*உ*

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

## திருமூலர் அருளிய

# திருமந்திரம்

## பத்தாம் திருமுறை {III}

7, 8, 9 தந்திரங்கள்


பதிப்பாசிரியர்

**டாக்டர் இராச.வசந்தகுமார்**

நிறுவன வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்



Enable | Enlighten | Enrich

KARPAGAM UNIVERSITY

(Under Section 3 of UGC Act 1956)

**பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**

# கற்பகம் பல்கலைக்கழகம்

ஈச்சநாரி, கோவை - 21

## நூற்குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | **திருமந்திரம் பத்தாம் திருமுறை (III)** |
| ஆசிரியர் | : | **திருமூலர்** |
| நூல் வகை | : | செய்யுள் நூல் |
| வெளியீடு | : | **பன்னிரு திருமுறை ஆய்வு மையம் கற்பகம் பல்கலைக்கழகம்** |
| வெளியீட்டு எண் | : | **50** |
| முதற்பதிப்பு | : | **2016** அக்டோபர் |
| பக்கங்கள் | : | 1248 |
| தாள் | : | மேப்லித்தோ 80 gsm |
| அளவு | : | டெமி 1/8 |
| அச்சகம் | : | செஞ்சுடர் அச்சகம்<br>கோ.வா.பாளையம்,<br>போத்தனூர், கோவை – 23.<br>அலைபேசி : 98431 74238 |




## திருமூலர் அருளிய

## திருமந்திரம்
## பத்தாம் திருமுறை

*(ஏழு, எட்டு மற்றும் ஒன்பதாம் தந்திரங்கள்)*

# பொருளடக்கம்

உ
*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

# திருமூலர் அருளிய திருமந்திரம் (III)

(*பத்தம் திருமுறை 7, 8, 9 தந்திரங்கள்*)

## வழிபாட்டுக் கருத்தரங்கம்

(22.10.2016, 23.10.2016 சனி, ஞாயிறு)

என்னை யறிகிலேன் இத்தனை காலமும்
என்னை யறிந்தபின் ஏதும் அறிந்திலேன்
என்னை யறிந்திட் டிருத்தலும் கைவிடாது
என்னையிட் டென்னை உசாவுகின் றேனே.

**– திருமந்திரம், எட்டாம் தந்திரம் –2331.**

## பதிப்புரை

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன்அடி சேரா தார். – திருக்குறள், 10

**1. உயிரின் நோக்கம் / இலட்சியம்** - வீடுபேறு, முத்தி, மோட்சம். (சொர்க்க நரகங்கள் அல்ல)

**2. எடுத்துக்கொண்ட கொள்கைகள்**

அ) எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னியசீர்ச் சங்கரன் தாள் மறவாமை.

ஆ) யாதொரு தெய்வங் கொண்டீர்; அத்தெய்வமாகி மாதொரு பாகர் தாம் வருவார் எனத் தெளிதலும்/ உறுதிபட நிற்றலும்.

இ) பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும், மாதொரு பாகர் மலர்த்தாள் மறப்பிலாமை.

ஈ) மற்றொரு தெய்வத்தைக் கனவிலும் நினையாதிருத்தல்.

உ) தம்மைத் தாம் முற்றிலும் மறத்தல்.

**3. வகுத்துக்கொண்ட நெறிகள்**

1) சிவபூசை – விசேட தீக்கை பெற்றுத் தினமும் சூரிய உதயத்தில் ஆன்மார்த்த படிகலிங்க மூர்த்திக்கு ஆனைந்துத் திருமஞ்சனத்துடன் 1008 போற்றி மலர் வழிபாடு.

2) எழில் ஞானபூசை – திருமுறைகளையும், சாத்திரங்களையும் ஓதுதல், ஓதுவித்தல்

3) சிவாலயத் திருப்பணிகள் – அன்றாட, வாராந்தர, மாதந்தர, வருடாந்தர பெருஞ்சாந்தி பெருவிழாக்கள் நடத்த உதவி செய்தல் – நல்விழாப் பொலிவு காணுதல் – காண்பித்தல்.

வெல்லும் அளவு விடுமின் வெகுளியைச்
செல்லும் அளவும் செலுத்துமின் சிந்தையை
அல்லும் பகலும் அருளுடன் தூங்கினால்
கல்லும் பிளந்து கடுவெளி யாமே.

**– திருமந்திரம், எட்டாம் தந்திரம்–2269**

**அன்புடையீர், வணக்கம்.**

**"மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்" என்ற மாணிக்கவாசக சுவாமிகளின் திருவாக்குக்கேற்ப இவ்வையத்தில் மாற்றங்கள் நிகழ்ந்துகொண்டே இருக்கின்றன. இந்த இருபத்தொன்றாம் நூற்றாண்டின் மாற்றங்கள் – கற்காலம் தொடங்கி இருபதாம் நூற்றாண்டு வரை நிகழ்ந்த மாற்றங்களோடு ஒப்பிடும்போது மிக அதிகமாகத் தெரிகின்றன. குறிப்பாக 1970–ஆம் ஆண்டு தொடங்கி, இன்றுவரை விஞ்ஞான வளர்ச்சியின் விளைவால் கணினி, ஊடகம், அலைபேசி, தொழிற்புரட்சிகளால் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களைப் பற்றி முன்னேற்றத்துக்கு முன் நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. இந்நூற்றாண்டில் மானுடனால் செய்ய முடியாத செயல்கள்;**

1. **ஐந்தொழில்.**
2. **அவற்றின் முக்கிய கூறான பிறப்பு, இறப்பு.**
3. **சங்கற்ப மாத்திரையாலே (நினைத்த அளவிலே) எதையும் செய்தல்.**

**பதிப்பாசிரியருக்கு 60 வயது ஆகிவிட்டது. 60 ஆண்டுகள் போனதே தெரியவில்லை. ஒவ்வொருவரின் வாழ்வின் அனுபவங்களே வரலாறுகள் ஆகின்றன. அவருடைய இளம் வயதில், வானொலிப்பெட்டி என்றழைக்கப்பட்ட ரேடியோ மிகப்பெரியதாக இருந்தது. அது**

'வால்வு ரேடியோ' எனப்பட்டது. பொறியியல் கல்லூரியில் படித்தபோது அவர் கைப்படவே வானொலி உட்கட்டமைப்பையும், பெட்டியையும் செய்து இலங்கை வானொலி நிகழ்வுகளைக்கூடக் கேட்டுள்ளார். பின்பு, அது 'டிரான்சிஸ்டர்' எனப்படும் சிறிய வானொலிப் பெட்டியாக மாறியது. சின்னாள் கழித்து வானொலிப்பெட்டியுடன் பதிவு செய்து பேசும் 'டேப் ரிக்கார்டரும்' உருவானது. சுழலும் நாடாவைக் கொண்ட டேப் ரிக்கார்டர் பெட்டியானது 'கேசட்' எனப்படும் சுருள் வளைகளுடன் பல நாட்கள் வழக்கிலிருந்தது.

பின்பு கணக்கியல் கருவிகளான 'கால்குலேட்டர்கள்' சந்தைக்கு வந்தன. 'கணினி'யும் அறிமுகப்படுத்தப்பட்டது. தொடர்ந்து வானொலி உபயோகங்கள் குறைந்து தொலைக்காட்சிப் பெட்டிகள் வழியாக கணினிக்குறுந்தகடுக்கு மாறிவிட்டோம். பெரிய தொலைக்காட்சிப் பெட்டிகள் மிக மெல்லியதாக மாறின. மிக மெல்லிய அந்தத் தகட்டிலிருந்து இப்போது 'பென்டிரைவ்' எனப்படும் மிகச்சிறிய தானியங்கிப் பாடகக் கருவிக்கு வந்து சேர்ந்துள்ளோம். மிக மிக நுண்ணிய அக்கருவிகளில் கோடான கோடி பக்கங்கள், ஓலைச்சுவடிகளில் உள்ள செய்திகளைக் கைவிரலளவு கருவிகளில் சேகரித்துவைக்க முடிகிறது. மிகப்பெரிய தகவல் சேர்ப்பு மையம் எனப்படும், 'பிக் டேடா மைனிங்' என்று அதை மிகப்பெரிய பாடமாகக் கொள்கின்றார்கள்.

மிகப்பருமையான வால்வ் ரேடியோவிலிருந்து மிக நுண்ணிய மைக்ரோ பிராசசர் எனப்படும் நுண் கருவிகளை உபயோகிக்கும் நிலைக்கு வந்துள்ளோம். இன்னும் எந்நிலைக்கு போகப் போகிறோம்? உலகிலேயே நுண்ணிய பொருள் எது? அது எவ்வளவு நுண்மையானது? அதன் நுண்வடிவம் எவ்வளவு? என்ற கேள்விகளுக்கு, திருமூல தேவநாயனார் உலகின் மிக நுண்ணிய பொருள் நமது உயிர்தான் என்று பாடியுள்ளார். உலகின் மிக நுண்ணியிரை பாக்டீரியா என்கிறோம். அது கண்களுக்குப் புலப்படாது. அதைப்பார்க்க நுண்ணோக்குக் கருவிகள் வேண்டும். அதையே பார்க்க அவ்வளவு கடினமாக இருக்கும்போது அதற்குள் இருக்கும் உயிரைப் பார்ப்பது எப்படி? பாவப்பட்ட சில மானுடர்களும் பிறப்பு, இறப்பு சுழற்சியில் ஈடுபடுத்தப்பட்டு வினைப்பயனை அனுபவிக்கப் பாக்டீரியாவாகப் பிறப்பதும் உண்டு. அவற்றிலிருந்து எல்லாம் தப்பித்து அரிய மானுடப்பிறவியையும், தமிழ்மொழியில் திளைக்கும் பேரின்பத்தையும் பெற்று, சிவமாம் பெருந்திருவையும் பதி, பசு, பாசம் என்ற முப்பொருள் உண்மையையும் அறிந்து, சைவக் காற்றைச் சுவாசித்து உண்ணும் உணவும், பருகும் நீரும் திருமுறைகள் என உணர்ந்து பெருவாழ்வு வாழும் நாளில் நுண்மை, பருமை ஆய்வு செய்து ஞானேந்திரமாக நமது இலக்காம் வீடுபேற்றை நோக்கிச் செல்வோம்.

**நுண்மை**

அணுவில் அணுவினை ஆதிப் பிரானை
அணுவில் அணுவினை ஆயிரங் கூறிட்டு
அணுவில் அணுவை அணுக வல்லார்கட்கு
அணுவில் அணுவை அணுகலுமாமே

- திருமந்திரம், ஏழாம் தந்திரம் - 1977

உயிரின் நுண்மைத் தன்மையை – அது எவ்வளவு சிறியது என்பதை;

கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயின்
கொண்டவனும் அப்பரிசே கூறுபடும் - கொண்ட
இருபொருளு மன்றியே இன்னதிது என்னா(து)
ஒருபொருளே பாய் இருக்கும் உற்று

என்று திருக்களிற்றுப்படியார் என்ற சைவ சித்தாந்த சாத்திர நூல் கூறுகிறது.

உயிரைப் பருப் பொருளாகக் கருதிக் கொண்டு அதன் “அகல நீள கன அளவுகள் எத்துணையன” என வினவுவார்க்கு விடைகூறின் “பசுவின் மயிர்களில் ஒன்றை எடுத்து அதனைப் பல நூறாயிரங் கூறு செய்தால் அவற்றுள் இன்னும் கூறு செய்யமுடியாது என்ற அளவுக்குப் பெறப்படும் ஒரு கூறின் அகல, நீள, கன அளவுகளே உயிரின் அகல, நீள, கன அளவுகள் என்று கூறலாம் என்று திருமூலர் கீழ்க்காண் பாட்டில் பாடியருளியுள்ளார்.

மேவிய சீவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு
மேவியது கூறது ஆயிர மாயினால்
ஆவியின் கூறது நூறாயிரத்தொன்றே

– திருமந்திரம், ஏழாம் தந்திரம் - 1980

இப்பாட்டின் உரை அணுவைப் பிளப்பது போல உள்ளது. ஒரு பசுமாட்டின் முடியை நூறு கூறாக்கச் சொல்கிறார். பின்னர் அதிலிருந்து ஒரு கூறான முடியெடுத்து ஆயிரம் கூறாக்கச் சொல்கிறார். அவ்வாறு ஆயிரம் கூறுபோட்டதில் ஒரு கூற்று முடியை எடுத்து அதை நூறாயிரம் கூறு போடச் சொல்கிறார். அதுதான் உயிர் - ஆவி – ஆன்மாவின் வடிவம் என்று சொல்கிறார்.

உருவம் என்று சொல்லவில்லை. வடிவு என்பது நீள, அகல, கனங்களை உடையது. அது கண்ணில்லாதவராலும் தடவி அறிந்துகொள்ளப்படும். உருவம் என்பது நிறம், அது கண்ணாலன்றி அறிய இயலாது.

இந்த உயிரின் வடிவை எண் கணிதத்தில் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

$1/1x100x1000x100000= 10^{-10}$ ஒரு கோடி என்பது $10^{8}$. மாட்டின் முடியை நூறு கோடி இழைகளாகப் பகுத்தால் அதுதான் உயிர் என்கிறார். 1/1000000000 – பின்னக் கணக்குப் போடும் கணக்கியல் வல்லார்க்கு இதுதான் உயிரின் அளவு என்று சொல்கிறார். அதாவது உயிரின் வண்ணம் 0.00000000001 (மாட்டின் முடியளவு). மாட்டின் முடி 100 மைக்ரான் அல்லது .1 மி.மீட். எனவே உயிரின் வண்ணம் $10^{-11}$ மி.மீட். அல்லது $10^{-14}$ மீட்டர் என்பதாகும். இவ்வளவு நுண்மையாக இருந்தாலும் அதற்குள் ஒரு பல இலக்க அடையாளம் இருக்கும். 125 கோடி மக்கள் கொண்ட இந்திய நாட்டிலேயே அடையாள அட்டைகளில் 16 இலக்க எண் உள்ளது. அது எவ்வளவு இலக்கம் இருக்கும்? அதை நகர்த்த 'பாஸ்வேர்டு' எனப்படும் கடவுச் சொல்லும் இருக்கும். உயிரின் உள்ளே இருக்கும் இறையணுவின் வடிவத்தைக் காண, உயிரின் வடிவில் ஆயிரங் கூறிட்டு அணுகச் சொல்லித் திருமூலர் திருமந்திரம் 1977-ஆவது பாடலில் கூறியிருப்பதால் $10^{-14} x 10^{-3} = 10^{-17}$ என்பது இறையணுவின் வடிவமாகும். ''ஏதுக்களாலும் எடுத்த மொழிகளாலும் மிக்கு சோதிக்க வேண்டாம்'' என்ற திருஞானசம்பந்தர் உபதேசப்படி நாம் இந்த மாதிரி ஆய்வுக்கெல்லாம் செல்லாமல் சரியை, கிரியை, யோக, எழில்ஞான பூசைகள் வாயிலாகத்தான் செல்லவேண்டும். இருப்பினும் சிவபரத்துவத்தை உணராதவர்களுக்கு மெய்ப்பிக்க நமக்கு தவ வலிமை போதவில்லை. ஆதலால் அவர்களுடைய விஞ்ஞான வழிச்சென்று 'மைக்ரோஸ் கோப்புகள்' எனப்படும் நுண்ணோக்கிகள் வழியாக உடலைக் கீறி அறுவை சிகிச்சை செய்யும்போது பார்க்க முடியுமா என்று வினவியபோது, $10^{-9}$ வடிவு எனப்படும் 'நானோ டெக்னாலஜி' அளவு வரைதான் நுண்ணோக்கியால் காணமுடியும். அதற்குச் சிறிய வடிவை அறியும் நுண்ணோக்கிகள் இன்றும் சந்தைக்கு வரவில்லை என்று சொன்னார்கள். மானுட கருவிகரணங்களால் காணவும் முடியாது என்பதுதான் மெய்ஞ்ஞானியர்களின் துணிவு. எனினும் அவர்களும் அவர்கள் வழி முயன்று சிவபரத்துவத்தை உணரட்டும். அது அவர்களின் பிராரத்த வினை. மானுடரின் முடியைக் கொள்ளாமல் மாட்டின் முடியை ஏன் அளவாகக் கொண்டார்? திருமூலர் மாடுமேய்ப்பவராக பரகாயப்பிரவேசம் செய்த சித்தராதலின் அவரையும் அந்த மலவாசனை, பெருங்காய வாசனை போல ஒட்டிக்கொண்டதென்பதை நகைச்சுவையாகக் கொள்ளலாம்.

<u>இந்தக் கணக்கின் பொருள் என்னவென்றால் நூறு கோடி உயிர்களைச் சிவபெருமான் ஒருமயிரில் அடக்கி – அடுக்கியுள்ளார் என்பதாகும்.</u> நூறு கோடி உயிர்கள் என்பது சாதாரணக் கணக்கா? இந்தியாவின் மொத்த மக்கட் தொகையின் அனைத்து உயிர்களையும் கூட்டினால் சற்றேறத்தாழ 1 மயிரில் அடக்கிவிடுவார். பூலோக மக்கட்தொகையை 7 மயிரில் அடக்கிவிடுவார். உயிர் உடலில் ஓரிடத்தும் எப்போதும் நிலைத்து நிற்பது இல்லை.

## உயிர்

உடலில் நகர்ந்து கொண்டிருக்கும் இடங்கள்

| விழிப்பு | புருவ நடு |
|---|---|
| களைப்பு | கண்டம் |
| உறக்கம் | இதயம் |
| பேருறக்கம் | கொப்பூள் |
| ஒடுக்கம் (கோமா நிலை) | மூலாதாரம் |

உடலுக்குள் உயிர், உயிருக்குள் சிவம்.

| உயிரின் வடிவம் அதாவது ஒரு பசுவின் மயிரில் | $10^{-14}$ மீட்டர் 100 கோடி உயிர்கள் அடக்கம் |
|---|---|
| உயிருக்கு | 32 இலக்க அடையாளமுண்டு |
| இறைவர் உயிரை | இயக்க கடவுச் சொல் பாஸ்வேர்டு |
| | உண்டு |
| உயிர் | உடலை இயக்கும். சிவம் உயிரை இயக்கும் |
| உயிரின் அடையாளமும் கடவுச் சொல்லும் | சிவபெருமான் உருவாக்கி ஐந்தொழில் புரிவதற்காக பிரம்மன், விட்டுணு, உருத்திரன் ஆகியவர்களுக்கு மட்டும் தெரிவித்துள்ளார். |

தனு, கரண, புவன போகங்கள் எல்லாவற்றிலும் நுண்மையானது உயிரென முடிவு செய்து, பருமையைப் பற்றிச் சற்று ஆராய்வோம். உலகம் – அண்டம் – புவனம் இவையே பருமனானவை என்பதை நிரூபிக்கக் கீழ்க்காணும் புள்ளி விவரங்கள் உதவுகின்றன.

**பூமி - செவ்வாய் கிரகத்துக்கான பயண நேரம் 6 மாதங்கள் - விஞ்ஞானி**

தூத்துக்குடியைச் சேர்ந்தவர் அந்தோனி எஸ்.ஜீவராஜன். இவரது மனைவி ஜூடித் ஜீவராஜன். இவர்கள் இருவரும் அமெரிக்காவின் விண்வெளி ஆராய்ச்சி மையத்தில் (நாசா) பணியாற்றி வருகின்றனர். பூமியிலிருந்து செவ்வாய் கிரகத்துக்கு மனிதர்கள் சென்றடைவதற்கான பயண நேரம் 6 மாதங்களாகும் என்று அந்தோனி எஸ்.ஜீவராஜன் கூறினார். தூத்துக்குடி, சுப்பையா வித்யாலயம் பெண்கள் மேல்நிலைப்பள்ளியில் நடைபெற்ற நிகழ்ச்சியில் அந்தோனி எஸ்.ஜீவராஜன் பேசியதாவது:

''செவ்வாய் கிரகத்துக்கு மனிதர்களை அனுப்ப நாசா தீவிர ஆராய்ச்சியில் ஈடுபட்டு வருகிறது. செவ்வாய் கிரகம் பூமியில் இருந்து 91 மில்லியன் கி.மீ. தொலைவில் உள்ளது. பூமியில் இருந்து செவ்வாய் கிரகத்துக்கு மனிதன் சென்று சேர 6 மாதங்களாகும். அதுபோல அங்கிருந்து பூமிக்குத் திரும்பவர 6 மாதங்களாகும். மேலும், ஒன்றரை ஆண்டுகள் செவ்வாய் கிரகத்தில் ஆராய்ச்சி மேற்கொள்ளவேண்டும். மொத்தத்தில் இரண்டரை ஆண்டுகள் தேவைப்படும். இந்த இரண்டரை ஆண்டுகள் விண்கலத்தில் மனிதன் இருக்கத் தேவையான ஆராய்ச்சிகளைச் செய்து வருகிறோம். பூமியில் 24 மணி நேரத்துக்கு ஒரு முறைதான் சூரியன் மறைவதைப் பார்க்கமுடியும். ஆனால், செவ்வாய் கிரகத்தில் 90 நிமிடங்களுக்கு ஒருமுறை சூரிய மறைவு தெரியும். அங்கு உடலில் இருந்து நிமிடத்துக்கு 1.5 சதவிகிதம் கால்சியம் குறையும். இதனால் எலும்புகள் பலமிழக்க நேரிடும். எனவே, 2 மணிநேரம் உடற்பயிற்சி செய்ய வேண்டும். மேலும், உடலில் உள்ள தசைகளும் கடினமாகிவிடும். செவ்வாய் கிரகத்துக்கு மனிதனை அனுப்ப இதுபோன்று பல கடினமான சவால்கள் உள்ளன. அவற்றை எதிர்கொள்வது குறித்து தீவிரமாக ஆராய்ச்சி செய்து வருகிறோம் என்று ஜீவராஜன் பேசினார்.''

ஆக, 9,10,00,000 கி.மீட்டர் தொலைவில் உள்ள செவ்வாய் கிரகத்துக்குப் போய்ச்சேர 6 மாதங்களாகும் என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர்.

கோள்களெல்லாம் சிவபெருமான் படைப்புகளே. அவையெல்லாம் மிகச் சிறிய விடயங்கள் என்ற கருத்தை நிலைநிறுத்திப் போகிற போக்கிலே பாடிவிட்டுச் சென்றார் திருஞானசம்பந்த சுவாமிகள்.

"வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன் மிக நல்ல வீணைதடவி
மாசறு திங்கள் கங்கைமுடி மேலணிந்து என் உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய்புதன் வியாழன் வெள்ளி சனி பாம்பரண்டு முடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல அடியார் அவர்க்குமிகவே"

என்பது அந்தப் பாடலாகும்.

கடந்த வாரம் தலைநகர் புதுதில்லிக்கு ஆகாய விமானத்திலே சென்று கொண்டிருந்தபோது, ஊர்தி ஓட்டி கடல் மட்டத்திலிருந்து 38,000 அடி உயரத்தில் தாம் பறந்து கொண்டிருப்பதாகவும், விமானத்துக்கு வெளியே -18ºC என்ற அளவில் குளிர் இருப்பதாகவும் விளக்கினார்.

1 மீட்டர் = 3.33 அடி என்று கணக்கிட்டால் சுமார் 12 கி.மீட்டர் உயரத்தில் நாம் பறக்கிறோம் என்று தெளிவாகிறது. முயன்றால் ஓரிரு கிலோமீட்டர் மேலே பறக்கலாம். அதற்குமேல் இன்று பறப்பது அரிது. அந்த உயரத்தில் விமான சன்னலின் வழி வெளியே பார்த்தால் எதுவுமே தெரியாது. அதற்குமேல் சுவாமி எங்கே இருக்கிறார்? நாம் இருப்பது 12/15 கி.மீட்டர் உயரத்தில். செவ்வாய் இருப்பது 9,10,00,000 கி.மீட்டர் துாரத்தில்! செவ்வாய், சிவபெருமானின் கால் துாசுக்குச் சமமான ஒரு கோளாகும். சூரியக்குடும்பத்தில் உள்ள முக்கியமான கோள்களைப்பற்றி இக்கால விஞ்ஞானிகள் கூறும் கருத்துக்களை இங்கு பட்டியலிடுகிறோம்.

| **கோள்** | **பூமியில் இருந்து** உள்ள தூரம் | **விட்டம்** | **பரப்பளவு** | **சுற்றி வரும்** வேகம் | **பண்புகள்** |
|---|---|---|---|---|---|
| சூரியன் | 15 கோடி கி.மீ. | 1,392,000 கி.மீ. | $6.09 \times 10^{12}$ கி.மீ.$^2$ | $2.2 \times 10^{8}$ ஆண்டுகள் | சூரியக் குடும்பத்தின் தலைவன் **சூரியன்** (Sun). இது ஒரு **விண்மீன்**. சூரியன் சிவனிடமிருந்து ஒளியைப் பெறுகிறான். இது சூரியக் குடும்பத்தின் மையப்பகுதியில் உள்ளது. சூரியக் குடும்பத்தின் கோள்கள் எல்லாம் சூரியனைச் சுற்றியே வருகின்றன. பூமியில் நாம் பெறும் **வெப்பம்** மற்றும் ஒளிக்குக் காரணம் சூரியன்தான். இது மிக மிகப் பெரிய வெப்பப் பந்து ஆகும். சூரியனின் ஈர்ப்பு விசையால் தான் மற்ற கோள்கள் எல்லாம் ஒழுங்கான ஓர் அமைப்பில் சுற்றி வருகின்றன. |
| சந்திரன் | 3.84,403 கி.மீ. | 3,474.8 கி.மீ. | 3.793 $\times 10^{7}$கி.மீ.$^2$ | 1.022 கி.மீ./ விநாடி | நிலவு, அம்புலி, சந்திரன் (Moon) என்று பலவாறு கூறப்படும் இக்கோள் வானிலே பூமியைச் சுற்றி வருகின்றது. இரவிலே குளிர்வாக ஒளிதரும் இக்கோளத்தை வானிலே காணலாம். இது பூமியின் ஒரே இயற்கையான துணைக்கோள். இது பூமியைச் சுற்றி வர சராசரி **27.32** நாட்கள் ஆகின்றன. இந்த நிலா, பூமியை ஒரு நீள் வட்டப் பாதையில் சுற்றி வருவதாகக் கண்டுபிடித்துள்ளார்கள். |

| கோள் | **பூமியில் இருந்து** உள்ள தூரம் | விட்டம் | பரப்பளவு | **சுற்றி வரும்** வேகம் | பண்புகள் |
|---|---|---|---|---|---|
| செவ்வாய் | 23 கோடி கி.மீ. | 6,794.4 கி.மீ. | 144 மில்லியன் கி.மீ.$^2$ | 24.1309 கி.மீ./விநாடி | **செவ்வாய்** (Mars) சூரியக்குடும்பத்தில் உள்ள ஒரு கோள் ஆகும். இது சூரியனிலிருந்து நான்காவது கோள் ஆகும். இது இரண்டு நிலவுகளைக் கொண்டுள்ளது. |
| புதன் | 5.79 கோடி கி.மீ. | 4,879.4 கி.மீ. | 7.5 x $10^7$ கி.மீ.$^2$ | 47.8725 கி.மீ./விநாடி | **புதன் கோள்** (Mercury) சூரியனுக்கு மிக அருகில் உள்ள கோளாகும். மேலும் இது சூரியக் குடும்பத்தில் மிகச்சிறிய கோளாகும். இது ஒரு முறை சூரியனைச் சுற்றி வர **88** நாள்கள் எடுத்துக் கொள்கிறது. சூரியனிட மிருந்து புதனின் கோணப்பிரிகை (angular separation from the sun) குறைவாக அதிகபட்சமாகவே **28.3°** தான்) உள்ளதால், பெரும்பாலும் சூரியனின் பொலிவு காரணமாக புதனைக் காண்பது அரிது. எனவேதான் நம் சான்றோர் பொன் கிடைத்தாலும் புதன் கிடைக்காது என்று கூறுவர். காலை அல்லது மாலைக் கருக்கல் நேரமே புதனைக் காண்பதற்குச் சரியான நேரம். |
| வியாழன் | 78 கோடி கி.மீ. | 1,42,984 கி.மீ. | x $10^{10}$ கி.மீ.$^2$ | 13.07 கி.மீ./விநாடி | **வியாழன்** (Jupiter) சூரியனிலிருந்து ஐந்தாவதாக அமைந்துள்ள ஒரு கோள் ஆகும். மேலும் இது சூரிய மண்டலத்திலேயே மிகப் பெரிய கோள் ஆகும். வளி அரக்கக்கோள்கள் நான்கில் வியாழனும் ஒன்றாகும். |

| **கோள்** | **பூமியில் இருந்து** உள்ள தூரம் | **விட்டம்** | **பரப்பளவு** | **சுற்றி வரும்** வேகம் | **பண்புகள்** |
|---|---|---|---|---|---|
| வெள்ளி | 10.82 கோடி கி.மீ. | 12,103.6 கி.மீ. | $4.60 \times 10^{8}$ கி.மீ.$^{2}$ | 35.0214 கி.மீ./விநாடி | **வெள்ளி** (Venus) சூரியக் குடும்பத்தில் சூரியனிலிருந்து இரண்டாவதாக அமைந்துள்ள ஒரு கோளாகும். நம் இரவு வானத்தில் நிலவுக்கு அடுத்து வெள்ளியே பிரகாசமானது. சூரிய உதயத்துக்கு முன்னும், சூரிய மறைவுக்குப் பின்னும் வெள்ளி தன் அதிகபட்ச ஒளியை அடைகிறது. ஆதலாலே அது காலை நட்சத்திரம் மற்றும் மாலை நட்சத்திரம் என்று அழைக்கப்படுகிறது. |
| சனி | 142 கோடி கி.மீ. | 120,536 கி.மீ. | $\times 10^{10}$ கி.மீ.$^{2}$ | 9.6724 கி.மீ./விநாடி | **சனி** (Saturn) சூரியக் குடும்பத்தில் சூரியனிலிருந்து ஆறாவதாக அமைந்துள்ள ஒரு கோள். சூரியக் குடும்பத்தில் இது இரண்டாவது பெரிய கோளாகும். வளி அரக்கக் கோள்கள் நான்கில் சனியும் ஒன்றாகும். |
| ராகு, கேது | | | | | இராகு, கேது இரண்டும் விண் பொருட்களே அல்ல. இவை நிழற் கோள்கள் எனப்படுகின்றன. |

இவற்றையெல்லாம் படைத்து, காத்து, ஒடுக்குபவர் சிவபெருமான். அவருலகமாகிய சிவனுலகம் இவற்றையெல்லாம் தாண்டி இருக்கிறது.

'தானே புயல்' தாண்டவமாடியது. 11-ஆம் எண் கொடி கடலூர் துறைமுகத்தில் ஏற்றப்பட்டது. 7, 8, 9-ஆம் எண் கொடிகள் ஏற்றினால் அது சாதாரணப் புயல். 11-ஆம் எண் கொடி ஏற்றினால் வானிலை ஆய்வுமையமான எங்களுக்கும் உங்களுக்கும் தகவல் துண்டிக்கப்படும் என்று, வானிலை ஆராய்ச்சி மையம் அறிவித்தது

அன்று ஆகாய விமானங்கள் கூட ஓட்டப்படவில்லை. பலத்த காற்று மணிக்கு 140 கி.மீட்டர் வேகத்தில் வீசியது. 38,000 அடி உயரம் வரை வீசியது. விமானங்களை இயக்க முடியாத வேகம். நீலகிரி மலைகள், கடல் மட்டத்திலிருந்து ஏறக்குறைய 2,200 மீட்டர் 'சுனாமி' எனப்படும் பேரழிவு அலையினால் ஒரு விநாடியில் தக்காண பீடபூமி / விந்தியத்துக்குத் தெற்கேயுள்ள தீபகற்பம் போன்றவையும் கீழ்மேலாகக் கடலில் மூழ்கி விடும். அடுத்து, தென்வடலாக அலை வீசினால் இமாலயமும் மூழ்கிவிடும். அதுதான் இறைவனின் பேராற்றல். அதுபோன்று பன்மடங்கு திறம் வாய்ந்தது மகா சங்கார **அதைச் செய்பவர் சிவபெருமான்.**

எனவே, கோடிக்கணக்கான கல் தொலைவுகள் என்ற அளவீடுகளை மனத்தில் கி.மீ x 2,933 [2]) என்பதை நினைத்துப்பார்த்தால் நமது தேசம் எவ்வளவு சிறியதென்று தெரிகிறது. அதே கணக்கீட்டில் பூலோக உருண்டையின் அளவினை எண்ணினாலும் அது மிகச் சிறிதென்றே தோன்றுகிறது. விண்வெளிப் பிறிதொரு ஊருக்கும் இடையே உள்ள தொலைவினைச் பிட்டுப் பார்க்கலாம். விமானப் பறப்பு உயரத்திலே ஊர்களே தெரிவதில்லை. ஒரு பெரிய ஊர் 12 கி.மீ. உயரத்தில் ஒரு புள்ளியாகக் கூடத் தெரிவதில்லை. ஒரு ஆயிரம் கி.மீட்டரில் இவ்வளவு ஊர்கள் இருப்பதுபோல, ஒரு கோடி கிலோமீட்டர் தொலைவுகளில் பல அண்டங்கள் இருப்பது உறுதியாகிறது. தெரிந்ததை வைத்துக்கொண்டுதான் தெரியாததை நிரூபிக்க வேண்டும். உள்ளது அழியாது, இல்லது தோன்றாது. எத்தனை அண்டங்கள் உள்ளன?

> ''அண்டப்பகுதியின் உண்டைப்பிறக்கம்
> அளப்பருந்தன்மை வளப்பெருங்காட்சி
>
> '' - திருவாசகம்

மேற்காண் பாடல் மூலம் மாணிக்கவாசக சுவாமிகள் பல அண்டங்கள் இருப்பதாக எடுத்துரைக்கிறார்.

**உலகம்**

பல வீடுகள் அல்லது குடியிருப்புகள் சேர்ந்த பகுதி ஊர். பல ஊர்கள் சேர்ந்தது ஒரு வட்டம். பல வட்டங்கள் சேர்ந்தது மாவட்டம். பல மாவட்டங்கள் சேர்ந்தது ஒரு மாநிலம். பல மாநிலங்கள் சேர்ந்தது ஒரு நாடு. பல நாடுகள் சேர்ந்தது ஒரு கண்டம். பல கண்டங்கள் சேர்ந்தது ஒரு உலகம். நாம் வாழும் பூமி ஓர் உலகமாகப் பூலோகம் எனப்படுகிறது.

**அண்டம்**

மேற்சொன்ன உலகத்தைப் போலப் பல உலகங்கள் சேர்ந்தது ஒரு அண்டம்.

**புவனம்**

பல அண்டங்கள் சேர்ந்தது ஒரு புவனம். ஒவ்வொரு புவனத்துக்கும் சிவபெருமான் ஒரு அதிபதியை நியமித்து, அதிதேவர் எனப் பெயரிட்டு படைத்து, காத்து, ஒடுக்கி புவனாபதிகள் மூலம் நாம் அனுபவிக்கக் கருணை புரிந்து வருகிறார்.

யாராவது புவனங்களுக்குப் பெயரிட்டுள்ளார்களா? எத்தனை புவனங்கள் உள்ளன? என்று ஆய்ந்தபோது, ஆகமநூல்கள் கீழ்க்காண் 224 புவனங்களைப் பட்டியலிட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 1. காலாக்னி புவனம் | 2. கூஷ்மாண்ட புவனம் | 3. ஆடகேஸ்வர புவனம் | 4. பரம்ம புவனம் |
| 5. வைணவ புவனம் | 6. உருத்திர புவனம் | 7. விருஷப புவனம் | 8. விருஷபதர புவனம் |
| 9. அனந்த புவனம் | 10. குரோதன புவனம் | 11. மாருதாச புவனம் | 12. கிருச்ன புவனம் |
| 13. உதும்பரீச புவனம் | 14. பணீந்திர புவனம் | 15. வச்சிர புவனம் | 16. தமுஷ்டீச புவனம் |
| 17. வித்யாதிப புவனம் | 18. ஈசான புவனம் | 19. சர்வக்ஞ புவனம் | 20. ஞானபுக் புவனம் |
| 21. வேதபாராக புவனம் | 22. சுரேச புவனம் | 23. சர்வ புவனம் | 24. ஜேஷ்ட புவனம் |
| 25. பூதபால புவனம் | 26. பலிப்பரிய புவனம் | 27. நிதீச புவனம் | 28. ரூபவத் புவனம் |
| 29. தன்ய புவனம் | 30. சௌம்யதேக புவனம் | 31. ஜடாதர புவனம் | 32. லட்சுமீதர புவனம் |
| 33. ரத்னதர புவனம் | 34. ஸ்ரீதர புவனம் | 35. பரசாதக புவனம் | 36. பரகாமத புவனம் |
| 37. சீக்ர புவனம் | 38. லகு புவனம் | 39. வாயுவேக புவனம் | 40. சூஷ்ம புவனம் |
| 41. தீஷ்ண புவனம் | 42. க்சயாந்தக புவனம் | 43. பஞ்சாந்தக புவனம் | 44. பஞ்சசிகா புவனம் |
| 45. கபர்த்தி புவனம் | 46. மேகவாகன புவனம் | 47. பல புவனம் | 48. அதிபல புவனம் |
| 49. பாசகஸ்த புவனம் | 50. மகாபல புவனம் | 51. சுவேத புவனம் | 52. ஜெயபத்ர புவனம் |
| 53. தீர்கபாகு புவனம் | 54. ஜலாந்தக புவனம் | 55. மேகநாத புவனம் | 56. சுநாத புவனம் |
| 57. நிருருதி புவனம் | 58. மாரண புவனம் | 59. உறந்தர புவனம் | 60. க்ரூரதிஷ்டி புவனம் |
| 61. பயாநக புவனம் | 62. ஊர்த்வசேப புவனம் | 63. விரூபாக்ச புவனம் | 64. தூம்பர புவனம் |
| 65. லோகித புவனம் | 66. தம்ஷ்டிரி புவனம் | 67. யாம்ய புவனம் | 68. மிருத்யு புவனம் |
| 69. ஹர புவனம் | 70. தாத்ரு புவனம் | 71. விதாத்ரு புவனம் | 72. கர்த்திரு புவனம் |
| 73. சம்யோக்த்ரு புவனம் | 74. வியோக்த்ரு புவனம் | 75. தர்ம புவனம் | 76. தர்மபதிபுவனம் |

| | | | |
|---|---|---|---|
| 77.அக்னிருத்திர புவனம் | 78. ஹீதாசனப புவனம் | 79. பங்கல புவனம் | 80. காதக புவனம் |
| 81. ஹர புவனம் | 82. ஜ்வலன புவனம் | 83. தகன புவனம் | 84. பப்ரு புவனம் |
| 85. பஸ்மாந்தக புவனம் | 86. க்சயாந்தக புவனம் | 87. கபாலீ புவனம் | 88. அஜ புவனம் |
| 89. புத்த புவனம் | 90. வஜ்ரதேஹ புவனம் | 91. பரமர்த்தந புவனம் | 92. விபூத புவனம் |
| 93. அவ்யய புவனம் | 94. சாஸ்திரு புவனம் | 95. பனாகி புவனம் | 96. திரிதசாதிப புவனம் |
| 97. சம்பு புவனம் | 98. விபு புவனம் | 99. கணாத்யக்ச புவனம் | 100. திரயக்ச புவனம் |
| 101. திரதசேச புவனம் | 102. சம்வாக புவனம் | 103. விவாக புவனம் | 104. நபச புவனம் |
| 105. லிப்சுவேதன புவனம் | 106. திரிலோசன புவனம் | 107. வீரபத்திர புவனம் | 108. பத்ரகாளி புவனம் |
| 109. அமரேச புவனம் | 110. பரபாச புவனம் | 111. நிமிச புவனம் | 112. புஷ்கரபுவனம் |
| 113. ஆஷாடி புவனம் | 114. டிண்டிமுண்டி புவனம் | 115. பாரபூத புவனம் | 116. லகுளீச புவனம் |
| 117. அரிச்சந்திர புவனம் | 118. ஸ்ரீசயிலபுவனம் | 119. ஜெல்பேசபுவனம் | 120. ஆம்ராதிகேச புவனம் |
| 121. மத்யமேச புவனம் | 122. மகாகாள புவனம் | 123. கேதார புவனம் | 124. பைரவ புவனம் |
| 125. கயா புவனம் | 126. குருக்சேத்திர புவனம் | 127. நாகல புவனம் | 128. நகல புவனம் |
| 129. விமலேஸ்வர புவனம் | 130. அட்டகாச புவனம் | 131. மாஹேந்திர புவனம் | 132. பீமேச புவனம் |
| 133. வஸ்த்ரபாதபுவனம் | 134. ருத்ரகோடிபுவனம் | 135. அவிமுத்த புவனம் | 136. மஹாபல புவனம் |
| 137. கோகர்ண புவனம் | 138. பத்திரகர்ணபுவனம் | 139. சுவர்ணாக்ச புவனம் | 140. ஸ்தாணு புவனம் |
| 141. சகலாண்ட புவனம் | 142. துவிரண்டபுவனம் | 143. மாகோடபுவனம் | 144. மண்டலேஸ்வர புவனம் |
| 145. காலாஞ்சர புவனம் | 146. சங்குகர்ணபுவனம் | 147.ஸ்துாலேஸ்வர புவனம் | 148. ஸ்தலேஸ்வர புவனம் |
| 149. பைசாச புவனம் | 150. ராட்சஸ புவனம் | 151. யஷ புவனம் | 152. கந்தருவ புவனம் |
| 153. ஐந்திர புவனம் | 154. சௌம்ய புவனம் | 155. ப்ராஜேச புவனம் | 156. பராம புவனம் |
| 157. அகிருத புவனம் | 158. க்ருத புவனம் | 159. பைரவ புவனம் | 160. பரம புவனம் |
| 161. வைணவ புவனம் | 162. கௌமார புவனம் | 163. ஔமய புவனம் | 164. ஸ்ரீகண்ட புவனம் |
| 165. வாம புவனம் | 166. பீம புவனம் | 167. உக்ர புவனம் | 168. பவ புவனம் |
| 169. ஈசான புவனம் | 170. ஏகவீர புவனம் | 171.பரசண்ட புவனம் | 172. உமாபதி புவனம் |
| 173. அஜ புவனம் | 174. அனந்த புவனம் | 175. ஏகசிவ புவனம் | 176. குரோத புவனம் |
| 177. சம்வர்த புவனம் | 178. ஜோதி புவனம் | 179. பங்கள புவனம் | 180. சூர புவனம் |
| 181. பஞ்சாந்தக புவனம் | 182. ஏகவீர புவனம் | 183. சிகேதன புவனம் | 184. அங்குஷ்டமாத்ர புவனம் |
| 185. ஈசான புவனம் | 186. ஏகேக்சண புவனம் | 187. ஏகபங்கள புவனம் | 188. உத்பவ புவனம் |
| 189. பவ புவனம் | 190. வாமதேவ புவனம் | 191. மகாதேஜ புவனம் | 192. வாமா புவனம் |
| 193. ஜேஷ்டா புவனம் | 194. ரௌத்ரி புவனம் | 195. காளி புவனம் | 196. கலவிகரணி புவனம் |

| 197. பலவிகரணி புவனம் | 198. பலப்பரமதனி புவனம் | 199. சர்வபூததமனி புவனம் | 200. மனோன்மணி புவனம் |
|---|---|---|---|
| 201. சிகண்டி புவனம் | 202. ஸ்ரீகண்ட புவனம் | 203. த்ரிமூர்த்தி புவனம் | 204. ஏகருத்ரர்புவனம் |
| 205. ஏகநேத்திரர் புவனம் | 206. சிவோத்தமர் புவனம் | 207. சூக்சம புவனம் | 208. அனந்தர் புவனம் |
| 209. சதாசிவ புவனம் | 210.நிவிர்த்திலகா புவனம் | 211. பரதிஷ்டாகலா புவனம் | 212. வித்யாகலா புவனம் |
| 213. சாந்திகலா புவனம் | 214.சாந்தியதீதாகலா புவனம் | 215. இந்திகைபுவனம் | 216. தீபகாபுவனம் |
| 217. ரேசிகாபுவனம் | 218. மோசிகாபுவனம் | 219. ஊர்த்துவகா புவனம் | 220. வியாபனி புவனம் |
| 221. வியோமரூப புவனம் | 222. அனந்தா புவனம் | 223. அனாதா புவனம் | 224. அநாசிருதா புவனம் |

**184–**ஆவதாகக் குறிப்பிட்டுள்ள அங்குஷ்டமாத்ர புவனம் தான் நாம் வாழும் பூமியாகும். இந்த அண்டங்களின் ஊடே சிவபெருமான் நின்றதுதான் லிங்கோத்பவ நிலை. திருவண்ணாமலைத் தரிசனக் கோலம், மிக உயர்ந்த புவனத்தின் மேல் தலை. பாதாளம் ஏழினுக்கும் கீழ் பாதமலர். இதுதான் பருமை – விசுவரூப தரிசனம்.

இந்த புவனங்களின் பெருமைகளை அளவிடல் அரிது. அத்துவா என்றால் வழி என்பது பொருளாகும். இப்பிறவியைப் பெற்றது வினைநீக்கத்துக்காக என்று நாமறிவோம். இந்த வினைநீக்கத்துக்கு உதவும் வழிதான் அத்துவா ஆகும். நம் பழவினைகளை நுகர்ந்து முடித்து, வீடுபேறடைவதற்கான வழிகளே அத்துவாக்களாகும். அவ்வத்துவாவின் வழி **1)** வினையை நுகர்கிறோம் **2.** வீடு பேறடைகிறோம். இவ்அத்துவா, சொல் பிரபஞ்சம், பொருள் பிரபஞ்சம் என இருவகைப்பட்டு, அறுவகையாக விரியும்.

பொருள் பிரபஞ்சம் – தத்துவம், புவனம், கலை

சொல் பிரபஞ்சம் – மந்திரம், பதம், வன்னம்

புவனங்கள் **224** என்ற செய்தியை மேலே கண்டோம்.

தத்துவங்கள் முப்பத்தாறு – ஆன்மதத்துவம் **24**
வித்தியா தத்துவம் **7**
சிவதத்துவம் **5**

கலைகள் ஐந்து – நிவிர்த்தி
பிரதிட்டை
வித்யா
சாந்தி
சாந்தியதீதை

**மந்திரங்கள் 11** (முன்னைந்தும் பிரம மந்திரங்கள்.
பின்னாறும் அங்க மந்திரங்கள்

| ஓம் | ஹோம் | ஈசானமூர்த்தாய | நம: |
|---|---|---|---|
| ஓம் | ஹேம் | தத்புருஷ வக்த்ராய | நம: |
| ஓம் | ஹூம் | அகோரஹ்ருதயாய | நம: |
| ஓம் | ஹிம் | வாமதேவகுஹ்யாய | நம: |
| ஓம் | ஹிம் | ஸத்யோஜாதமூர்த்தயே | நம: |
| ஓம் | ஹாம் | ஹ்ருதயாய | நம: |
| ஓம் | ஹீம் | சிரஸே | நம: |
| ஓம் | ஹூம் | சிகாயை | நம: |
| ஓம் | ஹைம் | கவசாய | நம: |
| ஓம் | ஹௌம் | நேத்ரேப்யோ | நம: |
| ஓம் | ஹ: | அஸ்த்ராய | நம: |

**பதங்கள் 81** (ஓம் ஹாம் எனத்தொடங்கி நம: என நிறைவு பெறும்)

| 1. | ஓம் | 42. | நாநா நாநா |
|---|---|---|---|
| 2. | வ்யோம வ்யாபிநே | 43. | தூ தூ தூ |
| 3. | வ்யோம ரூபாய | 44. | ஓம் பூ |
| 4. | ஸர்வ வ்யாபிநே | 45. | ஓம்புவ |
| 5. | சிவாய | 46. | ஓம் ஸூவ |
| 6. | அநந்தா | 47. | அநிதந |
| 7. | அநாதாய | 48. | நதந |
| 8. | அநாசிருதாய | 49. | நிதநோத்பவ |
| 9. | த்ருவாய | 50. | சிவ |
| 10. | சாஸ்வதாய | 51. | ஸர்வ |
| 11. | யேபாகபீட ஸம்ஸ்திதாய | 52. | பரமாத்மந் |
| 12. | நித்ய யோகிநே | 53. | மஹேச்வர |
| 13. | த்யாநா ஹராய | 54. | மஹாதவ |
| 14. | ஓம் நமசிவாய | 55. | ஸத்பாவேச்வர |
| 15. | ஸர்வ ப்ரபவே | 56. | மஹாதேஜ |
| 16. | சிவாய | 57. | யோகாதிபததே |

| 17. | ஈசாந மூர்த்தாய | 58. | முஞ்ச முஞ்ச |
|---|---|---|---|
| 18. | தத்புருஷ வக்த்ராய | 59. | ப்ரதம ப்ரதம |
| 19. | அகோரர ஹ்ருதயாய | 60. | சர்வ சர்வ |
| 20 | வாமதேவ குஹ்யாய | 61. | பவ பவ |
| 21. | ஸத்யோஜாத மூர்த்தயே | 62. | பவோத்பவ |
| 22. | ஓம் நமோ நம: | 63. | ஸர்வ பூதஸுகப்ரத |
| 23. | குஹ்யாதிகு ஹ்யாய | 64. | ஸர்வ ஸாந்தயகர |
| 24. | கோபத்ரே | 65. | ப்ருஹ்ம விஷ்ணு ருத்ரபர |
| 25. | அநிதநாய | 66. | அநர்ச்சித அநர்ச்சித |
| 26. | ஸர்வ யோகாதிக்ருதாய | 67. | அஸம்ஸ்துத அஸம்ஸ்துத |
| 27. | ஸர்வ வித்யாதிபாய | 68. | பூர்வஸ்தித பூர்வஸ்தித |
| 28. | ஜ்யோதி ரூபாய | 69. | ஸாஷி ஸாஷி |
| 29. | பரமேச்வரபராய | 70. | துரு துரு |
| 30. | அசேதநாசேதந | 71. | பதங்க பதங்க |
| 31. | வ்யோமிந் வியோமிந் | 72. | பிங்க |
| 32. | வ்யோபிந் வ்யோபிந் | 73. | ஞா ந ஞா நத |
| 33. | அரூபிந் அரூபிந் | 74. | சப்த சப்ஷத |
| 34. | ப்ரதம ப்ரதம | 75. | ஸூஷ்ம ஸூஷ்ம |
| 35. | தேஜஸ் தேஜஹ | 76. | சிவ |
| 36. | ஜ்யோதிர் ஜ்யோதி | 77. | சர்வ |
| 37. | அரூப | 78. | ஸர்வது |
| 38. | அநக்நி | 79. | ஓம் நமோ நம |
| 39. | அதூம | 80. | ஓம் சிவாய நமோ நம |
| 40. | அபஸ்ம | 81. | ஓம் |
| 41. | அநாதே | | |

**பத மந்திரங்களில்;**

| 1 | சாந்தியதீத கலையிலும் |
|---|---|
| 2 முதல் 12 வரை | சாந்தி கலையிலும், |
| 13 முதல் 32 வரை | வித்யா கலையிலும், |
| 33 முதல் 53 வரை | பிரதிஷ்டா கலையிலும், |
| 54 முதல் 81 வரை | நிவர்த்தி கலையிலும் உள்ளவை. |

வன்னம் – 51

**வன்னங்கள் எனப்பெறும் எழுத்துக்கள் (அ) அட்சரங்களுக்குரிய உருவம், நிறம், அதிதேவர், பயன் ஆகியன வருமாறு:**

| வ. எண் | வன்னம் | உருவம் | நிறம் | அதிதேவர் | பயன் |
|---|---|---|---|---|---|
| 1. | அ | ஆண் | சிவப்பு | எல்லாத் தேவரும் | வசீகரம் |
| 2. | ஆ | பெண் | வெள்ளை | பராசக்தி | ஆகர்ஷணம் |
| 3. | இ | ஆண் | பச்சை | விட்டுணு | காப்பு |
| 4. | ஈ | பெண் | பொன் | மாயாசக்தி | வசீகரம் |
| 5. | உ | ஆண் | கருமை | வாஸ்து | ராஜவசியம் |
| 6. | ஊ | பெண் | பச்சை | பூதேவி | ஜனவசியம் |
| 7. | ரு | அலி | பொன் | பிரமன் | கிரகபீடைநிவர்த்தி |
| 8. | ரூ | அலி | கருமை | வியாழன் | கரநிவர்த்தி |
| 9. | லு | அலி | வெள்ளை | அஸ்வினி தேவர் | கரநிவர்த்தி |
| 10. | லூ | அலி | செம்மை | அஸ்வினி தேவர் | கரநிவர்த்தி |
| 11. | ஏ | ஆண் | பொன் | வீரபத்திரர் | சர்வசித்தி |
| 12. | ஐ | பெண் | வெள்ளை | சரசுவதி | ஞானம் |
| 13. | ஒ | ஆண் | ஜோதி | ஈசுவரர் | இஷ்டசித்தி |
| 14. | ஔ | பெண் | வெள்ளை | ஆதிசக்தி | சர்வசித்தி |
| 15. | அம் | ஆண் | சிவப்பு | மகேசுவரர் | சுகம் |
| 16. | அ: | பெண் | சிவப்பு | காலாக்கினி உருத்திரர் | பாசநீக்கம் |
| 17. | க | ஆண் | பொன் | பிரமன் | படைப்பு |
| 18. | க(2) | பெண் | வெள்ளை | கங்கை | பாவநீக்கம் |
| 19. | க(3) | ஆண் | சிவப்பு | விநாயகர் | விக்கின நீக்கம் |
| 20. | க(4) | பெண் | வெள்ளை | பைரவர் | பகை அழிவு |
| 21. | ங | அலி | கருமை | காலர் | வெற்றி |
| 22. | ச | ஆண் | பயோதரம் | சண்டருத்திரர் | அசுர நிவர்த்தி |
| 23. | ச(2) | பெண் | கரும் பொன்மை | பத்ரகாளி | வெற்றி |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 24. | ச(3) | ஆண் | சிவப்பு | இந்திரன் | வெற்றி |
| 25. | ச(4) | பெண் | பசுஞ் செம்மை | அர்த்தநாரீசர் | வெற்றி |
| 26. | ஞ | அலி | பொன் | கோடி உருத்திரர் | போகநீக்கம் |
| 27. | ட | ஆண் | சிவப்பு | ப்ருங்கி | சுகம் |
| 28. | ட(2) | பெண் | வெள்ளை | சந்திரன் | அபம்ருத்யு நீக்கம் |
| 29. | ட(3) | ஆண் | பொன் | ஏகருத்திரர் | காலதோஷ நிவர்த்தி |
| 30. | ட(4) | பெண் | நீலம் | யமன் | அபம்ருத்யு நீக்கம் |
| 31. | ண | அலி | சிவப்பு | நந்தி | பொருட்பேறு |
| 32. | த | ஆண் | வெள்ளை | வாஸ்து | வெற்றி |
| 33. | த(2) | பெண் | குந்தம் | தருமதேவதை | வெற்றி |
| 34. | த(3) | அலி | சிவப்பு | துர்க்கை | பொருட்பேறு |
| 35. | த(4) | பெண் | பொன் | குபேரன் | பொருட்பேறு |
| 36. | ந | அலி | வெள்ளை | சாவித்திரி | பாபநாசம் |
| 37. | ப | ஆண் | வெள்ளை | ஆகாயம் | விருஷ்டி |
| 38. | ப(2) | பெண் | சிவப்பு | பசுபதி | பாபநாசம் |
| 39. | ப(3) | ஆண் | பொன் | திரிமூர்த்தி | சர்வசித்தி |
| 40. | ப(4) | பெண் | சிவப்பு | சுக்கிரன் | சர்வசித்தி |
| 41. | ம | அலி | பசுமை | மன்மதன் | வெற்றி |
| 42. | ய | அலி | கருமை | வாயு | உச்சாடனம் |
| 43. | ர | அலி | சிவப்பு | அக்கினி | மாரணம் |
| 44. | ல | அலி | பொன் | பிருதிவி | தம்பன சித்தி |
| 45. | வ | அலி | வெள்ளை | வருணன் | ரோக நிவர்த்தி |
| 46. | ச | பெண் | வெள்ளை | இலக்குமி | செல்வம் |
| 47. | ஷ | ஆண் | சிவப்பு | சூரியர் | சர்வசித்தி |
| 48. | ஸ | பெண் | சிவப்பு | சக்தி | காப்பு |
| 49. | ஹ | அலி | பளிங்கு | சிவம் | அஷ்டமாசித்தி |
| 50. | ள | பெண் | சிவப்பு | சத்தி | ஞானம் |
| 51. | க்ஷ | பெண் | சிவப்பு | சத்தி | காப்பு |

கர்ணிகையின் நடுவில், ஓங்கார வடிவத்துடன் வெண்மையாகிய சக்திமண்டலம் இருக்கும். இதில் ஈசுவரர் எழுந்தருளியிருப்பார்.

இங்ஙனம் ஆதார சத்திக்கு மேல் சிவாசனத்தைப் பிருதிவி தத்துவம் முதல், நாத தத்துவம் வரை வியாபித்திருப்பதாகச் சிந்தித்துச் செய்யும் ஆசன பூசையில் சிவபெருமானால் பணிக்கு அமர்த்தப்பட்ட எல்லாத் தேவர்களும் பூசிக்கப் பெறுகிறார்கள் என்பதும், சிவபூசையில் இடம்பெறாது தேவர்கள் எவரும் இருப்பதில்லை என்பதும் உணரத்தக்கனவாம்.

மேற்கூறியவாறு, ஏராளமான தோத்திர, சாத்திர பாடற் கருத்துக்களை உள்ளடக்கிய திருமந்திர நூலின் முதல் தொகுதியை முதல் மூன்று தந்திரங்களுடன் **25.06.2016** அன்றும், நான்கு, ஐந்து, ஆறாம் தந்திரங்களை உள்ளடக்கிய இரண்டாம் தொகுதியை **27.08.2016** அன்றும் வெளியிடத் திருவருள் கூட்டியது. நிறைவான மூன்று தந்திரங்களான ஏழு, எட்டு, ஒன்பதை அடக்கி இந்நூல் இப்போது வெளிவரவும் சிவபெருமான் திருவருள் கூட்டியுள்ளார். இந்நூலின்கண் அமைந்துள்ள நுட்பமான கருத்துக்களை, இப்பதிப்புரை மூலம் பகிர்ந்துகொள்வதில் பெருமகிழ்வு கொள்கிறோம்.

**முக்குண நிர்க்குணங்கள்**

| குணம் | அவத்தை | ஐந்தொழில் | அதிதெய்வம் | குறிப்புப் பெயர் | சிறப்புப் பெயர் |
|---|---|---|---|---|---|
| சாத்துவிகம் | சாக்கிரம் | காத்தல் | விட்டுணு | குண மூர்த்தி | சாக்கிர மூர்த்தி |
| இராசதம் | சொப்பனம் | படைத்தல் | பிரம்மா | குண மூர்த்தி | சொப்பன மூர்த்தி |
| தாமதம் | சுழுத்தி | ஒடுக்குதல் | உருத்திரன் | குண மூர்த்தி | தாமத மூர்த்தி |
| நிர்க்குணம் | துரியம் | மறைத்தல் | மகேசுவரர் | நிர்க் குணன் | துரிய மூர்த்தி |
| நிர்க்குணம் | துரியா தீதம் | அருளல் | சதாசிவம் | குணா தீதன் | துரிய மூர்த்தி |

மேலாலவத்தை = சுத்தாவத்தை = நின்மலாவத்தை. தத்துவங்கள் நீங்கி வாக்குகளின் வடிவாய் நிற்கும்.

| நின்மல சாக்கிரம் | இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் நிரம்பிய நிலை |
|---|---|
| நின்மல சொப்பனம் | குரு தரிசனமாகி அவர் அருளுபதேசம் பெறல் |
| நின்மல சுழுத்தி | உபதேசத்தில் உறைத்து நின்று சாதித்தல் |
| நின்மல துரியம் | பாசநீக்கம் |
| நின்மல துரியாதீதம் | சிவப்பேறு |

**கலாந்த பேதம்**

| 1 | மந்திர கலாந்தம் | ஆகமங்களையும், வேதங்களையும் ஓதி ஐயம் திரிபற உணர்தல் | தருக்க மதத்தர் |
|---|---|---|---|
| 2 | தந்திர கலாந்தம் | பாசுபதம் முதலிய தந்திரங்களை உணர்தல் | அகப்புறச் சமயிகள் |
| 3 | தெளிவுக் கலாந்தம் | உணரப்பட்ட நூல்களில் கண்டவாறு மேம்பட்டு ஒழுகுதல் | பௌராணிகர் |
| 4 | ஞான கலாந்தம் | திருவைந்தெழுத்தை மானதமாகப் பெரிய அளவில் கணித்தல் | அகச் சமயிகளில் ஒரு சாரார் |
| 5 | உபதேசக் கலாந்தம் | குரு உபதேசத்தை நன்கு சிந்தித்துத் தெளிந்தபின், நிட்டையில் நிற்றல் | சித்தாந்த சைவர் |

| இச்சாசத்தி | உயிர்களுக்கு மலத்தை நீக்கிச் சிவானுபவத்தைத் தருதற்பொருட்டு முதல்வனிடத்து உளதாகிய கருணை. |
|---|---|
| ஞானசத்தி | சிவப்பேறாகிய அதற்குச் செய்யக்கடவதாகிய உபாயங்களை அறிதல். |
| கிரியாசத்தி | அறிந்த அவற்றை அறிந்தவாறே சங்கல்பித்துச் செய்தல். |

| வ. எண் | கலை | கொண்ட தத்துவம் | அதி தேவன் | |
|---|---|---|---|---|
| 1. | சாந்தியதீத கலை | சிவம், சத்தி | சதாசிவன் | அங்ஙனம் சாந்தமாய் நின்றதும் ஒழியச் செய்யும் ஞானம். சிவசத்தி – சாந்தியதீதை. |
| 2. | சாந்தி கலை | சுத்த வித்தை, ஈச்சுரம், சாதாக்கியம் | மகேசுவரன் | அங்ஙனம் அனுபவம் பெற்ற உயிர்க்கு, விருப்பு வெறுப்பு, சங்கற்பம் முதலிய எல்லாத் துன்பங்களும் சாந்தமாகச் செய்யும் சிவசத்தி – சாந்தி. |
| 3. | வித்தியா கலை | வித்தியா தத்துவம் 7 | உருத்திரன் | அங்ஙனம் நிலைபெற்ற உயிர்கட்கு அனுமான, ஆகம ஞானமன்றி அனுபவ ஞானத்தைப் பயப்பிக்கும் சிவசத்தி – வித்தை. |
| 4. | பிரதிட்டா கலை | அப்பு முதல் பிரகிருதி ஈறாக 23 தத்துவம் | மாயோன் | பந்தத்திலிருந்து நிவிர்த்தி பெற்ற பின் உயிர்கள் மீள நோக்காத வண்ணம் பிரதிட்டை செய்யும் சிவசத்தி – பிரதிட்டை. |
| 5 | நிவிர்த்தி கலை | பிருதிவி | பிரம்மா | உயிர்களைப் பந்தத்தினின்றும் நிவிர்த்தி செய்யும் சிவசத்தி எனப்படும். |
| | | | | இங்ஙனம் சிவசத்தி யொன்றே. செயலால் நிவிர்த்தி முதலிய ஐவகைப் பெயர்பட்ட வழி, அவற்றிற்கு முதல்வனும் நிவிர்த்திபதி, பிரிதிட்டாபதி எனப் பெயர் அமையும். |

சூக்கும பஞ்சாக்கரங்கள் – அகாரம், உகாரம், மகாரம், நாதம், விந்து

இவ்வக்கரங்கள் பகுக்கப்படாது நிற்கும் காலத்து 'பிரணவம்' எனப்படும்.

அத்துவிதம் – இரு பொருளுக்கும் உள்ள சம்பந்த விசேடம்; இரண்டன்று.

| பஞ்சாக்கரம் | அதிதெய்வம் | |
|---|---|---|
| அகாரம் | பிரமா | அகங்காரமாய் நின்று ஆமோ, அன்றோ என்று எழும்பும். |
| உகாரம் | திருமால் | புத்தியாய் நின்று தெளியும். |
| மகாரம் | உருத்திரன் | மனமாய் நின்று பற்றும். |
| விந்து | மகேசுவரன் | சித்தமாய் நின்று சிந்திக்கும். |
| நாதம் | சதாசிவன் | புருடத்துவமாகிய உயிர். |

| பரதுரியம் | மேலானதுரியம். துரியம் – பேருறக்கம். |
|---|---|
| பரசாக்கிரம் | இருந்த நிலையில் உலகினை நுகர்தல். |
| பரசொப்பனம் | அந்நுகர்ச்சியிலே உறுதியான நினைவு. |
| துரியசுழுனை | துரிய நினைப்பு, மாற்று ஞானமயமாதல். |
| உபசாந்தம் (பரதுரியம்) | ஆழமான கடலைப்போல, அலைவு உலைவுமின்றிக் களிப்போடிருத்தல். |
| அரியதுரியம் | உபசாந்த துரிய சுழுத்தியும் நீங்குதல். |

| துரியசாக்கிரம் | ஆன்மாவின் பேருறக்க நிலை |
|---|---|
| துரிய சொப்பனம் | ஆன்மாவின் துடிப்பு |
| துரிய சுழுத்தி | அந்தத் துடிப்பில் பராதீதம் |
| பரதுரியம் | |
| பராவத்தை | துடிப்பும் அடங்குதல் |
| சிவதுரியம் | |
| இவை கடந்தது | சிவ துரியாதீதம் பேரொடுக்கம். |

| | |
|---|---|
| பிருதிவி முதல் மூலப்பிரகிருதி ஈறாக 25 தத்துவங்களும் | ஸ்ரீகண்டருத்திரரால் ஒடுங்கும். |
| மூலப்பிரகிருதிக்கு மேல் உள்ள 6 தத்துவங்களும் | அனந்தேசுவரரால் ஒடுங்கும். |
| சுத்தவித்தை + ஈசுரம், சாதாக்கியம் | சிவசத்தி தத்துவ பாலரான இலய சிவத்தில் ஒடுங்கும். |
| சத்தி + சிவதத்துவம் | சுத்த சிவத்தில் ஒடுங்கும். |

சுத்தமாயை, மாமாயை, குடிலை, குண்டலினி, விந்து – ஒருபொருட்கிளவி.

அசுத்தமாயை, அதோமாயை, மாயை, மோகினி – என்பவை ஒருபொருட்கிளவி

அங்காப்பு முதலிய அக முயற்சியால் பிறப்பது எழுத்தோசை. அதனை புலப்படுத்தலால் எடுத்தல், படுத்தல் முதலிய புற முயற்சியால் பிறப்பது இசையோசை.

## இருவினையொப்பு

உயிரின் அறிவின்கண், நல்வினை, தீவினைகளும், அவற்றின் பயனாகிய இன்ப துன்பங்களும், விருப்பு வெறுப்பின்றி ஒப்பத் தோன்றலேயாகும்.

## மலபரிபாகம்

மலசத்தி தேய்தல். மும்மலங்களும் வினைநுகர்வு காரணமாகப் பரிபாகம் அடைதல்.

## சத்திநிபாதம்

சத்தியினது அருள் பதிதல் என்பது பொருளாகும்.

| | |
|---|---|
| அசுத்தப்பிரபஞ்சம் | ஐம்பூதங்களும் ஆன்ம தத்துவங்களுடன் கூடி அசுத்தப் பிரபஞ்சம் எனப்படும் முக்குணமயமுடையன. |
| மிசிரப்பிரபஞ்சம் | முக்குணங்களைக் கடந்து நிர்க்குணமாய் உள்ளது. ஆயினும் மல கன்மங்களோடு விரவியுள்ளது. |
| சுத்தப்பிரபஞ்சம் | மலகன்மங்களையும் கடந்து நின்மயமாயுள்ளது |

**பராசத்தி** – உயிர்களுக்கு அனுக்கிரக மாத்திரங் குறித்துப் பொதுவகையான் அறிந்தும் அறிவித்தும் நிற்பதாகிய ஞானமொன்றே, சிவசத்தியின் சொரூபம். அதுவே பராசத்தி எனப்படும்.

**ஆதிசத்தி** – இதுவே திரோதானசத்தி. இந்தத் திரோதம் அவதர சத்தியாகிய ஓர் அவதரத்திலே தோன்றுகையால் ஆதிசத்தி எனப் பெயர் பெற்றது. இதற்கு அருட்சத்தி என்றும்பெயர். இதுதான் மற்ற நான்கு கிருத்தியங்கட்கும் காரணமானது. ஆன்மாக்களுக்கு மலத்தைச் செலுத்திப் பக்குவப்படுத்துவது.

**இச்சாசத்தி**–சிவன் ஆன்மாக்களை இரட்சிக்கத் திருவுளங் கொண்டபொழுது அந்த நினைவு எழுந்த அவதரத்துக்கு இச்சாசத்தி என்று பெயர்.

**ஞானசத்தி**–அவ்வாறு ஆன்மாக்களை இரட்சிக்க இச்சை கொண்ட சிவன் அவ்வான்மாக்களுக்குரிய வினைப்பயன்களை அறிந்த அவதரத்துக்கு ஞானசத்தி என்று பெயர்.

**கிரியாசத்தி** – அவ்வாறு அறிந்த வினைப்பயன்களை ஆன்மாக்களுக்கு ஊட்டும் நிமித்தம், அவர்களைப் பிரபஞ்ச காரியப்படுத்தும் அவதரத்துக்குக் கிரியாசத்தி என்று பெயர்.

பராசத்தி ஒன்றே வியாபார பேதத்தால் இவ்வாறு நாமபேதத்தை அடைதலேயன்றி வஸ்து பேதமில்லை. அது, அக்கினியினுடைய உஷ்ணசத்தி ஒன்றாய் இருந்தும், உலோகம், விறகு, உப்பு, அன்னம் முதலிய விஷய பேதத்ததனாலே உருக்குதல், கொளுத்துதல், வெடித்தல், சமைத்தல் என்று வெவ்வேறு பெயரடைவது போலாம். ஆயிரத்தில் ஒரு கூறு என்றது வரையறை செய்தது அன்று; அவை செயற்படும் தாரதம்மியத்தால் என்று கொள்க.

இச்சத்திகளை அதிட்டித்த சிவனும் பராசத்தியை அதிட்டித்தபோது பரசிவமென்றும், ஆதிசத்தியாகிய திரோதான சத்தியை அதிட்டித்தபோது திரோபவன் என்றும், இச்சாசத்தியை அதிட்டித்தபோது இச்சிதா என்றும், ஞானசத்தியை அதிட்டித்தபோது நாதா என்றும், கிரியாசத்தியை அதிட்டித்த போது கர்த்தா என்றும் பெயர் பெறுவர்.

நவந்தரு பேதங்களில் சிவத்திற்குச் சத்தியும், நாதத்திற்கு விந்துவும், இவ்விரண்டு மொழிந்த சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், விட்டுணு, பிரமா என்னும் ஐவர்க்கும் முறையே மனோன்மணி, மகேசை, உமை, இலக்குமி, சரசுவதி என்னும் சத்திபேதம் ஐவகைப்படும், காரிய பேதத்தினாலே சத்தி சிவங்களும் பேதமாயின.

அசுத்த மாயையினின்றும் காலம் முதலிய தத்துவங்கள் தோன்றிய பின்னர், அத்தத்துவங்களுள் ஒன்றாகிய கலாதத்துவத்தினின்றும் குணங்கள் அடங்கியிருக்கின்ற

மூலப்பிரகிருதி முதல்வன் ஆணையால் தோன்றும். அம்மூலப்பிரகிருதியினின்றும் சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் மூவகையான குணதத்துவம் தோன்றும். அக்குண தத்துவத்தில் போகத்துக்குச் சாதகமாகிய புத்தி முதலிய தத்துவங்கள் தோன்றி அத்தத்துவங்ளெல்லாம் குண வடிவமாகவே, முதல்வன் ஆணையால் உயிரைப் பந்திக்கும். அதனால் போகம் அனுபவிக்கும் இடமெல்லாம் உயிரும் அக்குண ரூபமாக நிற்கும்.

**தாமத குணமானது**, ஒன்றிலும் திருப்தியில்லாமையையும், உற்சாகம் இன்மையையும், ஈனப்பிருவிருத்தியையும், கோட்சொல்லுகையையும், அசுத்த உணவை உண்பதையும், அதிகநித்திரையும், கர்வத்தையும், சோம்பலையும், பிறருடைய மதிப்பைக் குறைக்க எண்ணுதலையும், அறிவு இல்லாமையையும், மோகத்தையும் உண்டு பண்ணும்.

**இராசத குணமானது,** லௌகீகப் பிரவிருத்தியையும், கோபம் முதலிய குரூரத்தன்மையையும், யான் எனது என்னும் அபிமானத்தையும், வஞ்சனையையும், இரக்கமில்லாமையையும் போகத்தின்கண் இச்சையையும், டம்பநடையையும் துக்கத்தையும் உண்டுபண்ணும்.

**சாத்துவிக குணமானது,** பொறுமையையும், மனஉறுதியையும், மனத்தின் சூட்சுமத்தையும், துன்பத்திலும் சந்தோஷமாயிருக்கும் தன்மையையும், மனம், வாக்குக் காயம் மூன்றும் கபடமின்றி ஒத்திருக்கும் தன்மையையும், நல்ல உத்தியோகத்தையும், பெற்றது கொண்டே மகிழுந்தன்மையையும், மோட்ச இச்சையையும், இந்திரிய அந்தக்கரணங்களின் அடக்கத்தையும், சகல சீவர்களிடத்தும் இரக்கத்தையும், மிருதுவான உணவை உண்ணுதலையும் உண்டு பண்ணும்.

உ

**சிவசாம்ராஜ்யம்**


சிவம்
பரமசிவம்
ஐந்தொழில் செய்யத் திருவுள்ளம் கொண்டு தனித்திருக்கும் நிலை
பரம சிவத்திடமிருந்து பிரிப்பின்றி நிற்பது
சத்தி
பராசத்தி
அருவ நிலை
பரநாதம்
(ஒலி)
பரவிந்து (ஒளி)
திருவுள்ளத்தைச் செயற்படுத்தும் ஆற்றல்
சுத்தமாயையோடு கூடிய நிலையில்
அபரநாதம்
(இலயசிவம்)
எண்ணுதல் இலய சிவம்
அபரவிந்து
(இலயசத்தி)
எண்ணத்திற்கேற்ப இயக்குதல்
நவந்தரு பேதம்
அருளல்
சதாசிவம்
(இலிங்கம்)
அருவுருவநிலை
மறைத்தல்
மகேச்சுவரம்
ஒடுக்கம்
குணி உருத்திரன்
உருவ நிலை
காத்தல்
திருமால்
படைத்தல்
பிரம்மா
திசைக்காவலர்கள்
இந்திரன், அக்கினி,
எமன், நைருதி,
வருணன், வாயு,
குபேரன், ஈசானன்
மானுடர் உட்பட
எழுவகை,
நால்தோற்றப் பிறப்புகள்
புவனாபதிகள்
பிறபணி தெய்வங்கள்
சிறுதெய்வங்கள்

இவை போன்ற ஏராளமான நுட்பங்களைத்தொகுத்து, நூலாக வெளியிட்டு, வழிபாட்டு கருத்தரங்கம் நடத்துதற்குத் திருவருள் கூட்டுவித்த நிலையில் ஏற்கனவே நிகழ்ந்த பன்னிரு திருமுறை ஆய்வுக் கருத்தரங்குகளைக் கீழ்க்கண்டவாறு நினைவுகூர்வோம்.

| | |
|---|---|
| முதல் திருமுறை | டிசம்பர் 27, 28.2014 |
| இரண்டாவது திருமுறை | பிப்ரவரி 21, 22.2015 |
| மூன்றாம் திருமுறை | ஏப்ரல் 18, 19.2015 |
| நான்காம் திருமுறை | ஜீன் 27, 28.2015 |
| ஐந்தாம் திருமுறை | ஆகஸ்டு 29, 30.2015 |
| ஆறாம் திருமுறை | அக்டோபர் 24, 25-2015 |
| ஏழாம் திருமுறை | டிசம்பர் 26, 27-2015 |
| எட்டாம் திருமுறை - I | பிப்ரவரி 27, 28 - 2016 |
| எட்டாம் திருமுறை - II | ஏப்ரல் 23 - 2016 |
| ஒன்பதாம் திருமுறை | ஏப்ரல் 24 - 2016 |
| பத்தாம் திருமுறை - I | ஜீன் 26, 27, 2016 |
| பத்தாம் திருமுறை - II | ஆகஸ்ட் 27, 28, 2016 |

அதன் வரிசையில், வரும் அக்டோபர் மாதத்தில் பத்தாம் திருமுறை, மூன்றாம் தொகுதிக் கருத்தரங்கமானது, 7, 8 மற்றும் 9—ஆம் தந்திரங்களுடன் கீழ்க்கண்ட அட்டவணைப்படி நடைபெறும்.

## நிகழ்ச்சி நிரல்

| அமர்வுகள் | | | பாடல் எண்கள் | பாடல்களின் எண்ணிக்கை | மொத்தப் பாடல்கள் | சொற்பொழிவாளர் நாள் / நேரம் |
|---|---|---|---|---|---|---|
| | I ஏழாம் தந்திரம் | | | | | |
| | 1. | ஆறாதாரம் | 1681-1688 | 8 | | |
| | 2. | அண்டலிங்கம் | 1689-1702 | 14 | | |
| | 3. | பிண்டலிங்கம் | 1703-1706 | 4 | | |
| | 4. | சதாசிவ லிங்கம் | 1707-1729 | 23 | | |
| | 5. | ஆத்தும லிங்கம் | 1730-1739 | 10 | | மகா வித்துவான் மயிலம் |
| முதல் | 6. | ஞானலிங்கம் | 1740-1749 | 10 | | **வே. சிவசுப்பிரமணியம்** அவர்கள் |
| **அமர்வு** | 7. | சிவலிங்கம் | 1750-1754 | 5 | 158 | 22.10.2016 சனி |
| | 8. | சம்பிரதாயம் | 1755-1768 | 14 | | காலை 09.00 - 11.00 |
| | 9. | திருவருள்வைப்பு | 1769-1789 | 21 | | |
| | 10. | அருளொளி | 1790-1798 | 9 | | |
| | 11. | சிவபூசை | 1799-1819 | 21 | | |
| | 12. | குருபூசை | 1820-1829 | 10 | | |
| | 13. | மகேசுர பூசை | 1830-1838 | 9 | | |
| | 14 | அடியார் பெருமை | 1839-1853 | 15 | | |
| | 15. | போசன விதி | 1854-1855 | 2 | | |
| | 16. | பிட்சா விதி | 1856-1861 | 6 | | |
| | 17. | முத்திரை பேதம் | 1862-1871 | 10 | | |
| | 18. | பூரண குகை நெறிச் சமாதி | 1872-1879 | 8 | | |
| | 19. | சமாதிக் கிரியை | 1880-1892 | 13 | | |
| | 20. | விந்துற்பனம் | 1893-1906 | 14 | | பேராசிரியர் **ம.வே. பசுபதி** |
| **இரண்டாம்** | 21. | விந்துஜயம்-போகசர ஓட்டம் | 1907-1943 | 37 | | அவர்கள் |
| **அமர்வு** | 22. | ஆதித்த நிலை-அண்டாதித்தன் | 1944-1953 | 10 | 161 | 22.10.2016 சனி |
| | 23. | பிண்டாதித்தன் | 1954-1956 | 3 | | நண்பகல் 11.00 - 01.00 |
| | 24. | மனவாதித்தன் | 1957-1961 | 5 | | |
| | 25. | ஞானாதித்தன் | 1962-1969 | 8 | | |
| | 26. | சிவாதித்தன் | 1970-1973 | 4 | | |
| | 27. | பசு இலக்கணம்-பிராணன் | 1974-1975 | 2 | | |
| | 28. | புருடன் | 1976-1979 | 4 | | |
| | 29. | சீவன் | 1980-1983 | 4 | | |
| | 30. | பசு | 1984-1985 | 2 | | |
| | 31. | போதன் | 1986-1991 | 6 | | |
| | 32. | ஐந்திந்திரியம் அடக்கும் அருமை | 1992-1999 | 6 | | |
| | 33. | ஐந்திந்திரியம் அடக்கும் முறைமை | 2000-2012 | 13 | | |
| | 34. | அசற்குரு நெறி | 2013-2017 | 5 | | |
| | 35. | சற்குரு நெறி | 2018-2035 | 18 | | பேராசிரியர் **புரிசை நடராசன்** |
| **மூன்றாம்** | 36. | கூடா ஒழுக்கம் | 2036-2051 | 16 | 154 | அவர்கள் |
| அமர்வு | 37. | கேடுகண்டிரங்கல் | 2052-2069 | 18 | | 22.10.2016 சனி |
| | 38. | இதோபதேசம் | 2070-2088 | 19 | | பிற்பகல் 02.00 - 04.00 |

| | II எட்டாம் தந்திரம் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 1. | உடலிற் பஞ்சபேதம் | 2089-2106 | 18 | | |
| | 2. | உடல் விடல் | 2107-2109 | 3 | | |
| | 3. | அவத்தை பேதம் - கீழாலவத்தை | 2110-2134 | 25 | | |
| | 4. | மத்திய சாக்கிராவத்தை | 2135-2150 | 16 | | |
| | 5. | அத்துவாக்கள் | 2151-2153 | 3 | | |
| நான்காம் அமர்வு | 6. | சுத்த நனவாதி பருவம் | 2154-2193 | 40 | 167 | சிவத்திரு ப. **குமரலிங்கம்** அவர்கள் 22.10.2016 சனி மாலை 04.00 - 06.00 |
| | 7. | கேவல சகல சுத்தம் | 2194-2235 | 42 | | |
| | 8. | பராவத்தை | 2236-2261 | 26 | | |
| | 9. | முக்குண நிர்க்குணங்கள் | 2262 | 1 | | |
| | 10. | அண்டாதி பேதம் | 2263-2264 | 2 | | |
| | 11. | பதினொன்றாந் தானமும் அவத்தை எனக் காணல் | 2265-2267 | 3 | | |
| | 12. | கலவு செலவுகள் | 2268-2269 | 2 | | |
| | 13. | நின்மலாவத்தை | 2270-2320 | 51 | | |
| ஐந்தாம் அமர்வு | 14. | அறிவுதயம் | 2321-2334 | 14 | 1170 | சிவத்திரு சு. **குஞ்சிதபாதம்** அவர்கள் 23.10.2016 ஞாயிறு காலை 09.00 - 11.00 |
| | 15. | ஆறந்தம் | 2335-2369 | 35 | | |
| | 16. | பதி பசு பாசம் வேறின்மை | 2370-2389 | 20 | | |
| | 17. | அடிதலை அறியும் திறம் கூறல் | 2390-2399 | 10 | | |
| | 18. | முக்குற்றம் | 2400-2401 | 2 | | |
| | 19. | முப்பதம் | 2402-2409 | 8 | | |
| | 20. | முப்பரம் | 2410-2416 | 7 | | |
| | 21. | பரலக்கணம் | 2417-2430 | 14 | | |
| | 22. | முத்துரியம் | 2431-2438 | 8 | | |
| | 23. | மும்முத்தி | 2439-2442 | 4 | | |
| | 24. | முச்சொரூபம் | 2443-2449 | 7 | | |
| | 25. | முக்கரணம் | 2450-2452 | 3 | | |
| | 26. | முச்சூனிய முத்தொந்தத்தசி | 2453-2459 | 7 | | |
| | 27. | முப்பாழ் | 2460-2465 | 6 | | |
| | 28. | காரிய காரண உபாதி | 2466-2469 | 4 | | |
| | 29. | உபசாந்தம் | 2470-2475 | 6 | | |
| | 30. | புறங்கூறாமை | 2476-2490 | 15 | | |
| ஆறாம் அமர்வு | 31. | அட்டதளகமல முக்குண அவத்தை | 2491-2500 | 10 | 173 | சிவத்திரு **சிவ. காந்தி** அவர்கள் 23.10.2016 ஞாயிறு நண்பகல் 11.00 - 01.00 |
| | 32. | நவாவத்தை அபிமானி | 2501-2509 | 9 | | |
| | 33. | சுத்தா சுத்தம் | 2510-2520 | 11 | | |
| | 34. | மோட்ச நிந்தை | 2521-2527 | 7 | | |
| | 35. | இலக்கணாத்திரயம் | 2528-2529 | 2 | | |
| | 36. | தத்துவமசி மகா வாக்கியம் | 2530-2546 | 17 | | |

| | 37. | விசுவக்கிராசம் | 2547-2554 | 8 | | |
|---|---|---|---|---|---|---|
| | 38. | வாய்மை | 2555-2568 | 14 | | |
| | 39. | ஞானிகள் செயல் | 2569-2571 | 3 | | |
| | 40. | அவாவறுத்தல் | 2572-2580 | 9 | | |
| | 41. | பத்தியுடைமை | 2581-2590 | 10 | | |
| | 42. | முத்தியுடைமை | 2591-2592 | 2 | | |
| | 43. | சோதனை | 2593-2605 | 13 | | |
| | | III ஒன்பதாம் தந்திரம் | | | | |
| | 1. | குருமட தரிசனம் | 2606-2611 | 6 | | |
| | 2. | ஞானகுரு தரிசனம் | 2612-2630 | 19 | | |
| | 3. | பிரணவ சமாதி | 2631-2636 | 6 | | |
| | 4. | ஒளிவகை | 2637-2653 | 17 | | |
| | 5. | பஞ்சாக்கரம்-தூலம் | 2654-2663 | 10 | | |
| ஏழாம் அமர்வு | 6. | பஞ்சாக்கரம்-சூக்குமம் | 2664-2668 | 5 | 157 | சிவத்திரு **சொ.சொ.மீ. சுந்தரம்** அவர்கள் 23.10.2016 ஞாயிறு பிற்பகல் 02.00 - 04.00 |
| | 7. | அதிசூக்கும பஞ்சாக்கரம் | 2669-2671 | 3 | | |
| | 8. | காரண பஞ்சாக்கரம் | 2672-2674 | 3 | | |
| | 9. | மகாகாரண பஞ்சாக்கரம் | 2675-2678 | 4 | | |
| | 10. | திருக்கூத்து | 2679-2680 | 2 | | |
| | 11. | சிவானந்தக் கூத்து | 2681-2688 | 8 | | |
| | 12. | சுந்தரக் கூத்து | 2689-2694 | 6 | | |
| | 13. | பொற்பதிக் கூத்து | 2695-2705 | 11 | | |
| | 14. | பொற்றில்லைக் கூத்து | 2706-2718 | 13 | | |
| | 15. | அற்புதக் கூத்து | 2719-2760 | 42 | | |
| | 16. | ஆகாசப்பேறு | 2761-2770 | 10 | | |
| | 17. | ஞானோதயம் | 2771-2781 | 11 | | |
| | 18. | சத்திய ஞானானந்தம் | 2782-2790 | 9 | | |
| | 19. | சொரூப உதயம் | 2791-2801 | 11 | | |
| | 20. | ஊழ் | 2802-2807 | 6 | | |
| | 21. | சிவரூபம் | 2808-2810 | 3 | | |
| | 22. | சிவதரிசனம் | 2811-2818 | 8 | | |
| | 23. | முத்திபேதம் கரும நிருவாணம் | 2819-2820 | 2 | | |
| எட்டாம் அமர்வு | 24. | சூனிய சம்பாடணை | 2821-2887 | 67 | 180 | முதுமுனைவர் **ந.இரா. சென்னியப்பனார்** அவர்கள் 23.10.2016 ஞாயிறு மாலை 04.00 - 06.00 |
| | 25. | மோனசமாதி | 2888-2907 | 20 | | |
| | 26. | வரையுரை மாட்சி | 2908-2910 | 3 | | |
| | 27. | அணைந்தோர் தன்மை | 2911-2932 | 22 | | |
| | 28. | தோத்திரம் | 2933-2978 | 46 | | |
| | 29. | சருவ வியாபகம் | 2979-3000 | 22 | | |

இரண்டு திங்களுக்கு ஒருமுறை சுமார் பன்னூறு பாடல்கள் கொண்ட ஒரு திருமுறையை முறையாகப் படித்து, அச்சுப்பிழை பலமுறை பார்த்துக் கடின உழைப்பின் பயனாக நூலை வெளியிடும், முனைவர் ப. தமிழரசியைத் தலைவராகக் கொண்டு செயல்படும் தமிழ்த்துறையின், முனைவர் இரா. மதன்குமார், முனைவர் ச. கவிதா, முனைவர் செ. ஆறுச்சாமி உள்ளிட்ட தமிழ்த்துறையினருக்கும், நூலாக்க ஒருங்கிணைப்புப் பணியில் செயலாற்றுகின்ற திரு. ப. வெள்ளிங்கிரி அவர்களுக்கும், கணினி நிபுணர்களான திரு. மு. மகேஷ், திரு. து. சசி அவர்களுக்கும், நூலைச் சிறப்பாக வெளியிடும் செஞ்சுடர் அச்சகத்தார்க்கும் மனமுவந்த நன்றிகள். அவர்கள் இம்மை, மறுமை இன்பம் பெறுவார்களாக.

மென்னூல் வடிவம் www.panniruthirumurai.org என்ற இணையமுகவரியில் உள்ளது. அன்பர்கள் படித்தும், படியெடுத்தும், தாங்கள் பெற்ற இன்பத்தை மற்றவர்க்கு எடுத்துரைத்தும் இன்புற அன்புடன் அழைக்கின்றோம்.

அனைவரும் வருக.

நன்றி.

அன்பன்,

**இராச. வசந்தகுமார்**
நிறுவன வேந்தர்
கற்பகம் பல்கலைக்கழகம்

24.09.2016
கோவை – 21

# திருமந்திர நூலமைப்பு

(ஏழு, எட்டு, ஒன்பதாம் தந்திரங்கள்)

ஏழாந்தந்திரம், ஆறாதாரம் முதல் இதோபதேசம் ஈறாக முப்பத்தெட்டு உட்பிரிவுகளையுடையதாகும். இதனுட் கூறப்படும் பொருள்களுள், ஆறாதார நிலைகள், சிவலிங்க பேதங்கள், அருளொளி, குருலிங்க சங்கம வழிபாடு, ஆதித்தர் வகை, ஐம்பொறிகளையடக்கும் முறை, சற்குரு, இதோபதேசம் என்பன சிறப்பாகக் குறிப்பிடத்தக்கனவாகும். இவை மேற்குறித்த தசகாரியங்களுள் சிவரூபம், சிவதரிசனம் என்னும் இரண்டையும் விளக்குவன. போசனவிதி, பிட்சாவிதி, பூரணக் குகைநெறிச் சமாதி, சமாதிக்கிரியை, விந்துச்சயம் என்பன, ஞானம் பெறுதற்குத் துணையாகவுள்ள நல்லொழுக்க நெறிகளை அறிவுறுத்துவனவாகும். மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களுள் வைத்து அண்டலிங்கம் முதலிய அறுவகை இலிங்கங்களையும் கண்டு வழிபடுதலும், அருளொளிக்குள் ஒடுங்கியிருந்து குருலிங்க சங்கமம் என்னும் மூன்றிடங்களிலும் சிவபெருமானை வெளிப்படக் கண்டு வழிபடுதலும் ஆகிய இவை, அகமும் புறமுமாகச் செய்தற்குரிய வழிபாடுகள் எனச் சைவநூல்கள் கூறும். ஐந்திந்திரியம் அடக்கும்முறை, கூடாவொழுக்க நீத்தல், கேடுகண்டிரங்கல் என்ற தலைப்புகளிலுள்ள திருமந்திரப் பாடல்கள், நல்லொழுக்கநெறியில் நின்று இறைவனை வழிபடுவோர்பால், குற்றங்கள் நீங்க இன்றியமையாது இருத்தற்குரிய நற்பண்புகளை விளக்குவனவாகும். இத்தந்திரத்தின் இறுதியிலுள்ள இதோபதேசம் என்ற பகுதி பொதுவாக உலக மக்களனைவரும், சிறப்பாகச் சிவநெறிச் செல்வர்களும் அன்புடன் கடைப்பிடித்தொழுகி உய்தி பெறுதற்குரிய நல்லுரைகளைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது.

செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை
வல்ல பரிசால் உரைமின்கள் வாய்மையை
இல்லை யெனினும் பெரிதுளன் எம்மிறை
நல்ல வரனெறி நாடுமி னீவிரே. **– (திருமந்திரம் – 2071)**

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே. **– (திருமந்திரம் – 2072)**

இக்காயம் நீக்கி இனியொரு காயத்தில்
புக்கும் பிறவாமல் போம்வழி நாடுமின்
எக்காலத்து இவ்வுடல் வந்து எமக்கு ஆனதென்று
அக்காலம் உன்ன அருள் பெறலாமே. **– (திருமந்திரம் – 2074)**

கூடியும் நின்றுந் தொழுதெம் மிறைவனைப்
பாடியுளே நின்று பாதம் பணிமின்கள்
ஆடியுளே நின் றறிவுசெய் வார்கட்கு
நீடிய வீற்றுப் பசுவது வாமே. **– (திருமந்திரம் – 2077)**

சார்ந்தவர்க் கின்பங் கொடுக்குந் தழல்வண்ணன்
பேர்ந்தவர்க் கின்னாப் பிறவி கொடுத்திடும்
கூர்ந்தவர்க் கங்கே குரைகழல் காட்டிடும்
சேர்ந்தவர் தேவரைச் சென்றுணர்வாரே. **– (திருமந்திரம் – 2081)**

எனவரும் திருமந்திரப் பாடல்கள் இங்கு நினைக்கத்தக்கனவாகும்.

எட்டாந் தந்திரம், உடலிற் பஞ்சபேதம் என்பது முதல் சோதனை என்பது ஈறாக, நாற்பத்து மூன்று உட்பிரிவுகளையுடையது. இதன்கண் உடலிற் பஞ்சபேதம், சாக்கிரம் முதலிய அவத்தை பேதங்கள், கேவல சகல சுத்தம் என்னும் மூவகை நிலைகள், அறிவுதயம், ஆறந்தம், மகா வாக்கியம், வாய்மை, அவாவறுத்தல், பத்தியுடைமை, சோதனை முதலிய பொருள்கள் விரித்துரைக்கப்பெற்றுள்ளன. சிவ தரிசனத்தின் பின் சிவனொடு கூடுதல் என்னும் சிவயோக நிலையினை உணர்த்துதல் எட்டாந் தந்திரத்தின் கருத்தென்பர் பெரியோர். இத்தந்திரத்திற் கூறப்படும் சிவயோக நிலைகள் பற்றிய அரும்பொருள்களும், மேற்கூறப்பட்ட அட்டாங்கயோகம் முதலிய நுண்பொருள்களும், அநுபவமுடைய ஆசிரியர்களை வழிபட்டு, அவர்கள் அறிவுறுத்திய நெறியில்நின்று, உணர்ந்து கொள்ளத்தக்கனவன்றி, ஏனையோரால் எளிதில் உணரத்தக்கன அல்ல.

இத் தந்திரத்தில் அடிதலையறியுந் திறங்கூறல் என்ற பகுதி, ஆன்மா இறைவன் திருவருளில் தலைப்பட்டுத் தாடலை போல் அடங்கி நிற்றலாகிய அத்துவித நிலையினைப் புலப்படுத்துவதாகும். மகா வாக்கியம் என்ற பகுதியில் 'தத்துவ மசி' எனவும் சிவாத்துவிதம் எனவும், அருமறைகளிற் கூறப்படும் சித்தாந்த நுண்பொருள் விரித்துரைக்கப்படுகின்றது.

வாய்மை வழிநின்று தன்னையறிந்திடும் தத்துவஞானிகள், அவாவறுத்து இறைவன்பால் எல்லையற்ற பத்தியுடையராய் சிவயோகத்தின் முடிந்த நிலையில் நிற்குந்திறத்தினை விளக்குவன, இத்தந்திரத்தில், வாய்மை, ஞானிசெயல், அவாவறுத்தல், பத்தியுடைமை, சோதனை என்ற தலைப்புகளில் அமைந்த கீழ்க்காண் திருமந்திரப் பாடல்கள் போற்றிப் பரவ வேண்டுவனவாகும்.

மெய்கலந்தாரொடு மெய்கலந்தான்மிகப்
பொய்கலந்தாருட் புகுதா ஒருவனைக்
கைகலந்தாவி யெழும்பொழு தண்ணலைக்
கைகலந் தார்க்கே கருத்துற லாமே. **2560**

தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே. **2570**

ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்
ஆசை படப்பட வாய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட வானந்த மாமே. **2574**

அடியா ரடியா ரடியார்க் கடிமைக்
கடியனாய் நல்கிட் டடிமையும் பூண்டேன்
அடியா ரருளால் அவனடி கூட்ட
அடியா னிவனென் றடிமை கொண்டானே. **2582**

ஆன்கன்று தேடி யழைக்கு மதுபோல்
நான்கன்றாய் நாடியழைத் தேனென் நாதனை
வான்கன்றுக் கப்பாலாய் நின்ற மறைப்பொருள்
ஊன் கன்றாய் நாடிவந் துள்புகுந் தானே. **2585**

முத்தியில் அத்தன் முழுத்த அருள்பெற்றுத்
தத்துவ சுத்தி தலைப்பட்டுத் தன்பணி
மெய்தவஞ் செய்கை வினைவிட்ட மெய்யுண்மைப்
பத்தியி லுற்றோர் பரானந்த போதரே. **2591**

பெம்மான் பெருநந்தி பேச்சற்ற பேரின்பத்
தம்மா னடிதந் தருட்கட லாடினோம்
எம்மாய மும்விடுத் தெம்மைக் கரந்திட்டுச்
சும்மா திருந்திடஞ் சோதனை யாகுமே. **2593**

இந்நூலின் நிறைவான ஒன்பதாந்தந்திரம், தச காரியத்துள் ஒன்றாகிய சிவபோகம் என்னும் பேரின்ப நிலையை விளக்கும் முறையில் அமைந்துள்ளது. ஈண்டுச் சிவபோகம் என்றது, உயிர் யோகத்தாற் சிவத்துடன் கூடிய நிலையில் தன்னை மறந்து அம்முதல்வனது பேரருளில் திளைத்து இன்புறுதலாகிய சிவசாயுச்சிய நிலையினை. இத்தந்திரம் குருமடதரிசனம் என்பது முதலாகச் சர்வ வியாபி என்பதீறாக இருபத்திரண்டு உட்பிரிவுகளையுடையதாகும். இதன்கண் கூறப்படும் குருமடதரிசனம், ஞானகுரு தரிசனம், திருக்கூத்துத் தரிசனம், ஆகாசப்பேறு, ஞானோதயம், சத்திய ஞானானந்தம், சொரூப உதயம், சிவ தரிசனம், சிவரூப தரிசனம் என்னும் பகுதிகள், சிவயோகியர்களின் அநுபவ நிலைகளைக் குறிப்பன ஆகும். பிரணவ சமாதி, தூல, சூக்கும, அதி சூக்கும பஞ்சாக்கரங்கள், மோனசமாதி என்னும் பகுதிகள், எல்லாப் பொருள்களையுந் தன்னகத்தே அடக்கியுள்ள திருவைந்தெழுத்தினை அவ்வத்தானங்களில் வைத்துத் தியானிக்கும் நிலையிற் சிவபோகத்து அழுந்துந் திறனைத் தெளிய அறிவுறுத்துவன ஆகும். திருவைந்தெழுத்தினைக் குறித்துத் திருமூலதேவர் இந்நூலில் அறிவுறுத்திய உண்மைகள், உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன் முதலிய மெய்கண்ட நூல்களில் எடுத்தாளப்பெற்று உள்ளமை உணர்ந்து போற்றத்தக்கதாகும். திருக்கூத்துத்தரிசனம் என்ற பகுதி, சைவத்தின் மிகச்சிறந்த நுண்பொருள்களை விளக்குவது. இதில் சிவானந்தக் கூத்து என்றது, சிவஞானிகள், என்றும் தம் மெய்யுணர்வினிற் கண்டு அநுபவிக்கத்தக்க நித்தியமாகிய ஆனந்தக் கூத்தாகும். இதன் நுட்பத்தினை,

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த பொன்சடை
பின்றயங்க ஆடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினாய் கூடலால வாயிலாய்
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. **(3–52–6)**

என வரும் திருப்பாடலில் ஆளுடைய பிள்ளையாரும்,

'குறியொன்றுமில்லாத கூத்தன்றன் கூத்து' **(திருவாசகம்)**

எனத் திருவாதவூரடிகளும் குறித்துப் போற்றியுள்ளமை நினைக்கத்தக்கதாம். பக்குவமுடைய சிவஞானிகளுக்குச் சிறப்பு முறையில் நிகழ்த்தப்பெறும் இத்திருக்கூத்தினையன்றி, உலக உயிர்கள் யாவும் நலம்பெற்றுய்தல் வேண்டும் என்னும் பொதுநிலையில், இறைவனால் நிகழ்த்தப்பெறுந் திருக்கூத்து, சுந்தரக்கூத்து, பொற்பதிக்கூத்து, பொற்றில்லைக் கூத்து, அற்புதக்கூத்து என்னும் தலைப்புகளில் வைத்து இத்தந்திரத்தில் விரித்துரைக்கப்பெறுகின்றது.

இதன்கண்வரும் சூனியசம்பாஷணை என்ற பகுதி, உணர்தற்குரிய உயர்ந்த ஞான நுண்பொருள்களைக் கேட்போர் எளிதின் மனங்கொள்ளும் வண்ணம், உருவக வாய்பாட்டால் மறைத்துக்கூறும் மறைபொருட் கிளவிகள் ஆக அமைந்துள்ளது. பொருள்களை ஆராய்ந்துபார்க்கும் அறிவுடைய ஆன்மாவின் உறையுளாகிய உடம்பின்கண்ணே, உயிர்க்கு நற்பயன் தரும் அறிகருவிகளாகிய ஐம்பொறிகள் உள்ளன. அவை ஐந்தும் தம்மை நல்வழியிற் செலுத்தும் ஆசிரியனைப் பெறாமையால் சீவபோதமாகிய வெறிகொண்டு புலன்களின் வழியே உழல்கின்றன. அவை, தீதின்றி நன்றின்பாற் செலுத்தவல்ல ஆசிரியனைப் பெற்று, அவனது உபதேசத்தின் வழி தற்போதம் அடங்கப்பெறின், அவை ஐந்தும் உயிர்க்குச் சிவஞானமாகிய பாலை நிரம்பத்தருவன என்னும் அரிய உண்மையினை விளக்கும் விடுகதை போன்று அமைந்தது,

பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரு மின்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினாற்
பார்ப்பான் பசு ஐந்தும் பாலாச் சொரியுமே. **(2838)**

எனவரும் திருமந்திரமாகும். இதுபோன்று இப்பகுதியில் வரும் பாடல்களை ஒப்பொடு புணர்ந்த உவமம், தோன்றுவது கிளந்த துணிவு ஆகிய பிசி என்னும் செய்யுள் வகையினை ஒத்து அமைந்திருத்தல் காணலாம். இவ்வாறு மறை பொருட்கிளவிகளாக வரும் திருமந்திரப் பாடல்களுக்கு அநுபவம் உடைய நல்லறிஞர்களைக் கொண்டு தெளிவான முறையில் பொருள் விளக்கங் காணுதல் தமிழ்வளர்ச்சிக்கும் சமயவளர்ச்சிக்கும் நற்பணியாகும்.

இவ் ஒன்பதாந் தந்திரத்தின் இறுதியிலமைந்த வரையுறைமாட்சி, அணைந்தோர்தன்மை, தோத்திரம், சர்வ வியாபி என்னுந் தலைப்புக்களில் உள்ள திருமந்திரப் பாடல்கள், பசுகரணங்களெல்லாம் சிவகரணங்களாகப் பெற்றுச் சிவபோகத்தில் திளைத்தின்புறும் அருளாளர்கள் ஆகிய சீவன் முத்தர்களது இயல்பினை இனிது புலப்படுத்துவனவாகும்.

உ
*சிவமயம்*
*திருச்சிற்றம்பலம்*

# திருமூலதேவ நாயனார்

*அருளிச்செய்த*

# திருமந்திரம்

## பத்தாம் திருமுறை

## ஏழாம் தந்திரம்

### 1. ஆறாதாரம்

*ஐந்தாம் தந்திரத்தில் சிவநெறி ஒழுகலாறுகள் அனைத்தையும் தொகுத்துணர்த்தும் வகையில் சரியை முதலிய நான்கு நெறியினையும் உணர்த்தி, முன் தந்திரத்தில் அந்நெறி நிற்றற்குரியாரது நிலைகளை உணர்த்திய நாயனார், அந்நெறியில் அவர் நின்று சிவனை உணருமாற்றை இத்தந்திரத்தில் யோகம் முதலாக உணர்த்துவராய், முதற்கண் யோகத்தின் முதற்படி ஆதாரயோகம் ஆதலை உணர்த்த ஆறு ஆதாரங்களின் இயல்பைக் கூறுகின்றார்.*

**1681.** நாலும் இருமூன்றும் ஈரைந்தும் ஈராறும்
கோலின்மேல் நின்ற குறிகள் பதினாறும்
மூலங்கண் டாங்கே முடிந்த முதல் இரண்டும்
காலங்கண் டான்அடி காணலும் ஆமே. 1

---

*1681. **தெளிவுரை :-** ஆறு ஆதாரங்களுள் மூலாதாரம் முதலிய ஐந்தனையும் முதலில் நன்கு தரிசித்து, அதன்பின் ஆறாவதாய் உள்ள ஆஞ்ஞையைத் தரிசிக்கும் பொழுது சிவனது திருவடியைத் தரிசித்தல் கூடும்.*

*1682. **தெளிவுரை :-** பிரணவ கலைகளில் பன்னிரண்டளவும் ஏறிக்காணின், நாதத்தளவும் செல்லலாம். பதினாறளவும் ஏறிக் காணின், நாதத்தைக் கடக்கலாம். மேதை முதலாக நாதாந்தம் ஈறாக உள்ள கலைகளுக்கு மேல் உள்ளது பராசத்தியே. அந்த சத்தி ஞானமயமானது; விகாரம் அற்றது. அதுவே ஞானத்தைப் பெறும் இடமாகும். மேதை முதலாகச் சொல்லப்படுகின்ற பிராசாதகலா யோகத்தின் உண்மை இதுவாகும்.*

*குறிப்புரை :- இதன் விளக்கங்களை மூன்றாம் தந்திரத்துள் 'கலை நிலை' என்னும் அதிகாரத்திற் காண்க. 'போத ஆலயத்து அவிகாரந் தனில் போதம் உளது' என்க. பிராசாத யோகத்தின் பயன் ஆதார நிராதாரங்களைக் கடக்கும்*

| வ. எண் | ஆதாரத்தின் பெயர் | தாமரை வடிவம் | குறியீடு | பஞ்சபூதம் | பீஜம் | அதி தெய்வம் | சிறப்பு எழுத்துக்கள் | இருப்பிடம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | மூலாதாரம் | நாலிதழ் | நாற்கோணம் | நிலம் (மஞ்சள்) | ணம் - பூமி பீஜம் | பிரம்மா | 4 எழுத்துக்கள் | கருவாய்க்கும் எருவாய்க்கும் இடையில் |
| 2. | சுவாதிட்டானம் | ஆறிதழ் | பிறைமதி | நீர் | வம், அப்பு பீஜம் | விட்டுணு இராகினி | 6 எழுத்துக்கள் | கருவாய்க்கும் நாபிக்கும் இடையில் |
| 3. | மணிபூரகம் | பத்திதழ் | முக்கோணம் | நெருப்பு | ரம் - அக்னி பீஜம் | உருத்திரக லாகினி | 10 எழுத்துக்கள் | நாபி (அ) தொப்பூழில் |
| 4. | அநாகதம் | பன்னி ரெண்டு இதழ் | அறுகோணம் | வாயு (காற்று) | யம் - வாயு பீஜம் | மகேசுவரன் (அ) ஈசானன் | 12 எழுத்துக்கள் | இதயத்தானம் |
| 5. | விசுத்தி | பதினாறு இதழ் | வட்டம் | ஆகாயம் | ஹம்-ஆகாய பீஜம் | சதாசிவம் | 16 எழுத்துக்கள் | கழுத்தினடி |
| 6. | ஆக்ஞை | ஈரிதழ் | | ஹம்ஸ வடிவான சிவம் | | பரசிவம் | 2 எழுத்துக்கள் | புருவநடு |

**1682.** ஈராறு நாதத்தில் ஈரெட்டாம் அந்தத்தின்
மேதாதி நாதாந்த மீதாம் பராசக்தி
போதா லயத்து அவிகாரந் தனில்போதம்
மேதாதி ஆதார மீதான உண்மையே. 2

**1683.** மேலென்றும் கீழென் றிரண்டறக் காணுங்கால்
தானென்றும் நானென்றும் தன்மைகள் ஓராறும்
பாரெங்கு மாகிப் பரந்த பராபரன்
காரொன்று கற்பக மாகிநின் றானே. 3

---

*முறையால் பராசத்தியே வடிவமாகப் பரமசிவன் நிற்கும் இடமாகிய மீதானத்தை அடைதலும், அங்ஙனம் அடைதலாலே பரமபந்தமாகிய நாதத்தையும் கடந்து 'சேவுயர் கொடியினான்றன் சேவடி சேர்தலும்" (சிவஞான சித்தியார், சூ.1) ஆகும் என்றபடி. இதன் முதல் அடி உயிரெதுகை பெற்றது.*

*இதனால் பிராசாத யோகத்தின் முடிநிலை இயல்பு கூறப்பட்டது.*

***1683. தெளிவுரை :-** வேற்றுமை யுணர்வின்றித் தியானிக்கின் தியானிக்கும் சாதகனும் பரம்பொருளாய் எங்கும் நிறைந்திருத்தலை அறியலாம் எனல் நுதலிற்று.*

*மேல் கீழ் என்னும் பாகுபாடின்றிச் சமபுத்தி பண்ணுங்கால், சிவோகம் எனத் தியானிக்கும் ஆன்மா, இறைவற்குரிய ஆறு குணங்களையும் பெற்று, உலகமெங்கும் நிறைந்த பொருளாய், பராபரமாகிய காரணி கற்பகமாகி நிற்பன் என்றவாறு.*

*திரிபுடி ஞானத்தால் அன்றி, அபேத ஞானத்தால் அறியின் சிவமேயாய் விளங்குவன் என்பது கருத்து.*

***குறிப்புரை :-** மேல்கீழ் என்பன பொருள்கள்மீது உள்ள குணரூப தன்மங்களால் விளையும் விகற்ப உணர்வு. அஃது உளதாம் வரை உண்மை ஞானம் உளதாகாது. ஆகலின், சமபுத்தியுடன் அறிய வேண்டும் என்பார். 'மேல் என்று கீழ் என்று இரண்டறக் காணுங்கால்' என்று அருளினார். மேலென்றும் கீழென்று எனப் பாடங்கொள்வாரும் உளர், என்று என்பதே உம்மைப் பொருளை உணர்த்துதலின் மேலும் உம்மை வேண்டா என்க.*

*இதனால் பிராசாத யோகத்தின் முடிநிலைப் பயன் கூறப்பட்டது.*

***1684. தெளிவுரை :-** ஆதார யோகத்தால் எய்தும் பயன் நாடிகள் சுத்தியாகி, அமுதம் நிரம்பப் பெறுதலே, (அதனால் மனம் ஒருங்கிய தியான சமாதிகளே உண்டாகும்). ஆகவே, பிராசாத யோகத்தில் பதினாறாவது கலைக்கு அப்பால்*

**1684.** ஆதார சோதனை யால்நாடி சுத்திகள்
மேதாதி ஈரெண் கலாந்தத்து விண்ணொளி
போதா லயத்துப் புலன்கர ணம்புந்தி
சாதா ரணம்கெட்டாற் றான்சக மார்க்கமே. **4**

**1685.** மேதாதி யாலே விடாதோம் எனத் தூண்டி
ஆதார சோதனை அத்துவ சோதனை
தாதார மாகவே தான்எழச் சாதித்தால்
ஆதாரம் செய்போக மாவது காயமே. **5**

---

*உள்ள மீதானத்திற்றான் மேல் உள்ள மந்திரத்தில் கூறியவாறு 'சிதாகாசம்' எனப்படுகின்ற பராசத்தியின் விளக்கம் உள்ளது. "போதாலயம்" என மேற் கூறப்பட்ட அதனை அடைந்து ஐம்புலன்களும், நாற்கரணங்களும், சீவபோதகமும் என்னும் இவற்றின் குறும்புகளாகிய பெத்தம் நீங்கினால் தான் 'சகமார்க்கம்' - என்னும் யோகம் முற்றியதாகும்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'பிறவாறாக வரும் யோகங்கள் எல்லாம் நிறைவு பெறாத யோகங்களே' என்றபடி, "சுத்திகள்" - என்பதன் பின், 'எய்தும்' என்னும் பயனிலையும் "விண்ணொளி" என்பதன்பின் 'உளது' - பயனிலையும் அவாய் நிலையாய் நின்றன. 'அப் போதா லயத்து' எனச் சுட்டு வருவித்துக் கொள்க. 'ஆலயத்துக் கெட்டால்' என இயையும், அஃது ஏழாம் வேற்றுமைத் தொகை. சாதாரணம் - பொதுவியல்பு. உயிர்கட்குப் பெத்த நிலை பொதுவியல்பும், முத்திநிலை உண்மை யியல்பும் ஆதலை நினைவு கூர்க.*

*இதனால் பிரசாத யோக முடிநிலைப் பயனது சிறப்பு ஏனை யோகப் பயன்களின் சிறப்பின்மையோடு ஒருங்கு வைத்து உணர்த்தப்பட்டது.*

***1685. தெளிவுரை :-*** *எனின், ஆதார சோதனையும் அத்துவ சோதனையும் சாதித்தால் சிவபோகம் விளையும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

*மேதாகலை முதல் பதினாறு கலைகளால் இடைவிடாமல் ஓம் ஓம் எனத் தியானித்தலால் தூண்டிக் குண்டலியானது முறையே மூலமுதல் ஆஞ்ஞை வரையுள்ள ஆதாரங்களிலும், வர்ணம் பதம் முதலான அத்துவாக்களிலும் நின்று பழகி, அவற்றைச் சோதித்துக் கடந்தால் ஆறாதார யோகத்தால் விளையும் போகத்தின்கண் இவ்வுடல் இன்பெய்தும் என்றவாறு.*

*பிராசாத மந்திரத்தால் ஓம் ஓம் எனத் தூண்டி ஆதார யோகப் பயிற்சி செய்யின் சிவபோகம் விளையும் என்பதாம்.*

***குறிப்புரை :-*** *மேதாதியால் - மேதாகலை முதலிய பதினாறு கலைகளால் என்க. அவையாவன, மேதை, அர்க்கீசம், விஷம், விந்து, அர்த்தசந்திரன், நிரோதி,*

*நாதம், நாதாந்தம், சத்தி, வியாபினி, வியோமரூபி, அகந்தை, அநாதை, அநாசிருதை, சமனை, உன்மனை என்பன. இவை உடலில் சத்தி பரிணமித்திருக்கும் யோகஸ்தானங்கள் பதினாறு. இவை யோகநூல் கூறியவை. பிராசாத மந்திரங்களால் என்பது ஆகமம். அவையாவன அகாரகலை, உகாரகலை, மகார கலை, விந்து, அர்த்தசந்திர கலை, நிரோதினி, நாதம், நாதாந்தம், சத்தி, வியோபினி, வியோமரூபினி, அநந்தை, அநாசிருதை, சமனை, உன்மனை என்பன.*

*இங்ஙனம் உடலுள் அவ்வவற்றிற்கு உரிய தானங்களும் அவ்வக்கலைகளை அவ்வவற்றிற்குரிய மந்திரங்களும் தியானிக்கும்போது தியானம் நிலைக்காமல் மறக்கவும் கூடும் ஆதலால் 'விடாது' என்றார்.*

*நினைப்பே மேதாகலை முதல் துவாதசாந்தம் வரை உயர்த்திச் செல்ல உபாயமாவது 'ஓம்' என்னும் மந்திரம் என்பார் 'ஓமெனத் தூண்டி' என்றார்.*

***சோதனை என்பது குற்றமுடையானைக் கண்டக் தலைவன் சோதிக்கலைப் போன்றது அன்று; கூட்டி எழுப்புதல் என்னும் பொருளதாகும்**. அஃதாவது, ஆன்மாவை அவ்வந் நிலைகளில் கூட்டி நிறுத்தி, பின் ஓம் ஓம் என்று தியானித்து, அந்த நிலையினின்றும் மேலே எழுப்பிக் கொண்டே போதலாம்.*

*ஆதார சோதனை; மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், விசுத்தி, அநாகதம், ஆஞ்ஞை என்ற ஆறு நிலைகளிலும் பொருந்தி நின்று மேலெழுதலாம்.*

*அத்துவ சோதனை : மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்ற ஆறு வழிகள். இவை சிவபோகத்திற்கு வழி ஆகலின் இவைகளில் கூடி நின்று எழுதல் இன்றியமையாததாம் என்க. கிரியைகளில் சிவ தீட்சைகளிலும் இச்சோதனைகள் ஹூம்பட் அஸ்திர மந்திரங்களால் சிஷ்ய தேகத்தில் இயற்றப்படுதலும், பின் சிவாக்கினியில் சேர்க்கப்படுதலும் உணர்க.*

*தாது ஆதாரமாக : ஆன்மாவை ஆதாரமாகக் கொண்டு, உயிர் உணர்வின் வடிவிற்றாதலின் அதனை ஆதாரமாகக் கொண்டு என்க. ஹடயோக முறையில் கெட்டிப்பட்ட ரசமணி போன்ற விந்தினை ஆதாரமாகக் கொண்டு என்று கூறும் யோக சந்திரிகை.*

*1686. **தெளிவுரை :-** 'உடம்பு ஆறாதாரங்களோடே அமைந்தது' - எனப் பொதுவாகச் சொல்லப்பட்டாலும் மேற்கூறிய ஏழாந் தானமும், அதற்குமேல் உள்ள நிராதாரமும் ஆகிய அவைகளையும் தரிசிக்கக் கடவீர். ஏனெனில், ஆறாதாரங்களில் அடங்கி நிற்கின்ற ஐம்பது எழுத்துக்களும் காரிய எழுத்துக்களேயாக, காரண எழுத்தாகிய பிரணவம் அந்தக் காரண நிலையிலே நிற்கும் இடம், அவைகளே யாகலின்.*

***குறிப்புரை :-** எனின், ஆதாரங்கள் அக்கரங்கள் இவற்றைப் புறத்தே காணன்மின்; உடம்பினுள் காண்மின்; அப்பொழுது பிரணவநாதமும்*

**1686.** ஆறந் தமும்கூடி ஆகும் உடம்பினில்
கூறிய ஆதாரம் மற்றுங் குறிக்கொண்மின்
ஆறிய அக்கரம் ஐம்பதின் மேலே
ஊறிய ஆதாரத் தோரெழுத் தாமே. **6**

**1687.** ஆகும் உடம்பும் அழிகின்ற அவ்வுடல்
போகும் உடம்பும் பொருந்திய வாறுதான்
ஆகிய அக்கரம் ஐம்பது தத்துவம்
ஆகும் உடம்புக்கும் ஆறந்த மாமே. **7**

---

*அமுதபான சுகமும் விளையும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

*மூலமுதலான ஆறு அந்தங்களும் கூடி ஆன இந்த உடம்பினுள் அவ்வாதாரங்களை நன்கு தியானியுங்கள்; எல்லாவற்றிற்கும் மேலாகத் தோன்றிய ஆஞ்ஞையில் ஐம்பது அக்கரங்களும் ஓம் என்னும் ஓரெழுத்தான நாதமாத்திரையாய்த் தோன்றும் என்றவாறு.*

*'உடம்பு மூலாதார முதலான ஆறு நிலைகளையுடையது. அவற்றைத் தியானியுங்கள். அவற்றுள் மேலாக உள்ளது ஆஞ்ஞை. அதில் ஓம் என்னும் பிரணவநாத அனுபவம் விளையும். அது அமுதம் உண்பதுபோல இனிமையும் களிப்பும் உடையதாயிருக்கும் என நுகர்வின்பம் உணர்த்தியவாறு. குறிக்கொண்மின் என்றது ஆதார யோகத்தின் அருமை உணர நின்றது. மேலாக ஊறிய ஆதாரத்து ஆறிய அக்கரம் ஓரெழுத்தாம் எனக் கூட்டிப் பொருள் காண்க.*

*1687. தெளிவுரை :- தூலதேகம் தோன்றுதற்கு முதலாயுள்ள சூக்கும தேகமும் இறுதியில் அழிவதேயாம். இனிக் காரியமாதல் பற்றி அநித்தியமாதல் தெளிவுற நிற்கின்ற தூல தேகம் சூக்கும தேகத்தோடு இயைந்து நின்று அறிவும் செயலும் உடையதாதல் காரிய எழுத்துக்களாகிய ஐம்பதனாலேயாகும். **ஆகவே சூக்குமதேகத்திற்கும் ஆறாதாரங்களின் இயைபு உள்ளதே**.*

*குறிப்புரை :- எனின், தூல சூக்கும உடல்களின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.*

*அழியுந்தன்மைத்தாய அவ்வுடல் மீளவும் தோன்றும் உடம்பாம்; அதுவும் உயிரோடு ஒன்றி அது செல்லும் பிறவிதோறும் செல்லும் உடம்பு நுண்ணுடம்பாம்; அதுவும் பொருந்தியமுறை ஏது எனின், வர்ணாத்வா முதல் தத்துவாத்துவா வரை உளதாம். அத்துவாக்கள் ஐந்தன் காரியமான உடம்புக்கும் கலாத்துவாவே அந்தமாம் என்றவாறு.*

*அதனையும் சோதிக்க என உபாயம் உணர்த்தியவாறு. ஆகும் உடம்பு -*

**1688.** ஆயு மலர்இன் அணிமலர் மேலது
வாய இதழும் பதினாறும் அங்குள
தூய அறிவு சிவானந்த மாகிப்போய்
மேய அறிவாய் விளைந்தது தானே. **8**

---

*வினைக்கீடாக மாயா காரியமாய் விளையும் உடல். ஆன ஒன்று அழியும் இயல்பினதாகலின் அழிகின்ற அவ்வுடலாகிய ஆகும் உடம்பும் எனப்பட்டது.*

*போகுமுடம்பு - நுண்ணுடல், தூலமும் சூக்குமமுமாகிய இவ்விரு உடலும் தம்முள் இயைந்த முறை அத்துவாக்களால் என்பதாம்.*

*இதனால், ஆதார யோகத்தின் இன்றியமையாமை வலியுறுத்தப்பட்டது.*

***1688. தெளிவுரை :-** ஆராய்ச்சிக் கருவியாகிய மனத்திற்கு இடமாய் உள்ள இருதய தாமரையாகிய இனிய அழகிய மலரின் மேல் உள்ளதாகிய ஓர் ஆதாரமாய் நிற்கும் இதழ்கள் பதினாறும் அவ்விடத்திலே உள்ளன. அதனை அடைந்த அறிவே மாசு நீங்கிச் சிவத்தோடு கூடி அதன் ஆனந்தத்தைப் பெற்று பின் அந்தச் சிவத்தின் வேறாய் நில்லாது ஒன்றாய் நிற்கும் முடிநிலையை எய்தும்.*

***குறிப்புரை :-** இருதயத்திற்குமேல் உள்ள ஆதாரம் விசுத்தி. அதனை அடையும் யோகமே ஆதார யோகத்தின் முடிநிலைக்கு அணித்தாவது ஆதலின், அதற்குக் கீழ் நிற்கும் யோகமெல்லாம் 'யோகம்' எனப்படாது என்றற்கு இவ்வாறு கூறினார். விசுத்தி பற்றிய விளக்கத்தைத் தந்து, அதன் பின்னர், "தூய அறிவு" என்றமையால், அதனை அடைந்த அறிவு' என்பது பெறப்பட்டது. முடிநிலையை அடைதலை 'விளைதல்' - எனக் கூறினார். "மேலது" என்பதன் ஈற்றுக் குற்றியலுகரம் கெடாது நின்று உடம்படு மெய்பெற்றது. உம்மை இரண்டனுள் முன்னது இறந்தது தழுவிய எச்சம். பின்னது முற்று.*

*இதனால், 'யோகத்தைக் கடைபோகச் செய்யாவிடின் அஃது யோகமாய்ப் பயன் தராது' என்பது கூறப்பட்டது.*

## 2. அண்டலிங்கம்

*இத்துணையும் யோகத்தின் வழிச் சீவனை உணருமாறு கூறினார். இனி முறையானே கிரியையின்வழி உணருமாறு கூறுவாராய், முதற்கண் அதற்குப் பற்றுக்கோடாகிய இலிங்க வகைகளைக் கூறுகின்றார்.*

*இலிங்கம் - குறி. அஃது இடுகுறியாய் நின்று கடவுளைக் குறிக்கும் குறியையே உணர்த்தி நிற்கும்.*

*அண்டம் - புற உலகம். அனைத்தும் கடவுள் வடிவாக உணரப்படும். நிலையில் புற உலகமும் கடவுள் வடிவாகலின், அஃதே அண்டலிங்கமாம். அதனது இயல்பைப் பதினான்கு திருமந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

*முற்கூறியவண்ணம் ஆறு ஆதாரங்களிலும் சிவம் விளங்குதலைத் தியானத்தான் நன்கறிந்து தெளிந்த சிவயோகி அண்டம் முழுவதும் சிவலிங்கமாகக் காணுதலைப் பன்னிரண்டு மந்திரங்களால் உணர்த்துவான் எடுத்துக் கொண்டார். அதிகார முறைமையும் இதனால் விளங்கும்.*

*அண்டம் என்பது சுத்தம், அசுத்தம், பிரகிருதியாகிய மூன்று மாயைகளின் காரியமாய் ஆன்மாக்களின் வினைப்போக பரிபாகங்களுக்கு ஏற்றவாறு விளங்கும் போகத்தானம். அது சிவலிங்க வடிவாதலைத் தெரிவிப்பது இப்பகுதி.*

**1689.** **இலிங்கம தாகுவ தியாரும் அறியார்**
**இலிங்கம தாகுவ தெண்டிசை யெல்லாம்**
**இலிங்கம தாகுவ தெண்ணெண் கலையும்**
**இலிங்கம தாக எடுத்த துலகே.** **1**

---

*1689. தெளிவுரை :- (ஏதோ ஒன்றை மட்டுமே 'இலிங்கம்' என உலகவர் நினைத்தலால்), இலிங்கம் - என்பதன் உண்மையை உணர்ந்தவர் அறியர். எட்டுத் திசைகளாய் விரிந்து காணப்படும் உலகம் முழுதுமே இலிங்கம். அறுபத்து நான்காகச் சொல்லப்படுகின்ற கலைகளும் இலிங்கம். இறைவன் உலகத்தைத் தனது அருட்குறியாகவே உண்டாக்கினான்.*

*குறிப்புரை :- "ஆவது" என்பன இரண்டும் தொழிற் பெயராய் நின்றன. "எண்டிசை" என்றதனால் பொருளுலகமும் "எண்ணெண் கலை" என்றதனால் சொல்லுலகமும் குறிக்கப்பட்டன.*

*இதனால் எல்லாம் இலிங்கமாதல் கூறப்பட்டது.*

*1690. தெளிவுரை :- உலகத்தைத் தோற்றுவித்த இறைவன் உலகில் அனைத்துப் பொருள்களையும் ஆக்கியது தனது சத்தியே பொருளாகவும், பொருளின் வடிவமைப்பாகவும், குணமாகவும் அமைத்தேயாம்.*

*குறிப்புரை :- 'அதனால் உலகமே இலிங்கம் ஆதலில் ஐயமில்லை' என்பது*

**1690.** உலகில் எடுத்தது சத்தி முதலா
உலகில் எடுத்தது சத்தி வடிவா
உலகில் எடுத்தது சத்தி குணமா
உலகம் எடுத்த சதாசிவன் றானே. **2**

**1691.** போகமும் முத்தியும் புத்தியும் சித்தியும்
ஆகமும் ஆறாறு தத்துவத் தப்பாலாம்
ஏகமும் நல்கி யிருக்கும் சதாசிவம்
ஆகம அத்துவா ஆறும் சிவமே. **3**

---

*குறிப்பெச்சம். 'எல்லாம் சிவமயம்' என்றல், சிவன் சத்தியாய் நிற்கும் நிலைபற்றியே என்பது தெளிவாகலின், இவ்வாறு கூறினார். கூறவே, 'சிவனது திருமேனி சத்தியாதல் பற்றி உலகமே இலிங்கமாதல் தெளிவாகும்' என்பதாம். பொருள் என்றது செயலாற்றலும், பயன் தருதலுமாகிய இவைபற்றி. முதல் எனினும் பொருள் எனினும் ஒக்கும். ஈற்றடியை முதலிற் கொள்க. சதாசிவம் - அம்மையப்பர் ஒருங்கு கூடிய சிவலிங்கத் திருமேனி.*

*இதனால், உலகமே இலிங்கமாதல் தெளிவிக்கப்பட்டது.*

*1691. தெளிவுரை :- ஆன்மா முப்பத்தாறு தத்துவங்களினின்றும் நீங்கித் தான் தனித்து நிற்கும் நிலையையும், அதன்பின் அது தன்னைப் பெற்று நிற்கும் நிலையையும், அந்நிலைக்கண் விளைகின்ற தனது பரபோகத்தையும் தருதலேயன்றி, உடம்பும், அதனால் உண்டாகின்ற புலன் உணர்வும் அதனால் வரும் புலன் இன்பமும் என்னும் இவற்றையும் தந்து நிற்பான் சிவன் ஆதலின் அவன், சிவாகமங்களில் பாசக் கூட்டமாகச் சொல்லப்படுகின்ற ஆறத்துவாக்களாயும், விளங்குவான்.*

*குறிப்புரை :- 'ஏகமும், முத்தியும், போகமும் - ஆகமும், புத்தியும், சித்தியும், என ஒதற்பாலதனைச் செய்யுள் நோக்கி முறை பிறழ வைத்தார். சிவன் தன்னையடையச் செய்தலே முத்தியாதலை நினைக. யோகம், ஏற்புழிக் கோடலால் பரபோகமாயிற்று. எண்ணிய எண்ணியாங் கெய்தும் உலகபோகத்தை, "சித்தி" என்றார். உயர்ந்தவற்றையும், தாழ்ந்தவற்றையும் உடன் வைத்துக் கூறிய குறிப்பால், 'உயர்ந்தவற்றையேயன்றித் தாழ்ந்தவற்றைத் தருபவனும் சிவனே' என்பது போந்தது. தாழ்ந்தவற்றைத் தருதல் அவற்றின்கண் உவர்ப்புத் தோன்றுதற் பொருட்டு. போகம் - நுகர்ச்சி. ஆகம் - உடல்.*

*"பந்தமும் வீடும் படைப்போன் காண்க"*

*- தி. 8 திருவண்டப்பகுதி, 52*

*என்றாற்போலும் திருமொழிகளை நினைக.*

*'பாசமாகிய அண்டங்கள் அனைத்தையும் கடந்து நிற்பவனாகிய சிவன்*

**1692.** ஏத்தினர் எண்ணிலி தேவர்எம் மீசனை
வாழ்த்தினர் வாசப் பசுந்தென்றல் வள்ளலென்
றார்த்தனர் அண்டங் கடந்தப் புறம்நின்று
காத்தனன் என்னும் கருத்தறி யாரே. **4**

---

*பாசங்களாகிய அண்டமாய் நிற்றல் எவ்வாறு என்னும் ஐயத்தை நீக்குதற்கு இவ்வாறு அருளிச் செய்தார்.*

*"அண்டமாய், ஆதியாய், அருமறையோ டைம்பூதப்*
*பிண்டமாய் உலகுக்கோர் மெய்ப்பொருளாம் பிஞ்ஞகனை"*

*- தி.4 ப.7 பா.4*

*என நாவுக்கரசரும் அருளிச்செய்தார். இதனானே பிண்டமும் இலிங்க மாதற்கு ஐயமின்று என்பது பெறப்படும்.*

*இதனால் அண்டம் இலிங்கமாதல் பற்றி எழுவதோர் ஐயம் அறுக்கப்பட்டது.*

*1692. **தெளிவுரை :-** தேவர் பலரும் தாம்செய்த புண்ணியத்தின் பயனாகச் சிவன் உருவத்திருமேனி கொண்டு வெளிப்படக் கண்டு புகழ்ந்தும், வாழ்த்தியும், இன்பப் பொருளாக உணர்ந்தும், வேண்டுவார் வேண்டுவதை அருளப்பெற்று, 'வரையாது வழங்கும் வள்ளல்' என ஆரவாரித்தும் நின்றாராயினும், 'அவன் உண்மையில் உலகங் கடந்தவனே' என்னும் உண்மையை உணர்கின்றிலர்.*

***குறிப்புரை :-*** *'அஃது அவர்கள் அவனைத் தம்மில் ஒருவனாக எண்ணும் அதனால் விளங்கும்' என்பது கருத்து. எனவே, 'அவன் அண்டலிங்கமாய் நின்று வழிபடுவார் செய்யும் வழிபாட்டினை ஏற்றுப் பயன் தருவானாயினும் உண்மையில் அவன் உலகங்கடந்தவன் என்பதை அறியாமை குற்றமாம்' என்றபடி. அவனது உண்மை நிலையை அறிந்த பொழுதே, 'அவன் நமக்காக இறங்கி வந்து அருள் செய்கின்றான்' என்பது விளங்க, அதனால் அவன்மாட்டு அன்பு நிகழ்தலும், அதனை அறியாத பொழுது அங்ஙனம் அன்பு நிகழாமையும், அன்பு நிகழாது செய்யும் வழிபாடு, வழிபாடு ஆகாமையும் உளவாதல் பற்றி, 'அவனது உண்மையை உணராமை குற்றம்' எனக் கூறினார்.*

*தேவர்கள் சிவபெருமான் உருவத் திருமேனி கொண்ட காலத்துப் போற்றிப் புகழ்ந்தனரேயன்றி, ஞானிகள் போல அறிவுருவ அருவத் திருமேனியைக் கண்டு போற்றும் ஆற்றல் இலர் என்றவாறு.*

*இதனால் **'அண்டலிங்கம் முதலிய இலிங்கங்களாய்ச் சிவன் நிற்றல் உயிர்கள் மாட்டுவைத்த அருள் காரணமாக' என்பது கூறப்பட்டது**.*

*1693. **தெளிவுரை :-** அந்தப் பரம்பொருளாகிய சிவம் தீக் கடவுள், அயன், மால், உபப்பிரமா, சூரியன், சந்திரன் ஆகியோரது கண்களுக்கு அவரவர் வழிபடும்*

**1693.** ஒண்சுட ரோன் அயன் மால் பிர சாபதி
ஒண்சுட ரான இரவியோ டிந்திரன்
கண்சுட ராகிக் கலந்தெங்குந் தேவர்கள்
தண்சுட ராய்எங்கும் தற்பரம் ஆமே. **5**

---

*இலிங்கமாகியும், அவ்விலிங்கங்களை வழிபடும் பொழுது அவர்கள் விரும்பியவற்றை வழங்க எங்கும் வெளிப்படும் அழகிய மூர்த்திகளாயும் விளங்கினும் எங்கும் கலந்து நிற்கும் பெரும்பொருளேயாகும்.*

***குறிப்புரை :-*** *அயன் - ஒவ்வோர் அண்டத்திலுமிருந்து படைத்தல் தொழிலைச் செய்யும் முதல்வனாகிய பிரம்மன். "தற்பரம்" என்பதை முதலில் வைத்து உரைக்க. பிரமனால் அவனது படைத்தற்றொழிலை இயற்றப் படைக்கப்படுபவர், 'உபப்பிரமாக்கள்' எனப்பட்டு, 'பிரசாபதிகள்' எனவும் கூறப்படுவர். 'தட்சப் பிரசாபதி' என்பது காண்க. தேவருள் சிறப்புடைய சிலரை எடுத்துக் கூறியவாறு. செவ்வெண் ஈற்றில் 'இவர்தம்' என்பது தொகுத்தலாயிற்று. 'கட்சுடர்' என்னும் நான்காவதன் தொகை எதுகை நோக்கி மெலிந்து நின்றது. அதன்கண் "சுடர்" என்றது இலிங்க வடிவினை, தேவர் யாவரும் லிங்க வடிவில் சிவனை வழிபடுதல் வெளிப்படை. "கலந்தெங்கும்" என்பதை இறுதியில் "ஆம்" என்பதனோடு இயைத்து முடிக்க. 'அத்தேவர்கள்' எனச் சுட்டுவருவித்துக் கொள்க. **சிவனது மூர்த்தம் நிறத்தால் பொங்கழலோடு ஒப்பதாயினும், வெப்பம் இன்றித் தட்பக் குணமே யுடைத்தாய் இருத்தல் பற்றி, 'தண்சுடராய்' என்றும்**, வழிபடுவார் வழிபடும் இடங்கள்தோறும் அவர்க்கு அருள்புரியத் தோன்றுதலால், "எங்கும் தண்சுடராய்" என்றும் கூறினார். "எங்கும் கலந்து ஆம்" என்பதில் ஆதல் உளதாதல்.*

*கண் சுடராகி என்றது கண்ணுக்குச் சுடராகி என விரியும். கண் காணுமாயினும் ஒளியின் உபகாரமின்றிக் காணாததுபோல, ஆன்மா அறியுமாயினும் அதற்கு அறிவிக்கும் உதவியை இறைவன் உயிர்க்குயிராய்க் கலந்து நின்று உதவுகிறான் என்பது விளங்க நின்றது.*

*இன்ப நுகர்ச்சியையே விரும்பும் தேவர்கட்கு அவர் விரும்பியவாறு அமுத கிரணனாகிய தண் சுடராயும், ஏனையோர்க்குப் பரிபாக நிலைக்கு ஏற்ப ஒண்சுடராயும் விளங்கும் இறையியல்பு உணர்த்தப் பெற்றது.*

***1694. தெளிவுரை :-*** *சிவனது மிக மேலான உண்மை நிலையை உணர்ந்து அவனை வழிபடுவோர் மிக அரியர். அதனை உணர்ந்து வழிபடுகின்ற அவர்கட்கும் பூவைத் தன்னுள்ளே அடக்கியுள்ள அழகிய கொடி அப்பூவைச் சிறிது சிறிதாகவே வெளிப்படுத்துதல் போலத் தனது உண்மை நிலையை வெளிப்படுத்துவான். ஆகவே அவனது பொது நிலையாகிய இலிங்க வடிவிலும்*

**1694.** தாபரத் துள்நின் றருளவல் லான் சிவன்
மாபரத் துண்மை வழிபடு வாரில்லை
மாபரத துண்மை வழிபடு வாருக்கும்
பூவகத் துள்நின்ற பொற்கொடி யாகுமே. **6**

**1695.** தூய விமானமும் தூலம தாகுமால்
ஆய சதாசிவம் ஆகும்நற் சூக்குமம்
பாய பலிபீடம் பத்திர லிங்கமாம்
ஆய அரன்நிலை ஆய்ந்துகொள் வார்கட்கே. **7**

---

*அவன் நின்று படிமுறையால் மேல் நிலையை அருளுவான்.*

*குறிப்புரை :-* *'ஆகவே இலிங்க வடிவம் அவனது அகண்ட நிலையோ, உண்மை நிலையோ அன்று என இகழாது கொள்க' என்பது குறிப்பெச்சம். "தாபரத் துள்நின்று அருளவல்லான்" என்பதை இறுதியிற் கூட்டியுரைக்க. தாபரம் - பெயர்ப்பொருளாகிய திருவுருப் படிமங்கள், சிவலிங்கம். "வழிபடுவாளர்க்கும்" - என்பது பாடம் அன்று. "ஆகும்" என்பதில் ஆக்கம் உவமை குறித்து நின்றது. சுட்டிக் கூறா உவமம் ஆகலின் பொதுத்தன்மை வருவிக்கப்பட்டது.*

*இதனால், இலிங்க வழிபாட்டின் சிறப்புக் கூறப்பட்டது.*

*1695. தெளிவுரை :-* *கருவறையின்மேல் உயர்ந்து விளங்கும் விமானங்கள், 'தூல லிங்கம்' என்பதும், கருவறையில் மூலமாய் விளங்கும் இலிங்கம் 'சூக்கும லிங்கம்' என்பதும், திருவாயிலின் முன் விரிந்து காணப்படும் பலிபீடம், 'பத்திரலிங்கம்' என்பதும் சிவாலயங்களின் உண்மையைச் சிவாகம நெறியால் ஆராய்ந்துணர் வார்க்கு விளங்குவனவாகும்.*

*குறிப்புரை :-* *"விமானமும்" என்னும் உம்மை, 'சதாசிவமூர்த்தியே யன்றி' என இறந்தது தழுவி நின்றது. அண்டத்தின் உள்ளாய் விளங்கும் பொருள்களும் இலிங்கங்களாதல் இதனால் கூறப்பட்டது.*

*ஆய சதாசிவம், ஆய அரன் என்பன உலகிலுள்ள சராசரங்கள் அனைத்திலும் கலந்தும் கடந்தும் நின்று இயக்குவதாய என்க. சதாசிவம் - அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கம். அதுவே சிவசத்திகளின் இருப்பை உணர்த்தும் குறியாதலின் 'நல்சூக்குமம்' எனப்பட்டது.*

*அரனிலை - சிவம் மணியின்கண் ஒளிபோல இடையறாது எழுந்தருளி விளங்கும் ஆலயங்கள். பத்திரம் - இதழ். பலிபீடம் தாமரை இதழ் போல்வது ஆகலின் அது பத்திரலிங்கம் எனப் பெற்றது. இடபம் என்பாருமுளர். இடபத்தை இலிங்கமாகக் கருதுதல் சிவாகம வழக்கமாயின் கொள்க.*

**1696.** **முத்துடன் மாணிக்கம் மொய்த்த பவளமும்**
**கொத்தும்அக் கொம்பு சிலை நீறு கோமளம்**
**அத்தன்றன் ஆகமம் அன்னம் அரிசியாம்**
**உய்த்ததன் சாதனம் பூமணல் லிங்கமே.** **8**

---

*1696.* ***தெளிவுரை :-*** *முத்து, மாணிக்கம், பவளம், செதுக்கிய மரக்கொம்பு, கல், திருநீறு, கத்தூரி, சிவாகமம், சோறு, அரிசி, பூ, மணல் இவை சிவலிங்கம் அமைக்கும் சாதனங்கள் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *மொய்த்த - ஒளிமிகுந்த. கொம்பு - மரக்கழி. "கொத்தும்" என்றதனால், அது செதுக்கி உருவாக்கப்படுதல் விளங்கிற்று. கோமளம் - அழகு. அஃது ஆகுபெயராய் இரத்தினத்தை உணர்த்திற்று. இதனால், படிகம், மரகதம் முதலாக எஞ்சிய இரத்தினங்களைக் கொள்க. சிலை - கருங்கல் வகைகள். 'மாக்கல் கூடாது' - என்பர். ஆகமம் - சிவாகமம் எழுதப்பட்ட சுவடி. திருமுறைச் சுவடிகளும் இதனானே பெறப்படும். அன்னம் - சோற்றுருண்டை. அரிசி - அரிசித்திரள். பூ - தனி மலரும், கோத்த மலரும். இனி இதனை இரட்டுற மொழிந்து, 'மண்' எனவும் கொண்டு, 'பிசைந்து பச்சையாக வைக்கும் மண்ணும், சுட்டுக் கொள்ளும் மண்ணும்' என உரைக்க. 'இலிங்கம் உய்த்து அதன் சாதனம் ஆம்' என மொழிமாற்றி, 'இலிங்க மாகச் செயப்பட்டு அதற்கு மூலப்பொருளாம்' என உரைக்க. சாதனம் ஆதல் முக்காலத்தினும் ஒக்கும் ஆதலின், அதனை இங்கு இறந்த காலத்தில் வைத்துக் கூறினார். ஏகாரம் ஈற்றசை.*

*சிவவழிபாடு 'ஆன்மார்த்தம், பரார்த்தம்' என இரு வகைப்படும். ஆன்மார்த்தம் - தன்பொருட்டு. பரார்த்தம் - பிறர் பொருட்டு. அவரவரும் தம் தம் இல்லத்திலாயினும், பூசைப் பெட்டகத்திலாயினும், இலிங்கத்தை எழுந்தருள்வித்துக் கொண்டு வழிபடுவது ஆன்மார்த்த வழிபாடு. வீரசைவர், 'இலிங்கம் அங்கத்திலே (உடம்பிலே) ஒன்றாய் நீங்காதிருக்கத்தக்கது' எனக் கொண்டு வழிபாட்டுக் காலத்தில் இலிங்கத்தை இடக்கையிலே வைத்து, வலக்கையால் வழிபடுவர்.*

***உலகம் முழுவதற்குமாகத் திருக்கோயில்களில் இலிங்கம் எழுந்தருள்வித்துச் சிவாசாரியர்களால் செய்யப்படுவது பரார்த்த வழிபாடு.***

*இவ்விரண்டனுள் மேலை மந்திரம் பரார்த்த இலிங்கம் ஆவனவற்றைக் கூற இம்மந்திரம் ஆன்மார்த்த லிங்கம் ஆவனவற்றைக் கூறிற்று.*

*பரார்த்த லிங்கம் இடம் விட்டுப் பெயராதிருத்தலால், **'அசலலிங்கம்'** என்றும், ஆன்மார்த்த லிங்கம் வேண்டும் இடங்களில் கொண்டு, செல்லப்படுதலாலும், வழிபாட்டின் பொழுதும், அதற்குப் பின்னும் இடம் மாற்றி வைக்கப்படுதலாலும் **'சல லிங்கம்'** என்றும் சொல்லப்படும். **சலம் - அசைவுடையது, அசலம் - அசைவில்லது**. இவற்றுள் மேலைமந்திரம் அசல*

**1697.** துன்றுந் தயிர் நெய் பால் துய்ய மெழுகுடன்
கன்றிய செம்பு கனல்இர தம்சந்தம்
வன்றிறற் செங்கல் வடிவுடை வில்வம் பொன்
தென்றிருக் கொட்டை தெளிசிவ லிங்கமே. **9**

---

*லிங்கமாவனவற்றைக் கூற, இம்மந்திரம் சலலிங்க மாவனவற்றைக் கூறிற்று. இவற்றுள் அசல லிங்கம் ஆதற்கு உரியனவும் உள; அவற்றை அறிந்து கொள்க.*

*இனி சல லிங்கமும், 'கணிகம், திரம்' - என இரண்டு வகைப்படும். கணிகம் - நிலையில்லாதது; அவ்வப்பொழுது ஆக்கி அமைத்து, வழிபட்டவுடன் விட்டு விடப்படுவது.*

*திரம் - நிலையுள்ளது, அஃது ஒருமுறை எழுந்தருள்வித்துக் கொண்டு, வாழ்நாளளவும் விடாமல் வழிபடப்படுவது.*

*'இவற்றுள் இங்குக் கூறப்பட்டவை இன்ன இன்ன இலிங்கமாதற்கு உரியன என்பது அந்த அந்தப் பொருள் இயல்பு பற்றியும் அவரவரது கருத்துப் பற்றியும் கொள்க'.*

*1697.* ***தெளிவுரை :-*** *மேற்கூறிய முத்து முதலியனவேயன்றி கட்டித்தயிர், நெய், பால், தூய்மையான சாணம், குற்றமில்லாத செம்பு, கனல், பாதரசம், சங்கு, கெட்டியான செங்கல், அழகான வில்வம், பொன் முதலியனவும் இலிங்கம் ஆதற்குரிய மூலப்பொருள்களாகும். அவற்றுள் ஒன்றைத் தெரிந்தெடுத்துக் கொள்க.*

***குறிப்புரை :-*** *"துய்ய" என்றது, 'பசுவினின்றும் தோன்றுவது' என்றதாம். இதனைத் தயிர் முதலிய நான்கிற்கும் கொள்க. மெழுகு - மெழுகுதல்; முதனிலைத் தொழிற்பெயர். இஃது ஆகுபெயராய், அதற்குக் கருவியாகிய சாணத்தைக் குறித்தது. ஆனைந்தில் (பஞ்ச கௌவியத்துள்) கோ நீர் தவிர ஏனை நான்கும் இங்குக் கூறப்பட்டன. தயிர் பால் நெய்கள் பாத்திரத்தில் வைத்துக் கொள்ளப்பட்டும், சாணம் பிடித்து வைக்கப்பட்டும், ஆவில் ஐந்தும் கலந்து நிறைகுட வடிவில் இலிங்கமாகும். நெய், சிறப்பாக வெண்ணெயே ஆகும். கன்றிய செம்பு - உருக்கி வார்க்கப்பட்ட தாமிரம். கனல் - எரியும் நெருப்பு; இது வேள்வித் தீ. பெரிதாய் எரியும் விளக்கும் ஆகும். வேள்வித் தீயில் குண்டமும், விளக்கில் தகழியும் பீடமாய் இருக்கும். ஒரு தகழியில் பல சுடர்கள் ஏற்றப்பட்டால் அவை முகங்களாகும். இரதம் - சித்த மருத்துவ முறையில் பண்ணப் படும் இரசக் கல், பாதரசம், ரசலிங்கம். சந்தம் - சந்தனம். வில்வம் - வில்வக் காயும், பழமும். பொன் செம்பொன்னும், வெண் பொன்னும். இவை உருக்கி வார்க்கப் பட்டு இலிங்கமாம். 'தேன்' என்பது எதுகை நோக்கிக் குறுகி நின்றது. தேனும் பாத்திரத்தில் கொள்ளப்படும். 'தென்', அழகுமாம். திருக் கொட்டை - உருத்திராக்கம்.*

**1698.** மறையவர் அற்சனை வண்படி கந்தான்
இறையவர் அற்சனை ஏய்பொன் னாகும்
குறைவில் வசியர்க்குக் கோமள மாகும்
துறையுடைச் சூத்திரர் சொல்வாண லிங்கமே. 10

---

*சலம் - நீர். நீரில் வாழும் சலஞ்சலம் முதலான சங்குகள். இதனால் கணிக லிங்கம் ஆவனவே கூறப்பட்டன. 'சலம் தென்தியங்கொன்றை' என்பனவும் பாடம். வடிவுடை வில்வம் - சிவலிங்க வடிவாகச் செய்யப்பட்ட வில்வக்கட்டை.*

*இரத்தினத்தால் ஆயவை 'இரத்தினசம்' என்றும், பொன்னால் ஆயவை 'உலோகசம்' என்றும் கல்லால் ஆயவை 'சைலசம்' என்றும் பொதுப் பெயர் பெறும். ஏனைய ஒவ்வொன்றேயாம்.*

*இவ்விலிங்க வகையால் ஆம் பயன் வகைகள் கீழ்க்கண்டவாறு. ஆகமங்களில் சொல்லப்படுகின்றன. எனினும் நாயனார் பொதுவாகவே கொள்ள வைத்தார்.*

| | |
|---|---|
| மணல் லிங்கம் | முத்தி |
| அரிசி லிங்கம் | செல்வம் |
| அன்னலிங்கம் | அன்னம் |
| ஆற்றுமணல் லிங்கம் | பூமி லாபம் |
| கோமய லிங்கம் (சாணம்) | நோய் நீக்கம் |
| வெண்ணெய் லிங்கம் | மன மகிழ்ச்சி |
| உருத்திராக்க லிங்கம் | ஞானம் |
| சந்தன லிங்கம் | சௌபாக்கியம் |
| தருப்பைக்கூர்ச்ச லிங்கம் | முத்தி |
| புட்ப லிங்கம் | ஆயுள் |
| வெல்ல லிங்கம் | எல்லா விருப்பம் |
| மா லிங்கம் | நிறைவு |

*1698. தெளிவுரை :- (இதன் பொருள் வெளிப்படை).*

*குறிப்புரை :- அந்தணர் முதலிய வருணங்களை ஒழுக்கம் பற்றிக் கொள்ளுதலே தமிழ்நெறி, வாணம் - பாணம். இதுகல்லால் ஆகியது; கோமளம் - இரத்தினம் என்பதும் "முத்துடன் மாணிக்கம்" என்னும் மந்திரத்தில் (பா. 1696) கூறப்பட்டது.*

*(பதிப்புக்களில் இதன்பின் காணப்படுகின்ற இரண்டு மந்திரங்களும்*

**1699.** போது புனைகழல் பூமிய தாவது
மாது புனைமுடி வானக மாவது
நீதியுள் ஈசன் உடல்விசும் பாய்நிற்கும்
ஆதி உறநின்றது அப்பரி சாமே. **11**

**1700.** தரைஉற்ற சத்தி தனிலிங்கம் விண்ணாம்
திரைபொரு நீரது மஞ்சன சாலை
வரைதவழ் மஞ்சுநீர் வான்உடு மாலை
கரைஅற்ற நந்தி கலைஉந்திக் காமே. **12**

---

*இவ்வதிகார இறுதியில் நிற்றற்கு உரியன).*

*1699.* **தெளிவுரை :-** *அண்டமாகிய இலிங்கத்தில் பூமி சிவனது பூக்கள் புனையப்பெற்ற திருவடிகளாயும், அண்ட முகடு திருமுடியாயும், வானம் திருமேனி யாயும் அமையும். ஆகவே, அண்டமாகிய இலிங்கத்துடன் சிவன் நிற்றல் மேற்கூறியவாறாகும். ஈசன் திருமேனி பூமிக்கும் விண்ணிற்கும் இடைப்பட்ட விசும்பாய் அனைத்தையும் தன்னகத்தடக்கி நிற்கும்.*

**குறிப்புரை :-** *மாது - கங்கை, "உள், ஈசன்" உளனாகிய ஈசன் எனப் பண்புத்தொகை, இது மேல் நின்ற 'கழல், முடி' என்பவற்றோடும் இயைந்தது.*

*இதனால் அண்டலிங்கம் சிவனது திருவடி முதலிய உண்மை உறுப்புக்களாய் நிற்கும் முறைமை கூறப்பட்டது.*

*1700.* **தெளிவுரை :-** *இன்னும் அண்டலிங்கத்தில் பூமி பீடமாயும், வானம் பீடத்தின் மேல் உள்ள இலிங்கமாயும், கடல் நீர் திருமஞ்சனக் குட நீராயும், மேகம் அந்த நீரை முகக்கின்ற கலமாயும், திசைகள் எல்லையற்ற சிவனது உந்தியின்மேல் உடுக்கப்படும் உடையாயும் நிற்கும். நட்சத்திரங்கள் வயிர மணிமாலை.*

**குறிப்புரை :-** *தரை, சத்தி என இயையும். தரையாகப் பொருந்திய பூமியே சத்தி பீடம். உள்ள - இலிங்கம் பொருந்தி நிற்கின்ற - பீடம் சத்தி வடிவாதல் பற்றி, "சத்தி" என்றார். நீர் - சால், குடம். 'ஐ' 'அழகிய நீர் என்க. "மஞ்சு நீர்" என்பதில் உள்ள "நீர்", தானியாகு பெயர். கரை - எல்லை; என்றது திசையை. "கரை" என முன் வந்தமையின் "அற்ற" என்றே போயினார். 'அற்ற நந்தி உந்திக்குக் கலை ஆம்' என மாற்றிக் கொள்க. உந்திக்கு - உந்திக்கண், வேற்றுமை மயக்கம். சத்தி பீடம் - பூமி. பாணம் - ஆகாயம்.*

*இதனாலும், அண்டலிங்கம் சிவனது உபசார அங்க உபாங்கங்களாய் நிற்கும் முறைமை கூறப்பட்டது.*

1701. அதுஉணர்ந் தோன்ஒரு தன்மையை நாடி
எதுஉண ராவகை நின்றனன் ஈசன்
புதுஉணர் வான புவனங்கள் எட்டும்
இதுஉணர்ந் தென்னுடல் கோயில் கொண்டானே. 13

---

*1701. **தெளிவுரை :-** உபநிடதங்களின் வழி தன்னை 'அது' என்னும் அளவில் தன்னைப் பொதுவாக உணர்ந்தவன் பின்பு தனது ஒப்பற்ற இயல்புகளைச் சிறப்பாக உணர வேண்டி ஆராயும்பொழுது அவன் அவ்வியல்புகளுள் ஒன்றையேனும் உணராதபடி மறைந்து நிற்கின்ற சிவன், வேதாந்திகட்கு மிகவும் புதுமையாய்த் தோன்றுகின்ற அண்ட லிங்கமாகிய இந்தத் தன்மையை உணர்ந்த என் உள்ளத்தையே கோயிலாகக் கொண்டு விளங்குகின்றான்.*

***குறிப்புரை :-*** *"அது" என்றது வேதாந்த மகாவாக்கியத்தில் உள்ள - தற்பதத்தினை. அப்பதத்தின் பொருளை அப்பதமாகக் காரியத்தைக் காரணமாக உபசரித்துக் கூறினார். "நாடி" என்னும் எச்சம் "உணரா" என்னும் எதிர்மறைப் பெயரெச்சத்தைக் கொண்டு முடிந்தது. 'தேடியறிந்திலர்' என்பது போல 'எதுவும்' என்னும் இழிவுசிறப்பும்மை தொகுக்கப்பட்டது; 'அண்டமே இலிங்கம்' என்னும் சைவாகமப் பொருள் வேதாந்திகட்குப் புதுமையாய்த் தோன்றுதல் பற்றி அதனை, "புது உணர்வு" என்றார். அசுத்த மாயா புவனங்கள் பூதபுவனம், தன் மாத்திரைப் புவனம், மனோ புவனம், அகங்கார புவனம், புத்தி புவனம், பிரகிருதி புவனம், புருட புவனம், மாயா புவனம் என ஓராற்றால் எட்டு வகைப்படுதல் பற்றி அவற்றை, "புவனங்கள் எட்டும்" என்றார். "எட்டும்" என்றது அதிகார இயைபால், எட்டும் இலிங்கம் ஆதலைக் குறித்தது. 'இது உணர்ந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. அண்டலிங்கத்தின் உண்மையை உணர்ந்ததனால் தாம் எய்திய பயனைக் கூறவே, 'பிறரும் அதனை உணர்வாராயின் அப்பயனைப் பெறுவர்' என்பது தானே அமைந்தது. புவனங்கள் எட்டு - அட்டமூர்த்தி வடிவான உலகங்கள்.*

*ஈசன் உடலைக் கோயிலாகக் கொள்ளுதல் உள்ளத்தில் வீற்றிருத்தலாலேயாம். இஃது இவ்வாறு கூறப்படும் பிற இடங்கட்கும் ஒக்கும். இதனை இட்டலிங்கமாக உடம்பில் பொருந்தியிருத்தலாக உரைப்பாரும் உளர்; முன்னைத் தந்திரத்தில் நாயனார் 'தவ வேடம்' கூறிய இடத்திலாதல், பிறிதோர் இடத்திலாதல் தூல உடலில் சிவன் வேறோர் இலிங்கமாய்ப் பொருந்தியிருத்தலைக் கூறிற்றிலர். ஆதலால், அது பொருளாகாமை அறிக.*

*இதனால், அண்டலிங்கத்தினை உணராதாரது தாழ்வும், அதனை உணர்ந்தாரது சிறப்பும் கூறப்பட்டன. **சிவலிங்க பூசை செய்பவனுக்கு எல்லாம் சிவமயமாய்த் தோன்றும். அவ்வனுபவ முதிர்ச்சியால் உடலுள் உத்தமன் கோயில் கொள்வான். அதனையும் அவன் அறிந்து அனுபவிப்பன்**.*

**1702.** அகலிட மாய்அறி யாமல் அடங்கும்
உகலிட மாய்நின்ற ஊனத னுள்ளே
பகலிட மாம்உளம் பாவ வினாசன்
புகலிட மாய்நின்ற புண்ணியன் றானே. 14

---

*1702.* ***தெளிவுரை :-*** *அடியவரது பாவத்தை ஒழிப்பவனாகிய சிவன் அண்டமே இலிங்கமாகக் கொண்டு அமர்ந்திருத்தல் அன்றியும் உண்மையை உணராமையால் வீணாய் ஒழிகின்ற ஒரு நிலையில் பொருளாகிய உடம்பினுள்ளே அதன் நடுவிடமாகிய இருதய தாமரையைத் தான் எழுந்தருளியிருக்கும் இடமாகக் கொண்டு விளங்குகின்ற புண்ணிய மூர்த்தியாயும் இருக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *'அகலிடமாயும்' என்னும் எதிரது தழுவிய எச்ச உம்மை தொகுத்தலாயிற்று. அறியாமையாவது, ஊனுடம்பே சிவனுக்கு ஆலயமாயும் இருத்தலை அறியாமை. "அறியாமல்" என்பதன் பின், 'இருத்தலால்' என்பது எஞ்சி நின்றது. 'அறியாமை' எனப் பாடம் ஓதி, 'அறியாமையால்' என உருபு விரித்தலும் ஆம். "அறியாமல் அடங்கும்" என்றதனால், "பயனின்றி" என்பது பெறப்பட்டது. உகல் - உகுதல்; அழிதல். பகல் - நடுவிடம். நுகத்திற் பகல் ஆணிபோல நடுவு நிலைமையை உடையர் என்றல் வழக்காதல் அறிக. ("நெடு நுகத்துப் பகல்போல - நடுவு நின்ற நன்நெஞ்சினர்" - பட்டினப்பாலை - 206, 27. "பகலன்ன வாய்மொழி" - புறப்பொருள் வெண்பா மாலை - வாகைப்படலம் - அரச வாகைக்கொளு) 'முனம்' என்பது பாடம் அன்று. புண்ணியம், சிவபுண்ணியம். 'அப்புண்ணியத்திற்கு ஏற்புடைய மூர்த்தி' என்றபடி. உள்ளக் கோயிலில் வழிபடுதல், 'கிரியை, யோகம்' என்னும் சிவ புண்ணியங்களாதலை நினைக. சிவனை, "பாவ வினாசன்" என்றதனால் 'இவ்வழிபாட்டில் நின்றாரது வினையைப் போக்குபவன் அவன்' என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. சிவபுண்ணியத்தை நோக்க உலக வினைகளுள் நல்வினையும் பாவமேயாகும்.*

*இதனால், முன்னை மந்திரத்தில் "உடல் கோயில் கொண்டான்" எனப் பொது வகையாற் கூறியது சிறப்பு வகையால் இனிது விளக்கப்பட்டது.*

*இவ்விரண்டு மந்திரங்களும் வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் ஆயின.*

## 3. பிண்டலிங்கம்

*பிண்டம் - உடம்பு. பிண்டலிங்கம் - உடம்பே இலிங்கமாய் நிற்கும் முறைமை. உயிர்கள் பலவற்றிற்குப் பொதுவான இடம் அண்டம்; இது பெரிது, அவ்வவ்வுயிருக்கும் உரிய சிறப்பிடம் பிண்டம். இது சிறியது. பெரியதாகிய அண்டம் இலிங்கம் ஆதலை உணர்த்திய பின், சிறிதாகிய பிண்டம் இலிங்கம் ஆதலை நான்கு மந்திரங்களால் உணர்த்துகின்றார். உலகமனைத்துமே இறைவனது திருமேனியாகக் கண்ட ஞானி அவ்வுலகத்தை அனுபவிக்கும் சாதனமாக இறைவனால் அருளப் பெற்ற தம் உடம்பும் லிங்கமாதல் கண்டு தெளிகிறான்.*

**1703.** **மானுடர் ஆக்கை வடிவு சிவலிங்கம்**
**மானுடர் ஆக்கை வடிவு சிதம்பரம்**
**மானுடர் ஆக்கை வடிவு சதாசிவம்**
**மானுடர் ஆக்கை வடிவு திருக்கூத்தே. 1**

---

*1703. தெளிவுரை :- பிண்டம் மாயையின் காரியமாய் எலும்பும் நரம்பும் தோலும் இறைச்சியுமாய் ஏழுவகைத் தாதுக்களின் கூட்டமாய உடல். அதுவே சிவலிங்க வடிவாதலை உணர்த்துதலின் இவ்வதிகாரம் பிண்டலிங்கம் என்னும் பெயர்த்தாயிற்று. உலகமனைத்துமே இறைவனது திருமேனியாகக் கண்ட ஞானி அவ்வுலகத்தை அனுபவிக்கும் சாதனமாக இறைவனால் அருளப்பெற்ற தம் உடம்பும் லிங்கமாதலைக் கண்டு தெளிவனாதலின் அண்டலிங்கத்தின் பின் பிண்டலிங்கம் வைக்கப்பெற்றது.*

*உடலே சிவலிங்கமும் சிதாகாயமும், பிறவுமாதலைத் தெரிவித்தல் நுதலிற்று.*

*மானுடர் உடலின் உருவமே சிவலிங்கம்; அதுவே அறிவாகாயம்; அதுவே சதாசிவம்; அதுவே திருக்கூத்து என்றவாறு.*

*குறிப்புரை :- தலை - பாணம்; உடல் - சத்திபீடம்; கால் முதல் அரை வரை - பிரமபீடம் எனக் கொள்ளின், உடல் சிவலிங்க மாதல் தெளியலாம்.*

*சிதம்பரம் - ஞானாகாயம்; அது திருச்சிற்றம்பலம். அது இறைவன் இடைவிடாது நின்று ஐந்தொழில் நடனம் இயற்றுமிடமாதலின் சிதம்பர மெனப்பட்டது.*

*சதாசிவம் - அருவுருவத் திருமேனி தாங்கிய சிவமும் சத்தியும் இணைந்த உரு. சிவம் - உரு. அது இலிங்கம். சத்தி - அறிவு. அது அருவுருவத் திருமேனி யாகிய அருளாற்றல். இரண்டும் இணைந்த ஒன்று சதாசிவம். உடலும் சிவமும் அருளும் இணைந்தது ஒன்றாதலின் சதாசிவம் எனப்பட்டது.*

**1704.** உலந்திலிர் பின்னும் உளர்என நிற்பீர்
நிலந்தரு நீர்தெளி ஊன்நவை செய்யப்
புலந்தரு பூதங்கள் ஐந்தும்ஒன் றாக
வலந்தரு தேவரை வந்திசெய் யீரே. **2**

**1705.** கோயில்கொண் டன்றே குடிகொண்ட ஐவரும்
வாயில்கொண் டாங்கே வழிநின் றருளுவர்

---

*திருக்கூத்து - நடராசப் பெருமான் இயற்றும் திருநடனம். வடிவு திருக்கூத்து என்றது உடலின் ஒவ்வோர் அசைவும் அவன் இயற்றும் அருட்கூத்தாம் என்றவாறு.*

***1704. தெளிவுரை :-*** *உடம்பில் பொருந்தியுள்ள அழுக்கினை மண் குழைத்த நீர் போக்கித் தூய்மை செய்து, சிவனை அந்த உடம்பாகிய இலிங்கத்திலே வழிபடுங்கள்; இறந்த பின்னும் இறந்தவராக மாட்டீர்; என்றும் ஒரு பெற்றியை உடையிராய் வாழ்வீர்.*

***குறிப்புரை :-*** *முதலடியை இறுதியிற் கூட்டி, "பின்னும் உலந்திலிர்" என மொழி மாற்றி யுரைக்க. "உலந்திலிர்" எனப் பின் வருவதனால், "உலந்த பின்னும்" என்பது பெறப்பட்டது. 'என்றும்' என்பது, ஆற்றலால் வந்தியைந்தது.*

*வந்தி - வந்தித்தல்; முதனிலைத் தொழிற்பெயர்.*

*'உடம்பையே இலிங்கமாக வைத்து வழிபடப் புகும்பொழுது உடம்பை மாசு போக மண்ணாற் கழுவிக் குளித்தல் தவறாமற் செய்யத் தக்கது' என்பது உணர்த்துதற்கு அதனை எடுத்தோதினார். 'ஊன்நவை நிலந்தரு நீர் தெளி செய்ய' என்க. பூதங்கள் ஐந்திலும் தனித்தனியே இறைவனை எண்ணி வழிபடுதல் உண்டு ஆகலின், "அவை ஐந்தும் ஒன்றாக வந்தி செய்யீர்" என்றது, 'அவை ஒருங்கு கூடி ஒன்றாய்ப் பரிணமித்த உடம்பிலே அவனை எண்ணி வழிபடுக' என்றதாயிற்று. வலம் - வெற்றி. சிவன் தன்னை வழிபடுபவர்க்கு வெற்றியைத் தருதலாவது, அவர் நினைத்தவற்றை நினைத்தவாறே கைகூடச் செய்தல். இதனால், இவ்வழிபாட்டின் இடைநிலைப் பயனாகச் சிலவற்றைப் பெறுதல் குறிக்கப்பட்டது. 'பிற பயன்கள் இடைநிலையாகக் கிடைப்பினும் முடிநிலைப் பயனாகிய வீடுபேறு உளதாம்' என்பது முதலடியில் கூறப்பட்டது. இறந்த பின்னும் இறந்தவர் ஆகாமையாவது, மீளப் பிறவாமை, என்னை? இறந்தவர் பிறத்தல் ஒருதலையாகலின்.*

*இதனால், பிண்டலிங்க வழிபாடு ஐம்பூத வெற்றி, என்றும் உளராதல் உட்பட எல்லாப் பயனையும் தருதல் கூறப்பட்டது.*

***1705. தெளிவுரை :-*** *உடம்பை இறைவன் தன் இருப்பிடமாகக் கொண்டு அதன்கண் எழுந்தருளியவுடன், அதனைத் தங்கள் இல்லமாகக் கொண்டு வாழ்ந்து*

தாயில்கொண் டாற்போல் தலைவன்என் னுட்புக
ஆயில்கொண் டீசனும் ஆளவந் தானே. 3

**1706.** கோயில்கொண் டான்அடி கொல்லைப் பெருமறை
வாயில்கொண் டான்அடி நாடிகள் பத்துள
பூசைகொண் டான்புலன் ஐந்தும் பிறகிட்டு
வாயில்கொண் டான்எங்கள் மாநந்தி தானே. 4

---

*அதில் உள்ள உயிரை அலைக்கழித்து வந்து ஐம்புல வேடர், தம் நிலைமாறி, அந்த உடம்பு தானே அதில் உள்ள உயிர்க்கு உய்யும் வழியாக உடன்பட்டு, அவ்வுயிரின் வழிநின்று அதற்குத் துணைபுரிவர். அந்த முறையில்தான் அந்த ஐம்புல வேடரை அவர் குறும்பை அடக்கி ஆளுதற்குரிய தலைவனாகிய மனம் அவர் வழிப்படுதலை விட்டு என்வழிப்பட்டது. அதனால், 'அந்த உடம்பாகிய இல்லத்தைச் சிவன் தன் இல்லமாக ஏற்றுக் கொண்டு என்னை ஆட்கொள்ளுதற்கு அதன்கண் வந்து வீற்றிருக்கின்றான்' என்று உணர்கின்றேன்.*

*குறிப்புரை :- முன் இரண்டடிகளில் பொது முறைமையைக் கூறி, அஃதே பற்றித் தாம் எய்திய பயனைப் பின் இரண்டடிகளில் விளக்கினார்.*

*'கோயில் கொண்ட' - என்பதன் ஈற்றகரம் தொகுத்தலாயிற்று. இதில் உள்ள இறந்த காலம் எதிர்காலத்தது, 'நாளைக் கூற்றுவன் வந்தான், என் செய்வை' என்பது போல. "வாயில்" என்பதன் பின் ஆக்கச் சொல் வருவிக்க. இதன் பின் உள்ள கொள்ளுதல், ஏற்றுக் கொள்ளுதல்; உடன்படுதல்.*

*"தாய் இல் கொண்டாற்போல்" என்றது, 'அயலார் மனைகளில் மாறி மாறிச் சென்று ஒதுக்கிருந்தவன், தன் முன்னோர் கட்டி வைத்துத் தனக்கு உரித்தாகிய இல்லத்தை அடைந்து நிலைத்தாற் போல என்றபடி. அகரச் சுட்டு, செய்யுளில் நீண்டு நின்றது; 'அவ்வில்' என்றது, உடம்பாகிய இல்லத்தை.*

*இதனால், பிண்டலிங்க வழிபாட்டினால் புலன் அடக்கம் உண்டாக, இறையருள் கைகூடுதல் கூறப்பட்டது.*

*1706. தெளிவுரை :- எங்கள் பெரும்பெருமான் மக்கள் உடம்பைக் கோயிலாகக் கொண்ட நிலையில் புழைக்கடையாகிய மூலாதாரத்தையும், அதற்குமேல் குய்யத்திற்கு அணித்தாயுள்ள சுவாதிட்டானத்தையும் தன்னை அக்கோயிலிலே காண்பதற்குரிய வழிகளாகக் கொண்டும், உடம்பின் உள்ளே உள்ள நாடிகளில் தலையானவையாம் பத்து நாடிகளின் செயற்பாடுகளை அக்கோயிலில் நிகழும் வழிபாட்டுச் செயல்களாக ஏற்றும் விளங்குதல் செய்து, அதனால் புலன்கள் ஐந்தனையும் அடங்கப் பண்ணி, அவ்வுடம்பையே தான் மக்கள் உயிர்க்கு அருள் பண்ணும் வாயிலாகக் கொண்டிருக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *'அதனால் மக்கள் உடம்பு அவன் விளங்கி நிற்கின்ற இலிங்கமும் ஆகின்றது' என்பது குறிப்பெச்சம். "அடி" இரண்டும் 'மூலம்' என்னும் பொருளைத் தந்தன.*

*பிறகிடுதல் - புறங்காட்டுதல்; தோல்வியுறுதல். 'பிறகிடு வித்து' என்பதில் விவ்விகுதி தொகுக்கப்பட்டது.*

*யோக முறையில் சிவனை உடம்பினுள்ளே காணுதல் அநுபவமாதல் பற்றி, மக்கள் உடம்பு அவனது இலிங்கமாதற்குத் தடையின்மை இதனால் கூறப்பட்டது.*

## 4. சதாசிவ லிங்கம்

*உபசார வகையால் அமைகின்ற அண்டலிங்க பிண்ட லிங்கங்களைக் கூறிய பின்னர் உண்மையான் அமைகின்ற சதாசிவ லிங்கத்தின் இயல்பை இருபத்து மூன்று மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

*தனது உண்மை நிலையில் உருவம், பெயர், தொழில் யாதும் இல்லாத பரமசிவன் உலகத்தோடு தொடர்புற்று நிற்கும் பொது நிலையில் பலவகை உருவும், பெயரும், தொழிலும் உடையவனாவான். அந்நிலையில் அவன் கொள்கின்ற வடிவம் 'அருவம், அருஉருவம், உருவம்' என மூவகைப்பட்டு நிற்கும். அருவத்திருமேனியனாய நிலையில் சிவன்' என்றும், அருஉருவத் திருமேனியனாய நிலையில் 'சதாசிவன்' என்றும், உருவத் திருமேனியனாய நிலையில் 'மகேசுவரன்' என்றும் பெயர் பெறுவான். எனவே, 'சதாசிவலிங்கம்' எனப்படுவது அருவுருவத் திருமேனியாதல் அறிக.*

*அருஉருவத் திருமேனியாவது, பிழம்பு மாத்திரமாய், முகம் முதலிய உறுப்புக்களுள் யாதும் இன்றி இருப்பது. இஃது 'அருவம், உருவம்' என்னும் இரண்டனையும் ஒருங்கு உடைமையாலும், உருவத் திருமேனிகள் பலவற்றிற்கு மூல முதற் கருவாய் இருத்தலாலும் இதுவே எவ்விடத்தும் 'இலிங்கம்' எனச் சிறந்தெடுத்துக் கூறப்படுகின்றது.*

*திருக்கோயில்களில் கருவறையில் மூல மூர்த்தியாய் விளங்குவதும், யாவரும் மந்திர முறையால் அகத்தும், புறத்தும் சிறப்பாக வைத்து வழிபடப்படுவதும் இந்த அருவுருவ வடிவமேயாதல் நோக்கத்தக்கது.*

**1707.** **கூடிய பாதம் இரண்டும் படிமிசை**
**பாடிய கையிரண் டெட்டும் பரந்தெழும்**
**தேடும் முகம்ஐந்தும் செங்கயல் மூவைந்தும்**
**நாடும் சதாசிவ நல்லொளி முத்தே.** **1**

---

*1707. தெளிவுரை :- சதாசிவ வடிவம் இரண்டு திருவடி, பத்துக் கை, ஐந்து முகம், முகம் ஒன்றற்கு மூன்று கண்களாகப் பதினைந்து கண் இவற்றை உடையதாகும்.*

*குறிப்புரை :- கூடிய பாதம் - இணைந்து காணப்படும் பாதம். படி மிசை பாடிய - உலகத்தில் புகழ்ந்து போற்றப்படுகின்ற, கண் அருளைப் பொழிதலால் சத்தியாதல் பற்றி "கயல்" என்றார். 'சதாசிவமாகிய நல்ல ஒளியும், முத்துமாய தன் வடிவம்' என்க. ஒளியும், முத்தும் ஆகுபெயர்கள். நல் ஒளி' என்றதனால் இம்மூர்த்தம் ஒளியுருவே யாதல் விளங்கும். முத்து, மாணிக்கம், வயிரம் என்பன உயர்த்துக் கூறும் சொற்களாதல் வழக்கு நோக்கியறிக.*

*இதனால் சதாசிவ லிங்கத்தின் வடிவு கூறப்பட்டது.*

**1708.** வேதா நெடுமால் உருத்திரன் மேல் ஈசன்
மீதான ஐம்முகன் விந்துவும் நாதமும்
ஆதார சத்தியும் அந்தச் சிவனொடும்
சாதாரணமாம் சதாசிவந் தானே. **2**

---

*"நாலுகொ லாம்அவர் தம்முக மாவன" - தி.4 ப.18 பா.4*

*எனவும்,*

*"அஞ்சினாற் பொலிந்த சென்னி அதிகைவீ ரட்ட னீரே"*

*- தி.4 ப.26 பா.5*

*எனவும் அப்பர் அருளிச் செய்தன இச் சதாசிவ மூர்த்தத்தை நோக்கியேயாம்.*

*"சதாசிவனே நின்பாதம் போற்றி போற்றி" - தி.6 ப.32 பா.6*

*"மனோன்மணியைப் பெற்ற - தாயிலான்" - தி.5 ப.91 பா.1*

*என்ற அவரது திருமொழிகளையும் நோக்குக.*

*1708.* **தெளிவுரை :-** *சதாசிவந்தானே கீழ் நின்று ஒடுக்க முறையில் மேல் நோக்கி எண்ணப்படுகின்ற 'அயன், மால், உருத்திரன், மகேசுரன்' என்னும் நால்வராயும், தனக்குமேல் முறையே நிற்கும் விந்து, நாதம், சத்தி, சிவம் என்னும் நால்வராயும் இருக்கும். அதனால் அனைத்து மூர்த்தங்கட்கும் இது பொது மூர்த்தமாகும்.*

**குறிப்புரை :-** *ஆகவே, சதாசிவ மூர்த்தத்தை வழிபடவே சிவபேதம் அனைத்தையும் வழிபட்டதாம் என்பது பெறப்பட்டது.*

*சிவபேதம் ஒன்பது. அவை 'நவந்தரு பேதம்' எனப்படும். அவை அனைத்தும் இம்மந்திரத்துட் கூறப்பட்டமை காண்க.*

*விந்துவும், நாதமும், 'விந்து, பரவிந்து - நாதம், பரநாதம்' எனத் தனித்தனி இரண்டாகும். அவற்றுள் சில இடங்களில் பரவிந்து பரநாதங்களை, 'சத்தி, சிவம்' என்றும், சில இடங்களில் விந்து நாதங்களை, 'சத்தி, சிவம்' என்றும் கூறும் வழக்கம் சிவாகமங்களில் உள்ளது. இங்குப் பரவிந்து பரநாதங்களே அவ்வாறு கூறப்பட்டன.*

*சதாசிவத்திற்கு மேல் உள்ள நான்கும் அருவம். கீழ் உள்ள நான்கும் உருவம். நடுவில் உள்ள சதாசிவம் அருவுருவம், அருவம், உருவம் என்னும் இருதன்மையையும் உடைமையால் சதாசிவ மூர்த்தம் அனைத்து மூர்த்தமாயும் உள்ளது. இஃதே பற்றிச் சேக்கிழார் நாயனார்,*

*"காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்*
*நீள்நாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்"*

*- தி.12. சாக்கிய நாயனார் 8*

**1709.** ஆகின்ற சத்தியின் உள்ளே கலைநிலை
ஆகின்ற சத்தியின் உள்ளே கதிரெழ
ஆகின்ற சத்தியின் உள்ளே அமர்ந்தபின்
ஆகின்ற சத்தியுள் அத்திசை பத்தே. **3**

---

*என அருளிச் செய்தார். சாதாரணம் - பொது.*

*இதனால், சதாசிவ லிங்கமே அனைத்து லிங்கமும் ஆதல் கூறப்பட்டது.*

***1709. தெளிவுரை :-*** *அறிவு மாத்திரமாய் நிற்கின்ற சிவத்தினின்றும் செயல் வடிவாய்த் தோன்றுகின்ற சத்தியின் ஒருகூறு தோற்றமுறையில் சாந்தியதீதை முதலிய ஐந்து கலைகளாகின்ற ஆதார சத்திகளாய் நிற்கும். அந்தச் சத்திகளினின்றும் 'இலயம், போகம், அதிகாரம்' என்னும் ஆதேய சத்திகள் ஏற்ற பெற்றியால் தோன்ற, அந்தச் சத்திகளிலே சிவம் அதுவதற்கு ஏற்றவாற்றால் பொருந்தி நிற்க, அதன்பின் அந்த இலயம் முதலிய சத்திகளாலே அனைத்துலகங்களும் தோன்றும்.*

***குறிப்புரை :-*** *முதலடிக்கண் வருவித்துரைத்தன ஆற்றலால் கொள்ளக் கிடந்தன.*

*சாந்தியதீதை முதலிய ஐந்து சத்திகளாவன, 'சாந்தியதீதை, சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தி' என்பன. இவற்றுள் முதல் இரண்டு கலைகளில் இலயசத்தி தோன்றும். நடுவில் உள்ள ஒன்றின் முற்கூற்றில் போக சத்தி தோன்றும் அதன் பிற்கூற்றிலும், ஏனை இரு கலைகளிலும் அதிகார சத்தி தோன்றும். சத்தியை, "கதிர்" என்றார். அவற்றுள் சிவன் இலய சத்தியில் 'சத்தன்' எனவும், போக சத்தியில் 'சத்தியுத்தன்' எனவும், அதிகார சத்தியில், 'பிரவிருத்தன்' எனவும் பொருந்தி நிற்பான். அங்ஙனம் பொருந்தி நின்று அச்சத்திகளை அவன் தூண்டுதலினாலே உலகங்கள் தோன்றி நின்று விளங்கும். அனைத்துத் திசைகளையும் எண்ணியவழி அவை பத்தாம் ஆதலின் "அத்திசை பத்து" என்றார் 'பத்தும்' என்னும் முற்றும்மை தொகுக்கப்பட்டது. அதன்பின் 'ஆகும்' என்பது அவாய்நிலையாய் நின்றது, அமர்தலுக்கு, 'சிவம்' என்னும் வினைமுதல் வருவிக்கப்பட்டது.*

*இதனால், சதாசிவமே உலகிற்கு முதலாதல் கூறப்பட்டது. அஃதே சிவபேதம் அனைத்தும் ஆதலை முன்னை மந்திரத்துட் கூறியதனைக் கருதுக.*

***1710. தெளிவுரை :-*** *பத்துத் திசைகளாய் அமைந்த அந்த உலகத்துள்ளே தான் வேதங்களின் ஆறு அங்கங்களும், அந்த அங்கட்கு முதலாகிய நான்கு வேதங்களும், அந்த வேதங்களின் பொருளைச் சரியை முதலிய நான்கு பாகங்களாய் நின்று தெளிய உணர்த்துகின்ற சிவாகமங்களும் பொருந்தி நிற்கின்றன.*

1710. அத்திசைக் குள்ளே அமர்ந்தன ஆறங்கம்
அத்திசைக் குள்ளே அமர்ந்தன நால்வேதம்
அத்திசைக் குள்ளே அமர்ந்தன சரியையோடு
அத்திசைக் குள்ளே அமர்ந்த சமயமே. 4

---

*குறிப்புரை :- ''திசை'' என்றதனால் அவற்றை உடைய உலகம் பொருளுலகமாதல் விளங்கும். ஆறங்கம் முதலியன சொல்லுலகம் ஆதல் வெளிப்படை. எனவே உலகம் இங்ஙனம் இருவகைத்தாதல் விளங்கும். இவை முறையே 'அத்தப் பிரபஞ்சம், சத்தப் பிரபஞ்சம்' என வடமொழியில் சொல்லப்படும். 'முன்னர்க் கூறிய உலகத்துள் பின்னர்க் கூறிய உலகம் விளங்குகின்றது' என்றதனால் அதனையும் சிவனே சத்திய வாயிலாகத் தோற்றுவித்தல் பெறப்பட்டது.*

*கீழ் நின்றும் கூறும் முறையால் ஆறங்கம் முதற்கண் கூறப்பட்டன. அவையாவன 'சிட்சை, வியாகரணம், கற்பம், நிருத்தம், சோதிடம், சந்தோ விசிதி' என்பன.*

*அவற்றுள் சிட்சை வேத மந்திரங்களை உச்சரிக்கும் முறையை விளக்கும். வியாகரணம் - வேத மொழிகளின் இலக்கணத்தைக் கூறும். நிருத்தம் வேத மொழிபற்றிய பல விளக்கங்களைத் தரும். சோதிடம் - வேதத்திற் சொல்லப்பட்ட கருமங்களை இயற்றுதற்குரிய கால வகைகளைக் கூறும். கற்பம் - சூத்திர வடிவில் அமைந்து வேதத்தில் சொல்லப்பட்ட கருமங்களைச் செய்யும் முறைகளை விவரிக்கும். அவை ஆசுவலாயனர், போதாயனர், ஆபத்தம்பர் முதலிய முனிவர்களால் செய்யப்பட்டன. சந்தோவிசிதி - வேத மந்திரங்களுக்கு எழுத்துக் கணக்கில் சொல்லப்படுகின்ற சாந்த வகைகளை விளக்கும். இவை வேதங்களை நன்கு உணர்தற்குக் கருவி நூல்கள் ஆகையால் இவற்றை உணராவிடில் வேதங்களால் பயனடைய இயலாது.*

*'சரியையாதியோடு கூடிய சமயம் அத்திசைக்குள்ளே அமர்ந்தன' என்க. இடை நின்ற சில பதங்கள் தொகுத்தலாயின. "சமயம்" என்றது தலைமை பற்றிச் சைவத்தின் மேல் நின்று, ஆகுபெயராய் அதனை உணர்த்தும் ஆகமங்களைக் குறித்தன. அவ் ஆகமங்களில் சொல்லப்பட்ட சரியை முதலிய நான்கும் மேற்கூறிய உலகத்திலே நிகழ்வன' என்பதை "அத்திசைக்குள்ளே அமர்ந்த சரியையோடு" என உடம்பொடு புணர்த்து ஓதினார்.*

*இதனால், சதாசிவமே மேற்கூறிய பொருளுலகம் போலச் சொல்லுலகங்களையும் தோற்றுவித்து உயிர்கட்குப் பயன்பட வைத்தல் கூறப்பட்டது.*

***1711. தெளிவுரை :-*** *முன்னை மந்திரத்தில் தலைமை பற்றி, 'சமயம்' என்றே சொல்லப்பட்ட சைவ சமயத்தில் இறைவனுக்கு அவத்தைகள் பத்துச்*

**1711.** சமயத் தெழுந்த அவத்தையீ ரைந்துள
சமயத் தெழுந்த இராசியீ ராறுள
சமயத் தெழுந்த சரீரம்ஆ றெட்டுள
சமயத் தெழுந்த சதாசிவந் தானே. **5**

---

*சொல்லப்படுகின்றன. (அவத்தை - நிலை, உயிர் உடலில் இயங்கும் நிலை).*

| | | |
|---|---|---|
| *நனவு* | - | *புருவ நடு* |
| *கனவு* | - | *கழுத்து* |
| *உறக்கம்* | - | *இருதயத்தானம்* |
| *பேருறக்கம்* | - | *தொப்பூழ்* |
| *ஒடுக்கம்* | - | *மூலாதாரம்* |

*கீழ்நோக்கிச் சென்றால் கீழாலவத்தை. மேல்நோக்கிச் சென்றால் மேலால வத்தை ஆக அவத்தை ஈரைந்து. ஐந்தொழில் கடவுளரை சம்பு, அணுபட்சத்தில் வைத்து ஈரைந்தாகவும் கொள்வர்.*

*உலகத்தில் சூரியன் முதலிய கோள்கள் இயங்கும் இராசிகள் மேடம் முதல் பன்னிரண்டு சொல்லப்படுதல் போலச் சைவத்தில் இறைவன் தானங்கள் பன்னிரண்டு சொல்லப்படுகின்றன. (அவை பிராசாத கலைகள் இருக்கும் இடங்களாம்).*

*சைவத்தில், 'இறைவனுக்குத் திருமேனிகள் ஆறு' என்றும், 'எட்டு' என்றும் சொல்லப்படுகின்றன. (அவை முறையே ஆறு அத்துவாக்களும், அட்ட மூர்த்தங்களுமாகும்).*

*இவை அனைத்துமாய் நிற்பது சைவ சமயத்தில் சொல்லப்படும் சதாசிவ லிங்கம்.*

***குறிப்புரை :-** சைவ சமயத்தில் சொல்லப்படுவன சைவாகமங்களில் சொல்லப்பட்டனவே யாதலின், 'இவ்வாறெல்லாம் சைவா கமத்துள் சொல்லப்பட்டன' என்றபடி 'இலிங்க மூர்த்தத்தில் இதனுட் கூறியவாறெல்லாம் சிவன் நிற்றல் கருதி வழிபாடு செய்யப்படும்' என்பது உணர்த்தியவாறு.*

***இதனால் சைவ சமயத்தில், எல்லாம் சதாசிவ லிங்கமாகக் கொள்ளப்படுதல் கூறப்பட்டது.***

***1712. தெளிவுரை :-** இவ்வதிகாரத்து முதல் மந்திரத்துள், 'சதாசிவ லிங்கத்திற்கு ஐந்து முகங்கள் உள்ளன எனக் கூறிய முகங்கள் ஒரு வரிசையில் இல்லாமல், நடுவு, கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு என்னும் திசைகளில் பொருந்தியுள்ளன'.*

**1712.** நடுவு கிழக்குத் தெற்குஉத் தரம்மேற்கு
நடுவு படிகம்நற் குங்கும வன்னம்
அடைவுள அஞ்சனம் செவ்வரத் தம்பால்
அடியேற் கருளிய முகம்இவை அஞ்சே. **6**

---

*அவற்றுள் நடுவண் உள்ள முகம் படிகம் போன்ற நிறத்தையும், கிழக்கில் உள்ள முகம் குங்குமம் போன்ற நிறத்தையும், வடக்கில் உள்ள முகம் செவ்வரத்தம் பூப்போன்ற நிறத்தையும் மேற்கில் உள்ள முகம் பால்போன்ற நிறத்தையும் உடையன.*

*(கிழக்கில் உள்ள முகம் பொன் போன்ற நிறத்தை யுடையதாகச் சொல்லப்படுதலால், இங்கு, ''குங்குமம்'' என்பதற்கு, 'கலவைச்சாந்து' எனப்பொருள் கொள்ளுதல் பொருந்தும்).*

*இந்த ஐந்து முகங்களுடன் தோன்றியே சிவன் அடியேனுக்கு அருள்புரிந்தான்.*

***குறிப்புரை :-** சைவாகமங்களில் சொல்லப்பட்டதனை நாயனார் தாம் அனுபவமாக உணர்ந்தமையை இங்கும் எடுத்துக் கூறினார். இதனானே பிறவும் உண்மையாதல் தெளிவித்ததாம். முதற்கண் கூறியவாறே ''நடுவு'' எனத் தொடங்கினமையால், ஏனை முகங்களும் மேற்கூறிய அம்முறையவாயின.*

*இதனால், சதாசிவ லிங்கத்து முகங்களின் இடமும், நிறமும் கூறப்பட்டன. "நிறங்கள் ஓர் ஐந்துடையாய்" எனத் திருவாசகத்துள் கூறப்பட்டது. இங்குக் கூறிய முகங்களின் நிறம் நோக்கியேயாம். (தி.8 சிவபுராணம் - 49).*

***1713. தெளிவுரை :-** இவ்வதிகாரத்து முதல் மந்திரத்துட் கூறியவற்றுடன் பத்துக் கைகளிலும் பத்துப் படைக்கலங்களையுடைய சதாசிவ லிங்கமாய்ச் சிவன் என் இருதயத்துள் வந்து புகுந்து நிறைந்து நிற்கின்றான்.*

***குறிப்புரை :-** சதாசிவ லிங்கமே தமது தியானப் பொருளாதலைக் கூறுவார் மேற்கூறிய அவற்றுடன் பத்துக் கைகளிலும் பத்துப் படைக் கலங்கள் இருத்தலை இங்குக் குறித்தருளினார். "உள" என்னும் பெயரெச்சக் குறிப்புக்கள், 'உடைய என்னும் பொருளவாய் அடுக்கி, 'நம்பி' என்னும் ஒரு பெயர் கொண்டன. அப்படைகள் பத்தாவன வலக் கைகள் ஐந்திலும், 'சூலம், வச்சிரம், வாள், மழு, அபயம்' என்பனவும், இடக்கைகள் ஐந்திலும் பாம்பு, பாசம், அங்குசம், நெருப்பு, வரதம் - என்பனவுமாம். அபய வரதங்கள் ஆயுதம் அல்லவாயினும் பெரும்பான்மை பற்றி ''ஆயுதம்'' என்றார். புதிதாய்ப் புகுந்தது போலக் கூறினாராயினும், முன்பு விளங்கா திருந்தது விளங்கிற்று' என்பதே கருத்தென்க. மக்களுட் சிறப்புடையாரைக் குறிக்கும் 'நம்பி' என்பது, தேவர்கட்குத் தலைவனாகிய சிவபிரானுக்கும் சொல்லப்படுதல் நம்பி என்னும்*

**1713.** அஞ்சு முகம்உள ஐம்மூன்று கண்உள
அஞ்சினொ டஞ்சு கரதலந் தானுள
அஞ்சுடன் அஞ்சுஆ யுதம்உள நம்பிஎன்
நெஞ்சு புகுந்து நிறைந்துநின் றானே. 7

**1714.** சத்தி தராதலம் அண்டம் சதாசிவம்
சத்தி சிவம்மிக்க தாபர சங்கமம்
சத்தி உருவம் அருவம் சதாசிவம்
சத்தி சிவம்தத் துவம்முப்பத் தாறே. 8

---

*திருப்பதிகத்தாலும் அறிக. (தி.7 ப.63)*

*இதனால் தமது தியானப்பொருள் சதாசிவ லிங்கமாதல் கூறப்பட்டது. அதனால், 'பிறரும் அதுகொள்க' என்றதாம்.*

***1714. தெளிவுரை :-*** *அண்டலிங்கத்துள் பூமி பீடமாயும், வானம் பீடத்தின்மேல் உள்ள இலிங்கமாயும் அமையும். (எனவே, சதாசிவ லிங்கத்துள் பீடத்தில் பூமியும், இலிங்கத்துள் வானமும் அடங்குவனவாம்).*

*இனி இறைவன் உயிர்கள் பொருட்டுக் கொள்கின்ற 'தாபரம், சங்கமம்' என்னும் இருவகை வடிவங்களுள் தாபரம் சிவக்கூறும், சங்கமம் சத்திக்கூறும் ஆகும். (தாபரம் - பெயர்ந்து நிற்பன; திருவுருப் படிமங்கள். சங்கமம் - உலாவுவன; அடியார்கள்).*

*இறைவன் கொள்கின்ற திருமேனிகளில் உருவத் திருமேனிகள் சத்திக் கூறும், அருவத் திருமேனிகள் சிவக்கூறும் ஆகும்.*

***குறிப்புரை :-*** *'சிவக்கூறும், சத்திக் கூறும் சமமாக விரவியதே, சதாசிவம் ஆகையால், அது மேற்கூறிய அனைத்துமாய் நிற்கும்' என்றவாறு, 'தத்துவம் முப்பத்தாறு' எனப் பொதுவகையால் சதாசிவ தத்துவமும் அடங்கக் கூறினாராயினும் அதனைச் சிறப்பு வகையால் வேறு வைத்து உணர்த்துதலே கருத்தென்க. "சதாசிவம்" - இரண்டில் முன்னது இலிங்கத்தைக் குறித்தது. பின்னது, சிவம் என்னும் அளவாய் நின்றது.*

*'பருமை, நுண்மை என்னும் இருவகைப் பொருள்களில் பருமை யெல்லாம் சத்திக்கூறும், நுண்மை எல்லாம் சிவக்கூறும் ஆகும்' என்பது இதனால் உய்த்துணரக் கூறினமை காண்க.*

*"தாபர சங்கமம்" என்றது எதிர்நிரல் நிறை. 'சங்கம தாபரம்' என்றே பாடம் ஓதுதலும் ஆம்.*

*இதனால் சதாசிவ லிங்கத்தினது சிறப்பு, காரண வகையால் கூறப்பட்டது.*

**1715.** தத்துவ மாவது அருவம் சராசரம்
தத்துவ மாவது உருவம் சுகோதயம்
தத்துவ மெல்லாம் சகலமு மாய்நிற்கும்
தத்துவ மாகும் சதாசிவந் தானே. **9**

---

*1715.* ***தெளிவுரை :-*** *'தத்துவம்' எனப்படுவன காரியப் பொருள்கள் அனைத்திற்கும் மூலங்கள் ஆதலின், அவையே 'சரம், அசரம்' என்னும் இருதிறப் பொருளாயும் பரிணமிக்கும். தத்துவங்கள் யாவும் உயிர்கட்குத் துன்பம் நீங்கி, இன்பம் தோன்றுதற் பொருட்டே உள்ளனவாம். இவ்வாறு அனைத்துப் பொருளுமாய் நிற்கின்ற அனைத்துத் தத்துவங்களும் ஆவது சதாசிவலிங்கம்.*

***குறிப்புரை :-*** *தத்துவமாவது அருவமானது; அந்தத் தத்துவம் சராசரங்களாய் விரிந்து நிற்கும்போது உருவமாம்; உருவமாக விரிந்தபோதே சுகத்தின் விளக்கம் ஆம்; இத்தத்துவங்களனைத்தும் எல்லாமாய் விளங்கும்; தத்துவம் என்பது சதாசிவமே என்றவாறு.*

*தத்துவம் என்பது உண்மை. இயல்பு, பிருதிவி முதல் குடிலை ஈறாய தத்துவங்கள் என்ற மூன்று பொருளிலும் முறையே ஆளப்பெற்றிருத்தல் காண்க.*

*தத்துவம் பொருட்டன்மையாயபோது அருவாம். பொருளாகும்போது சராசரமான உருவாம். அது சுகத்தின் தோற்றமாய் விளங்கும். அதுவே சகலமாயும் நிற்கும். சகலம் - மல மாயா கன்மரூபமான வடிவு. அனைத்தும் எனலுமாம். தத்துவமாகும் சதாசிவன் தானே என்பது சதாசிவம் உண்மைகள் அனைத்திலும் கலந்து விளங்கும் பேருண்மையாம் எனலுமாம்.*

*இதனால், 'சதாசிவ லிங்கம் சிறப்புடைத் தாதற்குக் காரணம் அஃது அனைத்துத் தத்துவமுமாய் நிற்றலே' என்பது கூறப்பட்டது.*

*1716.* ***தெளிவுரை :-*** *சதாசிவனாய் நிற்பவனைத் துதியாது வேறு சொற்களைச் சொல்லிக் காலம் போக்குபவரும், அந்தச் சதாசிவமூர்த்தி அவரவர்க்கு ஏற்புடைத்தாக அளித்து ஏவுகின்ற தொழில்களைச் செய்பவரும் ஆகிய வானவரது நெறியோடு எனது நெறிமாறுகொளச் செய்தற் பொருட்டு அவன் எனது நெஞ்சத்தில் புகுந்தான். ஆதலின் அவனே நாம் வழிபடும் கடவுளாயினான். (என்வழி நிற்பீராயின்) நீங்களும் அவனது திருப்பெயர்கள் பலவற்றையும் கூறி அவனை வழிபடுங்கள்.*

***குறிப்புரை :-*** *'சதாசிவன் எம் இறை; கூறுமின் நூறு எனமாற்றி இறுதிக்கண் வைத்துரைக்க. "கூறுமின்" என்றதனால், "நூறு" என்பது பெயர்களாயிற்று. 'அவற்றைக் கூறுமின்' என வருதலால், "வேறு" அவையல்லாத பிறவாயிற்று. "உரை செய்தல்" இரண்டினுள் முன்னது "சொல்லுதல்" எனவும், பின்னது 'ஏவுதல்' எனவும் பொருள் தந்தன. "மிகைப் பொருள்" என்றது, 'பயனில் பொருள்'*

**1716.** கூறுமின் நூறு சதாசிவன் எம்மிறை
வேறுரை செய்து மிகைப்பொரு ளாய்நிற்கும்
ஏறுரை செய்தொழில் வானவர் தம்மொடும்
மாறுசெய் வான்என் மனம்புகுந் தானே. **10**

---

*என்றவாறு. சிவனது திருநாமங்களைச் சொல்லாது பிறவற்றையே சொல்லுதலால் ஆன்ம லாபத்தையிழத்தல் பற்றி வானவரை, "மிகைப்பொருள்" என்றார். 'நிற்கும் வானவர், தொழில் வானவர்' எனத் தனித்தனி இயையும். ஏறு- ஏறுதற்குரியன; பொருந்துவன. உரை செய்த தொழிலைச் செய்யும் வானவர் என்க. அவரது நெறியெல்லாம் பிறவி நெறியாகலின் வீட்டு நெறி அதனின் மாறும் நெறியாயிற்று. அதனைச் செய்தலாவது, தருதல். "செய்வான்", வானீற்று வினையெச்சம். மனம் புகுதலால் அந்நெறி எய்தினமை பற்றி, செய்வான் புகுந்தான் என்றார். பிறரெல்லாம் வந்த நெறியையே தருவாராக, சிவன் ஒருவனே வீட்டு நெறியைத் தருவோனாதல் பற்றி, "சதாசிவன் எம் இறை" என்றார்.*

*இதனால், 'சதாசிவ வழிபாடொழிந்த செயல்களைச் செய்தலால் தேவரும் பந்தத்தின் நீங்காமையால், அதனின் நீங்க விரும்புவோர் சதாசிவ வழிபாடே செய்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

***1717. தெளிவுரை :-** அருளே நிறைந்த உள்ளத்தை உடையவனாகிய கடவுளை யான் எனது உள்ளத்திலே, கறுத்த கண்டத்தையும், மழு ஏந்திய கையையும், சுருண்ட சடையாகிய முடியையும், ஒளியையுடைய பிறையாகிய கண்ணியையும் உடையவனாக நன்கு காண்கின்றேன்.*

***குறிப்புரை :-** 'அருவுருவனாகிய சதாசிவன் உருவனாய் விளங்கும் பொழுது இத்தன்மையனாய் விளங்குதலை யான் அநுபவத்தில் காண்கின்றேன்' என்பதாம். அதனால், 'கடவுளை இவ்வுருவத்தில் கண்டு வழிபடுதலும் சதாசிவ வழிபாடேயாகும்' என்பது உணர்த்தியவாறு. 'கடவுள் உருவத்திருமேனியனாய் விளங்கும் பொழுது இவ்வாறே நிற்பன்' என்பதை,*

*அண்டம் ஆரிரு ளூடு கடந்தும்பர்*
*உண்டு போலுமோர் ஒண்சுடர்; அச்சுடர்*
*கண்டிங் காரறிவார்! அறிவா ரெலாம்*
*வெண்டிங்கட் கண்ணி வேதியன் என்பரே. - தி.5 ப.97 பா.2*

*என்னும் அப்பர் திருமொழியானும் அறிக.*

*சந்திரசேகரர், பிட்சாடனர் முதலிய திருமேனிகள் அவ்வப் பொழுது கொண்டு விடப்பட்ட வடிவங்களாக அவற்றை 'மாகேசுர பேதங்கள்' எனவும், இங்குக் கூறிய இவ்வடிவமே 'மகேசுர இயற்கை வடிவம்' எனவும் எங்கும் கூறப்படுதலையும், 'பிரளயாகலருக்கு ஞானத்தை முன்னின்று உணர்த்தும்*

**1717.** இருளார்ந்த கண்டமும் ஏந்து மழுவும்
சுருளார்ந்த செஞ்சடைச் சோதிப் பிறையும்
அருளார்ந்த நெஞ்சத்தெம் ஆதிப் பிரானைத்
தெருளார்ந்தென் னுள்ளே தெளிந்திருந் தேனே. 11

**1718.** சத்திதான் நிற்கின்ற ஐம்முகம் சாற்றிடில்
உத்தரம் வாமம் உரைத்திடும் சத்தி
பச்சிமம் பூருவம் தற்புரு டன்உரை
தெற்கில் அகோரம் வடகிழக் கீசனே. 12

---

*பொழுது இவ் வடிவத்தில் நின்றே சிவன் உணர்த்துவன்' எனவும் எங்கும் கூறப்படுதல் காண்க.*

*கறைக்கண்டம், மழுப்படை, சடைமுடி, பிறைக் கண்ணி இவற்றைக் கூறியதனானே நாற்றோள், முக்கண் முதலிய பிறவும் கொள்ளப்படும். "பிறையும்" என்பதன் பின் 'உடையவனாக' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது.*

*இதனால், அருவுருவமாகிய சதாசிவ லிங்கம் உருவமாய் விளங்குமாறு கூறப்பட்டது. 'அனைத்தும் சதாசிவ லிங்கமே' என மேற் கூறியதனை நினைக.*

*1718. தெளிவுரை :- சிவனது சத்தி ஒன்றே ஐந்தாகி அவனுக்கு மேற்கூறிய பக்கங்கள் ஐந்திலும் உள்ள ஐந்து முகங்களாய் நிற்கும். அதனால் அம்முகங்களின் பெயரானே அச்சத்திகளும் குறிக்கப்படும்.*

*குறிப்புரை :- முகங்களின் பெயர்களை ஈண்டே கூறுகின்றார் ஆதலின், அவற்றது திசையை மறித்து ஈண்டும் கூறினார். இதனால், 'ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோ சாதம், என்பன முறையே மேலே, 'நடுவு கிழக்குத் தெற்குத் தரம்மேற்கு' என்னும் திசைகளில் உள்ளனவாகக் கூறப்பட்ட முகங்களின் பெயராதல் விளங்கிற்று.*

*சத்தி ஐந்தாதல், படைத்தல் முதலிய தொழில் ஐந்தனையும் செய்தற் பொருட்டு. படைத்தல் முதலிய தொழில்களைக் கீழே சத்தியோசாதம் முதலாக வைத்து, 'சத்தியோசாதம், வாம தேவம், அகோரம், தற்புருடம், ஈசானம்' என எண்ணிப் பொருந்திக் கொள்க. சத்தி, 'திருவடி' எனப்படுமாதலின், "போற்றி யெல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்" (தி. 8 திருவெம். 20) என்பன முதலிய ஐந்தும் இவ்வைந்து சத்திகளையே குறித்தல் அறிக.*

*இதனால், சதாசிவ லிங்கத்தின் ஐந்து முகங்களின் பெயர்களும் அவற்றது உண்மையும் கூறப்பட்டன.*

*1719. தெளிவுரை :- கிழக்கு முதலிய நான்கு திசைகளில் உள்ள முகங்கட்கு நடுவேயுள்ள முகமாய் நிற்கின்ற 'ஈசானம்' என்னும் சத்தி சதாசிவனுக்கு அந்த*

**1719.** நாலுள்நல் ஈசானம் நடுவுச்சி தானாகும்
தாணுவின் றன்முகந் தற்புரு டம்மாகும்
காணும் அகோரம் இருதயம் குய்யமாம்
மாணுறு வாமம்ஆம் சத்திநற் பாதமே. **13**

**1720.** நெஞ்சு சிரம்சிகை நீள்கவசம் கண்அம்பாம்
வஞ்சமில் விந்து வளர்நிறம் பச்சையாம்
செஞ்சுறு செஞ்சுடர்ச் சேகரி மின்ஆகும்
செஞ்சுடர் போலுந் தெசாயுதந் தானே. **14**

---

*முகமாய் நிற்றலேயன்றி, நடுத்தலையாகியும் நிற்கும். அவ்வாறே ஏனைய, 'தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோ சாதம்' என்னும் முகமாய் நிற்கின்ற சத்திகளும் அம்முகங் களாதலேயன்றிச் சதாசிவனது 'முகம், இருதயம், குய்யம், பாதம்' என்னும் அவ்வுறுப்புக்களாயும் நிற்கும்.*

***குறிப்புரை :-*** *சத்தி சிவனுக்கு ஐந்து முகங்களாயும் 'உச்சி, முகம், இருதயம், குய்யம், பாதம்' என்னும் உறுப்புக்களாயும் நிற்றல் மந்திர ரூபமாய் என்க. அதனால் ஐந்து முகங்களும், உச்சி முதலிய உறுப்புக்களும், இன்னும் அடுத்த மந்திரத்துக் கூறப்படுகின்ற சிகை முதலிய உறுப்புக்களும் கருதுகோள் (பாவனை) வகையால் அமைதல் விளங்கும்.*

*சதாசிவலிங்க வழிபாட்டில் வாய் மந்திரத்தைச் சொல்ல, மனம் அவற்றிற்கு ஏற்ற பாவனையைக் கொள்ள, கை கிரியையினைச் செய்ய, இவ்வாறு 'மந்திரம், கிரியை, பாவனை' என்னும் மூன்றானும் அது நிகழ்வதாகும். குய்யம் - குறி.*

*இதனுள் உயிரெதுகை வந்தது.*

***1720. தெளிவுரை :-*** *பச்சை நிறத்தை உடையவளாய்ச் சிவனாகிய கதிரவனுக்கு அவனது மிகச் செப்பமாகப் பொருந்திய கதிராய் விளங்குகின்ற பராசத்தியாகிய பெண்டு சதாசிவனுக்கு மந்திர வகையால் (மேற்கூறிய ஐந்து முகங்களும், உச்சி முதலிய உறுப்புக்களுமாய் நிற்றலேயன்றி), இருதயம், சிகை, சிரம், கவசம், நேத்திரம், அத்திரம் என்னும் உறுப்புக்களாயும், அம்மூர்த்தியின் பத்துக் கைகளிலும் உள்ளனவாக மேற்கூறப்பட்ட பகலவன் போலும் ஒளியினையுடைய பத்துப் படைக்கலங்களாயும் நிற்பள்.*

***குறிப்புரை :-*** *"பச்சையாம்........ மின்" என்பதனை முதலிற் கொண்டு, "ஆகும்" என்பதனை "தெசாயுதத்திற்"கும் கூட்டி, 'மின், விந்து ஆகும் : தெசாயுதம் ஆகும்' என உரைக்க.*

*விந்து - சுத்த மாயை, அஃது ஆகுபெயராய் அதன் காரியமாகிய மந்திரத்தைக் குறித்தது. இவற்றை "மந்திரம்" எனக் கூறிய இதனானே மேற்போந்த ஐந்து முகங்களும், உச்சி முதலிய உறுப்புக்களும் மந்திரங்களே ஆயின. அவற்றைக்*

*குறிக்கும் மந்திரங்கள் 'பஞ்சப் பிரம மந்திரம்' என்றும், இங்குக் கூறிய மந்திரங்கள் 'சடங்க மந்திரம்' என்றும் சொல்லப்படும். இப்பதினொன்றும் கூடிய தொகுதி, 'சங்கிதா மந்திரம்' எனப்படும். சைவத்தில் சிவ மூல மந்திரம் தலையானதாய் நிற்க இப்பதினொரு மந்திரங்களும் இன்றியமையாத் துணை மந்திரங்களாய் நிற்கும். இவற்றுள் பிரம மந்திரங்கள் ஐந்தும் 'நம' என்னும் முடிவினதாக, சடங்க மந்திரங்கள் 'நம' என்பதனோடு வேறு முடிவுகளையும் ஏற்ற பெற்றியால் உடையனவாகும்.*

***சம்ஹிதா மந்திரங்கள்***

| | | | |
|---|---|---|---|
| ஓம் | ஹோம் | *ஈசான மூர்த்தா⁴ய* | *நம:* |
| ஓம் | ஹேம் | *தத்புருஷ வக்த்ராய* | *நம:* |
| ஓம் | ஹூம் | *அகோ⁴ர ஹ்ருத³யாய* | *நம:* |
| ஓம் | ஹிம் | *வாம தே³வ கு³ஹ்யாய* | *நம:* |
| ஓம் | ஹிம் | *ஸத்³யோஜாத மூர்த்தயே* | *நம:* |
| ஓம் | ஹாம் | *ஹ்ருத³யாய* | *நம:* |
| ஓம் | ஹீம் | *சிரஸே* | *நம:* |
| ஓம் | ஹூம் | *சிகா²யை* | *நம:* |
| ஓம் | ஹைம் | *கவசா¹ய* | *நம:* |
| ஓம் | ஹௌம் | *நேத்ரேப்⁴யோ* | *நம:* |
| ஓம் | ஹ: | *அஸ்த்ராய* | *நம:* |

## பஞ்சபிரம்ம மந்திரம்
## (முக மந்திரங்கள்)

| வ. எண் | முகம் | திசை | ஐந்தொழில் | மந்திரம் | நியாசிக்கும் இடம் |
|---|---|---|---|---|---|
| 1. | ஈசானம் | நடுவு | அருள்தல் | ஈசான மூர்த்தவிய நம | நடுவுச்சி |
| 2. | தத்புருடம் | கிழக்கு | மறைத்தல் | தத்புருட வக்த்ராய நம | முகம் |
| 3. | அகோரம் | தெற்கு | ஒடுக்குதல் | அகோர ஹ்ருதாய நம | இருதயம் |
| 4. | வாமதேவம் | வடக்கு | காத்தல் | வாமதேவ குஹ்யாய நம | குறி |
| 5. | சத்தியோ சாதம் | மேற்கு | படைத்தல் | சத்தியோஜாத மூர்த்தயே நம | பாதம் |

1721. எண்ணில் இதயம் இறைஞான சத்தியாம்
விண்ணிற் பரைசிரம் மிக்க சிகைஆதி
வண்ணக் கவசம் வனப்புடை இச்சையாம்
பண்ணும் கிரியை பரநேத் திரத்திலே. 15

---

## சடங்க மந்திரங்கள்
## (உறுப்பு மந்திரங்கள்)

| | | | |
|---|---|---|---|
| 1. | நெஞ்சு | ஹ்ருதாய நம | ஞானசத்தி |
| 2. | சிரசு | சிரசே நம | பராசத்தி |
| 3. | சிகை | சிகாய நம | ஆதிசத்தி |
| 4. | கவசம் | கவசாய நம | இச்சாசத்தி |
| 5. | கண் | நேத்ரேப்யோ நம | கிரியாசத்தி |
| 6. | அம்பு | ஹஸ்திராய நம | மேற்கூறியவற்றுள் ஒன்று |

5 பஞ்ச மந்திரம் + 6 சடங்க மந்திரம் – 11 சங்கிதா மந்திரம்
ஐந்தொழிலையும் + ஆறு குணங்களையும் குறிக்கும்

*பஞ்சப் பிரம மந்திரங்கள் ஐந்தொழிற் சத்திகளேயாதல் போலச் சடங்க மந்திரங்கள் சிவனது எண்குணங்களில் தூய உடம்பினனாதல் இயல்பாகவே பாசங்களின் நீங்குதலிலும், இயற்கையுணர்வு முற்றுணர்விலும் அடங்க ஆறாய் நிற்கும் குணங்களேயாகும். எண்குணங்களில் ஆறினைச் சிறப்பாக எடுத்து இறைவனை, 'சுத்த சாட் குண்ணியன்' என்று கூறுவர்.*

*'செஞ்செவ்வுறு' என்பது குறைந்து நின்றது. செஞ்செவ் - மிக்க செப்பம். சேகரி மின் - தலைவியாய பெண்டு.*

*இவை இரண்டு மந்திரங்களாலும் முகமாய் நிற்கின்ற சத்திகள் பிறவாயும் நிற்றல் கூறப்பட்டது. இவற்றானே பிரம மந்திரம், அங்க மந்திரங்களது உண்மையும் கூறப்பட்டனவாம்.*

***1721. தெளிவுரை :- இருதயம் முதலாகக் கூறிய சடங்க மந்திரங்கள் ஆறனுள் அத்திரம் ஒழிந்த ஏனைய ஐந்தில் சிவனது ஞான சத்தியே இருதய மந்திரமாயும், பராசத்தியே சிர மந்திரமாயும், ஆதி சத்தியே சிகா மந்திரமாயும், இச்சா சத்தியே கவச மந்திரமாயும், கிரியா சத்தியே நேத்திர மந்திரமாயும் நிற்கும்.***

**1722.** சத்தி நாற்கோணம் சலம்உற்று நின்றிடும்
சத்தி அறுகோணம் சயனத்தை உற்றிடும்
சத்திநல் வட்டம் சலம்அற் றிருந்திடும்
சத்தி உருவாம் சதாசிவன் றானே. **16**

---

***குறிப்புரை :-*** *அத்திர மந்திரம் மேற்கூறிய குணங்களுள் ஒன்றேயாம். எண்ணில் - ஆராய்ந்து உணரின்.*

*இதனால் அங்க மந்திரங்களாய் நிற்கும் சத்தியின் வகைகள் கூறப்பட்டன.*

***1722. தெளிவுரை :-*** *இலிங்கத்தின் பீடம் நாற்கோணமாயிருப்பின் அது சிவனது இயக்கச் சத்தியாகும். அறுகோணமாய் இருப்பின் அது கிடத்தற் சத்தியாகும். வட்டமாய் இருப்பின் அது இருத்தற் சத்தியாகும். இதனால் சதாசிவன் சத்தி வடிவாய் நின்றே அருள்புரிவான் ஆகலின், சதாசிவ லிங்கமும் அத்தன்மையதேயாம்.*

**இலிங்க பீடம்**

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| பிரம்ம பாகம் | கீழ்ப்பகுதி | நாற்கோணம் | மூலாதாரம் | பீடம் | பிரம்மா | படைப்பு சத்தி | இலயம் |
| விட்டுணு பாகம் | நடுப்பகுதி | அறுகோணம் பத்மம் | சுவாதிட் டானம் | ஆவுடை யார் | திருமால் | காத்தல் சத்தி | போகம் |
| உருத்திர பாகம் | மேற்பகுதி | வட்டம் | ஆக்ஞை | பாணம் | குணி ருத்திரன் | ஒடுக்க சத்தி | அதி காரம் |

*குறிப்புரை :- இலிங்கத்தில் சத்தியே பீடமாதல் பற்றி அதனை வேறு கூறாது "சத்தி" என்றே போயினார். கிடத்தல், இருத்தல், இயங்கல் என்னும் மூன்றும் இலயம், போகம், அதிகாரம் என்க. சலம் - அசைவு.*

*இதனால், சதாசிவலிங்கத்தது வேறுபாடுகளும், அவற்றது உண்மையும் கூறப்பட்டன.*

*1723. தெளிவுரை :- பெரியோனாகிய சிவனைக் கிரியையாளர்கள் எத்தனை முறை தம்பால் வருமாறு அழைப்பினும் அத்தனை முறையும் அவன் ஐந்து முகங்களையுடைய சதாசிவ லிங்கத்திடத்தே வந்து, ஒப்பற்ற ஒளிவடிவாய் நிற்பான். யோகிகள் சுவாதிட்டானத்தினின்றும் பிராண வாயுவை மேல் எழத்தூண்டி, மேலும் உள்ள ஆதாரங்களைக் கடந்தவழி, ஏழாந்தானமாகிய ஆயிர இதழ்த் தாமரையிடத்தும், அதற்கு மேல் எட்டாந் தானமாகிய நிராதாரத்திடத்தும், அதனையும் கடந்த ஒன்பதாவதாகிய மீதானத்திடத்தும் விளங்குவான்.*

**1723. மானந்தி எத்தனை காலம் அழைப்பினும்**
**தானந்தி அஞ்சில் தனிச்சுட ராய்நிற்கும்**
**கானந்தி உந்தி கடந்து கமலத்தின்**
**மேனந்தி ஒன்பதின் மேவிநின் றானே. 17**

**1724. ஒன்றிய வாறுஉம் உடலி னுடன்கிடந்து**
**என்றும்எம் ஈசன் நடக்கும் இயல்பது**
**தென்றலைக் கேறத் திருந்து சிவனடி**
**நின்று தொழுதேன்என் நெஞ்சத்தி னுள்ளே. 18**

---

*குறிப்புரை :- 'யோகிகட்கே சிவன் அகத்தில் விளங்கி, ஏனைக் கிரியையாளர்க்குச் சதாசிவலிங்கத்திலே விளங்குவான்' என்பதாம். எனவே, 'கிரியையாளர்கள் சதாசிவ லிங்கத்திலே வழிபடுமாற்றால் அவனைக் காண்க' என்றதாயிற்று. "நந்தி" நான்கில் முன்னது பெயராயும், ஏனைய வினையெச்சமாயும் நின்றன. நந்துதல், இங்கு ஆக்கத்தின் மேற்று. கால் - காற்று. 'கடந்தவழி' என்பது, "கடந்து" எனத் திரிந்து நின்றது. "மேல் நந்தி ஒன்பதின் மேவி நின்றான்" என்றதனால், கமலம், ஆயிர இதழ்க் கமலமே ஆயிற்று.*

***இதனால், சதாசிவலிங்கம் கிரியையாளர்க்கு இன்றியமையாததாதல் கூறப்பட்டது.***

*1724. **தெளிவுரை :-** எங்கள் சிவபெருமான் தக்க முறையில் உங்களுடைய உடலின் உள்ளே பொருந்தி என்றும் விளங்குகின்ற முறை முன்னை மந்திரத்தின் பிற்பகுதியிற் கூறியவாறாகும். அதனால் நான் சிவனது திருத்தமான பாதங்கள் எனது அழகிய தலையிலே பொருந்துதற் பொருட்டு உள்ளத்துள் நின்றே வணங்கினேன்.*

*குறிப்புரை :- நீவிர் அது மாட்டீர் ஆகலின், மேற்கூறியவாறு சதாசிவலிங்கத்தில் சிவனைக் கண்டு வழிபடுங்கள்' என்பதும், 'அவ்வாறு வழிபட்டுவரின் என்னைப் போல நெஞ்சத்தினுள்ளே நின்று தொழும் நிலையை எய்துவீர்' என்பதும் குறிப்பெச்சம். ஒன்றியவாறு - தக்கவாறு. 'அந்த அந்த ஆதாரங்கட்கு ஏற்ப' என்றபடி. யோகத்தால் 'தூய்மை பெற்ற தலை' என்பர். "தென்தலை" என்றார். தென் அழகு. 'சிவனது திருவடி தலைமேல் ஏற' என்றது, 'ஞானம் உண்டாக' என்றபடி.*

*இதனால், 'சதாசிவலிங்க வழிபாடு பின்னர் உளதாகும் ஆன்மலிங்க வழிபாட்டைத் தரும்' என்பது கூறப்பட்டது. இனி இங்கு நின்றும் ஆகமலிங்க வழிபாட்டின் சிறப்பையே கூறுகின்றார். 'அதனைப் பெறுதற்குச் சதாசிவலிங்க வழிபாட்டைக் கடைப்பிடிக்க' என வலியுறுத்தற் பொருட்டு. இவ்வாற்றால் இனிவரும் அதிகாரத்திற்குத் தோற்றுவாயும் அமைகின்றது.*

**1725.** உணர்ந்தேன் உலகினில் ஒண்பொரு ளானைக்
கொணர்ந்தேன் குவலயம் கோயில்என் நெஞ்சம்
புணர்ந்தேன் புனிதனும் பொய்யல்லன் மெய்யே
பணிந்தேன் பகல் அவன் பாட்டும் ஒலியே. **19**

**1726.** ஆங்கவை மூன்றினும் ஆரழல் வீசிடத்
தாங்கிடும் ஈரேழுள் தான்நடு வானதில்
ஓங்கிய ஆதியும் அந்தமும் ஆம்என
ஈங்கிவை தம்முடல் இந்துவும் ஆமே. **20**

---

***1725. தெளிவுரை :-*** *ஒளிப் பொருளாகிய சிவனை நான் அத்தன்மையனாக இவ்வுலகிற்றானே உணர்ந்தேன். பின்பு அவனை இவ்வுலகத்திற்கே வருமாறு கொணர்ந்தேன். பின் என் மனமே கோயிலாக அவனைக் கூடினேன். அதனால் அவன் இல்லாதவன் அல்லன்; உண்மையாக உள்ளவனே. நாளெல்லாம் நான் பாட்டும், ஒலியுமாக அவனைப் பணிதலையே செய்கின்றேன்.*

***குறிப்புரை :-*** *உணர்ந்தது, ஆசிரியர் மொழியாற் கேள்வியினால் ஆகும். பின்பு முன் உணர்ந்தவாறு உள்ளத்தே வைத்து நினைக்க, அவன் நினைவிலே விளங்கி நிற்றலால், "குவலயம் கொணர்ந்தேன்" எனவும், "என் நெஞ்சம் கோயிலாகப் புணர்ந்தேன்" எனவும், 'இங்ஙனம் அவன் எனக்கு அனுபவப் பொருளாகவே இருத்தலால் "பொய்யல்லன் மெய்யே" எனவும் கூறினார். "பொய்யல்லன்; மெய்யே" என்றது, 'இறைவன் என்று ஒருவன் உளனோ' என ஐயுறுவாரை நோக்கிக் கூறியது. "நெஞ்சம்" என்பதன் பின் 'ஆக' என்பதும், "ஒலி" என்பதன்பின் உம்மையும், 'ஆக' என்பதும் விரிக்க. "பகல்" என்பதன்பின் "எல்லாம்" என்பது எஞ்சி நின்றது.*

***1726. தெளிவுரை :-*** *உடம்பின்கண் ஒன்றின்மேல் ஒன்றாய் உள்ள அக்கினி மண்டலம், சூரிய மண்டலம், சந்திர மண்டலம் என்னும் மூன்றிலும் நெருப்புப் போன்ற ஒளி வீச, 'சிவனது பேதம் ஒன்பதுள் நடுவணதாகிய சதாசிவ மூர்த்தத்தில் உலகத் தோற்றமும், ஒடுக்கமும் நிகழ்வன' என்று உணர்ந்து நின்றால், அந்தச் சதாசிவ மூர்த்தமும், உலகத்தோற்றமும், ஒடுக்கமுமாய் நிற்கின்ற சத்தி, அவ்வுணர்ச்சியை உடையவனது உடலில் சந்திரன் போல ஒளிவிட்டு நிற்கும்.*

***குறிப்புரை :-*** *"உடல்" எனப் பின்னர் வருதலின் "ஆங்கு" என்னும் சுட்டு, செய்யுளின் முதற்கண் நின்றது. தாங்குதலுக்கு, 'சிவன்' என்னும் எழுவாய் வருவித்துக் கொள்க. "வீசிட" என்னும் எதிர்கால வினையெச்சம். "என" என்பதின் சொல்லெச்சமாய் நிற்கும் 'உணர' என்பதனோடு முடிந்தது. உணர்தல், இங்கு தியானித்தல். இவற்றை உடைய சத்தியை "இவை" என்றது பான்மை வழக்கு. 'இவற்றால்' என்னும் உருபு தொகுத்தலாயிற்று. "இந்துவும்" என்னும் உம்மை உயர்வு சிறப்பு.*

**1727.** தன்மேனி தற்சிவ லிங்கமாய் நின்றிடும்
தன்மேனி தானும் சதாசிவ மாய்நிற்கும்
தன்மேனி தற்சிவன் தற்சிவா னந்தமாம்
தன்மேனி தானாகும் தற்பரன் றானே. **21**

**1728.** ஆரும் அறியார் அகாரம் அவன்என்று
பாரும் உகாரம் பரந்திட்ட நாயகி
தாரம் இரண்டும் தரணி முழுதுமாய்
ஊறி எழுந்திடும் ஓசைய தாமே. **22**

---

*1727.* ***தெளிவுரை :-*** *அகவழிபாடு செய்பவனுக்கு அவனது உடம்பே சதா சிவமூர்த்தியாயும், அம்மூர்த்தி மானாயும் நிற்கும். இன்னும் அது சுத்த சிவனாயும், அச்சிவனது ஆனந்தமாயும் நிற்கும். அஃது இவ்வாறெல்லாம் ஆகும்படி சிவன் அவனது உடம்பே தானாய் விளங்கி நிற்பான்.*

***குறிப்புரை :-*** *'அகவழிபாடு செய்வான்' என்பது அதிகாரத்தால் கொள்ளப்பட்டது. சதாசிவனையும், சுத்த சிவனையும் உணர்ந்து, அவ்வுணர்வானே சுத்த சிவனது ஆனந்தத்தைப் பெறுதற்கு வாயிலாதல் பற்றி உடம்பை அவையெல்லாமாகப் பாற்படுத்து அருளிச் செய்தார். மானுடராக்கை வடிவு சிவலிங்கம்" என்னும் மந்திரத்துட் கூறியன பிண்டம் இலிங்கமாதலைக் குறித்தற்கும் இங்குக் கூறியன அகவழி பாட்டின் சிறப்பினை உணர்த்தற்கும் கூறப்பட்டன ஆகலின், இவை கூறியது கூறல் ஆகாமை அறிக. தற்பரன் - தனக்கு மேலே உள்ளவன்.*

*1728.* ***தெளிவுரை :-*** *சிவன் அகாரமாயும், சத்தி உகாரமாயும் நிற்க. அவ்விரண்டும் கூடி ஓகாரமாகும். அந்த ஓகாரம் உலக முழுவதும் பரவி, உள்ளத்தினின்றும் எழுகின்ற எல்லா எழுத்துக்களுமாய் ஒலிக்கும். இவை இரண்டுமே இணைந்து சிவலிங்கமாயிற்று.*

***குறிப்புரை :-*** *'அதனால் அந்த ஓகாரத்தை உன்னலே சிறப்புடைய வழிபாடாகும்' என்பது குறிப்பெச்சம். 'பீசாக்கரங்கள் அனைத்திலும் மகாரம் சேர்ந்து வருதல் இயல்பாகலின், அனைத்து மந்திரங்கட்கும் பொதுப் பீசமாகிய ஓகாரத்தோடு அது சேர்ந்து நிற்றல் சொல்ல வேண்டா' என்று போயினார். பாரும் - அறிமின். இதனை "நாயகி" என்பதன் பின்னர்க் கூட்டுக. 'தாரகம்' என்பது இடைக் குறைந்து நின்றது. தாங்குவது, என்னும் பொருட்டாய்ப் பிறமந்திரங்கள் அனைத்திற்கும் அடிநிலையாவது' என்னும் பொருட்டாய்ப் பிறமந்திரங்கள் அனைத்திற்கும் அடிநிலையாவது' என்னும் கருத்தினைத் தருவது. 'இரண்டும் தாரகம்' என மாற்றியுரைக்க. 'எழுத்து' என்பது, 'எழுது' என்பது அடியாகப் பிறப்பது - என்றலும் பொருந்தும் ஆகலின், "எழுந்திடும்" என்றது எழுத்துக்களின்*

**1729.** இலிங்கநற் பீடம் இசையும்ஓங் காரமாய்
இலிங்கநற் கண்டம் நிறையும் மகாரம்
இலிங்கத்துள் வட்டம் இறையும் உகாரம்
இலிங்கம் அகாரம் நிறைவிந்து நாதமே. **23**

---

*பிறப்பைக் குறித்து நின்றதாம். "மாறி எழுந்திடும்" என்பது பாடம் அன்று. இதனுள் ரகத்திற்கு றகரம் ஓராற்றால் இன எதுகையாயிற்று.*

***1729. தெளிவுரை :-*** *(முன்னை மந்திரத்தில், 'ஓங்காரத்துள் சிவமும், சத்தியும் முறையே அகாரமும், உகாரமுமாய் நிற்பர், என்றதனால், அவ்விருவரது வடிவமுமாகிய இலிங்கம் ஓங்காரமாய் நிற்றல் எவ்வாறு' எனின்). பீடம் சமட்டியான ஓங்கார வடிவேயாய் இருக்கும் இலிங்கம். ஒவ்வொரு கூற்றில் ஒவ்வோர் எழுத்தாய் வியட்டியாய் இருக்கும். அவற்றுள் பீடத்தின் உள்ளே மறைந்து நிற்கும் பகுதி மகரமாயும், பீடத்தோடு இணைந்து வெளியே புலனாகி நிற்கின்ற பொருந்துவாயாகின்ற வட்டம் உகாரமாயும், இலிங்கம் கீழ் நின்று முக்கூறுபட்டு முறையே அகாரமும், விந்துவும், நாதமுமாய் இருக்கும்.*

***குறிப்புரை :-*** *'இலிங்க நற் கண்டம் மகாரமாய் நிறையும்; இலிங்கத்து உள்வட்டம் உகாரமாய் நிறையும்' என ஆக்கச் சொல்லை ஏனையிரண்டிற்கும் கூட்டி, மொழிமாற்றி உரைக்க. பின்பு, 'இலிங்கம் அகாரம், நிறைந்து விந்து, நாதம் ஆம்' என்க. கண்டம் - கூறு. பீடத்துள் மறைந்து நிற்பது தனி ஒரு பகுதியாய்ப் புலனாகாது நிற்றல் பற்றி அதனை, "கண்டம்" என்றும், பீடத்தின் விளிம்பு வெளிவட்டம் ஆதலின், அதன் நடுவில் இலிங்கம் பொருந்தி நிற்கின்ற பொருத்து வாயை "உள்வட்டம்" என்றும் கூறினார்.*

*இறைவனது உபசார வடிவங்களில் மந்திர வடிவம் சிறந்ததாதல் பற்றி அதனை முன்னை மந்திரத்துட் கூறி, அவ்வாற்றானே இலிங்கமும் மந்திர வடிவாதலை இம்மந்திரத்துட் கூறினார். புறத்து உள்ள இலிங்கம் இவ்வாறு மந்திர வடிவாதலைக் கூறியதனானே அகத்திலும் இலிங்கம் அவ்வாறே கொள்ளப்படுதல் பெறப்பட்டது. படவே, இவ்விரண்டு மந்திரங்களும் வருகின்ற அதிகாரத்திற்குச் சிறந்த தோற்றுவாய் ஆயினமை காண்க.*

## 5. ஆத்தும லிங்கம்

***சதாசிவ மூர்த்திக்கு மந்திரம் சிறந்த வடிவாதலை அருளிச்*** *செய்தபின், அம்மந்திரங்கள் ஆன்மாவின் உணர்வை எழுப்பு மாற்றானே சிவனை அடைவிக்கும் ஆதலின், அவ்வுணர்வே சிவனுக்கு வடிவாதலை 'ஆத்தும லிங்கம்' என வைத்துப் பத்து மந்திரங்களால் அருளிச் செய்கின்றார்.*

**1730.** **அகார முதலாய் அனைத்துமாய் நிற்கும்**
**உகார முதலாய் உயிர்ப்பெய்து நிற்கும்**
**அகார உகாரம் இரண்டும் அறியில்**
**அகார உகாரம் இலிங்கம தாமே.** **1**

**1731.** **ஆதாரம் ஆதேயம் ஆகின்ற விந்துவும்**
**மேதாதி நாதமும் மீதே விரிந்தன**
**ஆதார விந்து அதிபீடம் நாதமே**
**போதா இலிங்கப் புணர்ச்சிய தாமே.** **2**

---

*1730. தெளிவுரை :- சிவன் அகார கலைக்கு முதல்வனாம் முகத்தால் அனைத்துப் பொருளுமாய் நிற்பான். உகார சத்தி கலைக்கு முதல்வனாம் முகத்தால் அப்பொருள்களைச் செயற்படுத்தி நிற்பான். அதனால் அந்த இருகலைகளை உணரின் அந்த உணர்வு தானே சிவனது வடிவமாகும். அகார உகார இணைப்பே இலிங்கமாம். அகர உகர இணைப்புப் பிரணவம். பிரணவமே சிவலிங்கமாம்.*

*குறிப்புரை :- பிரணவ கலைகளில் பருநிலையை உடையன அகார கலை, உகார கலைகளேயாதலின், அவற்றை உணரும் உணர்வே முதற்கண் இலிங்கமாய் நிற்கும்' எனக் கூறினார். "நிற்கும்" என்பவற்றிற்கு, 'சிவன்' என்னும் எழுவாய் வருவிக்க. உயிர்ப்பு - செயற்பாடு. எய்தல் - நிகழ்த்தல். சொல்லோடு பொருட்கு உள்ள ஒற்றுமை கருதி, மந்திர கலையையே பொருளாக ஓதினார்.*

*இதனால் மந்திர உணர்வே இலிங்கமாமாறு தொகுத்துக் கூறப்பட்டது.*

*1731. தெளிவுரை :- தனக்குக் கீழ் உள்ள அகாரம் முதலிய எழுத்துக்களை நோக்க அவற்றைத் தாங்கி நிற்கின்ற ஆதாரமாயும், தனக்கு மேல் உள்ள நாதத்தை நோக்க அதன்கண் பொருந்தியுள்ள ஆதேயமாயும் உள்ள விந்துவும், மேதை முதலிய அனைத்துக் கலைகட்கும் முதலாய் உள்ள நாதமும் முறையே ஒன்றின்மேல் ஒன்றாய் விளங்கி நிற்கும். அதனால், அவற்றுள் விந்துவே ஆதாரமாகின்ற பீடமாயும் நாதமே அந்தப் பீடத்தின்பால், வந்து இலிங்கத்தின் சேர்க்கையாயும் இயைந்து நிற்கும். விந்து நாதங்களின் புணர்ச்சியே ஞான மயமாகிய இலிங்கமாம்.*

**1732.** **சத்தி சிவமாம் இலிங்கமே தாபரம்**
**சத்தி சிவமாம் இலிங்கமே சங்கமம்**
**சத்தி சிவமாம் இலிங்கம் சதாசிவம்**
**சத்தி சிவமாகும் தாபரந் தானே.** **3**

---

*குறிப்புரை :- மேதாதி நாதம், 'மேதை முதலியவற்றிற்கு முதலாகிய நாதம்' என நான்காவதன் தொகையாய் நின்றது. 'விந்து அதி ஆதார பீடம்' என மொழிமாற்றிக் கொள்க. "விந்து, நாதம்" - என்றது, அவற்றால் உளவாகும் உணர்வுகளையே என்க.*

*இதனால், மந்திர உணர்வே இலிங்கமாமாறு வகுத்துக் கூறப்பட்டது.*

*1732. **தெளிவுரை :-** (மேற்கூறிய விந்து நாதங்கள் முறையே சத்தி சிவவடிவாகும் ஆதலால்). அவ்விரண்டும் ஒன்றாய் இயைந்த நிலையே புறத்தில் உள்ள தாபர சங்கமங்களும், சாதாக்கிய தத்துவத்தில் விளங்கும் சதாசிவ மூர்த்தியும் ஆகும். இனி சிவ வடிவம் யாதாயினும் அது சத்தி, சிவம் இரண்டும் இயைந்த வடிவமேயாகும்.*

***குறிப்புரை :-** தாபரம் - திருக்கோயிலில் உள்ள திருவுருவங்கள் நிலையானவை. சங்கமம் - அடியார்கள், ஈற்றில் நின்ற "தாபரம்" என்பது இலிங்கத்தின் பரியாயப் பெயராய்ச் சிவவடிவை உணர்த்திற்று. எவ்வடிவமும் 'சத்தி சிவக்கூட்டே' என்றதனால், உணர்வாகிய வடிவமும் அன்னதேயாதல் பெறப்பட்டது.*

*1733. **தெளிவுரை :-** பொன்னால் இயன்ற, பூவொடு கூடிய கொடி போலும் சத்தியுடன் சிவன் ஆன்ம சிற்சத்தியை நேரே பற்றி அதற்குப் பொருள் தருகின்ற நாதமே தன் வடிவாகக் கொண்டு ஆன்மாவின் உணர்வில் விளங்குவான். அதனால் அந்த நாதத்தின் காரியமாய் ஆகாயத்தின் ஒலியால் விளங்கி நிற்கின்ற ஐம்பது எழுத்துக்களும் பொருந்தியுள்ள இடத்தில் அடியவன் அடியார்களுக்கு நேரே விளங்கி நிற்கும் சிவசோதியைக் காண இயலும்.*

***குறிப்புரை :-** 'ஆதலால் அந்த ஐம்பது எழுத்துக்களையும் இலிங்கமாக வைத்துத் தியானிக்க' என்பது குறிப்பெச்சம். அத்துவாக்கள் ஏனை ஐந்து கலைகளில் அடக்கம் ஆதல் வெளிப்படை ஆதலின், அவற்றுள் மந்திராத்துவா அக்கலைகளில் அடங்கி நிற்கும் முறையும் வெளிப்படை. ஆகவே நிவிர்த்தி பிரதிட்டா கலையில் அடங்கி நிற்கும் எழுத்துக்கள் ஆதார பீடமாகவும், வித்தியா கலையில் அடங்கி நிற்கும் எழுத்துக்கள் நடுக்கண்டமாகவும் சாந்தி கலையில் உள்ள எழுத்துக்கள் பீடமாகவும், சாந்தியதீத கலையில் உள்ள எழுத்துக்கள் இலிங்கமாகவும் நிற்றல் போதரும்.*

*இம்மந்திரத்தை மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க. "அமர்ந்திடம்" - என்பதில் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. "தான்" இரண்டில்*

**1733.** தான்நேர் எழுகின்ற சோதியைக் காணலாம்
வான்நேர் எழுகின்ற ஐம்ப தமர்ந்திடம்
பூநேர் எழுகின்ற பொற்கொடி தன்னுடன்
தான்நேர் எழுந்த அகாரம தாமே. **4**

**1734.** விந்துவும் நாதமும் மேவும் இலிங்கமாம்
விந்துவ தேபீடம் நாதம் இலிங்கமாம்
அந்த இரண்டையும் ஆதார தெய்வமாய்
வந்த கருஐந்தும் செய்யும்அவ் வைந்தே. **5**

---

*முன்னது வழிபடுபவனையும், பின்னது வழிபடப்படும் சிவனையும் குறித்தன. நாதத்தை, 'அகாரம்' என்றலும், விந்துவை உகாரம் என்றலும் வழக்கு. அதனால், 'சத்தி உகாரமாய் நிற்க' என்பதும் இங்கு ஆற்றலால் பெறப்படும்.*

*நிவிர்த்தி கலையுட்பட்ட நம்மனோர்க்கு எழுத்தோசைகள் ஆகாயத்தின் குணமாகிய இசையோசையாம் உபாதியோடு கூடியன்றிப் புலனாகாமையின் அவற்றை, "வான் நேர் எழுகின்ற ஐம்பது" என்றார்.*

*இதனால் அக்கர உணர்வே ஆத்தும லிங்கமாதல் கூறப்பட்டது.*

***1734. தெளிவுரை :-*** *சத்தி சிவங்கட்கு வடிவமாய் நிற்கின்ற விந்து நாதங்களின் வடிவமே இலிங்க வடிவம். **அவற்றுள் விந்துவே பீடமாயும், நாதமே இலிங்கமாயும் நிற்கும்**. அந்த விந்து நாதங்களை முதலாகக் கொண்டு தோன்றிய 'சிவன் சத்தி, சதாசிவன், மகேசுரன், வித்தியேசுரன்' என்னும் முதல்வர் ஐவரும் முறையே, சிவம், சத்தி, சதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தை என்னும் சுத்த தத்துவம் ஐந்தையும் தோற்றுவிப்பார்கள்.*

***குறிப்புரை :-*** *சிவன் முதலிய ஐவரே உண்மைக் கருத்தாக்களாக ஏனை, 'அனந்த தேவர், சீகண்டர், மால், அயன்' முதலியோர் உபசார கருத்தாக்களேயாதலின், 'அவரும், அவர்தம் செயல்களும் இவ்வுண்மைக் கருத்தாக்களாலே உள ஆவன' என்பது பெறப்படும். படவே, 'அக்கருத்தாக்கள் ஐவரும் விந்து நாதங்களை முதலாகக் கொண்டவர் ஆதலின், அவ்விந்து நாதங்கள் இன்றி உலகம் இல்லை என்றதனால், அவ்விந்து நாதங்களின் வடிவாகிய இலிங்கம் உலக முதலாகும்' என்றதாயிற்று. 'இவ்வாறு இலிங்க வடிவின் உண்மையை உணரும் உணர்வே ஆத்தும லிங்கம்' என்பது கூறப்பட்டது.*

*'விந்து; நாதம்' என்பன பரவிந்து பரநாதங்களையும் அபர விந்து அபர நாதங்களையும் ஏற்ற பெற்றியான் உணர்த்தி நிற்கும் ஆதலின், இங்கு அவை பரவிந்து பரநாதங்களை உணர்த்தின. அவை முடிநிலை முதலாய் நிற்றலின் அவற்றை ஒழித்து, அபர நாதம் முதலாகவே தத்துவங்கள் எண்ணப்படுகின்றன. அபர நாத மூர்த்தியே, 'சிவன்' என்றும், அபர விந்து மூர்த்தியே 'சத்தி' என்றும்*

**1735.** சத்திநற் பீடம் தகும்நல்ல ஆன்மா
சத்திநற் கண்டம் தகுவித்தை தானாகும்
சத்திநல் லிங்கம் தகும்சிவ தத்துவம்
சத்திநல் லான்மாச் சதாசிவந் தானே. **6**

---

*சொல்லப்படுகின்றனர். அம்மூர்த்திகட்கு இடமாய் நிற்கும் தத்துவங்களே, 'சிவதத்துவம், சத்தி தத்துவம்' - எனப்படுகின்றன. "இலிங்கம்" இரண்டினில் முன்னது பொதுவாக இலிங்க வடிவினையும், பின்னது சிறப்பாகப் பிழம்பினையும் குறித்தன.*

*முதல்வர் ஐவரையும் "கரு ஐந்து" என அஃறிணை வாய்பாட்டாற் கூறினார். கடவுளரை எத்திணை வாய்பாட்டிலும் கூறுதல் வழக்காதலின் தெய்வமாய் என்பதன்பின், 'கொண்டு' என ஒருசொல் எஞ்சி நின்றது.*

*இதனால், **'இலிங்க வடிவும் உலக முதலில் வடிவும்' என உணரும் உணர்வே ஆத்தும லிங்கமாதல் கூறப்பட்டது**.*

***1735. தெளிவுரை :-** அருளே திருமேனியாகக் கொள்ளும் சிவனது திருவடியாகிய இலிங்கத்தில் பீடம் ஆன்மதத்துவமும், நடுக் கண்டம் வித்தியா தத்துவமும், கண்டத்திற்குமேல் உள்ள பகுதி சிவதத்துவமும் ஆகும். அந்த வகையினதாகிய இலிங்க மூர்த்திமான் சதாசிவராவர்.*

***இதனுள் "சத்தி" என்றது, 'அருள்' என்றபடி. முன்னர் "ஆன்மா" என்றது ஆன்ம தத்துவத்தையும், பின்னர் "ஆன்மா" என்றது மூர்த்தி மானையுமாகும். முப்பத்தாறு தத்துவங்களும் கூடிய கூட்டம் இலிங்க வடிவாம் என்றதனால் அத்தத்துவங்களால் விளங்குகின்ற ஆன்ம உணர்வும் சிவனுக்கு இலிங்கத்***




*திருமேனியாய் நிற்றல் கூறப்பட்டது. படவே, அவ்வுண்மையை உணராதவர்க்கு அவரது உணர்வு பாசமாயும், உணர்வார்க்கு அவரது உணர்வு சிவமாயும் நிற்கும் என்க.*

**1736.** மனம்<u>புகுந்</u> **<u>தென்னுயிர்</u>** மன்னிய வாழ்க்கை
மனம்<u>புகுந்</u> **<u>தின்பம்</u>** பொழிகின்ற போது
நலம்<u>புகுந்</u> **<u>தென்னொடு</u>** நாதனை நாடும்
இலம்<u>புகுந்</u> **<u>தாதியும்</u>** எற்கொண்ட வாறே. 7

**1737.** பராபரன் எந்தை பனிமதி சூடி
தராபரன் தன்அடி யார்மனக் கோயில்
சிராபரன் தேவர்கள் சென்னியில் மன்னும்
மராமரன் மன்னி மனத்துறைந் தானே. 8

---

***1736. தெளிவுரை :-*** *மனத்தின் தொழிற்பாடு நிகழ்தலால் நடைபெறுகின்ற என்னுடைய உயிர் வாழ்க்கையில் அந்த மனம் உலக இன்பத்தையே மிகுவித்துக் கொண்டிருக்கின்ற நிலைமையின் இடையே சிவனது திருவருள் புகுந்து செயலாற்றத் தொடங்கின மையால், அந்த மனமும் முன்னை நிலையை விடுத்து, என்னையும், என் தலைவனையும் நினைவதாயிற்று. சிவன் எனது உடம்பையே தனது இல்லமாகக் கொண்டு என்னை ஆட்கொண்டது இம்முறைமை யினாலாம்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'எனது உயிர் ஆத்தும லிங்கமானது இவ்வாற்றால்' என்றபடி. "புகுந்து" நான்கில் முதலாவதும், மூன்றாவதும் 'புகுதலால்' என்பதன் திரிபு. "நலம்" என்றது. திருவருளை, "நாடும்" என்னும் பயனிலைக்கு எழுவாய், 'அம்மனம்' என வருவிக்க. இல்லம், "இலம்" என இடைக் குறைந்து நின்றது. 'இல்லமாகப் புகுந்து' என ஆக்கம் வருவிக்க.*

*இதன் பின்னிரண்டு அடிகள் உயிர் எதுகை பெற்றன.*

***1737. தெளிவுரை :-*** *மேற்கூறியவாறு என்னை ஆட்கொண்டபின் இறையியல்பு அனைத்தையும் உடைய சிவன், எனது உயிரையே, தான் இருக்கும் இடமாகக் கொண்டான்.*

***குறிப்புரை :-*** ***<u>'அதனால் எனது உயிர் ஆத்தும லிங்கமாயிற்று'</u>*** *என்பது குறிப்பெச்சம். பரன் + அபரன் = பராபரன். 'மேலும், கீழுமாய் நிற்பவன்' என்பது பொருள். "மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க" - எனத் திருவாசகத்துள்ளும் வந்தது. (தி. 8 திருவண்டப்பகுதி, 50) 'இவ்வாற்றால்* ***<u>என் உயிரையும் இடமாகக் கொள்ளுதல் அவனுக்கு இயல்பாயிற்று'</u>*** *என்றபடி. எந்தை அடைந்தவர் மேல் தந்தை போலும் அருள் உடையவன். மதி சூடுதல் சார்ந்தாரைக் காப்பவன் ஆதலைக் குறிப்பது. "தராபரன்" என்றது மக்களை ஆட்கொள்ளுதலையும், "தேவர்கள் மன்னும்" என்றது தேவர்களை ஆட்கொள்ளுதலையும் குறித்தவாறு. 'அடியார்களது மனத்திலும், சிரத்திலும் வீற்றிருப்பவன் எனது பேரருளை வியந்தவாறு. 'சிரபரன்' என்பது எதுகை நோக்கி நீண்டது. இங்கு உள்ள "பரன்" என்பதை, "கோயில்" என்பதனோடு கூட்டுக. "மன்னும்" என்பது முற்று. 'மராமரன்*

**1738.** பிரான் அல்லன் ஆம்எனில் பேதை உலகம்
குரால் என்னும் என்மனம் கோயில்கொள் ஈசன்
அராநின்ற செஞ்சடை அங்கியும் நீரும்
பொராநின் றவர்செய்அப் புண்ணியன் தானே. **9**

**1739.** அன்றுநின் றான்கிடந் தான்அவன் என்றென்று
சென்றுநின் றெண்டிசை ஏத்துவர் தேவர்கள்
என்றுநின் றேத்துவன் எம்பெரு மான்றன்னை
ஒன்றிஎன் உள்ளத்தி னுள்இருந் தானே. **10**

---

*போல மன்னி உறைந்தான்' என்க. மரன் - மரம். மரங்களில் மிக்க வயிரம் உடையது மராமரம் ஆதலின், அஃது அகலாது இருத்தற்கு உவமையாயிற்று. தரா - பூமி. பரன் - தாங்குபவன். அனைத்தையும் அழிவுபடாதே தாங்குபவன்.*

***1738. தெளிவுரை :-*** *'பசு' எனப்படுகின்ற எனது மனத்தைப் பசுமனமாய் இல்லாது திருந்தப்பண்ணி அதனைத் தனக்குக் கோயிலாகக் கொண்ட தலைவன் சிவனேயாகும். அவனை, அங்ஙனம் பசுக்களைத் திருத்தி ஆட்கொள்கின்ற தலைவன் அல்லன் என்றும், 'ஆம்' என்றும் இங்ஙனம் ஐயுற்று உலகம் பிணங்குமாயின் அது பேதையுலகமேயாகும்.*

***குறிப்புரை :-*** *பின்னிரண்டடிகள், சிவனைச் சிறப்பு வகையால் விளக்குகின்றன. அதனால், முன்னர் "ஈசன்" என்றது பொதுமையிற் குறித்ததாம். 'செஞ்சடைப் புண்ணியன்' என இயையும். 'புண்ணியன் - புண்ணியத்தை வடிவாக உடையவனும், அதன் பயனாகின்றவனும்' என்க. தவம் செய்வார் கோடைக் காலத்தில் ஐந்தீ நாப்பண் நிற்றலும், மாரிக்காலத்தில் நீர்நிலையுள் நிற்றலும் செய்வர் ஆதலின் "அங்கியும் நீரும் பொரா நின்றவர்" - என்றார். பொருதல், தாக்கப்படுதலும், பொறுத்து நிற்றலும் என்னும் இரண்டனையும் குறித்தது. "செய் அப்புண்ணியம்" என விதந்து ஓதினமையால் இங்கு, "புண்ணியம்" என்றது இறைவனை நோக்கிச் செய்யும் தவத்தையாயிற்று. பேதைமை உடையவனைப் 'பேதை' என்றல் பான்மை வழக்கு. அஃது இங்கு அஃறிணைக்கண் வந்தது. குரால் - பசு.*

*இதனால், உயிர் சிவனுக்கு வடிவாய் நிற்றலன்றிப் பிற தேவர்க்கு வடிவாய் நில்லாமை கூறும் முகத்தால், ஆத்தும லிங்கத்தின் சிறப்பு உணர்த்தப்பட்டது.*

***1739. தெளிவுரை :-*** *உலகர் ஏனைத் தேவர்களை முதல்வராக நினைந்து தாம்கொண்ட கடவுளை 'அவன் ஓரிடத்தில் நின்றான், இருந்தான்' என இவ்வாறான வடிவங்களைப் பல இடங்களில் சென்று கண்டு துதிப்பார்கள். நான் சிவபெருமானை, 'என் உயிராகிய வடிவத்தில் என்றும் இருக்கின்றான்'*

*என்று நிலையாக நின்று துதிப்பேன். தேவர்கள் புறத்தே தொழுவர். அடியேன் என்னுளே காண்பன்.*

***குறிப்புரை :-*** *'தேவர்களை' என்னும் இரண்டன் உருபு தொகுத்தலாயிற்று. சிவபெருமானுக்குக் கிடந்த கோலம் ஓரிடத்தும் கூறப்படாமையால், "தேவர்கள்" என்பதனை எழுவாய் வேற்றுமையாகக் கொள்ளுதல் பொருந்துவதன்று. சிவபெருமானைச் சுட்டி நின்ற அவன் என்பது 'முதற்கடவுள்' எனப் பொருள் தந்து நின்றது. முதற்கண் நின்ற "என்று என்று" என்றது, 'இங்ஙனம் பலவாறாக' என்றபடி. 'என்று' என ஒரு சொல்லாப் பாடம் ஓதின் வெண்டளை பிழைத்தலை அறிக.*

*ஏனைத் தேவர்கள் உருவ மேனியைத் தவிர, 'அருவுருவம், அருவம்' என்னும் மேனிகளை உடையர் ஆகாமையால், இலிங்க வடிவினராகக் கூறப்பட்டிலர். அதனால் அவர் ஆத்தும லிங்கத்தில் நிற்றலும் இல்லை' என இவ்வழிபாடு சிவநெறி நிற்பார்க்கே உரித்தாதல் கூறப்பட்டது.*

## 6. ஞானலிங்கம்

*ஆன்ம உணர்வு பாசஞான பசுஞானங்களாய் நிற்கும் நிலையில் ஆத்தும லிங்கமாய்ச் சிவனுக்கு திருமேனியாதலைக் கூறியபின், அந்த உணர்வு சிவனை உணருமாற்றால் சிவஞானமாய் நிற்கும்பொழுது ஞான லிங்கமாய் அவனுக்குத் திருமேனியாய் நிற்றலைப் பத்துத் திருமந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

*ஞானம் - சிவமேயான அறிவு. ஞானலிங்கம் - சிவஞானமே திருவுருக் கொண்ட சிவகுருநாதன். எனவே ஞானலிங்கம் ஆசாரியன். தன்னைச் சிவமாகக் கண்ட ஞானி. தன்னைச் சிவநெறிப்படுத்தச் சிவஞானோபதேசஞ் செய்த பரமாசாரியனையும் சிவலிங்கமேயாகக் கருதுமாதலின், ஆன்ம லிங்கத்தை அடுத்து ஞானலிங்கம் அமைக்கப்பட்டது.*

**1740.** உருவும் அருவும் உருவோ டருவும்
மருவும் பரசிவன் மன்பல் லுயிர்க்கும்
குருவும் எனநிற்கும் கொள்கைய னாகும்
தருவென நல்கும் சதாசிவன் தானே. **1**

---

***1740. தெளிவுரை :-** யாதோர் உருவும் இலனாகிய பரமசிவன், தன்னைப் போலவே நிலைபெற்ற பொருளாய் உள்ள பல உயிர்களின் பொருட்டு, 'உருவம், அருவம், உருஅருவம்' என்னும் திருமேனிகளைப் பொருந்தி நிற்பான். அஃதேயன்றிப் பக்குவான்மாக்கள் பொருட்டுக் குருவாகி வந்து அவர்களோடு உடன் உறையும் கொள்கையையுடைய, கற்பகத் தருவைப்போல அவர்கள் வேண்டியவற்றை வழங்குகின்ற சதாசிவ மூர்த்தியும் ஆவான்.*

***குறிப்புரை :-** 'பதிப்பொருளாகிய சிவனை இவ்வியல்பினனாக உணர்தலே சிவஞானம்' என அதன் இயல்பு உணர்த்தும் முகத்தால் ஞானலிங்கத்தின் இயல்பைத் தொகுத்துக் கூறியவாறு.*

*"குருவும்" - என்னும் உம்மை இறந்தத தழுவியதனோடு உயர்வு சிறப்பு. இதனை, "சதாசிவன்" என்பதனோடு கூட்டுக. "ஆகும், நல்கும்" என்னும் பெயரெச்சங்கள் அடுக்கி, "சதாசிவன்" என்னும் ஒரு பெயரைக் கொண்டமையால், "ஆகும்" என்பதை வினையெச்சமாக்கி உரைக்கப்பட்டது. ஐந்தொழில்களில் அருளலைச் செய்தல் சதாசிவ மூர்த்தியாகியேயாதலால், "குருவென நிற்கும் கொள்கையனாகும் சதாசிவன்" என்றார். இதன்பின் 'ஆம்' என்பது எஞ்சி நின்றது. தான், ஏ அசைகள். குருவே ஞானலிங்கமாதல் உணர்த்தப்பெற்றது.*

***1741. தெளிவுரை :-** கீழும், மேலும் நான்கு நான்கு திருமேனிகளாய் உள்ள அவற்றிற்கு மிக நடுவிலே உள்ள **ஒரு திருமேனி மட்டும் அருவுருவமும், அஃதொழிய அதற்குக் கீழ் உள்ள திருமேனிகள் நான்கும் உருவமும், மேல் உள்ள திருமேனிகள் நான்கும் அருவமும் ஆக இவ்வாறு பொருந்துதலால், இவையாய்***

**1741.** நாலான கீழது உருவம் நடுநிற்க
மேலான நான்கும் அருவம் மிகநாப்பண்
நாலான ஒன்றும் அருஉரு நண்ணலால்
பாலாம் இவையாம் பரசிவன் தானே. 2

---

***நிற்கின்ற பரமசிவன் ஒருவனேயாயினும் ஒன்பது பேதங்களாய் நிற்பன்.***

***குறிப்புரை :-*** *இவற்றை 'நவந்தரு பேதம்' - என்பர். மூன்றாம் அடியில் "நாலான" என்றது, முன்னர், கீழே. மேல் - எனக் குறித்த இடம் ஒவ்வொன்றிலும் நாலான' - என்றதாம். அதனை முதற்கண் எடுத்து, நாலானவற்றின் மிக நாப்பண் ஒன்றும் அருவுரு என இயைத்துரைத்து வைத்து, அதன்பின் ''நடுநிற்க'' என்பதனை வைத்து, அதன்பின் முதற்றொட்டு உரைக்க. நடுவண் நிற்கும் திருமேனி, "நடு" எனப்பட்டது. "நிற்க" என்றது, 'ஒழிய' என்றபடி. "நண்ணலால்" என்பதற்குமுன், 'இவ்வாறு' என்பது எஞ்சி நின்றது, "நாலான கீழ், மேலான நான்கும், மிகநாப்பண் ஒன்றும்" என்றதனானே 'ஒன்பது' என்னும் தொகை பெறப்படுதலால் வாளா, "பாலாம்" என்றார். 'இவையாம் பரசிவன் தான் ஒருவனே பாலாம்' என இயைத்துக் கொள்க.*

*மேல் நான்கு, 'சிவம், சத்தி, நாதம், விந்து' என்பன. நாப்பண் ஒன்று சதாசிவ மூர்த்தம். கீழ்நான்கு, 'மகேசுரன், உருத்திரன், மால், அயன்' - எனப்படும் மூர்த்தங்கள். இவற்றின் இயல்பு சிவஞான சித்தியார் இரண்டாம் சூத்திரத்தில் கூறுமாற்றான் அறிக.*

***உருவத் திருமேனிகளை இவ்வாற்றால் உணரும் ஞானமே சரியை என்றும், அருவுருவத் திருமேனியை இவ்வாறு உணரும், ஞானமே 'கிரியை' என்றும், அருவத் திருமேனிகளை இவ்வாறு உணரும் ஞானமே 'யோகம்' என்றும், 'இம்மூவகைத் திருமேனிகளுள் யாதொன்றும் இன்றி அறிவுத் திருமேனியே பரசிவம்' - என உணரும் ஞானமே 'ஞானம்' என்றும் சொல்லப்படுகின்றன.*** *'இந்த நான்கும் ஞானத்தின் அரும்பு, மலர், காய், கனிபோலும் நிலையவாம்' என்பதை,*

> *"விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்*
> *அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே"*

*என்னும் தாயுமானவர் பாடலால் (பராபரக். 157) அறியலாம்.*

*இதனால், ஞான லிங்கங்கள் நால்வகையின ஆதலும், அவற்றின் படிநிலை உயர்வுகளும் ஞானத்தால் உணரப்படுகின்ற ஞேயங்களைக் கூறும்முகத்தால் கூறியவாறு.*

***1742. தெளிவுரை :-*** *மேற்கூறிய நவந்தரு பேதங்களில் 'உருத்திரன், மகேசுரன், சதாசிவன்' என்னும் பேதங்களை முதல்வன் பேதங்களாக உணர்ந்து வழிபடுவோர்*

**1742.** தேவர் பிரானைத் திசைமுகர் நாதனை
நால்வர் பிரானை நடுவுற்ற நந்தியை
யாவர் பிரான்என் றிறைஞ்சுவார் அவ்வழி
ஆவர் பிரான்அடி அண்ணலும் ஆமே. **3**

---

*அவ்வழிபாட்டினாலே முதல்வனது திருவடியை அடைவர். முதல்வனும் தானும் அவராகி நிற்பான்.*

***குறிப்புரை :-*** *'உருவம் உடைமையே பற்றி மேற்கூறிய உருவ பேதங்களை ஏனைத் தேவர்போல எண்ணுதல் கூடாது என்றற்கு அவற்றது சிறப்புணர்த்துவார், 'அருவுருவத் திருமேனியும் தனியொரு நிலையது ஆனமை பற்றி இகழ்தல் கூடாது' என்றற்கு அதனையும் உடன் கூறினார்.*

*"தேவர்பிரான்" என்றது உருத்திரனை. என்னை? அவனோடு ஒத்த உருவும், பெயரும், தொழிலும் உடையவன். தேவர்கட்குப் பிரானாய் நிற்றல் வெளிப்படையாதலின், திசைமுகம் - திக்கின் பகுதி. அவை எட்டாதலின் அவை போல எண்மராய் நிற்கும் வித்தியேசுரரை, "திசைமுகர்" என்றார். இவருக்குத் தலைவன் மகேசுரன். சதாசிவ மூர்த்தி தனக்குக் கீழ் உள்ள நால்வர்க்கும் மேலானவன் ஆதல் பற்றி "நால்வர் பிரான்" என்றும், அவன் காணாத அருவினர்க்கும், காணப்பட்டே நிற்கும் உருவினர்க்கும் நடுநிற்கும் சிறப்புப் பற்றி "நடுஉற்ற நந்தி" என்றும் கூறினார்.*

*'அவ்வழியால் என 'ஆல்' உருபும், 'அடிக்கண்' எனக் 'கண்' உருபும் விரிக்க. 'அண்ணலும் அவர் ஆம்' என ஒரு சொல் வருவிக்க. 'பிரான் என்று யாவர் இறைஞ்சுவார்' என்பதனை முன் இரண்டோடும் தனித்தனிக் கூட்டிப் பின்பு, நேரே உரைக்க.*

*இதனால், 'ஆன்மாவினது ஞானம் உண்மைப் பதிஞானம் ஆமாறு கூறும் முகத்தால், அஃதே உண்மை ஞான லிங்கம் ஆதல் கூறப்பட்டது'.*

***1743. தெளிவுரை :-*** *யாண்டும், திங்களும், நாளும் என்று இன்ன வகையாகக் காலத்தை வரையறை செய்கின்ற, ஒவ்வொருவரும் காலை, நண்பகல், மாலை என்னும் காலங்களில் தவறாது கண்டு வணங்கத்தக்க பகலவனிடத்துக் கருதியுணரினும், உணவு முதலிய உலகியல் ஒழுக்கத்தின் நீங்கி யோகத்தின் நின்று உணரினும் அவ்விடங்களில் உணரப்படும் பொருள் ஒப்பற்றதாகிய அந்தத் தனி முதற் பொருளேயாகும். அதனால் நான் எனது வினைக்கட்டு நீங்கி அழியுமாறு எவ்விடத்தும் அந்தத் தனிமுதற் பொருளையே விரும்பித் தொழுகின்றேன்.*

***குறிப்புரை :-*** *'கன்னி யுணரினும்' - என்பது பாடமன்று. முதல் அடியை ஈற்றில் வைத்து உரைக்க. கண்ணல் - கருதல். பாவித்தல். "மாறினும்" என்றது, 'மாறி யோக ஒழுக்கத்தில் நிற்பினும்' என்றவாறு. "காண் தகையானொடும்" - என்னும் மூன்றன் உருபை ஏழன் உருபாகத் திரிக்க. ஒன்று - ஒப்பற்றது. முதற்*

| அண்டலிங்கம் | பிண்டலிங்கம் | சதாசிவலிங்கம் | ஆத்துமலிங்கம் | ஞானலிங்கம் |
|---|---|---|---|---|
| புற உலகும் கடவுள் வடிவாதல்<br>அனைத்தும் கடவுள் வடிவாக உணரப்படும்<br>எட்டுத்திசைகளும், 64 கலைகளும் இலிங்கமே.<br>பரார்த்த லிங்கம், சல, அசல லிங்கம்.<br>திருக்கோயிலின் அனைத்துப் பாகங்கள், கலசம், பலிபீடம், அர்த்தமண்டபம், விமானம்<br>அண்டலிங்கம் சிவனது திருவடி முதலிய உறுப்புக்களாய் நிற்கும். பெரியது. | மானுட உடம்பே லிங்கமாக நிற்கும் முறை.<br>சிறியது.<br>பிண்டலிங்க வழிபாட்டால் புலனடக்கம் நிகழும்.<br>பிண்டலிங்க வழிபாடு எல்லாவற்றையும் தரும். | அருவுருவத் திருமேனி பாணம், ஆவுடையார், பீடம் என்ற முப்பகுப்பு.<br>திருக்கோயில் கருவறை மூர்த்தம். யாவரும் மந்திர முறையால் அகத்தும், புறத்தும் வைத்து வழிபடுவது.<br>சதாசிவ லிங்கமே அனைத்து லிங்கமாகிறது.<br>உலகிற்கு முதலாகிறது.<br>சொல், பொருள் உலகங்களைத் தோற்றுவிப்பது.<br>ஈசானம், தத்புருடம் என்ற ஐம்முக லிங்கமும் மந்திர வடிவே. | மந்திர உணர்வே இலிங்கமாதல்.<br>அக்கர உணர்வே ஆத்துமலிங்கம்.<br>இலிங்கவடிவம் உலகில் முதல் வடிவம் என உணரும் உணர்வே ஆத்துமலிங்கம்.<br>தத்துவங்களால் விளங்குகின்ற ஆன்ம உணர்வே ஆத்துமலிங்கம்.<br>உயிரையே இருக்கும் இடமாகக் கொள்ளுதல்.<br>உயிர் சிவனுக்கு மட்டுமே வடிவாய் நிற்கும். பிற தேவர்க்கு வடிவாய் நிற்காது.<br>பிற கடவுளுக்கு லிங்க வழிபாடில்லை. | ஒரு திருமேனி மட்டும் அருவுருவமும், அஃதொழிய அதற்குக் கீழ் உள்ள திருமேனிகள் நான்கும் உருவமும், மேல் உள்ள திருமேனிகள் நான்கும் அருவமும் ஆக இவ்வாறு பொருந்துதலால், இவையாய் நிற்கின்ற பரமசிவன் ஒருவனேயாயினும் ஒன்பது பேதங்களாய் நிற்பன்.<br>உருவத் திருமேனிகளை இவ்வாற்றால் உணரும் ஞானமே சரியை என்றும், அருவுருவத் திருமேனியை இவ்வாறு உணரும், ஞானமே 'கிரியை' என்றும், அருவத் திருமேனிகளை இவ்வாறு உணரும் ஞானமே 'யோகம்' என்றும், 'இம்மூவகைத் திருமேனிகளுள் யாதொன்றும் இன்றி அறிவுத் திருமேனியே பரசிவம்' – என உணரும் ஞானமே 'ஞானம்' என்றும் சொல்லப்படுகின்றன. |

**1743.** வேண்டிநின் றேதொழு தேன்வினை போயற
ஆண்டொடு திங்களும் நாளும் அளக்கின்ற
காண்டகை யானொடும் கண்ணி யுணரினும்
ஊண்டகை மாறினும் ஒன்றது ஆமே. **4**

**1744.** ஆதி பரதெய்வம் அண்டத்து நற்றெய்வம்
சோதி அடியார் தொடரும் பெருந்தெய்வம்
நீதியுள் மாத்தெய்வம் நின்மலன் எம்இறை
பாதியுள் மன்னும் பராசத்தி யாமே. **5**

---

*பொருளை 'அது' என்றல் உபநிடத வழக்கு.*

*'யார் எவ்விடத்து எவ்வாறு வணங்கினும் அவ்வணக்கம் தனி முதலாகிய பரசிவத்தையே சாரும் - என உணரும் உணர்வே ஞான லிங்கமாய்ப் பயன்தரும்' என்பது இதனால் கூறப்பட்டது.*

*1744. **தெளிவுரை :-** மெய்யுணர்வினை உடைய அடியவர்களால், 'யாவர்க்கும் முன்னே மேலே உள்ளவன்' எனவும், அனைத்து உலகங்கட்கும் முதல்வனாகிய முழுமுதற் றன்மை உடையவன் எனவும், 'நீதியின் உள்ளே விளங்குகின்ற பெரியோன்' எனவும், 'இயல்பாகவே பாசங்கள் இல்லாதவன்' எனவும் கொண்டு வழிநின்று போற்றுகின்ற பெருமையை உடையவன் எங்கள் கடவுள். அவனை அறிதற்கு உரிய அடையாளம் மாதொரு பாகனாய் இருத்தல்.*

*குறிப்புரை :- 'இவ்வாறு உணரும் உணர்வே ஞான லிங்கமாம்' என்றவாறு. ''சோதி அடியார் தொடரும் பெருந் தெய்வம்'' என்பதை அதற்குரிய காரணங்களுடன் விளக்கி, 'அத்தெய்வமாவான் சிவபெருமானே' எனக் கூறுதலே கருத்தாகலின், அதற்கு இவ்வாறு உரைக்கப்பட்டது.*

*"அண்டம்" என்றது, 'அகிலாண்டம்' என்றவாறு "அண்டத்துக்கு" என்னும் நான்கன் உருபு தொகுத்தலாயிற்று. ஓரிடத்தும், 'தெய்வம்' என வாளா கூறாது, "பரதெய்வம், நற்றெய்வம், பெருந்தெய்வம், மாத்தெய்வம்" - எனச் சிறப்பித்தே ஓதியது தெய்வம் என்பது முதற் கடவுளையே உணர்த்தி நிற்றற் பொருட்டு, ஈற்றடியில் உள்ள சொற்களை , 'தன்பாதியுள் பராசத்தி மன்னும் ஆம்' என இயைத்து 'அவன்' என்னும் தோன்றா எழுவாய் வருவிக்க. ஆம், அசை.*

*1745. **தெளிவுரை :-** ஆதிசத்திக்குமேல் உள்ளதாகிய பராசத்தியில் விளங்குவதே வாக்கும், மனமும் எட்டாது நிற்கும் தூய ஒளியாகிய சுத்த சிவ நிலை. அதனால், சிவன் பிறிதொன்றோடும் படாது தானேயாய் நிற்கின்ற அவனது உண்மைநிலை, ஞானசத்தி கிரியா சத்திகட்கு முதலாய் உள்ள ஆதி சத்திக்கு அப்பால் உள்ள பராசத்தியின்கண் நிற்பதே யாகும். எனினும் அவனது நிலைகள் ஆதிசத்தி. ஞானசத்தி, கிரியா சத்திகள் ஆகிய அவைகளோடும் இயைந்து நிற்பனவேயாம்.*

**1745.** சத்திக்கு மேலே பராசத்தி தன்னுள்ளே
சுத்த சிவபதம் தோயாத தூவொளி
அத்தன் திருவடிக் கப்பாலுக் கப்பாலாம்
ஒத்தவும் ஆம்ஈசன் தானாக உண்மையே. **6**

**1746.** கொழுந்தினைக் காணின் குவலயம் தோன்றும்
எழுந்திடம் காணின் இருக்கலும் ஆகும்
பரம்திடம் காணின்பின் பார்ப்பதி மேலே
திரண்டெழக் கண்டவன் சிந்தை உளானே. **7**

---

*குறிப்புரை :- 'அஃது அவனது பொதுநிலை' என்றபடி. 'அந்தப் பொது நிலையை அவன் அடைதற்குக் காரணம் உயிர்களிடத்து வைத்த கைம்மாறு கருதாத கருணையே' என்பது கருத்து. "ஈசன்" எனப் பின் வருதலால், "அத்தன்" என்றது, 'தன்' என்னும் அளவாய் நின்றது. "தோயாத தூவொளி" என்பதை, "சுத்த சிவபதம்" என்பதற்கு முன்னேயும், "ஒத்தவும் ஆம்" என்பதை இறுதியிலும் கூட்டியுரைக்க. 'தடத்த நிலைகள் பல' என்பது உணர்த்துதற்கு அதனைப் பன்மையாக ஓதினார். இதனால், முதற்பொருளை இவ்வியல்பினதாக உணரும் உணர்வே ஞானலிங்கம் ஆதல் கூறப்பட்டது.*

*1746. தெளிவுரை :- 'எல்லாப் பொருள்களின் முடிவுக்கும் முடிவாய் உள்ள'* (**"போதார் புனைமுடியும் எல்லாப் பொருள் முடிவே"** *- தி.8 திருவெம்பாவை, 10) பரமசிவனது உண்மையை உணரின் 'அவனே உலகம் அனைத்திற்கும் முதல்' என உலகத்தின் முடிநிலைக் காரணம் விளங்கும். பின் அந்தப் பரமசிவன் முதற்பொருளாய் எழுதற்குக் காரணமான அவனது குணமாம் பராசத்தியை உணரின் அஃதே எல்லையில் இன்ப வெள்ளமாய் விளைதலால், அப்பால் அலைவுயாதும் இன்றி, அந்த இன்ப வெள்ளத்திலே அமைதியுடன் இருத்தல்கூடும்.* ***எப்பொருள் தன் தன்மைத்தாயினும் அப்பொருளில் மெய்ப் பொருளாகிய பரமசிவனை (திருக்குறள், 355) அலைவின்றிக் காணும் மெய்யுணர்வைப் பெற்றால் அவ்வுணர்விலே முன்னே அருள்நிலை தோன்ற, அதன்பின் அதற்கு மேலாகப் பொருள் நிலையாகச் சிவன் விளங்குவான். அங்ஙனம் விளங்கக் கண்டவனது உள்ளத்தில்தான் அந்தச் சிவன் என்றும் இருக்கின்றான்.***

*குறிப்புரை :- 'ஆகவே,* ***அங்ஙனம் காணுதலாகிய உணர்வே ஞான லிங்கமாம்' என்பது கருத்து****. முடிவில் உள்ளதை, 'கொழுந்து' என்றல் வழக்கு. கொழுந்து - ஞானமயமான திருமேனி. குவலயம் - குவலயத்தின் உண்மை. 'எழுந்த' என்னும் பெயரெச்சத்து அகரம் தொகுத்தலாயிற்று. "இருக்கலும்" என்னும் உம்மை உயர்வு சிறப்பு. பரம் - மேல். மேல் உள்ளவனை மேல் என்றது ஆகுபெயர்; திடமாக என ஆக்கம் விரித்துரைக்க. "பார்ப்பதி" என்றது 'சிவ சத்தி' என்னும் பொருளதாய்த் திருவருளைக் குறித்தது. "திரண்டு எழ" என்றதனாலே. திரண்டு*

**1747.** எந்தை பரமனும் என்னம்மை கூட்டமும்
முந்த உரைத்து முறைசொல்லின் ஞானம்ஆம்
சந்தித் திருந்த இடம்பெருங் கண்ணியை
உந்திக்கு மேல்வைத் துகந்திருந் தானே. **8**

---

*எழுதலும் அனுவாத முகத்தால் பெறப்பட்டது. உளனாதற்கு அவன் என்னும் தோன்றா எழுவாய் வருவிக்க.*

*இதனால், சொரூப ஞானமாகிய ஞானலிங்கம் உளதாமாறு கூறப்பட்டது.*

***1747. தெளிவுரை :-*** *தன்னையே அடைக்கலமாக அடைந்த எனக்குத் தந்தையாய் நிற்கும் பரமசிவனையும் அவன் எனக்குத் தாயாய் நிற்கும் சத்தியோடு கூடிய கூட்டு நிலையையும், ஞானாசிரியர் தம் மாணாக்கர்க்கு முதற்கண் சுட்டளவாக உணர்த்திப் பின்பு அவ்விருவரது முறைமையை எல்லாம் விளங்க உணர்த்துவாராயின், மாணாக்கர்க்கு உண்மை ஞானம் பிறக்கும். எனவே ('அதுவே அவர்க்கு ஞானலிங்கமாய்ப் பயன் தரும்' என்றபடி) இனி என் அப்பன் என் அம்மையை மக்களது இருதய கமலத்தில் இருக்க வைத்துத் தானும் அந்த இடத்தையே விரும்பி அவளோடு கூடியிருக்கின்றான். ஆகவே, அவ்விருவரும் வீற்றிருக்கின்ற இடம் அதுவே.*

***குறிப்புரை :-*** *'ஆதலின் மக்கள் அவ்விடத்து அவனை ஞானலிங்கத்தில் காண்க' என்பது குறிப்பெச்சம். 'பரமனையும், கூட்டத்தையும்' என இரண்டாவது விரித்துரைக்க. "என் அம்மை கூட்டம்" எனப் பின்னர் வருதலால், முன்னர் "பரமன்" என்றது அவன் தனித்து நிற்கும் நிலையையாயிற்று. அஃது அவனது சொரூப நிலையும், அம்மையோடு கூடிய கூட்டம் அவனது தடத்த நிலையும் ஆகும். சொரூப சிவனே 'பரசிவன்' என்றும் பரமசிவன் என்றும் சொல்லப்படுவான். தடத்த சிவன் 'சிவன்' என்றும், 'ஆதிசிவன்' என்றும் சொல்லப்படுவான். சத்தியை விட்டுச் சிவன் ஒருபோதும் தனித்து நிற்றல் இல்லை யாயினும், செயல்யாதும் நிகழாதபோது சத்தி இருந்தும் இல்லாதது போல சிவன் செய்பவனும், சத்தி அவன் செயலுக்குத் துணையுமாய்ப் பிரிப்பின்றி நிற்றலின் அந்நிலை, சிவனும், சத்தியும் கூடிய கூட்டு நிலை என்றும் சொல்லப்படுகின்றன.*

*"ஒருரு வாயினை; மானாங் காரத்(து) ஈரியல் பாய்"*

*– தி.1 ப.128 அடி 1,2*

*என்று திருஞானசம்பந்தர் அருளிச் செய்தது இவை பற்றியே.*

*சிவன் பரசிவனாய் நிற்கும் பொழுது சத்தி பராசத்தியாய் நிற்பாள். அவளே அருட்சத்தி. சிவன் ஆதிசிவனாய் நிற்கும்பொழுது சத்தி ஆதிசத்தியாய் நிற்பாள். அவளே திரோதான சத்தி. அவள் வழியாகவே இறைவனது ஐந்தொழில்கள் நிகழும். இதுபற்றி அருணந்திதேவர்,*

*"அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கை யெல்லாம்"*

*– சிவஞான சித்தியார், சூ. 1, 69*

**1748.** சத்தி சிவன்விளை யாட்டாம் உயிர்ஆகில்
ஒத்த இருமாயா கூட்டத் திடைஊட்டிச்
சுத்தம தாகும் துரியம் பிரிவித்துச்
சித்தம் புகுந்து சிவம்அகம் ஆக்குமே. 9

---

என அருளிச் செய்தார். இவற்றையெல்லாம் இனிதுணர்த்தலே ஞானோபதேசமும், அங்ஙனம் உணர்த்தியவாறே உணர்தலுமே ஞானமும் ஆகலின், "முந்த உரைத்து முறை சொல்லின் ஞானமாம்" என்றார். உரைத்தற்கும் சொல்லுதற்கும் உரியவராகிய 'ஞானாசிரியர்' என்பது ஆற்றலாற் கொள்ளக் கிடந்தது. "சந்தித்திருந்த இடம்" என்பதற்கு, எஞ்சிநின்ற 'அது' என்னும் பயனிலையை வருவித்து இறுதியில் கூட்டியுரைக்க. "உந்திக்கு மேல் என்றது இருதயத்தை, இதனை மூன்றாம் தந்திரத்துள்,

"நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குலம்" - தி.10 பா. 569

என்றார். 'உந்தியின் மேல்' என்பது பாடம் அன்று.

இதனால், ஞான லிங்கத்தின் இயல்பும், அந்த இலிங்கத்தைப் பெறும் முறையும், பெற்றுப் பயன் அடையும் முறையும் கூறப்பட்டன.

1748. தெளிவுரை :- 'உயிரின் இருப்பு, சத்தியோடு கூடிய சிவனது விளையாட்டே' என்றால், அச்சிவன் அவ்வுயிரை யாதாக்குவான் எனில், ஆணவத்தைப் போக்குதற்கண் தம்மில் ஒரு தன்மைப்பட்ட, 'சுத்தம், அசுத்தம்' என்னும் இருமாயையால் ஆகிய கருவிக் கூட்டத்துள் அவ்வுயிரை முதற்கண் புகுவித்து அந்நிலையில் அவற்றின் வினைகளை அவை நுகரச் செய்து, அக்கருவிகள் கூடுதல் குறைதல்களால் உளவாகின்ற கேவல ஐந்தவத்தை சகல ஐந்தவத்தைகட்குப் பின் திருவருளால் உளவாகின்ற சுத்த ஐந்தவத்தையை அடைவித்து இறுதியாகத் துரியத்தையும் நீக்கித் துரியாதீதத்தில் சேர்த்து, அங்ஙனம் சேர்க்கப்பட்ட அந்நிலையில் அதன் அறிவினிடமாகத் தான் விளங்கி, அதனாலே, தனது இன்ப வெள்ளமே அவ்வுயிர்க்கு என்றும் உறைவிடமாகச் செய்வான்.

குறிப்புரை :- 'சத்தியோடு கூடிய சிவன் என்றதனால், ஆதிசிவன்' என்பது பெறப்பட்டது. உயிரினது நிலைபேற்றை 'உயிர்' என்றது ஆகுபெயர். விளையாட்டால் ஆவதனை, "விளையாட்டு" எனக் காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது. "ஆகில்" என்னும் 'செயின்' என் எச்சம் தெளிவின்கண் வந்தது. 'சுத்தம், அசுத்தம்' என்பவற்றால் தம்மில் வேறுபாடு உடையவேனும், ஆணவத்தை நீக்குதற்கண் ஒரு தன்மைய ஆதல் பற்றி இரு மாயைகளையும் "ஒத்த இரு மாயை" என்றார். மாயை, ஆகுபெயராய் அதன் காரியத்தை உணர்த்திற்று. "இடை" என்பதன்பின், 'புகுவித்து' என்பது எஞ்சிநின்றது. இறுதியாதல் பற்றி, சுத்த துரியத்தினின்றும் பிரிவித்தலை மட்டுமே கூறினாராயினும், அதற்கு முன்

**1749.** சத்தி சிவன்றன் விளையாட்டுத் தாரணி
சத்தி சிவனுமாம் சிவன்சத் தியுமாகும்
சத்தி சிவனன்றித் தாபரம் வேறில்லை
சத்திதான் என்றும் சமைந்துரு வாகுமே. **10**

---

*நிகழ்வனவாகிய அனைத்து அவத்தைகளினின்றும் பிரிவித்தல் ஆற்றலால் விளங்கிற்று. அறிவை, 'சித்தம்' என்றல் வழக்கு. 'சிவம்' என்பது, இங்கு, 'இன்பம்' என்னும் பொருளதாய் நின்றது. 'சிவத்தை' என இரண்டாவது விரிக்க.*

*இதனால், மேலை மந்திரத்தில் "முறைசொல்லின்" எனக் குறிக்கப்பட்ட 'முறை' இனிது விளக்கப்பட்டது.*

***1749. தெளிவுரை :-*** *உலகமே ஆதி சிவனது விளையாட்டாம். அவன் ஆதி சத்தியைக் கொண்டே அனைத்தையும் செய்வனாயினும் அச்சத்தியும், அவனும் உலகத்துத் தலைவியரும், தலைவரும் போல வேறு வேறானவர் அல்லர்; சத்தியே 'சிவனும்' சிவனே சத்தியும் ஆவர். எனினும் சில வேறுபாடு பற்றி, சத்தி எனவும், சிவன் எனவும் பிரித்து வழங்கப்படுகின்றார்கள். அதனாலே இலிங்கத்திலும் அவ்வேறுபாடு காணப்படுகின்றது. அஃதே பற்றி, அதனை, 'உலகத்தாரது உருவம் போல இருவேறு பொருள்களின் கலப்பு' என மயங்கற்க. இனி உண்மையாக உணர்ந்தால், சத்தியே அனைத்துத் திருமேனிகளுமாய் நிற்கும்.*

***குறிப்புரை :-*** *'தாரணி' என்பது 'தாங்குவது' என்னும் பொருட்டாய் நிலத்திற்கு, பெயராகும். அத்தகைய நிலமாவது மண்ணிலம் மட்டுமின்றிப் பொன்நிலம் முதலியனவும் நிலமேயாதலின், ''தாரணி'' என்றது எல்லா உலகங்களையும் குறித்தது. அவற்றைச் சிவனது விளையாட்டு என்று, மேலை மந்திரத்திற் கூறியவாறே உபசாரமாம், "விளையாட்டம்" என மேற்கூறியதனையே இங்கு மீட்டுங் கூறியது, மேற்கூறிய உயிரேயன்றி, 'ஏனைப் பொருள்கள் பலவும் அத்தகையனவே' என்பது உணர்த்துதற்கு. மேல், சிவனை, "எந்தை" எனவும், சத்தியை, "என்னம்மை" எனவும் கூறியதனால், அவ்விருவரும் உலகத்து தந்தை தாயரைப் போல வேறுவேறானவர் போலும் என மலையாமைப் பொருட்டு, சத்தியே சிவனும் ஆவாள்; சிவனே சத்தியும் ஆவான் என விளக்கிக் கூறினார்.* ***'விந்துவதே பீடம்; நாதம் இலிங்கமாம்' என ஆத்துமலிங்க அதிகாரத்தில்*** *கூறிய குறிப்பின்படி இலிங்கமும் ஒருபெற்றித்தாய் இராமல் இருவேறு வகையாய்க் காணப்படுதலால் அதுபற்றியும் மேற்கூறியவாறு மலையாமைப் பொருட்டு, "தாபரம் வேறில்லை" என்றார். 'இச்சத்தி சிவனன்றி' எனச்சுட்டு வருவித்து, 'தாபரம் இத்தன்மையராகிய சத்தியும் சிவனுமேயன்றி வேறில்லை' என உரைக்க. 'தாபரமும்' என்னும் இறந்தது தழுவிய எச்ச உம்மை தொகுத்தலாயிற்று. 'திருமேனிகள் எல்லாவற்றிலும் சத்தி மூர்த்தியாய் நிற்பன்' என்றற்கு, 'திரு மேனிகளில் சில சிவனது வடிவமே' என்றும், சில இருவரும் ஒன்றாய் இயைந்த*

*வடிவம் என்றும் எண்ணுமாறு நிற்றல், கடவுள் பொருள் ஒன்றேயாயினும், அஃது இருதன்மையை உடையது' என்பதைக் குறித்து நிற்கும் அடையாளம் ஆதலே யன்றிப் பிறிதில்லை' என்றதாயிற்று.*

*"வேர்த்து வெகுளார்" (நாலடியார், சினமின்மை, 4) என்பதனை, 'வெகுண்டு வேரார் என முன்பின்னாக மாற்றிப் பொருள்கொள்ளுதல் போல, "சமைத்துருவாகும்" என்றதை, 'உருவாகிச் சமையும்' என மாற்றிக் கொள்க. இதற்குப் பகலவன் ஒருவனே 'கதிரவனும், கதிரும்' என இருதன்மையை உடையனாய் இருத்தலை உவமையாகக் கூறுவர்.*

*சத்தி சிவனது இயல்பினை இங்குக் கூறியவாறே,*

*அருளுண்டாம் ஈசற்(கு) அதுசத்தி, அன்றே;*
*அருளும் அவனன்றி யில்லை - அருளின்(று)*
*அவன்அன்றே யில்லை; அருட்கண்ணார் கண்ணுக்(கு)*
*இரவிபோல் நிற்கும்அரன் ஏய்ந்து.*

*- சிவஞானபோதம், சூ.5. அதி.2*

*எனவும்,*

*"அருளது சத்தியாகும் அரன்றனக்(கு) அருளையின்றித்*
*தெருள்சிவம் இல்லை; சிவம்இன்றிச் சத்தி யில்லை"*

*"சத்திதான் நாதமாதி தானாகும்; சிவமும் அந்தச்*
*சத்திதா னாதி யாகும்; தரும்வடி வான வெல்லாம்*
*சத்தியும் சிவமுமாகும்"*

*- சிவஞானசித்தி, சூ. 5-9, சூ. 2. 76*

*எனவும் கூறப்பட்டன.*

*இதனால், மெய்ப்பொருளது தன்மையினை இங்ஙனம் உள்ளவாறுணர்தலே ஞானலிங்கமாதல் கூறப்பட்டது.*

## 7. சிவலிங்கம்

***(சிவம் மணியின்கண் ஒளிபோல வெளிப்பட்டு நின்று அருள் செய்யும் குறி)***

*மேல் சிவனது குறியாய் 'இலிங்கம்' எனப் பெயர் பெறுதற்கு உரியன பலவற்றையும் பல அதிகாரங்களால் அருளிச் செய்த நாயனார், உலகெங்கும் நிறைந்து, மற்றும் அவை அனைத்தையும் கடந்து தனக்கென ஓர் வடிவம் இல்லாத அவனுக்கு இத்தனை வடிவங்கள் கூறுதல் பொருந்துமோ என்று எழும் மலைவினை ஐந்து திருமந்திரங்களால் நீக்குவாராய், மேற்கூறிய அனைத்து இலிங்கங்கள் பற்றியும் தொகுத்து அருளிச் செய்கின்றார். அதனால் இவ்வதிகாரம் பொதுப்படச் சிவலிங்கம் பற்றிக் கூறுவதாயிற்று.*

**1750.** **குரைக்கின்ற வாரிக் குவலயம் நீரும்**
**பரக்கின்ற காற்றும் பயில்கின்ற தீயும்**
**நிரைக்கின்ற வானிவை நீண்டகன் றானை**
**வரைத்து வலம்செயு மாறறி யேனே.** **1**

---

***1740. தெளிவுரை :-*** *ஒலிக்கின்ற கடலை ஆடையாக உடைய நிலவட்டம், நீர், பல செயல்கட்கும் பயன்பட்டு நிற்கின்ற நெருப்பு, எங்கும் பரந்து செல்கின்ற காற்று, அனைத்தையும் தன்னுள் முறைப்பட அடக்கி நிற்கின்ற வானம் இவை அனைத்துமாய் அவற்றில் நிறைந்து நிற்கும் வகையில் உயர்ந்து சென்று, முடிவில் வானத்தையும் கடந்து உயர்ந்தோனாகிய சிவனை யான் உய்தி பெறுதற்கு, ஒரு சிறு வடிவினனாகக் கண்டு வலம் வருதல் முதலிய வகையால் வழிபடுதல் எவ்வாறு என அறிகின்றிலேன்.*

***குறிப்புரை :-*** *வாரிக்குவலயம் - கடல் சூழ்ந்த பூமண்டலம். ஆறு - முறை. வரை - அளவு, எல்லை. வருகின்ற திருமந்திரத்துள் அங்ஙனம் வழிபடுமாற்றை அருளுகின்றார் ஆகலின், இங்கு, "ஆறு அறியேன்" என யாதும் அறியார்போலக் கூறினாராயினும், கீழ் உரைக்கப்படுகின்ற அதுவன்றிப் பிறிதோர் ஆறு அறியேன்' என்பதே கருத்தாகும். செய்யுள் நோக்கித் தீயைக் காற்றுக்குப் பின்னர் வைத்தார். 'குவலயமும், வானும்' என்னும் எண்ணும்மைகள் தொகுக்கப்பட்டன. 'வாறிவை' என்பது பாடமன்று. பூதங்களைக் கீழ்த் தொடங்கிக் கூறினா ராதலின், 'நீண்டு' என்றார். 'வரைந்து' எதுகை நோக்கி வலித்தல் பெற்றது. வரைதல், எல்லை வகுத்தல். 'அகண்ட மானவனைக் கண்டனாக்குதல் இயலாது' என்பதாம். இதனை, "அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனாகக் கண்டு வழிபடுமாறு". (சிவஞான போதம், சூ. 12. கருத்துரை) என்றார் மெய்கண்ட தேவர்.*

*இதனால், இலிங்கத்தாலன்றி இறைவனை அணுகலாகாமை உணர்த்தப்பட்டது.*

***1751. தெளிவுரை :-*** *மேற்கூறியவாறு* ***நீண்டகன்று வரம்பிலனாகிய சிவனை***

1751. வரைத்து வலஞ்செயு மாறிங்கொன் றுண்டு
நிரைத்து வருகங்கை நீர்மலர் ஏந்தி
உரைத்தவன் நாமம் உணரவல் லார்க்குப்
புரைத்தெங்கும் போகான் புரிசடை யானே. 2

---

***வரம்புட்படுத்து வழிபடும் வழி ஒன்று இந்நிலவுலகில் உண்டு.*** *அஃது யாதெனின், அலைகளை வரிசையாக்கி அதனாலே கரையை அடைகின்ற கங்கையாற்றின் நீரையும், பூக்களையும் கையிலே கொண்டு, அவனது பெயர்கள் பலவற்றையும் சொல்லி ஆட்டியும், சாத்தியும் வழிபட்டு அவனை அங்ஙனம் வழிபடப்பட்ட அவ்வடிவத்தில் வைத்து உணர்தலேயாகும். அங்ஙனம் உணரவல்லார் உளராயின் அவ்வடியைப் பொள்ளல் செய்து அதனை விட்டு அவன் வேறு எங்கும் போய்விட மாட்டான்.*

***குறிப்புரை :-*** *'அதனுள் தானே இருந்து அருள் செய்வான்' என்பதாம். 'இவ்வாறு அவன் தான் அருளிச் செய்த ஆகமங்களில் உரைத்துள்ளான்' என்பது கருத்து. புரை - ஓட்டை, பொள்ளல்.*

*"தாபர சங்க மங்கள் எனும்இரண் டுருவில் நின்று*
*மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பான்"*

*- சிவஞான சித்தியார் சூ.2.28*

*என்றதும் இக்கருத்தினாலேயாகும்.*

***"எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் விரும்பும்***
***உண்மை யாவது பூசனை என உரைத் தருள"***

*- தி.12 திருக்குறிப்புத் தொண்டர், 51*

*என்று அருளிச் செய்தமை காண்க.* ***இஃதொழிய உயிர்கள் அவனை வழிபட்டு உய்யுமாறு வேறில்லையாதலின்,*** *அவற்றை இவ்வாற்றால் உய்வித்தல் வேண்டும் - என்னும் கருணை மிகுதியாலே அகண்டிதனாகிய சிவன் இவ்வாறு கண்டிதனாய் நின்று அருள் புரிகின்றான் என்னும் உண்மையைத் தெளிந்து கடைப்பிடிக்க - என்பதாம்.*

*''இங்கு'' என்றதனால், 'இம்முறையைச் சிவன் நிலவுலகிலே தான் வைத்துள்ளான்' என்பது போந்தது.*

*இதனால், 'அசிந்திதனாகிய இறைவனைச் சிந்திதனாகக் கண்டு வழிபடும் ஒரே முறையாவது இது' என்பது கூறப்பட்டது.*

***1752. தெளிவுரை :-*** *'சிவபிரான் ஒருவனே ஒப்பற்ற தனிமுதற் பொருள்' என நான் உணர்ந்தேன். அதனால் 'அவனை மேற்கூறியவாற்றால் வழிபடுதல் ஒன்றே நன்னெறி' என உணர்ந்து வழிபடுந்தோறும் அவன் தனது பேரின்ப வெள்ளம் எது ஐம்புலன்களில் அடங்காததாய் மிக்கெழுந்து என்பால் விளையப்*

1752. ஒன்றெனக் கண்டேன்எம் ஈசன் ஒருவனை
நன்றென் றடியிணை நான்அவ னைத்தொழ
வென்றைம் புலனும் மிகக்கிடந் தின்புற
அன்றென் றருள்செயும் ஆதிப் பிரானே. 3

---

*பண்ணுதலை அப்பொழுது அப்பொழுதே செய்கின்றான்.*

***குறிப்புரை :-*** *"எம் ஈசன்" என்றது 'சிவபிரான்' என்றவாறு. 'ஒருவனையே' என்னும் ஏகாரம் தொகுத்தலாயிற்று. 'அடியிணை தொழுதல்' என்பது 'வழிபடுதல்' என்னும் பொருளதாய் ஒரு சொல் நீர்மைப்பட்டு "அவனை" என்னும் இரண்டாவதற்கு முடிபாயிற்று. ஆதலின், 'அவனை நான் அடியிணை தொழ' என மொழி மாற்றியுரைக்க. வெல்லுதல், கிடத்தல், உறுதல் என்னும் தொழில்கட்கு இன்பமே வினைமுதல் என்க. 'என்பால் உற அருள் செய்யும்' என ஒரு சொல் வருவிக்க. ஈசன் - எல்லாச் செல்வங்களுக்கும் தலைமையாய் உரிமை பூண்டவன்.*

*இதனால், **'சிவனைப் பொது நீக்கி உணர்ந்து இலிங்கத்தில் கண்டு வழிபடல் வேண்டும்'** என்பதும், அங்ஙனம் **வழிபடுதலால் விளையும் பயன்** இது என்பதும் கூறப்பட்டன.*

***1753. தெளிவுரை :-*** *சிவன் தனது தடத்த நிலையில் 'அயன், மால், உருத்திரன், மகேசுரன், சதாசிவன், சத்தி, சிவன், விந்து, நாதம் - என்னும் ஒன்பது நிலைகளில் நின்று உயிர்கட்கு அவரவர் நிலைக்கேற்ற பயனைத் தருவன் ஆகலின் அவை அனைத்துக்கும் பொதுக் குறி யாவது இலிங்கத் திருமேனியை. அதனால் அதனைப் பராசத்தியோடே நிற்கும் பரசிவனாகிய சொரூப சிவனது குறியாகவும் உணர்ந்து வழிபடல் வேண்டும்.*

***குறிப்புரை :-*** *"மலர்ந்த" என்றதனை இசை யெச்சத்தால் மாயோனது உந்திக் கமலம் மலர்ந்த என விரித்துக் கொள்க. "மலர்ந்த" என்னும் பெயரெச்சம் 'மலர்ந்ததனால் வெளிப்பட்ட' எனப் பொருள் தந்தது.*

*அயன், மால் முதலிய ஒன்பது நிலைகளும் "நவந்தரு பேதம்" எனப்படும். அதனை,*

*சிவம்சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தருள் உருத்தி ரன்றான் மால் அயன் ஒன்றின் ஒன்றாய்
பவந்தரும்; அருவம்நால்; இங்(கு) உருவம்நால்; உபயம்ஒன்றா
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்.*

*- சிவஞான சித்தியார், சுபக்கம், 164*

*என்னும் சிவஞானசித்திச் செய்யுளால் உணரலாம். இவற்றை இங்ஙனம் ஒன்றின்*

**1753.** மலர்ந்த அயன்மால் உருத்திரன் மகேசன்
பலந்தரும் ஐம்முகன் பரவிந்து நாதம்
நலந்தரும் சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரும் லிங்கம் பராநந்தி யாமே. **4**

---

ஒன்றாய்ப் பவம்தரும்" - என்றமையால், 'இம்முறை தோற்றமுறை' என்பது விளங்கிற்று. எனவே, இம்மந்திரத்தில் நாயனார் அயன் முதலாகக் கூறியது ஒடுக்க முறையாதல் வெளிப்படை.

"பரநாதம்" - என்பதில் உள்ள "பரம்" என்பதை விந்துவிற்கும் கூட்டுக. பரநாத பரவிந்துக்களையே 'சிவம், சத்தி' எனவும், சிவம் சத்திகளையே 'நாதம், விந்து' எனவும் வழங்கும் வழக்கம் ஆகமங்களில் உண்மையால் மேற்காட்டிய சிவஞான சித்திச் செய்யுளில் அவ்வாறு கூறப்பட்டது.

நவந்தரு பேதங்களாய் நிற்கின்ற சிவன் தனது ஞானத்தால் தன்னை அவ்வந் நிலைகளில் உணர்ந்து வழிபடுவோரையும் அந்நிலையினராகச் செய்வன். அங்ஙனம் செய்யப்பட்ட அவர் அணுபக்க அயன், மால் முதலியோராவர். சிவன் அவ்வாறு நிற்கின்ற நிலைகள் சம்பு பக்கமாகும். 'இம்மந்திரத்திற் கூறப்பட்டவை சம்பு பக்கம்' என்பது உணர்க.

மேற்கூறிய நவந்தரு பேதங்களில் மகேசுரனது பேதங்களாக இருபத்தைந்து வடிவங்களும், மற்றும் பல வடிவங்களும் உள. அவையெல்லாம் 'மகேசுர மூர்த்தங்கள்' எனப்பட்டு 'மகேசுரன்' என்னும் ஒன்றிலே அடங்குவனவாம். ஆகவே, மாகேசுர வடிவங்கள் ஒவ்வொன்றும் அவ்வவ் வடிவத்திற்கு மட்டுமே உரிய சிறப்புக் குறிகளாய் அவ்வளவில் மட்டுமே பயன் தருவனவாய் நிற்க, இலிங்க மூர்த்தம் ஒன்றே நவந்தரு பேதங்கட்கும் பொதுக் குறியாய் நின்று எல்லாப் பயன்களையும் தருவது என்பது இம்மந்திரத்தால் உணர்த்தப்பட்டதாம். எப்பயன் கருதிச் சிவனை வழிபட்டோரும் அவனை இவ்விலிங்கத் திருமேனியிற்றானே வழிபட்டு அவ்வப் பயன்களைப் பெற்றமையைப் புராணங்கள் பலவாக விரித்துக் கூறும்.

இங்குக் கூறிய அயன், மால் முதலிய பலரும் சம்பு பக்கம் ஆதலால் சிவலிங்கத்தில் 'இது பிரம பாகம், இது விட்டுணு பாகம்' என்றாற் போலச் சில இடங்களில் கூறப்படுவதும் சம்பு பக்கத்தை நோக்கியே என்பது உளங்கொளத் தக்கது.

இதனால், சிவலிங்கம் அனைத்து மூர்த்திகளாயும் நிற்கும் சிறப்புடைத்தாதல் கூறப்பட்டது.

*1754.* **தெளிவுரை :-** உயிரை உடம்பில் நிறுத்திச் செயற்படச் செய்ய எழுந்த விருப்பத்தால் கீழ்நோக்கிக் கிடந்தும் மேல் நோக்கி எழுந்தும் விளங்குகின்ற குண்டலினி சத்தியோடு உயிர் பொருந்தி செயற்படும் வரையிலுமே உடல் நிலை

**1754.** மேவி யெழுகின்ற செஞ்சுட ரூடுசென்று
ஆவி யெழுமள வன்றே உடல்உற
மேவப் படுவதும் விட்டு நிகழ்வதும்
பாவித் தடக்கிற் பரகதி தானே. **5**

---

*பெற்றிருக்கும். அச்செயற்பாடு நின்றவுடன் உடல் நீங்கிவிடும். ஆகவே, உடல் உள்ளவரையும் உள்ளே விரும்பி ஈர்க்கப்படுவதும், வெளியே விடப்படுவதால் நீங்கிச் செல்வதும் ஆகிய மூச்சுக் காற்றினை அவ்வாற்றின் அடக்கி நடுநாடி வழியே செலுத்துமாற்றால் இது காறும் கூறிவந்த அண்ட லிங்கம் முதலிய அனைத்து இலிங்கங்களிலும் சிவனைப் பாவனை செய்து வழிபட்டால் மேலான கதி கிடைப்பதாகும்.*

***குறிப்புரை :-*** *குண்டலினி சத்தி ஒடுங்கிக் கீழ்நோக்கிக் கிடத்தலால் உயிருக்குக் கீழான உணர்வுகளும், அஃது எழுச்சியுற்று மேல்நோக்கி இயங்குதலால் உயிருக்கு மேலான உணர்வுகளும் உடல் வழியாக நிகழும். அவற்றுள் சிறந்தது மேலான உணர்வேயாதலால் அஃதொன்றையே நாயனார் குறித்தருளினார், குண்டலினி சத்தி பொதுவாக எல்லோரிடத்திலும் உடம்பினுள் கீழ்நோக்கிக் கிடந்து துயில்வதாகச் சொல்லப்படுதல், அதனால் உண்டாக்கப்படும் உலகியல் உணர்வு உணர்வாகாமை பற்றியேயாம். துயிலுதல், இறத்தல் அன்று ஆதலின் அந்நிலையிலும் அஃது உயிருக்கு ஓர் உணர்வைத் தந்து கொண்டுதான் இருக்கும். அங்ஙனம் தருகின்ற அதனையும் அந்தச் சத்தி கைவிடும்பொழுது உயிர் உடம்பைச் செயற் படுத்த மாட்டாது. அதனால் உடல் விழுந்துவிடும். அதுவே, 'இறப்பு' எனப்படுகின்றது. 'அத்தகைய இறப்பு நேர்வதற்குள் உயிர் சிவனை வழிபட்டு உய்தல் வேண்டும்' என்றற்கு, ''பாவித்து அடக்கிற் பரகதிதானே" என்றார்.*

*"அன்றே" என்பது, 'அந்நாள் வரையிலுமே' எனப்பொருள் தந்தது. "உடல் உற" என அனுவாதமாகக் கூறிய அதனால், 'உடல் உறும்' என்பதை முதலில் உரைத்துக்கொள்க.*

*"பாவித்து அடக்கின்" என்பதை, 'அடக்கிப் பாவிக்கின்' என முன்பின்னாக மாற்றி உரைக்க. பாவித்தற்குச் செயப்படுபொருள் அதிகார முறைமையால் வந்தியைந்தது.*

*'இலிங்க வழிபாட்டினையும் பிரணாயாமம் செய்து செய்தல் சிறப்புடையது' என்றற்கு, "மேவப்படுவதும், விட்டு நிகழ்வதும் அடக்கிப் பாவிக்கின்" என்றார். "விட்டு" என்பது, 'விடுதலால்' எனப் பொருள் தந்தது.*

*இதனால், 'சிவனை இதுகாறும் கூறிவந்த அனைத்து இலிங்கங்களிலும் வைத்து யோக முயற்சியுடன் வழிபடுதலே வீடடைதற்கு வழியாகும்' என முடித்துக் கூறப்பட்டது.*

## 8. சம்பிரதாயம்

*சம்பிரதாயம் - மரபுவழிச் செயல். மரபு, இங்கு ஞானமரபு. கிரியை முறையால் சிவனை வழிபடுதற்கு அதற்கு இடமாகிய இலிங்க வகைகளின் சிறப்பையெல்லாம் கூறிய நாயனார், அவ்வழிபாடு ஞான யோகக் கிரியா நிலையினராகிய மூவர்க்கும் பொது என்பார் ஞானத்தினது இயல்பினை இவ்விடத்திலும் பதினான்கு மந்திரங்களால் உணர்த்துகின்றார். ஞானியர் முதலிய மூவரும் இலிங்க வழிபாட்டினைத் தத்தமக்கு ஏற்ற வகையில் செய்வர் என்க.*

**1755.** உடல்பொருள் ஆவி உதகத்தால் கொண்டு
படர்வினைப் பற்றறப் பார்த்துக் கைவத்து
நொடியின் அடிவைத்து நுண்ணுணர் வாக்கிக்
கடிய பிறப்பறக் காட்டினன் நந்தியே. 1

---

***1755. தெளிவுரை :-*** *எம் அருட்குரவராகிய நந்திபெருமான் எம் உடல், பொருள், ஆவி என்பவற்றை யாம் நீர் வார்த்து ஒப்புக் கொடுக்கச் செய்து அவை முழுவதையும் தம்முடையனவாக ஏற்றுக்கொண்டு, அதனால் விரிந்து கிடந்த எமது வினைப்பரப்பு முழுவதையும் ஒரு நொடியில் பற்றற்றொழியப் பண்ணி, அதன்பின் தமது திருக்கையை எம் தலைமேல் வைத்துத் தீண்டிப் பின்னும் தமது திருவடிகளை எம் தலைமேற் சூட்டி, இவ்வாற்றால் யாராலும் உணரப்படாதவற்றையெல்லாம் உணரும் பேரறிவை எமக்குத் தந்து, வலிமை வாய்ந்த பிறவித் தொடக்கு அற்றொழியும்படி அருள்புரிந்தார்.*

***குறிப்புரை :-*** *இதனால், 'மக்கட்கு ஞானம் கிடைக்குமாறு இவ்வாறு' என்பது உணர்த்தப்பட்டது. நூல் சகலருக்கேயாதலால், இங்குக் கூறிய முறையும் சகலர்க்கேயாதல் தெளிவு.*

*ஞானம் இறைவனாலல்லது தரப்படாது. 'அதனை அவன் சகலர்க்கு ஆசான் மூர்த்தியாய் நின்றே அருளுவான்' என்க. பிரளயாகலர்க்கு ஒருகால் தனது இயற்கை வடிவில் முன்தோன்றியும், விஞ்ஞான கலர்க்கு உயிர்க்குயிராய் உள் நின்றேயும் உணர்த்துவான்.*

***ஞான நெறியில் நிற்பவர் தமது உடல், பொருள், ஆவி மூன்றனையும் சிவனுடையனவாகவே உணர்ந்து, அவற்றைக் குருவினிடத்தில் நீர் வார்த்து ஒப்புவிக்குமிடத்து, 'பொருள் எனப்படுவன பொன், மணிமுதல் பல்வேறு வகையான செல்வங்கள் மட்டும் அல்ல; 'யான் இதனைச் செய்தேன்; என் செயல்கள் இவை' எனப் பற்றி நிற்கும் வினைகளும் பொருள் எனப்பட்டு, அவைகளும் நீர்வார்த்து ஒப்புவிக்கப்படும். முதல் நாள் ஒப்புவித்த அந்த உணர்வு எந்நாளும் நீங்காது நிலைத்திருத்தற்குச் சிவனை நாடோறும் வழிபடும் போதெல்லாம் வழிபாட்டின் முடிவில் அந்த வழிபாட்டின் பயனையும்***

**1756.** உயிரும் சரீரமும் ஒண்பொரு ளான
வியலார் பரமும்பின் மேவும் பிராணன்
செயலார் சிவமும்சிற் சத்திஆ திக்கே
உயலார் குருபரன் உய்யக்கொண் டானே. **2**

---

***'சிவோதாதா, சிவோபோக்தா' என்னும் மந்திரத்தை ஓதி நீர் வார்த்து அவனிடமே ஒப்புவிப்பர். அதுவும் இங்குச் 'சம்பிரதாயம்' என்றதனால் பெறப்படுகின்றது.***

***1756. தெளிவுரை :-*** *சிவனை அடைய வேண்டினார்க்கு உடல் பொருள், ஆவிகளை அவனுடையனவாக ஒப்புவித்த பின்பும் மூச்சுக் காற்றின் இயக்கம் இடைவிடாது இயங்கியே நிற்கும் ஆதலின் அதுவும் அவர்கட்குச் சுமையாகும். அதனால், அதனையும் 'ஆதிசிவன், ஆதிசத்தி' என்பவர்க்கு உரியன ஆகும்படி சிவகுரு நீர்வார்த்துக் கொடுக்கச் செய்து ஏற்றுக் கொள்வார்.*

***குறிப்புரை :-*** *"பரமும் "என்னும் உம்மையை, "பிராணன்" என்பதன்பின் கூட்டி, "பரம்" என்பதை அதற்கும் கூட்டுக. வியல் - பரப்பு. அஃது இங்குப் பெரிதாதலைக் குறித்தது. பரம் - பாரம்; சுமை.*

*பிராரத்த வினை உள்ள வரையில் உடம்பு நீங்காது ஆகையால் உடம்பு நிற்றற்பொருட்டுப் பிராணவாயு இயங்கியே நிற்கும். அஃது இயங்கி உடம்பும் நிற்கவே, உடலோம்புதற் பொருட்டுச் சிறிதளவாயினும் உணவு தேடுதல், வெயில் பனி மழை முதலியவற்றால் வாட்டமும், மகிழ்ச்சியும் கொள்ளுதல் முதலியன நிகழும் ஆதலின் அவை ஆகாமியமாகி விடுதல் பற்றி, "பின் பிராணனும் பரம்" என்றார். 'ஆயினும் மேற்கூறியன நிகழுங்கால் அவற்றைத் தம் செயலாகக் கொள்ளாது சிவன், சத்தி இவர்களது செயலாக உணரின் அவை ஆகாமியமாய் முடியா ஆதலின் அவற்றை அங்ஙனம் உணர்தற்பொருட்டு, குருமூர்த்திகள் நாள்தோறும் வழிபாட்டில் அவற்றையும் நீர்வார்த்துக் கொடுக்கச் செய்து ஏற்றுக் கொள்ளுதல் மரபு' என்றற்கு. "உய்ய, உயல் ஆர் குருபரன் சிவன் சிற்சத்தி ஆதிக்கே கொண்டான்" என்றார். ஆர் குருபரன் = ஆர்க்கின்ற - நிறைக்கின்ற குருபரன். 'சிவகுரு' என்றற்கு, 'குரு' என்று ஒழியாது, "குருபரன்" என்றார். சிவனும், சத்தியும் தொழில் செய்யாது வாளா இருக்குங்கால் 'அனாதி' என்று சொல்லப்பட, ஐந்தொழில் செய்யுங்கால் 'ஆதி' என்று சொல்லப்படுதல் பற்றி "ஆதி" என்றார். ஆதி என்பதனைச் சிவனுக்கும் கூட்டுக. ஆதிக்கே என்பதன் பின், 'ஆக' என்பது வருவிக்க.*

*முன்னை மந்திரத்தில் சஞ்சிதத்தை ஒப்புவித்தல் கூறி, இம்மந்திரத்தில் ஆகாமியத்தை ஒப்புவித்தல் கூறினார்.*

> *"தொல்லையின் வருதல் போலத் தோன்றிரு வினைய துண்டேல்*
> *அல்லொளி புரையும் ஞானத் தழலுற அழிந்து போமே"*
>
> *- சிவப்பிரகாசம் - 89*

**1757.** பச்சிம திக்கிலே வைச்சஆ சாரியன்
நிச்சலும் என்னை நினைஎன்ற அப்பொருள்
உச்சிக்குக் கீழது உள்நாக்கு மேலது
வைச்ச பதம்இது வாய்திற வாதே. **3**

---

*எனவும்,*

*“தொல்லையின் வருதல் போலத் தோன்றிரு வினைய துண்டேல்*
*அல்லொளி புரையும் ஞானத் தழலுற அழிந்து போமே”*

*- சிவப்பிரகாசம் - 89*

*எனவும்,*

*“இடை ஏறும்வினை - தோன்றில் அருளே சுடும்”*

*- திருவருட்பயன், 98*

*எனவும் கூறுதல் காண்க.*

*ஞானம் பெறுமாற்றினைத் தாம் பெற்றவாற்றில் வைத்து விளக்கியவாறு.*

*1757. **தெளிவுரை :-** தான் வடக்கு நோக்கி அமர்ந்திருந்து, என்னைக் கிழக்கு நோக்கிச் சிவனை தியானித்து இருக்கும்படி பணித்த என் ஞானாசிரியர், பின்பு, ‘சிவன் உன் சிந்தனைக்கு அகப்படவில்லை யாகையால் நீ என்னையே சிவனாகத் தியானம்செய்’ என்று அருளிச்செய்தார். அவர் அங்ஙனம் அருளிச்செய்த அந்தத் தியானம் எனது உச்சிக்குக் கீழும், உள்நாக்கிற்கு மேலும் ஆகிய புருவ நடுவில் நிகழ்வது. அவ்விடத்து நிகழ்வதாகிய அந்தத் தியானமானது சொல் நிகழ்ச்சியோடு கூடாது, மனத்தொழில் மாத்திரையாய் நிற்பதாகும்.*

***குறிப்புரை :-** “பச்சிம திக்கிலே வைத்த ஆசாரியன்” என்ற ஞானத்தை உணர்த்தும் முறை மரபினை எடுத்துக் கூறியவாறு, ‘வைச்ச இது பதம்’ என மொழி மாற்றி யுரைக்க. இது பதம் - இந்த இடம். இஃது ஆகுபெயராய், இதன்கண் நிகழும் தியானத்தைக் குறித்தது. “திறவாது” என்பது, ‘திறக்கப் படாது’ எனச் செயப்பாட்டு வினையாய் நின்றது. சொல் நிகழ்த்துதலை, ‘வாய் திறத்தல்’ என்றது பான்மை வழக்கு.*

*மனத்தின் தொழில் சொல் நிகழ்ச்சியோடு கூடியும் நிகழும் ஆகலின் அவ்வாறு நிகழ்வது ‘தியானம்’ எனப்படாது, - சொல் நிகழ்ச்சியின்றி நிகழ்வதே தியானமாம் - என்றற்கு “வாய்திறவாது” என்றார். அசிந்திதனாகி சிவனைச் சிந்திதனாகக் காண்பதற்கு உரிய குரு, லிங்கம், சங்கமம் என்னும் மூன்றனுள் குரு சிறந்து நிற்றல் இங்குப் பெறப்பட்டது.*

*இதனால், ஞானத்தைப் பெறு முறையும், பின் அதனை நிலைபெறுத்திக் கொள்ளும் முறையும் கூறப்பட்டன.*

**1758.** **பெட்டடித் தெங்கும் பிதற்றித் திரிவேனை**
**ஒட்டடித் துள்ளமார் மாசெலாம் வாங்கிப்பின்**
**தட்டொக்க மாறினன் தன்னையும் என்னையும்**
**வட்டம தொத்தது வாணிபம் வாய்த்ததே.** **4**

---

*1758. **தெளிவுரை :-** 'இவ்விடம், அவ்விடம்' என்பதில்லாமல் எங்கும் சென்று, எனது பிடிவாதக் கொள்கையையே வலிந்து கூறி வாயில் வந்தவற்றைப் பிதற்றிக்கொண்டு திரிந்து கொண்டிருந்த என்னைச் சிவகுரு எதிர்ப்பட்டு, எனது அக்குற்றங்கள் எல்லாவற்றையும் ஒட்டடையை அடித்து நீக்குவது போல நீக்கி, அவைகளைத் தன் பக்கமாக எடுத்துக்கொண்டு, தன்னையும், என்னையும் ஒரு நிகராக வைத்துக் கொடுத்தும், கொண்டும் மாற்றிக் கொண்டான். என்னிடம் உள்ள குற்றங்களை முற்ற நீக்கினமையால், நாங்கள் இருவரும் ஒத்த வினையுடைய பொருளாயினோம். அதனால் கொடுத்துக் கொள்ளும் வாணிபம் தடையின்றி முடிந்தது. சிவகுருநாதன் சீடனையும் தானாம் தன்மை அடையச் செய்தல்.*

***குறிப்புரை :-*** *பெள் + டு = பெட்டு. 'விரும்பப் பட்டது என்பது பொருள். அது விரும்பப்பட்ட கொள்கையைக் குறித்தது. வலியுறுத்திப் பேசுதலை 'அடித்தல்' என்பர். 'அடித்து' என்றது 'அடித்தது போன்று' எனப் பொருள் தந்தது. 'ஒட்டு' என்னும் முதனிலைத் தொழிற்பெயர், அதனையுடைய பொருளைக் குறித்தது. வாங்குதல் - தனது ஆற்றலால் தன்னைக் கடந்து செல்லாது தன் பக்கமே நிறுத்துதல். மல மாயா கன்மங்கள் நீக்கப்படுமேயன்றி, அழிக்கப்படா ஆதலால், 'வாங்கி' என்றார். தட்டு - துலைத்தட்டு. ஒத்தல், நிறையால் ஒத்து நேர் நிற்றல். 'மாறினன்' என்றொழியாது "ஒக்க மாறினன்" என்றது, ஒவ்வாததனை ஒக்கப்பண்ணி மாறினன் என்பது தோன்றுதற் பொருட்டு. மாறுதல் - விற்றல். "தன்னை மாறி யிறுக்க உள்ள கடன்கள்" (தி.12 இளையான்குடி மாறர் பு.7) என்றாற் போல்வன காண்க. விற்றமை கூறவே, வாங்கினமை தானே பெறப்பட்டது. தன்னை விற்றமை, தன் தன்மையை சீவனிடத்துப் பதிவித்தமை. என்னை வாங்கினமை, சீவபோதத்தைத் தன்னிடத்து ஒடுக்கினமை - "வாணிபம் வாய்த்து'' என்றதனால், 'அது பொருந்தா வாணிபம்' என்பதும், "வட்டமதொத்தது" என்றதனால், 'அஃது அங்ஙனமாயினும் அதன்கண் உள்ள பொருந்தாமை நீங்கினமையால் அது தக்கதாயிற்று' என்பதும் போந்தன.*

*"தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்*
*சங்கரா ஆர்கொலோ சதுரர்"* *- தி. 8 கோயில் திருப்பதிகம், 10*

*என்பதிலும், 'சிவன் மேற்கொண்ட வாணிபம் பொருந்தா வாணிபம்' என்பது குறிக்கப்பட்டது. 'வட்டம், வாசி' என்பன, தரக்குறைவை உணர்த்தும் ஒருபொருட் சொற்கள். "வட்டம தொத்தது" என்றது 'தரம் குறைவு நீங்கி நேரியதாயிற்று' என்றபடி, "ஒத்தது" என்பதன்பின், ஆகலான் என்பது எஞ்சி நின்றது.*

**1759.** தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாம் தலைவன்
இருக்கின்ற தன்மையை ஏதும் உணரார்
பிரிக்கின்ற விந்துப் பிணக்கறுத் தெல்லாம்
கருக்கொண்ட ஈசனைக் கண்டுகொண் டேனே. **5**

---

*பெட்ட அடித்தல் - விரும்பியதைப் பேசுதல். இது பேசத் தகுந்தது, இது பேசத் தகாதது என்ற வேறுபாடின்றி விரும்பிய வண்ணமெல்லாம் பேசுதல்.*

*பிதற்றுதல் - பொருளற்றனவும், பயனற்றனவும் ஆகிய பேச்சுக்களைப் பேசுதல்.*

***இதனால், இறைவன் தானே குருவாய் நின்று உயிரைச் சீவத்தன்மை நீக்கித் தன் தன்மையை எய்துவித்துத் தானாக்கிக் கொள்ளுதலாகிய ஞானச் செய்தி இனிது விளங்கக் கூறப்பட்டது.***

*1759. **தெளிவுரை :-** உலகத்தார் உலக உணர்வைத் தருகின்ற நாதத்தின் புறப்போக்கினை நீக்கமாட்டாமையால் தன்னால் தாங்கப்படுகின்ற அனைத்துயிர் கட்கும் தலைவனாய் அவற்றின் உள்ளும் புறம்புமாய் உள்ள இறைவனது இருப்பையும், அவனது பெருந்தன்மையையும் சிறிதும் உணராது அல்லற்படுவர். யான் அவன் வந்த உண்மையை உணர்ந்தமையால் அந்த நாதத்தின் மாறுபாடாகிய புறநோக்கைப் போக்கி அவனது அருளையே கண்ணாகக் கொண்டு காணும் அக நோக்கினை எய்தினமையால் அவனது இருப்பையும், இயல்பையும் நன்கு உணர்ந்து கொண்டேன். மாயை அகற்றி மயக்கத்தைப் போக்கி ஈசனைக் காணுதல்.*

***குறிப்புரை :-** 'இஃதே ஞானமாவது' என்பதாம். ஞானத்தினது இயல்பு இனிது விளங்குதற் பொருட்டு அஞ்ஞானத்தினது இயல்பையும் உடன் எடுத்து ஓதினார். வருவித்துரைத்தன இசையெச்சங்கள்.*

*விந்து - சுத்த மாயை. அதுவே நாதமாய் நின்று புறப்பொருள் உணர்வைத் தருதல் பற்றி, "பிரிக்கின்ற விந்துப் பிணக்கு" என்றார். அகநோக்கால் சிவனைச் சார்தலும், புறநோக்கால் அவனின் நீங்கி உலகைச் சார்தலும் உயிர்க்கு உளவாதல் பற்றி, "பிரிக்கின்ற விந்து" என்றார். 'விந்துவால் விளையும் ஞானம் பாசஞானம் என்பதையும், 'அந்த ஞானம் பதிஞானத்திற்குத் தடையாய் நிற்கும்' என்பதையும்,*

*'வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்*
*விரும்பசபை வைகரியா தித்திறங்கள் மேலாம்*
*நாதமுடி வானவெலாம் பாசஞானம்'*

*- சிவஞான சித்தியார், சூ. 9.2*

*'ஓவிட விந்து ஞானம் உதிப்பதோர் ஞானம் உண்டேல்*
*சேவுயர் கொடியினான்றன் சேவடி சேர லாமே'*

*- சிவஞான சித்தியார், சூ. 1-26*

**1760.** கூடும் உடல்பொருள் ஆவி குறிக்கொண்டு
நாடி அடிவைத் தருள்ஞான சத்தியால்
பாடல் உடலினிற் பற்றற நீக்கியே
கூடியே தான்அவ னாம்குறிக் கொண்டே. **6**

**1761.** கொண்டான் அடியேன் அடிமை குறிக்கொள்ள
கொண்டான் உயிர்பொருள் காயக் குழாத்தினை
கொண்டான் பலம்முற்றும் தந்தவன் கோடலால்
கொண்டான் எனஒன்றும் கூறகி லேனே. **7**

---

*எனவும் ஓதியவாற்றான் அறிக. 'கருக்கொள்ளுதல்' என்பது உயிர்களைத் தனது வியாபகத்துள் அடக்கி நிற்றல், உயிர்களுக்கு உயிராய் அவற்றின் உள்நிற்றல் ஆகிய இரண்டினையும் குறித்தது. 'தலைவன்' என்பதன்பின் 'தலைவனாய்' என ஆக்கச் சொல் வருவித்துரைக்க. "ஈசன்" எனப் பின்னர் வருதலால், முன்னர் வாளா, 'தலைவனாய் இருக்கின்ற தன்மையை' என்றார். 'கண்டேன்', என்னாது, "கண்டு கொண்டேன்" என்றது நன்குணர்ந்தமை பற்றி.*

*இதனால், 'ஞானம் ஒன்றே அஞ்ஞானத்தை நீக்குவது' என்பது வலியுறுத்தி உணர்த்தப்பட்டது.*

***1760. தெளிவுரை :-** சிவன் தன்னை அடையும் செவ்வி வாய்ந்த உயிரையும், அதனது உடல் பொருள்களையும் தன்னுடையனவாக ஏற்றுக்கொள்ளுதலையே குறிக்கோளாகக் கொண்டு, அவ்வுயிர் வாழும் இடத்தை நாடி அடைந்து, தனது திருவடிகளை அதனது முடிமேற் சூட்டி, அதன்பின் வழங்கிய ஞானத்தின் துணையால் அவ்வுயிர் இழிவுடைய உடலில் முன்பு கொண்டிருந்த பற்றை அறவே விடுத்து, அச்சிவன் ஒருவனையே குறிக்கோளாகக் கொண்டு அவனை அடைந்து, தான் அவனேயாகிவிடும்.*

***குறிப்புரை :-** "ஆவி" என்பதை, "கூடும்" என்பதன் பின்னர்க் கூட்டுக. "அருள் ஞானம்" இறந்தகால வினைத்தொகை. 'தனது ஞானம்' என்பது உணர்த்தற்கு. 'ஞானம்' என்று ஒழியாது, "ஞான சத்தி" என்றார். பாடு - மேன்மை. அதனை, 'பாடு பெறுதியோ நெஞ்சே" (திருக்குறள், 1237) என்பத னானும் உணர்க. மேன்மையன்மை கீழ்மையை உணர்த்திற்று. 'கூடிய' என்பதும், 'குளிக்கொண்டு' என்பதும் பாடம் அல்ல. இது சாம்பவி தீக்கை பற்றி கூறிற்று என்பர்.*

*இதனால், 'ஞானம் பெற்றவரே வீடுபெறுவர்' என்பது கூறப்பட்டது.*

***1761. தெளிவுரை :-** சிவன், யான் அவனுக்கு அடிமையாதலை உண்மையாக உணரும்படி அவன் நேர் வந்து என்னை ஆட்கொண்டான். அதனால் என் ஆவி, உடல், பொருள் அனைத்தையும் தன்னுடையனவாக என்று கொண்டான். அவையேயன்றி, யான் செய்யும் செயலால் விளையும் பயனையும் தன்னுடையன வாகக் கொண்டான். இங்ஙனம் அவைகளை அவன் கொண்டது புதிதாகாது*

**1762.** குறிக்கின்ற தேகமும் தேகியும் கூடில்
நெறிக்கும் பிராணன் நிலைபெற்ற சீவன்
பறிக்கின்ற காயத்தைப் பற்றிய நேர்மை
பிறிக்க அறியாதார் பேயுடன் ஒப்பரே. **8**

---

*முன்பே அவன் என்பால் கொடுத்து வைத்தவற்றைத் திரும்பப் பெற்றுக் கொண்டதே யாகலின், 'என்னுடையவைகளை அவன் கொண்டு போய்விட்டான்' என்று யான் எங்ஙனம் முறையிட முடியும்? முடியாது ஆகையால் யான் பேசாதிருந்துவிட்டேன்.*

***குறிப்புரை :-*** *முதல் மூன்று அடிகளிலும் இரண்டாம் வேற்றுமை, தொடர்களின் இறுதிகளில் தொக்கும். விரிந்தும் நின்றது. 'அடியேன் குறிக்கொள்ள' என மாற்றி வைத்து உரைக்க.*

*இதனால், 'ஞானமாவது, உள்ளதாய், முன்பு உணரப்படாது இருந்ததனை உணர்தலேயன்றிப் புதுவதாய் விளைகின்ற ஒன்றை உணர்தல் அன்று' என்பது கூறப்பட்டது.*

***1762. தெளிவுரை :-*** *வினைக்கீடாகக் குறிக்கப்பட்ட உடம்பும், அவ்வுடம்பைத் தன்னுடையதாகக் கொள்ளும் உயிரும் ஒன்று சேர்ந்தவுடன், பிராணவாயுவும் நெறிப்பட்டு இயங்கத் தொடங்கும். (அங்ஙனம் இயங்குதல் உயிர் அவ்வுடம்பில் நிலைத்திருத்தற்குத் துணையாகவேயாம்). ஆகவே, அந்தப் பிராண வாயுவின் இயக்கத்தால் அந்த உடம்பில் நிலைபெற்றிருக்கின்ற அந்த உயிரிட மிருந்து அந்த உடம்பு ஒருகாலத்தில் பறிக்கவேபடும். அதனால், உயிர் உடம்பின் வேறாயினும், அஃது அதனைப்பற்றி நிற்றற்குரிய காரணத்தை உணர்ந்து அவ்வுணர்வால், தம்மை உடம்பின் வேறாக உணராது, உடம்பாகவே மயங்கி உலக வாழ்வில் இச்சை கொண்டு அலைபவர் பேயோடு ஒப்பர்.*

***குறிப்புரை :-*** *'இவ்வுயிருக்கு இஞ்ஞான்று இவ்வுடம்பு உரியது' எனக் குறிப்பதும், இவ்வுடம்பில் பிராணவாயுவை இயங்கச் செய்த அதனால் அவ்வுயிரை அவ்வுடம்பில் சிலகாலம் நிலைப்பிப்பதும், பின்பு அவ்வுடம்பை அவ்வுயிரிடமிருந்து பறித்துவிடுவதும் எல்லாம் இறைவனது ஆணையேயாதலும், அந்த ஆணை அவ்வாறெல்லாம் செய்தற்குக் காரணம் உயிர்களின் வினையே ஆதலும் ஆகியவற்றையே இங்கு "நேர்மை" என்றார். 'நீர்மை' எனப்பாடம் கொள்ளுதலும் பொருந்தும்.*

*'பிராணன், நேர்மை' - என்பவற்றில், 'ஆல்' உருபு விரித்துக் கொள்க. "நேர்மையால்" என்றது, 'நேர்மையை உணருமாற்றால்' என்றபடி, பேய்க்கு வயிற்றுக்குத் தேடுதல் ஒன்றன்றிப் பிறிது குறிக்கோள் இல்லாமை பற்றி அத்தன்மையரைப் பேயோடு ஒப்பிட்டார்.*

*இதனால், 'ஞானம் பெறாதார் தம்மையும், தமக்கு உறுதியானவற்றையும் உணரமாட்டார்' என்பது கூறப்பட்டது.*

**1763.** உணர்வுடை யார்கட் குலகமும் தோன்றும்
உணர்வுடை யார்கட் குறுதுய ரில்லை
உணர்வுடை யார்கள் உணர்ந்தஅக் காலம்
உணர்வுடை யார்கள் உணர்ந்துகண் டாரே. 9

**1764.** காயப் பரத்தின் அலைந்து துரியத்துச்
சால விரிந்து குவிந்து சகலத்தில்
ஆயஅவ் ஆறா றடைந்து திரிந்தேற்குத்
தூய அருள்தந்த நந்திக்கென் சொல்வதே. 10

---

***1763. தெளிவுரை :-*** *குருவருளால் ஞானத்தை உணர்வார்கட்கு உலகத்தின் இயல்பும் தோன்றும். (உம்மையால், உலகத்தைச் செயற்படுத்தி நிற்கின்ற முதல்வனது இயல்பும் தோன்றும்). ஆகவே, உலகத்தைப் பற்றாது விடுத்து முதல்வனையே பற்றி நிற்பர் ஆகையால் அவர்கட்கு உலகத்தால் விளைக்கப்படும் துன்பம் இல்லையாகும். (முதல்வனால் தரப்படும் இன்பமே விளையும்). குருவருளால் ஞானம் பெற்றவர்கள் அதனை முதற்கண் கேள்வியளவாகவே உணர்ந்தாராயினும், பின்பு சிந்தித்துத் தெளிந்து கொள்வார்கள்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'கேட்டல் அடிப்படை' என்பதாம். உயிர்கள் ஞானத்தைப் பெறும் முறைமையை இவ்வதிகாரத்து முன் மந்திரத்திற்கு முன் மந்திரங்காறும் விரித்தருளிச் செய்தமையால் மீட்டும் அதனை எடுத்துக் கூறாராயினார்.*

*இம்மந்திரம் சொற்பொருட் பின்வருநிலையணி.*

*இதனால், ஞானம் படிநிலையான் முற்றுமாறும், அதன் பயனும் கூறப்பட்டன.*

***1764. தெளிவுரை :-*** *உடம்பாகிய சுமையைச் சுமந்து கொண்டே உலகெங்கும் திரிந்து, அவ்வுடம்பால் துரிய நிலையில் உணர்வு ஒடுங்கியும், சகல நிலையில் உணர்வு மிகவிரிந்தும் கருவிகள் முப்பத்தாறின் சேர்க்கையால் இவ்வாறெல்லாம் அலமந்து கிடந்த அடியேனுக்கு அக்கருவிகளில் ஒன்றோடும் படாது தூயதாய் உள்ள திருவருளை வழங்கி அமைதியைக் கொடுத்தருளிய நந்தி பெருமானது கருணைக்கு நான் நன்றி சொல்வது எவ்வாறு!*

***குறிப்புரை :-*** *காயப்பரப்பு - சகலநிலையில் உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையுள்ள உணர்ச்சி நரம்புகள் அனைத்தும், உணர்ந்து உயரும் நிலையில் மூலாதாரம் முதல் பிரமரந்திரம் வரையுள்ள ஆறாதார நிலையில் என்க. அலைந்து என்றார் பயனெதுவும் இன்றிப் பொறிப்பசி தணிக்கத் தேடி அலைதலான் என்க.*

*துரியத்து - பிரமரந்திரத்திற்கு மேலதாகிய துரியத்தானத்து. துரியத்தானம் உச்சிக்குமேல் ஆறங்குல உயரத்தில் உள்ளது. துரியாதீதம் - அதற்குமேல் ஆறு*

**1765.** நானென நீயென வேறில்லை நண்ணுதல்
ஊனென ஊனுயி ரென்ன உடன்நின்று
வானென வானவர் நின்று மனிதர்கள்
தேனென இன்பம் திளைக்கின்ற வாறே. **11**

---

*அங்குலத்தில், அதாவது உச்சிக்குமேல் பன்னிரண்டு அங்குலத்தில் உள்ளது. ஆகவே, துரியம் வரையில் சென்று விரிந்தபின் தன்னிலை தாத்துவிகமான புவன போகங்களில் கடந்து உழல்வது அன்று; சிவத்தோடு ஒன்றி ஆனந்தமய மாயிருப்பது என்பதை உணர்ந்தபோது தன்னை இதுவரை பந்தித்திருந்த தத்துவங்கள் தன்னின் வேறானவையாக உணரப்படுதலின் 'ஆறாறு அடைந்து திரிந்தோர்க்குத் தூய அருள்தந்த நந்தி' எனப் பாராட்டினார்.*

*அருள் தருதலாவது சிவஞானம் வரப்பண்ணி ஆன்மாவை முத்திப் பேற்றிற்கு உரியனாக்குதல்.*

*இதனால், அஞ்ஞானம் காரணமாக அலமரும் உயிர்கட்குக் குருவாகி வந்து ஞானத்தை அருளி அமைதியைத் தரும் சிவபெருமானது பேரருட்கு அவ்வுயிர்கள் செய்யும் கைம்மாறு யாதும் இன்மை கூறப்பட்டது. இதன் இரண்டாம் அடியில் இன எதுகை வந்தது.*

*1765. தெளிவுரை :-* *குருவருளால் ஞானத்தைப் பெற்ற சகல வருக்கத்தினர் பின்பு சிவன் ஆகாயம் போல வியாபகனாய் விளங்குதலை உணர்ந்து அதனால் சுட்டறிவை விட்டு எங்கும் வியாபகமாய் அவனை உணருமாற்றால் தேன் சுவையை நுகர்தல் போல அவனது தூய இன்பத்தை நுகருங்கால் அந்தச் சிவன் இவர்கட்குக் காட்சிப்படுதல், 'நான் இன்பத்தை நுகருகின்றேன், நீ இன்பத்தைத் தருகின்றாய்' என இவ்வாறு வேறு நின்று நுகருமாறு அவன் இவரின் வேறாய் நிற்றல் அன்று. மற்று, இவர் உடம்பு போலவும், அவன் அவ்வுடம்பினுள் உள்ள உயிர் போலவும் உடனாய் நிற்கவேயாம். உயிர்கள் இன்பம் திளைக்கும் முறைமையை உணர்த்துகிறார்.*

*குறிப்புரை :-* *"மனிதர்கள்" என்பதை மூன்றாம் அடியின் முதலிற் கூட்டி, அது முதலாகத் தொடங்கி "நண்ணுதல்" என்பதை முதற்கண் வைத்து உரைக்க, "வானவர்" என்றது சிவனை உயர்வுப் பான்மையாற் குறித்தவாறு. "நின்று" இரண்டில் பின்னது 'நிற்றலால்' எனக் காரணப் பொருட்டாய் நின்றது. முன்னது அப்பொருளில் வந்த செயவென் எச்சத் திரிபு. 'நண்ணுதல், நின்று' இவற்றிற்கும் வினைமுதல் பின்னர் வந்த "வானவர்" என்பதே. 'திளைக்கின்ற வாற்றில்' என ஏழாவது விரிக்க.*

*"ஊன்" என்றது உடம்பை. 'உடம்பு' எனப் பொதுப்படவே அருளிச் செய்தாராயினும் அஃது அறிவுக்கருவிகளாகிய, உடம்பின் புறத்தில் உள்ள ஞானேந்திரியங்களையும், அகத்தில் உள்ள அந்தக் கரணங்களையுமே சுட்டி*

**1766.** அவனும் அவனும் அவனை அறியார்
அவனை அறியில் அறிவானும் இல்லை
அவனும் அவனும் அவனை அறியில்
அவனும் அவனும் அவன்இவன் ஆமே. 12

---

*நின்றது. இவ் அறிவுக் கருவிகள் அறியுந் தன்மையுடையனவாயினும் அவற்றோடு ஆன்மா இயைந்து தானும் அறிந்தாலன்றி அறியமாட்டாமை போல, உயிர்கள் அறிவுடையனவாயினும் சிவன் அவற்றோடு உடனாய் நின்று அறிந்தாலன்றி அவை அறியமாட்டா. இந்நிலை பெத்தத்தில் மட்டுமன்றி முத்தியிலும் ஆதலை, ஊன் என, (வானவர்) "ஊன் உயிர் என்ன உடன் நின்று" என்றார். குருவருளை நினைப்பித்தற்கு மனித உயிரையே குறித்தார்.*

*இதனால், ஞானத்தின் முடிநிலைப் பயனாகிய பரமுத்தியின் இயல்பு கூறப்பட்டது.*

***1766. தெளிவுரை :-** உயிர்க்கு உறுதியறியாமை பற்றி மெய்ந்நெறியாளனால் 'அவன்' என அயலவனாகக் குறிக்கப்படுபவனும், தன்போன்றோரால் அடைய லாகாத மேல் நிலையை அடைந்தமை பற்றி உலகியலாளனால் 'அவன்' என உயர்த்துக் கூறப்படும் மெய்ந்நெறியாளனும் ஆகிய இருவருமே சிவனை அறிந்திலர், அஃது எவ்வாறெனில், சிவனை ஆன்மா உண்மையாகவே அறியுமாயின் அதன் அறிவில், அறிபவனும் (உம்மையால் அறியும் அறிவும்) இல்லையாகும். (மேற்கூறிய இருவர் அறிவிலும் அறிபவராகிய தம்மை அறியும் 'யான்' என்னும், தமது அறிவை அறிகின்ற எனது என்னும் அறிவும் இருத்தலால் அவர் சிவனை அறிந்தாரால் எங்ஙனம்?) அவ்விருவரும் 'யான், எனது' என்பன முற்றும் அறும்படி சிவனை அறிந்தாராயின் அவருள் ஒவ்வொருவனும் ஒவ்வொரு காரணம் பற்றி மற்றவனை, 'அவன்' என வேற்று நிலையில் வைத்து எண்ணும் நிலைநீங்கி, 'இவன்' என ஒருநிலையில் வைத்து எண்ணும் நிலை உண்டாய்விடும்.*

***குறிப்புரை :-** "அவனை" என இரண்டன் உருபேற்று நின்றவை மூன்றும் பண்டறி சுட்டாய்ச் சிவனைக் குறித்து நின்றன. ஏனையவை, 'அவன்' என்று சுட்டப்படுபவன் எனப்பொருள் தந்தன. "அவனும், அவனும்" என இருவரைக் கூறி, 'அவர் இருவரும் சிவனை அறியார்' என்றமையால் 'அவர் இருவரும் வேறு வேறு நிலையினர்' என்பதும், 'ஆயினும் அவர் அறியாராயினமைக்குக் காரணம் ஒன்றே என்பதும் போந்தன ஆகலின், 'அவ்இருநிலை' இவை என்பதும், 'ஒன்றாகிய காரணம் இது' என்பதும் ஆற்றலால் கொள்ளப்பட்டன.*

*'உலகியலாளன் சிவனை அறியான் - என்பது வெளிப்படை; ஆயினும் மெய்ந்நெறியாளன் சிவனை அறியானாதல் எவ்வாறு என வியக்கத் தோன்றும், அங்ஙனம் வியப்புத் தோன்றக் கூறியது சொல் நயமாகும். முத்தி நிலையிலும்*

**1767.** நான்இது தான்என நின்றவன் நாடொறும்
ஊன்இது தான்உயிர் போல்உணர் வான்உளன்
வான்இரு மாமழை போற்பொறி வான்உளன்
நான்இது வாம்பரன் நாதனும் ஆமே. **13**

---

*சாக்கிரம் முதலிய அஞ்சவத்தைகள் உள; அவற்றுள் துரியம், துரியாதீதம் என்பவையே சிறந்தவை. அவற்றுள் துரியாதீதமே முடிநிலை. அதன்கண் அறிவானும், அவனது அறிவும் உணரப்படாமல் அறியப்படும். பொருள் ஒன்றே உணரப்படும். அவ்வாறன்றி, மூன்று பொருள்களும் உணரப்படுதல் துரிய நிலையேயாதல் பற்றி, அந்நிலையில் நின்றானையும் சிவனையறியாதவனாகக் கூறினார். **துரிய நிலை அருள் விளக்க நிலையும், துரியாதீதநிலை ஆனந்த விளக்கமும் ஆதல் அறிக**. இம்மந்திரத்திலும் சொற்பொருட் பின்வரு நிலையணி வந்தது.*

*இதனால் ஞானத்தின் பயனாகிய முத்தியின் முடிநிலை இயல்பு கூறப்பட்டது.*

*1767.* **தெளிவுரை :-** *உயிர் என்றும் உடம்பு போல இருக்க அதன்கண் உயிர்போல நின்று அறிகின்ற ஒருவன் இருக்கின்றான். அவன், 'இவ்வுயிர் நானே' எனத் திருவுளம் செய்து, அவ்வுயிரின் உள்ளத்தில் தனது கருணையை வானத்தில் உள்ள கரிய, பெரிய மேகம் மழையைப் பொழிவது போலப் பொழிவான். 'இவ்வுயிர் யான்' எனத் திருவுளம் செய்கின்ற அவன் குருவுமாய் வந்து அருள்பவனாவான்.*

*குறிப்புரை :- "தான்" இரண்டில் முன்னது தேற்றப் பொருளிலும், பின்னது எழுவாய்ப் பொருளிலும் வந்தன. "இதுதான்" என்றது, 'இந்த உயிர்தான்' என்றபடி. "ஊன்" என்பதன்பின் 'ஆக' என்பது தொகுத்தலாயிற்று.*

*'இதுதான் ஊன் ஆக, உயிர்போல் உணர்வான் உளன்; அவன், - இது நான்தான் - என நின்று, உளன், வான் இருமாமழை போல் பொழிவான்' - எனக் கூட்டியுரைக்க.*

*உளன் - உளம்; போலி. 'உளனில் பொழிவான்' என்க. ஈற்றடியில், "நான் இதுவாம்" என்றது, முதல் அடியில் கூறியதனை மீட்டு அனுவதித்ததாம். "நாதன்" என்பது குருவை உணர்த்துவதொரு பெயர்.*

*"இது நானே" என்றது "சிவோயம் அஸ்தி" என்னும் சித்தாந்த மகாவாக்கியப் பொருளைக் கூறியவாறு, ஆசிரியன் மாணவனது உயிரை இவ்வாறு பாவிக்கும் பாவனையால் அவனைச் சிவமாகச் செய்வன் என்க. குரு சிவனே என்றற்கு, "நான் இது வாம் பரன் நாதனும் ஆமே" என்றார்.*

*இதனால் ஆசாரியனால் சீவன் சிவன் ஆதலாகிய ஞானச் செய்தி மரபு*

**1768.** பெருந்தன்மை தான்என யான்என வேறாய்
இருந்ததும் இல்லைஅ தீசன் அறியும்
பொருந்தும் உடல்உயிர் போல்உண்மை மெய்யே
திருந்தமுன் செய்கின்ற தேவர் பிரானே. **14**

---

*கூறப்பட்டது.*

*1768. தெளிவுரை :- உண்மையை உண்மையாக உணர்ந்து உயிர்கள் செம்மை எய்தும் வண்ணம் செய்கின்ற சிவன், 'தீர உயர்ந்த பெருந்தன்மையை உடைய தான் அங்கே' எனவும், 'தீர இழிந்த சிறுதன்மையை உடையயான் இங்கே' எனவும் இவ்வாறு வேறு வேறாய் முன்பு இருந்ததும் இல்லை. (உம்மையால், இனி இருக்கப் போவதும் இல்லை) மற்று, உடலில் உயிர் வேறறக் கலந்திருப்பது போல அவன் என்றும் என்னுள் ஒன்றாய்க் கலந்தேயிருக்கின்றான்; ஆயினும் அவன் அறிவான்; யான் அறிந்திலேன்.*

*குறிப்புரை :- 'இது பொழுது அவன் அருளால் யானும் அதனை அறிந்தேன்' என்பது குறிப்பெச்சம். 'இவ்வாறு அறிந்த இதுவே ஞானம்' என்றபடி.*

*இதனால், '**படலத்தால் மறைக்கப்பட்டிருந்த கண்ணையுடையவன் அப்படலம் நீங்கியவுடன் முன் தான் காணாதிருந்த பொருள்களை காண்பது போன்றதே ஞானத்தைப் பெறுதல்' என்பதும், 'அங்ஙனம் கண்பெற்றவன் தன்முன் உள்ள பொருள்களைக் கொண்டு மகிழ்தல் போன்றதே முத்திநிலையை எய்துதல்' என்பதும் கூறப்பட்டன**.*

## 9. திருவருள் வைப்பு

*சிவ மெய்ந்நெறியின் மரபுகள் பலவாயினும் அவை அனைத்தும், 'ஞானம், யோகம், கிரியை, சரியை' என்னும் நான்காய் அடங்கும். அவற்றுள் தலையாயதான ஞானத்தையே 'சம்பிரதாயம்' எனக் கூறி விளக்கிய நாயனார் பிறவகையுட்பட்டு விரிவனவற்றுள் சிலவற்றையும் இனித்தொடர்ந்து விளக்குவாராய், 'மேற்கூறிய தலைமைப் பொருளாகிய ஞானத்திற்கும், ஏனைப் பலவற்றிற்கும் ஏதுவானது சிவன் தனது திருவருளை ஆன்மாவினிடத்து வைப்பதே' என்பதை இவண் இருபத்தொரு மந்திரங்களால் விளக்குகின்றார்.*

*'திருவருள் வைப்பாவது சத்திநிபாதமேயாகலின், அஃது ஐந்தாம் தந்திரத்துள் நால்வகைப்படுத்திக் கூறப்பட்டதன்றோ எனின், அவ்விடத்து, 'உயிர்க்கு உய்யும் நெறி வாய்க்கும் முறைமை இது' என்பது உணர்த்துதற் பொருட்டுக் கூறப்பட்டது. இவ்விடத்து, 'சத்திநிபாதம்' எய்தப் பெற்ற உயிர் அப்பேற்றினது அருமை பெருமைகளை உணரும் முறைமை உணர்த்துதற் பொருட்டுக் கூறப்படுகின்றது. 'இது வேறுபாடு' என்பதுணர்க.*

**1769.** இருபத மாவ திரவும் பகலும்
உருவது வாவ துயிரும் உடலும்
அருளது வாவ தறமும் தவமும்
பொருளது வுள்நின்ற போகம தாமே. 1

---

***1769. தெளிவுரை :-*** *அருளினிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று. உயிர்கட்குரிய இருநிலைகளாவன இரவாகிய அஞ்ஞான நிலையும் ஒளியாகிய ஞான நிலையுமாம்; உருவாவது உயிரும் உடலும் கூடிய நிலையேயாம்; அருளாவது அறமும், தவமும் ஆம்; பொருளாவது உயிர் உணரும் ஆனந்தானுபவமேயாம் என்றவாறு.*

*இம்மந்திரம் திருவருளென்பது சிவாகமங்களில் விதித்தவண்ணம் ஒழுகும் அறமும், அதன் முதிர்வால் விளையும் தவமுமேயாம்; இவ்விரண்டாலும் விளையும் சிவானந்தமே உறுதிப்பொருள் ஆம் என அருளையும் அதன் பயனையும் உணர்த்தியவாறு.*

***குறிப்புரை :-*** *பதம் - நிலை. உயிர்கள் மலமாயை கன்மங்களோடு கூடி, அவையே தானாய் இருள்மலத்துள் அழுந்தி நிற்கின்ற நிலை இருள் நிலையாகிய இரவு என்றதாம். பகல் - ஒளி, இறைவன் அருளால் அறியாமையின் நீங்கிச் சிவத்தைப் பொருந்தும் தீவிர பக்தி முதிர்ந்து, அதற்குரிய தியானம், யோகம் இவற்றில் ஈடுபடும் நிலை பகலாம் என்க.*

*ஆன்மாக்கள் உருவுகோடலாவது உடலொடு கூடி உயிர் நல்வினை தீவினைகளைப் புரிதற்குரிய வினைக்கு ஈடான ஓர் உருவைக் கொள்ளுதலாம். இந்த உடலையடுத்து உடல் எடுத்ததன் பயன் அறமும் தவமுமாய அருளை*

**1770.** காண்டற் கரியன் கருத்திலன் நந்தியும்
தீண்டற்கும் சார்தற்கும் சேயனாய்த் தோன்றிடும்
வேண்டிக் கிடந்து விளக்கொளி யான்நெஞ்சம்
ஈண்டிக் கிடந்தங் கிருளறு மாமே. **2**

---

*இறைவன் வைக்கத் தான் பரிபாகமுறுதலே என்று உணர்ந்து ஒழுகிய போது இறைவன் திருவருள் வைப்பன்; அதனால் சிவபோகமாகிய செம்பொருள் அனுபவம் சேரும் படிமுறையான் திருவருள் வைப்பினைத் தெரிவித்தருளுகின்றார்.*

***1770. தெளிவுரை :-*** *(சிவனை உயிர்கள் அனாதியில் ஓராற்றானும் உணர்தல் இல்லை). பின்பு உலகியல் உணர்வானே ஏனைப் பொருள்களைக் காண்டல், கருதல், தீண்டல், பற்றுதல் இவற்றைச் செய்தல் செய்து பெறுதல் போல அவனை அவ்வுயிர் பெற முயன்றால், அவனும் அவ்வகையினால் எல்லாம் அவற்றால் எய்துதற்கு அரியனாய், அவற்றிற்கு மிகத் தொலைவில் உள்ளவனாகியே நிற்பான். பின்பு ஒரு காலத்தில் அவனே விருப்பத்தை உடையவனாகிப் புறத்தே விளங்கும் இல்லக விளக்குப்போலும் (தி.4 ப.11 பா.8) தன்மையுடன் அகத்தில் தானே நல்லக விளக்காய் நீங்காது நிற்றலால், அவ்விடத்துள்ள அறியாமையாகிய இருள் அற்றொழியா நின்றது.*

***குறிப்புரை :-*** *என இதனையும், இனி வருகின்ற மந்திரங்களையும் திருவருள் வாய்க்கப் பெற்றார் அதனை உணர்ந்து மகிழ்ந்தெடுத்துக் கூறுவனவற்றை வைத்துரைக்க.*

*“நந்தியும்” என்னும் உம்மை இறந்தது தழுவி நிற்றலால்.*

*நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே எனத் தன் முனைப்பு அடங்கித் திருவருளை நாடிச் செயலற்குக் கிடக்கச் சிவம் நல்லக விளக்காய் நெஞ்சுள் தோன்றி, அறியாமை அறிவுஅகற்றி அருள்வன் என்பார் ‘இருளறும் ஆமே’ என்றார்.*

*இதனால், சிவன் அனாதியில் உயிர்கள் பக்குவமின்றி நிற்றலால் அரியனாயினும் பக்குவம் எய்திய காலத்தில் எளியனாய் விளங்கும் அவனது அருள் நிலை போற்றியுரைக்கப்பட்டது. அவ்வருட் பதிவானே முன்னை மந்திரத்துக் கூறிய அறமும், தவமும் தானே நிகழும் என்பது கருத்து.*

***1771. தெளிவுரை :-*** *தத்துவரூப, தத்துவதரிசன, தத்துவ சுத்திகளையும், சிவரூப, சிவதரிசன, சிவயோக, சிவபோகங்களையும் உணர்த்துதல் நுதலிற்று.*

*நின்னைக் குறித்து ஆராயின், நின்னுள்ளே எல்லா உலகங்களும் காணப்படும். வெறுக்கத்தக்க ஆணவ இருளால் விளையும் அறியாமை நீங்கின், உயிருக்கு உயிராய்ப் பரசிவம் கலந்திருத்தல் காணப்பெறும்; பரசிவத்திடத்தில்*

**1771.** குறிப்பினின் உள்ளே குவலயம் தோன்றும்
வெறுப்பிருள் நீங்கில் விகிர்தனும் நிற்கும்
செறிப்புறு சிந்தையைச் சிக்கென நாடில்
அறிப்புறு காட்சி அமரரும் ஆமே. **3**

---

*செறிந்த சிந்தையை ஆராயின், ஞானமே உருவான காட்சி உண்டாம்; அதனால் என்றும் சாவா மூவாப் பெருவாழ்வாகிய வீடுபேறு உண்டாம் என்றவாறு.*

*'நானார் என் உள்ளமார் ஞானங்களார்' என்று முதற்கண் ஆராயத் தொடங்கின், தத்துவங்களும் தத்துவ சுத்தியும் சிவதரிசனமும் சிவயோக சிவபோகங்களும் உடன் உண்டாம் என்பது கருத்து.*

*குறிப்பினின் என்பதற்கு நின்னைப்பற்றி நீயே ஆராயின் எனச் செயப்படு பொருளும், வினைமுதலும் வருவிக்க. இது ஆத்மரூப ஆத்மதரிசனம் கூறியதாம்.*

*குவலயம் - உலகம். மாயா காரியமான தத்துவங்கள் என்றவாறு. காரியமாய உலகம் அதன் காரணமான தத்துவங்களைக் காட்டி நின்றது. இது தத்துவரூபம். உலகம் அதனைக் காண்டலாகிய தத்துவதரிசனம், அதனை உள்ள வண்ணம் அறிந்தவழி உளதாய தத்துவசுத்தி அனைத்தும் கூறியது.*

*இருள் அறியாமையும் அதன் காரணமான ஆணவமும், காரிய காரண ஒற்றுமைபற்றி ஆணவ இருள் எனலுமாம். 'ஆணவ வல்லிருளைச் சுட்டு' என்பதும் காண்க. இது ஆன்ம சிற்சத்தியை மறைத்து நிற்பதால் வெறுக்கப்படுவது ஆகலின் 'வெறுப்பு இருள்' என்றார். நீங்கில் என்பதால் தத்துவ சுத்தி அறிவிக்கப்பட்டதாம்.*

*குறிப்புரை :- விகிர்தன் - சாமர்த்தியம் உடையவன்; விளக்கம் உடையவன் எனலுமாம். விகிர்தன் நிற்கும் என்றார். சிவம் என்றும் ஆன்மாவை விட்டுப் பிரியாது உடனாய் ஒன்றாய் நிற்பது ஆகலின், நிற்கும் என்றது படலம். நீங்கிய வழி கண்ணொளி வெளிப்படுதல்போலத் தடை நீங்கிய வழி தலைவன் மணிக்கண் ஒளிபோல விளங்கித் தோன்றுவன் என்பது உணர்த்த. இது சிவரூபமும் சிவதரிசனமும் கூறியது.*

*செறிப்பு - இடைவிடாதுறையுந்தன்மை. செறிப்பு உறு சிந்தை - இடைவிடாது சிவன்பால் உறையும் சிந்தை.*

*சிக்கென நாடில் - இறுகப் பற்றி ஆராய்ந்தால்; அதாவது, ஆய்வுக் காலத்துப் பொறிகளின் வாதனையாலும் ஆணவ வாதனையாலும் சிவசிந்தனையைக் கைவிட நேரும் அன்றே; அங்ஙனம் நழுவி விடாதபடி இறுகப் பற்றி ஆராயின் இது சிவயோகம் கூறியது.*

*1772. தெளிவுரை :- எங்கள் இறைவனாகிய சிவன் எம்மை விட்டு ஒரு போதும் நீங்கியதில்லை. அதனை அநுபவமாக உணர்ந்த அநுபூதி மான்களது*

**1772.** தேர்ந்தறி யாமையின் சென்றன காலங்கள்
பேர்ந்தறி யான்எங்கள் பிஞ்ஞகன் எம்மிறை
ஆர்ந்தறி வார்அறி வேதுணை யாம்எனச்
சார்ந்தறி வான்பெருந் தன்மைவல் லானே. **4**

---

*அறிவுரையை 'இதுவே நமக்குத் துணையாவது' என்று பற்றி உணரவல்லவன் எவனோ அவனே பெரும்பொருள் தன்மையைத் தான் பெற வல்லவனாவன். அதனை முன்பே உணர்ந்து ஒழுகாமையால் பல காலங்கள் வீணாகவே கழிந்தன.*

***குறிப்புரை :-*** *என்றாலும் இப்பொழுதாயினும் அவ்வாறு உணர்ந்து ஒழுகத் திருவருள் கிடைத்தது தவப் பயன் என்பது குறிப்பெச்சம்.*

*பிஞ்ஞகம் - தலைக்கோலம். பிறை, பாம்பு, கங்கை, கொன்றை மாலை முதலிய பலவகைப்பட்ட தலைக்கோலமும், சடை முடியும் சிவபிரானுக் கல்லது பிறர்க்கு இன்மையால் சிவபிரான் 'பிஞ்ஞகன்' எனப்படுகின்றான். அவனே இறைவனாதலைக் குறித்தற்கு, "பிஞ்ஞகன் எம்மிறை" என்றார். முதல் அடியை ஈற்றில் வைத்துரைக்க.*

*இதனால், 'சிவனை அவனது அருளைத் துணையாகப் பற்றியே அறிய இயலும்' என்பதும், 'அதனை அவ்வாறு அவனை அடைந்தோரது அருளுரையே உணர்த்தும்' என்பதும், 'அவ்வருளுரையைத் தெளிதற்கும் சிவனது அருள் வேண்டும்' என்பதும் கூறப்பட்டன. அடைந்தோரது அருளுரைகள் அங்ஙனம் உணர்த்துதலை,*

> *'அவன் அருளே கண்ணாகக் காணி னல்லால்*
> *இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்*
> *இவன் இறைவன் என்றெழுதி காட்டொணாதே'.*
>
> *- தி.6 ப.97 பா.9*

*என்பது முதலியவற்றான் உணர்க.*

***1773. தெளிவுரை :-*** *முன் மந்திரத்திற் கூறியபடி ஆர்ந்தறிந்தார் அறிவே துணையாகச் சார்ந்தறிந்தமையால் உள்ளமேயன்றி உடம்பும் உருகுமாறு ஞானமே வடிவாய் நிற்கும். சிவமுதற்பொருளை உணர்ந்தபின் அம் முதல்வன் தேன்போல இனியனாய்த் தெவிட்டாது நின்றான். இந் நிலையில் சஞ்சித வினைகள் கெட்டொழிதலன்றி அவற்றிற்கு வேறு வழியில்லை. அங்ஙனம் அவை கெட்ட பின்பு யான் அவற்றை நுகர்வோனாதலும், சிவன் அவற்றை எனக்குக் கூட்டி நுகர்விப்போனாதலும் ஆகிய நிலைகள் எங்ஙனம் உளவாகும்! உளவாதல் இல்லை.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடிமுதலாகத் தொடங்கி யுரைக்க. தம்மியல்பால் தாம் அழியற்பாலனவாதல் பற்றி, "தானே அழியும்" என்றார். எனினும், 'அவை*

**1773.** **தானே அழியும் வினைகள் அழிந்தபின்**
**நானே அறிகிலன் நந்தி யறியுங்கொல்**
**ஊனே யுருகி உணர்வை உணர்ந்தபின்**
**தேனே அனையன்நம் தேவர் பிரானே.** **5**

---

*பயனிலவாயினமை பற்றி முதல்வன் அழித்தொழிப்பன்' என்பதே கருத்து. பக்குவம் எய்திய உயிரை அவைகளால் முன்னர்ச் செய்யப்பட்டுக் குவிந்து கிடந்த சஞ்சித வினைகள் சென்ற பற்றமாட்டா' என்பதைத் திருவள்ளுவரும்,*

*சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்*
*சார்தரா சார்தரு நோய்.* *- திருக்குறள், 359*

*என அருளிச் செய்தார். உணர்வுடையதனை, உணர்வு என்றே உபசரித்தார். அது தேவர் பிரானேயாயினும், 'மெய்ப்பொருளது இயல்பு அது' என்றற்கு வேறு போலக் கூறினார்.*

*"தானே" எனறது பன்மையொருமை மயக்கம். பக்குவம் வந்த உயிர்களது சஞ்சித வினைகள் வாளா அழிக்கப்படுதல். துறவு பூண்டோர் சந்ததியும் இலராயின் அவர், முன்பு எழுதித் தந்த கடன் பத்திரம் அழிக்கப்படுதல் போல்வது என்க.*

*"யானேதும் பிறப்பஞ்சேன்; இறப்பதனுக் கென்கடவேன்!".*
*- தி. 8 திருச்சதகம் - 12*

*என்றதும் இந்நிலையில் நின்றேயாம்.*

*எல்லைஇல் பிறவி நல்கும் இருவினை, எரிசேர் வித்தின்*
*ஒல்லையின் அகலும்.* *- சிவப்பிரகாசம், 89*

*என்றது காண்க.*

*"நானே" என்னும் ஏகாரம், 'இன்றியமையாது அறியற்பாலன் யானே; பிறரல்லர்' என்பது உணர்த்தி நின்றது. 'அங்ஙனமாக, நந்தி அறியுங்கொல்' என்க. "கொல்", இங்கு எதிர்மறைப் பொருட்டாய் நின்றது. ஊக்குவித்தலும், உண்டலும் அறிந்தன்றி யாகாமையின் அவற்றை அறிதலின் மேல்வைத்துக் கூறினார்.*

*இதனால், திருவருட் பேற்றால் இன்பமாகிய பயன் விளைந்தபின் மீட்டும் துன்பம் இன்றாதல் கூறப்பட்டது. அதனால், இவ்வின்பம் நிலையான இன்பமாதல் விளங்கிற்று.*

*1774. தெளிவுரை :- என்னுள் இருக்கின்ற இறைவனை அறிய வேண்டியவன் யானே யன்றோ! (அந்நிலை இன்று யான் கைவரப் பெற்றேன்). வானுலகம் ஒன்றையே அறிந்து நிற்கும் வானவர் அந்த அறிவால் தம்முள் இருக்கும் இறைவனை அறியாது மயங்குவாராயினர். ஒவ்வொருவனும் தனது உடம்பின்*

**1774.** நானறிந் தன்றே யிருக்கின்ற தீசனை
வானறிந் தார்அறி யாது மயங்கினர்
ஊனறிந் துள்ளே உயிர்க்கின்ற ஒண்சுடர்
தானறி யான்பின்னை யார்அறி வாரே. **6**

**1775.** அருள்எங்கு மான அளவை அறியார்
அருளை நுகரமு தானதுந் தேரார்
அருள்ஐங் கருமத் ததிசூக்க முன்னார்
அருள்எங்கும் கண்ணான தார்அறி வாரே. **7**

---

*இயல்பையும், அந்த உடம்பினுள் உள்ள உயிரையும், அந்த உயிருக்குள் உயிராய் நின்று அதற்கு அறிவைத் தருகின்ற உள்ளொளியாகிய இறைவனையும் அறிந்து அவ்வாற்றால் பயன்பெற வேண்டியவன் அவனேயாய் இருக்க அவனவனும் அதனைச் செய்யாது கிடப்பானாயின் அவனுக்காக மேற்கூறியவைகளை யார் அறிவார்!*

*குறிப்புரை :- 'திருவருட் பேறில்லாமையால் அவரெல்லாம் அங்ஙனம் மயங்கிக் கிடப்பர்' என்பது கருத்து. ஈசன் - அனைத்தையும் தம் உடைமையாகக் கொண்டவன்.*

*'ஈசனை அறிந்து இருக்கின்றது நானன்றே' என மாற்றியுரைக்க. இருக்கின்றது - 'இருக்க வேண்டுவது' இது தொழிற்பெயராய், அத்தொழிலுடையதனை உணர்த்திற்று. ஊன் - உடம்பு; ஆகுபெயர். அதனைக் கூறவே, அதனுள் நின்ற உயிரும் கொள்ளப்பட்டது.*

*இதனால், திருவருட் பேறில்லாதாரது நிலைமை கூறப்பட்டது.*

*1775. தெளிவுரை :- திருவருளின் பெருவியாபகம், அஃது அதனைப் பெற்றார்க்குப் பேரின்பம் விளைத்தல், காரணக் கடவுளது தொழில்கள் எல்லாவற்றிற்கும் அதுவே முதலாதல், அனைத்தையும் அது முற்ற அறிதல் ஆகியவற்றை எல்லாம் அதனைப் பெற்றோர் அறிதலன்றிப் பெறாதார் சிறிதும் அறியமாட்டார்.*

*குறிப்புரை :- 'பெற்றார், பெறாதார்' என்பன ஆற்றலால் கொள்ளக் கிடந்தன. 'இவ்வுண்மையை யாமும் இப்பொழுதுதான் அறிந்தோம்' என்பது குறிப்பு. 'நுகர' என்பதன் இறுதி அகரம் தொகுத்தலாயிற்று. அமுதானதிற்கு, 'அஃது' என்னும் எழுவாய் வருவிக்க. அடிநிலையை, "அதிசூக்கம்" என்றார்.*

*இதனால், திருவருட் பேற்றின் பின் அதனது இயல்பு விளங்குமாறெல்லாம் கூறப்பட்டன.*

*1776. தெளிவுரை :- உயிர் அறிவுடையதாயினும் அவ்வறிவு ஆணவத்தால்*

**1776.** அறிவில் அணுக அறிவது நல்கிப்
பொறிவழி ஆசை புகுத்திப் புணர்ந்திட்டு
அறிவது வாக்கி அடியருள் நல்கும்
செறிவோடு நின்றார் சிவமாயி னாரே. **8**

**1777.** அருளின் பிறந்திட்டு அருளின் வளர்ந்திட்டு
அருளின் அழிந்துஇளைப் பாறி மறைந்திட்டு
அருளான அவ்வந்தத்து ஆரமு தூட்டி
அருளால் என்நந்தி அகம்புகுந் தானே. **9**

அருளால் அமுதப் பெருங்கடல் ஆட்டி
அருளால் அடிபுனைந் தார்வமும் தந்திட்டு
அருளான ஆனந்தத் தாரமு தூட்டி
அருளால்என் நந்தி அகம்புகுந் தானே.

---

*தடுக்கப்பட்டமையின் அத்தடையை நீங்கி அஃது அறிவை அடையும்படி தொடுத்துப் பின்பு அவ்வறிவு பொறிகளின் வழிச் சென்று புலன்களை விரும்பிப் பாச அறிவாகும்படி செய்து, அவ்விடத்து அவ்வறிவு தான் விரும்பும் புலன்களை நுகர்தற்கு உடனாய் நின்று, பின்பு பாச அறிவாய் நின்ற அதனைப் பதியறிவாகச் செய்து, அவ்வாற்றால் பதிநிலையை எய்திய அடியார் குழாத்துள் இருக்க அருளுவதாகிய திருவருளை எய்தி அதுவே பற்றாக நின்றவரே சிவமாம் தன்மைப் பெருவாழ்வை எய்தினார்.*

*குறிப்புரை :- 'பிறரெல்லாம் யாதும் இல்லா ஏழையராய் அலமருகின்றார்' என்றபடி. 'திருவருளே கேவல நிலையிற் கிடந்த ஆன்மாக்களைச் சகல நிலையிற் கொணர்ந்து, பின்பு சுத்த நிலையில் சேர்ப்பது' என அதனது உதவியை வகுத்தருளிச் செய்யுமுகத்தான் அதனை உணரும் உணர்விலார் பயன் பெறாராதலை வலியுறுத்தியவாறு.*

*'அறிவில் அறிவு அணுக நல்கி' என்க. இரண்டிடத்திலும், "அறிவது" என்னும் அது, பகுதிப் பொருள் விகுதி. செறிவு - எப்பொருளிலும் நிறைதல். அஃது ஆகுபெயராய் அதனையுடைய திருவருளைக் குறித்தது.*

*1777. தெளிவுரை :- யான் எம்பெருமானது திருவருளாற்றான் பிறந்தேன்; வளர்ந்தேன்; இறந்தேன். உலகம் ஒடுங்கிக் கிடந்த பொழுது யான் ஓய்வாக இருந்தேன்; மீட்டும் உலகம் தோன்றிய பொழுதும் பிறந்து வாழவே விரும்பினேன். இவ்வாறு முடிவின்றிச் சுழன்று வந்த யான் அவனது அருளே வடிவாகி நின்ற அந்த இறுதிக்காலத்தில் அப்பெருமான் எனக்கு எல்லையில் இன்பத்தை வழங்கி என் உள்ளத்தில் நீங்காது நின்றான். எல்லாம் அவனது அருளாலேதான் நிகழ்ந்தன.*

1778. பாசத்தில் இட்டது அருள் அந்தப் பாசத்தில்
நேசத்தை விட்டது அருள் அந்த நேசத்தின்
கூசற்ற முத்தி அருள் அந்தக் கூட்டத்தின்
நேசத்துத் தோன்றா நிலைஅரு ளாமே. 10

---

***குறிப்புரை :-*** *'எல்லா உயிர்கட்கும் இவ்வாறுதான்; ஆயினும் அவ்வுயிர்கள் இவற்றை 'என்னைப்போல முடிவில்தான் உணரும்' என்பது கருத்து. "அருள்" என யாண்டும் பொதுப்படவே ஓதினாராயினும், 'முதற்றொட்டு' "மறைந்திட்டு" என்பது காறும் கூறிய அருள் திருகுநிலை அருள் எனவும், 'ஏனைய நேர்நிலை அருள் எனவும் உணர்க. திருகுநிலை அருள் மறக் கருணை, நேர்நிலை அருள் அறக் கருணை. முன்னது 'திரோதான சத்தி' எனப்பட, பின்னதே 'அருட்சத்தி' எனப்படும். 'அருளின்' என்பதைப் பிறவற்றிற்கும் கூட்டுக.*

> *'அருளான ஆனந்தத்து' என்பது பாடம் அன்று.*
>
> *இதன் பின்னர்ப் பதிப்புக்களில் காணப்படும். "அருளால் அமுதப் பெருங்கடல் ஆட்டி" என்னும் பாடல் இடைச்செருகல்.*

***1778. தெளிவுரை :-*** *என்னை எனது இயற்கைப் பாசம் தனது சத்தி கெடுதற் பொருட்டுச் செயற்கைப் பாசத்தில் இட்டுத் துன்புறுத்தியதும் திருவருளே (இது திரோதானகரியாய் நின்ற நிலை) இயற்பாசம் சத்தி கெட்ட பின்னர் யான் அச்செயற்கைப் பாசங்களையே மேலும், மேலும் விரும்பிய விருப்பத்தை விடச் செய்ததும் திருவருளே. பாசத் தொடர்பினால் மெய்ப்பொருளை அணுகக் கூசிய கூச்சம் நீங்கி அம்மெய்ப்பொருளை அடைந்து, அதனானே துன்பக் கடலினின்றும் கரையேற்றுவித்ததும் திருவருளே, துன்பக் கடலினின்றும் கரையேறிய பொழுது விளைந்த எல்லையில்லாத இன்பத்தில் அவ்வின்பம் ஒன்றுமே தோன்றத்தான் தோன்றாது மறைந்ததும் திருவருளே.*

***குறிப்புரை :-*** *'அதற்கு யான் செய்யும் கைம்மாறு யாதுளது' என்பது குறிப்பெச்சம். அதனைப் புலப்படுத்தற்கே மேற்போந்தவற்றை மீள அனுவதித்தார். வருவித்துரைத்தன இசையெச்சங்கள். 'விடுவித்தது' என்பதில் விவ்விகுதி தொகுத்தலாயிற்று. கூசு, முதனிலைத் தொழிற்பெயர். "முத்தி" என்பதன்பின், 'கூட்டுவித்தது' என்பது சொல்லெச்சமாய் எஞ்சிநின்றது. நேசம் - அன்பு. அன்பினால் விளைவதாகிய இன்பத்தை 'அன்பு' என உபசரித்துக் கூறினார். 'நேசத்துக் கண்' என ஏழாவது விரிக்க. இன்பத்தில் சேர்த்த அருளேயாயினும் அது புலப்படினும் அநுபவம் நிகழாமைபற்றி அது தோன்றாது மறைந்து நின்றது என்க. அருள்நிலை துரியமேயாக, ஆனந்த நிலை துரியாதீதம் ஆதல் அறிக.*

*இதனால், திருவருள் பெற்றார் அத்திருவருளின் நன்றியை உணருமாறு கூறப்பட்டது.*

**1779.** பிறவா நெறிதந்த பேரரு ளாளன்
மறவா அருள்தந்த மாதவன் நந்தி
அறவாழி யந்தணன் ஆதி பராபரன்
உறவாகி வந்தென் உளம்புகுந் தானே. 11

**1780.** அகம்புகுந் தான்அடி யேற்கரு ளாலே
அகம்புகுந் தும்தெரி யான்அரு ளில்லோர்க்கு
அகம்புகுந் தானந்த மாக்கிச் சிவமாய்
அகம்புகுந் தால்நந்தி ஆனந்தி யாமே. 12

---

***1779. தெளிவுரை :–*** *சிவபெருமான் எனக்கு இனிப் பிறவா நெறியை அளித்த பெருங்கருணையை உடையவன். அதன்பின்னும் தன்னை யான் மறவாதிருக்கும் படியும் அருள்புரிந்தான். தவக்கோலத்தைப் பூண்டவன். அறக்கடலாய் அழகிய தட்பத்தையும் உடையவன். தனக்கொரு முதல் இன்றித்தானே எல்லாவற்றிற்கும் முதலானவன். எல்லாவற்றிற்கும் மேலொடு கீழாய் விரிந்தவன் (தி.8 திருவண்டப்பகுதி, 5) அத்தகையோன் தானே எனது உள்ளத்தைத் தகவு செய்து அதனுட் புகுந்தான்.*

***குறிப்புரை :–*** *'எனவே, இப்பயனை விரும்புவோர் யாவரும் அவனையே உணர்தல் வேண்டும்' என்பது குறிப்பு. "நந்தி", என்பதை முதலிற் கூட்டியுரைக்க. மறந்தவழிக் கன்மமும், மாயையும் அற்றம் பார்த்து வந்து அடுத்தல் மறவாதவாறு அருள் செய்வானாயினான்.*

*"மாதவன்" என்பதற்கு, 'மங்கை பங்காளன்' என்று உரைத்தலும் ஆம். 'பெண்ணாகிய பெருமான்' (தி.1 ப.10 பா.1) என்று அருளிச் செய்தது காண்க. 'இஃது அவன் பேரருளாளன் ஆதலைக் குறிக்கும் குறிப்பு' என்பது கருத்து.*

*"இறைவனாவான் அறவாழி அந்தணன்" (திருக்குறள், 8) என்னும் மறை மொழிக்கு இலக்கியமாய் உள்ளவன் என்பதுணர்த்தற்கு அம் மொழியைக் கொண்டு கூறினார். இதன் பொருள் விளக்கம் இதன் உரையிற் காண்க. பரன் - மேலே உள்ளவன்; அபரன் - கீழே உள்ளவன்.*

*இதனால், 'திருவருள்' எனப்படுவது சிவனது அருளே என்பது தெரிந்துணர்த்தப்பட்டது. பிறரது அருளைத் திருவருளாக மயங்கி எய்த்திடாமை இதனது பயன் என்க.*

***1780. தெளிவுரை :–*** *சிவன் உயிர்களது அறிவினுள்ளே அருளை நிறைவித்து, அதனால் இன்பத்தைப் பெருக்கி விளக்கமுற்று நின்றால் இன்பப் பொருளாய் அநுபவப்படுவான். அதனால் அடியேனுக்கு அவன் அங்ஙனம் அருளை வழங்கினமையால் கருவிகளின் வழியாக அன்றி, நேரே தலைப்பட்டுணரும் பொருளாயினான். ஆகவே, அருள் வழங்கப் பெறாதாரது அறிவினுள்ளும்*

**1781.** ஆயும் அறிவோ டறியாத மாமாயை
ஆய கரணம் அடைக்கும்ஐம் பூதங்கள்
ஆய பலஇந் திரிய மவற்றுடன்
ஆய அனைத்துமாம் அவ்வருட் செய்கையே. **13**

---

*இருப்பினும் அவர்கட்கு அவன் அங்ஙனம் உணரும் பொருளாதல் இல்லை.*

***குறிப்புரை :-*** *'அருளில்லார்க்குத் தெரியான்' என்றமையால், 'அருள் பெற்ற எனக்குத் தெரிந்தான்' என்பது பெறப்பட்டது. அதனால் முதற்கண் "புகுந்தான்" என்றதற்கு, 'புகுந்து தெரிந்தான்' என்பது பொருளாயிற்று.*

*'நந்தி அகம்புகுந்து ஆனந்தமாக்கிச் சிவமாய் அகம்புகுந்தால் ஆனந்தியாம்; அதனால் அடியேற்கு அருளால் அகம்புகுந்துஅருளில்லோர்க்கு அகம்புகுந்தும் தெரியான்' எனக் கொண்டு கூட்டியுரைக்க.*

*'சிவம்' என்பதற்குப் பல பொருள் உண்டு. இங்கு அது 'தூய தன்மை' என்னும் பொருட்டாய், 'மறையாது விளங்கி நிற்பது' எனப் பொருள் தந்தது. எல்லா உயிர்களிலும் சிவன் கலந்திருப்பினும் உலகரது அறிவில் அவரவர் துணியும் பொருளாயும், சரியை முதலிய மூன்றில் நின்றார்க்கு உருவம், அருவுருவம், அருவம் என்னும் திருமேனியனாயும், ஞானத்தில் கேள்வி முதலிய மூன்றில் நின்றார்க்கு ஆசிரியர் அறிவுறுத்த சொற்பொருள் அளவாயும் விளங்கி, நிட்டையில் நின்றார்க்கே தான் உண்மையாய் விளங்குவன். உண்மையாய் விளங்கும்பொழுதே இன்பமாய் விளைவான். அதனையே, "நந்தி, அகம்" புகுந்து ஆனந்தம் ஆக்கிச் சிவமாய் அகம் புகுந்தால் ஆனந்தியாம்" என்றார். ஆகவே முன்னர் அகம்புகுதல் தொடக்கமும், பின்னர் அகம் புகுதல் முடிவும் ஆயின புகுதல் புகுவதன்றாயினும் விளங்குதல் புதிதாதல் பற்றி. "புகுந்து" எனவும், "புகுந்தால்" எனவும் கூறினார், ஆனந்தி - இன்ப வடிவினன். 'முன்னை நிலை பெத்தம்' எனவும் 'பின்னை நிலை முத்தி' எனவும் உணர்க.*

*இதனால், திருவருட் பேற்றின் முடிநிலை இயல்பு விளக்கப்பட்டது.*

***1781. தெளிவுரை :-*** *'பெத்த நிலையில் உள்ள உயிர்களிடத்தில் திருவருள் உளராயினும் அது நேர்நிலை யன்று' என மேற்கூறிய இயைபானே, அஃது அத்திருகல் நிலையில் நின்று செய்வனவற்றை இங்கு நின்றும் விரிக்கின்றார்.*

*மாயா காரியங்களைக் கருவியாகக் கொண்டு ஆராய்ந்து அறிந்து வரும் அறிவும், அக்கருவிகளும், அக்கருவிகளின் வழிப்புலன்களை ஆன்ம அறிவை அடையச் செய்கின்ற ஐந்து பூதங்களும் அப்புலன்களை நேராகவும், பிறவற்றின் வழியாகவும் கவர்கின்ற புற, அகப் பொறிகளும் ஆகிய அனைத்தும் திருவருளின் செயலால் ஆவனவேயாம்.*

***குறிப்புரை :-*** *"ஆயும் அறிவு" என்றே ஓதினராயினும் 'அறிவு ஆராயும்*

**1782.** அருளே சகலமும் ஆய பௌதிகம்
அருளே சராசரம் ஆய மலமே
இருளே வெளியே எனும்எங்கும் ஈசன்
அருளே சகளத்தன் அன்றிஇன் றாமே. **14**

---

*ஆராய்ச்சியும்' என்பதே கருத்து. 'கருவிகள் தலைக்கூடிய வழியும் திருவருள் இன்றி ஆன்ம அறிவு தனித்து நின்று ஒன்றையும் அறியமாட்டாது' என்பதனைச் சிவஞானபோத ஐந்தாம் சூத்திரத்தால் அறிக. அறிவு - ஞான வடிவாகிய ஆன்மா. ஆயும் அறிவு - நானார் என் உள்ளமார் ஞானங்களார் என ஆராயும் ஆன்மா. **மாயை - இது நித்தமாயும், அருவாயும், ஒன்றாயும், உலகவித்தாயும், சடமாயும், எங்கும் வியாபியாயும், முதல்வன் வியாபகத்துள் அடங்குதலால் அவனுக்கு ஒரு வைப்பு சத்தியாயும், தனுகரணாதிகளால் விரிதலால் மலமாயும் உயிர்களை மயக்குவதாயும் உள்ளது**. 'கருவிகள் சடம்' என்றற்கு அதனை அவற்றது முதல்மேல் வைத்து "அறியாத மாமாயை" என்றார். இதனுள் 'மா' என்னும் அடை பிறிதின் இயைபு நீக்காது பொதுவில் இயைபின்மை மாத்திரை நீக்கி, மாயையின் வியாபகத்தை உணர்த்தி நின்றது. ஞானேந்திரிய விடயங்கள் பூதங்களின் குணமும், கன்மேந்திரிய விடயங்கள் அவற்றின் செயலும் ஆதல் பற்றி "அடைக்கும் ஐம்பூதங்கள்" என்றும், 'இருவகை இந்திரியங்களும்' என்றற்குப் 'பல இந்திரியம்' என்றும் கூறினார். 'அனைத்தும் அவ்வருட் செய்கையே ஆம்' என மாற்றியுரைக்க. அவ்வருள் - மேற்கூறிய திருவருள். இதனால், திருவருள் திரோதானகாரியாய் நின்றே அனைத்துலகையும் ஆக்கும் முறைமை கூறப்பட்டது.*

*1782. **தெளிவுரை :-** ஆன்மாக்கள் சகல நிலையை எய்துதற்குக் காரணமான பூதகாரியமாகிய சடப்பொருள்களும், சரமும் அரசமுமாய் உள்ள உயிர் வகைகளும் ஆகிய எல்லாம் திருவருளாலே ஆவனதாம். சிவனும் உயிர்களின் பொருட்டுத் திருமேனி கொள்ளுங்கால் திருவருளால் தான் அவற்றை உடையவன் ஆவான். இன்னும் அவன் ஆன்மாக்களுக்கு மயக்க உணர்வை உண்டாக்குதலும், பின்பு அதனை நீக்கி மெய்யுணர்வைத் தருதலும் திருவருளாலேதான். ஆகவே, திருவருள் இல்லையேல் ஒன்றும் இல்லையாம்.*

***குறிப்புரை :-** 'அங்ஙனம் ஆனபொழுது சிவனை வழிபட்டுப் பயன் பெறுதல் என்பது திருவருள் இன்றி எங்ஙனம் இயலும்' என்பது குறிப்பெச்சம். இக்குறிப்புப் பொருளை உணர்த்துதற் பொருட்டே இம்மந்திரத்திற் போந்த அனைத்தையும் அனுவதித்துக் கூறினார். இருள் - அஞ்ஞானம்; அதன் காரணம் மலம். வெளி - ஒளி; மெய்ஞ்ஞானம். ஈசன், எங்கும் மலமே, இருளே, வெளியே எனும் என மாற்றி, "சகளத்தன்" என்பதன் பின்னர்க் கூட்டியுரைக்க. இத்தொடரில் உள்ள ஏகாரங்கள் எண்ணிடைச் சொல். எனும் - என நிற்கும். சகளம் - உருவத் திருமேனி. "இன்று" என்னும் பயனிலைக்கு 'ஒன்றும்' என்னும் எழுவாய் வருவித்துக் கொள்க.*

**1783.** சிவமொடு சத்தி திகழ்நாதம் விந்து
தவமான ஐம்முகன் ஈசன் அரனும்
பவமுறு மாலும் பதுமத்தோன் ஈறா
நவமவை யாகி நடிப்பவன் தானே. **15**

---

*முதல் அடியிலும், 'பவுதிகமாய சகலமும் அருளே' என மாற்றிக் கொள்க. சகலத்திற்குக் காரணமாவனவற்றை, ''சகலம்'' என்றார். சகல நிலையில் வலுப்பெற்று நிற்பன பூதகாரியங்களேயாதலின் அவற்றையே சிறந்தெடுத்துக் கூறினார். 'சகளத்தன்' என்றது அந்நிலைமையை. நிட்களம், நிட்கள சகளம் ஆகியவையும் இங்கும் பொதுப்பட, "சகளம்" எனப்பட்டன.*

*இதனால் திருவருள் இன்றி ஒன்றும் இயலாமை வலியுறுத்தப்பட்டது.*

***1783. தெளிவுரை :-** நவந்தரு பேதமாகி நாதனே நடப்பனென்ற உண்மையை உணர்த்துதல் நுதலிற்று.*

*சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேச்சுரன், உருத்திரன், திருமால், பிரமன் என்ற ஒன்பது பேதமாகி இறைவன் ஒருவனே நடிப்பன் என்றவாறு.*

*இறைவன் ஒருவனே திருவருளால் நவந்தரு பேதமாகி நடிப்பன் என்பது கருத்து.*

***குறிப்புரை :-** சிற்சத்தியோடு பிரிப்பின்றி நிற்கும் சிவன் ஆன்மாக்களின் மலநோயைத் தீர்த்தற் பொருட்டுச் சுத்த மாயையில் தொழில் செய்யத் திருவுளங் கொண்ட அவதரம் சிவம். இது உயிர்களின் துன்பத்தை நீக்க உன்னிய சந்தர்ப்ப மாதலின் பரநாதம் எனவும்படும். அங்ஙனம் திருவுளங் கொள்ளும் பொழுது எங்ஙனம் தொழில் செய்ய வேண்டுமென்று எண்ணுகிற அவதரம் சத்தி. சத்தியாவது அடங்கி நிற்கும் ஆற்றல். சிவத்தினிடம் இந்நிலையில் ஒரு குறிப்பு நிகழும். அதனைப் பரவிந்து என்பர்.*

*அதன்பின், திருவுள்ளம் பற்றியவாறு செய்தற்கு முதற் காரணமாய்த் தன்னுள் அடங்கியிருந்த சுத்தமாயையோடு கூடிய அவதரம் நாதம்.*

*சுத்தமாயையோடு கூடிச் செய்ய வேண்டியனவற்றைச் செய்ய எண்ணிய நிலை விந்து. இது நாதவிந்துக்கள் சுத்த மாயையிற் கூடிய நிலையாயினமையின் அபரநாதம் அபரவிந்து எனவும் படும். இவற்றைச் சிவம், சத்தி எனக் கூறுதலும் உண்டு. இலயசிவம் இலயசத்தி எனப்படுவனவும் இவைகளே ஆம்.*

*பின்பு இன்னின்னவாறு செய்யவேண்டும் என்று திருவுளம் பற்றிய நிலை சதாசிவம்; சத்தியோடு கூடிய சிவம் சதாசிவம்; எண்ணும் முதன்மை சிவத்தையும் எண்ணுதற்குரிய ஆற்றல் சத்தியையும் குறித்தலின் சதாசிவம் எனப்படும்.*

**1784.** அருட்கண் ணிலாதார்க்கு அரும்பொருள் தோன்றா
அருட்கண் உளோர்க்கெதிர் தோன்றும் அரனே
இருட்கண்ணி னோர்க்கிங் கிரவியும் தோன்றா
தெருட்கண்ணி னோர்க்கெங்கும் சீரொளி யாமே. **16**

---

*எண்ணியவாறு செய்யும்போது அவரவர் கன்ம பலத்தை அவரவர் அனுபவிக்கச் செய்யும் முறையில் பரிபாகப்படாத கன்ம பலங்களையும் பரிபாகப்பட்டு அனுபவத்திற்கு வரும் கன்ம பலங்களில் உள்ள குண தோடங்களையும் மறைக்கும் நிலை மகேசுரமாம். மகத் ஐசுவரியத்தையுடைய நிலை மகேசுரம். உயிர்கள் அனுபவிக்க வேண்டிய கன்மங்களைக் கூட்டியும், அனுபவிக்க வேண்டாத ஐசுவரியங்களை மறைத்தும் வைத்தலின் மகேசுவரம் எனப்பட்டது.*

*அங்ஙனம் உயிர்கள் கன்ம பலங்களை நுகருங்கால் இளைப்பு ஒழித்தற் பொருட்டும், வேறு உலகங்களில் தோன்றி இன்பத் துன்பங்களை எய்துதற் பொருட்டும், இவ்வுலகத்திலேயே வேறு உடலின் வாயிலாக அவைகளை நுகர்தற் பொருட்டும் சங்காரம் செய்யும் நிலை உருத்திரன்.*

*நுகர்ச்சிக்காக உடலொடு உயிரை நிலைக்கச் செய்கின்ற நிலை விஷ்ணு.*

*நுகர்ச்சிக்குரிய உடல், கருவி, உலகம், பொருள் முதலியவற்றைத் தோற்றுவிக்கும் நிலை பிரமன்.*

*இவ்வொன்பதில் சிவம், சத்தி, நாதம், விந்து நான்கும் இறைவனது அருவத் திருமேனியாம். சதாசிவம் அருவுருவத் திருமேனியாம். பின் நான்கும் உருவாம் என்க.*

*இதில் நடிப்பவன் தானே என்பதால், நடிப்பவன் இவ்வொன்பது பேதங்களடங்காது வேறானவனாகக் கருத நிற்றலின் அது பரமாகிய சிவபேதமாம். அதனொடு கூட்டிப் பத்துப் பேதமாம் என்க. இதனை 'மேவும் பரசிவம், மெய்ச்சத்தி நாதமும்' என்னும் திருமந்திரத்தானும், 'தொலையா இவை முற்றுமாய் அல்லது ஒன்றே' என்னும் திருமந்திரத்தானும் உணர்க.*

***1784. தெளிவுரை :-** திருவருளாகிய கண் வாய்க்கப்பெறாதார்க்கு சிவமாகிய நுண்பொருளின் இருப்புத் தோன்றாது. உலகமாகிய பருப்பொருள்களின் விசித்திரங்களே தோன்றும். திருவருளாகிய கண் வாய்க்கப் பெற்றோர்க்கு, சிவனது இருப்பு மட்டுமன்றி அவனேயும் புலப்பட்டுத் தோன்றுவான். இவை எவைபோலும் எனின், ஒளியில்லாத கண்ணை உடையவர்க்குப் பகலவனது ஒளி தானும் தோன்றாது இருள் மட்டுமே தோன்றுதலும், ஒளியுடைய கண்ணுடையார்க்கு அவனது ஒளிப்பரப்பேயன்றி அவனேயும் தோன்றுதல் போல்வனவாம்.*

**1785.** தானே படைத்திடும் தானே அளித்திடும்
தானே துடைத்திடும் தானே மறைத்திடும்
தானே இவைசெய்து தான்முத்தி தந்திடும்
தானே வியாபித் தலைவனு மாமே. 17

**1786.** தலையான நான்கும் தனதரு வாகும்
அலையா அருவுரு வாகும் சதாசிவம்
நிலையான கீழ்நான்கும் நீடுரு வாகும்
தொலையா இவைமுற்று மாய்அல்ல தொன்றே. 18

---

***குறிப்புரை :-*** *இஃது எடுத்துக்காட்டுவமை. 'இருப்புத் தானும் அறியவாராது' என்றற்கு, "அரும் பொருள்" என்றார். சிவனது இருப்பும், இரவியினது ஒளியும் அவை பற்றி நிற்கும் பொருள்களின் பன்மை பற்றிப் பன்மையாக ஓதப்பட்டன. அதனானே எண்பொருள், இருள் இவை மட்டுமே தோன்றுதல் பெறப்பட்டது. இருட்கண் - இருளை மட்டுமே உணரும் கண். "இரவியும்" என்னும் உம்மை இழிவு சிறப்பாகலின், "இரவி" என்றது ஆகுபெயராய் அதன் ஒளியைக் குறித்தது. தெருள் - ஒளி. எங்கும் உள்ள ஒளி முழுதும் தோன்றுதலால் அதனானே அவ்வொளிக்கு முதலாகிய இரவியும் தோன்றுதல் பெறப்பட்டது.*

*இதனால், அருளில்லார்க்கு சிவம் தோன்றாது உலகமே தோன்றுதல் உவமையில் வைத்து விளக்கப்பட்டது.*

***1785. தெளிவுரை :-*** *சிவபெருமானே எங்கணும் வியாபகனாய், ஐந்தொழிலையும் செய்யும் முதல்வனாயினும் அவன் அத்தன்மையனாய் நிற்றற்குக் காரணமாயிருப்பது அவன் அருளாயும், எல்லையின்றி விரிவதாயும், அனைத்தும் வல்லதாயும் அவனிடத்து உள்ள ஆற்றலேயாம்.*

***குறிப்புரை :-*** *இங்கு, "தான்" எனப் பன்முறையானும் கூறியது இங்கு அதிகாரப்பட்டுள்ள அருளையேயாம். வியாபித்தலைவன் - வியாபியாய தலைவன். படைத்தல் முதல் வியாபித்தல், தலைவனாதல் ஈறாக உள்ள அவை அனைத்திற்கும் ஏதுவாய் நிற்பதனை அவையாகவே உபசரித்துக் கூறினார். இதுவும் சொற்பொருட் பின் வருநிலையணி.*

*இதனால் 'திருவருளாவது' இங்குக் கூறிய அனைத்துத் தன்மைகளையும் உடைய சத்தியே, என்பது கூறப்பட்டது. "அருள் உண்டாம் ஈசற்கு; அது சத்தி; அன்றே" என்பது சிவஞானபோதமும் (சூ.5 அதி.2) "அருளது சத்தியாகும் அரன்றனக்கு" என்பது சிவஞான சித்தியும் சூ.5.9 ஆகும்.*

***1786. தெளிவுரை :-*** *நவந்தரு பேதங்களும் அருவம் முதல் மூன்றுமாம் என*

**1787.** ஒன்றது வாலே உலப்பிலி தான்ஆகி
நின்றது தன்போல் உயிர்க்குயி ராய்நிலை
துன்றி அவைஅல்ல தாகும் துணையென்ன
நின்றது தான்விளையாட்டு என்னுள் நேயமே. **19**

---

*உணர்த்துதல் நுதலிற்று. சிறந்தனவாகிய சிவம், சத்தி, நாதம், விந்து என்னும் நான்கும் சிவத்திற்குரிய அருவநிலை ஆம்; ஐயப்படாத அருவுருவம் சதாசிவமாகும்; நிலை பெறுதற்கு உரியவான மயேச்சுரம் அரன் அரி அயன் என்னும் நான்கும் நீடிய உருவ நிலைகளாம்; அழியாத இவ்வொன்பதுமாயும், இவற்றைக் கடந்து நின்று இவற்றை இயக்குவதாயுமுள்ள பரசிவம் ஒன்றேயாம் என்றவாறு.*

*பரசிவம் நவந்தரு பேதமாயும், அவற்றைக் கடந்தும் நிற்கும் என்பது கருத்து.*

*பத்துப் பேதமாய் நிற்றல் முன்னர் திருமந்திரத்து 'நவமவை யாகி நடிப்பவன் தானே' என்பதன் உரையில் கூறப்பட்டமை காண்க. ஞானாவரண விளக்கத்தினும், ஞான சித்தி ஆகமத்துள் உதகரித்தவாறே 'சிவமொடு சத்தி' எனும் திருமந்திரத்து வருமாற்றானும் உணர்க. ஈண்டு நடிப்பவன் என்னும் பரமாகிய சிவபேதத்தோடு கூட்டிப் பத்தாயும் கூறுவர் என உரைத்தல் காண்க.*

***1787. தெளிவுரை :-** எனது உள்ளத்தில் என் அன்பேயாய் நிற்கின்ற சிவம் தன்போல்வது பிறிதுபொருள் இல்லாது தனி ஓர் அறிவுப் பொருளாய் இருத்தலால் அழிவற்று, என்றும் உள்ளதாகின்றது. அஃது அங்ஙனம் ஒன்றே யாயினும் தன்னைப்போல் அறிவுடையனவாயும், அழிவில்லனவாயும் உள்ள எண்ணற்ற உயிர்க்கும் உள்ளுயிராய் நிற்றலால் பலவாகவும் ஆகின்றது. அங்ஙனம் ஆயினும் அவ்வுயிரின் தன்மையைத் தான் அடையாமல் தான் வேறு பொருளாகவே உள்ளது. இனி, "அதன் விளையாட்டு" எனப்படுவது, அஃது உயிர்களோடு பெத்தம், முத்தி இருநிலையிலும் உடனாய் நின்று, எஞ்ஞான்றும் அவற்றிற்கு அவ்வப்பொழுது ஆனவற்றைச் செய்து உதவுவதேயாகும்.*

***குறிப்புரை :-** "தானே படைத்திடும்" என மேல் வந்த மந்திரத்தில் "வியாபி" என்ற நிலையில் சுத்தி, "சத்தி" என்றே பொதுவாகச் சொல்லப்படும் அது படைத்தல் முதலிய தொழில்களைச் செய்யும் பொழுது ஆரணி, செனனி, இரோதயத்திரி - முதலியனவாகச் சொல்லப்படும். அவற்றுள் "உயிர்க்குயிராய் நிலைதுன்றி" என்றதனால், 'சத்தி' என்னும் பொதுநிலையையும் "துணை" என்ன நின்றது" என்றதனால் ஆரணி முதலாக நிற்கும், சிறப்பு நிலையையும் கூறினார். முதல்வன் செய்யும் தொழில்களை 'விளையாட்டு' எனக் கூறுதற்குப் பொருள் 'ஐங்கலப் பாரம் சுமத்தல் சாத்தனுக்கு விளை யாட்டு' என்பது போல, 'வருத்த மின்றி எளிதில் செய்தல்' என்பதே யன்றி, 'சிறியார் விளையாடும் விளையாட்டுப் போலக் குறிக்கோள் யாதும் இல்லது' என்பதன்று.*

**1788.** நேயத்தே நின்றிடும் நின்மலன் சத்தியோடு
ஆய்அக் குடிலையுள் நாதம் அடைந்திட்டுப்
போய்அக் கலைபல வாகப் புணர்ந்திட்டு
வீயத் தகாவிந்து வாக விளையுமே. **20**

---

*"முதற்பொருள், முதலில் ஒன்றாய் இருந்தது; பின்பு அஃது யான் பலவாக ஆவேனாக எனக் கருதியது" எனவரும் உபநிடதப் பொருளும் திருவருளைப் பற்றியதேயாதலை இங்கு இவற்றால் உணர்த்தியவாறு. இனி முதல்வன் செயலை 'விளையாட்டு' எனச் சில இடங்களில் கூறப்படுதலையும் இங்குக் குறித்தார் என்க.*

*அன்பே சிவமாதல் பற்றி அதனை, "என்னுள் நேயம்" என்றார். 'என்னுள் நேயம்தான் உலப்பிலியாகி நின்றது; உயிர்க்குயிராய் நிலைதுன்றி, அவை யல்லதாகும்' எனவும், 'விளையாட்டுத் துணை என்ன நின்றதுதான்' எனவும் இரு தொடராக இயைத்து முடிக்க. சடமாயும், பலவாயும் உள்ள பொருள்கள் யாவும் அழிவன ஆதலின் அத்தன்மைக்கு முழுதும் வேறுபட்டதென்றற்கு, 'ஒன்று அதுவாலே' என்றார் ஆகலின், அஃது அறிவாய் நிற்றலும், உடன் கொள்ளப்பட்டது. 'அதனாலே' என ஓதற்பாலதனை, "அதுவாலே" என ஓதினார்; 'ஒன்றாய் நிற்கும் அத்தன்மையினாலே' என்க.*

*'முதற்பொருள் இவ்வாறெல்லாம் ஒன்றாயும், உடனாயும் சிறந்து நிற்றற்குக் காரணம் திருவருளாகிய அத்தன்மையினாலே' என்பது உணர்த்தியவாறு.*

*1788. தெளிவுரை :- முழுதும் திருவருளிலே பொருந்தி நிற்கின்ற சுத்த சிவன் அந்தத் திருவருள் காரணமாகச் சத்தியோடு கூடிச் சத்தனாய் நின்று, பின்பு சுத்தமாயையுள் பொருந்தி முதற்கண் நாத தத்துவத்தைத் தோற்றுவித்து, அத்தத்துவம் பற்றுக்கோடாக சூக்குமை முதலிய நால்வகை வாக்குகளையும், அந்த வாக்கு முதலிய அனைத்தையும் தம்முள் அடக்கி நிற்கும் சாந்தியதீதை முதலிய ஐந்து கலைகளையும் தோற்றுவித்துப் பின்பு விந்து தத்துவத்தைத் தோற்றுவித்த பின்னரே உலகம் முழுதும் முறைப்படி தோன்றும்.*

*சத்தி - சிவத்தோடுவேறன்றி நிற்பதாகிய கருணை. குடிலை - மாமாயையாகிற சுத்தமாயை. நாதம் - ஒலி வடிவான தத்துவம். கலை - நிவிருத்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னும் ஐந்துமாம். விந்து - விந்து சத்தி. இது காரியமாக விரியினும் காரணமாய நிலையில் அழிவற்ற பரவிந்து ஆதலின் 'வீயத்தகா விந்துவும்' என்றார். வீயத்தகா - அழியத்தகாத. காரண காரியங்களுக்குள்ள ஒற்றுமை பற்றி குடிலை முதல் மண்ணீறாக விரிவனவற்றை 'விந்துவாக விளையுமே' என்றருளினார்.*

*குறிப்புரை :- 'இங்ஙனமான அனைத்திற்கும் திருவருளே காரணம்' என்பது குறிப்பெச்சம். "நேயம்" என்றது திருவருளை 'சுத்த சிவன்' என்பார் "நின்மலன்" என்றார். அவன் சொரூப சிவன். அவனே உலகத்தை நோக்க விரும்பும்பொழுது*

**1789.** விளையும் பரவிந்து தானே வியாபி
விளையும் தனிமாயை மிக்கமா மாயை
கிளையொன்று தேவர் கிளர்மனு வேதம்
அளவொன் றிலாஅண்ட கோடிக ளாமே. **21**

---

*சத்தியாலே நோக்குவன் ஆதலின், "சத்தியோடு ஆய்" என்றார். "அடைந்திட்டு" என்பதை, "குடிலையுள்" என்றதற்கும் கூட்டுக. "போய்" என்றது "பின்பு" என்றபடி. ஒன்று இரண்டிற்கு வேறுபட்டவற்றை "பல" என்றல் வழக்கு. 'புணர்ந்திட்டு அதன்பின் விந்து ஆக, இதன்பின் யாவையும் முறையாக விளையும்' என்க. தோற்றுவிக்கப்பட்ட பொருள்களிலும் இறைவன் கலந்து நிற்றலால், "அடைந்திட்டு" எனவும் "புணர்ந்திட்டு" எனவும் கூறினார். 'விந்து தத்துவம் காரியமேயாயினும் பிற எல்லாவற்றிற்கு அது விளைதலுக்கு உலகம்' என்னும் வினைமுதல் வருவித்துக்கொள்க. 'பல்வேறு வகைப்பட்ட உலகங்களின் பல்வேறு வகையான தோற்றமும், ஒடுக்கமும் திருவருள் காரணமாகவே நிகழும்; என்றற்கு, உலகத் தோற்ற முறையைச் சிறிது வகுத்துக் கூறினார்.*

*இதனால், திருவருளின் பெருமை கூறப்பட்டது.*

***1789. தெளிவுரை :-** எல்லாக் காரியங்களின் தோற்றத்திற்கும் முதலாய் நிற்கின்ற பரவிந்துவே, பிற எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கி வியாபகமாய் நிற்கும். அது மல கன்மங்களோடு விரவுதல் இன்றித் தூயதாயும் உள்ளது. அதனால் அது 'மகாமாயை' எனவும் படுகின்றது. அஃது அபர முத்தர்களாகிய மந்திர மகேசுரர், அணுசதா சிவர் முதலியோருடைய தனு கரணங்களாகவும், சத்த கோடி மகா மந்திரங்களாகவும், வேத சிவாகமங்களாகவும் மேற்கூறியோருடன் மற்றும் விஞ்ஞான கலர்களும் வாழும் அளவற்ற அண்டங்களாயும் விளைந்து பயன்படும்.*

***குறிப்புரை :-** "பரவிந்து" என்பது, 'காரிய விந்துக்களுக்கு மேலாய் நிற்கும் விந்து' எனப் பொருள் தந்து காரணப் பெயராய்ச் சுத்த மாயையைக் குறித்தது. அதனையே சிவன் தான் நேரே தொழிற்படுத்துதலின் அதன் இயல்பை விரித்தார். 'அதனால் சத்தியது பெருமை விளங்கும்' என்பது பற்றி, சுத்த மாயைக்குக் கீழ் உள்ள அசுத்த மாயையைச் சிவன் தனது ஏவல் வழி நிற்கும் அனந்தேசுரரைக் கொண்டும், பிரகிருதி மாயையை அவரது ஏவல்வழிச் சீகண்ட ருத்திரரைக் கொண்டும் செயற்படுத்துவன்.*

*"தேவர்" என்றது ஏற்புழிக் கோடலால் மேற்கூறியோரைக் குறித்து, ஆகுபெயராய் அவரது தனு கரணங்களை உணர்த்திற்று. சிவாகமமும் வேதம் எனப்படும்.*

*இதனால் சுத்த மாயையினது சிறப்புக் கூறும் முகத்தால் திருவருளது ஆற்றற் பெருமை கூறப்பட்டது.*

## 10. அருளொளி

*முன் அதிகாரத்தில் திருவருளின் இயல்பினை அதனைப் பெற்றார் உணருமாறெல்லாம் கூறிய நாயனார், அதனுள் திருவருள் மறைத்தலைச் செய்து இருளாயும் நிற்றல் கூறப்பட்டமையால் அஃது அதற்குச் செயற்கையேயாக, அதன் இயல்பு ஒளியேயாதலை அச் சிறப்புப் பற்றி இவ்வதிகாரத்தில் வேறெடுத்து ஒன்பது மந்திரங்களால் உணர்த்துகின்றார். அதாவது அருளாகிய ஒளி உயிரினிடம் பரவியபோது, விளையும் அனுபவ வேறுபாடுகளை விதிமுகத்தானும், மறைமுகத்தானும் விளக்குவது இவ்வதிகாரம்.*

**1790.** அருளில் தலைநின் றறிந்தழுந் தாதார்
அருளில் தலைநில்லார் ஐம்பாசம் நீங்கார்
அருளின் பெருமை அறியார் செறியார்
அருளின் பிறந்திட்டு அறிந்தறி வாரே. **1**

---

*1790. **தெளிவுரை :-** திருவருளைப் பெற்று அதனானே அதன் இயல்பை உணர்ந்து அதிலே அழுந்தாதவர்கள் அத்திருவருளோடு இயைந்து ஒழுகும் ஒழுக்கத்தில் நில்லார், அங்ஙனம் நில்லாமையால் அவர் ஐம் பாசங்களினின்றும் நீங்குதலும் இல்லை. பாசங்களின் நீங்காமையால் அவர் திருவருளின் பெருமையை அறிந்து அதனை அடைய முயல மாட்டார். திருவருளைப் பெற்றோர் தமது வினைப்பிறப்பே அருட்பிறப்பாகப் பெற்று, திருவருளின் பெருமையை அறிந்து அதில் அழுந்துதலும் செய்வர்.*

***குறிப்புரை :-** எனவே, திருவருள் ஒளியேயாதல் உடன்பாட்டு முகத்தாலும், எதிர்மறை முகத்தாலும் விளங்கும் என்பதாம்.*

*'அருளின் வேறு பிறப்பாகப் பிறந்திட்டு' என்க. இறைவன் குருவாய் நின்று திருவருளை வழங்கப் பெற்றோர் முன்னைப் பிறப்பை மாற்றி வேறு பிறப்பாய்ப் பிறந்தவர் எனச் சொல்லப்படுதல் பலரும் அறிந்தது முன்னர் "அறிந்து, என்றமையால் பின்னர் "அறிவார்" என்றது அழுந்தியறிதலைக் குறித்தது. ஐம்பாசம் - ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாயி.*

*இதனால், திருவருள் ஒளியேயாதல் எதிர்மறை முகத்தால் வலியுறுத்தப்பட்டது. அருளில் தோய்தலும் அருளாலேயே விளையும்.*

*1791. **தெளிவுரை :-** 'நந்தி' என்னும் பெயரை உடைய சிவன், இனிப் பிறந்த உலகின்கண் வாராது என்றும் ஒரு படித்தாய் இருத்தற்குரிய வழியை எனக்குத் தந்தமையால் பெரியரிற் பெரியன் ஆகின்றான்; அந்நிலையில் அதுவெறும் வறுநிலையாய் இல்லாது உண்ண உண்ணத் தெவிட்டாத இனிக்கின்ற இன்பத்தை வழங்கினமையால் அவன் ஆனந்தமயன் ஆகின்றான். அவன் தனது அளவில்லாத பெருமை காரணமாக அளவற்ற பெயர்களை உடையன். அவற்றுள் எந்தப்*

**1791.** வாரா வழிதந்த மாநந்தி பேர்நந்தி
ஆரா அமுதளித் தானந்தி பேர்நந்தி
பேரா யிரம்உடைப் பெம்மான்பேர் ஒன்றினில்
ஆரா அருட்கடல் ஆடுகென் றானே. 2

**1792.** ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியும்
தேடியும் கண்டேன் சிவன்பெருந்தன்மையைக்

---

*பெயரையேனும் சொல்லி அதன் பொருளை உணரும் முகத்தால் அவனது திருவருளால் விளைகின்ற மேற்கூறிய இன்பக்கடலில் எஞ்ஞான்றும் மூழ்கியிருக்குமாறு எனக்கு அருள்செய்தான்.*

***குறிப்புரை :-*** *'நந்தி' என்னும் பெயரை உடையவனை 'நந்தி' என்னும் பெயராகக் கூறியது ஆகுபெயர். அதனைப் பின்னும் கூறியது சொற்பொருட் பின்வருநிலை. 'தந்தான்; அதனால் மாநந்தி' எனக் கூறற்பாலவற்றை இவ்வாறு கூறியது உடம்பொடு புணர்த்தல். "பேர் நந்தி" என்னும் எழுவாய்கட்கு, "மாநந்தி ஆனந்தி" என்பன பயனிலையாயின.*

*"ஆயிரம்" என்பது அளவின்மை குறித்தது. எல்லாப் பெயரும் அவனது திருவருளின் பெருமையையே உணர்த்தலின் 'எந்தப் பெயரினாலும் அருட்கடலில் ஆடலாம்' என்றார். அப் பெயர்கள் சிவன், சங்கரன், சம்பு, மயற்கரன், மயோபு, உருத்திரன் முதலியன. அவற்றது பொருள்களை அறிந்துகொள்க. "பேர் ஒன்று" என்பது, தலைமை பற்றி, சிவன் - என்பதையே குறித்தது எனவும் உரைப்பர்.*

*பேர் ஒன்று - 'சிவ' என்னும் சூக்கும ஐந்தெழுத்து. இது மலவெழுத்தும் மாயையெழுத்தும் உயிரெழுத்தும் நீங்கிய சுத்த பஞ்சாக்கரம் ஆதலின், சத்தியாகிய அருளும் சிவமாகிய கடலுமாய் ஆடுவாரை ஆடுகின்றேம் என்ற உணர்வையும் போக்கித் தானேயாய் வியாபித்து நிற்கின்றமையின், 'அருட் கடல் ஆடுக என்றான்' என்றதாம்.*

*இதனால், 'திருவருள் இருளாய்த் துன்பத்தைத் தருவதாகாது ஒளியாய், இருளை நீக்கி எல்லையில் இன்பத்தை வழங்குவதே' என்பது தெளிவிக்கப்பட்டது.*

***1792. தெளிவுரை :-*** *திருவருளை நிரம்பப் பெறாத நிலையில் யான் அவனது உண்மை நிலையை எனக்கு இயன்றவகையில் ஆடுதல், பாடுதல் முதலியன செய்து அறிய முயன்றேன். அதன் பயனாக அவனது அருளை நிரம்பப் பெற்றமையால், அவன் என் அறிவால் நோக்காது அவன் அருளால் நோக்கும் முறையை உணர்த்தி, அவ்வாறு நோக்கிய பொழுது அவன் என்னின் வேறாகாது என்னுள்ளே விளங்கினான்.*

கூடிய வாறே குறியாக் குறிதந்தென்
ஊடுநின் றான்அவன் தன்அருள் உற்றே. **3**

**1793.** உற்ற பிறப்பும் உறுமல மானதும்
பற்றிய மாயா படலம் எனப்பண்ணி
அற்றனை நீஎன் றடிவைத்தான் பேர்நந்தி
கற்றன விட்டேன் கழல்பணிந் தேனே. **4**

---

*குறிப்புரை :-* எனவே, 'உயிர் இறைவனைத் தன்னின் வேறாகப் புறத்தே காண முயலும் நிலையெல்லாம் திருவருளை முற்றப் பெறாத நிலை' என்பதும், 'முற்றப் பெற்ற நிலையில் அஃது இறைவனைத் தன்னுள்ளே கண்டு களிக்கும்' என்பதும் விளக்கியவாறு. காண முயன்ற முயற்சியைக் கண்டதாகக் கூறியது. 'அம்மி துணையாக ஆற்றைக் கடந்தான் மூழ்கினான்' என்பது போலக் காரணத்தைக் காரியமாக்கிக் கூறிய, உபசார வழக்கு. முதல் தொடரில் செயப்படு பொருளும் கருவியும் பயனிலைக்குப் பின்னே நின்றன. 'கூடியவாற்றால்' என உருபு விரிக்க. உற்று - உற்றதனால். 'தன் அருளை உற்றதனால் அவன் தந்து நின்றான்' எனக் கூட்டி முடிக்க.

இதனால், திருவருள் முதற்கண் சிற்றொளியாய்த் தோன்றிப் பின் பேரொளியாய்த் திகழ்தல் கூறப்பட்டது.

*1793. தெளிவுரை :-* 'நந்தி' என்னும் பெயரை உடையவனாகிய சிவன், யான் தொன்று தொட்டு என்னைப் பொருந்தி வந்த தனு கரண புவன போகங்களும், அவற்றிற்கு நிமித்தமாய் அநாதியே என்னைப் பற்றி நின்ற ஆணவமும் என்னோடு என்றும் இயற்கையாய் நீங்காது நிற்கும் குணங்களாகாது, ஒரு காலத்தில் விட்டு நீங்கும் குற்றத் தொகுதியே ஆதலை உணரச் செய்து, 'அக்குற்றங்கள் அனைத்தினின்றும் நீங்கி இது பொழுது நீ தூயையாய் நிற்றலையும் பார்' என்று காட்டினான். அதனால் நான் மாயா காரியங்களால் பெற்ற பாச அறிவை நீக்கினேன்; அவனது அருள் வழியிலே நின்றேன்.

*குறிப்புரை :-* 'இங்ஙனம் ஆதலின், திருவருள் இருளாய்க் குற்றங்களின் வீழ்த்துவதாவது, ஒளியாய் அவற்றினின்றும் மீட்பதே என்பது தெளிவாகின்றதன்றோ' என்பது கருத்து. "மாயை" என்பது இங்கு, நீடு நில்லாது விரைய மறைதலைக் குறித்தது. ஒரு பொருட்கு அதனை விட்டு என்றும் நீங்காததே 'அதன் குணம்' என்றும், ஒரு காலத்தில் அதனை விட்டு நீங்குவது 'அதற்குக் குற்றம்' என்றும் சொல்லப்படும். "என" என்பது 'என்று உணர' என்றவாறு.

"என்று அடி வைத்தான், என்பதை, 'அடி வைத்து என்றான்" எனப் பின் முன்னாக மாற்றி வைத்து உரைக்க. அடியைச் சென்னி மேல் வைத்தல் அருளை

**1794.** **விளக்கினை ஏற்றி வெளியை அறிமின்**
**விளக்கினின் முன்னை வேதனை மாறும்**
**விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்**
**விளக்கில் விளங்கும் விளக்காவர் தாமே. 5**

---

*வழங்குதற்கு அடையாளம். திருவடி அருளேயாதலின், அதனைப் பணிதலாவது அதன்வழி நிற்றலேயாம்.*

*உற்ற பிறப்பு - வினைக்கீடாகக் கிடைத்த இப்பிறவி, உறுமலம் - அநாதியே செம்பினிற் களிம்பு போலப் பொருந்திய ஆணவமலம். பற்றிய மாயாப் படலம் - அவ்வாணவத்தைப் போக்குதற்காகக் கூட்டப்பட்ட மாயையும் அதன் காரியமாகிய மாயேயங்களும். மாயை ஆகந்துகமலம் என்பார் பற்றிய மாயா படலம் என்றார். எனப் பண்ணி என்றது மாயாப் படலங்கள் நிலையற்றவை நித்தியமானவை அன்று என உணரச் செய்து, அத்தனையும் என்ற முற்றும்மை விகாரத்தால் தொக்கது.*

*இதனால், திருவருள் ஒளியேயாதல் வேறோராற்றால் வலியுறுத்தப்பட்டது.*

*1794.* **தெளிவுரை :-** *பாசஞான பசுஞானங்களாய்த் திரிபு கொள்கின்ற மருளில் பொருந்திய உயிரின உணர்வாகிய திரியில் பதிஞானமாகிய திருவருள் என்னும் சுடரைக் கொளுத்தி அஃது எரிந்து வீசுகின்ற ஒளியினால் எல்லாப் பொருட்கும் இடம் தந்து வியாபகமாய் நிற்கின்ற ஆகாயம் போன்று எல்லையற்று நிற்கும் சிவத்தைத் தரிசியுங்கள். அப்பொழுது அந்தத் திருவருளின் ஒளியில் பாசம் அற்றொழியும். முன்பு உளவாகிய துன்பங்கள் யாவும் முழுதுமாக அற்றொழியும். இவ்வாறு பசுஞானமாகிய அறிவைப் பதிஞானமாய் விளங்கச் செய்கின்ற திருவருளாகிய விளக்கைப் பெற்றவர்களே அந்த விளக்கினுள்ளே விளங்கும் மற்றொரு விளக்காய் விளங்குவார்கள்.*

**குறிப்புரை :-** *இம்மந்திரத்தின் பொருள்,*

*உடம்பெனும் மனைய கத்துள் உள்ளமே தகளி யாக*
*மடம்படும் உணர்நெய் அட்டி உயிர்எனும் திரிம யக்கி*
*இடம்படு ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில்*
*கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே.*

*- தி.4 ப.75 பா.4*

*என்னும் அப்பர் திருமொழியில் அமைந்து விளங்குதல் காண்க. இதனுள், “விளக்கு” என்பனவும், “வெளி” என்பதும் உருவகங்கள். விளக்கில் விளங்கும் விளக்காவது, பெருவிளக்கின் ஒளியினுள் தனது ஒளிவேறு தோன்றாது அடங்கி விளங்க இருக்கும் சிறுவிளக்கு. இதனை, ‘பகலில் ஏற்றி வைக்கப்பட்ட விளக்கு’ எனவும் கூறலாம். தாம், ஏ அசைகள். அருளொளியின் முன் ஆன்மாவும்*

**1795.** **ஒளியும் இருளும் ஒருகாலும் தீரா**
**ஒளியுளோர்க் கன்றோ ஒழியா தொளியும்**
**ஒளியிருள் கண்டகண் போல்வே றாய்உள்**
**ஒளியிருள் நீங்கி உயிர்சிவம் ஆமே.** **6**

---

*ஒளிபெற்று விளங்கும்.*

*இதனால், 'திருவருள் ஒளியாய் நின்று பயன் தருமாறெல்லாம் உணர்ந்து அதனாற் பயன்கொள்க' என்பது விதிக்கப்பட்டது. தீபம் - சிற்றொளி. விளக்கு - பேரொளி. வெளி - சிதாகாச வடிவாய கூத்தன்.*

*1795.* ***தெளிவுரை :-*** *'ஒளி, இருள்' என்னும் இரண்டில் எதுவும் எக்காலத்திலும் அழிந்தொழிவதில்லை. (ஒளி வரும் பொழுது இருள் அடங்கி யிருக்குமேயன்றி அழிந்து போவதில்லை. அஃது ஒளி நீங்கியபொழுது மீட்டும் இருள் வருதலைக் கொண்டு அறிந்து கொள்ளப்படும். இந்நிலையில்). நீங்காது நிற்கும் ஒளியோடு கூடிய கண்ணிற்கே ஒருஞான்றும் இருளோடு கூடும் நிலை வாராது ஒளியாகவே விளங்கும் நிலை உளதாகும். ஆகவே, ஒளியோடு கூடும் பொழுது ஒளியாயும், இருளோடு கூடும் பொழுது இருளாயும் நிற்கின்ற கண்போல்வது ஆன்மா. அஃதாவது கண் ஒளிப் பொருளுமன்று; இருட் பொருளுமன்று; அவ்விரண்டினும் வேறு. ஆயினும் ஒளியோடு கூடியபொழுது ஒளியாயும், இருளோடு கூடியிருளாயும் நிற்கும். அது போல ஆன்மாப் பதியும் அன்று; பாசமும் அன்று. அவ்விரண்டினும் வேறு. ஆயினும் பதியோடு கூடிய பொழுதி பதியாயும், பாசத்தோடு கூடிய பொழுது பாசமாயும் நிற்கும். ஒளி வந்தபொழுதும் இருள் அழிவதில்லை. ஆயினும் ஒளியின்முன் இருள்தோன்றாது அடங்கியிருக்கும். ஒளி வருவதும், போவதுமாய் இருப்பின், கண் ஒளியாயும், இருளாயும் வேறு வேறு நிலைகளை அடையும். வந்த ஒளி பின் நீங்காது நிற்பின் கண் அவ்வொளியேயாய்ப் பின் இருளாக மாறாது. அதுபோல, மாயா கருவிகள் வந்து கூடுவனவும், பிரிவனவுமாகிய புற ஒளிகளாகும். அதனால் அவற்றோடு கூடிய உயிர் அறிவாயும், அறியாமையாயும் மாறி மாறி நிற்கும். திருவருளாகிய ஒளிவந்த பின் நீங்காதே நிற்கும் அகவொளியாகும். அதனால் அதனோடு கூடிய உயிர் பின்பு ஒரு ஞான்றும் இருளாகாது ஒளியேயாய்ச் சிவமாய் விளங்கும்.*

***குறிப்புரை :-*** *இம்மந்திரத்தின் முதல் இரண்டடிகள் ஒட்டணியாய் நிற்றலின், இதன் பொருள் இவ்வாறு விரித்துரைக்கப்பட்டது. "ஒளியும் ஒழியாது" என இறந்து தழுவிய எச்ச உம்மை கொடுத்துக் கூறியதனால், இரண்டாம் அடியின் முதலில் உள்ள ஒளி, 'ஒழியா ஒளி' என்பது பெறப்பட்டது. ஒழியா ஒளியாவது இயற்கைப் பேரொளியாகிய ஞாயிற்றின் ஒளி. திருவருளின் இயல்பிற்கு அதனினும் சிறந்த உவமையின்மையால் அஃது ஒழியா ஒளியாக உபசரிக்கப்படுகின்றது. ஒழியும் ஒளி பல இல்லங்களிற் பலரால் ஏற்றியும்,*

**1796.** புறமே திரிந்தேனைப் பொற்கழல் சூட்டி
நிறமே புகுந்தென்னை நின்மல னாக்கி
அறமே புகுந்தெனக்கு ஆரமு தீந்த
திறமேதென் றெண்ணித் திகைத்திருந் தேனே. 7

---

*அணைத்தும் வைக்கும் விளக்கொளி. திருவருள் ஞாயிறு போன்றதும், மாயா கருவிகள் விளக்குப் போல்வனவுமாகும். மாயா கருவிகளால் பெறும் அறிவு பாச அறிவே ஆகையால், அது நீக்கத்தக்கதாயிற்று. "அறியாமை அறிவகற்றி" என்னும் சித்தியாரிலும் (சூ.8-30), "செறி வற்றுலகோடுரைசிந் தையுமற்று - அறிவற்று அறி யாமையும் அற்றதுவே" என்னும் கந்தர் அநுபூதியிலும் (பா.43) "அறிவு" என்றது, நீக்கத் தக்கதாகிய பாச அறிவையேயாகும்.*

*ஒளியில் நின்றோரது கண்ணின் இயல்பை அதனையுடையார் மேல் ஏற்றிக் கூறினார். "உயிர்" என்பதை மூன்றாம் அடியின் முதலிற் கூட்டி, "உள்" என்பதை ஒளியோடு இயைத்து, உயிர் ஒளி இருள் கண்ட கண்போல வேறாய், "உள் ஒளி" என்றதனால் கருவிகளாகி ஒளிவெளி ஒளியாயிற்று. வெளியாவது உயிருக்கு வேறாய் நின்றது.*

*இதனால், திருவருள் பாச ஒளிபோலப் புறமாய் நிலையாததாகாது, அகமாய் நிலைபெற்று நிற்கும் சிறப்புடைய ஒளியாதல் கூறப்பட்டது. இம்மந்திரத்தின் முதலடிப் பொருள், "ஒளிக்கும், இருளுக்கும் ஒன்றேயிடம்; ஒன்று மேலிடின் ஒன்று ஒளிக்கும்; எனினும் இருள் அடராது" எனக் கொடிக்கவி (பா.1)யிலும் கூறப்பட்டது.*

***1796. தெளிவுரை :-** சிவன் தனது திருவுளப் பாங்கிற்கு மாறான வழியில் சென்று உழன்று கொண்டிருந்த என்னை அதற்குக் காரணமான அறியாமையைத் தனது திருவடிகளை என் சென்னி மேல் சூட்டு மாற்றால் போக்கி ஆட்கொண்டு, அதனால் தூய்மை பெற்று எனது உள்ளத்திலே அவன் நீங்காது புகுந்து நிற்கு மாற்றால் யான் அவனது அருளேயாய் நிற்கச் செய்து, அதனால், எனது இயற்கையை எய்திய எனக்கு அவனது அரிய இன்பத்தை அவன் தந்தவாறு எவ்வாறு என எண்ணி யான் ஒன்றும் தோன்றாது நிற்கின்றேன்.*

***குறிப்புரை :-** ஏகாரங்கள் மூன்றும் அவற்றுக்கு எதிரானவற்றினின்றும் பிரிந்து நிற்றலால் பிரிநிலைகள். "சூட்டி" என்பதன் பின் 'ஆட்கொண்டு' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது. நிறம் - மார்பு; அஃது ஆகுபெயராய் நெஞ்சத்தைக் குறித்தது. அறிவை நெஞ்சமாக - உள்ளமாகக் கூறுதல் வழக்கு. "நின்மலர்" என்றது அதன் பயனாகிய ஞானத்தை உணர்த்தி நின்றது. இயற்கையை 'தருமம்' என வழங்கும் வடமொழி வழக்கே பற்றி இவரும் "அறம்" என்றார். தித்திப்பதாகிய பால் அதன் இயற்கைக்கு மாறாகக் கசப்பது, நாவில் சேர்ந்த*

**1797.** அருளது என்ற அகலிடம் ஒன்றும்
பொருளது என்ற புகலிடம் ஒன்றும்
மருளது நீங்க மனம்புகுந் தானைத்
தெருளுறும் பின்னைச் சிவகதி யாமே. **8**

---

*'பித்தம்' என்னும் செயற்கையாலேயாம். அந்தச் செயற்கை நீங்கிய பொழுது பால் இயற்கையான தித்திப்பையே உடையதாகும். அதுபோல உறவுப் பொருளாகிய திருவருள் பகைப்பொருளாக உயிருக்குத் தோன்றுதல், அவ்வுயிரை அனாதியே பற்றியுள்ள ஆணவமலமாகிய செயற்கையாலேயாம். அச்செயற்கை நீங்கிய பொழுது திருவருள் இயற்கையான உறவுப் பொருளாகவே தோன்றும். இதனை உமாபதி தேவர்,*

*தித்திக்கும் பால்தானும் கைக்கும்; திருந்திடும்நாப்*
*பித்தத்தில் தான்தவிர்ந்த பின்.* *- திருவருட்பயன், 62*

*என விளக்கினார். அம்முறையிலே இங்கு நாயனார் "அறமே புகுந்த எனக்கு" என்றார். 'புகுந்த' என்னும் பெயரெச்சத்து ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. பால் தித்தித்தலும், திருவருள் உறவுப் பொருளாதலும், செயற்கை காரணமாக முன்பு வேறுபட்டிருந்தது, பின்பு விளங்குதலால் செயற்கைபோலச் சொல்லப்படுதல் பற்றி, "புகுந்த என்னை" என்றார். இயற்கைத் தன்மையே 'குணம்' என்றும், செயற்கைத் தன்மை 'குற்றம்' என்றும் சொல்லப்படும். குற்றத்தை வடமொழியாளர், 'உபாதி' என்பர்.*

*திறம் - வகை. அது காரணத்தின்மேல் நின்றது. உயிர்களைச் சிவன் தானாகச் செய்தற்குக் காரணம் அவனுக்குள்ள அருளேயன்றிப் பிறிதின்மையை விளக்குவார். "திறம் ஏது என்று எண்ணித் திகைத்திருந்தேன்" என்றார்.*

*இதனால், திருவருள் ஒளியாய் நின்று செய்வன எல்லாம் கூறப்பட்டன.*

***1797. தெளிவுரை :-** பக்குவம் எய்தியபொழுது ஆணவ மலம் நீங்கத் திருவருட் பதிவு உயிரினிடத்து நிகழும். அப்பொழுதுதான் உயிர் தன்னையும், தலைவனையும் உணரும் நிலையைப் பெறும். அப்பேற்றால் அது திருவருளாகிய பரவெளியிற் சென்று, அதன்கண் விளங்குகின்ற சிவத்தைப் புகலாக அடையும். அவ்வாறு அடைந்து நிற்றலே உயிர்பெறும் முடிநிலைப் பேறாகும்.*

***குறிப்புரை :-** மூன்றாம் அடிமுதலாகத் தொடங்கி உரைக்க. "பின்னைச் சிவகதியாம்" என்பதை இறுதியில் வைக்க. மருள் - மயக்க உணர்வு. அஃது ஆணவ மலத்தால் நிகழ்வது. "நீங்க" என்னும் செயவெனெச்சம் நிகழ்காலத்தில் வந்து உடனிலையாய் நின்றது. "புகுந்தானை" என்ற அனுவாதத்தால் அவன் புகுந்தமை முன்பே பெறப்பட்டது. சிவன் தனது அருள் வழியே புகுவன் ஆகலின் அவன்*

**1798.** கூறுமின் நீர்முன் பிறந்திங்கு இறந்தமை
வேறொரு தெய்வத்தின்மெய்ப்பொருள் நீக்கிடும்
பாறணி யும்உடல் வீழவிட்டு ஆருயிர்
தேறணி யாம்இது செப்பவல் லீரே. **9**

---

*புகுந்தமை கூறவே அவனது அருள் புகுந்தமைதானே பெறப்பட்டது. தன்னை உணர்ந்த வழியே தலைவனை உணர்தல் கூடுமாகலின் தலைவனை உணர்தல் கூறவே தன்னை உணர்தலும் பெறப்பட்டது. உறு, துணைவினை. "தெருளும், ஒன்றும், ஒன்றும்" என்னும் பயனிலைகட்கு 'உயிர்' என்பது தோன்றா எழுவாயாய் நின்றது. ஒன்றுதல் - பொருந்துதல். செய்யுள் நோக்கி, "பொருளது என்ற புகலிடம்" என்றாராயினும், 'புகலிடம் என்ற பொருள்' என்றலே கருத்தென்க. எல்லாம் பொருளேயாயினும் உண்மையில் பொருள் எனப்படுவது மெய்ப்பொருளேயாதல் பற்றி அதனையே இங்கு, "பொருள்" என்றார். "அது" மூன்றும் பகுதிப் பொருள் விகுதிகள். 'அதுவே சிவகதி' என்றற்கு, "பின்னைச் சிவகதியாம்" என்றார்.*

*அருளும் பொருளுமே சத்தும் சித்தும் ஆனந்தமும் என்றும், இவற்றின் வேறாய் எம்முதலும் இல்லை என்றும் தெளிதல், அருள் - அம்மை. பொருள் - அப்பர். அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர் எனத் தெளிந்த வழி விளைவது சிவகதி ஆதலின் பின் சிவகதியாம் என்றார்.*

*இதனால், திருவருள் ஒளியாதல், அதனைப் பெற்றார் பெறும் பேறுபற்றி உணர்த்தப்பட்டது.*

*1798. தெளிவுரை :- உலகீர், திருவருளை உள்ளவாறு நீர் உணர்ந்தீராயின், சிவனை யொழிந்து ஒழிந்த தெய்வங்களுள் எதுவாயினும் அது பல்கால் பிறந்து வாழ்ந்து இறந்தமையை வேதாகம புராணங்களைச் சான்று காட்டிப் பலர்க்கும் விளக்கிக் கூறுங்கள். அங்ஙனம் கூறுமாற்றால் அவர்கள் வேறு எந்தத் தெய்வத்தையும் அதனிடத்து மெய்ப்பொருள் தன்மையை ஏற்றி மயங்கும் மயக்கத்தை நீக்குங்கள். இவ்வாறு செய்தலே பருந்துகள் கூட்டமாகக் கூடி உண்ணத்தகும் இவ்வுடல் அங்ஙனம் ஆகும்படி கீழே வீழ்ந்த காலத்தில் அரிய உயிர்தான் தனது உண்மை நிலையைத் தெரிந்து உய்யும் வழியாகும். ஆயினும், இவ்வாறு செய்ய நீர் மாட்டுவீரோ?*

*குறிப்புரை :- "செய்ய மாட்டுதல் அரிது" என்றபடி.*

*நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்;*
*ஆறு கோடிநா ராயணர் அங்ஙனே;*
*ஏறு கங்கை மணல்எண்ணில் இந்திரர்;*
*ஈறி லாதவன் ஈசன் ஒருவனே. - தி.5 ப.100 பா.3*

*எல்லார் பிறப்பும் இறப்பும்இயற் பாவலர்தம்*
*சொல்லால் தெளிந்தேம்; நம் சோணேசர் - இல்லில்*
*பிறந்தகதை யும்கேளேம்; பேருலகில் வாழ்ந்து, (உ)ண்டு*
*இறந்தகதை யும்கேட்டி லேம்.* - *அருணகிரி அந்தாதி, 70*

*"தாமோ தரன் முதலோர் சாதல்நூல் சாற்றுவதும்*
*பூமேலோர் பொன்றுவதும் கண்டோமே"* - *நீதி வெண்பா, 51*

*ஏனைய தேவர் பலரும் பிறத்தல், பின்பு உண்டு வளர்ந்து வாழ்தல், பின்பு இறத்தல் ஆகிய இவைகளை உடையவராதற்கு வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் ஆகியவை அனைத்தும் சான்றாக இருக்கவும் அவரது அருள்களை, 'திருவருள்' என்றல் மயக்க உணர்வேயாம் என்பதும், உண்மையுணர்வைப் பெற்றார் தாம் 'சிவனது அருளே திருவருள்' என உணர்தலோடு பிறர்க்கும் அதனை உணர்த்தற்பாலர் என்பதும் கருத்து. பாறு - மருந்து.*

*இதனால் 'ஒளியாகிய திருவருளாவது சிவனது அருளே' என்பது முடித்துக் கூறப்பட்டது.*

## 11. சிவபூசை

*'ஞானத்திற்குச் சாதனமாகின்ற அவைகளை 'யோகம், கிரியை, சரியை' என இங்ஙனம் மேல்நின்று கூறும் நாயனார், யோகத்திற்கு நிலைக்களமாகிய ஆதார வகைகளை முதற்கண் கூறி, அதன்பின் கிரியைக்கு நிலைக்களமாகிய 'குரு, லிங்கம், சங்கமம்' என்னும் மூன்றனுள் சிறப்புடைய இலிங்க வகைகளை முதற்கண் கூறி, அதன்கண் வழிபாட்டினைச் செய்தல் திருவருள் இன்றி ஆகாமை பற்றித் திருவருட் சிறப்பினை அதன்பின் கூறிய பின் முதற்கண் கூறிய இலிங்க வழிபாட்டினை, 'சிவபூசை' எனச் சிறந்தெடுத்து இருபத்தொரு மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

*'குரு, லிங்கம், சங்கமம்' என்னும் மூன்றனுள் குருமூர்த்தம், குருவருள் பெற்றார்க்கே உரியது. சங்கமம் எல்லார்க்கும் உரித்தாயினும் குருவருள் பெற்றார்க்கே சிறப்பு வகையில் உரியது. எனவே, எல்லார்க்கும் உரித்தாதலாகிய பெரும்பான்மை நிலையே இலிங்கத்திற்கு உள்ள சிறப்பு என்க.*

**1799.** **உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்**
**வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்**
**தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்**
**கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே.** **1**

---

*1799. தெளிவுரை :- ஞானம் முதிரப் பெற்றவர்க்கு இலிங்க பூசை செய்தற்கு அவர்களது இருதயமே, அவ்விலிங்கம் எழுந்தருளியிருக்கும் கருவறையாயும், ஊனால் அமைந்த உடம்பே அக்கருவறை உள்ளடக்கிச் சூழ்ந்துள்ள திருச்சுற்றுக்களாயும், வாயே அவ்விலிங்கத்தின் நேர் நோக்கு வாயிலாகவும், உயிரே இலிங்கமாயும், கண் முதலிய ஐம்பொறி உணர்வுகளே ஒளிமிக்க இரத்தின தீபங்களாயும் அமையும். உடம்பே ஆலயம். உயிரே சிவம்.*

*குறிப்புரை :- எனவே, 'அவர்க்கு இங்குக் கூறிய கருவறை முதலியன வேறு வேண்டா' என்பதாம். இங்ஙனமாகவே அவர் எஞ்ஞான்றும் இவற்றால் பூசை செய்து கொண்டேயிருப்பர் என்பதாம். வேறு கருவறை முதலியன புறத்தே நேரினும் அவற்றை அவர் இவ்வாறு பாவித்தே வழிபடுவர் என்பது உணர்க. "தெள்ளத் தெளிந்தார்க்கு" என்றதனால் இவ்வியல்பு ஞானியர்க்கு என்பது வெளிப்படை. பிறரெல்லாம் புறத்துக் காணப்படும் கருவறை முதலியவற்றையே அகத்தில் கற்பித்துக் கொண்டு வழிபட்டுப் பின்பு புறத்தே வழிபடுவர் என்க. அகத்தும், புறத்தும் ஞானியர் செய்யும் சிவபூசை 'ஞான பூசை' என்றும், ஏனையோர் செய்யும் சிவபூசை 'கிரியா பூசை' என்றும் சொல்லப்படும்.*

*"ஞானத்தால் தொழுவார் சில ஞானிகள்*
*ஞானத்தால் தொழுவேன்உனை நானலேன்" - தி.5 ப.90 பா.3*

**1800.** வேட்டவி யுண்ணும் விரிசடை நந்திக்குக்
காட்டவும் யாமிலம் காலையும் மாலையும்
ஊட்டவி யாவன உள்ளங் குளிர்விக்கும்
பாட்டவி காட்டுதும் பால்அவி யாமே. **2**

---

*என்று அருளிச் செய்தது இக்கருத்துப் பற்றியேயாகும்.*

*"வள்ளற் பிரானார்க்கு" என்றது 'வள்ளற் பிரானாரைப் பூசித்தற்கு' என்றபடி, "புலன்" என்றது புலன் உணர்வை, அஃது இயல்பிலே மயக்கத்தைச் செய்வதாதல் பற்றி, "கள்ளப் புலன்" எனவும், 'அஃது அங்ஙனமாயினும் ஞானியர்க்கு அது தெளிவையே தருவதாகும்' என்றற்கு, "காளா மணிவிளக்கே" என்றும் கூறினார். காளாமணி - பருத்த அழகிய மணி.*

*இதனால், சிவபூசையின் ஞானப் பகுதியின் இயல்பு கூறப்பட்டது. இனி அடுத்து வருகின்ற மந்திரமும் இதனையே கூறும். சிறப்புப் பற்றி இதுவே முன்னர்க் கூறப்படுகின்றது.*

***1800. தெளிவுரை :-** வேள்வித் தீயில் சிவனை வழிபடுவோர் அவனை நோக்கி அத்தீயில் இடும் உணவை அவன் உண்டு மகிழ்வதாகவே கருதுகின்றனர். ஆயினும் அவர் கருத்தை அவன் உடன்பட்டு நின்றே அவர்கட்கு அருள் புரிகின்றான். இனி இலிங்கத்தில் அவனை வழிபடுவோர் அவ்விலிங்கத்தின் முன் வைத்துக் கையை அசைத்துக் காட்டுகின்ற பொருளை அவன் காணும் அளவிலே உண்டு மகிழ்வதாகக் கருதுகின்றனர். அவர்கட்கும் அவர் கருத்தை உடன்பட்டே அவன் அருள் புரிகின்றான். அம்முறையில் அவனை உள்ளத்திலே உயிராகிய இலிங்கத்தில் வழிபடுகின்ற நாம் புறத்திலே வழிபடுவாரைப்போலப் பூசகாலங்களில் காட்டுதற்கு அங்கு எதனையுடையோம்? ஒன்றையும் உடையேமல்லோம். அதனால் அங்கு அவனுக்குக் காட்டும் உணவாவன அவனது திருவுள்ளத்தை மகிழ்விக்கின்ற தோத்திரப் பாடல்களே யாகும். அதனால் அந்த உணவையே அங்கு நாம் காட்டுவோம். அஃது உண்மையில் சொல் வடிவாகவே யிருப்பினும் நமது கருத்து வகையால் அவனுக்கு அது பாலடிசிலேயாய் மகிழ்ச்சியைத் தரும்.*

***குறிப்புரை :-** 'ஊட்டி மகிழ்வித்தலும், காட்டி மகிழ்வித்தலும், எனச் சிவனுக்கு உணவைத் தரும் முறை இரண்டு என்றற்கும், அவ்விரண்டில் எந்த முறையையும் அவன் உணவைப் படைப்பார் கருத்து நோக்கி அதற்கிசைந்து அருள்புரிதலன்றி அவரது செயலால் தன் குறை நிரம்புதல் பற்றி அருள்புரிகின்றிலன் என்றற்கும் வேள்வி செய்வாரது செயலினையும் இங்கு உடன் குறிப்பித்தார். உண்பிப்பாரது கருத்தை உடன் படுதலையே "உண்ணும்" என உபதேசித்துக் கூறினார். ஞான நெறியினது சிறப்புணரமாட்டாதார் புறத்தே பொருள்களைக் கொண்டு செய்யும் வழிபாட்டினையே சிறந்ததாகக் கருதுவர்*

**1801.** பான்மொழி பாகன் பராபரன் றானாகும்
மான சதாசிவன் றன்னைஆ வாகித்து
மேன்முகம் ஈசான மாகவே கைக்கொண்டு
சீன்முகம் செய்யச் சிவனவன் ஆமே. **3**

---

*என்பது தோன்றச் சிவபிரானை, 'வேட்டவி உண்ணும் விரிசடை நந்தி' எனவும், 'அங்ஙனமாயினும் ஞானபூசையே சிறப்புடையது என்றற்கு, "காலையும், மாலையும் ஊட்டு அவியாவன பாட்டு" எனவும், அதுவே அவனுக்கு மிக விருப்பத்தைத் தருவது என்றற்கு, "உள்ளம் குளிர்விக்கும் பாட்டு" எனவும் கூறினார்.*

*"பூசனை ஈச னார்க்குப் போற்றவிக் காட்டினோமே"*

*- தி.4 ப.76 பா.4*

*என்று அருளிச் செய்ததும் காண்க. பாலவி - பால் உணவு.*

*"வேட்ட" என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'அவ்வவி காட்டுதும்' எனச் சுட்டு வருவித்து உரைக்க. "காலையும், மாலையும்" என்றதனால் காலை நேரம், மாலை நேரம் என்னும் இருநேரமாவது சிவபூசை செய்யத்தக்கது என்பது உணர்த்தப்பட்டது.*

*"காலையும் மாலையும் கைதொழு வார்மனம்*
*ஆலையம் ஆரூர் அரனெறி யார்க்கே"*

*- தி.4 ப.17 பா.8*

*என்று அருளிச் செய்தமை காண்க.*

*'நிவேதித்தல்' என்னும் வடசொற்குப் பொருள் 'நன்றாக அறிவித்தல்' என்பது. அதுவே தமிழில் 'காட்டுதல்' எனப்படுகின்றது.*

*இதனால், ஞான பூசையின் இயல்பு மேற்கூறப்பட்டவற்றிற்கு மேல் இன்றியமையாது கூறற்பாலதென்று கூறப்பட்டது.*

***1801. தெளிவுரை :-** பெருமையுடைய சதாசிவ மூர்த்தி அருவுருவத் திருமேனியனாயினும் அவன் அருவமுங் கடந்த பரசிவனே என்பது தேற்றம், ஆதலால் இலிங்க வழிபாட்டில் சதாசிவ மூர்த்தியையே முறைப்படி ஆவாகனம் முதலியன செய்து ஒருவன் வழிபடுவானாயின், அவன் சிவனாம் தன்னைப் பெரும் பயனைப் பெறுவான்.*

***குறிப்புரை :-** 'வடிவம் யாதும் இன்மையால் அசிந்திதனாய் உள்ள சிவன் ஆன்மாக்களின் பொருட்டு வடிவங்கொண்ட சிந்திதனாய் நிற்றலால் பரசிவனைச் சதாசிவனாகக் கொண்டே வழிபட்டுப் பயன்பெறுதலே முறை என்றற்கு, "பராபரன் ஆகும் சதாசிவன் றன்னை" என்றார். "ஆவாகித்து" என்றது உபலக்கணம் ஆதலின், 'ஆவாகனம் முதலியவற்றைச் செய்து' என்றதாம்.*

**1802.** நினைவதும் வாய்மை மொழிவது மல்லால்
கனைகழல் ஈசனைக் காண்பரி தாகும்
கனைகழல் ஈசனைக் காணவல் லார்கள்
புனைமலர் நீர்கொண்டு போற்றவல் லாரே. 4

---

*ஆவாகனம் முதலியவாவன ஆவாகனம், ஸ்தாபனம், சந்நிதானம், சந்திரோதானம், நியாசம், அர்க்கியம், பாத்தியம், ஆசமனம், அபிடேகம், அலங்காரம், தூபம், தீபம், நைவேத்தியம், ஆராத்திரிகம், பிரதட்சிணம், நமஸ்காரம், தோத்திரம், பிரார்த்தனை என்பன. இவற்றின் இயல்பெல்லாம் பத்ததிகளிலும், சிவபூசா விதி நூல்களிலும் அறிக;*

*''மேன்முகம் ஈசானமாகவே கைக்கொண்டு'' என்றது, 'மேல் சதாசிவலிங்கத்தின் இயல்பாகக் கூறியவற்றை அவ்வாறே உணர்ந்து செய்க' என அவற்றை இங்க மீள நினைவுறுத்தியவாறு. 'சீலம்' என்பது கடைக் குறைந்து, ''சீல்'' என நின்றது. சீலத்தை முகம் செய்தலாவது விதிமுறைகளை நடைமுறைப்படுத்தல். ஒழுக்கம், பயிற்சி எனலுமாம். முகங்களைப் பாவித்துப் பயில்தல்.*

*இம்மந்திரம் முதலாக வருவன எல்லாம் ஞானபூசை கிரியா பூசை இரண்டற்கும் பொதுவாவனவாம்.*

***1802. தெளிவுரை :-** சிவனை இலிங்கத்தின்கண் சதாசிவ வடிவில் வைத்து மேற்கூறியவாறெல்லாம் நினைதலும், அந்நினைவுகட்கு ஏற்ற மறை மொழிகளை அவ்வப்பொழுது முறையாகச் சொல்லுதலும், அவற்றோடு அவ்வவ் வுறுப்புக்களைப் பூவும், நீரும் கொண்டு போற்றுதலும் தவிர அவனைக் காண்பதற்கு வழி வேறு இல்லை, ஆகையால் அவனைக் காண வேண்டுவோர் பலரும் அவற்றையே செய்வர்.*

***குறிப்புரை :-** அதனால் நீவிரும் அவற்றையே செய்மின்' என்பது குறிப்பெச்சம். சொல் சுருங்க வேண்டி வேறு வேறாக ஓதினாரேனும் இவ்வாறு ஒன்றாக வைத்துரைத்தலே கருத்தென்க. 'இலிங்கத்தில்' என்பதும், 'சதாசிவவடிவில்' என்பதும் அதிகாரத்தால் வந்தியைந்தன. தாம் தம் பயனைத் தப்பாது தருதல் பற்றி மந்திரங்களை "வாய்மை" என்றார். நினைதல் முதலிய மூன்றும் முறையே மனம், மொழி, மெய் இவற்றின் செயலாதல் தெளிவு. எனவே முப்பொறிகளும் பூசையில் ஒருங்கு இயைதல் வேண்டும் என்பது பெறப்பட்டது. ஞான பூசையில் மொழி மெய் இவற்றின் செயல்களும் அவ்வாறே பாவிக்கப்படும் என்க. நினைவது - நினைப்பற நினைதல். அதாவது தைலதாரை போல இடைவிடாது நினைதல்.*

*இதனால், சிவபூசை முப்பொறிகளாலும் இயற்றற்பாலதாதல் கூறப்பட்டது. இடையே சிவபூசையின் சிறப்பும் உணர்த்தப்பட்டது.*

**1803.** மஞ்சனம் மாலை நிலாவிய வானவர்
நெஞ்சினுள் ஈசன் நிலைபெறு காரணம்
அஞ்சமுது ஆம்உப சாரம்எட் டெட்டொடும்
அஞ்சலி யோடும் கலந்தற்சித் தார்களே. **5**

**1804.** புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண் டருள்புரி யாநிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றார்களே. **6**

---

*1803. **தெளிவுரை :-** தத்துவங்களில் ஒவ்வொன்றன் எல்லை காறும் அவற்றிற்குத் தலைவராக வைத்து பலராலும் திருமஞ்சனம் ஆட்டித் திருமாலை சூட்டி வழிபடப்படும் கடவுளர்களது உள்ளங்களில் சிவன் நிலைபெற்று நின்று அவ்வழிபாட்டின் பயன்களை அவரவர்க்கு வழங்கி நிற்றற்குக் காரணம் அவரெல்லாம் முன்பு சிவனைப் பஞ்சாமிர்தம் முதலியவற்றால் அபிடேகித்துப் பதினாறு வகையான உபசாரங்களைச் செய்து, கைகூப்பிக் கும்பிட்டு மனம் பொருந்தி வழிபட்டார்கள் என்பதே.*

*__குறிப்புரை :-__ 'என்பதே' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது. அங்ஙனம் வழிபடப்படுவார் பிரமன், விட்டுணு என்னும் காரணக் கடவுளரும், பிறரும் ஆவர். மஞ்சனம் - இறைவனை ஆட்டுதற்குரிய நீர்.*

*"அயன்றனை யாதி யாக அரன்உரு என்ப தென்னை?*
*பயந்திடும் சத்தி யாதி பதிதலால்" - சிவஞானசித்தியார், சூ. 1-60*

*என்னும் சிவஞான சித்தியை இங்கு உடன் நோக்குக. இங்குக் கூறப்பட்ட மஞ்சனம், மாலை, அஞ்சமுது என்பன உபலக்கணம். அவற்றால் சிவபூசைக்கு வேண்டப்படும் பொருள்கள் குறிக்கப்பட்டன. அஞ்சலி - கரம் குவித்தல்.*

*இதனால், சிவபூசையால் பெறப்படும் பயன்களுள் சிறப்புடையது ஒன்று எடுத்துக் கூறப்பட்டது. அதனானே 'வழிபடப்படுபவன் சிவன் ஒருவனே' என்பதும் 'ஏனையோர் யாவரும் அவனை வழிபடுபவரே' என்பதும் உடன் உணர்த்தப்பட்டன. வேதம் சிவன் ஒருவனையே "விசுவசேவியன்" என்றும், "தேயப் பொருள்" என்றும் கூறும்.*

*1804. **தெளிவுரை :-** 'சிவனை அடைதற்குச் செயற்பாலதாகிய தவம் யாது' எனத் தேர்பவர்க்கு, பூவும், நீருமே சாதனங்களாகும். அவை எவ்விடத்தும் எளிதிற் கிடைப்பனவே. அவை சாதனங்களாதல் எவ்வாறு எனின், நீரைச் சொரிந்து பூவைச் சாத்துதலாகிய அதைக் கண்டவுடனே சிவன் அதனைச் செய்தவர்க்கு அருள் புரிகின்றான். அங்ஙனமாகவும், நல்லூழ் இல்லாத பலர் இதனைச் செய்யாது, வாளா பொழுது போக்கிப் பிறப்பில் வீழ்கின்றனர்.*

**1805.** சீர்நந்தி கொண்ட திருமுக மாய்விட்ட
பேர்நந்தி என்னும் பிறங்கு சடையனை
நாநொந்து நொந்து வருமளவும் சொல்லப்
பேர்நந்தி யென்னும் பிதற்றொழி யேனே. 7

---

*குறிப்புரை :-* "இஃது அவர் வினையிருந்தவாறு" என்பது குறிப்பெச்சம். "உண்டு உண்டு" என்றது, அவற்றின் எளிமையும், முட்டின்மையும் கூறியவாறு.

*கற்றுக் கொள்வன வாயுள; நாவுள;*
*இட்டுக் கொள்வன பூவுள; நீருள;*
*கற்றைச் செஞ்சடை யானுளன்; நாமுளோம்;*
*எற்றுக் கோநம னால்முனி வுண்பதே.*

*- தி.5 ப.91 பா.6*

என்றதிலும் 'எம் வினையே காரணம்' என்பதே குறிப்பு.

இதனால், சாதனங்களின் எளிமையும், இறைவன் கருணை மிகுதியும், அறியாதார் சிறுமையும் தெரிவிக்கப்பட்டு **சிவபூசை செயலால் எளிதாய்ப் பயனாற் பெரிதாயினும் அது நல்லூழ் உடையார்க்கன்றி ஆகாமை கூறப்பட்டது**.

*1805.* **தெளிவுரை :-** (இங்கு இருக்க வேண்டிய இப்பாடல் பதிப்புக்களில் 'மாகேசுர பூசை' என்னும் அதிகாரத்திலும் அங்கு இருக்க வேண்டிய பாடல் இங்குமாக மாறியுள்ளன.)

புகழ்மிக்க நந்தி பெருமானாகிய எம் ஆசிரியர் எம்மை ஆளாக ஏற்றுக் கொண்டுபோய்த் திருமுன்பு சேர்த்த, 'நந்தி' என்பதையே தன் பெயராக உடைய சிவபெருமானை என்னால் ஆம் அளவும் துதிப்பதற்கு அந்த 'நந்தி' என்னும் பெயரையே எப்பொழுதும் சொல்வேன்.

**குறிப்புரை :-** 'இஃது எம் ஆசிரியர் ஆணை' என்றபடி, சிவபெருமானுக்கு அவனது மூலமந்திரத்தில் உள்ள 'சிவன்' என்பதே மெய்ப்பெயராயினும், அஃது அவனை வழிபடுவோர் யாவர்க்கும் பொதுவாய் நிற்க, அவரவரும் தாம் தாம் தனித் தனிச் செய்யும் வழிபாட்டில் தம் பெருமானது மெய்ப்பெயராக ஒரு பெயரைக் கொள்ளுமாறு ஆசிரியர் பணிப்பர். அம்முறையில் நாயனார்க்கு அவர் வழிபடும் பெருமானது பெயராக 'நந்தி' என்பதையே நந்தி பெருமான் அருளிச் செய்தார் என்க. இதனை நாயனார் எடுத்துக் கூறியதனால் சிவனைச் சிறப்பு வகையில் தமக்கே உரிய பெருமானாகக் கொண்டு வழிபடும்பொழுது அவனுக்கென்று ஒரு பெயரை அவரவரும் கொண்டு வழிபடல் வேண்டும் என்பது கூறப்பட்டது.

"விட்ட" என்பது, 'அரசன் ஆக்கொடுத்த பார்ப்பான்' என்பதிற்போல, 'சடையன்' என்னும் கோடற் பொருட் பெயர் கொண்டது. வருமளவும், ஆமளவும் "நொந்து" எனச் சினைவினை முதல்மேல் நின்றது. 'வருந்தியேனும் செய்வேன்'

**1806.** மறப்பதுற் றெவ்வழி மன்னிநின் றாலும்
சிறப்பொடு பூநீர் திருந்தமுன் ஏந்தி
மறப்பின்றி நின்னை வழிபடும் வண்ணம்
அறப்பெற வேண்டும் அமரர் பிரானே. **8**

**1807.** ஆரா தனையும் அமரர் குழாங்களும்
தீராக் கடலும் நிலத்துள தாய்நிற்கும்
பேரா யிரமும் பிரான்திரு நாமமே
ஆராய் வுழியெங்கள் ஆதிப் பிரானே. **9**

---

*என்றதாம். 'நந்தியென்னும் பேர் பிதற்றொழியேன்' என்க.*

*இதனால், சிவபூசையில் இன்றியமையாது கொளற்பாலதொன்று கூறப்பட்டது.*

***1806. தெளிவுரை :-*** *தேவர்கட்கெல்லாம் தேவனாகிய சிவபெருமானே! யான் இப்பிறப்பினின்று நீங்கி எப்பிறப்பை அடைந்து எங்கேயிருந்து எதனை மறந்து போனாலும் திருத்தமான பூ, நீர் முதலியவற்றைக் கொண்டு உன்னைச் சிறப்புடன் பூசிக்கின்ற இந்த வழக்கத்தை மட்டும் மறவாமல் கடைப்பிடித்து நிற்கும் வரத்தை அடியேன் முற்றாகப் பெறும்படி அருள் செய்யவேண்டும்.*

***குறிப்புரை :-*** *'அஃது ஒன்றே யான் உன்பால் வேண்டுவது' என்பது குறிப்பெச்சம். தம் அன்பு மீதூர்வால் இவ்விண்ணப்பத்தினை நாயனார் சிவபிரானிடம் செய்து நின்றமையால், 'சிவபூசை செய்வார் அப்பூசையில் இதனையே அவன்பால் வேண்டுக எனக் கூறி, அதனானே, சிவபூசையை மேற்கொண்டவர் அதனை ஒரு ஞான்றும், கைவிடுதல் கூடாது' என்பதனையும் உணர்த்தியவாறு. சொற்கிடக்கை முறை வேறாயினும் கருத்து நோக்கி இதற்கு இவ்வாறுரைக்கப்பட்டது. 'நின்னை வழிபடும் வண்ணம் மறப்பின்மை பெறவேண்டும்' என்க.*

> *"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே*
> *வழுவா திருக்க வரந்தர வேண்டும்" - தி.4 ப.94 பா.8*

*என வேண்டினமையை நினைக.*

***1807. தெளிவுரை :-*** *தெய்வ வழிபாடுகளும், வழிபடப்படும் தேவர் கூட்டங்களும் நீர் நிறைந்த கடல் சூழ்ந்த நிலத்தில் எங்கும் அளவின்றி உள்ளன. உண்மையாக ஆராய்ந்தால், அவ்வழிபாடுகளில் வேறு வேறாகச் சொல்லப்படுகின்ற அளவற்ற பெயர்களும் சிவன் பெயர்களே என்பதும், 'அனைத்துத் தெய்வங்களும் சிவனே' என்பதும் விளங்கும்.*

***குறிப்புரை :-*** *'அதனால், சிவனையே நேராகப் பெரியோர் வழிபடுவர்' என்பதாம்.*

*‘காண்பவன் சிவனே யானால் அவனடிக் கன்பு செய்கை*
*மாண்பறம்; அரன்றன் பாதம் மறந்துசெய் அறங்க ளெல்லாம்*
*வீண்செயல்’*

*எனவும்,*

*யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி ஆங்கே*
*மாதொரு பாக னார்தாம் வருவர்; மற் றத்தெய்வங்கள்*
*வேதனைப் படும்; பிறக்கும்; இறக்கும்; மேல் வினையும் செய்யும்;*
*ஆதலால் அவையிலாதான் அறிந்தருள் செய்வனன்றே.*

*எனவும்,*

*“இங்குநாம் சிலர்க்குப் பூசை இயற்றினால் இவர்களோ வந்து*
*அங்குவான் தருவர்? அன்றேல், அத்தெய்வம் அத்தனைக்காண்”*

*-சிவஞானசித்தியார், சூ.2, 27, 25, 26*

*எனவும் விளங்குதல் காண்க. (தெய்வப் பெயராய் வரும்) “எல்லாப் பெயரும் பரமசிவன் பெயர் என்பதே வேதநூல் துணிபு என்பது ஆண்டுக் (சுவேதாச் சுவத உபநிடதத்தில்) காண்க” என்னும் சிவஞான மாபாடியமும் (சூத்திரம், 1, அதிகார வெண்பா, 1) இங்கு நினைக்கத்தக்கது. ஆராதனை - வழிபாடு. தீராக் கடல் - அலை ஓயாத கடல், என்றது* ***சிவபூசை செய்பவர் ஆணையிடுவாராயின், அதுவும் ஓசையின்றி அவரது ஆணைக்குக் கட்டுப்பட்டு நிற்கும் என்பதை விளக்கி நிற்கின்றது****.*

***இவ்வாறெல்லாம் கூறுதல், ‘சிவபிரான் தவிர ஏனைத்தேவர் பலரும் பசு வருக்கத்தினரே’ என்பதும், ‘சிவபிரான் ஒருவனே பதி’ என்பதும் விளங்குதற் பொருட்டாம். ஆகவே, ‘பசு வருக்கத்தினரைப் பதியாகக் கருதிச் செய்யும் வழிபாடுகள் யாவும் நல்வினைகளாய்ப் பிறவியைத் தருதல் அன்றிப் பிறவியை நீக்கமாட்டா’ எனவும், ‘சிவபிரானைப் பதியாக உணர்ந்து செய்யும் வழிபாடே தவமாய் ஞானத்தைப் பயந்து, அது வழியாக வீட்டைத் தரும்’ எனவும் உணர்ந்து கொள்க. இம்மந்திரத்தில் பலவிடத்தும் பாடங்கள் திரிபெய்தின.***

***இதனால், சிவ பூசையின் தனிச் சிறப்புக் கூறப்பட்டது.***

***1808. தெளிவுரை :- பசுவினின்றும் பெறப்படுகின்ற அரிய பொருள் ஐந்தினாலும் திருமுழுக்காட்டித் தேவர் கூட்டம் வழிபட, ஆதியும், அந்தமும் இல்லாதவனாகிய சிவனது திருவருள் அவர்கள் உள்ளங்களில் மலர்ந்த தாமரை மலரில் தேன்போல வெளிப்பட்டு விளங்கிற்று. (அதனால் அவர்கள் பேரின்பம் பெற்றனர் என்றபடி). இங்ஙனம் தன்னை வழிபட்டு உய்தற்காகவே ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து ஆகப் பத்து இந்திரியங்களையும் அவை செயற்படுதற்கு ஆற்றலைத் தருகின்ற தன்மாத்திரைகள் ஐந்தினையும் சிவன் உயிர்கட்குப் படைத்துக் கொடுத்தான்.***

**1808.** ஆன்ஐந்தும் ஆட்டி அமரர் கணந்தொழத்
தான்அந்த மில்லாத் தலைவன் அருளது
தேன்உந்து மாமலர் உள்ளே தெளிந்ததுஓர்
பான்ஐங் குணனும் படைத்துநின் றானே. **10**

---

***குறிப்புரை :-*** *'அதனை உணர்ந்து அக்கருவிகளைப் பயன்படுத்திக் கொள்ளல் வேண்டும்' என்பதாம். பசுவினின்றும் பெறப்படும் அரும்பொருள் ஐந்தும், 'பஞ்ச கௌவியம்' எனப்படும். அவை பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்பன. இவை ஐந்தும் ஒன்றாகக் கலந்த பொழுதே 'பஞ்ச கௌவியம்' எனப் பெயர்பெறும். அவற்றைக் கலத்தற்கு அளவுகள் உண்டு. கோசலம் - பசுவின் நீர். கோமயம் - சாணம். இவை தூய்மையின் பொருட்டு மிகச் சிறிதளவிலே சேர்க்கப்படும்.*

*"இன்று பசுவின் மலமன்றே இவ்வுலகில்*
*நின்ற மலம் அனைத்தும் நீக்குவது" - திருக்களிற்றுப்படியார், 7*

*தனித்தனியாக ஆட்டும்பொழுது பால், தயிர், நெய் என்னும் மூன்றுமே ஆட்டப்படும். அவைகளை எவ்வளவும் ஆட்டலாம். அதனால் சிறிதளவே கொள்ளுதற்குரிய கோசல கோமயங்கள் தனித் தனியாக ஆட்டப்படா. "ஓர் பான் ஐங்குணனும்" என்பதை ஓர் பானும், ஐங்குணனும்" என்க. பூதங்களின் குணமாகிப் புலப்படுதல் பற்றித் தன்மாத்திரைகளை, 'குணம்' என்றார்.*

*இதனால், சிவபூசையில் கொள்ளத்தக்க ஒன்று கூறப்பட்டது. சிவபூசை செய்தல் மானுடப் பிறப்பின் பயன் என்பதை இடம் வாய்த்துழி உடன் கூறினார்.*

*மானுடப் பிறவிதானும் வகுத்தது மனவாக் காயம்*
*ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக் காகஅன்றோ!*
*வானிடத் தவரும்மண்மேல் வந்தரன் றனைஅற் சிப்பர்;*
*ஊனெடுத் துழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ.*

*- சிவஞானசித்தியார், சூ.2.91*

*என்றது காண்க. இச்செய்யுளிலும்,*

*"பாவமும் பழி பற்றற வேண்டுவீர்,*
*ஆவில் அஞ்சுகந் தாடும் அவன்கழல்*
*மேவ ராய்மிக வும்நினைந் துள்குமின்" - தி. 5 ப.99 பா.1*

*என்னும் திருமொழியிலும் 'சிவன் ஆவில் அஞ்சினை உகந்து ஆடுபவன்' என்பது உணர்த்தப்பட்டது. அஃதே, "ஆவினுக்கு அருங்கலம் அரன் அஞ்சு ஆடுதல்" (தி.4 ப.11 பா.2) என்று அருளிச் செய்யப்பட்டது. "அரன் அஞ்சு ஆடுதல்" என்பதை, 'அரன் ஆடும் அஞ்சு' என மாற்றிப் பொருள் கொள்க.*

**1809.** உழைக்கொண்ட பூநீர் ஒருங்குடன் ஏந்தி
மழைக்கொண்ட மாமுகில் போற்சென்று வானோர்
தழைக்கொண்ட பாசம் தயங்கிநின் றேத்திப்
பிழைப்பின்றி எம்பெரு மான்அரு ளாமே. **11**

---

***1809. தெளிவுரை :-*** *'தேவர்' என்பார் யாவரும் ஒவ்வொரு பொருட்கு அதன் எல்லையளவும் உரிமை பூண்டு நிற்பவரே. அவ்வுரிமையை அவரெல்லாம் நல்ல இடத்திலிருந்து எடுக்கப்பட்ட பூவையும், அவ்வாறே நல்ல இடத்திலிருந்து எடுக்கப்பட்ட நீரையும் கையில் ஏந்திக் கொண்டு நீரை முகந்து வரும் கரிய மேகங்கள் போல ஓரோர் தலத்தில் சென்று மிக்க அன்புடன் சிவபெருமானைப் பூசித்து அவன் பெரிதும் அருள் செய்யவே பெற்றனர்.*

***குறிப்புரை :-*** *'அதனால் நற்பேறுகள் யாவும் சிவபூசையின் வழிப்பெறும் பயனேயாம் என்றபடி, 'முன் செய் பூசா பலம்' என்னும் வழக்கினை நினைக.*

*வண்டுளரும் தண்டுழாய் மாயோன் இறுமாப்பும்,*
*புண்டரிகப் போதுறையும் புத்தேள் இறுமாப்பும்,*
*அண்டர்தொழ வாழ்உன் இறுமாப்பும் ஆலாலம்*
*உண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திரையால்.*

*- பரஞ்சோதி திருவிளையாடல்*
*- வெள்ளை யானை - 14*

*வானம் ஏத்தயான் வைகுந்த வாழ்வுபெற் றதுவும்*
*ஞான நான்முகன் சத்திய உலகநண் ணியதுவும்*
*ஏனை விண்ணவர் தத்தம வாழ்க்கையெய் தியவும்*
*ஆனு யர்த்தவன் அருட்குறி யருச்சனைப் பயனால்.*

*- காஞ்சிப்புராணம், சார்ந்தாசயப் படலம், 21.*

*எனவும் ஆன்றோர் அருளினமை அறிக. இன்னும்,*

*வானகம் ஆண்டுமந் தாகினி ஆடிநந் தாவனஞ்சூழ்*
*தேனக மாமலர் சூடிச்செல் வோரும் சிதவல் சுற்றிக்*
*கால்நகம் தேயத் திரிந்திரப்போரும் கனகவண்ணப்*
*பால்நிற நீற்றற்(கு) அடியரும் அல்லாப் படிறருமே.*

*உலகா ளுறுவீர் தொழுமின்விண் ணாள்வீர் பணிமின்நித்தம்*
*பலகா முறுவீர் நினைமின் பரமனோ டொன்ற லுற்றீர்*
*நலகா மலரால் அருச்சிமின் நாள்தர கத்துநிற்கும்*
*அலகா முறுவீர் அரனடி யாரை அலைமின்களே.*

*- தி.11 பொன்வண்ணத்தந்தாதி, 12, 14*

*என்றற்றொடக்கத்தனவும் காணத்தக்கன. 'பிழைப் பின்றிப் பெற்ற பேரருள்' என்க. அருளால் பெற்றவற்றை "அருள்" என்றே உபசரித்துக் கூறினார். உழை - இடம்.*

**1810.** வெள்ளக் கடல்உள் விரிசடை நந்திக்கு
உள்ளக் கடற்புக்கு ஓர்சுமை பூக்கொண்டு
கள்ளக் கடல்விட்டுக் கைதொழ மாட்டாதார்
அள்ளற் கடலுள் அழுந்துகின் றாரே. 12

**1811.** கழிப்படு தண்கடற் கௌவை உடைத்து
வழிப்படு வார்மலர் மொட்டறி யார்கள்
பழிப்படு வார்பல ரும்பழி வீழ
வெளிப்படு வார்உச்சி மேவிநின் றானே. 13

---

*இதனால், 'சிவபூசையே யாவராலும் செயற்பாலது' என்பது கூறப்பட்டது.*

***1810. தெளிவுரை :-*** *உள்ளே ஓட்டத்தையுடைய கடலாகிய கங்கை விரியப் பெறுகின்ற சடைமுடியை உடைய சிவபெருமான் பொருட்டு உள்ளத்திலே நிறைவதாகிய அன்பு என்னும் கடலுள் மூழ்கிப் பூவை நிறையப் பறித்துச் சுமந்துகொண்டு போய் போலியாகிய நற்குணங்களை ஒழித்து உண்மை நற்குணங்களை உடையவராய் வழிபட நினையாதவர்கள் துன்பமாகிய கடலுள் மூழ்குகின்றனர்.*

***குறிப்புரை :-*** *இதனை மேற்காட்டிய 'கால் நகம் தேயத் திரிந்திரப்போர்' என்றது முதலிய திருமொழிகளால் அறிக. "வெள்ளம்" பெருக்கெடுத்து ஓடுதலைக் குறித்தது. கடலுக்கு ஓட்டம் இன்மையால் ஓடுகின்ற கடல் கங்கா நதியாயிற்று. நீர்க்கடல் புறத்தே உளதாகலின், உள்ளக் கடல்" என்றது பேரன்பினையாயிற்று. "ஓர் சுமை" என்றது மிகுதியைக் குறித்தது. கள்ளம் - பொய்மை. 'கள்ளக் கடல், அள்ளற் கடல்' என்பன உருவகங்கள். 'அல்லல்' என்பது எதுகை நோக்கித் திரிந்தது. இனி, "அள்ளல், ஒருவகை நரகம்" என்றலும் ஆம்.*

*மேல் சிவபூசை செய்தார் எய்தும் பயன்களைக் கூறியதனால், இதனால் அது செய்யாதார் எய்தும் துன்பங்களைக் கூறியவாறு.*

***1811. தெளிவுரை :-*** *'தம் பிறவியை வாளா கழிக்கின்றார்கள்' எனக் கூறப் படும் பழியைப் பொருட்படுத்தாது அதனுள் அகப்பட்டு நிற்கின்ற உலகர் பலரும், கழி பொருந்திய கடலின் ஆரவாரம் போலும் உலகியல் ஆரவாரங்களை ஒழித்துச் சிவனை வழிபடுகின்றவர்கள் இட்ட பூக்களும், போதுகளும் நிரம்பக் கிடைத்தலைப் பலகால் கண்டாராயினும் அவை விளைக்கும் பயனை அறிய மாட்டார்கள். ஆயினும், அப்பழி நீங்க அவரது கூட்டத்தினின்றும் வேறுபட்டு நின்று வழிபடுவோரைத்தான் சிவன் தனது திருவருள் வியாபகத்துள் வைத்துப் பாதுகாக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *'கடற் கௌவைபோலும் கௌவை' என்க. கௌவை ஆரவாரம். உடைத்தல் - அழித்தல். வழிபடுவார்' என்பது எதுகை நோக்கி*

**1812.** பயனறி வொன்றுண்டு பன்மலர் தூவிப்
பயனறி வார்க்கரன் தானே பயிலும்
நயனங்கள் மூன்றுடை யான்அடி சேர
வயனங்க ளால்என்றும் வந்துநின் றானே. **14**

---

*விரித்தல் பெற்றது 'வழிபடுவார்' என்புழி, 'சிவனை' என்பதும், "மேவி நின்றான்" என்புழி, 'சிவன்' என்பதும் அதிகாரத்தால் வந்தன. வழிபடுவாரது மலரும் மொட்டும்' என ஆறன் உருபும், எண்ணும்மையும் விரித்துக் கொள்க. பலரும் அறியார்கள்' என்க. இனி, 'பலரும் அறியார்களாய்ப் பழிப்படுவார்' என முடிப்பினும் ஆம். வெளிப்படுதல் - விட்டு நீங்குதல் - தனது திருவடி வியாபகத்துள் அடக்குதலே உச்சி மேவுதல் எனப்படுகின்றது.*

*இதனால், சிவபூசை செய்வாரது உயர்வும் செய்யாதாரது இழிவும் ஒருங்கு கூறப்பட்டன.*

***1812. தெளிவுரை :-*** *'பயனுடைய செயலாவது இது' என அறியும் அறிவு ஒன்றே ஒன்றுதான் இவ்வுலகில் உள்ளது. அஃது யாதெனின், பலவகை மலர்களைத் தூவி வழிபட்டு அதனால் விளையும் பயனை அறிந்து அதனையே மேலும் மேலும் செய்பவர்க்குச்* ***சிவன் தானே பலகாலும் வலியவந்து அருள் செய்தலை அறிதலேயாகும்****. ஆகையால் அவ்வறிவின்வழி ஒழுகுவார்க்குச் சிவன் அவர் சொல்லியவாறெல்லாம் என்றும் எளிவந்து அருளுவன்.*

***குறிப்புரை :- அவ்வாறு அருளுதலை, பொதிசோறு சுமந்து வந்தளித்தமை, இரந்துவந்து சோறிட்டமை, வற்கடம் வருத்தாது படிக்காசு தந்தமை, காசு வாசி தீர்த்து வழங்கினமை, துணைவிபால் தூது சென்று ஊடல் தீர்த்தமை முதலிய பலவற்றிலும் வைத்து உணர்க****. பயிலுதல் - இடைவிடாமல் உரைத்தல்.*

*'பயனை அறியும் அறிவு' என்க. பயன் தரும் செயலை, 'பயன் என்றார். இரண்டாம் அடியின் இறுதியில் 'அதனை யறிதல்' என்பது எஞ்சி நின்றது. "அரன்" என முன்னர்க் கூறினமையால், "நயனங்கள் மூன்றுடையான்" என்றது, 'அவன்' என்னும் கட்டளவாய் நின்றது. 'வசனம்' என்பது 'வயனம்' எனத் திரிந்தது. நயனம் - கண். வயனம் - உபாயம்.*

*இதனால், சிவன் தன்னை வழிபடுவார்க்கு இம்மையிலும் இனிதருள் செய்தல் கூறப்பட்டது.*

*வேதன் நாரணன் ஆரணம் அறியா விழுப்பொருள்*
*பேதைபால்*
*தூதனாய் இருகால் நடந்திடு தோழன்*
*வன்மைசெய் தொண்டனுக்(கு)*
*ஆதலால் அடியார்களுக் கெளியான்*
*அடிக் கமலங்கள் நீ*

**1813.** ஏத்துவர் மாமலர் தூவித் தொழுதுநின்
றார்த்தெம தீசன் அருட்சே வடிஎன்றன்
மூர்த்தியை மூவா முதல்உரு வாய்நின்ற
தீர்த்தனை யாரும் துதித்துண ராரே. **15**

---

*காதலால் அணை; ஈண்டன வேண்டின*
*இம்மையே தரும் கண்டிடே.*

*- சிவஞான சித்தியார், பரபக்கம், 57*

*என அறிவுறுத்தினமை காண்க.*

***1813. தெளிவுரை :-*** *சிவனைக் காணலுறுவார் யாவரும் அவனது திருவருள் வடிவாகிய அவனது திருவடியின் கீழ்த்தம்மைத் தாமே கட்டி வைத்து, அவனை மிக்க மலர்களைத் தூவித்தொழுது துதித்தலையே செய்வர். அங்ஙனமன்றி, எனக்கு எதிர் தோன்றிக் காட்சி வழங்கியவனும், என்றும் கெடுதல் இல்லாத முதற்பொருளாய் உள்ளவனும் ஆகிய அவனை யாரும் தாம் இருந்த நிலையிலே யிருந்து காணமாட்டார்கள்.*

***குறிப்புரை :-*** *பின்னர், "யாரும் உணரார்" என்றதனால், முன்னர் ஏத்துதல் முதலியவற்றைச் செய்பவர் உணர்வோராதல் பெறப்பட்டது. ஆர்த்தல் - பிணித்தல். "அருட் சேவடி" என்பதன் பின் 'கீழ்' என்னும் பொருள்பட வந்த கண்ணுருபு இறுதிக்கண் தொக்கது. 'சேவடிக்கண் தம்மை ஆர்த்து' என்றது, 'தொண்டு பட்டு என்றபடி, துதித்தல் நிலை பெற்றிருத்தல்' என்றது, ஆட்படாது தனிநிற்றலைக் குறித்தது.*

*"தொழுவார்க்கே யருளுவது சிவபெருமான்"*

*- தி.12 சம்பந்தர் புராணம், 78*

*என்று அருளிச் செய்தமை காண்க.*

*இதனால், 'சிவனை இலிங்கத் திருமேனியில் மலர்தூவி வழிபடாதார் காணமாட்டார்' என்பது கூறப்பட்டது.*

***1814. தெளிவுரை :-*** *தேவர்கள் தத்தமக்கு வாய்ப்பான ஓரோர் இடத்தை அடைந்து நிலத்தில் நால்வகையாகத் தோன்றுகின்ற பூக்களையும், நீரையும் சுமந்து சென்று சிவனைத் திருவுருவங்களில் வழிபட்டு, அதனாலே மூவரில் ஓரொருவராயும், அவர் தவிர ஏனைத் தேவரில் ஓரொருவராயும் தலைமைபெற்ற அத்திருவருட் சிறப்பினையறிந்து அவ்வாறு அவனை வழிபட வல்லவர் யாவர்!*

***குறிப்புரை :-*** *'அத்தன்மையோர் மிக அரியர்' என்றபடி, 'திசை' என்பது 'இடம்' என்னும் பொருட்டாய் நின்றது. நால்வகைப் பூக்களாவன - 'கோட்டுப்*

**1814.** தேவர்கள் ஓர்திசை வந்துமண் ணோடுறும்
பூவோடு நீர்சுமந் தேத்திப் புனிதனை
மூவரிற் பன்மை முதல்வராய் நின்றருள்
நீர்மையை யாவர் நினைக்கவல் லாரே. **16**

**1815.** உழைக்கவல் லார்நடு நீர்மலர் ஏந்திப்
பிழைப்பின்றி ஈசன் பெருந்தவம் பேணி
இழைக்கொண்ட பாதத்து இனமலர் தூவி
மழைக்கொண்டல் போலவே மன்னிநில் லீரே. **17**

---

*பூ, கொடிப் பூ, நீர்ப்பு, புதர்ப்பூ' என்பன. இவை யாவும் நிலத்திலே தோன்றுதலின் அவை யாவும் அடங்க, "மண்ணோடுறும் பூ" என்றார். "மூவரிலும் பன்மையிலும் முதல்வராய்" என்க. 'பலர்' எனற்பாலதனை, "பன்மை" என எண்ணின்மேல் வைத்துக் கூறினார். "நின்ற" என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று.*

*மேல், 'உழைக்கொண்ட பூநீர்' என்னும் மந்திரத்துள் 'எல்லா நலங்களும் சிவ பூசையின் பயனேயாதலை விளக்குதற்குக் கூறிய அதனை, அஃதுணர்ந்து பயன் பெறுபவர் உலகத்து அரியர்' என்பதுணர்த்துதற்கு இங்குக் கூறினார் என்க. இதன் ஈற்றடி எதுகை பெறாது வந்தது.*

***1815. தெளிவுரை :-** நீரும், பூவும் சுமந்து சென்று நோற்க வல்லவர் நடுவிலே நீவிரும் அமர்ந்திருந்து அவரைப்போல, நீவிரும் சிவனிடத்தும் பெரிய தவத்தைச் சிறிதும் குற்றமறச் செய்தலில் கருத்துடையீராய் அவனது திருவடிகளில் பலவகைப் பட்ட மலர்களைத் தூவி, அன்புக் கண்ணீரைப் பொழிதலால் மழையைப் பெய்யும் மேகத்திற்கு ஒப்பாகும்படி அச்செயலில் நிலைத்து நில்லுங்கள்.*

***குறிப்புரை :-** உழைக்கவல்லார் - தியான யோகத்தில் உழைக்கவல்ல மெய்யடியார்கள். உழை - பக்கம். சிவன்பால் அணுகும் வாய்ப்புடையவர் . 'மலர் ஏந்தி, மலர் தூவி" என இருகாற் கூறினமையால் இதற்கு இவ்வாறுரைத்தலே கருத்தென்க. மெய்யன்பர் மெய்யன்பரையே ஏற்றுக் கொள்ளுதல் பற்றி, அவர் நடுவில் இருந்து பூசை செய்க' என்றார். அணிகலத்தை உணர்த்தும் 'இழை' என்பது இங்குச் சிலம்பினைக் குறித்து நின்றது. பிழைப்பு - குற்றம். மந்திரலோபம், கிரியாலோபம், தந்திரலோபம், திரவியலோபம் என ஆகமங்கள் கூறும் குற்றங்கள்.*

*இதனால், 'மெய்த் தொண்டர்கள் உடன்படும் பூசையே பூசையாம்' என்பது உணர்த்தப்பட்டது. இழைக்கொண்ட பாதம் - சிந்தையோடு இழைதலைக் கொண்ட திருவடி.*

***1816. தெளிவுரை :-** உலகியலை அது மயக்காதவாறு வென்று போக்கி, 'இனியாம் விரைந்து செய்யத்தக்க பணியாது' என எண்ணி நின்றவர் யாவரும்,*

**1816.** வென்று விரைந்து விரைபணி என்றனர்
நின்று பொருந்த நிறைபணி நேர்படத்
துன்று சலமலர் தூவித் தொழுதிடிற்
கொண்டிடும் நித்தனும் கூறிய தன்றே. **18**

---

*என்றும் நல்லதொரு பணியில் நின்று சிவனை அடைவதற்கும், சிவனுக்கு மன நிறைவான பணி தமக்குக் கிடைத்தற்கும் மிகுந்த நீரையும், பூவையும் கொண்டு ஆட்டியும், தூவியும் வழிபட்டால், சிவன் அதனை விரும்பி ஏற்றுக் கொள்வான். இது படைப்புக் காலத்திற்றானே அப்பெருமானால் சொல்லப்பட்டது.*

***குறிப்புரை :-***

***'எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர், தாம்விரும்பும்***
***உண்மை யாவது பூசனை"***

*- தி.12 திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணம், 51*

*என உரைத்தருளினமையை நோக்குக. வென்று - **ஐம்பொறிகள் வழியாக ஐம்புலன்களிற் சென்று மேன்மேலும் வினைகளைத் தேடாமல் மனத்தை வென்று**. விரைப்பணி - மணந்தரும் தூபமிடும் தொண்டு.*

*"என்றனர்" என்பது வினையாலணையும் பெயர். 'என்றனர் தொழுதிடில் நித்தலும் கொண்டிடும். இஃது அன்றே கூறியது' என முடிக்க. மலருக்குரிய தூவுதல் கூறினமையின், சலத்திற்குரிய ஆட்டுதல் வருவிக்கப்பட்டது. 'நித்தலும்' என்பது பாடமாயின் 'சிவன்' என்பது வருவித்துக் கொள்க. "கூறியது" என்னும் பயனிலைக்கு 'அவன்' என்னும் எழுவாய் தோன்றாது கூறியது சிவாகமங்களில் என்க. **சிவபூசை செய்யுங்கள், இதுவே உமக்கு உபதேசமாம் எனல் நுதலிற்று**.*

*இதனால், "துறந்தார் சிவபூசையைக் குறைவின்றி நிறைவாகச் செய்து சிறந்த பயனைப் பெறற் பாலர்" என்பது கூறப்பட்டது.*

***1817. தெளிவுரை :-** சிவனை நாள்தோறும் இலிங்கத்தில் வைத்து, சுயம்பு முதலிய பெயர்களை மிகவும் சொல்லி மலர்களைச் சாத்தியும், திருப்பாடல்கள் பலவற்றால் மிகத் துதித்தும் நின்றால் காணுதல் கூடும். அஃது இயல்வதொன்றாய் இருக்கவும் அதனைச் செய்யாது புறக்கணித்துப் போவதால் உலகத்தார் சிவனைக் காண்கிலர். ஆயினும் இங்குக் கூறியவாறு ஆத்தி முதலிய மலர்களைத் தூவி அருச்சித்தலே அக அழுக்காகிய மும்மலங்களும் நீங்குதற்குரிய வழி. மும்மலங்களும் நீங்கினால் பெருந்திசையாகிய விட்டு நிலையிற் செல்லுதல் எளிதாகும்.*

***குறிப்புரை :-** "வைத்தும்" என்பதை முதலில் வைத்து உரைக்க. வைத்தல் - தாபித்தல். 'இலிங்கத்தில்' என்பது அதிகாரத்தால் வந்தது. ஏற்றுதல் - மிகுவித்தல்.*

**1817.** சாத்தியும் வைத்தும் சயம்புவென் றேத்தியும்
ஏத்திய நாளும் இறையை அறிகிலார்
ஆத்தி மலரிட் டகத்தழுக் கற்றக்கால்
மாத்திக்கே செல்லும் வழிஅது வாமே. **19**

**1818.** ஆவிக் கமலத்தின் அப்புறத் தின்புறம்
மேவித் திரியும் விரிசடை நந்தியைக்
கூவிக் கருதிக் கொடுபோய்ச் சிவத்திடைத்
தாவிக்கும் மந்திரம் தாம்அறி யாரே. **20**

---

*சிவனுக்கு ஆத்தியும், கொன்றையும் சிறப்பாக உரியன ஆதலின் அவற்றுள் ஒன்றை விதந்து கூறினார். சாத்தல் - மாலைகளைச் சாத்தல். வைத்தல் - நிவேதனம் வைத்தல். சயம்பு - சுயம்பு - தான்தோன்றி. யாராலும் தாபனம் செய்யப்படாதவர். ஆத்தி - ஆரத்தி - ஆசை. மா திக்கு - பெரிய திசை.*

*இதனால்,* ***<u>'மலம் நீங்கி வீடு எய்துதற்கு வழி சிவ பூசையே' என்பது கூறப்பட்டது</u>.***

***1818. தெளிவுரை :-*** *உடம்பில் கீழாக உள்ள மூலம் முதலிய ஆறும், அதற்குமேல் ஏழாவதாக உச்சியில் உள்ளதும் ஆக ஏழு உறுப்புக்களும் தாமரை மலர் வடிவின. அவை, "ஆதாரங்கள்" எனப்படும். ஏழாம் தானத்திற்குமேல் பன்னிரண்டங்குல அளவு அருவமாய் நிற்றலால் அது 'நிராதாரம்' எனப்படும். அந்த நிராதாரத்தையே, ''ஆவிக் கமலத்தின் அப்புறம்'' என்றார் இனி, அப்பன்னிரண்டங்குலத்திற்கு அப்பால் உள்ளது ''மீதானம்'' எனப்படும். 'துவாதசாந்தம்' என்பதும் இதுவே. இதனையே, "அப்புறத்தின் புறம்" என்றார். 'மீதானமே பரமசிவனுக்கு இடமாவது' எனக் கூறப்படுதலால், அவ்விடத்தில், "மேவித் திரியும் விரிசடை நந்தியை" என்றார்.*

*"ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று*
*மீதானத் தேசெல்க உந்தீபற;*
*விமலற் கிடமதென் றுந்தீபற" - திருவுந்தியார், 8*

*என்றது காண்க. கூவி - அழைத்து. ஆதாரங்களையும், நிராதாரங்களையும், அதற்கு மேலேயுள்ள மீதானத்தையும் கடந்து அப்பால் உள்ள பரமசிவனை அழைக்க வேண்டுதலால், அதன் பொருட்டு மலர்களை இருகைகளையும் தாமரைப் போது வடிவமாகக் குவித்தலும், மலர்த்தலும் இன்றி இடைப்பட்ட வடிவமாக வைத்து அதனுட் கொண்டு, இருதயம் முதலாக மேலுள்ள ஆதாரங்களில் பிராசாத மந்திர உச்சாரணத்துடன் முறையே மீதானம் மட்டும் உயர்த்துவர். அதன்பின்பு அங்கு இருகைகளையும் மலர்த்தி அவற்றுள் பரமசிவன் அளவிடற்கரிய ஒளிவடிவாய் வந்ததாகக் கருதி, கைகளை உயர்த்திய முறையிலே மீள இறக்கிக்*

சாணாகத் துள்ளே அழுந்திய மாணிக்கம்
காணு மளவும் கருத்தறிவா ரில்லை
பேணிப் பெருக்கிப் பெருக்கி நினைவோர்க்கு
மாணிக்க மாலை மனம்புகுந் தானே.

பெருந்தன்மை நந்தி பிணங்கிருள் நேமி
இருந்தன்மை யாலும்என் நெஞ்சிடங் கொள்ள
வருந்தன்மை யாளனை வானவர் தேவர்
தருந்தன்மை யாளனைத் தாங்கிநின் றோரே.

சமைய மலசுத்தி தனசெயல் அற்றிடும்
அமையும் விசேடமும் ஆமந் திரசுத்தி
சமையுநிர் வாணம் கலாசுத்தி யாகும்
அமைமன்று ஞானமா னார்க்கபி டேகமே.

---

*கொணர்ந்து சிவலிங்கத்தின் உச்சியில் அம்மலர்களைச் சொரிந்து முன்னமே சதாசிவ மூர்த்தமாகப் பாவித்து நிறுத்தப்பட்ட அம்மூர்த்தியின் இருதயத்தில் இருகைகளையும் கவிழ்த்து அமைக்கும் முறையால் இருக்கப் பண்ணுவர். அழைத்தல், அல்லது கொணர்தல் ஆவாகனம் எனவும், இருத்துதல் 'தாபனம்' எனவும் சொல்லப்படும். அவற்றையே, "கூவிக் கருதி" எனவும் "கொடுபோய்ச் சிவத்திடைத் தாபித்தல்" எனவும் கூறினார். மந்திரம், கிரியை, பாவனை இவற்றால் இலிங்கத்தில் சிவத்தை விளங்கச் செய்தலே தாபனம் எனப்படும்.*

***குறிப்புரை :-*** ***"தாவிக்கும் மந்திரம் தாம் அறியார்" என்றாராயினும், 'மந்திரத்தால் தாவித்தலை அறியார்' என்றலே கருத்தென்க. "கூவிக் கருதிக் கொடுபோய்த் தாவித்தலை அறியார்" என்றதனால், 'இவற்றுள் ஒன்றையும் அறியார்' என்றதாயிற்று. இனி, 'மந்திரத்தால் தாவித்தலை அறியார்' என்றதனால் 'சிலர் சிவ பூசை செய்யினும் முறைப்படி ஆசிரியரை அணுகி அவர் அருளிச் செய்தபடி செய்தலை அறியார்' என்றதும் ஆயிற்று. ஆவி - உயிர். அஃது ஆகுபெயராய் அஃது இருக்கும் இடமாகிய உடம்பைக் குறித்தது. "ஆவி" குளமுமாம் ஆதலின், குளத்தின் கண் உள்ள தாமரை" என வேறொரு பொருளையும் தோற்றுவித்தது.***

***இதனால், சிவபூசை செய்யத்தக்கது' என்பதும், 'செய்யுங்கால் முறைப்படி செய்தலே சிறப்பு' என்பதும் இறைவனை இலிங்கத்தில் ஆவாகிக்கும் முறையும் கூறப்பட்டன.***

***இம்மந்திரத்தின் பின் சில பிரதிகளில் காணப்படுகின்ற "சாணகத்துள்ளே" என்னும் பாடல் பல பிரதிகளில் இல்லை. அது நாயனார் வாக்காகத் தெரியவில்லை.***

**1819.** ஊழிதோ றூழி உணர்பவர்க் கல்லது
ஊழிவ் வுயிரை உணரவுந் தானொட்டாது
ஆழி அமரும் அரிஅயன் என்றுளோர்
ஊழி கடந்தும்ஓர் உச்சி யுளானே. **21**

---

*அதனை அடுத்துப் பதிப்புகளில் காணப்படும் "பெருந்தன்மை நந்தி" என்னும் மந்திரம் அடுத்த அதிகாரத்தில் இருத்தற்கு உரியது.*

*அதனை அடுத்துக் காணப்படும் "சமயம் மாசுத்தி" என்பது ஐந்தாம் தந்திரத்தில் "சரியை" என்னும் அதிகாரத்தில் வந்தது.*

***1819. தெளிவுரை :-*** *பாற்கடலில் பள்ளி கொள்பவனாகிய திருமாலும் மற்றும் பிரமனும் எத்துணையோ யுகங்கள் வாழ்பவராயினும் சிவபெருமான் அவர்கட்கு எட்டாதவனாகவே யிருக்கின்றான். அதனால், அளவற்ற பிறவிகளில் அளவற்ற யுகங்களில் சிவனைப் பொது நீக்கியுணர்ந்து வழிபடுபவர்கட்கல்லது ஏனையோர்க்கு அவரது வினை அவனை அடைய ஒட்டாது.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடி முதலாகத் தொடங்கியுரைக்க. யாதொரு பிறப்பும் நிலையாததே ஆகையால், 'ஊழிதோறும் உணர்தல் வேறு வேறு பிறப்பை எடுத்து' என்பது வெளிப்படை. உணர்தற்குச் செயப்படுபொருளாகிய 'சிவனை' என்பது அதிகாரத்தால் வந்தது. அதனால், "உணர்தல்" என்றது சிவனை உணர்தலேயாகையால், பொது நீக்கி உணர்தலாயிற்று. "உணர்வும்" என்ற உம்மையால் பின்னின்ற உணர்தல், உணர்ந்து அடைதலைக் குறித்தது.*

*"பல்லூழி காலம் பயின்றரனை அற்சிக்கின்*
*நல்லறிவு சற்றே நகும்" - சைவ சமய நெறி*

*எனப் பிற்காலத்தவரும் கூறினார். இவ்வுயிர் - இவ்வுலகத்துயிர்.*

*இதனால், 'சிவனை உணர்ந்து அடைதல் சிவஞானிகட்கே கூடும்' என்பதும், 'சிவஞானம் சிவபூசையாலன்றி வாராது' என்பதும் முடித்துக் கூறப்பட்டன.*

## 12. குரு பூசை

*சிவபூசைக்கு நிலைக்களமாகிய மூன்றனுள் இலிங்க வழிபாட்டினை முதற்கண் கூறிய நாயனார் அடுத்துக் குரு வழிபாட்டினைப் பத்து மந்திரங்களால் உணர்த்துகின்றார். அஃதாவது சிவபூசையை எழுந்தருளப் பண்ணித் தந்த சிவகுருவைப் பூசித்தலின் இன்றியமையாமையையும், பயனையும் பத்து மந்திரங்களான் உணர்த்துகின்றது இவ்வதிகாரம். முன்னர், சிவபூசை செய்யும் முறையையும், தீட்சை விதிகளையும் அவற்றாலெய்தும் பயனையும் அறிவித்த ஆசிரியர் இவ்வதிகாரத்தில் சிவத்துவ விளக்கந்தந்த சிவகுருவைச் சிவனாகவே பாவித்துப் பூசிக்க; நேசிக்க; வந்திக்க; வாழ்த்துக என்றுணர்த்துகிறாராதலின் அதன் பின்னர் இவ்வதிகாரம் அமைக்கப் பெற்றது.*

**1820.** ஆகின்ற நந்தி யடித்தா மரைபற்றிப்
போகின்ற வுபதேசம் பூசிக்கும் பூசையும்
ஆகின்ற ஆதாரம் ஆறாறு அதனின்மேற்
போகின்ற பொற்பையும் போற்றுகின் றேனே. 1

---

*1820. தெளிவுரை :- எனக்கு இனி வேறொரு துணையின்றாகத் தாம் ஒருவரே துணையாய் நிற்கின்ற நந்தி பெருமானது திருவடிகளைப் பற்றி நின்றே உயிர்கள் பற்றி ஒழுகுதற்குரிய இறைநூல், அவற்றின்வழி இறைவனை வழிபடும் வழிபாடு, அகக்கோயில்களாகிய ஆதாரங்கள், முப்பத்தாறு தத்துவங்கள், அத் தத்துவங்களைக் கடந்து அவையனைத்திற்கும் மேலே செல்கின்ற தூய்மை ஆகிய இவைகளை நான் கருத்தாக உணர்ந்து, உலகர்க்கும் உரைப்பேனாயினேன்.*

*குறிப்புரை :- 'இது குருவருளால் கிடைத்த பேறு' என்பதாம். இறைவன் உயிர்களின் பொருட்டு அருளிச்செய்தன ஆதலான், அவனது நூலாகிய வேத சிவாகமங்களை "உபதேசம்" என்றார். "போதல்" இரண்டில், முன்னது நடத்தல்; அஃதாவது ஒழுகுதல். பின்னது, கடந்து செல்லுதல். வேதச் சிறப்பு. ஆகமச் சிறப்பு முதலியவைகளை நாயனார் முதற்றொட்டுக் கூறிவருதல் வெளிப்படை. தமது வரலாற்றை உணர்த்துதற் பொருட்டுப் பாயிரத்துள், "நந்தியருளாலே நாதனாம் பேர்பெற்றோம்" எனக் கூறிய அதனை இங்குக் குருவருளின் பெருமையை உணர்த்துதற் பொருட்டுக் கூறினார். குருவருளால் தாம்பெற்ற பேற்றினையும், குருவை மறவாமையும் கூறியதனால், 'நீவிரும் குருவை அடையின் இப்பேற்றினைப் பெறலாம். பெற்றபின் குருவருளை மறக்கலாகாது' என்பது குறிப்பாயிற்று. ''போகின்ற'' இரண்டில் முன்னதில் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. தூய்மையை, "பொற்பு" என்றார். வீட்டு நிலை, சுத்த நிலையாதலை அறிக.*

*இதனால், குருவருளின் சிறப்பும், அதனைப் பெற்றோர் அவரை நினைந்தே எதனையும் செயற்பாலர் என்பதும் கூறப்பட்டன.*

**1821.** பெருந்தன்மை நந்தி பிணங்கிருள் நேமி
இருந்தன்மை யாலும்என் நெஞ்சிடங் கொள்ள
வருந்தன்மை யாளனை வானவர் தேவர்
தருந்தன்மை யாளனைத் தாங்கிநின் றாரே. 2

**1822.** கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுறு மாமலர் இட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரஒண் ணாதே. 3

---

***1821. தெளிவுரை :-*** *சிவனது திருவருளை மிகப்பெற்ற நந்தி பெருமான், அப்பேறுடைமை பற்றியேயன்றிச் சிவனோடு மாறுபட்டுப் பகைச் செயலையே புரிகின்ற ஆணவ இருளுக்குப் பகலவனாய் இருத்தல் பற்றியும் அவரை முனிவரும், தேவரும் தம் இதயத்திலே எப்பொழுதும் வைத்துத் தியானிக்கின்றனர்.*

***குறிப்புரை :-*** *சிவனது திருவருளினும் பெரியது வேறொன்றின்மையால் அதனையே, "பெருந்தன்மை" என்றார். 'பெருந்தன்மையை உடைய நந்தி' என்க. நேமி சக்கரம் ஆதலின் அது 'பரிதி' என்னும் பெயரைத் தோற்றுவித்துப் பகலவனை உணர்த்திற்று. 'நேமியாம் இருந்தன்மை' என்க. இருந்தன்மை - சிறப்பு. உம்மை இறந்தது தழுவிற்றாகலின் அதற்கேற்ற பொருள் முன்பு வருவிக்கப்பட்டது. "என் நெஞ்சு இடம் கொள்ள வரும் தன்மையாளன்" என்றது "என் சித்தத்தே தன்னை வைத்தருளிய குருமூர்த்தி (சிவஞான சித்தியார் சுபக்கப் பாயிரம்) என்றபடி "வானவர்" என்பதில், "வான்" என்பது, 'உயர்வு' என்னும் பொருட்டாய் நிற்க. "வானவர்" என்பது, 'உயர்ந்தோர்' எனப் பொருள் தந்தது. "வானவர் தேவர்" உம்மைத்தொகை. இதனை, "தாங்கி நின்றார்" என்பதற்கு முன்னே கூட்டியுரைக்க. 'தாங்குதல் அறிவினால்' ஆகலின், அதற்கு இவ்வாறு உரைக்கப்பட்டது.*

*இதனால், 'முனிவர், தேவர் என்பவரும் குருவின் வழியே ஞானம் பெறுகின்றனர்' எனக் குருவருளின் இன்றியமையாமை கூறப்பட்டது.*

***1822. தெளிவுரை :-*** *காட்டில் பொருந்தியுள்ள கோடிக் கணக்கான சந்தன மரங்களின் கட்டைகளைத் தேய்த்தெடுக்கப்பட்ட நறுமணம் கமழ்கின்ற சந்தனத்தையும், அதுபோலவே ஆகாயம் அளாவக் குவிக்கப்பட்ட பெருமை மிக்க மலர்களையும் பயன்படுத்திச் சிவனை வழிபட்டாலும் உடம்பைத் தம்மின் வேறாக உணர்ந்து அதன்கண் உள்ள பற்றை விடுத்துச் சிவனையே பற்றாக உணர்பவர்க்கல்லது ஏனையோர்க்கு அவனது, தேன் நிறைந்த செந்தாமரை மலர் போலும் திருவடியைச் சேர இயலாது. பீமசேனன் பூக்களை வானளாவ மலை போலக் குவித்து வழிபட்டான் என ஒரு வரலாறு உண்டு.*

**1823.** மேவிய ஞானத்தின் மிக்கிடின் மெய்ப்பரன்
ஆவயின் ஞான நெறிநிற்றல் அற்சனை
ஓவற உட்பூ சனைசெய்யில் உத்தமம்
சேவடி சேரல் செயலறல் தானே. **4**

---

*குறிப்புரை :-* 'அவனை அவ்வாறு உணரும் உணர்வைக் குருவினால் அன்றி அடைய இயலாது' என்பது குறிப்பெச்சம். கான் - காடு. கோடி - காத தூரம்.

இதனால், 'மேற்கூறிய சிவபூசையும் குருவருள் பெற்றே செயற்பாலது ஆகலின், **சிவபூசைக்கு முன்னே குருபூசை செய்தல் இன்றியமையாதது'** என்பது உணர்த்தப்பட்டது.

*1823. தெளிவுரை :-* குருவருளால் கேள்வியாகப் பெற்ற ஞானத்தைப் பின் சிந்தித்தல், தெளிதல் என்பவற்றின்பின் நிட்டையாக முதிரப் பெறின் அவ்விடத்தில் அந்த நிட்டையில் நிற்றலே பரசிவ பூசையாகும். (ஆகவே அந்நிலையை அடைந்தவர்க்கு ஏனையோர்க்குக் கூறப்பட்ட சிவபூசைகள் வேண்டாவாம்). அந்நிலையை அடையாது கேள்வி முதலிய மூன்றில் நிற்போர்க்கு, "உள்ளம் பெருங்கோயில்" என்னும் மந்திரத்துட் கூறியவாறு செய்யும் ஞான பூசையே சாதனமும், அப்பூசையின் பயனாகத் தற்போதம் கழன்றிருத்தலே பயனும் ஆகும்.

**சிவஞான வழி நிற்றலே சிவார்ச்சனை; இடைவிடாத தியானமே உத்தமமான பூசை. செயலறுதலே திருவடியைத் தியானித்தல் என்பது கருத்து.**

உயர்ந்தவற்றுள் எல்லாம் உயர்ந்தது ஆதலின் ஞானத்தை மேவிய ஞானம் என்றார். மேவிய என்பதற்குப் பொருந்திய எனலும் ஆம். **அர்ச்சனை - பூசையுள் ஒரு அங்கமான மலரிட்டு, மந்திரத்துடன் வழிபடும் செயலாம். அது இறைவற்கும் நமக்கும் நெருங்கிய தொடர்பூட்டுவது ஒன்றாதலின், அதனை இடைவிடாது செய்ய மெய்யுணர்வே விளையும் என்பார் இங்ஙனம் அருளினார்.**

உட்பூசனை - அகப்பூசை. மனத்தாலேயே எல்லாச் சாதனங்களையும் அமைத்துக் கொண்டு பூசித்தலாம்; இதனை 'மனமணியிலிங்கமாக' என்னும் திருவிருத்தத்தானும் உணர்க. "ஞானநூல் தனை ஓதல் ஓதுவித்தல் தற்பொருளைக் கேட்பித்தல் தான் கேட்டல் நன்றா, ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும் இறைவனடி அடைவிக்கும் எழில் ஞான பூசை" என்பதாலும் அறிக. மற்றும், மூலமந்திரத்தால் நெஞ்சைப் பூசைக்குரிய இடமாகவும், கொப்பூழை ஓம குண்டமாகவும், புருவ நடுவாகிய அநாகத்தைச் சிவம் விளங்கும் இடமாகவும் கொண்டு பயில்வது ஞானபூசையாம் எனலும் ஒன்று. முன்னது ஞானத்திற் சரியையில் நிற்பார்க்கும் பின்னது ஞானத்தில் யோகத்தில் நிற்பார்க்கும் உரியனவாம் என்க. பின்னதே ஓவற உட்பூசனை செய்தல் என்பதால் குறிக்கப் பெற்றது.

**1824.** உச்சியுங் காலையு மாலையும் ஈசனை
நச்சுமின் நச்சி நமஎன்று நாமத்தை
விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினும்
நச்சுமின் பேர்நந்தி நாயக னாகுமே. **5**

---

*செயலறலாவது சிவசிந்தனை ஒன்றே செயலாய் புறச்செயல் அற்று இருத்தல். அலையாத கடல் போல அமைதியுற்றிருத்தல். இங்ஙனம் ஞானபூசை, அகப்பூசை இயல்புகளை ஓர்க.*

***குறிப்புரை :-*** *'ஞானம் குருவருளாலன்றி வாராது' என்பது மேற்கூறப் பட்டமையால், இங்கு "மேவிய ஞானம்" என்றதற்கு இவ்வாறு உரைக்கப்பட்டது. "மெய்ப்பரன்" என்பது 'உண்மைச் சிவன்' என்பதாய், பரமசிவனைக் குறித்தது. ஞானமாவது, அவனையறியும் அறிவேயாதல் அறிக. நிட்டையே ஞானத்தின் நிறை நிலை என்றற்கு அதனை 'ஞானத்தின் ஞானம்' என்றும், ஏனைக்கேள்வி முதலிய மூன்றனையும், ஞானத்திற் சரியை, 'ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம்' என்றும் சிவாகமங்கள் கூறுதல் காண்க.*

*இனி நிட்டை நிலையை அடைந்தோரும் அந்நிலையிலே மீட்சியின்றி நிற்கமாட்டாது மீள்வாராயின் ஞானத்திற் சரியை முதலியவற்றில் உள்ளோர்க்குக் கூறப்பட்ட நெறியிற்றானே நிற்பர். அப்பொழுது அவையெல்லாம் 'உபாயநிட்டைகள்' என 'நிட்டை' என்றே சொல்லப்படும். ஏனையோர் செய்வன எல்லாம் எவ்வகையாலும் 'சரியை, கிரியை, யோகம்' என்றே சொல்லப்படும். நிட்டைக்குப் பயனே ஆனந்தமாக, உபாய நிட்டைக்குப் பயன் அருள்மயம் ஆதலே என்பதுபற்றி, 'செயலறல் தானே சேவடி சேரல்' என்றார்.*

*இதனால், 'நிட்டை நிலையை எய்தினோரும் அதனில் நிற்க மாட்டாது மீள்வாராயின் பின்னும் கீழ்நிலையை எய்தாமைப் பொருட்டு, குருபூசை சிவபூசைகளைச் செயற்பாலர்' என்பது கூறப்பட்டது.*

***1824. தெளிவுரை :-*** *உலகீர், 'காலை, நண்பகல், மாலை' - என்னும் மூன்று போதிலும் சிவனை வழிபட விரும்புங்கள். அவ்வழிபாட்டில் 'நம' என்பதை இறுதியில் உடைய மந்திரம் சிறப்புடையனவாகும். ஆதலால் அவற்றையே மிகுதியாக உங்கட்குப் பயனை விளைக்கும் வித்துக்களாக விதையுங்கள். அவ்வாறு விதைப்பதற்குரிய நிலமாய் விளங்குவன 'கதிர், மதி, தீ' - என்னும் முச்சுடர்களுமாம். (ஆகவே, அவ்விடத்து அவற்றை விதையுங்கள்) அச்சிவன் 'நந்தி' என்னும் பெயருடைய குருமூர்த்தியாயும் விளங்குவன். விரும்பி சிவயநம என்று அவன் திருப்பெயரைப் புகழுங்கள்.*

***குறிப்புரை :-*** *தமக்கு நந்திபெருமான் குருவாயினமை பற்றி, "நந்தி நாயகனாரும்" என்றருளிச் செய்தாரேனும், 'அவரவர்க்கு அருள் செய்த அவ்வக்*

**1825.** இந்துவும் பானுவு மியங்குந் தலத்திடை
வந்தித்த தெல்லாம் அசுரர்க்கு வாரியாம்
இந்துவும் பானுவு மியங்காத் தலத்திடை
வந்தித்தல் நந்திக்கு மாபூசை யாமே. 6

---

குருமார்களாயும் அவன் விளங்குவான்' என்பதே கருத்தென்க. எனவே, 'இங்கு விதிக்கப்பட்ட முறையிலே குருவை வழிபடுக' என்றதாம். 'குருவருள் பெற்றோர்க்குக் குருவே சிவனாதல் பற்றி, முச்சுடர் முதலிய எவ்விடத்தும் அவர் குருவையே காண்பர்' என்பதாம். "நாயகன்" என்பது இங்குக் குருவைக் குறித்தது.

செய்யுள் நோக்கி "உச்சி" முதற்கண் வைக்கப்பட்டது. ஆன்மார்த்த வழிபாட்டிற்கு முப்போதே அமையும் ஆதலின் அவற்றையே கூறினார். காலையின் விரிவு விடியலும், மாலையின் விரிவு ஏற்பாடுமாக நள்ளிரவுங் கூட்டி ஆறுகாலம் பரார்த்த வழிபாட்டில் கொள்ளப்படுகின்றன. அவை முறையே உஷத்காலம், பிராதக் காலம், மாத்தியானிக காலம், சாயங்கால உபசந்தி (பிரதோஷ காலம்) சாயங்கால மகாசந்தி (இரண்டாம் காலம்) அர்த்த ஜாமம் எனப்படுகின்றன. மலர் தூவி அருச்சித்தல் முதலாகப் பெரும்பாலானவற்றிற்கு உரியவாகும் சிறப்புப் பற்றி, 'நம' என்னும் மந்திரங்களையே குறித்தார்.

இதனால், குருவழிபாடு முப்போதும் செய்தற்குரியதாதல் கூறப்பட்டது.

இதனை அடுத்துப் பதிப்புக்களில் காணப்படும் "புண்ணிய மண்டலம்" என்னும் மந்திரம் அடுத்த அதிகாரத்திற்கு உரியது.

*1825. தெளிவுரை :- எனின், ஞானத்தால் பூசித்தலே பூசை எனல். பகலும் இரவும் அற்ற என்றும் ஒளி மயமான இடத்தில் வணங்குதலே சிவத்திற்கு உரிய பெரிய பூசையாகும். பகலென்றும் இரவென்றும் விளங்கும் வேற்றுமை ஞானம் விளங்குமிடத்தில் செய்த வழிபாடு அனைத்தும் அசுரர்களுக்குப் பயன்படுவனவாம் என்றவாறு.*

*அபேதஞானம் விளைந்தவிடத்துச் செய்யப்பெறும் பூசனையே சிவபூசை; பேதஞானத்தால் செய்யப்படும் பூசை ஆசுரம் என்பது கருத்து.*

*குறிப்புரை :- இந்து - சந்திரன். இந்து இலங்கும் தலம் இரவு. பானு - சூரியன். தலம் - பகல் என்க. இரவு என்றும், பகல் என்றும் வேற்றுமை தோன்றாத அதாவது, என்றும் ஒளிமயமான இடம். அது சிவஞானத் தெளிவும் செயலும் சிறந்து தோன்றும் நிலை.*

*வாரி - பயன். பேதஞானத்தால் செய்யப்பெறின் அசுரப்பிரீதியாம். அபேத ஞானநிலையில் ஆற்றப்படின் சிவப்பிரீதியாம் என்க.*

*பின்னரும் 'பகலும் இரவும் பயில்கின்ற' (1885) எனவும், 'இராப்பகலற்ற இடத்தே' (1856) எனவும் விளக்குதல் காண்க.*

**1826.** இந்துவும் பானுவு மென்றெழு கின்றதோர்
விந்துவும் நாதமு மாகிமீ தானத்தே
சிந்தனை சாக்கிரா தீதத்தே சென்றிட்டு
நந்தியைப் பூசிக்க நற்பூசை யாமே. 7

---

*இங்ஙனமன்றி, இடைகலை பிங்கலைகளில் பிராணன் இயக்கும்போது இயற்றப்படும் பூசை அசுரப் பிரீதியாம்; சுழுமுனையில் இயங்கும்போது இயற்றப்படும் பூசை சிவப் பிரீதியாம் என்பாருமுளர். அவ்வுரை யோகமாமேயன்றி ஞான யோகம் ஆகாமை உணர்க. ஈண்டு அதிகாரப்பட்டு நிற்பது ஞானத்தின் யோகமாகலும் தெளிக.*

*இதனால், எவ்வகை வழிபாடும் பெரும்பயன் தருதற்கு ஆவதொரு வழி கூறப்பட்டது. இதனை எந்த வழிபாடு கூறுமிடத்திலும் கூறலாமாயினும் குரு வழிபாடு சிறந்தமை பற்றி இங்கே கூறினார்.*

***1826. தெளிவுரை :-** சந்திரகலையும், சூரிய கலையுமாகச் சொல்லப்படுகின்ற மூச்சுக்காற்று அடக்கப்பட்ட பொழுது நடுநாடி வழியாக மேல் ஏறி விந்துத் தானமாகிய ஆஞ்ஞையையும், நாதத்தானமாகிய ஏழாந்தானத்தையும் கடந்து அதற்குமேல் பிரமரந்திரம் வழியாகப் பன்னிரண்டங்குல அளவுள்ள நிராதாரத்தே செல்லின் அந்நிலை 'சாக்கிரத்தில் துரியம்' எனப்படும். அதனையும் கடந்திருப்பது மீதானம். அது சாக்கிரத்தில் அதீத்தானம். அந்நிலையில் சிந்தனையைச் செலுத்திச் சிவனை வழிபடுதலே எல்லாவற்றிலும் மேலான வழிபாடாம்.*

***குறிப்புரை :-***

*"ஆதாரத் தாலே நிராதாரத் தேசேன்று*
*மீதானத் தேசெல்க உந்தீபற;*
*விமலற் கிடமதென் றுந்தீபற" - திருவுந்தியார், 8*

*என்னும் திருவுந்தியார் இங்கு நோக்கத்தக்கது.*

*மீதானமே, "துவாதசாந்தப் பெருவெளி" என்றும், துரியங் கடந்த பரநாத மூலத்தலம்" (மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ் - முத்தப்பருவம், 1) என்றும் சொல்லப்படுகின்றது. "சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் இந்நிலையினரே" எனச் சேச்கிழார் விளக்குதல் காண்க. (தி.12 சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் பு.1) என்று - எனப்பட்டு. எழுகின்றது - எழுகின்ற மூச்சுக் காற்று. ஓர் - சிந்திக்கின்ற; வினைத்தொகை. ஆகி - இடத்தால் அவையேயாய். "சென்றிட்டு" என்பதை "மீதானத்தே" என்பதன் பின்னர்க் கூட்டுக. 'அதீதத்ததே' என்பது இடைக் குறைந்து "அதீதத்தே" என நின்றது. __இந்துவிலிருந்து விந்துவாகிய சத்தியும், பானுவிலிருந்து நாதமாகிய சிவமும் எனக் கொள்க__.*

*இதனால், 'எல்லா வழிபாட்டிலும் மேலான வழிபாடு இது' என அதன் இயல்பு கூறப்பட்டது.*

**1827.** மனபவ னங்களை மூலத்தின் மாற்றி
அநித உடல்பூத மாக்கி யகற்றிப்
புனிதன் அருளினிற் புக்கிருந் தின்பத்
தனிஉறு பூசை சதாசிவற் காமே. **8**

**1828.** பகலு மிரவும் பயில்கின்ற பூசை
இயல்புடை யீசற் கிணைமல ராகா
பகலு மிரவும் பயிலாத பூசை
சகலமுந் தான்கொள்வன் தாழ்சடை யோனே. **9**

---

***1827. தெளிவுரை :-*** *மனத்தின் ஓட்டத்திற்குக் காரணமாயுள்ள இட ஓட்ட வல ஓட்ட மூச்சுக் காற்றுக்களை அவ்வழியே ஓட விடாது தடுத்து நடு நாடி வழியாக ஓடும்படி மாற்றி, பூத காரியமாய் நின்று அழிகின்ற உடலை அவ்வாறு அழியாது நிலைத்திருக்கின்ற உடலாகச் செய்தற் பொருட்டு அதன் காரணமாகிய பூதங்களில் ஒடுக்கி அவையாகச் செய்யுமாற்றால் போக்கி, மீண்டு அது திருவருளினின்றும் தோன்றச் செய்யுமாற்றால் திருவருள் உடம்பாக ஆக்கி அதனுள் தான் புகுந்து சிவமாகி அதனானே சிவானந்தம் மேலிட நின்று வழிபடும் வழிபாடே ஒப்பற்ற வழிபாடாகும். அதனையே சதாசிவ மூர்த்தி என்பர்.*

***குறிப்புரை :-*** *"மூலம்" என்பது ஆகுபெயராய் அதற்கு மேலுள்ள சுவாதிட்டானத்தையும், பின் அங்குள்ள சுழுமுனை நாடியையும் குறித்தது. "மூலத்தான்" என்பது பாடமாயின், 'மூலமாகிய அவ் விடத்து' என உரைக்க. 'அநித்தம்' என்பது, "அநிதம்" என இடைக் குறைந்து நின்றது. "புக்கு" என்றதனால் முன்பு வெளியே சென்றிருந்தமை பெறப்பட்டது. சிவபூசையைத் தொடங்குதற்கு முன்னே யோக பாவனையால் பூதசுத்தி செய்யுமாற்றால் பௌதிக உடலை அழித்துப் பாவனையால் சிவமாகிய பூசையைத் தொடங்குதலும், அதன் பொருட்டு பூத சுத்திக்கு முன்னே தன்னைப் பௌதிக உடம்பினின்றும் பிரித்துத் துவாத சாந்தமாகிய மீதானத்திலுள்ள சிவத்தின்பால் சேர்த்து நிறுத்திப் பின்பு மீட்டும் முன்போற் கொணர்ந்து திருவருள் உடம்பிற் சேர்த்துச் சிவமாகின்ற முறை இம்மந்திரத்தில் உணர்த்தப்பட்டது. இவ்வாறு செய்தலே உண்மைச் சிவபூசையாகலானும், இதனைக் குரு முகமாக அன்றி அறிதல் கூடாமையால் 'அவ்வாறு அறியாது தாம் தாம் அறிந்தவாறே செய்யும் பூசைகள் எல்லாம் பொதுச் சிவ பூசைகளே' என்று சிவாகமங்கள் கூறுகின்றன. அதனையே இங்கு நாயனார் உணர்த்தினார் என்க.*

*இதனால், சிவபூசை உண்மைச் பூசையாக அமையுமாறு கூறப்பட்டது.*

***1828. தெளிவுரை :-*** *பகலும், இரவும் ஆகிய கால வேறுபாடுகள் தோன்றுகின்ற பூசைகள் காலத்தைக் கடந்தவனாகிய சிவனுக்கு முற்றிலும் நேர்படும் பூசைகள் ஆகா. மற்று, அவ்வேறுபாடு தோன்றாத பூசைகளையே*

**1829.** இராப்பக லற்ற இடத்தே யிருந்து
பராக்கற ஆனந்தத் தேறல் பருகி
இராப்பக லற்ற இறையடி யின்பத்து
இராப்பகல் மாயை இரண்டடித் தேனே. **10**

---

*சிவன் முழுமையாக ஏற்பான்.*

***குறிப்புரை :-*** *'உலகியல் முற்றும் மறக்கப்படாத வரையில் பகலும், இரவுமாகிய காலவேறுபாடுகள் தோன்றாமற் போகமாட்டா. அதனால் அவை சிவன் ஒருவனையே நினைந்து செய்யும் பூசைகள் ஆதல் இல்லை. உலகியல் முற்றும் மறக்கப்பட்ட பொழுது மேற்கூறிய வேறுபாடுகள் தோன்றமாட்டா ஆதலால் அந்நிலையில் நின்று செய்யும் பூசைகளே சிவனையன்றி வேறொன்றையும் நினையாத பூசையாம்' என்றபடி.*

*சண்டேசுர நாயனார் சிவபூசை செய்து கொண்டிருக்கும் பொழுது அவர்தம் தந்தை வந்து அவரை வைததையும் தண்டால் பலமுறை முதுகிற் புடைத்ததையும் அவர் சிறிதேனும் அறியாதிருந்ததையும், பின்பு அவன் சிவபூசைக்கு அழிவை உண்டாக்கியதை உடனே அறிந்ததையும் இங்கு நினைவு கூர்க. அதுபோலும் சிவபூசையே முழுமையான சிவபூசை யாகும்.*

*கையொன்று செய்ய விழியொன்று நாடக்*
*கருத்தொன்றெண்ணப்*
*பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப்*
*புலால்கமழும்*
*மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க*
*விரும்புமியான்*
*செய்கின்ற பூசைஎவ் வாறுகொள் வாய்வினை*
*தீர்த்தவனே.* *- பட்டினத்தடிகள்*

*எனப் பிற்காலப் பெரியார் அருளிச் செய்தது இக்கருத்துப் பற்றியேயாம். மலரால் செய்யப்படுவதனை "மலர்" என்று உபசரித்தார். சகலமும் - முற்றிலும்.*

*இதனால், சிவபூசை நிரம்பாவாறும், நிரம்புமாறும் கூறப்பட்டன.*

***1829. தெளிவுரை :-*** *இரவும், பகலும் ஆகிய கால வேறுபாடுகள் தோன்றாத ஆழ்ந்த தியான நிலையிலேயிருந்து, அதனால் விளைகின்ற சிவானந்தமாகிய தேனை வேறு நினைவின்றிப் பருகினமையால், இரவும் பகலும் ஆகிய கால வேறுபாடுகள் இல்லாத இறைவனது திருவடியின்பத்தில் திளைத்து, மேற்கூறிய வேறுபாடுகளையுடைய காலமாகிய மாயா காரியம் இரண்டினையும் யான் போக்கிவிட்டேன்.*

*__குறிப்புரை :-__ "தேறல்" என்றது 'தேன் துளி' என்னும், பொருட்டாய்ச் சிவானந்தத்தை ஓரளவே சுவைத்ததையும், "இன்பம்" என்றது 'இன்ப வெள்ளம்' என்னும் பொருட்டாய் அதில் மூழ்கித் திளைத்ததையும் குறித்தன. யோகாவத்தையில் தியானம் துரியமும், சமாதி துரியாதீதமும் ஆதலை விளக்குதற்கு இவ்வாறு அருளிச் செய்தார்.*

*இதனால், சிவ பூசையைத் தாம் நிரம்பச் செய்து பெற்ற அநுபவத்தை விளக்கி முடித்தவாறு.*

## 13. மாகேசுர பூசை

*மாகேசுரனைச் சார்ந்தவர் மாகேசுரர். எனவே 'சிவனடியார்' என்றபடி, சிவபூசைக்குரிய நிலைக்களங்கள் மூன்றனுள், சிவபூசை, குருபூசை என்னும் இரண்டினையும் உணர்த்தியபின் முறையானே சங்கம பூசையை ஒன்பது திருமந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

*சிவனடியார்களை சிவன் எனவே வழிபடுக என்னும் மரபின்வழி மாகேசுரர்களாகிய அடியார்களைப் பூசிக்கின்ற முறைமையினையும் பயனையும் உணர்த்துதலின் இவ்வதிகாரம் இப்பெயர்த்தாயிற்று. மாகேசுரர் - சிவனை இடைவிடாது நேசித்தும் பூசித்தும் வழிபடும் அடியார்கள். அவர்களைப் பூசை செய்தலும் அரன்பூசையே. ஆதலால் குருபூசையின் பின் இதனை அமைத்தவாறாம். அதிகார இயைபும் இதனானே காண்க.*

**1830.** படமாடக் கோயிற் பகவற்கொன் றீயின்
நடமாடக் கோயில் நம்பற்கங் காகா
நடமாடக் கோயில் நம்பற்கொன் றீயின்
படமாடக் கோயிற் பகவற்க தாமே. 1

---

*1830. தெளிவுரை :- கொடித் துகில் ஆடுகின்ற இயங்காக் கோயிலினுள் எழுந்தருளியிருக்கும் சிவனுக்கு ஒரு பொருளை ஏற்பித்தால் அஃது எங்கும் இயங்குகின்ற உடம்பாகிய கோயிலினுள் எழுந்தருளியிருக்கின்ற சிவனுக்குச் சேரமாட்டாது; அங்கேயே இருந்துவிடும். ஆனால், எங்கும் இயங்கும் உடம்பாகிய கோயிலினுள் எழுந்தருளியிருக்கும் சிவனுக்கு ஒரு பொருளை ஏற்பித்தால் அஃது அந்தச் சிவனுக்கு ஆதலுடன், கொடித்துகில் ஆடுகின்ற இயங்காக் கோயிலினுள் எழுந்தருளியிருக்கின்ற சிவனுக்கும் போய்ச் சேர்வதாகும்.*

*குறிப்புரை :- 'ஆகவே, இருவரையும் வழிபடல் வேண்டுமாயினும், இயங்கும் கோயிலினுள் இருக்கும் சிவனை வழிபடுதல் தவிரத் தக்கதன்று' என்றபடி.*

*படம் - சீலை. உருவம் தீட்டிய துணி. "ஆடும்" என்றதனால், அது கொடிச் சீலையைக் குறித்தது. "கட்டமாக மக்களால் அமைக்கப்பட்ட கோயில்' என்பதை விளக்க. "படம் ஆடு அக்கோயில்" எனவும், "உள்ளம் பெருங்கோயில்; ஊனுடம்பு ஆலயம்'' என்றபடி, ''உடம்பாகிய கோயில்'' என்பதை விளக்க. ''நடமாடு அக்கோயில்" எனவும் கூறினார். நடமாடுதல் - உலாவுதல். நடம் ஆடுதல் என்பது, 'நடனம் ஆடுதல்' எனப் பொருள் தருமாயினும் உலகவழக்கில் 'உலாவுதல்' என்னும் அளவாய் நிற்றலின் அஃதேபற்றி "நடமாடும் அக்கோயில்" என்றார்.*

*'திருக்கோயிலினுள் இருக்கும் திருமேனிகள் மந்திர சந்நியத்தால் சிவனேயாய் விளங்குதல் போல, அடியார்களது ஆன்ம சைதன்னியமும் ஆழ்நிலைத் தியான சமாதிகளாலும், அருள்ஞான உணர்வாலும் சிவனேயாம்*

**1831.** தண்டறு சிந்தைத் தபோதனர் தாம்மகிழ்ந்து
உண்டது மூன்று புவனமும் உண்டது
கொண்டது மூன்று புவனமும் கொண்டதென்று
எண்டிசை நந்தி எடுத்துரைத் தானே. 2

---

*ஆதலின், இடவேறுபாடு பற்றி வேற்றுமையில்லை' என்றற்கு இரண்டினையும், "பகவன், நம்பன்" என்றே குறித்தருளினார். இதனால் 'மாகேசுரர் மகேசுரனை' என்பதைக் குறிப்பால் உணர்த்தியவாறு. "ஒன்று" என்றது, 'எடுத்துக்காட்டிற்கு ஒன்று' என்றவாறு.*

*படமாடக்கோயில் - படம் பிடித்தாற் போலச் சிற்பம் செறியப்பெற்ற கோயில்*

*நடமாடக்கோயில் - நடக்கும் மாடக் கோயில்களாகிய அடியார்கள்.*

*பகவன் - ஆறு குணங்களை உடைய பரமன்*

*நம்பன் - சிவன்*

*இதனால், 'இலிங்க பூசை இயலாதாயினும் சங்கமபூசை ஒழியாது செய்யத்தக்கது' என்பது கூறப்பட்டது.*

***1831. தெளிவுரை :- <u>சிவஞானி உண்டதும் கொண்டதும், உலகம் உண்டதும் கொண்டதுமாம். சிவஞானியர் - விசுவரூபியர்</u>. 'சிவனிடத்தினின்று பிறிதொன்றால் நீக்கப்படாத உள்ளத்தினையுடைய மாகேசுரர்கள் மனமகிழ்ந்து உண்ட பொருள் மூன்றுலகங்களும் உண்ட பொருளாகும்; (அவற்றிற்கு அது பயனாகும்' என்பதாம்) அதுபோலவே அவர்கள் பெற்றுக்கொண்ட பொருளும் மூன்றுலகங்களும் பெற்றுக்கொண்ட பொருளாம், என்று நந்தி பெருமான் எங்கட்குச் சிறந்தெடுத்துக் கூறினார். ஞானி உண்டால் அது ஞாலம் உண்டது போல.***

*குறிப்புரை :- <u>'சிவன் இலிங்க பூசையை ஏற்று மகிழ்தலினும் தன் அடியவர் பூசையை ஏற்பதில் மிக்க மகிழ்ச்சி எய்துவன் ஆதலின், அம்மகிழ்ச்சியால் அவனை உயிராக உடைய உலகம் அனைத்தும் மகிழ்வெய்தும்' என்றபடி. 'அத்துணை மகிழ்ச்சிக்குக் காரணம் அவரது உணர்வின் சிறப்பு'</u> என்பதை உணர்த்த, "தண்டறு சிந்தைத்தபோதனர்" என்றார். தண்டு - கேடு. தண்டறு சிந்தை - கேடற்ற சிந்தை. "எண்டிசை" என்பதன் பின் 'புகழும்' என ஒரு சொல் வருவிக்க. "மகிழ்ந்து உண்டது" என்றதனால், 'அவர் மகிழும்படி வழிபடல் வேண்டும்' என்றதாயிற்று.*

> *இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்*
> *துணைத்துணை வேள்விப் பயன். - திருக்குறள், 97*

*என்னும் பொதுமறையை இது முதலாக வருகின்ற மந்திரங்களோடு ஒப்பிட்டுணர்க.*

**1832.** **மாத்திரை ஒன்றினில் மன்னி அமர்ந்துறை**
**ஆத்தனுக் கீந்த அரும்பொரு ளானது**
**மூர்த்திகள் மூவர்க்கும் மூவேழ் குரவர்க்கும்**
**தீர்த்தம தாம்அது தேர்ந்துகொள் வீரே.** **3**

---

*1832.* ***தெளிவுரை :-*** *இப்பாடலின் பொருள் பின்வரும் குறிப்புரையால் இனிது விளங்கும்.*

***குறிப்புரை :-*** *'சீவன்' என்னும் பெயரின் முதலெழுத்து இரு மாத்திரையுடையதும், 'சிவன்' என்னும் பெயரின் முதலெழுத்து ஒரு மாத்திரையுடையதும் ஆதல் பற்றி, 'சீவன்' என்னும் நிலையில் நில்லாது, சிவனிடத்தில் நிலைத்து நின்று அவனேயான அடியவனை, 'மாத்திரை யொன்றின் மன்னியமர்ந்துறை - ஆத்தன்' என்றார். சிவனடியார்கள் மாகேசுரன் எனப்படும் காரணத்தை விளக்கியவாறு. 'மகேசுரனுக்குள் அடங்கிநிற்பவன் மாகேசுரன்' என்றபடி. ஆத்தன் - நம்புதற்குரியவன். 'தன்னை நம்பினவர்க்கு உறுதியையே சொல்லுதலும், செய்தலும் உடையவன்' என்பதாம். எனவே, மாகேசுரர் அத்தகையினர் என்பது பெறப்பட்டது. சிறப்புணர்த்த வேண்டிச் சாதியொருமையாற் கூறினார். 'இப்பெயர் ஆசாரியனையே குறிக்கும் என்பாரும் உளர். அங்ஙனமாயினும் இம்மந்திரம் 'குருபூசை' என்னும் அதிகாரத்தில் உளதாக வேண்டும் என்க.*

*மூர்த்திகள் மூவர் - இலயசிவம், போகசிவம், அதிகாரசிவம் ஆகிய அருவம், அருவாரூபம், உருவம் என்ற மூர்த்திகள். அயன், அரி, அரன் என்பாருமுளர். அயன் முதலானோர் சமயம் **முதல் ஆசாரியாபிடேகம் வரை பெற்று அனுபூதிமானாக விளங்கும் ஆசாரியனைக் காட்டிலும் சிறந்தவர்களல்லர்**. ஆதலால் அவர்களைக் கூறுதல் ஏற்பதன்று. அன்றிச் சிவதீட்சை பெற்றார்க்கு ஈந்த பொருள் சிவதீட்சை பெறாதாரை எய்தாது என்ற மரபும் ஆகமும் ஓர்க.*

*மூ எழு குரவர் - மூத்தோராகிய குரவர் எழுவர்; அம்பிகை குரு, கந்த குரு, கணாதிபகுரு, லக்ஷ்மி குரு, வாணிகுரு, சண்டகுரு, விஷ்ணுகுரு என்பார். மேற்குவாயிற் பூசையில் இவ்வெழுவரையும் வைத்துப் பூசித்தலும் சிவ ஆகமங்களின் துணிபாகலானும், இவர்களே எல்லாரினும் மூத்தாராதலாகானும், மூ எழு குரவர்க்கும்' என்றார். தந்தை வழி தாய் வழி, மனைவி வழி மூத்தோர் என்பாரும் உளர். அவர்கட்குச் செய்யும் சடங்கு சென்று பற்றும் கிரியாயாமே யன்றி, மாகேசுர பூசையாகிய பதிபுண்ணியத்தில் பங்கு பற்றாதாம் என்பது.*

*1833.* ***தெளிவுரை :-*** *அந்தணர் வாழும் வீதிகள் பலவற்றை அவர்கட்குத் தானம் செய்தலும், அவ்வீதிகளில் அவர்கட்கு உயர்ந்த மாட மாளிகைகள் பல கட்டித் தருதலும் ஆகிய இவற்றால் விளையும் பயன்கள் யாவும் மாகேசுரன் ஒருவனை வழிபட அவன் உண்டதனால் விளையும் பயனளவிற்கு ஒவ்வாது*

**1833.** அகர மாயிர மந்தணர்க் கீயிலென்
சிகர மாயிரஞ் செய்தே முடிக்கிலென்
பகரு ஞானி பகலுண்பலத் துக்கு
நிகரிலை யென்பது நிச்சயந் தானே. 4

**1834.** ஆறிடு வேள்வி அருமறை நூலவர்
கூறிடு மந்தணர் கோடிபேர் உண்பதில்
நீறிடுந் தொண்டர் நினைவின் பயன்நிலை
பேறெனில் ஓர்பிடி பேறது வாகுமே. 5

---

*குறைவனவே என்பது உறுதி.*

*குறிப்புரை :- "அகரம்" என்பது 'அக்கிரகாரம்' என்பதன் மரூஉ. 'முதற் சுற்று' என்பது அதன் பொருள். 'கோயிலைச் சூழ்ந்த முதற் சுற்று வீதிகளே அந்தணர் இருத்தற்குரிய இடம்' என்பது வைதிக முறைமையாதலின் அம்முறைமைபற்றி அவர்கள் வீதி எங்கிருப்பினும் அஃது 'அக்கிரகாரம்' எனப்பட்டது. 'அந்தணர்களை மாட மாளிகைகளில்தான் வாழவைத்தல் வேண்டும், என்பதும் வைதிக நெறியாகலின், அவர்கள் வாழும் முதற்சுற்று வீதி, 'மாடவீதி' எனப்பட்டது. சிகரம் - கோயில்.*

*'திருக்கோயிலை நடுவாக வைத்து அதனைச் சூழ ஏழு சுற்று அமைய மதில்களை எழுப்ப அவைகளில் அமையும் வீதிகள் யாவும் மாடவீதிகள் எனவும், 'அவ்வீதிகளில் பரத்தையர் தவிர மற்றையோர் யாவரும் கலந்தே வாழ்தல் வேண்டும்' எனவும், 'அந்த வீதிகளைச் சுற்றிக் கடைத்தெருக்கள் இருத்தல் வேண்டும்' எனவும், 'ஆக எல்லா வீதிகட்கும் புறத்திலே பரத்தையர் வீதி அமைதல் வேண்டும்' எனவும் சிவஞான யோகிகள் தமது காஞ்சிப் புராணத்தில் 'நகர வருணனை' வாயிலாகப் புலப்படுத்தியுள்ளார். பலம் - பயன்.*

*பகரும் ஞானி - இவ்விடத்தில் சொல்லப்படும் ஞானி; மாகேசுரன். "பகல்" என்றது 'ஒரு பகல்' என்றபடி. இம்மந்திரத்தில் பாடம் திரிபு பட்டுள்ளது.* ***ஞானி ஒரு நாளைக்கு ஒரு முறைதான் உண்பார். அதுவும் பகலில் மட்டும் உண்பார்.***

*இதனால், அந்தணர்க்குச் செய்யும் தானங்களினும் மாகேசுரருக்குச் செய்யப்படும் தானம் பன்மடங்கு உயர்ந்ததாதல் கூறப்பட்டது.*

***1834. தெளிவுரை :-*** *ஆறு அங்கங்களால் தெளிய உணர்த்தப்படும் வேள்விகளைச் செய்கின்றவரும், வேதமாகிய நூலை ஓதுகின்றவரும், முப்புரிநூல் அணிபவரும் ஆகிய அந்தணர்கள் கோடிபேர் உண்டு மகிழ்வதனால் உண்டாகின்ற பயனோடு திருநீற்றை யணிகின்ற சிவனடியார்கள் சிலர் உண்டு மகிழும் மகிழ்ச்சியால் விளைந்து நிலைக்கின்ற பயனை வைத்து எண்ணிப் பார்க்குமிடத்து, முன்னர்க் கூறிய பயன் பின்னர்க் கூறிய உணவில் ஒரு*

**1835.** ஏறுடை யாய்இறை வாஎம் பிரான்என்று
நீறிடு வார்அடி யார்நிகழ் தேவர்கள்
ஆறணி செஞ்சடை யண்ணல் இவரென்று
வேறணி வார்க்கு வினையில்லை தானே. **6**

அத்தன் நவதீர்த்தம் ஆடும் பரிசுகேள்
ஒத்தமெய்ஞ் ஞானத் துயர்ந்தார் பதத்தைச்
சுத்தம தாக விளக்கித் தெளிக்கவே
முத்தியாம் என்றுநம் மூலன் மொழிந்ததே.

---

*படியினால் விளையும் பயனளவேயாகும்.*

***குறிப்புரை :-*** *'அருமறை கூறிடும் நூலவர்' என மொழி மாற்றியுரைக்க. "உண்பது" என்பது ஆகுபெயராய், அதனால் விளையும் பயனைக் குறித்தது. "உண்பதில்" என்றது உருபு மயக்கம்.*

*இதனால், 'தானங்களில் தலையாயதாய அன்னதானமும் அந்தணர்க்குச் செய்தலினும் மாகேசுரர்க்குச் செய்தலே கோடானு கோடி மடங்கு மிக்க பயனைத் தரும்' என்பது கூறப்பட்டது.*

***1835. தெளிவுரை :-*** *'இடபத்தை ஊர்தியாகவும், கொடியாகவும் உடையவனே! இறைவா! எங்கள் பெருமானே' என்று சிவனை எப்பொழுதும் துதித்து அவனது அருள் வடிவாகிய திருநீற்றை அன்புடன் அணிகின்றவர்கள் அவனுக்கு அடியராவார்கள். அவர்களை 'இவர்களே நிலவுலகில் காணப்படுகின்ற தேவர்கள்' என்றும், 'சிவபெருமான்' என்றும் கருதி அவரை மக்களின் வேறாக வைத்து வழிபடுகின்றவர்கட்கு அவரால் முன்பு செய்யப்பட்டுக் குவிந்து கிடக்கின்ற வினைகள் கெட்டொழிதல் உறுதி.*

***குறிப்புரை :-*** *தீவிர சத்திநிபாதர்க்கன்றி ஏனையோர்க்குச் சிவனையொழித் தொழிந்த தேவரை வழிபடாத நிலை உண்டாகாதாகலின் அவரை நோக்கி, 'இவரே தேவருமாவர்' என்றார். முன்பு "மூர்த்திகள் மூவர்க்கும் ஆம்" என்றதும் அவரை நோக்கி. மந்த சத்திநிபாதத்திற் செய்யும் வழிபாடு தீவிர சத்திநிபாதத்தைத் தந்து அதன்வழி நிகழும் வழிபாட்டினால் வினையை ஒழிக்குமாதலின் 'அவருக்கும் வினையில்லையாம்' என்றார்.*

***இதனால், மாகேசுர பூசையும் சிவபூசையேயாய்ப் பிறப்பையறுத்தல் கூறப்பட்டன.***

*இங்கு இருக்கவேண்டிய இப்பாடல் 'சிவபூசை' அதிகாரத்திலும், அங்கு இருக்கவேண்டிய பாடல் இவ்வதிகாரத்திலுமாகப் பதிப்புக்களில் மாறியுள்ளன. எனினும் இப்பாடல் நாயனார் வழிவந்த ஒருவரால் செய்யப்பட்டதாகவே தெரிகின்றது. சில பிரதிகளில் இது காணப்படவும் இல்லை.*

**1836.** அழிதக வில்லா அரன்அடி யாரைத்
தொழுதகை ஞாலத்துத் தூங்கிருள் நீங்கும்
பழுது படாவண்ணம் பண்பனை நாடித்
தொழுதெழ வையகத் தோரின்ப மாமே. 7

---

***மிகைப் பாடல் தெளிவுரை :-*** *சிவன் உயிர்கள் பொருட்டாக உண்டாக்கிய நவ தீர்த்தங்களில் சென்று முழுகும் பயன்பற்றிச் சொல்லுவோம் கேள்; 'உயர்ந்தோர் யாவர்க்கும் ஒத்ததாகிய மெய்ஞ்ஞானத்தினாலே உயர்ந்து நிற்கின்ற மாகேசுரரது திருவடிகளைத் தூய்மையாக விளக்கி, அந்த நீரை உடல் முழுதும் படும்படி தெளித்துக் கொண்டாலே முத்தி கிடைக்கும் என்பது நமக்கெல்லாம் குருவாகிய திருமூலர் அருளிச் செய்தது'.*

***குறிப்புரை :-*** *'எனவே, அது நவதீர்த்தங்களில் மூழ்குதலாம்' என்றபடி.*

***1836. தெளிவுரை :-*** *இறைமைக் குணங்களையுடைய சிவபெருமானை விரும்பி அவனை நாள்தோறும் தொழுது துயிலெழுதலை மட்டும் செய்தால், இவ்வுலகத்தில் உலகின்பத்தோடு சிறிது இறையின்பமும் உண்டாகும். ஆனால், தம் நிலையில் கெடுதல் இல்லாத மாகேசுரரை வழிபடுதலால், இவ்வுலகத்தில் நீங்குதற்கரிய அஞ்ஞானம் நீங்கி இறையின்பமே மிகக் கிடைக்கும்.*

***குறிப்புரை :-*** *எனவே, **'மாகேசுர பூசையைப் புறக்கணிப்பார் செய்யும் மகேசுர பூசையும் சிறிதளவே பயன் தரும்' என்பதாம். "அடியவர்க் கன்பில்லார் ஈசனுக் கன்பில்லார்" (சிவஞான சித்தியார், சூ.12-2) என்றார் அருணந்தி தேவரும்**. மாகேசுரபூசை செய்யாத வழி மகேசுர பூசை நிரம்பாமை நோக்கியன்றோ பெரியார் பலரும் அடியார்க்கடிமை செய்தலை ஆண்டவனை வேண்டியும் பெற்றனர். மூன்றாம் அடி முதலாகத் தொடங்கியுரைக்க. 'தொழுதகையால்' என உருபு விரிக்க. பழுதுபடாமைக்கு 'நாள்' என்னும் வினைமுதல் வருவிக்க.*

*இதனால், 'எத்தகையோர்க்கும் மாகேசுர பூசை இன்றியமையாதது' என்பது கூறப்பட்டது.*

***1837. தெளிவுரை :-*** *சிலர் மாகேசுரரிடத்துச் சிறிதளவும் அன்பில்லாதவராய் மாகேசுரனிடத்துச் சரண் புகுகின்ற பித்துக் கொள்ளிகளாய் அவனை மட்டும் பூசித்தலாகிய அந்த வழியிலே நெடுங்காலம் நின்று, அவனது அருள் மிகக் கிடையாத காரணம் யாதென்று ஆராய்ந்து, முடிபு காணாது இளைத்து விட்டார்கள்.*

***குறிப்புரை :-*** *"முக்கோற் பகவர்" (அகப்பொருள் விளக்கம்) என்பது போல, "பகவர்" என்பது மாகேசுரரைக் குறித்தது. பண்பு - அன்பு. 'பண்பு ஏதாகிலும் இலராகி' என்க. "பூசனை" என்றது சிறப்புப் பற்றி சிவபூசையையே குறித்தலின், புகுதல் அவனிடத்தேயாயிற்று. மத்தர் - உன்மத்தர். உண்மையை உணராது*

**1837.** பகவர்க்கே தாகிலும் பற்றில ராகிப்
புகுமத்த ராய்நின்று பூசனை செய்யும்
முகமத்தோ டொத்துநின் றூழிதோ றூழி
அகமத்த ராகிநின் றாய்ந்தொழிந் தாரே. **8**

வித்தக மாகிய வேடத்தர் உண்டஊண்
அத்தன் அயன்மால் அருந்திய வண்ணமாம்
சித்தந் தெளிந்தவர் சேடம் பருகிடின்
முத்தியாம் என்றுநம் மூலன் மொழிந்ததே.

---

*செய்தலின் "மத்தர்" என்றார். "முகம்", 'வாயில்' எனப் பொருள் தந்தது. 'அதனோடு' என்பது, "அத்தோடு" என மருவிநின்றது. 'ஆகமத்தர்' என்பது, "அகமத்தர்" எனக் குறுகி நின்றது. "ஒழிந்தார்" என்றதனால் முடிவு காணாமை பெறப்பட்டது.*

*சிவஞானியர் அன்பும், ஆசாரமும், சீலமும் இலராயினும் இறைவனை அனவரதமும் தியானித்துத்தம் உலக கன்மங்களிலிருந்து ஒழிவடைந்தவராவர் என்பது கருத்து. மதம் - உறுதி. புகும் மத்தர் - சித்தத்தைச் சிவன்பாலே செலுத்தும் மதம் பிடித்தவர். அகமத்தர் - இறைவன் பாலன்றிக் கருவி கரணங்கள் வழிச் செல்லாத மனமுடையவர்.*

*இதனால், 'மகேசுரனை அடையவேண்டுவார் மாகேசுரரை வழிபடல் இன்றியமையாதது என்பதே ஆகமங்களின் கருத்து' என்பது கூறப்பட்டது.*

*இதனை அடுத்து நிற்கும் "வித்தகமாகிய" என்னும் பாடலும் மேற்காட்டிய, ''அத்தன் நவதீர்த்தம்'' என்னும் பாடல்போலப் பிறரொருவரால் செய்யப்பட்டதாகவே தெரிகின்றது. இதுவும் ஒரு பிரதியில் இல்லை. இதன் பொருள் வெளிப்படை. இது மாகேசுரர் உண்ட பின் எஞ்சிய சேடத்தை யுண்ணுதலின் சிறப்பை உணர்த்துகின்றது.*

***1838. தெளிவுரை :-** உலகீர், பின்னும், பின்னும் நீர் மிக அழுந்த வருகின்ற எதிர் வினைகள் தோன்றாமல் ஆழ்ந்தே போகும்படி, பாசக்கட்டாகிய இழி நிலையினின்றும் நீங்கி உயர்நிலையை எய்தினாராயினும், மீட்டும் அந்த இழி நிலையில் பாசங்கள் வந்து வீழ்த்தாதபடி முன்பு செய்துபோந்த அந்தச் சரியை முதலிய அரிய தவங்களைப் பின்னும் மாகேசுரர் விடாது செய்வர். அத்தகையோர்க்கே நீவிர் தானத்தையும், தருமத்தையும் செய்யுங்கள். அவ்வாறு செய்தால் அச்செயல்கள் உங்களுடைய எதிர்வினை, பழவினை, பயன்வினை என்னும் மூவகை வினைகளையும் அறவே அழிக்கும். அவ்வினைகள் அழியவே, மீளப் பந்த உலகில் வரும் பிறப்பு இன்றி, வீட்டுலகமே கிடைப்பதாகும்.*

***குறிப்புரை :-** எதிர்வினை - ஆகாமியம். "ஆழ்வினை" - எதிர் கால வினைத்தொகை. பழவினை - சஞ்சிதம். அதனை அழித்தல் அரிது ஆதலின்*

**1838.** தாழ்விலர் பின்னும் முயல்வர் அருந்தவம்
ஆழ்வினை ஆழ அவர்க்கே அறம்செய்யும்
ஆழ்வினை நீக்கி அருவினை தன்னோடு
போழ்வினை தீர்க்கும்அப் பொன்னுல காமே. **9**

---

*"அருவினை" என்றார். போழ்தல் - இப்பொழுது வந்து தாக்குதல். அங்ஙனம் தாக்கும் வினை பிராரத்தமாம். "பொன்னுலகம்" என்றது "உயர்நிலை" என்னும் அளவாய் நின்றது. "ஆழ்வினை ஆழ" என்பதை முதலிற் கூட்டியுரைக்க.*

*இதனால், மாகேசுர பூசை வீடு பயத்தல் கூறி முடிக்கப்பட்டது.*

## 14. அடியார் பெருமை

*சங்கம வழிபாட்டின் சிறப்பைக் கூறிய நாயனார் அதன்பின் சங்கம வழிபாடு அத்துணைச் சிறத்தற்குக் காரணம் அவரது பெருமையே யாகலான் அதனை 'அடியார் பெருமை' என வேறெடுத்து, பதினைந்து மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**1839.** **திகைக்குரி யான்ஒரு தேவனை நாடும்**
**வகைக்குரி யான்ஒரு வாதி யிருப்பின்**
**பகைக்குரி யாரில்லை பார்மழை பெய்யும்**
**அகக்குறை கேடில்லை அவ்வுல குக்கே.** **1**

---

*1839. **தெளிவுரை :-** 'இடம்' என்று சொல்லப்படுவன எவையாயினும் அவை எல்லாவற்றையும் தனது உடைமையாக உடைய ஒப்பற்ற ஒரு தனிமுதற் கடவுளை உணருமாறெல்லாம் உணர்ந்து, அவ்வுணர்வினை மயக்கத்தால் குறைத்துப் பேசுபவரது மயக்கத்தை தனது அனுபவ மொழிகளாற் போக்குகின்ற சீரடியான் ஒருவனே ஒரு நாட்டில் இருப்பினும் அந்த நாட்டின்மேல் பகைமை கொள்வார் எவரும் இலராவர். அங்குப் பருவமழை பொய்யாது பெய்யும். எந்த ஓர் இல்லத்திலும் செல்வம் குறைதலோ, அல்லது செல்வம் தீர்ந்து வறுமை உண்டாதலோ நிகழாது.*

*__குறிப்புரை :-__ ஏனைத் தேவரெல்லாம் சில உலகத்தளவிலே அதிகாரம் உடையராக, "எல்லா உலகமும் ஆனாய் நீயே" (தி.6) என்றருளிச் செய்தபடி அனைத்துலகங்களிலும் நிறைந்து அவற்றைத் தான் விரும்பியபடி இயக்குபவன் சிவன் ஒருவனே யாகலின், அவனை, "திகைக்குரியான் ஒரு தேவன்" எனவும், காரண காரிய முறையில் உறுதிப்பட விளங்குதல் பற்றி "வாதி" எனவும் கூறினார். திகை - திசை; இடம். ஒருவாதியே' என்னும் தேற்றேகாரம் தொகுத்தலாயிற்று. "பார்" என்றது இங்கு விளைநிலத்தை. நாட்டினை "உலகு" என்றார். "அவ்வுலகுக்கு" என்பதை மூன்றாம் அடியின் முதலில் கூட்டியுரைக்க.*

*இதனால், 'சிவனடியார் உள்ள நாடு யாதொரு குறையும் இன்றி நலம் மிக்கதாகும்' என்பது கூறப்பட்டது.*

*(இதன் பின் பதிப்புக்களில் காணப்படும் "அவ்வுலகத்தே" என்னும் பாடல், தந்திரம் 6இல், "அருளுடைமையின் ஞானம் வருதல்" என்னும் அதிகாரத்தில் வந்தது).*

*1840. **தெளிவுரை :-** நிலத்தைத் தன்னகத்துக் கொண்ட கடல்களும், நிலத்தை நிலைபெறுத்துகின்ற எட்டுக் குலமலைகளின் சிகரங்களும், வானுலகமும், வானுலகத்திலுள்ள தேவர்களும், அத்தேவர்களுக்கு முதல்வனாகிய இந்திரனும்*

**1840.** கொண்ட குழியும் குலவரை யுச்சியும்
அண்டரும் அண்டத் தமரரும் ஆதியும்
எண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்திலும்
உண்டெனில் யாம்இனி உய்ந்தொழிந் தோமே. 2

**1841.** அண்டங்கள் ஏழும் அகண்டமும் ஆவியும்
கொண்ட சராசர முற்றும் குணங்களும்
பண்டை மறையும் படைப்பளிப் பாதியும்
கண்ட சிவனுமென் கண்ணன்றி யில்லையே. 3

---

*மற்றும் திசைக்காவலரும் ஆகிய அனைத்து, அனைவரும் வந்து எனது கையிலும் அடங்கியுள்ளன, உள்ளனர் என்றால், இனி நாங்கள் எந்த இடர்ப்பாட்டிலும் அகப்படாமல் அவற்றினின்றும் தப்பிவிட்டோமன்றோ!*

***குறிப்புரை :-*** *'கொண்ட குறி' என்பது பாடமன்று. கடலுக்கு 'ஆழி' என்னும் பெயருண்மை பற்றி, "குழி" என்றார். 'நாங்கள்' என்றது அடியார் அனைவரையும். "என் கைத்தலத்திலும்" என்ற உம்மை இழிவு சிறப்பு. 'அடியவருள் கடைப்பட்ட என்கையிலும் உள்ளன என்றால் பிற அடியவர் கையில் இருத்தல் சொல்ல வேண்டுமோ' என்பதாம். அவை எம் வசத்தன அல்லது, யாம் அவற்றது வசத்தினேம் அல்லேம்' என்றபடி. 'எல்லாப் பொருள்களும் சிவன் வசத்தின ஆதலின் அவை அவன் அடியார் வசத்தினவாம் என்றபடி.'*

*தாமடங்க இந்தத் தலமடங்கும்; தாபதர்கள்*
*தாமுணரின் இந்தத் தலமுணரும் - தாமுனியின்*
*பூமடந்தை நில்லாள்; புகழ்மடந்தை போயகலும்*
*நாமடந்தை நில்லாள் நயந்து. - திருக்களிற்றுப்படியார், 68*

*எனவும்,*

*'அகில காரணர் தாள்பணி வார்கள்தாம்*
*அகில லோகம் ஆளற் குரியர்' - தி.12 திருக்கூட்டச்சிறப்பு, 3*

*எனவும் அருளிச் செய்தல் காண்க.*

*இதனால், 'சிவனடியாரை உலகம் வாதியாமையே யன்றி அவர் வேண்டியவாறுமாம்' என்பது கூறப்பட்டது.*

***1841. தெளிவுரை :-*** *இதன் பொருள் வெளிப்படை.*

***குறிப்புரை :-*** *இதனால், 'மேற்சொல்லியவாறு எல்லாப் பொருள்களும் சிவனடியார் வசத்தன ஆதற்குக் காரணம் சிவன் அவர்கள் உள்ளத்தில் வீற்றிருத்தலேயாகும்' என மேலதற்குக் காரணம் கூறப்பட்டது.*

**1842.** **பெண்ணல்லன் ஆணல்லன் பேடல்லன் மூடத்துள்**
**உண்ணின்ற சோதி ஒருவர்க் கறியொணாக்**
**கண்ணின்றிக் காணும் செவியின்றிக் கேட்டிடும்**
**அண்ணல் பெருமையை ஆய்ந்தது மூப்பே. 4**

---

*'தம்பி ரானைத்தன் னுள்ளந் தழீஇயவன்*
*நம்பி யாரூரன்; நாம்தொழும் தன்மையான்'*

*- தி.12 திருமலைச் சிறப்பு, 19*

*என்றது காண்க. காரணங் கூறுவார் மேற்கூறிய காரியங்களையும் அனுவதித்து உடன் கூறினார்.*

*1842. தெளிவுரை :- இயல்பாகவே அறியாமையில் மூழ்கி அதுவாய் நிற்கின்ற உயிர்களுள் ஒவ்வொன்றின் அறிவினுள்ளும் நிற்கின்ற அறிவாயுள்ளவனும், ஒருவராலும் அறிய இயலாதவனும் கண்ணில்லாமலே காண்கின்றவனும், செவியில்லாமலே கேட்பவனும் ஆகிய சிவன் உலகில் காணப்படும் 'ஆண், பெண், அலி' என்னும் மூவகைப் பொருள்களுள் ஒருவகையினுள்ளும் படாது அவற்றின் வேறாய்த் தனித்து நிற்பவன். ஒருவராலும் அறியப்படாத அவனது அப் பெருந்தன்மையை அறிந்த அறிவே பேரறிவாகும்.*

*குறிப்புரை :- 'அத்தகைய பேரறிவை உடையவர்கள் சிவனடியார்கள்' என்றபடி. "பெண்ணல்லன் ஆணல்லன் பேடல்லன்" என்பதை "அண்ணல்" என்பதன் பின்னர்க்கூட்டி, 'அப்பெருமையை' எனச் சுட்டு வருவித்து உரைக்க. 'கண்ணின்றிக் காணும் செவியின்றிக் கேட்டிடும்' என்றது, 'விளக்கும் துணையுள்ள பொழுதன்றித் தானே விளங்கமாட்டாத உயிரினது அறிவு போலாது, தானே விளங்கி நிற்கும் அறிவை யுடையவன்' என்பதைக் குறித்தவாறு.*

*ஒருவராலும் அறியொணாதவனை அடியராயினார் மட்டும் அறிந்தது எவ்வாறெனின், "ஒருவர்" என்றது, பதியாகிய அவனது ஞானத்தைப் பெறாது, பாசஞான பசுஞானங்களை மட்டுமே யுடையவருள் ஒருவரையே ஆதலானும், அவருள் ஒருவராய் நில்லாது பதி ஞானத்தைப் பெற்றவரே அடியவராகலானும் அவை தம்முள் முரணாகா என்க. மூடம் - அறிவும் மனமும் காரியப்படுதலின்றி ஒன்றில் மடங்கிய நிலை. மூடம் உடையதனை "மூடம்" என்றது பான்மை வழக்கு. "அறியொணா" என்னும் பெயரெச்ச மறையும், "காணும்" "கேட்டிடும்" என்னும் பெயரெச்சங்களும் அடுக்கி, "அண்ணல்" என்னும் ஒருபெயர் கொண்டன. மூப்பு - முதிர்ச்சி; உயர்வு.*

*இதனால், 'உண்டு, பூசி, உடுக்குமாற்றால் அடியவர் உலகரோடு ஒத்தாராயினும், அவர் உலகரின் வேறாய உயர் நிலையினர்' என்பது கூறப்பட்டது.*

*1843. தெளிவுரை :- சிவனடியார்கள் பிறரைப் போலவே தாமும் மயக்க*

**1843.** இயங்கும் உலகினில் ஈசன் அடியார்
மயங்கா வழிச்செல்வர் வானுல காள்வர்
புயங்களும் எண்டிசை போதுபா தாளம்
மயங்காப் பகிரண்டம் மாமுடி தானே. 5

---

***உலகத்தில் வாழ்வராயினும் அவ்வுலகம் மயக்குகின்ற மயக்கத்துட் படாது தெளிந்த உணர்வோடே வாழ்வர்.*** *உடம்பு நீங்கிய பின்னும் பிறரைப் போல மயக்க உலகங்களில் உழலாமல் சிவன் உலகத்தை அடைந்து அதன்கண் சில புவனங்கட்குத் தலைவராயும் விளங்குவர். அவையேயன்றித் தாமும் சிவனைப் போலவே எல்லா உலகங்களும் தம்முள் வியாப்பியமாய் அடங்கத் தாம் அவற்றைத் தம்முள் அடக்கி வியாபகமாயும் நிற்பர்.*

***குறிப்புரை :-*** *'ஆகவே அவர்களை எளியராக எண்ணற்க' என்பதாம். "இயங்கும்" என்பதனை, 'தாம் இயங்கும்' எனக் கொள்க. "செல்வர்" என்றது 'வாழ்வர்' என்றபடி, "வான்" இங்குச் சுத்த மாயாவெளியைக் குறித்தது. அவ்வெளியே தடத்த சிவனுக்கு இடமாதல் அறிக. பின்னிரண்டடிகள், 'சிவனது இயல்பாக நன்கறியப்பட்டவற்றை இவர்களும் உடையர்' என்பதைக் குறித்தது. சிவனது இயல்பு.*

> *"பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்*
> *போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே"*
>
> *- தி.8 திருவெம்பாவை, 17*

*எனவும்,*

> *"கீதம் இனிய குயிலே, கேட்டியேல் எங்கள் பெருமான்*
> *பாதம் இரண்டும் வினவிற் பாதாளம் ஏழினுக் கப்பால்*
> *சோதி மணிமுடி சொல்லின் சொல்லிறந்து நின்ற தொன்மை"*
>
> *- தி.8 குயிற்பத்து, 1*

*எனவும் விளங்கிக் கிடந்தமை காண்க. அடியார்களுக்குத் தோள்கள் எண்டிசை; திருவடி - பாதாளம்; பகிரண்டம் - மாமுடியாம். போது - திருவடி மலர். "பகிரண்டம்" என்றது, 'அண்டங்கள் அனைத்திற்கும் வெளியே உள்ள இடம்' என்றபடி. அது வெற்ற வெளியாகலின், "மயங்காப் பகிரண்டம்" என்றார். மயங்குதல், பல பொருள்கள் ஒன்றோடொன்று விரவுதல்.*

*இதனால், **சிவனடியாரை நம்மனோருள் சிலராக வைத்த எளியராக மதித்தல் குற்றமாதல் கூறப்பட்டது.***

***1844. தெளிவுரை :-*** *புறநிலையில் செல்லாது அகநிலையிற் சென்று அங்குள்ள இறைவனை அறிகின்ற அறிவு "நான்" என்னும் முனைப்பு அடங்கி நிற்றலை அநுபவத்தில் யாம் கண்டோம். அதனால் அந்த அறிவு மாயா*

**1844.** அகம்படி கின்றநம் ஐயனை ஒரும்
அகம்படி கண்டவர் அல்லலிற் சேரார்
அகம்படி யுட்புக் கறிகின்ற நெஞ்சம்
அகம்படி கண்டாம் அழிக்கலும் எட்டே. **6**

---

*காரியங்களை ஒழித்து அவற்றினின்றும் நீங்கித் தூய்மையுறுகின்றது. ஆகவே, அகநிலையிலே நிற்கின்ற நம் பெருமானை அவ்விடத்திற் காண்கின்ற அகநிலை யறிவைப் பெற்றவர்கள் துன்பத்தை அடைய மாட்டார்கள்.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடி முதலாகத் தொடங்கியுரைக்க. "நெஞ்சம்" என்றது அறிவை. அறிவது அறிவேயன்றி நெஞ்சம் ஆகாமை யறிக. "அகம்படி" மூன்றனுள் முதல் இரண்டும் 'அகநிலை' எனப் பொருள் தந்தன. முதற்கண் நின்ற "அகம்" உள்' என்னும் பொருளையும், ஈற்றில் நின்ற "அகம்", "நான்" என்னும் பொருளையும் உடையன. முதற்கண் நின்ற 'படிதல்', பொருந்துதல். ஈற்றில் நின்ற 'படிதல்', ஆழ்தல். "கண்டாம்" தன்மைப் பன்மை வினைமுற்று. "கண்டவர்" என்றது 'அறிந்தவர்' என்றபடி.*

*"அழிக்கல்", இங்கு வெல்லுதல். அஃதாவது அவற்றின் நீங்குதல், அசுத்த மாயா காரியங்களை, 'பூதம், தன்மாத்திரை, ஞானேந்திரியம், கன்மேந்திரியம், அந்தக்கரணம், புருடன், கஞ்சுகம், மாயை' - என இங்ஙனம் தொகுத்தெண்ணி, எட்டாதல் அறிக. இனி "எட்டுத் தத்துவங்களால் ஆகிய நுண்ணுடம்பு" எனவும் ஆம். இவற்றின் நீங்கினோரே முத்தராதல் அறிக. எனவே 'இந்நிலை அடைந்தோர் பிறவித் துன்பத்தை எய்துமாறு இல்லையாகலின், சிவனடியாராவார் இத்தன்மையுடைய முத்தரே' எனக் கூறினார்.*

*இதனால், சிவனடியார் பெத்தருட் சிலராகாது, முத்தரேயாதல் கூறப்பட்டது.*

***1845. தெளிவுரை :-*** *கடந்த காலத்தில் நிகழ்ந்துபோன அந்தச் செயல்களும், இப்பொழுது கடந்து கொண்டிருக்கின்ற காலத்தில் நிகழ்கின்ற இந்தச் செயல்களும், இவற்றைச் செய்விக்கின்ற முதல்வனும், அவன் செய்விக்கின்றபடி யான் செய்யும் பொழுது அதற்குத் துணையாய் உடன் நிற்கின்ற அன்புள்ள துணைவனும் ஆகிய எல்லாமாய் உள்ள முழுமுதற் கடவுளாகிய சிவனை நான் எனக்கு வருகின்ற பழியாயும், புகழாயும் விளைகின்ற அனைத்துப் பொருள்களுமாக உணர்கின்ற உணர்ச்சியோடே எனது உயிர் போய்க் கொண்டிருக்கின்றது. அதனால், எனது உடல் வழியாக நிகழும் முயற்சிகள் அனைத்தையும் அப்பெருமான் தனது முயற்சியாகவே ஏற்றுக் கொள்கின்றான்.*

***குறிப்புரை :-*** *'அதனால் அறம் பாவங்கட்கு யான் யாதும் கடமைப்பட்டவ னல்லேன்' என்பதாம். "கழிவு, அழிவு" என்னும் தொழிற் பெயர்கள். முறையே*

**1845.** கழிவும் முதலுமெங் காதற் றுணையும்
அழிவும தாய்நின்ற ஆதிப் பிரானைப்
பழியும் புகழும் படுபொருள் முற்றும்
ஒழியுமென் ஆவி உழவுகொண் டானே. 7

**1846.** என்தாயொ டென்னப்பன் ஏழேழ் பிறவியும்
அன்றே சிவனுக் கெழுதிய ஆவணம்
ஒன்றா யுலகம் படைத்தான் எழுதினான்
நின்றான் முகில்வண்ணன் நேரெழுத் தாயே. 8

---

*இறந்தகால நிகழ்கால நிகழ்ச்சிகளின் மேல் நின்றன. அந்நிகழ்ச்சிகள்* ***அக்காலத்துப் பிறப்பின் வழியன என்பன*** *வெளிப்படை.* ***'இனி அடுத்து வருவதொரு பிறவி தமக்கு இல்லை' என்பது நாயனாரது துணிபாகலின் எதிர்காலம் பற்றிக் கூறாராயினார்,*** *முதல்வனை "முதல்" என்றது பான்மை வழக்கு. "அழிவும்" என்பதனை, "கழிவும்" என்பதன் பின் கூட்டியுரைக்க. "அது" என்னும் பகுதிப்பொருள் விகுதியை, 'அழிவதுவும்' என மாற்றி வைத்து உரைக்க. 'புகழுமாய், முற்றுமாக' என்னும் ஆக்கச் சொற்கள் தொகுத்தலாயின. 'முற்றுமாகக் கொண்டு' எனவும் ஒரு சொல் வருவிக்க. உழவு - உழப்பு; முயற்சி. எனது உழவு என வருவித்துக் கொள்க. சீவன்முத்தராயினார் 'எல்லாம் அவனே' என்று எதனைச் செய்யினும் தம் செயலற்று அவன் செயலாகச் செய்வர் ஆதலின், அவர், "பாதகத்தைச் செய்திடினும் சிவன் அதனைப் பணியாக்கி விடுவன்" (சிவஞானசித்தியார், சூ. 10-1) ஆதலின், "உழவு கொண்டான்" என்றார்.* ***இத்தகைய சீவன் முத்தரே 'அடியார்' எனப்படுகின்றனர் என்க****. இதனால், அடியாரது சீவன் முத்திநிலை தம்மேல் வைத்து இனிது விளக்கப்பட்டது. எனது உழவு என வருவித்துக் கொள்க.*

*1846.* ***தெளிவுரை :-*** *எனக்குத் தாயாகியவளும், தந்தையாகியவனும் நான் பிறப்பதற்கு முன்பே தங்களைச் சிவனுக்கு அடிமை' என்று எழுதிக் கொடுத்த ஆளோலையை வைத்துத்தான் ஈரேழுலகங்களையும் ஒக்கப் படைத்தவனாகிய பிரமதேவன் என்னைப் படைக்கும் பொழுது எனது தலையில், 'இவன் சிவனுக்கு அடிமை' என்று எழுதினான். 'அந்த எழுத்துப் பொய்யானதன்று, மெய்யானதே' என நிலை நாட்டுபவனாகவே சான்றுக் கையெழுத்தாகக் காப்போனாகிய திருமால் அமைந்தான்.*

***குறிப்புரை :-*** *'என் தாயொடு ஆவணம்' என்றது, 'யான் பிறந்த குடியில் யான் மட்டுமே சிவனடியானல்லேன்; என் தந்தை தாய் ஆகியோரே சிவனடியார் தாம்' என்றும், அதனால் யான் பிறப்பிலே சிவனடியான் என்றும் கூறியவாறு. இவ்வாறான வாய்ப்புடையவர்களையே 'பழவடியார்' என்றும், தாம் மட்டுமே*

**1847.** துணிந்தார் அகம்படி துன்னி உறையும்
பணிந்தார் அகம்படி பாற்பட் டொழுகும்
அணிந்தார் அகம்படி ஆதிப் பிரானைக்
கணிந்தார் ஒருவர்க்குக் கைவிட லாமே. **9**

---

*தொடக்கத்திலே யாதல், இடையிலேயாதல் அடியாராயினாரை, 'புத்தடியார்' என்றும் கூறுவர். நம்பியாரூரர் பழவடியாரேயாயினும் 'யான் ஆளல்லேன்' என வன்மை பேசினமை பற்றி அவரை ஏயர்கோன் கலிக்காமர்,*

*எம்பிரான் எந்தை தந்தை தந்தைஎன் கூட்ட மெல்லாம்*
*தம்பிரான் நீரே யென்று வழிவழிச் சார்ந்து வாழும்*
*இம்பரின் மிக்க வாழ்க்கை என்னைநின் றீருஞ்சூலை*
*வம்பென ஆண்டு கொண்டான் ஒருவனோ தீர்ப்பான் வந்து.*

*- தி. 12 ஏயர்கோன், 392*

*என புத்தடியாராகக் கூறினமை காண்க. வம்பு - புதுமை.*

*நாயனார் தம் தாய் தந்தையரையே குறித்தாராயினும் 'இருமரபும் சிவனுக்கு ஏழேழ் பிறவியும் ஆட்பட்ட மரபு' என்பதைக் குறித்தமை காண்க. "ஏழ் ஏழ் பிறவி" என்பது, 'எழுவகைப் பிறப்பில் வினைப்பயன் தொடரும் ஏழ்பிறப்பு' என்றவாறு. நேர் எழுத்து - நேர்ந்த எழுத்து. சான்றுக் கையெழுத்து.*

*ஆன்மாக்கள் அன்றே சிவனுக்கு அடிமை என்ற ஆளோலை உண்டு; அதனை எழுதினவன் முதல்வன்; சான்றிட்டவன் திருமால் என அநாதியே ஆன்மாக்கள் அரனுக்கு அடிமை என்பது உணர்த்தப்பட்டது.*

*சுந்தரர் தேவாரத்து 'ஏழேழ் படியெமை யாளுங் கொண்ட' எனவும், 'எந்தை தந்தை தந்தைக்குத் தம்பிரானார்' எனவும் வருதல் காண்க.*

*என் தாயோடு என் அப்பன் என்றது தாய்வழி தந்தை வழி இரண்டு குலமுமே அடிமையாதலை விளக்கியவாறு. அங்ஙனமாகவே அடிமைகட்குப் பிறந்தவன் அடிமை என்பது தாமே போதருமாகலான் என்க.*

*புத்தடியாரினும் பழவடியார்க்கு ஒரு சிறப்புண்மையை இதனாற் குறித்தவாறு.*

***1847. தெளிவுரை :-** 'சிவனே நமக்கு எல்லாப் பொருளும்' எனத் துணிந்தவரது உள்ளத்தில் ஒன்றி உறைபவனும், அங்ஙனம் துணிந்தபடியே மனமொழி மெய்களால் தன்னை வழிபட்டு ஒழுகு வசத்தனாய் நின்று அருள் புரிகின்றவனும் ஆகிய, அழகிதாய் அருள் நிறைந்த திருவுள்ளத்தனையுடைய முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானைப் பல்காலும் நினைக்கின்ற ஒருவர்க்கும் அவனை விடுதல் கூடுமோ! (கூடாது).*

**1848.** தலைமிசை வானவர் தாழ்சடை நந்தி
மிலைமிசை வைத்தனன் மெய்ப்பணி செய்யப்
புலைமிசை நீங்கிய பொன்னுல காளும்
பலமிசை செய்யும் படர்சடை யோனே. **10**

---

***குறிப்புரை :-*** *'அகம் படி' என்பது 'அகத்துப் பொருந்துதல்' என்னும் பொருட்டாய் அகமாகிய இடத்தைக் குறித்தது. 'சிவன் தன் அடியவர் வசத்தனாய் அவர் வேண்டியவாறெல்லாம் அருளுதல் அருள் காரணமாக அன்றி வேறில்லை' என்றற்கு "அணிந்து ஆர் அகம்படி ஆதிப்பிரான்" என்றார். "உறையும் ஒழுகும்" என்னும் பெயரெச்சங்கள், "அணிந்தா ரகம்படி ஆதிப்பிரான்" என்னும் தொகைச் சொல்லில், "ஆதிப்பிரான்" என்பதனோடு முடிந்தன. 'தேனை உண்டறியாதவர் அதனை உண்டு சுவை கண்டபின் விடாமைபோலச் சிவனது அருளின்பத்தை அறியாதார் அதனை அறிந்து நுகர்ந்தபின் விடமாட்டார்' என்பார், "கணிந்தார் ஒருவர்க்குக் கைவிட லாமே" என்றார். 'கணித்தார்' என்பது எதுகை நோக்கி மெலிந்து நின்றது.*

*"மேவினார் பிரிய மாட்டா விமலனார்" - தி.12 கண்ணப்பர். 174*

*என்ற திருத்தொண்டர் புராணத்தையும் காண்க. கணித்தல், பலகால் நினைத்தல்.*

*இதனால், 'சிவனடியார் சிவானந்தத்தைத் தெவிட்டாது நுகர்ந்து திளைப்பவர்' என்பது கூறப்பட்டது.*

***1848. தெளிவுரை :-*** *தேவர்கள் தம் தலையால் தனது திருவடிமேல் வணங்குகின்ற, தாழ்ந்த சடையை உடைய சிவபெருமான் தனக்கு உண்மையான தொண்டினைச் சிலர் செய்ய அதற்குப் பயனாக அவரைத் தேவர்கள் தம் தலைமேல் வைத்துப் போற்றும்படி வைத்தான். அதற்குமேல் அவன் அவரை முக்குணங்களும், கன்மமும், ஆணவமும் இல்லாத ஒளிமயமான மேல் உலகத்தை ஆள்கின்ற பயனையும் கூட்டுவிப்பான்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'சிவனடியார்கள் அத்துணை உயர்ந்தவர்கள்' என்பதாம். 'தலையால்' என உருபு விரித்து, "மிசை" என்பதற்கு, 'திருவடி மிசை' என உரைக்க. 'மிலைய, இசைய' என்னும் செயவெனெச்ச ஈறுகள் தொகுத்தலாயின. 'மிலைய' எனவே, 'தலைமேல்' என்பது தானே விளங்கிற்று. "மெய்ப் பணி செய்ய" என்பதை, "நந்தி" என்பதன் பின்னர்க்கூட்டி யுரைக்க. 'புலை நீங்கிய மிசையுலகு' என்க. "பொன்" என்றது ஒளியென்றவாறு. மேலே உள்ள ஒளியுலகாவது சிவனுலகு. பலம் - பயன். வேறு தொடராய் நிற்றலின் மீட்டும் 'படர்சடையோன்' என்றார்.*

*இதனால், 'சிவனடியார்கள் தேவரால் வணங்கப்படுபவராய்ச் சிவலோகத்தை ஆளும் பெருமையுடையவர்' என்பது கூறப்பட்டது.*

**1849.** அறியாப் பருவத் தரனடி யாரைக்
குறியால் அறிந்தின்பங் கொண்ட தடிமை
குறியார் சடைமுடி கூட்டி நடப்பார்
மறியார் புனல்மூழ்க மாதவ மாமே. **11**

**1850.** அவன்பால் அணுகியே அன்புசெய் வார்கள்
சிவன்பால் அணுகுதல் செய்யவும் வல்லர்
அவன்பால் அணுகியே நாடும் அடியார்
இவன்பாற் பெருமை இலயம தாமே. **12**

---

***1849. தெளிவுரை :-*** *ஒன்றும் அறியாத இளமைப் பருவத்திற்றானே சிவனடியாளர்களை அவரது வேடத்தால் அறிந்து மகிழ்ச்சியுற்றதே சிவனுக்கு உண்மை அடிமைத் தன்மையாகும். அதன் பின் அவர்கள் செல்லும் செலவைத் தவிர்ந்த அவர்களது திருவடிகளை விளக்கிய நீரினைத் தலையில் தெளித்துக் கொள்ளுதலே அங்ஙனம் செய்வார்க்குப் பெரிய தவமாகும்.*

***குறிப்புரை :-*** *இளமையிலே அடியார் பத்தி தோன்றுதல் முன்னைத் தவத்தினாலாம். காரைக்காலம்மையார் வண்டல் பயிலும் பொழுதே தொண்டர் வரின் தொழுதமையை (தி.12 காரைக்காலம்மையார், 5) நினைக. "நடப்பார் மறித்த புனல்" என்றதனால், 'திருவடிகளை விளக்கிய நீர்' என்பது விளங்கிற்று. மறி - மறிதல்; தவிர்தல். முதனிலைத் தொழிற்பெயர். 'மறிதலில் பொருந்திய நீர்' என்க.*

*இதனால், அடியவரை வழிபடுவாரது சிறப்புணர்த்து முகத்தால் அவரது பெருமை விளக்கப்பட்டது.*

***1850. தெளிவுரை :-*** *முன்னை மந்திரத்தில் கூறியவாறு இளமையிலே அடியார் பத்தியிற் சிறந்த ஒருவனை அடைந்து அன்பு செய்பவர்கள் சிவனையே அடையவும் வல்லாராவர். இன்னும் அவரிடத்தில் சிவனையே வழிபடும் ஒருவனது பெருமை அடங்கி விடுவதாகும்.*

***குறிப்புரை :-*** *'சிவனுக்கு அடியாராயினாரும் அவன் அடியார்க்கு அடியாராகவிடின் சிறந்தவராகார்' என்பதாம். அதனாலன்றோ, சிவனால் வலிந்து ஆட்கொள்ளப்பட்ட நம்பியாரூரர் பின்பு அடியாரது திருக்கூட்டத்தைக் கண்டு, "இவர்க்கு யான் அடியேனாகப் - பண்ணு நாள் எந்நாள்" (தி.12 தடுத்தாட் கொண்டது, 189) என இறைவனை நினைத்து எண்ணினார். முன்னை மந்திரத்திற் கூறினமை பற்றி அடியார்க்கடியானை "அவன்" என்றமையால், பின்னர் "இவன்" என்றது, பின்னர்க் கூறிய சிவன் பால் அணுகுதல் செய்தவனைக் குறித்தது. 'நாடும் அடியார்கண்' என ஏழாவது விரிக்க.*

*இதனால், 'சிவனுக்கு அடியாராயினாரும் அவன் அடியார்க்கு அடியாராதல் இன்றியமையாதது' என்பது கூறப்பட்டது. திருத்தொண்டத்*

**1851.** முன்னிருந் தார்முழு தெண்கணத் தேவர்கள்
எண்ணிறந் தன்பால் வருவர் இருநிலத்து
எண்ணிரு நாலு திசைஅந் தரம்ஒக்கப்
பன்னிரு காதம் பதஞ்செய்யும் பாரே. **13**

**1852.** சிவயோகி ஞானி செறிந்தஅத் தேசம்
அவயோக மின்றி அறிவோருண் டாகும்

---

*தொகை அடியார்க்கு அடியாராதலையேயன்றி, அடியார்க்கு அடியாராதலையும் குறித்தமை காண்க.*

*1851. **தெளிவுரை :-** பதினெண்கணங்களாக வகுத்துச் சொல்லப்படுகின்ற தேவ சாதியர் பலரும் முன்னே நல்வினைகள் பலவற்றைச் செய்து அந்நிலையை அடைந்தார்கள். அதன்பின்பு அந்நிலையில் இருக்க விரும்பாமல் சிவன்பால் அன்பு செலுத்தியுய்தற்கு இந்நிலவுலகத்தில் வருவார்கள். அவ்வாறு வந்து அவர் சிவனை வழிபடுகின்ற இடம் எட்டுத் திசையிலும் பன்னிரு காதப் பரப்பிற்குச் சிவலோகமாகும்படி அவர்களது ஞானம் செய்யும். "வானிடத்தவரும் மண்மேல் வந்தரன்றனை அர்ச்சிப்பர்" என்ற சித்தியாரை நினைவு கூர்க.*

***குறிப்புரை :-*** *'பதினெண்கணம்' என்பதை முதற் குறையாக "எண் கணம்" என்றார். 'பதினெண் கணங்களாவார் இவர்' என்பதைப் புறநானூற்றுக் கடவுள் வாழ்த்தின் பழைய உரையிற் காண்க. 'எண்கணங்களும் முன் இருந்தார்' என மாற்றியுரைக்க. "இருந்தார்" என்றது அந்நிலையினராய் இருந்தார் என்றபடி. "முன்" என்றதனால் 'பின்' என்பது பெறப்பட்டது. எண் - எண்ணம்; விருப்பம். இறந்து - நீங்கி. எனவே, 'சுவர்க்கலோக இன்பம் அபக்குவர்க்கே இனிக்கும் என்பதும், 'அவர்க்கும் பக்குவம் வந்தபொழுது உவர்த்துவிடும்' என்பதும் பெறப்படும். "கொன்றைத் - தொங்கலா னடியார்க்குச் சுவர்க்கங்கள் பொரு ளலவே" (தி.2 ப.41 பா.7) என்றருளியமை காண்க. "பன்னிரு காதம்" என்றது மிகுதி கூறியவாறு. சிவலோகமாகச் செய்தலாவது, மக்களைச் சிவபத்தியிற் சிறந்தவராக்கல்.*

*இதனால், தேவரியல்பு கூறும் முகத்தால் அடியாரது பெருமை உணர்த்தப்பட்டது. **இதனானே, 'அடியாருள் முற்பிறப்பில் தேவராய் இருந்தோரும் உளர் என அறிக' என்றதுமாயிற்று.***

*1852. **தெளிவுரை :-** எனின், சிவயோகி தங்கிய தலவிசேடம் உணர்த்துதல் நுதலிற்று. சிவயோகியாகிய ஞானி பயின்ற அந்த இடத்து யோகம் பழுதுபடாமல் சிவஞானியர் தோன்றுவர். புதிய போகப் பயன்கள் உண்டாகும். நல்ல இயல்புகள் தோன்றும். பிறவிக்கு ஏதுவாகிய மலச் சேர்க்கையின்றிப் பரலோகம் உண்டாம் என்றவாறு.*

நவயோகம் கைகூடும் நல்லியல் காணும்
பவயோக மின்றிப் பரகதி யாமே. **14**

**1853.** மேல்உண ரான்மிகு ஞாலம் படைத்தவன்
மேல்உண ரான்மிகு ஞாலம் கடந்தவன்
மேல்உண ரார்மிகு ஞாலத் தமரர்கள்
மேல்உணர் வார்சிவன் மெய்யடி யார்களே. **15**

---

*சிவயோகி வாழ்ந்த இடத்தில் சிவஞானியர் தோன்றுவர்; நற்குறிகள் தோன்றும்; புதிய புதிய யோகங்கள் உளவாம்; அங்கு வாழ்கின்றவர் அனைவரும் சிவ ஞானிகளாய்ச் சிவலோகம் மேவுவார் என்பதாம்.*

*செறிந்த - இடைவிடாது பயின்ற.*

*குறிப்புரை :- "சிவம்" என்பதை ஞானிக்கும் கூட்டுக. யோகமாவது 'ஒன்றுதல்' ஆதலால், அவயோகம், பயனில் பொருளோடு ஒன்றுதலாம். அறிவோர் - ஞானிகள். 'அறிவோர் வருகை உண்டாகும்' என ஒரு சொல் வருவித்துக் கொள்க. வருகை, அவதாரத்தையும் குறிக்கும். நவம் - புதுமை; அதிசயம். 'அதிசயங்களை நிகழ்த்துதல் பலர்க்குக் கூடும்' என்க. காணும் - காணப்படும். பவயோகம் - பிறப்பில் சேர்தல்.*

*இதனால் அடியாரது பெருமைகளுள் மிக்கன சில எடுத்துக் கூறப்பட்டன.*

*1853. **தெளிவுரை :-** பிரமன், விட்டுணு, பிறதேவர் ஆகியோரெல்லாம் தாம் தாம் செய்யும் அதிகாரத்தைத் தமது ஆற்றலால் அமைந்தனவாகவே கருதி மயங்குவாரல்லது, 'இவை பரம்பொருளாகிய சிவனது ஆணையின்வழி நமக்கு அமைந்தன, என்று உணரமாட்டார்கள் (அதனால் அவர்கள் மெய்யடியாராதல் இல்லை) அந்நிலையில், 'நமக்குக் கிடைத்த நலங்கள் யாவும் பரம்பொருளாகிய சிவனது அருளால் கிடைத்தன' எனச் சிவனுக்கு மெய்யடியாராயினாரே உணர்வார்கள்.*

*குறிப்புரை :- முதல் மூன்று அடிகளில் 'உணர்வான், உணர்வார்' என்பன பாடம் ஆகாமை அறிந்துகொள்க. மேல் - மேலான பொருள், என்றது அதன் அருளை. மிகு ஞாலம் - வானுலகம். பிரமனாதியோர் சில வேளைகளில். 'எமக்கு உள்ள நலம் சிவனருளால் வந்தது எனக் கூறினாராயினும் அது முகமனுரையே யன்றி, மெய்யுரையன்று' என்க.*

*இதனால், அயன் மால் முதலியோரினும் அடியார் உயர்ந்தோராதல் கூறப்பட்டது.*

## 15. போசன விதி

*'மாகேசுர பூசை'யின் இயைபு பற்றி 'அடியார் பெருமை' கூறிய நாயனார் அவர்தாம் உண்ணும் உணவிலும் சில நியமங்களை உடையராயிருப்பர் என்பதை இரண்டு மந்திரங்களால் குறிக்கின்றார். இது பற்றி ஆகமங்கள் பலவற்றைக் கூறினும் நாயனார் மிகச் சிறந்த ஒன்றிரண்டையே கூறுகின்றார்.*

*அஃதாவது உணவு உண்ணும் முறைமை. உண்டல் வயிற்றுத்தீ தணிய நிகழ்த்துவது. இதற்கும் முறைமை உண்டோ எனின், உண்டு என்க. விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் பிற உடலொடு கூடிய உயிர்கள் அனைத்திற்குமே பசி உண்டு. பசி உண்டேல் உணவு உட்கொள்ளுதலும் உண்டு. விலங்கு முதலிய ஏனைய உயிர்கள் அருந்துவதிலும் மனிதன் அருந்துவதில் ஒரு சிறப்பு உண்டு. மனிதன் உணவைத் தன் உடல் பருக்க - பசித்துத் தணிய என்று எண்ணுதல் கூடாது.* ***சிவனுக்கு சிவனடியார்களுக்கும் என எண்ணி அவர்களுக்கு அர்ப்பணம் செய்தே உண்ணவேண்டும்****. இதுவே போசன விதி. ஏனைய ஆகம* ***நூல்கள் உண்ணும் திசை, உண்ணும் பொருள், உண்ணும் முறை, உண்ணும் பொழுது காண்டற்கு உரியார், உடனிருந்து உண்டற்கு உரியார் முதலிய விதிகளை உணர்த்தும்.***

**1854. எட்டுத் திசையும் இறைவன் அடியவர்க்கு**
**அட்டஅடிசில் அமுதென் றெதிர்கொள்வர்**
**ஒட்டி ஒருநிலம் ஆள்பவர் அந்நிலம்**
**விட்டுக் கிடக்கில் விருப்பில்லை தானே. 1**

---

*1854. தெளிவுரை :- எனின், அடியவர்க்கு என்று அட்ட அடிசில் இறைவற்கு அமுதமாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

*எட்டுத் திசைகளிலும் அடியவர்கட்காக அடப்பட்ட உணவை அமுதம் என்று இறைவன் எதிரே தாமே வந்து ஏற்றுக் கொள்வர். ஒரு வயலையே பொருந்தி ஆள்பவர்கள் அந்நிலம் பண்படுத்திப் பயிர் செய்யப் பெறாமல் விட்டுக் கிடந்தால் விரும்பிய போகத்தையும் அறியார்களாம் என்றவாறு.*

*ஒரு வயல் உடையார் தரிசு போட்டால் போகம் அறியாமைபோல அடியார்க்கென்றே சமைத்த உணவு இறைவற்கு ஆம் என்பது கருத்து.*

*இறைவற்கு அவன் அடியார் அனைவரும் நிலம். நிலத்தை உழுது, நீர் பாய்ச்சி, எருவிட்டுப் பயிர் செய்வது போல அடியார்கட்கு அன்பு செய்து அன்னமிடுவது, நிலத்தில் ஒரு பகுதி தரிசு போட்டாலும் உடையன் விரும்பான்; விளைச்சலிராது. அதுபோல அடியார்களில் ஒருவர் உண்ணவில்லையாயினும் இறைவன் விரும்பான் என்பதாம்.*

*குறிப்புரை :- "தனக்கென்று உலையேற்றார்" என்று ஆசாரக் கோவையில்*

**1855.** அச்சிவ னுள்நின் றருளை யறிபவர்
உச்சியம் போதாக உள்ளமர் கோஇற்குப்
பிச்சை பிடித்துண்டு பேதம் அறநினைந்து
இச்சைவிட் டேகாந்தத் தேறி யிருப்பரே. **2**

---

*கூறப்படுதல்போல அடும்பொழுதே அடியார்களுக்கு என்று அடவேண்டும். அந்த உணவே அரனுக்கு அமுதமாம் என்றமையால் இது போசன விதியாயிற்று.*

*வறியன் ஒரு செய்யாளன் அச்செய் விளையக் காக்கும் செயல்போல, அடியார்கள் அனைவரையும் உண்பித்தலே இறைவற்கு விருப்பாவது என்க.*

***1855. தெளிவுரை :-*** *தம்முள் நிற்கின்ற சிவனுக்குள்ளே தாம் நின்று அவனது திருவருள் இயல்பை அநுபவமாக உணர்ந்த அடியார்கள் பசிமிகுந்த போது தம்முள்ளே அமர்ந்திருக்கின்ற தலைவனது இல்லமாகிய உடலில் உயிர் நின்றாங்கு நிற்றற் பொருட்டு, பிச்சையேற்று உண்டு சிவனைத் தம்மில் வேறாக நினையாது தாமேயாக நினைந்து உலகப்பற்று அற்று ஒன்றாகிய சிவ நிலையிலே உயர்ந்திருப்பார்கள்.*

*குறிப்புரை :-* ***"ஒருபோது யோகியே" என்ப ஆகலின் ஒவ்வொரு நாளும் உச்சிப்போதில் மட்டும் உண்ணவேண்டும் என்பதாம்****. உத்தமன் உறைகின்ற கோயிலாகிய உடம்பு வாழ்வதற்காக என்றது வினைகளைச் செய்யவும் போகங்களை நுகரவும் உண்பார்போல இருபோதும் முப்போதும் எப்போதும் உண்ணுதல் கூடாது என அறிவித்தவாறு.*

*சிவனடியார் அடுதல் அதற்கு உரியன ஆக்குதல் தேடுதல் முதலிய வினைகளில் ஈடுபடலாகாது. எட்டுத் திசையிலும் அடியார்க்கு என்றிட்ட அடிசிடிலைப் பிச்சையாக ஏற்றலே சிறந்தது என்பார் 'பிச்சை பிடித்து' என்றார்.*

*அங்ஙனம் பிச்சை ஏற்ற உணவையும் மூன்று கவளம் அல்லது ஒன்பது கவளத்திற்கு மிகாதவாறு பிடித்து உண்ண வேண்டும். மிகுதியாக உண்டல் தவ ஒழுக்கத்திற்குத் தளர்ச்சி என்பார் 'பிடித்து' என்றார்.*

*அங்ஙனம் விதிப்படி உண்போர்க்கே தியானம் சித்திக்கும். அத்துவித பாவனையில் அரனை வழிபடலாம் என்பார் 'பேதமற நிறைந்து' என்றார்.*

*அரனை நினையும்போது வாசனையால் கண் காது மூக்கு முதலான இந்திரியங்கள் தம் பசியைப் போக்கிக் கொள்ளப் புலன்களை நாடுதல் கூடும். அங்ஙனம் அவற்றைப் புறமே போகவிடாது கட்டுப்படுத்துதல் மிக மிக இன்றியமையாதது என்பார் 'இச்சைவிட்டு' என்றார்.*

***'யோகத்திற்கு ஒருவர்'*** *என்பது பழமொழியாதலின் தனிமையான இடமே யோகப்பயிற்சிக்குச் சிறந்தது என்பார் 'ஏகாந்தத்து' என்றும், அங்ஙனம் இருத்தல் உயர்தற்கு உபாயம் ஆகலின் 'ஏறி இருப்பர்' என்றும் கூறினார். ஏறுதல் உயிரைக் குண்டலினியோடு மதிமண்டலத்து ஏற்றுதல்.*

## 16. பிட்சா விதி

*அஃதாவது, பிச்சை எடுத்தற்கு உரிய முறைகளைக் கூறும் அதிகாரம் என்பதாம். பிச்சை என்பது உயிர் வாழ்வதற்காக எடுக்கப்பட வேண்டுமே அன்றி பலவகையான உணவுகளை வேண்டியவாறே உண்ணலாம் என்பதற்காக இருத்தல் கூடாது என்பது ஆறு திருமந்திரங்களான் அறிவிக்கின்றார். முன்னர் 'பிச்சை பிடித்து' என்று தோற்றுவாய் செய்தமையின் அதனியலை அடுத்து அறித்தல் முறையாதல் காண்க.*

**1856.** விச்சுக் கலமுண்டு வேலிச்செய் ஒன்றுண்டு
உச்சிக்கு முன்னே உழவு சமைந்தது
அச்சங்கெட் டச்செய் அறுத்துண்ண மாட்டாதார்
இச்சைக்குப் பிச்சை இரக்கின்ற வாறே. **1**

---

*1856. **தெளிவுரை :-** அடியவர்கட்கு உலக உழவரின் வேறான விதைக் கூடை உண்டு. வேலி நிலம் உண்டு. அதனால் அவர் பசிக்குமுன்பே அவரது உழவுத் தொழில் அவர்கட்குப் பயனைத் தந்து விடுகின்றது. ஆகவே, 'பசி வந்து வருத்துமோ' என்னும் அச்சம் இல்லாமல் அதற்கு முன்பே அவர்கள் அறுவடை செய்து பசியின்றி உண்கின்றார்கள். அது மாட்டாதவர்களே வயிறு வளர்க்கும் விருப்பத்தால் பலரிடம் சென்று இரந்து உயிர் வாழ்கின்றனர்.*

***குறிப்புரை :-*** *ஆகவே, 'அவர் அன்பர் விரும்பியளிக்கும் தானத்தையேற்று உண்ணுதல் சோம்பலால் மானங்கெடாது வாழமாட்டாது மானம் இழந்து பிறரிடம் சென்று இரப்பவரது இரவன்று' என்பதாம்.*

*உருவக வகையால் "விதைக்கூடை" என்பது சுழுமுனை நாடியையும், 'வேலி நிலம்' என்பது சந்திர மண்டலத்தையும் அதில் உண்டாகும் விளைவு விந்துத் தானத்து அமிழ்தத்தையும் உணர்த்தின. விச்சுக் கலம் - விதைக் கூடை. "உச்சிக்கு முன்னே" என்பது சிலேடை வகையால் 'பசிக்கும் முன்னே' உள்ள விந்துத் தானமாகிய ஆஞ்ஞையையும் குறித்தன. "மாட்டாதார்" என்றதால் அடியவர் மாட்டுவராதல் விளங்கிற்று. 'யோகத்தால் காயசித்தி பெற்று நெடுங்காலம் வாழ வல்லவர் அன்பர் செய்யும் வழிபாட்டினை ஏற்றலைச் சோம்பலால் வறுமை யுற்று இரப்பவர் செயலோடு ஒத்ததாக எண்ணுதல் அறியாமை' என்றபடி.*

*இதனால், 'அடியவர் பிச்சை யேற்றல் இரத்தலன்று' என்பது காரணத்துடன் விளக்கப்பட்டது.*

*1857. **தெளிவுரை :-** சிவபெருமான் பிரமனது தலை ஓட்டினையே கலமாகக் கொண்டு எங்கும் சென்று பிச்சையேற்றான். ஏன்? இயல்பாக அறம் செய்யாதவரும் உயர்ந்தோர்க்குக் கொடுத்தலாகிய செயல் வாய்த்து அறம்*

**1857.** பிச்சைய தேற்றான் பிரமன் தலையினில்
பிச்சைய தேற்றான் பிரியா தறஞ்செய்யப்
பிச்சைய தேற்றான் பிரமன் சிரங்காட்டிப்
பிச்சைய தேற்றான் பிரான்பர மாகவே. **2**

**1858.** பரந்துல கேழும் படைத்த பிரானை
இரந்துணி என்பர் எற்றுக் கிரக்கும்
நிரந்தர மாக நினையும் அடியார்
இரந்துண்டு தன்கழல் எட்டச் செய்தானே. **3**

---

*பெறுதற் பொருட்டு. இன்னும் அஃதேயன்றி, 'தானே பரம்பொருள்' என்பதை விளக்குவதற்கும். இப்பாடல் சிவபெருமான் பிச்சை ஏற்றதன் காரணத்தை உணர்த்துகிறது. இறைவன் திருக்கரத்தைச் சார்ந்ததால் பிரமன் சிறந்தான்.*

***குறிப்புரை :-*** *'எனவே, அவன் அடியார் பிச்சையேற்றலும் அத்தன்மைத்தேயாம்' என்பது குறிப்பெச்சம். தாருகாவன இருடிகள் கருமப்பிரம வாதிகளாய், 'கடவுள் இல்லை' என்னும் மயக்க உணர்வினராய்த் தம் மனைவியர்க்கும் அக்கொள்கையினையே போதித்துவர அவர்கட்கு அம்மயக்கத்தைப் போக்கி, 'பரம்பொருள் ஒன்று உண்டு' என்பதையும், 'அப்பரம்பொருள் தானே' என்பதையும், அவர்கட்குத் தெளிவிக்கவே சிவபிரான் திருமாலை மோகினியாகச் செய்து இருடியர்பால் அனுப்பித் தா பிச்சைப் பெருமானாய் இருடியர்தம் பத்தினிமார் முன் சென்றான். ஆதலின் அதனையே இம்மந்திரத்தின் பின்னிரண்டடிகளில் குறித்தார். பிச்சைப் பெருமானாய்ச் சென்றது, 'பரம்பொருள் ஒன்று உண்டு' என்பதை உணர்த்துவதற்கும், பிரம கபாலத்தை ஏந்திச்சென்றது, 'அப்பரம் பொருள் தானே' என்பதை உணர்த்தற்கும் ஆதலின் "பிரமன் சிரங்காட்டி" என மீளவும் அனுவதித்துக் கூறினார். முதற்கண் "பிரமன் தலைதன்னில்" என்றது, 'தன்னை பரம்பொருள்' என அகங்கரித்துப் பேசிய பிரமன் தலையிழந்தான் என்பதை உணர்த்து முகத்தால், சீவர்கள் தாங்களே எல்லாவற்றுக்கும் தலைவர் என எண்ணுதல் பிழை என்பதைக் குறித்தற்கு. இரண்டாவது அடியை, 'பிரியாள் அறம் செய்ய' எனவும் பாடம் ஓதுவர். அது முன்னிரண்டடிகளை வெற்றெனத் தொடுத்தல் ஆக்குமாறு அறிக.*

*இதன்கண் சொற்பொருட் பின்வரு நிலையணி வந்தது. 'அது' நான்கும் பகுதிப்பொருள் விகுதி. "பிரான் என்பதை முன்னும் கூட்டுக. பிரிதல் - மேற்கொள்ளாதொழிதல்.*

*இதனால், சிவன் அடியார்கள் பிச்சையேற்றல் சிவன் பிச்சையேற்றலை நினைப்பித்து, அதன் பயனை யெல்லாம் விளைத்தல் கூறப்பட்டது.*

**1859.** **வரஇருந் தான்வழி நின்றிடும் ஈசன்**
**தரஇருந் தான்தன்னை நல்லவர்க்கு இன்பம்**
**பொரஇருந் தான் புகலே புகலாக**
**அரவிருந் தால்அறி யான்என்பது ஆமே.** **4**

---

*1858.* ***தெளிவுரை :-*** *சிவபெருமானை உலக முதல்வனாக உணராதவர்கள் அவன் இரத்தலை மட்டுமே நோக்கி அது பற்றி இகழ்ந்தொழிவர். அவர்கள் போலன்றி அவனை உலக முதல்வனாக உணர்பவர். 'சிவன் ஏன் இரக்கவேண்டும்' என ஆழ்ந்து நோக்குவர். அங்ஙனம் நோக்குவார்க்கு, 'அவன் அடியவர் உலகியலில் ஈடுபடாது பசி நீங்குதல் மாத்திரைக்குத்தன் செயலைப் போலவே இரந்து உண்டு முடிவில் தனது திருவடியடையும் நோக்குத் தப்பாது நிறைவெய்துதற் பொருட்டாம்' என்பது விளங்கும்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'சிவனடியார் இரத்தலைச் செய்யும் திருவருள் வழி நிகழ்வதாம்' என்றபடி.*

*1859.* ***தெளிவுரை :-*** *அடியவர்களே! கருடனுக்கு அஞ்சிய பாம்புகளே சிவனையே அடைக்கலமாக அடைந்து அதனால், ஏன் கருடா சுகமா? என்று கேட்கும் அளவிற்கு அச்சமின்றியிருக்கின்றன என்றால், 'சிவன் தன்னை அடைந்தவர்களது இன்னலை எண்ணுவ தில்லை' என்றல் கூடுமோ! கூடாது. உண்மையில் அவன் நல்லவர்கட்கு இன்பத்தை அலைவீசும் கடலைப்போல மிகத் தருவதற்காகவே இருக்கின்றான். இன்னும் அவர்கட்கு அவன் தன்னையே கொடுத்துவிடுவான். ஆகையால், அவன் ஒரு காலத்தில் தலையோட்டிலே எங்கும் சென்று இரந்தானாயினும், எப்பொழுதும் தேவரும், மூவரும், யாவரும் தன்பால் வந்து வணங்கி நலம்பெற இருத்தல்போலவே நீங்களும் பலரது இல்லங்களைத் தேடிச்சென்று இரவாது இருங்கள்.*

***குறிப்புரை :-*** *'அவன் உங்களைத் தேடி உணவு வரும்படிச் செய்வான்' என்பது குறிப்பெச்சம். "புகலே புகலாக" என்பது முதலியவற்றை ஈசன் என்பதற்கு முன்னர்க்கூட்டி, ''வர இருந்தான் வழிநின்றிடும்'' என்பதனை இறுதியில் வைத்துரைக்க. 'இன்பம் அலைபொர என, பொருதற்கு வினைமுதல் வருவிக்க. அவ்வாறே "வர" என்பதற்கும் வினைமுதல் வருவித்துக் கொள்க. "வழி நின்றிடும்" என்றது, 'அவனைப் போலவே இரும்' என்றபடி.*

*இதனால், 'முன்மந்திரங்களிற் கூறியவாறு அடியவர் பிச்சையேற்றல் ஏற்புடைத்தாயினும், இருந்த இடத்திலிருந்தே ஏற்றல் சிறப்புடைத்து' என்பது உணர்த்தியவாறு.* ***சிவன் விட்டது வழியெனச் சிந்தையைச் சிவன்பால் செலுத்தியிருத்தலே பிட்சா விதி****.*

*1860.* ***தெளிவுரை :-*** *சிவனடியார்கள் தாம் எடுத்த உடம்பிலே உள்ளாராயினும், அதன்கண் இல்லாதவரேயாவர். அஃது எங்ஙனம் எனின் அவ்வுடம்பில் உளதாகின்ற பசி, அவா, சினம் என்பவை தம்மை வெல்லும் அளவிற்கு மிகார் ஆதலின், இன்னும் அவர்கள் இந்திரன், மால், பிரமன்*

**1860.** அங்கார் பசியும் அவாவும் வெகுளியும்
தங்கார் சிவனடி யார்சரீ ரத்திடைப்
பொங்கார் புவனத்தும் புண்ணிய லோகத்தும்
தங்கார் சிவனைத் தலைப்படு வாரே. **5**

**1861.** மெய்யக ஞானம் மிகத்தெளிந் தார்களும்
கையகம் நீட்டார் கடைத்தலைக் கேசெல்லார்
ஐயம் புகாமல் இருந்த தவசியர்
வையக மெல்லாம் வரஇருந் தாரே. **6**

---

*முதலியோர் உலகத்திலும், சிவலோகத்திலுங்கூட அங்குள்ள போகங்களை நுகர்ந்து வாழார். மற்றுச் சிவனது திருவடி நிழலில் தலைக்கூடுதல் ஒன்றனையே செய்வார்கள்.*

***குறிப்புரை :-*** *'அதனால், பிச்சை ஏற்றலையும் செய்யார்' என்பது குறிப்பெச்சம். 'சிவனடியார் சரீரத்திடைத் தங்கார்' என மாற்றி முதலில் வைத்துரைக்க. "தங்கார்" என்றது, எதிர்மறை வினைப்பெயர். "பொங்கார்", என்பதன்பின், 'ஆதலின்' என்னும் சொல்லெச்சம் வருவிக்க. புவனம் - கன்மக் கழிவிற்காகக் கிடைத்த இந்த உலகம். புண்ணியலோகம் - சுவர்க்காதி உலகங்கள்.*

*இதனால், 'சிவனடியார்கட்குப் பிச்சையும் மிகையேயாம்' என்பது கூறப்பட்டது.*

***1861. தெளிவுரை :-*** *இருந்த இடத்திலேயிருக்கும் யோகிகள் வறியவர் இரக்கும் இரவிற்குத் தாம் செல்லாமல், உலகத்தில் உள்ளவர்கள் எல்லாம் தம்பால் வந்து தம்மை வழிபடும்படி இருப்பார்கள். அங்ஙனமாயின், 'ஞானத்தில் மிகுந்தவர் இரத்தலைச் செய்யார்' என்பது சொல்ல வேண்டுமோ!*

***குறிப்புரை :-*** *'கையகம் நீண்டார் கடைத்தலைக்கே செல்வர்' என்பது பாடமன்று, மூன்றாம் அடிமுதலாகத் தொடங்கி உரைக்க. 'அகங்கை' எனப் பின் முன்னதாகத் தொக்க ஆறாம் வேற்றுமைத் தொகையாய் வருவது இங்கு நேரே "கையகம்" என்றே வந்தது. மௌனம் உடையாரை, 'வாய் திறவார்' என்றல்போல, இரவாதவரை, "கையகம் நீட்டார்" என்றார், 'வாயிற்படி' எனப் பொருள் தரும், கடைத்தலை என்னும் பால்பகா அஃறிணைப் பெயர் இங்குப் பான்மையாய் நின்றது. ஐயம் வறியோர் இரவும், பிச்சை உயர்ந்தோர் ஏற்கும் தானமும் ஆதல் அறிக. சிவஞானி பிச்சைக்கென்று வீடு வீடாகச் செல்லுதல் கூடாது. உண்மை ஞானிகளாயினும் கையேற்றல் கூடாது. இருக்குமிடத்தைத் தேடி வந்து அருத்தியுடன் இட்டால் அருந்துதல் உயர்வாம்.*

*இதனால், சிவனடியார் எஞ்ஞான்றும் இரவார் என்பது கூறி முடிக்கப்பட்டது. இறுதி மூன்று மந்திரங்களும் சிவனடியாருள் அதிதீவிர நிலை உடையாரது செயலே கூறப்பட்டது.*

## 17. முத்திரை பேதம்

***<u>அடியார் தாம் சொல்லக் கருதுவனவற்றை வாயாற் சொல்லாது கைச் செய்கை, உடற்செய்கைகளால் அறிவிக்குங்கால் அச்செய்கைகள் 'முத்திரை' எனப்படும்</u>. அச்செய்கைகள் பரத சாத்திரத்திலே பலவாகச் சொல்லப்படும். அவ்வாறு சிவாகமங்களிலும் சரியை முதலிய நான்கிற்கும் ஏற்புடையன பல கூறப்படும். அவற்றுள் 'சிறப்புடையன இரண்டு' எனக் குறிப்பிட்டு, சாம்பவி, கேசரி ஆகிய அவற்றின் சிறப்பினை இங்குப் பத்து மந்திரங்களால் உணர்த்துகின்றார்.***

**1862.** **நாலாறு மாறவே நண்ணிய முத்திரைப்**
**பாலான மோன மொழியில் பதிவித்து**
**மேலான நந்தி திருவடி மீதுய்க்கக்**
**கோலா கலங்கெட்டுக் கூடும்நன் முத்தியே. 1**

---

*1862. தெளிவுரை :- நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பும் நீங்குதற் பொருட்டு நல்லோர் தங்கள் உள்ளங்களை அவற்றிற்கு ஏற்பப் பொருந்திய முத்திரைகளாகிய பல வகைப்பட்ட மொழிகளிலே பொருந்தி, அவ்வாற்றால் பரம்பொருளாகிய சிவனடிமேல் செல்லும் படி செலுத்தினால், உலக ஆரவாரங்கள் அடங்கி, மேலான வீடுபேறு உண்டாகும்.*

*குறிப்புரை :- "நால், ஆறு" - என்பன தொகைக் குறிப்பாய் அத்துணையான தோற்றங்களையும், பிறப்புக்களையும் குறித்தன. 'நாலாகிய ஏழ்' எனவும், 'முத்திரையாகிய மோன மொழி' எனவும் விரிக்க. முத்திரைகள் வாய்திறந்து பேசாமலே கருத்தை விளக்குதலால் அவற்றை "மோன மொழி" என்றார். பதிவித்து உய்த்தற்கு, 'உள்ளம்' என்னும் செயப்படுபொருள் வருவிக்க. "உள்ளம்" என்றது, அதன் கண் எழும் கருத்துக்களை, "பதிவித்து" என்றது, 'வாய்திறவாமல்' எனவும், கருத்துக்கள் 'அவத்தின் பாலவாகாது, சிவத்தின் பாலாவே ஆகல் வேண்டும்' எனவும் கூறியவாறு. மேலான வீடு பரமுத்தி.*

*இதனால், முத்திரைகளது பயன் கூறுமுகத்தால் அவை அடியவர்க்கு வேண்டப்படுதல் கூறப்பட்டது. வாய்திறவாமையை வேண்டியது, 'அதனால் உலகியல் தொடர்பு குன்றுதல் பற்றி' என்பதனை, "கோலாகலம் கெட்டு" என்பதனால் கூறினார்.*

*துரியம் - உயிரின் பேருறக்க நிலை. உயிர் உடலில் எங்குள்ளது? நனவில் (இப்போது அனைவரின்) புருவ நடுவிலும், கனவில் கழுத்திலும் உறக்கத்தில் இருதயத் தானத்திலும், பேருறக்கத்தில் தொப்பூழிலும், உயிர்ப்படங்கலில் (கோமா நிலையில்) மூலாதாரத்திலும் இருக்கும். பேருறக்க நிலையான துரியம் கீழ்க்கண்டவாறு மூவகைப்படும்.*

**1863.** துரியங்கள் மூன்றும் சொருகிட னாகி
அரிய உரைத்தாரம் அங்கே அடக்கி
மருவிய **சாம்பவி கேசரி** உண்மை
பெருகிய ஞானம் பிறழ்முத் திரையே. 2

---

| | |
|---|---|
| ***துரியம்*** | *கண்களும் அறிவும் அடங்கிய நிலை* |
| ***சீவதுரியம்*** | *உடலுடன் பிராணன் அடங்கியிருக்கும் நிலை* |
| ***பரதுரியம்*** | *அருளில் உயிர் அடங்கிய நிலை* |
| ***சிவதுரியம்*** | *சிவத்திடம் சீவன் அடங்கிய நிலை* |

*இந்த மூவகைத் துரியங்களும் அடங்கிய நிலை ஞான முத்திரைகளாகிய சாம்பவி, கேசரிகள் என்க.*

***ஞான முத்திரைகள்***

| | |
|---|---|
| ***சாம்பவி*** | *அன்பர்களுக்குச் சுகத்தை உண்டாக்குவது. தியானத்தால் சம்புவாகிய சிவத்தை அடைவது. சம்பு - ஞானம். ஞானம் வெளிப்படுவதால் வந்த பெயர் என்பாரும் உளர். திருவருள் நோக்கம்.* |
| ***கேசரி*** | *பிராண வாயு சுழுமுனையில் செல்லும்போது உண்டாகும் அனுபவம். சின்முத்திரைக் கையுடன் பிரணவ யோகம் பயில்வது.* |

***1863. தெளிவுரை :-*** *அரிய சொற்களையே உரைப்பதாயினும் அதனையும் துரிய நிலையில் நிற்குங்கால் எழாமல் அடங்கியிருக்கச் செய்து நின்ற 'சாம்பவி, கேசரி' என்னும் இரண்டு முத்திரைகளே முத்துரியங்களும் செறிந்திருக்கும் இடமாய்' உலகியலினின்றும் நீங்குதற்கும், உண்மை ஞானம் பெருகுதற்கும் ஏதுவாய முத்திரைகளாம்.*

***குறிப்புரை :-*** *அரிய உரை...... கேசரி" என்பதை முதலிற்கொண்டு உரைக்க. தாரம் - நாக்கு. "அங்கே" என்றது முன்னர்ப்போந்த துரிய நிலையை. பிறழ்தல் - நீங்குதல். உலகியலினின்று நீங்குதல்.*

*இதனால், 'முத்திரைகள் பலவற்றுள் சிறப்புடையன இரண்டு' என அவை எடுத்துக் கூறப்பட்டன.*

***1864. தெளிவுரை :-*** *சாம்பவி முத்திரையாவது தனது கண்களைச் சிவனது கண்களாகப் பாவித்துக்கொண்டு, நோக்குவன எவற்றையும் அந்தப் பாவனையோடே நோக்குதலாம். இதனால் உலகப் பொருள்கள் மாயையாகாது அருள்மயமாக, தனது ஞானேச்சாக் கிரியைகளும் சிவனது ஞானேச்சாக்*

**1864.** சாம்பவி நந்தி தன்னருட் பார்வையாம்
ஆம்பவ மில்லா அருட்பாணி முத்திரை
ஓம்பயில் வோங்கிய உண்மைஅக் கேசரி
நாம்பயில் நாதன்மெய்ஞ் ஞானமுத் திரையே. **3**

**1865.** தானத்தி னுள்ளே சதாசிவ னாயிடும்
ஞானத்தி னுள்ளே நற்சிவ மாதலால்
ஏனைச் சிவனாம் சொரூபம் அறைந்திட்ட
மோனத்து முத்திரை முத்தாந்த முத்தியே. **4**

---

*கிரியைகளில் அடங்கி நிற்கும். இனித் தன்னைச் சிவனாகப் பாவித்து வணங்கு வோரையும் அருளே தனுவாய் நின்று சிவமாகச் செய்யும்.*

*இனிக் கேசரி முத்திரையாவது, பிறப்பில்லாமைக்கு ஏதுவாகிய சின்முத்திரைக் கையுடன் பிரணவ யோகத்தில் பயில்வதாகிய ஞானயோக நிலையாம். ஞான முத்திரைகள் - திருவருள் நோக்கமே சாம்பவி முத்திரை. சின் முத்திரையே கேசரி முத்திரை. இவை இரண்டுமே நாம் நாள்தோறும் பயில வேண்டிய சிவஞான முத்திரைகளாகும்.*

***குறிப்புரை :-** பிறவியை அறுப்பது திருவடி ஞானமேயாகையால் அதனை, "ஆம் பவம் இல்லா அருள்" என்றார். அருட்பாணி - அருளைக் குறிக்கின்ற கை. 'முத்திரையோடு' என உருபு விரிக்க. திருவடியுணர்வைக் குறிப்பது சின்முத்திரை ஒன்றேயாதல் அறிக.*

*இதனால், மேல் பெயர் கூறப்பட்ட இரு முத்திரைகளின் இயல்பு கூறப்பட்டது.*

***1865. தெளிவுரை :-** 'ஆதாரம், நிராதாரம், மீதானம்' என்பன எல்லாம் வரையறைப்பட்ட இடங்களேயாதலின் அவ்விடங்களில் எல்லாம் விளங்குபவன் தடத்த சிவனே. (ஆகவே யோகம் முழுவதிலும் விளங்குபவன் தடத்தசிவனே. அதனால் யோக முத்திரைகள் யாவும் பரமுத்தி அபரமுத்திகளையே தரும்). ஞானத்தில் சொரூப சிவன் விளங்குதலால் தடத்த சிவனின் வேறாகிய சொரூப சிவனைக் குறிக்கின்ற சின்முத்திரையே முத்திகளிலெல்லாம் முடிந்த முத்தியாகிய பரமுத்தியைத் தரும் முத்திரையாகும்.*

***குறிப்புரை :-** போக சிவனாகிய சதாசிவனுக்குமேல் இலய சிவனாகிய அருவ சிவன் உளனாயினும், 'தடத்த சிவன்' என்பது இனிது விளங்குதற் பொருட்டுச் சதாசிவனையே குறித்தார். "நற்சிவம்" என்றது, 'சொரூப சிவன்' என்றபடி. மோன முத்திரை - ஞான முத்திரை. அஃதாவது சின்முத்திரை. முத்த அந்த முத்தி - முத்திகளில் இறுதியான முத்தி. முத்தியைத் தருவதை "முத்தி"*

**1866.** வாக்கும் மனமும் இரண்டும் மவுனம்ஆம்
வாக்கு மவுனத்து வந்தாலும் மூங்கையாம்
வாக்கும் மனமும் மவுனமாம் சுத்தமே
ஆக்கும்அச் சுத்தத்தை யார்அறி வார்களே. **5**

**1867.** யோகத்தின் முத்திரை ஓரட்ட சித்தியாம்
ஏகத்த ஞானத்து முத்திரை எண்ணுங்கால்
ஆகத் தகுவதே கேசரி சாம்பவி
யோகத்துக் கேசரி யோகமுத் திரையே. **6**

---

*எனப் பான்மை வழக்காற் கூறினார். யோகத்தில் கைச்செய்கையேயன்றி, உடல் அமைப்புக்களும், அஃதாவது ஆசன வகைகளும் முத்திரை எனப்படும்.*

*இதனால், 'யோகிகளினும் சிறந்த ஞானிகளாகிய அடியவர் கொள்ளத் தக்கது சின்முத்திரையே' என்பது கூறப்பட்டது.*

*1866.* ***தெளிவுரை :-*** *வாக்கு, மனம் என்னும் இரண்டும் வாளா செயலற்று இருத்தலே 'மௌனம்' என்பதற்குப் பொருளாகும். 'அதைவிடுத்து, மனம் எவ்வாறு செயற்பட்டாலும் வாக்கு மட்டும் செயற்படாது வாளா இருத்தல்தான் மௌனம்' எனக் கூறினால் உலகில் ஊமைகளாய் உள்ளார் யாவரும் மௌன விரதிகளாகி விடுவர். வாக்கு, மனம் என்னும் இரண்டும் அடங்கிய தூய நிலையே 'சுத்த நிலை' எனப்படுகின்ற அந்த வீடுபேற்றைத் தரும். அந்த உண்மையை அறிகின்றவர் யாவர்?*

***குறிப்புரை :-*** *'அறிந்து வாக்கும், மனமும் மௌனமாய், மோன முத்திரையுடன் இருப்போம் அரியர்' என்பது குறிப்பெச்சம். "இரண்டும்" என்றது, 'இரண்டன் மௌனமும்' என்றபடி.*

*இதனால், 'மோன முத்திரையுடையார் இன்ன நிலையினராதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

*1867.* ***தெளிவுரை :-*** *யோகம் கைவந்தமைக்கு அடையாளம் அட்டமா சித்திகள் வாய்ந்தமையாகும். அதுபோல இறைவனின் வேறாகாது ஒன்றாகிய அநுபவ ஞானம் கைவந்தமைக்கு அடையாளத்தை ஆராயுமிடத்து மிக்க தகுதி வாய்ந்ததான வேதத்திற் சொல்லப்பட்ட கேசரியாகிய சாம்பவி முத்திரையோடு கூடிய கேசரி முத்திரையேயாகும். யோக நூலினும் கேசரி முத்திரை சொல்லப் பட்டதாயினும் அஃது யோக கேசரி முத்திரையாம்.*

***குறிப்புரை :-*** *ஆக்கம், இங்கு மிகுதி குறித்து நின்றது 'மிக்க தகுதியுடைய வேதம்' என்றது. ஞான காண்டமாகிய உபநிடதங்களை. அவற்றுட் கூறப்படும் கேசரி முத்திரை. 'சாம்பவி முத்திரையோடு கூடிய கேசரி முத்திரை' என்றும்,*

**1868.** யோகிஎண் சித்தி அருளொலி வாதனை
போகிதன் புத்தி புருடார்த்த நன்னெறி
ஆகும்நன் சத்தியும் ஆதார சோதனை
யோகத்துக் கேசரி யோகமுத் திரையே. 7

---

*'யோக நூலுட் கூறப்படும் கேசரி முத்திரை தனியாக சொல்லப்படும் கேசரி முத்திரை' என்றும் உணர்த்தற் பொருட்டு முறையே "கேசரி சாம்பவி" என்றும் "கேசரி" என்றும் கூறினார். ஆகவே, "சாம்பவி" என்றது, சாம்பவியோடு கூடியது' என்றதாம். யோக கேசரி மூன்றாம் தந்திரத்துள் கேசரி யோகம்' என்னும் அதிகாரத்தில் கூறப்பட்டதாம். இதனானே, 'உபநிடதங்களிற் கூறப்படும் யோகம் ஞானயோகமே' என்பதும் பெறப்படும்.*

*இதனால், கேசரி முத்திரை பற்றியதோர் ஐயம் அறுக்கப்பட்டது.*

***1868. தெளிவுரை :-*** *எனின், யோகி போகி சத்தி இவர்களின் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று. யோகியாவான் அட்டமாசித்திகளையும் பெற்று, அவை பெறுதற்கு உபாயமான திருவருள் நாதத்தில் வசிப்பவன்; போகியாவான் புத்தி தத்துவ விளைவான நால்வகைப் புருஷார்த்த நல்லொழுக்கத்தில் நிற்பவன். சத்தியாவான் ஆறு ஆதார சோதனைகளிலும் குண்டலினியும் தானுமாக ஒன்றாய்க் கண்டு, ஒப்பற்ற இடமாகிய உச்சியில் (சகஸ்ராரத்தில்) சத்தியும் தானும் வேறற்ற நிலையில் ஒன்றி நின்றவனேயாம் என்றவாறு.*

*யோகி, சித்திகளை எய்திய சித்தன். போகி, திருவருள் நாதத்தில் வசிக்கும் அனுபவி. சத்தி, குண்டலினியோடு அந்நியமாய்க் கூடி ஆயிரம் இதழ்த் தாமரையில் ஆனந்தப்படுபவன் என்பது கருத்து.*

*அருள் ஒலி வாதனை - திருவருள் நாதமாகிய பிரணவ ஒலி என்றும் சிந்தையில் ஒலித்துக்கொண்டே இருக்கும் அனுபவ அறிவாம். கருவி கரணங்களுக்கு அப்பாற்பட்டு என்றும் ஓம் ஓம் என்ற ஒலி அனுபவம் உறுதல் யோகமாம் என்பது. அது கேட்போர் என்றும் எங்கும் துன்பமேயுறார் ஆதலால் யோகி எனப்படுவார் என்பதாம்.*

***குறிப்புரை :-*** *போகி - நுகர்பவன். நுகர்பவன், என்றும் தனியாய்த் தன் புத்தியால் 'யான் போகி, அது போகம்' என உணர்பவன் ஆதலின் போகி புத்தியால் புருடார்த்த நல்லொழுக்கங்களில் நிற்பவன் ஆயினன் என்க.*

*புருடார்த்தம் - அறம் பொருள் இன்பம் வீடு என்பன. வீடும் போகிக்குப் போகமாமோ எனின், ஆம். தன் செயலற்று நுகரவேண்டிய வீட்டின்பத்தை யான் நுகர்கிறேன் என்று முனைந்து நின்று உணர்வானாயின் அந்நிலையில் அவன் போகியே ஆவான் என்க.*

**1869.** துவாதச மார்க்கமென் சோடச மார்க்கமாம்
அவாஅறும் ஈரை வகைஅங்கம் ஆறும்
தவாஅறு வேதாந்த சித்தாந்தத் தன்மை
நவாஅக மோடுன்னல் நற்சுத்த சைவமே. **8**

---

*சத்தி - சத்தியோடு கூடியவன். சத்தி - குண்டலினி. ஆதாரம் - மூல முதல் உச்சி வரையுள்ள ஆறு ஆதாரம்.* ***ஆறு ஆதாரங்களிலும் பிராணனும் குண்டலினியும் ஒன்றாக நின்று அனுபவித்து உச்சியிலும் ஒன்றாகவே உணரும் அனுபவம் சத்தியாம் என்பது.***

***1869. தெளிவுரை :-*** *பன்னிரு கலைப் பிராசாதமே பதினாறு கலைப் பிரசாதமாய் விரியும். அதனால் அவை இரண்டும் தம்மில் வேறாவன அல்ல. விரிவில் பதினாறாகின்ற அந்தப் பிராசாத யோகமே உலகியலிற் செல்லும் அவாவை அடியோடு அறுக்கும். அதனால் அந்தப் பிராசாத யோகங்களே அவா முற்ற நீங்குதற்கு ஏதுவாகிய 'வேதாந்த யோகம்' சித்தாந்த யோகம்' என்றும் சொல்லப்படும். அவற்றை மிக விருப்பத்தோடு செய்தலே சைவத்துள்ளும் மேலான சைவ நெறியாம்.*

***குறிப்புரை :-*** *யோகநெறி அனுபவம் முதிரச் சோடசப் பிராசாத அநுபவம் உண்டாம்; அவற்றுள் பத்து பற்றறுக்கும்; ஆறு சித்தாந்தச் செந்நெறியான சுத்தசைவம் ஆம் என்பது கருத்து.*

*துவாதச மார்க்கம் - மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, தாலு, ஆஞ்ஞை, பிரமரந்திரம், உபரிசிரஸ், துவாதசாந்தம், வெளி, பரவெளி என்னும் பன்னிரண்டு நெறிகளாம். துவாத சாந்தமாகிய நெறி எனினுமாம்.*

*மென்மை - நுட்பம் உணர்த்தி நின்றது. மென்சோடச மார்க்கம் - மிக நுட்பமான சோடச பிராசாத நெறிகளாம். அவையாவன. அகாரகலை, உகாரகலை, மகாரகலை, விந்து கலை, அர்த்தசந்திர கலை, நிரோதினி கலை, நாதகலை, நாதாந்த கலை, சத்திகலை, வியாபினி கலை, வியோமரூபை, அனந்தை, அநாதை, அநாசிருதை, சமனை, உன்மனை என்பனவாம். இவற்றுள் அகாரகலை முதல் வியாபினி வரையுள்ளவை பற்றறுதலாகிய பயனைத் தருவனவாம். ஏனைய நான்கும் சித்தாந்த செந்நெறியாகிய ஞானமுத்திரை அனுபவமாம் என்பது.*

*இதனால், 'ஞான கேகரி முத்திரையைக் கொள்ளுதற்கு உரியவர் ஞான யோகமாகிய பிராசாத யோகம் செய்பவரே' என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

***1870. தெளிவுரை :-*** *இன்ன முத்திரைக்கு இன்னாரெனல் நுதலிற்று. மோன*

**1870.** மோனத்து முத்திரை முத்தர்க்கு முத்திரை
ஞானத்து முத்திரை நாதர்க்கு முத்திரை
தேனிக்கும் முத்திரை சித்தாந்த முத்திரை
கானிக்கும் முத்திரை கண்ட சமயமே. **9**

---

*முத்திரை முத்தர்க்குரிய முத்திரையாம். ஞானமுத்திரை ஆசாரியருக்கு உரியதாம். சித்தம் இனிக்கும் முத்திரை சித்தாந்த முத்திரையாம்; இவை புகழப்படும் சமயங் கண்ட முத்திரையாம் என்றவாறு.*

*மோனமுத்திரை முத்தர்க்கும், ஞானமுத்திரை குருவுக்கும், தேனிக்கும் முத்திரை சித்தாந்த நெறியில் நிற்பார்க்கும் உரியனவாகப் புகழப்படும் சமயங்கள் புகல்கின்றன என்பதாம்.*

*மோன முத்திரை - வாய்வாளாது பிரணவத் தியானத்தில் இருக்கும் அசைவற்ற உயிர்ப்படங்கிய நிலை. இதற்குரியார் முத்தியை விரும்புவாராகிய முமுட்சுக்களாவார்.*

*ஞான முத்திரை - சீவன். மல மாயை கன்மங்களினின்றும் நீங்கிச் சிவத்தோடு தாடலைபோல மடங்கி நிற்றலை உணர்த்தும் சின்முத்திரையாகும். இது ஆசாரியன் இருந்து பார்க்கும்போது சாதகமுத்திரை எனவும், சீடனுக்கு உபதேசிக்கும் பொழுது போதக முத்திரை எனவும் இருவகைப்படும். இவ்விரு முத்திரைகளும் ஆசாரியனுக்கே உரியவை.*

*'சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்' என்புழிப்போல தேனித்தல் சிந்தை அமுது ஊற இருத்தல். அதற்குரிய முத்திரையாவது ஆனந்தானுபவம் வெளிப்படுக்கும் மெய்ப்பாடு. இதுவே சுத்தாத்துவித நெறிக்கு உரிய முத்திரையாம்.*

*இம்மூன்றும் கானிக்கும் சமயங்கண்ட முத்திரையாம் எனக்கூட்டுக. கானித்தல் - புகழ்ந்து பாடப்படுதல்.*

***குறிப்புரை :-** "முத்தர்க்கு முத்திரை, நாதர்க்கு முத்திரை" என்பவற்றை, "கண்ட சமயமே" என்பதற்கு முன்னே கூட்டி உரைக்க. "முத்திரை பலவற்றுள் முதற்கண் நின்றது எழுவாய்; ஏனைய பயனிலை. 'தேன்' என்னும் பெயர், 'இனிமை' என்னும் பொருட்டாக, அதனடியாக, 'தேனித்தல்' என்னும் வினைச்சொல் பிறந்தது. மேற்பார்வை பார்த்தலை, 'கண்காணித்தல்' என்பர். அதனை முதற் குறைந்து , "காணிக்கும்" என்றார். அடியவரைக் கண்காணிப்பவன் சிவனேயாதல் வெளிப்படை. "காணிக்கும்" என்பது இன எதுகையாயிற்று. 'கண்டன' என்னும் முற்றுச்சொல் 'அன்' பெறாது 'கண்ட' என நின்றது. "சமயம்" என்றது தலைமை பற்றிச் சைவ சமயத்தையே குறித்தது. சைவத்தை நாயனாரே ஐந்தாம் தந்திரத்தில் பல வகையாகப் பிரித்துணர்த்தினமை அறிக.*

**1871.** தூநெறி கண்ட சுவடு நடுஎழும்
பூநெறி கண்டது பொன்நக மாய்நிற்கும்
மேனெறி கண்டது வெண்மதி மேதினி
நீணெறி கண்டுளம் நின்மல னாகுமே. **10**

---

*இதனால், ஞான கேசரி முத்திரையே, முத்திரைகளுள் தலையாவது என்பது பலவற்றாலும் வலியுறுத்தி, ஒருவாறு முடித்துக் கூறப்பட்டது.*

***1871. தெளிவுரை :-*** *தூய நெறியாகிய யோக முறை கைவந்து உண்மையைக் கண்ட அடையாளம், புருவ நடுவில் தோன்றுகின்ற முடிநிலை ஆதாரமாய்க் காணப்பட்டு, மேருமலையின் உச்சியை அடைந்தது போலத் தோன்றும். எனினும் அதுவே முடிநிலையாகாது. அதற்கு மேலேயுள்ள ஏழாந்தானத்திற் சென்றவர் கண்டது சந்திர மண்டலமாம். ஒருவன் அதற்குமேலும் செல்வானாயின், சத்தி சிவ நெறிகளைக் கண்டு மலம் நீங்கிய தூய உணர்வினனாவன்.*

***குறிப்புரை :-*** *'அந்நிலையை அடைவிப்பது மேற்கூறிய பிராசாத யோக நெறியாகிய ஞான கேசரி முத்திரையேயாம்' என்பது குறிப்பெச்சம்.*

*"நெறி" நான்கனுள் ஈற்றில் உள்ளத்தில் இரண்டனுருபும், ஏனையவற்றில் மூன்றனுருபும் விரிக்க. பூ-பூமி; நிலம் - ஆதாரம். நகம் -மலை. ஆக்கம், உவமை குறித்து நின்றது. மேதினி மண்டலம். நீள்நெறி - உயர்நெறி. "நீணெறி" என்பது இன எதுகை.*

*இதனால், கேசரி முத்திரை பற்றிக் கூறப்பட்ட ஞானயோகத்தின் சிறப்புணர்த்து முகத்தானே அம்முத்திரையினது சிறப்புணர்த்தி முடிக்கப்பட்டது.*

## 18. பூரணக் குகைநெறிச் சமாதி

*சரியை முதலிய மூன்றனுள் யோகமே ஞானத்திற்கு அணுக்கமானது. அதனால் யோகியரும் ஒருவாறு ஞானியரோடு ஒப்பர். ஞானியரும் தம் உள்ளம் புறத்துச் செல்லுங்கால் யோக நெறியில் நிற்பர். அந்த யோகம் 'இயமம்' முதலிய எட்டுறுப்புக்களை உடைத்தாதல் மூன்றாம் தந்திரத்தில் கூறப்பட்டது. அந்த எட்டுறுப்புக்களில் முடிவானது சமாதியாகலின் யோகியரையும், ஞானியரையும் உலகத்தார் சமாதியில் உள்ளவராகக் கூறுவர். சமாதி என்பது உயிரும் மனமும் ஒத்தநிலை. நீரில் உப்பு கரைந்து ஒன்றானாற்போல மனமும் உயிரும் ஒன்றாதலே சமாதி. பிராணன் ஒடுங்க மனம் அதில் ஒடுங்குகிற அந்நிலை தான் சமாதி எனப்படுவது. அதாவது மனத்தின் சகல சங்கற்ப விகற்பங்களும் கெட்டு உயிர் இறைவனோடு ஒன்றுபட்டுப் பல காலம் பிரியாத நிலைமை. இதன் இலக்கணம் வராகோப நிடதத்தில் கூறப்பெற்றுள்ளது. இச்சமாதி யோக நூல்களில் இராஜ யோகம், உன்மனி, மனோன்மணி, அமரத்வம், லயம், தத்துவம், சூனியாசூனியம், பரமபதம், அமனஸ்கம், அத்வைதம், நிராலம்பம், நிரஞ்சம், ஜீவன் முத்தி, சகஜம், துரியம் என்ற பெயர்களாலும் அழைக்கப்பெறும்.*

*இது சித்திக்கப் பயிலும் முறை யோக சூடாமணி உபநிடதத்தில் பிராணாயாமம் பன்னிரண்டு நாள்வரை நிலைத்து நிற்கப் பயில்வதென்று கூறப்பட்டுள்ளது.*

*குகை என்பது ஒடுங்கிய இடம். மனம் கண்வழியாகப் புலன்களிற் சென்று பற்றாது நாடிய ஒன்றையே நாடி நிலைத்திருப்பதற்கு ஏற்ற ஒடுங்கிய இடம். மலைக்குகை கட்டுக்குகை போன்றன. நினைத்த மாத்திரத்தில் நின்மல சமாதி கைகூடும் சித்தி பெறாதார் இத்தகைய இடங்களில் புகுந்து மனோவிருத்தியை அடக்குவது வழக்கம். குகை - இருதய குகையுமாம். இருதய குஹரம் என்றும் யோகநூல் வழங்கும். அந்நெறியில் நெடுநாள் மனம் லயித்து நிற்கப் பழகிய நிலையே பூரண குகை நெறிச் சமாதி என்பது. பூரணம் என்ற அடைமொழி சமாதியை விசேடித்து நிற்பது.*

*மேலதிகாரத்து, தாரணை நிலைப்பதற்கு உபாயமான முத்திரா பேதங்களை மொழிந்த ஆசிரியர், இவ்வதிகாரத்தில் தாரணையின் முதிர்ச்சியான பூரண சமாதி இதய குகையில் நிலைக்கு முறையை உணர்த்துதலின் அதிகார இயைபும் இதனானே விளங்கும். அத்தகையோர் இருக்கும் இடம் எதுவாயினும் அதனை, 'குகை' என்றே வழங்குவர். 'மடம்' என்பது பிற்காலத்தில் பெருவழக்காயிற்று. 'குகை' என்னும் வழக்கம் யோகியர் மலைக் குகைகளில் தங்கியிருந்த நிலைபற்றி உண்டாயிற்று. ஆகவே நாயனார் சமாதி நிலையை, 'குகை நெறி' எனக் குறிப்பிட்டு, அவரது வாழ்வின் நிறைவை, "பூரணக் குகைநெறிச் சமாதி" என வைத்து எட்டு மந்திரங்களால் உணர்த்துகின்றார். அடியாரது இயல்பைப் பல்லாற்றானும் கூறி வந்த வகையில் அவரது வாழ்வின் நிறைவையும் கூறுதல் முறையாதலை அறிக.*

**1872.** **வளர்பிறை யில்தேவர் தம்பாலின் மன்னி**
**உளரொளிப் பானுவி னுள்ளே யொடுங்கித்**
**தளர்வில் பிதிர்பாதம் தங்கிச் சசியுள்**
**உளதுறும் யோகி உடல் விட்டால் தானே.** **1**

**1873.** **தானிவை யொக்கும் சமாதிகை கூடாது**
**போனவி யோகி புகலிடம் போந்துபின்**
**ஆனவை தீர நிரந்தர மாயோகம்**
**ஆனவை சேர்வர் அருளின்சார் வாகியே.** **2**

---

*1872. **தெளிவுரை :-** இயன்ற அளவு யோக நெறியில் நின்ற யோகி அந்நிலையிலே தனது புற உடலை விட்டு நீங்கினால் நீங்கின காலம் வளர்பிறைக் காலமாய் இருப்பின் முன்னர்த் தேவருலகை அடைந்து சில காலம் இருந்து, பின் சூரிய மண்டலத்தில் நுட்பமாய்ப் புகுந்து, அப்பால் பிதிரர்கள் உலகத்தில் தங்கி, இறுதியில் சந்திர மண்டலத்துள் தங்கி அங்குள்ள இன்பத்தை நுகர்வான்.*

***குறிப்புரை :-** ஈற்றடியில் உள்ள "யோகி உடல் விட்டால்" என்பதனை முதலிற்கொண்டு உரைக்க. தான், ஏ அசைகள். "வளர் பிறையில்" என்றதனால், யோகி வளர்பிறையிற்றான் புற உடலை விட்டு நீங்குவான்' என்பது அமைந்து கிடந்தது. உளர் ஒளி - அசைகின்ற ஒளிக்கதிர். பிதரராவார் மக்களுள் சிறந்தோரைத் தம்பால் வைத்துப் புரக்கும் கடவுளர். இவரே "தென்புலத்தார்" (திருக்குறள், 43) ஆவர். சசி - சந்திரன்.*

*இதனால், யோக நிலைமுற்றப் பெறாத யோகிகளது வாழ்வின் நிறைவிற்குப் பின் உளதாம் நிலை கூறப்பட்டது.*

*1873. **தெளிவுரை :-** யோக நிலை முற்றுப்பெறாது உடல்விட்ட யோகிக்கு மேற்சொல்லியன எல்லாம் பொருந்தும். அவன் அவ்வாறு மேற்சொல்லிய இடங்களிலெல்லாம் தங்கிப் பயன்களை நுகர்ந்தபின் அங்கு நின்றும் பூமியில் வந்து பிறந்து விட்ட குறையாகிய வினையைப் புசித்துத் தீர்ந்தபின் திருவருளின் துணையைப் பெற்று இடைவிடாது யோகத்தின் முதிர்ந்த நிலைகளை எய்துவன்.*

***குறிப்புரை :-** வியோகி - உடலினின்று உயிர் பிரிந்தவன். யோகத்தின் முடிநிலை சமாதி நிலையாகலின் யோகம் முற்றப் பெறாது உடல் விட்ட யோகியை, "சமாதி கை கூடாது போன வியோகி" என்றார். முதற்கண் "தான்" என்றது அவனையே யாகலின், அதனை, 'தனக்கு' எனத் திரித்துக் கொள்க. 'புகலிடத்தினின்றும்' என ஐந்தாவது விரிக்க.*

*இதனால், 'யோக நிலை முற்றப் பெறாது உடல் விட்ட யோகிகள், மீண்டும் பிறந்து அது முற்றப் பெறுவர்' என்பது கூறப்பட்டது.*

**1874.** **தானிவ் வகையே புவியோர் நெறிதங்கி**
**ஆனசிவ யோகத்தாம் ஆறாம் அவ்விந்து**
**தானதில் அந்தச் சிவயோகி யாகுமுன்**
**ஊனத்தோர் சித்திவந் தோர்காய மாகுமே.** **3**

**1875.** **சிவயோகி ஞானி சிதைந்துடல் விட்டால்**
**தவலோகம் சார்ந்துபின் தான்வந்து கூடிச்**
**சிவயோக ஞானத்தால் சேர்ந்தவர் நிற்பன்**
**புவலோகம் போற்றுநற் புண்ணியத் தோரே.** **4**

---

*1874.* ***தெளிவுரை :-*** *மேற்கூறிய யோகி மேற்கூறியவாறு உலக மக்கள் நெறியிலே தானும் நின்று, அதற்கு இடையிலே யோகம் முதிரப் பெற்றுச் சிவயோகியாவான். அங்ஙனம் அவன் சிவயோகி ஆவதற்கு வழி பிராசாத மந்திரம். அந்த மந்திரத்தில் நின்று சிவயோகி ஆவதற்கு முன்பு அவன் பொதுவான யோகப் பயிற்சியால் கிடைக்கும் காய சித்தியைப் பெறுதலும் உண்டு.*

***குறிப்புரை :-*** *"விந்து" என்றது உபலக்கணமாய் ஏனைக் கலைகளோடு கூடிய பிராசாத மந்திரத்தைக் குறித்தது. 'இம்மந்திர வழிச் செய்யப்படும் யோகமே சிவயோகம்' என்பது இங்கு இனிது விளக்கப்பட்டது. எனவே, முன் மந்திரத்தில் "மாயோகம்" என்றதும் இதுவேயாயிற்று. 'வந்த' என்னும் பெயரெச்சத்து அகரம் தொகுத்தலாயிற்று.*

*"காயமும்" என்னும் எதிர்மறை உம்மை தொகுத்தலாயிற்று.*

*இதனால், 'முன்மந்திரத்திற் கூறியவாறு மாயோகத்தைப் பெறுதற்குமுன் சிலர் காய சித்தியைப் பெற்று நெடுங்காலம் மண்ணிலே இருத்தலும் உண்டு' என்பது கூறப்பட்டது. காய சித்தியைக் கூறவே ஏனைச் சித்திகளையும் பெற்றிருத்தல் பெறப்பட்டது.*

*"தவமும் தவமுடையார்க் காகும்" (திருக்குறள், 262) என்றபடி, யோகம் முதிரப் பெறுதலும், சிவயோகம் கூடலும் முற்பிறவியில் பழகினோர்க்கேயாம் என்பதும் இதனால் பெறப்படுமாறு அறிக.*

*1875.* ***தெளிவுரை :-*** *எனின், சிவயோகி உடல் விட்டபின் எய்துகின்ற நிலை வேறுபாடுகளை உணர்த்துதல் நுதலிற்று.*

*சிவயோகியாகிய ஞானியர் நிலைகெட்டு உடல்தளர்ந்து உயிர் நீங்கின் தபோலோகம் சார்ந்து பின்னர்ச் சிவயோக வாயிலாகச் சிவஞானம் பொருந்தி நிலைபேறுற்று விளங்குவர். அவர்கள் புவலோகத்தாற் போற்றற்பெறும் புண்ணியராவர் என்றவாறு.*

*சிவயோகி உடல்விட்டபின் தபோலோகத்தைச் சேர்ந்து சிவயோக*

**1876.** ஊனமில் ஞானிநல் யோகி உடல்விட்டால்
தானற மோனைச் சமாதியுள் தங்கியே
தானவ னாகும் பரகாயஞ் சாராதே
ஊனமில் முத்தனாய் மீளான் உணர்வுற்றே. 5

---

*வாயிலாகச் சிவஞானம் பொருந்தி நிலைபேறுற்று விளங்குவர். அவர்கள் புவலோகத்தாற் போற்றப்பெறும் புண்ணியராவர் என்றவாறு.*

*சிவஞானயோகி - சிவயோகத்தின் வழி சிவஞானம் பெற்றவன்; என்றது சோபானக் கிரமத்தில் ஞானம் பெற்றவன் என்பதாம்.*

*சிகைந்து - சிவஞானசித்தி முற்றுப்பெறுதற்கு முன் நிலை தடுமாறி. அஃதாவது மனம் ஒன்றிச் சிவவாழ்வு வாழ்ந்த சிவயோகி மீளவும் வாசனை தாக்கப் பொறியின்பங்கட்கு அடிமையாகிச் சிவசிந்தனை மாறி உலகவர்போல உழலுதல்.*

*இந்நிலை விளைதல் தவக்குறையால் ஆதலின், அவர்கள் மீளவும் தவ உலகிற் பிறந்து பொறியடக்கமாகிய தவங்களைச் செய்து ஞானம் கூடப் பெற்று என்பார், 'தவலோகம் சேர்ந்து........ சேர்ந்தவர்' என்றார்.*

*நிற்பார் என்பது என்றும் நிலைதளராது உறுதியுடன் நிற்பார் என்னும் பொருளது. புவலோகம் - பூலோகத்திற்கு மேலதான ஒளியுலகு.*

***1876. தெளிவுரை :-*** ***குறைவில்லாத ஞானத்தைப் பெற்றவன் 'குறைவற்ற யோகி' என்றும் சொல்லப்படுவான். (அதற்குக் காரணம், உடம்புள்ள வரையில் அவன் பிராசாத யோக நிலையில் இருப்பதாகும்). அவன் உடலை விட்டு நீங்கியபின் வேறோர் உடலை எடுத்தல் இன்றியே, உடம்பில் மோன சமாதி நிலையில் தான் வேறின்றி இருந்தவாறே உடனே தான் சிவமேயாவன். ஆகவே, அவன் பரமுத்த னாதலன்றி, உலகியல் உணர்வைப் பொருந்திப் பிறப்பில் மீளான்.***

***குறிப்புரை :- 'தங்கி ஆகும்' என்பதில் செய்தெனெச்சம், 'ஓடி வந்தான்' என்பது போல முடிக்கும் சொற்கு அடையாய் நின்றது. "பரகாயம் சாராதே" என்பதை முதலடியின் இறுதியில் கூட்டியுரைக்க. இவ்வேகாரம் பிரிநிலை. 'முத்தராய்' எனவும், 'மீளார்' எனவும் பன்மைச் சொல்லாக ஓதுவன பாடம் ஆகாமையறிக. 'உணர்வுற்று மீளான்' என்க. இதனால் ஞானம் முற்றப் பெற்றோர் தம் வாழ்வின் பின்னர் எய்தும் நிலை கூறப்பட்டது.***

***1877. தெளிவுரை :- 'பிறந்தவர் இறத்தல் இயல்பு என்னும் அம்முறையிலே இறந்தவர் என்ன பயனைப் பெறுவர்' என வினவில் அம்முறையில் இறந்தவர் அடையும் பயன் அந்த இறப்பைத் தவிர வேறில்லை. (என்றதில், 'அவர் சிறப்பாக அடையும் பயன் வேறில்லை' என்றபடி) இனிப் பொதுவான யோகத்தைச் செய்து***

**1877.** செத்தார் பெறும்பய னாவதி யாதெனில்
செத்துநீர் சேர்வது சித்தினைக் கூடில்
செத்தார் இருந்தார் செகத்தில் திரிமலம்
செத்தார் சிவமாய திண்சித்தர் தாமே. **6**

**1878.** உன்னக் கருவிட் டுரவோன் அரன்அருள்
பன்னப் பரனே அருட்குலம் பாலிப்பன்
என்னப் புதல்வர்க்கும் வேண்டி யிடும்ஞானி
தன்னிச்சைக் கீசன் உருச்செய்யும் தானே. **7**

---

*அதன் பயனாகச் சித்திகளைப் பெற்றவர் இறந்தாரானால், அவரது புகழ் உலகில் இறவாதிருக்கும். ஆகவே, மும்மலங்களும் கெடப்பெற்றோரே வாழ்விலும், வாழ்விற்குப் பின்னரும் சிவமாய் நிற்கும் சிறந்த பேற்றை உடையராவர். சித்துக்கள் செய்யும் சித்தர் செத்தாராயின் அவர்கள் செத்தவர்கள் அல்லர். உலகத்து இருந்தவர் ஆவர்.*

***குறிப்புரை :-*** *"செத்தார்" என அமங்கலமாகவே கூறியதனால், அது பிறந்த பல உயிரும் இறக்கும் இறப்பினை எய்தி நின்றோரையே குறித்தது. வினாவியவருக்கு இறுக்கப்படும் விடையை வெகுளியால் அவர்மீதே வைத்து, "நீர்" என முன்னிலையாற் கூறினார். வெகுளி, வாளாதே பயன்பெற விழைதல் பற்றி எழுந்தது. சேர்வு + அது' என்க. சேரப்படும் பயனைச் சேர்வு என்றார். 'அதுவே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. சித்தி, 'சித்து' எனவும் படும். புகழுடம்பு நிலைத்து நிற்க இறத்தலை, "உளதாகும் சாக்காடு" (திருக்குறள், 235) என்ப ஆதலின், "இருந்தார்" என்றார். 'இருந்தாரே' என்னும் தேற்றேகாரமும் தொகுத்தலாயிற்று. 'செகத்தில் இருந்தாரே' என்க. 'வாளா இறந்தார் பெறும் பயன் யாது' என வினாவினார்க்கு, 'பிறந்தோர் யாவரும் புகழோ, ஞானமோ இரண்டில் எதனையாவது எய்தல் வேண்டும்' என்றற்கு, யோகியரும், ஞானியரும் பெறும் பயனை உடன் எடுத்து கூறினார். சிறந்த சித்தியாவது, முத்தியேயாதல் பற்றி, முத்தியும் சில விடத்து, 'சித்தி' எனப்படுதல் பற்றி, முத்தி எய்துவோரை, 'சித்தர்' எனக் கூறுகின்றவர் "திண்சித்தர்" எனச் சிறப்பித்துக் கூறினார்.*

*இதனால், வாளா வாழ்ந்து நாள் கழிப்பவர் வாழ்வு முடிந்த பின்னர் யாதொரு பயனும் எய்தாமை கூறப்பட்டது.*

***1878. தெளிவுரை :-*** *ஞானத்தைப் பெற விரும்பும் உறுதியுடையவன், 'சிவனையன்றி வேறொன்றையும் நினைத்தல் கூடாது' என்னும் எண்ணமாகிய விதையை முதலிலே தனது உள்ளமாகிய நிலத்தில் ஊன்றி, (அந்த எண்ணம் சத்திநிபாதத்தால் உண்டாகும்) அங்ஙனமே சிவனையே பலகாலும் நினைத்தும், போற்றியும் வருவானாயின், அந்தச் சிவனே அவனுக்கு ஞானியர் குழாத்தை அவனுக்கு அருள் புரியும் வண்ணம் கூட்டுவிப்பான். (சேரமான் பெருமாளுக்கு வன்றொண்டரைக் கூட்டுவித்ததுபோல). அங்ஙனம் கூட்டுவிக்கப்பட்ட பின்*

**1879.** எங்கும் சிவமாய் அருளாம் இதயத்துத்
தங்கும் சிவஞானிக்கு எங்குமாம் தற்பரம்
அங்கங் கெனநின் றகமுண்டவான் தோய்தல்
இங்கே யிறந்தெங்கு மாய்நிற்கும் ஈசனே. **8**

---

*அவன் தானும் அக்குழாத்து ஞானியர் போல உலகத்தார் அனைவரையும் தன் மக்கள் போலக் கருதி, 'அவர்களும் தான்பெற்ற பேற்றைப் பெற வேண்டும்' என விரும்புவான். அத்தகையோனுக்குச் சிவன் அவன் விரும்பியவாறெல்லாம் காட்சி தருவான்.*

***குறிப்புரை :-*** *'அவ்வாறு நீவிரும் செய்து ஞானத்தோர் பெறும் பயனைப் பெறுவீராக' என்பது குறிப்பெச்சம். 'வாளா செத்தார் பெறும் பயன் யாது' என வினாவியவரை வெறுத்து, 'அவர் பெறும் பயன் யாதுமில்லை' எனவும், 'பயன் பெறும் வழிகள் இவை' எனவும் கூறிய நாயனார், 'அவற்றுள் சிறந்ததாகிய ஞானத்தைப் பெறுதல் எவ்வாறு' என அறிய விரும்புவார்க்கு அதனை இம்மந்திரத்தாற் கூறினார். உன்ன - இடைவிடாது தியானிக்க.*

*"கரு" என்றது எண்ணத்தை. உரவோன் - திட்பம் உடையவன். பரசிவம். குலம் - குழாம். 'என்ன புதல்வர்க்கும்' என வரற்பாலது எதுகை நோக்கி. "என்னப் புதல்வர்க்கும்" என வந்தது. வேண்டுதல், தான்பெற்ற இன்பத்தை அவரும் பெறுதலை. "ஞானி" என்றது முன்பு உரவோனாய் இருந்து பின்பு ஞானம் பெற்றவனை. 'இம்மையிலும் தான் வேண்டியவாறே ஈசனைப் பெற்று நிற்பான்'. எனவே, உடல் விட்டபின் அவன் ஈசனைப் பெறுதல் சொல்ல வேண்டாவாயிற்று.*

*இதனால், முன் மந்திரத்து வினாவியவர்க்குப் பயன்பெறும் வழி காட்டப்பட்டது.*

***1879. தெளிவுரை :-*** *ஓரோரிடத்தில் மட்டுமே உள்ளது போலக் கட்டிடங்களுக்கு மேல் உள்ளது போலக் காணப்படுகின்ற ஆகாயம் உண்மையில் அவ்வாறின்றி எங்கும் நிறைந்திருத்தல் போல இறைவன் ஓரோரிடத்தில் மட்டும் இருப்பவன் போல அங்கங்குள்ள குருலிங்க சங்க மக்களிலே இருப்பினும் உண்மையில் அவன் அந்த இடங்களையெல்லாம் கடந்து எங்கும் இருக்கின்றான். இந்த உண்மையைத் திருவருளால் உணர்ந்து அந்தத் திருவருள் வியாபகத்திலே நிற்பவனே சிவஞானியாவான். அவன் உடல் விட்டால் அவனுக்கு சிவன் தனது எங்கும் நிறைந்த நிறைவு நிலையை அனுபவமாகச் செய்து எல்லையில்லாத இன்பத்தையும் அருளுவான்.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க. 'தோய்தல் போல' என உவம உருபு விரிக்க. 'சிவஞானிகளுக்குத் தற்பரம் எங்குமாய்' என்பதில் 'உடல் விட்டபின்' என்பது அதிகாரத்தால் வந்து இயைந்தது.*

*இதனால், இவ்வுலகிற்றானே சீவன் முத்தி நிலையைப் பெற்றவன் உடலை விட்டபின் பரமுத்தனாய் விளங்குதல் கூறிமுடிக்கப்பட்டது.*

## 19. சமாதிக் கிரியை

*சமாதி நிலையில் இருந்த யோகியர் ஞானியர், உடலை விட்டாராயின் அந்த உடலும் ஏனையோரது உடல் போலாது அருள் மயமானது என்பது பற்றி 'அதனை எரியூட்டாது குகைக்குள் இருத்தி வழிபடுதல் வேண்டும்' என்பதைப் பதின்மூன்று மந்திரங்களால் உணர்த்துகின்றார். 'சமாதி நிலையில் இருந்தவர் உடலை விட்டு நீங்கினாராயினும் அவர் உடலும் சமாதி நிலையினது' என்னும் அக்கருத்தால் அக்குகையும் 'சமாதி' எனப்படும். அது பற்றிய கிரியைகளை உணர்த்துவது இவ்வதிகாரம் என்க.*

**1880.** அந்தமிலா ஞானிதன் ஆகம் தீயினில்
வெந்திடில் நாடெலாம் வெந்திடும் தீயினில்
நொந்தது நாய்நரி நுங்கிடில் நுண்செரு
வந்துநாய் நரிக்குண வாம்வை வயகமே. 1

**1881.** எண்ணிலா ஞானி யுடல்எரி தாவிடில்
அண்ணல்தன் கோயில் அழலிட்ட தாங்கொக்கும்
மண்ணில் மழைவிழா வையகம் பஞ்சமாம்
எண்ணரு மன்னர் இழப்பர் அரசே. 2

---

*1880. **தெளிவுரை :-** ஞானியின் தேகத்தைச் சுட்டெரிக்கின் உளவாம் தீங்குகள் உணர்த்துதல் நுதலிற்று. எல்லையற்ற சிவஞானியின் உடல் தீயில் வெந்து கெடுமானால் நாடெல்லாம் வெப்பு நோயால் வெந்து கெடும். சும்மா கிடத்தி நாய்நரி உண்ணுமாயின் நாட்டிலே போர்மூண்டு நாடுமுழுதும் நாய்நரியுண்ண அழியும் என்றவாறு.*

*குறிப்புரை :- அந்தம் இன்மை ஞானத்தைச் சிறப்பித்தது. வருகின்ற மந்திரத்தில் எண்ணின்மையும் அன்னது. நோதல் பசியினால், செரு - போர். செருச்செய்வாரது நுட்பமாகிய திறமை செருவின்மேல் ஏற்றப்பட்டது. "வந்து" என்றதனில் 'வேற்று நாட்டிலிருந்து' என்பது பெறப்பட்டது. இவ்வெச்சம் காரணப்பொருட்டாய் நின்றது. தளை சிதைய ஓதப்படுவன பாடமல்ல.*

*இதனால், யோகியர் ஞானியரது உடலை எரியூட்டுதலும், வாளா விடுதலும் குற்றமாதல் கூறப்பட்டது. அடுத்து வரும் மந்திரமும் எரிப்படுத்தல் கூடாமையைக் கூறும்.*

*1881. **தெளிவுரை :-** எண்ணமும் அற்ற சிவஞானியின் உடலில் எரி தாவினால் சிவாலயத்தைக் கொளுத்திய பாவம் பொருந்தும்; பூமியில் மழை விழா. உலகம் பஞ்சமாம்; கணக்கற்ற அரசர்கள் அரசையிழப்பர் என்றவாறு.*

**1882.** புண்ணிய மாம்அவர் தம்மைப் புதைப்பது
நண்ணி அனல்கோக்கில் நாட்டில் அழிவாகும்
மண்ணி லழியில் மலங்காரப் பஞ்சமாம்
மண்ணுலக கெல்லா மயங்குமனல் மண்டியே. **3**

**1883.** அந்தமில் ஞானி அருளை அடைந்தக்கால்
அந்த உடல்தான் குகைசெய் திருத்திடில்
சுந்தர மன்னரும் தொல்புவி யுள்ளோரும்
அந்தமில் இன்ப அருள்பெறு வாரே. **4**

**1884.** நவமிகு சாணாலே நல்லாழம் செய்து
குவைமிகு சூழலைஞ் சாணாகக் கோட்டித்
தவமிகு முட்குகைமுக் கோணமுச் சாணாக்கிப்
பவமறு நற்குகை பத்மா சனமே. **5**

---

***குறிப்புரை :-*** *அண்ணல் - இறைவன். “ஆங்கு” அசை. இதனுள் ஞானியின் உடல் இறைவன் கோயிலுக்கு ஒப்பாதல் சொல்லப்பட்டது.*

***1882. தெளிவுரை :-*** *சிவஞானியரின் உடலைப் புதைப்பது புண்ணியமாம்; பொருந்தி நெருப்பை வைத்துச் சுடின் நாட்டில் அழிவு உண்டாம்; புதைக்காமல் மண்ணில் கிடந்து அழியின் உலகு அழகு கெடும்; மண்ணுலகு அனைத்தும் தீப்பிடித்துக் கெடும் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *மலங்கு ஆர - மனங்கலங்குதல் மிகும்படி. மண்ணில் அழிதல் - கேட்பாரின்றிக் கிடந்து அழிதல். ‘பங்கமாம்’ என்பது பாடம் அன்று. “அவர்” என்றது ஆகுபெயர். இதனால் குகைக்குள் அடக்கும் புண்ணியத்தைப் பயத்தல் கூறப்பட்டது.*

***1883. தெளிவுரை :-*** *சமாதி செய்விப்பார் எய்தும் பயன் உணர்த்துதல் நுதலிற்று. எல்லையற்ற சிவஞானி திருவருளைச் சார்ந்து உடலை விடின் அவ்வுடலைக் குகையொன்று கட்டி அதில் இருக்கச் செய்தால் அழகிய மன்னர்களும் தொன்மையதான புவிக்கண் வாழும் மக்களும் எல்லையற்ற இன்பத்தையும் சிவனருளையும் பெறுவர்.*

***குறிப்புரை :-*** *இதனால் ஞானியின் உடலைச் சமாதி செய்தலின் பயன் கூறப்பட்டது.*

***1884. தெளிவுரை :-*** *குகையை (நில அறையை) ஒன்பது சாண் ஆழமும் ஒரு பக்கத்திற்கு ஐந்து சாண் சதுரமும் ஆகச் செய்து அடியில் திருமேனி தவநிலையில் அமர்கின்ற ஆசனம் பக்கத்திற்கு மூன்றாக முக்கோணமாக அமைத்து, அதன் மேல் திருமேனியைப் பதுமாசனமாக இருத்துக.*

**1885.** **தன்மனை சாலை குளங்கரை யாற்றிடை**
**நன்மலர்ச் சோலை நகரில்நற் பூமி**
**உன்னருங் கானம் உயர்ந்த மலைச்சாரல்**
**இந்நிலத் தான்குகைக் கெய்தும் இடமே. 6**

**1886.** **நற்குகை நால்வட்டம் பஞ்சாங்க பாதமாய்**
**நிற்கின்ற பாதம் நவபாதம் நேர்விழப்**
**பொற்பமர் ஓசமும் மூன்றுக்கு மூன்றணி**
**நிற்பவர் தாம்செய்யும் நேர்மைய தாமே. 7**

---

*குறிப்புரை :- மூன்றாம் அடியில் 'உட்குகை' என்னாது 'குகை' என்றே ஓதின் தளை சிதைதலை நோக்குக. உட்குகை - குகைக்கீழ். 'பத்மாசனமாக இருத்துக' என இறுதியில் ஆக்கத்துடன் ஒரு சொல் வருவித்து முடிக்க.*

*இதனால் நிலக்குகை அமைத்து அதன்கண் திருமேனியை இருத்துமாறு கூறப்பட்டது.*

*1885. **தெளிவுரை :-** அடக்கஞ் செய்விப்பவனுக்குச் சொந்தமான மனை, சாலை, குளக்கரை, ஆற்றின் நடுப்படுகை, பூந்தோட்டம், நகரிலே நல்ல பூமி, நினைத்தற்கரிய காடு, உயர்ந்த மலைச்சாரல் இவ்விடங்களே குகை செய்தற்கு உரிய இடங்களாம் என்றவாறு.*

*குறிப்புரை :- "தன்" என்றது உடலை விட்டு நீங்கிய ஞானியை. "மனை" என்றது ஆச்சிரமத்தையும், தங்கியிருந்த இடத்தையும் பொதுவாகக் குறிக்கின்றது. சாலை - பெருவழி. 'குளக்கரை, குளங்கரை' - விகற்பப் புணர்ச்சி. 'யாற்றிடைத்திடல்' என்க. நற்பூமி - புனிதமான நிலம்.*

*இதனால் நிலக்குகை அமைத்தற்குரிய இடங்கள் வரையறுத்துக் கூறப்பட்டன.*

*1886. **தெளிவுரை :-** நில அறையின் மேலே அழகிய கோயில் ஐந்து அடிக்கு ஐந்து அடிச் சதுரமாய், உயரம் ஒன்பதடியாக மும்மூன்று அடி உயரத்தில் ஒவ்வொரு நிலையாய் மூன்று நிலைகள் தோன்றும்படி அமைத்தல் முறையாகும்.*

*குறிப்புரை :- "குகை" என்பதன் பின் 'மேல்' என்னும் பொருட்டாகிய கண்ணுருபு விரிக்க. "வட்டம்" என்றது. 'சுற்றுப் பக்கம்' என்ற படி. 'பாதம்' என்பது பலபொருள் தருமாதலின 'அடிக்கல்' என்பது உணர்த்துதற்கு "அங்கபாதம்" என்றார். அங்கம் - உடல் உறுப்பு. நில அறை இரண்டரை முழச் சதுரம் ஆதலின் அதன்மேல், 'ஐந்தடிச் சதுரம்' என்பது அந்த நில அறையை உள்ளடக்கியிருப்ப தாகும். நிற்கின்ற பாதம் - நிலத்தினின்றும் எழுந்து நிற்கும் வடிவுடையது. ஓசம்*

**1887.** பஞ்சலோ கங்கள் நவமணி பாரித்து
விஞ்சப் படுத்ததன் மேல்ஆ சனமிட்டு
முஞ்சி படுத்துவெண் ணீறிட் டதன்மேலே
பொன்செய்நற் சுண்ணம் பொதியலு மாமே. **8**

**1888.** நள்குகைநால் வட்டம் படுத்ததன் மேற்காகக்
கள்ளவிழ் தாமம் களபம்கத் தூரியும்
தெள்ளிய சாந்து புழுகுபன் னீர்சேர்த்து
ஒள்ளிய தூபம் உவந்திடு வீரே. **9**

---

*- ஒளி. அஃது பெயராய் யாவரும் காண விளங்கி நிற்கும் கோயிலைக் குறித்தது. 'அண்ணி என்பது இடைக் குறைந்து, "அணி" என நின்றது. அண்ணி நிற்பவர். ஞானியை அடுத்திருப்பவர்; மாணாக்கர் முதலாயினோர். "செய்யும்" என்னும் பெயரெச்சம் "நேர்மை" என்பதனோடு முடிந்தது.*

*இதனால், நில அறையின் மேல் கட்டப்படும் சமாதி கோயிலின் அமைப்பு முறை கூறப்பட்டது. நில அறை அமைப்பு முறை கூறினமையின் அதனோடு இயையக் கோயில் அமைப்பு முறையும் கூறப்பட்டது.*

***1887. தெளிவுரை :-** நில அறையின் அடியில் ஐம்பொன்களும், ஒன்பான் மணிகளும் நிரம்ப இட்டு மூடி, அதன்மேல் மேற்கூறிய முக்கோண பீடத்தை அமைத்து, அதன்மேல் தருப்பையைப் பரப்பி, திருவெண்ணீற்றைத் திருமேனிக்கு அடியிலும், சுற்றிலும், மேலேயும் நிரம்ப இட்டு, அதன்மேல் பொன்னிறமாய் உள்ள நறுமணப் பொடியை மிகுதியாகத் தூவுதலும் சிறப்புடையதாகும்.*

***குறிப்புரை :-** "ஐம்பொன்" என்றது பெரும்பான்மை பற்றியேயாகலின், கரும்பொன் ஒழிந்தனவே கொள்க. பஞ்சலோகங்கள் - பொன், வெள்ளி, செம்பு, ஈயம், வெண்கலம். நவமணிகள் - வைரம், வைடூரியம், முத்து, மரகதம், பவழம், கோமேதகம், மாணிக்கம், புட்பராகம், குருவிந்தம். முஞ்சிப்புல் - தருப்பை. பொற்சுண்ணம் - மஞ்சள் முதலியன கூட்டி இடித்த பொடி. பொன் செய் - பொன்னினது ஒளியைத் தருகின்ற.*

*இது முதல் நான்கு மந்திரங்களால் திருமேனியைப் பொதியுமாறே கூறப்படுகின்றது.*

***1888. தெளிவுரை :-** நடுவில் நில அறை இருக்க, நாற்புறத்திலும் மேலே வரம்பு அமைத்தபின், அதற்கு மேற்கு பக்கத்தில் நிலத்தின்மேல் ஆசனத்தின்மேல் திருமேனியை எழுந்தருளப் பண்ணி, சந்தனத்தின் கருப்பூரம் முதலியவை கலந்த குழம்பு, தனியாக இழைத்த சந்தனம், புனுகு, பனிநீர் முதலியவைகளால்*

**1889.** ஓதிடு வெண்ணீற்றால் உத்தூளம் குப்பாயம்
மீதினில் இட்டா சனத்தினின் மேல்வைத்துப்
போதுறு சுண்ணமும் நீறும் பொலிவித்து
மீதி லிருந்து விரித்திடு வீரே. **10**

**1890.** விரித்தபின் நாற்சாரும் மேவுதல் செய்து
பொரித்த கறிபோ னகம்இள நீரும்
குருத்தலம் வைத்தோர் குழைமுகம் பார்வை
தரித்தபின் மேல்வட்டம் சாத்திடு வீரே. **11**

---

*திருமுழுக்குச் செய்வித்து, தேன் துளிக்க மலரும் பூவால் ஆகிய மாலையைச் சார்த்தி, தூப தீபம் காட்டுக.*

***குறிப்புரை :-*** *"அதன்மேற்காக" என்றமையால், 'நிலத்தின் மேல்' என்பது பெறப்பட்டது. வழிபாடுகளை மிகச் சுருங்கக் கூறினாராயினும் உபலக்கணத்தால் இங்குக் கூறாதனவும் கொள்ளப்படும்.*

***1889. தெளிவுரை :-*** *தூப தீபம் காட்டுதல் முதலியவற்றைச் செய்தபின் திருநீற்றைத் திருமேனியில் பூசி, நில அறையில் அமைத்துள்ள பீடத்தின் மேல் மலர்கள், நறுமணப்பொடி, திருநீறு, அறுகு, சுண்ணம் இவைகளை குப்பாயமாகிய துணி உரையில் இட்டு, மேலே திருமேனியை எடுத்து இருத்திச் சுற்றிலும் ஆடையைச் சூழ வையுங்கள்.*

***குறிப்புரை :-*** *"வைத்து" என்பதை, "பொலிவித்து" என்பதற்கு முன்னே கூட்டுக. விரித்தலுக்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது.*

***1890. தெளிவுரை :-*** *குகையில் திருமேனியைச் சுற்றி ஆடையால் மூடியபின் குகையின் மேலே நான்கு பக்கங்களிலும் பல வகையான படையற் பொருள்களை வாழைக் குருத்தின்மேல் இட்டு நிவேதித்த பின்பு திருமேனியைப் பரிவட்டத்தால் மூடிவிடுங்கள்.*

***குறிப்புரை :-*** *படையற் பொருள்களை மேலே நிலத்தில் வாழைக் குருத்தின் மேல் நான்கு பக்கமும் இட்டு நிவேதித்தல் சூழ்ந்துள்ளோர் பலரும் கண்டு வணங்குதற்பொருட்டு. மற்றும் வானவரும் அப்பொழுது ஞானியை வணங்குவர் என்பது கருத்து. அலம் வைத்து - நிரம்ப இட்டு. குழை முகம் - அருள்புரிகின்ற ஞானியின் முகம். பார்வை தரிசித்தல் - நிவேதனங்களை ஞானி தான் பார்வை செய்து ஏற்றல், பரிவட்டம், "வட்டம்" என நின்றது.*

***1891. தெளிவுரை :-*** *திருமேனியைப் பரிவட்டத்தால் மூடிய பின்பு திருவெண்ணீறு, மணப்பொடி, பலவகை மலர்கள், தருப்பைப்புல், வில்வ இலை*

**1891.** மீது சொரிந்திடும் வெண்ணீறும் சுண்ணமும்
போது பலகொண்டு தர்ப்பைப்புல் வில்வமும்
பாத உதகத்தால் மஞ்சனம் செய்துபார்
மீதுமூன் றுக்குமூன் றணிநிலம் செய்யுமே. **12**

**1892.** ஆதன மீதில் அரசு சிவலிங்கம்
ஓதும் இரண்டினில் ஒன்றினைத் தாபித்து
மேதகு சந்நிதி மேவுத் தரம்பூர்வம்
காதலிற் கோடல் காண்உப சாரமே. **13**

---

*முதலியவைகளை நிரம்பச் சொரியுங்கள். பின் அருக்கியம் முதலியவைகளைக் கொடுத்து கோயில் எடுத்தற்குரிய தொடக்கத்தைச் செய்து விடுங்கள்.*

*குறிப்புரை :- 'தொடக்கத்தைச் செய்யுங்கள்' என்றதனால், 'திருமேனியை மண்ணால் மூடி மறையுங்கள்' என்பது தானே பெறப்பட்டது. இவ்விடத்தில் கூறுதற்கு உரிய கோயில் எடுத்தலை ஒரு காரணம் பற்றி, "பொற்பமர் ஓசம்" என முன்னே கூறினார் ஆகலின், 'அதனை இங்குக்கொள்க' என்றற்கு அங்குக் கூறியதனை இம்மந்திரத்து ஈற்றடியில் அனுவதித்துக் கூறினார். மீது 'சொரிந்திடும்' என்பதை 'வில்வமும்' என்பதன்பின் கூட்டுக. இங்கு மஞ்சனமாவது அருக்கிய பாத்திய ஆசமனங்களைக் கொடுத்தல்.*

*1892. தெளிவுரை :- இதன் பொருள் வெளிப்படை.*

*குறிப்புரை :- 'குகையின் மேல் ஒரு பீடத்தின்மேல் அரச மரமாயினும், இலிங்கமாயினும் இவற்றுள் ஒன்றை நிறுவி, நாள்தோறும் பதினாறு வகையான உபசாரங்களுடன் வழிபாடு செய்க' என்பதும், 'கோயிலை வடக்கு நோக்கியதாகவேனும், கிழக்கு நோக்கியதாகவேனும் அமைக்க' என்பதும் இதனால் கூறப்பட்டன. 'இன்னதை' நிறுவலாம்' என்பது குரு ஆணை பற்றியும், திருவருட் குறிப்பு நோக்கியும் அறியப்படும் எனக் கொள்க.*

*'வாயிலை வடக்கு நோக்கியேனும், கிழக்கு நோக்கியேனும் அமைக்க' என்றதனால். 'அதற்குமுன் திருமேனியும் அவ்வாறு இருத்தப்படும்' என்பதும், திருமேனி இருத்தப்பட்ட வகையிலே வாயிலும் அமைக்கப்படும்' என்பதும் உய்த்துணர்ந்து கொள்ளப்படும்.*

*கோயிலின் கருவறையிலே வில்வ மரம். பாத பீடிகை இவைகளை அமைத்தலும் மரபாக உள்ளது.*

*இங்ஙனம் இறுதியில் சமாதிக் கோயில்முறை சொல்லி முடிக்கப்பட்டது.*

## 20. விந்துற்பனம்

*கிரியையில் உள்ள 'குரு லிங்க, சங்கமம்' என்னும் மூன்றன் வழிபாட்டில் சிறப்புப் பற்றி, சங்கமர் தொடர்பான பலவற்றைக் கூறிவந்த வகையில் அவருக்குள்ள 'விந்து சயம்' பற்றியும் கூறிப்புகுந்து, முன்னே விந்துவின் சிறப்பைப் பதினான்கு மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

*அனைத்துலகங்கட்கும் மேல்நிலைக் காரணமாவது 'விந்து' எனப்படும் சுத்த மாயை. அனைத்துலகங்களும் 'அண்டம், பிண்டம்' என இருவகையுள் அடங்கும். அவற்றுள் 'பிண்டம்' எனப்படும் உடம்பின் உற்பத்திக்கு ஆண் கூறாய் உள்ள 'சுக்கிலம்' என்னும் தாது உள்நிலைக் காரணமாய் உள்ளது. அதனால் அதுவும் 'விந்து' எனப்படுகின்றது. இங்கு உள்நிலைக் காரணமாகிய விந்துவின் காரியத்தையே கூறப் புகுந்தாராயினும் அதனது முதன்மை தோன்றுதற்பொருட்டு மேல்நிலைக் காரணமாகிய சுத்தமாயையின் காரியங்களையே முதற்கண் சில மந்திரங்களால் உணர்த்துகின்றார். உற்பனம் - தோற்றம்; என்றது, காரியம் என்றபடி.*

**1893.** **உதயத்தில் விந்துவில் ஓம்முதற் குண்டலி**
**உதயக் குடிலில் வயிந்தவம் ஒன்பான்**
**விதியிற் பிரமாதி கள்மிகு சத்தி**
**கதியிற் கரணம் கலைவை கரியே.** **1**

---

*1893. தெளிவுரை :- முழுப்படைப்புக் காலத்தில் முதற்கண் சுத்த மாயா காரியங்களே தோன்றும். அக்காரியம் வாக்குகளும், இறைவனது நவந்தரு பேதங்கட்கும் இடமாய் நிற்கும் சுத்த தத்துவங்களும் ஆகும். நவந்தரு பேதங்களை ஒடுக்க முறையில் வைத்து எண்ணினால் பிரமன் முதலியனவாக அமையும். புண்ணியம் காரணமாக இறைவனது அதிகார சத்தி பதிதலால் அப்பெயர் பெற்று நிற்கும் அணுபக்கத்தினரும் உளர். அது நிற்க. வேறு பிரமனாதியர்க்கும், மற்றும் நால்வகை வாக்கிற்கும், அனைத்துப் பொருள்கட்கும் இடமாய் நிற்பன பஞ்ச கலைகள்.*

*குறிப்புரை :- 'அந்தப் பஞ்ச கலைகளும் சுத்த மாயையினின்றே தோன்றும்' என்பது கருத்து. குண்டலியாவது எழுத்தோசையாகிய நாதமேயாம். 'குடிலையில்' என்பது, "குடிலில்" எனக் குறைந்து நின்றது. 'விந்து, குடிலை' என்பன ஒருபொருட் சொற்கள் எனினும் சில இடங்களில் குடிலை என்பது ஆகுபெயராய் அதன் காரியமாகிய வாக்குகளை உணர்த்தும். கதி - காரிய நிகழ்ச்சி. அதிகரணம் என்பது 'கரணம்' எனக் குறைந்து நின்றது. அதிகரணம் - நிலைக்களம், குண்டலி என்றது சூக்குமமாகிய காரண நிலையாகலின் பின்னர்த் தூலமாகிய வைகரியை வேறு கூறினார். வைகரி என்றது உபலக்கணம் ஆதலின் ஏனை மத்திமை பைசந்திகளும் கொள்ளப்படும். 'கரணம் கலை' என்றதின் பின் அவற்றில் வைகரி முதலிய நிற்கும் என உரைக்க. இம்மந்திரத்தின் முதல் இரண்டடிகளில் தோன்றும் என்னும்*

**1894.** செய்திடும் விந்துபே தத்திறம் ஐயைந்தும்
செய்திடும் நாதபே தத்திறன் நாலாறும்
செய்திடும் மற்றவை ஈரிரண் டின்திறம்
செய்திடும் ஆறாது சேர்தத் துவங்களே. **2**

---

*பயனிலை எஞ்சி நின்றது. சுத்த தத்துவங்கள் ஐந்து எனப்படினும் அவை அனைத்தும் சிவ சத்தி பேதங்கட்கு இடமாகு மாற்றானே ஐந்தாய் நிற்றலின் நவந்தரு பேதங்களுள் பரநாத பரவிந்துக்கள், 'அரன் அரி அயன்' என்பன ஆகிய பேதங்கட்கு உரிய அதிகரணங்களையும் வேறு வைத்து எண்ணி 'வயிந்தவம் ஒன்பான்' என்றார். வயிந்தவம் - விந்துவின் காரியம். 'அரன், அரி, அயன்' என்பவர்கட்குச் சுத்த வித்தையிலும், பரநாத பரவிந்துக்களுக்கு அபரநாத அபர விந்துக்களிலும் களம் உண்டு என்க. "விதியிற் பிரமாதிகள் மிகு சத்தி" என்றது பிராகிருதராய் நிற்கும் மூர்த்திகளை மேற்கூறப் பட்டவரோடு வைத்து மயங்காமைப் பொருட்டு. இடைப்பிறவரலாகக் கூறினார். 'விதியின், மிகு சத்தியால் பிரமாதிகள் ஆவர்' என்க. விதி - புண்ணியம்.*

*"விரைக்கம லத்தோன் மாலும் ஏவலால் மேவி னோர்கள்,*
*புரைத்ததி கார சத்தி புண்ணியம் நண்ண லாலே"*

*எனவும்,*

*"அயன்றனை ஆதி யாக அரன்உரு என்ப தென்னை?*
*பயந்திடும் சத்தி யாதி பதிதலால்"*

*எனவும் சிவஞான சித்தி (சூத்திரம் - 2-34, 60) கூறுதல் காண்க.*

*நவந்தரு பேதங்கள் 'திருவருள் வைப்பு' என்னும் அதிகாரத்தில் கூறப்பட்டன.*

*இதனால் சுத்த மாயையாகிய விந்துவின் காரியங்கள் ஓராற்றால் தொகுத்துணர்த்தப்பட்டன.*

***1894. தெளிவுரை :-** நவந்தரு பேதங்களில் நாதங்களும், விந்துக்களும் முறையே சிவமும், சத்தியும் ஆதலால் சிவனது 'இலயம், போகம், அதிகாரம்' என்னும் மூன்று நிலைகளுள் அதிகார நிலையாகிய மகேசுரனது பேதங்கள் இருபத்தைந்தினையும் 'சத்தியின் காரியங்கள்' என்றும், நவந்தரு பேதங்களில் விந்து, சத்தி இவை யொழிந்த ஏழும், குணமூர்த்திகள் மூவரும் ஆகப் பதின்மரும் நாயக, நாயகி பாவத்தில் நாயகர்கள் ஆதலால் அவர்களையே, 'சிவ பேதங்கள்' என்றும் ஒருவாறு கூறலாம். இனி அந்தச் சத்தி சிவங்கள் "சகுணம், சமலம், நின்மலம், ஆனந்தம்" என்னும் காரணத்தால் நான்காகின்ற மாயையின் வகை மூன்றினின்றும் முப்பத்தாறு தத்துவங்களையும் வகைப்படத் தோற்றுவிக்கும்.*

***குறிப்புரை :-** "செய்திடும்" நான்கில் முதல் இரண்டையும், 'அங்ஙனமாகச்*

**1895.** வந்திடு பேத மெலாம்பர விந்து
தந்திடும் மாமாயை வாகீசி தற்பரை
உந்து குடிலையோடு ஓம்உறு குண்டலி
விந்துவில் இந்நான்கும் மேவா விளங்குமே. **3**

---

*செய்யும்' என்னு பொருளுடைய முற்றாக்கி, திறன் என்னும் எழுவாய்கட்குப் பயனிலைகளாக்குக. மூன்றாவதனைப் பெயரெச்ச மாக்கி, அதனை "அவை" என்பதனோடு முடிக்க. மற்று - வினை மாற்று. அவை, ஈரிரண்டினின்றும் தத்துவங்களைத் திறம் செய்திடும் என இயைக்க.*

*இதனால், சுத்த மாயையாகிய விந்துவில் நிற்கும் சத்தி சிவங்களின் செயல்கள் ஒருவாறு வகுத்துரைக்கப்பட்டன.*

*1895.* ***தெளிவுரை :-*** *மாயா காரியங்களாய் உள்ள பலவற்றிற்கும் காரணமாய் நிற்பது 'பரவிந்து' என்னும் தத்துவம். அது சுத்த மாயையின் காரியமே எனினும் அதன்கண்ணே 'அபர வாகீசுவரி, பரவாகீசுவரி', அனைத்து மந்திரங்களையும் செலுத்துகின்ற பிரணவம், அதன் வடிவமாகிய குண்டலி என்னும் நான்கும் பொருந்தி விளங்கும்.*

***குறிப்புரை :-*** *பரவிந்து 'சிவம்' என்னும் தத்துவத்திற்கு மேலுள்ளது. அதற்குமேல் பரநாதம் இருக்கும். அஃது இங்குக் குறிப்பிடப்படவில்லை. 'பரை' என்றது பரவாகீசுவரியை ஆகையால், வாளா, 'வாகீசி' என்றது அபர வாகீசுவரியையாயிற்று. 'பிரணவந்தானே குண்டலியாம்' என்றற்கு ஓமுறு குண்டலி என்றார். அங்ஙனமாயினும் அஃது அப்பெயரால் யோகத்தில் சிறப்பாக உன்னப்படுதல் பற்றி அதனை வேறாகக் கூறினார். அபர வாகீசுவரியும், பிரணவமும் அபர விந்துவில் விளங்குமாயினும் அவையும் காரண நிலையில் சூக்குமமாய்ப் பரவிந்துவில் விளங்குதலை, "மேவா விளங்கும்" என்றார். முன்னர், 'பரவிந்து' என்றதனால், பின்னர் "விந்து" என்றதும் அதுவேயாயிற்று. ஆகவே பின்னர் "விந்து" என்றது, 'அவ்விந்து' என்றதாயிற்று.*

*இதனாலும் விந்துற்பனங்கள் சில கூறப்பட்டன.*

*1896.* ***தெளிவுரை :-*** *நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்திய தீதை என்னும் பஞ்சகலைகளில் முறையே பொருந்தி நிற்கின்ற அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம் - என்னும் சூக்கும பஞ்சாக்கரங்கள் முறையே மனம் முதலாகப் புருடன் ஈறாக உள்ள கருவிகளைச் செலுத்தி நிற்கும்.*

***குறிப்புரை :-*** *"நிவிர்த்தாதி மேவு" என்பது ஏழாம் வேற்றுமைத் தொகை. "அகராதி, நாதாந்தம்" என்பவற்றையும் அகரமாகிய ஆதியும், நாதமாகிய அந்தமும் எனச் செவ்வெண்ணாக்குக. உளம் - புருடன், அகாரம் முதலிய ஐந்தும் முறையே*

**1896.** விளங்கு நிவிர்த்தாதி மேவக ராதி
வளங்கொள் உகார மகாரத்துள் விந்து
களங்கமில் நாதாந்தம் கண்ணினுள் நண்ணி
உளங்கொள் மனாதி உளமந்த மாமே. 4

**1897.** அந்தமு மாதியு மாகிப் பராபரன்
வந்த வியாபி யெனலாகு மந்நெறி
கந்தம தாகிய காரண காரியம்
தந்தைங் கருமமுந் தான்செய்யும் வீயமே. 5

---

*தூல வைகரி, சூக்கும வைகரி, மத்திமை, பைசந்தி, சூக்குமை என்னும் ஐவகை வாக்குக்களைக் குறிப்பன. அவை முறையே, அகங்காரம், புத்தி, மனம், சித்தம் என்னும் அந்தக் கரணங்களையும், புருடனையும் செலுத்தும் - என்பதையும், அதனாலேதான் உயிர்கட்குச் சவிகற்ப உணர்வு உண்டாகின்றது - என்பதையும் சிவஞான போதத்து முதலதி கரணத்தில் காண்க. "மனாதி" என்றது 'அந்தக் கரணம்' எனப் பொதுப் பொருள் தந்தது. அவற்றைச் செலுத்துவனவற்றை அவையேயாக உபசரித்தார்.*

*பிரதிட்டையாகி கலைகளில் இயற்கையாய் நிற்கின்ற உகாரம் முதலிய நான்கும் உபாதி (கலப்பு) வசத்தால் கீழக்கீழ்க் கலைகளிலும் பொருந்தும் என்க.*

*அகரம் முதலிய பிரணவத்தின் கூறுகள் (கலைகள்) ஆகும்.*

*இதனால் சுத்தமாயை தனது காரியமாகிய நாதம் முதலியவை வாயிலாக உயிர்கட்குச் சவிகற்ப உணர்வைத் தருதல் கூறப்பட்டது.*

***1897. தெளிவுரை :-** முதல்வன் உலகத்திற்கு முதலும், முடிவுமாகி, அதனுள் எங்கும் நிறைந்து நிற்கும் முறைமையால் பல தொகுதிகளாய் நிற்கும் காரண காரியப் பொருள்களைத் தோற்றுவித்து, அவன் ஐந்தொழில் செய்ய முதற் கருவியாய் நிற்பது விந்துவாகிய சுத்த மாயையே.*

***குறிப்புரை :-** மாயையினின்றும் தோன்றும் தத்துவங்களில் சில தம்மினின்றும் பிற தத்துவ தாத்துவிகங்கள் தோன்றுதற்குக் காரணமாகவும், அவ்வாறன்றிக் காரியமேயாகவும் நிற்றல் பற்றி, "கந்தமதாகிய காரண காரியம்" என்றார். கந்தம் - கூட்டம்; தொகுதி. மாயை காரியப் படுதல் முதல்வனது சந்நிதி யின்றி அமையாமை பற்றி, 'வியாபியாய நெறியால் செய்யும் வீயம்' என்றார். 'நெறியால்' என உருபு விரிக்க. முதற்கருவியாகும் சிறப்பு நோக்கி, "ஐங்கருமமும் தான் செய்யும்" என அதனையே வினைமுதல்போலக் கூறினார். வீயம், 'பீசம்' என்பதன் திரிபு பீசம் - விதை; என்றது முதற்காரணத்தை.*

**1898.** வீயம தாகிய விந்துவின் சத்தியால்
ஆய அகண்டமும் அண்டமும் பாரிப்பக்
காயஜம் பூதமும் காரிய மாயையில்
ஆயிட விந்து அகம்புற மாகுமே. **6**

**1899.** புறமுக மெங்கும் புகுந்தொளிர் விந்து
நிறமது வெண்மை நிகழ்நாதம் செம்மை
உறமகிழ் சத்தி சிவபாத மாய்உள்
திறனொடு வீடளிக் கும்செயல் கொண்டே. **7**

---

*இதனால் முதற்காரணமாகிய விந்து முதல்வனது சந்நிதி யானே காரியப்படுதல் கூறப்பட்டது.*

*1898.* ***தெளிவுரை :-*** *அனைத்திற்கும் முதற் காரணமாகிய சுத்த மாயையின் ஆற்றலால் அனைத்திற்கு வியாபகமாகிய நிவிர்த்தி முதலிய கலைகளும், அவற்றுள் அடங்கி நிற்கும் புவனங்களும் விரிந்து நிற்க. காரிய மாயையாகிய மூலப் பிரகிருதியினின்றும் பௌதிக சரீரத்திற்குக் காரணமாகிய ஐம்பூதங்களும் தோன்ற, சுத்தமாயை அவை அனைத்திலும் உள்ளும், புறம்புமாய் நிறைந்து நிற்கும்.*

***குறிப்புரை :-*** *நிவிர்த்தி முதலிய கலைகள் பிறவற்றிற்கு வியாபகமாதலல்லது தாம் வேறொன்றில் வியாப்பியம் ஆகாமை பற்றி அவற்றை, 'அகண்டம்' என்றார். "பாரிப்ப" என்பது இங்குத் தன் வினையாய் நின்றது, சாங்கியர், 'காரணம்' எனக்கூறும் மூலப் பிரகிருதி உண்மையில் 'கலை' என்னும் தத்துவத்தின் காரியமே யாதல் தோன்ற, அதனை, "காரிய மாயை" என்றார். பிரகிருதி காரியங்களில் சிறப்பாக அறியப்படுவன ஐம்பூதங்களேயாதல் பற்றி அவற்றையே எடுத்துக் கூறினார்.*

*இதனால், சுத்த மாயை அனைத்துலகங்களிலும் வியாபித்தல் கூறப்பட்டது.*

*1899.* ***தெளிவுரை :-*** *பிண்டத்தில் கரு உற்பத்திக் காரணமாய் ஆண் உடலில் வெண்ணிறம் உடைமை பற்றி, 'சுக்கிலம்' எனப்படுகின்ற தாது 'விந்து' எனப் பெயர் பெற்றதனை அண்டத்தில் புறம், அகம் என்னும் வேறுபாடின்றி எவ்விடத்தும் வியாபகமாய் நிற்கும் காரணப் பொருளாகிய 'சுத்த மாயை' என்றே கொள்ளுதல் வேண்டும். (நாதத்தின் காரியத்தை 'விந்து' என்னும் தத்துவமாகக் கொள்ள லாகாது' - என்பதாம்). இனப் பெண்ணுடலில் செந்நிறம் உடைமை பற்றி, சோணிதம்' எனப்படுகின்ற தாது, காரியப் பொருளாகிய நாதம்' எனத் தக்கதாகும். ஆகவே அவை முறையே முதல்வனாகிய சிவனது கூறும், அவனுக்குத்*

**1900.** கொண்ட இவ்விந்து பரமம்போற் கோதற
நின்ற படம்குடி லாய்நிலை நிற்றலின்
கண்ட கலாதியின் காரண காரியத்து
அண்டம் அனைத்துமாய் மாமாயை யாகுமே. **8**

---

*துணைவியாகிய சத்தியது கூறுமேயாகும். (அவ்வாறில்லையேல் அவை உயிர்க்கு இன்றியமையாக் கருவிகளாகிய தனு கரணங்களைத் தோற்றுவித்தல் இயலாது என்பதாம்). அவை அங்ஙனமாய்த் தனுகரணங்களைத் தோற்றுவித்து உயிர்கட்கு மன உறுதியுடன் செய்யும் ஞானச் செய்தி வாயிலாக வீட்டைத் தருவனவாம்.*

***குறிப்புரை :-*** *சுக்கில சோணிதங்கள் காரண காரியங்கள் அல்ல வாயினும் முதல்நிலையும், வழிநிலையும் ஆதல்பற்றி அவ்வாறு கூறினார். "பாதம்" என்றது, 'கூறு என்றபடி, 'பாகம்' எனப் பாடம் கொள்ளுதலைப் பொருந்தும், 'வெண்மை நிறமது விந்து; செம்மை நாதம்' என மாற்றிவைத்துரைக்க. நிறம், செம்மை இவை ஆகுபெயர்கள்.*

*இதனால், 'விந்து நாதங்கள் அண்டத்திற்கன்றிப் பிண்டத்திற்குக் காரணம் அல்ல என மயங்கற்க; சிவம் சத்திகளது கூறுகளின் தொடர்பால் அவை பிண்டத்திற்கும் காரணமாதல் தெளிவு' - என்பது கூறப்பட்டது.*

***1900. தெளிவுரை :-*** *உயிர்களை மேற்கூறியவாறு அண்டத்தையேயன்றிப் பிண்டத்தையும் ஆட்கொள்கின்ற விந்து பரம்பொருளைப் போலவே மல கன்மங்களோடு விரவுதலின்றித் தூயதாய், ஆயினும் நூலும் மண்ணும், ஆடையும் குடமுமாய்க் காரியப்படுதல் போலக் காரியப்படுவதாய், காரண ரூபத்தில் என்றும் அழிவின்றி, கலை முதலிய தத்துவங்களின் காரியமாய் உள்ள அனைத்து அண்டங்களிலும் அவையேயாய்க் கலந்து பெருமாயையாய் உள்ளது.*

***குறிப்புரை :-*** *பெருமையாவது அனைத்துப் பொருட்கும் வியாபகமாய் அவற்றைத் தன்னுள் அடக்கி நிற்றல், அதுபற்றியே சுத்த மாயை 'மகாமாயை' என்றும், 'ஊர்த்துவம், மேல். அசுத்த மாயை 'அதோ மாயை' எனப்படும்.*

*'சுத்த மாயையின் காரியம் விருத்தியேயன்றிப் பரிணாம மன்று' என்பது, "படம் குடிலாய் நிலை நிற்றலின்" என்பதனால் கூறப்பட்டது. "செயல் பரிணாமமன்று; புகழ்ந்திடும் விருத்தியாகும், படம் குடிலானாற் போல" எனச் சிவஞான சித்தியிலும் (முதற் சூத்திரம் 24) சொல்லப்பட்டது. இதன் இரண்டாம் அடியில் இன எதுகை வந்தது. இதனால் சுத்த மாயையினது பெருமை விளக்கப்பட்டது.*

***1901. தெளிவுரை :-*** *'அது' எனச் சேய்மையதாகச் சுட்டிச் சொல்லப்படுகின்ற*

**1901.** அதுவித்தி லேநின்றங் கண்ணிக்கும் நந்தி
இதுவித்தி லேயுள வாற்றை உணரார்
மதுவித்தி லேமலர் அன்னம தாகிப்
பொதுவித்தி லேநின்ற புண்ணியன் தானே. 9

**1902.** வித்தினி லன்றி முளையில்லை அம்முளை
வித்தினி லன்றி வெளிப்படுமா றில்லை
வித்தும் முளையும் உடனன்றி வேறல்ல
அத்தன்மைத் தாகும் அரன்நெறி காணுமே. 10

---

*மாமாயையாகிய அந்த விந்துவிலே நின்று, அதனை அடைந்தவர்க்கு இனிப்பவனாகிய சிவன், 'இது' என அண்மையாகச் சுட்டிச் சொல்லப்படுகின்ற சுக்கிலமாகிய இந்த விந்துவிலும் நின்று உயிர்களைப் பிறப்பித்துப் பின் வீடடையச் செய்தலை உணரும் உணர்வுடையார் உலகத்து அரியர், ஆயினும், மகாமாயையையே தனக்கு உடம்பாகக் கொண்டு விளங்குகின்ற அந்தப் பெருமான், நீரால் உண்டாக்கின்ற உணவுப்பொருளில் தங்கிப் பின் கருவுற்பத்திக்கு யாவரிடத்தும் பொதுவாய் உள்ள காரணமாகின்ற விந்துவிலும் இருக்கும் புண்ணியன் ஆகின்றான்.*

*குறிப்புரை :- இதனுள், "வித்து" என்றன 'முதற்காரணம்' என்றவாறு. "தானே" என்பதை, "உணரார்" என்பதற்குப் பின் எடுத்துக்கொண்டு உரைக்க. சுவையைச் சிறப்புக் குணமாக உடைமை பற்றி நீரை "மது" என்றார். மலர்தல், விருத்திப்படுதல், சூக்கும தேகியாய் நிற்கும் உயிர் முதற்கண் பயிர்களில் தங்கியே பின்னர் உணவாய் ஆண் உடம்பிற் செல்லுதலைப் பஞ்சாக்கினி வித்தை பற்றி அறிக. தாவரங்களிலிருந்து உண்டாகும் உணவுப்பொருளால் ஆனதே தூலசரீரம். (பருவுடம்பு) அதனால் அஃது 'அன்னமய கோசம்' எனப்படுகின்றது. அதன் சிறப்பு, 'தைத்தீரியம்' என்னும் உபநிடதத்தில் சொல்லப்பட்டது. சிவனுக்கு இடமான சிவதத்துவங்கள் சுத்த மாயாகாரியம் ஆதல் பற்றியும், அதன்கண் உள்ள புவனங்கள் முத்தியுலகங்கள் ஆதல் பற்றியும் சிவனை, "அதுவித்திலே நின்று அங்கு அண்ணிக்கும் நந்தி" என்றார்.*

*இதனால், பிண்டத்திற்குக் காரணமான விந்து அண்டத்திற்குக் காரணமாயுள்ள விந்துவோடொப்பதாய், சிவனுக்கு இடமாகும் சிறப்புக் கூறப்பட்டது.*

*1902. தெளிவுரை :- முளை விதையில்தான் உள்ளது. என்றாலும் அது விதை தனியேயிருக்கும்பொழுது தோன்றாது. நிலத்தில் விதைத்தால் தான் தோன்றும். 'வித்தில் முளை உள்ளது' என்றால், அது 'குடத்தில் நீர் உள்ளது'*

என்பது போல்வதன்று. அஃதாவது இடமும், இடத்து நிற்கும் பொருளும் ஆகின்ற அவ்வளவினது அன்று. சிலந்தியின் உடம்பும், அதினின்றும் வெளிவருகின்ற நூலும் போலக் காரண காரிய இயைபுடையனவாம். அது போன்றதே சிவன் உலகத்தைத் தோற்றுவிக்கின்ற முறையும்.

***குறிப்புரை :-*** *'அதனை அறிந்துகொள்' என்பது குறிப்பெச்சம். எனவே, இம்மந்திரத்தை ஒட்டணியாகக் கொண்டு பொருளை உய்த்துணர்ந்து கொள்ளல் செயற்பாலதாம். அங்ஙனம் கொள்ளுமாறு :- 'மாயையில்தான் உலகம் உள்ளது. என்றாலும் அந்த மாயை சிவனது சங்கற்பத்தில் பொருந்தினால் அதினின்றும் உலகம் தோன்றும். 'மாயையில் உலகம் உள்ளது' என்றால் அஃது இடமும் இடத்து நிற்கும் பொருளும் ஆகின்ற அவ்வளவினது அன்று. சிலந்தியினது உடம்பும், அதனுள்ளிலிருந்து வெளிப்படுகின்ற நூலும் போலக் காரணகாரிய இயைபுடையனவாம்' என்பது, இங்ஙனம் கூறியதனால், சிலந்தியினது உடம்பினுள் நூல் உள்ளதாயினும் அவ்வுடம்பைத் தாங்கி நிற்கின்ற உயிர் அந்நூலை வெளிப்படுத்தினாலன்றி வெளிப்படாமை போல் மாயையைத் தாங்கி நிற்கின்ற சிவசத்தி அதனின்றும் உலகத்தைத் தோற்றுவித்தாலன்றித் தோன்றாது என்பது விளங்கும்.*

> *"வித்துண்டா மூலம் முளைத்தவா தாரகமாம்*
> *அத்தன்தாள் நிற்றல் அவர்வினையால் - வித்தகமாம்"*

*என்னும் சிவஞான போதமும் (சூத்திரம், 1 அதிகரணம், 2) இங்கு நினைக்கத் தக்கது.*

*இரண்டாம் அடியில் உள்ள "வித்தினில்" என்பது வேண்டா வழிப்பற்ற இன்சாரியையுடன் வந்த, 'செயின்' என்னும் வினையெச்சம். 'வித்தினில் முளை குடத்துள் நீர்போல நிற்பின் யாவரும் எளிதில் வெளிப்படுத்துதல் கூடும். இஃது அன்னதன்று ஆகலின் நிலத்தாலன்றி இயலாது' என உவமைக்கண் பொருளிலும் அவ்வாறு கொள்க. 'மாயையாகிய விந்துவிற்குச் சொல்லியது சுக்கிலமாகிய விந்துவிற்கும் பொருந்தும்' என்பது கருத்து.*

*இதனால், அண்டபிண்டங்களாகிய உலகம் சிவனது சங்கற்பத்தாலன்றி உற்பத்தி கூடாமை கூறப்பட்டது.*

***1903. தெளிவுரை :-*** *பலவகையாக உண்ணப்பட்ட உணவுகள் மூன்று கூறுபடும். ஒரு கூறு உடம்பாய்ப் பரிணமிக்கும். மற்றொரு கூறு மனத்தின் தன்மையாய் அமையும். இன்னொரு கூறு மலமாகிக் கழிந்தொழியும். உணவால் திருத்தம் உறுகின்ற உடம்பும், மனமும் சேர்ந்து முன்னாட்களில் காரண நிலையில் 'சாரம்' என்பதாய் இருக்கும்.*

***குறிப்புரை :-*** *"உடம்பு" என்றது அதன்கண் உள்ள குருதி, முதலிய தாதுக்களையும், ''மனம்'' என்றது அதனது நினைவையுமாகும். தாயின்*

**1903.** அருந்திய அன்ன மவைமூன்று கூறாம்
பொருந்தும் உடல்மனம் போம்மலம் என்ன
திருந்தும் உடல்மனம் ஆங்கது சேர்ந்திட்டு
இருந்தன முன்னாள் இரதம தாகுமே. **11**

**1904.** இரதம் முதலான ஏழ்தாது மூன்றின்
உரிய தினத்தின் ஒருபுற் பனிபோல்
அரிய துளிவிந்து வாகும் ஏழ்மூன்றின்
மருவிய விந்து வளருங்கா யத்திலே. **12**

---

*முலைப்பாலுக்கு அவளது உடம்பில் உள்ள குருதி முதலியனவும், குழவியிடத்துள்ள அன்பும் காரணமாதல் போல்வதே உடம்பில் உள்ள குருதி, ஊன், நிணம் முதலிய தாதுக்கள் சாரமாதற்குக் காரணம் ஆதல்.*

*இதனால், மேல் "மது வித்திலே மலர் அன்னமதாகி" என்றது இனிது விளக்கப்பட்டது.*

***1904. தெளிவுரை :–*** *மேல் சொல்லப்பட்ட 'சாரம்' என்பது உட்பட ஏழ் தாதுக்களில் மூன்றிலிருந்து சில நாட்களில் புல் நுனியிற் பனியளவான துளிகள் பல உருவாகும். அந்தத் துளிகளே பிண்ட உற்பத்திக்குக் காரணமான 'விந்து' எனக் குறிப்பிட்டுக் கூறப்படுகின்றன. அவை இருபத்தொரு நாள் வரையில் உடம்பினுள் அந்த நிலையிலே முதிர்ந்து வரும்.*

***குறிப்புரை :–*** *தாது - மூலப்பொருள் 'ஏழ் தாதுக்களில்' - என ஏழாம் உருவு விரித்துரைக்க. உடம்பிற்கு மூலமான ஏழு பொருள்களாவன மேற்கூறிய சாரம், குருதி, என்பு, தோல், ஊன், நிணம், சுக்கிலம் - என்பன. இவற்றின் நிலைபேற்றிற்கு ஒன்றிற்கு மற்றொன்று காரணமாகவேயிருக்கும். காரண நிலையில் 'சுக்கிலம்' எனப்படுவதே காரிய நிலையில் 'விந்து' என வேறுபட்டு நிற்கும் என்பது இங்கு அறிதற்குரியது இருபத்தொரு நாட்களுக்குப் பின் விந்து வேறொன்றாய் மாறும் என்பதும் இங்கு உணரத்தக்கது.*

*இதனால், பிண்டத்திற்குக் காரணமான விந்து உண்டாகுமாறு கூறப்பட்டது.*

***1905. தெளிவுரை :–*** *மேற்கூறியவாறு முன் இருபத்தொரு நாள் வரையில் முதிர்ந்து வந்த விந்துக்கள் பின் இருபத்தொரு நாட்கள் வரையில் மனத்தின் வழிப்பட்டு நிற்கும். 'சத்தி நிபாதரும், உலகரும்' என மக்கள் இருதிறத்தராதலின் அவருள் சத்திநிபாதர் மனம் சிவன் பஞ்சமூர்த்திகளாய் விளங்கி நிற்கின்ற நிவிர்த்தி முதலிய பஞ்ச கலா ரூபமாய் நிற்கும் சுத்த மாயையை நோக்கிச் செல்லுமாகலின் அவர் காம வசப்பட்டு விந்துவை வெளியே வீழ்ந்தொழிய விடாமையின் அவை அவரை விட்டு நீங்கா. (அவரது மனம் பஞ்ச கலைகளை*

**1905.** காயத்தி லேழ்மூன்று நாளிற் கலந்திட்டுக்
காயத்து டன்மன மாகும் கலாவிந்து
நேயத்தே நின்றோர்க்கு நீங்கா விடாமையின்
மாயத்தே செல்வோர் மனத்தோ டழியுமே. **13**

**1906.** அழிகின்ற விந்து அளவை யறியார்
கழிகின் றதனையுட் காக்கலும் ஓரார்
அழிகின்ற காயத் தழிந்தயர் வுற்றோர்
அழிகின்ற தன்மை யறிந்தொழி யாரே. **14**

---

*நோக்கிச் செல்கின்ற செலவிற்கு அவை வலிமை தந்து நிற்கும் என்பதாம். அவரொழிந்த ஏனை உலகர் சிறிதுபோதிலே நிலையின்றி ஒழிவதாகிய காம இன்பத்திலே செல்பவர் ஆதலின் அவர் மனம் அங்ஙனம் சென்ற பொழுது அவரது விந்துக்களும் அதனுடன் சென்று வெளியே வீழ்ந்து அழிந்தொழியும்.*

***குறிப்புரை :-*** *'கலந்திட்டு ஆகும்' 'நீங்கா அழியும்' என்னும் பயனிலைகட்கு மேலை மந்திரத்தில் உள்ள "மருவிய விந்து" என்பது எழுவாயாய்வந்து இயைந்தது. "ஏழ் மூன்று நாளில்" என்பதைப் பின்னும் 'காயத்துடன் என்பதோடும்' கூட்டுக. 'கலா விந்து நேயம்' என்றதை, 'சிவ பத்தி, அடியார் பத்தி' என்பன போலக் கொள்க. "விடாமையின்" என்பதற்கு முன் 'அவர்' என்பது வருவித்து விடாமையின் நீங்கா என முடிக்க. மாயம், நிலையாமை. அஃது ஆகுபெயராய், அதனையுடைய இன்பத்தைக் குறித்தது. 'தலைவி தலைவனோடிறந்தாள்' என்பதிற்போல, "மனத்தோடழியும்" என்பதில் ஓடுருபு உயர்பொருளோடு வந்தது. மனம் அழிதலாவது, தமது செலவால் விளையும் துன்பத்தால் வருந்துதல்.*

*இருபத்தொரு நாள் உடலிலேயே வளர்ந்த விந்து, கழிக்கப் பெறாமையான் உடலிலேயே மூன்றுநாள் கலந்திருந்து தன்னிலை மாறி மனோவிந்துவாக மாறும். பின்ஞான விந்துவாய் அறிவு மாத்திரையாய் விளங்கும். அறிவு மாத்திரையாய் நிற்கும் நிலையில் திருவடிப்பற்று நீங்காதார்க்கு விந்து ஐயமாம். போகத்துள் ஈடுபடுவோர்க்கு மனமும் அழிந்து விந்துவும் அழிந்து விந்து க்ஷயமாம் என்பது கருத்து.*

*இதனால், பிண்டத்திற்குக் காரணமாகிய விந்து அதனையுடைய மக்களது இயல்பிற்கேற்ப நிற்குமாறு கூறப்பட்டது.*

***1906. தெளிவுரை :-*** *உலகர் தாம் செல்கின்ற போக நெறியால் அழிந்தொழிகின்ற விந்துவினது ஆற்றலை, 'இவ்வளவினது' என்று அறியமாட்டார்கள். அதனால் கீழ்நோக்கி வீழும் இயல்புடைய அந்த விந்துவை அவ்வாறு வீழாது உள்ளே நிறுத்திக் காக்கும் வழியைப் பற்றி அவர்கள்*

*எண்ணுவதும் இல்லை. அழிவைத் தனது இயல்பாக உடைய உடம்பினுள்ளே தங்கியிருந்து, அவ்வுடம்பால் உண்டாகின்ற பல இடுக்கண்களால் துன்பமுற்று மெலிகின்றவர்கள் தாம் பெற்றுள்ள பொருள்கள் அழியுந்தன்மை உடையவாதலை அறிந்து, அவ்வழியுந் தன்மையை நீக்கிக் கொள்ள மாட்டார்கள்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'அதனை நீக்கிக் கொள்ள வழி உண்டு' என வருகின்ற ஆதாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டதாம். "அளவு" என்றது ஆற்றலின் அளவை ஒரு துளி விந்துவிற்குப் பல துளி சுக்கிலத்தின் ஆற்றலும் ஒரு துளிச் சுக்கிலத்திற்குப் பல துளிக் குருதியின் ஆற்றலும், ஒரு துளிக் குருதிக்குப் பல துளி இரதத்தின் (சாரத்தின்) ஆற்றலும் உள்ளன என்பர். அதனால் அத்துணை ஆற்றலையுடைய விந்துவை இழப்பவர் தமது பேராற்றலை இழந்தவராகின்றனர். **'உயிர்கள் கீழ்நோக்கி வீழும் விந்துவை உடையன; இறைவன் அவ்வாறன்றி மேல்நோக்கிச் செல்லும் விந்துவை உடையன்; அதனால் தான் அவன் தனது நெற்றிக்கண் வழியாக முருகனைத் தர முடிந்தது' என்றும் 'உயிர்களின் விந்துக்கள் நீர்த் தன்மையுடையன; இறைவனது விந்து அவ்வாறன்றி நெருப்புத் தன்மையுடையது; அதனால் தான் ஒருமுறை அவனது விந்துவை உண்ட தேவர்கள் ஆற்றமாட்டாத வெப்ப நோயை உடையராய் அலமந்தனர்' என்றும் கூறுவர்.***

"ஊர்த்துவ ரேதம் விரூபாக்ஷம்"

ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்மபுருஷம் க்ருஷ்ண பிங்கலம் I
ஊர்த்வ ரேதம் விரூபாக்ஷம் விச்வ ரூபாய வை நமோ நம: II

*எனப் புருஷ சூக்தத்தில் வந்துள்ளது. சிவபிரானது விந்துவை உண்ட தேவர்கள் வெப்பு நோயால் வருந்தினமை காஞ்சிப் புராண சுரகரேசப் படலத்தில் சொல்லப்பட்டது. போகத்தை விட்டு யோகியராயினோரும் இந்நிலையை எய்துவர் என்பது யோக நூற் கொள்கை. இதனால் அவர்க்கு இளமையும், யாக்கையும் நிலையாமையும் நீங்கி நிலைபேறுடையனவாதலோடு, உடம்பு புதியதோர் ஒளியும், அழகும் பெற்று விளங்கும் என்பதும் அந்நூற் கொள்கை.*

*இவ்வாறு இவ்வதிகாரம் முடிக்கப்பட்டது.*

## 21. விந்து சயம் - போக சர ஓட்டம்

*முன்னதிகாரத்து இறுதியில் “கழிகின் றதனையுட் காக்கலும் ஓரார்” எனத் தோற்றுவாய் செய்தபடி, வீழ்ந்தொழிவதாகிய விந்துவை அங்ஙனம் ஒழியாது உள்ளே அடக்கிக் காக்க முயன்று, அம்முயற்சியில் பெறும் வெற்றி, ‘விந்துசயம்’ எனப்படும். இதன்பொருட்டுப் போகத்திற் செல்லாது யோகத்தில் செல்லுதலே சிறந்தது. எனினும் சில உலகச் சூழலால் அது கூடாதபொழுது விந்துவை அதன் இயல்பிலே வீழ ஒட்டாது தன் வசத்தில் நிற்கச் செய்தலும் ஒருவகையான விந்து சயமேயாம். அதற்கு யோகம் வல்லார் போக காலத்தில் பிராண வாயுவைத் தம் வசப்படுத்தி இயக்குதல் வேண்டப்படுவதாகும். அந்த வாயு ஓட்டம் ‘சர ஓட்டம்’ எனப்படுமாகலின் போக காலத்தில் அதனை இயக்கும் முறை ‘போக சர ஓட்டம்’ எனப்படுகின்றது. இந்த இருவகைச் சயத்தினையும் இங்கு முப்பத்தேழு மந்திரங்களால் உணர்த்துகின்றார். மூன்றாம் தந்திரத்து, ‘பரியங்க யோகம்’ என்பதில் போக காலத்திலும் கருத்து வேறுபடாமை கூறினார்; இங்கு ‘விந்து சயம்’ கூறுகின்றார் என்க. அஃதாவது விந்து வெளிப்படாது அடக்கும் முறைமையையும், போககாலத்துப் பிராண வாயுவின் ஓட்டத்தால் விந்துவை மிகுதியாக வெளிப்படா வண்ணம் அடக்கும் உபாயமும் ஆம். விந்து பிண்டோற்பத்திக்கு உரியதாம். இது உடலின் சாரமாய் - உள்ளத்தின் உறுதியாய் - மனவளர்ச்சிக்கு மருந்தாய் - சிவயோகத்தின் முதற்படியாய் இருத்தலின் இதனை அடக்குதல் இன்றியமையாததாம்; ஆதலால் விந்துற்பனத்தின்பின் இது வைக்கப்பட்டது.*

**1907.** **பார்க்கின்ற மாதரைப் பாரா தகன்றுபோய்**
**ஓர்க்கின்ற உள்ளம் உருக அழல் மூட்டிப்**
**பார்க்கின்ற கண்ணாசை பாழ்பட மூலத்தே**
**சேர்க்கின்ற யோகி சிவயோகி தானே. 1**

---

*1907. தெளிவுரை :- தன்னைக் காதலோடு பார்க்கின்ற மகளிரைத் தான் அவர்க்கு இசைந்து பாராமல் விலகிச் சென்று யோகத்தில் நின்று புறப்பொருளைக் கண்ணால் பார்க்க எழுகின்ற ஆசையை மூலக்கனலை வளர்ப்பதில் சேர்த்து, மாதரைச் சிந்திக்கின்ற மனம் மாதேவனைச் சிந்தித்து உருகும்படி செய்கின்ற யோகியே சிவயோகியாதல் கூடும்.*

*குறிப்புரை :- ‘மனத்தில் எழுகின்ற மாதர் ஆசையை இங்ஙனம் யோக முயற்சியால் நீக்குதலே விந்து சயம் பெறுதற்குச் சிறந்த வழியாகும்’ என்பதாம். ‘‘மூலத்தைச் சேர்க்கின்ற யோகி’’ என்றமையால், அழல் என்றது மூலாக்கினியாயிற்று. ‘பொதுவான யோகத்தால் விந்து சயம் பெற்றவன் பின்பு சிவயோகியாய் விளங்குவன்’ என்றபடி.*

*“மடவாரோடும் - பொருந்தணைமேல் வரும் பயனைப் போக*

**1908.** தானே அருளால் சிவயோகம் தங்காது
தானேஅக் காமாதி தங்குவோ னும்உட்கும்
தானே அதிகாரம் தங்கில் சடம்கெடும்
ஊனே அவத்துற் றுயிரோம்பா மாயுமே. 2

**1909.** மாயாள் வசத்தேசென் றாரிவர் வேண்டிடில்
ஓயா இருபக்கத் துள்வளர் பக்கத்துள்
ஏயாஎண் ணாளின்பம் ஏற்பன மூன்றிரண்டு
ஆயா அபரத்து ஆதிநாள் ஆறாமே. 3

---

*மாற்றி................ தனை நினைய வல்லோர்க்கென்றும் பெருந்துணையை"*
*- தி.6 ப.1 பா.5*

*என அப்பரும் அருளிச் செய்தார்.*

*இதனால், விந்து சயத்திற்கான சிறப்பு முறை கூறப்பட்டது.*

***1908. தெளிவுரை :-*** *தன்னியல்பால் திருவருள் வழியில் சென்று சிவயோகத்தில் நில்லாது காமம் முதலியவற்றிலே நிற்கின்ற கீழ்மகனும் அஞ்சும் அளவிற்கு 'யோகி' எனப்படுபவன் காம நெறியில் மிக்குச் செல்வானாயின் விந்து மிக அழிந்தொழியும். உடம்பும் உயிரைக் காக்க மாட்டாது வீணே கெட்டொழியும்.*

***குறிப்புரை :-*** *சிவயோக மார்க்கத்தில் தங்காது போகமாகிய அவயோகத்தில் ஈடுபடுவதால் உடல் அழியும். உயிர் பிரியும் என்பது கருத்து.*

*சிவயோகம் வலிந்து பற்றப்படுவதன்று. பற்பல பிறவிகளில் செய்த புண்ணிய விசேடத்தால் தேங்காயில் இளநீர் சேர்வது போல உயிரில் திருவருள் தானே பொருந்துவதென்பார் 'தான்ஏய் அருளால் சிவயோகம் தங்காது' என்றார்.*

*காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாற்சரியம் என்ற உட்பகை ஆறு. எல்லாப் பகைகட்கும் காமமே வித்து ஆதலின் காமம் முற்கூறப்பட்டது. சிவப்பணி செய்து திருவருளால் சிவயோகத்தில் தங்கவேண்டிய ஆன்மா, ஆணவ மலத்தால் கட்டுண்டு அறியாமைமிக்கு, காமத்தில் தன்முனைப்பாற் கெடுகிறது என்பார். 'தானே தங்குவோன்' என்றார். உம்; சாரியை, காமத்தில் ஈடுபடுபவனுக்கு அச்சம் இயல்பு ஆதலின் 'உட்கும்' என்றார்.*

*அதிகாரம் - ஒன்றை அடிமைப்படுத்தி அதிலேயே உறைந்து நிற்றல்; ஈண்டுக் காமத்தில் உறைத்து நிற்றலை உணர்த்திற்று. காமாதி அதிகாரத்தில் தானே தங்கி எனலும் ஆம். சடம் - உடல். ஊன் - ஆகுபெயராய் உடலை உணர்த்திற்று. உடல் உயிருக்கு இடமாய் அதனைப் பாதுகாப்பது விந்து அழிய உயிர் பிரியும் என்றவாறாம்.*

**1910.** ஆறைந்து பன்னொன்று மன்றிச் சகமார்க்கம்
வேறன்பு வேண்டுவார் பூவரின் பின்னைந்தோடு
ஏறும் இருபத் தொருநா ளிடைத்தோங்கும்
ஆறின் மிகுந்தோங்கும் அக்காலம் செய்கவே. **4**

---

*1909. **தெளிவுரை :-** எனின், மாதரைக்கூடும் நாட்கள் இவையென உணர்த்துதல் நுதலிற்று. மாதர்வசப்பட்டுச் சென்று இவர்கள் அவர்கள் கூட விரும்பினால் மாறி மாறி வந்து கொண்டேயிருக்கின்ற பூர்வம் அபரம் என்னும் இருபட்சத்துள் வளர்பக்கமாகிய பூர்வபக்கத்திலே முதல் எட்டுநாளும் மாதர் இன்பத்தைப் பொருந்தாமல் அதற்குமேல் ஆறு நாட்களிலும் கூடி விந்துவைப் பதிக்க. அபரபக்கத்தில் முதல் ஆறுநாளும் போகத்திற்கு ஆம் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *வளர்பிறையில் பின் ஆறுநாளும், தேய்பிறையில் முன் ஆறுநாளும் சூரியகலைக்கு உரிய நாளாதலின் அதில் கூடினால் விந்து விரயமாகாது என்பது கருத்து. மாயாள் - மயக்குவதையே தொழிலாகக் கொண்டுள்ள மாயையின் வடிவாகிய மாதர்கள். காந்தத்தைக் கண்ட இரும்பு போல ஆடவர்கள் மாதர்கள் வசப்படுதலின் 'மாயாள் வசத்தே இவர் சென்று' என்றார்.*

*வளர்பிறையும் தேய்பிறையும் மாறி மாறி வந்து கொண்டே இருத்தலின் 'ஓயா இருபக்கம்' என்றார். வளர் பக்கம் - சந்திரன் வளரும் பக்கமாகிய அமாவாசை அடுத்த பிரதமை முதல் பதினைந்து நாளும். அதில் பின் ஆறு நாள் ஆடவன் உடலில் சூரியகலை மிஞ்சியிருக்கும் நாள். இங்ஙனமே தேய்பிறையில் முன் ஆறு நாளும் இவற்றில் கூடினால் விந்து அழியாது.*

*1910. **தெளிவுரை :-** எனின், மங்கையரை மருவுங்காலம் உணர்த்துதல் நுதலிற்று. சகமார்க்கமாகிய யோகநெறியிற் பயில்வோர் மங்கையர் பூப்பெய்திய ஐந்து ஆறு பதினொன்று ஆகிய இந்நாட்களிலன்றி ஏனைய நாட்களில் கூடுக. இதனின் வேறாகிய சரியை கிரியையில் நின்று இறைவனிடம் அன்பு செய்வோராய் இல்லறத்தார், மாதர்கள் பூப்பெய்தியபின் கருப்பாசயத்தில் இதழ்கள் குவிந்து கொண்டே வரும் இருபத்தொரு நாளுக்குள் இடைப்பட்ட ஆறுக்கு அப்பாற்பட்ட நாட்களில் கலவி செய்க என்றவாறு.*

*யோகிகள் மாதர்கள் பூத்த முன் ஐந்து நாளும் ஆறாம் நாளும், பதினொன்றாம் நாளும் அன்றி மற்ற நாளில் கூடுவர். இல்லறத்தோர் முன் ஆறு நாளும் நீங்கி விதித்த ஏனைய நாட்களில் கூடுவர் என்பது கருத்து.*

***குறிப்புரை :-*** *சகமார்க்கம் - தோழமை நெறி. இறைவனைத் தோழனாகக் கொண்டு இடைவிடாது பழகும் நெறியாகிய யோக மார்க்கம். இதிற் பயிலுவோர் மாதர்கள் பூப்படைந்த முதல் ஆறு நாளிலும் பதினொராம் நாளிலும் கூடுதல்*

**1911.** செய்யு மளவில் திருநான் முகூர்த்தமே
எய்யுங் கலைகாலம் இந்து பருதிகால்
நையு மிடத்தோடில் நன்காம நூல்நெறி
செய்க வலம்இடம் தீர்ந்து விடுக்கவே. 5

---

*ஆகாது என விலக்கப்பட்டது. அவை மாதர்களுக்கு ஆற்றல் நின்ற காலமாதலின் அதில் கூடினால் யோகி தோற்பான் மாதர் வெல்வர் என்பதாம்.*

*வேறன்பு வேண்டுவோர் என்பதற்குச் சகமார்க்கத்தின் வேறாகிய சரியை கிரியைகளில் நிற்பார் எனப் பொருள் கொள்க. பூ வரின் - மாதர்கட்கு மாதவிடாயுண்டாகும் பூப்பு வந்தால்.*

*தோடு - இதழ். மாதர் கர்ப்பாசயம் மலர் போன்றது. அது இருபத்தொரு இதழ்களை உடையது. பூத்தால் நாளுக்கு ஓரிதழாக இருபத்தொராம்நாள் முழுதும் குவிந்துவிடும். ஆதலால் குவிந்தபின் கலத்தால் பயன் இல்லை; ஆதலின் "இருபத்தொரு நாள் இடை" என்றார்.*

*தோங்கும்; துவங்கும் என்பதன் திரிபு. பூப்பு துவங்கிய முன் ஆறு நாளும் புணர்ச்சிக்குரிய நாளன்றோதலின் அதற்குமேல் புணர்க என்பார் 'தோங்கும் ஆறின் மிகுத்து ஓங்கும் அக்காலம் செய்க' என்றார். ஓங்கும் அக்காலம் - ஆண் வீரியம் மிக்கு விளங்கும் காலம். பூப்பு ஆடியபின் ஈராறு நாளும் கருவயிற்றூறும் காலம் ஆதலின் பிரியப்பெறான் என்பதும் இக்கருத்தை ஒட்டியதே.*

*இதனால், யோகியர்க்கும், பிறர்க்கும் உரிய சில வரையறைகள் கூறப்பட்டன.*

***1911. தெளிவுரை :-** கலவி செய்தற்குப் பொருந்திய காலம் இரவில் முதல் யாமமும், கடையாமமும் ஒழிந்த இடையிரு யாமமேயாம். அதனுள்ளும் காலத்தை, 'சூரியகலைக்காலம், சந்திரகலைக்காலம் என வரையறுத்தற்கு ஏதுவாகிய பிராண வாயுவின் இயக்கம் சந்திர கலையாகின்ற இடநாடியின் நீங்கிச் சூரிய கலையாகின்ற வலநாடிவழியே இயங்கும்பொழுது காமநூல் முறைப்படி கலவி செய்த பின்பு சூரியகலையும், சந்திரகலையும் அல்லாத அமுதகலையாகிய நடுநாடியில் பிராணவாயு செல்லுங்கால் விந்துவை விடுக்க.'*

***குறிப்புரை :-** 'இவ்வாறு செய்யின் விந்து சயம் கூடும்' என்பதாம். "திரு" என்றது 'சிறப்பு' என்றபடி. சிறப்புடையதனை, 'சிறப்பு' என்றார். இரு முகூர்த்தம் ஓர் யாமமாகும். பகற்காலம் இயல்பாகவே விலக்கப்பட்டமையின், "இருநான் முகூர்த்தம்" என்றது இராக் காலத்திலே யாயிற்று. "கலை காலம்" என்பதில் ஒற்று மிகாமை வடநூல் முடிபு. 'காலத்துள்' என ஏழாவது விரிக்க. "இந்து" என்பதனோடும் கூட்டிக் கொள்ளப்படும். பிராண வாயு இங்குக் கூறிய முறையில் இயங்காவிடினும் யோகம் வல்லார் தாம் வேண்டுமாற்றால் அதனை இயக்கிக்*

**1912.** விடுங்காண் முனைந்திந் திரியங் களைப்போல்
நடுங்கா திருப்பானும் ஐயைந்தும் நண்ணப்
படுங்காதல் மாதின்பால் பற்றற விட்டுக்
கடுங்கால் கரணம் கருத்துறக் கொண்டே. **6**

---

*கொள்வர். இனிப் பிராண வாயு நடுநாடி வழியிற் செல்லுதல் யோகத்தாலன்றிக் கூடாது.*

*இதனால், மேல் நாள் வரையறுத்த பின் அந்நாள்களில் காலம் வரையறுக்கப்பட்டது.*

***1912. தெளிவுரை :-*** ***மண் முதல் புருடன்காறும் உள்ள இருபத்தைந்து கருவிகளும் தன்னை வந்து வாதிக்கும் பொழுது அவற்றால் சலனம் உறுதல் இன்றி இருக்கின்ற யோகியும் ஒரோ ஒருகால் பெண்ணின்பால் காதல் கொள்கின்றவனாவான் ஆயினும் அப்பொழுதும் அவன் அவள்மேல் பற்றுக் கொள்ளாது, போக காலத்தில் மிகுதியாய் இயங்குகின்ற பிராண வாயுவின் இயக்கத்தால் மெலிவடைகின்ற அந்தக் கரணங்களை அகமுகப்படுத்தி, முன் பஞ்சேந்திரியங்களைத் தன் வசப்படுத்தியது போலவே விந்துவையும் தன் வசப்படுத்தியே விடுவான்.***

***குறிப்புரை :-*** *'தன் வசப்படுத்தியே விடுவான்' என்றதனால், 'விடாது நிறுத்தவும் செய்வான்' என்பது பெறப்பட்டது. விடுதல் மாதின் இன்ப நிறைவின் பொருட்டாம். பஞ்சேந்திரியங்களை வெல்லுதலாவது அவற்றைத் தன் வசப்படுத்தலேயாதல் போல, 'விந்து சயம்' என்பதும் அதனைத்தன் விருப்பப்படி ஆளுதல் என்பதேயாம் என்றபடி, காண், முன்னிலையசை. "ஐயைந்தும் நண்ண" என்பதை மூன்றாம் அடியின் முதற்கண் வைத்து அங்கு நின்றும் நேரே சென்றுரைக்க. மெய்வருத்தித் தொழில் செய்யுங்கால் மூச்சுப் பெருமூச்சாய் இயங்குதல் போலக் கலவிக் காலத்திலும் அவ்வாறியங்குதல் பற்றி, "கடுங்கால்" - என்றார். உயிர்ப்பு நெட்டுயிர்ப்பாய காலத்தில் அந்தக் கரணங்கள் சோர்வடைதல் இயற்கை. அதுபொழுது அவற்றை உலகர் செயலற்றனவாகவே இருக்கச் செய்வர். யோகியர் அது பொழுது அவற்றைத் தம் தியானப் பொருளிலே ஒடுங்கச் செய்தல் பற்றி, "கடுங்கால் கரணம் கருத்துறக் கொண்டு" என்றார். 'காலால்' என உருபு விரிக்க. கருத்து - தியானப்பொருள்.*

*இதனால், யோகிகள் விந்து சயம் பெறுமாறு கூறப்பட்டது.*

***1913. தெளிவுரை :-*** *மாதர்பால் ஆடவரது மனத்தை ஈர்ப்பனவாய் உள்ளன அவருக்கு இயல்பாக அமைந்த நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு' - என்னும் குணங்களும், மேனியழகும், இளமையும், வடிவமைப்பும், பேசுகின்ற வாயாகிய பவளமும், ஒன்றை ஒன்று நெருக்கும் வகையில் புடைபரந்து எழுகின்ற*

**1913.** **கொண்ட குணனே நலனேநற் கோமளம்**
**பண்டை யுருவே பகர்வாய்ப் பவளமே**
**மிண்டு தனமே மிடைய விடும்போதில்**
**கண்ட கரணம்உட் செல்லக்கண் டேவிடே.** **7**

---

*கொங்கைகளும் ஆகிய இவையாம். 'இவை நேற்றுக் கண்டனதாம் இன்று காணப்படுகின்றன' என்னும் வகையிலே இருப்பன அல்லது அவ்வப்பொழுது புதிது புதிதாய்த் தோன்றுவன அல்ல ஆயினும் அவை அவ்வாறிருந்தே ஆடவரை வசீகரித்தல் வியப்பு. அம்முறையில், மாணவகனே, அவை உன்னைப் பற்றி நெருங்கியிருக்கும் பொழுது நீ விந்து சயம் பெற வேண்டினால் யோகியர் போல அவைகளைப் பொறிகளாற் பற்றி, அப்பற்றுதலானே திரிபெய்துகின்ற அந்தக் கரணங்களை அகமார்க்கத்தில் செலுத்தி அதனால் விந்துவை உன் வசப்படுத்தி விடு.*

*குறிப்புரை :- "பண்டை உருவே" என உருவிற்குக் கூறப்பட்ட பழைமை ஏனையவற்றிற்கும் கொள்ளப்படுமாகலின் அதற்கு இவ்வாறு விரித்துரை கூறப்பட்டது. ஏகாரங்கள் எண்ணுப் பொருள், மிண்டுதல், மிடைதல், இவை 'நெருங்குதல்' எனப் பொருள்தரும்.*

*இதனால், 'விந்து சயத்திற்கு அந்தக்கரணங்களைத் தம் வசப்படுத்தல் இன்றியமையாதது' என்பது கூறப்பட்டது.*

*'வாசி யோகத்தால் பிராணன் வசப்படும்; பிராணன் வசப்பட்டால் அந்தக்கரணம் வசப்படும்; அந்தக்கரணம் வசப்பட்டால் விந்து வசப்படும்' என்பது யோக நூல் முடிவு.*

*1914. தெளிவுரை :- ஆடவன் பெண்டினிடத்து விந்துவை விட்டபின் கலவிக் காலத்துச் சரவோட்டம் முதலியவை பற்றி அவ்விந்து கருவாகித் தோன்றும் முறையில் அதன் தொடக்கம் முதலியவைகளையும், பின்பு அதன் வாழ்நாள் சாநாள்களையும், பின்பு அதன் இழிகுணம், உயர்குணம் என்பவற்றையும் 'தனித்தனி இவ்வியல்பினது' என்று ஆராய்ந்தறிதலையும் செய்வானாக.*

*குறிப்புரை :- 'அவை யாவும் நல்லனவாய் அமைதலும் ஒரு வகை அவை தீயனவாதலும் ஒரு வகை. விந்து சயமும் விந்து அப செயமும் ஆம்' என்பது கருத்து. எனவே, யோகி தனது யோக வன்மையால் அவற்றையெல்லாம் நல்லனவாகச் செய்வான்' என்பதாம். "காலங்கள்" என்றது கரு முற்றும் பத்துத் திங்களை. ஒவ்வொரு திங்களிலும் புறத்தே ஒவ்வொரு சடங்கு செய்தலும் கரு மேற்கூறிய எல்லா வகையிலும் நன்மையை எய்துதற் பொருட்டேயாம். "வாழ் நாள் சாநாள்" எனப்பட்டன, கரு வயிற்றிலிருக்குங் காலமாகிய பத்துத் திங்களுக்குள்ளேயும் அமைவனவாம். காலத்தில் நிகழ்வனவற்றை, "காலங்கள்" என்றார். தோன்றுதல் - ஆராய்பவனுக்குப் புலனாதல், "தோன்ற" என்னும்*

**1914.** விட்டபின் கற்பவுற் பத்தி விதியிலே
தொட்டுறுங் காலங்கள் தோன்றக் கருதிய
கட்டிய வாழ்நாள்சா நாள்குணம் கீழ்மைசீர்ப்
பட்ட நெறியிதென்றெண்ணியும் பார்க்கவே. **8**

**1915.** பார்த்திட்டு வையப் பரப்பற் றுருப்பெற்று
வார்ச்செற்ற கொங்கை மடந்தையை நீக்கியே
சேர்த்துற் றிருதிங்கள் சேரா தகலினும்
மூப்புற்ற பின்னாளில் எல்லாம்ஆம் உள்ளவே. **9**

---

*செயவெனச்சம். "தோன்றியபின்" என இறந்த காலப் பொருட்டாய் நின்றது. "கருதிய, கட்டிய" என்னும் பெயரெச்சங்கள் அடுக்கி 'வாழ்நாள், சாநாள்' என்னும் பெயர்களைக் கொண்டு முடிந்தன. "கருவிற்பட்ட உயிரினது வினையை நோக்கிக் கட்டிய" என்றவாறு. கட்டுதல் - நியமித்தல், கருவிற் பட்ட உயிருக்கு அக்கருவில் தானே அஃது அடைதற்குரிய அனைத்தும் அமைக்கப்படுதல் என்பதை,*

*பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச் சாக்க டென்னும்*
*ஆறும்முன் கருவுட் பட்டது. - சிவஞான சித்தியார், சூ.2.9*

*என்பதனானும் அறிக. கருதுதல், கட்டுதல் ஆகிய வினைகட்கு 'பால் வரை தெய்வம்' என்னும் வினைமுதல் வருவிக்க. "எண்ணியும்" என்னும் உம்மை சிறப்பும்மை, அதனால் அஃது அங்ஙனம் எண்ணிப் பார்க்க வல்லாரை நோக்கிக் கூறியதாயிற்று. ஆகவே, 'சர ஓட்டம் முதலியவற்றை அறிய வல்லார்க்கு இங்குக் கூறியவெல்லாம் புலனாகும்' என்பது விளங்கும்.*

*இதனால், கலவி செய்வோர் அக்காலத்து மேற்கொள்ளும் முறை முறையின்மையால் மக்கள் நல்லராயும், தீயராயும் - வாழ்நாள் மிக்கராயும், குறைந்தவராயும் தோன்றுதல் கூறப்பட்டது.*

***1915. தெளிவுரை :-** எனின், அற்ப ஆயுளுள்ள குழவியாயினும் மூப்பு முதலிய உண்டெனல் நுதலிற்று.*

*சரவோட்டத்தால் முற்கூறிய அனைத்தையும் ஆராய்ந்து உலகத்துப் பரபரப்பாகிய சலனம் இல்லாமல் உருக்கொண்டு கச்சினை வருத்தும் கொங்கைகளை உடைய மடந்தையைப் பிரிந்து பிறந்த குழவி சேர்க்கப்பெற்ற இரண்டு மாதம் கூடப் பொருந்தாமலிறக்கினும் மூப்பினை அடைந்து பின்னாள் விளையும் அனைத்தையும் எண்ணி அறியும்படி அமைந்துள்ளது என்றவாறு.*

*பிறந்து இரண்டு மாதந்தான் இருக்கும் குழந்தையாயினும் அதற்குள் அக்குழவி எய்தும் பேறு இன்பம் துன்பம் அனைத்தையும் அன்றே உணரும் என்பது கருத்து. வையத்துப் பரப்பு - உலகத்து ஆரவாரம். புணர்ச்சிக் காலத்துத் தாயும் தந்தையும் ஆரவாரத்தில் ஈடுபடாது மௌனமாய் இருப்பது அவசியம்*

**1916.** வித்திடு வோர்க்கன்றி மேலோர் விளைவில்லை
வித்திடு வோர்க்கன்றி மிக்கோ ரறிவில்லை
வித்தின்இல் வித்தை விதற உணர்வோர்க்கு
மத்தில் இருந்ததோர் மாங்கனி ஆமே. **10**

---

*என்பது இதனால் வலியுறுத்தப் பெற்றது. இதனை 'முறையான பெண்ணாணும் மௌன முற்றால், மோசமில்லை கரு அங்கே தரிக்கும் பாரு' என்ற அகத்திய வைத்திய சாரமும் நன்கு விளங்கும்.*

***குறிப்புரை :-*** *உருப்பெற்று - வடிவு முதிர்ந்து, அது யூகிமுனிவர் வைத்திய சிந்தாமணியிலும் உபநிடதத்திலும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. வளர்ச்சி ஐந்தாவது நாளிலிருந்து பத்தாவது மாதம் வரையில் நிகழும். இதனை 'ஆகாநாள் விந்துவிட்ட ஐந்தாம் நாள் கருப்போலாகும்..... தசம் பிறவிதானே, என்னும் அகத்தியர் பிண்டோற்பத்தி செய்யுளாலும் அறிக'.*

*இருதிங்கள் சேராது அகலினும் முழுதும் இரண்டு மாதம் சேராமலிருந்தாலும், அதற்குள் இளமை பிணி மூப்பு அனைத்தும் உண்டு என்பதாம்.*

***1916. தெளிவுரை :-*** *உலகில் விதையை நிலத்தில் விதைப்பவர்க்கல்லது விளைவு ஏதும் கிடைக்க மாட்டாது. விதையை நன் முறையில் விதைப்பவர்க் கல்லது சிறந்த ஓர் அறிவும் இல்லையாகும். (அதுபோல விந்துவாகிய வித்தினை நன்முறையில் இடாதார்க்கும் நன்மகப் பேறாகிய விளைவும் கிடைக்கமாட்டாது; அவர்க்குச் சிறந்த ஓர் அறிவும் இல்லையாகும்). விந்துவாகிய வித்தினது இல்லற வித்தையை அமைந்து நோக்கி உணர்வாராயின், மரத்தில் தூங்கும் மாங்கனி போலும் பயன் கிடைப்பதாகும்.*

***குறிப்புரை :-*** *முன்னிரண்டடிகள் ஒட்டணியாய் நின்றமையின் அவற்றிற்குரிய பொருள் வருவித்துரைக்கப்பட்டது. 'மிக்க' என்னும் பெயரெச்சத்து அகரம் தொகுத்தலாயிற்று. மூன்றாம் அடியில் வந்த "வித்தை" என்பது 'கல்வி' என்றவாறு. இல்லறத்தை "இல்" என்றார். விரைவினை உணர்த்தும் 'விதுப்பு' என்பது முதனிலையளவாய், 'விது' என நின்றது. 'வேதின வெரிநின் ஓதிமுது போத்து' - என்பதில் 'ஓந்தி' என்பது "ஓதி" என இடைக்குறைந்து நின்றது போல, 'மரத்தில்' என்பது எதுகை நோக்கி, "மத்தில்" என இடைக் குறைந்து நின்றது. வாளா, 'மாங்கனி ஆம்' எனின் குறித்த பொருள் விளங்கா தாகலின், "மரத்திலிருந்தோர் மாங்கனி ஆம்" என்றார். அதனால், வித்தினது விளைவே மாங்கனியாதல் போல், 'விந்துவின் விளைவாக நன்மகவு உண்டாகும்' என்பது பெறப்பட்டது. இதுவும் ஒட்டணியே.*

*மாதொருத்தியை மணந்தவர்க்கு உளவாகிய இல்லறக் கடமைகளில் குடிவழியை நற்றவம் செய்தாயினும் நன்முறையில் தொடரச் செய்தலும்*

**1917.** கருத்தனில் அக்கரம் ஆயுவும் யாவும்
கருத்துளன் ஈசன் கருவுயி ரோடும்
கருத்தது வித்தாய்க் காரண காரியம்
கருத்துறு மாறிவை கற்பனை தானே. **11**

---

*ஒன்றாகலின், 'அது விந்து சயத்தால் கைகூடும்' என்றற்கு இவையெல்லாம் கூறினார்.*

*இதனால், விந்து சயத்தால் விளைவதோர் இம்மைப் பயன் கூறப்பட்டது.*

***1917. தெளிவுரை :-*** *கருப்பதியும் காலத்திலேயே மேல் விளைவு அனைத்தும் அடங்கியிருத்தலை உணர்த்துதல் நுதலிற்று.*

*எழுத்துக்களும் ஆயுளும் பிற அனைத்தும் கருவில் பதியும் உயிரோடு அதன் கருத்தில் அமைந்துள்ளன. ஈசனும் அக்கருத்தில் எழுந்தருளியுள்ளான். அக்கருத்தின் மூலமாய்க் காரண காரியம் காணுதல் கற்பனையே என்றவாறு.*

*கருப்பதியும்போதே உயிரோடு அதன் கருத்தில் கலை காலம் முதலிய அனைத்தும் அமைந்துவிடுகின்றன. அவற்றை இயக்கக் கடவுளும் கலந்திருக்கிறார். இங்ஙனம் கருத்துக்கு மூலமாய் காரண காரியமாய் இறைவன் கருத்திலே பொருந்த நாம் மாறி எண்ணுவது கற்பனையே உண்மையல்ல என்பது கருத்து.*

***குறிப்புரை :-*** *அக்கரம் - அகாரம் முதல் க்ஷகாரம் இறுதியான ஐம்பத்தொரு எழுத்துக்கள். எழுத்தால் விளையும் எண்ணென் கலை ஞானங்களே ஈண்டு அக்கரம் எனப்பட்டன. கலைஞானங்கள் குடியிருப்பது அவரவர் கருத்திலாதலின் 'அக்கரம் கருத்தினில்' எனப் பெற்றது.*

*ஆயுவும் - வினைப்போகங்களுக்காக அந்தந்த உயிர்களுக்கு வரையறுத்துக் கொடுக்கப்பட்ட வயதும் அதுவும் கருவிலே உயிரின் கருத்திலே அமைந்தது. மரத்தின் தன்மை அனைத்தும் வித்திலே அடங்கியிருப்பது போல. உயிரின் ஆயுள் போகம் அனைத்தும் கருத்தில் அடங்கியுள்ளன என்பதாம்.*

*கருவில் உயிர்க்கு உற்ற துணையாய், வினைப்போகங்களை அளந்து ஊட்டும் அன்னையாய், நன்னெறிப்படுத்தும் தந்தையாய் இறைவன் கலந்து உடனிருக்கின்றான் என்பது 'கரு உயிரோடும் உருத்துளன் ஈசன்' என்றதால் உணர்த்தப் பெறுகிறது. இதனை அப்பர் சுவாமிகள் கருவியாய்க் கிடந்து உன் கழலே நினையும் கருத்துடையேன் என்று அறிவிக்கின்றார்கள்.*

*இவ்வண்ணம் இறைவன் கருவிலுள்ள உயிரின் கருத்துக்கே வித்தாயும் அதற்குக் காரணமாயும் கருத்தால் விளையும் ஆயுள் போகம் முதலிய காரியங்களாயும் அந்தந்த உயிரின் கருத்திலே அமைந்திருக்கவும் அதற்கு மாறாக*

**1918.** ஒழியாத விந்து உடல்நிற்க நிற்கும்
அழியாப் பிராணன் அதிபலம் சத்தி
ஒழியாத புத்தி தபம்செபம் மோனம்
அழியாத சித்திஉண் டாம்விந்து வற்றிலே. **12**

---

*எண்ணுகின்ற எண்ணங்கள் அனைத்தும் வெறும் கற்பனையே உண்மையன்று என்பதை விளக்குவன பின் இரண்டு அடிகளும். ஆகவே இறைவன் உயிருக்குக் கருவாய் அதன் கருத்திலே கலந்து விளங்குகின்றான் என்பதுணர்த்தப் பெற்றது.*

***1918. தெளிவுரை :-*** *யோக முயற்சியால் விந்து வீழ்தலின் நீங்கி உடற்குள்ளே நிற்குமாயின் பிராணனும், உடலின் மிக்க வலிமையும், அறிவின் ஆற்றலும் அழியாது நிலைபெறும். இனி விந்து மூலாக்கினியால் தன் இயல்பு வேறுபட்டு உடம்பினுள் ஒன்றாய்க் கலந்து விடுமாயின் இடைவிடாத ஞானம். தவம், செபம், மௌன நிலை, எட்டுச்சித்திகள் ஆகிய எல்லாம் உளவாகும்.*

***குறிப்புரை :-*** *'அழியாது' என்பது ஈறு தொகுத்தலாயிற்று. 'பிராணன் முதலியவை அழியாது நிற்கும்' என முடிக்க. உடல் வலியிழந்து மெலியுமாயின் அறிவும் சோர்ந்து, பிராணனும் வலிமை குன்றி நீங்கும். பிராணன் நீங்கவே உடல் சிறிதுபோதும் நிலைக்கமாட்டாது நீங்கியொழியும். எனவே விந்து சயத்தால் வாழ்நாள் நீட்டிப்பு உளதாதல் கூறப்பட்டதாம். வாழ்நாள் நீட்டித்ததால் உயிர் தான் எடுத்த உடம்பினால் ஆகிய பயனைப் பெறுதல் கூடும் என்பது பின்னிரண்டடிகளால் சொல்லப்பட்டது. ஒழியாத ஞானமாவது, அறியாமையால் தவிர்க்கப்படாத மெய்யுணர்வு. "அழியாத சித்தி" என்றது சித்தியின் பெருமை கூறியவாறு.*

*விந்துவை வாளா வலிந்து நிறுத்தின் அஃது உபாதியாய், உடற்குத் தீங்கு தரும். யோக முயற்சியால் நிறுத்தின் அது, தன்னியல்பு வேறுபட்டு நிற்கும் ஆதலின் அதனால் உடல் வலிமை முதலிய நலன்கள் உண்டாகும். ஆகவே, யோக முயற்சியால் நிறுத்துதலே இங்குக் கூறப்பட்டது. இனி அவ்வாற்றானே அதனை மேலும் திரிவுபடச் செய்த வழி அஃது உடம்பினுட் சுவறி, யோகநெறிக்கு மேலும் உதவும் என்பது பிற்பகுதியாற் கூறப்பட்டது.*

*இவ்வாறு இதனால் உண்மையான விந்து சயத்தால் விளையும் பயன்கள் கூறப்பட்டன.*

***1919. தெளிவுரை :-*** *விந்து வறளும்படி யோக முயற்சியால் மூலஅனலை அதன்பால் சேர்த்து அதனால் அது கீழ்நோக்கி வீழும் இயல்பை விட்டு மேல்நோக்கி ஏறும் இயல்பினதாகச் செய்து அவ்வாறு சுழுமுனை வழியாக மேல் ஏற்றி ஆஞ்ஞையை முட்டி அடையப் பண்ணி, அஃது அவ்விடத்துள்ள ஒளியோடு கலந்தபின்னர், மேலும் செல்கின்ற மூலக்கனலால் ஆஞ்ஞைக்கு மேல்*

**1919.** வற்ற அனலைக் கொளுவி மறித்தேற்றித்
துற்ற சுழுனைச் சொருகிச் சுடருற்று
முற்று மதியத் தமுதை முறைமுறைச்
செற்றுண் பவரே சிவயோகி யாரே. **13**

**1920.** யோகியும் ஞானியும் உத்தம சித்தனும்
போகியும் ஞான புரந்தர னாவோனும்
மோக முறினும் முறைஅமிர் துண்போனும்
ஆகிய விந்து அழியாத அண்ணலே. **14**

---

*உள்ள நிறைமதி மண்டலத்திலிருந்து ஊறி வழிகின்ற அமுதத்தை முறை முறையாகத் தமது பண்டை இயல்பு கெட உண்கின்றவர்களே சிவயோகியர் ஆவார்கள்.*

***குறிப்புரை :-*** *'துற்ற அனலால் சுழியில் சொருகி' என்க. "துற்ற சுழுமுனை" என்பதில் சுழுமுனை ஆகுபெயராய் அதன் எல்லையைக் குறித்தது. விந்து ஆஞ்ஞை வரையிற் சென்று அங்குள்ள ஒளியோடு கலத்தலால் தானும் ஒளியாகி உடல் எங்கும் பரவும் என்க. உற்றபின், என்பது, "உற்று" எனத் திரிந்து நின்றது. பண்டையியல்பாவது, உலகருட் சிலராய் மனஞ்சென்றவாறே சென்று விந்துவை வீழ்த்து அழிதல். மதிமண்டலத்து அமுது தச நாடிகளில் பாய்தலால் அதுவே உணவாயிட, வேறு உணவு வேண்டாமையை 'உண்ணுதல்' என்றார். அது பலமுறையாக நிகழும் ஆதலின், 'முறை முறை உண்டல்' என்றார்.*

*இதனால், உண்மை விந்து சயத்தின் மேல்நிலைப் பயனும், அதனை அடைவோரது சிறப்பும் கூறப்பட்டன.*

***1920. தெளிவுரை :-*** *மாதர்மேல் மையலை உற்றபோதிலும் அதனால் உண்டாகிய விந்து அவர்பால் சென்று வீழாத நிலைமையை எய்திய பெரியோன், யோகியும், மேலான சித்திகளைப் பெற்றவனும், அதே நிலையில் போகத்தை இழக்காதவனும், ஞான வேந்தனாய் விளங்குபவனும், யோக முறையில் உண்ணும் மதி மண்டலத்து அமுதத்தைப் பெற்று உண்பவனுமாவான்.*

***குறிப்புரை :-*** *"ஞானி" என்றது பொதுவும், "ஞான புரந்தரன்" என்றது அதன்கண் உயர்ந்து நிற்கும் சிறப்பும் பற்றியாம். உம்மை பெற்றுவந்த பெயர்களை எல்லாம் வேறுவேறு எழுவாயாக வைத்து உரைப்பவர்க்கு அவை, "அண்ணல்" என்னும் ஒருமைப் பயனிலையோடு இயையாமை அறிக. இயைய வேண்டின், அப்பெயர்கள் யாவும் ஒருவனையே குறிப்பவனாகக் கொள்ளல் வேண்டும்.*

*யோகி - பன்னிரண்டு நாள் வரையில் இடைவிடாத தியான சமாதியிலிருந்து பழகியவன். ஞானி - யோகப் பயிற்சியால் சிவமேயான செல்வன். உத்தமசித்தன் - சித்தத்தை அடக்கியாண்டு சித்திகளைத் தன்னலத்துக்காகப்*

**1921.** அண்ணல் உடலாகி அவ்வனல் விந்துவும்
மண்ணிடை மாய்க்கும் பிராணனாம் விந்துவும்
கண்ணும் கனலிடைக் கட்டிக் கலந்தெரித்து
உண்ணில் அமிர்தாகி யோகிக் கறிவாமே. 15

**1922.** அறியா தழிகின்ற ஆதலால் நாளும்
பொறிவாய் அழிந்து புலம்புகின் றார்கள்
அறிவாய் நனவில் அதீதம் புரியச்
செறிவாய் இருவிந்து சேரவே மாயுமே. 16

---

*பயன்படுத்தாது உலகை வாழவைக்கும் உத்தமமாய சித்திகளை உடையவன். போகி - உள்ளவாறு போகங்களை நுகரத்தக்க புத்தி ஆற்றல் படைத்தவன். ஞானபுரந்தரன் - ஞானேந்திரன்; ஞானிகட்கெல்லாம் அரசாகிய ஞானி.*

*இதனால், விந்து சயத்தால் விளையும் பயன்கள் அதனைப் பெற்றவனது சிறப்பை வகுத்துக் கூறும் முகத்தால் விளக்கப்பட்டன.*

***1921. தெளிவுரை :-*** *சிவோகம் பாவனையால் உயிர் சிவனாதலால், அது நின்ற உடம்பும் சிவனது உடம்பாகியபின், அவ்யோகியது விந்துவும் நீர்த்தன்மை நீங்கிச் சிவனது விந்துபோல நெருப்புத் தன்மை எய்த அதனையும், உலகில் நாள்தோறும் வெளிவிடுத்துச் சிறிது சிறிதாக அழிக்கப்படுகின்ற பிராணவாயு வாகிய மூலப்பொருளையும் ஒற்றுமைப்பட ஒன்றாகக் கலந்து மூலாக்கினியால் சமைத்து உண்ணும் முறையை ஓர் யோகி வல்லனாயின், அவனது விந்து தேவாமிர்தமாய் உடல் நலங்கள் பலவற்றைத் தருதலுடன், ஞானமும் நன்கு சிறந்து பிரகாசிக்கச் செய்யும்.*

***குறிப்புரை :-*** *அண்ணல் - தலைவன்; சிவபிரான். 'ஆகிய பின்' என்பது "ஆகி" எனத் திரிந்து நின்றது. அனல் விந்து - அனல் தன்மைத்தாகிய விந்து. "அவ்வனல் விந்து" என்னும் சுட்டு, 'அது சிவவிந்துவின் தன்மை' என்பதைச் சுட்டிற்று. ஒவ்வொரு மூச்சிலும் சிறிது சிறிது பிராண வாயு அழிந்தொழிதலை "மாய்க்கும் பிராணன்" - என்றார். "பிராணனாம் விந்து" என்பதில் "விந்து" என்பது 'மூலப்பொருள்' எனப் பொருள் தந்தது. கட்புலனாகாது கருதியுணருமாறு அகத்தே நிற்றல் பற்றி மூலாக்கினியை, "கண்ணும் கனல்" என்றார். கண்ணல், கருதல், "எரித்து" என்றது. 'அவ்வாற்றால் பாகம் (பக்குவம்) செய்து' என்றபடி, "உண்ணில்" என்பது அவ்வாறு செய்து உண்ணுதலின் அருமை தோற்றி நின்றது.*

*நனவு - ஆன்மா எல்லாக் கருவி கரணங்களோடும் கூடிப் புருவ மத்தியாகிற சிம்மாசனத்திலே கொலுவீற்றிருந்து அரசு செலுத்தும் நிலையாகிற விழிப்புநிலை. அதிலே ஞான சொரூபியாய் ஆன்மா துரியாதீதம் என்ற கடந்த நிலையை எய்தச் சிவத்தோடு செறிவாயிருந்து அதாவது தியான சமாதிக்கண் வீற்றிருந்து, விந்து*

**1923.** மாதரை மாய வருங்கூற்றம் என்றுன்னக்
காதல தாகிய காமம் கழிந்திடும்
சாதலும் இல்லை சதகோடி யாண்டினும்
சோதியி னுள்ளே துரிசறும் காலமே. **17**

---

*உடலொடு சேர வற்றிக்கெடும் என்பதாம். ஆகவே தியானசமாதியொன்றே விந்துவை வெளிப்பட்டழியாது தடுத்து உயர்த்தி உடலொடு வற்றச் செய்யும் உபாயம் என்பது உணர்த்தப்பெற்றது.*

*இதனால், உண்மை விந்து சயம் பெறுமாறும், அதனால், உயர் ஞானமாகிய பயன் விளைதலும் கூறப்பட்டன.*

***1922. தெளிவுரை :-*** *உலக மாந்தரது விந்துக்கள் அவரது அறியாமையாலே தான் வீழ்ந்தொழிகின்றன. ஆதலால், அவ்வீழ்ச்சிக்கண் நாள்தோறும் அவர் ஐம்பொறி வழியில் அகப்பட்டுத் துயர் உறுகின்றனர். ஆகையால், பெரியோர் அறிவுடையராய்ச் சாக்கிரத்தில் தானே அதீத நிலையை அடைந்திருக்க, பிண்டத்திற்கு முதலாயுள்ள விந்துவாகிய சுக்கிலமேயன்றி, அண்டத்திற்கு முதலாயுள்ள விந்துவாகிய சுத்த மாயையும் ஒரு சேர அவர்க்கு அடங்கித் தம்மியல்பு கெட்டு நிற்கும்.*

***குறிப்புரை :-*** *அறிவாவது, இங்கு விந்து சயம் பெறும் முறையை அறிதல். அதீதமாவது, சித்தத்தை வேறிடத்தில் வையாது, சிவன்பாலே வைத்திருத்தல். அது ஞானியர்க்கு இயல்பிலும், யோகியர்க்கு யோகமுயற்சியாலும் வாய்ப்பதாகும். ஆகவே, ஏனையோர்க்கு அது கூடாமை யறிக. செறிவு - அடக்கம். அதனை "செறிவறிந்து சீர்மை பயக்கும்" (திருக்குறள், 123) என்பதனாலும் உணர்க. தம்மியல்பாவது பிண்ட விந்துவிற்கு விரைய வீழ்ந்தொழிதலும், அண்ட விந்துவிற்குச் சொல்வடிவாய் நின்று, தன்னின் நீங்கித் தனித்து நிற்கவொட்டாது தளைத்து நிற்றலுமாம்.*

*இதனால், விந்து சயத்திற்குச் சாக்கிராதீதம் புரிதல் வழியாதல் கூறப்பட்டது.*

***1923. தெளிவுரை :-*** *விந்து இழப்பிற்குக் காரணம் பால் உணர்ச்சியே யாகலின், அதனை மகளிரை அந்தப் பாலினராகக் கருதாமல், அங்ஙனம் கருதுபவர்க்கு அதனால் வரும் அழிவுபற்றி அவரைக் கொல்ல வரும் கூற்றுவனாகவே கருதின் அவர்மேல் செல்கின்ற ஆசையும். அதனால் எழும் பால் உணர்ச்சியும் நீங்கிவிடும். அவை நீங்கவே வந்து இழக்கப்படாதாகலின், அதனால் மனித ஆயுள் அளவேயன்றி, மேலும் பல்லாண்டு செல்லினும் இறப்பு வாராது. இனி அந்நாட்கள் எல்லாம் பரம்பொருளின் உள்ளே குற்றமற்றிருக்கும் நாட்களாயும் அமையும்.*

***குறிப்புரை :-*** *'மாய வரும்' என இயையாது, 'மாயக் கூற்றம்' என்றியைத்து.*

**1924.** காலங் கடந்தவன் காண்விந்து செற்றவன்
காலங் கடந்தழிந் தான்விந்து செற்றவன்
காலங் களின்விந்து செற்றுற்ற காரிகை
காலின்கண் வந்த கலப்பறி யாரே. **18**

---

*'இஃது உண்மை வடிவில் வாராது, வேறொரு வஞ்ச வடிவில் வருகின்ற கூற்றம்' என்று உரைத்தலும் பொருந்தும். காதலது - காதலின்கண் உண்டாவது. "காலமே" என்பதன்பின் 'உளதாகும்' என்னும் பயனிலை எஞ்சிநின்றது.*

*இதனால், 'விந்து சயம் பெற விரும்புபவன் மாதர் ஆசையை வெறுத்தலே சிறப்பு' என்பது கூறப்பட்டது.*

***1924. தெளிவுரை :-*** *விந்து சயம் பெற்றவன் பல்லாண்டுகள் வாழ்தலால் காலத்தைக் கடந்து நிற்பவனாவன். விந்துவை அழித்துவிட்டவன் குறிப்பிட்ட சிலகாலம் வரையில் எவ்வகையிலோ வாழ்ந்து மறைந்தவனாவான். இவ்விருவரும் முறையே கலவிக் காலம் உட்பட எந்தக் காலத்திலும் விந்துவைத் தன் உடலில் வற்றியிருக்கச் செய்தவனும், மாதி னொடு பிராணாயாம முறையில் அமைந்த கலவியை அறியாதவனும் ஆவார். **விந்துவை வென்றவன் காலத்தை வென்றவன். விந்துவால் வெல்லப்பட்டவன் காலத்தால் வெல்லப்பட்டு அழிந்தவன் ஆவன்**.*

***குறிப்புரை :-*** *செறுதல் தடுத்தலும், அழித்தலும் ஆகிய இருபொருளும் தருவதாகலின் அதனை இங்ஙனம் 'பொருட்பின் வருநிலையணி' என்னும் நயம் தோன்ற இவ்வாறு கூறினார். ''காலங்கள்'' என்ற பன்மையால் எல்லாக் காலங்களும் கொள்ளப்பட்டன. 'காரிகையொடு' என ஒடு உருபு விரிக்க. ஐயுருபு விரிப்பினும் ஆம். "காலின்கண் வந்த கலப்பு" என்றது 'யோக முறையில் செய்யும் கலவி' என்றபடி.*

*இதனால், விந்து சயம் பெற்றாரது உயர்வும், பெறாதாரது இழிவும் ஒருங்கு தொகுத்துக் கூறப்பட்டன.*

***1925. தெளிவுரை :-*** *மாதினொடு கூடுவீர், நீவிர் அக்காதல் வாழ்க்கை இருவரிடத்தும் நலமாக அமைய வேண்டின் மேலெல்லாம் கூறிவந்த முறையில் குறித்த நாட்கு முன்னாளே அவளது உடம்பில் மலமும், சலமும் ஆகிய உபாதிகளும், வாதம், பித்தம், ஐ என்னும் அவற்றின் மிகை குறைகளும் இல்லாதபடி நீக்குதற்கு உரியவற்றைச் செய்து அதன்பின்னர்க் கூடுவீராக.*

***குறிப்புரை :-*** *'உடல் நலம் கெட்டிருப்பவளொடு கூடுதல் கேடு பயக்கும்' என்பதாம். ''மலம்'' என்றதனால் சலமும், 'சீதம், பித்தம்' என்பவற்றைக் கூறியதனால் ஏனை வாதமும் கொள்ளப்பட்டது.*

*இரண்டாம் தந்திரத்தில், "மாதா உதரம் மலம்மிகில்" என்னும் மந்திரம்*

**1925.** கலக்குநாள் முன்னாள் தன்னிடைக் காதல்
நலத்தக வேண்டில் அந் நாரி உதரக்
கலத்தின் மலத்தைத்தண் சீதத்தைப் பித்தை
விலக்கு வனசெய்து மேல்அணை வீரே. **19**

**1926.** மேலாம் நிலத்தெழும் விந்துவும் நாதமும்
கோலால் நடத்திக் குறிவழி யேசென்று
பாலாம் அமுதுண்டு பற்றறப் பற்றினால்
மாலா னதுமாள மாளுமவ் விந்துவே. **20**

---

*கரு உற்பத்தியின் வகையுணர்த்தற்குக் கூறினார்; இதனை விந்து சயம் பெறுவார்க்கு ஆவதுணர்த்தக் கூறினார் என்க.*

*எனவே, இதன் கருத்து வகையும் பெறப்பட்டது.*

***1926. தெளிவுரை :-*** *விந்து ஆறு ஆதாரங்களில் மேல் ஆதாரமாகிய ஆஞ்ஞையில் தோன்றும்; அதற்கு மூலமாகிய பொருள் ஏழாம் தானமாகிய மதி மண்டலத்தில் தோன்றும். ஆகையால், பிராண வாயுவையும், அதனால் எழும் மூலாக்கினியையும் சுழுமுனை வழியாகச் செலுத்தி ஒவ்வோர் ஆதாரமாகக் கடந்து மதி மண்டலத்தை அடைந்து அங்கே உண்டாகின்ற அமிர்தத்தை உண்டு கொண்டே மாதினை ஆசையின்றித் தழுவினால், மையல் உண்டாகாது. அஃது உண்டாகாதாகவே விந்துவும் வெளிப்படாது அகத்திலே நிற்கும்.*

***குறிப்புரை :-*** *விந்துவிற்கு மூலமாதல் பற்றி அங்ஙனம் ஆகின்ற அப்பொருளை "நாதம்" என்றார். சுழுமுனையை, 'தண்டு' என்னும் வழக்குப் பற்றி, "கோல்" என்றார். நடத்துதற்குச் செயப்படுபொருள் மேலெல்லாம் கூறியவாற்றால் வந்தியைந்தன.*

*பால் - இடம். 'உரிய இடத்தில்' என்றபடி. "உண்டு" என்னும் வினையெச்சம் 'நோக்கிச் சென்றான்' என்பது போல உடன் நிகழ்ச்சிக்கண் வந்தது. பற்றுதற்குச் செயப்படுபொருள் முன்னை மந்திரத் தொடர்பால் வந்து இயைந்தது.*

*இதனால், மேல், "காலின்கண் வந்த கலப்பறியாரே" எனக்கூறிய கலப்பு இத்தன்மையது என்பது அறிவிக்கப்பட்டது.*

***1927. தெளிவுரை :-*** *விந்து உண்டாகும் முறையும், அஃது உண்டாகி முதிர்வதனால் விளைகின்ற பயனும், அதனை வீண்போகாது அடக்குதற்குரிய வழியும், அவ்வழிப்படி அதனை அடக்குதலால் வரும் ஆக்கங்களும், விந்து கெடுவதாகிய கேடும், அக்கேட்டினால் விளையும் விளைவுகளின் வகையும் ஆகிய இவற்றையெல்லாம் முறையாக மனத்திற் கொணர்ந்து, ஆய்ந்து உணர்பவர்க்கு விந்து சயம் உண்டாக வழி ஏற்படும்.*

**1927.** விந்து விளையும் விளைவின் பயன்முற்றும்
அந்த வழியும் அடக்கத்தின் ஆக்கமும்
நந்திய நாசமும் நாசத்தால் பேதமும்
தந்துணர் வோர்க்குச் சயமாகும் விந்துவே. **21**

---

***குறிப்புரை :-*** *விந்து உற்பனம் முதலியவற்றை உள்ளவாறுணர்வோர்க்கு விந்து ஐயமாதலை உணர்த்துதல் நுதலிற்று. விந்து விளையும் முறைமையும், அவ் விளைவின் முதிர்வால் எய்தும் பயனும், அதன் அழிவும், விந்துவை அடக்கி ஆள்வதால் அடையும் சிறப்பும், பெருகிய நாதமும், அதன் வகையும் ஆராய்ந்து அறிவோர்க்கு விந்து ஐயமாம் என்றவாறு.*

*விந்து விளைவும் - துளிரத்தம் சுண்டி ஒருதுளி சுக்கிலம் ஆதலும், எண்பது துளி சுக்கிலம் துண்டி ஒரு துளி விந்துவாதலும் ஆகிய விளைவு.*

*விந்து நன்றாக விளைந்து முதிருமானால் உடல் ஒளியும் உறுதியும் உடையதாகும். இவையே அதன் பயன் என்க. அந்த அழிவும் என்பது விந்து நாசமும் அதனால் விளையும் தீமைகளுமாம்.*

*அடக்கத்தில் ஆக்கமும் - விந்துவை வெளிப்படுத்தாது அடக்கிக் கொள்வதால் விளையும் உயர்வும். அவை மன ஒருமைப்பாடும் திடமும் சலியாத சொற்செயல்கள் உடைமையும் ஆம்.*

*நந்திய நாதம் - பெருகிய நாதம். நந்துதல் பெருகுதல் 'நந்தம்போற் கெடும்' என்பது போலக் கொள்க.*

*<u>நாதம் - விந்து முற்றி மணி அனபோது விளையும் ஒலி</u>. அதன் பேதம் - மணியோசை முதல் சங்கோசை ஈறாகச் சொல்லப்பட்ட பதினாறு வகை ஒலிக்கூறுகள். இவற்றை உள்ளவாறு உணர்வோர்க்கு விந்துஜயம் ஆம் என்றவாறு.*

*இதனால், 'அறிவுடையோர், பிண்டத்திற்குக் காரணமான விந்துவைப் பற்றி அறியற்பாலனவற்றை எல்லாம் அறிதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

***1928. தெளிவுரை :-*** *விந்துவை அமுதமாக்கும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று. விந்து என்கின்ற வித்தை அது பொருந்தியிருக்கின்ற மூலாதாரத்திலேயே ஓங்கி வளர்கின்ற குண்டலித் தீயால் விரும்பி எரித்து அவ்விந்துவை முடிவற்ற சூரியமண்டலத்தில் ஏற்றி மதிமண்டலத்தைச் சாரச் செய்தால் குளிர்ந்த அமுதமாம் என்றவாறு.*

*விந்துவை மூலத்தீயால் சுட்டு, சூரிய மண்டலத்திலேற்றி, சந்திரமண்டலத்தைச் சாரவைத்தால் அது அமுதமாம் என்பது கருத்து.*

***குறிப்புரை :-*** *மூலம் - குறிக்கும் குதத்துக்கும் இடைப்பட்ட இடம்.*

**1928.** விந்துவென் வீசத்தை மேவிய மூலத்து
நந்திய அங்கியி னாலே நயந்தெரித்து
அந்தமில் பானு அதிகண்ட மேலேற்றிச்
சந்திரன் சார்புறத் தண்ணமு தாமே. **22**

**1929.** அமுதச் சசிவிந்து ஆம்விந்து மாள
அமுதப் புனலோடி அங்கியின் மாள
அமுதச் சிவபோகம் ஆதலால் சித்தி
அமுதப் பிலாவனம் ஆங்குறும் யோகிக்கே. **23**

---

*பானுகண்டம் கொப்பூழ் முதல் இதயம் வரை உள்ள சூரிய மண்டலப்பகுதி. சந்திரமண்டலம் - புருவமத்திக்கு மேல் உச்சி வரை உள்ள பகுதி.* **விந்துவை** *மூலக்கனலால் சுட்டு, வலப்பால் உள்ள பிங்கலை நாடியின் வழியாக ஏற்றி,* **அதன்மேல் இடநாடி வழியாகச் சகஸ்ராரம்வரை உயர்த்திச் செல்லின், இவ்வெப்பம் தாக்கி மதிமண்டலத்து அமுதம் சுரக்கும் அதனால் நெடுநாள்** *வாழ்வும் பேரின்பமும் பெறலாம்.*

*1929.* **தெளிவுரை :-** *சிவயோகி அமுதலாப்பிலாவனம் செய்யும் முறை உணர்த்துதல் நுதலிற்று. அமுதமாகிய சந்திரமண்டலத்துள் விந்துவில் உடற்கண் தோன்றிய விந்து கலந்து லயமாக உடம்பு முழுவதும் அமுதப்புனல் பரவி இதயத்துள்ள சிவாக்கினியில் இலயிக்க, அமுதமயமான சிவபோகம் விளையும்; ஆதலால் சிவயோகிக்கு அமுதாப்பிலாவனமாகிற சித்தி பொருந்தும் என்றவாறு.*

*மதி மண்டலத்தில் மதிவிந்துவொடு உடல் விந்து என்ற அமுதநீர் பெருகி இதயச் சோதியுள் ஒன்ற, சிவபோகம் சித்திக்கும்; ஆதலால் அமுதாப்பலாவன சித்திவிளையும் என்பது கருத்து.*

**குறிப்புரை :-** *சசி விந்து - மூலாக்கினி மதி மண்டலத்திலுற்று எரிக்கும் போது விளையும் அமுதத்துளி.*

*ஆம் விந்து - நமது உடற்கண் விளையும் சுக்கில காரியமாகிய விந்து. இவ்விந்து குண்டலியோடு மதிமண்டலம் சென்றபோது ஒளியுள் ஒளி மாய்ந்தது போல மாளும் என்பது முதலடியால் உணர்த்தப் பெற்றது.*

*அமுதப்புனல் - இன்ப உணர்ச்சியின் மிகுதியால் விளையும் வியர்வை உமிழ்நீர் முதலியன. இது மதி மண்டலத்து அனுபவம் ஏற்படும்போது விளையும் அனுபவம். இப்புனல் இன்ப நுகர்வாய் வெளிப்பட்டுச் சிவானுபவமாக மறையும்; அதுவே சிவபோகமாம். இதனை விளக்குவன பின்னைய இரண்டடிகளும்.*

*அமுதாப்பிலாவணம் - அமுதத்தில் மூழ்கி எழுந்தது போலும் அனுபவம். சிவாகமங்களில் ஆத்மார்த்த பூஜையைக் கூறுமிடத்து, 'பூஜகன் சிவோகம் பாவனை செய்து அமிர்தாப்பிலாவனம் செய்க' எனவரும் பகுதியால் அமுதம்*

**1930.** **யோகம்அவ் விந்து ஒழியா வகைபுணர்ந்து**
**ஆகம் இரண்டும் கலந்தாலும் ஆங்குறாப்**
**போகம் சிவபோகம் போகிநற் போகமாம்**
**மோகம் கெடமுயங் கார்மூடர் மாதர்க்கே.** **24**

---

*தடாகமாக நிறைந்திருக்க அதில் மூழ்கி எழுந்தவனுக்கு மயிர்க்கால் தோறும் இன்ப உணர்வு வெளிப்படும். இதுவே அமுதாப்பிலாவனவாம்.*

*1930.* ***தெளிவுரை :-*** *மாதும், ஆடவனும் ஒருங்கு கூடி, இருவர் உடலும் 'ஓர் உடலே' எனும்படி இறுகப் புல்லிய விடத்தும் ஆடவனுக்கு அப்புல்லுதல் காரணமாக வெளிப்படுதற்குரிய விந்து வெளிப்படாதிருக்கப் பெறுதலே உண்மை யோகமாகும். ஆயினும் அவ்விடத்து இன்பநுகர்ச்சி இல்லா தொழியாது உள்ளதேயாகும். அவ்வின்பநுகர்ச்சி உடலின்ப நுகர்ச்சியாகாது சிவ இன்ப நுகர்ச்சியாகவேஅமையும். அதுவே இன்ப நுகர்ச்சியை உடையவனுக்குத் தீங்கினை விளையாது. நன்மையையே விளைக்கும் இன்ப நுகர்ச்சியாம். இந்நுகர்ச்சியைப் பெறும் வகையில் மாதரைப் புணர அறியாதார் புணர்ச்சிக் காலத்தில் அவரை உடல் இன்ப மயக்கமின்றிப் புணர மாட்டார்.*

***குறிப்புரை :-*** *'அம்மயக்கத்தில் மூழ்கிப் புணர்ந்து கெடுவர்' என்பதாம். 'புணர்ந்து...... .......... கலந்தாலும் அவ்விந்து ஒழியா வகை யோகம்' எனக் கூட்டியுரைக்க. 'போகிக்கு' என நான்கண் உருபு விரிக்க. "நாற்போகமாம்" என்னும் பயனிலைக்கு. 'அதுவே' என்னும் எழுவாய் வருவிக்க. தீங்காவது, போகம் வினைப்போகமாய், மேலும் வினையைப் பெருக்குதல். நன்மையாவது இன்பப் பேற்றைப் பலவாகத் தருகின்ற திருவருளை நினைத்தலால் அதனிடத்து மேலும், மேலும் அன்பு மீதூர்தல்.*

*"மாழை ஒண்கண் பரவையைத் தந்து ஆண்டானை" எனவும், "நாயேனைப் பொருட்படுத்துச் - சங்கிலியோடு எனைப் புணர்த்த தத்துவனை" (தி.7 ப.51 பா.10, 11) எனவும், "மான் திகழும் சங்கிலியைத் தந்து வருபயன்களெலாம் - தோன்ற அருள் செய்தளித்தாய்" (தி.7 ப.89 பா.10) எனவும், "பண்மயத்த மொழிப் பரவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானே" (தி.7 ப.46 பா.11) எனவும் நினைந்து, நினைந்து உருகியவாறும்.*

*ஓர்ந்தனன், ஓர்ந்தனன் உள்ளத் துள்ளே உள்ள ஒண்பொருள்;*
*சேர்ந்தனன், சேர்ந்தனன்; சென்று திருவொற்றி யூர்புக்குச்*
*சார்ந்தனன், சார்ந்தனன் சங்கிலி மென்தோள்; தடமுலை*
*ஆர்ந்தனன்; ஆர்ந்தனன் ஆமாத்தூர் ஐயன் அருளதே.*

*- தி.7 ப.45 பா.4*

*என அருளிச்செய்தவாறும் அறிக. "மோகங் கெட" எனப் பொதுப்பட*

**1931.** மாத ரிடத்தே செலுத்தினால் அவ்விந்து
காதலி னால்விடார் யோகம் கலந்தவர்
மாதர் உயிராசை கைக்கொண்டு வாடுவர்
காதலர் போன்றங்ஙன் காதலாம் சாற்றிலே. **25**

---

*அருளினமையால் இவ் யோகம் வல்லார் தம்மால் கூடப்பெறும் மகளிரையும் மோகம் இலராகச் செய்வர் என்பதும் பெறப்படும். விந்து ஒழியா வகை புணரும் யோகம் வச்சிர 'குலியோகம்' எனப்படும் என்றும், 'ஆயர்பாடியில் கிருட்டினன் அவ்யோகம் வல்லனாய் இருந்தான்' என்றும் கூறுவர். "மாதர்க்கு" (தி.7 ப.45 பா.4) என்பதும் உருபு மயக்கம்.*

*இதனால், 'விந்து சயம் வல்லார் உலகச் சுழலால் போகிகளாய் நிற்பினும் யோகிகளாய் நிற்பர்' என்பது கூறப்பட்டது.*

***1931. தெளிவுரை :-*** *யோகத்தைப் பொருந்தியவர் மாதரிடத்தே அவர் விழைவு நோக்கி விந்துவை விடுத்தாராயினும் அவர்மேல் கொண்ட மோகத்தால் விடுத்தாரல்லர். ஏனெனில், அவர் மாதர்பால் காட்டுகின்ற மோகத்தைச் சொல்லுமிடத்து ஏனையோர் மோகம் போன்றதாயிருப்பினும் அது வேறேயாம். ('பொதுவாக யாவர்மீதும் உளதாகிய அருளேயாம்' என்பதாம்). இனி, யோகத்தில் பொருந்தாதவர் மாதர்மேல் தம் உயிர்மேல் வைத்திருக்கும் ஆசையைப்போலும் ஆசையை வைத்து அதனால் மெலிவெய்துவர்.*

***குறிப்புரை :-*** *காதல், இங்கு மோகத்தைக் குறித்து நின்றது. யோகியர் மோகம் இன்மையால் அப்பொழுது விந்து சயம் பெறுதலும், பின்னரும் பல இன்னலுக்கு ஆளாகாது உய்தலும் உடையர் என்பதும், 'ஏனையோர் அவற்றிற்கு மாறான நிலையையுடையராவர்' என்பதும் கருத்து. மூன்றாம் அடியை இறுதிக்கண் வைத்து உரைக்க. "யோகம் கலந்தவர்" என்றதனால், "அதனைக் கலவாதவர்" என்பது பெறப்பட்டது. ஈற்றடி. அங்ஙனம் காதலைச் சாற்றில், காதலர் காதல் போன்றதாம் என மாற்றியும். ஒரு சொல் வருவித்தும் உரைத்தற்கு உரியது "அங்ஙன்" என்றது, 'அவரிடத்து' என்றபடி.*

*விந்து வெளிப்படாமல் போகம் செய்வது சிவபோகம் என்று உரைப்பாரும் உளர். சிந்தையை மாதரிடத்து வைத்து மயங்கிப் போகிக்குமது ஒருபோதும் சிவபோகம் ஆகாது. "எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனமிருக்கும் மோனத்தே" என்பது போல யோகியின் மனம் சிவத்திடத்தே பதிந்திருப்பதால் அது சிவபோகமாயிற்று.*

*கூத்தினர் தன்மை வேறு கோலம் வேறு ஆகுமாப் போல நம்பியாரூரர் பரவையாரிடம் பழகி வந்தமையால் இருவர் நெறியும் சிவபோகமாயிற்று. நம்பியாரூரர் பரவையாரைச் சிவனருள் என்றே திளைத்தார். பரவையார் சிவபெருமான் இன்னருள் பெற்று என்னை உடையவரானார் என்று திளைத்தார்.*

1932. சாற்றிய <u>**விந்து சயமாகும் சத்தியால்**</u>
ஏற்றிய மூலத் தழலை எழமூட்டி
நாற்றிசை ஓடா நடுநாடி நாதத்தோடு
ஆற்றி அமுதம் அருந்தவிந் தாமே. 26

---

*அதனாலேயே, இருவர் எய்திய போகமும் சிவபோகமாயிற்று. இஃது உணராது விந்து வெளிப்படாப் போகம் சிவபோகம் எனல் சிறிதும் ஏலாமை தெளிக.*

*இதனால், யோகம் வல்லவரும், அல்லவரும் இன்பம் நுகருமாறு கூறப்பட்டன.*

***1932. தெளிவுரை :-*** *முற்கூறிய விந்துவும் சத்தியால் ஜயம் ஆகும்; தூண்டி விட்ட மூலாதாரத்திலுள்ள கனலை மேலெழச் செய்து சிதறிப் போகாவண்ணம் நடுநாடியிலேயே நாதத்தோடு ஒன்றச் செய்து, அமுதம் உண்ண, விந்து அழியாமல் தமக்கேயாம் என்றவாறு.*

*விந்துவைக் குண்டலியோடு மேலெழச் செய்து மதி மண்டலத்தமுது உண்ண விந்து கெட்டொழியாது தமக்கேயாம் என்பது கருத்து.*

<u>*விந்துவை வெல்வது சத்தியால் என்றது தளராத மன உறுதியும் அதற்குக் காரணமான திருவருட் சத்தியும் துணையானால் முடியும் என்றவாறாம்.*</u>

*மூலத்தழல் மூலாதாரத்தில் சுருண்டு கிடக்குமாதலின் அதனைப் பிராணனை ஆளுமுறையால் ஏற்றிவிட வெளிப்பட்டுத் தோன்றுமென்பார் 'ஏற்றிய மூலத்தழல்' என்றார். எழமூட்டுதல் - ஆதாரங்கள் தோறும் பொருந்திப் புருவமத்தி வரையில் உயரச் செய்தல்.*

***குறிப்புரை :-*** *நடுநாடி - சுழிமுனை. நாதத்தோடு ஆற்றி - நாதத்தோடு விந்துவையும் ஒன்றச் செய்து, நாதவகை முன்னரே கூறப்பட்டது.*

*விந்து ஆம் என்பதற்கு அவ்விந்து தமக்கேயுரிய தாம் எனச் சிலசொல் வருவித்து முடிக்க.*

***1933. தெளிவுரை :-*** *மேற்கூறியவாறு செய்யும் யோகத்தால் மூலாக்கினியால் விந்துவும், நாதமும் கலந்து ஒன்றாதலும், அவ்வக் கினியின் வெம்மை உடம்பின் மயிர்க்கால்தோறும் பரவி நிற்றலும் நிகழ, அவ்வாற்றால் உள்ளம் உலகை வெறுத்துச் சிவத்தினிடத்தே செல்ல, பின்பு, 'சிவம் நான்' என்பதாகிய சிவோகம் பாவனை உண்டாக, அதனால் விந்து அழியா உடம்பில் அதற்கு வித்தாய், அதனுள்ளே சுவறி நிற்கும்.*

***குறிப்புரை :-*** *அகம் - நான். 'விந்து, உடம்பு அழியாமைக்கு வித்தாய் அதனுள்ளே மாளும்' எனக் கூறற்பாலதனை இங்ஙனம் கூறினார் "வித்தில்" - வித்துப்போல. சிந்தனை மாற - தனு கரண புவன போகங்களாகிற மாயைப்*

**1933.** விந்துவும் நாதமும் மேவக் கனல்மூலம்
அந்த அனல்மயிர்க் கால்தோறும் மன்னிடச்
சிந்தனை மாறச் சிவம்அகம் ஆகவே
விந்துவும் மாளும்மெய்க் காயத்தில் வித்திலே. **27**

**1934.** வித்துக்குற் றுண்பான் விளைவறி யாதவன்
வித்துக்குற் றாண்ணாமல் வித்துச்சுட் டுண்பவன்
வித்துக்குற் றுண்பானில் வேறலன் நீற்றவன்
வித்துக்குற் றுண்ணாமல் வித்துவித் தானன்றே. **28**

---

*பற்றிய உயிர் சிவத்தைச் சார்ந்து சிவமாக என்பது. மெய்க்காயம் - விஞ்ஞானமய கோசமாகிற ஞானசரீரம்.*

*இதனால், விந்து சயத்தின் பொருட்டுச் செய்யப்படும் யோகம் சிவ யோகத்தையும், காய சித்தியையும் உண்டாக்குதல் கூறப்பட்டது.*

***1934. தெளிவுரை :-** விதைக்கு வைத்திருக்கும் நெல்லைக் குற்றி உணவாக்கிக் கொள்பவன் வித்தினால் விளையக்கூடிய பெரும்பயனை இழந்தவனாவன். இனி, விதை நெல்லைக்குற்றி உண்ணாமல், பொரியாக வறுத்து உண்பவனும் முன் சொல்லப்பட்டவனைவிட அறிவுடையவன் ஆகமாட்டான். (ஏனெனில், அவனும் விளைவை இழக்கின்றானன்றோ!) ஆகையால் சிவயோகி விதையைக் குற்றி, அல்லது வறுத்து உண்ணாமலும், விதைத்துப் பெரும்பயன் அடைபவன் ஆவான்.*

***குறிப்புரை :-** நீற்றவன் - முழுநீறு பூசியவன். சிவயோகி, இம்மந்திரம் ஒட்டணியாகச் செய்யப்பட்டமையால், இதன் பொருள் வருமாறு :-*

*வித்து என்பது விந்துவை. ‘விந்துவை உபாதியாக்கிக் கொண்டு அதனை எவ்வாற்றாலேனும் போக்குபவன் அதனால் எந்தப் பயனையும் பெறாமல் இழப்பவனாவன். இனி யோகத்தால் விந்துவை உடம்பினுள் வற்றச் செய்பவனும் விந்துவால் பெறக்கூடிய பெரும்பயனைப் பெற்றவன் ஆகமாட்டான். ஆகையால் சிவயோகி இந்த இரண்டு வகையிலும் இல்லாமலும் பெரும்பாலோர்போல விந்துவை மாதர்பால் விடாமலும் விந்து சயத்தால் சிவோகம் பாவனையை அடைந்து நலம் பெறுவான்’.*

*விதை நெல் மிக்க விலையுடையது. அதனைப் பொன்னுக்கு விற்றால், அந்த அளவு உணவு நெல்லை மலிவான விலைக்கு வாங்கி உண்ணவும் செய்யலாம்; பொன்னும் இலாபமாகும். அதனால், ‘அதனை ஒப்பது சிவயோகியின் செயல்’ என்றார்.*

*இதனால், ‘விந்து சயத்தால் பெறத்தக்க சிறந்த பயன் சிவோகம் பாவனையே’ என்பது கூறப்பட்டது.*

1935. அன்னத்தில் விந்து அடங்கும் படிகண்டு
மன்னப் பிராணனாம் விந்து மறித்திட்டு
மின்னொத்த விந்துநா தாந்தத்து விட்டிட
வன்னத் திருவிந்து மாயும்கா யத்திலே. 29

1936. அன்னம் பிராணன்என்று ஆர்க்கும் இருவிந்து
தன்னை அறிந்துண்டு சாதிக்க வல்லார்க்குச்
சொன்னமு மாம்உருத் தோன்றும்எண் சித்தியாம்
அன்னவ ரெல்லாம் அழிவற நின்றதே. 30

---

*1935. **தெளிவுரை :-** உணவிலே விந்து காரண ரூபமாய் அடங்கியிருத்தலை அறிந்து உணவை நன்முறையில் ஒழுங்காக உண்டு வருதலாலும், பின்பு பிராணனில் அவ்வாறுள்ள விந்துவை அந்தப் பிராணனை ஒழுங்கான முறை இயக்குதலால் ஒளிவடிவமாக எழச்செய்து ஒலிவடிவாகிய விந்துநாதத் தானங்களில் ஏற்றி அதற்கு மேலும் செலுத்துதலாலும் அக்கர வடிவாய் நின்று அறிவைத் தோற்றுவிக்கின்ற பெரிய சுத்த மாயையும் உடம்பினுள்ளே அடங்கி நேரிதாம்.*

***குறிப்புரை :-** ‘உணவையும், பிராண வாயுவையும் ஒழுங்கான முறையில் கொண்டிருக்கும் யோகிக்கு வாக்குகள் நேரியவாக, அதனால் மனம் தன்வழிப்பட்டுச் சிவ சிந்தனை உண்டாகும்’ என்பது கருத்து. மறித்தல் - அடக்குதல். ‘மறித்தலால் மின் ஒத்த விந்து’ என்றதனால், விந்து மின்னல் போல ஒளிவடிவாதல் அனுவாத முகத்தால் பெறப்பட்டது. வன்னம் - சக்கரம். வன்னத்து இருவிந்து” என்பது, ‘கடி சூத்திரப் பொன்’ என்பதுபோலக் கரும காரகத்தின்கண் வந்த ஆறாவதன் தொகை, நான்காவதன் தொகை’ எனினுமாம்.*

*இதனால், விந்து சயத்தால் மேற்கூறியவாறு சிந்தனை மாறுதல் கூறப்பட்டது.*

*1936. **தெளிவுரை :-** ஆடவர் எல்லோர்க்கும் அன்ன விந்து, பிராண விந்து’ என இரு விந்துக்கள் உள்ளன. அந்த உண்மையை உணர்ந்து, அன்னத்தையும், பிராணனையும் நெறிப்படுத்தி நிற்க வல்லவர்க்கு மேனி பொன்போல விளங்கும். அட்டமா சித்திகள் கூடும். மேலும் அத்தன்மை யுள்ள யோகிகள் யாவரும் நீண்ட காலம் வாழ்ந்தமை வெளிப்படை.*

***குறிப்புரை :-** அன்னமும் பிராணனுமாகிய இருவகை விந்துக்களின் நிலை அறிந்து அடக்கி ஆண்டு வெல்லவல்ல சிவயோகியர் உடம்பு பொன்னாம். எண்வகைச் சித்திகளும் தானே வந்து எய்தும்; அவர்கள் நீடூழி வாழ்வார்கள் என்பது கருத்து.*

*அன்னம் - உண்ணும் சோறு, அன்ன விந்து - அன்னத்தின் சாரமான சுக்கிலத்தின் முதிர்வான விந்து. பிராணன் - மூச்சுக்காற்று; அது வாரசரத்திற்*

**1937.** நின்ற சிகாரம் நினைக்கும் பிராணனாய்
ஒன்று மகாரம் ஒருமூன்றோ டொன்றவை
சென்று பராசத்தி விந்துசயந் தன்னை
ஒன்ற உரைக்க உபதேசந் தானே. **31**

---

*கூறியவண்ணம் இயங்குவதால் விளையும் விந்து பிராணவிந்து. அன்னவிந்து போகத்தால் கழிந்து வீணாம். பிராணவிந்துவும் போகத்தாலும் தொழிலாலும் கழிந்து வீணாம். அவை வீணாகாது உடம்பிலேயே நிலைக்கும் வண்ணம் சாதிக்க வேண்டும்; அங்ஙனம் செய்வோரே யோகியர்.*

*பிராணவிந்துவைக் கும்பகஞ் செய்து அடக்கினால் உரோமம் கறுக்கும்; உறுப்புச் சிவக்கும்; பொன்னிறமாகும் என்பது முன்னர் மூன்றாந் தந்திரத்துப் பிராணாயாமப் பகுதியில் கூறப்பட்டது.*

*அன்னவிந்துவை அடக்கும் உபாயம் இவ்வதிகாரத்துக் கூறப்பட்டது. இருவகை விந்துவும் போகத்தில் சேர்ந்தே அழியுமாதலின், அங்ஙனம் அழியாத போது விளையும் பயன் சேர்ந்தே கூறப்படுகிறது.*

*அன்னவர் எல்லாரும் அழிவற நிற்பர் என்பது. ஆரிடம் பற்றி எல்லாம் அழிவற நின்றதே என முடிந்தது.*

*இதனால், 'விந்து சயம் வேண்டினார் உணவையும், பிராணனையும் நெறிப்படுத்திக் கொள்ளல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

*1937. தெளிவுரை :- (நீயே விந்து சயத்தைப் பெற்று விடலாம் என்று நினையாமல்) திருவருளும் அம்முயற்சியில் தலைப்பட்டு உடன் நிற்றற் பொருட்டுத் திருவைந்தெழுத்தில் உயிராய் உள்ள சிகாரத்தின் பொருளாகிய சிவனை அகார உகார மகாரங்களோடு உடன் வைத்து ஓம் சிவாயநம என்று தியானிக்க. விந்து சய மார்க்கத்தைப் பிறருக்கு உபதேசிக்கும் பொழுதும் இவ்வாறே உபதேசிப்பாயாக.*

*குறிப்புரை :- 'பிரணவ யோக முறையால் விந்து சயம் எளிதில் பெறலாம்' எனக்கூற வந்தவர்' அதனைச் சிவத்தியானத்தோடு செய்யல் வேண்டும்' என்பதை இவ்வாற்றால் கூறினார். "சிகாரம்" என்றது அதனால் குறிக்கப்படும் பொருளை, "நினைக்கும்" என்றது, 'நினைக்கப்படும்' என்றபடி. 'பிராணனாய் நினைக்கும்' என முடித்து, அதன்பின் 'அதனை' என்பது வருவித்து 'ஒன்றவை' என முடிக்க. 'பராசத்தி சென்று விந்து சயந்தன்னை ஒன்ற' என முதலிற்கூட்டியும், உபதேசம் ஒன்று உரைக்க' என இறுதியில் மாற்றியும் பொருள் கொள்க.*

*இதனால், சிவத்தியானத்தோடு கூடிய பிரணவயோகம் விந்து சயத்தைத் தருதல் கூறப்பட்டது.*

*1938. தெளிவுரை :- விந்து சயத்தால் சிவகதி சித்திக்குமாறு உணர்த்துதல்*

**1938.** தானே உபதேசம் தானல்லா தொன்றில்லை
வானேய் உயர்விந்து வந்த பதினான்கு
மானேர் அடங்க அதன்பின்பு புத்தியும்
தானே சிவகதித் தன்மையு மாமே. **32**

---

*நுதலிற்று. உபதேசம் சிவமாகிய தானல்லாது வேறொன்று இல்லையாம்; மதிமண்டலம் வரையில் பரகாயத்து உயர்ந்து செல்லுகின்ற விந்துவிலிருந்து தோன்றிய அகாரம் முதல் பதினான்று கலைகளும் மகத்தத்துவமும் அடங்க, அதன்பின்பு புத்தி தானே சிவகதி எய்தும் தன்மையைப் பெறும் என்றவாறு.*

*திருவைந்தெழுத்து அல்லது வேறு இல்லையாம். அதனை எண்ண விந்துமேல் நோக்கிச் செல்லும். விந்துவிலிருந்து தோன்றிய பதினான்கு கலைகளும் மகத்தத்துவத்தில் அடங்கும். அதன்பின் புத்தி தானே சிவகதி சேரும் தன்மையில் ஆம் என்பது கருத்து.*

***குறிப்புரை :-** தான் ஏய் உபதேசம் - விந்துவை வென்று சிவகதியைச் சேரவிரும்பும் ஆன்மாவாகிய தான் அடையும் உபதேசம். ஏய்தல் - பொருந்துதல்; அடைதல்.*

*தான் அல்லது - சிவமாகிய தான் அல்லாது; என்றது சிவயநம என்னும் திருவைந்தெழுத்து ஒன்றே அல்லாமல் என்க. திருவைந்தெழுத்தை எண்ணும் போது ஆன்மா சிவத்தைச் சார்ந்து சிவமேயாய் இருத்தலின் 'உபதேசம் தானல்லாது ஒன்று இல்லை' என்றார்.*

*வான் ஏன் உயர் விந்து - சகஸ்ராரமாகிய வான மண்டலம் வரையில் உயரும் விந்து. திருவைந்தெழுத்தை விடாது கணிக்க, விந்து கீழ்நோக்காது மேல்நோக்கிச் சென்று, பரையொடு கூடுமாதலின் விந்துவை 'வான் ஏய் உயர் விந்து' என்றார்.*

*வந்த பதினான்கு - பரவிந்துவிலிருந்து தோன்றிய அகாரகலை, உகாரகலை, மகாரகலை, விந்துகலை, அர்த்தகலை, நிரோதிகலை, நாதகலை, நாதாந்தகலை, சத்திகலை, வியோபினி கலை, வியோமரூபாகலை, ஆனந்தாகலை, அனதாகலை, அனாசிருதாகலை என்ற பதினான்குமாம்.*

*மான் - மனத்தோடு கூடி செயப்படுவதாகிய சமனா கலை, மனஸாஸக என்பது சமனா என்றாயிற்று. அதனைத் திருமூலர் மான் என்று குறிப்பிடுகிறார்.*

*புத்தி அறிவால் தியானிக்கப்படும் உன்மனை. உன்மனையாவது பரை, பரசிவம் முதலாய ஏனைய கலைகள் புத்தியில் பதிய ஆன்மா தானே சிவத்தில் சேரும் தன்மையைப் பெறும் என்பதாம்.*

***1939. தெளிவுரை :-** உயிர்களின் தோற்றமும் சிவோகம் பாவனையும் உணர்த்துதல் நுதலிற்று. விந்துவும் நாதமும் விளைவதால் இவ்வுலகத்தில் தோன்றிய பலவகைப்பட்ட உயிர்களும் உடலோடு கூடித் தோன்றியதாம்.*

**1939.** விந்துவுள் நாதம் விளைய விளைந்தது
வந்தஇப் பல்லுயிர் மன்னுயி ருக்கெலாம்
அந்தமும் ஆதியும் ஆம்மந் திரங்களும்
விந்து அடங்க விளையும் சிவோகமே. **33**

**1940.** வறுக்கின்ற வாறும் மனத்துலா வெற்றி
நிறுக்கின்ற வாறும்அந் நீள்வரை யெட்டில்
பொறிக்கின்ற வாறும்அப் பொல்லா வினையை
அறுக்கின்ற நாள்வரும் அத்திப் பழமே. **34**

---

*நித்தியமான உயிர்கட்கெல்லாம் முதலும் இறுதியுமாயிருக்கிற மந்திரங்களும் விந்து அடங்க அதனால் விளையும் சிவோகம் பாவனையாம் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *இவ்வுலகத்து உயிர்கள் உடலொடு கூடி விளங்குவது விந்து நாதங்களின் விளைவால் ஆம். உயிர்களுக்கு ஈறும் முதலுமாம் மந்திரமும் விந்து முனைப்பு அடங்குதலால் விளையும் சிவோகம் பாவனையாம் என்பது கருத்து.*

*சிவமே சங்காரகாரணன் ஆதலாலும் புணருற்பவமும் அதனின்று விளைதலாலும், 'அந்தமுமாம் ஆதியுமாம் சிவோகமே' என்றார். சிவோகம் பாவனை முதிர்தல் விந்து சயத்தால் ஆதலின் 'விந்து அடங்க விளையும் சிவோகமே' எனப்பட்டது.*

***1940. தெளிவுரை :-*** *விந்து சயத்தால் வினையை வெல்லலாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று. விந்துவை மீண்டும் முளையாதவாறு வறுக்கும் முறைமையும் எங்கும் உலாவருதலாகிய மனத்தின் வெற்றியைத் தடுத்து நிறுத்தும் முறைமையும் அதனைப் பெரிய பொன்மலையாகிற சுழுமுனையை ஒட்டி உயர்கின்ற முறைமையும் ஆகிய அனைத்தும் அத்திப்பழம் போல்வதாகிய உடலுக்குக் கொடிய வினைகளைப் போக்கிய நாளின் கண் வருவனவாம் என்றவாறு.*

*வினையைப் போக்குகின்ற நாளிலே விந்துசயமும் மனோசயமும் சுழுமுனைத் தியானமும் கைவரும் என்பது கருத்து.*

*வறுக்கின்றவாறு - விந்து முளைத்துப் பிறப்புக்கு ஏதுவாகாமல் அடக்குதல்.*

*மனம் மாயையாகிய உலகத்தில் தோன்றிய பல பொருள்களிடத்தும் சென்று பற்றுவதாதலின் அது உலகத்தில் உலாவரும்; அதனைச் சிவமாகிய ஓரிடத்து நிலைத்து நிற்கும்படி நிறுத்தும் வல்லமை பிராரத்த கன்மமும் ஏனைய கன்மச் சார்பும் கழிந்தாலன்றி இல்லையாதலின் 'வினையை அறுக்கின்ற நாள் உலாவரும் மனத்து வெற்றி நிறுக்கின்றவாறு ஆம்' என்றார்.*

***குறிப்புரை :-*** *நீள்வரை - உயரத்தில் நீண்டுவளரும் மலையாகிய உடல். ஏனைய விலங்கினங்களைப் போலன்றி மனித உடல் உயர்ந்து வளர்வது ஆதலின்*

**1941.** விந்துவும் நாதமும் மேவி உடன்கூடிச்
சந்திர னோடே தலைப்படு மாயிடில்
அந்தர வானத் தமுதம்வந் தூறிடும்
அங்குதி மந்திரம் ஆகுதி யாகுமே. **35**

மனத்தொடு சத்து மனஞ்செவி யென்ன
இனத்தெழு வார்கள் இசைந்தன நாடி
மனத்தில் எழுகின்ற வாக்கு வசனம்
கனத்த இரதம்அக் காமத்தை நாடிலே.

**1942.** சத்தமும் சத்த மனமும் மனக்கருத்து
ஒத்தறி கின்ற இடமும் அறிகிலர்
மெய்த்தறி கின்ற இடம்அறி வாளர்க்கு
அத்தன் இருப்பிடம் அவ்விடந் தானே. **36**

---

*'நீள்வரை' எனப்பட்டது. உடலை மேரு, சுவர்ணகிரி, பொன்மலை என வழங்குவது சித்தர் மரபு. நீள்வரை ஒட்டிப் பொறித்தலாவது உடலினுள் நடுநாடி வழியாக ஒட்டி மனத்தை மேல் ஏற்றுதல். பிராரத்தத்தை உண்டும் ஆகாமிய சஞ்சித வினைகள் வந்து பற்றாதவாறு தடுத்தும் நீக்குதலாகிய செயல், அறுத்தல் என்பதால் விளக்கப் பெற்றது. உடல், பல வித்துக்களையும் புழுக்களையும் உள்ளடக்கி நிற்பதாதலின் அத்திப்பழமாக உருவகித்துப்பெற்றது. மன்னரும் 'அத்திப்பழமும் அறைக்கீரை நல்வித்தும், கொத்தி உலைப்பெய்து' என்றருளியமை காண்க. உடலை அத்திப் பழமாக உருவகித்தல் திருமூல தேவர்க்கு வழக்காதல் பிறவிடங்களில் கண்டு தெளிக. அங்ஙனமிருக்க அத்தீப்பழம் எனக்கொண்டு தீப்பிழம்பாகிய சிவப்பழம் என இயைபில்லாப் பொருள் கொள்ளவேண்டுவது இல்லையாம்.*

***1941. தெளிவுரை :-*** *விந்துஜயத்தினால் வரும் நன்மை உணர்த்துதல் நுதலிற்று. விந்துவும் நாதமும் ஒன்றுகூடி உயர்ந்து சென்று மதிமண்டலத்தைப் பொருந்துமாயின், பராகாயத்திலிருந்து அமுதம் சுரக்கும்; அங்கு உண்டாகின்ற பிரணவ பஞ்சாக்கர நாதமே ஆகுதிக்கு உரிய மந்திரமாம் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *விந்து நாதங்கள் மேல்நோக்கிச் சென்று மதி மண்டலத்தைச் சார அமுதம் சுரக்கும். அப்பொழுது அங்கு அனுபவத்துக்கு வரும் ஓம் எனும் ஒலியே ஆகுதி மந்திரமாம் என்பது கருத்து.*

***1942. தெளிவுரை :-*** *சூக்குமை முதலிய வாக்குக்களும், அவ்வாக்குக்களால் இயக்கப்படுகின்ற மனம் முதலிய அந்தக் கரணங்களும், அந்த அந்தக்கரணங் களால் உண்டாகின்ற உணர்வுகளும் ஆகிய இவை ஒருங்கு தொக்க நிலையாகிய அறிவின் நிலையை உலகர் அறியமாட்டார். அதனை உள்ளவாறு அறிய வல்லவர்*

**1943.** உரவடி மேதினி உந்தியில் அப்பாம்
விரவிய நன்முலை மேவியகீழ் அங்கி
கருமுலை மீமிசைக் கைக்கீழிற் காலாம்
விரவிய கந்தர மேல்வெளி யாமே. **37**

---

*ஆசான் மூர்த்தியின் அருள் பெற்றவரே ஆவர். அவர்க்கு அந்த நிலையே சிவனது இருப்பிடமாதல் விளங்கும்.*

***குறிப்புரை :-*** *இங்குக் கூறப்பட்ட மூன்றனுள் முதலாவதாகிய வாக்கும் இறைவன் இயக்கவே இயங்கும் ஆகவே இறைவன் வாக்கினை நேராகவும், அந்தக் கரணங்களை வாக்கு வழியாகவும் இயக்கவே உயிர்கட்கு உணர்வுகள் உண்டாகின்றன. ஆகவே, 'இவ்வுண்மை உணருமிடத்து வாக்கே இறைவனுக்கு இடம்' என்பது விளங்கும். வாக்குப் பிரணவ வடிவாகலின் பிரணவம் இறைவனுக்கு இடமாதல் விளங்கும். அது விளங்கவே விந்து சயம் பெறுதற் பொருட்டு, பிரணவ யோகத்தில் மனம் செல்லும் என்பதாம்.*

*''மனம்'' என்றது உபலக்கணம் ஆதலின், ஏனைக்காரணங்களும் கொள்ளப்படும்.*

*இதனால், 'சுத்தமாயை யாகிய விந்துவின் சயத்திற்குப் பிரணவ யோகத்தை விரும்பிச் செய்தல்வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

***1943. தெளிவுரை :-*** *மனித உடம்பில் எல்லாவற்றையும் தாங்கும் வலிமையுடைய காலில் (இடைக்குக் கீழ் உள்ள பகுதியில்) 'நிலம்' என்னும் பூதமும், அதற்கு மேல் கொப்பூழ்வரை உள்ள பகுதியில் 'நீர்' என்னும் பூதமும், கொப்பூழ் முதல் முலைச் சுவடு இருக்கும் பரந்த இடமாகிய மார்புப் பகுதியில் 'தீ' என்னும் பூதமும் (இதனுள் முலையும் அடங்குதல் அறிக). மார்பிற்கு மேல் கைகளுக்கு ஆதாரமாய்க் கழுத்து வரையில் உள்ள பகுதியில் 'வளி' என்னும் பூதமும், (இதனுள் கைகளும் அடங்குதல் அறிக). கழுத்திற்கு மேல் உள்ள பகுதியில் 'வெளி' என்னும் பூதமும் நிற்கும். உடலின் ஐம்பூதநிலை அறிவிக்கப்படுகிறது.*

***குறிப்புரை :-*** *'இஃது அறிந்து, பிண்டமும் அண்டத்தோடு ஒத்தலை உணர்ந்து கொள்க' என்பது குறிப்பெச்சம். இவ்வாறு உணர்தல் விந்து சயம் முதலியவற்றைத் தரும் யோகத்திற்கு வேண்டப்படுதல் பற்றி இதனை இங்குக் கூறினார். கால் எல்லாவற்றையும் தாங்கும். எனவே உரம் அடி எனப்பட்டது. கருமுலை - கரிய நுனியையுடைய முலை. கந்தரம் - கழுத்து.*

*இதனானே வருகின்ற அதிகாரத்திற்கும் இயைபு தோற்றுவிக்கப்பட்டது. ஏனையவற்றோடு ஒப்ப, 'அடியில் கீழில்' என உருபு விரிக்க. 'மிசையும் கீழும் ஆகிய இடத்தில் கால்ஆம்' என்க. இவ்வதிகாரம் பெரும்பான்மை அந்தாதியாய் வந்தது.*

## 22. ஆதித்த நிலை - அண்டாதித்தன்

*சிவநெறியில் நிற்பார் சிவனை, 'குரு, லிங்கம், சங்கமம் - என்னும் மூன்றிடத்தில் வழிபடுவாராகலின், அவ்வழிபாட்டின் சிறப்பினை உணர்த்துதல் இன்றியமையாமை பற்றி அவற்றைக் கூறிப் பின்னர் இறுதிக்கண் நின்ற சங்கமத்தின் தொடர்பான சிலவற்றைக் கூறி, அம்மூன்று பற்றிய பொருள்களை முடித்தார். இனிச் சிவனைச் சூரியனிடமாகவும் வைத்து வழிபடுதல் சிவநெறியாகலின் அச் சூரியனது சிறப்பினை 'ஆதித்த நிலை' என்று எடுத்துக் கொண்டு, அதனை நான்கு பகுதியாகப் பகுத்து முதற்கண் அண்டாதித்தன் சிறப்பினைப் பத்து மந்திரங்களால் கூறுகின்றார். ஆதித்தன் - சூரியன். 'அதிதியின் மகன்' எனப்பொருள் தருவதாகிய 'ஆதித்தியன்' என்னும் பெயர் 'ஆதித்தன்' என நின்றது. தேவர் பலரும் 'காசிப முனிவர்தம் பத்தினியர் பதின்மூவருள் அதிதி - என்பவள்பால் பிறந்தவர் ஆதித்தன்' என்பது புராண மரபு. அண்டம் - ஆகாயம். சூரியன் ஆகாயத்தில் விளங்குதல் வெளிப்படை.*

**1944.** **செஞ்சுட ரோன்முத லாகிய தேவர்கள்**
**மஞ்சுடை மேரு வலம்வரு காரணம்**
**எஞ்சுடர் ஈசன் இறைவன் இணையடி**
**தஞ்சுட ராக வணங்கும் தவமே. 1**

---

*1944. **தெளிவுரை :-** (சூரியன் முதலாகக் காணப்படுகின்ற அனைத்து ஒளிப் பொருள்களின் ஒளியும் சிவனது ஒளியேயன்றி, அவற்றினுடையன அல்ல. அஃது எங்ஙனம் எனின்), சூரியன் நாள்தோறும் மகாமேரு மலையை வலம் வருதல் தெளிவு. ஏனைத் தேவர்கள் அவ்வாறு வலம் வருதலைப் பலர் அறியாராயினும் யோகியரும், ஞானியரும் அதனை நன்கறிவர். "அவர் வலம் வருதல் எதன்பொருட்டு" எனின், எங்கட்கு விளக்காகி நின்று பயன்தருகின்ற சிவனாகிய கடவுளின் திருவடி ஒளிகள் தங்களிடத்துப் பொருந்தி விளங்குதற் பொருட்டேயாம். வேண்டிய வேண்டியாங்கு எய்துதல் தவத்தால் (திருக்குறள், 265) ஆகலின் அவர் அதனைச் செய்கின்றனர்.*

*குறிப்புரை :- மஞ்சு - வெண்மேகம். சுடரோன் - சுடர் வடிவாகிய சிவபெருமான். பொருள் இனிது விளங்குதற் பொருட்டு இதற்கு இவ்வாறு உரை கூறப்பட்டது. 'தேவர்' என்பதற்கு 'ஒளியுடம்புடையவர்' என்பதே பொருள். அது சூரியனிடத்தே இனிது விளங்குதால், 'அவன் முதலாக' என்றார். தேவர் அனைவரையும் கூறினமையால், திங்கள், வியாழன், வெள்ளி முதலிய கோள்களையும், மற்றும் நாண்மின் விண்மீன்களையும் வேறு வேறெடுத்துக் கூறல் வேண்டாதாயிற்று. மஞ்சு - மேகம், "காரணம்", "நிமித்தம்" என்னும் பொருட்டாய் நின்றது. "எம் சுடர்" என்றது, நாயனார் தம்கூற்றாகக் கூறியது. திருவடி சத்தியாகலின் அதனையே சிவன்ஒளியாகக் கூறினார். மகாமேருமலை சிவன் எழுந்தருளியிருக்கின்ற கயிலையைத் தன்னிடத்தில் உடையது. வணங்குதலையே "தவம்" என்றமையால் பெயரெச்சம்*

**1945.** பகலவன் மாலவன் பல்லுயிர்க் கெல்லாம்
புகலவ னாய் நிற்கும் புண்ணிய நாதன்
இகலற ஏழுல கும்உற ஓங்கும்
பகலவன் பல்லுயிர்க் காதியு மாமே. **2**

**1946.** ஆதித்தன் அன்பினொ டாயிர நாமமும்
சோதியி னுள்ளே சுடரொளி யாய்நிற்கும்
வேதியர் வேண்டினும் விண்ணவர் சொல்லினும்
ஆதியில் அன்பு பழுக்கின்ற வாறே. **3**

---

*வினைப்பெயர் கொண்டதாம். "நின்முகம் காணும் மருந்தினேன்" என்பதிற்போல்,*

*நாயகன் கண்ண யப்பால் நாயகி புதைப்ப எங்கும்*
*பாயிரு ளாகி மூடப் பரிந்துல கினுக்கு நெற்றித்*
*தூயநேத் திரத்தி னாலே சுடரொளி கொடுத்த பண்பின்*

*தேயதோர் ஒளிகள் எல்லாம் சிவன்உருத் தேசது என்னார்.*

*என்னும் சிவஞானசித்தி (சூ.1 பா.52 - குறிஞ்சிக் கலி)ச் செய்யுளை நோக்குக.*

*இதனால் ஆதித்தன் சிவனொளியைப் பெற்று விளங்குதல் கூறப்பட்டது.*

***1945. தெளிவுரை :-** ஆதித்தனாலே உலகுயிர்கள் இறவாது வாழ்தலால், அவன் காத்தற் கடவுளாகிய மாயோனாக "சூரிய நாராயணன்" என்று சொல்லப்படுகின்றான். அதனால் அவனே எல்லா உயிர்கட்கும் புகலிடமாகின்ற முதற்கடவுளும் ஆகின்றான். இன்னும் உயிர்கள் நால்வகை யோனிகளுள் கருவாகித் தோன்றுதலும் ஆதித்தனாலே யாகலின் அவனே அனைத்துயிர்கட்கும் முதலுமாவான்.*

***குறிப்புரை :-** "ஏழுலகும் உற" என்றது, 'நால்வகை யோனியுட் பட்ட அனைத்துயிர்களும் தோன்ற' என்றபடி. ஏழுலகும் இகலற ஓங்குதலாவது, "ஆதித்தனாலேதான் அனைத்து உயிர்களின் பிறப்பும், வாழ்வும் அமைகின்றன" என்பதை யாவரும் ஒருமுகமாக உடன்பட்டுப் போற்றப்படுதல் ஆதித்தனை, "பலர்புகழ் ஞாயிறு" (தி.11 திருமுருகாற்றுப்படை, வரி 2) என ஆன்றோர் புகழ்ந்தமை அறிக. "ஆதியும்" - என்னும் உம்மை உயர்வு சிறப்பும்மை, 'அனைத்துலகங்களிலும் ஆதித்தர் உளர்' என்பதை இங்கு நினைக்க.*

***இதனால், ஆதித்தன் உயிர்கட்குத் தோற்றமும், நிலையுமாதல் கூறப்பட்டது.***

***1946. தெளிவுரை :-** ஆதித்தனை ஆயிர நாமங்கள் விண்ணவர் சொல்லி வேண்டினாலும், வேதியர் சொல்லி வேண்டினாலும் அவையெல்லாம் சிவபிரானிடத்தில் அன்பு தோன்றி முதிர்வதற்கு வழியாகவே அமையும். ஏனெனில், ஆதித்த மண்டலத்தின் ஒளிக்குள் ஒளியாய்ச் சிவபிரானே நிற்றலால்.*

**1947.** தானே உலகுக்குத் தத்துவ னாய்நிற்கும்
தானே உலகுக்குத் தையலுமாய் நிற்கும்
தானே உலகுக்குச் சம்புவுமாய் நிற்கும்
தானே உலகுக்குத் தண்சுட ராகுமே. 4

---

***குறிப்புரை :-*** *இரண்டாம் அடியை ஈற்றில் வைத்து உரைக்க. "நிற்கும்" என்னும் பயனிலைக்கு, 'அவன்' என்னும் எழுவாய் வருவிக்க. அப்பயனிலையின் பின், 'ஆகலான்' என்பது எஞ்சி நின்றது. சிவபிரானது அட்ட மூர்த்தங்களில் ஆதித்தனும் ஒன்றாகலின் 'சோதியினுள்ளே சுடரொளியாய் நிற்கும்' என்றும், அதனை அறியாது ஆதித்தனையே வழிபடுபவர்க்கும்,*

*யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே*
*மாதொரு பாகனார்தாம் வருவர் - சிவஞானசித்தியார், சூ. 2-27*

*என்றபடி பயன் தருபவன் சிவபெருமானே யாகலின், 'அவன் அவர்க்குத் தன்னை உணரும் உணர்வைச் சிறிது சிறிதாக விளங்கச் செய்வன்' என்பது பற்றி, "ஆதியில் அன்பு பழுக்கின்ற வாறே" என்றும் கூறினார்.*

*"அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்;*
*அருக்க னாவான் அரன்உரு அல்லனோ" - தி.5 ப.100 பா.8*

*என்று அருளிச் செய்தமை காண்க. சிவநெறியாளர் சூரியனை நேரே கண்டு வணங்கும்பொழுது அவனது ஒளிமண்டலத்தில் சதாசிவ மூர்த்தி எழுந்தருளி யிருத்தலை நினைந்தே வணங்குவர். சிவபிரானே ஆதித்தனாய் நின்று உலகிற்கு உதவுதல் பற்றியும், அவ்வுதவியின் முதன்மை பற்றியும் சிவபூசையில் முதற்கண் சூரியபூசை விதிக்கப்பட்டுள்ளது. அவ்விடத்துச் சூரியன் சிவ சூரியனாகவே பூசிக்கப்படுவான்.*

*"காண்பவன் சிவனே யானால்*
*அவனடிக் கன்பு செய்கை மாண்பறம்"*
*- சிவஞான சித்தியார், சூ.2-27*

*என்றது காண்க. 'ஆதித்தனை' என்னும் இரண்டன் உருபு தொகுத்தலாயிற்று. வேதியர் பூதராய்க் காட்சிப்படுதல் பற்றி முன்னர்க் கூறினார். "நாமங்கள்" என்பதனோடு இனிதியைய. "விண்ணவர் சொல்லினும்" என்பது முன்னர்க் கூட்டியுரைக்கப்பட்டது. 'வேண்டுதல், சொல்லுதல்' என்பவற்றை ஏனையோர்க்கும் கூட்டுக.*

*இதனால், ஆதித்த வழிபாடும் ஓராற்றால் சிவ வழிபாடாதல் கூறப்பட்டது.*

***1947. தெளிவுரை :-*** *ஆதித்தனே உலகிற்கு அப்பனாய் இருப்பன்; அம்மையாய் இருப்பன். சுகத்தைத் தருபவனாய் இருப்பன். இனிச் சந்திரனாய்க் குளிர்ந்த ஒளியைத் தருகின்றவனும் இவனே.*

**1948.** **வலயம்முக் கோணம்வட் டம்அறு கோணம்**
**துலைஇரு வட்டம்துய் யவ்வித ழெட்டில்**
**அலையுற்ற வட்டத்தில் ஈரெட் டிதழா**
**மலைவற் றுதித்தனன் ஆதித்த னாமே.** **5**

**1949.** **ஆதித்தன் உள்ளினில் ஆனமுக் கோணத்தில்**
**சோதித் திலங்கும்நற் சூரியன் நாலாங்**
**கேத மறுங்கேணி சூரியன் எட்டில்**
**சோதிதன்ஈரெட்டில் சோடசந் தானே.** **6**

---

*குறிப்புரை :- இதன்கண் சொற்பொருட் பின்வருநிலையணி வந்தது. அப்பனாய் நிற்றல் கதிரவனாய் நின்றும் அம்மையாய் நிற்றல் பல கதிர்களாய் நின்றும் என்க. இந்த இருநிலைகளும் சிவம் சத்தி நிலைகட்கு உவமையாகச் சொல்லப்படுமாறு உணர்க. தத்துவம் அடிநிலை உண்மையாதலின் அது தோற்றத்திற்கு முதலாகிய அப்பனைக் குறித்தது. அதனால், "தையல்" என்றதும், 'அம்மை' என்றதாயிற்று. "சம்பு" என்பது 'இன்பத்தைத் தோற்றுவிப்பவன்' எனக் காரணக் குறியாய் நின்றது. சூரியனது ஒளியையே சந்திரன் பெற்றுத் தண்சுடராயுள் நிற்குமாறு அறிக.*

*இதனால், அண்டாதித்தனது பெருமை பலபடியாக வகுத்துக் கூறப்பட்டது.*

*1948. தெளிவுரை :- சதுரம், வட்டம், முக்கோணம், அறுகோணம், துலாக்கோல், இருவட்டம் - என இவ்வாறு மூலாதாரம் முதல் பிரமரந்திரம் ஈறாக ஆறு ஆதாரங்களில் அமைந்த பீடங்களில் ஒவ்வொன்றின் மேலும் எட்டிதழ்த் தாமரையில் ஆதித்தன் அசையும் வட்டமாய் உள்ள பதினாறிதழ்களையுடைய தாமரை மலர்போல மாறுபாடின்றி விளங்கினான்.*

*குறிப்புரை :- 'ஆகவே, அவனை அவ்விடங்களிலெல்லாம் அவ்வாறு கண்டு வழிபடுக' என்பது குறிப்பெச்சம். அசைதல் ஒளிவீசுதலைப் புலப்படுத்தும். "வட்டம்" எனப்பின்னர் வருதலால், முன்னர் 'வலயம்' என்றது சதுரமேயாயிற்று. செய்யுள் நோக்கி முக்கோணம் முன் வைக்கப்பட்டது. ''இருவட்டம்'' என்பதன்பின், 'இவற்றின் மேல்' என்பது வருவிக்க. வட்டத்தில் - வட்டம் போல, 'ஈரெட்டிதழாக' என்பதன் ஈறு தொகுத்தலாயிற்று. இவ்விதழ்கள் கதிர்வடிவினைக் காட்டும். இதனால், ஆதித்தனை அகத்தும், புறத்தும் வழிபடும் முறைகளுள் அகத்து வழிபடும் முறை கூறப்பட்டது.*

*1949. தெளிவுரை :- ஆதித்தனுக்கு மிகச் சிறந்த இடமாகிய முக்கோண மண்டலத்தில் அவன் மிக்க ஒளியுடையவனாய் விளங்குவான். அவன் மூலாதாரத்தினின்றும் நான்காவதாகிய இருதயத்தை அளாவி ஓங்குவானாயின்*

**1950.** ஆதித்த னோடே அவனி இருண்டது
பேதித்த நாலும் பிதற்றிக் கழிந்தது
சோதிக்குள் நின்று துடியிடை செய்கின்ற
வேதப் பொருளை விளங்ககி லீரே. 7

**1951.** பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி
யாருக்கும் காணஒண் ணாத அரும்பொருள்
நீருக்கும் தீக்கும் நடுவே உதிப்பவன்
ஆருக்கும் எட்டாத ஆதித்தன் தானே. 8

---

*முன் மந்திரத்தில் சொல்லப்பட்ட பதினாறு இதழ் வடிவம் அப்பால் விசுத்தியை அடைந்து அங்குள்ள பதினாறு இதழ்களில் ஒன்றி ஒளிர்வான்.*

***குறிப்புரை :-*** *'அவன் அவ்வாறாகும் வரையில் அவனை வழிபடல் வேண்டும்' என்பது கருத்து. சோதித்து - ஒளியை உடைத்தாய பொருளாய், ஆக்கம் வருவிக்க. குணத்தை, "கேணி" என்றார். 'தாமரை பூத்தற்கு இடமாகிய குளம் போல்வது' என்பதாம். பின்வந்த "சூரியன்" என்பது சுட்டுப் பெயரளவாய் நின்றது; எட்டுதல் - அளாவுதல் "தன்" என்றது முன்னர்க்கூறிய கேணியை, ஈரெட்டு, அங்குள்ள தாமரையிதழ். சோடசம் ஆதித்தனது கதிர்நிலை. தான், அசை. 'தன் ஈரெட்டில் சோடசம் சோதியே' என இயைந்துக் கொள்க. இதனால், 'ஆதித்தனை அகத்தில் மிக வழிபடல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

***1950. தெளிவுரை :-*** *ஆதித்தன் இருண்ட பொழுது அவனோடு உலகமும் இருண்டுவிட்டது. வேறுபட்ட நான்கு வேதங்களின் மொழிகளும் வெறும் பிதற்றலாய்ப் பயனற்றுப்போயின. அவ்வாறாகவும் 'ஆதித்தனுக்குள்ளே சிவசத்தி நின்றே உலகிற்கு ஒளியைத் தருகின்றாள்' எனக் கூறுகின்ற வேத மொழியின் பொருளை, உலகீர் நீவிர் உணரமாட்டீர்.*

***குறிப்புரை :-*** *'ஆதித்தன், இருண்டது சத்தி சிவனது கண்ணைப் புதைத்த பொழுது' என்பது வெளிப்படையாகலின் அதனைக் கூறாதொழிந்தார். 'கழிந்தது' என்பது பன்மை யொருமை மயக்கம். வேதமொழி பயன்படாமை அதன்படியான செயல்கள் நிகழாமையாலாம். "சோதி" என்றது ஆதித்தனை.*

*இதனால், 'ஆதித்தனை வழிபடுதல் சிவ சத்தியை வழிபடுதலேயாகும்' என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

***1951. தெளிவுரை :-*** *ஆதித்தன்மேல் எழுந்துவருகின்ற வழி நிலத்திற்குக் கீழே யாருக்கும் அறிய ஒண்ணாத அரும்பொருளாய் உள்ளது. (ஆதலின் அதனை அறிய முயல வேண்டுவதின்று) இனிக் கண்ணிற்கு நன்கு புலனாயினும் யாராலும் அணுகிப் பற்ற இயலாத ஆதித்தன் புறப்பட்டுத் தோன்றுதல் நீருக்கும், தீக்கும் நடுவேயாகும்.*

**1952.** மண்ணை இடந்ததின் கீழ்ஓடும் ஆதித்தன்
விண்ணை இடந்து வெளிசெய்து நின்றிடும்
கண்ணை இடந்து களிசெய்த ஆனந்தம்
எண்ணும் கிழமைக் கிசைந்துநின் றானே. 9

---

***குறிப்புரை :-*** *ஆதலின் அது முதலாக அவனைக் காண்க என்பதாம். இஃது ஆதித்தன் புறத்தும், அகத்தும் நிற்றலாகிய இரண்டிற்கும் பொருந்தக் கூறியதாம். மாலையில் மறைந்த ஆதித்தன் காலையில் புறப்படும்பொழுது நிலத்திற்குக் கீழ் நின்று புறப்படுதலால் அவ்விடம் நிலத்தின்கண் உள்ளவரால் அறிய இயலாததாம். இனி அவன் புறப்படும்பொழுது கடல்நீரைக் கிழித்துக் கொண்டு வடவா முகாக்கினி உள்ள இடத்திற்கு வேறான இடத்திற் புறப்படுவான். அப்பொழுதும் அவனை யாரும் கண்ணால் காணலாமன்றி, அருகில் சென்று கையால் பற்ற இயலாது. இஃது அவன் புறத்து நிற்கும் நிலை. இனி அகத்தில் "பார்" என்றது, பூமியின் அடையாள வடிவமாகிய சதுரத்தைத் தனது வடிவமாக உடைய மூலாதாரத்தை. அதற்கும் கீழே ஆதித்தன் மிக நுண்ணிலையில் நிற்றலால் அஃது யாராலும் அறியப்படாதாம். "நீர்" என்றது சிறுநீர் தங்கும் இடமாகிய மணிபூரகத்தை, "தீ" என்றது; பிராணவாயுவின் கும்பகத்தால் மூளத்தக்க அக்கினியை உடைய மூலாதாரத்தை - இவ்விரண்டிற்கும் நடுவாவது சுவாதிட்டானம். அங்கு நுண்ணியனாய்ப் புலப்படுதலின் அதனை அவன் உதிக்கும் இடமாகக் கூறினார் எனினும் அவனை நன்கு புலப்படக் காணுதல் மேல், "ஆன முக்கோணத்தில்" எனக் கூறியது முதலிய இடங்களிலேயாம். 'இவ்விரு நிலையிலும் ஆதித்தனைப் பிடிக்க முயலாமல் கண்ணால் கண்டு வணங்குகள் என்றபடி'.*

*இதனால், ஆதித்தனால் பயன்பெறும் முறை கூறப்பட்டது.*

***1952. தெளிவுரை :-*** *ஆதித்தன் நிலத்தைப் பிளந்து கொண்டு அதன் கீழேயும் ஓடுகின்றான். பின்பு மேலே வந்து ஆகாயத்தைப் பிளந்துகொண்டு எங்கும் ஒளி மயமாகவும் செய்கின்றான். மற்றும் உயிர்களின் கண்களைத் துளைத்து அவற்றுள்ளேயும் புகுந்து இருளை ஓட்டி மகிழ்ச்சியைத் தருகின்றான். அந்த இன்பத்தை நினைத்தல் கடமையாகலின் அக்கடமையில் வழுவாது நின்று அவனைத் தியானித்தற்கும் அவன் உடன்பட்டு நிற்கின்றான்.*

***குறிப்புரை :-*** *'ஆகையால், அவனை வழிபடாதொழியின் அஃது உயிர்கட்குக் குற்றமாம்' என்பது கருத்து. 'ஆதித்தனது உதவியை முதலிற் பெற்றே பின்பு உயிர்கள் எந்தச் செயலையும் செய்ய இயலும் ஆதலின், அதுபற்றி அவனை வழிபடுதல் முதற்கண் செய்யத்தக்கது' என்றற்கு அவனது செயலை இங்ஙனம் வகுத்துக் கூறினார். இதுவும் ஆதித்தனது புறநிலை அகநிலை இரண்டிற்கும் பொருந்தக் கூறியதேயாம். அவற்றுள் புறநிலைப் பொருள் வெளிப்படை. அதனுள் "விண்" வெட்டவெளி. அகநிலையில் மண், மேற்கூறியவாறு மூலாதாரம்,*

**1953.** பாரை யிடந்து பகலோன் வரும்வழி
யாரு மறியார் அருங்கடை நூலவர்
தீரன் இருந்த திருமலை சூழ் என்று
ஊரை உணர்ந்தார் உணர்ந்திருந் தாரே. **10**

---

*விண், அது முதலாக மேன்மேல் உள்ள ஆதாரங்கள். கண், மனக்கண், "களிதந்த" என்றதனால், களிதருதல் அனுவாத முகத்தால் பெறப்பட்டது. "ஆனந்தம் எண்ணும்" என்றது. அது பற்றி அவனை எண்ணும் காரியத்தை உணர்த்தி நின்றது.*

*இதனால், ஆதித்தனது உதவி இன்றியமையா முதல் உதவியாதல் கூறும் முகத்தால், அவனை முதற்கண் வழிபடுதல் கடப்பாடாதல் கூறப்பட்டது.*

***1953. தெளிவுரை :-*** ***ஆதித்தன் நிலத்திற்குக் கீழிருந்து அதனைப் பிளந்து கொண்டு மேலே எழுவது போலத் தோன்றுகின்ற அந்த வழியின் உண்மையை, தாழ்ந்த நிலையில் உள்ளார்க்கு உரிய நூலை மட்டுமே உணர்ந்தவர்களில் ஒருவரும் அறியமாட்டார். (அதனை அவ்வாறே கொள்வர். உண்மையில் அது புறநிலையில் நில உருண்டையின் சுழற்சியும், அகநிலையில் மேற்கூறியவாறு மூலாதாரத்திற்குக் கீழ் நின்றுமேல் எழுதலும் ஆகும்). இனி அவ்வாதித்தன் விண்ணில் காணப்படும் பொழுது அவன் சிவபிரான் எழுந்தருளியிருக்கின்ற மகாமேரு மலையை வலம் வருகின்றான் என்றே கொள்வர். (உண்மையில் அதுவும் புற நிலையில் நில உருண்டையின் சுழற்சியும், அகநிலையில் மேற்கூறியவாறு வீணாத் தண்டைச் சூழ்ந்து ஒளிர்வதுமேயாகும்). கோள்களின் இயக்கம் பற்றியும், பிராணாயாமம் பற்றியும் இனிது விளங்கக் கூறும் நூல்களின் வழி அவற்றை உணர்ந்த ஒரு சிலரே மேற்கூறிய உண்மைகளை உணர்ந்திருந்தனர்.***

***குறிப்புரை :-*** ***தீரன் - உலகை ஆக்கவும், அழிக்கவும் வல்ல ஆற்றலுடையவன். சிவபிரான். ஊர் - ஊர்தல், முதனிலைத் தொழிற்பெயர். கிணற்றுத் தவளைபோல் இல்லாமல் வெளியே பல ஊர்களையும் சுற்றினவர்' என்பது நயம். கிணறு போல்வன பருப்பொருளைக் கூறும் நூல்கள். ஆதித்தனது புறநிலையையும் உண்மையாக ஒரு சில பேரறிவாளரே அறிந்திருந்தமை இம்மந்திரத்தால் விளங்குகின்றது.***

***இதனால், ஆதித்தனது நிலையின் அருமையை உணர்த்தும் முகத்தால் மேலது வலியுறுத்தப்பட்டது.***

## 23. பிண்டாதித்தன்

*ஆதித்தன் அண்டமாகிய வெளியில் காணப்படும் வகையை வைத்துப் பலவற்றை உணர்த்தியபின், 'பிண்டமாகிய உடம்பும் அண்டம்போலவே கொள்ளப்படுவது ஆதலால் அதனுள்ளும் ஆதித்தன் உள்ளான்' என்பதையும், அவனது சிறப்பினையும் மூன்று மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**1954.** நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும்
கன்றிய நந்தி கருத்துள் இருந்தனன்
கொன்று மலங்கள் குழல்வழி ஓடிட
வென்று விளங்கும் விரிசுடர் காணுமே. **1**

---

*1954. **தெளிவுரை :-** உயிர்கள் உடம்போடு கூடி நிற்றல், இருத்தல், கிடத்தல், நடத்தல் முதலிய எத்தொழிலைச் செய்யினும் அவ்வுயிர்களில் அழுந்தப் பொருந்தியுள்ள சிவன் அவற்றின் உடம்பில் உள்ள ஆதாரங்களில் நீக்கமின்றி நிற்கின்றான். பிராணவாயு இடநாடி வலநாடிகளை ஒழித்து நடுநாடி வழியாக ஓடினால் அஃது ஆதித்தனைப் போல ஒளியுடையதாய்க் காணப்படும். அந்த ஒளியில் சிவன் மும்மலங்களை ஒழித்து, உயிர்களின் தற்போதத்தையும் அடக்கி, அவற்றின் அறிவுக்கறிவாய் விளங்குவான்.*

*__குறிப்புரை :-__ குழல் - குழல் வடிவினதாகிய நடுநாடி. 'ஆகவே, நடு நாடி வழியே ஓடும் பிராணனே பிண்டாதித்தனாம்' - என்றபடி 'வல நாடி வழியாக ஓடும் பிராணனைப் பொதுவாக 'ஆதித்தன்' என வழங்குதல் மரபாயினும் அஃது உண்மையில் ஆதித்தனாய்ப் பயன் தருதல் நடுநாடி வழியே ஓடும் பொழுதுதான்' என்பது கருத்து. உலகப் பொருள்கள் புறத்தில் புலப்பட்டு விளங்குதல் அண்டாதித்தனால் ஆதல் போல, உயிர்ப்பொருளாகிய சிவம் அகத்தில் புலப்பட்டு விளங்குதல் நடு நாடி வழியாக ஓடும் பிராணனால் ஆதலின் அது பிண்டாதித்தனாதல் விளங்கும்' என்றதற்குச் சிவனது அகநிலையை இங்கு வகுத்துக் கூறினார். 'நின்றால்' முதலியன "நின்று" முதலியவாகத் திரிந்தன. "கருத்து" என்றது ஆதாரங்களை மலங்கள் கொன்று வென்று விளங்கும்' என்பதை இறுதியிற் கூட்டி, அதற்கு 'அந்நந்தி' என்னும் எழுவாயையும், ஓடுதற்கு. 'பிராணன்' என்னும் வினைமுதலையும் வருவிக்க. சுடராய் என்பதில் ஆக்கச் சொல் தொகுத்தலாயிற்று. "காணும்" என்றது, 'காணப்படும்' என்றபடி. கன்றிய நந்தி - தியானிக்கப்படும் சிவம்.*

*இதனால், 'பிண்டாதித்தனாவது இல்' என்பது உணர்த்தப்பட்டது.*

*1955. **தெளிவுரை :-** 'பிண்டாதித்தன்' என மேற்கூறிய பிராணன் ஓடுமளவும் ஓடி ஒடுங்கி நிற்கும் இடத்தை 'இது' என உணர்ந்து அவ்விடத்திலே நின்று பயன்பெற வல்லவரே தம்மை அண்டாதித்தன் இயக்கத்திற்கு வேறாய்ப் பிண்டாதித்தன் இயக்கத்தின் வழிப்பட்டவராக உணர்ந்து அவ்வியக்கத்தால்*

**1955.** ஆதித்தன் ஓடி அடங்கும் இடம்கண்டு
சாதிக்க வல்லவர் தம்மை உணர்ந்தவர்
பேதித் துலகம் பிதற்கும் பிதற்றெல்லாம்
ஆதித்த னோடே அடங்குகின் றாரே. **2**

**1956.** உருவிப் புறப்பட் டுலகை வலம்வந்து
சொருகிக் கிடக்கும் துறைஅறி வார்இல்லை
சொருகிக் கிடக்கும் துறைஅறி வாளர்க்கு
உருகிக் கிடக்கும்என் உள்ளன்பு தானே. **3**

---

*நீண்டகாலம் இவ்வுலகில் வாழ்வர். உலகம் இவ்வியல்பின் வேறுபட்டுத் தான் அறிந்ததையே அறிவாக நாட்டித் தான் வல்லவற்றை ஓயாது கூறும். அக் கூற்றினைத் தெளிந்தோர் எல்லாம் அந்த அண்ட ஆதித்தனது இயக்கத்திற்கு உட்பட்டு விரைவில் மாய்பவரேயாவர்.*

***குறிப்புரை :-*** *முதல் ஆதித்தன் 'பிண்டாதித்தன்' என்பது "ஓடி யடங்கும்" என்றதனால் விளங்கிற்று. அடங்கும் இடம் ஆஞ்ஞை அவ்விடத்திலே நின்று சாதித்தலாவது. மேல் சந்திர மண்டலத்தி னின்றும் அமுதம் ஊற்றெழப் பண்ணுதல். "உணர்ந்தவர்" என்றது அதன் காரியத்தைத் தோற்றுவித்து நின்றது. "எல்லாம்" என்பதன்பின் 'கேட்கின்றவர்' என ஒரு சொல்லைச் சொல்லெச்சமாக வருவிக்க. முன்னை ஆதித்தன் 'பிண்டாதித்தன்' ஆயினமையின் பின்னது அண்டாதித்தன் ஆயிற்று.*

*இதனால், பிண்டாதித்தனை உணர்ந்து சாதித்தலின் பயன் கூறப்பட்டது.*

***1956. தெளிவுரை :-*** *(இம் மந்திரம் அண்டாதித்தன், பிண்டாதித்தன் இருவர்க்கும் பொருந்தக் கூறியது). அண்டாதித்தன் கீழ் நின்றும் ஊடுருவி மேலே புறப்பட்டு உலகைச் சுற்றிச் சென்று, முடிவில் ஒடுங்கி நிற்பது உலக முதல்வனாகிய சிவனிடத்திலாகும். அவ்வாறே பிண்டாதித்தனும் மூலாதாரத்திற்குக் கீழ் நின்றும் உருவி மூலாதாரத்திலே வெளிப்பட்டு மேலே ஏனை ஆதாரங்களையும் கடந்து, முடிவில் ஒடுங்கி நிற்பது ஆஞ்ஞையில் உள்ள சதாசிவ மூர்த்தியினிடத்திலாகும். ஆகவே எவ்வகையிலும் உயிர்கட்குப் புகலிடமாகின்றவன் சிவனேயாவன். ஆயினும் இவ்வுண்மையை அறிபவர் உலகில் இல்லை. அறிபவர் எவரேனும் இருப்பின், எனது உள்ளத்தில் உள்ள அன்பு அவரிடமே சென்று உருகி நிற்கும்.*

***குறிப்புரை :-*** *'ஆதித்தன்' என்பது முதற்கண் அதிகாரத்தால் வந்து இயைந்தது. உருவிப் புறப்படுதல் மேல், "பாரையிடந்து" என்னும் மந்திரத்திலும் சொல்லப்பட்டது.*

*இதனால், ஆதித்த ஞானத்தால் விளையும் பயன் கூறப்பட்டது.*

## 24. மனவாதித்தன்

*மனமும் ஒரு கோசமாய் அதாவது மனோமய கோசமாய் உயிர் உறைதற்கு உரிய இடமாதலின் அதன்கண் ஆதித்தன் வெளிப்படு முறையும் அதனோடு உயிர் ஒன்றி ஒளிமயமாகும் முறையும் விளக்கப்படுகிறது.*

*அண்டாதித்தனை அகத்தும், புறத்தும் கண்டு வழிபடுதலாலும், பிண்டாதித்தனை நன்முறையில் வைத்தலாலும் மனம் முதலிய அந்தக் கரணங்கள் தூய்மை பெற்று ஒளியுடையனவாய் விளங்கும். அதனையே நாயனார் 'மன ஆதித்தன்' என வைத்து, அவை அங்ஙனம் ஆமாற்றினை ஐந்து மந்திரங்களால் விளக்குகின்றார்.*

**1957.** எறிகதிர் ஞாயிறும் இன்பனி சோரும்
எறிகதிர் சோமன் எதிர்நின் றெறிப்ப
விரிகதி ருள்ளே விளங்கும்என் ஆவி
ஒருகதி ராகில் உவாவது தானே. **1**

**1958.** சந்திரன் சூரியன் தான்வரின் பூசனை
முந்திய பானுவில் இந்துவந் தேய்முறை
அந்த இரண்டும் உபய நிலத்தினில்
சிந்தை தெளிந்தார் சிவமாயி னாரே. **2**

---

*1957.* **தெளிவுரை :-** *பூர்ணிமை நாளில் மிக விளங்குகின்ற சந்திரன், தெறும் இயல்பினையுடைய கதிர்களையுடைய சூரியனுக்கு எதிரே நின்று தன் கதிர்களை வீசும் இயல்பு அமைந்திருக்குமாயின், அந்தச் சூரியனும் குளிர்ந்த கதிர்களை வீசுவோன் ஆகிவிடுவான். (அந்த அமைப்புத்தான் இல்லையே!) பிண்டாதித் தனுக்குள்ளே விளங்குகின்ற எனது மனம் அவனால் ஓர் ஆதித்தனாயின், அது பின்பு பிண்டத் துள்ளே விளங்கும் சந்திர மண்டலத்தினது அமுத தாரையால் பூர்ணிமை நாளில் தோன்றுகின்ற சந்திரனாகிவிடும்.*

*குறிப்புரை :- 'அப்பொழுது எனதுமனம் அந்தப் பிண்டாதித் தனையும் வென்றுவிடும்' என்பதாம். 'மனம் ஆதித்தனால் தூய்மை பெற்றதற்குப் பின் சந்திர மண்டலத்து அமுதத்தினாலும் தூய்மை பெறல் வேண்டும்; அது முன்னைத் தூய்மையினும் மேலானது' என்பதை விளக்குதற்கு இவ்வாறு கூறினார். இதுபற்றிச் சந்திரனது தண்கதிர்களின் ஆற்றலைப் புனைந்துரை வகையால் மிகுத்துக் கூறினார். அக்கூற்றுக் குணவதிசய அணி, "ஆவி" ஆகுபெயர். இரண்டாம் அடி ஒப்புமை எதுகை.*

*இதனால், மன ஆதித்தனது பெருமை கூறப்பட்டது.*

*1958.* **தெளிவுரை :-** *'சந்திர கலை' எனப்படும் இட நாடியில், 'சூரிய கலை' எனப்படும் வல நாடிக் காற்று ஒடுங்கி இட நாடிக் காற்றே இயங்கினும் பின்னர்*

**1959.** **ஆகும் கலையோடு அருக்கன் அனல்மதி**
**ஆகும் கலைஇடை நான்கென லாம்என்பர்**
**ஆகும் அருக்கன் அனல்மதி யோடொன்ற**
**ஆகும்அப் பூரணை யாம்என் றறியுமே.** **3**

---

*மாறி இயங்கும் காலமே சிவனைப் பூசித்தற்கு உரிய காலமாகும். ('ஆகவே, பூசை செய்வோர் அவ்வாறு செய்து கொள்க' என்பதாம்). இனி அந்த இருவழியிலும் இன்றிப் பிராணன் நடுநாடிவழிச் செல்லுதலே யோகம் ஆதலின், அவ்வாறு யோகம் செய்பவரே அந்தக் கரணம் தூய்மையாகப் பெற்றவர் ஆவர். அவரே பின்பு சிவயோகத்தால் சிவமாகி நிற்பர்.*

*குறிப்புரை :- பின்னர், "பானுவில்" என்றதனால் முன்னர், 'சந்திரனில்' என அவ்விடத்தே ஏழாவது விரிக்கப்படும். 'வரினும்' என்னும் எதிர்மறை உம்மை தொகுத்தலாயிற்று. அவ்வும்மையால், 'சிவபூசையின்பொழுது பிராணன் அவ்வாறு இயங்குதல் கூடாது' என்பது பெறப்பட்டது. 'ஏய் முறையில் ஆகும்' என இரண்டாம் அடி இறுதியில் உருபும் பயனிலையும் விரிக்க, "உபய நிலம்" என்றது, 'இரண்டற்கும் பொதுவான இடம்' என நடு நாடியைக் குறித்தது. வருதல் வினையை மூன்றாம் அடியின் ஈற்றிலும் 'வரின்' எனக் கூட்டுக. "சிந்தை" என்றது உபலக்கணம்.*

*இதனால், மனம் ஆதித்தன் ஆகும் முறை கூறப்பட்டது.*

*1959. தெளிவுரை :- யோக முறையில், சூரியன், அக்கினி, சந்திரன் எனச் சொல்லப்படுகின்ற கலைகளோடு, அக்கினி செல்லும் வழியாகிய நடு நாடியும் 'கலை' என்று சொல்லப்படும். ஆகவே, கலைகளாவன நான்காம். அவற்றுள் சூரிய கலை, நடு நாடி வழியாக மேற்செல்கின்ற அக்கினியோடு சேர்ந்து சந்திர மண்டலத்தை அடையின் அந்நிலையே யோகியர்க்கு, மேல், 'உவா' எனக் குறித்த பூரணையாகும் என்ற அறிமின்கள்.*

*குறிப்புரை :- அருக்கன் அனல் மதி ஆகும் கலையோடு இடை ஆகும். ஆகவே, 'கலை நான்கு' எனலாம் என்பர்' என இயைத்துக் கொள்க. 'அனலோடு கூடி' என உருபும் பயனும் உடன் விரிக்க. 'மேற்கூறிய உவாவாம்' என்றதனால், 'அந்நிலையை அடைந்தோரது மனம் ஆதித்தனாய்ப் பிண்டாதித்தனை வெல்லும்' என்பதுதானே பெறப்பட்டது. "அறியும்" என்பது முன்னிலைப் பன்மை ஏவல் வினை முற்று.*

*இதனால், மேல் 'உவா' எனப்பட்ட நிலை உளதாகுமாறு கூறப்பட்டது.*

*1960. தெளிவுரை :- கீழ்ஏழ் உலகங்களை உள்ளடக்கியுள்ள அண்டமும், மேல் ஏழ் உலகங்களை உள்ளடக்கியுள்ள அண்டமும் ஆகிய இரண்டு அண்டங்களையும் கடந்து அவற்றிற்கு அப்பால் விளங்குகின்ற ஓர் ஒளி பரமசிவன். அவ்வொளி எந்த உலகத்தார்க்கும் உணர இயலாத உணர்வாய்*

**1960.** ஈரண்டத் தப்பால் இலங்கொளி அவ்வொளி
ஓரண்டத் தார்க்கும் உணரா உணர்வு அது
பேரண்டத் துள்ளே பிறங்கொளி யாய்நின்ற
ஆரண்டத் தக்கார் அறியத்தக் காரே. **4**

**1961.** ஒன்பதின் மேவி உலகம் அலம்வரும்
ஒன்பதும் ஈசன் இயல்பறி வார்இல்லை
முன்பதின் மேவி முதல்வன் அருள்இலார்
இன்பம் இலார் இருள் சூழநின் றாரே. **5**

---

*இருப்பது. எனினும் அஃது எல்லா உலகங்களிலும் விளங்குகின்ற எல்லா வகையான ஒளிகளிலும் உள்ளொளியாய் நிற்றலை அறியத் தக்கவர் யார்? அணுகத்தக்கவர் யார்? ஒருவரும் இலர்.*

***குறிப்புரை :-*** *'இலங்கொளியாகிய அவ்வொளி' என்க. இரண்டாம் அடியிறுதியில் உள்ள 'அது' என்பதை வேறுபிரித்து, "நின்றது" என்னும் பயனிலைக்கு எழுவாயாக்குக. "நின்றது" என்பது அத்தொழில்மேல் நின்றது. அண்டுதல் - அணுகுதல் முடிவில், மனம் ஆதித்தன் 'ஆகப் பெற்றவரே அறியத் தக்கார்; அணுகத் தக்கார்' என்னும் குறிப்பெச்சம் வருவித்து முடிக்க.*

*"அண்டம் ஆரிரு ளூடு கடந்தும்பர்*
*உண்டது போலும் ஓர் ஒண்சுடர்; அச்சுடர்*
*கண்டிங் காரறிவார்"* *- தி.5 ப.97 பா.2*

*என அருளிச் செய்ததையும் இங்கு நினைவு கூர்க.*

*இதனால், பரமசிவனது அருமையும், மன ஆதித்தனுக்கு ஆகின்ற அவனது எளிமையும் உணர்த்து முகத்தால் மன ஆதித்தனது பெருமை கூறப்பட்டது.*

***1961. தெளிவுரை :-*** *உலகம் ஒன்பது கோள்களில் உளம்பொருந்தி, அதனால் அமைதி காணாது அலமருகின்றது. ("பேரண்டத் துள்ளே பிறங்கொளியாய் நின்றது" என மேற்கூறியபடி) 'ஒன்பது கோள்களின் ஆற்றலும் சிவனது ஆற்றலே' என்னும் உண்மையை உணர்ந்து அவனையடைந்து அமைதிகாண்பவர் ஒருவரும் இல்லை. முதலில் அந்நிலையில் நிற்பினும் பின்பாவது அருளாளரது அருள் மொழிகளைக் கேட்டுச் சிவனது அருளைப் பெறாதவர் ஒரு ஞான்றும் இன்பம் இல்லாதவரேயாய்த் துன்பத்தையே உடையவராய் இருப்பர். நவ கோள்களின் ஆற்றல் சிவனருளால் வந்தது. ஒன்பது கோள்களும் சிவபெருமானால் பணிக்கு அமர்த்தப்பட்டவை.*

***குறிப்புரை :-*** *'வலம் வரும்' - என்பது பாடமன்று, இருள், இங்குத் துன்பம். இதனுட் கூறப்பட்டாரெல்லாம் அண்டாதித்த பிண்டாதித்தர்களால் மனம் ஆதித்தனாகப் பெறாதவர் என்க.*

*இதனால், மனம் ஆதித்தனாகப் பெறாதவர் எய்தும் குற்றம் கூறப்பட்டது.*

## 25. ஞானாதித்தன்

*முன்னை அதிகாரத்தில் மனம் ஆதித்தன் ஆமாறு கூறியபின் இவ்வதிகாரத்தில் மனத்தையும் ஆளுவதாகிய ஆன்ம அறிவு ஆதித்தன் ஆமாறு எட்டு மந்திரங்களால் கூறுகின்றார். அறிவு ஆதித்தன் ஆதல் பொருள்களின் இயல்பை உள்ளவாறு அறிதலாலேயாகலின் அவற்றை அவ்வாறறியும் முறையையே இதன்கண் கூறுகின்றார்.*

**1962.** **விந்து அபரம் பரம்இரண் டாய்விரிந்து**
**அந்த அபர பரநாத மாகியே**
**வந்தன தம்மில் பரம்கலை யாதிவைத்து**
**உந்தும் அருணோ தயம்என்ன உள்ளத்தே. 1**

---

*1962. **தெளிவுரை :-** சுத்த மாயையின் ஒருகூறு சிவனது சத்தியால் உலகத் தோற்றம் நிகழ்தற்குக் காரணமாகப் பக்குவப்படுத்தப்படும். அங்ஙனம் பக்குவப்படுத்தப்பட்ட பகுதி, 'மேற்பகுதியும் கீழ்ப்பகுதியும்' என இரண்டு பகுதியாய் விரியும். அவை முறையே 'பரவிந்து' என்றும் 'அபரவிந்து' என்றும் பெயர் பெறும். அவற்றினின்றும் முறையே சொல்லுலகத்தின் அதிசூக்கும நிலையாகிய பரநாதமும், சூக்கும நிலையாகிய அபர நாதமும் தோன்றும். (இவையே அதிசூக்குமை வாக்கும், சூக்குமை வாக்கும் ஆகும்). பின்பு அவற்றினின்றும் வைகரி முதலிய வாக்கு வடிவமான சொல்லுலகத்தையும், 'கலை, தத்துவம், புவனம்' என்னும் அத்துவாக்களையும் சிவன் தோற்றுவித்து, அவை வழியாக ஆன்ம அறிவினிடத்தே அருணோதயம் போன்ற ஒளியை விளங்கச் செய்வான்.*

***குறிப்புரை :-*** *கலை 'சாந்திய தீதை, சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தி' என முறையே ஒன்றன்பின் ஒன்றாய் ஐந்தாகி விரியும். ஏனை ஐந்து அத்துவாக்களும் இந்த, 'கலை' என்னும் அத்துவாவில் அடங்கும். அவையாவன 'வன்னம், பதம், மந்திரம்' என்னும் சொல் வகையும். 'தத்துவம், புவனம்' என்னும் பொருள் வகையுமாம். பரம் - சிவன், பரம் கலையாதி வைத்து உள்ளத்து அருணோதயம் என்ன உந்தும்' என முடிக்க. செய்யுள் நோக்கி அபரங்கள் முன்வைக்கப்பட்டன.*

*இதனால், உலகத்தோற்ற முறை ஒருவாறு தொகுத்துக் கூறப்பட்டது.*

*1963. **தெளிவுரை :-** ஆன்ம அறிவில் அருணோதயம் போலத் தோன்றுவதாக முன் மந்திரத்தில் குறித்த விளக்கத்திற்குக் காரணமான எழுத் தோசை, 'பர நாதத்தின் காரியம்' என ஆகமங்களில் சொல்லப்படுதலால், அந்தப் பரநாதத்திற்குக் காரணமாக மேற்குறிக்கப்பட்ட அந்தப் பரவிந்துவிலிருந்தே வைகரி முதலிய வாக்குக்களால் நிவிர்த்தி முதலிய ஐங்கலைகளிலும் அறிவு விளக்கம் சிவனால் உண்டாவதாகும்.*

**1963.** உள்ள அருணோ தயத்தெழும் ஓசைதான்
தெள்ளும் பரநாதத் தின்செயல் ஆதலால்
வள்ளல் பரவிந்து வைகரி யாதிவாக்கு
உள்ளன ஐங்கலைக் கொன்றும் உதயமே. 2

**1964.** தேவர் பிரான்திசை பத்துத யம்செய்யும்
மூவர் பிரான்என முன்னொரு காலத்து
நால்வர் பிரான் நடுவாய்உரை யாநிற்கும்
மேவு பிரான் என்பர் விண்ணவர் தாமே. 3

---

***குறிப்புரை :-*** *உள்ளம் - ஆன்ம அறிவு. 'அருணோதயத்திற்கு' என நான்காவது விரிக்க. 'வள்ளலால்' என மூன்றாவது விரித்து, அதனை "ஒன்றும்" என்பதனோடு முடிக்க. "பர விந்து வாக்கு" என்பது, பர விந்துவினின்றும் தோன்றும் வாக்கு' என ஐந்தாம் வேற்றுமைத் தொகை. இங்கும், 'வாக்கால்' என உருபு விரிக்க. 'ஐங்கலைக்கும் ஒன்றும் உதயம் உள்ளன' என மாறிக் கூட்டுக. உதயம் - ஒளித் தோற்றம். கலைகளின் பன்மைபற்றி உதயத்தையும் பன்மையாகக் கூறினார். "வைகரி யாதி" என்றது ஒடுக்கமுறை பற்றி. இவற்றிற்குப் பரவிந்து பரம்பரையால் காரணமாகும் என்க.*

*'தூல வைகரி, சூக்கும வைகரி, மத்திமை, பைசந்தி, சூக்குமை' என்னும் வாக்குக்கள் முறையே 'நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை' என்னும் கலைகளில் நின்று ஆங்காங்குள்ள உயிர்கட்கு உணர்வைப் பிறப்பிக்கும் என்பதை,*

*"நிகழ்ந்திடும் வாக்கு நான்கும் நிவிர்த்தாதி கலையைப் பற்றித்*
*திகழ்ந்திடும் அஞ்ச தாக"*

*என்னும் சிவஞான சித்தி (சூ. 1.24)ச் செய்யுளானும் உணர்க.*

*இதனால், சொல்லுலகம் அனைத்திற்கும் 'விந்து' எனப்படும் சுத்த மாயையே காரணமாதல் கூறப்பட்டது.*

***1964. தெளிவுரை :-*** *'தேவர்கள் தம் தம் பதவி விருப்பத்தால் விரும்புகின்ற முழுமுதற் கடவுளாவான் பத்துத் திசைகளிலும் நின்று காவல் புரிகின்ற நூற்றெட்டு உருத்திரர்கட்கும் தலைவன்' என்றும், 'பொதுவாக - மும்மூர்த்திகள் என்று யாவராலும் சொல்லப்படுகின்ற - அயன், அரி, அரன் - என்பவர்கட்குத் தலைவன்' என்றும் தொன்மையாகவே பலர் சொல்லிவர, 'முதற்கடவுள் அவ்வளவில் நில்லாது மேற்குறித்த மூவர்க்கும் மேலாய் நான்காமவனாய் உள்ள மகேசுரனை உள்ளிட்ட நால்வர்க்கும் தலைவனாவான்' எனச் சமயக் கணக்குக்களைக் கடந்து நிற்கின்ற உண்மை நூல்கள் உண்மையைச் சொல்லா நிற்கும் என உயர்ந்தோர் கூறுவர்.*

**1965.** பொய்யிலன் மெய்யன் புவனா பதிஎந்தை
மையிருள் நீக்கும் மதி அங்கி ஞாயிறு
செய்யிருள் நீக்கும் திருவுடை நந்திஎன்
கையிருள் நீக்கக் கலந்தெழுந் தானே. 4

---

***குறிப்புரை :-*** *இஃது 'ஐந்தொழிற்கும் முதல்வனாகிய சதாசிவ மூர்த்தியே பரம்பொருள் எனக்கூறியது'. 'பத்துத் திசை உதயம் செய்யும் தேவர்' என மாற்றி வைத்து உரைக்க. பத்துத் திசைகளிலும் நின்று காவல் புரிகின்ற உருத்திரர் இவர். இவர் என்பதைச் சிவஞான போதம் (சூ.2 அதி.2) பேருரையிலும் காணலாம். "முன்னொரு காலத்து" என்றது பழைமை குறித்தவாறு. அப்பழமையாவது சைவாகமங்களை உணராத உலகரது காலங்களாம். 'முன் ஒரு காலத்து என' என முன்னே கூட்டி முடிக்க. "நடு" என்றது அப்பாற்பட்ட நிலை. அஃது ஆகு பெயராய் அந்நூல்களைக் குறித்தது; வாய் - உண்மை. "விண்ணவர் மேவு பிரான்" என்பதை முதலில் எழுவாயாக வைத்து, அதனை, "பிரான், பிரான்" என்னும் பயனிலைகளோடு முடிக்க.*

*இதனால், 'முன் மந்திரங்களில், "பரம்" என்றும், "வள்ளல்" என்றும் குறிக்கப்பட்ட முதற் கடவுளாவான் இவன்" என்பது உணர்த்தப்பட்டது.*

***1965. தெளிவுரை :-*** *முன்மந்திரத்திற் கூறியவாறு சதாசிவ மூர்த்தியாய் நின்று ஐந்தொழில் நடாத்தும் முதல்வன் அவ்வாறு தொழில்புரிய நிற்பதற்கு முன்பே என்னை இயல்பாகவே பற்றி நிற்கின்ற, வெறுக்கத்தக்க அக இருளை நீக்குதற் பொருட்டு என் உயிருக்கு உயிராய்க் கலந்து நின்று, அதன் பின்பு தொழில் புரிய எழுந்தான்.*

***குறிப்புரை :-*** *நந்தி - சிவபெருமான். "பொய்யிலன்" முதலிய குறிப்பு வினைப் பெயர்கள் பலவும் அவனையே குறித்து நின்றன. பொய் - பொய்போலத் தோன்றுகின்ற அறியாமை. மெய் உள்ளதாய்த் தோன்றுகின்ற அறிவு. புவனங்கள் ''புவனா'' எனப் பெண்பாலாகச் சொல்லப்பட்டன. மையிருள் - மை போல்வதாகிய இருள், கண்ணிற்குப் புலனாவது போலத் தோன்றுகின்ற இருள். இஃது உலகை மறைக்கும் புற இருள்; மனமொழி மெய்களால் செய்யப்படும் இருள்; வினை இருளாகிய மலம் காரணமாக விளைவதனை "இருள்" என்றார். "இருள்சேர் இருவினை" (திருக்குறள், 5) என்றது காண்க. 'இவ்விருளை நீக்கும் திருமுச்சுடர்கட்கு இல்லை' என்பதை நினைவூட்டுதற்கு அவற்றின் இயல்பை எடுத்துக் கூறினார். திரு - மேன்மை; சத்தி. கைத்தல் - வெறுத்தல், பின்பு ''எழுந்தான்'' எனக் கூறியதனால், 'கலந்தமை அதற்கு முன்னே' என்பது பெறப்பட்டது இந்நிலை. 'அனாதி' எனப்படும். "என்" என நாயனார் தம் நிலையையே கூறினாராயினும் அஃது அனைத்துயிர்களின் நிலையையும் பற்றியதேயாகும்.*

*இதனால், முதல்வன் அனாதியே உயிர்களின் உள்ளுயிராய்க் கலந்து நிற்றல்*

**1966.** தனிச்சுடர் எற்றித்தாய் அங்கிருள் நீங்க
அனித்திடும் மேலை அருங்கனி யூறல்
கனிச்சுட ராய கயிலையில் ஈசன்
நனிச்சுடர் மேல்கொண்ட வண்ணமும் ஆமே. **5**

**1967.** நேரறி வாக நிரம்பிய பேரொளி
போரறி யாது புவனங்கள் போய்வரும்
தேரறி யாத திசைஒளி யாயிடும்
ஆரறி வார்அது நாயகம் ஆமே. **6**

---

*கூறப்பட்டது. அவ்வாறு கலந்து நிற்றலானே, 'அவைகளின் இருளை நீக்குதல் வேண்டும்' என்னும் இரக்கமும், அது பற்றிச் செய்யப்படும் தொழில்களும் முதல்வனுக்கு உளவாயின என்க.*

*1966.* ***தெளிவுரை :-*** *முன்மந்திரத்திற் கூறியபடி உயிர்களது இருளை நீக்க வேண்டி அவற்றினுள்ளே உள்ள சிவனது, 'திரு' எனப்பட்ட ஒப்பற்ற ஒளி தாக்கிப் பரவுதலால் அவ்விடத்துள்ள இருளாகிய மலம் நீங்கும். அது நீங்கினால் அந்த ஒளிக்கு மேலே உள்ள சிவமாகிய அரிய கனியின் சாறு அக்கனியினின்று வெளிப்பட்டு ஒழுகி இனிக்கும். அப்பொழுது ஊழிக் காலத்தும் அழியாத ஒளியினதாய் விளங்கும் கயிலாய மலைமேல் சிவன் நண்ணிப் பேரொளியுடன் திருமேனி கொண்டு வீற்றிருக்கும் காரணமும் விளங்கும்.*

***குறிப்புரை :-*** *எற்றுதல் - தாக்குதல். தாவுதல் - பரவுதல் 'தாய்' என்பது 'தாவ' என்பதன் திரிபு. இவ்வாறன்றி, 'நீக்க' எனப் பாடம் கொள்ளுதலும் ஆம். "அண்ணித்திடும்" என்பது திரிந்ததும், 'கன்னி' என்பது இடைக் குறைந்ததும் நண்ணி என்பது திரிந்து இடைக் குறைந்ததும் எதுகை நோக்கியாம். சிவத்தை, 'ஈசன் எதுங்கனி' (தி.5 ப.91 பா.7) என அப்பர் அருளிச்செய்ததும் இங்கு நோக்கத்தக்கது. கன்னி - அழியாமை. "ஊழிதோறுழி மற்றும் உயர் பொன்னடித் தான் மலை" (தி.7 ப.100 பா.10) என அருளினமை காண்க. வண்ணம் - வகை; காரணம் "ஆம்" என்றது, 'விளங்கும்' என்றபடி 'கயிலையில் ஈசன் உருவத் திருமேனியுடன் வீற்றிருத்தல் நிலவுலகத்து உயிர்களை உய்வித்தற்பொருட்டு என்னும் உண்மை அனுபவமாய்த் தோன்றும்' என்பதாம். தேர் - ஆராய்தல்.*

*இதனால், முதல்வன் உயிர்க்குயிராய்க் கலந்து நின்று செய்யும் பேருதவி விளக்கிக் கூறப்பட்டது.*

*1967.* ***தெளிவுரை :-*** *உயிர்களது அறிவினுள்ளே நுண்ணறிவாய் நிறைந்து நிற்கின்ற ஒரு பெரிய ஒளி, தடையின்றி எங்கும் போய் வருகின்ற பகலவனது தேர் செல்லாத இடத்தில் அங்குள்ள இருளை நீக்குகின்ற ஒளியாய் இருக்கும். இம்மறை பொருளை உணரும் அறிவுடையோர் யாவர்? எவரேனும் இருப்பாராயின் அவரது அறிவே தலைமை சான்ற அறிவாகும்.*

**1968.** மண்டலத் துள்ளே மலர்ந்தெழும் ஆதித்தன்
கண்டிடத் துள்ளே கதிரொளி யாயிடும்
சென்றிடத் தெட்டுத் திசைதொறும் போய்வரும்
நின்றிடத் தேநிலை நேரறி வார்க்கே. 7

---

***குறிப்புரை :-*** *நேர்மை - நுண்மை. "அவர் நின்றதோர் நேர்மையும்" என்று அருளியது காண்க. திசை - இடம். பகலவன் தேர் செல்லாத இடம் உயிரினது அறிவு. மேலேயும், "மையிருள் நீக்கும் மதி அங்கி ஞாயிறு" என்றது காண்க.*

*இதனால் முன் மந்திரங்களில் கூறப்பட்ட சிவனது நுண்ணிலை அறிதற்கரிதாதல் கூறப்பட்டது.*

***1968. தெளிவுரை :-*** *அண்டத்தில் ஒரு வட்ட வடிவினனாய்க் காணப்படுகின்ற ஆதித்தன் உலகில் எட்டுத் திக்கிலும் சென்று அலமருவார்க்கு அவர் சென்ற இடத்தில் எல்லாம் காணப்பட்டு ஒளியை வழங்குவான். வெளியில் அங்ஙனம் அலமரும் நிலையை விட்டு முன் மந்திரத்தில் கூறிய நுண்ணறிவை அறிந்து அகத்தே நோக்குபவர்க்கு அவன் உடம்பினுள் காண்கின்ற பல இடத்திலும் விளங்கி ஒளிதருகின்றவன் ஆவான்.*

***குறிப்புரை :-*** *'புறநோக்கு உடையவர்க்கு அண்ட ஆதித்தனே ஆதித்தன் ஆவதுபோல அகநோக்கு உடையவர்கட்குச் சிவனே ஆதித்தனாய்த் தோன்றுவான்' என்றபடி. 'என் தாய் என் சிற்றன்னையாயினாள்' என்று ஒருவன் சொல்வானாயின் அச்சொல்லில் 'ஆயினாள்' என்பது 'தாய்க்கு உரிய இடத்தைச் சிற்றன்னை பற்றி நிற்கின்றாள்' என்பதே பொருள் ஆதல் போலவே 'ஆதித்தன் கதிரொளியான்' என்பதற்குப் பொருள் கொள்க. 'கண்ட இடம், சென்ற இடம், நின்ற இடம்' என்பவற்றில் பெயரெச்சத்து அகரங்கள் தொகுத்தலாயின. 'கண்ட இடம்' என்றது ஆறு ஆதாரங்களை. "உள்ளே" என்பதன் பின் 'காணப்படும்' என ஒரு சொல் வருவிக்க. "உள்ளே காணப்படும் கதிரொளி" என்றதுமுன் மந்திரத்திற் கூறப்பட்ட நேரறிவை, "சென்றவிடத்து" என்பதனை முதலிலும், "நிலை" என்பதனை "வரும்" என்பதன் பின்னும் கூட்டுக. 'மழை நின்றது' என்றல் போல 'நிற்றல்' இங்கு ஒழிதலைக் குறித்தது. "நின்றிடத்துக் கதிரொளி யாயிடும்" என்றதனால், 'சென்ற இடத்தே மகிழ்ந்தெழுதல் நில்லா தவர்க்கு' என்பது பெறப்பட்டது. முதலடி இன எதுகை.*

*இதனால், அகநோக்குடையார்க்குச் சிவன் உள்ளொளியாய் விளங்குதல் கூறப்பட்டது.*

***1969. தெளிவுரை :-*** *கொப்பூழ், கண், மூக்கு, புருவநடு, தலைக்குப் பன்னிரண்டங்குலத்திற்கு மேல் என்னும் ஐந்திடங்களிலும் தோன்றி ஒளி வீசுகின்ற அந்த ஆதித்தனைத் தேவர்கள். 'உருத்திரன், மால், அயன்' என்னும் மும்மூர்த்திகளாக அறிந்து இன்புற்றிருக்கின்றனர்.*

**1969.** நாவிகண் நாசி நயன நடுவினும்
தூவியோ டைந்தும் சுடர்விடு சோதியைத்
தேவர்கள் ஈசன் திருமால் பிரமனும்
மூவரு மாக உணர்ந்திருந் தாரே. **8**

---

*__குறிப்புரை :-__ 'சிவனே தனது அதிகார சத்தியால் மும்மூர்த்திகளைக் காரணக் கடவுளராகச் செய்து உலகை நடத்துவிக்கின்றான்" என்றபடி. தொடக்கத்திலும்,*

*"அவனை யொழிய அமரரும் இல்லை,*
*.................................. அவனன்றி மூவரால் ஆவதொன் றில்லை"*

*- தி. 10 பா. 6*

*என்று அருளிச் செய்தார். மூலாதார சுவாதிட்டானங்களில் ஒளி சிறியதாய் விளங்கலின் அவற்றிற்கு, மேற்பட்ட இடங்களையே கூறினார். எல்லாவற்றிற்கும் முதலான பிராணன் இயங்குவது மூக்கு வழியாக ஆதலின் அதனையும் கூறினார். "நயனம்" என்றது ஆகுபெயராய்ப் புருவங்களை உணர்த்திற்று.*

*இதனால், சிவாதித்தனது சிறப்புணர்த்தி, வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.*

*'இவ்வதிகாரத்தில் சொல்லப்பட்ட உண்மைகளை உணரும் உணர்வே ஞானாதித்தானம்' என்பது கருத்து.*

## 26. சிவாதித்தன்

*சிவசூரியன் என்பது போலச் சிவமே ஒளிதரும் பொருளாய் ஆன்மாவில் கலந்து காட்டும் தன்மையை உணர்த்துவது. ஆன்ம அறிவுதான் அறியவேண்டியவற்றை அறிந்தமையால் ஒளிபெற்று ஞானாதித்தன் ஆகிய பின் அதனுள்ளே சிவம் நன்கு பிரகாசித்து விளங்குமாற்றை, 'சிவாதித்தன்' என வைத்து, நான்கு மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**1970.** அன்றிய பாச இருளும்அஞ் ஞானமும்
சென்றிடும் ஞானச் சிவப்பிர காசத்தால்
ஒன்றும் இராவ ரும்அரு ணோதயந்
துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே. 1

**1971.** கடங்கடந் தோறும் கதிரவன் தோன்றில்
அடங்கிடமூடில் அவற்றில் அடங்கான்
விடங்கொண்ட கண்டனும் மேவிய காயத்து
அடங்கிட நின்றதும் அப்பரி சாமே. 2

---

*1970.* **தெளிவுரை :-** *உயிர் அடைந்த ஞான ஒளியினுள்ளே வந்து எழு கின்ற சிவத்தினது ஒளியால் அக ஒளியாகிய அறிவை மறைத்திருந்த அக இருளாகிய ஆணவ மலமும், அதனால் விளைந்த அறியாமையும் இராக் காலத்திலே பொருந்தி எழுகின்ற அருணோதயத்தால் அதற்கு முன் திணிந்திருந்த இருள் நீங்குதல் போல நீங்கியொழியும்.*

**குறிப்புரை :-** *"சென்றிடும்" என்பது பெயரெச்சம். 'ஞானத்துள் சென்றிடும் சிவத்தின் பிரகாசத்தால்' எனக் கூட்டியுரைக்க. 'அருணோதயத்தால்' என உருபு விரிக்க. தெளிவு பற்றி எதிர்காலத்தை இறந்த காலமாக்கி, "தொலைந்தது" என்றார். ஏகாரம் தேற்றம். பொருளில் "அஞ்ஞானமும்" என்றதற்கு ஏற்ப உவமையிலும் 'குருட்டுத் தன்மையும்' என்பது வருவிக்க.*

*இதனால், அக இருளாகிய ஆணவ மலம் சிவாதித்தனது ஒளியாகிய அக ஒளியாலல்லது நீங்காமை கூறப்பட்டது.*

*1971.* **தெளிவுரை :-** *நில உலகின்கண் நீர் நிரம்பிய குடங்களில் ஆதித்தனை நோக்கி வாயைத் திறந்துள்ள குடங்களில் தான் ஆதித்தன் விளங்குவான். அவ்வாறின்றி ஆதித்தனை நோக்காதவாறு மூடி வைக்கப்பட்ட குடங்களில் யாதொன்றன் நீரிலும் ஆதித்தன் விளங்குதல் இல்லை. சிவன் உடல்தோறும் உள்ள உயிர்களில் விளங்குதலும் ஆதித்தன் குடத்து நீரில் விளங்குதல் போல்வது தான்.*

**குறிப்புரை :-** *'அஃதாவது, 'சிவன், அவனை உணரும் பக்குவம் வாய்ந்த உயிர்களினுள்ளே விளங்குதல்லது, அவனை உணரமாட்டாது மூடமாய்க்*

**1972.** தானே விரிசுடர் மூன்றும்ஒன் றாய்நிற்கும்
தானே அயன்மால் எனநின்று தாபிக்கும்
தானே உடல்உயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளிஒளி தான்இருட் டாகுமே. **3**

---

*கிடக்கின்ற அபக்குவமான உயிரினுள்ளே விளங்கான்' என்பதாம். கடம் - உடல். நீதி - உயிர். சூரியன் - சிவம்.*

*ஆதித்தனது கதிரில் இருதன்மைகள் உள்ளன. ஒன்று வெம்மை; மற்றொன்று ஒண்மை. அதுபோல, சிவனது சத்தியிலும் இரு தன்மைகள் உள்ளன. ஒன்று மறைத்தல்; மற்றொன்று விளக்கல். இத்தன்மை பற்றி, சத்தி இரண்டாகச் சொல்லப்படும். ஒன்று திரோதான சத்தி; மற்றொன்று அருட்சத்தி. மூடி வைக்கப்பட்ட குடத்து நீரிலும் ஆதித்தனது வெம்மைச் சத்தி விளங்குவதேயாகும். ஆயினும் அந்நீரில் ஆதித்தனது ஒளிச்சத்தி விளங்காது. அதுபோலவே எல்லா உயிர்களிடத்தும் சிவனது திரோதான சத்தி விளங்கவே செய்யும், ஆயினும் அருட்சத்தி பக்குவம் வாய்ந்த உயிர்களில் மட்டுமே விளங்கும் என உணர்க.*

*இங்குக் கூறிய உவமையால் குடத்து நீருள் ஆதித்தன் தோன்றும்பொழுது அந்த ஆதித்தனுக்கும், வானத்தில் உள்ள ஆதித்தனுக்கும் இடையே தன்மை வேற்றுமை யாதும் இன்மையும், மூடி வைக்கப்பட்ட குடத்து நீருள் ஆதித்தன் சிறிதும் தோன்றாமையும் பெறப்படுதலால், பல வகையில் வேறுபட்ட தன்மையை உடைய உயிர்களையும் 'சிவனது கூறுகளே; அல்லது சிவனது பிரதி பிம்பங்களே' என்பாரது கூற்றுப் பொருந்தாமையும் இங்குக் குறிக்கப்பட்டதாம். அடுக்குப் பன்மை தோற்றி நின்றது.*

*இதனால், சிவாதித்தன் ஞானாதித்தனுள்ளே விளங்குவதாதல் கூறப்பட்டது.*

***1972. தெளிவுரை :-** இங்குக் கூறிவரும் சிவாதித்தன் தான் ஒருவனேயாயினும் சுடர்களை எங்கும் வீசுகின்ற ஞாயிறு, திங்கள், தீ என்னும் முச்சுடர்களும் ஒன்று கூடினாற் போன்ற பேரொளியாய் இருப்பான்; தன்னை அழிப்பவனாகப் பலர் கருதினாலும் அயனாய் நின்று படைப்பவனும், அரியாய் நின்று காப்பவனும் தானேயாகும். மேலும் அவன் உயிர்களில் மட்டுமன்றி, உடல்களிலும் வேற்றுமை யின்றிக் கலந்து நிற்கின்றான். இன்னும் தானே ஒருவனே ஆகாயமாயும், அதன்கண் விளங்குகின்ற ஒளிகளாயும் நிற்றலேயன்றி இருளாகவும் ஆகின்றான்.*

***குறிப்புரை :-** 'இஃது அதிசயம்' என்பது குறிப்பெச்சம். 'சிவாதித்தன் உலகில் காணப்படுகின்ற ஒளிப்பொருள்களோடு ஒத்த ஒளியுடையனல்லன்; அவற்றினும் பலமடங்கு மேம்பட்ட ஒளியினை உடையன்' என்பது கூறுமுகத்தான். 'அவன் உதயஞ் செய்யப்பெற்ற உயிர்க்கு வேறு வேண்டத்தக்க பயன் யாதுமில்லை' என்பது முதலடியில் குறிக்கப்பட்டது. தாபித்தல் - நிலை நிறுத்தல். 'நடாத்துதல்' என்றபடி. இதற்கு 'உலகத்தை' என்னும் செயப்படுபொருள் வருவிக்க. 'உடல் உயிரின்கண்' என உருபு விரிக்க. இருள் முக்குணங்களும் தாமத குணத்தின்*

**1973.** **தெய்வச் சுடர்அங்கி ஞாயிறுந் திங்களும்**
**வையம் புனல்அனல் மாருதம் வானகம்**
**சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயிர்**
**ஐவர்க் கிடம்மிடை ஆறங்க மாமே.** **4**

---

*காரியம் ஆகலின் அக்குணத்திலும் நிறைந்து நிற்றல் பற்றிச் சிவனை "இருட்டுமாம்" - என்றார்.*

*இதனால், சிவாதித்தனது ஒப்புயர்வில்லாத அதிசய நிலை கூறப்பட்டது.*

*1973. **தெளிவுரை :-** தெய்வச் சுடர் அங்கி, வேள்வித் தீ ஞாயிறு முதல் வானகம் ஈறாயினவும் "பல்லுயிர்" என்றதும் வெளிப்படை. ஐவர், பிரமன் முதல் சதாசிவன் ஈறானவர். அவர்க்கு இடம் ஆவன சுவாதிட்டானம் முதல் ஆஞ்ஞை ஈறாய் உள்ள ஐந்து ஆதாரங்கள். ஆறு அங்கம் ஆஞ்ஞையிலிருந்து கீழ்நோக்கி எண்ண ஆறாவதாகும் மூலாதாரம். சைவப் பெரும்பதி - இவை யாவும் சிவத் தலங்களாகும்.*

***குறிப்புரை :-*** *"சைவப் பெரும்பதி" என்றதை "ஆம்" என்பதற்கு முன்னர்க் கூட்டுக. 'இவை சிவத்தலங்கள்' என்றது. 'இவ்விடங்கள் சிவனைக் கண்டு வழிபடுதற்குரிய இடங்கள்' என்றபடி எனவே, இவ்விடங்களில் சிவனைக் கண்டு வழிபட அவன் ஆதித்தனாய் உயிரினுள் விளங்குவான்' என்பது கருத்து. மிடை ஆறு அங்கம் - அவ்வைந்தோடு சேர்ந்து ஆறாவதாகின்ற உறுப்பு.*

*இதனால், சிவாதித்தன் உதயம் செய்தற்கு வாயில் கூறப்பட்டது.*

## 27. பசுவிலக்கணம் - பிராணன்

*முன் அதிகாரம் வரையில் வழிபடப்படும் பொருளின் இயல்பே கூறி, இனி இது முதலாக வழிபடும் பொருளின் இயல்பினை, 'பசு இலக்கணம்' - என வைத்துக் கூறுகின்றார். பசு - உயிர். அது தான் சார்ந்த பொருளின் இயல்பாயே நிற்பது, ஆதலால் முதற்கண் அது பிராணனைச் சார்ந்து, 'பிராணன்' என நிற்றலை இரண்டு மந்திரங்களால் கூறுகின்றார்.*

**1974.** **உன்னு மளவில் உணரும் ஒருவனைப்**
**பன்னு மறைகள் பயிலும் பரமனை**
**என்னுள் இருக்கும் இளையா விளக்கினை**
**அன்ன மயனென் றறிந்துகொண் டேனே. 1**

---

*1974. **தெளிவுரை :-** சிவன் தன்னை நினைப்பவரையே தான் நினைப்பான். பல பொருள்களையும் சொல்லுகின்ற வேதங்கள் பிறரைப்போல அல்லது தன்னைப் பலவிடத்தும் பெரும்பான்மை எடுத்துச் சொல்ல நிற்பவன். என் உள்ளே என்றும் ஒளிகுறையாத விளக்காய் உள்ளவன். 'அவன் உயிர்களிடத்து அன்னப் புள்ளாய் இருக்கின்றான்' என்னும் அரிய உண்மையினை நான் திருவருளால் அறியப்பெற்றேன்.*

***குறிப்புரை :-*** *அன்னப் பறவைக்கு, 'அம்சம்' என்பதும் ஒரு பெயர். அதனால் அம்ச மந்திரத்தை 'அன்னம்' எனக் குழூஉக்குறியாக வழங்குதல் சித்தர் மரபு. அம்ச மந்திரமே பிராணனை இயக்குவது. அஃது 'அசபை எனப்படும். அதனை நாயனார் நான்காம் தந்திரத் தொடக்கத்திலே கூறினார். சிவனது சத்தியே அம்ச மந்திரத்தை இடமாகக் கொண்டிருந்து பிராணனை இயக்குகின்றது ஆதலின் அவ்வுண்மையைத் திருவருளால் உணர்ந்த நான் பிராணனோடு கூடிப் பிராண மயனாய் நிற்கும்பொழுது சிவனை மறக்கிலேன் என்றபடி,*

*என்னில் ஆரும் எனக்கினி யார்இலை;*
*என்னி லும்இனி யான்ஒரு வன்உளன்;*
*என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்கு*
*என்னு ளேநிற்கும் இன்னம்ப ரீசனே. - தி.5 ப.21 பா.1*

*என்றருளிச் செய்ததும் காண்க. புறம்போந்து பின் உட்புகுதல் பிராணனின் இயல்பாதலை நினைக்க. முதல் மூன்று அடிகளிற் கூறியன அவன் அன்னமயன் ஆதலை வலியுறுத்தும் குறிப்பின். ''அறிந்துகொண்டேனே'' என்னும் சொல்லியல்பால், 'திருவருளால்' என்னும் இசையெச்சம் பெறப்பட்டது.*

*இதனால், பசு பிராணனாம் முறைமை கூறுங்கால் அந் நிலையும் சிவனருளால் உளதாதலை மறத்தல் கூடாமை கூறப்பட்டது.*

*1975. **தெளிவுரை :-** இங்கு "ஆறு" என்றது பிராணன் இயங்கும் வழி யினை,*

**1975.** அன்னம் இரண்டுள ஆற்றங் கரையினில்
துன்னி இரண்டும் துணைப்பிரியா தன்னந்
தன்னிலை அன்னம் தனிஒன்றுஅ தென்றக்கால்
பின்ன மடஅன்னம் பேறணு காதே. **2**

---

*"அதன் கரையில் உள்ள இரு அன்னங்கள்" என்றது, அந்தப் பிராணனை ஒட்டி நிற்கின்ற 'சிவன், சீவன்' என்னும் இருவரையும், அவ்வன்னம் இரண்டும் என்றும் இணைந்து நிற்றலினின்றும் நீங்கித் தனித்தனியே பிரிதல் இல்லை. அவற்றுள் ஒன்று அறிவுமிக்கது. ஆதலின் அது தனியே பிரிந்து நிற்பினும் யாதொன் றினையும் இழத்தல் இன்றி, இனிது வாழும், மற்றொன்று அறிவு குறைந்தது ஆதலால் அது பிரிந்து தனி நிற்பின் எந்தப் பயனையும் பெறாது துன்பத்தில் ஆழும் என்றது சிவ சீவர்களது இயல்பினை விளக்கியதாம்.*

***குறிப்புரை :-** "அழகிய சிறகையுடைய இரு பறவைகள் இணை பிரியாதவை; ஒரு மரத்தில் வாழ்கின்றன. அவற்றுள் ஒன்று அம்மரத்தின் பழத்தை உண்கின்றது. மற்றொன்று உண்ணாமல் பார்த்துக்கொண்டு மட்டும் இருக்கின்றது" என்னும் உபநிடதப் பொருள் இங்கு ஒப்பிடத்தக்கது (முண்டகோபநிதடம் - மூன்றாவது முண்டகம்).*

*மூன்றாம் அடியில், 'தனி நிலை' என்பது எதுகை நோக்கி, "தன்னிலை" என விகாரமாயிற்று. "தன்னந் தனிநிலை தனி ஒன்று" என்றதனை, 'தனி ஒன்று தன்னந் தனி நிலையையுடையது' என மாற்றிப் பயனிலை வருவித்து உரைக்க. 'உடையது' என்பது 'உடையதாதல் இயலும்' என்பதாம். "பின்னர்" என்பது, 'மற்றொன்று' என்றபடி. மற்றொன்றாகிய மட அன்னம் அது என்றக்கால் பேறு அணுகாது' என இயைக்க. மடமை - அறியாமை; 'சிற்றறிவு' என்பதாம். அது என்றல் - வேறொன்றாகிய 'அந்த அன்னத்தைப் போல நானும் தனித்திருப்பேன்' என்று நினைத்தல்.*

*இதனால், பிராணனாய் நிற்கும் பசு தான் பதியை விட்டுத் தனிநிற்றல் ஆகாமை விளக்கப்பட்டது.*

## 28. புருடன்

*பசு பிராணனோடு கூடி, 'பிராணன்' என நிற்கும் நிலை பற்றிக் கூறிய பின்னர், 'காலம், நியதி, கலை, வித்தை, அராகம்' என்னும் பஞ்ச கஞ்சுகங்களோடு கூடி, 'புருடன்' என நிற்கும் நிலைபற்றி நான்கு மந்திரங்களால் கூறுகின்றார்.*

**1976.** வைகரி யாதியும் மாய்ஆ மலாதியும்
பொய்கரி யான புருடாதி பேதமும்
மெய்கரி ஞானம் கிரியா விசேடத்தால்
செய்கரி ஈசன் அனாதியே செய்ததே. 1

---

*1976. **தெளிவுரை :-** தோன்றியழிகின்ற வைகரி முதலிய வாக்குக்களாகிய சொல்லுலகங்களையும் மற்றும் பொருளுலகங்களையும், அவைகளைப் பற்றி நின்று 'புருடன், உருத்திரன், சிவன்' என உயிர்கள் அடையும் நிலையற்ற வேறுபாடுகளையும் தனது உண்மைத் துணையாகிய ஞானம், கிரியை என்னும் வேறுபாடுகளையுடைய தனது சத்தியால் செய்கின்ற நிலையான முதல்வன் சிவபெருமானே. இவ்வமைப்பு அனாதியே அமைந்த அமைப்பாகும்.*

***குறிப்புரை :-*** *'மாய், ஆ' என்னும் முதனிலைகள் அடுக்கி, 'மலம்' என்னும் பெயரோடு வினைத்தொகையாய்த் தொக்கன. அந்நிலைமை தாப்பிசையாய், முன்னர் ''வைகரியாதி'' என்பதனோடும் இயையும். மாய்ந்து ஆகின்ற மலங்களாவன மாயேயங்கள். "ஆதி" என்றதனால் கன்மமும் தழுவப்பட்டது. கருவியின்றிக் கன்மம் நிகழாது ஆகையால் அக்கருவியைப் படைத்துக் கொடுத்தல் பற்றி, 'கன்மத்தைச் செய்பவனும் சிவனே' எனக் கூறினார்.*

*உயிர் முப்பத்தாறு தத்துவங்களையும் பற்றி நிற்கும்பொழுது 'புருடன்' என்னும் நிலையையும், ஆன்ம தத்துவத்தை ஒழித்து, ஏனைப் பன்னிரண்டு தத்துவத்தளவில் நிற்குமிடத்து 'உருத்திரன்' என்னும் நிலையையும், அவற்றுள்ளும் வித்தியா தத்துவங்களை ஒழித்து, ஏனைச் சிவ தத்துவத்தளவில் பற்றி நிற்கும் பொழுது 'சிவன்' என்னும் நிலையையும் அடையும். இவ்வாற்றானே 'மூவுலகம்' என்பன சிவநெறியில் புருடலோகம், உருத்திரலோகம், சிவலோகம்' என்பனவே யாகின்றன. அட்ட வித்தியேசுரர், சத்த கோடி மகா மந்திரேசுரர். அணு சதாசிவர் என்போர் யாவரும் 'சிவர்' என்னும் வகையினரேயாவர்.*

*கரி - சான்று; இங்கு வினை முதலாந் தன்மையைக் குறித்தது. பொய் கரி - பொய்க்கும் கரி, மெய்கரி - மெய்க்கும் கரி, 'பொய், மெய்' என்பன நிலையாமை, நிலைத்தல் இவற்றைக் குறித்தன். நடுவண் நின்ற "கரி" என்பது கருவியை வினை முதல் போலக் கூறியது. விசேடம் - சிறப்பியல்பு சிவனது சிறப்பியல்பு அவனது சத்தி. இங்கு அமைப்பாவது செய்வோனும், செயப்படுவனவுமாய் நின்ற இயல்பு.*

**1977.** அணுவில் அணுவினை ஆதிப் பிரானை
அணுவில் அணுவினை ஆயிரங் கூறிட்டு
அணுவில் அணுவை அணுகவல் லார்கட்கு
அணுவில் அணுவை அணுகலும் ஆமே. **2**

---

*'செய்தது' என்பது. 'செய்யப்பட்டது' என்னும் பொருட்டாய்ச் செய்யாததைச் செய்ததுபோலக் கூறும் இலக்கணை வழக்காய் நின்றது.*

*இதனால், உயிர் 'தான் புருடனாய் நிற்றல் முதலிய நிலைமைகளும் சிவனால் ஆவன' என்பதை மறத்தல் கூடாமை கூறப்பட்டது.*

***1977. தெளிவுரை :-** ஆணவ பந்தத்தால் தனது வியாபக நிலையை இழந்து அணுத்தன்மை எய்தி நிற்கின்ற உயிரை அணுவிலும் பல கூற்றில் ஒரு கூற்றளவினதாகப் பாவித்து, 'அணுவுக்கும் அணு' எனப்படுகின்ற நுண்ணியனாகிய சிவனை அணுக வல்லவர்கட்கே அவனை அடைதல் கூடும்.*

***குறிப்புரை :-** ஆன்மாச் சிவத்தையணுகும் உபாயம் உபதேசித்தல் நுதலிற்று. பரமாணுவை ஆயிரம் பிளவு செய்து அவ்வாயிரத்துள் ஒன்றாகிய அணுவில் பரமாணுவாகக் கலந்துள்ள சிவஞானத்தைச் சேரவல்லவர்களுக்கே அணுவினுள் அணுவாயும் முதற்பொருளாயும் உள்ள சிவபரம்பொருளை, அணுவில் அணுவாய் விளங்கும் பரசிவத்தை அணுகும் வன்மையுளதாம் என்றவாறு.*

*சிவன் அணுவிற்கணுவாய் விளங்குபவர். அந்த அணுவை ஆயிரம் கூறு செய்து அதில் ஒன்றிலும் கலந்திருப்பவர்; அவரை நுணுகி ஆராய்ந்து தியானிக்கின் அடையலாம் என்பது கருத்து.*

*அணு - ஆன்மா. அதனை கூறிடலாவது அதைப் பந்தித்துள்ள மலமாயா கன்மங்களைப் பிரித்து, அவ்வணுவைப் பிளந்து, அதினுள்ளும் சிவத்துவ வியாப்தியை உணர்தல்.*

*கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயின்*
*கொண்டவனும் அப்பரிசே கூறுபடும் - கொண்ட*
*இருபொருளு மன்றியே இன்னதிது என்னா(து)*
*ஒருபொருளே யாய்இருக்கும் உற்று.*

*- திருக்களிற்றுப்படியார், 24*

*என்பதிலும் இம்முறை கூறப்பட்டது அறிக.*

*இது முன் மந்திரத்து உரையிற் கூறிய எல்லா நிலைகட்கும் பொதுதலை அறிந்து கொள்க.*

*இதனால், மேற்கூறிய 'புருடன் முதலிய அனைத்து நிலைகளிலும் உயிர் சிவனைப் பொருந்தி நிற்குமாறு கூறப்பட்டது.'*

**1978.** படர்கொண்ட ஆலதின் வித்தது போலச்
சுடர்கொண் டணுவினைத் தூவழி செய்ய
இடர்கொண்ட பாச இருளற ஓட்டி
நடர்கொண்ட நல்வழி நாடலு மாமே. **3**

**1979.** அணுவுள் அவனும் அவனுள் அணுவும்
கணுவற நின்ற கலப்ப துணரார்
இணையிலி ஈசன் அவன்எங்கு மாகித்
தணிவற நின்றனன் சராசரந் தானே. **4**

---

***1978. தெளிவுரை :-*** *சிவனது திருவருளாகிய ஒளியினை ஆன்மா, பல கிளைகளும் விழுதுகளுமாய் விரிவடையும் ஆற்றலைத் தன்னுள்ளே அடக்கியிருக்கும் ஆலம் விதைபோலத் தன்னுள் அடக்குமாற்றால் தன்னை அச்சிவத்திற்கு ஏற்ற தூய இடமாகச் செய்யுமானால், அந்தத் திருவருள் ஒளி துணையாக, துன்பத்தையே தனது இயல்பாகக் கொண்ட ஆணவமாகிய இருளை ஓட்டி, அம்பலத்தில் ஞான நடனத்தைச் செய்கின்ற அப்பெருமான் தரக்கருதும் நல்வழியைத் தான் உணரும் வாய்ப்பு உண்டாகும்.*

***குறிப்புரை :-*** *படர் - படர்தல்; முதனிலைத் தொழிற்பெயர். அணு - ஆன்மா. "அணுவினை" எனப் பின்னர்க் கூறினாராயினும், 'சுடரை அணு தன்னுட் கொண்டு தன்னைத் தூவழி செய்ய' எனக்கூறுதலே கருத்தாதல் உணர்க. 'ஓட்டி, நாடல்' என்னும் பயனிலைகட்கு, 'தான்' என்பது தோன்றா எழுவாயாய் நின்றது.*

*இதனால், மேற்கூறிய முறை உவமை காட்டி விளக்கப்பட்டது.*

***1979. தெளிவுரை :-*** *முன் மந்திரத்தில், 'உயிர் ஆலம் விதைபோலவும் சிவன் அவ்விதையில் அடங்கியுள்ள கிளை முதலியன போலவும் ஆதல் வேண்டும்' என்றது ஒருபுடை உவமையேயன்றி, முற்றுவமையன்று. மற்று, உண்மை நிலையாது எனின், 'உயிர் மேல்; சிவன் உள்' என்றாயினும், 'சிவன் மேல்; உயிர் உள்' என்றாயினும் ஒருபடித்தாக வரையறுத்தல் கூடாதபடி, புறவேற்றுமையே யன்றி, அகவேற்றுமை தானும் இன்றி ஒன்றி நிற்கின்ற கலப்பே உண்மை நிலையாகும். இவ்வுண்மையை உணர்வார் ஒருவரும் இல்லை. இனித் தன்னொப் பில்லாத் தனிப்பெரும் பொருளாகிய சிவன் எல்லாப் பொருளிலும் ஒரு படித்தாக நீக்கமின்றி நிறைந்து நிற்கின் இயங்குவனவும், நிற்பனவுமாய்க் காணப்படுகின்ற உயிர்கள் பலவும் அவனிடத்தில் தத்தமக்கு இயலும் முறையில் கலந்து நிற்கின்றன.*

***குறிப்புரை :-*** *பரசிவம் உயிருக்குயிராயும், தன்னுள் அனைத்து உயிர்களை அடக்கியும் இருக்கும்; எங்கும் எல்லாவற்றிலும் வியாபித்திருக்கும் என்பது கருத்து.*

*அணுவுள் அவன் ஆதலாவது உயிருள் உயிராகிக் கலந்திருத்தல். அதாவது*

*வியாப்பியமாக இருத்தல். அவனுள் அணு என்றது ஆன்மாக்களைத் தன்னகத் தடக்கித் தன் வியாபகத்துள் ஆன்மாக்கள் அடங்கியிருக்கச் செய்தல். இதனால் ஆன்மாவும் பரசிவமும் சமமாமோ எனின் ஆகாது; அணுவில் பரசிவம் அடங்கி யிருக்கும்போது உயிர்கள் அனைத்திலும் ஒரு காலத்து வியாபித்துக் கலந்து விளங்கும் எல்லாமாந் தன்மையும், உயிர்கள் அவனிடத்து அடங்கியிருக்கும் போது உயிர்கட்கு ஏகதேச வியாபகம் பெறப்படுமேயன்றிச் சமமாகாமையும் உணர்க.*

*கணு - அளவு அல்லது வரையறை. இறைவனும் உயிரும் கலந்த கலப்பிற்கு அளவில்லையாதலின் 'கணுவற நின்ற கலப்பு' என்றார்.*

## 29. சீவன்

*முன் இரண்டதிகாரங்களால் உபாதி வசத்தால் உயிர்க்கு உளவாகின்ற தடத்த நிலை கூறினார். இவ்வதிகாரத்தால் அதனது உபாதியற்ற உண்மை நிலையை நான்கு மந்திரங்களாற் கூறுகின்றார்.*

**1980.** **மேவிய சீவன் வடிவது சொல்லிடில்**
**கோவின் மயிர்ஒன்று நூறுடன் கூறிட்டு**
**மேவிய கூறது ஆயிர மாயினால்**
**ஆவியின் கூறது நூறா யிரத்தென்றே.** **1**

---

*1980. **தெளிவுரை :-** உயிரைப் பருப்பொருளாகக் கருதிக்கொண்டு, 'அதன் அகல, நீள, கன அளவுகள் எத்துணையன' என வினாவுவார்க்கு விடை கூறின், 'பசுவின் மயிர்களில் ஒன்றை எடுத்து அதனைப் பல நூறாயிரங் கூறு செய்தால் அவற்றுள் ஒரு கூற்றின் அகல, நீள, கன அளவுகளே உயிரின் அகல, நீள, கன, அளவுகள்' எனக் கூறலாம்.*

***குறிப்புரை :-*** *இது 'வன்பாற்கண் - வற்றல் மரம் தளிர்த்தற்று" (திருக்குறள், 79) என்பது போல, வடிவு கூறலாகாமையைக் குறித்து நின்றது. 'வடிவு' என்பது அகல நீள கனங்களையுடையதாகும். அது கண்ணில்லாதவராலும் தடவி அறிந்து கொள்ளப்படும். 'உருவம்' என்பது நிறம். அது கண்ணாலன்றி அறிய இயலாது. எனவே, உயிர்க்கு 'அணு' முதலாக வடிவு கூறுவோர் உயிரை, 'பருப்பொருள்' அஃதாவது, 'தூலப்பொருள்' என்போராவர் உயிர் பருப்பொருளாகாது 'நுண்பொருள்', அஃதாவது 'சூக்குமப் பொருள்' என்றற்கே இவ்வாறு கூறினார். காற்றும் கட்புலனாகாத வடிவத்தை உடையதே. அதனால் உயிரை, 'பிராணன்' என்றல், உபாதி பற்றிய செயற்கையாலாம். தத்துவங்கள் யாவும் உபாதியேயாகலின், உயிரைமேல், 'புருடன்' முதலாகக் கூறியதும் உபாதி பற்றியேயாம். மேவிய கூறு - கிடைத்த ஒரு கூறு "ஆயினால்" என்பதன் பின், 'அதில்' என்பது வருவித்து 'அதில் நூறாயிரத்தொன்றே ஆவியின் கூறு' என்க.*

*இதனால், 'உயிர், உண்மையில் சூக்குமப் பொருளே' என்பது கூறப்பட்டது.*

*1981. **தெளிவுரை :-** கட்புலனாகாப் பொருள் சிவன் ஒருவனேயாக, பலவாகிய உயிர்களையும் அத்தகைய பொருளாகக் கூறுதல் கூடுமோ எனின், கூடும். ஏனெனில், சிவனது பெருமையை நோக்கு மிடத்து ஏனைத் தேவர் அனைவர் பெருமையினும் பெரிது. ஆயினும் பருப்பொருளாகிய உடம்புகளில் சூக்குமமாய் நிறைந்திருக்கின்ற உயிர்களினுள்ளே அவற்றின் அதிசூக்குமமாய் அவன் நிறைந்திருக்கின்றான். (எனவே, உயிர் சூக்குமப் பொருளும், சிவன் அதிசூக்குமப் பொருளுமாம் ஆதலின் அதுபற்றி ஐயமில்லை என்றபடி). சிவன் இத்தகைய அதிசூக்குமப் பொருளாதலின் அவன் தேவர்களாலும் எளிதில்*

**1981.** ஏனோர் பெருமைய னாயினும் எம்மிறை
ஊனே சிறுமை னுட்கலந் தங்குளன்
வானோ ரறியும் அளவல்லன் மாதேவன்
தானே அறியும் தவத்தின்அளவே. 2

**1982.** உண்டு தெளிவன் றுரைக்க வியோகமே
கொண்டு பயிலும் குணமில்லை யாயினும்
பண்டு பயிலும் பயில்சீவ னார்பின்னைக்
கண்டு சிவன்உருக் கொள்வர் கருத்துளே. 3

---

*அறியத்தக்கவனவல்லன். ஆயினும் அவனே அவரவரது தவத்தின் அளவை யறிந்து அவ்வளவிற்கு ஏற்ப விளங்கி நிற்பன்'.*

***குறிப்புரை :–*** *'ஏனையோரினும்' - என ஐந்தாவது விரிக்க. "ஊனே சிறுமை" என்பதற்கு, 'ஊனின்கண் உள்ள சூக்குமப் பொருள்' எனப் பொருள் கொள்க. அப்பொருள் உயிர்.*

*இதனால், முன் மந்திரத்திற் கூறிய பொருள் பற்றி நிகழ்வதோர் ஐயம் அறுக்கப்பட்டது.*

***1982. தெளிவுரை :–*** *உயிர்கட்கு முதற் காலத்திலே, 'சிவனை அறியும் வாயில் உண்டு' எனக் கூறுதற்கு அவனைத் தம்முன்னே கொண்டு யோகம் பயில்கின்ற குணம் இல்லாவிட்டாலும் பின்பு அக்குணத்தை அடைந்து தம்முன்னே கொண்டு யோகம் பயிலும். ஆகவே, உயிர்கட்கு என்றாயினும் ஒருநாள் சிவனைத் தெளிவாக உணரும் உணர்வு உண்டாகவே செய்யும்.*

***குறிப்புரை :–*** *'அவ்வுணர்வு முதற்கண் தோன்றாமைக்குக் காரணம் பக்குவம் வாயாமையும், பின்பு தோன்றுதற்குக் காரணம் பக்குவம் வாய்த்தலும் ஆம்' என்பது கருத்து. 'பக்குவம் சிவனது அருள் நோக்கத்தால் வாய்க்கும்' என்பது, "பண்டு பயிலும் பயில் சீவனார்" என்பதனால் குறிக்கப்பட்டது. பயில் சீவனார் - பயில்வை உடைய சீவனார், பயிலுதல் - நீங்காது உடன் இருத்தல். உரைத்தற்கு, உணரும் வாயில் உண்டென' என்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. ஏகாரத்தைப் பிரித்து, "குணம்" என்பதனோடு கூட்டுக. 'யோகம்' என்பதன்முன் உள்ள ஏகரம் வடசொல் நோக்கி வந்தது. இவ்வேகாரம் தேற்றம். 'தெளிவு உண்டு' என மாற்றி யுரைக்க. இதனால், முன் மந்திரத்தில், 'அறியும் அளவல்லன் மாதேவன்' என்பது பற்றி நிகழும் ஐயம் அறுக்கப்பட்டது.*

***1983. தெளிவுரை :–*** *மாயா காரியமாகிய கருவிக்கூட்டம் சடமாகலின், அது சித்தாகிய உயிருக்குக் கூடாப் பொருளாய்க் குற்றமாகும். ஆயினும் அவ்வுயிரின் உள்ளே என்றும் உள்ள சிவன் அதனது பக்குவம் அறிந்து அருள் காரணமாகக் குருவாகி எதிர்வந்து அதனை அக்குற்றத்தினின்றும் பிரிவிக்க,*

**1983.** மாயா உபாதி வசத்தாகும் சேதனத்து
ஆய குருஅரு ளாலே அதில் தூண்ட
ஓயும் உபாதியோ டொன்றின்ஒன் றாதுஉயிர்
ஆய துரியம் புகுந்தறி வாகவே. **4**

---

*அஃது அங்ஙனமே பிரிந்து திருவருளில் புகுந்து, அதன் கண் பேருறக்கத்தை எய்தி அமைதியுற்றிருக்கும், அருள் உறக்கம், இருள் உறக்கம் அன்றாகலின் அந்நிலையில் உயிர் அறிவே வடிவாய் விளங்கும்.*

***குறிப்புரை :-*** *உபாதி - செயற்கைப் பொருள்; மாசு. சேதனம் - அறிவுடைய பொருள். 'சேதனத்து ஆய குரு' என்றது, 'சிவம்' என்றபடி அதனால் சிவமே குருவாய் வருதல் பெறப்பட்டது. 'குரு தூண்ட' என இயையும். தூண்டுதல் - விரிந்து செல்லும்படி அதற்குரிய உண்மையை உணர்த்துதல். அஃது ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தமையை (சிவஞானபோதம், சூ.8) அறிவித்தலாம். 'அதினின்றும் தூண்ட' என்க. 'உயிர் உபாதி ஒன்றினோடும் ஒன்றாது துரியம் புகுந்து அறிவாகவே ஓயும்' என முடிக்க. துரியம் - பேருறக்கம். மலத்தில் உறங்குதல் கேவல துரியம். திருவருளில் உறங்குதல் சுத்த துரியம். இங்குக் குறிக்கப்பட்டது சுத்த துரியமே என்பது வெளிப்படை. இதனால் உபாதி வசத்தால் மாசுபட்டுச் செயற்கை நிலையில் இருந்து உயிர் அம்மாசினின்றும் நீங்கித் தூயதாய்த் தனது இயற்கை நிலையை அடையுமாறு கூறப்பட்டது.*

## 30. பசு

*உயிர்கள் அனாதியே உபாதி வசப்பட்டமையால் உலகில் காணப்படும் நாற்கால் பசுக்களோடு ஒப்பனவாய், 'பசு' எனப் பெயர் பெற்றன. அதற்கேற்ப உலகப் பசுக்கள் பல நிலையை உடையனபோலவே உயிர்களும் பல நிலைகளை உடையனவாதலை இரண்டு மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**1984.** கற்ற பசுக்கள் கதறித் திரியினும்
கொற்ற பசுக்கள் குறிகட்டி மேயினும்
உற்ற பசுக்கள் ஒருகுடம் பால் போதும்
மற்றைப் பசுக்கள் வறள்பசு தானே. 1

---

*1984. **தெளிவுரை :-** கருவுறும் பருவம் வாயாத இளம் பசுக்கள் இனச் சார்பால் கதற மட்டும் தெரிந்து கொண்டு, கன்றை ஈன்ற பசுக்கள் தம் கன்றினை அழைக்கக் கதறுவது போலத் தாமும் கதறித் திரியும். கன்றை ஈனாது கருவுற்ற மட்டும் உள்ள பசுக்கள் தமக்குரிய புல்லை விடுத்து மனிதர்க்கு உரிய பயிரில் சென்று மேயாதபடி அதன் தலைவன் புல்வெளியில் ஓரிடத்தில் முளையடித்து நீண்ட கயிற்றால் கட்டி வைக்க. அக்கயிற்றின் அளவிற்கு அவை கட்டில்லாதது போலத் தம் விருப்பப்படி சென்று புல்லை மேயும். எனினும் கன்றை ஈன்று தாய்மையை எய்திய பசுக்களே ஒன்று ஒரு குடம்போல நிரம்பப் பால் பொழியும் பசுக்களாகும். அவை தவிர மேற்சொன்ன மற்ற இருவகைப் பசுக்களும் பயன்படாத பசுக்களாகவே இருக்கும்.*

***குறிப்புரை :-** இம்மந்திரம் ஒட்டணி, "கற்ற பசுக்கள்" என்பதனால், நூலை மட்டும் கற்றுப் பரிபாகம் இன்மையால் அந்நூலை மட்டும் இளஞ்சிறார் காதற் பாட்டுக்களைப் பாடி அவற்றிற்கேற்ப நடித்தல் போலப் படித்துப் பொருள் விரிக்கின்றவர் குறிக்கப்பட்டனர். "கதறித் திரி யினும்" எனப்பின்னர் வருதலால், "கற்ற" என்றது, கதறக் கற்றதனையே குறித்தது. பசுக்கள் வாயொலி செய்தலை, 'கதறல்' என்றல் மரபு. கொற்றம் - வெற்றி. பசுக்களுக்கு வெற்றியாவது மலட்டுத் தன்மையின்றிக் கருவுறுதல். 'கொற்ற பசுக்கள்' எனும் சந்தி ஒற்று எதுகை நோக்கித் தொகுக்கப்பட்டது. குறி - முளை. கட்டி - கட்டப்பட்டு. 'குறியில் கட்டி' என உருபு விரிக்க. 'கருவுற்றுக் குறியில் கட்டப்பட்டு மேயும் பசுக்கள்' என்றதனால், ஆசிரியரது அருள்மொழியைக் கேட்டுச் சிந்திக்கும் நிலையில் உள்ளவர் குறிக்கப்பட்டனர். அவரைப் பொய்ந்நெறியில் சென்று இரண்டும் கெட்டவர் ஆகாதபடி ஆசிரியர் தம் ஆணைவழி நிற்பித்தலே, 'குறி கட்டி மேய்தல்' என்பதனால் குறிக்கப்பட்டது. எனவே "கொற்றம்" என்றது ஆசிரியரால் ஆட்கொள்ளப் பட்டமையைக் குறித்ததாம். "உற்ற" என்பதற்கு, 'கன்றை' என்பது வருவித்து, 'கன்றை உற்ற பசுக்கள் என்க'. 'தாய்மை எய்துதல்' என்பதனால், ஆசிரியரது அருள்மொழியைக் கேட்டுச் சிந்தித்த பின்பு தெளிதலையும், நிட்டை*

**1985.** கொல்லையில் மேயும் பசுக்களைச் செய்வதன்
எல்லை கடப்பித் திறைவ னடிகூட்டி
வல்லசெய்து ஆற்ற மதித்தபின் அல்லது
கொல்லைசெய் நெஞ்சம் குறிப்பறி யாதே. **2**

---

*கூடுதலையும் உடையராதலைக் குறித்தது. "பால்" என்றதனால், பரஞானம், அஃதாவது அனுபவஞானம் குறிக்கப்பட்டது. "ஒருகுடம் பால்" என்றதனால் 'நிறைந்த ஞானம்' என்பது குறிக்கப்பட்டது. போதுதல் - வெளிவருதல்; பொழிதல் எனவே தெளிவும், நிட்டையும் உடையவரது ஞான நிலை அயலார்க்கும் இனிது விளங்குதல் பெறப்பட்டது. வறள் - வறட்சி; பால் சிறிதும் சுரவாமை. மலட்டுப் பசுக்களும் கதறித் திரிவனவற்றுள் அடங்கின.*

*இதனால், 'சீவர்கட்குப் பசுத்துவம் மலபரிபாகம் காரணமாக இருவினை யொப்புச் சத்தி நிபாதமும் வாய்க்கப்பெற்று, ஆசிரியரது அருள்மொழியைக் கேட்டுச் சிந்தித்தலேயன்றித் தெளிவும், நிட்டையும் எய்துதலானே நீங்கும்' என்பது கூறப்பட்டது.*

***1985. தெளிவுரை :-** காப்பாருமின்றி, மேய்ப்பாருமின்றி, கறப்பாருமின்றித் தம் விருப்பம்போல் காட்டில் மேய்ந்து கொண்டிருக்கும் காட்டுப் பசுப்போன்ற மக்களை எப்படித் திருத்த முடியும். (அவர் யாருக்கும் அடங்குபவரல்லர்.) அவர் தாமே தமது இழிநிலையை உணர்ந்து ஆசிரியரை அடைக்கலமாக அடைவாராயினும் அவரை ஆசிரியர் கல்லில் நார் உரிப்பதுபோலவும், கல்லைப் பிசைந்து கனியாக்குதல் போலவும் (தி.8 திருவம்மானை, 5) தமது திருவருள் திறத்தால் அவரது நிலையினின்றும் நீங்கிச் சீர்செய்து, அவர் சீர்ப்பட்டமையை நன்குணர்ந்து சிவமாக்கிய பின்பல்லது அதற்குமுன் காடும், மேடும், கல்லும், முள்ளுமாய்க் கிடக்கின்ற நிலம் போன்றுள்ள அவரது மனம் உணர வேண்டியவற்றை உணராது.*

***குறிப்புரை :-** "மேயும்" என்றது 'தம் விருப்பப்படி சென்று மேயும்' என்றபடி 'அவ்வாறு மேயும் பசுக்கள்' என்றதனால் 'அவை காட்டுப் பசுக்கள்' என்பது விளங்கிற்று. "பசுக்கள்" என்றது உவமையாகு பெயராய், பசுக்கள் போல் உயிரைக் குறித்தது. இறுதியில் வைக்கற் பாலதாகிய "இறைவனடி கூட்டி" என்பதைச் செய்யுள் நோக்கி இடை வைத்தார். "செய்" என்பது உவம உருபு. "குறிப்பு" என்பது ஆகுபெயராய்க் குறிக்கப்படும் பொருளை உணர்த்திற்று.*

*இதனால், முன் மந்திரத்தில் கூறிய பொருள் எதிர்மறை முகத்தால் வலியுறுத்தப்பட்டது.*

## 31. போதன்

*போதம் - ஞானம். போதன் - ஞானி, முன்னையதிகாரத்தில் கூறியவாறு அநாதியே பாசத்துட்பட்டு, 'பசு' எனப்பெயர் பெற்று, ஞானத்தையிழந்து அஞ்ஞானியாய் நிற்கின்ற உயிர் பாசத்தின் நீங்கி ஞானத்தைப் பெற்று ஞானியாமாற்றை இவ்வதிகாரத்தில் ஆறு மந்திரங்களால் உணர்த்துகின்றார். எனவே முன் அதிகாரத்து இறுதியில் தொகுத்துணர்த்திய அதனை விரித்துணர்த்துவதே இவ்வதிகாரமாகின்றது. அஃதாவது சுட்டறுத்து வீடு காட்டப்பட்ட பசு வீட்டின்பத்தை விரும்பும் ஞான சொரூபியாய் இருத்தலை உணர்த்துவது.*

**1986.** சீவன் எனச்சிவன் என்னவெவ் வேறில்லை
சீவ னார்சிவ னாரை யறிகிலர்
சீவ னார்சிவ னாரை அறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே. **1**

---

*1986. தெளிவுரை :- 'சீவன்' எனவும், 'சிவன்' எனவும் வேறு வேறாய்த் தனித்து நிற்றல் எக்காலத்தும் இல்லை. உடலும், உயிரும் போல என்றும் ஒன்றியேநிற்கும். அவ்வாறிருந்தும் சீவன் சிவனை அறிந்ததில்லை. ஏன்? பாசங்கள் சீவனது அறிவை மறைத்து நிற்கின்றன. (அம்மறைப்பு நீங்கிச்) சீவன் சிவனை அறியுமாயின் அது சீவனாய் இராது, சிவமாகவே இருக்கும்.*

*குறிப்புரை :- எனவே, 'சார்ந்ததன் வண்ணம் ஆதல் உயிரினது இயல்பு' என்பது பெறப்படுகின்றது. அநாதி முதலே பாசத்தைச் சார்ந்து பாசமாய் நிற்கின்ற உயிர், சிவத்தைச் சாருமாயின் சிவமாயே நிற்பதாகும். அந்நிலையில் அது 'போதன்' எனப்படும்.*

*'ஆவர்' என்னாது "ஆயிட்டிருப்பர்" என்றதனால், 'அதுவே உயிர் அடையும் முடிநிலைப்பயன்' என்பது விளங்கிற்று. 'இத்தகைய பெருநிலைக்கு உரியதாகிய உயிர் அநாதியே இழிநிலையை எய்தியதும், பின்னரும் அந்நிலையை உணராது அதிலே இருத்தலும் வருந்தத்தக்கன' என அதன் இழிபு குறித்தற்கு இழித்தற் குறிப்பில் வரும் பன்மையால், "சீவனார்" என்றார். 'அவருக்கு உண்மையிலே பெரியோனாகிய சிவனை அறிதல் எளிதன்று' என்றற்கு, "சிவனார்" என்றார். "இல்லை" என்பதன்பின் 'ஆயினும்' என்பது வருவிக்க.*

*சீவன் சிவனை அறிதல் தனது அறிவினுள்ளேயாகும். அது 'சிவன் நான்' எனப் பாவிக்கும் சிவோகம் பாவனையாம்.*

> *"யாதொன்று பாவிக்க நான் அதுஆதலால்,*
> *உன்னை 'நான்' என்று பாவிக்கின்*
> *அத்துவித மார்க்கம் உறலாம்"*

**1987.** குணவிளக் காகிய கூத்தப் பிரானும்
மனவிளக் காகிய மன்னுயிர்க் கெல்லாம்
பணவிளக் காகிய பஃறலை நாகம்
கணவிளக் காகிய கண்காணி யாமே. **2**

---

*என அருளிய தாயுமான அடிகள் வாக்கும், ("எங்கும் நிறைகின்ற சிவம்")*

*"........................................ நற்கமலை*
*ஊரிற் குறுகினேன்; ஓர்மாத் திரைஅளவென்*
*பேரிற் குறுகினேன் பின்"*

*என்னும் குமரகுருபர அடிகள் வாக்கும். (பண்டார மும்மணிக்கோவை, 24) இங்கு நினைவு கூரற்பாலன. இம்மந்திரம் சொற்பொருட் பின்வருநிலையணி கொண்டது.*

*இதனால், 'பசு' எனப்படுகின்ற சீவன் 'போதன்' ஆமாறு கூறப்பட்டது.*

***1987. தெளிவுரை :-*** *எண்குணங்களையுடைய கூத்தப்பிரான், மனத்தை விளக்காக் கொண்டு பொருள்களை அறிந்து வருகின்ற, நிலைபெற்ற உயிர்களுக்கெல்லாம், படந்தோறும் மணியாகிய விளக்கினையுடைய பலதலைப் பாம்புபோலவும், இரவிலும் பல விளக்குக்களை ஏற்றி வைத்துக் கொண்டு பொருள்களைக் காவல் செய்கின்ற கண்காணி போலவும் இருக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'சீவனார் ஒரு பொழுதும் சிவனாரை அறியாவிடினும், சிவனார் சீவனாரை எப்பொழுதும் அறிந்து கொண்டே யிருக்கின்றார்' என்பதாம். 'ஆகவே, அவரை அறியச் சீவனார் ஆவன செய்தல் வேண்டும்' என்றபடி 'சிவன் இயல்பாகவே பாசங்கள் இன்மை, இயற்கையுணர்வு, முற்றுணர்வு என்னும் குணங்களை உடையன் ஆதலின் அவன் தனக்கு அறிவிக்கும் துணையை வேண்டாது தானே எல்லாவற்றையும் அறிவான்' என்றற்கு, "குண விளக்காகிய கூத்தப்பிரான்" என்றும், வேறொரு விளக்கை வேண்டாது தனது மணிகளாகிய விளக்கினாலே விளக்கத்தைத் தரும் பல தலைப் பாம்பு போல உயிர்கட்குத்தான் அறிவைத் தருகின்றான்" என்றும், 'உயிர்களை இமைப்பொழுதும் நீங்காது காண்கின்ற கண் காணியாய் உள்ளான்' என்றும் கூறினார். "மன்னுயிர்க்கு" என்னும் நான்கன் உருபு. 'கரும்பிற்கு வேலி' என்பது போல, அதற்கு வினையுடைமைப் பொருளில் வந்தது. 'தான் தோன்றி' என்பது 'தானே தோன்றுதலையுடையவன்' எனப்பொருள் தருதல் போல, 'கண் காணி' என்பது 'கண் காணுதலையுடையவன்' எனப் பொருள் தந்தது. "ஆகும்" என்பதை நாகத்திற்கும் கூட்டுக. ஆக்கம் உவமை குறித்து நின்றது. இரண்டாம் அடி இன எதுகை. குண விளக்கு - சிவம். மனவிளக்கு - உயிர். பணம் - படம். விளக்கு - விளக்குபவன். பணவிளக்கு - ஐம்பொறிகளாகிய ஐந்தலைகளையுடைய பாம்பிற்கு விடய ஞானமாகிற ஒளி.*

**1988.** அறிவாய் அறியாமை நீங்கி யவனே
பொறிவாய் ஒழிந்தெங்கும் தான்ஆன போதன்
அறிவாய் அவற்றினுள் தான்ஆய் அறிவன்
செறிவாகி நின்றஅச் சீவனும் ஆகுமே. 3

**1989.** ஆறாறின் தன்மை அறியா திருந்தேனுக்கு
ஆறாறின் தன்மை அறிவித்தான் பேர்நந்தி
ஆறாறின் தன்மை அருளால் அறிந்தபின்
ஆறாறுக் கப்புற மாகிநின் றானே. 4

---

*இதனால், சிவன் சீவனை எப்பொழுதும் அறிந்து கொண்டேயிருத்தலால் உரிய பொழுதில் அவன் சீவனுக்கு வெளிப்பட்டு அருளச் சீவன் என்பது போதனாம் என்பது கூறப்பட்டது.*

***1988. தெளிவுரை :-*** *சிவன் அறியாமையோடு விரவாது அறிவாயே இருப்பவன். அவன் சீவன்களின் அறிவில் பொருந்திச் சீவர்கள் அறிவனவற்றை யெல்லாம் தான் உடனாய்நின்று அறிவன். அதனால் அவன் சீவன்களாகியும் இருப்பான். ஆகையால் இந்நிலையை உணர்கின்ற சீவன் தானும் அச்சிவனேயாய் நிற்கும் ஆதலால், அத்தகைய சீவனே யாதும் அறியாத இருள் நிலையும், பொறிகளின் வழிப்பட்டு உலகை ஏகதேசமாய் அறிகின்ற மருள் நிலையும் ஆகிய இவற்றினின்றும் நீங்கிச் சிவனைப் போல எங்கும் வியாபகமாய் நின்று அறியும் நிலையை எய்தி, "போதன்" எனப்படுவதாகும்.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடிமுதலாகத் தொடங்கி உரைக்க. பின் இரண்டு அடிகளால் சீவன் வியாபக நிலையை எய்திப் போதனாவதற்குரிய இயைபு கூறப்பட்டது. அவற்றுள், ''அறிவாய் அறிவன், சீவனுமாகும்'' என்னும் பயனிலைகட்கு, 'சிவன் என்னும் எழுவாய் வருவிக்க. ''சீவனும் ஆகும்'' என்றதனால், 'அவ்வாறு ஆகின்றவன் சிவன்' என்பது தானே அமைந்தது. அலவன், கலுழன், கடுவன் முதலியனபோல, 'சீவன்' என்பது அஃறிணைப் பெயர். அவைகளைச் சுட்டிய "அவற்றினுள்" என்பது செய்யுளாகலின் முன் வந்தது. வேறு தொடராய் நிற்றலால் "நீங்கியவன், போதன்" என்பன திணை வழு ஆகாமை அறிக.*

*இதனால், சீவன் போதனாதற்குரிய இயல்பும், போதனார் நிலையது இயல்பும் கூறப்பட்டன.*

***1989. தெளிவுரை :-*** *'தத்துவங்கள் சடம்' என்று அறியாமல், அவைகளையே யானாக மயங்கிக் கிடந்த எனக்குச் சிவபிரான் தனது அருளைப் பற்றி நின்று அவ்வுண்மையை நான் உணர்ந்தபின் அவ்வாறு உணர்த்தியே அவன் தத்துவங் கட்கு அப்பாற்பட்டு நிற்றலையும் உணர்ந்தேன்.*

**1990.** சிவமா கியஅருள் நின்றறிந் தோரார்
அவமாம் மலம்ஐந்தும் அவதறியார்
தவமான செய்து தலைப்பறி கின்றார்
நவமான தத்துவம் நாடகி லாரே. 5

---

***குறிப்புரை :-*** *அதற்கு முன்னே, 'நான் தத்துவங்களின் வேறானவன்' என்பதை உணர்ந்தமை சொல்லவேண்டாவாயிற்று. இவ்வாற்றால் 'பாசம், பசு, பதி' என்னும் முப்பொருளின் இயல்புகளை உணர்ந்தமை போந்தது. 'இவ்வாறு உணரும் பொழுதே சீவன் போதனாம்' என்பது குறிப்பு.*

*அருளால் அறிதல், அருள்வழியாக அறிதலாம். அருளே 'பதிஞானம்' எனப்படுகின்றது. பாசஞான பசுஞானங்களின் நீங்கிப் பதிஞானத்தைப் பெற்று அது வழியாக எல்லாவற்றையும் அறிந்த வழியே உண்மை இனிது விளங்குவதாகும்.*

*"அருளால் எவையும் பார் என்றான்; அதை*
*அறியாதே சுட்டி அறிவாலே பார்த்தேன்*
*இருளான பொருள்கண்ட தல்லால், - கண்ட*
*என்னையும் கண்டிலன் என்னேடி தோழி"*

*என்றருளிய தாயுமான அடிகள் (ஆனந்தக் களிப்பு) வாக்கையும் நோக்குக.*

*"ஆறாறு" என்பது தொகைக் குறிப்பாய் அத்துணையான தத்துவங்களை உணர்த்திற்று. சொற்பொருட் பின் வருநிலையணி.*

*இதனால், 'போதமாவது இஃது' என்பது கூறப்பட்டது.*

***1990. தெளிவுரை :-*** *பிற ஆகமங்களிலன்றிச் சைவாகமங்களில் சொல்லப்படுகின்ற தத்துவங்களின் உயர்வை உணர்ந்து அவற்றைத் தெளிய மாட்டாதவர் சிவமுதற் பொருளையும், அதனது ஆற்றலின் சிறப்பையும் உணர்ந்து அதிலே பழகியறியார். அதனால் அவர் உயிர் பஞ்ச மலங்களால் போதம் இழந்து நிற்றலையும் உணர மாட்டார். பிற பிற சமய நூல்களில் எல்லாம் சொல்லப்படுகின்ற தவங்களைச் செய்து, தாம் அடைய வேண்டிய பயனை அடையாது இளைக்கின்றவராகின்றனர்.*

***குறிப்புரை :-*** *"சிவமாகிய அருள்" என்றதனை இரட்டுற மொழிந்து, 'சிவம்தான் அதுவாகிய அருள்' என்றும், தான் சிவமே ஆகிய அருள் என்றும் இரு பொருள் கொள்க. கொள்ளவே சிவமே அருளாயும், அருளே சிவமாயும் நிற்றல் பெறப்படும். "அறிந்து ஓரார்" தத்துவத்தை உணர்ந்தார்க்கல்லது. 'ஏனையோர்க்கு உணரவாராது' என்பதே முதல் அடியால் கூறப்பட்டது.*

*ஆன்ம லாபத்தை அடையவொட்டாமல் ஆன்மாவைத் தடுப்பனவாகிய*

**1991.** நாடொறும் ஈசன்நடத்து தொழில் உன்னார்
நாடொறும் ஈசன் நயந்தூட்டல் நாடிடார்
நாடொறும் ஈசன்நல் லோர்க்கருள் நல்கலால்
நாடொறும் நாடார்கள் நாள்வினை யாளரே. **6**

---

*மலங்கள் ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி - என ஐந்து உளவாதலையும் அவர் அறியமாட்டார். அதனால் அவற்றை நீக்குமாற்றினையும் அறிந்து அவ்வழியில் முயலார். பிற சமயங்களில் சொல்லப் பெறுகின்ற தவங்கள் சிவஞானத்தைப் பயவா ஆதலின் அவற்றைச் செய்வோர் சிவனது திருவருளை அடைதலாகிய தலையாய பயனை எய்தாது பிறவிக் குழியினின்றும் ஏறமாட்டாதராவர் என்பதாம். "தலைப்பறிகின்றார் என்றது தலைப்பறியை எய்துகின்றார்" என்றபடி. தலைப்பறி - தலைபோலும் முடிநிலைப் பயனை இழத்தல். நவம் - புதுமை. அது பிற நூல்களில் காணப்படாத சிறப்பினைக் குறித்தது. ஈற்றடியை முதலில் வைத்துப் பொருள் காண்க.*

*இதனால், போதராகாதாரது இயல்பு கூறும் எதிர் மறை முகத்தால் போதன் ஆமாறும், அதன் உயர்வும் கூறப்பட்டன.*

***1991. தெளிவுரை :-** நாளும் நாளும் தம்பால் நிகழ்வன யாவும் சிவ பெருமான் நிகழ்த்துவிக்க நிகழ்வனவே யாதலையும் ஊன்றியுணரார்; அங்ஙனம் அவன் நிகழ்த்துவித்தல் தாம் செய்த வினையின் பயன்களைத் தமக்குத் தனது அருள் காரணமாக ஊட்டுவித்தலேயாதலையும் கேட்டல் சிந்தித்தல்களின்வழி எண்ணிப்பாரார். சிவன் தனது அருளைத் தான் நேரே வழங்குதல் மேற்சொல்லிய உண்மைகளை ஆசிரியரது அருளால் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தவர்கட்கே என்பதையும் எண்ணமாட்டார். யார்எனில், நாள்தோறும் முன் மந்திரத்தில் கூறிய ஐம்பாசங்களின் வழியே உழைத்து நாட்களைக் கழிக்கின்றவர் என்க.*

***குறிப்புரை :-** "நல்லோர்" என்பதற்கு, 'கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர்' என மாதவச் சிவஞான யோகிகள் உரைத்ததனை (சிவஞான போதம், மங்கல வாழ்த்து) உன்னுக. சொற்பொருட் பின்வரு நிலையணி.*

*இதனுள், "வினை" என்றது ஐம்புல நுகர்ச்சிக்கு ஆவனவற்றைத் தேடலும் அவற்றை நுகர்தலுமே யாகலின் அதனை வெறுத்துக் கூறியதனால் வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டதாம்.*

## 32. ஐந்திந்திரியம் அடக்கும் அருமை

*இந்திரியம் - பொறி, அஃது 'அறிவுப்பொறி, செயற்பொறி' என இருவகைப்படும். அறிவுப் பொறி ஞானேந்திரியம். அவை, 'கண், காது, நாக்கு, மூக்கு, மெய்' என்பன. இங்கு "ஐந்திந்திரியம்" - என்றது இந்த ஞானேந்திரியங் களையே.*

*'இந்த இந்திரியங்களை அடக்குதல்' என்பது இவற்றின் வழி இவற்றிற்குரிய புலன்களின் மேல் உயிர்க்கு உண்டாகின்ற அவாவை அடக்குதலேயாகும். அப்புலன்கள், "கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியப்படுவனவாம். (திருக்குறள், 1101) அவாவாவது, நிரம்பாமை அஃது, "ஆரா இயற்கை அவா" (திருக்குறள், 370) என்றதனாலும் அறியப்படும் ஆர்தல் - நிரம்புதல். 'பெறாமையால் நிரம்பாமையும், பெற்றும் நிரம்பாமையும்' என நிரம்பாமை இரு வகைத்து, அவற்றுள் இங்கு கூறப்பட்ட நிரம்பாமை பின்னர்க் கூறியதேயாகும். இது நீங்காமைக்குக் காரணம் உயிர், 'தான் இதனை முயன்று நீக்கினாலன்றி இது தானாக நீங்காது' என்பதை அறியாமையேயாகும். அறியாமை ஞானத்தாலே நீங்கும். ஆகவே, அந்த அறிவிலேனும் ஞானத்தைப் பெறுதலில் உள்ள அருமையே ஐந்திந்திரியம் அடக்கும் முறை' எனப்பட்டது. இவ்விடத்தில், "பொறிவாயில் ஐந்தவித்தான்" (திருக்குறள், 6) என்னும் திருக்குறளுக்குப் பரிமேலழகர் உரைத்த உரையும் நோக்கற் பாலது. ஆன்மாவின் அறிவு, இச்சை வழிப்பட்ட மனம் செயற்பட அதனை இந்திரியங்கள் வழிச் செல்லாது அடக்குதலே இந்திரியம் அடக்குதல் எனப்பட்டது.*

*'போதன் ஆதற்கு இந்திரிய சயம் இன்றியமையாதது' என்பதனை உணர்த்துதற்கு, மேல் தோற்றுவாய் செய்யப்பட்ட அதனை இங்கு 'அடக்கம் அருமை, அடக்கும் முறைமை' என இரண்டாகப் பகுத்து, முதற்கண் அருமையை எட்டு மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**1992.** ஆக மதத்தன ஐந்து களிறுகள்
ஆக மதத்தறி யோடணை கின்றில
பாகனும் எய்த்தவை தாமும் இளைத்தபின்
யோகு திருந்துதல் ஒன்றறி யோமே. 1

---

*1992. தெளிவுரை :- இம்மந்திரம் ஒட்டணி. ஐந்து களிறுகள். ஐம்புலன்களின் மேல் செல்லும் ஐந்து அவாக்களையுடைய மனம் - மனம் ஒன்றாயினும் அவா வகையால் ஐந்தாயிற்று. ஆக மதத்தமை. மிகவும் மதம் கொண்டமை. அஃதாவது அவா மிக மிகுத்தமை. தறி - திருவருள். பாகன் - உயிர். அவன் எய்த்தமை - அந்த மனத்தை அவாக் கொள்ளாதவாறு தன் முயற்சியாலே தான் அடக்கி அடக்கிப் பார்த்து இயலாது இளைத்தமை. இனிக் களிறுகள் இளைத்தமை - மனம்தான் அவாவிய புலன்களை அடைந்து அடைந்து நிறைவுபெற விரும்பி, நிறைவு கூடாமையால் வெறுப்புற்றமை. இந்நிலையிலே அந்த மனம் திருத்தி*

**1993.** கருத்தின்நன் னூல்கற்றுக் கால்கொத்திப் பாகன்
திருத்தினும் பாய்மாத் திகைத்தன்றிப் பாயாது
எருத்துற ஏறி யிருக்கிலும் ஆங்கே
வருத்தினும் அம்மா வழிநட வாதே. 2

---

*நிறைவு பெறுதற்கு வழி சிவயோகத்தைத் தவிர வேறொன்றில்லாமை அறியப்பட்டது.*

***குறிப்புரை :-*** *மிக்க மதம் கொண்டனவாகிய யானைகள் ஐந்துள்ளன; அவை மேன்மேலும் பெருகுகின்ற அம்மதத்தால் கட்டுத்தறியோடு சென்றணைகின்றன இல்லை; அவற்றையடக்கமுயலும் பாகனும் இளைத்து, களிறுகளும் இளைத்த பின்பு யோகநெறியால் திருந்துதலன்றி வேறோருபாயம் இருப்பதாக அறிகின்றிலேம் என்றவாறு.*

*பொறிகள் ஐந்தும் தாமாக இளைத்துப்போனால் அவைகளை யோக நெறியால் அடக்கித் திருத்தலாம் என்பது கருத்து.*

*ஆகத்துட்டன் என்பதுபோல ஆகமதத்தன என்பது மிக்க மதத்தன என்ற பொருளில் வந்தது. ஐந்து களிறு என்றது ஐம்பொறிகளை. பொறிகளைக் களிறு என்றல் 'தொண்ட ரஞ்சு களிறும் அடக்கி' என்னும் திருக்கேதாரத் தேவாரத்தானும் 'உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்' என்ற திருக்குறட் குறிப்பானும் அறியலாம்.*

*'ஆக அம்மதத்தறியோடு அணைகின்றில' எனப் பிரிக்க. இயல்பாகவே மதங்கொண்ட களிறுகள் மேன்மேலும் பெருகுகின்ற அம்மதத்தால் தறியோடு அணைகின்றில என்க.*

*பாகன் என்றது ஆன்மாவை, ஆன்மா பொறிவழியோடி இளைக்க, யானைகளும் புலன்களைத் தின்று இளைக்கப் பின்புதான் யோகநெறியான் பொறிகளை வெல்லலாம் என்பதாம்.*

*யோகம் ஒன்றே பொறியடக்கும் உபாயம் என்று அறிவித்தவாறு.*

*கருத்தினன் னூல்கற்றுக் கால்கொத்திப் பாகன்*
*திருத்தலும் பாய்மாத் திகைத்தன்றிப் பாயா*
*எருத்துற வேறி யிருக்கலு மாங்கே*
*வருத்தினும் அம்மா வழிநட வாதே.*

***1993. தெளிவுரை :-*** *இதுவும் ஒட்டணி. அடங்காமையை ஐம்பொறி மேல் வைத்துக் கூறினும் அடங்காது ஓடுவது மனமே. ஓட்டத்தின் விளைவு குறித்து மனம் குதிரையாக உருவகிக்கப்படும். பாய்மா - குதிரை. குதிரையைப் போரின்கண் செயற்படுத்தும் வீரன் அதன் முதுகின் மேல் அமர்ந்துகொண்டு கால்களால்*

**1994.** புலம்ஐந்து புள்ஐந்து புள்சென்று மேயும்
நிலம் ஐந்து நீர்ஐந்து நீர்மையும் ஐந்து
குலம்ஒன்று கோல்கொண்டு மேய்ப்பான் ஒருவன்
உலமந்து போம்வழி ஒன்பது தானே. **3**

---

*குறிப்புத் தருவான். நல்ல குதிரைகள் அக்குறிப்பின் வழியே பாய்ந்து பாகனுக்கு வெற்றியை உண்டாக்கும். முரட்டுக் குதிரைகள் முரணி வேறுவழியிற் பாய்ந்து பாகனக்கு வீழ்ச்சியினைத் தரும். இங்கு "பாய் மா" என்றதை, 'குறிப்பிட்ட ஒரு பாய்மா' எனக் கொள்க. அது மனம். அதனைப் பிராணாயாமத்தால் அடக்குதல் கூடும். ஆகவே "கால்" என்றது சிலேடை வகையால் உவமையில் பாகனது கால்களையும், பொருளில் பிராண வாயுவையும் குறித்தது.*

*குறிப்புரை :-* கொத்துதல் - உட்செலுத்துதல். பாகன், ஆன்மா, அவன் யோகநூலைக் கருத்துடன் கற்று அதன்படி பிராணா யாமம்செய்து தாரணை நிலையில் நின்று அடக்கினாலும் அடங்காது ஓடுவதே மனத்தின் இயல்பு. உவமையில் 'நூல்' குதிரை செலுத்தும் நூல். 'எருத்தம்' ஈறு குறைந்து, "எருத்து" என நின்றது. எருத்தம் - பிடரி; இங்கு அது முதுகைக் குறித்தது. 'முதுகு' என்றது தாரணை நிலையை. திருத்துதல் - பிராணாயாமத்தினாலும், வருத்துதல், அஃதாவது அடக்குதல் தாரணையினாலும் என்றற்கு அவற்றைத் தனித் தனிக் கூறினார். திகைத்தல் - வேறு வழியில் செல்லுதல். வழி, நேர்வழி, அம் மா - மேற்குறிப்பிட்ட அந்தக் குதிரை. "திகைத்தன்றிப் பாயாது, வழி நடவாது" என்றவை, அடங்குதல் அரிதாதலையே குறித்தது.

இதனால், 'பொறி வழி ஓடும் மனத்தினை அடக்கி ஞான நெறியில் செலுத்துதல் யோகியர்க்கும் அரிது' என்பது கூறப்பட்டது.

*1994. **தெளிவுரை :-*** மேய்ப்புத் தொழில் செய்து பிழைக்கும் குலங்கள் ஆமேய்க்கும் குலம், எருமை மேய்க்கும் குலம், ஆடு மேய்க்கும் கலம், தாரா, கோழி முதலிய பறவைகள் மேய்க்கும் குலம் எனப் பலவகை உண்டு. அவற்றுள் பறவை மேய்க்கும் குலத்தில் இரங்கத்தக்க ஒரு குலம் உண்டு. அந்தக் குலத்தில் ஒருவனுக்கு ஒரு குடில். அந்தக் குடிலில் ஐந்து கூடுகள். அந்தக் கூடுகளில் உள்ள பறவைகளும் ஐந்து. அந்தப் பறவைகள் வெளியே மேயும் இடங்களும் ஐந்து. அந்த இடத்தில் மேய்கின்ற உணவுகளும் வேறு பட்ட ஐந்து. அந்த உணவுகளின் குணங்களும் வேறுபட்ட ஐந்து. இந்நிலையில் அந்த மேய்ப்பான் ஒருவன் அந்தப் பறவைகளை ஒரு வழியிற் செலுத்தி மேய்க்க வேண்டும். இது மாற்ற முடியாத ஓர் அமைப்பு முறை - அதனால் இந்த மேய்ப்புத் தொழிலில் வெற்றி பெற மாட்டாதார் பலர் மேற்குறித்த ஒரு குடிலில் ஒன்பது வாயில்கள் இருப்பதால் அந்த வாயில்களில் எந்த ஒன்றின் வழியாகவாவது யாருக்கும் தெரியாமல் ஓடி விடுகின்றார்கள்.

**1995.** அஞ்சுள சிங்கம் அடவியில் வாழ்வன
அஞ்சும்போய் மேய்ந்துதம் அஞ்சக மேபுகும்
அஞ்சின் உகிரும் எயிறும் அறுத்திட்டால்
எஞ்சா திறைவனை எய்தலும் ஆமே. **4**

---

***குறிப்புரை :–*** *இம்மந்திரம் பிசிச் செய்யுள். கூடு இங்கு, 'புலம்' எனப்பட்டது. அவை தத்துவங்களில் ஞானேந்திரியங்களாம். அவை புறநோக்குடைய மனத்திற்கு இடமாதல்பற்றி, 'புலம்' எனப்பட்டன. ஞானேந்திரியங்கள் 'புலம்' எனவும் படுதல் வழக்காதல் அறிக. புள் - பறவை, மனம். அஃது ஒன்றாயினும் மேற்குறித்த இடச்சார்பு பற்றி ஐந்தாகின்றது. நிலம் - மனம் பொறிவழியாகச் சென்று பற்றும் பொருள். "ஐந்து" என்றது, 'ஐந்து வகை' என்றபடி. மேய்க்கப்படும் பறவைகள் நீரை விரும்புதல் பெரும்பான்மையாதல் பற்றி உணவு "நீர்" எனப்பட்டது. அவை அப்பொருள்களில் பொறிவழியாகக் கவரப்படும் உரு, ஊறு, நாற்றம், சுவை, ஓசை என்பன. நீர்மை - குணம். அவை நுகர்வாரது தன்மைக்கு ஏற்பப் பெரிதும் சிறிதுமாக அவரது அறிவையழித்தல். "கொண்டு" என்பதை, "குலம் ஒன்று" என்பதனோடும் கூட்டுக. "ஒருவன்" என்பதன்பின் "இது நிலைமை" என்னும் இசையெச்சம் வருவிக்க. உலமருதல் - உழன்று எய்த்தல். 'உலமந்தவழி' என்பது 'உலமந்து' எனத் திரிந்து நின்றது. "போம் வழி ஒன்பது" என்றதனால், 'எந்த வழியாலாவது புறப்பட்டுப் போதல் எளிது' என்றபடி, வழி - வாயில், வாயிலைக் கூறவே, 'அவை உள்ளது குடிலில்' என்பது தானே பெறப்பட்டது. 'அஃது உடம்பு' என்க. "ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்" (தி.6 ப.99 பா.1) என அப்பரும் அருளிச் செய்தார்.*

*இதனால், ஐந்திரியங்கள் அடக்குதற்கு அரியனவாயுள்ள இயல்பினை விளக்கி, அதனால் அடக்க முயன்றோர் பலரது நிலையை எடுத்துக் கூறப்பட்டது.*

***1995. தெளிவுரை :–*** *இம்மந்திரமும் பிசிச் செய்யுளே, முன் மந்திரங்களில் களிறுகளாகவும், குதிரைகளாகவும், பறவைகளாகவும் குறிக்கப்பட்ட புலனடக்கம் இல்லாத மனம் இம்மந்திரத்தில் அதனது அடங்காமையின் மிகுதி இனிது விளங்குமாறு சிங்கமாகக் குறிக்கப்பட்டது. காட்டில் வாழ்வனவாகிய சிங்கங்கள் ஐந்துள்ளன. அந்த அஞ்சு சிங்கங்களும் தம் விருப்பம் போலச் சென்று மேய்ந்துவிட்டு தனித்தனியே அஞ்சு வீட்டில் அடங்குவனவாம். அச்சிங்கங்களின் பல்லையும், நகத்தையும் நீக்கி விட்டால் தவறாது இறைவனை அடையலாம் என்றவாறு. அடவி - வேறுபட்ட பல பெருமரங்கள் செறிந்த காடு. அது 'நல்லன, தீயன' எனப் பெரும்பான்மையாக இருவகைப்பட்டு, அவற்றுள் எண்ணிலவாய் விளையும் வினைகளைக் குறித்தது. நல்வினை, பயன்மரம், தீவினை, நச்சுமரம்; வாய்ப்பு உள்ள பொழுது சென்று ஐம்புலன்களை நுகர்கின்ற மனம் வாய்ப்பு இல்லாதபொழுதும் அவற்றையே நாடுதல் பற்றி "அஞ்சு அகமே புகும்" என்றார்.*

**1996.** ஐவர் அமைச்சருள் தொண்ணூற் றறுவர்கள்
ஐவர்உம் மைந்தரும் ஆளக் கருதுவர்
ஐவரும் ஐந்து சினத்தோட நின்றிடில்
ஐவர்க் கிறையிறுத் தாற்றகி லோமே. **5**

---

***குறிப்புரை :-*** *அஞ்சு - பொறிகள். சிங்கங்கட்கு உகிர் (நகம்) உண்டற்குரிய விலங்குகளை இறுகப் பற்றுதற்கும், எயிறு (பல்) அவ்விலங்கின் தசைகளை உண்டு சுவைத்தற்கும் உதவுவன. எனவே, 'அவற்றை அறுத்தல்' என்பது மனத்திற்குப் பொருள்களின் மேல் உளதாய பற்றினையும், அவற்றை நுகர்தற்கண் உளதாய ஈடுபாட்டினையும் நீக்குதலாயிற்று. 'நீக்குதற்குக் கருவி சிவயோக சிவஞானங்கள் என்பது மேல்பல இடங்களில் கூறப்பட்டது. ''அறுத்திட்டார்'' எனவே, "அறுத்திடல் மிக அரிது" என்பது விளங்கிற்று. நகமும், பல்லும் போயபின் காட்டில் வாழும் சிங்கங்கள் அங்குச் சென்றோரை அப்பாற் போகவிடாமல் மறித்துக் கொன்றொழிக்க மாட்டா. அதனால் அவர் அக்காட்டைக் கடந்து இன்புறலாம் என்பது பற்றி, "அறுத்திட்டால் - எஞ்சாது இறைவனை எய்தலும் ஆகும்" என்றார். உகிர் - நகம். எயிறு - பல்.*

*இதனால், 'ஐந்திந்திரியங்களை அடக்குதல் செயற்கருஞ் செயல் என்பதும், 'ஆயினும் அதனைச் செய்தார் அடையும் பயன் பெரிது' என்பதும் கூறப்பட்டன.*

***1996. தெளிவுரை :-*** *அரசராகிய நம்மில் ஒவ்வொருவருக்கும் ஐவர் அமைச்சர் உள்ளிட்ட தொண்ணூற்று பேர் வல்லுநர் பணியாளராய் உள்ளனர். அவர்கள் நமக்கு அடங்கிப் பணி புரியாமல் ஒவ்வொருவரும் தனித்தனியே நம்மை ஆள விரும்புகின்றனர். எனினும் ஐவர் அமைச்சரே நம்மை ஆள்வதில் வெற்றி காண்கின்றனர். அந்த ஐவருக்குள்ளேயும் ஒற்றுமையில்லை. அதனால் அவரவரும் ஒவ்வொரு நோக்கத்தோடு நம்மை ஆள முயல்கின்றனர். அவர் முயற்சி அவ்வாறு இருக்குமாயின், அவர்கட்கு வரிசெலுத்தி நாம் எவ்வளவு நிறைவு செய்ய இயலும்!*

***குறிப்புரை :-*** *'இயலாது; ஆகவே அவர் அனைவரையும் அடக்கிப் பணிய வைத்தலே தக்கது' என்பது குறிப்பெச்சம். ஐவர் அமைச்சராவார் ஐம்பொறிகள். தொண்ணூற்றறுவர் அப்பொறிகள் உள்ளிட்ட தத்துவ தாத்துவிகங்கள். 'உள்ளிட்டு' என்பது, 'உள்' எனக் குறைந்து நின்றது. நோக்கம் நிறைவேறாத பொழுது சினம் உண்டாகும். ஆகையால் நோக்கத்தை, 'சினம்' என்றது காரிய ஆகுபெயர். இறை - வரி; என்றது, சுவை, மணம் முதலிய புலன்களாய் உள்ள பொருள்களை, 'அவற்றைப் பலகால் நுகரினும் நிரம்பாது மீள மீள அவாவே உண்டாதலின் நுகராது அடக்குதலே தக்கது' என்பது கருத்து.*

> *அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை, விடல்வேண்டும்*
> *வேண்டிய எல்லாம் ஒருங்கு. - திருக்குறள், 343*

*என்றே திருவள்ளுவரும் அருளினார். இறை - கப்பம். அவ்விந்திரியங்களுக்கு*

**1997.** சொல்லகில் லேன்சுடர்ச் சோதியை நாடொறும்
சொல்லகில் லேன்திரு மங்கையும் அங்குள
வெல்லகில் லேன்புலன் ஐந்துடன் தன்னையும்
கொல்லநின் றோடும் குதிரையொத் தேனே. **6**

---

*வேண்டிய புகழ்ச்சி மாலை, மாதர் முதலியன.*

*மைந்து வலிமையாதலின், "மைந்தர்" என்றது, 'வலியர்' என்றபடி, அதனால் அவற்றை அடக்குதல் அருமை குறிக்கப்பட்டது. "ஐவர் உம் மைந்தர்" என்பதில் உகரம் சுட்டெழுத்து.*

*இதனால், 'ஐந்திந்திரியங்களை வருந்தியாயினும் அடக்குதல் வேண்டுமன்றி, அடங்காது அவற்றின் வழிச் செல்லுதல் தகாது, என்பது கூறப்பட்டது'.*

***1997. தெளிவுரை :-** "துஞ்சும் போதும் சுடர்விடும் சோதியாய், (தி.5 ப.93 பா.8) உள்ள இறைவனையும், அவனோடே நீக்கமின்றியிருக்கின்ற இறைவியையும், நாள்தோறும் ஒழிவின்றி மந்திர மொழியாலும், சோத்திரப் பாடல்களாயும் சொல்லக் கடவேனாகிய யான் அங்ஙனம் செய்ய மாட்டாதவனாய் நிற்கின்றேன். அதனால் அங்ஙனம் மாட்டாதாரிடத்து வளர்வனாகிய ஐம்புல ஆசைகளையும், அதனை உடைத்தாகின்ற மனத்தையும் அடக்கும் வலியிலேனாகின்றேன் அதனால், தன்மேல் இருப்பவனைக் குழியில் வீழ்த்திக் கொல்லவே நினைத்து வேகமாகப் பாய்ந்து ஓடுகின்ற குதிரையை அடக்க மாட்டாது விழிப்பவன் போலத் திகைக்கின்றேன்".*

***குறிப்புரை :-** இரண்டாவது அடியில் வந்த "சொல்லகில்லேன்" என்பது சொற்பொருட் பின்வருநிலையணி. 'மங்கையையும்' என்னும் இரண்டன் உருபு தொகுத்தலாயிற்று. "வெல்லகில்லேன்" என்பதை மூன்றாம் அடியின் இறுதியிற் கூட்டுக. "தன்னை" என்றது மனத்தை, ஐம்புலன்களை வெல்லுதல் அவற்றின்மேல் அவாக்கொள்ளாதவாறு அடக்குதலும், மனத்தை அடக்குதலாவது அதனைப் புறத்துப்போக விடாது அகத்தே நிற்கச் செய்தலும் ஆகும். 'இவ்விரண்டும் கைகூடுதற்கு உபாயம் இறைவனை இறைவியோடு தியானித்துத் துதித்தலே' என்றற்கு 'அவற்றை நான் செய்ய மாட்டாதவனாய் இருக்கின்றேன்' என்றார். மாட்டாமை பரிபாகம் இன்மையால் உளதாவது, 'இத்தகையோரிடத்து ஐம்புல ஆசை வளர்தல் இயல்பே' என்றற்கு, ''அங்குள புலன் ஐந்து'' என்றார். 'குதிரையோடு' என ஒடு உருபு விரிக்க. "ஒத்தேன்" என்றது, அதனை மாற்றிச் செலுத்த வகையறியாது, 'அதன் வழியிலே நிற்கின்றேன்' என்றதாம்.*

*இதனால், 'ஐம்புலனை அடக்கும் உபாயம் இது' என்பது அனுவாத முகத்தாற்கூறி, 'பரிபாகம் இல்லார்க்கு அவ்வுபாயத்தைச் செய்தல் அரிது' என்பது கூறப்பட்டது.*

**1998.** எண்ணிலி இல்லி யுடைத்தவ் விருட்டறை
எண்ணிலி இல்லியோ டேகிற் பிழைதரும்
எண்ணிலி இல்லியோ டேகாமை காக்குமேல்
எண்ணிலி இல்லத்தோர் இன்பம தாமே. 7

**1999.** விதியின் பெருவலி வேலைசூழ் வையம்
துதியின் பெருவலி தொல்வான் உலகம்
மதியின் பெருவலி மானுடர் வாழ்க்கை
நிதியின் பெருவலி நீர்வலி தானே. 8

---

***1998. தெளிவுரை :-*** *ஒரு தலைவன் எனக்கென ஓர் அறையை ஈந்துள்ளான். (தலைவன் - பிரமன். அறை - உடம்பு) அதில் உள்ள பொத்தல்களோ அளவில்லன. (மயிர்க்கால்கள்) ஆயினும் அந்த அறைக்குள்ளே சிறிதே ஒளிபுகாது இருட்டிக் கிடப்பது வியப்பைத் தருகின்றது. (ஞானம் உடம்பு வழியாக வாராமை தெளிவு). இந்த இருட்டறையிலேதான் என்னுடைய காலமெல்லாம்போய் ஆக வேண்டும் என்றால், அஃது எத்துணைத் துன்பத்தைத் தரும் என்பது சொல்ல வேண்டுவதில்லை. ஆயினும் இறைவன் என்னை அவ்வறையிற்றானேயிருந்து காலந் தள்ளாமல் காக்கத் திருவுளம் பற்றுவானாயின், உடனே எனக்கு அளவுட்படாத கலத்தையுடைய ஒரு பெரிய மாளிகையைத் தரின் ஒப்பற்ற பெரியதோர் இன்பம் கிடைத்துவிடும். (அம்மாளிகை வியாபகப் பொருளாகிய திருவருள். இன்பம், சிவானந்தம்).*

***குறிப்புரை :-*** *'திருவுளம் பற்றுவானா' என்பது குறிப்பெச்சம். "அவ்விருட்டறை" எனச் சுட்டிக் கூறினமையால், 'அஃது ஒருவனால் தரப்பட்டது' என்பது பெறப்பட்டது. "அறை" என்றார். எண்சாண் நீளமும் இருசாண் அகலமுமே உடைமையின், ஏகுதல் - செல்லுதல், காலம் போக்குதல், "பீழை" என்பது குறுகி நின்றது. மூன்றாம் அடியில் "இல்லி" என்றது ஆகுபெயராய் அவற்றையுடைய அறையைக் குறித்தது. 'காத்தல்' என்பது அதன் காரணம் உணர நின்றது.*

*இதனால், 'ஐந்திரியத்தை அடக்குதற்குத் திருவருள் துணை புரிய வேண்டும்' என்பது கூறி அத்துணை கிடைத்தல் அருமையாதலின் ஐந்திரியங்களை அடக்குதலும் அருமையாதல் கூறப்பட்டது. திருவருள் துணை கிடைத்தலின் அருமை முன் மந்திரத்தில் கூறியவாற்றால் இனிது விளங்கும்.*

***1999. தெளிவுரை :-*** *உலகில் அறத்திற்கும் இன்பத்திற்கும் காரணமாய் உள்ள பொருளின் வலிமைக்குக் காரணம் மழையின் வலிமையே யாகும். அதுபோல, கடல் சூழ்ந்த நிலவுலகில் உள்ள அனைத்துயிர்களின் வாழ்க்கை பலி அயன் விதித்த விதியின் வலிமையும், அவ்வுயிர்களுள் மக்கள் உயிர்களின் வாழ்க்கை வலிமைக்குக் காரணம் அவர்களது ஆறாவது அறிவின் வலிமையும், சுவர்க்க*

*லோகத்தவரது வாழ்க்கையின் வலிமைக்குக் காரணம் அவர்கள் இந்நிலவுலகில் செய்த பல தெய்வ வழிபாடுகளின் வலிமையும், சிவலோகத்தவரது வாழ்க்கையின் வலிமைக்குக் காரணம் அவர்கள் இந்நிலவுலகில் செய்த சிவவழிபாட்டின் வலிமையுமாகும். விதி, நிதி முதலியவற்றின் வலிமையால் இவ்வுலக வாழ்வு அமைவது போல, இறைவனது புகழைப் பாடுதலால் அமைவது வீடென விளக்கப்பட்டது.*

***குறிப்புரை :-** ஆகவே 'ஐந்திரியங்களை அடக்கியொழுகி அதனால் சிவலோகத்தை அடைதற்கு வழி சிவ வழிபாடேயாம்' என்பது கருத்து. ஈற்றடி எடுத்துக்காட்டுவமை யாதலின் அதனை முதற்கண் கூட்டியுரைக்க. "நீரின்று அமையாது உலகு எனின் அந்நீர் வான்இன்று அமையாதது" (திருக்குறள், 20) பற்றி, "நீர்" என்பதற்கு 'மழை' எனப் பொருள் உரைக்கப்பட்டது. "விதியை மதியால் வெல்லலாம்" என்பது உலக மொழியும் (பழமொழி) 'ஊழையும் உட்பக்கம் காண்பர், உலைவின்றித் தாழா துஞற்று பவர்' என்பது ஆசிரிய மொழியும் (திருக்குறள், 620) ஆகையால், "மானுடர் வாழ்க்கைக்குக் காரணம் மதியின் பெருவலி" என்றார். "வானுலகம்" என்பதை 'விண்ணுலகம்' எனவும், 'மேலான உலகம்' எனவும் இரட்டுற மொழிந்து கொள்க. ஐந்திரியங்களை அடக்கிப் பெறும் பயன் கூறுவார், அவற்றை அடக்காதோர் பெறும் பயனையும் உடன் கூறினார். அடக்கிப் பெறும் பயனது சிறப்பு விளங்குதற்கு, "துதி" என்றது உபலக்கணம். 'நதியின் பெருவலி நார்வலி தானே' எனப் பாடம் ஓதி, 'நாரம்' என்பது அம்முக் குறைந்து நின்றது எனினும் ஆம். துதி - இறைவனது பொருள் சேர்ந்த புகழ்.*

*இதனால், முன் மந்திரத்தில் கூறிய பொருள் உவமை முதலியவற்றால் நன்கு வலியுறுத்தப்பட்டது. பொறிகளின் வழியடிமையாதலை விடுத்து, சிவத் தோத்திரம் செய்து சிவபெருமானுக்கு அடிமையாக வேண்டும். அப்போது நிலைத்த இன்பம் கிடைக்கும் என்பதை வலியுறுத்துகிறார்.*

## 33. ஐந்திந்திரியம் அடக்கும் முறைமை

*அடக்கும் அருமையை முன்னதிகாரத்தில் கூறிவிட்டு இனி இரண்டாவதாக ஐந்திந்திரியங்களை அடக்கும் முறைமையைப் பதின்மூன்று மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**2000.** **குட்டம் ஒருமுழம் உள்ளது அரைமுழம்**
**வட்டம் அமைந்ததோர் வாவியுள் வாழ்வன**
**பட்டன மீன்கள் பரதன் வலைகொணர்ந்து**
**இட்டனன் யாம்இனி ஏதம் இலோமே.** **1**

---

*2000. **தெளிவுரை :-** ஒவ்வொரு மனித உயிரையும் ஒவ்வொரு நீர்வாழ் உயிராகக் கருதினால் அவ்வுயிர் வாழ்வதற்கு உள்ள குளமும் ஒருசாண் குறுக்களவுடைய வட்ட வடிவினதாய்த் தோன்றும். எனவே அதன் ஆழமும் ஒரு சாணளவே உள்ளதாக மதிக்கப்படும். ஆயினும் அவ்வாறின்றி ஒரு சாணுக்குமேல் கூடுதலாக ஒரு முழ ஆழம் உள்ளது. (குளம் - முகம். ஆழம் கழுத்திற்குக் கீழ் மூலாதாரம் வரை உள்ள இடம்). மேற்குறித்த குளத்தில் ஐந்து கொடிய மீன்கள் உள்ளன. அவை அந்நீர் வாழ் உயிரை அமைதியாக வாழ விடாமல் அலைக்கழிப்பன. மீன்கள், (ஐம்பொறிகள்) இந்த நிலைமை எமக்குந்தான் உள்ளது. இதனை அறிந்த ஓர் வலைஞன் எம்மிடத்தில் இரக்கங்கொண்டு வலையைக் கொணர்ந்து வீசினான். மீன்கள் தப்ப முடியாமல் அவ்வலையில் அகப்பட, வலைஞன் அவைகளைத் தான் எடுத்துக் கொண்டான். (சிவன் கருணை கூர்ந்து தனது சத்தியைச் செலுத்தி எமது ஐம்பொறிகளைத் தன்னையே பற்றியிருக்கச் செய்தான்). அதனால் யாம் துயர் ஒழிந்தோம்.*

***குறிப்புரை :-** மீன்கள் - ஞானேந்திரியங்களாகிய ஐம்பொறிகள். எனவே, ஐந்திரியங்களை அடக்குதற்கு இறைவனது திருவருளைப் பற்றி நிற்றலே வழி என்றதாயிற்று. "வட்டம்" என்பதன் பின் 'ஆய்' என்பது வருவிக்க. ஐம்பொறிகளும் அமைந்த உறுப்பு முகம் ஆகையால் அதனையே மனித உயிர்க்கு இடமாகக் கூறினார். எனினும் ஏனைய பகுதிகளை, 'குட்டம்' என்பதனால் தழுவினார். குட்டம் - ஆழம். 'பரதவன்' என்பது இடைக் குறைந்து நின்றது. பரவன் - செம்படவனாகிய சிவன். அவனது சிறப்புணர்த்தும் 'ஓர்' என்பது ஆற்றலால் வந்து இயைந்தது. 'இடுதல்' அதன் காரியம் தோன்ற நின்றது. ஏதம் - துன்பம்.*

*இதனால், 'ஐந்திந்திரியங்களை அடக்கும் முறைகளுள் நேரிதாவது' இது என்பது கூறப்பட்டது.*

*2001. **தெளிவுரை :-** நாம் நடத்தினால் நடந்து, கிடத்தினால் கிடப்பதாகிய உடம்பை நம்விருப்பத்தின் படியே நடத்திட ஒட்டாது, அதினின்றும் எழுகின்ற ஐந்து இந்திரியங்களும் கிளர்ச்சி செய்கின்றன. அக்கிளர்ச்சியை அடக்குபவனே*

**2001.** கிடக்கும் உடலில் கிளர்இந் திரியம்
அடக்க லுறுமவன் றானே அமரன்
விடக்கிரண் டின்புற மேவுறு சிந்தை
நடக்கில் நடக்கும் நடக்கு மளவே. **2**

---

மனிதருள் தேவனாவான். அவ்வாறின்றி, அக்கிளர்ச்சியின் வழிப்பட்டு நமது உடம்பாகிய ஒரு மாமிச பிண்டத்துடன் இன்னொரு மாமிச பிண்டத்தை அணைத்து இன்பம் அடைய விரும்பவனவாய் உள்ளன நமது மனங்கள். அந்த மனத்தின் வழியே நாம் நடந்து கொண்டிருந்தால் நமது உடம்புகள் அவற்றிற்கு வரையறுத்த நாள் வரையில் நடந்து பின்பு வீழ்ந்துவிடும்.

*குறிப்புரை :-* *'பின்பு நாம் பெறுவது யாது' என்பது குறிப்பெச்சம். 'எனவே, உடம்பு நடக்கும் காலத்திலே மனத்தை அடக்கி அது வழியாக இந்திரியங்களையும் அடக்கிப் பயன் எய்துதல் வேண்டும்' என்பதாம். 'அப்பயன் அமரராதல்' என்பது கூறப்பட்டது. "அடக்கம் அமரருள் உய்க்கும்" (திருக்குறள், 121) என்று அருளினமை காண்க. உயிருள்ள உடம்பை "விடக்கு" என்றார். அதனது இழிவு தோன்றுதற்கு, எனவே, 'அதனால் வரும் இன்பம் அருவருப் புடையது' என்பதாம். விடக்கு, மாமிசம். மற்றொரு விடக்காவது ஆணுக்குப் பெண்ணும், பெண்ணுக்கு ஆணுமாம். கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலன்களையும் ஒருங்கேயுடைத்தாயது இணை விழைச்சு இன்பமாகலின், (திருக்குறள், 1101) அதனையே விலக்கினார். விலக்கவே ஏனை இன்பங்கள் தாமே விலக்குண்டன. "சிந்தை" என்பதற்குப் பின், 'பின்' என்பது வருவிக்க. "நடக்கும்" என்னும் பயனிலையை இறுதியிற் கூட்டி, அதற்கு, 'அவ்விடக்கு' என எழுவாய் வருவிக்க. "நடக்கு மளவும்" என்பதற்கு உண்மைக் காரணமாகாத உயிர்ப்பினை எழுவாயாக இயைபின்றி வருவிப்பாரும் உளர்.*

*இதனால், 'உடம்புள்ள பொழுதே இந்திரியங்களை அடக்க உயர்நிலை பெறல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

*2002.* ***தெளிவுரை :-*** *'ஐம்பொறிகளையும் அடக்குதல்' என்பதற்கு, 'அவற்றைக் கெடுத்தல்' எனப் பொருள் செய்து, 'அவற்றை அடக்கு, அடக்கு' என மாணாக்கர்க்கு வலியுறுத்திக் கூறும் ஆசிரியர் உண்மை ஞானாசிரியர் ஆகார். ஏனெனில் அவ்வாறு அடக்கி உயர்நிலை பெற்றவர் வானுலகத்திலும் இல்லை. அதற்குக் காரணம் ஐம்பொறிகளைக் கெடுத்தொழித்தால் அவற்றால் அறிந்துவருகின்ற ஆன்மா அறிவற்ற சடம்போல் ஆகிவிடும். அதனையறிந்து யான் அவற்றைக்* கெடுத்திடாது செயற்பட வைத்தே பெறுகின்ற ஞானத்தை அறிந்தேன்.

*குறிப்புரை :- அந்த ஞானமாவது அவற்றை மனம் சென்றவழிச் செல்லவிடாது, அருளாசிரியர் அறிவுறுத்திய வழியில் செல்லச் செய்தலாம்.*

**2002.** அஞ்சும் அடக்கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கில்லை
அஞ்சும் அடக்கில் அசேதன மாம்என்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவறிந் தேனே. **3**

**2003.** முழக்கி எழுவன மும்மத வேழம்
அடக்க அறிவென்னும் தோட்டியை வைத்தேன்
பிழைத்தன ஓடிப் பெருங்கேடு மண்டிக்
கொழுத்தன வேழம் குலைக்கின்ற வாறே. **4**

---

*அருளாசிரியர் அறிவுறுத்தல் பின்வருமாறு அமையும்.*

*"ஆமாத்தூர் அம்மானைக்*
*காணாத கண்ணெல்லாம் காணாத கண்களே" - தி.2 ப.44 பா.4*

*"ஆமாத்தூர் அம்மானைக்*
*கூறாத நாவெல்லாம் கூறாத நாக்களே" - தி.2 ப.44 பா.7*

*"ஆமாத்தூர் அம்மானைக்*
*கேளாச் செவியெல்லாம் கேளாச் செவிகளே" - தி.2 ப.44 பா.8*

*"கண்காள் காண்மின்களோ - கடல்*
*நஞ்சுண்ட கண்டன் தன்னை" - தி.4 ப.9 பா.2*

*"செவிகாள் கேண்மின்களோ - சிவன்*
*எம்மிறை செம்பவள*
*எரிபோல் மேனிப் பிரான்திறம் எப்போதும்*
*செவிகாள் கேண்மின்களோ" - தி.4 ப.9 பா.3*

*"வாயே வாழ்த்து கண்டாய் - மத*
*யானை யுரிபோர்த்துப்*
*பேய்வாழ் காட்டகத் தோடும் பிரான்தன்னை*
*வாயே வாழ்த்து கண்டாய்" - தி.4 ப.9 பா.5*

*இம்மந்திரம் சொற்பொருட் பின்வருநிலையணியாய் வந்தது.*

*இதனால், ஐந்திந்திரியங்களை அடக்குதல் பற்றிய தவறாம் முறைமையை விலக்கி, நேரிய முறைமை தெரித்துணர்த்தப்பட்டது.*

*2003. தெளிவுரை :- ஐந்திந்திரியங்களாகிய மத யானைகள் தறியில் கட்டுண்ணாது பிளிறிக்கொண்டு தாம் நினைத்தபடி செல்லும் இயல்புடையன. அதையறிந்து நான் அவைகளை அடக்கி நேரிய வழியில் செலுத்துதற் பொருட்டு ஞானமாகிய அங்குசத்தைப் பயன்படுத்தினேன். எனினும் அவைகள் அதையும்*

**2004.** ஐந்தில் ஒடுங்கில் அகலிட மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருந்தவ மாவது
ஐந்தில் ஒடுங்கில் அரன்பத மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருளுடை யாரே. **5**

---

*மீறித் தம் விருப்பப்படி ஓடித் தமக்கு விருப்பமான உணவை அளவு கடந்து உண்டு, அதனால் மேலும் மதம் மிகுந்து தீய குணத்தை மிக அடைந்து என்னை நிலைகுலையச் செய்யுமாறு செய்து கொண்டிருக்கின்றன.*

***குறிப்புரை :-*** *'அந்நிலை சொல்லுக் கடங்காது' என்பது குறிப்பெச்சம். 'ஐந்திந்திரியமாகிய வேழம்' என்பது அதிகாரத்தால் வந்து இயைந்தது. இல்லையேல், வேழம் எனப்பட்டன யாவை என்பது விளங்காமை யறிக. "உரன் என்னும் தோட்டியால் ஓர் ஐந்தும் காப்பான்" (திருக்குறள், 24) என இவ்வாறு வருதலே மரபாகலின், அறிவென்னும் கோட்டையை வைத்தேன் என்பது பாடமாகாது. 'அறிவென்னும் தோட்டியை வைத்தேன்' என்பதே பாடம் என்க. அறிவு, ஞானாசிரியரால் அருளப்பட்ட அறிவென்க. அந்த அறிவு முதிர்ந்து முறுகாமையால் கூர்மை செய்யப் பெறாத தோட்டி போல் ஆய்விட, யானைகள் அதற்கு அடங்காது ஓடின என்க. இவ் யானைகட்கு உணவாவன அவற்றிற்குரிய புலன்கள். அவற்றை உண்ணுந்தோறும் அவாவே மேன்மேல் எழுதலால் "கொழுத்தன" என்றார். பின் வந்த "வேழம்" என்பது, 'அவை' என்னும் சுட்டுப் பெயரளவாய் நின்றது. "பெருங்கேடு மண்டி" என்பதைப் பின்வந்த "வேழம்" என்பதன் பின்னர்க் கூட்டியுரைக்க. "கேடு" என்றது கேடு பயக்கும குணத்தை, பாட்டின் இறுதியில், 'பெரிது' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது.*

*இதனால், 'அருளாசிரியர் அறிவுறுத்தவழியால் ஐந்திந்திரியங்களை அடக்க மாட்டாது புறக்கணிப்பாய் இருப்பின் அவற்றால் பெருங்கேடு விளையும்' என்பது கூறப்பட்டது.*

***2004. தெளிவுரை :-*** *இந்திரியங்களாகிய யானைகள் ஐந்தும் மதம் பிடித்துத் திரியாமல் ஆன்ம அறிவாகிய கூடத்திற்குள்ளே அடங்கியிருக்குமாயின் அதுவே அறம், தவம், இறையுலகப் பேறு, ஞானம் எல்லாமாம்.*

***குறிப்புரை :-*** *பொறிகளை புறம்போகாதடக்கித் திருவைந்தெழுத்தையே எண்ணுக என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

*திருவைந்தெழுத்தில் பொறிகள் அடங்கின் உலகம் அனைத்தும் தம்வசமாம்; அருந்தவமாம்; பெரிய பெருமானுடைய திருவடிப் பேறும் திருவருட் பேறுமாம் என்றவாறு.*

*பொறிகளின் வழி மனம் போகாது நிறுத்தத் திருவைந்தெழுத்தை எண்ணின் பொறிகள் அடங்கும். அதனால் இம்மையில் உலக வசியமும்*

**2005.** பெருக்கப் பிதற்றிலென் பேய்த்தேர் நினைந்தென்
விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம்
பெருக்கிற் பெருக்கும் சுருக்கிற் சுருக்கும்
அருத்தமும் அத்தனை ஆய்ந்துகொள்வார்க்கே. **6**

---

*மறுமைக்கு வேண்டிய தவமும் திருவடிப்பேறும் திருவருட்பேறும் உண்டாம் என்பது கருத்து.*

*ஐந்து - சீபஞ்சாக்கரம். சீபஞ்சாக்காரத்தால் பொறிகள் ஒடுங்குமாறு; சத்தம் ஆகாயத்தின் குணம். அது பராகாய ஞானாகாய வடிவான சிகாரத்தால் ஒடுங்கும்; எனவே காது சிவ ஒலியைச் சூக்குமமாக உணர்ந்து சிவஞானத்தில் திளைக்கும் என்பதாம்.*

*ஸ்பரிசம் வாயுவின் குணம். வாயு ஆகாயம்போல அருவாய், ஆகாயத்தை விட்டுப் பிரியாததாய் ஆன்மாக்களுக்குத் தாரகமாய் இருப்பது. ஆகாயமும் வாயுவும் தம்முள் என்றும் பிரிப்பற்றன சிவமும் சத்தியும் போல; ஆதலின் ஸ்பரிச குணமுடைய உடலிந்திரியம் திருவருட் சத்தியாகிற வகாரத்தால் ஒடுங்கும். எல்லாம் அம்மையப்பராகிய சிகார வகாரங்களாகக் காணும் ஆற்றலை அளிக்கும்.*

*உருவம் தேயுவின் குணம். தேயு ஒளியாய்ப் பொருளை உணர்த்தியும், பொருளை உணர்ந்தும் விளங்குவது அது கண்ணிந்திரியம் காரியம் உருவம். அப்பொறி காண்பதும் காட்டுவதுமாய செயல்புரியும். உயிர் எழுத்தாகிய யகாரத்தால் அடங்கும்.*

*இரதம் நீரின் குணம். சுவை பொருளைப் பற்றி நிற்கும் பண்பு. அது பற்றி நிற்கும் பொருளைக் கொண்டல்லது அதனை அறியமுடியாது. அதுபோல ஆணவமலம் அது பற்றி நிற்கும் ஆன்மாவின் செயலாலன்றி அதன் உண்மை அறியப்படாது. ஆதலால் இரதத்தை உணரும் பொறியாகிய நா மல எழுத்தாகிய நகாரத்தாலொடுங்கும்.*

*கந்தம் - மணம். அது பூமியின் குணம். பிருதிவி மாயா காரியம். அது 'ம' என்னும் எழுத்தால் ஒடுங்கும். ஆகவே நுண்பொறிகள் ஐந்தும் திருவைந்தெழுத்தால் புறம் போய் மலகன்மங்களிற் சிக்கி மடியாதவண்ணம் ஒடுங்கச் செய்வன ஐந்தெழுத்துக்களே என இந்திரியம் அடக்கும் முறைமை உணர்த்தியவாறு.*

***2005. தெளிவுரை :-*** **'உலகம் நிலையற்றது' என்பதைக் கூறும் நூல்களைப் பலவாக எடுத்துச் சொல்லி, அவற்றின் பொருளையும் பலவாறாக விளக்கிப் பேசினாலும், 'உலகம் கானல் போல்வது' என்பதைக் கல்வியளவிலும் கேள்வியளவிலும் உணர்ந்தாலும் அவையெல்லாம் இந்திரிய அடக்கத்திற்கு நேர்க்கருவியாவன அல்ல. ஏனெனில், நிலையாதவற்றின்மேல் அவாக்கொண்டு**

**2006.** இளைக்கின்ற வாறறிந் தின்னுயிர் வைத்த
கிளைக்கொன்றும் ஈசனைக் கேடில் புகழோன்
அளைக்கொன்ற நாகம்அஞ் சாடல் ஒடுக்கின்
துளைக் கொண்ட தவ்வழி தூங்கும் படைத்தே. 7

---

*ஓடி அவற்றுள் முன்னர் ஒன்றைப் பற்றிக் கிடந்து, பின்பு அதனை விட்டு மற்றொன்றின்மேல் தாவி அதனைப் பற்றிக்கிடந்து இவ்வாறு முடிவின்றிச் செல்வது மனமே அதனால் அஃது அவ்வாறு முடிவின்றி ஓட விட்டால், அது புலனுணர்வை முடிவின்றித் தோற்றுவித்துக் கொண்டேயிருக்கும். மனத்தை ஓடவிடாது நிறுத்திவிட்டால், புலன் உணர்வின் தோற்றமும் இல்லையாய் விடும். ஆகையால், **மனத்தை யடக்குதலே இந்திரிய அடக்கத்திற்கு நேர்க்கருவியாகும். 'இந்திரியங்களை அடக்குமாறு எவ்வாறு' என ஆராய்பவர்க்கு அறிய வேண்டிய பொருளாயிருப்பது அவ்வளவே.** மிகுதியாகப் பிதற்றி என்ன பயன்? கானல் நீர் போலும் உலகை நினைந்து என்ன பயன்? பரக்க விரிந்துள்ள பொருள்கட் கெல்லாம் வித்தாவது உள்ளம்; அவ்வுள்ளம் பெருக்க உலகம் பெருக்கும்; உள்ளம் சுருங்க உலகம் சுருங்கும்; இதனை ஆராய்ந்து கொள்ளவல்ல பேர்க்கு இவ்வளவுதான் உண்மைப் பொருளாம் என்றவாறு. பல பல பேசியும், இவ்வுலகம் கானல்நீர் என்று கருதியும் பயனில்லை. பிரபஞ்சவித்து உள்ளம். அது சுருங்க உலகம் சுருங்கிவிடும். விரியப் பிரபஞ்சம் விரியும். இவ்வளவுதான் உண்மை என்பது கருத்து.*

***குறிப்புரை :-** பிதற்றுவது வாய் ஆதலின், அதற்கு ஏற்புடைய 'நூல்' என்பது கொள்ளப்பட்டது. நினைதல் அவற்றின் பொருளையேயாம். "பேய்த்தேர்" என்பதன் பின் 'ஆதலை' என ஆக்கமும் உருபும் விரித்து முதற்கண் வைத்து உரைக்க. "விரித்த பொருள்" எனப் பின்னர் வருதலின், 'பேய்த்தேராவனவும் அவையேயாதல் தெளிவு. 'பிரபஞ்சம்' என்பது 'விரிவுடையது' என்னும் பொருளதாதலின் அது பற்றி, "விரித்தபொருள்" என்றார். "பொருள்" என்றது அவைபற்றிய உணர்வை. ஏனெனில் பெருக்கில் பெருகுவதும், சுருக்கில் சுருங்குவதும் அதுவேயாகலின்.*

*இதனால், 'இந்திரிய அடக்கமாவது மன அடக்கமே' என அதன் உண்மை கூறப்பட்டது.*

***2006. தெளிவுரை :-** இன்பத்தை நுகர்ந்து இனிதே வாழ்தற்கு உரியன வாகிய உயிர்கள் அவ்வாறின்றித் துன்பத்திற் கிடந்து துயர் உறுதலை அறிந்து அவை அத்துன்பத்தினின்றும் நீங்குதற்குரிய வழியை அமைத்துக் கொடுத்து, அதனாலே உறவாதற்குப் பொருந்தியவன் தானேயாய் நிற்கின்ற இறைவனைப் புகழ்ந்து போற்றி அதனால் தானும் என்றும் அழியாப் புகழைப் பெறுகின்ற அறிவன், ஐம்பொறிகளாகிய பாம்புகள் ஐந்தும் தாம் படம் எடுத்து ஆடுகின்ற ஆட்டத்தை விடுத்துத் தமது புற்றிலே சென்று அடங்கிக் கிடக்கும்படி அடக்கி*

*விடுவானாயின், அதன்பின், அவனும் துளையை உடைய அந்தப் புற்று வழியாகவே இன்பம் பெற்று அமைதியை அடைவான்.*

***குறிப்புரை :-*** *ஐம்பொறிகளாகிய நாகத்தை ஈசன்பால் ஒடுக்க அவை புற்றிலடைந்த பாம்புபோலச் சுழுமுனைக்கண் உறங்கிக் கிடக்கும் என்பது கருத்து.*

*கேடில் புகழோன் இன்னுயிர் இளைக்கின்றவாறு அறிந்து கிளைக்கு ஒன்றும் (வண்ணம்) வைத்த ஈசனை தளைக்கொன்ற நாகம் அஞ்சு ஆடல் ஒடுக்க துளைக்கொண்ட (தாய்) அவ்வழி தூங்கும் என இயைத்துப் பொருள் காண்க.*

*கேடில் புகழோன் - நித்தியனாகிய ஆன்மா. அவன் பாசவயப்பட்டு அழியும் தன்னை இறைவழிப்படுத்தி உய்தலாகிய பெரும்புகழ் தேடிக்கொண்டான் ஆதலின் 'கேடில் புகழோன்' எனப்பட்டான். கேடில் என்ற அடைமொழி புகழுக்கு இயையாமல் புகழோனுக்கு அடையாயிற்று என்க.*

*இளைக்கின்றவாறு அறிந்து - பொறிகளின் வயப்பட்டுப் புலன்களைத் தேடி அலைந்து வருந்துமாற்றை உணர்ந்து என்பதாம். வைத்த என்ற பெயரெச்சத்திற்கு ஏற்ப இன்பநிலையமான திருவடிக்கண் வைத்த எனச் சில சொல் வருவிக்க.*

*கிளை - சுற்றம்; ஈண்டுத் திருவடிப் பேற்றினை விரும்பும் உயிர்கட்கு உற்ற சுற்றம் அடியார்களாகிய சிவாநுபவச் சீமான்கள் ஆதலின் அவர்களை என்க. இறைவன் அவர்கள் பால் என்றும் உறைவானாதலின் 'கிளைக்கு ஒன்றும் ஈசன்' என்றார்.*

*ஈசனை ஈசன்பால் என இடவேற்றுமையாகக் கொள்க. ஈசன்பால் ஒடுக்க என்க. இன்னுயிர் இளைக்கின்றவாறு அறிந்து கிளைக்கொன்றும் ஈசனை வைத்த கேடில் புகழோன் என இயைந்தும் இப்பொருள் கொள்ளலாம்.*

*தளை- பாசம். தலைக்கொன்ற நாகம் - பாசக்கட்டினின்றும் விடுபட்ட பொறிகள் போகத்தை விரும்பிப் புலன்களைப் பற்றாத பொறிகள் என்பதாம். ஆடல் - அவற்றின் சேட்டை.*

*படமெடுத்து ஆடுதலைப் பாம்பாட்டி ஒடுக்க அப்பாம்பு பெட்டியுள் அடங்கிக் கிடப்பதுபோலப் பொறிகளும் அவ்வத்துளை வழி ஒடுங்கி மனமும் சுழுமுனையுள் ஒடுங்கி அலைவின்றி அடங்கும் என்றவாறு.*

***2007. தெளிவுரை :-*** *பூத காரியங்களாகிய ஐம்புலப் பொருள்கள்மேல் மதங்கொண்டு செல்கின்ற ஐந்து இந்திரியங்களாகிய யானைகளை அவற்றின் வழியே செல்கின்ற உயிரினது அறிவு, தான் அடையத்தக்கதாகிய திருவடி ஞானமாகிய தறியை அடைந்து அதன்கண் கட்டிவிட, அதனைக் கண்டு, அறிவர் பலரும் அறிந்து அடைகின்ற அருளானந்தத்தை இறைவன் தருவானாயின்,*

**2007.** பாய்ந்தன பூதங்கள் ஐந்தும் படரொளி
சார்ந்திடு ஞானத் தறியினிற் பூட்டிட்டு
வாய்ந்துகொள் ஆனந்த மென்னும் அருள்செய்யில்
வேய்ந்துகொள் மேலை விதியது தானே. **8**

**2008.** நடக்கின்ற நந்தியை நாடொறு முன்னிப்
படர்க்கின்ற சிந்தையைப் பைய ஒடுக்கிக்
குறிக்கொண்ட சிந்தை குறிவழி நோக்கில்
வடக்கொடு தெற்கும் மனக்கோயி லாமே. **9**

---

*அதுவே, யாவரும் மேற்கொள்ளத்தக்க முதல் நூல் விதியின் பயனாகும்.*

*குறிப்புரை :-* ''பூதங்கள்'' கருவியாகு பெயர். ''பூதங்களின் மேல் பாய்ந்தனவாகிய ஐந்தினையும் ஞானத் தறியினில் பூட்டிட்டு, அருள் செய்யில் அதுவே மேலை விதி" என இயைத்துப் பொருள் கொள்க. "ஐந்து" என்பது தொகைக் குறிப்பாய் ஐந்து இந்திரியங்களைக் குறித்தது. படர்தல் - செல்லுதல். "ஒளி" என்பது ஆன்ம அறிவை, சார்ந்திடும் - சாரத்தக்க. ஞானத்தை, "தறி" என்றதற்கு ஏற்ப இந்திரியங்களை 'யானை' என்னாதது ஏகதேச உருவகம். 'ஒரு கம்பத்திலே இரண்டு யானைகள் கட்டப்படுதல் கூடாது' என்பது உலகியல். அதற்கு மாறாக 'ஒரு தறியில் ஐந்து யானைகளைக் கட்டல் வேண்டும்' என்றதனால், இத்தறி உலகத்தில் இல்லாததோர் அதிசயத் தறியாயிற்று. 'பூட்டியிட்டு' என்பது குறைந்து நின்றது. அதனை, 'பூட்டியிட' எனத் திரித்துக் கொள்க. 'ஆய்தல்' என்னும் பயனிலைக்கு 'அறிவர்' என்னும் எழுவாயும், 'அருள் செய்தல்' என்னும் பயனிலைக்கு 'இறைவன்' என்னும் எழுவாயும் வருவிக்க. வேய்தல் - தலையிற் சூடிக் கொள்ளுதல். அஃது இங்கு மேற்கொள்ளுதலைக் குறித்தது. விதியின் பயனை, "விதி" என்றது ஆகுபெயர். தான், அசைநிலை. ஏகாரம் தேற்றம்.

*இதனால், ஐந்து இந்திரியங்களை அடக்கும் முறையும், அடக்கினால் விளையும் பயனும் வகுத்துக் கூறப்பட்டன.*

*2008. **தெளிவுரை :-*** உயிர்செய்யும் செயல் யாவற்றிலும் தானும் உடனாய் நின்று செய்யும் சிவனை அறியாது அனைத்துச் செயல்களையும் தானே செய்வதாகக் கருதி மயங்குகின்ற உயிர் அம்மயக்கத்தினின்றும் நீங்கி அவனை இடைவிடாது உணர்ந்து நிற்பின், ஐம்புலன்களை நாடி ஓடுகின்ற மனம் மெல்ல மெல்ல அதனை விடுத்து அவனிடத்தே சென்று ஒடுங்கும். அங்ஙனம் ஒடுங்கிய நிலை ஒருவர்க்கு வாய்க்குமாயின், உலகில் உள்ள அனைத்துக் கோயில்களும் அவரது மனமாகிய அந்தக் கோயிலாகவே அமைந்துவிடும்.

*குறிப்புரை :-* மனம் பொறிவழிச் செல்லாது அடக்கி, மனத்தை ஒரு வழிப்படுத்தி இறையருளையே எண்ணச் செய்யின் எங்கும் என்றும் மனமே

*கோயிலாக மகேசன் மன்னுவன் என்பது கருத்து.*

*நந்தி - சிவபெருமான். எல்லாவுயிர்கட்கும் உயிர்ப்பாய் உடனொன்றி அவைகளை யியக்கித் தானும் இயங்குவதால் நடக்கின்ற நந்தியை என நிகழ்காலத்தாற் கூறிய அருமை, இறைவனுடைய அநாதி நித்தியத் தன்மையை அறிவிப்பது.*

*நாடொறும் என்பது மூச்சை இழுக்கும் போதும் விடும்போதும் எப்போதும் என்ற பொருளில் வந்தது. முன்னில் - எண்ணில். எனவே எண்ணுவதனாலும் நோக்குவதனாலும் மனக்கோயிலில் இறைவன் ஆம் எனக் கூட்டுக.*

*படர்கின்ற சிந்தை - போகப் பொருள்களனைத்தினும் சென்று பற்றி அவற்றின் வடிவாய் உழலுகின்ற மனம். பைய ஒடுக்கி எனவே மனம் ஒடுக்குதற்கு அருமை தோன்ற நின்றது. 'மிடக்கொடு கட்டின் கீழே விழுத்திடும்' என முன்னரும் அறிவித்தார் ஆதலின் இங்ஙனம் கூறினார்.*

*குறிக்கொண்ட சிந்தை - இலட்சியத்தை நோக்கி எதிர் செல்கின்ற மனம். இது புறத்தே செல்லாது அகமுகமாகி ஆண்டவன் திருவடி நோக்கிச் செல்கின்ற அநுபவ முதிர்ந்த மனத்தைக் குறித்தவாறாம்.*

*குறி - ஆசாரியன் உபதேசித்த மந்திர பாவனையால் இங்ஙனம் இரு என்று காட்டிய அடையாளம் அல்லது இலக்கு. குறி - திருமேனியுமாம்.*

*வடக்கொடு தெற்கு என்றது உலகில் நீண்ட எல்லை. அவற்றை உணர்த்தலே கிழக்கும் மேற்கும் ஆகிய அகலமும் அனைத்தும் என்பது உணரப்படும்.*

*மனக்கோயில் ஆம்; நினைப்பவர் மனம் கோயிலாக் கொள்பவன் சிவமாதலின் இங்ஙனம் கூறப்பட்டது. மனக்கோயிலில் சிவம் ஆம் என்க.*

*பொறிவழிச் செல்லும் மனம் அடக்க முடியாதது என்றும், அதனை ஆசாரியனுபதேசித்த மந்திர தியானத்தால் அடக்கலாம் என்றும் அங்ஙனம் அடக்கின் இறைவன் மனக்கோயிலில் என்றும், எழுந்தருளி விளங்குவன் என்றும் உணர்த்தப் பெற்றமையின் அதிகார இயைபு காண்க.*

***'அனைத்துக் கோயில்களும் மனக்கோயிலாகவே அமையும்' என்றது, 'அவற்றில் எல்லாம் சென்று வழிபடுவார்க்கு அளிக்கும் பயன்களையெல்லாம் சிவன் இவர்க்கு இருந்த இடத்தில்தானே அளிப்பான்' என்றதாம்.***

***2009. தெளிவுரை :- வாழ்நாளில் கழிவன சில நாழிகைகள் போலத் தோன்றுகின்றன. ஆயினும் அவை உண்மையில் சிலவும், பலவுமான நாட்களாய் விடுகின்றன. அதனால் நெடுங்காலம் நிற்பதுபோலத் தோன்றுகின்ற உடம்பு நீர்மேல் எழுத்துப் போல விரைய மறைவதாகின்றது. இதனை உணர்ந்து,***

**2009.** சென்றன நாழிகை நாள்கள் சிலபல
நின்றது நீள்பொருள் நீர்மேல் எழுத்தொத்து
வென்று புலன்கள் விரைந்து விடுமின்கள்
குன்று விழஅதில் தாங்கலும் ஆமே. **10**

**2010.** போற்றிசைத் துப்புனி தன்திரு மேனியைப்
போற்றிசெய் மீட்டுப் புலன்ஐந்தும் புத்தியால்
நாற்றிசைக் கும்பின்னை யாருக்கும் நாதனை
ஊற்றுகை உள்ளத் தொருங்கலு மாமே. **11**

---

*'அறிவுடையேம்' என உங்களை நீங்களே மதித்துக் கொள்கின்ற உலகீர், இளமையிற்றானே ஐம்புல ஆசையை வென்று, அப்புலன்களுக்குச் சார்பாய் உள்ள பொருள்களைத் துறந்து விடுங்கள். இல்லையேல், அவ்வாசையால் விளையும் வினைகள் மலைபோல வந்துவிழும்; அவைகளைத் தாங்க இயலாது.*

***குறிப்புரை :-*** *''சென்றன'' என்பதைப் பின்னரும் கூட்டுக. பிற பொருள்களைப் பற்றுதற்குக் கருவி உடம்பாதலின் அதன் நிலையாமையே முதற்கண் உணரத்தக்கது. ஆதலின், "பொருள்" என்றது அதனையே குறித்தது. நீள்பொருள் என்றது நீர்மேல் எழுத்து ஒத்து எனக் கூட்டுக. "நின்றது" என்றது, 'என்றும் நிற்பதாக நினைக்கப்படுகின்ற உடம்பு. நீர்மேல் எழுத்து உடன் அழிவது. நிற்கும் நிலை நீர்மேல் எழுத்து நிற்பது போன்றதுதான் என்றபடி. எனவே, நிலையில்லாததனை, "நின்றது" என இகழ்ச்சியாகக் கூறியதாம். "குன்று" என்பது உவமையாகு பெயராய், அது போலும் வினைக்கூட்டத்தைக் குறித்தது. அதில் - அந்நேரத்தில். ஏகாரம். எதிர்மறை வினாவாய் வந்தது.*

*இதனால், 'அறிவுடையராயினார் ஐந்திந்திரியங்களை இளமைக் கண்ணே அடக்கி நலம்பெறல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

***2010. தெளிவுரை :-*** *வாசனா மலம் தாக்காத வண்ணம் காக்கும் உபாயம் உணர்த்துதல் நுதலிற்று. திருவடிப் புகழ்களைச் சொல்லிப் போற்றி இயல்பிலே தூயோனாகிய சிவபெருமான் திருமேனியை மீளவும் போற்றிசெய்; அங்ஙனம் செய்யின், ஐந்து புலன்களையும் புத்தியாலும் நாற்றிசைக்கும் உட்பட்ட ஞாலங்கட்கும், காலத்தாற் பின்னைக்கும் நாதனாகிய சிவனை ஞானானந்த அமுதஞ் சுரக்கும் உள்ளத்தாலும் ஒருப்படுதலும் ஆம் என்றவாறு.*

*இறைவன் புகழைக் கூறின், புலன்கள் சிவஞானத்தின் வழி நிற்க மனம் சிவத்தோடு ஒன்றுபடுதலாகிய சிவானுபவத்தில் திளைக்கலாம் என்பது கருத்து.*

***குறிப்புரை :-*** *புனிதன் - தூயவன். இறைவன் இயல்பாகவே பாசங்களில் நீங்கியவன் ஆதலின் புனிதன் என்பது காரண இடுகுறியாய் அடைமொழியின்றிச் சிவத்தையே உணர்த்தும் என்க.*

*போற்றி இசைத்தல் - போற்றிசைத்தல்; அடியேனைக் காத்தருள்க என வேண்டிக்கோடல். போற்று இசைத்தல் எனப் பிரித்துப் போற்றுதலைக் கூறுதல் என முதனிலைத் தொழிற் பெயராகக் கொள்ளினுமாம். புனிதன் திருமேனி மந்திர வடிவமாதலை.*

> *"சுத்தமாம் விந்துத் தன்னில் தோன்றிய வாத லானும்*
> *சத்திதான் பிரேரித் துப்பின் தானதிட் டித்துக்கொண்டே*
> *யத்தினாற் புத்தி முத்தி யளித்தலால் அரனுக் கென்றே*
> *வைத்தவா மந்திரங்கள் வடிவென மறைக ளெங்கும்*
>
> *மந்திர மதனிற் பஞ்ச மந்திரம் வடிவ மாகத்*
> *தந்திரஞ் சொன்ன வாறிங் கென்னெனிற் சாற்றக் கேள் நீ*
> *முந்திய தோற்றத் தாலும் மந்திர மூலத் தாலும்*
> *அந்தமில் சத்தி யாதிக் கிசைத்தலு மாகும் அன்றே"*

*எனவரும் சிவஞாசித்திச் செய்யுள்களானும் அறிக.*

*ஆகவே இறைவனுக்குப் பஞ்சமந்திரங்களே சிறப்புரு எனல் அறியப்பெறும். அவற்றுள்ளும் திருவைந்தெழுத்தே இறைவனது உண்மையுரு. அதனை இடைவிடாது கணிக்கின் வாசனாமலமும் தாக்கமையின் உள்ளம் சிவத்தோடு என்றும் சார்ந்து சிவபோகத்திலழுந்தி நிற்கும் என்க. இதனையே 'மீட்டே போற்றி செய் புலனைந்தும் புத்தியால் உள்ளத்து நாதனை ஒருங்கலுமாமே' என்ற பகுதி விளங்குகின்றது. ''பாசம் ஒருவத் தண்ணிழலாம் பதி; விதி எண்ணும் அஞ்செழுத்தே" என்னும் சிவஞான போதச் சூத்திரத்தானும்,*

> *"அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டானை*
> *அஞ்செழுத்தால் அர்ச்சித் திதயத்தில் - அஞ்செழுத்தால்*
> *குண்டலியிற் செய்தோமம் கோதண்டம் சானிக்கில்*
> *அண்டனாம் சேடனாம் அங்கு"*

*என்னும் மேற்கோள் வெண்பாவானும் தெளிக.*

*நாற்றிசைக்கும் நாதன் என்பது அனைத்தண்டங்களிலுமுள்ள அனைத்துலகுக்கும் நாதனென இடச்சேடமின்மையும், 'பின்னை நாதன்' என்பது இறப்பும் நிகழ்வுமாகிய காலங்கட்கு நாதனாக விளங்கியதைக் காட்சிப் பிரமாணத்தானும் ஆகமப் பிரமாணத்தானும் அறிந்தோம். ஆதலின் பின்புள்ள எதிர்காலத்திற்கும் இவனே நாதன் எனக் காலச்சேடமின்மையும், யார்க்கும் நாதன் என்பது மால் பிரமன் இந்திரன் வானவர் தொழ நின்ற பெருமான் எனச் சித்தாகிய ஆன்மச் சேடமின்மையும் உணர நின்றன.*

*ஊறுகை என்பது, எதுகை நோக்கி ஊற்றுகை எனவாயிற்று. ஊற்றுகை - ஊறுதலையுடையது. தொழிலாகு பெயராச் சிவானந்தத்தை உணர்த்தியது. சிவானந்தத்தில் திளைத்துச் சிவத்தோடு ஒன்றி விளங்கும் என்பது கருத்து.*

2011. தரிக்கின்ற நெஞ்சம் சகளத்தி னுள்ளே
அரிக்கின்ற ஐவரை யாரும் உணரார்
சிரிக்கின்ற வாறு சிலபல பேசில்
வரிக்கின்ற மைசூழ் வரையது வாமே. 12

2012. கைவிட லாவதொன் றில்லை கருத்தினுள்
எய்தி யவனை இசையினால் ஏத்துமின்
ஐவ ருடைய அவாவினில் தோன்றிய
பொய்வ ருடைய புலன்களும் ஐந்தே. 13

---

***2011. தெளிவுரை :-*** *சிவபெருமானது உருவத் திருமேனியினுள்ளே படிந்து நிற்றற்குரிய மனத்தை அங்ஙனம் நிற்க ஒட்டாமல் நச்சரித்துப் பெயர்கின்ற ஐம்புலன்களாகிய குறும்பரது தீச்செயலை உலகவர் யாரும் உணர்வதில்லை. அதனால் அங்ஙனம் உணராத நிலையில் இருந்து கொண்டே கவலையின்றி ஒருவரோடொருவர் நகையாடிச் சிலவும் பலவுமாகிய பேச்சுக்களைப் பேசி அவர் பொழுது போக்குவாரேயானால் அவரது செயல் தனது நிலையான இயற்கைப் பொலிவுடன் விளங்கத் தக்கதாகிய மலையை நிலையாது நீங்கும் அழகையுடைய மேகங்கள் வந்து சூழ்ந்து மறைத்தல் போல்வதாகும்.*

***குறிப்புரை :-*** *தரித்தல் - நிலையாக நிற்றல். 'சகளத்தினுள்ளே தரிக்கின்ற நெஞ்சத்தை அரிக்கின்ற ஐவர்'. "பேசில்" - என்றது, 'பேசுகின்றனர்' என்பதை அனுவாத முகத்தாற் குறித்தது. வரி - அழகு. மேகத்தின் அழகு சிறிது பொழுதில் அழியக்கூடியது. 'அதனால் சூழப்பட்டது' என்றதனால், மலையினது அழகு நிலைத்து நிற்பதாதல் குறிக்கப்பட்டது. 'உயிர் சிவத்தில் அழுந்திப்பெறும் அழகு இயற்கையானது; ஆதலின் அஃது அழியாது' என்பதையும், 'ஐம்புலன்களின் மேல் சென்று பெறும் அழகு செயற்கையாதலின் அது சிறிது பொழுதில் அழியும்' என்பதனையும் குறித்தவாறு. "மைசூழ்வரை யாம்" என்றாரேனும், 'மை வரையைச் சூழ்தலாம்' என்றலே கருத்து என்க. மை - கருமை - ஆணவ மலம். மைசூழ்வரை - ஆணவம் மிகுந்த மலை போன்ற உயிர் கொள் உடல். புலன்களை விட்டும் சிவத்தைச் சார்ந்த உயிர்கொள் உடல் - ஒளி சூழ் மேரு வரை. அங்ஙனம் செய்யாத உயிர்கொள் உடல் - மைசூழ் உரு வரை.*

*இதனால், சிவனது உருவத் திருமேனியை இடைவிடாது நினைத்தலே ஐந்திரியங்களை அடக்கும் முறையாதல் கூறப்பட்டது.*

***2012. தெளிவுரை :-*** *'ஐந்திந்திரியங்களை அடக்குதல் நம்மால் ஆகிற காரியம் அன்று' என இளைத்து, அதனைக் கைவிடுதற்குக் காரணம் சிறிதும் இல்லை. ஏனெனில், ஐந்திந்திரியங்களின் அவாவிற்குக் காரணமான நிலையற்ற பொருள்களில் பொருந்தியுள்ள புலன்களும் ஐந்திற்குமேல் இல்லை. அந்த ஐந்தையும் அடக்குதற்குச் செய்யத்தக்க உபாயமும் ஒன்றே ஒன்றுதான். அஃது*

*ஒருபொழுதும் நம்மை விட்டு நீங்கிச் சேய்மையில் இல்லாது, எப்பொழுதும் நம் உள்ளத்திலேயே வீற்றிருக்கின்ற சிவனை நல்ல இசைப்பாடல்களால் துதிப்பதுதான். ஆகவே, அதனைச் செய்து இந்திரியங்களை அடக்கி, இன்பம் எய்துங்கள்.*

***குறிப்புரை :-*** *கைவிடுதற்குச் செயப்படு பொருள் அதிகாரத்தால் வந்து இயைந்தது. "ஒன்று" என்றது, 'சிறிது' என்னும் பொருட்டாய் அவ்வளவிற்கான காரணத்தைக் குறித்தது. 'துதித்தலுக்கு இயற்பாக்களிலும் இசைப்பாடல்களே சிறந்தன' என்றற்கு, "இசையினால் ஏத்துமின்" என்றார். "அளப்பில கீதஞ் சொன்னார்க் கடிகள்தாம் அருளுமாறே" என அப்பரும் அருளிச் செய்தார். (தி.4 ப.77 பா.3) ஒருவர் ஒரு செயல் அன்றிப் பல செயல் செய்தல் உலகியலாய் இருக்க. "ஐவர் ஐந்து செயலே செய்பவராகின்றனர்' என அவரது மெலிவு உணர்தற்கு, "ஐவருடைய அவாவினில் தோன்றிய புலன்களும் ஐந்தே" எனவும், 'அவரை வெல்லுதற்குரிய உபாயமும் ஒன்றே; அதுவும் எளிதானதே' என்றற்கு, "கருத்தினுள் எய்தியவனை ஏத்துமின்" எனவும் அருளிச் செய்தார்.*

> *கற்றுக் கொள்வன வாயுள; நாவுள;*
> *இட்டுக் கொள்வன பூவுள நீர்உள;*
> *கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்*
> *ஏற்றுக்கோ நமனால் முனிவுண்பதே.   - தி.5 ப.91 பா.6*

*எனப் பிற இடங்களிலும் இங்ஙனம் எளிமையை உணர்த்துதல் காண்க. ஐந்திரியங்களை, "ஐவர்" என்றதுபோலப் பொய்ப்பொருள்களை அஃதாவது நிலையாத பொருள்களை, "பொய்வர்" என்றார். "ஐவர்" என்பதிற்போல, "பொய்வர்" என்பதிலும் வகரமெய் பெயர் இடைநிலையாய் வந்தது. "உடைய" இரண்டும் குறிப்புப் பெயரெச்சங்கள், முன்னதனை, 'ஆறாவதன் சொல்லுருபு' என்றலுமாம்.*

*இதனால், ஐந்திந்திரியங்களை அடக்கும் முறை அதனது எளிமைகூறி, 'அதனால் அதனைத் தப்பாது செய்து பயன் பெறுங்கள்' என வலியுறுத்தி முடிக்கப்பட்டது.*

## 34. அசற்குரு நெறி

*'ஐந்திந்திரியங்களை அடக்குதல் நன்னெறியாகும்' என்பதை வலியுறுத்தி உணர்த்திய நாயனார், அந்நெறியினை யறிய மாட்டாதார், 'அவற்றை யடக்குதல் கையில் உள்ள கனிகளை அழுக விட்டுக் கற்பனையால் தெரிகின்ற கற்பகத் தருவின் கனிகளை அடைய முயல்வது போலும்', எனக் கூறி நகையாடி அம்முயற்சியைத் தடுத்து நிற்பர் ஆதலின் அத்தன்மையோரையே 'அசற் குருமார்' என வைத்து அவரை யடைதலை ஐந்து மந்திரங்களால் விளக்குகின்றார்.*

*அஃதாவது குருவாக விளங்குதற்குரிய பண்பு சிறிதும் இல்லாது, குரு என்ற பதவியிலிருப்பவருடைய முறைமைகளை உணர்த்தும் பகுதி. பொறியடக்கம் கூறியபின், அதனுடைய இன்றியமையாமையை உணர்ந்த மாணாக்கன் ஆசாரியனைத் தேட முற்படுவன். அப்போது பொறியடக்கமில்லாதான் ஆசாரியனாக நேரின் அதனால் விளையும் தீமைகள் பலவாம். ஆதலால் இந்திரியம் அடக்கு முறைமையை அடுத்து, அடக்காத அசற்குருவின் நெறி அமைக்கப் பெற்றது.*

**2013.** **உணர்வொன் றிலாமூடன் உண்மைஓ ராதோன்**
**கணுவின்றி வேதா கமநெறி காணான்**
**பணிவொன் றிலாதோன் பரநிந்தை செய்வோன்**
**அணுவின் குணத்தோன் அசற்குரு வாமே.** **1**

---

*2013. **தெளிவுரை :-** ஒரு துறையிலும் அறிவில்லாத மூடன். உண்மைப் பொருளை ஆராயாதவன். உபதேச மரபும், வேதாகமநெறிகளை உணர்தலும் இல்லாதவன், அடக்கமில்லாதோன், பிறரை நிந்திப்போன், ஆன்ம போதமே மிக்கவன்; இவர்கள் அசற்குருவாவார் என்றவாறு.*

***குறிப்புரை :-** "அசற்குருவாய்" என்னும் பயனிலையை "மூடன்" முதலிய எல்லாவற்றோடும் தனித்தனி கூட்டுக. "உணர்வு" என்றது நல்லுணர்வை. 'ஒன்று' இரண்டும் 'சிறிது' என்னும் பொருளன. 'ஒன்றும்' என்னும் இழிவு சிறப்பும்மைகள் தொகுக்கப்பட்டன. உண்மை - பொருள்களின் உண்மையியல்பு. 'தத்துவம்' எனப்படுவது இதுவே. கணு - எல்லை, என்றது ஏகதேசத்தை. எனவே, 'சற்குரவ ராவார் வேதாகமங்களை முற்ற உணர்ந்திருப்பர்' என்பது போந்தது. பரநிந்தை, புறங்கூறல். அணு - உயிர். அதற்கு இயற்கையாய் உள்ளது அறியாமை. அஃதாவது உணர்த்தினும் உணர மாட்டாமையாம். "கொடிறும் பேதையும் கொண்டது விடா" (தி.8 போற்றித் திருவகவல், 63) என்று அருளிச் செய்தது காண்க. 'கூறப்பட்ட குற்றங்களுள் ஒன்றையே உடையராயினும் அவர் சற்குருவாகாது, அசற்குருவேயாவர்' என்றற்கு 'அசற்குருவாமே' என்பதைத் தனித்தனி கூட்டிக் கொள்ள வைத்தார். அசத்தை உணர்த்துவோன் அசற்குரு.*

*இதனால், 'அசற்குருவாவரிடத்துக் காணப்படும் குற்றங்கள் இவை' என்பது*

**2014.** மந்திரம் தந்திரம் மாயோகம் ஞானமும்
பந்தமும் வீடும் தரிசித்துப் பார்ப்பவர்ச்
சிந்தனை செய்யாத் தெளிவியாது ஊண்பொருட்டு
அந்தகர் ஆவார் அசற்குரு வாமே. 2

**2015.** ஆமா றறியாதோன் மூடன் அதிமூடன்
காமாதி நீங்காக் கலதி கலதிகட்கு
ஆமாறச் சத்தறி விப்போன் அறிவிலோன்
கோமான் அலன்அசத் தாகுங் குரவனே. 3

---

*கூறி, அவர் 'இன்னார்' என்பது உணர்த்தப்பட்டது.*

***2014. தெளிவுரை :-*** *சற்குரவராதற்கு உரியன பலவற்றை உடையோரும் தமது உபதேசத்தை உணரும் தகுதியில்லாதோர்க்கு அவர் வழியாகப் பெறப்படும் சில பயன் கருதி அவரை விலக்கமாட்டாராய் அவர்க்கு உபதேசம் செய்வாராயின், அவரும் அறியற்பாலனவற்றை அறியாத அறிவிலிகளாய், அசற்குரவராய் விடுவர்.*

***குறிப்புரை :-*** *மந்திரம் - முத்தி நெறிக்குரிய மந்திரங்கள். தந்திரம், வேதாகமங்களில் உள்ள ஞானப் பகுதிகள், மாயோகம் - சிவயோகம். ஞானம் - சிவஞானம். இவ்விடத்து உள்ள உம்மையை "மந்திரம்" முதலியவற்றோடும் கூட்டுக. ''பந்தம், வீடு'' என்றது, உண்மைப் பந்தத்தையும், உண்மை வீட்டையுமேயாம். 'தரிசித்துத் தெளிவி யாதோர்' என இயைக்க. இவ்வினையெச்சம் எண்ணுப் பொருளில் வந்தது. 'தரிசித்தும்' எனப் பாடம் ஓதுதல் சிறக்கும். பார்ப்பவர் - அறியத்தக்கவர். 'பார்ப்பவரை' என்னும் இரண்டன் உருபு உயர்திணைக்கண் தொகுக்கப்பட்டது. செய்யா - செய்து. "ஊண்" என்றது உபலக்கணம். "அந்தகர்" என்றது அகநோக்குப் பற்றி.*

*இதனால், 'சற்குரவர்க்கு ஆகாததொன்றினை உடையராயின் சற்குரவரும், அசற்குரவராவர்' என்பது கூறப்பட்டது.*

***2015. தெளிவுரை :-*** *'தக்கது இன்னது; தகாது இன்னது' என உணரும் உணர்வில்லாதவன் மூடன் என்பது உலகம் அறிந்தது. ஆயினும், அவ்வாறு அவற்றை அறிந்தும், காமம் முதலிய குற்றங்களின் நீங்கி, நல்லவற்றைப் பற்றியொழுகும் நல்லொழுக்கம் இல்லாதவன் அறிவுடையவன் ஆயினும் அதிமூடன் ஆவான். இனிக்குற்றங்களின் நீங்கி வல்லவற்றையே கடைப்பிடித் தொழுகும் நல்லொழுக்கம் உடையவனாயினும் நல்லனவற்றை மதித்து உவந்து ஏற்கும் பண்பின்றி அவற்றை உணர்த்துவோரையும் இகழ்கின்ற கீழ்மக்கட்கு நல்லுபதேசத்தைச் செய்வானாயின் அவனும் அறிவிலியேயாவான். ஆகையால் அத்தகையோனும் சற்குருவாகாது, அசற்குருவாயாவன்.*

***குறிப்புரை :-*** *கலதி - கீழ்மகன். "ஆமாறு" என்றதனானே அதன்மறுதலைப்*

**2016.** கற்பாய கற்பங்கள் நீக்காமல் கற்பித்தால்
தற்பாவம் குன்றும் தனக்கே பகையாகும்
நற்பால் அரசுக்கும் நாட்டிற்கும் கேடாகும்
முற்பாலே நந்தி மொழிந்துவைத் தானே. **4**

---

*பொருளும் போந்தது. நல்லன தீயனவற்றை அறிய மாட்டாதவன் மூடனாதல் இயல்பாகவே நன்கறியப்பட்டதாயினும், அவற்றை அறிந்தவனினும் அறிந்தவாற்றில் நிற்கமாட்டாதவன் அவனிலும் பெருமூடன் ஆதலை வலியுறுத்தி ஓதுதற் பொருட்டே இயல்பாக அறியப்பட்டதனை அனுவாதமாக எடுத்தோதினார். அசத்து - பொய்.*

*"ஓதி யுணர்ந்தும், பிறர்க்குரைத்தும் தான் அடங்காப்
பேதையிற் பேதையார் இல்" - திருக்குறள், 834*

*என அருளினமை காண்க.*

*'கலதிகட்கு ஆமாறு அறிவிப்பின் அது பயன்படாது ஆகலின், அஃது அரும்பொருளை அழிவு செய்ததாம்' என்பதை,*

*"அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால்" - திருக்குறள், 720 எனவும், 'ஆகவே, அவ்வாறு அறிவிப்பவன் அறிவிலியாவான்' என்பதை,*

*"காணாதாற் காட்டுவான் தான்காணான்" - திருக்குறள், 849 எனவும் அருளிச் செய்தார் திருவள்ளுவர். கோமான் - தலைவன். இங்கு, 'தலைவன்' என்றது ஞானத்திற்குத் தலைவனாகிய சற்குருவை, "அசத்தாகுங் குரவனே" என்றது, 'அசற்குருவே' என்றபடி, சற்குருவினின்றும் பிரித்தலின் ஏகாரம் பிரிநிலை.*

*இதனால், மேலது பிற சிலவற்றோடு ஒருங்கு வைத்து வலியுறுத்தப்பட்டது.*

***2016. தெளிவுரை :-** சற்குருவாவான் தன்னை அடைந்த மாணாக்கனிடத்தில் உள்ள குற்றங்களை முதலில் நல்லனவற்றைக் கூறும் முறையால் நீக்கி அதன் பின்பே ஞானத்தை உணர்த்துதல் வேண்டும். அவ்வாறு செய்யாமலே ஞானத்தை உணர்த்தினால் தனது ஆசிரியத் தன்மையுங் கெட்டுத் தனது செய்கையே தனக்குத் தீங்காய் முடியும். அதனால் நாட்டில் புல்லரே தலையெடுப்பர் ஆதலின் அரசு நல்லரசாய் இருப்பினும் அதற்கும் கேடு விளையும். நாடும் தீய நாடாகி விடும். இதனைப் படைப்புக் காலத்திற்றானே சிவன் தனது ஆகமங்களில் சொல்லி வைத்துள்ளான்.*

***குறிப்புரை :-** கற்பு - கல்வி. அது பின்னர் அம்முப்பெற்று, "கற்பம்" என நின்றது. 'கல்வியாகிய கல்வி' என்றது, ஆசிரியர் கற்பியாது அவர் தாமே கற்ற சொந்தக்கல்வி' எனக் குற்றங்களைக் குறித்து நின்றது. குணம் போலக் குற்றம் பிறர் கற்பிக்க வேண்டாதுதானே தோன்றி வளர்வதாதலை அறிக. பாவம் -*

**2017.** குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லுங் குருடர்
மருளுற்றுப் பழங்குழி வீழ்வர்முன் பின்அக்
குருடரும் வீழ்வர்கள் முன்பின் அறவே
குருடரும் வீழ்வார் குருடரோ டாகிலே. **5**

---

*தன்மை. தனக்குத் தீங்காதலாவது, உணர்த்தப்பெற்றோரால் நன்கு மதிக்கப்படாமையும், உலகரால் பழியும் அடைதல்.*

*இதனால், கலதிகட்கு ஆமாறு அறிவிப்போர் அடையும் குற்றம் கூறப்பட்டது.*

***2017. தெளிவுரை :-*** *குருடர் சிலர், வேறு சில குருடருடனே சேர்ந்து வழிச் செல்வார்களாயின் எல்லோருமாக 'முன், பின்' என்பதின்றி ஒருங்கே குழியில் விழுவதைத் தவிர வேறு என்ன நிகழும்! ஆகையால், சில குருடர்கள் வேறு சில குருடர்களுக்கு 'நாங்கள் உங்கட்கு வழிகாட்டுகின்றோம்' என்று சொல்லி அவர்கள் கையில் கோலைக் கொடுத்துத் தாங்கள் அக்கோலைப் பற்றிக் கொண்டு முன்னே செல்வராயின், முதலில் வழிகாட்டும் குருடர் பழங்குழியில் வீழ்வர். பின்பு அவர்களால் அழைத்துவரப்பட்ட அந்தக் குருடர்களும் அந்தக் குழியிலே வீழ்வார்கள். (அது தான் நிகழும்).*

***குறிப்புரை :-*** *"முன்பின் அறவே" என்பது முதலாக உள்ளவற்றை முதலில் கொண்டு உரைக்க.*

*இம்மந்திரம் ஒட்டணியாய் நின்றது.*

*'அஞ்ஞானிகள் சிலர் தங்களைப் போலவே அஞ்ஞானிகளாய் உள்ள சிலரைக் குரவராக மதித்து அடைவார்களாயின் இருவரும் பிறவிக் குழியில் விழுவதைத் தவிர வீடுபேறாகிய கரையை அடையார்; அவருள்ளும் குரவராய் நின்றவரே முதலில் பிறவிக் குழியில் வீழ்வர்' என்பது இதனால் குறிக்கப்பட்ட பொருள்.*

*ஆதல் - ஒன்றாதல். "ஆகில்" எனப் பின்னர் வருதலின் நான்காம் அடியில் முதற்கண் நின்ற குருடர் 'ஆகிய குருடர்' என்பது விளங்கிற்று. அதன்கண் வந்த உம்மை இறந்தது தழுவிய எச்சம். முன் தந்திரத்தில் போந்த "குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்" என்னும் மந்திரத்தை இதனோடு ஒப்பிடுக.*

*இதனால், அசற்குரவராயினார் பிறரையும் கெடுத்தல் கூறப்பட்டது.*

## 35. சற்குரு நெறி

*'இவ்வதிகாரம் முன்னை அதிகாரத்திற்கு மறுதலையாய் அதனால் விலக்கப்பட்டதற்கு மாறானவிதி' என்பது வெளிப்படை. இது பதினெட்டு மந்திரங்களையுடையது.*

*முன்னர் குரு ஆகாதார் இத்தன்மையர் என எதிர்மறை முகத்தான் உணர்த்திய ஆசிரியர், இவ்வதிகாரத்தான் நல்ல குரு ஆவார் யார் என அவரியல்புகளை உடன்பாட்டு முகத்தான் உணர்த்த எடுத்துக் கொண்டார். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.*

**2018.** தாள்தந் தளிக்கும் தலைவனே சற்குரு
தாள்தந்து தன்னை அறியத் தரவல்லோன்
தாள்தந்து தத்துவா தீதத்துச் சார்சீவன்
தாள்தந்து பாசம் தணிக்கும் வசனத்தே. 1

---

*2018. **தெளிவுரை :-** சற்குருவே தன்னையடைந்த மாணாக்கர்க்குத் திருவருளை வழங்கிக் காக்கும் பதியாவான். அவனையடைந்த மாணவனுக்கு அவன் தனது திருவடியைச் சென்னிமேல் சூட்டித் திருவடி ஞானத்தை அருளுமாற்றால் மாணவன் தனது உண்மை இயல்பை அறியும்படி செய்யவல்லான். அவன் தனது ஒரு வார்த்தையாலும், திருவடி சூட்டலாலும் தன்னை யடைந்த மாணவனாகிய பசுவை மாயா கருவிகளினின்றும் விடுவித்து, ஆணவக் கட்டினையும் அவிழ்த்துவிடுவான். திருவடியைச் சூட்டி ஆட்கொள்பவனே சற்குரு.*

*குறிப்புரை :- 'அத்தன்மைகளால் அவனது சற்குருவாம் தன்மையைத் தெளிக' என்பது குறிப்பெச்சம். திருவருளை, 'திருவடி' என்றல் மரபு. தாள் முயற்சியும் ஆம் ஆதலின் அது 'முயற்சி' என்னும் குறிப்பினையும் உடையது. திருவருள் எல்லாம் வல்லதாதலை நினைக. "குருவே சிவன்" (தி.10 பா.1561) 'சற்குருவே தலைவன்' என மொழிமாற்றி யுரைக்க. தன்னை அறிந்தபின் தலைவனை அறியத் தடையில்லை ஆதலின் அதனையே கூறி யொழிந்தார். ''சீவன்'' என்றது, 'பசு' என்றபடி, 'அவன் வசனத்தாலும், தாள் தந்தும் தத்துவாதீதத்துப் பாசம் தணிக்கும்' என்க. முதலடி ஒழிந்த ஏனை அடிகளில் "தாள் தந்து" என வந்தது சொற்பொருட் பின்வருநிலையணி.*

*இதனால், 'சற்குருவினது பெருமை அவனது செயலால் விளங்கும்' என்பது கூறப்பட்டது.*

*2019. **தெளிவுரை :-** (சற்குரு) தன் அடியார் வினை நீங்கவும் ஒன்பான் கோள்களின் தீங்கு நீங்கவும் யம தூதரது கூட்டம் விலகி ஓடவும், முடிவாகப் பிறவித் துன்பம் நீங்கவும் தனது திருவடிகளை அவர்தம் தலையோடு*

**2019.** தவிரவைத் தான்வினை தன்னடி யார்கோள்
தவிரவைத் தான்சிரத் தோடுதன் பாதம்
தவிரவைத் தான்நமன் தூதுவர் கூட்டம்
தவிரவைத் தான்பிற வித்துயர் தானே. **2**

**2020.** கறுத்த இரும்பே கனகம தானால்
மறித்திரும் பாகா வகையது போலக்
குறித்தஅப் போதே குருவருள் பெற்றான்
மறித்துப் பிறவியில் வந்தணு கானே. **3**

---

*பொருந்துமாறு வைத்தருளினான்.*

***குறிப்புரை :-*** *இப்பொருட்கேற்ற சொற்களை கொண்டு கூட்டினை அறிந்து கொள்க. இதனுள்ளும் சொற்பொருட் பின்வருநிலையணி வந்தது. 'சற்குரு' என்பது அதிகாரத்தால் வந்து இயைந்தது. அஃது "ஒருபாற் கிளவி ஏனைப்பாற் கண்ணும் வரும்" (தொல். பொருள், பொருளியல்) முறைமையில் வந்ததாகலின் இம்மந்திரமும் சற்குருவினது பெருமை கூறியதாதல் அறிக.*

*இதனால், சற்குரு அருளால் வீடுபேறாகிய முடிநிலைப் பயனேயன்றி, இடைநிலைப் பயனாகிய இம்மைப் பயன்களும் உளவாதல் கூறப்பட்டது.*

***2020. தெளிவுரை :-*** *பிறவி கெடுதலை உவமை வாயிலாக விளக்குதல் நுதலிற்று. கருமையான இரும்பு இரதகுளிகையின் சார்பால் பொன்னானால், மீளவும் அப்பொன் இரும்பு ஆகாததுபோலப் பண்டை நற்றவத்தால் பரமனைப் பத்தி பண்ணும் அக்கணமே குருவின் திருவருளைப் பெற்றவன் மீளவும் பிறவிக் கடலை அணுகவும் மாட்டான் என்றவாறு.*

*பொன்னான இரும்பு மீட்டும் இரும்பாகாதவாறு போல, குருவருள் பெற்ற உயிர் மீண்டும் பிறவாது என்பது கருத்து.*

*இரும்பினிடத்து கருமையும் துருப்பிடித்துத் தேயுந் தன்மையும் பரிசவேதி என்னும் குளிகைபட்டவுடன் அகன்று, ஒளியும் கனமும் துருப்பிடித்துத் தேயாமையும் பொருந்திய பொன் ஆம்; அங்ஙனமாய பொன் மீளவும் இரும்பு ஆகா; அதுபோல என உவமையை விரித்து இயைக்க.*

***குறிப்புரை :-*** *குறித்த அப்போதே - முற்றவத்தால் நம் கருமை அகல வேண்டும் என உயிர் எண்ணிய அக்கணமே, இவ்வுயிர் பரிபாகமுறுதற்குரியது எனக் குருநாதன் திருவருள் இவ்வுயிரை இலக்காகக் குறித்த அக்கணமே என இருவகையானும் கொள்க.*

*குருவருள் பெற்ற ஞான்றே பிறவிக் கேதுவாகிய மலகன்மங்கள் கெடுதலின் இங்ஙனம் கூறினார்.*

**2021.** பாசத்தை நீக்கிப் பரனோடு தன்னையும்
நேசத்து நாடி மலம்அற நீக்குவோன்
ஆசற்ற சற்குரு ஆவோன் அறிவற்றுப்
பூசற் கிரங்குவோன் போதக் குருவன்றே. **4**

**2022.** நேயத்தே நிற்கும் நிமலன் மலம்அற்ற
நேயத்தை நல்கவல் லான்நித்தன் சுத்தனே
ஆயத் தவர்தத் துவம்உணர்ந் தாங்கற்ற
நேயத் தளிப்பன்நன் நீடுங் குரவனே. **5**

---

*2021.* ***தெளிவுரை :-*** *உலகப்பற்றை ஒழித்து வீடுபேற்றில் விருப்பம் கொண்டு தன்னையும், தலைவனாகிய சிவனையும் ஆசிரியர் அருள் மொழியைக் கேட்டுச் சிந்தித்துத் தெளியுமாற்றால் தனது அறியாமையைப் போக்கித் தன்னை அடைந்தவரது அறியாமையையும் முற்றப் போக்க வல்லவனே குற்றம் அற்ற உண்மை ஞான குரு ஆவான். அவ்வாறன்றி, அனுபவ ஞானம் இன்றி, நூலறிவு மாத்திரையால் செய்யும் ஆரவாரத்தில் மயங்கித் தானும் அதனையே செய்பவன் உண்மை ஞானகுரு ஆகான்.*

***குறிப்புரை :-*** *"அறிவு" என்றது, அனுபவ ஞானத்தை, இதனுள் பன்மையாக ஓதுவன பாடம் ஆகாமை அறிக. பூசல் - வாதப்பிரதிவாதச் சண்டை.*

*இதனாலும் சற்குருவின் இலக்கணம் உடன்பாட்டானும், எதிர்மறையானும் கூறப்பட்டது.*

*2022.* ***தெளிவுரை :-*** *நித்தியனாகிய சிவன் நின்மலன் ஆகலின், அவன் மலம் நீங்கித் தன்பால் மெய்யன்பு செலுத்துவோரது அறிவிலே விளங்கி நின்று அம்மெய்யன்பினை மேலும் மேலும் பெருக்க வல்லவனாவன். ஆகையால், மலம் நீங்கிச் சுத்தான்மாவாய் நிற்கின்றவனே தன்னை அடைந்த மாணவக் கூட்டத்தாரது உண்மை நிலையை உணர்ந்து, அவர்களில் பாசப் பற்று அறும் பக்குவத்தை எய்தி னோர்க்கே ஞானத்தை உணர்த்துவன். ஆதலால் அவனே நிலைபெற்ற சற்குரு ஆவன்.*

***குறிப்புரை :-*** *'சுத்தான்ம சைதன்னியத்திலே சிவன் தான் அதுவேயாய் ஆவேசித்து நிற்றல் பற்றியே குரு சிவனாகின்றான்' என்பதை உணர்த்தற் பொருட்டு அவ்வியல்பை முதல் இரண்டு அடிகளில் கூறி, பின்பு 'சுத்தன்' என எடுத்துக்கொண்டு, "சுத்தனே நீடும் குரவன்" என்றார். 'நித்தன் நிமலன் ஆதலின் மலம் அற்ற நேயத்தே நிற்கும்; நேயத்தை நல்க வல்லோன்' எனக் கூட்டுக. அறும் பக்குவத்தை எய்திய நிலையைத் தெளிவு பற்றி, "அற்ற" என இறந்த காலத்தாற் கூறினார். குரவரல்லாதாரைக் 'குரவர்' என மயங்கிய மாணாக்கர் பின்பு அவரின் நீங்கி உண்மைக் குரவரை யடைவர் ஆகலின் அவர் அங்ஙனம் ஆகாமைக்கு ஏதுவாய் நிற்பவனை 'நீடும் குரவனை' என்றார்.*

**2023.** பரிசன வேதி பரிசித்த எல்லாம்
வரிசை தரும்பொன் வகையாகு மாபோல்
குருபரி சித்த குவலயம் எல்லாம்
திரிமலம் தீர்ந்து சிவகதி ஆமே. **6**

---

*இதனால், 'பெத்தத்தின் நீங்கிய சுத்தனே சிவமாய் நிற்கும் சற்குரு' என்னும் உண்மை எடுத்துக் கூறப்பட்டது.*

***2023. தெளிவுரை :-*** *குரு ஸ்பரிச தீட்சையால் மலமகற்று முறை உணர்த்துதல் நுதலிற்று. பரிசனவேதியான குளிகை தொட்ட பொருளனைத்தும் மேன்மை பொருந்திய பொன்னின் வகையாதல் போல, குரு தொட்ட உலகமனைத்தும் மும்மலங்களும் அகன்று சிவகதிசேரும் என்றவாறு.*

*குரு தொட்ட சித்துப் பொருளனைத்தும் சிவமாம் என்பது கருத்து.*

*பரிசனவேதி - உலோகங்களைப் பொன்னாக்கும் ஒருவகை மருந்து. அது பட்டவுடன் இரும்பு முதலான கீழ் உலோகங்களும் தம் கறை அகன்று செம்பொன் ஆகும் என்பதாம்.*

*குரு, சிவோகம் பாவனையிலிருந்து, தம் கையைச் சிவ அஸ்தமாகப் பாவித்து, சீடன் - சிரத்தைத் தொட, சீடன் மலமாயை கன்மங்களிலிருந்து நீங்கிச் சுத்த ஆன்மா ஆவன் என்பதாம்.*

*குவலயம் - பூமியாகிய பிரபஞ்சம். எல்லாம் என்றதனால் தனு கரண புவன போகங்கள் அனைத்தையும் கொள்க. திரிமலம் - மும்மலம். குவலயமெல்லாம் சிவகதிக்கண் ஆம் என விரிக்க.*

***குறிப்புரை :-*** *வேதித்தல் பற்றி இரச குளிகை 'வேதி' எனப் பெயர் பெற்றது. வேதித்தல் - மாற்றுதல். பரிசனம் - பரிசித்தல்; தீண்டுதல். தீண்டிய மாத்திரத்தில் பொன்னாக மாற்றுவது பரிசன வேதி. வரிசை - மேன்மை. குவலயம் - நிலவட்டம். அஃது ஆகுபெயராய் அதன்மேல் வாழும் உயிர்களை உணர்த்திற்று. உயிர்களுள்ளும் சிறப்புப் பற்றி மக்கள் உயிரையே உணர்த்திற்று. "குரு பரிசித்த எல்லாம்" எனப் பொதுப்படக் கூறினாராயினும், 'சிவோகம் பாவனையோடு பரிசித்த எல்லாம்' என்பதே கருத்து. 'தீர' என்பது, 'தீர்ந்து' எனத் திரிந்து நின்றது. ஆம் - உண்டாம்; கிடைக்கும்.*

*முன்பு, "கறுத்த இரும்பே வகையது போல" என்றது மாணவன் அடையும் பேற்றின் சிறப்பை உணர்த்தற்கும், இங்கு "பரிசன வேதி....... பொன்னாகுமாபோல்" என்றது சற்குருவினது திருவருள் ஆற்றலின் சிறப்பை உணர்த்தற்கும் கூறப்பட்டன ஆகலின் கூறியது கூறல் அன்றாம்.*

*இதனால் சற்குருவினது அருளாற்றலின் சிறப்பு உவமையில் வைத்து உணர்த்தப்பட்டது.*

**2024.** **தானே எனநின்ற சற்குரு சந்நிதி**
**தானே எனநின்ற தன்மை வெளிப்படின்**
**தானே தனைப்பெற வேண்டும் சதுர்பெறல்**
**ஊனே எனநினைந் தோர்ந்துகொள் உன்னிலே.** **7**

**2025.** **வரும்வழி போம்வழி மாயா வழியே**
**கருவழி கண்டவர் காணா வழியைப்**
**பெருவழி யாநந்தி பேசும் வழியைக்**
**குருவழி யேசென்று கூடலும் ஆமே.** **8**

---

*2024.* ***தெளிவுரை :-*** *"யான் சிவனே" என மாணாக்கற்கு அறிவுறுத்துகின்ற அந்தக் குருவின் சந்நிதியில் அவன் சிவனே ஆன தன்மை எவ்வாற்றாலேனும் மாணாக்கனுக்கு இனிது புலப்படுமாயின், அவனது மனித உடம்பைச் சிவனது அருள் திருமேனியாகவே உணர்ந்து, தான் அவனால் சிவமாந் தன்மையைப் பெறல் வேண்டும். (பின்னர் வேறு நினைதல் கூடாது). இதனை உன் உள்ளத்திற்குள்ளே ஆராய்ந்து கொள்க. தன்னைச் சிவமாக உணரும் சற்குருவின் வழிநிற்கும் முறையை உணர்த்துகிறார்.*

***குறிப்புரை :-*** *சிவமாம் தன்மை புலப்படுதல், அருணந்தி தேவர்க்கு மெய்கண்ட தேவர் நோக்கின மாத்திரத்தே மலச்செருக்கு முழுவதும் அற்றொழிய, உள்ளம் அனலிடை மெழுகு போல உருகப் பெற்றமை போல்வது. அதன் பின்னர் அவர் தம் ஆசிரியரை, "கண்ணுதலும் கண்டக் கறையும் கரந்தருளி - மண்ணிடை" (இருபா இருபஃது - குருவணக்கம்) வந்த சிவனாகவே உணர்ந்தமை அறிக. அதன் பின்னரும் வேறு நினைவாராயின் அவர் உய்யும் வழி இல்லை என்றபடி. ஆசிரியனது தன்மையை மாணவன் வெளிப்பட ஆராய்தல் கூடாமையின், "உன்னிலே தேர்ந்துகொள்" என்றார். இதனுள் 'குரு' எனப் பொதுப்படக் கூறாது "சற்குரு" என்றது உணர்த்துவோனது சொற்பற்றி, சதுர்பெறல் - 'அருள்உரு' எனப்படும் பெருமையே அடைதல் 'ஊனே சதுர்பெறல்' என நினைந்து தானே தன்னைப்பெற வேண்டும்' என்க.*

*இதனால், சற்குருவைத் தெளியுமாறு கூறப்பட்டது.*

*2025.* ***தெளிவுரை :-*** *குருவின்வழி நிற்பின் முத்தியிற் கூடலாம் எனல் நுதலிற்று. பிராரத்த நுகர்ச்சிக்காக இனி வரும் வழியாகிய பிறப்பும் போகம் நுகர்ந்து கழித்தவழீ போம் வழியாகிய இறப்பும் ஆகிய இரண்டாலும் கெடாத வழியும், ஓயாமல் பிறவியில் கிடந்து உழல்வார் அறியாத வழியும், சிவபெருமான் மிகப்பெரிய வழியாக வேதசிவாகமங்களில் பேசும் வழியும் ஆகிய மோட்ச நெறியைக் குருவின் உபதேச வழியாகச் செல்லின் அடையலாம் என்றவாறு.*

*அழிவில்லாததும், எளிதில் யாராலும் அறியமுடியாததும், வேதசிவாகமங்களிற் கூறப்பட்டதும் ஆகிய முத்தி நெறியைக் குருவழி நிற்பின்*

**2026.** குருஎன் பவன்வேத ஆகமம் கூறும்
பரஇன்ப னாகிச் சிவோகமே பாவித்
தொருசிந்தை யின்றி உயர்பாசம் நீக்கி
வருநல் லுயிர்பரன் பால்வைக்கும் மன்னனே. **9**

---

*கூடலாம் என்பது கருத்து.*

*குறிப்புரை :- வரும் வழி - பிறப்பு. ஆகாமிய வினை முதிர்ந்து பிராரத்தமாய் நுகரவரும் பிறவி ஆதலின் அதனை 'வரும் வழி' என்றார்.*

*போம்வழி - இறப்பு. வினைநுகர்ந்து கழிந்தவழி இறந்துபடுதலின் அதனைப் 'போம்வழி' என்றார்.*

*இவ்விருவழிகளிலும் பற்றப்படாததும் அழிவின்றி நித்தியமானதும் முத்திநெறி ஆதலின் 'வரும்வழி போம்வழி இரண்டானும் மாயாவழி' எனப்பட்டது.*

*கருவழி கண்டவர் - மீண்டும் பிறந்தவர். போக இச்சை மீதூரப் பெற்று, கருவழியாகிய உபத்தத்தையே நோக்குவோர். அவர்கள் அறியாத பெருவழி முத்தி என்றவாறு.*

*நந்தி - சிவபெருமான், பெருவழியாப் பேசும் வழி - இறைவன் நூல்களாகிய வேதசிவாகமங்களில் மிகப்பெரிய நெறியாகப் பேசப்பெறும் நெறி முத்தியாதலின் இங்ஙனம் கூறப்பட்டது.*

*2026. **தெளிவுரை :-** 'குரு' என்று சிறப்பித்துச் சொல்லப்படுபவன் வேதாகமங்களால் சொல்லப்படுகின்ற பேரின்பத்தை நுகர்பவனாய், சிவோகம் பாவனை தவிர வேறு பாவனை எதுவும் இன்றிப் பக்குவம் வாய்ந்த உயிரை மிகவாய் உள்ள பாசங்களினின்றும் நீங்கிச் சிவத்தில் சேர்க்கும் தலைவன் ஆவான்.*

*குறிப்புரை :- ஆகவே, அவன் வழியாகவே பக்குவிகள் சிவனை அடைதல் வேண்டும்' என்பது குறிப்பெச்சம். பரஇன்பம் - வீடுபேறு.*

*இதனால் குருவினாலன்றி ஞானம் எய்துதல் கூடாமையால் குருவினாலன்றி வீடடைதல் இயலாது' என்பது கூறப்பட்டது. சகல வருக்கத்தினருள் முன்னைத் தவமிகுதியால் பிரளயாகலர் விஞ்ஞான கலரோடு ஒப்போர் மிக அரியர் ஆதலின் பொதுநிலை இதுவாதலைக் கூறியவாறு.*

*2027. **தெளிவுரை :-** சிவனது அருளே தன் வடிவாய் நிற்கின்ற உண்மைக் குருவாகிய அவன் தன் மாணாக்கர்க்கு ஒரு வார்த்தையைச் சொல்வானாயின் அந்த ஒரு வார்த்தை முப்பொருளின் இயல்பை உள்ளவாறு விளங்கச் செய்து, ஏனை எல்லாப் பொருளும் சிவ வியாபகத்தை விட்டு வேறு நில்லாமையைப் புலப்படுத்தி, சுத்தம், அசுத்தம் என்னும் இருவகைப் போகங்களும் அல்லாத வேறு ஒரு தனிப் போகமாகிய பரபோகத்தை விளைத்து நிற்கும் வார்த்தையாய்*

**2027.** சத்தும் அசத்தும் சதசத்தும் தான்காட்டிச்
சித்தும் அசித்தும் சிவபரத் தேசேர்த்துச்
சுத்தம் அசுத்தம் அறச்சுக மானசொல்
அத்தம் அருட்குரு வாம்அவன் கூறிலே. **10**

**2028.** உற்றிடும் ஐம்மலம் பாச உணர்வினால்
பற்றறும் நாதன் அடியில் பணிதலால்
சுற்றிய பேதம் துரியம்மூன் றால்வாட்டித்
தற்பரம் மேவுவோர் சாதக ராமே. **11**

---

இருக்கும்.

*குறிப்புரை :- '**அதனால் அத்தகைய குருவை அடைந்த மாணாக்கர் ஞானத்தை எய்தி, வீடு பெறுதல் உறுதி' என்பது கருத்து**, நான்காம் அடியை முதற்கண் வைத்து, கூறுதலுக்குச் செயப்படுபொருள் வருவித்துரைக்க. 'ஒரு வார்த்தை, மகா வாக்கியம், பெரும்பெயர்' என்பன ஒரு பொருட் சொற்கள். "மன்ன என்னை ஓர் வார்த்தையுட்படுத்துப் - பற்றினாய்" (தி.8 செத்திலாப் பத்து, 2) என்றதனால் அவ்வார்த்தை இத்தன்மைத்தாதல் விளங்கும், இது பற்றியே,*

*"சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் தன்வசன*
*மாத்திரத்தின் வாய்க்கும்நலம் வந்துறுமே" - திருக்களிற்றுப்படியார், 6*

*எனச் சொல்லப்பட்டது. சத்து பதி; அசத்து பாசம்; சதசத்து பசு. சித்து - சேதனப் பிரபஞ்சம்; உயிர்கள். அசித்து - அசேதனப் பிரபஞ்சம்; உயிரல்லன. ஆணவமும், கன்மமும் உயிரோடு, ஒற்றித்து நிற்பன. சேர்ந்து நிற்றலை விளக்குதலைச் சேர்த்தலாக, உபசரித்துக் கூறினார். 'சுத்தம், அசுத்தம்' என்பன ஆகுபெயர். சுத்த போகம் சுத்தப் பிரபஞ்சத்திலும், அசுத்த போகம் அசுத்தப் பிரபஞ்சத்திலும் உள்ளனவாம். சிவபோகம் இவற்றின் வேறாய், மேம்பட்டதாய், எல்லையின்றி யிருத்தலை அறிக. சுகத்தை ஆக்கும் சொல்லை, "சுகம் ஆனசொல்" என்றதும் உபசாரம். இதன்பின் 'ஆம்' என்னும் பயனிலை எஞ்சிநின்றது.*

*இதனால், குருவினால் ஞானம் எய்தி, வீடுபெறுமாறு கூறப்பட்டது.*

*2028. **தெளிவுரை :-** பக்குவம் இன்மையால் உயிர் பாச ஞானத்தையே உண்மை ஞானமாகக் கருதி நிற்றலால் அனாதியே அதனைப் பற்றிய ஐம்மலங்களும் அதனை விட்டு நீங்காது அதனைப் பற்றியே நிற்கும். பக்குவம் வந்த பொழுது பாச ஞானத்தை வெறுத்துப் பதியாகிய சிவனை நோக்கி நின்று அவனைப் பல முறையால் வணங்குதலால் முன் கூறிய ஐம்மலங்களும் அற்றொழியும். ஆகவே, தம்மைக் கட்டியுள்ள பாசக் கூட்டத்தால் தாம் சிவனை விட்டு நீங்கியிருக்கும் நிலையை முத்துரிய நிலைகளால் முறையே போக்கிச் சிவனை அடைய முயல்பவரே சற்குருவின் அருள்வழி நிற்கும் சாதகர் ஆவார்.*

**2029.** எல்லாம் இறைவன் இறைவி யுடனின்பம்
வல்லார் புலனும் வருங்கால் உயிர் தோன்றிச்
சொல்லா மலம்ஐந் தடங்கியிட் டோங்கியே
செல்லாச் சிவகதி சேர்தல் விளையாட்டே. **12**

---

***குறிப்புரை :-*** *'சற்குருவின் அருளைப் பெற்றும் அங்ஙனம் முயலாதவர் சாதகர் ஆகார்; அஃதாவது பயன்பெற்றவர் ஆகார்' என்பதாம். 'பாச உணர்வினால் ஐம்மலம் உற்றிடும் எனவும், 'நாதன் அடியில் பணிதலால் பற்றறும்' எனவும் கூட்டுக' 'நாதன் அடியில் பணிதலாகிய செயலில் நிற்றலே சாதனையில் நிற்றலாம்' என்பது உணர்த்துதற்கு அதனையும், அதற்கு மறுதலையானதையும் முதற்கண் எடுத்துக் கூறினார். உறுதல், இங்கு நீங்காது நிற்றல். மூன்று துரியம் 'சீவ துரியம், சிவ துரியம், பர துரியம்' என்பன.*

*துரியமூன்று - சீவதுரியம், சிவதுரியம், பரதுரியம். துரியம் - சித்தமும் தனது சத்தி மடங்கிச் செயலற்று ஒழியும் அவத்தை; சீவதுரியம், ஆங்காரத் தானியக்கப்படும் பிராண வாயுவும் புருடனும் என்னும் இரண்டுங் கூடி உடம்பிற்குக் காவலாயிருக்கும். அதனையே விடயிக்கும் அவதரம். இதற்குத் தானம் உந்தி. இங்ஙனம் நின்று சிவத்தை விடயிக்குநிலை சிவதுரியம். அதுவும் அடங்கியநிலை பரதுரியம் என்க.*

*இதனால், 'சற்குருவை அடைந்து அவனால் ஆட்கொள்ளப் பெற்றோர் செயற்பாலன இவை' என்பது கூறப்பட்டது.*

***2029. தெளிவுரை :-*** *ஞானம் வரும்பொழுது ஆன்ம இயல்பு உள்ளவாறு விளங்கப்பெற்று, ஐந்து மலங்களும் சத்தியடங்கி நிற்க அவற்றைக் கடந்து மோனம் உடையராய் நிலைபெயராத வீட்டு நிலையை அடைதல் எளிதாகும். அந்நிலை சிவானந்தமே. ஞானியர் எல்லாரும் அதனைப் பெறவல்லவராவர். எளிதாக நடைபெறும் என்பதை விளையாட்டு என்று குறிப்பிடுகிறார்.*

*புலன் - ஞானம் அது முதலாகத் தொடங்கி, "விளையாட்டே" என முடித்துப் பின், 'இறைவன் இறைவியுடன் இன்பம் எல்லாம் வல்லார்' என வேறு முடிபு செய்க. 'எல்லாம்' என்னும் பொதுப்பெயர் இங்கு உயர்திணையாய் நின்றது. இறைவன் மெய்ப்பொருளும், இறைவி அதனது ஆனந்தமும் ஆதலின் 'இறைவன் இறைவியுடன் ஆன இன்பம்' என்றார். 'ஆன' என்பது தொகுத்த லாயிற்று. 'சொல்லாது' என்பதன் ஈறு குன்றிற்று. 'இப்பயனுக்குரிய ஞானத்தை அருளுபவன் சற்குருவே' என்பது கருத்து.*

*இதனால், மேற்கூறிய சாதகர் எய்தும் பயன்கள் கூறப்பட்டன.*

***2030. தெளிவுரை :-*** *இழிவான பிறப்பு நிலையில் அதன் இழிவு தோன்றாதவாறு மறைத்து மீள மீள அதிலே நின்ற கருவிக் கூட்டத்தின் இயல்பை உணர்த்தி, அதனின்றும் பிரித்து உயிர் தனது இயல்பினைத் தான் உணருமாறு*

**2030.** ஈனப் பிறவியில் இட்டது மீட்டூட்டித்
தானத்து ளிட்டுத் தனையூட்டித் தாழ்த்தலும்
ஞானத்தின் மீட்டலும் நாட்டலும் வீடுற்று
மோனத்துள் வைத்தலும் முத்தன்றன் செய்கையே. **13**

---

*செய்து அவ்வுணர்விலே சிறிது காலம் நின்று தாமதிக்கச் செய்தலும், பின்பு இறைவன் இயல்பை உணர்த்தி உயிருணர்வினின்றும் பிரித்து இறை உணர்விலே நிலைத்திருக்கச் செய்தலும், பின் இறையின்பத்திலே தோய்ந்து பேச்சற்றிருக்கச் செய்தலும் ஆய இவையெல்லாம் முத்தான்மாவாய் நின்ற சற்குருவின் செய்கைகளாய் விளங்கும்.*

***குறிப்புரை :-*** *"இட்டது" என்பது கருவிக் கூட்டத்தைக் குறித்த காரணப் பெயர். ஊட்டுதல், அறிவு புகட்டல், 'ஊட்டி மீட்டு' என மொழி மாற்றி, ஊட்டுதலுக்குச் செயப்படுபொருள் வருவித்துரைக்க. 'அத்தானத்து' எனச் சுட்டு வருவிக்க. "தன்" என்றது, தனது இயல்பினைக் குறித்த ஆகுபெயர். 'கருவியுணர்வு' மெய்யுணர்வாகாமை எளிதில் விளங்குதல்போல, உயிருணர்வு மெய்யுணர் வாகாமை எளிதின் விளங்குவதன்றாகலின் 'அதனின்றும் நீங்குதல் தாழ்ந்து நிகழும் என்றார். ஞானம் - மெய்யுணர்வு, இறையுணர்வே அது என்க. கருவியுணர்வு - பாச ஞானம். உயிருணர்வு - பசுஞானம். இறை யுணர்வு - பதி ஞானம்'. கருவிக்கூட்டத்தை 'இது நானன்று' எனக் கழித்தவுடன் தோன்றுவது 'சித்தாகிய யானே முதற்பொருள்' என்னும் உயிருணர்வாம் என்பதை, "ஆன்மா இவை கீழ் நாடலாலே - காதலினால் நான் பிரமம் என்னும் ஞானம் கருது பசுஞானம்" என்பதனான் அறிக. "மோனத்துள்" என்பதன்பின் 'இருக்க' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது என்பதனால் அறிக. ஏகாரம் பிரிநிலை. அதனால் உணர்த்தப்பட்டது. 'இவை தன் செயலால் ஆவன அல்ல' என்பது. முத்தன் - பாசங்களினின்றும் விடுபட்டவனாகிய சற்குரு.*

*இதனால், சற்குருவின் அருளாற்றல் திறம் வகுத்துக் கூறப்பட்டது.*

***2031. தெளிவுரை :-*** *சிவன் தனது கருணை காரணமாகச் செய்யும் முத் தொழில்களாகிய விளையாட்டு நிகழும் இடம் சடமாய மாயை யினிடத்திலாம். ஆயினும் அவ்விளையாட்டிற்குப் பயன் அறிவுடைப் பொருளாகிய உயிரை, 'சித்து இவை, அசித்து இவை' என்பதை அறியச் செய்து மும்மலங்களைத் துடைத்துத் தூய்மையுறப் பண்ணி வேறு இரு தொழில்களால் மெய்ப்பொருளை அடையச் செய்தலேயாகும்.*

***குறிப்புரை :-*** *பரமனுக்குப் பஞ்சகிருத்தியம் செய்தல் மிக எளிமையான செயல் என்பார் 'விளையாட்டு' என்றும், அவன் அங்ஙனம் செய்தல் ஆன்மாக்களெல்லாம் கடைத்தேற வேண்டும் என்னும் கருணை என்பார் 'அருளின்' என்றும், சீவர்களனைவர்க்கும் தந்தையாய்க் குற்றம் கடிந்து குணம் பெருக்கிக் கோதாட்டுவன் என்பார் 'அத்தன்' என்றும் கூறினார்.*

**2031.** அத்தன் அருளின் விளையாட் டிடம்சடம்
சித்தொ டசித்துத் தெளிவித்துச் சீவனைச்
சுத்தனு மாக்கித் துடைத்து மலங்களைச்
சத்துடன் ஐங்கரு மத்திடுந் தன்மையே. 14

**2032.** ஈசத்து வம்கடந் தில்லையென் றப்புறம்
பாசத்து ளேயென்றும் பாவியும் அண்ணலை
நேசத்து ளேநின்ற நின்மலன் எம்மிறை
தேசத்தை யெல்லாம் தெளியவைத் தானே. 15

---

*இடம் - ஆன்மாக்கள் வினைப் போகத்தைத் துய்த்தற்கு இடமாகிய புவனம். சடம் - வினைப் போகங்களைத் துய்த்தற்குச் சாதனமாகிய உடல், சித்து - உணர்த்த உணரும் அறிவுருவாய ஆன்மா. அசித்து - மண்முதல் குடிலை ஈறான அறிவற்ற மாயேயமாகிற தத்துவங்கள். அறத் தெளிவித்து - நன்றாகத் தெளிவித்து. அதாவது புவன போகங்களும் தத்துவ தாத்துவிகங்களும் காரிய மாதற்றன்மையால் அசத்து என்றும் சடம் என்றும் அறிவித்து, சித்தாகிய உயிர் சத்சித்தாகிய சிவத்தோடு கலந்து சித்தாகவே விளங்குதற்கு உரியது என்றும் உயிர்கள் உணர்ந்து ஊன்றுமாறு செய்தலாம்.*

*மலத்தோடு கூடி அசத்தான சீவனை மலத்தினைத் துடைத்துச் சுத்தனாக்குதல் நித்த சுத்தனாகிய சிவத்தோடு சேர்த்தற்கேயாம். இடுந்தன்மை என்பதை ஐங்கருமத்து இடுந்தன்மை என்றும், சத்துடன் இடுந்தன்மை என்றும் இரண்டிடத்தும் கூட்டுக.*

*இதனால், 'இறைவன் செய்யும் தொழில்களில் முடிவானது சற்குருவாய் வந்து ஞானத்தை அருளுதலே' என்பது கூறப்பட்டது.*

***2032. தெளிவுரை :-** உலகீர், எங்கள் சிவபெருமான் 'தனக்கு வேறாய் விலகி நிற்கும் பொருள் எதுவும் இல்லை' என்று அறிந்து தன்பால் செலுத்தப்படும் அன்பிலே விளங்கி நிற்பவன். அத்தகைய அன்பர்க்கு அவன் அனைத்துப் பொருளின் உண்மைகளையும் தெளிவாக உணரக் காட்டினான். ஆதலால் நீங்கள் 'அவனது வியாபகத்தைக் கடந்து அவனின் வேறாக யாதொரு பொருளும் இல்லை' என உணர்ந்து உடம்பில் உள்ள பொழுது அவனை எவ்வகையிலேனும் உணர்ந்து போற்றுங்கள்.*

***குறிப்புரை :-** 'உங்கட்கும் அனைத்துப் பொருள்களின் உண்மைகளையும் தெளிய உணர்த்துவான்' என்பது கருத்து. "இல்லை" என்பதற்கு 'எப்பொருளும்' என்னும் எழுவாய் வருவிக்க. 'அப்புறம் இல்லை' என்க. 'பாசத்துளேயும்' என்னும் எதிரது தழுவிய எச்ச உம்மை தொகுத்தலாயிற்று. "பாசம்" என்றது உடம்பை ஏன்? சீவன் முத்த நிலையில் கூறப்படுதலின், "தேசம்" என்பது இட ஆகுபெயராய் அதன்கண் உள்ள பொருள்களைக் குறித்தது. ஈசத்துவம் - இறைமை.*

**2033.** மாணிக்க மலை மலர்ந்தெழு மண்டலம்
ஆணிப்பொன் னின்றங் கமுதம் விளைந்தது
பேணிக்கொண் டுண்டார் பிறப்பற் றிருந்தார்கள்
ஊனுக் கிருந்தார் உணராத மாக்களே. **16**

---

*இதனால், சற்குருவின் அருளால் பெற்ற அறிவிற்குப் பயன் இறைவனிடத்தில் அன்பு செய்தலே என்பது கூறப்பட்டது.*

*2033.* ***தெளிவுரை :-*** *மாணிக்க மணிகளைக் கோத்த ஒரு வடத்தைத் தூங்க விட்டது போல உடம்பினுள்ளே ஒன்றின்மேல் ஒன்றாய் அமைந்து ஒளிவிட்டு விளங்கும் ஏழு மண்டலங்கள் உள்ளன. அங்கெல்லாம் அவற்றுக்கு மேல் உள்ள மாற்றுயர்ந்த பொன் போல்வதொரு நற்பொருளினின்றும் ஓர் அமுதம் ஊற்றெடுத்துப் பாய்கின்றது. அதனையறிந்து போற்றிக்கொண்டு உண்டவர்களே பிறப்பற்றிருக்கின்றார்கள். அதனை அறியாதவரெல்லாம் விலங்கொடொத்து உணவை உண்டு வயிறு வளர்ப்பதற்காகவே வாழ்கின்றனர்.*

***குறிப்புரை :-*** *'அவர் பிறவிக் கடலினின்றும் ஏறமாட்டார்' என்பது கருத்து. ஆணிப்பொன் - உரையாணியாக எடுத்து வைத்துக் கொள்ளும் உயர்ந்த பொன். "மலர்ந்த" என்றது, 'மலர்ந்தன போன்றுள்ளன' என்னும் பொருளைத் தந்தது. ஏழு மண்டலமாவன மூலாதாரம் முதலாக உச்சி ஈறாக உள்ளவை. அவை தாமரை மலர் வடிவின ஆதல் பற்றி, 'மாணிக்க மலை மலர்ந்தன போன்றுள்ளன' என்றார். ஏழாந் தானத்திற்கு மேல் நிராதாரமான பன்னிரண்டங்குலத்தைக் கடந்த மீதானத்தில் உள்ள செம்மேனியனாகிய சிவனை, "ஆணிப் பொன்" என உவமையாகு பெயரால் கூறினார். ஏழாந்தானத்திற்றானே அமுதம் ஊறுவதாயினும் அஃது அருள் மயமாதல் சிவனாலேயாதல் பற்றி அவனிடத்தினின்றே அமுதம் ஊறுவதாகக் கூறினார்.*

*இதனால், சற்குரு அருளால் சிவஞானத்தைப் பெற்றோர் பின் இச்சிவயோக சாதனத்தால் நிட்டை கூடல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

*2034.* ***தெளிவுரை :-*** *சத்தோடு கூடியவழிச் சத்தாம் தன்மையும், அசத்தோடு கூடியவழி அசத்தாம் தன்மையும் உடைத்தாதல் பற்றி, 'சதசத்து' எனப் பெயர் பெற்ற உயிரை அநாதியில் சத்தோடு சேராது நீங்கச் செய்து, அசத்தோடு சேர்த்த ஆணவ மலத்தொடர்பு இப்பெத்த காலத்தில் அற்றொழிதற் பொருட்டு, 'சுத்த மாயை, அசுத்த மாயை' என்னும் இருமாயைகளைச் செயற்படுத்தி, உயிரையும் அச்செயற்பாட்டிற்கு உள்ளாக்கியவனும், பின் என்றும் திரிபின்றி ஒருபடித்தாய் நிற்பதாகிய உண்மையை உணர்த்தி, அவ்வுயிரை உய்யக் கொள்கின்றவனும் இறைவனேயன்றிப் பிறர் இல்லை.*

***குறிப்புரை :-*** *உலகில் பிறக்கும் ஞான்றே சத்தாகிய உயிர், அசத்தாகிய உடல், உலகு, வினை, மலம் இவற்றொடு பிறந்து தன் தன்மைகெட்டு அசத்தாக*

**2034.** அசத்தொடு சத்தும் அசற்சத்து நீங்க
இசைத்திடு பாசப்பற்று ஈங்கறு மாறே
அசைத்திரு மாயை அணுத்தானும் ஆங்கே
இசைத்தானும் ஒன்றறி விப்போ னிறையே. **17**

---

*விளங்கிற்று. இறைவன் உயிர்கள் மீது வைத்த கைம்மாறில்லாக் கருணையால் சத்து அசத்தினை விட்டு நீங்குதல் வேண்டும் எனத் திருவுள்ளங்கொண்டு அவ்வுயிர்கள் அங்ஙனம் அசத்தொடு சார்தற்குக் காரணமான பாசங்களை அறுத்தார், பாசமாகிய அழுக்கு நீங்க இரு மாயைகளாகிற அழுக்குகளை, வண்ணான் ஆடையின் அழுக்கைப் போக்கச் சாணியும் உவர் மண்ணுமாகிய இருவகை அழுக்குகளைப் புணர்க்குமாறு போலப் புணர்த்தார். ஆடை தன்னழுக்கும் சார்பழுக்கும் நீங்கி வெண்மையானாற் போல உயிர் பாசத்தினின்று நீங்கத் தூய்மையாகவே அதனிடம் தான் விளங்கித் தோன்றினார். அவ்விளக்கம் என்றும் உயிரினிடமாக நிலைக்கவும் பாசம் மீளவும் வந்து வாசனையாகவேனும் பற்றாதவாறும் ஒன்றை உபதேசித்தார். இத்தனை உபகாரமும் முறையே செய்து ஆட்கொண்டார் இறைவனாகிய சற்குருவே என்பது உணர்த்தப் பெற்றது.*

*அசத்தொடு சத்து, சத்து அசத் நீங்க, இசைத்திடு பாசப்பற்று ஈங்கு அறுமாறே இருமாயை அசைத்து அணு தானும் ஆங்கே இசைத்தானும், ஒன்றறிவிப்போனும் இறையே என முடிக்க.*

*அசத் - தனு கரண புவன போகங்களாகிய மாயேயங்கள். சத் - நிலையான உயிர். இசைத்திடு பாசப்பற்று - அநாதியே கூட்டப்பெற்ற பாசங்களும் அவற்றான் விளைந்த மோகமாகிய பற்றுக்களும் அசைத்து - கூட்டி. இருமாயை - சுத்தமாயை. அசுத்தமாயை. அணு - ஆன்மா. தான் - சிவம். இசைத்தானும் - கூட்டியவனும். ஒன்று - சீபஞ்சாக்கரம்.*

*இதனால், சற்குரு சிவனே யாதல் அருளல் தொழில் அவனுடையதே யாதலை ஏனைத் தொழில்கள் நிகழுமாற்றின் வைத்து உணர்த்தும் முகத்தால் தெளிவிக்கப்பட்டது.*

***2035. தெளிவுரை :-** சத்திநிபாதம், படிமுறையால் நாளும் நாளும் மிகுந்து வரும் வகையால் ஆணவத்தைச் சிறிது சிறிதாக முறையே நீக்கி வருதலாலும், முடிவில் என்றும் நீங்காது நிலைத்து நிற்கும் உபதேச மொழியால் அவ்வாணவங் காரணமாக இருந்து வந்த அறியாமையைப் போக்கி அறிவைத் தருதலாலும், பின்னும் பண்டை வாசனையால் பாச உணர்வு தோன்றுமாயின் அதனைத் தோன்றும் பொழுதே பசையின்றி உலர்ந்து கெடும்படி வாட்டி விடுதலாலும், ஆராய்ந்து சொல்லுமிடத்து எல்லா முதன்மையும் உடையவனாக உண்மை நூல்களில் கூறப்படுகின்ற இறைவனே உயிர்கட்கு வீடுபேறு கிடைக்கும்படி குருவாய் வருபவனாவான்.*

**2035.** ஏறு நெறியே மலத்தை எரித்தலால்
ஈறில் உரையால் இருளை அறுத்தலால்
மாறின் பசுபாசம் வாட்டலால் வீடுறக்
கூறு பரனே குருவாம் இயம்பிலே. **18**

---

***குறிப்புரை :-*** *இறைவன் தனது அருட்சத்தியால் உயிர்களைப் பற்றியுள்ள ஆணவ மலத்தைப் படிப்படியாய் நீக்குதலை,*

*மன்னும் இருளை மதிதுரந்த வாறன்பின்*
*மன்னும் அரனே மலம் துரந்து.*

*- சிவஞானபோதம், சூ.11 அதி.2*

*எனக் கூறியதனானும் உணர்க. மாறுதல் - ஞான நெறியினின்றும் விலகல். "ஏறு நெறியால்" எனவும், 'ஈறில் உரையால்' எனவும் கூறியவற்றிற்கு ஏற்ப, 'தனது அருள் ஞானத் தீயால் வாட்டலால்' என ஏது வருவித்துக் கொள்க.*

*தொல்லையின் வருதல் போலத் தோன்றிரு வினைய துண்டேல்*
*அல்லொளி புரையும் ஞானத் தழலுற அழிந்து போமே.*

*- சிவப்பிரகாசம், 9-8*

*எனவும்,*

*.................................... இடை ஏறுவினை*
*தோன்றில் அருளே சுடும்.* *- திருவருட்பயன் - 98*

*எனவும் பின்னோர் கூறுதல் காண்க. 'இங்குக் கூறப்பட்டன' பிறரால் இயல்வன அண்மையின், இறுதிக்கண் கூறிய செயலும் சிவன் செய்யும் செயலேயாம்' என்பது கருத்து. 'வீடுறக் குருவாம்' என இயையும்.*

*இதனால், மேற்கூறிய பொருள் தக்கதோர் ஏதுக்களால் வலியுறுத்தி முடிக்கப்பட்டது.*

## 36. கூடா ஒழுக்கம்

*கூடா ஒழுக்கம் - மேற்கொள்ளுதற்கு ஏலாத ஒழுக்கம். சற்குரு நெறியை அடுத்து இதனைக் கூறுதலால், 'சற்குருவின் அருள் பெற்று அவ்வருள் வழியில் நிற்பார்க்கு ஏலா ஒழுக்கம்' என்பதே இதற்குப் பொருளாகின்றது.*

*அஃதாவது தாம் மேற்கொண்ட நிலைக்குப் பொருந்தாத ஒழுக்கம். சற்குரு ஆவான் பொறி அடக்கமும் சிவத்தியானமும் மேற்கொண்டு உலகவர்க்குக் கருணையே வழங்கும் தன்மையனாதல் வேண்டும் என்பதனை வகுத்த ஆசிரியர், இவ்வதிகாரத்தான் பொருந்தாத ஒழுக்கத்தை வகுத்துரைத்தல் வாயிலாக அசற்குரு நெறியை மேலும் வற்புறுத்தத் தொடங்கினார். இதனால் அதிகார முறைமையும் இனிதே விளங்கும்.*

**2036.** **கண்காணி இல்லென்று கள்ளம் பல செய்வார்**
**கண்காணி இல்லா இடம்இல்லை காணுங்கால்**
**கண்காணி யாகக் கலந்தெங்கும் நின்றானைக்**
**கண்காணி கண்டார் களவொழிந் தாரே.** **1**

---

*2036. தெளிவுரை :- அறிவில்லாதவர் 'தங்களை உடன் இருந்து காவல் புரிபவன் எவனும் இல்லை' என்று தவறாகக் கருதிக் கொண்டு தவறான செயல்கள் பலவற்றைச் செய்கின்றனர். உண்மையை உணர்ந்தால் யாவரையும் உடன் இருந்து காவல் புரிகின்ற ஒருவன் எங்கும் இருக்கின்றான். அவன் இல்லாத இடம் இல்லை. (எனவே தவறு செய்பவர் அவனால் ஒறுப்படுதல் திண்ணம்). எவ்விடத்திலும் நிறைந்து காவல் புரிகின்ற அவனை அங்ஙனம் காவல் புரிபவனாக அறிந்தோர் யாவரும் தவற்றை ஒருஞான்றும் செய்யாது ஒழிந்திருக்கின்றனர்.*

*குறிப்புரை :- 'அவரைப் பின்பற்றி ஒழுகுதலே அறிவுடைமை யாகும்' என்பது குறிப்பெச்சம். இம்மந்திரப் பொருளையே,*

*வஞ்சித் தொழுகும் மதியிலிகாள், யாவரையும்*
*வஞ்சித்தோம் என்று மகிழன்மின் - வஞ்சித்த*
*எங்கும் உளன் ஒருவன் காணுங்கொ லென்றஞ்சி*
*அங்கங் குலைவ தறிவு. - நீதிநெறி விளக்கம் - 93.*

*எனப் பின்வந்த பெரியார் ஞானப் பகுதியில் எடுத்தருளிச் செய்தார். மெய்கண்ட தேவரும்,*

*தன்னை யறிவித்துத் தான்தானாச் செய்தானைப்*
*பின்னை மறத்தல் பிழையலது. - சிவஞானபோதம், சூ.12 - அதி. 4*

*என ஞானியரை நோக்கியே அறிவுறுத்தியமை காண்க. "கண்காணி" என்பது*

**2037.** செய்தான் அறியும் செழுங்கடல் வட்டத்துப்
பொய்தான் மிகவும் புலம்பும் மனிதர்கள்
மெய்தான் உரைக்கில்விண் ணோர்தொழச் செய்குவன்
மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே. **2**

**2038.** பத்திவிற் றுண்டு பகலைக் கழிவிடும்
மத்தகர்க் கன்றோ மறுபிறப் புள்ளது
வித்துக்குற் றுண்டு விளைபுலம் பாழ்செய்யும்
பித்தர்கட் கென்றும் பிறப்பில்லை தானே. **3**

---

*நேரே நோக்கிக் காவல் புரிபவனைக் குறிக்கும்பெயர். "ஆக" என்பதைப் பின்னரும் கூட்டுக. கண்காணி கண்டார் என்பதற்குக் கண்ணையே இடமாகக் கொண்டு கண்டவர்; நேரறிவு பெற்றவர் எனினுமாம்.*

***2037. தெளிவுரை :-*** *மெய்யுரைக்கின் விண்ணோர் தொழ வைப்பன் எனல் நுதலிற்று. கருமை நிறம் தாழ்ந்து செம்மைநிறம் மிக்கு விளங்கும் தாழ்ந்த சடையையுடைய இறைவன் செழுமையான கடல் சூழ்ந்த இவ்வுலகத்துள் பொய் பலவற்றையே புலம்பித் திரியும் மக்கள், மெய்யுரைப்பார்களாயின் தேவரும் தொழும் தகுதி வழங்குவன். இவ்வுலகத்தைப் படைத்த அவன் எல்லாம் அறிவன் என்றவாறு.*

*உலகம் இறைவன் படைப்பு; இவ்வுலகத்து எங்கு யார் எதைச் செய்யினும் அவற்குத் தெரியும் ஆகையால் பொய் பேசிப் புலம்பற்க; மெய் உரைத்தால் தேவர் தொழுந்தகுதி வழங்குவன் என்பது கருத்து.*

***குறிப்புரை :-*** *செய்தான் அறியும் - உலகத்தையும் உயிர்களின் உடம்பையும் படைத்த இறைவனுக்கு எங்கு என்ன நடக்கிறது என்பது தெரியும்.*

*வட்டம் - குவலயம். பொய்யுரைப்போர் உண்மை உரைக்கின் இறைவன் அவர்களை விண்ணோர் தொழ வைப்பன் என்றது பதவியுலயர்த்துவன் என்றவாறாம். மை - கருமை நிறமான விடம். மிடறு - கழுத்து.*

***2038. தெளிவுரை :-*** *போலிக்குரவர்க்கு மறுபிறப்புண்மையும், உண்மைக் குரவற்கு அஃதின்மையும் உணர்த்துதல் நுதலிற்று. பத்தியை விலைபேசி விற்றுண்டு பகற்பொழுதைக் கழிக்கின்ற மதம் பிடித்தவர்களுக்கு மறுபிறப்பு உள்ளதன்றோ! விதையைக் குற்றியுண்டு, விளைபுலத்தைப் பாழான தரிசாக்கும் இறைப்பித்து உடையார்கட்கு என்றுமே பிறப்பில்லையாம் என்றவாறு.*

*வினையாகிற விதையை அழித்து, உள்ளவினையை நுகர்ந்து கழிக்கும் உண்மை ஞானியர்க்கு மறுபிறப்பு இல்லை; பத்தியை விற்கும் போலிகளுக்குப் பிறவியுண்டாம் என்பது கருத்து.*

**2039.** வடக்கு வடக்கென்பர் வைத்ததொன் றில்லை
நடக்க உறுவரே ஞானம் இலாதார்
வடக்கில் அடங்கிய வையகம் எல்லாம்
அகத்தில் அடங்கும் அறிவுடை யோர்க்கே. **4**

**2040.** காயக் குழப்பனைக் காயநன் னாடனைக்
காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத்
தேயத்து ளேஎங்கும் தேடித் திரிவார்கள்
காயத்துள் நின்ற கருத்தறி யாரே. **5**

---

***குறிப்புரை :-*** *இறைவனிடம் என்றும் நீங்காத அன்புடையார் போலப் பிறர் நம்பும்படி நடந்து அன்பை விலைக்கு விற்று வயிறு வளர்க்குமவர்கள் என்பார் "பந்தி விற்று ............ மத்தகர்" என்றார். மத்தகர் - மத்தர்; என்பது 'க' விரித்தல் பெற்றது. பாலன் - பாலகன் என்பது போல, வடமொழியிலக்கணம்.*

*வித்து - வினை. குற்று உண்ணல் - வருபிறவிக்கு வழியாகாது கெடுத்தல். விளைபுலம் - உடல். பாழ்செய்தல் - தரிசுபோடுதல். பித்தர் - அரனிடத்து முறுகிய அன்புடையார்.*

***2039. தெளிவுரை :-*** *கயிலை கருத்திலுள தெனல் நுதலிற்று. வடக்கு என்று எதற்குமே வடக்கை நோக்கிப் பிதற்றுவர்; வடக்கே வைத்தது ஒன்றும் இல்லையாம்; அறிவில்லாதவர்களே வடக்கு நோக்கிப் பயணம் செய்வர்; வடக்கில் அடங்கிய உலகமனைத்தும் சிவஞானியர் சிந்தையில் அடங்கும் என்றவாறு.*

*வடக்கேயுள்ள கயிலை, மேரு, கங்கை, யமுனை அனைத்தும் நம் அகத்துள் விளங்குவனவே; இஃதறியாதார் பயணம் சென்று பாழாவர் என்பது கருத்து.*

***குறிப்புரை :-*** *மேரு - உடல். கயிலை - புருவநடு. கங்கை - இடகலை. யமுனை - பிங்கலை. இங்ஙனம் நமக்குள்ளே மனத்தகத்துப் பார்க்க அறியாதார் யாத்திரை சென்று பாழ்படுவர் என யாத்திரை செய்தலும் சிவஞானியர்க்கு கூடாவொழுக்கம் என்பது வற்புறுத்தியவாறு.*

***2040. தெளிவுரை :-*** *காயக் குழப்பன் - உயிர்களின் உடம்புகளை அவற்றின் வினைக்கேற்ப உழல்விப்பவன். காயநன்னாடன் - உயிர்க்கு உயிராய் நிற்றலால் உயிர்களின் உடம்புகளைத் தனது இடமாக உடையவன். காயத்தினுள்ளே கமழ்தல் - "உற்ற ஆக்கையின் உறுபொருளாய் நறுமலர் எழுதரு நாற்றம் போல்" (தி.8 அதிசயப்பத்து, 9) உள்நோக்கி உணர்வார்க்கு நுண்ணிய இனிய பொருளாய் வெளிப்படுபவன்.*

*ஏனைய வெளிப்படை.*

**2041.** கண்காணி யாகவே கையகத்தே எழும்
கண்காணி யாகக் கருத்துள் இருந்திடும்
கண்காணி யாகக் கலந்து வழிசெய்யும்
கண்காணி யாகிய காதலன் றானே. **6**

---

***குறிப்புரை :–*** *'கருத்து அறியார் தேடித் திரிவர்கள்' என்பதன் பின், அவர்க்கு அது வேண்டுவதே' என்னும் குறிப்பெச்சம் வருவித்துரைக்க. அதனானே, 'கருத்தறிந்தார்க்கு அது வேண்டுவதின்று என்பது போந்தது போதரவே அவர் அங்ஙனம் திரியாமை அவர்க்குக் குற்றமாகாதாயிற்று, ஆகவே, அறியதார் அறிந்தார் போன்று ஒழுகுதல் கூடாஒழுக்கம் ஆதல் அறிக. தேயம் - தேசம்.*

*இதனால், 'கீழ் நிலையில் உள்ளோர் மேல்நிலையில் சென்றோர் போல ஒழுகுதல் கூடாது' என விலக்கப்பட்டது.*

***2041. தெளிவுரை :–*** *உயிர்களின் கண்ணைத் தன் இடமாகக் கொண்டு அவற்றிற்கு அக்கண்போலச் சிறந்து நிற்கின்ற இறைவன் ஞானிகட்கு அவர்தம் புறக் கண்ணிற்குப் புலனாகின்றவனாகியும் இனிது விளங்குவான். அகக்கண்ணிற்குப் புலனாகின்றவனாகியும் இனிது விளங்குவான். ஆகையால் அவர்களது செயல்திறங்களை இடைவிடாது நோக்கி அவற்றிற்கு ஏற்ற பயனை அருளுதல் அவனுக்கு இயல்பாகும்.*

***குறிப்புரை :–*** *"காணி" நான்கனுள் முன்னைய மூன்றும் பகுபதம்; இறுதி ஒன்றும் பகாப்பதம். பகுபதங்களில் வந்த இகர விகுதி மூன்றனுள் முன்னைய இரண்டிலும் செயப்படுபொருண்மையிலும், இறுதி ஒன்றும் வினைமுதற் பொருண்மையிலும் வந்தன. காணி - தனக்குரிய இடம். காணி உடையவனை, "காணி" என உபசரித்துக் கூறினார். 'உயிர் தனது வலக்கண்ணில் சிறந்து விளங்கும்' என்றும் 'அவ்விளக்கத்தில் இறைவனும் சிறந்து விளங்குவான்' என்றும் கூறும் உபநிடத வழக்குப் பற்றி (பிருகதாரணியம், அத்தியாயம் 5) இறைவனை, "கண்காணியாகிய காதலன்" என்றார். "கண்ணே! கண்ணிற் கருமணியே! மணியாடுபாவாய்" (தி.6 ப.47 பா.1) என்னும் திருத்தாண்டகமும் இங்கு நோக்கத் தக்கது. ஈற்றடியை முதலில் கூட்டியுரைக்க. புறத்து விளங்குதலை, 'கையகத்தே எழும்' என்றும் அகத்து விளங்குதலை "கருத்துள் இருந்திடும்" என்றும் கூறினார். வழி - தீரும் வாயில். ஞானியர் தற்போதம் நிகழ்ந்து செய்யின் அவற்றை அவர் செயலாகவும், தற்போதம் இழந்து செய்யின் அவற்றைத் தன் செயலாகவும் கொண்டு அவற்றிற்கு ஏற்ற பயனைத் தருதலையே இங்கு, "வழி செய்யும்" என்றார். கண் காணி - கண்ணால் காணப்படுவது.*

*இதனால், 'ஞானியரும் தற்போதம் நீங்காநிலையில் அறநெறிப் பிழைப்பாராயின் அஃது அவர்க்கு ஏனையோர்க்குப் போலவே கூடா ஒழுக்கமாம்' என்பது கூறப்பட்டது.*

**2042.** கன்னி ஒருசிறை கற்றோர் ஒருசிறை
மன்னிய மாதவம் செய்தோர் ஒருசிறை
தன்னியல் புன்னி யுணர்ந்தோர் ஒருசிறை
என்னிது ஈசன் இயல்பறி யாரே. 7

**2043.** காணா தவர்கண்ணில் படலமே கண்ணொளி
காணா தவர்கட்குக் காணாத தவ்வொளி
காணா தவர்கட்கும் கண்ணாம் பெருங்கண்ணைக்
காணாது கண்டார் களவொழிந் தாரே. 8

---

***2042. தெளிவுரை :-*** *இறைவனியல்பு ஒருவராலும் அறியவொண்ணாத தாயுளது என உணர்த்துதல் நுதலிற்று.*

*கன்னியாகிய திருவருட்சத்தியின் பதிவு பெற்றோர் ஒரு பக்கம்; வேத வேதாங்கங்களை ஐயந்திரிபு அறக் கற்றோர் ஒருபக்கம்; நிலைபேறுடைய பெரிய தவத்தைச் செய்வோர் ஒருபக்கம்; சிவத்தினியல்பையும், ஆன்மாவாகிய தன்னியல்பையும் ஆராய்ந்து தெளிந்த சிவஞானியர் ஒருபக்கம்; இது என்ன? ஒருவரும் ஈசன் இயல்பு அறியாராயினர் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *ஒவ்வொருவரும் ஒவ்வொரு பக்கம் தேடுகின்றனர்; இறைவன் நம் அகத்துளன் என்பதை அறியகிலாரே என்பது கருத்து. கன்னி - திருவருட் சத்தி. "பான்மொழிக்கன்னி யாகும்" அதனால் கன்னி எனப்பட்டார்.*

***2043. தெளிவுரை :-*** *முகக்கண்கள் புறப்பொருளைக் காணுதல் இயல்பாயினும் சில கண்கள் அப்பொருள்களைக் காணமாட்டாதன ஆதற்குக் காரணம் அக்கண்ணில் ஒளிக்கு மாறாகப் படலம் இருப்பதேயாகும். இனி முகக்கண் உடையார்க்கே யன்றி அக்கண் இல்லாதவர்க்கும் அகக் கண்ணாகிய அறிவுக்கு அறிவாய் உள்ள பேரறிவாம் சிவ ஒளியைத் தற்போத வழியாற் காணாது அருள் வழியாகக் கண்டவரே கள்ளத்தனமாகச் செய்யும் செயல்களைச் செய்யாது ஒழிவர். அந்தச் சிவ ஒளி அகக்கண்ணாகிய ஞானக் கண் இல்லாதவர்க்குக் காணப்படாத ஒன்றேயாய் இருக்கும்.*

***குறிப்புரை :-*** *'அதனால் அவர்கள் வினை விட்டொழியாது செய்பவரே யாவர்' என்பது குறிப்பெச்சம். 'வறியவர்கட்கு அடகுதான் சோறு என்றல் போல, "காணாத கண்ணில் படலமே கண்ணொளி" என்றார். அங்ஙனம் கூறியது, காணுதற்குரிய கண் காணாதொழிதற்குக் காரணங் கூறியவாறு. புறக்கண் பற்றிய இக் கூற்று உவமையாய், அகக்கண்ணை மறைத்து நிற்கும் மலம் காரணமாகச் சிவ ஒளியைக் காண்டல் இயலாமையை விளக்கிற்று. இரண்டாம் அடியில் "காணாதவர்" என்றது அகக்கண்ணால் காணாதவரையேயாம். இரண்டாம் அடியை இறுதியில் கூட்டியுரைக்க. காணாது காணல் - எஞ்ஞான்றும் காணல்.*

**2044.** பித்தன் மருந்தால் தெளிந்து பிரகிருதி
உய்த்தொன்று மாபோல் விழியுந்தன் கண்ணொளி
அத்தன்மை யாதல்போல் நந்தி அருள்தரச்
சித்தம் தெளிந்தேன் செயலொழிந் தேனே. **9**

**2045.** பிரான்மய மாகப் பெயர்ந்தன எட்டும்
பராமய மென்றெண்ணிப் பள்ளி உணரார்
சுராமய முன்னிய சூழ்வினை யாளர்
நிராமய மாக நினைப் பொழிந் தாரே. **10**

---

*களவு - மறைவில் நிகழ்த்தப்பெறும் காமமாதி குற்றங்கள்.*

*இதனால், 'கூடா ஒழுக்கம் உடையார் ஞானியர் ஆகார்' என்பது கூறப்பட்டது. செயலொழிதல் - சீவச் செயலற்றுச் சிவச்செயல் ஆதல்.*

***2044. தெளிவுரை :-*** *பித்துக் கொண்டவன் அதற்காக மருத்துவன் தரும் மருந்தால் பித்து நீங்கித் தெளிவுற்று உடம்பை முன்போலத் தறிகெட்ட நிலையில் செலுத்திக் கெடுக்காமல் இயற்கை நிலையில் செலுத்தி ஏனையோர் குழாத்தில் தானும் ஒருவனாய் ஒன்றுபடுதலைப் போலவும், படலத்தால் மறைக்கப்பட்ட கண்ணும் அவ்வாறே மருத்துவன் செய்யும் சிகிச்சையால் படலம் நீங்கித் தனது ஒளி கிடைக்கப் பெறும் அத்தன்மையைப் போலவும் அஞ்ஞானத்தால் அறிவு மயங்கி, 'யான், எனது' எனச் செருக்கித் திரிந்த யான் எம் ஆசிரியாராகிய நந்தி பெருமான் ஞானத்தை அருளியதனால் அறிவு தெளிந்து செருக்கொழிந்து அருள் வழியில் ஒழுகி ஏனைய அருளாளரது குழாத்தில் சேர்ந்து அவர்களில் ஒருவன் ஆயினேன்.*

***குறிப்புரை :-*** *'அதனால் யான்எனது என்னும் செருக்கால் கூடா ஒழுக்கத்தை மேற்கொள்ளுதலை இலன் ஆயினேன்' என்பது குறிப்பெச்சம். 'ஆகவே இப்பேற்றினைப் பெறாதவர் கூடாவொழுக்கத்தை ஒழிதல் இயலாது' என்பது கருத்தாயிற்று. உவமையில், 'பிரகிருதி உய்த்து ஒன்றுமாபோல் எனக் கூறினமையால், பொருளிலும் அதற்கு ஏற்புடையன கொள்ளப்பட்டன. ''பிரகிருதி'' என்றது உடம்பை; சிவஞான போதத்திலும் (சூ.3 அதி.5) "ஒடுங்கினவிடத்து இன்பத்துன்பம் சீவனம் பிரகிருதிக் கின்மையின்" என உடம்பு "பிரகிருதி" என்றது காண்க. பிரகிருதி - இயல்பான குணம், பித்த சுபாவம் என்பாருமுளர்.*

*இதனால், 'தற்போதத்தால் கூடாஒழுக்கத்தைக் கொள்ளுதற்குக் காரணம் திருவருளின்மையே' என்பது கூறப்பட்டது. சிவனருளால் சித்தம் தெளியும்.*

**2046.** ஒன்றிரண் டாகிநின் றொன்றிஒன் றாயினோர்க்கு
ஒன்றும் இரண்டும் ஒருகாலும் கூடிடா
ஒன்றிரண் டென்றே உரைதரு வோர்க்கெலாம்
ஒன்றிரண் டாய்நிற்கும் ஒன்றோடொன் றானதே. **11**

---

***2045. தெளிவுரை :-*** *கள்ளை மிக உண்டலால் உடல் அக்கள்மயமேயாய் இருத்தலை விரும்பும் வஞ்சமனத்தவர் ஞானிகட்குச் சிவமயமாகத் திகழ்கின்ற உலகப் பகுதி எட்டினையும் அருள்மயமாக எண்ணி அடங்குதலாகிய ஞான விழிப்பைக் கொள்ளாது அஞ்ஞானத்தில் உறங்குவோராய்த் தாம் குற்றம் சிறிதும் இல்லாத தூயராய் இருத்தல் வேண்டும் என்பதைச் சிறிதும் நினையாதே கெடுகின்றனர். எல்லாம் சிவமயம் என்று எண்ணாது கவலையுற்றிருப்போர் நிலைக்கு இரங்குதல் கூறிற்று.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடியை முதலில் வைத்துரைக்க. பெயர்தல் - விளங்குதல். உலகப் பகுதி ஐம்பெரும் பூதமும், 'ஞாயிறு, திங்கள்' என்னும் இருசுடர்களும், உயிர்களும் எட்டுப் பகுதியுள்ளே அடங்குதலின், "எட்டும் என முற்றும்மை கொடுத்து ஓதினார். உடலை, உயிர் இயக்குதல்போல் இவற்றை, இறைவன் இயக்கி நிற்றலின் இந்த எட்டும் அவனுக்குத் திருமேனிகளாகச் சொல்லப்படுதல் பற்றி இவற்றை, "பிரான் மயமாகப் பெயர்ந்தன" எனவும், அதனானே அவை அருள்மயம் ஆதல் பற்றி, 'பராமயம் என்றெண்ணி உணரார்' எனவும் கூறினார். பரா - பரை; சத்தி; அருள். "உணரார்" என்பது முற்றெச்சம். நிராமயம் - நோய் இன்மை; அஃது இங்குக் குற்றம் இன்மையைக் குறித்தது. நிராமயம் ஆகும்படி நினைத்தலை ஒழிந்தனர்' என்க. இது ஞானிகட்கு ஆகாமைபற்றி இவ்வாறான நிலையில் நிற்பவர்கள் ஞானத்தில் விழியாது அஞ்ஞானத்தில் உறங்குபவராகவே கூறினார். கள்ளால் களிப்பெய்தினார் நன்று தீது அறியாது மயங்கிக் கெடுவர் ஆதலின், கள்ளுண்டல் மற்றும் பலகுற்றங்கள் விளைதற்கு வழியாகும் என்பது கருத்து. சுராமயம் - கள்மயம், களிப்பு. நிராமயம் - துன்பமே இல்லாத நிலை என்றும் கொள்ளலாம்.*

*இதனால், 'கள்ளுண்பார் ஞானியராகாது அஞ்ஞானியரே யாவர்' என்பது கூறப்பட்டது.*

***2046. தெளிவுரை :-*** *'பலவாய் உள்ள உயிர் ஒன்றாய் உள்ள சிவத்தோடு இரண்டறக் கலத்தலே முடிநிலைப் பயன்' என்பது எல்லோர்க்கும் உடன்பாடு. ஆயினும், ஒரு பொருளாய் உள்ள பிரமமே அவிச்சையால் பலவாய் உள்ள உயிர்களாக மயங்கி அறியப்பட்டு, அவிச்சை நீங்கியவுடன் உயிர் முன்போல ஒரு பொருளாகிய பிரமத்தோடு ஒன்றாய்விடும் எனக் கூறுகின்றவர்கள் அவிச்சைக்குக் காரணம் கூறாமையால் உயிர் பிரமமேயான நிலைநிலைத்தல் இன்றிப் பிரமமும் உயிரும் வேறு வேறாய் நிற்கும் அவிச்சை நிலையே நிலை*

**2047.** உயிரது நின்றால் உணர்வெங்கு மாகும்
அயரறி வில்லையால் ஆருடல் வீழும்
உயிரும் உடலும் ஒருங்கிக் கிடக்கும்
பயிரும் கிடந்துள்ளப் பாங்கறி யாரே. **12**

---

*பெறுவதாகும். ஆகவே அவர்கட்கு இரண்டும் ஒன்றாகும் நிலை என்றும் கிட்டுவதின்றாம். இனி ஒன்றாகிய பரமனும், பலவாகிய உயிர்களும் என்றும் வேறு வேறாக இருத்தல் அன்றி, ஒன்றாதல் இல்லை' எனக் கூறுவார்க்கு அவ்வாறு நிற்றலே பயனாவதன்றி, முதற்கண் கூறிய முடிநிலைப் பயன்கிட்டாதாம்.*

***குறிப்புரை :-*** *'அதனால், 'அவ்வாறெல்லாம் கூறுவாருடன் எதிர்வாதம் செய்து பொழுதைப் போக்குதலும் ஞானியர்க்குக் கூடாஒழுக்கம்' என்பது குறிப்பெச்சம். இரண்டாம் அடியில் "ஒன்று, இரண்டு" என்றது, முதலாவது, இரண்டாவது' என அது ஈற்றடியிலும் சென்று இயையும். ஆகவே, இரண்டிடத்தும் "ஒன்றிரண்டு" என்பன பயனிலையாம் ஆகலின், அவற்றிற்கு எழுவாய் வருவித்து, 'ஒன்றும் இரண்டும் ஒன்றும் இரண்டுமே என்று உரைதருவார்க்கு எலாம் ஒன்றும் இரண்டும் ஒன்றும் இரண்டுமே (அவை ஒன்றாதல் இல்லை) என்க. "ஒன்றோடொன்றானதே" என்பதில் முதற்கண் நின்ற ஒன்று சிவம். ஒன்றாதலுக்கு உயிர் என்னும் எழுவாயும், 'ஆனதே முடிநிலைப் பயன்' என்னும் சொல்லெச்சமும் வருவித்து முதலில் கூட்டியுரைக்க.*

*இதனால், **உண்மை ஞானியர்க்குப் பிற மதத்தவரோடு தருக்க வாதம் செய்து பொழுதை வீண்படுத்துதலும் குற்றமாதல் கூறப்பட்டது**. சாத்திரங்களில் சொல்லப்படுகின்ற பிற மத மறுப்புக்கள், அம்மதம் பற்றி மயங்கும் மாணாக்கரை நோக்கி விளக்கம் தருவனவேயாகும்.*

***2047. தெளிவுரை :-*** *உயிர் உடம்பில் இருப்பதனால்தான் அந்த உடம்பு முழுதிலும் அறியுந்தன்மை காணப்படுகின்றது. (அத் தன்மையால் உடல் வீழ்ந் தொழியாது வாழ்ந்து செயற்படுகின்றது) உயிர் உடலை விட்டு நீங்கினால் உடலைச் செயற்படுத்துகின்ற அந்த அறிவு இல்லையாய்விடும். அறிவு இல்லையானால், வேறு எல்லா அமைப்புக்களும் நிறைந்துள்ள உடம்பு அவ்வமைப்பால் பயனின்றி வீழ்ந்து அழியும். ஆகவே 'உயிர்' எனப்படுவது உடம்பிற்கு வேறாதல் தெளிவாகலின் அத்தகைய உயிரும் உடம்பும் ஒன்றி நிற்கும் பயப்பாடு வெள்ளிடை மலைபோல் விளங்கிக் கிடக்கவும் சிலர் உடம்பையே தாமாக மயங்கிக் கூடா ஒழுக்கத்தினை மேற்கொள்கின்றனர்.*

***குறிப்புரை :-*** *உயிரும் உடலும் ஒன்றி வாழும் வாழ்வு திருவருட் பாங்கால் எனல் நுதலிற்று. மூச்சு நின்றால் உணர்ச்சி எங்கு இருக்கும்? அயர்ந்து அறிவில்லாமையால் ஊறு உணர்ச்சி நிறைந்த உடல் அஃது அகன்று கீழே விழும்;*

**2048.** உயிரது வேறாய் உணர்வெங்கு மாகும்
உயிரை அறியின் உணர்வறி வாகும்
உயிரன் றுடலை விழுங்கும் உணர்வை
அயரும் பெரும்பொருள் ஆங்கறி யாரே. **13**

---

*ஆகவே உயிரும் உடலும் ஒன்று கூடி வாழும் வாழ்வுக்கிடந்தந்த சிவனுடைய திருவுள்ளப் பாங்கினை அறியார் உலகவர் என்றவாறு.*

*உயிர் நின்றார் உணர்வு எங்கே? உடல் கீழே விழ வேண்டியதுதானே! உடலும் உயிரும் ஒன்றுபட்டது திருவருளால்; இதனை உலகவர் அறியார். உண்மையறிந்து உய்யாத இதுவும் ஓர் கூடாவொழுக்கமன்றோ என்பது கருத்து.*

*உயிர் - உயிர்ப்பாகிய மூச்சுக்காற்றால் தன் உண்மை அறியப்படுவதாய் உணர்வாக உடல் முழுதும் வியாபித்து நிற்பது. உயிர்ப்பின் ஓட்டம் நின்றால் உணர்வு எங்கே இருக்கும். உயிரையும் உடலையும் கூட்டித் தத்தம் கால எல்லைவரை வாழ வைப்பவன் இறைவன். இவ்வுண்மையைப் பலர் அறியார் என்பதாம்.*

*இதனால், 'குருவருளால் தம்மையும், தலைவனையும் உணர்ந்தாராயினும், கூடா ஒழுக்கத்தைக் கொள்ளின் உணராதவரேயாவர்' என்பது கூறப்பட்டது.*

***2048. தெளிவுரை :-** உணர்வினுக்குணர்வாய் மறைந்திருக்கும் பொருளை உணர்தலே ஒழுக்கமாம் எனல் நுதலிற்று. உயிருக்கு வேறாக உணர்வு என்ற ஒன்று உடல் முழுதும் வியாபித்திருக்கும்; உயிரை யறியின் உணர்வு அறியப் பெறும்; உடல் முழுதையும் வியாபித்திருப்பது உயிர் அன்று, உணர்வு; அதனில் மறைந்திருக்கும் பெரும்பொருள் ஒன்றுண்டு; அதனை எவரும் அறியார் என்றவாறு.*

*உயிர் உடல் முழுதும் பரவியுள்ளது என்பர்; அஃதுண்மையன்று; உணர்வே பரவியது; அதனுள்ளும் மறைந்திருக்கும் பரம்பொருளை அறிந்தவரே ஒழுக்கமுடையார் என்பது கருத்து.*

***குறிப்புரை :-** உயிர் - உயிர்ப்பு வடிவாய் இயங்குவது. அது உடல் முழுதும் பரவியில்லை. உணர்வு சாங்கம் அனைத்தினும் பரவியுள்ளது. ஆனால் உயிருக்கும் உணர்வுக்கும் ஒற்றுமை மிக உண்டு. உயிரையறியின் உணர்வை அறியலாம். அவ்வுணர்வையும் இயக்கி அதனுள்ளே மறைந்த பிரமத்தை அறிவதே ஒழுக்கம் என்பதாம். பெரும்பொருள் - பிரமம்; சிவம்.*

***2049. தெளிவுரை :-** அனைத்துலகங்களின் தொகுதியாகிய தேரினை நிலைபெறச் செய்கின்ற அச்சாணியாய் உள்ளவன் ஒளியாய் உள்ள அனாதி முத்தனாகிய சிவனே, அவன் நிவிர்த்தி முதலிய ஆதார கலைகள் ஐந்திலும்*

**2049.** உலகாணி ஒண்சுடர் உத்தம சித்தன்
நில ஆணி ஐந்தனுள் நேருற நிற்கும்
சில ஆணி யாகிய தேவர் பிரானைத்
தலைவாணி செய்வது தன்னை யறிவதே. **14**

**2050.** தானந்த மாமென நின்ற தனிச் சுடர்
ஊனந்த மாய்உல காய்நின்ற ஒண்சுடர்
தேனந்த மாய்நின்ற சிற்றின்பம் நீஒழி
கோனந்த மில்லாக் குணத்தரு ளாமே. **15**

---

*நுண்ணியனாய் நிறைந்து நிற்கின்றான். அவ்வைந்து கலைகளுக்கு உட்பட்டுள்ள இடங்களில் சிற்சிலவற்றிற்குத் தலைவராய், 'தேவர்' எனப்பெயர் பெற்று விளங்கும் அனைவர்க்கும் தலைவனாய் உள்ள அந்தப் பெருமானையே ஒருவன் தன்தலைமேல் வைத்து ஒழுகுவானாயின், அவன் அவ்வாறு ஒழுகுதலே தனது இயல்பை உள்ளவாறு அறிந்துஒழுகும் ஒழுக்கமாகும்.*

***குறிப்புரை :-** 'சித்தன், முத்தன்' என்பன ஒருபொருட்சொற்கள். ஆதிமுத்தர் அனைவர்க்கும் முன்னே முத்தனாய் உண்மைபற்றி அவ்வனாதி முத்தனை, "உத்தம சித்தன்" என்றார். நிலம் - ஆதாரம். அஃது ஏனை ஐந்து அத்துவாக்களுக்கும் ஆதாரமாய் உள்ள கலைகளைக் குறித்தது. நேர்மை - நுண்மை. 'அத்தேவர் பிரானை' எனச் சுட்டுவருவித்துக்கொள்க. வாணி, 'மொழி' எனப் பொருள்தரும் வடசொல். அது மொழிவடிவாய் விளங்கும் தியானத்தைக் குறித்தது. இவ்வாறு ஒழுகுவோர் கூடாவொழுக்கத்தைக் கொள்ளார் என்பதாம்.*

*இதனால், 'எந்நிலையிலும் கூடா ஒழுக்கம் திருவருள் நெறிக்கு ஏலாததே' என்பது உணர்த்தப்பட்டது.*

***2050. தெளிவுரை :-** மாணவனே, நீ 'எல்லாவற்றையுங் கடந்துவிட்ட எனக்கு இனி அறம் பாவங்கள் எங்குள' எனச் செருக்கி, தேன் துளியால் வரும் இன்பம்போல மிகச் சிறியனவாய்ப் பெறப்படுகின்ற சிற்றின்பத்தைப் பெறும் செயலை அறவே ஒழி, அவ்வாறு ஒழித்தால்தான் சிவனது அளவில்லாத இன்பத்திற்கு ஏதுவாகிய அவனது அருள் முற்றக் கிடைக்கும்.*

***குறிப்புரை :-** இது பின்னிரண்டிகளால் சொல்லப்பட்ட பொருள், கோன் - தலைவன்; பதி; சிவன், முன்னிரண்டடிகளில் அவனது பெருமை சொல்லப்பட்டது. அஃதாவது, 'உலகம் அனைத்திற்கும் தானே முடிவிடம்' என வேதம் முதலிய பல உண்மை நூல்களாலும் சொல்லப்பட நின்ற விளக்காயும் எல்லாப் பொருட்கும் பின்னும் முன்னுமாய் விளங்கும் ஒளியை யுடைய விளக்காயும் உள்ளவன் என்பது, ''ஊன்'' என்றதும் உடம்பு முதலாய உலகங்களையே. 'அவற்றிற்கு அந்தமாய்ப் பின் ஆதியாகி உலகமாயினான்' என்க.*

**2051.** உன்முத லாகிய ஊன்உயிர் உண்டெனும்
கன்முதல் ஈசன் கருத்தறி வார்இல்லை
நன்முதல் ஏறிய நாமம் அறநின்றால்
தன்முத லாகிய தத்துவம் ஆமே. **16**

---

'எஞ்ஞான்றும்தான் சுதந்திர அறிவனே யாவதல்லது பிறிதொன்று விளக்க விளங்கும் பரதந்திர அறிவினன் அல்லன்' என்றற்கு 'சுடர்' என்பதனை இருகாற் கூறினார். "தேன் அந்தம்" என்பதில் "அந்தம்" என்றது, 'விரைய முடியும் துளி' என்றபடி. அவ்விடத்தில் ஆக்கம் உவமை குறித்து நின்றது. இங்கு "குணம்" என்றது ஆனந்தத்தையே, ''உணர்ந்தார்க் குணர்வரியோன்தில்லைச் சிற்றம்பலத் தொருத்தன் - குணந்தான் வெளிப்பட்ட .... ..... ..... இக்கொடியுடை தோள்" (தி. 8 திருக்கோவையார், 9) என்பதில் "குணம்" என்றது போல்,

இதனால், 'எஞ்ஞான்றும் சிற்றின்பத்தில் இச்சை செய்பவர் திருவருளை முற்றப் பெறார்' என்பது கூறப்பட்டது. ''வான்புலன்கள் அகத்தடக்கி மடவாரோடும்" - பொருந்தணைமேல் வரும் பயனைப் போக மாற்றி" (தி.6 ப.1 பா.5) என்பதிலும் இக்கருத்தே அருளிச் செய்யப்பட்டது.

*2051. தெளிவுரை :-* "காட்சியால்" உணரப்படும் உடம்பேயன்றிக் கருதலால் உணரப்படும் உயிரும் உடம்பினுள்ளே உண்டு என்னும் உண்மையையும், 'அவ்வுயிருக்குத் தலைவராகச் சொல்லப் படுவோர் பலருள்ளும் கயிலைக் கடவுளாகிய சிவனே முழுமுதல் தலைவன்' என்னும் உண்மையையும் அறிகின்றவர் உலகத்து அரியர். இனி அவ்வுண்மையை உணர்ந்தவர்களும் அவற்றை உணர்வதற்குமுன் கொண்டிருந்த ஆசை வழிப்பட்ட செயல்களை முற்றவிடுத்தால்தான், ஓர் உயிரும் எஞ்சாதபடி ஒவ்வொன்றிற்கும் முதலாய் உள்ள மெய்ப்பொருளின் விளக்கம் நிரம்ப உண்டாகும்.

*குறிப்புரை :-*

| | | |
|---|---|---|
| கல்முதல் | - | மலைகட்கெல்லாம் முதலாகிய கயிலை. |
| நல்முதல் | - | நல்ல முதல்வனாகிய சிவம் |
| உன்முதல் | - | கண்டுணரப்படும் (உன்னியுணரப்படும்) முதல் |
| தன்முதல் | - | தன்முதலாகிய உண்மைப்பொருள் |

உயிரை, 'உன்னியுணரப்படும் முதல்' என்றமையால், 'ஊன் - உடம்பு - கண்டுணரப்படும் முதல்' என்றது பெறப்பட்டது. உன்முதல், வினைத்தொகை. கல் - மலை, 'எனும்' என்பதை "ஈசன்" என்பதனோடும் கூட்டுக. படிமுறையால் உணர வேண்டுதல் பற்றி இரு தொடராக ஓதினார். ஏறிய - ஏறியன. அஃதாவது 'பழகிப் போன செயல்கள்' என்றபடி. 'நன்குஏறிய' என்க. 'நன்கு' என்பது

*கடைக்குறைந்து நின்றது. 'நாமமும்' என்னும் உம்மை தொகுத்த லாயிற்று. நாமம் - பெயர்.*

*இதனால், 'அறிதற்கரிய உண்மைகளை அறிந்தவராகிய மெய் அறிவாளரும் கூடா ஒழுக்கம் உடையாராயின் அவ்வறிவால் பயன் எய்தார்' என்பது கூறி முடிக்கப்பட்டது.*

*(இம்மந்திரத்திற்குப் பின் பதிப்புக்களில் காணப்படுகின்ற "இந்திரியம் அந்தக் காரணம் இவை" எனத் தொடங்கும் மந்திரம் அடுத்த தந்திரம் முதல் அதிகாரத்தில் இருந்ததாகும்).*

## 37. கேடு கண்டிரங்கல்

*முன் அதிகாரத்தில் விலக்கப்பட்ட கூடா ஒழுக்கத்தினைப் பேதையாரே யன்றி, 'மேதையர்' என்பாருள்ளும் சிலர் கைக்கொண்டு கேடுறுதலைக் கண்டு தாம் கொள்ளும் இரக்கத்தைச் சில மந்திரங்களால் இவ்வதிகாரத்தில் வெளியிடுகின்றார். இது பதினெட்டு மந்திரங்களையுடையது. கேடு - உண்மை உணராத அறியாமை. அதனைக் கண்டு இரங்குதலால் அதிகார இயைபை அறியலாம்.*

**2052.** வித்துப் பொதிவார் விதைவிட்டு நாற்றுவார்
அற்றதம் வாழ்நாள் அறிகிலாப் பாவிகள்
உற்ற வினைத்துயர் ஒன்றும் அறிகிலார்
முற்றொளி ஈயல் முளிகின்ற வாறே. 1

---

*2052. **தெளிவுரை :-** மக்கள் தமக்கு வரையறுக்கப்பட்டு அமைந்த வாழ்நாள் இத்துணையது என்று அறியமாட்டாதவராய் அன்றாடம் உண்டு வாழ்வதேயன்றி, அடுத்துவரும் ஆண்டிற்கும் உணவின் பொருட்டான முயற்சிகளை ஓயாமற் செய்வதிலேயே மனம் அமைதியுற்று விடுகின்றனர். இஃது அவர் பிராரத்த வினைவிளைவாகிய துன்ப நிலையே என்பதையும் அவர் சிறிதும் அறிவதில்லை. இந்தப் பொய்யான இன்பத்திலே அவர் வீழ்ந்து கெடுதல் ஓங்கி எரியும் விளக்கை இனிய உணவென்று கருதிச்சென்று அதில் வீழ்ந்து மடிகின்ற வீட்டிற் பூச்சியின் செயலோடு ஒப்பதாகும். அந்தோ? இஃது அவரது ஓர் அறியாமை இருந்தவாறு!*

***குறிப்புரை :-*** *ஈற்றில் வருவித்துரைத்தது குறிப்பெச்சம். நாற்றுதல் - நாற்றங்காலில் நாற்றுவிடுதல். ஒளி, ஆகுபெயர். விட்டிலை - ஒப்புமைபற்றி, 'ஈயல்' என்றார். இதன் ஈற்றடியில் காணப்படும் பாட வேறுபாடுகள் சில.*

*இஃது யாக்கை நிலையாமையை அறியாது உழலுதல் நோக்கி இரங்கியவாறு.*

*2053. **தெளிவுரை :-** நாள்கள் மிக விரைவாக வந்து வந்து போவதை அறிந்திருந்தும் பலர் அந்நாள்களை வாது செய்வதிலே கழித்து விடுகின்றனர். ஒழுக்கத்தில் நில்லாது வாது செய்வதனால் அவர் என்ன பயனை அடையப் போகின்றனர்! ஒரு பயனும் இல்லை. ஒழுக்கத்தில் நின்றும், இறைவன் திருவடியை வணங்கியும் வருவராயின் நாளடைவில் இறையன்பு தோன்றி வளர அவனை அவர்நேரே அறிந்து இன்புறுவர். அதனை அவர் அறிகின்றாரில்லையே!*

***குறிப்புரை :-*** *"சடக்கென" என்பது விரைவுக்குறிப்பு. நீதி - நல்லொழுக்க முறைமை. "வாது" எனப் பொதுப்படக் கூறினமையால் உலகியல் பற்றி வாது, மெய்ந்நெறி பற்றிய வாது என்னும் இரண்டும் கொள்ளப்படும். அது பின்னர்*

**2053.** போது சடக்கெனப் போகின் றதுகண்டும்
வாதுசெய் தென்னோ மனிதர் பெறுவது
நீதியு ளேநின்று நின்மலன் தாள்பணிந்து
ஆதியை அன்பில் அறியகில் லார்களே. **2**

**2054.** கடன்கொண்டு நெற்குற்றுக் கையரை ஊட்டி
உடம்பினை யோம்பி உயிராய்த் திரிவார்
தடங்கொண்ட சாரல் தழல்முரு டேறி
இடங்கொண் டுடலார் கிடக்கின்ற வாறே. **3**

---

*"நீதியில் நின்று" எனவும், "நின்மலன் தாள் பணிந்து" எனவும் கூறியதனாலும் விளங்கும். முன்னர் அவ் விரண்டையும் கூறினமையால், பின்னர் "ஆதியை" என எடுத்தோதினார். ''நின்றும், பணிந்தும்'' என்னும் வினையெச்சங்கள், "அறியகில்லார்கள்" என்பதில் உள்ள அறிதல் வினையோடு முடிந்தது. ஆகவே, "அறியகில்லார்கள்" என்பது 'அறிதலைச் செய்யகில்லார்' எனப் பொருள் தந்தது.*

*இது, மேற்கூறிய வினைத்துயரை அறிந்து அதனினின்றும் நீங்கும் வழியை எடுத்தோதி அதனை மனிதப் பிறப்பை எய்தியும் பெறாது கெடுகின்றவரது கேடு நோக்கி இரங்கியவாறு.*

*'பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்*
*பெறுதற் கரிய பிரானடி பேணார்'* - *தி.10 பா.2058*

*எனப் பின்னரும் இரங்குவார்.*

*2054. **தெளிவுரை :-** நெல்லைக் கடனாகவேனும் வாங்கிக் குற்றி, குற்றிய அரிசியைக் கொண்டு ஒரு சாண் வயிற்றினுள் இருக்கும் சிறு கருவிகளின் வேகத்தைத் தணிக்கும் முகத்தால் உடம்பைப் பாதுகாக்கின்றவர்களும் தங்களை 'உயிர்' என்று சொல்லிக்கொண்டு திரிகின்றார்கள். அவ்வாறு திரிகின்றவர் தம்மைப் போன்றோர் பலரது உடம்புகளும் முடிவில், மலைச்சாரலில் பற்றி எரிகின்ற தீப்போன்ற பெரிய தீயை உடைய முருட்டணையில் ஏறிப் பின் அதினின்றும் இறங்காமல் அதனையே இடமாகக் கொண்டு கிடந்து ஒழிந்து போதலைப் பலமுறை கண்டிருந்தும் அதனைச் சிறிதும் பொருட்படுத்துதல் இல்லை.*

***குறிப்புரை :-** இவரை, 'உயிர்' என்றது கூறுதல் எவ்வாறு பொருந்தும் என்பது குறிப்பெச்சம். "உயிரா" என்பது பாடமாயின், 'உயிர்த்து' அஃதாவது 'மூச்சுவிட்டுச் சீவித்து' என உரைக்க. இறுதியில், 'அறியார்' என்பது சொல்லெச்சமாய் எஞ்சிநின்றது. கடனாகவும், என்னும் ஆக்கச் சொல்லும், உம்மையும் தொகுத்தலாயின. குற்று, 'குறு' என்பது அடியாக வந்த வினையெச்சம். அவ்வெச்சம் இக்காலத்தில் 'குற்றி' என வழங்குகின்றது. குறுதல் - உரலில் இட்டு*

**2055.** விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி சூழ்ந்து
புரந்தகல் லால்நிழற் புண்ணியன் சொன்ன
பரந்தன்னை ஓராப் பழிமொழி யாளர்
உரந்தன்னை யாக ஒருங்கிநின் றார்களே. **4**

---

*உலக்கையால் குற்றுதல். குத்துதல் - கையை முட்டியாகப் பிடித்துக் குத்துதல். இவ் வேறுபாடு உணரத்தக்கது. கை - சிறுமை. கையர், உடலார் - என்பன இழிவு நோக்கி உயர்திணையாகக் கூறப்பட்டன.*

*இது "நாடாமை, நாணின்மை, நாரின்மை, யாதொன்றும் பேணாமை" என்னும் பேதையார் தொழில்களில் நாடாமை நோக்கி இரங்கியவாறு.*

***2055. தெளிவுரை :–*** *தனக்கு உண்மையிடமாகிய திருக்கயிலையின் பாங்கர் நிலவுலகத்து மக்கள் பொருட்டாகத்தான் நிலைநிறுத்திய கல்லால மர நிழலின்கண் இருந்து சிவன் படைப்புக் காலத்திலே முனிவர் நால்வர்க்கு அவர் விரும்பிய உடனே அருளிச் செய்த முதல் மொழிகள் அம்முனிவரிடமிருந்து நல்லோரால் வழிவழியாகப் பெறப்பட்டு உலகில் வழங்கா நிற்கவும் அவற்றைக் கேளாது பழித்து ஒதுக்கத்தக்கனவாகச் சிற்றறிவுடையரால் சொல்லப்பட்டு வழங்கும் மொழிகளைக் கேட்டு நிற்போர் அக்கேள்வியின் பயனாகத் தமது வன்மையையே மெய்ம்மையாகத் துணிந்து இடர்ப்படுகின்றார்களே!. இஃதென்ன அறியாமை!*

***குறிப்புரை :–*** *'மறைகள்' எனப்படும் முதல்நூல்கள் நான்கு - என்பதும், அவற்றைப் படைப்புக் காலத்தில் சிவபிரான் கல்லால மர நிழலின்கண் எழுந்தருளியிருந்து முனிவர் நால்வருக்கு அருளிச் செய்தான் - என்பதும், அந்நான்கு மறைகள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கினையும் உணர்த்துவன என்பதும் தேவார திருவாசகங்களாகிய திருமுறைகளில் பல இடங்களில் பரவலாகவே சொல்லப்படுகின்றன. அவற்றுள் சிவன் கல்லால மர நிழலில் எழுந்தருளியிருந்து நால்வர்க்கு முதல் மொழியாகச் சிலவற்றை மொழிந்தது ஒன்று மட்டும் இம்மந்திரத்தில் சொல்லப்பட்டது.*

***2056. தெளிவுரை :–*** *அனைத்திற்கும் முதல்வனாகிய எங்கள் சிவபெருமான் உலகியலில் நிலைத்த புகழையும், நிரம்பிய மேலான தவத்தையும், அதன் பயனாகிய உண்மை ஞானத்தையும் தன்னையடைந்த அடியார்களுக்கே அளித்தருள்வான் ஆகையால், உலகர் அவற்றை இழத்தற்குக் காரணம் அவ்வடியவரோடு மாறுபட்டு, 'அது கடவுள், இது கடவுள்' எனத் தத்தமக்கு எட்டிய பொருள்களைத் தனித்தனி கூறித் தம்முள் கலாய்த்துக்கொண்டு, ஞானம் குறைகையாலேயாம். இஃது இரங்கத்தக்கது. ஈசன் செய்யும் உபகாரமும் அஃது அறியாது ஆன்மாக்கள் அடையும் கேடும் உணர்த்துதல் நுதலிற்று.*

***குறிப்புரை :–*** *"நிறைதவத் துண்மையும்" என்ற அனுவாதத் தானே நிறை*

**2056.** நின்ற புகழும் நிறைதவத் துண்மையும்
என்றும்எம் ஈசன் அடியவர்க் கேநல்கும்
அன்றி உலகம் அதுஇது தேவென்று
குன்றுகை யாலே குறைப்பட்ட வாறே. **5**

**2057.** இன்பத்து ளேபிறந் தின்பத்தி லேவளர்ந்
தின்பத்து ளேதிளைக் கின்ற திதுமறந்து
துன்பத்து ளேசிலர் சோறொடு கூறையென்
துன்பத்து ளேநின்று தூங்குகின் றார்களே. **6**

---

*தவத்தை நல்குதலும் பெறப்பட்டது. அன்றுதல் - மாறுபடுதல்; "அன்றினார் புரமெரித்தார்க்கு" (தி.12 பூசலார் பு.1) என்றது காண்க. சிலர் நிலம், நீர், தீ முதலிய சடப் பொருள்களையே தெய்வமாகக் கூறுதல் பற்றி, "அது, இது" என அஃறிணையாற் கூறினார்.*

***2057. தெளிவுரை :-*** *மக்கள் யாவரும் பிறக்கும்பொழுதே இன்பத்தில் பிறந்து, வளரும் பொழுதும் இன்பத்திலே வளர்ந்து இன்பத்திலே திளைக்கின்றவர்களே யாயினும் சிலர் இதனையறியாது தாங்கள் துன்பத்திலே மூழ்கியிருப்பதாகக் கருதிக்கொண்டு அத்துன்பத்தைப் போக்கிக் கொள்ளும் வழியாக, 'உணவு' என்றும், 'உடை' என்றும் அவாவி, அவற்றைப் பெறவேண்டி அல்லற்பட்டு, அவ்வல்லலை விட்டு நீங்க நினையாமல் அதிலேயே செயலற்றிருக்கின்றார்கள். இஃது இரங்கத்தக்கது.*

***குறிப்புரை :-*** *'வீடேயன்றிப் பந்தமும் இறைவனால் தரப்படுவதேயாகலின் அந்தப் பந்தம் பின் வீடு பெறுதற்கு வழியாகும் என்பதே உண்மையாதலின், அவ்வுண்மையை உணர்வார்க்குப் பந்தமும் இன்ப முடையதாயே அமைதல் பற்றி, 'இன்பத்துளே பிறந்து, இன்பத்திலே வளர்ந்து, இன்பத்துளே திளைத்து' எனவும், இவ்வுண்மையை உணராமையாலேதான் வாழ்க்கை துன்பமயமாகின்றது என்பது பற்றி, "சோறொடு கூறையென் துன்பத்துளே நின்று" எனவும், இவ்வறியாமை யுடையார்க்கு அவர் கருத்தாலும், செயலாலும் உண்டாக்கிக் கொள்கின்ற துன்பத்தினின்றும் நீங்கும் வாயில் இல்லாமைபற்றி, 'தூங்குகின்றார்களே' என்றும் கூறினார். 'அனைத்தும் திருவருட் செய லாதலின் அவை இன்பமயமேயாம். ஆயினும் அவற்றை அவ்வாறு உணராதார்க்கு அவை அனைத்தும் துன்பமேயாம்' என்பது கருத்து.*

***2058. தெளிவுரை :-*** *எவ்வகையினும் பெறுதற்கரிய பிறவியை இறையருளால் பெற்றிருந்தும், உண்மையன்பானன்றி உபாயங்களான் பெறமுடியாத சிவபெருமான் திருவடியைப் பேணாதவர்களாயினரே! பெறுதற்கரிய விலங்கினங்களை ஒத்த மக்கள் பெறுதற்கரிய சிவ புண்ணியப் பேற்றினை இழந்தார்களே என்றவாறு.*

**2058.** பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய பிரானடி பேணார்
பெறுதற் கரிய பிராணிகள் எல்லாம்
பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே. 7

**2059.** ஆர்வ மனமும் அளவில் இளமையும்
ஈரமும் நல்லஎன் றின்புறு காலத்துத்
தீர வருவதோர் காமத் தொழில்நின்று
மாதவன் இன்பம் மறந்தொழிந் தார்களே. 8

---

*பெறுதற்கரிய பிறவியைப் பெற்றும் பெறுதற்கரிய பேரின்பத்தைப் பெறாது அழிந்தனரே என இரங்கியவாறு. ஏனைய வெளி.*

***குறிப்புரை :-*** *"அரிய" என்னும் பெயரெச்சக் குறிப்பு நான்கனுள் மூன்றாவது வினைமுதற்பெயர் கொண்டது. ஏனைய செயப்படுபொருட் பெயர் கொண்டன. இறைவன் திருவடிப் பேற்றை 'ஏனை உயிர்கள் பெற இயலாத பேறு' என்றமையால், 'மக்கட் பிறவியைப் பெற்றும் அப்பேற்றைப் பெற நினையாதவர்கள் மக்களாகாது, ஏனை உயிர்களேயாவர்' என்பது கருத்தாயிற்று.*

*இதனால், கிடைத்த சாதனத்தின் அருமையை அறியாது அதனை வீண் படுத்துகின்ற அறியாமை நோக்கி இரங்கியவாறு.*

***2059. தெளிவுரை :-*** *யாவரிடத்தும் நட்பையே பாராட்டும் மனமும், எச் செயலிலும் சோர்வடையாத ஊக்கமும், கிளைஞர் எல்லோரிடத்திலும் செல்லுகின்ற ஈரமும் குறைவின்றியிருத்தலால் தாமும், பிறரும் 'இது மிக நல்லதாகிய பருவம்' என மகிழ்ச்சியுறுவதாகிய இளமைப் பருவத்திலே அந்நல்லவற்றையெல்லாம் உமையொருபாகனுக்குப் பணி செய்வதில் பயன்படுத்தாது, அவனது இன்பத்தைப் பெறாமல் மறந்து, அந்நல்லனவெல்லாம் விரையக் கெடுதற்கு ஏதுவாகிய சிற்றின்பச் செயலிலே சிலர் ஈடுபட்டு ஒழிகின்றார்களே; ஈதென்ன அறியாமை!*

***குறிப்புரை :-*** *'ஈதென்ன அறியாமை' என்பது குறிப்பெச்சம். 'இன்புறு காலம் இளமைக் காலமே' என்பது தோன்ற முன்னரே ஊக்கத்தினை, அதனைத் தருகின்ற இளமையாக உபசரித்துக் கூறினார். ஆர்வம் - பேரன்பு. 'அது நட்பைத் தரும்' என்பதனை,*

> *அன்பீனும் ஆர்வம் உடைமை அதுஈனும்*
> *நண்பென்னும் நாடாச் சிறப்பு. - திருக்குறள், 74*

*என்பதனால் அறிக. 'மக்கள் மனம் அவரது இளமைக் காலத்திலே தூயதாகவே இருந்து, நாள் செல்லச் செல்ல உலகச் சூழலில் படிந்து படிந்து மாசேறி விடுகின்றது' என்பது பொதுவான ஓர் உலக வழக்கு. அஃதே பற்றி இளமைப்*

**2060.** இப்பரி சேஇள ஞாயிறு போல் உரு
அப்பரி சங்கியின் உள்ளுறை அம்மானை
இப்பரி சேகம லத்துறை ஈசனை
மெய்ப்பரி சேவின வாதிருந் தோமே. **9**

**2061.** கூடவல் லார்குரு வைத்த குறிகண்டு
நாடகில் லார்நயம் பேசித் திரிவர்கள்
பாடகில் லார்அவன் வைத்த பரிசறிந்து
ஆடவல் லார்அவர் பேறெது ஆமே. **10**

---

*பருவத்தை "நல்ல என்று இன்புறுகாலம்" என்றார். ஈற்றடி முதலில், 'உமாதவன்' என வரற்பாலதாகிய உகரம் தொடை நோக்கி, மூன்றாம் அடியின் இறுதிக்கண் வகையுளியாய் நின்றது. "நின்று மறந்தொழிந்தார்களே" என்றலே கருத்தென்க. ஈற்றடி உயிரெதுகை.*

*இதனால், கனியிருக்கக் காய் கவர்ந்து கெடுதல் போல்வதோர் மயக்கம் நோக்கி இறங்கியவாறு.*

***2060. தெளிவுரை :-** முன் மந்திரத்தில் கூறிய உமாதேவனாகிய சிவன் தன் அடியவர் முன் புறத்தே தோன்றிக் காட்சி வழங்குமிடத்துக் காலையில் தோன்றுகின்ற இளஞாயிற்றைப் போலும் உருவுடையனாய் விளங்குவான். (அது "காலையே போன்றிலங்கும் மேனி" (தி.11 அற்புதத். 65) என்பது முதலிய திருமொழிகளான் உணரப்படும்) இனி அவர்க்கு இவ்வாறு புறத்துத் தோன்றுதல் போலவே அகத்துத் தோன்றுங்கால் உள்ளக் கமலத்தை இடமாகக் கொண்டு என்றும் இருப்பவனாய் விளங்குவான். இவ்விரண்டும் இன்றிக் கரந்து நின்று அருள்புரியுமிடத்துச் சிறிதும், பெரிதுமாய தீப்பிழம்புகளின் உள்ளிருந்து அருள்புரிவான். (இவ்வுண்மைகள் எல்லாம் அவனை அறிந்து இன்புறும் பெரியோரை அடுத்துக் கேட்பின் விளங்கும்). அவ்வாறு கேட்டுணராது நாளை வீணாகக் கழிக்கின்றோமே; இஃது அறியாமையன்றோ!*

***குறிப்புரை :-** பரிசு - தன்மை. அண்மையிடத்தனாய் வெளிப்படும் நிலைகளை "இப்பரிசு" எனவும், வெளிப்படாது சேயனாய் நிற்கும் நிலையை "அப்பரிசு" எனவும் கூறினார். இவ்விடங்களில் 'பரிசின் கண்' என ஏழாவதும், "மெய்ப்பரிசு" என்பதில் இரண்டாவதும் விரிக்க. பிறரது அறியாமையைப் புலப்படுத்தக் கருதினவன் அவர் உடன்படுமாற்றால் தம்மையும் அவரோடு உளப்படுத்திக் கூறினார்.*

*செய்தற் கரிய செயல்பலவும் செய்துசிலர்*
*எய்தற் கரியதனை எய்தினர்கள் - ஐயோநாம்*
*செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்*
*செய்யாமை செய்யாத வாறு. - திருக்களிற்றுப்படியார், 61*

**2062.** நெஞ்சு நிறைந்தங் கிருந்த நெடுஞ்சுடர்
நஞ்செம் பிரான்என்று நாதனை நாடொறும்
துஞ்சு மளவும் தொழுமின் தொழாவிடில்
அஞ்சற்று விட்டதோர் ஆனையும் ஆமே. **11**

---

*எனப் பிறரிடத்தும் இவ்வாறு வருதல் காண்க. ''அம்மானை ஈசனை'' என்பவற்றோடு இயைய, "உரு" என்பதனையும், 'உருவனை' என்க.*

*இதனால், ஞானம் இல்லாதார் அஃது உடையாரை அடைந்து அதனைப் பெற வாய்ப்பு உள்ளதாகவும் அவ்வாறு பெறாதிருக்கும் புறக்கணிப்பு நோக்கி இரங்கியவாறு.*

*2061.* ***தெளிவுரை :-*** *சிலர் பெரியோரைக் குரவராக அடுத்து உண்மையைக் கேட்டுணர்ந்தாராயினும் அவர் தங்கட்கு ஒருதலைப்பட உணர்த்திய குறிக்கோளை அங்ஙனமே உணர்ந்து அடைய மாட்டார். 'அடைய வேண்டும்' என நினைக்கவும் மாட்டார். குரவர் தம்மை மலம் கழுவித் தூயராகச் செய்த செயலின் அருமையை அறிந்து, அவரைப் புகழ்ந்து பாடவும் மாட்டார். ஆயினும் பிறர் தம்மை மதிக்கும்வண்ணம் இனிமை உண்டாகப் பேசுவர். அப்பேச்சுக்கு ஏற்றவாறு நடிக்கவும் வல்லவராவர். அவர் அடையும் பயன்தான் எதுவோ!*

***குறிப்புரை :-*** *'யாதொன்றும் இல்லை' என்றபடி, ''அவன்'' என்றது ஆசிரியனை. 'செய்த பரிசறிந்து பாடகில்லார்' எனக் கூட்டுக. "நயம் பேசித் திரிவர்கள்" "ஆடவல்லார்" என்பதற்கு முன்னே கூட்டியுரைக்க. ஆடுதல், இங்கு நாடக மாத்திரையால் நடித்தலின்மேற்று.*

*இதனால், பெற்றதனைப் பேணிப் பயன்கொள்ளாமையாகிய பேதைமை நோக்கி இரங்கியவாறு.*

*2062.* ***தெளிவுரை :-*** *சிவபெருமானை, 'ஒவ்வொருவர் உள்ளத்திலும் நிறைந்து அங்கு ஒளிவிட்டும் விளங்குகின்ற அணையா விளக்கு' என்றும், 'உயிர்கட்கெல்லாம் உண்மையான முதற் கடவுள்' என்றும் உணர்ந்து நாள்தோறும் வழிபடுங்கள். இறக்குமளவும் வழிபடுங்கள். அவனை அவ்வாறு வழிபடாது புறக்கணித் திருப்பின் உங்களுடைய ஐம்பொறிகளும் கட்டிய சங்கிலி அறுபட்டொழிந்த அத்தன்மையை உடைய யானைகளாய் விடும்.*

***குறிப்புரை :-*** *அஃதாவது, 'அவை நும்வழிப்படாது தம் வழியிலே உங்களைக் கொண்டு சென்று அலைக்கழிக்கும்' என்பதாம். நெடுமை, காலம் பற்றி வந்தது. "நாதனை" என்பதை முதலில் கூட்டியுரைக்க. "நம்" என்றது உயிர்கள் அனைத்தையும் ஒரு பெற்றியவாகத் தம்மோடு உளப்படுத்தி எண்ணுதலை. "நாதன்" என்றது சொல்லுவாரது குறிப்பால் சிவனை உணர்த்திற்று. செம்பிரான் நேர்க்கடவுள்; உண்மைக் கடவுள். ''தொழுமின்'' என்பதை ''நாடோறும்''*

**2063.** மிருகம் மனிதர்கள் மிக்கோர் பறவை
ஒருவர்செய் தன்புவைத் துன்னாத தில்லை
பருகுவர் ஓடுவர் பார்ப்பயன் கொள்வர்
திருமரு மாதவம் சேர்ந்துணர்ந் தாரே. **12**

---

*என்பதனோடும் கூட்டுக. 'அஞ்சும்' என்னும் முற்றும்மை தொகுத்தலாயிற்று. 'அஞ்சும்அம்' என இயையும். ஆக்கம் உவமை குறித்து நின்றது. "ஓர்" என்றது தன்மையைக் குறித்தது.*

*இதனால், ஐம்பொறியால் ஆட்டுண்டலின் நின்று நீங்கும் வழியறியாது அல்லலுறுவாரை நோக்கிஅவர் மேல் எழுந்த இரக்கத்தால் அவர்க்கு அவ்வல்லலின் நின்று நீங்கும் வழி கூறியவாறு.*

***2063. தெளிவுரை :-*** *விலங்குகள், மக்கள், தேவர்கள், பறவைகள் மற்றும் இவர்கள்போல் உள்ள இனத்தவர் ஆகியோரில் ஓரினத்தவரும் சிவபிரானிடத்தில் அன்பு வைத்து, அதனை மேலும் மேலும் பெருக்கி வழிபடாமையில்லை. அதனை அறிந்தவர்கள் அப்பெருமானது திருவருளைப் பெறுதற்குரிய பெரிய தவத்தைச் செய்து, அதன் பயனாக விளைந்த அன்பினால் சிவபெருமானைக் கண்டால் இனிய பாலைப் போலப் பருகிவிடுவார் போல்வார்; 'அவன் வெளிப்படும் இடம் எது' என்று தேடிப்பல திசைகளிலும் ஓடுவர். அதனால், தாம் மண்ணில் மக்களாய்ப் பிறந்த பயனை எய்துவர்.*

***குறிப்புரை :-*** *'அறிவிலார் அங்ஙனமின்றி வாளாமாய்ந்து மண்ணாகிக் கழிவர்' (தி.5 ப.90 பா.3) என்பதாம். எழுவகைப் பிறவியுள் உயர்ந்தது, தெய்வப் பிறப்பு ஆதலின் அதனை எய்தினோரை, "மிக்கோர்" என்றார். வானிடத் தவரும் மண்மேல் வந்து அரன்றனை அர்ச்சிப்பர்" (சிவஞான சித்தியார், சூ. 2, 91) என்பது சாத்திரம். இவையெல்லாம் புராணங்களில் மிக வெளிப்படை. "ஒருவர்" என்பதில் ஒன்று இனத்தைக் குறித்தது. 'ஒருவரும்' என்னும் இழிவு சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. 'அன்பு வைத்துச் செய்து' என மாற்றி உரைக்க. "உன்னாதது" என்றது எதிர்மறைத் தொழிற்பெயர். அதனை உணர்ந்தோர் மாதவம் செய்து பருகுதல் முதலியவற்றைச் செய்வர்' என்க. அன்பால் பிறரை இறுகத் தழுவிக் கொள்ளுதலே, பருகுதல் போல்வதாகக் கூறும் மரபினை, "பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை - பெருகலிற் குன்றலினிது" (திருக்குறள், 811) என்னும் திருக்குறளாலும் அறிக. 'தேடி ஓடுதலும் அன்புடையாரது செயல்' என்பதனை,*

*"...................... வியந்து ஆங்கு அலறித்*
*தேடிற்றிலேன்; சிவன் னெவ்விடத்தான்,*
*எவர் கண்டனர் என்று*
*ஓடிற்றிலேன்"* *- தி.8 நீத்தல் விண்ணப்பம், 45*

*என்று அருளிச் செய்தவாற்றானும் அறிக.*

**2064.** நீதி யிலோர்பெற்ற பொன்போல் இறைவனைச்
சோதியில் ஆரும் தொடர்ந்தறி வார்இல்லை
ஆதி அயனென் றமரர் பிரானென்று
நாதியே வைத்தது நாடுகின் றேனே. **13**

---

*இதனால், அறிவுடையாரது செயலை விதந்து கூறும் முகத்தால் அறிவிலாரது நிலைமை நோக்கி இரங்கியவாறு.*

***2064. தெளிவுரை :-*** *அற உணர்வு இல்லாதார் பொன்னைப் பெற்றால் அதனது பயனை அறிந்து அப்பயனை எய்தாது பொன்னை வாளா வைத்திருந்தே இறந்தது போலச் சிலர் சிவனை அறிந்தும் அவனால் அடையத் தக்க பயனை அறிந்து அம்முறையில் அவனை வழிபட்டு அப்பயனைப் பெறுகின்றவர் யாரும் இல்லை. ஆயினும் யான் உலகத்தைச் செயற்படுத்துதற்கு, 'படைப்புக் கடவுளாகிய பிரமன்' என்றும், மற்றும் 'தேவேந்திரன்' என்றும் இப்படிப் பல தேவரைத் தக்க வாறு சிவன் நியமித்திருக்கின்ற பெருஞ்செயலை நினைந்து அவனால் அடையத்தக்க பயனை அடைகின்றேன்.*

***குறிப்புரை :-*** *'பிற தேவரால் அடைவிக்க முடியாது சிவன் ஒருவனாலே அடைவிக்கப்படும் பிறவி நீக்கம். அஃது அயன் முதலிய தேவர் பலரையும் அவனே படைத்து அவரவர் அதிகாரத்தில் நியமித்திருத்தலால் விளங்கும்' என்பது பின்னிரண்டடிகளால் குறிப்பால் உணர்த்தப்பட்ட கருத்து. அப்பயனைப் பெறாதோர் சிவனை உணர்ந்தும் உணாதவரேயாதல் பற்றி அவரது செயலுக்கு நீதியிலார் பொன்பெற்ற செயலை உவமையாகக் கூறினார்.*

*ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்*
*ஏனை யிரண்டும் ஒருங்கு. - திருக்குறள், 760*

*என்பதனால் பொன் அறத்தையும், இன்பத்தையும் எளிதின் எய்துதற்கு வழியாதல் அறிக. "பெற்ற பொன்போல் எனப் பொருளுவமம் போலக் கூறினாராயினும், 'பொன் பெற்றது போல' எனத் தொழிலுவமமாகக் கூறுதலே கருத்தென்க. "சோதி" என்றது அறிவை. அதனால் தொடர்தலாவது அவனால் பெறும் பயனை அறிந்து அவனைப் பற்றுதல். அறிதல் அதன் காரியமாகிய வழிபடுதலையும், நாடுதல், அதன் காரியமாகிய உண்மையுணர்தலையும் குறித்து நின்றன. 'நாடி' என்பது எதுகை நோக்கித் திரிந்து நின்றது.*

*இதனால், சிவனை உணர்ந்தவரும் அவன்பால் வீடு பேற்றினை வேண்டாது, உலகப்பயனை வேண்டி அவற்றை மட்டுமே அடைதல் இரங்கத்தக்கது என்பது கூறப்பட்டது.*

***2065. தெளிவுரை :-*** *வண்டுகள்தாம் இன்புற வேண்டும் என்றுதான் மிகுந்த தேன் உள்ள மலர்களை அறிந்து அவற்றினுட்புகுந்து கிண்டிச் சிறிது சிறிதாகக்*

2065. இருந்தேன் மலரளைந் தின்புற வண்டு
பெருந்தேன் இழைக்கின்ற பெற்றிமை ஓரார்
வருந்தேன் நுகராது வாய்புகு தேனை
அருந்தேனை யாரும் அறியகி லாரே. 14

2066. கருத்தறி யாது கழிந்தன காலம்
அருத்தியுள் ளான்அம ராபதி நாதன்
ஒருத்தனுள் ளான்உல கத்துயிர்க் கெல்லாம்
வருத்திநில் லாது வழுக்குகின் றாரே. 15

---

*கொணர்ந்து மிகுந்த தேனைச் சேர்க்கின்றன. ஆயினும் அத்தேனில் ஒரு சிறிதையும் அவை பருகுவதில்லை. அதனை எண்ணிப் பாராதவர்களாய், அவற்றினும் கீழ்மையராக, தானாகவே வாயில் ஒழுகுவதும், எவ்வுலகத்திலும் கிடைத்தற்கரியதும் ஆகிய தேனை மக்களில் ஒருவரும் அறிந்து பருகுகின்றார்களில்லை. ஆயினும் யான் அவர்களைப்போல அத்தேனை நுகராமல் விட்டு வருந்தமாட்டேன்.*

***குறிப்புரை :-*** *'வண்டுகளின் பெற்றிமையை எண்ணிப் பார்ப்பார்களாயின் தாமும் அவை செய்யும் தவற்றினைச் செய்யமாட்டார்கள்' என்பார். "வண்டு பெருந்தேன் இழைக்கின்ற பெற்றிமை ஓரார்" என்றார். சிவம் தானே தனது கருணையால் உயிர்களுக்குத் தன் இன்பத்தை வழங்குதல் பற்றி, "வாய்புகுதேன்" என்றும், அது வழங்கும் அவ்வின்பம்போலும் பிறிதின்பம் வேறின்மையின், "அருந்தேன்" என்றும் கூறினார் 'நுகராது வருந்தேன்' என மாற்றிவைத் துரைக்க.*

*இதனால், சிவனால் தரப்படும் பேரின்பத்தது சிறப்பைக் கூறி, அதனைப் பெறாது இழப்போரது அறியாமைக்கு இரங்கியவாறு.*

***2066. தெளிவுரை :-*** *தன்னிடத்துச் செலுத்துகின்ற அன்பு உடையாரது அன்பிலே விளங்கி நிற்பவனும், தேவர்கட்கும் தேவனுமாய் உள்ள ஒருவனே அனைத்துயிர்கட்கும் ஒப்பற்ற தலைவன். அடங்காது ஓடுகின்ற மனத்தை வருத்தியாயினும் அடக்கி அவனை நினைந்து நில்லாமையால் பலர் அவனைப் பெறத் தவறுகின்றார்கள். அதனால் அவர்களது காலங்கள் உண்மையை உணராமலே கழிந்தொழியும்.*

***குறிப்புரை :-*** *'இஃது இரங்கத்தக்கது' என்பது குறிப்பெச்சம். முதலடியை ஈற்றில் வைத்துரைக்க. துணிபு பற்றி எதிர்காலம் "கழிந்தன" என இறந்த காலமாகச் சொல்லப்பட்டது. அருத்தி - அன்பு. அமராபதி - தேவர் உலகம். அஃது ஆகுபெயராய்த் தேவரை உணர்த்தி நின்றது. "உள்ளான்" என்னும் குறிப்பு வினைப்பெயர் எழுவாயாய் நின்றது. "உயிர்க்கெல்லாம்" என்பதன் பின்னும் "ஒருத்தன்" என்பதைக் கூட்டி மேற்குறித்த எழுவாய்க்குப் பயனிலையாக்கி முடிக்க.*

**2067.** குதித்தோடிப் போகின்ற கூற்றமும் சார்வாய்
விதித்தன நாள்களும் வீழ்ந்து கழிந்த
அதிர்த்திருந் தென்செய்தீர் ஆறுதி ராயின்
கொதிக்கின்ற கூழில் துடுப்பிட லாமே. **16**

---

*இதனால், மனத்தால் அன்பு செயற்பாலதான பொருளில் அன்பைச் செலுத்தாது, பிறபொருளில் அன்பு செலுத்தி நிற்கும் அறியாமை நோக்கி இரங்கியவாறு.*

***2067. தெளிவுரை :-*** *உலகீர், உங்களுக்கு இவ்வுடம்போடு கூடி வாழ்தற்கு வரையறுத்த நாள்கள் யாவும் தவம் செய்யாமையால் அவமே கழிந்தொழிந்தன. ஆகவே, உங்களை இவ்வுடம்பினின்று பிரித்தெடுத்துக் கொண்டு துள்ளி ஓடுபவனாகிய கூற்றுவனும் வந்துவிட்டான். இப்போது நடுங்கி என்ன செய்யப் போகின்றீர்கள்? நீங்கள் அமைதியுற வேண்டின் கொதிக்கின்ற கூழில் கையை யிடாமல் அகப்பையை இட்டு அள்ளி ஆற்றி உண்பதுபோலும் செயலைச் செய்தலே தக்கது.*

***குறிப்புரை :-*** *“சார்வாய்க் கழிந்த” என்றாராயினும், ‘கழிந்து சார்வாயிற்று’ என்றலே கருத்தென்க. கழிந்து, செயவெனெச்சத் திரிபு. தெளிவு பற்றி எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்டது. சார்வு - நெருங்குதல். “துடுப்பிடல்” என்பது, அதுபோலும் செயலைச் செய்தலைக் குறித்தது. கொதிக்கின்ற கூழ், கூற்றுவனால் கணக்கிட்டுக் கொள்கின்ற நாட்கள். கையிடுதல், அதனையறியாது தம் வயத்தன வாகக் கருதிக்கொண்டு அவற்றைத் தவத்தில் அல்லாமல் அவத்தில் கழித்தல். துடுப்பிடுதல் - சில நாட்களையாயினும் தவத்தில் கழித்தல். ஆம் - பொருந்தும் - ஏகாரம் ஈற்றசை.*

*கூற்றத்திற்கு நாள் சார்வாயிருந்து கழிதலாவது, மார்க்கண்டர்போலச் சிவப்பணி செய்து சிவலோகம் சாரமாட்டாமல் காலதூதர் கவரக் காலம் பயனின்றிக் கழிதல். வீழ்ந்து என்ற குறிப்பு ஈண்டுப் பயனின்மை உணர்த்திற்று.*

*மிகவும் நடுங்கிக் கொதிக்கின்ற கூழில் கைவிடப் பயந்த ஒருவன் குடிக்க இயலாது தவிப்பது போலக் காலத்தே வீணே கழித்துப் பயனிழத்தல் ஆகாது என்பார் இவ்வுவமை கூறினார். கொதிக்கும் கூழைப் போன்றது வினைக்கலத்தில் துயர் வெப்பால் கொதிக்கின்ற நம் வாழ்வு. அது நற்பயனை அளிக்க வேண்டுமானால் கூழைத் துடுப்பிட்டுக் கிளறி ஆற வைத்துக் காலத்தில் அருந்திக் களிப்பெய்த வேண்டும் என்பது உணர்த்தப்பெற்றுள்ளது.*

*இதனால், கூற்றத்தைக் கடத்தற்குரிய செயலில் நாளைக் கழியாமல், கூற்றத்தால் அடர்த்தற்குரிய வகையில் கழித்தலை நோக்கி இரங்கியவாறு.*

***2068. தெளிவுரை :-*** *ஆற்றங்கரையை அடுத்து ஒரு கழனி உண்டு. அதில்*

**2068.** கரையரு காறாக் கழனி விளைந்தது
திரையரு காமுன்னம் சேர்ந்தின்பம் எய்தும்
வரையரு கூறிய மாதவம் நோக்கின்
நரையுரு வாச்செல்லும் நாள்இல வாமே. **17**

**2069.** வரவறி வானை மயங்கிருள் ஞாலத்
திரவறி வானை எழுஞ்சுடர்ச் சோதியை
அரவறி வார்முன் ஒருதெய்வம் என்று
விரவறி யாமலே மேல்வைத்த வாறே. **18**

---

*உண்டாகின்ற விளைவை உடையவன் பெறுதல் அரிது. ஏனெனில், ஆற்றில் எப்பொழுது வேண்டுமானாலும் வெள்ளம் பெருகி வந்து விளைவை அழித்துவிடும். அதனை உணர்ந்து நீவிர் விழிப்பாய் இருந்து வெள்ளம் பெருகி வருவதற்கு முன்னே விளைவிற்குப் பாதுகாப்பு செய்து விளைவின் பயனை எய்துங்கள். (இஃது ஒட்டணி. ஆறு - வினைவிளைவின் தொடர்ச்சி. ஆற்றங்கரை - அத்தொடர்ச்சியைச் சார்ந்திருக்கின்ற உடம்பு. கழனி - உடம்பில் உள்ள உயிர்; என்றது அதன் உணர்வை, அதில் விளைவது சிவபுண்ணியத்தின் பயனாக விளங்கிய சிவஞானம், அதனை எப்பொழுதும் வந்து அழிக்க இருப்பது உயிருணர்வை வேறுபடுத்தும் வினைவிளைவு. அருகாமுன்னம் - நெருங்குதற்கு முன்னே, இவற்றை பெருமாற்றைப் பின்னிரண்டடிகளால் நேராகவே உணர்த்தினார். அஃதாவது) மலைமுழை முதலிய தனியிடங்களில் இருந்து செய்வதனால் வளர்ந்து முதிர்கின்ற தவத்தில் உணர்வு செல்லுமாயின் நரை, திரை, மூப்பு இவற்றோடு கூடி வருகின்ற நாட்கள் உங்கட்கு இல்லையாகும்.*

***குறிப்புரை :-*** *'ஆகையால் அத்தவத்தின் உணர்வைச் செலுத்தி உணர்வு திரியாது நின்று நரையும், திரையும் வருமுன் சிவஞானத்தை முற்றப்பெற்றுப் பயன் அடையுங்கள்' என்பதாம். "கரையருகு ஆறா" என்பதனை, 'ஆறுகரை அருகா' எனமாற்றி உரைக்க. இங்ஙனம் மாறி நின்றமையால், 'ஆறு' என்பது ஒற்று இரட்டுதலும் அம்முப் பெறுதலும் இல்லையாயிற்று. "தவம்" என்றதும் சிவபுண்ணியத்தையே யாகலின், அது கேட்டற்குப் பின் விடாது நிகழும் சிந்தித்தல் தெளிதல்களாகிய ஞானத்திற் கிரியை ஞானத்தில் யோகம் இவற்றைக் குறித்து நின்றன. இந்நிலையுடையோர் சிவயோகத்தையும் உடையராவர் ஆதலின் அவர்க்கு நரை திரை மூப்புக்கள் இலவாதல் அறிக.*

*இதனால், ஞானத்தை எய்தினோரும் பராக்கால் அதனை இழத்தலை நோக்கி யிரங்கி அவர் அவ்வாறு அதனை இழவாதிருக்க அறிவுறுத்தியவாறு.*

***2069. தெளிவுரை :-*** *பகலும், இரவும் கலந்து நிற்கின்ற உலகத்தில் உயிர்கள் தோன்றுதல், மறைதல் ஆகியவற்றின் வழிமுறைகள் முழுவதையும் நன்குணர்ந்து அவைகளை ஏற்றபெற்றியால் செய்விக்கின்றவனும், முடிவில் அவ்வுயிர்கள்*

*இராப்பகல் அற்ற இடத்தில் இருக்கும்படி வைத்து அவைகட்கு என்றும் விளக்கத்தைத் தந்தும் விளங்கியும் நிற்கின்ற, சுடர்விடுகின்ற பெருவிளக்காய் உள்ளவனும் ஆகிய சிவபெருமானை, 'நுண்ணறிவாளர் திரிபின்றி உணர்கின்ற ஒப்பற்ற முழுமுதற் கடவுள்' என்று உணர்ந்து அவனை அடைந்து உய்ய அறியாமையால் பலர்வேறு வேறு தெய்வங்களை முதற் கடவுளாகக் கருதி இடருள் அழுந்துதல் இரங்கத்தக்கது.*

***குறிப்புரை :-** வரவு - தோற்றம். "மயங்கிருள் ஞாலத்து" என்பது தாப்பிசையாய் முன்னும், பின்னும் சென்றியைந்தது. மயங்குதல் - கலத்தல். "இருள்" என்றதனால் 'ஒளி' என்பது போந்தது. மேல் உலகம் ஒளியுலகமும், கீழ் உலகம் இருள் உலகமும், இடையுலகம் இவ்விரண்டையும் உடைய உலகமும் ஆதலின் "மயங்கிருள் ஞாலம்" என்றது இடையுலகத்தை யாயிற்று. ஏனை இரண்டும் போக பூமியும், இதுவே கரும பூமியும் ஆதலின் உயிர்கள் இவ்வுலகத்துத் தோன்றுதல் மறைதல்களையே குறித்தார். வரவு தோற்றமாதல் வெளிப்படை. இரவு, இருள் ஆதலின் அஃது அறிவைத் தரும் தேகத்தை விட்டு அறியாமையிற் செல்வதாகிய இறப்பைக் குறித்தது. "எழும்" என்ற விதப்பு, எஞ்ஞான்றும் மறைதல் இன்றி விளங்கியே நிற்றலைக் குறித்தது. அதுவே அருள்வெளி என்க. அர அறிவு - அரம் போலும் கூரிய அறிவு. "அரம் போலும் கூர்மைய ரேனும்" (திருக்குறள், 997) என்றதும் காண்க. முன் தெய்வம் - நினைக்கின்ற கடவுள்; வினைத்தொகை. ஒரு தெய்வம் - ஒப்பற்ற தெய்வம். "மேல்" என்றது 'வேறு' என்னும் பொருட்டு ஆக்கம் வருவிக்கப்படும். "வைத்து" என்றது, அதனால் இடர்ப்படுதலாகிய தன் காரியம் தோற்றி நின்றது. 'இரங்கத்தக்கது' என்பது சொல்லெச்சம்.*

*இதனால், இன்றியமையாது அறியற்பாலதனை அறிந்து பயன்பெறாது மயங்கி இடர்ப்படுவாரது மயக்கம் நோக்கி இரங்குதலைச் செய்து, வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாயும் செய்யப்பட்டது.*

## 38. இதோபதேசம்

*அறியாமையால் கேடுறுவாரைக் கண்டு தாம் இரங்கிய இரக்கத்தைச் சில மந்திரங்களால் வெளியிட்டருளிய நாயனார் அதன்பின் அவர் நலனுறுமாற்றைச் சில மந்திரங்களால் இவ்வதிகாரத்தால் வெளியிடுகின்றார். இது உபதேசம் - நல்லனவற்றைச் செவியறிவுறுத்தல். இது பத்தொன்பது மந்திரங்களையுடையது.*

**2070.** மறந்தொழி மண்மிசை மன்னாப் பிறவி
இறந்தொழி காலத்தும் ஈசனை உள்கும்
பறந்தல மந்து படுந்துயர் தீர்ப்பான்
சிறந்த சிவநெறி சிந்தைசெய் யீரே. **1**

---

*2070. தெளிவுரை :- மண்மேல் உள்ள பிறவிகள் நிலையின்றிச் சின்னாளில் அழிந்தொழிவனவேயாம். ஆதலின் அவற்றுள் சில பிறவிகளை உயர்ந்தனவாகக் கருதி அப்பிறவியில் பிறக்க வேண்டும் என விரும்புதலை விட்டுவிடுங்கள். அங்ஙனம் விட்டு வீடுபெற விரும்பும் பொழுது அதன் பொருட்டுப் பிற நெறிகளை நாடாது, நெறிகள் அனைத்திலும் மிக மேலானதாகிய சிவ நெறியை நாடுங்கள். நாடி அதனை அடைந்து இறக்குங் காலம் உட்பட எக்காலத்தும் சிவனை இடைவிடாது நினையுங்கள். அவ்வாறு நினைந்தால் அவன் நலனடைதற் பொருட்டு அதற்கான வழிகளைத் தேடி எவ்விடத்தும் விரைந்து ஓடி அலையும் நம் அலைவை நீக்கியருளுவான்.*

*குறிப்புரை :- புதியன புகுதல் முறையில் புகுந்த முன்னிலைப்பன்மை ஏவல் விகுதியாகிய 'உம்' என்பது "மறந்தொழி" என்பதன் ஈற்றில் தொகுத்தலாயிற்று. உலகத்தில் அரசரும், அவரோடொத்த பெருஞ்செல்வருமாய்ப் பிறக்கும் பிறவி இனிதானது என ஏனையோர் விரும்புதல் உண்டு ஆதலின், 'அஃது ஒரு மயக்க உணர்வேயாதலின் அதனை விடுத்தல் வேண்டும்' எனவும், 'விடுத்தவழி வீடுபெறுதலே விரும்பப்படும் ஆதலின் அதன் பொருட்டுப் பிறவி நீங்கப் பெறாத பிறர் பலரை முதல்வராகக் கொண்ட நெறிகளை நாடாது பிறப்பில் பெருமானாகிய சிவனை முதல்வனாகக் கொண்ட சிவநெறியையே நாடுதல் வேண்டும். 'அதனை நாடி அடைந்தவழியும், அந்நெறியின் முறைமைகளை இடைவிடாது கடைப்பிடித்து ஒழுகுதல் வேண்டும்' எனவும் அறிவுறுத்தபடி. ஈற்றடியை இரண்டாம் அடியாகக் கூட்டியுரைக்க. "சிறந்த" என்பது இயைபின்மை நீக்கிய விசேடணம். இனி பிறிதின் இயைபு நீக்கிய விசேடணமாகக் கொண்டு, 'சித்தாந்த சைவம்' என உரைத்தலுமாம். ஐந்தாம் தந்திரத்தில் நாயனார் சில சைவ வேறுபாடு குறித்தமையை நினைவுகூர்க.*

*இதனால், 'உய்தி வேண்டுவார்க்கு உரிய நெறி இது' என்பது உணர்த்தப்பட்டது.*

2071. செல்லு மளவும் செலுத்துமின் சிந்தையை
வல்ல பரிசால் உரைமின்கள் வாய்மையை
இல்லை எனினும் பெரிதுளன் எம்மிறை
நல்ல அரன்நெறி நாடுமின் நீரே. 2

---

***2071. தெளிவுரை :-*** *நான், 'ஒரு காலத்திலும் பிறத்தலும், இறத்தலும் இல்லாதவன், எல்லாவற்றையும் அறிந்தவன், எல்லா உயிர்களிடத்தும் காரணம் இல்லாமலே இரங்குகின்ற பேரிரக்கம் உடையவன்' என்பன போலச் சொல்கின்ற அப்படிப்பட்ட முதல்வன் ஒருவன் இல்லை; இருக்க இயலாது' என்று சிலர் முரணிக் கூறுவராயினும் அப்படிப்பட்ட பேரதிசயமான தன்மைகளையுடைய சிவ முதல்வன் இருக்கவே செய்கின்றான். அதனை நம்பி அவனது நல்ல நெறியை நீங்கள் நாடி அடையுங்கள். அடைந்து எந்த அளவு உங்கள் மனம் சோர்வடையாது நினைக்க வல்லதாகின்றதோ அந்த அளவு அவனை நினையுங்கள். எந்த அளவு அவன் பொருள் சேர்ந்த புகழை உணர்ந்து உரைக்க இயலுமோ; அந்த அளவு உரையுங்கள்; பயனுண்டு.*

***குறிப்புரை :-*** *'பயனுண்டு' என்பது குறிப்பெச்சம். மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க.*

*எனைத்தானும் நல்லவை கேட்க; அனைத்தானும்*
*ஆன்ற பெருமை தரும். - திருக்குறள், 416*

*என்றாற்போலும் பல முறை பற்றி, "செல்லுமளவும் செலுத்துமின் சிந்தையை" எனவும், "வல்லபரிசால் உரைமின்கள் வாய்மையை" எனவும் கூறினார். "வாய்மை" என்பது ஆகுபெயராய், அதனையுடைய புகழைக் குறித்தது. "பெரிதுளன்" என்றது 'திண்ணமாக உளன்' எனவும், "எம் இறை" என்றது 'சிவன்' எனவும் கூறியவாறு. "நாடுமின்" என்றது அதன்காரியம் தோன்ற நின்றது.*

*இதனால், 'உண்மையை ஐயுறுதலை விடுத்து இயன்ற அளவு கடைப்பிடித்து ஒழுகுக' என உணர்த்தப்பட்டது.*

***2072. தெளிவுரை :-*** *உலகத்தார் பல சாதிகளைக் கூறுவராயினும் உண்மையில் உள்ளது ஒரு சாதியே. அது சிவ சாதி. உலகத்தார் பல கடவுளர் களைக் கூறிக் கொண்டாடுவராயினும் உண்மையில் உள்ள கடவுள் ஒருவனே. அவன் சிவன். இவற்றை நீவிர் முதலில் நன்றாக உணருங்கள். உணர்ந்தால், நமனும் உங்களை அணுகான்; வெட்கமின்றி முன்முன் பிறந்து இறந்த பிறப்புகளிலே மீண்டும் மீண்டும் பிறக்கும் நிலையும் உங்களுக்கு இல்லையாகும். அப்பால் மேற்கூறிய உண்மைகள் உங்கள் உள்ளத்தில் அசையாது நிலைபெற, அதன்வழிப் பின்னர்ச் சிவனை இடையறாது நினைந்து உய்தி பெறுங்கள்.*

***குறிப்புரை :-*** *"ஒன்றே, ஒருவனே" என்னும் தேற்றேகாரங்களால் அவற்றிற்கு மாறாக அறியாதார் பல கூறுதல் பெறப்பட்டது. "ஒன்று" எனப்பட்ட குலம்*

**2072.** ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகுங்கதி யில்லை நும் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே. **3**

**2073.** போற்றிசெய் அந்தண் கயிலைப் பொருப்பனை
நாற்றிசைக் கும்நடு வாய்நின்ற நம்பனைக்
காற்றிசைக் குங்கம ழாக்கையைக் கைக்கொண்டு
கூற்றுதைத் தான்றனைக் கூறிநின் றுய்மினே. **4**

---

*இது என்பதும், "ஒருவன்" எனப்பட்ட தேவன் சிவன் என்பதும் முன் முன் மந்திரங்களின் வழிவரும் தொடர்பால் இனிது விளங்கின. "சிவ சாதி" என்றது, சிவன், சத்தி இவரையே அப்பனும் அம்மையுமாய்க் கொண்டு பிறந்தவர்கள் என்றதாம். முதற்கண் "நினைமின்" என்றது அதற்கு முன்கூறிய உண்மையைக் குறித்தும், பின்னர் "நினைந்து" என்றது, அவ்வுண்மை உள்ளத்து நிலைபெற்றதன் பயனாக நினைக்கும் பொருளைக் குறித்தும் என்க. முன்னர் "நமன் இல்லை" என்றதனால், பின்னர்க் கூறிய உய்தி துன்பம் நணுகாத எல்லையில் இன்பத்தை அடைதலாம். கதி - பிறப்பு.*

*இதனால், 'பொது மக்களது பொதுநெறியிற் செல்லாமல் விடுத்து, மேன்மக்களது மேல் நெறியிற் செல்க என உணர்த்தப்பட்டது'.*

***2073. தெளிவுரை :- (இனி இங்கு நின்றும் இவ்வதிகாரத்தில் மேல் "ஒருவனே தேவனும்" என ஒருதலைப்பட வலியுறுத்தி உணர்த்தியருளிய, 'சிவபிரானுக்கு ஆட்செய்வதையே நும் கடமையாகக் கொண்டு ஒழுகிப் பயன் பெறுங்கள்' என்பதையே பல்லாற்றானும் பன்னிப் பன்னி அறிவுறுத்துகின்றார்).***

***இதன் பொருள் வெளிப்படை.***

***குறிப்புரை :-** நடுவாதல் - தலைமையிடத்தனாதல். பல பொருட்கும் தலையாதலை 'நடுநாயகம்' என்பர். "திசை" என்றது ஆகுபெயராய் அவற்றில் வாழும் உயிர்களை. "நடுவாய் நின்ற நம்பன்" என்றதனால், "அவனே யாவராலும் வணங்கப்படுவோன்" என்பது குறிப்பு. காற்று, பிராணவாயு. அதுவே உடம்பின் உட்கூறுகள் பலவற்றையும் தக்கவாறு இயைவித்து இயங்கச் செய்தல் பற்றி. "காற்றிசைக்கும் ஆக்கை" எனவும், அக்காற்று உள்ள பொழுது மெல்லவும், நீங்கியபின் மிகவும், புலால் நாற்றம் வீசுவது உடம்பு என அதன் இழிவு தோன்ற, "கமழ் ஆக்கை" எனவும் கூறினார். நறுமணம் வீசுதலை, 'கமழ்தல்' என்றல் மரபாகலின், இங்கு தீ நாற்றம் வீசுதலை, "கமழ்தல்" எனக் கூறியது இழித்தற் குறிப்பு. 'இசைக்கும் ஆக்கை, கமழ் ஆக்கை' எனத் தனித்தனி இயைக்க. "கொண்டு" என்றது 'கருவியாகப் பற்றி' என்றபடி. 'அவனைத் துதித்தால் உய்தி பெறுதல் திண்ணம்' என்பதை நிறுவ, "கூற்றுதைத்தான்றனைக் கூறிநின்று" என்றார்.*

2074. இக்காயம் நீக்கி இனியொரு காயத்தில்
புக்குப் பிறவாமல் போம்வழி நாடுமின்
எக்காலத் திவ்வுடல் வந்தெமக் கானதென்று
அக்காலம் உன்ன அருள்பெற லாமே. 5

2075. போகின்ற வாறே புகுகின்ற அப்பொருள்
ஆகின்ற போதும் அரன்அறி வானுளன்
சாகின்ற போதும் தலைவனை நாடுமின்
ஆகின்ற அப்பொருள் அக்கரை யாகுமே. 6

---

***2074. தெளிவுரை :-*** *'உயிராகிய நமக்கு உடல் எக்காலத்தில் வந்து பொருந்திற்று' என்று அக்காலத்தை ஆராய்ந்து உணரின், 'அதனை நமக்குப் படைத்துக் கொடுத்த தலைவன் இவன்' என்பது புலனாகும். அது புலனாகவே, அவன் மீது அன்பு செல்ல அவனது அருளைப் பெறுதல் உண்டாகும். அவ்வாற்றால் இவ்வுடம்பைக் கழித்துவிட்டு, இனி மற்றோர் உடம்பில் புகுந்து பிறத்தல் இன்றி உய்ந்துபோம் வழியை நாடுங்கள்.*

***குறிப்புரை :-*** *அனைத்தும் அழிந்தொழிந்த காலத்தில் உயிர்கள் உடம்பின்றியே இருக்கப் பின்பு அவற்றிற்கு உடம்பைக் கொடுத்தவன் அனைத்தும் அழிப்பவனாகிய சிவனேயாதலின், நமக்கு உடல் வந்த காலத்தை அறிந்தால், உடல் கொடுத்த தலைவன் இவன்' என்பதும் அறியப்படும் 'ஆதலின் அக்காலத்தை ஆராய்ந்துணர்ந்து அருள் பெறுக' என்றும் அவ்வாறு அருள் பெறுதலே பிறவி நீங்கும் வழியாகலின், 'பிறவாமல் போம் வழி நாடுமின்' என்றும் கூறினார். "அந்தம் ஆதி என்மனார் புலவர்" (சிவஞானபோதம் சூ.1) என்றார் மெய்கண்டதேவர். மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க.*

***2075. தெளிவுரை :-*** *நீவிர் போகின்ற போக்கிலே உங்களைப் போக விட்டுத் தானும், அப்போக்கிற்குத் துணையாய் உடன் வருகின்ற முதற்பொருள் சிவனே. அவன் அவ்வாறு விடுதலும், உடன்புகுதலும் நீவிர் உண்மையை உணர்தற்கு உரிய காலம் வருவதை அறிதற்காகவே யாம். ஆகையால், வாழ்கின்ற பொழுது மட்டுமன்றிச் சாகின்ற பொழுதும் அவனை நினையுங்கள். ஏனெனில், அவனே பிறவியாகிய கடலுக்கு அப்பால் உள்ள கரையாவான்.*

***குறிப்புரை :-*** *ஆன்மாக்களின் போக்கிலே விட்டு உடனின்று ஆட்கொள்ளும் பரசிவம், இறக்கின்ற போது நினைத்தால்கூடக் காலங்கழிந்தது எனக் கருதாது உடனாகி அக்கரையாகிய இன்பக் கரையில் சேர்க்கும் என்பது கருத்து.*

*அடம்பிடிக்கும் குழந்தையை நல்வழிப்படுத்தக் கருதிய தந்தை, அது போகின்ற போக்கிலே விட்டுத் திருப்புவது போல ஆன்மாக்கள் செல்லும் புன்னெறியிலே, அவற்றுடன் தாமும் உடனிருந்து, அல்லற்பட்டு அது உவர்ப்புக்*

**2076.** பறக்கின்ற ஒன்று பயன்உற வேண்டின்
இறக்கின்ற காலத்தும் ஈசனை உள்கும்
சிறப்பொடு சேரும் சிவகதி பின்னைப்
பிறப்பொன் றிலாமையும் பேருல காமே. 7

---

*கண்டு திரும்பி நன்னெறி நாடும்போது புன்னெறிதனை விலக்கி உடனாயும் விளங்கும் என்பார் 'போகின்ற ஆறே புகுகின்ற அப்பொருள் அரன் ஆகின்ற போதும் அறிவான் உளன்' என்றார்.*

*சாகின்றபோதும் என்பது, ஆகின்றபோது இவன் நினையாமல் கழிந்தானே என்று எண்ணாது, சாகின்ற போதாவது எண்ணினானே! அதுபோதும் என்று பரிபாக முற்றதாக எண்ணி அருள் செய்வன் என்பது உணர்த்தியவாறு. அக்கரை - திருவடி நெடுங்கரையாகிய வீடு.*

***2076. தெளிவுரை :-** கூட்டில் சிறிது போது தங்கியிருந்து பின்பு இரையை நாடி அக்கூட்டை விட்டுப் பறந்து போகின்ற பறவையைப் போல உடம்பில் சிறிது காலம் வாழ்ந்து பின்பு அவ்வாழ்வினும் வேறான பயனை நாடி அவ்வுடம்பை விட்டு ஓடுகின்ற உயிர், உண்மையாகவே தான் அடையத்தக்க பயனை அடைய வேண்டின் உடம்பை விட்டுப் பிரிகின்ற காலத்திலும் சிவனை மறவாமல் நினைக்கும். அவ்வாறு நினைத்தால் எல்லாச் சிறப்பினும் மேம்பட்ட சிறப்பாகிய, சிவ ஞானத்தின்வழி சிவகதியைச் சேரும். இனி அச்சிவகதிதான், ஏனையுலகங்கள் எல்லாவற்றையும் விடப்பெரியதாகிய உலகமும், அதனையும் கடந்த நிலைமையும் ஆகும்.*

***குறிப்புரை :-** "பறக்கின்ற ஒன்று" என்பது அடையடுத்த உவம ஆகுபெயர். "கூட்டை விட்டுப் பறக்கின்ற" என்பது ஆற்றலால் கொள்ளக் கிடந்தது. "வேண்டின்" என்றது 'உண்மையாக விரும்பினால்' என்றபடி, உண்மையாக விரும்புதலாவது தப்பாது பெறக் கருதுதல். தப்பாது பெறக்கருதினால் உள்கும்' என்றமையால், "உள்கா தொழியின் பயனில்லை" என்றாயிற்று. "பின்னைப் பிறப்பொன்றிலாமை, பேருலகு" என்பவற்றைப் பின்முன்னாக மாற்றிவைத்து உரைக்க. செய்யுள் பற்றி முறை பிறழ வைக்கப்பட்டன. சிவலோகம் சுத்த மாயாகாரியம் ஆதலின், அஃது அசுத்த மாயா காரியமாகிய ஏனைய உலகங்களை உள்ளடக்கி வியாபகமாய் நிற்றல் பற்றி, "பேருலகு" என்றார். "பேருலகும்" எனத் தொக்கு நின்ற எண்ணும்மையை விரிக்க. முன்னர்ப் பதமுத்தி, அபர முத்திகளை அடைந்து, பின்னர்ப் பரமுத்தி அடையப்படும் ஆதலின், 'பேருலகும், பிறப்பிலாமையும் ஆம்' என்றார். ஆம் - வாய்க்கும்.*

***2077. தெளிவுரை :-** எங்கள் சிவபெருமானை அவன் அடியவரோடு கூடியும், தனித்தும், பாடியும், ஆடியும் வணங்குவதுடன் உள்ளத்திலேயும்*

**2077.** கூடியும் நின்றும் தொழுதெம் இறைவனைப்
பாடி உளேநின்று பாதம் பணிமின்கள்
ஆடி உளேநின் றறிவுசெய் வார்கட்கு
நீடிய ஈற்றுப் பசுவது வாமே. **8**

**2078.** விடுகின்ற சிவனார் மேலெழும் போது
நடுநின்று நாடுமின் நாதன்றன் பாதம்
கெடுகின்ற வல்வினை கேடில் புகழோன்
இடுகின்றான் நும்மை இமையவ ரோடே. **9**

---

*அவனது திருவடிகளை நினைந்து அடிபணியுங்கள். ஏனெனில், உள்ளத்திலே நினைந்து பணிபவர்கட்குக் கன்றையீன்ற பசு அக்கன்றைவிட்டுப் பிரியாதது போலக் கரவாது விளங்கி அருள் செய்வான்.*

*குறிப்புரை :- செய்யுளுக்கேற்ப "ஆடி" என்பதனை வேறு வைத்து ஓதினாராயினும், முன்னர் கூறிய கூடுதல் முதலியவற்றுடன் ஒருங்கு வைத்து ஓதுதலே கருத்து என்க. நிற்றல் - தனித்து நிற்றல். உள்ளே நிற்றல் - ஒருங்கிய மனத்தோடு கூடி நிற்றல். பணிதல், அறிதல்களைச் சுருக்கம் கருதி வேறு வேறு வைத்தாராயினும் அவற்றையும் ஒருங்கு வைத்து இருமுறை ஓதுதலே கருத்தாம். அறிதல், இங்கு நினைத்தல், நீடுதல், பிரியாது உடன் இருத்தலைக் குறித்தது. அறிவு - அறிதல். அது பகுதிப்பொருள் விகுதி.*

*2078. தெளிவுரை :- எப்பொழுதாயினும் உடம்பை விட்டு நீங்குவதேயன்றி அதில் நிலைத்திராததாகிய உயிர் அவ்வாறு எப்பொழுதாயினும் உடம்பைக் கீழே வீழ்த்தி விட்டுத் தான் மேலே செல்கின்ற பொழுது வாழ்விற்கும், சாவிற்கும் இடைப்பட்ட நேரத்தில் சிவனது திருவடிகளை நினையுங்கள். நினைத்தால் உங்கள் வினைகள் கெட்டொழிவன. தான் மறைந்திருப்பினும் தனது செயல் எஞ்ஞான்றும் நிகழ்வதால் அதுபற்றி முடிவின்றி வருகின்ற புகழை உடையவனாகிய சிவன் உங்களைத் தேவர்களோடு தேவர்களாய்ச் சேர்ப்பிப்பான்.*

*குறிப்புரை :- "விடுகின்ற" என்றது அதன் இயல்பு கூறியவாறு, "சீவனார்" என்றது நிலைநில்லாமையைக் குறிக்கும் இழிவுக் குறிப்பு. உயிர் உடம்பை இயக்குதலும், இயக்காது விட்டு நீங்குதலும் இல்லாத நேரத்தை "நடு" என்றார். நாதன்றன் பாதத்தை முன்பெல்லாம் துணையாக நினைந்து வந்தவர்கட்கே அந்த நேரத்தில் அவற்றை நினைதல் கூடும் என்க. "கெடுகின்ற" என்பது அன்பெறாது வந்த அஃறிணைப் பன்மை வினைமுற்று. தெளிவு பற்றி எதிர்காலம் "கெடுகின்ற", "இடுகின்றான்" என நிகழ்காலமாகச் சொல்லப்பட்டது. "இமையவர்" என்றது அவரது தகுதிக்கேற்ப மால், அயன், இந்திரன் என்னும் இவர் உலகத்தவரையும், சிவலோகத்தவரையும் குறிக்கும். பதிப்புக்களில் இதன்பின் காணப்படும்*

**2079.** இன்புறு வீர்அறிந் தேஎம் இறைவனை
அன்புசெய் வீர்தவம் செய்யும் மெய்ஞ்ஞானத்துப்
பண்புறு வீர் பிறவித்தொழி லேநின்று
துன்புறு பாசத் துழைத்தொழிந் தீரே. **10**

**2080.** மேற்கொள்ள லாவதோர் மெய்த்தவம் ஒன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்த்தாளும் ஒன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்ந்நெறி ஒன்றுண்டு
மேற்கொள்ள லாம்வண்ணம் வேண்டிநின் றோர்க்கே. **11**

---

*"ஏறுடையாய்" என்னும் மந்திரம் மேல் 'மாகேசுர பூசை' அதிகாரத்தில் சொல்லப்பட்டது.*

*2079.* **தெளிவுரை :-** *மீண்டும் மீண்டும் பிறந்து பிறந்து உழல்வதாகிய அந்தத் தொழிலிற்றானே நின்று, அத்துன்பத்தை அடைவதற்கு ஏதுவான வினைகளில் கிடந்து உழைத்துக் கெட்டவர்களே, கேளுங்கள். எம் இறைவனாகிய சிவன் எல்லா உயிர்கட்கும் என்றும் உறுதுணையாய் இருந்து உதவி வருதலை உணர்ந்து அவனிடத்திலே அன்பு செய்யுங்கள்; அதன் மேலும் தவத்தைச் செய்யுங்கள்; அப்பொழுது உண்மை ஞானத்தைப் பெற்ற சிறப்பை உடையவராவீர்கள். அச்சிறப்பால் நிலையான இன்பத்தை எய்துவீர்கள்.*

**குறிப்புரை :-** *"பிறவித் தொழிலே நின்று" என்பது தொடங்கி, 'இன்புறுவீர்' என்பதை இறுதியில் வைத்து உரைக்க. தவமாவன சரியை கிரியா யோகங்கள். அது சிவநெறி நூல்களால் இனிது விளங்கும்.*

*2080.* **தெளிவுரை :-** *'யாவரும் மேற்கொள்ளத்தக்க நல்ல முறை எது' என்று அறிந்து அதனை மேற்கொள்ள விரும்புபவர்க்கு அம்முறை குறிப்பிடுகின்ற ஒப்பற்ற உண்மையான தவமும், ஒப்பற்ற அருளாற்றலும், ஒப்பற்ற வீட்டு நெறியும் உள்ளன.*

**குறிப்புரை :-** *'அவற்றை அறிந்து மேற்கொள்ளுதல் அறிஞர் கடனாகும்' என்பது குறிப்பெச்சம். 'அத்தவம் சிவபுண்ணியமும்' சிவன் அருளும், சிவநூல் கூறும் பொருள்களின் மெய்ம்மையுமாம் என்பதைக் குறிப்பால் உணர்த்தியவாறு. தாள் - முயற்சி. அஃது அதற்கு ஏதுவாகிய ஆற்றலைக் குறித்தது. ஈற்றடியை முதலில் வைத்து உரைக்க. இதன்கண் சொற்பொருட் பின்வருநிலையணி வந்தது.*

*2081.* **தெளிவுரை :-** *பொதுவாக, 'தேவரைச் சேர்தல்' என்பது தேவரை அவரை உணரும் நெறியிற் சென்று உணர்தலேயாகும். அம்முறையில் சிவபெருமான் தன்னைச் சார்ந்தவர்கட்கு இன்ப நிலையாகிய வீட்டையும், சாராது நீங்கினவர்கட்குத் துன்ப நிலையாகிய பிறப்பையும் கொடுப்பான்.*

**2081.** சார்ந்தவர்க் கின்பங் கொடுக்கும் தழல்வண்ணன்
பேர்ந்தவர்க் கின்னாப் பிறவி கொடுத்திடும்
கூர்ந்தவர்க் கங்கே குரைகழல் காட்டிடும்
சேர்ந்தவர் தேவரைச் சென்றுணர் வாரே. 12

**2082.** முத்தியை ஞானத்தை முத்தமிழ் ஓசையை
எத்தனைக் காலமும் ஏத்துமின் ஈசனை
நெய்த்தலைப் பால்போல் நிமலனும் அங்குளன்
அத்தகு சோதி யதுவிரும் பாரே. 13

---

*இதனை உணர்ந்து அவனிடத்தில் அன்பு மிகப் பெற்றவர்கட்கே அவன் தனது திருவடி நிழலைத் தருவான்.*

*குறிப்புரை :-* *'அதனைப்பெற முயலுங்கள்' என்பது கருத்து. முதல் இரண்டு அடிகளில் சிவனது இயல்பையும், மூன்றாம் அடியில், 'அவ்வியல்பினை மக்கள் உணர்தல் வேண்டும்' என்பதையும் கூறினார். ஆதலின், அது 'கூறியது கூறல்' ஆகாமை யறிக. 'சிவபெருமானைச் சார்தலாவது இது' என்று உணர்த்துவார் பொதுவாகத் தேவரைச் சாருமாறு கூறினார். அங்ஙனம் கூறிய ஈற்றடியை முதலிற் கூட்டியுரைக்க.*

*"சலம்இலன் சங்கரன்; சார்ந்த வர்க்கலால்*
*நலம்இலன்; நாடொறும் நல்குவான் நலன்" - தி.4 ப.11 பா.6*

*என்று அருளிச் செய்ததும் காண்க. பிறவியை "இன்னாமை" என்றமையால், இன்பமாவது வீடாயிற்று. குரைகழல் - ஒலிக்கும் வீரக்கழல். தனியாகு பெயராய்த் திருவடியை உணர்த்திற்று.*

*2082.* ***தெளிவுரை :-*** *வீடாகிய முடிநிலைப் பயனாயும், அப்பயனுக்கு நேர் வாயிலாகிய ஞானமாயும், அந்த ஞானத்தை முதற்கண் கேள்வியால் உணர்த்தும் முத்தமிழின் ஒலியாயும் உள்ள சிவபெருமானையே அறிஞர் எத்துணைக் காலமாயினும் ஒழியாது துதித்து நிற்பர். அங்ஙனம் துதிக்கின்ற துதியில் அவன் தன்னுள்ளே நெய்யைக் கொண்டிருத்தலால் தன்னைப் பருகுகின்றவர்கட்கு இனிக்கின்ற பால்போல அவன் இனிப்பான். ஆகவே அறிவில் இனிக்கின்ற அறிவாயுள்ள அவனை அறிவுடையோர் விரும்பாமல் இருப்பரோ?*

*குறிப்புரை :-* *'விரும்பவே செய்வர்' என்பதாம். "ஈசனை" என்பதை முதலடியின் இறுதியிற் கூட்டுக. அங்ஙனம் கூட்டவே, முத்தி முதலிய மூன்றும் ஈசனையே குறித்தனவாம். தலை - இடம். இங்கு உள்ளிடம். பால் இனித்தலைக் குறித்தற்கு, "நெய்த்தலைப் பால்" என விதந்தோதினார். "அங்கு" என்றது துதியை. "அது" பகுதிப்பொருள் விகுதி. ஏகாரம் வினாப் பொருட்டாய், அதன்*

**2083.** நியமத்த னாகிய நின்மலன் வைத்த
உகமெத் தனையென் றொருவருந் தேறார்
பவமத்தி லேநின்று பாய்கின்ற தல்லால்
சிவமத்தை ஒன்றும் தெளியகில் லாரே. **14**

**2084.** இங்கித்தை வாழ்வும் எனைத்தோ ரகிதமும்
துஞ்சொத்த காலத்துத் தூய்மணி வண்ணனை
விஞ்சத் துறையும் விகிர்தா எனநினை
நஞ்சற் றவர்க்கன்றி நாடாஒண் ணாதே. **15**

---

*எதிர்மறையைக் குறித்தது. விரும்புதலுக்கு 'அறிஞர்' என்பது தோன்றா எழுவாயாய் நின்றது. அறிஞர் விரும்பாதொழியார்' என்றதனால் 'நீவிரும் அதனையே செய்மின்கள்' என உலகர்க்கு அறிவுறுத்தவாறாயிற்று.*

*2083. **தெளிவுரை :-** 'ஒவ்வொரு பொருளையும் அதனதன் தன்மையில் நிற்குமாறு நிறுத்தி நடத்துபவனாகிய சிவபெருமான் அனைத்து உயிர்களையும் வீடு பெறுவிக்க எத்தனை யுகங்களை வரையறுத்திருக்கின்றான்' என்பதை அறிய வல்லவர் ஒருவரும் இல்லை. இந்நிலையில் அவரவரும் அச்சிவபரம் பொருளை உள்ளவாறு உணரும் நெறியால் உணர்ந்து பிறவியினின்றும் நீங்குதலையே ஒவ்வொருவரும் செய்தலே தக்கதாய் இருக்க, ஒருவரும் அதனைச் சிறிதும் செய்யாது, பிறவிக் கடலிலே குதித்து அதன் கரையைக் காணாது அமிழ்கின்றனர்.*

***குறிப்புரை :-** இஃது இங்ஙனம் ஆகுக என்னும் நியமமுடைய நின்மலன், உயிர்களாகிய நமக்கு வைத்த யுகங்கள் எத்தனை என்று ஒருவரும் உணரார்; பிறப்பாகிய மத்திலே அகப்பட்டுக் கடைபடுதலல்லாது சிவமாகிய மத்தைத் தெளியும் ஆற்றல் அற்றவர்களாகின்றார்களே என்றவாறு.*

*நம்வினைகளை உண்டு கழிக்க இறைவன் எவ்வளவு காலம் தந்திருக்கின்றான் என்பதை உணராது பிறவியிற்பட்டு உழல்கின்றார்களே என்பது கருத்து.*

*பவ மத்து - பிறவியாகிய மத்து; சிவமத்து - சிவமாகிற மத்து. பவமத்தைச் சார்ந்தால் கலக்கமும், சிவமத்தைச் சார்ந்தால் தெளிவுமுண்டாம் என்றது.*

*2084. **தெளிவுரை :-** இவ்வுலகில் தமக்கு வருகின்ற நன்மை, தீமை இரண்டினையும் அவை ஒரு நிகரனவாக நிற்க வைக்கும் காலத்தில் மாணிக்க வண்ணனாகிய சிவபெருமானை, அவனது ஞானத்திலே விளங்கும் தனியொரு பொருளாக உணர்ந்து அவ்வாறான அவனது பெருமையைச் சொல்லி நினைக்கின்ற தூய மனம் உடையவர்க்கன்றி, அவனை உணர இயலாது.*

***குறிப்புரை :-** இன்று சில இடங்களில் 'அங்கு, இங்கு' என்பன அங்கிட்டு,*

**2085.** பஞ்சமும் ஆம்புவி சற்குரு பால்மன்னி
வஞ்சக ரானவர் வைகில் அவர்தம்மை
அஞ்சுவன் நாதன் அருநர கத்திடும்
செஞ்சநிற் போரைத் தெரிசிக்கச் சித்தியே. **16**

---

*இங்கிட்டு என வழங்குதல் போல் முற்காலத்தில் 'இங்கு' என்பது 'இங்கித்தை' எனச் சில இடங்களில் வழங்கிற்று என்பது, "எங்கித்தைக் கன்மமெலாம் செய்தாலும்" என்னும் சிவஞான சித்தி (சூ. 10.6) ஆட்சியாலும் விளங்கும். பின்னர், "அகிதம்" என வருதலால் "வாழ்வு" என்றது இதத்தையாயிற்று. துஞ்சுதல் - தங்குதல். முதனிலைத் தொழிற்பெயர். 'ஒப்பத் தங்கிய காலத்து' என ஓதற்பாலதனை, 'தங்குதல் ஒத்த காலத்து' என்றார். நன்மையையும் தீமையையும், ஒரு படித்தாக நோக்குதல் இருவினையொப்பு வந்த காலத்தன்றிக் கூடாது. இருவினை ஒப்போடு உடன் நிகழ்வன மல பரிபாகமும் சத்திநிபாதமும். இம் மூன்றும் எய்தப் பெற்றவர் இறைவனைத் துதித்தலே உண்மையுணர்ந்து துதித்தலாக ஏனையோர் துதிப்பனவெல்லாம் "ஊரா மிலைக்கக் குருட்டா, மிலைத்த" (தி.8 திருச்சதகம், 87) வாறாம் ஆதலின், இருவினையொப்பு வாய்த்தோர்க்கன்றித் தூய்மணி வண்ணனை "நாட ஒண்ணாது" என்றார். எனவே, 'முன் மந்திரத்திற் கூறியவாறு ஏனையோரைச் சொல்லி என்ன பயன் 'என்றதாயிற்று' என - என்று சொல்லி என்க. 'விஞ்ஞானத்து' என்பது, 'விஞ்சானத்து' என மருவிப் பின் எதுகைக் கேற்பத் திரிந்து நின்றது. விஞ்ஞானம் - மேலான ஞானம்; பதி ஞானம். விகிர்தன் - ஏனை எல்லாப் பொருளினும் வேறுபட்ட தன்மையுடையவன். அத்தன்மையாவது பாச, பசு ஞானங்களால் பற்றவாராமை. "நினை நஞ்சற்றவர்" என்பது வினைத்தொகை. நஞ்சு - தீமை. அஃது இங்கு மனக்குற்றத்தைக் குறித்தது. 'மணி' என்பது நீலமணியையேயன்றி மாணிக்கத்தையும் குறித்தல் வழக்காதல் அறிக. இதன் கண் இன எதுகை வந்தது. துஞ்சுதல் - இறத்தல். விஞ்சத்து உறையும் - சீவபோதத்தைச் சிவபோதம் விஞ்சிய காலத்து வெளிப்படும்.*

*முதற்றொட்டு இதுகாறும் வந்த பதினைந்து மந்திரங்களாலும் யாவர்க்கும் பொதுவாகச் சிவவழிபாட்டினையே வலியுறுத்துணர்த்தினார். இனிவரும் நான்கு மந்திரங்களால் அச்சிவன் குருவாய் வந்து தன்னைக் காட்டப் பெற்றார்க்கு அவன் அக்குருவாய் நின்றே அருள்புரிவன் ஆதலின் அவரை நோக்கி, அக்குரு வழிபாட்டினை வலியுறுத்துணர்த்துகின்றார். யாவருக்கும் சிவன் பொதுவாய்த் தாபர சங்கமங்களில் நின்று அருள்புரியினும் சிறப்பாக அவன் யார் யார்க்கு எவ்வெவ்வுருவில் நின்று அருள்புரிந்தானோ அவர்க்கு அவ்வுருவே சிவவடிவாம் என்பது உணர்க. ஆளுடைய பிள்ளையார் எங்கும் சென்று சிவனைக் கண்டு வழிபட்டாராயினும் திருக்கழுமலத் திருத்தோணி வீற்றிருந்தருளும் பெருமானையே தாம் சிறப்பாகக் கொண்டு வழிபட்டமை முதலியன இதற்குச்*

**2086.** சிவனை வழிபட்டார் எண்ணிலாத் தேவர்
அவனை வழிபட்டங் காமாறொன் றில்லை
அவனை வழிபட்டங் காமாறு காட்டும்
குருவை வழிபடிற் கூடலும் ஆமே. 17

---

*சான்றாகும். இவ்வாறான சிறப்பு வடிவங்களே அவரவர்க்கு ஆன்மார்த்த மூர்த்தி என்க.*

*2085.* **தெளிவுரை :-** *தமக்கு ஞானத்தை அளித்த நல்லருளாசிரியரிடத்து அவரையும் ஏனைப் பலரொடு ஒப்ப நினைக்கும் நேர்மையில்லாத மனத்தை யுடைய மாணாக்கர் நன்மாணாக்கருள் தாமும் ஒருவராய் இருந்து அவர்கள் போல ஒழுகிவருவாராயின் அவரது கரவொழுக்கத்தால் நாடு பஞ்சத்தை எய்தும். அவரை அணுகச் சிவனும் அஞ்சுவான். அதனால் அவரைப் பின்பு அவன் மீளுதற்கரிய நரகத்தில் இடுவான். நேர்மையான மாணாக்கரைக் கண்ணால் கண்டவர்கட்கும் நற்பேறு உண்டாம்.*

**குறிப்புரை :-** *“ஆம்புவி” என இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின் மேல் ஏற்றப்பட்டது. “பஞ்சமும் ஆம்” என்பதனை, “வைகில்” என்பதன் பின்னர்க் கூட்டுக. உம்மை, ‘ஏனைத் தீங்குகளேயன்றி’ என இறந்தது தழுவி நின்றது. ஈற்றடி, இதற்கு எதிராக, நன்மாணாக்கர் உள்ள நாடு நலம் பல எய்துதலை உணர்த்தியவாறு எனவே, இதனால் குருவை நம்மனோரில் ஒருவராக எண்ணுதலின் குற்றமே இனிதுணர்த்தப்பட்டதாம். ‘செஞ்செவே நிற்போர் என்பது, “செஞ்ச நிற்போர்” என மருவி நின்றது. செஞ்செவே நிற்றல், மிக நேர்மையாக நிற்றல்.*

*2086.* **தெளிவுரை :-** *அளவற்ற தேவர்கள் சிவனை நேராகச் சென்று கண்டு வழிபட்டனர். ஆயினும் அவர்கள் பின்பு துன்பம் இன்றி வாழ்ந்ததாக வரலாறில்லை. பின்பும் துன்பம் எய்தியதாகவே வரலாறுகள் உள்ளன. ஆகையால், என்றும் துன்பமில்லா வாழ்வைப் பெறும் வகையில் சிவனை வழிபடும் முறையைத் தெரிவிக்கின்ற குருவை வழிபட்டால், அவரது அருளால் அவ்வழிபாட்டில் நின்று துன்பம் இல்லாத நிலையை அடைதல் கூடும்.*

**குறிப்புரை :-**

*“புவனியிற் போய்ப்பிற வாமையின் நாள்நாம்*
*போக்குகின் றோம்அவ மே; இந்தப்பூமி*
*சிவன்உய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்*
*............................ திருமாலாம்*
*அவன்விருப் பெய்தவும், மலரவன் ஆசைப்*
*படவும்நின் அலர்ந்த மெய்க் கருணையும் நீயும்*

**2087.** நரருஞ் சுரரும் பசுபாசம் நண்ணிக்
கருமங்க ளாலே கழிதலின் கண்டு
குருஎன்பவன் ஞானி கோதிலன் ஆனால்
பரம் என்றல் அன்றிப் பகர்வொன்று மின்றே. **18**

---

*அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்”*
*- தி.8 திருப்பள்ளியெழுச்சி, 10*

*எனவும்,*

*“வானிடத்தவரும் மண்மேல் வந்தரன் றனைஅற் சிப்பர்”*
*- சிவஞானசித்தி, சூ.2-92*

*எனவும், பிறவாறும் போந்த திருமொழிகளால், ‘தேவரும் நிலையான இன்ப வாழ்வை எய்துதற்கு மண்மேல் மானுடராய்ப் பிறந்து, ஞான குருவால் ஆட்கொள்ளப்பெறல் வேண்டும்’ என்பது தெளிவாதல் போலவே இந்நாயனாரும், தேவர், குருவை வழிபடாமல் சிவனை வழிபட்டுப் பெரும்பயன் எய்தாமையை எடுத்துக்காட்டிக் குரு வழிபாட்டினை வலியுறுத்தினார். ‘குரு வழிபாடே ஞான வழிபாடாம்’ என்பது கருத்து.*

*“அங்கு” இரண்டில் முன்னது ‘அத்தேவர்பால்’ எனவும், பின்னது, ‘வழிபட்ட இடத்து’ எனவும் கூறியபடி. ஆமாறு - பயனால் உயர்ந்த நிலை. ஒன்றில்லை - சிறிதும் இல்லை. பின்னர் வந்த “ஆமாறு” என்பதற்கு, ‘பயனால் உயரும் முறை’ என உரைக்க. உம்மை உயர்வு சிறப்பு.*

*2087. தெளிவுரை :- மக்களே யாகுக; அவரினும் மேற்பட்ட தேவரே யாகுக; எல்லோரும் பாசத்துட்பட்ட பசுக்களேயாய் வினைவழி வந்து நீங்கிப் போதலின், ‘குரு’ எனப்படுபவன் அந்நிலையை உணர்ந்து பாசத்தின் நீங்கி நிற்றலால், ‘ஞானி’ என வேறுவைத்து எண்ணப்படுதலால், அவனை, ‘பதி’ எனவே கூறுதல் வேண்டுமன்றி, வேறு சொல்லுதற்கில்லை.*

*குறிப்புரை :- நரர் - மக்கள். சுரர் - தேவர். இருவகையாகும் பாசத்திலே கட்டுண்டு இருத்தலின் பசு எனப்படுவர். அஃதாவது, நரரும் சுரரும் ஆகிய பசு என்பதாம். எழுவகைப் பிறப்புக்களுள் உயர்ந்தவை மக்கட்பிறப்பும், தெய்வப் பிறப்புமே யாகலின் அவற்றையே சிறந்தெடுத்துக் கூறினார். கூறவே, ஏனைப் பிறப்புக்களும் அவற்றுள் அடங்கின. எனவே, உயிர் வகைகளாக நாம் அறிவன யாவும் பசுக்களேயாதலால் அவை நிலையான இன்பத்தைப் பெறவிரும்பும் தமது விருப்பம் நிறைவேறாமல் துன்பப்பட்டு உழலவே காண்கையாலும், ‘குரு’ எனப் படுபவன், அவ்வாறன்றி, “நாம் ஆர்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம் ஏமாப்போம்; பிணியறியோம்; இன்பமே எந்நாளும், துன்பம் இல்லை” (தி.6 ப.98 பா.1) என்று சொல்லிச் செம்மாந்து இன்புற்றிருக்கக் காண்கையாலும், அவனை ஏனையோரில் ஒருவனாக வைத்து, “பசு” எனல் கூடாமையும், அவ்வியல்பு*

**2088.** ஆட்கொண்ட டவர்தனி நாயகன் அன்புற
மேற்கொண் டவர்வினை போயற நாடொறும்
நீர்க்கின்ற செஞ்சடை நீள்தன் உருவத்து
மேற்கொண்ட வாறலை வீவித்து ளானே. **19**

---

*பதிக்கன்றிப் பிறர்க்கு இன்மையால் "பதி" என்றலே ஏற்புடையதாதலும் விளங்கும் என்றவாறு. 'கழிதலின் குரு என்பவன் (அவற்றைக்) கண்டு கோதிலன் ஆனால் ஞானியாதலின் பதி என்றல் அன்றிப்பகர்வு ஒன்றும் இன்றே' என இயைக்க, 'ஆனால்' என்பது தெளிவின்கண் வந்தது, நீ இப்படிச் செய்வதனால், நான் உன்னுடன் இருக்க இயலாது' என்பது போல, இதனால், 'குரு சிவனே' எனப்படுதற்குக் காரணத்தை விளக்கியவாறு, இதனானே "குருவே சிவம்" என்றல் மலம் நீங்கித் தூயராய்ச் சிவன் அவரெனத் தானென வேறாகாது அவரே தானாய் அவரிடத்துத் தயிரில் நெய்போல விளங்கி நிற்கப் பெற்ற நிறைஞானியரை நோக்கியன்றி, வேடமாத்திரத்தால் 'குரு' என நிற்பாரை நோக்கியன்று என்பதும் இனிது விளங்கும்.*

*2088. தெளிவுரை :- ஒப்பற்ற தலைவனாகிய சிவன் தான் குருவாகி வந்து ஆட்கொள்ளப் பெற்றவர்களுள் பின்னும் நாள்தோறும் அக்குரு வடிவின்கண் அன்பு மேலும், மேலும் மிகச் செய்கின்றவரது வினைகள் சேய்மைக்கண் விலகிக் கெடும்படி, தனது இயற்கை உருவத்தில் நீண்ட சடையினிடத்தே கங்கையை அடக்கி வைத்திருப்பது போல் அவற்றின் ஆற்றலை அடக்கி அவரிடத்தே விட்டு நீங்காதிருப்பான்.*

*குறிப்புரை :- 'ஆட்கொண்டவர்' என்றது, 'ஆட்கொள்ளப்பட்டவர்' எனச் செயப்பாட்டு வினைப்பொருள் தந்து நின்றது. "அங்கணர் ஓலை காட்டி ஆண்டவர் தமக்கு நாடு" (தி.12 தடுத்தாட்கொண்ட பு.1) என்பதிற்போல, 'ஆட்கொண்டவருள்' என 'உள்' என்னும் உருபு விரிக்க. "தனிநாயகன்" என்பதை முதலிற் கொள்க. "நீர்ததும்புகின்ற சடையை நீர்க்கின்ற செஞ்சடை" என்றார். "ஆறு" என்பது உவம உருபாய் நின்றது. சிவனது உருவத்தை இங்கு "நீர் உருவம்" என்றது, பகீரதன் பொருட்டு ஆகாயத்தினின்றும் குதித்த கங்கையை உடனே தாங்கி நின்ற கோலம் நோக்கியாம். உயிர்களைத் தாக்கி மெலியச் செய்கின்ற வினைகளது ஆற்றல் கரையை மோதிக் கரைக்கின்ற கடல் அலையோடு ஒத்தல் பற்றி அலையாக உருவகம் செய்தார். "ஆகாய கங்கையைத் தனது சடைகளுள் ஒன்றின் உரோமத்தின் நுனியில் புல்நுனியில் நீர்போல நிற்குமாறு அடக்கிய பெருமானுக்கு வினையின் ஆற்றலை அடக்குதல் அரிதன்று" என்றற்கு 'நீள்தன் உருவத்தின் நீர்க்கின்ற செஞ்சடை மேற்கொண்டவாறு வீவித்துளான்' என்றார்.*

*வீதலுக்குப் பிற வினை வீவித்தல், வீவித்தான்' என்றே ஒழியாது "வீவித்துளான்" என்றார் உடம்புள்ள துணையும் பிராரத்தம் விளைந்து கொண்டே யிருத்தலின் அதனை மெலிவித்தற் பொருட்டு அவன் இமைப் பொழுதும் நீங்காது உடன் நிற்றல் பற்றி, சிவன் குருவாகி வந்து அருள்செய்யும் பொழுதே சஞ்சிதம் வறுத்த விதைபோலக் கெட்டொழியினும், பிராரத்தம் உடம்போடு ஒட்டி நிகழ அந்நிகழ்ச்சி உடல் ஊழாய் நிற்றல் அல்லது, வரும் பிறவிக்கு வித்தாக ஆகாமியத்தைத் தோற்றுவியாது கழிதற் பொருட்டுத் தன்னால் ஆட்கொள்ளப்பட்டவருள், தொடர்ந்து அன்பு செய்பவரிடம் விளங்கி முன் நிற்பான் என்பது உணர்க. இங்ஙனமாகவே, சிவன் குருவாகி வந்து ஆட்கொள்ளப்பட்ட பின்பும் குருவையே சிவனாகக் கண்டு அன்புசெய்து வழிபடுவார்க்கன்றி ஏனையோர்க்கு முன்போல ஆகாமியவினை விளைந்து அது சஞ்சிதம் ஆக, மீட்டும் பிறவியே விளையும் என்பது விளங்கும். இது பற்றியே,*

> *தன்னை அறிவித்துத் தான்தானாச் செய்தானைப்*
> *பின்னை மறத்தல் பிழையலது.*

*என்றார் மெய்கண்ட தேவரும் (சிவஞானபோதம், இறுதி வெண்பா). பிழையலது- தப்பமுடியாத குற்றம்; உய்தியில் குற்றம் பிழைத்தல் - தப்புதல். இதனால், "குருவால் ஆட்கொள்ளப்பட்டார் அதன்பின் குருவையே சிவமாகத் தேறி வழிபட்டு வருதல் இன்றியமையாதது" என்பதும் "அங்ஙனம் வழிபடாதவழிப் பழைய நிலையே ஆய்விடும்" என்பதும் கூறப்பட்டன.*

> *"அருபரத் தொருவன் அவனியில் வந்து*
> *குருபரனாகி அருளிய பெருமையைச்*
> *சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்*
> *பிறிவினை யறியா நிழலது போல*
> *முன்பின் னாகி முனியாது அத்திசை*
> *என்பு நைந் துருக, நெக்குநெக் கேங்கி*
> *அன்பெனும் ஆறு கரையது புரள,*
> *நன்புலன் ஒன்றி, "நாத" என் றரற்றி*
> *உரைதடு மாறி, உரோமஞ் சிலிர்ப்பக்*
> *கரமலர் மொட்டித்து இருதயம் மலரக்,*
> *கண்களி கூர, நுண்துளி அரும்பச்*
> *சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்*
> *தாயே யாகி வளர்த்தனை போற்றி"*
>
> *- தி.8 போற்றித் திருவகவல் - 75-87*

*என்னும் திருமொழியும் இங்குக் கூறிய வழிபாட்டு அனுபவ வழி எழுந்தது என்க.*

*'குருலிங்க சங்கமம்' என்னும் மூன்றன் வழிபாடு, ஞானத்தைப் பெறுமுன்னர் அதற்குச் சாதனமாயும், பெற்றபின்னர் அதனை நிலை பெறுத்துவனவாயும் இருத்தலின், அவையே யாவராலும் செயற்பாலன என்பதை வலியுறுத்தியவர், அவற்றுள், குருவழிபாடு ஞானியர்க்குத் தலையாதலை எடுத்துக் கூறி, இத் தந்திரத்தை முடித்தார். இதனுள் இன எதுகையும், ஆசெதுகையும் வந்தன.*

***ஏழாம் தந்திரம் மூலமும் உரையும் முற்றிற்று.***

# எட்டாம் தந்திரம்

*இந்த எட்டாந் தந்திரத்துச் சிவயோக நெறிக்குச் சாதனமான உடல் ஐவகைப்படுமென்பதையும், இவ்வுடல் தானாக விழாமல், யோகி தன்னுடைய இச்சைப்படி விடத்தக்கது ஆதலால் அதற்குரிய உபாயங்கள் இவை என்பதையும், கீழாலவத்தை மேலாலவத்தை முதலிய நிலை வேறுபாடுகளையும் அவற்றின் இலக்கணங்களையும் கேவல சகல சுத்தாவத்தைகளின் இயல்பையும், எல்லாவற்றிற்கும் மேலான பராவத்தை நின்மலாவத்தைகளுடைய தன்மைகளையும், ஆனந்தத்துடன், தத்துவ தாத்துவிக இயல்புகளை உள்ள வாறுணரும் முறைமைகளையும் உணர்த்திச் சோதனையுடன் உபதேசிக்கத் தொடங்கி முதற்கண் ஐவகை உடல் நிலைகளை அறிவிக்கின்றார்.*

## 1. உடலில் பஞ்ச பேதம்

*பொருளியல்புகளை உள்ளவாறு உணர்த்துமிடத்து முதற்கண் பருப்பொருளை எடுத்து அவற்றது இயல்பையும், பின்னரே நுண் பொருளை எடுத்து அவற்றது இயல்பையும் கூறலே பயனுடைத்தாதல் பற்றி முதற்கண் உயிர்கள் தாம் எஞ்ஞான்றும் பயன்படுத்திக் கொள்வதாகிய உடம்பை எடுத்துக்கொண்டு, அதன் இயல்பை உணர்த்துகின்றார். இது பதினெட்டு மந்திரங்களை உடையது.*

*'உடலில் பஞ்ச பேதம்' என்பது, 'உடம்புகள் ஐவகைப்படும்' என்றபடி. அவையாவன, 'பருவுடம்பு, நுண்ணுடம்பு, பண்புடம்பு, போர்ப்புடம்பு, முதலுடம்பு' - என்பன. இவை முறையே தூல சரீரம், சூக்குமசரீரம், குணசரீரம், கஞ்சுக சரீரம், காரணசரீரம்' - எனப்படும். இவற்றுள் இறுதி மூன்றுடம்புகளும், 'நனிநுண்ணுடம்பு' அல்லது 'பர சரீரம்' என ஒன்றாகத் தொகுத்தும் சொல்லப்படும். இவ்வுடல்கள் எவ்வப்போது எங்ஙனம் காரியப்பட்டு உயிருக்கு உபகாரப்படுகின்றன என்பது தெரிவிக்கப்படுகிறது.*

**2089.** காயப்பை ஒன்று சரக்குப் பலஉள
மாயப்பை ஒன்றுண்டு மற்றுமோர் பைஉண்டு
காயப்பைக் குள்நின்ற கள்வன் புறப்பட்டால்
மாயப்பை மண்ணா மயங்கிய வாறே. **1**

---

*2089. தெளிவுரை :- ஒரு பையில் பல பண்டங்களை அடைத்து வைத்தல் போல, யாவராலும் நன்கு அறியப்படும் உடம்பாகிய ஒரு பை ஒவ்வோர் உயிர்க்கும் கிடைத்திருத்தல் கண்கூடாக, அதன்கண் அடைக்கப்பட்டுள்ள பண்டங்களோ பல உள்ளன. (அவற்றை ஆராய்கின்றார் ஒருவரும் இல்லை) இனி, அந்தப் பை மாயம்போலக் கட்புலனாகி, விரைவில் மறைவதாகும். என்றாலும், அந்தப் பைக்குள்ளே மற்றொரு பையும் உண்டு; (அதனை அறிந்தோர் சிலரே). யாவரும் அறிந்த அந்தப் பைக்குள் அதற்கு வேறாகிய ஒன்று உள்ளதோ,*

*இல்லதோ' என ஐயுறுமாறு ஒளிந்து நிற்கின்ற உயிர் அதனை விட்டு வெளியே போய்விடுமானால், தோன்றியழிவதாகிய அந்த உடம்பு மண்ணோடு மண்ணாய்ப்போக, அதனை நிலையானதாகக் கருதி, அதனைத் தமக்கு உறவாகத் தெளிந்திருந்தோர் திகைப்புற்று நிற்கும் நிலை இரங்கத்தக்கதாகும்.*

| | |
|---|---|
| *காயப்பை* | *தூல உடம்பு. கண்ணால் காணப்படுவது. தோற்பை* |
| *மாயப்பை* | *சூக்கும உடம்பு. கண்ணால் காண முடியாதது* |
| *மற்றுமோர்பை* | *காரண உடம்பு* |

***குறிப்புரை :-** 'காயப்பை' என்றது உருவகம், சரக்காவன, என்பு, தசை, நரம்பு, குருதி, கோழை முதலியனவற்றை, 'சரக்கு' எனவே கூறியது சிறப்புருவகம். 'காயப்பை ஒன்று' என்பதன் பின்னும் 'உண்டு' என்பது எஞ்சி நின்று, ஈரிடத்தும் 'மாய் அப்பை' எனப் பிரிக்க. மாய்தல் கூறவே, தோன்றுதல் தானே பெறப்பட்டது. 'மற்றும் ஓர் பை உண்டு' என்பதை உணர்த்தப்புக்கவர், 'முற்கூறிய அந்தப் பையை அன்றி' என்றற்கு 'மாய் அப்பை ஒன்றுண்டு' என அதனையே மீளச்சுட்டிக் கூறினார். முதற்கண் கூறிய பையை 'மாயும் பை' என்றதனால், மற்றும் ஒன்றாகக் குறிக்கப்பட்ட பை, 'மாயப் பை' என்பது பெறப்பட்டது. **<u>மாயும் பை தூல உடம்பும், மாயாப் பை சூக்கும உடம்புமாம் என்க</u>**. உயிர்கட்கு அவ்வப்பொழுது வினைக்கீடாக விரைவில் மாறி மாறி வருவது தூலவுடம்பேயாதலும், நுண்ணுடம்பு அவ்வாறன்றி, உயிர் வீடுபெறும் வரையிலாவது, அல்லது உலகம் அழியும் வரையிலாவது உயிர்களோடு நீங்காது நிற்பது ஆதலும் அறிக. இங்ஙன மாகவே, பஞ்சபேதங்களுள் 'தூலம், சூக்குமம்' என்னும் இரு பேதங்களைக் குறிப்பிட்டு அவற்றது இயல்பு தொகுத்துக் கூறியவாறாயிற்று. என்பு, நரம்பு, குருதி முதலியவற்றின் கூட்டமே தூல தேகமாயினும், அவை அங்ஙனம் வெளி தோன்றாது மறைந்து நிற்றல் பற்றித் தூல தேகத்தைப் பையாகவும், என்பு முதலியவற்றை அதனுள் அடைக்கப்பட்ட சரக்காகவும் உருவகம் செய்தார். தூலதேகத்தைப் 'பை' என்றமையால் அதனோடு ஒப்ப ஏனைய தேகங்களையும் 'பை' என்றார். 'ஆக' என்பது ஈறு குறைந்து நின்றது. 'மற்றும் ஓர் பை உண்டு' என அறிவுறுத்தமையால், 'உடம்பாவது கண்கூடாய்த் தோன்றியழிகின்ற அஃது ஒன்றுமே போலும்' எனவும், 'அது மாய்ந்த பொழுது உயிர் தனித்து நிற்பதுபோலும்' எனவும் மயங்காது, 'தூல உடம்பு நீங்கிய பொழுது உயிர் சூக்கும உடம்பளவாய் நிற்கும்' எனவும், தூல உடம்பு உள்ளபொழுது அதனை உயிர் சூக்கும உடம்பு வழியாக இயக்கும்' எனவும் உணர்க - என உணர்த்தினமை காண்க. ஈற்றில், 'இரங்கத்தக்கது' என்பது அவாய் நிலையாய் நின்றது.*

***2090. தெளிவுரை :-** இறைவன் உயிர்கட்காக அமைத்துக் கொடுத்த, 'தூலம், சூக்குமம்' என்னும் இருவகை உடம்புகளுள் (தூல உடம்பின் இயல்பு பற்றி மேலே கூறினோம்) இனி அதுபோலப் புலால் நாற்றம் நாறுதல் இன்றியே உயிர்க்குப் பயன்படுகின்ற சூக்கும தேகத்தைப் பற்றிக் கூறுமிடத்துச் சத்தம்*

*முதலிய தன் மாத்திரைகள் ஐந்தும், அந்தக் கரணம் நான்கனுள் சித்தம் ஒழிந்த ஏனை மூன்றும் ஆக எட்டும் கூடியதாகும். அதனால் அது, **'பரியட்டகாயம்'** என்றும் சொல்லப்படும்.*

***குறிப்புரை :-** அத்தன் - தந்தை. மான் - மனம். ஆங்காரம் - அகங்காரம். ஐவகை உடம்புகளில் மேற்கூறிய இரண்டு உடம்பின் இயல்பினையே கூறப் புகுந்தமை பற்றி, 'அத்தன் அமைத்த உடல் இரு கூறினில்' என்றாரல்லது, 'ஏனை உடம்புகள் அத்தனால் அமைக்கப்பட்டன அல்ல' என்றிலர் ஆகலின், அனைத்துடம்புகளும் அத்தனால் அமைக்கப்பட்டன ஆதற்குத் தடையின்மை அறிக. 'அனைத்தையும் ஆக்கி, அழிக்கும் அத்தன் ஒருவன் உளன்' என்பதை மேலெல்லாம் பல்லாற்றானும் தெளிவித்துப் போந்தமையால், இங்கு அதனை நினைப்பிக்கும் அளவில் 'அத்தன் அமைத்த உடல்' என அனுவாதமாகக் கூறினார். வகையை 'கூறு' என்றார். சத்தம் முதலிய ஐந்தும் சிறப்பு நிலை எய்தியவழியே செவி முதலிய பொறிகட்குப் புலனாகும். அப்பொழுது அவை 'புலன்' என்றும், 'விடயம்' என்றும் சொல்லப்பட்டு, ஆகாயம் முதலிய **பூதங்களின் குணமாய் நிற்கும் . அப்பொழுது, அவை, தாத்துவிகங்களாம். அவை சிறப்புநிலை எய்தாது பொதுமையில் நிற்கும்பொழுது பொறிகட்குப் புலனாகாது, ஆகாயம் முதலிய பூதங்கள் தோன்றுதற்குக் காரணமாய் நிற்கும்.** அப்பொழுதே அவை 'தன்மாத்திரைகள்' எனப்படும். **தன் மாத்திரைகள் தத்துவங்களாம்.** ஆகாயம் முதலிய பூதங்கட்குக் காரணம் ஆதல் பற்றித் தன்மாத்திரைகள் 'சூக்கும பூதம்' என்றும் சொல்லப்படும்.*

| வ.எண் | பொறிகள் ← | புலன்கள் தாத்துவிகங்கள் | தன் மாத்திரைகள் (சூக்கும பூதங்கள்) → | பஞ்சபூதங்கள் |
|---|---|---|---|---|
| 1. | மெய் | ஊறு | | காற்று |
| 2. | வாய் | சுவை | | நீர் |
| 3. | கண் | ஒளி | | நெருப்பு |
| 4. | மூக்கு | நாற்றம் | | நிலம் |
| 5. | செவி | ஓசை | | ஆகாயம் |

*அந்தக்கரணங்கள் நான்கனுள் மேல் நிற்பதாகிய சித்தம் பரசரீரப் பகுதியாதலின், ஏனை மூன்றுமே சூக்கும சரீரப் பகுதியாம் என்க.*

*ஆகம போதங்களின், 'தாத்துவிகங்களே தூலசரீரம்; தத்துவங்கள் யாவும் சூக்கும சரீரம்' என்னும் ஒரு கருத்து உள்ளதாயினும் இங்கு நாயனார், 'தன்*

**2090.** அத்தன் அமைத்த உடல்இரு கூறினில்
சுத்தம தாகிய சூக்குமம் சொல்லுங்கால்
சத்த பரிச ரூப ரசகந்தம்
புத்திமான் ஆங்காரம் புரியட்ட காயமே. **2**

**2091.** எட்டினில் ஐந்தாகும் இந்திரி யங்களும்
கட்டிய மூன்றும் கரணம தாயிடும்
ஒட்டிய பாசம் உணர்வது வாகவே
கட்டி அவிழ்த்திடும் கண்ணுதல் காணுமே. **3**

---

*மாத்திரை ஐந்தும், அந்தக்கரணம் மூன்றும் கூடியதே சூக்கும சரீரம்' எனத் தெளிவாகக் கூறினமையின், கூறப்பட்ட கருத்தே இங்கு நோக்க வேண்டுவதில்லை, 'இங்குக் கூறப்பட்ட கருத்தே காலோத்தரம் முதலிய ஆகமங்களில் சொலலப்பட்டது என்றார் சிவஞான போத மாபாடியம் (அதி.2 சூ.2) உடையார்.*

*இதனால், மேற்கூறிய இரு பேதங்களுள் 'சூக்குமம்' எனப்பட்ட உடலின் இயல்பு வேறெடுத்து வகுத்துக் கூறப்பட்டது.*

*2091. தெளிவுரை :- எட்டுக் கருவிகள் கூடியதனால் '<u>புரியட்ட காயம்</u>' எனப்படும் உடம்பு - என மேற்கூறப்பட்ட சூக்கும சரீரத்திலிருந்தே மாபூதங்கள் ஐந்தும், இருவகை இந்திரியங்களும் தோன்றும். (எனவே, அப்பதினைந்தும் கூடியதே தூலசரீரமாம்). இனித்தூல சரீரத்தில் உள்ள இருவகை இந்திரியங்களும், சூக்கும சரீரத்தில் உள்ள அந்தக்கரணங்கள் மூன்றும் 'சரீரம்' எனப்பட்டாலும், உண்மையில் அவை கரணங்களேயாம்.*

*அறிவுக்குத் துணையாதல்பற்றி ஆன்மாவோடு பெரிதும் ஒற்றுமைப்பட்டு நிற்கின்ற அவற்றைக் கொண்டே சிவன் ஆன்மாவின் அறிவைப் புலன்களில் அகப்படுத்தி வைத்துப் பின்பு அப்புலன்களினின்றும் பிரித்துவிடுவான்.*

*குறிப்புரை :- 'ஐந்து' என்றது மாபூதங்களையாதல் தெளிவு. 'ஆகும்' என்பதனை 'இந்திரியங்கள்' என்பதன் பின்னும் கூட்டுக. 'இந்திரியங்கள்' எனப் பொதுப்படக் கூறியதனால் ஞானேந்திரியம், கன்மேந்திரியம் இரண்டும் கொள்ளப்படும். மாபூதங்கள் தன்மாத்திரைகளிலிருந்தும், ஞானேந்திரியங்கள் அகங்காரத்தின் சாத்துவிகக் கூற்றிலிருந்தும், கன்மேந்திரியங்கள் அகங்காரத்தின் இராசதக் கூற்றிலிருந்தும் தோன்றுவனவாம். இங்ஙனம் தோன்றிய பதினைந்தனுள் மாபூதங்களே எலும்பு, தோல், தசை முதலியனவாகப் பரிணமித்துத் தூலதேகமாக, இருவகை இந்திரியங்களும் பிறவாறு பரிணமியாது நிற்கும். ஆகவே, மாபூதங்களே உண்மையில் தேகம் ஆக, இருவகை இந்திரியங்கள் அத்தேகத்தின் நிற்றலால் ஒற்றுமை பற்றி, 'தனு' எனப்பட்டாலும் அவையும், அந்தக் கரணங்களும் அவ்வாறு சூக்கும தேகத்தில் நிற்றல் பற்றி, 'தனு'*

**2092.** இந்தியம் அந்தக் கரணம் இவை உயிர்
வந்தன சூக்க உடலன்று மானது
தந்திடும் ஐவிதத் தால்தற் புருடனும்
முந்துளம் மன்னும் மற்றாறும் முடிவிலே. **4**

---

*எனப்பட்டாலும் அவையும் உண்மையில் கரணங்களே என்பது உணர்த்தற்கு, 'இந்திரியங்களும்' மூன்றும் கரணமதாயிடும்' என்றார். இவ்வாறு 'மூன்றும்' என்பதனோடு இயைதற் பொருட்டு, 'ஆகும்' என்பதனை மீண்டும் கூறாது விடுத்தார். ஆகவே, 'இந்திரியங்களும்' என்பதனை 'இந்திரியங்களும் ஆகும்' எனவும் 'இந்திரியங்களும் மூன்றும்' எனவும் இருமுறை ஓதி இயைத்துக் கொள்க. சூக்கும சரீரத்திலிருந்து தூல சரீரம் தோன்றும் என்றற்கு, 'எட்டினில் ஐந்து ஆகும்; இந்திரியங்களும் ஆகும்' என்றும், 'தத்துவங்கள் யாவும் பொதுவாக, 'தனு' என்று கூறப்பட்டாலும், அவற்றுட் சில உண்மையில் கரணங்களே' என்றற்கு, 'இந்திரியங்களும் மூன்றும் கரணமதாகும்' என்றும், 'அவற்றுள் அறிவுக் கரணங்களே வலியபந்தங்கள்' என்றற்கு, 'ஒட்டியபாசத்து உணர்வதுவாகவே கட்டிய' என்றும் கூறினார். கட்டிய - ஒன்றுபடுத்தப்பட்ட காணும், முன்னிலை அசை. 'அறிமின்' என்றும் ஆம்.*

*இதனால், 'மேற்கூறிய என்பு முதலிய தாத்துவிகங்களே யன்றி, இருவகை இந்திரியங்களும், மாபூதங்களும் ஆகிய பதினைந்து தத்துவங்களும் தூல சரீரமாம்' என்பதும், 'அவற்றுட் சில உண்மையில் கரணங்களேயாம்' என்பதும் கூறப்பட்டன.*

***<u>தனு அல்லது தேகம் ஆன்மாவிற்கு நிலைக்களமும், கரணங்கள் ஆன்மாவிற்குக் கருவியுமாய் உதவும் என்க</u>. இந்திரியங்கள் புறக்கருவிகளும், மனம் முதலியன உட்கருவிகளும் ஆதல் அறிக. 'உட்கருவிகள்' என்பனவே, 'அந்தக் கரணங்கள்' எனப்படுகின்றது.***

***(பதிப்புக்களில் முன் தந்திரத்தில், 'கூடா ஒழுக்கம்' என்னும் அதிகாரத்து இறுதியில் காணப்படும் 'இந்திரியம் அந்தக்கரணம் இவை உயிர்' என்னும் மந்திரம் இத்தந்திரத்தில் இம்மந்திரத்தை அடுத்து இருந்ததாகும்).***

***2092. தெளிவுரை :- 'மாபூதங்கள் மட்டுமே உயிர்க்குக் கரணம் ஆகாதொழிய, 'இருவகை இந்திரியங்களும் அந்தக்கரணம் போல உயிர்க்குக் காரணமாம்' என மேலே சொல்லப்பட்டமையால், 'மாபூதங்களும் அவற்றின் காரியங்களுமே தூல தேகமாக இந்திரியங்களும் அந்தக்கரணம்போலச் சூக்கும தேகமாம் என்றலே பொருத்தமுடைத்துப் போலும்' எனின், அங்ஙனம் கொள்ளுதல் பொருந்துவதன்றாம். (இந்திரியங்கள் தூலதேகத்தில் இருந்து புறப் பொருளை அறிதலும், பொருள்களை எடுத்தல், கொடுத்தல் முதலிய வற்றைச் செய்தலும் கண்கூடாதலின் அவை தூல தேகமேயாம் என்பது கருத்து). இனி***

மூலப்பிரகிருதியினின்றும் தோன்றுவனவாகிய பஞ்சக் கிலேசங்களால் அவற்றிற்கு முன்பே தோன்றிய பொதுப் புருட தத்துவத்தில் சிறப்புப் புருட தத்துவம் பொருந்தும். வித்தியா தத்துவம் ஏழில் 'புருடன்' தவிர மற்றை ஆறு தத்துவங்களும் புருட தத்துவத்திற்கு மேலே உள்ளனவாகும்.

*__குறிப்புரை :-__ 'இந்திரியம்' என்பது இடைக் குறைந்து நின்றது. 'வந்தன என்பதன்பின், 'ஆயினும்' என்னும் சொல்லெச்சம் வருவித்து, 'இவை என்பு, தோல், இறைச்சி முதலியனபோலன்றி, உயிரின் அறிவு செயல்களுக்குக் காரணமாய் நிற்றலின் உயிர்போலவே தோன்றுமாயினும்' என உரைக்க. இதனால், 'இருவகை இந்திரியங்கள் - சூக்கும தேகம் - என்றால் என்ன' என்னும் ஐயத்தை நீக்கியவாறு. 'உயிர் வந்தன' என்பது 'உயிர்போல வந்தன' என வினையுவமத் தொகை, 'உளத்தின்கண் மன்னும்' என ஏழன் உருபு விரிக்க.*

*தூல தேகம், சூக்கும தேகம் இவற்றைக் கூறியபின், 'பண்புடம்பு' எனப்படும் குண சரீரத்தின் இயல்பையும், அதற்கு மேல் உள்ள 'போர்ப்புடம்பு' எனப்படும் கஞ்சுக சரீரத்தின் இயல்பையும், அதற்கு மேல் உள்ள 'முதலுடம்பு' எனப்படும் கரண சரீரத்தின் இயல்பையும் கூறினார்.*

*மான் - மகத்து; மூலப் பிரகிருதி. அது முக்குணமயமானது. அக்குணங்கள் வெளிப்படாது சூக்குமமாய் நின்றநிலை அவ்வியத்தமும், தூலமாய் வெளிப்பட்டுச் சமமாய் நின்றநிலை வியத்தமும் ஆகும். அவ்வியத்தமே பிரகிருதி. வியத்தமே காரணநிலையாதலின் அதனால் உயிர்க்கு வருவது ஒன்றுமில்லை. வியத்தமே காரிய நிலையாதலின் அதனாலே உயிர் முக்குணமயமாய் விகாரம் எய்துகின்றது. ஆகவே இந்த வியத்தமே குணசரீரம் ஆதல் அறிக.*

*பஞ்சக் கிலேசமாவன, அவிச்சை, அகங்காரம், இச்சை, ஆசை, கோபம் - என்பன. 'இவை பிரகிருதியினின்றும் தோன்றும்' என்பதும், 'இவற்றின் தொடர்பினாலே, இயற்கையின் விகாரம் இன்றியிருக்கும் உயிர் விகாரம் எய்தி, அகக் கரணம் புறக் கரணங்களால் புறத்து நிற்கும் பொருள்களைப் பற்றி, இன்பத் துன்பங்களை அடையும்' என்பதும் சாங்கிய மதக்கொள்கைகள். 'அக்கொள்கை ஆகமங்கள் சிலவற்றிலும் சொல்லப்பட்டுள்ளது' என்பது இம்மந்திரத்துள், 'மானது தந்திடும் ஐவிதத்தால் தற்புருடனும் முந்துளம் மன்னும்' என்பதனால் அறியக் கிடக்கின்றது. இந்தப் பஞ்சக் கிலேசத்தாலே உயிர் முக்குண உலகத்தோடு தொடர்பு பட்டு வினைகளை ஈட்டுவதும், நுகர்வதுமான நிலையை அடைதல் பற்றி இக் கிலேசத் தொகுதி 'பும்சுத்துவ மலம்' எனப்படும் என்றும், பும்சுத்துவ மலத்தை எய்திய உயிர் 'புருடன்' எனப்படும் என்றும் சிவஞான போத மாபாடிய (அதி. 2 சூ.2)த்தில் சொல்லப்பட்டது.*

*இனி, 'பிரகிருதிக்கு முன்பே புருடதத்துவம் உள்ளது' என்பது ஆகமங்களில் வெளிப்படை. அது பற்றி மாபாடியம் உடையார், 'முன்பு உள்ளது பொதுப் புருடதத்துவம்' என்றும் கூறிச் சிவஞான சித்தியாரின் 'நிச்சயம் புருடனாகிப்*

*பொதுமையில் நிற்பனன்றே' (சூ.2.56) என்பதைத் தம் கொள்கைக்கு மேற்கோளாகக் காட்டினார். 'பொதுமையில் நிற்பன்' என்றது பொதுப் புருட தத்துவத்தைக் குறிக்குமாயின், பின்னர் பும்சுத்துவ மலத்தைக் குறிப்பிட்டு, அதனால் சிறப்புப் புருட தத்துவம் தோன்றும்' என்பதனையும் கூறியாக வேண்டும். அவ்வாறு பஞ்சக் கிலேசமோ, பும்சுத்தவ மலமோ, சிறப்புப் புருட தத்துவமோ எந்தச் சித்தாந்த மூல நூலிலும், எங்கும் சொல்லப்படவில்லை. எனினும், 'இம் மந்திரத்தில் அவை கூறப்படுதல் சில ஆகமங்களின் கூற்றுப் பற்றி' எனக் கொள்ள வேண்டியுள்ளது. பும்சுத்துவம் - புருடத் தன்மை.*

*சித்தாந்த நூல்களில், புருடத் தத்துவம் வித்தியா தத்துவம் ஏழனுள் தோற்ற முறையில் இறுதியானதாகச் சொல்லப்படுகின்றது. அதனால் மூலப் பிரகிருதியை அடுத்து மேல் நிலையில் உள்ளதாகும். அதற்குமேல் ஏனை வித்தியா தத்துவங்களில், 'அராகம், வித்தை, கலை, நியதி, காலம்' என்பன முறையே ஒன்றன்மேல் ஒன்றாய் உள்ளன. இந்த ஐந்து தத்துவங்களையும் ஐந்து சட்டைகளாக உயிர் அணிந்து நின்ற நிலையில்தான் அது 'புருடன்' எனப் பெயர் பெறுகின்றது. அது பற்றி அந்நிலை ஒரு தத்துவமாகச் சொல்லப்படுகின்றது. காலம் முதலாக உள்ள ஐந்தும் ஐந்து சட்டை போல்வதால், அவற்றது தொகுதி 'கஞ்சுக சரீரம்' எனப்படுகின்றது. இந்த ஐந்து தத்துவங்களும் 'மாயை' என்னும் தத்துவத்தின் காரியமாய், அதினின்றும் நேரேயும், பின் ஒன்றின் ஒன்றாயும் தோன்றும். ஆதலால் அம் மாயா தத்துவம் ஏனை வித்தியா தத்துவங்கட்குக் காரணமாதல் பற்றி, 'காரண சரீரம்' எனப்படுகின்றது. ஆகவே, வித்தியா தத்துவங்கள் ஏழனுள் புருடன் கீழே நிற்க, ஏனை ஆறும் அதற்கு மேல் உள்ளனவாதல் பறறி, "மற்றாறும் முடிவிலே" என்றார்.*

*தற்புருடன் - தானாகிய புருடன். 'அஃதாவது, சகலனாகிய புருடன். பிரளயாகலரினின்றும் சில உயிர்கள் 'சகலர்' எனப் பெயர் பெறுதற்குக் காரணம் அவை முக்குண வடிவாகிய பிரகிருதியாற் கட்டுண்பதே யாதலின், 'ஐவிதத்தால் தற்புருடன் மன்னும்' என்றார். முந்து உளம் - இப்புருடனுக்கு முன்னே உள்ள புருடன். அது, வித்தியா தத்துவங்களில் தோற்ற முறையில் இறுதியானது. அந்த அளவில் நிற்கும் உயிர்கள் பிரளயாகலராகும்.*

*வித்தியா தத்துவங்கள் அசுத்த மாயையின்காரியம். எனினும் அசுத்த மாயை பெரிதாய், வியாபகமாய் இருத்தலால், அது முற்றிலும் தத்துவங்களாய்ப் பரிணமித்துவிடுவதில்லை. அதனின் ஒரு சிறு கூறே தத்துவங்களாய்ப் பரிணமிக்கும். இது 'ம்ண குடமாயிற்று' என்றால், அளவின்றியுள்ள மண்முழுவதும் குடமாய் விடாது அதில் ஒரு சிறு பகுதியே குடமாயது போல்வதாம்.*

*இனி, மண்குடமாவதற்கு முன் அங்ஙனம் ஆகுமாறு பிசைந்து பக்குவப்படுத்தப்படுதல் போல அசுத்த மாயையின் ஒரு கூறு தத்துவங்களாய்ப் பரிணமிக்குமாறு பக்குவப்படுத்தப்படும். அங்ஙனம் செய்யப்பட்ட அதுவே,*

**2093.** இரதம் உதிரம் இறைச்சி தோல் மேதை
மருவிய அத்தி வழும்பொடு மச்சை
பரவிய சுக்கிலம் பாழாம் உபாதி
உருவ மலால்உடல் ஒன்றென லாமே. **5**

---

*'மாயா தத்துவம்' என ஒரு தத்துவமாகச் சொல்லப்படுகின்றது. 'இவ்வாறு அசுத்த மாயையை அனந்த தேவர் தமது சத்தியால் பக்குவப்படுத்துவார்' என்பது ஆகமங்களின் கருத்து. இந்த மாயா தத்துவமே காரண சரீரம் என்க.*

*இதனால், பஞ்ச பேத உடல்களில் முன் சொல்லப்பட்ட இரு பேதங்கள் போக, எஞ்சிய மூன்று பேதங்கள் சொல்லப்பட்டன.*

***2093. தெளிவுரை :-** நிலையாய் இராமல் நிலையழிந்து ஒழிந்து போவன வாகியகுருதி, இறைச்சி முதலிய அழுக்குப் பொருள்களாம் பருப் பொருள்களது தொகுதியைத் தவிர தூல உடம்பு வேறு எதுவாதல் கூடும்? பருவுடல் இயல்பை விளக்குகிறார்.*

***குறிப்புரை :-** 'கூடாது, அதனால், இருவகை இந்திரியங்களும் ஆற்றலே யாயினும் அவை செவி, தோல் முதலிய உறுப்புக்கள் இன்றிச் செயற்படுதல் கூடாமையால், அவை தூல உடம்பே யல்லது சூக்கும உடம்பாகா' என்பதாம்.*

*இரதம் - இரசம்; அஃதாவது, உண்ணப்படும் உணவிலிருந்து ஊறிக் குருதி முதலியவாய்ப் பரிணமிப்பது. அதுவே, குருதி முதலியன நிலைபெறுதற்குத் துணையாதல் பற்றி முதற்கண் கூறப்பட்டது. மேதை - நிணம். 'கொழுப்பு' என்பர். அத்தி - அஸ்தி; எலும்பு. வழும்பு - நிணத்தில் உள்ள பசை. இதனை நிணத்திற்கு வேறாக எண்ணுதல் இல்லை. மச்சை - பித்த நீர். இங்குக் கூறப்பட்டவற்றுள் இரதம் வழும்பு இவை தவிர ஏனைய ஏழும் 'தாதுக்கள்' எனப்படும். தாது - மூலப்பொருள். பாழாதல் - கணந்தோறும் பதனழிந்து, முடிவில் அழிந்து போதல். தாதுக்கள் யாவும் அத்தன்மையவே யாதல் பற்றி. 'பாழாம் உபாதி' எனவும், இவ்வுபாதிகள் யாவும் பருப்பொருள்களாய்க் கட்புலனாவனவே என்றற்கு 'உருவம்' எனவும் கூறினார். உபாதி - மாசு. இரதம் முதலியவாகக் கூறப்பட்ட செவ்வெண்ணின் இறுதியில் தொகைச் சொல் தொக்கது. ஏகாரம் வினாப் பொருளாய், எதிர்மறை பொருள் தந்தது.*

*இதனால், மேல், 'சூக்கும உடலன்று' எனக் கூறப்பட்டவை தூலதேகமே யாதல் காரணம் கூறி வலியுறுத்தப்பட்டது.*

***2094. தெளிவுரை :-** மேல், 'அத்தன் அமைத்த உடல்' என்றபடி உயிர்களின் தகுதியை அறிந்து அத்தகுதிக்கேற்பப் பல்வேறு வகையான உடம்புகளை அமைத்துத் தருகின்ற இறைவனது அருள் மிகுதியையும் ஆற்றலின் மிகுதியையும் அறிய வல்லுநர் யாவர்; அந்நிலையில் 'மக்களாய்ப் பிறந்தோர் அவ்வுடம்பைப் பெறுதற்குப் பல பிறவிகளில் தாம் செய்த நல்வினை இவை' என்பதை அறிய*

**2094.** ஆரே அறிவார் அடியின் பெருமையை
ஆரே அறிவார் அருந்தவம் நின்றது
ஆரே அறிவார் அறபத்தெட் டாக்கையை
ஆரே அறிவார் அடிக்காவ லானதே. **6**

---

*வல்லுநர் யாவர்; மக்களுடம்பு அசுத்த உலகத்து உளது ஆதலின் அஃது அவ்வுலகத்திற்கு மேல் உள்ள மிச்சிர உலகம், சுத்த உலகம் என்பவற்றில் உள்ளோரது உடம்புகளில் உள்ள கருவிகட்குமேல் அறுபத்தெட்டுக் கருவிகள் கூடியது என்பதை அறிபவர் யாவர்! மூவகை உலகத்து உயிர்கட்கும் திருவருளே முதற்காவலாய் உள்ளது என்பதை அறிகின்றவர் யாவர்! ஒருவரும் இல்லை.*

***குறிப்புரை :-*** *முதற்கண் 'அடி' என்றது இறைவனது திருவடியை. அது திருவருளே. 'தத்துவம் தொண்ணூற்றாறு' என்பது வைதிக சமயம் அனைத்திற்கும் பொதுவான ஒரு கொள்கை. அத்தொண்ணூற்றாறும் தத்துவம், தாத்துவிகம்' என இரண்டாகவே பகுக்கப்படும். அவற்றுள் 'தத்துவம் எத்தனை' என்பதில் சமயங்கள் வேறுபடுகின்றன. ஆகவே, 'தாத்துவிகங்கள் எவை, என்பதிலும் ஒருமித்த கருத்து இல்லை. கட்டளைகளிலும் தாத்துவிகங்கள் பல்வேறு வகையாகவே சொல்லப்படுகின்றன. சைவ சித்தாந்தத்தில் தத்தவம் முப்பத்தாறு ஆகலின், தாத்துவிகம் அறுபதேயாதல் வேண்டும். அந்த அறுபதையும் கட்டளைகளை ஒட்டிப் பலர் பல வகையாகக் கூறுகின்றனர். அவைகள் சில காரணங்களால் பொருத்தமாகத் தோன்றவில்லை. மாதவச் சிவஞான யோகிகள் 'தாத்துவிகம் அறுபதும் ஐம்பெரும் பூதங்களின் கூறுகளே' என்கின்றார். (மாபாடியம், சூ. 4. அதி. 3 : சாத்திரம், சித்தி. சுபக். சூ.2) அதுவே பொருத்தமானதாகத் தெரிகின்றது. எனினும், பூதங்களின் கூறுகளாக அவர் ஞானேந்திரிய விடயம் ஐந்து, கன்மேந்திரிய விடயம் ஐந்து, பிராணாதி வாயுக்கள் பத்து என்னும் இருபதை மட்டுமே கூறி 'மற்று நாற்பது எவை' என்பதைக் கூறாது விடுத்தார் ஆயினும் நாடிகள் பத்தும் ஆகாயத்தின் கூறுகளாகும். ஆக முப்பது போக மற்றை முப்பதும் மேற்கூறிய என்பு, தோல், இறைச்சி முதலியனவாகவும், மற்றும் பூதக் கூறுகளாகக் கட்டளைகளில் கூறப்படுவன வற்றையும் கொள்ளுதல் வேண்டும். எனவே, தாத்துவிகம் அறுபதில் அவற்றிற்கு மூலமாகிய மாபூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து என்பவற்றையும், அந்தப் பூதமும், தன்மாத்திரையும் இன்றிச் செயற்படமாட்டாத இருவகைப் பத்து இந்திரியங்களையும் அடக்கி, தூல தேகக் கருவிகளை 'அறுபதே' என்றும், சூக்கும தேகக் கருவி 'மேற்கூறப்பட்ட எட்டே' என்றும் வைத்து, 'ஆகத் தூல சூக்கும தேகக் கருவிகள் அறுபத்தெட்டு' என, அறுபத்தெட்டாக்கை என்றார். எனவே 'ஆக்கை' என்றது, தூல சூக்கும தேகங்களை யாயிற்று. இந்த இருவகை உடம்பும் சகலருக்கல்லது, பிரளயாகலர் விஞ்ஞான கலருக்கு இல்லையாதல் அறியத்தக்கது.*

*இதனால், 'மக்களுக்குச் சிறப்பாக அமைந்த தூல சூக்கும தேகத்தின் இயல்பையும், அவற்றை அவ்வுயிர்கட்கு வழங்கிய இறைவனது அருளையும்,*

**2095.** எண்சாண் அளவாய் எடுத்த உடம்புக்குள்
கண்கால் உடலில் கரக்கின்ற கைகளில்
புண்கால் அறுபத்தெட் டாக்கை புணர்க்கின்ற
நண்பால் உடம்புதன் னால்உடம் பாமே. 7

**2096.** உடம்பிற்குள் நாலுக் குயிராய சீவன்
ஒடுங்கும் பரனோடு ஒழியாப் பிரமம்
கடந்தொறும் நின்ற கணக்கது காட்டி
அடங்கியே அற்றதிங் காரறி வாரே. 8

---

*ஆற்றலையும் அறிவுடையோர் ஆழ்ந்து நோக்க வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

***2095. தெளிவுரை :-*** *உடம்பை 'எண்சாண் உடம்பு' என்றல் யாவரும் அறிந்தது. 'அவரவர் கையால் எண்சாணேயாகும்' என்பது இதன் பொருள். 'எறும்பும் தன் கையால் எண்சாண்' (தனிப்பாடல் திரட்டு), என்றார் ஔவையார். இந்த அளவு யாவராலும் நன்கறியப்பட்ட அந்த உடம்பிற்றானே கண் முதலிய ஞானேந்திரியங்களும், கால் முதலிய கன்மேந்திரியங்களும் ஆற்றல் வடிவாய்ச் சூக்குமமாய்த் தோன்றாது நிற்கின்றன. எவ்வாற்றாலேனும், எவ்விடத்திலேனும் ஊறு உண்டாகுமாயின் அவ்விடம் புண்ணாகிக் குருதியையும், சீழையும் ஒழுக விடுகின்ற தூல தேகத்தைத் தோற்றுவித்தற் பொருட்டு மேற்கூறிய அறுபத்தெட்டுக் கருவிகளைத் தக்கவாற்றல் திருவருள் ஒன்று சேர்க்கின்ற சேர்க்கையால் ஓர் உடம்பிலிருந்து மற்றோர் உடம்பு தோன்றுவதாகும்.*

***குறிப்புரை :-*** *நாலுடம்பு - தூலம், சூக்குமம், காரணம், மகா காரணம் என்பன. அவற்றுள் தூல சரீரமாவது ஐம்பூதங்களும், கன்மேந்திரியம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும் ஆகப் பதினைந்தும் கூடியதாம்.*

*சூட்சும சரீரமாவது முற்கூறிய புரியட்டக வடிவாம். காரண சரீரமாவது காலம், நியதி, கலை, வித்யை, அராகம், குணம் ஆகிய ஆறுடன் கூடியதாம். மகாகாரண சரீரமாவது சுத்தமாயை ஒன்றேயாம்.*

***2096. தெளிவுரை :-*** *தூல உடம்புக்குள் சூக்கும உடம்பாய் நிற்கின்ற அந்தக்கரணங்கள் நான்கிற்கும், மேலும் நுண்ணிதான அதிசூக்கும உடம்பைக் கொண்டு இயங்கும் முதற்பொருளாய் உள்ள சீவான்மாத் தான் பரமான்மாவாகிய சிவத்தில் வியாப்பியமாய் நிற்கும். ஆகவே, எபபொருளிலும் எஞ்சாது நிறைந்து நிற்கும் பிரமப் பொருளாகிய சிவம், தான் ஒன்றேயாயினும் பல சீவான்மாக்களிலும் வியாபித்து அதனதன் தன்மைக்கேற்ப ஏகதேசமாயும் நின்று, பின் சீவான்மா சீவத்துவம் (பசுத்துவம்) நீங்கிய பொழுது தன்னைப் போலவே வியாபகமாகி விடுதலால் அவ்வேகதேசத் தன்மை நீங்கி வியாபகமாகி விடுகின்ற தன்மை, ஞாயிறு ஒன்றேயாய் வியாபகமாயினும் பல குடங்களில் உள்ள நீரில் எல்லாம் அதனதன் அளவிற்கேற்ப வேறு வேறு அளவில் பலவாய்த் தோன்றி,*

**2097.** ஆறந்த மாகி நடுவுடன் கூடினால்
தேறிய மூவாறும் சிக்கென் றிருந்திடும்
கூறுங் கலைகள் பதினெட்டுங் கூடியே
ஊறும் உடம்பை உயிருடம் பென்னுமே. **9**

---

*அக்குடங்களில் நீர் நீங்கிய பொழுது முன்பு நின்ற சிறு நிலையின் நீங்கி வியாபகமாகி விடுகின்ற தன்மையை ஒக்கும் என்னும் உண்மையை அறிந்தனர் எத்துணைப் பேர்!*

***குறிப்புரை :-** முற்கூறிய உடம்புகள் நாலுக்கும் உயிராக விளங்கும் சீவன், அச்சீவன் சிவபரம்பொருளோடு ஒடுங்கும். எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பிரமமாகிய சிவம் குடங்கள் தோறும் நிறைந்துள்ள நீரில் தோன்றுகின்ற கணக்கினையறிவித்து உயிருக்கு உயிராக அடங்கி நின்றது. இவ்வுண்மையை உள்ளவாறுணர்வார் யார் ஒருவருமிலர் எ-று.*

*சீவர்கள் தோறும் சிவம் கலந்திருக்கும் நிலை, கடந்தோறும் சூரியன் விளங்குவது போலாம் என்பது கருத்து.*

*உயிரும் சீவனும் ஒன்றேயாயினும், உயிராகிய சீவன் என்றது இருபெயரொட்டாம் **உயிராய வென்றது உடலொடு கலந்திருக்கும் பொதுத் தன்மையினையும், சீவனென்றது பருடனாகி விளங்கும் சிறப்பியல்பையும் தெரிவிப்பதாம்**.*

*பரன் - சிவன். ஒடுங்கும் - சிவபரம்பொருளின் சர்வ வியாபகத்துள் ஏகதேசமாய் அடங்கும் என்பதாம்.*

*ஒழியாப்பிரமம் - பார்க்குமிடம் எங்குமொரு நீக்கமற நிறைந்து நிற்கும் பரிபூரண ஆனந்த ஸ்வரூபமான பிரமம்.*

*கடந்தொறும் நின்ற கணக்கது - குடந்தோறும் நிறைந்த நீரில் விளங்கி நின்ற கணக்கு. அதாவது கடம் - உடல். நீர் - உயிர். சூரிய நிழல் - பிரம விளக்கம் என்க. இவ்வுவமையினை ஏகான்ம வாதிகளும் பரம் பிரமம் ஒன்றே எங்கும் வியாபித்திருக்கின்றது என்ற தம் கொள்கைக்கு உவமை காட்டுவர்.*

***2097. தெளிவுரை :-** யோகமுறையால் ஆறு ஆதாரங்களும் கீழாகியதனால், அவற்றிற்குமேல் உள்ள பிரமரந்திரத்தை அடைந்தால், அங்ஙனம் அடைந்தவருடைய தூல உடம்பு விரைவில் அழிந்தொழியாது உறுதி பெற்று நெடுநாள் இருக்கும். அந்நிலையில் சூக்கும உடம்பும் அதற்குச் சார்பாய் உறுதிப்பட்டு நின்று, அதனை என்றுமே உயிர் உள்ள உடம்பாகச் செய்யும்.*

***குறிப்புரை :-** முன்னர், 'மூவாறு' என்றது தூல உடம்பின் கூறுகளாகிய பூதம் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, இவற்றிற்கு முதலாக அகங்கார வகை மூன்று ஆகிய பதினெட்டினை, பின்னர், 'கலைகள் பதினெட்டு'*

**2098.** மெய்யினில் தூலம் மிகுத்த முகத்தையும்
பொய்யினில் சூக்கம் பொருந்தும் உடலையும்
கையினில் துல்லியம் காட்டும் உடலையும்
ஐயன் அடிக்குள் அடங்கும் உடம்பே. **10**

---

*என்றது, புரியட்ட காயமாகிய சூக்கும உடம்பின் தத்துவம் எட்டும், பத்து வாயுக்களாகிய தாத்துவிகம் பத்தும் ஆகப் பதினெட்டினை. வாயுக்கள் தூல தேகத்தனவாயினும் அவற்றாலே சூக்கும உடம்பு செயற்படுதல் பற்றிச் சூக்கும தேகக் கூறுகளுடன் கூட்டி எண்ணினார். இக்கருத்தே பற்றிச் சூக்கும உடம்பு 'பிராணமயகோசம், எனப்படுதலை நினைக'. 'ஊறும் உடம்பு' என்றது மேல், 'புண் கால் ஆக்கை' என்றது போன்றது. என்னும் - எனச் செய்யும். சிக்கென்றிருத்தல் - உறுதி பெற்றிருத்தல்.*

*இதனால், விரைவில் அழிதற்பாலதாகிய தூல உடம்பை அங்ஙனமாகாது நீடியிருக்கச் செய்யுமாறு கூறப்பட்டது. இது மேல் மூன்றாம் தந்திரத்துள் 'காய சித்தி' அதிகாரத்துள் விரிவாகக் கூறப்பட்டதாயினும், 'உடம்புகளைப் பற்றிக் கூறும் இவ்விடத்தில் நினைவூட்டுதல் நன்று' என்னும் கருத்தால் சுருங்கக் கூறப்பட்டது.*

***2098. தெளிவுரை :–** 'தூலம், சூக்குமம், பரம்' எனும் மூன்றுடம்புகளையும் ஒருங்குசேர்த்து ஓர் உடம்பிற்கு உவமித்தால், தூல உடம்பு முகத்தையும், சூக்கும உடம்பு கழுத்திற்குக் கீழும், காலுக்கு மேலும் உள்ள உடலையும், பர உடம்பு கைகால்களையும் ஒத்து நிற்கும். அவ்வாறு அமைந்த அந்தப் பேருடம்பு சிவனது திருவருளில் அடங்கும்.*

***குறிப்புரை :–** மெய்யினில் தூலம் - கண்கூடாக விளங்குதலால் ஐயத்திற்கு இடமின்றித் துணியப்படுகின்ற தூல உடம்பு. பொய்யினில் பொருந்தும் சூக்க உடல் - காட்சிப் புலனாகாமையால் உண்மை எளிதில் துணியப்படாது நுண்ணிதாய் உள்ள சூக்கும உடம்பு. 'தூலம், சூக்குமம்' என்பவற்றின்பின் 'ஆக' என்பது வருவிக்க. காட்டும் உடல் - உயிர்க்கு அறிவைத் தரும் பர உடம்பு. இங்கு "உடலை" என்றதில் ஐ சாரியை; வேண்டாவழி வந்தது. முகத்தையும், உடலையும் என்பவற்றோடு இயையக் 'கையினில்' என்பதையும் 'கையையும்' எனத் திரிக்க. இஃது உருபு மயக்கம். துல்லியம் - ஒப்பு. இதன்பின் 'என்க' என்னும் சொல்லெச்சம் வருவித்து, 'துல்லியம் என்க' என உரைக்க. ஈற்றில் நின்ற 'உடம்பு' என்பதற்கு. இவ்வாறான உடம்பு' என உரைக்க.*

***2099. தெளிவுரை :–** உயிர் பல அண்டங்களில் உடல் எடுத்தலை உணர்த்துகிறார். பகைவரைச் சினக்கின்ற வேகம் பொருந்திய போர்க் குதிரை அண்மை, சேய்மை என்னும் இடங்கட்குத் தக்கபடி முன்கால்களை எட்டி வைத்துப் பின் கால்களை வாங்கிக் கொண்டு தடையின்றி ஓடுதல் போலச் சூக்கும உடல் அண்மை சேய்மைகளுக்கு ஏற்ப விரைந்து செல்ல வல்லது. அதனால்,*

**2099.** காயுங் கடும்பரி கால்வைத்து வாங்கல்போல்
சேய இடம் அண்மை செல்லவும் வல்லது
காயத் துகிற்போர்வை ஒன்றுவிட் டாங்கொன்றிட்
டேயு மவரென்ன ஏய்ந்திடுங் காயமே. **11**

**2100.** நாகம் உடல்உரி போலும்நல் அண்டசம்
ஆகும் நனாவில் கனாமறந் தல்லது
போகலும் ஆகும் அரன்அரு ளாலே சென்று
ஏகும் இடம்சென்று இருபயன் உண்ணுமே. **12**

---

***உயிர் அவ்வுடலைப் பற்றிக் கொண்டு, அத்தன்மையில்லாத தூல உடம்புகளுள் ஒன்றை விட்டு நீங்கி மற்றொன்றை எங்கு வேண்டுமானாலும் சென்று எடுத்துக் கொள்ளும். தூல சரீரம் சூக்கும சரீரத்தின் மேல் போர்வை போலவே உள்ளதாகும். அதனால், உயிர் தூல உடம்பில் ஒன்றை நீக்கி விட்டு, மற்றொன்றை எடுத்துக் கொள்ளுதல் மக்கள் தமது போர்வை ஒன்றை நீக்கிவிட்டு மற்றொன்றை எடுத்துப் போர்த்துக் கொள்ளுதல் போல்வதே. உடம்பே போர்வையாகிறது.***

*குறிப்புரை :- 'வல்லது' என்னும் பயனிலைக்கு எழுவாய் முன் மந்திரத்தினின்றும் வந்தது. 'போர்வை ஒன்றை விட்டு ஒன்றை இட்டு ஏயும் அவர் என்ன உயிர் காயத்தை ஏயும்' என்க. காயம் - தூல தேகம். ஏயும் - பொருந்தும். 'உயிர்' என்பது ஆற்றலால் வந்து இயைந்தது. 'ஏயும் அவரென்ன' என்றாராயினும் 'அவர் ஏய்தல் என்ன' என்றலே கருத்து என்க. தாம் கூறிய சொற் கிடக்கைக்கு ஏற்ப 'அவர்' என்றார். ஆகவே கருத்திற்கு ஏற்ப அது 'மக்கள்' எனப்பட்டது. கடும்பரி - விரை வினையுடைய குதிரை. காய்தல் - சினத்தல். கால் வைத்து - காற்றைப் போல விரைந்து.*

*இதனால், 'தூல தேகத்தை விட்டு உயிர் நீங்குதலே இறப்பு என்பதும், அது மற்றொரு தூல தேகத்திற் சேர்தலே பிறப்பு' என்பதும் கூறப்பட்டன. தூல தேகம் சூக்கும தேகத்தினின்றே தோன்றுவதாயினும் அதனைக் கொண்டே சூக்கும தேகம் அறிதல் செய்தல்களை இயற்றலால் எடுத்துக் கொள்வதாகக் கூறப்பட்டது. இதனானே உயிர் பல பிறப்புக்களில் செல்லுமாறும் கூறப்பட்டதாம். பிறப்புக்களின் மாற்றம் வினை நிமித்தமாக நிகழ்வது.*

*2100. **தெளிவுரை :-** மறுபிறப்பு உண்டாவதை உவம முகத்தால் விளக்குகிறார். இவ்வுலகில் ஓர் உடம்பை விட்டு நீங்கிய உயிர் இறைவனது அருளாணையின்படி வேறொர் உடலில் சென்று, அவ்வுடலுக்குரிய இடத்தை அடைந்து, முன்பு இருந்த இடத்தில் அனுபவித்த அனுபவங்களை மறந்து அவ்விடத்து வரும் இன்பத் துன்பங்களை அநுபவிக்கும். அவை எவை போல எனின், பாம்பு முன்பிருந்த உடம்பாகிய தோலை நீக்கிவிட்டுப் புதிய உடம்பைப் பெறுதல் போல்வதும், முட்டையிற் பிறக்கும் உயிர்கள் முன்பு முட்டைக்குள் இருந்து பின்பு வெளிவந்து வேறு இடத்தை அடைதல் போல்வதும், கனவில்,*

**2101.** உண்டு நரக சுவர்க்கத்தில் உள்ளன
கண்டு விடும்சூக்கம் காரண மாச்செலப்
பண்டு தொடரப் பரகாய யோகிபோல்
பிண்டம் எடுக்கும் பிறப்பிறப் பெய்தியே. **13**

---

*முன்பு நனவில் நிகழ்ந்ததை மறத்தல் போல்வதுமாகும்.*

***குறிப்புரை :–*** *'அரனருளாலே' என்பது முதலாகக் கொண்டு உரைக்க. முதற்கண் 'சென்று' என்பதற்கு மற்றோர் உடம்பில் சென்று என்பது பொருளாகும். இஃது இவ்வுலகிலே மறுபிறப்பு எடுப்பதையே குறித்தது. 'ஆகும்' என்பனவும், 'போலும்' என்றவாறேயாம். நனவு, கனவோடொப்ப, 'நனா' எனப்பட்டது. அல்லது - வேறு நிகழ்ச்சி. போகல் - நிகழ்தல். 'நனாவில் நிகழ்ந்தவற்றைக் கனாவில் மறந்து, அல்லது போகல் போல்வதுமாம்' என்க. பாம்பு தோல் உரித்தல் ஓர் உடலைவிட்டு வேறு உடலில் செல்லுதற்கும். அண்டசம் ஓர் இடம் விட்டு, வேறோர் இடத்தை அடைதற்கும், நனவில் நிகழ்ந்தவற்றைக் கனவில் மறத்தல் முன் பிறப்பில் நிகழ்ந்தவற்றை அடுத்த பிறப்பில் மறத்தற்கும் உவமையாகச் சொல்லப்பட்டன. 'பன்னகம் அண்டசங்கள்' என்னும் சிவஞான சித்திச் செய்யுளையும், (சூ.2.38) அதன் உரையையும் இங்கு ஒப்பிட்டுக் காண்க. அண்டசம் - நால்வகைத் தோற்றங்களில் ஒன்றாய் முட்டையிலிருந்து தோன்றுவன.*

*இதனால், மறுபிறப்பு உளதாதல் பற்றித் தூல தேகத்திற்கு வேறாய்ச் சூக்கும தேசம் முதலியன உளவாதல் தெளிவிக்கப்பட்டது.*

***2101. தெளிவுரை :–*** *ஓர் உயிர் நிலத்தில் இறந்தபின் சூக்கும சரீரம் பற்றாகச் சென்று நரக சுவர்க்கங்களை அடைந்து அங்கு உள்ளவைகளைப் பார்த்து அவற்றால் வரும் துன்ப இன்பங்களை நுகர்ந்து, அந்த உலகங்களை விடுத்துத் தான் செய்த வினையில் மேற்கூறிய உலகங்களில் நுகரப்பட்டு எஞ்சி நிற்கின்ற வினைகள் தொடர்தலால், யோக சித்தர் ஓர் உடம்பை விட்டு மற்றோர் உடம்பில் புகுதல் போல வேறு பிறப்பை அடைந்து மீண்டும் நிலவுலகத்தில் அப்பிறப்பிற் குரிய உடம்பை எடுத்துக் கொள்ளும்.*

***குறிப்புரை :–*** *"இறப்பு எய்திச் சூக்கம் காரணமாச்செல" - நரக சுவர்க்கத்தில் உள்ளன பண்டு தொடர (சூக்கம் காரணமாச் செல) பிறப்பு எய்திப் பிண்டம் எடுக்கும் எனக் கூட்டிப் பொருள் கொள்க. 'ஓர் உயிர்' - தோன்றா எழுவாய்.*

*'சூக்கம் காரணமாக' என்பதும், 'எய்தி' என்பதும் பின்னும் கூட்டுதற்கு உரியன. காரணம் - கருவி. புடைபெயர்தற்கு உரிய கருவி. செல - செல்லுதலால். 'நரக சுவர்க்கத்தில் உள்ளன கண்டு உண்டு' என்றது, 'வினையிருந்த வகைக்கு ஏற்ப முன்னும் பின்னுமாக அடைந்து கண்டு நுகர்ந்து' - என்றபடி. தூல உடம்பை விட்டுச் சூக்கும தேகத்தோடு இருத்தற்குப் பாம்பு தோல் உரித்தலும், மறுபிறப்பில் முன் பிறப்பில் நிகழ்ந்தவற்றை மறத்தலும் முன் மந்திரத்தில்*

**2102.** தானவ னாகிய தற்பரந் தாங்கினோன்
ஆனவை மாற்றிப் பரமத் தடைந்திடும்
ஏனை உயிர்வினைக் கெய்து மிடஞ்சென்றும்
வானும் நிலனும் புகுந்தும் வருந்துமே. **14**

---

*உவமையாகக் கூறியபின், ஒருதூல தேகத்தை விட்டு மற்றொரு தூல தேகத்தை எடுத்தற்கு யோகிகள் பரகாயப் பிரவேசம் செய்தல் இம் மந்திரத்தில் உவமையாகக் கூறப்பட்டது.*

*இதனால், மேற்கூறியது உவமை கூறி வலியுறுத்தப்பட்டதுடன், சுவர்க்க நரக அனுபவங்களைக் கூறும் முகத்தாலும் சூக்கும தேகம் உண்மை நிறுவப்பட்டது. சுவர்க்க நரக லோகங்கட்கும் வேறு வேறு தூல உடம்பு உளவாயினும் நிலவுலகத்தால் உடம்பே இங்குச் சிறப்பாக எடுத்து, அதன் இயல்பு விளக்கப்பட்டது.*

***2102. தெளிவுரை :-*** *தான் சிவனேயாய் நிற்கின்ற சிவயோகி, அது காறும் தான் அடைந்திருந்த நிலைகளையெல்லாம் போக்கி, உடல் நீங்கினபின் அந்நிலைக்கு அப்பாற்பட்ட முடிநிலைப்பேற்றை அடைவான். அந்நிலையை அடையாது தாமேயாய் நிற்கின்ற மற்ற உயிர்கள் தாம் செய்த வினைக்கீடாகக் கிடைக்கின்ற இடங்களில் செல்வனவாய், விண்ணுலகிலும், மண்ணுலகிலும் புகுந்து துன்புறும்.*

***குறிப்புரை :-*** *தான் - உயிர்; அவன் - சிவம். தற்பரம் - அவனேயாகி ஏகனாகி நிற்றல். அதனைத்தான் தாங்குதலாவது அதன்கீழ் அடங்கியிருத்தல். அஃதாவது தனக்கென ஒன்றின்றி, எல்லாவற்றையும் அதனுடையதாகவே கண்டிருத்தல். 'தான் அவன் ஆதலாவது இதுவே என்றற்கு, 'தான் அவன் ஆகிய' என்றதனோடு அமையாது, 'தற்பரம் தாங்கினோன்' என்றார். இதுவே ஞான சிவ யோகம். இந்நிலை 'அருள் நிலை' என்றும், 'சுத்த துரியநிலை' என்றும் சொல்லப்படும். அதனையும் கடந்தது ஆனந்த நிலையாகிய அதீத நிலை யாகலின் அதனை, 'பரமம்' என்றார். பரமம் - மேல் எல்லை. 'விண் மண், இரண்டு லகத்துள்ளும் உயர்வு தாழ்வான இடங்களில் உயிர் செல்லும்' என்றற்கு, அவற்றை வேறு போல வைத்து, 'எய்தும் இடம் சென்றும்' 'வானும் நிலனும் புகுந்தும்' வருந்தும் என்றார். ஆன் + அவை - பசுவுக்குரியனவாகிய பசுக்குணங்கள் - பெத்த நிலை. பரமம் - மேலானவற்றிற்கெல்லாம் மேலாய பரமுத்தி.*

*இதனால், தூலதேகமே நிலையின்றி, மாறி மாறி வருவதாகச் சூக்கும தேகம் வீடுபெறுங்காறும், அல்லது ஊழி முடிவுகாறும் நிலைத்திருத்தல் கூறப்பட்டது.*

***2103. தெளிவுரை :-*** *இம் - எனின், சிவஞானியின் சரீரம் இதுவெனல் உணர்த்துதல் நுதலிற்று. ஞானத்திற் சரியையுடையார்க்குச் சிவ உடல் தம்முடலாம். ஞானத்திற் கிரியையுடையார்க்கு உளவாம் உடல் சிவனருளாம். இவர்கள் இருவருக்கும் மேலாக விசுத்தியில் நிற்கும் ஞானயோகிக்கு விந்துவும்*

**2103.** ஞானிக்குக் காயம் சிவமே தனுவாம் அஞ்
ஞானிக்கூன் நிற்கு முடம்பே யதுவாகும்
மேனிற்கும் யோகிக்கு விந்துவும் நாதமும்
மோனிக்குக் காயம்முப் பாழ்கெட்ட முத்தியே. **15**

**2104.** விஞ்ஞானத் தார்க்கா ணவமே மிகுதனு
எய்ஞ்ஞானத் தார்க்குத் தனுமாயை தானென்ப
அஞ்ஞானத் தோருக்குக் கன்மம் தனுவாகும்
மெய்ஞ்ஞானத் தோர்க்குச் சிவதனு மேவுமே. **16**

---

*நாதமுமே உடலாம். ஞான வரம்பாகிய மோனத்தில் நிற்பார்க்கு முப்பாழுங் கெட்ட முத்தியே உடலாம் என்று.*

*ஆகவே, ஞானத்திற் சரியை முதலிய நான்கு நிலையினுள்ளார்க்கும் உடல் இதுவாம் என உணர்த்தப் பெற்றது.*

*காயம், தநு, உடம்பு என்பன ஒரு பொருளனவாயினும், பகுதிப் பொருளால் வேறானவை. காயம் - அழிதலையுடையது. தநு - விஸ்தரித்தலை யுடையது என்னும் வடசொல். உடம்பு - உயிருக்கு உடனாய் இருப்பது. இவற்றை இடமறிந்து பயன்படுத்தியிருத்தல் அறிந்தின்புறுதற்குரியது.*

*விந்து - சிவசத்தி. நாதம் - சிவம். முப்பாழ் - ஆணவம், மாயை, கன்மம் என்ற ஆன்மாவைப் பாழ் செய்யும் மூன்று மலங்கள். அவை கெடுதலாவது வலி குன்றுதலும், கெட்டொழிதலும்.*

*சிவம் ஏய்தனு - சிவத்தைப் பொருந்தி உள்ள உடம்பு.*

*2104. தெளிவுரை :- மூவகை ஆன்ம வர்க்கத்தினருள் விஞ்ஞான கலருக்கு ஆணவமே சூக்கும தேகமாய் நிற்கும். இனி அந்த விஞ்ஞானகலர் நிலையை அடைய இருப்பவராகிய பிரளயாகலருக்கு அசுத்த மாயையே எல்லா உடம்புமாய் இருக்கும். 'ஞானம் இல்லாதவர்' எனப்படுகின்ற சகலர்க்குக் கன்மத்திற்கு ஈடாக வருகின்ற பிராகிருதங்களே உடம்பாகும். ஆகவே, அருள் உடம்பு மெய்ஞ்ஞானத்தை எய்தினவர்கட்கே வாய்ப்பதாம்.*

| விஞ்ஞான கலர் | ஆணவ மலம் மட்டும் |
|---|---|
| பிரளயா கலர் | ஆணவம் + மாயை |
| சகலர் | ஆணவம் + கன்மம் + மாயை |

*குறிப்புரை :- மிகுதனு - சூக்கும தேகம். இஃது ஒப்புமையாகக் கூறியது. 'நுண்ணிய பந்தம்' என்றபடி. 'ஏய்' என்பது 'எய்' எனக் குறுகி நின்றது. ஆகவே, அதனையடுத்து 'ஞானம்' என்றது முன் சொன்ன விஞ்ஞானத்தையாயிற்று பிரளயாகலருள் நேரே முத்தி பெறுபவரன்றி, விஞ்ஞானகலராகி முத்தி*

**2105.** மலமென் றுடம்பை மதியாத ஊமர்
தலமென்று வேறு தரித்தமை கண்டீர்
நலமென் றிதனையே நாடி யிருக்கின்
பலமுள்ள காயத்தில் பற்றும்இவ் வண்டத்தே. **17**

**2106.** நல்ல வசனத்து வாக்கு மனாதிகள்
மெல்லவிளை யாடும் விமலன் அகத்திலே
அல்ல செவிசத்த மாதி மனத்தையும்
மெல்லத் தரித்தார் மிகுத்தார் பசித்தே. **18**

---

*பெறுபவரும் உளர் என்க. கன்மத்தால் வருவதை, 'கன்மம்' என்றார். அவ்வாற்றால் வரும் தனு பெரும்பான்மை பற்றிப் பிராகிருத சரீரத்தைக் குறித்தது. 'ஞானிக்குக் காயம் சிவமேய் தனுவாகும்' என்றதனால், 'ஏனையோர்க்கு அது வாயாது' என்பதனை வகுத்துக் காட்டி, இறுதியடியால் அதனை நிறுவினார்.*

*இதனால், மேற்கூறியவற்றுள் சிறப்புடையது ஒன்று இனிது விளக்கப்பட்டது.*

*2105. **தெளிவுரை :-** அறிவுடையீர், தம் உடம்பை அருவருத்து நீக்கத் தக்கதாக அறியும் அறிவையில்லாதவர் அதனையே தாம், என்றும் இருக்கும் இடமாகக் கருதி, அதன்கண் தணியான ஒரு பற்று வைத்துப் போற்றி வருதலைக் கண்டீரன்றோ! அவர் நிலையை அடைந்திருக்கும் உயிர்கள் அதன் பயனாகப் பற்பல தூல தேகங்களை எடுத்து உலகங்களிலேயே உழலும்.*

***குறிப்புரை :-** ஊமர் - செவிப்புலனும், வாய்பேசுதலும் ஒருங்கிழந்த அறிவீனர்கள். 'வீடு பெறா' என்றபடி. 'இருக்கின், பற்றும்' - என்னும் பயனிலை கட்கு, 'அத்தகைய உயிர்கள்' என்பது தோன்றா எழுவாயாய் நின்றது. 'கண்டீர்; பற்றும்' எனக் கூறியவற்றால், 'நீவிரும் அவ்வாறு நிற்பின் அந்நிலையை அடைவீர்கள்' எனக் குறித்தவாறு.*

*இதனால், 'உடம்புகள் யாவும் அழுக்குப் பொருளே' என்பதும், அஃதறிந்து அவற்றின் நீங்குதலே அறிவுடைமை' என்பதும் கூறப்பட்டன.*

*2106. **தெளிவுரை :-** நல்ல சொற்களையே பேசுகின்ற வாக்கிலும், நல்ல நினைவுகளையே நினைக்கின்ற மனம் முதலிய அகக்கருவிகளிலும் இறைவன் மெல்ல மெல்ல வெளிப்பட்டு விளையாடுவான். நல்லன அல்லாத சொற்களையே கேட்க விரும்புகின்ற செவியையும், அவ்வாறே, அறியத் தகாத தம் தம் புலன்களையே அறிய விரும்புகின்ற கண் முதலிய ஏனைப் பொறிகளையும், நல்லன அல்லாதவற்றையே நினைக்கின்ற உட்கருவிகளையும் உடைய மக்கள் இவ்வுலகில் வறுமையால் பசி மிக்கவராய் வருந்துவர்.*

***குறிப்புரை :-** 'அவர் மறுமையில் நற்பிறப்பையும், பிறப்பற்ற வீட்டையும்*

*அடைதல் எங்ஙனம்' என்பது குறிப்பெச்சம். 'உடம்புகளை அருவருத்து நீக்கத் தக்கனவாக உணர்பவரே நல்ல வாக்கு, மனங்களையும், அங்ஙனம் உணராதவர் தீயனவாகிய வாக்கு மனங்களையும் உடையவராய், அதுவதற்குத் தக்கபயனை அடைவார்கள் என்றபடி. ஆகவே, 'வாக்கு மனங்கள் நல்லனவாகும்படி செய்து' அதனால், உடம்புகளின் நீங்கப் பெறுதலே செயற்பாற்று' என்பதாம்.*

*இதனால், 'உடலில் பஞ்சபேதங்களினும் நீங்கி உயிர் உய்தற்பாலது' என்பதும், 'அவற்றின் நீங்குதற்குரிய வழி இது' என்பதும் கூறி முடிக்கப்பட்டது.*

## 2. உடல் விடல்

*மேற்கூறிய உடல் வகைகள் யாவும் உயிர்க்கு என்றும் நிலையாய் நின்று உதவுவன அல்ல; அவ்வப்பொழுது நீங்கியும், பொருந்தியும் வரும்' என்பதை, 'உடல் விடல்' என வைத்து உணர்த்துகின்றார். "புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள் துச்சில் இருந்த உயிர்க்கு" என்றார் திருவள்ளுவரும் (குறள். 340). 'உடலின் இத்தன்மையை உணர்தலால் உயிர்க்கு அதன்மேல் உள்ள பற்று நீங்கும்' என்பது கருத்து. உடலில் சாதிக்க வேண்டியவற்றைச் சாதிக்க உடற்பற்று இடையூறாயின் அதனை நீக்க. இதில் மூன்று மந்திரங்கள் உள்ளன.*

**2107.** பண்ணாரும் காமம் பயிலும் வசனமும்
விண்ணாம் பிராணன் விளங்கிய சத்தமும்
புண்ணாம் உடலில் பொருந்து மனத்தையும்
அண்ணாந்து பார்க்க அழியும் உடம்பே. 1

---

*2107. தெளிவுரை :- நன்கு அமைந்த உடலால் எழுகின்ற காமமும், பலவகையாகப் பேசுகின்ற பேச்சுக்களும், வெளிச்செல்லும் பொழுது விளங்கி நிற்கின்ற மூச்சும், அம்மூச்சுப் பெரிதாயவழி எழுகின்ற ஓசையும், புலால் வடிவாகிய உடம்பின் உள்ளே இருப்பதாகிய மனமும் ஆகிய இவைகளை யெல்லாம் பிறர், 'எங்கே போயின' என்று திகைத்து அண்ணாந்து பார்க்கும்படி உடல் முதலில் நிலையழிந்து, பின்னர் உருவும் அழிந்தொழியும்.*

*குறிப்புரை :- ஆகவே, 'இதனை நிலையுடையதாக எண்ணிப் பற்றுச் செய்தல் நன்றன்று' என்பதாம். முதல் தந்திரத்தில் 'யாக்கை நிலையாமை' கூறியது அறத்தை வலியுறுத்தல் பற்றி. எனினும் ஞானத்தை உணர்த்தும் இவ்விடத்திலும் அதனையுணர்தல் இன்றியமையாமை பற்றி, வேறொரு கருத்துப் பற்றிக் கூறுகின்றார். 'பண்' என்னும் முதல் நிலை, பண்ணி அமைக்கப்பட்ட நல்ல நிலையை ஆகு பெயரால் உணர்த்தும். முறைப்படி அமைந்த இசை 'பண்' எனப்படுவதும் அவ்வாற்றாலேயாம். 'அந்நிலையில்தான் காமம் உளதாகும்' என்றற்கு, 'பண் ஆரும் காமம்' என்றார். 'மனத்தையும்' என்றதனோடு இயைய, ஏனை உம்மைகட்கு முன்பும் இரண்டன் உருபு விரிக்க. 'அண்ணாந்து பார்த்தல்' என்பது, எங்கும் காணாது திகைத்து நிற்றலைக் குறிக்கும் குறிப்பு. பார்க்க - பார்க்கும்படி. உடம்பு அழியும். உடற் பற்றறும்.*

*இதனால், 'காமம் முதலிய சிறிய இன்பம் காரணமாக உடம்பை விரும்புதல் சிறப்புடையதாகாது' என்பது கூறப்பட்டது.*

*2108. தெளிவுரை :- நிலையின்றி அழிவதாகிய உடம்பை இடமாகக் கொண்டிருப்பனவே செவி, கண் முதலிய அறிவுப் பொறிகளும், வாக்கு முதலிய செயற்பொறிகளும், அவற்றின்வழி வருகின்ற புல இன்பங்களும், அந்தக்*

**2108.** அழிகின்ற ஓர்உடம் பாகும் செவிகண்
கழிகின்ற கால்அவ் இரதங்கள் தானம்
மொழிகின்ற வாக்கு முடிக்கின்ற நாடி
ஒழிகின்ற ஊனுக் குறுதுணை யில்லையே. 2

**2109.** இலையாம் இடையில் எழுகின்ற காமம்
உலைவாய நேசத்து மூழ்கும் உளத்துத்
தலையாய மின்னுடல் தாங்கித் திரியும்
சிலையாய சித்தம் சிவமுன் னிடைக்கே. 3

---

*கரணங்களுக்கு வலுவூட்டுகின்ற பிராண வாயுவும், ஒன்றையொன்றோடு முடிந்து வைத்துள்ள நாடிகளும், மற்றும் பல ஆற்றல்களுக்கு உரிய இடங்களும். ஆகவே, உடம்பு அழிந்தால், அவையும் அதனோடே அழிந்தொழிதலால், அழிவதாகிய உடம்பிற்கு அதனை அழியாது நிலைபெறுத்துவதொருதுணை எதுவுமில்லை.*

***குறிப்புரை :-*** *'உடம்பின்கண் ஆகும்' என ஏழாவது விரிக்க. 'ஆகும்' என்னும் செய்யுமென்னும் முற்றிற்குச் செவி, கண் முதலிய பல பெயர்களும் முடிவாயின. செய்யுள் நோக்கி அப்பெயர்கள் முறை பிறழ வைக்கப்பட்டன. கால் - காற்று; பிராண வாயு. இரதம் - சுவை; என்றது இன்பத்தை.*

*இதனால், 'தூல தேகம் அழிவுடையதாகலின், அதன் இயல்பை மாற்று மாறில்லை' என்பது கூறப்பட்டது.*

***2109. தெளிவுரை :-*** *மாதரது நுண்ணிய இடையின்மேல் எழுகின்ற காம உணர்ச்சி மக்கள் உள்ளங்களில் உலையிடத்தில் உள்ள நெருப்புப் போல மிகுகின்ற ஆசையாலே பெருகி மிகும். ஆயினும் அந்த ஆசையால் சிறிதும் கலங்காது கல்போல உறுதியுற்று நிற்கும் உள்ளம் உடையவர்கள், சிவனது திரு முன்பில் காமம், குரோதம் முதலிய குற்றங்களோடு கூடாது மேன்மையுற்று விளங்குகின்ற ஒளி உடம்பைப் பெற்று வாழ்வார்கள்.*

***குறிப்புரை :-*** *இலையாம் இடை - 'இல்லை' என்றே சொல்லத்தகும் முறையில் அடைந்த இடை. உலைவாய - கொல்லனது உலையின்கண் உள்ளவை; நெருப்பு இடம் பற்றிப் பன்மையாகக் கூறப்பட்டது. 'உலைவாயன போலும் நேசம்' என அஃது உவமத் தொகையாய் வந்தது. 'மூழ்குவிக்கும்' என்பதில் பிறவினை விகுதி தொகுத்தலாயிற்று. அதற்கு 'அவற்றை' என்னும் செயப்படுபொருள் வருவிக்க. 'உளத்து' என்பதனை முதலிற் கூட்டியுரைக்க. 'மின்னுடல்' என்றது, 'ஒளியுடம்பு' என்றபடி. 'திவ்விய சரீரம்' என்பர். சித்தத்தை உடையவரது செயலை, 'சித்தம் திருமுன்னிடைக்கே தாங்கித் திரியும்' எனச் சித்தத்தின் செயலாக உபசரித்துக் கூறினார். முன்னிடை - முன்னிடம்.*

*குவ்வுருபைக் கண்ணுருபாகத் திரித்துக் கொள்க. சிவலோகத்தையே, 'சிவ முன்னிடை' என்றார். 'சிவ முன்னிலைக்கே' எனப்பாடம் ஓதுதலுமாம். சிலையாய சித்தம் - கல்போலக் காமப்புயல் தாக்கினும் அசையாத வலிய மனம்.*

*இதனால், 'நிலையில்லாத உடம்பினாலே சிவ புண்ணியங்களைச் செய்து நிலையுடைய வீட்டைப் பெறுதல் தக்கது' என்பது, அவ்வாறு செய்யாதாரது செயலையும், செய்தாரது செயலையும் ஒப்பிட்டுக் கூறுமுகத்தால் உணர்த்தி முடிக்கப்பட்டது.*

## 3. அவத்தை பேதம் - கீழாலவத்தை

*அவத்தை என்றால் நிலை என்பது பொருளாகும். எதனுடைய நிலை? நமது உடலினுள் உயிர் இருக்கும் நிலையை அவத்தை என்பார்கள். அதாவ உடலில் உயிர் எந்த இடத்தில் இருக்கிறது என்பதற்குத் திருமூலர் விடை பகர்கிறார்.*

***<u>அவத்தை பேதங்கள்</u>***

<table>
<tr><th colspan="8">உயிர் உடலைப் பற்றி நிற்கும் நிலைகள்</th><th>உயிர் சிவனைப் பற்றி நிற்கும் நிலை</th></tr>
<tr><th>வ. எண்</th><th>தமிழ்</th><th>வட மொழி</th><th>செயற் படும் கருவிகள்</th><th>உயிர் உடலில் நிலை கொள்ளும் இடம்</th><th>கீழால வத்தை</th><th>மேலால வத்தை</th><th>மத்தியால வத்தை</th><th>நின்மலா வத்தை</th></tr>
<tr><td>1.</td><td>நனவு</td><td>சாக்கிரம்</td><td>25</td><td>புருவநடு</td><td rowspan="5">↓<br>உயிர் கீழ் நோக்கிச் செல்லுதல்</td><td rowspan="5">↑<br>உயிர் மேல் நோக்கி வருதல்</td><td rowspan="5">புருவ நடுவில் நின்று சாக்கிர அவத்தை எய்தும்போது அதிலே சாக்கிர சாக்கிரம், சாக்கிர சொப்பனம், சாக்கிர சுழுத்தி, சாக்கிர துரிதம், சாக்கிர துரியாதீதம் முதலான ஐந்தும் நிகழ்வது</td><td rowspan="5">உலகப் பற்றை நீக்கி சிவத்தைப் பற்றும் இடத்து நிகழ்வன</td></tr>
<tr><td>2.</td><td>கனவு</td><td>சொப்பனம்</td><td>14</td><td>கழுத்து</td></tr>
<tr><td>3.</td><td>உறக்கம்</td><td>சுழுத்தி</td><td>2</td><td>இருதயம்</td></tr>
<tr><td>4.</td><td>பேருறக்கம்</td><td>துயிம்</td><td>1</td><td>நாபி</td></tr>
<tr><td>5.</td><td>உயிர்ப் படங்கல்</td><td>துரியா தீதம்</td><td>-</td><td>மூலாதாரம்</td></tr>
</table>

*உடம்புகளாவன : பல கருவிகளின் கூட்டம். உடம்பு வருதலும், நிற்றலும், அழிதலும் அவ்வுயிர்களின் வினைக்கீடாக அமைதல் போல, உடம்புகள் நிற்கின்ற காலத்திலும் கருவிகளில் சிலவும் பலவும் வினைக்கீடாகச் செயற்படாது ஓய்ந்தும் நிற்கும். ஆகவே, ஓய்ந்து நின்ற கருவிகள் போகச் செயற்படும் கருவிகளது ஏற்றக் குறைவால் உயிரின் அறிவு வேறு வேறு நிலைகளை அடையும். அவையே 'அவத்தை' எனப்படுகின்றன. அவத்தை - நிலை. அந்நிலைகள் ஐந்தாகக் கூறப்படுகின்றன. சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் - என்பன. இவை தமிழில் முறையே நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப் படங்கல் - எனப்படுகின்றன. சாக்கிரம் முதலிய ஐந்திலும் உயிரினது விளக்கம் முறையே புருவ நடு, கண்டம், இருதயம், நாபி, மூலாதாரம் என்பவற்றில் இறங்கிச்*

*செல்லுதல் 'கிழாலவத்தை' எனப்படும். பின்பு மூலாதாரத்தினின்றும் முன் இறங்கிய முறையிலே மேல் ஏறிப் புருவ நடுவை அடையும். அதை 'மேலா லவத்தை' எனலாம். என்றாலும் அதில் வேறுபாடு இல்லை. ஆகையால் யோக காலத்தே 'மேலாலவத்தை' எனப்படுகின்றது. இனிப் புருவ நடுவில் நின்று சாக்கிரத்தை எய்தும் பொழுதும் அதிலே சாக்கிர சாக்கிரம், சாக்கிர சொப்பனம் முதலாக ஐந்து அவத்தைகள் நிகழும். அவை மத்தியாலவத்தைகளாம். இவை யெல்லாம் ஆன்மா உலகத்தைப் பற்றி நிற்கும் நிலைகளேயாம். இனி உயிர் உலகத்தைப் பற்றாது விடுத்துச் சிவனைப் பற்றுமிடத்தும் இந்த ஐந்தவத்தைகள் நிகழும். அவை 'நின்மலாவத்தை' எனப்படும். இப்படி அவத்தைகள் பல்வேறு வகையாக நிகழ்தலையே 'அவத்தை பேதம்' என்றார். 'உடம்பு நிலையாததே என்றாலும், அந்த உடம்பு நிற்கும் காலத்திலும் உயிரினது அறிவு ஒரு நிலையில் நில்லாது உழலும் அறிவு நிலையாமையும் உண்டு; அதனை அறிவுடையோர் உணர்தல் வேண்டும்' என்றற்கு 'உடலிற் பேதம்' கூறியபின், அவத்தை பேதம் கூறுவாராய். முதற்கண் கீழாலவத்தையை இருபத்தைந்து மந்திரங்களால் கூறுகின்றார்.*

*'உடம்புகள் கருவிகளின் கூட்டம்' என்பது மேலே கூறப்பட்டது. 'அக்கருவிகளின் முழுத்தொகை தொண்ணூற்றாறு' - என்பது வைதிக மதங்கள் அனைத்திலும் ஒருமுகமாகச் சொல்லப்படுவது. அதனால், 'தத்துவம் தொண்ணூற்றாறு' என்பது ஒரு பொது வழக்கு. ஆயினும் அவற்றில், 'தத்துவம்', 'தாத்துவிகம்' - என இரு பிரிவு உண்டு. தத்துவங்கள் பிரளய காலம் வரையில் நிலைத்து நிற்பன வாய்த் தாத்துவிகங்கட்குக் காரணமாய் இருக்கும். தாத்துவிகங்கள் தத்துவங்களின் காரியமாய் விரைவில் தோன்றி, நின்று, அழியும். ஆகவே தூல தேகம் தாத்துவிகம். மற்றைய தேகங்கள் தத்துவம்.*

*தத்துவங்கட்குத் தொகை கூறுவதில் மதங்கள் வேறுபடுகின்றன. அதனால், 'எவை தாத்துவிகம்' என்பதற்கு விடையும் பலவாகும். சைவம் தத்துவம் முப்பத்தாறு என்கின்றது. எனவே சைவம் கூறும் 'தாத்துவிகம் அறுபது' என்பது சொல்ல வேண்டுவதில்லை என்றாலும், 'அந்த அறுபது எவை' என்பது எங்கும் திட்டமாகச் சொல்லப்படவில்லை. ஆகவே, கட்டளை நூல்களில் தாத்துவிகமாகக் கூறப்படுவன பிற மதங்களின் கொள்கைகளாகத் தெரிகின்றன. சிவஞான யோகிகள் 'தாத்துவிகம் அறுபதும் ஐம்பூதங்களின் கூறுகளே' என்றார். (சிவஞானசித்தியார், சுபக். சூ. 2. 62 வரை) அதுவே பொருத்தமானதாகத் தெரிகின்றது. ஆயினும் அந்த அறுபதையும் முற்றக்கூறாமல், சிலவற்றையே குறித்துக் காட்டினார். 'சிவநெறிப் பிரகாசநூல் உரை' - என்பன போன்றவை களும் அவ்வாறே சொல்கின்றன. தெளிவாகத் தெரிகின்ற தாத்து விகங்கள், ஞானேந்திரிய விடயங்களாகிய சத்தாதி ஐந்து, கன் மேந்திரிய விடயங்களாகிய வசனாதி ஐந்து, வாயுவின் கூறாகிய பிராணாதி பத்து, ஆக இருபது, இவற்றையே சிவஞான யோகிகள் குறிப்பிட்டுக் கூறினார். இவற்றை, 'பூதங்களின் கூறு' என்றதற்குத் தடையில்லை. இனிக் கட்டளை நூல்களிலும், சிவநெறிப்*

*பிரகாசத்திலும் கூறப்படுகின்ற பிருதிவியின் கூறாகிய மயிர், எலும்பு, தோல், தசை, மூளை என்னும் ஐந்து; அப்புவின் கூறாகிய இரத்தம், சிறுநீர், வெயர்வை, சுக்கிலம், பித்தநீர் என்னும் ஐந்து; தேயுவின் கூறாகிய பசி, தாகம், உடம்பில் வெப்பம், கண்ணில் சூடு, பைத்தியம் என்னும் ஐந்து; ஆகாயத்தின் கூறாகிய இடை, பிங்கலை, சுழுமுனை, அத்தி, அலம்புடை முதலிய நாடிகள் பத்து; ஆக இருபத்தைந்தினையும் மேற்கூறிய இருபதுடன் சேர்க்கத் தாத்துவிகம் நாற்பத்தைந்தாகும். மற்றைப் பதினைந்திற்குக் கட்டளை நூல்கள் வேறு வேறு கூறுவனவற்றைப் பூதங்களின் கூறாகக் கொள்ள இயலவில்லை.*

**2110.** **ஐயைந்து மத்திமை ஆனது சாக்கிரம்**
**கய்கண்ட பன்னான்கில் கண்டங் கனாஎன்பர்**
**பொய்கண் டிலாதபுரு டன்னித யஞ்சுழுனை**
**மெய்கண் டவனுந்தி ஆகும் துரியமே.** **1**

---

*2110. தெளிவுரை :- மேற்கூறிய அவத்தைகளில் மத்தியாலவத்தை ஐந்தும், கீழாலவத்தைச் சாக்கிரமும் நிகழும் இடம் புருவநடு, அவற்றுள் மத்தியா லவத்தைச் சாக்கிரம் ஒன்றிலேதான் எல்லாக் கருவிகளும் குறைவின்றிச் செயற்படும். மற்றையவற்றில் சிற்சில கருவிகள் செயற்படாது நிற்கும். அவற்றைப் பிரிந்தும், கூடியும் வரும் கருவிகளாகக் கூறுவர். மத்தியாலவத்தையை விட்டு, ஆன்மாக் கீழாலவத்தையில் சாக்கிரத்தை அடைதற்குக் காரணம் ஆன்ம தத்துவங்களில் சிலவும், தாத்துவிகங்களில் சிலவும் குறைதலேயாகும். அந்நிலையில், கீழாலவத்தைச் சாக்கிரத்தில் செயற்படும் கருவிகள் முப்பத்தைந்து' என்று சொல்லப்படுகின்றது. 'சாக்கிரம் முப்பத்தைந்து நுதலினில்' என்பது சிவஞான சித்தியார். (சுபக். சூ. 2.33) முப்பத்தைந்தில் தத்துவம் பதினைந்து, தாத்துவிகம் இருபது. ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று. இவை தத்துவங்கள். ஞானேந்திரிய விடயம் ஐந்து, கன்மேந்திரிய விடயம் ஐந்து, பிராணாதி வாயுக்கள் பத்து. இவை தாத்துவிகங்கள் 'முப்பத்தைந்து' எனத் தொகை கூறி வரையறுத்தது பிரிந்தும், கூடியும் வரும் நிலைமையுடைய கருவிகளை நோக்கியேயாம். ஆகவே, பிரிவின்றி எஞ்ஞான்றும் கூடியே நிற்கும் கருவிகள் இந்த அவத்தை பேதங்களில் நீங்குவன அல்ல. அவை வித்தியா தத்துவம் ஏழும், சிவ தத்துவம் ஐந்துமாம். 'புருடன்' என்பது ஒரு தத்துவம் அன்று. காலம், நியதி, கலை, வித்தை, அராகம் ஐந்தும் கூடிய நிலையேயாம். இவை ஐந்திற்குக் காரணம் 'மாயை' என்னும் தத்துவம். எனவே, புருடன்' என்றதனால், மேற்கூறியவற்றோடு சிவ தத்துவமும் பெறப்படும். ஆகையால் 'முப்பத்தைந்து' எனச் சுருக்கமாகக் கூறியபோதிலும் 'நாற்பத்தாறு' என்பதே உண்மையாம். எனவே, கீழாலவத்தை தொடங்குங்கால், தொண்ணூற்றாறு கருவிகளில், நீங்குவன ஐம்பதே' என்பது விளங்கும். ஐம்பதில் தத்துவம் பத்தும், தாத்துவிகம் நாற்பதும் ஆகும். தத்துவம் பத்தாவன மாபூதங்கள்*

*ஐந்து; தன்மாத்திரை ஐந்து, தாத்துவிகம் நாற்பதவான. மேற்கூறிய சத்தாதி ஐந்து, வசனாதி ஐந்து, பிராணாதி பத்து ஆகிய இருபது தவிர மற்றவையாம்.*

*இம்மந்திரத்தில், 'மத்திமை' என்றது புருவ நடுவை. 'சாக்கிரம் என்றது, அதிகாரத்தால் கீழாலவத்தைச் சாக்கிரமாயிற்று. 'ஐயைந்து' என்றது, பிராணாதி வாயுக்கள் பத்தினையும் விடுத்து, அஃது, ஒன்று இடைவிட்டு வரும் மந்திரத்தால் விளங்கும். 'ஐயைந்தால் என உருபு விரித்து மத்திமையில் ஐயைந்தால் சாக்கிரம் ஆனது' என இயைத்துக் கொள்க.*

*இனி, இரண்டாம் அடியில், 'மேற்கூறிய ஐயைந்தில் விடயங்களாய் நிற்கும் கருவிகள் பதினான்கினால் கண்டத்தில் சொப்பனம் நிகழும் என்பர்' எனக் கூறினார். 'விடயங்களாய் நிற்கும் கருவிகள்' என்றதனால், 'அவ்விடயங்களை அறிகின்ற கருவிகள் சாக்கிரத்தோடே நின்றுவிடும்' என்பதாயிற்று. அவையாவன ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியம் ஐந்துமாம். புருடன் கருவியாகாமை பற்றி அதனை நீக்கி, "பன்னான்கு" என்றார். ஆகவே, சத்தாதி ஐந்து, வசனாதி ஐந்து, பிராணாதி பத்து, அந்தக் கரணம் நான்கு புருடன் ஒன்று என இருபத்தைந்து கருவிகளால் கண்டத்தானத்தில் சொப்பனம் நிகழும் என்றமை அறிக.*

*மூன்றாம் அடியில், 'இதயம்' என்பது இரட்டுறமொழிதலாய், முன்னர்ச் சித்தத்திற்குப் பரியாயப் பெயராயும், பின்னர் இருதயத் தானத்தைக் குறிப்பதாயும் இருபொருள் தந்து நின்றது. ஆகவே, 'புருடன், சித்தம்' என்னும் இரு கருவிகளாலே இருதயத் தானத்தில் சுழுத்தி நிகழும்' எனக் கூறியது காண்க. சுழுத்தியைச் செய்யுள் நோக்கி, 'சுழுனை' என்றார். முதற்றொட்டே வாயுக்களைக் கூறாமையால், இங்கும் கூறிற்றிலர் ஆதலின் 'பிராணன்' என்னும் ஒரு வாயு மட்டும் சுழுத்தியில் நிற்கும் என்பது அறிக. அவ்வாயுவைக் கூட்டக் கருவிகள் மூன்றாகும். 'பொய் கண்டிலாத' என்றது, 'விடயங்களை நன்கு உணர்ந்து வருகின்ற' என்றபடி. எனவே ஈற்றடியில் 'மெய்கண்டவன் என்றது அப்புருடனை ஆயிற்று. ஆகவே, அஃது ஒன்றினாலே உந்தித்தானத்தில் துரியம் நிகழும்' என்றதாயிற்று. இங்கும் பிராணன் உண்டு. ஆகவே, சுழுத்தியோடு நீங்கியது சித்தம் ஒன்றுமேயாயிற்று.*

*துரியத்தைக் கடந்த துரியாதீதத்தில் தத்துவம் பற்றிக் கூறற் பாலது இல்லாமையால் அதனைக் கூறாதொழிந்தார். ஆகவே, புருடன் ஒரு காலத்தும் நீங்குதல் கூடாது ஆகையால், 'அதீதம்' பிராணன் ஒன்றும் நீங்கப் புருடன் மட்டும் இருப்பதாயிற்று. அதற்கு இடம் மூலாதாரம் - என்பதும் கீழாலவத்தை இறுதியில் உந்தியைக் கூறியொழிந்ததனால் விளங்கும். 'மெய்கண்டவனால் உந்தியில் துரியம் ஆகும்' என்க.*

*இதனால், கீழாலவத்தை ஐந்தன் இயல்பும் தொகுத்துக் கூறப்பட்டன.*

**2111.** முப்பதோ டாறின் முதல்நனா ஐந்தாகும்
செப்பதில் நான்காய்த் திகழ்ந்திரண் டொன்றாகி
அப்பதி யாகும் நியதி முதலாகச்
செப்பும் சிவம்ஈறாய்த் தேர்ந்துகொள் வீரே. 2

***2111. தெளிவுரை :-*** *முப்பத்தாறு தத்துவங்களாலும் (எனவே, தாத்துவிகம் அறுபதும் உளவாம் ஆதலின் தொண்ணூற்றாறு கருவிகளாலும்) நிரம்பிய அறிவாய்க் கீழாலவத்தைக்கு முன்னே உள்ள மத்தியா லவத்தையில் சாக்கிரம் நிகழும். அதுபொழுது சிவதத்துவம் ஐந்தும் உள்ளனவாம். அதன் பின் மத்திய சொப்பனம், மத்திய சுழுத்தி, மத்திய துரியம், மத்திய துரியாதீதம் - என்பவை முறையே சிவ தத்துவங்களில் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு குறைய நிற்கும் தத்துவங்கள் நான்கு, மூன்று, ஒன்று, ஆகுமாற்றால் நிகழும். நீங்குவன சுத்த வித்தை முதலாகவாம் ஆதலின், இறுதியில் நிற்பது 'சிவம்' என்பதொன்றுமே யாம். தத்துவங்கள் செலுத்துவனவும், கலை முதலிய ஐந்தும் செலுத்தப் படுவனவும் ஆதலின், செலுத்துவன நான்கும் நீங்கிய பொழுது செலுத்தப்படுவன வற்றிலும் நான்கும் நீங்கும். அவை, 'அராகம், வித்தை, கலை, நியதி - என்பன. எனவே, எப்பொழுதும் நீங்காது நிற்பன 'சிவம்' என்னும் தத்துவமும், அதனால், செலுத்தப்படுகின்ற காலமும் ஆம். ஆகவே, மத்திய துரியாதீதத்தில் நிற்பன அவை மட்டுமேயாம். இவற்றை ஆராய்ந்து உணர்ந்து கொள்ளுங்கள்.*

***குறிப்புரை :-*** *'ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று' எனப்பட்டன சிவ தத்துவங்களின் எண்ணிக்கையே. வித்தியா தத்துவம் ஏழில் புருடன் தனித்தத்துவம் அன்று. மாயை காரணமாய் நிற்பதன்றிச் செயற்படாது. அவையொழிந்த ஐந்துமே செயற்படுவன ஆதலின் சிவ தத்துவம் ஐந்தும் அந்த ஐந்தையே செலுத்தி நிற்கும். செலுத்தும் முறையாவது, சிவம் - காலம், சத்தி - நியதி. சாதாக்கியம் - கலை. ஈசுரம் - வித்தை, சுத்தவித்தை - அராகம் என்க. செலுத்துவனவற்றில் நீங்குவன சுத்தவித்தை முதலாகவும், அதற்கேற்பச் செலுத்தப்படுவன நீங்குதலும் அராகம் முதலாகவுமாய் நிகழும். தத்துவங்களை எண்ணுங்கால் தோற்ற முறை பற்றி எண்ணுதல் வழக்காதல் பற்றி 'நியதி முதலாக' என்றாராயினும் நீங்கும் முறை அராகம் முதலாகவே என்க. செலுத்துவன செலுத்தப்படுவனவற்றில் இயைபை வேறு கூறுவாரும் உளர்.*

*'இரண்டொன்று' என்றது இரட்டுற மொழிதலாய், முன்னர் உம்மைத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகையாய் 'மூன்று' எனவும், பின்னர் உம்மைத்தொகையாய் 'இரண்டும், ஒன்றும்' எனவும் இருபொருள் தந்தது. நியதி முதல் - நியதி முதலிய தத்துவங்கள். 'அவை ஆகும்படி சிவம் ஈறாய் அப்பதி ஆகும்' என்க. பதி - சிவ தத்துவம்.*

*கீழாலவத்தையில் நிகழும் சொப்பனம் முதலியவற்றை, 'இஃது*

*இத்தன்மையது' என யாவரும் தாமும் உணரவும். பிறர்க்கு உணர்த்தவும் கூடிய முறையில் அவை இனிது விளங்கக்கால நீட்டிப்புடன் அன்றாட அனுபவமாய் நிகழும். மத்தியாலவத்தை அவ்வாறின்றி நன்கு விழித்திருக்கும்பொழுதே மிக விரைவில் நினைப்பும், மறப்புமாய் மாறி மாறி நிகழ்வன ஆதலின் அவற்றை யாவரும் தாமும் இனிதுணர்தல் அரிது; பிறர்க்கும் உணர்த்துதல் அரிது. இதன் வேகத்திற்குக் கறங்கோலையை (காற்றாடி ஓலையை) உவமையாகக் கூறுவர். அதுபற்றி அருணந்தி சிவாசாரியாரும்,*

> *"அறிதரு முதல வத்தை அடைதரு மிடத்தே ஐந்தும்*
> *செறிதரும்; கரணந் தன்னில் செயல்தொறும் கண்டுகொள்நீ"*
>
> *- சுபக். சூ. 4. 35*

*என்னும் அளவே கூறிச் சென்றார். ஆயினும் சிவாக்கிரர் முதலியோர் கைப் பொருளைத் தொலைத்துவிட்டவன் அத்துன்ப மிகுதியாலும் மற்றும் புத்திர சோகம் முதலியவற்றாலும், மூர்ச்சை எய்துதலை 'மத்திய துரியாதீதம்' - என வைத்து, அதினின்றும் சிறிது சிறிதாகத் தெளிவடைந்து பழைய நிலையை எய்தும் வரையிலான நிகழ்ச்சிகளை மத்திய துரிய, மத்திய சுழுத்தி, மத்திய சொப்பன, மத்திய சாக்கிரா வத்தைகளாக வகுத்துக் காட்டுவர். ஆயினும், அவையெல்லாம் ஓரளவு தரும் விளக்கங்களேயன்றி, 'அவைதாம் மத்தியாலவத்தை' எனக் கொண்டு விடுதல் கூடாது. மத்தியாலவத்தை விழிப்புநிலையில் நாம் பொருள்களை உணர்ந்து நிற்கும்பொழுதே நிகழ்வனவாம். அவற்றுள் நினைப்பு, 'சகலத்தில் சகலம்' என்றும், மறப்பு, 'சகலத்தில் கேவலம்' என்றும் சொல்லப்படும். சகலம் 'பகல்' எனவும், கேவலகம் 'இரவு' எனவும் உருவகித்து வழங்கப்படும். **ஆகவே, நினைப்பும், மறப்பும் இல்லாத சுத்தநிலை 'இராப் பகல் அற்ற இடம்' எனக் கூறப்படுகின்றது**.*

***இதனால், மத்தியாலவத்தைகளின் இயல்பு தொகுத்துக் கூறப்பட்டது. 'அவத்தைகளின் பொது இயல்புகள் முதற்கண் ஒருங்கு வைத்துக் காட்டப்பட வேண்டும்' என்னும் கருத்தினால் இவை இங்குக் கூறப்பட்டன.***

***2112. தெளிவுரை :-** கேவலம் வருமாறு செய்கின்ற அந்தச் சாக்கிரா வத்தையானது ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அவற்றின் விடயங்கள் பத்து, வாயுக்கள் பத்து, அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று - என்னும் முப்பத்தைந்து கருவிகளால் நிகழும்.*

***குறிப்புரை :-** ஞானேந்திரிய விடயங்கள் முன்பு தன் மாத்திரை நிலையில் இருந்தமை பற்றி அவற்றை, 'தன்மாத்திரை' என்கின்றவர், அவற்றோடொத்த கன்மேந்திரிய விடயங்களையும் ஒருங்கு கூட்டி, 'தன்மாத்திரை' எனச் சுருங்கக் கூறினார். வாயுக்களில் பிராணனும், உதானனும் சொல்லொலியாயும் தோன்றுதல்*

**2112.** இந்தியம் ஈரைந்தீ ரைந்துதன் மாத்திரை
மந்திர மாய்நின்ற மாருதம் ஈரைந்தும்
அந்தக் கரணம் ஒருநான்கும் ஆன்மாவும்
பந்தவச் சாக்கிரப் பாலது வாகுமே. **3**

**2113.** பாரது பொன்மைப் பசுமை யுடையது
நீரது வெண்மை செம்மை நெருப்பது
காரது மாருதம் கறுப்பை யுடையது
வானகம் தூமம் மறைந்துநின் றார்களே. **4**

---

*பற்றி ஏனை வாயுக்களையும் 'மந்திரமாகும்' என்றார். 'பந்தம்' என்றது கேவல நிலையை. பால் - பகுதி அது, பகுதிப்பொருள் விகுதி. 'ஆன்மாவும்' என்பதன் ஈற்றில், 'ஆகிய முப்பத்தைந்தும்' என்னும் தொகைச் சொல் விரித்து, 'முப்பத்தைந்தாலும் சாக்கிரப் பால் ஆகும்' என முடிக்க 'சாக்கிரமாவது இங்கு எடுத்துக்கொண்ட கீழாலவத்தைச் சாக்கிரம்' என்பது விளங்குதற் பொருட்டு, 'பந்த அச்சாக்கிரம்' என்றார்.*

*இதனால், முதற்கண், 'மத்திமை யானது சாக்கிரம்' எனக் கூறியதன்கண் செயற்படும் கருவிகளாவன இவை - என்பது கூறப்பட்டது.*

***2113. தெளிவுரை :-** (அவத்தைக்குக் காரணமான கருவிகளுள் மிக எளிதில் விளங்குவனவாகிய ஐம்பெரும் பூதங்களில்) நிலம் பசும் பொன்னிறத்தையும், நீர் வெண்மை நிறத்தையும், நெருப்புச் சிவப்பு நிறத்தையும், காற்றுக் கருப்பு நிறத்தையும், வானம் புகை நிறத்தையும் உடையன. இவற்றின் அதிதேவர்கள் இவைபோலப் புலனாகாது மறைந்து நிற்பார்கள்.*

<u>பஞ்சபூதங்களின் பண்புகள்</u>

| வ. எண் | பூதம் | நிறம் | வடிவம் | அதிதேவர் | உடல் ஆதாரங்கள் |
|---|---|---|---|---|---|
| 1. | நிலம் | பசும்பொன்னிறம் | சதுரம் | பிரமன் | சுவாதிட்டானம் |
| 2. | நீர் | வெண்மை | பிறை/ அரை வட்டம் | திருமால் | மணிபூரகம் |
| 3. | நெருப்பு | சிவப்பு | முக்கோணம் | உருத்திரன் | அனாகதம் |
| 4. | காற்று | கறுப்பு | அறுகோணம் | மகேசுவரன் | விசுத்தி |
| 5. | வானம் | புகை | வட்டம் | சதாசிவன் | ஆக்ஞை |

**2114.** **பூதங்கள் ஐந்தும் பொறியவை ஐயைந்தும்**
**ஏதம் படச்செய் திருந்த புறநிலை**
**ஓது மலம்குண மாகும்ஆ தாரமோடு**
**ஆதி யவத்தைக் கருவிதொண் ணூற்றாறே.** **5**

---

*குறிப்புரை :- 'அதிதேவர்கள்' என்பது ஆற்றலால் கொள்ளக் கிடந்தது. தத்துவங்களினின்றும் விடுபடுதற்கு அவற்றை வழிபடுதலும் ஒரு முறையாகும். அதன்பொருட்டு அவற்றிற்கு வடிவம் நிறம் முதலியன ஆகமங்களில் கூறப்பட்டுள்ளன. அவ்வழிபாட்டிற்குப் பயன் தருபவர்கள் அவற்றின் அதிதேவர்களேயாதல்பற்றி அவர்களை இங்கு உடன் கூட்டி, 'மறைந்து நின்றார்களே' என்றார். அதனானே, 'இது வழிபாட்டு முறை' என்பது பெறப்படும். சித்தாந்த சாத்திரங்களில் நிறங்களோடு வடிவம் முதலியன கூறப்படுதல் காண்க. பசுமைப் பொன்மை' என மொழி மாற்றியுரைக்க. மூன்றாம் அடியில் தளை மயங்கி வந்தது. காரது மாருதம் - மேகங்களோடு சேர்ந்து வீசும் காற்று ஈற்றடி உயிரெதுகை பெற்றது.*

*இதனால், கருவிகளுள் சிலவற்றிற்குக் கூறற்பாலன சில கூறப்பட்டுள்ளன.*

*2114.* **தெளிவுரை :-** *தத்துவம் முப்பத்தாறனுள் பூதம் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து ஆகப் பதினைந்தும் புறக்குற்றங்களில் மூழ்கச் செய்கின்ற புறக்கருவிகளாம். ஆறு ஆதாரங்களும், ஒரு வகை மாயையாகச் சொல்லப்படுகின்ற பிரகிருதி குணங்களும் அவத்தைக்கு ஏதுவாகும். அந்நிலையில் ஐந்தவத்தைகளுள் முதலாவதாகிய சாக்கிராவத்தையில் தொண்ணூற்றாறு கருவிகளும் தொழிற்படுவனவாம்.*

**குறிப்புரை :-** *எனவே, இது மத்தியசாக்கிராவத்தையாம். ஆறாதாரங்கள், முக்குணங்கள் இவையும் சில இடங்களில் தாத்துவிகமாகச் சொல்லப்படுகின்றன. 'மலம்' என்றது மாயா மலத்தை, 'கருவி தொண்ணூற்றாறு என்றது, எல்லாக் கருவிகளும் 'குறைவின்றிச் செயற்படும்' என்றபடி. ஏதம் - குற்றம்.*

*இதனால், மத்தியாலவத்தையின் இயல்பு கூறப்பட்டடது.*

*2115.* **தெளிவுரை :-** *மேற்கூறிய மத்தியலாவத்தையின் இயல்பைக் கூறுமிடத்து உயிரினது செயற்பாடு, அனைத்துச் சுற்றங்களும் சூழ அரசன் உலாவருதல் போன்றதாகும். யானை இருபத்தைந்து, (இவை ஆன்மதத்துவங்கள்) குதிரை ஐந்து, (இவை காமம், வெகுளி, உலோபம், மோகம், மதம் என்னும் உணர்ச்சிகள்) அமைச்சர் நால்வர். (இவை நால்வகை வாக்குக்கள்) புறஞ் சூழ்ந்து வரும் சேனைகள் காலாட்படைகள் (இவை வித்தியா தத்துவங்களும், சிவ தத்துவங்களும்) சென்று சென்று நிற்கும் வாயில்கள் ஒன்பது. (இவை நவத் துவாரங்கள்) இங்ஙனமாக அறிக. துரியாதீதம் ஒழிந்த நான்கு அவத்தைகளுக்கும் உரிய கருவிகளை உருவகமாக உணர்த்துகிறார்.*

**2115.** **இடவகை சொல்லில் இருபத்தஞ் சானை**
**படுபர சேனைகள் பாய்பரி ஐந்தும்**
**உடையவன் மத்திமை உள்ளுறு நால்வர்**
**அடைய நெடுங்கடை ஐந்தொடு நான்கே.** **6**

**2116.** **உடம்பும் உடம்பும் உடம்பைத் தழுவி**
**உடம்பிடை நின்ற உயிரை அறியார்**
**உடம்போ டுயிரிடை நட்பறி யாதார்**
**மடம்புகு நாய்போல் மயங்குகின் றாரே.** **7**

---

*குறிப்புரை :- சொல்லாது விடுத்த தாத்துவிகங்களையும் உபலக்கணத்தால் ஏவலர் முதலியவராகக் கொள்ளல் வேண்டும். ஞானாமிர்தத்திலும் (அகவல் - 9) கருவிகள் அரசச் சுற்றங்களாக உருவகித்திருத்தல் அறியத்தக்கது. இடம், அதன்கண் செயற்படும் கருவியைக் குறித்த ஆகுபெயர். படுதல் - பொருந்துதல். பரசேனை - வேறு நின்று சூழும் சேனை. 'மத்திமை' என்பதின்பின் 'ஆக' என்பது வருவித்து அதனை எண்களுடன் முடிக்க.*

*இதனால், மேற்கூறிய மத்தியாலவத்தையின் இயல்பு இனிது விளங்குதற் பொருட்டு உருவகமாக்கிக் கூறப்பட்டது.*

*2116. **தெளிவுரை :-** அதிசூக்கும சரீரம் முதலில் சூக்கும சரீரத்தைப் பற்றிப் பின்பு அவ்விரண்டும் கூடித் தூல சரீரத்தைப் பற்றுதலினால் உயிர் அம்மூன்று சரீரத்தோடும் பொருந்தித் தனது செயலைச் செய்துவரும் நிலையைப் பலர் அறியாது, 'உடம்புதான் உயிர்' என மயங்குகின்றனர். உடம்போடு உயிருக்குள்ள தொடர்பு, வினை காரணமாகச் சிறிது கால அளவினதே என அறியாதவர்கள் தூய திருமடங்களின் உள்ளே எவ்வாறோ புகுந்துவிட்ட நாய் 'இந்த இடம்நமக்கு நிலையாது' என்பதை உணராமல், நிலைத்த ஒன்றுபோல நினைத்து, அங்கு அமைக்கப்பட்டுள்ள உணவைத் தனக்கே உரியனவாக எண்ணிக் களிப்பதுபோலக் களித்திருக்கின்றார்கள்.*

***குறிப்புரை** :- 'இஃது அவர் அறியாமை இருந்தவாறு' என்பது குறிப்பெச்சம். 'தழுவி' என்னும் செய்தென் எச்சம் காரணப் பொருளில் வந்தது. இரண்டாம் அடியில் 'அவ்வுடம்பிடை' எனச்சுட்டு வருவிக்க. 'சாக்கிரம் முதலிய அவத்தைகளின் இயல்பை அறிவார்க்கு, உயிர் உடம்பின் வேறாதல் தெற்றென விளங்கும்' எனற்கு இம்மந்திரத்தை இங்கு அருளிச்செய்தார். 'கனவில் தூல உடம்பு செயலற்றுக் கிடையாய்க் கிடக்கவும் உயிர் சூக்கும உடம்போடு கூடிச் செயற்படுதல் அனுபவம் ஆதலின், அவ்வாறே உயிர் ஏனை உடம்புகளின் வேறானது என்பது ஏனையவத்தைகளையும் உணரின் விளங்கும்' - என்பதாம். சிவஞான போதம் மூன்றாம் சூத்திரத்திலும் அவத்தைகளின் இயல்பு பற்றியே உயிர் உடம்பின் வேறாய் உண்மை நாட்டப்பட்டது. 'நின்ற உயிர்' என்றாரேனும்*

**2117.** **இருக்கின்ற வாறொன் றறிகிலர் ஏழைகள்**
**முருக்கும் அசபையை மாற்றி முகந்து**
**கருக்கொண்டு காமாரி சார முகந்தேர்ந்**
**துருக்கொண்டு தொக்க உடல்அழி யாதே.** **8**

---

*'உயிர் நின்றமை' என்றலே கருத்து.*

> *குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே*
> *உடம்போ டுயிரிடை நட்பு. - குறள். 338*

*என்னும் குறளில் 'நட்பு' என்றது நட்பு இன்மையைக் குறித்து நின்ற குறிப்பு மொழி என்பது அதன்கண் கூறப்பட்ட உவமையால் விளங்கும். அஃதே இங்கும் கூறப்பட்டது. மடத்திற்கும், நாய்க்கும் இயைபில்லையாயினும், ஏதோவொரு வழியால் நாய் மடத்தினுள் புகுந்து விட்டதாயினும் அஃது அங்கு நிலையாது நீங்குதல்போல, சடமாகிய உடம்புகட்கும், சித்தாகிய உயிருக்கும் இயைபில்லை யாயினும், வினைகாரணமாக உயிர் உடம்போடு இயைந்து நின்றது ஆகலின், அவ்வியைபு நிலையாது நீங்குதல் இயல்பென்றவாறு. இங்ஙனம் உவமையை விரித்துரைத்துக் கொள்க.*

*இதனால், 'மேற்கூறிய உடலின் பஞ்ச பேதத்திற்கு அனுபவம் அவத்தை பேதங்கள்' என்பது கூறப்பட்டது.*

*2117. தெளிவுரை :- அறிவில்லாதவர்கள், 'உலகத்தில் நாம் எவ்வாற்றால் உயிர் வாழ்கின்றோம்' என்பதைச் சிறிதும் உணர மாட்டார்கள். (உள்வாங்கியும், வெளிப்போக்கியும் பிராண வாயுவை ஓய்வின்றி இயக்குதலால்தான் அவர்கள் வாழ்கின்றனர். ஆகையால் அதனையறிந்து) பிறவியை அறுக்கின்ற அசபா மந்திரத்தால் பிராண வாயுவை மேற்சொல்லியவாறு இயக்கிப் பயின்ற தூயராய்ப் பின் அவ்வாயுவை உள்ளே நிறுத்தி' அம்மந்திரத்தை, 'சிவன் நான்' எனப் பொருள்படும் வகையில் மாற்றி நினைந்து அவ்வாற்றால், காமனை அழித்தோனாகிய சிவன் தம்மிடத்தில் பதிந்து பின் நீங்காது விளங்கும் தமது உடம்பாகச் செய்து கொள்வார்க்கு அங்ஙனம் அமைந்த உடம்பு அழிந்தொழியாது; நிலைத்திருக்கும். உள்ளிழுக்கும் போது சிவ என்றும் வெளித்தள்ளும் போது ஹம் என்று தள்ளி ஒவ்வொரு மூச்சையும் ஆன்ம போதம் விட்டு சிவபோதம் கைவரப் பெறுவதாகப் பாவித்தால் சிவம் பதியும்.*

*குறிப்புரை :- 'சிவன் நான்' எனப்பொருள்படும் மந்திரம், 'சிவோகம்' என்பது. அம்ச மந்திரத்தை, 'சோகம்' என மாற்றிய வழியும் அதன் உண்மைப் பொருள் 'சிவோகம்' என்பதேயாதல் பற்றி, 'அசபையை மாற்றி' என்றார். முகத்தல் - பிராணவாயுவைக் கும்பித்தல். இங்குக் கூறியவற்றையெல்லாம் கல்வி கேள்விகளால் அறிந்திருந்தும் அவ்வாறு செய்யாதாரை நோக்கியே, 'ஏழைகள்' என்றும், 'அறிகிலர்' என்றும் கூறினார். 'அறிவினான் ஆகுவ துண்டோ' (குறள்,*

**2118.** ஒளித்திட் டிருக்கும் ஒருபதி னாறை
அளித்தனன் என்னுள்ளே ஆரியன் வந்து
அளிக்குங் கலைகளி னால்அறு பத்துள்
ஒளித்திட்டு வைத்தான் ஒடுங்கிய சித்தே. **9**

---

*315) எனத் திருவள்ளுவர் கூறியதனை இங்கு ஒப்பு நோக்குக. 'ஒன்றும்' என்னும் இழிவு சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. முருக்குதல் - இடைவிடாது செபித்தல்.*

*இதனால், யாக்கை நிலையாதாயினும் அதனை நீட்டிக்கும் வழியை அறிந்தோர் அது செய்யாதிருத்தலின் குற்றம் கூறப்பட்டது.*

*2118.* **தெளிவுரை :-** *அறிவுப் பொருளேயாயினும் ஆணவ மறைப்பால் அவ்வறிவை இழந்து நின்ற உயிரை இறைவன் கருவிக் கூட்டத்துள் மறைந்து நிற்கும்படி செய்தான். (பின்பு அவ்வுயிர் பக்குவம் எய்திய காலத்தில்) குருவாகி வந்து எனக்கு உபதேசித்த நூல்கள் வழியாக என் உடம்பினுள்ளே மறைந்திருந்த பிராசாத கலைகள் பதினாறையும் விளக்கினான்.*

**குறிப்புரை :-** *'அதனால் நான் கருவிக் கூட்டத்தினின்றும் வெளியேறினேன்' என்பது குறிப்பெச்சம்.*

*'ஆரியன் ஒடுங்கிய சித்தினை அறுபத்துள் ஒளித்திட்டு வைத்தான். (பின்பு அவனே) வந்து அளிக்கும் கலைகளினால் என்னுள்ளே ஒளித்திட்டிருக்கும் ஒரு பதினாறை அளித்தனன்' என இயைத்துக் கொள்க.*

*'ஆரியன்' என்பது இரட்டுற மொழிதலாய் முன்பு 'பெரியோன்' எனவும், பின்பு 'ஆசிரியன்' எனவும் இருபொருள் தந்தது. இரண்டாவது பொருட்கு 'ஆகி என ஆக்கச் சொல்' விரித்துரைக்க.*

*'ஒரு பதினாலை' - என்பது படம் அன்று. ஒரு பதினாறு - பிராசாத கலைகள் பதினாறு. அவற்றை உபதேசமுறையான் அன்றி அறிதல் கூடாமையின், 'என்னுள்ளே ஒளித்திட்டிருக்கும் ஒரு பதினாறு' என்றும், அவற்றை அறிந்து அவ்யோகத்தை (பிராசாத யோகத்தை)ச் செய்யவே உடற்கூறுகள் அனைத்தும் இனிது விளங்கி, உயிரினது நிலையும் புலப்படுதல் பற்றி, 'ஆரியன் வந்து அளித்தனன்' - என அப்பேற்றினது சிறப்பையும் கூறினார்.*

*இதனால், யோகிகட்கு அவத்தை பேதங்கள் யாவும் இனிது விளங்குதல் கூறப்பட்டது.*

*2119.* **தெளிவுரை :-** *மண்ணிலிருந்து தோன்றிய பல மலர்களை உடைத்தாய் விளங்குகின்ற நீர், பொன்னிறத்தை உடைத்தாகிய தீயினின்றும் அதற்குப்பின் தோன்றியதாம். இனி அத்தீக் காற்றிலிருந்தும், காற்று ஆகாயத்திலிருந்தும் தோன்றினவாம். புத்தியினின்றும் தோன்றியதாகிய அகங்காரத்திலிருந்து தோன்றியது மனம். இவ்வாறு தூல சூக்கும தேகங்களின் உற்பத்தியைப் பகுத்துப்*

**2119.** மண்ணினில் ஒன்றும் மலர்நீர் மருங்காரும்
பொன்னினில் அங்கி புகழ்வளி ஆகாயம்
மன்னும் மனோபுத்தி ஆங்காரம் ஒரொன்றாய்
உன்னின் முடிந்த தொருபூ தசயமே. **10**

**2120.** முன்னிக் கொருமகன் மூர்த்திக் கிருவர்
வன்னிக்கு மூவர் வதுவைக்கு நால்வர்
கன்னிக்குப் பிள்ளைகள் ஐவர்முன் நாள்இல்லை
கன்னியைக் கன்னியே காதலித் தானே. **11**

---

*பகுத்து உணர்ந்தால், அவற்றை ஒடுக்கி, ஆன்மாத் தூய்மை அடைகின்ற நிலை கைகூடும்.*

*குறிப்புரை :-* எனின், பூதசுத்தி செய்யும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று. மண்ணும், அதில் பொருந்தி பரவியுள்ள நீரும் அந்நீர் தோன்றக் காரணமான பொன் போலும் தீயும், அதன் காரணமாகப் புகழப்படும் காற்றும் அது உலவுதற் கிடமாகிய ஆகாயமும், மனம், புத்தி, அகங்காரங்களும் ஆகிய இவைகள் ஆராயின் ஒன்றன் ஒன்றாக ஒடுங்கிய பூத செயமாகிய பூத சுத்தியாம் என்றவாறு.

ஐம்பூதங்களையும் அவற்றை அறியும் உட்கரணங்களையும் ஒன்றினொன்று ஒடுக்கி உணர்வது பூதசுத்தியாம் என்பது கருத்து.

'தத்வ சுத்திக்காகவும் பூத விகாரங்களைச் சமஞ்செய்வதற்காகவும் நாடொறும் அந்தர்யாகத்தில் பூதசுத்தி செய்க என்பது விதியாதலின் பூதசுத்தியின் இன்றியமையாமை உணர்க. இது ஆதி பௌதிகம், ஆதி தெய்விகம், ஆதியாத்மிகம் என மூவகைப்படும். அவற்றுள் ஆதி பௌதிக பூதசுத்தி முறையே ஈண்ட உணர்த்தப்பெறுகின்றது. இதன் விரிவைச் சிவாக்ர பத்ததி பூதசுத்திப் பிரகரணத்தில் காண்க'. பூதசயம் - பூத காரியமாகிய உடம்பை வென்று மீளும் வெற்றி.

*2120. தெளிவுரை :-* முதன்மையில் உள்ளதாகிய ஆகாயத்திற்கு ஓசையென்ற ஒருமகன். அதினின்று உருக்கொண்ட காற்றுக்கு ஓசையும் ஊறுமாகிய இருவர் மக்கள். காற்றிலிருந்து வந்த தீக்கு ஓசையும் ஊறும் ஒளியுமாகிய மூவரும் மக்களாம். தீயின் மகளாகிய நீருக்கு ஓசை, ஊறு, ஒளி, சுவை என்னும் நால்வரும் மக்கள். கன்னியாய பூமிக்கு சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐவரும் மக்களாம். இங்ஙனம் தன் மாத்திரைகளிலிருந்து பூதங்கள் தோன்றின. ஆதி காலத்திலே தலைவனாகிய சிவன் கன்னியாய மாயையைக் கன்னியாகியே காதலித்தான் என்றவாறு.

இறைவன் மாமாயையைக் கலக்கத் தன் மாத்திரைகளும் பூதங்களும் தோன்றின என்பதாம். முன்னி - முதல்வி. முதலில் எல்லாம் தம்மிடம் விளங்க விரிந்து இடங்கொடுப்பவளாகிய ஆகாயப்பெண். ஒருமகன் - சத்த தன் மாத்திரை.

**2121.** **கண்டகன வைந்தும் கலந்தன தாம்ஐந்தும்**
**உண்டன நான்கும் ஒருங்கே உணர்ந்தபின்**
**பண்டைய னாகிப் பரந்தவச் சாக்கிரத்**
**தண்டமுந் தானாய் அமர்ந்துநின் றானே.** **12**

---

*இவ்வண்ணமே பூதங்களைப் பெண்ணாகவும், தன் மாத்திரைகளை மக்களாகவும் உருவகித்தனர். எல்லாம் இறைவன் மாயையைக் கலக்க வந்தன என்றார். வதுவை - பெண். முன்னாளில் + ஐ எனப் பிரித்து ஆதி காலத்தில் தலைவனாகிய சிவன் எனப் பொருள் கொள்க. காதலித்தார் - சிருட்டியுன் முகமானார்.*

*இதனால், மேற்கூறப்பட்ட பூத சயத்திற்கு அறியற்பாலன சில கூறப்பட்டன.*

*2121. **தெளிவுரை :-** சுழுத்திக்குப் பின் கண்ட கனவிலே செயற்பட்ட ஓசை முதலிய புலன்கள் ஐந்தும், பின்னர்ச் சென்று கலந்த பொறிகள் ஐந்தோடும் கூடியிருக்கும் நிலையில் அப்பொறிகளின் வழியாகப் புறப்பொருள்களை அந்தக்கரணங்கள் நான்கும் உணர்வுறும் நிலைமையை ஒருங்கே அடைந்தபின் புருடன் முன்னை நிலையை அடைந்து, விரிந்து பரந்த சிறந்த சாக்கிராவத்தையை யுடையனாய், உலகமே தானாயது போன்ற வியாபக நிலையைப் பெற்று, வினைகளை நுகர்தலும் ஈட்டலும் செய்திருப்பான். கண்ட கனா ஐந்தாவன. சொப்பனத்தில் சாக்கிரம், சொப்பனத்தில் சொப்பனம், சொப்பனத்தில் சுழுத்தி, சொப்பனத்தில் துரியம், சொப்பனத்தில் துரியாதீதம். கனவு முடிந்து நனவு நிலை அடைந்ததும் காணப்படுகிற இந்தப் பிரம்மாண்டமாகிய காணப்படு பொருளும் காண்பதுமாகிய தானுமாக இருப்பான் சீவன் என்பதாம்.*

***குறிப்புரை :-** ஐந்து, ஐந்து, நான்கு என்னும் எண்கள் அவ்வவ்விடம் பற்றி அவ்வக் கருவிகளை உணர்த்தின. சிறப்புப் பற்றி ஞானேந்திரிய விடயங்களையே கூறினாராயினும் இனம் பற்றிக் கன்மேந்திரிய விடயங்களும் அவற்றிற்குரிய கன்மேந்திரியங்களும், அவற்றிற்கு வலிமை தருகின்ற வாயுக்கள் பத்தும் கொள்ளப்படும். படவே, 'எடுத்துக் கூறிய பதினைந்துடன் இவ்விருபதுங்கூட, அவத்தைக்கு ஏதுவாம் கருவிகள் முப்பத்தைந்து' என்பதும், 'அவற்றால் நிகழ்வது கேவல சாக்கிரம்' என்பதும் விளங்கும். 'அமர்ந்து நின்றான்' - என்னும் பயனிலைக்குத் தோன்றா எழுவாயாய் நின்றது 'புருடன்' என்பதேயாகலின், அதுவும் எடுத்துக் கூறப்பட்டதாயிற்று. மந்தமாய் நிகழினும் ஐம்புலனையும் உணர்தலிற் குறையாமைபற்றி, 'அண்டமும் தானாய் அமர்ந்து நின்றான்' என்றார்.*

*இதனால் அவத்தைக்கு ஏதுவாம் கருவிகள் கூறப்பட்டன.*

*2122. **தெளிவுரை :-** ஞானேந்திரியமும், கன்மேந்திரியமும், அந்தக் கரணங்களும் ஆகிய பதினான்கு கருவிகளோடு கூடிச் சாக்கிரா வத்தையில் நின்ற புருடன், அவ்வாறு நிற்கும் நிலையிற்றானே இரு வகை இந்திரியங்களாகிய பத்துக் கருவிகளை நீக்கிவிட்டு, எஞ்சிய நான்காகிய அந்தக்கரணங்களோடு மட்டும்*

**2122.** **நின்றவன் நிற்கப் பதினாலில் பத்துநீத்து**
**ஒன்றிய அந்தக் கரணங்கள் நான்குடன்**
**மன்று கலந்த மனைவாழ்க்கை வாதனை**
**கன்றிய கண்டத்தில் கண்டான் கனவதே.** **13**

---

***அழுத்தமான கண்டத்தானத்தில் சென்று, முன்பு சாக்கிரத்தில் புருவ நடுவில் நின்று நுகர்ந்த உலக நுகர்ச்சிகளின் வாசனையைக் கனவாகக் காண்பான்.***

***குறிப்புரை :-*** *சுழுத்தியில் சொப்பனம் உணர்த்துதல் நுதலிற்று. முன்னர்த் திருமந்திரத்தில் மொழிந்த வண்ணம் சொப்பனத்தில் சாக்கிரமுணர்வார் நிற்க. சொப்பனத்தில் கலந்துள்ள பதினாலு கருவிகளில் கன்மேந்திரியமும், ஞானேந்திரியமும் ஆன பத்துக் கருவிகளையும் விட்டு, அந்தக் கரணங்கள் நான்குடன், இவ்வுலகத்திலே பயின்ற இல்லற வாழ்க்கையின் வாசனையால், வருந்திய கழுத்தில் கனவு கண்டான் என்றவாறு.*

*அந்தக்கரணம் நான்குடன் ஆன்மா அடங்கிய இதயத்திற்கு மேல் கண்டத்தில் கனவு காண்பான். அது சுழுத்தியில் சொப்பனமாம் என்பது கருத்து.*

*சுழுத்தியில் சொப்பனங்காணல் எங்ஙனம் எனின், கண்டத்தானத்தை விட்டு ஆன்மா கழிக்கவேண்டிய கருவிகளைக் கழித்துச் சுழுத்தித்தானமான இதயத்திற்குச் செல்ல முயல்கின்ற சிறு அவசரம். அங்ஙனமே மார்புத் தானத்தினின்று கிளம்பிக் கண்டத்தையடைய இருக்கும் நிலையும் ஆம். இவ்விரண்டும் சுழுத்தியில் சொப்பனமாம் என்க.*

*கருவிகழன்று உட்கரணங்களோடு இதயத்தானத்திற்குப் போக முயலும் ஆன்மா மீட்டு கண்டத்திற் கனாக் காட்சியை நுகருமோ என்ற ஐயம், உண்மையாக இல்லை. வாசனையால் எனத் தீர்த்தற் பொருட்டு 'மன்று கலந்த மனைவாழ்க்கை வாதனை கண்டத்திற் கண்டான் கனவதே' என்பதாற் கூறப்பெற்றது.*

*2123.* ***தெளிவுரை :-*** *சுழுத்தி அனுபவம் உணர்த்துகிறார். மேற்கூறிய கண்டமாகிய தானத்தை (இடத்தை) விட்டுப்புருடன் கீழ் இறங்கி, அங்ஙனம் இறங்கும் நிலையில், முன்பு இருந்த அந்தக்கரணங்களுள் மானமாகிய அகங்காரத்தையும், மதியாகிய புத்தியையும் விடுத்து, யாதொன்றையும், பற்றி நினைக்க மாட்டாத நிலையையடைந்து, இருதயத்தில் தனியேசென்று, புலன் உணர்வையிழந்து இழப்பு நிலையில் உயிரினது சொரூபமே காணப்படாது கிடக்கும் நிலையே சுழுத்தியவத்தையாம்.*

***குறிப்புரை :-*** *அகங்காரத்தையும், புத்தியையுமே இழந்ததாகக் கூறினமையால், சித்தம் விடப்படாததாயிற்று. நினைத்தல் மனத்தால் ஆகலின், 'நினைக்க மாட்டாது' என்றமையால் மனம் நீங்கினமையும் பெறப்பட்டது.*

**2123.** தானம் இழந்து தனிபுக் கிதயத்து
மானம் அழிந்து மதிகெட்டு மால்ஆகி
ஆன விரிவறி யாஅவ் வியத்தத்தின்
மேனி அழிந்து சுழுத்திய தாமே. **14**

---

*ஆகவே, பெரும்பான்மை பற்றி, 'தனி புக்கு' - என்றாராயினும், 'சித்தத்துடன் புக்கு' என்பதே பொருளாயிற்று. புறப்பொருளைப் பற்றுவது மனமேயாகலின், அஃதில்லையாகவே, 'அதனால் பற்றப்படும் ஞானேந்திரிய விடயங்களும், கன்மேந்திரிய விடயங்களும் இலவாம்' என்பது தானே விளங்கிற்று. தாத்துவிகம் ஆதல்பற்றி, வாயுக்களை நாயனார் கூறாதே விடுத்தலால், பிராணாதி வாயுக்களில் பிராணன் தவிர ஏனை ஒன்பது வாயுக்களும் சொப்பனத்தானத்தோடே நின்று விடுதல் உரையிற் கொள்க. இதனால், சொப்பனத் தானத்தில் செயற்படுவனவாகக் கூறப்பட்ட இருபத்தைந்து கருவிகளில் சத்தாதி விடயங்கள் ஐந்து, வசனாதி விடயங்கள் ஐந்து, வாயுக்கள் ஒன்பது, மனம், புத்தி, அகங்காரம் ஆகிய அந்தக் கரணங்கள் மூன்று ஆக இருபத்திரண்டு கருவிகள் சொப்பனத் தானத்திலே நின்று விட, 'சித்தம், பிராணன், புருடன்' என்னும் மூன்று கருவிகளினாலே இருதயத்தில் சுழுத்தி நிகழும் என்க. சித்தம் செயற்படுதலால் 'சுழுத்தியில் ஆன்மாவிற்கு ஆழ்ந்த சிந்தனை உண்டு' என்பதும், ஆயினும் 'புத்தி' இல்லாமையால் விழித்தபின் 'முன்பு என்ன சிந்தித்தோம்' என்பதை ஆன்மா உணர்வதில்லை - என்பதும் உணர்க.*

*பிராண வாயுவை இயக்குவது அகங்கார தத்துவமே ஆகையால், 'பிராணன் உண்டு' எனவே, 'அதனை இயக்கும் அகங்கார தத்துவம் உண்டு' என்பது பெறப்பட்டதாயினும், அஃது பிராணனை இயக்குவதைத் தவிர, 'நான்' என முனைப்புற்று எழுச்சியாகிய தனது காரியத்தைச் செய்யமாட்டாமையால், நீங்கிய கருவியாகவே எண்ணப்படும்.*

*இதனால், கேவல சுழுத்தியின் இயல்பு கூறப்பட்டது.*

*சுழுத்தியில் ஆன்மா அறியும் கருவிகள் இல்லாமையால் அறியாமையிற் பட்டு, முடமாய்க் கிடப்பதையே ஏகான்மவாதிகள், ஆன்மாச் சுழுத்தியில் பிரம்மானந்தத்தில் அழுந்தியிருப்பதாகக் கூறுவர். 'நிர்க்குணமாகிய சுத்தப்பிரமமே அவிச்சை வசத்தால் சகுணமாகிய பந்தத்தை எய்தும் எனக் கூறுகின்ற அவர்கட்கு, 'பிரம்மானந்தத்தை அடைந்த சீவன் மீட்டும் அதைவிட்டு விடயானந்தத்திற்கு வந்துவிடும்; இந்நிலை அன்றாட நிகழ்ச்சியாகச் சீவனுக்கு மாறி மாறி நிகழும் எனக் கூறுதல் பொருந்தும். 'சிவனை அடைந்து, அவனது இன்பத்தை நுகர்ந்த உயிர், மீட்டும் ஐம்புல இன்பத்தை நோக்கி வருதல் இல்லை. அதனால், சிவன் தன் அடியார்களுக்கு மீண்டு வாரா வழியையே அருள்புரிவான்' எனக் கூறுகின்ற சித்தாந்திகட்கு அது பொருந்தாது - என்பதை விளக்கச் சுழுத்தி நிலையை, 'விரிவு - அறியா அவ்வியத்தம்' என்றார். விரிவு - அறியப்படுவனவாய் விரிந்து கிடக்கும் பொருள்கள். அவ்வியத்தம் - விளங்காமை. 'அவ்வியத்தம்' என்பது காரண*

**2124.** **சுழுனையைச் சேர்ந்துள மூன்றுள தன்காட்சி**
**கெழுமிய சித்தம் பிராணன்தன் காட்சி**
**ஒழுகக் கமலத்தின் உள்ளே யிருந்து**
**விழும்அப் பொருளுடன் மேவிநின் றானே.** **15**

---

*இடுகுறியாய் மூலப் பிரகிருதியைக் குறிப்பதாயினும் இங்குக் காரணக்குறியால் ஒன்றும் விளங்காதநிலையைக் குறித்தது. உலக அனுபவத்தை இழந்துவிடுவதே சிவாநுபவத்தை, அல்லது பிரம்மாநுபவத்தைப் பெற்றுவிடுதல் ஆகிவிடாது. 'ஆகும்' எனின், கட்குடியில் மயங்குவோர், விடம் தலைக்கேறுதல் முதலிய காரணங்களால் மூர்ச்சையுற்றோர் முதலிய பலரும் யாதொரு ஞான ஒழுக்கமும் இல்லாமலே சிவாநுபூதியைப் பெற்றவர் ஆகி விடுவர். ஆகவே, 'சுத்தத்தில் அரிதில் நிகழும் சுழுத்தி, துரியம், துரியாதீதம்' என்பன வேறு; கேவலத்தில் எளிதில் அன்றாட நிகழ்ச்சியாய் நிகழும் சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன வேறு எனவும் தெரிந்துணர்ந்துகொள்க. மேனி - சொரூபம். ஆன்மாவின் சொரூபம் அறிவு.*

*இவ்விடத்தில் கூறப்பட்டுவருவன 'கீழாலவத்தை' எனப்படும் கேவல ஐந்தவத்தைகளேயாம்.*

*2124. **தெளிவுரை :-** துரியாவத்தையின் இயல்பைக் கூறுகிறார். சுழுத்தியில் உள்ள மூன்று கருவிகளுள் புருடனுக்கு அறிவைத் தருவதாகிய சித்தம் நீங்கிப் போக, உந்திக் கமலத்தின்கண் பிராணவாயு ஒன்று மட்டுமே அவனுக்கு அறிவைத் தருவதாய் அமைய அங்கு இருந்துகொண்டு, ஆன்ம தத்துவங்கள் யாவும் தன்கண் வந்து ஒடுங்கநிற்பதாகிய மூலப்பிரகிருதியைத் தான் சிறிது அறிதலை அவன் செய்து கொண்டிருப்பான்.*

***குறிப்புரை :-** அதுவே கேவல துரியமாம். சுழுத்தியை, 'சுழுனை' என்றார். காட்சிக்குக் கருவியாவனவற்றை, 'காட்சி' என்றது ஆகு பெயர். 'பிராணன் தன் காட்சியாக' என ஆக்கம் விரித்து, அத்தொடரை ஈற்றடியில் முதலில் கூட்டுக. ஒழுகுதல் - ஒழுகிப்போதல்; நீங்குதல். 'சித்தம் ஒழுக' - என இயைக்க. 'கமலம்' என்பது இடத்திற்கு ஏற்ப உந்திக் கமலத்தைக் குறித்தது. விழுதல் - வந்து ஒடுங்குதல்.*

*இதனால், புருடன், பிராணன் என்னும் இரு கருவிகளே செயற்பட, ஆன்மா உந்தியில் நிற்றல் கேவல துரியம் அல்லது கீழாலவத்தைத் துரியம் - என்பது கூறப்பட்டது.*

*2125. **தெளிவுரை :-** துரியாதீத நிலையில் உயிர் நிற்கும் இயல்பு உணர்த்தப்படுகிறது. உயிர் தனக்குச் சிறப்பிடமாகிய இருதயத்தினின்றும் புறப்பட்ட வழி அதற்குத் தரப்படும் துரியத்தானத்தில் நின்று பின்பு அதனையும் விட்டு அப்பாற் சென்று, உலகத்தைப் பின் தள்ளிவிட்டு, நாதத்தால் உணர்வு*

**2125.** தானத் தெழுந்து தருந்துரி யத்தினின்
வானத் தெழுந்துபோய் வையம் பிறகிட்டுக்
கானத் தெழுந்த கருத்தின் தலையிலே
ஊனத்த வித்தைவிட் டுமன்நின் றானே. **16**

**2126.** ஊமை யெழுத்தொடு பேசும் எழுத்துறின்
ஆமை யகத்தினில் அஞ்சும் அடங்கிடும்
ஓம்மயம் உற்றது உள்ளொளி பெற்றது
நாம்மயம் அற்றது நாம்அறி யோமே. **17**

---

*விளங்குமாறு நிற்கின்ற குண்டலினி சத்தியின் தலைபொருந்தியுள்ள மூலாதாரத்தை அடைந்து, அவ்விடத்தில் பொருள்களை மயங்கியறிதலாகிய அந்த அறிவும் இன்றி அறிவேயில்லாதது போலக் கிடக்கும்.*

*குறிப்புரை :-* ஆறு ஆதாரங்களும் உயிர்க்கு இடமாயினும் அவற்றுள் இருதயமே சிறந்ததாதல் பற்றியே 'உயிருக்குத் தானம்' என்றார். 'தானத் தினின்றும்' என ஐந்தாவது விரிக்க. 'எழுந்த வழி' என்பது 'எழுந்து' எனத் திரிந்து நின்றது. வாயுவுக்குமேல் உள்ளது வானம் ஆதலின், 'வானத்தெழுந்து' என்றது, பிராண வாயு நீங்கிய நிலையைக் குறிக்கும் குறிப்பு மொழியாய் நின்றது. பிராண வாயுவின் இயக்கமும் இல்லாது போதலின் உயிர் உலக அனுபவத்தைச் சிறிதும் உடைத்தாகாமையை, "வையம் பிறகிட்டு" என்றார், கானம் - நாதம், கருத்து - உணர்வு. அஃது அதனைத் தரும் குண்டலினி சத்தியை உணர்த்திற்று. 'வித்தை' என்பதும் உணர்வே, 'அது மயக்க உணர்வு' என்றற்கு 'ஊனத்த வித்தை' என்றார். ஊனம் - குறை. 'ஊனமாய் நின்றான்' என ஆக்கம் விரித்து, ஆக்கம் உவமை குறித்து நின்றதாக உரைக்க. ஊமனுக்கு உணர் விருப்பினும் அதனை வெளிப்படுத்த மாட்டுவான் அல்லன் ஆதலின், அவன் உணர்வுடையனாயினும் அது செயற்படாத நிலையை உடைய உயிருக்கு உவமையாயினான். காரியமாகிய உலகத்தை நுகராமையின் காரணமாகிய மூலப்பிரகிருதியே அவ்விடத்தில் உயிருக்கு நுகர்ச்சியாவதாம்.

இதனால், 'பிராணவாயுவின் இயக்கமும் இன்றிப் புருடன் மூலாதாரத்தில் மூலப்பிரகிருதியைப் பற்றிக்கொண்டு, வெறும் மூடமாய்க் கிடப்பதே கேவல துரியாதீதம்' என அதனது இயல்பு கூறப்பட்டது. இன்றைய மருத்துவ உலகம் இதை "கோமா" நிலை என்கிறது. உயிர் இருக்கிறது. ஆனால் பிராண வாயு இல்லை. எனவே வென்டிலேட்டர் எனப்படும் காற்றுக்கருவியின் உதவிகொண்டு பிராணவாயு கொடுக்கப்பட்டு உயிர் தீவிர மருத்துவசிகிக்சைப் பிரிவில் போராடிக் கொண்டிருக்கும் நிலை.

*2126. **தெளிவுரை :-*** துரியாதீத நிலையின் அநுபவ இயல் உணர்த்துதல் நுதலிற்று. பேச இயலாத எழுத்தாகிய மகாரத்தோடு பேசும் எழுத்தாகிய அகார

**2127.** துரியம் இறுப்பது சாக்கிரத் துள்ள
நரிகள் பதினாலும் நஞ்சுண்டு செத்தன
பரிய புரவியும் பாறிப் பறந்தது
துரியம் இறந்திடம் சொல்லஒண் ணாதே. **18**

---

*உகாரங்கள் இயையின், ஆமைக்குள்ளே அஞ்சும் அடங்குவது போல ஆன்மாவினுள் ஐந்திந்திரியங்களும் அடங்கும். அப்போது ஆன்மா ஓம் என்னும் எழுத்தின் தன்மையேயாய், உள்ளொளியாய் ஞானம் பெற்றதாகி நாம் என்னுஞ் செருக்கற்று விளங்கும். அதனை யாம் அறியோம் என்றவாறு. ஓம் என்னும் பிரணவத் தியானம் பொருந்தின் பொறியடங்கி பிரணவமே மயமாய் உள்ளொளி பெற்று அகங்காரம் அற்று விளங்கும் என்பதாம்.*

*ஊமை எழுத்து - பேச இயலாத 'ம்' என்னும் எழுத்து. பேசும் எழுத்து - அகார உகாரம். 'யாரும் அறிவர் அகரம் அவன் என்று' என்பனவாகிய பிரமாணங்களால் அகாரம் - சிவம். உகரம் சத்தி எனக் கொள்க.*

*ஆமை - உயிர் அஞ்சு இந்திரியங்கள் ஐந்தும். ஓம் மயம் - பிரணவமயம். நாம் மயம் - அகங்காரம்.*

*'ஊமை எழுத்துடன்' 'ஆமையகத்துள் அஞ்சும் ஒடுங்கிடும்' 'ஊமை மற்றது' 'நாமைய மற்றது' என்பன பாடபேதங்கள்.*

*2127. தெளிவுரை :- சுழுத்தியைக் கடந்து உள்ள 'துரியம், துரியாதீதம்' - என்னும் இரண்டனுள் துரியம், 'எவ்வாறு இருந்தது' என வினாவுபவர்க்கு, 'இவ்வாறு இருந்தது' என விடையிறுக்கக் கூடியதாகும். துரியா தீதமோ எனில், அவ்வாறு வினாவுவார்க்கு இவ்வாறு இருந்தது' எனச் சொல்லவாராத நிலையாகும். ஏனெனில், சாக்கிராவத்தையில் அடக்கினும் அடங்காது, யாதானும் ஓர் ஆற்றால் தப்பிப்புறத்தே ஓடுதலால், 'நரிகள்' என்று சொல்லத்தக்கனவாகிய ஞானேந்திரியம், கன்மேந்திரியம், அந்தக்கரணம் என்னும் பதினான்கு பொறிகளும் உண்டமையால் இறந்து போய்விட்டன. அப்பொறிகளின் வழிச் செல்லும் உணர்விற்கு ஊர்தியாகிய 'பிராணன்' என்னும் குதிரையும் தனது ஓட்டம் அடங்கி ஒழிந்தது. துரியம் இருப்பதும் சாக்கிரத்துள்ளே என்பது சாக்கிராவத்தைக்குரிய 36 கருவிகளுள் பிராணவாயு, புருடன் என்ற 2 கருவிகளுடன் செயல்படுகின்ற துரியம் உள்ளதைத் தெரியப்படுத்துகிறது.*

*குறிப்புரை :- எனவே, நரிகள் பதினான்கு இல்லையென்றாலும் பரி (குதிரை)யின் ஓட்டம் இருந்ததால் துரியநிலை 'இவ்வாறு இருந்தது' எனச் சொல்லத் தக்கதாயிற்று - என்பதாம். 'நான் சுகமாகத் துயின்றேன்' - எனப் பின்பு விழிப்பு நிலையில் கூறுவது, துரிய நிலையில் எய்திய அனுபவத்தையேயாம். அந்த அனுபவமும் அறியப்படாத நிலையே கீழாலவத்தைத் துரியாதீத நிலை என்க. 'இறந்த' என்னும் பெயரெச்சத்து ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று.*

**2128.** மாறா மலம்ஐந்தான் மன்னும் அவத்தையின்
வேறாய மாயா தனுகர ணாதிக்கிங்கு
ஈறாகா தேஎவ் வுயிரும் பிறந்திறந்து
ஆறாத வல்வினை யால்அடி யுண்ணுமே. **19**

**2129.** உண்ணுந்தன் னூடாடாது ஊட்டிடும் மாயையும்
அண்ணல் அருள்பெறல் முத்திய தாவது
நண்ணல் இலாஉயிர் ஞானத்தி னால்பிறந்து
எண்ணுறு ஞானத்தின் ஏர்முத்தி யெய்துமே. **20**

---

*இதனால், கீழாலவத்தைத் துரியாதீத நிலை உயிர் தன்னையும் மறந்திருக்கும் நிலை' - என்பது கூறப்பட்டது.*

*2128.* **தெளிவுரை :-** *முத்தி பெறுங்காறும் விட்டு நீங்காதிருக்கின்ற ஐந்து மலங்களால் நிலைபெறுவதாகிய சகலாவத்தையில் தனியொரு சிறப்பினையுடைய மாயேயமாகிய தனு, கரணம் முதலியவற்றிற்கு இந்தச் சகல நிலையில் முடிவேயில்லாமையால், எல்லாவகையான உயிர்களும் ஒரு பிறப்பில் பிறந்து, பின் அதனை விட்டு நீங்கி, வேறொரு பிறப்பை அடைந்து அலமரும். அதற்குக் காரணம் தனது ஆற்றல் குன்றப்பெறாத வினையே.*

**குறிப்புரை :-** *எனவே, 'அவத்தை பேதங்கள் பெரும்பான்மையாகச் சகலாவத்தையிலே நிகழ்வன' என்பதும், 'அவற்றிற்குக் காரணம் வினையே' என்பதும் கூறியவாறாம். ஆகவே, 'கேவல ஐந்தவத்தை என்பன' - சகலத்திற் கேவல அவத்தைகள் என்றும் சகல ஐந்தவத்தைகள் - என்பன, - 'சகலத்திற் சகல ஐந்தவத்தைகள்' என்றும், 'சுத்த ஐந்தவத்தைகள்' - என்பன, சகலத்தில் சுத்த ஐந்தவத்தைகள்' என்றும் உணரற்பாலன - என்றதாயிற்று. சகலத்திற் சகலம் 'மகாசகலம்' - எனப்படும் இவற்றைக் கூட்டிக்கணக்கிடின் மூவைந்து பதினைந்தாதல் அறிக. இனி, 'யோகாலவத்தைகள் - என்பனவும் சகலத்தில் நிகழ்வனவேயாதலின் அவற்றைக்கூட்ட, சகலத்தில் நிகழும் அவத்தைகள் இருபதாம், அவை நிற்க. தனியே கேவலத்தில் ஐந்தும், தனியே சுத்தத்தில் ஐந்தும் கூட்ட அவத்தைகள் முப்பதாம். 'இவற்றுள் சகலத்தில் நிகழும் அவத்தைகள் பெரும்பாலன' - என்றது உணர்த்துதற்கே' 'மாறா மலம் ஐந்தின் மன்னும் அவத்தையின்' என்றார். கேவலத்தின் மன்னும் மலம் ஆணவம் ஒன்றே. சுத்தத்தில் யாதொரு மலமும் இல்லை. ஆகவே, 'மலம் ஐந்தால் மன்னும் அவத்தை' என்றது சகலாவத்தையாயிற்று. 'கேவலம், சகலம், சுத்தம்' எனக் காரண அவத்தைகள் மூன்று. அவை ஒவ்வொன்றிலும் நிகழும் சாக்கிரம் முதலிய ஐந்தும் காரிய அவத்தைகள் 'ஈறாகாது' என்னும் எதிர்மறை வினையெச்சம் காரணப் பொருட்டாய் நின்றது. மலம் ஐந்து - ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி. ஆணவம் மட்டும் நித்தியமானது. ஏனைய மலங்கள் திருவருள் நோக்கால் அழிதலும் கூடும்.*

**2130.** **அதிமூட நித்திரை ஆணவம் நந்த**
**அதனால் உணர்வோன் அருங்கன்மம் முன்னி**
**இதமான கேவலம் இத்திறம் சென்று**
**பரமாக ஐயவத் தைப்படு வானே.** **21**

---

*இதனால், இயைபுபற்றி, 'அவத்தை' என்பன பலவும் குறிப்பால் தொகுத்துணர்த்தப்பட்டன.*

*2129.* **தெளிவுரை :-** *இன்ப துன்பங்களை வினைக்கு ஏற்றவாறு விளைவித்து நிற்கின்ற மாயேயமாகிய உலகம், அந்த இன்பத் துன்பங்கள் தன்கண் வாதியாதபடி புளியம்பழத்தின் ஓடுபோல ஒட்டற்றுக் கழிய, இறைவனது திருவருளில் தோய்ந்து நிற்றலே முத்தியாகும். (என்றது, சீவன் முத்தி நிலையை, அதுவே சகலத்தில் சுத்தம் - என்க. இந்நிலைமுற்றாகக் கைகூடுதற்கு முன் பிராரத்தமாயினும் நீங்கிவிடுமாயின் அந்த உயிர் மற்றொரு பிறப்பை அடையும்) அத்தகைய உயிர் மற்றொரு பிறப்பை அடையுமாயினும் முன்னை ஞானத்தோடே பிறந்து, அது வழியாக அப்பிறப்பில் அது சீவன் முத்திநிலை முற்றாகக் கைகூடப் பெற்றுப்பின் முடிநிலையாகிய பரமுத்தியை அடையும். உண்ணும் - நுகரும். தன் ஊடாடாது - தன்னை வருத்தாது. ஊடாடல் - வருத்தல்.*

**குறிப்புரை :-** *"ஊட்டிடும் மாயை" என்றதனால் அவை மாயேயமாயின. எனவே, 'மாயேயத்தின் ஒட்டற்று நிற்கும் நிலையும், அதுவும் இன்றி நீங்கி வைந்தவத்தோடு நிற்கும் நிலையுமே சுத்தாவத்தை' என்பதும் கூறியவாறாகும். ஞானத்தினால் பிறந்து - பழம்பிறப்பு வாதனையால் கண்ணப்பர் தோன்றியது போல, சிவஞானத்தோடே பிறத்தல்.*

*ஏர்முத்தி - எழுச்சியையுடைய முத்தி. முடிநிலை முத்தி. 'ஊட்டிடும் மாயையும் உண்ணும் தன் ஊடாடாது அண்ணல் அருள் பெறல் முத்தியதாவது; அவனை நண்ணல் இலா உயிர்' என உரைக்க. ஞானத்தினால் - ஞானத்தினோடு.*

*2130.* **தெளிவுரை :-** *கேவலத்து ஐந்தவத்தையின் இயல்பு கூறுதல். அறிவு சிறிதேனும் தொழிற்படாத, 'ஒரு பேருறக்கம்' எனச் சொல்லத்தக்கது, ஆன்மா ஆணவத்தோடு மட்டும் இருக்கின்ற நிலை (அஃது 'அநாதி கேவலம்' எனப்படும்). பின்பு அந்த ஆணவ மலத்தின் சத்தி மாயையினால் சிறிதே கெட, அந்த மாயை விளக்கும் அளவிற்கு அறிவு விளங்கப் பெற்ற உயிர், நீக்குதற்கரிய வினைக்கு ஈடான உணர்வையே உடையதாம் நிலையில் இன்பம் போல நிகழ்கின்ற அறியாமையில் செல்வதே சகலத்தில் கேவலம். இந்தக் கேவலத்தில்தான் ஆன்மாக் கீழாலவத்தை ஐந்தினையும் அடையும்.*

**குறிப்புரை :-** *ஆணவத்தின் சத்தி கெடுவது மாயையால் ஆதலின அஃது ஆற்றலால் கொள்ளக் கிடந்தது. 'கன்மத்தால் முன்னி' என உருபு விரிக்க. 'கேவலம்' - என்பது 'அறியாமை' என்னும் பொருட்டாய் நின்றது. 'கேவலத்து' என்னும்*

**2131.** ஆசான்முன் னேதுயில் மாண வகரைத்
தேசாய தண்டால் எழுப்பும் செயல்போல்
நேசாய ஈசனும் நீடா ணவத்தரை
ஏசாத மாயாள்தன் னாலே எழுப்புமே. **22**

---

*அத்துச் சாரியை தொகுத்தலாயிற்று. பரம் - மேன்மை. 'பரம் ஆக' - என்றது 'வேறு (கீழ்) ஆகின்ற' என்னும் பொருளைத் தந்தது. ஈற்றடி உயிரெதுகையாயிற்று. நித்திரை - சுழுத்தி. மூடநித்திரை - அறிவிருந்தும் அறியாத நித்திரையாகிய துரிதநிலை. அதிமூட நித்திரை - எழுச்சியேயில்லாத துரியாதீத நிலை. நந்த - பெருக.*

*இதனால், கீழால் அவத்தை' - எனப்படுவன சகலத்தில் நிகழும் கேவல ஐந்தவத்தைகளாம் - என்பது கூறப்பட்டது.*

*2131. **தெளிவுரை :-** அநாதியே பற்றி, இறுதியற்றிருக்கும் ஆணவ மலத்தால் அறிவிழந்து கிடக்கும் உயிர்களைக் கருணையே உருவாய் உள்ள இறைவன் எவ்வாறு அறிவை மறைத்தல் இன்றி, அதனை விளங்கச் செய்வதாகிய மாயை யாகிய பணிப்பெண்ணை விட்டு ஆணவ உறக்கத்தினின்று தட்டி எழுப்பும்படி செய்வான். இது நல்லாசிரியன் ஒருவன் முன்னை நிலையில் சோம்பலால் உறங்கி விடுகின்ற சில மாணவர்களை அவ்வாசிரியன் மாணவர்களது அறிவை வளர்க்கத் தனது கையில் கொண்டுள்ள பிரம்பால் தட்டியெழுப்புதல் போல்வது.*

*__குறிப்புரை :-__ 'ஆசான்எழுப்பும்' என இயைக்க. 'தன்முன்னே துயில் மாணவகரை' என்க. உவமையில் சொல்லளவில் திணை மயங்கின எனினும், பொருளில் மயக்கம் இன்று. நேசம் என்பது கடைக்குறைந்து நின்றது. 'ஆணவத்தரை மாயையால் எழுப்பும்' என்றதனால், 'ஆணவம் சோம்பல்போல உறக்கத்தை விளைவிக்கும்' என்பதும், 'மாயை ஆசான் கைப்பிரம்புபோல உறக்கத்தினின்றும் விழிப்பிக்கும்' என்பதும் பெறப்பட்டன. இன்னும் மாயையை ஆசானது கையில் உள்ள பிரம்போடு உவமித்தமையால், 'அது சிவனுக்கும் பரிக்கிரக சத்தியேயன்றித் தாதான்மிய சத்தியன்று' என்பதும் விளங்கிற்று. இம்மந்திரப் பொருள் உமாபதி தேவரது சதரத்ந சங்கிரக (சென்னைப் பல்கலைக் கழகப் பதிப்பு)த்துள்.*

*"குருர் யதாக்ரதா; சஷ்யாந் ஸுப்தாந் தண்டேந போதயேத் I*
*சவோபி மோஹநீத்ரயாம் ஸுப்தாந் சத்தியா போதயேத் II"*

*எனக் கூறப்பட்டது. அதனைத் துறைமங்கலம் சிவப்பிரகாசர் தமது சதமணி மாலை (செய்யுள் 69)யில்,*

*குரவன் முன்துயில் கொள்ளும்மா ணாக்கனை*
*உரிய கோல்கொண் டுணர்த்துவன்; ஈசனும்*
*துரிய போகத் துயில்கொளு வான்றனை*

**2132.** மஞ்சொடு மந்தா கினிகுடம் ஆம்என
விஞ்சறி வில்லோன் விளம்பும் மிகுமதி
எஞ்சலில் ஒன்றேனும் ஆறுஎன இவ்வுடல்
அஞ்சுணும் மன்னன் அன்றேபோம் அறவே. **23**

---

*அரிய சத்தியி னால்அறி விக்குமே.*

*என மொழிபெயர்த்தார்.*

*சதரத்ந சங்கிரகத்தின் மூலத்திலும், அதன் மொழிபெயர்ப்பிலும், 'சத்தி' எனப் பொதுவாகக் கூறப்பட்டதனை இம்மந்திரத்தில் 'மாயாள்' எனச் சிறப்பாக விளக்கினமை அறியத்தக்கது.*

*இதனால், <u>'கேவலாவத்தைக்குக் காரணம் ஆணவ மலம்'</u> என்பதும், <u>'சகலாவத்தைக்குக் காரணம் மாயை'</u> என்பதும் கூறப்பட்டடன.*

*'ஏசாத மாயை' என்றது, 'அறிவை மறைத்தலைச் செய்யாது, விளக்கத்தைச் செய்வது' என்னும் குறிப்புடையதேயாகும். அதுபற்றி, 'சுத்தமாயை' எனப் பொருள் கூறுதல், 'பிரளயாகலர், சகலர்' என்னும் இவர்கட்குப் பொருந்த மாட்டாது.*

*2132. **தெளிவுரை :-** உடலோடு உயிர்க்குள்ள இயைபினை உவமை முகத்தான் விளக்குதல் நுதலிற்று. மேகமும் கங்கையாறும் குடமும் ஆம் என விஞ்சிய அறிவில்லாதோன் கூறும் மிக்க மதியால் குறைவின்றி அவையனைத்தும் ஒன்றேயென்னும், அக்கருத்து மாறானதென்றறிந்து கொள்ளக்கூடிய நிலையில் இவ்வுடலானது உயிராகிய மன்னவன் தன்னை விட்டுப் போமளவும் ஐந்தவத்தை யினின்று வினைகளை நுகரும் என்றவாறு.*

*உடல் உயிர்கழியும் வரை தூல சூக்கும காரண சரீரங்களினின்று ஐந்தவத்தை எய்தும் என்பதாம்.*

*மஞ்சு - நீர். ஆவிவடிவாய் நிற்கும் காரண நிலை ஆதலின் அது காரண சரீரத்திற்கு உவமிக்கப்பட்டது. மந்தாகினி கங்கையாறு. பல இடங்கட்கும் ஓடிப் பாய்ந்து எல்லாப் புலங்களையும் நிறைவிப்பது. அது எல்லாத் தத்துவங்களோடும் கூடி நின்றுவினைப் போகங்களை நுகர்வதும் விளைவிப்பதுமாகிய தூலசரீரத்திற்கு உவமையாக்கப்படுகிறது. குடம் - குடத்தினளவாகிய நீரையுடைய தாய்க் கொண்டு செலுத்தப்பெறுவது. அது புரியட்டக உடலாகிய சூக்கும சரீரத்திற்கு உவமிக்கப் பெற்றது.*

*இவ்வுடல் மூன்றும் ஒன்றாகவே தோன்றும் சைவ நூல் ஆராய்ச்சியில்லா தோனுக்கு ஆதலின் அவனை விஞ்சு அறிவில்லோன் என்றார். விஞ்சறிவு - கருவி நூலைக் கடந்த சிவஞான உணர்ச்சி. மிகுமதி - குறிப்பு மொழி. மதியற்றவன்*

**2133.** படியுடை மன்னவன் பாய்பரி ஏறி
வடிவுடை மாநகர் தான்வரும் போது
அடியுடை ஐவரும் அங்குறை வோரும்
துடியில்லம் பற்றித் துயின்றனர் தாமே. **24**

---

*என்பது பொருள். எஞ்சல் - குறை. மிகுமதி எனும் என முடிக்க. மாறு என இவ்வுடல் மன்னவன் போமளவு அஞ்சுணும் எனக் கூட்டுக. அஞ்சு - அவத்தை ஐந்து.*

***2133. தெளிவுரை :-*** *இம்மந்திரம் ஒட்டணியாய் நின்று பொருளைத் தருகின்றது. படி - நாடு; என்றது புற உலகத்தை. அதனை இறைவன் ஆணையால் தனதாகக் கொண்டு இன்பத் துன்பங்களை எய்திவரும் உயிரையே. 'உடை மன்னவன்' என்றார். வடிவு - பல உள்ளமைப்புக்கள். மாநகர் - கோநகர்; என்றது உடம்பை. வருதல் - உலாவருதல். என்றது, எல்லா இடங்களிலும் வியாபித்து, எல்லாப் புலன்களையும் உணர்ந்தும் அவற்றிற்கு ஏற்ற எல்லாச் செயல்களையும் செய்தும் வரும் சாக்கிராவத்தையை. அடியுடை ஐவர் - அணுக்கமாய் நிற்கும் அமைச்சர்கள் என்றது, ஞானேந்திரியங்கள் ஐந்தையும், அவற்றால் உணரப்படும் பொருள்கள் அந்தக்கரணங்களாலே தெளிவுபடும் ஆதலின், அந்த அந்தக் கரணங்களும் 'ஐவர்' என்றதிலே அடங்கின. அங்கு உறைவோர் - அமைச்சர்களுக்குக் கீழாய் அரசனது உலாவில் பலவகைப் பணிகளையும் செய்துநிற்கும் பல பணியாளர்கள், என்றது பிற கருவிகளை. இம்முறையை, 'கால் கொடுத்து இருகை மூட்டி' என்னும் ஞானாமிர்த அகவலிலும் காண்க. (அகவல் - 9) இச்சாக்கிர நிலை, "படைகொடு பவனிபோதும் பார் மன்னன்" எனச் சித்தியாரிலும் கூறப்பட்டது. (சுபக். சூ. 4)*

*'மன்னன் உலா வரும்போது அங்கு உறைவோர் துயின்றனர்' என்றதனால், 'துயின்றது, அவன் அந்தப்புரத்தில் சென்றபொழுது' என்பது போந்தது. அந்தப் புரமாவது மூலாதாரம். அந்தப்புரத்தில் அரசன் தன் மனையாளைத் தழுவிக் கிடத்தல், உயிர் மூலப்பிரகிருதியைப் பற்றி அதனை யொழித்துப் பிறிதொன்றையும், அறியாது கிடத்தல். இது சகலத்தில் கேவல துரியாதீத நிலையாகும். 'சகலத்தில் சகல சாக்கிரம் ஆன்மாவின் அறிவு முற்றாகவும், தீவிரமாகவும் செயற்படும் நிலை எனவும் சகலத்தின் கேவல துரியாதீதம் ஆன்மாவின் அறிவு சிறிதும் செயற்படாது மூடமாய் கிடக்கும் நிலை எனவும் உணர்க. முற்றாகவும் தீவிரமாகவும் செயற்படும் நிலைக்கு அரசன் குதிரைமீது ஏறி நகர்வலம் வருவதையும், சிறிதும் செயற்படாது மூடமாய்க் கிடக்கும் நிலைக்கு அரசன் அந்தப்புரத்தில் உறக்கத்தில் ஆழ்ந்து கிடத்தலையும் நூல்களில் உவமையாகக் கூறுதல் மரபாக உள்ளது. இல்லம் - அவரவருக்கு உரிய இடம். 'அவற்றை அடைதற்கு அவர்கள் துடிப்பர்' என்க. 'அரசன் உலாவரும்பொழுது*

**2134.** நேரா மலத்தினை நீடைந் தவத்தையின்
நேரான வாறுன்னி நீடு நனவினில்
நேரா மலம்ஐந்தும் நேரே தரிசித்து
நேராம் பரத்துடன் நிற்பது நித்தமே. **25**

---

*அமைச்சர் முதல் அனைவரும் சுறுசுறுப்பாகச் செயற்படுதல்போலச் சகலத்தில் சகல சாக்கிரத்தில் அனைத்துக் கருவிகளும் நன்கு செயற்படும்' எனவும், 'அரசன் அந்தப்புரத்தில் சென்று உறங்கிவிட்ட பொழுது தனியொரு காவலாளியுங்கூட உறங்கிவிடுதல்போல, உயிருக்குக் காவலாகிய பிராண வாயுவுங் கூட இயங்காது' எனவும் கொள்க. சாக்கிர நிலைக்கு, அரசன் கொலுமண்டபத்தில் அமர்ந்து அரசியலை ஆழ்ந்து நோக்குதலும் உவமையாகச் சொல்லப்படும். 'சாக்கிரத்திற்கு இடம் புருவ நடு' என்பது முன்பே சொல்லப்பட்டது. அதனால் அவ்விடம் அரசனது கொலுமண்டபமாகவும் கூறப்படும். துடியில்லம் - இதயம்.*

*இதனால், சகலத்தில் விளக்க நிலைகளில் உச்சகட்டமானதும், மூடநிலைகளிலும் உச்சகட்டமானதும் சொல்லப்பட்டன. இவற்றாலே இடையில் உள்ளவற்றின் இயல்புகள் தாமே விளங்கும் என்பது பற்றி.*

***2134. தெளிவுரை :-** சகலத்திற் கேவலமாகவும், சகலத்திற் சகலமாகவும் இயல்பாக நிகழ்ந்து வருகின்ற அஞ்சவத்தைகளிலே பாகம் (பக்குவம்) எய்தாத ஆணவமலத்தைச் சகலத்தில் சுத்தமாய் நிகழும் சாக்கிராவத்தையில் பாகம் எய்தியதாக அறிந்து, அதனானே பஞ்ச மலங்களும் பாகமெய்தியவற்றையும் நன்கு கண்டு, எஞ்ஞான்றும் தனது செம்மையினின்றும் திரிதல் இல்லாத மேலான பொருளோடுகூடி நிற்பதே உண்மைச் சுத்தாவத்தையாகும்.*

***குறிப்புரை :-** நீடு ஐந்தவத்தை - நெடுங்காலமாக நிகழ்ந்து வருகின்ற ஐந்தவத்தை என்றதனால் அவை பந்த நிலையில் நிகழும் சகல ஐந்தவத்தை களாயின. இதனை முன்னர்க் கூட்டியுரைக்க. 'நீடு நனவு' என்னும் காலங்கடந்த பெயரெச்சத் தொடர், 'நீடுதற்கு ஏதுவாகிய நனவு' எனப்பொருள் தந்து, சுத்தசாக்கிரத்தைக் குறித்தது. 'ஞானச்செய்தி' - எனப்படும் தச காரியத்துள் முதல் ஆறும் சுத்த சாக்கரமும், ஏனைய நான்கும் சுத்த சொப்பனம் முதலிய நான்குமாம். இவையே சகலத்தில் சுத்தமாம் ஐந்தவத்தைகள். இந்நிலையில் உயிர்தான் தன்னையும், தலைவனையும் அறிதலின் இதுகாறும் அங்ஙனம் அறியாதிருந்தது ஆணவ மலத்தாலே என்பதையும், இப்பொழுது அது நீங்கியதால்தான் இந்த அறிவு நிலை எய்தியதையும் வழியளவையானே தெளிவாக உணரும் ஆதலின் அதனையே, 'நேரா மலத்தை நடு நனவினில் நேரானவாறு உன்னி' என்றார். 'மூலமலத்தின் இயல்பு விளங்கவே, ஏனைய மலங்களின் இயல்புகள் தாமே விளங்க, எல்லா மலங்களின் இயல்பும் விளங்கினவாம்' என்றற்கு 'முன்பு நேராதிருந்த மலம் ஐந்தையும் இப்பொழுது நேரே தரிசித்து' என்றார்.*

*இந்நிலை துகளறு போதத்தில் 'பத்தாம் அவதாரமாகிய கேவலாதீதம்' - எனக் கூறப்பட்டது.*

*சகலத்தில் சுத்தம் நிலையில்லாது மாறி மாறி நிகழ்வதாக, உண்மைச் சுத்தமே நீங்காது நிற்பதாகலின் அதனை 'நித்தம்' என்றார்.*

*இதனால், 'சகலத்தில் நிகழும் ஐந்தவத்தைகளில் சுத்த ஐந்தவத்தைகளும் உள' என்பதும், 'ஆயினும் அவை நிலையற்றனவாக, நிலையானவையாய்ச் சகலத்தோடு தொடர்பு சிறிதும் இல்லாத உண்மைச் சுத்தாவத்தைகளும் உள' என்பதும் கூறப்பட்டன.*

## 4. மத்திய சாக்கிராவத்தை

| | |
|---|---|
| சாக்கிரத்தில் சாக்கிரம் | விடயங்களை நேரே அனுபவித்தல் |
| சாக்கிரத்தில் சொப்பனம் | சுகதுக்கங்கள் வந்த வரலாற்றை நாடி வியந்து நிற்றல் |
| சாக்கிரத்தில் சுழுத்தி | சுகதுக்கத்தில் மூழ்கி நிற்றல் |
| சாக்கிரத்தில் துரியம் | சுகதுக்கம் தோன்றாது பெருமூச்செறிந்து நிற்றல் |
| சாக்கிரத்தில் துரியாதீதம் | சுகதுக்கங்களைக் கேட்ட மாத்திரையால் திடுக்கிட்டுப் பிராண வாயு சீவியாமல் மூர்ச்சித்து மயங்கி நிற்றல் |

*முன்னை அதிகாரம் அவத்தை பேதங்களில் கீழாலவத்தையையே கூறியதாக அமைந்தமையால், அதனையடுத்து மத்தியாலவத்தையைப் பதினாறு மந்திரங்களால் இவ்வதிகாரத்தில் கூறுகின்றார்.*

*'மத்தியாலவத்தை ஐந்தும் சாக்கிரத்தானமாகிய புருவ நடுவிற்றானே நிகழ்தலின் அவற்றை உட்பிரிவாகிய சாக்கிர சாக்கிரம், சாக்கிர சொப்பனம் முதலியனவாக வைத்துக் கண்டு கொள்க' - என்றற்கு அவற்றை 'மத்திய சாக்கிராவத்தை' - என்றார். இம் மத்தியா லவத்தையில் ஆன்மா உலகத்தை நன்கு பற்றி உணரும் ஆகலின், இந்நிலையில் அதற்கு அமைந்த கருவிகள் யாவும் செயற்பட வேண்டியுள்ளது. 'அக்கருவிகள் தொண்ணூற்றாறு, என்பது பற்றிய ஆய்வு முன்னை யதிகாரத்துத் தொடக்க உரையில் காட்டப்பட்டது. ஆகவே, இவ்வதிகாரத்தில் நாயனார் தத்துவ தாத்துவிகங்களாகிய கருவிகளைப் பற்றியும் சிறிது விரித்துக் கூறுவார். மத்தியாலவத்தை ஐந்தும் விழிப்பிலேயே நினைப்பும், மறப்புமாய் மிக விரைவில் நிகழ்தலால் அவற்றை ஏனைய கீழாலவத்தை மேலாலவத்தைபோல எளிதில் உணர இயலாது. அவரவரும் தம் தம் நுண்ணுணர்வினாலே உணர்ந்து கொள்ளல் வேண்டும்.*

**2135.** சாக்கிர சாக்கிரந் தன்னில் திரோதாயி
சாக்கிர சொப்பனந் தன்னிடை மாயேயம்
சாக்கிரந் தன்னிற் சுழுத்திதற் காமியம்
சாக்கிரந் தன்னில் துரியத்து மாயையே. 1

---

*2135. தெளிவுரை :- மத்தியாலவத்தையாகிய சாக்கிர சாக்கிரத்தில் மட்டுமே திரோதானமலம் செயற்படும். (எனவே இந்நிலையில்தான் அனைத்துக் கருவிகளும் செயற்பட, ஆன்மா உலகினை நன்கு உணர்வதாகும்). சாக்கிர சொப்பனத் தளவிலேதான் - அஃதாவது, சாக்கிர சாக்கிரம், சொப்பனம் என்னும் இரண்டில் மட்டுமே ஆன்ம தத்துவம் செயற்படும். (அவற்றுள் சாக்கிரத்தில் மட்டுமே புறக்கருவிகள் செயற்படச் சொப்பனத்தில் அந்தக்கரண நிகழ்ச்சியாகிய சிந்தனை மட்டுமே உளதாகும்). சாக்கிர சுழுத்தியளவில்தான் - அஃதாவது சாக்கிர சாக்கிரம். சாக்கிர சொப்பனம், சாக்கிர சுழுத்தி என்னும் மூன்றளவிலேதான் கன்மங்கள் நிகழும். (எனவே, அந்த மூன்றளவிலேதான் ஆன்மாவிற்குச் சுக*

*துக்கங்கள் விளங்கித் தோன்றும்). சாக்கிர துரியத்தளவில்தான் வித்தியா தத்துவங்கள் செயற்படும். (எனவே, அந்த நான்களவில்தான் ஆன்மாவிற்கு 'யான்' என்னும் தன்னுணர்வு உளதாகும்).*

***குறிப்புரை :-*** *எனவே, சாக்கிர துரியா தீதத்தில் யாதொரு செயற்பாடும் இன்றி, மூச்சும் நின்றுவிட ஆன்மாத்தான் சாக்கிர சாக்கிரத்தில் அறிந்த சுகம், அல்லது துக்கத்திலே தன்னையும் மறந்து, 'அதுவேயாய் அழுந்தியிருக்கும்' என்பது, தானே விளங்கிற்று.*

*ஆன்மாவிற்கு 'யான்' என்னும் தன்னுணர்வு வித்தியா தத்துவத்தாலும், 'இஃது இன்னது' என்றும், இஃது எனது, பிறருடையது என்றும் நிகழ்வதாகிய பிறபொருள் உணர்வு ஆன்ம தத்துவத்தாலும் நிகழும். 'யான், எனது, பிறருடையது' - என்னும் உணர்வுகள் முழு அனுபவங்கள் ஆகா, அவை பொருள்களை உணரும் உணர்வுகளே யாம், அங்ஙனம் பொருள் உணர்வு நிகழ்ந்தபின், ஆன்மா அந்த உணர்வுகள் அனைத்தையும் இழந்து, உணர்ந்த பொருளில் அதுவாய் அழுந்துவதே முழு அனுபவமாகும். உலகப் பொருளில் ஆன்மா அவ்வாறு அழுந்தி நிற்பதே உலகத்தைப் பற்றிய முழு அனுபவமாகும். அதுவே சாக்கிர துரியாதீதம். அதிற் சிறிது குறைந்தன எல்லாம் சாக்கிர துரியம் முதலிய நான்குமாம். இதுவே இம்மந்திரத்தால் கூறப்பட்டது.*

*வித்தியா தத்துவங்களைச் சிவ தத்துவங்கள் செயற்படுத்த, வித்தியா தத்துவங்கள் ஆன்ம தத்துவங்களைச் செயற்படுத்தும். ஆகவே, 'வித்தியா தத்துவங்கள் ஆன்ம தத்துவங்களில் சில பலவற்றைச் செயற்படுத்தாது நிற்கும் நிலைகளே கீழாலவத்தை' எனவும், 'சிவதத்துவங்கள் வித்தியா தத்துவங்களில் சில பலவற்றைச் செயற்படுத்தாது நிற்கும் நிலைகளே மத்தியா லவத்தை' எனவும் உணர்ந்து கொள்க.*

*சித்தாந்த சாத்திரங்களில் கூட, 'மாயேயம்' என இருக்க வேண்டிய பாடங்கள் 'மாமாயை' என்றே மாற்றப்பட்டிருத்தலைக் காணலாம். அவ்வாறே இம்மந்திரத்திலும் சில பிரதிகளில் பாடம் மாற்றப்பட்டுள்ளது.*

*'மாயேயம்' என்பது இங்கு பிரகிருதியின் காரியங்களையே குறித்தது. மூல கன்மமே 'கன்மம்' எனப்பட, அதினின்றும் தோன்றும் நல்வினை தீவினைகளாகிய காரிய கன்மம், 'கான்மியம்' எனப்பட்டுப் பின் 'காமியம்' என மருவி வழங்குகின்றது. ஈற்றடியில் 'மாயை' என்றது அசுத்த மாயையை. அஃது ஆகுபெயராய், அதன் காரியமாகிய வித்தியா தத்துவங்களை உணர்த்திற்று.*

*நான்கடிகளிலும் 'செயற்படும்' என்னும் பயனிலைகள் எஞ்சி நின்றன.*

*இதனால், மத்தியாலவத்தை ஐந்தன் இயல்புகளும் தொகுத்துக் கூறப்பட்டன.*

**2136.** **மாயை எழுப்பும் கலாதியை மற்றதின்**
**ஏய இராகாதி ஏய்ந்த துரியத்துத்**
**தோயும் சுழுமுனை கனாநனா வும்துன்னி**
**ஆயினன் அந்தச் சகலத் துளானே.** **2**

---

*2136. **தெளிவுரை :-** சிவதத்துவம் அனைத்தும் செயற் படாமையால், வித்தியா தத்துவங்களும் செயற்படாது ஒடுங்கிய அதீத நிலைக்குப்பின் மீண்டும் சிவதத்துவங்கள் தொழிற்படத் தொடங்கிய பொழுது வித்தியா தத்துவங்களில் மாயா தத்துவம் எழுந்து, கலை, காலம், நியதி என்னும் மூன்று தத்துவங்களை எழுப்பும். பின்பு கலையினால் வித்தையும், வித்தையால் அராகமும் எழுந்து தொழிற்படும். இவ்வாற்றால் மத்தியாலவத்தைகளில் துரியாதீதம் முதலிய ஐந்தும் நிகழும். அவை ஐந்தும் 'மகாசகலம்' எனப் பொதுப் பெயரைப்பெறும்.*

*__குறிப்புரை :-__ 'வித்தியா தத்துவங்களில் மாயையைத் தவிர யாதொரு தத்துவமும் செயற்படாதநிலை சாக்கிரத்துரியா தீதமும், மாயையோடு காலம் மட்டும் தொழிற்படும் நிலை சாக்கிரத் துரியமும், அவற்றோடு கலை நியதி இவை தொழிற்படும் நிலை சாக்கிரச் சுழுத்தியும், அவற்றோடு வித்தை செயற்படும் நிலை சாக்கிர சொப்பனமும், அவற்றோடு அராகமுங் கூட, சிவதத்துவம், வித்தியா தத்துவம் அனைத்தும் செயற்படும் நிலை சாக்கிர சாக்கிரமும் ஆம்' - எனக் கூறியவாறு. சிவதத்துவங்களும் இவற்றிற்கு ஏற்பச் செயற்படும் என்க.*

*'மாயை எழுப்பும்' - என்றதனால், 'அது பிறிதொன்றையும் எழுப்பாது, தன்னளவில் செயற்பட்டிருந்த நிலை உண்டு' என்பது பெறப்பட்டது.*

*முன்னை மந்திரத்தில், 'சாக்கிர சாக்கிரம் தன்னில் திரோதாயி' - என்றதனாலும், 'சாக்கிர சொப்பனந் தன்னிடை மாயேயம்' என்றதனாலும், 'அந்நிலைகளில் வித்தியா தத்துவங்கள் மேற்கூறிய முறையில் செயற்படும்' என்பது கொள்ளப்படும்.*

*வித்தியாதத்துவங்களைக் காலம் முதலாக வைத்து எண்ணுதல் முறையாயினும், கலை முதலாக வைத்து எண்ணுதலும் உண்டு' என்பதைச் சிவப்பிரகாசம் முதலியவற்றால் அறிக.*

*பின்னர் 'இராகாதி' என வருதலால், 'கலாதி' என்றதில் 'ஆதி' என்றது, நியதியை மட்டுமே தழுவி நின்றது.*

*வித்தை, அராகம் இவை யொழிந்த ஏனையவற்றை முன்னே வேறு பிரித்து ஓதினமையால், 'ஏய்' என்பதில் ஏயப்பட்டன, அவையேயாயின,*

*வித்தியா தத்துவங்கள் பெரும்பாலும் ஒடுங்கினமையால் , சாக்கிரத்தில் அதீதத்தை எய்திய ஆன்மாப் பின்பு அதினின்றும் மீளுதல் வித்தியா தத்துவங்கள் செயற்படுதலாலே, என்பார் முன்னிரண்டடிகளில் சிலவற்றை வகுத்துக்கூறிப்*

**2137.** **மேவிய அந்தன் விழிகட் குருடனாம்**
**ஆவயின் முன்அடிக் காணும் அதுகண்டு**
**மேவும் தடிகொண்டு சொல்லும் விழிபெற**
**மூவயின் ஆன்மா முயலுங் கருமமே.** **3**

---

*பின்னிரண்டடி சிலவற்றைச் சுட்டியொழிந்தார். மாசகலத்தையே இங்கு, 'சகலம்' என்றார். 'இராகாதி ஏய்' என மாற்றி "கனா, நனா" என்பதற்கு முன்னும் 'ஆயினன்' என்பதை இறுதியிலும் கூட்டுக. 'ஆன்மா ஆயினன்' எனத் தோன்றா எழுவாய் வருவித்துக் கொள்க.*

*இதனால், மத்தியாலவத்தைகளில் சிலவற்றினியல்பு வகுத்துக் கூறப்பட்டது.*

*2137.* ***தெளிவுரை :-*** *பிறவிக் குருடன் கண்ணை விழித்து விழித்துப் பார்ப்பினும் யாதொன்றையும் காணமாட்டுவானல்லன். (இது போன்றது சாக்கிர துரியாதீதநிலை அஃதாவது, உணர்வு சிறிதும் இன்றிக் கிடக்கும் நிலையாம்).*

*ஒன்றும் காணப்படாத நிலையில் அக்குருடன் தன் காலின் கீழ்க் கிடப்பதைத் தடவித் தடவிப் பார்ப்பான். (இது போன்றது சாக்கிர துரிய நிலை. அஃதாவது, உணரத் தக்கனவற்றைச் சிறப்பாக அன்றிப் பொதுவாக உணரும் நிலையாம்).*

*தடவிப் பார்த்த குருடனுக்குக் கோல் ஒன்று கிடைத்ததாயின் அதனைத் துணையாகப் பற்றிச் சில இடங்களுக்குச் செல்வான். (இது போன்றது சாக்கிரச் சுழுத்தி நிலை; உணரப்படும் பொருள்களைச் சிந்தனையால் உணரும் நிலையாம்).*

*இதன் பிறகு அக்குருடன்தனக்குக் கண் தெரிவதற்கு வேண்டியவற்றைச் செய்வாரை அணுகி அவர்கட்கு உபசார வார்த்தைகளைச் சொல்வான். (இது போன்றது சாக்கிரச் சொப்பனநிலை. உணரவேண்டுவனவற்றை உணர்தற்கு முனையும் நிலையாகும்).*

*(இறுதியில் குருடன் கண்பெறுதலும் உண்டு. அதுபோன்றதே சாக்கிர சாக்கிரம்) சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னும் மூன்று நிலைகளில்தான் ஆன்மா செயற்பாடுடையதாம். ஏனை இரண்டும் செயலற்ற நிலைகளாம்).*

***குறிப்புரை :-*** *மேவிய - பிறப்பிலே பொருந்திய. விழி கண், நிகழ் கால வினைத்தொகை. 'குருடன்' என்றது, 'பார்க்க இயலாதவன்' என்றதாம். 'காணும்' என்றது, தடவிப் பார்த்தலை, 'தடிகொண்டு மேவும்' எனவும், 'விழிபெற ஆவன சொல்லும்' எனவும் மாற்றியுரைக்க.*

*இங்குக் கூறிய இவ்வியல்புகள் பெரிதும் அதிர்ச்சியைத் தரத்தக்க செய்தியை அறிந்தவுடன் ஆன்மா மூர்ச்சித்துப் பின் தெளிவிடைதலில் நன்கு விளங்கும். அது பற்றி அவற்றையே சிலர் உதாரணமாகக் காட்டினாலும் அவை*

**2138.** மத்திமம் ஒத்த சிலந்தி வலையத்துள்
ஒத்தங் கிருந்தங் குயிருண்ணு மாறுபோல்
அத்தனு ஐம்பொறி ஆடகத் துள்நின்று
சத்தம் முதல்ஐந்தும் தான்உண்ணு மாறே. **4**

---

*மட்டுமே உதாரணங்கள் அல்ல. மிகச் சிறு சிறு செய்திகளிலும் விழிப்பில் இவைகள் இடையறாது நிகழ்வனவேயாம்.*

***இதன் முதல் மூன்று அடிகள் ஒட்டணியாய் அமைந்தன. ஆதலின், இதனால், மேற்கூறியவை உவமைகாட்டித் தெளிவிக்கப்பட்டனவாம்.***

*2138. **தெளிவுரை :-** ஐம்பொறிகளைக் கருவியாக உடைய அந்த உடம்பாகிய ஆடரங்கத்துள் நின்று சத்தம் முதலிய புலன்களை உயிர் நுகரும் முறை, சிலந்தியானது வலைக்குள் ஏற்புடைய இடத்தில் இருந்து கொண்டு, அங்குவந்த உயிர்களை உண்ணும் முறைபோல்வது. ஆதலின், அதற்கு ஏற்புடையன மத்தியாலவத்தைகளே.*

*__குறிப்புரை :-__ 'தான்' என்றது உயிரை. 'தான் சத்தம் முதல் ஐந்தும் உண்ணுமாறு, சிலந்தி உயிர் உண்ணுமாறுபோலும்; ஆதலின் மத்திமம் ஒத்த' எனக் கூட்டி முடிவு செய்க.*

*இறைவன் ஒருங்கிருந்து உணர்த்துமாற்றை விளக்குதல் நுதலிற்று. சிலந்திப் பூச்சியானது, நடுவிலே ஒத்து விளங்கும் கூட்டிலிருந்து, வட்டில் ஒத்துத் தங்கி அதில் வந்து வீழ்கின்ற உயிர்களை உண்பது போலச் சிவமும், ஐம்பொறிகளாகிய அரவுகள் ஆடுகிற உடம்பினுள் இருந்து சத்தாதி புலன்களைத் தானுண்பன் என்றவாறு.*

*சிவம் உடம்பிலிருந்து புலன்களை நுகர்ந்து காட்டுவன் என்பதாம்.*

*சிலந்தி - சிவம். உயிர் உண்ணுதல் - புலன்களை நுகர்ந்துகாட்டுதல். மத்திமம் - கூட்டின் நடுவிலே பூச்சி தங்கும் இடம். சிலந்தி எல்லாப் பக்கத்து இழைகளும் ஒத்துள்ள நடுப் பாகத்திலிருந்து வலையில் வீழும் பூச்சிகளை உண்பது போலச் சிவனும் இவ்வுடம்பினுள் இருந்து புலன்களை நுகர்வன் என்பதாம். அங்ஙனம் அவர்கள் நுகர்தல், விருப்பாலோ - வேண்டுமென்றோ அன்று; உயிர்களும் புலன்களை நுகர்ந்து வினைகளைக் கழிக்கட்டும் என்ற கருணையால் என்க.*

*ஐம்பொறி ஆடு அகம் என்றமையால் ஐம்பொறிகளும் ஐயரவாகக் கருதப்பெற்றன.*

***இதனால், மத்தியாலவத்தையே உயிர் உலகத்தை நன்கு அனுபவிக்கும் நிலையாதல் கூறப்பட்டது. அதுபற்றி இது, 'பிரேரகாவத்தை' - எனப்படும்.***

**2139.** **வைச்சன அச்சு வகையிரு பத்தஞ்சோடு**
**உச்ச முடன் அணை வான்ஒரு வன்னுளன்**
**பிச்சன் பெரியன் பிறப்பிலி என்றென்று**
**நச்சி அவனருள் நான்உய்ந்த வாறே.** **5**

---

*2139.* **தெளிவுரை :-** *உயிர்களுக்கு உதவியாக அவைகளின் வசமாக வைக்கப்பட்ட கருவிகள் இருபத்தஞ்சு. எனினும், (அவைகளை வைத்து மட்டும் போதாமையால்) எல்லாவற்றையும் நடத்தும் தலைமைப்பாட்டோடு உடனாய், நீங்காது ஒருவன் இருக்கின்றான். அவனை எல்லா நூல்களும் ஒருமுகமாக, 'பித்தன்' என்றும் 'பெரியோன்' என்றும் 'பிறப்பிலி' என்றும் கூறுதலையறிந்து, அவனையே விரும்பி நான் உய்த்தவாறு குறிக்கொளத்தக்கதாகும்.*

**குறிப்புரை :-** *இருபத்தஞ்சு கருவிகளாவன, ஆன்மதத்துவம் இருபத்து நான்கும், புருட தத்துவம் ஒன்றுமாம். வித்தியா தத்துவங்கள் அனைத்தும் 'புருடன்' என ஒன்றாக அடக்கப்பட்டன. ஆன்மாக்களுடன் இறைவன் கருவிகளைக் கூட்டினால் மட்டும் போதாது. செயல்தோறும் அவனும் உடன் இயங்கினால்தான் உயிர்கள் அக்கருவிகளால் அடையத் தக்க பயனை அடையும். அதுபற்றி இறைவன் அவ்வாறு உடன் நிற்றலையே இம்மந்திரத்தால் குறித்தார்.*

*இறைவன் இவ்வாறு உடனாய் நிற்கும் நிலை, பெத்த காலத்தில் மத்தியாலவத்தையிலே சிறப்பாக நிகழ்தலால், அவ்வவத்தை 'உணர்த்து முறைமை' - எனப்படுகின்றது. ஆகவே அதனை இங்குக் குறித்தல் முறைமையாகின்றது. ஈற்றில் உரைக்கப்பட்டது சொல்லெச்சம்.*

*இறைவன் இங்ஙனம் உடனாய் நிற்கும் நிலை சிவஞான போதம் பதினொன்றாம் சூத்திரத்தில் 'காணும் உபகாரம்' என இனிது விளக்கப்பட்டது.*

*'இங்ஙனம் உடனாய் நிற்பவனைப் பிற தேவராக உணராது, சிவபெருமானாகவே உணர்தல் வேண்டும்' என்பதையே பின்னிரண்டடிகளால் கூறினார். 'பிச்சன், பிறப்பிலி, பேர் நந்தி' என அப்பரும் அருளிச் செய்தார். (தி.4 ப.80 பா.4) 'அவனருள் நச்சி' என மாற்றியுரைக்க.*

*'இருபத்தஞ்சு' - என்றதை மாகேசுர மூர்த்தமாகக் கொள்ளுதற்கு, இங்கு யாதோர் இயைபும் இல்லாமை யறிக.*

*இதனால், மத்தியாலவத்தை பற்றி அறியத்தக்கதொரு சிறப்புப் பொருள் கூறப்பட்டது.*

*2140.* **தெளிவுரை :-** *'சாங்கியர் கூறும் நிலம் முதல் மூலப் பகுதி ஈறான இருபத்து நான்கு தத்துவங்களுடன் அவர் இருபத்தைந்தாவதாகக் கூறுகின்ற புருடனையும் ஒரு தத்துவமாகக் கூட்ட, சாங்கியர் கொள்கையினின்றும் வேறான இருபத்தைந்து தத்துவங்கள் உளவாகின்றன. அவற்றிற்கு மேல் உண்மையில்*

**2140.** நாலா றுடன்புருடன் நற்றத் துவம்உடன்
வேறான ஐயைந்து மெய்ப்புரு டன்பரம்
கூறா வியோமம் பரம் – எனக் கொண்டனன்
வேறான நாலேழு வேதாந்தி தத்வமே. **6**

---

*'புருடன்' எனச் சொல்லத்தக்க ஈசுரனும் அவனுக்கும் மேலான, சொல்லுக்கு எட்டாத பராகாயமும், அதற்குமேல் பரப்பிரமமும் ஆகத்தத்துவம் இருபத்தெட்டு' எனத் 'தத்துவ எண்ணிக்கையை இவ்வாறு கொள்வதே சிறப்பு' என வேதாந்திகள் கூறுகின்றனர்.*

*குறிப்புரை :- 'வேதாந்திகளது கொள்கையை உணர்ந்தாலன்றிச் சித்தாந்திகளது கொள்கையின் சிறப்பு விளங்கமாட்டாது' என்பது பற்றி அதனைக் கூறினார். 'உடன்' இரண்டில் பின்னது 'தொகை' என்னும் பொருளது.*

*சாங்கியர் 'புருடன்' எனக் கூறுவதே சிவன் - என்பது வேதாந்திகள் கருத்து. அதனினின்றும் பிரித்தற்கு ஈசுரனை 'மெய்ப்புருடன்' என்றார். இதனையடுத்து, 'பரம்' என்றது 'மேல்' என்றபடி. 'வியோமம், ஆகாயம்' என்பன ஒரு பொருட் சொற்களாயினும் பூதாகாயம் அல்லாது, எல்லாவற்றிற்கும் மேலே உள்ள பராகாயமே சிறப்பாக, 'வியோமம்' எனப்படும்.*

*சித்தாந்தத்தில் சிவனது சத்தியே பராகாயமாம். ஞான மயமாய் இருத்தல் பற்றி 'சிதாகாசம்' எனப்படும். 'சிற்பர வியோமம்' (தி.12 தில்லை வாழந்தணர் புராணம் - 2) என்றார் சேக்கிழார்.*

*'எல்லாப் பொருள்கட்கும் இடங்கொடுத்து நிற்கும் பூதா காயம் போல, பிரகிருதி முதலாகிய அனைத்திற்கும் மேலாய் உள்ளது பராகாயம்' என்பது வேதாந்திகள் கொள்கை. அதனை, அனிர் வசனீயம்' - என அவர் கூறுதல் பற்றி அதனை, 'கூறா வியோமம்' என்றார். இதன் பின், பரம் என்றது, 'பரம்பொருள்' - என்றபடி. இறுதியில் 'வேறான' - என்றது, 'சிறப்பான' என்றதாம். 'வேறான தத்துவம் நாலேழு என வேதாந்தி கொண்டனன்' என்க. இம்மந்திரம் இரு விகற்பமாய் வந்தது.*

*மத்தியாலவத்தையில் வைத்துத் தத்துவங்களைக் கூறுவார். வேதாந்திகள் கூறும் தத்துவ முறைமையை இதனாற் கூறினார்.*

*2141.* ***தெளிவுரை :-*** *உயிர் (ஏலாத நிலைகளின் நீங்கி) ஏற்புடையதாகிய அழகிய நிலையைத் தலைப்பட்டபொழுது, இடைகலை, பிங்கலை நாடிகள் வழியாக இயங்குகின்ற காற்றோடு பொருந்தி அவற்றின் வடிவாகி, அப்பொழுதே இராசத சத்துவ தாமத குணங்களிலும் பொருந்திக் (கீழ்நோக்கிச் சென்று) மூலாதாரத்தையடைந்து, அங்கே உள்ள குண்டலினி சத்தியின் கீழ் நோக்கு நிலையை மாற்றி மேல்நோக்கி எழச் செய்து, பின்பு பிருதிவிமண்டலம், அப்பு*

**2141.** ஏலங்கொண் டாங்கே இடையொடு பிங்கலை
கோலங்கொண் டாங்கே குணத்தி னுடன்புக்கு
மூலங்கொண் டாங்கே முறுக்கிமுக் கோணிலும்
காலங்கொண் டானடி காணலு மாமே. 7

---

*மண்டலம், தேயு மண்டலம் ஆகிய மூன்று மண்டலங்களிலும் மேற்கூறிய முக்குண வடிவாய் உள்ள மும்மூர்த்திகளிடமாக இறைவனைத் தரிசித்தல் கூடும்.*

*குறிப்புரை :- ஏற்புடைய நிலையே அழகிது ஆதலின் அதனை 'ஏல் அம்' என்றார். அம் - அழகு. அஃது ஆகுபெயராய், அழகியதாகிய நிலையைக் குறித்தது. அழகிய நிலையாவது யோகாவத்தை. அட்டாங்கத்தில் இயமம் முதலிய நான்கும் 'யோக சாக்கிரம்' என ஒன்றாய் அடங்கும். ஏனைய பிரத்தியாகாரம் முதலிய நான்கும் யோக சொப்பனம், யோக சுழுத்தி, யோக துரியம், யோக துரியாதீதம் என்பனவாய் அமையும். இவை ஐந்துமே சிறப்பாக, 'மேலாலவத்தை' எனப்படும்.*

*யோகநூலார் இவற்றையே 'மலம் நீங்கிய நின்மலாவத்தை' எனக் கூறுவராயினும்' ஒளியாலன்றி இருள் நீங்காதவாறு போல, ஞானத்தாலன்றி, மலம் நீங்காது ஆதலின், ஞானாவத்தைகளே நின்மலாவத்தையாம். இதனை,*

> *"யோகில் தருவதோர் சமாதி தானும்*
> *தாழ்ந்துபின் சனனம் சாரும்"*

*எனச் சிவஞான சித்தி (சுபக்கம் சூ. 4. 34) இனிது விளக்கிற்று. தாழ்தலாவது, கீழ் நிலையை அடைதல். இவை இங்ஙனமாயினும் நின்மலாவத்தையில் சேர்க்கும் ஆற்றலுடையன ஆகலின் 'ஏற்புடைய அழகிய நிலை' எனப்பட்டன. கீழாலவத்தையும், இத்தன்மை இலவாதல் அறிக.*

*உயிர் சார்ந்ததன் வண்ணமாம் இயல்புடையது ஆதலின் 'இடையொடு பிங்கலை கோலங் கொண்டு' என்றார். இடையும், பிங்கலையும் அவை வழியாக இயங்குகின்ற காற்றைக் குறித்தலால் ஆகுபெயர்கள். உடல் உள்ள அளவும் முக்குணங்கள் நீங்கா ஆதலின் ஆன்மா அவற்றினுட் புகவேண்டியதாயிற்று. முறுக்குதல் - திசை மாற்ற வைத்தல். 'கோண்' என்றது, 'மண்டலம்' என்றபடி. பிராசாத நிலையில் நிராதாரத்தை உட்கொண்டு முதலில் உள்ளது அக்கினி மண்டலமாகச் சொல்லப்படினும் ஆதார யோகத்தில் பிரமனை நோக்கி முதலில் உள்ளதைப் பிருதிவி மண்டலமாகக் கூறினார். ஆதாரங்களில் காணப்படுபவர்கள் குணமூர்த்திகளேயாயினும் அவர்களை நிர்க்குண மூர்த்தியாகிய சிவனது விபூதிகளாகவே உணர்தல் வேண்டும் என்றற்கு,*

> *"காலம் கொண்டான் அடி காணலும் ஆமே"*

*என்றார். உம்மை சிறப்பு. அதனானே யோகாவத்தையின் சிறப்பு விளங்கும். காலம் கொண்டான் - காலத்திற்கு உட்படாமல் அதனைத் தன் செயலுக்குக் கருவியாகக் கொண்டவன் சிவன்.*

**2142.** நாடிகள் பத்தும் நலந்திகழ் வாயுவும்
ஓடிய காலின் ஒடுங்கி யிருந்திடும்
கூடிய காமம் குறிக்கும் இரதமும்
நாடிய நல்ல மனமும் உடலிலே. **8**

---

*"காலமும் கடவுள் ஏவலால் துணைக் காரணங்காண்"*

*என்றது சிவஞான சித்தி. (சுபக்கம். சூ. 1. 10)*

*'அவத்தை' எனப்படுவன மேற்கூறிய, 'கீழாலவத்தை, மத்தியாலவத்தை' - என்பனவேயன்றி, மேலாலவத்தையாகிய யோகாவத்தையும் உண்டு - என்பதை இதனாற் கூறினார்.*

*2142. **தெளிவுரை :-** நாடிகள் பத்தும் (நாடிகள் 10 - அத்தி, அலம்புடை, இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, குருதை, சங்கினி, சிகுவை, புருடன்) நன்மை விளங்குகின்ற வாயுக்கள் பத்தும் நாடிகளில் சிறப்புடைய, 'இடை, பிங்கலை, என்னும் இரு நாடிகள் வழியாக இயங்குகின்ற 'பிராணன்' என்னும் வாயுவிற்குக் கீழ்ப்பட்டு, அவற்றின் வழி நிற்கும். ஆணும், பெண்ணும் கூடியதனால் விளைகின்ற இன்பத்தில் உயிர் மூழ்குதற்குக் காரணமான சுக்கில சோணிதங்களும், அவ்வின்பத்தை விரும்புவதாய் அன்பைச் செய்கின்ற மனமும் உடல் முழுவதுமாய் இருக்கும்.*

*குறிப்புரை :- நாடிகள் பத்தும் தூல உடம்பிற்கு உறுப்பாய் அமைவன.*

*'பத்தும்' - என்பது, 'வாயு' என்றதனோடும் சென்று இயைந்தது. வாயுக்கள் பத்தாவன. 'பிராணன், அபானன், உதானன், சமானன், வியானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன்' - என்பன. 'நாடிகளாலும், வாயுக்களாலும் உடல் உருப்பெற்று நிலைபெறுகின்றன' எனவும், 'உடலை மனம் பற்றி உலாவுதலால் இன்பம் விளைகின்றது' எனவும் கூறியதனால், தூலமும், சூக்குமமும், பரமும் ஆகிய உடம்பாய் உள்ள கருவிகளின் கூடுதல் குறைதல்களாலே அவத்தைகள் பலவாய் நிகழ்கின்றன' என்பது உணர்த்தியவாறு.*

*இதனால், அவத்தை பேதங்கட்குக் காரணம் குறிப்பால் உணர்த்தப்பட்டது. ஒடுங்கியிருந்திடும்' என்பதை இறுதியிலும் கொண்டு கூட்டுக.*

*(இரண்டாம் தந்திரத்து, 'பாத்திரம்' - என்னும் தலைப்பில் வந்துள்ள 'ஆவன ஆவ' என்னும் மந்திரம் (பா. 496) பதிப்புக்களில் இதனையடுத்துக் காணப்படுகின்றது).*

*2143. **தெளிவுரை :-** ('வேதாந்திகள் கொள்வன' - என மேற்கூறப்பட்ட) தத்துவங்கள் இருபத்தெட்டு என்னும் தொகை, தூலபூதம் ஐந்து, சூக்கும பூதம் (தன்மாத்திரை) ஐந்து, ஆகிய பூதங்கள் பத்தும், ஞானேந்திரியம் ஐந்து,*

**2143.** பத்தொடு பத்தும் ஓர் மூன்றும் பகுதியும்
உய்த்த துரியமும் உள்ளுணர் காலமும்
மெய்த்த வியோமமும் மேலைத் துரியமும்
தத்துவம் நாலேழ் எனஉன்னத் தக்கதே. **9**

---

*கன்மேந்திரியம் ஐந்து ஆகிய இந்திரியங்கள் பத்தும், 'மனம், அகங்காரம், புத்தி' - என்னும் அந்தக் கரணங்கள் மூன்றும், மூலப்பகுதி ஒன்றும் ஆகிய சடங்கள் இருபத்து நான்கும், அவற்றிற்கு மேல் அபர துரியமாகிய புருடன், அல்லது சீவன் ஒன்றும், அதற்குமேல் காலத்தின் வாயிலாக எல்லாவற்றையும் இயக்குகின்ற ஈசுரன் ஒருவனும், அவனுக்கு மேலேயுள்ள மாயையாகிய பராகாசமும், அவனுக்கு மேல் பரதுரியமாகிய பரம்பொருள் ஒன்றும் எனக் கருதத் தக்கதாகும்.*

*குறிப்புரை :- சித்தம் மூலப்பகுதியுள் அடங்கிற்று. 'பராகாயம்' என்பதற்கு 'மெய்த்த வியோமம்' என்றார். ஈசுரனை மாயைக்கு உட்பட்டவனாகவே வேதாந்திகள் கொள்வர்.*

*இதனால் மேல் எண்ணளவாகக் கூறிய வேதாந்தி தத்துவங்கள் இவை என்பது விளக்கப்பட்டது.*

*2144. தெளிவுரை :- முந்நூறு, அதனுடன் முப்பதொருபான்; அஃதாவது முந்நூறு, இரண்டும் கூட அறுநூறு. தளம் - படி. இரட்டியதாகிய ஆறு. ஆறாறு = முப்பத்தாறு, அறுநூற்றை முப்பத்தாறு படியாக உறழ வருவது இருபத்தோராயிரத்து அறுநூறு. இஃது ஒரு நாளைக்கு வெளிச்சென்றும், உட்புகுந்தும் நடக்கின்ற மூச்சின் எண்ணிக்கையாகும். இவ்வாறு வாயு - பிராணன், எழுந்து நடந்தால், உயிரைப் பற்றியுள்ள பஞ்சமலங்களும் தம் தம் வேலையைச் செய்யும். அப்பொழுது தான் மாயா காரியமாகிய தத்துவங்களின் செயல்களும் விளங்குவனவாம்.*

*குறிப்புரை :- 'உடம்பில் உயிர் நிலை பெறுதற்குப் பிராண வாயுவினது இயக்கமே இன்றியமையாக் காரணமாய் இருத்தலின், அவ்வியக்கம் உள்ளதனால் தான் தத்துவங்கள் காரணமாக அவத்தைகள் நிகழ்கின்றன' என்றவாறு. துரியாதீத நிலையில் உயிர்ப்பு அடங்குதலால் மேற்கூறிய எண்ணிக்கையில் சில குறையலாம். உயிர்ப்பு அடங்கிய நிலையில் உயிர் கேவலத்திலே கிடக்கும். மூன்றாம் அடி இன எதுகை பெற்று வந்தது.*

*இதனால், 'அவத்தை பேதங்கட்கு உயிர்ப்பு ஓர் இன்றியமையாக் கருவி' என்பதும், அவ்வுயிர்ப்பின் நிலைகளும் கூறப்பட்டன.*

*2145. தெளிவுரை :- 'நாலுகோடியே நாற்பத்தெண்ணாயிரத்து ஐந்நூறு' என்பது முற்கூறிய எண்ணிக்கையில் உயிர்ப்பு இயங்கும் இயக்கத் தொகை,*

**2144.** விளங்கிடும் முந்நூறு முப்ப தொருபான்
தளங்கொள் இரட்டியது ஆறு நடந்தால்
வழங்கிடும் ஐம்மலம் வாயு எழுந்து
விளங்கிடும் அவ்வழித் தத்துவம் நின்றே. **10**

**2145.** நாலொரு கோடியே நாற்பத் தெண்ணாயிரம்
மேலும்ஓர் ஐந்நூறு வேறாய் அடங்கிடும்
பால்அவை தொண்ணூற்றோ டாறுட் படும்அவை
கோலிய ஐயைந்து ளாகும் குறிக்கிலே. **11**

**2146.** ஆகின்ற தொண்ணூற்றோ டாறும் பொதுஎன்பர்
ஆகின்ற ஆறாறு அருஞ்சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ்வே தாந்திக்கு வைணவர்க்கு
ஆகின்ற நாலாறுஐ யைந்துமாயா வாதிக்கே. **12**

---

*அத்தொகையளவு, சிறிதே ஏற்றம் உள்ள ஐந்தாண்டுகளாம். (எனவே, அந்த அளவு மூச்சு, உடல் வளர்வற்குத்தவிர, உயிர்க்கு யாதும் பயன்தருவன அல்லவாம்). இனி, 'மூச்சு இயங்கும் காலத்தில் விளங்கிடும்' எனப்பட்ட தத்துவங்கள் தொண்ணூற்றா றாகும். எனினும், அவற்றை இருபத்தைந்தில் அடக்குவார் உளர்.*

*குறிப்புரை :- தத்துவங்களைப் பற்றிக் கூறிவரும் தொடர்ச்சிக்கு இடையில் அவற்றோடு இயைபுடைய உயிர்ப்பியல்புகள் சிறிது இடம் பெற்றன. 'ஐயைந்துள் ஆகம்' என்றது பிறன் கோட் கூறல். கோலிய - வரையறுத்த. 'பால் அவை' என்றதில் 'அவை' என்றது மேற்கூறிய தத்துவங்களை. தத்துவங்கள் விரியான் 40048500. அவற்றை அடக்கிக்கூறின் 96. இன்னுஞ் சுருக்கினால் 25 என்றும் கொள்வர்.*

*2146. தெளிவுரை :- சமயவாதிகளுக்கு உரிய தத்துவத்தொகை உணர்த்துதல் நுதலிற்று. மாயையினின்று தோன்றுகின்ற தத்துவங்கள் பொது வகையான் தொண்ணூற்றாறு இவை பொது என்பர். உயரிய சைவர்களுக்கு உரிய தத்துவங்கள் ஆகின்ற முப்பத்தாறென்பர். வேதாந்திகட்கு உரியன இருபத்தெட்டு என்பர். வைணவர்க்கு இருபத்து நான்கு என்பர். மாயாவாதிகளுக்கு இருபத்தைந்து என்பர் என்றவாறு.*

*குறிப்புரை :- சித்தாந்த சைவர் கூறும் 36 தத்துவங்கள், ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும், வித்யா தத்துவம் ஏழும், சிவ தத்துவம் ஐந்தும் ஆக 36. வேதாந்திகட்கு உரியது இருபத்தெட்டு.*

*2147. தெளிவுரை :- 'மெய்' என்பன யாவும் ஒருவனது அறிவினுள்ளே அடங்கித் தோன்றுமாயின் அவன் ஏனையோர் பலரினும் திறம் மிக உடையனாய்*

**2147.** தத்துவ மானவை தன்வழி நின்றிடில்
வித்தக னாகி விளங்கி யிருக்கலாம்
பொய்த்தவ மானவை போயிடும் அவ்வழி
தத்துவ மாவது அகார எழுத்தே. **13**

**2148.** அறிவொன் றிலாதன ஐயேழும் ஒன்றும்
அறிகின்ற என்னை அறியா திருந்தேன்
அறிகின்ற நீஎன் றருள்செய்தான் நந்தி:
அறிகின்ற நான்என் றறிந்துகொண் டேனே. **14**

---

*விளங்கலாம். அப்பொழுது பயனில்லாத செயல்கள் யாவும் ஒழிந்து, பயனுள்ள செயல் கைவரும். அங்ஙனம் உணரப்படும் மெய்களில் நாதம் தலையாயது.*

*குறிப்புரை :- மெய்ம்மையை அறியும்பொழுதே பொய்மை பொய்மையாதல் விளங்கும். ஆதலின், 'தத்துவமானவை தன்வழி நின்றிடில் பொய்த்தவமாம் அவை போயிடும்' என்றார். பயனில்லாத செயல்களை, 'தவம் என்றது இழித்தற் குறிப்பு. சொல்லும் பொருளு மாகிய இருவகைப் பொருள்களில் சொல்லைத் தனது அறிவினின்றும் வேறு பிரித்துக் காணுதல் அரிதாதல் பற்றி 'தத்துவமானது அதுவே' என்றார். தன்னைக்கண்டால் போக்கொடு வரவு இறப்பும் விகாரமும் புருடன் இன்றாம்' என்பது சிவஞானசித்தி (சுபக்கம். சூ. 1. 23). நாதத்தை அகாரமாகக் கூறுதல் மரபு.*

*இதனால், தத்துவ ஞானமே பந்தம் நீங்குதற்கு வழியாதல் கூறப்பட்டது. 'ஐந்தின் வகைதெரிவான் கட்டே யுலகு' என்றார் திருவள்ளுவரும். (திருக்குறள், 27)*

*2148. **தெளிவுரை :-** 'நான் எது' என்று தொடங்கி, முப்பத்தாறு தத்துவங்களையும் நிலம் முதல் நாதம் ஈறாக, ஒவ்வொன்றாக ஆராய்ந்து வந்த பொழுது, அவை அனைத்துமே சடமாய் இருத்தலால், 'யான்' என்றும், 'எனது' என்றும் உணரும் உணர்வுகளையுடைய நான் அவைகளில் ஒன்றேனும் அல்லாமை புறப்பட்டது. ஆயினும் 'அவ்வுணர்வினையுடைய நான் எது' என உணர இயலாமலே திகைத்திருந்தேன். அப்பொழுது நந்தி பெருமான், 'முப்பத்தாறு தத்துவங்களும் சடம்' என்றும், 'நான் அவைகளில் ஒன்றேனும் அல்லேன்' என்றும் உணர்ந்தது எது? அதுதான் நீ என்றும் உணர்த்தினார். அதன் பின் நான் அவ்வாறே உணர்ந்து மெய்யுணர்வு உடையனாயினேன்.*

*குறிப்புரை :- ஆன்மாத் தன்னைப் பிற பொருள்களை உணர்தல் போலத் தன்னினும், பிறவற்றினும் வேறாகப் பிரித்து எதிர்ப்படுத்தி வைத்து உணர்தல் இயலாது' என்பதும், பிற பொருள்களின் இயல்பை உணரும் முகத்தானே, 'அவ்வுணர்வையுடைய பொருளே நான்' என அனுமித்தே உணர்தல் வேண்டும்*

**2149.** சாக்கிர சாக்கிர மாதிதனில் ஐந்தும்
ஆக்கு மாலவத்தை ஐந்தும் நனவாதி
போக்கிச் சிவத்தொடும் பொய்யான ஆறாறும்
நீக்கி நெறிநின்றோன் தானாகி நிற்குமே. **15**

---

*- என்பதும் கூறியவாறு. இஃது அறியாமையைப் பின்னர்த் தோன்றிய அறிவைக் கொண்டே அனுமித்துணர்தல் போல்வது. உலகில் ஒருவன் பிறரையும், பிற பொருளையும் எதிர்ப்படுத்திப் பார்த்தல் கூடும். ஆயினும், தன் முகத்தைத்தான் அவ்வாறு பார்க்க இயலாது. கண்ணாடி வழியாகவே பார்க்க இயலும். 'அது போல்வது இது' என்றும் கூறலாம்.*

*'என்முகம் எப்படியிருக்கிறது' என எண்ணி அலமருகின்ற ஒருவனும் அறிவுடையான் ஒருவன் கண்ணாடியைக் கொடுத்துக் காட்டிச் செய்வது போல, 'நான் எது' எனத் தேடி அலைகின்ற பக்குவான்மாவிற்குச் சிவன் குருவாகி வந்து, 'பிற பொருள்களை அறிந்து வருபவன் யாரோ, அவன்தான் நீ' என உணர்த்தி அருளுவான் - என்பதையே பின்னிரண்டடிகளால் கூறினார்.*

*'ஆன்மா - அருவுருவாய்த்*
*தோன்றிஉடன் நில்லாது; தோன்றாது நில்லாது;*
*தோன்றல்மலர் மணம்போல் தொக்கு'*

*- சிவஞானபோதம், சூ. 7. அதி. 3.*

*என மெய்கண்ட தேவரும் அருளிச்செய்தார். தத்துவங்கள் அனைத்தும் சடம். யான் சித்து என்பதை நித்திய சித்தாகிய சிவம் உணர்த்த உணர்ந்தேன் என்பது கருதி விளக்குகிறார்.*

*இதனால், 'பொருளியல்புகளை உணர்ந்துவரும் ஆன்மா தன்னை உணருமாறு இது' என்பது கூறப்பட்டது.*

*2149. **தெளிவுரை :-** சகலத்தில் சகலமாகிய சகலசாக்கிரத்திற்றானே நிகழும் சாக்கிரம் முதலிய ஐந்தையும், ஆணவத்தாலே ஆக்கப்படுகின்ற கேவல சாக்கிரம் முதலிய ஐந்தையும் அவை நிகழாதபடி, முதலாவதாகச் சொல்லப்படுகின்ற சகல சாக்கிரத்தில் உறைந்து நிற்கு மாற்றானே போக்கிச் சிவத்தோடும் திருவருள் வழியில் நிற்பவன். சடம் ஆதலின் நிலையின்றித் தோன்றியழிவனவாகிய முப்பத்தாறு தத்துவங்களுட்பட்டு, தத்துவான்மாவாய் நில்லாது, அவற்றின் நீங்கிச் சுத்தான்மா ஆவான். சகல, கேவல, கீழாலவத்தை, மேலாலவத்தை, மத்தியாலவத்தைகளில் நீங்கித் தத்துவங்களும் தாமல்ல என்று கண்டு மெய்ஞ்ஞானி சிவத்தோடன்றிச் சிவமாகவே விளங்குவான் என்பதாம்.*

**2150.** ஆணவ மாதிமலம் ஐந்து அலரோனுக்கு
ஆணவ மாதிநான் காம்மாற்கு அரனுக்கு
ஆணவ மாதிமூன்று ஈசர்க்கு இரண்டென்ப
ஆணவம் ஒன்றே சதாசிவர்க் கானதே. **16**

---

*குறிப்புரை :- 'மாசு நீங்கிய வழி, ஞாயிற்றின் முன்னிலையில் நிற்கும் படிகத்தில் ஞாயிற்றின் ஒளி பிரதிபலிக்கப் படிகம் அந்த ஞாயிறாகியே நிற்றல் போல, தத்துவங்களின் நீங்கியவழி, என்றும் சிவத்தோடே கூடி நிற்கின்ற ஆன்மாவில் சிவத்துவம் பிரகாசிக்க, அந்த ஆன்மாச் சிவமேயாய் நிற்கும்' - என்பது கருத்து.*

*ஆன்மாத் தத்துவங்களின் நீங்கிச் சிவத்தைத் திருவருளால் உணர்ந்து நிற்கும் நிலையே சகலத்தில் சுத்தாவத்தையாகும். 'அவையே தச காரியங்களாக வகுக்கப்பட்டன' என்பது மேலே கூறப்பட்டது. அந்தச் சுத்தாவத்தையும் சாக்கிரம் முதல் ஐந்தாக நிகழ்தல் பற்றி, 'நெறிநின்றோன்' என்றார். நெறிநிற்றல் - படி முறையாக ஏறி நிற்றல். 'நனவாதி' என்பதற்கு, 'நனவாகிய முதல் அவத்தையில் என உரைக்க. போக்கப்படுவன, முன்னர்க் கூறிய இருவகை ஐந்தவத்தைகளாம். 'சிவத்தோடும் நெறிநின்றான்' என இயைக்க. 'இவற்றோடும்' - என்பது பாடம் அன்று.*

*'கீழாலவத்தை மத்தியாலவத்தைகளின் வேறாய், யோகாவத்தைகளும் உள' என மேற்கூறியதன் பின் (பா. 2142) யோகாவத்தைகளின் மேலாக ஞானாவத்தைகளும் உள' - என்பது இதனால் கூறப்பட்டது.*

*தத்துவ ஞானத்தின் பயன் பந்தம் நீங்குதல் என மேற்கூறியவாறுபோல, (பா.2148) பந்தம் நீங்கிய உயிர் சிவமாம் தன்மையை அடைதலே ஞானாவத்தைகளாகிய சகலத்தில் சுத்தாவத்தை என்பதும் இதனால் பெறப்பட்டதாம். 'இவைகளே நின்மலாவத்தையாவன அல்லது யோகாவத்தைகள் நின்மலாவத்தையாகா' என்பதும் யோகாவத்தை கூறியவிடத்தே கூறப்பட்டது.*

*2150.* ***தெளிவுரை :-*** *(பஞ்ச மலங்களும், 'ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி' என்னும் முறையில் வைத்துச் சொல்லப்படும். இவற்றுள் மறைத்தல் தொழிலைச் செய்வதில் தலைமை பெற்று நிற்பது திரோதாயியே. அதனால்), பிரமன் சிவனைச் சிறிதும் உணராதவன் ஆகலின் அவனைப் பஞ்ச மலங்களையும் உடையவனாகவும், மாயோன் சிவனைச் சிறிது அறிந்தவன் ஆகலின் அவனை, திரோதாயி ஒழிந்த ஏனை நான்கு மலங்களை உடையவனாகவும், சீகண்ட ருத்திரன் பிரளயாகலன் ஆகலின் அவனைத் திரோதாயி, மாயேயம் - இவையொழிந்த மூன்று மலங்களே உடையவனாகவும், வித்தியேசுரர் மந்திர மகேசுரர் முதலியோர் விஞ்ஞானகலர் ஆயினும் அதிகார மலம் நீங்கா மையால் ஆணவத்தோடு, கன்மமும் கூட, இரண்டு மலங்களை*

*யுடையவர்களாகவும், அணு சதாசிவர்கள் அதிகார மலம் நீங்கினும் போக மலம் நீங்காமையால் ஆணவம் நீங்கப் பெறாது அஃது ஒன்றனையே உடையவர்களாகவும் கூறலாம்.*

| பிரமன் | ஆணவம் | கன்மம் | மாயை | மாயேயம் | திரோதாயி |
|---|---|---|---|---|---|
| மாயோன் / திருமால் | ஆணவம் | கன்மம் | மாயை | மாயேயம் | – |
| உருத்திரன் | ஆணவம் | கன்மம் | மாயை | – | – |
| மகேசுவரன் (வித்தியேசுவர்) | ஆணவம் | கன்மம் | – | – | – |
| அணு சதாசிவர் | ஆணவம் | – | – | – | – |

*குறிப்புரை :-* *'இதனுள் குறிக்கப்பட்ட கடவுளர் யாவரும் அணு பக்கத்தவர்களே' என்பது சொல்லாமலே விளங்கும். 'இவர்களை இவ்வாறு பகுத்துக் கூறியதும் பொதுவகையில் இவரிடையே உள்ள தார தம்மியம் இனிது விளங்குதற் பொருட்டே' என்க. இவர்களை இங்ஙனம் பகுத்துக் காட்டியதனால், இவர்கட்கு உட்பட்டனவாகச் சொல்லப்படும் நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகளுட்பட்ட ஆன்மாக்களின் பந்த வேறுபாடுகளும், அவற்றிற்கு ஏற்ப அவற்றிற்கு நிகழும் அவத்தை பேதங்களும் ஒருவாறு உணர்ந்து கொள்ளப்படும். 'அஃதே இந்த மந்திரத்திற்குப் பயன்' என்க. இரண்டாம் அடியீற்றில் குற்றிய லுகரம் கெடாது நின்றது.*

*இதனால், 'பந்தம் முழுவதும் நீங்காது சிறிதாயினும் உடைய உயிர்கட்கு எந்த வகையிலாவது அவத்தை பேதங்கள் நிகழவே செய்யும்' - என்பது கூறப்பட்டது.*

## 5. அத்துவாக்கள்

*'சொல்லுலகம், பொருளுலகம்' - என உலகம் இரு வகைத்து அவற்றுள் பொருளுலகம் 'புவனம், தத்துவம், கலை' என மூன்று வகையும், சொல்லுலகம், மந்திரம், பதம், வன்னம்' என்னும் மூன்று வகையும் உடையன. இந்த வகைகள் ஆறும் 'அத்துவா' எனப்படும். அத்துவா - படிவழி. உயிர் சிவத்தை அடைதற்குக் கடக்க வேண்டிய படிவழிபோல இவை நிற்றலால் 'அத்துவா' எனப்படுகின்றன. இவற்றுள் ஓர் இயைபு பற்றித் தத்துவங்களைக் கூறினார். ஆதலின், ஏனை ஐந்தையும் இவற்றுடன் தொகுத்து இவ்வதிகாரத்தில் மூன்று மந்திரங்களால் கூறுகின்றார்.*

*அத்துவா என்பது நெறி. அஃதாவது பிறவிக்கு ஏதுவாகிய மலத்தைக் கெடுத்து, எங்கணும் வியாபகமாகிய சிவம் பிரகாசித்தற்கு ஏதுவாகிய ஞானத்தைக் கொடுத்துப் பிறவியை ஒழிப்பதற்கு உரிய நெறியே அத்துவாஆம். ஆன்மாக்களின் மல கன்மங்களைப் போக்கச் சிவனே குருமூர்த்தியை வாயிலாகக் கொண்டு தீட்சை செய்விக்கும்பொழுது தீட்சை பெறும் மாணாக்கர் தகுதிக்கேற்ப ஞானவதி கிரியாவதி என்ற இருமுறையானும் செய்விப்பன். ஆசாரியன் சிவனாணை பெற்றுத் தீட்சை செய்யும் போது மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்ற அத்துவாக்கள் ஆறனையும் ஒன்றில் ஒன்று ஒடுங்கச் செய்து, இறுதியான கலாத்துவாவைத் திரோதான சத்தியில் ஒடுக்கி அதனைச் சிவத்தில் ஒடுக்கி மாணாக்கனுடைய மலத்தைக் கெடுத்துப் பிறவியை அறுப்பர்.*

***<u>வழி அல்லது நெறி என்னும் பொருள்தரும் அத்துவா உயிர்களுக்கு இதம் அல்லது அகிதம் என்னும் கன்மம் வரும் வழி எனவும், உயிர் இறைவனை அடைதற்குரிய வழி எனவும் இருவகைப்படும்</u>. அவற்றுள் கன்மம் வரும் வழி எங்ஙனம் பொருந்தும் எனின், மந்திரங்களை உரத்துச் சொல்லல், மெல்லச் சொல்லல், நினைத்தல் முதலிய சொல்லுதல் பேதங்களில் எந்த மந்திரத்தை எங்ஙனம் சொல்ல வேண்டுமோ அங்ஙனம் சொல்லல் புண்ணியம். மாறிச் சொல்லின் பாவம் ஆம். அங்ஙனமே பதங்களில் பிரிக்கக்கூடாத இடங்களில் பிரித்தாலும், உதாத்த அனுதாத்த ஸ்வரித ப்லுத பேதங்களை மாறி உச்சரித்தாலும் பாவம். புவனாத்துவாவில் அந்த அந்த புவனத்திற்குரிய பதிகளைப் பூஜியாமையாற் பாவம். தத்துவாத்துவாவில் பொறிகளால் நேரிய வழியில் போக நுகர்தல் புண்ணியம். தீய வழியில் நுகர்தல் பாவம். பஞ்சகலைகளில் கலா சக்திகளுக்கும் பூசை செய்தல் புண்ணியம். அங்ஙனம் பூசியாமையால் பாவம். ஆக இங்ஙனம் கன்மம் விளைகிறது.***

***சொல்லும் பொருளுமாயிருக்கிற அத்துவாக்களாறும் ஆணவ கேவலத்துட் கிடந்து அறிவு விளங்காத ஆன்மாக்கட்கு அறிவு தோன்ற வழியாகும். இவ்வறிவு விளக்கம் ஏகதேசம் என்பதை உணர்ந்தபின் அத்துவாக்களை ஒன்றின் ஒன்றடங்க ஒடுக்கும் முறையினால் இறைவனையடைவிக்கும் நெறியாகும் என்க. ஆகவே பேச்சை நிறுத்தி, உலகை வெறுத்து, உடலைத் தானென்றெனத் தெளிந்து, அருள் துணையால் தன்னையும் தலைவனையும் அறிய உதவும் நெறி என்பதாம்.***

**2151.** **தத்துவம் ஆறாறு தன்மனு ஆறைந்து**
**மெய்த்தகு வன்னம்ஐம் பானொன்று மேதினி**
**ஒத்திரு நூற்றிரு பான்நான்கு எண்பானொன்று**
**வைத்த பதம்கலை ஓரைந்தும் வந்தவே.** **1**

---

*2151. தெளிவுரை :- ஆறத்துவாக்களில், 'தத்துவம் முப்பத்தாறு' என்பது முன்பே குறித்து, விளக்கம் தரப்பட்டது. (எனவே, அஃது இங்கு நினை வூட்டும் அளவே கூறப்பட்டதாம்).*

*சொல்லுலகத்தில் முதலாவதாகிய மந்திரம் பதினொன்று, அவை 'ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்னும் பிரம மந்திரம் ஐந்தும், 'இருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அத்திரம்' - என்னும் அங்க மந்திரம் ஆறுமாம். தன் என்றது உயிரை.*

*செய்யுள் நோக்கி - 'எண்பான் ஒன்று வைத்த பதம்' என்பது பின் கூறப்பட்டது.*

*வன்னம் ஐம்பத்தொன்று. வன்னம் - எழுத்து. அவைகளை வடமொழி பற்றி யறிக. இவற்றுள் ஒன்று நீக்கி, ஐம்பது என்றலும் வழக்கு என்பதனை, "ஐம்ப தெழுத்தே அனைத்து வேதங்களும்" என்னும் மந்திரத்தான் அறிக.*

*மேதினி - புவனம். புவனம் இருநூற்றிருபத்து நான்கு. தத்துவங்கள் தோறும் புவனங்கள் உள்ளன. அவற்றின் எண்ணிக்கையைச் சிவஞான மாபாடியம் இரண்டாம் சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்தில் காண்க.*

*கலை ஐந்து. 'அவை நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை' - என்பன. வந்த - ஆன்மாவிற்கு வழியாகக் கிடைத்தன.*

*இந்த அத்துவாக்கள் ஆறிலும் உயிர் வியாபித்திருத்தலால், அது செய்த வினைகள் சஞ்சிதமாய், இவ்வத்துவாக்களைப் பற்றிக் கிடக்கும். அவை உள்ள வரையில் உயிருக்கு உண்மை ஞானம் விளங்கமாட்டாது. அதனால் பக்குவம் எய்திய உயிர்கட்குச் சிவன் குருவாகி வந்து, 'அத்துவ சுத்தி' அல்லது 'கலா சோதனை' - எனப்படும் நிருவாணதீக்கையில் ஞானவதியாகவாவது, கிரியாவதி யாகவாவது செய்யும் ஆகுதிகளால் சஞ்சிதத்தைத் துடைத்து, உபதேசத்தைச் செய்தருளுவான். அங்ஙனம் அவன் செய்த உபதேச மொழியை உயிர் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து பின் நிட்டை எய்தும்.*

*ஞானவதியாவது குண்டம், மண்டலம், வேதிகை முதலிய எல்லாவற்றையும் குரு தமது அகத்திலே கற்பித்துக் கொண்டு செய்வது. கிரியாவதியாவது, அவைகளை வெளியில் யாவரும் காண அமைத்துச் செய்வது.*

*இதனால், அத்துவாக்களின் தொகைகள் கூறப்பட்டன.*

**2152.** நாடிய மண்டலம் மூன்றும் நலம்தெரிந்து
ஓடும் அவரோடு உள்இருபத் தைந்தும்
கூடினர்கூடிக் குறிவழி யேசென்று
தேடினர் தேடித் திகைத்திருந் தார்களே. **2**

---

***2152. தெளிவுரை :-*** *(அத்துவாக்களைத் தரிசிக்க, அஃதாவது உள்ளபடி நேரிலே காண விரும்பியவர்கள் பிராசாத நெறியில் நின்று) உடம்பிலே கீழிருந்து பாவிக்கப்படுகின்ற நெருப்பு மண்டலம், நீர் மண்டலம், நிலா மண்டலம் - என்னும் மூன்று மண்டலங்களை உள்ளே உணர்ந்து இடை கலை, பிங்கலை வழியாக ஓடுகின்ற அந்தத் துணைவரோடு தாமும் ஓடித் தூல சூக்கும தத்துவங்களாகிய இருபத்தைந்து தத்துவங்களைக் கண்டார்கள். அதன் பின்பு அந்தத் துணைவரால் ஆகாமையின், குரு காட்டிய அந்தக் குறியான வழியிலே*

| | **மந்திரம்** | **பதம்** | **வன்னம்** | **புவனம்** | **தத்துவம்** | **அதி** தெய்வம் |
|---|---|---|---|---|---|---|
| நிவிருத்தி | 2 | 28 | 1 | 108 | 1 | பிரமன் |
| பிரதிட்டை | 2 | 21 | 24 | 56 | 23 | விஷ்ணு |
| வித்தை | 2 | 20 | 7 | 27 | 7 | ருத்ரன் |
| சாந்தி | 2 | 11 | 3 | 18 | 3 | மாகேஸ்வரன் |
| சாந்தியதீதை | 3 | 1 | 16 | 15 | 2 | சதாசிவம் |
| | 11 | 81 | 51 | 224 | 36 | |

இந்த ஐந்து கலைகளும் சிற்சத்தியில் ஒடுங்கும் சிற்சத்தியானது சிவத்தினிடம் ஒடுங்கும்.

*சென்று பர தத்துவங்களைத் தேடினர். அவ்வாறு தேடியும் அவை தரிசனப்படாமையால், ஒன்றும் தோன்றாது திகைத்து நின்றுவிட்டார்கள்.*

*குறிப்புரை :-* 'ஓடும் அவர்' - என்றது உருவகம். ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு, புருட தத்துவம் ஒன்று இவை இருபத்தைந்து தத்துவம். வித்தியா தத்துவங்கள் 'புருடன்' என ஒன்றாய் அடக்கப்பட்டன. ஆன்ம தத்துவம் தூலமும், வித்தியா தத்துவம் சூக்குமமும் ஆகும். சிவ தத்துவம் பரம். அஃதாவது அதிசூக்குமம். தூல சூக்கும தத்துவங்கள் சகலர் பிரளயாகலர்கட்குச் சரீரமாய் அமைதலால், அவை யோகக் காட்சியில் காணப்படுவவாயின. 'உள் இருபத்தைந்து' - என்றதும் இதுபற்றி, சிவ தத்துவம் அவ்வான்ம வருக்கத்தினருக்கு வேறாய் நிற்றலின், அவை அங்ஙனம் காணப்படாவாயின.

சிவ தத்துவங்களையும் அனுபவமாக உணர்ந்த பின்பே ஆன்மாச் சிவத்தை அடைய இயலும். தத்துவம் முப்பத்தாறும் நிவிர்த்தி முதலிய ஐந்து கலைகளில்

**2153.** சாக்கிர சாக்கிர மாதித் தலையாக்கி
ஆக்கிய தூலமள வாக்கிஅ தீதத்துத்
தாக்கிய அன்பான தாண்டவம் சார்ந்தது
தேக்கும் சிவமாதல் ஐந்தும் சிவாயமே. **3**

---

*அடங்கியுள்ளன. ஏனை நான்கு அத்துவாக்களும் தத்துவத்தில் அடங்கிவிடும். ஆகவே, தத்துவங்களைக் கண்டுவிட்டால், கலைகளைக் காண்டலும் எளிதில் கூட, அத்துவாக்கள் அனைத்தும் காணப்பட்டனவாய்விடும்.*

*இதனால், அத்துவாக்களில் சில பகுதிகளைக் காணுமாறு கூறப்பட்டது.*

***2153. தெளிவுரை :-*** *'நமசிவாய' என்னும் ஐந்தெழுத்து மந்திரத்தை (ஏனைக் கிரியா மந்திர யோக மந்திரங்களைப் போல எண்ணாமல், உண்மையை அனுபவமாக உணர்விக்கும் ஞான மந்திரமாகக் கொண்டு) சகலசாக்கிரத்தில் (சகலஐந்தவத்தைகள் நிகழாதவாறு தடுத்து), ஞானாவத்தைகளாகிய சுத்த சாக்கிரம் முதலியனவே நிகழுமாறு, அந்தச் சாக்கிரம் முதலிய ஐந்திலும் ஐந்து வகையாகச் சுத்த மானதம் ஆகிய அறிவினாலே கணித்து, ஆதாரங்கள் ஆறும், அவற்றிற்கு மேல் ஏழாவதாகிய நிராதாரமும் உடம்பளவினவாய் நீங்க, உடம்பைக் கடந்த துவாதசாந்தமாகிய மீதானத்தில் சென்று பொருந்திய அன்பே வடிவாய் நிகழும் திருக்கூத்தை உயிர் சென்று அடைவதே, எல்லையில் இன்பத்தைச் சிவம் பெருக்கி, அதற்கு வழங்குகின்ற சிவமாம் நிலையாகும்.*

***குறிப்புரை :-*** *'நமசிவாய' என்பதை ஒரு பெயராக்குதற் பொருட்டு அதன் ஈற்றில் மகரமெய் புணர்க்கப்படுதலை, 'நமச்சிவாயம் சொல்ல வல்லோம்' (தி.6 ப.98 பா.4) என்னும், அப்பர் திருமொழியால் உணர்க. 'நமச்சிவாயம்' என்பதை 'சிவாயம்' என்றது முதற்குறை. 'நமசிவாயம் ஐந்தும்' என மாற்றி முதலிற் கூட்டி, 'ஐந்தினையும் சாக்கிர சாக்கிரம் ஆதியில் தலை முதலாக ஆக்கி' - என உரைக்க. தலை - முதல். முதலாவது. நமசிவாய. இரண்டாவது. சிவாயநம. மூன்றவாவது?, சிவாய, நான்காவது, சிவ. ஐந்தாவது, சி. இவையே சுத்த சாக்கிரம். 'அதீதம்', 'கடந்தது' என்னும் பொருளது இவ்வியல்பினை,*

*"ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று*
*மீதானத் தேசெல்க உந்தீபற;*
*விமலற் கிடமதென் றுந்தீபற"*

*என்னும் திருவுந்தியாரால் (உந்தி. 8) உணர்க. 'ஆதார நிராதாரயோகங்கள் பாவனை மாத்திரமே' என்பதை அந்நூல்,*

*"ஆக்கில் அங் கேஉண்டாய், அல்லதங் கில்லையாய்ப்*
*பார்க்கில் பரமதன் றுந்தீபற;*
*பாவனைக் கெய்தாதென் றுந்தீபற"*

*எனக் கூறிற்று. (உந்தி - 89) இந்தப் பாவனாயோகங்கள் ஆன்மாத் தன் முனைப்பு*

*அறுதற்குரிய சாதகங்களாம். அச்சாதகங்களால் அம்முனைப்பு அற்றால், ஆன்மா 'யான்' என்றும், 'எனது' என்றும் எழுந்து உலகத்தில் சென்று பற்றும் நிலை ஒழியும். அஃதொழிந்த பொழுது, மீதானத்தில் இறைவனது திருக்கூத்தின், சிலம்பொலி கேட்கும்' அது கேட்டவுடன் ஆன்மா இல்லார்க்குக் கிழியீடு நேர் பட்டாற் போலப் பேரார்வத்துடன் ஓடி அவனையே அடைந்து அவன் மீதே அன்பு செலுத்தி அவனது இன்பத்தில் அழுந்தியிருக்கும் அதனைத் திருக்களிற்றுப்படியார் (வெண்பா 33)*

> *ஓசையெலாம் அற்றால் ஒலிக்கும் திருச்சிலம்பின்*
> *ஓசை வழியேசென் றொத்தொடுங்கி - ஓசையின்*
> *அந்தத்தா னத்தான் அரிவையுடன் அம்பலத்தில்*
> *வந்தொத்தான் அத்தான் மகிழ்ந்து*

*என விளக்கிற்து.*

*இவ்வெண்பாவில் கூறப்பட்ட அந்த நிலையே இங்கு அதீதம் எனப்பட்டது.*

> *“எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது*
> *தான் அமர்ந்து வரூஉம் மேவற் றாகும்”*

*(தொல். பொருள் - பொருளியல்) எனத் தொல்காப்பியரும், அவ்வாறே,*

> *இன்பில் இனிதென்றல் இன்புண்டேல் இன்புண்டாம்;*
> *அன்பு நிலையே அது.* ***- திருவருட்பயன் - 80***

***என உமாபதி தேவரும் கூறியவாறு. அன்பே இன்பத்திற்குக் காரணம் ஆதலின், ஆனந்த தாண்டவத்தை உயிரினது அன்பான தாண்டவம் என்றும், அந்நிலையில் அந்த ஆனந்தத்தை வழங்குகிற சிவத்தை. (இன்ப வெள்ளத்தைத்) தேக்கும் சிவம் என்றும் கூறினார். அன்பே சிவம். (முதல் தந்திரம் - அன்புடைமை) என்றதும் இங்குக் கூறிய அன்பையே என்பதையும் இதனானே உணர்க.***

***அன்பு நிலையே ஆனந்த நிலையாம் அன்றி வெறும், அறிவு நிலை ஆனந்த நிலை ஆகாமையை இங்கு உணர்ந்துகொள்க.***

***இதனால், 'அத்துவாக்களைக் கடக்குமாறும்' கடந்தவழி உளதாகும் பயனும் கூறப்பட்டன.***

## 6. சுத்த நனவாதி பருவம்

*ஞானம் முதலிய நான்கனுள் யோகம் மூன்றனை முன்னர்க் கூறிப் பின்னர் இறுதியாக ஞானத்தை எடுத்துக் கொண்டு இத் தந்திரத்தில் நூன் முறையில் சிலவற்றைக் கூறிவந்த நாயனார், இனிப் பலவற்றைத் தொகுப்பாக, இதுமுதல் ஏற்ற பெற்றியாற் கூறுகின்றார். ஆன்மா சிவத்தைச் சார்ந்து வியாபகமாய்ச் சுத்த தத்துவம் நனவாதி பருவங்களைச் சாரும் என்பதாம் சுத்தம் நின்மலம் எனவும் வழங்கப்பெறும். ஆதலால் அது நின்மல சாக்கிரம், நின்மல சொப்பனம், நின்மல சுழுத்தி, நின்மல துரியம், நின்மல துரியாதீதம் என ஐவகைப்படும். அவற்றுள் நின்மல சாக்கிரமாவது இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் நிரம்பிய நிலை. இதில் சிவதத்துவம் ஐந்தில் சுத்தவித்தை நீங்காமல் நீங்கின அவதரம் நின்மல சொப்பனம். குரு தரிசனமாகி அவரருளுபதேசம் பெறல், சுத்தவித்தையும் ஈச்சுரமும் நீங்காமல் நீங்கின அவதரம் நின்மல சுழுத்தி உபதேசத்தில் உறைத்து நின்று சாதித்தல். சுத்த வித்தை ஈச்சுரம் சாதாக்கியம் மூன்றும் நீங்காமல் நீங்கிய அவதரம். நின்மல துரியம் பாசநீக்கம் இதில் சுத்த வித்தை ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி என்னும் நான்கும் நீங்காமல் நீங்கின அவதரம் நின்மல துரியாதீதம் சிவப்பேறும் ஆம் என்க. இதில் சுத்த தத்துவம் ஐந்தும் நீங்காமல் நீங்கிய அவதரம்.*

*இதன் விரிவான விளக்கத்தை,*

*இலாடத்தே சாக்கிரத்தை எய்திய வுள்ளம்*<br>
*இலாடத்தே ஐந்தவத்தை எய்தும் - இலாடத்தே*<br>
*அவ்வவ இந்திரியத் தத்துறைகள் கண்டதுவே*<br>
*அவ்வவற்றி னீங்கலது வாங்கு.*

*என்னும் சிவஞானபோத மேற்கோள் வெண்பாவிற் காண்க.*

*அதனை நாற்பது மந்திரங்களான் விளக்கப்புகுந்த நாயனார் முதற்கண் பொதுவகையான் சகலமாகிய தூல நிலையின் நுண்ணிய நிலையே சுத்தம் என அருளுகின்றார்.*

*முதற்கண் உள்ளது சுத்த நனவாதி பருவம். சுத்த சாக்கிரமே 'சுத்த நனவு' எனப்பட்டது.*

**2154.** நனவாதி தூலமே சூக்கப் பகுதி<br>
அனவான ஐயைந்தும் விந்துவின் சத்தி<br>
தனதாம் உயிர்விந்து தான்நின்று போந்து<br>
கனவாம் நனவில் கலந்ததிவ் வாறே. 1

---

***2154. தெளிவுரை :-** கீழாலவத்தையாய் யாவராலும் நன்கு உணர நிகழும் கேவல சாக்கிரம் முதலிய ஐந்தையும் போல்வனவே, நுண்ணறி வுடையோரால் மட்டும் ஊன்றியுணரப் படுகின்ற மத்தியாலவத்தை யாகிய சகல சாக்கிரம் முதலிய ஐந்தும், அந்த ஈரைந்து அவத்தைகளிலும் உள்ள இருபத்தைந்து தத்துவங்களும் சுத்த மாயையிலும் உள்ளன. (யோகாவத்தையில் அவை செயற்படும்) அவைகளி*

**2155.** நனவில் அதீதம் பிறந்தார் கிடந்தார்
நனவில் துரியம் நிகழ்ந்தார் தவழ்ந்தார்
நனவில் சுழுத்தி நடந்தார் வளர்ந்தார்
நனவில் கனவோடல் நற்செய்தி யானதே. **2**

---

*னின்றும் உயிர் தனது உணர்வு விடுபட்டுச் சென்று, திருவருளில் முன்பெல்லாம் தான் கண்டு வந்த கனவு போல உணரப்படுகின்ற காட்சியில் தோய்கின்ற நிலையே சுத்த சாக்கிரம் முதலிய சுத்தாவத்தைகளாம்.*

***குறிப்புரை :-*** *'கேவல ஐந்தவத்தைகளை உவமையாகப் பற்றிச் சகல ஐந்தவத்தைகளின் உண்மையை உணர்தல் போல, அவ்விரண்டையும் உவமையாகப் பற்றிச் சுத்த ஐந்தவத்தைகளின் உண்மையை உணர்ந்து கொள்ளல் வேண்டும்' - எனவும்,*

*பிரகிருதி மாயை, அசுத்த மாயை இவற்றின் தொடர்பு கீழாலவத்தை மத்தியாலவத்தைகளோடு ஒழிய, யோகாவத்தையில் சுத்த மாயையின் தொடர்பு மட்டுமே உளதாம்' - எனவும்,*

*'அந்தச் சுத்தமாயைத் தொடர்பும் நீங்கித் திருவருள் பற்றாக நிகழ்வனவே சுத்தாவத்தைகள்' - எனவும் கூறியவாறு. யோகாவத்தைகளின் உண்மை யோக நூல்களால் விளங்கும்.*

*'இங்கு 'சுத்தம்' எனப்படுவது உடம்போடு கூடி நிற்கும் பொழுதே திருவருள் வயப்பட்டு நிற்பது ஆகலின், இது சகலத்திற் சுத்தமே, 'தனியான சுத்தம் வேறு உண்டு' என்பது மேலேயும் குறிக்கப்பட்டது. 'அசுத்த மாயையில் உள்ள தத்துவங்களைப் போல சுத்த மாயையிலும் அவ்வகைத் தத்துவங்கள் உள்ளன என்பது சிவாகமங்களின் துணிபு' என்பதைச் சிவஞானமாபாடியம் முதலியவற்றால் உணர்க.*

***2155. தெளிவுரை :-*** *'சாக்கிரத்தில், 'அதீதம்' என்னும் நிலை தோன்றப் பெற்றவர், தம்மால் உணரப்பட்ட பொருளையும் தம்மையும் வேறு வேறாக அறிதல் இன்றி அப்பொருளேயாய் அழுந்தித் தற்போதத்தை இழந்திருப்பர். அதனால் அவர், இடம் பெயரமாட்டாது கிடந்த கிடப்பில் கிடக்கும் பசுங்குழவி போல்பவராவர்.*

*சாக்கிரத்தில் 'துரியம்' - என்னும் நிலை தோன்றப் பெற்றவர், தம்மால் உணரப்படும் பொருளையும், தம்மையும் வேறு வேறாக அறிந்து, அந்த அளவில் அனுபவிக்கும் உணர்வு உடையவராவர், அதனால், அவர் இடம் பெயர்ந்து தவழ்ந்து செல்லும் குழவி போல்வர்.*

*சாக்கிரத்தில், 'சுழுத்தி' என்னும் நிலை தோன்றப் பெற்றவர் உணரப்படும் பொருளையும், உணரும் தம்மையும் வேறுவேறாகப் பகுத்து நன்குணர்வர்.*

**2156.** செறியுங் கிரியை சிவதத் துவமாம்
பிறிவில் சுகயோகம் பேரருள் கல்வி
குறிதற் றிருமேனி குணம்பல ஆகும்
அறிவில் சராசரம் அண்டத் தளவே. **3**

---

*அதனால் அவர் வளர்ச்சியடைந்து நன்கு நடக்கும் சிறுபிள்ளைகள் போல்வர்.*

*சாக்கிரத்தில், 'சொப்பனம்' என்னும் நிலை தோன்றப் பெற்றவர், பொருளில் மேலும் மேலும் நாடும் நாட்டம் மிகுந்து இருப்பர். அதனால் அவர் நன்கு ஓடி ஆடும் பருவச் சிறுபிள்ளைகளோடு ஒப்பர். (மகளிரில், 'பெதும்பைப் பருவத்தாரோடு ஒப்பர்' எனலாம்).*

*சாக்கிரத்தில், 'சாக்கிரம்' என்னும் நிலை தோன்றப் பெற்றவர் வாழ்க்கையில் முழுமையாக ஈடுபடுவர். அதனால் அவர்கள் கட்டிளமையுடையவரோடு ஒப்பர். (எனினும், ஆடவர்களில் பிரமசாரிகளையும், பெண்டிரில் கன்னிகளையும் இங்கு உவமையாகக் கொள்க).*

***குறிப்புரை :-*** ***இம்மந்திரம், 'சாக்கிரத்தில் சகலமாகிய மத்தியா லவத்தையின் இயல்பும், சாக்கிரத்தில் சுத்தமாகிய நின்மலாவத்தையின் இயல்பும், ஒரு தன்மையனவே' என உணருமாறு அவற்றின் இயல்புளைப் பொதுமையில் வைத்து உடலினைச் சிலேடையாக உணர்த்திற்று. மத்தியாலவத்தையில், உணரப்படும் பொருள் உலகமும், நின்மலாவத்தையில், உணரப்படும் பொருள் சிவமும் ஆகின்ற இவ்வளவே வேறுபாடு என்க. இதனை,***

***"ஆணவத்தோடு அத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்***
***தாணுவினோடு அத்துவிதம் சாருநாள் எந்நாளோ"***

***என்னும் தாயுமானவர் வாக்கும் ஓராற்றான் விளக்கும். சாக்கிரத்தில் நிகழும் இருவகை ஐந்தவத்தைகளின் இயல்பு விளக்கப்பட்டது.***

| சாக்கிர துரியாதீதம் | பிறத்தல் |
|---|---|
| அதில் துரியம் | தவழ்தல் |
| அதில் சுழுத்தி | நடத்தல் |
| அதில் சொப்பனம் | ஓடுதல் |

***2156. தெளிவுரை :-*** ***சிவநெறி மார்க்கம் நான்கனுள் சற்புத்திர மார்க்க மாகிய கிரியையில் நிற்பின் சிவ தத்துவங்கள் ஐந்தும் காட்சிப்படுவனவாம். சிவத்தோடு தன்னை ஒன்றவைத்து உன்னும் சகமார்க்க மாகிய யோகத்தால் சிவனது திருவருளை நிரம்பப் பெறுதல் கூடும். சிவனது ஞானத்தை உணர்தலாகிய சன்மார்க்கத்தால் ஆன்மாவினது ஞானமும் சிவஞானமேயாய், அதுவே தற்சொரூபமாய் நிற்கும். அந்நிலையில் சிவனது எல்லாக் குணங்களும்***

**2157.** ஆதி பரம்சிவம் சத்தி சதாசிவம்
ஏதமில் ஈசன்நல் வித்தையாம் தத்துவம்
போதம் கலைகா லமேநியதி மாயையும்
நீதி அராகம் நிறுத்தினன் என்னே. **4**

---

*ஆன்மாவுக்கு உளவாகும். அப்பொழுது ஆன்மாவும் சிவனைப் போலவே எங்கும் நிறைந்து விளங்கும்.*

| தாசமார்க்கம் | சரியை | அரும்பு |
|---|---|---|
| சற்புத்திரமார்க்கம் | கிரியை | மலர் |
| சகமார்க்கம் | யோகம் | காய் |
| சன்மார்க்கம் | ஞானம் | கனி |

***குறிப்புரை :-*** *கல்வி - வித்தை; ஞானம், என்றது சிவ ஞானத்தை. குறி - குறித்தல்; உணர்தல்; முதனிலைத் தொழிற்பெயர். 'தன்' - என்றது ஆன்மாவை. சிவமாம் தன்மையை எய்தினமை தோன்ற, 'திரு மேனி' என்றார். 'பலவும்' என்னும் முற்றும்மை தொகுத்தலாயிற்று. 'அந்த அறிவில்' எனச் சுட்டு வருவிக்க. 'அளவு' என்பது 'சராசரம்' என்றதனோடும் இயையும். சரியை, கிரியையிற் செலுத்துமுகத்தானே பயன்படுதலின், அஃதொழிந்தவற்றையே கூறினார். கிரியை, யோகம், கல்வி ஆகிய காரணங்கள் காரியங்களாகவே உபசரிக்கப்பட்டன. மூன்றாம் அடி தளை மயங்கி வந்தது.*

*இதனால், ஆன்மா நின்மலாவத்தையை அடையும் முறை கூறப்பட்டது.*

***2157. தெளிவுரை :-*** *'சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தை' என்னும் சிவ தத்துவங்களையும், அவற்றின்கீழ் உள்ள 'கலை, காலம், நியதி, வித்தை, அராகம், மாயை' என்னும் வித்தியா தத்துவங்களையும் அநாதி நிலையினின்றும் இறங்கி ஆதியாய் நிற்கின்ற சிவன் படைத்தருளினான் என்று உணர்க.*

***குறிப்புரை :-*** *'ஆம் தத்துவம்' என்றது 'அராகம்' என்பதனோடும் சென்று இயையும். 'போதம்' என்றது 'வித்தை' என்னும் பொருட்டாய்ப் பொதுவாக 'வித்தியா தத்துவம்' எனவும், சிறப்பாக அவற்றுள் ஒன்றாகிய 'வித்தை' என்றும் இருபொருள் தந்து நின்றது. கலை முதலிய ஐந்தும் கூடிய நிலையிலே ஆன்மா 'புருடன்' எனப்படுவதன்றி, புருட தத்துவம் தனித் தத்துவம் அன்றாதலின், அதனை இங்குக் கூறிற்றிலர்.*

*இதனால், அத்துவாக்களில், 'ஆறாறு' எனப்பட்ட தத்துவங்களில் சிவதத்துவம் ஆவனவும், வித்தியா தத்துவம் ஆவனவும் இவை என்பது கூறப்பட்டது.*

**2158.** தேசு திகழ்சிவம் சத்தி சதாசிவம்
ஈசன்நல் வித்தை இராகம் கலை காலம்
மாசகல் வித்தை நியதி மகாமாயை
ஆசில் புருடாதி ஆன்மாஈ ராறே. **5**

---

***2158. தெளிவுரை :-*** *(மேற்கூறிய இருவகைத் தத்துவங்களையும் கூட்டித் தொகை காணின்) 'சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்த வித்தை, கலை, காலம், நியதி, வித்தை, அராகம், புருடன், மாயை' - எனப் பன்னிரண்டாம். இவற்றுள் 'புருடன்' என்பது ஏனையபோல ஒரு தத்துவம் அன்று. கலை முதலிய ஐந்தனோடும் கூடி நிற்கும் ஆன்மாவே.*

***சிவதத்துவங்கள் (சுத்த மாயா தத்துவங்கள்)***

| | |
|---|---|
| சிவம் | *நாதம், சர்வ ஆன்மாக்களுக்கு அறிவை எழுப்பிவிக்கும் ஞானம்* |
| *சத்தி* | *விந்து, சர்வ ஆன்மாக்களுக்கு தொழிலை எழுப்பிவிக்கும் கிரியை* |
| *சதாசிவம்* | *சாதாக்கியம். விந்துவிலிருந்து தோன்றும். ஞானம், கிரியை இரண்டும் சமமாக விளங்கும் நிலை* |
| *ஈச்சுரம்* | *சாதாக்கியத்தில் கிரியை மிகுந்து ஞானங்குறைந்த நிலையில் தோன்றுவது மகேச்சுரம் (அ) ஈசன் என்றும் வழங்குவர்* |
| வித்தை | *சுத்த வித்தை. ஈச்சுர தத்துவத்திலிருந்து ஞானம் மிகுந்து கிரியை குறைந்த நிலையில் தோன்றுவது.* |

***குறிப்புரை :-*** *இங்ஙனம் தொகையை வேறு மந்திரத்தில் வைத்துக் கூறியதற்குப் பயன், 'புருடன்' என ஒரு தத்துவத்தைக் கூட்டியதும், அது பற்றிய விளக்கத்தைத் தந்ததும் ஆகும். ஆதி - முதல். என்றது, 'தத்துவம்' என்றபடி. செய்யுள் நோக்கி வித்தியாதத்துவங்கள் முறை பிறழ வைக்கப்பட்டன. சைவத்தின் சிறப்புத் தத்துவங்களை மட்டுமே கூறினார், ஆன்ம தத்துவங்கள் பிறராலும் கொள்ளப்பட்டு, விளங்கிக் கிடத்தல் பற்றி.*

*இதனால், மேற்கூறப்பட்ட தத்துவங்கட்குத் தொகை கூறப்பட்டது.*

***2159. தெளிவுரை :-*** *'ஆணவம், மாயை, கன்மம்' - என மலங்கள் மூன்றாம். அவற்றை எதிர்நிரல் நிறையாக வைத்து, அரிசிக்கு முளை, தவிடு, உமி - இவை போல்வனவாக உணர்க. ஆன்மாவும் சிவனைப் போலச் சித்துப் பொருளேயாயினும், அரிசி போன்ற ஒரு தன்மையை அஃது உடைமையால் அரிசிக்கு உமி முதலிய குற்றங்கள் அநாதியாக இருத்தல் போல, ஆணவம் முதலிய*

**2159.** ஆணவம் மாயையும் கன்மமும் ஆம்மலம்
காணும் முளைஅத் தவிடுமி ஆன்மாவும்
தாணுவைப் போலாமல் தண்டுல மாய்நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே. **6**

**2160.** பசுக்கள் பலவண்ணம் பால்ஒரு வண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற ஆயன்ஒரு வண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற ஆயன்கோல் போடின்
பசுக்கள் தலைவனைப் பற்றி யிடாவே. **7**

---

*குற்றங்கள் அநாதியே உளவாக, அது சிவனைப் போலப் பதியாகாது, பசுவேயாய் நின்றது. உனது தன்மையை இங்ஙனம் நீ உள்ளவாறு உணர்ந்து, பாசங்களில் பற்றுக்கொள்ளாது விடுத்துப் பதியாகிய சிவனைப் பற்றி இன்புறுவாயாக.*

***குறிப்புரை :-*** *'முளை அத்தவிடுமி போலக் காணும்' என மாற்றி உரைக்க. 'ஆன்மாவும்' என்னும் உம்மை இறந்தது தழுவிய எச்சம். தண்டுலம் - அரிசி. ஆக்கம், உவமை குறித்து நின்றது, ஆணவத்தைப் பிற சமயிகள் கொள்ளாமையால், 'மலம் மூன்று' என்பதை எடுத்தோதி வலியுறுத்தினார்.*

*இதனால், அத்துவாக்கள் யாவும் மாயையேயாக, அவை பற்றி வேறும் இருமலங்கள் ஆன்மாவிற்கு உளவாதல் கூறப்பட்டது.*

*"மும்மலம் நெல்லி னுக்கு முளையொடு தவிடு மிப்போல்*
*மம்மர்செய் தணுவின் உண்மை வடிவினை மறைத்து நின்று*
*பொய்ம்மைசெய் போக பந்த போத்திருந் துவங்கள் பண்ணும்"*

*என்னும் சிவஞான சித்தி (சூ. 2. 86) யாரையும், அதற்கு மாதவச் சிவஞான யோகிகள் உரைத்த உரையையும் காண்க.*

***2160. தெளிவுரை :-*** *உலகில் பாலைத் தரும் பசுக்கள் யாவும் ஒரே நிறம் உடையன அல்ல; பல நிறம் உடையன' (அது போல, சீவர்களாகிய பசுக்களும், 'பசுத்துவம்' எனப்படும் பந்தத்தை ஒரே வகையாக உடையன அல்ல; ஒரே வகையை உடையனவாயின், பந்தத்தினின்றும் விடுபடுதலும் எல்லாப் பசுக்களுக்கும் ஒரு காலத்திலே நிகழ்தல் வேண்டும். அவ்வாறில்லாமையால், பந்த வேறுபாடு பலதிறப்பட்டதாம்). ஆயினும், பசுக்கள் தரும் பயனாகிய பால் ஒரு நிறமேயாம். (அது போல அவை அடையும் வீடுபேறு ஒரு தன்மையுடையதே). இனிப் பசுக்களை மேய்க்கின்ற ஆயன் ஒருவன். (ஆகவே, அவன் ஒரு தன்மையனேயன்றிப் பல தன்மை உடையவன் அல்லன். (அதுபோலச் சீவர்களை, 'பெத்தம், முத்தி' என்னும் இரு நிலைகளிலும் உடன்நின்று நடாத்தும் பதி ஒருவனே, ஆகையால் அவன் பதித்தன்மை ஒன்றே உடையனன்றிப் பசுக்கள் போலச் சார்ந்ததன் வண்ணமாய்த் தன்மை வேறுபடுபவனல்லன்).*

**2161.** உடல் இந் தியம்மனம் ஒண்புத்தி சித்தம்
அடல்ஒன் றகந்தை அறியாமை மன்னிக்
கெடும்அவ் வுயிர்மயல் மேலும் கிளைத்தால்
அடைவது தான்ஏழ் நரகத்து ளாயே. **8**

---

*ஆயன் பசுக்களை மேய்க்காமல் அவற்றின் இச்சைப்படி விட்டு விடுவானேயானால் இவை ஆயனைச் சென்று சேராமல், காட்டில் திரிந்து அல்லற்பட்டே ஒழியும். (அதுபோல, சிவன் சீவர்களைக் கண்ணெடுத்துப் பார்க்காமல் விட்டுவிடுவானேயானால், அவை அவனை அறிந்து இன்புற மாட்டா, பந்தத்தால் விளையும் துன்பத்தில் கிடக்கும்.*

*"மேய்ப்பாரும் உண்டாய், வெறியும் அடங்கினால்*
*பார்ப்பான் பசுஐந்தும் பாலாய்ப் பொழியுமே" - தி.10 பா.2838*

*எனப் பின்னரும் பசுக்களுக்கு மேய்ப்பான் இருத்தல் இன்றியமையாது எனக் கூறுவார்).*

***குறிப்புரை :-** இம்மந்திரம் ஒட்டணி பெற்று நின்றது. 'பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே' எனப் பாடம் ஓதுபவர்கள்; 'சிவனது அருள் இன்றியே சீவர்கள் சிவனை அடைய இயலும் எனக் கூறுவோராவர்*

*'பசுக்கள் கொட்டிலை அடைந்த பின்பும் ஆயன் அவைகளைப் புறக்கணித்துவிட்டு விட்டொழிவான் அல்லன்' என்பதையும் நோக்குக. இதனால், 'மேய்க்கும் கோல்' என்பது திரோதான சத்தி மட்டும் அன்று; அருட்சத்தியுந்தான் - என்க.*

*பால் பிறர்க்கு மட்டுமே பயன் படுவன அல்ல. கன்றுகளின் நலத்தில் கருத்துடைமையால், அக்கன்றுகளை வளர்த்தல் பசுக்கள் அடைகின்ற பயனேயாம். மேலும் வறட்டுப் பசுக்கள் போற்றப்படாமல், மிக்க பாலைத் தரும் பசுக்களே போற்றப்படும். அதனால் பால் அதனைத் தரும் பசுக்கள் அடையும் பயனுமாகும். ஆகவே அது சீவன்கள் அடையும் வீடுபேற்றிற்கு உவமையாதற்கு இழுக்கில்லை.*

*இதனால், 'மேற்கூறப்பட்ட மலங்கள் உயிர்தோறும் வேறு வேறு வகையாய் உள்ளன' என்பது கூறப்பட்டது.*

***2161. தெளிவுரை :-** தாத்துவிகங்களாகிய உடம்பு, அதில் கரணங்களாய்ப் பொருந்தியுள்ள ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள், அந்தக் கரணங்கள் ஆகிய இவற்றின் இயல்பினை அறியாமையால் அவைகளையே 'தான்' என மயங்கிக் கெடுகின்ற அந்த உயிர், (அந்த அறியாமையை நீக்கிக் கொள்ள முயலாமல்) மேலும் மேலும் அந்த அறியாமையையே வளர்த்துக் கொண்டிருக்குமானால், அது அடைவது ஏழு நரகங்களிலும் சென்று வீழ்ந்து அங்குள்ள துன்பத்தைத்தான்.*

**2162.** தற்றெரி யாத அதீதம்தன் ஆணவம்
சொற்றெரி கின்ற துரியம்சொற் காமியம்
பெற்ற சுழுத்தி பின்பேசுறும் காதலாம்
மற்றது உண்டி கனாநன வாதலே. **9**

---

***குறிப்புரை :–*** *அடல் - வலி. 'வீடு பெறுதல் இயலாது' - என்றபடி. 'உடல்' என்பது பெரும்பான்மையும் தூல உடம்பையே. இந்தியம், 'இந்திரியம்' என்பதன் மரூஉ. நல்வினை செய்வார் அரியர் ஆகலின், அதன் பயனாகிய சுவர்க்கத்தை அடைதலைக் குறியாதொழிந்தார்' இந்நிலையிலே நிற்கும் உயிர்கட்குச் சுத்த நனவாதிகள் நிகழா என்பது கருத்து. எனவே, தத்துவங்களின் இயல்பை உணருமுகத்தால் தம்மை அவற்றின் வேறாக உணர்ந்த உயிர்கட்கே திருவருள் கிடைக்கச் சுத்த நனவாதிகள் உளவாம். சிவஞானபோதத்திலும்,*

*"இவ்வான்மாத் தன்னை அவ்விந்திரியத்தின் வேறாவான்*
*காணவே தமது முதல் சீபாதத்தை அணையும்" - சூ. 8 அதி - 3*

*என்றது காண்க. இங்குக் கூறப்பட்ட தத்துவ தாத்துவிகங்கள் வைதிக சமயத்தார் பலர் கூறுவனவேயாதலின், அவற்றை எடுத்தோத்தாகக்கூறாது, அனுவாதமாகக் கூறினார். சிவாகமங்கள் நரகங்களைப் பலவாகக் கூறினும் 'ஏழ் நரகம்' - என்பது ஒரு பொது வழக்கு.*

*இதனால், தத்துவஞானத்தவரே சுத்தநனவாதி பருவங்களைத் தலைப்படுவாராதல் கூறப்பட்டது.*

***2162. தெளிவுரை :–*** *'கேவலம், சகலம், சுத்தம்' - என்னும், காரண அவத்தை மூன்றனுள் கேவலத்தின் துரியாதீதம், உயிர், 'நான்' என்கின்ற தன்னுணர்வும் இன்றி, ஆணவத்தில் அழுந்தி அதுவேயாய்க் கிடந்த நிலை. 'யான்' என்னும் உணர்வு முகிழ்க்கின்ற கேவலத்தில் துரியம், மேற் குறித்த நிலையில் இறைவன் அவ்வுயிருக்கு மூலகன்மத்தைக் கூட்டு வித்த நிலை. கேவலத்தில் சுழுத்தி, மூல கன்மத்தோடு காரண சரீரமாகிய மாயா தத்துவத்தைக் கூட்டிய நிலை. இவைகளில் ஆன்மாவிற்கு வினையை ஈட்டுதல் நுகர்தல்கள் இல்லை, கேவலத்தில் சொப்பனம் கால நியதிகளைக் கூட்டுவித்த நிலை. கேவலத்தில் சாக்கிரம் கலை வித்தை அராகங் களைக் கூட்டிய நிலை. இந்தச் சொப்பன சாக்கிரங்களில் தான் உயிர் வினைகளை ஈட்டுதலும் நுகர்தலும் நிகழும்.*

<table>
<tr><td>துரியாதீதம்</td><td>உயிர் ஆணவத்தோடு கூடி<br>தன்னையறியாத நிலை</td><td rowspan="3">மூன்றும்<br>வினை<br>நுகர்வுக்கு<br>ஏதுவான<br>இடங்கள்</td></tr>
<tr><td>துரியம்</td><td>இறைவன் கன்மத்தைக் கூட்டுவித்த நிலை.<br>சொல்வோனாகிய தன்னைத் தெரிந்த நிலை</td></tr>
<tr><td>சுழுத்தி</td><td>கன்மத்தோடு காரண சரீரமாகிய மாயைக்<br>கூட்டுவித்த நிலை</td></tr>
</table>

**2163.** நனவிற் கனவில்லை ஐந்தும் நனவில்
கனவிலாச் சூக்குமம் காணும் சுழுத்தி
தனில்நுண் பகுதியே தற்கூட்டு மாயை
நனவில் துரியம் அதீதம் தலைவந்தே. **10**

| கனவு | வினை நுகர்ச்சி - காலம், நியதி கூட்டுவித்த நிலை | நுகருமிடம் |
|---|---|---|
| நனவு | வினை நுகர்ச்சி - கலை, வித்தை, அராகம் கூட்டிய நிலை | |

***குறிப்புரை :-*** *இவற்றுள் முதல் மூன்றினையும் முறையே 'அநாதி கேவலம், விஞ்ஞான கேவலம், பிரளய கேவலம்' - என்பர். 'காதல்' என்றது மயக்கத்தை. அஃது ஆகுபெயராய் மாயையைக் குறித்தது.*

*இதனால், மும்மலங்களைக் கூறிய இயைபு பற்றி, அவற்றோடு தொடரும் கேவல ஐந்தவத்தையின் இயல்புகள் கூறப்பட்டன.*

***2163. தெளிவுரை :-*** *நனவில் கனவு இல்லாமைபோலக் கனவிலும் நனவு இல்லையாதலின், சுழுத்தியில், சுழுத்தி முதலிய மூன்று நுட்ப அவத்தைகள் மட்டுமே உள்ளனவாம். (அவைகளை 'சுழுத்தியிற் சுழுத்தி, சுழுத்தியில் துரியம், சுழுத்தியில் துரியா தீதம்' எனக் கூறிக் காண்க).*

*இங்ஙனம் கூறியதனானே, சொப்பனத்தில் சாக்கிரம் ஒழிந்த நான்கும் உளவாதல் பெறப்பட்டது.*

*நனவில் சொல்லப்படும் துரியமும், துரியாதீதமும் தாமே தனித்து நிகழும் நிலையில் துரியத்தில் இரண்டும், துரியாதீதத்தில் அஃது ஒன்றுமாகவே நிகழும். (அவை, 'துரியத்தில் துரியம்' துரியத்தில் துரியாதீதம்' எனவும், துரியாதீதத்தில் துரியாதீதம் எனவும் சொல்லப்படும்).*

*"ஐந்து சாக்கிரத்தில்; நான்கு கனவினில்" என்னும் சிவஞான சித்திச் செய்யுளுக்கு (சூ. 4-36) இதுவும் பொருளாமாறு அறிந்து கொள்க.*

***குறிப்புரை :-*** *'இதனுட் கூறியன யாவும் கீழாலவத்தை' என்க.*

*பகுதி - மூலப்பகுதி. தற்கூட்டு மாயை - கீழாலவத்தையில் ஆன்மாவிற்குக் கூட்டப்படும் மாயை. 'அது மூலப்பகுதியே' என்றபடி. 'வந்தவழி' என்பது 'வந்து' எனத் திரிந்தது. வந்தவழித் தாமே உளவாம் என்க. மூன்றாம் அடியை இறுதியில் கூட்டியுரைக்க. முதற்கண் "நனவிற் கனவில்லை" என்றது 'கனவில் நனவு இல்லை' என்பதனைத் தெளிவிக்கக் கூறிய உவமை.*

*இதனால், நின்மலாவத்தையில் கனவு இல்லை என்று விளக்குகிறார்.*

**2164.** **ஆறாறில் ஐயைந் தகலல் நனாநனா**
**ஆறாம் அவைவிட வாகும் நனாக்கனா**
**வேறான ஐந்தும் விடவே நனாவினில்**
**ஈறாம் சுழுத்தி இனிமாயை தானே. 11**

---

*2164.* ***தெளிவுரை :-*** *தத்துவம் முப்பத்தாறில் ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும், வித்தியா தத்துவத்தில் புருடன் ஒன்றும் ஆக இருபத்தைந்து தத்துவங்களை ஆன்மாத் தன்னின் வேறாகக் கண்டு நீங்குதலே* ***சகலத்தில் சுத்த சாக்கிரமாகும்****. (நின்மல சாக்கிரம்)*

*பின்னர், வித்தியா தத்துவத்தில் எஞ்சியுள்ள ஆறு தத்துவங்களையும் அவ்வாறு கண்டு நீங்குதலே சகலத்தில் சுத்த சொப்பனமாகும். (நின்மல சாக்கிரத்துச் சொப்பனம்)*

*பின்னர், சிவ தத்துவம் ஐந்தனையும், 'இவை பிரளயாகலர் சகலர்கட்கு பிரேரக மாத்திரையாயும், விஞ்ஞான கலருக்குத் தனு கரண புவன போகங்களாயும் பயன்பட்டுத் தோற்றமும் அழிவும் உடைய அநித்தியப் பொருட்களேயன்றி, இவை தாமே சிவனது இலய போக அதிகாரத் திருமேனிகளாகிய நித்தியப் பொருள்கள் அல்ல; அத் திருமேனிகள் இவற்றின் வேறாய்ச் சத்தி வடிவாவனவே' எனத் தெளிந்து, அவை பற்றியிருந்த மயக்கத்தின் நீங்குதலே சகலத்தில் சுத்த சுழுத்தியாகும். இவற்றிற்குப் பின் எஞ்சி நிற்பது காரண நிலையில் உள்ள சுத்த மாயையே.*

| | |
|---|---|
| *நின்மல நனவில் நனவு நிலையில் காரியப்படுவன* | *வித்தியாதத்துவம் 6 + சிவதத்துவம் 5* |
| *நின்மல கனவு நிலையில் காரியப்படுவன* | *சிவத்துவம் 5 மட்டும்* |
| *நின்மல சுழுத்தி நிலையில் காரியப்படுவன* | *மாயை மட்டும்* |

***குறிப்புரை :-*** *'சிவ தத்துவங்கள் பிரேரக காண்டம்' - என்பதை நோக்காதார், 'அவை யின்றியும் வித்தியா தத்துவங்கள் நீங்கிய வழியும் சிவதத்துவங்கள் தொழிற்படும்' எனவும் இம்மந்திரத்திற்குப் பொருள் உரைப்பர்.*

*மலாவத்தைகட்கே தத்துவங்களின் தொழிற்பாடும், அவையின்மையும் காரணமாவதன்றி, நின்மலாவத்தைகு அவை காரணம் ஆகாமையையும், 'நின்மலாவத்தை திருவருளானே நிகழ்வன' என்பதையும் அவர் நோக்கிலர்.*

*சகலத்தில் சுத்த சாக்கிரம் முதலியனவும் சகலத்தில் சகல சாக்கிரம் முதலியனபோல இலாடத் தானத்தே நிகழ்தல் பற்றி இவற்றையும் 'சாக்கிர சாக்கிரம் முதலியனவாகக் கூறுவர். எனினும் இடம் நோக்கி 'அவை இவை' எனக் கொள்ளப்படும்.*

**2165.** மாயையில் வந்த புருடன் துரியத்தில்
ஆய முறைவிட் டதுவும்தான் அன்றாகிச்
சேய் கேவல விந்துடன் சென்றக்கால்
ஆய தனுவின் பயன்இல்லை யாமே. **12**

---

*இம் மந்திரத்துட் கூறப்பட்டன நின்மலாவத்தைகளே.*

*இதனால், 'நின்மலாவத்தைகளாவன இவை' - என்பதை வகுத்துக் கூறத் தொடங்கி, முதல் மூன்றின் இயல்புகள் கூறப்பட்டன.*

***2165. தெளிவுரை :-*** *(முன்னை மந்திரத்திற் கூறியவாறு) உயிர் மாயா காரியங்களையெல்லாம் கடந்து எஞ்சி நின்ற காரண நிலையில் உள்ள சுத்த மாயை தாரகமாகச் சிவத்தை உணர்ந்து நிற்றலே சகல சாக்கிரத்தில் சுத்த துரியமாகும்.*

*பின்னர், ஆன்மா அந்த நிலையிலும் நில்லாமல் விட்டு நீங்கி, அந்தக் காரணமாயையும் தொடர்பின்றி நிற்கச் சிவமே தாரகமாக அதனை உணர்ந்து நிற்றல் சகல சாக்கிரத்தில் சுத்த துரியாதீதமாகும். இந்நிலையில் உடம்பு இருந்தும் இல்லாததேயாம்.*

*சுழுத்தி நிலையில் மாயை ஒன்றோடு மட்டும் கூடிய உயிர் துரிய நிலையில் மாயை விட்டு நீங்கி அம்மாயையும் தானன்று என்றுணர்ந்து எட்டாத கேவல அவத்தையில் உள்ள விந்துவோடு கூட முயன்றக்கால் உடம்பால் பயனில்லை என்றுணரும்.*

***குறிப்புரை :-*** *'உடம்பு வழியாக மலவாசனைகள் உயிரைத் தாக்கா' என்பதாம். 'மாயையில் வந்த புருடன் துரியத்தில் ஆய முறை' என்றாரேனும், 'புருடன் மாயையில் வந்ததே துரியத்தில் ஆயமுறை' என்றலே கருத்தென்க. சேய்மை, 'சேய்' என முதனிலை மாத்திரமாய் நின்றது. 'சேய்மை' என்றது 'அதீதம்' என்றவாறு. கேவலம் - தனிமை; கட்டற்ற நிலை. 'விந்துவும் தன்னை விட்டுச் செல்ல, உயிர் தான் சிவத்தில் சென்றக்கால், சேய்மைத்தாகிய கேவலமாம்' என்க.*

*இதனால், முன்னை மந்திரத்திற் கூறியவைபோக, எஞ்சி நின்ற இரண்டன் இயல்புகள் கூறப்பட்டன. இவை ஐந்தும் தச காரியத்துள் முதல் மூன்றினை ஒன்று கூட்டிப் பகுத்தன என்க.*

***2166. தெளிவுரை :-*** *நின்மல துரியாதீத அனுபவம் உணர்த்தப்படுகிறது. பிறிதொன்றையும் தாரகமாகக் கொள்ளாமையால், சடத்தன்மை சிறிதும் இன்றித் தூய அறிவேயாய் நிற்கின்ற ஆன்மா, அந்நிலையில், பழஞ் சுடராகிய சிவனது அவ்வருள் வழியே, தொடர்ந்து அவனையே உணர்ந்து நிற்குமாயின், அவ் வருளால் தனது தூய்மை கெடாது, என்றும் அந்நிலையிலே நிற்கும் நிலை கைகூடுவதாகும்.*

**2166.** அதீதத் துரியத் ததீனாம் ஆன்மா
அதீதத் துரியத் ததனால் புரிந்தால்
அதீதத் தெழுந்தறி வாகிய மானன்
முதிய அனலின் துரியத்து முற்றுமே. **13**

---

***குறிப்புரை :-*** *'அவ்வாறு செய்யாவிடில், மீளக் கீழ்நிலையை அடையும்' என்பதாம். 'துரியாதீதம்' என்பது, 'அதீத துரியம்' எனப் பின் முன்னாகி நின்றது. 'முதிய அனல்' என்பதைச் சுட்டும் 'அது' என்னும் சுட்டுப்பெயர், செய்யுள் பற்றி முன் வந்தது. 'அனல்' என்றது, சுடர் என்னும் பொருளது ஆதலின் "அதனால்" என்றது 'அருளால்' என்றதேயாம். முதலடியை மூன்றாம் அடியாகவும் அனு வதித்துக் கூறியது. 'இங்குக் கூறுமாறு நில்லாவிடின் ஆன்மாத்தான் அரிதில் அடைந்த நிலையை இழந்துவிடும்' என்பது உணர்த்தற்கு. இயமானன், 'யஜமானன்' - என்பதன் திரிபு. 'வேள்வித் தலைவன்' என்பது இதன் பொருள். யஜமானன்' என்பது உலக வழக்கில் பொதுவாக வழங்கினும், செய்யுள் வழக்கில் உயிரையே குறித்தல் அன்றிப் பிறவகையில் பொருள் தாராது. முதுமை, பழமையைக் குறித்தது. 'அநாதி' என்பதை, 'பழமை என்றல் தமிழ் வழக்கு. இறுதியில் உள்ள 'துரியம்', 'கடப்பு' என்னும் பொருளதாய்ப் பாசங்களைக் கடந்ததை உணர்த்திற்று'. முற்றுதல் - நிறைவெய்தல்.*

*இதனால், அரிதிற் பெற்றதொன்றைப் பேணுமாறு கூறப்பட்டது.*

***2167. தெளிவுரை :-*** *பிரிந்தும், கூடியும் வரும் கருவிகளில் முப்பத்தைந்து கருவிகள் மட்டுமே கூடிச் செயற்படுவது கேவல சாக்கிரம். (இதுவும் சகல சாக்கிரம் போலப் புருவ நடுவில் நிகழும் என்பது மேற்பல இடங்களில் கூறப்பட்டது).*

*சிவ தத்துவம் ஐந்தும், வித்தியா தத்துவம் ஏழும் ஆகப் பன்னிரண்டு தத்துவங்களும் ஆன்மாவை எப்பொழுதும் விட்டு நீங்குவன அல்ல, அதனால், 'புருடன்' என ஒன்றுபோலக் கூறுமிடம் எல்லாம் அவத்தை பேதத்தில் இப்பன்னிரண்டு தத்துவங்களும் கொள்ளப்படும். 'அவற்றுள் முப்பத்தைந்து கருவிகள் மட்டுமே கேவல சாக்கிரத்தில் தொழிற்படும்' என்றமையாலும், அவற்றுள் 'புருடன்' என்பது, மற்றும் பதினொரு கருவிகள் கூடியது ஆகையாலும், நாற்பத்தாறு கருவிகள் கேவல சாக்கிரத்தில் தொழிற்படும்.*

*கேவலசாக்கிரத்தில் செயற்படும் நாற்பத்தாறு கருவிகளாவன. ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, ஞானேந்திரிய விடயமாகிய சத்தாதி ஐந்து, கன்மேந்திரிய விடயமாகிய வசனாதி ஐந்து, அந்தக் கரணம் நான்கு, புருடன் ஒன்று, பிராணாதி வாயுக்கள் பத்து என்பன, "புருடன்" என்பது பன்னிரண்டு கருவிகளை அடக்கியது - என்பது மேலே கூறப்பட்டது.*

**2167.** ஐயைந்து பத்துடன் ஆனது சாக்கிரம்
கைகண்ட ஐயைந்தில் கண்டம் கனாஎன்பர்
பொய்கண்ட மூவர் புருடன் சுழுனையில்
மெய்கண் டவன்உந்தி மேவில் துரியமே. **14**

---

*ஆன்மா புருவ மத்தியிலே நிற்பினும் தொண்ணூற்றாறு கருவிகளும் செயற்படின் சகல சாக்கிரமும், அவற்றுள் ஐம்பது கருவிகள் நீங்க, கேவல சாக்கிரமும் நிகழும் என்க.*

*சகல சாக்கிரத்தில் ஆன்மா புலன்களை அறிவதில் தீவிரமாய், நன்குணர்ந்து நிற்கும். கேவல சாக்கிரத்தில் ஆன்மாப் புலன்களை அறிந்தும் அறியாதது போன்ற மந்த உணர்வு உடையதாய் இருக்கும். இவை அவ்விரு சாக்கிரத்திற்கும் இடையேயுள்ள வேறுபாடு.*

*முப்பத்தைந்து கருவிகளில் ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியம் ஐந்தும் ஆகப் பத்துக் கருவிகள் நீங்க, ஏனை இருபத்தைந்து கருவிகள் மட்டும் செயற்படுவது கேவல சொப்பனம். இந்நிலையில் ஆன்மாக் கண்டத் தானத்தில் நிற்கும். கைகண்ட - சாக்கிரத்தில் நன்கு துய்க்கப்பட்ட.*

*அவ்விருபத்தைந்தில் சித்தம், பிராணன், புருடன் - ஆகிய மூன்று கருவிகள் மட்டுமே செயற்படுவது கேவல சுழுத்தி. (பொய் என்றது ஐம்புலன்களை. 'சுழுனையில் பொய்கண்ட மூவர் உளர்' என இயைத்துக் கொள்க. 'இவருள் புருடனும் ஒருவன்' என்பதாம்). 'சுழுத்தி நிகழும் இடம் இருதயம்' என்க.*

*பொருள்களை உணரும் ஆற்றல் உடைய புருடன் இருதயத்தை விட்டு உந்தியை அடைந்தால் அந்நிலை கேவல துரியமாம். அப்பொழுது பிராணன் மட்டுமே உளதாக இருவரே இருப்பர். (இரு கருவிகள் மட்டுமே அவ்விடத்தில் செயற்படும்' என்றபடி). இங்குப் புருட தத்துவத்தையே உயிராக உபசரித்தார். 'உந்தி மேவில்' என்றதனால் முன்பு இருதயத்தில் நின்றமை பெறப்பட்டது.*

*குறிப்புரை :- உந்திக்குகீழ் உள்ளது மூலாதாரமே. ஆதலால், 'புருடனோடு உடன் இருந்த ஒரு கருவியாகிய பிராணனும் நீங்க, புருடன் ஒருவனும் மூலாதாரத்தை அடைந்தால் கேவல துரியா தீதம் நிகழும் - என்பது குறிப்பால் விளங்கிற்று.*

*கீழாலவத்தைகளில் செயற்படும் கருவிகளை, 'தொகைக் குறிப்பு' - என்னும் குறிப்பு வகையால் மரபு பற்றி உணர்த்தினார் என்க.*

*இதனால், 'கீழாலவத்தைகட்கு உரிய கருவிகள் இவை' என்பது கூறப்பட்டது.*

**2168.** புரியட் டகமே பொருந்தல் நனவு
புரியட் டகந்தன்னில் மூன்று கனவு
புரியட் டகத்தில் இரண்டு சுழுத்தி
புரியட் டகத்தொன்று புக்கால் துரியமே. **15**

---

***2168. தெளிவுரை :-*** *('புரியட்டக சரீரம்' - என்பது பெரும்பான்மையும் சூக்குமசரீரத்தையும், சிறுபான்மை பரசரீரத்தையும் குறிக்கும். இது சிவஞான போத இரண்டாம் சூத்திரத்து இரண்டாம் அதிகரண சிவஞான மாபாடியத்தாலும் விளங்கும்).*

| | |
|---|---|
| *கனவில் நனவு* | *புரியட்ட உடலுடன் உயிர் பொருந்தல்* |
| *கனவில் கனவு* | *மனம், புத்தி, அகங்காரம் மட்டும் செயல்படும் நிலை* |
| *கனவில் சுழுத்தி* | *புத்தி, அகங்காரம் மட்டும் செயல்படும் நிலை* |
| *கனவில் துரியம்* | *அகங்காரம் மட்டும் செயல்படும் நிலை* |
| *கனவில் அதீதம்* | *உயிர் தனித்திருக்கும் நிலை. (பாரிசேட அளவை)* |

*தன்மாத்திரை ஐந்தும், அந்தக் கரணம் மூன்றும் ஆக எட்டும் கூடியது சூக்கும சரீரம். இவ்விடத்தில் சித்தம் பிரகிருதியில் அடங்கும்.*

*மூலப் பிரகிருதி ஒன்றும், வித்தியா தத்துவம் ஏழும் ஆக எட்டும் கூடியது பர சரீரம்.*

*எனவே, 'புரியட்டகம்' என்பது இவ்விரு சரீரங்கட்கும் பெயராதல் விளங்கும். (இவை இரண்டுமே இம் மந்திரத்திற் குறிக்கப்படுகின்றன).*

*இரு புரியட்டக சரீரங்களும் தூல சரீரத்தோடு பொருந்தி நிற்கும் நிலையே இருவகைச் சாக்கிராவத்தையாகும். (இருவகை சகலமும், கேவலமும், இவ்வாறு சுருங்கக் கூறினாராயினும் கேவல சாக்கிரத்திலும் கனவிற் போலவே புரியட்டக சரீரம் நிற்கும் என்க). சத்தாதி ஐந்தும், வசனாதி ஐந்தும், பிராணாதி பத்தும் ஆக இருபதும் தாத்துவிகங்கள். ஆகையால் அவற்றை எண்ணாமல் விடுக்கச் சூக்கும சரீரத்தில் மூன்று அந்தக்கரணங்கள் மட்டுமே செயற்படும் நிலை கேவல சொப்பனமாம். கேவல சாக்கிரத்தில் இருவகை இந்திரியங்கள் செயற்படும். கேவல சொப்பனத்தில் அவை செயற்படா. (இங்குப் பரசரீரம் கருத்தில் கொள்ளப்பட வில்லை). பரசரீரத்தில், 'பிரகிருதி, புருடன்' என்னும் இரண்டு மட்டுமே தொழிற்படும் நிமலை கேவல சுழுத்தியாம். (இங்கும் பிராணன் எண்ணப்பட வில்லை). பரசரீரத்தில் புருடன் ஒன்று மட்டுமே செயற்படும் நிலை கேவல துரியமாம். (இங்கும் பிராணன் எண்ணப்படவில்லை. ஒரு கருவியும் இன்றி ஆணவ மந்திரம் இருத்தலே கேவல துரியாதீதம்' என்பது கருத்து.)*

***குறிப்புரை :-*** *கேவல துரியாதீதத்தில் பிரகிருதி சிறிதும் அறிவைப் பிறப்பியாது, இருளாயே இருக்கும் என்க.*

**2169.** நனவில் நனவு புலனில் வழக்கம்
நனவில் கனவு நினைத்தல் மறத்தல்
நனவில் சுழுத்திஉள் நாடல் இலாமை
நனவில் துரியம்அதீதத்தூண் நந்தியே. **16**

---

*இதனால், கீழாலவத்தைக் கருவிகள், வேறு வேறு சரீரங்களாதல் காட்டப்பட்டது.*

***2169. தெளிவுரை :-*** *நனவில் நனவு - நனவில் நனவாதிகளைத் தொகுத்துணர்த்துகிறார். சாக்கிரத்தில் சாக்கிரமாவது உயிர் பொறிகளின் வழியாகப் புறத்தே உலாவிப் புலன்களைப் புதிது புதிதாக உணரும் நிலை.*

*சாக்கிரத்தில் சொப்பனமாவது, புறத்துச் சென்று புதிய காட்சிகளைக் காணாது முன்பு கண்டவற்றைப் பற்றியே நினைந்திருத்தல்.*

*சாக்கிரத்தில் சுழுத்தியாவது, முன்பு கண்ட காட்சிகளை நினைதலையும் விடுத்துப் பொதுமையின் நிற்றல்.*

*சாக்கிரத்தில் துரியமாவது, புறப்பொருள்களால் விளைந்தது துன்பமாயின் அதனைப் போக்கவும், இன்பமாயின் அதனைக் காக்கவும் ஆன வழிகளைப் பலவாக எண்ணுதல்.*

*சாக்கிரத்தில் துரியாதீதமாவது, அவ்வாறு எண்ணுதல் இன்றி, துன்பம், அல்லது இன்பத்திலே மூழ்கித் தன்னை மறத்தல்.*

| *நனவில் நனவு* | *ஐம்புலனொடுக்கம், தன் மாத்திரைகள் அடங்கல்* |
|---|---|
| *நனவில் கனவு* | *மனத்தின் தொழிலாகிய நினைத்தல்* |
| *நனவில் சுழுத்தி* | *நினைப்பையும் இழத்தல் - மறத்தல்* |
| *நனவில் துரியம்* | *உயிர்ப்படங்கல்* |
| *நனவில் துரியாதீதம்* | *சிவமாய் இருத்தல்* |

***குறிப்புரை :-*** *இவையே 'சகலத்திற் சகலம்' - என்றும், 'மகாசகலம்' என்றும் சொல்லப்படுவன என்க. இவை இனிது விளங்குதற் பொருட்டு, அரிய பொருளை மறந்து கைவிட்டவன் நினைவு வந்த பொழுது அதுபற்றி மூர்ச்சித்தல், தெளிந்து புலம்பல், விட்ட இடத்தை நினைத்துப் பார்த்தல் முதலியவற்றை அதீதம் முதலியனவாகக் கூறிக் காட்டுவர்.*

*'அதீதத்து ஊண்' (அநுபவித்தலை) நந்தி (விடுத்து) உள்நாடல் இலாமையாம் என்க.*

*இதனால், சகலத்தில் சகல சாக்கிரம் முதலியவற்றின் இயல்புகள் அனுபவத்தில் வைத்து உணர்த்தப்பட்டன.*

**2170.** **கனவில் நனவுபோல் காண்டல் நனவாம்**
**கனவினில் கண்டுமறத்தல் கனவாம்**
**கனவில் சுழுத்தியும் காணாமை காணல்**
**அனுமாதி தேய்தலில் ஆன துரியமே.** **17**

**2171.** **சுழுத்தி நனவொன்றும் தோன்றாமை தோன்றல்**
**சுழுத்திக் கனவுதன் உண்மை சுழுத்தியில்**
**சுழுத்தி அறிவறி வாலே அழிகை**
**சுழுத்தித் துரியமாம் சொல்லறும் பாழே.** **18**

---

*2170. **தெளிவுரை :-** கனவில் நனவாதி அவத்தைகளை உணர்த்துகிறார். (மேல், 'நனவிற் கனவில்லை' என வந்த மந்திரத்தில் சித்தாந்தம் கூறிய நாயனார் இது முதல் மூன்று மந்திரங்களால் சில பூர்வ பக்கம் கூறுகின்றார்).*

*கனவு நனவுபோல மிகத் தெளிவாக நிகழ்தல் சொப்பனத்தில் சாக்கிரம். (இதுவே, 'சொப்பனத்தில் சொப்பனம்' என்பது சித்தாந்தம்).*

*கனவு தெளிவாக அன்றி, மந்தமாக நிகழ்தல் சொப்பனத்தில் சொப்பனம். (இது வேற்றை என்பது சித்தாந்தம்).*

*கனவில் காட்சியாகக் காணாது, கருத்தாக மட்டும் சிலவற்றை உணர்தல் சொப்பனத்தில் சுழுத்தி. அந்த உணர்வும் இன்றி இருத்தல் சொப்பனத்தில் துரியம். (இதனானே, 'உணர்வு கனவில் உண்டாகும் இன்பத்துன்பங்களிலே அது அதுவாக அழுந்துதலே சொப்பனத்தில் துரியாதீதம்' - என்பது பெறப்படும்).*

*குறிப்புரை :- 'கனவில் நனவில்லை' என்பதே சித்தாந்தம்.*

***<u>கனவில் நனவாதி அவத்தைகள்</u>***

| | |
|---|---|
| *கனவில் நனவு போலக் காண்பது* | *கனவில் நனவு* |
| *கனவில் கண்டு அவைகளை மறத்தல்* | *கனவில் கனவு* |
| *ஒன்றையும் காணாது இருத்தல்* | *கனவில் சுழுத்தி* |
| *கண்டவற்றை அனுமானித்தல்* | *கனவில் துரியம்* |
| *உயிர்ப்படங்கல்* | *அதீதம்* |

*2171. **தெளிவுரை :-** சுழுத்தியில் நனவு முதலிய அவத்தைகளின் இயல்புணர்த்துதல். சுழுத்தியில் ஒருகால், 'இது நல்ல உறக்கம்' என அதனை உணர்தல் சுழுத்தியில் சாக்கிரம். சுழுத்தியில் 'நாம் நன்கு உறங்குகின்றோம்' எனத் தன்னை உணர்தல் சுழுத்தியில் சொப்பனம். (இவை இரண்டும் நிகழில் சுழுத்தி யில்லையாம் என்பது சித்தாந்தம்).*

*சுழுத்தியை உணர எழுகின்ற அறிவைச் சுழுத்தியில் தோய்கின்ற அறிவு*

**2172.** துரிய நனவாம் இதம்உணர் போதம்
துரியக் கனவாம் அகம்உணர் போதம்
துரியச் சுழுத்தி வியோமம் துரியத்
துரியம் பரம்எனத் தோன்றிடுந் தானே. **19**

---

*அழிக்க, யாதும் தோன்றாதநிலை சுழுத்தியில் சுழுத்தி, அவ் எழுச்சியும், அழிப்பும், தோன்றாது அடங்கும் நிலை சுழுத்தியில் துரியம். (இதனானே, 'அவ்வடக்கத்தால் எழுகின்ற உறக்க இன்பத்தில் ஆழ்ந்துவிடுதல் சுழுத்தியில் துரியாதீத நிலை' என்பது பெறப்படும்).*

*2172. **தெளிவுரை :-** துரிய நனவாதிகளின் இயல்பை உணர்த்துகிறார். துரியத்தில் பேருறக்கத்தில் விளைகின்ற மிக்க இன்பத்தினைக் காலத்தொடு ஒட்டி நெடிதுணர்தல் துரியத்தில் சாக்கிரம். அவ்வின்பத்தை உணராது தன்நிலையை உணர்தல் துரியத்தில் சொப்பனம். துரியத்தில் திருவருள் உணர்வு தோன்றல் துரியத்தில் சுழுத்தி. துரியத்தில் திருவருட்கு முதலாகிய சிவத்தை உணர்தல் துரியத்தில் துரியம். (இதனால், சிவத்தில் ஒடுங்கல் துரியத்தில் துரியாதீதமாதல் கொள்ளப்படும்).*

| சுழுத்தியில் நனவு | ஒன்றும் தோன்றாதுறங்கல் |
|---|---|
| சுழுத்தியில் கனவு | உயிராகிய தன் உண்மை மட்டும் தோன்ற நிற்றல் |
| சுழுத்தியில் சுழுத்தி | அறிவு அறிவாலே அழிதல் |
| சுழுத்தியில் துரியம் | சொல்ல முடியாத சூனியநிலை |

*(இவற்றுள், 'முதற்கண் கூறிய நிலையே துரியத்தில் துரியம்' என்பதும், அவ்வின்பத்தில் தோய்ந்து, அதுவேயாய்க் கிடத்தலே துரியத்தில் துரியாதீதம்' என்பதும், 'பிறவெல்லாம் கீழாலவத்தைக் கண் நிகழா' என்பதுமே சித்தாந்தம்).*

*இனி 'இங்குக் கூறப்பட்ட துரியம் பரதுரியமே' எனக் கொள்வாரும் உளர்.*

*துரியாதீத நிலை இங்குக் கூறப்படாமையால், அதில், 'சித்தாந்தத்திற்கு வேறாய்ச் சொலலப்படுவன இல்லை' என்பதாகின்றது.*

***குறிப்புரை :-*** *வியோமம் - பரவியோமம். பூர்வ பக்கங்களையும் உணர்ந்து கழித்தாலன்றிச் சித்தாந்தத்தில் தெளிவு பிறவாது ஆகலான், அதுபற்றி இம்மூன்று மந்திரங்களாலும் கீழாலவத்தை பற்றிய பூர்வ பக்கங்கள் சில கூறப்பட்டன.*

*2173. **தெளிவுரை :-** ஆன்மா தத்துவங்களின் இயல்பை அறியுமுகத்தானே தன்னியல்பை அனுமித்தறியும் நிலை சகலத்தில் சுத்த சாக்கிரம். (இதனை, 'ஆன்மரூபம்' என்க). தத்துவங்களின் இயல்பை உணரும் முகத்தால் அவற்றால் தனக்கு உண்டாகும் பாச அறிவை நீக்கி நிற்கும் நிலை சகலத்தில் சுத்த சொப்பனம். (இதனை, 'ஆன்ம தரிசனம்' என்க. 'சிவரூபம்' இங்கு உடன் நிகழும்).*

**2173.** அறிவறி கின்ற அறிவு நனவாம்
அறிவறி யாமை அடையக் கனவாம்
அறிவறி யவ்வறி யாமை சுழுத்தி
அறிவறி வாயின தான துரியமே. 20

**2174.** தான்எங்கும் ஆயவன் ஐம்மலம் தான்விட்டு
ஞானம் தனதுரு வாகி நயந்து பின்
தான்எங்கு மாய்நெறி நின்று அது தான்விட்டு
மேல்நந்தச் சூக்கம் அவைவன்ன மேலீடே. 21

---

*பதியறிவை நாடி அதனை அறிந்த ஆன்மா, அந்த அறிவில் தனது அறிவு ஒடுங்கத் தான் தோன்றாது அதுவேயாய் நிற்கும் நிலை சகலத்தில் சுத்த துரியமாம். (இதுவே, ஆன்மசுத்தியும், சிவதரிசனமும், சிவயோகமும் என்க.) இதற்குமேல் ஆன்மாத் தன்னால் பற்றப்பட்ட சிவம் விளைக்கின்ற ஆனந்தத்தில் மூழ்கிப் பிறிதொன்றையும் அறியாது நிற்றலே சகலத்தில் சுத்த துரியாதீதம் என்பது குறிப்பால் கொள்ளக்கிடந்தது. அதுவே 'ஆன்ம லாபம்' என்க.*

| ஞான நனவு | தன்னறிவு சிவனறிவில் அடங்கியதாக அறிதல் |
|---|---|
| ஞானக் கனவு | தன்னறிவு அங்ஙனம் அடங்கினோம் என்றுணர்வையும் இழந்த நிலை |
| ஞானவுறக்கம் | தற்போதம் சிவபோதமாகவே விளங்குதல் |
| ஞானத்துரியம் | பரமாகிய சிவதரிசனம் பெறுதல் |

*குறிப்புரை :- ஆன்ம சுத்தி, சிவ தரிசனம், சிவயோகம் இவை உடன் நிகழ்ச்சியாய் நிகழ்தல் பற்றி அம்மூன்றையும் ஒன்று கூட்டிச் சுழுத்தி துரியங்களாகப் பகுத்துக் காட்டினார். இவற்றிற்கு முன் இரண்டை, 'சொப்பனம்' என ஒன்றாகக் காட்டினார்.*

*மேல், 'ஆறாறில் ஐயைந்து' எனவும், 'மாயையில் வந்த புருடன்' எனவும் போந்த மந்திரங்களை இங்கு உடன் வைத்துக் காண்க. மூன்றாம் அடியில் வகர மெய் விரித்தல். 'அறிவையறிதலால் வரும் அறியாமை சுழுத்தி' என்க.*

*இதனால், நின்மலாவத்தையில் சில உட்கூறுகள் கூறப்பட்டன.*

*2174. தெளிவுரை :- வியாபகப் பொருளாகிய ஆன்மா, அந்த வியாபகத்தைத் தடுத்து அணுத்தன்மைப்படுத்திய ஆணவாதி பாசம் ஐந்தினின்றும் நீங்கித் தனது வியாபகத்தைத் தலைப்பட்ட நிலை உண்மைச் சுத்த சாக்கிரம். (இதுவே சீவன் முத்தியாம்).*

*சீவன் முத்தியில் மாயையாகிய உடம்பு இருத்தலால், அது வழியாக ஏனைப் பாசங்களின் வாசனைகளும் உளவாம். அவ்வாசனைகள் பெரும்பான்மையும்*

*நீங்கி, அதிகார மலவாசனை நின்றவிடத்து, அனந்தேசுராதி பதங்களில் விருப்பம் உண்டாகும். அவ்வாற்றால் அப்பதங்களில் இருத்தல் உண்மைச் சுத்த சொப்பனம் (இஃது அதிகார முத்தியாம்).*

*பின்பு அதிகாரமலம் நீங்கிப்போக மல வாசனை நின்றவிடத்து நிவிர்த்தி முதலிய நான்கு கலைகளையும் உள்ளடக்கிப் பெருவியாபகமாய் நிற்கின்ற சாந்தி யதீத கலையில் சத்தி தத்துவத்தில் உள்ள புவனங்களில் உள்ள போகங்களை நுவர்வதில் விருப்பம் உண்டாகும். அவ்வாற்றால் அவற்றை அடைந்திருத்தல் உண்மைச் சுத்த சுழுத்தி. (இது போக முத்தியாம்).*

*போக மல வாசனை நீங்கி, இலய மன வாசனை நின்றவிடத்து, அச்சாந்திய தீத கலையில் உள்ள சிவதத்துவ புவனங்களில் உள்ள போகங்களை நுகர்வதில் விருப்பம் உண்டாகும். அவ்வாற்றால் அவற்றை அடைந்திருத்தல் உண்மைச் சுத்த துரியம். (இஃது இலய முத்தியாகும்).*

*போக மல வாசனை நீங்கி, இலய மல வாசனை நின்றவிடத்து, அச்சாந்தியதீத கலையில் உள்ள சிவதத்துவ புவனங்களில் உள்ள போகங்களை நுகர்வதில் விருப்பம் உண்டாகும். அவ்வாற்றால் அவற்றை அடைந்திருத்தல் உண்மைச் சுத்த துரியம். (இஃது இலய முத்தியாகும்)*

*(சாந்தி கலையில் சாதாக்கிய தத்துவ புவனத்தை அடைந்தவர்களும், சாந்தியதீத கலையில் உள்ள புவனங்களை அடைந்தவர்களும், ‘அணு சதாசிவர்கள்’ எனப்படுவர். சுத்த வித்தை, ஈசுரம் ஆகிய தத்துவ புவனங்களை அடைந்தவர்கள் ‘வித்தையேசுரர்கள்’ என்றும், ‘மந்திர மகேசுரர்கள்’ என்றும் இருவகையினராய் இருப்பர்).*

*(இலய முத்தி ‘உண்மைச் சுத்த துரியம்’ என்றதனானே, ஆன்மா அனைத்து மல வாசனைகளும் சிறிதும் இன்றி நீங்கப் பரம சிவனோடு இரண்டறக் கலக்கும் சாயுச்ச நிலை உண்மைச் சுத்த துரியாதீதம் ஆதல் விளங்கும்).*

*(இவையெல்லாம் பராவத்தைகளாம்).*

| | |
|---|---|
| *வியோம சாக்கிரம்* | *மலங்களை விடுதல்* |
| *வியோம சொப்பனம்* | *ஞானத்தை விரும்பல்* |
| *வியோம சுழுத்தி* | *எங்குமாதல்* |
| *வியோம துரியம்* | *ஆக்கமாய்ப் பரத்தின் தன்மையாதல்* |

***குறிப்புரை :-** இவ்வாற்றால், சீவன் முத்தி, அதிகார முத்தி, போக முத்தி, இலய முத்தி, பரமுத்தி - என்பன உண்மைச் சுத்தத்தில் நிகழும் சாக்கிர சொப்பன சுழுத்தி துரிய துரியாதீதங்களாதல் போந்தவாறு அறிக.*

***‘விட்டு, நயந்து, நின்று’ என்னும் செய்தென் எச்சங்கள் எண்ணுப் பொருளில் வந்து, ‘சூக்கம்’ என்பதன் பின் தொக்கு நின்ற ‘ஆம்’ என்பதனோடு***

**2175.** ஐயைந்தும் ஆறும்ஓர் ஐந்தும் நனாவினில்
எய்யும் நனவு கனவு சுழுத்திஆம்
எய்தும்பின் சூக்குமம் எய்பகுதி மாயை
ஐயமுந் தானவன் அத்துரி யத்தனே. **22**

---

*முடிந்து, உண்மைச் சுத்த சாக்கரம் முதலிய மூன்றனையும் முறையே குறிப்பால் உணர்த்தின. 'சூக்கம்' என்றது துரியத்தை.*

*பின்வந்த 'விட்டு' என்பது 'விட்டவழி' என்பதன் திரிபு. அது 'நந்த' என்பதனோடு முடிந்தது. 'ஞானம்' என்பது 'வித்தை' என்னும் பெயர்க்குப் பரியாயமாய், 'வித்தைகள், வித்தையீசர்' (சிவஞானசித்தி, சுபக்கம் - சூ. 1. 26) என்போரைக் குறித்தது. 'வன்னம்' என்றது அவத்தையை. 'மேலீடு' என்றது, 'பராவத்தை' என்றபடி. நந்துதல் - வளர்தல்.*

*இதனால், உண்மைச் சுத்தமாகிய பராவத்தைகளின் இயல்புகள் கூறப்பட்டன.*

*2175. தெளிவுரை :- சகலசாக்கிரத்தில் முப்பத்தாறு கருவிகளும் குறைவின்றிச் செயற்படும். அந்தச் சாக்கிரத்திற்குப் பின்னர் அதிலே, 'சொப்பனம், சுழுத்தி' என்பவையும் நிகழும். அவைகளில் இளைத்து மடங்கும் கருவிகள் அசுத்த மாயையின் காரியங்களாம். அவை காலம், நியதி முதலியன. அவை செயற்படுதல் சிவதத்துவங்கள் செலுத்துதலினாலேயாகலின், 'அவை செயற்படா. எனவே, சிவ தத்துவங்களும் செயற்படாமை பெறப்பட்டது. சிவதத்துவங்கள் ஐந்தில் சுத்த வித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி என்பவை முறையே ஒவ்வொன்றாகக் குறைந்து கொண்டே போவதால், சகலத்தில் சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பவை நிகழும் என்க.*

*'உளனோ, இலனோ' - என்னும் ஐயம் நிகழுமாறு உயிர்ப்பின்றிக் கிடப்பது. அதற்குமுன் துரியநிலையில் இருந்த அந்த ஆன்மாவேயாம். (எனவே, விழிப்பு நிலையிலே உயிர்ப்பின்றி மூர்ச்சித்துக் கிடத்தலே சகலத்தில் துரியாதீத மாயிற்று).*

**நனவில் நனவாதி அவத்தை**

| | |
|---|---|
| நனவில் நனவு | 25 தத்துவங்களுடன் தொழிற்படும். மெய் - தூலம் |
| நனவில் கனவு | புருடன் நீங்கி வித்யாதத்துவம் ஆறுடன் தொழிற்படும். உடல் சூக்குமம் |
| நனவில் சுழுத்தி | சிவதத்துவம் ஐந்துடன் செயற்படும் அவத்தை - உடல் மூலப்பிரகிருதி |
| நனவில் துரியம் | சுத்தமாயை - அதுவே உடல் |

**2176.** ஈதென் றறிந்திலேன் இத்தனைக் காலமும்
ஈதென் றறிந்தபின் ஏதும் அறிந்திலேன்
ஈதென் றறியும் அறிவை யறிந்தபின்
ஈதென் றறியும் இயல்புடை யோனே. **23**

---

*குறிப்புரை :-* இவையெல்லாம் மத்தியாலவத்தைகள். எய் பகுதி - வினைத்தொகை. எய்த்தல் - இளைத்தல். பகுதி - தொகுதியுள் சில கூறுகள். மாயை, அதன் காரியத்தைக் குறித்த ஆகுபெயர். 'முந்த ஆனவன்' என்பதில் பெயரெச்சத்து அகரம் தொகுத்தலாயிற்று. 'உந்த ஆனவன்' என்றலும் ஆம். இங்கும் துரியம் 'சூக்கம்' எனப்பட்டது.

இம்மந்திரத்திற்குச் சித்தாந்தத்துள் ஓரிடத்தும் பெறப்படாது அவரவர் கருதியவாறே உரைத்த உரைகள் உள.

இதனால், வித்தியா தத்துவ சிவ தத்துவங்களின் கூடுதல் குறைதல்களாலே மத்தியாலவத்தைகள் நிகழ்தல் கூறப்பட்டது.

*2176. **தெளிவுரை :-*** தம்மனுபவங் கூறி உலகத்தவராகிய நமக்கு உணர்த்துகிறார். (சுருதியும், குருமொழியும் "ஒன்று அவன்தானே" என்றபடி, (பா.1) 'தன்னோடு ஒப்பவைத்து எண்ணுதற்கு மற்றொரு பொருள் இன்றித் தான்ஒன்றேயாய தனிமுதற் பொருள் ஒன்று உண்டு' என வலியுறுத்திக் கூறுகின்ற அப்பொருளை) மத்தியாலவத்தை கீழாலவத்தைகளில் மட்டுமே அகப்பட்டு உழன்ற இவ்வளவு காலமும், 'இது' என்று நான் உணரவில்லை (யோகாவத்தையை அடைந்த பொழுது அதனைச் சிறிதே உணர்ந்தேன்). நின்மலாவத்தையை அடைந்தபின் அதனைத் தெளிவாக உணர்ந்தேன். அதனை அவ் வாறுணர்ந்த பின் பிறிதொன்றையும் அறிய முயல்கின்றிலேன். ('அதனையே அறிந்து நின்றேன்' என்பதாம்). அவ்வாறு அதனை உணரும் உணர்வை எய்திய பின்புதான் நான் மெய்யுணர் வுடையேனாயினேன்.

*குறிப்புரை :-* அவத்தைகளே அதிகாரப்பட்டு வருதலால் 'இத்தனைக் காலமும்' - என்றது பயன்படாத அவத்தையிற் கிடந்த காலத்தையே குறித்தது. ஆகவே, அறிந்த காலம் பயன்படும் அவத்தை நிகழ்ந்த காலம் ஆயிற்று. 'அறிந்துபின்' - என்ற அனுவாதத்தால், அறிந்தமை தானே பெறப்பட்டது. அறியற்பாலதாய பொருளை அறிவதே அறிவாதலின், அங்ஙனம் அறியும் பொழுதே அறிவராந் தன்மையை மக்கள் பெறுதல் பற்றி, ''அறியும் இயல்புடையேன்" என்றார். 'உடையேன்' என்னும் ஆக்கவினைக் குறிப்பில் ஆக்கச்சொல் தொக்கு நின்றது. அடைதலே அறிவிற்குப் பயன் ஆதலின், 'அறிந்தபின்' என்றது, 'பெற்றபின்' என்றதேயாம்.

ஞாயிற்றின் ஒளியால் இருள்நீங்கிப் பொருள்களைக் காண்கின்ற கண் அவ்வொளியால் ஞாயிற்றையே நோக்கியவழி அதற்கு அந்த ஞாயிறன்றிப்

**2177.** உயிர்க்குயி ராகிஉருவாய் அருவாய்
அயற்புணர் வாகி அறிவாய்ச் செறிவாய்
நயப்புறு சத்தியும் நாதனுல காதி
இயற்பின்றேல் எல்லாம் இருள் மூடம் ஆமே. **24**

---

*பிறிதொரு பொருள் தோன்றாதவாறு போல, முதல்வனது அருளால் மலம் நீங்கிப் பொருளியல்புகளை உள்ளவாறு உணர்ந்துவரும் உணர்வு, அம்முதல்வனையே உணர்ந்தவழி அவ்வுணர்விற்குப் பிறிதொருபொருள் புலனாகாது' என்பதே, "ஈதென்றறிந்தபின் ஏதும் அறிந்திலேன்" என்பதனால் கூறப்பட்டது.*

*இதனால், அவத்தைகளின் பயன்கள் அனுபவ முறையால் கூறப்பட்டது.*

*2177.* ***தெளிவுரை :-*** *உலகிற்கு முதல்வனாகிய இறைவன் அறிவுடைப் பொருளாகிய உயிர்களில் அவற்றுக்கு உயிராகியும், அறிவில்லாத உருவமும், அருவமும் ஆகிய பொருள்களில் அவையேயாகியும் இவ்வாறு கலப்பினால் ஒன்றாயும், பொருள் தன்மையால் அவையனைத்தினும் தான் வேறாவதோர் திறம் உடையனாயும், உயிர்களின் அறிவு ஒன்றை அறியுமிடத்துத் தானும் அவ்வாறு அப்பொருளை அறிகின்ற அறிவாய் உடனாயும் 'சத்தியும், சிவமும்' என்னும் இரு திறத்தால் இயக்காவிடில் உயிர்கள் முழு மூடங்களாயும், உயிரல் பொருள்கள் சூனியமாயும் ஒழிவனவாம். சிவபெருமான் உயிர்களுடன் கலந்தும், கடந்தும், உடனாயும் இருக்கும் நிலைகளை உணர்த்துகிறார்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'அவன் அவ்வாறு இயக்குதலானே மேற்கூறிய அவத்தைகள் பலவும் நிகழ்கின்றன' என்றபடி. இதனானே, இறைவன் பெத்தம், முத்தி இரண்டிலும் உயிர்கட்கு அவ்வந் நிலைக்கேற்ற அறிவையும், அனுபவத்தையும் தந்துதவுதல் விளங்கும். நயப்புறு சத்தி - சிவகாமி. நாதன் - நடனநாதன்.*

*'உலகிற்கு ஆதி' என உருபு விரித்து அதனை முதற்கண் கூட்டி, 'நாதனும் ஆய்' என உம்மையும், ஆக்கச் சொல்லும் வருவித்து உரைக்க. இயற்பு - 'நடத்துதல்' எனப் பிறவினை. இது, 'நடத்தல்' எனத் தன்வினையாயின், 'இயல்பு' என நிற்கும். 'இருள்' என்றது, 'சூனியம்' என்றபடி. சூனியம், இங்கு, இருந்தும் இல்லாமை. 'இருள், மூடம்' என்பவற்றை எதிர் நிரல் நிறையாகக் கொள்க.*

*இதனால், 'ஆன்மாவும், கருவிகளும் கூடிய துணையானே அவத்தைகள் நிகழமாட்டா; இறைவனது திருவருள் உடனாய் நின்று நிகழ்விக்கவே நிகழும்' என்பது கூறப்பட்டது.*

*2178.* ***தெளிவுரை :-*** *சிவன், 'இச்சை, ஞானம், கிரியை' என்னும் தனது மூன்று சத்திகளில், 'உயிர்களை உய்விக்க வேண்டும்' என விரும்பும் இச்சா சத்தியினால் உயிர்களில் எல்லாம் தான் நல் உயிராய்க் கலந்து, அநாதியே*

**2178.** சத்தி யிராகத்தில் தான்நல் உயிராகி
ஒத்துறு பாச மலம்ஐந்தோடு ஆறாறு
தத்துவ பேதம் சமைத்துக் கருவியும்
வைத்தனன் ஈசன் மலம்அறு மாறே. **25**

**2179.** சாக்கிரா தீதத்தில் ஆணவம் தன்னுண்மை
சாக்கிரா தீதத் துரியத்தில் தான்உறல்
சாக்கிரா தீதத்தில் ஆணவந் தான்விடச்
சாக்கிரா தீதம் பரன்உண்மை தங்குமே. **26**

---

உயிர்களில் தன்னைப் போலவே பொருந்தியுள்ள பாசம், 'அஃது ஒன்றே' யாகாது 'ஐந்து' என்னும் படி முதல் மலத்தொடு நான்கு மலங்களைக் கூட்டியதனானே அம்முதல் மலம் முற்றிலும் அற்றொழிதற் பொருட்டுத் தத்துவ வகை முப்பத்தாறினையும் உண்டாக்கி, அம்முப்பத்தாறின் கூறுகளாக மற்றும் அறுபத்தாறு கருவிகளையும் தோற்றுவித்து வைத்தான்.

*குறிப்புரை :-* 'இவ்வாற்றால் உயிர்கள் முதல் மலம் முற்றிலும் நீங்கச் சிவனையடைந்து பேரின்பத்தை யடையும்' என்பதாம். 'ஈசன் இராக சத்தியின் தான்நல் உயிராகி, ஐந்தோடு, மலம் அறுமாறு பேதம், சமைத்து, கருவியும் வைத்தனன்' என இயைத்துக் கொள்க. இராகம் - இச்சை. 'பாசத்தோடு' என உருபு விரிக்க.

*நன்மை, இயல்பாகவே பாசங்களின் நீங்கினமையால் அறிவேயாயும், இன்பமேயாயும் இருத்தல். 'மலம் ஐந்து ஆக்கியதோடு' என்க. இவ்ஒடு, எண் ஒடு. முதல் மலம் ஆணவம்; பின்னர்க் கூட்டிய நான்கு மலங்களாவன மாயை, கன்மம், மாயேயம், திரோதாயி. மாயேயம், தத்துவ தாத்துவிகங்கள். எனவே, 'தத்துவ பேதம், கருவி' என்றது மாயேயங்களை விளக்கியதாம். 'கருவியும்' என்னும் உம்மை இறந்தது தழுவிய எச்சம்.*

*அவத்தை பேதங்கள் பெத்தமும், முத்தியுமாய் நிற்றலால், அவையிரண்டும் சிவன் செயலே யாதலை விளக்கியவாறு.*

*இம்மந்திரம் சைவ சித்தாந்தச் சுருக்கமாய் நிற்குமாற்றையும் உணர்ந்து கொள்க.*

*முன்னை மந்திரத்தில் தொகுத்துக் கூறிய சிவனது செயல் இதனால், வகுத்துக் கூறப்பட்டது.*

*2179. **தெளிவுரை :-** சகல சாக்கிரத்தில் சாக்கிரம் முதலியன நிகழுங்கால் இறுதியில் நிகழும் துரியாதீதத்தில் ஆன்மாத் தன்னையும், பிறிதையும் உணர்தல் இன்றி, ஆணவத்தால் விளையும் பேரிடரிலே மூழ்கியிருக்கும். இது 'தன்னுண்மை'*

**2180.** மலக்கலப் பாலே மறைந்தது ஞானம்
மலக்கலப் பாலே மறைந்தது சத்தி
மலக்கலப் பாலே மறைந்தனன் தாணு
மலக்கலப் பற்றால் மதிஒளி யாமே. **27**

---

*எனப்படும். (இந்நிலை அநாதி கேவலத்தொடு ஒத்ததாகும்).*

*நின்மல சாக்கிரத்தில் நிகழும் துரியாதீதத்தில் ஆணவம் இன்மையான், அதில் ஆன்மாச் சிவனால் தரப்படும் பேரின்பத்தில் மூழ்கித் தன்னையும் அறியா நிலையில் இருக்கும். (இஃது ஆன்மா இறுதியில் அடையும் சாயுச்ச நிலையோடு ஒத்ததாகும். இதுவே முன்பு ஆணவத்தோடு அத்துவிதமாய் நின்றது போலப் பின்பு மெய்ஞ்ஞானத் தாணுவினோடு அத்துவிதமாய் நிற்கும் நிலை).*

*இங்குக் கூறிய இருவகைச் சாக்கிரத்திலும் துரியாதீதத்திற்கு முன்னாதல், பின்னாதல் நிகழும் துரியத்தில் ஆன்மாத் தனக்கு உளவாகும் இன்பத் துன்பங்களை அறிவதாய் இருக்கும்.*

*குறிப்புரை :-* ‘முதல் அடியில் கூறிய சாக்கிரம் சகல சாக்கிரம்’ என்பதும் ‘இறுதியிரண்டடிகளில் கூறிய சாக்கிரம் நின்மலசாக்கிரம்’ என்பதும், இரண்டாம் அடியில் கூறிய சாக்கிரம் இரண்டனையும் குறித்த பொது சாக்கிரம் என்பதும் அவ்வவற்றில் காட்டப்பட்டுள்ள அனுபவம் பற்றி உணர்ந்து கொள்ளப்படும்.

இரண்டாம் அடியை இறுதியிற் கூட்டி, ‘சாக்கராதீதத்தின் பக்கத்ததாகிய துரியத்தில்’ எனவும், ‘தான் அனுபவத்தை உறல்’ எனவும் உரைத்துக் கொள்க.

முதற்கண் உள்ள ‘ஆணவம்’ தன்காரியம் உணர்த்தி நின்றது. ஈற்றில், ‘பரன் உண்மையில் தங்கும்’ என உருபு விரித்துரைக்க.

இதனால், ‘சகல சாக்கிரம், நின்மல சாக்கிரம்’ என்பவற்றின் இயல்புகள் அவற்றை ஒப்பிட்டுக் காட்டி உணர்த்தப்பட்டன.

*2180. தெளிவுரை :-* மலக் கலப்பால் விளையும் தீமைகளையும், மலநீக்கத்தால் விளையும் நன்மைகளையும் உணர்த்துகிறார்.

*குறிப்புரை :-* ‘மலம்’ என அடைகொடாது கூறுமிடத்துப் பெரும்பான்மையும் ‘ஆணவம்’ என்றே பொருள்படும். இங்கும் அவ்வாறே கொள்க. கலப்பு செம்பிற் களிம்பின் கலப்புப் போல அநாதியே உள்ளது. அதனால் அந்த ஆணவத்தின் விளைவாக இங்குக் கூறியனயாவும் அநாதியே உள்ளனவாம். தாணு - சிவன். மதி - ஞானம். இஃது ஆன்மாவின் ஞானம். ‘மலக் கலப்பால் இருளாய் இருந்த ஞானம், சிவக் கலப்பால் ஒளியாம்’ என்றபடி. ‘மலம் நீங்குமாறு இது’ என்பது, ஒன்று இடையிட்டு மேல் உள்ள மந்திரத்தில் கூறப்பட்டது.

**2181.** **திகைக்கின்ற சிந்தையுள் சிங்கங்கள் மூன்று**
**நகைக்கின்ற நெஞ்சுள் நரிக்குட்டி நான்கு**
**அகைக்கின்ற நெஞ்சினுள் ஆனைக்கன் றைந்து**
**பகைக்கின்ற நெஞ்சுக்குப் பால்இரண் டாமே.** **28**

---

*சத்தி, இங்கு அருட்சத்தி. 'ஞானம் அழிந்தது' எனக் கூறாமல், 'மறைந்தது' என்றே கூறினமையால், மலக் கழிப்பு அற்றால் மதி ஒளியாதற்குத் தடையின்மை யறிக.*

*இதனால், மலாவத்தைகட்குக் காரணம் ஆணவமும், நின்மலாவத்தை கட்குக் காரணம் அருட்சத்தியும் ஆதல் கூறப்பட்டது.*

*2181.* **தெளிவுரை :-** *கீழாலவத்தைச் சுழுத்தியில் காட்சி எதனையும் காணுதல் இன்றித் தெளிவில்லாதிருக்கின்ற ஆன்ம அறிவில், சிங்கங்கள் போன்ற கொடிய குணங்கள் மூன்று விளங்கி நிற்கும். (அவை, 'காமம், வெகுளி, மயக்கம்' - என்பன. 'இவற்றின் விரியே பஞ்சக்கிலேசம்' என்பர். பஞ்சக்கிலேசமாவன, 'அவிச்சை, அகங்காரம், அவா, ஆசை, கோபம்' - என்பன. இவை, கொடுமை மிகுதி பற்றிச் சிங்கங்களோடு உவமிக்கப்பட்டன).*

*அச் சுழுத்தியினின்றும் மேல் ஏறிச் சொப்பனத்தை அடைந்த ஆன்ம அறிவில் நான்கு நரிக்குட்டிகள் போன்ற சூழ்ச்சி வல்ல நான்கு கருவிகள் விளங்கி நிற்கும். (அவை, 'சித்தம், புத்தி, அகங்காரம், மனம்' என்பன. இவை சூழ்ச்சிக் கருவிகள் ஆதலின், நரிக் குட்டிகளோடு உவமிக்கப்பட்டன. 'நரிகள் சூழ்ச்சி வல்ல பிராணிகள்' என்பர்.*

*அச்சொப்பனத்தினின்றும் மேல் ஏறிச் சாக்கிரத்தை அடைந்த ஆன்ம அறிவினுள் பின்பு மதங்கொள்ளும் ஐந்து ஆனைக்கன்றுகள் போன்ற ஐந்து கருவிகள் விளங்கி நிற்கும். (அவை, செவி முதலிய ஞானேந்திரியங்கள். மத்தியாலவத்தைச் சாக்கிரத்தில் இவை வளர்ந்து மதம் மிக்க யானைகள் போல் ஆய்விடும்). மாறுபட்ட தன்மையுடைய மனத்திற்கு இரு வகையான பகுதிகள் உள்ளன என்றவாறு.*

*(கீழாலவத்தையை விட்டு, மத்தியாலவத்தையை அடைந்த ஆன்ம அறிவு, மேற்கூறிய யானைக் கன்றுகள் வளர்ந்து, மதம் மிக்கு, ஒன்றோடொன்று மாறுபட்டு நிற்றற்கு இடமாய், இரு நிலைகளையுடையதாம்; ஒன்று, அவ் யானைகளால் ஈர்ப்புண்டல். மற்றொன்று, அவற்றை அடக்கி ஒடுக்குதல்).*

**குறிப்புரை :-** *'சிந்தையைச் சீவன் என்றும், சீவனைச் சிந்தை என்றும் (சிவஞான சித்தி - சுபக்கம். சூ. 4. 28) கூறும் முறைமையால், ஆன்ம அறிவே, இங்கு, 'சிந்தை என்றும், 'நெஞ்சு' என்றும் கூறப்பட்டது. அங்ஙனம் கொள்ளாது நேர்ப் பொருள் கொள்ளின் பொருந்தாமை அறிக. திகைத்தல் மூடம் ஆகாது, அறிவு அலமரும் நிலையாதலின், அந்நிலை துரியாதீதமும், துரியமும் ஆகாது, சுழுத்தியே யாதல் அறிக. பிறவும் இங்குக் கூறியன ஆதலை ஓர்ந்துணர்க.*

**2182.** கதறிப் பதினெட்டுக் கண்களும் போகச்
சிதறி யெழுகின்ற சிந்தையை நீரும்
விதறு படாமுனம் மெய்வழி நின்றால்
அதிர வருவதோர் ஆனையும் ஆமே. **29**

---

*"பகைக்கின்ற நெஞ்சு" என்றது இடப்பெயரோடு முடிந்த பெயரெச்சத் தொடர். ஏனைய மூன்றும் வினைமுதற் பெயரோடு முடிந்த அத்தொடர்கள். நகைத்தல் - ஒளிவிடுதல். அகைத்தல் - பிளவுபடுதல்.*

*இதனால், கீழாலவத்தை சிலவற்றில் நிகழும் அனுபவங்கள் கூறப்பட்டன. மத்திய சாக்கிரத்தைக் கூறியது, ஐயம் அறுத்தற் பொருட்டு.*

*2182. தெளிவுரை :- துன்பத்தால் அலறிக் கொண்டு, ஒரு வழிப்படாது பதினெட்டு வழிகளில் போவதற்குப் பலமுகமாய் எழுகின்ற மனத்தை, நீவிர், நும் வாழ்நாள் முடிவதற்கு முன்னே மெய்ந்நெறியில் நிறுத்தினால், முன் மந்திரத்தில் கூறிய அந்த ஆனைகள் ஐந்தும் நடுங்கும்படி ஒப்பற்ற ஒரு பெரிய யானை உங்கள் அருகில் வந்து உங்களை எடுத்துச் செல்லும்.*

*குறிப்புரை :- அந்த யானையாவது சிவன், 'ஆனையும்' என்னும் உம்மை சிறப்பு. யானை, தன் பாகனைத் தானே எடுத்துச் சுமத்தல் போல, அடியார்களைத் தானே வந்து ஆட்கொண்டு அவர்களைத் தாங்கி நிற்றல் பற்றிச் சிவனை, 'ஆனை' என்பர் அருளாளர். திருக்கடவூர்த் திருக்குறுந்தொகை ஒரு திருப்பதிகம் முழுவதிலும் சிவபிரானை, 'ஆனை ஆனை' எனப் பலகாலும் கூறினமை காண்க. 'எடுத்துச் சுமப்பான்' (திருவருட்பயன் - 65) என்றார் உமாபதிதேவர். இனி 'ஆனை' என்பதை 'ஆன் + ஐ' என இருமொழித் தொடராக்கி, 'பசுக்கட்குத் தலைவன்' எனப் பொருள் உரைப்பாரும் உளர். விதறு - கேடு.*

*பதினெட்டு வழிகளாவன. புரியட்டக சரீரத்தில் உள்ள எட்டுக் கருவிகளும், ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும் ஆம். தூல பூதங்கள் தன்மாத்திரைகளில் அடங்கின. அடங்கவே அவற்றின் கூறாகிய தாத்துவிகம் அறுபதும் அவற்றோடு உடன் அடங்கின. எனவே, 'சூக்கும தூல சரீரங்களின் வழியே ஆன்மா புறத்துச் சென்று அலமரும்' எனக் கூறியவாறா. கண் - புழை. 'கண்களிலும்' என ஏழாவது விரிக்க. அவ்வாறு அலமராது நிற்றற்கு உபாயம் சரியையாதி தவங்களே. அவைகளே இங்கு 'மெய்வழி' எனப்பட்டன. 'நின்றால்' என்பது, பிவ்விகுதி தொகுக்கப்பட்ட பிறவினை. சிந்தையை மெய்வழி நிற்பித்தலே நின்மலா வத்தையாம்.*

*இதனால், 'கீழாலவத்தை மத்தியாலவத்தைகளில் நில்லாது' நின்மலாவத்தையில் செல்லல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

*2183. தெளிவுரை :- (கனவிலும் பிராணாதி வாயுக்கள் பத்தும்*

**2183.** நனவகத் தேஒரு நாலைந்தும் வீடா
கனவகத் தேஉட் கரணங்க ளோடும்
உனவகத் தேநின் றுதறிஉட் புக்கு
நினைவகத் தின்றிச் சுழுத்திநின் றானே. **30**

**2184.** நின்றவன் ஆசான் நிகழ்துரி யத்தனாய்
ஒன்றி உலகின் நியமா திகள்உற்றுச்
சென்று துரியாதீ தத்துச் சிலகாலம்
நின்று பரனாகி நின்மலன் ஆமே. **31**

---

*செயற்படுதலால், அந்தக் கரணங்களும் செயற்படவே செய்யும் - அதனால்), நனவிற்போலக் கனவிலும், மேல் 'ஆனைகள் ஐந்து' எனப்பட்ட ஞானேந்திரியப் புலன்கள் ஐந்தோடு, கன்மேந்திரியப் புலன்கள் ஐந்தும், இன்னும் பிராணாதி வாயுக்கள் பத்தும் கூடி ஆன்மா அமைதியுற்றிராதபடி தொல்லையுறவே செய்யும். இந்நிலையில் நிற்கும் ஆன்மா, ஒருமுகப்பட்ட சிந்தனையை விரும்புதலால், புலன்களையெல்லாம் உதறித்தள்ளி, இருதயத்துட் புகுந்து சுழுத்தியில் நிற்கும்.*

*குறிப்புரை :- 'கனவகத்தே, நனவகத்தே (நிற்கும்) உட்கரணங்களோடு, நால் ஐந்தும் வீடா' எனவும், 'அகத்தே நின்று, உதறி, நினைவகத்தே உள்புக்கு, இன்று இச் சுழுத்தி நின்றான்' எனவும் இயைத்துப் பொருள் கொள்க.*

*நினைவகம் - இருதயம். இது சுழுத்தித்தானம். இன்று - இப்பொழுது. அதாவது இருதயத்துட்புக்க பொழுது. 'இச்சுழுத்தி என்றது, 'நனவும், கனவும் போலப் புலன்களில் தொல்லையில்லாது, அமைதியாய் இருக்கும் சுழுத்தி' என்றபடி.*

*இதனால், 'பெத்த காலத்தில் புலன்களின் நீங்கி நிற்கும் நிலை சுழுத்தி நிலை' என்பதும் கூறப்பட்டது. படவே, துரிய துரியாதீதங்களில் அவையில்லாமை கூறவேண்டாவாயிற்று.*

*2184. தெளிவுரை :- மேற்கூறிய சுழுத்தியில் அமைதியை உற்றுணர்ந்தவன், அஃது அறியாமையாகிய இருளால் விளையும் அமைதியேயாதலைத் தெளிந்து, அவ்விருள் நீங்கி, ஒளியில் விளையும் அமைதியை அடையவிரும்பி, ஆசானிடத்துச் சென்று அவன் உணர்த்தியவாறே, உலகியலிற்றானே இயம நியமாதிகளை மேற்கொள்ளும் யோகத்தில் பொருந்தி நின்று, அவ்யோகத்தில் துரியமாகிய தியானத்தில் முதிர்ந்தவனாய், அதற்கு மேற்சென்று, அதன்கண் துரியாதீதமாகிய சமாதியில் சில காலம் நின்று, அதன் பின் பராவத்தையாகிய ஞானாவத்தைகளை அடைந்து, அதனால் பாசங்கள் முற்றிலும் நீங்கப் பெற்று முத்தனாவான்.*

*குறிப்புரை :- 'நின்று, ஆகி' என்னும் செய்தென் எச்சங்கள் எண்ணுப் பொருளில் வந்தன. 'ஆசான்' என்பதன் பின், 'கீழ்' என்னும் பொருளில் வரும்*

**2185.** ஆனஅவ் வீச னதீதத்தில் வித்தையாம்
தான்உல குண்டு சதாசிவ மாய்சத்தி
மேனிகள் ஐந்தும்போய் விட்டுச் சிவமாகி
மோன மடைந்தொலி மூலத்த னாமே. **32**

---

*கண்ணுருபு விரிக்க. 'உலகின் நியமாதிகளுற்று' என்பதனை மேலே 'நிகழ்' என்பதன்பின் கூட்டுக. 'ஒன்றி' என்றது, 'யோகத்தில் பயின்று' என்றபடி. நின்மலம், இங்குப் பரமுத்தி.*

*இதனால், 'கீழாலவத்தை மத்தியாலவத்தைகளில் அன்றாடம் இயல்பாகவே பயின்று வருவோர், ஆசான் அருள்வழியில் முயன்று, முன்னர் மேலாலவத்தையில் பயின்றால், பின்னர் நின்மலாவத்தையால் வீடு பெறலாம்' என்பது கூறப்பட்டது.*

*2185. **தெளிவுரை :-** பராவத்தை உண்மைச் சுத்தாவத்தையேயாயினும் துரியாதீதம், துரியம் ஒழிந்த மற்றை மூன்றாகிய சீவன்முத்தி, அதிகார முத்தி, போகமுத்திகளில் ஆன்மா உலகபோகத்தை நுகரும். ஏனெனில், சுழுத்தி சொப்பனங்களில், தோற்ற முறையில் சாதாக்கியம் முதல் ஐந்து தத்துவ உடம்புகள் இருத்தலாலும் சாக்கிரத்தில் மாயா உடம்பு இருத்தலாலும் அவ்வாறு அதுகாறும் போகத்தை நுகர்ந்த ஆன்மா, இலயமுத்தியில் சத்திதத்துவத்தைக் கடந்து, சிவதத்துவத்தில் தடத்த சிவமாய்ப் புறப் பொருளுணர்ச்சியின்றிச் சிவ உணர்வே மிக்கிருக்கும். அந்நிலையில் சூக்கும வாக்கை அது பற்றி நிற்கும். ஆகவே, பர துரியாதீதத்தை அடைந்த பொழுதுதான் ஆன்மாச் சிவஞானம் ஒன்றையன்றிப் பிறிதொரு பற்றும் இல்லாமல், சிவத்தை முழுமையாக அனுபவிக்கும்.*

*__குறிப்புரை :-__ ஈசன் அதீதம் - பராவத்தையில் நிகழும் அதீதம்' இம் முதலடியை இறுதியிற் கூட்டியுரைக்க. ஆன்மா 'தான் உலகு உண்டு' என்பதை 'போய்' என்பதன் பின்னர்க் கூட்டுக. தான் 'சதாசிவமாதி' என்பதில் 'ஆதி' என்பது தொகுக்கப்பட்டது. மாய் சத்தி - தோற்றமும் ஒடுக்கமும் உடைத்தாய் நிலையில்லாத சத்தி. இங்குச் சுத்த மாயா சத்தி. 'மாசத்தி' என்பதே பாடம் எனினும் 'மாமாயையின் சத்தி' என்றே கொள்ளப்படும். மேனிகள் ஐந்து அணு சதாசிவர், மந்திர மகேசுரர், வித்தியேசுரர், சுத்த வித்தையில் நிற்கும் மால், அயன். 'ஐந்திலும் போய்' என உருபு விரிக்க. 'அடைந்து' என்பதன் பின் 'அவ்விடத்து' என்பது வருவிக்க. ஒலி மூலம் - மூல ஒலி; நாதம். அதுவே சூக்குமைவாக்காம். மோனம் - நாதமுங்கடந்த நிலையாகிய ஞானவரம்பு.*

*இதனால், பராவத்தைகளில் அதீதம், அஃதொழிந்த பிற இவற்றின் உயர்வு, தாழ்வுகள் தெரித்துக் காட்டப்பட்டன.*

*2186. **தெளிவுரை :-** அண்டத்தில் 'தீ, ஞாயிறு, திங்கள்' என்னும் மூன்று*

**2186.** மண்டல மூன்றினுள் மாயநன் னாடனைக்
கண்டுகண் டுள்ளே கருதிக் கழிகின்ற
விண்டலர் தாமரை மேலொன்றுங் கீழாகத்
தண்டமுந் தாமா யகத்தினுள் ளாமே. **33**

**2187.** போதறி யாது புலம்பின புள்ளினம்
மாதறி யாவகை நின்று மயங்கின
வேதறி யாவணம் நின்றனன் எம்மிறை
சூதறி வார்உச்சி சூடிநின் றானே. **34**

---

*மண்டலங்களில் விளங்கும் முதல்வனைப் பிண்டத்திலே அம்மூன்று மண்டலங்களில் வைத்துக் கண்டு மேல் எழுதற்கு ஏதுவாய், உடம்பிற்குள்ளே மேல் ஒன்றும், கீழ் ஒன்றுமாக நாளத்தையும் உடையவாய், நன்கு மலர்ந்த தாமரை மலர்கள் உள்ளன.*

*குறிப்புரை :- 'அவைகளில் அவனை அவ்வாறு கண்டு, மேற்போவதே யோகாவத்தை' என்பதாம். மாயம் - நிலையாமை; அஃது அதனையுடைய மாயா காரியத்தைக் குறித்தது. 'நாடன்' என்றதனால், அக்காரியம் அண்டமாதல் விளங்கிற்று. 'கழிகின்ற' என்னும் பெயரெச்சத்தை, ஏதுப் பொருட்டாகிய 'தாமரை' என்பதனோடு இயைக்க. 'ஒன்றும்' என்பது, 'கீழ்' என்பதனோடும் சென்று இயையும். 'மேல்' என்றது உச்சித் தலையை. 'கீழ்' என்றது மூலாதாரத்தை. 'மேல், கீழ்' என்றதனானே, இடையில் உள்ளனவும் பெறப்படும். யோக முறையில் மூலாதார முதல் மூன்று ஆதாரங்கள் அக்கினி மண்டலமாகவும், மற்றை மூன்று ஆதாரங்கள் ஞாயிற்று மண்டலமாகவும், ஏழாந்தானம் திங்கள் மண்டலமாகவும் கொள்ளப்படும். 'மூன்றினுள் உள்ள நாடன்' என்க.*

*இதனால், 'யோகாவத்தைகள் அண்டத்தில் காணும் சிவக்காட்சியைப் பிண்டத்தில் காண்பனவாம்' என்பது கூறப்பட்டது.*

*2187. தெளிவுரை :- விடியல் வாராத பொழுதும் வந்ததாகக் கருதி நள்ளிரவிலே ஆரவாரித்த சில பறவைகளைப் போன்ற உயிர்கள், திருவருள் தம்மை நோக்குதல் இல்லாத நிலையிலே நின்று, பொய்யை 'மெய்' எனக் கொண்டு மயங்குகின்றன. அதனால், எங்கள் இறைவனாகிய சிவனும் செம்பைப் பொன்னாக்கும் வித்தையை அறிந்தும் அறியாதவன் போல இருக்கின்றான். இச் சூழ்ச்சியை அறிந்த பெரியோர்கள், நிராதார யோகத்தாலும், சுத்த துரியத்தாலும் அவனது அருளில் தோய்ந்திருப்பர்.*

*குறிப்புரை :- நள்ளிரவில் ஆரவாரிக்கின்ற பறவை போல்வதாவது, சிவனை யுணரும் பக்குவம் வாராத முன்பே வரப்பெற்ற வரைப்போல ஞான அனுபவங்களைக் கூறுதல். மாது, அருட்சத்தி, அது நோக்காமையாவது*

**2188.** கருத்தறிந் தொன்பது கண்டமு மாங்கே
பொருத்தறிந் தேன்புவ னாபதி நாடித்
திருத்தறிந் தேன்மிகு தேவர் பிரானை
வருத்தறிந்தேன் மனம் மன்னிநின் றானே. **35**

---

*ஆன்மாவிற் பதிய எண்ணாமை. எண்ணாத வகையில் நிற்றலாவது, பாசப் பற்றிலே கிடத்தல். வேது - வேதித்தல்; இரசவாதம் செய்தல், இங்குச் சீவனைச் சிவமாக்குதலாம். 'வண்ணம் - வண்ணத்தனாய்' என்க.*

*இதனால், 'மலபரிபாகமும், சத்தி நிபாதமும் இல்லாதார் நூலறிவு பேசினாலும், யோகாவத்தையிற்றானும் செல்லாது கீழாலவத்தை மத்தியால வத்தைகளிலே கிடத்தல் கூறப்பட்டது'.*

*2188. தெளிவுரை :- (சுருதி உத்தி அனுபவங்களால்) அறிய வேண்டுவதை அறிந்து, அதனால், 'உலக முதல்வன் யாவன்' என ஆராய்ந்து, 'அம்முதல்வன் சிவபிரானே' என நான் நன்குணர்ந்தேன். பின்பு அவனை என்பால் வருவிக்கும் வழியறிந்து வருவித்தேன். அவன் அவ்வாறே வந்து என் மனத்தில் நிலையாக நின்றுவிட்டான்.*

*குறிப்புரை :- கருத்து - அறியத்தக்க பொருள். 'பாரத வருடம் ஒன்பது கண்டமாய் உள்ளது' என்பது ஆகமங்களில் சொல்லப்படுவது. 'பிண்டத்தில் நவகண்டமாவன, ஆறு ஆதாரங்களும் மூன்று மண்டலங்களுமாம்' எனின் அவ்விருவகையினவும் ஒன்றை விட்டு மற்றொன்று இல்லாமையறிக. 'கண்டத்தையும்' என இரண்டாவது விரிக்க.*

*பொருந்து, பொருத்துதல்; மூவினையுட் படுத்தல்; முதனிலை திரிந்த தொழிற்பெயர். இஃது ஆகுபெயராய்த் தனக்குக் காரணமாகிய முதனிலைமேல் நின்று; வினைமுதலை உணர்த்திற்று. எனவே, 'உலகிற்கு முதல்வன் ஒருவன் உண்டு' என்பதை அறிந்ததாயிற்று. நிலத்தை 'நிலமகள்' எனப் பெண்பாலாகக் கூறும் வழக்குப் பற்றிப் புவனத்தை, 'புவனா' என்றார். திருத்து - திருத்தம்; 'திருந்து' என்பதன் திரிபு. 'திருத்தமாக' (செம்மையாக) என ஆக்கம் வருவிக்க. 'மிகு தேவர் பிரான்' என்றது, 'சிவபிரான்' என்றபடி, 'மிகு தேவர் பிரானைத் திருத்து அறிந்தே' என மாற்றியுரைக்க. 'வா' என்னும் பகுதி 'வரு' எனத் திரிந்து, 'து' எனனும் பிறவினை விகுதியோடு புணர்ந்து, 'வருத்து' என வருதல் உலக வழக்கில் உள்ளது. இதுவும் ஆகுபெயராய், இதற்குரிய உபாயத்தின் மேல் நின்றது. அது சரியை யாதி தவங்களுள் மேலானதாகிய யோகத்தையே உணர்த்திற்று. சிவன் மனத்தில் மன்னி நிற்றல் நின்மலாவத்தையிலாகும்.*

*இதனால், மல பரிபாகம் சத்தி நிபாதம் வரப் பெற்றோர் மேலாலவத்தை வழியாக நின்மலாவத்தை அடைதல் கூறப்பட்டது.*

**2189.** ஆன விளக்கொளி தூண்டு மவனென்னத்
தான விளக்கொளி யாம்மூல சாதனத்து
ஆன விதிமூலத் தான்அத்தில் அவ்விளக்கு
ஏனை மதிமண் டலங்கொண் டெரியுமே. **36**

**2190.** உண்ணாடும் ஐவர் குமண்டை ஒதுங்கிய
விண்ஆட நின்ற வெளியை வினவுறில்
அண்ணாந்து பார்த்து ஐவர் கூடிய சந்தியின்
கண்நாடி காணும் கருத்ததென் றானே. **37**

---

*2189. **தெளிவுரை :-** ஓரிடத்தில் ஏற்றி வைக்கப்பட்ட விளக்கு மற்றையிடங்களிலும் வியாபித்து நிற்றல் போல, மூலாதாரமாகிய இடத்தில் உள்ள அந்த விளக்கினை அதனை ஏற்ற வேண்டிய முறையை யறிந்து அவ்விடத் திற்றானே மேலே நிலாமண்டலங்காறும் உள்ள இடங்களில் வியாபிக்கும்படி, இடையே அணைந்துவிடாதபடி எரியுங்கள்.*

*குறிப்புரை :- 'எரித்தால், சிவபிரான் உங்கள் மனத்திலே வந்து மன்னியிருக்கப் பெறுவீர்கள்' என்பது குறிப்பெச்சம். ஆன விளக்கு - உலகில் ஓரிடத்தில் உள்ள விளக்கு. 'விளக்கினைத் தூண்டுபவன் போல மூலசாதனத்து அவ்விளக்கினை எரியும்' என முடிக்க. தன்வினை, பிறவினை இரண்டிற்கும் பொதுவான 'எரி' என்னும் பகுதி, இங்குப் பிறவினையாய் நின்றது. 'எரியும்' உம் ஈற்று ஏவல் வினைமுற்று. தானம் என்றது மூலதாரம் ஒழிந்த மற்றை ஆதாரங்களை, சாதனம் - தொழில் முதல் நிலைகள். இங்கு அஃது இடத்தைக் குறித்தது. 'மூல சாதனத்து அவ்விளக்கு' என இயைக்க. 'அவ்விளக்கு' எனப் பண்டறி சுட்டாகச் சுட்டியது. 'அவ்விடத்து எழாது மடிந்து கிடக்கின்ற குண்டலிசத்தி' என்பது விளங்குதற் பொருட்டு. ஆன விதி - பொருந்திய விதிமுறை. அவை யோகநூல்களுட் கூறப்படுவன. மூலத்தான் - வழியால். 'அதனில்' என்பது 'அத்தில் என மருவி வந்தது. 'ஏனை' என்பது இடையில் உள்ள ஆதாரங்களைத் தழுவிற்று. கொண்டு - அகப்படுத்து.*

*இதனால், 'முன் மந்திரத்தில் வருத்துதற்கு அறிந்த உபாயம் இது' என்பது சொல்லப்பட்டது.*

*2190. **தெளிவுரை :-** (கண் முதலியனபோல வெளியிலே கண்டறியப் படாமல்) 'உள்ளே சுருதியறியப்படுகின்ற ஐம்புல ஆசைகளின் களியாட்டம் ஒழிதற் பொருட்டு யோகாவத்தையை நிகழ்த்துதற்குரிய இடங்கள் யாவை என ஆராயின், இருதயத்தினின்றும் கீழே நோக்காமல், மேலே நோக்கினால், அந்த ஐம்புல ஆசைகளும் ஒருங்கு கூடி வந்து ஒடுங்கும் இடம் ஒன்று உண்டு. அந்த இடத்திலே நின்று, மேலும் ஆராய்க. அதுவே சிவனைப் புலப்படக் காணும்*

**2191.** அறியாத வற்றை அறிவான் அறிவான்
அறிவான் அறியாதான் தன்னறி வாகான்
அறியாத வற்றை அறிவானைக் கூட்டி
அறியா தறிவானை யாரறி வாரே. **38**

---

*வழி' என்று எம் ஆசிரியர் நந்திபெருமான் எங்கட்கு அறிவுறுத்தார்.*

*குறிப்புரை :-* *'நாடும்' என்றது, 'நாடி உணரப்படும்' என்றபடி. குமண்டை - களியாட்டாம். ஒதுங்கிய - ஒதுங்குதற்பொருட்டு. விண் - மேலிடம். மேலிடத்தில் ஆடுதலாவது, மேலாலவத்தையில். அஃதாவது யோகா வத்தையில் நிற்றல். 'வெளி' என்றது, 'இடம்' என்றபடி, ஐவர் கூடும் சந்தி. ஆஞ்ஞை, (புருவ நடு) 'நாடி' என்பது இகர ஈற்று ஏவல் வினைமுற்று. இது 'நாடுதி' எனத் தகரம் ஊர்ந்து வருதல் பெரும்பான்மை. சிறுபான்மை தகரம் ஊராதும் வரும். காணுதற்குச் செயப்படுபொருள் அதிகாரத்தால் வந்து இயைந்தது.*

*இதனால், முன் மந்திரத்திற் கூறிய உபாயத்தைப் பெறுமாறு கூறப்பட்டது.*

*2191.* ***தெளிவுரை :-*** *அறிவில்லாத சடங்களாகிய பாசங்களை அப்பாச அறிவினால் அறிகின்ற ஆன்மா அந்தப் பாச அறிவைக் கொண்டு அறிய வாராத பதி, அப்பாசங்களின் நீங்கியவழியும் பசு அறிவாலும் அறியவாரான். ஆகவே, அறிவில்லாத சடங்களாகிய பாசங்களையும், அறிவுடைய சித்தாகிய ஆன்மாவையும் ஒன்று கூட்டி அவற்றின் செயற்பாடுகளை அறியாதறிபவனாகிய பதியை அறியவல்லார் யாவர்? (ஒருவரும் இல்லை).*

*குறிப்புரை :-* *'பாச ஞான பசு ஞானங்களின் நீங்கிப் பதி ஞானங் கண்ணாகக் காண்பவர்களே பதியை அறிவார்கள்; அத்தகையோர் உலகில் மிக அரியர்' என்பது கருத்து. 'தன்' என்றது 'பசுவை, தன்னறிவிற்கும் ஆகான்' என உருபும் உம்மையும், அறியாதவற்றையும் அறிவானையும் கூட்டி என உம்மையும் விரிக்க. 'அறியாதறிதலாவது, சுட்டியறியாது, பொதுவாக அறிதல், 'கீழாலவத்தை மத்தியாலவத்தைகளில் பாச அறிவும், மேலாலவத்தையில் பசு அறிவும் செயற்படுதலால் அவைகளில் பதி வெளிநில்லாது, நின்மலாவத்தையில் மட்டுமே வெளிநிற்பான்' என்பதையே இம் மந்திரத்தாற் கூறினார்.*

*இதனால், அவத்தைகளில் பதி நிற்குமாறு கூறப்பட்டது.*

*2192.* ***தெளிவுரை :-*** *'பரவெளி' எனப்படுகின்ற திருவருள் வழி நிகழ்கின்ற நின்மலாவத்தைகளில், 'பேருறக்கம்' என்னும் நிலையை அடைதலையே சிறந்ததாகக் கூறினோம். அதற்குக் கீழ் உள்ள நனவு, கனவு, உறக்கம் என்பவைகளும் எல்லார்க்கும் எளியன அல்ல. எனினும் நின்மலாவத்தையும் காலத்தொடு பட்டு நிகழ்வனவாகலின் அவை கழித்தற்குரியனவே. காலத்தைக்*

**2192.** துரிய தரிசனம் சொற்றோம் வியோமம்
அரியன தூடணம் அந்நன வாதி
பெரியன கால பரம்பிற் றுரியம்
அரிய அதீதம் அதீதத்த தாமே. **39**

**2193.** மாயையிற் சேதனம் மன்னும் பகுதியான்
மாயையின் மற்றது நீவுதல் மாயையாம்
கேவல மாகும் சகலமாய் யோனியுள்
தோயும் அநித்தம் துரியத்துள் சீவனே. **40**

---

*கடந்து எல்லையற்ற நிகழ்வன பராவத்தைகள். அவைகளில் ஈற்றில் உள்ளது துரியம். அரிதாகிய, துரியத்தையும் கடந்த நிலை துரியாதீத நிலையாகும்.*

*குறிப்புரை :- 'வியோமத்தின்கண்' என்பதில் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. எனவே, அது முதலில் வைத்து உரைக்கப்படும். 'அந்நனவாதியும் அரியன; ஆயினும் தூடணம்' என்க. பரம் - மேல். அஃது ஆகுபெயராய், மேலனவாகிய நிலைகளைக் குறித்தன. 'பின்' என்றது, 'பின்னது' என்னும் பொருட்டு. 'அதீதம்' இரண்டில் முன்னது, 'கடந்தது' என்னும் பொருளது.*

*இதனால், 'பதி பசுவை உண்மையில் அடையும் நிலை பராவத்தையே' என்பது கூறப்பட்டது.*

*2193.* **தெளிவுரை :-** *அசுத்த மாயையால், ஆணவ மலம் காரணமாக முன்பு சடம் போலக் கிடந்த உயிர் சித்துத் தன்மையை உடையதாம். (அஃதாவது, 'செயற்படாதே கிடந்த, அறிவு இச்சை செயல்கள் செயற்படத் தொடங்கும்' - என்பதாம். இந்நிலை வித்தியா தத்துவங்களின் சேர்க்கையால் நிகழ்வது).*

*பின்னர் மூலப் பிரகிருதியால், அந்தச் சித்துத் தன்மை நிலை பெற்று விளங்கும். (அஃதாவது, 'அறிவு இச்சை செயல்கள் நன்கு செயற்பட்டு விளங்கும்' என்பதாம். இந்நிலை ஆன்ம தத்துவங்களால் நிகழ்வது).*

*'மாயை' என்கின்ற மலத்தினாலே மற்றொரு மலமாகிய ஆணவத்தை இறைவன் கழுவியொழிக்கின்றான் என்பது வியப்பான செய்திதான். பொருளியல்புகள் அவ்வாறு அமைந்துள்ளன. 'மலம் மலத்தான் - கழுவுவன் என்று சொன்ன காரணம் என்னை, என ஐயம் எழுப்பி, 'செழுநவ அறுவை சாணி உவர் செறிவித்து அழுக்கை - முழுவதுங் கழிப்பன்' - என விளக்கம் தந்தார் அருணந்தி தேவரும். (சிவஞான சித்தி. சுபக். சூ. 2)*

*மாயை சேராத பொழுது ஆன்மாத் தனிமையுடையதாகும்'. மாயை சேர்ந்த பொழுது கலையோடு கூடியதாகும். அதுவே நிலையில்லாத பல்வேறு பிறப்புக்களில் புகும் பிறவிநிலை. இனி, 'மாயை, ஆணவம்' என்னும் இரண்டையுங்*

*கடந்து நிற்கும் நிலையும் உயிருக்கு உண்டு. (அதுவே சுத்தம்).*

***குறிப்புரை :-*** *இறைவன் மாயையைப் புணர்ப்பதன் பயனும். உயிர் கேவல சகலப்படுவதன் இழிவும் உணர்த்துதல் நுதலிற்று. சேதனனாகிய ஆன்மா மாயையில் பிரகிருதியோனாகப் பொருந்துவன். இங்ஙனம் இறைவன், மாயையைக் கூட்டுவது மாயையால் மற்றதாகிய மலத்தைக் கழுவுதல் நோக்கமாம். மனிதனாகக் பிறந்து சாக்கிர துரியத்து அருளனுபவம் பெற வேண்டிய ஆன்மா அது பெறாமல் மாயையில் ஆம் போது கேவலாவத்தையிற் பொருந்தி எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதத்துட்பட்டுப் பிறந்திறந்துழல்வதாம் என்றவாறு.*

*சித்தாகிய ஆன்மாவைச் சிவன் மாயையோடு சேர்ப்பது மலவன்மையை வாட்டிச் சாக்கிர துரியத்துப் பேரின்பம் பெறச் செய்வதற்காக என்க. உயிர் அதனை விட்டு மாயையில் பொருந்திக் கேவலாவத்தையினும், தோய்ந்து பல யோனிகளிலும் தோய்வான் என்னே! என்பது கருத்து.*

*சேதனம் மாயையிற் பகுதியோன் (ஆக) மன்னும் மற்றது மாயையின் நீவுதல் ஆம்; துரியத்துள் மனிதர் சீவன் மாயை(யில்) ஆம் கேவலம் ஆகும்; சகலமாய் யோனியுள் தொயும் எனக்கூட்டிப் பொருள் கொள்க.*

*சேதனன் - சித்தாகிய ஆன்மா, சீவன் உணர்த்த உணரும் சித்தென்க. ஆன்மாவைச் சிவன் திருவருளால் மாயையிற் கூட்டியபோது அவன் பிரகிருதியே ஆவன். பிரகிருதி - அசுத்த மாயையின் தூல பரிணாமமேயாம். விதை முளைப்பதற்காகப் பக்குவப்பட்டு உப்பி நிற்பது போன்றதாம். இது சகலருக்குத் தூல தேகாதிகளைத் தோற்றுவித்துச் சங்கார காலத்தில் அவர்கட்குத் தாரகமாயிருக்கும்.*

*அவன் தனியே மாயையோடு கூடிய காலத்துக் கேவலாவத்திதன் ஆவன். பகுதியோனானபோது சகலாவத்தையனாய் யோனிகளிற் பிறப்பன் என்பதாம்.*

*இங்ஙனம் இறைவன் மாயையோடு கூட்டிச் சீவனை பகுதியோனாக்குதல் வினைப்போகங்களைத் துய்ப்பித்து மல வன்மை குன்றச் செய்து துரியத்துள் சிவனாக விளங்குதற்காகவே. அங்ஙனமிருக்க, உயிர் மாயையிற்பட்டுக் கேவல நிலையிலும், மாயையோடு பகுதியோனாகிச் சகலாவத்தையனாய் யோனிகளிற் புக்கு உழல்கின்றன. என்னே அறியாமை என அவத்தைகளினியல்பு கூறவந்த ஆசிரியர் அவத்தைகளைக் கழித்துத் துரிய நிலையில் அதீதத்தை யண்ணவேண்டியது உயிரின் கடமையும் முறைமையுமாம் என்பதை வலியுறுத்தி இவ்வதிகாரத்தை முற்றுவிக்கிறார்.*

## 7. கேவல சகல சுத்தம்

*மேற்கூறிவந்தன பலவும் காரிய அவத்தைகளாகும். அவற்றிற்கு நிலைக்களமான அவத்தைகள் உள. அவை காரண அவத்தைகளாம். அவை 'கேவலம், சகலம், சுத்தம்' என மூன்று. அவை பற்றி இவ்வதிகாரத்தில் நாற்பத்திரண்டு மந்திரங்களால் கூறியருள்கின்றார்.*

**2194.** **தன்னை யறிசுத்தன் தற்கே வலன்றானும்**
**பின்ன முறநின்ற பேத சகலனும்**
**மன்னிய சத்தசத் துச்சத சத்துடன்**
**துன்னுவர் தத்தம் தொழிலள வாகவே.** **1**

---

*2194. தெளிவுரை :- தத்துவங்களையும், அவற்றின் நீங்கியவழித் தன்னையும் அறிதலை விடுத்துச் சிவத்தை அறிகின்ற சுத்த நிலையை அடைந்தவனும், அவ்வாறின்றி, 'தத்துவம், சிவம்' என்ற இரண்டையும் அறியாது, ஆணவம் ஒன்றிலே மட்டும் அழுந்தி யிருக்கின்ற, தனது அநாதியியல்பை உடையவனும், இவ்விருவரின் வேறாய்த் தத்துவங்களை அறிந்து நிற்பவனும் தம்தம் ஆற்றலுக்கு ஏற்ப முறையே, சத்து, அசத்து, சதசத்து ஆகிய பொருள்களில் பொருந்தியிருப்பர்.*

*குறிப்புரை :- இங்ஙனம் அநுவாத முகத்தால் கூறியதனானே, 'கேவலம், சகலம், சுத்தம்' என்பன காரண அவத்தைகள்' என்பதும், அவற்றின் இயல்புகளும் பெறப்பட்டன.*

*அவற்றின் இயல்புகளாவன, ஆன்மா அநாதியில் ஆணவ மலத்தோடு மட்டும் பொருந்தி, இருளில் மூழ்கியிருந்த நிலை கேவலம். எனவே, பிற்காலங்களிலும் கருவி கரணங்களின் நீங்கி, ஆணவ மலத்தோடு மட்டும் இருத்தலும் கேவல நிலையேயாதல் விளங்கும். கீழாலவத்தை மத்தியால வத்தைகளிலும் இந்நிலை இடையிடையே வருவதாம்.*

*ஆன்மா மாயா காரியங்களாகிய தத்துவங்களோடு கூடிச் சிறிதே அறிவு பெற்று உலகத்தை அறிந்து நிற்கும் நிலை சகலம். யோகா வத்தையும் கருவி கரணங்களின் வழி நிகழ்வனவேயாகலின் சகலமேயாம்.*

*ஆன்மா மும்மலங்களினும் நீங்கிச் சிவத்தையே அறிந்து நிற்கும் நிலை சுத்தம் என்க. சகலத்திலும் இது நிகழ்வதாயினும் அது நிறைவுடையதன்று.*

*'தன்' என்பது முன்னர்ச் சிவத்தையும், பின்னர் ஆன்மாவையும் குறித்தன. 'சுத்தன்' என்பதிலும் எண்ணும்மை விரிக்க. 'சத்தாவது நிலைத்ததும், அசத்தாவது நிலையாததுமாம்' என்றற்கு, "மன்னிய சத்து" என்றார். ஆணவம் முத்தியில் சத்தி கெட்டு நிற்றலால், 'அசத்து' என்றார். தத்துவங்களில் இங்குத் தனு கரணங்களையே 'சதசத்து' என்றார். சதசத்தாவது உயிரே ஆயினும், சகல*

**2195.** தானே தனக்குப் பகைவனும் நட்டானும்
தானே தனக்கு மறுமையும் இம்மையும்
தானேதான் செய்த வினைப்பயன் துய்ப்பானும்
தானே தனக்குத் தலைவனும் ஆமே. **2**

---

நிலையில் தத்துவங்களையே உயிராக உணரும் நிலை உளதாதல் பற்றி அவ்வாறு கூறினார். 'தொழில்' என்றது, அதற்கு ஏதுவாய ஆற்றலை, 'தத்தம் தொழிலளவாகவே துன்னுவர்' என்க.

இதனால், 'இங்கு எடுத்துக்கொள்ளப்பட்ட காரண அவத்தைகள் இவை' என்பதும், அவற்றின் இயல்புகளும் தொகுத்துக் கூறப்பட்டன.

*2195.* **தெளிவுரை :-** *எனின், தானே அனைத்தும் ஆம் எனல் உணர்த்துதல் நுதலிற்று.*

*தனக்குப் பகைவனும், தனக்கு நண்பனும் தானே ஆவன். அங்ஙனமே மறுமைப் பயனும் இம்மைப் பயனும் செய்த புண்ணிய பாவ கன்மங்களின் பயனைத் துய்ப்பவனும், தனக்குத் தலைவனும் தானே ஆவன் என்றவாறு.*

*இம்மை, மறுமை, வினைப்பயன், தலைமை எல்லாம் தனக்குத் தானே என்பது கருத்து.*

*"நன்றுந்தீதும் பிறர்தரவாரா" "நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம்" ஆதலின், தனக்குப் பகைவனும் நண்பனும் தானே ஆவன்.*

*அங்ஙனமே மறுமைப்பயனாகிய இன்பத் துன்பங்களும் இம்மைப் பயனாகிய புண்ணிய பாவங்களும் அவற்றின் பயனாகப் போக போக்கியங்களும் எல்லாம் தானே என்பதாம்.*

**குறிப்புரை :-** *'உயிர்களினது பக்குவ வகைகளே அவைகளின் அவத்தை வேறுபாடுகட்குக் காரணம்' என்பது இம்மந்திரத்தின் குறிப்புப் பொருள்.*

*நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும், தன்னை*
*நிலைக்கலக்கிக் கீழிடு வானும் - நிலையினும்*
*மேன்மேல் உயர்த்து நிறுப்பானும், தன்னைத்*
*தலையாகச் செய்வானும் தான். - நாலடியார் - 248*

*என்னும் நாலடிச் செய்யுளும் ஒருவனது அறிவு அறியாமைகளால் உளவாய செயற்கை நிலைகளையே அவனது இயற்கை நிலைகளாக உபசரித்துக் கூறினமை இங்கு ஒப்பு நோக்கிக் கொளத்தக்கது. 'மறுமை, இம்மை' என்பன கால ஆகுபெயர்களாய், அக்காலங்களில் விளையும் பயன்களை உணர்த்தின.*

*இதனால், 'காரண அவத்தைகட்குக் காரணம் உயிர்களின் பக்குவாபக்குவங்கள்' என்பது கூறப்பட்டது.*

**2196.** ஆம்உயிர் கேவல மாம்மாயை யின்னிடைந்து
ஆம்உயிர் மாயை எறிப்ப அறிவுற்றுக்
காமிய மாயேய மும்கல வாநிற்பத்
தாமுறு பாசம் சகலத்த தாமே. **3**

---

*2196.* ***தெளிவுரை :-*** *உயிர் மாயை கன்மங்களோடு கூடாது ஆணவத்தோடு மட்டும் இருந்த நிலை கேவலாவத்தை. (இதுவே உயிர்களின் அநாதி நிலை). பின்பு இறைவன் மாயா காரியங்களைக் கூட்டுவிக்க, அவற்றால் சிறிது அறிவைப் பெற்று வினைகளை ஈட்டியும், நுகர்ந்தும் வரும் நிலை சகலாவத்தை.*

***குறிப்புரை :-*** *எனவே, 'உயிர் மாயை கன்மங்களோடு கூடுதற்கியலாத தன்மை கேவலத்திற்கும், அவற்றோடு கூடுதற்கியன்ற நிலை சகலத்திற்கும் காரணம்' என்றதாயிற்று.*

*'உயிர் மாயையின் இடைந்து கேவலம் ஆம்' எனக் கூட்டுக. 'இடைதல்' என்பது இயற்கையிலே விலகி நிற்றலைக் குறித்தது. 'இடைந்தவழி' என்பது 'இடைந்து' எனத் திரிந்து நின்றது. எறித்தல் - ஒளிவிடுதல். எனவே, மாயை விளக்காதல் பெறப்பட்டது. இஃது ''எறிப்ப'' என்ற குறிப்பாற் பெறப்பட்டமையால், குறிப்புருவகம். 'மாயா தனுவிளக்கா' (சிவஞான போதம். சூ. 4 அதி. 2) என்றார் மெய்கண்டதேவரும். 'கான்மியம்' 'காமியம்' என மருவிற்று. 'மூலகன்மம் காரணமாக உயிர்களால் செய்யப்பட்டது' என்ப இதன் பொருள். மாயேயம் - மாயையின் காரியங்கள். அவை தனு கரண புவன போகங்கள். இறைவனால் உறுவிக்கப்படுவனவற்றைத் தாமாக உறுவன போல வைத்து, 'தாம் உறு பாசம்' என்றார். அங்ஙனம் கூறினமையால், அவை ஆகந்துக மாகிய மாயை கன்மங்களைக் குறித்தன. 'அப்பாசம்' எனச் சுட்டு வருவித்து, 'அப்பாசங்களால்' என உருபு விரிக்க.*

*இதனால், முன்னை மந்திரத்தில் தொகுத்துக் கூறப்பட்ட காரண அவத்தை மூன்றனுள் முதல் இரண்டு அவத்தைகளின் இயல்புகள் வகுத்துக் கூறப்பட்டன.*

*2197.* ***தெளிவுரை :-*** *ஆன்மதத்துவங்கள் கூடுதல் குறைதல்களால் நிகழும் அவத்தைகளே சகலாவத்தைகள் ஆதலின், அவைகளை அடைந்தோர் யாவரும் சகல வருக்கத்தினரே. ஏனெனில், அவர்களே முக்குண வடிவாகிய பிரகிருதியுட்பட்டு, மும்மலங்களை உடையவர்களாய் இருத்தலின். எழுவகைப் பிறவியும் எய்தும் உயிர்கள் யாவும் சகல வருக்கத்தினவாதல் தெளிவு. இனி அவ் உயிர்களின் மேம்பட்டவர்களாக எண்ணப்படுகின்ற 'அயன் மால்' என்பவர்களும் பிரகிருதி புவனத்துள் பிறந்து இறந்தமை புராண இதிகாசங்களில் கேட்கப்படுதலால், அவர்களும் சகல வருக்கத்தினரே.*

***குறிப்புரை :-*** *சகலாவத்தையில் சேர்ந்தோர் சகலர்; அவர்கள் ஆகமங்களால்*

**2197.** சகல அவத்தையில் சார்ந்தோர் சகலர்
புகலும் மலம்மூ வகையும் புணர்ந்தோர்
நிகரில் மலரோன் மால் நீடுபஃ றேவர்கள்
இகழும் நரர்கீடம் அந்தமு மாமே. **4**

---

*சொல்லப்பெறும் மூவகையான மலங்களோடும் கூடியவர்கள் அவர்கள் தனக்கொப்பார் யாரும் இல்லாத பிரமனும், திருமாலும், பலராகிய பெரிய தேவர்களும், நிகழ்கின்ற நரர்கள் முதலாகப் புழு ஈறாகிய அனைவருமாம் என்றவாறு.*

*சகலராவார் சகலாவத்தையினில் நிற்போர்; அவர்கள் மும்மலங்களோடு கூடியவர்கள்; பிரமன், திருமால், உருத்திரன் முதலான தேவர்களும், நரர் முதல் புழு ஈறான உயிர்களும் சகலர் என்பது கருத்து.*

*மல மூன்றாவன - ஆணவம், கன்மம், மாயை என்பன நிகரில் என்ற அடையை நிகரில் மலரோன். நிகரில் மால் என எல்லாவற்றோடும் ஏற்ற பெற்றிக் கூட்டுக. "நீல உருத்திரர்" என்பவர் ஆகமங்களில் அருகிச் சுட்டப்படுதலால், அவர் சகல வருக்கத்தினராதலை நாயனர் இங்குக் குறிக்கவில்லை. 'சகலரே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுக்கப்பட்டது. சகல வருக்கத்தினரே சிவனை அறியாது மயங்குபவர் - அது ''தோன்றலர்தொத் துள்ளார் துணை'' (திருவருட்பயன் - 13) என்னும் திருவருட்பயனாலும் விளங்கும். அயன், மால் என்பவரும் ஒரோவழி அங்ஙனம் மயங்குபவராதலை நினைக. இரண்டாம் அடியின் இறுதியில், 'அவரேயாதலின்' என்னும் காரணச் சொல் தொக்கு நின்றது.*

*மாலோனைப் பிறவதவனாகக் கூறின், நிலவுலகில் பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து, மறைந்தமக்கள் சிலரைப் புராண இதிகாசங்கள் 'மாயோன் அவதாரம்' எனக் கூறுதலை 'உண்மை' என்னாது, உயர்த்தற்பொருட்டுக் கூறிய உபசாரமொழிகளாகக் கொள்ளுதல் வேண்டும். அங்ஙனம் கொள்ளின், மாயோன் சம்பு பக்கத்தவனே யாவன்.*

*நரர் - மக்கள். கீடம் - புழு. 'நரராதி கீடம் அந்தமாம்' என்க. உம்மை, 'அனைத்தும்' எனப் பொருள் தரும் முற்றும்மை.*

*இதனால், 'காரண அவத்தைகளை மூன்றாக எண்ணுதல் சகலரை நோக்கியே' என்பது கூறப்பட்டது.*

*2198. தெளிவுரை :- மாயை ஒழிந்த ஏனை இரு மலங்களையுடைய 'பிரளயாகலர்' என்போர் பிரகிருதியைக் கடந்த மாயாதத்துவத்தில் இருப்பர். அதனால் இவர்களது தனு கரணாதிகள் பிராகிருதம் ஆகாது. மாயேயமேயாம். (எனவே, 'மாயையின் நீங்கினார்' என்பது, 'பிரகிருதியின் நீங்கினார்' என்பதேயாம். ஆகவே, இவர்கள் சகலரினும் மேம்பட்டவர்கள். சிவனை ஒரு போதும் அறியாது*

**2198.** தாவிய மாயையில் தங்கும் பிரளயர்
மேவிய மற்ற துடம்பாய்மிக் குள்ளனர்
ஓவலில் கன்மத்தர் ஒன்றிய சீகண்டர்
ஆவயின் நூற்றெட் டுருத்திரர் என்பவே. **5**

---

*மயங்குவாரல்லர்). மாயையின் நீங்கினாராயினும் கன்மம் நீங்கப் பெறாதவர்கள். (இவர்களுக்கு உள்ள கன்மம் சூக்கும கன்மமே). அனந்த தேவர் வழிநின்று குணமூர்த்திகளை ஏவிப் பிரகிருதி மாயையில் தத்துவத்தில் உள்ள நூற்றெட்டுப் புவன ருத்திரர்கள் ஆகியோர் இப்பிரளயாகலர் வருக்கத்தைச் சேர்ந்தவர்களே.*

*குறிப்புரை :- இவ்வுருத்திரர்களைப் பற்றிச் சிவஞானபோதம் சூத்திரம் இரண்டு, அதிகரணம் மூன்றின் மாபாடியத்தால் அறிக. தாவிய - கடந்த, 'பிரளயர் மிக்குள்ளனர்' என இயைக்க. மேவிய மேவப்பட்ட. 'மாயையில் தங்கு பிரளயர்' என்ற அனுவாதத்தானே. 'அவர் மாயையில் தங்குவர்' என்பது பெறப்பட்டது. மற்று, அசை. அது - முன்னர்க்கூறிய மாயை. "உடம்பு" எனத்தனுவையே கூறினா ராயினும், இனம்பற்றிக் கரணம் முதலியனவும் கொள்ளப்படும். 'ஒன்றிய - கீழ் உள்ளாரோடு பொருந்திய' என உரைக்க. 'சீகண்ட உருத்திரரே சகலர்கட்குப் பரம்பொருளாய் எல்லாவற்றையும் அருளுபவர்' என்பது சிவாகமங்களில் சொல்லப்படுவது. 'கைலாச பதியாய் உள்ளவர் இவரே' என்பதும் அத்தகையது. அதனால், இவர் பிரளயாகலருள் பக்குவராய்ச் சிவனருளைப் பெற்றவர் என்க. 'ஆவயின் உள்ளார்' என ஒரு சொல்வருவித்து, அத் தொடரை, 'கன்மத்தர்' என்றதன் பின்னர்க் கூட்டுக. "தாவிய மாயையில் தங்கும் பிரளயர்" என்றதனால், அவருக்குச் சகலாவத்தை உண்டாகாமை பெறப்பட்டது. கேவலாவத்தை சுத்தாவத்தைகள் எல்லார்க்கும் உள்ளது.*

*இதனால், சகலாவத்தை இல்லாதவருள் ஒருசாராரது இயல்பும், 'அன்னார் இவர்' என்பதும் கூறப்பட்டன.*

*2199. **தெளிவுரை :-** எல்லார்க்கும் உரித்தாகின்ற கேவலாவத்தையைத் தாங்களும் உடையவர்களாய், ஆயினும் கன்மமும், மாயையும் இன்றி, ஆணவம் ஒன்றை மட்டும் உடையவர்களில் பக்குவம் பெற்றோர் அனந்தர் முதலிய அட்ட வித்தியேசுரர்களும், சத்த கோடி மகாமந்திரேசுரர்களும் ஆவர். அபக்குவரோ அநேகர்.*

*குறிப்புரை :- அபக்குவர்களையும் 'மந்திரேசுரர்' என்பர். இவர்களைச் சிவஞான சித்தி. (சுபக்கம். சூ. 1.25) "வித்தைகள்" எனக் கூறிற்று. 'மந்திர மகேசுரர்' என்பதனை, "ஈசர்" எனக் கூறினார். 'அநேகர்' என்ற குறிப்பானே, அபக்குவர் என்பது போந்தது. ஒரு மலம் உடையோர் 'விஞ்ஞான கலர்' எனப்படுவர்.*

*இதனால், 'சகலாவத்தை யில்லாதவருள் மற்றொரு சாரார் இவர்' என்பது கூறப்பட்டது.*

**2199.** ஆகின்ற கேவலத்து ஆணவத்து ஆனவர்
ஆகின்ற வித்தேச ராம்அனந் தாதியர்
ஆகின்ற எண்மர் எழுகோடி மந்திரர்
ஆகின்ற ஈசர் அநேகரு மாமே. 6

**2200.** ஆம்அவ ரில்சிவன் ஆரருள் பெற்றுளோர்
போம்மலந் தன்னால் புகல்விந்து நாதம்விட்டு
ஓம்மயம் ஆகி ஒடுங்கலின் நின்மலர்
தோம்அறு சுத்த அவத்தை தொழிலே. 7

---

*2200.* ***தெளிவுரை :-*** *மேல், 'ஒருமலம் உடையார்' எனக் கூறப்பட்டவர்களில், பெறுதற்கரிய சிவனது திருவருளை நிரம்பப் பெற்ற சிலர் அதிகார மல வாசனை, போக மல வாசனை ஆகியவைகள் நீங்கப் பெற்ற, இலய மல வாசனை மட்டுமே உடையவர் ஆவர். ஆகவே, அவர்கள் மலம் முற்றும் நீங்கிய முத்தர்களாகவே கருதப்படுவர். (அதனால் அவர்கட்குக் கேவல நிலை உள்ளதாகவும் கருதுதல் கூடாது. அவர்கள் வாழ்வது அபர விந்து அபர நாதங்களைக் கடந்த பரவிந்து பர நாதங்களிலாம். ஆகவே, அவர்கள் சூக்குமை வாக்கு ஒன்றை மட்டுமே உடையவர் ஆவர். அவ்வாற்றால் அவர்கள், சுத்தாவத்தை ஒன்றை மட்டுமே அடைபவராகக் கருதப்படுவர்.*

***குறிப்புரை :-*** *'போம்மலந் தன்னால்' என்றது, 'மலம் போயதனால்' என்றபடி, மலம் இங்கு மல வாசனை. போயவை அதிகார மல வாசனை, போக மல வாசனைகளே. அஃது, "ஓம் மயமாகி" என்றதனாலும், "ஒடுங்கலின்" என்றதனாலும் விளங்கும். ஒடுங்கல். இலய நிலையில் நிற்றல். அதனுள்ளும் இங்கு கூறப்பட்டது சூக்கும இலய நிலையே. அதனால், 'விந்து, நாதம்' என்பன அபர 'விந்து, அபர நாதங்களே ஆயின. இங்ஙனமாகவே, அபர முத்தர்கள்' என்னும் பெயர் இந்நிலையில் நின்றோர்கட்குப் பெரிதும் பொருந்துவதாம். 'அணு சதாசிவர்கள்' என்னும் பெயரும் போக மலம் உடையவர்கட்கே பொருந்துவது. அவர்கள் சாதாக்கிய தத்துவத்தில் போகங்களை நுகர்ந்து கொண்டிருப்பர். தோம் - குற்றம்; மலம். 'இவர் தொழில்' என ஒரு சொல் வருவித்து 'தோம் அறு சுத்தாவத்தையே' என ஏகாரத்தை மாறிக் கூட்டி முடிக்க. ஏகாரம் - பிரிநிலை.*

*இதனால், சுத்தாவத்தை ஒன்றை மட்டுமே அடைபவரது இயல்பு கூறப்பட்டது.*

*2201.* ***தெளிவுரை :-*** *ஆன்மா தன் அறிவை யிழந்து நிற்பதாகிய கேவல நிலையுள் மூன்றுவகை உண்டு. அவை நாலாகவும் வகுத்துக் கூறப்படும். 'அவை யாவை' - என ஆராயின், ஆணவ கேவலம், ஆணவத்தை நீக்குதற்குச் சிவன் விரும்பும் விருப்பக் கேவலம். தத்துவ சுத்திக்குப்பின் ஆன்மதரிசனத் தொடக்கத்தில் உளதாகும் திகைப்புக் கேவலம்' என்பன. இவை முறையே ஆன்மா*

**2201.** ஓரிருள் மூவகை நால்வகை யும்முள
தேரி லிவைகே வலமாயை சேரிச்சை
சார்இயல் ஆயவை தாமே தணப்பு அவை
வாரிவைத்து ஈசன் மலம்அறுத் தானே. **8**

---

*அநாதியில் ஆணவத்தில் மூழ்கியிருந்த நிலையும், பின்பு இறைவன் ஆன்மாவை அந்நிலை யினின்றும் விடுவிக்க மாயையைக் கூட்ட முனையும் நிலையும், பின்பு மாயா காரியங்களாகிய கருவி கரணங்களினின்றும் நீங்கிய நிலையுமாகும். இவை முறையே மருட்கேவலம், சகல கேவலம், அருட் கேவலம் - எனப் பெயர் பெறும். இறைவன் மாயையைக் கூட்டமுனைவது சூக்கும ஐந்தொழிலாகும். இந்நிலை சருவ சங்காரத்திற்குப் பின் மீளப் படைத்தற்கு முன்னேயும் உளதாகும். இவற்றைச் சிவஞானபோத ஆறாம் சூத்திரத்து அதிகரணத்தின் சிற்றுரையால் உணர்க. அருட்கேவலம் துகளறு போதத்திலும் சொல்லப்பட்டது.*

*இனிச் சகல கேவலத்தை, விஞ்ஞான கேவலம், பிரளய கேவலம் - என இரண்டாக்கி, 'கேவலம் நால் வகைத்து' என்றலும் உண்டு (இதனை நாயனார் உய்த்துணர வைத்தார். சகல கேவலத்தையும் வேறாக எண்ணி, 'கேவலம் ஐவகைத்து' என்றலும் உண்டு. அதனை நாயனார் குறித்திலர். மாயை, கன்மம் - இரண்டனோடும் கூடாது, அவை கூட்டப்படுதற்கு ஆவன செய்யப்படும் நிலை விஞ்ஞான கேவலம் - எனவும், கன்மம் கூட்டப்பட்டு, மாயை கூட்டப்படாத நிலை பிரளய கேவலம் - எனவும் உணர்க).*

*இவ்வாறான பல வகை அவத்தைகளை வைத்துச் சிவன் ஆன்மாக்களின் பாசங்களைப் போக்குகின்றான்.*

*குறிப்புரை :- 'ஆகவே அஃது அருட் செயலேயன்றி, வன்கண்மைச் செயலன்று' என்பது குறிப்பெச்சம். 'சேர் இச்சை' 'சேர்க்கும் இச்சை' எனப் பிறவினை வினைத்தொகை. சார் இயல் - சார்பு தன்மை. இயல் உடையவற்றை 'இயல்' என்றார். அவை மாயா காரியங்கள். 'தாம், ஏ' அசைகள். தணப்பு - நீக்கம். இஃது ஆகுபெயராய், அது நிகழும் நிலையைக் குறித்தது. வாரி வைத்தல் - அள்ளி வைத்தல்; 'மிகுதியாக வைத்து' என்றவாறு.*

*இதனால், காரண அவத்தைகள் மூன்றனுள் ஒன்றன் உட்பகுதிகள் கூறப்பட்டன.*

*2202. **தெளிவுரை :-** உண்மையான சுத்தாவத்தையாவது, விபரீத ஞானத்தையே தருகின்றவைகளாகிய கருவிகள் முப்பத்தாறினின்றும் விடுபட்டு அப்பாற்போய், அங்ஙனம் போயதனால் அறியாமையையே தருவதாகிய ஆணவ மலம் வந்து பற்றுதலாகிய அந்நிலையும் தோன்றாதொழிய, யாதொன்றனையும் உண்மையாகவே அறியும் அறிவையுடையவனாய், அந்த அறிவால் சரம், அசரம் ஆகிய அனைத்தையும் ஒருகாலத்திலே ஒருங்கே உணரும் நிலையை உடையனாய்,*

**2202.** பொய்யான போதாந்தம் ஆறாறும்விட்டகன்று
எய்யாமை நீங்கவே எய்யவன் தானாகி
மெய்யாஞ் சராசர மாய்வெளி தன்னுட்புக்கு
எய்தாமல் எய்தும் சுத் தாவத்தை என்பதே. **9**

**2203.** அனாதி பசுவியாத் தியாகும் இவனை
அனாதிஇல் வந்த மலம்ஐந்தால் ஆட்டி
அனாதியில் கேவலன் அச்சக லத்திட்டு
அனாதி பிறப்பறச் சுத்தத்துள் ஆக்குமே. **10**

---

*அத்தன்மைத்தாய் விளங்கும் பராகாயமாகிய அருள் வெளியுட் புகுந்து, அவ்வெளிக்குள் உள்ள சிவனை, அடையாமல் அடைந்திருப்பதாகும்.*

*குறிப்புரை :- போதம் - அறிவு. 'பொய்' என்றது விபரீதத்தை. போதம் தருவனவற்றை, 'போதம்' என்றார். போதாந்தம் - அறிவின் முடிவாகிய குடியையாகிய நாதம். எய்யாமை - அறியாமை. 'எய்யாமையே அறியா மையே' என்பது தொல்காப்பியம் (சொல் - உரியியல்) எய்யாமைக்கு எதிராக 'எய்தல்' என்றோ, 'எய்த்தல்' என்றோ ஒரு சொல் அக்காலத்தில் இல்லையாயினும் இங்கு நாயனார் 'அறிகின்ற அத்தன்மையுடையவன்' என்னும் பொருளில், 'எய்யவன்' என்றார். மெய் - பொருள். 'மெய்யாம்வெளி' என இயைத்தலும் ஆம். சராசரங்களும் தானாதல், அவற்றை ஒரு காலத்தே ஒருங்கே உணர்ந்து நிற்றல். எய்தாமல் எய்தல், புதுவதாய்ச் சென்று அடையாமல் அநாதியே பெற்றிருந்த பொருளை அஃது அன்ன தாதலை உணர்ந்து, வியத்தல். இதனானே 'சுத்தாவத்தையே இயற்கை' என்பதும், 'கேவலமும், சகலமும் மலங்களாகிய உபாதியான் ஆன செயற்கைகள்' என்பதும் விளங்கும். இக்கருத்தே பற்றித் திருவள்ளுவரும், வீட்டு நிலையை, 'பேரா இயற்கை' (குறள் - 370) என்றார். எய்துதற்குச் செயப்படுபொருள், 'வெளி' என்ற குறிப்பால் பெறப்பட்டது. 'எய்தும்' எனக் காலம் வினை முதல் போலக் கூறப்பட்டது.*

*இதனால், சுத்தாவத்தையின் இயல்பு உண்மையாற் கூறப்பட்டது.*

***2203. தெளிவுரை :-*** *அனாதியே பாசத்துட்பட்டுப் பசுத்தன்மை எய்தி நின்ற இந்த உயிரை, அனாதியாயும், ஆதியாயும் வந்த ஐந்து மலங்களால் ஆட்டிப் படைப்பவன் சிவன். அவன் அனாதியில் கேவல நிலையிலிருந்து உயிரை சகல நிலையில் கொணர்ந்துவைத்துப் பின்பு அனாதியாய பிறப்பு ஒழியும்படி சுத்தாவத்தையில் சேர்ப்பான்.*

***குறிப்புரை :-*** *முதல் அடியில் 'அனாதியில்' என ஏழாவது விரிக்க. 'பசுவாய்' என்னும் ஆக்கச் சொல்தொக்கது. 'வியாத்தியாய்ப் பசுவாகும் இவனை' என மொழிமாற்றி உரைக்க. ஒன்றைத் தன்னுள் அடக்கியிருப்பது வியாபகப் பொருள்; ஒன்றில் தான் அடங்கியிருப்பது வியாப்பியப் பொருள். அடங்குதலும்,*

**2204.** அந்தரஞ் சுத்தவத் தைகேவ லத்தாறு
தந்தோர்தஞ் சுத்தகே வலத்தற்ற தற்பரத்
தின்பால் துரியத் திடையே அறிவுறத்
தன்பால் தனையறி தத்துவந் தானே. **11**

---

அடக்குதலும் இன்றிச் சமமாய் இருப்பது வியாத்தி (வியாப்தி)ப் பொருள். 'அனாதியாய், இல்லாய் வந்த' என இரண்டிலும் ஆக்கம் வருவித்து உரைக்க. அனாதியில்லாய் வருதலாவது, ஆதியாய் வருதல். அனாதியாய் வந்தது ஆணவம். ஆதியாய் வந்தவை மாயை. கன்மம், மாயேயம், திரோதாயி. 'ஆட்டி' என்பது பெயர். ஆட்டுமாறு பின்னிரண்டடிகளில் கூறப்பட்டது. 'ஆட்டி - இட்டு, ஆக்கும்' என முடிக்க. 'ஆகும்' என்பது பாடம் அன்று. 'கேவலனை' என்னும் இரண்டன் உருபு தொகுக்கப்பட்டது. 'வித்தினின்று' மரம், மரத்தினின்று வித்து என்பது போல, 'வினையால் பிறப்பு, பிறப்பால் வினை' என இவ்வாறு முதல் அறியப்படாது தொடர்ந்து வருதலின் பிறப்பை 'அனாதி' என்றார்.

இதனால், 'கேவலம் ஆணவத்தின் செயல்' என்பதும், 'சகலமும், சுத்தமும் சிவன் செயல்' என்பதும் கூறப்பட்டன.

*2204. தெளிவுரை :- சுத்த கேவலத்தில் இருந்த உயிர் சுத்த துரியத்தில் தன்பால் தன்னை அறியும் என்பது உணர்த்துதல் நுதலிற்று. சுத்த கேவலாவத்தையின் வழியாகப் பரவெளியை அடைந்தவர்கள் சுத்த கேவலம் நீங்கிய தற்பர ஆன்மாவாகிய தன்பால் சிவமாகிய தன்னையே உணரும் உண்மை தானாக விளங்கும் என்றவாறு.*

*சுத்த கேவலத்தை வழியாகக் கொண்டு ஞானமாகிய ஆகாயத்தை அடைந்தவர்கள் அந்நிலை கடந்த தற்பர சிவத்தின் பால் சுத்த துரியாவத்தையில் பொருந்திச் சிவத்தைத் தன்னுள்ளே கண்டு தாம் நித்தியப்பொருள் ஆவர் என்பது கருத்து.*

*சுத்த கேவலாவத்தை ஆறு அந்தரம் தந்தோர் சுத்த கேவலத்தற்ற தற்பரத்தின்பால் அறிவு துரியத்தேயுற, தன்பால் தனையறி தத்துவம் தானாம் என்று கூட்டிப் பொருள் கொள்க.*

*சுத்த கேவலமாவது திருவருளிற்றோய்ந்து இன்ப நுகர்வுமின்றிக் கிடக்கும் நிலை. தேன்வண்டு தேன் குடத்து விளிம்பிலிருந்து நாவை நீட்டித் தேனை நுகரின் இனிமையைத் துய்க்கும். தேனிலேயே விழுந்தமிழுமாயின் அவ்வினிமையுட் சிக்கி, நுகருமாற்றலையும் இழந்து கிடக்கும்; அது போலத் திருவருளிற்றோய்ந்து ஒன்றும் அறியாது கிடக்கும் நிலையாம்.*

*தேனில் விழுந்த வண்டு எப்படியோ உதறியடித்துக் கொண்டு விண்ணில் இறகை விரித்து எழுமாயின் தன்மேனியில் ஒட்டிய தேனையும் நக்கி நக்கி உணரும். அதுபோல அருளில் ஆழ்ந்த ஆன்மா "அருள் இன்பம் அதனை*

**2205.** ஐயைந் தொடுங்குமவ் வான்மாவில் ஆன்மாவும்
மெய்கண்டு சுத்தஅவ் வித்தையில் வீடாகும்
துய்யஅவ் வித்தை முதல் மூன்றுந் தொல்சத்தி
ஐயை சிவம் சித்தி ஆம் தோற்றம் அவ்வாறே. **12**

---

*நுகர்வோன் யான்" என்று அவ்வருளில் நீங்காமல் நீங்கிச் சிறிது புறம்போய் வேறாயின் அருள் மேலானது, மேலான சிவத்தின் தன்மையாய் மிகச் சிறந்தது என்பதை உணர்ந்து திருவருளை அனுபவித்து அதன் மேலான நிலையை எய்த அவாவும் இந்நிலையை விளக்கும் பகுதி "சுத்த கேவலத்து அற்ற தற்பரத்தின்பால், அறிவு உற" என்பது.*

*அங்ஙனம் சிவனருளை நுகர்தலே சுத்த துரியம். அதுவே தன்னுள் தன்னை அறியும் தத்துவம் என்பதாம்.*

*இதனால், சுத்தத்தில் சுத்தமாய் உள்ளவை சுத்த துரியமும் துரியாதீதமும் ஆதல் சொல்லப்பட்டது.*

*2205. தெளிவுரை :- நிலம் முதல் பிரகிருதி ஈறான இருபத்தைந்து தத்துவங்களும் சகல வருக்கத்து ஆன்மாக்கட்குப் பரமாய் உள்ள சீகண்ட உருத்திரரிடத்தில் ஒடுங்கும் (இது பற்றியே இவை, 'ஆன்ம தத்துவம்' எனப் பெயர் பெற்றன. ஒடுக்கம் கூறுதலால் காரணமாய் உள்ள பிரகிருதியையும் கூட்டி 'இருபத்தைந்து' என்றார்).*

*அந்தச் சீகண்ட உருத்திரரும், 'தமக்கு' தனு கரணம் முதலியனவாய் வருவன அசுத்த மாயையே' என்னும் உண்மையை உணர்ந்து அவற்றின் நீங்கிச் சுத்த வித்தையில் வீடு பெறுவார். (எனவே, 'அசுத்த மாயா காரியங்களாகிய வித்தியா தத்துவங்கள் அந்தச் சுத்த வித்தைக்குத் தலைவராகிய அனந்த தேவரிடத்தில் ஒடுங்கும்' என்பது தானே பெறப்பட்டது).*

*இனி, அந்தச் சுத்த வித்தை முதலாக ஒடுக்க முறையில் நிற்கும் முதல் மூன்று தத்துவங்களும், 'சத்தி' எனப்பெயர் பெற்று நிற்கும் இலய சிவனிடத்தில் ஒடுங்கும். சிவ தத்துவம் ஐந்தில் எஞ்சி நின்ற 'சத்தி, சிவம்' என்னும் இரு தத்துவங்களும் முடிநிலைப் பேறாய் உள்ள சுத்த சிவனிடத்தில் ஒடுங்கும். இவையெல்லாம் மீளத் தோன்றுங்கால் இம்முறையானே தோன்றும். நின்மலாவத்தையில் தத்துவ ஒடுக்கமும் தோற்றமும் உணர்த்துதல் நுதலிற்று. ஆன்மாவின் இடமாக மண் முதல் புருடன் ஈறான இருபத்தைந்து தத்துவங்களும் ஒடுங்கும். ஆன்மா சிவதத்துவம் ஐந்தனுள் சுத்த வித்தையால் உண்மை ஞானம் பெறும். சுத்த வித்தை முதலான மூன்றும் நீங்கும் நிலை துய்ய நின்மல சுழுத்தியாம். அவற்றுடன் பழமையான சத்தியாகிய ஐயை சிவத்துள் ஒடுங்கிய நிலையில், சிவம் ஒன்றே விளங்க நின்ற நிலை நின்மல துரியம். சிவதத்துவமும்*

**2206.** ஐயைந்தும் ஆன்மாவில் ஆறோ டடங்கிடும்
மெய்கண்ட மேல்மூன்றும் மேவும்மெய் யோகத்தில்
கைகண்ட சத்தி சிவபரத் தேகாண
எய்யும் படிஅடங் கும்நாலேழ் எய்தியே. **13**

---

*நீங்காமல் நீங்கிய நிலை நின்மல துரியாதீதமாம். இவை ஒடுங்குமுறை தோன்று முறையிலும் சிவதத்துவத்திலிருந்து சத்தியும் அவற்றினின்று சாதாக்கியம் ஈச்சுரம் சுத்த வித்தைகளும் தோன்றும் என்றவாறு.*

***குறிப்புரை :-*** *'ஆன்மா' என்பது, ஏற்புழிக் கோடலால், 'சகல வருக்கத்து ஆன்மா' எனப் பொருள் தந்தது. அவைகட்குப் பரமாயுள்ள கடவுளை அவ்வான்மாக்களாக உபசரித்துக் கூறினார். 'ஆன்மாவும்' - என்னும் உம்மை சிறப்பும்மை. சுத்த சிவன், 'இலயம், போகம், அதிகாரம்' - என்னும் நிலைகளில் நிற்குங்கால் முறையே, சத்தன், 'உத்தியுத்தன், பிரவிருத்தன்' - எனப் பெயர் பெறுதலை நினைக. சத்தன் - சத்தியை உடையவன். எனவே, சத்தியை உடையவனை, 'சத்தி' - என ஆகுபெயரால் கூறியதாயிற்று. 'ஐயை - சத்தி. 'சித்தி' என்றது, 'முடிநிலைப் பேறு' என்னும் பொருட்டாய் நின்றது. இப்பொருளை, தத்துவம் எண்மூன்றும் சென்று ஆன்மா தத்துவத்தொடுங்கும்' என்னும் சிவஞான சித்தி (சுபக்கம் - சூ. 2. 72)ச் செய்யுட்கு மாதவச் சிவஞான யோகிகள் உரைத்த உரை பற்றித் தெளிக.*

*சீகண்ட உருத்திரருக்கு ஒடுக்கங் கூறிய அதனானே, சகல வருக்கத்தினரான, 'அயன், மால்' என்பவரில், 'அயன் மாலிடத்திலும், மால் சீகண்ட உருத்திரரிடத்திலும் ஒடுங்குவர்' - என்பதும், 'வித்தியேசுரர் மகேசுரனிடத்திலும் மகேசுரன் சதா சிவனிடத்திலும், சதாசிவன் 'சத்தி' என நிற்கும் இலயசிவனிடத்திலும், 'சத்தி' என்னும் சிவன், 'சிவன்' என்றே பெயர்பெற்று நிற்கும் சிவனிடத்திலும் அந்தச் சிவன் சுத்த சிவனிடத்திலும் ஒடுங்குவர் என்பதும் பெறப்படும். இவற்றால், 'சகலத்தில் நிகழும் சுத்த சாக்கிரம்' எனப்படும் தத்துவ சுத்தி ஒன்றே, 'நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகளின் அடங்கிய தத்துவங்களி னின்றும் முறையே நீங்குதலே, சாக்கிரத்தில் சாக்கிரம். சாக்கிரத்தில் சொப்பனம் முதலான பஞ்சாவத்தைகளாய் நிகழும்' என்பதும் உய்த்துணரவைத்தமை அறிந்து கொள்க.*

*இதனால், 'அவத்தைக்கு ஏதுவாவன தத்துவங்களே' என்பது பற்றி அவற்றின் ஒடுக்கத் தோற்றமுறைகள் கூறப்பட்டன.*

***2206. தெளிவுரை :-*** *(மேல், 'நாலாறுடன் புருடன்' - என்னும் மந்திரத்தில் 'வேதாந்தி தத்துவம்' - எனக் கூறப்பட்ட இருபத்தெட்டுத் தத்துவங்களில்) ஒடுக்க முறையில் முதல் இருபத்தைந்து தத்துவங்கள் சீவனில் அடங்கும். இருபத்தாறாம் தத்துவமாகிய ஈசுரன் உட்பட மற்றைய மூன்று தத்துவங்களும் மெய்ப்*

**2207.** ஆணவத் தார்ஒன் றறியாத கேவலர்
பேணிய மாயை பிரளயா கலர்க்காகும்
காணும் உருவினர் காணாமை காண்பவே
பூணும் சகலம் முப் பாசமும் புக்கோர்க்கே. 14

---

*பொருளாகிய பரப்பிரமத்தில் சீவன் ஒன்றாகும் பொழுது அதில் அடங்கிவிடும். சுருக்கமாகச் சொல்வதென்றால், 'விவகாரத்திற்குக் காரண சத்தியாகிய மாயை, அதற்கு அதிட்டானமாம் பாரமார்த்திகப் பொருளாகிய பரப்பிரம்மம் என்னும் அவ்விரண்டிலே எல்லாம் தோன்றதலால், எல்லாம் ஒடுங்குதலும் அவற்றிலேதான்' எனலாம்.*

*குறிப்புரை :- 'இது வேதாந்தி கொள்கை' என்பதாம். 'ஐயைந்தும் ஆன்மாவில்' என்று, 'ஐயைந்தாவன ஆன்மா உட்பட' என்றபடி, "அடங்கிடும்" என்பது 'ஆன்மாவில்' என்பதனோடும் சென்றியைந்தது. 'மெய்யாகக் கண்ட' என ஆக்கம் வருவிக்க. 'மேவும் மெய்யோகத்தில்' என்றாரேனும் 'மெய் யோகம் மேவுகையில்' என்றலே கருத்து. மேவுதற்கு வினைமுதல் வருவிக்கப்பட்டது. காண - காணுதல். காணுதல் - தோன்றுதல். எய்யும்படி - அறியும்படி. 'எய்யும்படி காணுதலால் நாலேழ் அவற்றில் எய்தி அடங்கும்' எனக் கூட்டி முடிக்க. 'நாலேழும்' என்னும் முற்றும்மை தொகுக்கப்பட்டது. அவற்றில் அடங்கும் எனக் கூட்டியுரைக்க.*

*இதனால், தத்துவங்களின் தோற்ற ஒடுக்க முறைகளை வேதாந்திகள் சித்தாந்தத்தின் வேறுபடக் கூறுமாறு உணர்த்தப்பட்டது.*

***2207. தெளிவுரை :-*** *ஆணவ மலம் ஒன்றையே உடையவராகிய விஞ்ஞானகலர் கேவலாவத்தையை அடையுமிடத்துக் காரிய தத்துவங்களுள் ஒன்றையும் அநுபவியாது, நாதமாத்திரையாயிருப்பர். இருமலம் உடையவராகிய பிரளயாகலர் கேவலா வத்தையை அடையும் பொழுது வித்தியாதத்துவத்தின் முடிவாகிய மாயாதத்துவம் அவர்கட்கு அநுபவப் பொருளாகும். போக்கிய காண்டமாய்த் தூலமாய் உள்ள பிரகிருதிக் காரியங்களை உடைய சகலர் கேவலாவத்தையை அடையும் பொழுது காரணமாகிய பிர கிருதியையே பற்றிக் கொண்டு, அதன் காரியப் பொருள்களில் ஒன்றையும் அனுபவித்தல் இன்றியிருப்பர். இனிச்சகலாவத்தை சகலர்கட்கே உளதாகும்.*

*எனின், மூவகையாருயிர் வர்க்கத்தின் இலக்கணத்தைத தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.*

*ஆணவமலம் ஒன்றுமேயுடையராய், வேறெதனையும் அறியாத ஆன்மாக்கள் கேவலராவர். ஆணவத்தோடு பேணப்படுவதாய சுத்த மாயை இரண்டையுமுடையர் பிரளயா கலராவர். காணப்படும் வடிவுடையார்களாகிய*

**2208.** ஆணவமா கும்விஞ் ஞான கலருக்குப்
பேணிய கன்மம் பிரளயா கலருக்கே
ஆணவம் கன்மமும் மாயையும் மூன்றுமே
காணும் சகலர்க்குக் காட்டும் மலங்களே. **15**

---

*சகலான்மாக்கள் இவர்களைக் காணாமை ஒன்றுமே காண்பார்கள். அங்ஙனம் காணாமையையே அணியாகப் பூணும் சகலர். ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்றும் புக்கோராவர் என்றவாறு.*

*மூவகை யான்மாக்கள் இலக்கணம் இது என வரையறுத்தவாறு.*

*குறிப்புரை :-* 'ஒன்றும்' - என்னும் இழிவு சிறப்பும்மை தொகுக்கப்பட்டது. இரண்டாம் அடியோடு இயைய, முதல் அடியின் ஈற்றிலும், 'ஆவர்' என்னும் ஆக்கம் வருவிக்க. விஞ்ஞானகலர்க்கும் சுத்த மாயை உளதாயினும் அதனால் செலுத்தப்படும் அசுத்த தத்துவங்கள் அவர்கட்கு இல்லாமையால், 'கேவலத்தில் அனுபவம் இல்லை' என்றும், ஏனையோர்க்குப் பிரேரக காண்டம், போசயித்திரு காண்டம்' - என்பவை இருத்தலால் அவர்கட்கு 'கேவலத்தில் அனுபவம் உண்டு' என்றும், 'சகலர்' என்பதில், 'கலை' எனப்படுவது பிரகிருதியேயாகையால், 'சகலர்க்கு மட்டுமே சகலாவத்தை உண்டு' என்றும் கூறினார். 'கேவலம்' என்பது பின்னும் சென்றியைந்தது. காணும் உருவம் - காணப்படுகின்ற தூலப்பொருள். 'காணாமை' என்பதில், காணுதல் - அனுபவித்தல். காணாமை, காணும் உருவத்தைக் காணாமை. பூணும் - பற்றாகும்.

*இதனால், காரண அவத்தைகள் பொதுவாகச் சொல்லப்படினும் அவை அவ்வவ்வுயிர்களின் பந்த வேறுபாட்டிற்கு ஏற்ப வேறுபட்டு நிகழ்தல் கூறப்பட்டது.*

*2208.* ***தெளிவுரை :-*** *(இம் மந்திரத்தில் பதிப்புக்களில் காணப்படும் பாடம் திரிவு செய்யப்பட்ட பாடம்).*

*விஞ்ஞானகலர் - என்னும் இனத்தவர்க்கு உள்ள பாசபந்தம் ஆணவமலம் ஒன்றுமே. 'பிரளயாகலர்' என்னும் இனத்தவர்க்கு உள்ள பாசபந்தம் அந்த ஆணவத்துடன் கன்மமும் கூடிய இரண்டு மலங்கள். 'சகலர்' என்னும் இனத்தவர்க்கு உள்ள பாச பந்தமே. 'ஆணவம், கன்மம், மாயை' - என்னும் மும்மலங்களும், 'பிரளயாகலர்' என்பதில், 'பி' என்னும் இகரம், வடசொல் பற்றி வந்த குற்றியலிகரமாய் அலகு பெறாதாயிற்று. பின்னும் இவ்வாறு ஆம் இடங்கள் உள.*

***குறிப்புரை :-*** *மூன்றாம் அடியில் உள்ள 'ஆணவம்' என்பதன் பின் எண்ணும்மை விரிக்க. இதனால், மூவகை உயிர் இனங்களில் இலக்கணங்களும் கூறப்பட்டன. இதனால், 'மாயை' எனப்பட்டது பிரகிருதியே - என்பதை*

**2209.** **கேவலந் தன்னில் கிளந்தவிஞ் ஞாகலர்**
**கேவலந் தன்னில் கிளர்விந்து சத்தியால்**
**ஆவயின் கேவலத் தச்சக லத்தையும்**
**மேவிய மந்திர மாமாயை மெய்ம்மையே.** **16**

---

*மேலெல்லாம் கூறியவாற்றால் உணர்க.*

*2209.* ***தெளிவுரை :-*** *(ஒன்று இடையிட்டு முன்னை மந்திரத்தில் கூறிய கேவல வகைகளில்) தமக்குரிய கேவலநிலை அடைபவராகக் கூறப்பட்ட விஞ்ஞானகலர், அக்கேவல நிலையினின்றும் எழுச்சி பெறுதல் 'விந்து' எனப்படும் சத்தி தத்துவத்தினாலாம். (எனவே, கேவல நிலையில் அவர்கள் 'நாதம்' எனப்படும் சிவதத்துவத்தைப் பற்றியிருந்தமை பெறப்படும்). அந்த விந்து சத்தியோடு பிற சுத்த மாயா தத்துவங்களைப் பற்றிச் செயற்படுதலே அவர்களது சகல நிலையாகும். (ஆகவே சகலருக்குப் போலப் பிரகிருதி தத்துவங்களைப் பற்றும் சகல நிலை அவர்கட்கு இல்லையாம்). அந்தச் சகல நிலையில் அவர்களுடைய தனு கரணங்கள், மந்திர வடிவாகிய சுத்த மாயையால் ஆயினவேயாம்.*

***குறிப்புரை :-*** *விஞ்ஞான கலரின் வடிவு முதலியன உணர்த்துதல் நுதலிற்று. கேவல நிலையில் விளங்குகின்ற விஞ்ஞானகலர், அந்த அவத்தையில் எழுச்சி பெறுவது விந்து சத்தியாலாம்; அங்குக் கேவல நிலையில் சகல நிலையை அடைவதற்காக அவர்கள் மாமாயாகிற சுத்தமாயா காரியமான மந்திர வடிவை அடைவர் என்றவாறு.*

*விஞ்ஞானகலர் விந்துசத்தியாற் செயற்படுவர். சுத்த மாயாகாரியமான மந்திர வடிவு பெறுவர். அப்போது அவர் விஞ்ஞானகலர் எனப்படுவர் என்பதாம்.*

*கிளர்ந்த - எழுச்சி பெற்ற அல்லது செயற்பட்ட, விஞ்ஞாகலர் - இடைக்குறையாய் விஞ்ஞான கலரை உணர்த்திற்று.*

*கிளர் - கிளர்ச்சி முதனிலைத் தொழிற்பெயர். கேவலந்தன்னிற் கிளர்ச்சி விந்து சத்தியாதல் என்க.*

*ஆவயின் - அவ்விடத்து. கேவலத்து அச்சகலத்தையும் மேவிய - கேவல சகலாவத்தையைப் பொருந்துவதற்காக. மேவிய - செய்யிய என்னும் வினைஎச்சம். மாமாயை மந்திரம் மெய்ம்மை மன்னும் என வினைமுற்று வருவித்து முடிக்க சுத்தமாயையின் காரியமான மந்திரங்களையே வடிவாகப் பொருந்தும் என்க. "இருமையும் ஏற்கும்" என்புழிப்போல மெய்ம்மை என்பது பண்பை உணர்த்தாது மெய் எனப் பொருள் மேல் நின்றது.*

*இதனால், விஞ்ஞானகலர் தமது கேவலத்தில் நீங்கித் தமக்குரிய சகலத்தில் நிற்குமாறு கூறப்பட்டது. (இந்தச் சகலம் சகலரது சகலம் போலாமையால்*

**2210.** மாயையின் மன்னும் பிரளயா கலர்வந்து
மாயையும் தோன்றா வகைநிற்க ஆணவம்
மாயச் சகலத்துக் காமியம் மாமாயை
ஏயமன் னூற்றெட் டுருத்திரர் என்பவே. **17**

**2211.** மும்மலம் ஐம்மலம் கூடி மயங்குவோர்
அம்மெய்ச் சகலத்தர் தேவர்அசு ரர்நரர்
மெய்ம்மையில் வேதா விரிமால் கீடாந்தத்தின்
அம்முறை யோனிபுக் கார்க்கும் சகலரே. **18**

---

*இதுவும் 'கேவலம்' என்றே வழங்கப்படுகின்றது. எனினும், விஞ்ஞானகலரது கேவலம் இரு தன்மைப்பட்டு நிற்குமாற்றை இம்மந்திரம் கூறிற்று என்க).*

*2210. **தெளிவுரை :-** வித்தியா தத்துவங்களில் மாயா தத்துவம் மட்டுமே செயற்பட்டு நிற்கும் நிலையில் பிரளயாகலர்பால் அந்த மாயா தத்துவமும் மெத்தெனவே செயற்படுதலால் ஆணவம் மேற்பட்டு நிற்கும். (அஃதே அவர்க்குக் கேவல நிலையாகும்). இனி, அவர்கட்குரிய சகலாவத்தைக்கண் சுத்த தத்துவங்கள் செயற்படுதலானே கன்ம மலங் காரியப்படுவதாகும். இந்நிலையில் நிற்பவர்கள், மேல், "தாவிய மாயை" - என்னும் மந்திரத்தில் (பா. 2199) குறிப்பிடப்பட்ட நூற்றெட்டு ருத்திரராவர்.*

*குறிப்புரை :- 'பிரளயாகலர்பால்' - என ஏழாவது விரிக்க. 'ஆணவம்' என்பதின்பின் 'மிகும்' என்னும் பயனிலை எஞ்சி நின்றது. மாயம் - நிலையாமை. பிரளயாகலர்க்குரிய சகல நிலையாவது, வித்தியாதத்துவங்கள் செயற்பட அவற்றால் அறிவு விளங்கப்பெறும் நிலை. காமியம் - கான்மியம். அஃதாவது காரிய கன்மம். மாமாயை என்றது, அதன் காரியமாகிய சுத்த தத்துவங்களைக் குறித்த ஆகு பெயர். 'மாமாயையால் காமியம்' என உருபு விரித்து, மாறிக் கூட்டுக. 'சுத்த தத்துவங்கள் செயற்பட்டுநிற்கும்' என்றதனால், அவற்றால் வித்தியா தத்துவங்கள் செயற்படுதல் தானே பெறப்பட்டது.*

*'காமியம்' என்பதன்பின்னும், 'ஆம்' என்னும் பயனிலை எஞ்சிநின்றது. மன்னுதல் - நிற்றல். இது 'மன்' என முதனிலையளவாய் நின்று, மன்னுவாரைக் குறித்தது.*

*இதனால், இருமலம் உடையார்க்குக் கேவல சகலங்கள் நிகழுமாறு கூறப்பட்டது.*

*2211. **தெளிவுரை :-** 'மும்மலம்' என்றும், 'ஐம்மலம்' என்றும் சொல்லப் படுகின்ற அனைத்து மலங்களையும் உடையவர்களாய், 'தமக்குமேல் ஒரு முதற் பொருள் உண்டு' என அறியாது மயங்குகின்றவர்களே உண்மையான*

**2212.** சுத்த அவத்தையில் தோய்ந்தவர் மும்மலச்
சத்தசத் தோடத் தனைத்தலைப் பாசமாம்
மத்த இருள்சிவ னானகதி ராலே
தொத்தற விட்டிடச் சுத்தரா வார்களே. **19**

---

*சகலாவத்தையை அடைபவர்கள். தேவர்கள், அசுரர்கள், மக்கள், அடி முடி தேடிய காலத்தில் 'முடியைக் கண்டேன்' எனப் பொய் கூறிய பிரமன், வியாபகன்' என்னும் கருத்தால், 'விட்டுணு' என்று அழைக்கப்படுகின்ற மாயோன் இவர்கள் யாவரும் தமக்குக் கீழ் புழுவரையில் உள்ள அனைத்து யோனிகளிலும் புகுந்து ஆரவாரிக்கின்ற சகல வருக்கத்தினரே.*

*குறிப்புரை :- 'ஆகவே, இவர்கள் அனைவரும் மூன்றவத்தைகளையும் அடைவர்' என்பது குறிப்பெச்சம். மேல், விஞ்ஞான கலர் பிரளயாகலர்கட்கும் சிலவகையான சகலாவத்தைகள் உள என்பது போலக் கூறியமையால், 'மும்மலத்தவரே உண்மையில் சகலாவத்தையை அடைவர்' என்றற்கு, 'அம்மெய்ச் சகலத்தர்' என்றார். ஆர்த்தல் - ஆரவாரித்தல். இஃது உலக மயக்கத்தில் மயங்கிச் செருக்குதல். மேல், "சகல அவத்தையில் சார்ந்தோர்" என்னும் மந்திரத்திலும் (பா. 2198) இம்மந்திரப்பொருள் கூறப்பட்டதாயினும் அங்கு, 'சகல வருக்கத்தினராவார் இவர், என்பதை உணர்த்துதலும், இங்கு, 'உண்மைச் சகலாவத்தையை எய்துபவர்கள் இவர்' என்பதை உணர்த்துதலும் ஆகக் கருத்துக்கள் வேறுவேறு என்க. பின்னர்க் குறிக்கப்பட்ட கருத்தே இம்மந்திரத்தாற் கொள்ளப்பட்டது.*

*2212. தெளிவுரை :- 'கேவலம், சகலம், சுத்தம்' என்னும் மூன்றனுள் சுத்தாவத்தையில் மூழ்கினவர்களே, 'ஆணவம், கன்மம், மாயை' என்னும் மும்மலங்களும் செயல் ஒழிந்து, உண்மை மாத்திரையாய் நிற்றலாலும், அம்மலங்களைச் செயற்படுத்தித் தனியாகி அவற்றிற்குத் தலைமை பூண்டு நின்ற திரோதான சத்தியாகிய மலமும் சிவசூரியனது கிரணமாம் அருட் சத்தியால் சற்று விட்டு நீங்குதலாலும் உண்மையில், 'சுத்தர்' எனத் தக்கவர் ஆவர்.*

*குறிப்புரை :- சகலத்தில் சுத்தத்தை எய்தினோரை நீக்கி உண்மைச் சுத்தத்தை எய்தினோரைச் சுட்டுதற்கு, 'தோய்ந்தவர்' என்றார். சத்து - செயற்படுதல் இன்றி உண்மை மாத்திரையாய் நிற்றல். 'சத்து ஆதலாலும்' - என ஆக்கமும், உம்மையும் விரிக்க. செயற்படத்தக்க பொருள்கள் செயற்படாது, உண்மை மாத்திரையாய் நிற்றல், 'அவற்றின் காரண நிலை' என்றும், செயற்பாடு, 'அவற்றின் காரிய நிலை' என்றும் சொல்லப்படும். மலங்கள் காரண நிலையில் நிற்குமிடத்து உயிரைப் பந்திக்க மாட்டா; காரிய நிலையை அடையும் பொழுதுதான் உயிரைப் பந்திக்கும். மலங்கள் உயிர்களிடத்தில் காரியப்படுதலும், படாமையும் அவற்றின் அபக்குவ பக்குவங்கட்கு ஏற்ப நிகழும். 'மும்மலங்கட்கும் காரியங்கள் உள' என்பதைச்*

**2213.** தற்கே வலம்முத்தி தானே தனிமையாம்
பிற்பால் சகலம் கலாதிப் பிறிவதாம்
சொற்பால் புரிசுத்த கேவலம் சாக்கிரம்
தற்பாற் புரிவது தற்சுத்த மாமே. **20**

---

*சிவஞான போதம் இரண்டாம் சூத்திரத்து இரண்டாம் அதிகரண மாபாடியத்தாலும், இருபா இருபஃதாலும் அறிக. காரணங்கள் நிலையுடைய வாதல் பற்றி அவற்றை, 'சத்து' என்றும், காரியங்கள் நிலையாமை பற்றி அவற்றை 'அசத்து' என்றும் கூறினார்.*

*மத்தம் - மயக்கம். 'மத்தமாகிய இருள்' என்க. எனவே, 'விபரீதஞானம்' என்றதாம். விபரீத ஞானத்தைச் செய்வதை, விபரீத ஞானமாகவே உபசரித்துக் கூறினார். அருட் சத்தியை, 'கதிர்' என்றதனால், சிவன் கதிரவனாதல் பெறப்பட்டது. இது குறிப்புருவகம். சத்து ஆதலாலும், ஓடலாலும், விட்டிடலாலும் சுத்தராவார்கள்' என முடிக்க.*

*இதனால், உண்மைச் சுத்தாவத்தை நிகழும் முறைமையும், அதன் சிறப்பும் கூறப்பட்டன.*

*2213. தெளிவுரை :- உயிர் சிவத்தோடு மட்டுமே பொருந்தி நிற்கின்ற அந்தத் தனிநிலையே பரமுத்தி நிலையாகும். அதுவே உண்மையில் தூய்மை யாகும். (இதனைச் 'சிவகேவலம்' என்றும், 'பர கேவலம்' என்றும் கூறலாம்). இதற்குக் கீழ்ப்பட்டன எல்லாம் சகலங்களே. (அஃதாவது, மாசொடுபட்டனவே). அந்நிலையில், சகல வருக்கத்து ஆன்மாக்கள் கலை முதல் மண் ஈறாய் உள்ள தத்துவங்களின் நீங்கி நிற்றல். அவற்றிற்கு மெய்ந்நூல்களில் சொல்லப்படுகின்ற சுத்த கேவலமாகும். (இஃது, 'அருட் கேவலம்' என்பதாகத் துகளறு போதத்தில் சொல்லப்பட்டது. வெண்பா-25) புருவ நடுவிலே நிகழ்வதாகிய சாக்கிராவத்தையிலே புறப்பொருளில் தோய்தல் இன்றி, அறிவுக்கறிவாய் உள்ள சிவத்திலே தோய்ந்திருத்தல் சகலத்தில் சுத்தமாம். (இதுவே, 'சாக்கிரத்தில் அதீதம்' - என்க).*

*குறிப்புரை :- எனின், சுத்தகேவல, சுத்த சுத்தங்களின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று. சுத்த கேவலமானது பற்றற்ற நிலையில் ஆன்மா தனிமையில் இருப்பதாம். பின்னதாகிய சுத்த சகலமாவது, அசுத்த மாயா காரியமான கலையாதிகளினின்று நீங்குவதாம். சுத்த சுத்தமாவது சுத்த கேவல நிலையில் உண்டாம். சாக்கிர முதலியனவும் சிவானுபவத்தில் கூடப்பெறுவதும் ஆம் என்றவாறு.*

*சுத்த கேவலம் - பற்றற்ற தனி நிலை. சுத்த சகலம் - கலையாதிகள் நீங்கிய நிலை. சுத்த சுத்தம் - சுத்த கேவல சாக்கிரத்தில் இருக்கும் பற்றற்ற நிலையின்றி அப்பற்றினைப் பற்றற்றான் தாளிணையில் பற்றி அச்செயலுமற்று*

**2214.** அறிவின் றமூர்த்தன் அராகாதி சேரான்
குறியொன் றிலான் நித்தன் கூடான் கலாதி
செறியும் செயல்இலான் தினக்கற்றல் இல்லோன்
கிறியன் மலவியாபி கேவலத் தானே. **21**

---

*அனுபவிக்கின்ற நிலை என்பது கருத்து.*

*தற்கேவலம் - சிவமாகிய அதுமட்டும் கூடிய தனிநிலை. முத்தி - பற்றறுதலாகிய வீடுபெற்ற நிலை. அதில் ஆன்மாவாகிய தான் தனியே நிற்கும் ஆதலின் தனிமையாம் என்றார்.*

*பின்பால் எதுகை நோக்கிப் பிற்பாலாயிற்று. சுத்த கேவலத்திற்குப் பின்னுள்ளதாகிய சுத்த சகலம் என்க. கலாதிப் பிறிவது - கலை, வித்தை, அராகம், காலம் முதலியன நீங்கி நிற்றலாம். கலாதிகள் அசுத்த மாயா காரியமாதலின் அவற்றி னீங்குதல் அசுத்த மாயையினீங்குதலாம்.*

*சொற்பால் புரி சுத்த கேவல சாக்கிரம் - சொல்லப்படுமளவிலே இன்பமயமானது என்று விரும்பப்படுகின்ற சுத்த கேவல சாக்கிரம் என்க.*

*தன்பால் புரிவது - சிவமாகிய தன்னிடம் விரும்புவது. புரிதல் - விரும்புதல். புகழ் புரிந்த என்புழிப் போல. தற்சுத்தம் - சுத்த நிலை.*

*2214. தெளிவுரை :- காரண கேவல நிலையில் ஆன்மவிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று. கேவலாவத்தையில் கிடந்த ஆன்மா, அறிவின்றி உடலில்லாதவனாகவும், அராக முதலான குணதத்துவங்கள் பொருந்தப் பெறாதவனாகவும், இச்சையில்லாத நித்தியனாகவும், கலை முதலான அசுத்த மாயா காரியமான தத்துவங்களோடு கூடிச் செய்யும் செயல் ஒன்று மில்லாதவனாகவும், போக நுகர்ச்சியைக் கற்காதவனாகவும், மயங்கியவனாகவும், ஆணவமல மாத்திரையாய் வியாபித்தவனாகவும் இருப்பன் என்றவாறு.*

*கேவல நிலையில் ஆன்மா அமூர்த்தனாகிப் பத்துக் குணங்களையுடையன் என்பதாம். இம்மந்திரத்தை,*

*அறிவிலன் அமூர்த்தன் நித்தன்*
*அராகாதி குணங்களோடும்*
*செறிவிலன் கலாதியோடுஞ் சேர்விலன்*
*செயல்கள் இல்லான்*
*குறியிலன் கருத்தாவல்லன் போகத்திற்*
*கொள்கை யில்லான்*
*பிறிவிலன் மலத்தினோடும் வியாபி*
*கேவலத்தி லான்மா.*

*என்ற சிவஞானசித்தியார் நான்காம் சூத்திரம் மூன்றாம் அதிகரணச்*

*செய்யுளோடும் ஒப்புநோக்கியுணர்க.*

| ***திருமந்திரம்*** | ***சித்தியார்*** |
|---|---|
| *அறிவின்றி* | *அறிவிலன்* |
| *அமுத்தன்* | *அமூர்த்தன்* |
| *அராகாதிசேரான்* | *அராகாதி குணங்களோடுஞ் செறிவிலன்* |
| *குறியொன்றில்லான்* | *குறியிலன்* |
| *நித்தன்* | *நித்தன்* |
| *கலாதி கூடான்* | *கலாதியொடுஞ் சேர்விலன்* |
| *செறியுஞ்செயலிலான்* | *செயல்கள் இல்லான்* |
| *தினக்கற்றல் இல்லோன்* | *போகத்திற் கொள்கையில்லான்,*<br>*கருத்தா அல்லன்* |
| *கிறியன்* | *மலத்தினோடும் பிறிவிலன்* |
| *மலவியாபி* | *வியாபி* |

*என இயைத்துப் பொருள்நயம் காண்க.*

*அறிவின்றி ஆன்மா கேவல நிலையில் கலை முதலியவற்றோடு கூடாமையின் அறிவின்றி என்றது.*

*அமுத்தன் - அமூர்த்தன் என்பதன் சிதைவு. உடம்பின் முன்னின்மையை யுடையவன்.*

*'அராகாதிசேரான்' புத்தியில் குணமாகிய தருமம், ஞானம், வைராக்கியம், ஐஸ்வரியம், அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைஸ்வரியம் ஆகிய எட்டுக் குணங்களும் சேரப் பெறாதவன். அராகாதி என்ற உபலக்கணத்தால் ஏனைய போக்கிய காண்டடங்களும் கொள்ளப்படும். குறியொன்றில்லான் மன முதலிய கருவிகள் இன்மையான் இச்சையில்லாதவன். குறி - முதனிலைத்தொழிற் பெயராய்க் குறித்துணரப் பயன்படுவதாய இச்சையை உணர்த்தி நின்றது.*

*நித்தன் - தோற்றக் கேடுகள் இல்லாதவன்.*

*கலாதி கூடான் - கலை, காலம், நியதி முதலியவற்றோடு கூடாதவன்.*

*செறியுஞ் செயலிலான் - தோய்ந்து இயற்றப் பெறும் வினையொன்றும் இல்லாதவன்.*

*தினக்கற்றல் இல்லோன் - தினக்கற்றல் - போக நுகர அறிதல். அஃதில்லாதவன் என்பதாம். தனக்கென ஒருவகைச் சுதந்திரமும் இன்மையான். நுகர்தல் இயல்பாகவே உயிர்கட்கு அமைந்தகுணமாயினும் அஃதின்மையான் செயற்கையாகக் கற்றலும் இல்லாதவன் என்றார்.*

**2215.** விந்துவும் மாயையும் மேவும் கிரியையும்
சந்ததம் ஞான பரையும் தனுச்சத்தி
விந்துவின் மெய்ஞ்ஞானம் மேவும் பிரளயர்
வந்த சகலர்சுத் தரான்மாக்கள் வையத்தே. **22**

---

*சிறியன் - மயக்கம் உடையவன். இது சுதந்திரமின்மையையும், மலத்தைச் சார்ந்து மயங்கிய தன்மையையும் உடையவன் என்பதை உணர்த்தியது.*

*மலவியாபி - மலத்தால் வியாபிக்கப் பெற்றவன். இவனுடைய வியாபகம் அனைத்தும் அவனைப் பற்றியுள்ள மலத்தின் அளவினவே என்பதாம்.*

*இங்ஙனம் நயமும் பொருளும் உணரக் கருவியாய் அமைந்தன, சித்தித் திருவிருத்தமும், மாதவச் சிவஞான சுவாமிகள் செய்த உரைக் குறிப்பும் என்க.*

*2215. **தெளிவுரை :-** பிரளயா கலர், சகலர், விஞ்ஞானகலர் ஆகிய மூவகை யினராய் விளங்கும் ஆன்மாக்கட்கும் முறையே அசுத்த மாயை, பிரகிருதி மாயை, சுத்த மாயை என்பவற்றால் அவ்வப் புவனங்களில் தனு கரண போகங்கள் உளவாகும். எல்லா உயிர்கட்கும் சுத்த மாயையின் காரியமாகிய வாக்குக்களால் தான் சவிகற்ப உணர்வு உண்டாகும்.*

***குறிப்புரை :-** 'விந்து' இரண்டில் முன்னது பைசந்தி வாக்கைக் குறித்து, அதற்குப் பற்றுக்கோடாகிய அசுத்தமாயையை உணர்த்திற்று. அதனால், 'மாயை' என்பது பிரகிருதி மாயையைக் குறித்தது. பரையாவது சூக்குமை வாக்காகலின் அஃது அதன் வடிவாய் நின்ற சுத்த மாயையைக் குறித்தது. இம்மூன்றும் பின் வந்த பிரளயாகலர், சகலர், சுத்தர் என்பவரோடு முறையே இயைந்தன. இங்கு 'சுத்தர்' என்றது ஏனை இரு திறத்தாரை நோக்கச் சுத்தராகிய விஞ்ஞான கலரைக் குறித்தது. இம்முத்திறத்தாரையும் செய்யுள் நோக்கி முறை பிறழ வைத்தார்.*

*'பிரளயர், சகலர், சுத்தர்' ஆன்மாக்கட்கு வையத்தே தனுவும், சத்தியும், கிரியையும் விந்துவினாலும், மாயையினாலும், ஞானபரையினாலும் சந்ததம் (எப்போதும்) மேவும்; மெய்ஞ்ஞானம் விந்துவின் மேவும்' - என இயைத்துப் பொருள் கொள்க. சத்தி - ஆற்றல்; என்றது கரணத்தையும், 'மெய்ஞ்ஞானம்' என்றது சவிகற்ப ஞானத்தையும் ஆகும். 'மூவகை ஆன்மாக்களுக்கும் சவிகற்ப உணர்வு வாக்குக்களாலேதான் உண்டாகும்' என்பதை,*

*"மூவகை அணுக்க ளுக்கும் முறைமையால் விந்து ஞானம்*
*மேவின தில்லை யாகில் விளங்கிய ஞானம் இன்றாம்"*

*என்னும் சிவஞான சித்தி சுபக்கம் (சூ. 1, 26) யாலும் அறியலாம். விளங்கிய ஞானம் - சவிகற்ப உணர்வு.*

*'கேவலத்தில் நின்ற ஆன்மாக்கள் தங்கள் தங்களுக்கு ஏற்ற தனு கரண புவன போகங்களால் சகல நிலையை அடையும்' என்பது கருத்து.*

*இதனால், மூவகை ஆன்மாக்களுக்கும் சகலாவத்தை நிகழுமாறு கூறப்பட்டது.*

**2216.** **கேவல மாதியில் பேதம் கிளக் குறின்**
**கேவலம் மூன்றம் கிளறும் சகலத்துள்**
**ஆவயின் மூன்றும் அதிசுத்தம் மூன்றுமா**
**ஓவலில்லாஒன்பான் உற்றுணர்வோர்கட்கே. 23**

**2217.** **கேவலத் திற்கே வலம்அதீ தாதீதம்**
**கேவலத் திற்சக லங்கள் வயிந்தவம்**
**கேவலத் திற்சுத்தங் கேடில்விஞ் ஞாகலர்**
**ஆவயின் நாதன் அருள்மூர்த்தி தானே. 24**

---

*2216.* **தெளிவுரை :-** *காரண அவத்தைகள் 'கேவலம்' முதல் மூன்றாகச் சொல்லப்பட்டாலும் அவற்றுள் ஒவ்வொன்றிலும் உட்பிரிவுகள் உண்டு. அவற்றை எடுத்துச் சொல்லுமிடத்து 'கேவலத்திற் கேவலம், கேவலத்திற் சகலம், கேவலத்திற் சுத்தம்' என்று மூன்றும், 'சகலத்திற் சகலம், சகலத்திற் சுத்தம்' என மூன்றும் ஆக ஒன்பதாம். இவ்வேறுபாடுகள் நுண்ணுணர்வுடையார்க்கே விளங்கும்.*

| *கேவலத்தில்* | *கேவலம்* | *சகலம்* | *சுத்தம்* |
|---|---|---|---|
| *சகலத்தில்* | *கேவலம்* | *சகலம்* | *சுத்தம்* |
| *சுத்தத்தில்* | *கேவலம்* | *சகலம்* | *சுத்தம்* |

*இதனால், காரண அவத்தைகள் மூன்றிலும் உள்ள வேற்றுமை வகைகள் தொகுத்துணர்த்தப்பட்டன.*

*2217.* **தெளிவுரை :-** *உயிர்கட்கு ஆணவ மல மறைப்பைச் சிறிதே நீக்கிச் சிறிதே அறிவைத் தருவன மாயா கருவிகள். அதனால், அவை ஒடுங்கிய விடத்து ஆணவம் மேற்படுவதே கேவல நிலை. கீழாலவத்தை மத்தியாலவத்தைகளில் எல்லாக் கருவிகளும் நீங்காது, தலையாய கருவிகள் நீங்கியதே 'அதீதம்' எனப்படுகின்றது. கீழாலவத்தையில் நிகழும் அதீதம் முக்குண வடிவான பிரகிருதி மேம்பட்ட நிலை. மத்தியாலவத்தையில் நிகழும் அதீதத்திலும் சிவ தத்துவமும், கால தத்துவமும் ஒடுங்காதே நிற்க, உயிருக்குப் புலன்கள் மிக்கு நிகழும். இதுவும் அதீதமேயாகும். இவ்விரண்டும் சகலாதீதமாகும்.*

*சருவ சங்கார காலத்தில் இறைவன் எல்லாக்கருவிகளையும் அழித்துவிட்டு, உயிர்களுக்கு முழு ஓய்வைத் தருதலால், அது பொழுது உயிர், உணர்வு சிறிதுமின்றி, முழுமூடமாய், ஆணவ இருளில் மூழ்கிக் கிடக்கும். இது கேவலா தீதமாகும். இதனையே 'விஞ்ஞான கேவலம்' என்பர். இந்நிலையில், ஒடுங்கிய உயிர்களை இறைவன் மீளத் தோற்றுவிக்க முயலும் நிலையும் கேவலந்தான். அதனையும் 'சகல கேவலம்' - என்றே கூறுவர். அதற்குக் காரணம் அந்நிலையில் இறைவன் சூக்கும ஐந்தொழில் செய்வான் என்பதே. இவை முதலான*

*அவத்தைகள் பலவற்றுள் ஒன்றும் இல்லாது ஆன்மா ஆணவ இருளில் மூழ்கிக் கிடந்த நிலை அனாதி கேவலமாகும். இதனை, 'மருட் கேவலம்' - என்பர். இவற்றுள் இரு சகலாதீதத்திற்கும் அப்பாற்பட்ட விஞ்ஞான கேவலத்தையே, 'அதீதாதீதமாகிய கேவலத்தில் கேவலம்' என்றார். அதீதாதீதம் - அப்பாலைக்கு அப்பால்.*

*மேற்கூறியவாறு இறைவன் சூக்கும ஐந்தொழில் செய்யும் நிலையாகிய சகல கேவலமே கேவலத்தில் சகலமாம். சூக்கும ஐந்தொழிலாவது சூக்குமை முதலிய நால்வகை வாக்குக்களையும் தோற்றுவிக்கும் முகத்தால் உயிர்கட்கு உணர்வைப் பொதுவாக நிகழ்வித்தல். சிவதத்துவங்கள், வித்தியா தத்துவங்களைச் செலுத்திய வழியே உயிர்கட்கு அறிவு இச்சை செயல்கள் சிறப்பாக விளங்கும். அஃது இந்நிலையில் இல்லாமையாலும், நால்வகை வாக்குக்களும் சுத்த மாயையின் காரியமேயாதலாலும், 'கேவலத்தில் சகலங்கள் வயிந் தவம்' என்றார். வயிந்தவம் (வைந்தவம்) - விந்துவின் காரியம். விந்து - சுத்த மாயை. வாக்குக்கள் பலவாதலால் அவற்றால் தோன்றும் உணர்வுகளும் பலவாதல் பற்றிச் 'சகலங்கள்' எனப் பன்மையாகக் கூறினார்.*

*சகலரும், பிரளயாகலரும், 'விஞ்ஞானகலர்' என்னும் நிலையை அடைதலே, கேவலத்தில் சுத்தமாகும். அஃதாவது 'சகலர் மண்ணாதி கலையந்தம் முப்பத்தொரு தத்துவங்களைக் கடந்து சுத்த தத்துவ பந்தத்தை மட்டும் உடையர் ஆதலும், பிரளயாகலர் வித்தியா தத்துவங்களைக் கடந்து, சுத்த தத்துவ பந்தத்தை மட்டும் உடையர்' ஆதலுமாம்.*

*இந்நிலையை அடைந்த பிரளயாகலர் சகலர்கட்கும் இறைவன் இயற்கை விஞ்ஞானகலர்க்குப் பக்குவ காலத்தில் உள்நின்றே ஞானத்தை உணர்த்தி, வீடு தந்தருள்வது போலவே அருள்தருவான்.*

| 1 | அதீதாதீதம் | அப்பாலைக்கு அப்பால் |
|---|---|---|
| 2 | கேவலாதீதம் (விஞ்ஞான கேவலம்) | சர்வ சங்கார காலத்தில் இறைவன் உயிர்களுக்கு முழு ஓய்வைத் தருவதால் உயிர் உணர்வின்றி முழு மூடமாய் ஆணவ இருளில் மூழ்கிக் கிடத்தல். |
| 3 | சகல கேவலம் | ஒடுக்கிய உயிர்களை மீளத் தோற்றுவித்தல் - சுத்த மாயையின் நிலைக்களம் - இறைவன் சூக்கும ஐந்தொழில் செய்வான். |
| 4 | அனாதி கேவலம் (மருட் கேவலம்) | எந்த அவத்தைக்கும் உட்படாது, ஆணவ மலத்தில் கிடத்தல் |
| 5 | கேவலத்தில் சுத்தம் | சகலரும், பிரளயாகலரும் விஞ்ஞானகலர் என்னும் நிலையை அடைதல், பரசிவம் வீடருளும் முத்தி நிலை |
| 6 | விந்து | சுத்த மாயை |

**2218.** **சகலத்திற் கேவலம் சாக்கிரா தீதம்**
**சகல சகலமே சாக்கிரா தீதம்**
**சகலத்திற் சுத்தமே தற்பரா வத்தை**
**சகலத்தில் இம்மூன்று தன்மையும் ஆமே.** **25**

**2219.** **சுத்தத்திற் சுத்தமே தொல்சிவம் ஆகுதல்**
**சுத்தத்திற் கேவலம் தொல்உப சாந்தமாம்**
**சுத்த சகலம் துரிய விலாசமாம்**
**சுத்தத்தில் இம்மூன்றும் சொல்லலும் ஆமே.** **26**

---

*குறிப்புரை :-* *'விஞ்ஞான' என்பது கடைக் குறைந்து நின்றது. 'விஞ்ஞான கலர் ஆதல்' எனவும், 'அருள் மூர்த்தி யாதல்' எனவும், 'தானேயாய்' எனவும் எஞ்சி நின்ற சொல்லெச்சங்கள் வருவித்துக் கொள்க. தானேயாதலாவது, செயற்கையால் முன்னிலையினும், படர்க்கையினும் தோன்றாமல், இயற்கையில் தன்மையிலே நிற்றல். 'அருள் மூர்த்தியாதலும்' என்னும் இறந்தது தழுவிய எச்ச உம்மையும், 'தானேயாய' என்னும் தேற்றேகாரமும் அவ்விடங்களில் உடன் வருவிக்க.*

*இதனால், முன் மந்திரத்தில் ஒன்பதாகத் தொகுத்துக் கூறிய அவத்தைகளில் 'கேவலத்தின் மூன்று' என்ற அவத்தைகள் இவை என்பது கூறப்பட்டது.*

*2218.* **தெளிவுரை :-** *மத்தியாலவத்தையில் நிகழும் அதீதமே சகலத்திற் கேவலமாகும். மத்தியாலவத்தையில் நிகழும் சாக்கிரமே சகலத்திற் சகலமாகும். சகலத்தில் சுத்தாவத்தையே சகலத்தில் சுத்தமாகும்.*

*குறிப்புரை :-* *மத்தியாலவத்தை, சகலத்தில் சுத்தாவத்தை இவைகளின் இயல்புகள் மேலே உணர்த்தப்பட்டன. முதற்கண் ஒன்பதாக வகுத்துக்காட்டி, இங்கு, 'சகலத்தில் இம்மூன்று தன்மையும் ஆம்' என்றது, 'கீழாலவத்தை, மத்தியாலவத்தை, மேலாலவத்தை இவையும் சகலத்திற் கேவலமும், சகலத்தில் சகலமும், சகலத்தில் சுத்தமும் ஆம்' - என்பது உணர்த்துதற்கு.*

*இதனால், முன் மந்திரத்தில் கூறியவற்றைத் தொடர்ந்து 'சகலத்தில் மூன்று' எனப்பட்ட அவத்தைகள் இவை என்பது கூறப்பட்டது.*

*2219.* **தெளிவுரை :-** *பரமசிவனோடு இரண்டறக் கலந்த நிலையே சுத்தத்தில் சுத்தம். சீவன் முத்தி நிலையில் பிராரத்தத்தால் விளையும் இன்பத் துன்பங்களில் விருப்பு வெறுப்பற்றிருக்கும் நிலையே சுத்தத்தில் கேவலம். சீவன் முத்தி நிலையில் உலகர்பால் இரக்கம் மிக்கு அவர்கட்கு உய்தியை வலிந்து சென்றும் உணர்வித்தலும், அதிகார முத்தி, போக முத்தி, இலய முத்தி இவைகளை அடைந்து அவ்வந் நிலையில் விளையும் சுத்த போகங்களை நுகர்தலும் சுத்தத்தில் சகலம்.*

**2220.** சாக்கிர சாக்கிரந் தன்னிற் கனவொடு
சாக்கிரந் தன்னில் சுழுத்தி துரியமே
சாக்கிரா தீதந் தனில்சகா னந்தமே
ஆக்கும் மறையாதி ஐம்மல பாசமே. **27**

**2221.** சாக்கிரா தீதத்தில் தான்அறும் ஆணவம்
சாக்கிரா தீதம் பராவத்தை தங்காது
ஆக்கும் பரோபாதி ஆம்உப சாந்தத்தை
நோக்கு மலம்குணம் நோக்குத லாமே. **28**

---

*குறிப்புரை :- உபசாந்தம் - அமைதி; பசுக் கன்மம் நீங்கி சிவப்பணி செய்தலாகிய நடுவு நிலைமை. விலாசம் - விளையாட்டு; தமக்கு உவப்பான செயல்களில் ஈடுபடுதல். இங்கும், 'சுத்தத்தில் இம்மூன்றும் சொல்லலும் ஆமே' என்றது, 'சீவன் முத்தி ஒன்றிலே தான் இம்மூன்றும் சொல்லுதற்கும் உரியன என்பது உணர்த்துதற்கு. துரிய விலாசம் - ஆஞ்ஞைக்கு மேலே துரிய ஆதாரத்தில் இன்பப்பயனாக விளங்குதல்.*

*இதனால், 'சுத்தத்தில் மூன்று' எனப்பட்ட அவத்தைகள் இவை என்பது கூறப்பட்டது.*

*2220.* **தெளிவுரை :-** *மத்தியாலவத்தையில் நிகழும் சாக்கிரம் முதலிய ஐந்திலும் சொல்லுலகம் முதலாகச் சொல்லப்படுகின்ற ஐந்து மலங்களாகிய பாசங்களே உயிருக்கு உலக அனுபவங்களை தந்து நிற்கும்.*

*குறிப்புரை :-*

| | |
|---|---|
| *சாக்கிர சாக்கிரம்* | *சுத்த தத்துவங்கள் ஐந்தும் தொழிற்படும்.* |
| *சாக்கிரத்தில் சொப்பனம்* | *சிவம், சத்தி, சாதாக்கியம், ஈச்சரம் நான்கும் தொழிற்படும்.* |
| *சாக்கிர சுழுத்தி* | *சிவம், சத்தி, சாதாக்கியம் மூன்றும் தொழிற்படும்.* |
| *சாக்கிர துரியம்* | *சிவம், சத்தி இரண்டும் தொழிற்படும்.* |
| *சாக்கிர துரியாதீதம்* | *சிவதத்துவம் ஒன்றே தொழிற்படும்.* |

*இதனால், 'சகலம், சுத்தம்' - என்னும் இரண்டிற்குக் காரணமும், பயனும் கூறப்பட்டன.*

*2221.* **தெளிவுரை :-** *('சாக்கிராதீதம்' - என்று பெயர் சொல்லப்படுவன இரண்டு. ஒன்று ஆணவம் நீங்கிய சாக்கிராதீதம்; மற்றொன்று, ஆணவம் நீங்காத சாக்கிராதீதம்). அவற்றுள் ஆணவம் நீங்கிய சாக்கிராதீதமும் பராவத்தையில் உயிர் சென்று தங்காதபடி பரோபாதியை உண்டாக்கும் ஆகையால், பராவத்தை*

**2222.** பெத்தமும் முத்தியும் பேணும் துரியமும்
சுத்த அதீதமும் தோன்றாமல் தான் உண்ணும்
அத்தன் அருள் என்று அருளால் அறிந்தபின்
சித்தமும் இல்லை செயல் இல்லை தானே. **29**

---

*யாகிய உபாதியற்ற நிலையை நோக்கியே செல். ஏனெனல், 'உபாதியாயினும் பரோபாதி தானே' என நினைப்பனவெல்லாம் பாசத்தோடு கூடியிருக்க நினைப்பனவேயாகும்.*

***குறிப்புரை :-*** *'ஆணவம் அறும் சாக்கிராதீதம்' என எடுத்துக்கொண்டு உரைக்க. தான், அசை, பாடத்தை இவ்வாறே ஓதலும் ஆம். ஆணவம் அறாத சாக்கிராதீதம், மத்தியாலவத்தையில் நிகழும் அதீதம். ஆணவம் அற்ற சாக்கிராதீதம், நின்மலாவத்தையில் நிகழும் அதீதம். இவையிரண்டும் சகலத்தில் சகலமும், சகலத்தில் சுத்தமும் ஆகும். இவற்றுள் நின்மலாவத்தைகள் தமக்குக் கீழ் உள்ளவற்றை நோக்கச் சுத்தமேயாயினும், உண்மைச் சுத்தமாகிய பராவத்தையில் செல்லுதற்குத் தடையாதலும் உடையன. அவை அன்னவாதல் பரோபாதியை உடைமையினாலாம். அது பற்றியே, 'பராவத்தை தங்காது பரோ பாதியை ஆக்கும்' என்றார். உபாதி - தடை. பரோபாதி - மேல் நிலைத் தடை. அஃது உலகம் எங்கும் சிவம் நிறைந்து நிற்றலை நினைந்து எப்பொருளிலும் சிவத்தையே கண்டிருத்தல். இது சிறப்புடையதே யாயினும், சிவத்தையே நேராகக் கண்டிருத்தலை நோக்கச் சிறப்பில தாதலை உணர்க.*

*உபசாந்தம் - உபாதியற்றநிலை. அது பராவத்தையேயாதல் அறிக. 'உபசாந்தத்தையே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுக்கப்பட்டது. 'குணம் நோக்குதல் மலம் நோக்குதலாகும்' - என மொழி மாற்றி, 'அதன் குணம்' என உரைக்க. எல்லாப் பொருளிலும் சிவத்தையே காணினும் அஃதே உலகத்தை இடையிட்டுக் காண்பதேயாதலின் அக்காட்சியின் சிறப்பை மட்டும் நோக்குதல், 'மலம் நோக்குதல் ஆகும்' என்றார். சிவத்தை 'உபாதி' என உரைத்தாரும் உளர்.*

*இதனால், மேற்கூறிய அவத்தை பேதங்களில் 'சுத்தத்திற் சுத்தத்தையே குறிக்கொண்டு முயலல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

***2222. தெளிவுரை :-*** *'பெத்தம், முத்தி' - என்பவற்றையும், 'சாக்கிர சொப்பன சுழுத்திகளுக்கு அப்பாலும், குறைந்த கருவிகளே செயற்படுகின்ற துரியம், ஒரு கருவியும் செயற்படாத துரியாதீதம் ஆகிய அவத்தைகள் உள' என்பதையும் அறியாமலே உயிர், அவத்தைகளை அனுபவித்து வருகின்றது. ஆயினும், 'அவையெல்லாம் சிவனது திருவருளால் இன்ன இன்னவாறு நிகழ்கின்றன' என்பதை அவனது அருளாலே அறிந்த பின், உயிருக்குத் தற்போதம் இல்லை. அஃது இல்லையாகவே, அதற்குத் தனக்கென யாதொரு செயலும் இல்லை.*

***குறிப்புரை :-*** *''சுத்தம்'' என்றது கருவிகள் அனைத்தும் ஒடுங்கிய ஒடுக்கத்தைக் குறித்தது. துரியமும், அதீதமும் அறிதற்கு அரியனவாம்.*

**2223.** எய்திய பெத்தமும் முத்தியும் என்பன
எய்தும் அரன்அரு ளே விளையாட்டோடு
'எய்தி டுயிர்சுத்தத் திடும்நெறி' என்னவே
எய்தும் உயிர்இறை பால் அறி வாமே. **30**

**2224.** ஐம்மலத் தாரும் அதித்த சகலத்தர்
ஐம்மலத் தாரும் அருவினைப் பாசத்தர்
ஐம்மலத் தார்சுவர்க் கம்நர காள்பவர்
ஐம்மலத் தார்அர னார்க்கறி வோரே. **31**

---

*"தோன்றாமல்" என்பது வழக்கு முறையால், "தோன்றப் பெறாமல்" எனப் பொருள் தந்தது. "தான்" என்றது உயிரை. உண்டல் - அனுபவித்தல். "அறிந்த பின்" எனக் கூறிப் பின் நிகழ்ச்சியை உணர்த்தினமையால், 'அதற்குமுன் கூறப்பட்டவை அறிதற்கு முற்பட்ட நிகழ்ச்சி' என்பது விளங்கிக் கிடந்தது. ஆகவே, "அனுபவிக்கும்" எனக் கூறப்பட்ட அவத்தைகள் பெத்த அவத்தைகள் - என்பதும், 'அறிந்த பின் நிகழ்வன முத்தியவத்தைகள்' என்பதும் போந்தன. 'தான்' என்றது திரோதான சத்தியை - எனக் கொள்கின்றவர்கள், 'சுத்த துரியாதீதத்தையும் அது மறைக்கும்' என உரைத்தல் வியப்பிற்குரியது.*

*இதனால், பலவாகக் கூறப்பட்ட அவத்தைகள் எல்லாம் பெத்த அவத்தை, முத்தி அவத்தை என இரண்டாய் அடங்குதலும் அவற்றுள் பெத்த அவத்தைகள் மலங்களாலும் முத்தி அவத்தைகள் திருவருளாலும் நிகழ்தலும் கூறப்பட்டன.*

*2223. தெளிவுரை :- உயிர்கள் அனாதியே அடைந்துள்ள பெத்த நிலையும், பின்பு முடிவில் அடையும் முத்தி நிலையும் சிவன் தனக்கு ஒரு விளையாட்டைப் போல மிக எளிதிற் செய்யும் அருட்செயலேயாகும். 'அச்செயல்களில் அகப்பட்டு வருகின்ற உயிர்கள், இறுதியில் மாசு நீங்கிய நிலையில் இடப்படும்' என்று சொல்லப்படுவதால், அந்நிலையில் அவை சிவனையே அடைந்திருக்கும். அப்பொழுது அது ஆன்மாக்களை சுத்தநிலையில் செலுத்தும் நெறி என்று அவை அறிவே முடிவாய் இருக்கும்.*

*குறிப்புரை :- 'எல்லாம் சிவனது அருளேயாதலின் அவ்வருள், முடிவில் சிவனையே அடைவிக்கும்' என்பதும், 'அந்நிலை அறிவு நிலை' என்பதும் கூறப்பட்டன. 'அறிவு நிலை' என்றதனால் 'ஆனந்த நிலை' என்பது சொல்லாமலே அமைந்தது.*

*2224. தெளிவுரை :- ஐந்து மலங்களையுடையவர்களாகச் சொல்லப் படுவோர் யாவரும் அதிகமான மாயைத் தொடக்கு உடையவர்கள். அவர்கள் அசுத்த வினையிலும் நீக்குதற்கரிய தூல வினைத்தொடக்குடையவர்கள். அத்தன்மைத்தான வினைத்தொடக்கால் சுவர்க்க நரகங்களை அடைந்து உழல்பவர்கள். ஆகையால், அவர்கள் சிவனை எளிதில் அறியும் அறிவுடைய ராவாரோ! 'ஆகார்'.*

**2225.** கருவில் அதீதம் கலப்பிக்கும் மாயை
அரிய துரிய மதில் உண்ணும் ஆசையாம்
உரிய சுழுத்தி முதல்எட்டும் சூக்கத்து
அரிய கனா தூலம் அந்நன வாமே. **32**

---

*குறிப்புரை :- 'அதனால், அவர்கட்குச் சிவன் தன்மையிலும், முன்னிலையிலும் தானே நேர்நின்று ஞானத்தை உணர்த்தாமல், படர்க்கையில் ஆசான் மூர்த்தியை அதிட்டித்து நின்று, பலநாள் உடன் கொண்டு, கேட்பித்தும், சிந்திப்பித்தும், தெளிவித்தும் ஞானத்தை உணர்த்துவன்' என்பது குறிப்பெச்சம். 'ஆகவே, இவர்கள் சுத்தாவத்தையை அரிதில் எய்துவர்' என்பதாம்.*

*முன் இரண்டடிகளில், 'ஐம்மலத்து ஆரும்' எனப் பிரித்து இரண்டாம் வேற்றுமைப் பெயர்த் தொகையாகக் கொள்க. 'அதிகரித்த' என்பது, 'அதித்த' எனக் குறைந்து நின்றது. 'சகலர்' என்பது, 'மாயையோடு கூடினவர்' எனப் பொருள் தரும் ஆதலின், 'அதிகரித்த சகலர்' என்பது, பெரிதும் மயக்கத்தைத் தருகின்ற, முக்குண வடிவாகிய பிரகிருதி பந்தத்தை உடையவர் ஆதலைக் குறித்தது. 'அரனார்க்கு' என்றது, 'அரனாரை அறிவதற்கு' என்றபடி. ஏகார வினா, எதிர்மறைப் பொருளில் வந்தது.*

*இதனால், சுத்தாவத்தை பற்றியதொரு சிறப்புப் பொருள் கூறப்பட்டது.*

*2225.* **தெளிவுரை :-** *(உயிர்கள் யாதானும் ஓர் யோனியிற்புக்குப் பிறந்த பின்புதான் சாக்கிரம் முதலிய அவத்தைகளை அடையும்' எனக் கருத வேண்டா. அவ்வவ் யோனியிற் புக்கிருக்கும் நிலையிலும் ஐந்தவத்தைகளை அடையும். அவை கருவளர் அவத்தைகளாம்).*

*வித்தில் நின்ற உயிரை முளையாகிய உடம்போடு முதற்கண் கலக்கச் செய்வதாகிய 'காரண சரீரம்', அல்லது, 'ஆனந்தமயகோசம்' எனப்படுகின்ற மாயா தத்துவத்தோடு உயிர்தொடர்பு கொள்வதே கருவினில் துரியாதீதம். பின்பு 'கஞ்சுக சரீரம்' அல்லது, 'விஞ்ஞானமய கோசம்' - எனப்படுகின்ற, அராகம் முதலிய ஐந்து தத்துவங்களோடு உயிர் தொடர்பு கொள்வதே கருவினில் துரியம். பின்பு, 'குணசரீரம்', அல்லது, 'மனோமய கோசம்' எனப்படுகின்ற மூலப் பிரகிருதியோடு உயிர் தொடர்பு கொள்வதே கருவினில் சுழுத்தி. பின்பு, 'சூக்கும சரீரம்', அல்லது 'பிராணமய கோசம்' எனப்படுகின்ற சித்தம் ஒழிந்த அந்தக்கரணம் மூன்று, தன்மாத்திரை ஐந்து ஆக எட்டுத் தத்துவங்களோடு உயிர் தொடர்பு கொள்வதே கருவினில் சொப்பனம். (சித்தம் பிரகிருதியில் அடங்கும்). பின்பு, 'தூல சரீரம்' அல்லது அன்னமய கோசம்' எனப்படுகின்ற ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, மாபூதம் ஐந்து ஆகப் பதினைந்து தத்துவங்களோடு உயிர் தொடர்பு கொள்வதே கருவினில் சாக்கிரம்.*

**2226.** **ஆணவம் ஆகும் அதீதம் மேல் மாயையாம்**
**பூணும் துரியம் சுழுத்திபொய்க் காமியம்**
**பேணுங் கனவுமா யேயம் திரோதாயி**
**காணும் நனவில் மலக்கலப் பாகுமே.** **33**

---

*குறிப்புரை :-* *இந்த ஐவகைச் சரீரங்கள் பற்றியே இத் தந்திரத்தின் தொடக்கத்தில் கூறப்பட்டது. உயிர்கள் கேவல நிலையிலிருந்து சகல நிலைக்கு வரும்பொழுது அதீத நிலையிலிருந்தே முறையாக வருதல் பற்றி, 'கருவளர்ச்சியும் அதீதத்திலிருந்தே முறையாக நிகழும்' என அறியுமாறு அவத்தைகளை அதீதத்தி லிருந்து முறையாகக் கூறினார். ஆசை - அராகம். தோற்ற முறையில் இறுதிக்கண் உள்ள அராகத்தைக் கூறவே, அதற்கு முன்னுள்ள தத்துவங்களும் அடங்கின. முதல் - மூலம்; அது மூலப் பிரகிருதி. எட்டுதல் - தீண்டுதல். 'சுழுத்தி, முதலை எட்டும்' என்க. சுழுத்தியில் நிற்கும் உயிரினது செயலைச் சுழுத்தியில் செயலாகக் கூறினார். 'சூக்கத்து' என்றாற்போலத் 'தூலம்' என்பதிலும் அத்துச்சாரியை விரித்து, 'ஆம்' என்பதைக் 'கனா' என்பதனோடும் கூட்டுக.*

*இதனால், கருவிலும் அஞ்சவத்தைகள் நிகழ்தல் கூறப்பட்டது.*

*2226.* **தெளிவுரை :-** *துரியாதீத நிலையில் உயிருக்கு ஆணவ மலம் மட்டுமே இருக்கும். அதற்குமேலே உள்ளதான துரிய நிலையில் அதனோடு வித்தியா தத்துவங்களில் தோற்ற முறையில் முதலிலே உள்ள மாயா தத்துவம் வந்து பற்றும். அடுத்து நிகழும் சுழுத்தி யவத்தையில் நல்லனவும் தீயனவும் ஆகிய காரிய கன்மங்கள் வந்து பற்றும். (இதனால், கால தத்துவமும், நியதி தத்துவமும் பற்றுதல் பெறப்படும்). அடுத்து நிகழும் சொப்பனத்தில் மேற்கூறிய கன்மங்களுக்கு ஏற்ப மாயா காரியங்களான கலை முதல் நிலம் ஈறான ஏனைகளுக்கு ஏற்ப மாயா காரியங்களான கலை முதல் நிலம் ஈறான ஏனை எல்லாத் தத்துவங்களும் வந்து பற்றும். (ஆகவே, சுத்த தத்துவங்கள் வந்து பற்றுதலும் தானே அமைந்தது). இறுதியாக நிகழும் சாக்கிரத்தில், முன்பு நான்கு மலங்களும் பற்றிக் கொண்டதனால் அவை அனைத்தையும் செலுத்துகின்ற திரோதான மலம் வந்து பற்றும். (என்றது, 'அனைத்தையும் முழுமையாக நடத்தும்' என்றபடி). ஐந்தவத்தைகளிலும் ஐந்து மலங்கள் இம்முறையில் உயிரை வந்து பற்றுவனவாம்.*

| | |
|---|---|
| *துரியாதீத நிலை* | *ஆணவம் மட்டும் இருக்கும்* |
| *துரிய நிலை* | *வித்தியா தத்துவத்தில் தோற்ற நிலையில் மாயை பற்றும்* |
| *சுழுத்தி* | *காரிய கன்மங்கள் அதாவது கால, நியதி தத்துவங்கள் பற்றும்* |
| *சொப்பனம்* | *கலை முதல் நிலம் ஈறாக எல்லாத் தத்துவங்களும் பற்றும்* |
| *சாக்கிரம்* | *திரோதாயி பற்றும்* |

**2227. அரன்முத லாக அறிவோர் அதீதத்தர்**
**அரன்முத லாமாயை தங்கிச் சுழுத்திக்**
**கருமம் உணர்ந்து மாயேயங்கைக் கொண்டோர்**
**அருளும் மறைவார் சகலத்துற் றாரே. 34**

---

*குறிப்புரை :- 'அதீதம் ஆணவம் ஆகும்; மேல் பூணும் துரியம் மாயை ஆம்; சுழுத்தி பொய்க் காமியம் ஆம்; பேணுங்களவு மாயேயம் ஆம்; நனவில் திரோதாயி காணும்; மலக் கலப்பு இவ்வாறு ஆகும்' என இம்மந்திரத்தின் சொல்முறைமை கொள்க.*

*காரணம் நிலையுடைமையால் அது, 'மெய்' என்றும், காரியம் நிலையாமையால் அது, 'பொய்' என்றும் சொல்லப்படும். கான்மியம், 'காமியம்' என மருவி வழங்கும். 'மாயேயம்' எனவரும் இடங்களில் எல்லாம் 'மாமாயை' எனப் பாடம் திரிக்கப்பட்டது என்பதை மேலேயும் கூறுவோம்.*

*இதனால், அவத்தைகளில் பாசங்கள் பற்றுமாறு கூறப்பட்டது.*

*2227. **தெளிவுரை :-** 'ஆணவம் அதீதத்தில் பற்றும்' என முன்மந்திரத்தில் கூறினமையால், அந்நிலையை மட்டும் உடையராய் அதிலே நிற்பவர்கள், 'சிவபெருமான் முதல்வன்' என உணரும் உணர்வை இழவார். (இவர்கள் விஞ்ஞான கலரே).*

*'மாயா தத்துவம் துரியத்தில் வந்து பற்றும்' என்றும், 'வித்தியா தத்துவங்களில் காலமும், நியதியும் வந்து பற்றும்' என்றும் முன் மந்திரத்தில் கூறினமையால், அந்த இரண்டில் நிற்பவர்களும் மேற்கூறப்பட்டவர்போல, 'சிவபெருமானே முதல்வன்' என்னும் உணர்வை இழத்தல் இல்லை. (இவர்கள் இருதிறத்தினரும் தம்முட் சிறிது வேறுபாடுடைய பிரளயாகலரே. இவர்களில் பின்னவர் புருட தத்துவத்திற்குச் சிறப்பு ஏதுவாய் நிற்கும் கலை, வித்தை, அராகங்களைப் பொதுமையாக அன்றிச் சிறப்பாக உடையராகார் என்பது நாயனார் கருத்து - என்க. 'கருவில் அதீதம்' என்னும் மந்திரத்திற் கூறியவற்றிற்கும், அடுத்து முன் மந்திரத்திற் கூறியவற்றிற்கும் சிறிது வேறுபாடு உண்டென்க).*

*'கலை முதலிய ஏனை எல்லாத் தத்துவங்களும் சொப்பனத்தில் வந்து பற்றும்' - என்று முன் மந்திரத்தில் கூறப்பட்டமையால், அவர்கள், 'தமக்கொரு தலைவன் உளன்' என்பதையே அறியார். இவர்கள் சகல வருக்கத்தினரே.*

***குறிப்புரை :-** சொப்பன நிலைதானே இத்தன்மையதாகலின், சாக்கிர நிலை இத்தன்மையதாதல் சொல்ல வேண்டாவாயிற்று.*

*இறுதியில் 'சகலத்துற்றார்' எனக் கூறியதனால், மேற் சொல்லப்பட்டவர்கள் விஞ்ஞானகலரும், பிரளயாகலருமாதல் விளங்கிற்று. அவத்தைகளைக் கூறியது*

**2228.** உருவுற்றுப் போகமே போக்கியத் துற்று
மருவுற்றுப் பூத மனாதியால் மன்னி
வரும்அச் செயல்பற்றி சத்தாதி வைகிக்
கருவுற் றிடுஞ்சீவன் காணும் சகலத்தே. **35**

---

பற்றி, அவற்றில் வந்து பற்றும் மலங்களையும், மலங்களைக் கூறியது பற்றி அவை வந்து பற்றும் அவத்தைகளையும் முன் மந்திரம் பற்றி உய்த்துணர வைத்தார். 'அருளும்' என்ற உம்மை, முதல்வனைப் பொதுப்பட உணரும் உணர்வும் இலராதலைக் குறிக்கும்.

இம் மந்திரத்தில் பாடம் பலவிடத்துத் திரிவுபட்டுள்ளது.

இதனால், மூவகை உயிர்கள் அடையும் அவத்தைகளின் கூடுதல் குறைவுகள் கூறும் முகத்தால் அவற்றின் பாச நிலைகள் கூறப்பட்டன.

*2228.* **தெளிவுரை :-** 'கருவில் அதீதம்' (பா. 2225) என்னும் மந்திரத்திற் கூறியபடி கருவிலேயே பல அவத்தைகளை அடைந்த உயிர், பின்பு பலருங் காணப் பிறந்து, சகலாவத்தையில் பூதம் முதலிய புறக்கருவிகளாலும், மனம் முதலிய அகக் கருவிகளாலும் செய்தற்குரிய செயல்களை மேற்கொண்டு, பல போக்கியப் பொருள்களில் பொருந்தி, ஓசை முதலிய புலன்களில் மூழ்கிப் பலவகை அனுபவங்களை அனுபவிப்பதாய்க் காணப்படும்.

**குறிப்புரை :-** 'கருவுற்றிடும் சீவன் உரு உற்றுச் சகலத்தே பூத மனாதியால் மன்னிவரும் செயல் பற்றிப் போகத்து உற்றும், சத்தாதி மன்னிப்போகம் மருவுற்றும் காணும்' எனக் கூட்டி முடிக்க. ஞானேந்திரியங்களின் புலன்களையே கூறினாராயினும், இனம் பற்றிக் கன்மேந்திரியங்களின் புலன்களாகிய மொழிதல் முதலியனவும் கொள்ளப்படும். சூக்கும தூல பூதங்களே ஞானேந்திரிய கன்மேந்திரியங்கட்கு நிலைக்களன் ஆதல் பற்றி அவற்றை, "பூதம்" எனப் பொதுப்படக் கூறினார். பூத மனாதி, 'பூதங்களும் மனாதிகளும்' என உம்மைத் தொகை.

இதனால், சகல வருக்கத்து உயிர்கள் சகல நிலையில் நிற்குமாறு இனிது விளக்கப்பட்டது.

*2229.* **தெளிவுரை :-** உயிர்கள் தமக்கு இருவினையொப்பு வாய்க்கப் பெற்ற பொழுது சிவனது சத்தி முன்பு பிறவித் துன்பத்தைத் தரும் திரோதான சத்தியாய் இருந்த நிலைமை மாறி, வீட்டின்பத்தைத் தரும் அருட்சத்தியாகித் தங்கள் அறிவில் பதியப் பெற்று, அதனானே மெய்யுணர்வு வேட்கை நிலைத்து நிற்க அவ்வேட்கை மிகுதியால் ஞான குருவை அடைந்து அவர் உபதேசித்த முறைப்படி தம்மைச் சிவனது அருட்சத்தியின் வழிப்படுத்திக் கொண்டு,

**2229.** **இருவினை ஒத்திட இன்னருட் சக்தி**
**மருவிட ஞானத்தில் ஆதரம் மன்னிக்**
**குருவினைக் கொண்டருட் சத்திமுன் கூட்டிப்**
**பெருமலம் நீங்கிப் பிறவாமை சுத்தமே.** **36**

---

*அதனாலே எல்லா மலங்களும் நீங்கப் பெற்று, மீண்டும் பிறவா நிலையில் நிற்பதே சுத்தாவத்தையாம்.*

*குறிப்புரை :-* *கேவல நிலையில் இருந்த உயிர்கள் சகல நிலையை அடைந்த பின்பு அதன்கண் பல்வேறு பிறப்புக்களை எய்தி, வினைகளை ஈட்டியும், நுகர்ந்தும் வரும். அப்பொழுது நல்வினைப் பயன்களில் விருப்பமும், தீவினைப் பயன்களில் வெறுப்பும் கொண்டு, நல்வினைப் பயன்களை விரைவில் எய்தவும், எய்திய வழி நீங்காது நிறுத்திக் கொள்ளவும், தீவினைப் பயன்களை எய்தாது தடுக்கவும், எய்தியவழி விரைவில் அகற்றவும் முயலும், அம்முயற்சியே அவற்றிற்குப் பின்னைப் பிறவிகட்குக் காரணமாய் அமையும். ஆகவே, 'நல்வினையும் தீவினை போலப் பிறப்பைத் தருவதே' என உணர்ந்து, 'விலங்கு பொன்னால் இயன்றதாயினும், இரும்பால் இயன்றதாயினும் விலங்கேயன்றி வேறன்று' என்பதுபோல, இருவகை வினைகளையும் தளைகளாகவே உணர்ந்து, விருப்பு வெறுப்பின்றி இரண்டையும் சமமாக நோக்கும் பக்குவ நிலையே இருவினை யொப்பாகும். அத்தகைய நோக்கு உண்டாயின், மேலும் மேலும் வினை ஏறுதல் நீங்கும். அந்நிலையில் என்றுமே உயிரினது அறிவில் ஒன்றி நிற்கின்ற சிவனது சத்தி, முன்பு திரோதான சத்தியாய் இருந்த நிலைமை மாறி, அருட்சத்தியாகிப் பதியும். அதுவே சத்தி நிபாதம். சத்தி நிபாதத்தால் 'வினைகளே பிறப்பிற்குக் காரணம்' - என்பதை உணர்ந்து, உயிர் வினைக்கு அஞ்சும். அவ்வஞ்சுதல், பிறவிக்கு அஞ்சுதலேயாகும். இங்ஙனம் பிறவிக்கு அஞ்சும் உயிர், பிறவி நீங்கும் வழியை உணர்த்துவாரையே நாடி ஓடும். அவ்வாறு ஓடுதலே ஞான வேட்கையாகும். இந்த ஞானவேட்கையே சத்தி நிபாதத்தின் பயன். அவ்வேட்கை நீங்காது நிலைக்கப் பெற்ற உயிர்களின் முன் சிவன், ஞானியராகிய ஆசான் மூர்த்திகளை அதிட்டித்து நின்று, ஞானத்தை உணர்த்துவன். அவ்வாறு உணர்த்த உணர்ந்த உயிர், அஞ்ஞானம் நீங்கப் பெற்றுச் சிவனை அடைந்து, அவனைப் போலவே பிறவாமை யுடையதாய் அவனது இன்பத்தில் திளைத்திருக்கும். அவ்வாறு திளைத்திருத்தலே சுத்தாவத்தை. இவையே இம்மந்திரத்தில் முறையாகக் கூறப்பட்டன.*

*அருட்சத்தியை, 'இன்னருட்சத்தி' என்றதனால், திரோதான சத்தி இன்னாமைச் சத்தியாதல் விளங்கிற்று. ஆதரம் - விருப்பம். சத்தி நிபாதம் வாயாத முன்பும் இடையிடையேயும் ஒரொரு கால் ஞானவேட்கை நிகழுமாயினும் அது, துயில் எழாதவன் துயிலின் இடையிலே சிறிது சிறிது விழிப்பை அடைதல்*

**2230.** ஆறாறும் ஆறு அதின் ஐயைந் தவத்தையோ
டீறாம் அதீதத் துரியத்து இவன்எய்தப்
பேறாகும் ஐவரும் போம்பிர காசத்தின்
ஈறார் பரசிவம் ஆதேய மாமே. **37**

---

*போல, நிலைத்தல் இன்றி விரைய நீங்குவதாக, சத்தி நிபாதத்தின் பின் உண்டாகும் ஞான வேட்கையே நிலையுடைய உண்மை ஞான வேட்கையாம்' என்பது உணர்த்துதற்கு. 'ஞான ஆதரம் மன்னி' என்றார். சத்திநிபாதம் வாய்க்கப் பெறாதவரது ஞான வேட்கையையே திருவள்ளுவர், ''தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால்" என்றார். (திருக்குறள் - 249) 'கூட்டி என்றது, தானே தன்னை அருட்சத்தி வழியில் சேர்த்தி' என்றபடி.*

*இதனால், சுத்தாவத்தையின் இயல்பு முறைப்பட இனிது விளக்கப்பட்டது. இந்நிலை சிவஞான சித்தி. (சுபக்கம் சூ. 4-40) யிலும் இவ்வாறே,*

*இருவினைச் செயல்கள் ஒப்பின் ஈசன்றன் சத்தி தோயக்*
*குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத்*
*திரிமலம் அறுத்துப் பண்டை சிற்றறி வொழிந்து ஞானம்*
*பெருகிநா யகன்றன் பாதம் பெறுவது சுத்த மாமே.*

*எனக் கூறப்படுதல் காண்க.*

*2230. தெளிவுரை :- முப்பத்தாறாகச் சொல்லப்படுகின்ற கருவிகளே அவத்தை வேறுபாடுகட்குக் காரணம். அந்தக் காரணத்தின்வழிக் காரியமாய் நிகழும் அவத்தைகள் இருபத்தைந்து. (கேவலம், சகலத்திற் கேவலம், சகலத்திற் சகலம், சகலத்தில் சுத்தம், நின்மலம் ஆகிய ஐந்தில் ஒவ்வொன்றிலும் சாக்கிரம் முதலிய ஐந்து). அந்த இருபத்தைந்தில் முடிவாய் உள்ளது சுத்த துரியாதீதம். அதனை உயிர் அடைந்த பொழுது, ஐந்தொழில் தலைவர்களாகிய ஐவரும் அதனைத் தடை செய்யாது இருக்க, அவ்விடத்து மிக்கு விளங்கும் அருள் ஞான ஒளியினால், அனைத்துயிர்கட்கும் முடிவான புகலிடமாய் உள்ள பரசிவனது பேரின்பம் அதன் அறிவினுள்ளே பொங்கித் ததும்பும்.*

*குறிப்புரை :- முப்பத்தாறினையும் தொகுத்து 'ஆறு' என ஒன்றாகக் கூறினமையின் 'அதின்' என ஒருமையாற் கூறினார். ஆறு - வழி. 'ஓட' என்னும் செயவெனெச்சத்து அகரம் தொகுத்தலாயிற்று. ஓடுதல், தொடர்ச்சியாக நிகழ்தல். 'போம்' என்னும் பெயரெச்சம், 'போயதனால் உண்டாகும்' எனக் காரணப் பொருட்டாய் நின்றது. ஈறார் பரசிவம் - முடிநிலையில் பொருந்தி நிற்கும் பரசிவம். ஆதேயம் - இடத்து நிகழ்பொருள். "ஆதேயம் ஆம்" என்றதனால், "பரசிவம்" என்பது ஆகுபெயராய், அதனால் விளையும் இன்பத்தைக் குறித்தது. எந்நிலையிலும் சிவம் உயிருக்கு ஆதாரமேயன்றி, ஆதேயம் ஆகாது. எனினும்*

**2231.** தன்னை அறியா துடலைமுன் தான் என்றான்
தன்னைமுன் கண்டான் துரியந் தனைக்கண்டான்
உன்னும் துரியமுன் ஈசனோ டொன்றாக்கால்
பின்னையும் வந்து பிறந்திடுந் தானே. **38**

**2232.** சாக்கிரந் தன்னில் அதீதம் தலைப்படின்
ஆக்கிய வந்த வயிந்தவ மால்நந்த
நோக்கும் பிறப்பறும் நோன்முத்தி சித்தியாம்
வாக்கும் மனமும் மருவல்செய் யாவே. **39**

---

*அதனால் தரப்படும் இன்பம் உயிரினது அறிவினுள்ளே ஊற்றெழவே உயிர் அதனை நுகர்வதாகும். அதுபற்றி அஃது 'ஆதேயம்' எனப்பட்டது. "சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது" (பா. 1440) என முன்னருங் கூறினார். "உற்ற ஆக்கையின் உறுபொருள், நறுமலர் எழுதரு நாற்றம்போல் - பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள்" (தி.8 அதிசயப்பத்து - 9) எனவும் "ஊற்றிருந்துள்ளம் களிப்போன் போற்றி" (தி.8 திருவண்டப்பகுதி - 121) எனவும் ஆளுடை அடிகள் அருளிச் செய்தார். இவையெல்லாம் பற்றியே,*

*"ஓங்குணர்வி னுள்ளடங்கி, உள்ளத்துள் இன்பொடுங்கத்*
*தூங்குவர்" - திருவருட்பயன் - 91*

*என்றார் உமாபதிதேவர். "ஐயைந்தாவன, சாக்கிரம் முதலிய ஐந்திலும் தனித்தனி நிகழும் சாக்கிரம் முதலியன" என்பார்க்குக் காரண அவத்தைகள் யாதேனும் ஒன்றேபெறப்படுதல் அன்றி, அனைத்தும் பெறப்படாமை அறிக.*

*இதனால், மேல் பெயரளவாகச் சுட்டப்பட்ட சுத்தாவத்தையின் இயல்பு தெரித்துக் கூறப்பட்டது.*

*2231. தெளிவுரை :- சகலாவத்தையில் தன்னை உடம்பின் வேறாக உணராமல், உடம்பையே "தான்" என உணர்ந்து நின்றவன், சுத்தாவத்தையை ஓரளவேனும் அடைந்த பின்பே தன்னை உடம்பின் வேறுபட்ட பொருளாக உணர்ந்தான். பின்பு சுத்தத்தில் துரிய நிலையை அடைந்து, சிவனது அருளை உணர்ந்தான். ஆயினும் அதனையும் கடந்த சுத்த துரியாதீதத்தை அடைந்து சிவனை உணர்ந்து அவனோடு இரண்டறக் கலவாது, துரியத்திலேயே அவன் இருந்துவிடுவானாயின், உடம்பு நீங்கிய பின், மீளவேறோர், உடம்பை எடுத்தலும் கூடும்.*

*குறிப்புரை :- "தனைக்கண்டான்" என்பதில் 'தன்' என்றது சிவனையாகலின், அங்கு, 'துரியம்' என்றது சுத்த துரியமேயாயிற்று. அஃது அங்ஙனமாகவே, 'முதல்' எனும் பொருள்பட வந்த 'முன்' என்பது, சுத்தாவத்தையின் தொடக்கமாயிற்று.*

**2233.** அப்பும் அனலும் அகலத்து ளேவரும்
அப்பும் அனலும் அகலத்து ளேவாரா
அப்பும் அனலும் அகலத்துள் ஏதென்னில்
அப்பும் அனலும் கலந்தது அவ் ஆறே. **40**

---

*'அதன்கண் தன்னைக் கண்டான்' என்றதனால், தன்னைக் காணாதிருந்தது சகலத்தில் ஆயிற்று. 'துரியத்தில்' என ஏழாவது விரிக்க. துரிய நிலை அருள் நிலையும், துரியாதீத நிலையே சிவ நிலையும் ஆதலால், சிவனது அருளே சீவனாக உபசரித்து, 'தனைக் கண்டான்' என்றமை தெளிவாம். "துரியமுன்" என்பதில் 'முன்' இடமுன். அவ்விடத்து நிகழ்வது துரியாதீதம். 'பின்னையும்' என்ற உம்மை, உயர்வு சிறப்பும்மை. "பிறந்திடும்" என்றது, 'பிறத்தல் கூடும்' என்றதேயன்றி, அஃது ஒருதலையன்று என்பதைச் சாத்திரங்களைக் கொண்டு தெளிக.*

*துரிய நிலையில் பிராரத்தவாசனை தாக்காதவாறு திருவருளில் உறைத்து நிற்றல், 'நள் அனல் வேவாத நற்றவரது செயலைப் போலவும்', 'பண் அமர மாச் செலுத்தும் பாகரது செயல் போலவும்' (சிவஞானபோதம் - சூ. 10 அதி. 2) பெரிதும் அரிதாகலின், அதனிற் சிறிதே சோர்வு உண்டாயின், அவ் அற்றம் பார்த்து, பிராரத்த வாசனை தாக்க, அதனால், ஆகாமியம் தோன்றி முதிர்ந்து, அடுத்த பிறப்பு வருதலும் கூடும். அது பற்றியே, 'ஈசனோ டொன்றாக்கால் - பின்னையும் வந்து பிறந்திடும்' என்றார். 'தான்' என்பதை ஈற்றடியில் முதலிற் கூட்டுக.*

*இதனால், 'சுத்த துரியாதீதமே பிறவா நிலை' என்பது உணர்த்தும் முகத்தால், அதனது இன்றியமையாச் சிறப்புக் கூறப்பட்டது.*

*2232. தெளிவுரை :- புருவ நடுவிற்றானே திருவருளால் சிவத்தைத் தலைப்படும் சாக்கிரம் முதலிய அவத்தைகளில் முடிவான அதீத நிலை கைகூடுமாயின், பாச ஞானத்தை உண்டாக்க வந்த வாக்காகிய மயக்கும் பொருள் கெடும். அது கெடவே, 'இனியும் வருங்கொல்' என எதிர்நோக்கி அஞ்சப் படுவதாகிய பிறப்பு, வாராதே ஒழியும். அதனால் பரமுத்தி நிலை கிடைக்கும். எவ்வாறெனில் அவ்விடத்தில் பாச ஞான பசு ஞானங்கள் தோன்ற மாட்டா ஆகையால்,*

*குறிப்புரை :- 'ஆக்கிய' என்பது, 'செய்யிய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். வயிந்தவம் - விந்துவின் காரியம். அவை இங்கு வாக்குக்களே. மால் - மயக்கம். நந்த - கெட. 'நந்த' என்றமையால், நந்துதல் அனுவாத முகத்தால் பெறப்பட்டது. மயக்கம் தருவனவற்றை, 'மயக்கம்' என்றார். பெத்தர்களுக்கு வாக்குக்கள் தெளிவைத் தருவனவாயினும், முத்தர்கட்கு அவை சிவஞானம் நிகழ்தற்குத் தடையாய் உலகுணர்வைப் பயக்கும் ஆதலின் அவற்றை, 'மால்' என்றார். நோன்மை - வலிமை. ஏனை முத்திகளினும் வலியுடைத்தாய் நிலைத்து*

**2234.** அறுநான் கசுத்தம் அதின் சுத்தா சுத்தம்
உறும்ஏழும் மாயை உடன்ஐந்தே சுத்தம்
பெறுமா றிவைமூன்று காண்டத்தால் பேதித்து
உறுமால்மாமாயையின் ஆன்மாவினோடே. **41**

---

*நிற்பது பரமுத்தி என்க. 'வாக்கு' என்பது பாச ஞானத்தையும், 'மனம்' என்பது பசுஞானத்தையும் உணர்த்துதலைச் சிவஞானபோதம் ஆறாம் சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்தால் உணர்க.*

*இதனால், 'சாக்கிரத்தில் சுத்தாவத்தையைத் தலைப்பட்டோர் அவற்றுள் துரியத்திலே நின்று விடாமல், துரியாதீதத்தை அடைதல் வேண்டும்' என மேற்கூறியது, அதன் பயன் கூறும் முகத்தால் வலியுறுத்தப்பட்டது.*

*2233.* **தெளிவுரை :-** *'இன்பம், துன்பம்' என்னும் இரண்டும் உலக உணர்வே நிகழும் சகலாவத்தையில் நிலையின்றி, மாறி மாறித் தோன்றும். அகலாவத்தை யாகிய சுத்தாவத்தையில் அவை தோன்றவேமாட்டா. 'சகலாவத்தையில் அவை தோன்றுதல் ஏன்' எனில், இன்பம், துன்பம் இரண்டும் கலந்ததுதான் சகலாவத்தை.*

*குறிப்புரை :- அப்பு என்றது விருப்பை. அனல் என்ற வெறுப்பை. 'பிரபஞ்சம்' என்னும் வடசொல்லுக்கு, 'விரிவுடையது' என்பது பொருளாகலின் அதனை 'அகலம்' எனத் தமிழாக்கி, முதலிலும் கடைசியிலும் சொற்பின்வரு நிலையணி தோன்றக் கூறினார். அஃது ஆகுபெயராய்ப் பிரபஞ்சத்தை உணர்ந்து நிற்கும் சகலாவத்தையைக் குறித்தது. இடையில் உள்ள 'அகலம்', 'சகலம்' என்னும் வடசொற்கு எதிராய வடசொல். 'சுத்தம்' என்னாது 'அகலம்' என்றது அவ்வணி தோன்றுதற் பொருட்டேயாம். 'அப்பும் அனலும்' என்றவை மறைபொருட் சொற்கள். அவையும் சொற்சுவை தோன்ற வந்தனவேயாம். அப்பு - நீர். அனல் - தீ. இவை அவற்றின் வெளிப்படைப் பொருள். அச்சொற்கள் நான்கடியிலும் வந்தது, சொற்பொருட் பின்வருநிலையனி. அவ்ஆறு - அந்த வழி. நிலையை 'வழி' என்றார்.*

*இதனால், சகலாவத்தை பந்தமும், சுத்தாவத்தை வீடும் ஆதல் கூறப்பட்டது.*

*2234.* **தெளிவுரை :-** *முப்பத்தாறு தத்துவங்களில் கீழ் உள்ள ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும் அசுத்த தத்துவங்களாகும். அவை அவ்வியத்தமாகிய மூலப் பிரகிருதியினின்றும் தோன்றி ஒடுங்கும். இடையில் உள்ள வித்தியா தத்துவம் ஏழும் மிச்சிர தத்துவமாகும். அவை அசுத்த மாயையினின்றும் தோன்றி ஒடுங்கும். மேலே உள்ள சிவ தத்துவம் ஐந்தும் சுத்த தத்துவங்களாகும். அவை சுத்த மாயையினின்றும் தோன்றி ஒடுங்கும். இம் மூவகைத் தத்துவங்களும் மூன்று காண்டங்களாய்ப் பிரிந்து ஆன்மாவோடு கூடி, அதற்கு அறிவிச்சை செயல்கள் நிகழக் கருவிகளாய் நிற்கும்.*

**2235.** மாயைகைத் தாயாக மாமாயை ஈன்றிட
ஆய பரசிவன் தந்தையாய் நிற்கவே
ஏயும் உயிர்கே வலசகலத் தெய்திப்பின்
ஆய்தரு சுத்தமும் தான்வந் தடையுமே. **42**

---

*குறிப்புரை :-* *மூன்று கண்டங்களாவன; 'போக்கிய காண்டம், போசயித்திரு காண்டம், பிரேர காண்டம்' என்பன. இவற்றை ஆன்ம தத்துவம் முதலாக வைத்துப் பொருத்திக் கொள்க. போக்கியம் - புசிக்கப்படுவது. போசயித்திரு - புசிப்பவன். பிரேரகம் - செலுத்துதல். இவற்றை இவ்வாறே,*

*ஐந்து சுத்தத்தின் கீழ், ஏழ் சுத்தாசுத்தம்; அசுத்தம்*
*தந்திடும் புமான்கீழ் எண்மூன் றாய தத்துவம்; சீவற்கு*
*வந்திடும்; பிரேரகாண்டம், மருவு போசயித்திரத்தோடு*
*அந்தமில் அணுக்களுக்குப் போக்கிய காண்ட மாமே.*

*என சிவஞானசித்தி. (சுபக்கம். சூ. 2.70)யில் கூறப்பட்டமை காண்க.*

*'மாயேயம்' என்று உள்ள இடங்களில் எல்லாம் 'மாமாயை' என்றே பாடம் திரிக்கப்பட்டது போலவே, 'போசயித்திரு காண்டம்' என்று உள்ள இடங்களில் எல்லாம், 'போகசயித்திரு காண்டம்' என்றே பாடம் திரிக்கப்பட்டுள்ளது.*

*அவ்வியத்தமாகிய மூலப்பிரகிருதி பல சமயத்தாராலும் நன்கறியப்பட்டது. ஆதலின் அதனை 'அதின்' எனப் பண்டறிசுட்டாற் கூறினார். 'உறும்' என்பதை 'அதின்' என்பதனோடும் கூட்டுக. உறுதல் - சூக்குமமாய்ப் பொருந்தியிருத்தல். எனவே அது, தோற்றத்திற்கு முன்னும், ஒடுக்கத்திற்குப் பின்னும் உளதாம் நிலையாதல் அறிக. 'ஏழ் சுத்தா சுத்தம்; மாயையின் உறும்' என இயைக்க. 'உறுமால் மாமாயையின்' என்பதனையும் 'சுத்தம்' என்பதன் பின்னர்க் கூட்டி, 'உறும் ஆன்மாவினோடே' என்பதை மீட்டும் மூன்றாம் அடியின் இறுதியில் கூட்டி யுரைக்க. காண்டம் - பகுதி.*

*இதனால், தத்துவம் முப்பத்தாறும் பற்றிய சில சிறப்பியல்புகள் கூறப்பட்டது.*

*2235.* **தெளிவுரை :-** *சிவனே எல்லாம் செய்பவன். ஆகையால், உலகமாகிய மகவிற்கு அவனை, 'தந்தை' எனலாம். உலகிற்கு முதற் காரணமான 'சுத்த மாயை, அசுத்த மாயை' என்னும் இரு மாயைகளுள் சுத்த மாயையையே சிவன் தான் நேரே பற்றிச் செயற்படுத்துதலால் அதனைச் சிவனோடு புணர்ந்து உலகமாகிய மகவை ஈன்ற, 'நற்றாய்' எனலாம்; அசுத்த மாயையைச் சிவன் தான் நேரே பற்றிச் செயற்படுத்தாமல், அனந்த தேவரைக் கொண்டும், அவர் வழியாகச் சீகண்ட உருத்திரரைக் கொண்டும் செயற்படுத்துதலால் அதனை, உலகமாகிய மகவை வளர்க்கும் 'செவிலித்தாய்' எனலாம். எனவே, சுத்த மாயை, அசுத்த மாயை என்னும் இரு முதற் காரணங்களாலும், சிவனாகிய கருத்தாவினாலும் உலகம் தோன்றி நிலை பெற, உயிர்கள் அவ்வுலகத்தைப் பற்றி நின்று, 'சகலம், கேவலம்'*

*என்னும் இருநிலைகளில் மாறி மாறி உழன்று, முடிவில் சிவனது அருளாலே ஞானத்தைப் பெற்று, அவற்றினின்றும் விடுதலை அடைந்து சுத்த நிலையை அடையும்.*

***குறிப்புரை :-*** *செவிலி முதலியோரைச் செய்யுள் நோக்கி முறை பிறழ வைத்தார். உலகமாகிய மகவை எடுத்துக் கூறாமையால் அது. 'தந்தை, நற்றாய், செவிலி' என்பவற்றால் பெறப்பட்ட குறிப்புருவகமாகும். உயிரை, 'தான்' என்றது சாதி யொருமை. இங்ஙனம் மகவாக உருவகிக்கப்பட்டவை, 'சேதனம், அசேதனம்' என்னும் இருவகைப் பிரபஞ்சமுமாகும். சேதனப் பிரபஞ்சங்கள் அறிவைப் பெறுதலும், அசேதனப் பிரபஞ்சம் பல்வேறு வகையான தன்மைகளைப் பெறுதலும் இங்குக் குறிக்கப்பட்ட மூவராலுமாம் என்க. சுத்த மாயை சகலர் பிரளயாகலர்கட்குப் பிரேரகமாத்திரையாயும், நால்வகை வாக்குக்களாயும் பயன்படும். அஃது அவர்கட்குத் தனு கரண புவன போகங்களாய் வருதல் இல்லை. விஞ்ஞானகலர்க்கு மட்டுமே சுத்தமாயை தனு கரண புவன போகங்களாய் வந்து பயன்படும்.*

***சுத்தமாயை, 'விந்து' எனப்படுதலால், அதன் காரியங்கள் 'வைந்தவம்' என்றும், அசுத்த மாயையே, 'மாயை' எனப்படுதலால், அதன் காரியங்கள், 'மாயேயம்' என்றும், பிரகிருதியின் காரியங்கள் 'பிராகிருதம்' என்றும் சொல்லப்படும்****. எனினும், பிரகிருதியும் அசுத்த மாயையின் காரியம் ஆதல் பற்றி பிராகிருதங்களையும், 'மாயேயம்' என அடக்கிச் சொல்லுதல் உண்டு.*

*வித்தைகள், வித்தை, யீசர், சதாசிவர் என் றிவர்க்கு*
*வைத்துறும் பதங்கள், வன்னம், புவனங்கள், மந்திரங்கள்*
*தத்துவம், சரீரம், போகம், கரணங்கள் தாம் எலாமும்*
*உய்த்திடும் வைந்தவந்தான் உபாதான மாகி நின்றே.*

*என்னும் சிவஞான சித்தி (சுபக்கம் - சூ. 1.25)ச் செய்யுளை நோக்குக. இதனுள் 'விந்து' என்பதே பகுதிப் பொருட்டாகிய விகுதியைப் பெற்று, 'வைந்தவம்' என வந்தது. பகுதிப் பொருள் விகுதியை வட நூலார் 'சுவார்த்த பாவ தத்திதப் பிரத்தியயம்' என்பர்.*

*இதனால், உலகத்தின் தோற்ற ஒடுக்கங்கள் ஆமாற்றை விளக்கி, அதனாலே காரண அவத்தைகள் மூன்றும் நிகழ்தலைத் தெரிவித்து, அதிகாரம் முடிக்கப்பட்டது.*

## 8. பராவத்தை

*பராவத்தை - அவத்தைகள் எல்லாவற்றிற்கும் மேலே உள்ள அவத்தை. பரம் - மேன்மை. அவத்தை - நிலை. இது மேல், 'சுத்தத்தில் சுத்தம்' (பா. 2220) எனக் கூறப்பட்ட அவத்தையேயாம். அனைத்து அவத்தைகளிலும் மேலான அவத்தையாதல் பற்றி, முன்மந்திரத்தில் 'ஆய்தரு சுத்தமும் தான்வந்தடையுமே' (பா.2220) எனக் கூறிப் போந்த இயைபு கொண்டு இதனை இங்கு இருபத்தாறு மந்திரங்களால் விரித்துரைக்கின்றார். பரம்பொருளோடு சேர்தலே பராவத்தை யாதலும் உணர்க.*

**2236.** **அஞ்சும் கடந்த அனாதிபரம் தெய்வம்**
**நெஞ்சமுந் தாய நிமலன் பிறப்பிலி**
**விஞ்சும் உடலுயிர் வேறு படுத்திட**
**வஞ்சத் திருந்த வகையறிந் தேனே.** **1**

---

*2236. **தெளிவுரை :-** உருவம் இரண்டு, (வித்தை, ஈசுரன்) உருவாருவம் ஒன்று (சதாசிவன்) அருவம் இரண்டு (சத்தி, சிவன்) ஆக முத்திறத்து ஐந்து நிலைகளையும் கடந்து, தன்னியல்பில் நிற்கும் பரசிவனே சுத்த சிவன். (மேற்கூறிய ஐந்தும் அபர சிவங்களாம்). பரசிவன் - மனத்தையும் கடந்தவன். இயல்பாகவே மலங்கள் இல்லாதவன். எனவே, மாயா சரீரங்களை எட்டாதவன். ஆகவே, அவன் (தனது திருவருள் காரணமாக) மலங்களுட் பட்டனவாயினும் உண்மையில் அவற்றினும் மேற்பட்ட உயிர்களை முன்னர் மாயாகாரியமாகிய உடலோடு ஒன்றுபடுத்திப் பின்பு அதனின்றும் வேறுபடுத்தி உய்வித்தற் பொருட்டு அவ்வுயிர்கள் தன்னை அறியாதபடி அவற்றின் அறிவினுள்ளே கள்வன் போல ஒளித்திருந்தான். எனினும், அவனது கள்ளத்தை நான் அவன் அருளாலே அறிந்து கொண்டேன். அஞ்சு - ஆணவம், கன்மம், மாயை, மயேயம், திரோதாயி என்ற ஐந்தையும் கடந்த சிவன் என்றும் கொள்ளலாம்.*

***குறிப்புரை :-** 'அதனால் பராவத்தையில் உள்ளேன்' என்பது குறிப்பெச்சம். 'நீவிரும் இதனை எய்தலாம்' என்பது கருத்து. 'அஞ்சு' என்றது ஐம்மலங்களை எனின், 'நின்மலன்' என்பது வெற்றெனத் தொடுத்தல் ஆதலும், 'தடத்த சிவத்தின் மேற்பட்ட சொரூப சிவமே பரசிவம்' என்பது பெறப்படாமையும் அறிக. 'அனாதி' என்றது, செயற்கையோடு கூடாத இயற்கையைக் குறித்தது. 'தெய்வம்' என்பது 'திவ்வியம்' என்னும் பொருட்டாய்த் தூய்மையை உணர்த்திற்று. 'நெஞ்சமும்' என்னும் உம்மை, 'நாவையேயன்றி' என, இறந்தது தழுவி நின்றது. 'மனம், வாக்கு' - என்பவற்றின் உண்மைப் பொருளை, 'சாக்கிரந்தன்னில் அதீதம் தலைப்படின்' என்னும் மந்திரத்தின் (பா. 2233) உரையிற்காண்க. தாய - கடந்த, 'விஞ்சும் உயிர்' எனக் கொண்டு கூட்டுக. 'உயிருடல்' என்றே பாடம் ஓதுதலும் ஆம். வேறு*

**2237.** சத்தி பராற்பரம் சாந்தி தனில் ஆன
சத்தி பரானந்தம் தன்னில் சுடர்விந்து
சத்தி அம் மாயை தனுட்சத்தி ஐந்துடன்
சத்தி பெறும்உயிர்தான் அங்குற் றாறுமே. **2**

---

*படுத்துதல் கூறினமையால், முன்பு ஒன்றுபடுத்தினமை பெறப்பட்டது. 'திருவருளால்' என்பதும் 'அவன் அருளால்' என்பதும் ஆற்றலால் கொள்ளக் கிடந்தன.*

*இதனால், 'பராவத்தைக்கு நிலைக்களம் பரம்பொருள்' என்பதும், அதன் சிறப்பியல்புகளும் கூறப்பட்டன.*

***2237. தெளிவுரை :-*** *(குண குணிகட்குத் தம்முள் வேற்றுமையின்மையால்), 'சத்தியே சிவம்' என்று கூறலாம். எனினும், சத்தியை ஆள்வது பொருளேயாதலின், சிவத்தினின்றே சத்தி தோன்றுகின்றது. (அஃதாவது செயற்படுகின்றது). அதனால் உயிர்கட்கு, அமைதியைத் தருவதும், மேலான ஆனந்தமாய் விளைவதும் பராசத்தியே. இனி அந்தச் சத்தியினால் தான் சுத்தமாயையாகிய சத்தி காரியப்படுகின்றது. அது காரியப்படும் நிலையில் சிவசத்தி, 'பரை, ஆதி, இச்சை, ஞானம், கிரியை' என ஐந்தாய் இருக்கும். அந்த ஐந்துடனும் கூடுவதனாலே தான் உயிர் ஆற்றலைப் பெறுகின்றது. ஆகவே, உயிர் அமைதியை அடைந்து, ஆனந்தத்தைப் பெறுவது பரையாகிய சத்தியிடத்தில்தான்.*

***2238. தெளிவுரை :-*** *முப்பத்தாறு தத்துவங்களும் சடமேயாதலின் சித்தாகிய பரம்பொருள் அத்தத்துவங்கள் அனைத்திற்கும் அப்பாற்பட்டதாம். (அந்தப் பரம் பொருளை யடைதலே பராவத்தை) இந்தச் சடசித்துக்களைப் பகுத்து, சித்தின் இயல்பை அறிபவரும் அரியர். அந்தச் சித்துப் பொருளின் குணமே அருள் ஆதலின், அப்பொருளை அறிந்து அருளைப் பெறுபவரும் அரியர். உயிர் சார்ந்ததன் வண்ணமாம் இயல்புடையது. ஆகலின், அறிவே வடிவான பரம்பொருளைச் சார்ந்து அறிவே வடிவாய்விட்ட அவர்கட்குத்தான் சிவன் அளவிலா இன்பப் பொருளாய் இன்புறுத்துவான்.*

***2239. தெளிவுரை :-*** *வித்தியா தத்துவங்கட்கு முதற் காரணமாய் உள்ள அசுத்த மாயையைக் கடந்து சிவதத்துவத்தை அடைந்தமையால் 'வித்தியாதரர் கட்குத் தலைவன்' எனச் சொல்லுதற்குரிய ஆன்மா பிராசாத கலைகளில் ஒன்பதைக் கடத்தலால், சுத்த மாயாகாரியங்களையும் கடந்த ஒருநிலையைப் பெற்றுப் பத்தாம் கலையாகிய வியாபினி கலையில் நின்று, அருட்சத்தியை வஞ்சம் அற்ற நெஞ்சுடன் நாடுவானாயின் அஃது, ஒன்பது அடுக்குக்களுக்கு மேல் உள்ள பத்தாவது மாடியில், காலில் செம்பஞ்சு ஊட்டுதல் முதலிய ஒப்பனை களுடன் கட்டிலில் உறங்குகின்ற தலைவியைத் தலைவன் அடைந்து, அவளோடு இனிய சொற்களைக் கூறுவது போன்றதாகும்.*

**2238.** ஆறாறுக் கப்பால் அறிவுஆர் அறிபவர்
ஆறாறுக் கப்பால் அருள்ஆர் பெறுபவர்
ஆறாறுக் கப்பால் அறிவாம் அவர்கட்கே
ஆறாறுக் கப்பால் அரன்இனி தாமே. **3**

**2239.** அஞ்சொடு நான்கும் கடந்து அகமேபுக்குப்
பஞ்சணி காலத்துப் பள்ளி துயில்கின்ற
விஞ்சையர் வேந்தனும் மெல்லிய லாளொடு
நஞ்சற நாடின் நயஞ்செய்யு மாறே. **4**

---

***குறிப்புரை :–*** *பஞ்சீகரணம் - பிரிப்பின்றிக் கலத்தல். பஞ்சணிகாலம் - உயிரும், அருளும் பிரிப்பின்றிப் பங்சீகரணம் பெற்ற காலம். இங்கு, மெல்லியலாளுக்கு ஒப்பாகச் சொல்லப்பட்டது அருட்சத்தியேயாகலின், 'அஞ்சொடு நான்கும்' என்றது, பொதுப்பட 'ஒன்பது' என்னும் பொருட்டாய்ப் பிராசாத கலைகளில் கீழுள்ள ஒன்பதைக் குறித்தது. ஆகவே, 'அகம்' என்பது பத்தாவதாகிய வியாபினி கலையாயிற்று.*

*விஞ்ஞை - அறிவு. விஞ்சையர் வேந்தன் - அறிவுருவான ஆன்மா. 'விஞ்சையர் வேந்தனும் அஞ்சொடு நான்கும் கடந்து, அகமே புக்கு, நஞ்சு அற நாடின் (அது) நயம் செய்யும் ஆறு' எனக் கூட்டிப் பொருள் கொள்க. 'அது' என்பது தோன்றா எழுவாய். 'பஞ்சு அணிகால் அத்தோடு துயில்கின்ற' என்னும் உருபு தொகுத்தலாயிற்று. அது, பகுதிப் பொருள் விகுதி. அத்தோடு, 'அதனோடு' என்பதன் மரூஉ. காலில் செம்பஞ்சுக் குழம்பூட்டுதல், ஏனை ஒப்பனைகளுக்கு உபலக்கணம். 'செல்வர் இல்லத்து இளமகள் நலத்தை வேண்டினோன், பல மாடிகளைக் கடந்து மேல்மாடியில் சென்றவழியே அவளைத் தலைப்பெய்தல் கூடுவது போலச் சுத்த சிவனது அருட்சத்தியை அடைய வேண்டினோன் பிராசாத யோகத்தில் பல படிகளைக் கடந்து மேலே சென்றபொழுதே அந்தச் சத்தியை அடைதல் கூடும்' என்றபடி.*

*"கிடந்த கிழவியைக் கிள்ளி யெழுப்பி*
*உடந்தை யுடனே நில்" - திருவுந்தியார் - 14*

*என்றார் திருவுந்தியார் ஆசிரியர். 'அவள் கிடக்கும் இடம் பத்தாம் தானம்' என்பதை இம்மந்திரத்தால் அறிகின்றோம். பத்தாம் தானத்தைக் கடந்து நான்கு தானங்கள் அந்தரமாய் நிற்க. அப்பால் உள்ள இரண்டு தானங்கள் சிவன் இருக்கும் ஆத்தானம் ஆகும். இன்ப வழியாதல் பற்றி, 'கிழவி' என்றும் 'மெல்லியலாள்' என்றும் சொல்லப்படினும், 'தாயுடன் சென்றே பின் தாதையைக் கூட வேண்டும்' (பிற்காலத்து பட்டினத்து அடிகள் பாடல்) என்பது பற்றி, 'சத்தியை முதற்கண் சார்தல் வேண்டும்' எனக் கூறினார். பள்ளி - திருவருள் இன்பம் துய்க்கும் ஆனந்த நிலையம். துயிலுதல் - தன் செயலற்றுக் கிடத்தல்.*

**2240.** உரிய நனாத்துரி யத்தின் இவன்ஆம்
அரிய துரிய நனாவாதி மூன்றில்
பரிய பரதுரி யத்தில் பரன்ஆம்
திரிய வரும்துரி யத்தில் சிவமே. **5**

---

*'சத்தி ஐந்துடன் - சத்தி பெறும் உயிர் தான் அங்குற்று ஆறுமே' என முன் மந்திரத்திற் கூறினார். அதனை ஞான நெறியாற் கூட இயலாதபொழுது, பிராசாத யோக நெறியால் கூடுதல் கூடும்' என்பது இதனால் கூறப்பட்டது.*

***2240. தெளிவுரை :-** எளிதில் இயல்பாக நிகழும் சகல சாக்கிர துரியம் போலவே, அரிதில் சாதித்து அடைவதாகிய நின்மல துரியத்திலும் ஆன்மா, ஆன்மாவாய்த்தான் இருக்கும். ஆயினும், வியாபகமாகிய பர துரியத்தில் அது மேல்நிலையை அடையும். அந்தத் துரியம் வேறுபட நிகழ்கின்ற பரதுரியாதீதத்தில் தான் ஆன்மாச் சிவமாம் தன்மையை அடையும்.*

***குறிப்புரை :-** முன் மந்திரத்தில் 'விஞ்சையர் வேந்தன்' என ஒப்புமைப் பெயரால் குறிக்கப்பட்ட ஆன்மாவை இங்கு எழுவாயாக வருவிக்க. பின்னர் 'அரிய' என வருதலால், முன்னர், 'உரிய' என்றது எளிதில் இயல்பாக நிகழ்வதாயிற்று. நனாத் துரியம் - சகல சாக்கிரமாகிய மத்தியா லவத்தையில் நிகழும் துரியம். 'துரியத்தின்' என்பதில் உள்ள 'இன்' உருபு. ஒப்புப் பொருளில் வந்த ஐந்தாம் வேற்றுமை உருபு. "மூன்றில்" என்னும் ஏழாவதனை முடிப்பதாகிய 'இவன் ஆம்' என்பது அவ்வேற்றுமைக்குப் பின்னர் வாராது, முன்னர் வந்தது. பருமை - வியாபகத்தைக் குறித்தது. எனவே, பராவத்தையில் தான் ஆன்மா உண்மையாக அணுத்தன்மை நீங்கி, விபுத்தன்மையை அடைதல் பெறப்பட்டது. 'பரன்' என்பது, பொதுப்பட, 'மேல் நிலையன்' எனப் பொருள் தந்தது. அது வியாபக நிலையுள் ஆயினமையைக் குறித்ததேயாகும். திரிதல் - வேறுபடுதல். 'திரிய வரும் துரியம்' என்றது, துரியம் வேறுபட, அதன்பின் நிகழும் அதீதத்தைக் குறித்தது. 'ஆம்' என்றதை இறுதியிலும் கூட்டுக.*

*இதனால், பராவத்தை நின்மலாவத்தையினும் உயர்ந்ததாதல் இனிது விளக்கப்பட்டது.*

***2241. தெளிவுரை :-** 'பராவத்தையிலும் அதன் முடிநிலையாகிய அதீதத்தை அடைதல் வேண்டும்' எனக் கூறுதல், சிறிதே எஞ்சி நிற்கும் மலவாசனை நீங்குதற் பொருட்டாம். (வாசனை, 'இலய மலவாசனை' என்க.) இனி அந்த அதீதத்தைத் தலைப்பட்ட பின்பும் விடாது தொடர்ந்தது அதிற்றானே பழகிப் பழகியிருந்தால் தான், ஆன்மாச் சிவமாம் தன்மையைப் பெறும். ஆகவே, அதில் அவ்வாறு தொடர்ந்து பழகாதவர்கள் எத்துணைச் சாதகங்களைச் செய்தவராயினும் அவர் சிவமாம் தன்மையை அடையார். அத்தன்மையை அடையாமையால், சிறிதளவு எஞ்சி நின்ற பாசமும் நீங்காமல் இருந்து கொண்டேயிருக்கும்.*

**2241.** பரமாம் ஆதீதமே பற்றறப் பற்றப்
பரமாம் ஆதீதம் பயிலப் பயிலப்
பரமாம் ஆதீதம் பயிலாத் தபோதனர்
பரமாகார் பாசமும் பற்றொன் றறாதே. **6**

---

***குறிப்புரை :-*** *'அவ் இருப்பு எல்லையில் இன்பத்திற்குத் தடையாகும்' என்பது கருத்து. "பற்றறப் பற்ற" - என்பதற்குக் கருத்து நோக்கி இவ்வாறு உரை கூறப்பட்டது.*

*பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு.* ***- திருக்குறள் - 350***

*எனத் திருவள்ளுவரும்,*

*பற்றை அறுப்பதோர் பற்றினைப் பற்றில், அப்*
*பற்றை அறுப்பர்என் றுந்தீபற.* ***- திருவுந்தியார், 15***

*எனத் திருவுந்தியார் ஆசிரியரும் அருளிச் செய்தமை காண்க.*

*இன்னும் திருவுந்தியார் ஆசிரியர்,*

*பழக்கந் தவிரப் பழகுவ தன்றி,*
*உழப்புவ தென்பெணே, உந்தீபற;*
*ஒருபொரு ளாலேயென் றுந்தீபற.* ***- திருவுந்தியார், 2***

*என்றமையும் அறியற்பாற்று. பாசம் - பாச வாசனை. ஒன்று - சிறிது, அஃது அவ்வளவிற்றாகிய பாச வாசனையைக் குறித்தது. 'ஒன்றும்' என உம்மை விரிப்பின், அது நின்மலாவத்தையைப் பயனிலதாகச் செய்தல் உணர்க. "பற்று" என்றதை, 'குறிகளும் அடையாளமும் கோயிலும்' (தி.5 ப.90 ப.6) ஆக உரைத்தாரும் உளர்.*

*இதனால், பராவத்தையிலும் அதீதம் இன்றியமையாததாதல் கூறப்பட்டது.*

***2242. தெளிவுரை :-*** *பல சமயத்தாராலும், 'எத்தன்மைத்து' என ஆராயப் படுவதாய், அருவமாய் நிற்கும் மாயை, சிவத்திற்கு வேறும் ஆகாமல், ஒன்றும் ஆகாமல் இடைப்பட்டதாய் இருக்கும். அதனால், வாக்கு மனங்கள் நீங்கிய பின்பும் வாசனை யளவாய் நிற்கின்ற அந்த மாயை அறவே நீங்கினால், அறிவு முழுத் தூய்மை அடைந்து, அதனால் சிவானந்த மயமாகிப் பின்பு அந்தச் சிவானந்தத்தால் விழுங்கப்பட்ட பொருளாகிவிடும்.*

***குறிப்புரை :-*** *'பொய்' என்றது கண்ணுக்குப் புலனாகாமையே. அகம் புறமாய் நிற்றல், சிவத்தில் வியாப்பியமாய் உயிரில் வியாத்தியாய் நிற்றல், 'வாக்கு, மனம்' என்பவற்றின் உண்மைப் பொருளை, 'சாக்கிரந் தன்னில் அதீதம்*

**2242.** ஆயும்பொய் மாயை அகம்புற மாய்நிற்கும்
வாயும் மனமும் கடந்த மயக்கறின்
தூய அறிவு சிவானந்த மாகிப் போய்
வேயும் பொருளாய் விளைந்தது தானே. 7

**2243.** துரியப் பரியில் இருந்தஅச் சீவனைப்
பெரிய வியாக்கிரத் துள்ளே புகவிட்டு
நரிகளை ஓடத் துரத்திய நாதர்க்கு
உரிய வினைகள்நின்று ஓலமிட் டன்றே. 8

---

*தலைப்படின்' என்னும் மந்திரத்து (பா. 2232) உரையிற் காண்க. வேய்தல் - மூடுதல்; அகப்படுத்தல். 'விளைவது' என எதிர்காலத்தில் கூறற்பாலது, துணிவு பற்றி, "விளைந்தது" என இறந்த காலமாகக் கூறப்பட்டது.*

*இதனால், பராவத்தையில் அதீதத்தில் செல்லவேண்டுதற்குக் காரணம் கூறப்பட்டது.*

***2243. தெளிவுரை :-*** *பர துரியமாகிய குதிரைமேல் ஏறிய ஆன்மா, அதனை விடுத்து, அதற்குமேல் உள்ள அதீதமாகிய புலிக்குகைக்குள் தன்னைப் புகவிடுமாயின், புலியால் கௌவிக் கொள்ளப்பட்ட ஆட்டினை நரிகள் பற்ற மாட்டாது அஞ்சி ஓடிவிடுதல் போல, அந்த ஆன்மாவை மாயா காரியங்களாகிய தத்துவங்கள் அணுகமாட்டாது நீங்கிவிடும். (அஃதாவது, 'செயல் இழந்துவிடும்' என்பதாம்) மாயா கருவிகள் நீங்கினமையால் பிராரத்த கன்மம் வந்து பற்றமாட்டாது ஒழியும்.*

***குறிப்புரை :-*** *'விசாக்கிரம், வியாக்கிரம்' என்னும் சொல் ஒற்றுமைப் பற்றி பராவத்தையில் முடிவான அதீதத்தைப் புலியாக உருவகிக்கின்றவர். அதற்கேற்பத் தத்துவங்களை நரிகளாக உருவகித்தார். அதனானே ஆன்மா ஆடாக உருவகிக்கப்பட்டதும் விளங்கும். 'ஆட்டை உண்பன நரியும், புலியும் ஆயினும், புலிபற்றிக் கொண்ட ஆட்டினை நரி அணுகமாட்டாது. அதுபோல ஆன்மாவை உட்கொள்வன மாயா கருவிகளும், சிவமும். ஆயினும் சிவத்தால் பற்றிக் கொள்ளப்பட்ட ஆன்மாவை மாயா கருவிகள் அணுக மாட்டா' என்பது நயம்.*

*நாதர் - தலைவர். இங்கு, ஞானத்தலைவர். உரியவினை, முகந்து கொண்ட பிராரத்த வினை. ஓலமிடுதல் - அஞ்சி, தீங்கு செய்யாதிருக்கும்படி முறையிடுதல். 'ஓலமிட்டன்று' என்றது, 'ஈயென இரத்தல் இழிந்தன்று' (புறம் 274) என்பது போல, 'ஓலமிட்டது' என்பதாம். இது பன்மை யொருமை மயக்கம்.*

*இதனால், பர துரியாதீதத்தை அடைந்த ஆன்மாவை மாயை கன்மங்கள் தொடராமை கூறப்பட்டது.*

***2244. தெளிவுரை :-*** *இங்குச் சொல்லிவாராநின்ற இந்தச் சாக்கிர முதலிய*

**2244.** நின்ற இச் சாக்கரம் நீள்துரி யத்தினில்
மன்றறும் அங்கே மணம்செய்ய நின்றிடும்
மன்றன் மணஞ்செய்ய மாயை மறைந்திடும்
அன்றே இவனும் அவன்வடி வாமே. **9**

---

*அவத்தைகளில் துரியத்தை அடைந்த போதிலும் சிவன் அனைத்தும் கடந்த வெற்ற வெளியான அதீத நிலையில் இருப்பவன் ஆதலால், அவ்விடத்திலே உயிரைக் கூட இருப்பான். (துரியத்தில் வந்துகூட மாட்டான்). அவன் உயிரைக் கூடினால்தான் உயிர்க்கு உலக உணர்வு மறையும். அப்பொழுது அது சிவ உணர்வு ஒன்றேயுடையதாய்ச் சிவமாகும். (எனவே* ***'உயிர் அதீத நிலையை அடைதல் வேண்டும்' என்பதாம்****).*

***குறிப்புரை :-*** *அதிகாரம் 'பராவத்தை' ஆதலின், பராவத்தையை 'நின்ற இச் சாக்கிரம்' என்றார். சாக்கிர நீள் துரியம் - சாக்கிரத்தினின்று நீண்டு செல்ல உளதாகின்ற துரியம். மன்றன் - அம்பலவன். அம்பலம் - வெற்றவெளி. அது அனைத்தும் கடந்த அதீத நிலையைக் குறித்தது. 'மாயை' என்பது காரிய ஆகுபெயராய் உலகத்தை உணர்த்தி, இருமடியாகுபெயராய் உலக உணர்வை உணர்த்திற்று. கூடுதல், புணர்தல் முதலிய சொற்களாற் கூறாமல், 'மணம்' என்னும் சொல்லாற் கூறினமையால், அது, தலைவன் தலைவியை ஈருடல் ஓருடலாக முயங்குதல் போல இரண்டறக் கலத்தலைக் குறித்தது. எனவே, 'துரியம் முதலிய பிற நிலைகளில் சிவன் உயிரோடு, கேளிர், கிளைஞர் முதலியவரோடு தலைப்பெய்தல் போலத் தலைப்பெய்திருப்பானாயினும்* ***இரண்டறக் கலத்தல் அதீதநிலையில்தான் என்றதாயிற்று****.*

*"அவன் இவன் ஆனது அவன் அருளால் அன்றி,*
*இவன் அவன் ஆகான் என் றுந்தீபற" - திருவுந்தியார், 40*

*என்பர் ஆதலால், 'உயிரை வந்து மணப்பவன் சிவனே' எனக் கூறினார். அன்றே - அப்பொழுதே.*

*இதனால், 'சிவன் தன்னிலையில் நிற்பது சுத்த துரியாதீத நிலை' என்பது கூறும் முகத்தால், 'அதனை ஆன்மா அடைதலே அது பேறு பெறும் நிலையாகும்' என்பது கூறப்பட்டது.*

***2245. தெளிவுரை :-*** *சிவத்திற்கும், ஆன்மாவிற்கும் இடையே நிற்பதாகிய மாயை தனது நிலையினின்று விருத்திப் பாடுமாயின் ஆணவ இருளில் உள்ள உயிர்கட்கு விளக்குப் போல உதவும். அதனாலேயே மத்தியாலவத்தை நிகழும். துரியத்தில் ஆன்மாப் பாசத்தினின்றும் நீங்காது அழுந்தி நிற்கும். (ஆதலின் அஃது ஆன்மா அடைதற்குரிய துரியம் அன்று). அஃது அடைதற்குரிய துரியம் பரதுரியமே. அதனை அடைந்தால் அது பாசங்கள் நீங்கித் தூயதாம்.*

***குறிப்புரை :-*** *சாக்கிரம் - விரிதலாவது அங்கு காரியப்படும்*

**2245.** விரிந்திடில் சாக்கிரம் மேவும் விளக்காய்
இருந்த இடத்திடை யீடான மாயை
பொருந்தும் துரியம் புரியில்தா னாகும்
தெரிந்த துரியத்துத் தீதக லாதே. **10**

**2246.** உன்னை யறியாது உடலைமுன் நான்என்றாய்
உன்னை யறிந்து துரியத் துறநின்றாய்
தன்னை யறிந்தும் பிறவி தணவாதால்
அன்ன வியாத்த னமலனென் றறிதியே. **11**

---

*தத்துவங்களோடு கூடுதல். 'இடையீடான மாயை இருந்த இடத்து விரிந்திடின் விளக்காய்ச் சாக்கிரம் மேவும்' என மாற்றி இதன் பின் ஈற்றடியைக் கூட்டுக. 'ஆய்' என்பதை ஆக' எனத் திரிக்க. 'தெரிந்த துரியம்' என்பது, 'எல்லார்க்கும் அனுபவமாய் அறியப்பட்ட துரியம்' என மத்தியாலவத்தைத் துரியத்தைக் குறித்தது. 'தீது அகலாது' என்றதனால் அது பொருந்தாத் துரியம் ஆயினமையின், 'பொருந்துந் துரியம்' என்றது பரதுரியம் ஆயிற்று. தான்ஆதல், ஆன்மாப் பாசமாய் இருந்த நிலையின் நீங்கித் தானேயாய் இருத்தல். ஈடு - பெருமை.*

*இதனால், 'துரியம்' என்பது உயர்வுடையது போலக் கூறப்பட்டாலும், உண்மையில் உயர்ந்த துரியம் பரதுரியமே' என்பது கூறப்பட்டது.*

***2246. தெளிவுரை :- மாணவனே, நீ கீழாலவத்தை மத்தியாலவத்தைகளில் நின்ற பொழுது உன்னையே நீ, 'யார்' என்று அறிந்து கொள்ளாது, உடம்பையே, 'நான்' என்று சொல்லிக் கொண்டிருந்தாய். பின்பு, நின்மலாவத்தையை அடைந்தபொழுது உன்னை நீ, 'சடமாகிய உடம்பின் வேறாகிய சித்துப் பொருள்' என அறிந்து, அதன்கண் துரிய நிலையிலே சிவன் உன்னையே தானாகக் கொண்டு நிற்கும்படி அவனது அருள் வழியில் நின்றாய், எனினும் ஆன்மாத் தன்னையும், தலைவனையும் அறிந்து அவனது அருள் வழியில் நின்ற அளவிலே அதற்குப் பிறவி நீங்கி விடாது. 'சிவன் எல்லாப் பொருளிலும் நீக்கமற நிறைந்து நின்றானாயினும், அவனது உண்மை நிலை பிறிதொன்றோடும் கூடாது அனைத்தினும் வேறாய் நிற்கும் தூய்மையே' என்பதை அறிந்து, அவனை அந்நிலையிலே சென்று தலைப்பட முயல்.***

*குறிப்புரை :- **'அம்முயற்சியாவது, நின்மலாவத்தையையும் கடந்து பராவத்தையை அடைய முயலுதல்'** - என்பது குறிப்பு. ஈற்றில் தந்துரைத்தது இசையெச்சம். 'முன்' என்றது, 'ஞானாவத்தைக்கு முன்' என்றது. ஆகையால் அது, கீழாலவத்தை மத்தியாலவத்தைகளையும், அறிதல் ஞானத்தினால் ஆதலின், 'அறிந்து' என்றது, ஞானாவத்தையாகிய நின்மலாவத்தையையும் குறித்தன. உறுதற்கு வினை முதல் வருவித்துக் கொள்க. 'அமலன்' என்றது, 'சகலாவத்தைக்கு*

**2247.** கருவரம் பாகிய காயத் துரியம்
இருவரும் கண்டீர் பிறப்பிறப் புற்றார்
குருவரம் பெற்றுஅவர் கூடிய பின்னை
இருவரும் இன்றிஒன் றாகிநின் றாரே. 12

---

*அப்பால் நிற்பவன்' என்பதைக் குறிப்பினால் உணர்த்தியது. எனவே, சகலத்திற் சுத்தமாகிய நின்மலாவத்தையும் கடந்து, பராவத்தையில் செல்லுதல் வேண்டும்' என்பது போந்தது. அன்ன வியாத்தன் - அத்தன்மையாதான ஒரு நிறைவினை யுடையவன். வியாத்தன் - வியாப்தன் என்பதன் சிதைவு; விளக்கொளியை விழுங்கி நிற்கும் ஞாயிற்றொளியைப் போல ஆன்மாவைத் தன்னகத்தடக்கி நிற்கும் பரம்பொருள்.*

*இதனால், நின்மலாவத்தையும் சகலத்தில் சுத்தமேயாக, பராவத்தையே உண்மைச் சுத்தம்' என்பது கூறப்பட்டது.*

***2247. தெளிவுரை :-** கருவிற்கு உட்படுதலையுடைய உடம்பில் நிகழ்வதாகிய துரியத்தில் தீயும், சிவனும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டீர்கள். (அது போதாது; ஏனெனில்) பிறப்பு இறப்புக்களிற்பட்டு உழல்கின்றவர்கள், ஞான குருவின் அருளைப் பெற்றுச் சிவனும், தாமும் வேறறக் கலந்த பின்பே தாம் சிவனின் வேறாய சீவராய் நில்லாது, சிவமாகி நிற்பர்.*

***குறிப்புரை :-** 'அங்ஙனம் நின்றவரே பிறப்பிறப்பு அற்றவராவர்' என்பது குறிப்பெச்சம். 'துரியத்தில்' - ஏழாவது விரிக்க. 'துரியத்து' எனப் பாடம் ஓதுதலும் ஆம். கூடுதலுக்குச் செயப்படுபொருளாகிய 'சிவனை' என்பது வருவிக்க. 'கண்டீர்' என்றதனால், அது சிவ தரிசனமும், 'கூடிய' என்றதனால் அது சிவயோகமும் ஆயின. சிவ தரிசனமும் குருவருளால் பெறற்பாலதே யாயினும் பிறப்பறுதியைத் தரும் சிறப்புப் பற்றிச் சிவயோகமே குருவருளால் பெறப்படுவது போலக் கூறப்பட்டது. சிவதரிசனத்தளவில் நின்றவர் பிறப்பெய்துதல் சிறுபான்மையாதலின், அவர்களைப் பிறப்பிறப்பு அற்றவராகக் கூறினர். அங்ஙனம் கொள்ளாக்கால் மேல், "தன்னையறிந்தும் பிறவி தணவாது" என்றத னோடு முரணும் என்க. சிவயோகமே துரியமாக, சிவதரிசனம் சுழுத்தியே யாயினும் அது துரியத்தின் தோற்றுவாயாதல் பற்றி அதனையும் 'துரியம்' என்றார். 'நின்றார்' என்பது, துணிவு பற்றி எதிர்காலம் இறந்த காலமாக வந்த கால வழுவமைதி.*

*இதனால், 'தம்மை உணர்ந்து தலைவனை உணர்தலாகிய நின்மலாவத்தையை அடைதற்குக் குருவருள் வேண்டும்' என்பது கூறப்பட்டது. 'அவ்வாற்றால் நின்மலாவத்தையை அடைந்து பராவத்தையை எய்துதல் கூடும்' என்றற்கு.*

**2248.** அணுவின் துரியத்தில் ஆன நனவும்
அணுஅசை வின்கண் ஆன கனவும்
அணுஅசை விற்பரா தீதம் சுழுத்தி
பணியில் பரதுரி யம்பரம் ஆமே. **13**

பரதுரி யத்து நனவும் பரந்து
விரிசகம் உண்ட கனவும்மெய்ச் சாந்தி
உருவுறு கின்ற சுழுத்தியும் ஓவத்
தெரியும் சிவதுரி யத்தனு மாமே.

---

***2248. தெளிவுரை :-*** *('மேலாலவத்தை' என்றும், சகலத்தில் 'சுத்தாவத்தை' என்றும் கீழ் உள்ளவைகளை நோக்கிச் சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற யோகாவத்தைகள் அது காரணம் பற்றியே 'துரியம்' எனப்படும். (துரியம் - மேற்பட்டது) ஆயினும், அதில் சீவத் தன்மை நீங்காமையால் அவை சீவதுரியமேயாம். அவையே இங்கு 'அணுவின் துரியம்' என்றும், 'அணுவசைவு' என்றும் சொல்லப்படுகின்றன.*

*சீவ துரியமாகிய யோகாவத்தையில் உள்ள, 'சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்' என்பன தாழ்வுடையனவே - என அறியப்பட்டால், அதன் பின்பே பராவத்தை உளதாகும். அந்தப் பராவத்தையே அவத்தைகளில் எல்லாம் மேலான அவத்தை.*

***குறிப்புரை :-*** *'ஆகவே - மேலாலவத்தை - எனக் கூறப்படுதலே பற்றி அவற்றையே 'பராவத்தை' என மயங்கற்க' என்பதாம்.*

*'யோகில் - தருவதோர் சமாதி தானும்*
*தாழ்ந்து பின் சனனம் சாரும்' - சுபக்கம் து. 5. 34*

*என்னும் சிவஞான சித்தி மொழி மேலேயும் எடுத்துக்காட்டப்பட்டது. செய்யுள் நோக்கிச் சுழுத்தி இறுதியில் வைக்கப்பட்டது. பராதீதம் - பரமும் அதீதமும்; உம்மைத்தொகை. இதன் பின்னும், 'சுழுத்தி' என்பதன் பின்னும் எண்ணும்மை விரிக்க. 'பரம்' என்றது துரியத்தை. பணிதல் - தாழ்தல். அஃது இங்கு அறிபவனது அறிவில் அத்தன்மையதாய் விளங்குதலைக் குறித்தது.*

*இதனால், பராவத்தை பற்றியதோர் ஐயம் அறுக்கப்பட்டது.*

*(இதன் பின் பதிப்புக்களில் காணப்படுகின்ற 'பரதுரியத்து நனவும்' என்னும் பாடல் மிகையாகத் தெரிகின்றது).*

***2249. தெளிவுரை :-*** *பராவத்தையில் சாக்கிரம் சீவன் முத்தி. அதில் உலக அனுபவம் சிவானுபவமாய் நிகழும். (அதுவே,*

*'பெற்றசிற் றின்பமே பேரின்பமாம்' - திருவுந்தியார் - 33*

**2249.** பரமாம் நனவின்பின் பாற்சகம் உண்ட
திரமார் கனவு சிறந்த சுழுத்தி
உரமாம் உபசாந்தம் முற்றல் துறவே
தரனாம்சிவதுரி யத்தனும் ஆமே. **14**

**2250.** சீவன் துரியம் முதலாகச் சீராக
ஆவ சிவன்துரி யாந்தம் அவத்தைபத்து
ஓவும் பரானந்தி உண்மைக்குள் வைகியே
மேவிய நாலேழ் விடுத்துநின் றானே. **15**

---

*எனக் கூறப்பட்டது). அந்த அனுபவம் அதிகார முத்தியில் பழக்க வாசனையாய் நிகழும். அதுவே பர சொப்பனம். போக முத்தியில் அந்த வாசனையும் தாக்க மாட்டாது நீங்கும். அதுவே பர சுழுத்தி. (இதில் சுத்த தத்துவ போதத்தில் இச்சையுண்டாம்) அந்த இச்சையும், அதனால் வரும் அந்தப் போகமும் அடங்கி நிற்றலே 'உபசாந்தம்' எனப்படும். அது பரதுரியம். அதை அடைந்தவன் மேல் நிலையை அடைந்தவனாவன். 'சிவதுரியம்' எனப்படுகின்ற நின்மலத் துரியத்தை அடைந்தவனும் இந்நிலையை அடைந்தே உயர்வு பெறுதற்குரியன்.*

***குறிப்புரை :-** காயம் இருந்து நீங்கின பாத்திரத்தில் அதன் வாசனை பதிந்திருத்தல் போன்ற பதிவை, 'திரம்' என்றார். திரம் - நிலைப்பு. 'கனவில் வாசனை உண்டாம்' என்றதனால், நனவில் அனுபவம் உண்மை பெறப்பட்டது. வாசனை தாக்காத உறுதி. 'உறும்' எனப்பட்டது. 'உரம் சிறந்த சுழுத்தியாம்' என்க. முற்றல் - முதிர்தல். துறவு - கீழ் நிலைகளின் நீங்குதல்; அது துரியம். 'சிவ துரியத்தனும் ஆம்' என்பது 'ஒரு தலையாக ஆவன்' என்றதாம். உபசாந்தம் துரியம் ஆகவே, இன்பம் துரியாதீதம் ஆயிற்று. ஆகவே, 'முடிநிலை உயர்வு பராவத்தையே' என்பது பெறப்பட்டது.*

*இதனால், பராவத்தைகளின் இயல்பும், 'அவைகளே முடிநிலை உயர்வு' என்பதும் கூறப்பட்டன.*

***2250. தெளிவுரை :-** 'சிவதுரியம்' எனப்படுவது, யோகாவத்தையில் இயமம் முதலிய எட்டில் ஏழாவதாகிய 'தியானம்' என்பது. 'சிவ துரியம்' எனப்படுவது, தசகாரியத்துள் ஒன்பதாவதாகிய சிவயோகம். இவ்வொன்பதில் ஆன்ம சுத்தி சிவ தரிசன சிவயோகங்களில் அடங்கிவிடுதலால், எஞ்சிய எட்டோடு, யோகாவத்தையில் 'தியானம் சமாதி' - என்னும் இரண்டைக் கூட்ட, சீவதுரியம் முதலாகச் சிவதுரியம் ஈறாக உள்ள அவத்தைகள் பத்தாம். ஆகவே, இந்தப் பத்த வத்தைகளையும் கடந்து, சிவானந்தந் தருவதாகிய உண்மைச் சுத்தாவத்தை அடைந்தவனே, தான் முன்பு கட்டுண்டிருந்த அனைத்துத் தத்துவங்களினின்றும் நீங்கினவனாவன். சீவதுரியம் முதல் சிவதுரியம் ஈறாக 10 அவத்தைகள் ஆவன -*

**2251.** பரம்சீவன் மேலாம் பரமம் பரத்தின்
பரம்பரன் மேலாம் பரநன வாக
விரிந்த கனாஇடர் வீட்டும் சுழுனை
உரந்தகும் ஆனந்திஆம் உண்மை தானே. **16**

---

*சீவதுரியம், சீதுரியாதீதம், பரநனவு, பரகனவு, பரசுழுத்தி, பரதுரியம், சிவநனவு, சிவகனவு, சிவசுழுத்தி, சிவதுரியம் என்பன.*

*குறிப்புரை :-* 'மேலாலவத்தை' எனப்படுதலால் யோகாவத்தையில் நிகழும் துரியம் சகலத்திற் சுத்தமே யாகையால், அது சீவ துரியமாம். எவ்வாறெனில், சகலத்தில் நிற்கும் உயிரே சிவன் ஆகலின். இனி - ஞானாவத்தையும் சகலத்தில் சுத்தமாயினும் அது ஞான குருவின் அருளால் ஞானத்தைப் பெற்றபின் அதனை முற்றுவிக்கும் நிலையாதலின் அதன்கண் நிகழும் துரியம் சிவதுரியமாம். தசகாரியத்துள்ளும் 'சிவயோகம்' என்றே சொல்லப்படுதல் நினைக்கத்தக்கது. உண்மைச் சுத்தாவத்தையாகிய முத்தி வகைகளே பராவத்தையாதலின், அதன்கண் நிகழும் துரியம் பர துரியமாம். அதன் பின் நிகழும் அதீதமே சாயுச்சிய முத்தியாகலின், அந்நிலையில் விளையும் ஆனந்தமே முடிநிலைப் பேரானந்தம் ஆதலின் அது பரானந்தமாகும்.

பரானந்தத்தை அடைந்தவன் பரானந்தி. உண்மைச் சுத்தத்தை, 'உண்மை' என்றும், 'அனைத்துத் தத்துவங்களும்' எனக் கூற வந்தவர் அதனை வேதாந்திகளும் உணரும் வகையில், 'மேவிய நாலேழ்விடுத்து நின்றான்' என்றும் கூறினார். 'அந்தம்' என்பதன் பின்னும் ஆக்கம் வருவித்து, 'சீவன் துரியம் முதலாகச் சிவன் துரியம் அந்தமாகச் சீராக ஆவ அவத்தை பத்து' என முடிக்க.

இதனால், யோகாவத்தை, தசகாரியம் இவற்றை வைத்து நோக்கின், சுத்தாவத்தைகள் பலவாதல் கூறப்பட்டது.

*2251.* **தெளிவுரை :-** 'பரம்' என்பது 'மேல்' என்னும் பொருளது ஆதலின், 'எங்கும் பரன்' என்று சொல்லப்படுகின்ற சிவன், மேலானவன்' என்பது போதரும். இனி, 'பரமம்' என்பது பரத்தினும் உயர்ந்த மேன்மையைக் குறிக்கும். ஆகவே, 'பரம்பரன்' என்று சொல்லப்படுகின்ற சிவனே மேலான சிவன். அவனைத் தலைப்படும் சீவன் முத்திநிலையே பரசாக்கிரம். (அதில் பிராரத்தம் உயிரைத் தாக்காவிடினும் உடலூழாய் வந்து போகும்). 'பர சொப்பனம்' எனப்படுகின்ற அதிகார முத்தியில் பிராரத்துவத் தொடர்பு உண்டாகாது. பரசுழுத்தியாகிய போக முத்தியிலும், பர துரியமாகிய இலய முத்தியிலும் ஞானம் முற்றி நிற்கும். பரதுரியாதீதமாகிய பரமுத்தியில் சிவானந்தப் பெருக்கு உளதாம். இவையே உண்மைச் சுத்தாவத்தைகளாம்.

*குறிப்புரை :-* 'பரமம் பரத்தின் மேலாம்' என இயைக்க. 'பரன்' என்பதை

**2252.** சார்வாம் பரசிவம் சத்தி பரநாதம்
மேலாய விந்து சதாசிவம் மிக்கோங்கிப்
பாலாய்ப் பிரமன் அரிஅமர் ஆபதித்
தேவாம் உருத்திரன் ஈசன்ஆம் காணிலே. 17

---

*'சொரூப சிவன்' என்றும், 'சிவன்' என்பதை தடத்த சிவன் என்றும் நாயனார் கொள்கின்றார். 'பர நனவாக' என்பதோடும் 'இடர்' என்பதைக் கூட்டி, 'பரநனவில் (இடர்) ஆக விரிந்த கனா இடர் வீட்டும்' என முடிக்க. விரிந்த கனா பர சொப்பனம். எனவே, 'சுழுனை' என்றதும் பர சுழுத்தியே ஆயிற்று. உயிர் ஆனந்தியாதல் பராதீதத்தில் ஆதலின், அதற்கு முன்னேயுள்ள துரியமும், 'உரந்தகும்' என்றதிலே அடங்கிற்று. அனைத்தையும் 'உண்மை' என ஒன்றாய் அடக்கினமையின், 'தானே' என ஒருமை அசையே கூறினார்.*

*இதனால், பராவத்தைகளே உண்மைச் சுத்தாவத்தைகள் ஆமாறு காரண வகையாலும், பயன் வகையாலும் வலியுறுத்தப்பட்டது.*

*2252. தெளிவுரை :- தத்துவங்களை ஆராயுமிடத்து, எல்லா உயிர்களும் முடிவில் அடையும் இடமாய் உள்ள பரமசிவனும், பரா சத்தியும் முதற்கண் முறையே பரநாத மூர்த்தியும் பரவிந்து சத்தியுமாய் நிற்க, பின்பு பரவிந்து சத்தியினின்று அபரநாத மூர்த்தியும், அவனிடத்தினின்று அபரவிந்து சத்தியும் தோன்ற, அதன்பின் அபரவிந்து சத்தியினின்று சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன் என்போர் முறையே ஒருவரினின்று மற்றொருவர் தோன்றுவர்.*

*குறிப்புரை :- 'இங்ஙனம் பரமசிவனும், பராசத்தியும் ஆகிய அவர்களே தடத்த நிலையில் பரநாத மூர்த்தி, பரவிந்து சத்தி முதலாகிய ஒன்பது பேதங்களாய் நிற்பர்' என்றபடி. இதனை,*

> *சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், திகழும் ஈசன்,*
> *உவந்தருள் உருத்தி ரன்றன், மால், அயன் ஒன்றின் ஒன்றாய்ப்*
> *பவந்தரும்; அருவம் நால்; இங்கு உருவம் நால்; உபயம் ஒன்றாய்*
> *நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்.*
>
> *- சுபக்கம் - சூ. 2. 74*

*என்னும் சிவஞான சித்தியாலும் உணர்க. இச் செய்யுளில் பரநாத மூர்த்தியே 'சிவம்' என்றும், பரவிந்து சத்தியே 'சத்தி' என்றும் சொல்லப்பட்டனர். எனவே, 'நாதம், விந்து' எனப்பட்டவை அபர நாதமும், அபர விந்துவும் ஆயின. இம் மந்திரத்துள் 'பரநாதம்' என்றதனானே அபர நாதமும், 'பரவிந்து' என்றதனானே அபர விந்துவும் பெறவைக்கப்பட்டன. 'காணில்' என்பதை முதலில் வைத்து, 'ஓங்கி' என்பதை 'ஓங்க' எனத் திரித்து, 'ஈசன் அவன்பால் ஆய், அரி, பிரமன், அமர் ஆபதித்தேவாம் உருத்திரன் ஆம்' என இயைத்து முடிக்க. செய்யுள் பற்றி*

*இங்ஙனம் முறை பிறழவும், சொற் சுருங்கவும் ஓதினார். ஈசன் - மகேசுரன். 'ஆய்' என்பதனையும் 'ஆக' எனத் திரிக்க. 'மகேசுரன், சதா சிவன்பால் ஆவன்' என்ற குறிப்பானே, 'உருத்திரன் மகேசுரன்பால் ஆம்' என்பது பெறப்பட்டது. 'அரி, பிரமன்' என்பது செவ்வெண். அதன்பின் தொக்கு நின்ற 'இவ்விருவரும்' என்னும் எழுவாய் 'ஆபதி' என்பதில் ஆதலாகிய பயனிலையோடு முடிந்தன. 'அமர்' என்னும் முதனிலையே 'அமர்ந்து' என எச்சப்பொருள். அமர்ந்து ஆதலாவது, ஒடுங்கியிருந்து தோன்றுதல். 'ஆ பதி' ஏதுப் பொருட்டாய வினைத்தொகை. பதி - தலைவன். 'பதித் தேவாம் உருத்திரன்' என்பது, 'பதியாகிய தேவனாகிய உருத்திரன்' எனப் பல்பெயர் ஒட்டுப் பண்புத்தொகை. இந்திரனுக்கு இங்கு இடம் இன்மையால் 'அமராபதி' என்பதை இந்திரனது நகரமாகக் கொள்ளுதற்கு யாதும் இயைபில்லை. 'அமர்ந்தாபதி' என்றே பாடம் ஓதுதல் சிறக்கும்.*

*சிவனது இந்த ஒன்பது நிலைகளும் தடத்த நிலைகளேயாகும். இவை 'நவந்தரு பேதம்' - எனப்படுகின்றன. இவைகளை நாயனார் இங்குக் கூறியதற்குக் காரணம், 'முத்தி வகையாகிய பராவத்தையை அடைந்தோர் படிமுறையானே கீழ் இருந்து மேல் உள்ள இந்நிலைகளையெல்லாம் அடைவர்' என்பதும், 'அந்நிலையில் அவர்களும் இங்குக் கூறிய பெயர்களையெல்லாம் பெறுவர்' என்பதும் உணர்த்தற் பொருட்டாம். சிவனது நிலைகள் 'சம்பு பட்சம்' என்றும், பராவத்தையை எய்தினோரது நிலைகள் 'அணுபட்சம்' என்றும் சொல்லப்படும்.*

*மேற்காட்டிய சிவஞான சித்திச் செய்யுளில் கூறியபடி கீழ் உள்ளவை நான்கும் உருவம். மேல் உள்ளவை நான்கும் அருவம். இடையில் உள்ள ஒன்றும் அருவுருவம். அருவம் இலயம். அருவுருவம் யோகம். உருவம் அதிகாரம். இந்த மூன்றும் இறையவத்தைகளாகும். மேல் எல்லாம் கூறியன உயிர் அவத்தைகள். அருவம், 'நிட்களம்' என்றும், உருவம், 'சகளம்' என்றும், அருவுருவம் 'நிட்களசகளம்' அல்லது 'சகள நிட்களம்' என்றும் சொல்லப்படும். இறையவத்தை மூன்று பற்றிய முத்திகளே. 'அதிகார முத்தி, போக முத்தி, இலயமுத்தி' எனக் கூறப்படுகின்றன. இம்மூன்றும் 'அபரமுத்தி' என்றும் சொல்லப்படும். இவையெல்லாம் இம்மந்திரத்தின் வழிப் பெறப்படும். இதனானே இது, மேல், 'சிவமாம் பரத்தினில் சத்தி' (பா.106) என்றதற்குப்பின் 'கூறியது கூறல்' ஆகாமை உணர்க.*

*இதனால், 'பராவத்தை சாக்கிரம் முதலியவற்றால் ஐந்தாதலேயன்றிப் பிறவாற்றால் பலவாதலும் உண்டு' என்பது கூறப்பட்டது.*

***2253. தெளிவுரை :-** சிவன் தமது அறிவினுள் அறிவாய்க் கலந்திருத்தலையும், 'பூவுலகம் முழுதும் ஒரு காலத்தில் முற்றும் அழிந்தொழியும்' என்பதையும் அறியாதமடவோர், உடலோடு கலப்பினால் ஒன்றாய் இருக்கின்ற உயிர் பொருளால் வேறாதலை உணர்ந்து உடம்பையே தாமாகப் பற்றி நின்று, அதனால் இவ்வுலகத்திற்றானே அருளரசு ஆள மாட்டுவாரல்லர். அவர் அத்தகைய*

**2253.** கலப்பறி யார்கடல் சூழ்உல கேழும்
உலப்பறி யார்உடலோடுயிர் தன்னை
அறப்பறிந் திங்கர சாளகி லாதார்
குறிப்பது கோல கடலது வாமே. **18**

---

*நிலையை அடைய வேண்டின், அவர்கள் குறிக்கொளத் தக்கது சிவனது தடத்தத் திருமேனிகளை எழுதி வைக்கும் உள்ளமாகிய கிழியேயாம்.*

*குறிப்புரை :-*

*"உயிரா வணம் இருந்து உற்றுநோக்கி*
*உள்ளக் கிழியின் உருவெழுதி,*
*உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தால்*
*உணரப் படுவாரோடு ஒட்டி வாழ்தி......."*

*- தி.6 ப.25 பா.1*

*என அப்பரும் அருளிச் செய்தார். அவ்வருள்மொழியால், அஃது யோகப் பயிற்சியானே கூடும்' என்பது விளங்கும்.*

*'கடல் சூழ் உலகு ஏழு' ஆவன, நாவலம் பொழில் முதலிய ஏழு பொழில்கள். தாம் உள்ள இடத்து உள்ளவர்களை உள்ளத்துட் கொண்டே ஓதுகின்றார் ஆதலின், பூவுலகத்தின் நிலையாமையையே எடுத்துக் கூறினார். பூவுலகமும் ஏழ்கடலும் ஏழ்பொழிலுமாய் விரிந்து கிடத்தலின், 'இவை முழுதும் எஞ்சாது அழிந்தொழிதலும் உளதாகுமோ' என மயங்குவர் என்றற்கு "கடல் சூழ் உலகேழும் உலப்பறியாது" என்றார். பறிதல் - நீங்குதல். 'அலப்பறிந்து' என்பது பாடம் அன்று. 'அறப்பிரிந்து' என ஓதலும் ஆம். இதனுள் ஈரடி எதுகை வந்தது.*

*இதனால், 'பராவத்தை நிலையை அடைதற்கு அந்நிலையில் நிற்கும் சிவனைச் சகலாவத்தையிற்றானே பாவனை முறையால் வழிபடுதல் வழியாகும்' என்பது கூறப்பட்டது.*

*2254.* ***தெளிவுரை :-*** *சிறு தவங்களையெல்லாம் செய்து அலுத்துவிட்ட பின்பு, நல்லறிவு பிறந்து செய்கின்ற பெருந்தவத்தின் வழியாக உயிர்களைப் பராவத்தையில் சேர்க்கின்ற தனது இயல்பை ஒருவன் அறிந்து தன்னை அடைய விரும்பினால் எங்கள் இறைவனாகிய சிவன் உடனே அவன் முன் தோன்றுவான். ஏனெனில் அவன் பெருங்கருணையாளன். அம்முறையில் யான் எனது பழைய சிற்றறிவு முடியும் காலத்தையும் அறிந்தேன். அதனால் சிவனது பேரறிவாலே என்னையும் அறிந்தேன். யான் இது பொழுது இன்புற்றிருக்குமாறு இவ்வாறாம்.*

***குறிப்புரை :-*** *பெருந்தவம், சரியை கிரியா யோகங்கள், இவற்றை பின்னையறிவனவாகக் கூறினமையால், முன்பு சிறு தவங்களைச் செய்தமை விளங்கிற்று. அவை உலகப் பயன்களை விரும்பிச் செய்தனவாகும். அப்பயன்கள்*

**2254.** பின்னை யறியும் பெருந்தவத் துண்மைசெய்
தன்னை யறியின் தயாபரன் எம்மிறை
முன்னை யறிவு முடிகின்ற ஞானமும்
என்னை யறியலுற் றின்புற்ற வாறே. **19**

**2255.** பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னில் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தன தன்கர ணங்கள்தாம்
தன்னில் மறைந்தன தன்கர ணங்களே. **20**

---

*யாவும் சில காலமேயிருந்து அழிந்தொழிதலை உணர்ந்தமையால், அவற்றைத் தரும் தவங்களைச் செய்வதில் அலுப்பு உண்டாயிற்று. முன்மந்திரத்தில் சொல்லியபடி இப்பெருந்தவத்தால் சிவன் உயிர்களைப் பராவத்தையில் சேர்த்தல் பெறப்பட்டது. மோனை நயம் கெடுதலையும் நோக்காது, 'உண்மை செய்து அன்னை அறியின்' எனப் பிரித்து, 'சத்தி நிபாதம் வாய்க்கின்' எனப் பொருள் உரைப்பார்க்கு சத்தி நிபாதத்தின் பின்னர் நிகழ்வதாகிய பெருந்தவம் சத்தி நிபாதத்திற்கு முன் நிகழ்வதாய் முடிதலை நோக்குக. சிற்றறிவு - ஏக தேச ஞானம்; அஃதாவது சில பொருள்களையே அறிதல். அது முடியுங் காலம், அவ்வாறு அறிந்து வருதலில் உவர்ப்புத் தோன்றும் காலம். 'தன்னாலே தந்தால் தன்னையும் தானே காணும்' என்பவாகலின், 'என்னையறியலுற்று' என்றது சிவஞானத்தினால் ஆயிற்று. இவ்வாற்றால் பராவத்தையைத் தலைப்பட்டமையால் இன்புற்றிருக்க இயன்றது.*

*இதனால், முன் மந்திரத்தில், "குறிப்பது கோல மடலது வாமே" எனக் கூறிய அந்நெறியிலே நின்றவழி, முறையாக விளையும் பயன்களின் முடிநிலைப் பயனாகப் பராவத்தையும் அதன்கண் பரானந்தமும் உண்டாதல் கூறப்பட்டது.*

*2255. தெளிவுரை :- பொன்னால் செய்யப்பட்ட அழகிய அணிகலன்கள் தம்மிடத்துப் பொன் உள்ளதாயினும் அதனை உணரச் செய்யாது மறைத்துத் தமது அழகினையே உணரப் பண்ணி மக்களை மயக்குகின்றது. ஆயினும், அந்த அணிகலன்களின் செயற்கை நலன்களை அழித்துவிட்டால், அணிகலனாய் இருந்த பொருள்கள் அழியாதிருப்பினும் அவை பொன்னாகிவிட்டு அதனுள்ளே மறைந்துவிடும். அவைபோல, சார்ந்ததன் வண்ணம் ஆகின்ற ஆன்மாவைப் பெத்த காலத்தில் அதனுடைய தனு கரணங்கள் தம் வயப்படுத்தித் தம்மயம் ஆகச் செய்து, ஆன்மாத் தன்னைத் தான் அறியாதபடி மறைத்து, அதனைத் தாமென்றே மயங்கச் செய்துவிடுகின்றன. ஆயினும், ஆன்மாக் குருவருளால் ஞானத்தைப் பெற்ற முத்தி காலத்தில் உண்மை ஞானம் பொது ஞானத்தை அழித்துவிடுதலால், ஆன்மாவில் வியாப்பியமாய்த் தமக்கெனச் சுதந்திரமின்றி ஆன்மாவின் வழியே*

**2256.** மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தன பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தன பார்முதல் பூதமே. **21**

**2257.** ஆறா றகன்று நமவிட் டறிவாகி
வேறான தானே யகாரமாய் மிக்கோங்கி
ஈறார் பரையின் இருளற்ற தற்பரன்
பேறார் சிவாய அடங்கும் பின் முத்தியே. **22**

---

*செயற்படுகின்ற தனு கரணங்கள் தாம் அழிந்தொழியாது அவ்வான்மாவின் வயப்பட்டு முன்போல மருள்வழியில் இயங்காமல், ஆன்மாவைப் போலவே அருள் வழியில் இயங்கும்.*

*குறிப்புரை :-* இவையிரண்டிற்கும் காரணம், ஆன்மாவின் அபக்குவமும், பக்குவமுமேயாகும். 'ஆன்மா அபக்குவ காலத்தில் மாயை கன்மங்களின் வழிப்பட்டுச் சகலாவத்தையையும், பக்குவ காலத்தில் அதனின் நீங்கி நின்மலா வத்தையையும், வீடுபெறும் காலத்தில் பராவத்தையையும் அடையும்' என்பது இதனால் ஆன்மாவின் மேல்வைத்துக் கூறப்பட்டது. இஃது எடுத்துக் காட்டுவமை.

*2256. தெளிவுரை :-* மரத்தால் செய்யப்பட்ட பெரிய மதயானை உருவம் சிற்பியின் கைவண்ணத்தால் மரத்தை உணர ஒட்டாமல் மறைத்து, மக்களை மயக்குகின்றது. ஆயினும் சிற்பியினது வேலைப்பாடுகளை அழித்து விட்டால், அந்த மத யானையாய் இருந்த பொருள் அழியாதிருப்பினும் மரத்தினுள்ளே மறைந்துவிடும். அது போல, பரம்பொருளால் இயங்குகின்ற உலகம், ஆன்மாவின் பெத்த காலத்தில் தானே சுதந்திரமாய் இயங்குவனவாய் அதற்குக் காட்சியளிக்கும். ஆயினும் குருவருளால் ஞானத்தைப் பெற்ற முத்தி காலத்தில் உண்மை ஞானம் பொது ஞானத்தை அழித்துவிடுவதால், உலகம் சுதந்திரம் அற்றொழியப் பரம் பொருளின் இயக்குதலே விளங்கி நிற்கும்.

*குறிப்புரை :-* இவற்றிற்கும் காரணமும், மேற்கூறிய அபக்குவ பக்குவங்களே என்பது வெளிப்படை. இதனால், மேற்கூறிய அந்தப் பொருளே பரம்பொருளின் மேல் வைத்துக் கூறப்பட்டது. இதுவும் அவ்வுவமை.

*2257. தெளிவுரை :-* பெத்தம், முத்தி இரண்டும் சிவன் செயலேயாகலின் அது பற்றி அவையிரண்டும் முறையே, 'ஊனநடனம், ஞானநடனம்' எனப்படும். ஊன நடனத்தில் சிவனது சத்தி திரோதான சத்தியாயும், ஞான நடனத்தில் சிவனது சத்தி அருட்சத்தியாயும் செயற்படும். சிவசத்தி; பொருளால் ஒன்றேயாயினும், செயல் பற்றி இவ்வாறு இரண்டாக வகுத்து விளக்கப்

*படுகின்றது. திரோதான சத்தி மறைத்தலையும், அருட் சத்தி அருளலையும் செய்யும்.*

*உமாபதி தேவர், திருவைந்தெழுத்தை 'நமசிவாய' எனத் தூலமாகக் கொண்டாலும், 'சிவாயநம' எனச் சூக்குமமாகக் கொண்டாலும்,*

*ஊன நடனம் ஒருபால்; ஒருபால் ஆம்*
*ஞானநடம்; தான்நடுவே நாடு.* ***- திருவருட்பயன், 83***

*என அருளிச் செய்தார். தான் - சீவன்; அல்லது ஆன்மா. 'அது நடுவே உள்ளது' எனக் கூறப்பட்டமையால், யகாரம் பசு வெழுத்தாயிற்று.*

*'உண்மை விளக்க' நூல் - திருவைந்தெழுத்தை, 'சிவாயநம' எனச் சூக்குமமாக எடுத்துக் கொண்டு,*

*"சிவன், அருள், ஆவி, திரோதம், மலம் ஐந்தும்*
*அவன் எழுத்து ஐந்தின் அடைவாம்"* ***- வெண்பா, 41***

*எனக் கூறிற்று. ஆகவே, 'சிகாரம் சிவன்; வகாரம் அருட்சத்தி, யகாரம் ஆன்மா, நகாரம் திரோதான சத்தி, மகாரம் ஆணவ மலம்' என்றதாயிற்று. மாயை கன்மங்கள் ஆணவ மலம் போல உயிருக்கு இயற்கையாகாது, திரோதான சத்தியாலே செயற்கையாகக் கூட்டப்பட்டு, ஆணவ மலத்தின் பரிபாகத்திற்குத் தக்கவாறு அந்தத் திரோதான சத்தியாலே செயற்படுத்தப்படுவதால், அவை வேறு நில்லாது, திரோதான சத்தியுள் அடங்குகின்றன. 'மாதவச் சிவஞான யோகி கட்கும் இதுவே கருத்து' என்பது அவரது உரைகளால் விளங்கும்.*

*உமாபதி தேவரும்; ஆன்மாவை நடுவாக வைத்து, "திருவெழுத் தஞ்சில் ஆன்மாத், திரோதம், மாசு, அருள், சிவம்" (சிவப்பிரகாசம் - 91) என முதலில் முன் உள்ள எழுத்து பாச எழுத்து இரண்டையும், பின்பு பின் உள்ள பதியெழுத்து இரண்டையும் குறித்தார். 'முன், பின்' என்பவற்றைக் காலம் பற்றிக் கொள்ளாது. இடம் பற்றிக் கொள்க. இவற்றால், 'ந, ம' என்பன பாச எழுத்துக் களும், 'சி, வ' என்பன பதி எழுத்துக்களும் ஆயின. எனவே, முப்பொருள்களும் அஞ்செழுத்தில் அடங்குதலாலும், "பலகலை ஆகமம், வேதம் யாவையினும் கருத்துப் பதி, பசு, பாசம் தெரித்தலே" யாகலானும்,*

*"அஞ்செழுத்தே ஆகமமும், அண்ணல் அருமறையும்*
*அஞ்செழுத்தே ஆதிபுரா ணம்அனைத்தும்"* ***- வெண்பா - 44***

*என உண்மை விளக்கத்திலும்,*

*அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் அஞ்சின்*
*பொருள்நூல் தெரியப் புகின்.* ***- திருவருட்பயன், 81***

*எனத் திருவருட் பயனிலும் கூறப்பட்டன.*

*இவற்றால், 'நகார மகாரங்கள் ஊன நடனம்' என்பதும், 'சிகாரவகாரங்கள் ஞான நடனம்' என்பதும் விளங்கும்.*

*கீழாலவத்தை மத்தியாலவத்தை, மேலால் அவத்தைகளில் நிற்போர் தத்துவங்களின் நீங்காமையால் அவர்களின் பற்றுக்களை விட விரும்பாதவர் அஞ்செழுத்து மந்திரத்தைத் தூலமாக வைத்தும், பற்றுக்களை விட விரும்பினோர் அதனைச் சூக்குமமாக வைத்தும் கணித்தற்கு உரியர். அவற்றின் பயனாக ஞான குருவின் உபதேசத்தைப் பெற்றுப் பற்றுக்களை விட்டொழிக்க முயல்கின்றவர்கள் தத்துவங்களாகிய பாசங்கள் நீங்குதற்பொருட்டு அஞ்செழுத்துக்களில் பாச எழுத்துக்கள் இரண்டையும் நீக்கி, மற்றை மூன்றெழுத்தை மட்டுமே கணித்தற்கு உரியர். இதனை, 'அதிசூக்கும பஞ்சாக்கரம்' என்பர். இந்நிலையில் பிரணவத்தைச் சேர்த்தல் கூடாது. பிரணவம் இன்றிச் சிகாரம் முதலிய மூன்றெழுத்துக்களைத் திரும்பத் திரும்பக் கணிக்குங்கால், யகாரம் வகாரத்திற்கும், சிகாரத்திற்கும் இடைப்பட்டதாகிவிடும். ஆகவே, ஆன்மாவை எவ்வகையிலும் பாசங்கள் பற்றுதற்கு வழியில்லை, யகாரத்தைத் தொடர்ந்து சிகார வகாரங்கள் வர, பின்பு வகரத்தைத் தொடர்ந்து யகாரம் வருதலால், "அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால்" (தி.8 கோயில் மூத்த திருப்பதிகம் - 1) என்னும் திருவாசகத்தொடர் இதனையே குறிப்பதாகக் கூறுவர்.*

*சிவஞான போத ஒன்பதாம் சூத்திரத்தில் மெய்கண்ட தேவர்;*

> *"ஊராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்*
> *தண்ணிழலாம் பதி"*

*எனக் கூறி, அதனையடுத்து "எண்ணும் அஞ்செழுத்தே" எனக் கூறியவர், அதனை வாளா கூறாது, 'விதி' எண்ணும் அஞ்செழுத்தே, எனக் கூறியருளினார். வார்த்திகத்திலும்,*

> *"இவ்விடத்துச் சீபஞ்சாக்கரத்தை*
> *விதிப்படி யுச்சரிக்க"*

*என்றார். 'பாசம்ஒருவ' என முன்னே கூறினமையால், 'விதிப்படி' என்றது, 'பாச எழுத்துக்களை நீக்கிப் பிரணவமும் இல்லாமல் உச்சரித்தல் வேண்டும்' என்றதேயாகின்றது. வெளிப்படையாகவே அந்த மூன்றெழுத்து மந்திரத்தை அவர் எடுத்துக் கூறாமைக்குக் காரணம், 'அவ்வாறு கூறுதல் மரபன்று' என்பதும், இன்னோரன்னவை யெல்லாம் குருமுகமாகவே அறிதற்குரியன' என்பதுமேயாம். ஆயினும், காலப்போக்கில் அவரது பொருளை உணர்ந்து பயன் பெறுபவர்கள் அருகி மாறுபட்ட கருத்துக்கள் மலிந்து வருதலால், இவ்விடத்து எடுத்துக் காட்ட வேண்டி வருகின்றது. இதுபற்றியே மாதவச் சிவஞான யோகிகள்;*

> *"இங்ஙனம் ஆசிரியர் மாட்டெறிந்ததூஉம்*

> *உணராதார்................. சித்தாந்த வழக்கொடு*
> *முரணிக் கூறுவர்"* - *மாபாடியம் சூ. 9. அதி. 3*

*எனக் கூறினார்.*

*பஞ்சாக்கரத்தைத் தூலமாகக் கணித்தலை விடுத்துச் சூக்குமமாகக் கொண்டு கணிப்பினும் யகாரம் வகாரத்திற்கும், நகாரத்திற்கும் இடைப்பட்டே நிற்றலால் பாசம் நீங்காதது பற்றி,*

> *ஆசில் நவா நாப்பண் அடையாது, அருளினால்*
> *வாசி யிடை நிற்கை வழக்கு.* - *திருவருட்பயன், 89*

*என்றார் உமாபதிதேவர். அஞ்செழுத்தில் பாச எழுத்துக்களை நீக்கி உச்சரிக்கின், யகாரம்; வகாரத்திற்கும் சிகாரத்திற்கும் இடைப்பட்டு நிற்றலை மேற்கூறியவாற்றால் அறிக. இதனையறியாதார், 'சிவாய சிவ' என்பதை ஓர் உருவாக வைத்துப் பல உருக்கள் கணிக்க வேண்டும் என்பர். அவ்வாறு கணிப்பின், சில உருக்களில் 'சிவா' என்பது 'வசி' என இயைந்து அவ்வுருக்குள் வாசியிடை நிற்றலாகிய சாதகத்தைப் பயவாமை உணர்க.*

*சிவஞானபோத ஒன்பதாம் சூத்திரத்தில் சொல்லப்பட்ட சகலத்தில் சுத்த சுழுத்தியில் சிகாரம் முதலிய மூன்றெழுதுக்களையே உச்சரித்தல் வேண்டும் எனக் கூறினமையால், 'பத்தாம் சூத்திரத்தில் சொல்லப்பட்ட 'அவனே தானே ஆகிய, அந்நெறி - ஏகனாகி' ஆன்மாத் தன்னை யிழந்து நிற்பதாகிய சகலத்தில் சுத்த சுழுத்தியில் யகாரத்தையும் நீக்கி, 'சிவ' என இரண்டெழுத்தாக உச்சரித்தல் வேண்டும் என்பது போந்தது. 'இது காரண பஞ்சாக்கரம்' எனப்படும். இதனை நாயனார் அடுத்து வரும் தந்திரத்தில் "சிவ சிவ என்றே தெளிகிலர் ஊமர்", "சிவ சிவ என்கிலர் தீவினை யாளர்" என்பன முதலாக அருளிச் செய்வார்.*

*இங்ஙனமாகவே, சிவஞானபோதப் பதினொன்றாம் சூத்திரத்தில் அரன் கழலின்கீழ் ஆன்மா ஆனந்தத்தில் மூழ்குதலாகிய சகலத்தில் சுத்த துரியாதீதத்தில் அருள் எழுத்தாகிய வகாரமும் நீங்க. சிகாரம் ஒன்றுமே அசபா நலமாய் நிற்கும் என்பதும் பெறப்படும். இந்த ஓரெழுத்து மந்திரத்தை நாயனார் 'நாயோட்டு மந்திரம்' என மறைபொருட்கூற்றாக ஓதினார். அந்தமந்திரத்தை மிகையானதாகப் பிற்காலத்தார் கருதிவிட்டனர். நாயின் தன்மை குரைப்பது. நாயின் தன்மையையே, 'நாய்' என்றார். 'குரைத்தலை ஓட்டுவது' என்றது, 'பேச்சை ஒழித்து மௌனத்தை உண்டாக்குவது' என்றதாம். தருமை ஆதீன ஆதி பரமாசாரியராகிய குருஞான சம்பந்தரும்;*

> *கற்க இடர்ப்பட்டுமிகக் கற்றஎலாம் கற்றவர்பால்*
> *தற்கமிட்டு நாய்போலச் சள்ளௌனவோ.*
> - *சிவபோகசாரம், 128*

*என, ஞான நெறியில் நில்லாது பேசும் பேச்சுக்களுக்கு நாயின் குரைப்பை உவமை*

*கூறினார். 'பேசா அனுபூதி' (கந்தர் அநுபூதி, 43) 'மோனம் என்பது ஞானவரம்பு' (கொன்றை வேந்தன்) என்பன போன்றவற்றை நோக்குக. இந்த ஓரெழுத்து மந்திரம், 'மகாகாரண பஞ்சாக்கரம்' - எனப்படும். மந்திர நூல் வழக்கில், ஓர் எழுத்தான் ஆயதே சிறப்பாக 'மந்திரம்' எனப்படும். அந்த மந்திரத்தை நாயனார் தமது மந்திர மாலையில் கூறாது போவாரோ!*

*ஐந்தெழுத்தாய் இருந்த மந்திரம் பின்பு மூன்றெழுத்தாய்ப் பின்பு இரண்டெழுத்தாய், இறுதியில் ஓரெழுத்தே ஆகிவிடுகின்றது. இது,*

> *சென்றுசென் றணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றாம்*
> *திருப்பெருந் துறையுறை சிவனே.*
>
> *- தி.8 கோயில் திருப்பதிகம், 7*

*என அருளிச் செய்த அநுபவத்திற்கு ஒத்துள்ளது. இதனை உமாபதி தேவர்,*

> *பதிபசு பாச முதிர்அறி வுகளுடன்*
> *ஆறா முன்னர்க் கூறாப், பின்னர்*
> *இருபொருள் நீத்துமற் றொருநால் வகையையும்,*
> *ஈனமில் ஞாதுரு ஞானம் ஞேயம் என்று*
> *இசைய மூன்றாய்ப் பசு பதி என்றவற்று*
> *இரண்டாய், இரண்டும் ஒன்றின்ஒன் றாகத்*
> *திரண்டாம் பயனெனும் திருவருள் தெளியில்*
> *சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம்*
> *என்றிவற் றியற்கை இயம்புதல் தகுமே"*
>
> *- சங்கற்ப நிராகரணம், சைவவாதி நிராகரணம், 55-63*

*எனக் கூறினார். இங்ஙனம் கூறிய இதனையே சிவஞான யோகிகள் பரம சித்தாந்தத்தை ஓதியதாக உரைத்தார் (மாபாடியம், சூ. 10, அதி. 1).*

*தச காரியங்களில் முதல் மூன்றின் முடிவில் உள்ள தத்துவ சுத்தி எய்திய பொழுது அது நிலைபெறுதற் பொருட்டுத் திருவைந்தெழுத்தில் பாச எழுத்தாகிய நமக்களை நீக்கி - மூன்றெழுத்தாகக் கணித்து, அதனாலே முன்பு தத்துவங்களாகிய சடத்தோடு கூடிச் சடமாய் இருந்த நிலை நீங்கிச் சித்தாகிய ஆன்மாத் தானேயாகி யகாரத்தோடே நின்று, (அஃதாவது நமக்களோடு சேராது நின்று - ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம் இரண்டும் இவ்விடத்தே நிகழ்ந்துவிடும். இவையெல்லாம் சகலத்தில் சுத்த சாக்கரம் சுத்த சொப்பன சுத்த சுழுத்திகளாய்விடும்). பாசங்களினின்று மிக மேன்மையுற்றுப் பின் இறுதியில் உள்ள அருட் சத்தி வழியாக (இது சகலத்தில் சுத்த துரியம்), இயல்பாகவே பாசம் அற்று இருக்கின்ற சிவனைப் பெறும்பேற்றை அடை (இது சகலத்தில் சுத்த துரியாதீதம்). அப்பொழுது முன்பு இருந்த யகாரம் வகாரத்திலே அடங்கும்.*

*பின்பு வகாரமும் சிகாரத்திலே அடங்கிவிடும். அதன் பிறகு உனக்குக் கிடைப்பது பரானந்தந்தான். (இதற்குமேல்) அடையத்தக்கது எதுவும் இல்லை என்பதாம்.*

***குறிப்புரை :–*** *இதனைக் கீழ்க்காணும் பிற்காலத்துப் பட்டினத்து அடிகளது பாட்டு ஒன்று மிக நயம்பட தெரிவிக்கின்றது.*

*மாயநட் டோரையும், மாயா மலமெனும் மாதரையும்*
*வீயவிட் டோட்டிவெளியே புறப்பட்டு மெய்யருளாம்*
*தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப்பின் தாயை மறந்(து)*
*ஏயும் அதே நிட்டை யென்றான் எழிற்கச்சி ஏகம்பனே.*

*நட்டோர் - நண்பர். திரோதான சத்தியும், அதனால் கூட்டிச் செயற்படுத்தப் படுகின்ற மாயை கன்மங்களும். இவை நகாரத்தால் குறிக்கப்படுகின்றன.*

*மாயா - என்றுமே அழியாது நிற்கின்ற, மலம் - ஆணவம். ஆணவத்தை ஒரு பெண்ணாகக் கூறும் வழக்கு உண்மையை,*

*பலரைப் புணர்ந்தும்இருட் பாவைக்குண் டென்றும்*
*கணவற்கும் தோன்றாத கற்பு.* ***- திருவருட்பயன், 25***

*என்னும் திருவருட் பயனாலும் அறிக. இம்மலம் மகாரத்தால் குறிக்கப்படுகின்றது.*

*வீயவிட்டு ஓட்டுதல், நகார மகாரங்களை நீக்குதல். மெய்யருளாம்தாய் வகாரம். அதனோடு கூடுதலாவது, முன்புபோல நகார மகாரங்களோடு கூடாது, வகாரத்தோடே இணைந்து நிற்றல்.*

*தாயுடன் செல்லுதல் யகாரத்தையும் நீக்கி, இரண்டெழுத்தாகக் கணித்தல்.*

*தாதையைக் கூடிப் பின்தாயை மறந்துவிடுதல், வகாரத்தையும் நீக்கிச் சிகாரத்தோடு மட்டும் இருந்துவிடுதல்.*

*'தானே' என்பது முன்னிலைக்கண் படர்க்கை வந்த இட வழுவமைதி. ஈறு ஆர் பரை - இறுதியில் உள்ள அருட்சத்தி, பரையின் - பரையினால், தற்பரன் பேறு - தற்பரனைப் பெறும் பேறு. நிலை மொழியின் ஈறுதிரியாமை சிறுபான்மை பொதுவிதியானே கொள்ளப்படும். பேறு ஆர், 'பேற்றினைப் பொருந்து' என முன்னிலை ஏவல். 'சிவாய அடங்கும்' 'சிய்யில் வவ்வும் யவ்வும் அடங்கும்' எனக் கொள்க. 'முத்தி' என்றது ஆனந்த நிலையை. ஏகாரம் தேற்றம்.*

*இவையெல்லாம் நின்மலாவத்தைக்கண் நிகழ்வனவேயாயினும், 'பராவத்தையிலும் அதீதம் ஒழிந்த ஏனை நான்கிலும் சூக்குமமாய் நிகழும்' என்பது உணர்த்துதற்கு இங்கு இதனைக் கூறினார்.*

*இதனால், 'அஞ்செழுத்தின்புணை' எல்லா அவத்தைகளிலும் ஏற்ற பெற்றியால் பிறவிக் கடலைக் கடத்துதல் கூறப்பட்டது.*

**2258.** துரியத்தில் ஓரைந்தும் சொல்அகா ராதி
விரியப் பரையின் மிகுநாதம் மந்தம்
புரியப் பரையின் பராவத்தா போதம்
திரியப் பரமாமாம் துரியம் துரியமே. **23**

---

***2258. தெளிவுரை :-*** *சகலத்திற் சுத்தமாகிய நின்மலாவத்தை ஐந்திலும் வாக்குக்கண் அகாரம் முதலிய ஐந்து அக்கரங்களாய், (அ, உ, ம, விந்து, நாதம் - என்பனவாய்) தூலமாய் நிகழும் (எனவே, அவ்விடத்து உலக வாசனை இருக்கவே செய்யும் என்பதாம்). நின்மலா வத்தைக்கு மேலான உண்மைச் சுத்தாவத்தையில் அவ்வாக்குக்கள் சூக்குமமாய் நிகழும் (அதனால், உலக வாசனை தோன்றாவிடினும், 'யான்' எனது என்னும் உணர்வினால் ஞாதுரு ஞான ஞேய வேற்றுமை நிகழவே செய்யும்). அந்த வேற்றுமையும் அறுவது பர துரியத்திலாம் (அவ்விடத்தில் ஆன்மா அருள்மயமாய் நிற்கும்). அதன் பின்பு மேலானதாய் அதீதம் தோன்றும் (அதில் ஆன்மா ஆனந்தமயமாய் இருக்கும்).*

***குறிப்புரை :-*** *துரியமாகிய மேனிலையை உணர்த்துதல் நுதலிற்று. துரிய நிலையில் சாக்கிராதி ஐந்தும் தெரிவாயாக. சொல்லுலகில் முதலாகிய அகார முதலான ஐம்பத்தொரு எழுத்துக்களும் தோன்றக் காரணமான நாதம் பரையாகிய சுத்த மாயையினின்று தோன்றும். தோன்றிய முறையே அந்தம் எய்தப் பரையின் பராஅவத்தைக் காட்சியும், அகல பரமமாகிய சிவம் தோன்றும். இதுவே பரமமாகிய துரிய துரியாதீதமாம் என்றவாறு.*

*துரியத்தின் நிகழும் ஐந்தவத்தைகளுள் துரிய துரியாதீதம் சிவம் ஒன்றே பிரகாசிக்கும் நிலையென்பதாம்.*

*துரியத்தில் ஓரைந்தும் - துரிய சாக்கிரம், துரிய சொப்பனம், துரிய சுழுத்தி, துரிய துரியம், துரிய துரியாதீதம் என்பன.*

*அவற்றுள் துரிய சாக்கிரமாவது; சிறிது அறிவு விளக்கத்தைத்தரும். கலைஞானத்திற்கு முதலான அகாராதி க்ஷகாராந்தமான 51 எழுத்துக்களும் சொற்களும் விரியப் பெறுதலாம்.*

*துரிய சொப்பனமாவது; அச்சொற் பிரபஞ்சம் நாதத்தில் தோற்றமும் ஒடுக்கமும் உடையதென உணர்தலாம்.*

*துரிய சுழுத்தியாவது; அந்நாதமும் பரையாகிய சுத்த மாயையினின்று விரிதலும் ஒடுங்குதலும் உடையதெனக் காண்டலாம். இதனையே நாதம் அந்தம் புரிய எனக் குறித்தனர் ஆசிரியர் என்க.*

*துரிய துரியமாவது; பரையாகிய சுத்தமாயை விமலனுக்கோர் பரிக்கிரக சத்தியாக இருத்தலை உணர்தல். இதனையே பராவத்தா போதம் என்றார் ஆசிரியர்.*

**2259.** ஐந்தும் சகலத்து அருளால் புரிவுற்றுப்
பந்திடும் சுத்த அவத்தைப் பதைப்பினில்
நந்தி பராவத்தை நாடச் சுடர்முனம்
அந்தி யிருள்போல ஐம்மலம் மாறுமே. **24**

---

*துரிய துரியாதீதமாவது; முற்கூறிய பராவத்தா போதமுங்கெட, அதாவது பரிக்கிரக சத்தியான சுத்த மாயையும் விமலனுள் ஒடுங்கப் பரமாகிய சிவம் மட்டும் உணரப்படும் அவதரம்.*

***2259. தெளிவுரை :-*** *சாக்கிரம் முதலிய ஐந்தவத்தைகளையும், சகலத்தில் மாயா கருவிகளால் அடையாது, திருவருளால் அடைந்து, (எனவே, 'மேலா வத்தையையும் கடந்து நின்மலாவத்தையை அடைந்து' என்றதாம்) சகலத்திற் சுத்தமாகிய அந்த அவத்தைகளில் மேலே பாய்ந்தும், கீழே வீழ்ந்தும் பந்துபோல அலைகின்ற அலைவினால் அவ்வலைவு நீங்கப் பெறுகின்ற உண்மைச் சுத்தமாகிய பராவத்தையில் நாட்டம் உண்டாகுமானால், அந்த நாட்டத்தின் முன் ஐந்து மலங்களும் அந்திக் காலத்தில் விளக்கின்முன் இருள் நில்லாது நீங்குதல் போல நில்லாது நீங்கும்.*

***குறிப்புரை :-*** *'சகலத்து' எனவும், 'அருளால்' எனவும் கூறியவற்றால், புரியப்படுவன நின்மலாவத்தைகளாயின. தானே நிகழ்வனவற்றை ஆன்மா நிகழ்வித்துக் கொள்வதுபோல வைத்து, 'புரிவுற்று' என்றார். பந்து இடும் - பந்தினை வீசுவது போல நிகழும். நந்தி - சிவன்.*

*இதனால், 'ஆன்மா நின்மலாவத்தையையும் கடந்து, பராவத்தையை எய்திய பொழுதே உண்மையில் தூயதாம்' என்பது கூறப்பட்டது.*

***2260. தெளிவுரை :-*** *'இருபத்தைந்து' எனத் தொகை பெற்று நிற்கின்ற தத்துவங்களாய் உள்ள மூலப் பிரகிருதியின் இயல்பையும், 'மாயேயம்' எனப்படுகின்ற வித்தியா தத்துவங்களாய் உள்ள அசுத்தமாயையின் இயல்பையும் சாதகன் உள்ளவாறு உணர்ந்து தத்துவஞானியாய், எல்லாப் பொருளிலும் கலப்பினால் ஒன்றாகியும், பொருள் தன்மையால் வேறாகியும் நிற்கின்ற சிவமாகிப் பிறவியினின்றும் நீங்கி நிற்கும் பராவத்தையை அடைதலே உண்மைச் சுத்தாவத்தையாகும்.*

***குறிப்புரை :-*** *'பொய்கண்ட' என்பது தாப்பிசையாய் 'ஐயைந்து' என்றதனோடும் சென்றியைந்தது. பொய்கண்ட - நிலையாமை நன்கு உணரப்பட்ட. இங்கும் 'மாயேயம்' என்பது, 'மாமாயை' எனப் பாடம் திரிக்கப்பட்டுள்ளது. 'மாயையாம் மாயேயம்' என்றாராயினும், 'மாயேயமாம் மாயை' என மாறிக் கூட்டுக. தான், அசை, எய்தல் - அறிதல், படி - வகை. இஃது ஆகுபெயராய், 'படியன்' எனப் பொருள் தந்தது. 'சிவமாந் தன்மையைப் பெற்ற ஆன்மாவும் சிவம்போலவே வியாபகமாய் நிற்கும்' என்பார். 'எவற்றுமாய்*

**2260.** ஐயைந்து மட்டுப் பகுதியும் மாயையாம்
பொய்கண்ட மாயேயந் தானும் புருடன்கண்டு
எய்யும் படியாய் எவற்றுமாய் அன்றாகி
உய்யும் பராவத்தை யுள்உறல் சுத்தமே. **25**

**2261.** நின்றான் அருளும் பரமும்முந் நேயமும்
ஒன்றாய் மருவும் உருவும் உபாதியும்
சென்றான் எனைவிடுத் தூங்கிற்செல் லாமையும்
நன்றான ஞானத்தின் நாதப் பிரானே. **26**

---

*அன்றாகி' என்றார். "எவற்றுமாய்" என்றது, 'எவற்றிலும் அவையேயாய்' என்றபடி.*

*இதனால், பராவத்தையை எய்துமாறும், 'பராவத்தையே பிறவாநிலை' என்பதும், 'அஃதே உண்மைச் சுத்தாவத்தை' என்பதும் கூறப்பட்டன.*

*2261.* ***தெளிவுரை :-*** *பரம்பொருளை அறிய அவாவிநிற்கின்ற சுத்தான்மாவும், அதற்கு அதனை அறிதற்குத் துணைபுரிந்து அதன் அறிவுக்கு அறிவாய் நிற்கின்ற திருவருளும், அவ்வருளின் துணையால் அந்த ஆன்மாவால் அறியப்படுகின்ற பரம் பொருளும் ஆகிய மூன்று உயர் பொருள்களும், ஆன்மாவினிடத்து மூவகை உடம்புகளாய் நிற்கின்ற தத்துவங்களும், அவற்றைச் செலுத்துகின்ற திரோதான சத்தியும் நீங்கினவிடத்து ஒன்றாய்ப் பொருந்திவிடும். அஃதன்றியும், சிவன் பின்னர் அந்த ஆன்மாவைவிட்டுப் பிரியாத நிலைமையும் உண்டாகும்.*

***குறிப்புரை :-*** *'நின்றான்' என்பதிலும் எண்ணும்மை விரிக்க 'முன்னேயமும்' என்பது பாடம் அன்று. நேயம் - அன்பு; விருப்பம், விருப்பத்திற்குரிய பொருளை 'விருப்பம்' என்றார். முந்நேயம் - திரிபுடி. அவை 'ஞாதுரு, ஞானம், ஞேயம்' என்பன. இவை மூன்றும் வேறு வேறாய்த் தோன்றுங்காறும் 'அனுபவம்' என்பது இல்லையாம். சிவத்தை உணர்தல் சிவஞானத்தாலன்றிக் கூடாமையால், பிற மதத்தினர் என்ன கூறினாலும் சித்தாந்தம் 'ஞானம்' என்பது* ***சிவஞானத்தையே. அது திருவருளேயாதல் அறிக.*** *உபாதிகளைச் செலுத்துதல் பற்றித் திரோதான சத்தியும், 'உபாதி' என உபசரித்துக் கூறப்படும். 'சென்ற' என்னும் பெயரெச்சத்து அகரம் தொகுத்தலாயிற்று. சென்ற ஆன் - நீங்கிய அவ்விடத்து. எங்கு - வேறிடம். 'செல்லாமையும்' என்னும் உம்மை இறந்தது தழுவிய எச்சம். இதன் பின்னும் 'மருவும்' என்பதனைக் கூட்டுக. 'உருவும், உபாதியும் சென்ற ஆன், நின்றானும்..... ஒன்றாய் மருவும்; நன்றான ஞானத்தின் நாதப் பிரான் (ஞானத்தின் நாதன் - திருவருளுக்குத் தலைவன்) எனை விடுத்து ஊங்கிற் செல்லாமையும் மருவும்' எனக் கூட்டி முடிக்க 'ஊங்கிற் செல்லாமை' என்பதை, 'எங்கெழுந்தருளுவது இனியே' (தி.8 பிடித்த பத்து) என்பது போலக் கொள்க.*

*இதனால், பராவத்தை எய்துமாறும், அதன்கண் நிகழும் அநுபவமும் கூறும் முகத்தால் அதனது மேன்மை எடுத்தோதி முடிக்கப்பட்டது.*

## 9. முக்குண நிர்க்குணங்கள்

*'கேவலம், சகலம் சுத்தம்' என்னும் மூன்றவத்தையுள் சகலம் பிரகிருதியோடு கூடியது ஆகையாலும், பிரகிருதி, சாத்துவிகம், இராசதம், தாமதம் என்ற முக்குண மயம் ஆதலாலும், அதன்கண் நிகழும் அவத்தைகளில் சில 'முக்குணங்களின் காரியம்' எனப் பொதுவாகச் சொல்லப்படுதலை ஒரு மந்திரத்தால் கூறுகின்றார். நிர்க்குணம் - குணமற்ற நிலை.*

**2262.** **சாத்திகம் எய்தும் நனவென்ப சாற்றுங்கால்**
**வாய்த்த இராசதம் மன்னும் கனவென்ப**
**ஒய்த்திடும் தாமதம் உற்ற சுழுத்தியாம்**
**மாய்த்திடும் நிர்குணம் மாசில் துரியமே.** **1**

---

*2262. **தெளிவுரை :-** சாக்கிரம், பொருள்களை நன்குணரும் நிலையாகலின் அது, 'சாத்துவிக குணத்தின் காரியம்' என்றும், சொப்பனம், பொருள்களைச் சாக்கிரத்தில் அனுபவித்த வாசனையளவாய் நிற்கும் நிலையாதலின் அது மெய்ம்மைக்கு எதிரான போலி அனுபவம் ஆதல் பற்றிச் சாத்துவிகத்திற்கு எதிரான, 'இராசதகுணத்தின் காரியம்' என்றும், சுழுத்தி, யாதும் உணராத நிலையாதலின் அஃது, இருள் மயமான 'தாமத குணத்தின் காரியம்' என்றும் சொல்லப்படும். துரியம் இம்மூன்றையும் கடந்ததாகலின் அது 'நிர்க்குணமாய் நிகழ்வது' என்றும் சொல்லப்படும்.*

*குறிப்புரை :- 'துரியம், நிர்க்குணம்' எனவே, அதனைக் கடந்த துரியாதீதம், நிர்க்குணம்' எனச் சொல்ல வேண்டாவாயிற்று. துரிய துரியாதீதங்களை 'நிர்க்குணம்' எனக் கூறியதனானே 'நிர்க்குணம்' என்னும் வழக்கு, மாயாகுணங்கள் இல்லாமையையே குறிக்குமன்றி, யாதொரு குணமும் இன்மையைக் குறியாது - என்பது பெறப்படும். இறைவனை 'நிர்க்குணன்' எனவும், 'குணாதீதன்' எனவும் கூறுதலும் இந்தக் கருத்திலே தானேயன்றி, 'யாதொரு குணமும் இல்லாதவன்' என்னும் கருத்தினாலன்று. இயல்பாகவே மாயையின் நீங்கி நிற்கும் இறைவன், குணங்கள் பலவற்றையுடையனாதலை நினைக.*

*முத்தொழில்களில், 'படைத்தல் இராசதத்தொழில்' என்றும், 'காத்தல் சாத்துவிகத் தொழில்' என்றும், 'அழித்தல் தாமதத் தொழில்' என்றும் சொல்லப்படும். அதனால் அவ்வத்தொழிலைச் செய்யும் மூர்த்திகளை அவ்வக்குணம் உடையவராகக் கூறுவர். ஆகவே மும்மூர்த்திகளும், 'குண மூர்த்திகள்' என்றும், மூவருக்கும் அப்பாற்பட்ட பரமசிவனை, 'நிர்க்குணன்' என்றும் 'குணாதீதன்' என்றும் கூறுவர்.*

*மற்றும் மேற்கூறிய சாக்கிரம் முதலிய அவத்தைகள் முக்குணங்களின் காரியங்களாகச் சொல்லப்படுதல் பற்றித் திருமாலை, 'சாக்கிரமூர்த்தி' என்றும்,*

*பிரமனை, 'சொப்பனமூர்த்தி' என்றும், உருத்திரனைச் 'சுழுத்திமூர்த்தி' என்றும் கூறுவர். ஆகவே முக்குணங்களையும் கடந்து, நிர்க்குணனாய் உள்ள பரமசிவன் துரியமூர்த்தியாகின்றான. துரியம் நான்காவதாகலின், பரமசிவனை, 'மூவருக்கும் அப்பால் உள்ள நான்காமவன்' என்பர்.*

*இனி மும்மூர்த்திகளை முக்குணங்களில் ஓரோர் குணத்தை உடையவராகக் கூறுதலும் அவர் கொண்டுள்ள தொழில் பற்றியேயன்றி, அவரவருக்கு உள்ள குணம் பற்றியன்று. 'குணம் பற்றி' எனின், சொப்பன மூர்த்தியும், சுழுத்தி மூர்த்தியும் விழித்துக் கொண்டேயிருக்க, சாக்கிர மூர்த்தி துயில்கொள்பவனாய் இருத்தல் அமையாது. சாக்கிரம் முதலிய மூன்று பற்றியே கூறினாராயினும், சகலத்தில் கேவலம் தாமதத்தாலும், சகலத்தில் சகலம் இராசதத்தாலும், சகலத்தில் சுத்தத்தில் யோகம் சாத்து விகத்தாலும் நிகழும் என்க. ஆகவே, சுத்தம் நிர்க்குணமாம். முக்குணம் கூறுதல் பற்றி, நிர்க்குணமும் கூறவேண்டியதாயிற்று. 'சாத்துவிகம்' என்பது 'சாத்திகம்' என மருவிற்று.*

*இதனால், சகலாவத்தையில் முக்குணங்கள் தொடருமாறு கூறப்பட்டது.*

| வ. எண் | முக்குண நிர்க்குணங்கள் | காரியம் | ஐந்தொழில் | அதிதேவர் | மூர்த்தி | சிறப்புப் பெயர் |
|---|---|---|---|---|---|---|
| 1. | சாத்துவிகம் | சாக்கிரம் | காத்தல் | திருமால் | சாக்கிர மூர்த்தி | முக்குண மூர்த்தி |
| 2. | இராசதம் | சொப்பனம் | படைத்தல் | பிரம்மா | சொப்பன மூர்த்தி | |
| 3. | தாமதம் | சுழுத்தி | அழித்தல் | குணி உருத்திரன் | சுழுத்தி மூர்த்தி | நிர்க்குண மூர்த்தி |
| 4. | நிர்க்குணம் | துரியம் துரியாதீதம் | மறைத்தல் அழித்தல் | பரமசிவம் | துரிய மூர்த்தி | |

## 10. அண்டாதி பேதம்

***'உலகங்கள் பலவற்றை அடக்கியது அண்டம்' என்பதும், 'அந்த அண்டத்திற்கு அதிபதிகளாய் உள்ள கடவுளர்களது இருக்கை புவனம்' என்பதும் கொள்கை. இவைகளுள் புவனங்களே, 'இரு நூற்றிருபத்து நான்கு' எனச் சிவாகமங்களில் வரையறுக்கப்படுகின்றன. அண்டங்களும், அவற்றுக்கு உட்பட்ட உலகங்களும், 'எண்ணில்லாதன' என்றே சொல்லப்படுகின்றன***. ***எனினும், 'தத்துவங்களின் காரியம் தனு கரண புவன போகங்கள்' எனக் கூறுமிடத்தில் 'புவனம்' என்பது பொதுவாக அண்டங்களையும், உலகங்களையும் தழுவி நிற்கின்றது. அதனால், ஓரோர் இயைபு பற்றித் தத்துவங்களைக் கூறிவந்த நாயனார், அத்தத்துவங்களின் காரியங்களில் தனு கரணங்களை முன்னே கூறினமையின் புவனங்களாகிய 'அண்டம், உலகம்' என்பவை பற்றி இரண்டு மந்திரங்களால் கூறுகின்றார். 'ஆதி' என்பதனால், உலகங்கள் கொள்ளப்பட்டன.***

**2263.** **பெறுவ பகிரண்டம் பேதித்த அண்டம்**
**எறிகடல் ஏழின் மணலள வாகப்**
**பொறியொளி பொன்னணி யென்ன விளங்கிச்**
**செறியும்அண் டாசனத் தேவர் பிரானே. 1**

---

*2263. தெளிவுரை :- அண்டங்கள் ஆசனமாகக் கொண்டு, அவற்றிற்கு மேலே விளங்குகின்ற சிவபெருமான், உயிர்களால் பற்றப்பட்டுப் புறமும், அகமுமாய்ப் பல்வேறு வகையில் அமைந்துள்ள அண்டங்கள் எண்ணிலவாய் நிற்க, அவை அனைத்திலும் கட்பொறிக்குப் புலனாகின்ற மற்றொளியையுடைய, பொன்னால் ஆகிய அணிகலன்போல அவற்றினுள் நிறைந்திருக்கின்றான்.*

*குறிப்புரை :- பெறுதற்கு வினைமுதல் வருவிக்கப்பட்டது. "எறிகடல் ஏழின் மணலளவாக" என்றது, 'எண்ணிலவாக' என்றபடி. "ஒளி" என்றதனால், பொறி, கட்பொறியும், "பொன்" என்றதனால், ஒளி, பொன்னினது மாற்றொளியும் ஆயின. 'பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்கள், உள்ளனவாயினும் அவற்றது ஒளியையே மக்கள் நோக்குதல் போல, அண்டங்களிலே சிவபெருமான் நிறைந்திருப்பினும், அண்டங்களை மட்டுமே உயிர்கள் உணர்கின்றன' என உவமையை, உணரப்படுதல் படாமை பற்றிய ஒரு புடை உவமையாகக் கொள்க.*

*அண்டம் ஆரிரு ளூடுகலந் தும்பர்*
*உண்டு போலும் ஓர் ஒண்சுடர்; அச்சுடர்*
*கண்டிங் காரறிவார்! அறிவார் எலாம்*
*வெண்டிங்கட் கண்ணி வேதியன் என்பரே. - தி.5 ப.97 பா.2*

*எனவும்,*

*"அண்டங் கடந்தபொருள்; அளவில்லதோர்*
*ஆனந்த வெள்ளப் பொருள்" - தி. 9 திருப்பல்லாண்டு 2*

**2264.** ஆனந்த தத்துவம் அண்டா சனத்தின்மேல்
மேனி ஐந்தாக வியாத்தம்முப் பத்தாறாய்த்
தானந்த மில்லாத தத்துவ மானவை
ஈனமி லாஅண்டத் தெண்மடங் காமே. 2

---

*எனவும் ஓதினாற்போல இவரும், "அண்டாசனத் தேவர்பிரான்" என ஓதினார். 'விளங்கி' என்பதை 'விளங்க' எனத்திரித்து, 'அண்டங்கள் விளங்க, தான் அவற்றினுள் விளங்காது நிறைந்திருப்பான்' என்க.*

*இதனால், 'தத்துவங்களின் காரியமாகிய அண்டங்கள் எண்ணிலவாம்' என்பது கூறப்பட்டது. 'தேவர்பிரான் செறியும்' என்றது, அவை அவனால் நிலைபெறுதலை உணர்த்தியவாறு.*

***2264. தெளிவுரை :-** அண்டங்களாகிய ஆசனத்தின்மேல் ஆனந்தமாய் உள்ள மெய்ப்பொருள்கள் (வடிவமற்றதாயினும்) அருவம் இரண்டு, அருவுருவம் ஒன்று, உருவம் இரண்டு ஆகிய ஐந்து வடிவங்களைக் கொண்டு விளங்குதலால், அதனால் வியாபிக்கப்பட்ட முப்பத்தாறு முதனிலைப் பொருள்கள் தோன்றி, அழிவின்றி நிற்பனவே 'தத்துவங்கள்' எனப்படுகின்றன. அவையே குறைவில்லாத அண்டங்களாய்க் காரியப்பட்டு, அளவிறந்து நிற்கின்றன.*

***குறிப்புரை :-** ஐந்து வடிவங்கள் மேல், "சார்வாம் பரசிவம் சத்தி பரநாதம்" (பா.2252) என்னும் மந்திரத்தின் உரையில் சொல்லப்பட்ட 'சிவம், சத்தி, சதாசிவன், மகேசுரன்' என்பவற்றோடு 'வித்தை' என்பதுமாகும். ஆகி நின்று செயலாற்றுதலால், முப்பத்தாறு தத்துவங்களில்மேல் உள்ள ஐந்தையும் மெய்ப்பொருள்தானே நேரே செயற்படுத்துகின்றது. கீழ் உள்ள முப்பத்தொன்றினைப் பிறரைக்கொண்டு செயற்படுத்துகின்றது. 'தத்துவம்' எனப்படுவன முதற் காரணப் பொருளாய் ஊழி முடிவுகாறும் அழியாது நிற்பன ஆதல் பற்றி, "தான் அந்தம் இல்லாத தத்துவமானவை" என்றார். "தான்" என்றது பன்மையொருமை மயக்கம். 'தத்துவமானவை அண்டமாய், எண்மடங்கு ஆம்' என்க. "எண் மடங்கு" என்பது மிகுதியைக் குறிப்பதொரு வழக்குச்சொல். அண்டத்து - அண்டமாம் நிலையில்.*

*இதனால், பரமசிவன் தடத்த சிவனாகப் பல்வேறு திருமேனிகளைக் கொண்டு முன்னர்த் தத்துவங்களைத் தோற்றுவித்துப் பின் அவற்றால் அண்டங்களை ஆக்கி அவை அனைத்திலும், தான் நீக்கமின்றி நிறைந்திருப்பான் என்பது சொல்லப்பட்டது.*

*ப்ரா - சிவம். ஸா - சத்தி. தம் - இரண்டன் வடிவு. ஆகவே சிவசக்திகளின் வடிவே பிராசாதம். அது சிவசக்திகளுடைய வடிவாகி எல்லையிலா இன்பவாரியில் தோய உதவும் யோகத்தானம். சோடசகலாப் பிரசாதம் - 16. துவாதச கலாப் பிரசாதம் - 12. பன்னிரெண்டின் விரிந்த நிலையே 16.*

## 11. பதினொன்றாந்தானமும் 'அவத்தை' எனக் காணல்

*பதினொன்றாந்தானம் - துவாதச கலாப் பிரசாதத் தானங்கள் பன்னிரண்டில் முடிவில் உள்ள உன்மனாத்தானத்தை அடுத்துக் கீழ் நிற்பதாகிய சமனாத் தானம். இது பிரமரந்திரத்திற்கு (உச்சிப் பெருந்துளைக்கு) மேல் உள்ள பன்னிரண்டங்குலத்தில் முடிவாய் உள்ள நான்கு அங்குலத்திற்குக்கீழ் நான்கு அங்குல அளவுள்ள இடமாகும். யோகங்களில் பிராசாதயோகமே ஞானத்திற்குச் சிறந்த சாதனம் ஆதல் பற்றிச் சைவ நூல்கள் அதனையே சிறப்பித்துக் கூறும். 'அதில் பன்னிரண்டாந் தானமாகிய உன்மனாத் தானத்தைக் கடந்துவிட்டால் சிவனை அடைந்துவிடலாம்' எனக் கூறப்படும் முறையில் சமனாத்தானம் வரையில் 'பாசத்தானங்கள்' என்றும், உன்மனாத்தானம் 'அருள்தானம்' என்றும் அதனைக் கடந்தது 'ஆனந்தத் தானம்' என்றும் சொல்லப்படும். எனவே, 'சகலத்தில் சுத்தம்' எனப்படும் யோகத்தில் பிராசாத வகையிலும் சமனாத் தானம் வரையில் பாசத் தொடர்பு உளதாகும் - என்பதையே நாயனார் இங்கு, "பதினொன்றாந்தானமும் அவத்தை எனக் காணல்" என்றார். "அவத்தை" என்றது, "மலாவத்தை" என்றபடி.*

*எனவே, 'இந்தப் பதினொன்றாந்தானம் யோகத்தில் சுழுத்தியேயன்றித் துரிய துரியாதீதங்கள் அன்று' என்பது விளங்கும். இதனை மூன்று மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**2265.** அஞ்சில் அமுதம் ஓர்ஏழின்கண் ஆனந்தம்
முஞ்சில் ஓங்காரம் ஓர்ஒன்பான் பதினொன்றில்
வஞ்சக மேநின்று வைத்திடில் காயம்ஆம்
சிஞ்சுகச் செவ்வாய்க் கிளிமொழி கேளே. 1

---

*2265. தெளிவுரை :- கெடுதல் இல்லாத ஓங்காரத்தின் கலைகள் பன்னிரண்டில் 'அ, உ, ம, விந்து' என்னும் நான்கிற்கு அப்பால் ஐந்தாவதாய் உள்ள அர்த்த சந்திர கலையை அடைந்தால் ஓர் அமுததாரை ஒழுகும். (அஃது உடல் எங்கும் உள்ள நாடிகளில் பாய்ந்து உடலை உறுதிப்படுத்தும். இந்த இடம் புருவநடுவிற்குச் சற்றுமேல், 'நெற்றி நடு' என்னலாம்) பின்பு நிரோதினியைத் தாண்டி ஏழாவதாய் உள்ள நாதகலையை அடைந்தால் அவ்விடத்து ஓர் ஆனந்தம் தோன்றும். (அந்த ஆனந்தம் சிறையில் உள்ளவனுக்கு, விடுதலை தோன்றிவிட்டது' என்பது தெரிந்தவுடன் உண்டாகின்ற ஆனந்தம் போல்வதேயாகும். இந்த இடம் பிரமரந்திரத்திற்குப் பின்) அதனைக் கடந்து நாதாந்தத்தைத் தாண்டி, ஒன்பதாவதாய் உள்ள சத்திகலையிலும் அதனைக் கடந்து வியாபினி கலையைத் தாண்டிப் பதினொன்றாவதாய் உள்ள சமனா கலையிலும் சென்று உள்ளத்தை அசையாதிருக்கச் செய்தால், அத்தகையோர் இவ்வுலகத்திலே இருப்பினும் உமைகேள்வனாகிய சிவன், 'ஊனே, ஊனின் உள்ளமே, உள்ளத்தில் உள்ளே நின்ற கருவே' (தி.6 ப.47 பா.1) என அருளிச் செய்தபடி அவர்கள் உடம்பிற்குள்ளே*

**2266.** புருட னுடனே பொருந்திய சித்தம்
அருவமொ டாறும் அதீதத் துரியம்
விரியும் சுழுத்தியின் மிக்குள்ள எட்டும்
அரிய பதினொன்றும் ஆம்அவ் வவத்தையே. **2**

---

*இனிது வெளிப்பட்டு நின்று, "வாக்கிறந்த அமுதம் மயிர்க்கால்தோறும் - தேக்கிடச் செய்து" (தி.8 திருவண்டப் பகுதி - 170. 7) (அஃதாவது பேரானந்தத்தை விளைத்து) நிற்பான்.*

***குறிப்புரை :-*** *"முஞ்சில் ஓங்காரம்" என்பதை முதலிற் கொள்க. முஞ்சில் - மூஞ்சியில் - மூஞ்சி - முன்பக்கம். முகம் அதாவது தொடக்கம். 'ஓர் ஒன்பானில், பதினொன்றில் வைத்திடில், வஞ்ச அகமே நின்றும் கிளிமொழி கேள்காயம் ஆம்' எனக் கூட்டி முடிக்க.*

*வைத்தலுக்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது.*

*பிரபஞ்சம், 'வஞ்சம்' என வந்து, புணர்ச்சியில் வகரம் கெட்டபின் அகரம் தொகுத்தலாயிற்று. 'நின்றும்' என்னும் உம்மையும் தொகுக்கப்பட்டது. கேள் - கேள்வன். ஈற்றடியை மகடூ முன்னிலையாக்கினாரும் உளர். நாயனார் இந்நூலில் யாண்டும் மகடூ முன்னிலை வைக்கக் காண்கிலம்.*

*இதனால், பிராசாத யோகமும் கரணத்தோடு கூடிய மலாவத்தையேயன்றி, நின்மலாவத்தை ஆகாமை அதன் பயன்கள் சிலவற்றை உணர்த்து முகத்தால் கூறப்பட்டது.*

*மேல் மந்திரம் (பா. 696-இன்) உரையைக் கொண்டு இப் பொருளைத் தெளிக. மற்றும் பிராசாத நூல்களையும் காண்க.*

***2266. தெளிவுரை :-*** *(சகலத்தில் சுத்தமாகிய யோக வகைகளில் பிராசாத யோகத்தில் ஒரு வகையான பராவத்தை நின்மலா வத்தைகள் சொல்லப்படுகின்றன. அவை மேற்கூறிய சுத்தத்தில் சுத்தாவத்தைகளாகிய பரா வத்தையும், இனிக்கூறப்படும் நின்மலாவத்தைகளும் அல்ல. (பிராசாத தீபம் - செய்யுள் 18-21) அந்த அவத்தைகளில் தத்துவங்களின் நீக்கமும் சொல்லப்படுகின்றது. அவற்றுள் அமைந்த நின்மலாவத்தையை இம்மந்திரம் குறிப்பிடுகின்றது).*

*புருடதத்துவமும், அதற்குக்கீழே பொருந்தியுள்ள சித்தமும் சூக்குமமாகிய நாதவிந்து கலைகளிலே ஒடுங்கும். அவ்வொடுக்கங்கள் முறையே யோகத்தில் நின்மலாதீதமும், யோகத்தில் நின்மல துரியமும் ஆகும். சித்தத்தற்குக் கீழ் உள்ள புத்தி, அகங்காரம், மனம் ஆகிய மூன்று அந்தக்கரணங்களும், தன்மாத்திரைகள் ஐந்தும் ஆகிய எட்டும் யோகத்தில் நின்மல சுழுத்தி முதலியவற்றில் விரிந்து*

**2267.** காட்டும் பதினொன்றும் கைகலந் தால்உடல்
நாட்டி அழுத்திட நந்தியல் லால்இல்லை
ஆட்டம்செய் யாத அதுவிதி யேநினை
ஈட்டும் அதுதிடம் எண்ணலும் ஆமே. **3**

---

*நிற்கும். இங்ஙனமாகவே ஞானாவத்தைகளை நோக்க, மேற்கூறிய பதினொன்றாந் தானமாகிய சமனா கலையும் யோகாவத்தைத் தானமேயாம். (ஏனெனில், அவ்விடத்தும் சுத்த மாயைத் தொடர்பு இருத்தலின் என்பது கருத்து).*

***குறிப்புரை :-*** *ஆறும் - தணியும்; ஒடுங்கும் ''உடனே'' என்பது எண்ணொடுவின் பொருட்டாய் நின்றது. "அருவம்" என்றது, சூக்குமம் என்றபடி. அகார உகார மகாரங்களை நோக்க, விந்து நாதங்கள் சூக்குமம் ஆதலை உணர்க. "அருவமொடு" என்றது, 'அருவத்தளவில்' என்றபடி. அதீதத்துரியம், உம்மைத் தொகை. 'துரியத்தில்' என ஏழாவது இறுதிக்கண் தொக்கது. 'மிக்குள்ள எட்டும் சுழுத்தியினின்றும் கீழ்க்கீழ் விரியும்' என்க. புத்தி மட்டும் தோன்றுவது சுழுத்தியும் அதனுடன் அகங்காரமும் தோன்றுவது சொப்பனமும், அவற்றுடன் மனமும் தன்மாத்திரையும் தோன்றுவது சாக்கிரமும் ஆகும். இம்முறையில் நாதாந்தம் முடிய, 'துரியாதீதம்' எனச் சொல்லப்பட்டாலும் அதற்கு மேலும் பரவிந்து பரநாதங்கள் இருத்தலால் பதினொன்றாந்தானமும் சகலத்தில் சுத்தாவத்தைத் தானமே - என்றபடி. இதனை, சிவமூல மந்திரங்களை நோக்கிப் பிரணவ கலைகள் பொதுவாக, 'சூக்கும பஞ்சாக்சரம்' எனச் சொல்லப்பட்டாலும் அகார உகார மகாரங்கள் விந்து நாதங்களை நோக்கி, 'தூலம்' எனச் சொல்லப்படுதலைப் போலக் கொள்க. "பதினொன்றும்" என்னும் உம்மை சிறப்பு, பிராசாத யோகத்தின் அவத்தைளை எடுத்துக்காட்டியது. அவற்றிடையேயுள்ள தாரதம்மியங்கள் போன்றனவே சுத்தத்திற் சுத்தாவத்தைகட்கும், சகலத்திற் சுத்தாவத்தைகட்கும் இடையேயுள்ள 'தாரதம்மியங்கள்' என்பது உணர்த்துதற்கு அவத்தைத் தானத்தை 'அவத்தை' என உபசரித்தார்.*

*இதனால், முன் மந்திரத்தில் கூறப்பட்ட பொருள் காரணங்காட்டி வலியுறுத்தப்பட்டது.*

***2267. தெளிவுரை :-*** *முன் மந்திரத்தில் சொல்லப்பட்டபடி சிவாகமங்கள் கூறுகின்ற அந்தத்தானங்கள் பதினொன்றிலும் சென்று நின்றால் உடம்பு விரைவில் அழியாது நெடுங்காலத்திற்கு நிலைபெறும் வகையில் உறுதியடையும். அந்நிலையில் அவ்வுடலில் உள்ள உயிருக்குச் சிவனைத் தவிரத் துணையாவார் வேறு ஒருவரும் இலராவர். (அஃதாவது, 'அவ்வுண்மை அவ்வுயிருக்கு நன்கு விளங்கி நிற்கும் என்பதாம்) அதனால் உனது மனம்போனபடி நீ போய் அலைந்து கொண்டிருந்த அலைவுகளையெல்லாம் விடுத்து அமைதியுற்றிருந்த அந்த அமைதியே வழியாகச் சிவன் தன் அடியார்களோடு கூட்டுதல் உறுதி. இந்த*

*உறுதியும் உனக்கு அந்நிலையில் விளங்குவதாகும்.*

***குறிப்புரை :-*** *கைகலத்தல், 'கலத்தல்' என்னும் பொருட்டாய ஒரு சொல். நாட்டி அழுத்திட - நிலைப்படுத்தி உறுதிசெய்ய. 'உறுதி செய்ய' என்ற அனுவாதத்தானே உறுதி செய்தலும் பெறப்பட்டது. விதி - முறைமை.*

*இதனால், சகலத்திற் சுத்தம் மலாவத்தையேயாயினும் அது பயனுடைத்தாதல் கூறப்பட்டது.*

## 12. கலவு செலவுகள்

*கலவு - கலப்பு. ஆணவத்தோடு மட்டும் இருந்த ஆன்மா மாயா கருவிகளோடு கலத்தல். "முன்னையது கேவலம்" என்பதும், 'பின்னையது சகலம்' என்பதும் மேல் பல இடங்களில் சொல்லப்பட்டன. செலவு - சகலத்தைவிட்டு அப்பாற் செல்லுதல். இதுவே சுத்தம். இவையெல்லாம் மேலே சொல்லப்பட்டன வாயினும் நின்மலாவத்தை பராவத்தைகளின் வேறுபாடு இனிது விளங்குதற் பொருட்டு அவற்றை இவ்வதிகாரத்தில் இரண்டு மந்திரங்களால் சகலாவத்தை சுத்தாவத்தைகளை ஒப்புநோக்கி உணரக் கூறுகின்றார். கலவு - கலத்தல். செலவு - பிரிதல்.*

**2268.** **கேவலந் தன்னில் கலவு சகலத்தின்**
**மேவும் செலவு விடாவிருள் நீக்கத்துப்**
**பாவும் தனைக்காண்டல் மூன்றும் படர்வற்ற**
**தீதறு சாக்கிரா தீதத்தில் சுத்தமே.** **1**

---

*2268. தெளிவுரை :- கேவலாவத்தைக்குப் பின்பு ஆன்மாச் சகலத்தை அடைதலே கலவு நிலையாகும். (கலத்தல் மலத்தோடேயாகையால், இக்கலப்பு அசுத்தமேயாம். எனவே, கேவலத்திலிருந்த அசுத்தம் போய்விடவில்லையாம். முன்னை அசுத்தமே பின்னை அசுத்தத்திற்குக் காரணம் ஆகையால்) விடாது பற்றியுள்ள முதல் அசுத்தமாகிய இருள் நீங்கும் சமையத்தில் ஆன்மாச் சகல நிலையினின்றும் சிறிது சிறிதாக விலகி அப்பாற் செல்லுதலே செலவு நிலையாகும். (இது மலங்களினின்றும் நீங்கும் நிலையாகலின், 'நின்மலாவத்தை' எனப்படும்) இந்நிலையில் ஆன்மாத் தன்னைக் காணுதல், பின் திருவருளைக் காணுதல், பின் பராசத்தியைக் காணுதல் இவை மூன்றும் முறையே நிகழ்ந்து நீங்கினால் சாக்கிராதீதம் வாய்க்கும். அதன் பின்பே நின்மலாவத்தை முடிவு பெறும்.*

*குறிப்புரை :- தன்னைக் காணுதல் முதலிய மூன்றும் முறையே, 'சைதன்னிய தரிசனம், ஞான தரிசனம், பரை தரிசனம்' எனத் துகளறு போதத்தில் (வெண்பா - 32-44) கூறப்படுதல் காண்க. சாக்கிராதீதம், 'பரையில் அதீதம்' என்பதனோடு கூட்டி இரண்டாகவும், பரையில் அதீதத்தை யடுத்துச் சுத்தாவத்தையும் அந்நூலில் (வெண்பா - 49-52) கூறப்படுதலையும் காண்க. அந்நூலில் 'சுத்தாவத்தை' எனப்பட்டதும், இம்மந்திரத்தில் 'சுத்தம்' எனப்பட்டதும் நின்மலாவத்தையேயாம். "மேவும், பாவும்" என்றாராயினும், 'கேவலந் தன்னில் சகலத்து மேவுதல் கலவு' எனவும், 'விடா இருள் நீக்கத்துப் பாவுதல் செலவு' எனவும் உரைத்தலே கருத்தென்க. பாவுதல் - பரவுதல்; முற்றும் பொருந்துதல்.*

*இதனால், சகலாவத்தை சுத்தாவத்தைகளின் இயல்பு ஒப்பிட்டு உணர்த்தப்பட்டன.*

**2269.** வெல்லும் அளவு விடுமின் வெகுளியைச்
செல்லும் அளவும் செலுத்துமின் சிந்தையை
அல்லும் பகலும் அருளுடன் தூங்கினால்
கல்லும் பிளந்து கடுவெளி யாமே. 2

---

***2269. தெளிவுரை :-*** *எந்தப் பொருள் மேலும் எழுகின்ற விருப்பத்தை வெல்லுங்கள்; வெறுப்பை ஒழியுங்கள்; உள்ளம் தூய்மையாகும். ஆனபின் அதனை இயன்ற அளவு திருவருளைப் பற்றியே இயங்கச் செய்யுங்கள். பின்பு அஃது அல்லும், பகலும் திருவருளையே சார்ந்து அமைதியுற்றிருக்கும். அப்பொழுது மலைக் குகையுள் அடைக்கப்பட்டவனுக்கு அந்தக் குகை வெடித்துப் பெரிய விடுதலை கிடைத்தது போன்ற ஒருநிலை உண்டாகும்.*

***குறிப்புரை :-*** *'மலாவத்தைகள் நீங்கிப் பராவத்தை நிகழும்' என்றபடி. இதனானே வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டதும் ஆயிற்று. இஃது ஒட்டணி.*

*அளவு - அளாவுதல்; கலத்தல். அது விரும்புதலைக் குறித்தது. வெகுளி, 'வெறுப்பு' என்னும் அளவாய் நின்றது. 'விருப்பம் நீக்குதற்கு அரியது' என்பது பற்றி அதனை, 'வெல்லுமின்' என்றார். 'தூங்கினால்' என்றதனால், தூங்குதல் பெறப்பட்டது. 'வெல்லுதல், விடுதல், செலுத்துதல் எல்லாம் யோகத்தால் உளவாகும்' என்பதும், 'அவை உளவாகவே நின்மலாவத்தை பராவத்தைகளில் செல்லுதல் கூடும்' என்பதும் கருத்து.*

*இதனால், கலவு செலவுகளில் நிகழும் சுத்தாவத்தையின் இயல்பு கூறப்பட்டது.*

## 13. நின்மலாவத்தை

*நின்மலாவத்தை - மலம் அற்ற நிலை. மலம் அறுதல் படிப்படியாகவேயாம். அவ்வாறு அறும் முறையே தச காரியங்களாக வகுத்துக் காட்டப்படுகின்றது. அவற்றைத் துகளறுபோதம் முப்பதாகப் பகுக்கின்றது. பத்தாயினும், முப்பதாயினும் அவை சாக்கிரம் முதலிய ஐந்து அவத்தைகளாக அடக்கப்படுகின்றன. அவையே நின்மலாவத்தை. இது சகலத்திற் சுத்தமே. சகலத்திற் சுத்தம், 'யோகாவத்தை, ஞானாவத்தை' என இருவகைத்து. நின்மலாவத்தை, ஞானாவத்தை இதனின் மேற்பட்டதே பராவத்தை. அது 'சுத்தத்திற் சுத்தம்' அல்லது 'உண்மைச் சுத்தம்' ஆகும். அதனை ஓர் இயைபு பற்றி மேலே கூறினார். ஆகவே, எஞ்சி நிற்கும் நின்மலாவத்தையை இங்கு ஐம்பத்தொரு மந்திரங்களால் கூறுகின்றார். எனினும் தசகாரியங்களைத் தலைப்படுதற்கு யோகப்பயிற்சி இன்றியமையாதது என்றற்கு முதற்கண் யோகம் பற்றியே கூறுகின்றார்.*

**2270.** **ஊமைக் கிணற்றகத் துள்ளே உறைவதோர்**
**ஆமையின் உள்ளே அழுவைகள் ஐந்துள**
**வாய்மையி னுள்ளே வழுவா தொடுங்குமேல்**
**ஆமைமென் மேலும்ஓர் ஆயிரத் தாண்டே.** **1**

---

*2270. தெளிவுரை :- (இம்மந்திரம் ஒட்டணி பெற்றது).*

*ஊமைக் கிணறு - வாய் இல்லாத கிணறு. அஃதாவது, தோண்டப்படாமல் நிலத்தினுள்ளே கிடக்கின்ற நீர்நிலை, என்றது கேவல நிலையை. ஆமை, கேவலத்தில் கிடக்கும் ஆன்மா. அழுவை - அழுவம்; பள்ளம் - அழுந்திய அனுபவம். பள்ளங்கள் ஐந்தாவன; கேவலம், சகலத்திற் கேவலம், சகலத்திற் சகலம், சகலத்தில் யோகம், சகலத்தில் ஞானம்' என்னும் காரண அவத்தைகள். அவற்றுள், 'வாய்மை' என்னும் பள்ளம் சகலத்தில் ஞானம். இதுவே நின்மலாவத்தை. இதனை அடைந்த ஆன்மா நித்தியமாம் தன்மையைப் பெறும். வாய்மை - மெய்ப்பொருளாகிய சிவம்.*

*குறிப்புரை :- ஆன்மா எப்பொழுதும் நித்தியமேயாயினும் உடம்போடு கூடிப் பிறந்தும், இறந்தும் வருதலால் அநித்தியமாக எண்ணப்படுகின்றது. ஆகவே, 'மென்மேலும் ஓர் ஆயிரத்தாண்டு' என்றது. 'என்றும் இறவாமையை உடையதாம்' எனப்பொருள் தந்து, நித்தியம் ஆதலை உணர்த்திற்று. இதனால், 'நின்மலாவத்தை பராவத்தைக்கு வாயிலாய் நிற்கும்' என அதனது சிறப்புக் கூறப்பட்டது.*

*2271. தெளிவுரை :- 'நிலம், நீர், தீ, காற்று, வானம்' என்னும் ஐம்பூதங்களும் முறையே பிரமன், மால், உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்னும் ஐவர்களாலே*

**2271.** கால் அங்கி நீர்பூக் கலந்தஆ காயமே
மால் அங்கி ஈசன் பிரமன் சதாசிவன்
மேல் அஞ்சும் ஓடி விரவவல் லார்கட்குக்
காலனும் இல்லை கருத்தில்லை தானே. **2**

**2272.** ஆன்மாவே தன்மைந்த னாயினன் என்பது
தான்மா மறைஅறை தன்மை அறிகிலர்
ஆன்மாவே மைந்தன் அரனுக்கு இலனென்றால்
ஆன்மாவும் இல்லையால் ஐயைந்தும் இல்லையே. **3**

---

*தான் தொழிற்படுகின்றன. ஆகவே அந்த ஐவரையும் ஆதார யோகத்தால் 'சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை' என்னும் ஆதாரங்களில் முறையாகக் கண்டு, பின்நிராதாரத்தை அடைய வல்லவர்கட்கு இறப்பும் இல்லை. வாழ்வில் உலக உணர்வும் இல்லையாம். பிரமன் முதலியோரும் உயிர் வர்க்கத்தைச் சேர்ந்தவர்களே. இவர்களை இவ்வதிகாரத்தில் நியமித்துப் பணி கொள்வோர்க்கும் இப்பெயர்களே. அவர்கள் காரணேசுவரர்கள்.*

***குறிப்புரை :-*** ***'எனவே, மேல் - வெல்லும் அளவு என்பது, (பா. 2270) என்பது முதலாகக் கூறிய சாதனங்கள் ஆதாரயோகத்தாலே எளிதில் கைவரும்' என்பதாம். 'நிலம் முதலிய ஐம்பூதங்கட்கும் பிரமன் முதலிய ஐவரும் அதிதேவர்கள்' என்பதை உண்மை விளக்கம், சிவஞான சித்திச் சுபக்கம் ஆகியவற்றால் அறிக. செய்யுள் நோக்கிப் பூதங்களையும், அதிதேவர்களையும் முறை பிறழவைத்தார். அங்கிக்கு அதிதேவ னாகிய உருத்திரனை 'அங்கி' என்றே கூறினார். மேல் அஞ்சு - மூலா தாரத்திற்கு மேலே உள்ள ஐந்து ஆதாரங்கள். ஓடி - முறையாக ஏறி விரவுதலுக்குச் செயப்படுபொருள் வருவிக்க. இதனால், 'ஆதார யோகம் ஆயுளை வளர்த்து, உலகியல் உணர்வை நீக்கும் முகத்தால் நின்மலாவத்தைக்கு வாயிலாம்' என்பது கூறப்பட்டது.***

***2272. தெளிவுரை :-*** ***'உயிர்கள் அனைத்திற்கும் சிவன் தந்தை' என்பதும், 'சத்தி தாய்' என்பதும் வேதாகமங்களில் எங்கும் முழங்கும் முழக்கமாதலை அறியாது சிலர் ஆன்மாவை, 'தாயும் இலி; தந்தையிலி' என்கின்றார்கள். அஃது உண்மையாயின், சடப்பொருள்களாகிய தத்துவங்களும், அவற்றைக் கொண்டு ஆன்மாக்கள் உலகில் பிறந்து வினைகளை நுகர்ந்தும் ஈட்டியும், பின்பு இறந்தும் செல்லும்நிலை இல்லையாக வேண்டும்.***

***குறிப்புரை :-*** ***உயிர்களுக்குச் சிவனும், சத்தியும் தந்தையும், தாயும் ஆதலை, "ஆலவாயில் அப்பனே" (தி.4 ப.62) எனவும் "பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை" (தி.8 திருவெம்பாவை - 14) எனவும், மற்றும் பல இடங்களிலும் இவ்வாறு வருவனவற்றால் அறிக. சிவனுக்கும், சத்திக்கும் வேறுபாடின்மை பற்றிச்***

**2273.** உதயம் மழுங்கல் ஒடுங்கல்இம் மூன்றின்
கதிசாக் கிரம்கன வாதி சுழுத்தி
பதிதரும் சேதனன் பற்றாத் துரியத்து
அதிசுப னாய்அனந் தானந்தி யாகுமே. **4**

---

*சிவனையே, "தொடர்ந்து நின்றென் - தாயானை" (தி.6 ப.19 பா.8) "அம்மையே, அப்பா" (தி.8 பிடித்த பத்து - 3) என்றாற்போலவும் பல இடங்களில் அருளிச் செய்வர். எவ்வாறாயினும், 'பரம்பொருட்கு ஆன்மா மகன்' என்பதில் ஐயமில்லை. "அறிகிலர்" என்பது, அறியாமையால் அதனை மறுத்துக் கூறுதலாகிய காரியத்தை உணர்த்திற்று. ஆன்மா அறிவுடை உலகமாயும், தத்துவ தாத்துவிகங்கள் அறிவிலா உலகமும் ஆதலின், 'ஆன்மாத் தோற்றம் உடையது ஆகாவிடின் உலகமே இல்லை' என்பார். ''ஆன்மாவும் இல்லையால்; ஐயைந்தும் இல்லையே'' என்றார். வித்தியாதத்துவங்களைப் புருடதத்துவத்தில் அடக்கி "ஐயைந்து" என்றார்.*

*இதனால், 'ஆன்மா யோக ஞானங்களால் உலகினின்றும் நீங்குதல் வேண்டும்' என்பது வலியுறுத்தப்பட்டது.*

***2273. தெளிவுரை :-** அறிவு உதயசூரியன் போலத் தோன்றி விளங்குதலும், அவ்வாறின்றி மேகங்களால் மறைக்கப்பட்ட சூரியனைப் போல மழுங்கி நிற்றலும், அத்தமித்த சூரியன்போல ஒடுங்கியிருத்தலும் ஆகிய இவையே பெத்தத்தில் நிகழும் சாக்கிர சொப்பன துரியங்களாகும். ஆகவே, 'அவற்றின்பின் நிகழும் துரியமும் அறிவுசெயற்படாது அடங்கிக் கிடக்கும் நிலை' என்பது சொல்ல வேண்டா. இந்தப் பெத்தநிலை அவத்தைகளை விடுத்துச் சுத்தநிலை அவத்தையை ஒருவன் எய்துவானாயின்' அவன் மிக நன்மையை அடைந்தவனாய், எல்லையில்லாத ஆனந்தத்தையுடையவனாவான்.*

***குறிப்புரை :-** "உதயம்" எனக் கூறிய சொற்குறிப்பால் இவ்வாறு பொருள் கொள்ளக்கிடந்தது. "மூன்றின்" என்பதில் 'இன்' வேண்டாவழிச் சாரியை. கதி - நிலை. பதிதல் - அழுந்துதல். 'பற்றுக்களில் பதிதரும்' என்பது, பின்பு "பற்றாத் துரியம்" என்றதனால் விளங்கும். பற்றாத் துரியமும், யோக துரியமும், ஞான துரியமுமாம். 'யோகா வத்தையை அடைந்தவன் ஞானாவத்தையையும், பின்பு பராவத்தையையும் அடைதல் உறுதி' என்பது பற்றி ''அதிசுபனாய் அனந்தானந்தியாகும்" என்றார். சுபன் - நன்மையை அடைந்தவன். அனந்தம் - முடிவில்லாதது. அனந்த + ஆனந்தி = அனந்தானந்தி. இது வடமொழிப் புணர்ச்சி.*

*இதனால், மலாவத்தைகள் துன்பநிலையும், நின்மலாவத்தை இன்ப நிலையும் ஆதலைக் கூறும் முகத்தால், நின்மலாவத்தையின் இன்றியமையாமை கூறப்பட்டது.*

***2274. தெளிவுரை :-** சட உலகங்கள் யாவும் தனக்குள் அடங்கியிருக்க, சிவஞானத்தால் எல்லாப் பொருளையும் ஒருங்கேயறியும் தன்மையுடையவன்*

**2274.** எல்லாம்தன் னுட்புக யாவுளும் தானாகி
நல்லாம்துரியம் புரிந்தக்கால் நல்லுயிர்
பொல்லாத ஆறாறுட் போகாது போதமாய்ச்
செல்லாச் சிவகதி சென்றெய்து மன்றே. **5**

---

*ஆகின்ற அத்தகைய நல்ல துரியத்திலே தங்கும் நிலையை ஒருயிர் அடைந்து விட்டால் அது நல்ல உயிராகும். பின்பு அது பிறவியாகிய தீமையை விளைவிக்கின்ற முப்பத்தாறு தத்துவங்களில் செல்லாது. முன்பெல்லாம் சடங்களாகிய அவற்றிற்சென்று அவையேயாய் இருந்ததுபோல் இல்லாமல் அவற்றின் நீங்கி அறிவுப் பொருளாய், செல்லாது செல்வதாகிய சிவகதியை அடையும்.*

*குறிப்புரை :- செல்லாச் சிவகதி - பூவினுட்கந்தம் பொருந்தியவாறு போலச் சிவகதி தானே வந்தெய்துதற்குரியதேயன்றி ஒருவன் முனைந்து நின்று சென்றடைவதற்கு உரியதன்று. திருவருள் அழைத்துச் செல்லுமானால் சென்றடையலாம் எனப் பிற்கூறுகின்றார். திருமாலும் அயனும் தாமே சென்றடையலாம் என முனைந்து சென்று மாட்டாமை, உணர்ந்தமை ஈண்டு நினைவு கூரத்தக்கது.*

*பெத்த காலத்தில் ஆன்மாப் பாசங்களின் வியாப்பியமாய் இருந்தது, முத்தி காலத்தில் அவைகளைக் கீழ்ப்படுத்தி நிற்றல் பற்றி, "எல்லாம் தன்னுட் புக" என்றும், பெத்த காலத்தில் ஆன்மாத் தத்துவங்களைப் பற்றி ஏகதேசமாய் இருந்து, முத்தி காலத்தில் சிவ ஞானத்தைப் பற்றி வியாபகமாய் நிற்றல் பற்றி, "யாவுளும் தானாய்" என்றும் கூறினார். 'நன்று' என்பது இறுதிநிலை கெட்டு "நல்" என முதனிலையளவாய் நின்றது. "நல்லாந் துரியம், நல்லுயிர்" என்பவை, 'சுத்த துரியம், சுத்தான்மா' என்பதாம். "புரிந்தக்கால்" என்பது, புரிதலின் அருமை தோற்றி நின்றது. "ஆகிப்புரிந்தக்கால்" என்றாரேனும், 'புரிந்து ஆகியக்கால்' என்பது கருத்தென்க. செல்லாது செல்லுதலாவது, 'முன்பு வேறாய் இருந்து, பின்பு சென்று அடைதல்' என்பதின்றி, முன்பே உள்ளதனை உணர்தல் "அன்றே" என்றது தேற்றம்.*

*இதனால், நின்மலாவத்தையின் இயல்பும், பயனும் கூறப்பட்டன.*

*2275. **தெளிவுரை :-** நெருப்பில் காய்ந்து நெருப்பாகவே இருந்த இரும்பு நெருப்பை விட்டு நீங்கினால் நெருப்பாய் இராமல் இரும்பாகவே யிருக்கும். இருப்பின் நெருப்பின் சூடு விரைவில் ஆறிவிடாது; இருக்கவே செய்யும். அதுபோல நின்மல, சாக்கிர, சொப்பன, சுழுத்திகளோடு தத்துவங்களினின்றும் ஆன்மா நீங்கியபோதிலும் துரியத்திலும் அவற்றில் முன்பு மூழ்கியிருந்த வாசனை இருக்கவே செய்யும்.*

*குறிப்புரை :- 'அதனால் நின்மலதுரியாதீதத்தை அடைதல் வேண்டும்'*

**2275.** காய்ந்த இரும்பு கனலை அகன்றாலும்
வாய்ந்த கனலென வாதனை நின்றாற்போல்
ஏய்ந்த கரணம் இறந்த துரியத்தும்
தோய்ந்த கருமத் துரிசக லாதே. **6**

**2276.** ஆன மறையாதி யாம்உரு நந்திவந்து
தேனை யருள்செய் தெரிசனா வத்தையில்
ஆன வகையை விடும் அடைந் தாய்விட
ஆன மலாதீதம் அப்பரந் தானே. **7**

---

*என்பது குறிப்பெச்சம். கருமம் - தொழில். துரிசு - குற்றம், என்றது அதன் வாசனையை. தசகாரியங்களுள் தத்துவ ரூபம், தத்துவதரிசனம் இவ்விரண்டும் நின்மலசாக்கிரம். ஆன்ம ரூபம் தத்துவ தரிசனத்தில் உடன் நிகழும். ஆன்ம தரிசனம் நின்மல சொப்பனம். இதில் தத்துவ சுத்தி அடங்கும். சிவரூபம் உடன் நிகழும்.*

*ஆன்ம சுத்தி நின்மல சுழுத்தி, இதில் சிவதரிசனம் நிகழ, ஆன்ம சுத்தி ஓரளவே நிகழும். சிவயோகம் நின்மல துரியம். இதில் ஆன்மசுத்தி முற்றுப்பெறும். எனினும் பண்டை வாசனை சிறிது இருக்கும். சிவபோகமே நின்மல துரியாதீதம். இதுவே ஆன்ம லாபம். இங்கு ஆன்மாப் பண்டை வாசனையும் இன்றிச் சிவமேயாய் நிற்கும். ஆகவே இதனை அடைதல் இன்றியமையாததாயிற்று. வாதனை - வாசனை.*

*இதனால், நின்மல துரிய துரியாதீதங்களின் இயல்புகள் கூறப்பட்டன.*

*2276. தெளிவுரை :- வேதம் முதலாகிய சொல்லுலகங்களையும், மற்றும் பொருள் உலகங்களையும் தனது வடிவமாகக் கொண்டுள்ள சிவன் புலப்பட்டு நின்று, தனது திருவருளாகிய தேனை வழங்குகின்ற நின்மலாவத்தையில் கடக்க வேண்டிய சாக்கிரம் முதல் நான்கையும் கடந்து முடிந்தபின் துரியாதீதமே பராவத்தையாய் விளங்கும்.*

*குறிப்புரை :- என்றது, 'விரைவில் பராவத்தை கைகூடும்' என்றதாம். தெரிசனாவத்தை, பொருள்களின் இயல்பை உள்ளவாறுணரும் நிலை. அது ஞானாவத்தையாதல் அறிக. 'விடு' என்பது 'வீடு' எனத் திரியாது செய்யுள் நோக்கி, 'விடு' என்றே, நின்று, விடுதலாகிய தொழிலையே குறித்தது. உம்மை, சிறப்பும்மை. 'விடுத்திட வேண்டிய வகை' என்றதனால் அவைமுதல் நான்கு நிலைகளேயாயின. 'விட்டது' என்பதே துணிவுப் பொருளை உணர்த்துமாயினும், 'ஆய்விட்டது' என்றல் உலக வழக்கு. 'முடிந்துவிட்டது' என்பது அதன் பொருளாகும். அது பற்றி, 'அடைந்துவிட' என்பதை, 'அடைந்தாய்விட' என்றார். 'நின்மலம்' என்பதை*

**2277.** **சுத்த அதீதம் சகலத்தில் தோய்வுறில்**
**அத்தன் அருள்நீங்காது ஆங்கணில்தான் ஆகச்**
**சித்த சுகாவத்தை தீண்டாச் சமாதிசெய்**
**அத்தனொ டொன்றற் கருள்முத லாகுமே.** **8**

**2278.** **வேறுசெய் தான்இரு பாதியின் மெய்த்தொகை**
**வேறுசெய் தான்என்னை எங்கணும் விட்டுய்த்தான்**
**வேறுசெய் யாஅருட் கேவலத் தேவிட்டு**
**வேறுசெய் யாஅத்தன் மேவிநின் றானே.** **9**

---

*"மலம்" என்றது முதற்குறை. 'நிருவிகற்பம்' என்பது 'விகற்பம்' எனவும், 'சன்மார்க்கம்' என்பது 'மார்க்கம்' எனவும் வந்த செய்யுட்களைக் காண்க. (சிவஞான சித்தி சுபக்கம். - 8, 4)*

*இதனால், 'நின்மல துரியா தீதமே பராவத்தைக்கு நேர்வாயில்' என்பது கூறப்பட்டது.*

*2277. **தெளிவுரை :-** மத்தியாலவத்தையிற்றானே நின்மல துரியாதீத நிலை (இதுவே 'சாக்கிரத்தில் அதீதம்' எனப்படுவது) தோன்ற, ஆன்மா அதிலே நிலைத்திருக்குமாயின், சிவனது திருவருள் அதனை விட்டு நீங்காது. அந்நிலையில் நீ பராவத்தையை அடைவதற்குச் சித்த சலனத்தால் பற்றக்கூடிய உலகியல் நிலை வந்து சிறிதும் தீண்டாதபடி சமாதி நிலையில் நில். அப்பொழுது முன் சொன்ன திருவருள் உன்னைச் சிவனோடு ஒன்றுபடுத்தும்.*

***குறிப்புரை :-** 'ஆங்கண்' என்பது பெயராய் நின்று உருபேற்றது. 'தான்' என்றது சிவனை. 'ஒன்ற முதலாகும்' என்றாராயினும், 'முதலாய நின்று ஒன்றுவிக்கும்' என்பதே கருத்து.*

*இதனால், நின்மல துரியாதீதத்தில் சிவன் அருளுருவாய் நின்று, பராவத்தையில் ஆனந்த உருவாதல் கூறப்பட்டது.*

*2278. **தெளிவுரை :-** எவ்வுயிரினின்றும் தன்னை வேறுபடுத்திக் கொள்ளாது, அதனோடு ஒன்றாகியே, அதற்கு அப்பனாகியும் இருக்கின்ற சிவன், எவ்வுலகிலும் உள்ள உடற்கூட்டத்தை 'ஆண், பெண்' என இரு சமபாதிகளாகப் பிரித்து வைத்துள்ளான். என்னையும் தன்னினின்றும் வேறுபடுத்தி, அத்தகையனவாகிய உடம்புகள் உள்ள அனைத்திடங்களிலும் செல்லவிடுத்து, அந்த உடம்புகளுக் குள்ளே புகுத்தினான். பின்பு தன்னினின்றும் என்னை வேறுபடுத்தாது ஒன்றாக்கிக் கொள்கின்ற அருட்கேவலத்திலே செலுத்தி, என்னோடு பொருந்தி நிற்கின்றான்.*

***குறிப்புரை :-** "வேறுசெய்யா அத்தன்" என்பதை முதலிற் கொள்க.*

**2279.** கறங்கோலை கொள்ளியின் வட்டம் கடலில்
நிறஞ்சேர் திரைதயிர் மத்தின் மலத்தே
அறம்காண் சுவர்க்கம் நரகம் புவிசேர்ந்து
இறங்கா உயிர்அரு ளால்இவை நீங்குமே. **10**

---

*இரண்டாம் அடியில் "வேறு செய்தான்" என்பது முற்றெச்சம். 'என்னையும்' என்னும் இறந்தது தழுவிய எச்ச உம்மை தொகுத்தலாயிற்று. அருட்கேவலமாவது, ஆன்ம தரிசனத்தில் தத்துவ சுத்தி நிகழ்ந்த பின்னர் ஆன்ம சுத்திக்கு இடைப்பட்ட நிலை. இதுவே துகளறு போதத்தில் (வெண்பா - 25, 8) 'ஆம் அவதாரமான கேவலம்' எனச் சொல்லப்பட்டது. இதைச் சிறப்பாகக் குறிப்பிடும் முகத்தால் நின்மலாவத்தை முழுதும் குறிக்கப்பட்டது. "வேறுசெய்யா அருட்கேவலம்" என்றதனால், 'நின்மலாவத்தையே பதியைப் பசு பற்றும் நிலை' என்பது விளங்கும். இது சகலத்தில் சுத்தத்து ஞானாவத்தை. இதனால், "வேறு செய்தான் என்னை எங்கணும் விட்டுய்த்தான்" என்றது, சகலத்தில் கேவலம், சகலத்தில் சகலம், சகலகத்தில் சுத்தமாகிய யோகம் - என்னும் இவைகளைக் குறித்ததாயிற்று.*

*'உடம்புகளை ஆண், பெண்' - என இரு வகையாய்ப் பிரித்து வைத்ததைக் கூறியது. 'அவத்தைகள் யாவும் இருபாற்கும் பொதுவே' என்பது உணர்த்துதற்கு, 'மெய்த்தொகை வேறு செய்தான்' என்றே கூறினமையால், உயிரில் - ஆண், பெண் - என்னும் வேறுபாடில்லை என்பதும், 'உயிராகிய பறவைக்குக் கூடாய் உள்ளனவே உடம்புகள்' என்பதும், 'அதனால், வினைக்கீடாக ஆண் உடம்பில் புகுந்திருந்த உயிர் அதனை விட்டுப் பறந்துபோய்ப் பெண் உடம்பில் புகுதலும், பெண் உடம்பில் இருந்த உயிர் அதனை விட்டுப் பறந்துபோய் ஆண் உடம்பில் புகுதலும் கூடும்' என்பது விளங்கும். விளங்கவே, இதனை உணராத மதங்கள், ஆணுக்கன்றிப் பெண்ணுக்கு வீடுபேறில்லை என்றும், 'ஆணைவிடப் பெண்ணுக்கு இறைத்தொடர்பு எளிதும் மிக்கதுமாம்' என்றும் கூறுவன எல்லாம் போலியாதல் பெறப்படும். இம்மந்திரம் சொற்பொருட் பின்வருநிலையணி பெற்றது.*

*இதனால், 'பதியை அடைதற்குப் பசு - ஆண், பெண் - என்னும் வேறுபாடின்றி நின்மலாவத்தையை அடைய முயலல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

*2279. தெளிவுரை :- உயிர்கள் காற்றாடியில் உள்ள ஓலைகளைப் போலவும் கொள்ளியைச் சுழற்றுங்காலத்தில் தோன்றுகின்ற வட்ட வடிவு போலவும், கடலில் அலைகள் போலவும், தயிரைக் கடையும் மத்தைப் போலவும், 'மேல், கீழ், நடு' என்னும் மூன்றுலகங்களிலும் விரையச் சென்று மீண்டு மீண்டு, ஆழ்குழிப்பட்டுத் துன்புற்று, சிவன் அருள்புரிந்த பொழுது அவ்வருளால் ஆழ்குழிகளாகிய இவற்றினின்றும் மீண்டு கரையேறி, அவனை அடைந்து இன்புறும்.*

**2280.** தானே சிவமான தன்மை தலைப்பட
ஆன மலமும்அப் பாசபே தங்களும்
ஆன குணமும்ப ரான்மா உபாதியும்
பானுவின் முன்மதி போல்பட ராவே. **11**

---

***குறிப்புரை :-*** *உவமைகள் ஒரு நிலையில் நில்லாது பல நிலையில் மாறி மாறி விரையச் சுழலுதலை விளக்க வந்தன. இச்சுழற்சிக்குக் காரணம் பாசங்களே.*

*மலம் மாயை, கன்மம், மாயேயம், திரோதாயி, மன்னிச்*
*சலமாரும் பிறப்பி றப்பில் தங்கி, இத் தரை, கீழ், மேலும்*
*நிலையாத கொள்ளி வட்டம், கறங்கென நிமிடத் தின்கன்*
*அலமாரும் இறைவ னாணை யால்உயிர் நடக்கு மன்றே.*

*என்னும் சிவஞான சித்தி (சுபக்கம் - சூத்திரம் 2. 88)யினைக் காண்க.*

*“மலங்கள் ஐந்தால் கழல்வன் தயிரில் பொருமத்துறவே”*

*- தி.8 நீத்தல் விண்ணப்பம் - 29*

*என்பது திருவாசகம்.*

*“ததியுறு மத்தின் சுழலும் என் ஆவி” - அபிராமியந்தாதி*

*என்றார் பிறரும், அறம் காண் - அறம் காரணமாகச் சென்று காண்கின்ற - சுவர்க்கத்தை இத்தகையதாகக் கூறவே, நரகம் மறம் காரணமாகச் சென்று காண்பதாயிற்று. புவி, அறம், மறம் இரண்டாலும் சென்று காண்பது. இறங்கா - வீழ்ந்து ‘இறங்கா நீங்கும் என இயையும், எச்சம் எண்ணுப் பொருளில் வந்தது. இறங்குதல் சொல்லப்பட்டமையானே சுவர்க்க நரக புவிகள் ஆழ்குழியாயின. ‘அக்குழிகளில் வீழ்வன எல்லாம் மலாவத்தைகள்’ என்பது மேற்காட்டிய மேற் கோள்களாலே விளங்கும். ஆகவே, நின்மலாவத்தையே உயிரின் கரையேற்றம் ஆகின்றது.*

*இதனால், சகலமாகிய மலாவத்தை பிறவி நிலையாய்ப் பெருந்துன்பம் விளைவிக்கும் இழிவைக் கூறுமுகத்தால், நின்மலாவத்தையினது உயர்வு உணர்த்தப்பட்டது.*

***2280. தெளிவுரை :-*** *‘ஆன்மாவே சிவம்’ என்று சொல்லத்தக்க நிலையை ஆன்மா அடைந்தபின், அநாதியே பொருந்திய சகசமலமாகிய ஆணவமும், அதனை முன்னிட்டு வந்த, ‘மாயை’ கன்மம், மாயேயம், திரோதாயி என்னும் பாச வேறுபாடுகளும் அவற்றிற்கு உரியவாய் ஆன்மாவினிடத்து விளங்கிய இழி குணங்களும், இவை நீங்கினாலும் நீங்கப் பெற்ற சுத்தான்மா விடத்திலும் பின்னும் நிற்கின்ற இவற்றின் வாசனைகளும் சூரியன்முன் சந்திரன் போல அடங்கி ஒடுங்கிவிடும். (வாதிக்கமாட்டா’ என்றபடி).*

**2281.** **நெருப்புண்டு நீருண்டு வாயுவும் உண்டங்கு**
**அருக்கனும் சோமனும் அங்கே அமரும்**
**திருத்தக்க மாலும் திசைமுகன் றானும்**
**உருத்திர சோதியும் உள்ளத் துளாரே.** **12**

*குறிப்புரை :- பானு - பேரொளி. மதி - சிற்றொளி. பானு இயல்பான ஒளியுடையது. மதி ஒளியைப் பானுவிடமிருந்து பெற்றது. மலங்களின் இழிகுணங்களை இருபாஇருபஃது நான்காம் செய்யுளால் அறிக. ஆன்மாச் சிவமாம் தன்மையை அடைதல் நின்மலாவத்தையில் ஆதலின், 'அதனை அடைக' என்பார், இவ்வாறு அதன் பயனை விரித்தார். இதனானே 'நின்மலாவத்தை' என்னும் பெயர்க்காரணமும் விளங்கிற்று.*

*இதனால், நின்மலாவத்தை அதன் பெயருக்கேற்ற பயனை உடைத்தாதல் கூறப்பட்டது.*

*2281. **தெளிவுரை :-** 'உள்ளம்', ஏற்புழிக்கோடலால், 'யோகியர் உள்ளம்' என்க. ஏனையோர்க்கு அப்பாவனையில்லாமையறிக. 'நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்' (தி.5 ப.2 பா.1) என்றாற் போல்வனவும் இக்கருத்தே பற்றி வரும் என்க. செய்யுளாகலின் உள்ளத்தைச் சுட்டும். 'அங்கு' என்பது முன்னே வந்தது.*

*'தத்துவ தாத்துவிகங்களும் அவற்றைச் செலுத்தும் கடவுளரும் யோக பாவனையால் கடக்கத்தக்கவர்கள்' என்பதை உணர்த்தும் முகத்தால் யோகத்தை விதித்தவாறு.*

*இதனால், நின்மலாவத்தைக்கு உரிய வாயிலின் சிறப்புக் கூறப்பட்டது.*

*2282. **தெளிவுரை :-** இம் - எனின், சிவலோகம் எய்தும் எளிய உபாயம் உணர்த்துதல் நுதலிற்று. அறிவென்னும் தோட்டியால் யானைகள் ஐந்தையும் தம் வயமாகும்படி அடக்கி, சிவஞானத் திரியை ஏற்றி அதுவெனச் சுட்டப்படும் பொருளாகிய அறிவினுள் புகுந்து உடலை மயக்கமற ஆராயும் நின்மலாவத்தையில் இருப்பவர்க்குச் சிவலோகம் ஏற வாய்ப்பான வழி மிக மிக எளிதாம் என்றவாறு.*

*பொறிகளை அறிவென்னும் அங்குசத்தால் அடக்கி, ஞான விளக்கை ஏற்றி, அறிவினுள் புகுந்து, தடையான உடலை மயக்கவுணர்வற நோக்கினால், வீடெய்துதல் எளிதாம் என்பது கருத்து.*

*யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லுவது போலப் பொறிகளும் தம்மைப் பல்லாற்றானும் வளர்த்த பாகனாகிய ஆன்மாவையே வதைத்தலின் அவற்றை யானைகளாக உருவகித்தார். அறிவென்னும் தோட்டி என்க. 'உரனென்னுந் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்' என்பதும் இப்பொருட்டு, ஏகதேச உருவகம்.*

**2282.** ஆனைகள் ஐந்தும் அடக்கி அறிவென்னும்
ஞானந் திரியில் கொளுவி அதனுட்புக்கு
ஊனை இருளற நோக்கும் ஒருவற்கு
வானகம் ஏற வழிஎளி தாகுமே. **13**

**2283.** ஆடிய காலின் அசைக்கின்ற வாயுவும்
தாடித் தெழுந்த தமருக ஓசையும்
பாடி யெழுகின்ற வேதா கமங்களும்
நாடியி னுள்ளாக நான்கண்ட வாறே. **14**

---

*திரி - தானியாகு பெயராக விளக்கையுணர்த்திற்று. திரியைக் கொளுவி எனவே, ஞான விளக்கேற்றி என்க.*

***குறிப்புரை :-*** *அறிவு என்னும் ஞானம் - அறிவுகளில் எல்லாம் மேலானமை பற்றி 'அறிவு' என்றே சொல்லப்படுகின்ற மெய்யறிவு. நாயனாரது நோக்கில் அது சிவஞானமே. "திரி" என்றது உயிர் அறிவை. "உயிர் எனும் திரி மயக்கி" என்பதிலும் "உயிர்" என்பது அப்பொருட்டு. ஞானத்தை - தீ - என்னாதது ஏகதேச உருவகம். உயிரை, 'திரி' என்றே கூறியது சிறப்புருவகம். "அதனுட்புக்கு ஊனை நோக்கும்" என்றதை, 'ஊனுட்புக்கு அதனை நோக்கும்' எனக் கொள்க. இருளற நோக்கியவழி முன் புலப்படாதிருந்தவை புலப்படுதல் போல, ஊனை இருளற நீக்கினால் முன் மந்திரத்திற் கூறியன எல்லாம் விளங்கும் ஆகலின் "வானகம் ஏற வழி எளிதாமே" என்றார். "வானகம்" என்றது யோகத்திற்கு அப்பாற்பட்ட நின்மலாவத்தையை,*

*உடம்பெனும் மனைய கத்துள் உள்ளமே தகளி யாக,*
*மடம்படும் உணர்நெய் யட்டி உயிரெனுந் திரிம யக்கி,*
*இடம்படு ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில்,*
*கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே.*

*- தி.4 ப. 75 பா.4*

*என்று அருளினமையை நோக்குக. மடம்படும் உணர் - பசு போதம்.*

*இதனால், 'மேல் குறிப்பால் உணர்த்திய யோகம் சிவயோகம் ஆதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

*2283.* ***தெளிவுரை :-*** *நான் எனது விருப்பப்படியே விட்டும், வாங்கியும் இயக்குகின்ற பிராணவாயுவையும், மிகுத்தெழுகின்ற தமருக ஓசையையும், வல்லுநர்கள் பாடுதலால் எழுகின்ற வேதாகம ஒலிகளையும், நான் கண்ட முறை, சுழுமுனா நாடியினுள்ளாக, நடனத்தில் தூக்கிய காலின் கீழாம்.*

***குறிப்புரை :-*** *'யோகத்திலே ஞானத்திற்குரிய எல்லாவற்றையும் சிவனது நடனத்தின் வழியே பெறலாம்' என்றபடி. 'தடித்து' என்பது செய்யுள் நோக்கி*

**2284.** முன்னை யறிவினில் செய்த முதுதவம்
பின்னை அறிவினைப் பெற்றால் அறியலாம்
தன்னை அறிவது அறிவாம் அஃதன்றிப்
பின்னை அறிவது பேயறி வாகுமே. **15**

---

*நீட்டல் பெற்றது. அசைகின்ற வாயு என்பதை சிலம்பொலியாகவும் கொள்வர். சிவபெருமானுக்கு வேதங்களே சிலம்பு. அதன் ஒலி பரநாதம் என்க.*

*இதனால், 'சிவயோகமே ஞானத்திற்கு வாயில்' என்பது உணர்த்தப்பட்டது.*

*2284. **தெளிவுரை :-** முதலில் நிகழும் அறிவு பெரிய தவ அறிவாயும், பின்னர் நிகழும் அறிவு அந்தத்தவத்தால் வரும் மெய்யறிவாயும் நிகழ்தல் வேண்டும். பின்னை அறிவு மெய்யறிவாய் நிகழ்ந்தவழியே முன்னை அறிவு தவ அறிவாய் நிகழ்ந்தமை அறியப்படும். இல்லையேல், அது வெற்றறிவாக அறியப்படும். முதல் அறிவால் நிகழ்ந்த தவத்தால் பெறத்தக்க அறிவாவது, தன்னை உள்ளவாறு அறியும் அறிவே. தன்னை உள்ளவாறு அறியாமல் பிறவற்றை அறியும் அறிவுகள் எல்லாம் மருள் அறிவுகளேயாம்.*

*குறிப்புரை :- முதுதவம் - பெருந்தவம். "அறிவினில்" என்ற 'இன்' ஏதுப் பொருளில்வந்த ஐந்தாம் உருபு. பின்னைப் பெற்றால்' என இயையும். "அறிவினைப் பெற்றால்'' என்பதில் 'அறிவு' எனப்பட்டது. பின் இரண்டடிகளால் உடன்பாட்டாலும் எதிர்மறையாலும் 'இன்னது' என விளக்கப்பட்டது.*

*ஆன்மாத் தன்னை உள்ளவாறு அறிதலாவது, உலக வாழ்க்கையானே தனக்குச் சுதந்திரம் இன்மையை உணரும் முகத்தால், தனக்கு ஒரு தலைவன் உளன் ஆதலை அனுமானத்தால் உணர்தலும், பின்னர்த் தனது தவத்திற்கு ஏற்ப நிகழும் நிகழ்ச்சிகளால் அனுபவமாக உணர்தலுமாம். அனுமானத்தால் உணருமாற்றை ஒளவையார்,*

> *ஒன்றை நினைக்கின் அதுஒழிந்திட் டொன்றாகும்;*
> *அன்றி அதுவரினும் வந்தெய்தும்; - ஒன்றை*
> *நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்;*
> *எனைஆளும் ஈசன் செயல்.* - நல்வழி, 27

*என விளக்கினார். 'பின்னை' என்பது 'மற்று' என்னும் பொருளைத் தந்தது. பேயினது அறிவு நெறிப்படா அறிவு. அஃது உவம ஆகுபெயராய் அதுபோன்ற அறிவைக் குறித்தது.*

*'பல பிறப்புக்களில் செய்த தவமுதிர்ச்சியால் பின்னர்ச் சில பிறப்புக்களில் ஞானம் நிகழும்' என்பதும், 'அந்த ஞானமாவது இது' என்பதும் உணர்த்தும் முகத்தால், 'ஞான நிகழ்ச்சியே நின்மலாவத்தை' என்பது இதனாற் கூறப்பட்டது.*

**2285.** செயலற் றிருக்கச் சிவானந்த மாகும்
செயலற் றிருப்பார் சிவயோகம் தேடார்
செயலற் றிருப்பார் செகத்தோடுங் கூடார்
செயலற் றிருப்பார்க்கே செய்திஉண் டாகுமே. **16**

---

"இவ்வான்மாக்களுக்கு முற்செய்தவத்தான் ஞானம் நிகழும்" (சிவஞானபோதம் சூத்திரம் - 8, அதி. 1) எனவும், "தம்மை உணர்ந்து, தமை உடைய தன்னுணர்வார் எம்மையுடைமை" எனவும் மெய்கண்ட தேவரும் கூறினார்.

*2285. **தெளிவுரை :-** நின்மல துரியத்தை அடைந்தவர்கட்கே, அதன் பின்னர் ஆனந்த நிலையாகிய அதீத நிலை வாய்க்கும். அதனால் அவர் அந்த அதீத நிலையை அடைய முயலுதலன்றி, முன் சொன்ன சிவயோகத்தைப் புரிய எண்ண மாட்டார்கள். அவ்யோகத்தைப் புரியாமையால், அவர்கள் உலகப்பற்றில் வீழ்ந்துவிடமாட்டார்கள். ஆகவே, சிவானுபவமாகிய செயல் ஞான துரியாதீதத்தை அடைந்தவர்கட்கல்லது. ஏனைச் சிவயோகிகட்கு உண்டாக மாட்டாது.*

***குறிப்புரை :-** ஆன்மா, "தான்பணியை நீத்தல்" (சிவப்பிரகாசம் - 71) நின்மல துரியத்திலேயாதலை அறிக. ஆன்மாச் செயலற்றிருத்தலாகிய இதனையே நாயனார் முதல் தந்திரத்து 'உபதேசப்' பகுதி 15, 16, 17-ஆம் மந்திரங்களில் நயம்பட விளக்கியிருத்தல் காண்க.*

*இதனால், ஒன்று இடையிட்டு மேற்கூறிய சிவயோகம் நின்மலாவத்தைக்குச் சாதனமேயன்றிச் சாத்தியம் ஆகாமை உணர்த்தப்பட்டது.*

*ஆன்மா தன் செயல் அற்று, 'எல்லாம் சிவன் செயல்' என்று இருக்கும் நின்மல துரிய நிலையே;*

*"கூட்டில் வாள் சாத்தி நிற்றல்"* **- திருவுந்தியார் - 30**

*எனவும்,*

*செய்தற் கரிய செயல்பலவும் செய்துபலர்
எய்தற் கரியதனை எய்தினர்கள் - ஐயோ! நாம்
செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு.* **- திருக்களிற்றுப்படியார் - 61**

*எனவும் சாத்திரங்கள் கூறுகின்றன.*

*2286. தெளிவுரை :- (கீழாலவத்தை மத்தியாலவத்தைகளை நோக்க, மேலாலவத்தையாகிய யோகாவத்தை நிறைவுடையதேயாம். எனினும், ஞானாவத்தையை நோக்கின் அது குறைவுடையதேயாகும். ஆகையால்) இயமம்,*

**2286.** தான்அவ னாகும் சமாதிகை கூடினால்
ஆன மலம்அறும் அப்பசுத் தன்மைபோம்
ஈனமில் காயம் இருக்கும் இருநிலத்து
ஊனங்கள் எட்டும் ஒழித்தொன்று வோர்கட்கே. **17**

---

*நியமம் முதலாக உள்ள அந்த எட்டுறுப்புக்களையும் (சமாதி உட்படக்) கடந்து, நின்மல துரிய நிலையில் "அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி நிற்றலாகிய" (சிவஞானபோதம், சூத்திரம் - 10) அந்தச் சமாதி கைவந்தால்தான் அநாதி தொட்டே பற்றியுள்ள ஆணவமலம் வாசனையும் இன்றி நீங்கும். (அப்பொழுது பின் வந்த மாயை கன்மங்களாகிய பாசங்களும் அவ்வாறாம். ஆகவே, அப்பொழுதுதான்) ஆன்மா, 'பசு' என்கின்ற நிலைமை நீங்கப்பெற்று, 'சிவம்' எனப்படும் நிலையை எய்தும்.*

*குறிப்புரை :- ஒளி வந்தவழியல்லது இருள்போகாதது போல, ஞானம் வந்த வழியல்லது அஞ்ஞானத்தைச் செய்வதாகிய ஆணவ மலம் அறுமாறில்லை. "அஞ்ஞானத்தால் உறுவதுதான் பந்தம்; உயர் மெய்ஞ்ஞானந்தான் - ஆனத்தால் அதுபோவது; அலர்கதிர்முன் இருள் போல்" (சுபக்கம் - 8, 27) என்பது சிவஞான சித்தி. இதனால் இங்கு "சமாதி" என்றது ஞான சமாதியேயன்றி, யோக சமாதியன்று. "தான் அவனாகும் சமாதி" என எடுத்தோதியதும் அது விளங்குதற் பொருட்டு. இந்த ஞான சமாதியையே திருக்களிற்றுப்படியார்,*

*"சார்பு கெடஒழுகின் நல்ல சமாதியும்; கேதப்*
*படவருவ தில்லைவினைப் பற்று"* - *வெண்பா - 34*

*எனக் கூறிற்று.*

*ஈற்றடியை முதலிற் கூட்டி, 'ஈனமில் காயம் இருநிலத் திருக்கும்' என முடிக்க. காயம் இருத்தலைக் கூறியது. 'ஞான சமாதியை அடைந்தோர் காயத்தை இருத்த வேண்டினும் இருக்கும்' என்பது உணர்த்துதற்கு, ஞானிகளது உயிரேயன்றி, உடம்பும் நின்மலமேயாதலைக் குறித்தற்கு, "ஈனம் இல் காயம்" என்றார்.*

*இதனால், 'யோக துரியாதீதத்தைக் கடந்து நின்மலா வத்தையை அடைதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

*2287. தெளிவுரை :- (இருவினையொப்பு மலபரிபாகம் வந்தபொழுது ஆன்ம அறிவில் பதிகின்ற அருட்சத்தியை மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என அதன் தன்மை பற்றி வழங்கப்படுமாயினும் அவை 'நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை' என்னும் கலைகளின் வகையாகவே சொல்லப்படுகின்றது. (சிவநெறிப் பிரகாசம் - 156) அந்த ஐந்து சக்திகளும் சிவனது திருவடியேயாம். (அருளை 'அடி' எனக் கூறுதல் மரபு. அதனால், சத்தி நிபாதத்தில் உண்டாகின்ற ஞானமும் 'திருவடி ஞானம்' என்றே கூறப்படும்). அந்த ஞான*

**2287.** **தொலையா அரனடி தோன்றும்ஐஞ் சத்தி**
**தொலையா இருள்ஒளி தோற்ற அணுவும்**
**தொலையாத் தொழில்ஞானம் தொன்மையில் நண்ணித்**
**தொலையாத பெத்தமுத் திக்கிடை தோயுமே.** **18**

---

*ஒளி தோன்றியவுடன், அநாதி தொட்டு விடாது பற்றிநிற்கின்ற ஆணவ இருள் நீங்கும். அது நீங்கவே, ஆன்மாவிற்கு இயல்பாய் உள்ள இச்சாஞானக்கிரியா சத்திகள் (ஆணவத்தால் தடுக்கப்பட்டிருந்தனவேயன்றி, அழிக்கப்படாமையால்) விளக்கம் பெற்று ஆன்மாத் தனது இயற்கை நிலையை அடையும். அடைந்த பொழுது முதற்கண் முற்றும் நீங்காத பெத்தமும் அது முற்றும் நீங்கிய முத்தியும் என்னும் இரண்டற்கும் இடைநிலையில் ஆன்மா இருக்கும்.*

*குறிப்புரை :-* அந்த நிலையே நின்மலாவத்தை என அறிக. 'தோன்றும் ஐஞ்சத்தி தொலையா அரனடி' எனவும், 'ஒளிதோற்ற தொலையா இருள் தொலையா' எனவும் கூட்டுக.

'ஒளிதோற்ற தொலையா இருள் தொலையா' எனப் பொதுப்பட ஓதினாராயினும் சொல்லுவாரது குறிப்புத் திருவடி ஞானத்தின் மேலதும், ஆணவ இருளின் மேலதும் ஆதலை அறிக. மூன்றாம் அடியில் நின்ற "தொலையா" என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். மூன்றாம் அடியில் உள்ள "தொலையா" என்பது 'செய்யா' என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். அதனை, 'தொலைய' எனச் செயவெனெச்சமாகத் திரித்துக்கொள்க. இங்ஙனமாகவே இம்மந்திரம் சொற்பின்வருநிலையணி பெற்றதாம்.

இதனால், ஞானாவத்தையே நின்மலாவத்தையாதலன்றி, யோகாவத்தை அன்னதாகாமை தெரித்துணர்த்தப்பட்டது.

*2288. தெளிவுரை :-* உயிர்கள் அவற்றைச் செலுத்துகின்ற சிவசத்தியின் தன்மைக்கு ஏற்ப மயக்க உணர்வைப் பெற்றுப் பெத்தத்தையும், மெய் உணர்வைப் பெற்று முத்தியையும் எய்தும். ஏனெனில், அந்த 'மயக்கம், மெய்' என்னும் இரண்டையும் உயிர்கட்குத் தருகின்ற ஞானமாகிய தன் சத்திக்குச் சத்தனாய் உள்ள சிவன், ஒரு பெற்றியில் நில்லாது இருவேறாய் நிற்கின்ற அந்தச் சத்திக்கு உயிராய் நின்று அதனைச் செலுத்துவன் ஆதலின்.

*குறிப்புரை :-* தோன்றிய பெத்தம் - கட்டுநிலை. தோன்றிய முத்தி - வீட்டுநிலை. 'உயிர், சத்தியால் மான்று பெத்தத்தையும், தெருண்டு முத்தியையும் பெறும்' என்க. இது முறை நிரல்நிறை. உயிர் பக்குவம் எய்தாத பொழுது மலங்கள் அதன் ஆற்றலை அடக்கித்தாமே மேற்பட்டு நிற்றலால் அப்பொழுது சிவனது அப்பாசங்களைச் செலுத்தி அவை வழியாக உயிருக்கு மயக்க உணர்வையும்,

**2288.** தோன்றிய பெத்தமும் முத்தியும் சூழ்சத்தி
மான்றும் தெருண்டும் உயிர்பெறும் மற்றவை
தான்றரும் ஞானந்தன் சத்திக்குச் சத்தன்றான்
ஊன்றல்இல் லாஉள் ளொளிக்கொளி யாகுமே. **19**

**2289.** அறிகின் றிலாதன ஐயேழும் ஒன்றும்
அறிகின்ற என்னை அறியா திருந்தேன்
அறிகின்றாய் நீஎன் றருள்செய்தான் நந்தி
அறிகின்றேன் நான்என் றறிந்துகொண் டேனே. **20**

---

*உயிர் பக்குவம் எய்திய காலத்தில் அதன் ஆற்றலை மலங்கள் அடக்க மாட்டாது, அதற்குக் கீழ்ப்பட்டுப் போதலால், அப்பொழுது சிவனது சத்தி தான் நேர்நின்று உயிர்கட்கு மெய்யுணர்வையும் தரும். அதனால், "மான்றும், தெருண்டும் பெறும்" என்றார். மான்று - மயங்கி. தெருண்டு - தெளிந்து. ஒன்றாகிய சத்தியே, பாசத்தின் வழிநின்று அறிவை மயக்கும் பொழுது 'திரோதான சத்தி' என்றும், மயக்காது விளக்கும் பொழுது 'அருட்சத்தி' என்றும் பெயர் பெறும். 'ஞானத்தன்' என்பது இன்னோசை நோக்க மெலித்தல் பெற்றது. ஒன்றேயாயினும் இரண்டாய்ச் செயலாற்றுதல்பற்றிச் சத்தியை "ஊன்றல் இல்லா ஒளி" என்றார். மற்று, தான் அசைகள். "ஒளிக்கு ஒளி" என்றது, 'சிவன் செயற்படுத்திய வழியிலே சத்தி செயற்படும்' என்பது உணர்த்துதற்கு முன்பு, "சத்திக்குச் சத்தன்" என்றதை இனிது விளக்கியவாறு.*

*இதனால், மேற்கூறிய பெத்தமும் முத்தியும் சிவனாலே ஆமாறு கூறப்பட்டது.*

*2289. தெளிவுரை :- தத்துவங்கள் முப்பத்தாறினையும், அவை தாமே அறிந்தும், செய்தும் வருவனவாக மயங்கி, உண்மையில், 'அவற்றைக் கருவிகளாகக் கொண்டு அறிபவனும் செய்பவனும் நான்தான்' என்பதையான் பெத்த காலத்தில் அறிந்து கொள்ளாமலே மயங்கியிருந்தேன். பின்பு நந்தி பெருமான், மேற்குறித்த உண்மையை எனக்கு அறிவுறுத்தருளினார். அந்த உண்மையை அங்ஙனமே அறிந்து கொண்டமையால், முத்தனாயினேன்.*

*குறிப்புரை :- 'பெத்தம், முத்தி' என்பன ஆற்றலால் கொள்ளக் கிடந்தன. 'இவ்விரண்டிற்கும் காரணம் பக்குவம் எய்தாமையும், எய்தினமையும்' என்பது மேலே கூறப்பட்டது.*

*இதனால், 'மெய்யுணர்வு திரோதானசத்தி அருட்சத்தியாய் மாறின அளவில் பெறப்படாது. குருவினாலே பெறப்படும்' என்பது கூறப்பட்டது.*

*2290. தெளிவுரை :- தான் 'சிவன்' என்கின்ற நிலைமை நீங்கி, 'சிவன்'*

**2290.** **தான்அவன் ஆகியன் ஞானத் தலைவனை**
**வானவர் ஆதியை மாமணிச் சோதியை**
**ஈனமில் ஞானத்து இன்னருட் சத்தியை**
**ஊனம் இலாள்தன்னை ஊனிடைக் கண்டதே.** **21**

---

*என்கின்ற நிலைமையை அடைந்த பெரியோன் சிவன் சத்தி இருவனாயும் நேரே கண்டது தன்னுடைய உடம்பிற்குள்ளேயாகும்.*

*குறிப்புரை :- 'சகலத்தில் சுத்தத்து ஞானாவத்தையாகிய நின்மலாவத்தையிலாம்' என்றபடி 'அந்நிலையை அடைந்தவன் பின் பராவத்தை அடைதல் உறுதி' என்பது கருத்து. முன் இரண்டு அடிகளில் சிவனும், பின் இரண்டு அடிகளில் சத்தியும் குறிக்கப்பட்டனர். அவ்வடிகளின் பொருள் வெளிப்படை. "கண்டது" என்னும் ஒருமை அத்தொழிலைக் குறித்தது. 'கண்டது ஊனிடை' என மாற்றியுரைக்க.*

*இதனால், 'சகலத்திலேயே நின்மலாவத்தையில் சிவசத்திகளை அவர்களது ஞானமாகிய கண்ணால் காணுதல் கூடும்' என்பது கூறப்பட்டது.*

*2291. **தெளிவுரை :-** ஆணவ இருளைச் சிறிதே நீக்குவனவாகிய மாயா காரியக் கருவிகளும் அவற்றால் சிறிதே நீக்கப்படுகின்ற ஆணவ இருளும், அதனை நீக்க உதவுகின்ற சிவசத்தியும் அச்சத்தியால் காப்பாற்றப்படும் ஆன்மாவும் ஆகிய இவைகளை முறையாக முன்னர் உணர்தல் வேண்டும். (அவ்வாறு உணர்தலே அரிது. ஆயினும்) அதன்பின் அவற்றோடு நில்லாது ஆன்மாவின் எளிய நிலையையும், அந்நிலையை உணர்ந்து சிவன் அதன்மேல் கொள்ளும் இரக்கத்தையும், அவ்விரக்கத்தால் ஆன்மாவிற்கு உண்டாகின்ற அனைத்துப் பொருள்களையும் பற்றிய உண்மையான உணர்வின் சிறப்பையும் உணர்ந்து, பின் பல பொருள் உணர்வை விடுத்துச் சிவன் ஒருவனையே உணர்கின்ற உணர்வு உண்டாகுமானால், அதன் பின்பே சிவனது பேரின்பம் ஆன்மாவிற்கு உளதாகும்.*

*குறிப்புரை :- பின்னர், "பரை" எனத் திருவருள் குறிக்கப்படுதலால், முதற்கண் "ஒளி" என்றது மாயையாகிய ஒளியையே குறித்தது. அளியது - அளிக்கத்தக்கது. அஃதாவது, இரங்கத்தக்கது. அளி - கருணை; அருள் - கருணையின் காரணமான இறைவன் ஆற்றல்.*

*துகளறு போதத்தில், ஒளியை உணர்தல், முதல் ஏழு அவதரங்களாகவும், இருளையுணர்தல், அடுத்து மூன்று அவதரங்களாகவும், ஆன்மாவை உணர்தல், அடுத்த 'தன்னுண்மை சைதன்னிய தரிசனம்' எனவும், இரக்கத்தை (திருவருளை) உணர்தல் 'ஞானதரிசனம்' எனவும் தெருளை உணர்தல் அடுத்த எட்டு அவதாரங்களாகவும் கூறப்பட்டன. இவற்றின் பின்னர்க் கூறப்பட்டன எல்லாம் சிவன் ஒருவனையே உணர்ந்து நிற்கும் நிலைகளாம். அந்நிலைகளே சிவானந்த*

**2291.** ஒளியும் இருளும் பரையும் பரையுள்
அளிய தெனலாகும் ஆன்மாவை யன்றி
அளியும் அருளும் தெருளும் கடந்து
தெளிபவ ருள்ளே சிவானந்த மாமே. **22**

**2292.** ஆனந்த மாகும் அரன்அருட் சத்தியில்
தான்அந்த மாம்உயிர்தானே சமாதிசெய்து
ஊன்அந்த மாய்உணர் வாய்உள்ளுணர்வுறின்
கோன்அந்தம் வாய்க்கும் மகாவாக்கியம் ஆமே. **23**

---

*விளைவுகளுமாம். "பரை" என்பது பொதுவாக 'சத்தி' என்னும் பொருட்டாய் நின்றது. இதனால், நின்மலாவத்தையின் உட்கூறுகள் ஒருவாறு விளக்கப்பட்டன.*

*2292. தெளிவுரை :- 'சிவானந்தம்' என்பதும் சிவனது அருட்குணங்களில் ஒன்றேயாம். (வரம்பில் இன்பம்) ஆகவே, அச்சத்தி வழியாக ஞான நிலைகளில் முடிநிலையை அடைந்த உயிர் பின் சிவத்திலே அழுந்தி, ஐவகை உடம்புகளினின்று நீங்கி, அறிவே வடிவாய், அந்த அறிவுக்கு அறிவாய் உள்ள சிவத்திலேயே பிரிதல் இன்றி நிற்குமாயின் சிவனை முற்றும் பெறுதலாகிய மிகப்பெரிய பேறு உளதாகும்.*

*குறிப்புரை :- ஊனந்தமாய் - உடலனுபவமாகிய மாயா காரிய நுகர்ச்சிகளைத் தாண்டி. கோனந்தம் - சிவமாந்தன்மை. "தானே" என்பது, 'அந்த உயிரே' எனத் தேற்றப் பொருள் தந்தது. சமாதி - தான் அதுவாதல், கோபம் - கோவம், பாபம் - பாவம்' என வருதல் போல, 'மகாபாக்கியம், என்பது, 'மகா வாக்கியம்' என வந்தது. பாக்கியம் - பேறு. இவ்வாறன்றி 'மகா வாக்கியம்' என்றே கொள்ளுதற்கு இங்கு ஏதும் இயைபில்லாமை அறிக. இதனால், முன்மந்திரத்தில் குறிக்கப்பட்ட சிவானந்தம் வாய்க்குமாறும் 'அதுவே பெரும்பேறாகிய ஆன்மலாபம்' என்பதும் கூறப்பட்டன. இப்பேறு கிடைத்தற்குக் கூறப்பட்ட வழி நின்மலாவத்தையே யாதலை நோக்குக.*

*2293. தெளிவுரை :- அறிவித்தாலும் அறியும் தன்மையில்லாத அபக்குவர்க்கும் குருவின் உபதேசம் ஏற்புடையதன்று; (பயன் இன்மையால்) முற்பிறவியிலே கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தும் நிட்டை கூடாது விட்டமையால் கருவிலே திருஉடையவராய்ப் பிறந்து, ஞானத்தின் திருவுருவாயே நிட்டையை வேண்டி நிற்பவர்க்கும் குருஉபதேசம் வேண்டுவதன்று. எனவே அறிவித்தால் அறியும் பக்குவம் உடையவராய் அறிவிப்பாரை நாடி நிற்கும் அவர்கட்கே ஞான குரவர் உபதேசத்தைச் செய்வாராக. பக்குவம் வாய்ப்பினும், தம்மையும், தலைவனையும் குருஉபதேசத்தாலன்றித் தாமாகவே அறிபவர் உலகில் யார் இருக்கின்றார்கள்? (ஒருவரும் இல்லை).*

**2293.** **அறிவிக்க வேண்டா அறிவற் றவர்க்கும்**
**அறிவிக்க வேண்டா அறிவுற் றவர்க்கும்**
**அறிவுற்ற றறியாமை எய்திநிற் போர்க்கே**
**அறிவிக்கத் தம்அறிவு ஆர்அறி வாரே.** **24**

*குறிப்புரை :- அறிவித்தால் அறியும் ஆற்றலும், 'அறியவேண்டும்' என்னும் அவாவும் இல்லாதவர் 'பிராகிருதர்' என்றும், முற்பிறப்பிலே கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தவர் 'சாமுசித்தர்' என்றும், பரிபக்குவம் வாய்ந்து, ஞானகுருவைத் தேடுகின்றவர் 'வைநயிகர்' என்றும் சொல்லப்படுவர். இதனை, 'பண்டை நல்தவத்தால் தோன்றி' (சுபக்கம், பாயிரம் - 4) என்னும் சிவஞானசித்திச் செய்யுளின் உரையால் உணர்க. இவர்களையே இங்கு நாயனார் 'அறிவற்றவர், அறிவுற்றவர், அறிவுற்று அறியாமை எய்தி நிற்பார்' என்றார். அயர்தல் - மறத்தல்.*

| | |
|---|---|
| பிராகிருதர் | அறிவித்தால் அறியும் ஆற்றலும், அறியவேண்டுமென்ற அவாவும் இல்லாதவர். |
| சாமுசித்தர் | முற்பிறப்பிலே கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தவர். |
| வைநயிகர் | பரிபக்குவம் வாய்ந்து ஞானகுருவைத் தேடுகின்றவர். |

*இம்மூன்று பெயர்களில் நடுவில் உள்ள ஒன்றில் உள்ள 'அறிவு' என்பது மட்டும், 'ஞானம்' என்றும், மற்றையிரண்டும் 'அறியும் ஆற்றல்' என்றும் பொருள் தந்தன. "அறியாமை" என்பதில், 'மை' வினையெச்ச விகுதி. எனவே, 'அறியாமல்' என்பது அதன்பொருள். அறியும் ஆற்றல் இருந்தும் அறியாமல் நின்றதற்குக் காரணம் அறிவிப்பார் இன்மை.*

*இறுதியில், "தம் அறிவு ஆர் அறிவார்" என்றதும், 'அறியும் ஆற்றலைப் பெற்றவர்க்கும் அறிவிப்பார் இன்றி அறிதல் இயலாது' என்பதை விளக்குதற்கேயாம். உம்மை இரண்டும் எதிரதுதழுவியும், இறந்தது தழுவியும் நின்றன. முன்னிரண்டடிகளில் பாடம் திரிவுபட்டுள்ளது. "அறிவிக்க" என்பது வியங்கோள். அதற்கு எழுவாய், ஆற்றலால் வந்து இயைந்தது.*

*இதனால், ஞான குரவராயினார்க்கு ஒரு கட்டளைபோல வைத்து பரிபக்குவம் இல்லார்க்கு ஞானாவத்தை நிகழாமையும், பரிபக்குவம் உடையார்க்கும் ஞானகுரு இன்றி அது நிகழாமையும் கூறப்பட்டன. ஞானம் ஞான குரு இன்றி நிகழாமை மேலே சில இடங்களில் கூறியிருக்கவும், இங்கும் அதனைக் கூறியது, 'பெற்றதன் பெயர்த்துரை நியமப்பொருட்டு' என்பவாகலின் நின்மலாவத்தை கூறும் இவ்விடத்திலும் அதனை வலியுறுத்தற்பொருட்டாம்.*

*2294. தெளிவுரை :-* **சகலத்தில் சுத்தமாகிய மேலாலவத்தையும்,** *(யோகாவத்தையும்)* **சகலத்திற் சகலமாகிய மத்தியாலவத்தையும், சகலத்தில் கேவலமாகிய கீழாலவத்தையும்** *ஆகிய இவைகளின் தொடர்புகள் சிறிதும்*

**2294.** சத்தும் அசத்தும் சதசத்தும் தாம்கூடிச்
சித்தும் அசித்தும் சதசித்து மாய்நிற்கும்
சுத்தம் அசுத்தம் தொடங்காத் துரியத்துச்
சுத்தராய் மூன்றுடன் சொல்லற் றவர்கட்கே. **25**

---

*இல்லாது நீங்கிய நின்மல துரியத்தில் நிற்றலால் சுத்தான்மாக்களாய், சொல் நிகழ்ச்சி அத்துரியத்திற்கு முற்பட்ட, 'சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி' என்னும் மூன்றோடே நீங்கப் பெற்றவர்கட்கு, சத்தாய் உள்ள சிவமும், அசத்தாய் உள்ள பாசங்களும், சதசத்தாய் உள்ள ஆன்மாவும் முறையே சித்தும், அசித்தும், சிதசித்தும் ஆதல் முற்ற அனுபவமாய் விளங்கும்.*

*குறிப்புரை :-* மூன்றாம் அடி முதலாகத் தொடங்கியுரைக்க. அசுத்தம் போலத் தொடற்பற்றதாகக் கூறினமையால், "சுத்தம்" என்றது சகலத்திற் சுத்தமேயாயிற்று. முப்பொருள்களின் இயல்பு சத்து, அசத்து, சதசத்து ஆதல் மட்டும் விளங்கல் நிரம்பாமையால், 'அவை முறையே சித்தும், அசித்தும், சிதசித்துமாதல் விளங்கும்' என்றார். சிவஞான போதத்துள்ளும் 'இருதிறன் அல்லது சத்தாம்' என்று ஒழியாது, "சிவசித்தாம்" என அருளியதையும் (சூத்திரம் 6) அதன் உரையையும் நோக்குக.

'சத்து' என்பது, 'உள்ளது' என்றும், 'அசத்து' என்பது 'இல்லது' என்றும், 'சதசத்து' என்பது, 'சத்தோடு கூடிச் சத்தாயும், அசத்தோடு கூடி அசத்தாயும் நிற்கும்' என்றும் பொருள் தரும். இன்னும் 'உள்ளது' என்பது, 'என்றும் ஒரு படித்தாய் உள்ளது' என்றே பொருள்தரும். அதனால் 'அசத்து' என்பது 'சிலகாலம் உள்ளதாய் இருந்து பின் இல்லதாகிவிடும்' என்றே பொருள் தரும். இம்முறையில் சத்தாய் உள்ளது சித்தாயும் இருக்கும்; அஃதாவது அறிவாய், ஒரு ஞான்றும் அறியாமை உடையதாகாமல் இருக்கும். அசத்தாய் உள்ளது அசித்தாயும் இருக்கும். அஃதாவது எஞ்ஞான்றும் எவ்வாற்றானும் அறிவுடையதாகாது அறியாமையே உடையதாயே இருக்கும் 'சடம்' என்பது இதுவே. சதசத்தாய் உள்ளது சிதசித்தாயும் இருக்கும். அஃதாவது சித்தோடு கூடிச் சத்தாயும் அஃதாவது அறிவுடையதாயும் அசித்தோடு கூடி அசத்தாயும் அஃதாவது அறியாமையுடையதாயும் இருக்கும். 'இவையெல்லாம் நூலறிவால் அறியப்பெறினும் அநுபவமாக விளங்குவது நின்மல துரியத்தில்' என்பது இம்மந்திரத்தில் கூறப்பட்டது. "கூடி நிற்கும்" என்றது அனைத்தும் விளங்கும்' என்றபடி. ஏகாரம் பிரிநிலை.

இதனால், 'நின்மலாவத்தையில்தான் அனுபவ ஞானம் உண்டாகும்' என்பது கூறப்பட்டது.

*2295. தெளிவுரை :-* புருடன், (ஆன்மா) பிறிதொரு பொருள் அறிவியாமல் தானாகவே ஒன்றையும் அறியும் தன்மையுடையனல்லன்; அதனால், அவன்

**2295.** தானே அறியான் அறிவிலோன் றானல்லன்
தானே அறிவான் அறிவு சதசத்தென்
றானால் இரண்டும் அரனரு ளாய்நிற்கத்
தானே யறிந்து சிவத்துடன் தங்குமே. **26**

---

*அறிவில்லாத சடப்பொருளும் அல்லன். ('அறிவித்தால் அறிவான்' என்றபடி) இத்தன்மை உடைய இவன், பிறர் அறிவிக்க வேண்டாது, தானே எல்லா வற்றையும் அறிபவனாகிய சிவனது அறிவைக்கொண்டு தன்னை முன்மந்திரத்தில் கூறியவாறு, 'சதசத்து' என அறிவானாயின்' அப்பொழுது இவனும், இவனால் சாரப்பட்ட கருவித் தொகுதியும் சிவனது அருளாகியே நிற்கும். ('இவனும் சிவமாகி' இவனது கரணங்களும் சிவகரணமாய்விடும்' என்றபடி). அங்ஙனம் நிற்கவே, முன்பு அசித்தோடு கூடி அசித்தாய் இருந்த, அல்லது ஏகதேசமாய் அறியும் சிற்றறிவை உடையவனாய் இருந்த இவனே, எல்லாவற்றையும் அறியும் அறிவுடையவனாகிச் சிவத்தோடே கூடி இரண்டற்றிருப்பான்.*

*குறிப்புரை :- திருவருள் துணைநின்று காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல் காணக்கண்ணினைக் கண்டு காட்டினால் தன்னைச் சதசத்து என்றுணருவான். அங்ஙனம் உணரும்போதும் தனக்குத் திருவருள் துணைசெய்தது, அதனாலுணருகின்றேன் என்பதையுணரான். அங்ஙனம் அருள் உண்மையையுணருமாயின் சிவத்தோடு கூடிச் சிவமாவன் என்பதாம். "தானே" மூன்றில் இறுதியில் உள்ளதில் ஏகாரம் தேற்றம். ஏனைய பிரிநிலை. ஆன்மா நின்மலாவத்தையை அடைதல் பற்றியே கூறி வருதலாலும், முன் மந்திரத்திலும் "சுத்தராய்ச் சொல்லற்றவர்கட்கே" எனச் சீவர்களே குறிக்கப்பட்டமையாலும் அத்தொடர்ச்சி பற்றி இம்மந்திரத்திற்கு 'ஆன்மா' என்பது எழுவாயாய் வந்து இயைந்தது. "தானே அறிவான் அறிவு" என்பதன் ஈற்றில் 'ஆன்' உருபு விரிக்க. "ஆனால்" என்பதில் ஆக்கம் அறியாததனை அறிதலை உணர்த்திற்று. "நிற்க" என்ற அனுவாதத்தால், 'நிற்கும்' என்பது தானே பெறப்பட்டது. "சதசத்து" என்றதில் அசத்தும் பெறப்பட்டமையால், "இரண்டும்" என்றதில் அசத்துத் தொகுதியும் ஒன்றாயிற்று. "தங்கும்" என்பதை ஆண்பாலாகக் கொள்க. ஆன்மா, வடமொழி வழக்குப் பற்றி ஆண்பாலாகச் சொல்லப்பட்டது.*

*இதனால், முன்மந்திரத்தில், 'ஆன்மாச் சிதசித்து' எனக்கூறிய வகையில், 'சித்தாதல் இவ்வாற்றால்' என்பது விளக்கப்பட்டது.*

*2296. தெளிவுரை :- மாயாகாரியங்களாகிய கருவிகளின் உண்மையை உணர்ந்தவர்கட்கே மெய்ப்பொருளாகிய சிவத்தை உணரும் உணர்வு கிடைக்கும். அந்த உணர்வானே ஆன்மாச் சிவமாம் தன்மையை அடையும். அதனை அடையவே, அந்தச் சிவஞானமே சிவபத்தியாய்ப் பரிணமிக்க, அந்தப் பத்தியால் சிவானந்தம் விளைவதாகும்.*

**2296.** தத்துவ ஞானம் தலைப்பட் டவர்கட்கே
தத்துவ ஞானம் தலைப்பட லாய்நிற்கும்
தத்துவ ஞானத்துத் தான்அவன் ஆகவே
தத்துவ ஞானானந் தம்தான் தொடங்குமே. **27**

**2297.** தன்னை யறிந்து சிவனுடன் தான்ஆக
மன்னும் மலக்குணம் மாளும் பிறப்பறும்
பின்அது சன்முத்தி சன்மார்க்கப் பேரொளி
நன்னது ஞானத்தின் முத்திரை நண்ணுமே. **28**

---

***குறிப்புரை :-*** *“தத்துவம்” நான்கில் முதலது உபசார வழக்கால் ‘தத்துவம்’ எனப் பெயர் பெற்று நிற்கும் மாயா கருவிகளைக் குறித்தது. ஏனையவை உண்மை வழக்கால் மெய்ப்பொருளைக் குறித்தன. “தலைப்படல்” இரண்டனுள் முதலது ஆன்மாவின் செயலாயும், இரண்டாவது ஞானத்தின் செயலாயும் நின்றன. தான் - ஆன்மா. அவன் - சிவன். “ஆகவே” என்ற அனுவாதத்தால், ஆதல் தானே பெறப்பட்டது. ஈற்றில் உள்ள தான், அசை.*

*இதனால், முன் மந்திரத்தில் ‘ஆன்மாத் தன்னை யுணர்தல் சிவஞானத்தால்’ என்றமை பற்றி, அந்தச் சிவஞானம் கிடைக்குமாறும் அது கிடைப்பின் விளையும் பெரும் பயன்களும் கூறப்பட்டன.*

***2297. தெளிவுரை :-*** *ஆன்மாத் தனது இயல்பை உள்ளவாறறிந்தால் தான் பாசத்துடன் நில்லாது சிவத்துடனே நிற்கும். அவ்வாறு நிற்கும் பொழுதுதான் மலங்களின் சேட்டை ஒழியும். பாசங்களின் சேட்டை ஒழிவே பிறப்பின் ஒழிவாகும். எவ்வாற்றானும் மீண்டும் பிறவி எய்தாத நிலையே முடிநிலைப் பரமுத்தியாகும். மற்றும் அதுவே நன்னெறியாகிய ஞானத்தால் அடையப்படும் பேரறிவுப் பொருளும் ஆகும். அது சின்முத்திரை வழியாகக் கிடைக்கும்.*

*குறிப்புரை :-* ***ஆன்மா தன்னையறிதலாவது; சிற்றறிவும் சிறு தொழிலும் உடையேன் எனவும், இறைவற்கு என்றும் மீளா அடிமையெனவும், அநாதியே மல கன்ம மாயைகளால் மறைக்கப்பட்டவன் எனவும், தத்துவங்களாகிய மாயேயங்கள் தடையாக அதனால் உலகமே பெரிது, போகமே சிறந்தது என மயங்கியவன் எனவும், முன்னைய வினைகளை உண்டு கழிக்கவும், மலவன்மையைக் கெடுக்கவும் இவ்வுடல் மாயாகாரியமாக உதவப்பட்டதெனவும், இதனைக் கொண்டு வினைக்கேடும், மலவன்மையினழிவும் திருவருள் துணையால் தேடிக் கொள்ளத் தக்கவன் யான் எனவும் உணர்ந்து அதற்குரிய சரியையாதிகளைக் கடைப்பிடித்தல்.***

*சேட்டையை, ‘குணம்’ என்றார். “பின்” என்பது, ‘மற்று’ என்னும் பொருளில் வந்தது. ‘பின்னும்’ என்னும் எதிரது தழுவிய எச்ச உம்மையும், ‘அதுவே’ என்னும்*

**2298.** ஞானம்தன் மேனி கிரியை நடுஅங்கம்
தானுறும் இச்சை உயிராகத் தற்பரன்
மேனிகொண்டு ஐங்கரு மத்துவித் தாதலால்
மோனிகள் ஞானத்து முத்திரைபெற் றார்களே. **29**

---

*தேற்றேகாரமும் தொகுத்தலாயின. 'பின்னும் அதுவே' என்பதை, "சன்முத்தி" என்பதன் பின்னர்க்கூட்டுக. 'நன்றது' என்பது எதுகை நோக்கி, 'நன்னது' என வந்தது. 'முத்திரையால் என உருபு விரிக்க. சின்முத்திரையைப் பெறுமாறு, வருகின்ற மந்திரத்தில் காண்க.*

*இதனால், முன் மந்திரத்தில் கூறிய தத்துவ ஞானத்தால் ஆன்ம சுத்தி உண்டாக, அதன்பின் நிகழும் ஆன்ம லாபமும் அதன் சிறப்பும் கூறப்பட்டன.*

***2298. தெளிவுரை :-*** *(சிவனுக்கு வடிவமாய் அமைவது, அவனது சத்தியே. அதனை, "காயமோமாயை அன்று; காண்பது சத்தி தன்னால்" (சுபக்கம் - சூ. 1 41) என்னும் சிவஞான சித்தியால் அறியலாம். 'அரிதரு கண்ணியாளை ஒரு பாகமாக அருள் காரணத்தில் வருவார்' (தி.4 ப.8 பா.2) என அருளிச் செய்ததும் இதனையே. அவ்வாறு ஆகுமிடத்து).*

*ஞானசத்தியே உடல். கிரியாசத்தியே உடலில் உள்ள பல உறுப்புக்கள். இச்சாசத்தியே 'உயிர்களை உய்விக்கவேண்டும்' என்னும் கருணையாய் உள்ளிருந்து உந்துவதாய் மேற்கூறியவைகளை இயக்கும் உயிராகும். இவைகளை யெல்லாம் கொண்டு அவன் செய்யும் தொழில்கள் ஐந்து. (படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்). இங்ஙனம் ஆகலின் அவ்வைந்தொழிலில் இறுதிக்கண்ணதாகிய அருளலை தற்போதம் அற்றிருந்தவர்கள் மட்டுமே பெற்றார்கள் ('பிறரெல்லாம் ஏனை நான்கையே பெறுகின்றனர்' என்பதாம்).*

***குறிப்புரை :-*** *இறைவனுக்கு 'அருவம், அருவுருவம், உருவம்' என மூவகை வடிவங்கள் உள. அவற்றுள் அருவம் தவிர, ஏனைய இரண்டும் பற்றி இங்குக் கூறப்பட்டன. 'உருவ வடிவத்தில் உடலும் உறுப்பும் நம்மனோரது உடலும், உறுப்பும் போலவே இருப்பினும் அவை அன்ன அல்ல; இங்குக் கூறிய சத்திகளே' என அறிவுறுத்தபடி அருவுருவ வடிவம் மந்திர வடிவம். அதனுள் சத்தியோசாத மந்திரம் உடலும், ஈசான மந்திரம் சென்னியும், தற்புருட மந்திரம் முகமும், அகோரமந்திரம் இருதயமும், வாமதேவமந்திரம் மறைவுறுப்பும் ஆக இவ்வாறு அமைகின்றன.*

*இறைவன் சனகாதி நால்வர்க்குத் தென்முகக் கடவுளாய்க் கல்லால மர நீழலில் இருந்து சின்முத்திரையாலே ஞானத்தை உணர்த்தியதைக் கருத்தில் கொண்டே.*

*"மோனிகள் ஞானத்து முத்திரைபெற் றார்களே"*

**2299.** உயிர்க்கறி வுண்மை உயிர்இச்சை மானம்
உயிர்க்குக் கிரியை உயர்மாயை சூக்கம்
உயிர்க்கிவை யூட்டுவோன் ஊட்டு மவனே
உயிர்ச்செய லன்றிஅவ் வுள்ளத் துளானே. **30**

---

*என்றார். ('ஆகவே, அவரைப் போன்றாரும் அவ்வாறு ஞானத்தைப் பெறுதல் கூடும்' என்பது குறிப்பெச்சம்).*

*அருவ வடிவம், 'இலயம்' என்றும், அருவுருவ வடிவம் 'போகம்' என்றும், உருவம் வடிவம் 'அதிகாரம்' என்றும் சொல்லப்படும் நிலைகளையுடையனவாம். இனி ஞானக்குரவருடைய திருமேனியும் சிவோகம்பாவனை காரணமாகச் சத்தி வடிவம் அல்லது அருட்டிருமேனியாம் ஆகலின், அவரால் சின்முத்திரை வழியாகப் பலரும் பெறுதல் கூடும் என்க. சின்முத்திரையின் இயல்பை முத்திரா லட்சணங்களில் காண்க.*

*இதனால், முன்மந்திரத்தில் கூறிய ஞான முத்திரையின் உண்மையும், அதனைப் பெறுமாறும் கூறப்பட்டன.*

***2299. தெளிவுரை :-*** ***(முன்மந்திரத்தில் சிவனுக்கு உள்ளனவாகக் கூறிய ஞான சத்தி, இச்சா சத்தி, கிரியா சத்திகள் உயிர்கட்கும் உள்ளன, அஃது எவ்வாறு பெறப்படுகின்றது எனின்), 'சடப்பொருள்கட்கு வேறாய் உயிர் உண்டு' என உணர வைப்பதே உயிரினது ஞான சத்திதான், (அஃதாவது, எங்கே அறிவு நிகழ்கின்றதோ அங்கெல்லாம் 'உயிர் உள்ளது' என உணரப்படுகின்றது என்பதாம்). இனி, அந்த அறிவு 'யான்' எனத் தன்னைப் பற்றியும், 'எனது' எனப் பிற பொருளைப் பற்றியும் கொள்கின்ற பற்றும் இச்சாசத்தியின் செயலேயாகும். அந்தப் பற்றுக் காரணமாக உயிர் பலவான மாயா காரியப் பொருள்களைச் செயற்படுத்தி, அவற்றால் பயன் உறுவது கிரியா சத்தியின் செயற்பாடே. இவ்வாறு இவை நுட்பமாக ஓர்ந்துணரத்தக்கன. (அங்ஙனம் உணராமல், 'உயிர்கட்கு இந்தச் சத்திகள் இல்லை' என்று கருதிவிடுதல் கூடாது). எனினும் உயிர்கட்கு அவற்றின் வினைப் பயன்களை ஊட்டுவிக்கின்ற சிவன் செயற்படுத்தவே இச்சத்திகள் செயற்படும். ஆகையால், உயிர்கள் செய்யும் செயல்கள் அவைகளே தனி நின்று செய்யும் செயல்கள் ஆகாது, அவற்றுள் உயிர்க்கு உயிராய் நிறைந்து நிற்கும் சிவன் செயல்களே ஆகின்றன.***

***குறிப்புரை :-*** ***இவ்வாற்றால், 'ஒன்றேனும் நம் செயல் அன்று; எல்லாம் சிவன் செயலே' என்று உணரப்பெறுவதே தம்மையுணர்ந்து, பின் தலைவனை உணர்தலாகும்.***

***"சீவனும் இச்சா ஞானக்***
***கிரியையால் சிவனை ஒப்பன்***

**2300.** தொழில்இச்சை ஞானங்கள் தொல்சிவன்சீவர்
கழிவற்ற மாமாயை மாயையின் ஆகும்
பழியற்ற காரணம் காரியம் பாழ்விட்டு
அழிவற்ற சாந்தாதீ தன்சிவன் ஆமே. 31

---

*ஆவன்என் றிடின் அனாதி*
*மலம்இவற் றினை மறைக்கும்;*
*காவலன் இவன்செய் கன்மத்*
*தளவினில் கொடுப்பக் காண்பன்;*
*பாவியாம் புத்தி முத்திப்*
*பயன்கொளும் பண்பிற் றாமே"* **- சுபக்கம் - சூ. 1, 64**

*என்னும் சிவஞான சித்திச் செய்யுளைக் காண்க. "உயிர்க்கு அறிவு" என்பதை, 'உயிருக்கு உள்ள அறிவு' என விரிக்க. "உயிர்க்குக் கிரியை" என்பதும் அத்தகைத்து, உண்மையை உணர்த்துவதை "உண்மை" என உபசரித்தார்.*

*அபிமானம், 'மானம்' எனப்பட்டது. 'பற்று' என்பதே பொருள். உயர்தல், எண்மிகுதல், மாயை, அதன் காரியத்தைக் குறித்த ஆகுபெயர். பின்னும் அஃது இருமடியாகுபெயராய், அவற்றைக் கொண்டு செய்யப்படும் செயல்களை உணர்த்திற்று. 'ஊட்டுதல்' இரண்டில் முன்னது, 'வலுப்படுத்துதல்' என்னும் பொருளது. பின்னதற்குச் செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது. "உள்ளத்துளான்" என்பதன்பின், 'செயல்' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது.*

*இதனால், மேல், "தன்னை யறிந்து சிவனுடன் தானாக" என்பது பற்றி, அங்ஙனம் ஆமாறு கூறப்பட்டது.*

***2300. தெளிவுரை :-*** *'கிரியை, இச்சை, ஞானம்' என்பன சிவனுக்கு என்றும் இயல்பாகவே விளங்கி நிற்கின்றன. 'உயிர்கட்கோ' எனின், அவை அனாதியே ஆணவ மலத்தால் மறைக்கப்பட்டுப் பின்பு சிவனால் கூட்டப் பெறுகின்ற சுத்தமாயை அசுத்த மாயைகளின் காரியங்களில் அவை சிறிதே விளங்குகின்றன. சிவன் இந்த மாயைகள், அவற்றின் காரியங்கள், ஆணவம் ஆகிய அனைத்தையும் கடந்து, நிலைத்து நிற்பதாகிய துரியாதீத நிலையில் இருக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *சிவசீவர் - சிவன் உடனாக விளங்க அவருடன் கூடிய சீவர்கள். 'தொன்மை' என்பது விகுதி கெட்டுப் பகுதி மாத்திரமாய் நின்றது. தொன்மையானவற்றைத், "தொன்மை" என்றார். 'சீவர்க்கு' என்னும் நான்கன் உருபு தொகுத்தலாயிற்று. கழிவற்ற - அழிவில்லாத; என்றும் உள்ளகாரணம், மாயைகள் காரியம் அவற்றினின்றும் தோன்றிய கருவிகள், சுத்த மாயை விஞ்ஞான கலருக்கே கருவியாய்ப் பயன்படும் என்க. இருள் போலுதலின் ஆணவத்தைப், 'பாழ்' என்றார். சாந்த + அதீதம் = சாந்தாதீதம். சாந்தம் அமைதி; என்றது துரிய*

**2301.** இல்லதும் உள்ளதும் யாவையும் தானாகி
இல்லதும் உள்ளது மாய்அன்றாம் அண்ணலைச்
சொல்லது சொல்லிடின் தூராதி தூரம்என்று
ஒல்லை உணர்ந்தால் உயிர்க்குயிர் ஆகுமே. **32**

---

*நிலையை'. பராவத்தையில் அதீதத்தை அடைந்தோர்க்கு மீட்சியில்லை ஆகையால் அதனை, 'அழிவற்றது' என்றார்.*

*இதனால், சிவ சீவர்களது இச்சா ஞானக் கிரியைகளின் வேறுபாடு உணர்த்தப்பட்டது. இதனானே அவற்றை உடையவர்களது வேறுபாடும் தானே பெறப்படும். முன்மந்திர உரையிற் காட்டிய சிவஞான சித்திச் செய்யுளில் அஃது இனிது விளக்கப்பட்டமை காண்க.*

***2301. தெளிவுரை :-** உணருமாற்றால் உணராதவர்களால், 'இல்லை' என மறுத்துக் கூறப்படும் பொருளாய் உள்ளவனும், உணருமாற்றால் உணர்ந்தவர் களால், 'உண்டு' என நிறுவப்படும் பொருளாய் உள்ளவனும், உலகின்கண், 'சூக்குமம், தூலம்' என்னும் இருவகைப்பட்ட எல்லாப் பொருள்களிலும் "அவையே தானாய்" (சிவஞானபோதம் - சூ. 2) கலந்து நிற்பினும், அவற்றின் தன்மையைத் தான் எய்தாமையால் அவற்றின் வேறாய் உள்ளவனும் ஆகிய முதல்வனாம் சிவனை வாக்குக் குறிப்பிட முயலுமாயின் அதற்கு எட்டாத நெடுந்தொலைவில் உளன். இவ்வுண்மையை உயிர் எவ்வளவு விரைவாக உணருமோ அவ்வளவு விரைவில் அதன் உள்ளுயிராய் விளங்கி நிற்பான்.*

- *இல்லது - நிலையற்ற மாயா காரியப் பொருள்கள். அவை தனு, கரண, புவன போகங்கள்*
- *உள்ளது - நிலையான காரண மாயை முதலிய பொருள்களும் உயிருமாகிய யாவையும்.*

***குறிப்புரை :-** "இல்லதும் உள்ளதுமாய்" - என்பதை முதலிற் கொள்க. முதல் அடியில் சொல்லப்பட்ட இன்மை உண்மைகள் புலனாகாமை புலனாதல் களைக் குறித்து நின்றன. "உண்மையுமாய், இன்மையுமாய்" (தி.8 திருச்சதகம் - 15) என்று அருளிச் செய்ததும் இவ்விரு பொருளும் பற்றி என்க. 'இல்லதும் உள்ளதும் ஆகிய யாவையும்' - என்க. ''ஆகியும்'' என்னும் உம்மை தொகுக்கப்பட்டது. சொல்லால் சொல்லுதலை, 'சொல் சொல்லிடில்' எனக் கருவியே வினை முதல் போலக் கூறப்பட்டது. சொல், வாக்கு, அது நால்வகைத் தாதலை அறிக. வாக்குக்கள் சுத்த மாயாகாரியம் ஆதலின் அதற்கும் அப்பாற்பட்ட நிலையை 'தூர அதிதூரம்' என்றார். "பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு பாதமலர்" (தி.8 திருவெம்பாவை - 10) "சோதி மணிமுடி சொல்லின் சொல் இறந்து நின்ற தொன்மை" (தி.8 குயிற் பத்து - 1) "சொற்பதத்தார் சொற்பதமும் கடந்துநின்ற சொலற்கரிய சூழலாய் இது உன் தன்மை" (தி.6 ப.84*

**2302.** உயிர்இச்சை ஊட்டி உழிதருஞ் சத்தி
உயிர்இச்சை வீட்டிமெய் உண்மையை நாட
உயிர்இச்சை கூட்டி உடன்உற லாலே
உயிர்இச்சை வாட்டி உயர்பதம் சேருமே. **33**

---

*பா.4) என்னும் திருமொழிகளை உணர்க. அது, பகுதிப்பொருள் விகுதி, 'உணர்தல், அவன் அருளால்' என்பது அறிக.*

*இதனால், முன் மந்திரத்தில் கூறியபடி சிவன் துரியாதீதனாயினும் எங்கும் நிறைந்து நிற்பவன் ஆதலின், அவனை உணருமாற்றால் உணரின் உணரப்பட்டு நிற்பான் என்பது கூறப்பட்டது.*

***2302. தெளிவுரை :-** சிவனது சத்தி (உயிர்கள் பக்குவம் எய்தாத பொழுது) அவற்றுக்கு உலகின்மேல் ஆசையை உண்டாக்குதலும், (பக்குவம் எய்திய பொழுது) அவற்றுக்கு அவ்வாசையைப் போக்குதலும் ஆகிய இரு செயல்களைச் செய்யும். (முன்னை நிலையில் திரோதான சத்தியாயும், பின்னை நிலையில் அருட் சத்தியாயும் அது நிற்கும். திரோதானசத்தி, 'ஆதி சத்தி' என்றும் சொல்லப்படும்). உயிருக்கும் உலக ஆசை நீங்கிய பொழுது அருட்சத்தி உயிரை அசத்தை விடுத்து சத்தினை நாடுதலில் விருப்பம் உண்டாக்கி, இவ்வாறு அதனுடன் என்றும் உடனாய் நிற்றலால்தான் உயிர் உலகப் பற்றினை ஒழித்து, மேலான வீட்டினைச் சேர்வதாகின்றது.*

***குறிப்புரை :-** இம்மந்திரத்தில் பாடவேறுபாடு மிகுதியாய் உள்ளது. "அருள்சத்தி", வினைத்தொகை. மூன்றாம் அடியில் உள்ள "உயிர்" என்பதன்பின் நான்காம் உருபு விரிக்க.*

*இதனால், 'பெத்த நிலையாகிய சகலாவத்தைகளும், முத்தி நிலையாகிய சுத்தாவத்தைகளும் சிவசத்தியாலே நிகழும்' என்பது கூறப்பட்டது.*

***2303. தெளிவுரை :-** 'மலம்' எனப்படும் ஐந்தும் நீங்கப் பெற்றவர்களே சிவமாந்தன்மையைப் பெற்றார்கள். அவற்றுள் ஒன்று, ஒன்று நீங்கப் பெற்றவர்களும், ஒருமலமேனும் நீங்கப் பெறாதவர்களும் நிலத்திற் பிறந்து, பின் சுவர்க்கத்திலும், நரகத்திலும், புகும் பகுதியினரேயாவர். ஆயினும், 'இவ்விருவகை நிலைகளும் சிவனது கருணை காரணமாக அவனது சத்தியாலே நிகழ்வன' என்பதை அறிபவர் உலகத்தில் அரியர்.*

***குறிப்புரை :-** ஒன்றிரண்டு மலங்கள் நீங்கப் பெறுதலாவது ஆணவம் தவிர ஏனைய மாயை கன்மங்கள் நீங்கப் பெறுதலாம். 'அவர்கள் இயற்கையாயுள்ள பிரளயாகலர், விஞ்ஞானகலராம் தன்மையர் ஆதலல்லது, சிவமாம் தன்மையைப் பெறாமையால், ஆணவ வலியால் மீண்டும் சகலர் நிலையை அடைதல் கூடும்' என்பதாம். ஆயினும் 'இவ்இருவகையும் பக்குவ அபக்குவங்களை நோக்கிச்*

**2303.** சேருஞ் சிவம்ஆனார் ஐம்மலம் தீர்ந்தவர்
ஓரொன் றிலார்ஐம் மலஇருள் உற்றவர்
பாரின்கண் விண்நர கம்புகும் பான்மையர்
ஆரும்கண்டு ஓரார் அவைஅருள் என்றே. **34**

**2304.** எய்தின செய்யும் இருமாயா சத்தியின்
எய்தின செய்யும் இருஞான சத்தியின்
எய்தின செய்யும் இருஞால சத்தியின்
எய்தின செய்யும் இறையருள் தானே. **35**

---

*சிவனது அருட்சத்தியும், திரோதான சத்தியும் செய்யும் செயலேயாம்' என்பதும் 'திரோதான சத்தியின் செயலும் நோயாளிக்கு மருத்துவன் செய்யும் செயல்போலக் கருணை காரணமாக நிகழ்வதே' என்பதும் அறியத்தக்கன என்றபடி. சேரும் சிவம் - தம்மால் சேரப்பட்ட சிவம். சேர்தல் சிவத்தினது ஞானத்தாலே என்பது தோன்ற அடைபுணர்க்கப்பட்டது. ஆகவே, 'ஐம்மலந் தீர்ந்தவர் அந்த ஞானத்தைப் பெற்றுச் சிவம் ஆவர்' என்பதும், 'ஐம்மலந் தீராதவர் அந்த ஞானத்தைப் பெறார் ஆகலின் சிவத்தைச் சேர்ந்து சிவம் ஆக மாட்டாது பிறப்பை எய்துவர்' என்பதும் போந்தவாறு அறிக. 'பாரின்கண் பிறந்து' என ஒருசொல் வருவிக்க.*

*இதனால், 'மலாவத்தை நீங்கப் பெறாதவர்க்குப் பிறப்பு அறாது' என்பதும், 'மலாவத்தை நீங்கி நின்மலாவத்தையை எய்தினோரே பிறப்பற்றவர் ஆவர்' என்பதும் ஒருங்குவைத்து உணர்த்தப்பட்டன.*

***2304. தெளிவுரை :-** ஏற்புடைய செயல்களை ஏற்குமாற்றால் செய்யும் இறைவனுடைய கருணை பரிக்கிரக சத்தியாகிய 'சுத்த மாயை, அசுத்த மாயை' என்னும் இரு மாயைகளின் ஆற்றலைக் கொண்டும், 'மந்தம், தீவிரம்' என்னும் இருவகை அருட் சத்தியைக் கொண்டும், கன்மத்தின் வழியாக, 'இன்பம், துன்பம்' என்னும் இரண்டை ஊட்டுகின்ற திரோதான சத்தியைக் கொண்டும் அவ்வப் பொழுது ஏற்புடையவற்றைச் செய்யும்.*

***குறிப்புரை :-** 'எய்தினர்' என்பது பாடம் ஆகாமை அதுபற்றி யெழுந்த உரைகளானே விளங்கும். எய்தின - ஏற்புடையன. 'எய்தின செய்யும்' என்பது, சொற்பொருட் பின்வருநிலை அணியாய்ப் பலமுறை வந்தது. "செய்யும்" நான்கில் ஈற்றில் உள்ளது எச்சம். ஏனையவை முற்று. இதனையும் முற்றாகக் கொள்ளின் இறையருள் எவ்வாற்றானும் ஏற்புடையனவே செய்யும்' என முடிக்க. இப்பொருட்கு "இறையருள்" என்பது மட்டுமே முதலிற் கூட்டத்தக்கது. அருள் காரணமாக இறைவன் செய்வனவற்றை அருளே செய்வன போலக் கூறினார். 'பணியுமாம் என்றும் பெருமை; சிறுமை அணியுமாம் தன்னை வியந்து' என்றாற் போல, ஈற்றடியை முதலிற் கூட்டியுரைக்க. தான், அசைகள். ஞால சத்தி -*

**2305.** திருந்தினர் விட்டார் திருவில் நரகம்
திருந்தினர் விட்டார் திருவார் சுவர்க்கம்
திருந்தினர் விட்டார் செறிமலக் கூட்டம்
திருந்தினர் விட்டார் சிவமாய் அவமே. **36**

---

*ஞாலத்தை நடத்தும் சத்தி. ஞானசத்தி, ஞாலசத்தி இரண்டும் தாதான்மியமாய் உள்ள ஒரு சத்தியின் வகையேயாம். மந்ததரம் மந்தத்திலும், தீவிரதரம் தீவிரத்திலும் அடக்கி இரண்டாகக் கூறப்பட்டன.*

*இதனால், முன் மந்திரத்தில், "ஆரும் கண்டு ஓரார் அவை அருள் என்றே" எனக் கூறியது இவ்வாற்றால் என விளக்கு முகத்தால் வலியுறுத்தப்பட்டது.*

***2305. தெளிவுரை :-** ஆணவ மலத்தால் வளைக்கப்பட்ட கோணல் நீங்கி நேரான நிலையை அடைந்தோர் சிவமே ஆயினமையால், சுவர்க்கத்தை விரும்புதல், நரகத்திற்புகுதல், மாயை கன்மங்களின் குழாத்துள் இருத்தல், அவற்றால் பிறந்து இறந்தும், இறந்துபின் பிறந்தும் உழல்வதாகிய பயனில் செயல்களை உடையராதல் ஆகிய இவை அனைத்தையும் விட்டு நலம் பெற்றார்கள்.*

***குறிப்புரை :-** "திரு" என்றது இன்பத்தை - இன்பம் இன்மை, துன்பம் உண்மையைக் குறித்தது. "திருந்தினர்" என்பவற்றோடெல்லாம், "சிவமாய்" என்பதனைக் கூட்டி, 'விட்டார்' என முடிக்க. சொற்பொருட் பின்வருநிலைஅணி. 'திருந்தியது முன் மந்திரத்திற் கூறிய ஞான சத்தியால்' என்க.*

*இதனால், மேற்கூறிய இறையருட் செயலால் உயிர்கள் அடையும் முடிநிலைப் பயன் கூறப்பட்டது.*

***2306. தெளிவுரை :-** அவம் - பயன் இன்மை, வீண். குறிக்கோள் நிறைவேறாத பிறவிக்கு ஏதுவாய பசுபாச வினைகள், பிறப்பு. பயனாவது நன்மையே. எனவே, "அவம்" என்றது, 'நன்மை இன்மை' என்றபடி. அது தீமை உடையதாகவும் இருக்கலாம். சிவம் - நன்மை.*

*பகுத்தறிவில்லாதவர், 'இஃது அவம், இது சிவம்' எனப் பகுத்துணர மாட்டார். (ஆகவே, 'அவர் அவத்தைச் சிவமாக எண்ணி, அதனைப் பற்றிக் கொண்டு உழல்வர்' என்பதாம்). பகுத்தறிவுடையவர் அவற்றை நன்கு பகுத்துணர்வார். (ஆகவே 'அவர் அவத்தை விடுத்துச் சிவத்தைப் பற்றி நன்மையடைவர்' என்பதாம்). பகுத்தறிவு திருவருளால் வாய்ப்பது. அங்ஙனம் வாய்க்கப்பெற்று, அவத்தினையும், சிவத்தினையும் உள்ளவாறு உணர்ந்தால், பகுத்தறிவு இல்லாத பொழுது, 'உயிர் அவத்தில் உழன்றதும் சிவனது அருளால்தான் பின்பு அதனை விடுத்துச் சிவத்தைப் பற்றியதும் சிவனது அருளால்தான் என்பது அனுபவமாய் விளங்கிவிடும்'.*

**2306.** அவமும் சிவமும் அறியார் அறியார்
அவமும் சிவமும் அறிவார் அறிவார்
அவமும் சிவமும் அருளால் அறிந்தால்
அவமும் சிவமும் அவன்அரு ளாமே. **37**

---

***குறிப்புரை :-*** *'அறிவு, அறிதல்' என்பன பகுத்தறிவையும் பகுத்தறிதலையுமே குறித்தமை, 'அவமும், சிவமும்' என்றதனால் விளங்கும். 'பகுத்தறிதற்கு அங்ஙனம் அறியும் அறிவு வாய்ப்பது திருவருளால்' என்றற்கு, "அருளால்" என்றே கூறிப் போயினாராயினும், 'அருளால் பெற்ற அறிவால்' என்பதே கருத்து. அவமும், சிவமும் அவன் அருளாதல் விளங்கும்பொழுது, 'முன்னையது பக்குவம் இன்மையின் அது வருதற்பொருட்டு இயற்றப்பட்டது' என்பதும் விளங்கும் என்பது கருத்து. அவம், மலாவத்தைகளும், சிவம், நின்மலாவத்தைகளும் ஆகும்.*

*இதனால், 'நின்மலாவத்தையே பயனுடையதாம்' என்பதும், 'அது திருவருளால் நிகழும்' என்பதும் கூறப்பட்டன.*

***2307. தெளிவுரை :-*** *('சிவன் அருள்' என்றும், 'சிவனது சத்தி' என்றும் சொல்லப்படுவது ஒரு பொருளேயாகும். அதனால்,) அருளாகிய சத்தி, தீ பொருளாய் இருக்க, சூடு அதன் பண்பாய் அதன்கண் வேற்றுமையின்றியிருத்தல் போல, சிவம் பொருளாய் இருக்க, தான் அதன் பண்பாய் அதன்கண் வேற்றுமையின்றியிருக்கும். அங்ஙனம் இருக்கும்பொழுது அறிவாகியேயிருக்கும். (இது சத்தியின் 'உண்மை' எனப்படும் சொரூபம்). அதுவே, 'ஆணவம், மாயை, கன்மம்' என்னும் மும்மலங்களாயும் நின்று (உயிர்கள் சிவனை அறியாதபடி மறைக்கும். இந்நிலையில் அது, 'திரோதனகரி, திரோதாயி' - என்னும் பெயர்களைப் பெறும். இஃது அதன், 'பொது' எனப்படும் தடத்தம்) பின்பு அதுவே தனது உண்மையான அருளாகும்பொழுது, சிவன் உயிர்களுக்கு முன்போல மறைந்து நில்லாமல், இனிது விளங்கும் பொருளாய்த் திகழ்வான்.*

***குறிப்புரை :-***

> *"அருளது சத்தி யாகும் அரன்றனக்கு; அருளை யின்றித்*
> *தெருள்சிவம் இல்லை; அந்தச் சிவம்இன்றிச் சத்தியில்லை"*
>
> ***- சுபக்கம், சூ. 5, 9***
>
> *"ஏயும்மும் மலங்கள் தத்தம் தொழிலினைச் செய்ய ஏவும்*
> *தூயவன் தனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்*
> *ஆய்வர்"* ***- சுபக்கம், சூ. 2, 87***

*என்னும் சிவஞான சித்தியையும்,*

> *"முயங்கி நின்று - (மலம்) பாகம் உற உதவு*
> *திரோதாயி ஒன்று"*

**2307.** அருளான சத்தி அனல்வெம்மை போலப்
பொருள்அவ னாகத்தான் போதம் புணரும்
இருள்ஒளி யாய்ஈண்டும் மும்மலம் ஆகும்
திருவரு ளாநந்தி செம்பொருள் ஆகுமே. **38**

---

*"நேராதல் மருவுங்கால், முன்*
*சினமருவு திரோதாயி கருணையாகித்*
*திருந்திய சத்தி நிபாதம் திகழும் அன்றே"*

*என்னும் சிவப்பிரகாசத்தினையும் (செய்யுள் 32, 48) காண்க.*

*'போதமாய்' என ஆக்கம் விரிக்க. "இருள் ஒளியாய் ஈண்டும் மும்மலம்" என்றது, 'இருளுக்கு ஒளிவந்து பொருந்துதலால், அதற்கு மேலும் கூடுகின்ற மும்மலங்களாய் நிற்கும்' என்றவாறு. இருள் - ஆணவம். நான்காவது தொகுத்தலாயிற்று. 'இருளுக்கு ஒளி' என்பதைப் "பிணிக்கு மருந்து" (திருக்குறள் - 1102) என்றது போலக் கொள்க. 'ஒளியாவது மாயை' என்பது வெளிப்படை. ஆய் - ஆதலால். ஆதல் - பின்பு வந்து சேர்தல். ஈண்டுதல் - திரளுதல். எனவே, அவை கன்மம் ஆயின. மலங்களை ஏவுதலால், சத்தியே மலமாக எண்ணப் பட்டது. 'திருவருள் ஆக' என்பது கடைக்குறைந்து நின்றது. 'திருவருளால்' என்பது பாடமாயின், 'அது திருவருள் ஆக, அதனால்' என உரைக்க. நந்தி - சிவன்.*

*'சத்தி புணரும்; ஆகும்; (அது) திருவருள் ஆக, நந்தி செம்பொருள் ஆம்' என வினை முடிவு செய்க.*

*இதனால், முன் மந்திரத்தில் சுட்டப்பட்ட அருளின் நிலைமையெல்லாம் தெரித்துக் கூறப்பட்டன.*

***2308. தெளிவுரை :-** **'படைக்கும் சத்தி, காக்கும் சத்தி, அழிக்கும் சத்தி' என இவ்வாறு சத்திகள் வேறு வேறாகச் சொல்லப்படினும், உண்மையில், அவை அனைத்தும் ஒரு சத்தியின் பேதங்களே. அஃது எவ்வாறெனில் சூரியன் வானத்தில் இருக்கும் பொழுது தாமரை முதலியவற்றின் பூக்கள் அனைத்தும் ஒரு நிலையையே அடையாமல் பல நிலைகளை அடைகின்றது. (சில அரும்பாகவும், சில போதுகளாகவும், சில மலர்களாகவும், சில வாடல்களாகவும் ஆகின்றன) அந்த வேறுபட்ட நிலைகள் அனைத்திற்கும் ஏற்பச் சூரியனது கதிரின் தன்மைகளும் வேறுபட அமைதல் வேண்டும் ஆயினும், அக்கதிர் சூரியனது கதிர்கள் என்னும் வகையில் ஒன்றேயாவது போல்வதாம்.***

***குறிப்புரை :-** பதுமாதிகள் - தாமரை முதலிய நீர்ப்பூக்கள். சிவசத்தியின் வேறுபாடு 'பிறவற்றை நோக்கிய வேறுபாடேயன்றித் தன்னிலே வேறுபட்ட வேறுபாடு அன்று என்பதாம். "அருட் பேதம்" என்பதை முதலில் வைத்து, "பேதித்துப் பேதியாவாறு" என முடிக்க. "தம்" என்பதனை, "செயல்"*

**2308.** ஆதித்தன் தோன்ற அரும்பது மாதிகள்
பேதித்த தம்வினை யால்செயல் பேதிப்ப
ஆதித்தன் தன்கதி ரால்அவை சேட்டிப்பப்
பேதித்துப் பேதியா வாறுஅருட் பேதமே. **39**

**2309.** பேதம் அபேதம் பிறழ்பேதா பேதமும்
போதம் அபோதம் புணர்போதா போதமும்
நாதம் அநாத முடன்நாதா நாதமும்
ஆதல் அருளின் அருளிச்சை யாமே. **40**

---

*என்பதனோடும் கூட்டுக. ''வினை'' என்பது, அது நிகழ்தற்கு ஏதுவாகிய பக்குவத்தைக் குறித்த ஆகுபெயர். "பேதிப்ப" என்பதில் உள்ள "பேதித்தல்" என்னும் செயலின் வினை, செயலையுடைய பதுமாதிகள் மேல் ஏற்றப்பட்டது. சேட்டித்தல் - செயற்படுத்தல். "ஆதித்தன்" இரண்டில் பின்னது 'அவன்' என்னும் சுட்டுப் பெயரளவாய் நின்றது. "பேதித்துப் போதியவாறு" என்னும் பயனிலைக்கு. 'அக்கதிர்கள்' என்னும் எழுவாய் வருவிக்க. சேட்டித்தல் - தொழிற்படுத்தல்.*

*'அருட் பேதம், ஆதித்தன் தோன்றப் பது மாதிகள் செயல் பேதித்து நிகழும்படி அவனது கதிர்கள் செயற்படுத்துமிடத்து அக்கதிர்கள் பேதித்தும் பேதியாவாறு' என வினை முடிவு செய்க.*

*இதனால், முன் மந்திரத்தில் சத்தி பலவாதல்போலக் கூறப்பட்டமை பற்றி, 'சத்திகள் பலவோ' என எழும் ஐயம், 'சத்தி செயல் பற்றிப் பலவாகச் சொல்லப்படுகின்றதேயன்றி, உண்மையில் பலவன்று. 'ஒன்றே' என்பதை உவமையால் கூறித் தெளிவிக்கப்பட்டது.*

***2309. தெளிவுரை :-** 'சிவனது அருள்' எனப்படும் சத்தி, உலகுயிர்களோடு பொருள் தன்மையால் வேறாய் நின்று அவற்றை அறிவித்தும், இயக்கியும் நிற்றல், அவ்வாறு நிற்பினும் தான் அவற்றின் வேறாய்த் தோன்றாது ஒன்றேயாய் நிற்றல் என்னும் இவ்வகைகளால் ஒரு வகையில் பேதமாயும், பிறிதொரு வகையில் அபேதமாயும் இருத்தலும், மலங்களை நீக்குதலால் உயிர்களின் அறிவை விளக்குதலால் அறிவாயும், மலங்களைச் செலுத்துதலால் அவற்றின் அறிவை மறைத்து அறியாமையாயும் இவ்வகைகளால் ஒருவகையில் அறிவாயும், பிறிதொரு வகையில் அறியாமையாயும், நாதத்தை எழுப்புதலால் நாதமாயும், அதனை ஒடுக்குதலால் நாதம் இல்லதாயும் இவ்வகைகளால் ஒரு வகையில் நாதமாயும், பிறிதொரு வகையில் நாதம் இல்லதாயும் இவ்வாறெல்லாம் பேதப்பட்டு நிற்றல் அதன் இச்சையாலேயாம்.*

***குறிப்புரை :-** பேதம் - வேறுபாடு. உடலுக்கும் உயிர்க்குமுள்ள வேறுபாடு. சடமும் சித்தும் ஆதல். இம்மந்திரத்துள் இரண்டாம் அடியில் பாடம் பெரிதும்*

**2310.** மேவிய பொய்க்கரி ஆட்டும் வினையெனப்
பாவிய பூதங்கொண் டாடிப் படைப்பாதிப்
பூவியல் கூட்டத்தால் போதம் புரிந்தருள்
ஆவியை ஆட்டும் அரன்அரு ளாமே. **41**

---

*திரிபுபட்டுள்ளது. மற்றும் திரிபுகள் உள. "பேதா பேதம், போதா போதம், நாதா நாதம்" என்பன அன்மொழித் தொகையாய், 'இரண்டும் அல்லாத வேறொன்று' எனப்பொருள் தாராமல், உம்மைத்தொகையாய் இரண்டையும் குறித்துநின்றன. நாதம் - மொழி. "அருள்" இரண்டில் பின்னதை முதலிற்கூட்டி, "அருளின்" என்பதற்கு, 'அதன்' எனப் பொருள் உரைக்க. அருளையுடைய சிவனது இச்சையை ஒற்றுமை பற்றி அருளது இச்சையேயாகவும், இச்சைப்படி நிகழ்வனவற்றை இச்சையாகவும் உபசரித்துக் கூறினார். இதனால், 'சத்தியினது பேதங்கள் அது தானாகவே ஆக்கிக் கொள்வன அன்றிப் பிறிதொன்றால் ஆக்கப்படுவன அல்ல' என்பது கூறப்பட்டது. 'சத்திதான் பலவோ என்னில், தான் ஒன்றே, அனேகமாக வைத்திடும், காரியத்தால்' என்பது சிவஞான சித்தி. (சுபக்கம் - சூ. 1. 61). அபேதம் - நான் என ஒற்றுமை நயத்தான் ஒன்றென அறியப் பெறுதல். பேதாபேதம் - இருவகையானும் உணரப்படுதல்.*

***2310. தெளிவுரை :-*** ***மனிதன் ஒருவன், யானைபோலப் பொய்யாகச் செய்யப்பட்ட பொறியினுட் புகுந்து மறைந்து கொண்டு, அதனை உயிருடையது போலப் பலவகையில் இயங்கச் செய்யும் செயல்போல, அருள் மாயையின் காரியமாகப் பரந்து விரிந்த உலகினுள் மறைந்து நின்று, அதனைப் பலவகையாக இயங்கச் செய்து, அதனானே உயிரினது அறிவைப் படைத்தல் முதலிய தொழில்களால் பலவாறாக விளங்குவித்து, அவ் இயக்கத்துட்பட்டு அலமரச் செய்யும் 'அருள்' எனப்படுவது சிவனது அருளே.***

***குறிப்புரை :-*** *கரி - யானை. அதனை ஆட்டுதல் வினைக்கு வினை முதல் ஆற்றலால் பெறப்பட்டது. 'பொய்யானையின் இயக்கத்தை அதனது இயக்கமாகவே எண்ணிச் சிறுபிள்ளைகள் பலவகை உணர்ச்சிகளை அடைதல் போல, உலகத்தின் இயக்கத்தை அதனது இயக்கமாகவே கருதி, அறிவில்லாதவர் பலவகை உணர்ச்சிகளை எய்துகின்றனர்' என்பது உவமையால் போந்த பொருள். அத்தகைய உணர்ச்சிகளைத் தோற்றுவித்தலையே, "போதம், புரிந்து" என்றார். "அருள்" என்பதை முதலிற்கூட்டுக. "பூதம்" என்பது உபலக்கணத்தால் 'பூதம் முதலியவை' எனவும், 'பூ' என்பது, மண் முதலியவை' எனவும் பொருள் தந்தன. 'படைப்பாதியால்' என உருபு விரிக்க. "இயல் கூட்டத்தால்" என்றாரேனும், 'கூடிய இயலால்' என்பது கருத்து. இயல் - இயலல்; இயங்குதல். முதனிலைத் தொழிற்பெயர். 'அஃது அரன் அருளாமே' என, எழுவாய் வருவித்துரைக்க. இதனை எடுத்துக் கூறியது, 'பிறகடவுளரது அருள்கள் அல்ல' என்பது உணர்த்தி, 'அவர்களது செயல்களும் அரன் அருளே' என வலியுறுத்தற் பொருட்டு.*

**2311.** ஆறா றகன்று தனைஅறிந் தான்அவன்
ஈறாகி யாவினும் யாவும் தனில்எய்த
வேறாய் வெளிபுக்கு வீடுற்றான் அம்மருள்
தேறாத் தெளிவுற்றுத் தீண்டாச் சிவம்ஆமே. **42**

---

*இதனால், 'எல்லாம் திருவருட்செயலே' என்பது விளங்காமை அறியாமையால் என்பது கூறப்பட்டது.*

***2311. தெளிவுரை :-*** *'தத்துவம் முப்பத்தாறினுள் ஒன்றேனும் தான் அல்லன்' எனத் தெளிந்து, அவைகளை, 'தான்' என மயங்கும் மயக்கத்தினுள் நீங்கினவன் எவனோ அவனே, அவற்றிற்கு வேறாகி, மேலே உள்ள பரவெளியை அடைந்து வீடு பெற்றவனாவன். அந்நிலையில் முன்பு இருந்த மயக்கம் நீங்கித் தெளிவு பெற்று, எளிதில் அணுக இயலாத சிவத்தை அடைந்து அதுவேயாவன், அதுவே அவன் அடையவேண்டிய இறுதி நிலையாகும். அந்நிலையில் சிவனைப்போல இவனும் வியாபகமாய், ஏனை எல்லாப் பொருள்களும் தன்னில் வியாப்பியமாய் நிற்க விளங்குவான்.*

***குறிப்புரை :-*** *"ஆகி எய்த" என்றது, 'ஆகி எய்துதற் பொருட்டு' என்றது ஆகலின், அஃது இறுதியில் வைத்து உரை கூறப்பட்டது. "வீடு" என்றது, வீட்டின்பத்தை. தேறா - தேறி. மருள்தேறுதலாவது, மருளினின்றும் நீங்கித் தெளிவையடைதல். பின்னும், "தெளிவிற்று" என்றது, 'அத்தெளிவு நிலைபெறப் பெற்று' என்றபடி. தீண்டாச் சிவம் - பற்றுதற்கரிய சிவம்.*

*இதனால் மேல், 'திருவருள் செய்வனவாகச் சொல்லப்பட்ட செயல்களில் இறுதியாக உயிர் பயனடைதல், இவ்வாறான நின்மலாவத்தையில்' என்பது கூறப்பட்டது.*

***2312. தெளிவுரை :-*** *அடைதற்கரிய சிவபத்தியைப் பொதுவாகத்தான் அறிந்த முறையில் அடைந்து ஒழுகிய ஒருவன் பின்பு கிரியா குருவின் அருளால் சிறப்பாக அதனை அடைந்து, அவர் அறிவுறுத்த முறையிலே சிவதன்மத்தில் ஒழுகிச் சிவயோகத்திலும் பயின்று, அதன் பயனாகப் பின்பு சிவஞானமாகிய யானையின்மீது ஏறிச் செலுத்தி, மும்மாயைகளையும் தாண்டிச் சென்று, அப்பால் உள்ள சிவனோடு கூடுதலும் கூடும்.*

***குறிப்புரை :-*** *"மீண்டு உற்று" என்றதனால், முன்பு ஒரு முறை உற்றிருந்தமை பெறப்பட்டது. நூல்வழியாகவும், காட்சி வழியாகவும் அவரவர் தாம் தாம் அறிந்தவாற்றால் சிவ பத்திகொண்டு சிவதன்மங்களில் ஒழுகுதலால் வரும் சிவபுண்ணியம், பொதுச் சிவபுண்ணியமும், குரு அருளால் அறிந்து அவற்றில் முறைப்படி ஒழுகுதலால் வரும் சிவ புண்ணியம் உண்மைச் சிவ புண்ணியமும் ஆகும். பொதுச் சிவபுண்ணியம் உண்மைச் சிவபுண்ணியத்தை தர உண்மைச்*

**2312.** தீண்டற் கரிய திருவடி நேயத்தை
மீண்டுற் றருளால் விதிவழி யேசென்று
தூண்டிச் சிவஞான மாவினைத் தான்ஏறித்
தாண்டிச் சிவனுடன் சாரலும் ஆமே. **43**

**2313.** சார்ந்தவர் சாரணர் சித்தர் சமாதியர்
சார்ந்தவர் மெய்ஞ்ஞான தத்துவ சாக்கியர்
சார்ந்தவர் நேயம் தலைப்பட்ட ஆனந்தர்
சார்ந்தவர் சத்த அருள்தன்மை யாரே. **44**

---

*சிவபுண்ணியமே உண்மைச் சிவ ஞானத்தைத் தரும். உண்மைச் சிவ ஞானமே சிவமாம் தன்மையைப் பயக்கும். இம்முறையையே இம்மந்திரம் கூறுமாறு அறிக.*

*சரியை, கிரியை இரண்டும் 'சிவ தன்மம்' என ஒன்றாகவும் சொல்லப்படும் என்பதை,*

*"நல்லசிவ தன்மத்தால், நல்லசிவ யோகத்தால்,*
*நல்லசிவ ஞானத்தால் நான் அழிய - வல்லதனால்"*

*என்னும் திருக்களிற்றுப்படியாரால் (வெண்பா - 15) விளங்கும்.*

*'நேயத்தை அருளால் மீண்டு உற்றுச் சென்று ஏறித்தூண்டித் தாண்டிச் சாரலும் ஆம்' என வினை முடிக்க. 'மா' என்பது காட்டு விலங்குகள் அனைத்திற்கும் பொதுவான பெயர். 'பாய்மா, பரிமா' என்பன குதிரையைக் குறிக்கும் சிறப்புப்பெயர். 'அரிமா' என்பது சிங்கத்தைக் குறிக்கும் சிறப்புப் பெயர். 'கைம்மா' என்பது யானையைக் குறிக்கும் சிறப்புப் பெயர். எனவே, இங்கு 'மா' என்னும் பொதுப்பெயர், இடம் நோக்கிக் கைம்மாவைக் குறித்தது. அது, ஞானம், எவ்விடத்திலும் யானையாக உருவகப்படுத்துதலே மரபாதலால் விளங்கும். உம்மை, உயர்வு சிறப்பு.*

*இதனால், 'தவம், ஞானம்' என்னும் இரண்டுமே குருவருளால் எய்தற்பாலனவாய், ஞான நிகழ்ச்சியே நின்மலாவத்தையாதல் கூறப்பட்டது.*

***2313. தெளிவுரை :- 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என நால்வகை முறையால் சிவனைச் சார்ந்தவர் முறையே, 'சாரணர், சித்தர், சமாதியர், சாத்தியர்' என நிற்பர். எனினும் இறுதியில் சொல்லப்பட்ட சாத்தியரே சிவானந்தத்தை அடைந்தவர். அவரே நிலையான அருள் தன்மையைப் பெற்றவரும் ஆவர்.***

***குறிப்புரை :- சாரணர் முதலிய மூவரும் சிவலோகத்தில் இருக்கும் நிலை பற்றி அப்பெயர்களால் கூறப்பட்டனர். சாரணர் - எங்கும் சென்று உலாவி வருபவர். 'ஒருவர் இல்லத்தில் பணி புரியும் பணியாளர் அவ் இல்லத்தில் எங்கும் செல்லும் உரிமையுடையர் ஆதல்போலச் சிவலோகத்தில் எங்கும் செல்பவர்'***

*என்றபடி. இதுவே 'சாலோக பதவி' எனப்படுகின்றது. இப்பதவி இத்தகையதாதல் பற்றியே இதனைத் தரும் சரியைத் தொண்டு, 'தாச மார்க்கம்' அல்லது, 'தொண்டர் நெறி' எனப்பட்டது. சித்தர் - சிறப்புப் பயன் கிடைக்கப் பெற்றவர். 'சிவ லோகத்தில் சிவனுக்கு அணுக்கராய் இருக்கும் சிறப்புரிமை பெற்றவர்' என்றவாறு. இதுவே 'சாமீப பதவி' எனப்படுகின்றது. இப்பதவி இத்தகைத்தாதல் பற்றியே இதனைத் தரும் கிரியைத் தொண்டு, 'சற்புத்திரமார்க்கம்' அல்லது 'மகன்மை நெறி' எனப்பட்டது. சமாதியர் - சிவனுக்குச் சமமானவர். 'சிவலோகத்தில் சிவனது உருவத்தைப் போன்ற உருவத்தையே பெற்றிருப்பவர்' என்றபடி. இதுவே 'சாரூப பதவி' எனப்படுகின்றது. இப்பதவி இத்தகையதாதல் பற்றியே இதனைத் தரும் யோகப் பயிற்சி, 'சகமார்க்கம்' அல்லது 'தோழமை நெறி' எனப்பட்டது. இவை மூன்றுமே பத முத்திகளாம். சாத்தியர் - சாத்தியத்தை, அஃதாவது தமது குறிக்கோளை அடைந்து விட்டவர். இவரை "மெய்ஞ்ஞான தத்துவர்" என எடுத்துக்கூறியதனால், 'முன் சொல்லப்பட்ட மூவரும் மெய்ஞ்ஞானத்திற்குரிய படிகளில் நின்றவர்' என்பது பெறப்பட்டது. குறிக்கோள், சிவனோடு இரண்டறக் கலந்து, மீண்டுவாரா நிலைமையில் இருத்தல். அந்நிலையே ஆனந்த நிலையுமாம் ஆதலின், ஆனந்தத்தைப் பெறுதலும் குறிக்கோளாயிற்று. "சத்த அருள்" என்பது, 'வெண்மைய ஆடை' என்பதுபோல வினைக் குறிப்பு பெயரெச்சத்தொடர். 'தத்துவம்' என்பது பலபொருள்கட்கு உரியதாகச் சொல்லப்படுதலால், இங்குச் சொல்லப்படும் தத்துவம், 'மெய்ஞ்ஞான தத்துவம்' என்றார். 'மெய்ஞ்ஞானமாகிய தத்துவம்' என்றபடி. 'முன் மந்திரத்திற் சொல்லிய சார்ச்சி வகையை உடையவர் நால்வகையினர்' என்றற்குச் "சார்ந்தவர்" என்பதை எழுவாயாக வைத்துக் கூறினார். சொற்பொருட் பின்வரு நிலையணி வந்தது. இங்குக் கூறிய சமாதி, 'அநாதிக்குச் சமமாக எண்ணப்படும் ஆதி' என்க. இதனால், 'சிவனைச் சாருமுறையும், அம்முறைகளால் அடையும் பயன்களும் நால்வகையினவாம்' என்பது உணர்த்தும் முகத்தால் 'இறுதியிற் கூறிய பயன் நின்மலாவத்தையாலே உளதாம்' என்பது கூறப்பட்டது.*

| சரியை | சாரணர் | தாசமார்க்கம் | தொண்டர் நெறி | சாலோக பதவி | பதமுத்தி |
|---|---|---|---|---|---|
| கிரியை | சித்தர் | சற்புத்திர மார்க்கம் | மகன்மை நெறி | சாமீப பதவி | |
| யோகம் | சமாதியர் | சகமார்க்கம் | தோழமை நெறி | சாரூப பதவி | |
| ஞானம் | சாத்தியர் | சன்மார்க்கம் | காதன்மை நெறி | சாயுச்சிய பதவி | பரமுத்தி |

***2314. தெளிவுரை :-** (உண்மையுணர்ந்தோர்)* ***'அறிபவனும், அறியப்படுபவனும் - என உள்பொருள் இரண்டு எனக்கூறுவர் ஆயினும் அவ்விரண்டு பொருளும் எஞ்ஞான்றும் வேறுநில்லாது உடலும், உயிரும் போல ஒன்றாகியேயிருத்தலால், பாசமாகிய அசுத்தத்தின் நீங்கினோர், அறியப்படுபவனை யறிதலோடு அறிபவனையும் அறிதலாகிய இரண்டறிவை***

**2314.** தான்என் றவன்என் றிரண்டென்பர் தத்துவம்
தான்என் றவன்என் றிரண்டற்ற தன்மையால்
தான்என் றிரண்டுன்னார் கேவலத் தானவர்
தான்இன்றித் தானாகத் தத்துவ சுத்தமே. 45

---

*யுடையராகாது, அறியப்படுபவனை மட்டுமே அறிதலாகிய அந்த ஓர் அறிவை மட்டுமே உடையவராய் இருப்பர். அவ்வாறிருத்தலே நிறைவான சுத்த நிலையாகும்.*

***குறிப்புரை :-*** *உடலும், உயிரும் வேறு நில்லாமையே பற்றி, 'அவ்விரண்டனுள் ஒன்றே உள்ளது; மற்றொன்று இல்லை' எனக் கூறுதல் அறியாமையுடையாரது கூற்றாதல்போல, அறிவானும், அறியப்படுபவனும் வேறு நில்லாமையே பற்றி, 'அவ்விருவருள் ஒருவனே உளன்; மற்றொருவன் இல்லை' என்றல் அறியாமையுடையவரது கூற்றாய்விடும் - என்பது உணர்த்துதற்கு. "தான் என்று, அவன் என்ற தத்துவம் இரண்டு என்பர்" எனவும், 'ஆயினும், அறிபவனது அறிவை அறியப் படுபவனிடத்தே நிலைத்து நில்லாதவாறு அகற்றி, 'தான்' என்றும், இவ்வாறெல்லாம், 'யான், எனது - பிறர், பிறரது' என மயங்கி உழலச் செய்வது மல சத்தியேயாகலின் அச்சத்தி முழுவதுமாக நீங்கப் பெற்றவர் அங்ஙனம் பலதலைப்படும் அறிவுடையராகாது, 'அவனே' என அறியும் அந்த ஒருதலைப்பட்ட அறிவையே உடையராய் இருப்பர்' - என்பது உணர்த்துதற்கு "கேவலத்து ஆனவர்தான் என்று இரண்டு உன்னார்" எனவும், அவ்வாற்றால், அறிபவன் அறியப்படுபவனேயாய் நிற்றலே மலம் முழுவதுமாக நீங்கிய நிறைவான சுத்த நிலை - என்பது உணர்த்துதற்கு, "தான் இன்றித் தான் ஆகத் தத்துவ சுத்தமே" எனவும் கூறினார்.*

*ஈற்றடியில் உள்ள "தான்" இரண்டில் முன்னது அறிபவனையும், பின்னது அறியப்படுபவனையும் குறித்தன. தன்மையை என்பது பாடம் அன்று "கேவலம்" என்றது, கலப்பின் நீங்கி நிற்றலைக் குறித்தது. "தத்துவம்" இரண்டில் முன்னது, 'உள்ளது' என்றும், பின்னது 'உண்மை' என்றும் பொருள் பயந்தன. "சுத்தம்" என்பதன் பின், 'ஆம்' என்பது எஞ்சி நின்றது. ஏகாரம் தேற்றம். உண்மைச் சுத்தத்தை அடைதற்குச் சகலத்திற் சுத்தமாகிய நின்மலா வத்தையை அடைதல் வேண்டும்' என்பது கருத்து. அதனுள்ளும் சிவயோக நிலையே இங்கு வலியுறுத்தப்பட்டது. மெய்கண்ட தேவரும் இவ்வாறே,*

*"நான் அவன்என்(று) எண்ணினர்க்கும் நாடும் உளம் உண்டாதல்,*
*தான்எனஒன்(று) இன்றியே, தான் அதுவாய் - நான்என ஒன்(று)*
*இல்என்று தானே எனும்அவரைத் தன்அடிவைத்(து)*
*இல்என்று தான்ஆம் இறை"* ***- சிவஞானபோதம் - சூ. 10. அதி. 1***

*என அருளினமை காண்க.*

**2315.** தன்னினில் தன்னை அறியும் தலைமகன்
தன்னினில் தன்னை அறியின் தலைப்படும்
தன்னினில் தன்னை அறிகில னாயிடில்
தன்னினில் தன்னையும் சார்தற் கரியனே. **46**

---

*இதனால், நின்மலாவத்தையின்றிப் பராவத்தையை எய்துதல் கூடாமை உணர்த்தப்பட்டது. (அருட்கேவலத்தில் நின்றார் அருட்சுத்தம் எய்தும் உபாயம்).*

***2315. தெளிவுரை :-*** *('என்னை உடையானாகிய தலைவன் எங்குளன்' எனப் புறத்தே பலவிடத்துத் "தேடியும் தேடொணாத் தேவனாய்" உள்ள சிவனை, 'இனி என்னுள்ளேதான் நான்தேட வேண்டும்' என உணர்ந்து, அவ்வாறே) அவனைத் தன்னுள்ளே அறிய முயல்கின்ற பெருமகன் அம்முயற்சியில் உறைத்து நிற்பனாயின், அவனைத்தான் அடைந்துவிடுவான். அம்முறையில் அவன் தன்னுள்ளே தேட முயலாது, புறத்திற்றானே தேடிக் கொண்டிருப்பானாயின், அவன் சிவனைத் தன்னுள்ளேயும் அடைதற்கு அரியவனாகியேயிருப்பான்.*

***குறிப்புரை :- 'சிவனைப் புறத்தே தேடாது தன்னுள்ளே தேடி அடைவது தான் நின்மலாவத்தை' என்பது குறிப்பு.***

*''தேடிக்கண்டுகொண்டேன்; திருமாலொடு நான்முகனும் தேடி தேடொணாத் தேவனை என்னுள்ளே தேடிக் கண்டு கொண்டேன்" (தி.4 ப.9 பா.12) என நாவரசர் அருளிச் செய்தமையை இங்கு உன்னி உணர்க. மற்றும் அவர் இத்திருமந்திரத்தை "முன்னோர் மொழி பொருளேயன்றி, அவர் மொழியும் - பொன்னேபோல் தோற்றம்" வகையில் (நன்னூற் பாயிர உரைமேற்கோள்) தமது 'சித்தத் தொகை'த் திருக்குறுந்தொகையில் எடுத்தருளிச் செய்தமையும் உணரற் பாற்று. இதனானே, உண்மைப் பாடங்களும் சில விளங்கும். யாப்புக்கேற்பன கொள்ளப்படும். எனவே முன்பு, ''தேடிக் கண்டுகொண்டேன்'' என்னும் திருப்பாடலும் இதனையே இனிது விளக்கியதாயிற்று. "தன்னினில்" என்பவற்றில் இன்னுருபோடு ஒத்த இல்லுருபு இன் சாரியை பெறுதல் சிறுபான்மை இலேசினால் கொள்ளப்படும். (தொல் - எழுத்து - புணரியல்) உம்மையை மாற்றிவைத்துரைக்க. இதனால், நின்மலாவத்தையே சிவனை அடையும் வழியாதல் வலியுறுத்தப்பட்டது.*

***2316. தெளிவுரை :-*** *மாணவகனே, குருவருள் பெறாத மற்றவர்களைப் போல நீயும் இராக் கதிர்போலச் சிறிதளவைத் தருபவனாயும், பகற் கதிர்போலப் பேரறிவைத் தருபவனாயும் இருந்து எல்லாவற்றையும் செய்கின்ற சிவனைப் புறத்தெல்லாம் தேடி, 'ஐயோ!' சிவனைக் காணமுடியவில்லையே' என்று கதறி அழாதே. ஏன் எனில், அவனை அகத்தே அறிதலாகிய அந்த நெறியைப் பற்றி, அதிலே சென்ற பொழுது அவன் எனக்குக் கிடைத்தான். அதன்பின் அவன்*

**2316.** அறியகி லேன்என் றரற்றாதே நீயும்
நெறிவழி யேசென்று நேர்பட்ட பின்னை
இருசுட ராகி இயற்றவல் லானும்
ஒருசுட ராய்வந்தென் உள்ளத்துள் ளானே. **47**

**2317.** மண்ணொன்று தான்பல நற்கலன் ஆயிடும்
உண்ணின்ற யோனிகட் கெல்லாம் ஒருவனே
கண்ணொன்று தான்பல காணும் தனைக்காணா
அண்ணலும் அவ்வண்ண மாகிநின் றானே. **48**

---

*முன்போல இருசுடராய் இல்லாமல் பகற் கதிராகிய ஒரு சுடரேபோலத் தோன்றி, அந்நிலையினின்றும் மாற்றம் சிறிதும் இன்றி, என் உள்ளத்துள் நீங்காதிருக்கின்றான்.*

*குறிப்புரை :- 'நீயும் அந்நெறியிலே சென்றால் தவறாமல் அவனை அடைவாய்' என்பது குறிப்பெச்சம். 'அகத்தே அறியும் நெறியே நின்மலாவத்தை' என்பது மேலே குறிக்கப்பட்டது. "வழியே" என்றது, 'பிறழாது பற்றி' என்றபடி. "நேர்பட்ட பின்னை" என்ற அனுவாதத்தால், நேர்பட்டமைதானே பெறப்பட்டது. உம்மை சிறப்பு. சிறிதறிவைத் தருதல் திரோதான சத்தியால், பேரறிவைத் தருதல் அருட்சத்தியால். இவையே பெத்த முத்தி நிலைகளாம். ரகாரவகையால் எதுகை ஒன்றிற்று. இதனால், நின்மலாவத்தையை எய்தாது வருந்தும் மாணாக்கன் மேல் இரக்கங்கொண்டு, அதனை அடையுமாறு அறிவுறுத்தப்பட்டது.*

*2317. **தெளிவுரை :-** குடம், சால், சாடி முதலாகக் கலங்கள் பல வகையால் இருப்பினும் அவை அனைத்திலும் ஒருமண்ணே பொருந்தியிருத்தல் போலப் பிறப்பு வகையால் உயிர்களின் அறிவு பல்வேறு வகைப்பட்டிருப்பினும் ஒரு பேரறிவாகிய சிவன் அவை அனைத்தின் அறிவினுள்ளும் இருக்கின்றான். அங்ஙனமாயினும், கண் எல்லாப் பொருளையும் பார்க்க, பார்க்கப்பட்ட பொருள்கள் கண்ணைப் பாராததுபோல, அறிவுக்கறிவாய் உள்ள சிவன் அனைத்துயிர்களையும் அறியினும் அவ்வுயிர்களுள் ஒன்றேனும் அவனை அறிதல் இல்லை.*

*குறிப்புரை :- இதனுள் முதலிற் போந்த உவமை, ஒருவனே பலவற்றில் இருக்கும் அளவிற்குக் கூறிய ஒருபுடை எடுத்துக்காட்டு உவமை. மற்றுக் காரிய காரணங்களைப் பற்றியதன்று. 'பலவற்றை' என உருபு விரிக்க. 'குடம் முதலியன கண்ணைக் காணாமை மட்டும் அன்று; தம்மையும் தாம் அறிவதில்லை' என்பதனையும் பின்னர்க் கூறிய உவமையால் உடன்கொள்க.*

*காட்டிய கண்ணே தனைக்காணா, கண்ணுக்குக்*
*காட்டிய உள்ளத்தைக் கண்காணா - காட்டிய*

**2318.** ஓம்புகின் றான்உல கேழையும் உள்நின்று
கூம்புகின் றார்குணத் தின்னொடுங் கூடுவர்
தேம்புகின் றார்சிவம் சிந்தைசெய் யாதவர்
தும்பகில் லார்வந்து கொள்ளலும் ஆமே. 49

---

*உள்ளம் தனைக்காணா; உள்ளத்தின் கண்ணாய*
*கள்வன்தான்; உள்ளத்திற் காண்* **- சிவஞானபோதம் - சூ. 9, அதி. 1**

***காணொ ணாகர ணங்க ளுக்குயிர்***
***கண்டி டாமையின் இன்றெனின்,***
***காணு மோகடம் கண்ட கண்ணினைக்***
***கண்டு நிற்பதும் கண்ணதே***

**- சிவஞான சித்தி பரபக்கம் உலகாயதன் மத மறுதலை - 19**

*எனவும் போந்த சாத்திர மொழிகளைக் காண்க.*

*"ஒருவனே" என்பதன் பின் 'அறிவாய் உளன்' என்பது வருவிக்க. உள்நின்ற - உலகத்துள் நின்ற யோனிகள், ஆகுபெயர். வண்ணம் - நிலைமை. நிலைமையனை 'நிலைமை' என்றதும் ஆகுபெயர். "அண்ணலும்" என்னும் உம்மை, உவமையைத் தழுவிநின்ற எச்ச உம்மை.*

*இதனால், 'மேற்கூறியவாறு ஒருவனே எல்லா உயிர்களின் அகத்திலும் நிற்றல் எங்ஙனம்' என்னும் ஐயம் தெளிவிக்கப்பட்டது.*

***2318. தெளிவுரை :-*** *ஏழுலகத்தில் உள்ள உயிர்களையும் சிவன் ஒப்பநோக்கித்தான் அவற்றின் உள்நின்று காத்து வருகின்றான். (என்றாலும், சிலரே அதனையுணர்ந்து, ஏனையவற்றைப் பற்றாது விடுத்து அவனிடத்திலே சென்று அடங்குகின்றனர். அங்ஙனம் அடங்கினவர்கள் சிவனது எண்குணங்களையும் தாங்களும் உடையவராவர், பலர் அவ்வாறு உணர்ந்து சிவனை அடைதல் இல்லை. அங்ஙனம் அடையாதவர்கள் உலகியலில் சிக்கித் துன்புறுகின்றனர். சிவனை அடைந்து அடங்காதவர்கள் சிவனது குணத்தைப் பெறுதலும் கூடுமோ! (கூடாது).*

***குறிப்புரை :-*** *'சிவம்' எனப்பின்னர் வருதலால் 'ஓம்புபவன் சிவன்' என்பதும் குணம் அவனுடையன என்பதும் போந்தன; ஓம்புதலை எடுத்துக் கூறினமையால், ஒப்ப நோக்குதல் பெறப்பட்டது. 'ஓம்புபவன் ஒப்ப நோக்கினும் ஓம்பப்படும் உயிர்கள் பக்குவ பேதத்தால் பயன் பெறுதலில் வேறுபடுகின்றன, என்பதாம். ஆகவே, 'அனைவரும் ஒருகாலத்திற்றானே நின்மலாவத்தை எய்தார்' என்பதாம் 'சென்று' எனற்பாலதனை. 'வந்து' என்றது இடவழுவமைதி. 'அக்குணம் கொள்ளலும் ஆமே' என்க. உம்மை சிறப்பு. ஏகார வினா, எதிர்மறை உணர்த்தி*

**2319.** குறியறி யார்கள் குறிகாண மாட்டார்
குறியறி யார்கடம் கூடல் பெரிது
குறியறி ஆவகை கூடுமின் கூடில்
அறிவறி வாய்இருந்து அன்னமும் ஆமே. **50**

---

*நின்றது. சிவனது எண்குணங்களாவன; தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்ற லுடைமை, வரம்பிலின்ப முடைமை (திருக்குறள் - 9, பரிமேலழகர் உரை) இவை முறையே சுதந்திரத்துவம், விசுத்ததேகம், நிராமயான்மா சருவஞ்ஞத்துவம், அநாதி முத்தத்தன்மை, அலுத்த சத்தி, அநந்த சத்தி, பூர்த்தி' என வடமொழியில் சொல்லப்படும் (சிவஞானசித்தி சுபக்கம் - பாயிரம் - 1) அலுத்த சத்தி, 'குறைவில்லாற்றல் உடைமை' என்றும் சொல்லப்படும். பூர்த்தி, 'திருத்தி' என்றும் சொல்லப்படும். அநாதி முத்தத்தன்மை 'அநாதி போதம்' என்றும் சொல்லப்படும். சிவனைச் சேர்ந்தார் "எண் குணத்துளோமே" (தி.6 ப.98 பா.10) எனக் கூறுமாறு காண்க. கூம்புகின்றார் - மனம் பொறிவழிச் சென்று புலன்களைப் பற்றி அலையாது திருவடிச்சார்பு ஒன்றிலே இறுகப்பற்றி நின்று குவிதல். தேம்புதல் - தேம்பி அழுதல்.*

*இதனால், அனைவரும் பக்குவபேதத்தால் ஒருங்கே நின்மலாவத்தையை எய்தாமை கூறப்பட்டது.*

***2319. தெளிவுரை :-** 'குறிக்கொளத் தக்கது இது' என அறியாதவர்கள் அதனை அடைதல் எங்ஙனம் கூடும்? (கூடாது) அவர் உடம்பிற் கட்டுண்டு நிற்குங் காலம் பெரிதாகும். ஆகையால், நீவிர், 'குறிக்கொள்ளத்தக்க பொருள் இது' என்பதை அறிந்து, பின்பு அதுவே யாகும்படி பொருந்தி நில்லுங்கள். நின்றால், உங்களுடைய அறிவு அறிவாய் இருக்கும். வீட்டின்பமும் சித்திக்கும்.*

***குறிப்புரை :-** குறி - குறித்துணரும் உயிர். குறி - குறித்து இலக்காக எண்ணி உணரப்படும் சிவம். குறி - குறிக்கப்படும் பொருள். முதனிலைத் தொழிற்பெயர் ஆகுபெயராய்ச் செயப்படுபொருளை உணர்த்திற்று. காணுதல், இங்கு, 'அடைதல்' எனத் தன்காரியம் தோற்றி நின்றது. கூடல், அதற்குரிய காலத்தைக் குறித்த ஆகுபெயர். மூன்றாம் அடியில் அறி என்னும் முதனிலையே அறிந்து என வினையெச்சப் பொருள் தந்தது. 'வரிப்புனை பந்து', என்பதிற்போல, "ஆவகை", வினைத்தொகை. அன்னம் - சோறு. அது, "பாதகமே சோறு பற்றினவா" என்பதிற்போல நின்றது உம்மை, சிறப்பு.*

***இதனால், 'உயிர் குறிக்கொளத் தக்க பொருள் சிவமேயாதலின், அதனை நின்மலாவத்தையால் அடைதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.***

**2320.** ஊனோ உயிரோ உறுகின்ற தேதின்பம்
வானோர் தலைவி மயக்கத் துறநிற்க
யானோ பெரிதறி வேன்என்னும் மானுடன்
தானோ பிறப்போ டிறப்பறி யானே. **51**

---

***2320. தெளிவுரை :-*** *உயிர் உடம்பொடு கூடி நிற்கும் நிலையில் வருகின்ற இன்பத் துன்பங்களை நுகர்வது உடம்பா? உயிரா? இதனை எண்ணிப் பார்த்து உண்மையை உணரமாட்டாமல் திரோதான சத்தியால் வரும் மயக்கத்திலே இருந்து கொண்டு, 'யான் உண்மையை நன்கறிவேன்' என்று சொல்கின்ற மனிதன்தான் பிறந்ததாகிய 'பிறப்பு' என்பதையும், பின்பு இறக்கப்போவதாகிய 'இறப்பு' என்பதையுமே 'இன்ன' என அறியமாட்டான்.*

***குறிப்புரை :-*** *'மற்ற உண்மைகளை எங்ஙனம் அறிவான்' என்பது இசையெச்சம். 'இன்பம் உறுகின்றது ஏது? என மொழி மாற்றியுரைக்க. ''ஏது'' என்பது, 'யாது' என்பதன் மரூஉ, சிறப்புப்பற்றி இன்பமே கூறப்பட்டதாயினும் துன்பமும் உடன்கொள்ளப்படும். 'யான் சுகிக்கின்றேன்; துக்கிக்கின்றேன்' என உணரும்பொழுது யான்' எனப்படுவது உடம்பின் வேறாகிய உயிரே; அவ்வுயிரே தான் என உணரமாட்டாது, திரோதான சத்தியால் வரும் மயக்கத்தால் உடம்பையே தானாக மதிக்கும் ஒவ்வொரு தனி மனிதனும் 'பிறப்பு, இறப்பு' என்பவற்றின் உண்மையையே 'இவை' என அறியமாட்டான் ஆதலின், அவன் தனது அறிவை 'அறிவு' எனக் கூறுவன எல்லாம் போலியே என்பதாம். 'பிறப்பு' என்பது உடம்பு தோன்றுதலும், 'இறப்பு' என்பது உடம்பு அழிதலுமே ஆவன. அல்லது, உயிர் தோன்றுதலும், அழிதலும் அல்ல. ஆயினும் மயக்கத்தால் மக்கள் உயிர் தோன்றுவதும், அழிவதுமாகக் கருதுகின்றனர் என்பது குறிப்பு. மயக்குதற்கு உரியவளாகக் கூறியதனால் "வானோர் தலைவி" திரோதான சத்தியாயினாள். 'திரோதான சத்தி உள்ள வரையில் மக்கள் மெய்யறிவைப் பெறமாட்டார்' என்பதனால், 'அருட்சத்தி தோன்றினால் மெய்யறிவைப் பெறுவார்' என்பது பெறப்பட்டது. அதனானே வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றவாயும் பெறப்படுகின்றது. 'அருட்சத்தி' தோன்றியபொழுதே மெய்யறிவு தோன்ற, நின்மலாவத்தை நிகழும் என்றலின், இம்மந்திரம் இவ்வதிகாரத்திற்கு உரியதாயிற்று.*

*இதனால், 'நின்மலாவத்தைக்குக் காரணம் மெய்யறிவு' என்பது உணர்த்தி முடித்து, வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாயும் செய்யப்பட்டது.*

## 14. அறிவுதயம்

*அறிவு உதயம் - மெய்யறிவின் தோற்றம். இப்பொருளும் இவ்வதிகாரத்தின் இயைபும் மேற்கூறியவாற்றானே விளங்கும். இவ்வதிகாரத்தினைப் பதினான்கு மந்திரங்களால் கூறுகின்றார்.*

**2321.** தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்
தன்னை அறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தானே. 1

---

*2321. **தெளிவுரை :-** ஒருவன் பொருள் இயல்புகளை உள்ளவாறு அறியப் புகும்பொழுது தன்னுடைய இயல்பை முதற்கண் உள்ளவாறு அறிவானாயின், அதன்பின்பு அவனது அறிவு பொய்யறிவாகிக் கெடாது; தானும் எந்தக் கேட்டினையும் எய்தான். ஆகவே, மனிதன் முதலில் தன்னுடைய இயல்பை அறிய முயலாமல், பிற பொருள்களின் இயல்பை அறிய முற்படுவதால், அறிவுகெட்டு அலைகின்றான். அதனால், ஒருவன் முதலில் தனது இயல்பை உள்ளவாறு அறியும் அறிவைப் பெற்றுவிடுவானாயின், அவன் தன்னையே பிறர் வழிபடும் அளவிற்கு உயர்ந்து நிற்பான்.*

***குறிப்புரை :-** தன்னை அறிந்தவன் சிவமாகப் பிறர்போற்ற விளங்குவன் என்பதாம். தன்னை அறிதலாவது தான் ஒருவர் உணர்த்த உணரும் சித்துப்பொருள்; உண்ணின்று உணர்த்தும் பரம்பொருளை உள்ளவாறு உணர்ந்து உய்தலே என் கடமை. இந்த உடல், கருவி, கரணங்கள், உறுபோகம் இவற்றினால் மயங்குதல் முறைமையுமன்று கடமையுமன்று; ஆகவே சித்தாகிய யான் சத்சித்தாகிய பரசிவத்தைக் கூடவே முறையென்று உணர்தல்.*

*இங்ஙனம் அறிந்து எல்லாம் சிவன் செயல் என்று இருந்தானாயின் வினைகள் ஏறா; ஆதலின் அவனுக்கு வருவதொரு கேடும் இல்லையாம்.*

*ஆகவே தன்னை அறியும் அறிவைப் பெற்றானாயின் தன்னைச் சிவமாக எண்ணி உலகம் போற்ற அவன் இருந்தான் ஆவன் என்பதாம்.*

*இருப்பான் என்னாது இருந்தான் என்றது துணிவு பற்றிய உரையாம் என்க.*

*2322. **தெளிவுரை :-** 'எந்த உயிருக்கு மல பரிபாகம் வந்ததோ, அந்த உயிரின் உள்ளத்திலே சிவபெருமான், வலிமையும், பெருமையும் உடைய அனைத்துத் தேவர்களும் தொழும்படி வீற்றிருக்கின்றான்' என்பதை உணர்தலால், அருட் சத்தியாகிய தேவியும் அங்கே மகிழ்ச்சியோடு விரைவில் சென்று அப்பெருமானை வணங்குவாள்.*

**2322.** அங்கே அடற்பெருந் தேவரெல் லாந்தொழச்
சிங்கா தனத்தே சிவன்இருந் தான்என்று
சங்கார் வளையும் சிலம்பும் சலேல்எனப்
பொங்கார் குழலியும் போற்றிஎன் றாளே. 2

**2323.** அறிவு வடிவென் றறியாத என்னை
அறிவு வடிவென் றருள்செய்தான் நந்தி
அறிவு வடிவென் றருளால் அறிந்தேன்
அறிவு வடிவென் றறிந்திருந் தேனே. 3

---

***குறிப்புரை :-*** *என்றது, 'அவனது குறிப்பின்வழியே செயற்பட முற்படுவாள்' என்றபடி. சத்தி சத்திமானை வழிபட்டவள் ஆதலை இவ்வாறு விளக்கினார். சிவன் அங்கே என்றும் இருப்பினும் கள்வன்போல ஒளித்திருந்து, பின் வெளிப்பட்டமை பற்றிப் புதியனாகச் சென்று இருந்தது போலக் கூறினார். "அங்கே" எனப் பொதுப்படக் கூறியது, மெய்ந்நூல் வழக்கு. சிவபெருமானைக் கொலுவிருப்பவன் போலக் கூறியதும், அருட்சத்தியே மகிழ்பவள்போலக் கூறியதும் உயிர்கட்கு மல பரிபாகம் வருவித்தலே அவர்களது குறிக்கோள் என்பது தோன்றுதற்கு. சலேல், ஒலிக்குறிப்பு. இஃது, ஓடி வருதலைக் குறிப்பால் உணர்த்திற்று. 'சலேல் எனப் புகுந்து' என ஒருசொல் வருவிக்க. கூந்தலுக்குப் பொங்குதல் கற்றையாய் அடர்தல். 'பொங்குதல் நிறைந்த குழலை உடையவள்' என்க. சத்தியை வேறெடுத்துக் கூறியது. 'சத்தி நிபாதம் உளதாகும்' என்பது உணர்த்தற் பொருட்டு. ஆகவே, 'மலம் பரிபாகம் உற' அதனால் சத்தி நிபாதம் உண்டாகி, அறிவு உதயம் உளதாம்' என்றதாயிற்று.*

*இதனால், அறிவுதயம் வருமாறு கூறப்பட்டது.*

***2323. தெளிவுரை :-*** மேற் *(பா. 2231)* கூறியவாறு, *"வானோர் தலைவி" தந்த மயக்கத்தால், 'எனது வடிவம் அறிவு' என்னும் உண்மையை அறியாது, 'உடம்பே' என்று மயங்கியிருந்த என்னை, நந்திபெருமான் தோன்றி அம்மயக்கத்தை நீக்கி, 'உனது வடிவம் உடம்பன்று; அறிவு' என அருளிச்செய்து உண்மையை உணரப் பண்ணினார். அவரது திருவுளக் கருணையால் அடியேனுக்கு அறிவு உதயமாயிற்று. அதனால், 'உடம்பு எனது வடிவம் அன்று' என உணர்ந்து அதனின் நீங்கியிருக்கின்றேன்.*

***குறிப்புரை :-*** *'நந்தி பெருமான் எனக்குச் சொல்லியதைத் தான் நான் உனக்குச் சொல்கின்றேன்' என்பது குறிப்பெச்சம். முன்மந்திரத்தில், ''சிங்காதனத்தே சிவன் இருந்தான்'' என்றும், ''பொங்கார் குழலியும் போற்றியென்றாள்" என்றும் கூறிப் பின், "அருள் செய்தான் நந்தி" என்றும், பின் "அருளால் அறிந்தேன்" என்றும் கூறியதனால், மலபரிபாகத்தால் சத்தி*

**2324.** அறிவுக் கழிவில்லை ஆக்கமும் இல்லை
அறிவுக் கழிவல்லது ஆதாரம் இல்லை
அறிவே அறிவை அறிகின்றது என்றிட்டு
அறைகின் றனமறை ஈறுகள் தாமே.

ஆயு மலரின் அணிமலர் தன்மேலே
மாய இதழ்கள் பதினாறும் அங்குள
தூய அறிவே சிவானந்த மாகியே
போய அறிவாய்ப் புணர்ந்திருந் தானே. **4**

---

*நிபாதமும், சத்தி நிபாதத்தால் குருவருளும், குருவருளால் அறிவுதயமும் உளவாதலைக் குறிப்பான் உணர்த்தினமை காண்க. அறிவுதயம், 'ஞானோதயம்' என்றும் சொல்லப்படும். அருள்காரணமாக அருளிச் செய்த அறிவுரை "அருளால்" என்று உபசரிக்கப்பட்டது.*

*இதனால், அறிவுதயம் குருவருளாலே உளதாதல் கூறப்பட்டது.*

***2324. தெளிவுரை :-*** *தோற்றமும், கேடும் சடத்துக்கன்றிச் சித்துக்கில்லை. சித்துக்குப் பற்றுக்கோடு சித்தேயன்றிச் சடம் அன்று. அவ்வாறே சித்தை யறிவதும் சித்தன்றிச் சடம் அன்று. இவ்வாறு, 'வேத முடிபுகள்' எனப்படுகின்ற உபநிடதங்கள் யாவும் கூறுகின்றன.*

***குறிப்புரை :-*** *இந்த முறைமையால், 'பிறப்பதும், இறப்பதும் உயிரன்று; உடம்பே. உயிருக்கு உடம்பு பற்றுக்கோடன்று, சிவமே பற்றுக்கோடு. இனிச் சிவத்தை அறிவதும் உயிரேயன்றி, உடம்பன்று' என்பவற்றை உணர்த்தி, 'உதயமான அறிவைக் கொண்டு இவற்றையெல்லாம் இவ்வாறு அறிதல் வேண்டு' என்பது உணர்த்தியவாறு. 'இட்டு', அசை நிலை.*

*இதனால், 'மெய்யறிவாவது இது' என்பது கூறப்பட்டது. (இம் மந்திரத்தின் பின் பதிப்புக்களில் காணப்படுகின்ற, "ஆயு மலரின்" என்னும் மந்திரம் முன் தந்திரத்து முதல் அதிகாரத்து இறுதியில் சொல்லப்பட்டது).*

***2325. தெளிவுரை :-*** *'உலகத்தில் பலராய்க் குழுமி வாழ்கின்ற அனைத்து மக்களிடையே தானும் ஒரு மகன்போல வந்து அருள்செய்ய வேண்டும்' என்கின்ற சூழ்ச்சியைத் திருவுளத்து எண்ணி, அவ்வாறு வந்து என்முன் நின்ற சிவனை யான் 'சிவன்' என்று அறிந்துகொண்டு போற்றினேன். பின்னும் அங்ஙனம் அவன் வந்து நின்ற திருமேனியை விடாது பற்றிக் கொண்டு திரிந்தேன். அதைக் கண்டு அவனே வியந்து, 'அப்பா' நீ மிகப் பெரியை' என்று கூறினான்.*

***குறிப்புரை :-*** *மன்னுதல், இங்குப் பலராதல் எனவே, அவர் உலக மக்கள் ஆயினர். மாயம், 'சூழ்ச்சி' என்னும் பொருட்டு. 'மாயத்தின் கண்' என உருபு*

**2325.** மன்னிநின் றாரிடை வந்தருள் மாயத்து
முன்னிநின் றானை மொழிந்தேன் முதல்வனும்
பொன்னின்வந் தானோர் புகழ்திரு மேனியைப்
பின்னிநின் றேன்நீ பெரியை என் றானே. **5**

---

*விரித்து. 'சில முன்னி நின்றானை' என ஒருசொல் வருவித்து முடிக்க. 'அருள் மாயம்' வினைத்தொகை. போற்றுதல், "கண்ணுதலும் கண்டக் கறையும் கரந்தருளி" (இருபா இருபஃது - 1) வந்தான் என்றும், "பிறவா முதல்வன் பிறந்து" (போற்றிப் பஃறொடை - 69) வந்தான் என்றும் இன்னோரன்னவாகச் சொல்லித் துதித்தல். "பொன்" என்றது, 'நிதி போல வந்து' என்றது. 'இல்லார்க்குக் கிழியீடு நேர்பட்டாற் போல வந்து' என்றதாம். "வந்து" என்பதை 'வா' எனத் திரித்துக்கொள்க. ஆனோர் - நட்டோர்; உண்மையறிந்து வந்து மாணாக்கர் ஆயினோர். நட்டோரை 'ஆனவர்' எனவும், பகைவரை 'ஆகாதவர்' எனவும் கூறுதல் உலக வழக்கு. "அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப் பேணித் தமராக் கொளல்" (திருக்குறள் - 443) எனக் கூறிய செயற்கரிய செயலைச் செய்தமை பற்றி, 'நீ ஏனையோரினும் வேறாய பெரியை' எனப் பாராட்டினார் என்பதாம். 'குரு ஏனை மக்கள் போலவேயிருப்பினும் அவரை, மக்களுள் ஒருவராக அறியாது, தம்மை ஆட்கொள்ள வந்த சிவனாகவே அறிதல், பக்குவிகட்கன்றி, அபக்குவிகட்கு இயலாது' என்பதை உமாபதி தேவர்,*

> *அருளா வகையால் அருள்புரிய வந்த*
> *பொருள் ஆர் அறிவார் புவி.* ***- திருவருட்பயன் - 43***

*என்றும்,*

> *பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்*
> *போர்வையெனக் காணா புவி.* ***- திருவருட்பயன் - 45***

*என்றும் கூறினார். இதனால், 'நாயனார் தம் குருவாகிய நந்தி பெருமானை நந்தி கணத் தலைவராக மட்டும் காணாது, சிவபெருமானாகவே 'கண்டிருந்தார்' என்பதும், 'அது பற்றி இவரது சிறப்பை உணர்ந்து அவரும் இவரைச் சிறப்பாகப் பாராட்டினார்' என்பதும் விளங்கும்.*

*இதனால், 'அறிவை உதிப்பித்த குரு சிவமேயாவர்' என்பது உணர்த்தும் முகத்தால், 'உண்மையறிவு சிவனால் அல்லது, பிறர் ஒருவராலும் தரப்படாது' என்பது கூறப்பட்டது.*

***2326. தெளிவுரை :-*** *மெய்யறிவு வேண்டுவீர், உமது வேட்கை நிரம்ப வேண்டுமாயின் நீவிர் சிவனையே பொருளாக உணர்ந்து அவனிடம் அன்பு செய்யுங்கள் (பிறரைப் பொருளாக அறியும் அறிவுகள் எல்லாம் போலியறிவே). யான் சிவனை உணர்ந்து பயன் பெற்றேன். ("நான் பெற்ற இன்பம் பெறுக*

**2326.** அறிவறி வாக அறிந்தன்பு செய்மின்
அறிவறி வாக அறியும்அவ் வண்ணம்
அறிவறி வாக அணிமாதி சித்தி
அறிவறி வாக அறிந்தனன் நந்தியே. **6**

---

*இவ்வையகம்") இவ்வாற்றால் உமது அறிவு உண்மை மெய்யறிவாயின், அதனைச் சிவனும் அறிந்து, பயன் தருவான். அதனால் அத்தகைய அறிவால் நிலையான வீடுபேறேயன்றி, இடையில் அணிமாதி சித்திகளும் தாமே வந்து வாய்க்கும்.*

***குறிப்புரை :-*** *"அறிவு அறிவாக" என வந்த நான்கிற்கும், 'அறிவு மெய்யான அறிவாக' என்பதே பொருள். சொற்பொருட் பின்வருநிலையணி. நந்தி சிவன். அது, "அறிந்து" என்பதனோடும் இயையும். "நந்தியை" என்னும் இரண்டன் உருபு தொகுக்கப்பட்டது. ஈற்றடியை முதலடியின் பின்னர்க் கூட்டுக. "அறியும்" என்பதற்கும் வினைமுதல் "நந்தி" என்பதே. அவ்விடத்து அறிதல், பயன் தருதலாகிய தன் காரியம் உணர்த்தி நின்றது. இரண்டாம் அடியில் 'ஆக' என்பது 'ஆனபின்' என்னும் பொருளதாயும், மூன்றாம் அடியில், "ஆக" என்பது, "ஆதலால்" எனக் காரணப் பொருட்டாயும் நின்றன. "அணிமாதி சித்திக்கு" 'ஆம்' என்னும் பயனிலை எஞ்சி நின்றது.*

*இதனால், 'மெய்ப்பொருளை அறியும் அறிவே மெய்யறிவு எனப் பொதுவாகச் சொல்லப்படினும், சிவனை மெய்ப்பொருளாக அறியும் அறிவே உண்மை மெய்யறிவாம்' என்பது கூறப்பட்டது. "பொருள் அல்லவற்றை பொருள் என்று உணர்தலை, மருள்" (திருக்குறள் - 351) என்றார் திருவள்ளுவர்.*

***2327. தெளிவுரை :-*** *உலகினர், 'எமக்கு அறிவு வேண்டும், அறிவு வேண்டும்' என கூப்பாடு போடுகின்றனர். 'ஆயினும், அங்ஙனம் கூப்பாடு போட்டுப் பெற்ற அறிவு அறியாமையாய் இருத்தலை ஒருவரும் அறியார், அங்ஙனம் ஒருவராலும் அறியப்படாதிருக்கின்ற அந்த அறியாமை நீங்கி, அறிவு அறிவாகுமானால், முன்பு 'அறிவு' என்று நினைக்கப்பட்டது அறியாமையால் இருந்த அழகு வெளிப்பட நகைப்பு உண்டாகும்.*

***குறிப்புரை :-*** *'தன்னை உடையார் ஒருவருக்கும் தான் காணப்படாது, அறிவு போலவே தோன்றுதலும், தான் நீங்கிய பின் விளங்கி நிற்கும் அறிவைக் கொண்டே தான் அனுமித்துணரப்படுதலுமே அறியாமையின் இயல்பு' என்பது உணர்த்தியவாறு. "அறிதோறறியாமை கண்டற்றால்" (திருக்குறள் - 1110) என்னும் திருக்குறளை நோக்குக.*

> *"சுடரால் இருள்தேடச் சொல்லார்கள் எந்தாய்!*
> *சுடரால் இருந்தேடச் சொன்னாய்" - சதமணிக்கோவை - 62*

*என்றதும் இஃதே பற்றி. "அறிவுபோல் அடர்ந்தெழும் அறியாமையின் வலியால்"*

**2327.** அறிவறி வென்றங் கரற்றும் உலகம்
அறிவறி யாமையை யாரும் அறியார்
அறிவறி யாமை கடந்தறி வானால்
அறிவறி யாமை அழகிய வாறே. **7**

**2328.** அறிவறி யாமையை நீவி யவனே
பொறிவாய் ஒழிந்தெங்கும் தானானபோது
அறிவாய வற்றினுள் தானாய் அறிவின்
செறிவாகி நின்றவன் சீவனும் ஆமே. **8**

---

*(காஞ்சிப்புராணம் - சார்ந்தாசயப்படலம் - 12) எனச் சிவஞான யோகிகளும் கூறினார். இத்தன்மையதான அறியாமையைச் செய்வது ஆணவ மலமே. அது பற்றி உமாபதிதேவர்;*

*ஒருபொருளும் காட்டாது இருள் உருவம் காட்டும்;*
*இருபொருளும் காட்டாது இது. - திருவருட்பயன், 313*

*எனவும்,*

*பலரைப் புணர்ந்தும் இருட் பாவைக்குண் டென்றும்*
*கணவற்கும் தோன்றாத கற்பு. - திருவருட்பயன், 315*

*எனவும் கூறினார்.*

*அழகிதல்லாததை, 'அழகிது' என்றது வஞ்சப் புகழ்ச்சி. "அழகியவாறே" என்பதன்பின் 'தோன்றும்' என்பது எஞ்சி நின்றது.*

*இதனால், முன்மந்திரத்தில் கூறியபடி, 'அறிவு அறிவாக அறிந்து அன்பு செய்ய அறிவு உதயம் ஆவதற்குத் தடையாய் உள்ளது, பெரும்பான்மையோரால் நம்ப இயலாத ஆணவ மலம்' என்பது உணர்த்தும் முகத்தால், 'அது பரிபாகம் ஆதல் இன்றியமையாதது' என்பது கூறப்பட்டது.*

*2328. தெளிவுரை :- அறிவு அறியாமையாய் இருந்த நிலையினின்றும் நீங்கி, அறிவேயாய் நிற்கப் பெற்றவனே, புற இந்திரியம் முதலிய கருவிகளில் அவையே தானாய் ஒன்றி, அவற்றின் அளவாய் நின்ற ஏகதேச நிலை நீங்கி, எங்கும் தானாம் வியாபக நிலையைப் பெறுவான். அந்நிலையைப் பெற்றபொழுதுதான் சடமே, யாயினும் சித்துப் போலத் தோன்றிய கரணங்களில் அறிவாய் உள்ளவனும், அவற்றால் சீவனாய் இருந்தவனும் தானே ஆதல் அவனுக்கு விளங்கும்.*

*குறிப்புரை :- நீவுதல் - துடைத்தல். அறிவின் வினையை அதனை உடையான்மேல் ஏற்றி, 'நீவியவன்' என்றார். "பொறி" என்றது உபலக்கணம். "எங்கும் தானானபோது" என்ற அனுவாதத்தால், எங்கும் தானானமை தானே*

**2329.** அறிவுடை யார்நெஞ் சகலிட மாவது
அறிவுடை யார்நெஞ் சருந்தவ மாவது
அறிவுடை யார்நெஞ்சொ டாதிப் பிரானும்
அறிவுடை யார்நெஞ்சத் தாகிநின் றானே. **9**

---

*பெறப்பட்டது. 'அறிவாய' என்னும் அஃறிணைப் பன்மைப்பெயர், சாரியையும் உருபும் பெற்று, 'அறிவாயவற்றினுள்' என வந்தது. 'அறிவாய' என்றது, 'அறிவுடையனபோலத் தோன்றியன' என்னும் பொருட்டு. செறிவு - மிகுதி. உம்மையை "நின்றவன்" என்பதனோடும் கூட்டுக. "ஆம்" என்றது, 'ஆதல் விளங்கும்' என்றவாறு.*

*இதனால், அறியாமை நீக்கத்தின் இன்றியமையாமை அதன் பயன் கூறும் முகத்தால் விளக்கப்பட்டது.*

*2329. **தெளிவுரை :-** மெய்யறிவை அடைந்தோரது உள்ளங்கள் அனைத்துலகங்களையும் உட்கொள்ளவல்லன; செய்தற்கரிய சரியை கிரியா யோகங்களில் பழகிப் பழுத்தன. அதனால், முதற்கடவுளாகிய சிவபிரானும் அவரது உள்ளங்களையே தானாகச் செய்து, அவற்றின் கண் நீங்காமலும் நிற்கின்றான்.*

*குறிப்புரை :- "ஆவது" இரண்டும் துவ்வீறுபெற்ற தொழிற் பெயர்கள் அவை ஆகுபெயராய், அவற்றையுடைய உள்ளங்களைக் குறித்தன. 'நெஞ்சொடு' என்பதன்பின் 'ஒன்றாகி' என்பது வருவிக்க. "நெஞ்சு" என்பது பொதுப்பட அந்தக் கரணங்களைக் குறித்தன. அதனானே இனம் பற்றிப் புறக் கரணங்களும் கொள்ளப்படும். ஈற்றில் 'அறிவுடையார் நெஞ்சம்' என்றது, 'அது' (அதன்கண்) என்னும் சுட்டுப் பெயரளவாய் நின்றது.*

*இதனால், மெய்யறிவு பெற்றோரது கரணங்கள் நம்மனோரது கரணம்போலப் பசுகரணமாகாது, பதிகரணமாதல் கூறப்பட்டது.*

*பாலை நெய்தல் பாடியதும், பாம்பொழியப் பாடியதும்*
*காலனைஅன் றேவிக் கராங்கொண்ட - பாலன்*
*மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நம்தம்*
*கரணம்போல் அல்லாமை காண்.* ***- திருக்களிற்றுப்படியார் - 12***

*என்னும் சாத்திர மொழியை இங்கு ஒப்புநோக்கியுணர்க.*

*2330. **தெளிவுரை :-** உடம்பும், உலகமும் ஆகிய இவற்றின் அடிநிலைப் பொருளாகிய மாயைக்குத் தலைவனாய் உள்ள சிவன், உயிர்களின் பெத்த காலத்தில், 'அயன், மால், அரன்' என மூவராய் நின்று அவைகளை முத்தொழிலில் அகப்படுத்தி, அவைகளால் அணுகுதற்கு அரியனாய்ச் சேய்மையில் நின்றவன்,*

**2330.** மாயனு மாகி மலரோன் இறையுமாய்க்
காயநன் னாட்டுக் கருமுத லானவன்
சேயன் அணியனாய்த் தித்திக்கும் தீங்கரும்
பாய் அமு தாகிநின் றண்ணிக்கின் றானே. **10**

**2331.** என்னை யறிகிலேன் இத்தனை காலமும்
என்னை யறிந்தபின் ஏதும் அறிந்திலேன்
என்னை யறிந்திட் டிருத்தலும் கைவிடாது
என்னையிட் டென்னை உசாவுகின் றேனே. **11**

---

*முத்தி காலத்தில் அம்மூவர்க்கும் மேலாய மூர்த்தியாய் வெளிப்பட்டு அருகில் விளங்கி கரும்பு போலவும், அமுதம் போலவும் இனிப்பவன் ஆகின்றான்.*

***குறிப்புரை :-*** *இரண்டாம் அடியை முதலில் வைத்து உரைக்க. உலகத்தை "நன்னாடு" என்றார். "காய நன்னாடு" உம்மைத்தொகை. கரு - முதற் காரணம். முதல் - முதல்வன், தலைவன். சேயவன் - சேயவனாய் நின்றவன் என இறந்த காலத்து வந்தது. "ஆய்" என்பது "அணியன்" என்பதனோடும் இயையும். "கரும்பாய்" என்றதில் ஆக்கம், உவமை குறித்து நின்றது. 'பெத்தம், முத்தி' என்பன ஆற்றலால் கொள்ளக்கிடந்தன.*

*இதனால், முன் மந்திரத்தில், "அறிவுடையார் நெஞ்சத்து ஆகி நின்றான்" எனக் கூறியதன் மேல், 'அவன் அங்ஙனம் ஆகி நின்று செய்வது இது' என்பது கூறப்பட்டது. இஃது இனிது விளங்குதற் பொருட்டு இதன் மறுதலை நிலையையும் உடன் கூறினார்.*

***2331. தெளிவுரை :-*** *இவ்வளவு காலமும் யான் என்னையறியாமல், என்னின் வேறாகிய பொருள்களையே யானாக எண்ணியிருந்தேன். (அதனால் அவற்றில் அழுந்தி, அவையேயாய் இருந்தேன்). நந்தி பெருமானது அருளால் என்னை யான் அவற்றின் வேறான பொருளாக அறிந்தபின் அந்தநிலை சிறிதும் இல்லை. மேலும் யான் யானாகிய நிலையை நழுவ விடாமல் உறுதியாகப்பற்றி, என்னையே ஏதுவாகப் பற்றி, எனது இயல்பை யான் நன்கு ஆராய்ந்து வருகின்றேன்.*

> *"என்னையறியேன் இத்தனை காலமும்" என்றது பெத்த நிலை*
> *"என்னையறிந்தபின் ஏதும் அறிந்திலேன்" என்றது முத்தி நிலை*
> *அனுபவம் மொழிந்தது.*

***குறிப்புரை :-*** *மாணாக்கன் நிலைமை இதுவாய் இருத்தல் பற்றி நாயனார் தமது நிலையையும் அதுவாகக் கூறினார். அவன் அந்நிலையினின்று தாழாமல் நிலைத்து, மேல் ஏறுதற்பொருட்டு. 'நந்திபெருமான் அருளால்' என்பது, மேலெல்லாம் நாயனார் கூறிவந்தவாற்றால் கொள்ளக் கிடந்தது.*

**2332.** மாய விளக்கது நின்று மறைந்திடும்
தூய விளக்கது நின்று சுடர்விடும்
காய விளக்கது நின்று கனற்றிடும்
சேய விளக்கினைத் தேடுகின் றேனே. **12**

**2333.** தேடுகின் றேன்திசை யெட்டோ டிரண்டிலும்
நாடுகின் றேன்நல மேயுடை யான்அடி
பாடுகின் றேன்பர மேதுணை யாம்எனக்
கூடுகின் றேன்குறை யாமனத் தாலே. **13**

---

*இதனால், 'குருவருளால் அறிவு உதயமானபின் அதனை வளர்த்துக் கொள்ளுதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

*2332. **தெளிவுரை :-** நம் கையில் உள்ளது உடம்பாகிய ஒரு விளக்கு, அது நிலையற்றது; சிறிதுபோதுநின்று மறைந்து விடும் என்பது நம் போன்றவர்களை விட்டு அது மறைந்தமையால் அறிந்தேன். மேலும் இது முடைநாற்றம் வீசுவதாயும், பசி, நோய் முதலியவற்றால் வருத்துவதாயும் உள்ளது. இனித் திருவருளாகிய மற்றொரு விளக்கு மிகச் சேய்மையில் உள்ளதாகப் பெரியோர்கள் சொல்வதால் அறிகின்றேன். அந்த விளக்கு எப்பொழுதுமே நம்மை விட்டு நீங்காமல் ஒளிவீசிக் கொண்டேயிருக்குமாம். மேலும் அது தூய்மையானதாயும், தனி ஓர் இன்பத்தைத் தருவதாயும் இருக்குமாம். அதனை அடையத்தான் நான் அலைந்து கொண்டிருக்கின்றேன்.*

***குறிப்புரை :-** இதுவும் முன் மந்திரம்போலவே மாணாக்கனது நிலை நோக்கிக் கூறியதாம். 'நீயும் இந்த விளக்கைவிட்டு, அந்த விளக்கைத் தேடி அடை' என்பது குறிப்பெச்சம். "காய விளக்கது" என்பதை முதலில் கூட்டுக. இதில் உள்ள 'அது', பகுதிப்பொருள் விகுதி. மாயம் - நிலையாமை. உடம்பு மாயையின் காரியம் ஆதலாலும், ஆணவம் இருள்போல்வதாக, மாயை விளக்குப் போல்வது ஆதலாலும் "காய விளக்கு" என்றும், திருவருள் அறிவுக்கறிவாய் நின்று அறிவித்து வருதலின் அதனையும் ''விளக்கு'' என்றும் கூறினார். தூய்மையையும், கனற்றுதலையும் கூறவே அவற்றின் மறுதலைகள் பெறப்பட்டன. கனற்றுதல் - வெதுப்புதல்; துன்பந்தருதல்.*

*இதனால், 'உதயமான அறிவால் ஆன்மரூபத்தின் வழி தத்துவ தரிசனத்தைச் செய்து, திருவருளை நாடவேண்டும், என்பது கூறப்பட்டது. 'திருவருளே ஞானக்கண்' என்க.*

*2333. **தெளிவுரை :-** 'நன்றேயுடையனாயும், தீதேயில்லாதவனாயும் உள்ள சிவனது அருளே எல்லாவற்றினும் மேலான துணையாம்' என்று துணிந்து*

**2334.** முன்னை முதல்விளை யாட்டத்து முன்வந்தோர்
பின்னைப் பெருமலம் வந்தவா போர்த்திட்டுத்
தன்னைத் தெரிந்து தன் பண்டைத் தலைவன்தாள்
மன்னிச் சிவமாக வாரா பிறவியே. **14**

---

*அதனையே பெற விரும்புகின்றேன். விரும்பி அதனை எல்லாத் திசைகளிலும் சென்று தேடுகின்றேன்; அதனைத் துதிக்கின்றேன். இவ் வகையில் யான் அதனை நினைவளவில் பெற்றுவிட்டேன்.*

*குறிப்புரை :-* *'இனி அதனை அனுபவமாகப் பெறுவேன்' என்பதாம். ஆகவே, நீயும் நாடியும், தேடியும், பாடியும் நின்றால், அதனை அனுபவமாகப் பெறுவாய்' என்பது குறிப்பு. இறந்த காலத்தில் நிகழ்ந்தவற்றை மாணவன் பொருட்டு நிகழ்காலத்தில் நிகழ்வதாகக் கூறினார்.*

*'நலமே உடையான் அடியே பரம் துணையாம் என நாடுகின்றேன்; திசை எட்டோ டிரண்டிலும் தேடுகின்றேன்; பாடுகின்றேன்; குறையா மனத்தாலே கூடுகின்றேன்' எனக் கூட்டி முடிக்க. சிவனது அருளை, 'அவன் அடி' என்றல் மரபு.*

*இதனால், 'அறிவு உதயமாகி, ஆன்மரூபத்தாலும், ஆன்ம தரிசனத்தாலும் தத்துவ தரிசனம் சுத்திகளைச் செய்தபின் சிவதரிசனத்தைப் பெற முயலல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

*2334.* ***தெளிவுரை :-*** *முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாய் (தி. 8 திருவெம்பாவை - 9) உள்ள முதல்வனாகிய சிவபெருமானது விளையாடலால் முதற்கண் இயல்பாய் உள்ள ஒரு மலமாகிய ஆணவமும், அது பற்றிப் பின் வந்து பெருகிய மலங்களாகிய மாயை கன்மங்களும் அவை வந்த வழியே ஒருவன் போகச் செய்து, அநாதியே அடியவனாகிய தன்னையும், தனக்கு அனாதியே தலைவனாய் உள்ள அப்பெருமானையும் உணர்ந்து, பாசங்களை விட்டு அவனது திருவடியை அடைந்து அவனே ஆயினால், பின்பு அவனுக்குப் பிறவிகள் வாரா.*

***குறிப்புரை :-*** *'ஆடல்', 'ஆட்டம்' என வருதல் போல, 'விளையாடல்' என்பது 'விளையாட்டம்' என வந்து, அத்துச் சாரியை பெற்றது. 'விளையாட்டத்தில்' என ஏழாவது விரிக்க. ஐந்தொழில் இறைவனுக்கு விளையாட்டுப் போல்வதாதல் பற்றி அவற்றை அவனது விளையாட்டம்' என்றார். 'வந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. "மலம்" என்பது "ஓர்" என்பதனோடும் சென்று இயைந்தது. 'பெருகு' என்பது கடைக்குறைந்து நின்றது. மாயையும், கன்மமும் முறையே விரிதலும், தொடர்தலும் உடைமை பற்றி, "பெருகு மலம்" எனப்பட்டன. மலங்கள் வந்தவாறு, உயிர்களின் அபக்குவம் 'அது நீங்கினால், அது வழியாக வந்த*

*மலங்களும் நீங்கும்' என்பார், "வந்தவா பேர்த்திட்டு" என்றார். 'ஆறு' என்பது கடைக்குறைந்து நின்றது. "பண்டை" என்பது, "தன்னை" என்பதனோடும் இயையும் 'தலைவனாவான் சிவனே' என்றற்கு, "சிவமாக" என்றாரேனும், 'அவனாக' என்றலே கருத்து.*

*இதனால், அறிவு உதயத்தின் பயன்கள் முறையானே தொகுத்துணர்த்தப்பட்டன.*

## 15. ஆறந்தம்

*சரியை கிரியா யோகங்கட்குப் பின் இத்தந்திரத்தில் ஞானத்தைச் சித்தாந்த முறையிலே கூறி வலியுறுத்திய நாயனார், இனி இவ்வதிகாரத்தில் ஞானம் பற்றிச் சமய நூல்களின் கருத்து வேறுபாடுகளை உணர்த்துவாராய், அவ்வேறுபாட்டினை ஆறந்தங்களாக வைத்து முப்பத்தைந்து மந்திரங்களால் கூறுகின்றார்.*

**2335.** **வேதத்தின் அந்தமும் மிக்கசித் தாந்தமும்**
**நாதத்தின் அந்தமும் நற்போத அந்தமும்**
**ஓதத் தகும்எட் டியோகத்தின் அந்தமும்**
**ஆதிக் கலாந்தமும் ஆறந்த மாமே.** **1**

**2336.** **அந்தம்ஓர் ஆறும் அறிவார் அதிசுத்தர்**
**அந்தம்ஓர் ஆறும் அறிவார் அமலத்தர்**
**அந்தம்ஓர் ஆறும் அறியா ரவர்தமக்கு**
**அந்தமொ டாதி அறியஒண் ணாதே.** **2**

---

*2335. **தெளிவுரை :-** அந்தங்கள், அவையாவன சமய நூல்களின் முடிவுகள் ஆறு. அவை, 'வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தம்' - என்பன.*

*__குறிப்புரை :-__ 'இவை இன்ன' என்பதனை நாயனார் பின்னர் அருளிச் செய்வார்.*

*இதனால் ஞானம் பற்றிச் சமய நூல்கள் கொண்டுள்ள முடிவுகள் ஆறு வகையில் அடங்குதல் கூறப்பட்டது.*

*2336. **தெளிவுரை :-** (ஒரு பொருளை உடன்பாட்டினும், எதிர்மறையினும் ஆய்ந்து உணர்பவரே உண்மை உணர்பவர் ஆதலால்), மேற்கூறிய ஆறு அந்தங்களையும் அறிந்தவரே அறிவர் ஆவர். அவற்றை அறியாதவர் அறிவர் ஆகார்.*

*__குறிப்புரை :-__ அதி சுத்தர் - மிகத் தூயர்; மலம் முழுதும் நீங்கப் பெற்றவர். அந்தம் ஆதிகள், ஞானத்தின் முடிவும், முதலும். செய்யுள் பற்றி அந்தம் முன் வந்தது. "அறிய" என்னும் செயவெனெச்சம் தொழிற்பெயர்ப் பொருட்டாய் நின்றது. அமலம் - குற்றமின்மை. சமலம் - குற்றமுடைமை. மலம் - குற்றம். இங்கு ஆணவ மலம்.*

*இதனால், ஆறந்தங்களை உணர்தலின் இன்றியமையாமை கூறப்பட்டது.*

*2337. **தெளிவுரை :-** பிறிதொரு நூலால் அன்றித் தன்னாலேதான் பிரமாண*

2337. தானான வேதாந்தம் தான்என்னும் சித்தாந்தம்
ஆனாத் துரியத்து அணுவன் தனைக்கண்டு
தேனார் பராபரம் சேரச் சிவோகமாய்
ஆனா மலம்அற் றருஞ்சித்தி ஆர்தலே. 3

---

*மாகின்ற வேதத்தின் முடிவுதான் எக்காலத்தும் சிவாகமங்களின் முடிவு. அவ்விரண்டிலும் கூறப்படுவது, நின்மலாவத்தையில் நிகழும் சாக்கிரம் முதலிய ஐந்தவத்தைகளுள் சிவனின் நீங்கி நில்லாத துரியாவத்தையில் ஆன்மா, தன்னை முதற்கண் உள்ளவாறுணர்ந்து, தேன்போல இனிக்கின்ற பரம்பொருளை அடைதற்கு வழியாகிய சிவோகம் பாவனையில் நின்று, அதனானே அனாதிதொட்டு நீங்காது பற்றி வருகின்ற மலம் முற்றும் நீங்கப்பெற்று, பெறுதற்கரிய பேற்றைப் பெறுதலேயாம்.*

***குறிப்புரை :-*** *"தான்" இரண்டில் முதற்கண்ணதில், 'தானே' என்னும் ஏகாரம் தொகுக்கப்பட்டது. ஓடு, எண்ணிடைச் சொல். பின்னது தேற்றப் பொருளில் வந்த இடைச்சொல். 'முடிந்த முடிபு' எனப் பொருள் தருவதாகிய 'சித்தாந்தம்' என்பது சிறப்புப் பற்றிச் சிவாகமாந்தத்திற்கே காரண இடுகுறிப் பெயராய் வழங்குகின்றது. எனவே, மேல் இவ்வதிகாரத் தொடக்கத்தில் கூறிய 'சித்தாந்தம்' என்பதும் இதுவேயாதல் அறிக.*

*இனி, 'வேதாந்தம்' என்பதும் காரணப் பெயராய் உபநிடதங்களையும், காரண இடுகுறிப் பெயராய்ப் பிரமசூத்திரத்தையும் குறிக்கும். எனினும் **சித்தாந்த சைவத்தில் எங்கும் 'வேதாந்தம்' என்பது உபநிடதங்களையன்றிப் பிரமசூத்திரத்தையன்று.** 'பிரமசூத்திரம் ஏகான்ம வாதநூல்' - என்பதே சித்தாந்த சைவத்தின் முடிவு என்பதைச் சர்வான்ம சம்பு சிவாசாரியார் செய்த சித்தாந்தப் பிரகாசிகையாலும் சிவஞான மாபாடியத்தில் சிறப்புப் பாயிரத்து, 'சைவாகமப் பிராமணியம்' கூறும் பகுதியாலும், அவையடக்கத்தில் 'ஏகான்மவாதம்' கூறும் பகுதியாலும் அறிக.*

*'வேதாந்தமே சித்தாந்தம்' - என்பதைப் பின்னரும் நாயனார் விளக்குதல் காண்க. "அச்சிவோகம்" என்ற அகரச்சுட்டு. வேதாகமங்களில் சொல்லப் படுதலைச் சுட்டிற்று. இறுதியில், 'இவற்றின் முடிவு' என்பது இசையெச்சமாய் எஞ்சி நின்றது.*

*இதனால், **'வேதாந்தமும், சித்தாந்தமும் முடிவால் வேறல்ல'** என்பது கூறப்பட்டது. 'அங்ஙனமாயின் இரண்டாகக் கூறுவானேன்' என்னும் வினாவிற்கு விடை, பின்வரும் "வேதமோடாகமம்" என்னும் மந்திரத்திற் காணலாம்.*

***2338. தெளிவுரை :-*** *'பரனே யன்றிச் சீவனும் அவன் போலவே என்றும் உள்ள அனாதி நித்தப்பொருள்' என்னும் கொள்கையை முதலிற் கொண்டு, (சீவன்*

**2338.** **நித்தம் பரனோ டுயிர்உற்று நீள்மனம்**
**சத்தம் முதல்ஐந்து தத்துவம் தான்நீங்கிச்**
**சுத்தம் அசுத்தம் தொடரா வகைநினைந்து**
**அத்தன் பரன்பால் அடைதல்சித் தாந்தமே.** **4**

---

*அனாதியே பந்தப்பட்டு நிற்றலாம்), அது சுத்த மாயை, அசுத்தமாயை இரண்டும் பின்னர் வந்து பற்றாதவாறு விலகுதற்குரிய வழியை அறிந்து, அவ்வழியால் பந்தத்தினின்றும் நீங்கி, தந்தையாகிய சிவனை அடைதலே 'சித்தாந்தம்' என்னும் தத்துவமாகும்.*

*குறிப்புரை :-* எது பிறப்பு இறப்பு இல்லாததோ அது சிவம். எது பிறப்பு இறப்பு உள்ளதோ அது சீவன். 'வேதாந்தம்' என்னும் தத்துவமும் அதுதான் என்பது, முன் மந்திரத்திற் கூறியவாற்றால் அமைந்தது. 'பரனோடு உயிர் நித்தம் ஆதலை உற்று' என்க. "சத்த முதல் ஐந்து" என்பது ஆகுபெயராய் அவற்றை அறியும் செவி முதலிய ஐந்து பொறிகளைக் குறித்தது. இதனானே உபலக்கணத் தால் அனைத்துக் கருவிகளும் கொள்ளப்படும். "தத்துவம்" என்றது, 'கருவி' என்றவாறு. 'மாயை தொடரா வகை' என்றது. 'பிறவி தொடரா வகை' என்றதாம்.

இதனால், 'சக சீவ பரங்களில் முதல் இரண்டும் நித்தப் பொருள்களே' என்பதே சித்தாந்தம் எனக்கூறி, இக்கொள்கையே வேதாந்தம்' என்றமையால், 'பரம் என்றே நித்தம்' என்பது வேதாந்தம் ஆகாமையும் கூறப்பட்டது. எனவே ஆறந்தங்களுள் இங்கு சித்தாந்தம் கூறப்பட்டதாம். வேதாந்தம் இதன்கண் அடங்கிற்று.

சகம் - பிரபஞ்சம். காரியப் பிரபஞ்சம் அநித்தம் ஆதலின், முதலிரண்டு மட்டுமே இங்கு 'நித்தம்' எனக் கூறப்பட்டன.

*2339. **தெளிவுரை :-*** பஞ்க கலைகட்கு அதிதேவராகப் பொருந்துபவருள் பிரமனது அதிகாரத்திற்கு உட்பட்டது நிவிர்த்தி கலை. இது 'பிருதிவி' என்னும் தத்துவத்தைத் தன்னுட் கொண்டது. இதற்குமேல் இதனை உள்ளடக்கிப் பரந்திருப்பது பிரதிட்டா கலை. இஃது அப்பு முதல் பிரகிருதி முடிவாக உள்ள இருபத்து மூன்று தத்துவங்களைத் தன்னுட் கொண்டது. இதற்கு அதிதேவன் மாயோன். இதற்கு மேல் இதனை உள்ளடக்கிப் பரந்திருப்பது வித்தியா கலை. இது வித்தியா தத்துவம் ஏழினையும் தன்னுட்கொண்டது. இதற்கு அதிதேவன் உருத்திரன். இதற்கு மேல் இதனை உள்ளடக்கி பரந்திருப்பது சாந்தி கலை. இது சிவதத்துவங்களில் கீழ் உள்ள சுத்த வித்தை, ஈசுரம், சாதாக்கியம் என்னும் மூன்று தத்துவங்களைத் தன்னுட் கொண்டது. இதற்கு அதிதேவன் மகேசுரன். இதற்கு மேல் இதனை உள்ளடக்கிப் பரந்திருப்பது சாந்தியதீத கலை. இது சிவ தத்துவங்களுள் எஞ்சி நின்ற, 'சத்தி, சிவம்' என்னும் இரண்டு தத்துவங்களைத்

**2339.** மேவும் பிரமனே விண்டு உருத்திரன்
மேவுமெய் யீசன் சதாசிவன் மிக்கப்பால்
மேவும் பரம்விந்து நாதம்விட ஆறாறு
ஓவும் பொழுதுஅணு ஒன்றுள தாமே. **5**

---

*தன்னுட் கொண்டது. இதற்கு அதிதேவன் சதாசிவன். இங்குக் கூறிவந்த தத்துவங்களில் இறுதியாக எல்லாவற்றிற்கும் மேலே உள்ளனவாகச் சொல்லப்பட்ட 'சத்தி, சிவம்' - என்னும் தத்துவங்களே 'விந்து, நாதம்' என்றும் சொல்லப்படும். ஆகவே, இவைகளையும் கடந்தால்தான் முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்ததாகும். அவ்வாறு கடந்தபொழுதுதான் கருவி கரணங்களில் வேறாய், 'ஆன்மா' என ஒன்று உளதாதல் விளங்கும்.*

*குறிப்புரை :- பஞ்ச கலைகளைப் பற்றி அறிய வேண்டுவன பல உள. அவையெல்லாம் சிவஞானமாபாடியம், பிராசாத யோக நூல்கள் முதலியவற்றில் சொல்லப்பட்டுள்ளன. அவையனைத்தையும் இங்குக் கூறுதல் கூடாமையின் அவைகளுள் தலையாய அதிதேவர்களை மட்டுமே கூறி, அவர் வழியாக அக்கலைகளையும், அவைகளில் அடங்கி நிற்பனவற்றையும் உணர வைத்தார். ஆகவே, பிரமன் முதலிய ஐந்தும் ஆகுபெயர்களாய், அவரால் செயற்படுத்தப்படும் கலை, தத்துவம் முதலியவற்றைக் குறித்தன. 'விந்துவும், நாதமும் மிக்கு அப்பால் மேவும் எனக்கூட்டுக. இதனை எடுத்துக் கூறியது 'இவை கடத்தற்கு அரியன' என்பதும், "கடந்த இடமே நாதாந்தம்" என்பதும் விளங்குதற்பொருட்டு. 'பிரமன்' முதலியன செவ்வெண் இறுதியில், 'இவர்களில்' என்பது வருவிக்க.*

*இதனால், ஆறந்தங்களுள் நாதாந்தம் கூறப்பட்டதாம். தத்துவங்களைக் கொள்ளாதொழியினும் நாதத்தைப் பொதுப்பட உணர்ந்து 'அதன் அந்தத்தை அடைதலே முடிநிலை' என்பவர் பாசுபதர் முதலிய சில புறச்சமயிகள்.*

***2340. தெளிவுரை :-*** *முன் மந்திரத்தில் கூறியவாறு. தத்துவம் முப்பத்தாறனையும் கடந்த நிலையில் 'தான்' என ஒரு பொருள் அவற்றின் வேறாய் உளதாதலை உணர்ந்த ஆன்மா, தனக்கு உபாதியாய் (குற்றமாய்)ச் சேர்ந்த அவற்றினது சடத்தன்மையையும், தனது சித்துத்தன்மையையும் தெள்ளியவாக ஆராய்ந்து, அதனானே, அவற்றினின்றும் அறவே நீங்கி, அவ்விடத்தில் உள்ள தன்னை மறைக்கின்ற ஆணவ இருளும் சிவனது அருளால் நீங்க, அவனது உணர்வாகிய சிவஞானத்தோடு கூடி, அதுவாகி நிற்குமாயின், அவ்விடத்தில், 'போதம்' எனப்படுகின்ற ஞானம் உண்டாகும்.*

*குறிப்புரை :- ஆறாறு - ஆறாறன் தொகுதி. "நாதாந்தம்" இரண்டனுள் முன்னது அவ்விடத்து விளங்கும் ஆன்ம அறிவைக் குறித்தது. "மேல் உள்ள" என்றது, 'மாயைக்கு மேல் உள்ள' என்றபடி, இருள் அருளாலன்றி நீங்காமை*

**2340.** உள்ள உயிர்ஆறா றாகும் உபாதியைத்
தெள்ளி அகன்றுநா தாந்தத்தைச் செற்றுமேல்
உள்ள இருள்நீங்க ஓர்உணர் வாகுமேல்
எள்ளல்இல் நாதாந்தத்து எய்திடும் போதமே. **6**

---

*வெளிப்படை. ஓர் உணர்வு - தன்னோடு ஒப்பது வேறொன்றிலாத உணர்வு; சிவனது உணர்வு. உயிர் நாதாந்தத்தை அடைந்தமை முன்பே கூறப்பட்டமையால், ஈற்றில், "நாதாந்தத்து" என்றது, 'அவ்விடத்து' என்னும் சுட்டளவாய் நின்றது. இங்கு, "போதம் எய்திடும்" என்றதனால், 'போதம்' எனப்படுவது சிவபோதமே என்பது விளங்கும். விளங்கவே, போதாந்தமாவது, ஆன்மா, தான் சிவஞானத்தில் முற்றி நிற்கும் நிலையே போதாந்தம் என்பது போந்தது.*

*தத்துவம் முப்பத்தாறனையும் கடந்தவழி இருமாயைகளையும் கடந்ததாம். மாயைகள் ஆணவத்தைப் போக்கவே இறைவனால் கூட்டப்பட்டன. ஆதலின், 'அவை நீங்கியவிடத்து ஆணவம் நிற்றல் இயல்பு' என்பது பற்றி, "நாதாந்தத்தைச் செற்று மேல் உள்ள இருள்" என்றும்,*

*"ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம்;*
*ஒன்று மேலிடின் ஒன்று*
*ஒளிக்கும்; எனினும் இருள் அடராது" - கொடிக்கவி - 1*

*என ஓதியபடி, 'நாதாந்தத்தில் ஆணவமே யன்றிச் சிவமும் உளதாக, பக்குவம் இல்லாத பொழுது மேலிடுகின்ற ஆணவம், பக்குவம் வந்த பொழுது மேலிட மாட்டாதிருக்கச் சிவமே மேலிடும் ஆதலின் "இருள் நீங்க" என்றும், சிவம் மேலிட்ட வழி ஆன்மா அதனைப் பற்றுதற்குத் தடை இன்மையால், "ஓர் உணர்வு ஆகுமேல்" என்றும் கூறினார்.*

*இதனால், 'போதமாவது இது' எனவும், அதனை அடையுமாறும் கூறும் முகத்தால், ஆறந்தங்களுள் போதாந்தம் கூறப்பட்டது. 'போதாந்தமே முடிநிலை' என்பவர் பாடாண வாத சைவர் முதலிய அகச் சமயிகள். இவர்களை, 'பூர்வ சைவர்' - என்பர் சிவாக்கிர யோகிகள்.*

*2341. **தெளிவுரை :-** இயமம், நியமம் முதலிய எட்டுறுப்புக்களையும் மேற்கொள்ளப் புகுந்து, அவ்வாறே படிமுறையால் மேல் ஏறி, முடிவான 'சமாதி' என்னும் நிலையை எய்திச் சிவனுக்கு அணுக்கமாகி நிற்கச் சீவன் சிவனாய்விடும். அந்நிலையில் உலகத்தாக்கம் ஒழிய ஓர் அமைதி நிலை தோன்றும். அதுவே உயிர் பெறத்தக்க பேறு - என்னும் இதுவே யோக நூலின் முடிவான கொள்கை.*

*குறிப்புரை :- இயமம், நியமம் முதலிய எட்டுறுப்புக்களின் இயல்பை மூன்றாம் தந்திரத்தில் காண்க. '**இயமத்தில் தொடங்கி முறையே வளர்ந்து ஏழாவது உறுப்பாகிய தியானத்தை அடைதலே ஞானத்தின் முடிநிலை'***

**2341.** தேடும் இயம நியமாதி சென்றகன்று
ஊடும் சமாதியில் உற்றுப் பரசிவன்
பாடுறச் சீவன் பரமாகப் பற்றறக்
கூடும் உபசாந்தம் யோகாந்தக் கொள்கையே. 7

**2342.** கொள்கையி லான கலாந்தம் குறிக்கொள்ளில்
விள்கையி லான நிவிர்த்தாதி மேதாதிக்கு
உள்ளன ஆம்விந்து உள்ளே ஒடுங்கலும்
தெள்ளி அதனைத் தெளிதலும் ஆமே. 8

---

*என்பதும், 'அதன்பின் சமாதியை அடைதலே ஞானத்தன் பயன்' என்பதும், 'அதனை அடைந்தோர் உடம்பு நீங்கிய பின் பரம்பொருளோடு ஒன்றாகி விடுவர்' என்பதும் யோகநூற்கொள்கை என்றபடி, 'உடம்பு நீங்குதலின்றி, என்றும் நிலைத்திருக்கப் பெறுதலே முத்தி' என்னும் கொள்கையும் உண்டு.*

*ஊடுதல் - உட்புகுதல். 'ஊடுறும்' என்பது குறைந்து நின்றது. என்றலும் ஆம். 'சிவனுக்கு அணியராதல் சமாதியின் தொடக்கநிலை' என்க. 'உபசாந்தம் கூடும்' என மாற்றியுரைக்க. உபசாந்தம் - விருப்பு வெறுப்பற்ற தன்மை.*

*இதனால், ஆறந்தங்களுள் யோகாந்தம் கூறப்பட்டது. இக்கொள்கையுடையோர் யோகமதத்தினர். இவர் முதல் ஆசிரியர் பெயர்பற்றி, 'பாதஞ்சலர்' எனவும் கூறப்படுவர்.*

*2342. **தெளிவுரை :-** 'ஆறந்தம்' எனப்படுகின்ற கொள்கைகளில் ஒன்றான, 'கலாந்தமாவது யாது' என அறிந்து கொள்ளப்புகின், உயிர் பாசங்களினின்றும் நீங்குதற்கண் துணையாய் உள்ள நிவிர்த்தி முதலிய கலைகளும், மற்றும் பிராசாத மந்திரத்தின் மேதா முதலிய கலைகளும் சுத்த மாயையிலே தோன்றிச் சுத்த மாயையிலே ஒடுங்குமாற்றை ஆராய்ந்து தெளிதலே கலாந்தமாம்.*

*__குறிப்புரை :-__ நிவிர்த்தி முதலிய சத்திகளாவன, 'நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை' என்னும் ஐந்துமாம். இச்சத்திகளுக்கு இடமாகின்ற சுத்த மாயா விருத்திப் பகுதிகளும் இச்சத்திகளின் பெயர்களையே உடையன. 'உலகம் ஆறு அத்துவா மயமானது' எனக்கூறுமிடத்து, ஏனை ஐந்து அத்துவாக்களும் கலாத்துவாவிலே அடங்கும். அதனால் அத்துவ சுத்தி, 'கலாசுத்தி' என்றும், 'கலா சோதனை' என்றும் சொல்லப்படும். இந்தச் சுத்தி, அல்லது சோதனையே நிருவாண தீக்கையாதலின் 'தீக்கையே முத்தியாம்' எனக் கூறும் ஒருசார் சைவர்கள் 'கலாந்தத்தில் பஞ்ச கலாந்தம்' என்பர்.*

*இனிப் பிராசாத கலைகள் மூன்றாம் தந்திரத்து, 'கலை நிலை' என்னும் அதிகாரத்தில் காட்டப்பட்டன. 'அவைகளை முன்னர் ஆராய்ச்சியால் உணர்ந்து*

**2343.** தெளியும் இவையன்றித் தேர்ஐங் கலைவேறு
ஒளியுள் அமைந்துள்ளது ஓரவல் லார்கட்கு
அளிஅவ னாகிய மந்திரம் தந்திரம்
தெளிவு உபதேசம் ஞானத்தொடு ஐந்தாமே. **9**

---

*பின்னர் அனுபவத்திற்காணுதலே முடிநிலை' என்பவர் 'கலாந்தத்தில் பிராசாத கலாந்தர்' என்க. இவரை யோக சைவர்' அஃதாவது, 'பிராசாத யோகமே முத்தியைப் பயக்கும் - எனக்கூறும் சைவர் என்பதாம். இவரும் ஐக்கிய வாத சைவர் போல ஆணவ மலத்தை உணராதவர் ஆதலின், அவரோடு ஒப்பர் என்க.*

*ஈசானம் முதலிய பஞ்சப் பிரம மந்திர சத்திகளாகிய ஈசானி முதலிய ஐந்தும், அவைகளின் முறையே ஐந்தும், நான்கும், எட்டும், பதின்மூன்றும், எட்டும் - ஆக முப்பத்தெட்டாய் நிற்கும் சத்திகளும் 'கலை' எனப்படுதலால், அவற்றைத் தெளிதலும் கலாந்தமாம் என்பாரும் உளர். அவை மந்திர கலைகளாய் நாதாந்தத்தில் அடங்குதலாலும், நாயனார் அவ்வாறு ஓதாமையாலும் அவைகளை இங்குக் கொள்ளல் வேண்டா என்க. ''ஆதிக்கு'' என்பது கண்ணுருபின் பொருளில் வந்த உருபு மயக்கம். 'ஆம்' என்பதனை, 'ஒடுங்கலும்' என்பதன் பின்னர்க் கூட்டுக. உம்மை, தோன்றுதலைத் தழுவிய எச்சவும்மை.*

*இதனால், ஆறந்தங்களுள் கலாந்தம் கூறப்பட்டது. அஃது இருவகைத் தாதலும் உடன் உணர்த்தப்பட்டது.*

*2343. தெளிவுரை :- (முன் மந்திரத்தில் கூறப்பட்ட கலாந்தம் ஒழுக்கம் பற்றியது. இனி), நூல் அறிவு பற்றி நோக்குங்கால் உள்ள கலாந்தம் வேறு ஐந்தாகும். அவை, 'மந்திர கலாந்தம், தந்திர கலாந்தம், தெளிவுக் கலாந்தம், ஞான கலாந்தம், உபதேச கலாந்தம்' என்பன. அவையும் ஞானப் பகுதிகளேயாம். அவை ஆராய்ச்சியில் வேட்கை உடையவர்கட்கு ஆவனவாம்.*

*குறிப்புரை :- 'அவை இன்ன' என்பது வருகின்ற மந்திரத்தால் பெறப்படும். அவன் அளியன் ஆகிய - சிவன் அருள் மிக்கவனால் அளித்தருளிய (கலைகள்).*

*2344. தெளிவுரை :- அநாதியே உள்ளவனால் செய்யப்பட்டமையின், 'அநாதி நூல்' எனப்படுகின்ற ஆகமங்களையும், வேதங்களையும் ஓதி, ஐயம் திரிபு அற உணர்தல் மந்திரகலாந்தம். ஏனைப் பாசுபதம் முதலிய தந்திரங்களை அவ்வாறு உணர்தல் தந்திர கலாந்தம். அவ்வாறு உணரப்பட்ட அந்நூல்களில் கண்டவாறு ஒழுகும் ஒழுக்கத்தில் மேம்படுதல் தெளிவுக் கலாந்தம். திருவைந்தெழுத்தைத் தத்தமக்கு உரியமுறையில் மனம் முதலிய அந்தக் கரணங்களால் அன்றி, அறிவால் சுத்தமானதாகப் பெரிய அளவில் கணித்தல் ஞான கலாந்தம். குரு உபதேசத்தை நன்கு சிந்தித்துத் தெளிந்தபின் நிட்டையில் நிற்றல் உபதேச கலாந்தமாம்.*

**2344.** **ஆகும் அனாதி கலைஆ கமவேதம்**
**ஆகும்அத் தந்திரம் அந்நூல் வழிநிற்றல்**
**ஆகும் மனாதி உடல்அல்லா மந்திரம்**
**ஆகும் சிவபோ தகம்உப தேசமே.** **10**

**2345.** **தேசார் சிவம்ஆகும் தன்ஞானத் தின்கலை**
**ஆசார நேயம் அறையும் கலாந்தத்துப்**
**பேசா உரையுணர் வற்ற பெருந்தகை**
**வாசா மகோசர மாநந்தி தானே.** **11**

---

*குறிப்புரை :- உபதேசகலை மட்டிலே, 'குரு உபதேசம்' எனக் கூறினமை பற்றி, 'ஏனைய கலைகள் குரு இன்றியும் உணரப்படும்' எனக்கொள்ளலாகாது. ஏனெனில், 'உபதேசம்' என்றது ஞானோப தேசத்தையேயாகலின், அவ்விடத்து, 'குரு' எனப்பட்டோரும் ஞானகுருவே. ஞான குருவைக் கூறியது ஏனைக் குருமாரை விலக்கியதாகாது. பிறரெல்லாம் வித்தியா குரவரும். கிரியா குரவரும் ஆவர் என்க.*

*'அனாதி ஆகும் கலை' என மாறிக் கூட்டுக. ஆகும் அத்தந்திரம் - வேதாகமங்கட்குப் பின்னிலையினவாகிய அந்தத் தந்திரங்கள் ஆகும். மனாதி - மந்திரங்களைக் கணித்தற்குக் கருவியாகும் மனம் முதலியன. உடல் - கருவி. ஈற்றில் உள்ள 'ஆகும்' என்பதை வேதம் முதலிய எல்லாவற்றோடும் கூட்டுக.*

*இவ்விரண்டு மந்திரங்களாலும் கலாந்தம் வேறுவகையால் அமைதல் கூறப்பட்டது. மந்திர கலாந்தம் கொண்டவர் தருக்க மதத்தவர். தந்திர கலாந்தம் கொண்டவர் அகப்புறச் சமயிகள். தெளிவுக் கலாந்தம் கொண்டவர் பௌராணிகர். ஞான கலாந்தம் கொண்டவர் அகச்சமயிகளில் ஒருசாரார். உபதேச கலாந்தம் கொண்டவரே சித்தாந்த சைவர்.*

*2345. தெளிவுரை :- ஞான கலாந்தத்தில் சிவம் வெளிப்படும். (என்றாலும் அதன்கண் அன்பு செய்து அழுந்துதல் உபதேச கலாந்தத்தில் உண்டாகும்). தெளிவுக் கலாந்தம் இறைநெறி ஒழுக்கத்தையும், இறையன்பையும் வலுப்படுத்தும். (என்றாலும் அவற்றை அஃது அறிவியல் முறையில் உணர்த்தாது. அவ்வாறு உணர்த்துவது உபதேச கலாந்தமே). வாய் வாளாமைபெற்று, பிறபொருள் உணர்வும், தன்னுணர்வும் அற்ற பெருந்தகையோன் வாக்கு மனங்களைக் கடந்த பரம சிவன் ஆவான்.*

*குறிப்புரை :- தன் ஞானம் - சிவ ஞானம். 'அதனை உணர்த்தும் கலை' என்க. அக்கலைகள் பலவும் திருவைந்தெழுத்தில் அடங்கும். "கலை, கலாந்தத்து" என்பவற்றில் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. 'ஆசார நேயம்', உம்மைத்தொகை. அறைதல் - வலியுறுத்தல். அறையும் - அறையப்படும். 'பேசாது' என்பது ஈறு*

**2346.** தானது வாகும் சமாதி தலைப்படில்
ஆன கலாந்தநா தாந்தயோ காந்தமும்
ஏனைய போதாந்தம் சித்தாந்த மானதும்
ஞான மெனஞேய ஞாதுரு வாகுமே. **12**

---

குறைந்துநின்றது. உரை, சொல்லப்படுவது. உணர்வு - சொல்லவாராது உணர்வு மாத்திரையாய் நிற்பது, பெருந்தகை, ஆகுபெயர். இவ்வொருமை சாதியொருமை. நந்தி - சிவன், மாநந்தி - பரமசிவன். "மாநந்திதானே" எனத் தேற்றேகாரத்தால் 'வேற்றுமையில்லை' என வலியுறுத்தியது. அத்தன்மை குறைவின்றி நிரம்புதல் பற்றி இங்ஙனம் வலியுறுத்ததனானே, 'அவன் பொருளால் வேறே' என்பது பெறப்பட்டது.

இதனால், மேற்கூறிய ஐந்து கலாந்தங்களுள் உபதேச கலாந்தத்தின் சிறப்பு, குறிப்பால் உணர்த்தப்பட்டது.

*2346. தெளிவுரை :- (வேதாந்தம் சித்தாந்தத்துள் அடங்க ஆறந்தங்கள் ஐந்தந்தங்களாகும்). 'ஞாதுரு, ஞானம், ஞேயம்' என்னும் மூன்று பொருள்கள் உள்ளன எனக் கூறுவதில் எந்த அந்தமும் வேறுபடவில்லை. ('ஞானம் ஒன்றே உள்ளது; ஏனையவை இல்லை' - எனக் கூறும் ஏகான்மவாதம் வேதாந்தம் அன்று - என்பது மேலே கூறப்பட்டது), இவற்றுள் ஞாதுருவாகிய ஆன்மாவும், அதன் ஞானமும் சமாதிநிலையில் ஞேயத்திலன்றிப் பிறவற்றிற் செல்லாமையால், ஞாதுருவாகிய ஆன்மாவும் சிவமேயாய் நிற்கும்.*

*குறிப்புரை :- 'அந்நிலை உபதேச கலாந்தமாகிய சித்தாந்தத்திலல்லது இல்லை' என்பது கருத்து. ஞானம் - அறிவு. ஞேயம் - அறியப்படும் பொருள். ஞாதுரு - அறிபவன். இவை முறையே 'காட்சி, காணப்படு பொருள், காண்பான்' எனவும் கூறப்படும். இவை 'திரிபுடி' எனப்படும். 'மூன்று பொருள் இல்லை; ஞானம் ஒன்றே உள்ளது' என ஏகான்மவாதம் கூறும். 'மூன்று பொருள்கள் உள்ளன. ஆயினும் உணர்பவனது உணர்வில் அம்மூன்றும் மாறி மாறித் தோன்றும் நிலை சிவானுபவ நிலையாகாது. அவனது உணர்வில் ஞேயமாகிய சிவம் ஒன்றுமே தோன்றும் நிலையே சிவானுபவ நிலை. அதுவே பரமுத்தி' என்பது சித்தாந்தம். இவற்றுள் ஏகான்ம வாதக் கொள்கையை மறுத்துச் சித்தாந்தக் கொள்கையை வினா வெண்பா, பின்வருமாறு நயம்பட வலியுறுத்துகின்றது.*

*காண்பானும், காட்டுவதும், காண்பதுவும் நீத்துண்மை
காண்பார்கள் நன்முத்தி காணார்கள் - காண்பானும்
காட்டுவதும் காண்பதுவும் தண்கடந்தைச் சம்பந்தன்
வாட்டுநெறி வாரா தவர்.* **- வினா வெண்பா - 11**

**2347.** ஆறந்த மும்சென் றடங்கும்அஞ் ஞேயத்தே
ஆறந்தம் ஞேயம் அடங்கிடும் ஞாதுரு
கூறிய ஞானக் குறிஉடன் வீடவே
தேறிய மோனம் சிவானந்த உண்மையே. **13**

---

*இம்மந்திரத்தில் "சமாதி" என்றது பாவனையளவாக நிகழும் யோகசமாதியன்று, ஞானசமாதி. இதுவே திருக்களிற்றுப்படியாரில் (வெண்பா - 34) கூறப்பட்டது. ஆறந்தங்களை கலாந்தம், நாதாந்தம், யோகாந்தம், போதாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் என்ற முறையில் கொள்வது வழக்கம்.*

*2347.* ***தெளிவுரை :-*** *ஆறந்தங்களிலும், 'ஞாதுரு ஞானத்துடன் சென்று, ஞேயத்தில் அடங்குதலைத்தான் முடிநிலையாகக் கூறுகின்றன. ஆகவே, ஞாதுருவும், ஞானமும் ஞேயத்தில் சென்று அடங்குதல்தான் ஆறந்தங்களின் குறிக்கோளும். ஆயினும், 'ஞேயத்தில் அடங்குதல் மட்டுமன்றி, அவ்விடத்தில் எல்லையில்லாததோர் இன்பநுகர்ச்சியில் ஞாதுரு மூழ்கியிருத்தலே உண்மைப்பேறு' எனக் கூறுகின்ற சித்தாந்தமே ஏனை அந்தங்களினும் வடித்தெடுத்த மோன நிலையாகும்.*

***குறிப்புரை :-*** *இரண்டாம் அடியை முதலில் வைத்து, 'ஆறந்தமும், ஞாதுரு, ஞானக்குறி உடன்வீட, ஞேயம் அடங்கிடும்; (ஆகலான்) ஆறந்தமும் சென்று அஞ்ஞேயத்தே அடங்கிடும்' (ஆயினும்) சிவானந்த உண்மையே தேறிய மோனம்' எனக் கூட்டி முடிக்க.*

*அடங்கிடுதலைக் கூறும் அந்தங்களை, அவையே அடங்குவனவாக உபசரித்துக் கூறினார். "அஞ்ஞேயம்" என்னும் சுட்டு, பின்னர்க் கூறப்படும் அடங்குதல் தொழிலையே உட்கொண்டது. "ஆறந்தம்" இரண்டில் பின்னதில் உம்மை விரித்து, 'ஞேயத்தின்கண்' என உருபுவிரிக்க. 'ஞாதுருவும், ஞானமும் ஞேயத்தின்கண் அடங்கிவிடும் அளவே முத்தியாவது என, அவ்விடத்து, பெறுவானையும், பேற்றினையும் அழித்துச் சில அந்தங்கள் கூறும் ஆகலின், அதனை மறுத்துச் சித்தாந்தத்தை வலியுறுத்துதற்கு, "தேறிய மோனம் சிவானந்த உண்மையே" என்றார்.*

> *முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்;*
> *சுத்தஅனு போகத்தைத் துய்த்தலணு; - மெத்தவே*
> *இன்பம் கொடுத்தலிறை; இத்தைவிளை வித்தல்மலம்;*
> *அன்புடனே கண்டுகொளப் பா.* ***- உண்மைவிளக்கம் - 50***

*என்பதே சித்தாந்தம் ஆதலையறிக.*

*இதனாலும், சித்தாந்தத்தின் தலைமையை ஏதுக் காட்டி வலியுறுத்தப்பட்டது.*

**2348.** **உண்மைக் கலைஆறொன் றைந்தின் அடங்கிடும்**
**உண்மைக் கலாந்தம் இரண்டைந்தோ டேழுந்தம்**
**உண்மைக் கலைஒன்றில் ஈறாய நாதாந்தத்து**
**உண்மைக் கலைசொல்ல ஓர்அந்த மாமே.** **14**

---

*2348.* ***தெளிவுரை :-*** *உண்மையை உணர்த்தும் கலைகள் பலவாகச் சொல்லப்படினும் அவை அனைத்தும் பன்னிரு கலைக்குள் அடங்குவனவாம். இனி, அனைத்துக் கலைகளையும் விடாது கடக்க வேண்டின், பதினாறைத் தாண்டி அப்பால் செல்லுதல் வேண்டும். 'நாதாந்தம்' என்பது, இவ்வாறு கூறப்படுவனவற்றின் இடையே நிற்கின்ற ஒன்று. ஆகையால், அதையே 'உண்மை' என்று சொல்லின், அஃது ஏகதேசத்தையே 'முற்று' எனக் கருதுவதாகவே முடியும்.*

***குறிப்புரை :-*** *'ஆறு, ஒன்று, ஐந்து' என்பன அவ்வெண்களையே குறித்தன. அதனால், ஏழன் உருபு பெறாது. மூன்றன் உருபு பெற்றது. பிராசாத கலைகள் பலவாவன பஞ்ச கலை, அட்ட கலை, தச கலை, சதுர்த்த கலை முதலியன. அவைகளையெல்லாம் பிராசாத நூல்களில் காண்க. அவை அங்ஙனமாயினும் துவாதச கலையும், சோடச கலையுமே சிறப்புடையனவாகப் பயிலப்படற்குரியன' என்றற்கு, "பன்னிரண்டில் அடங்கும்" என்றும், 'பதினேழாகிய அந்தம்' என்றும் கூறினார். கலையட்கு அடக்கம் கூறினமையால் பன்னிரண்டு என்றும் மேற்போதல் கூறினமையால், 'பதினாறைக் கடந்த பதினேழ்' என்றும் கூறினார். இப்பிராசாதங்களைப் பற்றி இத்தந்திரத்திலும், மூன்றாம் தந்திரத்திலும் சிறிது விளங்கக் கூறினோம்.*

*"ஓர் அந்தம்" என்றது, 'ஏகதேச அந்தம்' என்றபடி.*

*இதனால், ஆறந்தங்களில் ஒன்றாகிய நாதாந்தத்தின் நிலை கூறப்பட்டது.*

*2349.* ***தெளிவுரை :-*** *தேவரையெல்லாம் தம் ஆளுகைக்கு உட்படுத்தி ஆட்சி புரிகின்ற, எங்களுடைய புகழ்மிக்க நந்திபெருமானே, நாங்கள் ('வேதாந்தமும், சித்தாந்தமும் வேறு வேறு' எனக் கூறிப்பிணங்குவார் பின் சென்று) கெடாதபடி எங்களை அறைகூவி அழைத்துத் திருவடி தீக்கை செய்து, 'அவ்விரண்டிலும் சொல்லப்படுகின்ற உண்மை ஒன்றே என்பதையும், அவ்வுண்மையின் உயர்வையும் இனிது விளங்க உபதேசித்தருளிய ஞான குருவாவார். பசுக்களாகிய 'அனைத்துயிர் களையும் அடிமையாக உடைய சத்தி ஆதி சத்தியாய் நின்று ஆட்டிப் படைக்கும் நிலையில், சிவனும் ஆதிசிவனாகவே அவளுடன் இருந்தவன், அந்நிலையை மாற்றித் தனது இயற்கை நிலையாகிய அநாதி சிவனாம் பரமசிவனாகி வந்து, அவளைத் தழுவிக்கொண்ட பின்பு, ஏனையோர்க்கும் எங்கட்கு அருளியவாறே அருளுமாறு அவன் அந்நந்தி பெருமானைத் திருவுள்ளத்தில் எண்ணுவான்'.*

***குறிப்புரை :-*** *ஆவுடையாள் - சிவசத்தி. அரன் - சிவபிரான். தேஉடையான்*

**2349.** ஆவுடை யாளை அரன்வந்து கொண்டபின்
தேவுடை யான்எங்கள் சீர்நந்தி தாள்தந்து
வீவற வேதாந்த சித்தாந்த மேன்மையைக்
கூவி அருளிய கோனைக் கருதுமே. **15**

---

*- தேவர்களைத் தனக்கு அடிமையாகவும் உடைமையாகவும் உடையவன். அப்பொழுது அவ்வுண்மை ஏனையோர்க்கும் இனிது விளக்கப்படும் என்பது குறிப்பெச்சம். 'பசு' என்னும் வடசொற்கு நேரிய தமிழ்ச்சொல் 'ஆ' என்பதாதல் பற்றி அதனையே கூறினாராயினும் அது 'பசு', அஃதாவது, 'பாசத்தில் கட்டுண்டது' என்னும் பொருளையே தருதலின், 'உடையாள்' என்றது ஆதிசத்தியை, அஃதாவது திரோதான சத்தியையேயாயிற்று. "அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கையெல்லாம்" என்ற இடத்திலும் 'உலக வாழ்க்கையைத் தரும் அவள்' என்றது, திரோதான சத்தியையேயாதலை நினைக. 'அரன்' - என்பது, 'பாசங்களை அரிப்பவன்' என்னும் பொருளது ஆதலின் அஃது, 'அநுக்கிரகத்தைச் செய்பவன்' என்னும் பொருட்டாய்ப் பரமசிவனைக் குறித்தது. உயிர்கட்கு இருவினையொப்பு மலபரிபாகம் வரும் பொழுதே திரோதான சத்தி அருட்சத்தியாய் மாறி ஆன்மாவிற்பற்றி, அரன் அப்பொழுதுதான் வந்து மணப்பவன் போலக் கூறினார். இது, 'சத்தி நிபாதம் வந்த பின்பு' எனக் கூறியவாறேயாம். "கோனை" என்பது, 'கோன் அவன்; அவனை' என இருசொல் தன்மைப்பட்டு நின்றது. "கருதும்" என்னும் 'செய்யும்' என்முற்று. இங்கு ஆண்பால் படர்க்கையில் வந்தது. 'அரன் வந்து கொண்டபின் கோனைக் கருதும்' என முடிக்க. தமக்கு அருள்புரிந்த வகையைக் குறித்து 'நந்திபெருமானையே கருதுவன்' என்றாராயினும், 'அவரவருக்கு ஏற்புடையாரைக் கருதுவன்' என்றலே கருத்தாம். முதல் அடியை, "கோனை" என்பதன் பின்னர்க் கூட்டுக.*

*இதனால், 'ஆறந்தங்களில் வேதாந்த சித்தாந்தங்களே மேலானவை' என்பது குருவருள் பெற்றபின் விளங்குதல் கூறப்பட்டது.*

*2350. தெளிவுரை :- கொள்வார் கொள்ளும் வன்மை மென்மைகட்கு ஏற்பச் சிவன் உலகில் பலவகைச் சமய நூல்களை ஆக்கி வைத்திருக்கின்றான். (அவை ஒன்றோடொன்று முரணுதல் போலத் தோன்றுதல், அவற்றைக் கொள்வாரது பக்குவத்திற்கு ஏற்ப அவை அமைந்ததனாலேதான், அதனால் அவற்றைக் கொள்வோர் தமக்கு விருப்பமானவற்றைக் கொண்டு அமைதல் வேண்டுமன்றிப் பிறருக்கு விருப்பமானவற்றைப் பழித்தல் கூடாது. ஏனெனில் எல்லா நூல்களும் இறைவன் அருளால் தோன்றியவையேயாகலின்) அந்நூல்களின் வழி அமைந்த சமயங்களில் சில, 'புறம்' எனப்படும். மாயை, மகாமாயை இவற்றைக் கொண்டுள்ள சமயங்கள் அகச்சமயங்களாம். அவற்றையும் கடந்து நிற்பன வேதாந்த சித்தாந்தத் தத்துவங்கள்.*

**2350.** கருது மவர்தம் கருத்தினுக் கொப்ப
அரன்உரை செய்தருள் ஆகமந் தன்னில்
வரும்சம யம்புறம் மாயைமா மாயை
உருவிய வேதாந்த சித்தாந்த உண்மையே. **16**

---

*குறிப்புரை :-* 'ஆகமங்களில் சிவாகமங்களே சித்தாந்தம், என்றல், அவை முற்றறிவுடைய சிவனால் செய்யப்பட்டமையாலேயாம். எந்தச் செயலும் சிவன் தான் நேரே செய்யவும், பிறரைக் கொண்டு செய்விக்கவும் நிகழ்வதேயன்றி, அவை தாமாக நிகழ்வன அல்ல ஆகலின், சமய நூல்கள் பலவும் காரணக் குறிபற்றிச் சிவாகமமேயாம்.

*துணை நன்மலர் தூய்த்தொழும் தொண்டர்காள், சொல்லீர்;*
*பணைமென்முலைப் பார்ப்பதி யோடுட னாகி*
*இணையில் இரும் பூளை யிடங்கொண்ட ஈசன்*
*அணைவில்சமன் சாக்கியம் ஆக்கிய வாறே' - தி.2 ப.36 பா.10*

என்று அருளிச் செய்ததும் இப்பொருட்டே. இன்னும்,

*விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்தே*
*எரிவினால் சொன்னா ரேனும் எம்பிராற்கு ஏற்றதாகும்*
*- தி.4 ப.60 பா.9*

என்றதும் கொள்பவரது பக்குவ வேறுபாடுகளை நோக்கியதேயாம்.

'உயிர்கள் பக்குவம் எய்தியபொழுதே இறைவன் குருவாகி வருவான்' என்பதை, "அரும்பருவம் அடைதலுமே ஆசானாகித் தோன்றி" என முன்னர்க் கூறிய சிவஞானசித்தி, பின்னர், 'அவ்வரும் பருவம் எப்பொழுது வரும்' என வினாவுவார்க்கு;

*புறச்சமய நெறிநின்றும், அகச்சமயம் புக்கும்*
*புகல்மிருதி வழிஉழன்றும், புகலும் ஆச்சிரம*
*அறத்துறைகள் அவையடைந்தும், அருந்தவங்கள் புரிந்தும்*
*அருங்கலைகள் பலதெரிந்தும், ஆரண நூல் படித்தும்,*
*சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும், வேத*
*சிரப்பொருளை மிகத்தெளிந்தும் சென்றால், சைவத்*
*திறத்தடைவர்* ***- சிவஞானசித்தி சுபக்கம் - சூத்திரம், 8-10, 11***

எனப் பின்னர்க் கூறிற்று. இதனால் அனைத்துச் சமய நூல்களையும் அவற்றைக் கொள்வாரது பக்குவத்தை நோக்கின் வேண்டத்தக்கனவேயாதல் அறிக.

'சாருவாகம் முதல் எல்லாச்சமயமும் பரமசிவனால் செய்யப்பட்டமையின் பிரமாணமேயாயினும்..... சோபான முறையான்படும்' (சிறப்புப்பாயிரம் -

'வேதாகமப் பிராமணியம்') எனச் சிவஞான மாபாடியத்தில் உரைக்கப் பட்டமையும் காண்க.

பக்குவம் நோக்கிச் செய்யப்பட்டமையால், 'உலகம் மாயை மகாமாயைகளினின்று பரமசிவனால் தோற்றி ஒடுக்கப்படும்' என்பதை உணர மாட்டாதார்க்கு அது சொல்லப்படவில்லை அதனால், சாருவாகர், (உலகாயதர்) 'பூதம் நான்கே; அவை கூடுதலும் பிரிதலும் இயற்கை. கூடுவதால், உலகமும், உடம்புகளும் தோன்றும்; பிரிவதால் அழியும். நான்கு பூதங்களும் கூடியபொழுது அறிவும் தோன்றும்; பிரியும்பொழுது அறிவும் அழியும்; ஆயினும், உடம்பு உள்ளவரையில் உலகம் நீதி கடைப்பிடிக்கப்பட வேண்டும்; இல்லையேல் வாழ்வு நல்வாழ்வாக அமையாது' என்பர். ஆயினும் நீதியைக் கடைப்பிடிக்காத பொழுது அவர்கள் தங்கள் மதத்தைக் கைவிட்டவர் ஆகின்றனர்.

சமணரும், பௌத்தரும், 'உலகம் தானே தோன்றியழியும்' என்பர். அவருள் சமணர், 'அறம் - என்பது ஒன்று உண்டு. அதன் வழியிலேதான் உலகம் நடைபெற்று வருகின்றது' - என்பர். ஆகவே, அறத்தைக் கடைப்பிடிக்காது வழுவி விடும் பொழுது அவர்கள் தங்கள் மதத்தைக் கைவிட்டவர் ஆகின்றனர்.

பௌத்தர், 'மனிதர் பரதுக்க துக்கராய் வாழவேண்டும்; அஃதாவது, பிறர்க்காயினும், பிற உயிருக்காயினும் துன்பம்வரின், அத்துன்பத்தைத் தமக்கு வந்த துன்பமாகக் கருதி அத்துன்பத்தைக் களையவும், துன்பம் வராமல் காக்கவும் வேண்டும்; இதுவே தவம். இத்தவத்தால் ஞானம் பிறக்கும்; ஞானத்தால் வீடும் உளதாம்' என்பர். எனவே, இத்தவத்தினின்றும் வழுவும்பொழுது அவர்கள் தங்கள் மதத்தைக் கைவிட்டவராகின்றனர்.

இவரெல்லாம் வேதசிவாகமங்களை இகழ்தலால் புறத்திலும் புறப்புறச் சமயிகள் ஆகின்றனர். வைதிகருள் மீமாஞ்சகரும், சாங்கியரும் நிரீச்சுரவாதிகள். அவருள் மீமாஞ்சகர், ஈசுரன் இல்லாவிடினும் இருப்பதாக வைத்து வேதத்தில் சொல்லப்படுகின்ற வேள்வி முதலிய கருமங்களைச் செய்தல் வேண்டும்; செய்தால் அந்தக் கருமங்களே பயனைக்கொடுக்கும். கருமங்களை விட்டவன் வழியை விட்டுக் குழியில் வீழ்ந்தவன் ஆவான்; அவனுக்கு உய்தியில்லை என்பர். எனவே, அவர் கருமங்களில் வழுவும்பொழுது தங்கள் மதத்தைக் கைவிட்டவர் ஆவர்.

சாங்கியர், 'உலகமே மயக்கத்தைத் தருவது, சாங்கிய நூலின் வழியே தத்துவ ஆராய்ச்சியில் முதிர்ந்து நிற்றல் வேண்டும். அவ்வாறு நின்றால் மயக்கம் நீங்கும்' என்பர். ஆகவே, அவர் தத்துவ ஆராய்ச்சி செய்யாது, வாழ்க்கை நடத்தப் புகும் பொழுது தங்கள் மதத்தைக் கைவிட்டவராவர்.

நியாய வைசேடிகர்களும், 'ஈசுரன் ஒருவன் உண்டு' எனக் கூறினாராயினும், உய்யும் வழி கூறுவதில் சாங்கியரை ஒத்திருக்கின்றனர்.

யோக மதத்தினர், 'யோகத்தின் எட்டுறுப்புக்களாகிய இயமம், நியமம்

முதலியவற்றை முற்றாகக் கடைப்பிடிக்க வேண்டும்' என்பர். முற்றாகக் கடைப் பிடித்தோர் எவரும் இலர்.

ஏகான்மவாதிகள், 'உலகம் கனவு போன்றதே; என்றாலும், அதைக்கனவாகக் கண்டு கழித்து, பரமார்த்தத்தில் விழிக்கின்ற வரையில் உலகில் உள்ள எல்லா நீதி அநீதிகளையும் உணர்ந்து, தீவழி நீக்கி, நல்வழியில் ஒழுகவேண்டும்' என்பர். எனவே, அவர் அவ்வாறு ஒழுகாதபொழுது தங்கள் மதத்தைக் கைவிட்டவர் ஆகின்றனர்.

'பாஞ்சராத்திரம்' எனப்படுகின்ற வைணவ மதத்தினர், பெரும்பான்மையும் சைவரோடு ஒத்திருப்பினும் சைவத்தின் உயிர்க்கொள்கையாகிய, 'பிறப்பு இறப்பு உடையன எல்லாம் உயிர்களே; எக்காரணத்தாலும் அவையில்லாதவனே கடவுள்' என்பதை மறுத்து, 'உயிர்களின் பொருட்டுக் கடவுள் பிறந்தும் வருகின்றான்' என்பர். பிறப்பாவது அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என்னும் நால்வகை யோனிகளுள் எந்த ஒன்றிலேனும் கருவாய் இருந்து தோன்றி, வளர்ந்து, சிலகாலம் வாழ்ந்து மறைதலாம். இதனை 'அவதாரம்' என்றல் உபசாரமே. உண்மையில் அவதார மாவது, கடவுள் எவையேனும் சில காரியங்களை முன்னிட்டு யாதானும் ஓர் உருவில் தோன்றிச் சில நொடிகளில் அக்காரியத்தை முடித்து மறைவதேயாகும். பிறப்பு எய்தியவர்களையே இவர்கள் கடவுளாகக் கூறினாலும், 'அவர்களையும், கடவுளையும் வழிபட்டு உய்யவேண்டும்' என்பர். மேலும், 'அறகடவுளையும் வழிபட்டு உய்யவேண்டும்' என்பர். மேலும், 'அற நெறியில் ஒழுகுதல் கடவுளுக்கு விருப்பமின்மையையும் தரும் ஆதலின் அற நெறியிலே ஒழுகவேண்டும்' என்றும் கூறுவர். இக்கொள்கை சைவத்திலும் உள்ளதே. 'உலகிற்கு அறநெறியை அருளியவன் கடவுளே' எனக் கொள்வதால் அநநெறியில் ஓழுகுவதும் கடவுள் வழிபாட்டின் ஒரு பகுதியேயாகின்றது. எனவே, வைணவரும், சைவரும் அறநெறியையும், இறைவழிபாட்டினையும் விடுவாராயின் தங்கள் மதத்தைக் கைவிட்டவராவர். மீமாஞ்சகர் முதல் பாஞ்சராத்திரம் முடிய உள்ள மதத்தினர் வேதத்தை ஏற்றுக்கொண்ட போதிலும் வேதசாரமாகிய சைவாகமங்களை ஏற்றுக்கொள்ளாமல் இகழ்தலால் இவர்களுடைய சமயங்கள் 'புறச்சமயங்கள்' எனப்படுகின்றன.

இனிப் பாசுபதம் முதலிய தாந்திரிகர்கள், இறையுண்மை கொண்ட போதிலும் வேதத்திற்கு மாறான ஒழுக்கங்களை 'நல்லொழுக்கம் எனக் கொள்ளுதலாலும், 'ஆன்றோர் யாவரும் வேத ஒழுக்கமே நல்லொழுக்கம்; அவற்றிற்கு மாறானவை தீயொழுக்கம்' எனக் கொண்டமையாலும் இவர்களது சமயங்கள் 'அகப்புறச் சமயங்கள்' எனக்கூறப்படுகின்றன. ஓரளவு தழுவுவர். அதனால் இவர்களது சமயம் அறவே, 'புறச்சமயம்' எனப்படவில்லை.

புறப்புறச் சமயிகள் 'மாயை' என்ற ஒன்றைக் கொள்வதேயில்லை. அதிலிருந்து அவர்களுடைய தத்துவங்கள் எவ்வளவு முரண்பட்டவை என்பது

2351. வேதாந்த சித்தாந்தம் வேறிலா முத்திரை
போதாந்தம் ஞானம்யோ காந்தம் பொதுஞேயம்
நாதாந்தம் ஆனந்தம் சீருத யம்மாகும்
மூதாந்த முத்திரை மோனத்து மூழ்கலே. 17

---

*விளங்கும். புறச்சமயிகள் வைதிகர்களாயினும் மாயையை மட்டும் கொண்டு, மகாமாயையைக் கொள்வதில்லை. அதனால் அவர்களுடைய தத்துவங்களும் நிறைவுடையன ஆகாமை விளங்கும்.*

*இவைகளையெல்லாம் நோக்கும்பொழுது சமயவாதிகளது பக்குவநிலை விளங்கும். விளங்கவே இறைவன் எல்லாரிடத்தும் ஒப்பவே கருணையுடையவன் ஆகையால், சமய நூலை ஒன்றாகச் செய்யாது பலவாகச் செய்தும், செய்வித்தும் உள்ளான் என்பதை இம்மந்திரம் விளக்குகின்றது.*

*'ஆகமம்' எனத் தொகையால் ஒன்றாகிப் பின் வகை விரிகளால் பலவாதல் பற்றித் "தன்னில்" என ஒருமையால் கூறப்பட்டது. "புறம்" என்பதில் முக்கூற்றுப் புறங்களும் அடங்கின. 'வரும் சமயமே புறமும்' என ஏகாரமும், உம்மையும் விரிக்க. 'அதனால் அவை இகழற்பால அல்ல' என்பதாம். உருவிய உண்மை 'வேதாந்த சித்தாந்த உண்மை' என்க. "உருவிய" என்பது அன்பெறாத அகர ஈற்றுப் பன்மை வினைப்பெயர்.*

*இதனால், 'ஆறந்தங்களில் மேற்பட்டவை வேதாந்தமும், சித்தாந்தமும்' என்பது பரந்த நோக்கத்தில் வைத்து விளக்கப்பட்டது.*

***2351. தெளிவுரை :-** ஆறந்தங்களில் வேதாந்தம், சித்தாந்தம் இரண்டும் ஒன்றே எனத் தெளிவான அடையாளங்களைப் பெற்றுள்ளன. **'போதாந்தம்' என்பது உயிர் அஞ்ஞானம் நீங்கி, ஞானத்தைப் பெறும் நிலையாகும். 'யோகாந்தம்' என்பது, பொதுப்பட ஒரு பொருளைக் குறியாகக் கொண்டு அதனையே நோக்கி நிற்பது. நாதாந்தம் திருவருளைத் தலைப்பட்டு, அதனாலே சிவானந்தம் தோன்றப் பெறுவது.** இவற்றிற்கு மேலாக முதலிற்கூறிய வேதாந்த சித்தாந்தங்களே முடிந்த அடையாளமாகிய பேசாநிலையைப் பெற்றுச் சிவானந்தத்தில் திளைத்திருத்தலாகும்.*

***குறிப்புரை :-** 'சீராக உதயம் ஆதல் ஆகும்' என்க.*

***இதனால், ஆறந்தங்களுள் கலாந்தம் ஒழிந்த ஏனை ஐந்து அந்தங்களின் பயன் கூறப்பட்டன. கலாந்தத்தின் பயன் மேற்கூறப்பட்டது.***

***2352. தெளிவுரை :-** வேதாந்தத்தில் சொல்லப்படுவது, 'பிரகிருதியும் அதன் காரியமுமாகிய ஏழுவகைக் குற்றங்களினின்றும் நீங்க வேண்டும்' என்பதே. அவை 1. பூதங்கள் 2. ஞானேந்திரியங்கள் 3. அவற்றின் விடயங்கள் 4. கன்மேந்திரியங்கள்*

**2352.** வேதாந்தந் தன்னில் உபாதிமேல் ஏழ்விடல்
நாதாந்தம் பாசம் விடுநல்ல தொம்பதம்
மீதாந்தம் காரணோ பாதியேழ் மெய்ப்பரம்
போதாந்தம் தற்பதம் போம்அசி என்பவே. **18**

---

*5. அவற்றின் விடயங்கள் 6. அந்தக் கரணங்கள் என்பனவும், எல்லாவற்றிற்கும் மூலமாகிய 7. பிரகிருதியும் ஆகியவையாகும்.*

*வேதாந்தத்திற்கு மேலேயுள்ள கலாந்தமாகச் சொல்லப்படுவது பிரேரக காண்டம் ஆதல் பற்றிக்காரண தத்துவங்களாகச் சொல்லப்படுகின்ற சுத்த தத்துவங்களால் செலுத்தப்படுகின்ற வித்தியா தத்துவங்கள் ஏழும் நீங்குதலாம். இத்தத்துவங்கள் தடத்த சிவனால் செலுத்தப்படுதல் பற்றி, 'பரோபாதி' என்றும் சொல்லப்படும்.*

*நாதாந்தமாகச் சொல்லப்படுவது, உயிர் உபாதிகள் அனைத்தும் நீங்கி நிற்கின்ற நிலையாம். 'தத்துவமசி' மகா வாக்கியத்தில் ஆன்மாவைக் குறிப்பதாகிய 'துவம்' பதம் இந்நிலையில் நின்ற ஆன்மாவையே குறிப்பதாம்.*

*போதாந்தமாகச் சொல்லப்படுவது, உபாதிகளின் நீங்கிய ஆன்மா மல வாசனையால் 'யான், எனது' என நிற்கின்ற நிலையை விடுத்துச் சிவமாகும் நிலையாகும். 'தத்துவமசி' மகாவாக்கியத்தில் 'அசி' பதம் ஆன்மா இவ்வாறாகும் நிலையையே குறிப்பதாம். 'தத்' பதம் சிவத்தைக் குறிக்கும்.*

***குறிப்புரை :-** "மேல்" என்றது பிரகிருதியைக் குறித்தது. இரண்டாவதாகக் கூறப்படவேண்டிய மீதாந்தம், வேறுபொருள்படாமைப் பொருட்டு மூன்றாவ தாகக் கூறப்பட்டது. "விடு" என்பது முதனிலைத் தொழிற்பெயர். இதனை காரணோபாதி காரணங்களால் வரும் உபாதி, 'தற்பதத்துப் போம் அசி' என்க. "தற்போதம்" என்பதில் 'தத்' என்பது அதன் பொருளைக் குறித்து நின்றது. போதல் புகுதல். 'போதலையே அசி' என்றமையால், "போம் அசி" என்பதில் பெயரெச்சம் வினைப்பெயர் கொண்டதாம்.*

***இதனால் ஆறந்தங்களுடன் மேற்கூறப்பட்ட ஐந்தில் உள்ள பாச நீக்க முறைகள் கூறப்பட்டன.***

***2353. தெளிவுரை :-** 'உலகங்கள் அனைத்தையும் கடந்தாலும் அவற்றிற்கு அப்பாலும் ஒரு பேரொளி உள்ளது' என வேதாகமங்கள் கூறுகின்றன. அந்தப் பேரொளிக்குள்ளே உள்ள ஓர் ஒளிதான் எங்கள் சிவபெருமான். அவன் அந்தப் பேரொளியைத் தனக்கு இயல்பாய் உள்ள மேலான ஆற்றலாக உடையவன். எனினும் அந்த ஆற்றலை ஆட்சி செய்கின்ற ஒருவனாகவும் அவன் அதற்குள் இருக்கின்றான்.*

**2353.** அண்டங்கள் ஏழும் கடந்தகன் றப்பாலும்
உண்டென்ற பேரொளிக் குள்ளால் உளவொளி
பண்டுறு கின்ற பராசத்தி யென்னவே
கொண்டனன் அன்றிநின் றான்எங்கள் கோவே. **19**

---

***குறிப்புரை :-*** *அண்டம், இங்கு 'உலகம்' என்னும் பொருட்டாய் நின்றது. 'உலகங்கள் ஏழு' என்னும் மரபு பற்றி, 'ஏழு' எனப்பட்டது. "கடந்தகன்று" என்பது ஒரு பொருட்பன்மொழி. "அப்பாலும்" என்னும் உம்மை, இறந்தது தழுவிய எச்சம் இதனால் அண்டங்களுக்குள்ளேயும் அந்த ஒளி இருத்தல் பெறப்பட்டது. "என்ற" என்னும் அனுவாதத்தால், என்றலும் பெறப்பட்டது. "உள ஒளி" என்பது குறிப்பு வினையெச்சத் தொடர். "பண்டு" என்றது 'அனாதி' என்றபடி. 'ஆற்றல் யாவும் பொருளைப் பற்றியே நிற்கும் ஆதலால், அந்த ஆற்றலுக்குப் பற்றுக்கோடாய் உள்ளவனே எங்கள் பெருமான்' என்றார். 'அன்றி நின்றான்' என்றது, 'அந்த ஆற்றலாகிய குணத்திற்கு வேறாய், அதனையுடைய குணியாய் நிற்கின்றான்' என்றதாம்.*

*'பரம்பொருள் அறிவு மட்டுமான குணமேயன்றி, அறிவையுடைய குணியன்று' என்பர் ஏகான்மவாதிகள். 'அது சித்தாந்தம் அன்று' என்பதை இம்மந்திரத்தால் கூறினார்.*

*தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி*
*பின்னமிலான் எங்கள் பிரான். - **திருவருட்பயன் - 2***

*என்றார் உமாபதி தேவர். சிவன் வெறும் சத்தியன்று; 'சத்தியையுடைய சத்திமான்' என்க. எந்த ஒரு சத்தியும் தன்னையுடைய பொருள் இன்றித் தனியேயிராது.*

*.............................. சத்திதான் சத்தனுக்கோர்*
*சத்தியாம்; சத்தன்வேண்டிற் றெல்லாமாம் சத்தி தானே.*

*என்ற சிவஞான சித்தி (சுபக்கம் - 2 - 76)யைக் காண்க.*

*இதனால், ஆறந்தங்களுள் மேலானதாய சித்தாந்தத்தின் சிறப்புப்பொருள் ஒன்று எடுத்துக்கூறப்பட்டது.*

*அண்டம் ஆரிருள் ஊடு கடந்தும்பர்*
*உண்டு போலும்ஓர் ஒண்சுடர்; அச்சுடர்*
*கண்டிங் காரறிவார்! அறிவா ரெலாம்*
*வெண்டிங்கட் கண்ணி வேதியன் என்பரே. - தி.5 ப.97 பா.2*

*என்னும் அப்பர் திருமொழியை இங்கு நினைவு கூர்க.*

***2354. தெளிவுரை :-*** *சிவன் தனது சத்தியாலே உயிர்கட்கு அறிவிக்கும்*

**2354.** கோவுணர்த் தும்சத்தி யாலே குறிவைத்துத்
தேவுணர்த் தும்கரு மச்செய்தி செய்யவே
பாஅனைத் தும்படைத்து அற்சனை பாரிப்ப
ஓவனைத் துண்டொழி யாத ஒருவனே. **20**

---

*முறையை உணர்ந்து, அந்த வழியிலே குரு உபதேசித்த பணிகளைச் செய் வதாலும், மற்றும் மந்திரங்களைச் சமர்ப்பித்து வழிபாடு செய்வதாலும் பாசங்கள் யாவும் நீங்கும். பின்பு என்றுமே உயிர்க்குயிராய் நீங்காதிருக்கின்ற சிவன் ஒருவனே உயிரினிடத்து உள்ள பொருளாவான்.*

***குறிப்புரை :-*** *கோ - யாவர்க்கும் தலைவன்;* ***சிவன். அவன் முன்னர்த் திரோதான சத்தியால் உலகத்தையே உணர்த்துவான். பின்பு அருட் சத்தியால் உலகத்தை மறைத்துத் தன்னை உணர்த்துவான். அதுவே சத்திநிபாதமாம்.*** *அதுதான் மந்ததரம் மந்தம் முதலாகப் பல வகைப்படுதலின் அதற்கேற்ப குரு முன்னர் 'சரியை, கிரியை, யோகம்' என்பவற்றை உணர்த்தி, முடிவிலே ஞானத்தை உணர்த்துவார். அவற்றுள் "கருமச் செய்தி" என்பது சரியையும், "அற்சனை" என்பது கிரியா யோகங்களையும் குறித்தன. யோகமும் அருவத் திருமேனி அருச்சனையே. "செய்ய, பார்ப்ப" என்பன வினையிடத்து வந்த செவ்வெண். தே - சிவனேயான குரு. பா - பாட்டாயினும் மந்திரமே. "அற்சனை பாட்டேயாகும்" (தி.12 தடுத்தாட்கொண்ட பு. 70) என்றது காண்க. படைத்தல் - சமர்ப்பித்தல். பாரித்தல் - மிகுதியாகச் செய்தல். "ஓ" என்னும் முதனிலையே. 'ஓவும்' என முற்றுப்பொருள் தந்தது. 'அனைத்தும்' என்னும் முற்றும்மை தொகுத்தலாயிற்று. 'ஒழியாத ஒருவனே உண்டு' என மாற்றியுரைக்க.*

*இதனால், 'ஞானத்திற்கு வழி சரியை கிரியா யோகங்கள்' என்பது சித்தாந்தம் ஆதல் கூறப்பட்டது.*

***2355. தெளிவுரை :-*** *சித்தாந்தம், "மற்றாருந்தன்னொப்பாரில்லாத" (தி.6 ப.1 பா.2) தலைவன் ஒருவன் இருக்கின்றான் எனக் கூறுவதையோ, 'அத் தலைவனுக்கு அடிமையாய் உள்ள உயிர்கள் பல உள்ளன' எனக் கூறுவதையோ, 'அவ்வுயிர்கட்கு நல்வினை; தீவினையென்னும் இருவகை வினைகளும், சுத்த மாயை, அசுத்த மாயை என்னும் மாயைகளும் ஆகிய கட்டுக்கள் உள்ளன' எனக் கூறுவதையோ சத்திநிபாதம் வாயாதவர் உணர வல்லவராகார். ஆகையால், எக்காலத்திலும் உயிர்களின் அறிவுக்கறிவாய் நின்று அவைகளுக்கு அறிவித்து, வினைப்பயனை நுகர்வித்து, அவற்றிற்கு அவை அறியாமலே ஆதாரமாயும் நிற்கின்ற அந்தத் தலைவனே இருவினை யொப்பு மல பரிபாகங்களின்போது அறிவித்தால்தான் எவரும் இந்தச் சித்தாந்த உண்மைகளை உணர இயலும்.*

***குறிப்புரை :-*** *வருவித்துரைக்க குறிப்பெச்சங்கள். 'சத்திநிபாதம் வாயாதோர்,*

**2355.** ஒருவனை உன்னார் உயிரினை உன்னார்
இருவினை உன்னார் இருமாயை உன்னார்
ஒருவனு மேஉள் ளுணர்த்திநின் றூட்டி
அருவனு மாகிய ஆதரத் தானே. **21**

---

*வாய்த்தோர்' என்பன, முன் மந்திரத்தில், "கோவுணர்த்தும் சத்தியாலே" என்றதனால் கொள்ளக் கிடந்தன. அருவம் - புலனாகாமை. 'ஆதாரம்' என்பது குறுகி நின்றது.*

*இதனால், முன் மந்திரத்தில் கூறப்பட்ட பொருள் எதிர்மறை முகத்தான் வலியுறுத்தப்பட்டது.*

*2356. **தெளிவுரை :-** சிவன்பால் அன்புள்ளவர்களை இடமாகக் கொண்டு வெளியாகின்ற ஆற்றல்கள் எல்லாம் அவர்களுடைய ஆற்றல்கள் அல்ல; மற்று, சிவனிடத்தினின்றும் வெளியாகின்ற ஆற்றல்களே. அந்த ஆற்றல்களின் முன்னிலையில் எல்லாப் பொருள்களையும் சிவன் நிற்க வைத்துச் செயற்படச் செய்தலால், உயிர் நிலையாகச் சிவானந்தத்தில் மூழ்கி, அவ்வானந்தமே மயமாம் நிலையை அடையும்.*

*__குறிப்புரை :-__ 'ஆகிவரும் அவை, சிவத்தினின்றும் வரும் சத்திகள்' எனவும் 'அவற்றின்முன் வகுத்திட்டு எனவும், மொழி மாற்றியும், வேண்டும் சொற்களை வருவித்தும் உரைக்க சிவனது சத்தி, செயலாற்றுகையில் 'அதிகாரசத்தி' எனப்பெயர் பெறும். அது சிவத்தினிடம் இருந்தே செயலாற்றாது, அவனுடைய அன்பர்களிடமிருந்தும் செயலாற்றும். அந்த அதிகாரத்துப் பதியப் பெறுதற்குப் புண்ணியம் வேண்டும் "புரைத்ததி காரசத்தி புண்ணியம் நண்ணலாமே" (சிவஞான சித்தி - சுபக். சூ. 1-61) என்றது காண்க. செயல்கள் தாம் பலவாகலின், அவற்றிற்கு ஏற்ப அதிகார சத்திகளும் பலவாம். 'இவை செயல் நோக்கியல்லது பொருள் நோக்கியல்ல' என்பதை,*

*சத்திதான் பலவோ என்னில், தான்ஒன்றே; அனேகமாக*
*வைத்திடும் காரியத்தான்; மந்திரி யாதிக் கெல்லாம்*
*உய்த்திடும் ஒருவன் சத்திபோல்;அர னுடையதாகிப்*
*புத்திமுத் திகளை யெல்லாம் புரிந்தவன் நினைந்தவாறாம்.*

**- *சிவஞான சித்தி - சுபக். சூ. 1-61***

*என்பதனான் உணர்க.*

*அதிகார சக்திகள் பலவும் அவரவரது புண்ணியத்திற்குத் தக அவ்வவரிடம் பதிந்து ஏற்புடைய செயல்களைச் செய்யும் என்க. உரன் உறுதல், எல்லாவற்றையும் செய்தும் தான் நிலை திரியாது இருத்தல். "முன்" என்றதும், "சந்நிதி" என்றதும்*

**2356.** அரன்அன்பர் தானம தாகிச் சிவத்து
வரும்அவை சத்திகள் முன்னா வகுத்திட்டு
உரன்உறு சந்நிதி சேட்டிப்ப என்றும்
திரன்உறத் தோயாச் சிவாநந்தி யாமே. **22**

---

*வெறும் எதிர்முக மாத்திரை யன்று; 'இஃது இவ்வாறு ஆகுக' எனச் சங்கற்பித்தலையேயாம். இத்தகைய சங்கற்ப மாத்திரையானே சிவன் எல்லாவற்றையும் செய்கின்றான் என்பதை உணர்க. சேட்டித்தல் - செயற்படுதல். "சேட்டிப்ப" என்னும் செயவெனெச்சம் காரணப்பொருளில் வந்தது. "சிவாநந்தி" என்றது சாதியொருமை. இதற்கு, 'உயிர்' என்னும் தோன்றா எழுவாய் வருவிக்க. 'சிவத்தினின்றும் வரும் சத்திகள்' என்றதனால், 'அவற்றின் முன்னாக வகுத்தவன் சிவனே' என்பது பெறப்பட்டது. "வகுத்திட்டு" என்னும் செய்தென் எச்சம். 'ஆசிரியன் சொல்லி, மாணாக்கன் அறிந்தான்' என்பதுபோலக் காரணப் பொருட்டாய் நின்றது. 'வகுத்திட்டுச் சேட்டிப்ப' என இயையும்.*

*இதனால், முன்மந்திரத்தில், "ஒருவனே தலைவன்" என்றது பற்றி, 'தலைவர் பலராதலைக் கண்டும், கேட்டும் அறிகின்றோமே; அஃதென்' என்று எழும் ஐயம் தீர்க்கப்பட்டது.*

***2357. தெளிவுரை :-** வேதாந்தப் பொருள் முழுவதையும் மிகச் சுருக்கமாகத் தொகுத்துணர்த்தும், 'ஒருமொழி அல்லது 'பெரும்பெயர்' எனப்படுகின்ற மகா வாக்கியங்கள் சிலவற்றுள், 'தத்துமசி' என்பதே சிறந்தெடுத்துச் சொல்லப்படுவது. (இது சாமவேதவாக்கியம்) இதனுள் **'தத்' என்பது பதியாகிய சிவத்தையும், 'துவம்' என்பது பசுவாகிய உயிரையும், 'அசி' என்பது, உயிரைச் சிவமாக்குகின்ற அருட் சத்தியையும் குறிக்கும்**. எனினும், 'இவற்றுள் பசுவாகிய உயிர் பஞ்ச பேதங்களை யுடைய (தி.10 8 ஆம் தந்திரம் முதல் அதிகாரம்) உடலளவில் ஏகதேசமாய் உள்ளதன்று; வியாபகமானதே' என்பதை வலியுறுத்தி விளக்குவதே வேதாந்தமாகும்.*

***மண்முதல் நாதம் ஈறாகச் சொல்லப்படுகின்ற உபாதிகளுள் ஒன்றும் இன்றி, நின்மலமாய் நிற்பது எதுவோ அதுவே பதிப்பொருள்' என வலியுறுத்தி விளக்குவது நாதாந்தமாகும். ('உயிர் இவ்வுபாதிகளை உடைமையாலே - பசு - எனப்பட்டது'** என்பதும் இதனானே விளங்கும்).*

*இனி, துவம் பதப்பொருளாகிய உயிர் தத் பதப் பொருளாகிய சிவத்தில் சென்று 'பாலோ டளாயநீர் பாலாகு மல்லது நீராய் நிறந்திரிந்து தோன்றாதவாறு போல' (நாலடியார் - 177) சிவமேயாய் வேறுதோன்றாது ஒன்றிவிடுதலை வலியுறுத்தி விளக்குவதே போதாந்தமாகும். (போதம் - சீவபோதம். அந்தம் - அதன் ஒடுக்கம். அஃதாவது கதிரொளியில் விளக்கொளிபோலச் சிவபோதத்தில்*

2357. வேதாந்தம் தொம்பதம் மேவும் பசுஎன்ப
நாதாந்தம் பாசம் விடநின்ற நன்பதி
போதாந்தம் தற்பதம் போய்இரண் டைக்கியம்
சாதா ரணம்சிவ சாயுச்சிய மாமே. 23

2358. சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்
அவமவ மாகும் அவ்வீ ரிரண்டும்
சிவமாம் சதாசிவன் செய்ததென் றானால்
நவமான வேதாந்த ஞானம்சித் தாந்தமே. 24

---

*சீவபோதம் அடங்கியிருத்தல்).*

***('போதாந்தம் கூறும் நிலையை எய்தி, அவ்விடத்தில் உயிர் பேரா இன்பப் பெருவெள்ளத்தில் அழுந்துதலை வலியுறுத்தி விளக்குவதே சித்தாந்தமாகும்' என்பது குறிப்பு).***

*'சிவமும், சீவனும் பொருள் இரண்டாமாயின், அவை ஒன்றாதல் எங்ஙனம் கூடும்' எனின், அவ்விரண்டற்கும் இடையே உள்ள பொதுத்தன்மைதான் அவை அங்ஙனம் ஒன்றாதற்குக் காரணம். (அத்தன்மையாவது, இரண்டும் சித்தாய் இருத்தலாம். எனவே, சடத்திற்குச் சிவத்தோடு ஒன்றுதல் கூடாமை விளங்கும்).*

***குறிப்புரை :-*** *பசு - பசுவின் இயல்பு; ஆகுபெயர். பசு இயல்பைக் கூறுவதை 'பசு' என்றே உபசரித்தார். இவை 'பதி' என்றதற்கும் ஒக்கும். 'தற்பதத்துப் போய்' என்க. 'இரண்டும்' என்னும் முற்றும்மை தொகுத்தலாயிற்று. 'ஐக்கியம்' என்பதன்பின், 'ஆதல்' என்பது எஞ்சி நின்றது. ஆதலைக் கூறுவதை 'ஆதல்' என்றதும், சாயுச்சம் ஆதற்குக் காரணமாவதை, 'சாயுச்சியம்' என்றதும் உபசாரம். சாதாரணம் - பொதுத்தன்மை. இதனால், மேல், "ஒருவனையுன்னார்; உயிரினை உன்னார்" என்பன முதலாக எதிர்மறை முகத்தாற் கூறியவற்றை நீக்கி, உடன்பாட்டு முகத்தால் உன்னுமாறு ஆறந்தங்களுள் பெறப்படுதல் கூறப்பட்டது.*

***2358. தெளிவுரை :-*** *ஆறந்தங்களுள், 'வேதாந்தம், சித்தாந்தம்' என்னும் இரண்டும், சீவன் சிவம் ஆதலைக் கூறுவதில் வேறுபடவில்லை. ஏனை, 'போதாந்தம், கலாந்தம், நாதாந்தம், யோகாந்தம்' என்னும் நான்கும் ஒன்றின் ஒன்று கீழ்ப்பட்ட நிலைகளையே விளக்கி நிற்கும். வேதமும், சித்தாந்தத்தைக் கூறும் சிவாகமும், உண்மையில் 'சிவம்' எனப்படுகின்ற அந்தப்பொருளே, தடத்தத்தில் 'சதாசிவன்' என்னும் பெயரையும், அதற்குரிய வடிவத்தையும் கொண்டு செய்த முதல்நூல் ஆகுமானால், அவற்றுக்கிடையே வேறுபாடிருத்தல் எங்ஙனம் கூடும். கூடாது. ஆகவே, வேதாந்த ஞானம், சித்தாந்த ஞானமேயாம்.*

***குறிப்புரை :-*** *ஆதலைக் கூறுவனவற்றை "ஆதல்" என்றது உபசாரம். அவமம்*

**2359.** சித்தாந்தத் தேசீவன் முத்திசித் தித்தலால்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்
சித்தாந்த வேதாந்தம் செம்பொருள் ஆதலால்
சித்தாந்த வேதாந்தம் காட்டும் சிவனையே. **25**

---

*- கீழ் (பரமம் - அவமம்). "செய்தது" எனவும், "ஒன்று" எனவும் கூறியது. 'வடிவால் வேறாயினும், பொருளால் ஒன்றே' என வலியுறுத்தற்கு 'வேதம் ஒருவரால் செய்யப்பட்டதன்று; தானே உள்ளது' எனக் கூறுபவர்க்கே (மீமாஞ்சகர்) வேதம் ஆகமத்தின் வேறாகும். 'வேதமும் சிவனால் செய்யப்பட்டதே' என்பார்க்கு வேதமும் ஆகமந்தான். இது பற்றியே நீலகண்ட சிவாசாரியார், 'வேதமும் ஆகமமே' ("வேதோபி ஆகம" சிவாத்துவித பாடியம் - பதியதிகரணம்) என்றார். வேதாகமங்கள் தோன்றிய வரலாற்றை முதல் தந்திர உரையிற் காண்க.*

*நவம் - புதுமை; முதலிலே உணரப்படுவது' என்பது கருத்து.*

*இதனால், மேற்கூறியவற்றுள் வேதாந்த சித்தாந்தங்களது உயர்வு கூறப்பட்டது.*

*2359. தெளிவுரை :- ஆறந்தங்களுள் சித்தாந்தத்தில் நிற்கும் நிலையில் தான் சீவன் முத்தி (அஃதாவது, உடம்பு உள்ளபொழுதே அதில் தொடக்கற்று, வீட்டின்பத்தில் இருக்கும்நிலை) கிடைக்கும். ஆகையால், சித்தாந்த நிலையில் நிற்பவர் உலகர்போலவே காணப்படினும், அவர் உலகருள் ஒருவராகாது, வீடுபேற்றில் இருப்பவரே ஆவார். வேதாந்தத்தின் உட்கிடையும் சித்தாந்தமே யாதலால், அவ்வுட்கிடையை உணரவல்லவர்கட்கு வேதாந்தம், சித்தாந்தம் இரண்டும் சிவனையே பரமாகக் காட்டி நிற்றல் விளங்கும்.*

*குறிப்புரை :-*

*சித்தாந்தத் தேசிவன்தன் திருக்கடைக்கண் சேர்த்திச்*
*செனனம்ஒன்றி லேசீவன் முத்த ராக்கி*
*வைத்தாண்டு மலம்கழுவி ஞான வாரி*
*மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை அறுத்து*
*முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்பன் என்று*
*மொழிந்திடவும் உலகரெல்லாம் பாவப்*
*பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்*
*பெருங்குழியில் வீழ்ந்திடுவர்; இது என்ன பிராந்தி!*

*- சிவஞானசித்தி சுபக்கம் - சூ. 8-16*

*என்னும் சிவஞான சித்தி மொழியினை இங்கு ஒப்புநோக்கியுணர்க.*

*இதனால், ஆறந்தங்களுள் சித்தாந்தத்தின் தலைமை அதன் பயன்கூறும் முகத்தால் இனிது விளக்கப்பட்டது.*

**2360.** **சிவனைப் பரமனும் சீவனுட் காட்டும்**
**அவமற்ற வேதாந்தம் சித்தாந்தம் ஆனால்**
**நவமுற் றவத்தையில் ஞானம் சிவமாம்**
**தவமிக் குணர்ந்தவர் தத்துவத் தாரே.** **26**

---

*2360. தெளிவுரை :- **சிவனை ஈசுரனிடத்திலும், சீவனிடத்திலும் வைத்துக் காட்டுவது வேதாந்தம்**. அதில் இருவகை உண்டு. ஒன்று பரிணாமவாதம்; மற்றொன்று ஆபாசவாதம். ஆபாசம் - போலி. விவர்த்தனம் ஆபாசத்துள் அடங்கும். விவர்த்தனம் - கயிறு பாம் பாதல் போலும் பொய்த்தோற்றம். 'நிர்க்குணமாகிய பரப்பிரமமே தன் இச்சையால், சத்துவகுணனாகிய ஈசுர னாகவும், இராசத குண னாகிய சீவனும், தாமத குணத்தவாகிய அந்தக் கரணம் முதலிய கருவிகளுமாய்ப் பரிணமிக்கும்' என்பது பரிணாம வாதம். 'நிர்க் குணமாகிய பரப்பிரமத்திலே - இன்னது எனச்சொல்ல இயலாத - மாயை என்பது உண்டு. அது முக்குணங்களையுடையது. மூன்று நிறம் உடைய கண்ணாடியைப் போன்றது. அம்மூன்று கூற்றிலும் கண்ணாடியில் நிழல் போலப் பரப்பிரமம் பிரதிபலிக்கும். அவற்றுள் சத்துவக் கூற்றின் பிரதி பலனம் ஈசுரனாயும், இராசதக் கூற்றின் பிரதிபலனம் சீவனாயும், தாமதக் கூற்றின் பிரதி பலனம் அந்தக் கரணம் முதலிய கருவிகளாயும் நின்று செயற்படும்' என்பது ஆபாசவாதம். இந்த ஆபாசத்திற்கு அடிப்படை மாயையே யாகையால், ஆபாசவாதமே 'மாயாவாதம்' எனப்படுகின்றது. எவ்வகையிலேனும் இந்த வேதாந்தம் 'சகம், சீவன், பரம்' என்னும் முப்பொருளை உணர்த்துதலால், இதனை உணர்ந்த பின் ஆகமாந்தத்தை உணருங்கால், வேதாந்தக் கூற்று தூலாருந்ததி முறைமைத்தாதல் விளங்கும்.*

*தூலாருந்ததி முறைமை யாவது, 'அருந்ததி மீன் மிக நுண்ணிதாதலின், அதனைக் காட்டுதல் அரிது' என்று கருதி முதற்கண், அதற்கு அருகில் உள்ள ஒரு பெரு மீனைச் சுட்டி, 'அதுவே அருந்ததி' எனக் காட்டுதல் போன்ற முறை. முதலில் அப்பெருமீனைக் கண்டுணர்ந்தவனுக்குப் பின்பு, 'அஃதன்று அருந்ததி மீன்; அதனைச் சார்ந்து மிக நுண்ணியதாய் விளங்குகின்றதனைப் பார்; அதுவே அருந்ததி மீன்' எனக் காட்டினால், அவன் அருந்ததியைக் கண்டு கொள்வான். இம்முறையில் அருந்ததியல்லாத மீனை அணுக்கம்பற்றி 'அருந்ததி' என்றல் போல்வது இங்குக் கூறிய வேதாந்தப் பொருள். அருந்ததி மீனையே சுட்டி, 'அருந்ததி மீன்' எனக் காட்டுதல் போல்வது ஆகமாந்தப் பொருள்.*

*ஆகவே, தூலாருந்ததி முறைமை பற்றி நோக்கினால் இங்குக் கூறிய வேதாந்தமும் பயனில்லது ஆகா தாகலின், இந்த வேதாந்தமும் சித்தாந்தமேயாம். இவ்வாறு ஆகும் நிலைமையில் ஒருவனது ஞானம் அமையுமாயின், அந்த ஞானம் தசகாரியத்துள் ஒன்பதாம் நிலையாகிய 'சிவயோகம்' எனப்படுகின்ற சீவன் சிவனாய் நிற்கும் நிலைமையைத் தரும். 'சரியை, கிரியை, யோகம்' என்னும்*

**2361.** தத்துவ மாகும் சகள அகளங்கள்
தத்துவ மாம்விந்து நாதம் சதாசிவம்
தத்துவ மாகும் சீவன்நல் தற்பரம்
தத்துவ மாம்சிவ சாயுச் சியமே. **27**

---

*தவங்களின் மிகுதியினாலே இத்தகைய ஞானத்தை எய்தினோரே, 'தத்துவ ஞானிகள்' எனப்படுகின்றார்கள்.*

***குறிப்புரை :-*** *'பரப்பிரமத்தை' என்னாது, "சிவனை" என்றது, 'சித்தாந்தத்தில் சொல்லப்படும் சிவனே, வேதாந்தத்தில் சொல்லப்படும் பரப்பிரமம்' என்றற்கு, இச்சிவன், சொரூப சிவன் என்க. இஃதே பற்றித் தடத்த சிவனை, 'வேதாந்திகள் கூறும் ஈசுரன்' என்றோ, 'சகுணப் பிரமம்' என்றோ மயங்கற்க. சிந்தாந்தம் கூறும் தடத்த சிவனும் நிர்க்குணனே. பரமன் - வேதாந்திகள் கூறும் பரமன்; ஈசுரன். "நவம்" என்றது, ஒன்பதாம் எண்ணுமுறைமை. 'உற்ற' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. மிக்கு - மிகுந்ததனால். உணர்தற்கு, 'இதனை' என்னும் செயப்படுபொருள் வருவிக்க.*

*இதனால், 'சித்தாந்தமே வேதாந்தம்' என்னும் உண்மையை உணராதவர் வேதாந்த வாக்கியங்கட்குத் தாம் தாம் அறிந்தவாற்றால் கூறும் பொருள்களும் சித்தாந்தத்தை உணர்ந்தவர்கட்கு நேர்மாறனவையாகாது, தூலாருந்ததி முறைமையவாம் என்பது கூறப்பட்டது.*

***2361. தெளிவுரை :-*** *சித்தாந்தத்தில் சொல்லப்படுகின்ற உருவம், அருவம் உருவாருவம் ஆகிய சிவவடிவங்களும், அவற்றிற்கு இடமாகின்ற விந்து, நாதம், சாதாக்கியம் ஆகிய நிலைக்களங்களும், சீவனும், அதனின் மேம்பட்ட சிவன், சத்தி, சதாசிவன் ஆகிய கருத்தாக்களும் உண்மைகளேயன்றி, மேற்கூறிய வேதாந்தத்தில் சொல்லப்படுவன போல, பரிணாமமோ, ஆபாசமோ அல்ல. ஆகவே, சீவன் சிவனோடு கதிரவன் ஒளியில் விளக்கொளிபோல இரண்டறக் கலக்கும் சித்தாந்த முத்தியே உண்மை முத்தியாம்.*

***குறிப்புரை :-*** ***தத்துவம் - உண்மை****. 'தத்துவமாகும்' என்னும் பயனிலை நான்கடிகளிலும் முதற்கண்ணே நின்றது.* ***சகளம் - உருவம்****, அகளம் - அருவம்.* ***சகள அகளம் - அருவுரு****. இவ்விரண்டைக் கூறியதனால் சகள நிட்களமாகிய உருவாருவமும் பெறப்பட்டது. தன்பரம் - தனக்கு மேலே உள்ளவர். அவர் சதாசிவர் முதலிய கடவுளர். இவரையும், சீவர்களையும், மற்றும் இவர்களது தன கரண புவன போகங்களையும், 'கனவிற் காணப்படும் மயக்கக் காட்சிபோல வியாவகாரிக சத்தைகள்; பாரமார்த்திகத்தில் இவையெல்லாம் பொய்யாய் ஒழியும்' எனக் கூறுவர் மாயாவாதிகள். 'அது பொருளன்று' என வலியுறுத்தற்கு அடிதோறும் "தத்துவம் ஆகும்" எனக் கூறினார்.*

**2362.** வேதமொ டாகமம் மெய்யாம் இறைவன்நூல்
ஓதும் பொதுவும் சிறப்பும்என் றுள்ளன
நாதன் உரைஅவை நாடில் இரண்டந்தம்
பேதம தென்னில் பெரியோர்க் கபேதமே. **28**

---

*இதனால், மேற்கூறிய வேதாந்தப்பொருள் தூலாருந்ததி முறைமைத்தாதல் வலியுறுத்தப்பட்டது.*

*2362. தெளிவுரை :- இதன்பொருள் வெளிப்படை.*

*குறிப்புரை :- பொது, உண்மையை முற்ற உணர்த்தாது, ஓரளவாக உணர்த்துவது. சிறப்பு, உண்மையை முற்ற உணர்த்துவது, உலகர் உண்மையை ஓரளவே உணர்வார்; சத்தி நிபாதரே முற்ற உணர்வார். மேலும் உண்மையை முதற்கண் ஓரளவாக உணர்ந்ததே பின்பு முற்ற உணர இயலும். அது பற்றியே உலகர்க்காகவும், சத்திநிபாதர்க்காகவும் முறையே வேதமும், ஆகமமும் சிவனால் செய்யப்பட்டன. எனவே, இவ்வுண்மையை உணராதவர், 'வேதாந்தம் வேறு சித்தாந்தம் வேறு' என்பர். இவ்வுண்மையை உணர்ந்தவர் ஒரு உண்மை தானே பொதுவும், சிறப்புமாம் வகையில் 'வேதாந்தம்' எனவும், 'சித்தாந்தம்' எனவும் நிற்கின்றது என்பர் என்றபடி.*

*"வேதநூல், சைவநூல் என்றிரண்டே நூல்கள்;*
*வேறும்உள நூல்இவற்றின் விரிந்த நூல்கள்;*
*ஆதிநூல் அனாதிஅம லன்தருநூல் இரண்டும்;*
*ஆரணநூல் பொது; சைவம் அருஞ்சிறப்பு நூலாம்;*
*நீதியினால் உலகர்க்கும் சத்திநிபா தர்க்கும்*
*நிகழ்த்தியது"*

*- சிவஞான சித்தி சுபக்கம் சூத். 8-15*

*என்றது சிவஞானசித்தி.*

*இதனால், ஆறந்தங்களுள் வேதாந்த சித்தாந்தங்களது தலைமை அவற்றின் இயல்பு கூறும் முகத்தால் வலியுறுத்தப்பட்டது.*

*2363. தெளிவுரை :- வேதாந்தத் தெளிவாம் சித்தாந்த நெறியில் அடையப்படும் ஆனந்தம் சிவானந்தம். அதனை முற்றப்பெற்ற உயிரே மேலான ஆனந்தத்தைப் பெற்ற உயிராகும். இனி அந்த ஆனந்தம் முப்பாழுக்கு மேலே விளைவதாகும். அதனை இவ்வுலகிலே இறைவன் செய்யும் திருக்கூத்திலும் பெறலாம். திருக்கூத்தில் பெறுவது 'முத்திரானந்தம், எனப்படும். அதனை எல்லாரும் பெறுதல் கூடும். சிவானந்தத்தை எந்த வகையிலேனும் பெறும் உயிரே இன்பத்தால் நிறைக்கப்பட்ட உயிராகும்'.*

**2363.** பரானந்தி மன்னும் சிவானந்த மெல்லாம்
பரானந்தி மேன்மூன்றும் பாழுறா னந்தம்
விராமுத்தி ரானந்தம் மெய்ந்நட னானந்தம்
பொராநின்ற உள்ளமே பூரிப்பி யாமே. **29**

*குறிப்புரை :-* பர + ஆனந்தம் = பரானந்தம். 'பரா + ஆனந்தம்' என்றலும் ஆம். ஆனந்தத்தை உடையது ஆனந்தி. "பரானந்தி மன்னும் சிவானந்தம் எல்லாம்" என்றாரேனும், 'சிவானந்தம் எல்லாம் மன்னியது பரானந்தி' என்றலே கருத்து. எல்லாம் - முழுதும். 'முழுதிலும்' என்க. மன்னுதல் - நிலைத்திருத்தல். இரண்டாம் அடியில், 'அந்தப் பரானந்தம்' எனச் சுட்டியுரைக்க. "மேல் மூன்றும் பாழ்உறு ஆனந்தம்" என்பதை, 'மூன்று பாழுக்கும் மேல் உறு ஆனந்தம்' என மாறிக் கூட்டுக.

| | |
|---|---|
| முப்பாழ் | - போதப்பாழ், சீவப்பாழ், சிவப்பாழ் என்பன. |
| போதப்பாழ் | - தத்துவரூபம் முதலிய மூன்றையும் அறிந்து பாழ்படுத்தி நீங்கல் |
| சீவப்பாழ் | - ஆன்மரூபம் முதலிய மூன்றையும் அறிந்து நீங்குதல் |
| சிவப்பாழ் | - சிவரூபம் முதலிய இரண்டையும் அறிந்து நீங்குதல் |

விரா ஆனந்தம், வினைத்தொகை. "விரா" என்றது உடம்பொடு புணர்த்தது. எனவே, 'முத்திரானந்தம் (யாவராலும்) விராவப்படும்' என்பது கருத்தாயிற்று. கூத்தப்பெருமானது கூத்து, ''ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான் அழுத்தலையே" (உண்மை விளக்கம் - 36) குறிப்பதாகலின், அந்த நடனத்தில் காணப்படும் முத்திரை (வீசியகரமும், எடுத்த திருவடியும்) 'ஆனந்த முத்திரை' யாகும். அதனால் அதை, ''முத்திரானந்தம்'' என்றார். முத்திரானந்தம் - முத்திரையில் விளையும் ஆனந்தம்.

**'இறைவன் இல்லை' எனப் பிணங்கிய தாருகாவன முனிவர்க்கு 'அவன் உளன்' என விளக்கினமையால், பிட்சாடனர் கையில் காணப்படுவது 'சன் முத்திரை' சன் + முத்திரை (சத் + முத்திரை) என்றும், சனகாதி நால்வர்க்கு ஞானத்தைத் தெளிவித்தமையால், தென்முகக் கடவுள் கையில் காணப்படுவது 'சின்முத்திரை' (சித் + முத்திரை) என்றும் சொல்லப்படும்.** எனவே இம்மூர்த்திகளின் முத்திரையும் கூடி, சச்சிதானந்த முத்திரையாதல் விளங்கும்.

'பொரு' என்னும் பகுதி நேரே, 'போர் செய்தல்' எனப் பொருள் தருமாயினும், உகரம் பெற்று, 'பொருவுதல்' என நின்று 'ஒத்தல்' என்றும் பொருளைத் தரும் ஆதலின் இங்கு, "பொராநின்ற" என்பது, 'ஒத்திரா நின்ற' எனப் பொருள் தந்தது. ஒத்திருத்தல் - தகுதி பெற்றிருத்தல். உள்ளம் - ஆன்மா. பூரித்தல் - நிறைத்தல். பூரிப்பி - நிறைக்கப்பட்டது.

இதனால், சித்தாந்தத்தில் பெறப்படும் பயன் ஒப்புயர்வற்றதாதல் கூறப்பட்டது.

**2364.** ஆகும் கலாந்தம் இரண்டந்தம் நாதாந்தம்
ஆகும் பொழுதில் கலைஐந்தாம் ஆதலின்
ஆகும் அரனேபஞ் சாந்தக னாமென்ன
ஆகும் மறைஆ கமம்மொழிந் தானே. 30

**2365.** அன்றாகும் என்னாதை ஐவகையந் தந்தம்மை
ஒன்றான வேதாந்தம் சித்தாந்தம் முன்னிட்டு
நின்றால் இயோகாந்தம் நேர்படும் நேர்பட்டால்
மன்றாடி பாதம் மருவலும் ஆமே. 31

---

*2364.* ***தெளிவுரை :-*** *ஆறந்தங்களில், 'கலாந்தம், நாதாந்தம்' என இரண்டு கூறப்படினும், __நாதாந்தம் கலாந்தத்துள் அடங்கும்__ ஆதலின், நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளின் முடிவே முடிவாகும். ஆகவே, 'அந்தப் பஞ்சகலைகளையும் சுத்த மாயையுள் ஒடுக்கியும், மீள விரித்தும் நிற்பவன் சிவன்' எனக் கேட்கப்படுத லன்றிப் பிறர் ஒருவரும் அத்தன்மையராதல் கேட்கப்படாமையால், அவனே ஆறந்தங்கட்கும் மூலமாகிய வேதாகமங்களைச் செய்தருளினான். கலாந்தம் இரண்டு. 1. அகாரம் முதலாய 16 கலைகள் (மேதா) 2. நிவிர்த்தி உள்ளிட்ட பஞ்ச கலைகள். இரு வகைக் கலைகளின் முடிவிலுள்ளவர் சிவனே ஆதலின் அவர் பஞ்சாந்தகன் எனப்பட்டார்.*

***குறிப்புரை :-*** *அன்றே, தேற்றம், 'பஞ்ச கலைகளையும் ஒடுக்கி, விரிப்பவனே முழுமுதல் தலைவன்' என்பதும், 'கீழ்க் கீழ் உள்ள சில கலைகளை மட்டும் ஒடுக்கி, விரிப்பவர் முழுமுதல் தலைவராகாது, முழுமுதற்றலைவன் கீழ் ஒருபுடை நிற்கும் தலைவர் என்பதும் சித்தாந்தம். ஆதலின், உலகிற்கு இருவகை முதல் நூல்களைச் செய்தளித்தவனும் அவனே என்றபடி. 'இரண்டந்தம்' என்பதை, 'நாதாந்தம்' என்பதன் பின்னர்க் கூட்டுக. என்ன - என்று சொல்லும்படி. பஞ்சாந்தகன் - ஐந்தையும் இறுதி செய்பவன். இறுதி செய்தலைக் கூறவே, தோற்றுவித்தலும் தானே பெறப்பட்டது. அரன் - சங்கார காரணன்.*

*பஞ்சாந்தகம் ஐவகைப்படும் பஞ்சாந்தகம் - சங்காரம்*

| | |
|---|---|
| *1. முதலாவது* | *நிவர்த்தி கலைகளில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்.* |
| *2. இரண்டாவது* | *பிரதிட்டா கலைகளில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்.* |
| *3. மூன்றாவது* | *வித்தியா கலைகளில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்.* |
| *4. நான்காவது* | *சாந்தி கலைகளில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்.* |
| *5. ஐந்தாவது* | *சாந்தியதீத கலைகளில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்.* |

**2366.** **அனாதிசீ வன்னைம் மலமற்றப் பாலாம்**
**அனாதி அடக்கித் தனைக்கண் டரனாய்த்**
**தனாதி மலங்கெடத் தத்துவா தீதம்**
**வினாவும்நீர் பால்ஆதல் வேதாந்த உண்மையே.** **32**

---

*இதனால், மேல் "நாதன் உரை அவை" எனப்பொது வகையால் சுட்டப்பட்ட தலைவன் இவன் என்பது சிறப்பு வகையால் இனிது விளக்கப்பட்டது.*

*2365.* ***தெளிவுரை :-*** *வேதாந்தத்தைத் தவிர மற்றை ஐந்து அந்தங்களை, 'உண்மையல்ல; போலி என்று இகழாதே தலையாய வேதாந்தத்தைச் சித்தாந்தத்தின் வழியாக உள்ளவாறுணர்ந்து நின்றால், யோகாந்தம் செயல்முறையில் வாய்க்கும். அது வாய்த்தால், மன்றாடியாகிய சிவனது திருவடிப்பேறும் கூடும்'.*

***குறிப்புரை :-*** *அன்றுதல் - மாறுபடுதல், வேறுபடுதல். அன்றினார் - பகைவர். மன்றாடி - பெயர். அன்று, பன்மையொருமை மயக்கம். "என்னாதை" என்பது, எதிர்மறை ஒருமை ஏவல். இஃது, 'என்னாதே' என மருவி இறுதியிற் கூட்டுக. உணர்வு முறையில் சித்தாந்தம் முடிவானதாயினும், செயல்முறையில் அதற்கு முதற்படி யோகாந்தம் என்றபடி. அனைத்து அந்தங்களும் படிமுறையில் வேண்டுவன ஆதலின் அவற்றை, "அன்றாகும் என்னாதை" என்றார்.*

*இதனால் ஆறந்தங்களும் படி வழியாதல் கூறப்பட்டது.*

| | |
|---|---|
| *அபிநயம், நாட்டியம்* | *வாக்கியார்த்தத்தை வெளிப்படுத்துவன* |
| *நிருத்தம்* | *பதார்த்தத்தை வெளிப்படுத்துவது* |
| *தாண்டவம்* | *தாளத்துக்கியைய ஆடுவது* |

*2366.* ***தெளிவுரை :-*** *பதியைப்போலவே பசுவாகிய சீவனும் அனாதி. அதற்கு அனாதியே ஒரு குற்றம் உண்டு. அந்தக்குற்றம் மேல் எழாமல் கீழாகும்படி அடக்கினால் சீவன் தனது உண்மையைத் தான் உணரும். தன்னை உணர்ந்தால், பின் தலைவனை உணர்ந்து, அவனைச் சார்ந்து அவனாகி நிற்கும். அங்ஙனம் நிற்கும் நிலையை அடைதற்பொருட்டுச் சீவன் அனாதிக்குப் பின் ஆதியாய் வந்த மலங்களும் நீங்கும்படி அவற்றைக் கடக்கும் முறையை ஞான குருவை அடைந்து வினாவும், பின் அவர் உபதேசித்தபடி நின்று, ஐந்து மலங்களும் நீங்கப் பெற்றுத் தூயதாய் உலகத்தைக் கடந்து நிற்கும். அந்நிலையில் அது சிவத்தைச் சேர்ந்து சிவம் ஆதல், நீர் பாலோடு சேர்ந்து பாலாதல் போல்வதாம். வேதாந்தத்தின் உண்மைப்பொருள் இதுதான்.*

**2367.** உயிரைப் பரனை உயர்சிவன் றன்னை
அயர்வற் றறிதொந்தத் தசியெ னதனால்
செயலற் றறிவாகி யும்சென் றடங்கி
அயர்வற்ற வேதாந்தம் சித்தாந்தம் ஆமே. **33**

---

*குறிப்புரை :- முன் மந்திரத்தில், 'வேதாந்தப் பொருளைச் சித்தாந்தத்தின் வழியாக உணர்தல் வேண்டும்' என்றமையால், 'அதனை அவ்வாறு உணருங்கால் வேதாந்தப் பொருள் இவ்வாறாம்' என்றபடி.*

*ஐம்மலம் - ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி. இவற்றுள் ஆணவம் அனாதி; அன்றே உள்ளது. ஏனைய ஆதி; பின் வந்தவை. இரண்டாம் அடியில் "அனாதி" என்றது. அனாதியாய மலத்தை. அனாதிக்கு அந்தம் இல்லை ஆதலின், 'அழித்து' என்னாது "அடக்கி" என்றார். ஆணவம் தவிர ஏனை நான்கும் "ஆதி மலம்" எனப்பட்டன. சம்பந்தம் ஆயினமை பற்றி, "தத்துவாதீதம்" என மாயேயத்தையே கூறினாராயினும் இனம் பற்றி அனுபந்தமும், சார்பு பந்தமுமாய் உள்ள ஏனைய மலங்கட்கு அதீதம் ஆதலும் கொள்ளப்பட்டது. வினாவுதற்கு, வினாவப்படுவார் வருவிக்கப்பட்டார்.*

*சீவனை, 'ஆதி' என்பாரை மறுத்தற்கு, "அனாதி சீவன்" என்றும், 'மலம் இரண்டே' என்பாரை மறுத்தற்கு, "ஐம்மலம் அற்று" என்றும், ஆணவத்தைப் பலபட மயங்கிக் கூறுவாரை மறுத்தற்கு "அனாதி மலம்" என்றும், 'சீவன் சிவனாதல் நீரும், நீரும் சேர்ந்து ஒன்றாதல் போல்வது' எனவும், 'குடம் உடைந்த வழிக் குடாகாயம் மகா காயத்தோடு சேர்ந்து ஒன்றாதல் போல்வது' எனவும், மற்றும் இன்ன பிற போல்வனவாகவும் கூறுவாரை யெல்லாம் மறுத்தற்கு, "நீர் பாலாதல்" என்றும் கூறினார்.*

*"ஐம்மலம் அற்று அப்பால் ஆம்" என்பதை "வினாவும்" என்பதன் பின்னர்க் கூட்டி, 'அது நீர் பால் ஆதல் போல்வது' எனவும், 'இதுவே வேதாந்த உண்மை' என்று எழுவாய்கள் வருவித்து, தேற்றேகாரத்தை மாற்றி வைத்துரைக்க. அதீதம் ஆதற்குரிய முறையை "அதீதம்" என்றார்.*

*இதனால், மேல் "நாடில் இரண்டந்தம் பேதமதென்னில் பெரியோர்க் கபேதமே" என்றது தெளிவிக்கப்பட்டது.*

*2367. **தெளிவுரை :-** 'உயிர், பரன், திருவருள்' என்னும் முப்பொருளையும், 'அவற்றுள் ஒன்றையும் விடாது முறையே உணர்த்துகின்ற, 'துவம், தத், அசி' என்னும் மூன்று பதங்களால் ஆகிய வேதாந்த மகா வாக்கியத்தை அனுபவமாக உணர்வதால், நீ சடமாகிய பாசங்கள் வாக்கியத்தை அனுபவமாக உணர்வதால், நீ சடமாகிய பாசங்கள் ஆகாது, சித்தாகி விடுவாய். ஆயினும், அதன்பின் 'யான் எதனையும் யானே அறியமாட்டாமையால், தூலசித்தாகின்ற எனக்கு*

எஞ்ஞான்றும் அறிவித்து வருகின்ற சூக்குமசித்து ஒன்று உண்டு என உணர்ந்து, எதனையும், 'யான் அறிகின்றேன், யான் செய்கின்றேன்' எனச் செருக்குதலை விடுத்து, அந்தச் சூக்கும சித்தின்கீழ்ப் போய் அடங்கியிரு. அப்பொழுதே வேதாந்தம் சித்தாந்தம் ஆகிவிடும்.

**குறிப்புரை :-** சிவன், அவனது அருளைக் குறித்த ஆகுபெயர். வாக்கியம், 'தத்துவமசி' என்று இருப்பினும் உண்மையில் அதன் சொற்கிடக்கை முறை, 'துவம் தத் அசி' என்பதே ஆதலை விளக்குவார். 'தொம்தத் அசி' என்றார். 'அசி' என்பது, 'ஆகின்றாய்' எனப் பயனிலை ஆதலாலும் அது முன்னிலையிடத்தது ஆதலாலும் 'துவம்' (நீ) என்னும் முன்னிலை எழுவாய் முதற்கண் நிற்றலே முறையாதல் அறிக. எனவே, 'தத்துவமசி' என்ற மகாவாக்கியத்தின் பொருள், 'நீ அது ஆகின்றாய்' என்பதே ஆகின்றது.

ஒரு பொருள் மற்றொரு பொருளேயாதற்குக் காரணம் அவற்றிடையே யுள்ள இயைபு. அவ்வியைபுதான் பல. 'குடம் மண் ஆகின்றது' என்பதில் ஆதற்குக் காரணம் காரிய காரண இயைபு. அது போன்றதே 'நீ அது ஆகின்றாய்' என்பதில் ஆதற்குரிய காரணம் என்பர் பிரம பரிணாமவாதிகள்.

'வெண்மை தாமரை யாகின்றது', 'இலை பூ காய்கள் மரமாகின்றன' என்பவற்றில் ஆதற்குக் காரணம் குண குணி, இயைபும், அவயவ அவயவி இயைபும் ஆகும். இவைபோன்றதே 'நீ அது ஆகின்றாய்' என்பதில் ஆதற்குரிய காரணம் என்பர் விசிட்டாத்து விதிகள்.

'பாம்பு பழுதையாகின்றது', 'அரசன் ஆண்டியாகின்றான்' 'குடாகாயம் மகாகாயம் ஆகின்றது' என்பவற்றில் ஆதற்குக் காரணம் காட்சிவகையும், நிலைமை வகையும், பொருள் ஒருமை வகையும் ஆகும். இவை போன்றதே, 'நீ அது ஆகின்றாய்' என்பதில் ஆதற்குரிய காரணமும் என்பர் கேவலாத்து விதிகள்.

'இவரெல்லாம், 'வேதாந்தமும், சித்தாந்தமும் வேறு, வேறு' எனப் பேதம் கூறுபவரும், சித்தாந்தத்தை ஏனையோர் கூறும் வேதாந்தம் ஆக்குபவரும் ஆவர். அவர்களையெல்லாம் மறுத்து, 'நீ அது ஆகின்றாய்' என்பதில் ஆதற்குரிய காரணம், "நான் இவள்ஆம் பகுதிப் பொற்பு" (தி.8 திருக்கோவையார் - 8) என்று அருளிச்செய்தபடி, 'தலைவன் தலைவி ஆகின்றான்' என்பதில் ஆதற்குக் காரணம், தலைவனது உணர்வு தன்னை உணரும் உணர்வாகாது, தலைவி தன் நலத்தையே உணரும் உணர்வாதலாம் அது போன்றதே, 'நீ அது ஆகின்றாய்' என்பதில் ஆதற்குரிய காரணம் எனச் சித்தாந்தம் கூறுவார், "அறிவாகியும் சென்று அடங்கி" என்றார். "தந்ததுன் றன்னைக் கொண்ட தென்றன்னை" (தி.8 கோயில் திருப்பதிகம் - 10) என்பதில், "என்றன்னை" என்றதும், "என்னை விழுங்கி வெறுந் தானாய் நிலை நின்றது தற்பரமே" (கந்தரனுபூதி - 28) என்பதில் "என்னை" என்றதும் உயிருணர்வையேயாம். இவற்றில், "கொண்டது" எனவும், "விழுங்கி" எனவும்

**2368.** மன்னிய சோகமாம் மாமறை யாளர்தம்
சென்னியது ஆன சிவோகமாம் ஈதென்ன
அன்னது சித்தாந்த மாமறை ஆய்பொருள்
துன்னிய ஆகம நூல்எனத் தோன்றுமே. **34**

---

*கூறப்பட்டதே இங்கு, "அடங்கி" எனக் கூறப்பட்டது. 'அடங்குதி' என்னும் இகர ஈற்று ஏவல் வினை தகரம்பெறாது நின்றது, "நன்றுமன் இது நீ நாடாய் கூறி" (அகம். 268) என்பதிற்போல.*

*"அறி" என்பது, 'தொந்தத்தசி' என ஒரு சொல் நீர்மைத்தாய் நின்றதனோடு வினைத்தொகைபடத் தொக்கது. அயர்வு - அறியாமையால் கொள்ளாதொழில்.*

*இதனால், முன் மந்திரத்தில் கொள்கைவகையால் விளக்கிய உண்மை, சொற்பொருள் வகையால் விளக்கப்பட்டது.*

***2368. தெளிவுரை :-** பொது மறையாகிய வேதத்தை மட்டுமே நூலாகக் கொண்டு, சிவாகமங்களை நூலாகக் கொள்ளாதவர்கட்குத் தலையான மகா வாக்கியமாய் உள்ளது. "ஸோஹம் அஸ்மி" என்பது (இதன் பொருள், 'அது நான் ஆகின்றேன்' அல்லது, 'அவன் நான் ஆகின்றேன்' என்பது 'தத்துவமசி' மகாவாக்கியத்தில் முன்னிலையில் வைத்துச் சொல்லப்பட்ட பொருளே இதில், தன்மையில் வைத்துச் சொல்லப்பட்டது. ஆகையால் இவ்விரண்டிற்கும் இடையே உள்ளது வடிவு வேற்றுமையே யன்றிப் பொருள் வேற்றுமையில்லை. **'தத்துவமசி' மகாவாக்கியம், மாணவனுக்கு உபதேசிக்கும் ஆசிரியர் கூற்று. "ஸோஹம் அஸ்மி" மகாவாக்கியம், ஆசிரியர் உபதேசித்த பொருளை அநுபவமாகக் காணும் மாணவன் கூற்று இவற்றால் இவை முன்னிலையிடத்தும், தன்மையிடத்தும் ஆயின)**.*

*இனிப் பொதுமறையாகிய வேதத்தோடு, சிறப்பு மறையாகிய சிவாகமங்களையும் நூலாகக் கொள்வோர், வேதாந்தத்தில் 'ஸோஹம் அஸ்மி' எனப் பொதுவாகக் கூறப்பட்டது. உண்மையில், 'சிவோஹ மஸ்மி' எனக்கொள்வர். (இதன் பொருள், 'சிவன் நான் ஆகின்றேன்' என்பது). அக்கொள்கையே சிறப்பு மறையாகிய சிவாகமங்கள் ஆராய்ந்து காட்டும் முடிநிலை முடிபாகும். அந்த முடிபைப் பல்லாற்றானும் வலியுறுத்த எழுந்த நூல்களே 'சிவாகமம்' எனப்பெயர் பெற்று விளங்குகின்றன.*

***குறிப்புரை :-** 'இருவகை நூல்களின் முடிவும் பொதுவும், சிறப்பும் ஆகின்ற அத்துணையேயல்லது, அவற்றிடையே பிறிது வேற்றுமையில்லை' என்பது குறிப்பு.*

**2369.** முதலாகும் வேதம் முழுதா கமம்அப்
பதியான ஈசன் பகர்ந்த திரண்டும்
முதிதான வேதாம் முறைமுறை யாலமர்ந்து
அதிகாதி வேதாந்தம் சித்தாந்தம் ஆமே. **35**

---

*'மாமறையாளர்தம் சென்னியது சோகம் ஆம்' எனவும், 'ஈது, ஆன சிவோகமாம் என்ன, அன்னது சித்தாந்த மாமறை ஆய்பொருள்' எனவும் இயைத்துக் கொள்க. "தோன்றும்" என்னும் பயனிலைக்கு. 'அது' என்னும் தோன்றா எழுவாய் வருவிக்க.*

*"பண்டை மறைகளும் 'அது நான் ஆனேன்' என்று*
*பாவிக்கச் சொல்லுவது இப்பாவகத்தைத் தானே"*

*என்னும் சிவஞானசித்தி (சுபக்கம் - சூ. 9-7)யில், "இப்பாவகம்" என்றது, 'சிவன் நான் ஆனேன்' என்னும் சிறப்புப் பாவனையேயாம்.*

*ஒருவனை, 'அவன்' எனப் பொதுவாகச் சுட்டிக் கூறுவதனாலும், ஒரு பொருளை, 'அது எனப்பொதுவாகச் சுட்டிக் கூறுவதனாலும் அக்கூற்றைக் கேட்டவனுக்கு என்ன பயன் உண்டாகும்? பொதுவாகச் சுட்டியவற்றைப் பின்பு சிறப்பாகச் சுட்டியவழியே, கேட்பவனுக்குப் பயன் உண்டாகும். எனவே, பொதுக்கூற்றுச் சிறப்பிற்கு முன்னோடியேயன்றி, அதுவே முடிநிலை முடிபு ஆகாமை உணர்க.*

*"அதுபழச் சுவையென, அமுதென, அறிதற்(கு)*
*அரிதென, எளிதென அமரரும் அறியார்;*
*இதுஅவன் திருஉரு; இவன் அவன் எனவே*
*எங்களை ஆண்டுகொண்டு" - தி.8 திருப்பள்ளியெழுச்சி - 7*

*என்னும் அருள்மொழியால், 'பொதுவாக விளக்கமின்றியிருக்கும் மகாவாக்கியப் பொருளைச் சிறப்பாகத் தெளிய உணர்த்துவதே ஆசிரியர் வழங்கும் அருள் உபதேசமொழி' என்பது விளங்கும்.*

*'தத்துவமசி' என்னும் பொது வாக்கியமே, 'சிவத்துவமசி' எனச் சித்தாந்த ஆசிரியரால் சிறப்பாக உபதேசிக்கப்படுகின்றது. "ஸோஹமஸ்மி" என்னும் பொது வாக்கியமே. 'சிவோஹமஸ்மி' எனச் சித்தாந்த மாணவனால் சிறப்பாகப் பாவிக்கப்படுகின்றது.*

*'சிவாய' என நிருவாண தீக்கையில் உபதேசிக்கப்படுகின்ற முத்தி பஞ்சாக்கரத்தைத் திரும்பத் திரும்ப உச்சரிப்பதனால், 'ய, சி, வா' என அமையும் எழுத்துக்கள் முறையே 'துவம், தத், அசி' என்னும் பதங்களாய் அமைதல் விளங்கும். அதனால் உபதேசிக்கப்பட்ட அந்த மூன்றெழுத்துக்களை விந்துத்*

*தானமாகிய புருவ நடுவில் வைத்துத் தியானிப்பதனால், சிவோஹம் பாவனை, அஃதாவது 'நான் சிவன் ஆகின்றேன்' என்னும் பாவனை அமைந்து விடுகின்றது.*

*'தத்துவமசி' என்பதே மகாவாக்கியம் ஆயினும், 'துவம்தத்அசி' என்பதே பொருளாதல் போல, 'சிவத்துவமசி' என்பதே மகாவாக்கியம் ஆயினும், 'துவம்சிவாசி' என்பதே பொருளாகலின், அப்பொருள் மேற்கூறிய மூன்றெழுத்துக்கணிப்பால் அமைதலை உணர்க.*

*இதனால், வேதாந்தமும் சித்தாந்தமும் ஒன்றாம் முறைமையும், அவற்றுள் சித்தாந்தமே சித்தாந்தம் ஆதலும் தெரித்துக் கூறப்பட்டன.*

***2369. தெளிவுரை :-** வேதம், நிறைவான ஆகமம் இவையிரண்டும் முதல் நூல்களே. இரண்டையும் செய்தவன் முழுமுதல் தலைவனாக யாண்டும் சொல்லப்பட்ட அந்தப் பரமசிவனே. முதற்கண் ஓதவைத்த வேதம், உலகரது பக்குவ பேதங்களை நோக்கிப் படிமுறையால் பல பொருள்களைக் கூறுவதாய் அமைந்தமையால், மேன்மையுற்றது வேதாந்தமும், அதனினும் மேன்மையுற்றது ஆகமாந்தமுமாகும்.*

***குறிப்புரை :-** முழுமை, தெளிவுத்தன்மை இரண்டும் பகர்ந்தது அப்பதியான 'ஈசன்' என்க. 'வினைமுதல்' என்னும் பொதுமை பற்றி, 'பகர்ந்தது' என அஃறிணையாகக் கூறப்பட்டது. 'வினையே செய்வது' (தொல். சொல். - வேற்றுமை மயங்கியல்) என்பதில் 'செய்வது' என்றது போல. முதிது - முன்னது. 'அமர்ந்து' என்பது 'ஆகும்' என்பதனோடு முடிந்தது. 'அதிகாதிகம்' என்பது ஈறு குறைந்து நின்றது. 'அதிகம் அதிகம் வேதாந்தம், சித்தாந்தம்' என்றது முறை நிரல் நிறை.*

*இதனால் இவ்வதிகாரப் பொருள் முடிந்தது முடித்துக் கூறி நிறுவப்பட்டது.*

| பராசத்தி | ஞானம், கிரியை முதலிய பாகுபாடின்றிய நிலை |
|---|---|
| பரநாதம் | ஞானம், கிரியை முதலியனவாகப் பாகுபட்டுப் பொதுவகை ஞானமாய் நிற்கும் நிலை |
| பரவிந்து | பொதுவகைக் கிரியையாய் நிற்கும் நிலை |
| அபரநாதம் | சிறப்புவகை ஞானமாய் நிற்கும் நிலை |
| அபரவிந்து | சிறப்புவகைக் கிரியையாய் நிற்கும் நிலை |

## 16. பதி பசு பாசம் வேறின்மை

***<u>'பதி, பசு, பாசம்' எனப்</u>*** *பொருள்கள் மூன்றாயினும் அவை எக்காலத்திலும் தனித்து நிற்றல் இன்றி, ஒன்றியே நிற்றலை விளக்குவது இவ்வதிகாரம். முதற்கண் அம்முப்பொருள் உண்மையை மறித்துணர்த்துகின்றார். இஃது இருபது மந்திரங்களையுடைது.*

**2370.** **அறிவறி வென்ற அறிவும் அனாதி**
**அறிவுக் கறிவாம் பதியும் அனாதி**
**அறிவினைக் கட்டிய பாசம் அனாதி**
**அறிவு பதியின் பிறப்பறுந் தானே.** **1**

**2371.** **பசுப்பல கோடி பிரமன் முதலாப்**
**பசுக்களைக் கட்டிய பாசம்மூன் றுண்டு**
**பசுத்தன்மை நீங்கி அப் பாசம் அறுத்தால்**
**பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே.** **2**

---

*2370. தெளிவுரை :- உலகத்தாரால், 'அறிவு, அறிவு' என்று சொல்லப்படுவ தாகிய உயிர்களும் அனாதியே உள்ளன. அவற்றின் அறிவுக்கு அறிவாய் உள்ள இறைவனும் அனாதியே உளன். அறிவாகிய உயிர்களைக் கட்டியுள்ள அறிவற்றவனாகிய பாசங்களும் அனாதியே உள்ளன. ஆயினும் அனாதியாகிய சிவனது ஞான சத்தி உயிரினிடத்துப் பதியுமாயின், உயிர் பிறவித்தொடர்ச்சி அறப்பெறும்.*

*குறிப்புரை :- "அனாதி" எனவே, ஆதியும், அந்தமும் இலவாயின. ஞானசத்தியே அருட்சத்தி என்க. அது பதிதலே சத்தி நிபாதம். 'சத்தி நிபாதம் வந்தால் பிறப்பு அறும்' என்றாரேனும், 'ஞானம் நிகழப் பிறப்பறும்' என்றலே கருத்தென்க.*

*இம்மந்திரத்தில் கூறப்பட்டன, மேல், "பதி, பசு, பாசம் எனப் பகர் மூன்றில்" (பா.114) என்னும் மந்திரத்துக் கூறப்பட்டனவேயாதலின், அவை நெடுஞ்சேயவாயினமை பற்றி, இங்கு இயைபுபடுதற் பொருட்டு மறித்துணர்த்திய வாறு.*

*2371. தெளிவுரை :- முன்மந்திரத்தில், "அனாதி" எனப்பட்ட பசுக்கள் பிரமதேவன் முதலாகக் கோடிக் கணக்கில் உள்ளன. ஆயினும், அவற்றைக் கட்டியுள்ள பாசங்கள் மூன்றே. (ஆணவம், மாயை, கன்மம்). பதி பசுக்களைக் கட்டியுள்ள பாசங்களை அறுத்துவிட்டால், பசுக்கள் பசுத்தன்மை நீங்கிப் பதியைப் பற்றிக்கொள்ளும். பின்பு அவை பதியை வீட்டு நீங்கமாட்டா.*

***குறிப்புரை :-*** *'பிரமன்' முதலிய பெயர்கள் பிறப்புப் பற்றி வருவனவாம். 'பிரமன் முதலா' என்றது, காரணக் கடவுளர்களைக் கீழ்த் தொடங்கிக் கூறியது. 'அறுபத்து பதி' என்பது பாரிசேடத்தால் அமைந்தது. 'பந்தம் அனாதியாய் இருக்கும் அதினின்றும் நீங்குதல் உளதாதல் போலப் பதியைப் பற்றிய பின்னும் அதினின்றும் நீங்குதல் உளதாகும் போலும்' என நிகழும் ஐயத்தை நீக்குதற்கு "பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே" என்றார். பாசங்களின் சத்தி காலப் போக்கில் மெலிவடைவன அதனால் உயிர் அவற்றினின்றும் நீங்குதல் உளதாகின்றது; சிவசத்தி அத்தன்மைத்தன்றாய் என்றும் ஒரு பெற்றித்தாம் ஆதலின் சிவத்தை அடைந்த உயிர்க்குப் பின் அதனினின்றும் நீங்கும் நீக்கம் இல்லை என்க.*

> *"துறக்குமா சொலப்படாய் துருத்தியாய்"* **- *தி.2 ப.98 பா.5***
>
> *"மேவினார் பிரிய மாட்டா விமலனார்"* **- *தி.12 கண்ணப்பர் - 174***

*என்னும் திருமொழிகளையும் நோக்குக. 'அறுத்தால் நீங்கிப் பற்றிவிடா' என்றதனால், 'பசுக்கள்தாமே பாசங்களை அறுத்துக் கொள்ள வல்லன அல்ல' என்பது பெறப்பட்டது.*

> *"கட்டியே நீயே அவிழ்க்கி னல்லது*
> *எட்டுணை யாயினும் யான்அவிழ்க் கறியேன்"*
>
> **- *திருஒற்றியூர் ஒருபா ஒருபஃது - 9***

*என்றது காண்க. "தலைவனைப் பற்றி விடா" என ஒருமையும், பன்மையுமாகக் கூறியவாற்றால், 'பதிப்பொருள் ஒன்றேயன்றி, இரண்டாவதில்லை' என்பது பெறப்பட்டது.*

*இதனால், **'முப்பொருளில் பதி ஒன்றே; பசுக்கள் எண்ணில; பாசம் மூன்று' என்பது கூறப்பட்டது.** ஆணவம் - உயிரை அணுத்தன்மையுறுமாறு செய்தலினால் அது ஆணவம். அது ஆவாரகசத்தி, அதோநியாமிகாசத்தி என இருவகைப்படும்.*

*கன்மம் - சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என முப்பாகுபடும்.*

*மாயாமலம் - சுத்தம், அசுத்தம் என இருவகைப்படும். பிரகிருதியைச் சேர்த்து மூன்றாகவும், மாயேயம், திரோதயம் சேர்த்து ஐந்தாகவும் கொள்வர்.*

***2372. தெளிவுரை :-*** *உயிர்கள் அனாதியே கிடந்த பாசநிலையிலே கிடந்தாலும் அப்பொழுது அவைகட்கு உண்டாகின்ற பயன் மூன்று. அவை, 'அறம், பொருள், இன்பம்' என்பனவாம். நான்காவதாகிய வீடு அந்நிலையிலே கிட்டாது. அது கிடைக்க வேண்டுமாயின், அந்த மூன்றும் நீங்குதற்கு ஏதுவாகிய ஞானம் ஒன்றையே விரும்பிப் பதியை உலகப் பற்றுச் சிறிதும் இன்றி,*

**2372.** கிடக்கின்ற வாறே கிளர்பயன் மூன்றும்
நடக்கின்ற ஞானத்தை நாள்தோறும் நோக்கித்
தொடக்கொன்று மின்றித் தொழுமின் தொழுதால்
குடக்குன்றில் இட்ட விளக்கது வாமே. **3**

---

*நாள்தோறும் வழிபடுங்கள். வழிபட்டால் அந்தப் பதி, குடத்தில் இட்ட விளக்குப் போல மறைந்திருந்த நிலையினின்றும் நீங்கிக் குன்றில் இட்ட விளக்குப் போல வெளிப்பட்டு விளங்கும். உயிர்கள் பாசத்தால் கட்டுண்டு கிடக்கும் நிலையிலே அப்பாசங்களினின்றும் வீடு பெற்றுய்யுமாறு உள்ள சரியை, கிரியை, யோகங்களாகிய தவங்களை முற்பிறவிகளில் செய்து முடித்த விடத்து அந்தத் தவங்கள் வீடுபேறு அடைதற்கு சன்மார்க்கமாகிய ஞானத்தைக் கொடுத்து அந்த ஞானம் வாயிலாக முத்தியைக் கொடுக்கும்.*

***குறிப்புரை :-*** *'அது வெளிப்பட்டு விளங்கவே, முன் மந்திரத்திற் கூறியபடி பாசம் அறுக்கப்படப் பதியைப் பற்றிக் கொள்ளும் நிலை உளதாம்' என்பது குறிப்பெச்சம். 'கிடக்கின்ற ஆற்றிலே' என உருபு விரித்துக்கொள்க. பயன், உயிர்கள் அடையத்தக்க பயன் 'அவை அறம் முதலிய நான்கு' என்பது வெளிப்படை. நடத்தல், இங்கு நீங்குதல். "இம்மூன்றும் - விட்டதே பேரின்ப வீடு" என்னும் ஔவையார் வாக்கையும் நினைக. நடக்கின்ற ஞானம் - நடத்தற்கு ஏதுவாகிய ஞானம். அறம் முதலிய மூன்றும் உலகியலாதலின் அவை பாச நிலையிற்றானே நிகழ்வவாயின. விளக்கால் அல்லது இருள் நீங்காதவாறுபோல, ஞானத்தால் அல்லது உலகியல் நீங்காமை பற்றி "மூன்றும் நடக்கின்ற ஞானம்" என்றும், பதியைத் தொழுதலே தவம் ஆதலாலும், அத்தவத்தை உலகப் பற்றுடன் செய்யின் உபாயத்தவமும், பற்றற்றுச் செய்யின் உண்மைத் தவமுமாம். ஆதலால், "தொடக்கு ஒன்றும் இன்றித் தொழுமின்" என்றும், 'தொழுதல் நியமமாதல் வேண்டும்' என்பார். "நாடோறும் தொழுமின்" என்றும் கூறினார். பதியைத் தொழுதலாகிய தவம், 'சரியை, கிரியை, யோகம்' என மூன்று என்பதும், 'அத்தவத்தானே பதிஞானம் உளதாம்' என்பதும் மேல் பல இடங்களில் கூறப்பட்டன. குடத்திட்ட விளக்கு, குன்றில் இட்ட விளக்கு' இருதொடராக்கி உரைக்க. "அது" என்றது, உபநிடத வழக்கு. 'பதி' என்றவாறு. 'குடத்தில் இட்ட விளக்காயுள்ள அது, குன்றில் இட்ட விளக்காம்' என்க. சாதன சாத்தியங்கள் தம்முள் இயைபிலவாதல் கூடாமையின், தொழுவதும் பதியையேயாயிற்று. இதனால், 'பதியால் பாசம் அறுக்கப்படுதல் இவ்வாற்றால்' என்பது கூறப்பட்டது.*

***2373. தெளிவுரை :-*** *முற் பாசத்தை நீக்குதற்குப் பிற்பாசங்களைக் கூட்டிப் பிறப்பு இறப்புக்களில் சுழலவைத்த இறைவனை, 'அஃதும் கருணையே' என அறிந்து அவன் மாட்டு அன்பு செய்து அவனை நினைப்பவர், அவ்வாறு நினைத்தபின், அவன் பிறப்பு இறப்புக்களில் வைத்துள்ளமை பற்றி நாணம் உறுதலும், அந்நாணத்தால் அதனை வன்கண்மையாகக் கருதுதலும் எங்ஙனம்*

**2373.** பாசம்செய் தானைப் படர்சடை நந்தியை
நேசம்செய் தாங்கே நினைப்பர் நினைத்தலும்
கூசம்செய் துன்னிக் குறிக்கொள்வ தெவ்வண்ணம்
வாசஞ்செய் பாசத்துள் வைக்கின்ற வாறே. **4**

**2374.** விட்ட விடம்ஏறா வாறுபோல் வேறாகி
விட்ட பசுபாசம் மெய்கண்டான் மேவுறான்
கட்டிய கேவலம் காணும் சகலத்தைச்
சுட்டு நனவில் அதீதத்தில் தோயுமே. **5**

---

*உளவாகும்? உளவாகா. பாசஞ்செய்தல் - தனு கரண புவன போகங்களைக் கூட்டுதல்.*

***குறிப்புரை :-*** *முற்பாசம், ஆணவம், பிற்பாசம், மாயை கன்மங்கள். பாசத்தால் பாசத்தை நீக்குதல் ஆடையின் அழுக்கினை உவர்மண் முதலிய அழுக்கினால் நீக்குதல் போல்வதாகும். இவ்வுண்மையை உணர்வார் பிற்பாசங்களைச் சேர்த்தமையை வன்கண்மையாகக் கருதார் என்பதாம். பிற்பாசங்களைச் சேர்த்தமையே மேற்காட்டியபடி "கட்டிய நீ" எனப்பட்டது. (பா. 2372 - உரை) 'வைக்கின்றவாற்றை உன்னிக் குறிக்கொள்வது எவ்வண்ணம்' என்க.*

*இதனால், கட்டியவனே பதிதான்' என அவனை வெறாது அன்பு செய்து, முன்மந்திரத்தில் கூறியவாறு, 'நாள்தோறும் தொழுதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

***2374. தெளிவுரை :-*** *ஒருவனுடைய உடலில் பற்றிய விடம், மணி மந்திர ஔடதங்களால் நீங்கிப் போனபின்பு மீண்டும் அஃது அவன் உடலில் ஏற இயைபில்லாததுபோல, மெய்ஞ்ஞானத்தை உணர்ந்தவன், அவ்வுணர்வினால் அவனோடு ஒன்றியிருந்த பாசங்கள் வேறாகி நீங்கிவிட்ட பின்பு, அவன் அப்பாசங்களோடு பொருந்துதற்கு இயைபில்லை. அதனால், அவன் தன்னைத் தடை செய்திருந்த கேவல சகல நிலைகளைப் போக்கி சாக்கிரத்தில் அதீதமாகிய நின்மல துரியாதீதத்தில் அழுந்திச் சீவன் முத்தனாகியே நிற்பான்.*

***குறிப்புரை :-*** *கட்டிய கேவலம் - ஒன்றையும் அறியாத கேவலம். காணும் சகலம் - சிறிது அறிவு பெற்றுச் சிலவற்றை அறிகின்ற சகலம். சுடுதல் - போக்குதல். 'தோன்றும்' என்பது பாடம் அன்று. 'மெய்கண்டான்' என்பது நாயனாராலே கூறப்பட்டிருத்தலும் சிவஞான போதத்தில் அச்சொல் ஆளப்பட்டிருத்தலும் குறிக்கொளத்தக்கன.*

*இதனால், 'பசுக்கள் தலைவனைப் பற்றிய பின் விடா' என மேற்கூறியது, உவமையில் வைத்து வலியுறுத்தப்பட்டது.*

**2375.** நாடும் பதியுடன் நற்பசு பாசமும்
நீடுமா நித்த நிலையறி வார்இல்லை
நீடிய நித்தம் பசுபாச நீக்கமும்
நாடிய சைவர்க்கு நந்தி யளித்ததே. **6**

---

***2375. தெளிவுரை :-*** *சத்தி நிபாதம் வரப்பெற்றமையால், 'நாம் உய்யும் வழியாவது யாது' என ஏக்கற்று ஆராயும் பக்குவிகள் அவ்வழியை உணர்தற் பொருட்டுச் சிவாகமங்கள் வழியாகச் சிவபெருமான் அருளிச் செய்தவை, பதியேயன்றிப் பசு பாசங்களின் அனாதி நித்தத்தன்மையும், அவற்றுள் பசுக்கள் பாசத்தினின்றும் நீங்கிப் பதியை அடையும் முறைமையும் ஆகும். ஆயினும் அவைகளை அறியும் பக்குவிகள் உலகத்து அரியர்.*

***குறிப்புரை :-*** *ஈற்றடியை முதலில் கொண்டு, அதன்பின் மூன்றாம் அடியையும், அதன்பின் முதல் இரண்டு அடிகளையும் கூட்டியுரைக்க. முதல் இரண்டடிகளில் சித்தாந்தத்தின் அடி நிலைப் பொருள் சுருங்கக் கூறப்பட்டது.*

*இதனால், முப்பொருளியல்பை உள்ளவாறு உணரமாட்டாதாரது நிலைமையது இரங்கத்தக்க தன்மை கூறப்பட்டது.*

***2376. தெளிவுரை :-*** *சிவாலயங்களின் அமைப்பை உற்று நோக்கி உணர வல்லார்க்குக் கருவறையில் முதலிடத்தில் உள்ள இலிங்கமே பதியாயும், அவ்விலிங்கத்தின் திருமுன்பில் உள்ள இடபமே பசுவாயும், (உயிராயும்) இடபத்திற்குப் பின் உள்ள பலிபீடமே அடக்கி ஒடுக்கப்பட்ட பாசமாயும் காட்சியளிக்கும்.*

***குறிப்புரை :-*** *இடபம் இலிங்கத்தை நோக்கின் பலிபீடம் அதன் பின்னதாயும், இலிங்கத்தை நோக்காது வெளியை நோக்கின் இடபத்தின் முன்னதாயும் இருக்கும். இவை சிவத்தை நோக்கும் உயிர்கட்குப் பாசம் பிற்படுதலையும், சிவத்தை நோக்காது, உலகத்தை நோக்கும் உயிர்கட்குப் பாசம் முற்படுதலையும் உணர்த்தும்.*

*சிவத்தை நோக்கும் உயிரைப் பாசங்கள் அடரமாட்டாது, இருந்தும் இல்லதாய்க் கிடத்தலின், பலியிடப்படும் பீடமே பாசமாகின்றது. பாசத்தை, ''ஆகும் நற்பாசம்'' என்றதும் இது பற்றி, 'சன்மார்க்கமாகிய தத்துவப் பொருள்களே சிவாகமங்களில் சமய சங்கேதப் பொருள்களாகச் சொல்லப்பட்டுள்ளன' என்பது - இதனை*

*"சன்மார்க்க*
*சமய சங்கே தப்பொருளும் தான்ஒன் றாகப்*
*பன்மார்க்க நெறியினிலும் கண்ட தில்லை"*

*என வியந்து கூறினார் தாயுமான அடிகள்.*

**2376.** ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடல்ஏ றெனநிற்கும்
ஆய பலிபீடம் ஆகும்நற் பாசம்ஆம்
ஆய அரன்நிலை ஆய்ந்துகொள் வார்கட்கே. 7

**2377.** பதிபசு பாசம் பயில்வியா நிற்கப்
பதிபசு பாசம் பகர்வோர்க்கா றாக்கிப்
பதிபசு பாசத்தைப் பற்றற நீக்கும்
பதிபசு பாசம் பயிலநில் லாவே. 8

---

*இதனால், 'முப்பொருள்களின் இயல்பை ஆகமங்களைப் பற்றி உணர மாட்டாதார், சிவாலயங்களின் அமைப்பை நோக்கியேனும் உணரற்பாலர்' என்பது கூறப்பட்டது.*

***2377. தெளிவுரை :-*** *முப்பொருள் இயல்பை மாணார்க்கர்க்கு முன்னர்க் கேட்பித்துப் பின்னர் மீள மீள அவற்றைச் சிந்திப்பித்தற் பொருட்டு அவற்றை உபதேசிக்கின்ற ஆசிரியன்மார்கட்கு உபதேச மொழியை ஆக்கி, அதுவழியாகச் சிவன் பசுக்களின் பாசங்களை அறவே நீக்குவான். அம்முறையில் முப்பொருள் இயல்பைச் சிந்தித்துத் தெளியின் பாசங்கள் தம்மியல்பில் நிற்கமாட்டா 'நிலை கெட்டு ஒடுங்கும்' என்பதாம்.*

***குறிப்புரை :-*** *'பயில்வியாநித்தம்' என்பது பாடம் அன்று. ஆறு - வழி என்றது உபதேச மொழியை. அம்மொழியாவது திருவைந்தெழுத்து மந்திரமேயாதல்.*

*"நானேயோ தவம்செய்தேன்! சிவாயநம எனப்பெற்றேன்"*

***- தி.8 திருவேசறவு - 10***

*என்னும் அநுபவ மொழியால் விளங்கும். ஐந்தெழுத்தின் உட்பொருள் முப்பொருளே என்பது.*

*"சிவன், அருள், ஆவி, திரோதம், மலம் ஐந்தும்,*
*அவன் எழுத் தஞ்சின் அடைவாம்"* ***- உண்மை விளக்கம் - 41***

*என்பது முதலியவற்றில் விளக்கப்பட்டது. "நில்லா" என்பதற்கு எழுவாய் வருவிக்கப்பட்டது.*

*இதனால், 'முப்பொருள் இயல்பைச் சிவாலயங்களை நோக்கி ஒருவாறுணர்ந்தார், பின்பு ஆசிரியரை அடைந்து அவர் உபதேசிக்கும் உபதேச மொழியைப் பெற்றுத் தெளிய உணர்ந்து உய்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

**2378.** பதியும் பசுவொடு பாசமும் மேலைக்
கதியும் பசுபாச நீக்கமும் காட்டி
மதிதந்த ஆனந்த மாநந்தி காணும்
துதிதந்து வைத்தனன் சுத்தசை வத்திலே. **9**

**2379.** அறிந்தணு மூன்றும்மெய் யாங்கணும் ஆகும்
அறிந்தணு மூன்றும்மெய் யாங்கணும் ஆக
அறிந்த அனாதி வியாத்தனும் ஆவன்
அறிந்த பதிபடைப் பான்அங் கவற்றையே. **10**

---

***2378. தெளிவுரை :-*** *சித்தாந்தத் தத்துவங்களைச் சிவாகம ஞான பாதத்தில் அருளிச்செய்த சிவபெருமான், அப்பொருளைப் பயக்கும் தோத்திரங்களையும் கிரியா பாதத்தில் சொல்லிவைத்திருக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *'அத்தோத்திரங்களையும் அன்போடு பொருள் உணர்ந்து பாடித் தோத்திரித்து உய்தி பெறுக' என்பதாம். "தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே" (தி.6 ப.78 பா.5) என அப்பரும் அருளிச் செய்தமை காண்க. "காணும்" என்பது கட்டுரைச் சுவைபட வந்தது. சுத்த சைவம் பூர்வபக்க ஞானங்களைப் போக்கிச் சித்தாந்த ஞானத்தைத் தருகின்ற சிவாகமம்.*

*இதனால், 'சைவ சாத்திரங்களின் பொருளைச் சைவ தோத்திரங்களை நியமமாக ஓதும் முறையால் பயிலுக' என்பது கூறப்பட்டது.*

***2379. தெளிவுரை :-*** *மூவகை ஆன்மாக்களும் தாம் தாம் பெற்ற தனு கரணத் தளவாக அறிவு விளங்கப் பெறுதலின், அவை யாவும் 'அணு' எனப்படுகின்றன. ஆயினும் அவற்றின் உண்மை நிலை பதியைப் போல வியாபகமே. பாசத் தடை நீங்கியபின் உயிர் தனது உண்மை நிலையாகிய வியாபக நிலையை அடையும். ஆயினும், பதியினது வியாபகத்தில் அது வியாப்பியமேயாம். உயிர்களின் ஏகதேச நிலை, வியாபக நிலை ஆகிய இருநிலைகளும் என்றும் ஒரு பெற்றியனாய் உள்ள பதியே அவைகட்கு ஆவனவற்றைச் செய்துநிற்பான்.*

***குறிப்புரை :-*** *பின் இரண்டடிகளிற்போல 'அறிந்த' என வர வேண்டிய பெயரெச்சம் ஈற்று அகரம் தொகுத்தல் பெற்று நின்றது. யாங்கணும் ஆதல் வியாபகம் ஆதல். இரண்டாம் அடி அனுவாதம், அனாதி - அனாதியாய சிவன். 'அனாதியில்' என உருபுவிரிக்க. உம்மை, சிறப்பு. "அனாதியில் வியாத்தனும் ஆவன்" என்றதனால், 'முப்பொருள்களும் அதிசூக்கும சூக்கும தூலமாம் முறையால் வியாபக வியாப்பிய வியாத்தியாய் இயைந்து நிற்கும்' என்பது உணர்த்தப்பட்டது. இதுவே "பதிபசு பாசம் வேறின்மை" என்க. "அவற்றையே" என்னும் பிரிநிலை ஏகாரத்தைப் பிரித்து, 'பதியே' எனக் கூட்டுக. 'முப்பொருள்களும் வியாபக வியாப்பிய முறையால் சமமாய் நிற்பினும் பதியே சுதந்திரமுடையதாய்*

**2380.** படைப்பாதி ஆவ பரசிவம் சித்தி
இடைப்பால் உயிர்கட் கடைத்திவை வாங்கல்
படைப்பாதி சூக்கத்தைத் தற்பரம் செய்யப்
படைப்பாதி தூலம்அப் பாசத்து ளாமே. **11**

---

*ஏனையவற்றை இயக்கி நிற்கும்' என்றற்கு, 'பதியே அங்கு அவற்றைப் படைப்பான்' என்றார். அங்கு அவ்விரு நிலைகளிலும், "படைப்பான்" என்றது, 'எல்லாவற்றையும் செய்வான்' என்னும் குறிப்பு மொழி.*

*இதனால், பதி பசு பாசம் வேறின்மையும், அவற்றுள் பதியே தலைமையது ஆதலும் கூறப்பட்டன.*

*முன்மந்திரத்தில், 'சுத்த சைவத்திலே நந்திமதி தந்து வைத்தனன்' எனக் கூறப்பட்டவற்றில் இவ்வதிகாரத்தில் எடுத்துக் கொண்ட சிறப்புப் பொருளை இதனுள் இவ்வாறு கூறிய நாயனார், இதன் தொடர்பாக மற்றும் சிலவற்றை இங்கும் கூறுகின்றார். அவை மேலே கூறப்பட்டன வாயினும், 'பெற்றதன் பெயர்த்துரை நியமப் பொருட்டு' என்னும் முறையால் இவ்வதிகாரத்தில் எடுத்துக்கொண்ட பொருளோடு அவற்றையும் உடன்கூறித் தெளிவிக்கின்றார்.*

***2380. தெளிவுரை :–** படைப்பு முதலிய செயல்கள் நிகழ்தல் 'பரசிவம், பராசத்தி' என்னும் இருவராலேயாம். படைப்பு முதலிய ஐந்தொழில்களாவன, தனுகரண புவன போகங்களை உயிர்களுக்குச் சேர்ப்பித்தலும், நீக்குதலுமேயாம். இவ்வைந்தொழில், 'சூக்குமம், தூலம்' என்னும் இருவகையில் நிகழும். **சூக்கும ஐந்தொழிலைச் சிவன் சுத்தமாயையில் தான் நேரே செய்வான். தூல ஐந்தொழிலை அவன் அசுத்த மாயை பிர கிருதி மாயைகளில் அனந்ததேவர், சீகண்டர் வழியாகச் செய்விப்பான்**.*

***குறிப்புரை :–** 'முதற்பொருள் பொருளால் ஒன்றாயினும் ஞாயிறு ஒன்றே 'கதிரவனும், கதிரும்' என இருதிறப்பட்டுத் தாதான்மியமாய் இயைந்து நிற்றல்போல, 'சிவம், சத்தி' என இருதிறப்பட்டுத் தாதான்மியமாய் இயைந்து நிற்கும்' என்பது உணர்த்துதற்கு. "படைப்பாதி ஆவ, பரசிவம் சத்தி" என்றார். 'சத்தியால்' என உருபு விரிக்க. இடைப்பால் - 'கேவலம், சுத்தம்' என்னும் இரண்டற்கு இடையேயுள்ள சகலத்தில், படைத்து ஒடுக்கப்படுவன தனுகரணாதி களேயாதலின், வாளாதே, ''இவை'' எனச் சுட்டிப் போயினார். 'சூக்கப் படைப்பாதியை' எனவும், 'தூலப்படைப்பாதி' எனவும் பின் முன்னாக மாற்றிக் கொள்க. ''சூக்கத்தைத் தற்பரம் செய்ய'' என்றதனால், தூலம் பிறரால் செய்யப்படுதல் விளங்கிற்று. அவற்றிற்கு ஏற்ப முதற்காரண வேறுபாடும் காணப்பட்டது. "பாசம்" என்றது, இங்கு தூலம் அதிதூலமாகிய அசுத்தமாயை பிரகிருதி மாயைகளை. மா - ஒடுங்குதல். யா - வருதல். ஆதலின் எல்லாக்*

**2381.** ஆகிய சூக்கத்தை அவ்விந்து நாதமும்
ஆகிய சத்தி சிவம்பரம் மேல்ஐந்தால்
ஆகிய சூக்கத்தில் ஐங்கருமம் செய்வோன்
ஆகிய தூலத்தீ சானனும் ஆமே. **12**

---

*காரியங்களும் தன்பால் வந்து ஒடுங்குதற்கும், தன்னின்று தோன்றுதற்கும் காரணமாய் நின்றது மாயை எனப்படும். ஆதலால், ஒன்றற்கொன்று நுண்ணிதிற் செல்லும் சூக்குமங்கட்கு முடிவிடமாய் நின்ற சூக்குமப் பொருளே மாயை.*

*இதனால், முன் மந்திரத்தில், 'பதியே அங்கு அவற்றைப் படைப்பான்' எனக் கூறப்பட்ட பொருள் அஃது ஆமாறு வகுத்துக் கூறப்பட்டது.*

***2381. தெளிவுரை :–*** *அபரவிந்து, அபரநாதம், பரவிந்து, பரநாதம், பராசத்தி என்னும் மேலான ஐந்து நிலைகளில் நின்று சூக்கும ஐந்தொழில் செய்பவன், அருவத்தையும் கடந்த பரம சிவன். தூல ஐந்தொழில்களைச் செய்பவன் மகேசுரன்.*

***குறிப்புரை :–*** *சத்தி ஞானம், கிரியை முதலிய பாகுபாடின்றிய நிலையில் பராசத்தியாம். ஞானம், கிரியை முதலியனவாகப் பாகுபட்டுப் பொதுவகை ஞானமாய் நிற்கும் நிலையில் பரநாதமாம். பொதுவகைக் கிரியையாய் நிற்கும் நிலையில் பரவிந்துவாம். சிறப்புவகை ஞானமாய் நிற்கும் நிலையில் அபரநாதமாம். சிறப்பு வகைக் கிரியையாய் நிற்கும் நிலையில் அபரவிந்துவாம். இங்ஙனம் இவ்வைந்தையும் காண்க. விந்துவை முதலிற்கூறியது கீழிருந்து எண்ணும்முறை பற்றியாம். "பரம்" எனப் பின்னர்க் கூறினமையின், 'சத்தி, சிவம்' என்றது பரவிந்து பரநாதங்களையாயிற்று. 'அவ்விந்து நாதமும்' என்று எடுத்துக் கொண்டு, சூக்கத்து ஐங்கருமம் செய்வோன் சூக்கத்து ஐ' என மேலே கூட்டி முடிக்க. சூக்கத்து ஐ - அருவத்தையும் கடந்த தலைவன். இங்கு, "ஈசானன்" என்றது மகேசுரனை. என்னை? தூல ஐந்தொழிலைச் செய்தும், செய்வித்தும் நிற்பவன் அவனேயாகலின், அவன் தூல ஐந்தொழிலைச் செய்தும், செய்வித்தும் நிற்குமாறு வருகின்ற மந்திரத்தால் கூறப்படும்.*

*இதனால், முன் மந்திரத்தில் தொகுத்துக் கூறப்பட்ட சூக்கும தூல ஐந்தொழில் நிகழ்ச்சிகளில் சூக்கும ஐந்தொழில் நிகழுமாறு வகுத்துக் கூறப்பட்டது.*

***2382. தெளிவுரை :–*** *(இம்மந்திரத்தில் கூறப்படும் பொருள் ஏழாம் தந்திரத்தில், "சிவமொடு சத்தி நிகழ்நாதம் விந்து", "தலையான நான்கும் தனதருவாகும்" என்னும் மந்திரங்களில் கூறப்பட்டதேயாம். ஆகையால், அவற்றில் கண்டு கொள்க).*

**2382.** மேவும் பரசிவம் மேற்சத்தி நாதமும்
மேவும்ப ரின்விந்து ஐம்முகன் வேறீசன்
மேவும் உருத்திரன் மால் வேதா மேதினி
ஆகும் படிபடைப் போன்அரன் ஆமே. **13**

**2383.** படைப்பும் அளிப்பும் பயில்இளைப் பாற்றும்
துடைப்பும் மறைப்பும்முன் தோன்றும் அருளும்
சடத்தை விடுத்த அருளும் சகலத்து
அடைத்த அனாதியை ஐந்தென லாமே. **14**

---

***குறிப்புரை :-*** *பரசிவம், பரநாதம், மேற் சத்தி - பரவிந்து 'உம்பரின் மேவும் விந்து' என்க. உம்பர் - சதாசிவத்திற்குமேல். ஐம்முகன் - சதாசிவன். ஈசன் - மகேசுரன். மேதினி ஆகும்படி - உலகம் தோன்றும்படி. படைப்போன் அரனே ஆம். இந்த அனைவரையும் உண்டாக்குபவன் ஒரு சிவனே. எனவே, 'உலகம் இந்நவந்தரு பேதங்களால் நடைபெறுகின்றது' என்பதாம். ஈற்றடி உயிரெதுகை.*

*இதனால், சூக்குமம், தூலம் ஆகிய இருவகை ஐந்தொழில்களும் நடைபெறும் முறைமை கூறப்பட்டது.*

***2383. தெளிவுரை :-*** *'கேவலம், சகலம், சுத்தம்' என்னும் மூன்றனுள் சகலத்தில் படைத்தல், காத்தல், உயிர்களை இளைப்பாற்றுதற் பொருட்டு அழித்தல், சிற்றின்பத்தை அதன் இழிவு அறிந்து வெறாது விரும்பி நுகருமாறு மறைத்தல் ஆகிய முன்னர் நிகழும் அருட் செயல்களையும், சடமாகிய பாசங்களை விடுவித்துத் தன்னைக் காட்டியருளும் அருளலாகிய பின்னர் நிகழும் அருட் செயலையும் உயிர்கள் பொருந்த வைத்த அனாதியாகிய பரமசிவனை, இத்தொழில்களை நோக்கி, 'ஐவர்' என்று கூறலாம்.*

***குறிப்புரை :-*** *'மறைத்தலும் அதன்வழி நிகழும் படைப்பு முதலியனவும் அருளே' என்றற்கு அவற்றை 'முற்றோன்றும் அருளும்' எனவும், 'அழித்தல்கூட அருளோ' என்னும் ஐயத்தை நீக்குதற்கு அதனை "இளைப்பாற்றும் துடைப்பும்" எனவும் கூறினார். **தன்னிலையில் நிற்கும் சொரூப சிவன் 'அனாதிசிவன்' என்றும் உயிர்களின் பொருட்டாய் ஐந்தொழில் செய்யும் தடத்தசிவன் 'ஆதிசிவன்' என்றும் சொல்லப்படுவான்**. 'ஒருவனாகிய அனாதிசிவனே, ஐந்தொழில் பற்றி ஐவர் தடத்த சிவனாய் நிற்பர்' என்பது உணர்த்துதற்கு, "அனாதியை ஐந் தெனலாமே" என்றார். ஐவர் - சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன். இவர் சம்பு பட்சத்தினர். சம்பு பட்ச அனுபட்ச விளக்கங்களை மேலே காண்க. நிலைநோக்கி, "ஐந்து" என அஃறிணையாகக் கூறப்பட்டது.*

*இதனால், 'முன் மந்திரத்தில் ஒன்பதாகச் சொல்லப்பட்ட பேதங்களில்*

**2384.** ஆறாறு குண்டலி தன்னின் அகத்திட்டு
வேறாகும் மாயையில் முப்பால் மிகுத்திட்டங்கு
ஈறாம் கருவி யிவற்றால் வகுத்திட்டு
வேறாம் பதிபசு பாசம்வீ டாகுமே. **15**

---

*தூல ஐந்தொழிற்கு உரியனவாய், யாவராலும் அறியப்படுவன ஐந்தே' என்பது கூறப்பட்டது.*

*இதனால், 'முன் மந்திரத்தில் ஒன்பதாகச் சொல்லப்பட்ட பேதங்களில் தூல ஐந்தொழிற்கு உரியனவாய், யாவராலும் அறியப்படுவன ஐந்தே' என்பது கூறப்பட்டது.*

*2384.* ***தெளிவுரை :-*** *பதி, முப்பத்தாறு தத்துவங்களைச் சுத்த மாயையில் வியாப்பியமாகச் செய்து, அம்முப்பத்தாறு தத்துவங்கட்குக் காரணமாய் வேறு நிற்கும் மாயையை, சுத்தம், சுத்தாசுத்தம், அசுத்தம்' என மூன்றாக வகுத்து, அந்த மாயை மாயேயங்களின் பின்னவாகிய 'தாத்துவிகம்' என்னும் காரிய பூதங்களையும் இந்த மாயை மாயேயங்களால் ஆக்கி, அனைத்துப் பொருள் கட்கும் வேறாய் நிற்கும். (எனவே, பசு, மாயை, அனைத்துப் பொருள்கட்கும் வேறாய் நிற்கும். (எனவே, 'பசு, மாயை, மாயேயம், தாத்துவிகம் ஆகியவற்றில் கட்டுண்டு நிற்கும் என்பது பெறப்பட்டது. எனினும்) பாசங்கள் நீங்கியவழிப் பசு, பதியாகும்.*

***குறிப்புரை :-*** *குண்டலி - சுத்த மாயை "தன்னின்" என்பதில் இன், சாரியை மேற்சாரியை, 'அவற்றினின்' முதலியன போல, 'மாயையில் மிகுத்திட்டு' என இயையும். 'மூன்று' என்னாது, "முப்பால்" என்றமையால், ஒரு மாயைதானே மூன்றாகி நிற்றல் பெறப்படும். 'வீட' என்பது ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'பதி ஆகும்' என ஒரு சொல் வருவித்து முடிக்க. 'பசு, பதி ஆதல் எவ்வாறு என்பது, மேல் "உயிரைப் பரனை, உயர்சிவன் தன்னை" (பா.2368) என்னும் மந்திரத்து உரையில் காட்டப்பட்டது.*

*இதனால், 'அனைத்தையும் செய்தும் பதி அவற்றால் எய்துவ தொன்றின்றி நிற்க, பசுவே அவற்றால் பல நிலைகளை எய்தும்' என்பது கூறப்பட்டது.*

*2385.* ***தெளிவுரை :-*** *பதி, பசுவை இயல்பாகவே உள்ள ஒரு பாசத்தின்மேல் மற்றொரு பாசம் பற்றும்படி அதனுள்ளே புகுத்தும். (இப்பாசம் மாயை, இயல்பாக உள்ளது ஆணவம்) அதன்பின், இருவினைகளாகிய குழியிலே ஆழச் செய்யும். அதன்பின், அந்த இருவினைகளுக்கு ஈடான துன்பத்தையும், இன்பத்தையும், பசு நுகர்தற்பொருட்டு அதனை நரகத்திலும், சுவர்க்கத்திலும் சேர்த்து, அங்கே சிலநாள் தங்க வைக்கும். இவையெல்லாம் இப்படித்*

**2385.** வீட்கும் பதி பசு வைப்பாசம் மீதுற
ஆட்கும் இருவினை ஆங்கவற் றால்உணத்
தாட்கும் நரக சுவர்க்கத்தில் தான்இட்டு
நாட்குற நான்றங்கு நற்பாசம் நண்ணுமே. **16**

**2386.** நண்ணிய பாசத்தில் நான்எனல் ஆணவம்
பண்ணிய மாயையில் ஊட்டல் பரிந்தனன்
கண்ணிய சேதனன் கண்வந்த பேரருள்
அண்ண லடிசேர் உபாயம தாகுமே. **17**

---

*தொடர்ச்சியாக நிகழ்தல் திரோதான சத்தியாலாம். அச்சத்தி இவ்வாறு செய்வித்தல், பசுக்கள் தம் பசுத்துவத்தின் நீங்கிப் பதியை அடையும் நாளைக் கிட்டுதற் பொருட்டாம்.*

*குறிப்புரை :- 'வீழ்க்கும், ஆழ்க்கும், தாழ்க்கும்' என்பன திரிந்து நின்றன. தாழ்த்தல் - தங்கச் செய்தல். "மீதுற" என்றதனால், முன்பே ஒரு பாசம் உள்ளமை விளங்கும். "ஆழ்க்கும்" என்றது, குறிப்புருவகம். "இருவினைக்கண்" என்னும் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. 'ஆங்கவை' என்பது ஒருசொல். "அவற்றால்" என்பதன் பின், 'வரும் பயனை' என்பதும், 'நாட்கு' என்பதன்பின், 'அணிமைக்கண்' என்பதும் வருவிக்க. முன்னர் "வீழ்க்கும், ஆழ்க்கும், தாழ்க்கும்" என்றமையால், "நாள்" என்றது, அவை நீங்கும் நாளாயிற்று. நாலுதல், நீளுதல், பாசங்களைச் செலுத்துதல் பற்றி இறைவனது சத்தியும், 'பாசம்' என உபசரித்துக் கூறப்படும். ஆயினும் அது நலங்கருதியே செலுத்துதலின், "நற்பாசம்" என்றார். 'நற்பாசத்தால்' என உருபு விரித்து, 'இவையெலாம் நாட்கு உற, நற்பாசத்தால் நான்று அங்கு நண்ணும்' என முடிக்க.*

*இதனால், 'பதி, பசுக்கள் பாசத்தின் நீங்கித் தன்னை அடைதற் பொருட்டுத் திரோதான சத்தியால் அவைகட்கு மாயை கன்மங்களைச் சேர்த்து, அவை வழியாக ஐந்தொழில் புரியும்' என்பது கூறப்பட்டது.*

*2386. **தெளிவுரை :-** உயிர்களைப் பற்றியுள்ள பாசங்களில், 'நான்' என்னும் முனைப்பை உண்டாக்குவது ஆணவமே (இம் முனைப்பே, 'தற்போதம்') என்றும், 'சீவ போதம்' என்றும் சொல்லப்படும். மாயையைக் கருவியாகப் பற்றி உயிர்கள் செயற்படும்பொழுது, இந்த 'நான்' என்னும் முனைப்போடு செயற்படுவதால் தான் அவைகட்கு வினைகள் உண்டாகின்றன. 'நான் செய்கின்றேன்' என்னும் உணர்வோடு செய்தலால், அச் செயல்களில் பயனைச் செய்த உயிரையே நுகரச் செய்ய இறைவன் திருவுளங் கொள்கிறான். அதற்குக் காரணமும் அவன் அவ்வுயிர்கள் மாட்டு வைத்த கருணையே யன்றிப் பிறிதில்லை. அதனால், வினைப்*

**2387.** ஆகும் உபாயமே யன்றி அழுக்கற்று
மோகம் அறச்சுத்தன் ஆதற்கு மூலமே
ஆகும் அறுவை அழுக்கேற்றி எற்றல்போல்
ஆகுவ எல்லாம் அருட்பாசம் ஆகுமே. **18**

**2388.** பாசம் பயில்உயிர் தானே பரம்முதல்
பாசம் பயில்உயிர் தானே பசுஎன்ப
பாசம் பயிலப் பதிபரம் ஆதலால்
பாசம் பயிலப் பதிபசு ஆகுமே. **19**

---

*பயனை ஊட்டுவித்தலும் அவை அவனது திருவடியை அடைதற்கு உபாயமேயாகும்.*

*குறிப்புரை :-* கண்ணிய - கருதிய. பாசவலி கெட பதிப்பொருளை அடையக் கருதிய. சேதனன் - அறிவிக்க அறியும் உயிர். 'மாயையில் பண்ணிய ஊட்டல்' என்க. பண்ணிய, அன்பெறா அகரஈற்று அஃறிணைப் பன்மை வினைப் பெயர். பண்ணிய - பண்ணப்பட்டவற்றை. 'ஊட்டற்குப் பரிந்தனன்' என்க. 'அதுவும் பேரருளே' என எழுவாய் வருவிக்க. "பேரருள்" என்பதன்பின், 'ஆதலான்' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது. பரிந்தனன் - இரக்கங் கொண்டான்.

*இதனால், இறைவன் உயிர்கள் செய்த வினைகளைத் தான் ஏற்றுக் கொண்டு, அவற்றின் பயனை அவைகளை நுகரச் செய்தற்குக் காரணம் கூறப்பட்டது.*

*2387. தெளிவுரை :-* இறைவன் உயிர்கட்கு ஆணவ பாசத்தின்மேல் மாயை கன்ம பாசங்களைச் சேர்த்தது பல உபாயங்களுள் ஓர் உபாயம் அன்று. உயிர்கள் ஆணவ மலத்தினின்றும் நீங்கித் தூய்மை பெறுதற்கு அவற்றைச் சேர்ப்பது தவிர புதிய வேறு வழியேயில்லை. அஃது எதுபோலும் எனின், புதிதாகத் தோன்றிய ஆடையில் இயல்பாய் உள்ள அழுக்கினை மேலும் பிற அழுக்கை ஏற்றித் துவைத்துப் போக்குதல் போல்வதாம். அதனால், இயற்கையாக அன்றி இறைவனால் சேர்க்கப்பட்ட பாசங்கள் யாவும் அருளால் சேர்க்கப்பட்ட பாசங்களே.

*குறிப்புரை :-* "மூலமே" என்னும் ஏகாரம் தேற்றம் 'அறுவையை எற்றல் போல்' என்க. எற்றல் - அடித்தல்; துவைத்தல். "போல்" என்னும் முதனிலை, 'போலும்' என முற்றுப் பொருள் தந்தது. அருட்பாசம் - அருளால் வைத்தருளிய இரக்கம். அறுவை - துணி. ஏற்றல் - மேலும் மேலும் புரட்டுதல்.

*இதனால், "அண்ணலடிசேர் உபாயமதாகும்" எனப்பட்டது. உவமையில் வைத்து வலியுறுத்தப்பட்டது.*

**2389.** அத்தத்தில் உத்தரம் கேட்ட அருந்தவர்
அத்தத்தில் உத்தர மாகும் திருமேனி
அத்தத்தி னாலே அணையப் பிடித்தலும்
அத்தத்தில் தம்மை அடைந்துநின் றாரே. **20**

---

*2388. **தெளிவுரை :-** பசு தன்னைக் கட்டியுள்ள பாசங்கள் குறும்பு செய்தலால், 'நானே பரம்' என்கின்றது. ஆயினும், அங்ஙனம் நினைப்பதும், சொல்வதும் என்றும் நிலைத்து நில்லாமல் பின் நீங்கிப் போவதால், உயிர்க்கு அந்நிலை செயற்கை நிலையாதல் விளங்குதலின், 'உயிர் அநாதியே செயற்கை யோடு கூடிப் பசுவேயாய் நிற்கின்றது? என, அறிந்தோர் கூறுவர். ஆயினும், 'பதிதான் முதலிலே பாசத்தோடு கூடிப் பசுவாய் இருந்து பின் பாசத்தினின்றும் நீங்கிப் பதியாகின்றது' எனச் சிலர் கூற முற்படுவாராயின், அங்ஙனம் கூறுவார்க்குப் பதியின் வேறாய்ப் பசு இல்லையாம் ஆகலானும், பாசங்கள் சடம் ஆகலின் தாமே செயற்பட மாட்டா ஆகலானும் பதியே தன்னின் மிக இழிந்த பாசங்களை மேலிட்டுக்கொண்டு பசுவாதல் கூடுமோ?*

***குறிப்புரை :-*** *பாசத்துடனே இடைவிடாமல் பொருந்தும் ஆன்மா முதற்சுமையுடையதாம். பரம் - பாரம், சுமை. இயல்பாகவே ஆணவ மலத்துடன் கூடியிருத்தலால் அது அதற்குச் சுமையாயிற்று. பாசத்தால் கட்டுண்ட உயிர்தான் பசு எனப்படும். (ஆணவம் ஆன்மாவை அணுத்தன்மைப்படுத்தித் தான் நிறையும்) ஆன்மா பாசத்தினின்று விடுபடுதற் பொருட்டு மாயா காரியங்களைக் கூட்டி யமைத்தல் பதியின் கடமையாயிற்று; அது அப்பதிக்கு இரக்கத்தால் வந்த சுமை. இறைவன் ஆன்மாக்களைச் சுமந்து திரிகின்றான். ஒன்றாயும் வேறாயும் உடனாயுமிருந்து உபகரிக்கிறான். ஆன்மாக்களுக்குப் பாசத்தைக் கூட்டி மலவலி தொலைக்கத் திருவுளங் கொண்டு அருளிலே முதன்மை பெற்று விளங்குகின்றான் என்றவாறு.*

*இதனால், 'பசுவே ஐந்தொழில் செய்யும்' என்பாரையும், 'பதியே தனது விளையாட்டால் பசுவாகி ஐந்தொழிற்படும்' என்பாரையும் மறுத்துச் சித்தாந்தம் கூறப்பட்டது.*

*2389. **தெளிவுரை :-** வேதாகமங்களின் அர்த்தத்திலே தெளிவு பிறவாமல் ஐயுற்று வினாவிய முனிவர்களை, அந்த வேதாமகப் பொருள்களில் முடிந்த பொருளாய் உள்ள அருட்டிரு மேனியானது தனது கையினாலே அணைத்துத் தழுவிக் கொள்ளுதலும், அவர்கள் அத்திருமேனியில் அமைந்த கைக்குறிப்பினாலே தம்மை உள்ளவாறு உணர்ந்துகொண்டார்கள்.*

***குறிப்புரை :-*** *கல்லாலின் புடையமர்ந்த கடவுள்பால் நான்மறை ஆறங்க முதல் கற்ற கேள்வி வல்லார்கள் நால்வரும் வந்து ஞானத்தை உபதேசிக்க*

*வேண்டும் என்று விண்ணப்பிக்க. இறைவர் புன்னகை கொண்டு அது கூறுந்தரத்தன்று. அநுபவத்திலே உணரற்பாற்று என்று தமது திருக்கரத்திலே அமைத்த ஞான முத்திரையினால் மோன நிலையில் அறிவித்தருளினார். அன்றியும், அவ்வருட்டிருமேனியுடன் தமது திருக்கரத்தினாலே சிரத்தில் வைத்து அணைத்துப் பிடித்த அளவில் ஊமைத் தசும்புள் நீரு நிறைந்தாற்போலச் சிவஞானம் நிறைவுற்று அதன் பொருளாகவுள்ள தம்மையடைந்து சிவபோகத்தை நுகர்ந்திருந்தனர் என்றவாறு.*

*சின்முத்திரையாகிய மோனமுத்திரை; "மும்மலம் வேறுபட்டாலொழிய" என்னும் ஸ்ரீகச்சியப்ப முனிவர் வாக்கு இங்கே கருதத்தக்கது.*

## 17. அடிதலை அறியும் திறங்கூறல்

*'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களில் பதிக்குப் பசுவோடே நேர்த்தொடர்பு. பசுவழியாகப் பாசத்தோடு தொடர்பு. பதியும், பசுவும் சித்துப் பொருள்கள். அதனால் பதிக்குப் பசுவோடே நேர்த் தொடர்பு உளதாதல் இயல்பு. பதியில் பசு வியாப்பியம். ஆகவே இந்நிலையை விளக்குதற்குப் பசுவினது தலையின்மேல் பதியிருப்பதாகக் கூறுதல் ஒரு சங்கேத வழக்கு. அந்த வழக்கின் உண்மைப் பொருளை இவ்வதிகாரத்தில் பத்து மந்திரங்களால் உணர்த்துகின்றார். மேற்கூறிய முப்பொருள்களில் முதல் இருபொருள்களின் இயைபு கூறுதலால் இவ்வதிகாரம் முன் அதிகாரத்தை அடுத்து நிற்பதாயிற்று.*

**2390.** காலும் தலையும் அறியார் கலதிகள்
கால்அந்தச் சத்தி அருள்என்பர் காரணம்
பால்ஒன்று ஞானமே பண்பார் தலைஉயிர்
கால்அந்த ஞானத்தைக் காட்டவீ டாகுமே. **1**

---

*2390.* **தெளிவுரை :-** *முற்செய் தவம் இன்மையால் இப்பிறப்பில் நல்லறி வின்றிப் புல்லறிவேயுடையார், தம்மை எல்லாம் அறிந்தவராக மதித்துக்கொண்டு, ஏவவும் செய்கலாது, தாமும் தேராது (திருக்குறள் - 848) பயனிலவற்றைப் 'பயனுடைய' எனவும், பயனுடையவற்றை 'பயனில' எனவும் கொண்டு தாம் வேண்டியவாறே செல்பவர்களை, 'தலை கால் தெரியாது திரிபவர்' என்றல் வழக்கு. அதன் பொதுப்பொருள் வெளிப்படையாயினும், சிறப்புப் பொருள் குறிப்பாகவே உள்ளது. அஃது யாதெனின், 'கால்' என்பது சிவனது சத்தி. அஃதே திருவருள். அஃதே எல்லாவற்றிற்கும் வினை முதல். 'தலை' என்பது உயிர். 'உயிர்க்கு அறிவு உண்டாதல் தலையிலே' என்பது யாவரும் அறிந்தது. எனவே, ஞானம் உதயமாவது 'தலை' எனப்படுகின்ற உயிரினிடத்திலேதான். அந்த ஞானம் தானே உதயமாகாது. 'கால்' எனப்படுகின்ற சிவசத்தி உதிப்பிக்கவே உதயமாகும். (ஞானகுரு மாணாக்கனது தலையில் தமது காலை வைத்துத் தீக்கை செய்தல் இந்த உண்மையை நன்குணர்த்தும். தாழ்ந்தோர் உயர்ந்தோர் காலில் தங்கள் தலைபடும்படி வணங்கும் மரபும் இது பற்றியது. "பொல்லார் இணை மலர் நல்லார் புனைவரே" (சிவஞானபோதம் - மங்கல வாழ்த்து) என மெய்கண்ட தேவர் அருளிச்செய்த குறிப்பும் உணரத்தக்கது.*

> *கோள்இல் பொறியிற் குணம் இலவே, எண்குணத்தான்*
> *தாளை வணங்காத் தலை.* **- திருக்குறள் - 9**

*என்றதும் இக்குறிப்பினதே). காலாகிய சிவசத்தி உதிப்பிக்கின்ற ஞானத்தின் பயன் அந்த உயிர் வீடு பெறுதலாம்.*

**குறிப்புரை :-** *கலதி - வீணர். 'கால்' என்பது, 'தாள்' எனவும்படும். தாள் -*

**2391.** பசுப்பல கோடி பிரமன் முதலாப்
பசுக்களைக் கட்டிய பாசம்மூன் றுண்டு
பசுத்தன்மை நீங்கி அப் பாசம் அறுத்தால்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே. **2**

---

*முயற்சியுமாம். முயற்சியே கிரியை. "எத்திறம் ஞானம் உள்ளது அத்திறம் இச்சை செய்தி" (சிவஞானசித்தி - சுபக்கம் - சூ. 162) என்றபடி, இச்சையும் கிரியையும் ஞானத்தின் வேறு பாடேயாம். இச்சை எப்பொழுதும் ஒரு நிலையிலேயிருக்கும். ஏனை ஞானமும், கிரியையுமே செயற்படும். அதனால், இயங்கு கருவியாகிய கால், (இறைவனது இருதிருவடிகளும்) ஞானமும், கிரியையுமேயாம். உயிர்கட்கு அறிவு தலையில் இருத்தலால், அவற்றின் இச்சை செயல்களும் தலையில் உள்ளனவாம். எனவே, 'காலின்கீழ் உள்ளது தலை' என்பதன் பொருள், இறைவனது ஞானேச்சாக் கிரியைகள் வியாபகமாய் நிற்க, அவற்றில் உயிர்களின் ஞானேச்சாக் கிரியைகள் வியாப்பியமாய் நிற்றலைக் குறிப்பதாம். சிவமும், சீவனும் ஒன்றும் ஆகாமல் இரண்டும் ஆகாமல் நிற்பதே சித்தாந்த பரமுத்தியாகலின், அதனை விளக்குதற்கு எத்தனையோ தொகைச் சொற்கள் இருப்பினும் அவற்றையெல்லாம் விடுத்து, 'தடலைபோல்' எனக் கூறுவதும் இது பற்றி,*

> *தாடலைபோற் கூடிஅவை தான்நிகழா வேற்றின்பக்*
> *கூடலைநீ ஏகம்எனக் கொள். **- திருவருட்பயன் - 74***

***என்பது காண்க. 'காறலைபோல்' எனக் கூறலும் உண்டு. "என்பர்" என்பதை, "காரணம்" என்பதன் பின்னர்க் கூட்டுக. 'கால்' என்பதைக் குறையெண்ணுப் பெயராகக் கூறுவோர், 'தலை' என்பதை அங்ஙனங் கூறமாட்டாமை அறிக. முதற்காரணம் - மாயை. துணைக்காரணம் - சத்தி. நிமித்தகாரணம் - சிவன்.***

***இதனால், 'அடிதலை தெரிதல்' என்னும் வழக்கின் உண்மைப் பொருள் விளக்கப்பட்டது.***

***2391. தெளிவுரை :-** இறைவன் உயிர்களுக்கு ஏகதேச அறிவை நிகழ்வித்துச் சிறுபோகங் கொடுத்துப் பிறவியும் செலுத்துகின்றான். அதனாற்பயன் பருவம் முதிர்வித்து வியாபக அறிவை நிகழ்வித்துப் பரபோகம் கொடுத்தற் பொருட்டேயாம். ஏகதேச அறிவு நிகழ்ந்தன்றிச் சிறுபோக நுகர்ச்சி செல்லாது, வியாபக அறிவு நிகழ்ந்தன்றிச் சிறுபோக நுகர்ச்சி செல்லாது, வியாபக அறிவு நிகழ்ந்தன்றிப் பரபோக நுகர்ச்சி செல்லாதென்க. இறைவன் இவ்வாறு போகங் கொடுத்து அறிவுகாட்டி, வீட்டை அளிப்பன். இது கருணையேயாம். அக்கருணை இறைவனுக்கு இயற்கைக்குணம் எனப்படும் சத்தியாம். <u>சத்தி குணம், இறைவன் குணி, குணம் குணியைவிட்டு நீங்காது</u>. சூரியன், கிரணத்தால் உலகத்துப் புற இருளை ஓட்டிக் கண்களுக்குப் பிரகாசத்தைச் செய்கின்றான். அதுபோல,*

**2392.** நின்றான் நிலமுழுது அண்டமும் மேல்உற
வன்றாள் அசுரர் அமரரும் உய்ந்திடப்
பின்றான் உலகம் படைத்தவன் பேர்நந்தி
தன்றா ளிணைஎன் தலைமிசை யானதே. 3

---

*இறைவன் அவ்வருளால் உயிர்க்கு அறியாமையாகிய மயக்கத்தை நீக்கி அநுக்கிரகம் செய்வான் என்க. (முன் மந்திரத்தில், "காலந்த ஞானத்தைக் காட்ட வீடாகுமே" என்றது சிவஞானமாகிய பதி ஞானமாம்) உடம்பில் 'தலை, கால்' என்பன, வெளியுறுப்பாய் இருத்தல் யாவரும் அறிந்தது. ஆயினும் உடம்பிற்கு உள்ளே தலை கால்கள் உள்ளன; அவற்றைப் பலர் அறியார். அந்த 'தலை, கால்' என்பன முறையே தலை உச்சியும், மூலாதாரமும் ஆகும். (தலைஉச்சி ஏழாந்தானம் எனப்படும்). அந்தத் தலையில் எல்லாருக்கும் இயல்பாக உண்டாகின்ற அறிவு உலகியல் அறிவாகும். அந்த அறிவு, மூலாதாரத்தில் உள்ள குண்டலி கீழ் மேலாகச் சுழன்று செய்யும் செயலால் யோகக்காட்சி அறிவாய் மாறி நிகழப்பெற்றவர், அந்த அறிவையே உடையராய் இருத்தலன்றி, உலகியல் அறிவை உடையவர் ஆகார்.*

***குறிப்புரை :-*** ***'தலையும், அடியும் முறையே உச்சியில் உள்ளது. மூலத்தில் உள்ளது' என நிரல்நிறையாக வைத்து உரைக்க. "உள்ளது" என்பது, "மூலம்" என்பதன் பின்னரும் சென்று இயையும். தலை அடியான அறிவு - தலை அறிவு அடி அறிவாக மாறிய அறிவு. 'தலை அடியாகவே இருந்தார்' என்க.***

***இதனால், 'அடி தலை யறிதல்' என்னும் வழக்குச் சிவஞான நிகழ்ச்சியைக் குறித்தலேயன்றி யோக ஞான நிகழ்ச்சியையும் குறிக்கும் என்பது கூறப்பட்டது.***

***2392. தெளிவுரை :-*** ***'அடி தலை அறியும் திறம்' என்பது, 'இறைவனது அடி தலைகளை அறிதல்' எனவும் பொருள் தரும். அம்முறையில் பார்க்கும் பொழுது, 'அவனது அடி தலைகள் உயிர்களால் அறிய இயலாதவை' என்று அறிதலே மெய்யறிவாகும். அந்த உண்மையை அறிவிக்கவே அவன் மாலும், அயனும் போர் செய்தபொழுது அப்போரினால் மிக்க வலிமையையுடைய அசுரரும் - தேவருங்கூட அழியாது வாழ்தற்பொருட்டுத் தனது திருவடிகள் நிலம் முழுதும் கடந்து கீழாகவும், முடி அண்டங்களையெல்லாம் கடந்து அவற்றிற்கு மேலாகவும் இருக்கும்படி நெடியதோர் உருவத்தோடு அவர்கட்கு இடையே தோன்றி நின்றான். (அவர்கள் அவனது அடியையும், முடியையும் தேடிக் காணாது இளைத்தனர். அங்ஙனமாகவே) உலகம் முழுவதையும் படைத்தல் முதலிய ஐந்தொழிலைச் செய்யும் முதல்வன் அவனே ஆகின்றான். அவன் 'நந்தி' என்பதைத் தனது பெயராக உடையவன். அவனது திருவடியிணை தான் தலைமேல் உள்ளது.***

**2393.** சிந்தையி னுள்ளுளது எந்தை திருவடி
சிந்தையும் எந்தை திருவடிக் கீழது
எந்தையும் என்னை அறியகி லா னாயின்
எந்தையை யானும் அறியகி லேனே. **4**

---

***குறிப்புரை :-*** *'அஃது அவனே இரங்கி வந்து எனக்கு அருளியது' என்பது குறிப்பு. இரண்டாம் அடி முதலாகத் தொடங்கி, 'நின்றான்' என்பதை முதலடியின் இறுதியில் வைத்து உரைக்க. 'முழுதும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. "அண்டமும்" என்பதன்பின் எஞ்சி நின்ற 'கீழ்' என்பதை வருவித்து நிரல்நிறை யாக்குக. 'பின்' என்பது தெளிவுப் பொருட்கண் வந்தது, 'நீயிர் பொய் கூறியபின், மெய் கூறுவார் யாவர்' என்பதிற் போல. "தான்" என்பதில் பிரிநிலை ஏகாரம் விரித்து, 'உலகம் படைத்தவன் தானே' என்க. "படைத்தவன்" என்பது உபலக்கணம்.*

*இதனால், 'அடிதலை அறிதலை இறைவனிடம் வைத்து நோக்குங்கால் - அவை நம்மால் அறிய இயலாதன - என அறிதல் வேண்டும்' என்பதும், 'அறிந்து அவனது அடியை அடைய முயல வேண்டும்' என்பதும் கூறப்பட்டன.*

*"நிலமுதற்கீழ் அண்டம்உற நின்றிலனேல் இருவரும்தம்*
*சலமுகத்தால் ஆங்காரம் தவிரார்காண் சாழலோ"*

***- தி.8 திருச்சாழல் - 6***

*"பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு பாதமலர்;*
*போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே"*

***- தி.8 திருவெம்பாவை - 10***

*"கீதம் இனிய குயிலே கேட்டியேல் எங்கள் பெருமான்*
*பாதம் இரண்டும் வினவில் பாதாளம் ஏழினுக் கப்பால்*
*சோதி மணிமுடிசொல்லில், சொல்லிறந்து நின்ற தொன்மை"*

***- தி.8 குயிற்பத்து - 1***

*என்பனவும் காண்க.*

***2393. தெளிவுரை :-*** *(முன் மந்திரத்தில் சொல்லியவாறு சிவனது திருவடியினை எனது தலைமேல் மட்டும் உள்ளதன்று. எனது சித்தத்தி னுள்ளேயும் உள்ளது. இனி எனது சித்தத்தை உள்ளடக்கி, வெளியிலேயும் உள்ளது). (இந்நிலை, அவன்தானே இரங்கி எனக்குச் செய்த அருட்செயலாகும். ஏனெனில்) முதற்கண் அவன் என்னை நினையாதிருப்பின், நான் அவனை நினைப்பதற்கே வழியில்லை.*

***குறிப்புரை :-*** *அந்தக்கரணம் நான்கனுள் சித்தம், ஒன்றை மீள மீள இடைவிடாது நினைந்து நினைந்து நிற்றலால்தான் ஆன்மா அப்பொருளில்*

**2394.** பன்னாத பார் ஒளிக் கப்புறத் தப்பால்
என்னா யகனார் 'இசைந்தங் கிருந்திடம்
உன்னா ஒளியும் உரை செயா மந்திரஞ்
சொன்னான் கழலிணை சூடிநின் றேனே. **5**

---

*அழுந்தி நின்று அதனை அனுபவிக்கின்றது. அது பற்றியே, ''திருவடி சிந்தையினுள்ளே" என்றார்.*

> *"சிந்திப் பரியன; சிந்திப் பவர்க்குச் சிறந்து செந்தேன்*
> *முந்திப் பொழிவன........ ஐயாறன் அடித்தலமே"* **- தி.4 ப.92 பா.1**

> *"அளப்பருங் கரணங்கள் நான்கும் சிந்தையே யாக"*
> **- தி.12 தடுத்தாட்கொண்ட பு. 106**

*என அருளிச் செய்தன காண்க.*

> *என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்;*
> *தன்னை நானும்முன் ஏதும் அறிந்திலேன்;*
> *என்னைத் தன்அடி யான்என் றறிதலும்,*
> *தன்னை நானும் பிரான்என்றறிந் தேனே.* **- தி.5 ப.91 பா.8**

*எனவும்,*

> *எந்த மாதவம் செய்தனை நெஞ்சமே,*
> *பந்தம் வீடவை யாய பராபரன்,*
> *அந்தம் இல்புகழ் ஆரூர் அரனெறி*
> *சிந்தை யுள்ளும், சிரத்துளும் தங்கவே.* **- தி.5 ப.7 பா.2**

*எனவும் போந்த அப்பர் திருமொழிகளை இங்கு உடன்வைத்துக் காண்க.*

*இதனால், முன் மந்திரத்திற் கூறப்பட்ட திருவடிப் பேற்றின் நிலை மேலும் வகுத்துக் கூறப்பட்டது.*

***2394. தெளிவுரை :-*** *சொற்களால் சொல்ல வாராத ஒரு நிலம்; அவ்வாறான ஓர் ஒளி; இவ்வாறெல்லாம் சொல்லப்படுகின்ற அதற்கு அப்புறத்ததாகிய இடமே என்னுடைய தலைவர் இருக்கும் இடம். அவர் அவ்வாறிருக்கவும் மனக் கண்ணிற்கும் காணப்படாத ஓர் ஒளியாயும், வாக்கிற்கு வாராத ஒரு மந்திரமாயும் உள்ள அதனது இயல்பையும், அதனை அடையும் வழியையும் ஒருவன் எனக்குச் சொன்னான். அந்த வழியிலே நின்றமையால், முன் மந்திரத்திற் கூறியவாறு என் தலைவனது திருவடியை யான் அடைந்தேன்.*

***குறிப்புரை :-*** *"பன்னாத" என்பதை ஒளிக்கும் கொள்க. 'ஒரு நிலம்' என்றும், 'ஓர் ஒளி' என்றும் சொல்லப்பட்டது. 'பரவெளி' என்றும், 'சிதாகாசம்' என்றும் சொல்லப்படுகின்ற பராசத்தி அது தன் குணமாக, அக்குணத்தையுடைய*

**2395.** பதியது தோற்றும் பதமது வைம்மின்
மதியது செய்து மலர்ப்பதம் ஓதும்
நதிபொதி யுஞ்சடை நாரியோர் பாகன்
கதிசெயும் காலங்கள் கண்டுகொளீரே. **6**

---

*குணியாதல் பற்றிப் பரமசிவனை, அதற்கும் அப்புறத்துள்ளவனாகக் கூறினார். "அப்பால்" என்றது, 'அந்த இடம்' என்றபடி. 'அப்புறத்துள்ள அந்தப் பால்' என்க. 'இருந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. உள்ளத்துள் ஒரு பொருளை நினைப்பது என்றாலும் யாதானும் ஒருவடிவில்தானே நினைத்தல் வேண்டும். அஃது இயலாமையால், "உன்னா ஒளி" என்றார். உரை செயா மந்திரமாவது உரை செய்யப்படும் மந்திரங்களையெல்லாம் வாயிலாகக் கொண்டு இயக்கி, அம்மந்திரங்களைக் கணிப்பவர்க்கு அவற்றின் பயனைத் தந்து நிற்கும் அந்தப் பொருள். இங்ஙனம் இருவகையாகக் கூறிய இதுவும் திருவருளைக் குறித்ததேயாம். "உரைசெயா மந்திரம்" என்பதிலும் எண்ணும்மை விரிக்க. ஒருவன் - குருமூர்த்தி. அவ்வெழுவாய வருவிக்கப்பட்டது. குருமூர்த்தி அருளைச் சொன்னதாவது, 'உன் அறிவிற்கு அருளையே தாரகமாகக் கொண்டு, அறிந்தும், செய்தும்நில்' எனக் கூறியது. 'அவ்வழியில் நிற்கவே, தலைவனது திருவடிப்பேறு கிட்டிற்று' என்பதாம்.*

*இதனால், 'அடி, தலை' என்பவற்றுள் இறைவனது, திருவடியின் சிறப்பும், அதனை அடையுமாறும் கூறப்பட்டன.*

***2395. தெளிவுரை :-** பதியாகிய சிவன் உங்கட்குக் காட்டாவிடினும் அன்பர்கட்குக் காட்டிய திருவடிகளை அவ் வரலாறு உணர்ந்து அவைகளைப் பாவனையால் உங்கள் தலை மேல் வையுங்கள். மற்றும் மலர் போன்ற அவைகளை உங்கள் உள்ளத்திலே வைத்துத் தியானிப்பதுடன், வாயால் புகழ்ந்து பாடுங்கள். இவைகளையெல்லாம் இடையறாது செய்யாவிடினும் இவற்றிற்குரிய காலங்களைத் தெரிந்து அக்காலங்களில் செய்யுங்கள். அறிவு புறம் போகாமல் தோத்திரம் செய்ய வேண்டும். நாரி - உமை. கதி - முத்தியின்பம்.*

***குறிப்புரை :-** 'செய்தால் அவன் தனது திருவடிகளை உங்கட்கும் காட்டி உய்யக் கொள்வான்' என்பது குறிப்பெச்சம். "தோற்றும்" என்றது இறந்த காலத்தில் நிகழ்காலம், பின்னர் "மதி" என்றும் "ஓதும்" என்றும் கூறுதலால், முன்னர் வைத்தல் தலைமேலாயிற்று.*

*வாழ்த்த வாயும், நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே.* ***– தி.5 ப.90 பா.7***

*என்ற அப்பர் திருமொழியும் காண்க.*

**2396.** தரித்துநின் றான்அடி தன்னுடைய நெஞ்சில்
தரித்துநின் றான்அம ராபதி நாதன்
கரித்துநின் றான்கரு தாதவர் சிந்தை
பரித்துநின் றான்அடி பரிபாகத் தானே. 7

---

*'இறைவனைத் தியானித்தற்குரிய சிறப்புக் காலங்கள் மூன்று' என்ப. அவை 'காலை நண்பகல் மாலை' என்பன.*

*"தெரிகாலே மூன்று சந்தி தியானித்து வணங்க நின்று*
*திரிகாலங்கண்ட எந்தை திருச்செம்பொன் பள்ளியாரே".*

***- தி.4 ப.29 பா.7***

*என ஓதியருளினமை காண்க. இவைகளை, 'சந்தியாகாலம்' என்பர். **சம் தியா காலம் - நன்றாகத் தியானித்தற்குரிய காலம்**.*

*இனி வழிபாட்டிற்குரிய காலங்களை 'முன் மூன்று, பின் மூன்று' என வைத்து ஆறு காலங்களும் சொல்லப்படும் 'வைகறை, காலை, நண்பகல்' - என்பன முன் மூன்று காலங்கள், 'எற்பாடு, மாலை, யாமம்' - என்பன பின்மூன்று காலங்கள். "கதிசெயும்" என்பதில், செய்தல் - உண்டாக்குதல்.*

*இதனாலும், இறைவனது திருவடியை அடையும் முறையே வகுத்துச் சொல்லப்பட்டது.*

***2396. தெளிவுரை :-*** *எல்லாப்பொருள்கட்கும் ஆதாரமாய் அவைகளைத் தாங்கி நிற்பவனாகிய சிவன் தன்னை எண்ணாதவர்களது உள்ளத்தைக் குடிகொள்ளாமலும், அடைதற்கரிய அப்பரிபாகத்தை அடைந்தமை காரணமாக பரிபாகிகளது உள்ளத்தை விரும்பியும் நிற்கின்றான். ஆகவே,* ***அவனது திருவடியைத் தனது உள்ளத்தில் தாங்கி நிற்பவன் இவ்வுலகத்திருப்பினும் சிவலோகத்தில் இருப்பவனேயாவான்.***

***குறிப்புரை :-*** *'தரித்து நின்றான். கருதாதவர் சிந்தை கரித்து நின்றான்; அப்பரிபாகத்தானே பரித்துநின்றான்; அவன் அடி தன்னுடை நெஞ்சில் தரித்து நின்றான் அமராபதிநாதன்' என இயைத்துப் 'பொருள்கொள்க'; "பரித்து" என்பதை, 'பரிப்ப' எனத்திரிக்க.*

*"சிந்தை" என்பது பரித்த லோடும் இயையும். அகரச்சுட்டு அடைதற்கு அருமை தோற்றி நின்றது. 'அவன் அடி' எனச் சுட்டியுரைக்க. கரித்தல் - வெறுத்தல். 'கருதாமைக்குக் காரணம் பரிபாகம் இன்மை' என்பது தோன்றுதல் அறிக.*

*'அமரர்' என்பது தேவரையும், 'அமராபதி' என்பது தேவருலகத்தையும்*

**2397.** ஒன்றுண்டு தாமரை ஒண்மலர் மூன்றுள
கன்றாத தாளும் இரண்டுள காயத்துள்
நன்றாகக் காய்ச்சிப் பதம்செய வல்லார்கட்கு
இன்றேசென் றீசனை எய்தலும் ஆமே. **8**

---

*குறித்தல் பொது வழக்காயினும், சிவநெறி வழக்கில் அவை சிவ சாலோக சாமீப சாரூப நிலைகளை அடைந்தவர்களையும், சிவலோகத்தையும் குறிக்கும்.*

*இதனால், சிவனது திருவடிப்பேற்றின் அருமையும், அப்பேறு பெற்றவர்களது சிறப்பும் கூறப்பட்டன.*

***2397. தெளிவுரை :-** மக்கள் உடம்பிற்குள் தாமரைக் கொடி ஒன்றே உள்ளது; அதில் மலர்கள் மூன்று உள்ளன. அந்த மூன்று மலர்களிலும் என்றும் அவற்றால் வருந்துதல் இல்லாத சிவனது திருவடியிணையும் உள்ளது. ஆயினு அத்திருவடியிணையைக் காண்பதற்கு அந்த மூன்று மலர்களும் மலராக மலர்தல் வேண்டும். அவ்வாறு மலர்தற்கு அவை பக்குவப்பட வேண்டும். அதற்கு உடம்பிற்றானே உள்ள நெருப்பை எழுப்பி வெதுப்பினால், அம்மலர்கள் பக்குவப்பட்டு மலரும். மலர்ந்தால், அங்ஙனம் மலர்விக்க வல்லவர்கட்குச் சிவனை அடைதல் இப்பொழுதே எளிதாகிவிடும்.*

***குறிப்புரை :-** தாமரைக்கொடி, சுழுமுனைநாடி, மூன்று மலர்கள், அனாகதம், (இருதயம்) விசுத்தி, (அடித்தொண்டை) ஆஞ்ஞை (புருவநடு) ஆகிய ஆதாரங்கள், அனாகதத்திற்குக் கீழ் உள்ள ஆதாரங்கள் தாமரைக்கொடியின் அடிப்பாகமாகக் கருதப்படுகின்றன. வழிபாடு 'மந்திரம், கிரியை, பாவனை' என்னும் மூன்றுறுப்புக்களால் நிகழ்வன. அவை மூன்றும் முறையே மொழி, மெய், மனம் என்பவற்றால் நிகழுங்கால், விசுத்தி, அனாகதம், ஆஞ்ஞை என்பவற்றில் நிகழ்தல்பற்றி அம்மூன்றையே கூறினார். இன்றே - இப்பிறப்பிலேயே. காயத்துள் - நன்றாகக் காய்ச்சுதல் - இடைகலை, பிங்கலைகளை அடக்கிச் சுழுமுனை வழியே பிராணவாயுவைச் செலுத்துதல்.*

*இதனால், 'சிவனது திருவடியை அடைதற்கு மேற்கூறிய நினைத்தல் வாழ்த்தல் வணங்கலேயன்றிச் சிவயோகமும் சிறந்த சாதனமாம்' என்பது கூறப்பட்டது.*

***2398. தெளிவுரை :-** சிவபெருமான் பக்குவம் எய்திய என்னைத் தனது திருவடியாகிய மலர்கள் எனது தலையிலே எனது பாசக்கட்டு நீங்குமாறு மலரும்படி செய்யும் முகத்தால், மயக்கம் கொண்ட எனது மனத்தால் திகைத்து நிற்கின்ற திகைப்பை நீக்கி ஆட்கொள்ள நினைத்தான். அதனால் நான் கோணல்கள் எல்லாம் நீங்கி, நேர்மையை அடைந்தேன். அந்த நேர்மை இது' எனச் சொல்லவாராது.*

**2398.** கால்கொண்டென் சென்னியிற் கட்டறக் கட்டற
மால்கொண்ட நெஞ்சின் மயக்கில் துயக்கறப்
பால்கொண்ட என்னைப் பரன்கொள நாடினான்
மேல்கொண்டென் செம்மை விளம்பஒண்ணாதே. **9**

**2399.** பெற்ற புதல்வர்பால் பேணிய நாற்றமும்
குற்றமும் கண்டும் குணங்குறை செய்ப ஓர்
பற்றைஅவ் வீசன் உயிரது பான்மைக்குச்
செற்ற மிலாச் செய்கைச் செய்தின செய்யுமே. **10**

---

***குறிப்புரை :-*** *'கால்கொண்டு' என்பது, இறுதியில் நின்ற "கட்டற" என்பதனோடு இயைந்தது. அந்த 'கட்டற' என்றது, 'முறுக்கவிழ்ந்து மலர' என்றதாம். "கால்கொண்டு கட்டற" என்றாரேனும், 'கால் கட்டறலைக் கொண்டு' என்றலே கருத்து.*

*'பரன், பால் கொண்ட என்னைக் கால் கட்டறக் கொண்டு துயக்கறக் கொள்ள நாடினான்' என இயைக்க. பால் - பன்மை' பக்குவம் மேல் - அதன்பின் மேல் கொண்ட' என்பதில் அகரம் தொகுத்தலாயிற்று.*

*<u>கோணல்கள் ஆணவ மலத்தால் எழும் செருக்கும், கன்ம மலத்தால் வரும் இன்பத் துன்பங்களும், மாயா மலத்தால் வரும் ஐம்புலத் தாக்குதலும் பிறவுமாம்</u>. நேர்மை, மெய்யுணர்வு, முதல்வனது இயல்பு பற்றி எழும் அன்பு, அதனால் விளையும் ஆனந்தம் முதலியனவாம்.*

*'பக்குவம் வந்தால் நீவிரும் இவையெல்லாம் பெறுவீர்' என்பது குறிப்பெச்சம்.*

*இதனால், 'திருவடிப் பேறே கோட்டம் நீக்கிச் செம்மை செய்வது' என்பது கூறப்பட்டது.*

***2399. தெளிவுரை :-*** *தாம் பெற்ற புதல்வரிடத்தில் உள்ள தீ நாற்றத்தையும், அதற்குக் காரணமான அசுத்தப் பொருள்களையும் அநுபவித்த போதிலும் அப்புதல்வரிடத்தில், வெறுப்புக் கொள்ளாமலே பெற்றோர்கள் அவை நீங்குதற் பொருட்டுப் புதல்வர்க்கு வெறுப்பான செயல்களைச் செய்வர். (அவை நெய்யிட்டு, நலங்கிட்டு முழுக்காட்டுதல், மருந்தூட்டுதல் முதலியனவாம்). அது போலவே, சிவனும் உயிர்கள் பக்குவம் எய்தற் பொருட்டு உலகப் பற்றை அவைகட்கு உண்டாக்குதலால், அப்பற்றின் வழியவான செயல்களைச் செய்வான். ஆகவே, அது கருணை காரணமானது அன்றி, வன்கண்மை காரணமானது அன்றாம்.*

*குறிப்புரை :- குற்றம் - இங்கு, அசுத்தம். இதனைக் கூறவே "நாற்றம்" என்றது தீ நாற்றமாயிற்று. "குணம் குறை" என்றது 'குணம் இல்லன' என்றபடி. 'குணம் இல்லன' என்றது புதல்வரது கருத்து நோக்கி. 'பான்மை பக்குவம்' என்பதை முன் மந்திர உரையிலும் கூறினோம். பான்மைக்கு - பக்குவம் வருதற்கு, செற்றம் - பகை; வன்கண்மை 'இலாது' என்பது ஈறு குறைந்து நின்றது. செய்கைக்கு - செய்கையால்; உருபு மயக்கம். ஈசன் உயிரது பான்மைக்குச் செற்றம் இலாது ஓர் பற்றைச் செய்கையால், அதற்கு எய்தின செய்யும்' என்க. உலகப் பற்றிற்கு எய்தின பிறப்பு இறப்புக்களும், இன்பத்துன்ப நுகர்ச்சிகளுமாம். ஈசன் - எப்பொருட்கும் தலைவன்.*

*இதனால், 'பக்குவம் வாயாத உயிர்கட்கு இறைவன் செய்வதும் அருளேயன்றி, வன்கண்மையன்று' என்பது கூறும் முகத்தால், அவ்வுயிர்களும் திருவடிப்பேற்றை அடைவனவே என்பது கூறப்பட்டது.*

## 18. முக்குற்றம்

*அடி தலையறிதலின் அருமையைக் கூறிய நாயனார், 'அவற்றை அறிதற்குத் தடையாய் உள்ளன மூன்று குற்றங்கள்' என்பதை இரண்டு மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**2400.** மூன்றுள குற்றம் முழுதும் நலிவன
மான்றிருள் தூங்கி மயங்கிக் கிடந்தன
மூன்றினை நீங்கினர் நீக்கினர் நீங்காதார்
மூன்றினுட் பட்டு முடிகின்ற வாறே. 1

**2401.** காமம் வெகுளி மயக்கம் இவைகடிந்து
ஏமம் பிடித்திருந் தேனுக் கெறிமணி
ஓமெனும் ஓசையி னுள்ளே உறைவதோர்
தாமம் அதனைத் தலைப்பட்ட வாறே. 2

---

*2400. **தெளிவுரை :-** உயிர்களை எப்பொழுதும் வருத்துவனவாய் மூன்று குற்றங்கள் உள்ளன. அதனால் ஆணவத்தின் சத்தி முற்றும் மடங்காது செயற்பட, சில வேளைகளில் ஒன்றை மற்றொன்றாக உணர்த்தும், சில வேளைகளில் எதனையும் அறியாதே கிடந்தும் உயிர்கள் துன்புறுகின்றன. ஆகவே அம்முக்குற்றம் நீங்கப் பெற்றவரே துன்பத்தை நீக்கினவர் ஆகின்றனர். நீங்கப் பெறாதவர் அக்குற்றங்களில் கிடந்து கெடும் முறைமையை உடையவர் ஆவர்.*

*__குறிப்புரை :-__ 'மூன்று குற்றங்கள் இவை' என்பது வருகின்ற மந்திரத்தால் கூறப்படும். ''மான்று'' என்பதும் 'மயங்கி' என்றதேயாயினும் அது திரிபுணர்வையும், மயங்கி என்பது யாதும் அறியாமையையும் குறித்தன. "ஆறு" என்பதன்பின், 'உடையர்' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது.*

*இதனால், 'உயிர்களின் துன்பத்திற்குக் காரணம் முக்குற்றம்' என்பது கூறப்பட்டது.*

*2401. **தெளிவுரை :-** 'காமம், வெகுளி, மயக்கம்' என்னும் மூன்று குற்றங்களையும் நான் முற்றக்கடிந்து, எனக்குப் பாதுகாவலாய் உள்ள பொருளை நோக்கிக் கொண்டிருந்தேன். அப்பொழுது, அடிக்கப்பட்ட மணியினின்றும் எழும் ஓசை போல, 'ஓம்' என்னும் ஓர் ஓசை என் உடம்பினின்றும் எழுந்தது. அவ்வோசையை நுணுகி நோக்கியபோது அதனுள்ளே ஓர் அரிய பொருள் வெளிப்பட அதனை நான் அடைந்தேன். இது வியப்பு.*

*__குறிப்புரை :-__ காமம் - **விருப்பம். வெகுளி - சினம்; வெறுப்பு, மயக்கம் - அறியாமை.** 'வேட்கை' என்பதையும் காமம் ஆக்கியும், 'செருக்கு' என்பதையும் மயக்கம் ஆக்கியும் குற்றத்தை 'ஐந்து' என்றல் சாங்கிய நூல் முறைமை. அந்த*

*ஐந்தையும் அந்நூலார் **'பஞ்சக்கிலேசம்'** என்பர். அந்த ஐந்தையே திருவள்ளுவர், "காமம், வெகுளி, மயக்கம்" (திருக்குறள் - 360) என மூன்றாக்கிக் கூறியதாகப் பரிமேலழகர் உரைத்தார். எனினும், தமிழ் நூலார் மூன்றாகக் கூறுவதையே சாங்கியர் ஐந்தாக விரித்தனராவர். பிடித்திருத்தல் - குறிக்கொண்டிருத்தல். 'எறிமணி போலும் ஓசை' என்க. மணி, அதன் ஓசையைக் குறித்த ஆகுபெயர், மணியை அடிப்பது ஒரு கணமேயாயினும், அதினின்றும் எழும் ஓசை நெடிது போது தொடர்ந்து ஒலித்தல் போல, உந்தியினின்றும் எழுந்த 'ஓம்' என்னும் ஓசை இரண்டு மாத்திரையைக் கடந்து தொடர்ந்து ஒலித்தது' என்றற்கு 'எறி மணி ஓசை போல்' என்றார். 'இவ்வோசை யோகத்திற் கேட்கப்படும்' என்பது மூன்றாம் தந்திரத்துள் கூறப்பட்டது. 'ஓம்' என்பது ஒரு சொல்லாகலானும் சொல்லுக்குச் சார்பாய் உள்ளது பொருளாகலானும் பொருளைச் 'சார்பு' என்றார். தாமம் - சார்பு. இதன்பின், 'வெளிப்பட' என ஒருசொல் வருவிக்க. "உள்ளே உறைவது" என்றதனால் அஃது அறிதற்கரியது என்பது பெறப்பட்டது. 'வியப்பு' என்பது சொல்லெச்சம். கடிதல் - நீக்குதல். ஏமம் - பாதுகாவல். தாமம்- ஒளி.*

*இதனால், 'முக்குற்றங்கள் இவை' என்பதும், 'அவை யோக முயற்சியால் நீங்குதலும்' கூறப்பட்டன.*

## 19. முப்பதம்

*'முக்குற்றம்' என 'மூன்று' என்னும் எண் இயைபு பெற்றமையின் அவ்வியைபே பற்றி மும்மூன்றான் உள்ளன. சிலவற்றை உணர்த்துவாராய் முதற்கண் 'முப்பதம்' உணர்த்துகின்றார். முப்பதம் ஆவன. தத் + துவம் + அசி. பதம் சொல். இம்முப்பதமும் கூடியது சாமவேத மகாவாக்கியம். இது பற்றிய சிலவற்றை எட்டு மந்திரங்களால் கூறுகின்றார்.*

**2402.** **தோன்றிய தொம்பதம் தற்பதம் சூழ்தர**
**ஏன்ற அசிபதம் இம்மூன்றோ டெய்தினோன்**
**ஆன்ற பராபரம் ஆகும் பிறப்பற**
**ஏன்றன மாறச் சிவமாய் இருக்குமே. 1**

---

*2402. **தெளிவுரை :-** 'துவம்' என்பதே சித்தர் மரபில், 'தொம்' என மரூஉ மொழியாகக் கூறப்படுகின்றது. 'துவம்' என்னும் பதம் முன்னே எழ, அதனை அடுத்து 'தத்' என்னும் பதம் வந்து பற்ற, அதன்பின் 'அசி' என்னும் பதமும் வந்து சேர, இம் மூன்றும் கூடிய கூட்டமாய் அமைந்த வாக்கியத்தின பொருளாக ஒருவன் ஆகிவிடுவானாயின், அவன் வியாபகப் பொருளாகிய பரம்பொருளே யாவன். பின் முன்பு தான் பொருந்தியிருந்த மும்மலங்களும் நீங்கச் சிவமாகி யிருப்பான்.*

***குறிப்புரை :-*** *வாக்கியம் 'தத்துவமசி' என்று இருப்பினும் பொருள், 'துவந்தத்தசி' என்பதேயாகலின் அவ்வாக்கியத்தை நாயனார் இவ்வாறே கூறுகின்றார். இதுபற்றி மேலே கூறினோம் (பா. 2368 - உரை) எய்துதல் - பொருள் அனுபவமாகப் பெறுதல். வேதம், முதற்பொருளைப் பொதுவாக, 'பரம்' எனக் கூறும். ஆகவே, 'நீ அது ஆகின்றாய்' என்னும் வேதவாக்கியத்தால் பொது அனுபவம் உண்டாதலை "பராபரம் ஆகும்" என்று கூறிப் பின், சித்தாந்தம் 'துவம்சிவமசி' எனக் கூறுகின்ற சிறப்புப்பொருளை எய்திச் சிவமாய் இருக்கும் எனக் கூறினார். மற்றும் இது பற்றிய சில விளக்கங்களை மேலே (2368 - உரை) கூறப்பட்டவற்றுட் காண்க.*

*இதனால், 'முப்பதம் ஆவன இவை' என்பதும், அவற்றால் பெறப்படும் பயனும் கூறப்பட்டன.*

*பிறப்பு அற ஏன்றனன் - அநாதிகாலந் தொட்டு மலச் சார்பினால் இடையறாதுவந்த பிறப்பை நீங்கும்படி ஏன்று கொண்டான். பிறப்பு இறப்புக்கள் மலச்சார்பினால் உயிர்களுக்கு உண்டாயின. அதை நீங்குதற்கு உரிய வழியை நன்கு ஆராய்ந்து இறைவன்பால் ஒப்புவிக்கத் தெரியவேண்டும். அதனால் மலச் சார்பு மாண்டொழியும். சிவச்சார்பு உண்டாம். அச்சார்புதான் சிவமாந்தன்மைப் பெருவாழ்வைத் தரும். அவ்வாழ்வுதான் இங்கே சிவமாயிருக்கும் வாழ்வாம்.*

**2403.** போதந் தனைஉன்னி பூதாதி பேதமும்
ஓதும் கருவிதொண் ணூறுடன் ஓராறு
பேதமும் நாதாந்தம் பெற்றியிற் கைவிட்டு
வேதம்சொல் தொம்பத மாகுதல் மெய்ம்மையே. **2**

**2404.** தற்பதம் என்றும் துவம்பதம் தான்என்றும்
நிற்பது அசி அத்துள் நேரிழை யாள் பதம்
சொற்பதத் தாலும் தொடரஒண் ணாச்சிவன்
கற்பனை யின்றிக் கலந்துநின் றானே. **3**

---

*“சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட, அத்தன் எனக்கு அருளியவாறு ஆர் பெறுவார் அச்சோவே” என்ற அருளிப்பாடு சிந்தித்தற்குரியது.*

***மகாவாக்கியம்***

| தத்துவமசி | அது நீ ஆகின்றனை | முன்னிலை மகா வாக்கியம் |
|---|---|---|
| சோக மஸ்மீ | அவன் நானாகின்றேன் | தன்மை |
| சோயம் ஆப்தி | அவன் இது ஆகின்றான் | படர்க்கை |

***2403. தெளிவுரை :-*** *‘அறிவாவது சடத்தின் குணமாகாது, வேறேயாம்’ என்பதை உணர்ந்து பூதம் முதலிய தத்துவ வகைகளையும், அவற்றின் கூறுகளாகிய தாத்துவிக வகைகளையும் ஆகத் தொண்ணூற்றாறு கருவிகளையும் நாதமுடிவாக அவற்றின் இயல்புகளை ஆராயும் முகத்தால், ‘தான்’ என மயங்காது விட்டொழிந்து உண்மையாகவே, ‘தத்துவமசி’ என்னும் வேதாந்த மகாவாக்கியத்தில் உள்ள ‘தொம்’ பதப்பொருளாகி நிற்றலே ஆன்மாவின் உண்மை இயல்பாகும்.*

***குறிப்புரை :-*** *‘உண்மையாக அன்றி வெறும் வாய்மொழியாக அவ்வாக்கியத்தைச் சொல்லிக் கொண்டிருப்பதில் பயனில்லை’ என்பதாம். இதுவே, தசகாரியத்துள் ‘தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி ஆன்மரூபம்’ என நான்காக வகுத்துக் கூறப்படுகின்றது. சிவஞானபோத (சூ.8 அதி.4)த்தில், ‘இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறாவான் காணவே’ எனப்பட்டதும் இதுவே. தொண்ணூற்றாறு கருவிகள் மேலே கூறப்பட்டன.*

*இதனால், முப்பதங்களுள் ஆன்ம பதமாகிய தொம்பதப் பொருளை உண்மையாக உணருமாறு கூறப்பட்டது.*

***2404. தெளிவுரை :-*** *முப்பதங்களுள், ‘அசி’ என்னும் பதமே தத் பதம் என்றும் ‘துவம் பதம்’ என்றும் சொல்லத்தக்கதாய் உள்ளது. (அஃதாவது, இரண்டையும் ஒன்றாகச் செய்கின்றது). அந்தப்பதத்தில் தான் அருட்சத்தி*

*இருக்கின்றாள். அதனால், வாக்குக்களால் எட்ட முடியாத சிவனும் அந்தப் பதத்திலேதான் கற்பனையாக அன்றி, உண்மையாகவே கலந்து நிற்கின்றான்.*

***குறிப்புரை :-*** *தத் - அது (சிவம்). துவம் - நீ (உயிர்). அசி - ஆகிறாய். எனவே, 'அது நீ ஆகிறாய்' என்கின்ற பொழுது இரண்டையும் ஒன்று படுத்துவது 'அசி' ஆதல் உணர்க. பெத்த காலத்தில் சிவன் சீவனாய், 'தான்' என வேறு தோன்றாது நிற்றலும், முத்திக் காலத்தில் சீவன் சிவனாய் 'தான்' என வேறு தோன்றாது நிற்றலும் சத்தியினாலேயாகலின், 'அசி' என்னும் பதத்திலே நேரிழையாள் உளள் - என்றார். திருவைந்தெழுத்தில் அசிபதமாய் நிற்பது வகாரமும், நகாரமும் ஆம்.*

*"அவன்இவ னானது அவன் அருளால் அல்லது,*
*இவன் அவன் ஆகான் என்று உந்தீபற" - **திருஉந்தியார் - 40***

*எனத் திருவுந்தியார் சீவன் ஒன்றும் மாட்டாமையை வலியுறுத்துகிறது. 'உளன்' என்னும் பயனிலை எஞ்சிநின்றது. 'அப்பதத்து' எனச் சுட்டு வருவித்து, 'சிவன் கலந்து நின்றான்' என முடிக்க.*

*இதனால், முப்பதத்துள் 'அசி' பதத்தது உண்மை கூறப்பட்டது. தத் என்பது அது எனப் பொருள்படும். துவம் என்பது நீ எனப் பொருள்படும். அசி ஆகின்றாய் என்பது நீ அது ஆகின்றாய் என்றவிடத்து நீயாகிய ஆன்மா சிவமாக ஆகின்றாய் எனப் பொருள்படும். சிவம் ஆதலாவது சிவமாம் தன்மைப் பெரு வாழ்வை அடைதல். சீவன் சிவமாதல், சீவத்தன்மை கெட்டுச் சிவமாந் தன்மையை அடைந்த விடத்தாம். ஆன்மா சிவத்தன்மை அடைதற்கு உரிய எல்லாச் சாதனங்களையும் கைக்கொள்ளுதல் வேண்டும். அந்தச் சாதனங்களில் ஒன்று குறைந்தாலும் சிவமாந்தன்மை எய்தாது. உயிர்கள் சிவத்தைச் சார்ந்து சிவத்தன்மை பெற்று அச்சிவத்தை அனுபவித்து நிற்கும் நிலை அம்மம்ம! எளிதில் கூடாத காரியம். அப்படி அனுபவித்து நிற்கும் நிலையைத்தான் அது நீ ஆகின்றாய் என்றது. சிவத்தைச் சார்ந்து நிற்றல் திருவருள் வழியன்றி வேறொன்றானும் கூடாது. ஆதலின் நேரிழையாள் பதம் என்றார். நேரிழையாள் பதமாவது சத்திநிபாதம், திருவருள் வீழ்ச்சி. சத்திநிபாதத்தால் தான் அது நீ ஆகின்றாய். அத்திருவருள் நிலை சொல்லால் தொடர முடியாது. தொடராமைக்குக் காரணம் சிவபெருமான் திருவருளைக் கலந்து நிற்பதனாலேயேயாம். 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்று அருளினார் அந்நிலையில் நின்ற அருளாளர்.*

*அவனருளாலன்றி அவனை அணுகுதலுங் கூடாது. அணுகுதலாவது பூசித்தல், தியானித்தல் என்பன. கற்பனை இன்றி என்பது வேறுபாடில்லாமல் என்றபடி. தொடரவொண்ணாச் சிவன் - மாயை காரியமாக உள்ள கருவி கரணங்களால் தொடர முடியாத சிவன். ஞானமே வடிவாகவுள்ள அப்பரம்*

**2405.** அணுவும் பரமும் அசிபதத் தேய்ந்து
கணுவொன் றிலாத சிவமும் கலந்தால்
இணையறு பால் தேன் அமுதென இன்பத்
துணையது வாய்உரை யற்றிடத் தோன்றுமே. **4**

---

*பொருளை ஞானிகள் ஞானத்தாலேயே வழிபடுவர்.*

*ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்*
*ஞானத் தால்தொழு வேனுனை நானலேன்*
*ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு*
*ஞானத் தாயுனை நானும் தொழுவனே.*

***என்று அருளினர் திருநாவுக்கரசு சுவாமிகள். ஞானம் என்றது சிவஞானத்தை; ஆன்ம ஞானத்தை அன்று. சிவன் கலந்து நின்றான் - சிவன் சீவனாகிய உன்னுடன் பேதமில்லாமல் கலந்து இரண்டற விளங்கினான் என்றவாறு.***

*2405. **தெளிவுரை :-** 'துவம்' பதப்பொருளாகிய ஆன்மாவும் 'தத்' பதப் பொருளாகிய பரமும் 'அசி' பதத்தால் ஒன்றான பின்பு, அதில் சிவமும் கலந்து விடுமாயின், அக்கலவை, பாலும் தேனும் கலந்த கலவையில் அமுதமும் கலந்தாற் போல இனிமையோடு, உறுதியையும் தந்து நிற்கும். அக்கலவையின் சிறப்புச் சொல்லற்ற நிலையாய்த் தோன்றும்.*

*குறிப்புரை :- பரம், சிவம் இரண்டும் ஒன்றாயினும் பொதுவும், சிறப்புமாகிய உணர்வு வேறுபாடு பற்றி வேறுவேறாகக் கூறினார். பரமாதல் வேதாந்த ஞானத்தாலும், சிவமாதல் சித்தாந்த ஞானத்தாலும் என்க. 'அசிபதத்தால்' என மூன்றாவது விரிக்க. "ஏய்ந்து" என்னும் எச்சம் எண்ணின்கண் வந்தது. கணு - வேற்றுமை. ஒன்று - சிறிது. 'ஒன்றும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. இணை - ஒப்பு. பால், ஓரளவு இனிப்புடையது. தேன், மிக இனிப்புடையது. ஆகவே அவை முறையே ஆன்மாவிற்கும், பரத்திற்கும் உவமையாம். அமுது உறுதி பயப்பது. ஆகவே, அது சிவத்திற்கு உவமையாம். இன்பத் துணை - இனிய பொருள்களின் கலப்பு. அது, பகுதிப்பொருள் விகுதி.*

*உலக வியாபாரத்தின் கண்ணேயிருந்து தனக்கு அன்னிய மாயுள்ள பதார்த்தங்களிடத்தில் புத்தி செலுத்தி ஒவ்வொன்றினையும் சுட்டியறியும் அறிவு உள்ளவரையில் அவ்வின்பம் விளையாது. இத்தகைய வியாபாரங்கள் அனைத்தையும் அறவே கைவிட்டு நிர்விகற்பமாயிருக்கும் நிலையை அடைந்தவர் கட்கே அவ்வின்ப விளைவு உண்மையில் விளையும். மனமானது பாசத்தின் காரியம், பாசமானது இம்மையில் உலக இன்பத்தை ஊட்டுவது போல, மறுமையிலும் பேரின்பத்தை ஊட்டும் ''முத்தியிலு மூன்று முதலு மொழியக்கேள்" என்றமை அறிக.*

**2406.** **தொம்பதம் தற்பதம் தோன்றும் அசிபதம்**
**நம்பிய சீவன் பரன்சிவ னாய்நிற்கும்**
**அம்பத மேலைச் சொரூபமா வாக்கியம்**
**செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானே.** **5**

---

*இதனால், வேதாந்த சித்தாந்த மகாவாக்கியங்களின் அனுபவச் சிறப்புக் கூறப்பட்டது.*

*2406. **தெளிவுரை :-** அழகிய சொற்களால் ஆகிய பழமையான, மெய்ம்மை கூறும் மகாவாக்கியம் 'தொம்' (துவம்) தத், அசி' என்னும் மூன்று சொற்களை யுடையது. அச்சொற்கள் முறையே புத்தி முத்திகளை விரும்புகின்ற சீவன், பரம்பொருள், அதன் சத்தி ஆகியவற்றைக் குறித்து நிற்கும். அவ்வாக்கியத்தைப் பன்முறையும் உணர்தலால் அடையப்படும் செவ்விய பொருள், குருவாகி வந்து ஆட்கொள்கின்ற சிவனே.*

***குறிப்புரை :-** மூன்றாம் அடியை முதற்கண் கூட்டியுரைக்க.*

*'பத வாக்கியம்' என இயையும். வாக்கியம் சாதனம் ஆகலின், செம்பொருள், அதனால் அடையப்படும் பொருளாயிற்று. செம்மை, எஞ்ஞான்றும் திரிபின்றி ஒருதன்மைத்தாய் நிற்பது. இதுவே, வடமொழியில் 'சத்து' எனப்படும். அதற்குப் பொருள் என்பது சித்தாந்தம். மகா வாக்கியம் - பெரும்பெயர் - ஒரு வார்த்தை.*

*இதனால், 'முப்பத வாக்கியம் மெய்ப்பொருளை அடையும் வழி' என்பதும், அதனால், அடையப்படும் மெய்ப்பொருள் சிவனே என்பதும் கூறப்பட்டன. இரண்டாம் அடி அனுவாதமாய், மேலெல்லாம் கூறியதை வலியுறுத்திற்று.*

*காணப்பட்ட இவ்வுடம்பால் காணப்படாத ஆன்மாவையும், ஆன்மாவால் பரமான்மாவையும் அனுமானப் பிரமாணத்தால் ஆராய்ந்து, தடத்தலக்கணம் எனப்படும், பொதுவியல்பையுணர்ந்து, பெரும்பெயர் எனப்படும் மகாவாக்கியத்தால் சொல்லப்படும் முதற்கடவுளது திருவருளால் சொரூபலக்கணம் எனப்படும் சிறப்பியல்பை அநுபூதி ஞானத்தால் அறிந்து சிவானுபவம் பெறுதல் வேண்டும். செம்பொருள் - சிவப்பொருள். மாவாக்கியத்தாற் பிரதிபாதிக்கப்படும் செம்பொருள் ஆவான் சீர்நந்திதான்; அவன் சிவன்தான் என்னை ஆட்கொண்டு அருள் செய்கின்ற சீர் நந்திதான் என்க. நந்தி - சிவபெருமான்; "நந்தி நாமம் நமச்சி வாயவே" (தேவா).*

*"தோற்றக் கேடுகள் இன்மையின் நித்தமாய், தோன்மையால் தன்னை ஒன்றுங் கலத்தல் இன்மையின் தூயதாய்த் தான் எல்லாவற்றையும் கலந்து நிற்கின்ற முதற்பொருள் விகாரமின்றி, எஞ்ஞான்றும் ஒருதன்மைத்தாதல் பற்றி, அதனைச் செம்பொருள் என்றார்" எனப் பரிமேலழகர் (திருக்குறள் - மெய்யுணர்தல் - 8)*

**2407.** ஐம்ப தறையா தவரும் அவர்சிலர்
உம்பனை நாடி உரைமுப் பதத்திடைச்
செம்பர மாகிய வாசி செலுத்திடத்
தம்பர யோகமாய்த் தான்அவன் ஆகுமே. **6**

---

*''சிறப்பென்னுஞ் செம்பொருள் காண்பதறிவு'' என்பதன் உரையில் கூறியவாற்றானு முணர்க.*

*2407.* ***தெளிவுரை :-*** *எழுத்தறி கல்வியில் அறியவேண்டிய எழுத்துக்கள் ஐம்பது. அவற்றுள் ஒன்றையேனும் அறியாதவரும் உளர். அவரும் மக்களுட் சிலராகவே இருக்கின்றனர்; (அவர்கள் நற்கதி அடையு மாறில்லை. ஆகவே), கல்வி கற்றவர் அக்கல்வியின் முடிநிலையாக முப்பதங்களைக் கொள்ளுதல் வேண்டும். கொண்டு, செம்மையான, உயர்ந்த வாசியோகத்தைச் செய்தல் வேண்டும். அவ்யோகம் 'ஹம்ஸ;' என்னும் மந்திரமாக அமைதலின், அதுவே தொம்பதமும், தத்பதமுமாய் நிற்கும். நிற்கவே, அது, 'யோஹம்' என்று ஆகி, சீவன் சிவனாகின்ற பயனைத் தகும்.*

*முப்பதம் என்றது இடைகலை, பிங்கலை, சுழுமுனை நாடிகள் எனக் குறித்தவாறு மூன்று நாடிகளும் சேர்ந்துள்ள இடம். புருவமத்தி வாசி செலுத்திட - பிராண வாயுவைச் செலுத்த செம்பரமாகிய வாசி - செம்பொருள் ஆகிய வாசி என்க. வ - அருள். சி - சிவம். உச்சுவாச நிச்சுவாச நிலைகண்டு அவற்றை உள்ளடக்கிச் சுழுமுனை வழியாகச் செலுத்த என்றபடி. உச்சுவாச நிச்சுவாச நிலையாவது ஹம்ஸ மந்திரம்; ஹம் சிவபீஜம், ஸம் சத்தி பீஜம். இதுவே செம்பொருளாகிய வாசியாம். அவ்வாறு செலுத்தி நிற்கும் நிலையின் முதிர்வே தம் பரயோகமாய் முடியும்; தம்முடைய மேலான யோகமாம் என்றவாறு.*

*இடைகலையானது எப்போதும் வலது நாசியிலும் முக்கால் அம்சம் எனவே நிற்கும். ஹ0 ஸ0 என்பது ஆன்மாவுக்குள்ள பெயராம். வெளியிலே வரும் சுவாசத்தின் சத்தமாகிய ஹ0 என்பதையும், உள்ளே செல்லும் சுவாசத்தின் சத்தமாகிய ஸ0 என்பதையும் கண்டறிக. ஹ0ஸ0 என்னும் சத்தத்தை அறிந்தவரே இதன் முதற்படியைத் தெரிந்து கொண்டவராவார். இது ஒரே காலத்தில் இயலாத காரியமாம். இதனை அநுட்டித்து வரும் யோகியானவன், சந்நியாசியாக வேண்டும் என்ற நியமம் இல்லை. கிருகத்தில் உள்ளவர்கள் எல்லோருமே இதனை அநுட்டிக்கலாம். திரிகரணசுத்தியுடன் எவர் அநுட்டித்தாலும் அவர்கட்கு இது சித்தியாம். யோகாப்பியாசத்தை ஒருவன் பதினெட்டு வயதில் தொடங்கு வானானால் ஐம்பதாவது வயதில் அவன் கேசரி முத்திரையை அடைவான் ஆகலின், 'ஐம்பதறியாதவரும் அவர் சிலர்' என்றார்.*

***குறிப்புரை :-*** *"கல்லா நெஞ்சில் - நில்லான் ஈசன்" ஆதலின், எழுத்தறியா தவரை இகழ்ந்தார். (தி.3 ப.40 பா.3) "அறியாதவரும்" என்பதன்பின், 'உளர்' என்பது*

**2408.** நந்தி யறிவும் நழுவில் அதீதமாம்
இந்தியம்சத் தாகி விடசிவ னாகும் நால்
நந்திய மூன்றிரண்டொன்று நலவைந்தும்
நந்தில் நனவாதி மூட்டும் அனாதியே. 7

---

*வருவிக்க. 'அவரும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. சிவனை நினையாது செய்யும் யோகம் வெறும் ஹடயோகமாய் ஆன்மிகப் பயனைத் தாராது ஆதலின், 'உம்பனை நாடி முப்பதத்திடை வாசி செலுத்திட' என இயையும். உரைபதம், வினைத்தொகை. செம்பரம் - செவ்விதும், மேலானதும் ஆகிய பொருள். அப் பொருளாம் தன்மையைக் குறிக்கின்ற பதத்தையே அதுவாக உபசரித்தார். 'ஹம்ஸ' மந்திரம் இயல்பாக இயங்கும் சுவாசத்தாலே அமைதலின் அதனை, 'அசபா மந்திரம்' என்பர். 'செபிக்கப்படாத மந்திரம்' என்பது இதன் பொருள். 'பேசாத மந்திரம்' என்றும் கூறுவர். 'தம் யோகம், பரயோகம்' எனத் தனித்தனி முடிக்க. தம் யோகம் - தம்மால் செய்யப்படும் யோகம். பரயோகம் - மேலான யோகம். "ஆகும்" என்றது 'ஆதலாகிய பயனைத் தரும்' என்றபடி.*

*இதனால், 'முப்பத அநுபவத்தை வாசியோகத்தால் பெறலாம்' என்பது கூறப்பட்டது.*

***2408. தெளிவுரை :-*** ***ஆன்மாவிற்குச் சிவனை அறிகின்ற அறிவும் நழுவும்போது 'அதீதம்' எனப்படும் முடிவுநிலை வாய்க்கும். அஃதாவது, ஆன்மாச் சிவனை அறியும் பொழுது, 'யான் சிவனை யறிகின்றேன்' என அறிகின்ற அறிவும் அதைவிட்டு நழுவினால் அதன் பின்பே துரியாதீதநிலை வாய்க்கும்' என்பதாம். (ஆகவே அவ்வறிவு நழுவிய நிலை துரியமாதல் பெறப்பட்டது). இனி அவ்வாறின்றி, ஞானேந்திரியம், கன்மேந்திரியம் அவற்றின் விடயங்களாகிய சத்தாதி, வசனாதி முதலிய தத்துவ தாத்துவிகங்கள் நீங்கிய போதிலும், 'யான்' என்னும் உணர்வு நீங்காது. ஆகவே, அது நீங்குதல் நின்மல சாக்கிரம் முதலிய வற்றிலாம். அவையும் நீங்கினால் பரசாக்கிரம், பரசொப்பனம் முதலியனவே இயற்கை நிலையாகிய முத்தியைக் கூட்டுவிக்கும்.***

***நந்திய மூன்று இரண்டு ஒன்று நலம் ஐந்து*** - ***மேலாலவத்தையின்கண் உள்ள மூன்று முதலியன. மேலாலவத்தை என்றது சுத்தாவத்தையை; அது நின்மலாவத்தை. நந்திய - மேம்பட்ட நின்மல சாக்கிரம், நின்மல சொப்பனம், நின்மல சுழுத்தி, நின்மல துரியம், நின்மல துரியாதீதம் என்பன. இரு வினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் நிரம்பிய நிலை நின்மல சாக்கிரம். குரு தரிசனமாகி அவர் அருளுபதேசம் பெறல் நின்மல சொப்பனம். உபதேசத்தில் உறைத்து நின்று சாதித்தல் நின்மல சுழுத்தி, பாசநீக்கம் நின்மல துரியம். சிவப்பேறு நின்மல துரியாதீதம் என்பர். மூன்று இரண்டு ஒன்று எனக் கூறியது உபதேசத்தில் உறைத்த நின்று சாதித்தலின் இன்றியமையாமை கருதி அதன்பின்***

**2409.** பரதுரி யத்து நனவும் படிஉண்ட
விரிவில் கனவும் இதன்உப சாந்தத்து
உரிய சுழுனையும் ஓவும் சிவன்பால்
அரிய துரியம் அசிபதம் ஆமே. **8**

---

*உபதேசம், சத்திநிபாதம் கூறியது இவைகளின்றி இது சாதித்தலில்லை என்பது கருதியதாம். முறை பிறழக் கூறியமை வற்புறுத்தற்பொருட்டே என்க. நாலாம் அவத்தை கூறாது நலம் ஐந்து என்றருளினார்; பெறும் பயன் சிவப்பேறு ஒன்றுமே, நாலாவது ஆகிய பாசநீக்கம் சிவப்பேற்றுள் அடங்கியதேயாம்.*

*பரஞானத்தால் பரத்தை தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர்; பதார்த்தங்கள் பாரார்; ஆகலின், துரியசாக்கிரம் இருந்த நிலையிலேயே எஞ்சுதலின்றி எல்லாவற்றையும் ஒருசேர நுகர்தல்; துரியசொப்பனம் நுண்ணுணர்வால் நுகர்தல்; துரிய சுழுத்தி கருவி கரணங்களின் உருவை மட்டும் உணர்தல் அதுவும் கெட்டநிலை துரிய துரியமாம். இந்நாலுங் கெட்ட நிலையே துரியதுரியாதீதம். இதுவே அனாதியை மூட்டும் என்க. முன்னைய ஐந்தும் நந்தின் அனாதியை மூட்டும். நனவாதி மூட்டும். 'நாலுங் கெட்டான்' என்பது பழமொழி.*

***குறிப்புரை :-** நந்தி யறிவு - நந்தியை அறியும் அறிவு. விட - நீங்க. 'யான்' என்பது நீங்குவதாகிய நின்மலாவத்தையை. 'நின்மலாவத்தை' என ஒரு சொல்லாற் கூறிப்போகாது அனைத்தையும் முறையானே எடுத்தோதினார். அவற்றை அதீதம் முதலாகக் கீழ்நோக்கிக் கூறும் பொழுது 'யான்' என்னும் உணர்வு ஒன்றைவிட மற்றொன்றில் மிக்கிருக்கும் - என்பது உணர்த்துதற்கு துரியத்தில் பாசநீக்கமே உளதாகும். சிவப்பேறு அதீதத்திலே உண்டாகும். "நல ஐந்தும்" என்றதனால் அவை நின்மலாவத்தையாயின. 'அவையும் நந்தில்' என்றதனால் 'நனவாதி' எனப்பட்டவை பராவத்தையாயின. நின்மலாவத்தை பராவத்தைகளின் இயல்பு மேற்போந்த அதிகாரங்களில் கூறப்பட்டன. அனாதி - இயற்கை. 'அனாதியை மூட்டும்' என இயைக்க.*

***இதனால், முப்பத அனுபவம் நின்மலாவத்தை பராவத்தைகளிலை நிகழும்' என்பது கூறப்பட்டது.***

***2409. தெளிவுரை :-** பரதுரியத்தில் உலகத்தை அனுபவித்தலாகிய கேவல சகல அஞ்சவத்தைகள் எஞ்ஞான்றும் நிகழாது அறவே நீங்கும். ஆயினும் நின்மல துரியத்தில் அவை ஒரோவொருகால் நிகழினும் நிகழும். ஆகவே, நின்மல துரிய 'அசி' பத அனுபவமாய் நிற்பதே. ('அதையும் கடந்த அனுபவம் ஆதல் இல்லை' என்பதாம்).*

***குறிப்புரை :-** 'பரதுரியத்து ஓவும்' என இயையும். ஓவும் - நீங்கும். ஓவுவன நனவும், கனவும், சுழுனையும்' இவை கேவல சகல அவத்தைகள்' என்பது. "படி*

உண்ட” என்றதனால் விளங்கிற்று. படி - உலகம். “படி உண்ட” என்பதை, “நனவு” என்பதற்கு முன்னர்க் கூட்டுக. விரிவு இல் கனவு - நனவுபோல விரிந்த அறிவு இல்லாத கனவு. சுழுத்தியில் அறிவு பெரிதும் ஒடுங்குதலால் அதனை, ‘கனவும் ஒடுங்கிய உபசாந்தம்’ என்றார். “சிவன்பால்” என்பதன்பின், ‘நிகழும்’ என ஒரு சொல் வருவிக்க.

இதனால், ‘நின்மலாவத்தை மகாவாக்கிய அநுபவமாக, பராவத்தை அதனையும் கடந்த அநுபவமாம்’ என்பது கூறப்பட்டது.

பரதுரியத்தின் கண்ணே சாக்கிரத்தில் படிந்து விரியாத காலத்துச் சொப்பனமாம். பரதுரியம் - மேலான துரியம். இருந்த நிலையில் உலகினை நுகர்தலே பரசாக்கிரம். அந்நுகர்ச்சியிலே உறுதியான நினைவே பரசொப்பனம். இத்துரிய நிலைக்கண்ணே உள்ள நினைப்பும் அற்று ஞானமயமாதல் துரிய சுழுனையாம். உபசாந்தம் என்றது ஆழமான கடலைப்போல அலைவும் உலைவுமின்றிக் களிப்போடிருத்தலை என்க. உபசாந்தத் துரியத்தின்கண் உள்ள சுழுத்தி நிலையும் நீங்குதல் அரிய துரியமாம். உபசாந்தத்து என்றது பரதுரியத்தை. ஓவும் - நீங்கும். கனவும் நனவும் சுழுனையும் ஓவும் துரியம். விரிவு இல் கனவு - காரியப்படும் தத்துவங்களோடு கூடாமை.

“ஆன்மா பேருறக்கநிலை எய்துதலே துரியசாக்கிரம்; அங்கே ஆன்மாவின் துடிப்பு துரிய சொப்பனம்; அத்துடிப்பில் பராதீதம் எய்துதல் துரியசுழுத்தி; துடிப்பும் அடங்குதல் பரதுரியம் எனப்படும் பராவத்தையாம்”. இதுவே சிவதுரியம் ஆம் என்க. சிவன்பால் துரியம் என்றது பத்தாவது; அவைகளைக் கடந்த உண்மைநிலை சிவதுரியாதீதம் அசிபதம் ஆம் என்றது சிவமாகின்றாய் என்பது.

## 20. முப்பரம்

*இனி, ஏழு மந்திரங்களால் முப்பரம் உணர்த்துகின்றார். முப்பரமாவன, 'மண்டல பரம், தத்துவ பரம், பசுபரம்' என்பன. பரம் - மேலானது; கடந்தது.*

**2410. தோன்றிஎன் னுள்ளே சுழன்றெழு கின்றதோர்
மூன்று படிமண் டலத்து முதல்வனை
ஏன்றெய்தி இன்புற் றிருந்த இளங்கொடி
நான்று நலஞ்செய் நலஞ்செயு மாறே. 1**

---

*2410. **தெளிவுரை :-** உடம்புள்ளபோதே உண்டாகி என்னுள்ளேயே சுழித் தெழுகின்றதாகிய ஒப்பற்ற மூன்று வகையாகவுள்ள மண்டலங்கள் உள்ளன. அவை அக்கினி மண்டலம், சூரிய மண்டலம், சந்திர மண்டலம் என்பனவாம். அக்கினிமண்டலம் மூலம் முதல் நாபி வரையில், சூரியமண்டலம் நாபி முதல் கண்டம் வரையில், சந்திரமண்டலம் கண்டம் முதல் புருவமத்தி வரையிலாம். அம்மூன்று மண்டலங்களிலும் சிவம் விளங்கும். சிவன் சூரியமண்டலத்தில் பிரமனும், சந்திர மண்டலத்தில் விஷ்ணுவும், அக்கினி மண்டலத்தில் உருத்திரனுமாக வீற்றிருப்பார். இவை உடலின்கண் உள்ள மண்டலங்களாம். இளங் கொடியாகிய குண்டலிசத்தி, மூலம் முதல் ஆஞ்ஞை வரையில் உள்ள ஆறு ஆதாரங்களையும் கடந்து மேற்சேர வேண்டும். குண்டலி சத்தியை மூலக் கனலால் வெதும்பி எழும்பச் செய்து தடையாகவுள்ள மூன்று கிரந்திகளையும் பேதித்துப் பிரமரந்திரத்தில் உள்ள பராசத்தியுடன் கூட்டுவித்தல் வேண்டும்.*

*சுழுமுனை நாடியானது வீணாதண்டம் என்னும் முதுகந் தண்டோடு பிணைந்திருக்கும்; இவ்வுடம்பிலுள்ள மூன்று கிராந்திகளையும் அது வியாபித்து நிற்கும். சோம சூரியாக்கினி என்னும் மூன்று மண்டலங்களும் யோகிக்கு ஒத்து நிற்பனவாம். குண்டலி சத்தியை கிரந்திகளைத் தாண்டி பிரமரந்திரம் வரையிற் கொண்டு போகப் பேரின்பம் விளையும் என்பார். முதல்வனை ஏன்று எய்தி - சிவப்பொருளைத் திருவருள் முகமாக அடைந்து, நான்று நலஞ்செய் இளங்கொடி என்றது சுழுமுனையின் வாயிலை முகத்தால் மூடிக்கொண்டு நித்திரை செய்யும் குண்டலி சத்தியை என்க.*

*இந்தக் குண்டலி சத்தி கந்தத் தானத்தின் மேல் பாகத்தில் யோகிகளுக்கு மோட்சத்தின் பொருட்டாகவும் மூடர்களுக்குப் பந்தத்தின் பொருட்டாகவும் நித்திரை செய்கின்றது. நான்று நலம் செய் - கலந்து இன்பத்தைச் செய்யும்.*

*இதனால், முப்பரங்களுள் மண்டல பரம் பயன் தருமாறு கூறப்பட்டது.*

*2411. **தெளிவுரை :-** மண்டல பரம் துவாதசாந்தத்தில் நிற்றலால் ஏனைய கடவுளர்க்கெல்லாம் மேலான கடவுளாயும், அங்கே திருநடனம் புரிவதால்*

**2411.** மன்று நிறைந்தது மாபரம் ஆயது
நின்று நிறைந்தது நேர்தரு நந்தியும்
கன்றை நினைந்தெழு தாய்என வந்தபின்
குன்று நிறைந்த குணவிளக் காகுமே. 2

**2412.** ஆறாறு தத்துவத் தப்புறத் தப்பரம்
கூறா வுபதேசம் கூறில் சிவபரம்
வேறாய் வெளிப்பட்ட வேதப் பகவனார்
பேறாக ஆனந்தம் பேணும் பெருகவே. 3

---

*மன்றில் நிறைந்ததாயும், தனது சத்தியால் உடம்பெங்கும் நிறைந்து விளங்குவ தாயும், இன்னும் நேரே எழுந்தருளிவந்து அருள் புரியும் குருவடிவாயும் உள்ளது. அந்தப்பரம் உயிர்களைக் கன்றை நினைந்து ஓடிவரும் தாயைப் போல நினைந்து எதிர்வந்து அருள் புரிந்த பின்னர், குடத்துள் இருந்த விளக்குப்போல இருந்த அது, குன்றின் மேல் விளங்கும் விளக்குப் போல இனிது விளங்கி நிற்கும்.*

***குறிப்புரை :-*** *"மாபரம் ஆயது" என்பதை முதலிற் கொள்க. ஏனைய கடவுளராவார் மூலாதாரம் முதலிய ஆதாரங்களில் விளங்குபவர்கள். 'நிராதாரம்' எனப்படுகின்ற ஏழாம் தானத்தில் விளங்கும் கீழாய் அடங்குவதே "நந்தி" என்றது 'குரு' என்றவாறு. "நந்தியும்" என்னும் உம்மை சிறப்பு. இதன்பின் 'ஆம்' என்பது எஞ்சி நின்றது. 'வருதல், ஆதல்' என்பவற்றிற்கு 'அது' என்பது தோன்றா எழுவாயாய் நின்றது. நன்மையை, 'குணம்' என்றல் வழக்கு. நன்மை, இங்கு இனிது விளங்கி நிற்றல்.*

*"கன்றை நினைந்தெழு தாய்என வந்த கணக்கது ஆகாதே"*

*- தி.8 திருப்படையாட்சி - 2*

*என்னும் திருவாசகத்தையும் காண்க.*

*இதனால், மண்டல பரத்தின் பெருமையும், அஃது உயிர்கட்கு அருள் புரியுமாறும் கூறப்பட்டன.*

***2412. தெளிவுரை :-*** *பரம்பொருள், 'முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பாற்பட்டது' என உணரப்படும் பொழுது 'தத்துவ பரம்' எனப்படும். பொருளால் வேறாகாமை பற்றி முன்மந்திரத்தில், 'மண்டல பரமே குருவாய் வந்து உணர்த்துவது' எனக் கூறப்பட்டதாயினும் அவ்வாறு வந்து உணர்த்துவது தத்துவ பரமே. பரம் பொருள் குருவாகி வந்து உணர்த்தியது சைவ வரலாற்றில் அன்றிப் பிற சமய வரலாற்றில் காணப்படாமையால், குருவாகி வந்து உணர்த்தும் தத்துவ பரம் சிவபரமே என்பது தெளிவு. அது செய்த உபதேசமும் சொல்லாமற் சொன்ன உபதேசமே. அஃதாவது, சின் முத்திரையால் உணர்த்திய உபதேசமே.*

**2413.** பற்றறப் பற்றில் பரம்பதி யாவது
பற்றறப் பற்றில் பரன்அறி வேபரம்
பற்றறப் பற்றினைப் பற்றவல் லோர்கட்கே
பற்றறப் பற்றில் பரம்பரம் ஆகுமே. **4**

---

*அந்த உபதேச பரத்திற்கு வேறாய்வெளிப்பட்ட, வேதாகமங்களை அருளிச்செய்த சதாசிவ நாயனார் வெளிப்பட்டது. முற்கூறிய கூறா உபதேசம் இனிது தெளியப்பட்டுப் பயன் தருதற் பொருட்டாம். அவ்விரு மூர்த்திகளது செயலாலும் பயன்கொள்பவரால் அச்செயல்கள் மேலும் மேலும் இன்பம் பெருகும்படி நன்கு பேணப்படும்.*

***குறிப்புரை :-*** *"ஆறாறு தத்துவம்" என முன்னர்க் கூறினமையால், "அப்பரம்" என்றது, தத்துவபரம் ஆயிற்று. "கூறில்" என்னும் எச்சம். "கூறிற்றாயின்" எனத் தெளிவின்கண் வந்தது. 'அது சிவபரமே' எனச் சுட்டு வருவித்து முடிக்க. 'தத்துவ பரம் குருவாகிவந்து உணர்த்துமாயின், சதாசிவநாயனார் வேதாகமங்களை அருளிச் செய்தல் எதற்கு' எனனும் ஐயத்தை நீக்குதற்கு. "பேறாக" என்றார். பேறு பயன். ஆக - உண்டாதற் பொருட்டு. தென்முகக் கடவுள்பால் சென்று கேட்ட சனகாதி நால்வர் வேதாகமங்களை ஓதியுணர்ந்தபின், அவற்றின் பொருளைத் தெளிதற் பொருட்டுக் கேட்டாராயினும், பொதுவாக குரு உபதேசத்தைக் கேட்ட பின்பு அதனைத் தெளிதற்குப் பயன்படுவனவே வேதாகமங்கள் என்பது பற்றி. "பேறாக" என்றார். எனவே, தென்முகக் கடவுள் வரலாற்றை எடுத்துக்காட்டியது, முன் மந்திரத்தில், "நேர்தரு நந்தியும் ஆம்" என்றதற்கு அனுபவம் காட்டியதேயாம். வேதாகமங்களின் வழி மேலும் மேலும் சிந்தித்த பொழுதே குருவுபதேசம் நிலைபெற்றுப் பயன் தருவதாம். அதனையே, "பேணும்" எனக் கூறினார். பேணும் - பேணப்படும்.*

*இதனால், முப்பரங்களில், 'தத்துவபரமாவது இது' என்பதும், அஃது உயிர்கட்கு அருள்புரியுமாறும் கூறப்பட்டன.*

***2413. தெளிவுரை :-*** *பரம்பொருள் உயிர்களைப் பாதுகாக்கும் பதியாகி நிற்றல், அவ்வுயிர்கள் வேறு பற்று எதுவும் இன்றி, அனைத்துப் பற்றுக்களையும் விடுத்து, அந்தப் பரம் பொருள் ஒன்றையே பற்றி நிற்கும் பொழுதுதான், (இப்பாதுகாவல், பிறவிக் கடலினின்றும் எடுத்துக் காக்கும் காவல்) பிற பற்றுக்களை யெல்லாம் விடுத்துப் பரம் பொருளையே பற்றுதல், குரு உபதேசத்தைச் சிந்தித்துத் தெளிதலால் உண்டாகும். அதனையே,*

> *ஓர்த்துள்ளம் உள்ள துணரின், ஒருதலையாப்*
> *பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. - திருக்குறள் - 357*

*எனத் திருவள்ளுவர் கூறினார்.*

**2414.** பரம்பர மான பதி பாசம் பற்றாப்
பரம்பர மாகும் பரம் சிவம் மேவப்
பரம்பர மான பரசிவா னந்தம்
பரம்பர மாகப் படைப்ப தறிவே. **5**

---

*அங்ஙனம் வேறு பற்று அறப் பரம்பொருளையே பற்றும் பொழுது அந்தப் பரம்பொருளின் ஞானமே உயிரினது ஞானமாகிப் பின்பு, அதுவே பரம் பொருளும் ஆகிவிடும். பரம்பொருளாகிய பற்றப்படும் பொருளை இவ்வாறு பற்ற வல்லவர்கட்கு அப்பற்றுதலின் கண், பரம் பொருள் பரம்பொருளாகவே வெளிப்படும்.*

***குறிப்புரை :-*** *"பரம்பதியாவது" என்பதை முதலிற் கூட்டுக. மூன்றாம் அடியில் "பற்று" என்பது, முதனிலைத் தொழிற்பெயராய், ஆகுபெயரால், பற்றப்படும் பொருளைக் குறித்தது. ஈற்றடியிலும் "பற்று" என்பது முதனிலைத் தொழிற்பெயராய், ஏழாம் வேற்றுமை ஏற்றது. பரம் பரம் ஆதல் - உண்மையாக வெளிப்பட்டு விளங்குதல்.*

*இதனால், 'தத்துவ பரத்தை அதன் உபதேசத்தின் வழியே சென்று அடைதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

***2414. தெளிவுரை :-*** *பாசங்களோடு சிறிதும் தொடர்பின்றி, மேலானதற்கும் மேலானதாய் நிற்கின்ற அதுவே மிகமேலான பரம்; பதி. (என்றது 'பசு பரம்' என்றபடி. பாசங்களின் மேலானது பசு; அது பரம். அதற்கு மேலானது பதி; அது பரம்பரம் 'தற்பரம்' என்றும் சொல்லப்படும். தற்பரம் தனக்கு மேலானது. 'தன்' என்பது ஆன்மா தற்பரம், பரமான்மா 'தத்துவ பரம்' என்பது தத்துவங்களைக் கடந்த நிலையை மட்டும் குறிப்பது. 'பசு - பரம்' என்பது, கன்மம் திரோதாயி இவற்றிற்கு மேல் பசு இவற்றையும் கடந்தது பசுபரம்) இவ்வாறான 'பரம்' என்றும் 'சிவம்' என்றும் சொல்லப்படுகின்ற அந்தப் பொருளை உயிர், மாயா காரியப் பொருள்களில் எந்த ஒன்றினின்றும் அடையப்படாத பேரானந்தத்தையுடையதாகும். அந்த ஆனந்தத்தைப் பொருளாகக் கொண்டு முயன்று அடையும் அறிவே 'அறிவு' என்று சொல்லப்படும்.*

*எனவே, பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களும் அநாதியாம். பதிப்பொருளைப் பாசம் பற்றாது. பசு, பாசத்தைப் பற்றும். பதிப்பொருளையும் பற்றும். பதி சத்துப்பொருள். பாசம் அசத்துப்பொருள். பசு சதசத்துப் பொருள். பாசத்தினின்று நீங்கிய ஆன்மா முத்தான்மா, எல்லாவற்றினும் அதுவதுவாய் நிற்கும் தன்மையுடையது ஆகலின் சார்ந்ததன் வண்ணமுடைத்தாம். பாசம் பற்றாத பரமாகிய ஆன்மா பதியின் பற்றாகப் பரம்பரமானது. பரம்பரமாவது வியாபக அறிவைப் பெற்று முற்றுணர்வுடையனாய் மலவாசனை தீர்ந்து பேரின்ப வாழ்வைப் பெற்றது. பதி பற்றாகச் சிவமேவப் பெற்றது. "அந்தமிலா ஆனந்தம்*

**2415.** நனவில் கலாதியாம் நால்ஒன் றகன்று
தனிஉற்ற கேவலந் தன்னில் தானாகி
நினைவுற் றகன்ற அதீதத்துள் ஞேயந்
தனையுற் றிடத்தானே தற்பரம் ஆமே. **6**

---

*அணிகொள்தில்லை கண்டேனே" எனவும், "அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேன் யாது நீ பெற்றதொன்றென்பால்" எனவும், "கருப்பஞ் சாற்றினும் அண்ணிக்கும் காண்மினே" எனவும், "உள்ளத்தேறலமுத வொளிவெளி, கள்ளத்தேன்கடி யேன் கவலைக் கடல், வெள்ளத் தேனுக்கெவ்வாறு விளைந்ததே" எனவும் வரும் திருவாக்குக்களானு முணர்க.*

*சிவபெருமான் ஆனந்த குணமுடையவர். சிவானந்தத்தை சீவான்மா அடைந்து ஆனந்த மயமாய், சிவானந்த மயமாய், பரசிவானந்தமாய் விளங்குவான் என்க.*

***2415. தெளிவுரை :-** சகலத்தில் புருவ நடுவிலே நிகழும் 'கேவல சாக்கிரம், சகல சாக்கிரம்' என்னும் இருவகைச் சாக்கிரத்துள், வித்தியா தத்துவங்களில் கலை முதலிய ஐந்து தத்துவங்களும் செயற்படாது ஒடுங்கிய நிலையில் ஆன்மா உயிர்ப்பும் இன்றித் தனித்துக் கிடக்கும் ஒருநிலையை அடையும். அந்நிலையும் ஒருவகைக் கேவலமே. அந்நிலையில் கருவிகள் இல்லாவிடினும், ஆணவம் உள்ளது. கருவிகள் ஒடுங்கிய நிலையில் இந்தக் கேவல நிலை உண்டாகாமல் நீங்கித் திருவருள் அறிவிக்க அறிதலாகிய அறிவினைப் பெற்று அறிகின்ற சாக்கிரம் முதலியவைகளை அடைந்து, முடிவாக அதீதத்தை எய்தி, அதன்கண் விளங்குகின்ற ஞேயத்தில் அழுந்தும் பொழுதே ஆன்மா மேற்கூறிய பசு பரமாகிய தற்பரமாய் நிற்கும். கலாதி - கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்ற ஐந்தையும்.*

***குறிப்புரை :-** நாலொன்று - ஐந்து. இரண்டாம் அடி, 'சகலத்திற் சகலம்' என்றும், 'மகா சகலம்' என்றும் சொல்லப்படுகின்ற மத்தியாலவத்தையில் நிகழும் அதீதத்தின் இயல்பைக் கூறியது. "நினைவுற்று அகன்று" என்பதை 'அகன்று நினைவுற்ற' என மாற்றிக் கொள்க. அகலுதல், மேற்கூறிய அதீதத்தை, நினைவுறுதல் - அறிவு பெறுதல். இவ்விடத்தில் அது திருவருளால் நிகழ்வதாகும். 'இதுவே நின்மலாவத்தை' என்பதை மேலெல்லாம் கூறியவாற்றான் அறிக. 'தான்' என்றது ஆன்மாவை. 'தற்பரமே பசுபரம்' என்பது முன்மந்திர உரையில் கூறப்பட்டது.*

*இதனால், 'முன்மந்திரத்திற் கூறப்பட்ட நிலையை ஆன்மா அடைதற்கு வழி நின்மலாவத்தை' என்பது கூறப்பட்டது.*

**2416.** தற்கண்ட தூயமும் தன்னில் விலாசமும்
பிற்காணும் தூடணந் தானும் பிறழ்வுற்றுத்
தற்பர கால பரமும் கலந்தற்ற
நற்பரா தீதமும் நாடக ராதியே. 7

---

***2416. தெளிவுரை :-*** *ஆன்மா தன்னைத்தான் வேறு 'தத்துவங்கள் வேறு' என உணர்தல் ஆன்ம தரிசனமாம். அதன்பின், கருவிகள் நீங்கிய பின்பும் தனக்கு அறிவு நிகழக் காணுதலால் 'எஞ்ஞான்றும் தனக்கு அறிவைத் தருவது சிவமே' என உணர்ந்து சிவனது அறிவையே தனது அறிவிற்குப் பற்றுக் கோடாக உணர்ந்து, அவன் அறிவினாலே அவனை நோக்குதல் சிவதரிசனமாகும். இவ்விடத்தில் ஆன்மசுத்தியும் ஓரளவு உடன் நிகழும். பின்பு அங்ஙனம் உணரப்பட்ட சிவனிடத்தில் தான் அடங்கி அவனேயாய் நிற்றல் சிவயோகமாகும். இந்நிலையில் ஆன்ம சுத்தி நிறைவுறும். அதனால், பின்பு பிரபஞ்சம் காட்சிப்படினும் ஆன்மா அதனைப் பற்றாது ஒதுக்கிவிடும். இம்மூன்று நிலைகளையும் தாண்டிய பொழுது, காலத்தைக் கடந்து நிற்றலால், 'கால பரம்' என்றும், ஆன்மாவைக் கடந்து நிற்றலால், 'தற்பரம்' என்றும் சொல்லப்படுகின்ற பசுபரம் தோன்றும். பின் அதனோடு ஒற்றுமைப்படுதல் நின்மல துரியாதீதமாகும். இஃது இம்மையில் அம்மையாம் ஆன்ம லாபமாகும். இவற்றிற்குப் பின் தேகம் நீங்கப் பரசிவத்தில் கலத்தல் பரதுரியாதீதமாகும். இவற்றையெல்லாம் தெரிந்துணர்தல், அகரத்தை முதலாக உடைய எழுத்துக்களால் ஆகிய நூல் களினாலேயாம்.*

***குறிப்புரை :-*** *தூயம் - தூய்மை. நன்மை, வன்மை முதலிய சில பண்புப் பெயர்கள் மையீறு பெறாது, 'நலம், வலம்' என்றாற் போல அம்மீறு பெற்று வருதல் பற்றி. 'தூய்மை' என்பதை, 'தூயம்' என்றார். இது நாயனாருடைய தனித்ததோர் ஆட்சி. "கண்டதூய்மை" என்பது 'கண்டதனால் வரும் தூய்மை' எனப்பொருள் தந்து நின்றது. ஆன்ம தரிசனத்தையே, "தற்கண்ட" என்றும், ஆன்ம சுத்தியின் முதல் நிலையையே "தூய்மை" என்றும், அதன் முடிநிலையை "தன்னில் விலாசம்'' என்றும், சுத்தி பெற்ற ஆன்மாப் பின்னர் பிரபஞ்சத்தால் தாக்குண்ணாமையே "தூடணம்" என்றும் கூறினார். விலாசம் - விளக்கம். தன்னில் விலாசம் - சிவத்தில் வியாப்பியமாய் மாசுபற்றா திருக்கை. பிறழ்தல் - மாறுதல். அஃது இங்கு நீங்குதல் மேற்று. 'ஆன்ம சுத்தியையும் கடந்தது என்றமையால், பின்னிரண்டடிகளில் ஆன்ம லாபம் கூறப்பட்டதாம். "பரம்" என்றது அதன் தோற்றத்தை. "கலந்து" என்றது, 'கலந்தபின்' என்றபடி. 'கலந்தபின்' என்றதனால், கலத்தலும் பெறப்பட்டது. 'கலந்த பின் உளதாம் பராதீதம்' என்க. இதனை "அற்ற அதீதம்" என்றது, 'தேகம் நீங்கிய பின் நிகழும் அதீதம்' என்றபடி. நின்மலா வத்தையும், பராவத்தையும் அநுபவத்தில் சொல்லிறந்து நிற்பனவாயினும்,*

*அவற்றை முதற்கண் நூல்களால் உணர்ந்த வழியே முயற்சி கூடும் என்றற்கு "நாடு அகராதி" என்றார். நாடு, முதனிலைத் தொழிற்பெயர். அகராதி, அடையடுத்த ஆகுபெயர். 'அகராதியால்' என உருபு விரிக்க.*

*இதனால், 'முப்பரங்களில் தற்பரமாகிய பசுபரத்தை நூல்கள் வழியாக நுண்ணிதின் உணர்ந்து அடைதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

## 21. பர லக்கணம்

*முன் அதிகாரத்தில், 'முப்பரம்' எனப் பரத்தைக் கூறினமையால், அதுபற்றி அடுத்துப் பரலக்கணம் கூறுகின்றார். அஃதாவது, பரம்பொருளின் இயல்பு 'பதியியல்பு' எனினுமாம். இவ்வதிகாரம் பதினான்கு மந்திரங்களையுடையது.*

**2417.** **அதீதத்து ளாகி அகன்றவன் நந்தி**
**அதீதத்து ளாகி அறிவிலன் ஆன்மா**
**மதிபெற் றிருள் விட்ட மன்னுயிர் ஒன்றாம்**
**பதியிற் பதியும் பரவுயிர் தானே.** **1**

---

*2417. தெளிவுரை :- சிவன் நின்மல துரியாதீதத்தில் ஞேயமாய் வெளிப்பட்டுப் பின்பு அதனையும் நீங்கி நிற்பான். (அஃதாவது, 'போக்கியப் பொருளாகாது நிற்பான்' என்றபடி. அவன் போக்கியப் பொருளாதல் பராவத்தைகளிலாம்) அந்நிலையில் உயிர் தற்போதத்தை இழந்து நிற்கும். ஞானத்தைப் பெற்று, அஞ்ஞானத்தினின்றும் நீங்கிய உயிரே, ஒன்றாகிய பதிப் பொருளில் அழுந்தி அதுவாகும். அங்ஙனம் ஆய பொழுது அந்த உயிரே 'பரமான்மா' என்னும் பெயரைப் பெறும்.*

*நின்மல துரியாதீத நிலைக்கண் அறிந்து அநுபவிக்கப்படும் பொருளாயுள்ள நந்தி என்னும் நாமத்தையுடைய சிவபரம்பொருள் வியாபக முடையவன், ஆன்மா அறிவு முதலியன இன்றி மலத்தால் மறைக்கப்பட்டுத் தொழிற்பாடின்றிக் கிடக்கும் நிலை அதீதம்; ஆதலின் அறிவின்றிக் கேவலாதீதத்தில் ஆன்மா அழுந்தி நிற்பன் என்க.*

*மதி பெற்று இருள் விட்ட மன்னுயிர் - அறிவு பெற்று இருளினின்று நீங்கிய நிலை பெற்ற ஆன்மா, மதி பெறுதலாவது; கேவலாதீதத்தில் அறியாமையோடு கூடிக் கருவிகளின்றிக் கிடக்கும் ஆன்மா அந்நிலையினின்று சிறிது எழுச்சி உண்டாதல் துரியம். எழுச்சி உண்டாகியும் துன்பம் தோன்றாதிருத்தல் சுழுத்தி. துன்பந்தோன்றுதல் சொப்பனம். துன்பத்திற்கு வருந்துதல் சாக்கிரம். இவ்வாறு கேவலத்தில் ஐந்தவத்தையும் காண்க.*

*இச்சா ஞானக் கிரியா சத்திகள் இருத்தலால் கருவிகள் இல்லாத நிலையில் துன்பம் தோன்றுதலும் துன்பத்துக்கு வருந்துதலும் கூடும். கருவிகளோடு கூடின நிலையில் உண்டாகின்ற வருத்தத்திற்கும், கருவிகளோடு கூடாநிலையில் உண்டாகும் வருத்தத்திற்கும் உள்ள வேறுபாடுகள்; காரணந்தெரிந்து வருந்துதலும், காரணந் தெரியாது வருந்துதலுமாகும்.*

*இதனை ஓர் உதாரணத்தில் வைத்துக் காணலாம். சிசுப் பருவத்தில் பசியினால் வருந்தும் வருத்தமும், முதிர்ந்த பருவத்தில் பசியினால் வருந்தும்*

*வருத்தமும் போலாம். சிசு துன்பத்திற்கு ஆற்றாது வருந்துமே அன்றி அத்துன்பம் பசியினால் வந்தென்றறியாது; பருவம் வந்தபின் துன்பமும் துன்பத்திற்குக் காரணமும் அறியப்படும். இவ்வாறே கருவிகளோடு கூடாத நிலையினையும், கூடின நிலையினையும் கண்டு கொள்க.*

*ஆன்மா ஆணவமலத்தோடு கூடிநிற்கும் நிலையே கேவலமாம்; அது தன்னுண்மை.*

*இனி, கேவலாவத்தையைப் பொருந்தி நின்ற ஆன்மா உடம்பினைப் பெற்றும், கலாதி தத்துவங்களோடு கூடியும், தருமம் முதலிய புத்தி குணங்களைப் பொருந்தியும், மனம் முதலிய கருவிகளைக் கூடியும், இச்சையுற்றும், வாக்குக்களால் நிகழும் அறிவுற்றும், செயல்களைப் பொருந்தியும், சத்தாதி விடயங்களில் விருப்பம் செய்தும், போகத்தை அனுபவித்தும், பிறப்பு இறப்புக்களில் புகுந்து திரிந்தும், ஏகதேசியாகியும் சகலாவத்தையில் இப்பத்துக் காரியமும் உடையனாய்ச் சீவித்து நிற்கும்.*

*கலாதியைப் போக காண்டம் என்றும், புத்தியாதியைப் போக்கிய காண்டம் என்றும் கூறுவர்.*

*ஆன்மா கருவிகளுடன் கூடிய நிலையே சகலமாம்.*

*இனி, சகலாவத்தையில் நின்ற ஆன்மா அந்த நிலையை விட்டு இருவினையொப்பு வந்து சிவசத்தி பதியப் பெறுதலால் குருவருளைப் பெற்று, ஞானயோகத்தைப் பொருந்தி, மும்மலங்களையும் நீக்கி, விடய அனுபவத்திற்கு ஏதுவாகிய விருப்பு வெறுப்பு என்னும் பழைய வாதனையும் நீங்கி சிவஞானத்தைப் பெருக்கிச் சிவபெருமானுடைய திருவருளை அடைந்து நிற்கும்.*

*இருவினையொப்பால் சத்தாதி விடயத்தைப் பற்றிய செயல் நீக்கமும், சத்தி பதிதலால் கருவிகளின் கூட்ட நீக்கமும், குருவருள் பெறுதலால் தானஞ் செய்தல் காரணமாக உடம்பு நீக்கமும், ஞானயோகம் பெறுதலால் பிறப்பு இறப்பு நீக்கமும், மலம் அறுதலால் ஏகதேசத்தன்மை நீக்கமும், விருப்பு வெறுப்பு நீக்கத்தால் விடயானுபவ நீக்கமும், சிவஞானப் பெருக்கால் விடயஞான நீக்கமும் உண்டாம். விடயஞானம் என்றமையால் விடய இச்சை செயல்களும், கருவி என்றமையால் போக காண்டமாகிய கலாதிகளும் நீங்கும் என்க.*

*சத்திநிபாதத்துக்கு மூலம் மலபரிபாகம் இருவினையொப்புக்கு மூலம் சிவபுண்ணியமாம்.*

*இருள் - அறியாமை. இருண்மலம் - ஆணவமலம். பரஞானத்தைப் பெற்ற பொழுதே சிவம் பிரகாசிக்கும்.*

*இருள் விட்ட மன்னுயிர் என்றது ஆணவமல சத்தி வறுத்த வித்துப்போல் நீங்க, நிலைபெற்ற ஆன்மா என்க. மெய்ஞ்ஞானத்தால் மலம் சிறிது சிறிதாக*

**2418.** ஆதியும் அந்தமும் இல்லா அரும்பதி
சோதி பரஞ்சுடர் தோன்றித் தோன்றாமையின்
நீதிய தாய்நிற்கும் நீடிய அப்பர
போதம் உணர்ந்தவர் புண்ணியத் தோரே. 2

---

*நீங்கப் பெற்று, சிவம் பூரணமாய்ப் பிரகாசித்த விடத்து மலம் பற்றறக் கழியும். இங்கே கூறியது மலம் பற்றறக் கழிந்த ஆன்மாவையேயாம்.*

*ஒன்றாம் பதியில் என்றது பதிப்பொருள் ஒன்றே, இரண்டில்லை; வேதம் ஏகம் என்று கூறியது. அதற்குப் பொருள் ஒன்று என்பதேயாம்; வேறு பொருள்படாது. ''ஒன்றென்றதொன்றே காண் ஒன்றே பதி''; ''வேதம் ஒன்றென்றதற்குப் பொருள் ஒன்றென்பதேயாம் வேறு பொருள்படாது. அதற்குத் தாற்பரியம் பதிப்பொருள் ஒன்றே; இரண்டில்லை என்பதாம்" (சிவஞான போதச் சிற்றுரை) அதிகாரஞ் செய்து நிற்பது பதி. அதிகாரத்தின் ஒழிந்து தன்னியல்பில் நிற்பது சிவமாம்.*

*பரவுயிர் தானே பதியும் - முத்திக் காலத்திலே எண்குணங்களால் நிறைந்த சீவன், சிவமாந் தன்மைப் பெருவாழ்வுற்று இவ்வியல்பிற்று எனப் பிரித்தறிய வாராமையின் பேரின்ப சுகத்தில் அழுந்தும் என்றவாறு.*

*ஆனந்த சொரூபமாய் நிற்பன் என்க.*

*மற்றும், ஆனந்த சொரூபமாய் நிற்கச் செய்தல் நின்மல துரியாதீதம்; இது சிவபோகம் எனப்படும். "உயிர் தானும் சிவாநுபவம் ஒன்றினுக்கு முரித்தே" என்றருளினார் அருணந்தி தேவநாயனார்.*

***2418. தெளிவுரை :-** **பதியாகிய பரம்பொருள் தோற்றமும் அழிவும் இல்லாதது, வியாபகமான பேரொளியாயும், அப்பொழுதே உயிர்க்குயிராய்க் கலந்து நிற்கும் மிக நுண்ணிய விளக்காயும் உள்ளது. அஃது ஏனைப் பொருள்கள் போல எல்லார்க்கும் இனிது விளங்கித் தோன்றாது, ஒரு சிலர்க்கே விளங்கித் தோன்றுவதாய் நின்றே, கோட்டம் இன்றி, நடுவு நிலையதாயே உள்ளது. காலத்தைக் கடந்ததாகிய அந்தப் பரம்பொருளின் இயல்புகளை உணர்ந்தவர் தவம் செய்தவராவர்.***

***குறிப்புரை :-** 'ஆதியும் அந்தமும் இல்லாதது' என வேறு கூறற்பாலதனை ஒன்றாக உடம்பொடு புணர்த்துக் கூறினார். "அரும்பதி" என்பதனை முதலிற் கொள்க. "பரஞ்சுடர்" என்பதில் பரம் - மிகு நுண்மை. பரபோதம் - பரத்தை உணரும் போதம். புண்ணியம், சிவபுண்ணியம். இதுவே தவம் ஆதல் அறிக.*

***இதனால், பரலக்கணம் மற்றும் சில கூறப்பட்டன.***

**2419.** துரியங் கடந்து துரியாதீ தத்தே
அரிய இயோகங்கொண் டம்பலத் தாடும்
பெரிய பிரானைக் பிரணவக் கூத்தே
தெரியவல் லார்க்குத் துரிசில்லை தானே. 3

**2420.** செம்மைமுன் னிற்பச் சுவேதம் திரிதல்போல்
அம்மெய்ப் பரத்தோடு அணுவன் உள்ளாயிடப்
பொய்ம்மைச் சகம்உண்ட போத வெறும் பாழில்
செம்மைச் சிவமேரு சேர்கொடி யாகுமே. 4

---

***2419. தெளிவுரை :-*** *யோகாவத்தையில், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை, பிரமரந்திரம், துவாதசாந்தம் என்பன முறையே சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் அவத்தைகட்குரிய தானங்களாகும். அவற்றுள் துரியத்தானமாகிய பிரமரந்திரத்தையும் கடந்து, அதீதத் தானமாகிய துவாத சாந்தத்தில், அரிதாகிய அம்பலத்தில் பொருந்தி ஆடுபவன் பெரிய பெருமான்; மகாதேவன். அந் நடனத்தைக் காணுதல் பிரணவ கலைகளின் வழியாகவே கூடும் ஆகையால், அவ்வழியால் அக்கூத்தில் அவனைக் காணவல்லவர்க்கு மலக்குற்றங்கள் இல்லையாகும்.*

***குறிப்புரை :-*** *துரியம், துரியாதீதம் என்பன அவற்றிற்குரிய இடங்களைக் குறித்தன. "அம்பலத்து" என்பதை, "அரிய" என்பதன் பின்னர்க் கூட்டுக. அரிய அம்பலம் - சிதாகாசம்; "இயோகம்" என்பதில் இகரம் விரித்தல். யோகம் - கூடுதல். சேர்தல். பிரணவக் கூத்து - பிரணவத்தின் வழியாக அடையப்படும் கூத்து. 'கூபத்தே' என்பது பாடம் அன்று. ஏகாரம் பிரிநிலை. அதனால் பிற வழிகளால் அடைதல் பிரிக்கப்பட்டது. "கூத்தே" என்பதில் ஏழாவது விரிக்க.*

*இதனால், 'பரபோதத்தால் உண்மையாக அடையத்தக்க பரம்பொருள், பிரணவ யோகத்தால் பொதுவாக - ஒருவாறாக அடையப்படும்' என்பது கூறப்பட்டது. அடைந்தவர் பெறும் பயனும் உடன் கூறப்பட்டது.*

***2420. தெளிவுரை :-*** *மாணிக்க மணியின் செந்நிறம் முன் வந்து நின்ற போது, பளிங்கின் வெண்ணிறம் அந்தச் செந்நிறமாகவே திரிந்து காணப்படுதல் போல, வெளிப்பட்டு நின்ற அந்த நிலையான பரம்பொருள் முன்வந்து நின்ற பொழுது ஆன்மாத் தன்வண்ணம் அப்பரம்பொருள் வண்ணமேயாக, அதனுள் அடங்கி நிற்கும். அப்பொழுது அதுகாறும் நிலையற்ற பிரபஞ்சத்தை நுகர்ந்து வந்த ஆன்ம ஞானம் பாச ஞானமாய் இருந்த நிலை அற்றொழியும். அவ்வொழிவில் சிவம் மேருமலையாய் நிற்க, ஆன்மா அந்த மேருமலையை அடுத்த காக்கையாய் இருக்கும்.*

***குறிப்புரை :-*** *'சிவமேயாய் நிற்கும்' என்றபடி. "கனக மலையருகேபோயின*

**2421.** வைச்ச கலாதி வருதத் துவம்கெட
வெச்ச இருமாயை வேறாக வேறுத்து
உச்ச பரசிவ மாம்உண்மை ஒன்றவே
அச்சம் அறுத்தென்னை ஆண்டனன் நந்தியே. 5

---

*காக்கையும் அன்றே படைத்தது பொன் வண்ணமே" (தி.11 பொன்வண்ணத்தந்தாதி 100) என்பதனால் இவ்வுவமப் பொருளை உணர்ந்து கொள்க. "செம்மை, சுவேதம்" என வாளா கூறினாராயினும், ''மாணிக்கத்தினது செம்மை'' என்பதும், "பளிங்கினது வெண்மை" என்பதும் குறிப்பால் கொள்ளக் கிடந்தன. 'மெய், பொய்' என்பன நிலை நிலையாமைகளைக் குறித்தன. 'போதப்பாழ்' என இயையும். செம்மை - திரிபின்மை. சிவ மேரு, உருவகம். கொடி - காக்கை. "ஆகும்" என்றதும் உருவகத்தையே தோற்றி நின்றது.*

*இதனால், 'பரம்பொருள் உயிர்களைத் தன்வண்ணம் ஆக்கும்' என்பது கூறப்பட்டது.*

***2421. தெளிவுரை :-*** ***எனக்குக் குருவாகிய நந்திபெருமான் சிவபெருமானால் எனக்கென என்னோடு கூட்டி வைத்த கலை முதல் நிலம் ஈறாக வருகின்ற தத்துவங்கள் எல்லாம் தம்தன்மை கெட்டுச் சிவகரணங்களாகும் படியும், பின்பு அத்தத்துவங்கட்கு முதலாகிய அசுத்தமாயை, அதன் காரியங்களைச் செலுத்தி நிற்கின்ற கருவிகட்கு முதலாகிய சுத்தமாயை ஆகிய துன்பத்தைத் தரும் இரு மாயைகளும் என்னைப் பொறுத்தமட்டில் காரண மாதற்றன்மை அடியோடு கெடும்படியும் செய்து, அதனால், யான் தடத்தசிவத்திற்கு மேலேயுள்ள சொரூபசிவத்தைத் தலைப்படும்படி, 'இனியும் பிறவி வருமோ' என்னும் அச்சம் நிகழாதவாறு என்னை ஆட்கொண்டருளினார்.***

***குறிப்புரை :-*** ***கலாதி வருதத்துவம் கெட - அநாதி கேவலத்தில் ஆன்மாக்களெல்லாம் ஆணவ மலத்தால் மறைப்புண்டு கிடக்கும் மலத்தின் சத்திகள் பல. ஆதலால் மறைப்பும் பல வேறு வகைப்படும். அங்ஙனம் மறைப்புண்டு கிடக்கும் ஆன்மாக்களுக்கு மலநோயைத் தீர்க்கச் சிவபெருமான் திருவுளங் கொண்டருளுவர். அவ்வாறு மலநோயைத் தீர்க்கத் திருவுங் கொண்டருளுங் காலத்துக் கன்ம மலம் மாயா மலங்களைக் கூட்டாமலே விசேட ஞானத்தால் ஆணவமலத்தை நீக்கியருளுவர். விசேட ஞானமாவது பதிஞானம்; அது பாசஞானம், பசுஞானங்களின் மேம்பட்டதாகலின் விஞ்ஞானம் எனப்படும். இப்பதிஞானத்தை இறைவன் அறிவினுள் அறிவாய் நின்று உணர்த்துவர். அவ்வாறு உணர்த்துவதற்குக் கலை முதலிய தத்துவங்களால் ஆக்கப்படும் சரீரமும் புவனமும் இன்றியமையாது வேண்டப்படும். ஆகலின், சுத்த மாயா காரியங்களாகிய 'கலாதி தத்துவங்களால் ஆக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்து முத்தி அடைவிப்பர். இவர்கள் விஞ்ஞானகலர் எனப்படுவர். இவ்வான்மாக்கள்***

ஆணவமல பந்தம் ஒன்றே உடையவர்; ஒருமலமுடையர். கலாதி தத்துவங்களைப் பெற்றும் பதிஞானத்தால் அத்தத்துவங்களில் கட்டுப்படாது அசுத்த மாயைக்கு மேல் வைகுவர். எடுத்த பிறவியையன்றி இவருக்கு வேறு பிறவி கிடையாது.

இனி, கன்ம மலத்தைக் கூட்டி ஆணவமலத்தை நீக்குதற்குரிய ஆன்மாக்களுக்கு அசுத்த மாயா காரியமாகிய கலாதி தத்துவங்களால் ஆக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்து, அவ்வசுத்த மாயையின் மத்தியில் வைகும்படி செய்து, பிரளயத்தில் இறைவன் தடத்தத் திருமேனி கொண்டு முன்னின்று அருள் செய்வர். இவருக்குப் பிரளயத்தின் பின் பிறவி இல்லாமையால் பிரளயாகலரெனப் பெயராயிற்று. இவர், ஆணவம், கன்மம் என்னும் இருமலமுடையார்.

இனி, கன்மமலம் மாயா மலங்களைக் கூட்டி ஆணவ மலத்தை நீக்குதற்குரிய மறைப்பினையுடைய ஆன்மாக்களுக்கு அசுத்த மாயாகாரியமாகிய கலாதி தத்துவங்களால் ஆக்கப்பட்ட சரீரத்தைக் கொடுத்துப் பிரகிருதி மாயையில் வைகும்படி செய்து பக்குவம் வந்த காலத்து இறைவன் குருமூர்த்தி யாய்த் தோன்றி நின்று அருள் செய்வர். இவர், ஆணவம் கன்மம் இரண்டுடனே மாயாமலமுடையர் ஆகலின், மயக்கத்தினால் பிரளயம் வரை பல பிறவிகளை எடுத்து, பிரளயத்தில் கலாதிகளுடன் ஒடுங்கிக் கிடந்து புனருற்பவம் ஆகுங்கால் மீண்டுந்தோன்றி இவ்வாறே பிறர்பிறப்பினுட்பட்டு உழல்வர். ஆகலின், சகலர் எனப்படுவர். இவர் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலமுடையார்.

இங்கே ‘வைச்ச கலாதி’ என்றமையால் கலாதிகளுடன் ஒடுங்கிக் கிடந்தமை சித்திக்கும். ‘கலாதிவரு தத்துவம்’ என்றமையால் புனருற்பவம் என்பது சித்தித்தது.

முதலுற்பவம் வருமாறு உணர்த்தாது புனருற்பவம் வருமாறு உணர்த்தினார். “பிரபஞ்சம் அநாதி ஆகலின், அம்முதற்கோடி நம்மனோரான் அறியவாராமை யானும், ஒடுங்கியின் மீள உளதாமாறே ஈண்டு அவாய் நிலையான் உணர்த்த நின்றதாகலானும் அதுவே கூறினா ரென்பது’’. “விச்சதின்றியே விளைவு செய்குவாய்” எனவும், “விண்ணும் மண்ணக முழுதும் யாவையும் வைச்சு வாங்குவாய்” எனவும் ஓதிய திருவாக்கானும் இவ்விரு வேறு வகையும் கண்டு கொள்க” என்று ஸ்ரீமாதவச் சிவஞான யோகிகள் தமது பாடியத்தில் அருளிச் செய்தமையும் கருதுக.

‘கலாதி வரு தத்துவம்’ காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்பன; இவை வித்தியா தத்துவங்கள் ஏழாம். கேவலத்தில் அறிவு இச்சை செயல்கள் விளங்கப் பெறாது நின்ற ஆன்மா, மாயையில் கலக்குண்ட பாகத்தைப் பொருந்திய பொழுது அவ்வறிவிச்சை செயல்கள் பொது வகையால் விளங்கப் பெற்ற காரண சரீரம் உண்டாம்; அது ஆனந்தமயகோசமாம்.

அதன்பின் கலை முதலிய ஐந்து தத்துவங்களாகிய கஞ்சுக சரீரத்தைப் பொருந்தி அறிவு இச்சை செயல்கள் சிறப்பு வகையால் விளங்கப் பெற்றுக் கஞ்சுக

**2422.** என்னை யறிய இசைவித்த என்நந்தி
என்னை யறிவித்து அறி யாத இடத்துய்த்துப்
பின்னை ஒளியில் சொருபம் புறப்படத்
தன்னை யளித்தனன் தற்பர மாகவே. **6**

---

*சரீரத்தைப் பொருந்தும். அது விஞ்ஞானமய கோசமாம்.*

*அதன்பின் குண சரீரத்தைப் பொருந்தி அந்தக் கரணத்தின் தன்மை விளங்கப் பெறும். அது மனோமய கோசமாம்.*

*அதன்பின் சூக்கும சரீரத்தைப் பொருந்தி பிராணவாயுவின் சம்பந்தம் பெற்று விளங்கும்; அது பிராணமய கோசமாம்.*

*அதன்பின் தூல சரீரத்தைப் பொருந்தும். அஃது அன்னமய கோசமாம் என்க.*

*கெட - ஒடுங்க. எனவே, தோற்றிய முறையிலே ஒடுக்கத்தைச் செய்ய; இத்தத்துவங்கள் கெட.*

*எச்ச இருமாயை வேறாக வேரறுத்து - எஞ்சி நின்ற சுத்தமாயை. பிரகிருதி மாயை என்னும் இரண்டு மாயைகளையும் வேறாகச் செய்து பின்பு முளைக்காதபடி வேரினைக் களைந்து; எனவே அடியோடு விட்டு நீங்கி என்றவாறு. இதனை விட்டு நீங்குதல் திருவருள் துணையாகவே செய்தல் கூடும். அவ்வாறு அடியோடு தத்துவக் கூட்டங்களை விட்டு நீங்கவே மிக மேலாகிய சிவமாந்தன்மைப் பெருவாழ்வு உண்டாகும். ஆகலின் "உச்ச பரசிவம் ஆம்" என்று அருளினார். அந்த உண்மையினை நன்குணர்ந்த ஆன்மா பொய்ம்மையாகிய மாயா காரியங்களை விட்டு நீங்கி மெய்ம்மையாகிய சிவப் பொருளுடன் ஒன்றும் ஆகலின் உண்மை ஒன்று என்றார். பரசிவமாகிய மெய்ப்பொருளுடன் ஒன்றுதலினால் நந்தி என்னும் நாமத்தையுடைய இறைவன் பிறப்பு இறப்புக்கள் உண்டாம் என்று அஞ்சுகின்ற தன்மையைப் போக்கி ஆன்மாவாகிய என்னை ஆட்கொண்டருளினான். நான் மீளா அடிமை. அவன் ஆட்கொண்டருளினான். நான் முத்தி நிலையிலும் அப்பெருமான் செய்த பேருபகாரத்தை நினைந்து அடிமையாய் நின்று வழிபடுவேனாக என்பது எஞ்சி நின்றது.*

*உயிர் தானும் சிவானுபவம் ஒன்றினுக்கே உரித்து ஆகலின் 'உச்ச பரசிவமா முண்மையொன்ற ஆண்டனன் அச்சமறுத்து ஆண்டனன்'; தன்னை அறிவித்துத் தான் தானாச் செய்தான்" நந்தி என்றவாறு.*

*2422. தெளிவுரை :- எனக்குக் குருவாகிய நந்திபெருமான், முதலில் என்னை யான் அறியுமாறு அறிவித்தருளினார். (கருவிக் கூட்டத்தினின்றும் என்னை வேறாக யான் உணரும்படி செய்தார்). அதனால், என்னை யான் அறிந்தபின்பு,*

**2423.** பரந்தும் சுருங்கியும் பார் புனல் வாயு
நிரந்த வெளியொடு ஞாயிறு திங்கள்
அரந்தம் அரன்நெறி யாய் அவை யாகித்
தரந்த விசும்பொன்று தாங்கிநின் றானே. 7

---

*என்னையான் அறியாது நிற்கின்ற ஓர் இடத்திலே என்னைச் செலுத்தினார். (சிவபோத மிகுதியால் சீவ போதம் தோன்றாது நிற்கின்ற திருவருள் நிலையிலே செலுத்தினார்). பின்னர் அங்ஙனம் நின்ற அந்த ஒளியினாலே அவ்வொளிக்கு முதலாகிய பொருள் புலப்பட்டது. புலப்பட்டபின் யான் அந்த மேலான பொருளே ஆகும்படி அதனை என் கைக்குள் வருமாறு அளித்தார்.*

***குறிப்புரை :-** 'என்னை அறிய இசைவித்தது', ஆன்ம தரிசனம்' என்றும், 'என்னை அறியாதவிடத்து உய்த்தது', 'ஆன்ம சுத்தி' என்றும், 'சொருபம் புறப்படத் தன்னை அளித்தது', 'ஆன்ம லாபம்' என்றும் உணர்க. முன் மந்திரத்தில் கூறியன தத்துவ ரூபம் முதல் ஆன்ம ரூபம் முடிவாக உள்ளன. ஆகையால், அவற்றிற்கு மேலே எஞ்சியுள்ள பயன்களைப் பரம்பொருள் ஆசான் மூர்த்தியாய் வந்து அருளுதல் இதனால் கூறப்பட்டது.*

***2423. தெளிவுரை :-** சிவன்,*

*"நிலம், நீர், நெருப்பு, உயிர், நீள் விசும்பு, நிலாப், பகலோன்,
புலனாய மைந்தனோடு எண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்"*

*- தி. 8 திருத்தோணாக்கம் - 5*

*எனவும்,*

*"இருநிலனாய்த், தீயாகி, நீரு மாகி
இயமான னாய், எறியும் காற்று மாகி,
அருநிலைய திங்களாய், ஞாயி றாகி,
ஆகாச மாய் அட்ட மூர்த்தி யாகி
............. எம்மடிகள் நின்ற வாறே" - தி. 6 ப. 94*

*எனவும் அருளிச் செய்தவாறு, ஐம்பெரும்பூதங்களும், 'ஞாயிறு' திங்கள், என்னும் இரு சுடர்களும், ஆன்மாவும் ஆகிய எட்டினையும் தனக்குத் திருமேனியாகும்படி அவைகளில் வேறின்றிக் கலந்து நிற்கின்றான்.*

***குறிப்புரை :-** 'அஃதறிந்து அவனைப் போற்றி உய்தல் வேண்டும்' என்பது குறிப்பெச்சம். 'பரந்தும் சுருங்கியும் நின்றான்' என இயையும். பரத்தல், பெரியதிற் பெரியனாய் அளவின்றி விரிந்து நிற்றல். சுருங்கல், சிறியதிற் சிறியனாய் நுணுகி எல்லாப் பொருளிலும் நிறைந்து நிற்றல்.*

*"அணோரணீயாந் மஹதோ மஹீயாந்"*

**2424.** சத்தின் நிலையினில் தானான சத்தியும்
தத்பரை யாய்நிற்கும் தாய்ஆம் பரற்குடல்
உய்த்தகும் இச்சையில் ஞானாதி பேதமாய்
நித்தம் நடத்து நடிக்குமா நேயத்தே. 8

---

*எனக் கடோபநிடதம் கூறும். செய்யுள் நோக்கி, எட்டுப்பொருள்களையும் முறை பிறழ வைத்தார். நிரந்த - எங்கும் நிறைந்த. அரத்தம் - சிவப்பு. அது பண்பாகு பெயராய், அந்நிறத்தையுடைய தீயைக் குறித்தது. 'அரத்தம், தரத்த' என்பன எதுகை நோக்கி மெலிந்து நின்றன. தரம் - ஏனை ஏழிற்கும் மேலான வியாபகம். அங்ஙனமான தன்மையுடைமை பற்றி ஆன்மாவை உவமையாகுபெயரால் "விசும்பு" என்றார். "அரன்" என்பதை முதலிற் கொள்க. நெறியாய் - முறையாக. தாங்கி நிற்றல். அவற்றினுள் நிறைந்து அவற்றை நிலைத்திருக்கச் செய்தல், அரன், பார் முதலியவற்றுள் முறையாய் அவையாகி, விசும்பு ஒன்றைத் தாங்கி நின்றான்' எனவினை முடிக்க. சிவனுக்கு ஆன்மாவோடே நேர்த்தொடர்பு. பின்பு அதுவழியாகவே ஏனையவற்றோடு தொடர்பு. அது பற்றியே, விசும்பு ஒன்றையே சிவன் தாங்கி நிற்பதாகக் கூறினார்.*

*இதனால், பரம்பொருள் அட்ட மூர்த்தமாய் நிற்றல் கூறப்பட்டது.*

***2424. தெளிவுரை :-** 'தத்' பதப் பொருளாகிய சிவன், தனது உண்மை நிலையில் உள்ள பொழுது அவனின் வேறாகாது அவனோடு ஒன்றாகியே நிற்கும் சத்தியும், 'பரை' என நிற்கும். அஃதாவது யாதொன்றனையும் பற்றாது, தான் தனியே மேலானதாய் நிற்கும் என்பதாம். "சத்தியும்" என்னும் உம்மையால், சத்தியையுடைய சத்திமானாகிய சிவனும் அப்பொழுது 'பரன்' என நிற்றல் பெறப்பட்டது. 'பரசிவனாய் நிற்பன்' என்க. அந்தச் சத்தியே சிவனுக்கு வடிவம். என்றது, 'சிவம் சத்தியே மயமானது' என்றபடி, இனி அந்தச் சத்தி, அருள் காரணமாக உயிர்களின் பொருட்டு ஐந்தொழிலாகிய நாடகத்தை மேற்கொண்டு செய்யும் பொழுது, தன்னிச்சையாகவே இச்சை, ஞானம், கிரியை முதலிய வகைகளாய்ப் பலவாகி, அவ்வைந்தொழிலை இடையறாது நடத்தும்.*

***குறிப்புரை :-** "தத்" என்பதை முதலிற் கொள்க. 'சத்து, உண்மை' என்பன ஒரு பொருட்சொற்கள். இதுவே, 'சொரூபம்' எனப்படும். 'பரம்பொருள் எவ்வாற்றானும் இருமையையுடையதன்று; முற்றிலும் ஒருமையையே உடையது' என்பர் மாயாவாதிகள். 'அவ்வாறன்றிப் பரம்பொருள் பொருளால் ஒன்றாயினும், குண குணித் தன்மையால் 'சிவம், சத்தி' எனத்தன்னுள் இருதிறப்பட்டுத் தாதான்மியமாய் இயைத்து நிற்கும்' என்பது சித்தாந்தம். இது, ஞாயிறு பொருளால் ஒன்றாயினும் குணகுணித் தன்மையால், 'கதிரவனும், கதிரும்' எனத் தன்னுள் இருதிறப்பட்டுத் தாதான்மியமாய் இயைந்து நிற்றல் போல்வதாகும்.*

*சிவன் உயிர்களையும், மாயையும் ஒரு கருத்துப் பற்றிச் சிறப்பாக நோக்காது, பொதுவாக அறிந்து மட்டும் நிற்றலே அவனது 'தன்னியல்பு', அல்லது 'சொரூப லக்கணம்' எனப்படும். அந்நிலையில் அவன் 'பர சிவன்' அல்லது 'பரம சிவன்' எனப்படுவான். 'சுத்த சிவன்' என்றும் சொல்வதுண்டு. அப்பொழுது அவனது சத்தியும் 'பராசத்தி' எனப்படும். பரா - மேலானவள். அந்நிலையில் சத்த செயலாற்றுதல் இல்லை. இதனையே, சத்தின் நிலையினில் தானான சத்தியும் - பரையாய் நிற்கும் என்றார். 'இன்' வேண்டாவழிச் சாரியை. "தானான" என்றது 'தாதான்மியமான' என்றபடி. 'பரா' என நின்ற சத்தி உயிர்களின் பொருட்டு ஐந்தொழில் செய்ய விரும்பி மாயையைக் காரியப்படுத்த நினைக்கும் பொழுது அதில் ஒரு சிறிய கூறு, ('ஆயிரத்தில் ஒரு கூறு' என்பர்). 'ஆதி சத்தி' எனப் பிரிந்து நிற்கும். இஃது உயிர்களை கன்மம் மாயைகளினுட் செலுத்தலால், 'திரோதான சத்தி' எனப்படும். திரோதானகரி, 'திரோதாயி' என்னும் பெயர்களாலும் குறிக்கப்படும். மலங்களின் வழி நிற்றல் பற்றி, இதனையும் 'ஒரு மலம்' என்று உபசரித்துக் கூறுவர். இவ்வாறு 'ஆதி' என நின்ற அது பின், 'ஞானம், இச்சை, கிரியை' என மூன்றாகிப் பின் பலவாகும். அதனையே, "ஞானாதி பேதமாய்" என்றார். இவ்வாறு அது பலவாவது, தன்னிச்சையாலன்றிப் பிறரால் அன்று. அதனையே, "உய்த்தகும் இச்சையில்" என்றார். 'உய்த்தல் தகும்' என்பது, "உய்த்தகும்" என நின்றது. 'இங்ஙனமாகி ஐந்தொழிலை அது நடத்துதற்கு முடிவில்லை' என்றற்கு, 'நித்தம் நடத்தும்' என்றும், 'இதனால் அது தன்னியல்பினின்று வேறுபடுதல் இல்லை' என்றற்கு, 'நடிக்கும்' என்றும், 'இவ்வாறு நடித்தற்குக் காரணம் உயிர்கள் மாட்டு வைத்த பெரிய கருணையேயன்றிப் பிறிதில்லை' என்றற்கு "மா நேயத்தே" என்றும் கூறினார். "நேயத்தானே" என உருபு விரிக்க. சத்தி 'ஆதி சத்தி' முதலிய பெயர்களைப் பெற்றுச் செயலாற்றும் பொழுது, சிவனும் அந்நிலைகளில் எல்லாம் அவற்றிற்கு ஏற்ப, "ஆதி சிவன்" முதலாகப் பல பெயர்களைப் பெற்று நிற்பன். பரமசிவன், 'சொரூப சிவன்' எனவும், ஏனைய ஆதி சிவன் முதலியோர் 'தடத்த சிவர்' எனவும் அறிக. இவ்வனைத்துச் சிவமும், சத்தியும் பெயர், உருவம், தொழில் என்னும் இவற்றால் வேறுவேறாகச் சொல்லப்படுகின்றனவேயன்றிப் பொருளால் வேறுபாடு சிறிதும் இன்றி, ஒன்றேயாம்.*

> *"சத்திதான் பலவோ என்னில்,*
> *தான்ஒன்றே; அனேக மாக*
> *வைத்திடும், காரியத்தால்"* ***- சுபக்கம் சூ. 1-61***

***"சத்தன் வேண்டிற்று எல்லாமாம் சத்தி தானே" - சுபக்கம் சூ. 2-76***

***என்னும் சிவஞான சித்தியைக் காண்க.***

2425. மேலொடுகீழ் பக்கம்மெய் வாய்கண்ணா நாசிகள்
பாலிய விந்து பரஉட் பரையாகக்
கோலிய நான்கவை ஞானம் கொணர்வித்துச்
சீலமி லாஅணுச் செய்திய தாகுமே. 9

---

*இதனால், பரம்பொருளின் இயல்பு பற்றி மாயாவாதி முதலியோர் கூறும் கூற்றுக்களை மறுத்துச் சித்தாந்தம் உணர்த்தப்பட்டது.*

*தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தரும்சத்தி*
*பின்னமிலான் எங்கள் பிரான்.*

*எனத் திருவருட் பயனிலும் இவ்வியல்பு கூறப்பட்டது.*

***2425. தெளிவுரை :-*** *முன் மந்திரத்தில் கூறிய சத்தி மேல், கீழ், புடை என்னும் இடங்களையும், மெய், வாய், கண், நா, மூக்கு என்னும் ஐம்பொறிகளையும், விந்து, நாதம், பர நாதம் என்னும் வாக்குக்களையும், அவைகட்குப் பற்றுக் கோடாய் நின்று அவற்றின் பெயர்களையே தாமும் பெற்று நிற்கின்ற சுத்த தத்துவங்களையும் இங்ஙனம் பாகுபட்ட பல பொருள்களை உண்டாக்கி அவற்றால் எல்லாம் சரியை முதலிய நான்கினாலும் ஞானத்தை வருவித்து, இவ்வாறெல்லாம் அஞ்ஞானத்திற் கிடக்கின்ற உயிர்களை ஈடேற்றுதலாகிய செயல்களை உடையதாய் நிற்கும்.*

***குறிப்புரை :-*** *'ஆக்கப்படும் பொருள்கள் அளவில்லன' என்பது தோன்றுதற் பொருட்டுச் சிலவற்றை எடுத்து எண்ணிக் காட்டினாரேயன்றி, அனைத்தையும் எடுத்துக் கூறிற்றிலர். ஆகவே, அவற்றை உபலக்கணமாகக்கொண்டு, ஏனையவற்றையும் அறிதல் வேண்டும். பாலிய - காத்தல் பொருட்டு. பாலித்தல் - காத்தல்; ஈடேற்றுதல். கோலிய - வரம்பு செய்யப்பட்ட. "அவை" பகுதிப்பொருள் விகுதி. "நான்கவற்றால்" என உருபு விரிக்க. சீலம் - தூய்மை. 'தூய்மை இலா' எனவே, மாசுடைமை பெறப்பட்டது. அணு - உயிர். அணுச்செய்தி - அணுவைப் பற்றிய செயல்.*

*இதனால், முன் மந்திரத்தில், 'நித்தம் நடத்தும்' எனத் தொகுத்துக் கூறப்பட்ட செயல்கள் ஒருவாறு வகுத்துக் கூறப்பட்டன.*

***2426. தெளிவுரை :-*** *அதன் தன்மை காயத்தில் வேறாம் போலும் உயிரின் இயல்பு தத்துவ தாத்துவிகங்களாகிய உடம்புடன் கூடியிருக்கும் காலத்தில் வேறாக உள்ளதாம். கேவல நிலையில் ஆணவமலத்துள்ளே அழுந்தி அறிவற்று மூடமாய்க் கிடந்த காலத்தும், சுத்த நிலையில் கருவிகளுடன் கூடாமல் விட்டு நீங்கி நின்மலமாயிருக்கும் காலத்தும் உயிரின் தன்மை வேறுபட்டு உள்ளதேயாம். சகல நிலையிலும் உயிர் வேறுபட்ட நிலையிலுள்ளதேயாம்.*

**2426.** வேறாம் அதன்தன்மை மேலும்இக் காயத்தில்
ஆறாம் உபாதி அனைத்தாகும் தத்துவம்
பேறாம் பரவொளி தூண்டும் பிரகாசமா
ஊறா உயிர்த்துண் டுறங்கிடும் மாயையே. **10**

---

*இக்காயத்தில் உபாதி ஆறாம் - உடம்பிலே உள்ள ஆதார நிலைகளும் ஆறு உள்ளன. அவை மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்பனவாம். ஆதாரங்களும் துன்பமுடையனவே என அறிந்து நிராதாரத்தே செல்லுதல் உயிருக்கு நலம் பயப்பதாம்.*

*அனைத்தாகும் தத்துவம் உபாதி - எல்லாத் தத்துவங்களும் துன்பத்தைத் தருவனவே. ஆகலின் தத்துவங்களைக் கடந்து தத்துவாதீதமாகிய நிலையின்கண் துன்பமின்றி இன்பமாய் வாழலாம் என்பதை நன்றாக அறிவின்கண் ஆராய்ந்து உணர்ந்து.*

*பரவொளி பேறாம் - நிராதார யோகம் என்னும் ஆன்ம சொரூபத்தை உணர்ந்து ஒரு பற்றுமின்றிச் சமாதி பரனாய் நிற்க மீதானமாகிய சிவசொரூபத்தலே கூடுதலே அடையத்தக்கதாம். தடத்த மூர்த்தங்களைக் குறிக்கும் தியான சமாதி யோக முதிர்ச்சியினாலே திருவருள் ஞான விளக்கமுண்டாய் அந்தத் திருவருளில் அடங்கிச் செய்யும் சோகம் பாவனையில் தலைப்பட்டுப் பரை அதீதமாகிய சிவப்பேற்றை அடைதலொன்றுமே ஆன்ம லாபமாம். மலரகிதராகிய சிவபெருமானுக்குத் திருமேனி திருவருளேயாம்.*

*மாயை தூண்டும் பிரகாசமாய் ஊறா உயிர்த்தது உண்டு உறங்கிடும் - சுத்த மாயை, அசுத்த மாயை, பிரகிருதி மாயை என்பன கேவலத்தில் அறிவற்றுக் கிடந்த ஆன்மாவுக்குச் சகல நிலையில் கருவி கரணங்களுடன் கூட்டுவித்து அறிவை ஊக்குவித்து மயக்கமும் செய்யும். மயக்கம் - விபரீதவுணர்வு. மாயைக்கு விபரீத உணர்வைச் செய்தல் தன்னியல்பன்று. ஏகதேச அறிவைச் செய்தலே மாயைக்குத் தன்னியல்பாம் என்பர்.*

*மாயா காரியங்களெல்லாம் சிவத்தினைச் சார்தற் பொருட்டேயாம். மலங்களை நீக்குமுகத்தால் தனு கரணாதிகள் சிவத்தினை சார்தற் பொருட்டாம் என்க. தத்துவங்களெல்லாம் உயிர்களோடு பொருந்துவன என்றறிந்து நீங்கித் தத்துவாதீதனாகிய பரமசிவனை அடைதல் வேண்டும். அப்போது மாயா காரியங்களெல்லாம் பயனின்றிக் கழிவனவாம் என்றவாறு.*

***2427. தெளிவுரை :-** 'தத்' பதப் பொருளாகிய பதி, தன்னிலையில், நிலையான ஒப்பற்ற, முதன்மை வாய்ந்த பேரறிவே எனினும், அதுவே உயிர்களை நோக்கி இயங்கும் பொதுநிலையில் உயிர்களை உலகத்தை நுகரும்படி செய்கின்ற பாச அறிவாய் நிற்கும். ('திரோதான சத்தியாய் நிற்கும்' என்றதாம்). அந்தப் பாச*

2427. தற்பரம் மன்னும் தனிமுதற் பேரொளி
சிற்பரந் தானே செகம்உண்ணும் போதமும்
தொற்பதந் தீர்பாழில் சுந்தரச் சோதிபுக்கு
அப்புறம் அற்றதிங் கொப்பில்லை தானே. 11

---

*அறிவால் உயிர் உலகத்தை நுகர்ந்து வருங்காலத்தில் அந்தப் பாச அறிவும், அதன் அறிவாகிய பசு அறிவும் நீங்கப் பெற்ற பொழுது, முன்சொன்ன பேரொளியிற் கலந்து, அதற்கு அப்பாலும்போய், முன்னை நிலையெல்லாம் நீங்கப்பெற்று நிற்கும். அப்பொழுது அதற்கு ஒத்ததும், உயர்ந்ததும் இல்லாத ஓர் உயர்வை அஃது அடையும்.*

***குறிப்புரை :-** 'அச் சிற்பரம்' எனச் சுட்டு வருவிக்க. "போதம்" என்பதன்பின், 'ஆம்' என்பது எஞ்சி நின்றது. 'தொல் பதம்' என்பது, எதுகை நோக்கி, "தொற் பதம்" எனத் திரிந்து நின்றது. பதம் - நிலைமை. தீர் பாழ் - தீர்ந்ததாகிய பாழ். இது பின்னர் 'போதப் பாழ்' எனக் குறிக்கப்படும். 'அப்புறமாய்' என ஆக்கமும், "இங்கு" என்பதன்பின், 'அதற்கு' என்பதும் வருவிக்க.*

*இதனால், சிவசத்தி திரோதான சத்தியாய் நின்று செயற்படுதலால் வரும் பயன் கூறப்பட்டது.*

***2428. தெளிவுரை :-** முதல் நூல்களாகிய வேதாகமங்கள், சில இடங்களில் சுத்த மாயையை, 'சிவனுக்குத் திருமேனி' எனக் கூறும். அஃது உபசாரமே.*

*"சுத்ததத் துவம் சிவன்றன் சுதந்திர வடிவ மாகும்*
*நித்தம்என் றுரைப்பர் காலம் நீங்கிய நிலைமை யாலே"*

*என்னும் சிவஞான சித்தி (சுபக்கம் - சூ. 1. 66)யையும், அதன் உரையையும் காண்க.) ஏனெனில், சிவன் துரியத்தையும் கடந்த அதீதமூர்த்தி. (நின்மல துரியம் வரையிலே சுத்தமாயை உள்ளது). தத்துவசுத்தி, ஆன்மரூபம் ஆகியவற்றைக் கடந்து ஆன்ம தரிசனத்தைப் பெற்ற ஆன்மாவும் சிவ தரிசன சிவயோகங்களால் ஆன்ம சுத்தியை எய்தாது, காரணோபாதி யாகிய சுத்தமாயையில் இருப்பானாயின் அவனது நிலையை நன்கு ஆராயுமிடத்து அவன் தூய்மை எய்தியவன் ஆகான்.*

***குறிப்புரை :-** "காயமோ மாயையன்று காண்பது சத்தி தன்னால் (தி. 4 ப.8 பா.2) என எதிர்மறை முகத்தானும், உடம்பாட்டு முகத்தானும் தெளிவுபடக் கூறுதலின் சிவனுக்குச் சத்தியே - அருளே திருமேனியாவதல்லது, மாயை திருமேனியாகாது".*

*"அரிதரு கண்ணி யாளை ஒருபாக மாக*
*அருள்கா ரணத்தில் வருவார்"*

*என்பதே திருமுறை (தி.4 ப.8 பா.2) மொழி. இதனை,*

**2428.** பண்டை மறைகள் பரவான் உடல் என்னும்
துண்ட மதியோன் துரியாதீ தன் தன்னைக்
கண்ட பரனும்அக் காரணோ பாதிக்கே
மிண்டின் அவன்சுத்த னாகான் வினவிலே. 12

**2429.** வெளி கால் கனல் அப்பு மேவுமண் நின்றது
அளியா கியதற் பரங்காண் அவன்றான்
வெளி கால் கனல் அப்பு மேவுமண் நின்ற
வெளியாய சத்தி அவன்வடி வாமே. 13

---

*"உருஅருள்; குணங்களோடும்,*
*உணர்வருள் உருவில் தோன்றும்*
*கருமமும் அருள் அரன்றன்*
*கரசர ணாதி சாங்கம்*
*தரும்அருள்; உபாங்க மெல்லாந்*
*தானருள்; தனக்கொன் றின்றி,*
*அருளுரு உயிருக் கென்றே*
*ஆக்கினன்; அசிந்த னன்றே"* **- சிவஞானசித்தி சுபக்கம், சூ. 1-47**

*எனச் சாத்திரமும் பலபடியால் வலியுறுத்தி ஓதுதல் காண்க. இங்ஙனமாகவே, சிவன் அசுத்த மாயையைப் போலச் சுத்த மாயையை விலக்காமல் அதிட்டித்து (இடமாகக் கொண்டு) நிற்றல் பற்றிச் சில இடங்களில் அதனைச் சிவனுக்குத் திருமேனியாக உபசரித்துக் கூறும். ஆகவே, சிவனுக்கு உண்மையில் திருமேனியாய் அமைவது அவனது சத்தியே என்பதாம்.*

*"ஆகாச சரீரம் பிரஹ்ம"*

*என்னும் உபநிடத மொழியில் "ஆகாசம்" என்பதும் சிதாகாசமாகிய சத்தி என்பதே சித்தாந்தம். "பர வான்" என்றது இங்குச் சுத்த மாயையை. காரணோ பாதியாவதும் அதுவே. "பரன்" என்றது, தத்துவங்கடந்து தன்னைத்தான் கண்டமையால் பாசங்களின் நீங்கினவனாகிய ஆன்மாவை. "பரனும்" என்னும் உம்மை சிறப்பு.*

*இதனால், முன் மந்திரத்தில், "சுந்தரச் சோதிபுக்கு அப்புறமாய் அறுதல்" எனக் கூறியது பற்றி நிகழ்வதோர் ஐயம் அறுக்கப்பட்டது.*

***2429. தெளிவுரை :-*** *'மாயா காரியமாகிய உலகப்பொருள் அனைத்திலுமே பரமசிவன் அருள்காரணமாக நிறைந்திருக்கின்றான்' என வேதாகமங்கள் கூறும். அவ்வாறு கூறுவதற்கும், 'அவனது சத்தியே அவ்வாறு நிறைந்துள்ளது' என்பதே கருத்து. பூதாகாயம் ஏனைப் பூதங்களில் எல்லாம் நிறைந்திருத்தல் போல அனைத்துலகங்களிலும் நிறைந்திருத்தல் பற்றி அச்சத்தி, 'பரவெளி - பராகாயம்'*

**2430.** மேருவி னோடே விரிகதிர் மண்டிலம்
ஆர நினையும் அருந்தவ யோகிக்குச்
சீர்தவம் செய்யின் சிவனருள் தானாகும்
பேரவும் வேண்டா பிறிதில்லை தானே. **14**

---

*எனக் கூறப்படுகின்றது. அந்தச்சத்தியே, உண்மையில் பரமனுக்கு திருமேனியாகும்.*

***குறிப்புரை :-*** *அனைவரும் அறிந்த ஐம்பூதங்களைக் கூறும் முகத்தால் உலகப்பொருள் அனைத்தையும் கொள்ளவைத்தற்கு அவற்றைத் தோற்ற முறையில் வைத்து எண்ணிக் காட்டினார். 'நின்றது பரம்' என இயையும். "அளியாகியபரம்" என்றது உடம்பொடு புணர்த்தது. காண், முன்னிலையசை "அவன்றான் சத்தி" என்றது, 'சத்தி அவனின் வேறானதன்று' என்றதாம். 'பரம் பொருள் தன்னிலையில் தான் நிற்கும் பொழுது சிவம் என்றும், உலகத்தோடு ஒன்றாய், வேறாய், உடனாய்த் தொடர்பு பட்டு நிற்கும் பொழுது சத்தி என்றும், ஐந்தொழில் செய்யும் பொழுது பதி என்றும் பெயர்பெறும்' என்னும் ஆகமப் பொருளை யுணர்த்துவார். 'வெளி, கால்.......... நின்ற வெளியாய சத்தி' என்றார்.*

*இதனால், முன் மந்திரத்தில், 'பரவான் உடல் - என்றல் உபசாரமாயின், உண்மை யாது' என்றெழுந்த அவாய்நிலை நிரப்பப்பட்டது.*

***2430. தெளிவுரை :-*** *இடைகலை பிங்கலைகளை, 'சந்திர சூரியர் வழி' எனக் கூறுதலால், அவ்வழியாக இயங்கும் பிராண வாயு வலம் வரும் சுழுமுனை நாடியை, 'மகாமேரு' என்றலும், அந்தச் சுழுமுனை நாடியின் நடுப் பாகமாகிய அநாகத விசுத்தி ஆதாரங்களை, 'சூரிய மண்டலம்' என்றலும் யோக நூல் வழக்கு. அனாகதமாகிய இருதயம் பூசைத் தானமாகக் கொள்ளப்படும். அதனால், சுழுமுனை வழியாகச் சென்று இருதயத்தில் சிவபெருமானை நன்றாக நினைந்து வழிபடுபவனை, 'மேருவினோடே சென்று விரிகதிர் மண்டிலத்தில் (சிவனை) ஆரநினையும் அருந்தவயோகி' ('சென்று') என ஒரு சொல் வருவித்து, 'விரிகதிர் மண்டிலத்தில்' என உருபு விரித்து கொள்க). "செய்யின்" என்பது 'செய்வதனால்' எனப் பொருள்தந்து நின்றது. ஆகவே, 'அந்த அருந்தவ யோகிக்குச் சிவனருள் தானாகவே கிடைக்கும்' என்றும், 'அவன் கைக்கொள்ள வேண்டிய சாதனம் வேறொன்றும் இல்லையாகையால் அந்நெறியைவிட்டு அவன் விலகுதல் வேண்டா' என்றும் கூறினார்.*

*இதனால், 'இங்குக் கூறப்பட்ட இலக்கணங்களையுடைய பரம்பொருளை அடைதற்கு யோகம் சிறந்த சாதனம்' எனக் கூறி முடிக்கப்பட்டது.*

## 22. முத்துரியம்

*'பர லக்கணம்' என்பது இடையில் வந்து முடிய, 'மூன்று' என்னும் எண் இயைபுபட்டு நிற்றலின், மீட்டும் மூன்றாய் நிற்பன சிலவற்றைக் கூறுவாராய், முதற்கண் 'முத்துரியம்' எட்டு மந்திரங்களால் கூறுகின்றார். துரியம் - அப்பால், செயலற்ற நிலை, ஒடுக்கம். துரியாதீதம் - அப்பாலுக்கப்பால், பேரொடுக்கம். ஆகவே, யாதோர் அனுபவமும் துரியத்தில் மிகுந்தும், துரியாதீதத்தில் அளவு கடந்தும் நிகழும் என்க. துரியம் மூன்று உள்ளன. அவை சீவதுரியம், பரதுரியம், சிவதுரியம் என்பனவாம். சீவதுரியம் - நனவு, கனவு, உறக்கம்.*

**2431.** நனவாதி மூன்றினில் சீவ துரியம்
தனதாதி மூன்றில் பரதுரி யந்தான்
நனவாதி மூன்றில் சிவதுரி யம்மாம்
இனவாகும் தொம்தத் அசிபதத் தீடே. 1

---

*2431. தெளிவுரை :- (ஆன்மா, 'சீவன்' எனப்படுவது பாசநிலையில் ஆகலின், முதற்கண் சொல்லப்பட்ட நனவு, சகலத்தில் கேவலமாய் நிகழும். கீழாலவத்தையிலும், சகலத்தில் சகலமாய் நிகழும் மத்தியாலவத்தையிலும் நிகழும் நனவுகளாம்). கீழாலவத்தையில் நிகழும் சாக்கிரம் முதலியவற்றில் நிகழும் துரியம், ஆணவ அநுபவம் மிகுவது ஆதலாலும், மத்தியாலவத்தையில் நிகழும் சாக்கிரம் முதலியவற்றில் நிகழும் துரியம், ஐம்புல அநுபவம் மிகுவது ஆதலாலும் அவை யிரண்டும் சீவ துரியமாம். (இவை தொடக்கத்தில் நிகழ்வன. மேலாலவத்தையாகிய யோக துரியமும் சீவதுரியமே) இறுதியில் நிகழும் பராவத்தையில் நிகழும் சாக்கிரம் முதலியவற்றில் நிகழும் துரியத்தில் உயிர் பாசப்பற்று இன்றிப் பரம்பொருள் அனுபவமே மிகப் பெற்றிருத்தலால் அது பர துரியமாம். ('இஃது இலய முத்திநிலை' என்பது மேலே குறிப்பிடப்பட்டது). இடையில் மத்தியாலவத்தைக்கு மேல் நிகழும் மேலாலவத்தையாகிய யோகாவத்தையில் நிகழும் சாக்கிரம் முதலியவற்றில் நிகழும் துரியமும், நின்மல சாக்கிரம் முதலியவற்றில் நிகழும் துரியமும், உலகியல் உணர்வு முற்ற நீங்காத நிலையில் சிவானுபவம் மிகப் பெறுவன ஆதலின் அவை பரதுரியம் ஆகாது சிவதுரியமாம். இவற்றுள் சிவதுரியமும், பர துரியமுமே 'தத்துவமசி' மகா வாக்கிய அனுபவங்களாம்.*

*குறிப்புரை :- தனது - பரம் பொருளினது. இன - இன்ன 'இவை' என்றபடி. 'இவை' என்பது அண்மைச் சுட்டாகலின், அது பின்னிரண்டு துரியங்களையே குறித்தது. பதத்து ஈடு - பத அநுபவத்தில் இடுவன.*

*இதனால், 'முத்துரியங்களாவன இவை' எனச் சுட்டியும், விளக்கியும் கூறப்பட்டது.*

**2432.** தானாம் நனவில் துரியம் தன் தொம்பதம்
தானாம் துரிய நனவாதி தான்மூன்றில்
ஆனாப் பரபதம் அற்றது அருநனா
வானான மூன்று துரியத் தணுகுமே. 2

**2433.** அணுவின் துரியத்து நான்கும்அ தாகிப்
பணியும் பரதுரி யம்பயில் நான்கும்
தணிவில் பரமாகிச் சார்முத் துரியக்
கணுவிரு நான்கும் கலந்தஈ ரைந்தே. 3

---

***2432. தெளிவுரை :-*** *சீவன் சீவனாகவே இருக்கின்ற மத்தியாலவத்தைச் சாக்கிரம் முதலியவற்றில் நிகழும் துரியத்தில் ஆன்மா, 'துவம்' பதப் பொருளாய் இருக்கும். ஆன்மாச் சிவமாந்தன்மையைப் பெறுகின்ற நின்மல சாக்கிரம், பரசாக்கிரம் முதலியவற்றில் நிகழ்கின்ற துரியங்களில் ஆன்மா சிவமாகி, 'தத்' பொருளாய் இருக்கும். ஆகவே, இவ்விரு துரியங்களிலும் ஆன்மாப் பாசம் அற்றதாம். சகலத்தில் கேவலத்திற்கு மேலாக நிகழும் மூன்று துரியங்களிலும் ஆன்மா இவ்வாறான நிலைகளை அடையும்.*

***குறிப்புரை :-*** *"தான்" மூன்றில் முன்னது சீவனையும் ஏனையவை பரத்தையும் உணர்த்தின. "தான்மூன்றில்" என்பதை 'மூன்றில் தான்' என மாற்றியுரைக்க. "அரு நனா" என்றது, எளிதில் இயல்பாக நிகழாது அரிய திருவருளால் நிகழ்வது என நின்மல சாக்கிர பராசாக்கிரங்களைக் குறித்தன. "அருநனாவான்" என்னும் மூன்றன் உருபை ஏழன் உருபாகத்திரித்துக் கொள்க. 'காலத்தினாற் செய்த நன்றி' (திருக்குறள் - 101) என்பதிற் போல.*

*இதனால், 'முத்துரியங்களுள் சீவ துரியம் பெத்த துரியமும் ஏனைய துரியங்கள் முத்திதுரியமும் ஆம்' என்பது கூறப்பட்டது.*

***2433. தெளிவுரை :-*** *பெத்த துரியம் அனைத்தையும் 'சீவ துரியம்' என ஒன்றாகவும் முத்தி துரியம் இரண்டையும் ஒன்றாகவும் ஆக்க. அவ்விரண்டிலும் துரியம் முதலாகக் கீழ் நோக்க உளவாம் அவத்தைகள் இருநான்கு; எட்டு. இனி இவ்விரண்டிலும் உள்ள துரியா தீதங்களைக் கூட்ட அவத்தைகள் பத்தாகும். இவைகளில் பெத்தா வத்தை ஐந்தில் ஆன்மாக்கீழ் நிலையதாயும், முத்தியவத்தை ஐந்தில் மேல்நிலையை எய்தியும் இருக்கும். நான்கு என்றது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் என்பனவற்றை. சீவதுரியம் 4 + பரதுரியம் 4 + பராவத்தையில் துரியம், துரியாதீதம் 2 = 10.*

***குறிப்புரை :-*** *'அது வாகி' என்பதில் முற்றியலுகரம் கெட்டு "அதாகி" என நின்றது. பணிதல் - கீழ்ப்போதல். தணிவு - தாழ்தல். பரமாதல் - மேற் போதல். சார், முதனிலைத் தொழிற் பெயர். "பரமாகி" என்னும் எச்சம் இதனோடே*

**2434.** ஈரைந் தவத்தை யிசைமுத் துரியத்துள்
நேரந்த மாக நெறிவழி யேசென்று
பாரந்த மான பராபரத் தைக்கியத்து
ஓரந்த மாயீ ருபாதியைச் சேர்த்திடே. **4**

---

*முடிந்தது. கணு - சேர்க்கை. சேர்க்கையால் வருவதை, 'சேர்க்கை' என்றார். 'கணுவில்' என உருபு விரிக்க. 'சீவ துரிய பரதுரிய அவத்தைகளின் தொகை பத்து' எனச் சுருங்கக் கூறிப் போகாமல் இங்ஙனம் விரிவாகக் கூறியது, 'ஓர் ஐந்து தாழ்வுடையன; மற்றோர் ஐந்து உயர்வுடையன' என்பது உணர்த்துதற்கும்; அதீதத்தைக் கூட்டாமல் துரியத்தோடே முடித்து, அவத்தைகளை 'நான்கு' எனவும், 'எட்டு' எனவும் தொகை கூறுதலும் உண்டு என்பது உணர்த்துதற்குமாம் என்க.*

*இதனால், முத்துரியங்களது தராதரங்கள் விளக்கப்பட்டன.*

***2434. தெளிவுரை :-*** *கீழாலவத்தை ஐந்து, மத்தியாலவத்தை ஐந்து, மேலாலவத்தை ஐந்து இம் மூவைந்து பதினைந் தவத்தைகளை 'சீவாவத்தை' என ஓரைந்தாகவும், நின்மலாவத்தை ஐந்து, பராவத்தை ஐந்து இவ்வீரைந்தையும் 'பராவத்தை ஐந்து' என ஓரைந்தாகவும் தொகுக்க அவத்தைகள் ஈரைந்தாகி, 'சீவ துரியம், சிவ துரியம், பர துரியம்' என்னும் முத்துரியங்களும், அவற்றுள்ளே அடங்கும். அவ் அவத்தைகளை மேலாலவத்தைச் சாக்கிரம் முதலாகத் தொடங்கிப் படி முறையாக மேலே மேலே ஏறிச்சென்று, முடிவில் எல்லாமாய் உள்ள பரம்பொருளில் ஒன்று பட்டு, முடிந்த பயனைப் பெற்று, அதற்கு முன்னே நிகழ்ந்த யோக துரியம், நின்மல துரியம் ஆகிய இரண்டு உபாதிகளையும் பயனுடைய அவத்தைகளாகும் படி ஆக்கிக் கொள்க.*

***குறிப்புரை :-*** *பார் - உலகம். பார் அந்தமான அனைத்துலகங்கட்கும் அப்பாற்பட்ட. பராபரம் - மேல், கீழ் அனைத்துமாய் நிற்பது. நின்மலாவத்தையை நோக்க யோகாவத்தையும், பராவத்தையை நோக்க நின்மலாவத்தையும் இடர் தருவனவாதல் பற்றி அவற்றை "உபாதி" என்றார்.*

*இதனால், 'முத்துரியங்களையும் முறையால் எய்துதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

***2435. தெளிவுரை :-*** *இறைவனை அறியுமாற்றால் அறியின், பல்,நா, உதடுகள் இவைகளில் அகப்படாத ஒரு மெய்ப்பொருள் யாராலும் அணுக முடியாதாயினும் அணுக முடியும். ஆகையால், மெய்ப்பொருளை அடைய முயல்கின்றவர்களே, நீவிர் அதனை அடைதற் பொருட்டு துரிய நிலத்திலிருந்து கீழ் இறங்கிவிடாமல் இருங்கள்.*

**2435.** தொட்டே யிருமின் துரிய நிலத்தினை
எட்டா தெனினும் நின் றெட்டும் இறைவனைப்
பட்டாங் கறிந்திடில் பல்நா உதடுகள்
தட்டா தொழிவதோர் தத்துவந் தானே. **5**

---

***குறிப்புரை :-*** *'துரியத்திற்குக் கீழ் உள்ள அவத்தைகள் தாம் மெய்ப் பொருளோடு தொடர்பில்லாத நிலை' என்பதும், 'பல், நா, உதடுகளின் செயல்கள் துரியத்திற்குக் கீழ் உள்ள நிலைகளில்தான் நிகழும்' என்பதும் கருத்து. இங்குக் கூறிய துரியம் சிவ துரியம். ஏனெனில், சீவதுரியத்தில் மெய்ப்பொருள் தொடர்புறாது நிற்கும் ஆகலானும், பரதுரியத்திற் சென்றோர் மீளார் ஆகலானும் என்க. 'இறைவனை ................ தத்துவந்தான் எட்டாதெனினும்நின் றெட்டும். (ஆதலால்) துரிய நிலத்தினைத் தொட்டே இருமின்' எனக் கூட்டி முடிக்க.*

*"துரியம் கடந்தஇத் தொண்டர்க்குச் சாக்கிரம்*
*துரியமாய் நின்றதென் றுந்தீபற;*
*துறந்தார் அவர்களென் றுந்தீபற"* **- *திருவுந்தியார் - 32***

*துரியம் கடந்தசுடர்த் தோகையுடன் என்றும்*
*பிரியாதே நிற்கின்ற பெம்மான் - துரியத்தைச்*
*சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யும் தன்மைகளும்*
*ஆக்கியிடும் அன்பர்க் கவன்"* **- *திருக்களிற்றுப்படியார் - 69***

*என்பவற்றிலும், 'சிவதுரியத்திற்றான் சிவன் தொடர்புற்று நிற்பான்' எனக் கூறப்பட்டது. துரியத்திலே நிலையாக நின்றால், பிரபஞ்சம் தாக்கா தொழிதலுடன், மேல் அதீதத்திற்குச் செல்லும் ஆற்றலும் உளதாகும் என்க.*

*இறைவனை அறியுமாற்றால் அறிதலாவது, அவன் அருளாலே அறிதல். பல், நா, உதடுகளில் தட்டாமையாவது, சொல்லவாராமை. 'எட்டப்படாது, எட்டப்படும்' என்பன, 'எட்டாது' எனவும், "எட்டும்" எனவும் வந்தன.*

*இதனால், 'முத்துரியத்துள் சிவ துரியமே முத்திக்கு வழி' என்பது கூறப்பட்டது.*

***2436. தெளிவுரை :-*** *சடங்களாகிய முப்பத்தாறு தத்துவங்களையும் நீக்கும் முகத்தால், அடர்ந்துள்ள மாயையைப் போக்கிச்சித்தாய் நின்று பின்னர் வெளிப்படுத்துகின்ற திருவருளாலே அதுவேயாய் நிற்கின்ற தன்மையால் உயர் நெறியை அடைந்த அன்பர்களே சிவனது இயல்பை உண்மையாக உணர்ந்தோராவர்.*

***குறிப்புரை :-*** *"அறிவாய்" என்பதை, 'சிதைத்து' என்பதன் பின்னர்க் கூட்டுக. "அசத்து" எனவே, அசித்தாதலும் சடம் என்பதும் பெறப்பட்டது. 'அருளாலே*

**2436.** அறிவாய் அசத்தென்னும் ஆறா றகன்று
செறிவாய மாயை சிதைத்து அரு ளாலே
பிறியாத பேரரு ளாயிடும் பெற்றி
நெறியான அன்பர் நிலையறிந் தாரே. **6**

**2437.** நனவில் நனவாதி நாலாம் துரியம்
தனதுயிர் தொம்பதம் ஆமாறு போல
வினையறு சீவன் நனவாதி யாகத்
தனைய பரதுரி யம்தற் பதமே. **7**

---

*அருளாய்' என்றதனால், 'அருள் தானே வெளிப்பட, அதனாலே ஆன்மா அந்த அருளேயாய் நிற்கும்' என்பதும், 'ஆறாறகன்று அறிவாய் அருளாயிடும்' என்றதனால், 'அருள் வெளிப்படல் ஆன்மா அறிவான பின்னர்' என்பதும், 'ஆன்மா அறிவாதல் ஆறாறகன்றபின்னும்' என்பதும் பெறப்பட்டன. "ஆறாறகன்று" என்பது தத்துவசுத்த ஆன்ம ரூபங்களையும், "அறிவாய்" என்றது ஆன்ம தரிசன சிவரூபங்களையும், "அருளாலே அருளாயிடும்" என்றதனால், ஆன்ம சுத்தி, சிவதரிசன சிவயோகங் களையும் குறித்தமை காண்க. இவற்றுள் சிவயோகமே சிவதுரியமாம். 'பெற்றியால்' என உருபு விரிக்க.*

*இதனால், 'சீவ துரியத்திற்கு அப்பாற்பட்ட சிவதுரியமே சிவத்தோடு உண்மையில் தொடர்பு கொள்ளும் நிலை' என்பது கூறப்பட்டது.*

*2437.* ***தெளிவுரை :-*** *பிராரத்த வினை நீங்காமையால், கருவி கரணங்களோடு கூடிய உடம்பிற்றானே புருவ நடுவின் கண் நிகழும் சுத்த சாக்கிரம் முதலிய சிவ ஐந்தவத்தைகளில் நாலாவதாகிய சிவதுரியத்தில் சீவன் ஆன்ம சுத்தியைப் பெற்று 'துவம்' பதப் பொருளாய் நிற்றல்போல, பிராரத்தவினை நீங்கினமையால், கருவி கரணங்களைக் கடந்து நிற்கின்ற நிலையில் நிகழும் பர சாக்கிரம், பர சொப்பனம் முதலாக நிகழும் பர அவத்தை ஐந்தில் நாலாவதாகிய பரதுரியத்தில் ஆன்மா, 'தத்' பதப் பொருளாய் நிற்கும். அஃதாவது, 'சிவமேயாய் நிற்கும்' என்பதாம்.*

***குறிப்புரை :-*** *'பராவத்தைகளில் சீவன் முத்தி தவிர ஏனைய நான்கும் உண்மையில் உடம்பு நீங்கிய பின்னர் நிகழ்வனவாயினும் சீவன் முத்தி நிலையிலும் அவை பொதுவாக நிகழும்' என்பதும், 'இம்மையில் (உடம்பு உள்ளபொழுது) பராவத்தையில் முடிவான அதீத நிலையில் நின்றவர்களே அம்மையில் (உடம்பு நீங்கியபின்) பரமுத்தியை அடைவர்' என்பதும், 'ஏனையோர் தாம் தாம் இங்கு நின்ற நிலைக்கு ஏற்ப அங்குள்ள நிலைகளை அடைவர்' என்பதும் இம்மந்திரத்தால் அறிக. கேவலாத்துவிதிகளும் சீவன் முத்தரை, வரிட்டன், வரியான், முதலாக வகைப்படுத்துவர்.*

*முதலடியின் ஈற்றில் 'கண் உருபு விரிக்க. "தனதுயிர்" என்பதில் ஆறன்*

**2438.** தொம்பதம் தற்பதம் சொல்முத் துரியம்போல்
நம்பிய மூன்றாம் துரியத்து நற்பரம்
அம்புவி உன்னா அதிசூக்கம் அப்பாலைச்
செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானே. **8**

---

*உருபு, 'இராகுவினது தலை' என்பதுபோல 'ஒற்றுமைக் கிழமைக்கண்' வந்தது. பின்னர் "வினை அறு சீவன்" என்றதனால், முன்னது வினை உறுசீவனது நிலை' என்பது பெறப்பட்டது. வினை, இங்குப் பிராரத்தம். "ஆமாறுபோல" என்ற அனுவாதத்தால், ஆமாறும்தானே பெறப்பட்டது. 'தன' என்பது இடை ஐகாரச் சரியை பெற்றது.*

*இதனால், சீவ துரியத்திற்கு அப்பாற்பட்ட பர துரியத்தின் சிறப்பு அதனது பயன் உணர்த்தும் முகத்தால் உணர்த்தப்பட்டது.*

*2438. **தெளிவுரை :-** 'துவம், பதம், 'தத்' பதம் முதலிய சொற்களின் வழியாக நிகழும் 'சீவ துரியம், சிவ துரியம், பர துரியம்' என்னும் முத்துரிய அனுபவ நிகழ்ச்சிகளில், பெரிதும் விரும்பப்பட்ட மூன்றாவதாகிய பரதுரியத்தில் முதற்கண் சொல் நிகழ்ச்சி சிறிது உளதாயினும், முடிவில் சொல்லற்றதாகிய பேரொளியாம் பரசிவம் அனுபவப்பட்ட அந்நிலை, உலக வாசனை முழுதும் அற்றுச் சூக்குமத்திலும் சூக்குமமாய் விளங்க, 'அவ்விடத்தில் அனைத்துப் பொருட்கும் அப்பாற்பட்ட அந்தப் பரசிவமே தனது பேரருள் காரணமாகக் குருமூர்த்தியாய் வந்து தனக்கு அருள் செய்தது' என்னும் உண்மையும் விளங்கும்.*

*குறிப்புரை :- "தற்பதம்" என்பதன்பின் 'முதலிய' என்பது வருவித்து, 'சொல்லால் நிகழும்' என உருபும், பயனும் விரிக்க. 'முத்துரியத்துள்' என 'உள்' என்பது விரிக்க. போல் அசை, "பரம்" என்பதன் பின் 'வெளிப்பட', என்பதும், 'அதிசூக்கம்' என்பதன்பின் 'ஆக' என்பதும், ஈற்றில் 'ஆம்' என்பதும் வருவிக்க.*

*இதனால், முத்துரியத்துள் முடிநிலைத் துரியத்தின் உயர்வு கூறி முடிக்கப்பட்டது.*

## 23. மும்முத்தி

*முத்துரியத்தை அடுத்து, 'மும்முத்தி' கூறுகின்றார். மும்முத்திகளாவன, 'சீவன் முத்தி, அபர முத்தி, பரமுத்தி' என்பன. இவற்றை நான்கு மந்திரங்களால் கூறுகின்றார்.*

**2439.** **சீவன்றன் முத்தி அதீதம் பரமுத்தி**
**ஓவுப சாந்தம் சிவமுத்தி ஆனந்தம்**
**மூவயின் முச்சொருப முத்திமுப் பாலதாம்**
**ஓவுறு தாரத்தில் உள்ளும்நா தாந்தமே. 1**

---

*2439.* ***தெளிவுரை :-*** *மும்முத்திகளுள் முதலாவதாகிய சீவன்முத்தியாவது, உலகத்தில் இருப்பினும் உலகத்தைக் கடந்து நிற்கும் நிலையாம். எனவே, 'இஃது உடம்புள்ள பொழுதே நிகழ்வது' என்பது அறியப்படும். நின்மலாவத்தையில் சாக்கிரம் முதலியனவாம். மூன்றாவதாகிய பரமுத்தியாவது, உயிர் முன்பு இருந்த பாச நிலைகள் முற்றும் அற்று நிலையான அமைதியைப் பெறும் நிலையாகும். (ஆகவே, இஃது உடம்பு நீங்கிய பின்னர்ப் பெறப்படுவதால் விளங்கும்). பிறர், 'விதேக முத்தி' என்பர். இந்நிலையில், 'சிவானந்தத்தை நாம் அனுபவிக்கின்றோம்' என்னும் உணர்வும் இன்றி, அந்த ஆனந்தத்துள் மூழ்கியிருக்கும் நிலையாதல் பற்றி இதனை, 'ஆனந்தாதீதம்' என்றும் கூறுவர். ஆனந்தாதீதம் ஆனந்தத்தில் அதீதம். இவ்வாறன்றி, உலக இன்பத்தில் தோயாது, சிவானந்தத்திலே தோய்தல் சிவமுத்தியாம். (எனவே நின்மலாவத்தையில் துரியாதீத நிலையாம்). இவ்வாறு மூன்று நிலைகளில், உயிர் மூன்று தன்மைகளை உடையதாக, முத்தி மூன்று வகையாய் இருக்கும். இவற்றுள் சொல்லிறந்த முத்தியாகிய பரமுத்தியே நாதாந்த முத்தியாகக் கருதப்படும்.*

| *சீவன் முத்தி* | *நின்மலாவத்தையில் சாக்கிரம். உடம்புள்ள போதே நிகழ்ந்து, உலகத்தில் இருப்பினும் உலகத்தைக் கடந்து நிற்பது.* |
|---|---|
| *பரமுத்தி* | *விதேகமுத்தி. உடம்பு நீங்கியபின் பெறுவது. ஆனந்தாதீதம். நாதாந்த முத்தி* |
| *சிவமுத்தி* | *நின்மலாவத்தையில் துரியாதீத நிலை. உலக இன்பத்தில் தோயாது, சிவானந்தத்தில் தோய்தல்.* |

***குறிப்புரை :-*** *"அதீதம்" என்பது, 'கடந்தது' என்னும் பொருளது. ஆனந்த அனுபவத்தை, "ஆனந்தம்" என்றார். 'தாரகத்தில்' என்பது இடைக்குறைந்து நின்றது. தாரகம் - பிரணவம். இது அனைத்துச் சொற்களும் ஆதல் அறிக. ஓவுறு தாரகம் - தாரகம் ஓவிய (நீங்கிய) நிலை. உள்ளும் - உள்ளப்படும். என மாறிக் கூட்டியுரைக்க.*

**2440.** ஆவ தறியா உயிர்பிறப் பால்உறும்
ஆவ தறியும் உயிர்அருட் பால்உறும்
ஆவதொன் றில்லை அகப்புறத் தென்றகன்று
ஓவு சிவனுடன் ஒன்றுதல் முத்தியே. 2

---

*இதனால், 'மும்முத்திகளாவன இவை' என்பதும் அவற்றின் இயல்புகளும் கூறப்பட்டன.*

***2440. தெளிவுரை :-*** *("அறிவுடையார் ஆவ தறிவார்; அறிவிலார் - அஃதறிகல்லாதவர்" (திருக்குறள் - 427) என்றபடி, பின் விளைவதை முன் கூட்டிக் காரிய காரண இயைபு பற்றி உய்த்துணர்பவரே 'அறிவுடையார்' எனப்படுவார். அங்ஙனம் அறியமாட்டாதவர் அறிவிலார் ஆவர். அறிவால் இன்பம் வருதலும், அறியாமையால் துன்பம் வருதலும் நியதி. ஆகவே) பின் விளைவதை முன்கூட்டி அறிந்து வருமுன்னர்க் காத்துக் கொள்ளாத உயிர்கள் பிறப்பாகிய துன்பத்திலே வீழ்ந்திடும். பின் விளைவதை முன்கூட்டியே அறிந்து, 'வருமுன்னர்க் காத்துக் கொண்ட உயிர்கள் சிவனது திருவருளிலே சென்று பொருந்தும். 'சிவனாலன்றி உடம்பாலும், உலகத்தாலும் உயிர்கட்கு வருவதொன்றில்லை' என்பதை உணர்ந்து, அவனது அருளைப் பெற்று, அந்த அருளாலே அவனுடன் ஒன்றுபடுதலே முத்தியாகும்.*

***குறிப்புரை :-*** *'எனவே, சிவனது அருளைப் பெற்றோர் முத்தியாகிய இன்பத்தை அடைவர்' என்பதாம். 'பிற' என்னும் முதனிலையே, 'பிறப்பு' எனத் தொழிற் பெயர்ப் பொருளைத் தந்தமையின் முதனிலைத் தொழிற்பெயர்.*

> *"ஞானத்தால் வீடு............ அஞ்ஞானத்தால்*
> *உறுவதுதான் பந்தம்"* ***– சிவஞானசித்தி – சுபக்கம் சூ. 8-28***

*என்பார், "ஆவதறியா உயிர் பிறப்பால் உறும் - ஆவதறியும் உயிர் அருட்பால் உறும்" என்றார். அகன்று அகமாகிய உடம்பையும், புறமாகிய உலகத்தையும் அடிநிலைக்காரணமாக உணர்தலினின்றும் நீங்கி, ஓவு சிவன் - எல்லாவற்றையும் கடந்தவனாகிய சிவன்.*

*இதனால், முத்திகளின் பொது இலக்கணம் கூறப்பட்டது. இதனானே, 'சித்தாந்த முத்தி இது' என்பதும், 'ஏனைச் சமயவாதிகள் பிற பிறவாகக் கூறும் முத்திகள் எல்லாம் பூர்வ பக்க முத்திகளே' என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டன. அவர் கூறும் முத்தி வகைகளைச் சிவஞானசித்தி (சுபக்கம். சூ. 8-12) சிவப்பிரகாச (செய்யுள்-50) நூல்களிற் காண்க. முத்தியை இலக்கண வகையால் தெரிந்துணர்த்துபவர் 'அதனை அடைதல் ஞானம் ஒன்றானேயாம்' என்பதும் உடன் கூறினார்.*

**2441.** சிவமாகி மும்மலம் முக்குணஞ் செற்றுத்
தவமான மும்முத்தி தத்துவத் தைக்கியத்
துவமா கியநெறி சோகம்என் பார்க்குச்
சிவமாம் அமலன் சிறந்தனன் தானே. **3**

---

***2441. தெளிவுரை :-*** *சித்தாந்தம் கூறுகின்ற மும்மலங்களையும், ஏனைச் சமயத்தார் முடிவாகக் கூறுகின்ற முக்குணங்களையும் (சாத்துவிக ராசத தாமதங்கள்) போக்கிச் சிவமாம் தன்மையை எய்திச் சரியை முதலிய விரதங்களால் உண்டாகும் அந்த ஞானத்தின் பயனாகப் பெறுகின்ற மும்முத்திகளையே, 'தத்துவமசி' 'ஸோஹமஸ்மி' என்னும் மகா வாக்கியங்கள் கூறும் முத்தி நிலையாக உணர்ந்து, அந்த மகாவாக்கியப் பொருள்களை அனுபவமாக உணர வல்லவர்கட்கு நன்மையே நிறைந்து, தீமை சிறிதும் இல்லாதவனாகிய சிவன், பிற பொருட்களையெல்லாம் விலக்கித் தான் ஒருவனே விளங்கி நிற்பான்.*

***குறிப்புரை :-*** *சிவன் அவ்வாறு விளங்கி நிற்றல், ஞாயிறு பிற பொருள்களைக் காண்பவர்கட்கு அவற்றைக் காட்டித் தன்னைக் காட்டாது நின்று, தன்னைக் காண்பவர்கட்குப் பிற பொருளைக் காட்டாது, தன்னையே காட்டி நிற்றல் போல்வது. 'சிவம் இவ்வாறு தன்னையே காட்டி நிற்பதே முத்தி நிலை' எனவும், 'தன்னைக் காட்டாது பிற பொருள்களைக் காட்டி நிற்பதே பெத்தநிலை' எனவும் உணர்க. "சிவம் ஆகி" என்பதை முதலடியின் இறுதியிற் கூட்டுக. "தவம்" என்பது முன்னர் அதன் பயனாகிய ஞானத்தையும், பின்னர் ஞானத்தால் அடையும் பயனையும் குறித்த இருமடி யாகுபெயர். "ஐக்கியம்" என்றது, 'அசி' என்றபடி. மூன்றாம் அடியில் உள்ள "துவம்" தன்மை. "துவமாகிய நெறி" என்பதை "சோகம்" என்பதன் பின்னர்க் கூட்டி, 'தத்துவமஸி, ஸோகமஸ்மி இவற்றின் தன்மையாய நெறி' என உரைக்க. மகாவாக்கியங்கள் இங்குத் தம்மை யுணர்த்தி யொழியாது, தம் பொருளை உணர்த்தி நிற்றலின் 'தன்மை' என்றது அவை பற்றிய அனுபவங்களையாம். நெறி - ஞான நெறி. இதுவும் ஆகுபெயரால் அதன் பயனையே குறித்தது. "சிவமாம் அமலன்" என்றது, 'நன்றுடையானைத் தீயதில்லானை' (தி.1 ப.98 பா.1) என்றாற்போல்வது. இங்ஙனம் மறுதலைப் பொருளையும் உடன் கூறியது முத்திநிலையில் சிவன் உயிருக்குப் பிற பொருளைக் காட்டாமையை உணர்த்தற்கு. "பொய்காட்டா மெய்யா" (உண்மை விளக்கம் - காப்பு) என்றதும் காண்க.*

*இதனால், 'வேதாந்தமுத்தி சித்தாந்த முத்தியே' என உணர வல்லவர்களே வேதாந்த ஞானிகளாய், மும்முத்திப் பயன் பெறுவர் என்பது கூறப்பட்டது.*

***2442. தெளிவுரை :-*** *பக்குவான்மாக்கட்குப் பாசத்தை அறுத்துத் தன்னையே அளிப்பதாகிய சித்தாந்த முத்தியைத் தருகின்ற, பெரிய பெருமானாகிய (மகா தேவனாகிய) சிவனே ஏனையோர்கட்கு அவரவர்களது தகுதிக்கு ஏற்ப, பொது*

**2442.** சித்தியும் முத்தியும் திண்சிவ மாகிய
சுத்தியும் முத்தீத் தொலைக்கும் சுகானந்த
சத்தியும் மேலைச் சமாதியு மாயிடும்
பெத்தம் அறுத்த பெரும்பெரு மானே. **4**

---

*யோகிகள் விழைகின்ற அணிமாதி அட்டமாசித்தியாகிய பயனையும், ஏனைச் சமயத்தார் தாம் தாம் 'முத்தி' எனக் கொண்டு விழைகின்ற பல்வேறு பயன்களையும், அகப்புற, அகச்சமயிகள் விழையும் பொதுநிலைச் சிவபதமாகிய பயனையும், இப்பயனுக்கு எதிராய் உள்ள 'தாபத் திரயம்' எனப்படும் மூவகைத் துன்பங்களைப் போக்கிக் கொள்கின்ற ஆற்றலையும், சிவயோகிகள் விரும்புகின்ற அந்த மேலான சமாதியாகிய சீவன் முத்தியையும் தருபவனாவான்.*

***குறிப்புரை :-*** *'சிவன் முத்தி தரும் பெருமான்' என்பதே பற்றி, அவன் தன்னையளிப்பதாகிய அந்தப் பரமுத்தி ஒன்றைத் தான் தருவான் போலும்' என மயங்கி யுரைக்கும் பல்வேறான வழக்குரைகளால் மாணாக்கர் மயங்காமைப் பொருட்டு, 'அனைத்துப் பயன்களையும் தருபவன் சிவன் ஒருவனேயன்றிப் பிறர் ஒருவரும் இல்லை' என்பதை விளக்கினார். 'முத்தியைத் தரும் பெருமான், அதற்குக் கீழ்ப்பட்ட ஒன்றையும் தர வல்லனல்லன்' என்றல், தன்னைச் சார்ந்தவர்க்குக் காணியும், மனையும், மாடமும், மாளிகையும், ஊரும், நாடும் வழங்கவல்ல அரசனுக்குப் பரிசிலர் வேண்டும் பொன்னும், பூடணமும், யானையும், குதிரையும், தேரும் போல்வனவற்றைத் தருதல் இயலாது எனக் கூறுவாரது கூற்றோடு ஒக்கும் என்பதாம். 'சிவன் முத்தியைத் தருபவன்' என்பதற்கு, 'ஏனைப் பயன்களை ஏனைத் தேவரிடத்தும் சென்று பெறுதல் கூடும்;* ***பிறவியற்ற பெருநிலையாகிய முத்திப் பயனைச் சிவன் ஒருவனிடத்தில் பெற முடியும்'*** *என்பதே கருத்தாகலின், அஃதறியாது, சிவன் முத்தியைத் தவிர வேறு ஒன்றையும் தர மாட்டுவானல்லன் என்பார்க்கு நாம் என் கடவோம் என்பது கருத்து. 'சிவனலால் முத்தியில் சேர்த்துவார் இலை' என்னும் காஞ்சிப்புராண (திருநெறிக் காரைக்காட்டுப் படலம் - 29)த்தையும் காண்க.*

*'பிற சமயிகள் விழையும் முத்தி' என்றதனால் உலகாயதர் விழையும் அரிவையர் இன்பம் முதலிய இம்மைப் பயன்கள் பலவும் அடங்கின. 'பிற பயன்களையும் தேவர் பிறர் அளித்தல் சிவனது ஆணையைப் பெற்றே' என்பது மேலெல்லாம் விளக்கப்பட்டது. ஆதலின், பிறதேவர் தரும் பயன்களும் அவர்தாமே சுதந்திரராய் நின்று தருவன அல்ல என்பது விளங்கும்.*

*மூவகைத் துன்பங்களாவன 'ஆதியான்மிகம், ஆதி பௌதிகம், ஆதிதைவிகம் என்பன. இவை முறையே, தன்னாலே தனக்கு வருவது ('தான்' என்பது தன் உடம்பையும் சேர்த்தே), ஐம் பெரும் பூதங்களால் வருவது, பிற காரணங்களைக் கருதாது, ஊழே காரணமாகக் கருத வருவது என்பனவாம்.*

*இவ்வாறு ஞானாமிர்தத்தில் (அகவல் - 19) சொல்லப்பட்டது. பரிமேலழகர், 'ஆதி பௌதிகம்' என்பதைப் பிற உயிர்களால் வருவனவாகக் கூறினார். (திருக்குறள் - உரை) "சுத்தி" என்றது 'குற்றம் அற்றதாகிய முத்தி' என்றபடி. தரும் பெருமானைத் தரப்படும் பயனாகவே உபசரித்துக் கூறினார்.*

*இதனால், 'முத்திப் பெரும்பயனைத் தருவான் இவன்' எனக் கூற வந்தவர், அவனது பெருமை அத்துணைத்தாகாமை தோன்றக் கூறி முடித்தார்.*

## 24. முச்சொரூபம்

*பெத்தம் தடத்தமாக, முத்தியே சொரூபம் ஆதலின், முன் அதிகாரத்தில் கூறிய மும்முத்திகளையே இவ்வதிகாரத்தில் 'முச்சொரூபம்' என ஏழு மந்திரங்களால் வேறொரு வகையாக விளக்குகின்றார். 'பெத்தம் தடத்தமே, முத்தியே சொரூபம்' என உணர்தலே இவ்வதிகாரத்தின் பயன். (தடத்தம் - செயற்கை, சொரூபம் - இயற்கை).*

**2443.** ஏறிய வாறே மலம்ஐந் திடைஅடைத்து
ஆறிய ஞானம் சிவோகம் அடைந்திட்டு
வேறுமென் மேல்முச் சொரூபத்து வீடுற்றங்கு
ஈறதில் பண்டைப் பரன்உண்மை எய்துமே. **1**

---

*2443. தெளிவுரை :- 'ஆணவம், திரோதாயி, மாயை, மாயேயம், கன்மம்' என இவ்வாறு ஐந்து மலங்களும் ஆன்மாவை வந்து பற்றி, ஒன்று, இரண்டு, மூன்று' என இவ்வாறு தொகை மிகுந்த முறையிலே அவற்றினின்றும் ஒவ்வொன்றாக நீங்கி, முழுதும் விடுபட்ட ஆன்ம ஞானம், பின் 'சிவோகமஸ்மி' என்னும் அனுபவத்தைப் பெற்று, அதற்குப் பின்னும் மேலே மேலே சென்று முச்சொரூபமாகிய மும்முத்திகளைப் பெற்று, முடிவில் அநாதியான சொரூப சிவனை அடைந்து நலம் பெறும்.*

*குறிப்புரை :- மலம் ஐந்தும் ஏறிய முறையே நீங்குதலாவது, பிராரத்த கன்மம் நீங்க, அதனால் வந்த மாயேயம் நீங்குதலும், காரியமாகிய மாயேயம் நீங்கவே காரணமாகிய மாயையும் நீங்குதலும், கன்மம், மாயேயம், மாயை இவைகளைச் செலுத்தி நிற்பதே திரோதாயி ஆதலின் இம்மூன்றும் நீங்க, திரோதாயியாய் அவற்றைச் செலுத்தி நின்ற சத்தியும் அந்நிலை மாறி அருட் சத்தியாய் ஆன்ம அறிவிற் பதிதலும், அஃது அவ்வாறு பதியவே, ஆணவம் நீங்குதலுமாம்.*

*'ஏறிய மலம் ஐந்திடை அடைந்தவாறே ஆறிய ஞானம்' என்க. ஆறுதல் - தணிதல்; நீங்குதல் ஞானம், இங்கு ஆன்ம ஞானம். முன் அதிகாரத்தில் கூறப்பட்ட, 'சீவன் முத்தி, சிவமுத்தி, பரமுத்தி' என்பனவே இவ்வதிகாரத்தில் ஆன்ம சொரூபம், சிவ சொரூபம், பர சொரூபம் என முச்சொரூபங்களாக வைத்து உணர்த்தப்படுகின்றன. அவற்றுள் ஆன்ம சொரூபம், "ஆறிய ஞானம்" என்பதனாலும், சிவ சொரூபம், "சிவோகம் அடைந்திட்டு" என்பதனாலும், பர சொரூபம், பண்டைப்பரன் உண்மை எய்தும், என்பதனாலும் இங்கு உணர்த்தப் பட்டன. தச, காரியத்துள் தத்துவரூபம் முதல் ஆன்ம தரிசனம் ஈறாக உள்ளவை ஆன்ம சொரூபமாகவும், சிவயோக சிவ போகங்கள் சிவ சொரூபமாகவும், பரமுத்தி நிலை பர சொரூபமாகவும் வைத்து உணர்த்தப்படுதல் அறிக. சிவ*

**2444.** மூன்றுள மாளிகை மூவர் இருப்பிடம்
மூன்றினில் முப்பதோ ராறு முதிர்வுள
மூன்றினி னுள்ளே முளைத்தெழும் சோதியைக்
காண்டலும் காயக் கணக்கற்ற வாறே. **2**

---

*ரூபம் ஆன்ம தரிசனத்துள்ளும், ஆன்ம சுத்தியும், சிவ தரிசனமும் சிவபோகத்துள்ளும் அடங்கும்.*

*பின்வரும், 'பரன் உண்மை எய்துதலையும் உடன் வைத்து, "முச் சொரூபத்து வீடுற்று" என்றார். பண்டு - அனாதி.*

*இதனால், 'முச்சொரூபமாவன இவை' என்பதும், அவற்றின் இயல்பும் கூறப்பட்டன.*

***2444. தெளிவுரை :-*** *'சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர்' என்னும் மூவகை உயிர்களுக்கும் மூன்று வகையான மாளிகை போன்ற, 'பிராகிருத சரீரம், மாயேய சரீரம், வைந்தவ சரீரம்' என்னும் மூன்று வகையான உடம்புகள் இருப்பிடமாய் உள்ளன. அந்த மூன்று வகை உடம்புகட்குள்ளேதான் தத்துவங்கள் உள்ளன. அவ்வுடம்புகளில் ஒவ்வொன்றிலுமே 'ஆன்மா, சிவம், பரம்' என்னும் மூன்று ஒளிப்பொருள்களும் வெளிப்படுகின்றன. அவ்வொளிகளை நேரே உணரும் வாய்ப்பு உளதாயின், அதன்பின் மேற்கூறிய உடம்புகளுக்குள்ளே உயிர் இருக்க வேண்டிய விதி இல்லையாய்விடும்.*

***குறிப்புரை :-*** *"மாளிகை மூவர்" என்பன உருவகங்கள். 'மூவர் இருப்பிடமாக மாளிகை மூன்று உள' என இயைக்க. முதிர்பு - வலுவடைதல். அஃதாவது உடம்பு அழிந்தாலும் தாம் அழியாதிருத்தல். அத்தன்மை யுடையனவே தத்துவங்களாம். "மூன்றினின் என்பதில் இன், வேண்டாவழிச் சாரியை, சோதி - ஒளி; என்றது அறிவை. காண்டல் ஆன்ம, சிவ, பர தரிசனம் செய்தலாம். தடத்த சிவத்தையே 'சிவம்' என்றும், சொரூப சிவத்தைப், 'பரம்' என்றும் நாயனார் இவ்விடங்களில் குறித்தருளுகின்றார்". மூன்று என்பதைச் சோதிக்கும் கூட்டி, 'மூன்று சோதியை' என உரைக்க. பரம் உடம்பினுள்ளே முளைத்தெழுதலாவது, 'ஞான நிலையாகிய நின்மல நிலைக்குமேல் பர நிலையில் அடையப்படும் ஞேயப்பொருள் உண்டு என்னும் உணர்வு தோன்றுதல். கணக்கு - கட்டளை, விதி. காயக் கணக்கு அறுதல் பிறப்பு அறுதலாம். பயனை, "ஆறு" என்றார். "அறத்து ஆறு இது என வேண்டா" (திருக்குறள் - 37) என்பதிற்போல, "ஆறு" என்பதன் பின், 'உண்டாம்' என்னும் பொருட்டாகிய, 'ஆம்' என்னும் சொல்லெச்சம் வருவிக்க. ஈற்றடி இன எதுகை பெற்றது.*

*இதனால், முச்சொரூபங்களையும் மூவகை உயிர்களும் தம் தம் உடம்பிற்றானே உணர்ந்து அடைதற்குரியன என்பது கூறப்பட்டது.*

**2445.** உலகம் புடைபெயர்ந்து ஊழியும் போன
நிலவும் சுடரொளி மூன்றும்ஒன் றாய
பலவும் பரிசொடு பான்மையுள் ஈசன்
அளவும் பெருமையும் ஆர்அறி வாரே. 3

---

***2445. தெளிவுரை :-*** *உலகங்கள் எல்லாம் ஒடுக்க நிலையை எய்தி விட்டன. அதனால், உலகம் உள்ளளவும் இருந்த அந்த ஊழியும் போய், அடுத்த ஊழி வரும் நிலைமை தோன்றி விட்டது. உலகம் உள்ள பொழுது விளங்கிக் கொண்டிருந்த, 'ஞாயிறு, திங்கள் தீ' என்னும் முச்சுடர்களும் காரண நிலையில் ஒன்றாகி விட்டன. இவை போல எல்லாப் பொருள்களும் தம் தம் காரண நிலைகளை எய்தி விட்டன. ஆயினும் பரமசிவன் முன் இருந்தவாறே இருக்கின்றான் என்றால், அவனது நீளத்தின் எல்லையையும், அகலத்தின் எல்லையையும் யார் அறிய வல்லார்!*

*ஊழி என்றது 1. நித்தப்பிரளயம் (அ) பிரமாண்ட பிரளயம்*
*2. பிராகிருதப் பிரளயம் (அ) அவாந்தரப் பிரளயம்*
*3. மத்திமப் பிரளயம்*
*4. மகாப் பிரளயம்*
*5. பிரம மகாப் பிரளயம்*

*என ஐவகைப்படும்.*

*சங்காரம் ஐவகைப்படும்.*

1. *நிவிர்த்தி கலையிலடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்*
2. *பிரதிட்டா கலையிலடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்*
3. *வித்தியா கலையிலடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்*
4. *சாந்தி கலையிலடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்*
5. *சாந்தியதீத கலையிலடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம்*

***குறிப்புரை :-*** *புடைபெயர்ந்து - தோன்றியவாறே ஒடுங்கி. "பெயர்ந்து" என்னும் எச்சம் எண்ணுப் பொருளில் வந்தது. 'போயினது' என்பது, "போன" எனக் குறைந்து நின்றது. ஆய - ஆயின. பரிசு - தன்மை. காரியத்தின் தூலமாய்க் காணப்படும் இயல்புகள் காரணத்தில் சூக்குமமாய்க் காணப்படாது நிற்கும் ஆதலின் அங்ஙனம் நிற்பனவற்றை, 'தன்மை' என்றார். பான்மை - பகுதி; என்றது காரணப் பகுதிகளை, "பான்மையுள்" என்பதன்பின், 'ஆயின' என என்னும் சொல்லெச்சம் வருவித்துக் கொள்க. நீள அகலங்கள் காலம் பற்றியும், இடம் பற்றியும் கொள்ளப்படும். பரம் பொருள், 'நித்தியம்' ஆதலின் கால அளவைக் கடந்ததும், எல்லாப் பொருளும் தன்னில் வியாப்பியமாய் நிற்க, தான் எல்லா வற்றிற்கும் வியாபகமாய் நிற்றலின் இடத்தைக் கடந்ததும் ஆயிற்று. அவற்றை,*

**2446.** பெருவாய் முதல் எண்ணும் பேதமே பேதித்து
அருவாய் உருவாய் அருவுரு வாகிக்
குருவாய் வரும்சத்தி கோன்உயிர்ப் பன்மை
உருவாய் உடன்இருந்து ஒன்றாய் அன் றாமே. **4**

---

*"அளவும், பெருமையும் ஆர் அறிவார்" என்றார். "ஆர் அறிவார் அவ் அகலமும் நீளமும்" (பா. 32) என முன்னருங் கூறினார். "நீளஅகலம் உடையாய் போற்றி" (தி.6 ப.55 பா.10) என்றதும், ஏனையெல்லாப் பொருட்கும் வியாபகமாய் நிற்றலையே குறித்தது. இதிலும் ஈற்றடி இன எதுகை பெற்றது.*

*இதனால், முச்சொரூபங்களுள் பர சொரூபத்தின் பெருமை விளக்கப்பட்டது.*

***2446. தெளிவுரை :-*** ***மகா மாயையை முதலாக வைத்து எண்ணுகின்ற காரணங்களையும், அவற்றின் காரியங்களையும் வேறு வேறு வகைபடத் தோற்றுவித்து, அவற்றை அங்ஙனம் செய்தற்கு ஏற்ற 'அருவம், உருவம், அருவுருவம்' என்னும் மூவகைத் திருமேனிகளைக் கொண்டு, மூவகை நிலையில் நின்று, முடிவில் குருவாகியும் வந்து ஆட்கொள்கின்ற அருளாளனாகிய சிவன், அளவில்லாத உயிர்களிலும் அவ்வவற்றோடும் சேர்ந்து உயிர்க்கு உயிராதல் தன்மையால் உடனாயும், கலப்பினால் ஒன்றாயும், பொருள் தன்மையால் வேறாயும் உள்ளான்.***

***குறிப்புரை :-*** *"வாய்" என்றது 'வாயில்' என்னும் பொருட்டாய், 'காரணம்' எனப் பொருள் தந்தது. உலகத்திற்கு உரிய முதற் காரணங்களில், 'மகா மாயை' எனப்படும் சுத்த மாயையே பெரிதாகலின் அதனைப் "பெருவாய்" என்றார். 'முதலாக' என ஆக்கம் வருவித்துக் கொள்க. அதனை முதலாக வைத்து எண்ணுமாறு 'மகா மாயை, மாயை, பிரகிருதி' என இம்முறையால் எண்ணுதலாம். பேதம் - வகை. காரணங்கள் இயல்பிலே வேறுபட்டிருப்பினும், அவ் வேற்றுமையை உயிர்களின் தகுதி வேறுபாடுகளுக்கு ஏற்ப பொருத்துதலின், அங்ஙனம் பொருத்துதற்குரிய காரணங்களையும் சிவனே போதித்ததாகக் கூறினார். காரண வேறுபாட்டிற்கு ஏற்பக் காரியங்களை வேறு வேறாகச் செய்பவன் சிவனே யாதல் தெளிவு. செய்யுள் நோக்கி, அருவுருவம் இறுதியில் வைக்கப்பட்டது. அருவம் முதலிய மூவகைத் திருமேனிகளின் நிலை, 'இலயம், போகம், அதிகாரம்' என்பனவாம் என்பது மேலெல்லாம் சொல்லப்பட்டது. 'உடனாய், ஒன்றாய், வேறாய் இருத்தலே அத்துவிதமாய் இருத்தலாம்' என்பது சித்தாந்தம் ஆதல் வெளிப்படை.*

*"உலகெலா மாகி வேறாய்*
*உடனுமாய்"*

*என்பது சிவஞானசித்தி (சுபக்கம் - சூ. 2-1).*

**2447.** மணிஒளி சோபை இலக்கணம் வாய்த்து
அணியென லாய்நின்ற ஆறது போலத்
தணிமுச் சொருபாதி சத்தியால் சாரப்
பணிவித்த பேர்நந்தி பாதம்பற் றாயே. **5**

---

*ஈறாய், முதல் ஒன்றாய், இரு பெண் ஆண், குணம் மூன்றாய்,*
*மாறாமறை நான்காய், வரு பூதம் அவை ஐந்தாய்*
*ஆறார்சுவை, ஏழோசையொடு, எட்டுத்திசை தானாய்,*
*வேறாய், உடன் ஆனான் இடம் வீழிம்மிழ லையே.*

*- தி.1 ப.11 பா.2*

*என்னும் திருமுறைத் திருமொழியும்,*

*ஈறாகி அங்கே, முதல்ஒன்றாய் ஈங்கிரண்டாய்,*
*மாறாத எண்வகையாய், மற்றிவற்றின் - வேறாய்*
*உடனாய் இருக்கும் உருவுடைமை யென்றும்*
*கடனாய் இருக்கின்றாய் காண். - திருக்களிற்றுப்படியார் - 86*

*என அதனை எடுத்துக்காட்டி நிறுவிய சாத்திர யாப்பும் கண்டுணரற்பாலன. சத்தி கோன் - சத்திக்குத் தலைவன். ஞானேச்சாக் கிரியா சத்திகளைக் கொண்டு செயலாற்றும் முதல்வன் 'பதி' எனப்படுபவன் இவனே. இந்நிலை தடத்தமே யாகலின் இவனை இங்கு, 'சிவன்' எனக் கொள்க. 'பன்மையில்' என உருபு விரிக்க. ஈற்றில் "உருவாய்" என்றது, உயிர்தோறும் தனித்தனிப் 'பொருந்தும் பொருளாய்' என்றபடி.*

*இதனால், முச்சொரூபத்துள் சிவ சொரூபத்தின் இயல்புகள் வகுத்துரைக்கப்பட்டன.*

***2447. தெளிவுரை :-** இரத்தினங்கள் நிறம், ஒளி, வடிவம் என்பவற்றைப் பெற்றுப் பல அணிகலங்களாய் நிற்கும் முறைமை போலத் தான் 'பரம், சிவம், ஆன்மா' என்னும் முச்சொரூபத்தை யுடையதாகி அந்நிலைகளில் தனது சத்தியால் சீவனும் அடங்கித் தோன்றும்படி செய்த, 'நந்தி' என்னும் பெயரையுடைய அந்த முதல்வனது திருவடிகளையே பற்றாகப் பற்றி உய்வாயாக. ஆன்மா - படிகம். சிவன் - மாணிக்கம்.*

***குறிப்புரை :-** பரம் - சொரூப சிவம். அதன் வடிவம் அகண்டமாய் இருத்தல் பின்னர்க் கண்டமாய் உள்ள வடிவத்தைக் கூறுதலின் அதனோடு ஒப்ப அகண்டத்தையும் 'வடிவம்' என்றார். 'இலக்கணம்' என்றது வடிவத்தை. சிவம் - சதாசிவன், மகேசுரன் ஆகிய தடத்தசிவங்கள். இனிச் சிவமே ஆன்ம சொரூபமாய் நிற்றலாவது சீவனில் அதுவேயாய்க் கலந்து நிற்றல். 'பர சொரூபம் சிவ சொரூப மாயும் ஆன்ம சொரூபமாயும் நிற்றல் ஆதி சத்தியால் என்றபடி' "ஆதி சத்தியால்"*

**2448.** கல்லொளி மாநிறம் சோபைக் கதிர்தட்டல்
நல்ல மணிஒன்றில் நாடில்ஒண் முப்பதம்
சொல்லறு பாழில் சொல்லறு பேர்உரைத்து
அல்லறு முத்திராந் தத்தனு பூதியே. **6**

---

*என்பதன் பின், 'அவற்றில்' என்பது வருவிக்க.*

*இதனால், 'ஒரு பெரும் பொருளே தனது சத்தியால் முச்சொரூபமாய் நின்று உயிர்களை உய்விக்கின்றது' என்பது கூறப்பட்டது.*

***2448. தெளிவுரை :–*** *பிற மணிகளில் "ஒளி" என்றும், 'நிறம்' என்றும் 'சோபை' என்றும் இங்ஙனம் பல பெயர்களால் சொல்லப்பட்டு விளங்குகின்ற கதிர்கள் ஒரு படிக மணியிலே பொருந்த, அப்படிக மணிவேறு பல மணிகளாய்க் காட்சியளிப்பது போன்றதே 'தத்துவமசி' மகாவாக்கியத்தால் உபதேசிக்கப்படும் பொருள். அஃதாவது, 'உயிர் சார்ந்ததன் வண்ணமாம் இயல்புடையது ஆதலின், பாசத்தைச் சார்ந்து பாசமாய் இருந்த நீ, அந்நிலை நீங்கிச் சிவத்தைச் சார்ந்து சிவம் ஆகின்றாய்' என்பதாம். (சீவன் பாசமாய் இருந்த நிலை சொல்லால் சொல்லப்படும். அஃது அந்நிலையினின்றும் நீங்கிச் சிவமாகிய நிலை) சொல்லால் சொல்ல வாராது, முத்தி பஞ்சாக்கரமும் மொழியாய் இராது அநுபவமான ஒளி நிலையாகும். இது முப்பாழும் கடந்த நிலையும், குரு பஞ்சாக்கரத்தை உபதேசித்து, சின்முத்திரையால் அஞ்ஞானத்தைப் போக்கி, மெய்ஞ்ஞானத்தை உணர்த்திய முடிந்த நிலையும் ஆகும்.*

***குறிப்புரை :–*** *"நல்ல மணி" என்றது சார்ந்ததன் வண்ணமாம் இயல்பால் சாரப்பட்ட பல மணிகளாய் விளங்கும் மணி; என்றது படிக மணியை. ஆகவே, "கல்" என்றது பிற மணிகளையாயிற்று. கதிரின் இயல்பை இனிது விளக்குவார் அதனைப் பல பெயர்களால் குறித்தார். "தட்ட" என்பதை "ஒன்றின்" என்பதன் பின்னர்க் கூட்டுக. முப்பதம் - முப்பதப் பொருள். இது சொல்லாகுபெயர். இதன்பின், 'ஆம்' என்பது எஞ்சி நின்றது. அல் - இருள். அல் அறுத்ததைக் கூறவே, ஒளியை வழங்கியதும் தானே பெறப்பட்டது. அறு முத்திரை, 'அறுத்த முத்திரை' எனப் பிறவினை வினைத்தொகை. 'உரைத்த அறுத்த' என்பதற்கு. 'குரு' என்னும் எழுவாய் வருவித்துக்கொள்க.*

*இதனுள், 'முச்சொரூபத்துள் முடிவான பர சொரூபத்தை, குரு உபதேசத்தின் வழி அடைதலே முடிநிலைப் பயன்' என்பது கூறப்பட்டது.*

***2449. தெளிவுரை :–*** *வரிசையாய் அமைந்துள்ள செந்தாமரை மலர்களின் பல்வேறு வகையாய்க் காட்சியளிக்கின்ற இறைவனை மூலாதாரத்தினின்றும் எழுந்து மேல்நோக்கி நடக்கின்ற அனல் நாதாந்தத்திலே நிறுத்திக்காட்ட, அதனால், அவ்விடத்தை அடைந்த பால் ஒழுகும் தனங்களையுடைய*

**2449.** உடந்தசெந் தாமரை யுள்ளுறு சோதி
நடந்தசெந் தாமரை நாதம் தகைந்தால்
அடைந்த பயோதரி அட்டி அடைத்த
இடந்தரு வாசலை மேல்திற வீரே. 7

---

*பெருமாட்டி அடைத்து வைத்திருக்கின்ற விசாலமான மேல் வாசலைத் திறக்கும் உபாயம் அறிந்து திறவுங்கள்.*

***குறிப்புரை :-*** *'அப்பொழுது அவ்வத் தாமரை அளவில் அடங்கித் தோன்றிய இறைவன், எல்லையில் பேரொளியாய்க் காட்சியளிப்பான்' என்பது குறிப்பெச்சம். 'அக்காட்சி சிவ சொரூபக் காட்சியாகும்' என்பதும், அதனைக் கண்டால் பர சொரூபத்தைக் காணுதல் கூடும் என்பதும் இதன் உட் கருத்துக்களாகும்.*

*ஒன்றையொன்று சார்ந்திருப்பதை, உடந்தையாய் இருப்பது, என்றல் வழக்கு. 'உடந்தை' என்பது உடந்த' என நின்றது. ஒற்று மிகாமையும் இத்திரிபு நோக்கியேயாம். பின் வந்த 'செந்தாமரை' என்பது அது போலும் தீயைக் குறித்தது. உடந்த செந்தாமரை ஆறு ஆதாரங்கள். தீ, மூலாக்கினி. 'நாதத்தில் தகைந்தால்' என்க. தகைதல் - தடுத்தல். 'தகைந்ததால்' என்பது குறைந்து நின்றது. 'சோதியைத் தகைந்ததால்' என இயைக்க. பயோதரி, குண்டலி சத்தி, அட்டி அடைத்தல் - இறுக மூடிவைத்தல். மேல் வாசல் துவாதசாந்தத்திற் செல்லும் வழி. அஃது உச்சித் துளையாம். அதனைத் திறத்தலாவது, உணர்வு அதனைக் கடந்து செல்லும் இயல்பினை அடைதல். 'மேல் வாசலை' என மொழி மாற்றி யுரைக்க.*

*இதனால், சிவசொரூப பர சொரூபங்களை அடைதற்கு உபாயம் கூறி முடிக்கப்பட்டது.*

## 25. முக்கரணம்

*தத்துவம், நின்மலாவத்தை, பராவத்தை என்னும் இம்மூன்றுமே இங்கு 'முக்கரணம்' எனப்படுகின்றன. கரணம் - உடனடிக் கரணம். இவற்றில் சீவான்மா பரமான்மாப் பற்றி மூன்று மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**2450.** இடன்ஒரு மூன்றில் இயைந்த ஒருவன்
கடன்உறும் அவ்வுரு வேறெனக் காணும்
திடமது போலச் சிவபர சீவர்
உடனுறை பேதமும் ஒன்றென லாமே. 1

---

*2450. **தெளிவுரை :-** உயிர் சகலாவத்தையில் தத்துவங்களோடு கூடி 'சீவான்மா' எனப் பெயர் பெற்று நிற்பினும் அது தத்துவங்களின் வேறாதல் போல்வதும், நின்மலாவத்தையில் தத்துவங்களின் நீங்கி வாக்குகளின் வடிவாய் நிற்குமிடத்து 'அந்தரான்மா' எனப்பெயர் பெற்று நிற்பினும் அது வாக்குகளின் வேறாதல் போல்வதும் பரா வத்தையில் பரத்தோடு கூடிப் பரான்மா எனப் பெயர் பெற்று நிற்பினும் அது பரத்தின் வேறாதல் போல்வதுந்தாம். பரம் பொருள் சீவான் மாவில் நிறைந்து 'சிவம்' என நிற்பினும் அது சிவனின் வேறாதலும், பரான்மாவில் நிறைந்து 'பரம்' என நிற்பினும் அது பரான்மாவின் வேறாதலுமாம்.*

*குறிப்புரை :- எனவே, 'பரமான்மாவும், சீவான்மாவும் எவ்வாற் றானும் ஒன்றாதல் இல்லை' என்பதே இதனால் சொல்லப்பட்டதாம். அவத்தைகளே இங்கு 'இடம்' எனப்பட்டன. "ஒருவன்" என்பது "புருடன்" என்னும் பொருட்டாய், உயிரைக் குறித்தது. "உரு" என்றது, தனக்கு வேறாய பொருள்' என்றவாறு. அவற்றை உயிர், 'தன்னின் வேறு' எனக் காணுதல் ஞானத்தினாலாம். ஆகவே, அந்த ஞானத்தினாற்றானே உயிர் பரத்தையும் 'தன்னின் வேறு' என உணர்தல் வேண்டும் என்பதாம். அவ்வாறு உணரும் உணர்வே பதிஞானத்தைத் தரும். அவ்வாறின்றி, உயிர் தன்னையே பரமாகக் காணுதல் மல வாசனை பற்றி நிகழும் பசுஞானமாம். "ஒன்று எனலாம்" என்றது, 'வேறாக உணரப்படுதலால் ஒரு தன்மையவாம்' என்றபடி. 'திடமது போலப் பேதமும் ஒன்றெனலாம்' என இயைக்க. அது பகுதிப்பொருள் விகுதி.*

*இதில் உணர்த்தப்பட்ட பொருள் முன்பே சொல்லப்பட்டது.*

*2451. **தெளிவுரை :-** பொருள்களை மாறாக உணரும் மயக்கத்தை நீக்கி உள்ளவாறுணரும் தெளிவைத் தருதலால் குண்டலி சத்தி ஒளியெனத்தக்கது. அதனை உலகர் இருளாக்கி வைத்துள்ளனர். அவ்வாறில்லாது அதனை ஒளியாகவே விளங்கும்படிச் செய்தல் வேண்டும். அது பிராணாயாமத்தால் மூலாக்கினியை எழுப்புதலால் உண்டாகும். அஃது உண்டாகும் பொழுதுதான்*

**2451.** ஒளியை ஒளிசெய்து ஓம்என் றெழுப்பி
வளியை வளிசெய்து வாய்த்திட வாங்கி
வெளியை வெளிசெய்து மேல்எழ வைத்துத்
தெளியத் தெளியும் சிவபதந் தானே. **2**

**2452.** முக்க ரணங்களின் மூர்ச்சை தீர்த்து ஆவதக்
கைக்கா ரணமென்னத் தந்தனன் காண்நந்தி
மிக்க மனோன்மனி வேறே தனித்தேக
ஒக்கும்அ துன்மனி ஓதுட் சமாதியே. **3**

---

*'வெறுங் காற்று' எனப்படுகின்ற மூச்சு சூரிய சந்திர கலைகளாம் சிறப்பு வளியாகும். அதனை அவ்வாறு செய்து, பயன் கிட்டும்படி கும்பகத்தால் சேமித்து, அதனானே சுழுமுனை வழி, வழியாயில்லாமல் அடைத்தும், உச்சியில் அருள் ஞானம் விளங்குகின்ற இடம் இடமாய் இல்லாமல் பாழ்படுத்தியும் வைத்திருக்கின்ற நிலையை மாற்றி வலமாகவும், இடமாகவும் செய்து குண்டலியை 'ஓம்' என்று எழுப்பி மேற்போய் உலாவச் செய்து தெளிவுணர்வைப் பெற்றால், சிவ சீவர்களது உண்மை நிலை விளங்கும்.*

***குறிப்புரை :-*** *'ஓம்' என்று எழுப்பி - என்றதனால், இவ்யோகம் பிரணவயோகமாதல் விளங்கும்.*

*இதனால், மேற்சொல்லப்பட்ட சிவ பர சீவர் பேதம் விளங்குதற்கு வழி கூறப்பட்டது.*

***2452. தெளிவுரை :-*** *ஆறாதாரங்களில் மணிபூரகம், அனாகதம், ஆஞ்ஞை என்னும் மூன்று ஆதாரங்கள் சிறப்புடையன. சுவாதிட்டானத்தினின்றும் எழுகின்ற பிராணன் 'உதானன்' எனப் பெயர் பெற்று மேலோங்கி இவ்விடங்களில் சென்று ஆஞ்ஞையில் முடியும். அவ்வாறு முடியும்படி அதனை முடித்த பின்பு அவ்வாறு முடித்ததனால் உண்டாகும் பயனைக் கைம்மேற் பலனாக எமக்கு எம் ஆசிரியர் நந்தி பெருமான் அளித்தருளினார். அப்பயன் தான் யாதெனில், ஆஞ்ஞையில் விளங்கிய மனோன்மனி சத்தி அதற்கு மேலே வியாபினி சமனை உன்மனைகளாய்ச் செல்ல, உன்மனாந்தத்தில் சிவத்தோடு ஒன்றும் சமாதி நிலையாம்.*

***குறிப்புரை :-*** *"காரணம்" இரண்டில் முன்னது இடத்தையும், பின்னது காரணத்தினால் விளைவதாகிய பயனையும் குறித்தன. தீர்த்தல் - முடித்தல். 'தீர்த்து, அதனால் ஆவதாகிய அப்பயனைத் தந்தனன் நந்தி' என்க. காண், முன்னிலையசை. ஏக ஒக்கும் அது - செல்லும் நிலையில் முடியும் நிலையாகின்ற அது, 'உன் மனியாம்' என்க. "உள்" என்றது நுட்பத்தை. இது, பொது யோக சமாதியாகாது, பிராசாத யோக சமாதியாகலின், "உட்சமாதி" என்றார்.*

*இதனால், முன் மந்திரத்தில், "ஓம்" - என்று எழுப்பி மேல் எழ வைத்ததலால் பயன் விளைதல் இவ்வாறு என்பது கூறப்பட்டது.*

## 26. முச்சூனிய முத்தொந்தத்தசி

*'சூனியம் பாழ்' என்பன ஒரு பொருட் சொற்களாயினும் அவற்றை நாயனார், 'அற்ற நிலை' என்னும் பொருளவாக வைத்து, 'சூனியம்' என்பதை, 'சொல்லறுதி' எனவும், 'பாழ்' என்பதை "பொருளறுதி" எனவும் குறியிட்டுக் கூறுகின்றார். அவற்றுள் சூனியமாகிய சொல்லறுதி, 'தத் + துவம் + அசி' என்னும் மூன்று சொற்கள் பற்றி அமைதலை 'முச்சூனியம்' எனக் குறிப்பிட்டு உணர்த்துகின்றார். முச் சூனிய தொந்தத்தசி - முச்சூனியங்களாகின்ற 'தொம்' முதலிய மூன்று சொற்களின் நிலைமை. இதனை ஏழு மந்திரங்களால் உணர்த்துகின்றார்.*

**2453.** தற்பதம்தொம்பதம் தானாம் அசிபதம்
தொற்பதம் மூன்றும் துரியத்துத் தோற்றவே
நிற்பது உயிர்பரம் நிகழ்சிவ மும் மூன்றின்
சொற்பத மாகும் தொந்தத் தசியே. 1

---

*2453. **தெளிவுரை :-** துவம், தத், அசி என்னும் மூன்று சொற்கள் தொன்மையான வேதத்தில் சொல்லப்பட்டனவாகும். இவை உலகியலில் தோன்றுதல் போலாது யோக துரியம், நின்மலதுரியம், பரதுரியம் ஆகிய முத்துரியங்களில் உணர்வின்கண் தோன்றும் பொழுது அவை முறையே சீவ அறுதியும், பர அறுதியும், சிவ அறுதியுமாய் நிற்கும். அது என்னும் தற்பதமும், நீ என்னும் தொம்பதமும், தன் மயமாவது உணர்த்தும் அசிபதமும் நின்மல துரியத்தில் தோற்ற அத்தோற்றத்தில் உயிரும், பரமும், சிவமும் நிற்பதாம்.*

*குறிப்புரை :- 'சிவம்' என்பது அருளையும் 'பரம்' என்பது ஆனந்தத்தையும் குறிக்கும். நிற்பது, தொழிற்பெயர். ஈற்றில் உள்ள பதம் நிலை, முடிநிலை. "உயிர், பரம்" என்பவற்றிலும் எண்ணும்மை விரிக்க. ஈற்றில் உள்ள "தொந்தத்தசி" என்பதை, "மூன்றின்" என்பதற்கு முன்னே கூட்டி, 'ஆம்' அம்மூன்றின் எனச் சுட்டு வருவித்துரைக்க. சிறப்பு நோக்கி, 'அசி' என்பதை மட்டும் 'முன்னர், தான் ஆம் அசி' என்றார்.*

*ஞானாசாரியன் ஆன்மாவின் பக்குவம் நோக்கி, அது நீ ஆனாய் என்று உபதேசம் செய்யக் கேட்ட அப்பக்குவான்மா அம்மந்திரப் பொருளாகிய சிவமும் தியானிப்போனாகிய ஆன்மாவும் இரண்டறக் கலந்து அக்கலப்பினால் சிவமாந் தன்மைப் பெரு வாழ்வுறும் என்க. சீவ துரியம், பரதுரியம், சிவதுரியம் என்னும் அவத்தையைக் கடந்தது சிவதுரியாதீதம் என்பது. சீவதுரியம் முதல் சிவதுரியம் ஈறான பத்து அவத்தைகள் வருமாறு. சீவதுரியம், சிவதுரியாதீதம், பரநனவு, பரகனவு, பரசுழுத்தி, பரதுரியம். சிவநனவு, சிவகனவு, சிவசுழுத்தி, சிவதுரியம் என்பன பரதுரிய சாக்கிரம். பரந்த உலகத்தை எஞ்சுதலின்றி இருந்த நிலையிலேயே ஒருசேர நுகர்தல். பரதுரிய சொப்பனம் நுண்ணுணர்வால் நுகர்தல். பரதுரிய சுழுத்தி கருவி கரணங்களின் உருவை மட்டும் உணர்தலாம்.*

**2454.** தொந்தத் தசிமூன்றில் தொல்கா மியமாதி
தொந்தத் தசிமூன்றில் தொல்தா மதமாதி
வந்த மலம்குணம் மாளல் சிவம் தோன்ற
இந்துவின் முன்இருள் நீங்குதல் ஒக்குமே. **2**

**2455.** தொந்தத் தசிய வாசியில் தோற்றியே
அந்த முறைஈரைந் தாக மதித்திட்டு
அந்த மிலாத அவத்தைஅவ் வாக்கியத்து
உந்து முறையில் சிவ முன்வைத் தோதிடே. **3**

---

*அதுவும் கெட்ட நிலை பரதுரிய துரியம்; இதுவே சிவதுரியம் என்க. பரதுரிய சாக்கிரமும் பரதுரிய சொப்பனமும் உண்மையான அமைதியாம். சகல கேவல சுத்தங்களின் சுழுத்திக்கு இதுவேறானது என்றுணர்க.*

*இதனால், 'முச்சூனியம் ஆவன இவை' என்பதும், அவை தோன்றும் இடங்களும் கூறப்பட்டன.*

***2454. தெளிவுரை :–*** *முன் மந்திரத்தில் கூறிய மூன்று அறுதிகளுள் தொம்பத அறுதியில் (சீவ அறுதியில்) மாயா - மலமும், தற்பத அறுதியில் (பர அறுதியில்) ஆணவ மலமும், அசிபத அறுதியில் (சிவ அறுதியில்) கன்ம மலமும் நீங்கும். அவ்வாறே அம்மூன்று அறுதிகளிலும் முறையே இராசதம், சாத்துவிகம், தாமதம் என்னும் குறைகள் நீங்கும். இவ்வாறு மூவறுதியில் மும்மலங்களும், முக்குணங்களும் நீங்குதல் நிலாவின் முன் இருள் நீங்குதலை ஒக்கும்.*

***குறிப்புரை :–*** *"மூன்றில்" என்பன இரண்டும், 'மூன்று அறுதிகளில்' என்றபடி. "காமியம் ஆதி" என்பதை, "காமியம், ஆணவம், மாயை என்றவாறாகக் கொண்டு, அவற்றை எதிர் நிரல்நிறையாகப் பொருத்துக. தாமதமாதி முக்குணங்களை ஏற்ற பெற்றியால் பொருத்திக் கொள்க. "சிவம் தோன்ற" என்பதை "மலம் குணம் மாளல்" என்பதற்கு முன்னே கூட்டுக. "ஆதி" என்பதன் பின், 'நீங்கும்' என்பது வருவிக்க.*

*இதனால், முச்சூனியங்களில் நிகழ்வன சில கூறப்பட்டன.*

***2455. தெளிவுரை :–*** *'தொம், தத், அசி' என்னும் மூன்று பதங்களையும் முத்தி பஞ்சாக்கர மூன்றெழுத்துக்களில் முறையே யகார சிகார வகாரங்களில் வைத்து அந்த முறையிற்றானே தூல பஞ்சாக்கரம் ஐந்தும், சூக்கும பஞ்சாக்கரம் ஐந்தும் அடங்கியிருப்பதாகக் கொண்டு அதனையே அழிவில்லாத யோகாவத்தை நின்மலாவத்தை பராவத்தைகளில் 'தொந்தத்தசி' வாக்கியமாகச் சிகார வகாரங்களை முன் வைத்து உச்சரி.*

***குறிப்புரை :–*** *'அவத்தையில்' எனவும், 'அவ்வாக்கியத்தை' எனவும் அவ்வவ் வுருபினை விரிக்க. 'ஓதினால் முச்சூனியமும் விளையும்' என்பது குறிப்பெச்சம்.*

**2456.** வைத்துச் சிவத்தை மதிசொரு பானந்தத்து
உய்த்துப் பிரணவ மாம்உப தேசத்தை
மெய்த்த இதயத்து விட்டிடு மெய்யுணர்ந்து
அத்தற் கடிமை அடைந்துநின் றாயே. **4**

**2457.** தொம்பதம் மாயையுள் தோன்றிடும் தற்பதம்
அம்பரை தன்னில் உதிக்கும் அசிபதம்
நம்புறு சாந்தியில் நண்ணும் அவ்வாக்கியம்
உம்பர் உரைதொந்தத் தசி வா சியாவே. **5**

---

*இதனால், திருவைந்தெழுத்து மந்திரமே தத்துவமசி மகா வாக்கியமாய் முச்சூனியங்களைத் தருதல் கூறப்பட்டது.*

***2456. தெளிவுரை :-*** *முன் மந்திரத்திற் கூறியவாறு முத்தி பஞ்சாக்கரத்தை சிவ முன்னாக வைத்து உணர்வைப் பர சொரூபமாகிய ஆனந்த நிலையிற் செலுத்தி அதனோடே பிரணவமாகிய அந்த உபதேச மந்திரத்தையும் அவ்வாறே உள்ளத்தில் சேர்ப்பி, சேர்ப்பித்தால், அப்பொழுதே நீ மெய்யுணர்வைப் பெற்றுச் சிவனுக்கு அடிமையாகி விடுவை.*

***குறிப்புரை :-*** *முன்மந்திரத்தை அடுத்து அந்தாதியாக "வைத்து" என்றதனால், 'முன் வைத்து' என்றதாயிற்று. பிரணவத்தையும் அவ்வாறாகி வைக்கும் முறை பின்னர்க் கூறப்படும். தெளிவு பற்றி எதிர்காலம் இறந்த காலமாயிற்று.*

*இதனால், பிரணவமும், தத்துவமசி, முத்திபஞ்சாக்கரம் இவை போல முச்சூனியத்தைத் தரும்' என்பது கூறப்பட்டது. 'சிவத்தை முன் வைத்து' என்றது அனுவாதம்.*

***2457. தெளிவுரை :-*** *'தத்துவமசி' மகாவாக்கியத்தில் 'துவம்' பதப்பொருளாகிய சீவன் உயிர் தத்துவங்களையே 'தான்' என மயங்கும் மயக்கம் மாயையால் தோன்றுவதாகும். தற்பதப் பொருளாகிய பதி ஐந்தொழில் செய்தற் பொருட்டுப் பராசத்தியினின்றும் சிவமாகித் தோன்றும். சீவன் சிவமாதலைத் தெரிவிப்பதாகிய 'அசி' பதப்பொருள் உயிர் அனைத்துப் பாசங்களினின்றும் நீங்கித் தூயதாய நிலையில் தோன்றும். இனி, 'தத்துவமசி' மகா வாக்கியத்தில் உள்ள 'அசி, தத், துவம்' என்னும் முப்பதங்களும் முத்தி பஞ்சாக்கரத்தில் முறையே 'வா, சி, ய' மூன்றெழுத்துக்களில் அடங்கும்.*

***குறிப்புரை :-*** *எனவே, தத்துவமசி மகாவாக்கியப் பயிற்சியின் பயனாகிய முச்சூனியங்களை முத்தி பஞ்சாக்கரப் பயிற்சியே தரும்' என்பது குறிப்பெச்சம். "பதம்" மூன்றும் அவற்றின் பொருளைக் குறித்த சொல்லாகு பெயர்களாம். நம்புதல், விரும்புதல், தூய்மையை, "சாந்தி" என்றார். உம்பர் உரை, தொன்மை*

**2458.** ஆகிய அச்சோயம் தேவதத் தன்இடத்து
ஆகி யவைவிட்டால் காயம் உபாதானம்
ஏகிய தொம் 'தத் தசி' என்ப மெய்யறி
வாகிய சீவன் பரசிவ னாமே. **6**

---

*மொழி. ஈற்றில் யகர உயிர்மெய் செய்யுள் நோக்கி நீட்டல் பெற்றது.*

*இதனால், முத்தி பஞ்சாக்கரம், 'தத்துவமசி' இவற்றின் பொருள் தோன்றுமாறு கூறப்பட்டது.*

***2458. தெளிவுரை :-*** *'சோயம் தேவதத்தன்' என்பது 'தேவதத்தனாகிய அவனே இவன்' என்பதைக் குறிக்கும். இது ஒரு வடமொழி உதாரணம். இதன் விளக்கம் இல்லற நிலையில் அதற்குரிய கோலமும், உடையும், பெயருமுடையனவாய் இருந்த ஒருவன் அவற்றையெல்லாம் விடுத்துத் துறவியாகி, அதற்குரிய கோலம், தண்டு, கமண்டலம், வேறு பெயர் ஆகியவற்றைக் கொண்டால், 'அவன்' எனப்பட்ட நிலையில் அவனிடம் இருந்த சேர்க்கைப் பொருள்களையெல்லாம் விடுத்து, அவற்றை உடையவனாய் இருந்த அவனை மட்டுமே கொண்டு, 'இவன்' எனச் சுட்டுதல் போல்வதே 'சீவன் சிவமாகிறது' என்றலும் - என்பது. அஃதாவது பசுத்துவத்தால் 'சீவன்' எனப்படுகின்ற உயிர் அப்பசுத்துவத்தின் நீங்கித் தூயதாகிய நிலையிலேதான் சிவனைச் சார்ந்து சிவமாகின்றது என்பதாம்.*

***குறிப்புரை :-*** *ஆகிய - இயற்சொல்லாகாது, ஆக்கச்சொல்லாய் அமைந்த அகரச்சுட்டு 'சோயம் தேவதத்தன்' என்னும் தொடர் முழுவதையும் சுட்டிற்று. "இடத்து" என்பது ஏழாம் வேற்றுமைப் பொருட்டாய் நின்றது. ஆகியவை - சேர்க்கைப் பொருளாகச் சேர்ந்துள்ளவை. 'விட்டாற்போல' என உவம உருபு விரிக்க. 'காயம் முதலிய' என ஒரு சொல் வருவிக்க. ஏகிய - நீங்கிய. "ஏகிய" 'தொம்' என்பதையே - "தத் அசி - என்ப" என முடிக்க. இங்ஙனம் கூறியவற்றின் விளக்கமாகவே, "மெய்யறிவாகிய சீவன் பரசிவன் ஆமே" என்பது கூறப்பட்டது. சீவனே என்னும் பிரிநிலை ஏகாரம தொகுக்கப்பட்டது. "மெய்யறிவாகிய சீவன்" என்றதனால், அது பொய்யறி வாகிய உடம்பு முதலியவற்றின் நீங்கினமை பெறப்பட்டது. இவ்வாறு பொருள் கொள்ளுதல், விட்டு விடாத 'லக்கணை' எனப்படும். இலக்கணை பின்பு விளக்கப்படும்.*

*"சோயம் தேவதத்தன்" என்னும் இவ்வுதாரணத்திற்கு ஏகான்மவாதிகள் தரும் விளக்கம், 'இல்லறத்தானாய் இருந்தவன் எவனோ அவனேதான் துறவியானவனும்; வேறொருவனல்லன்; அதுபோலத்தான் சீவனும், பிரமமும் வேறாகாததும்' என்பது. துறவிக்கும் இல்லறத்தானுக்குப் போலக் கோலமும், உடைமையும் ஒழுக்கமும் உள்ளன ஆகலின், அவற்றைப் பெற்றவனே துறவியாதல் நினைக்கத்தக்கது.*

*இதனால், முச்சூனிய நிலை உவமையில் வைத்து விளக்கப்பட்டது.*

**2459.** தாமத காமிய மாதி தகுகுணம்
ஆம்மலம் மூன்றும் அகார உகாரத்தோடு
ஆம்அறும் அவ்வும்அவ் வாயுடன் மூன்றினில்
தாம்ஆம் துரியமும் தொம்தத் தசியதே. 7

---

***2459. தெளிவுரை :-*** *முக்குணங்களும், மும்மலங்களும் 'அ, உ, ம' என்னும் பிரணவ கலைகள் செயற்படில் செயற்படும்; ஒடுங்கில் ஒடுங்கும். அச்செயற்பாடு ஒடுக்கங்களும் மூவகை உடம்பின் கண் நிகழும் 'தொம், தத், அசி' என்னும் முப்பதங்களின் சூனியங்களும் அவ்வாறேயாம். அஃதாவது 'முச்சூனியங்கள் நின்மல துரியத்தில் நிகழும்' என்பதாம்.*

*தாமதம் ஆகி தகு குணம் ஆம் மூன்றும் - தாமதம் இராசதம் சாத்துவிகம் என்னும் மூன்று குணங்களும் காமியம் ஆகி, தகு மலம் மூன்றும் - கன்மம் மாயை ஆணவம் என்று சொல்லப்படும் மூன்று மலங்களும், அகார உகாரத்தோடு மவ்வும் - அகரம் அகங்காரத்தினையும் உகரம் புத்தியினையும் மகரம் மனத்தினையும் செலுத்தும் உடல் மூன்றில், தாம் ஆம் துரியம் - தூலம் சூக்குமம் காரணம் என்னும் உடம்புகளில் உண்டாகும் துரியநிலை, அவ்வாய் உடல் - அந்த வாயில்களையுடைய உடல், மல கன்மங்களால் கட்டுண்ட நிலை பெத்தம். அவற்றின் நீங்கிய நிலை முத்திநிலையாம். துரியநிலை ஒடுக்கம். அவற்றைக் கடந்த நிலை துரியாதீதமாம்.*

*தாமதம் முதலிய குணங்களும், காமியம் முதலிய மலங்களும் தூலவுடம்பும் புரியட்டகவுடம்பும் காரணவுடம்பும் ஆகிய யாவும் தொம் (த்வம்) என்னும் பதப்பொருளாய் நிற்கும் ஆன்மா; ஆன்மா இவற்றைத் தாமாகவே எண்ணி நிற்கும் நிலை தத் என்றது துரிய நிலை, அது பரதுரியமாம். பரதுரியம் மெய்ப் பொருட்காட்சி. பரதுரிய துரியமே சிவதுரியம் எனப்படும். ஆகலின் தத் என்னும் பதப்பொருளாய் நிற்கும் சிவம அசி என்னும் பதம் ஆனாய், ஆகின்றாய் என்பது ஆன்மா சிவத்தோடு கலத்தற்கு வாயிலாக உள்ளது பரதுரியம் என அறிக என்றவாறு.*

***குறிப்புரை :-*** *'தாமத மாதி குணம், காமியமாதி மலம்' எனக் கூட்டுக. "மூன்றில்" என்பதன் பின் 'நிகழும்' என்பது வருவிக்க உடல் மூன்று, இவ்வதிகாரத் தொடக்கத்தில் சொல்லப்பட்டன. தாம் ஆம் துரியம் - ஆன்மாச் சுத்தி பெற்ற நின்மல துரியம் 'தொம் தத், அசி' என்பன அவற்றின் சூனியங்களைக் குறித்தன.*

*இதனால், முச்சூனியங்களின் இயல்புகள் தொகுத்துக்கூறி முடிக்கப்பட்டன. இவற்றால் இவை பிராசாத யோகத்தில் சொல்லப்படும் சூனியங்கள் ஆகாமை விளங்கும்.*

## 27. முப்பாழ்

*'பாழ்' என்பது பற்றிய விளக்கம் முன் அதிகாரத் தொடக்கத்தில் தரப்பட்டது. இவ்வதிகாரம் ஆறு மந்திரங்களை உடையது.*

**2460.** காரியம் ஏழ்கண் டறும்மாயப் பாழ்விடக்
காரணம் ஏழ்கண் டறும்போதப் பாழ் விடக்
காரிய காரண வாதனை கண்டறும்
சீர் உப சாந்தம் முப் பாழ்விடத் தீருமே. 1

**2461.** மாயப் பாழ் சீவன் வியோமப்பாழ் மன்பரன்
சேயமுப் பாழ்எனச் சிவசத்தி யில்சீவன்

---

*2460. **தெளிவுரை :-** காரிய தத்துவங்களாகிய தூல உடம்பு, தூல பூதம், சூக்கும பூதம், ஞானேந்திரியம், கன்மேந்திரியம், அந்தக்கரணம், பிரகிருதி ஆகிய ஏழினையும் தன்னின் வேறாகக் கண்டு அவற்றின் நீங்கிய நிலை 'மாயப் பாழ்' எனப்படும். அதைக் கடந்து காரண தத்துவங்களாகிய வித்தியா தத்துவம் ஏழினையும் தன்னின் வேறாகக் கண்டு நீங்கிய நிலை 'போதப் பாழ்' எனப்படும். அதைக் கடந்து முன் நீங்கியவற்றின் வாசனை உளதாகிய சுத்த தத்துவங்களையும் வேறாகக் கண்டு கடந்த நிலை 'உபசாந்தம்' எனப்படும். இதனையும் கடந்த நிலையே பந்தம் முழுதும் நீங்கிய வீட்டு நிலையாம். காரியமாகிய உடல், பொறி, மனம், சித்தம், புத்தி, அகங்காரம், பிராண வாயு ஆகிய ஏழும் என்றும் கொள்ளலாம்.*

***குறிப்புரை :-*** *போதப்பாழ், 'சீவப்பாழ்' என்றும், உபசாந்தம், வியோமப் பாழ்' என்றும் சொல்லப்படுதலை வருகின்ற மந்திரத்தில் காண்க. ஆன்ம தத்துவம் வித்தியா தத்துவத்தின் காரியம் ஆதல் பற்றி அவற்றைக் "காரியம் ஏழ்" எனவும், அவை போல வித்தியா தத்துவம் வேறு தத்துவத்தின் காரியம் ஆகாது ஆன்ம தத்துவத்திற்குக் காரணமாகியே நிற்றல் பற்றி அவற்றை, "காரணம் ஏழ்" என்றும், அதற்கு மேல் நீங்க வேண்டுவன இன்மையின் அந்நிலையை, "உபசாந்தம்" என்றும் கூறினார். தீர்தற்கு, 'பந்தம்' என்னும் எழுவாய் வருவிக்க.*

| | |
|---|---|
| *மாயப்பாழ்* | *போதப்பாழ், தத்துவரூபம் முதலிய மூன்றையும் அறிந்து பாழ்படுத்தி நீங்கல்.* |
| *சீவப்பாழ்* | *ஆன்மரூபம் முதலிய மூன்றையும் அறிந்து நீங்குதல்* |
| *சிவப்பாழ்* | *சிவரூபம் முதலிய இரண்டையும் அறிந்து நீங்குதல் என்றும் கொள்ளலாம்.* |

*இதனால், 'முப்பாழாவன இவை' என்பதும், அவற்றின் இயல்புகளும் கூறப்பட்டன. இம்முப்பாழும் நீங்க முழுப்பாழ் சித்திக்கும். முழுப்பாழ் - முத்தி.*

ஆய வியாத்தம் எனும்முப்பாழ் ஆம் அந்தத்
தூய சொரூபத்தில் சொல்முடி வாகுமே. **2**

**2462.** எதிர்அற நாளும் எருதுவந் தேறும்
பதியெனும் நந்தி பதமது கூடக்
கதியெனும் பாழைக் கடந்துகற் பனையை
உதறிஅப் பாழில் ஒடுங்குகின் றேனே. **3**

---

*2461. **தெளிவுரை :-** மாயப் பாழ், சீவப் பாழ், வியோமப் பாழ் ஆகிய மூன்றும், 'நிலைபெற்ற பரம் பொருளைப் போல மிக மேம்பட்ட நிலை' என்று சொல்லப்பட மற்றும் அவையே, 'சீவன் சிவனது திருவருளில் அடங்கி நிற்கும் முப்பாழ்' என்றும் சொல்லப்படும். மிகத் தூயதாகிய உண்மை நிலை, அப், 'பாழ்' என்னும் பெயரும் அற்ற இடமாகும்.*

***குறிப்புரை :-*** *முன் மந்திரத்தில் 'போதப் பாழ்' எனக் கூறியதைச் "சீவப்பாழ்" என்றும் "உபசாந்தம்" எனக் கூறியதை "வியோமப் பாழ்" என்றும் இம்மந்திரத்திற் கூறியவாறு காண்க.*

*இதனால், 'முப்பாழ்' என்பவற்றின் பெயர் வேறுபாடுகளும், உண்மை இயல்பும் கூறப்பட்டன.*

*2462. **தெளிவுரை :-** 'என்றும் தன்னோடு ஒப்பார் இன்றி ஆனேற்றையே ஊர்தியாக உவந்து ஏறி உலாவுகின்ற சிவன் ஒருவனே பதி; ஏனையோர் யாவரும் பசுக்களே, எனத் துணிந்து அவனது திருவடியை அடைய வேண்டி, முன்னர், 'இதுவே கதி' எனக் கருதிய மூன்று பாழ்களையும் கடந்து முன் கருதிய கருது கோள்களையெல்லாம் உதறித்தள்ளி, அவற்றையெல்லாம் கடந்த வேறொரு தனிப் பாழில் இப்பொழுது தான் அடங்கியிருக்கின்றேன்.*

***குறிப்புரை :-*** *இதனால், 'பாழ்' என்பது, 'மாசாவன அனைத்தும் நீங்கிய தூய்மையே' என்பது விளங்கும். ஆகவே, மாயப் பாழாவது 'மான்' எனப்படும் பிரகிருதி நீக்கமும், 'போதப் பாழ்' என்பது, 'மோகினி' எனப்படும் அசுத்த மாயை நீக்கமும், 'வியோமப் பாழ்' என்பது, 'விந்து' எனப்படும் சுத்தமாயை நீக்கமும் ஆதல் பெறப்பட்டது. முப்பாழ்களுள் ஒன்றிரண்டையே முழுத் தூய்மையாகக் கருதுவார் கருத்துக்கள் திரிபுணர்வேயாதல் பற்றி அவற்றைக் "கற்பனை" என்றார். முப்பாழையும் கடந்த அப்பாழே முன்மந்திரத்தில் "தூய சொரூபம்" எனப்பட்டது. "ஏறும் பதியெனும் நந்தி" என்பதை, "ஏறும் நந்தியெனும் பதி" என மாற்றியுரைக்க. இந்தப் பதியினது பதமது கூட' என்றதனால் 'இம் முப்பாழ்த் தரிசனமும், அவற்றது சுத்தியும் சிவபெருமானைப் பொதுநீக்கித் தனக்குவமையில்லாத தனிப்பெரும் பொருளாக உணரும் உணர்வைப் பெற்றவர்களுக்கே கூடும்' என்றதாயிற்று. "எதிர் அற" என்றதும், இதனை வலியுறுத்தற்கேயாம்.*

**2463.** துரியம் அடங்கிய சொல்லறும் பாழை
அரிய பரம்பரம் என்பர்கள் ஆதர்
அரிய பரம்பரம் அன்றே உதிக்கும்
அருநிலம் என்பதைஆர் அறி வாரே. **4**

---

*இதனால், 'முப்பாழுங் கடந்தவழியே முதற்பாழாகிய சொரூப நிலையை அடைதல் கூடும்' என்பதும், 'அது சிவஞானம் வழியாகவே கூடும்' என்பது கூறப்பட்டன.*

*2463. **தெளிவுரை :-** முப்பாழையும் கடந்த, சுத்த துரியமாகிய நின்மல துரியமும் அடங்கிய சொல்லற்ற நிலையாம் சொரூபமாகிய உண்மையை, அறியாதார் சிலர், 'அஃது உயிர்களால் என்றும் அடையப்படாத மிக மேலேயுள்ள நிலை' எனக் கூறுவர். (உயிர்களால் என்றுமே அடையப்படாது எனின், 'அத்தன்மையதாகிய ஒருபொருள் உண்டு' என்பதே பெறப்படாது முயற்கோடு, ஆகாயத்தாமரை முதலியனபோல அதுவும் வெறும் கற்பனைப் பொருளாய் விடும். மிக மேலானதேயாயினும் ஆதலின்) அஃது என்றுமே உயிர்களால் அடையப்படாதது அன்று; செயற்கரிய சாதனைகளைச் செய்த வழிக் கிடைக்கின்ற ஓர் அரிய இடமேயாம். இவ்வுண்மையை அறிந்து, அவ்வாற்றால் அதனை அடைய முயல்பவர் எத்துணைப் பேர்? ஒரு சிலரேயாவர்.*

***குறிப்புரை :-*** *"துரியம்" என்றது பாழை. அடங்குதல் - கீழ்ப்படுதல்; எனவே சொல்லறும் பாழ் அதீத நிலையாயிற்று. "அரிய" என்பன, கிடைக்கப்படாத' என்னும் பொருளன. பரம், பரம் - மேலதற்கும் மேலானது. "அன்றே" என்னும் தேற்றேகாரத்தைப் பிரித்து, ''நிலம்'' என்பதனுடன் கூட்டுக. உதித்தல் - எதிர்ப்படுதல். ''அறிவார்'' என்பதில் அறிதல், அதனுடன் காரியமாகிய முயலுதலையும் குறித்தது. 'முயலுதல் இல்லையேல், அறிந்ததனால் பயன் என்னை' என்க.*

*இதனால், 'முப்பாழும் கடந்த முதற்பாழ் உயிர்களால் முயன்று அடையற் பாலதோ, அன்றோ' என்னும் ஐயம் அறுக்கப்பட்டது. முன் மந்திரத்திலும், "அப்பாழில் ஒடுங்குகின்றேன்" என அநுபவம் காட்டினார். "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" (பா.24) என்பது நாயனாரது திருவுளம் ஆதலின், அதுபற்றி எழும் ஐயத்தை இதனால் அறுத்தருள்வாராயினார்.*

*2464. **தெளிவுரை :-** 'மெய்ப்பொருளை அருளாசிரியர் பக்குவம் வாய்ந்தவர் கட்கு உபதேசிக்கும் உபதேச மொழி, 'சிவாயநம' என்னும் மந்திரமே என்பதைச் சைவப் பெருமக்களன்றிப் பிறர் தெளிய மாட்டாராயினும் சைவப் பெருமக்கள் அதனைத் தெளிந்து அதன் உண்மையை ஆராயுமிடத்து, முப்பத்தாறு தத்துவங்களும் தம்மின் வேறாகி நீங்கிய பொழுது அந்த ஐந்தெழுத்தில்*

**2464.** ஆறாறும் நீங்க நமவாய் அகன்றிட்டு
வேறா கியபரை யாஎன்றும் மெய்ப்பரன்
ஈறான வாசியிற் கூட்டும் அதுஅன்றோ
தேறாச் சிவாய நமஎனத் தேறிலே. **5**

---

*பாசத்திற்கு வழியாகிய 'நம' என்பதை நீக்கி, முன்பு நகரத்தின் பொருளாய்த் திரோதானமாய் இருந்த சத்தி வேறுபட்டு அருட்சத்தியாய் வகாரத்தின் பொருளாகி யகாரத்தின் பொருளாகிய ஆன்மாவை, யகாரம் நீங்கிய இரண்டெழுத்தில் ஈற்றெழுத்தாகிய வகாரம், முதலெழுத்தாகிய சிகாரத்தின் பொருளாகிய உண்மைச் சிவத்தில் பின் என்றும் நீங்காதவாறு சேர்ப்பதாகவே யன்றோ உணரப்படும்! 'பிறிதாக ஒன்றும் உணரப்படாது' என்பதாம்.*

*குறிப்புரை :- 'பக்குவிகளுக்கு ஆசிரியர் உபதேசிக்கும் உபதேச மொழி திருவைந்தெழுத்தே' என்பது.*

*"மன்ன என்னை ஓர் வார்த்தையுட் படுத்துப்
பற்றினாய்" - தி.8 செத்திலாப் பத்து - 2*

*என்ற ஆசிரியர்,*

*"நானேயோ தவம் செய்தேன்; சிவாயநம எனப்பெற்றேன்" (தி.8 திருஏசறவு - 10) என்று அருளிச் செய்தமையால் விளங்கும். அவர் எடுத்த எடுப்பிலே, "நமச் சிவாய வாஅழ்க" (தி.8 சிவபுராணம் - 1) என எடுத்தருளிச் செய்தமையும் நினைக்கத்தக்கது.*

*"நன்னெறி யாவது நமச்சி வாயவே" - தி.4 ப.11 பா.9*

*"நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே" - தி.5 ப.90 பா.2*

*என்னும் திருமொழிகளும் ஓர்ந்துணரற்பாலன. நன்னெறி சன்மார்க்கம், ஞானநெறி. வாய் - வழி; பாசத்திற்கு வழி. ஈற்றடியை முதலில் வைத்து, 'நமவாகிய வாய் அகன்றிட்டு, வேறாகிய பரை, யவ்வை மெய்ப் பரன்பால் கூட்டும்; அஃதாவது வா சிய்யில் கூட்டும்' என இயைக்க. செய்யுள் பற்றி எழுத்தும், பொருளும் விரவி வரக் கூறினார். தேறாமை, 'சிவாயநம' என்பதன் பெருமையைத் தெளியாமை. எனவே, தேறுதலும் அதன் பெருமையேயாயிற்று. தேறுதல், அதன் காரியமாகிய ஆராய்தலையும் உடன் உணர்த்திற்று.*

*இதனால், 'முப்பாழையும் முறையே கடத்தற்கும் பின் முப்பாழையும் கடந்து அப்பாழை அடைதற்கும் நற்றுணையாவது திருவைந்தெழுத்தே' என்பது கூறப்பட்டது.*

*2465. தெளிவுரை :- 'உயிர் உடம்பே; உடம்பே உயிர்' என இவ்வாறு உயிரின் இயல்பை மயங்கி உணர்ந்து, அந்நெறியிலே தங்கள் ஆராய்ச்சியைச்*

**2465.** உள்ளம்உரு என்றும் உருவம் உளம்என்றும்
உள்ள பரிசறிந்து ஒரு மவர்கட்குப்
பள்ளமும் இல்லை திடர்இல்லை பாழ்இல்லை
உள்ளமும் இல்லை உருவில்லை தானே. **6**

---

*செலுத்துபவர்கட்கு உயிர் இல்பொருளேயாம். உயிர் இல்பொருளாயினமையின், உடம்பின் தன்மையை அவர் உணர்ந்ததும் உணராமையேயாம். ஆகவே, அவர்கட்கு இங்குக் கூறிவந்த இருட்குழியாகிய தத்துவச் சிக்கலும் இல்லை; அக்குழியினின்றும் ஏறும் கரையாகிய முப்பாழும் இல்லை. அவற்றைக் கடந்த வேறு வெளியாகிய பரநிலையும் இல்லை.*

***குறிப்புரை :-*** *'இவையெல்லாம் உயிர் உடம்பின் வேறு என்பதை உணர்ந்து, நிலையற்ற உடல் நலத்தைப் பெரிதாக நினைந்து, அதனை அடைய முயல்பவர்கட்கே உள்ளனவாம்' என்றபடி. "இல்லை" என்றது, இருத்தலைப் பற்றிக் கவலை உண்டாதல் இல்லை' என்றதாம். இத்தன்மையை நோக்கியன்றோ தெய்வப் புலவர்,*

*நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்;*
*நெஞ்சத் தவல மிலர்.* ***- திருக்குறள் - 1072***

*என்று அருளிச் செய்தார். ஈற்றடியை அதன் அயலடிக்கு முன்னர்க் கூட்டுக. உள்ளம் - உயிர். உரு - உடம்பு.*

*இதனால், முடிநிலைப் பேறாகிய இவற்றைக் கூறுமிடத்து 'இன்னோரன்ன மெய்ந்நூற் பொருள்கள் எல்லாம் தக்கார்க்கே உரியன' எனத் தொகுத்துக் கூறி முடிக்கப்பட்டது.*

## 28. காரிய காரண உபாதி

*மேல், 'சூனியம்' எனவும், 'பாழ்' எனவும் வீட்டு நிலையை விளக்கியபின், அந்நிலையை அடைதற்குத் தடையாய் உள்ளவற்றை "உபாதி" என வைத்து விளக்குகின்றார். உபாதி - குற்றச்சேர்க்கை. இவ்வதிகாரம் நான்கு மந்திரங்களையுடையது.*

**2466.** செற்றிடும் சீவ உபாதித் திறன்ஏழும்
பற்றும் பரோபாதி ஏழும் பகர்உரை
உற்றிடும் காரணம் காரியத் தோடற
அற்றிட அச்சிவ மாகும் அணுவனே. **1**

---

*2466.* ***தெளிவுரை :-*** *முன்அதிகாரத் தொடக்கத்தில் (பா.2461) 'காரிய தத்துவம்' எனக் கூறப்பட்டனவே இங்கு, சீவஉபாதி என்றும், 'காரண தத்துவம்' எனக் கூறப்பட்டனவே இங்கு, 'பரோபாதி' என்றும் கூறப்பட்டன. இங்கு, 'பரம்' என்பது, பரம் பொருளைக் குறியாமல், 'சீவ உபாதிக்கு மேலே உள்ளவை' எனப் பொருள் தந்தது. 'இவ்விருவகை உபாதிகளும் நீங்கினால் காரியம் காரணத்தோடு அற்றுவிட்டதாகும். அங்ஙனம் அவை அற்று விட்டால், 'அணு' எனப்பட்ட உயிர் அவ்வணுத்தன்மை நீங்கி, வியாபகப் பொருளாகிய சிவத்தை அடைந்து தனது வியாபக நிலையைப் பெற்று இன்புறும்' என்பது பின்னிரண்டடிகளின் பொருள்.*

***குறிப்புரை :-*** *அற அறுதல் - முற்றும் நீங்குதல். இரண்டாம் அடியிலும் "ஏழும்" என்பதன் பின்னும் 'அற' என்பது வருவிக்க. "காரியம், காரணம்" என்பன நிரல் நிறையாய் மேற்கூறிய 'சீவ உபாதி, பரோபாதி, என்பவற்றோடு இயைந்தன. பின்னர் "அணு வருதலால், அச்சிவம்" என்னும் சுட்டு 'வியாபகச் சிவம்' என அதன் வியாபகத்தைச் சுட்டிற்றாம். 'அணு வியாபகம் ஆகும்' என்றதனால், 'அணுத்தன்மை உயிர்க்குச் செயற்கையால் வந்தது', என்பதும், 'வியாபகமே அவனது இயற்கை' என்பதும் பெறப்பட்டன. செயற்கை, ஆணவ மலம்.*

*இதனால், உயிர் செயற்கையின் நீங்கி இயற்கையை எய்துதற்குத் தடையாய் உள்ளவை உபாதிகள்' என்பதும், அவை, 'காரிய உபாதி, காரண உபாதி' என இருவகையினவாம் என்பதும் கூறப்பட்டன.*

*2467.* ***தெளிவுரை :-*** *தத்துவங்களுக்குள்ளே சில காரியமும், சில காரணமும் ஆதல் பற்றி அவற்றை, 'காரியம், காரணம்' எனப் பிரித்துக் கூறினாலும் தத்துவங்கள் அனைத்திற்கும் மாயையே காரணமாகத் தத்துவங்கள் அவற்றின் காரியம் ஆதல் பற்றி அவை அனைத்தையும் இங்கு "காரியோபாதி" என்றார். "நனவு" என்றது சகல சாக்கிரத்தை. அதன்கண் நிகழும் 'நனவு, கனவு, உறக்கம்' என்பவற்றில், இவற்றிற்கு முன் நிலைகளில் எல்லாம் கிடைக்கப்பெறாத வேறு*

**2467.** ஆறாறு காரியோ பாதி அகன்றிட்டு
வேறாய் நினைவு மிகுத்த நனா கனா
ஆறா றகன்ற சுழுத்தி அதில் எய்தாப்
பேறாம் நிலத்துயிர் தொம்பதம் பேசிலே. 2

**2468.** உயிர்க்குயி ராகிஒழிவற் றழிவற்று
அயிர்ப்பறு காரணோ பாதிவெதி ரேகத்து
உயிர்ப்புறும் ஈசன் உபமித்தா லன்றி
வியர்ப்புறும் ஆணவம் வீடல்செய் யாதே. 3

---

*கிடைக்கப் பெறுகின்ற துரிய நிலையை அடைந்த பொழுதுதான் உயிர் உண்மையில் 'துவம்' பதப் பொருளாகும்.*

*கரணங்களில் நின்ற ஆன்மா நீங்குமாறு எவ்வாறு எனின்; பளிங்கு தன்னை அடுத்த பலநிறங்களின் இயல்பாய் தன்னிடத்துக் காட்டி நிற்கும். இஃது அப்பளிங்கிற்குப் பொது இயல்பு. இதுபோல் ஆன்மாவும் தன்னால் சாரப்பட்ட கருவிகளின் இயல்பே தன்னிடத்து விளங்க அதுவாய் நிற்கும். இஃது ஆன்மாவிற்குப் பொது இயல்பு. இப்பொது இயல்பினை முன்னர்ச் சிந்தித்து அறிந்து கொண்டு, பின்னர்ப் பல நிறங்களின் வேறாகப் படிகத்திற்குச் சிறப்பான ஒளி உளதாயினாற்போல, இப்பொது இயல்பைத் தன் இயல்பு அன்றென்றும், தன்னியல்பாகிய சிறப்பியல்பு இப்பொது இயல்பின் வேறாய் உண்டு என்றும், அருளால் அறிந்து பொது இயல்பாகிய அக்கருவி ஞானம் நீங்கும்படி தன் இயல்பாகிய உண்மையை உணர்ந்தால் அத்தன்னியல்பில் விளங்கித் தோன்றும் சிவத்தைப் பொருந்துவன். இதனால், ஆன்மாவின் பொது இயல்பு சிறப்பு இயல்பை உணர்தல் கருவிகளினின்று நீங்குதற்கு உபாயமாம் என்க.*

***2468. தெளிவுரை :-* *எல்லா உயிர்களிலும் அவற்றிற்கு உயிராய், ஒரு ஞான்றும் விட்டு நீங்காது, அழிவின்றியிருப்பினும் உயிர்கள் முன் மந்திரத்தில் கூறிய உபாதிகள் அனைத்தினின்றும் நீங்கிய பின்பே முன்பு பாலில் நெய்போல விளங்காதிருந்த நிலையினின்றும் நீங்கித் தயிரில் நெய்போல வெளிப்பட்டு விளங்குகின்ற சிவன் அவ்வாறு வெளிப்பட்டாலன்றி யாதோர் உயிர்க்கும் துன்பத்தைத் தருகின்ற ஆணவ மலம் நீங்குதல் உண்டாகாது.***

***குறிப்புரை :-* *'உயிர்கட்கு உள்ள உபாதிகளில் மூல உபாதி ஆணவ மலமே யாதலின், முன் மந்திரத்தில் மாயேயங்களாகிய ஆறாறும் நீங்கியபின் உயிர்தொம்பதமாம் - என்றது என்னை' என்னும் ஐயத்தை நீக்குதற்கு இது கூறினார். ஆணவத்தை நீக்க வேண்டியே மாயேயங்கள் சேர்க்கப்பட்டமையால், 'அவை நீங்க' என்றமையால், 'அவற்றிற்குக் காரணமான ஆணவம் நீங்கினமை தானே பெறப்படும் என்றபடி. அயிர்ப்பு - ஐயம். வெதிரேகம் - எதிர்மறை; அது***

**2469.** காரியம் ஏழில் கரக்கும் கடும்பசு
காரணம் ஏழில் கரக்கும் பரசிவன்
காரிய காரணம் கற்பனை சொற்பதப்
பாரறு பாழில் பராற்பரந் தானே. **4**

---

*முன்னை நிலைக்கு மாறாய் அமையும் நிலையைக் குறித்தது. உயிர்த்தல், இங்கு விளங்குதல். உபமித்தல் - உடனாதல். இதுவும் அந்நிலை விளங்குதலையே குறித்தது. 'ஒளியாலல்லது இருள் நீங்காதவாறு போல், சிவம் பிரகாசித்தாலல்லது ஆணவ மலம் நீங்காது என்பதாம். 'மாயேயங்களாகிய உபாதிகள் நீங்கினவிடத்தே பிரகாசிப்பவன் சிவன்' என்றதனால், மாயேயங்கள் நீங்கினவிடத்துச் சிவம் பிரகாசித்தலால் ஆணவ மலம் நீங்கிற்றாம்' எனக் கூறற் பாலதனை வலியுறுத்தற் பொருட்டு 'உபமித்தாலன்றி ஆணவம் வீடல் செய்யாது' என எதிர்மறை முகத்தாற் கூறினார்.*

*இதனால், 'ஆதியாய உபாதி நீங்குங்கால், அநாதியாய உபாதி நீங்கியேவிடும்' என ஐயம் அறுக்கப்பட்டது.*

*2469. தெளிவுரை :- 'காரிய உபாதி' என மேற்கூறப்பட்ட உபாதிகள் உள்ள பொழுது, உயிர் தன்னையே அறியாது மயங்கும். காரிய உபாதிகள் நீங்கக் காரண உபாதிகள் நீங்காதிருக்குமாயின் உயிர் தன்னை ஒருவாறு அறியினும் தலைவனை அறியாது மயங்கும். இக்காரிய காரண உபாதிகள் உயிர்கட்கு ஆக்கி வைக்கப்பட்டவை. இன்னும் இவ்வுபாதிகள் பலவாகச் சொல்லப்படுகின்ற பதங்களாகிய உலகங்களைச் சார்ந்து நிற்பனவாம். இவையெல்லாம் அற்ற நிலையே 'வெறும் பாழ்' எனப்படுகின்றது. அவ்விடத்தில் தான் மேலானவற்றிற் கெல்லாம் மேலான பரம் பொருள் உள்ளது.*

*குறிப்புரை :- 'உயிர் அந்த வெறும்பாழை அடைந்து தான் பரம் பொருளை அடைதல் வேண்டும்' என்பது கருத்து. 'கலக்கும்' என்பன பாடம் அல்ல. கடும்பசு - மலத்தால் மிக மூடப்பட்ட பசு; என்றது, சகலவருக்கத்து உயிரை - காரிய காரணம், உம்மைத் தொகை. "கற்பனை" என்றது, ஆக்கப்பாட்டினை. பதம் - பதவி. பார் - உலகம். ஏகாரம், பிரிநிலை. அதனைப் பிரித்து, "பாழ்" என்பதனோடு மாறிக்கூட்டி, "பாழிலேதான் பராற்பரம்" என்க. தான் கட்டுரைச் சுவைபட வந்தது. 'உள்ளது' என்பது சொல்லெச்சம்.*

*இதனால், 'உபாதிகள் எல்லாம் நீங்கின இடமே உயிர் அடையத் தக்க இடம்' என்பது கூறி, வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.*

## 29. உபசாந்தம்

*'முச்சூனியம் முப்பாழ்' என்பவற்றைக் கடந்த நிலையே 'உபசாந்தம்' எனப்படுவது ஆதலின், அவற்றையடுத்து இதனைக் கூறுகின்றார். எனவே, இதுவே முடிநிலைப் பேறாதல் அறிக. 'காரிய காரண உபாதி' இடைநின்று, சிங்க நோக்காய், முன்னவற்றிற்கும், இதற்கும் தடையாவனவை நீங்க வேண்டுதலைக் கூறியதாம். இவ்வதிகாரம் ஆறு மந்திரங்களையுடையது. உபசாந்தம் - மனோவிருத்தி அமைவுற்றிருத்தல். செயலறுதல். சிந்தையும் ஒருங்கித் திருவடியிற் பதித்தல்.*

**2470.** **முத்திக்கு வித்து முதல்வன்றன் ஞானமே**
**பத்திக்கு வித்துப் பணிந்துற்றுப் பற்றலே**
**சித்திக்கு வித்துச் சிவபரம் தானாதல்**
**சத்திக்கு வித்துத் தனதுப சாந்தமே. 1**

---

*2470. தெளிவுரை :-*

*பற்றுக பற்றற்றான்; பற்றினை; அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு.* - ***திருக்குறள், 350***

*என்றபடி, உலகப் பற்றை நீக்குதற்கு வழி சிவப்பற்றைக் கொள்ளுதலாகும். அப்பற்று உண்டாதற்கு வழி, சிவனைக் குருலிங்க சங்கமங்களை வழிபட்டு உறுதுணையாகப் பற்றுதலாகும். மனம் புலன்களின் வழி ஓடாது தன் வயப்படுதற்கு வழி யோகசமாதி. முத்திக்கு வழி சிவஞானம். அந்த ஞானம் வருதற்கு வழி உயிர் உபசாந்தத்தை அடைதலாம்.*

***முதல்வன் தன் ஞானமே முத்திக்கு வித்து*** *- சிவஞானமே திருவடிப் பேறாகிய முத்தியினை அடைதற்குரிய வாயிலாம்.*

***பணிந்து உற்றுப்பற்றலே பத்திக்கு வித்து*** *- சிவனடியார் திருவடிகளையும், சிவபெருமான் திருவடிகளையும் பத்தியினால் மறவாது வணங்கித் துதித்து இடையறாது பற்றியிருத்தல் பத்திக்கு வாயில்.*

***சிவப்பரம் தானாதல் சித்திக்கு வித்து*** *- சிவனை விட்டு நீங்காத திருவருளை மறவாதிருத்தலும் அவ்வருளின் வழி நிற்றலும் ஆகிய இவை மனம் தன் வசம் ஆதலாகிய சித்திக்கு வாயிலாம்.*

***தனது உபசாந்தமே சத்திக்கு வித்து*** *- ஆன்மாவின் மனோவிருத்தி அமைவுற்றிருத்தலே திருவருட் பதிவிற்கு வாயில்.*

***குறிப்புரை :-*** *'இங்கு எடுத்துக்கொண்ட பொருள் முத்தியே' என்பது தோன்றுதற் பொருட்டு. 'சிறப்புடைப் பொருளை முற்படக் கிளத்தல்' என்னும்*

**2471.** காரியம் ஏழும் கரந்திடும் மாயையுள்
காரணம் ஏழும் கரக்கும் கடுவெளி
காரிய காரண வாதனைப் பற்றறப்
பாரண வும்உப சாந்தப் பரிசிதே. **2**

**2472.** அன்ன துரியமே ஆத்தும சுத்தியும்
முன்னிய சாக்கிரா தீதத் துறுபுரி
மன்னு பரம்காட்சி யாவது உடன்உற்றுத்
தன்னின் வியாத்தி தனி உப சாந்தமே. **3**

---

*முறைப்படி "முத்திக்கு வித்து" என்பதையே முன்னர்க் கூறினாராயினும் ஈற்றடிக்கு முன்னே கூட்டியுரைத்தல் கருத்தென்க. "சத்தி" என்றது ஞானத்தையே. 'முத்திக்கு வித்து, சக்திக்கு வித்து' என்பவற்றைக் கூறுதலே கருத்தாயினும், அவை வலியுறுத்தற் பொருட்டு வேறு இரண்டை உடன் கூறினார். இஃது ஒப்புமைக் கூட்ட அணி. பணிந்துற்றுப் பற்றுதலுக்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. மனத்தை அது சென்றவிடத்தால் செலவிடாது (திருக்குறள் - 422) அடக்கித் தன் வயப்படுத்துதலே பெறற்கரிய பேறாகலின் அதனை "சித்தி" என்றார். சிவபரம் - சிவமாகிய பரம் பொருள். தானாதல் - சமாதி. "சிவம் பரம்" என்றதனால், சிவ யோகமே குறிக்கப்பட்டதாம். உபசாந்தமாவது மாயேயங்கள் எல்லாம் நீங்கிய நிலை' என்பது முன்பே கூறப்பட்டது.*

*சிவப்பேறு என்பதே முத்தி எனப்படும். முத்தி என்பது விடுதல். விடுதல் பாசமேயாயினும் சிவத்தைப் பற்றி நின்றே விடவேண்டுதலின் சிவப்பேறே தலைமையான முத்தியாம். அம்முத்தியும் பரமுத்தி. சீவன்முத்தி என இருதிறப்படும். பரமுத்தியாவது, பரனாகவே பேதமற நின்று பாசத்தை விடுதல். சீவன் முத்தியாவது, சீவனாகி என்றும் சிவானுபவ மேலீட்டால் பாசத்தை விடுதல். அதாவது, சீவத் தன்மையைச் செய்வதாகிய பாசத்தை இழந்து நிற்றல். இவ்விருவகை முத்தியினுள் பரமுத்தியை விதேக முத்தி என்றும் கூறுவர். அப்பரமுத்தியாகிய சிவானுபவ நிலையே முதற்கண் விளங்குவதாம்.*

*இதனால், 'உபசாந்தம் ஞானத்தைப் பயக்க, ஞானம் வீடுபேற்றைத் தரும்' என்பது கூறப்பட்டது.*

***2471. தெளிவுரை :-** 'காரிய தத்துவம்' எனப்பட்ட ஆன்ம தத்துவங்கள் பிரகிருதியில் ஒடுங்கினும், பிரகிருதி ஒடுங்காத பொழுது அவை மீளத் தோன்றும் நிலை உளதாகும். ஆகவே, பிரகிருதி ஒடுக்கமே காரிய தத்துவ ஒடுக்கம் ஆதலின், அஃது அசுத்த மாயையில் ஒடுங்குவதாம். இனி, 'காரண தத்துவம்' எனப்பட்ட வித்தியா தத்துவம் ஏழும் அசுத்த மாயையில் ஒடுங்க, அசுத்த மாயை கலக்குண்ணாது சுத்த மாயையில் வியாப்பியமாகி நிற்றலே காரணதத்துவ ஒடுக்கம் ஆதலின், அசுத்த மாயை சுத்த மாயையில் ஒடுங்குவதாகும். (இங்கு*

**2473.** ஆறா றமைந்தா றவத்தையுள் நீங்குதல்
பேறான தன்னை அறிதல் பின் தீர்சுத்தி
கூறாத சாக்கிரா தீதம் குருபரன்
பேறாம் வியாத்தம் பிறங்குப சாந்தமே. **4**

---

*ஒடுக்கமாவது காரியப்படுதல் இன்றி வியாப்பிய மாத்திரம் ஆதல்) இவ்வாறு காரிய காரண உபாதிகளின் வாசனையும் அற்றபொழுது ஆன்மா பர துரிய நிலையை அடையும். ('அப்பால் அதீத நிலை தானே வரும்' என்பது கருத்து) 'உபசாந்தம்' என்பதன் தன்மை ஆன்மா இவ்வாறு காரிய காரண உபாதிகளின் வாசனையும் அற்றுத் துரிய நிலையை அடைதலேயாகும்.*

***குறிப்புரை :-** பார் - நிலம். என்றது, முன் அதிகாரத்தில், "எய்தாப் பேறாம் நிலம்" (பா.2467) எனப்பட்ட நிலம். அணவுதல் - அடைதல் இதற்கு, 'உயிர்' என்னும் எழுவாய் வருவித்துக் கொள்க.*

*இதனால், 'உபசாந்தமாவது இது' என்பதும், அதனை அடையுமாறும் கூறப்பட்டன.*

***2472. தெளிவுரை :-** முன் மந்திரத்தில், "பார்" எனப்பட்ட அந்தப் பரதுரியமே முற்றான ஆன்ம சுத்தி நிலையாகும். (எனினும், அதற்கு முன்னே 'சிவதுரியம்' எனச் சொல்லப்பட்ட நின்மல துரியமே ஆன்ம சுத்தியாகச் சொல்லப்படுகின்றதன்றோ எனின் பராவத்தையில் இனிது வெளிப்படுகின்ற பர சிவம், நின்மலாவத்தையில் ஓரளவாக வெளிப்படுதல் பற்றி அங்ஙனம் கூறப்படுகின்றது. ஆயினும் ஆன்மா பர சிவத்தோடு இரண்டறக் கலந்து உடனாய், வியாபகமாய் நிற்றல் ஒப்பற்ற உபசாந்தமாகிய பராவத்தையிலே யாகலின், பர துரியமே முற்றான ஆன்ம சுத்தியாம் என்க.*

***குறிப்புரை :-** ஆத்தும சுத்தி - அந்தக்கரணத்தின் தூய்மை. புரி - பரமானந்தம். பரங்காட்சி - ஆன்ம தரிசனம். இதனை மெய்கண்ட நூல்கள் 'ஆன்ம லாபம்' எனக் கூறும். "சுத்தியும்" என்னும் உம்மை சிறப்பு. முன்னிய - முன்பே கருதப்பட்ட சாக்கிராதீதம், நின்மல துரியாதீதம். 'புரிவு' என்பது விகுதி குன்றி, முதனிலை மாத்திரமாய் நின்றது. புரிவு - செயல்; மேற்குறித்த ஆன்ம சுத்தி. பரம் - பர சிவம் 'காட்சியாவதனால்' எனவும், 'உபசாந்தத்தில்' எனவும் ஏற்கும் உருபுகள் விரிக்க. தன்னில் - பரசிவத்தில், 'வியாத்தி' என்றது வியாப்பியத்தை.*

*இதனால், உபசாந்தமே முடிநிலைப் பேறாதல் கூறப்பட்டது.*

*நின்மல சாக்கிரம் - நிர்விகாரியாக்கல்*
*நின்மல சொப்பனம் - தன் வண்ணமாகச் செய்தல்*
*நின்மல சுழுத்தி - தன்னோடு ஒப்பச் செய்தல்*

**2474.** வாய்ந்த உபசாந்தம் வாதனை உள்ளம் போய்
ஏய்ந்த சிவம்ஆதல் இன்சிவா னந்தத்துத்
தோய்ந்து அறல் மோனச் சுகானு பவத்தொடே
ஆய்ந்து அதில் தீர்கை ஆனதீ ரைந்துமே. **5**

---

*நின்மல துரியம் - அடங்கி நிற்கச் செய்தல்*

*நின்மல துரியாதீதம் - ஆனந்த சொரூபமாய் நிற்கச் செய்தல்*

*2473. **தெளிவுரை :-** முப்பத்தாறு தத்துவங்களும் தன்னின் மேம்பட்டுத் தன்னை மயக்காதபடி அவைகளைக் கீழ்ப்படுத்தி, அவைகளால் வரும் மயக்கத் தினின்றும் நீங்குதலே தன்னைத் தான் பெறுதலாகிய ஆன்ம தரிசனமாகும். (சிவரூபம் இதில் உடன் நிகழும். "தன் உயிர் தான் அறப் பெற்றானை ஏனைய மன்னுயிரெல்லாம் தொழும்" (திருக்குறள் - 268) என்றார் திருவள்ளுவரும்) ஆன்ம தரிசனத்திற்குப்பின் நிகழ்வதாகிய ஆன்ம சுத்தியாவது, சொல் நிகழ்ச்சியில்லாத, மௌன நிலையாகிய நின்மல துரியாதீதமாகும். (இதில் சிவதரிசனமும், சிவயோகமும் உடன் நிகழும்) ஆன்ம சுத்திக்குப் பின் அடையற்பாலதாகிய ஆன்ம லாபமாகிய சிவப்பேறாவது, பர துரியா தீதமே.*

*குறிப்புரை :- ஆறுதல் - அடங்குதல்; கீழ்ப்படுதல். தீர்தல் - மும்மலங்களும் நீங்குதல். குருவாகி வந்து அருள்செய்யும் அருட்பெருக்குப் பற்றிச் சிவனை, "குருபரன்" என்றார். குருபரன் - குருமார்களுக்கெல்லாம் மேலான குரு; ஞானகுரு. வியாத்தம் - வியாத்தி; சம நிறைவு. சமமாதல், சிவ வியாபகத்தோடாம். ஆன்மாச் சிவத்தில் வியாப்பிய மாயினும் பெத்தத்தில் ஏகதேசமாய் நின்ற நிலையினின்றும் நீங்கி வியாபகமாயினமை பற்றி "வியாத்தி" என்றார்.*

*இதனால், உபசாந்தத்தை அதற்கு இனமாய் முன்னிகழ்வனவற்றோடு ஒப்பித்துக்காட்டி அதன் இயல்பு இனிது விளக்கப்பட்டது. இதனானே அவற்றது இயல்புகளும் தெளிவிக்கப்பட்டன.*

*2474. **தெளிவுரை :-** உபசாந்தம் பத்து நிலைகளையுடையதாகச் சொல்லப்படும்.*

1. *கருவி கரணங்கள் உலகியல் வகையில் செயற்படாது, மெய்யுணர்வு நெறியில் செயற்படுதல். (இஃது யோகாவத்தை, இது முன்பு 'சீவ துரியம்' எனப்பட்டது. இது கருவிகளின் மாற்றுச் செயல் ஆதலின், இதனை, வாதனை" என்றார்).*
2. *ஆன்மாத் தன்னைக் கருவிகளின் வேறாக உணர்தல் (இஃது ஆன்ம தரிசனமாம். உள்ளம் - ஆன்மா; 'ஆன்மா' என்றது, 'ஆன்மாத் தான் ஆதல்' என்றபடி).*

3. *ஆன்மாத் தன்னையிழத்தல். (அஃதாவது தற்போதம் நீங்குதலாம்). "போய்" என்றது, 'தான் போய்' என்றபடி.*

4. *தற்போதத்தை இழந்த ஆன்மாச் சிவனையே உணர்ந்து அவனேயாதல். (இதுவே தசகாரியத்துள் சொல்லப்படும் சிவயோகம். ஆன்ம தரிசனத்தில் சிவரூபம் உடன் நிகழும். ஆன்ம சுத்தி சிவதரிசனத்தில் தொடங்கி சிவயோகத்தில் முற்றுப்பெறும்).*

5. *சிவானந்தம் உதயமாதல். (இது சிவயோகத்தின் முடிநிலையில் நிகழும்).*

6. *உயிர் சிவானந்தத்தை அனுபவித்தல். (இஃது 'ஆனந்தானுபவம்' எனப்படும்). இதில் உயிருக்கு, 'நாம் ஆனந்தத்தை அனுபவிக்கின்றோம்' என்னும் உணர்வு நிகழும்.*

7. *உயிர் ஆனந்தத்தில் அழுந்துதல். (இதில் அந்த உணர்வும் இல்லாதொழியும்). இஃது 'ஆனந்தாதீதம்' எனப்படும். (இரண்டு முதல் 5 முடிய உள்ள நான்கும் நின்மலாவத்தையில் சாக்கிர, சொப்பன, சுழுத்தி, துரிய அவத்தைகளாம். 6, 7 நின்மல துரியாதீதமாம்).*

8. *சகலரினின்று பிரளயாகலர்களாகப் பெற்ற உயிர்களும், பிரளயா கலரில் பக்குவம் பெற்ற உயிர்களும் பின் விஞ்ஞானகலராய் இறைவனால் திருவருள் செய்யப்பெற்றுச் சுத்த புவன போக்கியப் பொருள்களால் இன்புற்றிருத்தல்.*

9. *அதற்கு மேலும் சுத்த புவன அதிபதிகளாய் ஆட்சி புரிதல். (இவை 'அபர முத்தி' எனப்படும்).*

10. *இங்குக் கூறிய இவைகளில் ஒன்றும் இன்றிச் சிவனோடு இரண்டறக் கலந்து அவனது வியாபகத்தில் அடங்கி விடுதல் என்பன. (இறுதி மூன்றும் பராவத்தைகளாம். அவற்றுள் பத்தாவதே பரமுத்தியாம்).*

***குறிப்புரை :–*** **'இங்குக் கூறியன எல்லாம் உபசாந்தம்; எனப்படுமாயினும் பராவத்தையே உண்மை உபசாந்தம் என்பதும், அவற்றுள் பர முத்தியே முடிநிலை' என்பதும் கருத்துக்கள். "சிவானந்தத்து" என்றதனால் சிவானந்தம் உதயமாதல் பெறப்பட்டது. ''தோய்ந்து'' என்றதனால், தோய்தலும் வேறொன்றாயிற்று. "மோனம்" என்றது அமைதியை; அது துன்பம் இன்மையைக் குறித்தது. "அனுபவத்தொடே" என்னும் ஒடு, எண் ஒடு. ஆய்தல் - இங்கு முற்றுணர்வுபெற்று எல்லாவற்றையும் அறிதல் ஆகவே, அஃது ஆட்சி செய்தலாயிற்று. 'உபசாந்தம் ஈரைந்துமே' என முடிக்க. ஏகாரம் தேற்றம்.**

***இதனால், ஞானச் செய்தியாவன பலவும் உபசாந்தத்தின் படிநிலைகளாகத் தொகுத்துணர்த்தப்பட்டன.***

**2475.** **பரையின் பரஅப ரத்துடன் ஏகமாய்த்**
**திரையின்இன் றாகிய தெண்புனல் போலவுற்று**
**உரையுணர்ந்து ஆரமு தொக்க உணர்ந்துளோன்**
**கரைகண் டவன் உரையற்ற கணக்கிலே.** **6**

---

*2475.* ***தெளிவுரை :-*** *பர சிவத்தின் சத்தியாகிய பராசத்தியின் தடத்த நிலை அதன் அபரமும், சொரூபநிலை அதன் பரமும் ஆகும். பெத்தத்தின் நீங்கிய உயிர் முதற்கண் நின்மலாவத்தையிலும், பராவத்தையில் அதீதத்திற்குக் கீழ்ப்பட்ட நான்கு நிலைகளிலும் பராசத்தியின் அபர நிலையைப் பொருந்தியும் அதீதத்தில் அதன் பரநிலையைப் பொருந்தியும் அலையற்றுள்ள கடல்நீர் போல யாதோர் அலைவுமின்றியிருக்கும். எனினும், அபர நிலையில் தேவாமுதத்தைப் பெற்று உண்பவன், அதனைத் தான் பெற்ற அருமை, அதன் சுவை மிகுதி, அதன் பயன் முதலியவற்றை உணர்ந்து நிற்பவன் போலவும், பர நிலையில் அவ்வாறு உணர்தல் இன்றி அந்த அமுதத்தின் சுவையிலே மூழ்கித் தன்னை மறந்து நிற்பவன் போலவும் இருப்பான். இவ்விருவரில் தன்னை மறந்து, உரையுணர்விறந்தவன் நிலையே முடிந்த நிலையாம்.*

***குறிப்புரை :-*** *"உரையுணர் விறந்து நின்று உணர்வதோர் உணர்வே" (தி.8 கோயில் திருப்பதிகம் - 3) என்றும் அருளிச் செய்தமையும் காண்க. சத்தியின் நிலையே சிவத்தின் நிலையாயினும் உயிர் சத்தி வழியாகவே சிவத்தையடைதல் பற்றி அங்ஙனம் அடையப்படும் நிலைகளைச் சத்திநிலைகளில் வைத்துக் கூறினார். "உரை உணர்ந்து" என்றது, 'உரையையும், உணர்வையும் வேறாக நன்குணரும் நிலையில் நின்று' என்றபடி. ஒக்க உணர்தல் - முற்ற உணர்தல்; என்றது நன்குணர்தலை 'உணர்ந்துளோன் உரையற்ற கணக்கில் கரை கண்டவன் ஆவான்' என முடிக்க. கணக்குநிலை - கணக்கில் நிலையை அடைந்த பொழுது.*

*இதனால், ஞானச் செய்திகளின் முடிநிலை அனுபவங்கள் கூறி முடிக்கப்பட்டது.*

## 30. புறங்கூறாமை

*'புறங்கூறாமை' என்னும் இவ்வதிகாரத்தை முதல் தந்திரத்தில் தானம், தருமம், கொல்லாமை, புலால் உண்ணாமை, பிறர்மனை நயவாமை முதலியவற்றுடன் ஒருங்கு வைத்து ஓதாமல் ஞானச் செய்திகளையெல்லாம் முடித்துவிட்ட பின்னர் வைத்து ஓதுதலால் இது பொதுப்பட வரும் 'புறங்கூறாமை' என்னும் அறமாகாது மேற்கூறிய செய்திகளையே ஞானச் செய்திகளாகக் கூறும் சித்தாந்த சைவரைப் பிற சமயிகள் புறங்கூறுதல் பொருந்தாமையை உணர்த்துவதேயாகும். பொது அறங்களிலும் 'கொல்லாமை, புலால் உண்ணாமை' முதலியன, 'கொல்லுதல் கூடாமை, புலால் உண்டல் கூடாமை' என்றாற்போலவே பொருள் தருதலை நினைக. "கேளாம் புறன்" (சிவஞான போதம் - அவையடக்கம்) என்றார் மெய்கண்ட தேவரும். இவ்வதிகாரம் பதினைந்து மந்திரங்களையுடையது.*

**2476.** பிறையுட் கிடந்த முயலை எறிவான்
அறைமணி வாட்கொண் டவர்தமைப் போலக்
கறைமணி கண்டனைக் காண்குற மாட்டார்
நிறையறி வோம் என்பர் நெஞ்சிலர் தாமே. **1**

---

*2476. தெளிவுரை :- 'சந்திரனிடத்து உள்ள முயலையாம் வெட்டுவோம்' என்று சொல்லி, ஒலிக்கின்ற மணிகட்டியுள்ள வாளையெடுத்து உயர உயர வீசுபவர் போல, அறிவில்லாதவர் நீலமணி போலும் கறுத்த கண்டத்தையுடைய சிவனை அடையும் நெறியை உணர மாட்டாமலே தாமே மெய்ப்பொருளை முற்ற அறிந்த நிரம்பிய ஞானிகள் போலத் தாம் அறிந்தன சிலவற்றைக் கூறி உண்மை ஞானியரை இகழ்வர்.*

*யான் எனது என்னும் செருக்கு அறுதல் எச்செயலும் சிவச்செயல் எனக் காணும் சிவஞானிகளுக்கன்றிக் கூடாது. காண்பானும் காட்சியும் காணப்படு பொருளுமாக இறைவனைத் தரிசிக்குங்கால் மாயா கருவிகள் சிவகருவிகளாக மாறித் தரிசிப்பதேயன்றி அவை நீங்கமாட்டா. நீங்காமைக்குக் காரணம் ஆணவ மலம் நீங்கப்பெற்றும் அம்மலத்தின் வேர் அறுக்கப்படாமையேயாம். வேர் என்பது பற்று எனப்படும். **மலம் அறியாமையைச் செய்யும். பற்று செருக்கைச் செய்யும்**. அப்பற்றுதல் இறைவனைப் பற்றி ஏகனாகி நிற்றலாலுண்டாம். நான் செய்தேன் என்னும் பற்று மடங்கினாலன்றி, வினையில் கட்டப்படுதற்கு ஏதுவாய் இந்திரியங்களின் வழிபட்டுச் செல்லும் அடிமைத்தன்மை நீங்காமையின், அது நீங்குதற்காக எச்செயலும் சிவச்செயல் எனக் காணுதல் ஒருதலையான் வேண்டப்படும். அவ்வாறு காணுவார்க்கு இந்திரியங்களின் குறும்பு சிறிதுகாலம் நிகழினும், பின்னர் மடங்கி ஒழியும் என்க.*

*குறிப்புரை :- 'முயல்' எனப்படுவது, உண்மையில் முயலாகாமை போல,*

**2477.** கருந்தாட் கருடன் விசும்பூ டிறப்பக்
கருந்தாழ் கயத்தில் கரும்பாம்பு நீங்கப்
பெருந்தன்மை பேசுதி நீஒழி நெஞ்சே
அருந்தா அலைகடல் ஆறுசென் றாறே. **2**

**2478.** கருதலர் மாளக் கருவாயில் நின்றே
பொருதலைச் செய்வது புல்லறி வாண்மை

---

*ஞானியர்பால் பிறர் குறையாகக் காண்பனவும் உண்மையில் ஆகாமையும் இவ்வுவமையால் கொள்ளத்தக்கது. 'ஞானமில்லாரது இகழ்ச்சிகள் ஞானியைச் சார மாட்டாமையே யன்றிச் சார்தற்கு யாதும் இயைபும் இல்லை' என்பது இவ்வுவமையால் கூறப்பட்டதாம்.*

*"எறிவான்" வான் ஈற்று வினையெச்சம். "நெஞ்சு" என்றது அறிவை. 'அது குருவுபதேசத்தைக் கேட்டுச் சிந்தித்துத் தெளியும் அறிவு' என்க.*

*இதனால், 'உண்மையுணராதாரது இகழ்ச்சியால் உண்மையுணர்ந்தார்க்கு வருவதோர் இழுக்கில்லை' என்பது கூறப்பட்டது.*

***2477. தெளிவுரை :-*** *மனமே, 'பெரிய முயற்சியையுடைய கருடன் தன்போக்கிலே தான் ஆகாயத்தில் பறக்கவும், கரிய நாகம் அஞ்சி ஓடி, மிக ஆழ்ந்த புற்றுள் ஒளிந்து கொள்ளுதல் போல்வதே, மெய்யுணர்வுடையார் முன் மெய்யுணர்வில்லாதாரது நிலை என்பதைச் சில சான்றுகளால் நீ உணர்ந்திருந்தும் மெய்யுணர்வில்லாதாரது கூற்றுக்களைப் பெரிதுபடுத்திப் பேசுகின்றாய். இனி அவ்வாறு பேசுதலை விடு. ஏனெனில் உண்மை மெய்ந்நெறியாகிய பெருநெறியில் ஏனைச் சிறுநெறிகள் எல்லாம் பெரிய ஒரு கடலிலே சிறிய பல ஆறுகள் சென்று உருத்தெரியாது அடங்குதல் போல்வதே'.*

***குறிப்புரை :-*** *"கருமை" இரண்டும் பெருமை; ஏனையது நிறம், "நீங்க" என்பது 'மறைய' என்றபடி, அது, 'மறைதல் போல்வதாக' எனப் பொருள் தந்தது. 'பெருந்தன்மை பட' என ஒரு சொல் வருவிக்க. பெரிதுபடுத்திப் பேசுதலாவது, 'அவைகளும் ஏன் உண்மைகளாய் இருக்கக்கூடாது' என எண்ணி மயங்குதல். 'சென்ற' என்பதன் ஈற்றகரம் தொகுத்தலாயிற்று. "சென்னி" என்றது சென்று அடங்குதலைக் குறித்தது. "ஆறு" இரண்டில் முன்னது நதி. பின்னது உவம உருபு. 'ஆறாதலையுடையவே' என ஈற்றில் சொல்லெச்சம் வருவித்து முடிக்க. பிறர் நெஞ்சின் இயல்பினைத் தம் நெஞ்சின்மேல் ஏற்றியுரைத்தார்.*

*இதனால், 'புறங் கூற்று மொழிகள் மயக்கும் தன்மையுடைய வாயினும் குரு உபதேசத்தில் உறைத்து நின்று மயங்கலாகாது' என்பது கூறப்பட்டது. 'பிற நெறிகள் குற்றம் உடையன ஆகாது, குறை மட்டுமே உடையன' என்பது பின்னர்க் கூறிய உவமையால் பெறப்படுதல் காண்க.*

மருவலர் செய்கின்ற மாதவம் ஒத்தால்
தருவலர் வேட்ட தனிஉம்பர் ஆமே. 3

**2479.** பிணங்கவும் வேண்டா பெருநிலம் முற்றும்
இணங்கிஎம் ஈசனே ஈசன்என் றுன்னிக்
கணம்பதி னெட்டும் கழலடி காண
வணங்கெழும் நாடிஅங்கு அன்புறல் ஆமே. 4

---

*2478. **தெளிவுரை :-** பகைவரைப் போர்க்களத்தில் எதிர்த்துப் போர் செய்யாது, அவர்தம் நகரத்தை முற்றுகையிட்டே காலத்தைப் போக்குதல் புல்லறிவாண்மையாகும். சிவநெறியைச் சாராதவர் செய்யும் பெரிய தவங்கள் எல்லாம் அப்புல்லறிவாண்மையை ஒக்குமேயானால், அவற்றால் தரப்படும் பயன்கள் எல்லாம் சுவர்க்க போக வாசிகளாய்ச் சில காலம் வாழ்ந்திருத்தலேயாகும்.*

***குறிப்புரை :-*** *'முத்திப் பயனை அவை தரமாட்டா" என்பதாம். "கறைமணி கண்டனைக் காண்குற மாட்டார்" (பா. 2477) என மேலே கூறினமையால், "மருவலர்" என்றது சிவனை மருவாதவர்களையாயிற்று. "ஒத்தால்" என்னும் 'செயின்' என எச்சம் தெளிவின் கண் வந்தது. "நீரின்றமையா துலகெனின்" (திருக்குறள் - 20) என்பதிற் போல "ஆமே" என்பது, 'ஆகும் அதுவே' எனப் பொருள் தந்தது.*

*"பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்*
*இசைத்து வருவினையில் இன்பம்"*

*என்னும் சிவஞான போத (சூ-8, அதி-1)த்தை நோக்குக. 'பிறவிக்குக் காரணமான வினைகளை வெல்வதற்குப் பசு புண்ணியங்களைச் செய்தல்' என்பது இங்குக் கூறிய உவமையால் குறிக்கப்பட்ட பொருள்.*

*இதனால், பதி புண்ணியங்களை உணராது பசு புண்ணியங்களையே புகழ்வாரது நிலைமை கூறப்பட்டது.*

*2479. **தெளிவுரை :-** பெரிய நிலவுலகத்தார் யாவரும், வானுலகத்துப் பதினெண் கணங்களும், எங்கள் இறைவனாகிய சிவனையே 'பரம்பொருள்' என உடன்பட்டு மனத்தால் நினைத்தும் பின்னர் அவன் திருவடியைக் கண்டு வாக்கால் வாழ்த்தியும் தலையால் வணங்கியும் பயன்பெற முயல்கின்றனர். அதனை நன்கு சிந்தித்து அவனிடத்தில் அன்பு செய்தலே தக்கது. அதை விடுத்துப் பிற சமயிகளது சொற்களைக் கேட்டு மாறுபடாதீர்கள்.*

***குறிப்புரை :-***

*"தட்டை யிடுக்கித் தலையைப் பறித்துச்*
*சமணே நின்றுண்ணும்*

**2480.** என்னிலும் என்உயி ராய இறைவனை
பொன்னிலும் மாமணி யாய புனிதனை
மின்னிய வெவ்வுயி ராய விகிர்தனை
உன்னில் உம் உன்னும் உறும்வகை யாலே. **5**

---

*பிட்டர் சொல்லுக் கொள்ள வேண்டா;*
*பேணித் தொழுமின்கள்" - தி.1 ப.69 பா.10*

*என்றாற் போல ஞானசம்பந்தரும் அருளிச் செய்வார். "நிலம்" என்றும் "கணம்" என்றும் கூறினமையால், "எழும்" என்று அஃறிணை முடிபு தந்தார். "பெருநிலம் முற்றும், கணம் பதினெட்டும் - எம் ஈசனே ஈசன் என்று இணங்கி, உன்னி, காண வணங்கி எழும்" என இயைத்து, "காண வணங்கி" என்பவற்றில் விகுதி பிரித்துக்கூட்டி, 'கண்டு வணங்க எழும்' என முடிக்க. 'வணங்கி' என்பது ஈறு தொகுத்தலாயிற்று. "பிறைநுதல் வண்ணமாகின்று; அப்பிறை பதினெண் கணனும் ஏத்தவும் படுமே" (புறம் - கடவுள் வாழ்த்து) என்றதும் காண்க.*

*பதினெண் கணங்கள் இவை என்பதை,*

*"விரவுசா ரணரே, சித்தர்,*
*விஞ்சையர், பசாசர், பூதர்*
*கருடர், கின்னரர், இயக்கர்,*
*காந்தர்வர், சுரர், தைத்தியர்,*
*உரகர், ஆகாச வாசர்,*
*உத்தர குருவோர், யோகர்,*
*நிருதர், கிம் புருடர், விண்மீன்*
*நிறைகணம் "மூவா றாமே"*

***- சூடாமணி நிகண்டு - தொகுதி 12-117***

***என்னும் நிகண்டினால் அறிக. விஞ்சையர் - வித்தியாதரர். இயக்கர் - யட்சர். காந்தர்வர் - கந்தருவர். சுரர் - தேவர். தைத்தியர் - அசுரர். உரகர் - நாகர். உத்தர குருவோர் - போக பூமியர். யோகர் - முனிவர். நிருதர் - அரக்கர். விண்மீன் - நட்சத்திர மண்டலர்.***

***இதனால், 'உயர்ந்தோர் நெறி சிவநெறியே' என்பது வலியுறுத்தப்பட்டது.***

***2480. தெளிவுரை :-** என்னைத்தான் நான், 'என் உயிர்' என்று ஒற்றுமைக் கிழமை பற்றி எண்ணுவேன். ஆயினும், என் உயிரினுள் உயிராய் நின்று எனக்கு உறுதி செய்தது வருபவன் எங்கள் இறைவனாகிய சிவன். ஆகவே, 'என் உயிர்' என்று யான் வலியுறுத்திக் கூறுதற்கு உண்மையில் உரியவன் அவனே. அவன் உண்மையில் பொன்னினும், மணியினும் சிறப்பாகக் கொண்டு போற்றத்தக்கவன்.*

**2481.** நின்றும் இருந்தும் கிடந்தும் நிமலனை
ஒன்றும் பொருள்கள் உரைப்பவ ராகிலும்
வென்றைம் புலனும் விரைந்து பிணக்கறுத்து
ஒன்றா உணரும் ஒருவனும் ஆமே. **6**

---

*தூய்மையே வடிவானவன். உலகில் காணப்படும் பொருள்களில் எல்லாம் மேலான ஒளிப்பொருளாகிய, பகலவன் "வெங்கதிர்" என்று சொல்லப்படுதல் போல, உயிரினுள் உயிராய் இருந்து அங்குள்ள இருளை முற்றக் கடிதலால் அவனை 'வெவ்வுயிர்' என்றலும் பொருந்தும். ('வெம்மை' என்பதற்கு, 'விருப்பம்' என்பதும் பொருளாகலின், "வெவ்வுயிர்" என்பது, 'விரும்பத்தக்க உயிர்' என்றும் பொருள் தரும்) அவன் உயிர்களின் குணங்கட்கு வேறான குணங்களை யுடையவன். அவனை நீவிர் நினைப்பீராயின், உம்மையும் அவன் நினைப்பான். (அவனை நீவிர் அடைதல் கூடும்).*

***குறிப்புரை :-***

***என்னில் ஆரும் எனக்கினி யார் இலை
என்னி லும் இனி யான்ஒரு வன்உளன்;
என்னு ளே உயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்(கு)
என்னு ளேநிற்கும் இன்னம்பர் ஈசனே. - தி.5 ப.21 பா.1***

*என்னும் அப்பர் திருமொழியையும் காண்க.*

***"என்னிலும் என் உயிராய இறைவன்" என்றது, 'என் உயிர்' என்று யான் சிறப்பித்துக் கூறுதற்கு என்னிலும் மிக உரிமையுடைய இறைவன், என்றபடி, "மணியிலும்" எனப் பின்னரும் உருபு விரிக்க. ஆய - உயர்ந்த, மின்னிய - ஒளி விடுகின்ற. விகிர்தன் - வேறுபட்டவன். 'உம்மை உன்னும்' என்பதில் இரண்டன் உருபு தொகுத்தலாயிற்று. உறும் வகையாலே உன்னும்' என முன்னர்க் கூட்டி முடிக்க.***

***இதனால், முன் மந்திரத்தில், "எம் ஈசனே ஈசன்" என்று உயர்ந்தோர் பலரும் உன்னி வந்து வணங்குவர் என்றதற்குக் காரணம் கூறப்பட்டது.***

***2481. தெளிவுரை :-** நூல்களில் சொல்லப்பட்ட பொருள்களைப் பிறர் அறிய நன்கு உரைப்பவராயினும், தாங்கள் ஐம்புலன்களை வென்று, 'இவன் பரமோ, அவன் பரமோ, எல்லாருமே பரமோ' என இங்ஙனம் பலவாறாக எண்ணி அலமரும் ஐயங்களை விரைவில் விடுத்து, 'இவன் ஒருவனே பரம்' என்று ஒருதலையாக உணரத்தக்கவன் ஒரு முதல்வனே. அத்தகைய முதல்வன் எங்கள் பரமாகிய சிவன் ஒருவனே ஆதலின், அவனையே நீவிர் நிற்றல், இருத்தல், கிடத்தல் முதலிய எத்தொழிலைச் செய்யினும் மனத்தால் ஒன்றியிருங்கள்; பயன் அடைவீர்கள்.*

**2482.** நுண்ணறி வாய் உல காய் உல கேழுக்கும்
எண்ணறி வாய்நின்ற எந்தை பிரான்றன்னைப்
பண்ணறி வாளனைப் பாவித்த மாந்தரை
விண்ணறி வாளர் விரும்புகின் றாரே. 7

---

***குறிப்புரை :-*** *'பொருள்கள் உரைப்பவராயினும்' என்பது முதலாகத் தொடங்கி, ஈற்றில், 'ஆதலின்' என்பது வருவித்து. 'எம் நிமலனை நின்றும் ஒன்றும் என முடிக்க. மேல் "எம் ஈசனை" என்றும், "என் உயிர்" என்றும் கூறினாற்போல, இங்கும் 'எம் நிமலனை' என்பதில் 'எம்' என்பது தொகுத்தலாயிற்று.*

"ஒன்றே குலமும்; ஒருவனே தேவனும்"

*எனவும்,*

*"சிவனோ டொக்கும் தெய்வம் தேடினும் இல்லை*
*அவனோடொப்பர் இங்கு யாவரும் இல்லை" - தி.10 பா.40*

*எனவும் மேற்கூறியவற்றையே இங்கு வலியுறுத்து ஓதினார்.*

*இதனால், ஐயக் கொள்கை ஆகாமை கூறப்பட்டது.*

*ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்*
*வானம் நணிய துடைத்து - திருக்குறள் - 353*

*எனத் திருவள்ளுவரும் கூறினார்.*

***2482. தெளிவுரை :-*** *உயிர்கள் தூல சித்தாதல் போல இல்லாமல் சூக்கும சித்தாய், சடவுலகத்தை இயக்கியும், அறிவுலகமாகிய உயிர்களின் அறிவுக்கறிவாய் நின்று அறிவித்தும் நிற்கின்ற, எங்கள் தந்தையாகிய சிவபெருமான், உயிர்களின் தனித்தன்மையை உணர்ந்து அவற்றைப் பக்குவப்படுத்தும் முறைகளில் பக்குவப்படுத்துவோனாவான். அவனை உணர்ந்த பெருமக்களையே உயர்ந்த அறிவினையுடையோர் சேரவிரும்புகின்றார்கள்.*

***குறிப்புரை :-*** *பின் "என் அறிவாய்" என்றமையால் முன்பு "உலகு" என்றது சட உலகத்தையாயிற்று. பண்ணுதல் தகுதி யாக்கல். "ஆட்பாலவர்க் கருளும் வண்ணமும் ஆதி மாண்பும் கேட்பான் புகில் அளவில்லை" (தி.3 ப54 பா.4) என்பதனால், சிவன் பண்ணறிவாளன் ஆதலையறிக. "விண்" என்பது உயர்வைக் குறித்தது. அறிவின் மிக்கோராதல் பற்றித் தேவர்கள், 'புலவர்' என்றும், 'விபுதர்' என்றும் சொல்லப்படுவார்கள். ஆதலின் அவர்களையே "விண்ணறிவாளர்" எனக் கூறினார் எனவும், இனி 'விண்ணாவது சிவபோகம்; அறிவாளர் அங்குள்ள சிவஞானிகள் எனவும் கொள்ளலும் ஆகும். விண்ணறிவாளர் விரும்புதற்குக் காரணமானவற்றையே முதலில் உடம்பொடு புணர்த்தலாகக் கூறினார். "விண்ணறிவாளர் விரும்புகின்றார்" என்றதனால், 'நீவிரும் அவ்வாறு விரும்புதலே*

**2483.** விண்ணவ ராலும் அறிவரி யான்றன்னைக்
கண்ணற உள்ளே கருதிடில் காலையே
எண்ணுற வாகும் முப் போதும் இயற்றிநீர்
பண்ணிடில் தம்மை பராபர னாகுமே. **8**

**2484.** ஒன்றாய் உலகுடன் ஏழும் பரந்தவன்
பின்றான் அருள்செய்த பேரரு ளாளவன்
கன்றா மனத்தார்தம் கல்வியுள் நல்லவன்
பொன்றாத போது புனைபுக ழானே. **9**

---

*தக்கது' என்பது குறிப்பாயிற்று.*

*இதனால், 'அறிவு வடிவான மெய்ப்பொருள் சிவனே' என்பது கூறப்பட்டது.*

***2483. தெளிவுரை :-*** *தேவர்களாலும், (உம்மையால் மூவர்களாலும்) அறிதற்கரியவனாகிய சிவனைச் சிறிதும் இடையீடின்றி உள்ளத்தால் பற்றுங்கள்; பற்றினால் பற்றிய அப்பொழுதே அவன் உங்களால் விரும்பப்படும் பொருளாய் வெளிப்பட்டு விளங்குவான். அதன் பின்பு எஞ்ஞான்றும் நீவிர் அவனை அகத்தும், புறத்தும் வழிபட்டால், உமது தன்மை சிவத்தன்மையாய்விடும்.*

***குறிப்புரை :-*** *கண் - காலம் பற்றிய இடைவெளி. காலை - காலம். 'அக்காலையே' எனச் சுட்டு வருவித்து உரைக்க. இயற்றுதல், பண்ணுதல் என இருகாற் கூறியது அகம், புறம் நோக்கியாம். 'உம் தன்மை' என எடுத்துரைக்க. "பராபரன்" என்பது, அவனால் தன்மையைக் குறித்த ஆகுபெயர்.*

*இதனால், சிவன் சாராதார்க்கு அரியனாயினும் சார்ந்தார்க்கு எளியன் ஆதலை உணர்த்தி, 'அவனைச் சார்ந்து பயன் அடைக' என்பது கூறப்பட்டது.*

***2484. தெளிவுரை :-*** *சிவன், தான் பொருளால் ஒன்றாயினும், எண்ணில்லாத பல பொருள்களிலும் நிறைந்திருப்பவன் (என்றது, 'அவ்வாறு வியாபிக்கும் சத்தியை உடையவன்' என்றபடி) ஆயினும் தன்னைச் சார்ந்தவர்க்குச் சார்ந்த பின்பே அருளும் பேரருளையுடையவன். அன்பு செய்யும் மனத்தினர் தாம் அறிந்தவாறு செய்யும் செயல்களுக்கெல்லாம் இணங்குபவன். அன்பர்கள் பலவாய் நிறைந்த மலர்களைத் தூவிப் புகழும் கெடாத புகழினையுடையவன்.*

***குறிப்புரை :-*** *'அவனை அணுக வேண்டினார்க்கு அணுகுதல் - எளிதேயாம்' என்பது கருத்து. 'உலகு ஏழும் உடன் பரந்தவன்' என மாற்றியுரைக்க. எழுவாய் அதிகாரத்தால் வந்து இயைந்தது. உடன் - ஒருசேர. 'ஆளவன்' என்பதில் முதலில் நின்ற அகரம் விரித்தல். கன்றாமை - வெறாமை. அது வெறுத்தலின் மறுதலையாகிய விரும்புதலைக் கூறித்தது. "கல்வி" என்றது, கற்றுச் செய்யும்*

**2485.** போற்றி என்றேன் எந்தை பொன்னான சேவடி
ஏற்றியே யென்றும் எறிமணி தான்அகம்
காற்றின் விளக்கது காயம் மயக்குறல்
மாற்றலும் கேட்டது மன்றுகண் டேனே. **10**

---

*செயல்களை, 'அடியார் செய்த அநாசாரம் பொறுத்தருளுபவன்' ஆதலை 'கன்றா மனத்தார் தம் கல்வியுள்நல்லவன்' என்றார். "பொன்றாத" என்பதைப் புகழுக்கு அடையாக்குக.*

*இதனால், '<u>சிவனது இயல்பை உணரவல்லார்க்கு அவனை அடைதல் எளிது' என்பது கூறப்பட்டது</u>.*

***2485. தெளிவுரை :-*** *எம் தந்தையாகிய சிவபெருமானது பொன் போலும் சிவந்த திருவடிகளில், அகத்தில் எனது மனத்தையும், புறத்தில் பூக்களையும் ஏற்றி, 'போற்றி போற்றி' என்று பலநாளும், துதித்தேன். அப்பொழுது, அடிக்கப்பட்ட மணியின் ஓசை போன்ற ஓர் ஓசை உள்ளத்திலே கேட்டது. உடனே, காற்றின் முன்னே உள்ள விளக்குப் போல்வதாகிய உடம்பு எந்த நேரத்திலும் நீங்குவதாயினும், அஃது என்றும் நீங்காமலே இருப்பது போலக் காட்டி மயக்குகின்ற மயக்கத்தை நீக்கும் உபாயமும் கேட்டது. பின்பு எல்லாவற்றையும் அடக்கி, மேலே வியாபித்துள்ள பரவெளியும் என் கண்முன் காணப்பட்டது.*

***குறிப்புரை :-*** *"போற்றி என்றேன்" என்பதை, "என்றும்" என்பதன் பின்னர்க் கூட்டுக. "கேட்டது" என்பதை, முன்னரும் கூட்டி, 'அகம் எறிமணி கேட்டது, மாற்றலும் கேட்டது' என்க. மணி, அதன் ஓசையைக் குறித்த ஆகுபெயர். இவ்வோசை யோகத்திற் புலனாகும். ஓசை 'விளக்காகிய காயம்' என்க. அது பகுதிப் பொருள் விகுதி. ''மாற்றல்'' என்பது ஆகுபெயராய் அதற்குரிய உபாயத்தைக் குறித்தது. உபாயம் கேட்டமையாவது. அகத்தில் யோகத்தால் புலனாயினமையாம். "கேட்டது" எனச் செயப்படுபொருள் வினை முதல் போலக் கூறப்பட்டது. பரவெளியாவது, திருவருள் அது காணப்பட்டமையாவது தெளிவாக விளங்கினமை. அதனைக் கண்டமை கூறவே அதன்கண் உள்ள சிவத்தைக் கண்டமை கூறவேண்டாவாயிற்று. 'நீவிரும் ஏற்றிப் போற்றினால், கேட்டும், கண்டும் பயன் பெறலாம்' என்பது குறிப்பெச்சம்.*

*இதனால், 'சரியை கிரியா யோகங்களால் சிவனை அடைந்து, அஞ்ஞானம் நீங்கி, மெய்ஞ்ஞானிகள் ஆவீராக' என்பது கூறப்பட்டது.*

***2486. தெளிவுரை :-*** *என்னைத் தானே தேடிக்கொண்டு வந்து என்னுள்ளே யிருக்க ஒருப்பட்டுவிட்ட சிவனை என்னுள்ளே புகுந்து அறிகின்றவர் ஒருவரும் இல்லை. (ஆகவே, வேறிடத்தில் அவனை அறிதலும் இயலாமை வெளிப்படை). யான் வெளியே சென்று அலையாமல் என் உடம்பினுள்ளே கீழ் இருந்து மேல்*

**2486.** நேடிக்கொண் டென்னுள்ளே நேர்தரு நந்தியை
ஊடுபுக் காரும் உணர்ந்தறி வார்இல்லை
கூடுபுக் கேறலுற் றேன்அவன் கோலம் கண்
மூடிக்கண்டேன் உல கேழும்கண் டேனே. **11**

---

*ஏறிச் சென்ற பொழுது அவனது அழகைக் கண்டேன்; காணுங்கால் கண்ணைத் திறந்து பார்த்துக் காணாமல் கண்ணை மூடிக்கொண்டே கண்டேன். அப்பொழுது அவனை மட்டுமா கண்டேன்? ஏழுலகங்களையும் கண்டேன்.*

*குறிப்புரை :-*

> *"தானேவந்து எம்மைத் தலையளித்து ஆட்கொண்டருளும்*
> *வான்வார் கழல்" - தி.8 திருவெம்பாவை - 6*

*எனவும், "தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்" (தி.8 திருஏசறவு - 10) எனவும் அருளிச் செய்தவாறு, பக்குவம் எய்திய ஆன்மாக்களை அவை பக்குவம் எய்தியது உணர்ந்து தானே சென்று அடைந்து அருளுபவன் சிவன் ஆதல் பற்றி, நேடிக் கொண்டென்னுள்ளே நேர்தரு நந்தியை" என்றார். "கூடு புக்கு ஏழலுற்றேன்" என்றது மூலாதாரத்தினின்று ஆறு ஆதாரங்களையும் நிராதாரத்தில் யோக நெறியால் சென்றமையை, "கண் மூடி" என்றதும் அந் நெறியைக் குறித்தற்கு. யோகக் காட்சியில் அவனைக் கண்டவர்கட்கு அவனது அருளால் எவ்விடத்திலும் எக்காலத்துப் பொருளும் இனிது விளங்குதலைக் குறிக்க, ''கோலம் கண்டேன் உலகேழும் கண்டேன்'' என்றார். ''ஆரும் உணர்ந்தறிவார் இல்லை" என்றதற்கு, இறைவன் யோகியர் உள்ளத்தில் விளங்குதல் போலப் புறஇடங்களில் விளங்குதல் இல்லை' என்பதே கருத்து. இக்கருத்தே பற்றி அம்மை திருவந்தாதி (வெண்பா - 96)யிலும்,*

> *ஆர்வல்லார் காண அரனவனை? அன்பென்னும்*
> *போர்வை யதனாலே போர்த்தமைத்துச் - சீர்வல்ல*
> *தாயத்தால் நாமும் தனிநெஞ்சி னுள்ளடைத்து*
> *மாயத்தால் வைத்தோம் மறைத்து.*

*என்று அருளிச் செய்யப்பட்டது. இதில் அன்பர் உள்ளம் குறிக்கப்பட்டது.*

> *"காலையும், மாலையும் கைதொழு வார்மனம்*
> *ஆலையம், ஆரூர் அரனெறி யார்க்கே" - தி.4 ப.17 பா.8*

*என்ற அப்பர் திருமொழியும் இக்கருத்தே பற்றி எழுந்தது.*

*இதனால், யோக முயற்சியும், அன்பும் சிவனை அடைதற்கு வழியாதல் கூறப்பட்டது.*

**2487.** **ஆன புகழும் அமைந்ததோர் ஞானமும்**
**தேனும் உடைய சிறுவரை ஒன்றுகண்டு**
**ஊனம்ஒன் றின்றி உணர்தல்செய் வார்கட்கு**
**வானகம் செய்யும் மறவனும் ஆமே. 12**

---

*2487. **தெளிவுரை :-** யோகக் காட்சி பற்றி, 'முக்காலமும் உணர்ந்தவர்' எனப் பலரும் கூறப்பட்டுக் குவியும் புகழாகிய உயர்வையும், அவ்யோகத்தாலே பிறர் ஒருவரால் அசைக்க ஒண்ணா அருள் உணர்வாகிய துளங்கா நிலையையும், அமுதமாகிய தேனையும் உடைய ஒரு சிறு குன்று மக்கள் எல்லாரது உடம்பிலும் உள்ளது. அதனை உணர்ந்து, ஏறும் வழியறிந்து ஏறி, அதனை உணர்வினால் அடைந்த தவத்தோரை, அவர் உடம்பு நீங்கிய பின்னர்த் தனது பேருலகில் ஏற்றுகின்ற ஆண்மையுடையவனாகவும் எங்கள் சிவன் இருக்கின்றான்.*

*__குறிப்புரை :-__ யோக நெறியில் புருவ நடு 'மேரு' எனப்படுதல் பற்றி, அதனை "வரை" என்கின்றவர், அஃது எண் சாண் உடம்பினுள் ஓரிடத்ததாதல் பற்றி ''சிறுவரை'' என்றார். 'நுண்ணியதாகக் காணத்தக்கது' என்றலும் கருத்து. 'உடம்பினுள்' என்பது ஆற்றலால் கொள்ளக் கிடந்தது. அவ்விடத்துப் பருகி இன்புறுதற்கு ஏதுவாய் உள்ள அமுதத்தை, "தேன்" எனக் சிறப்புருவகமாகக் கூறி, ஏனைய, 'புகழ், ஞானம்' என்பவற்றை உருவகம் செய்யாது வாளா கூறினமையின், இஃது ஏகதேச உருவகம். "கண்டு" என்றது, காணுதற்கு அருமை குறித்தது. செய்தல் - தருதல். "ஏனையோர் அது மாட்டார்" என்பது உணர்த்து தற்கு மாட்டுவானை, "மறவன்" என்றார். மறவன் - வீரன். உம்மை சிறப்பு. இங்கும் எழுவாய் அதிகாரத்தால் வந்து இயைந்தது.*

*இதனால், __சிவநெறி நின்று சிவயோகம் செய்யின், 'புகழும், ஞானமும், இன்பமும், வீடும் பெறலாம்' என்பது உணர்த்தப்பட்டது__.*

*2488. **தெளிவுரை :-** 'மதி' என்பதற்கு, 'அறிவு' என்பதும் பொருள் ஆதலால் 'மதி' என்னும் பெயருக்கு வானத்துச் சந்திரனை விட மிக உரிமையுடைய உச்சிச் சந்திரனை அடைந்து, அதனால் உண்டாகும் அறிவையே அறிவாகப் பெற்ற யோகிகளுடைய தூய அறிவாய் விளங்கும் ஒளி, பேரின்பமே வடிவாக உடைய பரம்பொருளாம். அதனால், பிறரெல்லாம் தங்களுடைய நிலையற்ற அறிவையே அறிவாகப் பற்றி உலகத்தை நுகர்ந்துகொண்டிருக்க இவ்யோகிகள் 'உபசாந்தம்' என்னும் நிலையை அடைந்து, அநாதியே பற்றிய மலங்கள் நீங்கப்பெற்று, அமைதி நிலையை அடைகின்றனர்.*

*__குறிப்புரை :-__ ''மாதவரது தூய்மதி'' என்க. பரமானந்த வடிவானதை, "பரமானந்தம்" என்றார். தாமதி - தாவுகின்ற மதி. ஒன்றை விட்டு ஒன்றைப் பற்றும் நிலையில்லாத அறிவு. அற்றார், முற்றெச்சம். தெளிவு பற்றி நிகழ்காலம், இறந்த காலமாகச் சொல்லப்பட்டது.*

**2488.** மாமதி ஆம்மதி யாய்நின்ற மாதவர்
தூமதி யாகும் சுடர்பர மானந்தம்
தாமதி யாகச் சகம்உணச் சாந்திபுக்கு
ஆம்மலம் அற்றார் அமைதிபெற் றாரே. **13**

**2489.** பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்டு
இதமுற்ற பாச இருளைத் துரந்து
மதம்அற்று எனதியான் மாற்றிவிட் டாங்கே
திதம்உற் றவர்கள் சிவசித்தர் தாமே. **14**

---

*இதனால், முன் மந்திரத்தில் கூறப்பட்ட யோகத்தின் சிறப்புடைப் பயன் கூறப்பட்டது.*

*2489. **தெளிவுரை :-** 'சாலோகம், சாமீபம், சாரூபம்' மூன்றும் பத முத்திகளாம். சிலர் இவற்றையே வேறு வகையாகக் கூறி, 'பரமுத்தி' எனச் சாதிப்பர். அவற்றில் எல்லாம் இருள்மலம் ஆகிய ஆணவம் பற்றறக் கழியாமையால் அதன் காரியமாகிய துன்பம் அவ்விடங்களில் சிறிது சிறிது உள்ளதேயாம். ஆகையால், 'அவை குறையுடையன' என்று அறிந்து, அவற்றோடு நிற்றலை விடுத்து, ஆணவம் பற்றற நீங்கினமையால், அதன் காரியமாகிய மயக்கமும், 'யான், எனது' என்னும் செருக்கும் பற்றறக் கழிய, அப்பற்றுக்களை இயல்பிலே இல்லாதவனாகிய பரம சிவனிடத்தில் அடங்கி நிலைத்திருப்பவர்களே உண்மையில் சிவனைப் பெற்றவராவர்.*

***குறிப்புரை :-*** *'அயன், அரி, அரன்' என்னும் மூவர் பதவிகளைச் சிவநூல்கள் ஓரிடத்தும் 'முத்தி' என்றல் இல்லையாகலின் அவைகளை மூன்று 'பத முத்திகள்' என்றல் கூடாமையறிக. இதம் உற்ற பாசம் - பெத்த நிலையில் இன்பம்போலத் தோன்றிய பாசம். "ஆங்கு" என்றது பண்டறி சுட்டு. திதம் - நிலைபேறு 'இந்நிலையை அடைந்தவர்களே நிலை பெற்றவர்' என்றதனால், பதமுத்தி யடைந்தவர்கட்கும் பின்னர்ப் பிறப்பு வருதல் உண்டு என்பது,*

*தவம் செய்தார் என்றும் தவலோகம் சார்ந்து*
*பவம் செய்து பற்றறுப்பா ராகத் - தவம் செய்த*
*நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்*
*கற்றார்சூழ் சொல்லுமாம் கண்டு.*

*என்பது சிவஞான போதம் (சூ.8 அதி. 1) 'பரமுத்தி யொழிந்த ஏனைய முத்திகள் இன்பநிலை ஆகா' என்பதைச் சிவஞான சித்தி (சுபக்கம் சூ - 11.3) கீழ்க்காணுமாறு விளக்கும்.*

*"பினாதி அருள் பெற்றவர்கள் நித்தஉரு வத்தைப்*
*பெற்றிருக்கை முத்தியெனில், பெறும்பதமே இதுவும்;*

**2490.** சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன்
சுத்தாசுத் தத்துடன் தோய்ந்தும்தோ யாதவர்
முத்தர முத்திக்கும் மூலத்தர் மூலத்துச்
சத்தர் சதாசிவத் தன்மையர் தாமே. **15**

---

*இனாதுநிலை இதுதானும்; காயம் உண்டேல்,*
*இருங்கன்மம், மாயைமலம் எல்லாம் உண்டாம்"*

*சித்தி - பேறு. சித்தர் - பேறு பெற்றவர்.*

*இம்மந்திரம் அகச் சமயத்தார்க்கு அறிவுறுத்தியது.*

*2490.* **தெளிவுரை :-** *சிவஞானத்தால் சிவதரிசனத்தைப் பெற்றோர் யாவரும் சிவனைப் பெற்றவராகவே எண்ணப்படுவர். (அவர் பின்பு பதமுத்திக்கு மேலான அபர முத்தி பரமுத்திகளை அடைவர் ஆதலின்),*

*"பரஞானத் தாற்பரனைத் தரிசித்தோர் பரமே*
*பார்த்திருப்பர்; பதார்த்தங்கள் பாரார்"*

*- சிவஞான சித்தி (சுபக்கம் சூ - 11.3)*

*என்றபடி அவர்கள் 'சுத்தம், அசுத்தம்' என்னும் இருவகைப் பிரபஞ்சத்துள் எதில் இருப்பினும் அதில் பற்றற்றேயிருப்பர். அவர், 'பதமுத்தி, அபரமுத்தி, பரமுத்தி' என்னும் மும்முத்திகளையும் தம்மை அடைந்த மாணாக்கர்க்கு அளிக்க வல்ல ஆசிரியர்களும் ஆவர். இனி மூலாதாரத்தில் ஒடுங்கியிருக்கும் குண்டலி சத்தியை எழுப்பி அதன் பயனைப் பெற்ற யோகியரும் சதாசிவ மூர்த்தி போல அபர ஞானமாகிய கலைஞானங்களை வழங்கத்தக்கவராவர்.*

**குறிப்புரை :-** *'சீருடன் தோயாதவர்' என இயைக்க. சீர் - சிறப்பு திருவருள். 'அதனுடனேயிருந்துகொண்டு, தோய்வின்றி இருப்பர்' என்க. சத்தியைப் பெற்றவர் சத்தர். சதாசிவமூர்த்தி பரஞானத்தையும் தருபவர் ஆயினும், அவர் வேதாகமங்களை அருளிச்செய்து, பிறர்க்கு அறிவுறுத்தினமையே இங்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.*

*இதனால், சிவஞானிகளும், சிவயோகிகளுமே ஆசிரியராவர் என்பது உணர்த்தும் முகத்தால், பிறரை ஆசிரியராகக் கொண்டு மயங்குதல் கூடாமை கூறி முடிக்கப்பட்டது.*

*முதல் தந்திரம் முதலாகச் சில இடங்களில் கூறியவற்றையே இங்குக் கூறினார். ஆயினும் அவை சுபக்கத்தாரை நோக்கி உண்மையுணர்த்தலாகக் கூறப்பட்டன. இவை பரபக்கத்தாரை நோக்கி, அறிவுரையாகக் கூறப்பட்டன. இவ்வேற்றுமை உண்மையால், இவை கூறியது கூறல் ஆகாமை உணர்க. இங்ஙன மாகவே, இவ்வாறு உரையாதார்க்கு இவை கூறியது கூறல் ஆதலையும் உணர்க.*

## 31. அட்டதள கமல முக்குண அவத்தை

*மேல், பிற சமயிகள் சித்தாந்த சைவரைப் புறங்கூறுதல் பொருத்தம் அற்றதாகக் கூறிய இயைபானே இங்கு நின்றும் மற்றும் சிலவற்றைப் பரபக்கப் பார்வையாலே கூறுகின்றார். அவற்றுள் கடவுட் கொள்கையுடைய சமயங்கள் அனைத்தும் தம் தம் தெய்வங்களை இருதய கமலத்தில் வைத்து வழிபடுதலைச் சிறப்பாகக் கொள்ளுதலின், அது பற்றிய சிலவற்றை முதலில் கூறுகின்றார். இது பத்து மந்திரங்களையுடையது. 'அட்டதள கமலத்தில் முக்குண நிலைகள்' என்பது அதிகாரப் பொருள். அவத்தை - நிலை. 'பிற சமயங்கள் முக்குணங்களைக் கடந்த நிர்க்குணம் அல்ல' என்றற்கு இவ்வாறு கூறப்பட்டது. நிர்க்குணமாகிய சைவமும் இடையிடையே புடைபட வைத்து உணர்த்தப்படும்.*

**2491.** **உதிக்கின்ற இந்திரன் அங்கி யமனும்**
**துதிக்கும் நிருதி வருணன்நல் வாயு**
**மதிக்கும் குபேரன் வடதிசை ஈசன்**
**நிதித்தெண் டிசையும் நிறைந்துநின் றாரே.** **1**

---

*2491. தெளிவுரை :- "அண்ட பிண்டம் அவை சமம்" (கோயில் புராணம் - பதஞ்சலி சருக்கம் - 70) என்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது ஆதலின், இதய கமலம் எட்டிதழ்களை உடையதாகக் கொள்ளப்படுதல் போலவே நில வுலகமும் எட்டிதழ்களையுடைய தாமரை மலர்களும், அவ்விதழ்களில் திசைக் காவலர்கள் இருப்பதாகவும் பாவித்து அவர்களை வழிபடல் வேண்டும் - என்பது வைதிகக் கொள்கை. அவரளவிற்கு அது வேண்டுவதே என்பதை முதற்கண் கூறுகின்றார். இதன் பொருள் வெளிப்படை.*

***திக்குப் பாலகர் எண்மர் : திசைக்காவலர்கள்:***

*சிவபெருமானால் பணிக்கு அமர்த்தப்பட்டவர்கள். நம்மைப் போன்று மும்மலமுடையராய், பிறப்பு இறப்புக்குட்பட்டவர்கள். நாமும் வேண்டினால் இப்பதவி கிடைக்கும்.*

| திசை | தெய்வம் |
|---|---|
| கிழக்கு | இந்திரன் |
| தென்கிழக்கு | அக்கினி |
| தெற்கு | எமன் |
| தென்மேற்கு | நைருதி |
| மேற்கு | வர்ணன் |
| வடமேற்கு | வாயு |
| வடக்கு | குபேரன் |
| வடகிழக்கு | ஈசானன் |

**2492.** ஒருங்கிய பூவும்ஓர் எட்டித ழாகும்
மருங்கியல் மாயா புரியத னுள்ளே
சுருங்கிய தண்டின் சுழுனையி னூடே
ஒருங்கிய சோதியை ஓர்ந்தெழும் உய்ந்தே. **2**

---

*குறிப்புரை :-* *இந்திரன் முதலிய எண்மரையும் கிழக்கு முதலாகத் தொடங்கி எட்டுத் திசையையும் வலமாக எண்ணிப் பொருத்திக் கொள்க. ஈசன் - ஈசானன். நிதித்தல் - நிதிமிகுதல், நியதி செய்யப்படல். உதிக்கின்ற இந்திரன் - கீழ்த்திசைக் காவலனாய்த் தோன்றும் இந்திரன். அங்கி - அக்கினித்தேவன்.*

*இதனால் 'திசை காக்கும் கடவுளர் எண்மராவார் இவர்' என்பது கூறப்பட்டது. கிழக்கிலும், வடக்கிலும் இந்திரனையும், குபேரனையும் நீக்கி, முறையே 'ஞாயிறு, திங்கள்' என்பவரைக் கூறுதலும் உண்டு. அவ்விடத்தில் திங்களை, 'சோமன்' என்ப.*

*"ஞாயிறாய், நமனு மாகி,*
*வருணனாய்ச் சோம னாகித்*
*தீ, யறாநிருதி, வாயு,*
*திப்பிய சாந்த னாகி" - தி.4 ப.32 பா.6*

*என்னும் திருப்பாடலைக் காண்க. இனி, 'சோமன்' என்பதும் குபேரன் பெயரே என்பாரும் உளர்.*

*2492.* ***தெளிவுரை :-*** *உயிர்களோடு ஒன்றி இயங்குகின்ற மாயா நகரத்தில் ஒன்றை ஒன்று ஒத்துள்ள தாமரை மலர்கள் எட்டிதழ்களையுடையனவாகும். அவை உள்ளே நுணுகிய புழையை உடைய தண்டின்மேல் உள்ளன. அவற்றுள் ஒரு தண்டு 'சுழுமுனை' எனப்படுகின்றது. அதனோடு உள்ள புழையால் மலர்கின்ற தாமரையில் விளங்குகின்ற ஒளியையே யோகிகள் காண்கின்றனர். ஆதலின் மற்றொரு தாமரையிலும் அந்த ஒளியையே பாவித்து உய்தி பெறுங்கள்.*

***குறிப்புரை :-*** *இம்மந்திரம் இரட்டுற மொழிந்தது. பூ - 1 மலர்; இதய கமலம் 2 பூமி. மாயாபுரி - 1 அண்டம். 2 பிண்டம், உடம்பு இதய கமலத்தை உடைய தண்டு சுழுமுனை நாடி. பூமியைத் தாங்குகின்ற தண்டு அனந்தன் - (ஆதிசேடன்) இதய கமலத்தில் விளங்குகின்ற ஒளி சிவன். அவனையே அண்டத்திலும் (பூமியிலும்) நடுநாயகனாக வைத்து, ஏனையோரைச் சுற்றுக் கடவுளராகக் கொண்டு வழிபட்டு உய்க என்பதாம். இவ்வாறு செய்யும் வழிபாடு சிவாலயங்கள் அனைத்திலும் என்றும் நிகழ்ந்து வருதல் வெளிப்படை. எனவே, 'முன் மந்திரத்துக் கூறப்பட்ட திசைக் காவலர்களைச் சிவனது ஆணையை நடத்தும் அதிகாரிகளாகக் கொண்டே வழிபடுதல் வேண்டும்' என்பது போந்தது. 'இதுவே சிவ நெறி' என்க.*

**2493.** மொட்டலர் தாமரை மூன்றுள மூன்றினும்
விட்டலர் கின்றனன் சோதி விரியிதழ்
எட்டல ருள்ளே இரண்டல ருள்ளூறில்
பட்டலர் கின்றதோர் பண்டம் கனாவே. **3**

**2494.** ஆறே அருவி அகம் குளம் ஒன்றுண்டு
நூறே சிவகதி நுண்ணிது வண்ணமும்
கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும்
வேறே யிருக்கும் விழுப்பொருள் தானே. **4**

---

*இரண்டாம் அடியை முதலில் வைத்து உரைக்க. எழுதல் - மேம்படுதல்.*

*இதனால், 'வைதிக கருமங்களைச் செய்யினும் சைவ முறையிலே செய்தலே ஆன்றோர் ஆசாரம்' என்பது கூறப்பட்டது.*

*2493.* **தெளிவுரை :-** *அரும்பாய் இருந்து அலர்த்த அலர்கின்ற தாமரை மலர்கள் உடலினுள்ளே ஒன்றல்ல; மூன்று உள்ளன. அந்த மூன்றிலுமே ஒளி வடிவான இறைவன் விளங்குகின்றான். எனினும், மேற்கூறிய எட்டிதழ்த் தாமரையிலே நின்றுவிடாமல் ஏறிச் சென்று இரண்டிதழ்த் தாமரையை அடைந்து அவனைத் தரிசித்தால், பிறந்து வளர்கின்ற உடம்பு கனவுக் காட்சியாய்விடும்.*

**குறிப்புரை :-** *"மொட்டு அலர்கின்ற" என்ற விதப்பால், அலர்த்த அலர்தல் பெறப்பட்டது. அலர்த்துதல் பிராணாயாமத்தால், மூன்று தாமரைகளாவன, மேல் ஆதாரங்களாகிய, 'அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை' என்பன. எட்டிதழ்த் தாமரை அனாகதமே. கீழ் ஆதாரங்களில் வேறு கடவுளர் இருத்தலின் அவற்றைக் கூறாது, இம்மூன்று ஆதாரங்களை மட்டுமே கூறினார். இவற்றில் சிவன் 'உருத்திரன், மகேசுரன், சதாசிவன்' என இருப்பன். அதனால், 'உருத்திரனிடத்திலே நின்று விடாமல், சதாசிவனை அடைக' என்றார். ஆதார யோகத்தின் பயன் விளைவது அவ்விடமேயாகும். அனாகதம் பூசைத்தானமாக ஆஞ்ஞையே தியானத் தானமாம். ஏர்பு - எழுந்து. பண்டம் - உடம்பு. இது பின்னர் வருதலின், முன்னர் "மூன்றுள" என்றது இதனுள்ளேயாயிற்று. கனவுக் காட்சியாதலாவது, 'கனவு போல நிலையாது' என்னும் உணர்வு மிகுதல்.*

*இதனால், 'ஆதார யோகம் யாவும் ஒரு பெற்றிப்பட்டன அல்ல; மேலையாதார யோகமே சிவ யோகமாய்ப் பயன் தரும்' என்பது கூறப்பட்டது.*

*2494.* **தெளிவுரை :-** *உடம்பினுள், முன் அதிகாரத்தில் கூறியவாறு உள்ள சிறுமலையினின்றும் தோன்றுவது ஆறு அன்று; அருவியே (பா. 2487). அந்த அருவியின் நீரை ஏற்கின்ற குளம் (ஏரி) ஒன்று உண்டு. அதில் விளையும் விளைவு*

**2495.** **திகையெட்டும் தேர்எட்டும் தேவதை யெட்டும்**
**அகையெட்டு மாய்நின்ற ஆதிப் பிரானை**
**வகையெட்டும் நான்கும்மற் றாங்கே நிறைந்து**
**முகையெட்டி னுள்நின் றுதிக்கின்ற வாறே. 5**

**2496.** **ஏழும் சகலம் இயம்பும் கடந்தெட்டில்**
**வாழும் பரம்ஒன்று அதுகடந் தொன்பதில்**
**ஊழி பராபரம் ஓங்கிய பத்தினில்**
**தாழ்வு அது ஆன தனித்தன்மை தானே. 6**

---

*வகைகளோ பல. ஆயினும் அவ்விளைவினது இயல்பு அறிதற்கரிதாய மிக நுட்பமாய் உள்ளது. அதனை வெளிப்படக் கூறினால், மாதொரு கூறனாகிய பரம்பொருளேயாம்.*

*குறிப்புரை :- 'அருவியே ஆறு' என ஏகாரத்தை மாற்றி யுரைக்க. "அகம்" என்பதை முதலிற் கூட்டுக. "அருவி" என்றதனால், அது தோன்றும் இடமாகிய மலையுண்மை தானே பெறப்பட்டது. 'மலையில் ஆறு உற்பத்தியாதல் இயல்பு; ஆயினும் இங்கு அஃதில்லை' என்றபடி. 'அஃது ஆஞ்ஞை' என்பது மேலே சொல்லப்பட்டது. அருவி - ஆஞ்ஞையினின்றும் பெருகும் அமுத தாரை. குளம் - இருதயம். விளைவு பல வகையினதாதல் இறைவனது எண் குணங்கள் பற்றியாம். முதல் இரண்டடிகளிற் பொதுப்படக் கூறியவற்றை ஏனையோர் அறிவாராயினும், அதனைச் சிறப்புவகையான் அறியாமை பற்றி, 'அதனை அவ்வாறு அறிதல் வேண்டும்' என்பதைப் பின்னிரண்டடிகளால் கூறினார். 'அங்ஙனம் உணராத பொழுது அவர் முயற்சி பெரும்பயன் தாராது' என்பதாம். வேறேயிருத்தல், தலைமையிடத்திருத்தல்.*

*இதனால், மேலையாதார யோகங்களையும் சிவ யோகமாகச் செய்யுமாறு கூறப்பட்டது.*

*2495. **தெளிவுரை :-** தியானப் பொருள் பிராசாத கலைகள் பன்னிரண்டிலும் நிறைந்து, எட்டிதழ்த் தாமரையாகிய இதய கமலத்திலும் பொருந்தி வெளிப்படச் செய்கின்ற முறை, திசையெட்டும், அவற்றைக் காக்கின்ற தேவர் எண்மரும், அவர்தம் ஊர்தி முதலியனவும், ஐம்பெரும்பூதம், இருசுடர், உயிர் ஆகிய எட்டுப் பொருள்களும் ஆகிய அனைத்துமாய் உள்ள முதல்வனாகிய சிவபிரானை வெளிப்படச் செய்யும் முறையேயாம்.*

*குறிப்புரை :- 'தியானப் பொருள் சிவனே' என்றபடி "தேர் எட்டும்" என்பதை, "தேவதை எட்டும்" என்பதன் பின்னர்க் கூட்டுக. "தேர்" என்றது, படைக்கலம் முதலிய பிறவற்றையும் தழுவிய உபலக்கணம். 'திசைக்காவலர் அவ்வாறெல்லாம் வழிபடப்படுவர்' என்க. அகை - பிரிவு. மற்று, அசை. மூன்றாம்*

**2497.** பல்லூழி பண்பிற் பகலோன் இறையவன்
நல்லூழி ஐந்தினுள் ளேநின்ற ஊழிகள்
செல்லூழி அண்டத்துச் சென்றவன் ஊழியுள்
அவ்வூழி உச்சியுள் ஒன்றின் பகவனே. 7

---

அடி முதலாகத் தொடங்கி, 'உதிப்பிக்கின்ற ஆறு' ஆதிப்பிரானை' என முடிக்க. 'ஆதிப்பிரானை உதிப்பிக்கின்ற ஆறாம்' என்றபடி. ஆறு - முறைமை. 'உதிப்பிக்கின்ற' என்பதில் பிறவினை விகுதி தொகுக்கப்பட்டது.

இதனால், 'யோகத்தின் எட்டுறுப்புக்களில் 'தியானம்' ஏதேனும் ஒன்றைத் தியானிப்பது அன்று; சிவனைத் தியானிப்பதே' என்பது கூறப்பட்டது. 'ஏதேனும் ஒன்றைத் தியானிக்கலாம்' என்பது யோக மதம்.

*2496. தெளிவுரை :-* வைதிக முறையில் வழிபடினும், இதய கமலத்தின் எட்டிதழ்களில் கிழக்கு முதலாகத் தொடங்கி வலமாக ஏழ் எண்ணி ஏழாவ தாகிய வட இதழ் ஈறாக உள்ள இதழ்களில் உள்ளவர்களாக மேற்சொல்லப்பட்ட திசைக் காவலர்களைச் சகலவருக்கத்து ஆன்ம வர்க்கத்தவராகவும், அடுத்த வடகீழ் இதழில் உள்ள ஈசானனை அவரின் மேம்பட்ட பிரளயாகல உருத்திரனாகவும், எட்டையும் கடந்து மேலாக ஓங்கி நிற்கும் உயர்புற இதழில் சீகண்ட உருத்திரரை வைத்துச் சிவனாகவும், கீழ்நோக்கித் தூங்கும் கீழ்ப்புற இதழில் ஆதார சத்தியை வைத்து அச்சத்தியாகவும் பாவித்து வழிபடின் சிறப்புடைய சைவ வழிபாடாக அமையும்.

*குறிப்புரை :-* "ஏழ்" என்றது ஏழ் இதழ்களில் உள்ள தேவதைகளைக் குறித்தது. 'சகலமாக இயம்பும்' என ஆக்கம் வருவிக்க. 'இயம்பும்' - இயம்பப்படும். 'வாழும் ஒன்று பரம்' என மாற்றிக் கொள்க. "பரம்" என்பது, 'மேலானது' என்னும் அளவாய் நின்றது. ஊழி பராபரம் அயன், மால் இவர்களது ஊழியிலும் அழியாது நிற்கும் சீகண்ட உருத்திரர். தாழ்வு - கீழ் உள்ளது; ஆதார சத்தி. மேல், "சுருங்கிய தண்டின் சுழுனையினூடே" என்றமையால் இம்முறைக்கு மூலாதாரத்தில் உள்ள குண்டலிசத்தியே தாமரையின் கிழங்காகும். இதய கமல வழிபாடு சைவாகமங்களில் சொல்லப்பட்ட சைவமுறை வேறாதலையறிக. தனித்தன்மை - சிறப்புத்தன்மை; அது சிவ வழிபாட்டுத் தன்மையாம்.

இதனால், வைதிகத்தில் சைவமாம் வகை சொல்லப்பட்டது. அனைத்துத் தேவர்களையும் ஒரு நிகராகப் பரமாகக் கருதுவது தனி வைதிகம் என உணர்க.

*2497. தெளிவுரை :-* முதற்கடவுளாவான் உலகிற்குப் பலவகையான ஊழிகளைப் பகுத்து வைத்துத்தான் அவற்றில் அகப்படாது நிற்பவன். அங்ஙனம் பகுக்கப்பட்ட ஊழிகள் பெரும்பான்மையாக ஐந்தாகும். அவை நிவிர்த்திகலை

**2498.** புரியும் உலகினைப் பூண்டஎட் டானை
திரியும் களிற்றொடு தேவர் குழாமும்
எரியும் மழையும் இயங்கும் வளியும்
பரியும்ஆ காசத்தில் பற்றது தானே. **8**

---

*ஊழி முதலாக, சாந்தியதீதைகலை ஊழி ஈறானவையாம். அவற்றில் ஒன்றிலும் உள்ளாய் நிகழும் ஊழிகள் பல. ஒவ்வோர் ஊழியையும் கடந்து அனைத்து ஊழிகளும் முடிந்த பின்பும் அவற்றில் மாயையில் அனைத்து உலகங்களும் ஒடுங்கவும் தான் ஒடுங்காது மேல் நிற்பவன் எவனோ, அவனே முழுமுதற்கடவுள்.*

*குறிப்புரை :- 'அத்தகையோன் பரம சிவனே' என்பது கருத்து. அதனால், 'ஏனையோர் பலரும் அவனால் தோற்றி ஒடுக்கப்படும் உயிர் வருக்கத்தினரே' என்பதும் அருத்தாபத்தியால் பெறப்பட்டது. பகல் - பகுதல்; பகுத்தல். பகலோன் - பகுத்தலை உடையவன். நின்ற - நின்றன. இரண்டாம் அடியீற்றில் 'பல' என்பது வருவிக்க. 'செல்லூழிதோறும் அண்டத்துச் சென்றவன்' என்க. 'அண்டம்' என்பது, 'அப்பால்' என்னும் பொருட்டு. "உச்சியுள்" என்பதும் அது. ஊழியுள் அவ்வூழி - எல்லா ஊழிகளிலும் முடிவான ஊழி. ஒன்றின் - பொருந்தியிருப்பின், 'அவன் பகவனாம்' என முடிக்க. ஈற்றடி இன எதுகை.*

*இதனால், இதய கமல வழிபாடு சைவ வழிபாடாக நிகழ்தலே சிறப்புடைய தாதல், அதற்குக் காரணம் கூறும் முகத்தால் வலியுறுத்தப்பட்டது.*

*2498. **தெளிவுரை :-** முதற்கடவுளால் ஆக்கி அளிக்கப்படும் உலகத்தின் திசைகள் எட்டாகப் பாகுபட்டு உள்ளன. 'அத்திசைகளில் எட்டு யானைகள் நின்று உலகத்தைத் தாங்குகின்றன' என்பதும், 'அந்த யானைகளைத் தங்கள் ஊர்திகளாகக் கொண்டு உலாவும் தலைவர்கள் உளர்' என்பதும் இருக்கட்டும். நெருப்பும், நீரும், ஓயாது இயங்கும் காற்றும் ஆகாசமாகிய வெளியைப் பற்றாகக் கொண்டுதான் இயங்குகின்றன. அதுபோல, அனைத்திற்கும் பற்றுக்கோடாய் உள்ளவன் அனைத்து ஊழிகளையும் கடந்து நிற்கின்ற அவனே.*

*குறிப்புரை :- 'அத்திசைக் காவலர்களே உலகிற்குப் பற்றுக் கோடல்லர்' என்பது கருத்து. அக்கருத்து உவமை காட்டித் தெளிவிக்கப்பட்டது. பூண்ட - பூண்டன; சுமக்கின்றன. எண்மரையும் சேர்த்து, 'குழாம்' என்றார். அவர்களை உலகிற்குப் போதியவராகக் கருதுபவரை உட்கொண்டு, ஏனைத் தேவரைச் சேர்த்திலர். 'குழாமும் திரியும்' என்க. உம்மை, இறந்தது தழுவிற்று. பரிதல் - இயங்குதல். ஆகாசத்தில் பரியும் எனவும், 'அதுவே பற்று' எனவும் மாற்றியுரைக்க. தான், அசை. 'அதுபோல அனைத்திற்கும் பற்று அவனே' என்பது குறிப்பெச்சம்.*

*இதனால், முன் மந்திரத்திற் கூறப்பட்ட பொருள் வலியுறுத்தி விளக்கப்பட்டது.*

**2499.** ஊறும் அருவி உயர்வரை உச்சிமேல்
ஆறின்றிப் பாயும் அருங்குளம் ஒன்றுண்டு
சேறின்றிப் பூத்த செழுங்கொடித் தாமரைப்
பூவன்றிச் சூடான் புரிசடை யோனே. **9**

**2500.** ஒன்றும் இரண்டும் ஒருங்கிய காலத்து
நின்றும் இருந்தும் நிலம்பல பேசினும்
வென்றும் இருந்து விகிர்தனை நாடுவர்
சென்றும் இருந்தும் திருவுடை யோரே. **10**

---

*2499. **தெளிவுரை :-** சுரந்து பாய்கின்ற அருவியை உடைய, உயர்ந்த மலை உச்சிக்கு மேலே, தனக்கு வருவாயாகும் நதி எதுவும் இல்லாமல் தானே நிறைந்து, தனது நீரைக் கீழ் நிலங்கட்குப் பாய விடுகின்ற ஓர் அதிசயக் குளம் உண்டு. அக்குளத்தில் சேறும், கிழங்கும், இல்லாமலே செழிப்பான ஒரு கொடியிற் பூத்த அதிசயத் தாமரையும் ஒன்று உண்டு. அந்தத் தாமரைப் பூவைத் தவிர வேறு பூக்களைச் சிவன் விரும்பிச் சூடுதல் இல்லை.*

***குறிப்புரை :-*** *ஊறும் அருவி, விந்துத் தானத்திற்கு உண்டாகின்ற அமிர்த தாரை. அதனை உடைய உயர் வரை, ஆஞ்ஞை; புருவ நடு. அதற்கு மேலேயுள்ள அருங்குளம் உச்சி. அது 'சந்திர மண்டலம்' எனப்பட்டு, சந்திரன் தருகின்ற அமிர்தத்தைப் போல அமிர்தத்தைத் தருதலால், 'ஆறின்றிப் பாயும் அருங்குளம்' எனப்பட்டது. ''உண்டு'' என்பதன்பின், 'அதன்கண்' என்பது வருவிக்க. செழுங்கொடி, ஆஞ்ஞையினின்றும் மிடற்றினின்றும் உச்சிக்குச் சென்று பரவும் நாடிகள்; நரம்புகள் பூத்த தாமரை, உச்சியில் மலர்கின்ற ஆயிர இதழ்த் தாமரை. அதனையே சிவன் விரும்பிச் சூடுதல், அத்தாமரையினின்றும் தோன்றும் யோகக் காட்சிகளையே ஆஞ்ஞையில் தன்னைத் தியானிக்கும் யோகிகட்குத் தான் வழங்கும் பிரசாதமாகக் கொண்டிருத்தல். இம்மந்திரமும் மேற்போந்த சில மந்திரங்களைப் போலப் பிசிச்செய்யுள். ஈற்றடி மூன்றாம் எழுத்தெதுகை பெற்றது.*

*இதனால், அட்ட தள கமல வழிபாட்டிற்கு மேல் யோக வழிபாடும் செய்யத்தக்க சைவ வழிபாடாதல் கூறப்பட்டது.*

*2500. **தெளிவுரை :-** மும்மலங்களும் இறைவனது திருவுள்ளத்தோடு ஒத்துப்போகும் காலத்தில், அவனது திருவருளைப்பெற்று நிற்கும் பெரியோர்கள் உலகத்தார் ஆங்காங்கே நின்று கொண்டும், இருந்து கொண்டும், தங்கள் வாய்க்கு வந்த எவற்றைப் பேசினாலும் அவற்றைப் பொருட்படுத்தாது, ஐம்புலன்களை வெல்லுதலும் செய்து, நடந்தாலும், இருந்தாலும் சிவனை உணர்ந்தேயிருப்பர்.*

***குறிப்புரை :-*** *'அவருடைய உணர்வே உண்மை அட்டதள கமல வழிபாடாகும்' என்பது குறிப்பெச்சம். இறைவனுடைய திருவுள்ளம், 'உயிர்*

*தன்னை உணர்தற்கு எந்தத் தடையும் இருத்தல் கூடாது' என்பது. ஆணவமலம் மறைத்தலைச் செய்யாது வாளா இருத்தலும், மாயை கன்மங்கள் உயிர்கள் திருவருள் நெறியில் ஒழுகுதற்குத் துணை செய்தலுமே மும்மலங்களும் இறைவனது திருவுள்ளத்தோடு ஒத்துப்போதலாம்.'அந்நிலை மலம் பரிபாகமான காலத்தில் உண்டாகும்' என்பது கருத்து. "மால் இவன் என்ன மன நினைவில் - ஒத்தன ஒத்தன சொல்லிட ஊரூர் திரிந்து எவரும் - தத்தம் மனத்தன பேச" (தி.8 திருச்சதகம் - 3) என்னும் "நிலையே, நிலம், நின்றும், இருந்தும் பல பேசினும் விகிர்தனை நாடுவர்" என்றார். "வென்றும்" என்னும் உம்மை சிறப்பும்மை.*

*இதனால், சைவ வழிபாடு மல பரிபாகத்தில் உலகியலின் நீங்கினாரிடத்தில் திரிபின்றி நிற்கும் என்பது கூறப்பட்டது.*

## 32. நவாவத்தை அபிமானி

*அட்டதள கமல முக்குண அவத்தை கூறியபின், 'அவத்தை' என்னும் இயைபு பற்றி ஒன்பான் அவத்தை அபிமானியைப் பற்றிக் கூறுகின்றார்.*

*இப்பகுதி உபநிடதத்திற் குறிக்கப்படும் நனவு, கனவு, உறக்கம், துரியம் என்னும் அவத்தைகள் நான்கனுள் கீழ் உள்ளவை. ஓரோவொன்று மும்மூன்றாக ஒன்பது அவத்தைகள் ஆதலும், அவற்றின் அதிதெய்வங்களின் பெயரும் அவற்றால் வரும் பயன் முதலியனவும் உணர்த்துகின்றது.*

*நவம் - ஒன்பது; அவத்தை - உயிரின் உணர்வு நிலைகள். அபிமானி - உணர்வு நிலைகள் தோறும் உயிரையும் அதற்குச் சார்பாக உள்ள தத்துவங்களையும் உடனின்று செலுத்தும் அதிதெய்வம்; அஃதாவது உலகெலாமாகி, வேறாய், உடனுமாய், ஒளியாய் ஓங்கும் சிவசத்தியின் கூறு. அஃது, அது அதுதான் என, வேறு காணப்படாமல், உடனின்று செலுத்துவதால் பற்றி அபிமானி எனப்பட்டது.*

*உபநிடதங்களில் 'ஆன்மா' எனப் பல இடங்களிலும் பொதுவாகச் சொல்லப்படுவனவற்றில் பெரும்பான்மையான இடங்களில் 'பரமான்மா' என்றும், சில இடங்களில் 'சீவான்மா' என்றும் பொருள் கொள்ளவேண்டியுள்ளது. 'இவ்விருவகை ஆன்மாக்களும் பொருளால் வேறு வேறு என்பதே சித்தாந்தம்' என்பது வெளிப்படை.*

*இவ்வாறே, தன்னிலையில் உருவம், பெயர், தொழில் ஒன்றும் இன்றி நிற்கும் பரமசிவன் உயிர்களின் பொருட்டு ஐந்தொழில் செய்ய முற்படும் நிலையில் உருவம் முதலியவற்றைத் தானே தனது இச்சையால் தனது சத்தியாலே கொண்டு நின்று 'சிவன்' என நிற்பன் ஆதலின், 'சொரூப சிவனாகிய பரமசிவனும், தடத்த சிவனாகிய சிவனும் நிலை வேறுபட்டதன்றிப் பொருளால் வேறல்லர்' என்பதும் சித்தாந்தம். ஆகவே, அவத்தை வேறுபாட்டில் சீவர்கட்குச் சிவன் காணப்படும் காட்சி பற்றி எய்தும் பெயர்களாக உபநிடதங்கள் கூறும் பெயர்கள், சிவனுக்கே உரியவாய்ப் பின் அச்சிவனோடு ஒற்றித்த சீவனுக்கும் சார்ந்ததன் வண்ணமாம் தன்மை பற்றி உரிய ஆகின்றன.*

*மாயா வாதிகள், 'ஒன்றாகிய பிரமமே மாயையில் கண்ணாடியில் நிழல்போலப் பிரதிபலிக்கும்; மாயை முக்குண வடிவினதாகலின் அம்முக் குணத்துள் சாத்துவிக பிரதிபலனமே ஈசுரனும், இராசதப் பிரதிபலனமே சீவரும், தாமதப் பிரதிபலனமே காரண சூக்கும தூலமென்னும் மூவகைச் சரீரங்களும் ஆவர்; ஆகவே, சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி ஆகிய மூன்றவத்தைகளும் ஈசுரனுக்கும் உள, சீவனுக்கும் உள; அதனால் அவத்தை வேறுபாடு பற்றி உபநிடதங்களில் சொல்லப்படும் பெயர்களின் சில ஈசுரனுக்கு உரியன; சில சீவனுக்கு உரியன' என்பர். மற்றும் அவர் கொண்ட அவத்தைகள் ஆறே. அவைகளையெல்லாம் மறுத்துச் சித்தாந்தத்தை விளக்குதற் பொருட்டே இவ்வதிகாரத்தை நாயனார் கூறுகின்றார். இவ்வதிகாரம் ஒன்பது திருமந்திரங்களை உடையது.*

*மாயாவாதிகள் 'ஞான பூமி ஏழ்' என வகுத்து, 'அவை சீவர்க்கே உரிய சாக்கிரம்*

*முதலிய அவத்தைகளாகவும் அமையும்' என்பர். எனினும் அவை பற்றி வரும் பெயர்களாக உபநிடதங்கள் எவற்றையும் கூறுதல் இல்லை.*

**2501.** தொற்பத விசுவன் தைசதன் பிராஞ்ஞன்
நற்பத விராட்டன்பொன் கற்பன்அவ் வியாகிருதன்
பிற்பதச் சொல்இத யன்பிர சாபதியன்
பொற்புவிச் சாந்தன் பொருந்தபி மானியே. 1

---

***2501. தெளிவுரை :-** வியாத்தன், தைசதன், பிராஞ்ஞன், விராட்டன், இரணிய கருப்பன், அவ்வியாகிருதன், இதயன், பிரசாபதி, சாந்தன் இம்முத்திறத்து ஒன்பது பெயர்களும் சீவ சாக்கிரம் முதலிய முத்திறத்து ஒன்பது அவத்தைகளிலும் சிவன் தான் காட்சிப்படும் முறையால் எய்தும் பெயர்களாம். ஆகவே, அவனை அத்தன்மையனாகக் காணும் காட்சியில் சீவனும் சார்ந்ததன் வண்ணமாம் தன் றன்மையால் அப்பெயர்களைப் பெற்று நிற்கும்.*

| **வ.** எண் | **அவத்தை (அ)** நிலை | **பதம் (அ)** நெறி | **அபிமானிகள்** | | |
|---|---|---|---|---|---|
| | | | **நனவு** நிலையில் | **கனவு** நிலையில் | **உறக்க** நிலையில் |
| 1. | சகலத்தில் கேவலம் | தொற்பதம் | விசுவன் - உலகமுகப் படுத்துவோன் | தைசதன் - அகவொளி தருவோன் | பிராஞ்ஞன் - அறிவைத் தருவோன் |
| 2. | சகலத்தில் சகலம் - மாசகலம் | நற்பதம் | விராட்டன் - உலக உருவினன் | பொன்கற்பன் - கருப்பம் என்னும் உள்ளத்தை இதப்படுத்து பவன் | அவ்வியாக் கிருதன் - இன்ப துன்பங்களில் அழுத்துபவன் |
| 3. | சகலத்தில் சுத்தம் | பிற்பதம் | இதையன் - உள்ளக் குகைப் பொன்வண்ணன் | பிரசாபதி - உயிரைக் காப்பான் | துரிய நிலையில் பொற்பு விச்சாந்தன் |

*குறிப்புரை :- பதம் - நெறி. விசுவன் - உலகுயிர் வடிவினன். உலகமுகப்படுத்துவோன். விசுவம் - உலகு. தைசதன் - (தேசசு) ஒளி வடிவினன். பிராஞ்ஞன் - பெருஞான வடிவினன். இம்மூன்று பெயர்களும் முறையே பிராணாயாம பிரத்தியாகாரங்களாகிய சீவ சாக்கிரத்திலும் ஆன்ம தரிசன சிவரூபங்களாகிய சிவ சாக்கிரத்திலும், சீவன் முத்தி அதிகார முத்திகளாகிய பரசாக்கிரத்திலும் எய்துவனவாம்.*

*தொற்பதம் - பண்டைய கேவல நிலை. கேவலம் - தனிமை. நற்பதம் - சகலம். பிற்பதம் - திருவருள் பெற்று ஒழுகும் நெறி. விராட்டன் - விராட் புருடன்; சகல புவன வடிவினன். உலக உருவினன். இரணிய கருப்பன் -*

*பொன்வண்ணத்தவன்; கவர்ச்சி தருபவன். அவ்வியாகிருதன் - பிரிவுபடாதவன்; அருவுருவன். இம்மூன்று பெயர்களும் முறையே தாரணை யாகிய சீவ சொப்பனத்திலும், ஆன்ம சுத்தி சிவ தரிசனங்களாகிய சிவ சொப்பனத்திலும், இலய முத்தியாகிய பர சொப்பனத்திலும் எய்துவனவாம்.*

*இதயன் - இருதயத்தில் ஒளிர்கின்றவன்; பிரசாபதி - உயிர்களைப் பாதுகாப்பவன். இங்கு ஆகாமியம் நிகழாவாறு தடுத்துப் பிறப்பில் வீழாதபடி காத்தல் என்க. சீவனும் இவ்வாற்றால் தன்னைத் தற்காப்பதாகும். சாந்தன் - அமைதியுடையவன். பிறபொருள் அனைத்திலும் பற்றின்றியிருத்தலோடு ஒன்றன் வாசனையேனும் இல்லாது இன்ப வடிவாய் இருப்பவன். இம்மூன்று பெயர்களும் முறையே தியான சமாதிகளாகிய சீவ சுழுத்தியிலும், சிவயோக சிவபோகங்களாகிய சிவ சுழுத்தியிலும், இலய முத்தி பரமுத்திகளாகிய பர சுழுத்தியிலும் எய்துவனவாம். 'பர சுழுத்தியில் காட்சிப்படுபவன் சொரூப சிவனாகிய பரம சிவனே' என்பது 'சாந்தன்' என்னும் பெயரால் அறியப்படுவது. மாண்டூக்கியோப நிடதத்து ஏழாவது மந்திரம், "சிவம், சாந்தம், அத்வைதம், சதுர்த்தம்" எனக் கூறி மற்றும் பலவாறாக வருணித்தது சொரூப சிவத்தையேயாம்.*

*சதுர்த்தம் - நான்காவது பொருள். அஃதாவது, 'துரிய மூர்த்தி' என்பதாம். இங்குத் துரிய துரியாதீதங்களும், 'சுழுத்தி' என அடக்கப்பட்டமையால் மூன்றாவது மூர்த்தியாகச் சொல்லப்பட்டது. 'சிவன் நான்காமவன்' என்பதனால், அவன் மும்மூர்த்திகளுள் ஒருவன் ஆகாமை விளங்கும்.*

*மற்றும் அவ்வுபநிடதத்து நான்காம் மந்திரம் 'தைசசன்' என்பது சொப்பனாவத்தையில் எய்தும் பெயராகக் கூறிய சொப்பனத்தைச் சீவ சாக்கிரத்தை நோக்கச் சிவ சாக்கிரம் சொப்பனம் போலத் தோன்றுதல் பற்றிக் கூறியதாகக் கொள்ளல் வேண்டும்.*

*விசுவ ரூபியை* ***முண்டகோபநிடதம்*** ***'அந்தரான்மாவிற்கு அக்கினி தலை, சந்திர சூரியர் கண்கள், திக்குகள், காது, வேதங்கள், வாக்கு, வாயு, மூச்சு, புவனங்கள், இருதயம்' என வருணித்து, 'அவனது பாதங்களிலிருந்தே அனைத்துலகங்களும் 'உண்டாயின' என்றது. (முண்டகம் - 2. கண்டம் - 1. மந்திரம் - 4).***

> ***"நீல மேனி வாலிழை பாகத்து***
> ***ஒருவன் இருதாள் நிழற்கீழ்***
> ***மூவகை யுலகமும் முகிழ்த்தன முறையே"***

***என்பது ஐங்குறுநூற்றுக் கடவுள் வாழ்த்து.***

***'தொல் பதம்' என்பது எதுகை நோக்கி, 'தொற் பதம்' எனத் திரிந்தது. இஃது உயிர்கட்கு அநாதியாய் உள்ள பசுத்துவத்தை ஒட்டி நிகழும் அவத்தையைக் குறித்தது. பதம் - அவத்தை. "நற்பதம்" என்பது நின்மலாவத்தையையும், "பிற்பதம்"***

**2502.** நவமாம் அவத்தை நனவாதி பற்றின்
பவமாம் மலம் குணம் பற்றற்றுப் பற்றாத்
தவமான சத்திய ஞானப் பொதுவில்
துவம் ஆர்துரியம் சொரூபம தாமே. **2**

---

*என்பது அவற்றின்பின் நிகழும் பராவத்தையையும் குறித்தன.*

*"அபிமானி" என்பதைச் சாதியொருமைப் பெயராகக் கொண்டு சிவன், சீவன் இருவரையுங் கொள்க. இவ்வதிகாரத்து இம்முதல் மந்திரத்தால் நவாவத்தை அபிமானிகள் எய்தும் பெயர்கள் தொகுத்துக் கூறப்பட்டன.*

***2502. தெளிவுரை :-*** *மேற்கூறிய முக்கூற்று ஒன்பான் அவத்தைகளில் முதற்கூறாகிய 'சீவஅவத்தை' எனப்படும் யோகாவத்தையில் நிற்பினும் பிறப்பு உண்டாகவே செய்யும். அதனால் குரு உபதேசத்தின் வழியாகச் சிவ அவத்தை ஆகிய நின்மலாவத்தையை அடைந்து, 'யான், எனது' என்னும் பற்றுக்களை விடுத்து, அப்பற்றுக்கள் சிறிதும் இல்லாத சிவயோகமாகிய உண்மை ஞான வெளியில் நீ அதுவாகி அடங்கி நில். அந்நிலையே சிவ துரியமாகும். அதன்பின் துரியாதீத நிலை எளிதில் கைவர, பரம சிவனை அடையும் உண்மை நிலை உண்டாகும்.*

***குறிப்புரை :-*** *விதந்தோதாது பொதுப்பட ஓதியதனால் "நனவாதி" என்றது முதற்கண் நிகழும் சீவ அவத்தையைக் குறித்தது. 'பற்றினும்' என்னும் சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. மலம் - ஆணவம். அதன் காரியமே யான்' என்னும் செருக்கு. குணம் - மாயை. அதன் காரியங்களே 'எனது' என்னும் செருக்கிற்கு நிமித்தம். 'இவற்றால் வரும் பற்று' என்க. 'அந்தப்பற்றுக்கள் வந்து பற்றாத தவம்' என்றதனால் அது சிவ யோகமாயிற்று. அந்நிலை அருள்நிலையே யாகலின் அது, "சத்திய ஞானப் பொது" எனப்பட்டது. துவம் - தன்மை. ஆர் - பொருந்து. "ஆம்" என்பதை முன்னரும் கூட்டி, 'அதுவே துரியம் ஆம்; பின்பு சொரூபம் ஆம்' என முடிக்க.*

*இதனால், மேற்கூறிய அபிமானப்பெயர்கள் ஒன்பதில் இதயனிலும் மேலான, 'பிரசாபதி, சாந்தன்' என்னும் பெயர்களைப் பெற முயல்வதே சிறப்பு என்பது கூறப்பட்டது.*

***2503. தெளிவுரை :-*** *மேற்கூறிய சிவ துரியத்தில் சீவன் "அவனே தானே ஆகிய அந்நெறி - ஏகனாகி'' நிற்றலால் ''தான்'' என்பதொரு முதல் இல்லையாய்விட, "மல மாயை தன்னொடு வல்வினையின்றே" (சிவஞான போதம் - சூ. 10) என்றபடி. பிறப்பிற்குக் காரணமாய் நின்ற மும்மலங்களும் அடியோடு கெட்டொழியும். ஒழியவே சீவபோதம் பராவத்தையின் இறுதியில் நிகழும் சாந்த சிவ போதமேயாம். அதனால் அந்நிலையில் அந்தச் சீவன் செய்யும் செயல்களும்*

**2503.** சிவமான சிந்தையில் சீவன் சிதைய‌ப்
பவமான மும்மலம் பாறிப் பறிய
நவமான அந்தத்தின் நற்சிவ போதம்
தவமாம் அவையாகித் தானல்ல வாகுமே. **3**

**2504.** முன்சொன்ன ஒன்பானின் முன்னுறு தத்துவம்
தன்சொல்லின் எண்ணத் தகாஒன்பான் வேறுள
பின்சொல்ல லாகும்இவ் வீரொன்பான் பேர்த்திட்டுத்
தன் செய்த ஆண்டவன் தான்சிறந் தானே. **4**

---

*பிறப்பிற்கு ஏதுவாம் ஆகாமிய வினையாகாது சிவ போதத்தை நினைப்பிக்கின்ற தவங்களேயாய், மற்றும் தான் செய்தன ஆகாது சிவன் செய்தனவேயாகி விடும்.*

*குறிப்புரை :-* “ஆகும்” என்பதனைப் “போதம்” என்பதனோடும் கூட்டி, ‘அந்தத்தின் நிகழும் நற்சிவ போதம் ஆகும்’ என்க. ‘தவமாம் அவையாகி’ என்றதனால், ‘அவர் செய்யும் செயல்கள்’ என்பது பெறப்பட்டது. தான் செய்யும் செயல்களைத் “தான்” என்றார். ‘தான் செய்வன அல்ல ஆகும், என்றதனால், ‘சிவன் செய்வன ஆகும்’ என்பது தானே பெறப்பட்டது”. சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன்” (தி.8 தோணோக்கம்-6) என்று அருளிச் செய்தது காண்க.

இதனால், மேற்கூறிய அபிமானப் பெயர்களுள் ‘பிரசாபதி’ என்னும் பெயரினனாதலும் சிறப்புடைத்தாதல் கூறப்பட்டது.

*2504.* ***தெளிவுரை :-*** *இவ்வதிகாரத்து முதற்கண் சொல்லப்பட்ட ஒன்பது அவத்தைகளைப் போல அவற்றுக்கு முன்னே சீவன் தன் சொல்லால் சொல்லி எண்ணக் கூடாத ஒன்பது நிலைகள் உள்ளன. ஆகவே, அனைத்தையும் தொகுத்து நோக்கும்பொழுது பதினெட்டாகின்ற இவைகளினின்றும் சீவர்களைப் பிரித்துத் தானாகச் செய்துவரும் தலைவனாகிய சிவன் முத்தி நிலையில் தான் ஒருவனே யாகி விளங்கி நிற்கின்றான்.*

*குறிப்புரை :-* இங்கு, ‘‘தத்துவம்’’ என்றதைச் சித்தாந்த முறையில் சிறப்பாகவும், பிற மதங்கள் கூறும் முறையில் பொதுவாகவும் கொள்க. அங்ஙனம் கொள்ளவே, மாயாகாரியங்களோடு ‘சீவன்’ சிவன், பரன் என்பனவும் தத்துவங்களாம். ஆனபின், “தத்துவம்” என்றது ஆகுபெயராய் அவை பற்றி நிகழும் அவத்தைகளைக் குறிக்கும். ஆகவே, இவ்வதிகாரத் தொடக்கத்தில் சொல்லப்பட்ட சீவன் முதலிய மூன்று பற்றிய ஒன்பது அவத்தைகளுடன், மாயா காரியங்களில் உணர்வுக் கருவிகளாகிய ஞானேந்திரியம் ஐந்து, அந்தக் கரணம் நான்கு ஆகிய ஒன்பது கருவிகளால் நிகழும் உணர்வு நிலைகளாகிய ஒன்பது அவத்தைகள் உளவாக, அனைத்தும் “ஈரொன்பான்” ஆகும். ‘இந்நிலைகள் அனைத்தையும் நீக்கிச் சீவனைத் தன்னைப் போலவே என்றும் ஒரு நிலையில் நிற்கச் செய்து

**2505.** உகந்தன ஒன்பதும் ஐந்தும் உலகம்
பகர்ந்த பிரான் என்னும் பண்பினை நாடி
அகைந்தெம்பி ரான்என்பன் அல்லும் பகலும்
இகந்தன வல்வினை ஈடறுத் தானே. **5**

---

*சிவன் தான் மட்டுமே விளங்கி நிற்கின்றான். இதுவே உண்மை நிலையாகிய சொரூபநிலை' என்றபடி. 'பர துரியத்தையும் பேர்க்கின்றான்' என்றது, அபர முத்தியினின்றும் நீக்குதலை நோக்கி, "ஒன்பானின்" என்பதில் இன் உவம உருபு. 'மாயா காரியங்கள்' என்பது விளங்குதற் பொருட்டு. "எண்ணத்தகா" என்றார். "பின்" என்றது. 'முடிவில்' என்றபடி. 'தன்போலச் செய்த' என உவம உருபு விரிக்க. 'தற்செய்த' எனற்பாலது, எதுகை நோக்கி மெலிந்து நின்றது. "செய்த" என இறந்த காலத்தாற் கூறினமையின் பண்டு தொட்டுச் செய்து வருதல் விளங்கிற்று. 'தானே சிறந்தான்' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று.*

*இதனால், அவத்தைகள் பலவற்றாலும் உயிரைச் சிவன் உய்வித்தல் கூறப்பட்டது.*

***2505. தெளிவுரை :-** 'உயிர்களின் பொருட்டு அவற்றிற்கு ஏற்புடைய வித்தை பதினான்கையும் செய்தருளிய முதல்வன்' என்று உயர்ந்தோர் யாவராலும் சொல்லப்படுகின்ற அத்தன்மையை உணர்ந்து, நான் சிவனை ஏனைத் தேவரினின்றும் வேறு பிரித்து, 'அவனே எங்கள் கடவுள்' என்று இரவும், பகலும் ஓயாது சொல்லிக் கொண்டிருப்பேன். அதனால், வரும் பிறப்புக்களில் என்னை வந்து பற்ற நின்ற வலிய வினைகள் இல்லாதொழிந்தன. மற்றும் இப்பொழுது தோன்றும் வினைகளையும் அவன் அழித்துவிட்டான்.*

***குறிப்புரை :-*** *'அதனால் இனி எனக்குப் பிறவி இல்லை', இசையெச்சம். "உலகம்" என்பதை முதலிற் கொள்க. வித்தை பதினெட்டாயினும் அவற்றுள் உபவேதம் நான்கை நீக்கி, 'பதினான்கு' என்றலும் வழக்கு. வித்தை பதினெட்டாவன, வேதம் நான்கு, உபவேதம் நான்கு, அங்கம் ஆறு, உபாங்கம் நான்கு.*

*"அட்டாதச வித்தைக்கும் சூலபாணியே கர்த்தா" என்று கருதி கூறுகின்றது.*

*"அஷ்டா தசாநா மேதாஸாம் வித்யாம் பேதவர்த்தநாம்!*
*ஆதி கர்த்தா சிவஸ் ஸாக்ஷாச் சூலபாணி ரிதிச் சுருதி!!"*

*என்பது வாயு சங்கிதையில் சொல்லப்படுவது.*

*"ஈசாநஸ் ஸர்வ வித்யாநாம்"*

*என்பது மகாநாராயணோப நிடதம்.*

*அகைத்தல் - பிரித்தல். 'அகைத்து' என்பது எதுகை நோக்கி மெலிந்து நின்றது. ஈடு - முன் இடுதல். அது முன்பு, "வல்வினை" என்றதனால், முன்*

**2506.** நலம்பல காலம் தொகுத்தன நீளம்
குலம்பல வண்ணம் குறிப்பொடு கூடும்
பலம்பல பன்னிரு காலம் நினையும்
நிலம்பல ஆறில்நன் னீர்மையன் தானே. **6**

---

*இடப்படுவதாகிய வினையையே குறித்தது.*

*இதனால், 'அபிமானப் பெயர்கள் ஒன்பதனாலும் குறிக்கப்படுமாறு ஒன்பது அவத்தைகளிலும் விளங்குபவன் சிவனே' என உணர்ந்தவழியே பிறப்பு நீங்குதல் குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

***2506. தெளிவுரை :-*** ***சிவன் உயிர்களுக்கான நல்ல வழிகள் பலவற்றைச் சொல்லியருளிய காலம் எல்லையறியப்படாத பழமையுடையது. ('படைப்புக் காலம்' என்றபடி) உயிர்த் தொகுதிகள் அவ்வழிகள் பலவற்றில் தம் கருத்திற்கு ஏற்புடையவற்றைப் பற்றி அவற்றிற்கு ஏற்ற பயன்களை அடைந்து வருகின்றன. பெரும் பொழுது ஆறும், சிறு பொழுது ஆறுமாகிய பன்னிரண்டு காலங்களிலும் சிவபெருமானை நினைவதால் விளையும் பயன்களும் பல. அங்ஙனம் நினைத்தற்குரிய இடங்களும் பல என்றாலும் ஆறு இடங்களில் (ஆறு ஆதாரங்களில்) சிவன் இனிது விளங்குபவனாய் இருக்கின்றான்.***

***குறிப்புரை :-*** ***'அந்த ஆறு இடங்களில் அவனை நினைக்கப் பழகுங்கள்' என்பது குறிப்பெச்சம்.***

***'தான் நலம் பல தொகுத்தன காலம் நீளம்' எனவும், 'பன்னிரு காலம் நினையும் பலம் பல' எனவும் மாறிக் கூட்டுக. நினைத்தற்குச் செயப்படுபொருளும், "தான்" எனப்பட்ட சிவனே என்பது எளிதின் விளங்கும். சிறுபொழுது ஆறும் பெரும்பொழுது ஆறின் வேறாவன அல்ல எனினும் 'எஞ்ஞான்றும் ஒழியாது நினைக' என்றற்கு அவற்றை வேறுபோல வைத்து "பன்னிரு காலம்" என்பதை வினைத்தொகை யாக்கி, 'சொல்லப்படும் காலை, மாலை இருகாலமும்' எனவும் உரைப்பர்.***

***இதனால், 'வீடு பெற விரும்புவோர், ஒன்பான் அவத்தைகளில் சீவ அவத்தைகளாகிய யோகாவத்தையை முதற்கண் பற்றுதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.***

***2507. தெளிவுரை :-*** ***எல்லாவற்றிற்கும் மேலான முதற்பொருள் தன்னியல்பில் 'சிவம்' என்றும், 'சத்தி' என்றும் இரு கூற்றையுடையதாய் இருக்கும். அவற்றுள் சத்தி தனது ஒரு சிறு கூற்றில் 'ஆதி' என்னும் பெயருடையதாய் நின்று, 'அறிவு, அருள், உயிர், தத்துவங்கள் வேதம் முதலிய நூல்கள், பஞ்சகலைகள், சுத்தமாயை, அசுத்தமாயை, பல சமயத்தாரும், ஆராய்ந்து கூறும் முத்திநிலைகள்' என்னும் ஒன்பது வகையாய் நிற்கும்.***

**2507.** ஆதி பராபரம் ஆகும் பராபரை
சோதி பரம் உயிர் சொல்லும்நல் தத்துவம்
ஓதும் கலை மாயை ஓரிரண்டு ஓர்முத்தி
நீதியாம் பேதம்ஒன் பானுடன் ஆதியே. 7

---

***குறிப்புரை :-*** *இவற்றுள் அறிவே ஞானம். அருளே இச்சை. இவை இரண்டும் தன்னால் தான் அடையும் பேதங்கள். ஏனைய ஆறும் தான் அவையே யாய்க் கலந்து நிற்கும் கலப்பினால் அடையும் பேதங்கள். அங்ஙனம் கலந்து நின்று அவற்றை இயக்குதலே கிரியை ஆதலின் அதனை வேறு கூற வேண்டாவாயிற்று.*

*"ஆதி" இரண்டனுள் முதலது 'முதற்பொருள்' என்னும் பொருட்டு. ஈற்றது ஆதி சத்தி. இதுவே 'திரோதான சத்தி' எனப்படும். 'பராற் பரம், பராற் பரை' என்பன 'பராபரம், பராபரை' என மருவி வழங்கும். 'மேலானவற்றிற்கும் மேலானது, மேலானவற்றிற்கும் மேலானவள்' என்பன இவற்றின் பொருள், 'பராபரம்' என அஃறிணையாற் கூறியது. 'சிவம்' எனக்கூறியவாறு. தன்னிலையில் சிவம் 'பரமசிவம்' என்றும், அதனது சத்தி 'பராசத்தி' என்றும் சொல்லப்படும். அது வாளா இருப்பதன்றி, யாதொன்றையும் செய்வதன்று. செய்ய நினைக்குங்கால், ஒரு சிறு கூற்றானே 'ஆதி சத்தி' என வேறு நின்றே செய்யும். அதனால், பேதங்கள் எல்லாவற்றிலும் ஆதி சத்தி உடனாய் நிற்கும் என்க.*

*ஆதி சத்தி 'ஞானம்' என்னும் வகையில் அனைத்துயிர்களின் அறிவிலும் அறிவிற்கு அறிவாய் நின்று அவ்வறிவுப் பொருள்களை அறியச் செய்யும் 'கிரியை' என்னும் வகையில் உயிர்களையும், உயிரல் பொருள்களையும் இயக்கி நிற்கும். இவற்றிற்கெல்லாம் காரணம் தான் அருள்வடிவாய் இருத்தலே.*

*"கலை" என்பதனை இரட்டுற மொழிந்து கொள்க. "தத்துவம்" என்றது பொருட் பிரபஞ்சத்தையாகலின். சொற் பிரபஞ்சம் எஞ்சாமைப் பொருட்டு அதனை வேறு கூறினார். பஞ்ச கலைகளும் இரு மாயைகளுள் சுத்த மாயா காரியமேனும் அவை தத்துவங்களின் வேறாய் அனைத்தையும் தம்முள் அடக்கி நிற்றல்பற்றி வேறு கூறப்பட்டன. காரியங்களை முன்னர்க் கூறிக் காரணங்களை முடிவிற் கூறினார். ஓர் முத்தி, வினைத்தொகை, சித்தாந்த முத்தி அருட்சத்தியால் ஆவது ஆகலின், பிற சமயத்தார் கூறும் முத்திகளே திரோதான சத்தியால் ஆவன என்க.*

*'ஒன்பானுடனும்' என்னும் முற்றும்மை தொகுத்தலாயிற்று. 'ஒன்பானுடனும் ஆதி ஆம்' என முடிக்க.*

**2508.** தேறாத சிந்தை தெளியத் தெளிவித்து
வேறாம் நரகம் சுவர்க்கமும் மேதினி
ஆறாப் பிறப்பும் உயிர்க்கரு ளால்வைத்தான்
வேறாத் தெளியார் வினை உயிர் பெற்றதே. **8**

---

*ஒன்பான் பேதங்களையும் "நீதியாம் பேதம்" என்றது, 'உயிர்கள் பக்குவத்தை யடைதற்கு, இவை இன்றியமையாத முறைகளாம்' என்றற்கு.*

*இதனால், 'ஒருவனாகிய சிவன் தனது ஆதி சத்தியால் பல பேதங்களை அடைந்து நிற்றலால், நவாவத்தை அபிமானியும் ஆகின்றான்' என்பது குறிப்பால் விளக்கப்பட்டது.*

*2508. **தெளிவுரை :-** அநாதியே பற்றிய மலத்தால் அறியாமையை யுடையதாய் நிற்கின்ற உயிர்களின் அறிவு அவ்வறியாமை நீங்கித் தெளிவடைதற் பொருட்டுத் தெளிவிற்கு வித்தாக, தம்முள் மாறுபட்ட நரகலோக சுவர்க்க லோகங்களிலும் பூலோகத்திலும் வினைக்கீடாகச் சென்று பிறக்கும் பிறப்புக்களையும் சிவன் உயிர்கட்கு அமைந்திருக்கின்றான். அங்ஙனம் அமைத்தது அருள் காரணமாகவேயாம். அதனை வன்கண்மையாக நினைக்கும் தங்கள் நினைப்பை விட்டு, அருளாகத் தெளியமாட்டாதார் தெளிதற்கு வாயிலான மானுடப் பிறப்பைப் பெற்றதும் வினையின் விளைவேயாம்.*

***குறிப்புரை :-** "சிந்தையைச் சீவன் என்றும், சீவனைச் சிந்தை என்றும்" (சிவஞான சித்தியார் - சுபக்கம் சூ - 4. 28) கூறும் முறையில் இங்கு உயிர்களின் அறிவு "சிந்தை" எனப்பட்டது. "தெளிவித்து" என்றது வினைத்தொகை. 'வித்தாகி' என ஆக்கம் வருவிக்க. "பிறப்பும்" என்னும் உம்மை, 'வீடேயன்றி' என எதிரது தழுவிய எச்சம். "உயிர் பெற்றது" என்றது, 'பிறப்பை எடுத்தது' என்றபடி. 'உயிர் பெற்றது வினை' என மாறிக் கூட்டுக. வினையின் விளைவை "வினை" என்றார். என்றது, 'முன்னைப் பிறவிகளின்றும் இப்பிறப்பிற்கு வேறு சிறப்பில்லை' என்றபடி. அஃதாவது, 'இப்பிறப்பிலும் முன்புபோல வினையை ஈட்டிக் கொள்ளுதலை மட்டுமே செய்வர்; உய்யும் நெறியைத் தலைப்படார்' என்பதாம்.*

*இதனால், 'மானுடப் பிறப்பை எய்தினோர் சிவன் நவாவத்தை அபிமானியாதலை உணர்ந்து படிமுறையானே அவனை அடைதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

**2509.** ஒன்பான் அவத்தையுள் ஒன்பான் அபிமானி
நன்பாற் பயிலும் நவதத்துவம் ஆதி
ஒன்பானில் நிற்பதோர் முத்துரி யத்துறச்
செம்பாற் சிவம் ஆதல் சித்தாந்த சித்தியே. **9**

---

***2509. தெளிவுரை :-*** *இங்குக் கூறிவரும் ஒன்பான் அவத்தைகளிலும் சிவன் அபிமானியாய் நிற்கும் நிலைகள், அவ் அவத்தைகளில் செயற்படும் தத்துவங்கள் மற்றும் சில இவற்றை உணர்ந்து அவ்வொன்பான் அவத்தைகளிலும் 'துரியம்' எனப்படும் நிலையிலே நிற்றற்கண் பர துரியத்தில் சீவன் செம்மைச் சிவனாகி விடுவதே சித்தாந்த நெறியின் முடிநிலைப் பயனாகும்.*

***குறிப்புரை :-*** *எனவே, 'பிற பிற சமயத்தார் கூறும் சித்திகள் எல்லாம் முடிநிலைச் சித்திகள் அல்ல' என்பதாம். நவாவத்தைகளில் செயற்படும் நவ தத்துவங்களாவன, சீவ அவத்தையில் பிராணனை இயக்கும் அகங்காரம், தியானிக்கப்படும் பொருளை ஒருதலையாக உணரும் புத்தி, அதனையே சிந்திக்கும் சித்தம் என்பனவும், சிவ அவத்தையுள் குருமொழியைச் சிந்திக்கும் ஞானம், அடையப்படும் பொருளைத் தெளியும் ஞானம், தெளியப்பட்ட பொருளையே விரும்பி அதன்கண் அழுந்தும் ஞானம் என்பனவும், பராவத்தையில் சிவனது நேர் அதிகார சத்தி, போக சத்தி, இலய சத்தி என்பனவுமாம். இங்குப் பராசத்தியும், வேற்றுமை மிக இன்மையால் இலய சத்தியாகக் கொள்ளப்பட்டது. செம்பால் - செம்மைப்பகுதி என்றது சொரூப நிலையை. எனவே, 'சொரூப சிவம்' என்பதை நாயனார், 'செம்பாற் சிவம்' எனக் குறித்திருத்தல் குறிக்கொளத் தக்கது. செம்மை - உண்மை நிலையில் வேறுபடாது இருந்தவாறே இருத்தல். சித்தி - பேறு. என்றது, சிறப்புப் பற்றி முடிநிலைப் பேற்றையே குறித்தது.*

*இதனால் நவாவத்தைகளின் முடிநிலைப்பயனும் அதனை அடையுமாறும் கூறி முடிக்கப்பட்டது.*

## 33. சுத்தா சுத்தம்

*தத்துவ வகையில் பரபக்கப் பார்வையால் சிலவற்றை மறுத்து, உண்மையை (சித்தாந்தத்தை) வலியுறுத்திய நாயனார் புற மாசு புறத்தூய்மைகளையே பெரியவாகக் கொண்டு, அகநிலையாகிய தத்துவங்களில் செல்லாதவரை நோக்கி இவ்வதிகாரத்துட் சில கூறுகின்றார். சுத்தம் - தூய்மை. அசுத்தம் - மாசு. இவ்வதிகாரம் பதினொரு மந்திரங்களையுடையது.*

**2510.** **நாசி நுனியினின் நான்மூ விரலிடை**
**ஈசன் இருப்பிடம் யாரும் அறிகிலர்**
**பேசி யிருக்கும் பெருமறை அம்மறை**
**கூசி யிருக்கும் குணம் அது வாமே. 1**

---

*2510. தெளிவுரை :- மூன்றாம் தந்திரத்தில், நாசிக்கதோமுகம் பன்னிரண்டங்குலம் (பா.569) என்னும் மந்திரத்திற் கூறியபடி, 'மூக்கின் நுனிக்குக் கீழே பன்னிரண்டங்குலத்தில் உள்ள இருதயம் சிவன் எழுந்தருளியிருக்கும் இடம்' என்பதை உங்களுள் ஒருவரும் அறியார். (அதனால் அவர்கள் புறத்தே உள்ள இடங்களில் சிவனைக் காணும் அளவிலே அமைந்து, அதனையே சிவக்காட்சி யாகக் கொண்டு இருந்துவிடுகின்றனர்). ஆயினும் பெரிய மறைநூல்கள் மேற்கூறிய ஈசன் இருப்பிடத்தைச் சொல்லியிருக்கின்றன. எனினும் அந்த மறை நூல் அந்த இடத்தை அணுக இயலாதவர்கட்கு அதனைக் கூற நாணம் உற்று, வெளிப்படையாக அன்றிக் குறிப்பாகவே கூறியமைந்தன. அது மறைநூல்கட்கு இயல்பு.*

*குறிப்புரை :- 'அதனால், அப்பொருளை நல்லாசிரியரை வழிபட்டுக் கேட்டுணர்ந்து அணுகல் வேண்டும்' என்பது குறிப்பெச்சம். இங்கு, "பெருமறை" என்றது, யோகம், தகர வித்தை முதலியவற்றைக் கூறும் உபநிடதங்களையும், சிவாகமங்களில் யோக பாதங்களையும், அவ்விடங்களில் குறிப்பு மொழிகள் உளவாதலை அறிக. நாயனாரும் 'சூனிய சம்பாடணை' முதலியவற்றால் குறிப்பு மொழிகள் பலவற்றைக் கூறினமை வெளிப்படை.*

*இதனால் 'புறத்தூய்மையோடு அமைந்துவிடாது அகத்தூய்மையை அடைதல் வேண்டும்' என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது. புறத்தூய்மையையே சிறப்பாக வலியுறுத்துவன பிராம்மணங்களும், மிருதிகளும்.*

*2511. தெளிவுரை :- உயிர்களால் செய்யப்படும் செயல்கள் யாதேனும் ஒரு பயனைக் கருதிச் செய்யும் செயல்களாகுமிடத்து 'அச்செயல்களைச் செய்தோன் அவனே' என்னும் உரிமை தோன்றுதலையும், செய்த செயல்களும், 'இனி வரும்' எனக் கருதப்படுகின்ற பிறவிக்கு வித்தாம் ஆகாமியம் ஆதலையும் உணர்ந்து, அச்செயல்களில் பற்று வையாது 'எச்செயலையும் செய்யும் வாய்ப்பினை நமக்கு*

2511. கருமங்கள் ஒன்று கருதும் கருமத்து
உரிமையும் கன்மமும் உன்னும் பிறவிக்
கருவினை யாவதும் கண்டகன்று அன்பிற்
புரிவன கன்மக் கயத்துட் புகுத்துமே. 2

---

*அளித்தவன் சிவன்' என்பதையுணர்ந்து, அவனிடத்து அன்பு செய்து, எச்செயலையும் அவன் பணியாகச் செய்யின் அம்முறையில் அறிந்தோ, அறியாமலோ நிகழும் செயல்கள் யாவும் வினை நீக்கத்திற்கு வாயிலான தவமாகி, அவற்றைச் செய்தவனை வினை நீக்கத்தில் சேர்ப்பிக்கும்.*

***குறிப்புரை :-*** *ஒன்று - ஒரு பயன். 'கன்மமும் கருவினை ஆவதும்' என இயையும். 'ஆவது' என்பது தொழிற்பெயர். "கன்மமும்" என்னும் உம்மை சிறப்பும்மை. உன்னும் - கருதப்படுகின்ற. கரு - முதல். கரு வினை. 'இச்செயலை யானே செய்கின்றேன்; இச்செயல்களும், இவற்றால் வரும் பயன்களும் என்னுடையனவே' என்னும் கருத்தே 'பற்று' எனப்படுகின்றது. இப்பற்றோடு செய்யும் கருமமே 'காமிய கருமம்' எனப்படுகின்றது.*

*இனி, யாதொரு பயனையும் கருதாதவழிச் செயல் செய்வார் ஒருவரும் இலராவர். ஆகவே, 'செயல்களைச் செய்தற்கு வேண்டுவன பலவற்றையும் அளித்தவன் இறைவன் ஆகையால், உயிர்கள் செய்யும் செயல்கள் யாவும் 'ஈசன் இடும்பணி' (சிவஞான சித்தியார் - சுபக்கம் - சூ - 2. 21) என உணர்ந்து, அவற்றில் - யான், எனது என்னும் பற்றின்றி, "என் கடன் (அவன்) பணி செய்து கிடப்பதே" (தி.5 ப.19 பா.9) என்று அவனிடத்து அன்போடும் செய்வதே பயன் கருதாது செய்தலாம். அதனையே இங்கு நாயனார். "அகன்று அன்பின் புரிவன" என்றார். இதுவே 'நிட்காமிய கருமம்' எனப்படுகின்றது. இந்நிலைமை கடவுட் கொள்கை யில்லார்க்கு வாயாது. 'க்ஷயம்' என்னும் வடமொழி, தமிழில் 'கயம்' என வரும். ஆகவே, கருமக் கயம் - வினை நீக்கமாம். 'காமிய கன்ம நிட்காமிய கன்மங்களாவன இவை' என்பதும், அவற்றின் பயன் முறையே பிறப்பும் வீடுமாம்' என்பதும் இம்மந்திரத்துட் கூறப்பட்டமை காண்க.*

> *"காமியம் செய்து காலம் கழியாதே*
> *ஓமியம் செய்தங்கு உள்ளத் துணர்மினோ" - தி.5 ப.19 பா.9*

*என அப்பரும் அருளிச் செய்தார்.*

*இதனால், வினை மாசே உண்மை மாசும், அதன் நீக்கமே உண்மைத் தூய்மையும் ஆதல் கூறப்பட்டது.*

> *புறந்தூய்மை நீரான் அமையும்; அகந்தூய்மை*
> *வாய்மையாற் காணப் படும். - திருக்குறள் - 298*

**2512.** மாயை மறைக்க மறைந்த மறைப்பொருள்
மாயை மறைய வெளிப்படும் அப்பொருள்
மாயை மறைய மறையவல் லார்கட்குக்
காயமும் இல்லைக் கருத்தில்லை தானே. **3**

---

*என அருளிச் செய்த திருவள்ளுவர்க்கும் புறத்தூய்மையினும் அகத்தூய்மையே சிறந்தது என்பது கருத்தாதல் தெளிவு. அவர்,*

> *மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி*
> *மறைந்தொழுகும் மாந்தர் பலர்.* - *திருக்குறள் - 278*

*என அருளிச் செய்ததும் இங்கு நினைவுகூரற்பாலது.*

***2512. தெளிவுரை :-*** *வேதங்களால் முடிநிலைப் பொருளாகக் கொள்ளப்பட்ட முதற்பொருள் உயிர்கட்கு வேறாய் இன்றி அவைகளிடத் திற்றானே இருக்கின்றது. ஆயினும், மாயா காரியங்களாகிய கருவிக் கூட்டங்கள் உயிரினது அறிவைத் தம் வயப்படுத்தியே வைத்திருத்தலால் உயிர்கள் அம்முதற் பொருளை அறியாதிருக்கின்றன. அதனால் முதற்பொருள் மறைந்து நிற்கும் பொருளாக அறியப்படுகின்றது. மாயா காரியங்களாகிய கருவிக் கூட்டங்களில் வயப்படாது விடுபட்டவர்க்கு அக்கருவிக் கூட்டங்கள் மறைந்துவிட, முதற்பொருள் வெளிப்பட்டுத் தோன்றும். அதன் பின்பும் அக்கருவிக் கூட்டங்கள் தம்மை மயக்காதபடி அம்முதற் பொருளுக்குள்ளே அடங்கி நிற்க வல்லவர்கட்கு உடம்பு இருந்தும் இல்லையாம். அதனால் அவை பற்றி யெழுகின்ற, 'யான், எனது' என்னும் செருக்கும் இல்லையாம்.*

***குறிப்புரை :-*** *ஆகவே, அவர்கள் உடம்பு நீங்கிய பின் "வானோர்க்கு உயர்ந்த உலகம் புகுதல்" (திருக்குறள் - 364) தெள்ளிது என்பதுமாம்.*

> *முந்திவட் டத்திடைப் பட்டதெல்லாம்*
> *முடிவேந்தர் தங்கள்*
> *பந்திவட் டத்திடைப் பட்டலைப்*
> *புண்பதற் கஞ்சிக் கொல்லோ!*
> *நந்திவட் டம்நறு மாமலர்க்*
> *கொன்றையும் நக்கசென்னி*
> *அந்திவட் டத்தொளி யான்அடிச்*
> *சேர்ந்ததென் ஆருயிரே*

*என்பனபோல ஆருயிர்த் திருவிருத்தம் (தி.4 ப.84) முழுவதும் அருளிச் செய்தமை காண்க. 'அப்பொருளின்கண்' என, 'உள்' எனப்பொருள் படும் ஏழாவது விரிக்க.*

*உலகியலில் வினை மாசே பெருமாசு ஆதலின் அது நீங்குமாற்றை முன்*

**2513.** மோழை அடைத்து முழைதிறந் துள்புக்குக்
கோழை அடைக்கின்றது அண்ணற் குறிப்பினில்
ஆழ அடைத்தங் கனலிற் புறஞ்செய்து
தாழ அடைப்பது தன்வலி யாமே. **4**

---

*மந்திரத்திற் கூறியபின், மாயை மாசு நீங்குமாறு இதனால் கூறப்பட்டது. 'இம்மாசு நீக்கமே உண்மைத் தூய்மையாம்' என்பதும் கருத்து.*

***2513. தெளிவுரை :-*** *நீர் புறம் போய் வீணாவதற்கு உரிய, வயல்களின் சிறு புழை போல, விந்து வெளிச்சென்று வீணாகின்ற வழியாகிய குறியைச் செயற்படாமல் தடுத்து, பிராணனைச் சுழுமுனை வழியாகச் செலுத்தி அதனோடே மேல்நிலமாகிய ஆஞ்ஞையில் உணர்வினால் சென்று புகுந்து, அங்கு நிற்கின்ற நிலை சலித்தலை நீக்க முயலுமிடத்துச் சிவ நினைவால் அதனை அடியோடு நீக்கி, உடம்பையும் விரைவில் வீழ்ந் தொழியாதபடி யோகக் கனலால் கற்பஞ்செய்து தன்னைச் சிவத்திற்குள்ளே அடைத்து வைத்தலே ஒருவனுக்கு உண்மையான தன்வலிமையாகும்.*

***குறிப்புரை :-*** *மோழை கீழாறு. இங்கு பெண்ணின் பால் வீழ்ப்பதைக் குறித்துள்ளது. முழை - மலைக்குகை. மலை முழை - சுழுமுனை நாடியை 'மேரு' என்பதால், அதன் உள்வெளியை 'மலைமுழை' என்றார். காயத்தைக் கற்பம் செய்தல் இப்பிறப்பிற்றானே சிவஞானம் முற்றுதற் பொருட்டேயாம்; என்னை? முற்றுப் பெறாதவழி மேலும் பிறப்பு வரும், ஆதலின் "கோழை" என்பது இங்குக் கோழைமையாகிய தளர்ச்சியைக் குறித்தது. தாழ்தல் - தங்குதல். "வினை வலியும், தன் வலியும், மாற்றான் வலியும் - துணை வலியும் தூக்கிச் செயல்" (திருக்குறள் - 471) என்றவிடத்துக் கூறப்பட்ட வலிமைகளிலும் "தன் வலி" என்றதே இன்றி யமையாதல் பற்றி 'இச்செயலே உயிருக்குத் தன்வலியாம்' என்றார்.*

*இதனால், மேற்கூறப்பட்ட இருவகை மாசுகளையும் கழுவுதற்கு ஒருவகைச் சாதனம் கூறப்பட்டது.*

*(இதன்பின் பதிப்புக்களில் காணப்படும். "காயக் குழப்பனை" என்னும் மந்திரம் ஏழாம் தந்திரத்து, "கூடா ஒழுக்கம்" என்னும் அதிகாரத்தில் வந்தது).*

***2514. தெளிவுரை :-*** *அறிவில்லாதவர்கள் தங்கள் உடம்பு அசுத்தத்தைத் தீண்டிவிட்டதனால் 'தீட்டு உண்டாகிவிட்டது தீட்டு உண்டாகி விட்டது' என்று சொல்வார்கள். அவர்களில் ஒருவருமே, 'உண்மையில் தீட்டு எங்கு உண்டாகின்றது' என ஆராய்ந்தறிய மாட்டார். யாராயினும் அதனை ஆராய்ந்து அறிவார்களேயானால் 'உயிர் மக்கள் வடிவாய் உள்ள உடம்பைத் தீண்டியதே தீட்டு' என்பது அவர்கட்கு நன்கு புலப்பட்டுவிடும்.*

***குறிப்புரை :-*** *அசூசம் - அசுத்தம். தூய்மையின்மை. 'அசுத்தத்தைத்*

**2514.** ஆசூசம் ஆசூசம் என்பார் அறிவிலார்
ஆசூசம் ஆம்இடம் ஆரும் அறிகிலார்
ஆசூசம் ஆம்இடம் ஆரும் அறிந்தபின்
ஆசூசம் மானுடம் ஆசூசம் ஆமே. **5**

---

*தீண்டுவதனால் தீட்டு உண்டாதல் உண்மையே. அந்தத் தீட்டு உடம்பிற்கு உண்டாவதைத் தங்களுக்கு உண்டானதாகவும், அதனைப் போக்கித் தூய்மை செய்வதால் தாங்கள் தூய்மை அடைந்துவிட்டதாகவும் கருதுதல் அறியாமை' என்பதாம். உண்மையை உணர்ந்தால்,* ***நாம் மானுட உடம்பைப் பற்றிக் கொண்டிருப்பதே தீட்டு என்பதும், 'அதனைப் போக்கி இறைவனை அடைதலே நமக்குத் தூய்மை' என்பதும் விளங்கும்****. அவற்றை விளக்கிக் கொண்டவர்களே அறிவுடையோர் என்பது கருத்து. மாணாக்கர் செயற்பாலது மானுட உடம்பை நீக்குதலேயாதல் பற்றி, "மானுடம் ஆசூசம்" என்றாரேனும், 'உடம்பாவன பலவும் ஆசூசமே' என்றதே கருத்து.*

*மானுட உடம்பை,*

> *"பொத்தை ஊன்சுவர் புழுப்பொதிந் துளுத்தகம்*
> *பொழுகிய பொய்க்கூரை" - தி.8 அதிசயப்பத்து - 7*

*என்றாற்போலப் பலபடக் கூறுமாறு அறிக. 'மக்கள் தங்கள் உடல் தீட்டைப் போக்கி உடலைத் தூய்மையாக்கிக் கொள்வதனாலே தாங்கள் தூயோராய் விட்டதாகக் கருதிக்கொள்ளுதல் அறியாமை' என்றபடி. இதனானே, 'புறத்தூய்மை ஒன்றே உயிரை நற்கதி யடைவிக்கும்' எனக் கூறும் கூற்றுக்கள் போலியாதல் விளங்கும்.*

*இதனால், 'புறத்தூய்மையையே பெரிதாக வலியுறுத்தியமையாது, அகத்தூய்மையையே பெரிதும் வலியுறுத்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

***2515. தெளிவுரை :-*** *சிவனது முதன்மையை உணர்ந்து அவனைச் 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என்னும் நால்நெறியில் எவ்வகையில் நின்று வழிபடுவார்க்கும் புறத்தூய்மை வாயாவிடினும் அகம் திருவருளில் படிந்திருத்தலால் அவர்கட்கு எந்த வகையான அசுசியும் இல்லையாம்.*

***குறிப்புரை :-*** *இஃது அறியாது அவர் புறத் தூய்மை குறைந்திருத்தல் பற்றி அவரை, 'ஆசௌசம் உடையவர்' என இகழலாகாது என்பதாம். புறத் தூய்மை இல்லாமைக்குக் காரணம் அவர் அதனை இகழ்ந்து ஒதுக்குதல் அன்று; வாய்ப்புக் கூடாமையேயாம். கண்ணப்பர் முதலியோரது அருள் வரலாறுகள் இதற்குச் சான்றாகும்.*

*அரு நியமம் - கடைப்பிடித்தற்கரிய கடப்பாடான தொண்டு. அருச்சனை*

**2515.** ஆசூசம் இல்லை அருநிய மத்தருக்கு
ஆசூசம் இல்லை அரனைஅற் சிப்பவர்க்கு
ஆசூசம் இல்லையாம் அங்கி வளர்ப்போருக்கு
ஆசூசம் இல்லை அருமறை ஞானிக்கே. **6**

---

*அகத்தும், புறத்தும் செய்யும் வழிபாடு. யோகிகள் பிராணா யாமத்தால் மூலாக்கினியை வளர்ப்பர் ஆதலால், புறத்தே அழல் ஓம்பி வழிபடுவாரும் யோகிகளாகச் சொல்லப்படுவர். இவருள் சிவவேள்வி செய்வாரையே இங்குக் கொள்க. ஞானசம்பந்தர்,*

*"சுடர்விட்டுளன் எங்கள் சோதி" - தி.3 ப.54 பா.5*

*என அருளிச் செய்தற்குச் சேக்கிழார்,*

*"ஆன்ற அங்கிப் புறத்தொளியாய், அன்பின்*
*ஊன்ற உள்ளெழும் சோதியாய் நின்றனன்" - தி.12 சம்பந்தர் 835*

*எனப் பொருள் விரித்தமை இங்கு நோக்கத்தக்கது.*

*அருமறை ஞானிகளாவார் வேதத்தின் 'பிரமகாண்டம்' எனப்படும் ஞானகாண்டப் பொருளை அதன் தெளிவாகிய சிவாகமங்களின் ஞானபாதத்தின் வழிச் சிந்திப்பவர்களும், சிந்தித்துத் தெளிந்த நிட்டை கூடியிருப்பவர்களும் ஆவர். இவற்றிற்கெல்லாம் முற்பட்டது. "குருவார்த்தை கேட்டல்". (பா.138) "அருமறை" என்பதனை இரட்டுற மொழிந்து, 'அரிய உபதேசம்' என்றும், 'அரிய பிரமகண்டம்' என்றும் இருபொருள் கொள்க.*

*இதனால், 'சிவநெறி நிற்றலே சிறப்புடைத் தூய்மை' என்பது கூறப்பட்டது.*

***2516. தெளிவுரை :-** முன்னர்ப் புறத்தொண்டுகளைச் செய்து, அகத்தும், புறத்தும் சிவனை வழிபடுவார்க்குச் சுழித்தோடுகின்ற நீரில் மூழ்கினாற்போலும் ஓர் உண்மைத் தூய்மை தொடங்குவதாகும். (பின்னர் அகத்தும், புறத்தும் அங்கி வளர்த்தலால் அத்தூய்மை முதிரும்). இவைகளைச் செய்யாது புறத்தூய்மை மட்டுமே வலியுறுத்திக் கூறுகின்ற நூல்களாகிய குழிகளில் வீழ்ந்தவர்கள் தூய்மையைப் பொருந்தார். இனி முற்கூறிய தூய்மையைப் பொருந்தியர்களில் கூட, உருவம், அருவுருவம், அருவம் என்னும் குறிகளைக் கடந்து குறியிறந்து உணரும் உணர்வுடையார்க்கன்றிச் சிவனை நேர்படக் காணுதல் இயலாது.*

***குறிப்புரை :-** 'சிவனை நேர்படக்காணுதலே முழுத் தூய்மையாம்' என்றபடி. கூடுதலுக்குச் செயப்படுபொருள் முன்னர்க் கூறிய தூய்மையேயாயிற்று. தொடங்குதல் கூறினமையால் முதிர்தலும் கொள்ளப்பட்டது.*

***இதனால், அகத்தூய்மை தொடங்கி, முதிர்ந்து, முற்றுமாறு கூறப்பட்டது.***

**2516.** வழிபட்டு நின்று வணங்கு மவர்க்குச்
சுழிபட்டு நின்றதோர் தூய்மை தொடங்கும்
குழிபட்டு நின்றவர் கூடார் குறிகள்
கழிபட் டவர்க்கன்றிக் காணஒண் ணாதே. 7

**2517.** தூய்மணி தூய்அனல் தூய ஒளிவிடும்
தூய்மணி தூய்அனல் தூர்அறி வார்இல்லை
தூய்மணி தூய்அனல் தூரறி வார்கட்குத்
தூய்மணி தூய்அனல் தூயவும் ஆமே. 8

---

*2516.* ***தெளிவுரை :-*** *முன்னர்ப் புறத்தொண்டுகளைச் செய்து, அகத்தும், புறத்தும் சிவனை வழிபடுவார்க்குச் சுழித்தோடுகின்ற நீரில் மூழ்கினாற்போலும் ஓர் உண்மைத் தூய்மை தொடங்குவதாகும். (பின்னர் அகத்தும், புறத்தும் அங்கி வளர்த்தலால் அத்தூய்மை முதிரும்). இவைகளைச் செய்யாது புறத்தூய்மை மட்டுமே வலியுறுத்திக் கூறுகின்ற நூல்களாகிய குழிகளில் வீழ்ந்தவர்கள் தூய்மையைப் பொருந்தார். இனி முற்கூறிய தூய்மையைப் பொருந்தியர்களில் கூட, உருவம், அருவுருவம், அருவம் என்னும் குறிகளைக் கடந்து குறியிறந்து உணரும் உணர்வுடையார்க்கன்றிச் சிவனை நேர்படக் காணுதல் இயலாது.*

***குறிப்புரை :-*** *'சிவனை நேர்படக் காணுதலே முழுத் தூய்மையாம்' என்றபடி. கூடுதலுக்குச் செயப்படுபொருள் முன்னர்க் கூறிய தூய்மையேயாயிற்று. தொடங்குதல் கூறினமையால் முதிர்தலும் கொள்ளப்பட்டது.*

*இதனால், அகத்தூய்மை தொடங்கி, முதிர்ந்து, முற்றுமாறு கூறப்பட்டது.*

*2517*. ***தெளிவுரை :-*** *உலகத்தில், மாசு நீங்கக் கழுவப்பட்ட இரத்தினமும், தூய பொருள்களாலே வளர்க்கப்பட்ட தீயும் தூய ஒளியையே தரும். 'அதுபோல உடம்பினுள் தூய ஒளிகளைத் தரும் தூய இரத்தினமும், தூய தீயும் எவை' என்பதை அறிபவர் உலகருள் எவரும் இல்லை. அவற்றை அறிய வல்லவர்கட்கு அவை தாம் தூயவாய் இருத்தலேயன்றி உடம்பிற்குத் தூய்மையைத் தருவனவாய் அமையும்.*

***குறிப்புரை :-*** *கழுவப்படுவதனால் தூய்மை அடைகின்ற மணி உயிர். இயல்பாகவே தூய்மையுற்றிருக்கின்ற தீ சிவம். 'சாதனங்களைச் செய்தவழி உயிர் தூய்மையுற்றும், சிவம் பிரகாசித்தும் புலால் உடம்பை ஒளியுடம்பாகச் செய்யும்' என்பது கருத்து.*

*இதனால், 'ஆன்ம சுத்தியே உண்மைத் தூய்மையாம்' என்பது கூறப்பட்டது.*

*2518.* ***தெளிவுரை :-*** *'முதல்வனாகிய முக்கண்ணன் முன்னெறியாகிய (தி.4 ப.11 பா.9) தனது நெறியை உலகிற்கு வைத்தது உயிர் தூயதாதற் பொருட்டேயாம். அந்நெறியிற் செல்வார்க்கு உறுதுணையாக அவன் வைத்தது அவனது*

**2518.** தூயது வாளாக வைத்தது தூநெறி
தூயது வாளாக நாதன் திருநாமம்
தூயது வாளாக அட்டமா சித்தியாம்
தூயது வாளாகத் தூய்அடிச் செல்லே. **9**

**2519.** பொருளது வாய்நின்ற புண்ணியன் எந்தை
அருளது போற்றும் அடியவ ரன்றிச்
சுருளது வாய்நின்ற துன்பச் சுழியின்
மருளவர் சிந்தை மயங்குகின் றாரே. **10**

---

*திருப்பெயராகிய திருவைந்தெழுத்து மந்திரம். அந்த மந்திரத்தைப் பல்காலும் ஓதி உயிர் தூய்மையுற்றால் அட்டமா சித்திகள் தாமே வந்து அதனை அடையும். ஆதலின் உயிர் தூய்மை அடைவதற்கு முன்பு அங்ஙனம் தூயராயினார் சென்ற அடிச்சுவட்டில் செல்.*

*குறிப்புரை :-* 'நான்கு அடிகளிலும், வாள் தூயதாக' என மாற்றிக் கொள்க. வாள் - ஒளி; அஃது இங்கு அறிவுப் பொருளாகிய உயிரைக் குறித்தது. "ஆக" நான்கில் மூன்றாவது காரணப் பொருளிலும், ஏனைய காரியப் பொருளிலும் வந்தன. "வைத்தது" என்பதை இரண்டாம் அடியிலும் கூட்டுக. தூயவரது அடிச்சுவடும் தூயதே ஆம் என்க.

இதனால், உண்மைத் தூய்மையை வேண்டுவோர் சிவ நெறியைப் பற்றிச் சிவமூல மந்திரத்தை எப்பொழுதும் ஓதுதல் வேண்டும் என்பது கூறப்பட்டது.

*2519. தெளிவுரை :-* மெய்ப்பொருளாய், என்றும் ஒரு பெற்றியனாய் நிற்பவன் சிவபெருமானே, அவனே எங்கட்குத் தந்தை. அவனது திருவருளைப் போற்றுகின்ற அடியவர்களே சுருண்டு சுருண்டு வருகின்ற கடலின் அலைபோல முடிவின்றி வருகின்ற பிறப்பாகிய துன்பச்சுழலினின்றும் நீங்குவர். அவனது திருவருளைப் போற்றாது ஒழிகின்றவர் எல்லாம் அச்சுழலில் அகப்பட்டுத் திகைக்கின்றார் ஆதலின் அவர் அருளுடையாராகாது மருளுடையவரேயாவர்.

*குறிப்புரை :-* எனவே, 'திருவருட் செல்வராகிய சிவனடியாரே தூயவர்; அச்செல்வத்தைப் பெறாதோரெல்லாம் மாசுடையவரே; அதனால் அச்செல்வத்தைப் பெற முயலுங்கள்' என்பது குறிப்பெச்சம்.

"புண்ணியன்" என்பது, 'சிவன்' என்னும் பொருட்டாய் நின்றது. 'அது' மூன்றும் பகுதிப்பொருள் விகுதி. "சுருளதுவாய்" என்பதில் ஆக்கம் உருவகம் குறித்து நின்றது. "மருளவர்" என்பதை இறுதியிற் கூட்டுக.

இதனால், உண்மைத் தூய்மையை உணராதவரது நிலைமை இரங்கத் தக்கதாதல் கூறப்பட்டது.

*2520. தெளிவுரை :-* 'நிலையில்லனவாகிய பல வகை உடம்புகள்

**2520.** வினையால் அசத்து விளைவ துணரார்
வினைஞானந் தன்னிலே விடாதுந் தேரார்
வினைவீட வீடென்னும் வேதமும் ஓதார்
வினையாளர் மிக்க விளைவறி யாரே. **11**

---

ஒன்றழிந்தபின் மற்றொன்று தோன்ற, அஃதழிந்தபின் வேறொன்று தோன்ற, இவ்வாறு முடிவின்றி வந்து உயிரை அலைக்கழிப்பது வினையே' என்பதையும், 'அந்த வினை பொருள்களை உற்றவாறுணரும் மெய்யுணர்வால் கெடும்' என்பதையும் ஆசான் அருள் பெறாதார் அறியமாட்டார். இனி, 'வினை நீக்கமே வீடுபேறாம்' எனக் கூறுகின்ற வேதத்தையும் அவர்கள் ஓதுவதில்லை. ஆகவே, அவர்கள் வினையை ஆண்டு, அதிற்றானே மகிழ்கின்றவராவர். அவர் பின்னும் பின்னும் எல்லையின்றி வரும் துன்பவினையை அறிய மாட்டார்.

*குறிப்புரை :- அசத்து - நிலையில்லாதது. சத்து - நிலையுடையது. இங்கு "வினை" என்றது பிராரத்த வினை, ஆகாமிய வினைகளை. 'அவை ஆசிரியன் உணர்த்தியவாற்றானே நின்மலாவத்தையை அடைந்து அதன்கண் நிற்பவரை வாதியா' என்பதை,*

*"எத்தனுவில் நின்றும் இறைபணியார்க் கில்லைவினை;*
*முற்செய்வினை யும்தருவான் முன்"*

*என்னும் சிவஞான போத (சூ - 10 - அதி. 2)த்தால் அறிக.*

*"எப்பொழுது இவனுடைய இருதயத்தில்*
*நிறைந்துள்ள ஆசைகள் எல்லாம் ஒழிகின்றனவோ*
*அப்பொழுது, சாகும் தன்மையுடைய மனிதன்*
*சாகாதவனாகி விடுகின்றான்"*

*என்று கடோப நிடத ஆறாவது வல்லிப் பதினாறாவது மந்திரம் கூறுகின்றது. ஆசையால் விளைவனவே வினையாதலின் "வினைவீட வீடு" என வேதம் கூறுதல் அறிக.*

*அவாஎன்ப எல்லா உயிர்க்கும், எஞ்ஞான்றும்*
*தவாஅப் பிறப்பீனும் வித்து. - திருக்குறள் 361*

*இன்பம் இடையறாது ஈண்டும், அவாஎன்னும்*
*துன்பத்துள் துன்பம் கெடின். - திருக்குறள் 69*

*எனத் திருவள்ளுவர் வலியுறுத்தியதும் இதனையே.*

*இதனால், 'வினைமாசு நீங்கலே உண்மைத்தூய்மை, அது நீங்காமையே உண்மை மாசு' என்பன கூறி முடிக்கப்பட்டது. (யாவரும் அறிந்தது இதுவேயாதல் பற்றி இவ்வாறு கூறினார். 'பின்பு ஆழ்ந்து உணர்வார்க்குக் காரணம் மாசாக ஆணவத்துண்மை புலனாகும்' என்பது கருதி.)*

## 34. மோட்ச நிந்தை

*'உண்மைச் சுத்தமாவது முத்தியும், உண்மை அசுத்தமாவது பெத்தமுமே' என முன் அதிகாரத்தில் விளக்கிய நாயனார், 'முத்தி' என்பதொன்றில்லை எனப் பழிப்பவரை நோக்கி, அது குற்றம் ஆதலை இவ்வதிகாரத்தால் கூறுகின்றார்.*

*இனி முத்தியை 'உளது' என உடன்படினும் அதனை அடைய முயலாது புறக்கணிப்பாய் இருத்தலும், உண்மை முத்தியாகிய சித்தாந்த முத்தியை மறுத்துப் பிற முத்திகளைக் கூறுதலும் இங்குக் குற்றமாகக் கருதப்படுகின்றன. சித்தாந்த முத்தி ஐந்தாம் தந்திரத்தில் 'சாயுச்சம்' என்னும் அதிகாரத்தில் விளக்கப்பட்டது. இவ்வதிகாரம் ஏழு மந்திரங்களையுடையது.*

**2521.** **பரகதி உண்டென்ன இல்லைஎன் போர்கள்**
**நரகதி செல்வது ஞாலம் அறியும்**
**இரகதி செய்திடு வார்கடை தோறும்**
**துரகதி உண்ணத் தொடங்குவர் தாமே. 1**

---

*2521. தெளிவுரை :- 'பிறப்பிறப்பினின்றும் நீங்கிப் பரம்பொருளை அடைந்து இன்புற்றிருக்கும் நிலை உண்டு' என்று உண்மை நூல்களெல்லாம் கூறா நிற்கவும், 'அஃது இல்லை' எனப் பிணங்கி, மனஞ் சென்றவாறே செல்பவர்கள் நரகலோகத்தை அடைதல் உலகத்தில் உயர்ந்தோர் பலரும் நன்கறிந்தது. நரகத்தின் நீங்கிப்பின்னும் அவர் மக்களாய்ப் பிறப்பின் கடைதொறும் சென்று இரக்கும் செயலையே உடையராவர். அங்ஙனம் இரக்குங்கால் வயிறு நிரம்பாமல் உணவு வேளை முடிவதற்குள் பலரிடம் சென்று இரக்க வேண்டி ஓடவும் தொடங்குவர்.*

*குறிப்புரை :- 'நரக, துரக' என்பன கடைக் குறைந்து நின்றன. "இர கதி" என்பது வினைத்தொகை. இதன்கண் 'கதி' என்பது நடை; தொழில். 'கடை தோறும் இரகதி செய்திடுவார்; நிரம்ப உண்ணத் துரக கதி தொடங்குவர் என்க. தாம், ஏ - அசை. "ஞாலம்" என்றது ஆகமப் பிரமாணத்தையுடைய உயர்ந்தோரை.*

*'பரகதி உண்டு' என்பவரே நோற்றலை மேற்கொள்வர். 'அஃது இல்லை' என்பார் நோற்றலைச் செய்யார். நோலாதவர் வறியராய்ப் பிறப்பர்' என்பது உண்மை நூல்களின் முடிவாதல்.*

> *இலர்பல ராகிய காரணம் நோற்பார்*
> *சிலர்; பலர் நோலா தவர்.* - **திருக்குறள் - 270**

*"மேலைத் - தவத்தளவே யாகுமாம் தான் பெற்ற செல்வம்" (ஔவையார், மூதுரை) என்பன முதலியவற்றால் விளங்கும். வறுமையால் இரத்தல் உண்டாகும். இரந்த வழியும் மிக்க தீவினையால், உணவு கிடைத்தல் அரிதாகும்.*

2522. புறப்பட்டுப் போகும் புகுதும்என் நெஞ்சில்
திறப்பட்ட சிந்தையைத் தெய்வம்என் றெண்ணி
அறப்பட் டமரர் பதி யென் றழைத்தேன்
இறப்பற்றி னேன் இதிங் கென்னென்கின் றானே. 2

---

*சித்தாந்த முத்தியை மறுத்து வேறு கூறி, அக் கூற்றிற்கு ஏற்ப ஒழுகுவார்க்கு இவ்வாறான தீங்குகள் உளவாகா ஆயினும், 'அவர்க்குப் பிறவி நீங்காது' என்க.*

*உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து*
*அலகையா வைக்கப் படும்.* ***- திருக்குறள் - 850***

*என்னும் குறட்பாவும் இம்மந்திரத்திற் கூறிய பொருள் நோக்கம் உடைத்தென்க.*

*இதனால், 'முத்தி' என்பதொன்று இல்லை என்பார், தம்மாலே தாம் கெடுதல் கூறப்பட்டது.*

*இதன்பின் பதிப்புக்களில் காணப்படும் "கூடகில்லார் குரு வைத்த நெறிகண்டு" என்னும் மந்திரம் முன்தந்திரத்தில் 'கேடுகண்டிரங்கல்' அதிகாரத்தில் வந்தது.*

***2522. தெளிவுரை :-*** *பிராண வாயு வெளியே செல்லுங்கால் தானும் வெளிச் சென்றும், அஃது உள்ளே வருங்கால் தானும் உள்ளே வந்தும் இவ்வாறு உழல்கின்ற எனது மனத்தின் அலைவுக்கிடையே அந்தப் பிராணனை அடக்கியதனால் நிலைபெற்ற சித்தத்தையே பரம்பொருளின் இருப்பிடமாகக் கருதி, அவ்விடத்தில் நின்றே, 'புண்ணியங்களின் பயனாய் எதிர்ப்படுகின்ற தேவதேவனே' என்று அழைத்தேன். அங்ஙனம் ஒருமுறை யழைத்ததோடன்றித் தொடர்ந்து பன்முறை அழைத்து அவனை உள்ளத்தால் இறுகப் பற்றினேன்; அதன்பின்பு அவன் தோன்றி, 'நீ இங்கு என்ன செய்கின்றாய்' என்று வினாவுகின்றான்.*

***குறிப்புரை :-*** *'ஆகவே, உடம்பு நீங்கியபின் நான் அடையத்தக்க கதி அவனே' என உணர்ந்தேன் என்பது கருத்து. 'அதனால், பரகதி இல்லை என்பாரது கூற்று எனக்கு நகை விளைக்கின்றது' என்பதாம். போவதும், புகுவதுமாய் உள்ள நெஞ்சு நிற்றலைக் குறித்தமையால், அவ் விரண்டிற்கும் காரணம் வருவித்துரைக்கப் பட்டது. நெஞ்சு, விடாத ஆகுபெயர். மனம் அலையின் சித்தம் ஒன்றையும் சிந்தியாதாக, அது நிலைத்தவழியே சித்தம் ஒன்றை ஆழ்ந்து சிந்தித்தலின் 'திறப்பட்ட சிந்தை' என்றதற்கு ஏற்ப மனம் நிலைபெற்றமை பெறப்பட்டது. திறப்படுதல் வலியுடைத்தாதல். "அடியார் சிந்தையுள் தேனூறி நின்று" (தி.8 சிவபுராணம், 47) "கருதுவார் இதயத்துக் கமலத்து ஊறும் - தேனவன்காண்" (தி.6 ப.87 பா.1) என்றாற்போலும் சுருதிகளின் வழிநின்று, திறப்பட்ட சிந்தையைத் 'தெய்வம்' என்று எண்ணினார் என்க. அறப்பட்ட -*

**2523.** திடலிடை நில்லாத நீர்போல ஆங்கே
உடலிடை நில்லா உறுபொருள் காட்டிக்
கடலிடை நில்லாக் கலம்சேரு மாபோல்
அடல்எரி வண்ணனும் அங்குநின் றானே. **3**

---

*அறத்தால் வெளிப்பட்ட. 'பட்ட' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. "பட்ட" என்பது, "பதி" என்பதனோடு முடிந்தது. சிந்தையில் இருப்பவனை அழைத்தல் சிந்தையாலேயாம். எனவே அவ்வாறு, பன்முறை பாவித்தலாயிற்று. 'ஒரு நாள் அழைத்துவிட்டு விடாமல், பல நாள் அழைத்தல் வேண்டும்' என்பது,*

*"பவன் எனும் நாமம் பிடித்துத் திரிந்து*
*பன்னாள் அழைத்தால்,*
*இவன்எனைப் பன்னாள் அழைப்பொழியான்*
*என்று எதிர்ப்படுமே" - தி.4 ப.11 பா.9*

*அரங்கமாய்ப் பேய்க்காட்டில் ஆடுவான் வாளா*
*இரங்குமோ எவ்வுயிர்க்கும் ஏழாய்! - இரங்குமேல்*
*என்னாக வையான்! தான் எவ்வுலகம் ஈந்தளியான்!*
*பன்னாள் இரந்தாற் பணிந்து. - அம்மை திருவந்தாதி - 78*

*என்றாற்போலும் திருமொழிகளால் விளங்கும். அதனால், "இறப்பற்றி" என்றால் "இங்கு இது என் என்கின்றாள்" என்றது, "என்னோடு கலந்து உறவாடுகின்றாள்" என்றபடி.*

*இதனால், 'பரகதி உண்டு' என்பது இவ்விடத்திற்றானே அநுபவமாய் விளங்கும் என்பது கூறப்பட்டது.*

***2523. தெளிவுரை :-** மேட்டு நிலத்தில் பொழியப்பட்ட மழைநீர் அங்கு நிலைத்து நில்லாது நீங்குவதுபோல, வினையால் உடம்பினிடத்துச் சேர்க்கப்பட்ட உயிர் அதன்கண் நிலைத்து நில்லாது நீங்குவதாகும். ஆயினும், தழல் வண்ணனாகிய சிவனும் அவ்வுயிரோடு கூட அவ்வுடம்பின்கண் நிற்கின்றான். ஏனெனில், கடலிடத்தே நில்லாது கரையையே சேர்வதாகிய மரக்கலம் கடலிடை நின்றாருடன் தானும் நிற்பதுபோல, உயிரைப் பந்தத்தினின்றும் விடுவித்து வீட்டை அடைவித்தற் பொருட்டாம்.*

***குறிப்புரை :-** கருத்து நோக்கிச் சொற்கிடக்கை முறையானன்றி இவ்வாறு உரை கூறப்பட்டது. உவமம் சுட்டிக் கூறா உவமமாய் நின்றமையால் அதனால் விளக்கப்படும் பொருள் இறுதியில் விரித்துரைக்கப்பட்டது. இடையில் நின்ற காட்டுதல் (அறிவித்தல்) வினை பொருட்கே உரியது. ஈசன் உயிர்க்குக் காட்டி கண்டிடுவான்" (சிவஞானசித்தியார் - சுபக்கம். சூ. 11-1) என்றது காண்க.*

**2524.** தாமரைநூல் போல்வ தடுப்பார் பரத்தொடும்
போம்வழி வேண்டிப் புறத்தே உழிதர்வர்
காண்வழி காட்டக்கண் காணாக் கலதிகள்
தீநெறிச் சென்று திரிகின்ற வாறே. **4**

---

*'கடலிடைப்பட்டவர் மரக்கலம், அல்லது புணையைப்பற்றியின்றித் தாமே கரைசேர மாட்டமைபோலப் பிறவியுட்பட்ட உயிர்கள் இறைவனைப் பற்றியன்றித் தாமே கரை சேரமாட்டா' என்பதும், 'அதனால் இறைவன் தனது கருணை காரணமாகப் பிறப்புடைய உயிர்களோடு உடனாய் நின்று அவற்றை வீடடைவிக்கின்றான்' என்பதும் இங்குக் கூறப்பட்ட பொருள்கள்.*

*பிறவிப் பெருங் கடல் நீந்துவர்; நீந்தார்*
*இறைவ னடிசேரா தார்.* ***- திருக்குறள் - 10***

*என்றார் திருவள்ளுவரும். 'மறு பிறப்பு இல்லை' என்பாரைத் தவிர, ஏனையோர் பலர்க்கும் 'உயிர்கள் பிறவியுட் பட்டன' என்பது உடன்பாடு. அதனால், அவர்கள் அனைவரும் இம்மந்திரத்திற்கூறிய உவமையை உடன்படுவர். மேற்காட்டிய திருக்குறளும் 'மறுபிறப்பு உண்டு' என்பார்க்குக் கூறுவதாய் எழுந்ததன்றி 'மறு பிறப்பு இல்லை' என்பார்க்குக் கூற எழவில்லை. ஆகவே, 'பரகதி' என்பது உண்டு என்பது உவமையாலும் விளக்கப்பட்டதாம்.*

*இதனால், பரகதி உண்மை உவமையில் வைத்து விளக்கப்பட்டது.*

***2524. தெளிவுரை :-*** *தாமரைத் தண்டின் நூல்போல் அறிவுடையார் முன் எளிதில் அற்றுப்போகின்ற நூல்களால், உண்மை நூல்களின் வழிச் செல்வாரைத் தடுக்கின்றவர்கள் தாங்கள் மேல்நிலையை அடைய விரும்பி, அதற்கு மாறான வழிகளில் சென்று அலைவார்கள். அவர்களது செயல்கள், தெரிய வேண்டிய வழியைத் தெரிந்தவர் காட்டினாலும் அதனைக் கண் கொண்டு பாராத குருடர்கள் தாங்கள் அறிந்ததே வழியாகக் கொண்டு துன்பம் தரும் வழிகளில் திரியும் செயல் போன்றனவேயாம்.*

***குறிப்புரை :-*** *'நூல்' என்னும் பெயர் ஒற்றுமை பற்றித் தாமரை நூலை எடுத்துக்காட்டினார்.*

*"உன்நூலும் ஒருநூலா உரைப்ப தென்னே!*
*உலட்டு நூல், பருத்தி நூல், சிலம்பி நூல்கள்"*

***- சிவஞான சித்தியார் - பரபக்கம் -***
***சௌத்திராந்திகன் மதமறுதலை - 10***

*என அருணந்திதேவரும் கூறுதல் காண்க. முதற்பொருளைக் காண்டற்குரிய மெய்ந்நெறியைச் சான்றோர்கள் மெய்ந்நூல்கள் சார்பாக நின்று காட்டவும்,*

**2525.** மூடுதல் இன்றி முடியும் மனிதர்கள்
கூடுவர் நந்தி யவனைக் குறித்துடன்
காடும் மலையும் கழனி கடல்தொறும்
ஊடும் உருவினை உன்னகி லாரே. **5**

---

*அதனை நோக்கிக் காண விரும்பாத தீவினையாளர் தீநெறியில் தாம் செல்வதற்கு முற்பட்டு மேற்கொள்ளும் முறை தழுவாச் செயல்களைக் கூறின் ஒருவன் திருவருளொடும் ஒன்றி ஒழுகும் ஒழுக்க நெறியை விரும்பின் அவனை, நூலே அகத்தே கொண்ட தாமரைக் கொடி நீர் நிலையில் நீந்துவோனைக் காலைப் பிணித்துச் செயற்படவொட்டாதது போல், தடுப்பர்; நன்னெறிக்குப் புறம்பான நெறிகளிற் சுழல வைப்பர்.*

*கலதிகள் தடுப்பர். உழிதரச் செய்வர்; அவர் திரிகின்றவாறு இது என முடிக்க. உழிதர்வர் என்னும் தன்வினை - பிறவினைப் பொருள் பயக்க நின்றது. 'தாமரை நூல் போல்' என்னும் தொடர், படவரல்குலாள் என்றது போல நின்று, நூல் தாமரை போல் என வைத்து உரைக்க நின்றது. தாமரைத் தண்டு அகத்தே நூலைக் கொண்டிருத்தல் போல், கலதிகளும் தம் அகத்தே நூலைக் கொண்டிருந்து தடுப்பர் என்னும் நயம் தோன்றுதல் காண்க. பரம் - திருவருள். பரம்பொருள் எனினும் அமையும்.*

***2525. தெளிவுரை :-** பாசக் கூட்டம் மறைக்கின்ற மறைப்பு நீங்கி உடல் வீடும் மனிதர்கள் உடலில் இருக்கும்பொழுது, "மாயோன் மேய காடுறை யுலகம்" (தொல்காப்பியம் - பொருள் - அகத்திணையியல்) என்பது முதலாக முறைப்படுத்துச் சொல்லப்பட்ட நால்வகை நிலங்கள் தோறும் உள்ளிடத்துச் சிவபெருமான் கொண்டிருக்கும் திருவுருவங்களைக் குறித்துச் சென்று வணங்கியிருந்து, உடல் நீங்கிய பொழுது பேரின்ப வடிவினனாகிய சிவபெருமானை அடைந்து அவனோடு இரண்டறக் கலப்பர். ஆயினும், பாசக் கூட்டத்தின் மறைப்பு நீங்கப்பெறாத மனிதர்கள் அத்திருவுருவங்கள் எங்கும் இருப்பினும் அவைகளைப் பற்றி யாதும் நினைக்க மாட்டார்கள்.*

***குறிப்புரை :-** மூடுதல் - அறிவை மூடும் அறியாமை, புலனுணர்வு என்பன. கடம் - பாலைநிலம். ஊடு - நடு. 'மூடுதல் இன்றி முடியும் மனிதர்கள் காடும் ...... உருவினைக் குறித்து நந்தியவனை (அடைந்து) உடன் கூடுவர்; (பிறர்) உன்னகிலார்' என இயைக்க. "அவன்" பகுதிப் பொருள் விகுதி. "குறிகளும் அடையாளமும் கோயிலும் - நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும்" (தி.5 ப.90) நிலமெங்கும் உள்ளனவாகவும் பாசத்தால் மூடப்பட்டுக் கிடக்கும் மனிதர்கள் அவற்றைச் சிறிதும் நோக்குதல் இல்லை. அதனால், அவர்கள் உடல்விட்ட பின்பு அடையும் நிலை யாது எனக்கூறி இரங்கியவாறு, "மூடுதல் இன்றி" என முன்னர்க் கூறப்பட்டமையால், பின்னர் அதன் மறுதலை*

**2526.** ஆவது தெற்கும் வடக்கும் அமரர்கள்
போவர் குடக்கும் குணக்கும் குறிவழி
நாவினில் மந்திரம் என்று நடுஅங்கி
வேவது செய்து விளங்கிடு வீரே. **6**

---

*வருவிக்கப்பட்டது. அவர்கட்கு மேற்கூறிய (பா.2508) "நரகம், சுவர்க்கம், மேதினி" என்னும் மூன்று உலகங்களுள் யாதானும் ஒன்றிற்சென்று பிறத்தலே கதி என்பது குறிப்பெச்சம். 'பிறப்பதற்கே தொழிலாகி, இறக்கின்றாரே' (தி.6 ப.95 பா.5) என்பது அருளிச் செய்ததையும் நோக்குக.*

*இதனால், 'சிவநெறியை உணராதவர் மறுமையில் அடையும் நிலை இரக்கத்திற்கு உரியது' என்பது கூறப்பட்டது.*

***2526. தெளிவுரை :- (தலையில் வலக் கன்னத்தை, 'தெற்கு' என்றும், இடக் கன்னத்தை 'வடக்கு' என்றும், நெற்றியை, 'கிழக்கு' என்றும், பிடரிக்கு மேல் உள்ள பகுதியை 'மேற்கு' என்றும் குழூஉக் குறியாக வழங்குதல் சித்தர் மரபு. அம்முறையில்).***

***தெற்கும், வடக்கும் உயர்வுடையன. அத்திசைகளில் தேவர்கள் உலாவுவார்கள். (சூரிய கலை சந்திர கலைகளாகிய பிராணங்கள் வியாபிக்கும்). மேற்கும், கிழக்கும் யோகி தன் தியானப் பொருளைக் குறித்துச் செல்லும் வழிகளாம். அங்ஙனம் செல்லும் பொழுது நாவால் உச்சரிக்கப்படுவன மந்திரங்கள். இவற்றை யெல்லாம் இவ்வாறு உணர்ந்து, மூலாக்கினியை எழுப்பி நடுநாடி வழியாக ஓங்கச் செய்து, அதனால் அறிவு விளங்கப் பெறுவீர்களாக.***

***குறிப்புரை :- 'அங்ஙனம் அறிவு விளங்கப்பெற்றால், சுவர்க்க நரகங்களும், அவற்றைக் கடந்துள்ள சுத்த புவனங்களும் விளங்கச் சித்தாந்த முத்தி நிலையும் விளங்கும்' என்பது குறிப்பெச்சம். ஆவது - உயர்ந்து நிற்பது, இதனை, தெற்கு, வடக்கு இரண்டனோடும் தனித்தனிக் கூட்டுக. மந்திரமாவன பிரணவமும், அம்சமும், திருவைந்தெழுத்துமாம். 'உணர்ந்து' என்பது சொல்லெச்சம்.***

***இதனால், 'உண்மை முத்தி நிலையை யோகக் காட்சியால் இவ்வுலகிலே உணர்தல் கூடும்' என்பது கூறப்பட்டது. அதனால், அதனை 'இல்லை' என்றல் குற்றமாதல் பெறப்பட்டது.***

***2527. தெளிவுரை :- சமயப் பூசலை மேற்கொண்டு, பிற சமயத்தவர் சினங் கொள்ளுமாறு கடுஞ்சொற்களைப் பேசின பாவத்தையடைந்தவர் தாம் 'நெறியல்லா நெறி தன்னை நெறியாக மயங்கும் மயக்கம் (தி.8 அச்சோப்பதிகம் -2) தம்மிடத்தில் பொருந்துதலால் நெறிகளைத் திரிய நோக்கினாராயினும், 'நாம் பெரிய தவத்தைச் செய்கின்றோம்' என்பது தான் அவர்கள் கருத்து. அவர்கள்***

**2527.** மயக்குற நோக்கினும் மாதவம் செய்வார்
தமக்குறப் பேசின தாரணை கொள்ளார்
சினக்குறப் பேசின தீவினை யாளர்
தமக்குற வல்வினை தாங்கிநின் றாரே. **7**

---

*தங்களுக்கு உண்மை மனோலயம் வரும்படி சொல்லிய முறையைக் கைக் கொள்ளாமையால் அக் கருத்துப் போலியேயாய் உண்மையில் அவர்கள் தம்மை வந்து சார வேண்டிய வினைகள் வந்து சார்தலினாலே அவற்றைச் சுமந்து நிற்பவரேயாவர்.*

***குறிப்புரை :-*** *'தவத்தினால் வினையை நீக்கிக் கொள்பவர் அல்லர்' என்பதாம். "மாதவம் செய்வார்" என்றது அவர்களது கருத்தை நோக்கி. தாரணை - எண் வகையோக உறுப்புக்களில் மனம் ஒருங்கி நிற்கும் நிலை. அஃது அதற்குரிய முறையைக் குறித்தது. 'சினக்க' என்னும் வினையெச்சம். குகரச் சாரியையும், 'உறு' என்னும் துணைவினையும் பெற்று, 'சினக்குற' என வந்தது. "பேசின" என்னும் காரணப் பொருளில் வந்த பெயரெச்சத்தை, "தீவினை" என்பதனோடே முடிக்க. "அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை நாடி இனிய சொலின்" (திருக்குறள் - 96) என்பவாகலின் உறுதி கூறுமிடத்தும் இன்சொல்லால் கூறுதலே நன்றாகலின் 'சமயத்துறையில் தாம் பிறர்க்கு உறுதி கூறுவதாகக் கருதிக்கொண்டு, அவர்பால் கடுஞ்சொற்களை வழங்குதல் தீவினையாம்' என்றபடி. இத்தீவினையை நன்னெறி யாளர் ஒரோ ஒருகாற் செய்யினும் அவர் பிறர்க்கு உறுதி கூறிய நன்மையை யேனும் பெறுவர். நெறியல்லா நெறியாளர் இதனைச் செய்யின் அவர்க்கு மிஞ்சுவது கடுஞ்சொல் வழங்கினமையால் வரும் அத் தீவினை மட்டுமே என்பது கருத்து. இம்மந்திரம் மூன்றாம் எழுத்தெதுகை பெற்றது.*

*இதனால், சித்தாந்தம் முத்தியைப் பழிப்பார்க்கு தீவினையும் உளதாதல் கூறப்பட்டது.*

## 35. இலக்கணாத் திரயம்

*சொற்கள் 'வெளிப்படைச் சொல், குறிப்புச் சொல்' என இரு வகைப்படும். (தொல் - சொல் - பெயரியல்) அவற்றுள் குறிப்புச்சொற்களின் வகைகளில் ஒன்றைத் தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் (பொருளியல்) "பாற்கிளவி" என்றும், ''பால்கெழுகிளவி'' என்றும் பிரித்துக் கூறித் தொல்காப்பியர் சொல்லதிகாரத்தில் (எச்சவியல்) அவற்றை, "வாரா மரபின வரக்கூறுதலும்" என்னும் நூற்பாவில்,*

*"அன்னவை யெல்லாம் அவற்றவற் றியலான்*
*இன்ன என்னும் குறிப்புரை யாகும்"*

*எனக் குறிப்புச் சொல்லில் அடக்கினார். ஆகவே அவற்றை 'பான்மைச் சொல்' என்றும், அவற்றது வழக்கத்தை, 'பான்மை வழக்கு' என்றலும் பொருந்தும். பான்மைச் சொல்லைத் தொல்காப்பிய உரையாளர் 'இலக்கணத்தின் பக்கச் சொல்' என்பர். பக்கம் - அணித்தாய இடம் - மற்றும் 'பகுதிச் சொல்' என்றும் கூறுவர். பான்மை வழக்கைச் 'சார்த்து வழக்கு' என்றலும் உண்டு.*

*"தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்*
*பகுதிக் கிளவி வரைநிலை யிலவே" - கிளவியாக்கம்*

*என்றதனால், தகுதி வழக்கையும் 'பக்கச் சொல்' என்பர்.*

*எனினும் வடநூலார் பான்மைச் சொல்லை, 'இலக்கணைச்சொல்' என வேறு பிரித்து, 'செஞ்சொல், இலக்கணைச் சொல், குறிப்புச் சொல்' எனச் சொற்களை மூன்றாக வகுப்பர். (திருக்குறள் - 711 பரிமேலழகர் உரை) குறிப்புச் சொல் 'வியங்கியம்' எனப்படுகின்றது. லக்ஷணா என்னும் ஆரியச்சொல் தமிழில் இலக்கணை எனப்படும். திரயம் - மூவகை.*

*இலக்கணையாவது ஒரு பொருளினது இலக்கணத்தை மற்றொரு பொருளுக்குத் தந்துரைப்பது. அது விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டும் விடாத இலக்கணை என மூவகைப்படும். "நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏற" என்றதில் ஏறுதலாகிய இலக்கணம் அன்பிற்கு இன்மையின் விட்ட இலக்கணை. நாணன் முன் ஏறப் பின் திண்ணனார் அன்பின் வயப்பட்டு ஏறினார் என்பது கருத்து. கங்கைக்கண் இடைச்சேரி, புளி நின்றான் என்புழி இடைச்சேரி கங்கையின் கரையில் இருத்தலும், புளியினது பழத்தைத் தின்றலும் உண்மையின் இவை விடாத இலக்கணை. 'பாயிருள் பருகிப் - பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பரிதி' என்பதில், பருகுதலும் காலுதலும் பரிதிக்கு இல்லையேனும் இருளைப் போக்குதலும் பகலைத் தருதலும் உண்மையின் விட்டும் விடாத இலக்கணை. இலக்கணை, ஆகுபெயர். உருவகங்களுள் அடங்கும்.*

*இலக்கணைக்குச் சொல்லப்படும் இலக்கணமாவது. 'ஒரு பொருளின் தன்மையை மற்றொரு பொருளுக்கு ஏற்றிச் சொல்வது' என்பது, 'மற்றொரு பொருள்' என்றால், சிறிதும் இயைபில்லாத பொருளன்று; யாதானும் ஒரு வகையில் இயைபுடைய பொருளே. 'பான்மைச் சொல்' என்றலும் அது பற்றித்தான்.*

*'இலக்கணைக்குக் கூறப்படும் இலக்கணம் ஆகுபெயர்க்கும் பொருந்தும்' என்று வட நூலார் ஆகுபெயரையும் இலக்கணையுள் அடக்குவர்.*

*இலக்கணை, மூன்றாக வடமொழியில் கொள்ளப்படுகின்றது. ஆயினும் தமிழில் ஆகுபெயர். 'விட்ட ஆகுபெயர். விடாத ஆகுபெயர் என இரண்டேயாகும், 'ஊர் உறங்கிற்று, ஊர் எழுந்தது' என்றால், உறங்குதலும் எழுதலும் ஊர்க்குக் கூடாது, ஊரில் உள்ள மக்கட்கே கூடும் ஆதலின் அஃது விட்ட ஆகுபெயராம். "தாமரை புரையும் காமர் சேவடி" (குறுந்தொகை, கடவுள் வாழ்த்து) என்பதில், 'தாமரை' என்னும் முதலின் பெயர் அம்முதலைக் குறியாது, அதன் மலரை மட்டுமே குறிக்கின்றது. ஆயினும் பொதுப்பட 'மலர்' எனப்பொருள் தாராமல், சிறப்பாக, 'தாமரை மலர்' என்றே பொருள் தருகின்றது. இனி, 'நீலம் சூடினாள்' என்றால், 'நீலம்' என்னும் நிறப் பண்புப் பெயர் அதனை மட்டும் குறித்துப் போகாது, அந்நிறத்தையுடைய மலரையும் உடன் குறிக்கின்றது. இவையெல்லாம் விடாத ஆகுபெயர்கள்.*

*'முதல், சினை' என்பனவும், 'பண்பி, பண்பு' என்பனவும் ஒன்றைவிட்டு ஒன்று நில்லா. அதனால், அவற்றின் பெயர்கள் ஆகுபெயராய் வரும்பொழுது அவை விடாத ஆகுபெயர்களாம். வடநூலாரும் 'கங்கையின்கண் இடைச்சேரி' என்பதை 'விட்ட இலக்கணை' (கங்கை - கங்கைக்கரை) என்றும், 'சிவப்பு நிற்கின்றது' 'வெள்ளை போகின்றது' என்பவற்றை 'விடாத இலக்கணை' என்றும் கூறுவர். (சிவப்பு - சிவப்புக் குதிரை. வெள்ளை - வெள்ளைக் குதிரை).*

*இனி விட்டும் விடாத இலக்கணைக்கு அவர் 'அவனே இந்தத் தேவதத்தன்' (சோயம் தேவதத்தன்) என உதாரணம் காட்டுவர். 'அவன்' என்பது, முன் ஒருபோது, ஓர் இடத்தில், ஒருவகைக் கோலத்துடன் காணப்பட்ட தேவதத்தனைக் குறிக்கின்றது. 'இந்தத் தேவதத்தன்' என்பது முன்னர் அவன் காணப்பட்ட காலம், இடம் கோலம் ஆகிய வற்றை நீக்கி இப்போது இவ்விடத்தில் வேறு கோலத்தில் காணப்படும் தேவதத்தனைக் குறிக்கின்றது. ஆகவே இது விட்டும் விடாத இலக்கணை யாகின்றது. இதில் 'தேவதத்தன்' என்னும் பெயர் ஓரிடத்தும், ஒரு காலத்தும் வேறொருவனைக் குறியாமையால், இஃது ஆகுபெயர் ஆமாறில்லை. இங்கு, 'தேவதத்தன்' என்பது அவனது உடம்பையே. (உலகத்தில் மக்களுக்கு இடப்படும் பெயர்கள் சாத்தன், கொற்றன் முதலியன அவர்களது உடம்பிற்குரியன அல்லது உயிருக்குரியன அல்ல).*

**2528.** விட்ட இலக்கணை தான்போம் வியோமத்து
தொட்டு விடாதது உபசாந்தத் தேதொகும்
விட்டும் விடாதது மேவும்சத் தாதியில்
சுட்டும் இலக்கணா தீதம் சொரூபமே. **1**

---

*2528. தெளிவுரை :- ஆன்மாவின் சொரூப (இயற்கை) நிலையைக் குறித்து வரும் சொற்களெல்லாம் இலக்கணைச் சொல்லாகாது இலக்கணச் சொல்லேயாம். அஃதாவது, நேர்ப்பொருளைத் தருவனவேயாம். அவை 'ஆன்மா*

*நித்தியம், வியாபகம், சித்து' என்றல் போல்வன. ஆன்மாவின் சொரூப நிலையைக் கூறாது, தடத்த (செயற்கை) நிலையைக் குறித்து வரும் சொற்களே இலக்கணைச் சொல்லாய் நிற்கும். அஃதாவது நேரே பொருளை யுணர்த்தாமல், ஒன்றை இடையிட்டுப் பொருளுணர்த்தும். அது மூன்று வகைப்படும். (அவ்வகைகள் மேலே காட்டப்பட்டன).*

*'ஆன்மா, மேல், கீழ், நடு உலகங்களில் பிறந்தும், இறந்தும் உழலும்' என்றால், ஆன்மா உண்மையில் வியாபகப் பொருள் ஆகையால், அதற்குப் போக்கு வரவு இல்லையாதலின், ஆன்மாவை விட்டு, 'அதன் சூக்கும, பரசரீரங்களே அவ்வாறு உழல்வன' எனக் கொள்கின்றோம். ஆகவே இது விட்ட இலக்கணை.*

*இனி, 'ஆன்மாச் சகலத்திற் கேவலம், சகலம், சுத்தம் என்னும் அவத்தைகளை அடைகின்றது' என்றால், அவ்வவத்தைகளில் உணர்வு வேறுபடுவது ஆன்மாவே ஆகையாலும், அதன் கருவிகளின் கூடுதல் பிரிதல்கள் என்பவற்றாலும், சீவ கரணங்கள் சிவ கரணங்களாய் வேறுபடுதலாலுமே அவத்தைகள் நிகழ்தலாலும் ஆன்மாவை விடாமலே அதன் கருவிகளின் கூடுதல் குறைதல்களையே கொள்கின்றோம். அதனால் இது விடாத இலக்கணையாம்.*

*இனி, 'ஆன்மா புறத்தே உள்ள ஓசையைக் கேட்கின்றது, உருவத்தைக் காண்கின்றது' என்றால், கேட்டல் காண்டல்களைத் தான் நேரே செய்யாது, செவியும், கண்ணுமாகிய பொறிகளே அவற்றைச் செய்கின்றன என்றும், ஆயினும் அப்பொறிகள் அச்செயல்களைச் செய்யுமாறு ஆன்மா அவற்றை அதிட்டித்து (வாயிலாகப் பற்றி ஏவி) நிற்கின்றது என்றும் கொள்கின்றோம். இதனால், இது விட்டும் விடாத இலக்கணையாம்.*

***குறிப்புரை :-** ஈற்றடியை முதலில் வைத்து உரைக்க. 'சொரூபம் இலக்கணாதீதம்' (இலக்கணைக்கு அப்பாற்பட்டது) எனக் கூறியதனால், 'இலக்கணைச் சொற்களாய் வருவன தடத்தத்தைப் பற்றி வருவனவே' என்பது பெறப்பட்டது.*

***'ஆன்மாவின் தடத்த இயல்புகளைக் கூறுமிடத்து ஆன்மாவிற்குச் செயற்கையாயுள்ள மலங்களின் இயல்பை வேறாகவும், ஆன்மாவின் தற்சொரூபம் வேறாகவும் உணர்தல் வேண்டும்' என்பது இம்மந்திரத்தின் திரண்ட கருத்து. ஆகவே, ஆன்மாவைப் போலச் சிவன் தனது தடத்த நிலையில் முன்னை நிலையை மறத்தலாகிய உணர்வு வேறுபாட்டை அடைதல் இல்லாமையால், 'அவனது தடத்த நிலைகளைக் குறிக்கவே இலக்கணைச் சொற்கள் பயன்படுகின்றன' எனக்கூறும் மாயாவாதிகள் கூற்றுப் பொருந்தாது என்பதும் இதனாலே குறிக்கப்பட்டதாம். இது வருகின்ற மந்திரத்தில் வெளியாகும்.***

***வியோமம் - ஆகாயம்; வானுலகம். அஃது உபலக்கணம். "உபசாந்தம்"***

**2529.** வில்லின் விசைநாணில் கோத்திலக் கெய்தபின்
சொல்லுங் களிறைந்தும் கோலொடே சாய்ந்தன
இல்லில் இருந்தெறி கூரும் ஒருவற்குக்
கல்கலன் என்னக் கதிர்எதி ராகுமே. **2**

---

*என்றது கருவிகளின் சேட்டை அடங்கிய நிலையை. சத்தாதி - ஓசை முதலிய புலன்கள். சுட்டும் - நேரே சுட்டுகின்ற.*

*இதனால், உபநிடதப் பொருள்களைச் செம்மையாக உணர்தற்கு உரிய ஒரு கருவியின் இயல்பு விளக்கப்பட்டது.*

***2529. தெளிவுரை :-*** *(இம்மந்திரம் ஒட்டணியாய் நின்றது).*

*வில்லினிடத்து விசையைத் தருகின்ற நாணை ஏற்றி, அதன்கண் அம்பைப் பூட்டி தொலைவில் உள்ள இலக்கை எய்ய வல்லார் அங்ஙனம் எய்வாராயின் அந்த இலக்கிற்குக் குறுக்கே நிற்கின்ற கொலையானைகள் ஐந்தும் அந்த அம்பாலே வீழ்ந்துவிடும். (அம்பு இலக்கைச் சென்று அடையும்). இனி அவ்வாறு எய்யும் ஒருவன் தனக்கு வாய்ப்பான இடத்தில் இருந்து கொண்டு எய்யும் பொழுது அச்சாதனையால் இனியதோர் ஒளி மாணிக்கக்கலன் போல் வெளிப்பட்டு விளங்கும்.*

***குறிப்புரை :-*** *இவ்வதிகாரத்தில் உபநிடத வாக்கியங்களுக்குப் பொருள் கொள்ளும் முறை பற்றிக் கூறுகின்றார். ஆதலின் 'முண்டகம்' என்னும் ஓர் உபநிடதத்தில் கூறப்பட்டவாறே இம்மந்திரத்தில் கூறினார். அதிற் கூறப்பட்டது வருமாறு.*

1. *"சித்தம் அழகியோய், உன்னிடத்தில் உள்ள பெரிய அத்திரத்தை (வில்லை) எடுத்து அதில், முன்பே உபாசனையால் கூர்மை பெற்றுள்ள அம்பைத் தொடுத்து, பிரம்ம பாவனையால் அதை இழுத்து, அட்சரப் பிரம்மமாகிய இலக்கில் பாயும்படி செலுத்து" (முண்டகம் - 2, கண்டம் - 2, மந்திரம் - 3, 4).*
2. *"பிரணவமே வில். ஆன்மாவே அம்பு. பிரம்மமே அதன் இலக்கு. அது சிறிதும் மறதியற்ற நினைவுடன் எய்யப்படல் வேண்டும். (எய்யப்பட்டால்) ஒன்று பட்ட நிலை ஏற்படும்". (முண்டகம் - 2, கண்டம் - 2, மந்திரம் - 3, 4).*

*இவற்றால் இம்மந்திரத்தில் மறைத்துக் கூறப்பட்ட பொருள் இனிது விளங்கும். உபாசனை, இங்கு மந்திரோபாசனை யாதலின், "விசை நாண்" என்றது திருவைந்தெழுத்தாகக் கொள்ளப்படுகின்றது. இதனை மேற்காட்டிய உபநிடதம் வெளிப்படையாகக் கூறவில்லை. 'பிரணவ கலைகளே அஞ்செழுத்து' என்பது உபநிடதங்களின் கருத்து ஆதலால் அது 'வில்' என்பதில் அடக்கப்பட்டது என்பது இனிது விளங்க நாயனார், "விசை நாணின்" என வெளிப்பட ஓதினார்.*

*உபாசனையால் கூர்மை பெற்ற அம்பு, சமய விசேட நிருவாண தீக்கைகளால்*

*பல முறைகளில் திருவைந்தெழுத்தை ஓதிப் பயின்று, திருவருள் உணர்வு மிகப் பெற்ற ஆன்ம உணர்வு, ஆன்மா எத்துணை முயற்சிகளைச் செய்தாலும் தனது இலட்சியத்தை அடைதற்கு, இடையே குறுக்கிடுவன ஐம்புலன்கள் ஆதலின், அவையும் இலட்சியத்தை நோக்கி உறுதியாகச் செல்லும் ஆன்மாவின் முன் வலியற்று வீழ்ந்துவிடும்' என்பதையும் நாயனாரே கூறினார்.*

*கோல் - அம்பு, ஒடு உருபை ஆன் உருபாகத் திரிக்க. ஏகாரம், 'அந்த அம்பைத் தவிர வேறொரு படைக்கலம் வேண்டா' என்பதைக் குறித்தது. தெளிவு பற்றி எதிர்காலம் இறந்த காலமாகச் சொல்லப்பட்டது.*

*உபநிடதத்தில் 'மறவா நினைவு' எனப்பட்டது யோகா வத்தையில் சமாதி நிலையும், நின்மலாவத்தையில் நின்மல துரியமும் ஆகும். இவற்றையே நாயனார் "இல்" (இல்லம்) என்றார். எறி - எய்யப்படும் இலக்கு. கூரும் - அதனைக் கூர்ந்து நோக்குகின்ற. கல் - மாணிக்கம். 'கற்கலன்' என்பது எதுகை நோக்கி, 'கல்கலன்' என இயல்பாய் நின்றது. கதிர் - கதிரவன். ஆகுபெயர். சொரூப சிவம்.*

*இங்குக் கூறிய இவ்வுருவக முறையில் பரமான்மாவை, 'இலக்கு' என்றதனால், அஃது இருந்தபடியே என்றும் இருக்கின்றது என்பதும், 'கூர்மை பெற்ற அம்பு' என்றதனால், சீவான்மாவே பிரணவோபாசனையாகிய சாதனத்தால் அவ்விலக்கினை அடைதல் வேண்டும்' என்பதும் உபநிடதத்தின் கருத்து என்பது போந்தது. எய்பவனும், எய்யப்படும் பொருளும் ஒன்றாதல் ஒருபோதும் இல்லையாகலானும், 'உண்டு' எனின், 'தன்னைப் பற்றுதல்' (ஆன்மாச் சிரய தோடம்) என்னும் குற்றம் படும் ஆகலானும், ஏகான்ம வாதம் கொண்டு இலக்கணைகளைப் பிரமப் பொருளின் தடத்த நிலைகளுக்கு ஆக்குதல் பொருந்தாமை தெள்ளிது என்றபடி. இங்ஙனம் இதனைத் தெளிவுபடுத்தவே நாயனார் இம்மந்திரத்தைக் கூறினார். அதனால் இம்மந்திரம் இவ்வதிகாரத்தில் இடம்பெற்றது.*

*புள்ளுவர் ஐவர் கள்வர்*
*புனத்திடைப் புகுந்து நின்று,*
*துள்ளுவர்; சூறை கொள்வர்;*
*தூநெறி விளைய ஒட்டார்;*
*முள்ளுடை யவர்கள் தம்மை*
*முக்கணான் பாத நீழல்*
*உள்ளிடை மறைந்துநின்(று) அங்(கு)*
*உணர்வினால் எய்ய லாமே.*

*- தி.4 ப.77 பா.5*

*என்னும் அப்பர் திருமொழியை இங்கு ஒப்பிட்டுக் காண்க.*

*இதனால், இலக்கணை பயன்படும் முறை உபநிடதக் கூற்றால் விளக்கப்பட்டது.*

## 36. தத்துவமசி மகாவாக்கியம்

*இத்தந்திரத்தில் மேல், மாணாக்கரை நோக்கி, 'முப்பதம், முச்சூனிய தொந்தத்தசி' என்னும் அதிகாரங்களில் சுருங்கக் கூறிய பொருள்களையே இவ்வதிகாரத்தில் பரபக்கத்தாரை நோக்கிச் சிறிது விரிவாகக் கூறுகின்றார். இது பதினேழு மந்திரங்களையுடையது. பல மகாவாக்கியங்களைப் பற்றியும் கூறிய போதிலும் தலைமை பற்றி, 'தத்துவமசி மகாவாக்கியம்' எனப் பெயர் கூறப்பட்டது.*

**2530.** சீவ துரியத்துத் தொம்பதம் சீவனார்
பாவு பரதுரி யத்தினில் தற்பதம்
மேவு சிவதுரி யத்துஅசி மெய்ப்பதம்
ஓவி விடும்தத் துவமசி உண்மையே. **1**

---

*2530. தெளிவுரை :- ('வேதாந்த மகாவாக்கியங்கள் சில உள' என்பதும், அவற்றின் இயல்பும் மேற்குறித்த அதிகாரங்களில் சொல்லப்பட்டன. அவ்வாக்கியங்களில் 'தத்துவமசி' என்னும் வாக்கியமே சிறப்பாகக் கூறப்படுதலால் அது பற்றியே இங்குக் கூறுகின்றார். வடமொழியில் 'தத் + த்வம் + அஸி' என்னும் மூன்று பதங்களின் சேர்க்கையே 'தத்துவமஸி' என்று ஆகின்றது. தத் - அது. த்வம் - நீ, அஸி - ஆகின்றாய். தத்துவமஸி - அது நீயாகின்றாய். இங்ஙனமாயினும் 'ஆகின்றாய்' என்பதனால், 'நீ அது ஆகின்றாய், என்பதே கருத்து, த்வம், 'துவம்' என வருகின்றது. 'தொம்' என மரூஉவாகவும் வரும். இங்குக் குறித்த கருத்துப் பற்றி நாயனார், 'தொந்தத்தசி' என்றே கூறுவார்).*

*'தத்துவமசி' என்பதை, 'தொம், தத், அசி என வைத்து நோக்கினால் முதற்கண் உள்ள 'தொம்' என்பது, மேல் 'முத்துரியம்' என்பவற்றில் சீவ துரியமாகிய யோகாவத்தையாகிய சகலத்திற் சுத்தாவத்தை நிலையில் தியான சமாதிகளில் உள்ள சீவான்மாவைக் குறிக்கும். 'தத்' என்பது பர துரியமாகிய பர முத்தியில் அடையப்படும் சொரூப சிவத்தைக் குறிக்கும். 'அசி' என்பது, நின்மல துரியமாகிய சிவயோகத்தில் சீவான்மா பரமான்மாவாகிய சிவனேயாய் அவனோடு ஏகமாகி விடுதலைக் குறிக்கும். இதுவே 'தத்துவமசி' மகாவாக்கியத்தின் உண்மைப் பொருள். இப்பொருளைச் சில மதங்கள் தள்ளிவிடுகின்றன.*

*குறிப்புரை :- 'அதனைக் கொண்டு மயங்க வேண்டா' என்பது குறிப்பெச்சம். 'தத்துவ மசி உண்மை இது' என முடித்து ஓவிவிடும் என்பதை இறுதியில் கூட்டி, அதற்கு எழுவாய் வருவித்து முடிக்க. தள்ளிவிடுகின்ற மதங்கள் சிலவகை ஏகான்ம வாத மதங்கள். அவை 'சீவான்மா, பரமான்மா என இரண்டு ஆன்மாக்கள் இல்லை. பரமான்மா ஒன்றே பல சீவான்மாக்கள் ஆகின்றது' என்பதில் தம்முள் மாறுபடுதல் இல்லை.*

*முதல் வேதமாகிய* ***இருக்கு வேத*** *பாகமாகிய ஐதரேய உபநிடதத்தில் சொல்லப்பட்டது. "பிரஜ்ஞானம் பிரஹ்மம்" என்னும் மகாவாக்கியம். "அறிவு பிரமம்" என்பது இதன் பொருள்.*

*இரண்டாம் வேதமாகிய* ***எசுர்வேத*** *பாகமாகிய பிருகதாரணீய உபநிடதத்தில் சொல்லப்பட்டது. "அஹம்பிரஹ்மாஸ்மி" என்னும் மகாவாக்கியம். "நான் பிரம்மமாய் இருக்கின்றேன்" என்பது இதன் பொருள்.*

*மூன்றாம் வேதமாகிய* ***சாமவேத*** *பாகமாகிய சாந்தோக்கிய உபநிடதத்தில் சொல்லப்பட்டதே, "தத்துவமஸி" என்னும் மகாவாக்கியம். "அது நீயாகின்றாய்" என்பது இதன் பொருள்.*

*இறுதி வேதமாகிய* ***அதர்வண வேத*** *பாகமாகிய மாண்டூக்கிய உபநிடதத்தில் சொல்லப்பட்டது. ''அயமாத்மா பிரஹ்மம்'' என்னும்* ***மகாவாக்கியம்****. "இந்த ஆன்மா பிரம்மம்" என்பது இதன் பொருள். இது "சோயமஸ்தி" என்பதாகவும் சொல்லப்படுகின்றது. 'அது இதுவாய் இருக்கின்றது' என்பது இதன் பொருள்.*

*இங்கு வேத மகாவாக்கியம் (பிரஜ்ஞானம் பிரஹ்மம்) உண்மையைக் கூறுவதாய் உள்ளது. மற்றை மூன்று வேதங்களின் மகா வாக்கியங்களே சீவன் சிவனாவதற்குத் துணையாகின்றன. அஹம் பிரஹ் மாஸ்மி'யில் 'அஹம், நான்' என்பதும் 'தத்துவமசி'யில் 'துவம், நீ என்பதும், 'அயமாத்மா பிரஹ்மத்'தில் 'அயம் ஆத்மா இந்த ஆன்மா' என்பதும் ஒரு பொருளையே தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூவிடங்களில் வைத்துக் கூறுகின்றன. அவ்வாறே, 'தத் அது' என்பதும் மற்றைய வாக்கியங்களில் கூறிய 'பிரம்மம்' என்னும் அந்தப் பொருளையே குறிக்கின்றது. அங்ஙனமே 'அஸி ஆகின்றாய்', அஸ்மி ஆகின்றேன். 'அஸ்தி இருக்கின்றது' என்பனவும் முன்னிலையும், தன்மையும் படர்க்கையும் ஆகிய இடவேறுபாடன்றி, பொருள் வேறுபாடு உடையன அல்ல. எனவே மூன்று வாக்கியங்களும் ஒரு கருத்தையே குறிப்பவையாகின்றன. 'ஆயின் மூன்று எதற்கு' என்றால், சீவனைச் சிவமாக்குதற் பொருட்டு ஆசிரியர் மாணவனது ஆன்மாவை, "இந்த ஆன்மாப் பிரம்மம் (சிவம்)" எனத் தம்முள்ளே சிவபாவனை செய்து சிவமாக்கிப் பின்பு மாணவனை நோக்கி, 'நீ பிரம்மம் (சிவம்) ஆகின்றாய்' என உபதேசித்து, பின்பு அவனை, 'நான் பிரம்மமாய் (சிவமாய்). இருக்கின்றேன்' என்று இடையறாது பாவித்து வரச் செய்கின்றார். எனவே, அயமாத்மா பிரம்மம்' என்பது ஞானாசிரியர் ஞானதீக்கையில் செய்யும் பாவனா தீக்கை வாக்கியமும், 'தத்துவமசி' என்பது அவர் வாசக தீக்கையில் செய்யும் உபதேச வாக்கியமும், அஹம் பிரம் மாஸ்மி' என்பது உபதேசம் பெற்ற மாணவன் நாள்தோறும் இடையறாது பாவித்துப் பயிலும் பயிற்சி வாக்கியமும் ஆகின்றன. 'பிரஜ்ஞானம் பிரம்மம்' என்பது, 'சீவனுக்குச் சிவமாம் தன்மை உண்டு' என்பதை*

*அறிவிக்கின்றது. அத்தன்மை யாவது, சார்ந்ததன் வண்ணமாம் தன்மையேயாம். இது பற்றியே தாயுமானவர் (பாடல் “எங்கும் நிறைகின்ற பொருள்”).*

> *“யாதொன்றும் பாவிக்க நான் அது ஆதலால்*
> *உன்னை ‘நான்’ என்று பாவிக்கின்*
> *அத்துவித மார்க்கம் உறலாம்”*

*என்றார். சீவன் முத்தியில் பாவனையாய் உள்ள இது, பரமுத்தியில் உண்மையாய் இருக்கும்.*

*மகாவாக்கியங்களின்படி, ‘சீவன் சிவமாகின்றது’ என்றால் ‘ஒருபொருள் மற்றொரு பொருளாதல் எங்ஙனம்’ என்னும் ஐயம் எழுகின்றது. அவ் ஐயத்தை நீக்கவே, ‘அத்துவிதம்’ என உபநிடதம் கூறிற்று என்பதும், ‘எனவே, பலவகைச் சம்பந்தங்களில் ‘அத்துவிதம்’ என்பது ஒருவகைச் சம்பந்தம் என்பதுமே சித்தாந்தம். **அத்துவித சம்பந்தமாவது, இரண்டு பொருள்கள் என்றும் பிரிப்பின்றி ஒன்றாய்க் கலந்து நிற்கும் சம்பந்தம். இது தமிழில் “இருமையில் ஒருமை” எனப்படுகின்றது**.*

*இனி ஒருமையில் இருமையும் உண்டு. அது ‘தாதான்மிய சம்பந்தம்’ எனப்படும். **அஃதாவது பொருள் ஒன்றே யாயினும் இரண்டாகக் கருதப்படும் தன்மை**. அது, குணியும் குணமும், (பண்பியும், பண்பும்) அவயவியும் அவயவமும், (முதலும், சினையும்) சத்திமானும் சத்தியும் (பொருளும் அதன் ஆற்றலும்) போல்வனவற்றில் உள்ளது. சிவம், சத்தி என்பவைகட்கு இடையே உள்ள சம்பந்தம் இத்தாதான்மிய சம்பந்தமே.*

*இவற்றால் மகாவாக்கியங்கள், பிறப்பிற்கு அஞ்சி வீடுபேற்றை விரும்பிச் சைவாசாரியரை அடைந்து முன்னர்ச் சமய தீக்கை பெற்றுச் சரியையில் நின்று, பின்பு விசேட தீக்கை பெற்றுக் கிரியையில் நின்று, பின் யோகத்தை அடைந்து அதில் சமாதி நிலையை உற்ற மாணாக்கன் பின்னும் பேரின்பம் விளையாமையால் ஞானாசாரியனை அடைந்து அவர்பால் ‘அடைக்கலம்’ எனப் புகுந்தமையால் அவர் அவனது பக்குவநிலையை நோக்கி, **‘நீ தியான சமாதிகளால் பாவிக்கும் பாவனைகள் எல்லாம் உனது கருவி கரணங்களின் துணை கொண்டேயாகும். அவற்றுக்குள் கருவி கரணங்களைக் கடந்த சிவம் எங்ஙனம் அகப்படும்?’** எனச் சொல்லி நிருவாண தீக்கை அத்துவ சுத்தியால் அவனது சஞ்சித கன்மங்களைப் போக்கி, இனி நீ ஞானச் செய்திகளில் தலைப்பட்டுத் திருவருளைத் துணையாகக் கொண்டு, நின்மல சாக்கிரம் முதலிய மூன்று நிலைகளில் நின்று ஒவ்வொன்றையும் கடந்து நான்கு ஐந்தாம் நிலைகளாகிய துரியம், துரியா தீதங்களை அடைந்தால் உனது சீவத்தன்மை நீங்க, ‘நீ சிவமாவாய்’ என உபதேசித்தார். (ஞானச் செய்திகள் - தச காரியம்). அவ் உபதேசத்தைக் கேட்டு, அதில் உறைந்து நின்று ‘சிவோகம் பாவனையால் அவன் சிவமேயாவன்’*

**2531.** ஆறா றகன்ற அணுத்தொம் பதம் சுத்தம்
ஈறான தற்பதம் எய்துப சாந்தத்துப்
பேறா கியசீவன் நீங்கிப்பிர சாதத்து
வீறான தொந்தத் தசிதத்வ மசியே. 2

---

*என்பது இம்மந்திரத்தால் கூறப்பட்டதாம். ஆகவே, தெளிவுரையில் கூறியபடி மகாவாக்கியங்களில் 'இது, நீ, நான்' என்னும் சொற்குப்பொருள் யோக சமாதியில் நிற்கும் மாணவனாகிய சீவான்மாவும், 'பிரம்மம், அது' என்னும் சொற்கட்குப் பொருள் சொரூப சிவமாகிய பரமான்மாவும், 'ஆதல்' என்பதற்குப் பொருள். சீவன் நின்மலாவத்தையில் பாசத்தினின்றும் நீங்கிச் சிவத்தைத் தலைப்பட்டமையால் சார்ந்ததன் வண்ணமாம் தன்மையால் சிவமாகியே நிற்றலும் ஆகின்றன.*

*சைவசித்தாந்தத்தின்படி, சீவன் சிவமாதலாவது, சார்ந்ததன் வண்ணமாம். இயல்புடைய படிக மணி நீல மணியைச் சார்ந்து நீல மணியாய் இருந்த நிலையினின்றும் நீங்கி, மாணிக்க மணியைச் சார்ந்து மாணிக்க மணியாவது போல, சார்ந்ததன் வண்ணமாம், இயல்புடைய ஆன்மாப் பாசத்தோடு சேர்ந்து பாசமாய், அதனால், 'பசு' எனப்பட்டிருந்த நிலையினின்று நீங்கி, சிவத்தை அடைந்து சிவமாகி நிற்றலேயாம். ஒரு பொருள் மற்றொரு பொருள் ஆதல் அன்று.*

*சைவ சித்தாந்தச் சுத்தாத்துவிதத்தின்படி எந்நிலையிலும் சீவன், கலப்பினால் சிவமாகியேயிருத்தலால், மகா வாக்கியங்கட்கு இடர்ப்பாடின்றி நேரே பொருள் கொள்ள இயல்கின்றது. எனவே, 'தத்துவ மசி' என்னும் உபதேச வாக்கியத்தின் ஆசிரியர் மாணாக்கனுக்கு அவன் அறியாதிருக்கின்ற உண்மையை அறிவிப்பதும், 'அஹம்பிரம்மாஸ்மி' என்னும் பயிற்சி வாக்கியம் ஆசிரியர் அறிவுறுத்தியபடியே மாணாக்கன் அவ்வுண்மையை அறிவதும் ஆகின்றன. அவ்வளவேயன்றிப் பொருளில் வேறுபாடில்லை.*

*இதனால், மகாவாக்கியங்களின் பரபக்கப் பொருள்களை மறுத்துச் சுபக்கமாகிய சித்தாந்தப் பொருள் உணர்த்தப்பட்டது.*

***2531. தெளிவுரை :-** (சகலாவத்தையில் தொம்பதப் பொருளாய் நின்ற தத்துவ வன்ன ரூபியான ஆன்மாச்) **சுத்தாவத்தையில் தத்துவம் அனைத்தினின்றும் நீங்கித் தூயதாய்த் தொம்பதப் பொருளாய் நிற்கும். தத்பதப் பொருளாகிய, எல்லாப் பொருட்கும் முடிவாய் உள்ள சொரூப சிவம் எப்பொழுதுமே பரதுரியத்தில் உள்ளது. அதனை அத்துரியத்தில் அடைந்த ஆன்மா அவ்வாறு குருவருளால் அசுத்தத்தின் நீங்கிச் சுத்தத்தை எய்தி, சிவமாய் நிற்கும் பேற்றினையளிக்கின்ற, 'தொம் தத்தசி' என்னும் பதத்தின் பொருளே 'தத்துவமசி' மகாவாக்கியத்தின் பொருளாகும்.***

**2532.** **துவம்தத் தசியே தொந்தத் தசியும்**
**அவைமன்னா அந்நு வயத்து ஏகம்ஆன**
**தவவுறு தத்வ மசிவேதாந் தத்துச்**
**சிவமாம் அதுவும்சித் தாந்தவே தாந்தமே. 3**

---

*குறிப்புரை :- அணு - உயிர். 'சகலாவத்தையில் தத்துவ வன்னரூபியாயும், சுத்தாவத்தையில் தூயதாயும் நிற்கும் ஆன்மாச் சிவத்தின் வேறானதேயாதலால், அது சிவமாவது, 'சோயம் தேவதத்தன்' என்பதிற் போல, உபாதியுடன் நின்ற சிவம் அவ்வுபாதியின் நீங்கி அதுவாதல் அன்று; நீலமணியைச் சார்ந்து நீல மணியாய் நின்ற படிகமணி, மாணிக்க மணியைச் சார்ந்து மாணிக்க மணியாய் நின்றது போல்வதேயாம்' என்றபடி.*

*'தத்துவமசி' என்பது, 'சோயம் தேவதத்தன்' என்பதுபோல என்பவர், உபாதியுட்படுவதும் அதனின்றும் நீங்குவதும் ஆகிய அதனையே 'பிரம்மம்' என்கின்றமையால், 'அவர் பசுவையே பதியாகக் கருதுகின்றனர்' என்பது பெறப்படும். ஆகவே, அவரது பிரம்ம ஞானம் பசு ஞானமேயாகின்றது, இதனைச் சிவஞான சித்தியார் (சுபக்கம் - சூ - 9.2)*

> *"நணுகி ஆன்மா இவை கீழ் நாடலாலே*
> *காதலினால் 'நான் பிரமம்' என்னும் ஞானம்*
> *கருது பசு ஞானம்"*

*எனக் கூறிற்று.*

*பதங்களின் பொருள்களைப் பதங்களாகவே உபசரித்துக் கூறினார். 'சுத்தத்து'என்னும் அத்துச்சாரியை தொகுத்தலாயிற்று. "தற்பதம்" என்றதும் அதன் பொருளையே. தற்பதம் பேறாகிய' என இயையும். பேறாதலாவது, பெறப்படும் பொருளாதல், "ஆகிய" என்னும் பெயரெச்சம், 'அரசன் ஆகொடுத்த பார்ப்பான்' என்பது போல, "சீவன்" என்னும் கோடற் பொருட்பெயர் கொண்டது. 'பிர சாதத்து நீங்கி' என மாறுக. பிரசாதம், குருப் பிரசாதம். 'பிரசாதத்தால்' என உருபு விரிக்க. நீங்குதல், பாசத்தினின்று. வீறு - மேன்மை. "ஆன" என்னும் பெயரெச்சம் "தொந்தத்தசி" என்னும் ஏதுப்பெயர் கொண்டது.*

*இதனால், 'தத்துவமசி' மகாவாக்கியம் பொருள் படுமாறெல்லாம் இனிது விளக்கப்பட்டன.*

*(இதன் பின் பதிப்புக்களில் காணப்படும், "ஆகிய அச்சோயம் தேவதத்தன்" என்னும் மந்திரம், மேல்" "முச்சூனிய தொந்தத்தசி" அதிகாரத்தில் வந்தது).*

*2532.* ***தெளிவுரை :-*** *'துவம் தத் அஸி' என்பதே தொந்தத்தசி என்பது மேலே சொல்லப்பட்டது. அவை இரண்டுமே நீக்கப்படாது நிலை பெற்று நின்று,*

**2533.** துரியம் அடங்கிய சொல்லறும் பாழை
அரிய பரம்என்பர் ஆகார்இ தன்றென்னார்
உரிய பரம்பர மாம் ஒன் றுதிக்கும்
அருநிலம் என்பதை யார்அறி வாரே. **4**

---

*பொருள்கோள் முறையில் ஒன்றாய் இயைகின்ற இயைபினால் ஒன்றேயாகின்றன. இனி, வேதாந்தத்தில் பெரிதும் பயின்று வருகின்ற 'தத்துவமசி' என்னும் மகா வாக்கியம் வேதாந்தம் சீவன் சிவமாதலையே குறிப்பது. ஆகவே, அதனை, சித்தாந்த மகா வாக்கியம்' என்றும் சொல்லலாம். 'இல்லை, வேதாந்த மகா வாக்கியந்தான்' என்றும் சொல்லலாம்.*

*குறிப்புரை :- அந்நுவயம் - இயைபு. அத்துவிதம். இருமையின் ஒருமை. 'எப்படிச் சொல்லினும் பொருள் ஒன்றே' என்பது கருத்து. முதல் அடி அநுவாதம். மன்னா - மன்னி, அந்நுவயம் - பொருள் கோள் முறை. தவ உறுதல் - பயின்று வருதல் "அதுவும்" என்னும் உம்மை சிறப்பு. சித்தாந்த வேதாந்தம் உம்மைத் தொகை. சித்தாந்த மகாவாக்கியம், 'சிவத்துவமசி' என்பது, திருவைந்தெழுத்தேயும் இப்பொருளைப் பயக்கும்.*

*இதனால், 'மகாவாக்கியங்களில் சொல் வேற்றுமை பற்றி மலைதல் வேண்டா; அவையெல்லாம் பொருளால் ஒன்றே' என்பது கூறப்பட்டது.*

*2533. தெளிவுரை :- துரியத்தைக் கீழ்ப்படுத்தி நிற்கும், துரியாதீதநிலை, சுட்டுணர்வினால், உணரவும், சொல்லாற் சொல்லவும் வாராமையால் அந்நிலையை எய்தாதவர்க்கு அது வெறும் பாழ்போல்வதாகும். அதனால் அவர் அதில் விளங்கும் பொருளை, ஒருவராலும் அடைய இயலாத ஒரு தனிப் பொருள் என்று கூறுவர். அதனை வேறு சிலர், 'அஃது இன்னது ஆம் - என்றும், இன்னது அன்று' என்றும் அநிர்வசனீயமாகக் கூறுவர். ஆயினும், 'அந்தத் துரியாதீத நிலை அனுபவிக்கத்தக்க, மிக மேலான, ஒன்றேயான ஒப்பற்ற ஒரு பெரும் பொருள் விளங்குகின்ற நிலை' என்பதே அறிபவர் யார்!*

*குறிப்புரை :- அந்நிலையையடைந்து, அப்பொருளைத் தலைப்பட்டுணரும் ஒரு சிலரே அறிவார் என்பது கருத்து. பாழ் போல்வதாதலை, "பாழ்" என்றார். 'ஆகார் அரிய பரம் என்பர்' என மாறிக் கூட்டுக. 'அவர் கூறுவது உண்மையாயின் அப்பொருளால் யாருக்கு, என்ன பயன்! ஒன்றுமில்லையாகையால் அவர் கூற்றுப் பிழையானது என்பது 'அங்கு விளங்கும் பொருள் அனுபவப்படுவதே' என்பதும் கருத்துக்கள். "என்னார்" என்பதை முன்னும் கூட்டி, 'இது என்னார்; அன்று என்னார்' என்க. பரம் பரம் - மேலானதற்கும் மேலானது, உதித்தல் - விளங்குதல்.*

*இதனால், "வேதாந்த மகாவாக்கியங்களின் அனுபவம், 'அறிவான், அறிவு, அறியப்படும் பொருள்' என்பன இல்லாது, வெறும் அறிவு மாத்திரையானதே"*

**2534.** தொம்பம் தத்பதம் சொல்லும் அசிபதம்
நம்பிய முத்துரி யத்தும்மேல் நாட ஏ
யும்பத மும்பத மாகும் 'உயர்பரம்
செம்பொரு ளான சிவம்'என லாமே. **5**

---

என்றல் பொருந்தாது. பெறுவான், பெறப்படும் பொருள் என்பன உள்ளதாய்ப் பேரின்பமாவதே என்பது கூறப்பட்டது.

*2534. தெளிவுரை :- மேற்கூறிய, சீவ துரியம், சிவ துரியம், பரதுரியம் என்னும் மூன்று துரியத்திலுமே தொம்பதப் பொருளாகிய ஆன்மா, தத்பதப் பொருளாகிய சிவத்தை, அசிபதத்தின் வழியாக, மேல்நோக்கு உணர்வினால் உணருமாயின், பரதுரியத்திற்போலவே ஏனை இரு துரியங்களிலும் அது சிவமாகியே நிற்கும் (சீவனாகி நில்லாது என்பதாம்).*

| சீவதுரியம் | உயிரின் செயலறல் | சிகாரம் | தத்பதப்பொருள் |
|---|---|---|---|
| பரதுரியம் | அருட் செயலறல் | வா | அழிபதப்பொருள் |
| சிவதுரியம் | சிவச் செயலறல் | ய | துவம்பதப்பொருள் |

*குறிப்புரை :- அங்ஙனம் நோக்கி நிற்றலே 'சாக்கிரத்தில் அதீதம்' எனப்படும். இதனையே,*

*"................................ எல்லாம் ஈச
னிடத்திலும், ஈசன்எல்லா இடத்தினிலும் நின்ற
அந்நிலைமை அறிந்(து) அந்தக் கரணங்கள் அடங்கி
அறிவதொரு குறிகுருவின் அருளினால் அறிந்து,
மன்னுசிவன் றனையடைந்து நின்(று) அவன்ற னாலே
மருவு பசு கரணங்கள் சிவகரண மாகத்
துன்னியசாக் கிரமதனில் துரிய தீதம்
தோன்றமுயல்; சிவானுபவம் சுவானுபூ திகமாம்"*

*எனவும்,*

*"சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள், உலகில்
சருவசங்க நிவிர்த்தி வந்த தபோதனர்கள்; இவர்கள்
பாக்கியத்தைப் பகர்வதுஎன்! இம்மையிலே உயிரின்
பற்றறுத்துப் பரத்தைஅடை பராவுசிவர் அன்றோ!
"ஆக்கும்முடி கவித்(து) அரசாண்(டு) அவர்கள் அரிவையரோ(டு)
அநுபவித்தங்கு இருந்திடினும் அகப்பற்றற் றிருப்பர்"*

*எனவும், சிவஞான சித்தி (சுபக்கம் - சூ - 8-34, 35) கூறிற்று.*

*மும்மை தரும்வினைகள் மூளாவாம்; மூதுலகில்*

**2535.** வைத்த துரிய மதில்சொரூ பானந்தத்து
உய்த்த பிரணவ மாம்உப தேசத்தை
மெய்த்த இதயத்து விட்டிடும் மெய்யுணர்
வைத்த படியே அடைந்துநின் றானே. **6**

---

*அம்மையும் இம்மையே ஆம். - திருவருட்பயன் - 99*

*என்றதும் இந்நிலை நின்றாரை நோக்கியேயாம்.*

*'தொம்பதம் நாட' என இயையும் 'தத்பதத்தை அசிபதத்தால்' என உருபுகள் விரிக்க. 'ஏயும் பதமும் பதமாகும்' என்றது, 'எந்நிலையில் நின்றாலும் அது பரதுரியநிலையேயாம்' என்றபடி, 'பரமும், செம்பொருளும் ஆன சிவன்' என்க.*

*இதனால், 'மகாவாக்கியங்களில் ஊன்றி நிற்கின் எந்நிலையிலும் சிவ நிலை கூடும்' என்பது கூறப்பட்டது.*

*2535.* ***தெளிவுரை :-*** *'தத்துவமசி' என்னும் உபதேசத்தையேயன்றிப் பிரணவ உபதேசத்தை ஒருவன் தனது நிலையான உள்ளத்தில் அழுத்தி வைப்பினும் அதனால் விளையும் மெய்யுணர்வினால் அவன் தன்னை ஆசிரியர் ஆக்கி வைத்த சிவநிலையை இழக்காது அடைந்து நிற்பவனாவான்.*

***குறிப்புரை :- 'பிரணவம் மகாவாக்கியப் பயனைத் தரும்'*** *என்றபடி. அது, மேல், "வில்லின் விசை நாணில்" (பா. 2530) என்னும் மந்திரத்தில் கூறப்பட்டது. பிரணவ கலைகளாகிய 'அ, உ, ம்' என்பன முறையே தத், த்வம், அசி பதங்களாய் நிற்கும் என்க. பிரணவம் இவ்வாறு நின்று உயிரைச் சிவமாகச் செய்தலால், "எல்லா பிராணிகளையும் பரமான்மாவினிடம் வணங்கச் செய்வது பிரணவம்" ("ப்ராணாந் ஸர்வாந் பரமாத்மநி ப்ரணாமயதி இதி ப்ரணவ") என, 'பிரணவம்' என்னும் சொற்கு உறுப்புப் பொருள் கூறுவர்.*

*துரியம், முத்துரியம். 'அது' என்னும் பகுதிப் பொருள் விகுதி பன்மை யொருமை மயக்கமாய் வந்தது. சொரூபானந்தம் - சிவானந்தம். உய்த்த பிரணவம் - முத்துரியத்திலும் முன்பு பலரை சொரூபானந்தத்தில் செலுத்திய பிரணவம். "இதயம்" என்றது ஆன்ம உணர்வை. 'தெளிந்த உணர்வு' என்றற்கு, "மொய்த்த இதயம்" என்றார். விட்டிடல், மேல் எழாது அழுத்தி வைத்தல். "விட்டிடும்" என்னும் பெயரெச்சம் காரணப் பொருட்டாய், "மெய்யுணர்வு" என்னும் காரியப் பெயர் கொண்டது. வைத்தலுக்கு எழுவாய் வருவிக்க. தெளிவு பற்றி எதிர்காலம் "நின்றான்" என இறந்த காலமாகச் சொல்லப்பட்டது.*

*இதனால், முன்னையதிகாரத்தில் சொல்லப்பட்ட பிரணவத்தின் இயல்பு இவ்வதிகாரத்தில் இகந்துபடாமைக் காக்கப்பட்டது.*

**2536.** நனவாதி ஐந்தையும் நாதாதி வைத்துப்
பினமாம் மலத்தினைப் பின்வைத்துப் பின்சுத்தத்
தனதாம் சிவகதி சத்தாதி சாந்தி
மனவாச கங்கெட்ட மன்னனை நாடே. 7

---

*2536. **தெளிவுரை :-** 'அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம்' என்னும் பிரணவ கலைகள் ஐந்தையும் முறையே யோகாவத்தையில் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் அவத்தைகளாகிய 'பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை; தியானம், சமாதி' என்னும் ஐந்திலும் பொருந்த வைத்துப் பயின்றால், உன்னின் வேறாகாது உடனாய் ஒன்றி நின்ற ஆணவ மல சத்தி உன்னின் வேறாய்ப் பிரியும். அங்ஙனம் அது பிரியுமிடத்து நின்மலாவத்தையில் சாக்கிரம் முதலிய ஐந்திலும் மேற்சொல்லியவாறே அகாரம் முதலிய கலைகளை வைத்துப் பாவிக்க, ஆணவ சத்தி உன்னை மறைக்க மாட்டாது. கீழ்ப்பட்டு அடங்கும். அஃது அடங்கவே, ஆன்ம சுத்தி உண்டாகி, அதன் பின் ஆன்ம லாபமும் கிடைக்கும். இவ்வாறு சத்தாதி ஐம்புலன்களையும் உணரும் ஐம்பொறிகளையும், அவற்றின் வழி ஓடுகின்ற மனத்தையும், அதற்குமேல் வாக்கையும் கடந்த தலைவனாகிய சிவனை நீ உணர்வாயாக.*

***குறிப்புரை :-*** *"நாதாதி" என்றது, எதிர் நிரல் நிறையாகக் கூறியது. "வைத்து" என்பதன்பின், 'பாவிக்க' என்னும் சொல்லெச்சம் வருவிக்க. 'பின்னமாம்' என்பது இடைக்குறைந்து நின்றது. பின்னமாதல், வேறாதல், 'பின்னமாம் மலத்தை' என்ற அனுவாதத்தால் பின்னமாதல் பெறப்பட்டது. "பின்" என்றது முற்படாது அடங்குதலை. 'பின்னாக வைத்து' என்க. 'பின் சுத்தத்து ஆம்' என்றதனால், பின் சுத்தநிலை வாய்த்தல் பெறப்பட்டது. 'சிவகதி தனது ஆம்' என மாறுக. சத்தாதி ஆகுபெயர். சாந்தி - அடங்குதல். "கெட்ட" என்றது, 'கடந்த' என்றபடி. 'சாந்தியை உடைய, கெட்ட மன்னன்' என்க.*

*இதனால், பிரணவம் மேற்கூறியவாறு சொரூபானந்தத்தில் உய்க்குமாறு இது' என்பது கூறப்பட்டது.*

*2537. **தெளிவுரை :-** (முன் மந்திரத்தில் "மன்னன்" என ஆண்பாலாகச் சொல்லப்பட்ட சிவம்) தனக்குப் புறம்பாக யாதொரு பொருளும் இல்லாதபடி எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி நிற்றல் பற்றி, 'பூரணத்துவம் உடையது' என்று சொல்லப்படுகின்றது. (அஃதன்றி, 'அது தவிர வேறு பொருள் இல்லை' என்னும் கருத்தில் 'அது பூரணத்துவம் உடையது' என்று சொல்லப்படவில்லை).*

> *"அகிலாண்ட கோடி யெல்லாம்*
> *தன் அருள் வெளிக்குளே தங்கும்படிக்கு இச்சை வைத்து"*

*என்னும் தாயுமானவர் பாடல் இங்கு நோக்கத்தக்கது.*

**2537.** **பூரணி யாவது புறம்பொன் றிலாமையால்**
**பேர்அணி யாதது பேச்சொன் றிலாமையால்**
**ஓர்அணை யாததுஒன்றும் இலாமையால்**
**காரணம் இன்றியே காட்டும் தகைமைத்தே.** **8**

---

*வாக்கைக் கடந்து நிற்றலால் அஃது எந்த ஒரு பெயராலும் திட்டமாகச் சொல்ல ஒண்ணாதது. குணங்குறி ஒன்றும் இன்மையால் உயிர்களால் அனுமித்து உணரப்படாதது. ஆயினும் பிற காரணங்களால் காட்டப்படாது, தன்னாலே தான் காட்டப்படுவதாம்.*

*குறிப்புரை :-*

*ஊரிலான் குணம் குறியிலான் செயலிலான் உரைக்கும்*
*பேரிலான், ஒரு முன்னிலான், பின்னிலான், பிறிதோர்*
*சாரிலான், வரல், போக்கிலான், மேலிலான் தனக்கு*
*நேரிலான் உயிர்க் கடவுளாய் என்னுளே நின்றான்.*

*என்னும் கந்த புராண (அசுர காண்டம் - மாயை படலம் 1)ச் செய்யுளையும்,*

*"ஒன்றும் குறியே குறிஆத லால், அதனுக்கு*
*ஒன்றும் குறிஒன் றிலாமையினால் - ஒன்றோடு*
*உவமிக்க லாவதுவும் தானில்லை"* **- திருக்களிற்றுப்படியார் - 10**

*"காண்பாரார் கண்ணுதலாய், காட்டாக் காலே" - தி.6 ப.95 பா.3*

*என்னும் சாத்திர தோத்திரங்களையும் காண்க. ஓர் - ஓர்தல்; முதனிலைத் தொழிற்பெயர். தன்னாலே தான் காட்டப்படுதலாவது, ஞாயிற்றைக் காணலுறுவார்க்கு அது பிறிதோர் ஒளியால் காட்டப்படாது, அது தனது ஒளியாலே தான் காட்டப்படுதல் போல, அதனது அருளாலே அது காட்டப்படுதலாம். பூரணி - பூரணத்துவம் உடையது. உபநிடதம் முதற் பொருளைப் 'பூர்ணம், பூர்ணம்' எனப் பலமுறை கூறும்.*

*இதனால், 'சீவன் சிவனாவது அவனது அருளாலே யன்றித் தன்னாலன்று' என்பது கூறப்பட்டது. இது பற்றியே 'அஸி' பதப்பொருள் திருவருள் ஆகின்றது.*

*"அவன் இவன் ஆனது அவன் அருளா லல்லது*
*இவன் அவன் ஆகான் என் றுந்தீபற;*
*என்றும் இவனே என் றுந்தீபற" - திருவுந்தியார் - 40*

*என்பதனால், சீவன் சிவன் ஆம் முறைமையைத் தேர்ந்து கொள்க.*

***2538. தெளிவுரை :-*** *'நீ அது ஆகிறாய்' என்னும் பொருளதாய் ஆசிரியர் மாணவனுக்கு உபதேசிக்கின்ற 'தொம்தத்தசி' (தத்துவமசி) என்னும் அந்த மகா வாக்கியமே, மாணாக்கன் பயில்கையில், "நான் அது ஆனேன்" என்னும்*

**2538.** 'நீஅது ஆனாய்' எனநின்ற பேருரை
ஆய் 'அது ஆனேன்' என்னச் சமைந்து அறச்
சேய சிவமாக்கும் சீர்நந்தி பேரரு
ளாய்அது வாய்அனந் தானந்தி யாமே. **9**

**2539.** உயிர்பரம் ஆக உயர்பர சீவன்
அரிய பரம்ஆக அச்சிவம் வேதத்
திரயிலும் சீராம் பராபரன் என்ன
உரிய உரையற்ற ஓம்மயம் ஆமே. **10**

---

*பொருளதாகிய 'அஹம்பிர்மாஸ்மி' என்னும் மகாவாக்கியமாய் நின்று, சிவனை அதன் பாசங்கள் முற்றும் அற்றொழியப் பண்ணி, வாக்கு மனங்கட்கு அப்பாற்பட்ட சிவமாகச் செய்யும். அங்ஙனம் பயில்கின்ற சீவன் முதலில் சிவனது அருளே தானாய்ப் பின்பு சிவனேயாய், அவனது முடிவில்லாத ஆனந்தத்தை அனுபவிப்பதாகும்.*

*குறிப்புரை :-* பேருரை - மகாவாக்கியம். ஆய் - ஆசிரியரது உபதேசப் பொருளை வேதாகமங்களின் வழியால் சிந்தித்துத் தெளியப்படுத்துகின்ற சிவம். "அனந்தானந்தி" என்பது வடமொழித் தீர்க்க சந்தி. முத்தியில் ஆன்மாச் சிவத்தோடு சேர்ந்து சிவமாய் விடுமேயல்லது, அதன்பின் அது சிவனது ஆனந்தத்தை அனுபவிக்கும் பொருளாய் இராது" எனச் சுத்த சைவர் கூறுவர். அதனை மறுத்தற்கு 'ஆனந்தமாம்' என்னாது, ஆனந்தியாமே" என்றார்.

இதனால், 'மகாவாக்கியங்கள்' படர்க்கை, முன்னிலை, தன்மை' என்னும் இட வேறுபாட்டால் வேறு வேறு போலத் தோன்றுகின்றனவேயன்றிப் பொருளால் வேறல்ல' என்பது உணர்த்தி, அதனால், உபதேசத்தால் பெற்ற வாக்கியப் பொருளைப் பயிற்சியில் வைத்துப் பயிலும் சீவன் சிவன் ஆம் முறைமையும் அதன் பயனும் கூறப்பட்டன.

*2539. தெளிவுரை :-* முன் மந்திரத்திற் கூறிய முறையால் சீவன் சிவமான பொழுது, அது 'சீவான்மா' எனப்படாது, பரமான்மா' என்றே சொல்லப்படும். (இவ்வாறு சருவஞ்ஞானோத் தரத்தில் சொல்லப்பட்டது என்பதைச் சிவஞான போத ஆறாம் சூத்திர மாபாடியத்தில் காண்க). அங்ஙனம் சொல்லப்படுமாறு சீவன் சிவமேயாய் விட்ட பொழுது, அவ்வாறான அந்த ஆக்கச் சிவம், மூன்று வேதங்களிலும் பராபரம்' எனப் புகழ்தற்கு உரியது. சொல் இறந்ததும், பிரணவமே வடிவானதும் ஆன அந்தச் சிவமேயன்றி, வேறன்றாம்.

*குறிப்புரை :-* பர சீவன் - பரமான்மா. 'பர சீவனாய்' என ஆக்கம் வருவிக்க. 'அரிய சிவம் ஆக ஆம்' என இயைத்து முடிக்க. 'ஆக' என்னும் செயவெனெச்சம் காரணப் பொருட்டு. ஆக்கச் சிவத்தைக் குறிக்க, 'அச்சிவம்' எனச் சுட்டினார்.

**2540.** வாய்நாசி யேபுரு மத்தகம் உச்சியில்
ஆய்நாசி உச்சி முதலவை யாய்நிற்கும்
தாய்நாடி யாதிவாக் காதி கலாதிகள்
சேய்நா டொளியாச் சிவகதி ஐந்துமே. **11**

---

*பின்னர்க் கூறியன எல்லாம் இயற்கைச் சிவத்தைக் குறித்து, 'திரயத்திலும்' இடைக் குறைந்து நின்றது. திரயம் - மூன்று 'இறுதி, வேதமாகிய அதர்வணம் ஏனை மூன்று வேதங்களுள் அடங்கும்' என்னும் கருத்தால், "வேதம் த்ரயீ" எனக் கூறும் வழக்கு உண்டு ஆதலின், "வேதத்திரயத்தில்" என்றார். "என்ன" என்பது, "உரிய" என்பதனோடு முடிந்தது. "உரிய, உரையற்ற" என்பன "ஓம் மயம்" என்பதனோடு முடிந்தன. "மயம்" என்றது, மயமான பொருளை. 'சிவம் ஓங்காரமே' என்றல் வேத வழக்கு. "ஓம்மயம் ஆமே" என்றது உடம்போடு புணர்த்தது. ஆகவே 'ஓம்மயம் ஆனதும் ஆகும்' என முன்னர்க் கூறியவற்றோடு கூட்டி யுரைத்தல் கருத்தாயிற்று. 'ஓம்மயமே ஆம்' எனப் பிரிநிலை ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டி உரைக்க. இவ்வாறு வலியுறுத்திக் கூறியது, 'முத்தியில் சீவான்மாவிற்கும், பரமான்மாவிற்கும் இடையே தூலமும், சூக்குமமும் ஆகிய வேறு பாடன்றிப் பிறிது வேற்றுமை யில்லை' என்பது உணர்த்துதற்கு, 'சிவம், சூக்குமம்' என்பது உணர்த்துதற்கு அது, 'பரம்' எனப்பட்டது. இம்மந்திரம் இரு விகற்ப எதுகையதாய் நின்றது.*

*இதனால், மகாவாக்கியங்களில் அநுபவ வாக்கியத்தால் உளதாகும் பயனது சிறப்புக் கூறப்பட்டது.*

*2540. தெளிவுரை :- மேல் வாயின்கண் உள்ள, நாசிக்குச் செல்லும் வழியிடம், (என்பது நாக்கின் அடிக்கு மேல் உள்ள இடம். இஃது 'அண்ணம்' எனப்படும்). புருவ நடு, நடு நெற்றி, உச்சித் தலை என்னும் நான்கும் சுழுமுனை வழியாகச் செல்லும் பிராணன் செல்லும் வழிகளில் சிறப்பானவையாகும். அவற்றிலும் புருவநடுவும், உச்சியும் சிறப்பிற் சிறப்பானவை. சுழுமுனை நாடிக்கும் முதலாய் உள்ள மூலதாரத்தில் உறங்கிக் கிடக்கின்ற, நால்வகை வாக்கிற்கும் முதலாகிய குண்டலி சத்தி எழுங்தோங்கிப் பிராணனுடன் மேற்சொல்லிய இரண்டிடங்களை அடைந்து, அவற்றிற்கு அப்பால் உள்ள பொருளைக் காணும் ஒளியாக அமையுமாயின் அப்பொழுது, 'கலை, காலம், நியதி, வித்தை, அராகம்' என்னும் ஐந்து தத்துவங்களும் சிவகதியை அடைவதற்குத் துணையாகிவிடும்.*

*குறிப்புரை :- என்றது, 'பசு கரணங்கள் பதி கரணங்களாகப் புருடன் சிவமாவான்' என்றபடி, 'நாசி இரண்டனுள் முன்னது நாசிக்குச் செல்லும் வழியையும், பின்னது நாசியின் அடிப்பாகத்தையும் உணர்த்தின. பிராசாத யோகத்தில், அகார உகார மகார விந்து நாத கலைகள் முறையே, 'மூலாதாரம் முதல் இருதயம் வரையிலும், அப்பால் அடி அண்ணம் வரையிலும், அப்பால்*

**2541.** அறிவறி யாமை இரண்டும் அகற்றிச்
செறிவறி வாய்எங்கும் நின்ற சிவனைப்
பிறிவறி யாத பிரான் என்று பேணார்
குறியறி யாதவர் கொள்ளறி யாரே. **12**

---

*புருவ நடு வரையிலும், அப்பால் எவ்விடத்திலும் பரவி நிற்கும்' எனப் பிராசாத நூல்கள் கூறும். ஆகவே, 'அகார உகார மகார கலைகளைக் கடந்த விந்து நாதங்களும் ஒருவனுக்கு இனிது விளங்குமாயின், அவன் துவாதசாந்தத்தில் விளங்கும் சிவனைத் தரிசித்துச் சிவம் ஆவான்' என்றற்கு இவ்வாறு கூறினார்.*

*தாய்நாடி - நடு நாடி; சுழுமுனை, 'அதன் ஆதி' எனவும் 'வாக்குகளின் ஆதி' எனவும் கொண்டு பொருள் உரைக்க. சேய் நாடு ஒளி - தொலைவில் காணத்தக்க ஒளி. தொலைவு, துவாதசாந்தம். 'ஆக' என்பது கடைக் குறைந்து நின்று, "சிவகதி" என்பதன் பின் தொக்கு நின்ற 'ஆம்' என்பதனோடு முடிந்தது. 'ஒளியென' என்பதே பாடமாயினும் 'ஒளி என்று ஆக' என்பதே பொருளாம். "கலாதிகள்" என்பதை ஈற்றடியில் கூட்டி, 'கலாதிகள் ஐந்தும் சிவகதி ஆம்' என இயைத்து முடிக்க.*

*இதனால், 'முன் மந்திரத்தில் கூறியவாறு சீவன் சிவன் ஆவதற்குப் பிராசாத யோகம் உறுதுணை யாகும்' என்பது கூறப்பட்டது.*

*2541. தெளிவுரை :- கருவி கரணங்களால் வரும் அறிவைக் கொண்டு புறப் பொருள்களை அறிந்து வருகின்ற சிற்றறிவையும், கருவிகள் முடங்கிய வழி ஆணவ மலத்தால் உண்டாகின்ற அறியாமையும் ஆகிய இரண்டையும், எங்கும் நிறைந்துள்ள சிவனது பேரறிவால் நீங்கும்படி நீக்கி, அந்த அறிவினாலே சிவனை, 'அவனே உயிர்களில் என்றும் நீக்கமின்றி நிறைந்திருக்கின்ற முதல்வன்' என உணர்ந்து அவனையே பற்றி நிற்கும் முறையை அறியாதவர்கள் (தாம் மெய்ப் பொருளை அறிந்து பற்றி விட்டதாகக் கருதிக்கொள்ளினும்) அது மாட்டாதவரே ஆவர்.*

*குறிப்புரை :- மேற்சொல்லப்பட்ட சீவ துரியம் பிராசாத யோகம், சிவ துரியம் ஆகியனவே மெய்ப்பொருளை அடையும் நெறியாகலானும், அவை சைவ சித்தாந்தத்தில் மட்டும் சொல்லப்படுதலாலும் ஏனைச் சமயத்தார் அவற்றை அறிந்து அவற்றின் வழி மெய்ப்பொருளை அடையமாட்டார்' என்றபடி. சிவஞான சித்தியும் இவ்வாறு,*

*"சித்தாந்தத் தேசிவன்தன் திருக்கடைக்கண் சேர்த்திப்*
*செனனம் ஒன்றிலே சீவன் முத்தராக*
*வைத்தாண்டு மலம்கழுவி ஞான வாரி*
*மடுத்(து) ஆனந்தம் பொழிந்து, வரும் பிறப்பை அறுத்து,*

**2542.** அறிவார் அறிவன அப்பும் அனலும்
அறிவார் அறிவன அப்பும் கலப்பும்
அறிவான் இருந்தங் கறிவிக்கி னல்லால்
அறிவான் அறிந்த அறிவறி யோமே. **13**

---

*முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்பன் என்று*
*மொழிந்திடவும், உலகரெல்லாம் மூர்க்கராகிப்*
*பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்*
*பெருங்குழியில் வீழ்ந்திடுவர் இது என்ன பிராந்தி"*
*- சுபக்கம் - சூ. 8. 16*

*என இரங்கிக் கூறுமாறு காண்க.*

*"செறி அறிவாய் எங்கும் நின்ற சிவன்" என்றது உடம்பொடு புணர்த்தது ஆதலின் அதற்கு இவ்வாறு உரைக்கப்பட்டது. குறி - குறிக்கோள்; என்றது கொள்ளத்தக்க பொருளை. 'கொள்ள' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'கொள்ளவும்' என, இறந்தது தழுவிய எச்ச உம்மை விரிக்க. ஏகாரம், தேற்றம்.*

*இதனால், பிற சமயத்தார்தம் நிலைநோக்கி இரங்குதல் கூறப்பட்டது.*

*2542.* ***தெளிவுரை :-*** *பொருள்களைத் தாமாக அறிபவர் யாவரும் அறியும் பொருள்கள் காட்சிப் பொருள்களே. அவையேயன்றிக் கருத்துப் பொருள்களும் உள ஆதலால், அவற்றை அறிவிப்பவன் ஒருவன் இருந்துகொண்டு அறிவித்தாலன்றி, அறிபவன் தானே அறிந்து பெற்ற அறிவாக நாம் எந்த அறிவையும் அறிகின்றிலம்.*

***குறிப்புரை :-*** *'மெய்ப் பொருள் அறிவு ஆசிரியனையின்றி உண்டாகாது' என்றபடி. "அறிவார்" என்றது, தாமாகவே அறிபவராகத் தம்மைக் கொள்பவரை, அவரது மதம் பற்றிக் கூறியது. இவர் 'ஆசிரியன் வேண்டா' என இகழ்பவர். இரண்டாம் அடியில் 'அப்பூவும்' என்பது, 'அப்பும்' எனத் திரிபெய்தி நின்றது. அன்றேல், கூறியது கூறிற்றாம். "வானிற் கலப்பு வைத்தோன்" (தி.8 திருவண்டப் பகுதி - 23) என்றாற் போலும் திரு மொழிகளை அவர் கொள்ளாமை பற்றி, எங்கும் சென்று கலப்பதாகிய காற்றையே இங்குக் "கலப்பு" என்றார். எனவே, 'காணாதான்- கண்டானாம் தான் கண்டவாறு' (திருக்குறள் - 849) என்னும் பொதுமறை மொழிக்கு இலக்கியமாய் உள்ளார். உடன்படுவனவாகிய நான்கு பூதங்களையே இங்குச் செய்யுட்கு ஏற்பச் சொற்சுருங்கி வர, ஏற்ற பெற்றியால் கூறினார் என்க. "காட்சிப் பொருளன்றிக் கருத்துப் பொருள் இல்லை" என்பவரை, 'உலகாயதர்' என்றும், 'சாருவாகர்' என்றும் 'பூதவாதிகள்' என்றும் கூறுவர். "அறிவான்" இரண்டில் முன்னது, 'முன்பே அறிந்துள்ளவன்' எனவும், பின்னது, 'இனி அறிபவன்' எனவும் பொருள் பயந்தன. தொடர் வேறாகலின் பின்னதில்*

**2543.** அடிதொழ முன்னின் றமரர்கள் அத்தன்
முடிதொழ ஈசனும் முன்னின் றருளிப்
படிதொழ நீபண்டு பாவித்த எல்லாம்
கடிதெழக் காண்என்னும் கண்ணுத லானே. **14**

---

*பன்மையொருமை மயக்கம் இன்மை அறிக. இனிப் பின்னரும், 'அறிவார்' என்றே பாடம் ஓதலும் ஆம். "அறிவான்" என்பதை ஆன் உருபு ஏற்ற பெயராக உரைத்தல் பொருந்தாமையறிக.*

*இனிக் காட்சிப் பொருள்களையும் முதற்கண் முதியோர் அறிவிக்கவே அறிதல் அனுபவம் ஆதலின், 'மெய்ப் பொருளை யாமே அறிவோம்' என்றல் பொருந்தாமை உணரப்படும். 'சித்தாந்த நெறி ஆசிரியன் அருளை வேண்டி நிற்பதே' என்பதை நாயனார், மேலெல்லாம் பலவிடத்தும் (பா. 99, 138) கூறினார், மேலும் கூறுவார்.*

*எமக்கென் எவனுக்கு எவைதெரியும், அவ்வத்*
*தமக்கவனை வேண்டத் தவிர்.* - திருவருட்பயன் - 46

*ஞானம் இவன்ஒழிய நண்ணியிடும், நற்கல்அனல்*
*பானு ஒழியப் படின்.* - திருவருட்பயன் - 50

*என்றாற்போலச் சாத்திரங்களும் குருவருளை வலியுறுத்தி ஓதுதல் காண்க.*

*இதனால், மேற்கூறிய ஞான நெறி, ஆசிரியன் அருளையின்றி அமையாது' என்பது, 'அது வேண்டா' என்பாரை நோக்கி வலியுறுத்தப்பட்டது.*

*(இதன்பின், "அதீதத்துள்ளாகி அமர்ந்தவன் நந்தி" என்னும் மந்திரம் மேல், 'பரலட்சணம்' என்னும் அதிகாரத்தில் வந்தது).*

*2543. **தெளிவுரை :-** சிவபெருமானைத் தேவர்கள் அவன் திருமுன் நின்று அவனது திருவடிகளைத் தலை வணங்கிப் பணிய, அவனும் அவர்கட்கு முன்னின்று அவர்கள் வேண்டுவனவற்றை அளித்தருளுவன். இனி, உலகமெல்லாம் 'ஞானி' என்று வணங்கும்படி நிற்கின்ற உனக்கு அவன், நீ முன்பு யோக பாவனையில் பாவனையாகப் பாவித்தவைகளையெல்லாம் இப்பொழுது விரைவில் உண்மையாய் விளங்கக் கண்டு இன்புறுவாயாக' என்று அருள்புரிவான்.*

*குறிப்புரை :- 'போகம், மோட்சம்' என்பவற்றில் வேண்டுவார் வேண்டுவதைத் தருபவன் சிவன், அவன்பால் நீ மோட்சத்தையே வேண்டுவாயாக என மாணாக்கனுக்கு அறிவுறுத்தவாறு. 'அத்தனை' என்னும் இரண்டன் உருபு தொகுக்கப்பட்டது. 'முடிதொழ' என்றது, முன்பு "அடிதொழ" எனப் பொதுவாகக் கூறியதைச் சிறப்பாக விளக்கிக் கூறியவாறு. "ஈசன் கண்ணுதலான்" என்பன*

**2544.** நின்மல மேனி நிமலன் பிறப்பிலி
என்னுளம் வந்துஇவன் என்அடியான் என்று
பொன்வளர் மேனி புகழ்கின்ற வானவன்
நின்மலன் ஆகென்று நீக்கவல் லானே. **15**

---

*சுட்டுப் பெயரளவாய் நின்றன. 'படிதொழப் பாவித்த' என இயையும். 'கடி தொழ' என்பது பாடமன்று.*

*இதனால், 'சிவன் மோட்சம் தருபவனல்லன்' எனவும், 'மோட்சமே தருவான்; போகம் தாரான்' எனவும் கூறிப் பிணங்குவோரையெல்லாம் மறுத்து 'அனைத்தும் தருவான்' என்பதும், 'ஆயினும் உயர்ந்தோர் அவன்பால் மோட்சத்தையே வேண்டிய மேற்கூறிய நெறியில் நிற்பார்' என்பதும் கூறப்பட்டன.*

*2544.* ***தெளிவுரை :-*** *வேதங்களில், 'பொன்னிறம் விளங்க நிற்பவன்' (இரணிய கருப்பன்) எனப் புகழப்படுகின்ற சிவன், இயல்பாகவே மலம் இல்லாத தூயோன் ஆதலின் பிறப்பில்லாதவனாய் அருளே திருமேனியாகக் கொண்டு, 'இவன் என்னுடைய அடியவன்' என்று கருணைகூர்ந்து, என் உள்ளம் மகிழும்படி என் எதிர்வந்து இவனும் என்னைப் போல மலம் நீங்கித் தூயன் ஆகுக' எனக் கருதுதல் செய்து, அவ்வாறே நீங்குதற்கரிய எனது மலத்தை நீக்கவல்லவனாயினான்.*

***குறிப்புரை :-*** *'இதற்கு யான் அவனுக்கு அடிமை பூண்டிருந்ததே காரணம்' என்பது இசையெச்சமும், 'எனவே, பிறரும் அவனுக்கு அடிமை பூண்பாராயின், அவன் அவ்வாறு வந்து அருள்புரிவன்' என்பது குறிப்பெச்சமும் ஆம். நின்மலன் ஆகுக எனக் கருதினான்' என்றது, "அயமாத்மா பிரஹ்மம்", அல்லது "சோய மஸ்தி" என்னும் மகாவாக்கியத்தைப் பயன்படுத்தியதைக் குறித்ததாம். ஆகவே, "வந்து" என்றது குருவாகி எதிர்வந்ததைக் குறித்ததாயிற்று. அதனால், "என் உளம்" என்பதன் பின் 'மகிழ' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றதாம். மூன்றாம் அடியை முதலிற் கூட்டுக. அன்றி, 'அஃதே பாடம்' என்றலுமாம். மேனி, மேனியனைக் குறித்த ஆகுபெயர். நின்மல மேனியன் ஆதற்குக் காரணம் பிறப்பின்மையும், பிறப்பின்மைக்குக் காரணம் மலம் இன்மையுமாம். "மாயைதான் மலத்தைப் பற்றி வருவதோர் வடிவமாகும்" என்பது சிவஞான சித்தி (சுபக்கம் - சூ - 1.41). 'பொன்வளர்மேனி என' என்று, 'என' என்பது வருவிக்க. 'ஆக' என்னும் வியங்கோளின் இறுதிநிலை தொகுத்தலாயிற்று. "வல்லான்" என்பது இறந்த கால வினைக் குறிப்புப் பெயர்.*

*இதனால், மகா வாக்கியம் பற்றித் தமது அனுபவம் கூறப்பட்டது.*

*2545.* ***தெளிவுரை :-*** *நான் இவ்வுலகில் 'யான், எனது' என எனக்கு இருந்த பற்றை எனது புண்ணிய வாசத்தால் துறந்து, வித்தியா குரு, கிரியா குரு*

**2545.** துறந்துபுக் குள்ளொளி சோதியைக் கண்டு
பறந்தஎன் உள்ளம் பணிந்து கிடந்தே
மறந்தறி யாஎன்னை வானவர் கோனும்
இறந்து பிறவாமல் ஈங்குவைத் தானே. **16**

**2546.** மெய்வாய்கண் மூக்குச் செவியெனும் மெய்த்தோற்றத்து
ஐவாய அந்தக் கரணம் அகிலமும்
எவ்வாய் உயிரும் இறைஆட்ட ஆடலால்
கைவாய் இலாநிறை எங்கும்மெய் கண்டதே. **17**

---

*இவர்களால் என் உள்ளே ஒளிந்து நிற்கும் ஒளியாகிய சிவனை ஓராற்றால் கண்டு, முன்பு அலையாய் அலைந்து கொண்டிருந்த எனது மனம் ஒருங்கி அவனிடத்தே அடங்கிக் கிடக்க, அதனால் அவனை மறவாதவனாகிய என்னை அவனும், இறத்தலும், பின்பு பிறத்தலும் ஆகிய இவைகளை அடையாதபடி செய்து, பின்னும் இவ்வுலகிலே இருக்க வைத்தான்.*

*குறிப்புரை :-* 'அதற்குக் காரணம் எனது பிராரத்தம்' என்பது குறிப்பெச்சம். இடையில் வருவித்துரைத்தன இசையெச்சங்கள். கிடந்து - கிடந்தமையால், இறத்தல், தூல உடம்பு நீங்குதல், வீடு பெறுவார்க்குத் தூல உடம்போடே சூக்கும அதி சூக்கும உடம்புகளும் உடன் நீங்கும். அஃதன்றியும் தூல உடம்பும் வருத்தமின்றி நீங்குதலன்றி, நோயால் வருந்தி நீங்குவதன்றாம். 'அந்நிலையே தமக்கு வாய்க்கும்படி செய்தருளினான்' என்பதையே 'இறவாமல்' எனவும், சூக்கும அதிசூக்கும உடம்பு நீங்காதோர் மீண்டும் பிறிதொரு தூல உடம்பை எடுப்பர் ஆதலின், 'அந்நிலை தமக்கு எய்தாதபடி செய்தருளினான்' என்பதையே "பிறவாமல்" எனவும் கூறினார். "பிறவாமல்" என்பதன் பின், 'செய்து' என ஒரு சொல் வருவிக்க. இஃது அறியாதார் உடம்பு நீங்குவனவற்றையெல்லாம் 'இறப்பு' என ஒன்றாகவே கருதுவர். 'சாவா வரம்' என்பதும் தூல உடம்பு மட்டும் தனித்து நீங்காத நிலையைப் பெறுதலேயாம். 'ஞானிகள் பிராரத்தம் காரணமாக இவ்வுலகில் நின்றாராயினும் அவர்களது வாழ்வு உலகிற்கு உபகாரமாய் அமையும் என்பது தோன்ற "ஈங்கு வைத்தான்" என்றார்.

இதனால், மகாவாக்கிய அனுபூதிமான்கள் சீவன் முத்தராய் உலகிற்கு நலம் புரிபவராதல் கூறப்பட்டது.

*2546. தெளிவுரை :-* 'மெய், வாய், கண், மூக்கு, செவி' எனப்படுகின்ற ஐந்து புற அறிவுக் கருவிகளும், 'மனம், புத்தி, சித்தம், அகங்காரம்' எனப்படுகின்ற நான்கு அக அறிவுக் கருவிகளும், பிறவும் கூடிய உடம்புகளும், அறிவின்றி விரிந்து பரந்துள்ள பல உலகங்களும், அவற்றைச் சார்ந்து எவ்விடத்தும் அறிவையும் இன்பத்துன்ப நுகர்ச்சிகளையும் பெற்று வருகின்ற அளவற்ற உயிர்களும் ஆகிய

*அனைத்தும் சிவன் ஆட்டவே ஆடுகின்றன. இதனை, "ஆட்டுவித்தால் ஆர் ஒருவர் ஆடாதாரே" (தி.6 ப.93 பா.1) என்னும் திருமுறையும், "அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது" என்னும் முதுமொழியும் விளக்கி நிற்கின்றன. அதனால் சிவனது கை, வாய் முதலிய உறுப்புகளுள் யாதொன்றும் இல்லாத பெருநிறைவு எங்கும் உள்ளதாகிய அத்துவித உண்மை அருளாளரால் நன்குணரப்பட்டது.*

***குறிப்புரை :-** சத்தினை உபநிடதம் 'அத்துவிதம்' எனக் கூறியது, 'அஃது அனைத்துப் பொருளிலும் உடலில் உயிர் போலக் கலப்பினால் ஒன்றாயும், கண்ணில் அருக்கன்போலப் பொருள் தன்மையால் வேறாயும், உயிர்க்கு உயிராதல் தன்மையால் உடனாயும் இயைந்து நிற்கும் இயைபினைக் குறித்தது' என்பதே சித்தாந்தம் ஆகலின், 'அவ்வுண்மையை உணர்ந்தோரே மகாவாக்கியப் பொருளை அனுபவமாக உணர்வர்' என்றற்கு இங்ஙனம் வகுத்தோதி முடிக்கப்பட்டது. இதனானே வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறும் அறிக. மெய்த் தோற்றம் - புறத்துக் காணப்படுதல். 'ஐ வாயவும், அந்தக் கரணமும்' என அவற்றிலும் உம்மை விரிக்க. ''நிறை'' என்பதற்கு, 'அவனது நிறை' என வருவித்துரைக்க. 'எங்கு ஆம் மெய்' என்க. கண்டது - காணப்பட்டது.*

## 37. விசுவக் கிராசம்

***விசுவக் கிராசம்*** *- விசுவம் - உலகம். கிராசம் - விழுங்கப்படுவது. உலகை விழுங்குதல். விழுங்குதல், இங்கு, ஒடுக்குதலாம். அறிவுடையது, அறிவில்லது' என உலகம் இருவகைத்து. அறிவுடை உலகமாவது உயிர்த்தொகுதி. பிறவற்றது தொகுதி அறிவிலா உலகம். இனி அறிவிலா உலகமும், 'சொல்லும், பொருளும்' என இரு வகைத்து, 'இவை அனைத்தையும் ஒரு காலத்து இறைவன் ஒடுக்கி, மீள உண்டாக்குவான்' என்பதும், 'ஒடுக்கக் காலத்தில் பக்குவம் எய்திய உயிர்களைத் தன்னோடு அவன் சேர்த்துக்கொள்வான்' என்பதும் சித்தாந்தம். 'இவையெல்லாம் இல்லை' எனப் பிணங்குவர் உலகாயதரும், மீமாஞ்சகரும். அவருள் உலகாயதர் 'உயிர்' என ஒன்று தனியே இல்லை என்பர். மீமாஞ்சகர், உயிர்கள் உள்ளன; ஆயினும், அவைகளை ஓர் இறைவன் ஒடுக்குதலும், படைத்தலும் இல்லை. பற்றுடைய உயிர்கள் தங்கள் வினை காரணமாகத் தாங்கள் பல பிறவிகளை எடுத்துப் பற்றற்ற காலத்தில் யாதோர் உடம்பையும் எடாது கல்லுப்போல் கிடக்கும். உடம்புகள் இயல்பாகவே தோன்றியழியும். உலகம் தோன்றுதலும் இல்லை; அழிதலும் இல்லை. உலகில் சில பகுதிகள் சில காலங்களில் எவையேனும் சில காரணங்களால் அழியலாம். அழிந்த பகுதிகள் மீள எஞ்சிய பகுதிகளால் நிரம்பிவிடும். முற்றழிவு என்பது எக்காலத்தும் இல்லை' என்பர்.*

*சாங்கியர், 'உலகத்தைப் பிரகிருதியே தோற்றுவித்து ஒடுக்கிக் கொள்ளும். அதற்கு வேறொருவன் வேண்டா. பிரகிருதியின் மயக்கத்தால் மயங்குகின்ற உயிர் அதன் காரியங்களை உற்று நோக்கி அம்மயக்கத்தினின்றும் நீங்கி, அலைவற்றிருக்கும். அஃது ஒருவனிடத்து அடங்கி ஒடுங்குவதும் இல்லை. அவனால் வெளியில் விடப்படுவதும் இல்லை' என்பர். இவர் கூற்றையெல்லாம் மறுத்து அறிவுடையதும், சொல்லும் பொருளுமாய் அறிவில்லதும் ஆகிய இருவகை உலகங்களையும் ஒடுக்கும் காலத்துத் தன்னுள் ஒடுக்கி, படைக்குங் காலத்தில் தன்னினின்றும் மீளத் தோற்றுவிப்பான்' என்னும் சித்தாந்தத்தை வலியுறுத்துவதே இவ்வதிகாரம். இது கூறாவிடில் மேலெல்லாம் 'சீவன் சிவமாகும்' எனக் கூறியது நிலை பெறாமையறிக.*

*அறிவிலா உலகம் மாயையில் தோன்றி, மாயையில் ஒடுங்குவதாயினும் அந்த மாயையும் இறைவனது வியாபகத்தை விட்டு அப்பால் இல்லாமையால் அறிவிலா உலகமும் இறைவனிடத்தில் தோன்றி, இறைவனிடத்தில் ஒடுங்குவதாகின்றது. இது விதையினின்றும் தோன்றி ஒடுங்கும் தாவரங்கள் விதைக்கு ஆதாரமாய் உள்ள நிலத்தினின்றும் தோன்றி ஒடுங்குவனவாகச் சொல்லப்படுதல் போல்வதாம். இதனை, "வித்துண்டா மூலம் முளைத்தவா தாரகமாம் - அத்தன்தாள் நிற்றல் அவர்வினையால் - வித்தகமாம் (சிவஞானபோதம் - சூ-1 அதி. 2) என்று அருளிச் செய்தார் மெய்கண்ட தேவர்.*

*"எப்படிச் சிலந்திப் பூச்சி (நூலை) உண்டாக்கி இழுத்துக் கொள்ளுகிறதோ, எப்படி ஓடதிகள் (மரம் செடி கொடிகள்) உண்டா கின்றனவோ, எப்படி உடம்பொடு*

*கூடியுள்ள மனிதனிடமிருந்து உரோமங்கள் உண்டாகின்றனவோ அப்படி அட்சரப் பிரம்மத்தி னிடமிருந்து இந்த உலகம் உண்டாகின்றது" என்கின்றது உபநிடதம்.*

*"யதோர்ண நாபி;*
*ஸ்ருஜதே, க்ருஹ்ணதே ச ப்ருதிவ்யா மோஷதய;*
*ஸம்பவந்தி! யதா ஸத: புருஷாத் கேச லோமாநி,*
*ததாக்ஷராத் ஸம்பவதீஹ விச்வம்!!"* - ***முண்டகம் - முதல் - 7***

***'சிலந்தி' என்னும் உடம்பில் நூலுக்கு முதல் உள்ளது. அதனின்றும் அவ்வுடம்பில் உள்ள உயிர் நூலை உண்டாக்கி வெளியிடுகின்றது. பின் ஒடுக்கிக் கொள்கிறது. இவ்வதிகாரம் எட்டு மந்திரங்களையுடையது.***

**2547. அழிகின்ற சாயா புருடனைப் போலக்**
**கழிகின்ற நீரிற் குமிழியைக் காணின்**
**எழுகின்ற தீயிற்கர்ப் பூரத்தை யொக்கப்**
**பொழிகின்ற இவ்வுடல் போம்அப் பரத்தே. 1**

---

*2547. தெளிவுரை :- விரையத் தோன்றி மறைகின்ற சாயா புருடனைப் போலவும், சிறிது நின்று கெடுகின்ற நீர்க்குமிழி போலவும், சிறிது நீட்டித்துக் கெடுகின்ற, தீயிடைப்பட்ட கருப்பூரத்தைப் போலவும், அசுத்தத்தைப் பொழிகின்ற தூலவுடம்பும் ஒரு காலத்தில் சிவத்தில் ஒடுங்குவதேயாம்.*

*குறிப்புரை :- தத்துவ முறைப்படி தத்துவங்களில் தோன்றும் உடம்புகள் தோன்றிய தத்துவங்களிலே மீள ஒடுங்கத் தத்துவங்கள் மாயையில் ஒடுங்கும் ஆகலின், அவை மாயைக்கு வியாபகமான சிவத்தில் ஒடுங்குவதேயாம்' என்றபடி.*

*''இவ்வுடம்பு'' எனத் தூல உடம்பையே சுட்டினாராயினும், உபலக்கணத்தால் சூக்கும அதிசூக்கும உடம்புகளும் கொள்ளப்படும்.*

*சாயா புருடன், நின்மலமாகிய வானத்தை உற்று நோக்குங்கால் அதன்கண் உள்ள ஒளி மண்டலத்தின் ஒரு கூறு மனிதனைப் போலத் தோன்றும் வடிவம். இது மிக விரைவில் மறைதலால் விரையக் கெடும் உடம்பிற்கு உவமையாயிற்று.*

*சாயா - சாயை; நிழல். ஒளி மண்டலத்தின் ஒரு கூறே புருடன் வடிவிற்றாய்த் தோன்றுதலின், அஃது இல்லதன்று; உள்ளதே. அஃது ஒடுங்குதல் ஒளிமண்டலத்திலேயாம். காணின் - காணுதலைப் போல. 'இன்' உவம உருபு. நீர்க்குமிழி நீரில் தோன்றி நீரில் ஒடுங்குதல் வெளிப்படை. கருப்பூரம் - பச்சைக் கற்பூரம். அது கூட்டுப் பொருளாகலின், அதன் கூறுகள் ஆற்றலாய் மாறி அவ்வப் பொருள் ஆற்றலில் ஒடுங்கும்.*

*சாயாபுருடன் ஒரு நெறிப்பட்ட மனநினைவில் தோன்றி உளதாய்நின்று, அந்நினைவு நீங்கும்போது தானும் நீங்கும்; அதுபோல, முத்தர்க்கு நுண்உடல், பருவுடல் இரண்டும், முதல்வன் சங்கற்பம் உள்வழி நின்று, உலகிற்கு மெய்ந்நெறி*

**2548.** உடலும் உயிரும் ஒழிவற ஒன்றின்
படரும் சிவசத்தி தானே பரமாம்
உடலைவிட் டிந்த உயிர்எங்கு மாகிக்
கடையும் தலையும் கரக்கும் சிவத்தே. **2**

---

*விளக்குதற்குக் கருவியாய்ப் பயன்பட்டு, அச் சங்கற்பம் மாறும் போது நுண்ணிய அருநிலை எய்தி மறையும் எனக் கொள்க. வாதவூரடிகள், திருநாளைப்போவார் என்போர் திருச்சிற்றம்பலத்தே மறைந்தனர் என்பதும், அப்பர் அடிகள் 'புண்ணியா உன் அடிக்கே போதுகின்றேன்' எனப் புகன்று திருப்பூம்புகலூர்ச் சிவலிங்கத்தே மறைந்தார் என்பதும் கருதற்பாலன; இவற்றை அருவ சித்தி எனக் கூறுவாரும் உளர்.*

*இனி, எழுகின்ற தீயிற் கர்ப்பூரத்தை ஒக்க என்றது ஆளுடைய பிள்ளையார் அருட் சோதியிற் கலந்தமைக்கு உவமை. இதனை அருவுருவ சித்தி எனக் கூறுவாரும் உளர்.*

*ஏற்புழிக்கோடலால் இவ்விரண்டு உவமையும் முத்தர் உடம்பு நீங்குமாற்றிற்கே கொள்ளப்பட்டன. உடம்பின் எச்சம் சிறிதும் இராது என்றபடி.*

*பரம் - திருவருள்; பரத்தேபோம் என்றாராயினும், விதையின் விளைவை அதற்குச் சார்பாகிய நிலத்தின் மேலேற்றி நிலம் விளைந்தது என்றாற்போல, பரத்தாற்றொழிற்படும் மாயையிற்போம் எனக் கொள்க.*

*அணையால் தடுக்கப்பட்டு நின்ற பெருவெள்ளம் அவ்வணை முறிந்தபோது, ஆற்றின்வழி விரைந்து ஓடிக் கடலில் கலந்து, பின் மீளாது; அதுபோல, மலத்தின் நீங்கிய ஆன்மா அயரா அன்பின் அரன்கழல் சென்று மீளாது. பண்டைய பயிற்சி வயத்தால் அன்றித் திருவருள் வயத்தால் ஒருகால் மீளினும் அதன் உடலும் கருவியும் சிவமாய் விளங்கி உலகத்தார்க்குச் சிவஞானத்தைப் பொழியும்.*

*இங்ஙனமாகவே, 'உடம்புகளை இறைவன் ஒடுக்குதல் இல்லை' எனல் வேண்டா என்பது குறிப்பெச்சம். முதல் மூன்று அடிகளின் ஈற்றிலும் உம்மைகள் விரிக்க.*

*இதனால், உடம்புகள் ஒடுங்குமாறு உவம அளவையால் நிறுவப்பட்டது. 'தோற்றம், ஒடுக்கம்' என்பவற்றில் இங்கு வேண்டுவது ஒடுக்கமேயாதல் அறிக.*

***2548. தெளிவுரை :-** **உடம்பும், உயிரும் நீக்கமற ஒன்றியிருக்கும் பொழுது, உலகத்தை நோக்கிச் செல்லும் சிவ சக்தியே உயிருக்குத் தலைமையாய் நின்று நடத்தும். உடலை அறவே விட்டொழித்தவழி, உயிர் சிவனைப் போலவே எங்கும் இருப்பதாய், முடிவும், முதலுமாகிய எல்லைகளில் எதுவும் இன்றி வியாபகமாய்ச் சிவனது வியாபகத்தில் அடங்கிவிடும்.***

**2549.** செவிமெய் வாய் கண் மூக்குச் சேர்இந்திரியம்
அவியின் றியமன மாதிகள் ஐந்தும்
குவிவொன் றிலாமல் விரிந்து குவிந்து
தவிர்வொன் றிலாத சராசரந் தாமே. **3**

**2550.** பரன் எங்கும் ஆரப் பரந்துற்று நிற்கும்
திரன் எங்கு மாகிச் செறிவெங்கும் எய்தும்
உரன்எங்கு மாய்உல குண்டு முமிழ்க்கும்
வரன்இங்ஙன் கண்டியான் வாழ்ந்துற்ற வாறே. **4**

---

***குறிப்புரை :-*** *ஆகவே, 'சிவன் உயிரை உண்கின்றான்' என்றல் பொருந்துமாறு அறிக என்பதாம். திருவாசகத்தில் 'உயிருண்ணிப் பத்து' என ஒரு பகுதியிருப்பதும், "யானாகிய என்னை விழுங்கி வெறுந் - தானாய் நிலை நின்றது தற்பரமே" (கந்தர் அனுபூதி - 28) என்றதும் இங்கு நினைவு கூரத்தக்கன. 'விட்டவழி' என்பது, "விட்டு" எனத் திரிந்து நின்றது.*

*'பெத்த காலத்தில் திரோதான சத்தி வழிப்பட்டு ஏகதேசியாய்ப் போக்கு வரவு புரிகின்ற உயிர் முத்தி காலத்தில் ஏகதேசத் தன்மை நீங்கி வியாபகமாய்ச் சிவத்தில் அடங்கும்' என்பது இம்மந்திரத்தின் கருத்து. ''உடல்'' என்ற பொதுமையால் மூவகை உடம்பும் கொள்க.*

*இதனால், 'உயிர் ஒடுங்குதல் இல்லை எனல் வேண்டா' என்பது கூறப்பட்டது.*

***2549. தெளிவுரை :-*** *செவி முதலிய ஐந்து ஞானேந்திரியங்கள், மனம் முதலிய நான்கு அந்தக் கரணங்கள், பிரகிருதி ஆகப் பத்தினையும் பற்றி நின்று செலுத்துகின்ற உயிர்கள் அவற்றைப் பலதலைப் பட்டு விரிந்து செல்லவிடாது சிவம் ஒன்றையே நோக்கிக் குவிந்து செல்லுமாறு செலுத்துதல் வேண்டும். அங்ஙனம் செலுத்தாமையால் அவை பல வழியாக விரிந்து செல்லத் தாமும் அவ்வாறே முதற்கண் உலகில் விரிந்து செல்கின்றன. ஆயினும் அவை முன் சொல்லியவற்றுள் குவிந்த பொழுது, சராசரங்களாகிய அனைத்து உடம்புகளும் உயிர்களும் சிவத்தில் ஒடுங்கிச் சிறிதும் நீங்காதனவாய் இருக்கும்.*

***குறிப்புரை :-*** *அவி இன்றிய - அடங்குதல் இல்லாத, "ஐந்தும்" என்ற குறிப்பால் பிரகிருதி தழுவப்பட்டது. 'முன்பு விரிந்து, பின்பு குவிந்த வழி' என்க. 'சராசரந்தாமே தவிர்வொன்றிலாதவாம்' என்க. சரம் - இயங்கு திணை. அசரம் - நிலைத்திணை. 'தாம், ஏ' அசைகள்.*

*இதனால், உலகத்தின் விரிவும், ஒடுக்கமும் ஆமாறு கூறப்பட்டது.*

***2550. தெளிவுரை :-*** *சிவன் வியாபகன்; மாற்றம் இல்லாதவன்;*

**2551.** அளந்த துரியத் தறிவினை வாங்கி
உளங்கொள் பரம்சகம் உண்டஃதொழித்துக்
கிளர்ந்த பரம்சிவம் சேரக் கிடைத்தால்
விளங்கிய வெட்ட வெளியனும் ஆமே. **5**

---

*எவ்விடத்திலும், எப்பொருளிலும் நிறைந்து அதனால், தனது ஆற்றலால் சுத்தமும், அசுத்தமும் ஆய இரு மாயா காரியங்களிலும் தனது ஆற்றலால் தங்கி அவற்றைத் தன்னுள் ஒடுக்கவும் செய்வான். பின்பு விரிக்கவும் செய்வான். நான் மேல்நிலை அடைந்து பேரின்ப வாழ்வில் வாழ்ந்திருத்தற்குக் காரணம் இந்த உண்மையை இவ்வாறு உணர்ந்ததே.*

*குறிப்புரை :-* 'அதனால் நீவிரும், இதனை, இவ்வாறே உணர்மின்; மேல்நிலையை அடைந்து பேரின்ப வாழ்வில் வாழ்ந்திருப்பீர்' என்பது குறிப்பெச்சம்.

"எங்கும் ஆரப் பரந்து உற்று நிற்கும்" என்றது, 'வியாபகன்' என்றபடி. பின்னர் வந்த "எங்கும்" என்பது, 'எப்பொருளிலும்' என்றதாம். உரன் - ஆற்றல். 'உரனால்' என உருபு விரிக்க. வரன் - வரம்; மேன்மை. 'யான் வரனில் வாழ்ந்துற்றவாறு இங்ஙன் கண்டு' என முடிக்க. 'உமிழும்' என்பது இடைக்கண் வேண்டாவழிக் குகரச் சாரியையும்' சந்தியும் பெற்று, 'உமிழ்க்கும்' என வந்தது.

இதனால், 'மெய்யுணர்வோர், உலகத்தை இறைவன் ஒடுக்கியும், தோற்றுவித்தும் நிற்கின்றான் என உணர்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.

*2551. தெளிவுரை :-* உயிரினது அறிவின் நிலைமையை அளந்து, அஃது நின்மல துரியத்தை அடைந்தவாற்றினைத் தெரிந்து, அதன்கண் உயிரினது அறிவினை வாங்கித் தன் அறிவினுள் அடக்கிக் கொண்ட நின்மல சிவம், அந்நிலையில் உயிரினது உடம்பும், உலகமும் இருப்பினும் அவையில்லாதது போலத் தனது அருளினுள் அடக்குமாற்றால், உயிரினது 'யான், எனது' என்னும் பற்றை அறுத்துத் துரியத்திற்கு மேற்பட்ட பரசிவமாய்ப் பொருந்தக் கிடைத்தால், ஆன்மா அந்தப் பரசிவமாகிய பராகாயத்தில் அடங்கிவிடும் பேற்றினையும் பெற்றுவிடும்.

*குறிப்புரை :-* "உளம்" என்றது அறிவினை. "அஃது" என்றதும் அதன்மேல் உள்ள பற்றினையே. வெளியன் ஆதற்கு வருவிக்கப்பட்டது. உம்மை சிறப்பும்மை.

இதனால், சிவன், உணர்வொடுக்கம் செய்யுமாற்றால் உயிர் ஒடுக்கம் செய்தல் கூறப்பட்டது.

*2552. தெளிவுரை :-* உலையிற்பட்ட இரும்பு தன்மேல் வீழ்ந்த நீரை மீள வெளிப்படாதபடி தன்னுள் ஒடுக்கிக் கொள்வது போல, மேலானதற்கும் மேலான

**2552.** **இரும்புண்ட நீர்என என்னைஉள் வாங்கிப்**
**பரம்பர மான பரமது விட்டே**
**உரம்பெற முப்பாழ் ஒளியை விழுங்கி**
**யிருந்தனன் நந்தி இதயத்து ளானே.** **6**

**2553.** **கரிஉண் விளவின் கனிபோல் உயிரும்**
**உரிய பரமும்முன் ஓதும் சிவமும்**
**அரிய துரியத்து அகிலமும் எல்லாம்**
**திரிய விழுங்கும் சிவபெரு மானே.** **7**

---

*பொருளாகிய சிவன், யான் அஞ்ஞானத்தை விட்டு மெய்ஞ்ஞானத்தைப் பெற்றமையால் முப்பாழிலும் முறையானே எனது சீவ போதத்தைத் தான் விழுங்கித் தான் மட்டுமே எனக்கு மேலேயிருந்தான்; என் அறிவினுள்ளும் இருந்தான்.*

*குறிப்புரை :- ஈற்றில் நின்ற "பரம்" வாளா பெயராய் நின்றது. அது பகுதிப்பொருள் விகுதி. உரம் - மெய்ஞ்ஞானம். பெற்றது மெய்ஞ்ஞானமாகவே, விட்டது அஞ்ஞானமாயிற்று. முப்பாழ், மேலே கூறப்பட்டன. அப்பாழ்தோறும் உயிரினது அறிவு வேறுபடுதலை யறிக. ஒளி - அறிவு. "விழுங்கி யிருந்தனன்" என்றதனால் அவன் மட்டுமே தனித்திருந்தமை பெறப்பட்டது. "அலைகடலில் சென்று அடங்கும் ஆறுபோல்" (சிவஞான போதம் - சூ - 8. அதி - 4) சீவன் சிவத்துள் சென்று அடங்கச் சிவமே ஒளி வீசி நின்றது என்றபடி. பின்னர், "இதயத்துளான்" என்றதனால், முன்னர் 'மேலே உளான்' என்றதாயிற்று.*

*2553. தெளிவுரை :- 'சீவ அவத்தை, சிவ அவத்தை, பர அவத்தை' என மேற்கூறிய மூன்று அவத்தைகளிலும் அரியனவாம் துரிய நிலையில் சிவபெருமான் அனைத்துலகங்களையும், அவற்றில் வாழும் உயிர்களையும் அவற்றது முன்னை இழிநிலை மாறி, உயர்நிலையாகும்படி விழுங்கிவிடுவான்.*

*குறிப்புரை :- 'யானை' என்பது விளம்பழத்திற்கு உண்டாகின்ற ஒரு நோய். அஃது அப்பழத்தின் ஓடு இருந்தபடியே இருக்க, உள்ளே உள்ளதை மட்டும் அழித்துவிடும். அதனால், வெளிப்பார்வைக்கு மட்டும் நன்றாய் இருப்பதுபோலக் காணப்பட்டு, உட்பகுதியில் ஒன்றும் இல்லையாய் விடுகின்ற பொருள்கட்கு, 'வேழம் உண்ட விளங்கனிபோல' என்னும் உவமை கூறப்படுகின்றது. அஃது இங்குத் தம் தன்மை திரிந்த மாயா காரியங்கட்கும், அவற்றைப் பற்றி நிற்கும் உயிர்கட்கும் உவமையாகக் கூறப்பட்டது. உயிர் - சீவன். 'சீவன், சிவம், பரம்' என்பன அவ்வவ் அவத்தைகளைக் குறித்து நின்றன. செய்யுள் நோக்கி, இறுதிக்கண் நிற்றற்பாலதாய பரம் இடைக்கண் வைக்கப்பட்டது. முன் ஓதும் - மேலே சொல்லப்பட்ட, 'உயிரும், சிவமும், பரமும் ஆன துரியத்து' என்க. "அகிலம்" என்றது மாயா காரியங்களால், எல்லாம்" என்றது உயிர்களையும்,*

**2554.** அந்தமும் ஆதியும் ஆகும் பராபரன்
தந்தம் பரம்பரன் தன்னில் பரமுடன்
நந்தமை உண்டுமெய்ஞ் ஞானஞே யாந்தத்தே
நந்தி யிருந்தனன் நாம்அறி யோமே. **8**

---

*அங்ஙனம் கொள்ளாக்கால், "எல்லாம்" என்றது கூறியது கூறலாம். திரிய - தம் நிலை மாறும்படி. விழுங்குதல், இங்குத் தன் தன்மைய ஆக்குதல். உயிர் பெத்தத்தில் நிற்கும்பொழுது அதற்குச் சார்பாய், உள்ள மாயா காரியங்கள் பசுகரணங்களாயும், முத்தியைப் பெற்ற பொழுது அவை பதி கரணங்களாயும் நிற்கும். இவ்வாறு ஆதலையே "திரிய" என்றார்.*

*மாயைமா யேயம், மாயா*
*வரும்இரு வினையின் வாய்மை*
*ஆய ஆ ருயிரின் மேவும்*
*மருள்எனில் இருளாய் நிற்கும்;*
*மாயைமா யேயம், மாயா*
*வரும்இரு வினையின் வாய்மை*
*ஆயஆ ருயிரின் மேவும்*
*அருள்எனில் ஒளியாய் நிற்கும்.*

*என்னும் சிவப்பிரகாசச் (செய்யுள் 70) செய்யுளைக் காண்க. முத்தி, இங்குப் பரமுத்தி தவிர ஏனைய, "கரியுண் விளவின் கனி" என்ற உவமையால் இது விளங்கும். முன்னர் "இரும்புண்ட நீர்" என வேறு உவமை கூறப்பட்டவாறு அறிக.*

*இதனால், சிவன் உலகத்தையும், உயிர்களையும் அவற்றின் தன்மைகளைத் திரித்துத் தன்வண்ணம் ஆக்குதல் கூறப்பட்டது.*

*2554. தெளிவுரை :- சிவபெருமான், அனைத்துப் பொருள்கட்கும் அந்தமும், ஆதியுமாய் உள்ள பெரும் பொருளாய் நின்று, பல உயிர்களும் அடையும் பல்வேறு அவத்தைகளில் தடத்த சிவனாய் எல்லாம் அவற்றிற்குத் தலைவனாய்ப் படிமுறையால் அவைகளை உயர்த்தி, முடிவில் சொரூப சிவனாய் அவனது ஞானமே கண்ணாக உணரும் ஞானத்திற்கு ஞேயமாய் இருக்கின்றான். அவனது செயல்களை நாம் அறுதியிட்டு அறியமாட்டோம்.*

*குறிப்புரை :- பராபரன் - பரையோடு கூடிய பரன். பரம்பரன் - பரம்பரையின் முதல்வன். பரம் - திருவருள். "நந்தி" என்பதை முதலிற் கொள்க. 'இயற்கையில் அந்தமும், ஆதியும் ஆகும் பராபரனும், உயிர்களின் அவத்தை வேறுபாடுகளில் தத்தமக்குப் பராபரனும், முடிவில் தன்னில் தான் ஆன பரமும் ஆகி நம்மை உண்டு, அந்தத்து ஞானத்திற்கு ஞேயமாய் இருந்தனன். அவற்றை*

யெல்லாம் நாம் அறியோம்' என இயைத்து முடிக்க. உண்ணுதல் மேற்கூறிய வேழம் உண்ட விளங்கனிபோல ஆகும்படி உண்ணுதல். 'ஆதலுடன் கூடி' என முன்னும் பின்னும் ஓரோர் சொல் வருவிக்க. ஆதல் - ஆதற்றன்மை.

இதனால், சிவன் உலகை உண்ணும் முறைகளையெல்லாம் தொகுத்துக் கூறி முடிக்கப்பட்டது.

## 38. வாய்மை

*அஃதாவது மெய்ம்மை மெய்ப்பொருளைத் தலைப்பட வேண்டுவார் தம் அறிவு மனமொழி மெய்களால் மெய்ம்மையினையே பற்றி ஒழுகுதல் வேண்டும் என இவ்வதிகாரம் கூறுகின்றது. இனி, "தூஉய்மை என்ப தவாவின்மை மற்றது - வாஅய்மை வேண்ட வரும்" என்னும் திருக்குறளிற்போல, வாய்மை என்னும் சொல் மெய்ம்மையினையுடைய முதற் பொருளைக் குறித்து நின்றது எனினும் பொருந்தும், இவ்வதிகாரம் மெய்ப்பொருளைத் தலைப்படுமாறு உணர்த்தலின்.*

*ஞானம் பற்றிப் பலவகையாகக் கூறிப் போந்தவற்றை ஒருவாறு தொகுத்து இவ்வதிகாரம் கூறுகின்றது. ஆகவே, 'வாய்மை' என்றது, 'முடிந்த முடிபான உண்மை' என்றபடி. இது பதினான்கு மந்திரங்களையுடையது.*

**2555.** அற்ற துரைக்கில் அருளுப தேசங்கள்
குற்றம் அறுத்தபொன் போலக் கனலிடை
அற்றற வைத்திறை மாற்றற ஆற்றிடில்
செற்றம் அறுத்த செழுஞ்சுடர் ஆகுமே. 1

---

*2555. தெளிவுரை :- உயிர்கள் அடையத் தகும் முடிவான பயனைக் கூறுமிடத்து, அது வேதாந்த சித்தாந்த மகாவாக்கியங்களின் ஒருமித்த பொருளேயாகும். அதுமேலே சொல்லப்பட்டது. அந்தப்பயன், இறைவன், உயிர்கள் பாச பந்தங்களினின்றும் முற்றாக நீங்கத் திருவுளம் பற்றி, தான் அந்தப் பந்தங்களை நீக்கும் செயல்களைக் குறைவின்றிச் செய்தால் தீயில் இட்டு மாசுக்களை நீக்க நீங்கிய பொன்போல உயிர்கள் தன்னைச் சூழ்ந்துள்ள இருளை ஓட்டி ஒளிவிடுகின்ற விளக்குப்போல ஆகி, பந்தங்கள் அனைத்தையும் துரத்தி விளங்கும்.*

*குறிப்புரை :- அற்றது - முடிந்த பயன். இதன்பின், 'அது' என்னும் எழுவாய் வருவிக்க. "கனலிடை" என்பதை அவ்வடியின் முதலிற் கூட்டி, அவ்வடியை ஈற்றுக்கு அயலிற் கூட்டுக. "இறை" என்பதையும் அவ்வடியின் முதலிற் கூட்டுக. "அற்று அற" என்னும் ஒருபொருட் பன்மொழி, 'முற்றாக' எனப்பொருள் தந்தது "அற" என்றதும், 'முற்ற' என்றபடி. 'திருவுளம் வைத்து' என்க. மாற்று - மாற்றுச் செயல்; பரிகாரம் "ஆகும்" என்பதற்கும், 'உயிர்' என்னும் எழுவாய் வருவிக்க. ஆக்கம், உவமை குறித்து நின்றது.*

*இதனால், ஒருமொழி மகாவாக்கியங்களே உயிர்களைப் பிறவிக் கடலினின்றும் கரையேற்றுகின்ற புணையாகும்' என்பதும், (அம்மகா வாக்கியங்களில் தலையாயது திருவைந்தெழுத்து' என்பதே சித்தாந்தம். "அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை" (தி.8 திருச்சதகம் - 27) எனவும், "இருவினைப்பாசம் மும்மலக் கல் ஆர்த்தலின் - வருபவக் கடலில் வீழ்*

**2556.** எல்லாம் அறியும் அறிவு தனைவிட்டே
எல்லாம் அறிந்தும் இலாபம் அங்கில்லை
எல்லாம் அறியும் அறிவனை நான்என்னில்
எல்லாம் அறிந்த இறையென லாமே. 2

---

*மாக்கள் ஏறிட - அருளும்மெய் அஞ்செழுத்து" (தி.12 அப்பர் பு. 129) எனவும் போந்த திருமொழிகளைக் காண்க). 'அதுவும் இறைவனது அருளால் உரிய காலத்தில் பெறத்தக்கது' என்பதும் கூறப்பட்டன.*

***2556. தெளிவுரை :-*** *உயிர்கள் இறைவனைத் தவிர மற்றை எல்லாப் பொருள்களையும் அறிதல் அவற்றிற்குப் பந்தமாகும். அதனைக் குருவருளால் நீக்கிச் சிவனைப்போல முற்றறிவைப் பெற்றபின்னும் இறைவனைத் தவிர வேறு பொருள்களை அறிவதில் பேறு ஒன்றும் இல்லை. (மாறாக, இன்ப இழப்பே உளதாகும். ஏனெனில், பிற எல்லாம் துன்பப் பொருள்களேயாதலின்). ஆகவே 'சிவன் நான்' என்னும் அந்த ஒற்றுமை உணர்விலே நிலைத்து நிற்பின், உயிர் இறை நிலையினின்றும் பிறழாதிருக்கும்.*

***குறிப்புரை :-*** *முதல் இரண்டடிகள் முறையே பாச நீக்கத்தையும், சிவப்பேற்றையும் குறித்தன. 'சிவப்பேறு பெற்றும் பயனில்லை' என்றதனால், அதற்குரிய காரணம், "எல்லாம்" என்றதனால் குறிப்பால் பெறப்பட்டது. 'இறையே' என்னும் தேற்றேகாரம் தொகுத்தலாயிற்று. 'திருவருளைப் பெற்றபின்னும் அது கண்ணாக இறைவனையே உணர்ந்து அவனிடமிருந்து அடங்கி நில்லாது, தற்போதத்தால் பிறவற்றை யுணர்தல் மீட்டும் பந்தமாம்' என்பதனை,*

*"பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவதென்?*
*அக்கொழு நீ அறிந் துந்தீபற;*
*அறிந்தறி யாவண்ணம் உந்தீபற"* ***- திருவுந்தியார் - 38***

*என்னும் திருவுந்தியாரால் அறிக. "அறிந்து, அறியா வண்ணம்" திருவருளாலே யறிந்து, தற்போதம் தலையெடாதபடி நில்.*

*எல்லாம் அறியும் அறிவுறினும், ஈங்கிவர் ஒன்(று)*
*அல்லா தறியார் அற.* ***- திருவருட்பயன் - 93***

*என்றார் உமாபதிதேவர்.*

*இதனால், 'உபதேச நிலையினின்றும் பிறழாது உறைத்து நின்ற வழியே பயன் உளதாம்; இல்லையேல் அஃது இழக்கப்படும்' என்பது கூறப்பட்டது.*

*(இதன்பின் பதிப்புக்களில் காணப்படும் "தலைநின்ற தாழ்வரை மீது தவம் செய்து" என்னும் மந்திரம் அடுத்த தந்திரத்து, 'சொரூப உதயம்' என்னும் அதிகாரத்தில் வருவது).*

2557. தானே உலகின் தலைவன் எனத்தகும்
தானே உலகுக்கோர் தத்துவ மாய்நிற்கும்
வானே பொழிமழை மாமறை கூர்ந்திடும்
ஊனே உருகிய உள்ளம்ஒன் றாகுமே. 3

---

***2557. தெளிவுரை :-*** *சிவபெருமான் ஒருவனே உலகங்கட்கெல்லாம் முழு முதல் தலைவனும், மெய்ப்பொருளும் ஆவன். அறம் முதலிய உறுதிப்பொருள்களை உணர்த்தும் மறைகளின் வழியே அவைகள் நிலைபெறற் பொருட்டு வானம் மழைபொழியவும் கருணை கூர்வன். இவற்றை உணர்ந்து ஊனும் உருகும்படி எந்த உள்ளம் அன்பினால் உருகுகின்றதோ அந்த உள்ளம் அவனோடு சேர்ந்து ஒன்றாகும்.*

***குறிப்புரை :-*** *கூர்தல் - உள்ளது சிறத்தல். இங்கு, "தான்" என்பன வடமொழி வழக்குப் பற்றிப் பொதுமையில் வாராது, தமிழ்வழக்கே பற்றி மேலெல்லாம் சிறப்பாக எடுத்து வலியுறுத்திப் போந்த சிவபெருமானை உணரச் சிறப்பாகவே வந்தது. 'அல்லாக்கால், இம்மந்திரம் நின்று வற்றும்' என்க. 'மாமறை வழி ஒழுக வானே மழை பொழியக் கூர்ந்திடும்' என ஒருசொல் வருவித்து இயைத்து முடிக்க. "பொழி" என்னும் முதனிலையே, 'பொழிய' என வினையெச்சப் பொருள் தந்தது. "வானே" என்னும் பிரிநிலை ஏகாரம், "வானின்றமையா தொழுக்கு" (திருக்குறள், 20) என்பதை விளக்கி நின்றது. 'ஊனே' என்னும் தேற்றேகாரம், 'உருகமாட்டாதது ஊன், அதுவும் உருகுதற்கு ஏதுவாய் நின்ற உள்ளம்' என்னும் பொருளைத் தோற்றுவித்தது. "உருகிய" என்னும் பெயரெச்சம், "உள்ளம்" என்னும் ஏதுப்பெயர் கொண்டது. அப்பெயர்விடாத ஆகுபெயராய் அதனையுடைய ஆன்மாவைக் குறித்தது. இதனால், முன் மந்திரங்களில், "இறை" என்றும் "எல்லாம் அறிந்த அறிவன்" என்றும் கூறப்பட்ட முதல்வன் சிவபெருமானே என்பது கூறப்பட்டது.*

***2558. தெளிவுரை :-*** *'திருவருளைப் பெற்றவர் அதனைப் பெற்றது எதன் பொருட்டு' என்று அறிய விரும்பினால், அவர் அத்திருவருளால் மலம் நீங்கப் பெற்ற தமது அறிவுகள் அத்திருவருளே கண்ணாக அத்திருவருட்கு முதலாகிய சிவத்தை ஆராய்ந்து அவ்வாராய்ச்சியால் முன்பு நீங்கிப்போன மலத்தின் வாசனை தங்கியுள்ள தங்களது அறிவை அவ்வாசனையும் அற்ற தூய அறிவாய் நிற்கும்படி செய்து, இங்ஙனம் அரிதிலே பெறப்பட்ட பொருளாய் உள்ள இறைவனது திருவடியையே விடாது பற்றி, அவற்றின்கீழ் அடங்கியிருப்பர்.*

***குறிப்புரை :-*** *அமரில் - விரும்பின். 'அவர் திருவருள் பெற்றது இந்நிலையை அடைதற்பொருட்டே; வேறொன்றின் பொருட்டன்று' என்பதாம்.*

> *"யாஅம் இரப்பவை,*
> *பொருளும், பொன்னும், போகமும் அல்ல, நின்பால்*

**2558.** அருள்பெற்ற காரணம் என்கொல் அமரில்
இருளற்ற சிந்தை இறைவனை நாடி
மருளுற்ற சிந்தையை மாற்றி அருமைப்
பொருளுற்ற சேவடி போற்றுவர் தாமே. **4**

**2559.** மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்றன்னைப்
பொய்கலந் தார்முன் புகுதா ஒருவனை
உய்கலந்து ஊழித் தலைவனுமாய் நிற்கும்
மெய்கலந் தின்பம் விளைத்திடும் மெய்யர்க்கே. **5**

---

*அருளும், அன்பும், அறனும் மூன்றும்*
*உருள்இணர்க் கடம்பின் ஒலிதா ரோயே"* ***பரிபாடல்-5, 78-83***

*என்னும் சான்றோர் மொழியினை எண்ணுக. இம்மந்திரத்தின் பொருளைச் சிவஞான போத ஒன்பதாம் சூத்திரத்தாலும், அதன் உரையாலும் உணர்க. 'என்கொல் என அறிய' என ஒருசொல் வருவிக்க. அமர்தல் - விரும்புதல். சிந்தை, அறிவைக் குறித்த ஆகுபெயர். முன்னர், 'சிந்தையின் கண்' என ஏழாவது விரிக்க. 'அருமைப் பொருளாய்' என ஆக்கம் விரிக்க. தாம், அசை, ஏகாரம், தேற்றம்.*

*இதனால், மேல், "எல்லாம் அறியும் அறிவுதனை விட்டே" என்னும் மந்திரத்தில் கூறியது வலியுறுத்தப்பட்டது.*

***2559. தெளிவுரை :-*** *எவ்வகையிலும் வாய்மையையே பற்றி நிற்பாரோடே அளவளாவுபவன் சிவன். எவ்வகையிலும் பொய்யைப் பற்றி நிற்பவர்க்குத் தனது இருப்பையும் புலப்படுத்தாதவன் அவன். தாம் உய்தி பெறற் பொருட்டு அவனையே சார்தலால், அத்தகைய வாய்மையாளருக்கு அவன் பேரொடுக்கத்தைச் செய்பவனாக இருந்து, நிலையான இன்பத்தை எல்லையின்றி விளையுமாறு செய்வன்.*

***குறிப்புரை :-*** *"மெய், பொய்" என்ற பொதுமைகள், உலகியல் அருளியல் இரண்டிலும் உள்ள வாய்மை பொய்மைகளை உணர்த்தி நின்றன. அதனால் உலகியலிலும் பொய்யைப் பற்றுகின்றவர்களைச் சிவன் வெறுத்தல் விளங்கிற்று. "கரவாடும் வன்னெஞ்சர்க்கு அரியானை" (தி.4 ப.7 பா.1) 'கரப்பவர் தங்கட் கெல்லாம் கடுநர கங்கள் வைத்தார்' (தி.4 ப.38 பா.10) "வஞ்ச நெஞ்சத்தவர்க்கு வழிகொடாார் - நஞ்சநெஞ்சர்க் கருளும் நள்ளாறரே" (தி.5 ப.68 பா.7) (நஞ்ச - நைந்த; உருகிய) என அப்பர் கடிந்தோதியருளிய திருமொழிகளைக் காண்க. கரத்தல் - உள்ளதை 'இல்லை' என மறைத்துக் கூறுதல். அது பொய்ம்மையே யாதல் அறிக.*

**2560.** **மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்மிகப்**
**பொய்கலந் தாருட் புகுதா ஒருவனைக்**
**கைகலந் தாவி எழும்பொழு தண்ணலைக்**
**கைகலந் தார்க்கே கருத்துற லாமே.** **6**

---

*நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே*
*புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்;*
*பொக்கம் மிக்கவர் பூவும் நீரும்கண்டு,*
*நக்கு நிற்பன் அவர்தம்மை நாணியே. - தி.5 ப.90 பா.9*

*என அவர் அருளியல் பற்றிச் சிறப்பாக ஓதியருளினமையும்,*

*“யானே பொய்; என் நெஞ்சும் பொய்; என் அன்பும்பொய்*
*ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே”*

*- தி.8 திருச்சதகம் - 90*

*என ஆளுடைய அடிகளும் அவ்வாறே அருளிச் செய்தமையும் உணரற்பாலன. மெய்கலந்தான் - நேரே விளங்கிக் கலந்தான். ஏனையோர்பால் விளங்காதே கலந்திருப்பான் என்க. இரண்டன் உருபுகள் “உய்கலந்து” என்பதில் கலத்தலோடு முடிந்தன.*

*உய்கலந்து - உய்யக்கலத்தலால். கலப்பவர் மெய்யர். கலத்தல், உணர்வால் ஒன்றுதல். ‘மெய்யர்க்கே’ என்பதை இதன்பின் கூட்டுக. ‘மெய் கலந்த’ என்பதில் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. மெய் - நிலைபேறு.*

*2560.* ***தெளிவுரை :-*** *முன் மந்திரத்திற்கூறிய அத்தகைமையனாகிய சிவனை, ஆவி உடலைவிட்டு நீங்கும் காலத்தில் நினைத்தல், அதற்கு முன்னெல்லாம் இடைவிடாது நினைந்தவர்கட்கே கூடும்.*

***குறிப்புரை :-*** *‘ஆதலின் அவ்வாறு இப்பொழுதே நினையுங்கள்’ என்பது குறிப்பெச்சம். ‘உயிர்போங் காலத்து நினைத்தல் அரிது’ என்பதை,*

*“........................................ கடல்நாகைக்*
*காரோண, நின்*
*நாமம் பரவி, நமச்சிவா யவ்வெனும்*
*அஞ்செழுத்தைச்*
*சாம்அன் றுரைக்கத் தருதிகண்டாய்*
*எங்கள் சங்கரனே” - தி.4 ப.103 பா.3*

*என்பதனாலும், ‘அவ்வாறு நினைந்தவழியே அவனை யடைதல் கூடும்’ என்பதை,*

*“உன்னை நினைந்தே கழியும் என் ஆவி” (தி.4 ப.112 பா.3)*

*என்பதனாலும் உணர்க. இறக்குங் காலத்தில் வினையின்வழி எந்த நினைவு*

**2561.** எய்திய காலத்து இருபொழு தும்சிவன்
மெய்செயின் மேலை விதிஅது வாய்நிற்கும்
பொய்யும் புலனும் புகல்என்றும் நீக்கிடில்
ஐயனும் அவ்வழி ஆகிநின்றானே. 7

---

*உயிருக்கு உண்டாகின்றதோ, 'அந்த நினைவின்படியே அஃது அடுத்த பிறப்பை அடையும்' என்பதை,*

*மரிக்கும்போ(து) உன்னும் வடிவமதை ஆவி*
*பரிக்கும் நினைவு பரித்து.* - சோமவார விரத கற்பம்

*என்பதனாலும்,*

*ஆதலினால் சுற்றத் தவரைநினை யா(து) அமலன்*
*பாதம் நினைக பரிந்து.* - சோமவார விரத கற்பம்

*என்பதனாலும் அறிக.*

*மூன்றாம் அடியில், 'கைகலந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'ஆவி கலந்திருத்தலும், எழுந்து போதலும் உடலிடத்து' என்பது வெளிப்படை. "கருத்துறல்" என்பதை "எழும்போது" என்பதன் பின்னர்க் கூட்டுக. பின்வந்த, 'கைகலத்தல்' என்பது, எப்பொழுதும் இடைவிடாது கலத்தலைக் குறித்தது.*

*இதனால், உய்திவேண்டுவோர் தப்பாது செயற்பாலது இது' என்பது உணர்த்தப்பட்டது.*

*2561.* **தெளிவுரை :-** *ஒருவன் எய்தற்கரிய மானுடப் பிறவி தனக்கு எய்தி யிருப்பதையும், அதன் நிலையாமையையும் உணர்ந்து காலை, மாலை இரு பொழுதும் சிவன் வகுத்த உலகியல் அருளியல் இரண்டிலும் வாய்மையையே கடைப்பிடித்து ஒழுகுவானாயின் அதுவே வருங்காலத்தில் அவன் பயனடைதற்கு ஏற்ற நெறி முறையாகும். சிவபெருமானும் அவ்வழியில்தான் புலப்பட்டு நிற்பான்.*

**குறிப்புரை :-** *'ஆகவே, எவ்வகையிலும் பொய்மையைப் பற்றாதொழிக' என்பதாம்.*

*பொய்யாமை பொய்யாமை ஆற்றின், அறம்பிற*
*செய்யாமை செய்யாமை நன்று.* - **திருக்குறள் - 297**

*எனவும்,*

*"பொய்கடிந்(து) அறத்தின் வாழ்வார்;*
*புன்றசடை முடியார்க்கு அன்பின்*
*மெய்யடி யார்கட் கான*
*பணிசெயும் விருப்பில் நின்றார்".* - **தி.12 திருநீலகண்டர்-2**

**2562.** எய்துவது எய்தா தொழிவது இதுஅருள்
உய்ய அருள்செய்தான் உத்தமன் நந்தி
பொய்செய் புலன்நெறி ஒன்பதும் தாழ்க்கொளின்
மெய்யென் புரவியை மேற்கொள்ள லாமே. **8**

---

எனவும் அருளிச்செய்தமை காண்க. செய்தல். சொல்லாலும், செயலாலும் நிலைநிறுத்துதல். 'சிறிதளவு காலத்தையும் பொய்மையில் செலவழித்தல் கூடாது' என்பது, 'எய்திய காலத்து இருபொழுதும் சிவன் - மெய்செயின்' எனப்பட்டது.

இதனால், 'உய்தி வேண்டுவார்க்குப் பொய்மை கூடாது' என்பது வலியுறுத்தப்பட்டது. ஐம்புல விருப்பமே பொய்க்குக் காரணமாகும்' என்பதைக் குறிக்க அதுவும் உடன் விலக்கப்பட்டது.

*2562. **தெளிவுரை :-** யாதானும் ஒன்று கிடைப்பது அல்லது கிடையாது ஒழிவது ஆகிய இந்நிலைமை திருவருளால் அமைவது. இதனை உத்தம குருவாகிய எங்கள் புகழ்மிக்க நந்திபெருமான் நாங்கள் உய்வடைதற் பொருட்டு எங்கட்கு அருளிச்செய்தார். ஆகவே, ஒன்றைப் பெற வேண்டியோ, அல்லது போக்க வேண்டியோ பொய்யை மேற்கொள்ளத் தேவையில்லை. ஆயினும் யோகியரே இந்நிலைமையைத் தெளிபவர்கள். அந்த யோகம் வாய்க்க வேண்டினால், பொய்ப் பொருளிலே ஆசையை உண்டாக்குகின்ற நவத்துவாரங்களையும் அடைத்தலாகிய இயம நியமங்களைக் கைக்கொளல் வேண்டும். கைக்கொண்டால் உண்மையான வாசியோகம் எளிதாக அமையும்.*

***குறிப்புரை :-*** *'ஐம்பொறிகளில் மெய் தவிர ஏனைய நான்கும் ஏழு துளைகளாய் உள்ளன. கன்மேந்திரியங்களில் எருவாய், கருவாய் இரண்டைக் கூட்ட ஒன்பது துவாரங்களாம் 'எருவாய்' வழியாக அபானனைத் தடுக்க வேண்டும்' என்பதும் யோக நூல் முறைமை, 'உலகத்தார் ஊர்வன பொய்க்குதிரை' என்றற்கு வாசி யோகத்தை "மெய்யென் புரவி" என்றார்.*

*இதனால், 'வாய்மையை நன்கு கடைப்பிடித்தற்கு வழி யோகம்' என்பது கூறப்பட்டது.*

*2563. **தெளிவுரை :-** (இவ்வதிகாரத்துள் முன்பே இரு மந்திரங்களில் கூறியபடி) வாய்மையாளரையே விரும்புதலும் பொய்ம்மையாளரை வெறுத்தலும் உடையவனும், எல்லா உயிர் உள்ளங்களிலும் உள்ளவனும், வேத முதல்வனும் ஆகிய சிவபெருமானைப் பொய்யை யொழித்து, மெய்யாகப் பற்றினவர்க்கே அவன் புகலிடமாவான். ("மெய்யராகிப் பொய்யை நீக்கி வேதனையைத் துறந்து செய்யரானார் சிந்தையானே தேவர் குலக்கொழுந்தே" (தி.1 ப.50 பா.4) என அருளிச் செய்தார் ஆளுடைய பிள்ளையாரும்).*

**2563.** கைகலந்தானைக் கருத்தினுள் நந்தியை
மெய்கலந் தான்றன்னை வேத முதல்வனைப்
பொய்கலந் தார்முன் புகுதானைப் புனிதப்
பொய்யொழிந் தார்க்கே புகலிட மாமே. **9**

**2564.** மெய்த்தாள் அகம்படி மேவிய நந்தியைக்
கைத்தாள் கொண்டாரும் திறந்தறி வாரில்லைப்
பொய்த்தாள் இடும்பையைப் பொய்யறநீ விட்டங்கு
அத்தாள் திறக்கில் அரும்பேற தாமே. **10**

---

*குறிப்புரை :- இரண்டன் உருபுகளை, 'ஒழித்து பற்றினார்க்கே' என ஒருசொல் வருவித்து முடிக்க.*

*இதனால் பொய்யாமையானே முன் மந்திரத்திற் சொல்லிய திருவருள் கிடைத்தல் கூறப்பட்டது.*

*2564. **தெளிவுரை :-** உயிர்களின் உள்ளங்களாகிய கோயிலுக்கு உள்ளே சிவபெருமான் தனது நிலையான திருவடிகளை விரும்பி வைத்து விளங்குகின்றான். அக்கோயில் பூட்டப்பட்டுள்ளது. ஆயினும் அப்பூட்டைத் திறத்தற்குரிய திறவுகோல்கள் மக்கள் எல்லாரிடத்திலும் உள்ளன. இருந்தும் அந்தத் திறவுகோலைப் பயன்படுத்தி அந்தப் பூட்டைத் திறந்து சிவனைத் தரிசிப்பவர் யாரும் இல்லை. அதற்குக் காரணம், அருவருக்கத்தக்க பொருள்களைப் பொதிந்து வைத்து மூடியுள்ள பைகளை அவர்கள் 'பொய்' என்கின்ற கயிற்றால் இறுகக் கட்டி, அவற்றைக் காவல் புரிந்து கொண்டிருப்பதாகும். மாணவகனே, நீயும் அவர்களைப் போல இருந்து விடாமல் அந்தப்பைக் காவலை உண்மையாகவே விட்டு, உன் கையில் உள்ள அந்தத் திறவுகோலால் அந்தக் கோயிலைத் திறப்பாயாயின், கிடைத்தற்கரிய பேறு உனக்குக் கிடைக்கும்.*

*குறிப்புரை :- "தாள்மேவிய" எனச்சினைவினை முதல்மேல் நின்றது. கைத் தாழ் - இயல்பாகவே கையில் இருக்கின்ற திறவுகோல் என்றது, பிராணனை. பொய்த்தாழ் - பொய்ம்மையாகிய திறவுகோல். தாழ் இடுதல் - பூட்டுதல். பின்னர், 'பை' என வருதலால், இவை பையைக் கட்டுகின்ற கயிற்றையும், கட்டுதலையும் குறித்தன. பையாவது உடம்பு.*

> *"இடும்பைக்(கு) இடும்பை இயல்உடம்பி தென்றே*
> *இடும்பொய்யை மெய்யென் றிராதே"* - **நல்வழி**

*என ஔவையாரும் கூறினார். 'பைம்மறியாப் பார்க்கப்படும் என்பது நாலடி (வெண்பா - 42) பின் இரு தாள்கள் 'தாழ்' என்பதன் மரூஉ. அது, பகுதிப்பொருள் விகுதி.*

**2565.** **உய்யும் வகையால் உணர்வினால் ஏத்துமின்**
**மெய்யன் அரன்நெறி மேல்உண்டு திண்ணெனப்**
**பொய்யொன்று மின்றிப் புறம்பொலி வார்நடு**
**ஐயனும் அங்கே அமர்ந்துநின் றானே.** **11**

---

*இதனால், 'வாசியோகத்தால் சிவனைத்தரிசித்தல் கூடும்' என்பது கூறப்பட்டது.*

*2565. **தெளிவுரை :-** பொய்ம்மைகளைச் சிறிதும் இல்லாது உறுதியாக அப்பாற்போக்கி, அகத்தில் மட்டுமன்றிப் புறத்திலும் வாய்மை விளங்க நிற்பாரது நடுவிலே சிவனும் விரும்பி எழுந்தருளியிருக்கின்றான். ஆகையால், உய்தியின் பொருட்டு, அந்த நிலைமையை உணர்ந்து சிவனைத் துதியுங்கள். அப்பால், மெய்ம்மையின்கண் உள்ளவனாகிய சிவனை அடையும் வழிதானே கிடைப்பதாகும்.*

***குறிப்புரை :-** "திண்ணென" என்பது தொடங்கி உரைக்க. ஒன்றும் - சிறிதும், புறத்திலும் வாய்மை பொலிதலாவது, கொள்ளும் கோலங்கள். அகத்தில் கொள்ளும் எண்ணங்களுக்கு ஏற்றவையாயிருத்தலும், நெஞ்சில் கரவு இன்மையால் முகம் மகிழ்ச்சியாற் பொலிதலும் போல்வன. நடு அங்கே - நடுவாகிய இடத்திலே. அமர்ந்து - விரும்பி. "அடியார் நடுவுள் இருவீரும் இருப்பதானால்" (தி.8 கோயில் மூத்த திருப்பதிகம் - 1) என ஆளுடைய அடிகளும் அருளிச்செய்தார்.*

*இதனால், 'அகத்தும், புறத்தும் வாய்மையால் விளையும் தூய்மையே சிவநெறியும் ஆகும்' என்பது கூறப்பட்டது.*

*2566. **தெளிவுரை :-** நறுமணம் மிக்க மலர்களினின்றும் காய்த்துப் பழுத்த நல்ல பழம் ஒன்று தோட்டத்தில் உள்ளது. அதனைத் தோட்டத்தில் விளைவித்தவன் உண்ணாதபடி ஒரு கொடிய பறவை வந்து கொத்தித் தின்கின்றது. அஃது அவ்வாறு செய்யாதபடி வில்லில் அம்பைத் தொடுத்து எய்து பறந்தோடும்படி ஓட்டினால் சிவந்த பொன்போலும் கிடைத்தற்கரிய சிவகதியைச் சென்று அடையலாம்.*

*இது வினை (புல)ப்பகையை வென்றால் முதல்வனைத் தலைப்பட்டுப் பேரின்பம் எய்தலாம் எனக் கூறுகின்றது. மணங்கமழும் மலரோடு கூடிய கனிந்த பழம் ஒன்று என்றும் உளது. அஃது அருளொளியோடு கூடிய பேரின்பச் சிவம் அவ்விரண்டினிடத்தும் உயிர்கள் அணுகாதபடி தடுத்து நிற்பது வினைப்பகை (புலப்பகை) ஆகிய பறவை அதனைத் திருவைந்தெழுத்தாகிய அம்பை உணர்வில் தொடுத்துச் செலுத்தினால் அப்பகை அகலச் செல்லும். பின் உயிர் தன் மாசு நீங்கிச் சிவகதியைப் பெற்றின்புறும்.*

**2566.** வம்பு பழுத்த மலர்ப்பழம் ஒன்றுண்டு
தன்பாற் பறவை புகுந்துணத் தான்ஒட்டாது
அம்புகொண்டு எய்திட்டு அகலத் துரந்திடில்
செம்பொற் சிவகதி சென்றெய்த லாகுமே. **12**

**2567.** மயக்கிய ஐம்புலப் பாசம் அறுத்துத்
துயக்கறுத் தானைத் தொடர்மின் தொடர்ந்தால்
தியக்கம் செய்யாதே சிவன்எம் பெருமான்
உயப்போ கெனமனம் ஒன்றுவித் தானே. **13**

---

***குறிப்புரை :-*** *முன் மூன்று அடிகள் ஒட்டணியாய் நின்றன. மலர்கள், ஆறு ஆதாரங்கள். மணம் - தெய்வமணம். பல மலர்கள் பூத்துப் பொலிய, அவற்றின் பயனாக ஒருகாயே காய்த்துப் பழுத்த அரிய பழம் சிவம் 'வம்பு மலரிற் பழுத்த பழம்' என மாற்றியுரைக்க. தோட்டம் - உடம்பு. தோட்டத்தை உடையவனாய், அதில் பயிர் செய்பவன் யோகி. பறவை - பொய்ம்மை. சிவத்தை மறைத்து விடுவதால், அதனை அப்பழத்தை உண்ணும் பறவையாகக் கூறினார். எய்தற்குரிய 'வில், நாண், அம்பு' இவை என்பது மேலே கூறப்பட்டது. (பா. 2529).*

*இதனால், பொய்மை அகலப் போக்குதற்குப் பிரணவயோகம் சிறந்ததாதல் கூறப்பட்டது.*

***2567. தெளிவுரை :-*** *தன் அடியார்களுடைய ஐம்புல ஆசையாகிய பாசங்களைப் போக்கி, அவர்கள் கலக்கத்தை நீக்கித் தெளிவைத் தருகின்றவன் சிவன் ஆதலின், அவனை அறிவினாலே பற்றுங்கள்; பற்றினால், அவன் சற்றும் தாழாது, உங்களை 'உய்யப் போக' எனத் திருவுளம்பற்றி. உங்களுடைய மனங்களை ஒருவழிப்படுத்துவான். துயக்கு - கலக்கம். தியக்கு - சோர்வு.*

***குறிப்புரை :-*** *துயக்கறுத்தமை தம்மை உள்ளிட்ட பலரது அனுபவம் பற்றிக் கூறினார். அறிவால் தொடர்தல், சரியை, கிரியை யோகங்களில் இயன்றவாற்றால் பற்றுதல். என்னை? தொடர்ந்து நிகழ்வன அவையேயாதலின், 'மனம் பல வழியிற் சென்று அலைதலானே அது பொய்ம்மையையும் ஏற்கின்றது; ஆகவே, மனம் ஒருவழிப்படின் பொய்ம்மையும் இல்லாதொழியும்' என்பதாம். 'போக' என்னும் வியங்கோளின் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. தெளிவுபற்றி எதிர்காலம் 'ஒன்று வித்தான்' என இறந்த காலமாகச் சொல்லப்பட்டது.*

*இதனால், 'யோகம் இயலாதவர் சரியை கிரியைகளாலாயினும் பொய்ம்மையைப் போக்கற்பாலர்' என்பது கூறப்பட்டது.*

***2568. தெளிவுரை :-*** *ஒருங்கிய மனம் தானாகவே சிவனை நினைக்கு*

**2568.** மனமது தானே நினையவல் லாருக்கு
இனம்எனக் கூறும் இருங்காயம் ஏவல்
தனிவினில் நாதன்பால் தக்கன செய்யில்
புனிதன் செயலாகும் போதப் புவிக்கே. **14**

---

*நிலையுடையதாகும். அந்நிலைக்கு மனத்தைக் கொணர வல்லவர்கட்கு, அனைத்துயிர்க்கும் துணையாகின்ற முறையில் அவர்கட்கு அமைந்துள்ள தூல உடம்பும் அவர் ஏவியவற்றையே செய்யும் ஏவலாளியாய்க் கீழ்ப்படிந்து நிற்கும். அக்கீழ்ப்படிதலைக் கொண்டு சிவன்பால் ஏற்புடைய செயல்களைச் செய்தால், இப்பிறப்பிலேயே அவர் செய்யும் செயல்கள் எல்லாம் மிகவும் சிவன் செயலேயாய்விடும்.*

*குறிப்புரை :- 'அவர்கட்குப் பந்தம் ஆகா' என்பதாம். ''நினைய'' என்பதன்பின், 'செய்ய' என ஒரு சொல் வருவிக்க. ஏவல் தணிவு - ஏவலிற்படும் பணிவு. தக்கன சரியை கிரியா யோகங்கள். 'புவிக்கே போதப் புனிதன் செயல் ஆகும்' என இயைக்க. புவி - நில உலகம். இதனால், 'இப்பிறப்பு' என்பது குறிக்கப்பட்டது. "புவிக்கு" என்பது உருபு மயக்கம். போத - மிகவும்.*

*இதனால், முன் மந்திரத்தில் கூறியவாறு மனம் ஒருமிக்கச் செய்தலின் பயன் கூறப்பட்டது. அதனானே வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாயும் ஆயிற்று.*

*மெய்ம்மையாம் உழவைச் செய்து,*
*விருப்பெனும் வித்தை வித்திப்*
*பொய்ம்மையாம் களையை வாங்கிப்*
*பொறையெனும் நீரைப் பாய்ச்சித்*
*தம்மையும் நோக்கிக் கண்டு*
*தகவெனும் வேலி யிட்டுச்*
*செம்மையுள் நிற்பராகில்*
*சிவகதி விளையு மன்றே.* *- தி.4 ப.76 பா.2*

*என்னும் அப்பர் திருமொழியை இவ்வதிகாரத்துடன் கூட்டியுணர்க.*

## 39. ஞானிகள் செயல்

*பல்வகை அறங்களுள்ளும் மிக்கதாகிய வாய்மையை ஞானிகளே முற்றக் கடைப்பிடிப்பவராவர் என முன் அதிகாரத்திற் கூறிய இயைபானே அவர்களது செயலை இவ்வதிகாரத்திற் கூறுகின்றார்.*

*யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்*
*வாய்மையின் நல்ல பிற.* ***– திருக்குறள் – 300***

***என்றதனால் வாய்மையின் சிறப்பு இனிது விளங்கும். இவ்வதிகாரம் மூன்று மந்திரங்களையுடையது.***

***அஃதாவது மெய்யுணர்ந்தார்க்கு உடம்பு உள்ள அளவும் அதுகொண்ட வினை உள்ளதாகலின் அது வரும்போது அஃது உடல் ஊழாய்க் கழியும்படியும் மேல்வினை ஏறாதபடியும் அவர்தம் விழைவு அறிவு செயல்கள் புறத்தே சிவன் திருவுருக்களில் சென்று வியாபரிக்குமாறு கூறுதல். இஃது அணைந்தோர் தன்மை எனவும் படும்.***

**2569.** **முன்னை வினைவரின் முன்உண்டு நீங்குவர்**
**பின்னை வினைக்குஅணார் பேர்ந்துஅறப் பார்ப்பர்கள்**
**தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்**
**நன்மையில் ஐம்புலன் நாடலி னாலே.** **1**

---

*2569. தெளிவுரை :- தம்மை நன்குணர்ந்தபின் தலைவனையும் உள்ளவாறு அறிந்தவரே (சிவஞானயோகம் - அவையடக்கம்) உண்மைத் தத்துவஞானிகள். அவர்கள் பிராரத்த வினைதோன்றினால், 'இது நாம் முகந்துகொண்டு வந்தது, இதனை அனுபவித்துத்தான் ஆகவேண்டும்' என்று உணர்ந்து அதன் பயனாகிய இன்பத்தில் விருப்பமும், துன்பத்தில் வெறுப்பும் இல்லாமல் கடன்கழிப்பார் போலப் பற்றற்றே ஐம்புலன்களை நுகருமாற்றால் அவ்வினையினின்றும் நீங்குவர். (பற்றுச்செய்யா மையால் அவ்வினை அவர்தம் உணர்வைத் தாக்காமல் உடலையே தாக்கி ஒழியும்) விருப்பு வெறுப்பு இன்மையால் இன்பத்தை நிலை நிறுத்திக் கொள்ளவும், துன்பத்தை விரைவில் ஒழிக்கவும் அவர்கள் எண்ணாமையால், அவர்கள் ஆகாமிய வினையில் வீழ்தல் இல்லை. அதன் தோற்றத்தை நிகழாதபடி தடுத்து விடுவார்கள்.*

*குறிப்புரை :- 'அதனால், உடம்பு நீங்கியபின் அவர்கள் அடைவது வீடு பேறேயன்றிப் பிறவியன்று' என்பதாம். "தன்" என்பதை, 'தலைவன்' என்னாவிடில், "ஞானிகள்" என்னும் பன்மையோடு இயையாமை அறிக. ஈற்றடியை, "முன்னை வினைவரின்" என்பதன் பின்னர்க் கூட்டுக. "வினைக்கு" என்பது உருபு மயக்கம். அண்ணார் - சேரார்.*

*இதனால், ஞானிகள் பிறப்பை அறுத்துக் கொள்ளுமாறு கூறப்பட்டது.*

**2570.** தன்னை அறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த திருவரு ளாலே. 2

---

***2570. தெளிவுரை :-*** *முன் மந்திரத்திற் கூறிய அந்த ஞானிகள், அம் மந்திரத்தில் கூறியபடி தாங்கள் வினையினின்று நீங்குதலோடல்லாமல், தங்களைச் சிவமாகக் கருதி வந்து அடைந்தவர்களது வினைகளையும் சிவனது திருவருள் வியாபகத்தில் நின்று நீக்கியருள்வார்கள்.*

***குறிப்புரை :-*** *சென்னி - உயிர்களின் அறிவு செயல் ஆற்றல்கள். திருவருள் - முதல்வனது அறிவு செயல் ஆற்றல்கள். சென்னியில் வைத்தல் - தம் ஆற்றல்களை முதல்வனது ஆற்றல்களில் தாடலை போல ஒன்றி அடங்கச் செய்யல். இதனை மெய்கண்ட தேவர், "தம்மையுணர்ந்து தமையுடைய தன் உணர்வார் - எம்மை யுடைமை" (சிவஞான போதம் - அவையடக்கம்) எனவும்,*

*"சிவன் குருவாகி வந்து ஞானத்தை உணர்த்துவான்" என்றல் இத்தகைய ஞானிகளைச் சிவன் அவர் தானேயாக ஆவேசித்து வந்து அருள்புரிதலையே என்பதை, அவர், (மெய்கண்டதேவர், சிவஞானபோதம் சூ - 8, ஆதி. 2)*

> *"இவ்வான்மாக்களுக்குத் தமது*
> *முதல்தானே குருவுமாய்*
> *உணர்த்தும் என்றது,*
> *அவன் அன்னியமின்றிச் சைதன்னிய*
> *சொரூபியாய் நிற்றலான்"*

*எனவும் அருளிச் செய்தமையால் உணர்க.*

*முன் மந்திரத்தில் ''வரின்'' என்றதனால், ''முன்னைவினை'' என்றது பிராரத்துவமும், இம்மந்திரத்தில், "முடிச்சு" என்றதனால் "முன்னை வினை" என்றது சஞ்சிதமும் ஆயின. வருவதற்கும், முடிச்சாய்க் கிடத்தற்கும் உரியன அவையேயாகலின், "அவிழ்ப்பர்" என்றது, வினைகள் பின் நின்று விளையாது உருண்டோட வீழ்த்துவர் என்றதாம். முடிச்சு - மூடை. பின்னை வினை, ஆகாமியமே. அதனைப் பிடித்துப் பிசைதலாவது, அது தோன்றும் பொழுதே மாணாக்கரது உள்ளத்தில் தம்மையும், தமது உபதேச மொழியையும் நினைவு கூர்விக்கு மாற்றால் அவற்றின் கொடுமையையும் நினைந்து அஞ்சச்செய்து முற்றாதபடி போக்குதல். "சென்னியில் வைத்த" என்றது, அது மேலாய் நிற்கத் தாம் அதன் கீழாய் அடங்கி நிற்றல். அதனால் அவரது செயல் சிவன் செயலேயாதல் உணர்த்தப்பட்டது. "திருவருளாலே" என்றதனால் சிவசமவாதம் கூடாதாயிற்று.*

*ஞானிகளாவார் குருவருள் பெற்றவர்களே. அவர்களது 'சஞ்சிதம்,*

*பிராரத்தம், ஆகாமியம்' - என்னும் மூவகை வினைகளுள் சஞ்சிதம் ஞான தீக்கையால் எரிசேர்ந்த வித்துப் போலக் கெட்டொழியும். பிராரத்தம் அனுபவத்தால் தீரும். எனினும் அஃது அவர்களது உணர்வைத் தாக்காது உடலளவாய் ஒழிதலால், ஆகாமியத்தை உண்டாக்காது. சோர்வு காரணமாக ஒரோவழி ஆகாமியம் தலையெடுக்குமாயினும் அது உடனே அவர்களது குருலிங்க சங்கமங்களைப் பற்றிய மனமொழி மெய் வழிபாடுகளால் முறுகுதலின்றிக் கெடும். இவ்வாற்றால் ஞானிகள் தாம் வினையினின்று நீங்குதலேயன்றித் தம்மையடைந்த பக்குவிகளுக்கு ஆசிரியராய், அவர்களது வினையையும் நீக்குவர். இஃதே இம்மந்திரத்தால் கூறப்பட்டது. இங்ஙனம் கொள்ளாக்கால், கூறியது கூறலாய், இதனாற் போந்த பொருள் ஒன்றும் இல்லையாம். "சென்னியில் வைத்த திருவருளாலே" எல்லாம் செய்தல் மேற்பல விடத்தும் கூறப்பட்டமையால், அதனையே கூறுதற்கு இங்கொரு மந்திரம் வேண்டா.*

*மூன்று வகையான வினைகளும் நீங்கும் முறை மேற்கூறியவாறே யாதலை,*

*எல்லையில் பிறவி நல்கும்*
*இருவினை எரிசேர் வித்தின்*
*ஒல்லையின் அகலும்; ஏன்ற*
*உடல் பழ வினைய தூட்டும்;*
*தொல்லையின் வருதல் போலத்*
*தோன்றிரு வினைய துண்டேல்*
*அல்லொளி புரையும் ஞானத்(து)*
*அழல் உற அழிந்து போமே.*

*என்னும் சிவப்பிரகாச (செய்யுள் - 89)த்தாலும்,*

*ஏன்ற வினை உடலோடு ஏகும் இடை ஏறும்வினை*
*தோன்றில் அருளே சுடும்.*

*என்னும் திருவருட்பயனாலும் அறிக. மற்றும்,*

*"உணக்கி லாததோர் வித்து மேல் விளையாமல்*
*என்வினை ஒத்தபின்*
*கணக்கி லாத்திருக் கோலம்*
*நீ வந்து காட்டினாய்"   - தி.8 திருக்கழுக்குன்றப் பதிகம்-1*

*என்பதனானும் அறிக.*

*சிவமேயான ஞானிகள் பக்குவிகளுக்குச் சிவமாகவே தோன்றுவர். அதனால் அவர்களைக் கண்டவுடன் பக்குவிகள் தம்மையிழந்து அவர்பால் அடைக்கலம் புகுவர். ஞானிகளும் அவர்களது பக்குவத்தை உணர்ந்து அவர்களைத் தங்கட்கு ஆளாகக் கொண்டு, அருளுதலைச் செய்வர். இவற்றையெல்லாம் ஆசிரியர் அருணந்தி தேவர், உமாபதி தேவர் வரலாறுகளின் வைத்து அறிக.*

**2571.** மனவாக்குக் காயத்தால் வல்வினை மூளும்
மனவாக்கு நேர்நிற்கில் வல்வினை மன்னா
மனவாக்குக் கெட்டவன் வாதனை தன்னால்
தனைமாற்றி ஆற்றத் தகும்ஞானி தானே. **3**

---

*இதனால், ஞானிகள் தாங்கள் நலம் பெறுதலேயன்றிப் பிறரையும் நலப்படுத்துதல் கூறப்பட்டது. இந்நாயனார்,*

*"நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்"*

*எனத் தொடக்கத்திற்றானே அருளிச்செய்தது நினைக்கற்பாலது.*

***2571. தெளிவுரை :-*** *உயிர்களின் மனமும், வாக்கும், காயமும் நேர்முறையில் செயற்படாது, கோடும் முறையில் செயற்பட்டால் உயிர்கட்கு, நீக்குதற்கரிய வலிய வினைகள் உளவாகும். அவை அவ்வாறின்றி, நேர்முறையில் செயற்பட்டால் அவ்வாறான நிலைமை ஏற்படாது. (எனினும் அஞ்ஞானமுடையவர்களது மனோவாக்குக் காயங்கள் நேர்முறையில் செயற்படமாட்டா). இனி ஒருவன் அஞ்ஞானத்தின் நீங்கி மெய்ஞ்ஞானத்தைப் பெற்று, மனோ வாக்குக் காயங்களின் பிடியில் அகப்படாது விடுபட்டானாயினும், பழைய வாசனை காரணமாக ஒரோவழி அவை தம்மியல்பில் வந்து அவனைத் தாக்குதல் கூடும். அப்பொழுது அவன் தற்போதத்தை நீக்கிச் சிவபோதத்தை உடையவனாய் அவற்றைச் செயற்படுத்தினால், அவன், 'ஞானி' என்னும் நிலையினின்று நீங்கான்.*

***குறிப்புரை :-*** *ஞானிகள் அவ்வாறுதான் அவைகளைச் செயற்படுத்தி நிற்பார்கள் என்பது குறிப்பெச்சம். மனோ வாக்குக் காயங்கள் நேர் முறையில் செயற்படுதலாவது, 'நாம் செயற்படுவது திருவருளால்' என்பதை மறவாமல் நினைந்து, தமது செயலை இறைவனது பணியாகக் கருதிச் செயற்படுதல், உடையானது நேர்மை, நேர்மை இன்மைகள் உடைமைகளின் மேல் ஏற்றிச் சொல்லப்பட்டன. "தன்" என்றது தற்போதத்தை, தற்போதத்தால் நுகராது சிவபோதத்தால் நுகரின் சிற்றின்பமும் பேரின்பமேயாகும். இதனை,*

*"பெற்றிசிற் றின்பமே பேரின்ப மாம்அங்கே*
*முற்ற வரும்பரி சுந்தீபற,*
*முளையாது மாயையென் றுந்தீபற" - திருவுந்தியார் - 33*

*எனவும்,*

*உடம்புடைய யோகிகள்தாம் உற்றசிற் றின்பம்*
*அடங்கத்தம் பேரின்பத்(து) ஆக்கில் - தொடங்கி*
*முளைப்பதுமொன் றில்லை, முடிவதுமொன் றில்லை;*
*இளைப்பதுமொன் றில்லை இவர்.*

***- திருக்களிற்றுப்படியார்-76***

*எனவும் போந்த சாத்திரங்களாலும், மற்றும்*

> *காணும் கரணங்க ளெல்லாம்பே ரின்பமெனப்*
> *பேணும் அடியார் பிறப்பகலக் - காணும் பெரியான்*

***- தி.8 பண்டாய நான்மறை - 6***

***என்னும் திருமொழியாலும் உணர்க. வாதனை - வாசனை. தன், சாரியை. வாதனையால் விளைவன "வாதனை" எனப்பட்டன. "வாதனைதன்னால்" என்னும் மூன்றாம் உருபை, 'வாதனைதன்கண்' என ஏழாம் உருபாகத் திரிக்க.***

***இதனால், ஞானிகள் பிராரத்தம் காரணமாகப் பழைய வாசனை தோன்றும் பொழுது அதனால் திரிபெய்தாது நிற்குமாறு கூறப்பட்டது.***

## 40. அவா அறுத்தல்

*அவாவாவது, 'உள்ளது போதும்' என அமைந்திராது 'எனக்கு இது வேண்டும்; அது வேண்டும்; அவையின்றி என் வாழ்வு அமையாது' என ஒன்றையோ பலவற்றையோ பெற விரும்பும் வேட்கை. இது பற்றியே "ஆரா இயற்கை அவா" (திருக்குறள் 370) எனப்பட்டது. ஆராமை - நிரம்பாமை. இஃது எல்லார்க்கும் உள்ளதாயினும் இங்குக் குறிக்கப்படுவது, ஞானிகட்குப் பண்டைப் பயிற்சி வயத்தால் எழும் அவாவே. அது முன்னை யதிகாரத்து இயைபினால் விளங்கும். திருவள்ளுவரும் அவா அறுத்தலை மெய்யுணர்தலின்பின் வைத்துக் கூறினமை உணர்தற்பாலது.*

*பிறப்பு நிலையில் உள்ளாரது அவா பிறப்பல்லாத பிற சிறு துன்பங்களையே பயக்கும். ஞானத்தால் பிறப்பற்று வீட்டு நிலையில் உள்ளாரது அவா அவர் பல்லாற்றானும் முயன்று நீக்கிய பிறவியாகிய பெருந்துன்பத்தை மீளப் பயக்கும் கொடுமையுடையது ஆதலின், அவரது அவாவே நூல்களால் பெரிதும் கடியப்படுகின்றது. இதனை,*

> *அவாஎன்ப எல்லா உயிர்க்கும், எஞ் ஞான்றும்*
> *தவாஅப் பிறப்பீனும் வித்து.* ***- திருக்குறள் - 361***

> ***ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே***
> ***பேரா இயற்கை தரும். - திருக்குறள் - 370***

***எனவும், பிறவாறும் ஓதினமையால் அறிக. இவ்வதிகாரம் ஒன்பது மந்திரங்களை உடையது.***

**2572. வாசியும் மூசியும் பேசி வகையினால்**
**பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை**
**ஆசையும் அன்பும் அறுமின் அறுத்தபின்**
**ஈசன் இருந்த இடம்எளி தாகுமே. 1**

---

*2572. தெளிவுரை :- வாசி யோகத்தின் பெருமையையும், அதிற் பயிலும் யோகியின் பெருமையையும் நூல்களால் உணர்ந்து அவற்றை வகை வகையாக விரித்துரைப்பவனைப் போல, ஞானிகளும் விரித்துரைத்துக் கொண்டு காலம் போக்குவதில் பயனில்லை. ஆகையால் நீவிர் உயிரல் பொருள்கள் மேல் செல்லும் ஆசையையும் உயிர்ப் பொருள்கள்மேல் மேல் செல்லும் அன்பினையும் அடியோடு நீக்குங்கள். நீக்கினால் நீவிர் இறை நிலையை அடைதல் எளிதாகும்.*

*குறிப்புரை :- 'இல்லையேல், அரிதாகும்' என்பதாம். மூசுதல் - மூடுதல். மூசி - மூடியிருப்பவன். மூடப்படுவன கண்கள். பேசி - பேசுபவன். வீண் காலம் போக்குதலை, 'பிதற்றுதல் என்றார். அன்பு இல்லறத்தார்க்கே உரியனவாய் நீங்க, ஞானிகட்கு அருளே உரித்தாதல் பற்றி, அன்பும் அறுக்கப்பட வேண்டியதாயிற்று.*

2573. மாடத் துளான் அலன்மண்டபத் தான்அலன்
கூடத் துளான்அலன் கோயிலுள் ளான் அலன்
வேடத் துளான்அலன் வேட்கைவிட் டார்நெஞ்சில்
மூடத்து ளேநின்று முத்திதந் தானே. 2

---

*“இடம்” என்றது நிலையை, இதனால், ‘சொல்லளவாய் நிற்கும் அவா அறுத்தல் ஞானி கட்கும் பயன் தருவதாகாது’ என்பது கூறப்பட்டது. “என்போல் உடம்பெலாம் வாயாய்ப் பிதற்றுவர் ஆர்” எனத் தாயுமான அடிகளும் கூறினார்.*

***2573. தெளிவுரை :-*** *சிவன், ஆசையால் மூடப்பட்டுள்ள அந்த மனங்களிலே வெளிப்படாது மறைந்து நின்று, ஆசையற்றவர்களது மனங்களிலே வெளிப்பட்டு விளங்கி, அவர்கட்கு முத்தியைத் தருகின்றான். ஆகையால் அவன், அவனை வைத்து வழிபடுகின்ற மாடம், மண்டபம், கூடம், கோயில், திருவேடம் ஆகிய இவ்விடங்களில் இல்லை. இருப்பான் அலன்.*

***குறிப்புரை :-*** *மூடத்து - மறைவாக. மாடம் - இல்லங்களில் சுவர்களில் அமைக்கப்படும் சிறு நிலைகள். அடியார் வேடமும் சிவன் உறையும் இடமாகக் கொள்ளப்படுதல் தெளிவு. ‘இவ்விடங்களில் சிவன் இல்லை’ என்றது, ஆசையுற்ற மனங்களுடன் அவ்விடங்களில் அவனை வழிபடுவார்க்கு. ‘மூடு அத்துளே நின்று’ எனப் பிரித்து, அதனை, வேட்கை விட்டார் நெஞ்சில் முத்தி தந்தான்’ என்பதற்கு முன்னே கூட்டி முதற் கண் வைத்து உரைக்க. ‘அதனுள்’ என்பது, ‘அத்துள்’ என மருவிற்று. நின்று - மறைந்து நின்று. ‘மூடு அத்துளே மறைந்து நின்று’ என்றதனால், மூடுதல் இன்றி விளங்கிய நெஞ்சில் வெளிப்பட்டு நிற்றல் பெறப்பட்டது. முன் மந்திரத்து நின்ற ‘ஈசன்’ என்பதே இம்மந்திரத்திற்கு எழுவாயாய் வந்து இயைந்தது. இதனால், ‘உள்ளத்தில் ஆசை அறாதவர்கள் வெளியில் தனியிடங்களில் சிவனை வைத்து வழிபடுதலால் பயனில்லை’ என்பது கூறப்பட்டது.*

***2574. தெளிவுரை :-*** *மேற்கூறிய உலக ஆசைகள் அனைத்தையும் நீவிர் கட்டாயமாக அறவே விட்டொழியுங்கள்; அவைகளை விட்டு நீவிர் சிவனை அடைந்த பின்பும் பழைய பழக்கத்தால் அந்த ஆசைகள் மீண்டும் உங்கள்பால் தோன்றுதல் கூடும். அப்பொழுதும் அதனை முளையிலேயே அறுத்தெறியுங்கள்; ஏனெனில் ஆசை மிகுந்து மிகுந்து வருவதால்தான் எந்நிலையிலும் துன்பங்கள் மிகுந்து மிகுந்து வருகின்றன. ஆசையை நீக்க நீக்க, இன்பங்களே மிகுந்து மிகுந்து வரும்.*

***குறிப்புரை :-*** *அடுக்கு, வலியுறுத்தற்பொருட்டு, ‘ஈசனிடத்தாயினும்’ என ஏழனுருபு புணர்ப்பினும் அமையுமாயினும் அவ்வாறு புணர்த்தோதாது, “ஈசனோடாயினும்” என மூன்றனுருபு புணர்த்தோதியதனையும் நோக்காது, ‘ஈசனை விரும்புதலையும் விடுமின்’ என உரைப்பாரும் உளர். அந்த*

**2574.** ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை அறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்தம் ஆமே. **3**

**2575.** அடுவன பூதங்கள் ஐந்தும் உடனே
படுவழி செய்கின்ற பற்றற வீசி
விடுவது வேட்கையை மெய்ந்நின்ற ஞானம்
தொடுவது தம்மைத் தொடர்தலும் ஆமே. **4**

---

*விருப்பத்தையும் அறுத்தவர் அடைவது யாது? மீமாஞ்சகரும், தருக்க மதத்தவரும், பாடாணவாத சைவரும் கூறும், யாதோர் உணர்வுமின்றிக் கல்லுப்போலக் கிடக்கும் நிலையேபோலும்! ஈசனிடத்திருந்தபொழுதும் உலக ஆசை துன்பந் தருதற்கு நம்பியாரூரர் வரலாறு நற்சான்று பகரும். பின்னிரண்டடிகளில் வந்த ஆக்கம் மிகுதி மேலன.*

*இதனால், அவா துன்பத்திற்கும், அவா இன்மை இன்பத்திற்கும் காரணம் ஆதல் கூறப்பட்டது.*

*2575. தெளிவுரை :- கொல்வது போலும் துன்பத்தை ஒருங்குகூடிச் செய்வனவே ஐம்பூதங்கள், அவற்றின்மேல் வைக்கின்ற பற்று மீண்டும் மீண்டும் சிக்குதற்கு வழி செய்வதே. அதனால், அந்தப் பற்றினைப் போக்கி, மீண்டும் அவற்றின்மேல் செல்ல எழுகின்ற ஆசையை எழாமல் தடுப்பதே நிலைத்து நிற்கின்ற ஞானமாகும். அந்தப் பூதங்களை மனத்தால் சிறிது தீண்டுதலும் அவை தொடர்தலுக்கு வழியேயாகும்.*

*குறிப்புரை :- அடுதல் - கொல்லுதல். இங்கு அதனோடொத்த துன்பத்தைக் குறித்தது, "கொல்லப் பயன்படும் கீழ்" (திருக்குறள் - 1078) என்பதிற்போல் ஐந்து பூதங்களும் துன்பம் செய்தலாவது, அவை உடம்பாகி நின்று, நோய், பசி முதலியவற்றைச் செய்தல், எனவே, "பற்று" என்றதும் உடம்பிற் பற்றேயாயிற்று. உடம்பிற் பற்றே வேட்கை பலவற்றிற்கும் காரணம் ஆதலை அறிக. உடன் - ஒன்றுகூடி. உம்மை, இறந்தது தழுவிய எச்சம்.*

*இதனால், 'ஆசைகட்குக் காரணம் உடம்பின்மேல் பற்று' என்பது கூறப்பட்டது.*

*2576. தெளிவுரை :- நிறை மதி நாளன்று பொங்குகின்ற கடலைப்போல ஊழிவெள்ளம் தோன்றி உலகை விழுங்கிவிட்டு மறைந்தது. என்றும் கெடாத இன்பக்கடலை இறைவன் தாங்கிக் கொண்டிருக்கின்றான். ஆயினும், வானோரும், மண்ணோரும் ஆசைக்கடலில் மூழ்கியிருந்தமையால் இறைவனது இன்பக்கடலை அடைய மாட்டாது, அந்த ஊழி வெள்ளத்தில் மூழ்கி அழிந்தனரேயன்றி பயன் ஏதும் பெற்றாரில்லை.*

**2576.** உவாக்கடல் ஒக்கின்ற ஊழியும் போனது
உவாக்கட லுட்பட்டுத் துஞ்சினர் வானோர்
அவாக்கட லுட்பட்டு அழுந்தினர் மண்ணோர்
தவாக்கடல் ஈசன் தரித்துநின் றானே. **5**

**2577.** நின்ற வினையும் பிணியும் நெடுஞ்செயல்
துன்றுந் தொழில்அற்றுச் சுத்தம தாகலும்
பின்றைங் கருமமும் பேர்த்தருள் நேர்பெற்றுத்
துன்றி அழுந்தலும் ஞானிகள் தூய்மையே. **6**

---

*குறிப்புரை :-* ஈற்றடியை முதலடியின் பின்னர்க்கூட்டி, வானோர், மண்ணோர் அவாக் கடலுட் பட்டு அழுந்தினராய், உவாக் கடலுட்பட்டு துஞ்சினர்' என முடிக்க. பின் வந்த "உவாக்கடல்", 'மேற்கூறிய அந்தக் கடல்' என்னும் பொருட்டாய் நின்றது. ஏனைப் பிறப்புக்கள் பலவற்றினும் சிறந்த பிறப்பினராகிய தேவரும் மக்களுங்கூட ஆசையால் ஏனைப் பிறப்பினரே ஆயினர்' என்றபடி. "அழுந்தினர்" என்பது முற்றெச்சமாய் நின்றது. அவாக்கடலைத் துன்பக் கடலாக வருணித்தமையால், "தவாக்கடல்" என்றது இன்பக் கடலாயிற்று. தலை உவா - அமாவாசை. கடை உவா - முழுமதி நாள். துவா - இரண்டு.

இதனால், மக்கள், தேவர் பிறப்பினையும் ஆசை பயனில்லன ஆக்குதல் கூறப்பட்டது.

*2577. தெளிவுரை :-* ஞானிகளாயினார் செய்யும் வீட்டு நெறிச் செயலாவன. (தீக்கையால் எரிக்கப்பட்டு ஒழிந்த சஞ்சித வினைபோக, முகந்து கொண்டு) எஞ்சி நின்ற பிராரத்த வினைத் தாக்கத்தையும், கருவி கரணங்களாய் நிற்கும் மாயையின் தாக்கத்தையும் வாசனையளவாய் நிற்கும் ஆணவத்தின் தாக்கத்தையும் முன் போல நீட்டியாது (சிவஞானபோதப் பன்னிரண்டாம் சூத்திரத்திற் கூறிய முறையால்) உடனே தடுத்துப் போக்கித் தூய்மையோடிருத்தலும், ஐந்தொழில் முதல்வர் செய்யும் ஐந்தொழிலின்றும் நீங்கிச் சிவனது திருவருளைப் பெற்று அவற்றால் அவனை நேரே கூடி அவனது இன்பத்தில் மூழ்குதலுமேயாகும்.

*குறிப்புரை :-* 'பின்னும் பின்னும் ஆசையில் வீழ்ந்து அழிவதன்று' என்பதாம்.

> தலைப்பட்டார் தீரத் துறந்தார்; மயங்கி
> வலைப்பட்டார் மற்றை யவர். - **திருக்குறள் 348**

என்றருளினார் திருவள்ளுவர். பிணி - கட்டு; நோயுமாம். வினையை முன்னர்ப் பிரித்தமையால் பிணி ஏனையவாயின. 'பின்றை' என்பதன் ஈற்று ஐகாரமும் அதன்பின் உம்மையும் தொகுத்தலாயின. "பின்றை" என்பது, 'மற்று' என்னும் பொருளதாயிற்று. பேர்த்தல் - நீக்குதல் அருள்பெற்று, நேர்த்துன்றி' என இயைக்க. அழுந்துதலுக்கு இடம் ஆற்றலால் பெறப்பட்டது. தூய்மை - வீடு. இஃது

**2578. உண்மை உணர்ந்துற ஒண்சித்தி முத்தி ஆம்**
**பெண்மயல் கெட்டறப் பேறட்ட சித்தியாம்**
**திண்மையின் ஞானி சிவகாயம் கைவிட்டால்**
**அண்மை அருள்தான் அடைந்தன்பின் ஆறுமே. 7**

---

*அதற்குரிய செயல்களைக் குறித்தது.*

*இதனால், 'ஆசை அற்றொழிதற் பொருட்டு ஞானிகள் செய்யும் செயல்கள் இவை' என்பது கூறப்பட்டது.*

*2578. **தெளிவுரை :-** பொருளியல்புகளை உள்ளவாறு உணருமாற்றால் பொய்ப் பொருள்களில் ஆசையை அறத்தொலைத்து, மெய்ப் பொருளை உணர்ந்து நிற்றலால் அடையப்படும் வீடு பேறே ஒருவனுக்குச் சிறந்த பேறாகும். அவ்வாறன்றிப் பெண்ணாசையை மட்டும் தொலைத்துப் புகழ், பொருள் முதலியவற்றை அவாவி யோகத்தில் நிற்றலால் பெறும் பேறு அட்டமாசித்தி களாம். (அவை பிறப்பை நீக்காமையால் 'பேறு' எனப்படா) மற்று, மேற்கூறியவாறு மெய்யுணர்தலால், "உரன் என்னும் தோட்டியான் ஓர் ஐந்தும் காக்கும்" (திருக்குறள் - 34) திறம் பெற்ற ஞானி தனுவோடு (உடம்போடு) இருப்பினும் அவனது தனு சிவதனுவேயாகும், பிராரத்தம் முடிந்தபின் அத்தனு நீங்கினால், அவன் சிவனை மிக அணியனாய் அணைதற்குரிய அருளைப் பெற்று அணைவான். அணைந்தபொழுது சிவனிடத்தே அன்பு மீதூர்ந்து அவன் சிவனது இன்பத்திலே அமைதியுடன் திளைத்திருப்பான்.*

***குறிப்புரை :-** சிவ தனுவின் பெருமை திருவுருத்திரத்துள் பின்வருமாறு கூறப்பட்டது.*

> *"மகாருத்திரரே, உலகியலாகிய பிணிக்கு*
> *மருந்தாய் உள்ளதும், உம் அருளைப்பெற்றுள்ள*
> *உருத்திரருடனும் இரண்டறக் கலந்து உயிர்க*
> *ளுக்குத் துன்பத்தை நீக்கி, இன்பத்தைத் தருகின்ற*
> *மருந்தாய் உள்ளது மான உமது, சத்திமய*
> *மான நன்மை மிக்க எந்தத் தனு*
> *(உடம்பு) உண்டோ அந்தத் தனுவினால்*
> *எங்களை நல்வாழ்வு வாழ அருளும்"*
>
> *யாதோ ருத்ர சிவாதனு; சிவா விச்வாஹ பேஷ ஜீ*
> *சிவா ருத்ரஸ்ய பேஷ ஜீ தயா நோ ம்ருட ஜீவஸே.*

***- அனுவாகம் - 10.2***

*இன்னும் அதனுள் அதுபற்றி,*

> *"உருத்திரரே, (கயிலை) மலையில் வீற்றிருந்து*
> *உலகிற்கு இன்பம் ஊட்டுபவரே,*

*சாந்தமானதும், நன்மை மிக்கதும்,*
*வினையற்ற நிலையை (வீட்டினை)*
*விளக்கி நிற்பதுமாய் எந்தத் தனு*
*உள்ளதோ அந்த உம்முடைய தனுவால்*
*எங்களுக்கு உண்மை விளங்கும்படி*
*அருள்வீராக”*

*யாதோ ருத்ர சிவாதனு ரகோராபாப காசிநீ*
*தயாநஸ் தனுவா சந்தமயா கிரிசந்தாபிசாகசீஹி*

***- அனுவாகம் - 13***

*என்றும் கூறப்பட்டது. ‘சிவ ஞானிதன் தனுவும் இத்தகையதாகிய சிவ தனுவே’ என்றற்கு, “சிவ காயம்” என்றார். சிவனது அதிகார சத்தியைப் பெற்று அவனுக்கு உடம்பு போல நிற்றல். “உற” என்பதன்பின் ‘வரும்’ என ஒரு சொல் வருவித்து ‘வரும் முத்தியே ஒண் சித்தியாம்’ என முடிக்க. பெண் மயல் கெடுதல் ‘நியமம்’ என்பதை உணர்த்திப் பின்யோகத்தையும் உணர்த்திற்று. ‘கெட்டறல்’, ஒருபொருட் பன்மொழி. பேறு - பெறப்படுவது. திண்மையின் ஞானி - திண்மையை (மன உறுதியை) உடைய ஞானி. ‘அண்மையாய்’ என ஆக்கம் வருவிக்க. அடைந்தபின் அன்பு மேன்மேற் பெருக, அதனானே இன்பம் மேன்மேல் எல்லையின்றி விளையும் என்க. “அன்பே இன்பமாம்” என்பதை,*

*இன்பில் இனிதென்றல் இன்றுண்டேல், இன்றுண்டாம்;*
*அன்பு நிலையே அது.* ***- திருவருட் பயன், 80***

*என்னும் திருவருட் பயனால் அறிக. அறிந்தாலன்றி அன்பு உண்டாகாது. ஆகவே, ஞானத்தின் பயனே பத்தியாம். இதனைச் சேக்கிழார்*

*“ஞானம் ஈசன்பால் அன்பே*
*என்றனர் ஞானம் உண்டார்”*

*என்று அருளியது காண்க. (தி.12 திருஞான. பு. 843) சில சமயிகள், ‘ஞானமே முடிநிலையானது’ எனக் கூறிப் பத்தியைப் படிநிலையாகக் கொள்வர். அவர்களை,*

*“வித்தினைத் தேடி முளையைக்கை விட்டவர்*
*பித்தேறி னார்களென் றுந்தீபற*
*பெறுவதங் கென்பெணே உந்தீபற”* ***- திருஉந்தியார் - 28***

*எனவும், அவர்களது சமயங்களையும் சமய நூல்களையும்,*

*“சாவிபோம் மற்றைச் சமயங்கள் புக்குநின்(று)*
*ஆவி யறாதேஎன் றுந்தீபற;*
*அவ்வுரை கேளாதே உந்தீபற”* ***- திருஉந்தியார் - 31***

*எனவும் திருவுந்தியார் கூறிற்று. இது பற்றி திருக்களிற்றுப் படியாரிலும் செய்தி உள்ளது.*

**2579.** 'அவன் இவன் ஈசன்' என்று அன்புற நாடிச்
'சிவன் இவன் ஈசன்' என்று உண்மையை ஓரார்
பவனிவன் பல்வகை யாம்இப் பிறவிப்
புவன் இவன் போவது பொய்கண்ட போதே. **8**

---

*வித்தும் அதன் அங்குரமும் போன்றிருக்கும் மெய்ஞ்ஞானம்*
*வித்தும் அதன் அங்குரமும் மெய்யுணரில் - வித்ததனில்*
*காணாமை யால் அதனைக் கைவிடுவர்; கண்டவர்கள்*
*பேணாமை யால் அற்றார் பேறு.*

***- திருக்களிற்றுப்படியார், 57***

*சாவி போதலாவது, விளைந்த பயிர் கதிர்விட்டு முற்றியும் நிரம்ப முற்றிப் பயன்படும் அளவிலே அங்ஙனமாகாது காய்ந்து பதராகி விடுதல். ஞானத்தைத் தந்தும், அதன் பயனாகிய அன்பைத் தராதுபோதற்கு இஃது உவமையாயிற்று. இனித் திருக்களிற்றுப்படியாருள் "காணாமையால் அதனைக் கைவிடுவர்" என்றது பிற சமயத்தாரைக் கருதியும், 'கண்டவர்கள் - பேணாமையால் அற்றார் பேறு' என்றது சித்தாந்த சைவருள்ளும் நூலறிவு பெற்றும் நுழைவின்றிப் பத்தி செய்யாதாரைக் கருதியும் என்க.*

*நாணாமை, நாடாமை, நாரின்மை, யாதொன்றும்*
*பேணாமை பேதை தொழில்.* ***- திருக்குறள் - 833***

*என்னும் திருக்குறள் இங்கு நெஞ்சிற் பதிக்கற்பாலது.*

*"நூலறிவு பேசி நுழைவிலாதார் திரிக" (தி.11 அற்புதத் திருவந்தாதி, 33) என அம்மையார் அருளிச் செய்தார். இவ்வாறான அருமை தோன்றுதற்பொருட்டே "இறுதியில் அன்பின் ஆறும்" என்று அருளிச்செய்தார். ஆறும் - அமைதியுறும்.*

*இதனால், ஞானத்தால் இருவகைப் பற்றும் அற்ற மெய்யுணர்வால் அறுக்கப்படும் அவா அறுதியே சிறந்ததாதல் கூறப்பட்டது.*

***2579. தெளிவுரை :-*** *சிவபெருமான் ஒருவனையே முதற் கடவுளாக உணர்தலே, முன் மந்திரத்திற் கூறியவாறு உண்மையை உணர்தலாகும். அவ்வாறின்றி, பிற கடவுளரை, 'அவனே கடவுள், இவனே கடவுள்' என உணர்ந்து அன்பு செய்வன எல்லாம் இறையன்புகள் ஆகா; உயிர் அன்புகளே. தான் உண்மையை உணர்ந்துவிட்டதாகக் கருதிய ஒருவன் அதன் பின்னும் வலிய பலவகைப் பிறவிகளாகிய தேரினை ஊர்ந்து, பலவகைப் புவனங்களாகிய வீதிகள் தோறும் பவனி வருதல் அவன் பொய்யை மெய்யாகத் திரிய உணர்ந்த பொழுதேயாம்.*

***குறிப்புரை :-*** *"அன்புற நாடி" என்பதை, நாடி அன்புற்று" என மாற்றிக் கொள்க. 'வன் பல்வகையாம் இப்பிறவியில் புவனியில் இவன் பவனி போவது*

**2580.** கொதிக்கின்ற வாறும் குளிர்கின்ற வாறும்
பதிக்கின்ற வாறிந்தப் பாரகம் முற்றும்
விதிக்கின்ற ஐவரை வேண்டா துலகம்
நொதிக்கின்ற காயத்துள் நூல்ஒன்றல் ஆமே. **9**

---

*பொய்கண்ட போதே என இயைத்துக்கொள்க. 'வன்பிறவி, பல்வகையாம் பிறவி' எனத் தனித்தனி முடிக்க. பிறவியில் உழலுதலைப் பவனியாக உருவகித்து, ஏனையவற்றை உருவகம் செய்யாமை ஏகதேச உருவகம். தொடர் வேறாதலின், ஈற்றடியில் "இவன்" என்றது பன்மையொருமை மயக்கம் ஆகாமை அறிக. "இவன்" இரண்டில் முன்னது, 'சிவனாகிய இவன்' என இருபெயரொட்டாய் அண்மைச் சுட்டுப்பெயர். பின்னது, மேற்கூறிய உணராருள் ஒருவன். 'புவனி' என்பதன் ஈற்று இகரம் தொகுத்தலாயிற்று. பவன் - பவிப்பவன், தோன்றுபவன்.*

*இதனால், சிவபத்தியாலன்றிப் பிற தேவர் பத்தியால் பதவி ஆசைகள் நீங்காமை கூறப்பட்டது.*

***2580. தெளிவுரை :–** துன்பத்தைக் காய்தலும், இன்பத்தை உவத்தலும் ஆகிய இத்தன்மைகளையே உள்ளத்தில் உறுதியாகக் கொள்ளும் முறைமையை யுடையதே இவ்வுலகம் முழுதும், ஆயினும், அந்தத் துன்ப இன்பங்கள் அவற்றிற்குக் காரணமான புலன்களைக் கொணர்ந்து பொருத்துகின்றவர் ஐம்பொறிகளாகிய துட்டரேயாகலின், அவரை உலகம் வெறுத்தொதுக்கி, அழியும் தன்மையுடைய இவ்வுடம்பில் இருந்து கொண்டே சிவநூல்களின் வழி நிற்றலே தக்கது.*

***குறிப்புரை :–** 'நிற்பின் அவா முற்றும் அறும்' என்பது குறிப்பெச்சம். பதிக்கின்றவாற்றை உடையதனை, "பதிக்கின்றவாறு" என்றார். "பாரகம்" என்றதும், 'உலகம்' என்றதும் உயிர்களை. விதித்தல், இங்கு தப்பாது பொருத்துதல். 'நொடிகின்ற' என்பது, எதுகை நோக்கித் திரிந்து வலிமிகுந்தும் நின்றது. நொடிதல் – அழிதல், அது "நொடித்தான் மலை" (தி.7 ப.100) என்றமையானே விளங்கும். "நூல்" என்றது, இங்கு அதிகாரத்தால் சிவநூலையே குறித்துக் கருவியாகுபெயராய், அதனால் உணர்த்தப்படும் நெறியைக் குறித்தது. அந்நெறியில் சொல்லப்படுவனவற்றுள் பத்தியே தலையானதாகையால், "ஒன்றன்" என்றது அதனை ஒன்றுத லாகவே கொள்க. சிவ பத்தி மிகின், உலக ஆசை தோன்றாமை அறிக.*

*கொதித்தல் - துன்பந்தருவதாய் வெறுப்பிற்கு உரியதாதல்*

*குளிர்தல் - இன்பந்தருவதாய் விருப்பிற்கு இடனாதல்*

*விருப்பு வெறுப்புக்குக் காரணம் ஐம்பொறிகள். அவற்றை இயக்குவது அவா.*

*நொதித்தல் - ஊறுதல், மலஞ்சோர நிற்றல்*

*இதனால், ஆசையை அறுத்தற்கு உண்மை வழி சிவ பத்தியாதல் கூறிமுடித்து, வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாயும் செய்யப்பட்டது.*

*(இதற்குப்பின் பதிப்புக்களில் காணப்படுகின்ற, "உய்ந்தனம் என்பீர்; உறுபொருள் காண்கிலீர்" என்னும் மந்திரம் ஐந்தாம் தந்திரத்தில் 'யோகம்' என்னும் அதிகாரத்தில் வந்தது).*

## 41. பத்தியுடைமை

*துன்பம் தருவதாய அவாவை முற்றாகப் போக்கி, நிலைத்து நின்று இன்பம் தந்துகொண்டிருப்பது பத்தியேயாகலின், அவா அறுத்தலை அடுத்துப் பத்தியுடைமை கூறுகின்றார். 'பத்தி சிவபத்தியே' என்பது மேலே சொல்லப்பட்டது. இவ்வதிகாரம் பத்து மந்திரங்களையுடையது. முதல்வனிடத்தும் அவன் அடியாரிடத்தும் அன்பும் பணிவும் உடையன் ஆதல்.*

**2581.** முத்திசெய் ஞானமும் கேள்வியுமாய் நிற்கும்
அத்தனை மாயா அமரர் பிரானைச்
சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற சோதியைப்
பத்தன் பரசும் பசுபதி தான் என்றே. 1

**2582.** அடியார் அடியார் அடியார் அடிமைக்கு
அடியனாய் நல்கிட்டு அடிமையும் பூண்டேன்
அடியார் அருளால் அவனடி கூட்ட
அடியான் இவன்என்று அடிமை கொண்டானே. 2

---

*2581. **தெளிவுரை :-** வீடுபேற்றை தருகின்ற ஞான நூலைக் கற்கின்ற கல்வியின் பயனாயும், அவற்றைப் பற்றிக் கேட்கின்ற கேள்வியின் பயனாயும் உள்ளவனும், உலகிற்குத் தந்தையும் தேவர்கட்குத் தேவனும், தான் இயல்பாகவே தூயனாய், உயிர்கள் தூய்மை அடைதற்குரிய வழியாய் நிற்பவனும், அறிவே வடிவாய் உள்ளவனும் ஆகிய சிவனையே, 'உயிர்கட்குத் தலைவன்' என்று உணர்ந்து இறையன் புடையோன் போற்றுவான்.*

***குறிப்புரை :-*** *"பத்தன்" என்பது சாதி யொருமை. பரசப்படுதற்குக் காரணம் உடம்பொடு புணர்த்தலாகக் கூறப்பட்டது. "ஞானமும் கேள்வியும்" என்றது ஆகுபெயராய், அவற்றின் பயனைக் குறித்தது.*

*இதனால், 'இறையன்பாவது இது' என உணர்ந்தார் பத்திசெய்யும் முறை கூறப்பட்டது.*

*2582. **தெளிவுரை :-** சிவனுக்கு அடியராயினார்க்கு அடியார் ஆயினார் சிலர். அவர்கட்கு அடியராயினார் சிலர். அவர்கட்கு அடியராயினார் மற்றும் சிலர். அவர்கட்கே நான் அடியவன் ஆக என்னைக் கொடுத்து அடியவனாகி, அடிமைகட்குரிய பணிகளைச் செய்வதையே எனது கடமையாகவும் மேற்கொண்டேன். அதனால் என்னை ஆளாக ஏற்றுக் கொண்ட அடியார்கள் என்மேல் கருணை வைத்து அந்தப் பெருமானுடைய திருவடிகளில் என்னைச் சேர்ப்பிக்க, அப்பெருமானும் என்னைத் 'தனக்கே அடியவன்' என்று சொல்லி, நேராகவே என்னை அடிமை கொண்டான்.*

*முதல்வனுக்கு நேர் அடியர் ஞானிகள். அவருக்கு அடியார் யோகிகள். அவர்க்கு அடியார் கிரியையினர். அவர்க்கு அடிமை சரியையினர். இங்ஙனமன்றி, முறையே ஆசிரியர், சாதகர், மகன்மையினர், தொண்டினர் எனினும் பொருந்தும், ஞானம் முதலியவற்றை அறிவு, செறிவு, நோன்பு, சீலம் எனத் திருவாசக வழக்குப் பற்றிக் குறித்தலும் உண்டு.*

***குறிப்புரை :-** அடியார்க்கு அடியாரைப் பலராகக் கூறியது, 'அன்று தொட்டு இன்று காறும் அடியவர் பரம்பரை தொடர்ந்து வருகின்றது' என்பதை உணர்த்தற்கு. 'அந்தப் பரம்பரையில் வந்த எந்த அடியவர்க்கு அடிமை பூண்டாலும், அவர்களைச் சிவன் நேரே தன் அடியவராக ஏற்றுக்கொள்வான்' என்பதே இங்கு உணர்த்தப்பட்டது.*

*"திருப்பா திரிப் புலியூர்*
*உடையான் அடியார் அடிஅடி யோங்கட்கு*
*அரியதுண்டே"*

*"தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே" (தி.4 ப.101) எனப்போந்த திரு மொழிகளுடன் திருத்தொண்டத்தொகைத் திருப்பதிகத்தையும் (தி.7 ப.39) உற்று நோக்குக. "சீரணி குருசந்தானம்" (சிவஞான சித்தியார் - சுபக்கம் - சூ. 1.46) என்றதும் இக்கருத்தே பற்றி. முதலடியின் ஈற்றில், "அடிமை" என்றதும் 'அடிமை' செய்யும் அடியரையே. 'நல்கியிட்டு' என்பது குறைந்து நின்றது. 'நல்கிட்டு அடியனாய்' என மாற்றுக.*

*இதனால், அடியார் அடியார், அடியடியார் பத்திகளே சிவபத்தி யாதல் கூறப்பட்டது.*

*எனக்கன்பு நின்பொருட்டு எய்தாத தென்கொல்!*
*வெள் ளேறுடையான்*
*றனக்கன்பு செய்திருத் தாண்டக வேந்த, இத்*
*தாரணியில்*
*நினக்கன்பு செய்கின்ற அப்பூதியைச், சிவ*
*நேசம்உறும்*
*இனர்க்கன்பு செய் நம்பி யாரூரன் ஏத்தும்*
*இயல்பறிந்தே* ***- நால்வர் நான்மணி மாலை - 6***

*என்னும் சிவப்பிரகாச அடிகள் திருமொழியும் இங்கு உணரத்தக்கது.*

***2583. தெளிவுரை :-** சிவன் குளிர்ச்சியாய் இருக்க வேண்டிய சமையத்தில் நீரைவிடக் குளிர்ச்சியாய் இருப்பான். சுடவேண்டிய சமையத்தில் நெருப்பை விடச் சூடாகச் சுடுவான். (இரண்டும் கருணையே). அவனது முறை இவ்வாறாதலை அறிய வல்லார் ஆர்! நிலவுலகில் உள்ளார்க்குப் புலனாகாமலே சூக்குமமாய் இருந்து, அவர்கட்குப் பயன் தருகின்ற தேவர் பலரையும்விடச் சிவன்*

**2583.** நீரிற் குளிரும் நெருப்பினிற் சுட்டிடும்
ஆர்இக் கடன்நந்தி ஆமா றறிபவர்
பாரில் பயன்ஆரைப் பார்க்கிலும் நேரியன்
ஊரில் உமாபதி யாகிநின் றானே. **3**

**2584.** ஒத்துல கேழும் அறியா ஒருவன்என்று
அத்த னிருந்திடம் ஆர்அறி வார்செல்லப்
பத்தர்தம் பத்தியின் பாற்படி னல்லது
முத்தினை யார்சொல்ல முந்துகின் றாரே. **4**

---

*அதிசூக்குமன் ஆயினும், அவன் உயிர்களின் பொருட்டு ஊர்கள் தோறும் உமாதேவிக்குக் கணவனாய், அவளோடும் எழுந்தருளிக் காட்சியளிக்கின்றான்.*

*குறிப்புரை :- 'அஃதறிந்து அவ்விடங்களில் சென்று பத்தி செய்க' என்பது குறிப்பெச்சம். "நந்தி" என்பதை முதலிற்கொள்க. இடையில் வருவித்துரைத்தன இசையெச்சங்கள். "பயன்" என்பதன்பின் 'தரும்' என ஒருசொல் வருவிக்க. நேர்மை - சூக்குமம். இது பருமைக்கு எதிரானது. உமாபதியாகி நிற்றல், 'உலகனைத்திற்கும் அம்மையும், அப்பனும் தானே' என்பது தோன்றுதற்கு, 'அதனை யுணரின் பத்தி தானே பெருகும்' என்பது கருத்து.*

*இதனால், சிவன் உருப்பத்தி சிவ பத்தியேயாதல் கூறப்பட்டது.*

*2584. தெளிவுரை :- அன்பரது அன்பில் சென்றாலல்லது, 'அனைத்துலகங் களாலும் அறிய இயலாத ஒருவன்' எனச் சொல்லப்படுகின்ற சிவன் இருக்கின்ற இடத்தை அறிந்து சென்றடைய வல்லார் யாவர்? அவ்வாறே, அன்பர்கள் தம் அன்பிற்கண்டு சொன்னாலல்லது, கிடைத்தற்கரிய முத்துப்போன்ற அவனைக் கண்டு சொல்ல முற்படுவார் யாவர்? ஒருவரும் இல்லை.*

*குறிப்புரை :- சிவனை அவன் அன்பர்களல்லது பிறர் காணவும், சொல்லவும் வல்லாரல்லர்' என்றபடி.*

*"சித்தமும் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையிற் படுவோன் காண்க"*
*- தி.8 திருவண்டப்பகுதி - 41, 42*

*என்றருளிச் செய்தமை யறிக. 'ஒருவன்' என்பது சிவனைக் குறிக்கும் ஒரு பெயர்.*

*"ஒருவன் என்னும் ஒருவன் காண்க"*
*- தி.8 திருவண்டப்பகுதி - 43*

*என்பது திருவாசகம்.*

*"ஒருவன் என்று உலகம் ஏத்தும்
நளிர்மதிச் சடையன்" - திருவாய்மொழி - 3, 4-8*

**2585.** ஆன்கன்று தேடி யழைக்கு மதுபோல
நான்கன்றாய் நாடிஅழைத்தேன் என் நாதனை
வான்கன்றுக் கப்பாலாய் நின்ற மறைப்பொருள்
ஊன்கன்றாய் நாடிவந் துள்புகுந் தானே. **5**

---

*எனத் திருவாய்மொழியுள்ளும் வந்தது. 'என்ற, இருந்த' என்பவற்றின் ஈற்று அகரங்கள் தொகுத்தலாயின. 'ஆரறிவார் சொல்ல' என்பது பாட மன்று; அது பின்னர் வருதல் காண்க. "பத்தர்தம் பத்தியின் பாற்படி னல்லது" என்பது தாப்பிசையாய் முன்னரும் சென்றியைந்தது. அங்ஙனம் இயையுங்கால் "தம்" என்பது முன்னர்ச் சாரியையாயும், பின்னர்ப் பெயராயும் நின்றது.*

*இதனால், 'பத்தி யுடையாரே சிவனைக் காணவும், சொல்லவும் வல்லார்' என்பது கூறப்பட்டது.*

*2585. தெளிவுரை :- தாயைப் பிரிந்த பசுக்கன்று தன் தாயை நாடி அழைப்பதுபோல, சிவன் ஆவாய் இருக்க, நான் அவனைப் பிரிந்து வாடும் கன்றாய் இருந்து, என் தலைவனாகிய அவனையே நாடி, 'அப்பாவோ! ஐயாவோ!' எனப் பன்முறை அழைத்தேன்; அவன் வானுலகத்திலுள்ள பசுக்கன்றுகள் போலும் தேவர்கட்கெல்லாம் அப்பால் நிற்கும் வேதப்பொருளாயினும் எனது கூக்குரலைச் செவிமடுத்து, உருவம் யாதும் கொள்ளாமலே என்னைத் தேடி வந்து, என உள்ளத்துள்ளே புகுந்தான்.*

*குறிப்புரை :- 'நான் மகிழ்ந்தேன்' என்பது இசையெச்சம். 'ஆனை' என இரண்டன் உருபு விரிக்க. "கன்றாய்" என்னும் ஆக்கம் உவமை குறித்து நின்றது. தேவர்கள் பசுவர்க்கத்தினராகலின் 'பசு' என்றும், அவர்கள், 'தாம் கன்றுகள்' என்பதையும், 'சிவன் தாய்ப்பசு' என்பதையும் நினைந்து அவனை அழைத்தல் இன்றிச் சுக போகங்களில் ஆழ்ந்து கிடத்தலால் 'அவர்கட்கு அப்பாலாய்' என்றும், 'எனினும், மெய்யுணர்வார் அவனை அழைத்தே நிற்பர்' என்றற்கு, "மறைப்பொருள்" என்றும் கூறினார். 'மறைப்பொருள் ஆமவன்' என்க. ஊன் - உடம்பு. கன்றுதல் - விடாது பற்றுதல், 'ஊன் கன்றானாய் வந்து புகுந்தான்' என்க. இங்ஙனம் கூறியது, 'அவன் புறம் நின்று போதராமல், அகம் நின்ற நிலையையே விளக்கியருளினான்' என்றபடி.*

*இதனால், 'பத்தியுடையார் சிவனை யின்றியமையாது அலமருவர்' என்பதுவும், 'அவர்கட்குச் சிவன் நேர்வந்து அருளுவன்' என்பதும் கூறப்பட்டன.*

*"உடையான் கழற்கு அன்பிலை;*
*.................. துணையிலி பிணநெஞ்சே!*
*தேடுகின்றிலை, தெருவுதோ றலறிலை;*
*செய்வதொன் றறியேனே" - தி.8 திருச்சதகம் 31*

*எனவும்,*

**2586.** பெத்தத்தும் தன்பணி இல்லை பிறத்தலால்
முத்தத்தும் தன்பணி இல்லை முறைமையால்
அத்தற் கிரண்டும் அருளால் அளித்தலால்
பத்திப்பட் டோர்க்குப் பணியொன்றும் இல்லையே. **6**

---

*"................. வியந்து ஆங்கு அலறித்*
*தேடிற்றிலேன்; சிவன் எவ்விடத்தான்?*
*எவர் கண்டனர்? என்று*
*ஓடிற்றிலேன்; கிடந்து உள்ளுருகேன்;*
*நின்று உழைத்தனனே" - தி.8 நீத்தல் விண்ணப்பம்-45*

*எனவும், பிறவாறும் போந்த பத்தித் திருமொழிகளைக் காண்க.*

*'ஆனின் றழைக்கு மதுபோல்என் நந்தியை*
*நானின் றழைப்பது ஞானங் கருதியே' - தி.10 பா. 65*

*எனத் தொடக்கத்தேயும் இவர் கூறினார். கன்றுதல் - உற்ற நோய் நோன்று உரு இளைத்தல். தவம்.*

***2586. தெளிவுரை :-** உயிர்களின் நிலை 'பெத்தம், முத்தி' என இரண்டு. பெத்தம், பாசங்களிற் கட்டுண்ட நிலை. முத்தி, அவற்றினின்றும் விடுபட்ட நிலை. இவ்விரண்டு நிலைகளிலும், 'உயிர்களின் செயல்' என்று ஒன்று இல்லை. ஏனெனில், பெத்தத்தில் உயிர்கள் பல பிறவிகளில் சென்று உழல்கின்றன. அப்பிறப்புக்களைத் தருபவனும், வாழுங் காலத்து இன்பத் துன்ப நுகர்ச்சிகளை அவற்றிற்குரிய பொருள்களைத் தந்து ஊட்டுவிப்பவனும், பின்பு அந்தப் பிறவியை நீக்கிவிடுபவனும் எல்லாம் சிவனே. அதனால், பெத்தத்திலும் அவற்றிற்கென்று ஒரு செயல் இல்லை. இனி, முத்தியாவது சிவன் குருவாய் வந்து ஞான தீக்கை செய்து வினைக்கட்டினை அறுத்து அதினின்று விடுவிப்பது. அந்நிலையிலும் உயிர் அவன் காட்டிய வழியில் நடத்தற்குரியதேயன்றித் தானாக எவ்வழியிலும் செல்லாது. மேலும் ஞான தீக்கையில் உயிர் தனது, உடல், பொருள், ஆவி அனைத்தையும் சிவன் கையில் முழுமையாக ஒப்புவித்து விடுகின்றது. இவ்வாற்றால், பெத்தம், முத்தியிரண்டிலும் உண்மையில் உயிருக்கென்று ஒரு செயல் இல்லை. ஆயினும் மயக்கத்தால் உயிர்கள் பெத்தத்தில் நிகழும் செயல்களைத் தம் செயல்களாகவும், முத்தர்கள் செயலையும் அவரது செயல்களாகவும் கருதி மயங்குகின்றன. ஞானம் கைவரப் பெற்று பத்தி மிகுந்தவர்க்கு அத்தகைய மயக்கம் இன்றி, உண்மையே விளங்கி நிற்றலால், தமக்கும் பணியாதும் இல்லையாகும் நிலை அவர்கட்கே உள்ளது.*

***குறிப்புரை :-** "தன்" என்றது சாதியொருமை. "பிறத்தலால்" என்றது, 'தம் வயம் இன்றிப் பிறத்தலால் என்றபடி. பிறத்தல் கூறவே, வாழ்தலும், இறத்தலும் பெறப்பட்டன. 'முத்தி' என்பது எதுகை நோக்கி, 'முத்தம்' என இகரம் தொகுத்து*

**2587.** பறவையிற் கற்பமும் பாம்பும்மெய் யாகக்
குறவம் சிலம்பக் குளிர்வரை யேறி
நறவார் மலர்கொண்டு நந்தியை யல்லால்
இறைவன்என் றென்மனம் ஏத்தகி லாதே. **7**

---

*அம் விரிக்கப்பட்டது. முறைமை - குரு கற்பித்த முறைமை. இரண்டு, பெத்த நிலை, முத்தி நிலை, அருளால் அருளின்படி. அளித்தது, அருளைத் தந்தவனுக்கு. "தந்ததுன்றன்னைக் கொண்டதென் றன்னை" (தி.8 கோயில் திருப்பதிகம் - 10) என அருளினமை காண்க.*

*இனி ஒருபோது அளித்தமையை எப்போதும் மறவாமைப் பொருட்டு அவர் எல்லாச் செயல்களையும் 'சிவனுக்கு ஆகுக, சிவனுக்காக' என அருள் வழி நின்று சொல்லி முடிப்பர். 'இவ்வாற்றால் பணிச் சுமை யாதும் இல்லாதார்க்குப், பத்தி மேலும் மேலும் பெருகி முதிரும்' என்பது கருத்து.*

*இதனால், பத்தி யுடையார்க்கு அப்பத்தி மேலும் மேலும் பெருகி முதிருமாறு கூறப்பட்டது.*

***2587. தெளிவுரை :-** உபநிடதம் கூறுமாறு ஐந்து பறவைகள் போன்றுள்ள ஐந்து உடம்புகளுள்ளும் உள்ளீடாய் நிற்கின்ற ஆன்மாவும், அன்ன மயம், பிராண மயம் என்னும் உடம்பினுள் பாம்பு வடிவாய் உள்ள குண்டலினியும் பொதுமை நீங்கி, உண்மை நிலையை அடைந்திருக்க, அவ்வுடம்புகளுள்ளே மலையில் வாழும் குறவர்கள் இசைக்கும் இசைபோல எழுகின்ற நாதங்கள் ஒலிக்க, அமிர்தத்தால் குளிர்ந்திருக்கின்ற, விந்துத்தானமாகிய, 'மேரு' எனப்படும் ஆஞ்ஞையை அடைந்து அங்குக் கொல்லாமை முதலிய எட்டையும் எட்டு மலர்களாகக் கொண்டு வழிபட்டுத் 'தியானம்' செய்யும்பொழுது, எங்கள் சிவபெருமானையன்றி, எனது மனம் வேறொருவனை 'இறைவன்' என்று கொண்டு தியானியாது.*

***குறிப்புரை :** கற்பம் - சாவாது மூவாது இருத்தற்குக் கொள்ளப்படும் மருந்து. பாம்பு - குண்டலினி ஆற்றல். குறவம் சிலம்ப - மணி, கடல், யானை போன்ற பத்துவித நாதங்கள் ஒலிக்கக் கேட்டு. தைத்திரீய உபநிடதம் ஆனந்த வல்லியில், ஐங்கோசங்களையும் தனித்தனிப் பறவையாகவும் அவற்றின் உறுப்புக்களைத் தனித்தனி ஐந்தாக வைத்து, முகம் முதலிய உறுப்புக்களாகவும் உருவகம் செய்து கூறிற்று. அதனை, மாதவச் சிவஞான யோகிகள்,*

*"ஆன்மா இத் தரை கீழ் மேலும்
கொள்ளி வட்டம் கறங்கென
நிமிடத்தின்கண் அலமரும் படி
கொண்டு திரிதல் பற்றிஇவ்
வைங்கோசங்களை ஐந்து*

**2588.** **உறுதுணை நந்தியை உம்பர் பிரானைப்**
**பெறுதுணை செய்து பிறப்பறுத் துய்மின்**
**செறுதுணை செய்து சிவனடி சிந்தித்து**
**உறுதுணை யாய் அங்கி யாய்நின் றானே.** **8**

---

*பறவையாகவும், அவற்றுள் ஒரோ*
*ஒன்றை ஐவகைப் படுத்து முகம்*
*முதலிய உறுப்புக்களாகவும்*
*வேதத்துள் உருவகஞ் செய்*
*துணர்த்தியவாறு" - சிவஞான சித்தியார் - சுபக்கம், சூ-4,23-உரை*

*என்றார். முண்டகோபநிடதம், மூன்றாம் முண்டகத்தில், ஆன்மாவையே பறவையாக உருவகம் செய்து, 'அஃது உலகமாகிய மரத்தில் அமர்ந்து, அதில் உள்ள போகமாகிய பழத்தைப் புசிக்கின்றது' என்றும், 'ஆயினும், அதனை விட்டுப் பிரியாது இணைந்து உடன் இருக்கின்ற மற்றொரு பறவை அந்தப் பழத்தை உண்ணாமல் பார்த்துக் கொண்டிருக்கின்றது' என்றும் கூறிற்று. உண்ணாமல் பார்த்துக்கொண்டிருக்கின்ற பறவை சிவன்.*

*பறவை உடம்பை எடுத்த உயிரும் 'பறவை' என்றே சொல்லப்படுதல் பற்றி முண்டகோபநிடதம் ஆன்மாவையே (பறவை) என்றது. ஆயினும் உண்மையில் பறவையாவது, பறவை உடம்பே ஆகையால், தைத்திரியோபநிடதம் ஐவகை உடம்புகளையே ஐந்து பறவைகளாகக் கூறிற்று. இங்கு நாயனார், "பறவை" என்றது உடம்பையே. கர்ப்பம் - சூல்; உள்ளீடு உடம்பின் உள்ளீடாவது ஆன்மா. குறவர் பாடும் இசையை, "குறவம்" என்றார். ஆஞ்ஞையை 'மேரு' என்பதால், அதன் கீழ் ஒலிக்கின்ற நாதத்தை, "குறவம்" என்றார். சிலம்புதல் - ஒலித்தல். இதனை, மேல், "மணி கடல் யானை" (பா. 593) என்னும் மந்திரத்தும் குறித்தவாறு காண்க. கொல்லாமை முதலிய எட்டாவன, 'கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு' என்பன. (சிவஞான மாபாடியம், சூ-9, அதி-3) இவை எண்வகை யோக உறுப்புக்களில் இயம நியமங்களாய் வருதல் காண்க. ஏத்துதல், இங்குப் பொதுமையில் 'வழிபடுதல்' என்னும் பொருட்டாய்த் தியானத்தைக் குறித்தது. குளிர் வரை ஏறியபின் செயற்பாலது அதுவேயாகலின்.*

*இதனால், சிவ பத்தியே இறை பத்தியாவதன்றிப் பிற பத்திகள் இறை பத்தியாகாமை வலியுறுத்தப்பட்டது.*

***2588. தெளிவுரை :-*** *சிவன், தன்னையே நெருங்கி நிற்கும் துணைவனாக உணர்ந்து, தனது திருவடிகளைச் சிந்தித்தவழிக் கிடைக்கும் துணைவனாயும், ஒளி விளக்காயும் உள்ளான். அவனையன்றிப் பெருந்துணைவரும், பெறத்தக்க துணைவரும் வேறிலர். (ஏனெனில், பேரருளால் உயிர்களின் பிறப்பை அறுப்பவன் அவனேயாகலின்) ஆகையால், உணர்வுடையீர், அதனை உணர்ந்து அவனையே துணையாகப் பற்றிப் பிறப்பையறுத்துப் பிழையுங்கள்.*

**2589.** வானவர் தம்மை வலிசெய் திருக்கின்ற
தானவர் முப்புரம் செற்ற தலைவனை
கானவன் என்றும் கருவரை யான்என்றும்
ஊனத னுள்நினைந் தொன்று படாரே. **9**

---

*குறிப்புரை : மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி, அதனுள்ளும் "சிவன்" என்பதை முதலில் வைத்து உரைக்க. செய்தல், இங்குக் கருதுதலைக் குறித்தது. "உறுதுணை" இரண்டில் முன்னது உரிச்சொற்றொடர்; பின்னது வினைத்தொகை. அங்கி - தீ. அஃது இங்கு விளக்கைக் குறித்து, அறிவை விளக்குதலைச் சுட்டிற்று. 'அறிவுத் துணையே துணையாவதன்றி, உடற்றுணை துணையாகாது என்றபடி. செறுதுணை - மலசத்தியை நீங்கும்படி சினந்து நிற்கும் மறைப்பாற்றல். (சினமருவு திரோதாயி).*

*இதனால், 'சிவன் ஒருவனே அறிவுத் துணையாகலானும், உற்றாரை உறுபவன் ஆகலானும் அவனையே துணையாகப் பற்றிப் பத்தி செய்து பயன் பெறல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

*2589.* **தெளிவுரை :-** *தேவர்களைத் துன்புறுத்திய அசுரர்களது மூன்று கோட்டைகளைத் தன் சிரிப்பினாலே ஒரு நொடியில் சாம்பலாக்கி அழித்த தலைவன் சிவன். அவனைச் சிலர், 'காட்டிலே ஆடுபவன்' என்றும், 'கரிய மலையில் வாழ்பவன்' என்றும் தங்கள் ஊன் உடம்பின் உள்ளுக்குள்ளாகவே இகழ்ந்து, அவனைக்கூடார் ஆயினார்.*

**குறிப்புரை :** *'அஃதவர் வினையிருந்தவாறு' என்பது குறிப்பெச்சம்.*

> *'ஓங்குமலைப் பெருவிற் பாம்புஞாண்கொளீஇ*
> *ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்*
> *பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த*
> *கறைமிடற் றண்ணல்'* — ***புறநானூறு, 55***

*என்பன போலும் சான்றோர் மொழியினை உணராதார் பிணங்குவர் என்பது முதல் இரண்டடிகளில் குறிக்கப்பட்டது. 'ஒன்றுபட்டார்' என்பது பாடமாயின், 'அவனது பெருமையை உணர்வினால் உணர்ந்து, அகமாகிய உள்ளத்துள் தியானித்துச் சமாதி நிலை கூடினர்' என உரைக்க. சிவன் இருப்பது வெள்ளி மலையாயினும், முகில்கள் தவழ்தலும், பசுமை படர்ந்திருத்தலும் பற்றி, 'கருவரையான்' என்றார். 'ஒன்றுபட்டார்' என்பதையே பாடமாகக் கொள்வார், 'கரு - பிறப்பை. வரையான் - ஏற்காதவன்' என உரைப்பர்.*

*இதனால், உண்மை உணராதார் பத்திசெய்து பயன் பெறும் இடம் அறியாமை கூறப்பட்டது.*

*2590.* **தெளிவுரை :-** *உலகனைத்தையும், 'இவை சிலகாலம் நிலைபெற்றிருந்து,*

**2590.** நிலைபெற கேடென்று முன்னே படைத்த
தலைவனை நாடித் தயங்குமென் உள்ளம்
மலையுளும் வானகத் துள்ளும் புறத்தும்
உலையுளும் உள்ளத்தும் ஊழ்த்துநின் றானே. 10

---

*பின் 'ஒடுங்குக' என்று சங்கற்பித்துப் படைத்த தலைவன் எங்கேயிருக்கின்றான்' என்று அவனைக் காணத்தேடி என் உள்ளம் திகைத்தது. பின்பு அவன் தேட வேண்டாது எங்கும் நிறைந்து, உயிர்களின் புறத்தும், அவனைத் தேடித் திகைக்கும் உள்ளத்தும் 'புறம், அகம்' என்னும் வேறுபாடின்றி விளங்குதலைக் கண்டு வியந்தேன்.*

*குறிப்புரை :* 'கெட' என்னும் வியங்கோள் முற்று ஈறு தொக்கு, முதல் நீண்டு 'கேட' என நின்றது. அது, 'கேடு' என்னும் முதனிலை திரிந்த தொழிற் பெயரன்று. "தயங்கும்" என்றது, இறந்தகாலத்தில் நிகழ்கால முற்று. 'எவ்விடத்தும்' என்றற்கு மலையையும், வானத்தையும் உபலக்கணமாகக் கூறினார். உலைதல் - வருந்துதல். "உள்ளும் உள்ளத்தும்" என்பது ஒரு சொல் நீர்மைத்தாய் நிற்க. 'உலை' என்பது அதனோடு தொக்கு வினைத்தொகையாயிற்று. ஊழ்த்து நிற்றல், காண்டற்குரிய செவ்வியோடேயிருத்தல். 'நின்றான்' என்றது, அதன் பயனாகிய வியப்பைக் குறித்து நின்றது.

இதனால், பத்தி செய்வார்க்குச் சிவன்தேட வேண்டாது, இருந்த இடத்தில் இருந்தே காணப்படுதல் கூறப்பட்டது.

## 42. முத்தியுடைமை

*உயிர்கள் அடையும் 'பெத்தம் முத்தி' என்னும் இரு நிலைகளுள் இத்தந்திரத்தில் கூறுவன எல்லாம் முத்தி நிலை பற்றியனவே யாகலான் அவற்றை இத்துணையும் கூறிவந்து, இங்கு அந்நிலையின் இயல்பை இரண்டு மந்திரங்களால் சுருக்கிக் கூறுகின்றார். இதனுள், 'முத்தி' என்றது, முத்தி நிலையின் இயல்பினையாம்.*

**2591.** முத்தியில் அத்தன் முழுத்த அருள்பெற்றுத்
தத்துவ சுத்தி தலைப்பட்டுத் தன்பணி
மெய்த்தவம் செய்கை வினைவிட்ட மெய்யுண்மைப்
பத்தியில் உற்றோர் பரானந்தர் போதரே. **1**

---

*2591.* **தெளிவுரை :-** *முத்தி நிலையை அடைந்தவர் சிவனது திருவருளை முழுமையாகப் பெறுவர். (எனவே, 'ஏனையோர் சிறிது சிறிது பெறுவர்' என்றதாம்). அதனால், அவரே கருவி கரணங்களின் கட்டற்றவராவர் (கருவி கரணங்களோடு கூடியிருப்பினும் அவற்றால் உலகியலில் செல்லார்' என்பதாம்). ஆகவே, அவர் தன் முனைப்புக் கொண்டு ('யான், எனது என்னும் வகையில்) உலகை நோக்கி ஒன்றைச் செய்தலும், அவ் வாறன்றிச் சிவனையே நோக்கி ஒன்றைச் செய்தலும் ஆகிய செயல்கள் எல்லாவற்றையும் விடுத்து, சொரூப சிவனிடத்து உண்மையான பத்தியில் மட்டுமே நிற்பர். அதனால், அவர் அடையும் ஆனந்தமே உண்மைப் பேரானந்தமாகும். உண்மை ஞானியரும் அவரே.*

**குறிப்புரை :-** *தத்துவ சுத்தி தலைப்பட்டு - தத்துவங்கள் 36-ம் வேறென்று நீங்கி. 'தன்பணி' என்பது, பொதுவாகச் சீவபோதச் செயலை உணர்த்தும் ஒரு சொல். 'தன் பணியையும், மெய்த்தவத்தையும் செய்கை யாகிய வினையை விட்ட பத்தி' என்க. மெய்த்தவம், சிவனை நோக்கிச் செய்யும் செயல்கள். உலகியற் செய்கையை நோக்க மெய்த்தவம் சிறந்ததாயினும் அதுவும் 'நான்' என்னும் போதத்தோடு செய்வதேயாகலின், அப்போதத்தை விட்டவர்க்கு அதுவும் வினையேயாம் என்றற்கு, "மெய்த்தவம் செய்கை வினை" என்றார். இஃதே பற்றித் தாயுமானவர், "நான் பூசை செய்யல் முறையோ" (கருணாகரக் கடவுள்-) என்றார். மெய், மெய்ப்பொருள், சொரூப சிவன் 'மெய்யின்கண் செய்யும் உண்மைப்பத்தி' என்க. உண்மைப்பத்தி, பிறிது பயன் விரும்பாது, அவனையே விரும்பிச் செய்யும் பத்தி. இங்கும் பத்தியையே முடிநிலையாகக் கூறினமை உணரற்பாலது.*

*இதனால், முத்தி நிலையின் இயல்புகள் எல்லாம் சுருக்கிக் கூறப்பட்டன. இவையும், அடுத்து வரும் மந்திரத்தில் வருவனவும் ஆகிய இயல்பினை உடையோரே சீவன் முத்தராவர்.*

*2592.* **தெளிவுரை :-** *(மேல், "பறவையில் கற்பமும்" (பா.2587) என்னும்*

**2592.** வளங்கனி தேடிய வன்தாட் பறவை
உளங்கனி தேடி உழிதரும் போது
களங்கனி அங்கியிற் கைவிளக் கேற்றி
நலங்கொண்ட நால்வரும் நாடுகின் றாரே. 2

---

*மந்திரத்தில் சொல்லியபடி) உலகமாகிய மரத்தில் தனக்கு இனிமையான பழத்தைத் தேடி அலைந்த சீவனாகிய பறவை, பின்பு அந்தப்பழம் தன்னுள்ளே யிருப்பதை அறிந்து அதனைத் தேடி அங்கு அலைந்துகொண்டிருக்கும் பொழுது, அதற்குக் கண்ணும் சிறகும்போல உதவுகின்ற அந்தக் கரணங்களாகிய நால்வரும் முன்புபோலத் தீயராய் இல்லாது நல்லவராய் விட்டமையால், அங்கே (உள்ளத்துள்ளே) மிக்கு விளங்குகின்ற பேரொளியிலிருந்து சிறு கைவிளக்கை ஏற்றிப் பிடித்து, அப் பறவைக்கு உதவி புரிகின்றனர்.*

***குறிப்புரை :–*** ***'பெத்த நிலையில் உலகியலில் ஈர்த்துச் சென்ற அந்தக் கரணங்கள், முத்தி நிலையில் சிவத்தை உணர்தற்குத் துணை புரிகின்றன' என்பதாம். 'வளக் கனி, உளக் கனி' என்பன எதுகை நோக்கி, ஒத்த வல்லெழுத்து மிகாது, இனமெல்லெழுத்து மிக்கு முடிந்தன. வளங்கனி - முத்தி. உளங்கனி - உள்ளங்கனிந்து. களம் கனி - கள்ளம் கனிந்த. தாள் - முயற்சி. களம் - இடம். 'அக் களத்துக் கனிந்த அங்கி' என்க. கனிதல், இங்கே, மிகுதல், அங்கி - அக்கினி பேரொளி; பேரறிவு. 'மலம் நீங்கிய உயிரின் அந்தக் கரணங்கள் பதிஞானத்தை உடையனவாகும்' என்பது உணர்க.***

***இதனால், சீவன் முத்தரது அந்தக்கரணங்கள் பாசத்தளையாகாமை கூறப்பட்டது.***

## 43. சோதனை

*சோதனையாவது பொருள்களைக் குற்றம் களைந்து, தூயன ஆக்குதல். அஃது இங்கு, முத்தி நிலையை எய்தினோர் பின்னரும் முன்னைக் குற்றங்கள் வந்து தம்மைச் சிறிதும் அணுகா வண்ணம் செய்தலைக் குறித்தது. அஞ்ஞானத்தின் நீங்கி, மெய்ஞ்ஞானத்தை எய்தினோர் முடிவாகச் செயற்பாலது இதுவேயாகலின், இதனை இறுதிக்கண் கூறி, இத்தந்திரத்தை முடித்தருளுகின்றார். அஃதாவது ஆருயிர்கள் வீடு பெறுவதற்குப் படிநிலை வழிபோல் அமைந்த எழுத்து சொல் மறை தத்துவம் புவனம் கலை என்னும் ஆறு அத்துவாக்களில் ஈட்டப் பெற்றுள்ள வினைகளை ஆய்ந்து கண்டு அழித்தல். இஃது அத்துவ சோதனை எனவும், அறுவழி ஆய்வு எனவும் குறிக்கப்படும். அத்துவா -- வழி. அவை சொல் மூன்று பொருள் மூன்று ஆக ஆறு. இவ்வதிகாரம் பதின்மூன்று மந்திரங்களையுடைது.*

**2593.** பெம்மான் பெருநந்தி பேச்சற்ற பேரின்பத்து
அம்மான் அடிதந்து அருட்கடல் ஆடினோம்
எம்மாய மும்விடுத்து எம்மைக் கரந்திட்டுச்
சும்மா திருந்திடம் சோதனை ஆகுமே. 1

---

*2593. தெளிவுரை :- எல்லோரினும் பெரியவனும், பெருந்தலைவனும் சொல்ல வாராத பெரிய இன்பத்தைத் தன்னை அடைந்தவர்க்கு வழங்கியருளும் அன்னதொரு பெருந்தகையை உடையவனும் ஆகிய சிவன் உம்முன் வந்து தனது திருவடிகளை எங்கள் தலைமேற் சூட்டினமையால் நாங்கள் அவனது திருவருளாகிய கடலில் மூழ்கினோம். அதனால், (நீருள் இருக்கும் மீனைச் சிச்சிலி கொத்தமாட்டாது ஓடி விடுதல்போல) பொய்யாகிய பாசங்கள் எல்லாம் எம்மைப் பற்றமாட்டாது நீங்கிவிட, நாங்கள் எங்களை அவனிடத்தில் ஒளிந்து வைத்துச் சும்மா இருக்கின்றோம். இந்த நிலையில் எங்கட்குச் சோதனைகள் வருகின்றன.*

*குறிப்புரை :- அஃதாவது, 'பாசங்கள் எங்களுடைய சோர்வை, மீன் நீரை விட்டு மேலே வரும் வரவைப் பார்க்கின்ற சிச்சிலி போலப் பார்க்கின்றன' என்பதாம். ஆகவே, 'அப்பார்வை யினின்றும் நாங்கள் தப்புகின்றோம்' என்பது கருத்து. 'பெம்மான் அம்மான்' என்னும் பொதுச் சொற்கள் சிவனையே குறித்தற்கு "நந்தி" என்னும் சிறப்புப் பெயரை இடையே பெய்தார். "தந்து, விடுத்து" என்ப வற்றிற்கு 'தந்தமையால், விடுத்தமையால்' என உரைக்க. 'சும்மாதிருத்தல், வாளாதிருத்தல்' என்பனவே இலக்கணச் சொற்கள். அவை, 'சும்மா, வாளா' என மருவி வழங்குகின்றன. 'இருந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. ஆகும் - தோன்றும்.*

*இதனால், முத்தி நிலையை அடைந்தவற்றையெல்லாம் வகுத்துக் கூறி,*

**2594.** அறிவுடை யான்அரு மாமறை யுள்ளே
செறிவுடை யான்மிகு தேவர்க்கும் தேவன்
பொறியுடை யான்புலன் ஐந்துங் கடந்த
குறியுடை யானொடும் கூடுவன் நானே. **2**

---

*இவற்றிற்குப் பின் சோதனை உளவாதல் கூறப்பட்டது.*

***2594. தெளிவுரை :-*** *அறியாமையோடு கூடுதல் சிறிதும் இன்மையால், 'அறிவுடையான்' எனப்படுதற்கு உரிமையுடையவனும், அரிய பெரிய வேதங்களில் எங்கும் பரவலாகப் போற்றப்படுபவனும், பெரிய தேவர்கட்கும் தேவனும், கண், செவி முதலிய பொறிகளையுடையனாயினும் அவற்றால் அறியப்படுகின்ற ஐந்து புலன்களில் ஒருபோதும் தோய்வின்றித் தன்னிலையில் திரியாதிருப்பவனும் ஆகிய சிவனோடே யான் என்றும் கூடியிருப்பதன்றிப் பிரிதல் இல்லை.*

***குறிப்புரை :-*** *இறைவனை, "பொறிவாயில் ஐந்தவித்தான்" (திருக்குறள் -6) என்றல் அவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கி நிற்கும் தன்மை யுடைமை பற்றியேயன்றி, ஒரு காலத்தில் பாசத்தையுடையனாயிருந்து பின் நீங்கினவனல்லன் என்பது தோன்ற, "அறிவுடையான் " முதலிய மூன்றற்கும் பின்னர் இறுதியில் இதனைக் கூறினார். 'இயல்பாகவே பாசங்களின் நீங்கினவன் எவனும் இல்லை' என்பவர், இதனை 'ஒரு காலத்தில் புலனைக் கடந்தவனைக் குறிக்கின்றது' என்பர். இஃதே தொல்காப்பிய (பொருள் - மரபியல்)த்துள் "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் - முனைவன்" எனப்பட்டது. கூடுதல் பிரிவின்மையைக் குறிக்க வந்தது. 'இயல்பாகவே பாசங்களால் பற்றப்படாது இருப்பவனைச் சார்ந்திருத்தலால், எம்மைப் பாசங்கள் வந்து அணுகுமாறில்லை' என்பது கருத்து. மிகுதேவர், காரணக்கடவுளர் மூவர். உம்மைகள், சிறப்பு. "பொறியுடையான்" என்பதன்பின், 'ஆயினும், என்னும் சொல்லெச்சம் வருவிக்க. குறி - தன்னியல்பு. இதனால் மேல்,*

*"பதியணுகின்பசு பாசம்நில் லாவே" - தி.10 பா.114*

*என்று அருளிச்செய்தபடி, பதியைச் சார்ந்து நிற்கும் உயிரைப் பாசம் பற்ற மாட்டாமைக்குக் காரணம் கூறப்பட்டது.*

*சதசத்தாம் மெய்கண்டான், சத்து அருளிற் காணின்*
*இதமித்தல் பாசத்தில் இன்றிக் - கதம்மிக்(கு)*
*எரிகதிரின் முன்இருள்போல் ஏலா அசத்தின்*
*அருகணையார்; சத்தணைவார் ஆங்கு*

***- சிவஞானபோதம் - சூ.10 அதி.2***

*என்பதனை நோக்குக.*

*(இதன்பின் பதிப்புக்களில் காணப்படும் "அறிவறிவென்றங் காற்று முகம்" என்னும் மந்திரம், மேல், "அறிவுதயம்" என்னும் அதிகாரத்தில் வந்தது).*

**2595.** குறியாக் குறியினில் கூடாத கூட்டத்து
அறியா அறிவில் அவிழ்ந்தேக சித்தமாய்
நெறியாம் பராநந்தி நீடருள் ஒன்றும்
செறியாச் செறிவே சிவம்என லாமே. **3**

---

*2595.* **தெளிவுரை :-** *குறியாக் குறி - தற்போதத்தால் தானே கொள்ளாது, குரு கொள்வித்தபடி கொண்ட இலட்சியம். கூடாத கூட்டம் - தற் போதத்தின் வழிச்சென்று புணராது, திருவருள் வழிச்சென்று புணர்ந்த புணர்ச்சி. அறியா அறிவு - தற்போதமாய் நின்று அறியாது, சிவ போதமாய் நின்று அறியும் அறிவு. அவிழ்தல் பாசக்கட்டு நீங்குதல். எனவே, 'குறியா....... அவிழ்த்து' என்றது "தானே கொள்ளாது குருவுணர்த்திய இலட்சியமாகிய சிவத்தில், தற்போதத்தால் முயலாது, திருவருள் வழியாக முயன்று ஒன்றுபட்டுப் பின்னும் அந்தத் திருவருளாலே அஃதொன்றையே அறிந்து நிற்குமாற்றால் பாசங்கள் நீங்கப் பெற்று" என்றதாயிற்று. பாசக்கட்டு நீங்கினமையால், பலவாகிய பொய்ப் பொருட்பற்றுத் தொலைய, ஒன்றாகிய மெய்ப்பொருளிடத்தே அன்பு மீதூர நிற்றலால், நன்னெறியாகிய அருட்சத்தியின் முதலாகிய அச்சிவத்தில் அவ்வருளால் அழுந்துதலாகிய இயற்கை இயைபே உண்மைச் சிவசம்பந்தமாம்.*

**குறிப்புரை :-** *செறியாச் செறிவு - புதுவதாய்ச் சென்று இயையாது, முன்பே இயல்பாய் இயைந்துள்ள இயைபு. 'சிவத்திற்கும், ஆன்மாவிற்கும் இடையேயுள்ள அத்துவித சம்பந்தம், முன்பு இல்லாது பின்பு இடையே ஒரு காலத்தில் உண்டாகும் சம்பந்தம் அன்று; அஃது அனாதியேயுள்ள சம்பந்தம்' என்றபடி. எனவே, 'சைவம் சிவனுடன் சம்பந்தமாகுதல்' (பா.1492) என்றது, முன்பு உணராதிருந்த அச்சம்பந்தத்தை உணர்தல் என்றதேயாம். 'எல்லா உயிர்களிடத்தும் சிவனது அத்துவித சம்பந்தம் இயல்பாக உள்ளமை தோன்றவே, "நின்றனவும், சரிப்பனவும் சைவமேயாம் நிலைமை அவர்க்கருள்செய்து" எனக் குறித்தருளினார் சேக்கிழார். (தி. 12 சம்பந்தர் - 926).*

*சென்றிவன்றான் ஒன்றில், சிவபூ ரணம்சிதையும்;*
*அன்றவன்றான் ஒன்றுமெனில் அன்னியமாம் - இன்றிரண்டும்*
*அற்றநிலை ஏதென்னில், ஆதித்தன் அந்தன்விழிக்*
*குற்றமற நின்றதுபோற் கொள்.*

*என்னும் உண்மை விளக்க (வெண்பா-48)மும், இதனையே விளக்கிற்று.*

*பராநந்தி - பரைக்கு முதல்வனாகிய சிவன், 'நந்தியின்கண்' எனவும், 'நீடு அருளால்' எனவும் ஏற்கும் உருபுகள் விரிக்க. "சிவம்" என்றது, அதனோடு சம்பந்தம் ஆதலைக் குறித்தது. "செறிவே" எனவும் எனலாமே எனவும் போந்த பிரிநிலையும், தேற்றமும் ஆகிய ஏகாரங்கள். எத்தகைய சோதனையிலும் இந்நிலை யினின்றும் சிறிதும் வழுவலாகாமையை உணர்த்தி நின்றன.*

**2596.** காலினில் ஊறும் கரும்பினிற் கட்டியும்
பாலினுள் நெய்யும் பழத்துள் இரதமும்
பூவினுள் நாற்றமும் போல் உளன் எம்மிறை
காவலன் எங்கும் கலந்துநின் றானே. **4**

**2597.** விருப்பொடு கூடி விகிர்தரை நாடில்
பொருப்பகஞ் சேர்தரு பொற்கொடி போல
இருப்பர் மனத்திடை எங்கள் பிரானார்
நெருப்புரு வாகி நிகழ்ந்து நிறைந்தே. **5**

---

*இதனால், 'சோதனைகளால் சலியாது நிற்றற்குரிய நிலை இது' என்பது கூறப்பட்டது.*

*2596.* **தெளிவுரை :-** *எல்லாப் பொருள்களிலும் தங்கியிருத்தல் பற்றி, 'இறை' என்றும், எல்லா உயிர்களையும் பாதுகாத்தல் பற்றி, 'பதி' என்றும் சொல்லப்படுபவனாகிய எங்கள் சிவபெருமான், காற்றில் பரிசமும், கரும்பில் வெல்லமும், பாலில் நெய்யும், பழத்தில் சுவையும், மலரில் மணமும் போல, உயிர்களின் உள்ளங்களில் எல்லாம் இரண்டறக் கலந்து நிற்கின்றான்.*

**குறிப்புரை :-** *'அக்கலப்பினை அறிந்து, 'சிவோஹமஸ்மி' எனப் பாவிக்கும் பாவனையில் உறைத்து நின்றால், சோதனைகளால் வரும் ஊறு யாதும் இல்லையாம்' என்பது கருத்து.*

*"கசிந்த - தொண்டினொடும், உளத்து அவன்றான் நின்ற கலப்பாலே*
*'சோகம்' எனப் பாவிக்கத் தோன்றுவன் வேறின்றி"*

*என்னும் சிவஞான சித்தி (சுபக்கம் - சூ. 9-7) யைக் காண்க. எனவே, 'அஹம்பிரஹ் மாஸ்மி' 'சோஹமஸ்மி' என்பன, இக்கலப்புப் பற்றிக் கூறப்படுதலல்லது, 'சோயம் தேவதத்தன்' என்பதுபோல, விட்டும் விடாத இலக்கணை வகையாற் கூறப்படுவன அல்ல' என்றவாறாம். உளம், உளன் - மகர னகர உறழ்ச்சி. 'உளன் எங்கும் கலந்து நின்றான்' என்க.*

*இதனால், சோதனைகளில் சலியாது நிற்றற்குரிய வழிவகை கூறப்பட்டது.*

*2597.* **தெளிவுரை :-** *எங்கள் சிவனார், தம்மை அன்பினால் நோக்கின், தம்முடைய சத்திபோல வந்து, அங்ஙனம் நோக்கி நிற்பவரது உள்ளத்தில், பேரறிவாய், உயிர்க்குயிராய் நிறைந்து, நீங்காதிருப்பார்.*

**குறிப்புரை :-** *பொருப்பகம் சேர்தரு பொற்கொடி, உமை; 'சத்தி' எனற் பாலதை இவ்வாறு கூறினார். 'முன்னர்ச் சத்திநிபாதம்போல வந்து, பின்னர்த் தாம் விளங்கி நிற்பார்' என்றபடி, 'போல' என்பதன்பின், 'வந்து' என ஒரு சொல் வருவிக்க. "நெருப்பு" என்பது, 'ஒளி' என்னும் பொருட்டாய், அறிவைக் குறித்து*

**2598.** நந்தி பெருமான் நடுவுள் வியோமத்து
வந்தென் அகம்படி கோயில்கொண் டான்கொள்ள
எந்தைவந் தான்என்று எழுந்தேன் எழுதலும்
சிந்தையி னுள்ளே சிவன்இருந் தானே. **6**

---

*நின்றது. "எங்கள் பிரானார்" என்பதை முதலில் வைத்து உரைக்க. "விகிர்தர்" என்றது சுட்டளவாய் நின்றது. 'மனத்திடை, நெருப்புருவாகி நிகழ்ந்து நிறைந்து இருப்பர்' என இயைத்துக் கொள்க.*

*இதனால், 'சோதனைக் காலத்திலும் அன்பு குறைதலாகாது' என்பது கூறப்பட்டது.*

*2598.* ***தெளிவுரை :-*** *'பர வியோமம்' எனப்படுகின்ற அருள்வெளியில் உள்ள சிவபெருமான், அங்கு நின்றும் போந்து என் உள்ளத்துள்ளே புகுந்து அதனையே தனது இடமாகக் கொண்டான். கொண்டது எவ்வாறெனில், அவன் எனது உள்ளத்தை நோக்கி வரும்பொழுது, "வாராத என் தந்தை வருகின்றான்" என்று நான் பதைத்தெழுந்து எதிர்கொண்டேன். அதனால்தான், அவன் என் உள்ளத்தையே தனது இடமாகக் கொண்டுவிட்டான்.*

***குறிப்புரை :-*** *'வியோமத்து நடுவுள் நின்றும் வந்து' என்க. வியோமம், பரவியோமம். கொள்ள - கொள்ளுமாறு. எழுதல், அதன் காரியத்தைக் குறித்து நின்றது. இருந்தான் - நீங்காது, இருந்தே விட்டான். 'தன்னை வரவேற்கும் உள்ளப்பான்மை உள்ளவர்களை நோக்கியே அவன் வருவான்' எனவும், 'அங்ஙனம் வந்த பின், அவன் மீண்டு நீங்கிப்போதல் இல்லை' எனவும் கூறியவாறு. "வருதல் கோயில் கொள்ளல்" என்பவற்றின் உண்மைப்பொருள், மேல், "செறியாச் செறிவு" (பா.2595) என்பது பற்றிக் கூறியதனால் விளங்கும். 'உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்; எங்கெழுந்தருளுவ தினியே' (தி.8 பிடித்த பத்து -1) என்பதனானும் இம் மந்திரப் பொருளை உணர்க. "சிந்தையுட் சிவம தானார் திருச்செம்பொன் பள்ளி யாரே" (தி.4 ப.29 பா.4) என அப்பரும் அருளிச் செய்தார்.*

*இதனால், 'சிவனது அருமை பெருமைகளை எந்நிலையிலும் அயராது உணர்ந்திருத்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

*2599.* ***தெளிவுரை :-*** *உயிர்களுக்கு ஆகும் நன்மைகளையெல்லாம் செய்ய வல்லவனும், அனைத்துயிர்களையும் ஒப்ப நோக்கும் நடுவு நிலையாளனும் இயல்பாகவே பாசங்கள் இல்லாத தூயவனும் ஆகிய சிவபெருமானை நீவிர் புன்மை உண்டாகும்படி பொய்த்தல் இன்றி, உண்மையாக விரும்புங்கள்; விரும்பினால், பல உயிர்களுள்ளும் உம்மை, 'இவ்வுயிர் யாது' எனச் சிறப்பாக நோக்கி, நும் செயற்கையை நீக்கி, இயற்கையாகச் செய்து அத்தொன்னிலையில் பின்னும் தொடர்ந்தே நிற்பான்.*

**2599.** நன்மைவல் லோனை நடுவுறை நந்தியைப்
புன்மைபொய் யாதே புனிதனை நாடுமின்
பன்மையில் யாதென நும்மைப் பரிசுசெய்
தொன்மையின் உண்மை தொடர்ந்து நின்றானே. 7

**2600.** தொடர்ந்துநின் றான்என்னைச் சோதிக்கும்போது
தொடர்ந்துநின் றான்நல்ல நாதனும் அங்கே
படர்ந்துநின்று ஆதிப் பராபரன் எந்தை
கடந்துநின் றவ்வழி காட்டுகின் றானே. 8

---

*குறிப்புரை :- 'வேறுபடான்' என்பதாம். 'புன்மையாக' என ஆக்கம் வருவிக்க. பொய்யாது நாடுதலாவது, வேறுபயன் கருதாது அன்பே காரணமாக விரும்புதல். செயற்கை, பாசத்தோடு கூடிநின்ற நிலை. இயற்கை, பாசத்தின் நீங்கிச் சிவத்தோடு நிற்கும் நிலை இஃதே தொன்னிலை; அனாதி நிலை; உண்மையியல்பு. அதில் தொடர்ந்து நிற்றலாவது, அதினின்றும் மாறுபடாதிருத்தல்.*

*இம்மந்திரம் பதிப்புக்களில் பாடம் பெரிதும் வேறாய்க் காணப்படுகின்றது.*

*(தன்மைவல் லோனைத் தவத்துள் நலத்தினை*
*நன்மைவல் லோனைத் நடுவுறை நந்தியைப்*
*புன்மைசெய் யாதே புனிதனை நாடுமின்;*
*பன்மையில் உம்மைப் பரிசுசெய் வானே)*

*அடுத்து வரும் மந்திரம், "தொடர்ந்து நின்றான்" எனத் தொடங்குதலால், இப்பாடமே கொள்ளப்பட்டது.*

*இதனால், 'மெய்யன்பு சோதனையால் திரியமாட்டாது' என்பது கூறப்பட்டது.*

*2600. **தெளிவுரை :-** சிவபெருமான் சற்குருவாய் வந்து எனது ஆறு அத்துவாக்களையும் அவற்றில் உள்ள சஞ்சித கன்மங்களை நீக்கித் தூய்மை செய்யும் பொழுது, அந்தச் செயலிலே தொடர்ந்து நின்றான். பின்பு தூய்மையாகி விட்ட அந்த அத்துவாக்களிலே அவனே தொடர்ந்து நின்றான். அதன் பின்பு எல்லாப் பொருளிலும் கலப்பினால் ஒன்றாகியும், பொருள்தன்மையால் வேறாகியும் நிற்கின்ற அந்த நிலைகளை எனக்கு அறிவித்துக் கொண்டேயிருக்கின்றான்.*

*குறிப்புரை :- 'அவன் அவ்வாறிருக்கும் நிலையை மறவாதிருத்தலே நான் செய்யத்தக்கது' என்பது இசையெச்சம். 'அதனைச் செய்தால் சோதனை எதுவும் என்னை ஒன்றும் செய்யாது' என்பது கருத்து. சோதித்தலுக்குச் செயப்படு பொருள் அத்துவாக்களேயாதலின் அவை வருவிக்கப்பட்டன. ஆகவே, பின் தொடர்ந்து நிற்றற்கு அவையே இடமாயின. ஆதலின், 'அங்கே' எனச் சுட்டினார்.*

**2601.** **அவ்வழி காட்டும் அமரர்க் கரும்பொருள்**
**இவ்வழி தந்தை தாய் கேளிரே ஒக்கும்**
**செவ்வழி சேர்சிவ லோகத் திருத்திடும்**
**இவ்வழி நந்தி யியல்பது தானே.** **9**

---

*அதில் உள்ள ஏகாரம் பிற இடங்களினின்றும் பிரித்த பிரிநிலை. நல்லநாதன் - சற்குரு. 'சற்குரு வாவான் சிவனே' என்பதைப் பின்னர், 'ஆதிப் பராபரன் எந்தை' என்பதனால் சுட்டினார். படர்தல் - எங்கும் நிறைதல். 'படர்ந்து நின்றும், கடந்து நின்றும் அவ்வழி காட்டுகின்றான்' என்க. ஏகாரம், ஈற்றசை.*

*இதனால், 'இறைவன் உயிர்க்குயிராய் நின்று அறிவித்தலை மறவாமையே சோதனைகளினின்றும் நீங்கும் வழியாகும்' என்பது கூறப்பட்டது.*

*2601. தெளிவுரை :- விண்ணுலகத்தில் விண்ணவர்கட்கும் அவர்கள் அவ்வுலகத்தில் பற்றற்றுச் செல்ல வேண்டிய அந்த வழியைக் காட்டும் அரிய பொருளாய் இருப்பான். மண்ணுலகத்தில் மக்களுக்குத் தந்தை போலவும், தாய் போலவும், உறவினர் போலவும் இம்மைக்கு வேண்டுவன பலவும் செய்து, அம்மைக்கு ஆகும் நல்வழியையும் கற்பித்துத் தனது உலகத்தில் இருக்கச் செய்வான். இஃது எங்கள் சிவபெருமானது இயல்பு.*

*குறிப்புரை :- "அமரர்க்கு" என்பதை முதலிற் கொள்க. இவ்வழி - இவ்விடம்; மண்ணுலகம். தேவர்கள் இம்மை நலம் பெற்று சிவனை ஒரளவு அணுகியவர் ஆதலின், அவர்க்கு வேண்டுவது அம்மை வழியேயாயிற்று. ஈற்றில், "வழி" என்பது, 'இயல்பு' என்னும் பொருட்டு. 'தன்னடியார்களைச் சிவன் தன் உலகத்து இருத்துவோன் ஆதலின் சோதனைகளில் அவர்களை நழுவ விடான்' என்பது கருத்து.*

> *"சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன்ஆதல்,*
> *சார்ந்தாரைக் காத்தும் சலம்இலனாய்"*
>
> *- சிவஞானபோதம்-சூ-10, அதி-2*

*எனவும்,*

> *"................................ என்றுந்தான்,*
> *தீதுறுவ னானால், சிவபதிதான் கைவிடுமோ!*
> *மாதொருகூ றல்லனோ மற்று"*
>
> *- திருக்களிற்றுப்படியார் - 42*

*எனவும் போந்த சாத்திர மொழிகளைக் காண்க.*

*இதனால், சிவன் தன் அடியார்களைச் சோதனைகளில் காத்தல் கூறப்பட்டது.*

*2602. தெளிவுரை :- உலகப் பற்றை விடுத்துச் சிவப்பற்றைப் பற்றினோர்,*

**2602.** எறிவது ஞானத்து உறைவாள் உருவி
அறிவத னோடே அவ் ஆண்டகை யானைச்
செறிவது தேவர்க்கும் தேவர் பிரானைப்
பறிவது பல்கணம் பற்றுவிட் டாரே. **10**

**2603.** ஆதிப் பிரான்தந்த வாள்அங்கைக் கொண்டபின்
வேதித்திங் கென்னை விலக்கவல் லார்இல்லை
சோதிப்பன் அங்கே சுவடும் படாவண்ணம்
ஆதிக்கண் தெய்வம் அவன்இவன் ஆமே. **11**

---

*அந்நிலைக்கண் தமக்கு யாதேனும் இடையூறுவரின் அவர்கள் அவற்றைப் போழ்வது, ஞானமாகிய வாளைத் திருவருளாகிய உறையினின்றும் உருவியாம். அங்ஙனம் இடையூற்றைப் போக்கி முன்போல, அவர்கள் அறிந்து நிற்பது, தம் இயல்பையும், தலைவன் இயல்பையுமாம். (ஆகவே அடிமை நிலையினின்றும் பிறழார் என்பதாம்) அங்ஙனம் அறிந்து அடிமை செய்து நிற்றலால் அவர்கள் இரண்டறக் கலப்பது சிவபெருமானையே. அவர்கள் அறவே விட்டு விலகுவது, வேற்றியல்புடைய பல குழுக்களையாம்.*

*குறிப்புரை :-* “ஞான வாள் ஏந்தும்; ......வான ஊர் கொள்வோம் நாம் மாயப்படை வாராமே” (தி.8 திருப்படையாட்சி-1) என்று அருளிச்செய்தது காண்க. ‘‘ஞானத்து’’ என்பதில் அத்து, வேண்டாவழிச் சாரியை. ஞானிகட்கு இடையூறுகளாவன. ஐம்புலக் குறும்புகள். அறிவ, அன் பெறாத அகர ஈற்று அஃறிணைப் பன்மை வினைப்பெயர். அஃது அறிதலாகிய அத்தொழில்மேல் நின்றது. ‘தன்னோடு’ என்பது இடைக்குறைந்து, பன்மை யொருமை மயக்கமாய் வந்தது. தேவர்க்கும் தேவர், மூவர். ‘எறிவது, செறிவது, பறிவது’ என்பனவும் தொழில்மேல் நின்றனவே. ‘பற்றுவிடார்’ என்பது பாடம் அன்று.

*இதனால், சோதனைக் காலத்திலும் ஞானிகள் செய்யும் செயல்கள் கூறப்பட்டன.*

*2603. தெளிவுரை :-* யான் தொடக்கத்தில் தேவனாய் இருந்து, இப்பொழுது சிவனே ஆகிவிட்டேன். அஃது முழுமுதற் கடவுளாகிய சிவன் தனது ஞானமாகிய வாளை எனக்கு ஈந்தருள, இதனை யான் விடாது பற்றிக் கொண்டமையால், என்னை இனி அவனை அடைய ஒட்டாமல் வேறுபடுத்தி விலக்க வல்லவர் எங்கும், எவரும் இல்லை. அவ்வா றன்றி எங்கேனும், யாரேனும் என்னை வேறுபடுத்தி விலக்க வருவார்களேயாயின் அவர்கள் வந்து சென்ற சுவடும் தோன்றாதபடி அவர்களது வலிமையைச் சோதித்து ஓட்டிவிடுவேன். சோதித்தல் - தடை வரும் வாயிலை ஆய்ந்து அதனைக் கெடுத்தல்.

*குறிப்புரை :-* “நாம் ஆர்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்”. ‘தென்றிசைக் கோன்றானே வந்து - கோவாடிக் குற்றேவல் செய்கென்றாலும்

**2604.** அந்தக் கருவை அருவை வினைசெய்தற்
பந்தப் பனிஅச்சம் பல்பிறப் பும்வாட்டிச்
சிந்தை திருத்தலும் சேர்ந்தார்அச் சோதனை
சந்திக்கத் தற்பர மாகும் சதுரர்க்கே. **12**

**2605.** உரையற்ற தொன்றை உரைத்தான் எனக்குக்
கரையற் றெழுந்த கலைவேட் பறுத்துத்
திரையற்ற என்னுடல் நீங்கா திருத்திப்
புரையற்ற என்னுட் புகும்தற் பரனே. **13**

---

*குணமாகக் கொள்ளோம்' (தி.6 ப.98 பா.1) "யாம் ஆர்க்கும் குடியல்லோம்; யாதும் அஞ்சோம்" எனப் போந்த திட்பத் திரு மொழிகளைக் காண்க. வேதித்தல் - பேதித்தல். "வேதித்து" என்னும் குற்றியலுகரம் கெடாது நின்றது. அங்கே - அப்பொழுதே. தெய்வம் ஆதல், மக்களினும் மேம்படுதல். அது ஞானத்தைக் கேள்வியளவில் உணர்ந்த நிலை. சிவமாதல் நிட்டை கூடியபின். வீரன் ஒருவன் தன்னையே சுட்டி, 'இவன்முன்யாரும், எதுவும் செய்ய இயலாது' என்றவிடத்து, வீரம் காரணமாகப் படர்க்கைச் சொல் தன்மைப் பொருள் தருதல் போலவே, இங்கு 'இவன்' என்பது தன்மைப் பொருள் தந்தது. இவன் ஆதிக்கண் தெய்வம், இப்போது 'அவனே' என மாற்றி, முதலிற் கூட்டியுரைக்க.*

*இதனால், சோதனைகளில் ஞானிகளது துணிவு நிலை உணர்த்தப்பட்டது.*

*2604. தெளிவுரை :- எல்லா அனத்தங்கட்கும் மூலமாய் உள்ள ஆணவம், சத்தி சமூகம் ஆதலின் அருவமாய் உள்ள மாயை, அதனைக் கொண்டு சில செயல்களைச் செய்வதாகிய கன்மம் ஆகிய இப்பந்தங்களால் உளவாகின்ற, நடுங்கத்தக்க அச்சத்தைத் தரும், எண்ணிறந்தனவாகிய பிறப்புக்கள் அனைத்தையும் போக்கி, ஞானாசிரியர் ஆன்ம அறிவைத் தூயதாக்க, அதனால் சிவத்தைச் சேர்ந்து சிவமாயினோர், அதன்பின்பும் வரும் சோதனைகளை உறுதியோடு சந்தித்து வென்றால், அங்ஙனம் வென்ற திறமையாளர்க்கு அந்தச் சிவப்பேறு நிலைத்திருக்கும்.*

*குறிப்புரை :- 'இல்லையேல் நழுவிடும்' என்றபடி. சேர்தற்குச் செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது. 'அந்தக் கரு, அச்சோதனை' என்பன பண்டறி சுட்டு. சந்தித்தல், புறங்கொடாமையைக் குறித்தது. "தற்பரம்" என்றது, பெறப்பட்ட பொருளைக் குறித்தபடி. ஆதல், என்றும் உளதாதல்.*

*இதனால், ஞானத்தை முறையாக எய்தினோர், அதன் பின்வரும் சோதனைகளால் கலங்காது நின்று சாதித்தல் வேண்டும் என்பது கூறப்பட்டது.*

*2605. தெளிவுரை :- முதுமை காரணமாக வருகின்ற திரையில்லா (இளமையாகவே யிருக்கின்ற) என்னுடைய உடம்பை அவ்வாறே என்றும்*

*அழியாதிருக்கும்படி வைத்து, 'காமம், வெகுளி, மயக்கம்' என்னும் குற்றங்கள் அற்ற என்னுடைய உள்ளத்தில் புகுந்த சிவன், எனக்கு, அளவின்றிக் கிடக்கின்ற நூல்களின்மேல் செல்கின்ற அவாவை அறுத்து, சொல்லுக்கு எட்டாத ஓர் அரும்பொருளை எனக்கு உபதேசித்தான்.*

***குறிப்புரை :-** 'அதனையே யான் இத்தந்திரத்தில் கூறினேன்' என்றபடி. பின்னிரண்டடிகளை முதலில் வைத்து, முதல் அடியை இறுதியில் கூட்டியுரைக்க. உரையற்றது ஒன்று - சிவானுபவம். "நூலறிவை மட்டுமே கொண்டு நான் இத்தந்திரத்தைக் கூறவில்லை" என்பதாம். "அரன் அடி சிந்தை செய்து ஆகமம் செப்பலுற்றேனே" (பா.12) எனப் பாயிரத்துட் கூறினாராகலின், இது கூற வேண்டியதாயிற்று. 'சரியை முதலிய நான்கனுள் முதல் மூன்றும் நூலறிவானே கூறினும் கூடும்; ஞானம் அத்தகையது அன்று' என்பதாம். 'உடலை நீங்காதிருக்கச் செய்தான்' என்றது நெடுநாள் இருக்கச் செய்தான் என்றபடி.*

*இதனால், 'இத்தந்திரத்துள் ஞானம் இவ்வாற்றால் கூறி முடிக்கப்பட்டது' என முடிவுரை கூறினார்.*

***எட்டாம் தந்திரம் மூலமும் உரையும் முற்றிற்று.***

# ஒன்பதாம் தந்திரம்

## 1. குருமட தரிசனம்

*தொன்றுதொட்டு வரும் கேள்வியோடு அனுபவமும் உடைய ஞானகுரு எழுந்தருளியுள்ள திருமடத்தைக் கண்டு தொழுதல். முதற்றொட்டுச் சரியை முதலிய சைவாகமப் பொருள் நான்கினையும் எட்டுத் தந்திரங்களில் ஏற்ற பெற்றியால் விரிவாகக் கூறி முடித்த நாயனார், இறுதியான இவ்வொன்பதாம் தந்திரத்தால் நூலின் ஒழிபாக, மேற்போந்தவற்றோடு இயைபுடைய சிலவற்றை ஏற்ற பெற்றியாற் கூறி, நூலை முடிக்கின்றார்.*

*'வித்தியா குரு, கிரியா குரு, ஞான குரு எனக் குருமார் முத்திறப்படுவர். அவருள் வித்தியாகுருமார் இருக்குமிடம். 'குருகுலம்' எனப்படும். குலம் - இல்லம். ஏனை இருதிறத்தார் இருக்குமிடம் 'மடாலயம்' எனப்படும். அஃது இங்குச் சுருக்கமாக, "மடம்" எனப்பட்டது. அவருள்ளும் இங்கு, "குரு" என்றது, சிறப்பாக ஞான குருவையே.*

*வித்தியா குரவராவார் இல்லறத்தவரே. வானப்பிரத்தராயும் இருப்பர். ஏனையிருவரும் 'கிருகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம்' என்னும் மூன்று ஆச்சிரமங்களில் தங்கட்கு ஏற்புடையதில் இருப்பர். இம்மூவரது இருப்பிடங்களுமே 'மடம்' எனப்படும். எனினும், கிருகத்தர் தவிர ஏனையிருவரது இருப்பிடங்களையே வழக்கத்தில் 'மடம்' என்பது குறிக்கின்றது.*

*"தாவில் சீர் முருகனார் திருமனைக் கெய்தி"*

*என முருக நாயனாரது இல்லத்தை, "திருமனை" என ஓரிடத்தில் அருளிச் செய்த சேக்கிழார் தாமே. அதனை வேறிடங்களில்*

*"திக்கு நிறைசீர் முருகர் முன்பு*
*செல்ல, அவர்மடம் சென்று புக்கார்"*

***- தி.12 ஞானசம்பந்தர் - 522, 490, 567***

***"முருகனார் திருமடத்தின் மேவுங் காலை"***

***"ஓங்குபுகழ் முருகனார் திருமடத்தில் உடனாக"***

***- தி.12 நாவுக்கரசர் - 231, 243, 261***

***என, "மடம்" என்றும், "திருமடம்" என்றும் அருளிச் செய்தார். ஆதலின், சிவனுக்கு அடியவராய்ச் சிவப்பணி செய்வார் யாவராயினும் அவரது இல்லங்கள், 'திருமடம்' எனக் குறிக்கப்படுதற்கு உரியவாதல் விளங்கும். இன்னும் அவர், (சேக்கிழார்) அப்பரும், சம்பந்தரும் திருவீழிமிழலையில் சிலநாட்கள் எழுந்தருளியிருந்த இடங்களையே, 'அக்காலங்களில் அந்த இடங்கள்***

*திருமடங்களாய் விளங்கின' என்னும் கருத்தால்,*

*"ஈறி லாத பொருளுடைய*
*இருவர் தங்கள் திருமடமும்"*

***- தி.12 நாவுக்கரசர் 231, 243, 261***

*"நாவினுக்கு வேந்தர் திருமடத்தில்"*

*"பிள்ளையார்தம் திருமடத்தில்"*

*எனத், "திருமடம்" எனக் குறித்தருளினார். இன்னும் திருஞான சம்பந்தர் திருமணத்தின் பொருட்டுச் சென்று, அதற்குமுன் சிறிதுபோது எழுந்தருளியிருந்த இடத்தையே, அவர் எழுந்தருளியிருந்தமை காரணமாகச் சேக்கிழார்,*

*"பூதநா யகர்தம் கோயிற்*
*புறத்தொரு மடத்திற் புக்கார்"*

***- தி.12 ஞானசம்பந்தர் - 1208***

*என, "மடம்" என்று அருளிச் செய்தார்.*

*இனித் திருநாவுக்கரசு நாயனார், திருப்பூந்துருத்தியில்,*

*"திங்களும் ஞாயிறும் தோயும்*
*திருமடம் ஆங்கொன்று செய்தார்"*

***- தி.12 நாவுக்கரசர் 389***

*எனப்பட்டது, ஆசிரியன்மார்களும், அடியார்களும் எழுந்தருளியிருக்கத்தக்கதாக, நிலையாக அமைத்த திருமடமாகும்.*

*"நான்காம் வருணத்தாருள் நைட்டிகருக்கல்லது*
*ஆசாரியத் தன்மையில் அதிகாரம் இல்லை"*

*என்றும்,*

*"ஆதிசைவராயின் கிருகத்தருக்கும் ஆசாரியத்*
*தன்மையில் அதிகாரம் உண்டு"*

*என்னும் சிவஞான யோகிகள் தமது சிவஞான போத மாபாடியத்துச் சிறப்பப் பாயிரப் பாடியத்துள், ''ஆசாரியத் தன்மையின் அதிகாரம்'' என்னும் தலைப்பின்கீழ்ப் பலவகைத் தடைவிடைகளால் நிறுவினார். அதுபற்றிச், 'சைவ சமய நெறி' (ஆசாரியர் இலக்கணம் - 37) நூலின்,*

*"சூத்திரனும் தேசிகனா வான்மரணாந் தம்துறவி,*
*சாத்திரத்தின் மூன்றும்உணர்ந் தால்"*

*என்னும் குறளின் உரையில் யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலர் பின்வருமாறு*

*கூறியுள்ளதை இங்கு அறிதல் இன்றியமையாதது. (மூன்றும் - முப்பொருள்களின் இயல்பும்).*

> *"சூத்திரருள் நைட்டிகப் பிரமசாரிகட்கே*
> *குருத்துவம்; கிருகத்தவர்களுக்குச் சமயி,*
> *புத்திர, சாதகத்துவம் மாத்திரம்; குருத்துவம்*
> *இல்லை - என்று காமிகாகமத்தில் கூறப்படுதல்*
> *பற்றி இவ்வாறுரைத்தார்.*
>
> *- சூத்திரருட் கிருகத்தருக்கும் குருத்துவம்*
> *உண்டு - என்று வேறுசில ஆகமங்களில்*
> *விதிக்கப்பட்டது.*
>
> *முன்னை விதி, நைட்டிகப் பிரமசரியம் வழுவாது*
> *அநுட்டிப்போர் பலருளராகப் பெற்ற முனை*
> *யுகங்களிலும், பின்னை விதி நைட்டிகப்*
> *பிரமசரியம் வழுவாது அநுட்டிப்போர்*
> *மிக அரியராகப் பெற்ற இக்கலியுகத்திலும்*
> *கொள்ளற்பாலன வாதலின், விரோதமின்மை*
> *தெளிக"*

*இதனால், 'ஆகமங்களில் சூத்திரர்களில் கிருகத்தருக்கும் ஆசாரியத் தன்மையில் அதிகாரம் உண்டு' எனக் கூறப்பட்டிருப்பதை அறிகின்றோம். வழக்கத்திலும் அவ்வாறு உள்ள ஆசாரியர்கள், 'தேசிகர்கள்' எனப் பெயர் பெற்று விளங்கக் காண்கின்றோம். அவர்களைச் சிவஞான யோகிகள் 'ஆசாரியர்கள்' என்று ஒப்புக் கொள்ளவில்லை. ஆயினும், தீக்கையைப் பற்றி விரிவாகவும், சுருக்க மாகவும் கூறுகின்ற, சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் என்னும் நூல்களிலும், சாதியை வைத்துத் தீக்கை வேறுபாடு கூறவில்லை. அவ்வாறே சாதி பற்றிக் கூறப்படும் சைவ பேதங்களையும் அந்நூல்கள் குறிப்பிடவில்லை. இந்நாயனாரும் குருமார்களைப் பற்றிப் பேசும் இடங்களில் இவ்வாறெல்லாம் கூறவில்லை.*

*'ஞான தீக்கையால், உயிரே சீவனாய் இருந்தது, சிவமாகி விடுகின்றது' என்றால், அதன்பின் அதற்குக் கருவியாய் அமைந்து, அது வேண்டியவாறே பயன்படுகின்ற உடம்பைப் பற்றிய சாதி, தீக்கை யினாலும், மாறுதல் இல்லை' என்பதை உடன்பட முடியவில்லை.*

*சிவப்பிரகாச (செய்யுள் - 70) நூலில் உமாபதி தேவர், "பெத்தான்மாவின் உடம்பே பாசம்; முத்தான்மாவின் உடம்பு திருவருளே'' என்கின்றார். இந்நாயனாரும், பா. 2578இல்*

> *"திண்மையின் ஞானி சிவகாயம்"*

என்பதனால், "சிறந்த ஞானியின் உடம்பு சிவனது திருமேனியே" என முன் தந்திரத்தில் கூறியிருத்தலைப் பார்த்தோம். துறவிகள் உடம்பிற்குச் சமாதிக் கிரியை விதித்ததும் இது பற்றியே. திருநாவுக்கரசு நாயனார்,

> எவரேனும் தாம்ஆக; இலாடத் திட்ட
> திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி,
> உவராதே அவரவரைக் கண்டபோது
> உகந்தடிமைத் திறம்நினைந்து அங்கு உவந்து நோக்கி,
> இவர்தேவர் அவர்தேவர் என்று சொல்லி
> இரண்டாட்டாது ஒழிந்து ஈசன் திறமே பேணிக்
> கவராதே தொழும் அடியார் நெஞ்சி னுள்ளே
> கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே. - தி.6 ப.61 பா.3

எனப் பொதுவான திருவேடமுடையாரைப் பற்றியே இவ்வாறு அருளிச் செய்தார். அங்ஙனமாக, 'சிறந்த ஞானாசிரியரால் பலவகைத் தீக்கைகளையும் செய்து, ஔத்திரி தீக்கையால் அத்துவ சோதனையும் செய்யப்பட்டபின்னும் அந்த அத்துவாக்களையுடைய உடம்பு, தாய் வயிற்றினின்றும் பிறந்தது பிறந்த படியேதான் உள்ளது. சிறிதும் மாற்றமில்லை' எனக் கூறுதல், 'சமயத்திலும் சாதியே வலுவுடையது; அது பிறப்பு மாறினாலன்றி, மாறாது' எனக் கூறும் மிருதி நூல்களையே தலையாய பிரமாணங்களாகக் கொள்கின்ற சுமார்த்த சமயத்தின் தாக்கமேயாகும். 'சைவத்தில் அஃதில்லை' என்பது திருத்தொண்டர் புராணத்தில் மிக மிக வெளிப்படை. 'தீக்கையால் உயிரினது நிலை மட்டுமே மாறும்; உடலது நிலையில் மாற்றம் உண்டாகாது' எனக் கூறினால், 'துறவிகளது உடம்பிற்குச் சமாதி விதித்தலால் பயன் என்னை, என்க. 'அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்போர்' நிருவாண தீக்கைபெற்றுச் சைவ சந்நியாசமும் பெற்ற பின்னரும், 'முன்பு இருந்த அந்தணன் அந்தணன்தான்; வேளாளன் வேளாளன் தான்' எனக் கூறுதல் எவ்வளவு தொலைவு உண்மையோடு ஒட்டுகின்றது என்று பார்த்தல் வேண்டும்.

எனவே, இங்கு, "குரு" என்றது, எவ்வாற்றாலேனும் ஆசிரியத்தன்மை பெற்றோரையேயாம். எனினும் சந்நியாச ஆச்சிரமத்தில் உள்ள குருமார் இருப்பிடத்திற்கே 'மடம்' என்னும் பெயர் சிறப்பாக உரியது. வானப்பிரத்த, கிருகத்த ஆசாரியர்கள் இருப்பிடத்திற்கு அது பொதுவாக உரியதே.

இனி, 'சந்நியாசிகட்கு ஆசாரியத் தன்மை இல்லை' என்னும் ஓர் வாதமும் உண்டு. (சைவ சமய நெறி - ஆசாரியர் இலக்கணம் - 59)

அது தபசுவி - என்னும் சந்நியாசியைக் குறித்து மட்டுமே கூறியது' எனச் சிவஞான யோகிகளே மேற்குறித்த இடத்தில் விளக்கினார். இங்கு வானப்பிரத்தர் 'தபசுவி' அல்லாத சந்நியாசிகளுள் அடங்குவர்.

*அப்பாஇம் முத்திக்(கு) அழியாத காரணந்தான்*
*செப்பாய், அருளாலே; செப்பக்கேள் - ஒப்பில்*
*குருலிங்க வேடம்எனக் கூறில்இவை கொண்டார்,*
*கருஒன்றி நில்லார்கள் காண்.* ***- உண்மைவிளக்கம் - 52***

***கற்றா மனம்போல் கசிந்துகசிந் தேஉருகி***
***உற்றாசான் லிங்கம் உயர்வேடம் - பற்றாக***
***முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்***
***பத்திதனில் நின்றிடுவர் பார்.*** ***- உண்மைவிளக்கம் - 53***

***என்றபடி, சித்தாந்த முத்திக்குத் துணையாவன, குரு லிங்க சங்கமங்களே யாதல் பற்றி அவைகளை, மேல் இடம் வாய்த்துழிக் கூறிய நாயனார், இங்கு முதற்கண் குரு இடமாகிய திருமடத் தரிசனத்தின் சிறப்பைக் கூறுகின்றார். இவ்வதிகாரம் ஆறு மந்திரங்களையுடையது.***

**2606.** **பலியும் அவியும் பரந்து புகையும்**
**ஒலியும்எம் ஈசன் றனக்கென்றே உள்கிக்**
**குவியும் குருமடம் கண்டவர் தாம்போய்த்**
**தளிரும் மலரடி சார்ந்துநின் றாரே.** **1**

---

*2606. தெளிவுரை :- 'சிவபெருமான் ஒருவனுக்கு உரியன' எனக் கருதிக் கொண்டு, தனியாகப் படைக்கப்படுகின்ற படையல்களும், நெருப்பிடமாக இடப்படுகின்ற அவிசுகளும், தூபம், வேள்வி, குருலிங்க சங்கமங்கட்காக அடுகின்ற அட்டில் இவற்றினின்றும் எழுகின்ற புகைகளும், வழிபாடுகளில் மெல்ல ஓதுகின்ற மந்திர ஒலிகளும், இசையுடன் உரக்க ஓதுகின்ற வேதம், திருமுறை இவற்றின் ஓசைகளும் வந்து வந்து பரவிக் குவிகின்ற இடம் குருமடம், இதைக் கண்ணால் கண்டவர்களும் சிவலோகத்திலே சிவனது திருவடியைச் சார்வார்கள்.*

*குறிப்புரை :- 'கண்டவர்கட்கு உலக ஆசைகள் நீங்க, சிவபத்தி தோன்றி முதிரும்' என்பதாம். "நல்லாரைக் காண்பதுவும் நன்றே" (ஔவையார் - மூதுரை) என்றதும் இது பற்றி, "ஈசன்றனக் கென்றேஉள்கி" என்பதை முதலிற்கொள்க, கருதுதலைச் 'சங்கற்பம் செய்து கொள்ளல்' என்பர். 'அங்ஙனம் செய்து கொண்டு செய்வனவற்றிற்குப் பயன் மிகுதி என்பது ஆகமங்களின் துணிபு. "ஈசன்" என முன்னர்ப் போந்தமையால், "மலரடி" என்றதும் அவனது திருவடியே யாயிற்று. 'ஈசன்' என்பது சிவபெருமானுக்கே உரிய சிறப்புப் பெயர். "உள்கி" என்பதன்பின், 'செய்ய' என ஒரு சொல் வருவித்து "பரந்து" என்பதைக் "குவியும்" என்பதற்கு முன்னர்க் கூட்டுக. தெளிவு நோக்கி எதிர்காலம் 'சார்ந்து நின்றார்' என இறந்த காலம் ஆயிற்று. பின்னிரண்டடிகள் உயிரெதுகை பெற்றன.*

*இதனால், குருமட தரிசனம் பத்தியைத் தருதல் கூறப்பட்டது.*

**2607.** **இவன்இல்லம் அல்லது அவனுக்கங் கில்லை**
**அவனுக்கு வேறில்லம் உண்டா அறியின்**
**அவனுக்கு இவன்இல்லம் என்றென் றறிந்தும்**
**அவனைப் புறம்பென்று அரற்றுகின் றாரே.** **2**

---

*2607.* ***தெளிவுரை :-*** *'சிவனுக்கென்று சுத்த தத்துவங்களில் உலகங்கள் உள்ளன' எனக் கூறப்படுவன, அவனுக்காக அமைக்கப்பட்டன அல்ல இந்தச் சிவகுருவுக்காக அமைக்கப்பட்டனவே. (ஏனெனில், சிவனுக்கு இருக்க ஓர் இடம் தேவையில்லை. சிவகுருவுக்கு, மாசுடம்பு நீங்கியவுடன் இருக்க ஒரு தூய இடம் வேண்டும்). 'சுத்த தத்துவ உலகம் தவிர, அவற்றின் வேறாகச் சிவனுக்கென்றே இடம் இருக்கின்றது' என்று சொன்னால் அந்த இடம் இந்தச் சிவகுருதான். இதை உண்மை நூல்கள் பலவற்றால் அறிந்தும் சிலர், 'குருமடம் வேறு; சிவனது உலகம் வேறு' எனக் கூப்பாடு செய்கின்றனர்.*

***குறிப்புரை :-*** *'குருமடம் சிவலோகமே' என்றபடி. "இல்லம்" என்பதை "அங்கு" என்பதன் பின்னும் கூட்டுக. மூன்றாம் அடியில், 'சிவனே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுக்கப்பட்டது. அவனுக்கு இல்லம் இவனே' என மாற்றிக் கொள்க. "என்று என்று" என்னும் அடுக்கு, பலமுறை கற்றும், கேட்டும் அறிதலைக் குறித்தது'. "அவனைப் புறம்பென்று" என்பதற்குக் கருத்து நோக்கி, இவ்வாறு உரைக்கப்பட்டது.*

*இதனால், 'குருமட தரிசனம், சிவலோக தரிசனமே' என அதனது சிறப்புக் கூறப்பட்டது. 'அவ்விடம் திருவருள் விளக்கம் நிரம்பியுள்ள இடம்' என்பது கருத்து.*

*2608.* ***தெளிவுரை :-*** *ஞானமாகிய கடலில் மூழ்குதற்கு உரிய பெரிய துறையாகிய குருமடத்தைச் சென்று நான் தரிசித்தபின்பு, எல்லா உயிர்களும் சென்று சேரும் இடமாகிய சிவனது, அப்பொழுது கொய்த தாமரை மலர்போலும் சிவந்த திருவடிகள் தேடிக் காண்பதற்கு அரியனவாகவே இருக்க, திருமடத்தைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டுள்ள சிவகுருவே எங்கட்குச் சிவனாய் இயங்குகின்ற உலகம், உயிர் எங்கும் நிறைந்து நிற்கின்றான்.*

***குறிப்புரை :-*** *"பெருந்துறை" என்றது, குறிப்புருவகம். 'பெரிதாகிய கடலில் சென்று ஆடுதல். அதற்குரிய துறைவழியாக அன்றி இயலாதவாறு போல, அகண்ட ஞானத்தைப் பெறுதல் அதற்குரிய குருமடத்தில் சென்றன்றி இயலாது' என்பது தோன்ற இவ்வாறு உருவகித்தார். "பெருந்துறை" என்னும் சொற் குறிப்பால், 'இந்நாயனார் ஆளுடைய அடிகள் காலத்திற்குப் பின் இதனை அருளிச்செய்தார்' எனக் கருதலாம்.*

> *பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்*
> *மூழ்கிய புனிதன்* ***- நால்வர் நான்மணி மாலை - 8***

**2608.** நாடும் பெருந்துறை நான்கண்டு கொண்டபின்
கூடும் சிவனது கொய்மலர்ச் சேவடி
தேட அரிய சிறப்பில்லி எம்மிறை
ஒடும் உலகுயி ராகிநின் றானே. **3**

---

என அடிகளைச் சிவப்பிரகாசர் போற்றினார். 'ஞானத்தைப் பெற்றவர்களுக்கு அதனை அளித்தருளிய ஞானகுருவே சிவன்' என்பதை, "குருவே சிவம் எனக் கூறினன் நந்தி" (பா.1561) என நாயனார் முதற்கண் கூறியதுபோலவே, அருணந்தி தேவரும்,

"பரம்பிரமம் இவன்என்றும், பரசிவன்றான் என்றும்,
பரஞானம் இவன்என்றும், பராபரன்றான் என்றும்,
அரன்தரும்சீர் நிலையெல்லாம் இவனே யென்றும்
அருட்குருவை வழிபட" - சிவஞான சித்தியார், சுபக்கம்-சூ-12.7

எனக் கூறினமை அறியற்பாலது. இவ்வாற்றால், 'சிவனது சேவடி தேடி அடைய அரியன அரியனவாகவே இருக்க, நாங்கள் குருமடத்தில் குருவினது சேவடியையே சிவனடியாக அடைந்து விட்டோம்' என்றார். சிறப்பு இல் - ஞான நிலையம். இகர ஈறு, அதனையுடைய குருமூர்த்தியை உணர்த்திற்று. "கூடும் சிவனது........ தேட அரிய" என்பதை இடைப் பிறவரலாக்கி, இம் மந்திரத்தை வினை முடிபு செய்க. 'அரிய ஆக' என ஆக்கமும், 'எம்மிறையும், உலகுயிராகியும்' என எண்ணும்மைகளும் விரிக்க.

இதனால், ஞானிகட்குக் குருமடம் புகலிடமாதல் கூறப்பட்டது.

*2609.* **தெளிவுரை :-** 'சிவன் எழுந்தருளியிருக்கின்ற இருக்கை, கயிலாய மலை. ஞானிகளது உள்ளம் என்பன முறையே திருமடத்தில் உள்ள பீடமும், மடாலயமும், திருநந்தவனமுமே' என்று நான், பன்னிரு பகுதியாகிய, பெரிய தமிழ்நாட்டு மக்கட்கு உறுதியாகக் கூறுவேன்.

**குறிப்புரை :-** 'சிவனுடைய' என்பது முன் மந்திரத்தினின்றும் வந்து இயைந்தது. ''இயம்புவன்'' என்பது மீள மீள வந்தது சொற்பொருட் பின்வருநிலையணி. மடம் முதலிய மூன்றினையும் ஆசனம் முதலிய மூன்றனோடும் நிரல் நிறையாக இயைக்க. "ஆதாரம்" எனப்பின்னர் வருதலால், "மடம்" என்பது இடவாகு பெயராய், அதன்கண் உள்ள முதற்பொருளாகிய பீடத்தைக் குறித்தது. தானியாகு பெயராக, மடத்தையே 'பீடம்' என வழங்குதல் உண்மையையும் இங்கு நோக்குக. நந்தவனம் மலர்பொதுளி விளங்குதலால், அது ஞானிகளது உள்ளமாயிற்று. அதன் மணம், ஞான மணமாம். ஈராறு நிலம் - தமிழ்ப் பன்னிரு நாடுகள்.

"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தினும்"

- தொல் - சொல் - எச்சவியல், நூற்பா 4

**2609.** இயம்புவன் ஆசனத் தோடு மலையும்
இயம்புவன் சித்தக் குகையும் மடமும்
இயம்புவன் ஆதாரத் தோடு வனமும்
இயம்புவன் ஈரா றிருநிலத் தோர்க்கே. **4**

---

*என்றமையால், தொல்காப்பியர்க்கு, இவைகளைக் கொடுந்தமிழ் நாடாகக் கூறுதல் கருத்தாகாமை விளங்கும்.*

*"என்னைநன் றாக இறைவன் படைத்தனன்,*
*தன்னைநன் றாகத் தமிழ்ச்செய்யு மாறே" - தி.10 பா. 4*

*என நாயனாரே பாயிரத்துட் கூறியவாறு தமிழ் மக்கட்கே தாம் நூல் செய்கின்றார் ஆகலானும், "தமிழ் மண்டலம் ஐந்து" எனத் தமிழ்நாடு முழுதையும் நோக்கினார் ஆகலானும் தமிழ் மக்களையே குறித்தார். இனி, 'ஈராறும், இரண்டும் ஆகிய நிலம்' என வைத்து, 'பதினான்கு உலகங்களில் உள்ளார்க்கும் இயம்புவன்' என்றும் உரைப்பர். 'அஃது எத்துணைப் பொருத்தம் உடையது' என அறிந்து கொள்க.*

*இதனால், 'குருமடத்தில் உள்ள பீடம் முதலியன சிவனது பீடம் முதலியனவேயாம் சிறப்புடையன' என்பது கூறப்பட்டது.*

*2610.* **தெளிவுரை :-** *குருமடத்தில் முதன்மையாக அமைந்துள்ள பீடம், சிவபெருமானுடைய முகம். மடாலயம் உயிர்களால் நினைக்கப்படுகின்ற சிவனுடைய திருமேனி. திருமடத்தில் உள்ள பல உயிர்ப் பொருட்கள், உயிரல் பொருட்கள், சிவனுடைய வியாபகத்துள் அடங்கியுள்ள உயிர்களும், உயிர் அல்லாதனவும் ஆகிய உலகங்கள். குருமூர்த்தியின் ஆட்சி, சிவபெருமான் உயிர்களின் பாசத்தைப் போக்குதற்குச் செய்கின்ற செயல்கள். குருமூர்த்தியினுடைய உள்ளம், சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் மேலான இருக்கை குருமூர்த்தி தாம் இருப்பதாகக் கொண்டுள்ள குகை. சிவனுடைய இடமாகிய சிதாகாசம். ஆகவே, குருமூர்த்திக்கு அவர்தம் மாணவர் செய்யும் பதினாறு வகை முகமன்களோடு கூடிய வழிபாட்டுச் செயல்கள். உலகில் சிவபெருமானுக்கு அந்தணர் முதலியோர் அவ்வாறு செய்யும் வழிபாட்டுச் செயல்களே.*

**குறிப்புரை :-** *"அகம்" இரண்டில் முன்னது இடவாகு பெயராய், அதில் உள்ள பொருட்களைக் குறித்தது. பரவர்க்கம் - ஏனைப் பொருள்கள். செய் - செயல்; முதனிலைத் தொழிற்பெயர். 'ஆசு இன்மைக்கு ஏதுவான செயல்' என்க. 'தேயம், காட்சி' என்பன பாடம் அல்ல. பரம் + ஆதனம் = பரமாதனம். எண் எண் - எட்டும் எட்டும்; பதினாறு. இஃது எண்ணாகு பெயராய் அத்துணை வழிபாட்டுச் செயல்களைக் குறித்தது. எழுவாயாய் நின்று "கிரியை" என்னும்*

**2610.** முகம்பீட மாம்மட முன்னிய தேகம்
அகம்பர வர்க்கமே ஆசில்செய் ஆட்சி
அகம்பர மாதனம் எண்ணெண் கிரியை
சிதம்பரம் தற்குகை ஆதாரந் தானே. **5**

**2611.** அகமுக மாம்பீடம் ஆதாரம் ஆகும்
சகமுக மாம் சத்தி ஆதனம் ஆகும்
செகமுக மாம் தெய்வ மேசிவம் ஆகும்
அகமுகம் ஆய்ந்த அறிவுடை யோர்க்கே. **6**

---

*பயனிலையைக் கொண்டது. 'குகையாகிய ஆதாரம்' என்க. குகையை 'ஒடுக்கம்' என்பர்.*

*'பீடம் முகமாம்; பரவர்க்கம் அகம்; ஆட்சி செயல்; தற்குகை ஆதாரம் சிதம்பரம்; ஆகவே, எண் எண் முகமன் கிரியை' என இயைத்துக் கொள்க. ஈற்றடி மூன்றாம் எழுத்தெதுகை பெற்றது. உயிர் எதுகையுமாம்.*

*இதனால் குருமடமே சிவசொரூபமாதல் கூறப்பட்டது.*

*2611. தெளிவுரை :- புற ஆரவாரங்களை விடுத்து, அகநோக்குக் கொண்டு நோக்குகின்ற ஞான குரவர்கட்கு, அனைத்திற்கும் அடி நிலையாகிய அந்த அக நோக்கு உணர்வே சிவன் எழுந்தருளியிருக்கும் ஆசனமாகும். அந்த அகநோக்கு உணர்வு நிலை திரியாதே மாணாக்கர் பொருட்டு உலகை நோக்குகின்ற அதுவே சிவன் கொள்கின்ற திருவுருவமாகும். அங்ஙனம் நோக்கி மாணாக்கர்க்குச் செய்யும் அருட் செயல்களே அத்திருவுருவத்தில் உள்ள சிவபெருமானாகும்.*

*குறிப்புரை :- வழிபாடு, 'ஆசனம் (இருக்கை), மூர்த்தி (திருவுரு), மூர்த்திமான் (உடையான்)' என்னும் மூன்றும் அமையச் செய்யப்படும் ஆகலின் அம்மூன்றும் குரு மூர்த்திகளது அருட்செயலில் அமைதல் காட்டியபடி 'ஞானகுரு தம் மாணாக்கர்க்கு அருள்புரியுமிடத்துத் தமது நிலையை இவ்வாறு பாவித்து நின்றே புரிதலால், அவர் செயல் அவருக்குச் சிவப் பணியாயும், ஏனையோர்க்குத் திருவருட் செயலாயும் அமைந்து பயன் தருகின்றன' என்பதாம்.*

*"அகமுகமாம் ஆதாரம் பீடம் ஆம்" என்க.*

*ஆதனம் - ஆசனம். என்றது, இங்கு, உறையும் இடமாகிய உருவத்தைக் குறித்தது. சிவனுக்குச் சத்தியே திருமேனியாதல் அறிக. வழிபாட்டில் உரிய வகையில் கட் புலனாகியிருக்கும் உருவம் சிவனுக்குப் பருவுடம்பு. மந்திரம் நுண்ணுடம்பு. சத்தி நனி நுண்ணுடம்பு. சிவன் அவ்வுடம்புகளின் உள்ளிருக்கும் உயிர் ஆதலின், நனி நுண்ணுடம்பையே இங்குக் கூறினார். சத்தி வெளிப்படும்பொழுது சிவமும் உடன் வெளிப்பட்டு நிற்கும் ஆதலின் "சகமுகமாம் சத்தி" என்றும், "செகமுமாம்*

*தெய்வமே சிவமாகும்" என்றும் கூறினார். "தெய்வம்" என்றது, திவ்வியமாகிய செயல்களை.*

*இதனால், ஞானகுருவினது பாவனை முதிர்ச்சியால் அவர் சிவமாய் நிற்றலின் அவரது மடம் சிவசொரூபமாயிற்று' என்பது விளக்கப்பட்டது.*

*ஆறு, ஏழாந் தந்திரங்களில் குருவைப் பற்றிக் கூறினா ராயினும் அங்குக் குருமடத்தின் சிறப்புப் பற்றிக் கூற இயைபில்லாமையால், அவற்றின் ஒழிபாக இதனை இங்குக் கூறினார். இது முன்னைத் தந்திரத்து இறுதிக்கண் நின்ற 'பத்தி யுடைமை' அதிகாரத்தோடு இயைந்து நிற்றலும் காண்க.*

## 2. ஞானகுரு தரிசனம்

*மேற்கூறியவாறு ஆறு, ஏழாம் தந்திரங்களில் குருவைப் பற்றிக் கூறினா ராயினும் அவை பொதுப்பட எல்லாக் குரவர்க்கும் ஆதல் கூடும் ஆகலின், அவருள் தலையாயவராகிய ஞான குருவின் தரிசனத்தை இங்கு வேறெடுத்துக் கொண்டு கூறுகின்றார். இவ்வதிகாரம் பத்தொன்பது மந்திரங்களையுடையது.*

**2612.** மாயை இரண்டு மறைக்க மறைவுறும்
காயம்ஓ ரைந்தும் கழியத்தா மாகியே
தூய பரஞ்சுடர் தோன்றச் சொரூபத்துள்
ஆயவர் ஞானாதி மோனத்த ராவரே. **1**

---

*2612. தெளிவுரை :- 'அசுத்த மாயை, பிரகிருதி மாயை' என்னும் இரு மாயைகள் தம்முள் ஒடுக்க ஒடுங்குகின்ற ஐந்து உடல்களையும் அவற்றது இயல்பை உள்ளவாறு உணர்ந்து, 'அவை நாம் அல்ல' என்று கழிக்கக் கழிதலால், முன்னர்த் தாம் சடமாகிய அவையாகாது, சித்தாகி நின்று, அங்ஙனம் நின்ற அந்நிலையில், இயற்கையிலே அசுத்தமாய் நின்ற பாசஞானமும், செயற்கையால் அசுத்தமாகிய பசு ஞானமும் போலாது, இயல்பாகவே தூய்தாகிய பதிஞானம் தோன்ற, அதனானே அந்த ஞானத்திற்கு முதலாய் உள்ள சிவத்தை அறிந்து, அதனுள் அடங்கியிருப்பவர்' மோனிகட்கு மேலாகிய மோனிகளாவார்.*

*குறிப்புரை :- மூலப்பகுதியின் ஆயவை சித்தம் புத்தி ஆங்காரம். தொழிற்பொறி ஐந்து. அறிவுப் பொறி ஐந்து. நுண்பூதம் ஐந்து. பருப்பூதம் ஐந்து என்னும் இருபத்து நான்கு. இவற்றுள் ஐம்பூதங்களாலாகி அறிவு தொழிற் பொறிகளுக்கு இடனாகிச் சோறு நீர் காற்று என்பவற்றைக் கொள்ள வளர்வதாய்க் காணப்படும் நனவுடல் பருவுடம்பு. இஃது அன்ன மய கோசம் எனவும் படும்.*

*சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் நுண்பூதம் ஐந்தானும் ஆக்கப்பெற்று, புத்தி, ஆங்காரம், மனம் இவற்றிற்கு இடந்தந்து, கனவில் உடலாய் நிற்பது நுண் உடல்; இது பிராணமயகோசம் எனவும் படும்.*

*இனி, சித்தம் என்பது குண ரூபமாய் விளங்கி, ஏனை மூன்று அகக் கருவிகளையும் அடங்கக் கொண்டது. இது குணவுடல் அல்லது மனோமய கோசம் எனப்படும். இஃது உறக்கத்தில் உயிர்க்கு உடலாய் நிற்பது.*

*இம்மூன்றும் மூலப்பகுதி எனப்படும் பருமாயையினின்றும் ஆயவை.*

*இனி, அசுத்த மாயை எனப்படும் நுண்பகுதியில் தோன்றுவன மாயை, காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்பவை. இவற்றுள் முதற்கண்ணதாகிய*

**2613.** ஆறொடு முப்பதும் அங்கே அடங்கிடல்
கூறக் குருபரன் கும்பிடு தந்திடும்
வேறே சிவபதம் மேலா அளித்திடும்
பேறாக ஆனந்தம் பேணும் பெருகவே. **2**

---

*மாயையே மிகு நுண் உடல் அல்லது ஆனந்தமய கோசமாகும். இஃது உயிர்க்கு உயிர்ப்பு அடங்குதல் எனப்படும் கேவல துரியாதீதத்தினும் நீங்காமலுள்ளது. ஏனை ஐந்தன் தொகுதி அறிவுடல் அல்லது விஞ்ஞானமய கோசம் எனப்படும். இஃது உறக்கத்தின் பின் கூறப்படும் பேருறக்கம் அல்லது துரியம் என்னும் நான்காம் அவத்தையில் உயிர்த்து நிற்பது. இது கஞ்சுக சரீரம் எனவும் படும்.*

*கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்று அடிப்படை நிலைகளிலும் உயிர் இவ்வுடல்களைச் சார்ந்து அறிந்தும் அறியாமலும் வருவதை உள்நோக்கிக் கண்டு, இவை உயிர்க்கு வேறாதலைச் சுட்டியுணரின் இவை கழிந்து, ஆன்மா தன் தூய நிலையில் நிற்கும். இதுவே தானாகி என்றதனால் குறிக்கப்பட்டது. அத்தகைய ஆன்மாவின் உணர்வில் தான் தூய பரமாகிய சுடர் (திருவருள்) தோன்றும். இச்சுடர் ஞானக்கண் எனவும் படும்.*

***2613. தெளிவுரை :-* உயிர்க்குச் சிவத்தைக் காட்டாது தம்மையே காட்டி நிற்கின்ற முப்பத்தாறு கருவிகளின் சேட்டைகளும் அடங்கும் முறையை மேலான குரு உபதேசம் செய்யும் பேற்றினை அக்குருவைத் தரிசித்து வணங்குவதாகிய வணக்கமே தரும். அவ்வுபதேச வாயிலாக அது மேலும் சிறப்பாகச் சிவனது திருவடியைத் தரும். பின்பு முடிநிலைப் பேறாக அவனது ஆனந்தத்தைத் தந்து, அஃது எல்லையின்றிப் பெருகி வருமாறு பேணியும் நிற்கும்.**

***குறிப்புரை :-*** *'ஆகவே, உபதேசத்திற்கு முன்னும், அதன் பின் சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் என்னும் நிலைகளிலும் குரு வழிபாட்டினைத் தவிரற்க' என்பது குறிப்பெச்சம்.*

*தன்னை யறிவித்துத் தான்தானாச் செய்தானைப்*
*பின்னை மறத்தல் பிழையலது - முன்னவனே*
*தானேதா னாச் செய்தும், தைவமென்றுந் தைவமே;*
*மானே தொழுகை வலி.* ***- சிவஞானபோதம் - சூ-12. அதி-4***

*என்றார் மெய்கண்ட தேவரும்.*

*அங்கே - அப்பொழுதே. "அடங்கிடல்" என்றது, அதற்குரிய வழியைக் குறித்தது. 'குருபரன் கூற, அவனைக் கும்பிடுதல் தந்திடும்' என இயைக்க. கும்பிடு, முதனிலைத் தொழிற்பெயர். 'தத்துவம் முப்பத்தாறனுள் மேலே உள்ள*

**2614.** துரியங்கள் மூன்றும் கடந்தொளிர் சோதி
அரிய பரசிவம் யாவையு மாகி
விரிவு குவிவற விட்ட நிலத்தே
பெரிய குருபதம் பேசஒண் ணாதே. **3**

**2615.** ஆயன நந்தி அடிக்கென் தலைபெற்றேன்
வாயன நந்தியை வாழ்த்தஎன் வாய்பெற்றேன்
காயன நந்தியைக் காணஎன் கண்பெற்றேன்
சேயன நந்திக்கென் சிந்தைபெற் றேனே. **4**

---

*சிவதத்துவம் ஐந்தும் செலுத்துதல் அளவாய் நிற்க, ஏனை முப்பத்தொரு தத்துவங்களே சகலர்க்கு மேற் கூறிய ஐந்துடம்புகளாய் வந்து பொருந்தும்' என்க.*

*இதனால், ஞான குரு தரிசனம் அடைதற்கரிய பேறுகளையெல்லாம் அளித்தல் கூறப்பட்டது.*

*2614. **தெளிவுரை :-** தம்மை அடைந்தவரை, முத்துரியங்கட்கும் அப்பாற்பட்டு ஒளிரும் பேரொளிப் பிழம்பாகிய, அணுகுதற்குரிய பரசிவப் பொருளேயாய், அதனைப்போலவே எங்கும் வியாபகமாய், அறிவு மாயா காரியங்களின்மேல் படர்ந்து செல்லுதலும், அதனை விட்டு ஒன்றும் அறியாது அறியாமையுள் மூழ்கிக்கிடத்தலும் ஆகிய 'சகலம், கேவலம்' என்னும் இரண்டும் அற்ற இடமாகிய சுத்த நிலையிலே தங்கும்படி கொண்டு போய்ச் சேர்க்கின்ற பெருஞான குருவின் திருவடி தரிசனச் சிறப்பை அளவிட்டுச் சொல்ல இயலாது.*

***குறிப்புரை :-** முத்துரியங்கள் முன் தந்திரத்தில் சொல்லப்பட்டன. 'ஆகி' என்பதை, "பரசிவம்" என்பதனோடும் கூட்டுக. விரிவு, சகலம். குவிவு, கேவலம். "விரிவு குவிவு அற" என்றதனால், 'அவை அற்ற நிலத்தே விட்ட பெரிய குரு' என்க. விடுதல் - சேர்த்தல். அதிகாரம் 'தரிசனம்' ஆதலின், "பதம்" என்பதும், பாத தரிசனத்தையே என்க. பாதம் பயன் தருதலும் தரிசனத்தினாலே யென்பதும் உணரற்பாற்று.*

*இதனால், முன் மந்திரத்தில் 'வேறே சிவபதம் மேலா அளித்திடும்' எனக் கூறப்பட்ட பயனின் பெருமை உணர்த்தப்பட்டது.*

*2615. **தெளிவுரை :-** என் ஞானகுரு நந்தி பெருமான்; அவர் தாயைப் போலும் கருணையுடையவர்; உயிர்க்கு உறுதி பயக்கும் சொல்லையுடையவர்; கட்புலனாகின்ற திருமேனியை உடையவர். எனினும் பாவிகட்கு எட்டாதவர். யான் தலையைப் பெற்றது அவரது திருவடிகளில் படும்படி வணங்குதற்காகவே; மற்றும் அவற்றைச் சூட்டுதற்காகவுமாம். நான் வாய்பெற்றது அவரை வாழ்த்துவதற்காகவே. நான் கண்பெற்றது அவரைத் தரிசித்தற்காகவே, நான் மனத்தைப் பெற்றது அவரை நினைத்தற்காகவே.*

**2616.** கருடன் உருவம் கருதும் அளவில்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவின் உருவம் குறித்த அப்போதே
திரிமலம் தீர்ந்து சிவன்அவன் ஆமே. **5**

| ஆய் அன | தாயை அனைய |
|---|---|
| வாய் அன | வறியவனுக்குப் பொருள் வாய்த்தல் அன்ன |
| காய் அன | காயம் (உடம்பு)அன்ன |
| சேயன | உரை உணர்வுகளுக்குச் சேயன் |

*குறிப்புரை:-* 'ஞானத்தை விரும்புவோர் பலரும் எந்த ஞான குருவையேனும் அடைந்து, அவருக்கு ஆட்படுதலையே தங்கள் பிறவிப் பயனாக உணர்தல் வேண்டும்; இல்லையேல், ஞானம் கிடையாது; கிடைப்பினும் நிலைத்து நின்று பயன் தாராது' என்பதாம். ஆயன் - ஆய் தாய் போன்றவன். வாய் - வாய்மை. 'காயத்தன்' என்பதில் அத்துச் சாரியை தொகுத்தலாயிற்று. 'அந்நந்தி' என்பது, நான்கடிகளிலும் சந்தி நகர ஒற்று தொகுக்கப்பட்டு நின்றது. "அடிக்கு, நந்திக்கு" என்னும் நான்கன் உருபுகள் 'அடியை வணங்குதற்கு, நந்தியைச் சிந்தித்தற்கு' என வினை பற்றி நின்றன. 'பூவிற்குச் சென்றான், கடைக்குச் சென்றான்' என்பனபோல.

இதனால், ஞான குரு தரிசனமே மானுடப் பிறப்பின் பயனாதல் கூறப்பட்டது.

*2616. **தெளிவுரை :-*** கருடனாந் தன்மை செய்யும் மந்திரத்தைப் பயன்றோன் அம்மந்திர உருவைக் கருதியதும் அவனால் நோக்கப்பட்டோனுக்கு ஏறிய அரவின் நஞ்சு நீங்கி இறப்பினால் வரும் அச்சம் கெடுகிறது. அதுபோலச் சிவகுருவின் உருவத்தை நினைத்த அப்போதே நினைப்போனின் உயிரின் கண்ணதாகிய மாசு தீர்ந்து அவ்வுயிர் சிவமாந்தன்மை பெறுகிறது.

*குறிப்புரை :-* **'கருடோகம் பாவனையால் விடம் நீங்குவது போலச் சிவோகம் பாவனையால் மும்மலங்களும் நீங்கும்'** என்பது இதன் திரண்ட பொருள். சிவோகம் பற்றி முன் தந்திரத்தில் சொல்லப்பட்டது. கருடோகம் பாவனை, சிவஞான போத ஒன்பதாம் சூத்திர பாடியத்துள் இனிது விளக்கப்பட்டிருத்தல் காண்க. இதனானே, 'பாவனை பொய்யன்று' என்பதும் நிறுவப்பட்டதாம். "கருட தியானத்தால் விடம் அகலும் அதுபோல" எனச் சிவஞான சித்தி (சுபக்கம் - சூ - 9, 7)யிலும் சொல்லப்பட்டது. "அவன்" என்பதை மூன்றாம் அடியின் முதலிற் கூட்டுக. "அவன்" என்றது பாவிப்பவனை.

இதனால், குருத்தியானமே சிவோகம் பாவனையாதல் கூறப்பட்டது.

(இதன்பின் பதிப்புக்களில் காணப்படும் அண்ணல் இருப்பிடம் ஆரும் அறிகிலர்" என்னும் மந்திரம். மூன்றாம் தந்திரத்து, 'கால சக்கரம்' அதிகாரத்தில் வந்தது). (பா.750).

**2617.** தோன்ற அறிதலும் தோன்றல்தோன் றாமையும்
மான்ற அறிவும் மறிநன வாதிகள்
மூன்றவை நீங்கும் துரியங்கள் மூன்றுஅற
ஊன்றிய நந்தி உயர்மோனத் தானே. **6**

**2618.** சந்திர பூமிக்குள் தன்புரு வத்திடைக்
கந்த மலரில் இரண்டிதழ்க் கன்னியும்
பந்தம் அறுத்த பளிங்கின் உருவினர்
பந்தம் அறுத்த பரம்குரு பற்றே. **7**

---

*__2617. தெளிவுரை :-__ தோன்ற அறிதல் - பொருள்களை இனிது விளங்கத் தெளிய உணர்தல். தோன்றல் தோன்றாமை - விளங்கவும் விளங்காமலும் ஐயமாக உணர்தல். மான்ற அறிவு - யாதும் அறியாது அறிவு மூடமாதல். இவையே மறித்து மறித்து வரும் நனவு கனவு உறக்கங்களாம். இம்மூன்றும் நீங்கிய நான்காம் நிலை துரியம். அது மூன்று வகையாய் நிகழும். (அவை முன் தந்திரத்தில் 'முத்துரியம்' என்பதில் காட்டப்பட்டன). அம்மூன்று துரியங்களும் நீங்க, ஐந்தாவதாகிய அதீதத்தில் ஞான குருவை உணர்பவன் (மேற்கூறியவாறு கருடோகம் பாவனை செய்பவன் கருடனே யாதல் போலக்) குருவேயாகி விடுவான்.*

*__குறிப்புரை :-__ நனவு முதலிய அவத்தைகளை உணர்ந்து நீங்குதல் குருவருளால் ஆகத்தக்கது எனக் கூறுகின்றது இது.*

*பொருள்களை விளங்க அறிதலை உடையது நனவு. விளங்கியும் விளங்காத ஐயுறு நிலையின் அறிவது கனவு. அறிவு மயங்கிய நிலை உறக்கம். இம்மூன்றையும் கடந்த நிலை துரியம். அது கேவலம், சகலம், சுத்தம் மூன்றினும் உண்டு. கேவல சகலங்களைக் கடத்தலால் இரு துரியங்கள் அறும். சுத்த நிலைக்கண் துரியம் என்பது அருளோடு ஒன்றி நிற்பது. அதனையும் கடந்த நிலையே அதீதம் எனப்படும் இன்புறு நிலை. இத்துரியம் மூன்றும் நீங்கி அதீதத்தை அணையும்படி அருள் மொழியை என் அறிவில் ஊன்றியவன் ஞானகுரு. அவன் என்னைப் போல உருபெயர் முதலியன பெற்று வரினும், அவன் தன் உண்மையில் மேலான மோன நிலையில் நுகரப்படும் இன்புருவச் சிவனே ஆவன்.*

*மான்ற அறிவு - அறிவு மாழ்கி அறியா நிலை. மறி - மீண்டு மீண்டு மறித்து வரும்.*

*__2618. தெளிவுரை :-__ புருடனது உடம்பில் சந்திர மண்டலம் எனக் குறிக்கப்படுகின்ற அந்த எல்லைக்குள்ளேயிருக்கின்ற புருவ நடுவில், நறுமணம் பொருந்திய ஈரிதழ்த் தாமரை மலரில் அருட்சத்தி, பிறிதொரு நிறத்தொடு கூடாது தூய்மையாய் உள்ள படிகம் போன்றிருக்கின்றார். உனது பாச பந்தங்களை முற்ற*

**2619.** மனம்புகுந் தான்உல கேழும் மகிழ
நிலம்புகுந் தான்நெடு வான்நிலம் தாங்க
சினம்புகுந் தான்திசை எட்டும் நடுங்க
வனம்புகுந் தான்ஊர் வடக்கென்ப தாமே. **8**

---

*அறுத்த ஞான குருவை நீ அவ்விடத்திலே தியானி.*

*குறிப்புரை :-* *'தியானித்தால் அவர் உன்னைச் சிவனாக்கி விடுவார்' என்பது குறிப்பெச்சம். ஞான பூசைக்கு ஓமத் தானம், பூசைத் தானம், தியானத் தானம் முறையே உந்தி, இதயம், புருவநடு ஆதலின், 'தியானத்தைப் புருவ நடுவிலே செய்க' என்றார். புருவ நடுவே 'ஆஞ்ஞை' எனப்படும். ஆஞ்ஞை, சிவனது ஆணை. அது சத்தியேயாதலை உணர்க. 'இரண்டிதழ்க் கந்த மலரில்' என மாற்றுக. "கன்னியும்" என்னும் உம்மை சிறப்பு. பரம் குரு - மேலான குரு.*

*இதனால், கருடோகம் பாவனைபோலக் குருவைப் பாவகன் தானாகப் பாவித்தலைச் செய்யும் இடம் கூறப்பட்டது.*

*2619.* ***தெளிவுரை :-*** *'ஏழுலங்களிலும் உள்ள உயிர்கள் மகிழும்படி அவைகளின் மனத்தினுள் இருப்பவனும், நீண்ட வானுலகத் தேவரையும், மண்ணுலக மக்களையும் அருள்புரிந்து காக்க வேண்டிப் பல தலங்களில் எழுந்தருளியிருப்பவனும், பாவத்திற்கு அஞ்சாது உலகிற்குக் கொடுமையை விளைப்பவர் யாராயினும் அவர்கள் அஞ்சி நடுங்கும்படி சினம் கொள்கின்றவனும், காட்டை இடமாகக் கொண்டு ஆடல் புரிகின்றவனும் ஆகிய ஒருவனது இருப்பிடம் இப்பெருநிலத்திற்கு வடக்கெல்லையாகிய இடத்தில் உள்ளது' என்று அறிந்தோர் சொல்லுவர்.*

***குறிப்புரை :-*** *கயிலை மலையை இவ்வாறு குறிப்பாற் சுட்டினார். 'நகர்' என்பது இறைவன் இடத்தைக் குறிப்பது போலவே, 'ஊர்' என்பதும் அவனது இடத்தைக் குறிக்கும்.*

> *"பணியியர் அத்தைநின் குடையே, முனிவர்*
> *முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே"* - ***புறநானூறு - 6***

*என்னும் புறப்பாட்டில், இறைவனது இடம் 'நகர்' எனச் சொல்லப்பட்டது. 'இறைவனாவான் சிவன் ஆதலின், 'ஊர்' என்பது அவன் இயல்பாக இருக்கும் இடமாகிய கயிலாய மலையைக் குறிக்கும்' என்னும் கருத்தினால், "ஊர்க் கோட்டம்" எனச் சிலப்பதிகாரம் (கனாத்திறம் உரைத்த காதை - 11) கூறியதற்கு அரும்பத உரையாசிரியர், 'ஸ்ரீ கயிலாயம் நிற்கும் கோயில்' என்றும், அடியார்க்கு நல்லார், "இறைவனாகிய கயிலாயம் நிற்கும் கோயில்" என்றும் பொருள் உரைத்தமை இங்கு அறியற்பாலது. ஞான குரு தரிசனத்தில் இதனைக் கூறியது 'கயிலை மலையில் தென்முகக் கடவுளாய் இருந்து நால்வர் முனிவர்க்கு*

**2620.** தான்ஆன வண்ணம்ஐங் கோசமும் சார்தரும்
தான்ஆம் பறவை வனம்எனத் தக்கன
தான்ஆன சோடச மார்க்கம்தான் நின்றிடில்
தான்ஆம் தசாங்கமும் வேறுள்ள தாமே. 9

---

ஞானத்தை அளித்த முதலாசிரியன் சிவனே' எனவும், 'ஆகவே, உலகில் ஞானத்தை அருளும் ஞானாசிரியர் யாவரும் அவனாகவே கொள்ளற்பாலர்' எனவும் உணர்த்தற் பொருட்டாம்.

"யோகியாய் யோக முத்தி உதவுத லதுவும் ஓரார்" என்னும் சிவஞான சித்தி (சுபக்கம் - சூ - 150) கூறுவதும் தென்முகக் கடவுள் வடிவத்தையேயாதல் அறிக. இரண்டு மூன்றாம் அடிகளில் அநுக்கிரக நிக்கிரகங்களைச் செய்வோன் ஆதலையும், முதலடியில் அவற்றை அவன் உயிர்களோடு அத்துவிதமாய் நின்று செய்தலையும் குறித்தார். "உலகு" என்றது உயிர்களை; மகிழ்தற்குரியன அவையே யாகலின்,

"வானிடத் தவரும் மண்மேல் வந்து
அரன்றனை அற்சிப்பர்" - சிவஞானசித்தி - சுபக்கம் - சூ - 2, 92

ஆகலின் நிலவுலகத் தலங்கள் அவர்களது நன்மைக்காகவும் இருத்தலையறிக. இரண்டாம் அடி மூன்றாம் எழுத்தெதுகை பெற்றது. உயிரெதுகை பெற்றதுமாம்.

இதனால், இவ்வுலகத்து ஞான குரவரெல்லாம் தென்முகக் கடவுளாதலைக் கூறுமாற்றான், அவரது தரிசனத்தின் சிறப்புக் கூறப்பட்டது.

2620. **தெளிவுரை :-** சார்ந்ததன் வண்ணமாம் தனது இயல்பினால் ஐந்து உடம்புகளைச் சார்ந்து அவையேதானாய் நிற்கின்ற பறவையாகிய உயிர் அது சென்று திரியும் காடாகிய சொல்லுலகத்தில் 'பதினாறு படிகளை உடைய ஒரு நல்ல வழியைக் கண்டு நடக்குமாயின், அது சிவமாம் தன்மையை அடையும். இனி, அஃதேயன்றி, அப்பறவை சிவமாதற்குப் பத்துப் படிகளையுடைய வேறொரு வழியும் உண்டு.

**குறிப்புரை :-** ஐந்து உடம்புகள் எட்டாம் தந்திரத் தொடக்கத்தே காட்டப்பட்டன. அவை பறவைகளின் உடம்பாகவும், அவற்றில் உள்ள உயிர் பறவையாகவும் உபநிடதங்களில் உருவகிக்கப்படுதலும் மேலே கூறப்பட்டன (பா.2588 உரை) சொல்லுலகமாவது மொழி. மொழி வாயிலாகவே உயிர் உலகத்துப் பொருள்கள் பலவற்றையும் மிக விரைவாக, மாறி மாறி உணர்கின்றது. அதனால், மொழியை உயிராகிய பறவை பறந்து திரியும் காடாக உருவகித்தார். ஆயினும் உயிருக்கு உறுதி பயக்கின்ற மந்திரங்களும் அந்தச் சொல்லுலகிலேதான் உள்ளது. ஆதலின் அவற்றை அந்தக் காட்டில் கிடைக்கும் வழியாக வைத்து, அவற்றுட் சிறந்த சோடச கலாப் பிராசாத மந்திரத்தைப் பதினாறு

**2621.** மருவிற் பிரிவறி யான்எங்கள் நந்தி
உருவம் நினைக்கின்நின் றுள்ளே உருக்கும்
கருவிற் கலந்துள்ளம் காணவல் லார்க்கு இங்கு
அருவினை சோரும் அழிவார் அகத்தே. **10**

---

*படிகளையுடைய நல்ல வழியாகக் கூறினார். 'தசாங்கம்' என்றது தச காரியத்தை. பிராசாத யோகம் யோகமாய் நிற்க, தச காரியம் ஞானம் ஆதல் பற்றி அவற்றின் வரிசையை "வேறுள்ளது" என்றார். இனி, "சோடச மார்க்கம்" என்பதை, 'சரியையிற் சரியை, சரியையிற் கிரியை முதலிய பதினாறு' என்பாரும் உளர். இங்கு விளக்கப்படுவது ஞானம் ஒன்றேயாகையாலும், பிராசாத யோகம் ஞான யோகமே ஆதலாலும் அவர் கூறும் பொருள் சிறவாமை அறிக.*

*பிராசாதயோகம், தச காரியம் - இவற்றை அவ்வந் நூல்களிற் காண்க.*

*"தான்" நான்கில் முன்னிரண்டும்' ஆன்மாவால் சாரப்படும் பொருள். பின்னிரண்டும் சிவம். 'வண்ணத்தோடும்' என உருபு விரிக்க. "சார்தரும்" எனபது, 'சார்தந்து' என வினையெச்சப் பொருள் தந்தது. 'வனம் எனத் தக்கனவற்றில்' என ஏழாவது விரிக்க. 'சோடசத்தையுடைய மார்க்கம்' என்க. மூன்றாம் அடியில் உள்ள "ஆன" என்னும் பெயரெச்சம், "மார்க்கம்" என்னும் ஏதுப்பெயர் கொண்டது. "ஆன்" என்னும் இரண்டு இறந்த காலங்களும் முன்னை நிகழ்ச்சி வாயிலாக முக்கால நிகழ்ச்சியையும் குறித்தவாறு.*

*இதனால், 'ஞான குரு தரிசனத்தால் உயிர் உய்யும் வழியை உணரும்' என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

*2621. தெளிவுரை :- ஒருவரை அணுகிவிட்டால், பின்பு அவரை விட்டு ஒருபோதும் நீங்குதல் இல்லாதவர் எங்கள் நந்தி பெருமான். அந்நிலையில் அவரது திருவுருவத்தை உள்ளே நினைத்தால், நினைக்கின்ற உள்ளங்களை அஃது உருக்கிவிடும். அதனால், அங்ஙனம் உருகிய உள்ளம் உடையவர்கள் அவரிடத்தே ஒடுங்கி, அவரது அருள் கண்ணாகவே எதனையும் காண்பர். அங்ஙனம் காண வல்லார் முன்பு அவரது பிராரத்த வினை இவ்வுலகத்தில் மிகவும் மெலிந்து விடும். (உயிரைத் தாக்காது, உடல் ஊழாய்க் கழியும்' என்பதாம்). அதனால், அவர் தியானித்த அந்த உருவத்திலே அடங்கித் தற்போதம் அற்றிருப்பர்.*

*குறிப்புரை :- 'அதனால், அவர்க்குப் பின்னை வினையாகிய ஆகாமியமும் உண்டாகாது' என்பதாம். கரு - முதற்பொருள். தாக்க வரும் வினை தாக்க மாட்டாது மெலிதல் பற்றி. "வல்லார்க்குச் சேரும்" என தாக்கப்படுவோர்க்கு நான்கன் உருபு கொடுத்துக் கூறினார்; அவனை 'அவனுக்கு இவன் இளைத்தான்' என்பது போலக் கொள்க. அரு - சூக்குமம். பிராரத்தம் யாரும் அறியாதபடி வருவதாதல் அறிக. 'அருவிகண் சோரும்' என்பதும் பாடம்.*

**2622.** தலைப்பட லாம்எங்கள் தத்துவன் றன்னை
அலைப்படு பாசம் அறுத்தறுத் திட்டு
நிலைப்பட நாடி நினைப்பற உள்கின்
தலைப்பட லாகும் தருமமுந் தானே. **11**

---

*இதனால், 'ஞான குருவாய் வந்து ஞானத்தைத் தந்த சிவன் பின்பு நீங்கான் ஆதலின், ஞானியரும் அவனை விடாது பற்றி வினை தீரப்பெறுவர்' என்பது கூறப்பட்டது.*

*2622.* ***தெளிவுரை :-*** *எங்களது மெய்ப்பொருளாகிய சிவனைப் பலரும் அடையலாம். ஆயினும், அதன்பின்பும் அலைகள் போல வந்து வந்து தாக்குகின்ற பாசங்களை அவ்வப்பொழுது அவை தாக்காதபடி அறுத்தறுத்துப் போக்கி, அடைந்த அடைவு நிலைப்பில் நிற்குமாற்றை ஆராய்ந்து, தற்போதம் தலையெடாதபடி குறிக்கொண்டிருந்தால், அடைந்தது அடைந்ததாகவே யிருக்கும். அதுவே சிவனை அடைந்தவர்க்குரிய தருமமும் ஆகும்.*

***குறிப்புரை :-*** *'அவ்வாறு செய்து நிலைத்திருத்தல் அரிது' என்பதாம். இது பற்றியே ஞானம் பெற்றோர் தம் ஞானாசிரியரது அடி நிழலைப் பிரியாது உறைவர் என்க. அதிதீவிர நிலையை உடையவர்க்கு இவ்வாறான இடர்ப்பாடு தோன்றாது. ஏனையோர்க்கு இவை தோன்றும். அதனையே அருணந்தி தேவர்,*

> *நேசமொடும் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும்*
> *நிலையுடையோர் நின்றிடுவர் நிலையதுவே ஆகி;*
> *ஆசையுடன் அங்கும் இங்கும் ஆகி அலமருவோர்*
> *அரும்பாசம் அறுக்கும்வகை அருளின்வழி உரைப்பாம்.*
>
> ***- சிவஞானசித்தி - சுபக்கம் - சூ - 8, 39***

*என்றார். மெய்ப்பொருளைத் தலைப்பட்டும் அதிலே நிற்கமாட்டாது மீளப் பிறவியிற் செல்வோரைக் கருதியே திருவள்ளுவர், "தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால்" (திருக்குறள்-249) என்றார். பின்னர் நிற்கும் நிலை, கழைக் கூத்தர் கரணம் இடுதலும் கயிற்றின்மேல் நடத்தலும், குடநீரைத் தலையிற்கொண்டவள் கையிரண்டையும் வீசி நடத்தலும் போலும் அருஞ்செயலாதல் பற்றி முதற்கண், "தலைப்படலாம் எங்கள் தத்துவன்றன்னை" என எளிது போலக் கூறினாராயினும் அதுவும் எளி தன்று என்பது வெளிப்படை. தருமம் கடமை. "அவர்க்குத் தருமமும் ஆகும்" என ஒரு சொல் வருவித்து முடிக்க. அது செய்யாவழித் தீங்கு வருதல் பற்றி, "தருமம்" என்றார். உம்மை, இறந்தது தழுவிய எச்சம்.*

*இதனால், ஞானத்தைப் பெற்றுவிட்டவர்க்கும் ஞானகுரு தரிசனம் இன்றியமையாததாதல் கூறப்பட்டது.*

**2623.** **நினைக்கின் நினைக்கும் நினைப்பவர் தம்மைச்**
**சுனைக்குள் விளைமலர்ச் சோதியி னானைத்**
**தினைப்பிளந் தன்ன சிறுமைய ரேனும்**
**கனத்த மனத்தடைந் தார்உயர்ந் தாரே.** **12**

---

*2623. **தெளிவுரை :-** சிவபெருமான், தன்னை நினைத்தால், நினைப்பவரைத் தானும் நினைப்பான். (நினைத்து, அவரை மேன்மேல் உயரச் செய்வான்) அதனால், சுனைக்குள்ளே மலர்ந்த ஒரு தாமரை மலரின்மேல் எழுகின்ற சோதி போல இருதய கமலத்திலே ஒளிவடிவாய் விளங்கும் அப்பெருமானை 'அடைதல்' என்பது மனத்தால் அடைதலேயாதலின் அவ்வாறு அவனை முதிர்ந்த அன்பால் அடைந்தவர், உலகியலில் எத்துணைச் சிறுமையராய் இருப்பினும், உயர்ந்தோரினும் உயர்ந்தோரேயாவர்.*

***குறிப்புரை :-*** *'அஃதறிந்து அவரை அடைந்தோரும் உயர்ந்தவரே' அவரை அடைந்து பயன் பெறுதலே அறிவுடைமையும், அங்ஙனம் செய்யாது, உலகியல் பற்றி அவரைப் புறக்கணித்தல் அறியாமையும் ஆம்' என்பது கருத்து. 'கொப்பூழ் அடியாகத் தோன்றிய தண்டின்மேல் மலரும் மலர் இருதயம்' எனச் சொல்லப்படுவதால், அதனை, 'சுனையின் விளைந்த மலர்' என்றார். அச்சோதி யினானை' எனச் சுட்டு வருவித்துக்கொள்க. 'தினை, பனை என்பன சிறுமை பெருமைகட்குக் காட்டப்படும் சில அளவைகள், (திருக்குறள் - 104) பரிமேலழகர் உரை. ஆதலின், சிறுமையை, "தினைப்பிளந்தன்ன சிறுமையர்" எனக் குறித்தார். பகர ஒற்று எதுகை நோக்கி விரிக்கப்பட்டது. கனத்தல் முதிர்தல். அஃது இங்கு அன்பு முதிர்தலைக் குறித்தது.*

*இதனால், 'உயர்ந்தோரினும் உயர்ந்தோராவர் ஞான குரவரே' என்பது கூறும் முகத்தால், அவரது தரிசனத்தின் உயர்வு கூறப்பட்டது.*

*2624. **தெளிவுரை :-** சிவனை மனத்தால் அடைந்து நிற்கும் பொழுது இடையே அதனை நீக்குகின்ற ஊறு ஏதேனும் தோன்றுமாயின், அதனை, 'இது நாம் முன்பு செய்த வினையினின்றும் முகந்து கொண்டு வந்த பிராரத்தத்தின் விளைவு' என அறிக. அங்ஙனம் அறியுமிடத்து, 'அந்தப் பிராரத்தம் தானே வரும். சுதந்திரம் உடைத்தன்று; சிவனே அதனைக் கூட்டுவிக்கின்றான்' என உணரவல்லவர். அதனாலும் சிவபத்தி செய்பவராயே விளங்குவர்.*

***குறிப்புரை :-*** *வினையை நுகர்வோர் ஆகார்; அதனால், அந்தப் பிராரத்தம் கட்டாயமாக விளைத்துச் செல்லும் ஆகாமியத்தையும் விளைக்கமாட்டாது உடல் ஊழாய் ஒழியும்' என்பதாம்.*

> *"நின்னைஎப் போதும் நினையலொட்டாய் நீ, நினையப்புகின்,*
> *பின்னைஅப் போதே மறப்பித்துப் பேர்த்தொன்று நாடுவித்தி"*
>
> *- தி.4 ப.112 பா.4*

**2624.** தலைப்படுங் காலத்துத் தத்துவன் றன்னை
விலக்குறின் மேலே விதிஎன்று கொள்க
அனைத்துல காய்நின்ற ஆதிப் பிரானை
நினைப்புறு வார்பத்தி நேடிக்கொள் வாரே. **13**

**2625.** நகழ்வொழிந் தார்அவர் நாதனை உள்கி
நிகழ்வொழிந் தார்எம் பிரானொடுங் கூடித்
திகழ்வொழிந் தார்தங்கள் சிந்தையினுள்ளே
புகழ்வழி காட்டிப் புகுந்துநின் றானே. **14**

---

*எனப் பிராரத்த விளைவிலும் சிவனையே நினைந்தவாற்றை உணர்க. 'தத்துவன் றன்னைத் தலைப்படும் காலத்து' என மாற்றியுரைக்க. விதி - பிராரத்தம். விதியின் விளைவை, "விதி" என்றும், அயர்வொழிந்து நிற்றலை, "நேடி" (தேடி) என்றும் கூறினார். இம்மந்திரம் ஈரடி எதுகை பெற்று வந்தது.*

*இதனால், ஞானியர் பிராரத்தத்தால் தாக்குண்ணாது நிற்குமாறு கூறப்பட்டது. இவ்வாறு நிற்பவர் ஞானகுரு என்பதாம்.*

*2625. தெளிவுரை :- 'யான், எனது' என்னும் தன்முனைப்புக் கொண்டு தருக்குதலை ஒழிந்து, 'எல்லாம் அவனே' என்று அடங்கியிருப்பவர்களது அறிவினுள்ளே சிவன் நின்று எல்லாக் கலைகளாலும் புகழப்படுகின்ற தனது திருவருள் நெறியையே விளக்கி நிற்பான். அதனால், அவர்கள் அவனையே அறிந்து நிற்றலால் அத்திருவருள் நெறியைவிட்டு அப்பால் நகர்தல் இல்லை. மற்றும் அவனிடத்திலே அழுந்தி நிற்றலால் பிறவிக்குரிய நெறியில் சென்று பிறப்பதில்லை.*

*குறிப்புரை :- மூன்றாம் அடி முதலாகத் தொடங்கியுரைக்க.*

| | |
|---|---|
| *நகழ்வு* | *நெறியின் விலகுதல்.* |
| *நிகழ்வு* | *உலகியல் வாழ் இயல்பு.* |
| *திகழ்வு* | *யான் எனது என முனைந்து நிற்றல்.* |
| *புகழ்வழி* | *பெரியோர் பலரும் புகழும் திருநெறி.* |

*திகழ்வொழிந்தாரைச் சுட்டுவதாகிய "அவர்" என்னும் சுட்டுப் பெயர் செய்யுளாகலின் முன் வந்தது. 'நாதனை உள்கி நகழ்வொழிந்தார்; எம்பிரானொடுங் கூடி நிகழ்வொழிந்தார்' என்க. "உள்கி, கூடி" என்னும் செய்தென் எச்சங்கள் காரணப் பொருளவாய் நின்றன. ('கற்றுப் பெரியன் ஆயினான் என்பதிற் போல'. "காட்டிப் புகுந்து நின்றான்" என்பதை, 'புகுந்து காட்டி நின்றான்' எனப் பின் முன்னாக வைத்துரைக்க).*

*இதனால், 'ஞான குரவர் ஏனையோர் போல்வாரல்லர்' என்பது கூறப்பட்டது.*

**2626.** வந்த மரகத மாணிக்க ரேகைபோய்ச்
சந்தித் திடும்மொழி சற்குரு சன்மார்க்கம்
இந்த இரேகை இலாடத்தின் மூலத்தே
சுந்தரச் சோதியுட் சோதியும் ஆமே. **15**

---

***2626. தெளிவுரை :-*** *ஞான குரு காட்டும் ஞானநெறி, அன்று அயன் மால் தேடும்படி வந்த, மரகத மணியொளியும் மாணிக்க மணி யொளியும் சேர்ந்த ஓர் ஒளிவடிவை அடையும் உபதேச மொழியே யாம். அந்த மொழியின் பொருளே புருவ நடுவில், ஆன்மாவின் அறிவினுள் அறிவாகத் தியானிக்கப்படும் ஒளியுமாகும்.*

***குறிப்புரை :-***

*"மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம்*
*மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்*
*திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்"*
*- தி.8 திருவண்டப்பகுதி - 124, 126*

*என்பதனால், அயன், மால் இவர்கட்குமுன் ஒளிவடிவம் பச்சை நிறமும், செம்மை நிறமும் விரவிய ஒளியாய் இருந்தமை அறியப்படும். முதற்பொருள் 'சத்தி, சிவம்' என இருதிறப்பட்டு இயைந்து நிற்றலை இந்நிறங்கள் குறிக்கும்.*

*"அழகாயும், மெய்ம்மையாயும் உள்ளவனும்,*
*பரப்பிரம்மம் - என்று பேசப்படுபவனும்,*
*உயிரினுள் இருப்பவனும், கருமை நிறமும்,*
*பொன்னிறமும் கலந்த உருவத்தை உடையவனும்,*
*மேல்நோக்கிப் பாயும் வீரியத்தை உடையவனும்,*
*மாறுபட்ட கண்களை யுடையவனும்,*
*உலகத்தைத் தன் வடிவமாகக் கொண்டவனும்*
*ஆகிய அவனுக்கு வணக்கம்! வணக்கம்!!"*

*"ருதம் ஸத்யம் பரம் பிரஹ்ம புருஷம் க்ருஷ்ண பிங்கலம்*
*ஊர்த்வ ரேதம் விரூபாக்ஷம் விச்வருபாயவை நமோ நம:"*

***- நாராயண சூக்தம் - 13***

*என வேதமும் கூறிற்று. இரேகை - ஒளி. "எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய" (தொல். சொல். எச்சவியல் நூற்பா 24) என்பது பற்றித் தொகைச் சொல் இடையில் ரகர லகர முதல் ஆரியச் சொற்கள் முதற்கண் அகர இகர உகரங்களில் யாதும் பெறாது வருதலைக் 'குற்றம்' என்றல் இல்லை. அதனால் "மாணிக்க ரேகை" என்றே வந்தது. "மரகத மாணிக்க ரேகை" என்னும் மும்மொழித் தொகைச் சொல் முதல் இருமொழிகள் உம்மைத் தொகையாய்ப் பின்பு 'ரேகை'*

**2627.** உண்ணும் வாயும் உடலும் உயிருமாய்க்
கண்ணும்மா யோகக் கடவுள் இருப்பது
மண்ணும் நீர்அனல் காலொடு வானுமாய்
விண்ணும்பின் னின்றி வெளியானோர் மேனியே. **16**

---

என்பதனோடு ஆறாம் வேற்றுமைத் தொகையாய்த் தொக்குப் பின்பு விடாத ஆகுபெயராய், அவற்றையுடைய ஓர் ஒளியைக் குறித்தது'. "வந்த" என்பது, அயன், மால் இவர்முன் வந்த' என ஆற்றலாற் பொருள் தந்தது. 'ரேகையைச் சந்தித்திடும்' என இயையும். இவ்விரேகையை, "சிவ" என்னும் மந்திரம் உணர்த்துமாறும், அதுவே உபதேசம் ஆமாறும் உணர்க. "மூலம்" என்றதை, 'நாசியின் மூலம்' எனக் கொள்க. சுத்தான்ம அறிவை, "சுந்தரச் சோதி" என்றார்.

இதனால், ஞான குரு உபதேசம் பரசிவத் தியானத்தை உணர்த்திப் பயன் பெறச் செய்தல் கூறும் முகத்தால், அவரது தரிசனச் சிறப்பு உணர்த்தப்பட்டது.

*2627. தெளிவுரை :-* நிலம் முதலிய பூதங்கள் ஐந்தையுமேயன்றி, அவை தோன்றியொடுங்கும் இடமாகிய மூலப் பகுதியையும் கடந்து அறிவேயான ஞானியரது உடம்பில், யோகத்தால் கருதியுணரப்படுகின்ற கடவுள் இருப்பது, உணவை உண்கின்ற வாய் முதலிய உறுப்புக்கள் அவற்றையுடைய, உடம்பு அதனினுள்ளிருக்கும் உயிர் ஆகிய அனைத்திலும் ஒன்றாய்க் கலந்தேயாம்.

*குறிப்புரை :-* இஃது இறைவன் ஞானிகளின் உடலை இடங்கொள்வது உரைக்கின்றது. மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி, முதல் அடியை ஈற்றில் வைத்து உரைக்க. அருவமாதல் பற்றி மூலப் பகுதியை "விண்" என்றார். இங்குக் குறிப்பது சகலரையேயாதலின் அவருக்குரிய மூலப் பகுதியை மட்டுமே கூறினார். எனினும், உபலக்கணத்தால் அசுத்த மாயையும் கொள்ளப்படும். வெளியாதல் - விடுபடுதல். மாயையினின்றும் விடுபடுதலாவது, அவற்றின் காரியங்களைத் தாமாக மயங்காது, தம்மை அவற்றின் வேறாக உணர்வில் நிலைபெற்றிருத்தல். அத்தகையோர் மாசுடையராகாது தூயராகலின், அவரது உடம்பும் தூயதாக, அதன் கண்ணும் சிவன் விளங்குவான்' என்க. இது பற்றியே,

> "............ நிலாவாத புலால் உடம்பே புகுந்துநின்ற
> கற்பகமே" - தி.6 ப.95 பா.4

எனவும்,

> "எந்தையே! ஈசா! உடல்இடம் கொண்டாய்;
> யான் இதற் கிலன்ஓர்கைம் மாறே" - தி.8 கோயில் திருப்பதிகம்-10

எனவும் திருமொழிகள் எழுந்தன என்க. 'மேனியில்' என ஏழாவது விரிக்க. உடம்பு நிலைபெறுதற்கு உணவு இன்றியமையாததாதல் பற்றி அதனை உண்ணும்

**2628.** பரசு பதியென்று பார்முழு தெல்லாம்
பரசிவன் ஆணை நடக்கும்பப் பாதியால்
பெரிய பதிசெய்துபின் ஆம் அடியார்க்கு
உரிய பதியும்பார் ஆக்கிநின் றானே. **17**

---

உறுப்புச் சிறந்தெடுத்துக் கூறப்பட்டது. கண்ணல் - கருதல்.

"இருப்பது" என்ற வினைப்பெயர் அத்தொழில் மேல் நின்றது ஆதலின், அவ்வெழுவாய்க்கு, "ஆய்" என்ற வினையெச்சம் பயனிலையாயிற்று. 'ஒருவன் உயர்வது உழைத்து' என்பதிற்போல.

"மாயோகக் கடவுள்" என்றது, தென்முகக் கடவுளையே என்பர்.

இதனால், ஞானிகளது திருமேனியைச் சிவன் தனதாகக் கொள்ளுதல் கூறும் முகத்தால், குரு தரிசனம் சிவ தரிசனமேயாதல் கூறப்பட்டது.

*2628. தெளிவுரை :-* வேதாகமங்களால், 'பதி' என்று போற்றப்படுகின்ற பரமசிவனது திருவாணை எவ்வுலகிலும் தடையின்றிச் செல்லும். அதில் ஒரு கூற்றினால் முன்னுள்ள அடியார்களை அவன் தானாகச் செய்து, மற்றொரு கூற்றினால் பின்னுள்ள அடியார்களுக்காகப் பலவகையான உலகங்களைப் படைத்து வைத்துள்ளான்.

*குறிப்புரை :-* அடியார்க்கு இவ்வுலகையும் தங்குதற்கு உரிய இடமாக்கினான் இறைவன் என்பதை உணர்த்துகிறார். பரசுதல் - துதித்தல். அதற்கு வினைமுதல் வருவிக்கப்பட்டது. 'பதியென்று பரசு பரசிவன் ஆணை பார்முழுதெல்லாம் நடக்கும்' என இயைக்க. 'பாதி' என்றது கூறு' என்னும் பொருட்டாய் நின்றது. ஆணை - சத்தி. அதன் ஒரு கூறு 'திரோதான சத்தியாய் நின்று உலகைச் செயற்படுத்தும். மற்றொரு கூறு அருட் சத்தியாய் நின்று உயிர்களைச் சிவத்தோடு சேர்த்துச் சிவமாக்கும். இதனையே இம்மந்திரத்தாற் கூறினார். இரண்டையும் புடைபடவைத்துக் கூறியது இவ்விடத்திலேயாகும். எண்ணுப் பெயர்கள் இரட்டிக்குமிடத்து, ஒவ்வொன்று. இவ்விரண்டு, மும்மூன்று என்பன முதலாக வருதல் போல, "பாதி பாதி" என்பது "பப்பாதி" என வந்தது. அதனுள் ஒவ்வொன்று, 'பதி செய்தல், பார் ஆக்கல்' என்பவற்றோடு வேறு வேறு சென்றியைந்தது. பின் ஆம் அடியார் - பின்பு தான் ஆதற்கு உரிய அடியார். எனவே, 'முன் ஆம் அடியார்' என்பது தானே பெறப்பட்டது. பின் வந்த 'பதி, வாழும் இடம். 'பதியாகிய பாரினை ஆக்கியும் நின்றான்' என உம்மையை மாற்றியுரைக்க.

இதனால், 'ஞானகுரு, பர சிவனால் பதியாக்கப்பட்டவர்' என்பது கூறப்பட்டது.

**2629.** **அம்பர நாதன் அகலிட நீள்பொழில்**
**தன்பர மல்லது தாம் அறியோம் என்பர்**
**உம்பருள் வானவர் தானவர் கண்டிலர்**
**எம்பெரு மான்அருள் பெற்றிருந் தாரே.** **18**

---

*2629.* **தெளிவுரை :-** *மக்கள் நிலவுலகத்துள்ளாராயினும் அவர்கள் எங்கள் சிவபெருமானது திருவருளைப் பெற்றிருக்கின்றார்கள் ஆகையால் அவர்கள், 'அகன்ற இடத்தையுடைய அனைத்துலகங்களும் சிதம்பர நாதன் ஆகிய அவனது ஆணைவழியல்லது பிறவாற்றால் நடத்தலைத் தாங்கள் அறியவில்லை' என்று கூறுகின்றார்கள். அஃதாவது, 'அவன் அன்றி ஓர் அணுவும் அசைதலைக் காணவில்லை' என்கின்றார்கள். தேவரும் மக்களுக்கு மேலிடத்துள்ளாராயினும் இந்த உண்மையை அவர்கள் உணர்ந்திலர்.*

**குறிப்புரை :-** *'காரணம், அவர்கள் எம்பெருமான் அருள் பெறாமை' என்பதாம்.*

*"கனவிலும் தேவர்க்கு அரியாய் போற்றி!*
*நனவிலும் நாயேற் கருளினை போற்றி!"*
*- தி.8 போற்றித்திருவகவல் - 143, 144*

*"தேவர் கனாவிலும் கண்டறியாச்*
*செம்மலர்ப் பாதங்கள்" - தி.8 திருப்பொற் சுண்ணம் - 16*

*புவனியில் போய்ப்பிற வாமையின் நாள்நாம்*
*போக்குகின் றோம் அவமே; இந்தப் பூமி*
*சிவன் உய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கி ..........*
*(திருமாலாம்*
*அவன்விருப் பெய்தவும், மலரவன் ஆசைப்*
*படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையும், நீயும்*
*அவனியிற் புகுந்து எமை ஆட்கொள்ள வல்லாய்.*
*- தி.8 திருப்பள்ளியெழுச்சி - 10*

*என்னும் திருமொழிகளும் இக்கருத்தே பற்றி எழுந்தன.*

*மக்கள், 'யாம் மானுடர்; சிவன் கடவுள். ஆகவே அவன் நமக்கு அருள்புரிதல் வேண்டும்' என்னும் எண்ணத்தைப் பொதுவாக உடையவர். அதனால், அவர்களின் முயற்சியுடையோர் அவனது அருளைப் பெறுகின்றனர். தேவர், 'நாமும் தேவர், சிவனும் தேவர்' என்னும் எண்ணத்தைப் பொதுவாக உடையர். அதனால் அவர்களுள் அவன் அருள் பெறுபவர் அரியர் ஆகின்றனர். சிலர் பெற நினைப்பினும் தாழ்வெனும் தன்மை வருதற்பொருட்டு மண்ணுலகில் வந்து வழிபட்டே சிவன் அருளைப் பெறுகின்றனர்.*

*"வானிடத் தவரும் மண்மேல்*
*வந்து அரன்றனை அர்ச்சிப்பர்;*

**2630.** கோவணங் கும்படி கோவண மாகிப்பின்
நாவணங் கும்படி நந்தி அருள்செய்தான்
தேவணங் கோம்இனிச் சித்தம் தெளிந்தனம்
போய்வணங் கும்பொரு ளாயிருந் தோமே. **19**

---

*ஊனெடுத் துழலும் ஊமர்*
*ஒன்றையும் உணரார் அந்தோ"*

*- சிவஞான சித்தி - சுபக்கம் - சூ. 2, 92*

*என்னும் சாத்திர மொழியைக் காண்க.*

*"அகலிடநீள் பொழில்" என்பதை முதலிற்கொள்க. அம்பரம் சிறப்புப் பற்றி, சிதம்பரத்தைக் குறித்தது. 'தாம் என்பர்' என இயையும். உம்பர் - மேலிடம். "உம்பர்" என்றதனால், 'இம்பர்' என்பது பெறப்பட்டது. மூன்றாம் அடியை இறுதியிற் கூட்டுக. இரண்டாம் அடி இன எதுகை.*

*இதனால், 'சிவன் அருள் பெறாதார் சிவனது மேற்கூறிய இயல்பை உணர்தல் இயலாது' என்பது கூறப்பட்டது. 'அதனாலே ஞான குருவின் பெருமையையும் அவர்கள் அறியார்' என்பதாம்.*

***2630. தெளிவுரை :-*** *எங்கள் ஞான குருவாகிய நந்தி பெருமான் எங்களுடைய நாக்கள் எங்களையே புகழ்ந்து கொள்ளும் இயல்புடையனவாய் இருந்த நிலையை மாற்றித் தமக்கு வணக்கங் கூறுவன ஆகும்படி அருள்புரிந்தார். அதனால், பின்பு எங்கள் அறிவுகள் தெளிவுடையன ஆகப் பெற்றோம். ஆகி, தேவர்கோவும் மக்கட் கோவும் பலரும் வணங்கும்படி 'கோவணமும் மிகையே' என்னும் மனப்பான்மையுடன் துறவுக் கோலத்தை உடையர் ஆயினோம். யாவரும் பல அரிய சாதனங்களின் வழியே சென்று அடையப்படும் பொருளாகிய சிவமேயாய் இருக்கின்றோம். ஆகவே இனிப் 'பிறிதொரு தெய்வத்தை வணங்குதல்' என்பது எங்கள்பால் நிகழாது.*

***குறிப்புரை :-*** *'நந்தி, நா வணங்கும்படி அருள் செய்தான்; பின் சித்தம் தெளிந்தனம்; கோ வணங்கும்படி கோவணம் ஆகிப் போய் வணங்கும் பொருளாகியிருந்தோம்; இனித்தே வணங்கோம்' என இயைத்துக் கொள்க.*

*நா வணங்குதல் கூறவே, ஏனைத் தலையும், உள்ளமும் வணங்குதலும் உடன் கொள்ளப்படும். ஈற்றடி ஆசிடை எதுகை.*

*இதனால் ஞான குரு தரிசனத்தால் விளையும் பயன் தம் அநுபவத்தில் வைத்துக் காட்டி முடிக்கப்பட்டது.*

*பிரணவத்தோடு கூடாத மந்திரம் பிராணன் இல்லது என்பது எல்லா மந்திரங்களுக்கும் பொதுவிதி. திருவைந்தெழுத்து பிரணவமின்றியே வீரியம் உடையதாம். அதற்குக் காரணம் அது பிரணவத்தின்று தோன்றி அதன் பொருளையே குறித்தல் என்க.*

## 3. பிரணவ சமாதி

*இங்கு, 'சமாதி' என்பது பொதுப்பட, 'யோகம்' எனப் பொருள் தந்தது. எனவே, 'பிரணவ சமாதி' என்றது 'பிரணவ யோகம்' என்றபடி. பிரணவ யோகத்தை மேல் "கலைநிலை" (பா.3) போன்ற சில அதிகாரங்களில் ஆங்காங்கு ஓரோர் இயைபு பற்றிக் கூறினாராயினும் அது பற்றிய எஞ்சிய சிலவற்றை இங்குக் கூறுகின்றார். இவ்வதிகாரம் ஆறு மந்திரங்களையுடையது.*

**2631.** தூலப் பிரணவம் சொரூபானந்தப் பேருரை
பாவித்த சூக்குமம் மேலைச் சொரூபப் பெண்
ஆலித்த முத்திரை ஆங்கதிற் காரணம்
மேலைப் பிரணவம் வேதாந்த வீதியே. **1**

---

*2631. தெளிவுரை :- வேதங்களில் உயர்த்துச் சொல்லப்படுகின்ற பிரணவ மந்திரம் மெய்ப்பொருள் இன்பத்தைப் பொதுவாக விளக்கும் தூல மந்திரமே யாம். (அஃது அகாரம் முதலிய ஐந்து அக்கரங்களாகவே சொல்லப்படுகின்றது. அக்கரங்கட்கும் அத்தியான்மிக சத்திகள் உண்டு. எனினும் அவை வேத வேதாந்தங்களில் சொல்லப்படவில்லை. ஆகவே அத்தியான்மிக சத்திகளை யுடையனவாகச் சொல்லப்படுகின்ற சீபஞ்சாக்கரமே (திருவைந்தெழுத்தே) சூக்கும மூல மந்திரமாகும். (இது பிரணவத்தை நோக்கி, 'சூக்குமம்' எனப்பட்டது) இனித் திருவைந்தெழுத்திலும் மிகச் சூக்குமமானது ஞான குரு தமது கையால் காட்டுகின்ற சின்முத்திரை. இவற்றுள் முதற்கண் சொல்லப்பட்ட பிரணவ யோகம் வேதாந்த முறையாம்.*

*குறிப்புரை :- எனவே, சீபஞ்சாக்கர யோகமும், அதன் பொருளைச் சின் முத்திரையால் உணர்வதும் சித்தாந்த முறை' என்பது அருத்தா பத்தியால் பெறப்பட்டது. பஞ்சாக்கர யோகமாவது பஞ்சாக்கரத்தைச் சுத்தமானதமாக அறிவாற் கணித்தலாம். சின்முத்திரையை உணர்தல் அனுபவமாம். "பிரணவம்" என்பதை முதலிற் கூட்டுக. சொரூபம் - மெய்ப்பொருள். 'தூலப் பேருரை' என இயையும். மூல மந்திரம், "பேருரை" எனப்பட்டது. திருவைந்தெழுத்தைப் பிரணவத்தோடு கூட்டிச் சொல்லுதல் 'ஆறெழுத்து மந்திரம்' எனப்படும். ஆறெழுத்தைச் சிகாரம் முதலாக வைத்து நோக்கி, பிரணவத்தை, 'பரன்' என்றும், சிகாரம் முதலிய ஐந்தையும் முறையே 'ஈசானம் முதலிய பஞ்சப் பிரமங்களின் சத்தி' என்றும் சிவாகமங்கள் கூறும். ஈசானம் முதலிய ஐந்தின் சத்திகள் முறையே 'ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி' எனப் பெயர் பெறும். இச்சத்திகள் ஐந்தும் முறையே ஐந்தும், நான்கும், எட்டும், பதின்மூன்றும், எட்டுமாகிய கலைகளை (கூறுகளை) உடையன. இந்த முப்பத்தெட்டுக் கலைகளின் வடிவமாகவே சதாசிவ மூர்த்தி எழுந்தருளியுள்ளார். இவையெல்லாம் சிவாகமங்களிலும், சைவ பத்ததிகளிலும் காணத்தக்கவை. இந்தப் பஞ்ச*

**2632.** ஓம்எனும் ஓங்காரத் துள்ளே ஒருமொழி
ஓம்எனும் ஓங்காரத் துள்ளே உருஅரு
ஓம்எனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்
ஓம்எனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே. **2**

---

*சத்திகளையே நாயனார் இங்கு, ' மேலைச் சொரூபப் பெண்' என்றார். எனவே, 'அக்கரங்களாகச் சொல்லும் வேதாந்தத்திலும், சிவசத்திகளாகச் சொல்லும் சித்தாந்தம் நுட்பமானது' என்பதை, "பாவித்த சூக்குமம்" என்றார். பாவித்த - மறைபொருளாக வைத்துக் காக்கப்பட்ட. சின்முத்திரையில் பெருவிரல் 'சிவ' என்பதையும், சுட்டு விரல் 'ய' என்பதையும், நடுவிரல் 'ம' என்பதையும் ஏனை ஆழிவிரல் சிறுவிரல்கள் கன்மம் மாயைகளாய் 'ந' என்பதையும் குறிப்பனவாம். ஆலித்தல் - உருப்படுதல். விரைவில் கரைவதாகிய பனிக்கட்டி (கல்மழை) அவ்வாறு கரைவதற்குமுன் 'ஆலி' எனப் பெயர்பெற்று நிற்கும். "காரணம்" என்றது, 'அதி சூக்குமம்' என்றபடி.*

*இதனால், ஞான குரு தரிசனத்தால் கிடைக்கும் பிரணவ யோகம், தூலம், சூக்குமம், அதிசூக்குமம் என மூன்றாதல் கூறப்பட்டது.*

*2632. தெளிவுரை :- வேதாந்த சித்தாந்த ஞான குரவர்கள் ஒரு வார்த்தையாகச் சொல்லுகின்ற உபதேச மொழிகளும், சிவன் கொள்ளுகின்ற உருவம், அருவம், அருவுருவம் என்கின்ற மூவகைத் திருமேனிகளும், பலவகை மொழிகளும் ஆகிய எல்லாம் 'ஓம்' என்பதாகிய பிரணவத்தில் உள்ளனவேயாம். அதனால் பிரணவயோகத்தால் சித்தி முத்திகள் யாவும் கிடைக்கும். மகா வாக்கியம், பெரும்பெயர், தத்துவமசி முதலிய முடிந்த மொழிகள் ஓங்காரத்தில் அடங்கும்.*

*குறிப்புரை :- 'சொல்லுலகங்கள் யாவும் பிரணவத்தின் காரியமே' என்பதாம். ஓங்காரம் நான்கும் 'பிரணவம்' என்னும் அளவில் வாளாபெயராய் நின்றன. ஒரு மொழியே மகாவாக்கியமாம். மகாவாக்கியங்கள் முன் தந்திரத்துள் கூறப்பட்டன. 'ஒருமொழி' என்னும் பால்பகா அஃறிணைப் பெயர் இங்குப் பன்மை குறித்து நின்றது. முதல் மூன்று அடிகளின் ஈற்றிலும் 'உள்ளன' என்னும் பயனிலைகள் எஞ்சி நின்றன. உருவும், அருவும் கூறவே இனம் பற்றி உருவருவும் கொள்ளப்பட்டது. வருகின்ற மந்திரத்துள் 'சராசரம்' என வருதலால், இங்குக் கூறப்பட்ட உருவம் முதலியன இறைவனுடைய திருமேனிகளாயின. 'திருமேனிகள் ஓங்காரத்தில் உள்ளன' என்றது அவற்றது மந்திரங்களை நோக்கி இறைவனை 'மந்திரத்தால் உருக்கோலி' (சிவஞானசித்தியார், சுபக்கம், 1.26) எனக் கருதுதல் கிரியா மார்க்க முறை. அருவத் திருமேனியை மந்திரமாகவே உள்குதல் (தியானித்தல்) யோகமுறை. 'இம்முறைகளால் பிரணவம் சித்தியையும், முத்தியையும் தரும்' என்பதாம். சிறப்புப் பற்றி முத்தி முன்னர்க் கூறப்பட்டது. முத்தியையும், சித்தியையும் தருவதை அவையேயாக உபசரித்துக் கூறினார்.*

**2633.** **ஓங்காரத் துள்ளே உதித்தஐம் பூதமும்**
**ஓங்காரத் துள்ளே உதித்த சராசரம்**
**ஓங்காரா தீதத்து உயிர்மூன்றும் உற்றன**
**ஓங்கார சீவன் பரசிவ னாகுமே. 3**

---

*இதனால், பிரணவத்தினது இயல்பும், அதன் வழித்தான யோகத்தின் பயனும் கூறப்பட்டன.*

*2633. **தெளிவுரை :-** பஞ்ச பூதம் முதலிய தத்துவங்களும் அவற்றின் காரியங்களாகிய பலவகை உடம்புகளும் பிரணவத்திலிருந்தே தோன்றின. பிரணவ மாகிய அதற்கு அப்பால் உள்ளன மூவகை உயிர்கள், ஆகவே பிரணவமே வடிவான உயிரை, 'பரசிவன்' என்றே சொல்லலாம்.*

***குறிப்புரை :-*** *''உள்'' இரண்டிலும் 'நின்று' என்பது வருவிக்க சொல்லாலன்றிப் பொருள்கள் பற்றி 'விளங்கிய ஞானம்' உண்டாதல் கூடாமை பற்றிச் சொற்களையே பொருளாகக் கூறும் முறை பற்றி அச்சொற்கள் அனைத்திற்கும் மூலமான பிரணவத்தினின்றே பொருள்கள் பலவும் தோன்றின வாகக் கூறினார். எனினும் சித்தாகிய உயிர்கள் ஓங்காரத்திற்கு வேறாதல் பற்றி 'அவை ஓங்காரத்திற்கு அப்பால் உற்றன' என்றும், பிரணவத்தைச் செலுத்தி நிற்பது சிவ சத்தியேயாகலின் பிரணவ வடிவான உயிரை, சிவன் என்றல் கூடும்' என்றும் கூறினார்.*

*மூவகை அணுக்களுக்கும் முறைமையால் விந்து ஞானம்*
*மேவின தில்லை யாகில் விளங்கிய ஞானம் இன்றாம்,*
*ஓவிட விந்து ஞானம் உதிப்பதோர் ஞானம் உண்டேல்,*
*சேவுயர் கொடியி னான்றன் சேவடி சேர லாமே.*

*என்னும் சிவஞான சித்தி (சுபக்கம் - சூ. 1.36)யைக் காண்க. இதனால் உயிர் தன்னை உணர்தல் பிரணவ யோகத்தின் வழியாதல் விளங்கும்.*

*இதனால் பிரணவத்தின் சிறப்பும், 'அதன்வழித்தான யோகத்தால் உயிர் தன்னை உணர்ந்து, தலைவனையும் உணரும்' என்பதும் கூறப்பட்டன.*

*2634. **தெளிவுரை :-** 'ஓம்' எனச் சமட்டியாகச் சொல்லப்படுவது 'பிரணவம்' எனவும் அதனை 'அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம்' எனப் பெரும்பான்மை ஐந்தாகவும், மற்றும் பலவாகவும் பிரித்து வியட்டியாகச் சொல்லப்படுவனவற்றை, 'பிரணவத்திற்கு' இனம் எனவும் கூறுவர். அவ் இனங்களை மேல், 'கலை நிலை' என்னும் அதிகாரத்தில் காணலாம். (பா. 696) அந்த இனங்கள் ஞான வடிவான பல சத்திகளாகும். சத்திக்கும் சிவத்திற்கும் வேற்றுமையின்மையால் அவைகளை, 'ஆனந்த மயமான சிவம்' என்றும் சொல்லலாம். அச்சத்திகள் அண்டத்தில் சரம்,*

**2634.** வருக்கம் சுகமாம் பிரமமு மாகும்
அருக்கச் சராசரம் ஆகும் உலகில்
தருக்கிய ஆதார மெல்லாந்தன் மேனி
சுருக்கமில் ஞானம் தொகுத்துணர்ந் தோர்க்கே. **4**

**2635.** மலையுமனோ பாவம் மருள்வன வாவ
நிலையின் தரிசனம் தீப நெறியாம்
தலமும் குலமும் தவம் சித்த மாகும்
நலமும் சன் மார்க்கத் துபதேசந் தானே. **5**

---

*அசரம் ஆகிய அனைத்துப் பொருள்களிலும் வியாபித்து நிற்கும். மற்றும் பிண்டமாகிய உடம்பில் ஆறாதாரங்கள் முதலான பல இடங்களிலும் நிற்கும். இத்தன்மைகள் எல்லாவற்றையும் உணர்ந்தவர்கட்கே விரிந்த ஞானம் உளதாகும்.*

*குறிப்புரை :- இனத்தை, "வருக்கம்" என்றார். "சுகமாம் பிரமம்" என்பது பெயரெச்சத் தொடர். உம்மை இறந்தது தழுவியதனோடு, சிறப்பு. அதனால் சத்தியாதல் பெறப்பட்டது. ஞாயிற்றைக் குறிக்கும் 'அருக்கம்' ஒன்பது 'ஒளி' (விளக்கம்) என்னும் பொருட்டாய் நின்றது. மேனி - வடிவம். அது தியான வடிவம். 'மேனி உளதாம்' எனவும், 'ஞானம் உளதாம்' எனவும் எச்சங்கள் வருவித்து முடிக்க.*

*இதனால் பிரணவ யோகத்தில் பிரணவம் பல கலைகளாய்ப் பிரிந்து நின்று பயன் தருதல் கூறப்பட்டது. அக்கலைகள் சராசரங்கள் அனைத்துமாய் நிற்றலைப் பிராசாத நூல்களில் காண்க.*

*இனி, இம்மந்திரத்திற்கு வைதிக முறையில் பொருள் கூறுவோர், 'வருக்கமாவன' ஐம், க்லீம், ஸௌம், ஹ்ரீம், ச்ரீம்' எனவும், 'அவை மூலாதாரம் முதலிய இடங்களில் நிற்கும்' எனவும் கூறுவர். அம்முறை சிறப்புச் சிவயோகமாகிய பிரணவ பிராசாத யோக முறையாகாது, பொதுயோக முறையேயாம். இதனையடுத்து வரும் "சோடச மார்க்கமும், ஈராறின் அந்தமும்" என்பவற்றாலும் அறியலாம்.*

*2635. தெளிவுரை :- தன்னறிவாலே தனக்குள் தோன்றும் மலைவுகள் எல்லாம் தெளிவைத் தாராது. மேலும், மேலும் மயக்கத்தையே தரும், இருள் நெறிகளேயாகும். ஆகையால், ஞான குருவின் தரிசனமே நிலையான உணர்வைத் தருகின்ற ஒளி நெறியாம். ஆகவே, தவத்திற்குரிய புண்ணியத் தலங்களும், அங்குள்ள தவத்தோர் கூட்டங்களும், அவரோடு கூடி ஒழுகுகின்ற தவ ஒழுக்கமாகிய நன்மையும் எல்லாம் நன்னெறியை உணர்த்துகின்ற நல்லாசிரியரது உபதேசமே.*

*குறிப்புரை :- உபதேசத்தின் வழிப்பட்டனவற்றை 'உபதேசம்' என*

**2636.** சோடச மார்க்கமும் சொல்லும்ஈசன் மார்க்கிகட்கு
ஆடிய ஈராறின் அந்தமும் ஈரேழில்
கூடிய அந்தமும் கோதண்ட மும்கடந்து
ஏறிய ஞானஞே யாந்தத் திருக்கவே. **6**

---

*உபசரித்துக் கூறினார். நல்லாசிரியர்தம் உபதேச வழிப்பட்ட பொழுதே புண்ணியத் தலம் முதலியன உண்மைப் புண்ணியத் தலம் முதலியனவாம்' என்றபடி. 'அவற்றைத் தன்னறிவளவிலே தான் அறிந்து கைக்கொள்ளுதல் பயனுடைத் தாகாது' என்பதாம். இங்ஙனம் கூறுமுகத்தானே, 'பிரணவ யோகமும் உபதேச முறையான் உணர்ந்து மேற்கொள்ளற்பாலது' என்பது உணர்த்தியவாறு, 'சித்தம் தவம் ஆகும் நலம்' என மாற்றிக் கொள்க. தவம் - தவ விருப்பம்.*

*இதனால், 'உண்மைப் பிரணவ யோகம் இன்னது' என்பது கூறப்பட்டது.*

***2636. தெளிவுரை :-*** *ஞானத்தை அடைதற்குரிய வழியை அடைய விரும்புவோர்கட்கு, அவர்கள் ஆதாரயோகத்தின் முடிநிலையாகிய புருவ நடுவையும் கடந்து மேல் ஏறி ஏழாந்தானத்தை அடைந்து உணர்ந்த ஞானத்தினால் நிராதாரத்தையும் கடந்துள்ள ஞேயமாகிய சிவத்திற் சென்று அடங்கியிருத்தற்பொருட்டு, 'பன்னிருகலை, பதினாறுகலை' என்று பிராசாத யோகங்களைப் பதினான்கு வித்தைகளின் முடிவாகிய பிராசாத நூல்கள் கூறும்.*

***குறிப்புரை :-*** *'சன்மார்க்கிகட்கு, கோதண்டமும் கடந்து ஏறிய ஞானத்தால் ஞேயமாகிய அந்தத்து இருக்க, சோடசத்தையும், ஈராறையும் ஈரேழில் கூடிய அந்தமும் சொல்லும்' என இயைத்து முடிக்க. ஆடிய - முன்னோர் பயின்ற. இது தாப்பிசையாய் 'சோடச மார்க்கம்' என்பதனோடும் சென்றியைந்தது.*

*புருவநடு ஆதார யோகத்தின் முடிநிலை இடமாகலின் "கோதண்டமும்" என்னும் உம்மை சிறப்பு. ஏறிய ஞானம் - ஏறியதனால் விளைந்த ஞானம். 'ஞானத்தால்' என உருபு விரிக்க. ஞேய அந்தம் - ஞேயமாகிய அந்தம். இதுவே பிராசாத யோக முடிநிலை இடமாதலின் "அந்தம்" எனப்பட்டது.*

*பதினான்கு வித்தைகளாவன வேதம் நான்கு, வேதாங்கம் ஆறு, உபாங்கம் நான்கு இவற்றுடன் உபவேதம் நான்கு கூட்டி, 'பதினெண் வித்தை' என்றலும், உபவேதம் நீக்கி, "பதினான்கு வித்தை" என்றலும் ஆக இரு வழக்குக்கள் உள்ளன. அவற்றுள் பின்னதை இங்குக் கூறினார்.*

*"ஈரேழிற் கூடிய அந்தமும்" என்னும் உம்மை முற்றும்மை. அந்தத்தின் பொருளை "அந்தம்" என்றது ஆகுபெயர். பின்னர் அப்பொருளைக் கூறும் நூலை "அந்தம்" என்றது இருமடியாகு பெயர். ஈற்றடி உயிரெதுகை பெற்றது.*

*இதனால், 'ஞானத்தைப் பெறவேண்டினார்க்குச் சிறந்த வழியாவது பிரணவ யோகமே' என்பது கூறி முடிக்கப்பட்டது.*

## 4. ஒளிவகை

*பிரணவ யோகத்தில் வெளிப்படும் ஒளிகளின் இயல்பை பிரணவ யோகத்தை அடுத்து இவண் கூறுகின்றார். இவ்வதிகாரம் பதினேழு மந்திரங்களையுடையது. காணும் ஒளி, காட்டும் ஒளி, ஒளிக்கு முதலாகிய சுடர், அறிவொளி, அறிவிக்கும் அறிவொளி ஆகியவற்றின் இயல்புகளை உணர்த்துகிறது.*

**2637.** **ஒளியை அறியில் உருவும் ஒளியும்**
**ஒளியும் உருவும் அறியில் உருவாம்**
**ஒளியின் உருவம் அறியில் ஒளியே**
**ஒளியும் உருக உடன்இருந் தானே.** **1**

---

*2637. தெளிவுரை :- (உலகத்தில் கண்வழியாகக் காட்சி நிகழுங்கால் அக்காட்சி காணப்படும் பொருள், அதுவும் அதனைக் காணும் கண்ணொளியும் விளங்குதற்கு இன்றியமையாத் துணையாகிய ஒளி, அவ்வொளியால் விளங்கி உருவத்தைக் காண்பதாகிய கண்ணொளி ஆகிய மூன்றன் கூட்டத்திலே நிகழ்வதாகும். ஆயினும் கண்ணால் உருவத்தைக் காண்கின்றவன் அம்மூன்றனையும் ஒருங்கே அறிதல் இயலாது) மற்று காணப்படும் உருவத்தையும், காண்பதாகிய கண்ணொளியையும் விளக்கி நிற்கின்ற அந்த ஒளியை அறிவானாயின் அப்பொழுது ஏனை யிரண்டும் அறியப்படாமல் மறைந்து நிற்கும். இனிக் காணப்படும் உருவத்தை அறிவானாயின் அப்பொழுது ஏனையிரண்டும் மறைந்து நிற்கும். இனிக் கண்ணொளியின் இயல்பை அறியின் அப்பொழுது ஏனையிரண்டும் அறியப்படாமல் மறைந்து நிற்கும். இம்முறையில் தான் சிவன்தான் ஆன்ம ஒளி மறைந்தவிடத்து அவன் அவ்வான்மாவினோடு உயிர்க்குயிராய் என்றும் உடனாகியிருத்தல் விளங்கும்.*

*குறிப்புரை :- 'ஆகவே, அவ்வாற்றால் அவனை அறிந்து நிற்றலே அறிவுடைமையாம்' என்பது குறிப்பெச்சம். தத்துவத்துறையில் 'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களுக்கிடையே உள்ள உறவு எத்தகைய உறவு என்னும் ஆராய்ச்சியில் "அவ்வுறவு அத்துவித உறவு" என்னும் சிவாகமநூல் துணிவினை முன்னைத் தந்திரத்தில், 'பதி, பசு, பாசம் வேறின்மை' என்னும் அதிகாரத்தில் ஓராற்றால் விளக்கிய நாயனார், அவ்வுறவு பிராசாத யோகத்தில் நிகழும் ஒளிக் காட்சியில் வைத்து அறியின் இனிது விளங்குதல் பற்றி அதனை இங்கு இவ்வாறு நுண்ணிதாக விளக்கினார். மெய்கண்ட தேவரும்,*

> *"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்*
> *காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்"* **- சிவஞானபோதம், சூ. 11**

*என அருளிச் செய்ய, அதனையே அருணந்தி தேவர்,*

> *"............... காட்டக் கண்டிடும் தன்மை உடைய கண்ணிற்கு*

*ஏயும் உயிர் காட்டிக்கண் டிடுமா போல*
*ஈசன் உயிர்க்குக் காட்டிக் கண்டிடுவன்"*

***- சிவஞான சித்தி சுபக்கம், சூ. 11***

*எனவும், உமாபதி தேவர்,*

*"அறிவொளிபோல் பிறிவரும் அத்துவிதமாய்" (சிவப்பிரகாசம்-7) எனவும் கூறினார். "அறிவொளி" என்றதில் அறிவு, ஆன்ம அறிவு. ஒளி, கண்ணொளி.*

*முதன்கண் உள்ள 'ஒளி', காட்டும் ஒளி. அது விளக்கொளி ஞாயிற்றின் ஒளிகளில் ஒன்றாகலாம். இரண்டாவதாய் உள்ள 'ஒளி', காணும் ஒளியாகிய கண்ணொளி. இரண்டாம் அடியில் உள்ள "ஒளியும்" என்பது 'செய்யும்' என் முற்று. 'மறையும்' என்பது அதன் பொருள். அஃது, "உருவும், ஒளியும்" என்னும் எழுவாய்கட்கும் பயனிலையாய் நின்றது. ஒளிதல் தன்வினை; ஒளித்தல் பிறவினை. அவை 'செய்யும்' என் முற்றாகுமிடத்து முறையே 'ஒளியும்' எனவும், 'ஒளிக்கும்' எனவும் வரும். "ஒன்று மேலிடில் ஒன்று ஒளிக்கும்" (கொடிக்கவி - 1.1) என்பதில் "ஒளிக்கும்" என்பது தன்வினையாய் நின்றது. இரண்டாம் அடிப்பகுதியை, 'உருவகத்தை அறியில் உருவேயாம்' என விரித்துக்கொள்க. 'ஏனையிரண்டும் தோன்றா' என்பது கருத்து. மூன்றாம் அடியில் உள்ள ஒளிகள், கண்ணொளியாம். அவ்விடத்து "உருவம்" என்றது அதன் இயல்பை. இங்கும் "ஒளியே" என்றது, 'அவ்வொளியே தோன்றும்; ஏனையவை தோன்றா' என்றதாம். மூன்றடிகளாலும் உவமையே கூறப்பட்டது. ஈற்றடியில் உள்ள ஒளி, ஆன்ம அறிவு. அஃது உருகுதலாவது, நிலையழிதல். உம்மை, 'பாச அறிவேயன்றி' என இறந்தது தழுவிற்று. "உருக" என்னும் செயவெனெச்சம் காரணப் பொருட்டாய் நின்றது. 'இருப்பான்' என்னும் எதிர்காலம், விரைவு பற்றி "இருந்தான்" என இறந்த காலமாயிற்று. இருத்தல் இருக்கும் அது விளங்குதல். இருத்தலுக்கு 'சிவன்' என்னும் எழுவாய் வருவிக்க.*

*உவமையில், 'மூன்றில் ஒன்றை யறியுமிடத்து ஏனையவை மறைந்து விடும்' என ஒரு தொடராற் சுருங்க ஓதாது, மூன்று தொடரால் விரியக் கூறினார். 'மூன்று யாவை' என்பதை முன்னர்த் தொகுத்துக் கூறாமையின் அவை விளங்கா என்பது பற்றி. பொருளில், காட்டுவது சிவனருளும், காண்பது ஆன்ம அறிவும், காணப்படும் பொருள் பதி, பசு, பாசங்களுமாகக் கொள்க. கண் உருவங்களைக் காணும்பொழுது காட்டுவதாகிய ஒளியையும், காண்பதாகிய தன்னையும் மறந்து, உருவங்களை மட்டுமே காண்பதுபோல, ஆன்ம அறிவு பெத்த காலத்தில், அறிவிப்பதாகிய திருவருளையும், அறிவதாகிய தன்னையும் அறியாது அறியப்படுவதாகிய உலகத்தை மட்டுமே அறிந்து வருதலால் அது பொழுது அது தன்னையும், தலைவனையும் அறியாது மயங்குகின்றது. ஆசிரியர் அருளுரையைக் கேட்டு அதன்வழி நின்று அதுதான் அறியும் முறைமையை*

**2638.** புகல்எளி தாகும் புவனங்கள் எட்டும்
அகல்ஒளி தாய்இருள் ஆசற வீசும்
பகல்ஒளி செய்ததும் அத்தா மரையில்
இகல்ஒளி செய்தெம் பிரான் இருந்தானே. **2**

---

*உற்றுணருமாயின் மயக்கம் நீங்கி மெய்யுணர்வைப் பெறும்' என்பதும் 'மெய்யுணர்வாவது முப்பொருளும் பிரித்தறியுமாறு வேறு வேறு நில்லாது அத்துவிதமாய் இருத்தலின். அந்நிலையை அறிதல் ஆசிரியரது அருளாலன்றிக் கூடாது' என்பதும் கூறியவாறு. இம்மந்திரம் சொற்பின்வரு நிலையணி பெற்றது.*

*இதனால் 'உலகில் காட்டுவதும், காண்பதும், காணப்படுவதும் ஆகிய மூவகை ஒளிகளின் முறைமையில் வைத்து பிரணவ யோகத்தில் வெளிப்படும் ஒளிகளின் இயல்பு உணரற்பாலன' என்பது கூறப்பட்டது.*

***2638. தெளிவுரை :–*** *நிவிர்த்தி கலையில் 'நூற்றெட்டு' என்றும், பிரதிட்டா கலையில் 'குய்யாட்டகம், அதிகுய்யாட்டகம், குய்யதராட்டகம்' என்று இன்ன பலவாகவும் எட்டு எட்டாகச் சொல்லப்படுகின்ற, சகல வருக்கத்தினராலும் எளிதில் அடையப்படும் புவனங்களிலும் ஞான ஒளியைப் பரப்பி அறியாமை யாகிய இருளைப் போக்குகின்ற சிவனாகிய ஞாயிறு வெளிப்பட்டு விளங்குவதும் உள்ளமாகிய தாமரையிலேயாம். அத்தாமரையில் அந்த ஞாயிறாகிய சிவன் ஒன்றோடு ஒன்று மாறுபட்ட இரு நிற ஒளியுடையனாய் விளங்குகின்றான்.*

***குறிப்புரை :–*** *'அதனை அறிவுடையார் உணர்தல் வேண்டும்' என்பது குறிப்பெச்சம். மாறுபட்ட இருநிற ஒளிகளாவன சிவப்பும், நீலமும். இவை முறையே சிவமும், சத்தியும் ஆகும். நிவிர்த்தி பிரதிட்டா கலைகளில் உள்ள புவனங்கள் எட்டு எட்டாகச் சொல்லப்படுதலைச் சிவாகமங்களிலும் சிவஞான போத மாபாடியம் முதலியவற்றிலும் காண்க. அவை சகல வருக்கத்தினர்க்கு இடமாதல் பற்றி, 'புகல் எளிதாகும்' என்றார். திருவருள் அண்டத்திலும் ஞானிகட்கு விளங்குதல் பற்றி "அகல் ஒளி செய்து இருள் ஆசற வீசும் பகல்" என்றார். அகல் ஒளி - விரிந்த ஒளி. தாய் - தாவ; பாவ. ஆகமலம் இருள் மலம் ஆணவம். வீசுதல் - அகற்றுதல். பகல் - பகலவன் 'இருள் மலம் அகற்றும் பகலவன்' என்றதனால் அது சிவனாகி ஞாயிறாயிற்று. ஒளி செய்தல் ஒளியைத் தருதல். "செய்ததும்" என்னும் உம்மை இருத்தலாகிய எதிர் வருவதனைத் தழுவிற்று. 'சிவ ஒளி அண்டம், பிண்டம் இரண்டிலும் விளங்கி அறியாமையாகிய இருளைப் போக்கும்' என்றபடி.*

*இதனால், மேற்கூறிய ஒளிகளில் ஆன்ம அறிவிற்குக் காட்டாகி நிற்கும் சிவ ஒளியின் இயல்பு வகுத்துக் கூறப்பட்டது.*

**2639.** **விளங்கொளி அங்கி விரிகதிர் சோமன்**
**துளங்கொளி பெற்றன சோதி அருள**
**வளங்கொளி பெற்றது பேரொளி வேறு**
**களங்கொளி செய்து கலந்துநின் றானே.** **3**

---

*2639. **தெளிவுரை :-** (முன் மந்திரத்திற் கூறியவாறு, 'சிவனே அண்டத்திலும், பிண்டத்திலும் ஒளியைத் தருகின்றான்' என்றால், 'இங்குக் கண்கூடாகக் காணப்படும் - தீ ஞாயிறு, திங்கள் - என்பவை ஒளியைத் தருகின்றன' எனக் கருதுதல் பிழையோ எனில், அன்று; மற்று).*

*ஆங்காங்கு அவ்வப்பொழுது காலவரையறை ஏதும் இன்றி வெளிப்பட்டு மறைகின்ற தீயும், சில கால வரையறைகளின்படி தோன்றி நின்று ஒளியைத் தந்துவிட்டு மறைகின்ற ஞாயிறும், திங்களும் ஆகிய அவையும் அவ்வாற்றால் ஏற்ற பெற்றியால் ஒளியைத் தந்து விளங்குதலும், ஒளியைத் தாராது மறைந்து போதலும் ஆகிய நிலைமையை உடையனவாகச் சிவன் அருள் செய்ததனாலேயே அவை ஓரளவில் உலகிற்கு ஏற்ற பெற்றியால் ஒளியைத் தரும் செயற்கைச் சிற்றொளிப் பொருள்களாய் உள்ளன. என்றும் வற்றா வளம் கொண்டவனாகிய சிவன் கொண்டுள்ள ஒளியே இயற்கை மூலப் பேரொளி. அந்த ஒளியை உடைய சிவன் இருளை முற்றும் நீக்க மாட்டாது சிறிது சிறிது நீக்குகின்ற அந்தச் சிற்றொளிப் பொருள்களை உலகிற்குப் படைத்துத் தந்து தான் அவற்றோடு இரண்டறக் கலந்து அவற்றை நிலைபெறுத்தியும் நிற்கின்றான்.*

***குறிப்புரை :-*** *துளங்குதல் - அலைதல்; நிலையில்லாது நீங்கியும், தோன்றியும் வருதல். 'அங்கி, கதிர், சோமன் ஆகியவை துளங்கு ஒளியையே பெற்றன; சோதி அருளப் பெற்றன' என்க. வளம் கொளி - வளத்தைக் கொண்டிருப்பவன்; இயற்கையாகவே கொண்டிருப்பவன். 'பெற்றது' என்றதும், 'இயற்கையில் பெற்றிருப்பது' என்றதேயாம். பேரொளி - கால வரையறையும், இட வரையறையும் இல்லாத ஒளி - இஃது, 'அளவில் பேரொளி' எனப்படும். 'களங்கம்' என்பது ஈற்று அம்முக் குறைந்து நின்றது. களங்கமாவது இருள். அதனை அறவே நீக்காது அதனுடன் இருக்கின்ற ஒளிகள் களங்கொளிகளாம். வேறு களங்கொளி - களங்கம் இல்லாத தனது பேரொளிக்கு வேறான களங்க ஒளி. செய்தல் - படைத்தல். கலந்து நிற்றல் அவற்றை நிலைபெறுத்தற் பொருட்டு ஆதலின் அது வருவித்துரைக்கப்பட்டது. ''செய்து நின்றான்'' என்னும் பயனிலைக்கு. 'அவன்' என்னும் எழுவாய் வருவிக்க.*

*இதனால், 'உலகில் காணப்படும் முச்சுடர்களாகிய ஒளிகளும், சிவனது திருவருட் பேரொளி தந்த ஒளிகளே; சுதந்திர ஒளிகள் அல்ல; அவை அளவில்லனவும் அல்ல' என்பது கூறப்பட்டது. இவ்வுண்மையை விளக்குவதே உமை சிவனது கண்களைப் பொத்திய போது, உலகம் ஒளியையிழந்து*

**2640.** **இளங்கொளி ஈசன் பிறப்பொன்றும் இல்லி**
**துளங்கொளி ஞாயிறும் திங்களும் கண்கள்**
**வளங்கொளி அங்கியும் மற்றைக்கண் நெற்றி**
**விளங்கொளி செய்கின்ற மெய்காயம் ஆமே.** **4**

---

*இருளடைந்ததைக் கூறும் வரலாறு (சிவஞான சித்தி - சுபக்கம் - சூ. 1.52).*

*2640.* ***தெளிவுரை :-*** *சிவன் என்றும், எவ்விடத்தும் பிறத்தலை இல்லாதவன் ஆதலால், அவனே இயற்கையாய் விளங்கும் ஒளி. அவனொழிந்த பிற பொருள்கள் எல்லாம் தோற்றம் உடையனவேயாதலால் அவற்றுள் சிலவாகிய முச்சுடர்களும் அவன் ஆக்கிய செயற்கை ஒளிகளே. முச்சுடர்களுள் ஞாயிறும், திங்களும் அவனது வல இடக் கண்களாகவும், தீ பிறருக்கில்லாத மூன்றாவதான நெற்றிக் கண்ணாகவும் உயர்ந்தோரால் சொல்லப்படுகின்றன. இனி அவனது திருமேனியே ஒளிமயமாகலின், ஒளியுடன் விளங்குகின்ற ஆகாயம் அவனது திருமேனியாகச் சொல்லப்படுகின்றது.*

***குறிப்புரை :-*** *'இலங்கு' என்பது எதுகை நோக்கி "இளங்கு" எனத் திரிந்தது. இயற்கையாகவே இலங்குகின்ற ஒளி என்க. இதனை முதல் அடியின் ஈற்றிற் கூட்டி. அதற்கு முன் 'ஆதலால்' என்பது வருவித்துரைக்க. ஏனையோரெல்லாம் பிறந்திறந்தமை பலவிடத்தும் கேட்கப்படுகின்றது. துளங்குதல், செயற்கையை உணர்த்திற்று. 'மற்றை நெற்றிக்கண்' என மாற்றியுரைக்க. இதனை வேறு வைத்துக் கூறினமையால், இஃது ஏனையோர்க்கு இல்லாமை விளங்கிற்று. முச்சுடர்களும் இறைவனது உறுப்பாதலைக் கூறுகின்றவர், அவற்றிற்கு இடமாகிய ஆகாயம் அவனது உடம்பாதலையும் உடன் கூறினார்.*

*"ஆகாய வண்ணம் உடையாய் போற்றி"* ***- தி.6 ப.57 பா.3***

*என அப்பர் அருளிச் செய்தார். "ஆகாச சரீரம் பிரம்ம" எனத் தைத்தீரிய உபநிடதம் கூறிற்று. மற்றை உபநிடதங்களிலும் இவ்வாறு கூறப்படுகின்றது. முன் மந்திரத்தில் இயற்கையிற் பெற்றுள்ளதைக் குறித்த "வளங்கொளி" என்பது இம்மந்திரத்தில் சிவனிடமிருந்து பெற்றதைக் குறித்தது. காயம் - ஆகாயம் - 'காயம் மெய் ஆம்' என இயைக்க.*

*இதனால், 'சுதந்திரமான ஒளியையுடையவன் சிவன் ஒருவனே' என்பது வலியுறுத்தி உணர்த்தப்பட்டது.*

*2641.* ***தெளிவுரை :-*** *எல்லா ஒளிகளிலும் மேலான ஒளியாகிய திருவருள் ஒளியின்கீழ் அதினின்றும் தோன்றியனவே, விரிந்து பரந்த ஒளியையுடைய ஆகாயம், காற்று, ஒளிப்பொருளாகிய தீ, நீர், நிலம் ஆகியவை. இவை ஐந்தும் உயிர்கட்கு அறிவைத் தந்து, ஆகாயம் ஒன்றிற்குள்ளே ஏனை நான்கும் அடங்கி யிருப்பினும், இவை ஐந்தும் ஒடுங்கும் இடம் திருவருள் ஒளிதான்.*

**2641.** மேலொளிக் கீழதின் மேவிய மாருதம்
பார்ஒளி அங்கி பரந்தொளி ஆகாசம்
நீர்ஒளி செய்து நெடுவிசும் பொன்றினும்
ஓர்ஒளி ஐந்தும் ஒருங்கொளி யாமே. **5**

---

*குறிப்புரை :-* மேவிய - மேவின. செய்யுள் நோக்கிப் பூதங்கள் முறை பிறழ வைக்கப்பட்டன. செவ்வெண்ணாகச் சொல்லப்பட்ட இவற்றின் இறுதியில் 'ஐந்தும்' என்னும் தொகை வருவித்து, "மேவிய" என்பதற்கு முடிபாக்கிப் பின், 'ஐந்தும் ஒளி செய்து விசும்பின் ஒன்றினும் ஒருங்கு ஒளி ஓரொளியாம்' என இயைத்து முடிக்க. முதலடி இன எதுகை. 'பரந்த' என்பதன் ஈற்றகரம் தொகுத்தலாயிற்று. ஐம்பூதங்களும் தூல சரீரமாகி, ஞானேந்திரிய கர்மேந்திரியங்கட்கு இடமாதல் பற்றி அவற்றை ஒளி செய்வனவாகக் (அறிவைத் தருவனவாக) கூறினார். ஒருங்குதல் - ஒருசேர அடைதல். 'ஒடுங்கொளி' என்றே பாடம் ஓதுதலுமாம். 'மாயா காரியங்கள் ஆன்மாவிற்கு விளக்காய் அமையினும் அவை திருவருளால் விளக்கம் பெறுவனவே', என்பது கூறியவாறு.

இதனாலும் 'அனைத்து ஒளிகட்கும் மூல ஒளி அருள் ஒளியே' என்பது வலியுறுத்தப்பட்டது.

*2642. தெளிவுரை :-* ('ஒளி' என்பதனை 'மின்னியல்' ஞானம் என்பவற்றோடும் கூட்டுக).

சிவனது சத்தி, பரை, ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி என முன்னர் ஆறாகி நின்று அருள்புரிவனவாம். (ஈசானி முதலிய ஐந்துமே "ஈசானம்" முதலிய பஞ்சப் பிரம மந்திரங்களாம்) அந்த ஆறின் வடிவாகவே நாள்தோறும் பிரணவத்துடன் கூட்டிச் சிகாரம் முதலாக வைத்து எண்ணப்படும் திருவைந்தெழுத்துக் கொள்ளப்படும்.

*குறிப்புரை :-* 'அதனை உணர்ந்து அம்மந்திரத்தைக் கணிக்கவே சிவஞானம் உளதாம்' என்பது கருத்து.

பராசத்தி ஏனைச் சத்திகளாய் வெளிப்படுதலல்லது நேரே வெளிப்படாமையின் அதனை "மின்னியல் ஒளி" என்றும், "ஈசானி பளிங்கு போன்றது, என்பதனால் அதனை, ''தூவொளி'' என்றும், பூரணி கன்ம சாதாக்கியமாய் நின்று எல்லாவற்றையும் செவ்வனே ஏற்றல் பற்றியும் அதனை, மேதக்க செவ்வொளி" என்றும், ஆர்த்தி அஞ்ஞானத்தை அழித்தல் பற்றி அதனை" "பன்னிய ஞானம்" என்றும், (பன்னிய - வேதாகமங்கள் சொல்லிய) வாமை உலகுயிர்கள் அனைத்தையும் வினைவழி நடத்துதலின் "பரந்த பரவொளி" என்றும், (''பரத்து'' என்பதில் அத்து வேண்டாவழிச் சாரியை) மூர்த்தி உயிர்களைப் பலபேதப்படத் தோற்றுவிக்குமாற்றால் சிவனை அடைய

**2642.** மின்னியல் தூவொளி மேதக்க செவ்வொளி
பன்னிய ஞானம் பரந்த பரத்தொளி
துன்னிய ஆறொளி தூய்மொழி நாடொறும்
உன்னிய ஆறொளி ஒத்தது தானே. **6**

**2643.** விளங்கொளி மின்னொளி யாகிக் கரந்து
துளங்கொளி ஈசனைச் சொல்லும்எப் போதும்
உளங்கொளி ஊனிடை நின்றுயிர்க் கின்ற
வளங்கொளி எங்கும் மருவிநின் றானே. **7**

---

*வழிவகுத்தல் பற்றி அதனை, "துன்னிய ஆறொளி" என்றும், (ஆறு - வழி றகரம் இரட்டியாமை செய்யுள் விகாரம்) என்றும் கூறினார். இவ்வாறு நுண்பொருள்களை மறை பொருட் கூற்றுக்களால் உய்த்துணரக் கூறுதல் நாயனாரது நெறி என்பது பலவிடத்தும் நன்கறியப்பட்டது. "துன்னிய ஆறொளி" என்பதன்பின் "இந்த ஆறு ஒளியும்" என்பது வருவித்து. "நாடொறும் உன்னிய ஆறு ஒளி ஒத்தது" என முடிக்க. "ஒத்தது" என்பது பன்மை யொருமை மயக்கம். தான், ஏ அசைகள்) தூமொழி - தூய்மையைத் தரும் மொழி, திருவைந்தெழுத்து.*

*இனித் திருவைந்தெழுத்திற்கு ஈடாகப் பிரணவ கலைகளாகிய 'அ, உ, ம், விந்து, நாதம்' என்பவற்றைக் கொள்ளுதல் பொது நெறியாம்.*

*இதனால், மூல மந்திரம் சிவசத்தி வடிவாய் நின்று ஒளியை (ஞானத்தை)த் தருதல் கூறும் முகத்தால் திருவருள் பேரொளியாமாறு விளக்கப்பட்டது.*

*2643. தெளிவுரை :- சிவன் எல்லா ஒளிகளிலும் மேலாய் மிக விளங்குகின்ற ஒளியாய் இருப்பினும் தன்னை நினைக்கின்றவனது உள்ளத்தில் மட்டுமே விளங்கி நின்று, உடலிலும் உயிர்ப்பாய் இயங்குகின்ற வண்மையுடையவனாயும், மற்றை எல்லாப் பொருள்களிலும் மேகத்தில் ஒரே ஒரு காலத்தில் மட்டுமே சிறிது விளங்கி விரைவில் மறையும் மின்னல்போல மறைந்துள்ளவனாயும் இருக்கின்றான். ஆகையால் அவனை நீங்கள் இடைவிடாது துதியுங்கள்.*

*குறிப்புரை :- 'துதித்தால் உங்கள் உள்ளத்தில் விளங்கி, உடலில் உயிர்ப்பாயும் இயங்குவான்' என்பது குறிப்பெச்சம். 'துலங்கொளி' என்பது எதுகை நோக்கி, "துளங்கொளி" எனத் திரிந்து நின்றது. 'ஈசன், உளங்கொளி ஊனிடை நின்று உயிர்க்கின்ற வளங்கொளியாய், எங்கும் விளங்கொளி மின்னொளியாகிக் கரந்து மருவி நின்றான். (அவனை) எப்போதும் சொல்லும் என இயைத்து முடிக்க. முதல் என்பது, சாதியொருமை.*

*இதனால், பேரொளியாகிய சிவன் தன்னை நினைப்பவரது நெஞ்சில் மட்டுமே விளங்கி நிற்றல் கூறப்பட்டது.*

**2644.** விளங்கொளி அவ்வொளி அவ்விருள் மன்னும்
துளங்கொளி யான்தொழு வார்க்கும் ஒளியான்
அளங்கொளி யார்அமு தாரநஞ் சாரும்
களங்கொளி ஈசன் கருத்தது வாமே. **8**

---

*2644. **தெளிவுரை :-** சிவன் எல்லா ஒளிகளிலும் மேலாய் விளங்குகின்ற தனது ஒளியை, எல்லா இருளிலும் மேலானதாய் மிக மறைக்கின்ற ஆணவ இருளின் வலிகெடுதற்கு ஏதுவான ஒளியாக உடையவன். அவ்வொளியை அவன் எவ்வுயிரிடத்தும் மறைத்தல் இல்லை. ஏனெனில், விளங்கும் ஒளியுடம்பினராகிய தேவர்கள் அமுதம் உண்டற்பொருட்டு நஞ்சம் நிறைந்த கண்டத்தையுடைய அவனது திருவுள்ளம் அத்தகையது.*

***குறிப்புரை :-*** *"ஈசன்" என்பதை முதலிற் கொள்க. "விளங்கொளியாகிய அவ்வொளியைத் துளங்கொளியாக உடையான்" என்க. அவ்விருள் - ஒளிகளின் மேலான ஒளிபோல, இருள்களின் மேலான அந்த இருள். அஃது ஆணவ மலம்.*

*ஒரு பொருளும் காட்டாது இருள்உருவம் காட்டும்;*
*இருபொருளும் காட்டாது இது.* **- திருவருட்பயன் - 23**

*என ஆணவ இருளின் கொடுமை மிகுதி கூறப்படுதல் காண்க. துளங்குதல் - மெலிதல். துளங்கு ஒளி - துளங்குதற்கு ஏதுவாகிய ஒளி. மன்னும் துளங்குதல் - பெரிதும் மெலிதல். ஆணவம் அநாதியாதலின் அழியாது சத்தி மெலிந்தே நிற்பதாதல் பற்றி, 'துளங்குதல்' என்றார். அலங்குதல், 'அளங்குதல்' என மருவி வந்தது. தொழுவார்க்கும் என்ற உம்மையால், 'தொழாதார்க்கும்' என்பது கொள்ளப்பட்டது. ஒளியான் - கரவான். அது - அத்தன்மையது. அஃதாவது உயிர்கள் ஒளியைப் பெறத் தான் இருளைத் தாக்கி அடக்கும் தன்மை.*

*"சிற்றுயிர்க் கிரங்கிக் - காய்சின ஆலம் உண்டாய்*
*அமுதுண்ண"* *- தி.8 நீத்தல் விண்ணப்பம் - 50*

*"விண்ணாள்வார் அமுதுண்ண மிக்கபெரு*
*விடம் உண்ட*
*கண்ணாளா"* *- தி.12 ஏயர்கோன் கலிக்காமர் - 286*

*என்பன போலும் திருமொழிகளைக் காண்க.*

*இதனால், பிற ஒளிகளால் நீங்காத கொடிய திணியிருளை நீக்குகின்ற செவ்விய நுண்ணொளியாதல் கூறப்பட்டது.*

*2645. **தெளிவுரை :-** பிறிதொரு பொருள் விளக்க வேண்டாது தானே விளங்கும் ஒளி எந்த ஒளியோ அந்த 'ஒளியே சிவன்' எனப்படும் பொருள்.*

**2645.** **இலங்கிய தெவ்வொளி அவ்வொளி ஈசன்**
**துளங்கொளி போல்வது தூங்கருட் சத்தி**
**விளங்கொளி மூன்றே விரிசுடர் தோன்றி**
**உளங்கொளி யுள்ளே ஒருங்குகின் றானே.** **9**

---

*(எனவே, விளக்கினால் விளக்கும் ஒளி எந்த ஒளியோ அந்த ஒளியே சீவன்' எனப்படும் பொருள் என்பது தானே விளங்கிற்று). இனி, ஞாயிறு, பிறரால் காணப்படுதற்கு ஏதுவாய் அதனினின்றும் வியாபிக்கின்ற அதன் கதிர்போன்றது சிவனது சத்தி. ஆக, விளக்கம் உடைய ஒளிகள் மூன்றாகும். அவற்றுள் பேரொளியாகிய சிவன் தன்னை நினைக்கின்ற உயிரினது நெஞ்சத்தில் வெளிப்பட்டு அதனது ஒளியைத் தனது ஒளிக்குள் அடக்கி விளங்குவான். இறை, உயிர், சத்தி மூன்றும் முச்சுடர்.*

*குறிப்புரை :-* "இலங்கியது" என்றது, 'தானே இலங்கியது' என்றபடி. தூங்குதல், நீக்கமின்றியிருத்தல். இதனுள் இன வெதுகை வந்தது.

இதனால், சிவ ஒளி சீவ ஒளிக்கு உதவும் ஒளியாதல் கூறப்பட்டது.

*2646. தெளிவுரை :-* பிறிதோர் ஒளியைத் தன்னுட் கொண்டிருக்கும் ஒளியாவது எந்த ஒளி? உடலினுள்ளே ஒளியாய் நிற்கும் சீவ ஒளியாம் அந்த ஒளிக்குள் ஒளியாகி நிற்கும் வண்மையை உடைய பெரிய மாணிக்க ஒளியாகிய சிவன், தன்னைக் காணும் பக்குவம் எய்தினார் கண்முன் முதற்கண் திடீரென விளங்குகின்ற மின்னல் ஒளிபோல மின்னிப் பின்பு பரவெளியிலே ஒன்றி அதுவாகி, பேரொளியைப் பெற்ற திருக்கூட்டத்துள் நீங்காது நிற்பான்.

*குறிப்புரை :-* "உளம் கொளி" என்பதில் கொள்வதும், கொள்ளப்படுவதும் ஒளிகளாதல் அதிகாரத்தில் பெறப்பட்டது. அதனால் "மாமணிச் சோதி" என்பதும் "விளங்கொளியாய் மின்னி" என்பதும் பொருந்துவவாயின. வளம், ஒளிக்கு ஒளியாய் நிற்கும் செழுமை. இங்கும் அலங்கொளி அளங்கொளியாயிற்று.

இதனால், சிவ ஒளி பக்குவம் எய்தினார்க்கு வெளிப்பட்டு விளங்கிப்பின் மறையாது நிற்றல் கூறப்பட்டது.

*2647. தெளிவுரை :-* தானே விளங்கும் ஒளியாகிய சிவன் விளங்கி நின்ற இருள் மெலியப்பெற்ற சீவ ஒளியின் உடல் பொறி கரணங்களிலும் முன்பு சேர்ந்திருந்த ஆணவ இருள் சேரமாட்டாது ஒதுங்கியிருக்கும். அவ்வாறு அந்த இருள் மெலிதற்குரிய அதிசூக்கும நடனத்தைச் செய்து கொண்டு தன்னை நினைக்கின்ற உயிரின் நுண்ணுடம்பில் முடிநிலைத் தானமாகிய உன்மனாந்தத்திலே இருப்பான்.

*குறிப்புரை :-* விகிர்தன் - உயிர்களின் இயல்பிற்கு வேறுபட்ட இயல்பினை

**2646.** உளங்கொளி யாவதென் உள்நின்ற சீவன்
வளங்கொளி யாய்நின்ற மாமணிச் சோதி
விளங்கொளி யாய்மின்னி விண்ணில் ஒடுங்கி
அளங்கொளி ஆயத்து ளாகிநின் றானே. **10**

**2647.** விளங்கொளி யான விகிர்தன் இருந்த
துளங்கொளிப் பாசத்துள் தூங்கிருள் சேரா
கலங்கொளி நட்டமே கண்ணுதல் ஆடி
உளங்கொளி உன்மனத் தொன்றிநின் றானே. **11**

---

*உடையவன். "பாசம்" என்றது இங்கு மாயேயத்தை, அதனானே அதனைப் பற்றுக் கோடாகக் கொள்ளும் வினையும் பெறப்பட்டது. 'இருள் கலங்கு நட்டம்' என மாற்றியுரைக்க. அது ஞான நடனம். உன்மனை பற்றிக் 'கலைநிலையில்' காண்க. (பா.696) உயிரை ஆணவம் பற்றியுள்ள பொழுதே அதனை 'மாயை, மாயேயம், வினை' என்பவற்றையும் இருள் பற்றி உயிரை ஆணவம் பற்றாது நீங்கிய பொழுது அதன் மாயை முதலியவற்றையும் ஆணவம் பற்றாது; அதற்குக் காரணம் திருவருள் விளக்கமே என்பதை,*

*மாயைமா யேயம் மாயா*
*வரும்இரு வினையின் வாய்மை*
*ஆயஆ ருயிரின் மேவும்*
*மருள்எனில் இருளாய் நிற்கும்,*
*மாயைமா யேயம் மாயா*
*வரும்இரு வினையின் வாய்மை*
*ஆயஆ ருயிரின் மேவும்*
*அருள்எனில் ஒளியாய் நிற்கும்.*

*என்னும் சிவப்பிரகாசச் செய்யு (70)ளால் அறிக. மூன்றாம் அடி இன எதுகை. 'சேராது' என்பது ஈறு குறைந்து நின்றது. 'உன் மனாந்தத்து' என்பது 'உன் மனத்து' என இடைக் குறைந்து நின்றது.*

*இதனால் சிவ ஒளியால் சீவ ஒளி உடம்பொடு நலம் பெறுதல் கூறப்பட்டது.*

*2648. தெளிவுரை :- ஆன்மாக்கள் சிவனுக்குத் தலைவனுக்குப் புதுமணம் செய்துகொண்ட மனைவியர் போன்றவர்கள். சிவனோ, புதுமணம் செய்து கொள்ளப்பட்ட மனைவியர் எளிதில் செல் லொணாத காவற் கட்டத்தில் உள்ள தலைவன்போல் உள்ளான். இவர் இருதிறத்தாரிடையே தூதாகின்றவள் தலைவனுக்குக் காதற் பரத்தைபோன்ற ஆதி சத்தி. (திரோதான சத்தி) அவளது தூதின் பயனாகச் சிவன் இரங்கி வந்து ஆன்மாக்களது திணிந்த இருளை நீக்கியது வியப்பு.*

**2648.** போது கருங்குழல் போல்நவர் தூதிடை
ஆதி பரத்தை அமரர் பிரானொடும்
சோதியும் அண்டத்தப் பால்உற்ற தூவொளி
நீதியின் அல்லிருள் நீக்கிய வாறே. **12**

---

*குறிப்புரை :-* *பரத்தை - பரமாகிய அழகியோன். ஆதி - மறைப்பாற்றல். போது - பேரரும்பு. 'அதனை அணிந்த கருங்குழல்' என்றது, அக்குழலையுடைய புதுமண மனைவியை. போல்நவர் - அவளோ டொத்த புதியர். பந்தத்தில் பழையவராயினும் வீட்டிற்குப் புதியரே. உவமையில் பன்மையில் ஒருமை மயங்கிற்று. அருட்சத்தியும், திரோதான சத்தியும் வேறு வேறல்லவாயினும் திரோபவித்தல் சிவனுக்குக் கருத்தன்றாகலின், அதனைச் செய்கின்ற செயல் பற்றித் தனது அறத்திற்கு ஒத்த அருட்சத்தியாகிய தேவியின் வேறான, தனது அறத்திற்கு ஒவ்வாத பரத்தையாக உருவகம் செய்தார். 'பரத்தை' என்பது சொல் நயத்தால் பிறிது பொருள் தந்ததாயினும், அது, தொழுபவனை 'தொழுத்தை' என்பது போல, 'பரத்தின்பால் உள்ளவள்' என்றே பொருள் தரும். சிவனையடைந்து இன்புறுதற்கு உரியவாதல் பற்றித் தலைவனை அடைந்து இன்புறுதற்குரிய சீவான்மாக்கள் பெண்டிரோடு ஒப்பிக்கப்படுதலை,*

*இருவர் மடந்தையருக்கு என்பயன் உண்டு? உண்டாம்,*
*ஒருவன் ஒருத்தி யுறின்.* **- திருவருட் பயன் -** *72*

*என்பதிலும் காண்க. 'இஃது உவமை மாத்திரையேயன்றிப் பொருளன்று' என்பது உணராதார். 'உயிர்கள் எல்லாம் பெண்டிர்' எனவும் 'இறைவன் ஒருவனே ஆடவன்' எனவும் கூறி மகிழ்வர். அவர், ஆடவர் பெண்டிர்' என்னும் வேற்றுமை மாயாகாரியப் பருப்பொருளான உடம்பின் கண்ணதன்றி அறிவேயான நுண் பொருளிடத்து எங்ஙனம் விளங்கக் கண்டனரோ!*

*எண் ஒடு ஓரிடத்தில் நின்றே ஏனையிடத்தும் சென்று இயையுமாகலின் இங்கு 'ஒடு' 'போல்நவர்' என்பதனோடும் சென்றியைந்தது. உம்மை அசை. 'போது கருங்குழல்போல் நவரோடும் அமரர் பிரானோடும் இடை தூது ஆதி பரத்தை' எனக் கூட்டுக.*

*இதனால், அனைத்தையும் கடந்து நிற்கும் பேரொளியாகிய சிவன், அனைத்துப் பொருளிலும் கலந்து நின்று இயக்கும் சிற்றொளியாகிய திரோதான சத்தியுடன் நின்று ஆன்மாக்களது ஆணவ இருளை நீக்குதல் கூறப்பட்டது.*

*2649.* **தெளிவுரை :-** *உலகம், சிலர் சிலவற்றை 'உண்டு' எனக் கூறினால், உடனே அவற்றை 'இல்லை' என மறுத்துக் கூறும் இஃது உலகத்தின் இயல்பு ஆதலை எளிதில் காணுதல் கூடும். காலத்திற்கும், இடத்திற்கும் உட்பட்டு, எளிதில் அகப்படுகின்ற பொருள் பற்றியே இவ்வா றாதலின், 'காலம், இடம் இவற்றைக்*

**2649.** உண்டில்லை என்னும் உலகத் தியல்பிது
பண்டில்லை என்னும் பரங்கதி உண்டுகொல்
கண்டில்லை மானுடர் கண்ட கருத்துறின்
விண்டில்லை உள்ளே விளக்கொளி யாமே. **13**

---

*கடந்த, 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருள் உண்டு' (தி.8 திருவெம்பாவை-9) என அறிந்தோர் கூறுவதை, உலகம் 'இல்லை' எனக் கூறிப் பிணங்குகின்றது. இவ்வுலகத்திற்கு 'மேற்கதி' என்பது உண்டாகுமோ! உண்டாகாது. அந்த முன்னைப் பழம்பொருளை மக்கள் கண்டதில்லை. ஒரு சிலர் கண்டனரேனும், அவர் 'அதன் இயல்பு இது' என விளக்கிச் சொல்லியதில்லை. 'மற்று அதன் இயல்புதான் யாது' எனின், புறக்காட்சியை விடுத்து அறிவிற்குள்ளே ஒற்றித்துக்காணும் அகக்காட்சியில் விளங்குகின்ற ஓர் அதிசய விளக்கொளியாகும் அது.*

*குறிப்புரை :- 'பண்டு' என்பது இடைச் சொல்லாயினும் பெயர்த் தன்மைப் பட்டு ஆகுபெயராய்ப் பண்டையதைக் குறித்தது. 'கண்டது, விண்டது' என அவ்வத்தொழில் மேல் நிற்கும் வினைப் பெயர்களில் அகரச் சாரியையும், துவ்விகுதியும் தொகுத்தலாயின. 'கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்' என்பது ஒரு பழமொழி. விள்ளுதல் - விளக்கிச் சொல்லுதல். 'உண்மை மாத்திரையாற் சுட்டப்படுமேயன்றி, இலக்கண வகையால் விளக்கிச் சொல்லுதல் இயலாது, அநுபவித்து அறியத்தக்கது' என்பதாம். இதனை,*

*"மகட்குத் தாய் தன் மணாளனோ டாடிய*
*சுகத்தைச் சொல்லெனின் சொல்லுமா றெங்ஙனே"*

*எனப் பின்னர் நாயனாரும்,*

*இங்ஙன் இருந்ததென் றெவ்வண்ணம் சொல்லுகேன்;*
*அங்ஙன் இருந்ததென் றுந்தீபற;*
*அறியும் அறிவதன் றுந்தீபற.* **- திருவுந்தியார் - 4**

*எனவும்,*

*அன்றுமுதல் ஆரேனும் ஆளாய், உடனாகிச்*
*சென்றவர்க்கும் இன்னதெனச் சென்றதிலை - இன்றிதனை*
*இவ்வா றிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்!*
*அவ்வா றிருந்த தது.* **- திருக்களிற்றுப்படியார் - 9**

*எனவும்,*

*மருவி இருவரும் புணர வந்த இன்பம்*

**2650.** சுடருற ஓங்கிய துள்ளொளி ஆங்கே
படருறு காட்சிப் பகலவன் ஈசன்
அடருறு மாயையின் ஆரிருள் வீசி
உடலுறு ஞானத் துறவிய னாமே. **14**

---

*வாயினாற் பேசரிது; மணந்தவர்தாம் உணர்வர்.*

*- சிவஞான சித்தி - சூ. 8. 36*

*எனவும் பின்னை ஆசிரியன்மாரும் கூறுமாற்றால் உணர்க. இங்ஙனமாதலின், 'முன்னைப் பழம்பொருள்' என்பது சூனியம் போலும் என மலையாமைப் பொருட்டு, "உள்ளே விளக்கொளியாமே" என்றார்.*

*இதனால், 'சிவ ஒளி பேரொளியாதலுடன் உள்ளொளி நுண்ணொளி' என்பது கூறப்பட்டது.*

***2650. தெளிவுரை :-*** *உலகத்தில், விளக்கு முதலாய் நிற்க, அதினின்றும் வியாபிக்கின்ற ஒளி இருந்தும் இல்லையாய்ப் போகும்படி தோன்றி விளங்குகின்ற ஞாயிறு போன்றவன் சிவன். ஆகவே, உடல், பொறி, உலகு நுகர் பொருள்களாய்ப் பல்வேறு வகைப்பட்டு நெருங்கியிருக்கின்ற மாயா கருவிகள் செய்யும் மயக்கத்தை அடக்கி, அதற்கு மாறான ஞானத்தினால் உயிர்களோடு உறவுகொள்பவன் அவன்.*

***குறிப்புரை :-*** *'அஃதறிந்து, கருவி ஞானத்தை நீக்கி, அவனது ஞானத்தை நாடிப்பெறுக' என்பது குறிப்பெச்சம். "ஆங்கு" என்றது, 'அங்கு நின்றும்' என்றபடி. படர்தல், இங்கு நீங்குதல். படர்உறு காட்சிப் பகலவன் படர்தற்கு ஏதுவாய் உறுகின்ற காட்சியையுடைய பகலவன். "மாயை" என்றது, மாயையின் காரியத்தை. இன், சாரியை மயக்கத்தை "இருள்" என்றார். மயக்கத்திற்கு ஏது அதுவாகலின். வீசுதல் - போக்குதல். உடலுதல் - மாறுபடுதல். "உறவியன்" என்பதில் அன் ஆடூவை அறிவித்தற்கு விகுதி மேல் விகுதி.*

*ஆங்கே - உவம உருபு. மாயையின் ஆரிருள் வீசுதல் - தத்துவ ஆய்வு வாயிலாக அவற்றைக் கடந்த தன் உண்மையியல்பைத் தலைப்படல். பகலவனைக் காணுதற்கு அவன் ஒளியையன்றி வேறு ஒளி பயன்படா. அதுபோல ஈசனைக் காணுதற்கு அவன்றன் அருளொளியே வேண்டப்படும். மாயையாகிய விளக்கு வேண்டப்படாது; அதன் நீக்கமே வேண்டப்படும் என்பது கருத்து.*

*இதனால், "மேற்கூறிய அக விளக்கைக் காணுதல் அதன் ஒளியாலல்லது, பிற ஒளிகளால் ஆகாது' என்பது கூறப்பட்டது.*

***2651. தெளிவுரை :-*** *சிவபெருமான் தனது திருமேனி பவளமும், செம்பொன்னும் போல்வதற்கு ஏற்ப அருமையாலும் அன்பினால் பிறர்க்கு அளிக்கப்படுகின்ற பவளமும், பொன்னும் போல்பவன். அவன், உலகிற்கு*

**2651.** ஒளிபவ ளத்திரு மேனிவெண் ணீற்றன்
அளிபவ ளச்செம்பொன் ஆதிப்பிரானும்
களிபவ ளத்தினன் காரிருள் நீக்கி
ஒளிபவ ளத்தென்னோடு ஈசன்நின் றானே. 15

---

*மகிழ்ச்சியைத் தருகின்ற பகலவன், உலகத்துத் திணிந்த இருளைப் போக்குதல் போல எனது உள்ளத்தில் திணிந்த இருளைப் போக்கி, 'என் அறிவினுள்ளே இருக்கும் பவளம்' என்று சொல்லும்படி என்னுடன் இருக்கின்றான். இறைவன் உயிர்க்குற்றம் நீக்கி அதன்கண் உறைதலைக் கூறுகின்றது.*

*குறிப்புரை :- "ஆதிப்பிரானும்" என்பதை முதலிற் கொள்க. உம்மை சிறப்பு. ஆதிப்பிரானும்" என்பதுடன் முதல் அடியும் கூடிய தொடர் 'சிவபெருமான்' என்னும் பொருட்டாய் நின்றது. 'வெண்ணீற்றில் ஒளிந்த - மறைந்த பவளத் திருமேனியன்' என்க. "பவளச் செம்பொன்" என்னும் உம்மைத் தொகை ஒரு சொல் நீர்மைப்பட்டு நிற்க. அதனோடு ''அளி'' என்பது வினைத்தொகை நிலைப்படத் தொக்கது. அளி - அளிக்கப்படுகின்ற. அன்பினால் ஒருவர் பிறர்க்கு அளிக்கும் பரிசுப் பொருள்களில் பவளமும், பொன்னும் சில அரும்பொருள்களாம். அவ்அருமை பற்றியே அவை இங்குச் சிவபெருமானுக்கு உவமையாகச் சொல்லப்பட்டன.*

*"வைப்பர் -பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து" (திருக்குறள் - 155) என்பதிலும் பொன் பொதிந்து வைத்துப் போற்றப்படும் அருமை பற்றியே பொறுத்தார்க்கு உவமையாகக் கூறப்பட்டது. இன்னும் ''முன்னோர் மொழிபொருளேயன்றி அவர் மொழியும் - பொன்னே போற் போற்றுவம்" (நன்னூற் பாயிர உரை) என்பதிலும் பொன் அருமை பற்றியே உவமை யாயிற்று. "பவளத்தையும் பொன்னையும்போலச் சிவபெருமான் உள்ளத்துப் பொதிந்து வைத்தப் போற்றுதற்குரியவன்" என்பது, "அளி பவளச் செம்பொன்" என்பதனால் குறிக்கப்பட்டது. "பவளச் செம்பொன்" என்னும் உம்மைத் தொகை உவம ஆகுபெயர். இனன் - பகலவன். பவளத்து இனன் - பவளம் போலும் நிறத்தையுடைய இனன். களி இனன் - உலகம் களிப்புறுதற்கு ஏதுவாகிய இனன். திணிந்த இருள்' என்றற்குக் ''காரிருள்'' என்றார். 'இனன்போல' எனவும், 'பவளத்தைப் போல' எனவும் உவம உருபு விரிக்க. ஒளி பவளம் உள்ளத்தில் மறைந்து நிற்கும் பவளம். "ஈசன்" என்பது 'அவன்' என்னும் சுட்டுப் பெயரளவாய் நின்றது. அதனை மூன்றாம் அடியின் முதலிற் கூட்டுக.*

*இதனால், சிவன் உயிர்களின் உள்ளொளியாய் நின்று உள்ளிருளை நீக்கும் அருமை அறியற்பாலதாதல் கூறப்பட்டது.*

*2652. தெளிவுரை :- உள்ளத்துள்ளே உள்ளொளியாகிய சிவனும்*

**2652.** ஈசன்நின் றான்இமை யோர்கள்நின் றார்நின்ற
தேசம்ஒன் றின்றித் திகைத்தழைக் கின்றனர்
பாசம்ஒன் றாகப் பழவினைப் பற்றுற
வாசம்ஒன் றாமலர் போன்றது தானே. **16**

**2653.** தானே இருக்கும் அவற்றின் தலைவனும்
தானே இருக்கும் அவன்என நண்ணிடும்
வானாய் இருக்கும்இம் மாயிரு ஞாலத்துப்
பானாய் இருக்கப் பாவலும் ஆமே. **17**

---

*இருக்கின்றான். கண் இமைக்காது பார்த்துக் கொண்டிருக்கின்ற தேவர்களும் இருக்கின்றார்கள். இருப்பினும், அவர்கள் ஒளி தம்மிடத்தில் சிறிதும் இல்லாதது போல, 'ஒளி எங்கே உள்ளது' எனத் தேடித் திகைத்து, 'சிவனே! சிவனே' என ஓலமிடுகின்றனர். அதற்குக் காரணம், ஆணவமாகிய ஒரு பாசம் முதலிலே பற்றியிருக்க, அது காரணமாக வகையால் இரண்டாய், விரியால் அளவிறந்தன வாகிய வினைகள் வந்து பற்றியிருப்பதேயாம். ஆகவே, அவர்களது செயல், மலர் இருந்தும் மணம் கமழாதது போன்றதாகும்.*

*குறிப்புரை :-* 'தேக' என்பது, 'தேசம்' என அம்முப்பெற்று வந்தது. தேசு - ஒளி. இன்றி - இல்லாதது போல. 'பற்றற' என்பது பாடம் அன்று. "வாசம், ஒன்றாமலர் போன்றது" என்றலே கருத்தென்க. 'மலர் உயிரும், மணம் சிவமும்' என்க.

"பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்,
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது" - தி.10 பா.1440

என முன்னரும் கூறினார். இதனை,

"உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர்
எழுதரு நாற்றம்போல்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள்" - தி.8 அதிசயப்பத்து, 9

என ஆளுடைய அடிகளும் அருளிச் செய்தார். உயர் பிறப்பினராகிய தேவர்களைக் கூறவே மக்கள் நிலை சொல்ல வேண்டாவாயிற்று.

இதனால், 'சிவன் உள்ளொளியாய் இருந்தும் பாசப்பற்றால் விளங்கிலன்' என்பது கூறப்பட்டது. ஆகவே, பாசம் பற்று அற்றால் விளங்குவன்' என்பது சொல்லாமே அமைந்தது.

*2653. **தெளிவுரை :-*** வேதமாய் இருப்பவனும் சிவனே. வேதத்தைச் செய்தவனும் சிவனே. இனி வேதமும் இயல்பாகவே அவனையே, 'முடிநிலைப் பொருள்' எனக் கூறி முடியும். ஆகவே, ஆகாயத்திற்குள் அடங்கியிருக்கும் உலகம்

*அனைத்தினுள்ளும், 'ஞான சூரியனாய் உள்ளவன் சிவன் ஒருவனே' எனப் புகழ்ந்து பாடி அவனை அடைதலே தக்கது.*

***குறிப்புரை :-*** *முதலில் உள்ள, 'தான்' சிவன் என்பது, அதிகாரத்தால் விளங்கிற்று. 'இருக்கு' என்பது பொதுப்பட அனைத்து வேதங்களையும் குறிக்கும் பெயராயும் வரும். இரண்டாம் அடியில் "இருக்கும்" என்னும் உம்மை சிறப்பு. அவ்விடத்து, "தானே" என்றது 'இயல்பாகவே' என்றபடி. "அவன்" என்பதன்பின் 'முடிநிலைப் பொருள்' என்பது எஞ்சி நின்றது. வேதத்தைக் கூறவே ஆகமமும் அடங்கிற்று. 'வானின் உள்ளாய் இருக்கும்' என உருபு விரிக்க. 'சான்றோராவார் வேதாகமங்களின் வழி நிற்பவர் ஆகலான், எவ்விடத்தும் சிவனையே ஞான மயமான மெய்ப்பொருளாகப் போற்றி வணங்குதலே சான்றோராயினார்க்கு உரிய இயல்பு' என்றபடி. 'பானுவாய்' என்பதில் ஈற்று உகரம் குறைந்து, 'பானாய்' என வந்தது.*

*இதனால், 'வேதாகம வழக்காகிய சான்றோர் சென்ற நெறிப்படி உயிர்களுக்குள்ளே ஒளி வளர் விளக்காய் ஒளிர்பவன் சிவனே' என உணர்ந்து அவனைக் கண்டு இன்புறல் வேண்டும்' என்பது கூறி முடிக்கப்பட்டது.*

## 5. பஞ்சாக்கரம் - தூலம்

*பிரணவ யோகத்தில் விளங்கும் ஒளிவகை பற்றிச் சில கூறிய பின், பிரணவ பரிணாமமாகிய அக்கர மந்திரங்களில் தலையாய சிவ மூல மந்திரம் பற்றிச் சில கூறுவாராய், அதனுள் தூலமாவன சிலவற்றை முதற்கண் கூறுகின்றார். இது பத்து மந்திரங்களையுடையது. நான்காம் தந்திரத்திற் கூறியன கிரியையாகிய யந்திரம் நோக்கி; இவை ஞானானுபவம் நோக்கி என உணர்க. எனவே இது முதல் மூன்று அதிகாரங்கள் நான்காம் தந்திரத்தில் கூறப்பட்ட மந்திர வகைகளின் ஒழிபாம்.*

**2654.** ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீர்உல குக்குயி ராவது
நன்றுகண் டீர்இனி நமச்சிவா யப்பழம்
தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே. 1

---

*இம்மந்திரம் பதிப்புக்களில் பின்பு வரும் 'அணைந்தோர் தன்மை' அதிகாரத்தில் காணப்படுகின்றது. இதற்கு ஈடாக நான்காம் தந்திரத்தில் 'திருவம்பலச் சக்கர' அதிகாரத்தில் வந்த "ஐம்பதெழுத்தே" என்னும் மந்திரம் (948) பதிப்புக்களில் காணப்படுகின்றது.*

*2654. தெளிவுரை :- அனைத்துலகங்களுக்கும் முதற்பொருளாய் நிற்கும் கடவுட் பொருள் ஒன்றே. அனைத்து உயிர்கட்கும் உயிராய் உள்ளதும் அதுவே. அதனை உணர்த்தும் 'நமச்சிவாய' என்னும் ஐந்தெழுத்து மறைமொழியே ஞானத்தைத் தரும் மறைமொழியாம். அம்மறைமொழியாகிய பழத்தை நான் தின்றே பார்த்தேன். அது தித்தித்த முறையை உலகில் எந்தத் தித்திப்போடு நான் உங்கட்கு உவமித்து உணர்த்துவேன்?*

*குறிப்புரை :- ஈற்றில் வருவித்து உரைத்தது 'உணர்த்தரிது' என எஞ்சி நின்ற சொல்லெச்சம் பற்றி, "கண்டீர்" மூன்று தொடர்ப்பொருளை வலியுறுத்தி நின்ற முன்னிலையசைகள். ''உலகு'' இரண்டில் பின்னது உயிர்த்தொகுதி. நன்றாவது ஞானம். அதனைத் தருவதனை "நன்று" என உபசரித்துக் கூறினார். இனித் தின்று கண்டேன் என இயையும். இனி - இப்பொழுது.*

*இதனால், 'ஞானத்தைத் தருதல் பற்றி மந்திரங்களுள் தலையாயது ஐந்தெழுத்து மந்திரம்' என்பதும், அது நகாரம் முதலாக அமையின் தூல பஞ்சாக்கரமாம்' என்பதும் சொல்லப்பட்டன. இதனைப் பிரணவத்தோடு கூட்டிக் கூறின் தூல சடாக்கரமாம்.*

*வடமொழி 'ம' என விசர்க்க ஈறாய் நின்று முப்பதாம் மெய்யோடு புணருங்கால், விசர்க்கம் அம்முப்பதாம் மெய்யாகத் திரிந்து வருதல் பற்றித் தமிழில் நமச்சிவாய' எனச் சொல்லப்படும். அவ்வாறாயினும் வடமொழி*

**2655.** அகாரம் முதலாக ஐம்பத்தொன் றாகி
உகாரம் முதலாக ஓங்கி உதித்து
மகார இறுதியாய் மாய்ந்துமாய்ந் தேறி
நகார முதலாகும் நந்திதன் நாமமே. **2**

---

*யிலாயினும், தென்மொழியிலாயினும் மெய்யெழுத்து எண்ணப்படாமையின், எழுத்து ஐந்தேயாம். 'நமசிவாய' என்றல் யந்திர முறையாகிய கிரியா மார்க்கமாம். திருமுறைகளில் எல்லாம் ஞானமார்க்க முறையாகிய 'நமச்சிவாய' என்றே சொல்லப்படும். திருமுறைகளில் பெரும்பான்மையாக இத்தூல பஞ்சாக்கரமே எடுத்தோதப்படுதல் வெளிப்படை.*

*2655. **தெளிவுரை :-** சிவன், "சொல் இறந்து நின்ற தொன்மையன்" (தி.8 குயிற்பத்து - 1) ஆயினும் சொல்லாலன்றி உயிர்கள் அவனை உணர்தல் கூடாமை பற்றி அவன் சொல்வடிவான பல பெயர்களையும் உடையவன் ஆகின்றான். எல்லாப் பொருள்களும் பெயராலே அறியப்படுதலாலும் எல்லாப் பொருள்களிலும் சிவன் அவையேயாய்க் கலந்து நிற்றலாலும் ஒரு வகையில், எல்லாப் பெயர்களும் சிவன் பெயர்களேயாகின்றன. பெயர்கள் யாவும் எழுத்துக்களால் ஆனவை. 'அவ் எழுத்துக்கள் ஐம்பத்தொன்று' எனப்படுகின்றன. அந்த எழுத்துக்கள் பிரணவ கலைகளாகிய அகார உகார மகாரங்களால் முறையே 'தோற்றம், நிலை, இறுதி' என்பவற்றை அடைவனவாகச் சொல்லப்படுகின்றன. ஆகவே, அனைத்துப் பெயர்களும் தோன்றி அழிவன ஆகின்றன. இந்நிலையில் தோற்றமும் அழிவும் இல்லாத சிவ நாமம், நகாரத்தை முதலாக உடைய ஐந்தெழுத்தால் ஆவதாம்.*

*__குறிப்புரை :-__ எனவே, இந்த ஐந்தெழுத்துக்கள் ஐம்பத்தோர் அக்கரங்களுள் அடங்கி நிற்கின்ற அந்த எழுத்துக்கள் ஆகாது. வேறு எழுத்து' என்பதாம். இது பற்றி, "ஐந்து கலையில் அகராதி தன்னிலே" என்ற மந்திர (பா.961)த்தை நோக்குக. மற்றும்,*

*"அஞ்செழுத்தீ தாகில் அழியும் எழுத் தாய்விடுமோ!*
*தஞ்ச அருட்குருவே சாற்று"* **- உண்மை விளக்கம், 40**

*என்னும் உண்மை விளக்க அடிகளில் அமைந்த குறிப்பையும் உன்னுக ஆதல் - தோன்றுதல். ஓங்கி உதித்தல் - நிலைத்து நிற்றல்.*

*"மாய்ந்து மாய்ந்து ஏறி" என்றது, 'பலவாய்த் தோன்றி மறைந்து பெயர்களாய் எண்ணிக்கை மிகுந்து' என்றபடி, இங்ஙனம் கூறியது பெயராயின பலவற்றையும், "ஏறி" என்பதன் பின் 'முடிவாக' என்பது வருவிக்க. 'முதலது' என்பதில் இறுதி நிலை தொகுத்தலாயிற்று.*

*இதனால், சிவ நாமமாகிய ஐந்தெழுத்துக்கள் ஏனை எழுத்துக்கள் பலவற்றில் சில ஆவன அல்ல' என்பது கூறப்பட்டது.*

**2656.** அகாராதி யீரெட் டலர்ந்த பரையாம்
உகாராதி சத்தி உள்ளொளி ஈசன்
சிகாராதி தான்சிவம் ஏதமே கோணம்
நகாராதி தான்மூல மந்திரம் நண்ணுமே. **3**

---

*2656.* **தெளிவுரை :-** *'ஐம்பது' அல்லது, 'ஐம்பத்தொன்று' எனப்படும் அகரம் முதலாகிய எழுத்துக்களில் பதினாறு வகையாய்ப் பராசத்தி நிறைந்து நிற்கும். (பதினாறாவன சயை, விசயை, அசிதை, பராசிதை, நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, இந்திகை, தீபிகை, இரோசிகை, மோசிகை, வியோம ரூபை, அனந்தை, அனாதை, அனாசிருதை' என்பன. (சிவநெறிப்பிரகாசம் - செய்யுள் - 77).*

*அந்தச் சத்தியைக் குறிக்கும் பெயர் உகாரத்தை முதலாக உடையது. 'உமா' என்பது (இஃது உ, ம், அ என்பது கூட்டாக இருத்தலால், 'சத்தி பிரணவம்' எனப்படும்). சத்தி ஒளியாய் நிற்க. அதற்குப் பற்றுக்கோடான சுடராய் உள்ளார்ந்து நிற்பவன் சிவன். முன் மந்திரத்திற் கூறிய ஐந்தெழுத்து மந்திரத்தைச் சிகாரம் முதலாகக் கொண்டு நோக்கினால் அம்மந்திரம் மூன்று கூறாய், 'பதி, பசு, பாசம்' என்னும் மூன்றையும் உணர்த்தும். ஆகவே, முன் மந்திரத்திற் கூறியவாறு நகாரத்தை முதலாகக் கொண்ட ஐந்தெழுத்தாலாகிய அந்த மந்திரமே அனைத்து மந்திரங்கட்கும் மூல மந்திரமாம் தகைமையை உடையதாகும்.*

**குறிப்புரை :-** *அகாராதி - அகரம் முதலாகிய எழுத்துக்கள். 'அகாராதியில்' என உருபு விரிக்க. 'பரையாம் தன் சத்தி உகாராதி' உகாராதி - உகரத்தை முதலாக உடைய மந்திரம் என மாற்றியுரைக்க. "உள்ஒளி" என்பது, 'ஒளி உள்' என்பது பின் முன்னாக மாறி நின்ற ஆறாவதன் தொகை. "உள்" என்பது ஆகுபெயராய் உள்ளார்ந்து நிற்கும் பொருளைக் குறித்தது. ஐந்தெழுத்து மந்திரத்தில், 'சிவா' என்பது பதியையும் 'ய' என்பது பசுவையும், நம என்பது பாசத்தையும் குறிக்கும். அவற்றுள்ளும் சிகாரம் சிவனையும், வகர ஆகாரம் அவனது அருட் சத்தியையும் குறிக்கும். 'நம' என்பதிலும் மகாரம் ஆணவத்தையும், நகாரம் திரோதான சத்தியையும் குறிக்கும். மாயை கன்மங்கள் திரோதான சத்திக்குக் கருவியாய் அதனுள் அடங்கும். இவற்றையெல்லாம், உண்மை விளக்கம், (வெண்பா - 41) சிவப்பிரகாசம் (செய்யுள் - 91) முதலிய நூல்களில் காண்க. ஏதம் - குற்றம். பாசம் கோணம் - வளைவு இரு பக்கமும் வளைந்து சென்று பாசத்தோடும், பதியோடும் பற்றும் தன்மையுடையது பசு, செய்யுள் நோக்கிப் பாசம் முன்னர்க் கூறப்பட்டது. மூலமந்திரம் என்றது, மூல மந்திரமாம் தன்மையை.*

*இதனால், முன் மந்திரத்தில் "நந்திதன் நாமம்" எனக் கூறிய நகாராதி ஐந்தெழுத்தால் ஆகிய மந்திரம் ஏனை மந்திரங்கள் அனைத்திற்கும் மூலமாதற்குக் காரணம் விளக்கிக் கூறப்பட்டது. அதனோடே அக்கரங்கள் எல்லாம் சத்திமயம் ஆதலும் உடன் இணைத்துக் கூறப்பட்டது.*

**2657.** வாயொடு கண்டம் இதயம் மருவுந்தி
ஆய இலிங்கம் அவற்றின்மே லேஅவ்வாய்த்
தூயதோர் துண்டம் இருமத் தகம்செல்லல்
ஆயதீ றாம்ஐந்தோ டாம்எழுத் தஞ்சுமே. **4**

---

*2657.* **தெளிவுரை :-** *நந்தி நாமமாகிய நகாராதி ஐந்தெழுத்தாலாகிய மந்திரத்தின் நிலையை நுணுகி நுணுகி நோக்கினால், அடி அண்ணம், கண்டம் (மிடறு) இருதயம், உந்தி, மூலம் என்பவற்றில் முறையாகப் போய், முதல் நிலையாய் நிற்கும். அந்நிலையே 'நாதம்' எனப்படுகின்றது. அதனை 'அகரம்' என வழங்குவர். இனி அது தியானிக்கப்படும் நிலையில் புருவநடு, நெற்றி, உச்சி அதற்கு மேலும் செல்வனவாகிய நிராதாரம், மீதானம் ஈறாகிய ஐந்திடத்திலும் பொருந்தும்.*

**குறிப்புரை :-** *எல்லாச் சொற்களுமே ஒருவன் தன் செவிக்கும் பிறர் செவிக்கும் கேட்கும்படி சொல்லும்பொழுது பல், இதழ், நா, அண்ணம் முதலியவற்றின் முயற்சியால் பிராண வாயுவோடு கூடிப் பருமையாய் வெளிப்பட்டு வைகரி வாக்காய் நிகழும். இவ்வாறாக மந்திரங்களை உச்சரித்தல் 'வாசகம்' எனப்படும். தன் செவிக்குக்கூடக் கேட்காதபடி மெல்ல உச்சரிக்கும் பொழுது 'அடி, அண்ணம், கண்டம்' என்னும் இடங்களில் மத்திமை வாக்காய் நிகழும். இவ்வாறாக மந்திரங்களை உச்சரித்தல் 'உபாஞ்சு' எனப்படும். இவ்வாறு உச்சரித்தலே இல்லாமல் பொருள்கள் கருத்தளவாய் நிற்கும் பொழுது உந்தியிலும் பைசந்தி வாக்காய் நிற்கும். கருத்தளவாய் நிற்க மந்திரங்களை எண்ணுதல் 'மானதம் எனப்படும். இவற்றிலும் நுண்ணிதாய்க் காரண நிலையில் நிற்கும் பொழுது மூலா தாரத்தில் சூக்குமை வாக்காய் நிற்கும். அந்நிலையே சிறப்பாக, 'குண்டலி சத்தி' எனப்படுகின்றது. இந்நிலைதான் ஐந்தெழுத்து மந்திரத்திற்கும் உள்ளது. ஆயினும், புருவ நடுமுதல் மீதானம் ஈறாகத் தியானப் பொருளாய் வியாபித்து நிற்றல் ஐந்தெழுத்து மந்திரத்திற்கன்றிப் பிற சொற்களுக்கில்லை. இச்சிறப்பை விளக்குதற் பொருட்டே முதற்கண் அனைத்துச் சொற்களும் நால்வகை வாக்காய் நிகழுமாற்றை எடுத்துக் கூறினார். ஆகவே அது ஞாபக மாத்திரையேயாம். புருவ நடு முதலாக மேற்செல்லுதல் எல்லாம் தியானமே யாதலின் அதனைக் கூறிற்றிலர். இலிங்கம், அதனை அடுத்துள்ள மூலத்தைக் குறித்தது. 'அவ்வாய்' ஆம், என முடிக்க. துண்டம் - மூக்கு. அஃது அதன் அடியாகிய புருவ நடுவைக் குறித்தது. மத்தகம் - தலை. நெற்றியையும் சுட்டுதற்கு, "இருமத்தகம்" என்றார். செல்லல் - அதற்குமேல் செல்லல். 'செல்லல்' என்னும் தொழிற் பெயர் தொழிலாகு பெயராய்ச் செல்லும் இடங்களைக் குறித்தது.*

*இதனால், ஐந்தெழுத்து மந்திரம் பிற சொற்களின் வேறுபட்டதாதல் விளக்கப்பட்டது.*

**2658.** **கிரணங்கள் ஏழும் கிளர்ந்தெரி பொங்கிக்**
**கரணங்கள் விட்டுயிர் தான்எழும் போதும்**
**மரணங்கை வந்துயிர் மாற்றிடும் போதும்**
**அரணங்கை கூட்டுவது அஞ்செழுத்தாமே.** **5**

---

*2658.* **தெளிவுரை :-** *"தோற்றம் உண்டேல் மரணம் உண்டு" (தி.7 ப.7 பா.2) என்றபடி பிறந்த உயிர்கள் அனைத்திற்கும் உள்ள இயற்கை நியதியின்படி இறப்பை எய்திய மக்களின் உடம்பை உறவினரும், ஊராரும் முறைப்படி எரியூட்டுவார்கள். அவ் எரி, ஏழுவகையான கதிர்கள் மிக்குத் தோன்றும் வகையில் ஓங்கி எரியும். அப்பொழுது தான் பருவுடம்பில் எஞ்சி நின்ற 'தனஞ்சயன்' என்னும் காற்று முதலிய சில கருவிகள் அவ்வுடம்பை விட்டு நீங்குவனவாகும். அவையும் நீங்க உயிர் நுண்ணுடலோடு வினைக்கீடாகத் தான் செல்ல வேண்டிய இடம் நோக்கிச் செல்லும். இவ்வாறான இயற்கை இறப்புவரினும், உயிர் செய்த பெருந்தீவினை காரணமாக இடையே திடீர் செயற்கை இறப்பு வரினும் எப்பொழுதும் உயிருக்குப் பாதுகாவலைத் தருவது திருவைந்தெழுத்து மந்திரமே.*

**குறிப்புரை :-** *கிரணங்கள் ஏழு - ஊதா, கருநீலம், நீலம், பச்சை, மஞ்சள், சிவப்பு, செம்மஞ்சள் என்னும் ஒளிக்கதிர்ப் பிரிவு. கரணங்கள் - அக புறக்கருவிகளோடு கூடிய பருவுடல். 'நெருப்பிலும், ஞாயிற்றிலும் ஏழுவகையான ஒளிக்கதிர்கள் உள்ளன' எனவும், 'அந்த ஏழு கதிர்களே பகலவன் தேரில் ஏழு குதிரைகளாக உருவகிக்கப்பட்டன' எனவும் இக்கால அறிவியலார் கூறி விளக்குவர். அதனை நாயனார் முன்பே, "கிரணங்கள் ஏழும் கிளர்ந்தெரி பொங்கி" எனக் கூறினார். கரணங்கள் - கருவிகள். "விட்டு" என்னும் செய்தென் எச்சம் எண்ணின்கண் வந்தது. "எரி பொங்கி" என்றதனால் 'இயற்கை மரணம்' என்பது போந்தமையின், பின்பு "மரணம்" என்றது, அகால மரணத்தையாயிற்று. இரு நிலைகளிலும் அஞ்செழுத்துப் பாதுகாவலைத் தருதலாவது, உயிர் சுவர்க்க நரகங்களில் புகாது சிவலோகத்தை அடைவித்தல். சிவலோகத்தை அடைந்த உயிர் ஏனை உயிர்கள் போல மீள இவ்வுலகத்திலே வந்து பிறத்தல் நியதியன்று. பிறக்கினும் ஞானத்திற்கு உரியதாகவே பிறக்கும். 'அந்நிலையைத் தருவது ஐந்தெழுத்து' என்றபடி.*

*இதனால், பிறப்பை நீக்குவது ஐந்தெழுத்து மந்திரம் ஆதல் கூறப்பட்டது.*

*2659.* **தெளிவுரை :-** *'ஞாயிறும், திங்களும் எழுகின்ற காலை, மாலை என்னும் வேளைகளில் சிறப்பாகக் கணிக்கத் தக்க மந்திரம் இது' என்பதை அக்காலங்களில் மந்திரக் கணிப்புச் செய்வோரில் பெரும்பாலோர் அறிந்திலர். (ஆகவே அவர்கள் காயத்திரி மந்திரத்தையே அவ்வேளைகளில் கணிக்கின்றனர். ஆகவே) 'சந்தியா தேவதை' எனப்படும் சத்திக்கு மிகவும் விருப்பத்தைத் தருவது திருவைந்தெழுத்து மந்திரமே என்பதை அறிந்து அதனை அக்காலங்களில்*

**2659.** ஞாயிறு திங்கள் நவின்றெழு காலத்தில்
ஆயுறு மந்திரம் ஆரும் அறிகிலர்
சேயுறு கண்ணி திருவெழுத் தஞ்சையும்
வாயுற ஓதி வழுத்தலும் ஆமே. **6**

---

*வாசகம் முதலிய மூவகையானும் ஓதுதலாகிய சிறப்பு அவர்கட்குக் கூடுமோ!*

***குறிப்புரை :-*** *'கூடாது' என்பதாம். நவிலுதல் - முறைப்படி அமைதல். ஞாயிறு எழும் காலம் காலை வேளையாதல் வெளிப்படை. 'திங்கள் எழும் காலம் ஞாயிறு மறையும் நேரம்' என்றே கொள்ளப்படும். இவையிரண்டும் கூறவே, இனம் பற்றி நண்பகலும் கொள்ளப்படும். இவையே முப்போதுகளாம் 'சந்தியா காலம்' எனப்படும் ஆசாரியராயினார் நள்ளிரவிலும் வழிபடுவர். அது சிறுபான்மை.*

*"செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்(கு)*
*அந்திஉள் மந்திரம் அஞ்செ ழுத்துமே"* ***- தி.3 ப.22 பா.2***

*என்னும் ஞானசம்பந்தர் திருமொழியை இங்கு உடன் வைத்து உணர்க. ஆய் - ஆய்வு; முதனிலைத் தொழிற்பெயர். சேயுறு கண் - செவ்வரி பொருந்திய கண். மந்திரங்களைக் கணிக்கும் முறை 'வாசகம், உபாஞ்சு, மானதம்' என மூன்று என்பதை மேல், 'வாயொடு கண்டம்' எனப் போந்த மந்திர உரையிற் காண்க. (பா. 2657) "வழுத்தலும்" என்னும் உம்மை சிறப்பு, ஈற்றில் உள்ள ஏகாரம் எதிர்மறை வினாப்பொருட்டு.*

*"ஞாயிறு, திங்கள்" என்பவற்றை வல இட உயிர்ப்புக்களாகக் கொண்டு, 'அவற்றை முறையாக இயக்கித் திருவைந்தெழுத்தைக் கணிப்பினும், அம்ச மந்திரத்தைக் கணித்தலோடொப்பதே' என உரைத்து, "ஊனில் உயிர்ப்பை" (தி.3 ப.22 பா.3) எனத் தொடங்கும் ஞானசம்பந்தர் திருப்பாடலை மேற்கோளாகக் காட்டுவர்.*

*இவ்விருபொருளையும் இம்மந்திரத்திற்குப் பொருளாகக் கொள்க.*

*ஞாயிறு - வலப்பக்கம் நிகழும் உயிர்ப்பு*

*திங்கள் - இடப்பக்கம் நிகழும் உயிர்ப்பு. ஹம்சம் என்னும் அசபையில் ஹம் என்பது விடுப்பதும், ஸம் என்பதும் உட்கொள்வதாகவும் கொள்வர்.*

***2660. தெளிவுரை :-*** *சிவகுரு உபதேசித்த மொழி வழியில் நின்று, பிறப்பிற்கு ஏதுவான வழியையே கூறும் சமய நூல்களைக் கைவிடவும், மற்றும் பிறவி வரும் வழிகெட்டுப் போகும்படி அதனைப் போக்கவும் வன்மை பெற வேண்டுவார்க்கு அவ்வன்மையைத் தருவதாகிய திருவருளாகிய வழியைக் காட்டுவதும் திருவைந்தெழுத்து மந்திரமே யாகும்.*

**2660.** குருவழி யாய குணங்களில் நின்று
கருவழி யாய கணக்கை அறுக்க
வருவழி மாய மறுக்கவல் லார்கட்கு
அருள்வழி காட்டுவது அஞ்செழுத் தாமே. 7

**2661.** வெறிக்க வினைத்துயர் வந்திடும் போது
செறிக்கின்ற நந்தி திருவெழுத் தோதும்
குறிப்பது உன்னில் குரைகழல் கூட்டும்
குறிப்பறி வான்தவம் கோன்உரு வாமே. 8

---

***குறிப்புரை :-*** *குரு வழி - குரு காட்டிய வழி. அஃது உபதேச வடிவினதாம். குணம் - நற்பண்பு; என்றது நல்லொழுக்கத்தை. குணத்தைத் தருவதனை, "குணம்" என்றார். 'நின்று அறுக்கவும், மறுக்கவும் வல்லார்' என்க. கணக்கு - நூல். "வல்லார்" என்றது, 'வன்மையை வேண்டுவார்' என அக்காரணத்தின்மேல் நின்றது. அருள் வழி - அருளாகிய வழி. 'அதனைக் காட்டுவது அஞ்செழுத்து' எனவே, பிறவெல்லாம் அருள் அல்லாத மருள் வழியையே காட்டுதல் பெறப்படும்.*

*இதனால், 'திருவருளைப் பற்றச்செய்வது திருவைந்தெழுத்தே' என்பது கூறப்பட்டது.*

*2661.* ***தெளிவுரை :-*** *செயலற்று நிற்கும்படி வினையின் பயனாகிய துன்பங்கள் வந்து விளையும்பொழுது அவற்றால் சோர்வுறாதபடி உறுதியைத் தருகின்ற திருவைந்தெழுத்தை ஓதும் கருத்தைக் கொண்டால் அக்கருத்து அதனை உடையவனைச் சிவனது திருவடியில் சேர்க்கும். மேலும் அக்கருத்துடையவன் செய்யும் செயல்கள் சிவனது உருவேயாகும்.*

***குறிப்புரை :-*** *வெறித்தல் - வெறிச்சோடிப் போதல், செறிதல், அடங்குதல் ஆதலின், செறித்தல் அடக்குதல். அஃதாவது, துயரத்தை வெளிக்காட்டாது இருத்தல். குறிப்பு - கருத்து.*

*2662.* ***தெளிவுரை :-*** *திருவைந்தெழுத்து வழியாக மேகங்கள் தவழும் வெள்ளி மலையில் வீற்றிருக்கின்ற இறைவனை நெஞ்சால் நினைதலும், வாயால், 'தலைவனே' என்று சொல்லி வாழ்த்துதலும், இறக்கும்பொழுது, 'உனது திருவடியே புகல்' என்று சொல்லியும் நின்றால் அவ்விறைவனது அருளை எளிதில் பெறலாம்.*

***குறிப்புரை :-*** *"அஞ்சில்" என்பதில் இல், ஏதுப் பொருட்கண் வந்த ஐந்தாம் உருபு. இதனை முதலிற் கொள்க. இதற்குப் பிறவாறு உரைப்பன இவ்விடத்திற்கு இயையா. "வாயால்" என்பதனோடு இயைய. "நெஞ்சால்" என உருபு விரிக்க.*

**2662.** நெஞ்சு நினைத்து தம் வாயாற் பிரான்என்று
துஞ்சும் பொழுதுன் துணைத்தாள் சரண்என்று
மஞ்சு தவழும் வடவரை மீதுறை
அஞ்சில் இறைவன் அருள்பெற லாமே. **9**

**2663.** பிரான் வைத்தஐந்தின் பெருமை உணராது
இராமாற்றம் செய்வார்கொல் ஏழை மனிதர்
பராமுற்றும் கீழொடு பல்வகை யாலும்
அராமுற்றும் சூழ்ந்த அகலிடம் தானே. **10**

---

*"என்று" இரண்டின் பின்னும் வருவிக்கப்பட்ட சொல்லெச்சங்கள் காரணப் பொருளவாய் 'பெறலாம்' என்பதனோடு முடிந்தன.*

*இதனால், திருவைந்தெழுத்தால் சிவனது திருவருளை பெறுதல் எளிதாதல் கூறப்பட்டது.*

*2663. தெளிவுரை :- இறைவன் உயிர்கள் உய்தியின் பொருட்டு உண்டாக்கி வைத்துள்ள சாதனம் திருவைந்தெழுத்து மந்திரம். அதுவே அவனது பேராற்றலாகிய பேரருட் சத்தியும், குண்டலினியாதல் பற்றி 'பாம்பு' என உருவகித்துக் கூறப்படும் சுத்த மாயையால் பலவகையாலும் வியாபிக்கப்பட்டு விளங்கும். அசுத்த மாயையும் பல புவனங்களும் ஆகும். ஆகவே, அதன் பெருமையை உணரமாட்டாத எளிய மக்கள் தங்கள் அஞ்ஞானமாகிய இருளைப் போக்கிக் கொள்ள வல்லவராவரோ!*

*குறிப்புரை :- 'ஆகார்' என்பதாம். குண்டலினி - வளைந்திருப்பது; அஃதாவது, அனைத்தையும் தன்னுள் அடக்கிக் கொண்டு அவற்றைச் சூழ்ந்திருப்பது. அது சுத்த மாயையே. அது நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகளாய் விரிந்து அனைத்தையும் உள்ளடக்கி நிற்பதை குறிக்கவே சிவாலயங்களில் சிவலிங்கத்தின் மேல் பாம்பு ஒன்று ஐந்து தலைகளுடன் படம் எடுத்துக் கவிந்திருப்பதாக வைக்கப்படுகின்றது. இனிப் பூமியை அதன் அடியில் 'ஆதி சேடன்' என்னும் பாம்பு தாங்குவதாகக் கூறப்படுவதும், சுத்த மாயை எங்கும் வியாபித்துள்ளதைக் குறிப்பதே. திருமால் பாம்பணையிற் பள்ளி கொண்டிருப்பதாகக் கூறுவதும் பழமையாக இந்தக் கருத்து இந்நாட்டில் பலர்க்கும் பொதுவாய் இருந்ததைக் காட்டும். ஆயினும் பிற்காலத்தில் மாயோன் சமயம் சைவ தத்துவத்தை விட்டுச் சாங்கிய தத்துவத்தை ஏற்றுக் கொண்டது. இங்குப், "பல்வகையாலும்" என்றது, சுத்த மாயை நால்வகை வாக்குகளாயும், சிவம், சத்தி முதலிய சுத்த தத்துவங்களாயும், நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகளாயும் விரிந்து நிற்றலை, இவற்றுள் நால்வகை வாக்குக்களே*

*சிறப்புடையனவும் அவற்றுள்ளும் மந்திரங்களே சிறப்புடையனவும் ஆதலின், 'மந்திரங்களில் தலையானதாகிய திருவைந்தெழுத்து மந்திரமே அனைத்துமாய் உள்ளது' என்றும், இதனை உணராதார்க்கு ஞானம் உதியாது ஆதலின், 'அவர் அஞ்ஞானத்தைப் போக்கிக் கொள்ள வல்லவராவரோ' என்றும் கூறினார். இரா - இரவு; இருள். பரா - பரா சத்தி. கீழ் - கீழது; அதோ மாயை; அசுத்த மாயை, பரா முற்றும், கீழொடு, அராப் பல்வகையாலும் சூழ்ந்த அகலிடம் முற்றும் தானே' என இயைக்க. தானே - அத்திருவைந்தெழுத்தே.*

*இவ்வாறு திருவைந்தெழுத்தின் பெருமையை பொதுப்படக் கூறி, தூல நிலை முடிக்கப்பட்டது.*

## 6. பஞ்சாக்கரம் - சூக்குமம்

*திருவைந்தெழுத்தின் தூல நிலை பற்றிச் சில கூறியபின் அதன் சூக்கும நிலை பற்றிச் சில கூறுகின்றார். இது ஐந்து மந்திரங்களையுடையது. (பதிப்புக்களில் பாடல்கள் பிறழ்ந்து காணப்படுகின்றன).*

**2664.** எளிய வாதுசெய் வார்எங்கள் ஈசனை
ஒளியை உன்னி உருகும் மனத்தராய்த்
தெளியவே ஓதின் சிவாயநம என்னும்
குளிகையை இட்டுப்பொன் னாக்குவான் கூட்டையே. **1**

---

*2664. தெளிவுரை :- எவராலும் மறுக்க ஒண்ணாத உண்மையை எளிய மக்கள் மிக எளிதாக உடன்படாது மறுத்து வாதிடுவர். அவர் அவ்வாதத்தினை விட்டு அஞ்ஞான இருளை அகற்றும் ஞான ஒளியாகிய எங்கள் சிவபெருமானை நினைந்து உருகுகின்ற மனத்தை உடையவராய்க் கணிப்பார்களாயின். அப்பெருமான் அந்த, 'சிவாயநம' என்னும் குளிகையினால் அவர்களது உயிரை மட்டுமன்று; உடம்பாகிய செம்பையே பொன்னாக்கி விடுவான்.*

*குறிப்புரை :- 'அப்பேற்றினை அவர்கள் பெறுகின்றிலர்' என்பது குறிப்பெச்சம். குளிகை பிற உலோகங்களைப் பொன்னாக்கும் இரசமணி. இதனைச் செய்யும் முறையை அக்காலத்தில் சித்தர்கள் அறிந்திருந்தனர். பிற உலோகங்களைப் புடம் இட்டு உருக்கிப்பதம் அறிந்து இக்குளிகையைச் சேர்த்தால், அந்த உலோகங்களில் உள்ள வேற்றுப் பொருட்கள் நீங்கி அவை பொன்னாய் ஒளிரும். கூடு - உடம்பு. "கூட்டையே" என்னும் தேற்றேகாரத்தால் உயிரை அதற்கு முன்பே பொன்னாக்குதல் பெறப்பட்டது. உயிர் ஆணவத்தால் அறிவையிழந்து களிம்பினால் ஒளியிழந்து நிற்கின்ற செம்புபோல் உள்ளது. திருவைந்தெழுத்துக் கணிப்பினால் ஆணவம் நீங்கி விட்டால், இரச குளிகையால் களிம்பு நீங்கிச் செம்பு பொன்னாய் ஒளிர்வது போல உயிர் சிவமாய் விளங்கும். உயிர் சிவமாயின், அதன் உடம்பும் சிவகாயமேயாம். இதனை மேலேயும் சில இடங்களில் கூறினார். (பா.2647 முதலியன)*

*மேல், "நகார முதலாகும்" (பா.2655) என்றதனை, 'ஆகி உதித்து, ஏறி ஆகும்' என்றமையால் நகாரம் முதலாக அமைவது 'தூலபஞ்சாக்கரம்' என்பதும், இங்கு, 'உன்னி உருகும் மனத்தராய்த் தெளியவே ஓதின் கூட்டையே பொன்னாக்குவன்' என்றதனால், சிகாரம் முதலாக அமைவது 'சூக்கும பஞ்சாக்கரம்' என்பதும் போந்தன.*

*இதனால் சூக்கும பஞ்சாக்கரத்தின் சிறப்புக் கூறப்பட்டது.*

*"சித்தம் ஒருக்கிச் சிவாய நம என்*
*றிருக்கினல்லால்..............................*

**2665.** தெள்ளமு தூறச் சிவாய நமவென்று
உள்ளமு தூற ஒருகால் உரைத்திடும்
வெள்ளமு தூறல் விரும்பிஉண் ணாதவர்
துள்ளிய நீர்போற் சுழல்கின்ற வாறே. **2**

---

*அத்தன் அருள்பெற லாமோ, அறிவிலாப்*
*பேதை நெஞ்சே"* - ***தி.4 ப.95 பா.5***

*"உனதருளால் - திருவாய்ப் பொலியச்*
*சிவாய நம என்று நீறணிந்தேன்.*
*தருவாய் சிவகதி நீ பாதிரிப்புலியூர் அரனே"* ***- தி.4 ப.95 பா.6***

*"நானேயோதவம் செய்தேன், சிவாயநம எனப்பெற்றேன்"*
***- தி.8 திருஏசறவு, 10***

*எனத் திருமுறைகளில் இச்சூக்கும பஞ்சாக்கரம் சிறுபான்மையாகச் சில இடங்களில் எடுத்தோதப்படுதல் காண்க.*

***2665. தெளிவுரை :-*** *புறத்தில் தெளிவான அமுதமான கண்ணீர் சுரந்து பாயவும், அகத்தில் அன்பு பெருகவும் 'சிவாயநம' என்று ஒருமுறை சொல்வதால் உண்டாகும் இன்பமாகிய அமுத வெள்ளத்தை உண்ண விரும்பாதவர்கள் பெருங்காற்றில் அகப்பட்ட மழைத்துளிபோல அடையும் இடம் அறியாது அலமருதல் இரங்கத்தக்கது.*

***குறிப்புரை :-*** *"உள் அமுது" என்றது அன்பினை. "உள் அமுது ஊற" என்பதையும் "தெள்ளமுதூற" என்பதனோடு இயைக்க. உரைத்திடும் அமுது - உரைத்தலால் விளையும் அமுதம். 'வெள்ள அமுது' என்பதில் அகரம் தொகுத்தலாயிற்று. ''விரும்பி உண்ணாதவர்'' என்றாராயினும் 'உண்ண விரும்பாதவர்' என்றலே கருத்தென்க. "துள்ளிய நீர்" என்பதற்கு ஆற்றல் பற்றி இவ்வாறு உரைக்கப்பட்டது, இறுதியில் 'இரங்கத் தக்கது' என்னும் சொல்லெச்சம் வருவிக்கப்பட்டது.*

*இதனால், பஞ்சாக்கரத்தைச் சூக்குமமாக வைத்து ஓதுவார் சிறந்த பயனை அடைதல் எதிர்மறை முகத்தால் கூறப்பட்டது.*

***2666. தெளிவுரை :-*** *சூக்கும பஞ்சாக்கரத்தில் சிகாரம் முதலிய ஐந்தெழுத்துக்கள் முறையே சிவம், அருட்சத்தி, உயிர், திரோதான சத்தி, ஆணவ மலம்' என்னும் ஐந்தையும் குறிக்கும். (மாயேயம் மாயையில் அடங்க, மாயை கன்மங்கள் திரோதாயி வழிப்பட்டு அதனுள் அடங்க, திரோதாயியைக் குறிக்கும் நகாரம் ஆணவம் ஒழிந்த மற்றை நான்கு மலங்களையும் குறிக்கும்). ஆகச் சீவன் ஐந்து மலங்களிலும் நீங்கிச் சிவம் சத்திகளோடே சேர்ந்திருக்குமாயின், பயனில்லாத செயல்களில் செலுத்துகின்ற பாசங்கள் சீவனைச் சாரமாட்டா.*

**2666.** **சிவன் சத்தி சீவன் செறுமலம் மாயை**
**அவம் சேர்த்த பாசம் மலம்ஐந் தகலச்**
**சிவன்சத்தி தன்னுடன் சீவனார் சேர**
**அவம் சேர்த்த பாசம் அணுககி லாவே.** **3**

---

*குறிப்புரை :- திரோதான சத்தி மலங்களைச் செயற்படுத்துதல் பற்றி அதுவும் 'ஒரு மலம்' என்று உபசரித்துக் கூறப்படும். மலத்தைக் கெடுத்தலே அதன் குறிக்கோள் ஆதல் பற்றி அதனை, "செறு மலம்" என்றார். 'மலத்தைக் கெடுக்கின்ற மலம்' என்பது அதன் பொருள். மாயையாகிய அவத்தினைச் சேர்த்த பாசம் ஆணவம். உண்மை விளக்கம். சிவப்பிரகாசம் ஆகிய நூல்களிலும் இவ்வாறே.*

*"சிவன், அருள், ஆவி, திரோதம், மலம் ஐந்தும்*
*அவன்எழுத் தஞ்சின் அடைவாம்"* **- உண்மை விளக்கம் - *41***

*எனவும்*

*"திருவெழுத் தஞ்சில் ஆன்மாத்*
*திரோதம், மாசு, அருள், சிவம் - சூழ்*
*தர, நடு நின்றது"* **- சிவப்பிரகாசம் - *91***

*எனவும் கூறப்படுதல் காண்க. சிவப்பிரகாசச் செய்யுளில், ஆன்மா நடு நின்றமை கூறப்பட்டது. முதற்கண் "பாசம்" என்பதன்பின் 'இவற்றில்' என்பது வருவிக்க. இவற்றைக் குறிப்பன சிகாரம் முதலிய எழுத்துக்கள்' என்பது. மேமல் அவற்றைக் கூறியதனானே அமைந்தது.*

*"சீவனார்" என உயர்த்துக் கூறியது. பாசத்துள் அகப்பட்டுத் துன்புறுதலைக் குறிக்கும் இழித்தற் குறிப்பு. சீவனார் மலம் ஐந்து அகல, சிவம் சத்தி தன்னுடன் சேர' என்றது அதிசூக்கும பஞ்சாக்கரத்திற் செல்லல் வேண்டும் குறிப்பினை உட்கொண்டது. "உடன்" என்பதைச் சிவனுடன் கூட்டுக. "பதி அணுகின் பசு பாசம் நில்லாவே" (பா.114) என முதலிலேயும் கூறினார்.*

*திருவைந்தெழுத்தை நகாரம் முதலாகச் சொல்லுமிடத்து ஒரு தொடர் மொழியாய் நின்று, 'சிவனுக்கு வணக்கம்' என்னும் ஒரு பொதுப் பொருளையே தந்து நிற்றலால் 'தூல பஞ்சாக்கரம்' எனச் சொல்லப்பட, சிகாரம் முதலாகச் சொல்லுமிடத்து ஒவ்வோர் எழுத்தும் ஒவ்வோர் நுண்பொருளைக் குறிக்க, உயிர் பாசங்களின் நீங்கித் திருவருள் வழியாகச் சிவத்தை அடைதல் வேண்டும் என்னும் சிறப்புப் பொருளைக் குறித்தலால் 'சூக்கும பஞ்சாக்கரம்' எனப்படுகின்றது என்க.*

*தூல பஞ்சாக்கரம் சமய தீக்கையிலும், சூக்கும பஞ்சாக்கரம் விசேட தீக்கையிலும் உபதேசிக்கப்படும். விசேட தீக்கை வேண்டுவோர் உலகியலில் ஓரளவேனும் பற்றுவிட்டவராய் இருத்தல் வேண்டும்.*

**2667.** சிவனரு ளாய சிவன்திரு நாமம்
சிவனருள் ஆன்மாத் திரோதம் மலமாய்ச்
சிவன்முத லாகச் சிறந்து நிரோதம்
பவம தகன்று பரசிவ னாமே. **4**

---

*"அந்தியும் நண்பகலும் அஞ்சு பதம் சொல்லி" (தி.7 ப.83 பா.1)*

*என்னும் திருமுறைத் திருமொழியுள் அஞ்செழுத்தை, "அஞ்சு பதம்" என்றது, சூக்கும நிலை பற்றி எனக் கொள்ளுதல் உண்டு.*

*இதனால் சூக்கும பஞ்சாக்கரத்தின் உட்கிடைப் பொருள் உணர்த்தப்பட்டது.*

*இதன் பின் பதிப்புக்களில் காணப்படும் "ஓதிய நம்மலம் எல்லாம் ஒழித்திட்டு" என்னும் மந்திரமும், "அருள்தரும் ஆயமும்" என்னும் மந்திரமும் அப்பால் இரு மந்திரங்களையடுத்துள்ள, "நமவென்னும் நாமத்தை" என்னும் மந்திரமும் அடுத்த அதிகாரத்தில் இருத்தற்குரியன.*

*2667.* **தெளிவுரை :-** *(சிவனுடையனவாகச் சொல்லப்படுகின்ற பொருள்கள் அனைத்தும் அவனது அருளேயாகலின்) அவனது திருப்பெயராகிய திருவைந்தெழுத்தும் அவனது அருளேயாகும். அதில் சிகாரம் முதலிய எழுத்துக்கள் மேற்கூறியவாறு, 'சிவன், அருட்சத்தி, சீவான்மா, திரோதான சத்தி, ஆணவ மலம்' என்பவற்றைக் குறித்து நிற்குமிடத்து அவ்வெழுத்துக்கள் சிகாரம முதலாக நின்று முத்திக்கு வழியாகும். (ஆகவே 'நகாரம் முதலாக நிற்பின் அஃது அத்தன்மையது ஆகாது' என்றதாயிற்று) அதனால், சிகாரம் முதலாகக் கொண்டு கணிக்கின், அவ்வாறு கணிப்பவன் பிறவியினின்றும் நீங்கிச் சிவனாவான்.*

**குறிப்புரை :-** *முன் இரண்டடிகளால், முன் மந்திரத்தில் கூறியதனையே அனுவதித்துக் கூறினார். அது முத்தி நெறி ஆதலைக் கூறுதற் பயன் நோக்கி, உண்மை விளக்க (வெண்பா, 41, 42, 43)த்திலும்,*

*"நம்முதலா ஓதில்அருள் நாடாது, நாடும்அருள்*
*சிம்முதலா ஓதுநீ சென்று"*

*"அண்ணல் முதலா அழகார் எழுத்தைந்தும்*
*எண்ணில், இராப்பகல்அற் றின்பத்தே - நண்ணி*
*அருளா னதுசிவத்தே ஆக்கும் அணுவை,*
*இருளா னதுதீர இன்று"*

*"ஆதி, மலம்இரண்டும் ஆதியா ஓதினால்*
*சேதியா மும்மலமும் தீர்வாகா"*

*என்றும், (ஆதி, திரோதான சத்தி) சிவப்பிரகாச (செய்யுள்-92)த்தில்,*

**2668.** நமாதி நனாதி திரோதாயி யாகித்
தமாதிய தாய்நிற்கத் தான்அந்தத் துற்றுச்
சமாதித் துரியந் தமதாகம் ஆக
நமாதி சமாதி சிவஆதல் எண்ணவே. **5**

---

*"ஆசுறு திரோதம் மேவா(து) அகலுமா சிவம்முன் னாக*
*ஓசைகொள் அதனில் நம்மேல் ஒழித்(து) அருள்ஓங்கும்"*

*என்றும், திருவருட் பயனில் (குறள் - 85, 87),*

*மாலார் திரோதம் மலம் முதலாய் மாறுமோ,*
*மேலாசி மீளா விடின்*

*சிவம் முதலே ஆமாறு சேருமேல் தீரும்*
*பவம்; இதுநீ ஓதும் படி.*

*என்றும், எல்லா இடத்திலும் இவ்வாறே கூறப்பட்டன.*

*'சிறந்து' என்னும் செய்தென் எச்சம் காரணப் பொருளில் வந்தது. நிரோதம் - நீக்கம்; பாச நீக்கம். நிரோதம் ஆம்' எனப் பயனிலை வருவித்து முடிக்க. "அகன்று ஆம்" என்பதற்கு சீவன் என்னும் எழுவாய் வருவிக்க.*

*இதனால் சூக்கும பஞ்சாக்கரம் முத்தி நெறியாதல் கூறப்பட்டது.*

*2668. தெளிவுரை :- நமாதி - 'நம' என்பதை முதலாக உடைய தூல பஞ்சாக்கரம். திரோதாயி ஆகி நனவாதி - திரோதான சத்தி வசப்பட்டதாய்ச் சகல கேவலங்களில் நிகழும் சாக்கிரம் முதலிய அவத்தைகளை உண்டாக்கும். (இனி) சமாதித் துரியம் தமது அகம் ஆக - நின்மலாவத்தையே சீவர்களுக்கு உடம்பாதற் பொருட்டு தம் ஆதியாய் நிற்க - அப்பஞ்சாக்கரம் சிவன் சத்திகளது வசமாதற் பொருட்டு தான் அந்தத்து உற்று முன் சொன்ன 'நம' என்பது ஈற்றில் பொருந்த நம ஆதி சமம் சிவ ஆதி ஆதல் எண்ண - 'நம' முதலுக்கு ஈடாகச் 'சிவ' முதல் ஆதலைக் கருதுக.*

*குறிப்புரை :- 'நனவாதி' என்பது அகரம் தொக "நனாதி" என்று ஆயிற்று. திரோதாயி ஆதல் திரோதாயி வசம் ஆதல். அஃதாவது, பந்தத்தைத் தருவது ஆதலாம். நின்மலாவத்தை 'சமாதித் துரியம்' எனப் பின்னர் வருதலால், முதற்கண் உள்ள நனவாதிகள் சகலத்திலும் கேவலத்திலும் நிகழ்வனவாம் 'நனவாதியைத் தரும்' என ஒரு சொல் வருவித்து முடிக்க. "தாமதியது" என்பதில் "தம்" என்றது சிவனையும், சத்தியையும் அங்கு "ஆதியது" என்றது, முதன்மையையுடையது வசப்பட்டது என்றவாறு. "நிற்க" என்பது, "ஆக" என்பதனோடு முடிய, "ஆக" என்பது "ஆதல்" என்பதனோடு முடிந்தது. "நிற்க" என்பதற்கு நமாதியைச் சுட்டும் 'அது' என்பது வருவிக்க "தான்" என்றது, முதற்கண் கூறிய நம ஆதியதை. தான்*

*"அந்தம் உற்று" என்பதில், "உற்று" என்பதை 'உற' எனத் திரித்து, அத்தொடரை ஈற்றடியின் முதலிற் கூட்டுக. தமது - சீவர்களது. ஆகம் - உடம்பு. சமாதி - பரம்பொருளோடு ஒன்றுதல். அஃது அத்தன்மையதாகிய நின்மலாவத்தையைக் குறித்தது. அந்நிலையில் திருவருளாய் நிற்றலால் "தமது ஆகம் சமாதித் துரியம் ஆக" என்றார் 'சிவ ஆதி, நம ஆதி சமம் ஆதல் எண்ண' என மாற்றியுரைக்க. 'சமம்' என்பது ஈற்று அம்முத் தொகநின்றது. சமம் ஆதல், ஈடாதல். "எண்ண" என்பது அகர ஈற்று வியங்கோள் 'எண்ணுக' என்றது 'ஆய்ந்தறிக' என்றதாம்.*

*அவத்தை வேறுபாடுகளை முன் தந்திரத்தில் காண்க.*

*இதனால், தூல பஞ்சாக்கரம் சகல கேவலங்களாய், நிற்க, சூக்கும பஞ்சாக்கரம் சுத்தத்திற்கு ஏதுவாதல் கூறி முடிக்கப்பட்டது.*

## 7. அதி சூக்கும பஞ்சாக்கரம்

*ஐந்தெழுத்து மந்திரத்தின் தூல சூக்கும நிலைகளைப் பற்றிச் சில கூறிய பின் அதிசூக்கும நிலை பற்றிச் சில கூறுகின்றார். இது மூன்று மந்திரங்களையுடையது.*

**2669.** **ஓதிய நம்மலம் எல்லாம் ஒழித்திட்டுஅவ்**
**ஆதி தனைவிட் டிறைவன் அருட்சத்தி**
**தீதில் சிவஞான யோகமே சித்திக்கும்**
**ஓதும் சிவாய மலம்அற்ற உண்மையே.** **1**

---

*2669. **தெளிவுரை :-** மேல் எல்லாம் சொல்லப்பட்டு வந்த தூலமும், சூக்குமமும் ஆகிய ஐந்தெழுத்துக்களுள் திரோதாயியைக் குறிக்கும் நகாரமும், ஆணவத்தைக் குறிக்கும் மகாரமும் ஆகிய இவ் இரண்டெழுத்துக்களையும் முற்ற நீக்கி, அதனாலே சிவனது 'ஆதி' என்னும் சத்தி அருட் சத்தியாக மாறுவதால் முன்னர்க் குற்றம் அற்ற சிவஞானமும் பின்னர்ச் சிவயோகமும் கிடைக்கும். ஆனால் அவ்வாறு ஓதப்படும், 'சிவாய' என்னும் மூன்றெழுத்தே பாசம் நீங்கிய முத்தி பஞ்சாக்கரம் ஆகும்.*

*குறிப்புரை :- 'இதுவே அதிசூக்கும பஞ்சாக்கரம்' என்பது குறிப்பெச்சம். "ஆதி" என்றது, ஆதியாய் நிற்கும் தன்மையை. 'விட்ட' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'அருட் சத்தியால்' என உருபு விரிக்க. சிவஞானமாவது, சிவனது அறிவு; திருவருள். 'பதிஞானம்' எனப்படுவது இதுவே, பாச எழுத்துக்களை, விடாது ஓதுவதால் பாச ஞானமும், பசுஞானமும் உளவாகும். அவற்றுள்ளும் நகாரத்தை முன் வைத்து ஓதுவதால் பாச ஞானமும், சிகாரத்தை முன் வைத்து ஓதுவதால் பசு ஞானமும் உளவாம்.*

*பாச ஞானமாவது கருவி கரணங்களால் தரப்படும் அறிவு. சிவனையே நினைத்தும், வாழ்த்தியும், வணங்கியும் நிற்பின் அவையெல்லாம் கருவி கரணங்களின் வழிப்பட்டனவேயாகலின் பாச ஞானங்களேயாம். சரியையிலும், கிரியையிலும் இந்நிலையே உளதாகும்.*

*இனி யோகத்தால் கருவி கரணங்கள் அடங்க யோகி தனது அறிவாலே தான் சிவனை அறியுமிடத்து அவனது அறிவே முற்பட்டு நிற்றலால், அச்செயல் பசு ஞானத்தின் வழிப்பட்டதாம். இந்நிலையில் நிற்பவனுக்கு 'எனது' என்னும் புறப்பற்று ஓரளவு நீங்கினாலும், 'யான்' என்னும் அகப்பற்று நீங்குவதில்லை. திருவைந்தெழுத்தைச் சரியையாளன் நகாரம் முதலாகக் கணிப்பான்; கிரியையாளனும், யோகியும் சிகாரம் முதலாகக் கணிப்பர்.*

*யோகத்தால் 'யான்' என்னும் அகப்பற்றும் மெலிவடைந்த பின் ஞான குருவைத் தேடியடைந்து, அவர் ஞான தீக்கை செய்து ஐந்தெழுத்தை இங்குக்*

*கூறியவாறு மூன்றெழுத்தாக வைத்து உபதேசிக்க, பாச ஞான பசு ஞானங்கள் நீங்கிப் பதிஞானம் தோன்ற அதனால் உயிர் பதியைக் கண்டு இன்புறும். இதனையே இங்கு நாயனார் "சிவஞானம் சித்திக்கும்" என்றார். இதனானே பின்னர்த் தசகாரியத்துள் ஒன்பதாவதாகிய சிவயோகம் கூடும் ஆதலின், அதற்குத் தோற்றுவாயாக இங்கு "யோகமே சித்திக்கும்" என்றார். இவ்யோகம் கிரியையின் பின் நிகழ்வதாகிய யோகம் அன்று. தசகாரியத்துள் ஒன்பதாவதாகிய யோகமாம்.*

*மெய்கண்ட தேவரும் இவ்வாறே சிவஞான போதத்தில் எட்டாம் சூத்திரத்தில் முத்தி பஞ்சாக்கர உபதேசத்தை, "தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த" என்றும், ஒன்பதாம் சூத்திரத்தில் "பாசம் ஒருவப் பதி தண்ணிழலாம்" என்றும், "விதி எண்ணும் அஞ்செழுத்தே" என்றும் கூறி, ஒன்பதாம் சூத்திர வார்த்திகத்தில்,*

*"இனி இவ்விடத்தில் சீ பஞ்சாக்கரத்தை*
*விதிப்படி உச்சரிக்க"*

*என்றும் கூறினார். சூத்திரத்தில், "பாசம் ஒருவ" என்றதனால் இங்கு "விதிப்படி" என்றது. பாச எழுத்துக்களை நீக்கி மூன்றெழுத்தாக உச்சரித்தல் என்பது விளங்கிற்று. இதனையே சிவஞான யோகிகள் இவ்விடத்து மாபாடியத்தில், "முத்தி பஞ்சாக்கரம்" என்றும்,*

*"இங்ஙனம் ஆசிரியர் (விதிப்படி என)*
*மாட்டெறிந்ததும் உணராதார்*
*சித்தாந்த வழக்கொடு முரணிக் கூறுவர்"*

*என்றும் கூறினார். முரணிக் கூறுவனவாவன, முத்தி பஞ்சாக்கரத்தை வேறுவேறாகக் கூறுவன. திருவருட்பயனிலும் (குறள். 89)*

*ஆசின் நவா நாப்பண் அடையாது அருளினால்*
*வாசி இடைநிற்கை வழக்கு.*

*என்றே கூறப்பட்டது. சிகாரம் முதலாக ஓதும் பொழுது ஆன்ம எழுத்தாகிய யகாரம் நகாரத்திற்கும், வகர ஆகாரத்திற்கும் இடை நிற்கின்றது. 'அது வேண்டா' என விலக்கப்பட்டது. யகாரத்தை, 'வா, சி' இவற்றின் இடையே நிற்க வைத்து உச்சரித்தல் வழக்கம் எனக் கூறப்பட்டது. அதனால் 'சிவாயசிவ' என்பதே முத்தி பஞ்சாக்கரம் எனக் கொண்ட கொள்கையும் உள்ளது. ஆயினும் மந்திரங்களில் ஓர் எழுத்தே ஒன்றுக்கு மேற்பட்ட முறையில் வருமாயின் அதுவே எழுத்தாக எண்ணப்படுதல் இல்லை. 'சிவாயசிவ' என்பது பார்ப்பதற்கு ஐந்தெழுத்துப் போலத் தோன்றினாலும், பின் வந்த 'சிவ' என்பது முன்பு வந்ததே மீண்டும் வந்தது ஆகலானும் 'முன்பு வந்த எழுத்துக்களின் பொருள் வேறு, பின்பு வந்த எழுத்துக்களின் பொருள் வேறு' என்றல் கூடாமையானும் அம்மந்திரம் உண்மையில் மூன்றெழுத்து மந்திரமேயாகும். ஆகையால் நகார மகாரங்கள் நீங்க*

*நிற்கும் 'சிவாய' என்னும் மூன்றெழுத்தே முத்தி பஞ்சாக்கரம் ஆகும். அதனை ஓர் உருக்கணித்து, அடுத்த உருத்தொடங்குகையில் யகாரம் வகர ஆகாரத்திற்கும், சிகாரத்திற்கும் இடைநிற்பதாக ஆகின்றது. இதனையே உமாபதிதேவர் 'வா சி இடைநிற்கை' என்றார் (திருவருட்பயன் - 89).*

*வேடிக்கைக் கதை ஒன்று உண்டு. 'பல சரக்குக்கடை வாணிகர் ஒருவர் தம் காலத்தையெல்லாம் வாணிகத்திலே கழித்தவர். இறக்கும் சமயத்திலும் தாம் விற்ற சரக்குக்களில் முதலில் விற்பது அரிசி என்பதையும், கடைசியில் கொடுப்பது வசம்பு என்பதையும் நினைத்து இரண்டையும் சேர்த்து 'அரிசிவசம்பு அரிசிவசம்பு' என்று பலமுறை பிதற்றினார். ஆயினும் அஃது அவர், 'அரி, சிவ, சம்பு' என விட்டுணு நாமத்தையும், சிவ நாமத்தையும் சொன்னதாக ஆக, அவர் முன்னே வைகுந்தம் சென்று, பின்பு சிவலோகம் சென்றார் என்பது அக்கதை.*

*"வால்மீகி முனிவர் முதலில் 'ராம' எனச் சொல்ல வாராமல் 'மரா' மரத்தை நினைத்து, 'மரா, மரா' என்று சொல்லிக் கொண்டிருந்தாராம். அது ராம நாமத்தைச் சொன்னதாக ஆகிச் சிறந்த முனிவர் ஆகி விட்டார்" என்று வைணவத்தில் ஒரு கதை உண்டு. இவை போன்றது தான் முத்தி பஞ்சாக்கரத்தைக் கணிக்கும் பொழுது யகாரம் வாசி இடை நிற்றல்.*

*இனித் திருவைந்தெழுத்தில் சிகாரம் வேதாந்த மகா வாக்கியத்தில் 'தத்' பதப் பொருளுடையதும், வகாரம் 'அசி பதப்பொருளுடையதும் யகாரம் துவம் பதப்பொருளுடையதுமாதல் முன் தந்திரத்தில் சொல்லப்பட்டது. அந்நிலை உண்மையாய்ப் பயன் தருதற்குச் சிகார வகார யகாரங்கட்கு மேலும் எழுத்துக்களைக் கூட்டுதல் பொருந்தாமையும் நோக்கத்தக்கது.*

*'தத்துவமசி' வாக்கியத்தின் பொருள் 'அது நீ ஆகிறாய்' என்பதாகலின், அவ்வாக்கியத்தில் 'நீ' என்பது எழுவாயும், 'ஆகிறாய்' என்பது பயனிலையும், 'அது' என்பது பயனிலைக்கு அடைமொழியுமாம் உள்ள நிலைமை எப்பொழுதும் மாறுவதில்லையாகலின், 'முதல், இடை, கடை' என்னும் மூன்றிடங்களில் அவற்றுள் எந்தச் சொல் எந்த இடத்தில் நிற்பினும் பொருள் மாறுபடுதற்கில்லை. அதனால், முத்தி பஞ்சாக்கரத்தில வகாரம் இடைநிற்றலால் தவறில்லை. இனி, 'யகாரம் வா, சி இடை நிற்க ஓதுதலால், வா சிய்யை அருளி, யவ்வை வாழ்விக்கும் நிலை உண்டாகின்றது என்றார் உமாபதி தேவர். (திருவருட்பயன் - 88).*

*சிவஞானபோத எட்டாம் சூத்திரத்தில் முத்தி பஞ்சாக்கரத்தைக் குரு உபதேசிக்கக் கேட்டல் மட்டுமே கூறப்பட்டமையால், அந்த அளவில் ஆன்ம தரிசனமும் சிவரூபமும் நிகழும். பின்பு ஒன்பதாம் சூத்திரத்தில் முத்தி பஞ்சாக்கரத்தைச் சிந்தித்தல் கூறப்பட்டமையால், அந்நிலையில் சிவ தரிசனம் தோன்றி ஆன்ம சுத்தி நிகழும். அது பின்பு, சிவ தரிசனத்தின்பின் நிகழ்வதாகிய*

**2670.** அருள்தரும் ஆயமும் அத்தனும் தம்மில்
ஒருவனை ஈன்றவர் உள்ளுறை மாயை
திரிமலம் நீங்கச் சிவாய என்றுஓதும்
அருவினை தீர்ப்பதும் அவ்வெழுத்தாமே. **2**

---

*சிவயோகம் தோன்றுதற்கு ஏதுவாகும்.*

*சிவஞான சித்தி சுபக்கம் ஒன்பதாம் சூத்திர (செய்யுள்-7)த்தில் "சோகம் எனப் பாவிக்க" என்றது, பொருள் பற்றி ஓதியதன்றிச் சொற்பற்றி ஓதியதன்று. 'சொற்பற்றி ஓதியதே' என வாதிப்போர் வாதிக்க; அதனால் நமக்கு வருவதொரு குறையில்லை. பொருள் பற்றி ஓதவே, அருணந்தி தேவரும் சிவஞான போத ஒன்பதாம் சூத்திரத்தில் மெய்கண்ட தேவர் கூறிய பஞ்சாக்கரத்தைத்தான் கூறினாராதல் விளங்கும்.*

*விண்ணி னார்பணிந்தேத்த வியப்புறும்*
*மண்ணி னார்மற வாது சிவாய என்று*
*எண்ணி னார்க்கிட மாஎழில் வானகம்*
*பண்ணி னாரவர் பாலைத் துறையரே.* *- தி.5 ப.51 பா.6*

*என்று திருமுறையில் இவ்வதி சூக்கும பஞ்சாக்கரம் மிக அருமையாக எடுத்தோதியிருத்தல் அறிக.*

*இதனால், 'அதிசூக்கும பஞ்சாக்கரமாவது இது' என்பதும், 'இதுவே முத்தி பஞ்சாக்கரம்' என்பதும் சொல்லப்பட்டன.*

***2670. தெளிவுரை :-* சீவான்மாவாகிய ஒருவனைத் தாயும், தந்தையுமாய்த் தம்மிற் கூடி ஈன்றவர்கள் மறமும், அறமும் ஆம் இருவகையில் தோன்றும் அருளைத் தருகின்ற மகளிரும் சிவனும் ஆவர். மகளிரும் மற நிலையுடைய தாய்க்குத் தோழியாய் நின்றவள் மாயை. (அவளைச் சார்ந்து கன்ம மகளும், அவ்விருவர்க்கும் தலைவியாக ஆணவப் பெண்டும் உள்ளனர். ஆகவே அம்மூவரும் நீக்கத் தக்கவர்களே. அங்ஙனம் அவர்களை நீக்கவல்லது, பாச எழுத்துக்களை நீக்கி 'சிவாய' என்று ஓதப்படும் அதிசூக்கும பஞ்சாக்கரமேயாகும்.**

***குறிப்புரை :-* ஆயம் - மகளிர் கூட்டம், திரோதான சத்தி செயல் வகையால் அளவிறந்த நிற்ப, அவற்றோடெல்லாம் அவற்றிற்கு ஏற்ற வகையால் சிவன் கூடி நிற்றலாலும், சீவான்மா முதலில் திரோதான சத்தியால் பாச அறிவு, பசு அறிவுகளைப் பெற்றுத் தோன்றி வளர்ந்து, முடிவில் அருட் சத்தியால் பதியறிவு விளங்கப் பெற்றுச் சிவசமம் ஆதலின் அச்சத்தி பேதங்களை எல்லாம் ஆயமாக உருவகித்து, 'தம்மிற் கூடி ஒருவனை ஈன்றவர் ஆலயமும், அத்தனும்' என்றார். 'கூடி' என ஒரு சொல் வருவிக்க. "ஒருவன்" என்றது சாதியொருமை. ஈனல் கூறவே புறந்தருதலும் கொள்ளப்படும். இங்கு ஈனலும், புறந்தருதலும் அறிவைத்**

**2671.** நமஎன்னும் நாமத்தை நாவில் ஒடுக்கிச்
சிவஎன்னும் நாமத்தைச் சிந்தையுள் ஏற்றப்
பவமது தீரும் பரிசும்அ தற்றால்
அவமதி தீரும் அறும்பிறப் பன்றே. **3**

---

*தோற்றுவித்து வளர்த்தலாம். 'ஈன்று புறந்தரப்பட்டோர் அளவிறந் தோராயினும் அவரெல்லாம், 'சீவர்' எனச் சாதியால் ஒருவரே என்றற்கு "ஒருவனை ஈன்றவர்" என்றார். உள்ளுறை அகம்படித் தொண்டு செய்யும் அடித்தோழி. உள் உறைபவனை, "உள் உறை" என்றார். "திரிமலம் தீர்ந்து" எனவும், "அருவினை தீர்ப்பதும்'' எனவும் பின்னர் வருதலால் மாயையோடு ஏனை ஆணவ கன்மங்களும் திரோதான சத்தியின்கீழ் இருந்தமை பெறப்பட்டது. "தீர்ப்பதும்" உம்மை சிறப்பு. ஆணவ மலம் பரிபாகம் ஆய வழியே வினை நீக்குதலும், வினை நீங்கவே, மாயையும் உடன் நீங்குதலும் நிகழ்தல் பற்றி வினை தீர்த்தலையே சிறப்பாக எடுத்துக் கூறினார்.*

*இதனால், திருவைந்தெழுத்தில் பாச எழுத்துக்கள் நீக்கற்பாலனவாதல் கூறப்பட்டது.*

*இதனை அடுத்து 'சிவசிவ' எனத் தொடங்கும் இரு மந்திரங்களும் அடுத்து ஓர் அதிகாரமாக இருத்தற்குரியன.*

***2671. தெளிவுரை :-** 'சிவாய நம' என்னும் ஐந்தெழுத்தில், 'நம, என்னும் உறுப்பினை நா அளவில் கொண்டு, அதனையும் சொல்லாமல் அடக்கி, ஏனை மூன்றெழுத்தை மட்டுமே மந்திரமாகக் கொண்டு அறிவாற் கணித்தலாகிய சுத்த மானதமாக உணர்ந்துணர்ந்து நிற்க வினை நீங்கும். வினை நீங்கவே பதிஞானம் இனிது விளங்க ஏனைப் பசுபாச ஞானங்கள் யாவும் அற்றுவிடும். அவை அற்றுவிடவே பிறவியறுதல் திண்ணமாம்.*

***குறிப்புரை :-** 'மூன்றெழுத்துக்களில் பிறவி நீக்கத்திற்குக் காரணமாதற் சிறப்பு நோக்கி முதல் இரண்டெழுத்தையே கூறினார். அதனானே வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாயும் ஆயிற்று. பரிசு அது - அப்பரிசு; வினையாகிய பாசம், உம்மை, 'ஆணவமே யன்றி' என இறந்தது தழுவிற்று. அவ மதி - பயன் இல்லாத ஞானம். அவை பாச ஞானமும், பசு ஞானமும் இவற்றை 'அவம்' என்றது பெருந்துன்பமாகிய பிறவியை உண்டாக்குதல் நோக்கி, முதலடி உயிரெதுகை.*

*இதனால், அதிசூக்கும பஞ்சாக்கரத்தின் சிறப்புத் தொகுத்துக் கூறி முடிக்கப்பட்டது.*

## 8. காரண பஞ்சாக்கரம்

*அதிசூக்குமத்தினும் சூக்குமம் 'காரணம்' எனப்படும். அவ்வாற்றால் முன் அதிகாரத்திற் கூறிய பஞ்சாக்கரத்தினும் சூக்குமமாய் நின்று 'காரண பஞ்சாக்கரம்' எனப்படும் அதன் சிறப்புப் பற்றிச் சில கூறுகின்றார். இது மூன்று மந்திரங்களை யுடையது. (இவ்வதிகாரமும் அடுத்து வரும் அதிகாரமும் வேறு வேறு பெயருடன் வேறுவேறாகக் காணப்பட வேண்டியவை. பதிப்புக்களில் அவ்வாறு காணப்படாது, அவற்றிற்குரிய மந்திரங்கள் 'அதிசூக்கும பஞ்சாக்கரம்' என்ற அந்த ஓர் அதிகாரத்தில் உள்ளனவாகவே காணப்படுகின்றன).*

**2672.** சிவசிவ என்றே தெளிகிலர் ஊமர்
சிவசிவ வாயுவும் தேர்ந்துள் ளடங்கச்
சிவசிவ ஆய தெளிவின்உள் ளார்கள்
சிவசிவ மாகும் திருவரு ளாமே. **1**

---

*2672. **தெளிவுரை :-** முன் அதிகாரத்திற் கூறிய மூன்றெழுத்துக்களுள் ஈற்றில் உள்ள ஆன்ம எழுத்தாகிய யகாரத்தையும் நீக்கி, எஞ்சிய இரண்டெழுத்துக்களை மட்டுமே மந்திரமாகக் கொண்டு தொடர்ந்து இடைவிடாது கணித்தல் சிறப்புடைத்து' என்பதைத் தெளிய மாட்டாதவர் அவ்வாறு கணியாமையால், பேசும் வன்மையிருந்தும் அஃது இல்லாத ஊமரேயாவர். அம்மந்திரத்தைக் கணிக்கும் தெளிவினுள் நிற்பவர்கள் அதனால் அடங்க, ஆன்ம போதமும் அடங்கச் சிவம் ஆதற்குரிய திருவருள் நிலை வாய்க்கப் பெறுவார்கள்.*

***குறிப்புரை :-** இது மேற்கூறிய அதிசூக்குமத்தினும் சூக்குமம் ஆதலின் காரண பஞ்சாக்கரமாம். "சிவ சிவ" என்றது இரண்டெழுத்து மந்திரத்தைத் தொடர்ந்து சொல்லும் முறையைக் கூறியது; நான்கெழுத்தைக் கூறியதன்று. இதன்பின் 'சிறப்புடைத்து' என்பது வருவிக்க. 'இம்மந்திரக் கணிப்பால் வாயு (பிராணவாயு) அடங்கும்' என்றதனால் இவ்விரண்டெழுத்தும் முறையே இரேசக பூரக எழுத்துக்களாய் அசபா மந்திரமாய்ப் பயன்படுதல் குறிக்கப்பட்டது. மூன்றாம் அடியை முதல் அடியின் பின்னர்க் கூட்டுக. சிவ சிவ ஆய தெளிவு - 'சிவ சிவ' என்றலே உறுதி பயக்கும் எனத் தெளிந்த தெளிவு. இரண்டாம் அடியில் 'சிவசிவவாய்' எனவும் ஈற்றடியில் 'சிவவாய்' எனவும் மூன்றாம் உருபு விரிக்க. ஆகும் திருவருள் ஆம் - ஆதற்கு ஏதுவாகிய திருவருள் உண்டாகும்.*

*இதனால், அதி சூக்குமத்தினும் சூக்குமமாகிய காரண பஞ்சாக்கரம் இது' என்பதும், அதன் சிறப்பும் கூறப்பட்டன.*

*'சிவ' என்பதைத் தொடர்ந்து உச்சரித்தால் 'வசி' என வருதல் பற்றி, 'வசி' என்பதே காரண பஞ்சாக்கரம் எனக் கூறுவாரும் உளர். அவர்,*

*"கலந்தருள் பெற்றது மாவசியே;*

**2673.** சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே. **2**

**2674.** செஞ்சுடர் மண்டலத் தூடுசென் றப்புறம்
மஞ்சண வும்முறை ஏறி வழிக்கொண்டு
துஞ்சு மவன்சொன்ன காலத் திறைவனை
நெஞ்சென நீங்கா நிலைபெற லாகுமே. **3**

---

*காழி அரனடி மாவசியே" - தி.3 ப.113 பா.10*

*என்னும் திருமுறையை எடுத்துக்காட்டி,*

*"நாலாய பூதமும், நாதமும், ஒன்றிடின்*
*நாலாம் நிலையாம் என் றுந்தீபற"* ***– திருவுந்தியார் – 26***

*என்னும் திருவுந்தியார் 'வசி' என்பதையே காரண பஞ்சாக்கரமாகக் கூறிற்று என்பர். நாலாய பூதம் ஆகாயத்திலிருந்து எண்ண நான்காவது வாயு. அதன் பீசம், வகாரம். நாதம் சிவதத்துவ மூர்த்தி சிவன். அவனைக் குறிப்பது 'சி' என்னும் எழுத்து. நாலாம் நிலை நின்மல துரியம், அல்லது சாயுச்சியம் என்பர்.*

***2673. தெளிவுரை :–*** *(இதன் பொருள் வெளிப்படை)*

***குறிப்புரை :–*** *'தேவர்' என்றது அபரமுத்தரை. உம்மை சிறப்பு. அதனால் பத முத்தர் ஆதல் தானே பெறப்பட்டது. சிவகதி – சிவமாம் நிலை. இது சீவன் முத்தி நிலை, பரமுத்தி நிலை இரண்டையும் குறிக்கும். தான், அசை, ஏகாரம் தேற்றம். இதனால் சிவகதியின் அருமை விளங்கும்.*

*இதனால், 'காரண பஞ்சாக்கரம் முத்தியை எய்தும் நிலையுடையவர்கட்கே கூடும்' என்பது கூறப்பட்டது.*

***2674. தெளிவுரை :–*** *இறக்கும் நிலையை அடைந்த ஒருவன் அப்பொழுது இந்தக் காரண பஞ்சாக்கரத்தை இரண்டு முறையேனும் சொல்வானாயின், அவன் சூரிய மண்டலத்தைப் பிளந்துகொண்டு, அப்பால் மின்னல் உலகத்தையடைந்து, பின்பு அதனையும் கடந்து சிவனையே தனக்கு உயிராகக் கொண்டிருக்கும் நிலையைப் பெறுவான்.*

***குறிப்புரை :–*** *"அபர முத்தியைப் பெறுவான்" என்பதாம். 'ஞானிகள் தாம் நின்ற உடலை விட்டு நீங்குங்கால் இங்குக் கூறியவாறு ஒளி வழியிற் சென்று இறைவனை அடைவார்கள்; ஞானம் இல்லாதவர்கள் பிறவழிகளில் சென்று தேவர் உலகம், அல்லது மானுடர் உலகம் இவற்றிற் செல்வார்கள்' என்பது உபநிடதங்களில் கருத்தாதல் சாந்தோக்கியம் பிருகதாரணியம் முதலிய*

*உபநிடதங்களாலும், உத்தர மீமாஞ்சை நூலாலும் அறியப்படுவன. அவற்றுள், 'ஒளிவழியில் சென்று இறைவனை அடையும் வீட்டு நிலை இக்காரண பஞ்சாக்கரக் கணிப்பினால் உண்டாகும்' என்பது இங்குக் கூறப்பட்டது.*

*"துஞ்சும் அவன் சொன்ன காலத்து" என்பதனை முதலிற் கூட்டி, சொல்லுதலுக்குச் 'சிவசிவ' என்னும் செயப்படுபொருளை அதிகாரத்தால் வருவித்து உரைக்க. "நெஞ்சு" என்றது உயிரை. 'இறைவனையே உயிராகக் கொண்டிருத்தலாவது, அவனோடு பிரிவின்றி ஒன்றி, அவன் வழிப்பட்டு நிற்றல்' என்பதை நாயனாரே, "நீங்கா நிலைபெற லாகுமே" என விளங்க ஓதினார்.*

*இதனால், காரண பஞ்சாக்கரத்தால் பயன் எய்தும் முறை வகுத்துக் கூறப்பட்டது.*

*"கடல் நாகைக் காரோண, நின்*
*நாமம் பரவி நமச்சிவா யவ்வென்னும் அஞ்செழுத்தும்*
*சாம் அன்றுரைக்கத் தருதிகண் டாய்எங்கள் சங்கரனே"*

*- தி.4 ப.103 பா.3*

*என்னும் அப்பர் திருமொழியை இங்கு நினைவு கூர்க.*

## 9. மகா காரண பஞ்சாக்கரம்

*காரண பஞ்சாக்கரம் பற்றிச் சில கூறியபின், அதனினும் சூக்குமமாகிய மகாகாரண பஞ்சாக்கரம் பற்றிச் சில கூறுகின்றார். இது நான்கு மந்திரங்களை யுடையது.*

**2675.** அங்கமும் ஆகம வேதமும் ஓதினும்
எங்கள் பிரான்எழுத் தொன்றில் இருப்பது
சங்கைகெட்டு அவ்வெழுத் தொன்றையும் சாதித்தால்
அங்கரை சேர்ந்த அருங்கலம் ஆமே. 1

---

*2675. தெளிவுரை :-* வேதம், வேதாங்கம், வேதாந்தம் முதலாக உள்ள அனைத்து நூல்களையும் ஒருவன் ஓதி உணர்ந்தாலும் எங்கள் பெருமானாகிய சிவனை அவன் உணர்தல் இயலாது. ஏனெனில், சிவன் இருப்பது ஓர் எழுத்திற்குள்ளே. (அஃதாவது, 'சி' என்னும் எழுத்தின் உள்ளேயாம். எனவே, 'அதன் உண்மையை உணராமல், மற்றை எத்தனை நூல்களை ஓதி உணர்ந்தாலும் அவனை உணர்தல் இயலாது' என்பதாம்). இது கேட்பதற்கு மிக வியப்பாய் இருக்கும் ஆகையால், 'இஃது உண்மையாய் இருக்க முடியுமா' என எழும் ஐயம் நீங்குதல் அரிது. முன்னைத் தவத்தாலும், குருவருளாலும் அந்த ஐயம் நீங்கப் பெற்று அதனை உறுதியுடன் சாதித்தால் அங்ஙனம் சாதிக்கின்ற ஆன்மாத் தான் என்றும் அடைந்தறியாத அழகிய கரையை அடைந்த மரக்கலத்திற்கு ஒப்பாகும்.

*குறிப்புரை :-* அஃதாவது; 'பிறவியாகிய கடலைக் கடந்து, வீடுபேறாகிய கரையை அடையும்' என்பதாம் வருவித்துரைத்தன இசையெச்சங்கள். "ஓர் எழுத்து" என்றது முன் அதிகாரத்தில் கூறப்பட்ட இரண்டெழுத்தில் வகாரம் நீங்க நின்ற சிகாரத்தினை ஆதல் எளிதின் விளங்கும்.

'தூலம், சூக்குமம், அதிசூக்குமம், காரணம், மகா காரணம்' என ஐந்து வகையாகக் கூறப்படுகின்ற பஞ்சாக்கரத்துள் சமய தீக்கைப் பேற்றால் தூல பஞ்சாக்கரத்தை ஓதிச் சரியையிலும், விசேட தீக்கைப் பேற்றால் சூக்கும பஞ்சாக்கரத்தை ஓதி முன்னர்க் கிரியையிலும், பின்னர் யோகத்திலும் நின்று, நிருவாண தீக்கைப் பேற்றால் அதி சூக்கும பஞ்சாக்கரத்தைக் கேட்டுப் பொதுப்பட உணருமாற்றால் தத்துவ சுத்தி ஆன்ம தரிசன சிவரூப நிலைகளை யடைந்து, பின், அதனை நன்கு சிந்தித்துச் சிறப்பாக உணருமாற்றால் ஆன்ம சுத்தி சிவ தரிசன நிலைகளையடைந்து, பின் அதனை நன்கு தெளியுமாற்றால் காரண பஞ்சாக்கரத்தை ஓதிச் சிவயோக நிலைமை அடைந்து, பின் நிட்டை கூடுமாற்றால் மகாகாரண பஞ்சாக்கரத்தை ஓதிச் சிவபோக நிலையைப் பக்குவான்மா அடையும் என்க.

'சிவ யோகம்' என இங்குக் கூறப்படுவது, ஆன்மாத் தன்னை உணர்தல் இன்றிச் சிவனை மட்டுமே உணர்ந்து நிற்கும் நிலை. இதனால் இங்கு ஆன்ம

*எழுத்தாகிய யகாரம் நீக்கப்படுகின்றது. ஆன்மா தற்போதத்தை இழத்தலும் சிவபோதமே போதமாக நிற்றலும் திருவருளேயாகலின் இங்கு அருள் எழுத்தாகிய வகாரம் இருத்தல் இன்றியமையாததாகின்றது.*

*இந்தச் சிவயோக நிலை அருள்நிலையேயன்றி, ஆனந்த நிலையன்று. சிவபோதம், மேலிட மேலிட சிவானந்த வெள்ள பொங்கித் ததும்பிப் பூரணமாய் நிற்க அதனுள் ஆன்மா மூழ்குதலே ஆனந்த நிலை. அதுவே நிட்டை நிலை. அங்கு ஆன்மா அருளையும் நினையாது மது உண்ட வண்டுபோல் அந்த ஆனந்தமாயே நிற்றலால் அவ்விடத்து அருள் எழுத்தாகிய வகாரமும் நீங்குவதாயிற்று.*

*மாயநட் டோரையும் மாயா மலம் எனும் மாதரையும்*
*வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு, மெய்யருளாம்*
*தாயுடன் சென்று, பின் தாதையைக் கூடிப், பின் தாயை மறந்(து)*
*ஏயும் அதே நிட்டை யென்றான் எழிற்கச்சி ஏகம்பனே.*

*என்னும் பிற்காலப் பட்டினத்தடிகள் பாடலும் அதிசூக்கும, காரண, மகா காரண பஞ்சாக்கரங்களையே குறிப்பால் உணர்த்துதலை ஓர்ந்துணர்க.*

*தூல சூக்கும பஞ்சாக்கரங்களை ஓதுதல் சகல நிலையாய் முடிய, அதிசூக்குமம் முதலாக ஓதுவனவே சுத்த நிலையாகும். அதனுள் கேட்டல் சுத்த சாக்கிரம். சிந்தித்தல் சுத்த சொப்பன சுழுத்திகள். தெளிதல் சுத்த துரியம். நிட்டை சுத்த துரியாதீதம்.*

*ஆன்ம சுத்திக்குப்பின் ஆன்மா அடையும் ஆன்ம லாபம் இரண்டு. ஒன்று பாச நீக்கம். இதுவே அருள்நிலை. மற்றொன்று சிவப்பேறு. இதுவே ஆனந்த நிலை. சிவஞான போத சூத்திரங்களுள் எட்டாவது முதலாக நான்கு சூத்திரங்களாலும் முறையே கேட்டல் முதலிய நான்கும் கூறப்பட்டன. பன்னிரண்டாம் சூத்திரம் அணைந்தோர் தன்மை கூறுவது.*

*உமாபதி தேவர் தாம் அருளிச் செய்த எட்டு நூல்களுள் இறுதி நூலாகிய சங்கற்ப நிராகரணத்து இறுதியில் இப்பஞ்சாக்கரங்களின் உண்மையே ஒருவாறு விளங்கும்படி பரம சித்தாந்தமாக ஓதியருளினார். அப்பகுதி வருமாறு:-*

*"பதிபசு பாச முதிர் அறி வுகளுடன்*
*ஆறா முன்னர்க் கூறாப், பின்னர்*
*இருபொருள் நீத்துமற் றொருநால் வகையையும்,*
*ஈனம்இல் ஞாதுரு, ஞானம், ஞேயம் என்(று)*
*இசைய மூன்றாய், பசி, பதி என்(று) அவற்(று)*
*இரண்டாய், இரண்டும் ஒன்றின்ஒன் றாகத்*
*திரண்டாம் பயன்எனும் திருவருள் தெளியில்*
*சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம்*
*என்றிறை யியற்கை இயம்புதல் தகுமே"*

*(சைவ வாதி நிராகரணம் - 55, 63). இதனுள் "இன்றெனக் கருளி இருள் கடிந்து" என்னும் திருவாசகம் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டது.*

*சிவப்பிரகாச (செய்யுள், 92)த்து. "ஆசுறு திரோதம் மேவாது" என்னும் செய்யுளின் பொருளை வல்லார்வாய்க் கேட்டுணர்க. 'அதிசூக்கும' முதலிய பஞ்சாக்கரங்கள் உலகப்பற்று 'அற்று' ஞான வேட்கை கொண்டு, ஞானாசிரியரை அடைந்து ஞானோபதேசத்தைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடுவார்க்கே உரியன. மற்றையோர்க்குத் தூலமும், சூக்குமமும் ஆகிய பஞ்சாக்கரங்களே உரியன.*

*தூலமும், சூக்குமமும் ஆகிய இருபஞ்சாக்கரங்களும் பிரணவத்தோடு கூட்டியும், கூட்டாதும் ஆசிரியர் உபதேசித்தபடி ஓதப்படும். அதிசூக்குமம் முதலிய மூன்றுவகைப் பஞ்சாக்கரங்களும் பிரணவம் இன்றியே ஓதப்படும்.*

*"எல்லா உணவிற்கும் உப்பு இன்றியமையாதது. ஆயினும் சிறந்த உணவாகிய பாலுக்கு உப்புக் கூடாது. அதுபோல எல்லா மந்திரங்கட்கும் பிரணவம் இன்றியமையாதது. ஆயினும் மிகச சிறந்த சிவமூல மந்திரமாகிய பஞ்சாக்கரத்திற்குப் பிரணவம் தேவையில்லை" என்கின்ற ஒரு மரபு உண்டு. அது அதிசூக்குமம் முதலிய பஞ்சாக்கரங்களை நோக்கி எழுந்ததேயாகும்.*

*பிற மந்திரங்கள் கூட நிர் பீச தீக்கையில் பிரணவம் இன்றியே சொல்லப்படும்.*

*இனி, உமாபதி தேவர், தமது, 'கொடிக்கவி' (செய்யுள்-4. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, திருவாவடுதுறை ஆதீன வெளியீடு). நூலில் "எட்டெழுத்து, நாலெழுத்து" எனக் கூறியவை 'பிராசாத பஞ்சாக்கரம், தார பஞ்சாக்கரம்' எனக் கூறப்படுமேயன்றி அதிசூக்கும பஞ்சாக்கரம் எனக் கூறப்படாது. அவையும் யோகிகட்கே உரியன. எட்டெழுத்து, நாலெழுத்து முதலியவற்றை அச்செய்யுளின் உரையிற் காண்க.*

*ஆகம வேதங்களைக் கூறவே இனம் பற்றி வேதாந்தமும் கொள்ளப்பட்டது. "ஓதினும்" என்னும் உம்மை சிறப்பு. அதனால் 'அறிதல் இயலாது' என்னும் சொல்லெச்சம் வருவிக்கப்பட்டது. "ஒன்றையும்" என்னும் உம்மை முற்று. அதனால் அதனது ஆற்றல் மிகுதி உணர்த்தப்பட்டது.*

*அதிகாரத்தை வேறுபடுத்தி விரிவு கூறாவிடினும் இம்மந்திரத்திற்குப் பிறகும் இப்பொருளையே கூறினமை காண்க.*

*இதனால், 'மகா காரண பஞ்சாக்கரமாவது இது' என்பது குறிப்பால் உணர்த்தி, அதனது ஆற்றல் மிகுதி தெளிவாக்கப்பட்டது.*

*இம்மந்திரம் பதிப்புக்களில் அதிகப் பாடல்களில் ஒன்றாகச் சேர்க்கப்பட்டுள்ளது. எனினும் பிறிதோர் உரையிலும் இஃது உள்ளுறு மந்திரமாகக் கொள்ளப்பட்டிருத்தல் காண்க.*

**2676.** நாயோட்டு மந்திரம் நான்மறை நால்வேதம்
நாயோட்டு மந்திரம் நாதன் இருப்பிடம்
நாயோட்டு மந்திரம் நாதாந்த மாம்சோதி
நாயோட்டு மந்திரம் நாமறி யோமே. **2**

**2677.** சிவாய நமஎனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே அடிமைய தாகிச்
சிவாய சிவசிவ என்றென்றே சிந்தை
அவாயம் கெடநிற்க ஆனந்தம் ஆமே. **3**

---

***2676. தெளிவுரை :-*** *மகா காரண பஞ்சாக்கரமாகிய 'சி' என்னும் ஓர் எழுத்தே நான்கு வேதப் பொருள்களாய் விரிந்தது. அதுவே கடவுளது இருப்பிடம். எனவே, தத்துவாதீதமான ஒளிப்பொருளும் அதுவேயாம். ஆகவே, சித்தர்கள் 'நாய் ஓட்டும் மந்திரம்' என நகை விளைக்குமாறு மறைத்துக் கூறுகின்ற அம்மந்திரத்தைப் பிறர் 'இன்னது' என அறிதல் இயலாது.*

***குறிப்புரை :-*** *சித்தர் மரபில் உயர்ந்த பொருள்களைப் பிறர் அறியாவண்ணம் இழிந்தனபோல மறைத்துக் கூறுதல் வழக்கம். அம்முறையில் இஃது அவர்களால் 'நாய் ஓட்டும் மந்திரம்' எனக் குறிக்கப்படுதலை இங்குக் கொண்டு கூறினார். "கிடந்த கிழவியைக் கிள்ளி யெழுப்பி" (திருவுந்தியார் - 14) முதலியனவும் காண்க. நாயை ஓட்டுமிடத்துச் சொல்லப்படுவது. 'சீ' என நெட்டெழுத்தாய் இருப்பினும், அதுவே அதனைக் குறிக்கும் தொடராகாமல், குறிப்பால் பொருளையுணர்த்தலின், 'சி' எனக் குற்றெழுத்தையே குறித்ததாயிற்று. நால் வேதங்களும் சிவபிரானது பெருமையை விரித்தலால், 'இதுவே நால் வேதங்கள்' என்றும், சிவனே இதன் பொருளாதல் பற்றி "நாதன் இருப்பிடம்" என்றும், "நாதாந்த சோதி" என்றும் சிவன் பொது மக்களால் அறிதற்கரியன் ஆதலின் தம்மைப் பிறர் போல வைத்து, 'இம்மந்திரத்தை நாம் அறியோம்' என்றும் தமிழ், ஆரியம் இரண்டாலும் கூறி வலியுறுத்துவார், "நான்மறை நால்வேதம்" என்றும் கூறினார்.*

*இதனால் மகாகாரண பஞ்சாக்கரமே எல்லாமாய் இருத்தல் கூறப்பட்டது.*

***2677. தெளிவுரை :-*** *சூக்கும பஞ்சாக்கரக் கணிப்பினால் உள்ளம் உலகியலின் நீங்கிச் சிவன்பாற் செல்லும். அதனால் ஆன்மாத் தான் சிவனுக்கு ஆளாகி வினையாகிய தீங்கினின்றும் நீங்கும். அப்பால் அதி சூக்கும பஞ்சாக்கரக் கணிப்பினால் ஆன்ம அறிவு பாசஞானமாகிய தீங்கில்லதாம். அப்பால் காரண பஞ்சாக்கரக் கணிப்பினால் ஆன்மாப் பசு போதம் நீங்கிச் சிவபோதம் பெற்றுப் பிறப்பாகிய தீங்கினின்றும் நீங்கும். அப்பால் மகாகாரண பஞ்சாக்கரக் கணிப்பினால் ஆன்மாச் சிவானந்தத்தில் மூழ்கியிருக்கும் "என்று என்று" என்னும் அடுக்கினுள் முன்னதைச் "சிவாய" என்பதனோடு கூட்டி, 'அவாயம் அறநிற்க'*

**2678.** பழுத்தன ஐந்தும் பழமறை யுள்ளே
விழித்தங் குறங்கும் வினையறி வார் இல்லை
எழுத்தறி வோம்என் றுரைப்பர்கள் ஏதர்
எழுத்தை அழுத்தும் எழுத்தறி யாரே. **4**

---

*என ஒருமுறையும் பின்னர் நிற்கும் "என்று" என்பதனை "அவாயம்கெட" என்பதனோடு மற்றொரு முறையும் முடிக்க. "அவாயம்" என்பது ஏற்ற பெற்றியால் பொருள் தந்தது. "நிற்க" என்பதன்பின், 'பின்னர்' என ஒரு சொல் வருவிக்க. அதனால், 'ஆனந்தம் ஆதல் ஓரெழுத்து மந்திரத்தால்' விளங்கிற்று. "ஆம்" என்றது 'விளையும்' என்றபடி.*

*இதனால், உலகியலைத் தரும் தூல பஞ்சாக்கரம் நீங்க, மற்றைய நால்வகைப் பஞ்சாக்கரத்தின் பயனும் ஒருங்கு தொகுத்துக் கூறப்பட்டன.*

***2678. தெளிவுரை :-*** ***பஞ்சாக்கரம் பழமையான வேதமாகிய மரத்தில் அரும்பாய் அரும்பி, போதாய் முதிர்ந்து, பிஞ்சாய் உருப்பட்டு, காயாய் காய்த்து, பழமாய்ப் பழுத்து, உண்ண வல்லவர்க்கு இனித்துப் பயன்படுகின்றது. அதனை உண்டு, அல்லல் அற்று அமைதியுடன் அறிதுயில் கொள்ளும் பயிற்சியை அறிபவர் உலகில் இல்லை ஆயினும் பள்ளியில் எழுத்தறி கல்வியை மட்டும் கற்றவர்கள் கூட, 'இந்த ஐந்தெழுத்துக்களை நாங்கள் அறிவோம்' எனக் கூறுகின்றனர். ஆயினும் வேதம் முதலிய அனைத்தையும் கற்றவர்கள் கூட ஐந்தெழுத்து ஊழை நீக்கும் எழுத்தாதலை அறிய மாட்டார்கள்.***

***குறிப்புரை :-*** *ஐந்து வகையான பஞ்சாக்கரங்களும் நிலையால் வேறுபட்டன அன்றிப் பொருளால் வேறுபட்டன அல்ல ஆதலை. "பழுத்தன" என்னும் குறிப்பால் உணர்த்தினார். அது பற்றியே அதற்கு இவ்வாறு உரைக்கப்பட்டது. "பழுத்தன" என்றது குறிப்புருவகம். "அங்கு" என்றது, "விழித்திருக்கும் போதே" என்றபடி. விழித்தல் அறிவு அறியாமையுட் படாது விளங்கியிருத்தல். உறங்குதல் - உலக வாதனையின்றியிருத்தல். எனவே, சிவத்தை மறவாது உணர்ந்திருத்தலாயிற்று. இந்நிலை ஆனந்த நிலையாதல் பற்றி, உலகத்தில் உறங்குவார் அல்லல் இன்றி இருத்தலோடு உவமித்து இந்நிலையில் நிற்பவரை, 'தூங்குபவர்' என்றும், செயலற்றிருத்தல் பற்றி, "சோம்பர்" என்றும் நயம்படக் கூறுவர். "தூங்கிக் கண்டார் சிவலோகமும் தம்முள்ளே" "சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே" (திருவருட் பயன் - 91) என்னும் மந்திரங்களைக் காண்க.*

*ஓங்குணர்வி னுள்ளடங்கி, உள்ளத்துள் இன்பொடுங்கத்*
*தூங்குவர்;மற் றேதுண்டு சொல்.* ***- திருவருட்பயன் - 91***

*என்றார் உமாபதி தேவரும் இதனை, "தூங்காமல் தூங்குதல்" என்றும் கூறுவர். ஏதர் - குற்றம் உடையவர். ஏதம் - குற்றம்; அறியாமை. ஈற்றடியின் முதலில் உள்ள எழுத்து ஊழ். அதனை 'அயன் எழுத்து' என்றும், 'தலையெழுத்து' என்றும்*

கூறும் வழக்குண்மை யறிக. அழுத்துதல் - அடங்குதல். ஊழ் வினை ஊட்டியல்லது ஒழியாமை பற்றி 'ஒழிக்கும்' என்னாது, "அழுத்தும்" என்றார். 'உயிரைத் தாக்காது உடல் ஊழாய் வந்து போகும்' என்பதாம்.

"திருவாஞ்சியத் துறையும்
ஒருவனார் அடியாரை ஊழ்வினை
நலிய ஒட்டாரே". **- தி7 ப76 பா1**

என்று அருளிச் செய்ததும் இப்பொருட்டு. திருவைந்தெழுத்தை ஓதுவாரை ஊழ்வினை நலியா என்பதனை,

பந்தமா னவை யறுத்துப்
பௌதிகம் உழலும் எல்லைச்
சந்தியா தொழியா தங்குத்
தன்மைபோல் வினையும் சாரும்;
அந்தம்ஆ திகள் இலாத
அஞ்செழுத் தருளி னாலே
வந்தவா றுரைசெய் வாரை
வாதியா பேதி யாவே.

சிவப்பிரகாசம் - 90 என்பதனான் அறிக.

சிவாய நமஎன்று சிந்தித் திருப்போர்க்(கு)
அபாயம் ஒருநாளும் இல்லை; - உபாயம்
இதுவே; மதிஆகும்; அல்லாத எல்லாம்
விதியே மதியாய் விடும். **- நல்வழி**

என்னும் ஔவையார் திருமொழியும் காண்க. இறுதியில் உள்ள "எழுத்து" எழுத்தாம் தன்மை. இசை வல்லுநர்கள், 'சரிகமபதநி' என்னும் எழுத்துக்களைச் சொல்லக் கேட்ட ஒருவன் 'இந்த எழுத்துக்களை நான் அறியேனோ' என்று சொல்வது போல்வதுதான். 'ஐந்தெழுத்துக்களை நாம் அறிவோம்' என்றல் என்றபடி. விதிப்பயனை வெல்வதற்கு திருவைந்தெழுத்து நெறி ஒன்றே கூறப்பட்டுள்ளது.

இதனால், இதுகாறும் பலவாறாகக் கூறிவந்த அஞ்செழுத்தின், சிறப்பனைத்தும் ஒரு வார்த்தையாகத் தொகுத்துணர்த்தி முடிக்கப்பட்டது.

## 10. திருக்கூத்து

*திருவைந்தெழுத்து மேற்கூறிய பல சிறப்புக்களையும் உடையன ஆதலின் அதுவே, சிவனது உருவமாயும் உள்ளது. அங்ஙனம் அஞ்செழுத்தால் உருவம் கொள்கின்ற சிவன் செய்யும் செயல்கள் எல்லாம் அவனுக்கு விளையாட்டாய் இருத்தலின், அச்செயல்கள் எல்லாம் அவனது கூத்தாக அமைகின்றது. 'அக்கூத்துக்கள் தாம் பலவாகும்' என்பதை இது முதலாகச் சில மந்திரங்களால் கூறுகின்றார். முதற்கண் அவற்றைத் தொகுத்துப் பொதுவாக வைத்து இரண்டு மந்திரங்களால் கூறுகின்றார்.*

*இவ்வதிகாரம் இறைவன் உயிர்கள் நன்மைபெற்று உய்தற்பொருட்டுச் செய்யும் அருட்செயல்களாகிய திருக்கூத்தை எவ்வெவ்வகையால் எங்கெங்கு கண்டு இன்புறவேண்டும் என்று உணர்த்துகிறது.*

**2679.** எங்கும் திருமேனி எங்கும் சிவசத்தி
எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம்
எங்கும் சிவமாய் இருத்தலால் எங்கெங்கும்
தங்கும் சிவன்அருள் தன்விளை யாட்டதே. **1**

---

*2679. தெளிவுரை :- சிவனது சத்தி 'அங்கு, இங்கு' எனாதபடி எங்கும் நிறைந்திருத்தலால், 'சத்தியே அவனது திருமேனி' என்பது பற்றி எங்கும் அவனது திருமேனி உள்ளதாம். 'சத்தியே அவனது இருப்பிடமாகிய பர வெளி அல்லது சிதாகாசம்' என்பது பற்றி, எங்கும் அவன் இருக்கும் சிதாகாசம் உள்ளதாம்; 'அவனது சத்தி, அல்லது திருவருளே அவனது செயல்கள்' என்பது பற்றி, அவனது திருக்கூத்து எங்கும் நிகழ்வதாம். இவ்வாற்றால் எங்கும் எல்லாம் சிவமயமாய் இருத்தலால், எங்கு நிகழும் எந்தச் செயலும் அவனது திருவருள் திருவிளையாட்டேயாம்.*

*குறிப்புரை :- 'எங்கும் சிவ சத்தி ஆதலால் எங்கும் திருமேனி.............. இருத்தலால், சிவனது அருள் விளையாட்டே எங்கெங்கும் தங்கும்' என இயைத்து முடிக்க. 'அது' பகுதிப் பொருள் விகுதி.*

*இதனால், 'எங்கும் நிகழும் எல்லாச் செயல்களும் அவனது திருவிளையாட்டாம் ஆதலின் அவ்விளையாட்டாகிய அவனது திருக்கூத்துக்கள் தாம் பலவாம்' என அவை தொகுத்துக் கூறப்பட்டன.*

*2680. தெளிவுரை :- அறிவே வடிவாதல் பற்றி, பரஞ்சோதியாய் மேலான ஒளியாய் - விளங்குகின்ற சிவனது அருள் விளையாட்டாக முன் மந்திரத்தில் கூறப்பட்ட அத்திருக்கூத்துத் தான் பலவாயினும் அவை, 'சிவானந்தக் கூத்து, சுந்தரக் கூத்து, பொற்பதிக் கூத்து, பொற்றில்லைக் கூத்து, அற்புதக் கூத்து' என*

**2680.** சிற்பரஞ் சோதி சிவானந்தக் கூத்தனை
சொற்பத மாம்அந்தச் சுந்தரக் கூத்தனை
பொற்பதிக் கூத்தனைப் பொற்றில்லைக் கூத்தனை
அற்புதக் கூத்தனை யார்அறி வாரே. **2**

---

*ஓராற்றால் ஐந்து வகையாகின்றன. அவற்றின் மேலும் பலவாகின்ற கூத்தினை இயற்றுகின்ற அவனது ஆற்றலை யாரே அளவிட்டறிவார்!*

***குறிப்புரை :-*** ***இவைகளை ஓரோ ஒன்றாக நாயனார் பின்வரும் அதிகாரங்களில் விளங்கக் கூறுவார்.***

***இதனால் திருக்கூத்து வகைகள் தொகுத்துப் பெயரளவில் சுட்டப்பட்டன.***

| பாடல்கள் | கூத்து | விளக்கம் |
|---|---|---|
| 8 | சிவானந்தக் கூத்து | முத்தர்க்குப் பேரின்பம் விளைக்கும் திருக்கூத்து - சொரூபம் |
| 6 | சுந்தரக்கூத்து | பொருள்களும் உயிர்களும் முறை தழுவச் செய்யும் - தடத்தம் |
| 11 | பொற்பதிக்கூத்து | உயிர்களின் உள்ளங்களில் நின்றியற்றும் திருக்கூத்து தடத்தம் |
| | | அண்டத்திலும், பிண்டத்திலும் உள்ள பொன் போன்ற பதிகளில் நிகழ்த்தும் கூத்து |
| 13 | பொற்றிலைக்கூத்து | அண்டத்துள் நடுவில் நின்றாடும் கூத்து - தடத்தம் |
| 42 | அற்புதக்கூத்து | ஐந்தொழில் நடத்தும் திருக்கூத்து - தடத்தம் |
| | பிண்டத்தில் | அதிசூக்குமத் திருக்கூத்து |
| | அண்டத்தில் | தூலசூக்குமத் திருக்கூத்து |
| | திருக்கூத்து | இறைவன் உயிர்களோடு ஒன்றி உடனாகிச் செய்தருளும், காட்டும் உபகாரமும் காணும் உபகாரமும் ஆம். |
| | | உலக இன்பமும் திருக்கூத்தின் பயன் |

## 11. சிவானந்தக் கூத்து

*மேல் நிறுத்த முறையானே ஐவகைக் கூத்துக்களுள் முதலாவதாகிய சிவானந்தக் கூத்தினை எட்டு மந்திரங்களால் விளக்குகின்றார்.*

**2681.** **தானந்தம் இல்லாச் சதானந்த சத்திமேல்**
**தேனுந்தும் ஆனந்த மாநடம் கண்டீர்**
**ஞானம் கடந்த நடம்செய்யும் நம்பிக்கு அங்கு**
**ஆனந்தக் கூத்தாட ஆடரங் கானதே.** **1**

---

*2681. **தெளிவுரை :-** மேற்கூறிய ஐவகைக் கூத்துக்களுள் சிவானந்தக் கூத்தாவது, என்றும் அழிதல் இல்லாமையால் சத்தாய், அதனோடே சித்தாய், ஆனந்தமாய் உள்ள சத்தியிடமாக நின்று ஆனந்தத்தை முடிவின்றிப் பொழியும் கூத்தாகும். ஆகவே, ஆன்ம அறிவைக் கடந்து அந்தக் கூத்தினை இயற்றும் சிவனுக்கு அவ்விடத்தில் அந்த நடனத்தைச் செய்தற்கு அரங்காய் நிற்பது மேற்கூறிய அந்தச் சத்தியே.*

*குறிப்புரை :- 'பரா சத்தி' என்பது உணர்த்துதற்கு, 'சத்தாயும் ஆனந்தமாயும் உள்ளது' என்றார். அதனானே சித்தாதலும் தழுவப்பட்டது. 'சத்தாவது உள்ளது' என்று மட்டும் கூறுவாரை மறுத்துச் சித்தாந்தம் கூறுதற்பொருட்டு, தோற்றக் கேடுகள் இன்றி உள்ளது' என்பர். "தான் அந்தம் இல்லாச் சத்தி" என்றார். அந்தம் இன்மை கூறவே, ஆதியின்மையும் பெறப்பட்டது. 'ஆன்ம அறிவைக் கடந்து தன்னியல்பில் நிற்கும் சத்தியே பராசத்தி' என்றற்கு "ஞானம் கடந்து" என்றார். 'அவ்வானந்தக் கூத்து' எனச்சுட்டு வருவிக்க. "ஆடரங்கு" என்பதில் ஆடுதல் வாளா பெயராகி நின்றது. 'ஆனது அந்தச் சத்தியே' எனப் பயனிலை வருவித்து முடிக்க.*

*"ஆனந்த மாநடம்" என்பதை முதலிற் கூட்டுக. கண்டீர், முன்னிலையசை. 'சத்திமேல் நிகழ்ந்து' என ஒருசொல் வருவிக்க. "உந்தும்" என்பது முற்று. உந்துதல் - வெளிப்படுத்துதல்.*

*இதனால் 'சிவானந்தக் கூத்தாவது ஆன்ம அறிவைக் கடந்து நிற்கப் பராசத்தியிடமாக நிகழ்ந்து எல்லையில் இன்ப வெள்ளத்தைப் பொழியும் கூத்து' என்பது கூறப்பட்டது.*

*எனவே, இது பரமுத்தியை அடைந்த ஆன்மாக்கட்கு அந்நிலையில் பராசத்தி வழியாகப் பேரானந்தத்தை இடையறாது தந்து கொண்டிருக்கும் கூத்தாதல் விளங்கும்.*

*எனினும் இவ்வுலகில் பக்குவான்மாக்கட்குச் சீவன் முத்தி நிலையில் அவ்வானந்தத்தைத் தருகின்ற கூத்தும் 'ஆனந்தக் கூத்து' என்றே உபசரித்துக் கூறப்படுதலை,*

**2682.** **ஆனந்தம் ஆடரங்கு ஆனந்தம் பாடல்கள்**
**ஆனந்தம் பல்இயம் ஆனந்த வாச்சியம்**
**ஆனந்தம் ஆக அகில சராசரம்**
**ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந் தானுக்கே.** **2**

---

*மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்*
*தானந்த மானிடத்தே தங்கியிடும் - ஆனந்தம்*
*மொண்டருந்தி நின்றாடல் காணும், அருள் மூர்த்தியாக்*
*. . . . . . . . . . . . . . . . . . . .* **- உண்மைவிளக்கம் - 37**

*பரையிடமா நின்றுமிகு பஞ்சாக் கரத்தால்*
*உரைஉணர்வுக் கெட்டா ஒருவன் - வரைமகள்தான்*
*காணும் படியே கருணைஉருக் கொண்டாடல்*
*பேணுமவர்க் குண்டோ பிறப்பு.* **- உண்மைவிளக்கம் - 38**

*என்பவற்றால் அறிக.*

*2682.* **தெளிவுரை :-** *'ஆனந்தம்' என்னும் சொல் வழியாக உணரப்படுகின்ற அந்தப் பொருள், ஆருயிர்களுக்கு அனுபவப் பொருளாதற் பொருட்டு ஆனந்தக் கூத்தை விரும்பிச் செய்யும் சிவனுக்கு அந்நிலையில், 'மன்னன் எப்படி, மன்னுயிர் அப்படி' என்பதுபோல, உடன் நிகழும் அரங்கமும் ஆனந்தமயம்; பாட்டுக்களும் ஆனந்தமயம்; பலவகை வாத்தியங்களும் ஆனந்தமயம்; இயங்கு திணை நிலைத் திணைகளாகிய அனைத்துப் பொருள்களும் ஆனந்தமயம்.*

**குறிப்புரை :-** *வாச்சியம் - சொற்பொருள். 'ஆனந்த வாச்சியம் ஆனந்தமாக, ஆனந்தக் கூத்து உகந்தானுக்கு என்பவற்றை முதலில் கூட்டியுரைக்க. "ஆனந்தம் ஆக" என்றது, 'உண்மையில் ஆனந்தமாகும்படி' என்றதாம். உண்மையாவது, அநுபவம் உகத்தல், தன் காரியத்தைத் தோற்றுவித்து நின்றது. ஆனந்தத்தை விளைப்பவற்றையும், பெறுபவற்றையும் ஆகுபெயரால் "ஆனந்தம்" என்றார். "சராசரம்" என்றது அப்பிறப்பினை எடுத்த உயிர்களை. 'எஞ்ஞான்றும் எல்லாப் பொருள்களும் முதல்வன் வழியாவனவன்றி வேறாவன அல்ல' என்பதாம். 'பூவோடு சேர்ந்த நாரும் மணங் கமழும்' என்பது போல, 'ஆனந்தக் கூத்தோடு இயைந்த அனைத்தும் ஆனந்தமாம்' என்பது கருத்து. பராகாசத்துள் நிகழும் ஆனந்தக் கூத்தின் இயல்பு இதுவாகலின், அதுதானே இவ்வுலகில் நிகழுமிடத்தும் இவ்வியல்பினதேயாம்.*

*"உணர்வின் நேர்பெற வரும்சிவ போகத்தை*
*ஒழிவின்றி உருவின்கண்*
*அணையும் ஐம்பொறி யளவினும் எளிவர*
*அருளினை எனப்போற்றி".* **- தி.12 திருஞானசம்பந்தர் - 161**

*என்ற ஆளுடைய பிள்ளையாரது அனுபவ நிலையை இங்கு நினைவு கூர்க.*

**2683.** ஒளியாம் பரமும் உளதாம் பரமும்
அளியார் சிவகாமி யாகும் சமயக்
களியார் பரமும் கருத்துறை அந்தத்
தெளிவாம் சிவானந்த நட்டத்தின் சித்தியே. **3**

**2684.** ஆன நடமைந்து அகள சகளத்தன்
ஆன நடம்ஆடி ஐங்கரு மத்தாகம்
ஆன தொழில் அருளால் ஐந்தொழில் செய்தே
தேன்மொழி பாகன் திருநடம் ஆடுமே. **4**

---

*2683.* ***தெளிவுரை :-*** *'உள்ளது' என வழங்கப்படும் சத்தாதல் தன்மையும், 'ஒளி' என வழங்கப்படும் சித்தாதல் தன்மையும், சமய நிலையில் 'சிவகாமி' என வைத்து வணங்கப்படும் அருள் வடிவான ஆனந்த மாதல் தன்மையும் ஆகிய இம்மூன்று தன்மைகளையும் உயிர்கள் பெறுதல், சிவன் செய்யும் ஆனந்த நடனத்தை உள்ளத்தில் தெளிவாகக் கண்டு தியானிக்கும் தியானத்தினாலாம்.*

***குறிப்புரை :-*** *"பரம்" மூன்றும் பரமாதல் தன்மை மேல் நின்றன. பரமாதல் தன்மையை உபநிடதங்கள், 'சத்து சித்து, ஆனந்தம்' என மூன்றாகக் கூறும் வழக்குப் பற்றி அவற்றையே எடுத்துக் கூறினார். செய்யுள் நோக்கிச் சித்து முதற்கண் கூறப்பட்டது. 'சிவகாமி' என்பது பொதுவாக, 'சிவனை விரும்புபவள், விரும்பச் செய்பவள்' எனப் பொருள் தரினும் உண்மையில் 'காமம்' என்பது இன்பத்தைக் குறிப்பதாக 'சிவகாம வல்லி' என்பதை, தன் ஆனந்தக் கொடி' (பரஞ்சோதி திருவிளையாடற் புராணம் - பாயிரம் - சிவகாமி வாழ்த்து) எனக் கூறுமாற்றால் அறிக. தெளிவு, இங்கு, தியானம். "தெளிவாம் நட்டத்தின்" என்றது, 'நட்டமாம் தெளிவானதின் சத்தி' எனப் பொருள் தந்து நின்றது.*

*இதனால், சிவானந்தக் கூத்துப் பரமுத்தி ஆனந்தத்தைத் தருதல் கூறப்பட்டது.*

*2684.* ***தெளிவுரை :-*** *அருவம், உருவம், அருவுருவம் என்னும் மூவகைத் திருமேனிகளை உயிர்களின் பொருட்டுக் கொள்கின்ற சிவன் படைத்தல் முதலிய ஐந்தொழிலுக்கு ஏற்ப ஐந்து வகை வடிவங்களையும், அவற்றிற்குரிய பெயர்களையும் கொண்டு செய்தலை நாடகமாக உடையவன். ஆகையால் அவன் செய்யும் தொழில்கள் யாவும் அருள் காரணமாகச் செய்வனவே அந்நிலையில் அத்தொழிலை அவன் ஐந்தாக வகுத்து அம்மையோடு உடனாய் நின்று திருக் கூத்தாடுகின்றான். அக்கூத்தும் ஐந்தாகும்.*

***குறிப்புரை :-*** *அகளம் - அருவம். சகளம் - உருவம். இவற்றைக் கூறவே, இனம் பற்றி அருவுருவமும் கொள்ளப்பட்டது. "ஆடி" என்பது பெயர். "நடம்*

**2685.** பூதாண்டம் பேதாண்டம் போகாண்டம் யோகாண்டம்
மூதாண்ட முத்தாண்டம் மோகாண்ட தேகாண்ட
தாகாண்டம் ஐங்கரு மத்தாண்ட தற்பரத்து
ஏகாந்த மாம்பிர மாண்டத்த தென்பவே. **5**

---

*ஐந்து" என்றது, பொன், வெள்ளி, செம்பு, இரத்தினம், பல்வகைக் கூட்டு, என்ப வற்றாலாகிய மன்றங்களில் செய்யும் நடனத்தை. எனவே, மன்றம் ஐந்தாதல் பற்றி நடனம் 'ஐந்து' எனப்பட்டதாம். பொன் மன்றம் முதலியன முறையே 'தில்லை, கூடல், திருநெல்வேலி, திருவாலங்காடு, திருக்குற்றாலம்' என்னும் தலங்களில் உள்ளவை. ஆகம் - திருமேனி. ஐந்தொழிலுக்கு ஏற்ற ஐந்து திருமேனிகளாவன அயன், மால், அரன், மகேசுரன், சதாசிவன் ஆகிய திருமேனிகள். அயன் முதலிய மூவரையும் இங்கு, 'சம்பு பக்கத்தினர்' என்க. ஆன தொழில், தான் என்று கொண்ட தொழில், அருளால் ஆவன' என ஒரு சொல் வருவிக்க.*

*"அகள சகளத்தன் ஐங்கருமத்து ஆகம் ஆன நடம் ஆடி" எனத் தொடங்கி, 'பாகனாய்' என ஆக்கம் வருவித்து, 'ஆன நடம் ஐந்து' என முடிக்க. "ஐந்தொழில் செய்து" என்பதைத் 'தொழில் ஐந்து செய்து' என மாற்றிக் கொள்க.*

*இதனால், முடிநிலைக் கூத்தாகிய ஆனந்தக் கூத்திற்கு முன் அதற்கு ஏதுவான வேறு கூத்துக்களையும் சிவன் செய்தருளுகின்றான் என்பது கூறப்பட்டது.*

*2685. தெளிவுரை :-* 'நிலையற்ற இன்பத்தில் மோகத்தை உண்டாக்குவதாகிய சுவர்க்கம், மக்கள், விலங்கு முதலிய வேறுபட்ட பல உடம்புகளையுடையதாகிய பூமி, துன்பத்தையே தருவதாகிய நரகம்' என்னும் மூவகை உலகங்களில் உயிர்களைச் செலுத்தி ஐந்தொழில் செய்து அவைகளை ஆட்கொள்கின்ற, மேலான பரம்பொருளும் அனைத்துப் பொருள்கட்கும் இடமாதல் பற்றி, 'பிரமம்' எனக் குறிக்கப்படுவதும் ஆகிய அந்த ஒரு பொருளில் அடங்கியுள்ள அண்டங்களோ பல கோடி என்றாலும் அவை ஐந்து தொகுப்புக்களில் அடங்குகின்றன. அவை, 'பூதாண்டம், பேதாண்டம், போகாண்டம், யோகாண்டம் இவை அனைத்திலும் பழைதான முத்தாண்டம்' என்பன.

*குறிப்புரை :-* இவை முறையே, 'நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை' என்னும் கலைகளில் அடங்கியுள்ளனவாம். "மோகாண்டம்" என்பது முதலாகத் தொடங்கியுரைக்க. "மோகாண்டம்" என்பது முதலிய மூன்றிலும் ''அண்டம்'' என்றது உலகத்தை. ''தாகாண்டத்து'' என்பதில் அத்துத் தொகுத்தலாயிற்று. 'ஐங்கருமத்தால்' என உருபு விரிக்க. ஆண்டதற்குச் செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது. 'ஏக அந்தமாம் பிரமமாகிய அண்டத்தன பூதாண்டம் ................ முத்தாண்டம்' என முடிக்க. 'பிரமத்தை அண்டம்' என்றது இடமாதல் பற்றி.

**2686.** வேதங்க ளாட மிகும்ஆ கமமாடக்
கீதங்க ளாடக் கிளரண்டம் ஏழாடப்
பூதங்க ளாடப் புவனம் முழுதாட
நாதன்கொண் டாடினான் ஞானானந் தக்கூத்தே. **6**

---

*"பூதாண்டம்" என்பதில் "பூதம்" என்றது யாவரும் நன்கறிந்த பிருதிவியை. "பேதம்" என்றது அதற்குமேல் அப்பு முதல் பிரகிருதி முடிய உள்ளவற்றை. "போகம்" என்பது போக்தா. (நுகர்வோன் மேலதாய்ப் புருட தத்துவத்தையும் அதற்குக் காரணமானமற்றை வித்தியா தத்துவங்களையும் குறித்தது). யோகாண்டம், தவத்தோர் அடையக்கூடிய வித்தியேசுர புவனங்கள். அவை 'சுத்த வித்தை ஈசுரம், சாதாக்கியம்' என்னும் தத்துவங்களில் உள்ளன. முத்தாண்டம், அபர முத்தித் தானங்களாகிய சிவதத்துவ, சத்தி தத்துவ புவனங்களை. தோற்ற முறையில் இவை முற்பட்டனவாதல் பற்றி "மூதாண்டம்" எனப்பட்டன. "மூதாண்டம்" என்பது, ஏனையவற்றோடு இயைந்து இன்னோசை தர வேண்டி, "மூதாண்டம்" என நீட்டல் பெற்றது. "மோகாண்ட தேகாண்ட தாகாண்டம்", உம்மைத் தொகை. தற்பரத்து - தற்பரமாம் தன்மையையுடைய. அத்தன்மையாவது உயிர்கள் அனைத்திற்கும் மேலானதாதல்.*

*'இவ் ஐங்கலைகளிலும் சிவனது ஆனந்தக் கூத்து நிகழ்கின்றது' என்பது கருத்து. பின்னிரண்டடிகள் உயிரெதுகை.*

*இதனால், ஆனந்தக்கூத்தின் வியாபகம் கூறப்பட்டது.*

*2686. தெளிவுரை :-* ("அவனன்றி ஓரணுவும் அசையாது" என்னும் பழமொழி. 'அவன் அசையவில்லையாயின் எதுவும் அசையாது' என்பதையும் தெரிவிப்பதுடன் 'அவன் அசைந்தால் அனைத்தும் அசையும்' என்பதையும் தெரிவிக்கின்றது. ஆகவே, 'அனைத்தும் அசைய வேண்டி அவன் அசைகின்றான்' என்பது விளங்குகின்றது. அசைதல், அது அது தன் தன் இயல்பிற்கு ஏற்பச் செயற்படுதல், 'அவனது திருக்கூத்தினாலே அனைத்தும் செயற்படுகின்றன' என்பதையே இம்மந்திரம் உணர்த்துகின்றது).

இதன் பொருள் வெளிப்படை.

*குறிப்புரை :-* 'சொல்லும், பொருளும்' என அனைத்துப் பொருளும் இரு வகைப்படும். சொல் 'வழக்குச் சொல், செய்யுட் சொல்' என இருவகைத்து. செய்யுட்களுள் முதல் நூல்களே தலையாயவை. ஆகவே அவற்றை வேதங்கள் ஆட, மிகும் ஆகமம் ஆட" என எடுத்தோதவே, ஏனைய சொல் வகைகள் ஆடுதல் தானே அமைந்தது. சொற்கள் அசைதலாவது வழக்கிலும், செய்யுளிலும் நின்று பொருளுணர்த்தி வருதல். செய்யுட்கண் தம்மியல்பில் நிற்குங்கால் இயற் செய்யுளாயே நிற்கும். இசையோடு பொருந்தினால் இசைச் செய்யுளாய்

**2687.** **பூதங்கள் ஐந்தில் பொறியில் புலன்ஐந்தில்**
**வேதங்கள் ஐந்தில் மிகும்ஆ கமம்ஐந்தில்**
**ஓதும் கலை காலம் ஊழியுடன் அண்டப்**
**போதங்கள் ஐந்தில் புணர்ந்தாடும் ஈசனே.** **7**

---

*முன்னையினும் இனிமையைத் தரும். அதனால், "கீதங்கள் ஆட" என அவற்றை வேறெடுத்தோதினார். அண்டம் - உலகம். உலகங்களை 'ஏழ்' என்றல் வழக்கு. "பூதங்கள்" என்றது உபலக்கணத்தால் தத்துவம் அனைத்தையும் தழுவி நின்றது. புவனங்கள், உலகங்களை ஆட்சி புரியும் அதிகார தேவர்களுக்கு உரிய இடங்கள், 'அவை இருநூற்று இருபத்து நான்கு என்பது சைவ சித்தாந்தம். நாதன் ஞானானந்தக் கூத்தனைக் கொண்டு ஆடினான்' என இயைக்க. கொள்ளல், மேற்கொள்ளல், ஞானத்தைக் கூறவே, அதனோடு உடன் நிற்பதாய உண்மையும் கொள்ளப்படும். உண்மை அறிவு இன்பக்கூத்தே ஆனந்தக்கூத்து ஆதல் விளங்கும்.*

*இதனால், சிவனது உண்மையறிவின்பக் கூத்தே அனைத்துப் பொருள்களும் நிலைத்துத் தத்தம் இயல்பிற்கேற்பச் செயற்பட்டு பயன் விளைக்கச் செய்வது' என்பது கூறப்பட்டது.*

***2687. தெளிவுரை :-*** *(முன் மந்திரத்தில், 'அனைத்துப் பொருள்களின் இயக்கங்கட்கும் காரணமாய் நிகழ்வது சிவன் கூத்து' என்பது கூறப்பட்டது. இம்மந்திரத்தில், அவை இயங்குங்கால், அக்கூத்து அவற்றோடு உடனாயும் இயங்கி நிகழ்கின்றது' என்பது கூறப்படுகின்றது. இவையே இவ்விரண்டிற்கும் இடையேயுள்ள வேற்றுமை. எனவே மேற்கூறிய மந்திரத்தின் பொருளே இம்மந்திரத்திற்கும் ஆகின்றது).*

*இதன் பொருள் வெளிப்படை.*

***குறிப்புரை :-*** *பாரதத்தை அதன் சிறப்புப் பற்றி, 'ஐந்தாம் வேதம்' என்றல்போல வேதத்தின் பொருளை உபவிருங்கணம் செய்யும் புராண இதிகாசங்களை உபசாரத்தால் 'வேதம்' என வைத்து, "வேதங்கள் ஐந்து" என்றார். துணை நூல்களாய் நின்று முதல் நூலின் பொருளை விரித்து விளக்குதல் ஓதும் - நூல்களில் சொல்லப்படுகின்ற கலை, காலம் இவை வித்தியா தத்துவங்களில் தலையாயவை. ஊழி, உலகத்தின் நிலைப்புக் காலம். 'அண்டம் ஐந்தில் போதம்' என மாற்றியுரைக்க. அண்டம் ஐந்து, நிவிர்த்தி முதலிய கலைகளில் உள்ள அண்டத்தின் வகை ஐந்து, போதம் - அறிவு. இஃது உயிர்களின் அறிவு, என்றது அதன் நிகழ்ச்சியை. புணர்தல் - உடனாய் நிற்றல்.*

***2688. தெளிவுரை :-*** *முன் இரு மந்திரங்களில் அஃறிணையாக வைத்துக் கூறிய பொருளை இம்மந்திரம் உயர்திணையாக வைத்துக் கூறுகின்றது.*

**2688.** தேவர் அசுரர்நரர் சித்தர்வித் யாதரர்
மூவர்கள் ஆதியின் முப்பத்து மூவர்கள்
தாபதர் சாத்தர் சமயம் சராசரம்
யாவையும் ஆடிடும் எம்இறை ஆடவே. **8**

---

*குறிப்புரை :-* 'ஆதியின் மூவர்கள்' என மாற்றிக் கொள்க. ஆதி உலகத் தோற்றக் காலம். சாத்தர் - சாத்தியர். 'சாத்தியர்' என்னும் ஒருசாராரும் தேவர் கூட்டத்துள் சொல்லப்படுகின்றனர்.

சிவனது திருக்கூத்து உலகத்தின் செயற்பாடு எல்லாவற்றிற்கும் காரணம் ஆதல் தொகுத்துக்கூறி முடிக்கப்பட்டது.

## 12. சுந்தரக் கூத்து

*மேல் நிறுத்த முறையானே சிவானந்தக் கூத்துக் கூறியபின் சுந்தரக் கூத்தினை ஆறு மந்திரங்களால் கூறுகின்றார்.*

**2689.** **அண்டங்கள் ஏழினுக்கு அப்புறத்து அப்பால்**
**உண்டென்ற சத்தி சதாசிவத் துச்சிமேல்**
**கண்டங் கரியான் கருணைத் திருவுருக்**
**கொண்டங் குமைகாணக் கூத்துகந் தானே.** **1**

---

*2689. **தெளிவுரை :-** பிரகிருதி உலகங்களுக்கு அப்பால் உள்ளவை அசுத்த மாயா உலகங்கள். அவற்றிற்கு அப்பால் சுத்த வித்தை, ஈசுரம், சாதாக்கியம் என்னும் தத்துவ புவனங்கட்கு அப்பால் உள்ளவை சத்தி தத்துவ புவனமும், சிவ தத்துவ புவனமும், அவைகளில் முறையே 'சத்தி' என்றும், 'சிவன்' என்றும் இருதிறப்பட்டு நின்று ஐந்தொழில் புரிகின்ற சிவன், அத்தொழிலின் பொருட்டு அருளே திருமேனியாகக் கொண்டு சத்தி காணும்படியாகத் தான்ஆடலை விரும்பி ஆடுகின்றான்.*

***குறிப்புரை :-*** *எனவே, அங்ஙனம் ஆடுகின்ற கூத்தே சுந்தரக் கூத்தாம்' என்பது போந்தது. சுந்தரம் - அழகு. எனவே, அது வடிவைக் குறிக்கின்றது. வடிவு தான் 'அருவம், அருவுருவம், உருவம் என மூவகைப்படுதல் பலவிடத்தும் சொல்லப்பட்டது. அவற்றுள் உருவத் திருமேனி கொண்டு செய்யும் கூத்தையே நாம் கூத்தாகக் காணினும், அதனோடு ஒப்ப ஐந்தொழில் இயற்றும் மற்றைத் திருமேனிகளின் செயலும் சுந்தரக் கூத்து' என்றே இங்குக் கூறப்படுகின்றன. 'சூக்கும நடனம், அதிசூக்கும நடனம்' எனச் சாத்திரங்களில் கூறப்படுவனவற்றை இங்கு நினைவு கூர்க. இதனால் மேல் தொகுத்துக் கூறிய கூத்து ஐந்தனுள் முதலாவதாகிய சிவானந்தக் கூத்து ஒன்றும் சொரூப நிலைக் கூத்தும், ஏனைய நான்கும் தடத்தநிலைக் கூத்தும் ஆதல் அறிக.*

*"அண்டங்கள் ஏழ்" என்றது, பிரகிருதி அண்டங்களையாதலின், பின்னர்க் கூறப்பட்டவை அசுத்த மாயை, சுத்தமாயா அண்டங்களாதல் விளங்கிற்று. சிவன் இன்றிச் சத்தியில்லையாதலின் சத்தியைக் கூறவே, சிவன் தானே பெறப்பட்டான். 'சத்தி, சிவன்' என்பன அவரையும், அவர்க்கு இடமாய தத்துவங்களையும் குறித்து நின்றன. 'உச்சிமேல் உள்ளது' என ஒரு சொல் வருவித்து முடிக்க. "கண்டம் கரியான்" என்பது, 'சிவன்' என்னும் அளவாய் நின்றது. சிவன் செய்யும் கூத்தினை உமை காணுதலாவது, சிவனது செயலை உயிர்கட்குச் சேர்ப்பித்தலாம். உகத்தல் தன் காரியம் தோற்றி நின்றது.*

*இதனால், 'சுந்தரக் கூத்தாவது ஐந்தொழில் பற்றிய கூத்து' என்பது கூறப்பட்டது.*

**2690.** பரமாண்டத் துள்ளே பராசத்தி பாதம்
பரமாண்டத் துள்ளே படரொளி ஈசன்
பரமாண்டத் துள்ளே படர்தரு நாதம்
பரமாண்டத் துள்ளே பரன்நட மாடுமே. **2**

**2691.** அங்குசம் என்ன எழுமார்க்கப் போதத்தில்
தங்கிய தொம்தி எனுந்தாள ஒத்தினில்
சங்கரன் மூலநா டிக்குள் தரித்தாடல்
பொங்கிய காலம் புகும்போதல் இல்லையே. **3**

---

*(பதிப்புக்களில் இதனை அடுத்துள்ள "கொடுகொட்டி பாண்டரம்" என்னும் மந்திரம் அடுத்த அதிகாரத்தில் இருத்தற்குரியது).*

***2690. தெளிவுரை :-*** *எல்லாவற்றையும் வியாபித்து நிற்றலால் சுத்த மாயையின் வியாபகம் பரமாண்டம் ஆகும். அதற்குள்ளே உள்ள அனைத்து இடங்களிலும் பராசத்தியின் கூறாகிய ஆதி சத்தி பரவியுள்ளது. ஆகவே அந்தச் சத்தியைத் தனது விரிந்த ஒளியாகக் கொண்ட தடத்த சிவன், அவ்விடங்களில் எல்லாம் உளன். அவையேயன்றிச் சுத்தமாயையின் காரியமாகிய வாக்குக்களும் 'அதிசூக்குமம், சூக்குமம், தூலம்' என்னும் வகையில் அந்த எல்லா இடங்களிலும் உள்ளன. ஆகவே, அந்த எல்லா இடங்களிலும் சிவன் தனது சுந்தரக் கூத்தினைச் செய்கின்றான்.*

***குறிப்புரை :-*** *முதல் மூன்று அடிகளின் ஈற்றிலும் 'உள்ளது, உளன், உள்ளன' என்னும் பயனிலைகள் எஞ்சி நின்றன. மூன்றாம் அடியின் ஈற்றில், 'ஆகலான்' என்பதும் உடன் எஞ்சி நின்றது. நாதம் இல்லையேல் பொருள் விளங்காமை பற்றி அதன் இருப்பையும் உடன் கூறினார். நடம், அதிகாரத்தால் இங்குச் சுந்தரக் கூத்தாயிற்று.*

*இதனால், சுந்தரக் கூத்து மும்மாயா புவனங்களிலும் நடைபெறுமாறு கூறப்பட்டது.*

***2691. தெளிவுரை :-*** *('அம்சம்' என்பதை இடையே குகரச் சாரியையைக் கூட்டி, 'அங்குசம்' என ஒரு கருவியின் பெயர்போல ஆக்கி மறை பொருட் கூற்றாக வழங்குதல் சித்தர் மரபு. எனவே, 'அங்குசம் என்ன எழும் மார்க்கம்' என்பது, 'அம்சம்' என எழுகின்ற வழி என்பதாம். இம்மந்திரம் இரேசக பூரகமாய் நிகழும் வாயு இயக்கத்தால் இயல்பாக நிகழ்தலின் 'அசபா மந்திரம்' எனப்படும். அம்மந்திரவழி இயங்கும் உயிர்ப்பினாலே அறிவு நிகழ்தலின் அவ்வாற்றால் அறிவை விளக்குகின்ற இறைவனது செயல் 'அசபா நடனம்' எனப்படுகின்றது. அந்த நடனத்திற்கு. 'அம், சம்' என்பனவே, 'தொம், தி' என ஒலிக்கின்ற தாளங்களாம். அந்தத் தாள ஒற்றுக்கு இயையச் சிவன் சுழுமுனை நாடிக்குள்*

**2692.** **ஆளத்தி ஆடிப் பின்நவக் கூத்தாடிக்**
**காலத்தீ ஆடிக் கருத்தில் தரித்தாடி**
**மூலச் சுழுனையுள் ஆடி முடிவில்லா**
**ஞாலத்துள் ஆடி முடித்தான்என் நாதனே.** **4**

---

*நின்று சுந்தரக் கூத்து ஆடுதலை அறிவு விளங்கிய காலத்தில் தொடங்குகின்றான். ஆயினும் அக்கூத்தினை அவன் முடித்துவிட்டு அப்பாற்போதல் இல்லை.*

*குறிப்புரை :- போதம் - அறிவு. மூல நாடி, சுழுமுனை நாடி. தரித்தல் - தங்குதல். அறிவு விளங்குதல். குரு உபதேசத்தால் அசபா நடனத்தை அறியப் பெறுதல்'. "புகுதல்" எனப் புதிதுபோலக் கூறியது, அறிவுக்குப் புலனாகும் காலம் பற்றி. விளங்கிய அறிவு பின் விளக்கம் அற்று மறவாமை பற்றி, "போதல் இல்லை" என்றார். அசபா நடனத்தால் இங்ஙனம் அறிவு விளங்கச் செய்தல் ஐந்தொழில் நடனத்தில் 'அதிசூக்கும நடனம்' எனப்படும். எனவே, இதுவும் சுந்தரக் கூத்தின் வகையாயிற்று.*

*இதனால், சுந்தரக் கூத்து வகைகளுள் ஒன்றன் இயைபு கூறப்பட்டது.*

*2692. தெளிவுரை :- எனக்குத் தலைவனாகிய சிவபெருமான் முதலில் சுந்தரக் கூத்திற்கு ஆயத்தங்களைச் செய்தும், பின் அதனை, 'அருவம் நான்கு அருஉருவம் ஒன்று, உருவம் நான்கு' என்னும் முறையில் திருமேனி கொண்டு மும்மாயைகளின் மேலும் நிகழ்த்திப் பின் முற்றொடுக்கத்தைச் செய்தும், அக்காலங்களில் உயிர்களின் அறிவின்கண் நின்று அதனை விளக்கியும், தோற்றம் நிலை, இறுதி மூன்றனுள் இடையதாகிய நிலைப்புக் காலத்தில் முன் மந்திரத்தில் கூறியவாறு சுழுமுனை நாடியில் நின்று உயிர்ப்பு வழியாகப் புலன் உணர்வைத் தந்து; இறுதியாக, என்றும் அழிதல் இல்லாத பெருநிலமாகிய முத்தி நிலத்தில் பேரானந்தத்தைத் தரும் நடனத்தைச் செய்தும் நிற்பதாக அக்கூத்தினை இங்ஙனம் வரையறை செய்து கொண்டான்.*

*குறிப்புரை :- ஆளத்தியாவது, பண் அமைதற்கு ஏழிசை முறையால் அதனை ஏற்றிழிவு வகைகளில் முன்னர் அமைத்துக் காண்பது. அஃது இங்குச் சுந்தரக் கூத்தினை இயற்றுதற்கு ஆவனவற்றைச் செய்தலைக் குறித்தது. காலம் - ஊழி; பேரூழி; முற்றழிப்புக் காலம். "கருத்து" என்றது அறிவை. "ஆடி" என வந்த செய்தென் எச்சங்கள் ஆறும் எண்ணுப் பொருளவாய் முறையே 'ஆயத்தம், தூலம், சூக்குமம், கேவலம், சகலம், சுத்தம்' என்னும் அறுவகைக் கூத்தினையும் குறித்தன. சிவன் ஆயத்த நிலையில் பரநாத பரவிந்துக்களாயும், தூல நிலையில் அபரநாத அபரவிந்து சதாசிவன் முதலிய ஐவராயும் நிற்பன். 'நவந்தரு பேதம்' என்னும் மரபில் மலைவு வாராமைப் பொருட்டு. "நவக்கூத்தாடி" என ஒன்பது பேதம் கூறினாராயினும், அவற்றுள் முதலில் உள்ள பரநாத பரவிந்துக்கள் ஒழிந்த*

**2693.** சத்திகள் ஐந்தும் சிவபேதந் தாம்ஐந்தும்
முத்திகள் எட்டும் முதலாம் பதம்எட்டும்
சித்திகள் எட்டும் சிவபதம் தாம்எட்டும்
சுத்திகள் எட்டீசன் தொல்நட மாடுமே. **5**

---

*ஏழனையே அங்குக் கொள்க. இனி 'நவக் கூத்தாடி' என்றே போயினால், ஆயத்த நிலை தோன்றாமை பற்றி அதனை வேறு வைத்தும் முற்றழிப்புத் தனிச் சிறப்புடைமையின் அதனைப் பின்னரும் எடுத்தோதியும் வலியுறுத்தினார். சுத்த நிலைக்கூத்து முன் அதிகாரத்திற்குரிய ஆனந்தக் கூத்தேயாயினும் அதுவும் கூத்தினுள் ஒன்றாதல் தோன்றுதற் பொருட்டு. "முடிவிலா ஞானத்துள் ஆடி" எனத் தொகுத்தோதினார். "முடித்தான்" என்றது, 'இவ்வாறு முடித்தான்' என வரையறை செய்தமையைக் குறித்தது. இனிச் சுத்தம் ஒழிந்த கேவல சகலக் கூத்துக்களும் நவக் கூத்தில் அடங்குவனவே என்க. முதல் அடி இன எதுகை.*

*இதனால், சுந்தரக் கூத்தின் வகைகள் பலவும் வகுத்துக் கூறப்பட்டன. ஆனந்தக் கூத்தைக் கூறியது எய்தியது இகந்து படாமைக் காத்தது.*

*2693.* ***தெளிவுரை :-*** *சத்தி பேதங்கள் ஐந்து. அவை, 'பரை, ஆதி, இச்சை, ஞானம், கிரியை' என்பன. இவற்றோடு இயைந்த சிவபேதமும் ஐந்து. அவை, 'பரமசிவன், சிவன், கருணாகரன், நாதமூர்த்தி, விந்துமூர்த்தி' என்பன. திருவருள் பெற்றோர் அடையும் முத்திகள் எட்டு. அவை, சாலோக்கியம், சாமீப்பியம், சாரூப்பியம், சிவன் முத்தி, அதிகார முத்தி, போகமுத்தி, இலயமுத்தி, பரமுத்தி அல்லது சாயுச்சியம்' என்பன. முதன்மைப் பதவிகள் எட்டு. அவை, 'கணபதி, குமாரன்' நந்தி, சண்டி, அரன், அரி, அயன், இந்திரன்' என்போரது பதவிகள். சித்திகள் எட்டு. அவை அணிமாதிகள். சிவபதம் - சிவனது நிலை. அவை எட்டாதல் அட்டமூர்த்தியாய் நிற்றலால். அட்ட மூர்த்தமாவன 'ஐம்பூதம், ஞாயிறு, திங்கள், உயிர்' என்பன. இவற்றில் நிற்குமிடத்தே 'பவன், சர்வன்' முதலிய எட்டுப் பெயர்களைச் சிவன் உடையவன் ஆகின்றான். சுத்திகள் எட்டு, வழிபாட்டில் செய்யப்படுவன. 'நிரீக்கணம், புரோக்கணம், தாடனம், அப்பியுக்கணம் தாளத்திரயம், திக்குப்பந்தனம், அவகுண்டனம், அமிர்தீகரணம்' என்பன. இவை முறையே 'பார்த்தல், தெளித்தல், தட்டுதல், மூடுதல் மும்முறை கை கொட்டல், திசைக்காப்புச் செய்தல், சுற்றுதல், அமுதமய மாக்கல்' என்பனவாம். இவை முதலாக அனைத்தும் நிகழும்படி சிவன் தொன்று தொட்டுச் சுந்தரக்கூத்தினை நிகழ்த்தி வருகின்றான்.*

***குறிப்புரை :-*** *''பேதம்'' என்பதைச் ''சத்தி'' என்பதனோடும் கூட்டுக. ''எட்டீசன்'' என்பதில், 'எட்டும் நிகழ' என ஏனையவற்றோடு இயைய எண்ணும்மை விரித்து, அவற்றிற்கு முடிக்கும் சொல் ஒன்றும் வருவிக்க.*

*இதனால், சுந்தரக் கூத்தின் பயன்கள் பலவும் விரித்தோதப்பட்டன.*

**2694.** மேகங்கள் ஏழும் விரிகடல் தீவேழும்
தேகங்கள் ஏழும் சிவபாற் கரன்ஏழும்
தாகங்கள் ஏழும் சாந்திகள் தாம்ஏழும்
ஆகின்ற நந்தியடிக்கீழ் அடங்குமே. **6**

---

*2694. **தெளிவுரை :-** பலவகையில் ஏழு ஏழாகத் தொகுத்துச் சொல்லப்படுகின்ற அனைத்துப் பொருள்களும் சிவனது சுந்தரக் கூத்தினுள் அடங்கி நிற்கின்றன.*

***குறிப்புரை :-*** *மேகங்கள் ஏழு:- பிங்கல நிகண்டிலும், சூடாமணி நிகண்டிலும் சிறிது சிறிது வேறுபடச் சொல்லப்பட்டன. நீர்மழையை அளவாகவும், மிகையாகவும், சிறிதாகவும் பொழிவன, மண்மழை, கல் மழை, பொன் மழை, மணி மழை என்பவற்றைப் பொழிவன இவைகள். கடல் ஏழு :- உப்பு, பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன், நன்னீர் - என்பவற்றை உடையன. தீவு ஏழு :- அந்த ஏழு கடல்களாலும் சூழப்பட்டுத் தனித்தனியே உள்ள ஏழு நிலப்பகுதிகள். அவை - சம்பு, சாகம், குசை, கிரௌஞ்சம், சான்மலி கோமேதகம், புட்கரம் என்னும் காரணப் பெயர்களையுடையன. சம்புத்தீவு, நாவலந்தீவு. இதுவே நாம் வாழும் நிலம். தேகங்கள் ஏழு :- 'தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்' என்னும் எழுபிறப்புக்கள். பாற்கரன் - சூரியன். சிவ பாற்கரன் - சிவ சூரியன். சிவன் உள்ளிருந்து அறியாமை இருளைப் போக்கி அறிவைப் பிறப்பித்தற்குக் கருவியாய் அவனால் அமைக்கப்பட்டவை. அவை ஏழாவன :- ஐம்பொறிகளும், மனமும் புத்தியும் ஆய அந்தக் கரணங்களுமாம். இன்னும் 'ஏழ்' என்றதனானே வித்தியா தத்துவம் ஏழினையும் கொள்க. தாகம் - வெப்பம்; அஃது அதனையுடைய தீயைக் குறித்தது. "தீக்கு நாக்கு ஏழ் உள" என்பர். அது பற்றி அஃது ஏழ் எனப்பட்டது. சாந்தி என்றது சுத்தத்தை. அஃது ஏழாதல் கலா சுத்தி ஐந்தும், கன்ம சுத்தி ஒன்றும், ஆணவ சுத்தி ஒன்றுமாம். இந்த ஏழ் சுத்தியாலும் ஆன்ம சுத்தி உளதாகும்.*

*இதனால், வகை வகையாகச் சொல்லப்படுகின்ற அனைத்துப் பொருள்களும் சுந்தரக் கூத்துள் அடங்குதல் தொகுத்துக் கூறி முடிக்கப்பட்டது.*

## 13. பொற்பதிக் கூத்து

*இனி, நிறுத்த முறையானே பொற்பதிக் கூத்தினைப் பதினொரு மந்திரங்களாற் கூறுகின்றார்.*

**2695.** கொடுகொட்டி பாண்டரம் கோடுசங் காரம்
நடம்எட்டோடு ஐந்து ஆறு நாடியுள் நாடும்
திடம்உ ற்றெழும் தேவ தாருவனத் தில்லை
வடம்உற்ற மாவன மன்னவன் தானே. **1**

---

*2695.* **தெளிவுரை :-** *தேவதாரு வனம், தில்லை வனம், திருஆலவனம் (திருவாலங்காடு) என்பவற்றில் எழுந்தருளியுள்ள தலைவன் கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் ஆகிய சங்காரக் கூத்துக்களையும் அட்ட மூர்த்தத்தில் நின்று அவற்றை இயக்கி ஆடும் எட்டுக் கூத்தினையும், ஐந்தொழிற்கான ஐந்து கூத்தினையும், சுழுமுனை நாடியில் அறியப்படும் ஆறு ஆதாரங்களில் ஆறு கூத்தினையும் உறுதியாகக்கொண்டு ஆடுகின்றான்.*

**குறிப்புரை :-** *எனவே, 'எங்கும் அகண்டாகாரமாய், அருவாய் நின்று ஆடுதலேயன்றி, சில உயர் இடங்களில் அவற்றைத் தன்னுடையனவாக வரையறை செய்து கொண்டு அங்கு உருவத்திருமேனி கொண்டு ஆடுவதே பொற்பதிக் கூத்து' என்றதாயிற்று. 'பொன்' என்றது தெய்வத்தன்மையை. பொற்பதி - தெய்வத் தன்மையுடைய தலங்கள்.*

| | |
|---|---|
| *கொடுகொட்டி* | *- உலகம் முழுவதும் அழித்து ஆடும் தனிக்கூத்து* |
| *பாண்டரங்கம்* | *- முப்புரம் எரித்து அந்நீற்றினை மேற்பூசிக் கொண்டு ஆடும் வீரக் கூத்து* |
| *கோடு* | *- அயன் ஒரு தலை பறித்து அதனை ஏந்தியாடும் வீரக்கூத்து* |

*இவை மூன்றும் ஒடுக்கம் பற்றி எழுந்தவை. ஏனையவை மற்றைய நான்கு தொழில்களைப் பற்றியவை.*

| | |
|---|---|
| *தேவதாருவனம்* | *- கடவுள் உண்மைக் கொள்கையை உடன்படாத வேத முனிவர் வேள்வி முதலியன செய்து உறைந்த வனம்* |
| *காப்பு நடம்* | *- உலக அழிவு ஏற்படாமல் காக்கக் காளியால் நிகழ்த்தப்பட்டது* |

*'கொடுகொட்டி, பாண்டரங்கம்' என்னும் கூத்துக்களை அசுரரை அழித்த காலத்தில் சிவபெருமான் ஆடினவாகச் சிலப்பதிகார (அரங்கேற்று காதை) உரை கூறிற்று. கலித்தொகைக் கடவுள் வாழ்த்தில், 'சிவன் கொடு கொட்டி, பாண்டரங்கம், காபாலம் - என்னும் கூத்துக்களை ஆடும் பொழுது அக்கூத்திற்கு*

**2696.** தெற்கு வடக்குக் கிழக்குமேற் குச்சியில்
அற்புத மானஓர் அஞ்சு முகத்திலும்
ஒப்பில்பே ரின்பத் துபய உபயத்துள்
தற்பரன் நின்று தனிநடம் செய்யுமே. 2

---

*உமையம்மையே தாளம் தருவாள்' எனக் கூறியதற்கு, ஆண்டுப் பிறர் இல்லையே" என்ற நச்சினார்க்கினியரது விளக்கத்தால் அக்கூத்துக்கள் சங்காரத்தின் முடிவில் செய்யப்படுவனவாதல் விளங்கும். இனி, பிரம கபாலத்தை ஏந்தி ஆடும் கூத்தே காபாலக் கூத்து ஆதலின் அதுவே தாருகாவனத்தில் அம்முனிவர்தம் பத்தினியர் முன்பும், முனிவர் முன்பும் ஆடிய கூத்தாகும். இவை போன்ற எல்லா வகைக் கூத்துக்களையும் சிவன், மேல், ஆன நடம் ஐந்து" (பா.2684) எனக் குறிக்கப்பட்ட ஐந்து மன்றங்களில் ஆடல் திருமேனி கொண்டு ஆடுகின்றான் என்பது, "தாருவனத் தில்லை (வன), வடமாவன மன்னவன்" என்றதனால் விளங்கிற்று. தாருகாவனம் ஒரு தலமாக விளங்கவில்லை. தில்லை வனமும், திருஆலவனமும் தலங்களாய் விளங்குதல் வெளிப்படை. இவற்றைக் கூறவே சிறப்பாக ஏனை மூன்றும், பிறவும் கொள்ளப்படும். கோடு, கிளை' என்னும் பொருட்டால், முதல் உறுப்பாய தலையைக் குறித்தது. 'பாண்டரங்கம்' என்பது ஈறு குறைந்து, 'பாண்டரம்' என நின்றது. "கோடு" என்பதன் பின் 'ஆகிய சங்காரங்கள்' எனப் பண்புருபு விரித்து முடிக்க. 'நாடியுள் நாடும் ஆறு' என மாற்றிக் கொள்க. 'இவற்றைத் திடமாகக் கொண்டு எழும் மன்னவன்' என வினைமுடிபு செய்க. எழுதல் - முயலுதல்; அது நிகழ்த்துதலைக் குறித்தது.*

*இதனால், அனைத்து வகையான கூத்துக்களையும் சிவன் உருவத் திருமேனி கொண்டு தலங்களில் ஆடுவதே 'பொற்பதிக் கூத்தாம்' என்பது கூறப்பட்டது.*

***2696. தெளிவுரை :-** சிவன் 'உருவம்; அருவுருவம்' என்னும் இருவகை வடிவில் தலங்களில் எழுந்தருளியிருக்குங்கால் எங்கும் கிழக்கு நோக்கியே எழுந்தருளியிருப்பான். <u>கோயில் வாயில் எத்திசையை நோக்கியிருப்பினும் அது கிழக்குத் திசையாகவே பாவிக்கப்படும்</u>. அந்நிலையில் உச்சி, கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு என்னும் ஐந்து பக்கங்களிலும் முறையே ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் முகங்கள் உள்ளனவாம். கோயிலின் வாயில் திசை மாறியிருப்பின் தற்புருட முகம் அந்தத் திசையில் வர அந்தத் திசையின் முகம் தற்புருட முகத்தில் சென்றுவிடும். சிவனது இந்த முகங்கள் ஏனை யோரது முகங்கட்கு இல்லாத பல அதிசய ஆற்றல்களை உடையன. அந்த முகங்களின் ஆற்றலால் சிவன் உயிர்களை நிகரற்ற பேரின்ப நிலையில் செலுத்துதற்கு மேற்கூறிய இருவகைத் திருமேனிகளிலும் இருந்து ஒப்பற்ற திருக் கூத்துக்களைச் செய்கின்றான்.*

***குறிப்புரை :-** செய்யுள் நோக்கி உச்சி, கிழக்கு முதலிய பக்கங்கள் முன் பின்னாகக் கூறப்பட்டன. இந்த ஐந்து முகங்களும் முன் தந்திரத்தில், "நடுவு*

கிழக்குத் தெற்குத் தரம் மேற்கு" என்பது முதலிய மந்திரங்களிலும் கூறப்பட்டமை காண்க. இங்குக் கூறிய குறிப்புக்களால் சிவனது 'ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம்' என்னும் முகங்கள் ஐந்தும் சிவனது 'உச்சி, முன்பக்கம், வலத்தோள், இடத்தோள், முதுகு' என்பவற்றின்மேல் உளவாகச் சிவன் எங்கும் கிழக்கு நோக்கியே அமர்ந்திருப்பவனாதல் விளங்கும்.

பக்கங்கள் பலவற்றிலும் முன்பக்கமமே கொள்ளத்தக்கது ஆதலின், வழிபாடுகள் பலவும் தற்புருட முகத்திலே செய்யப்படுகின்றன. 'தற்புருட முகத்தில் செய்யப்படுவது எதுவும் எல்லா முகத்திலும் செய்ததேயாம்' என்பது சிவாகமங்களில் சொல்லப்படுவது.

ஐந்து முகங்களும் ஐந்து சாதாக்கியங்களாகச் சொல்லப்படும். சத்தியோசாதம் அமூர்த்தி சாதாக்கியம், வாமதேவம், மூர்த்தி சாதாக்கியம். அகோரம் கர்த்திரு சாதாக்கியம். தற்புருடம் கரும சாதாக்கியம், ஈசானம் சிவ சாதாக்கியம். இவற்றுள் அமூர்த்தி சாதாக்கியம் முதலாக ஒவ்வொன்றும் அடுத்த சாதாக்கியத்தை முறையே சார்ந்து நிற்க, முடிவில் நான்கு சாதாக்கியமும் சில சாதாக்கியங்களைச் சார்ந்து நிற்கும் என்க.

1. 'உச்சிமுகம் ஈசானம்; ஒளிதெளிஅப் பளிங்கே;
   உத்தரபூ ருவத்திசையை நோக்கிஉறும் உகந்தே.
2. நிச்சயித்த முகத்தின்கீழ்ப் பூர்வதிசை நோக்கி
   நிகழும்முகம் தற்புருடம்; கோங்கலர்போல் நிறமே.
3. அச்சுறுத்தும் அகோரமுகம் அறக்கரிது; கராளம்
   அவிழ்தாடி; வலத்தோளில் தென்னோக்கி அமரும்.
4. செச்சைநிறத் தெரிவைமுகம்; இடத்தோள்மேல் வாமம்.
5. சிறுபுறத்தின் முகம் சத்தி யோசாதம் நிகழ்வால்.

என்னும் சிவதருமோத்தரச் செய்யுளால் மேற்கூறியவை விளங்குதல் காண்க. உத்தர பூருவம் - வட கிழக்கு. பூர்வதிசை - கிழக்குத் திசை, அறக் கரிது - மிகவும் கறுப்பானது.

அகோரமுகம் தோற்றத்தால் அச்சுறுத்தும் கோர வடிவாய் இருப்பினும் அது கோரத்திற்குக் கோரமாய்க் கொடிய வினைகளை அழித்தொழித்தலால் உண்மையில் அகோரமே - கோரம் இல்லாத - சாந்தமே. "கொன்றது வினையைக் கொன்று நின்றஅக் குணம்என் றோரார்" என்னும் சிவஞான சித்தி (சுபக்கம் - சூ. - 1.51)யை நோக்குக. இதனானே அகோர மந்திரம் பிராயச்சித்த மந்திரமாய் உள்ளது. "ஒப்பில் பேரின்பத்து" என்பதனை, "தனி நடம் செய்யும்" என்பதற்கு முன்னே கூட்டி யுரைக்க. பேரின்பத்து நடம், பேரின்பத்துக்கு ஏதுவாய நடம். "உபயம்" இரண்டில் முன்னது, 'இரண்டாவதான உருவம்' என்றும், பின்னது,

**2697.** அடியார் அரன்அடி ஆனந்தங் கண்டோர்
அடியா ரவர்அர னத்தனரு ளுற்றோர்
அடிஆர் பவரே அடியவ ராவர்
அடியார்பொன் னம்பலத் தாடல்கண் டாரே. **3**

---

*'அருவம், உருவம் இரண்டுமான அருவுருவம்' என்றும் பொருள் பயந்தன. மூன்றாம் அடி இனவெதுகை.*

*இதனால், ஐந்து முக மூர்த்தியாகிய சதாசிவ மூர்த்தியே நிலவுலகத் தலங்களில் உருவத் திருமேனி கொண்டு நடம் செய்தல் கூறப்பட்டது.*

*சிவாலயங்களில் கருவறையில் உள்ள இலிங்கம் சதாசிவ மூர்த்தமே. ஏனை உருவத் திருமேனிகள் மகேசுர மூர்த்தங்களாம்.*

***2697. தெளிவுரை :-** பொன்னம்பலம் முதலிய ஐந்து அம்பலங்களிலும், மற்றும் பல இடங்களிலும் ஆடற் பெருமானைக் கண்டு வணங்கினவரே 'அடியார்' எனப்படுவர். அவரே சிவானந்தத்தை அடைந்தவர்; சிவன் அருளைப் பெற்றவர்; சிவனது திருவடியைச் சேர்ந்தவர்.*

***குறிப்புரை :-** "பொன்னம்பலத்தாடல் கண்டோர்" என்பதை முதலிற் கூட்டியுரைக்க. தலைமைபற்றிய இதனைக் கூறவே, மற்றவை தழுவப்பட்டன. மூன்றாம் அடியொழிந்த மற்றை மூன்றடிகளிலும் "அடியார்" என வந்தனவும், மூன்றாம் அடியில் "அடியவர்" என்றதும் சொற்பொருட் பின்வருநிலையணி, "அரன் அத்தன்" என்றது இருபெயர் ஒட்டு.*

*இதனால், சிவாலய தரிசனத்தில் ஆடற்பெருமானது தரிசனத்தின் இன்றியமையாச் சிறப்பு கூறப்பட்டது.*

***2698. தெளிவுரை :-** பலவகையான நடனங்களையும் செய்பவன் சிவன். அவன் மிக மேலான ஞான நடனத்தையும் செய்ய வல்லவன். அந்த ஞான நடனத்தினால், அடங்காத எனது தற்போதத்தைத் தனது வலது தாளால் மிதித்து அடக்கி, இடப்பக்கத்தில் காணப்படுவதாய எடுத்த பாதத்தை எனது தலைமேல் வைத்து, என்னைப் பேரின்பக் கடலுள் ஆழ்த்தினான். இனி "உள்ளக் கிழியின் உருவெழுதிப்" (தி.6 ப.25 பா.1) பார்க்கும் யோகிகட்கு அக்கிழியுருவில் ஒன்றி விளங்குகின்றான்.*

***குறிப்புரை :-** "என்னை" இரண்டில் முன்னது, 'எனது போதத்தை' என்றபடி. "அடங்காத என்னை அடக்கி" என்பதனோடு, "மலம் சாய அமுக்கி" (உண்மை விளக்கம் - 36) என்பதையும், "இடம் காண் அடி வைத்து என்னைப் பரானந்தத்து இட்டு" என்பதனோடு, "அருள்தான் எடுத்து - நேயத்தால் - ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான் அழுத்தல்" என்பதையும் ஒப்பிடுக.*

**2698.** அடங்காத என்னை அடக்கி அடிவைத்து
இடங்காண் பரானந்தத் தேஎன்னை இட்டு
நடந்தான் செயும்நந்தி நன்ஞானக் கூத்தன்
படந்தான்செய் உள்ளுட் படிந்திருந் தானே. **4**

**2699.** உம்பரில் கூத்தனை உத்தமக் கூத்தனை
செம்பொற் றிருமன்றுட் சேவகக் கூத்தனை
சம்பந்தக் கூத்தனைத் தற்பரக் கூத்தனை
இன்புற நாடிஎன் அன்பில்வைத் தேனே. **5**

---

*மூன்றாம் அடியை முதலிற் கூட்டி உரைக்க. "நடந்தான்" என்பதில் 'தான்', அசை. ஞானக்கூத்தை வகுத்துரைப்பதே "மாயை தனை உதறி" (உண்மை விளக்கம் - 36) எனத் தொடங்கும், ஞானக்கூத்து. ஞானியர் பொருட்டுச் செய்வதாகலின், ஈற்றடியிற்கூறியது யோகியர்க்காயிற்று. ஞானியரும், யோகியரும் அல்லாத பிறர்க்கெல்லாம் சிவன் ஊன நடனத்தைச் செய்வான் என்க. அது, "தோற்றம் துடியதனில்" (உண்மை விளக்கம் - 35) என்னும் வெண்பாவில் சொல்லப்பட்டது.*

*இதனால், பொற்பதிக் கூத்துள் ஞான நடனம் உயிர்கட்குத் தரும் பயன் கூறும் முகத்தால், அதன் தரிசனச் சிறப்பு உணர்த்தப்பட்டது.*

***2699. தெளிவுரை :-*** ***நான், பிறவியாகிய துன்பத்தினின்று நீங்கி, வீடாகிய இன்பத்தை அடைதற்குரிய வழி யாது' என்று ஆராய்ந்து கூத்தப் பெருமானை என்னுடைய அன்பிற்குள் அகப்படும்படி வைத்தேன். தேவருள் அவனே கூத்தாட வல்ல பெருமான். அவனது கூத்து எல்லார் கூத்தினும் மேலாய கூத்து; செம்பொன் அம்பலத்தில் வெற்றியுடன் விளங்கும் கூத்து; அனைத்துப் பொருள்களின் இயக்கத்தோடும் மிக நெருக்கமான தொடர்புடைய கூத்து. உபநிடதங்கள், 'தத்' என்னும் சொல்லால் சுட்டுகின்ற பரம்பொருளின் கூத்து.***

***குறிப்புரை :-*** ***ஈற்றடியை முதலில் வைத்து உரைக்க. "கூத்தன்" என வந்தன பலவும் ஒரு பொருள் மேல் வந்த பல பெயர். கூத்தின் சிறப்பை அதனை உடையானோடு பலவகையிலும் சேர்த்துக் கூறினார்.***

> ***"கனிதரு செவ்வாய் உமையொடு காளிக்கு***
> ***அருளிய திருமுகத்து அழகுறு சிறுநகை***
> ***இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்***
> ***பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்"***

***- தி.8 கீர்த்தித் திருஅகவல் - 142-145***

***என்பதனால், காளியோடு ஆடி, 'அவளை வென்ற அந்த நடனமே தில்லையிற் செய்யப்படுகின்றது' என ஆளுடைய அடிகள் அருளிச் செய்தவாறே இவரும்***

*பொன்மன்றுட் கூத்தினைச் "சேவகக்கூத்து" என்றார். சேவகம் - வீரம், வெற்றி. கோயிற் புராணமும் இவ்வாறே கூறுதல் காண்க.*

*"சம்பந்தம்" என்றது, இங்கு அத்துவித சம்பந்தத்தை. அதனைச் சித்தாந்த நூல்கள் இனிது விளக்கும்.*

*"நாடி வைத்தேன்" என்றதனால், அதன் பயன் எண்ணியது எண்ணியவாறே கிடைத்தமை பெறப்பட்டது. அதனை இங்குக் கூறியதனால், 'நீவிரும் அவனை அவ்வாறு வைத்தால் இன்புறுவீர்கள்' என்பது குறிப்பெச்சமாயிற்று.*

*"சித்தமும் செல்லாச் சேட்சியன் காண்க!*
*பத்தி வலையில் படுவோன் காண்க!"*

*- தி.8 திருவண்டப்பகுதி, 41, 42*

*ஆர்காண வல்லார் அரனவனை? அன்பென்னும்*
*போர்வை யதனாலே போர்த்தமைத்துச் - சீர்வல்ல*
*தாயத்தால் நாமும் தனிநெஞ்சி னுள்ளடைத்து*
*மாயத்தால் வைத்தோம் மறைத்து.*

*- தி.8 அற்புதத் திருவந்தாதி, 961*

*"அழலார் வண்ணத்து அம்மானை*
*அன்பில் அணைத்து வைத்தேனே"* *- தி.4 ப.15 பா.7*

*எனப் பிற திருமுறைகளிலும் வந்தவாறு இங்கும் நாயனார், "அன்பில் வைத்தேன்" என்று அருளிச் செய்தார். அதனால், வேதங்களாலும் அறியவாராது 'அது' எனச் சேய்மைச் சுட்டாகப் பொதுவிலே சுட்டப்படுகின்ற பரம்பொருள் அன்பர்தம் அன்பிற்குள்ளே வந்து அகப்படுதல் தெளிவாகும். பொற்பதிக் கூத்துப் பல வகைக் கூத்தும் ஆதல் தோன்றுதற்கு. இடையே "செம்பொன் திருமன்றுட் கூத்து" என்றார்.*

*இதனால், பொற்பதிக் கூத்தின் தரிசனம் பலவகைக் கூத்தின் தரிசனமுமாய் வீடு பயத்தல் கூறப்பட்டது.*

***2700. தெளிவுரை :-** சிவன் தனது கூத்தினை மாணிக்கச் சபையில் மாணிக்கக் கூத்தாக இயற்றுவான். தில்லைப் பொற் சபையில் பொற்கூத்தாக இயற்றுவான். மற்றும் வெள்ளி முதலிய சபைகளில் அது அதற்குத் தக்க கூத்தாக இயற்றுவான். அனைத்தையும் கடந்த தனது இயற்கைப் பரஞ்சோதி வெளியில் சிவானந்தக் கூற்றாக இயற்றுவான். (அது முதலிலே சொல்லப்பட்டது). ஆகவே, ஒருவகையாய் இல்லாமல் பலவேறு வகையாக இயற்றுகின்ற ஆணிப்பொற் கூத்தனது கூத்து வகைகளையெல்லாம் யார் வரையறை செய்து கூறவல்லவர்!.*

***குறிப்புரை :-** 'ஒருவரும் இல்லை' என்பதாம். பூணுதல் - வெள்ளி*

**2700.** மாணிக்கக் கூத்தனை வண்தில்லைக் கூத்தனைப்
பூணுற்ற மன்றுட் புரிசடைக் கூத்தனைச்
சேணுற்ற சோதிச் சிவானந்தக் கூத்தனை
ஆணிப்பொற் கூத்தனை யாரறி வாரே. **6**

**2701.** விம்மும் வெருவும் விழும் எழும் மெய்சோரும்
தம்மையும் தாம்அறி யார்கள் சதுர்கெடும்
செம்மை சிறந்த திருஅம் பலக்கூத்துள்
அம்மலர்ப் பொற்பாதத்து அன்புவைப் பார்கட்கே. **7**

---

*முதலியவற்றைத் தமதாகக் கொள்ளுதல். "சடைக்கூத்து" என்பதை 'சடை போலும் கூத்து' என உவமத் தொகையாக்கி, 'சிவனது சடை ஒன்றாய் இல்லாது பலவாய் விரிதல் போலப் பலவாய் விரியும் கூத்து' எனத் தொழிலுவமம் ஆக்குக. ஆணிப்பொன் - பிற பொன்னின் மாற்றுக்களையெல்லாம் அளந்து காட்டித் தான் வேறொன்றால் அளக்கப்படாத பொன். இதனை 'உரையாணி' என்பர். ஆணிப்பொன் போலும் கூத்து, பிற கூத்தின் தகுதிகளைத் தான் அளந்து, பிறிதொரு கூத்தினால் தன் தன்மை அளக்கப்படாத கூத்து.*

*''யார் அறிவாரே'' என்றது, 'பொற்பதிகளில் சென்று காணின் அக்கூத்துக்களின் வகையை ஒருவாறு உணர்ந்துரைத்தல் கூடும்' என்றபடி.*

*இதனால், பொற்பதிக் கூத்து அவனது கூத்து வகை பலவற்றையும் காட்டுதல் கூறப்பட்டது.*

***2701. தெளிவுரை :-** பொற்பதிகளுள் உள்ள நேர்மை மிகுந்த அம்பலங்களில் நிகழும் திருக்கூத்தில் அழகிய மலரும் பொன்னும் போலும் எடுத்த திருவடியில் தன் அன்பை வைப்பவர்கட்கு அவ்வன்பினால் உடம்பு அழுகையில் விம்மும்; 'அத்திருவடி எங்கே மறைந்து விடுமோ' என அஞ்சி நடுங்கும்; தமது அடைக்கல நெறியையும், பிழைபொறுக்க வேண்டுதலையும் இனிது புலப்படுத்த வேண்டி நிலத்தின்மேல் நெடுங்கிடையாய் விழும்; பின்பு திருக்கூத்தினைக் காண வேண்டி எழும்; தளர்ச்சியடையும்; முடிவாக அவர்கள் தம்மையே தாம் மறந்துவிடுவார்கள் என்றால் 'தற்பெருமை' என்பது அவர்கட்கு எங்கேயிருக்கப் போகின்றது? அஃது எங்கும் இல்லாது, அறவே கெட்டொழியும்.*

***குறிப்புரை :-** மூன்றாம் அடி முதலாகத் தொடங்கிப் பின், "மெய்" என்பதை "விம்மும்" என்பதற்கு முன்னே கூட்டி உரைக்க. "தம்மையும்" என்னும் உம்மை சிறப்பு. சதுர் - பெருமை. திருக்கூத்தை அன்போடு தரிசிப்பவர்க்கு இம்மெய்ப்பாடுகள் உளவாதலைத் திருநாவுக்கரசரது வரலாற்றில் சேக்கிழார்,*

*கையும் தலைமிசை புனைஅஞ் சலியன;
கண்ணும் பொழிமழை ஒழியாதே*

**2702.** தேட்டறும் சிந்தை திகைப்பறும் பிண்டத்துள்
வாட்டறும் கால்புந்தி யாகி வரும்புலன்
ஒட்டறும் ஆசை அறும் உளத் தானந்த
நாட்டம் முறுக்குறு நாடகம் காணவே. **8**

---

*பெய்யும் தகையன; கரணங் களும்உடன்*
*உருகும் பரிவின; பேறெய்தும்*
*மெய்யும் தரைமிசை விழும்;முன் பெழுதரும்;*
*மின்றாழ் சடையொடு நின்றாடும்*
*ஐயன் திருநடம் எதிர்கும் பிடும்அவர்*
*ஆர்வம் பெருகுதல் அளவின்றால்*

*- தி.12 திருநாவுக்கரசர், 167*

*எனக் கூறியவாற்றானும் அறிக.*

*இன்னும்,*

*விம்மா வெருவா விழியாத் தெழியா வெருட்டுவார்;*
*தம்மாண் பிலராய்த் தரியார்; தலையால் முட்டுவார்;*
*எம்மான், ஈசன், எந்தை, என் அப்பன் என்பார்கட்கு*
*அம்மான் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்.*

*- தி.4 ப.21 பா.6*

*என்றதையும் காண்க. நேர்மை - மலக்கோண் நீங்கிய திருவருள் நேர்மை.*

*இதனால், பொற்பதிக் கூத்தினைத் தரிசிப்பார்க்கு உண்டாகும் அனுபவம் கூறப்பட்டது.*

***2702. தெளிவுரை :-** காண்பவரது உள்ளங்களில் சிவானந்த நாட்டத்தையே முறுகி வளரச் செய்கின்ற பொற்பதிக் கூத்துக் கண்டவுடன் கண்டவர்களது சித்தம் வேறு எதனையும் சிந்தியாது; அந்தத் திருக்கூத்து ஒன்றை மட்டுமே சிந்திக்கும். உயிர்ப்பினால் பொறிகள் வழியாகப் புலன்களின்மேல் செல்வனவாய ஏனைய அந்தக் கரணங்களும் அவ்வாறு செல்லமாட்டா. ("அளப்பருங் கரணங்கள் நான்கும் சிந்தையே ஆக" (தி.12 தடுத்தாட் கொண்டது-106) என்ற அநுபவத்தை நினைவு கூர்க). அங்ஙனமாகவே, உலக ஆசைகள் பலவும் அற்றொழி வனவாம். அவை ஒழியவே உலகப் பொருள்களைத் தேடி, அவை கிடையாமையால் மனம் திகைத்தலும், தேடுதலாலும், திகைத்தலாலும் உடல் இளைத்தலும் நிகழா.*

***குறிப்புரை :-** "ஆனந்த நாட்டம்" என்பது முதலாகத் தொடங்கி, 'சிந்தை தேட்டறும்' என மாற்றி, "திகைப்பறும், பிண்டத்துள் வாட்டறும்" என்பதை இறுதியில் வைத்து உரைக்க. தேடுதல் - ஆராய்தல். தேடு, தேட்டு - முதனிலை*

**2703.** காளியோ டாடிக் கனகா சலத்தாடிக்
கூளியோ டாடிக் குவலயத் தேஆடி
நீடிய நீர்த்தீக்கால் நீள்வானத் தேயாடி
நாளுற அம்பலத் தேஆடும் நாதனே. **9**

---

*திரிந்த தொழிற்பெயர். 'காலால், புந்தியாகி வரும் புலன்மேல் (மனம்) ஒட்டறும்; திகைப்பறும்' என உருபு விரித்து, 'மனம்' என்பது வருவிக்க. மனம் பொறிவழிச் சென்று கவர்கின்ற புலன்கள் முடிவில் புத்தியின்கண் வந்து முடிதலின், "புந்தியாகி வரும் புலன்" என்றார். 'புலன்மேல்' என, 'மேல்' என்பது விரிக்க. பிண்டம் - உடல். 'வாட்டம்' என்பதில் அம்முக் குறைந்து நின்றது.*

*இதனால், பொற்பதிக் கூத்துக் காண்பவர்க்கு அக்காட்சியே முத்திப் பேரின்பமாதற் சிறப்புக் கூறப்பட்டது.*

***2703. தெளிவுரை :-** சிவன், படைப்புக் காலத்தில் உயிர்களைக் காளியின் பிடியிலிருந்து விடுவித்தற்கு அவளோடு நடனப் போட்டியிடும் முறையில் நடனம் ஆடி அவளை வெள்கச் செய்து வென்றான். பின்பு தேவர்கள் கண்டு தனது முதன்மையை உணர்ந்து உய்தற் பொருட்டு அவர்கள் முன் மேரு மலையில் நடனம் ஆடினான். பின்பு நில உலகில் சுடலைகளில் பேய்களோடு கூடி நடனம் ஆடினான். பஞ்ச பூதங்களில் எப்பொழுது ஒருவரும் அறியாதபடி நடனம் ஆடிக் கொண்டிருக்கின்றான். அவன் பொற்பதிகளில் உள்ள அம்பலங்களில் யாவரும் காண, எந்நாளும் ஆடிக் கொண்டிருக்கின்றான்.*

***குறிப்புரை :-** 'அவ்வருமை யறிந்து அப்பதிகளில் சென்று அந்த நடனத்தை வணங்குதல் மானிடர்க்குக் கடன்' என்பது குறிப்பெச்சம்.*

*'காளி, தாருகன்' என்னும் அசுரனை அழித்து அவனது குருதியைக் குடித்த காரணத்தால், அவனைப் போலவே உலகை அழிக்கத் தொடங்கியபொழுது சிவன் அவளோடு நடனப்போர் செய்து அவளது சினத்தை அடக்கினான்' என்பது புராண வரலாறு.*

*நீடுயர் மண்ணும் விண்ணும் நெடுவேலை குன்றொடு*
*உலகேழும் எங்கும் நலியச்*
*கூடிய கையராகி இமையோர் கணங்கள்*
*துதிஓதி நின்று தொழலும்*
*ஓடிய தாருகன்றன் உடலம் பிளந்தும்*
*ஒழியாத கோபம் ஒழிய*
*ஆடிய மாநடத்து எம் அனலாடி பாதம்*
*அவையாம் நமக்கொர் சரணே.* - *தி.4 ப.14 பா.4*

*என்னும் அப்பர் திருமொழிக் குறிப்பைக் காண்க. தாருகன் - ஆணவ மலம். அவனை அழித்த காளி - மாயை. சிவன் அவனது கோபத்தை அடக்கியது*

**2704.** மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை
கூரும்இவ் வானின் இலங்கை குறிஉறும்
சாரும் திலைவனம் தண்மா மலயத்தூ
டேறும் சுழுமுனை இவைசிவ பூமியே. **10**

---

*மாயையின் மயக்கத்தை நீக்கியது. எனவே, உயிர்களைக் கேவல சகலங்களின் நீக்கிச் சுத்தத்தை அடையச் செய்தலே சிவன் செய்யும் திருக்கூத்து என்பது விளங்கும். காளியோடு நடனம் ஆடிய ஐதிகத்தைக் குறிப்பதே திருவாலங்காட்டுத் தலம். எனவே, அவ்விடத்து நடனமே பழைய நடனம் ஆதல் விளங்கும்.*

*தேவர்கள் காண மேருமலையில் ஆடியதை இம்மந்திரத்தால் அறிகின்றோம்.*

***சிவன் சருவ சங்காரத்தின் பின் உடல்அற்ற உயிர்களோடு கூடி நடனம் ஆடுதல் அறியாதார் உலகத்தில் பேய்களோடு கூடிச் சுடுகாட்டில் ஆடுவதாக எண்ணுவர்***. *அவர்தம் மனப்பான்மை பற்றி அதனையும் சிவன் உடன்பட்டுக் கொள்கின்றான். 'குவலயத்துக் கூளியோடு ஆடி' என ஒரு தொடராக ஓதற்பாலதனை இரண்டு தொடராகப் பிரித்து ஓதினார். சிவனது செயல்கள் எல்லாம் அவனது திருக்கூத்தாகவே கூறப்படுதல் பற்றி. அவன் பஞ்ச பூதங்களைச் செயற்படுத்தி நிற்றலையும் அவனது திருக்கூத்தாகக் கூறினார். 'எத்துணைப் பெரியோன் எத்துணை எளியனாய் வந்து பொற்பதிகளில் ஆடுகின்றான்' என்பதை விளக்குதற்கு அவனது பெருநடனங்கள் பலவற்றையும் எடுத்தோதினார். மூன்றாம் அடி உயிரெதுகை பெற்றது.*

*இதனால், பொற்பதிக் கூத்தின் அருமை உணர்த்தப்பட்டது.*

***2704. தெளிவுரை :-*** *('சிவன் அண்டம், பிண்டம்' இரண்டிலும் நடம் புரிகின்றான்' என்பதனாலும், 'பிண்டத்துள் இருதயத்திலே நடம் புரிகின்றான்' என்பதனாலும் அண்டமும், பிண்டமும் சமம் ஆகின்றன. அம்முறையில் நோக்கும் பொழுது) பிண்டத்தில் நடுநாடியாகிய சுழுமுனா நாடியே மேரு மலையும், இடைநாடியே இலங்கையும், பிங்கலை நாடியே மேருவிற்கு அப்பால் உள்ள நில உருண்டையின் வடமுனையும் ஆகும். 'இனி, 'மேரு' எனப்படும் நடு நாடி மேல் நோக்கி செல்கின்ற மணிபூரகம் பொதிய மலையும், இருதயம் தில்லை வனமும் ஆகும். ஆகவே மேரு முதலியவற்றை உடைய நிலம் சிவனது திருவருள் மிக்கு விளங்குகின்ற சிவநிலம் ஆதல்போல், சுழுமுனை முதலியவற்றை உடைய பிண்டமும் சிவநிலமேயாம்.*

***குறிப்புரை :-*** *'நடுநாடி மேரு வாய் உறும்; இடை இலங்கையாய் உறும், பிங்கலை குறியாய் உறும்; மலயத்தூடு ஏறும் சுழுனை தில்லை வனத்துச் சாரும் ஆகவே, இவைகளையுடைய பிண்டம் வெளியே இனிது விளங்குகின்ற நிலம் போல சிவபூமி என இயைத்துக் கொள்க.*

**2705.** பூதல மேருப் புறத்தான தெக்கணம்
ஓதும் இடைபிங் கலைஒண் சுழுனையாம்
பாதி மதியோன் பயில்திரு அம்பலம்
ஏதமில் பூதாண்டத் தெல்லையின் ஈறே. **11**

---

*குறி - எல்லை. அது வட எல்லையைக் குறித்தது. முன்னர்க் கூறிய உருவக முறையால், "மலயம், தில்லைவனம்" என்பன மணிபூரகத்தையும் இருதயத்தையும் குறிப்பவாயின. "வான்" என்றது அதன்கண் அடங்கி விளங்கும் நிலத்தை. இன், உவம உருபு. 'இலங்கை, குறி' என்பவற்றை, இடைபிங்கலைகளோடு நிரல் நிறையாக இயைக்க. 'ஆய் உறும்' என ஆக்கம் விரித்து எல்லாவற்றோடும் கூட்டுக. 'மிக்க' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. "இவை" என்பது தானியாகு பெயராய் இவைகளையுடைய உடம்பைக் குறித்தது.*

*இதனால்,* ***அண்டத்தில் பொற்பதிகள் இருத்தல் போலப் பிண்டத்திலும் பொற்பதிகள் இருத்தல் கூறப்பட்டது.***

***2705. தெளிவுரை :-** (முன் மந்திரத்தில் பிண்டம் அண்டத்தோடு ஒப்ப வைத்து நோக்கும் முறை கூறியது போல, அண்டத்தைப் பிண்டத்தோடு ஒப்ப வைத்து நோக்கினால்),*

*மேருவிற்கு அப்பால் உள்ள நில உருண்டையின் வடமுனை நிலமகட்குப் பிங்கலை நாடியும், தெற்கேயுள்ள இலங்கை இடைநாடியும், சிவன் நடனம் புரிகின்ற தலங்களுள் தலையாயதாகிய தில்லை நடுநாடியும் ஆகும். பூத காரியமாகிய அண்டம், பிண்டம் இரண்டனுள் அண்டம் பிண்டத்தோடு ஒப்ப இவ்வாறு வரையறை செய்து உணரப்படும்.*

***குறிப்புரை :-** 'அண்டம், பிண்டம் என்பவற்றுள் பிண்டத்தை அண்டத்தோடு ஒப்பித்தலே மரபு போலும்' என மலையாமைப் பொருட்டு, 'அண்டத்தைப் பிண்டத்தோடு ஒப்பித்தலும் மரபே' என்றற்கு இது கூறினார். இதனால், அண்டம் பிண்டம் இரண்டும் தம்முட் சமம் ஆதல் விளங்கிற்று. கோயிற் புராண (பதஞ்சலி சருக்கம் - 70, 71)த்திலும்,*

*"அலைந்திடும் பிண்டம், அண்டம்
அவைசமம் ஆத லாலே,
இலங்கைநேர் இடைபோம்; மற்றை
இலங்குபிங் கலையாம் நாடி
நலங்கிளர் இமய நேர்போம்;
நடுவுபோம் சுழுனை நாடி"*

*என்றும்,*

"நாடரு நடுவின் நாடி
நலங்கிளர் தில்லை நேர்போய்க்
கூடும்"*

என்றும் இவ்வாறே கூறப்பட்டது.

'புறத்து ஆனது' என்பதன் ஈறு தொகுத்தலாயிற்று. "இடை பிங்கலை" என்பவற்றை முன் மந்திரத்திற்கு இணங்க, 'புறத்து ஆனது, தெக்கணம்' என்ப வற்றோடு எதிர்நிரல் நிறையாக இயைக்க. "தெக்கணம்" என்றது. தென் கோடியாகிய இலங்கையை, 'நட்டம் பயில்' எனப் பயிலுதலுக்குச் செயப்படு பொருள் வருவித்துக் கொள்க. நில உருண்டைதான் பல பகுதிகளை உடைத்தாயினும், அவற்றுட் சிறந்தது, 'கரும பூமி' எனப்படுகின்ற பரத கண்டமே இவ்வாறான பல சிறப்புக்களை உடையது என்க.

இதனால், பிண்டத்தைப் போல அண்டமும் நாடி முதலியவற்றை உடைத்தாதல் கூறப்பட்டது.

'அண்டம், பிண்டம் இரண்டும் சிவன் நடம்புரியும் பொற்பதிகளை உடையன' என்றற்கு இவ்விரு மந்திரங்களும் இவ்வதிகாரத்தில் அருளிச் செய்யப்பட்டன.

## 14. பொற்றில்லைக் கூத்து

*இனி, நிறுத்த முறையானே பொற்றில்லைக் கூத்தினைப் பதின்மூன்று மந்திரங்களால் உணர்த்துகின்றார். பொற்பதிகளுள் தலையாயது தில்லை; அது பொன்னம்பலம்; ஆதலின் வேறு வைத்தார்.*

**2706.** அண்டங்கள் ஓரேழும் அம்பொற் பதியாகப்
பண்டைஆ காசங்கள் ஐந்தும் பதியாகத்
தெண்டினிற் சத்தி திருவம் பலமாகக்
கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே. **1**

---

*2706. **தெளிவுரை :-** பொன் வகைகளில் சிறந்தமை பற்றி, 'அம்பொன்' எனப்படும் செம்பொன் நகரமாகிய தில்லைப் பதியே அனைத்து அண்டங்களையும், அப்பதியில் உள்ள ஆலயத்தின் ஐந்து ஆவரணங்களே பூதங்களில் ஒன்றாகிய ஆகாயம் போலாது, அதற்கு மிக முன்னே சுத்த மாயையில் தோன்றி, அனைத்துப் பொருள்களையும் தம்முள் அடக்கி நிற்கின்ற நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகளாகவும், அவ் ஆலயத்தின் முன் ஆவரணத்துள் உள்ள திருவம்பலமே ஐந்தொழில் செய்யும் சத்தியாகவும் அமையும்படி நின்று, அனைத்தையும் கடந்து நிற்கும் மேலான ஒளியாகிய சிவன் நடனத்தை விரும்பிச் செய்கின்றான்.*

***குறிப்புரை :-*** *அண்டப் பகுதிகளை எடுத்துக் கூறவே, முன் அதிகாரத்தில் அண்டத்தோடு ஒப்பிக்கப்பட்ட ஒப்புமை பற்றிப் பிண்ட வகைகளும் அடங்கின. அதனால், 'பொற்றில்லைக் கூத்துத் தானே அண்டபிண்டம் அனைத்தையும் இயக்குகின்ற கூத்தாம்' எனக் கூறியவாறாயிற்று. இன்னும் "பரஞ்சோதி" என்றதனால், ஒரு நாமம், ஓருருவம், ஒன்றும் இல்லாத அந்தப் பரமசிவன்தானே பொற்றில்லையுள் உருவும், பெயரும், தொழிலும் கொண்டு ஆடுகின்றான்' என்பது தோற்றுவிக்கப்பட்டது.*

*தண்டு, 'தெண்டு' என மருவிற்று. தண்டு - செங்கோல், நீதி. அஃது உயிர்களை வினை நெறிக்கு உட்படுத்தி ஆளும் ஆளுகையைக் குறித்தது. "தெண்டினினின்" என இன்னருபின் மேல் இன்சாரியை வந்தது சிறுபான்மை வழக்கு. உகத்தல் - விரும்புதல். அது தன் காரியந்தோன்ற நின்றது.*

*கோயிலை, 'நகர்' என்றல் பற்றி, 'பதி' என்றார். அதனை ஐந்து ஆகாசமாகக் கூறினமையின், அஃது ஐந்து ஆவரணங்களை உடைத்தாதல் விளங்கிற்று. அனைத்தையும் அடக்கி நிற்றல் பற்றிக் கலைகள் 'ஆகாசம்' எனப்பட்டன.*

*இதனால், 'தில்லைத் திருக்கோயிலின்கண் உள்ள திருவம்பலத்தில் செய்யப்படும் திருக்கூத்தே பொற்றில்லைக் கூத்தாம்' என்பதும், அதன் சிறப்பும் கூறப்பட்டன.*

2707. குரானந்த ரேகையாய்க் கூர்ந்த குணமாம்
சிரானந்தம் பூரித்துத் தென்றிசை சேர்ந்து
புரானந்த போகனாய்ப் பூவையும் தானும்
நிரானந்த மாக நிருத்தஞ்செய் தானே. 2

---

*__2707. தெளிவுரை :-__ குரு உணர்த்தியருள்கின்ற இன்பக் கதிராய்ப் பின் பெருகி விளைகின்ற தலையாய இன்பத்தைத் தன்னுள் நிரம்பக் கொண்டு சிவன் தென்னாட்டில் தில்லையை அடைந்து மங்கையோடு உடனாம் இன்பப் போக வடிவினனாய், நிலையான இன்பத்தைத் தரும் நடனத்தைச் செய்கின்றான்.*

*__குறிப்புரை :-__ 'அதனைத் தவறாது சென்று கண்டு தொழுதல் வேண்டும்' என்பது குறிப்பெச்சம்.*

*குரு + ஆனந்தம் = குரானந்தம். 'ரேகை', ஒளியின் சிறு கூறு. குரு உபதேசத்தில் சிவானந்தம் கேள்வியளவில் சிறிதே புலப்படுதலால் அதனை "ரேகை" என்றும், பின்னர்ச் சிந்தித்தல், தெளிதலால் பெருகி வருதலால் "கூர்ந்த" என்றும், அங்ஙனம் பெருகி எல்லையின்றி விளைகின்ற இன்பம் சிவனுக்கு "வரம்பில் இன்பம்" என்னும் குணமாய் இருத்தலின் "குணமாம் சிரானந்தம்" என்றும், அஃது அவனது நடனத்தில் பொங்கி வழிதலால், "பூரித்து" என்றும் கூறினார். "தென்திசை" என்றது இங்குத் தில்லையை அவன் தேர்ந்து கொண்டது, 'அதன் சிறப்பு நோக்கி' என்றே கொள்ளப்படும். "மாதவம் செய்த தென்றிசை" (தி.12 திருமலைச் சருக்கம் - திருமலைச் சிறப்பு - 25) எனச் சேக்கிழாரும் குறித்தருளினார். புரம் - திருமேனி; வடிவம் 'பூவையும் தானுமாம் ஆனந்த போக புரனாய்' என்க. ஆனந்தம், சிவானந்தம். போகம் - உலக இன்பம். அவன் போக வடிவினனாய் இருந்து தரும் போகம் சிவானந்தத்திற்குத் தடையாகாமை பற்றி, "ஆனந்த போகம்" என்றார் மொழியின் இனிமை பற்றி மகளிரைக் 'கிளி, பூவை' என உவம ஆகுபெயராய் கூறுதல் இலக்கிய வழக்கு. 'நிர்' என்னும் உபசர்க்கம் நிலை பேற்றையும் உணர்த்தும், நிர்த்தாரணம் நிர்ணயம்' முதலியவற்றிற் போல, இம்மந்திரத்திற்குப் 'பரஞ்சோதி' என்னும் எழுவாயை முன் மந்திரத்திலிருந்து கொள்க.*

*இதனால், தில்லைக் கூத்தினைச் சிவன் மேற்கொண்ட வகையும், அது போகம், மோட்சம் இரண்டையும் தருதலும் கூறப்பட்டன.*

*__2708. தெளிவுரை :-__ சிவன் தான் ஆடும்பொழுது, அவனோடு உடன் ஆடுவன பல. அவ்வாறு அனைத்தும் ஆடும்படி அவன் தான் நாதாந்தத்தைக் கடந்து செய்யும் நடனத்தைத் தில்லையில் நாதத்தோடு கூடியே ஆடுகின்றான்.*

*இது நாதாந்தக் கூத்து உணர்த்துகின்றது.*

*முப்பத்தாறாவது தத்துவம் எனப்படும் நாதத்தின் முடிவில் பரவெளியில் திருவருள் உருக்கொண்டு நாதப் பறையைக் கையிற்கொண்டு முதல்வன் ஆடினன்.*

**2708.** ஆதி பரன்ஆட அங்கை அனலாட
ஓதும் சடையாட உன்மத்தம் உற்றாடப்
பாதி மதியாடப் பாரண்டம் மீதாட
நாதமொ டாடினான் நாதாந்த நட்டமே. **3**

---

*அதன் விளைவாக, ஆதிசத்தியோடு உடனாகிய சதாசிவன் ஆடினன்; முதல்வனது மற்றொரு திருக்கையில் ஏந்திய அனல் ஆடிற்று; அவன்றன் சடைகள் ஆடின; அவன் முடிக்கணிந்த உன்மத்த மலரும் ஆடின; பிறை ஆடிற்று. இந்தப் பாராகிய அண்டம் ஆடிற்று.*

*பார் அண்டம் ஈது - எனப் பிரிக்க. நாதப்பறை உயிர்களுக்கு அறிவை வழங்கும் நாத சத்தியை எழுப்பிற் சொற் பிரபஞ்சத்தைத் தொழிற்படுத்தும். சதாசிவன் தன் ஐந்தொழிலை மேற்கொண்டான் என்றபடி. இறைவன் உலக உருவினன் ஆகலின், சடை ஆகாயத்தைக் குறிக்கும். கனல் உலகிலுள்ள தீயைக் குறிக்கும். ஒளியுடைப் பொருள்கள் இதில் அடங்கும். பிறை வளர்ந்தும் தேய்ந்தும் உலகப் பொருள்களை வளர்ந்தும் தேய்ந்தும் வரச் செய்யும். உன்மத்தம் வெளிப்படையாக மக்களால் விரும்பப்படாத பொருள்கள் ஏனைய பொருள்களைத் தோற்றுவிக்கு முகத்தால் பயன்படுதலைக் குறிக்கும்.*

***குறிப்புரை :-** 'இஃது அதிசயம்' என்பதாம். "ஆதிபரம்" என்பதன் பின் 'தான்' என்பது வருவிக்க. கை முதல் மதியீறாகச் சொல்லப்பட்டன எல்லாம் அவனுடையனவே. ஓதும் சடை, பிறருக்கு உரித்தாகாது அவனுக்கே உரித்தாகச் சொல்லப்படுகின்ற சடை. எனவே, 'முதல் இருடியாவான் சிவனே' என்பது விளங்கும். "விஸ் வாதிகோ ருத்ரோ மகரிஷி" என வேதமும், "முன்னியாய் நின்ற முதல்வா போற்றி" (தி.6 ப.57 பா.5) எனத் திருமுறையும் கூறும். **உன்மத்தம் சடையில் அணிந்த ஊமத்தை மலர். அனல், வினையைப் போக்குதலையும், சடை ஞானத்தைத் தருதலையும், ஊமத்தை ஆனந்தம் விளைத்தலையும், பிறை அருள் வழங்குதலையும், குறிப்பால் உணர்த்துவன**. 'பாரும், மீது அண்டமும் ஆட' என்க. இது அவன் ஆட, அனைத்தும் ஆடுதலைக் குறிக்கும். "நாதமொடு" என்பதில் நாதம் சிலம்பொலி. கந்திருவர் யாழொலி முதலிய இன்னொலிகள். நாதாந்தம் - முடிவில் உள்ள நாத தத்துவத்திற்கு அப்பால், 'அங்குச் செய்யப்படுவதே ஆனந்த நடனம்' என்பது மேற்கூறப்பட்டது. (தி.10 த.9 அ.11) 'அந்த நடனத்தைச் சிவன் இத்தில்லையில் செய்கின்றான்' என்றார்.*

***2709. தெளிவுரை :-** அழகிய திருமேனியுடன் பெருமான் தில்லையம்பலத்தில் ஆடுகின்ற தலைமை வாய்ந்த அந்த நடனம் அகில உலகங்களுக்குமான நடனமாகும். அதனை வணங்க வேண்டி அவ்வம்பலத்தை அடைந்தால், அவ்அடைவே மேலான ஞானத்தின் முடிநிலையாகிய மௌன நிலைப்பேறாகும்.*

**2709.** கும்பிட அம்பலத் தாடிய கோநடம்
அம்பரன் ஆடும் அகிலாண்ட நட்டமாம்
செம்பொரு ளாகும் சிவபோகம் சேர்ந்துற்றால்
உம்பர மோனஞா னாந்தத்தின் உண்மையே. 4

**2710.** மேதினி மூவேழ் மிகும்அண்டம் மூவேழு
சாதக மாகும் சமயங்கள் நூற்றெட்டு
நாதமொடு அந்தம் நடனாந்தம் நாற்பதம்
பாதியோ டாடும் பரன்இரு பாதமே. 5

---

***குறிப்புரை :-*** *"அம்பரன்" என்பதை முதலிலும், 'கும்பிட' என்பதை இரண்டாம் அடியின் இறுதியிலும் கூட்டி உரைக்க. அம்பலம், அதிகாரத்தால் இங்குத் தில்லையம்பலம் ஆயிற்று. கோ - தலைமை. 'அகிலாண்டத்திற்கும் ஆடும் நட்டமாம்' என்க. செம்பொருள், கண்கூடாக அறியப்படும் பொருள். ஈண்டுள்ளாரால் அங்ஙனம் அறியப்படும் சிவலோகம் தில்லையம்பலம்' என்க. "கும்பிடச் சேர்ந்துற்றால்" என்றது, 'கும்பிடுதற்கு முன்பே பயன் விளையும்' என விளைவு கூறியவாறு. உம்பர் அம் எனப் பிரிக்க. உம்பர் - மேன்மை. அம் - அழகு; சிறப்பு' என்றபடி 'மோனமாகிய அந்தம்' என இயையும், மௌனமாவது, தற்போதம் அற்ற நிலை. "மோனம் என்பது ஞான வரம்பு" (கொன்றை வேந்தன்) என ஔவையாரும் அருளிச் செய்தார். ஞான அந்தத்தின் உண்மை - ஞானத் தின் முடிநிலையால் விளையும் மெய்யான பேறு; பரமுத்தி. தில்லைத் திருநடம், கண்டு வணங்கினார்க்கு வீடுபேற்றைத் தரும்' என்றபடி.*

*இதனால், தில்லைக் கூத்தின் தலைமையும், பயனும் கூறப்பட்டன.*

***2710. தெளிவுரை :-*** *நில அண்டத்தின் பகுதி மூவேழும், அவற்றிற்கு மேல், 'நீர் முதலிய பூதம் நான்கு, அகங்காரம், புத்தி, பிரகிருதி' என்னும் தத்துவ அண்டங்கள் ஏழும் உண்மை வீட்டிற்கு வழியாகின்ற உபநிடத நூல்கள் நூற்றெட்டும், இன்னும் அராகம் முதல் நாதம் முடிவாய் உள்ள தத்துவ புவனங்களும் ஆகிய அனைத்தும் சிவனது திருக்கூத்தின் எல்லையையே எல்லையாக உடையன. இனி உயிர்கள் அடையும் சாலோக, சாமீப, சாரூப, சாயுச்ய முத்திகளும் மாதுடன் ஆடும் சிவனது திருவடி நிலைகளேயாகும்.*

***குறிப்புரை :-*** *நில அண்டப் பகுதி மூவேழாவன, கீழுலகம் ஏழு, நிலப்பரப்பின் தீவுகள் ஏழு, மேலுலகம் ஏழு, புவனங்களை நோக்கும் பொழுது தன்மாத்திரை, கன்மேந்திரியம், ஞானேந்திரியம், மனம். இவை அகங்காரத்தில் அடங்குதலைச் சிவஞான யோகிகளது இரண்டாம் சூத்திர மாபாடியத்துப் பிரதிட்டா கலை விளக்கத்தில் காண்க. வேதாந்த சித்தாந்த நூல்களே உண்மை ஞான நூல்களாதல் பற்றி அவைகளையே 'சாதகம்' எனக் கொண்டு, அவற்றுள் வேதாந்த நூல்களையே சமய நூல்களாகச் சுட்டினார். 'சமயம்' என்றது சமய*

**2711.** இடைபிங் கலைஇம வானோ டிலங்கை
நடுநின்ற மேரு நடுவாம் சுழுனை
கடவும் திலைவனம் கைகண்ட மூலம்
படர்வொன்றி யெண்ணும் பரமாம் பரமே. **6**

---

*நூல்களை. ஒடு, எண் ஒடு. அதன் இயல்பு ஓரிடத்தில் நின்றே ஏனையிடத்தும் இயைதல் ஆதலை அறிக. அந்தம், இங்கு எல்லை முன் நின்ற அந்தம் மேதினி முதலிய பிறவற்றோடும் சென்றியையும். "மேதினி யந்தமொடு, மூவேழ் அந்தமொடு" என இவ்வாறு எண்ணி, "நடனாந்தம்" என்பதனோடு முடிக்க. 'பதம்' என்றது முத்தியை, "பாதி" என்றது பாதியாய் இருப்பவனை.*

*இதனால், அனைத்தும் திருக்கூத்துள் அடங்குதல் பொதுவகையால் கூறப்பட்டதாயினும், கருத்து வகையால் தில்லைக் கூத்துள் அடங்குதலே கூறப்பட்டதாம்.*

***2711. தெளிவுரை :-*** *பிண்டத்தில் இடைகலை பிங்கலை நாடிகள் அண்டத்தில் உள்ள இலங்கையும், இமயமுமாகவும் நடு நாடியாகிய சுழுமுனை இரேசக பூரக வாயுக்களால் சூழப்படுதலால் சூரிய சந்திரர்களால் வலம் வரப்படுகின்ற மேருவாகவும் மதிக்கப்படும். அந்நிலையில் தில்லை நடுநாடியாக மதிக்கப்படுதலால், அங்கு நடனம் புரிகின்ற பெருமானே யோகியர் தம் மனம் ஒன்றி உள்கும் முதற் பொருளாவான்.*

***குறிப்புரை :-*** *அஃதாவது, 'உலகம் முழுவதையும்' இயக்குபவனாவான்' என்பதாம்.*

*'கடவுள் மூலம், கைகண்ட மூலம்' எனத் தனித்தனியாக இயைக்க. கடவுதல், யோகியர் பிராணனைச் செலுத்துதல். "கடவும்" என்னும் பெயரெச்சம், "மூலம்" என்னும் இடப்பெயர் கொண்டது. கைகண்ட - அனுபவம் பெற்ற. இஃது ஏதுப் பெயர் கொண்டு முடிந்தது. 'அனுபவம் பெற்றோர் யோகியர்' என்க. "மூலம்" என்றது நடுநாடியை. படர்வு - நினைவு. "பரம்" என்றது, 'முதற்பொருள்' என்றபடி. 'அங்கு (தில்லையில்) நடிக்கும் பரமே பரமாம்' என முடிக்க.*

*இதனால், தில்லைத் திருத்தலத்தின் முதன்மை கூறும் முகத்தால், அதன்கண் திருக்கூத்து நிகழ்த்தும் இறைவனது முதன்மை கூறப்பட்டது.*

***2712. தெளிவுரை :-*** *பரத கண்டத்தின் தென்னெல்லையாகிய, 'கன்னித்துறை' எனப்படும் குமரித் துறையும், காவிரியும், பிற நவ தீர்த்தங்களும், 'ஆனை மலை, பசு மலை, நாகமலை, சிராமலை, அண்ணாமலை, மறைமலை, காளத்திமலை' என்னும் ஏழு மலைகளும், வேத ஆகம ஒழுக்கங்களும் சிறந்து விளங்குதலால், அக்கண்டத்தில் நிலை திரியாததாகிய தென்பகுதியே நிலவுலகத்தில் முத்தி நிலமாகும்.*

2712. ஈறான கன்னி குமரியே காவிரி
வேறாம் நவதீர்த்தம் மிக்குள்ள வெற்பேழும்
பேறான வேதா கமமே பிறங்கலால்
மாறான தென்திசை வையகம் சுத்தமே. 7

---

***குறிப்புரை :-** காவிரியோடு உடன் வைத்து எண்ணத்தகும் வேறு ஒன்பது யாறுகள் 'பொருநை, (தாமிரவருணி), வையை, மணிமுத்தம், நிலா, (வெள்ளாறு), கெடிலம், தென்பெண்ணை, பாலி, கம்பை, பொன் முகலி' என்பன. மிக்குள்ள - ஏனைய வெற்புக்களினும் மேம்பட்டுள்ள. 'பிறத்தலால் என்பது பாடம் அன்று.*

*பரத கண்டத்தின் வடபகுதி யவனர்கள், முகமதியர்கள் முதலியோரால் பேரிடர்ப்பட்டுத் தனது நிலை திரிந்தது போலத் தென்பகுதி என்றும் நிலை திரிதல் இல்லாமை தோன்ற, "மாறாத தென்திசை" என்றார். 'அசோக மன்னனும் பாலாற்றைக் கடந்து அப்பால் தெற்கே செல்ல இயலாமல் திரும்பி விட்டான்' என்பர்.*

*கங்கை, யமுனை, சரசுவதி, கோதாவரி முதலிய நதிகளாலும், இமயத் தொடராலும், காசி, கேதாரம் முதலிய தலங்களாலும் வடபகுதி இயற்கையில் சிறந்து நிற்பினும் அயலவர் நுழைவால் நிலை திரிந்தமை அறிக.*

*'வேதாகமங்கள் வடபகுதியில் தோன்றனவாகச் சொல்லப்படினும் அவைகளின் ஒழுக்கம் சிறந்து விளங்குதல் தென்பகுதியில் தான்' என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. "சுத்தம்" என்றது முத்தி நிலையை. சுத்தத்தைத் தருவதனை, "சுத்தம்" என்றார்.*

*சேக்கிழார் நாயனாரும் இவ்வாறே, 'மாதவம் செய்த திசை தென்திசையே' எனக் கூறி, அதற்குக் காரணம் யாது' என முனிவர்கள் வினாவ, உபமன்னியர், 'தில்லை, திருஆரூர், காஞ்சி, திருஐயாறு, சீகாழி முதலிய இறை தலங்களை மிகப் பெற்றிருத்தலே' என விடையிறுத்து, பேசில் அத்திசை ஒவ்வா பிறதிசை" என வலியுறுத்திக் கூறினார் என அருளிச் செய்தார். (தி.12 திருமலைச் சருக்கம் - திருமலைச் சிறப்பு - 30-36) இன்னும் அவர்,*

*"திசையனைத்தின் பெருமையெலாம் தென்திசையே வென்றேற" எனவும்,*

*'அசைவில்செழுந் தமிழ்வழக்கே அயல்வழக்கின் துறைவெல்ல' (தி.12 திருமலைச் சருக்கம் - திருமலைச் சிறப்பு - 30 - 36) எனவும் அருளிச் செய்தார். இந்நாயனார்,*

*"என்னைநன் றாக இறைவன் படைத்தனன்,*
*தன்னைநன் றாகத் தமிழ்ச் செய்யு மாறே"*

*"தங்கி மிகாமைவைத் தான்தமிழ்ச் சாத்திரம்...."*

**2713.** நாதத் தினில் ஆடிநாற்பதத் தேஆடி
வேதத் தினில் ஆடித்தழல்அந்தம் மீதாடிப்
போதத் தினில் ஆடிப் புவனம் முழுதாடும்
தீதற்ற தேவாதி தேவர் பிரான். **8**

**2714.** தேவரொ டாடித் திருவம் பலத்தாடி
மூவரொ டாடி முனிகணத் தோடாடிப்
பாவினுள் ஆடிப் பராசத் தியில்ஆடிக்
கோவிலுள் ளாடிடும் கூத்தப் பிரானே. **9**

---

*"சதாசிவம் தத்துவம் முத்தமிழ் வேதம்..."*

*"உதாசனி யாதுட னேஉணர்ந் தோமால்..."   - தி.10 பா.20, 26, 15*

*என்பவற்றால் தமிழ் மொழியின் சிறப்பை உணர்த்தி, இங்குத் தமிழ் நிலத்தின் சிறப்பை உணர்த்தினார். இவற்றால் எல்லாம் தமிழ் மொழியும், தமிழ் நிலமுமே சிவனருள் பெறுதற்குச் சிறந்த வாயிலாதல் விளக்கியவாறாம்.*

*இதனால், தென்திசையே சுத்தமாகத் தில்லை சுத்தத்தில் சுத்தமாய் உள்ளது' என்பது கூறப்பட்டது.*

***2713. தெளிவுரை :-*** *சொல்லுலகத்திற்கு முதலாகிய நாதத்திலும், அதன் காரியமாகிய நால்வகை வாக்குக்களிலும், அவ்வாக்குகளாய் வெளிப்படுகின்ற வேதாகமங்களிலும், அவற்றின்வழி வேட்கப்படுகின்ற வைதிகாக்கினி, சிவாக்கினி என்பவற்றின் கொழுந்திலும், உயிர்களின் அறிவிலும், எல்லா அண்டங்களிலும் ஆடுபவனாகிய சிவபிரான்.*

*(இதனை அடுத்துவரும் மந்திரத்தோடு கூட்டி முடிக்க).*

***2714. தெளிவுரை :-*** *கூத்துக்கோலம் உடையனாய், 'கோயில்' எனப்படும் தில்லையில் திருச்சிற்றம்பலத்தில் தேவர்களும், மூவர்களும், முனிவர்களும் வேதமும், தமிழும் பாட, உமையம்மைதன் கண்முன் ஆடுகின்றான்.*

***குறிப்புரை :-*** *"ஆடி" என வந்த செய்தென் எச்சங்கள் பலவும் எண்ணின் கண் வந்தன. வேதத்தைக் கூறவே ஆகமமும் அடங்கிற்று. "நாதத்தில் ஆடி" என்னும் மந்திரத்துள் 'சிவன் உலகரால் அறியப்படாத பல இடங்களில் ஆடுபவன் என்பதைக் கூறி, "தேவரொடாடி" என்னும் மந்திரத்தில் 'அத்தகையோன் நம்மனோரும் எளிதிற் கண்டு உய்யும்படி தில்லையில் உருவத் திருமேனி கொண்டு ஆடுகின்றான்' என்பதைக் கூறினார். 'நாதம் முதலியவற்றில் ஆடுபவன் தில்லையில் தேவர் முதலியோர் சூழ அம்மைமுன் ஆடுகின்றான்' என ஒரு தொடரால் சுருங்கக் கூறி போகாமல், 'ஆடி, ஆடி, ஆடி .... ஆடுகின்றான்' எனப் பல தொடரால் விரியக் கூறினார். தில்லைக் கூத்தின் அருமையை வலியுறுத்தற்கு,*

2715. ஆறு முகத்தின் அதிபதி தான் என்றும்
கூறு சமயக் குருபரன் தான் என்றும்
தேறினர் தேறத் திருவம் பலத்துள்ளே
வேறின்றி அண்ணல் விளங்கிநின் றானே. 10

---

*யாண்டும் மந்திரங்களைத் தனித்தனிச் செய்யுளாகவே செய்து வரும் நாயனார் இங்கு இரு மந்திரங்களைக் குளகமாகச் செய்தார். இக்கூத்தின் பெருமை ஒரு செய்யுளில் அடங்காமை காட்டிச் சொல்லில் அடங்காமை தோற்றுவித்தற்கு, "பராசத்தியில்" என்பது 'பரா சத்தி யிடத்தில்' என்னும் பொருட்டாய், 'பரா சத்தி முன்னிலையில்' எனப் பொருள் தந்தது. 'கோவிலுள் கூத்தப் பிரானாய்' என ஆக்கம் வருவித்து, ஆடிடும்' என முன்னே கூட்டி முடிக்க.*

*இவ் இரு மந்திரங்களாலும், 'தில்லைக் கூத்தின் பெருமை சொல்லில் அடங்காதது' என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

***2715. தெளிவுரை :-** கூத்தப் பிரான் ஒரு திருமுகத்தையே கொண்டு, ஒருவனேயாய் இருப்பினும் 'ஆறு திருமுகங்களையுடைய முழுமுதற் கடவுளும் தானே' எனவும், அனைத்துச் சமய முதல்வனும் தானே' எனவும் தனது திருநடனக் குறிப்பை உணர வல்லவர்கள் உணர்ந்து கொள்ளும்படி தில்லைத் திருவம்பலத்துள் எஞ்ஞான்றும் விளங்கி நிற்கின்றான்.*

***குறிப்புரை :-** 'உச்சியில் ஒன்றும், நான்கு திசைகளிலும் நான்கும் ஆக ஐந்து முகங்களையே உடையவனாய்ச் சிவபிரான் உலகத்தை ஐந்தொழிற்படுத்து நடத்துகின்றான் என்றே வேதாகமங்கள் கூறியபோதிலும், 'அந்த ஐந்து திருமுகங்கள் வெளிப்படையாய் விளங்குவன' என்பதும், 'கீழ்நோக்கிய ஒருமுகம் ஞானியரே உணரும் வண்ணம் மறைந்துள்ளது' என்பதும் வேதாகமத் துணிபுகள் என்பதை நாயனார் இரண்டாம் தந்திரத்து 'அதோமுக தரிசனம்' என்னும் அதிகாரத்துள் குறிப்பால் உணர்த்தினமை காண்க. ஐந்து முகங்களும் பொதுவாக ஐந்தொழிலை இயற்றினும், அவரவர் விரும்பும் விருப்பத்தை நிறைவேற்றும் சிறப்புத் தொழில்களை அதோமுகம் செய்யும் என்க. அது தேவர் வேண்டுகோளுக்கு இரங்கி முருகனை அளித்த வரலாற்றால் நன்கு விளங்கும்.*

*'தோற்றம் துடியதனில்' என்னும் உண்மை விளக்க வெண்பாவால் கூத்தப் பிரான் ஐம்முகம் செய்யும் ஐந்தொழில்களைச் செய்தல் விளங்கும். 'வரைமகள் தான் காணும்படியே' எனவும், "மாதொரு பாகம் நோக்கி மன்னு சிற்றம் பலத்தே ஆதியும் நடுவும் இல்லா அற்புதத் தனிக்கூத்தாடும் - நாதனார்" எனவும் பிற இடங்களிலும் "பரா சத்தியில் ஆடி" என முன் மந்திரத்திலும் கூறிய வாறு தேவியை உடன் கொண்டு, அவள் காண ஆடுதலே அதோமுகம் செய்யும் செயலைக் குறிக்கும். சமயங்கள் யாவும் அவற்றின் முதலாசிரியர்களாலே தோற்றுவிக்கப்படினும் அவர்களை அவ்வாறு தோற்றுவிக்கச் செய்தவனும்*

**2716.** அம்பலம் ஆடரங் காக அதன்மீதே
எம்பரன் ஆடும் இருதாளின் ஈரொலி
உம்பர மாம்ஐந்து நாதத்து ரேகையுள்
தம்பத மாய்நின்று தான்வந் தருளுமே. **11**

---

*சிவனே யாதல் பற்றி, "கூறு சமயக் குருபரன் தான்" என்றார். அதுவும் அதோ முகச் செயல்களில் ஒன்றே என்க. வேறின்மை - நீங்குதல் இன்மை.*

*இதனால், தில்லைக் கூத்தபிரானே எல்லா மூர்த்திகளுமாய் நிற்றல் கூறப்பட்டது.*

***2716. தெளிவுரை :-*** *எம் இறைவனாகிய சிவன், தில்லைத் திருவம் பலத்தையே ஆடும் அரங்கமாகக் கொண்டு அதன்கண் ஓய்வின்றி ஆடுவான். அவனது வலம், இடம் ஆகிய இரண்டு திருவடிகளினின்றும் எழும் கழல் சிலம்பின் ஓசைகள் முறையே நாதமும், விந்துவுமாய் நிற்கும். அவை பரநாத பர விந்துக்களாம். அவையே அவற்றின் கதிர்களாகிய 'அபர நாதம், அபர விந்து, சாதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தை' என்னும் ஐந்து தத்துவங்களில் அவற்றின் நிலைமையவாய் நிற்க. சிவனும் அம்முறையால் உயிர்களிடத்துப் பொருந்தி அவற்றிற்கு அறிவைத் தருவான்.*

***குறிப்புரை :-*** *இஃது உணர்த்து முறைமை எனப்படும் அதிசூக்கும நடனம் உணர்த்துகின்றது.*

*எம் முதல்வன் திருவம்பலமே ஆடரங்காக ஆங்கு நின்று ஆடுங்கால் இரண்டு திருவடிகளில் நின்றும் வெளிவரும் அறிவு, தொழில் ஆற்றல்களாகிய இரண்டு ஒளிகள், மாயையைக் கடந்த நாதம், விந்து, சாதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தை என்னும் ஐந்து இரேகையுள் வந்து உயிர்களைக் கடந்து நின்றே, மா சகலத்தில் அருளும்.*

*அறிவு தொழில் என்னும் ஆற்றல் இரண்டனுள் அறிவேயாதல் நாதம். தொழிலேயாதல் விந்து. இரண்டும் ஒத்து நிற்றல் சாதாக்கியம். தொழில் மிக்கு அறிவை உட்கொண்டு நிற்றல் ஈசுரம். அறிவு மிக்குத் தொழிலை உட்கொள்வது சுத்த வித்தை; இவை ஈரொளி ஐந்து ரேகையுள் வருதல்.*

*வித்தியா தத்துவம் ஏழனுள் மாயையை நாதமும், கலை கால நியதிகளை விந்துவும், புருடனைச் சாதாக்கியமும், வித்தையைச் சுத்த வித்தையும், அராகத்தை ஈசுரமும் செலுத்தும். இவற்றுள் மாயை அந்தக் கரணம் நான்கனுள் சித்தத்தைச் செலுத்தும். கலை ஆங்காரத்தைச் செலுத்தும். வித்தை புத்தியைச் செலுத்தும். அராகம் மனத்தைச் செலுத்தும். மனம் வாயில்களைப் பற்றி புறப்பொருள்களின் தன்மையை உணரும். இது வாயிற் காட்சி. பின் மனம் அகக்கருவிகளுள் சித்தத்தோடு ஒன்றிப் பழைய நினைவுகளோடு கலந்து சங்கற்ப விகற்பம் செய்யும்;*

2717. ஆடிய காலும் அதிற்சிலம் போசையும்
பாடிய பாட்டும் பலவான நட்டமும்
கூடிய கோலம் குருபரன் கொண்டாடத்
தேடிஉள் ளேகண்டு தீர்ந்தற்ற வாறே. 12

---

*புத்தி எதிர்ப்பட்ட பொருளைச் சவிகற்பமாக நிச்சயிக்கும். ஆங்காரம் அவ்வுணர்வைத் தனதென அகங்கரிக்கும். இது மானதக் காட்சி. பின், சித்தம் குணமாய் நின்று புத்தியின்கண் முக்குணங்களுள் ஒன்றாய் மேம்பட, அதனை உயிர், அராகம் முதலியவற்றின் உதவியால் இன்பத் துன்ப மயக்கங்களுள் ஒன்று உற்று அழுந்தி அறியும். இது தன் வேதனைக் காட்சி. இங்ஙனம் இறைவன் திருவடிகள் ஐந்தாய் நின்று உணர்த்துதலைக் காணலாம்.*

***2717. தெளிவுரை :-*** *ஞான குருவாய் நின்று ஞானத்தைத் தருகின்ற சிவன், அவ்வாறன்றி, ஊன்றியும் தூக்கியும் ஆடும் கால்களும் அவற்றில் கழலும் சிலம்பும் ஆகியவற்றின் ஓசைகளும், அருகில் உள்ளவர்கள் பாடுகின்ற பாட்டுக்களும், பலவகையான கரணங்களும் கூடிய கூத்துக் கோலத்தைக் கொண்டு, ஆடுதலை அறியாமல், அவனை எங்கெங்கோ தேடியலைந்து, பின்பு என் உள்ளத்திலே அந்தக் கூத்துக் கோலத்தைக் கண்டேன். அக்காட்சியே யான் பிறவிக் கடலினின்றும் நீங்கிக் கரையேறிய நெறியாகும்.*

***குறிப்புரை :-*** *"குரு பரன்" என்பதை முதலில் வைத்து உரைக்க. 'குருபரனாய் வந்து செய்கின்ற அருளையே கூத்தனாய் நின்று செய்கின்றான்' என்பது இம்மந்திரத்தின் திரண்ட கருத்து. கூத்தனாய் என ஒரு சொல்லாற் சொல்லி யொழியாது, அக்கோலத்தை வகுத்துக் கூறினார். அதனை உள்ளத்தே கண்ட வாறெல்லாம் இனிது விளங்குதற்கு கண்டது, 'உள்ளே' என்றதனால், தேடியது 'வேளியே' என்பது போந்தது. 'பிறவியறுதலை எண்ணாதவர் திருக்கூத்தினைப் புறத்தே மட்டும் ஒருகாற் கண்டு ஒழிவர்' என்பதும், 'பிறவியற வேண்டுபவர் அதனை எஞ்ஞான்றும் உள்ளத்தே கண்டு கொண்டிருப்பர்' என்பதும் கூறியவாறு. கண்டமைக்கும், அற்றமைக்கும் 'யான்' என்னும் எழுவாயும், பிறவி யினின்றும் என்னும் நீக்கப் பொருளும் வருவிக்க. 'அற்றவாறு அறியத்தக்கது' எனச் சொல்லெச்சம் வருவித்து முடிக்க. கூத்தப் பிரான் ஒருகாலிற் சிலம்பும், ஒரு காலிற் கழலும் அணிந்திருத்தல் அவற்றுள் ஒன்றைக் கூறவே மற்றொன்றும் பெறப்பட்டது.*

*இதனால், 'கூத்துக்கோலம், போகியர்க்கு போகவடிவாதலேயன்றி, யோகியர்க்கு யோக வடிவுமாம்' என்பது கூறப்பட்டது.*

***2718. தெளிவுரை :-*** *('பிற உலோகங்களை நோக்கப் பொன் உயர்ந்தது' என்பதில் ஐயம் இல்லை. ஆயினும், 'பொன்னிலும் மாணிக்கம் உயர்ந்தது' என்பது தெளிவு ஆதலால்) ஐவகை மன்றினுள்ளும் மணிமன்றினுள் ஆடும் ஆடற்*

**2718.** இருதயந் தன்னில் எழுந்த பிராணன்
கரசர ணாதி கலக்கும் படியே
அரதன மன்றினில் மாணிக்கக் கூத்தன்
குரவனாய் எங்கணும் கூத்துகந் தானே. **13**

---

*பிரானே யோகியர்க்கு யோகமும், போகியர்க்குப் போகமும் ஆகின்ற அருட் கூத்தினை எல்லா இடங்களிலும் சென்று ஆடுகின்றான். 'அஃது எதுபோலும்' எனின், இருதயத்திலே நிறைகின்ற பிராண வாயுவும் அவ்விடத்தினின்றும் குருதியோடு ஓடி உடம்பெங்கும் நிறைதல் போலும்.*

***குறிப்புரை :-*** *'இச்சிறப்புப் பற்றியே அந்த மன்று மணிமன்றாய் உள்ளது' என்க. அது திருஆலங்காட்டு மன்றமாம். அவ்விடத்துக் கூத்து, காலை உயர்த்தி ஆடும் கூத்து (ஊர்த்துவ நடனம்) ஆதலும், "எண்டோள் வீசிநின்று ஆடும் ஆடல்" (தி.4 ப.9 பா.2) ஆதலும் எண்ணத் தக்கன.*

*"இன்னும் வேண்டும், நான் மகிழ்ந்து பாடி*
*அறவா, நீ ஆடும்போது 'உன் அடியின்கீழ் இருக்க"*

*- தி.12 காரைக்காலம்மையார் - 60, 61*

*என வேண்டிய அம்மைக்கு இறைவன் ஆலங்காட்டு நடனத்திலே அவ்வாறு இருக்க அருள்புரிந்தமையும் கருதத் தக்கது. முன் அதிகாரத்தில் நாயனார் சிவன் ஆடும் இடங்களை எல்லாம் சுட்டியதில், கனகா சலத்தில் ஆடுதலுக்கும் முன்னே காளியோடு ஆடிய ஆலங்காட்டு நடனத்தையே முதலாவதாகக் குறித்தார். இது உலகம் காளியால் அழிந்தொழியாதவாறு காத்த நடனமாகச் சொல்லப்படுதலும் நோக்கத்தக்கது.*

*தேன்புக்கு தண்பணைசூழ் தில்லைச்சிற் றம்பலவன்*
*தான்புக்கு நட்டம் பயிலுமது என்னேடீ*
*தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணியெலாம்*
*ஊன்புக்க வேற்காளிக்(கு) ஊட்டாங்காண் சாழலோ*

*- தி.8 திருச்சாழல், 14*

*இதனால், 'பொன்னம்பலமாகிய தில்லைத் திருத்தலம் இருதயமாயினும், அதற்கும் மூலமாய் உள்ளது மணியம்பலமாகிய ஆலங்காடு' என்பது கூறி முடிக்கப்பட்டது.*

## 15. அற்புதக் கூத்து

*இனி, நிறுத்த முறையானே அற்புதக்கூத்து கூறுகின்றார். இது நாற்பத் திரண்டு மந்திரங்களையுடையது. இது, 'மேற்கூறிய அனைத்துக் கூத்துக்களுமே அற்புதக் கூத்து' எனக் கூறுகின்றது. எனவே, கூத்துக்களின் அற்புதம்' என்பதே கருத்தாம். அற்புதம் - அதிசயம்.*

**2719.** குருஉரு அன்றிக் குனிக்கும் உருவம்
அருஉரு ஆவதும் அந்த உருவே
திரிபுரை யாகித் திகழ்தரு வாளும்
உருவரு வாளும் உமையவள் தானே. 1

**2720.** திருவழி யாவது சிற்றம் பலத்தே
குருவடி வுள்ளாக் குனிக்கும் உருவமே
உருஅரு ஆவதும் உற்றுணர்ந் தோர்க்கு
அருள்வழி யாவதும் அவ்வழி தானே. 2

---

*2719. **தெளிவுரை :-** சிவபிரானது கூத்த வடிவமே சகல வருக்கத்தினருக்குக் குருவாகி வந்து ஞானத்தை உணர்த்தும் வடிவமும், திருக்கோயில்களில் மூலத் தானத்தில் எழுந்தருளியிருந்து வழிபாட்டினை ஏற்று அருள்புரியும் இலிங்க வடிவமும் ஆகும். இனி அவ்வடிவத்தின் பக்கத்தில் பெண்ணுருவாய் நிற்பவளும், மற்றும் சிவனுக்கு மூவகைத் திருமேனியாய் விளங்குபவளும் கூத்தப் பெருமானது சத்தியே.*

***குறிப்புரை :-*** *'குனிக்கும் (ஆடும்) உருவமே குரு உரு; அன்றி, அரு உரு ஆவதும் அந்த உருவே' என இயைத்துக் கொள்க. புரம் - திருமேனி. புரை - திருமேனியாள் உள்ளவள். 'உருவாய் வருவாளும்' என ஆக்கம் விரிக்க. "உமையவள்" என்றது, 'சத்தி' என்னும் பொருட்டாய் நின்றது. இவ்வாறெல்லாம் கூறியது, கூத்தப் பெருமானை வணங்கும் வணக்கத்தின் பயனை நோக்கியாம்.*

*இதனால், 'கூத்தப் பெருமான் வணக்கமே அனைத்துத் திருமேனிகளின் வணக்கமாம்' என அவனது சமட்டி நிலை அற்புதம் கூறப்பட்டது.*

*2720. **தெளிவுரை :-** ஒருவனுக்கு வீட்டு நெறியாவது, அவனது உள்ளத்தில் அவனுக்குக் குருவாய் வந்து அருள் புரிந்தவர் நீங்காதிருக்க, வெளியில் சிற்றம்பலத்தில் அம்பலவாணர் ஆடுதலேயாகும். (உள்ளத்தில் குருவைத் தியானித்தலும், வெளியில் திருக்கூத்தை காணுதலுமேயாகும்' என்பதாம்). உண்மையை ஊன்றி உணர்ந்தோர்க்கு மூவகைத் திருமேனிகளும் ஞான நெறியும் அவையேயாம்.*

***குறிப்புரை :-*** *'திரு' என்பது வீடாதலை, ''போகமும், திருவும் புணர்ப்பானை'' என்பதனால் அறிக. 'உள் குருவடிவு ஆக' என மாற்றி, ''திருவழியாவது'' என்பதன் பின்னர்க் கூட்டுக. ''குனிக்கும் உருவமே'' என்றாராயினும் 'உருவாய்க் குனித்தலே' என்றலே கருத்தென்க. 'குனித்தல்' என்றதும் அதனைக் காணுதலையே. உற்று உணர்ந்தோர்க்கு, உருவாவதும், அருவாவதும், அருள்வழி யாவதும் அவ்வழியே என இயைத்து முடிக்க. தான், அசை, வழி - வாயில். 'உரு, அரு' என்பவற்றைக் கூறவே, உருவாருவமும் கொள்ளப்படும். தியானிக்கப்படுவதும் குனிப்பதும் உருவம் முதலியன ஆவனவும் வேறுவேறாய் இருக்க, அவற்றை, "குனிக்கும் உருவே" என, அஃது ஒன்றேயாகக் கூறியதுதான் இங்குக் குறிப்பிட்ட அற்புதம்.*

> *"சிறைவான் புனல் தில்லைச் சிற்றம் பலத்தும் என் சிந்தை*
> *யுள்ளும் உறைவான்"* *- தி.8 திருக்கோவையார், 20*

*என்றவிடத்தும் இவ்வற்புதம் குறிக்கப்பட்டமை காண்க.*

*இதனால், மேற்கூறிய சமட்டி நிலையில் உள்ளவைகளில் தலையாயதாகிய ஞான நிலை. சிறப்புப் பற்றி வேறெடுத்துக் கூறப்பட்டது.*

> *மைம்மரு பூங்குழற் கற்றை துற்ற*
> *வாணுதல் மான்விழி மங்கை யோடும்*
> *பொய்ம் மொழி யாமறை யோர்கள் ஏத்தப்*
> *புகலி நிலாவிய புண்ணியனே!*
> *எம்மிறையே' இமை யாத முக்கண்*
> *ஈச!என் நேச!இ தென்கொல் சொல்லாய்;*
> *மெய்ம்மொழி நான்மறை யோர் மிழலை*
> *விண்ணிழி கோயில் விரும்பியதே.* *- தி.7 ப.59 பா.1*

> *அங்கமும் வேதமும் ஓதும் நாவர்*
> *அந்தணர் நாளும் அடிபரவ,*
> *மங்குல் மதிதவழ் மாடவீதி*
> *மருகல் நிலாவிய மைந்த சொல்லாய்*
> *செங்கய லார்புனற் செல்வம் மல்கு*
> *சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்*
> *கங்குல் விளங்கெரி யேந்தியாடும்*
> *கணபதி யீச்சரங் காமுறவே.* *- தி.1 ப.4 பா.1*

> *பாடக மெல்லடிப் பாவையோடும்*
> *படுபிணக் காடிடம் பற்றி நின்று*
> *நாடகம் ஆடும்நள் ளாறுடைய*
> *நம்பெரு மான்!இது என்கொல் சொல்லாய்*
> *சூடக முன்கை மடந்தை மார்கள்*

**2721.** நீடும் சிரசிடைப் பன்னிரண் டங்குலம்
ஓடும் உயிர்எழுந் தோங்கி உதித்திட
நாடுமின் நாதாந்த நம்பெரு மான்உகந்து
ஆடும் இடம்திரு அம்பலந் தானே. **3**

---

*துணைவ ரொடுந்தொழு தேத்தி வாழ்த்த*
*ஆடக மாடம் நெருங்கு கூடல்*
*ஆலவா யின்கண் அமர்ந்தவாறே. - தி.1 ப.6 பா.1*

*"பருமதில் மதுரைமன் அவையெதிரே*
*பதிகம தெழுதிலை யவை யெதிரே*
*வருநதி யிடைமிசை வருகரனே". - தி.1 ப.7 பா.1*

*"................ பேணு பெருந்துறையுட்*
*கண்ணார் கழல்காட்டி நாயேனை ஆட்கொண்ட*
*அண்ணா மலையானைப் பாடுதுங்காண் அம்மானாய்".*

*- தி.8 ப.8 பா.10*

*என்றாற்போல ஏனை ஆசிரியர்களும் ஏகதேசியாய்க் காணப்படுபவன் எங்குமாய் நின்று அருள்புரிதலை வியந்தருளிச் செய்தல் காணத்தக்கது.*

*2721. தெளிவுரை :- உள்ளே புகுந்து, வெளியே ஓடும் இயல்புடைய பிராணன் மூலாதாரத்தினின்றும் எழுந்து சுழுமுனை வழியாக மேலே செல்லுங்கால், புருவ நடுவையும் கடந்து உச்சியை அடைந்து, அதற்கு மேலேயும் பன்னிரண்டங்குலம் சென்றால் பின்பு கிடைப்பது மேல்நிலைத் தத்துவமாகிய நாதத்தையும் கடந்து நிற்கின்ற நம் பெருமானாகிய சிவன் மிகவும் விரும்பி ஆடும் இடமாகிய திருவம்பலமே. அதனை நீங்கள் உணருங்கள்.*

*குறிப்புரை :- ''நாடுமின்'' என எடுத்தோதியது, பொற்பதிக் கூத்து, பொற்றில்லைக் கூத்து ஆகியவற்றில் காணப்படும் அம்பலங்களை இம்மீதான அம்பலமாக உணர்ந்து வணங்குதல் சிறப்பு' என்பது உணர்த்துதற் பொருட்டாம்.*

*<u>ஆறு ஆதாரங்களில் மேல் உள்ளதாகிய ஆஞ்ஞைக்கு அப்பால் உச்சி வரை ஏழாந்தானம். அதற்கு மேல் பன்னிரண்டங்குலம் நிராதாரம்; அதைக் கடந்த பெருவெளி மீதானம். அதுவே பரவெளி. 'துவாதசாந்தம்' என்று சொல்லப்படுவது</u>.*

*<u>பிராணன் ஏழாம் தானத்திற்கு அப்பால் செல்லுதல் இல்லை. வலிந்து செலுத்தினால் பின் திரும்பாதாக. உடம்பு வீழ்ந்துவிடும்</u>. ஆயினும் பிராசாத கலைகளால் பிராணன் நிராதாரத்தளவு செல்வதாகப் பாவித்து நிற்றல் பற்றி "பன்னிரண்டங்குலம் உதித்திட" என்றார். உதித்தல், இங்கு, செல்லுதல், 'உதித்திட அப்பால் அம்பலந்தான்' என ஒருசொல் வருவித்து முடிக்க. தான் என்பது தேற்றப் பொருள் தந்து நின்றது.*

**2722.** **வளிமேகம் மின் வில்லு வாகை ஓசை**
**தெளிய விசும்பில் திகழ்தரு மாறுபோல்**
**களிஒளி ஆறும் கலந்துடன் வேறாய்**
**ஒளியுரு வாகி ஒளிந்துநின் றானே.** **4**

---

*"ஓடும் உயிரெழுத்து ஓங்கி" என்பதை முதலிலும், "நாடுமின்" என்பதை ஈற்றிலும் வைத்துரைக்க.*

*இதனால், புற அம்பலங்கள் அக அம்பலங்களாய்ச் சிறந்து நிற்கும் அற்புதம் கூறப்பட்டது.*

*2722. தெளிவுரை :- (அம்பலங்கள் பலவற்றையும் உகந்து ஆடும் நம்பெருமான் வானத்தில் அடங்கியுள்ள காற்று, மேகம், மின்னல், வில், இடி, ஓசை என்பவைபோல). நிவிர்த்தி முதலிய கலைகளில் அடங்கியுள்ள 'தத்துவம், புவனம், வன்னம், பதம், மந்திரம்' என்னும் ஐந்தோடும், கலையையும் கூட்ட ஆறோடும் ஒன்றாய், வேறாய், உடனாய்க் கலந்து அறிவு வடிவாய் அவற்றினின்று பிரித்துக்காண வாராமல் மறைந்தே நிற்கின்றான்.*

*குறிப்புரை :- 'அம்பலங்கள் பலவற்றிலும் காணப்படுகின்ற இவன், மேல் நுண்ணியவாய் மிகப்பெரிய அளவில் விரிந்து கிடக்கின்ற அவை அனைத்திலும் ஒளிந்து நிற்றல் வியப்பு' என்பதாம். இம்மந்திரத்திற்கு எழுவாய் முன் மந்திரத்திலிருந்து வந்து இயைந்தது. காற்று வடிவம் உடைத்தாயினும், உருவம் இல்லது ஆகலின் அது காரண ரூபமான தத்துவங்கட்கும், மேகம் பல்வேறு வடிவங்களாய் வியப்புறத் தோன்றுவது ஆகலின் அது விசித்திரமான பல புவனங்கட்கும், மின்னல் விரையத் தோன்றி, விரைய மறைவது ஆகலின், அது விரையத் தோன்றி விரைய மறையும் வன்னங்கட்கும், (எழுத்துக்களுக்கும்) வானவில் பல நிறங்களையுடையதாய், அழகிதாய் உள்ளத்தைக் கவர்தலின் அது பொருளுணர்ச்சியைத் தரும் பதங்கட்கும் இடியோசை பெருமுழக்கம் ஆதலின் அது நன்கு உச்சரிக்கப்படுகின்ற பாட்டாகிய மந்திரத்திற்கும், வானம் இவை எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி நிற்றலின் அஃது அத்து வாக்கள் ஆறில் ஏனை ஐந்தையும் தன்னுள் அடக்கி நிற்கும் கலைக்கும் உவமையாயின. இனி, "ஓசை" என்பதை, 'ஆகாயத்தின் குணமாகிய ஓசை' எனக் கொள்ளலும் ஆம். பிற ஓசைகளை நீக்குதற்கு "வானக ஓசை" என்றார். களிஒளி - களிப்பைத் தருகின்ற ஒளி. "ஒளி" என்றது அறிவை. அறிவைத் தருவனவற்றை 'அறிவு' என்றார். 'அறிவைத் தருகின்ற ஆறு' எனவே, அவை அத்துவா ஆதல் விளங்கிற்று. 'கலந்து - ஒன்றாய்க் கலந்து' என்க.*

*இதனால், பொற்பதிகளிலும், பொற்றில்லையிலும் ஆடும் பெருமான் அகண்ட வியாபகனாய் நிற்கும் அற்புதம் கூறப்பட்டது.*

*2723. தெளிவுரை :- இருளை ஓட்டுதலால் முதன்மை பெற்ற தீ முதலிய*

**2723.** தீமுதல் ஐந்தும் திசைஎட்டும் கீழ்மேலும்
ஆயும் அறிவினுக் கப்புற ஆனந்தம்
மாயைமா மாயை கடந்துநின் றார்காண
நாயகன் நின்று நடம்செய்யு மாறே. **5**

**2724.** கூத்தன் கலந்திடும் கோல்வளை யாளொடும்
கூத்தன் கலந்திடும் கோதிலா ஆனந்தம்
கூத்தன் கலந்திடும் கோதிலா ஞானத்துக்
கூத்தனும் கூத்தியும் கூத்ததின் மேலே. **6**

---

*ஐம்பெரும் பூதங்களும், கிழக்கு முதலிய எட்டுத் திசைகளும், மற்றும் அவற்றோடு உடன் எண்ணப்படுகின்ற 'கீழ், மேல்' என்னும் பக்கங்களும், இவற்றையெல்லாம் பற்றி ஆராய்ந்தறிவதாகிய உயிர்களின் அறிவும் ஆகிய இவையெல்லாவற்றிற்கும் அப்பால் உள்ளது உண்மையான இன்பம். அதனை அசுத்த மாயை, சுத்த மாயை ஆகிய இருமாயைகளையும் கடந்தவரே பெறுவர். அவர் அங்ஙனம் அதனைப் பெறுதற் பொருட்டே சிவன் நிலவுலகில் நின்று பொற்பதிக் கூத்து, பொற்றில்லைக் கூத்து இவற்றைச் செய்கின்றான்.*

*குறிப்புரை :- 'நாயகன் நின்று நடம் செய்யும் ஆறு, தீ முதல் அப்புற ஆனந்தம் கடந்து நின்றார் காண' என இயைத்து முடிக்க. "அறிவினுக்கு" அறிவும் ஆகிய இவற்றுக்கு' என விரிக்க. இகர உயிரும், யகர மெய்யும் மொழியீற்றின் உறழ்ந்து வரும் இயல்புடைமையால் ("இகர யகரம் இறுதி விரவும்" - தொல் - எழுத்து மொழி மரபு, 25) ஈகாரம் ஒன்றே யகர எதுகையை நிரப்பிற்று? என்க*

*இதனால், நிலவுலகக் கூத்து பரானந்தத்தைத் தருகின்ற அற்புதம் கூறப்பட்டது.*

*2724. தெளிவுரை :- கூத்தப் பெருமான், தான் மட்டும் தனியே நின்று ஆடாமல், உமை ஒருபால் நிற்கக் கொண்டு, அவள் காணவே ஆடுதல் வெளிப்படை. அதனாலேதான் அவனது கூத்து ஆனந்தமயமாயும், ஞானமயமாயும் உள்ளது. ஒரு கூத்திலே இருவர் பங்கும் உள்ளனவேயன்றி, இருவரும் இருகூத்து இயற்றிலர்.*

*குறிப்புரை :- 'ஞானமும், ஆனந்தமும் இறைவனுக்குக் குணங்கள் ஆதலின் அவை அவனது சத்தியேயாம்' என்பதும், 'சத்தியின்றிப் பொருள் இல்லை ஆதலால், அவள் இன்றி அவன் ஆடுதல் இல்லை' என்பதும், 'பெருமானும், சத்தியும் வேறு வேறு ஆகாமையின், இருவரும் ஒரு கூத்தினையே உடையர்' என்பதும் கூறியவாறு. 'வேறொரு கூத்தை ஆடியவள் காளி' என்க.*

*"கூத்ததின்மேலே" என்பதற்கு, 'ஒரு கூத்ததின்மேலே' என உரைக்க. அது பகுதிப் பொருள் விகுதி. 'மேலே உள்ளனர்' என ஒரு சொல் வருவித்து முடிக்க.*

**2725.** **இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்**
**நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன்**
**படங்கொண்டு நின்றஇப் பல்லுயிர்க் கெல்லாம்**
**அடங்கலும் தாமாய்நின் றாடுகின் றாரே. 7**

---

*கோது - துன்பமும், அறியாமையும். இம்மந்திரம் சொற்பொருட் பின்வருநிலையணி பெற்றது.*

***இதனால், ஒரு நடனத்தை இருவர் இயற்றுதலும், அதனால் பிறவற்றில் பெறப்படாத பயன் விளைதலும் ஆகிய அற்புதங்கள் கூறப்பட்டன.***

*2725.* ***தெளிவுரை :-*** *'எம் தந்தையாகிய சிவனது இடப் பாகத்தைக் கவர்ந்து கொண்ட, எம் தாயாகிய சத்தியும், அவளுக்குத் தனது இடப்பாகத்தைத் தந்த சிவனும் என ஒருவரே இருவராய் நின்று கூத்தியற்றுகின்றார்கள்' என்பதை நானும் ஒரு கருதலளவையால் உணர்ந்து கொண்டேன். ஆகவே, துணியால் பொதியப்பட்ட மூடைபோல ஆணவ மலத்தால் மறைக்கப்பட்டுள்ள அனைத்துயிர்களின் பொருட்டாகவே அவ்விருவரும், மாயா காரியங்கள் அனைத்திலும் நிறைந்து நின்று, அவைகளை இயக்கித் தாம் ஆடுகின்றனர்' எனப் பிறர்க்கும் உணர்த்துகின்றேன்.*

***குறிப்புரை :-*** *"சத்தி" என்றதனால், 'சிவன்' என்பதும், "எந்தை" என்றதனால், "எம்தாய்" என்பதும் பெறப்பட்டன. 'கருதல் அளவையால்' என்பது, ஆற்றலால் வந்தது. கருதலளவையால் அதனை யறிந்தவாறாவது,*

> *"சத்தியும் சிவமும் ஆய தன்மை இவ்வுலக மெல்லாம்*
> *ஒத்தொவ்வா ஆணும், பெண்ணும், உயர்குண குணியுமாகி"*
>
> ***- சிவஞான சித்தியார் - சுபக்கம் - சூ.1.66***

*நிற்றலைக் கொண்டு அறிவதாம்.*

*"இடம்" என்றது உடம்பின் இடப்பாகத்தை யாதலின், 'ஒருவரே இருவராய் நிற்றல்' பெறப்பட்டது. "ஓர் உடம்பு இருவராகி" (தி.4 ப.22 பா.6) என அப்பர் அருளிச் செய்தமை காண்க. 'இவர்கள் நடனம் ஆடுதல் உயிர்களின் பொருட்டே' என்பதை ஞான சம்பந்தரும்,*

> *"ஆடும் எனவும் அருங்கூற்றம் உதைத்து வேதம்*
> *பாடும் எனவும் ..........................................*
> *நாடும் திறத்தார்க்கு அருளல்லது நாட்டலாமே"*
>
> ***- தி.3 ப.54 பா.6***

*என அருளிச் செய்தமை காண்க.*

**2726.** சத்தி வடிவு சகல ஆனந்தமும்
ஒத்தஆ னந்தம் உமையவள் மேனியாம்
சத்தி வடிவு சகளத் தெழுந்திரண்டு
ஒத்தஆ னந்தம் ஒருநடம் ஆமே. **8**

**2727.** நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடம்
சிற்றம் பலம்என்று தேர்ந்துகொண் டேனே. **9**

---

*இதனால், ஒருவரே இருவராய் நின்று ஆடுதலும் அவ் விடத்து, அடங்கலும் தாமாய் நின்று ஆடுதலும், தம் பொருட்டன்றிப் பிறர் பொருட்டாகவே ஆடுதலும் ஆகிய அற்புதங்கள் கூறப்பட்டன.*

*2726. **தெளிவுரை :-** எல்லா உயிர்கட்கும் ஏற்புடையதாகிய 'இன்பம்' என்பது 'சத்தி' என்னும் கூறே. அதனால், எந்த இன்பப் பொருளிலும் உள்ள எந்த இன்பமும் 'சத்தி' என்னும் கூறே. (பொருள், 'சிவம்' என்னும் கூறாம்) இனி எல்லாத் திருமேனி வகைகளும் சத்தியே. அந்நிலையில் பெருமானது சத்தியால் தோன்றி நிகழ்கின்ற ஒப்பற்ற நடனம், முத்தியின்பமாகிய பேரின்ப நடனமாகும்.*

***குறிப்புரை :-*** *'திருக்கூத்துச் சத்தியால் உண்டாகி, ஆனந்தத்தைப் பொழியும்' என்றபடி. சகலம் - எல்லாம். உம்மை, முற்று. இனி, 'சகலம் சகலநிலை' எனவும் உரைப்பர். அவர் உம்மையை இழிவு சிறப்பாகக் கொள்வர். இரண்டாம் அடியை முதலிற் கூட்டி உரைக்க. ஒத்தல் - உள்ளத்திற்கு ஒத்தல். 'சகளத்து' என்பதில் 'அத்து' அல்வழிக்கண் வந்த சாரியை. 'சகளமாய் எழும்' என ஆக்கம் வருவிக்க. "சகளம்" என்பது, பொதுவாகத் 'திருமேனி' என்னும் அளவாய் நின்றது. 'எழுந்து ஒத்த ஒரு நடம் ஆனந்த நடனமாம்' எனக் கூட்டுக. இரண்டு - இருவினை 'இரண்டும்' என்னும் முற்றும்மை தொகுத்தலாயிற்று. 'இரு வினை யொப்பு' என்பது உபலக்கணத்தால் மலபரி பாகம், சத்திநிபாதம், ஞான முதிர்ச்சி இவைகளைத் தழுவி 'முத்தி' என்னும் பொருட்டாய் நின்றது. ஒத்த காலத்தில் நிகழ்வதை "ஒத்த" என்றே உபசரித்துக் கூறினார்.*

*இதனால், திருக்கூத்து ஆனந்தக் கூத்தாதலாகிய அற்புதத்திற்குக் காரணம் கூறப்பட்டது.*

*2727. **தெளிவுரை :-** நெற்றிக்குக் கீழே, இரு புருவங்கட்கு இடையேயுள்ள வெற்றிடம் தன்னை உற்று உற்றுப் பார்க்க. பார்க்குந்தோறும், பார்க்குந்தோறும் பார்ப்பவர்க்கு ஒளியை மிக மிக வீசுகின்ற ஓர் இல்லமாய் விளங்கும். 'அந்த இல்லமே' சிவன் யாவரும் பற்றுதற்குரிய பற்றாய் இருக்குமிடம். அஃதாவது 'ஞானாகாசம் என நான் திருவருளால் ஆராய்ந்து அடைந்தேன்'.*

**2728.** **அண்டங்கள் தத்துவம் ஆதி சதாசிவம்**
**தண்டினில் சாத்தவி சாம்பவி ஆதனம்**
**தெண்டினில் ஏழும் சிவாசன மாகவே**
**கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே. 10**

---

*குறிப்புரை :- உற்று உற்றுப் பார்த்தலாவது, உளம் ஒருங்கித் தியானித்தல். எனவே, அது தியானித்தற்குரிய இடமாதல் பெறப்பட்டது. ஒளி - ஞானம். மந்திரம் - இருப்பிடம். மேல் துவாத சாந்தத்தை 'அம்பலம்' என்றும், இருதயத்தை 'அம்பலம்' என்றும் கூறி, இங்கும் புருவ நடுவை 'அம்பலம்' என்றது என்னையெனின், அண்டத்தில் அம்பலங்கள் பலவாதல்போலப் பிண்டத்திலும் அம்பலங்கள் பலவாதல் பற்றியாம். இருதய அம்பலம் வழிபட்டுத் தவம் பெறுதற்கு உரியது, புருவ நடு அம்பலம் தியானித்து ஞானம் பெறுதற்குரியது. துவாதசாந்த அம்பலம் அமைதியுற்று ஆனந்தம் எய்துதற்கு உரியது என்க. அண்டத்து அம்பலங்களும் வெள்ளி, பொன், மணி என வகைப்பட்டு நிற்றல் போலப் பிண்டத்து அம்பலங்களும் இவ்வாறு வகைப்பட்டு நிற்கும். "மந்திரம்" என்பதனை, 'பஞ்சாக்கர மந்திரம்' என்பாரும் உளர். அஃது இவ்விடத்திற்கு இயைபில்லதாம் என்க. 'இருந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று.*

*இதனால் ஓர் அம்பலம் உற்று உற்றுப் பார்க்க ஒளிவிடும் அம்பலமாய் உள்ள அற்புதம் கூறப்பட்டது.*

*2728.* **தெளிவுரை :-** *உலகங்கள் ஏழு, சாதாக்கியம் முதலாகக் கீழ் நோக்கியும், மேல் நோக்கியும் எண்ண வருகின்ற தத்துவங்கள் ஏழு. 'தண்டு' எனப்படுகின்ற சுழுமுனை நாடியில் உள்ள, 'சத்தம்' எனப்படுகின்ற வாக்கிற்கு முதல்வியாதல் பற்றி சாத்தவியாம் குண்டலி சத்திக்குரிய ஆதாரங்கள் ஏழு, அவற்றிற்குமேல் 'வியாபினி, வியோமரூபை, அனந்தை, அனாதை, அனாசிருதை, சமனை, உன்மனை என்னும் சிவசத்திகளது இடங்கள் ஏழு, யாழ், குழல் முதலியவற்றின்றும் எழுகின்ற இசைகள் ஏழு ஆகியவற்றை எல்லாம் தனது இடமாகக் கொண்டு சிவன் நடனம் புரிகின்றான்.*

*குறிப்புரை :- 'இஃது அற்புதம்' என்பது குறிப்பெச்சம். "ஏழும்" என்பது இறுதி நிலை விளக்காய், ஏனை எல்லாவற்றோடும் சென்றியைந்தது. 'சதாசிவம் ஆதி தத்துவம்' என இயைக்க. 'சிவ தத்துவம் ஐந்து' என்பதே பெரும்பான்மையாக எங்கும் சொல்லப்படினும் பரநாத பரவிந்துக்களைக் கூட்டி, 'ஏழு' என்றும் சிறுபான்மை சில ஆகமங்களில் சொல்லப்பட்டது. "ஆதனம்" என்பதைச் "சாத்தவி"என்பதனோடும் கூட்டுக. 'தண்டு' என்பது "தெண்டு" எனமருவி வந்தது. தண்டு - யாழ். உபலக்கணத்தால் குழலும் கொள்ளப்பட்டது. இறைவன் சொல்லும், பொருளும் ஆதலேயன்றி ஏழிசையாய், இசைப்பயனுமாய் (தி.7 ப.51 பா.10) நிற்றலும் நன்கறியப்பட்டது. "சிவாசனம்" என்பதில் 'சிவன்' என்பது 'தன்'*

**2729.** மன்று நிறைந்த விளக்கொளி மாமலர்
நன்றிது தான்இதழ் நாலொடு நூறவை
சென்றது தான்இரு பத்திரு நூறுள
நின்றது தான்நெடு மண்டல மாகுமே. **11**

**2730.** அண்டம் எழுகோடி பிண்டம் எழுகோடி
தெண்டிரை சூழ்ந்த திசைகள் எழுகோடி
எண்டிசை சூழ்ந்த இலிங்கம் எழுகோடி
அண்டன் நடம்செயும் ஆலயந் தானே. **12**

---

*என்னும் பொருட்டாய் நின்றது அன்றி, 'மங்கலப் பொருட்டாய் நின்றது' என்றலும் ஆம்.*

*இதனால், திருக்கூத்தின் வியாபக அற்புதம் கூறப்பட்டது.*

*2729. **தெளிவுரை :-** முன் மந்திரத்திற் கூறியவாற்றால் அம்பலங்கள் தாம் அளவிலவாதல் பெறப்பட்டமையால், அவைகளில் விளக்கொளி போல விளங்கி ஆடும் மூர்த்திகளும் எண்ணிலர். இனி அந்த அம்பலங்கள் மலராக விளங்க, இருநூற்றிருபத்து நான்கு புவனங்கள் அவற்றின் இதழாக, நிலையின்றித் தோன்றி யழிவன. ஆகவே, என்றும் நிலையாயுள்ள சத்தியே அவனுக்கு என்றும் உள்ளதாகிய அம்பலமாம். ஆகவே, இதுவே அவனுக்கு நன்றாய அம்பலமாகும்.*

*__குறிப்புரை :-__ "நூறு" என்றது அளவின்மையைக் குறித்தது. 'மலராக' என உவமம் குறித்த ஆக்கச்சொல் வருவிக்க. "சென்றது" என்றது பன்மையொருமை மயக்கம். 'செல்வது' என எதிர்காலத்தாற் கூறற்பாலது, விரைவு பற்றி "சென்றது" என இறந்த காலமாகச் சொல்லப்பட்டது. 'நிற்பது' என்பதும் தெளிவு பற்றி "நின்றது" எனப்பட்டது. காலத்தின் நெடுமை அதில் உள்ள மண்டலத்தின்மேல் ஏற்றப்பட்டது. அம்பலத்தை, 'மண்டலம்' என்றார்.*

*இதனால், அம்பலங்கள் பலவாயினும் உண்மை அம்பலம் சத்தியேயாதல் கூறப்பட்டது.*

*2730. **தெளிவுரை :-** அளவின்றி உள்ள அண்டங்கள், பிண்டங்கள், (உடல்கள்) பிருதிவி அண்டங்கள் தோறும் உள்ள அளவற்ற எழுவகைக் கடல்கள், அவைகளால் சூழப்பட்ட எழுவகைத் தீவுகள், எல்லாத் திசைகளிலும் நிறைந்துள்ள அளவற்ற மூர்த்தங்கள் இவை அனைத்தும் சிதாகாச வெளியில் உள்ள சிவன் நடனம் புரியும் இடங்களாம்.*

*__குறிப்புரை :-__ "எழுகோடி" என்றது அளவின்மையைக் குறித்தபடி. "திசை" என்பது 'இடம்' என்னும் பொருட்டாய்த் தீவுகளைக் குறித்தது.*

**2731.** ஆகாச மாம் உடல் ஆங்கார் முயலகன்
ஏகாச மாம்திசை எட்டும் திருக்கைகள்
மோகாய முக்கண்கள் மூன்றொளி தானாக
மாகாய மன்றுள் நடம்செய்கின் றானே. **13**

**2732.** அம்பல மாவ அகில சராசரம்
அம்பல மாவன ஆதிப் பிரானடி
அம்பல மாவன அப்புத்தீ மண்டலம்
அம்பல மாவன அஞ்செழுத் தாமே. **14**

---

*இதனால், அளவிலா, எல்லா இடங்களிலும் திருக்கூத்து நிகழும் அற்புதம் கூறப்பட்டது.*

*2731.* ***தெளிவுரை :-*** *ஆகாயம் ஒன்றேயாய் எங்கும் வியாபித்துள்ளது. ஆயினும் செயற்கையால் வரையறுக்கப்பட்டு, 'மடாகாயம், கோயில், ஆகாயம், மன்ற ஆகாயம்' முதலாகப் பலவாறு வழங்கப்படுகின்றன. அவையெல்லாம் சிறு ஆகாயங்களாக, இயற்கை ஆகாயம் 'மகாகாயம்' எனப்படும். சிறு ஆகாயங்களில் பல உருவங்களில் நடனம் செய்கின்ற சிவன் மகாகாயத்தையே அம்பலமாக ஒன்றேயான விசுவ ரூபத்தை உடையவனாயும் நடனம் புரிகின்றான். அந்நிலையில் அவனுக்கு ஆகாயமே உடல்; உயிர்களின் ஆணவ மலமே முயலகன்; போர்வை போலச் சுற்றியுள்ள எட்டுத் திசைகளே எட்டுக் கைகள்; சூரியன், சந்திரன், அக்கினி என்னும் முச்சுடர்களே விரும்பத்தக்க மூன்று கண்கள் என இவ்வாறு அமையும்.*

***குறிப்புரை :-*** *'ஆங்காரம்' என்பது ஈற்று அம்முக் குறைந்து, "ஆங்கார்" என நின்றது. அஃது அதற்குக் காரணமான ஆணவ மலத்தைக் குறித்தது. 'மோகமார்' என்பதும், அவ்வாறு, 'மோகார்' என நின்றது. மோகம் - விருப்பம். "மாகாயம்" என்பதில் காயம் - ஆகாயம்.*

*இதனால் அகண்டமாய் உள்ள விசுவரூப நடன அற்புதம் கூறப்பட்டது.*

*2732.* ***தெளிவுரை :-*** *சிவபெருமான் திருக்கூத்தியற்றுதற்குரிய அம்பலமாய் நிற்பன, நீர், தீ (இனம் பற்றி நிலம், வளி, வான்) இவற்றின் அண்டங்களும், அனைத்து இயங்கு திணை நிலைத்திணை உயிர்களும், திருவைந்தெழுத்தும், அவனது வல இடத்திருவடிகளும் ஆகும்.*

***குறிப்புரை :-*** *இவை தூல சூக்கும வகையில் ஒன்றைவிட ஒன்று சூக்கும மாகிய அம்பலம். இவை செய்யுள் பற்றி ஏற்ற பெற்றியில் கூறப்பட்டன. அஞ்செழுத்து அருட்சத்தி, திரோதான சத்தி, உயிர் என்பவைகளாய் நிற்றலின் அவையும், பிரானது வலத்திருவடி திரோதான சத்தியும், இடத்திருவடி அருட்சத்தியும் ஆதலின் அவையும் அம்பலமாயின.*

**2733.** கூடிய திண்முழ வம்குழல் 'ஓம்'என்ன
ஆடிய மானுடர் ஆதிப் பிரான்என்ன
நாடிய நற்கணம் ஆரும்பல் பூதங்கள்
பாடிய வாறொரு பாண்டரங் காமே. **15**

---

***இதனால், திருக்கூத்து அனைத்துத் தூல சூக்கும அதிசூக்கும அம்பலங்களில் நடைபெறும் அற்புதம் கூறப்பட்டது.***

*2733. **தெளிவுரை :-** சிவனது பலவகைக் கூத்தில் 'பாண்டரங்கம்' என்னும் கூத்து (திரிபுரத்தை எரித்த காலத்தில் நிகழ்த்தப்பட்டது. ஆதலின்) ஒன்றோடு ஒன்று இயைந்து ஒலிக்கும் மத்தளமும், குழலும் 'ஓம்' என்று ஒலிக்கவும், அந்நடனத்தின் குறிப்பை ஆராய்ந்து நோக்கிய பதினெண் கணங்களும் நிறைந்த பூதப்படைகளும் பல பாடல்களைப் பாடவும், அவர்களோடு மக்களும் கண்டு, 'இவனே முதற்கடவுள்' என உணர்ந்து களி நடம்புரியவும் நிகழ்ந்தது.*

***குறிப்புரை :-*** *"பூதங்கள் பாடியவாறு" - என்றாராயினும், 'பூதங்கள் பாட மானுடர் ............ ஆடியவாறு' எனக் கூட்டி, 'நிகழ்ந்தது' என ஒரு சொல் வருவித்து முடிக்க. இதில், மானுடர் கண்டு தெரிந்து ஆடினமை சிறப்பாகக் குறிக்கப்பட்டது.*

*"தேர்முன் நின்ற திசைமுகன் காணப்*
*பாரதி பாடிய வியன்பாண்ட ரங்கமும்"*

***- சிலப்பதிகாரம் - கடலாடு காதை - 44, 45***

*என்பதற்கு.*

*"வானோராகிய தேரில், நான்மறைக் கடும்பரி பூட்டி நெடும் புறம் மறைத்து, வார்துகில் முடித்துக் கூர்முட்பிடித்துத் தேர்முன்னின்ற திசைமுகன் காணும்படி பாரதி வடிவாய இறைவன் வெண்ணீற்றை அணிந்தாடிய பாண்டரங்கக் கூத்தும்" என்ற அடியார்க்கு நல்லார் உரையைக் காண்க. 'பாண்டரங்கம்' என்பது கடைக் குறைந்து நின்றது.*

*இதனால், திருக்கூத்து வகைகளில் ஒன்றன் அற்புதம் எடுத்தோதி விளக்கப்பட்டது.*

*2734. **தெளிவுரை :-** வானம் அண்டங்களுக்கு உள்ளேயும் உள்ளது; வெளியேயும் உள்ளது. அதுபோல, நிலத்திற்கு அண்மையிலேயும் உள்ளது. சேய்மையிலேயும் உள்ளது. அதனால் அந்த இடங்களில் எல்லாம், வானவராகிய தேவர்களும் இந்த இடங்களில் உள்ளனர். அவர்கள் அனைவரும் தில்லைப் பொன்னம்பலத்தில் கூத்தப் பெருமான் தாமரை மலர்போலும் திருவடிகளைப் பெயர்த்து ஆடும் திருக்கூத்தினைக் கண்டு வணங்கி நற்கதியை அடைகின்றார்கள்.*

***குறிப்புரை :-*** *'தேவர்களைக் கூறவே, மக்களைக் கூறவேண்டா' என்பது கருத்து.*

**2734.** அண்டத்தில் தேவர்கள் அப்பாலைத் தேவர்கள்
தெண்டிரை சூழ்புவிக் குள்ளுள்ள தேவர்கள்
புண்டரி கப்பதப் பொன்னம் பலக்கூத்துக்
கண்டுசே வித்துக் கதிபெறு வார்களே. **16**

**2735.** புளிக்கண் டவர்க்குப் புனல்ஊறு மாபோல்
களிக்கும் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
துளிக்கும் அருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும்
ஒளிக்குள்ஆ னந்தத் தமுதூறும் உள்ளத்தே. **17**

---

*இதனால், மண்ணுலகத் திருக்கூத்தினை விண்ணவர்களும் கண்டு வணங்கி நற்கதிபெறும் அற்புதம் கூறப்பட்டது.*

*2735. தெளிவுரை :- புளியை நாவில் இட்டுச் சுவையாவிடினும் அதனைப் பார்த்தபோதே பார்த்தவர்கட்கு அதனைச் சுவைத்தாற் போல நாவில் நீர் ஊறுதல் அனைவரும் அறிந்தது. அதுபோல, கூத்தப்பெருமானது ஆனந்தக் கூத்தினைக் கண்டவர்கட்கு அக்கூத்தில் காணப்படும் குறிப்பின் பொருளைப் பெறாவிடினும் பெற்றுவிட்டது போன்ற இன்பம் உள்ளத்தில் ஊற்றெடுக்க உடலிலும் அதற்குரிய மெய்ப்பாடுகள் தோன்றும்.*

*குறிப்புரை :- அம்மெய்ப்பாடுகளுள் கண்ணீரரும்புதல் ஒன்றை மட்டும் தோற்றுவாயாகச் சுட்டினார். மயிர் சிலிர்த்தல், உடல் கம்பித்தல், நாத்தழுதழுத்தல் முதலியன பிறவாம். களிக்கும் திருக்கூத்து - களித்தற்கு ஏதுவாய திருக்கூத்து. "துளிக்கும் கண்ணீர் சோர" என்றது, 'முன்பு அரும்பிப் பின்பு தாரையாய் ஒழுக' என்றபடி 'அக்கூத்து நெஞ்சை உருக்கும்' என்க. ஒளி - சிவம். அதனுள் ஆனந்தமாவது, அதில் தோய்ந்து பெறும் ஆனந்தம்.*

*'பெறத் தக்க பொருள்களைப் பெற்ற வழியே இன்பம் உண்டாதலன்றிக் காட்சி மாத்திரையாற் கண்ட பொழுதே இன்பம் உண்டாதல் எங்ஙனம்' என்னும் ஐயத்தை உவம வாயிலாக நீக்கினார்.*

> *உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம் போல்*
> *கண்டார் மகிழ்செய்தல் இன்று.* *- திருக்குறள், 1090*

*எனக்கூறிய அவ்வின்பத் தன்மை இவ்வின்பத்திற்கும் உண்டென்க. காமத்திற்கு உரியரல்லார்க்கு மேற்கூறிய காமத்திற்கு ஏதுவான காட்சி மகிழ்செய்யாதவாறு போல, இறையின்பத்திற்கு உரியர் அல்லார்க்குப் பொன்னம்பலக் கூத்துக்காட்சி இன்பம் செய்யாதாகலின், அவர், யாம், அக்கூத்தினைக் கண்டபொழுது எமக்கு அத்தகைய இன்பம் தோன்றவில்லையே ஏன்? என நாயனாரைக் கடாவலாகாமை யறிக. "புளிக் கண்டவர்க்கு" என்பதில் ககர ஒற்று எதுகை நோக்கி விரிந்தது. புளி சுவைக்கப்படு பொருளாகலின், 'நாவில்' என்பது கூற வேண்டாவாயிற்று.*

**2736.** திண்டாடி வீழ்கை சிவானந்த மாவது
உண்டார்க்கு உணவு உண்டால் உன்மத்தம் சித்திக்கும்
கொண்டாடும் மன்றுள் குனிக்கும் திருக்கூத்துக்
கண்டார் வருங்குணம் கேட்டார்க்கும் ஒக்குமே. **18**

**2737.** அங்கி தமருகம் அக்கமாலை பாசம்
அங்குசம் சூலம் கபால முடன் ஞானம்
தங்கு பயம்முன் தருநீல மும்முடன்
மங்கையோர் பாகமாய் மாநடம் ஆடுமே. **19**

---

*'சோர' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தல். "ஆனந்தத்து" என்பதில் அத்து, அல்வழிக்கண் வந்த சாரியை.*

*இதனால், திருக்கூத்துக் கண்ட அளவிலே ஆனந்தம் விளைக்கும் அற்புதம் கூறப்பட்டது.*

*2736. **தெளிவுரை :-** சிவானந்தத்தை அடைந்தவர்கட்கு உளவாகும் மெய்ப்பாடுகள் உடல் நிற்கலாற்றாது தள்ளாடி வீழ்தல் முதலியனவாம். (இந்நிலை எய்தினாரை, 'ஆவேசம் வரப்பெற்றவர்' என்பர்.) இனிய உணவுகளால் விளையும் மகிழ்ச்சி அவற்றை உண்டபின்பே உண்டவர்க்கு உளவாகும். ஆயினும் யாவராலும் புகழப்பெறும் திருவம்பலத்தில் சிவன் செய்யும் கூத்துக் கண்டவுடனே கண்டவர்க்குப் பெருமகிழ்வை உண்டாக்கும். (எனவே, திண்டாடி வீழ்தல் முதலியன கண்டார்க்கும் உண்டாவனவாம்). இனி அதனைக் கண்டார்க்கே யன்றிக் கண்டவர் அக்கூத்தின் இயல்பைச் சொல்ல, அதனைக் கேட்டவர்க்கும் அத்தகைய மகிழ்வை அக்கூத்து உண்டாக்கும்.*

*குறிப்புரை :- 'திண்டாடுதல்' என்பது நிலையாகாமல் தளர்ந்து வீழ்தலைக் குறிக்கும் நாட்டுப்புற வழக்கு. "சிவானந்தம்" என்பது அதனால் உண்டாகும் மெய்ப்பாட்டினைக் குறித்த ஆகுபெயர். பின் மூன்று அடிகள் வேற்றுமையணி பெற்றன. 'இன்பம் பயத்தலால் இனிய மூன்று அடிகள் வேற்றுமையணிபெற்றன. 'இன்பம் பயத்தலால் இனிய உணவும், திருக்கூத்தும் ஒக்குமாயினும், இனிய உணவினும், திருக்கூத்து தனித்ததொரு சிறப்புடையது' என்பதாம். மேற்காட்டிய, "உண்டார்கண் அல்லது" என்னும் திருக்குறளும் அவ்வணியை உடையதே - 'மகிழ்ச்சி கண்டவர்க்கு மட்டுமன்று; கேட்டவர்க்கும் உளதாம்' என்பதை இம்மந்திரம் கூறிற்று. 'கண்டார்க்கு' என்னும் உளதாம்' என்பதை இம்மந்திரம் கூறிற்று. 'கண்டார்க்கு' என்னும் நான்கன் உருபு தொகுக்கப்பட்டது. "குணம்" என்றது நிகழ்ச்சிகளை.*

*இதனால், மேற்கூறிய அற்புதத்திலும் அற்புதம் ஒன்று கூறப்பட்டது.*

**2738.** **ஆடல் பதினொன் றுறுப்பும் அடைவாகக்**
**கூடிய பாதச் சிலம்புகைக் கொள்துடி**
**நீடிய நாதம் பராற்பர நேயத்தே**
**ஆடிய நந்தி புறம்அகத் தானே.** **20**

---

*2737.* **தெளிவுரை :-** *சிவபெருமான் திருக்கூத்து நிகழ்த்துங்கால், நான்கு கைகளோடே நிகழ்த்துதலும் உண்டு. எட்டுக் கைகளோடு நிகழ்த்துதலும் உண்டு. (எட்டுக் கைகளோடு நிகழ்த்துங்கால் அவற்றில்), தீயகல், உடுக்கை, உருத்திராக்க வடம், பாசம், அங்குசம், சூலம், பிரம கபாலம் என்பவற்றுடன் ஞானத்தின் பயனாகிய அஞ்ஞானத்தை நீக்குதலைக் குறிக்கும் நீல மலரையும் ஏந்தி, உமையம்மை ஒருபால் நிற்க ஆடுவான்.*

**குறிப்புரை :-** *நீல மலர் கரிய நிறத்தை உடையதாய் இரவில் முகிழ்த்திருந்து, கதிரவன் தோன்ற மலர்வது ஆதலின், அஃது ஆணவத்தில் அறியாமை எய்திக் கிடந்து, திருவருள் தோன்ற அது நீங்கி அறிவு நிகழ்தலைக் குறிப்பால் உணர்த்தும். இதனை நாயனார் எடுத்தோதவே, ஏனையவை பற்றிய குறிப்புக்களும் உணரப்படும். அவை நெருப்பு அழித்தல் தொழிலையும், வினையை எரித்தல் தொழிலையும், உடுக்கை ஒலியைப் பிறப்பித்துப் படைத்தல் தொழிலையும், மாயையை உதறித் தள்ளுதலையும், அக்கமாலை ஞானோபதேசம் செய்தலாகிய அருளல் தொழிலையும், பாச அங்குசங்கள் ஐம்புலக் களிறுகளைப் பிணித்து அடக்குதலையும், சூலம் இச்சா ஞானக்கிரியா சத்திகளுடன் கூடி அனைத்தையும் நடத்துதலையும், பிரம கபாலம் தனது நித்தியத் தன்மையையும் குறிக்கும். தேவி திருவருளைக் குறித்தல் வெளிப்படை. பயம் - பயன். 'சிவன்' என்னும் தோன்றா எழுவாய் வருவித்துக்கொள்க. கலித்தொகைக் கடவுள் வாழ்த்திலும் கூத்துக் கோல வருணிப்பில்,*

> *"ஆறறி யந்தணர்க் கருமறை பலபகர்ந்து*
> *தேறுநீர் சடைக்கரந்து திரிபுரம் தீமடுத்து*
> *கூறாமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி*
> *மாறாப்போர் மணிமிடற்று எண்கையாய், கேளினி"*

*என எட்டுக் கையே கூறப்பட்டது.*

*இதனால், ஒருவகை நடனக்கோலம் வகுத்துணர்த்தப்பட்டது.*

*2738.* **தெளிவுரை :-** *கூத்துப் பதினொன்றின் உறுப்புக்கள் எல்லாம் முறையாகக் கூடிய பாதத்தில் அணியப்பட்டுள்ள சிலம்பும், கையில் கொண்டுள்ள உடுக்கையும் ஒலியை எப்பொழுதும் எழுப்பிக் கொண்டிருக்கின்றன. அவ்வாறாக, மேலானவற்றிற்கெல்லாம் மேலான இடத்தில் ஆடுபவனாகிய சிவன் எல்லா உலகிலும் உள்ள உயிர்களின் அகத்தும், புறத்தும் ஆடுகின்றான்.*

**2739.** ஒன்பதும் ஆட ஒருபதி னாறாட
அன்புறு மார்க்கங்கள் ஆறும் உடன்ஆட
இன்புறும் ஏழினும் ஏழ்ஐம்பத் தாறாட
அன்பனும் ஆடினான் ஆனந்தக் கூத்தே. 21

---

*குறிப்புரை :-* *ஆடல் பதினொன்றாவன, 'அல்லியம், கொடுகொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல்' என்னும் நின்றாடல் ஆறும். 'துடி, கடையம், பேடு, மரக்கால், பாவை' என்னும் வீழ்ந்தாடல் ஐந்துமாம். ஆறு, ஐந்து, ஐந்து, ஆறு, நான்கு, நான்கு, இரண்டு. இவற்றின் இயல்பெல்லாம் ஆடல் நூலுள் (பரத சாத்திரங்கள்) சொல்லப்படும். சிலப்பதிகாரத்து அரங்கேற்றுக்காதை உரைகளில் சிறிது காண்க. 'எல்லா ஆடலும் எல்லாரும் வல்லராகார்; சிலர் சிலர் சில சிலவே, வல்லராவர்; சிவன் எல்லா ஆடலும் வல்லன்' என்பதும் 'ஆயினும் அவ்வாடல்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவன் ஆவன்' என்பதும் கூறியவாறு. 'நாதம் நீடிய' என மாறுக. நீடிய - நீடின. நேயம் - விருப்பம். அது விரும்பப்படும் இடத்தைக் குறித்தது.*

*இதனால், 'சிவன் ஒருவனே ஆடல் வல்லான்' ஆகும் அற்புதம் கூறப்பட்டது.*

*2739.* **தெளிவுரை :-** *சிவவேதங்கள் ஒன்பதும், பிராசாத கலைகள் பதினாறும், சமயங்கள் ஆறும் ஒருங்கு ஆடும்படியும், உயிர்கள் இன்புறும் இடமாகிய ஏழ்அண்டத்துள் சிறப்பாக நிலவுலகில் ஏழு தீவுகளும், அவற்றினும் சிறப்பிற் சிறப்பாகப் பரத கண்டத்து ஐம்பத்தாறு நாடுகளும் ஆடும்படியும் உயிர்கள்மாட்டு அருள் உடையோனாகிய சிவன் ஆனந்தத்தை விளைக்கும் திருக்கூத்தைத் தில்லையில் ஆடுகின்றான்.*

**குறிப்புரை :-** *நில உலகத்தைச் சிறப்பாகக் கூறினமையால், கூத்து முன் அதிகாரத்திற்போந்த தில்லைக் கூத்தாயிற்று. சிவ பேதங்கள் ஒன்பதாவன, நவந்தரு பேதங்கள். அவை ஆடுதலாவன, தாம் கருதியவற்றை நிகழ்த்துதல், 'பிராசாத கலைகள்' என்றது அவற்றின் அதிதேவர்களையும் 'சமயங்கள்' என்றது அவற்றை மேற்கொண்டவர்களையுமாம். ஒன்பது முதலிய மூன்றும் ஞான வாயிலாதல் பற்றி அவற்றை முன்னர்க் கூறினார். "அன்பனும்" என்னும் உம்மை, சிறப்பு.*

*இதனால், தில்லையில் உள்ள ஒருவன் ஆட, அனைத்தும் ஆடுதலாகிய அற்புதம் கூறப்பட்டது.*

*2740.* **தெளிவுரை :-** *ஏழ் நரம்புகளில் ஏழு வகையாய்த் தோன்றி, அவற்றிற்குப் பொருந்திய ஏழ் எழுத்துக்களால் குறிக்கப்பட்டு, அந்த ஏழ் எழுத்துக்களில் ஒன்றே ஏற்றத்தின் தொடக்கமும், இறக்கத்தின் முடிவுமாய் நிற்க அமையும் ஏழு பண்களினாலும் பாடப்படுகின்ற நன்னெறியை எங்கள்*

**2740.** ஏழினில் ஏழாய் இயைந்தெழுந் தேழதாய்
ஏழினில் ஒன்றாய் இழிந்தமைந் தொன்றாய
ஏழினில் சன்மார்க்கம் எங்கள் பரஞ்சோதி
ஏழிசை நாடகத் தேஇசைந் தானே. **22**

**2741.** மூன்றினில் அஞ்சாகி முந்நூற் றறுபதாய்
மூன்றினில் ஆறாய் முதற்பன்னீர் மூலமாய்
மூன்றினில் அக்கம் முடிவாக முந்தியே
மூன்றினில் ஆடினான் மோகாந்தக் கூத்தே. **23**

---

*சிவபெருமான் ஏழிசைகளோடு கூடிய தனது கூத்திலே பொருந்தி ஆடுகின்றான்.*

*குறிப்புரை :- ஏழு வகைகளாவன, 'குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்' என்பன. இவற்றிற்குப் பொருந்திய எழுத்துக்களாவன முறையே 'ஆ' முதல், 'ஔ' ஈறான நெட்டெழுத்து ஏழுமாம். இவற்றை,*

*"களையறு குரலே துத்தம்,*
*கைக்கிளை உழையி னோடே,*
*இளியொடு, விளரி, தாரம்*
*என்ப ஏழிசையின் நாமம்"*

*"ஆங்குள ஆ, ஈ, ஊ, ஏ,*
*ஐ, ஓ, ஔ என்னும் ஏழும்*
*தீங்கிலா அக்க ரங்கள்*
*செப்பும்ஏ ழிசைக்குந் தானே"*

*என்னும் சூடாமணி நிகண்டா (தொகுதி 10, 35, 37)லும் உணர்க. முற்காலத்தில் இருந்த யாழின் முன்னேற்றமாக வீணை தோன்றினாற்போல, முற்காலத்தில் இருந்த இசையின் பெயர்கள், இசையின் எழுத்துக்களின் முன்னேற்றமே, "சட்சம் இடபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிடாதம்" என்னும் பெயர்களும், 'ச, ரி, க, ம, ப, த, நி' என்னும் எழுத்துக்களும் என்க. எழுத்துக்களில் முதலாவதினின்று இசை மெல்ல மெல்ல உயர்ந்து உச்சத்தை அடையும்பொழுது அந்த எழுத்தே சொல்லப்பட்டு, மீண்டும் அதினின்றும் மெல்ல மெல்ல இறங்கி முடிவடையும் பொழுது அந்த எழுத்தே சொல்லப்படுதல் பற்றி, "ஏழினில் ஒன்று ஆய், இழிந்தமைந்து ஒன்றாய்" என்றார். ஆதல் - மேன்மேல் உயர்தல். பண்கள் ஏழாவன, கோடிப்பாலை, செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, மேற்செம்பாலை, விளரிப்பாலை' என்னும் ஆதாரப் பண்கள். 'இவற்றின்றும் பிறக்கும் பிறவிப் பண்கள் நூற்று மூன்று' எனவும் 'மற்றும் திறங்கள்' எனவும், 'திறத்திறம்' எனவும் கூறுவர். இவையெல்லாம் இசைத் தமிழ் நூல்களில் சொல்லப்பட்டன. அந்நூல்கள் பலவும் இறந்து போயின. சிலப்பதிகார*

*உரைகளில் சிறிது காணப்படுகின்றன.*

*நமது சிவநெறிப்பொருள்கள் இயற்றமிழ்ச் செய்யுட்களிலன்றியும், இசைத்தமிழ்ப் பாட்டுக்களிலும் இனிமை பெறச் சொல்லப்பட்டமையை, "ஏழினிற் சன்மார்க்கம்" என்றும், அப்பொருள்கஎெல்லாம் பெருமான் தனது கூத்தில் குறிப்பினால் தோன்ற ஆடுதலை, "ஏழிசை நாடகத்தே இசைந்தானே" என்றும் கூறினார்.*

*'இயைந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. 'ஏழது' என்பதில் 'அது' பகுதிப்பொருள் விகுதி. அவ்விடத்து, "எழுத்து" என்றது சாதியொருமை. கூத்தின் வினையாகிய இசைதல் அதனைச் செய்வான் மேல் ஏற்றப்பட்டது.*

*இதனால், இசைத்தமிழ்ப் பாடல்களால் இனிமை பெற விளக்கப்படும் பொருள்கள் எல்லாம் திருக்கூத்தில் விளங்குதலாகிய அற்புதம் கூறப்பட்டது.*

***2741. தெளிவுரை :-*** ***(காலம், கதிர், மதி, சேய், மால், பொன், வெள்ளி, காரி' என்னும் ஏழு கோள்களின் இயக்கம் பற்றிப் பலவகையாகப் பகுக்கப்படும். அவற்றுள் கதிரியக்க அளவில் அதற்கும், மதிக்கும் இடையேயுள்ள வழியளவு பதினைந்தாகப் பகுக்கப்பட்டு அவற்றுள் ஒவ்வொரு பகுதியும் 'திதி' (ஸ்திதி-நிலை) எனப்படுகின்றது. மதி கதிருக்கு முன்னாக அகன்று செல்லும் நிலை பதினைந்தும் 'முற்பக்கம் பூர்வ பட்சம் - மதியது ஒளி மிகுந்து வருதலால் சுக்கில பட்சம்' என்றும், மதி கதிரை அணுகிப் பின்னாக வருதலால் 'அபர பட்சம்' என்றும், மதியது ஒளி குறைந்து வருதலால் கிருட்டினபட்சம் என்றும் சொல்லப்படுகின்றன. ஒவ்வொரு பட்சத்திலும் உள்ள திதிகள் மூன்று வட்டங்களாக வகுக்கப்பட்டு, ஒவ்வொரு வட்டத்திலும் உள்ள ஐந்து திதிகளும் முறையே 'நந்தை, பத்திரை, சயை, இரித்தை, பூரணை' எனப் பெயர் சொல்லப்படும். எனவே, ஒன்று, ஆறு, பதினொன்றாம் திதிகள் நத்தையும், இரண்டு, ஏழு, பன்னிரண்டாம் திதிகள் பத்திரையும், மூன்று, எட்டு, பதின்மூன்றாந் திதிகள் சயையும், நான்கு, ஒன்பது பதினான்காம் திதிகள், இரித்தையும், ஐந்து, பத்து, பதினைந்தாம் திதிகள் பூரணையும் ஆகின்றன. இவ்வாறு), பதினைந்து திதிகளும் ஐந்தாகத் தொக்கு நின்று பயன் தருதலையே "மூன்றினில் அஞ்சாகி" என்றார். மூன்று - மூன்று வட்டம். அஞ்சு - நந்தை முதலிய ஐந்து சிறப்பு நிலை. இவையெல்லாம் கணி நூல்களில் (சோதிட சாத்திரங்களில்) காணப்படும்.***

***முந்நூற்றறுபது - ஓர் ஆண்டில் உள்ள நாள்கள். ஒரு திங்களுக்கு முப்பது நாள்களாகப் பன்னிரண்டு திங்களுக்கு 30 x 12 = 360. (சிறிதே ஏறிப் பெரும்பான்மையாக நாள்கள் முந்நூற்றறுபத்தைந்தும் ஓரோவோர் ஆண்டில் முந்நூற்று அறுபத்தாறும் ஆகின்ற அவற்றைக் கணக்கில் கொள்ளாமல் ஆண்டிற்கு முந்நூற் றறுபது நாள்' என்றல் பொது வழக்கு). இந்த நாள்கள்***

**2742.** தாமுடி வானவர் தம்முடி மேல்உறை
மாமணி ஈசன் மலரடித் தாளிணை
யாமணி யன்புடை யார்மனத் துள்ளெழும்
காமணி ஞாலம் கடந்துநின் றானே. **24**

---

*முந்நூற்றறுபதும் பன்னிரண்டு அடிநிலைப் பகுதிகளாய்த் தொக்கு நிற்கும். அவையே பன்னிரு திங்கள்களாம். அவற்றையே "முதற் பன்னீர் மூலமாய்" என்றார். முதல் - 'முந்நூற்று அறுபது' என எண் பெறுதற்கு முன்பு. 'மூலம் பன்னிரண்டாய்' என மாற்றிக் கொள்க.*

*பன்னிரு திங்களும் 'கார், பனி, வேனில்' எனப் பெரும்பான்மை மூன்றாகிப் பின் அவற்றுள் ஒவ்வொன்று இரண்டாகப் பருவங்கள் ஆறாகும். அவற்றையே "மூன்றினில் ஆறாய்" என்றார். இவற்றை ஆவணி முதலாக நந்நான்காகக் கொள்க. கார்ப்பருவத்தின் பின் இரு திங்களும் 'கூதிர்ப் பருவம்' (பெருமழையின்றிச் சிறுதூற்றலும், துளியும் மிகுந்து தொல்லை தரும் பருவம்). பனிப் பருவத்தின் முன் இருதிங்கள் முன்பனிப் பருவமும், பின் இரு திங்களும் பின்பனிப் பருவமும் ஆகும். முன் பனியில் குளிர் மிகுந்தும், பின்பனியில் குளிர் குறைந்தும் இருக்கும். 'முன்பனி, பின்பனி' என்பன, பின்முன்னாகத் தொக்க ஆறாம் வேற்றுமைத் தொகைகள். வேனிற் பருவத்தின் முன் இரு திங்களும் 'இளவேனில் (வேனில் இளமையுடைத்தாய் வெப்பத்தை மிகத் தரும் பருவம்) எனவும், பின் இருதிங்கள் 'முதுவேனில்' (வேனில் முதுமையை எய்தி வெப்பத்தை மிகத் தரமாட்டாத பருவம் எனவும் சொல்லப்படும்.*

*அக்கம் - கண்; சிவனது கண்கள் மூன்று. 'கதிர், மதி, தீ' என்னும் முச்சுடர்கள். 'மூன்று, அக்கத்தில் முடிய' என மாற்றுக. முடிதல் - அடங்குதல். பெரும்பாலும் முச்சுடர்களாலே காலம் பல வகை நிலையை அடைந்து பல விளைவுகளை உண்டாக்குதலை அறிக.*

*மூன்றிலும் ஆடினான் - ஏதேனும் ஒருகாலத்தில் உள்ளார்க்கு அக்காலத்தோடு, அதற்கு முன்னும், பின்னும் ஆகிய காலங்களிலும் ஆடினான். எதிர்காலம் பற்றி நோக்குங்கால் "ஆடினான்" என்பதைத் தெளிவு பற்றி வந்த வழுவமைதியாகக் கொள்க.*

*மோகம் - மயக்கம்; திரிபுணர்ச்சி. இஃது ஆணவ மலத்தின் காரியம். அந்தக் கூத்து - அந்தத்தை உண்டாக்கும் கூத்து. எனவே, 'உயிர்களின் ஆணவ மலத்தை நீக்குதற்கே இவ்வாறு சிவன் அனவரத தாண்டவத்தைச் செய்கின்றான்' என்பதாம்.*

*"ஆகி, ஆய், ஆய், ஆய், ஆக" என்பவற்றிற்கு, 'காலம்' என்னும் எழுவாயும், "ஆடினான்" என்பதற்கு, 'சிவன்' என்னும் எழுவாயும் வருவிக்க. முந்தியே - அனாதி தொட்டே.*

**2743.** புரிந்தவன் ஆடில் புவனங்கள் ஆடும்
தெரிந்தவன் ஆடு மளவெங்கள் சிந்தை
பரிந்தவன் ஆடிற்பல் பூதங்கள் ஆடும்
எரிந்தவன் ஆடல்கண் டின்புற்ற வாறே. **25**

---

*மேல் (பா. 2739) இட வரைவின்றி எங்கும் ஆடும் அற்புதம் கூறப்பட்டாற்போல, இதனால், கால வரைவின்றி என்றும், எப்பொழுதும் ஆடும் அற்புதம் கூறப்பட்டது.*

*2742.* **தெளிவுரை :-** *கற்பக மலர் மாலையை அணிந்த முடியை உடைய தேவர்களது தலைமேல் இருப்பனவாகிய, மாணிக்கம்போலும் சிவபெருமானது இருபாதங்களும், தகுதி வாய்ந்த அணியாகிய அன்பை உடையவர்களது உள்ளத்திலே விளங்கும் கற்பகத் தருவும், சிந்தாமணியும் ஆகும். ஆயினும் அவன் உலகத்தைக் கடந்தேயிருக்கின்றான்.*

*குறிப்புரை :- கா - கற்பகம். மணி - சிந்தாமணி. '**கற்பகத்தரு இரந்தவற்றைக் கொடுக்கும்; சிந்தாமணி பெற நினைந்தவற்றைக் கொடுக்கும்**. உலகத்தைக் கடந்து நிற்கின்றவன் அன்பர்கள் உள்ளத்தில் கற்பகத் தருவும், சிந்தாமணியும் போல இருத்தல் கருணையினாலேயாகலின், அவன் மேற்கூறியவாறு எங்கும், எஞ்ஞான்றும் ஆடுதல் கருணையினாலே' என்பதைக் குறிப்பால் உணர்த்தியவாறு.*

*'தாமமுடி' என்பது, "தாமுடி" எனக் குறைந்து நின்றது. அதனால் தேவர்களது தலையினது உயர்வு குறிக்கப்பட்டது. 'உறை தாளிணை' என இயையும். 'உறை மாமணி' என இயைத்தலும் ஆம். "தாள்" என்பது, கால் முழுவதையும் குறிக்க. "அடித் தாள்" என்பது பின் முன்னாகத் தொக்க ஆறாம் வேற்றுமைத் தொகையாய் பாதத்தைக் குறித்தது.*

*இங்கு "அணி" என்றதை, "ஒருபாற் கோடாமை சான்றோர்க்கு அணி" (திருக்குறள், 118) என்பதிற்போலக் கொள்க. "கடந்து நின்றான்" என்பதற்கு, 'அவன்' என்னும் சுட்டு வருவிக்க.*

*இதனால், ஞாலம் கடந்து நின்றவன் சிலரது உள்ளங்களிலே விளங்கி, எண்ணியவற்றை எண்ணியாங்கு முடிக்கும் அற்புதம் கூறும் முகத்தால் அவனது கூத்து அற்புதமும் உணர்த்தப்பட்டது.*

*2743.* **தெளிவுரை :-** *அனைத்தையும் படைத்தவனாகிய சிவன் அடி பெயர்த்து ஆடினால், அவனால் படைக்கப்பட்ட அகலிடங்கள் அனைத்தும் தாமாகவே ஆடும். (இயங்கும். 'அவன் ஆடாவிடில் அவையும் ஆடா; இயங்கா' என்பது கருத்து). இதை அறிந்த சிவன் அவை ஆடும் பொருட்டுத் தான் ஆடுமளவும் எங்கள் அறிவுகள் அறிதலைச் செய்யும். ('அவன்' ஆடாவிடில்*

**2744.** ஆதி நடம்செய்தான் என்பர்கள் ஆதர்கள்
ஆதி நடம்செய்கை ஆரும் அறிந்திலர்
ஆதி நடம்ஆடல் ஆரும் அறிந்தபின்
ஆதி நடம்ஆடல் ஆம்அருட் சத்தியே. **26**

---

*எங்கள் அறிவுகளும் அறிதலைச் செய்யா' என்பது கருத்து). இது பற்றி அவன் கருணை கூர்ந்து எங்கும், எப்பொழுதும் ஆடுகின்றான். அப்பொழுது அவனது சுற்றமாகிய பல பூதங்களும் களிப்பினால் ஆடுகின்றன. நாங்கள் இன்பம் அடைந்ததும் அவன் சோதியாய் விளங்கி நின்று ஆடுதலைக் கண்டேயாம்.*

*குறிப்புரை :-* "புரிந்தவன், தெரிந்தவன்" என்பன வினையாலணையும் பெயர்கள். 'அவன் புரிந்து ஆடில்' எனவும், 'அவன் எரிந்து ஆடல்' எனவும் மாற்றி வைத்துரைக்க. 'சிந்தையும்' ஆடும் என, இறந்தது தழுவிய எச்ச உம்மையும் அதனை முடிக்கும் சொல்லும் வருவிக்க. எரிதல் - ஒளி வீசுதல். 'யாம் இன்புற்றவாறு ஆடல் கண்டு' என எடுத்து முடிக்க. "இன்புற்றவாறு" என்பதிலும் இறந்தது தழுவிய எச்ச உம்மை தொகுத்தலாயிற்று.

இதனால் திருக்கூத்தினால் அறிவில் பொருள், அறிவுடைப் பொருள் அனைத்தும் செயற்படும் அற்புதம் கூறப்பட்டது.

*2744. தெளிவுரை :-* எப்பொருட்கும் முதல்வனாகிய சிவன் கூத்தனாய் நிற்றலைக்கண்டு, அதன் உண்மையை அறிவும் அறிவு இல்லாதவர்கள், அக்கூத்தினை அவன் எவையோ சில பயன்களைப் பெற வேண்டி ஆடுகின்றான்' எனப் பிதற்றுவார்கள். ('எப்பொருட்கும் முதல்வனாகியவனுக்குப் பிறர்பால் பெற வேண்டியது யாதுளது' என்பது கருத்து). அவன் நடம் செய்தபின் உண்மை யாவராலும் அறிதற்கு அரிதேயாம். யாரேனும் அவ்வுண்மையை அறிவார்களாயின், 'அவனுக்கு இயல்பாய் உள்ள கருணையின் விளைவே அவனது கூத்து' என்பதே அவ்வுண்மையாய் முடியும்.

*குறிப்புரை :-* 'ஆராயினும்' என்பது, 'ஆரும்' எனத் தொகுத்தல் பெற்று நின்றது. 'அறிந்தால்' என்பது, "அறிந்த பின்" எனத் திரிந்து நின்றது. குணத்தை, "சத்தி" என்றார். 'அருட்சத்தி ஆம்' என முன்னே கூட்டி முடிக்க. செய்கையின் உண்மையை, ''செய்கை'' என்றும் சத்தியின் விளைவை ''சத்தி'' என்றும் உபசரித்தார். இம்மந்திரம் சொற்பொருட் பின்வருநிலையணி பெற்றது.

இதனால், சிவனது திருக்கூத்துச் சிறிதும் தன்பொருட்டாகாது, பிறர் பொருட்டேயாகின்ற அற்புதம் கூறப்பட்டது.

*2745. தெளிவுரை :-* தனித்தனி ஒன்பது, ஒன்பது பகுதிகளையுடையனவும், 'தத், துவம்' என்னும் இரு சொற்களால் குறிக்கப்படுவனவும் ஆகிய, 'பதி, பசு'

**2745.** ஒன்பதொ டொன்பதாம் உற்ற அசிபதத்து
அன்புறு கோணம் அசிபதத்து ஆடிடத்
துன்புறு சத்தியுள் தோன்றிநின் றாடிட
அன்புறும் எந்தைநின்று ஆடலுற் றானே. **27**

**2746.** தத்துவம் ஆடச் சதாசிவன் தான்ஆடச்
சித்தமும் ஆடச் சிவசத்தி தான்ஆட
வைத்த சராசரம் ஆடமறை ஆட
அத்தனும் ஆடினான் ஆனந்தக் கூத்தே. **28**

---

*என்னும் இரண்டும் 'அசி' என்னும் சொல்லில் இணையும்படியும், அதற்கு முன்னே பசு துன்பத்தைச் செய்கின்ற திரோதான சத்தியின் வசப்பட்டு எங்கும் பிறந்தும், வாழ்ந்தும் சுழலும்படியும் பசுக்களின் கருணையுடையவனாகிய எம்தந்தை சிவன் ஆடல் தொழிலைப் பொருந்தி நிற்கின்றான்.*

*குறிப்புரை :-* என்றது, 'உயிர்கட்குப் 'பிறப்பு, வீடு' என்னும் இருநிலைகளையும் 'தருதற்காக ஆடுகின்றான்' என்றபடி. வீடு சிறந்தமை பற்றி முற்கூறப்பட்டது. வீட்டைத் தருவது ஞான நடனம். பிறப்பைத் தருவது ஊன நடனம். 'ஒன்பதும் ஒன்பதும் ஆம் கோணம்' எனவும், 'இருபதத்து உற்ற கோணம்' எனவும் தனித்தனி இயைக்க. அவற்றுள் முன்னையது பதியையும், பசுவையும் தனித்தனி நவகோண சக்கரமாக உருவகம் செய்ததாம். பதியின் ஒன்பது பகுதிகள் நவந்தரு பேதம், பசுவின் ஒன்பது பகுதிகள் 'கேவலம், சகலம், சுத்தம்' என்னும் மூன்றில் ஒவ்வொன்றிலும், 'கேவலம், சகலம், சுத்தம்' என்னும் மும்மூன்று உட்பிரிவுகளாம். அவையெல்லாம் முன் தந்திரத்தில் விளக்கப்பட்டன. அன்புறுதல், ஒன்றையொன்று நேசித்தல். 'அசி' பதம் சீவன் சிவன் ஆதலைக் குறிப்பது என்பதும் முன் தந்திரத்தில் சொல்லப்பட்டது. "ஒன்பதொ டொன்பது" என்பதில் உள்ள ஒடு எண் ஒடு. "ஆடிட, ஆட" என்னும் எச்சங்களும் எண்ணின்கண் வந்தன.

*இதனால், உயிர்களின் பல நிலைகளும் நிகழ்தற்பொருட்டுச் சிவனும் பல நிலைகளில் நின்று ஆடுதல் கூறப்பட்டது.*

*2746.* ***தெளிவுரை :-*** *முன் மந்திரத்தில் கூறியபடி பசு பல நிலைகளில் செயற்படும்படி சத்தி ஆடுதலால், சிவனும் அதற்கு இயையப் பல நிலைகளில் நின்று ஆடுகின்றான்.*

*குறிப்புரை :-* ஐந்தொழிற்கும் முதல்வன் சதாசிவன் ஆதல்பற்றி அவனை வேறு பிரித்துக் கூறினார். சித்தம் - உயிர்களின் அறிவு. சராசரம் - பிறப்பு வகைகள். "சிவசத்தி தான் ஆட" என்பதை மூன்றாம் அடியின் ஈற்றில் வைத்து, 'அவள் ஆட, அத்தனும் ஆனந்தக்கூத்து ஆடினான்' என முடிக்க. காரியப்

**2747.** **இருவரும் காண எழில்அம் பலத்தே**
**உருவோ டருவோ டுருவரு ரூபமாய்த்**
**திருவருட் சத்திக்குள் சித்தன் ஆனந்தன்**
**அருளுரு வாகநின் றாடலுற் றானே. 29**

**2748.** **சிவம்ஆடச் சத்தியும் ஆடச் சகத்தின்**
**அவம் ஆடஆடாத அம்பரம் ஆட**
**நவமான தத்துவம் நாதாந்தம் ஆடச்**
**சிவம்ஆடும் வேதாந்த சித்தாந்தத் துள்ளே. 30**

---

*பொருளில் வந்த ஏனை, 'ஆட' என்னும் எச்சங்கள். 'சிவசத்தி தான் ஆட' என்பதனோடு முடிந்தன. 'தான்' இரண்டும் அசைகள். சத்தி, இங்கு ஆதி சத்தி.*

*இதனால், திருக்கூத்துக்கள் யாவும் சத்தியின் நிலைகட்கு ஏற்ப நிகழ்த்தப்படுதல் கூறப்பட்டது.*

*2747.* ***தெளிவுரை :-*** *உண்மையில் அருட்சத்திக்கு உள்ளே சென்று அடையப்படுபவனாய் ஆனந்தத்தைப் பொழியும் சிவன் இவ்வுலகில் 'பதஞ்சலி, வியாக்கிரபாதர்' என்னும் முனிவர் இருவர் எப்பொழுதும் கண்டுகளிக்கும்படி, 'உருவம், அருவம், உருஅருவம்' என்னும் மூன்று திருமேனிகளில், அத்திருமேனிகள் அருளேயாய் நிற்க நின்று ஆடுதலை மேற்கொண்டுள்ளான்.*

***குறிப்புரை :-*** *"இருவரும் காண" என்றதனால், இங்குக் கூறிய அம்பலம் தில்லை அம்பலம் ஆயிற்று. அங்கு உருவம், கூத்துக்கோலம். அருவம், ஆகாசத்தைச் சுட்டும் இரகசியம். உருஅருவம், 'திருச்சிற்றம்பலம் உடையார்' என்னும் இலிங்கத் திருமேனி. சித்தன் - அடையப்படுபவன். மூன்றாம் அடியை முதலில் வைத்து உரைக்க.*

*இதனால், தில்லையம்பலக் கூத்தின் அற்புதம் கூறப்பட்டது.*

*2748.* ***தெளிவுரை :-*** *சிவ முதற்பொருள், தான் செய்வோனாய் நின்று சங்கற்பிக்க, அச்சங்கற்பந்தானே சத்தியாகிப் பலவகையில் நிற்க, அதனால் உலகத்தில் தீயனயாவும் நிலைகெட்டு நீங்கும் நிலையை எய்த, உலகில் அசைவற்றதாக எண்ணப்படுகின்ற ஆகாயமும் ஒலி அலைகளைத் தோற்றுவித்துச் செயற்பட, புதிது புதிதாய்த் தோன்றியமைகின்ற தத்துவங்கள் நிலம் முதல் நாதம் ஈறாக நின்று செயற்பட எப்பொழுதும் ஆடும் இவ்வுண்மை வேதாந்தத்திலும், சித்தாந்தத்திலுமே காணப்படும்.*

***குறிப்புரை :-*** *'பிறவற்றில் காணப்படாது' என்றதாம். அஃதாவது, 'புறச் சமயிகள் இதனை உணரார்' என்றதாம். ஈற்றில் உள்ள "சிவம்" என்பதை முதலில் வைத்து உரைக்க. முதற்கண் உள்ள 'சிவம் என்பது செய்வோன்' என்னும்*

**2749.** நாதத்தின் அந்தமும் நற்போத அந்தமும்
வேதத்தின் அந்தமும் மெய்ச்சிவ அந்தமும்
தாதற்ற நல்ல சதாசிவ அந்தமும்
நாதப் பிரம சிவநட மாமே. **31**

---

*பொருட்டாய் நின்றது. அதன்கண், 'சிவமாய்' என ஆக்கம் வருவிக்க. "சிவம் ஆட" என்பதில் ஆடுதல், சங்கற்பித்தல். "நாதாந்தம்" என அந்தம் கூறவே, நிலமாகிய ஆதியும் பெறப்பட்டது. ''வேதாந்த சித்தாந்தம்'' என்பது உம்மைத்தொகை. 'உள்ளது' என்பதில் இறுதிநிலை தொகுக்கப்பட்டு, "உள்" என நின்றது.*

*இதனால், திருக்கூத்தின் அற்புத நிலை வேதாந்த சித்தாந்தங்களிலே விளங்குதல் கூறப்பட்டது.*

*2749. **தெளிவுரை :-** 1. உயிர் தத்துவங்கள் அனைத்தையும் 'தான் அல்ல' என்று கண்டுகழித்துத் தன்னை அவற்றிற்கு வேறான சித்துப் பொருளாக உணர்தலும், 2. பின்பு, 'தான், அறிவித்தால் அறியும் தூல சித்தாவதல்லது, தானே அறியும் சூக்கும சித்தன்று' எனத் தனது உண்மையை உணர்ந்து, 3. அதனானே, 'தானே அறிந்தும், உயிர்கட்கு அறிவித்தும் நிற்கும் சூக்கும சித்துத் தலைவனாம் சிவன்' என அறிதலும் 4. இவ்வறிவு வேதாகமங்களாகிய அபர ஞானங்களாய் இல்லாது, 5. அவற்றைக் கடந்த அனுபவமாம் பரஞானமாகப் பெறுதலும் ஆகிய இவையெல்லாம் தனக்கு ஒரு மூலம் இல்லாது தானே மூலமாய் நிற்கும் சதாசிவ மூர்த்திக்கு மேலே நாதமாய் நின்று 'நாதப்பிரமம்' எனப்படுகின்ற ஆதி சிவனது நடனத்தின் பயனேயாகும்.*

***குறிப்புரை :-** "அந்தம்" என்பன கடந்த நிலையைக் குறித்தன. தாது - மூலம். ஐந்தொழில்களில் இறுதியான அருளலைச் செய்வோன் சதாசிவன் ஆதலை நினைக. "மெய்ச் சிவம்" என்பதில் சிவம், சிவத்தைத் தரும் சிவாகமம். சத்தப் பிரம வாதிகள் சடமாகிய நாதத்தையே 'நாதப் பிரமம்' என்பர். அது பொருந்தாது; நாதத்தை அதிட்டித்து நிற்கும் சிவனே நாதப்பிரமம் என்பார் 'நாதப் பிரம சிவன்' என்றார். இந்தச் சிவன் அநாதி சிவனாகிய பரமசிவத்தினின்றும் தோன்றிய ஆதி சிவன் ஆதலையறிக. நடனத்தின் பயனை, "நடம்" என உபசரித்தார்.*

*இதனால், சுத்தாவத்தை பராவத்தைகள் யாவும் திருக்கூத்தின் விளைவாதல் கூறப்பட்டது. இவ் அவத்தைகள் முன் தந்திரத்தில் விளக்கப்பட்டன.*

*2750. **தெளிவுரை :-** சரியை முதலிய இறப்பில் தவங்களை நிரம்பச் செய்த உயிரைப் பாசங்கள் அப்பொழுதே விட்டு நீங்குதலால், அவ்வுயிர் சிவம் முதலாக எண்ணப்படும் சிவதத்துவங்களால் உயிர்க்கு இருந்து வந்த ஐந்தொழிலில் படும்*

**2750.** சிவமாதி ஐவர்திண் டாட்டமும் தீரத்
தவமார் பசுபாசம் ஆங்கே தனித்துத்
தவமாம் பரன்எங்குந் தானாகி ஆடும்
தவமாம் சிவானந்தத் தோர் ஞானக் கூத்தே. **32**

**2751.** கூட நின்றான் ஒரு காலத்துத் தேவர்கள்
வீட நின்றான் விகிர் தாஎன்னும் நாமத்துத்
தேட நின்றான்திக ழும்சுடர் மூன்றொளி
ஆட நின்றான் என்னை ஆட்கொண்ட வாறே. **33**

---

*பிணிப்பு நீங்கும்படி, தவத்தின் வடிவாய் விளங்கும் சிவன் எங்கும் தானாய்த் திருக்கூத்தியற்றுவன். அக்கூத்துத் தவத்தால் விளைந்த ஞானத்தின் பயனாக அதற்கு உரியோர் பொருட்டுச் செய்யப்படுவதாகும்.*

*குறிப்புரை :- மூன்றாம் அடியை முதலில் வைத்து 'பசுவினின்றும்' என உருபு விரிக்க. தனித்து, தனித்தலால், எங்கும் தான் ஆக - தனது வியாபக நிலை தோன்றும்படி. அஃதாவது, 'எங்கும் சிவமாய்த் தோன்றும்படி' என்பதாம். 'அது ஞானக்கூத்து' எனச் சுட்டு வருவித்து தவமாம் சிவானந்தத்தோர்க்கு' என உருபு விரித்து முடிக்க.*

*சிவமாதி ஐவர், சிவ தத்துவம் முதலிய சுத்த தத்துவம் ஐந்திலும் நிற்கும் முதல்வர்கள், இவர்கள் பந்தத்தில் உள்ள உயிர்களை அவற்றினின்றும் நீங்குதற்கு ஆவன செய்வாராயினும், அச்செயல் நோயாளிக்கு மருத்துவன் செய்யும் செயல் அப்பொழுது துன்பமாய்த் தோன்றுதல்போல அலமரலை விளைக்குமாகலின், அந்நோய் நீக்கத்தை, அவரால் விளையும் திண்டாட்டம் நீங்குதலாகக் கூறினார். 'திண்டாட்டம்' என்னும் நாட்டுப்புற வழக்கு, 2736 ஆம் மந்திரத்திலும் வந்தது.*

*இதனால், திருக்கூத்து வகைகளுள் ஞானக்கூத்தின் சிறப்புக் கூறப்பட்டது.*

*2751. **தெளிவுரை :-** 'தேவர் என்பார் அனைவரும் தனது முன்னிலையில் ஒருங்குகூடி வணங்க இருப்பவனும், அவர் அனைவருமே அழிந்து இல்லையாகிய காலத்திலும் தான் அழியாது ஒருவனாய்த் தனித்திருப்பவனும், உள்ள காலத்தில் உயிர் வருக்கத்துட் பட்டார் யாவரும் 'எம்மில் வேறாம் தன்மை யுடையவனே', (தலைவனே) எனச் சொல்லித் தேட நிற்பவனும், தனது முக்கண்கள் சுழலுதலால், உலகத்தார் முன் விளங்குகின்ற, 'ஞாயிறு, திங்கள், தீ' என்னும் முச்சுடர்களும் சுழலும்படி ஆடுகின்றவனும் ஆகிய அவன் என்னை ஆட்கொண்டவாறு வியப்பிற்குரியது.*

***குறிப்புரை :-** கூடுதல், தன் பயனைத் தோற்றுகின்றது. "தேவர்கள்" என்பதை, ''கூட'' என்பதனோடும் கூட்டுக. 'வீடவும்' என்னும் சிறப்பும்மை*

**2752.** நாதத் துவங்கடந் தாதி மறைநம்பி
பூதத் துவத்தே பொலிந்தின்பம் எய்தினர்
நேதத் துவமும் அவற்றொடு நீதியும்
பேதப் படாவண்ணம் பின்னிநின் றானே. **34**

---

தொகுத்தலாயிற்று. விகிர்தன் - வேறுபட்டவன். மூன்றொளிகள் ஆடுதல் கூறினமையால் அவன் ஆடுதல் பெறப்பட்டது. 'வியப்பிற்குரியது' என்பது சொல்லெச்சம்.

*இதனால், ஆடல் வல்லானது அற்புத நிலை கூறப்பட்டது.*

*2752.* ***தெளிவுரை :-*** *வேதாந்தத்திலே விளங்குகின்ற நம் சிவன், நாத தத்துவத்தையும் கடந்த முதல்வன். அவனை இந்தப் பூமியிலே இங்குள்ளவர்கள் தெளிவாகக் கண்டு ஆனந்தத்தை அடைகின்றார்கள். அது பற்றி அவன் அவர்களிடமிருந்து வைத்த கருணையும், நடுவுநிலைமையும் முரணாகி விடவில்லை; நேரொன்றியே நிற்கின்றன. அவ்வாறு உள்ளது அவன் இப்பூமியில் இயைந்து நிற்கின்ற நிலை.*

***குறிப்புரை :-*** *'நாத தத்துவம்' என்பது கடைக்குறைந்து 'நாதத்துவம்' என நின்றது. இனி 'நாதத்தின்மை' எனக்கொண்டு 'சுத்த மாயை' எனினும் ஆம். சிறப்பும்மையும்; 'கடந்த' என்பதன் ஈற்று அகரமும் தொகுத்தலாயின. "மறை" என்றது அதன் முடிவை. 'மறை நம்பி நாதத்துவமும் கடந்த ஆதி' என்க. இதனை அனுவதித்து ஓதினார், அவன் மிகக் கீழ்த் தத்துவத்தின்கண் விளங்கிநிற்கும் எளிமையுணர்த்தற்கு. பூ - பூமி. 'பூத் தத்துவம்' என ஒற்று மிகாமை வடநூல் முடிவு. பொலிந்து, 'பொலிய' என்பதன் திரிபு. இன்பம் எய்துதற்கு வினைமுதல் வருவிக்கப்பட்டது. 'நேசத்துவம்' என்பது, எதுகை நோக்கித் திரிந்தது. நேசம் இறைவனுடையது. இன்பம் எய்துவார் பலராகலின், அவர்மேல் வைத்த நேசமும் பலவாகச் சொல்லப்பட்டது. நீதி, "மோகம் அறுத்தவர்க்கே முத்தி கொடுப்பம்" எனச் சொல்லி வைத்த நீதி. அது பேதப்பட்டமை, அவனது காட்சியாலே மோகம் அற்றமையினாலாம். ஆகவே, அவரது நிலைமை அவ்வாறாகும்படி அவன் இவ்வுலகில் இயைந்து நிற்கின்றான்" என்பதாம். இனி, 'நேதியும்' என்பதே பாடமாகக் கொண்டு ஏற்குமாறு உரைப்பர்.*

*"பின்னி நின்றான்" எனப் பொதுப்படக் கூறினாரேனும் இங்குச் சிறப்பாகக் கூத்தனாய் நிற்றலைக் கூறுதலே கருத்தென்க. இன்பம் எய்துதல் அதனானே சிறக்க நிகழ்தலின்.*

*இதனால், திருக்கூத்தினால் சிவநெறி உண்மை அற்புதமாக விளைதல் கூறப்பட்டது.*

**2753.** **ஆனந்தம் ஆனந்தம் என்பர் அறிவிலார்**
**ஆனந்தம் மாநடம் ஆரும் அறிகிலர்**
**ஆனந்தம் மாநடம் ஆரும் அறிந்தபின்**
**ஆனந்தம் அற்றிட ஆனந்தம் ஆமே.** **35**

**2754.** **திருந்தநற் சீஎன் றுதறிய கையும்**
**அருந்தவ வாஎன் றணைத்தபொற் கையும்**
**பொருந்தில் அமைப்பில் இயஎன்பொற் கையும்**
**திருந்தத் தீஆகும் திருநிலை மவ்வே.** **36**

---

*2753.* ***தெளிவுரை :-*** *"பேரின்பத்தை அடைய வேண்டும், அடைய வேண்டும் என்று, அஃது இருக்குமிடத்தை அறியாத பலர் அதனைத் தேடி அலைகின்றனர், ஆயினும் பேரின்பம் இவ்வுலகில் சிவன் செய்யும் திருக்கூத்திலே இருத்தலை யாரும் அறிதல் இல்லை. அறிவார்களாயின், அக்கூத்து, உலக இன்பம் அனைத்தும் கெடும்படி பேரின்பமாய் நிகழும்".*

***குறிப்புரை :-*** *"ஆனந்தம்" பலவற்றில் ஈற்றடியின் முதலில் நின்ற ஒன்று தவிர ஏனைய யாவும் சிறப்புப் பற்றிப் பேரின்பத்தையே குறித்தன. அடுக்கு, இடைவிடாமை பற்றி வந்தது. 'வேண்டும்' என்பது சொல்லெச்சம். ஆனந்தத்தைத் தருதல் பற்றி நடனத்தையே "ஆனந்தம்" என உபசரித்துக் கூறினார். 'அறுதல் விடயானந்தம் - ஐம்புல இன்பம்' என்க.*

*இதனால், முன் மந்திரத்திற் கூறிய அற்புதத்தை அறிய மாட்டாதாரது நிலை இரக்கத்திற்குரியதாதல் கூறப்பட்டது.*

*2754.* ***தெளிவுரை :-*** *சிவனது திருக்கூத்தினைக் காணுங்கால், அதில் உதறிய கையை, மாயையை, 'சீ' என்று உதறும் கையாகவும், வீசி அணைத்த கையை, அடியவனை, 'வா' என்று அழைத்து அருள் வழங்கும் கையாகவும், சார்ந்தவிடத்து, 'அஞ்சற்க' என அமைந்த கையை, 'இனிதிருக்க' எனத்தேற்றம் தரும் கையாகவும் தீ ஏந்திய கையை, வினைகள் கெடத் திருவருள் வழி நிற்கச் செய்யும் கையாகவும், ஊன்றிய திருவடியை மலத்தை மிதித்து நிற்கும் திருவடியாகவும் காணுதல் வேண்டும்.*

***குறிப்புரை :-*** *திருவைந்தெழுத்தில் உள்ள எழுத்துக்களின் சிலேடை தோன்ற உண்மையுணர்த்தியவாறு. உதறலுக்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. இங்குக் கூறியவற்றில் அமைந்துள்ள எழுத்துக்களை வருகின்ற மந்திரத்துள் "உதறிய கை, அணைந்த கை, 'இய' என்ற கை" - உடம்பொடு புணர்த்து ஓதப்பட்ட பொருள்கள் இனிது விளங்க வெளிப்படையாக உரைக்கப்பட்டன. "தீ, நிலை" என்பன ஆகுபெயர்களால் அவற்றையுடைய கையையும், அடியையும் குறித்தன. "ம" என்றது, மலத்தை அதன் முதலெழுத்துக்*

**2755.** மருவும் துடியுடன் மன்னிய வீச்சு
மருவு மமைப்பு அனலுடைக் கையும்
கருவின் மிதித்த கமலப் பதமும்
உருவில் சிவாய நமஎன ஓதே. **37**

---

*குறிப்பாற் கூறினார். 'மவ்வை மிதித்தல்' என ஒரு சொல் வருவிக்க. வேண்டும் இடங்களில் எல்லாம் 'ஆக' என்பது வருவித்து, அவற்றை "ஆகும்" என்பதனோடு முடிக்க. "திருந்து அத் தீ ஆகும்" என்பதை, "அத் தீ திருந்து ஆகும்" என மாற்றி உரைக்க. திருந்து - திருந்துதல்; அஃதாவது, தற்போதத்தால் வினைகளைச் செய்யாது திருவருள் வழி நிற்றல். முதனிலைத் தொழிற்பெயர் "இய" என்றது, 'இயல்' என ஏவியதனைக் குறித்தது. "ஆகும்" என்பதைப் பின்னரும் கூட்டுக.*

*இதனால், திருக்கூத்தினை உண்மையில் தரிசிக்கும் முறைகளுள் ஒரு வகை முறை கூறப்பட்டது.*

*மாயை தனைஉதறி, வல்வினையைச் சுட்டு, மலம்*
*சாய அமுக்கி, அருள் தான்எடுத்து - நேயத்தால்*
*ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான்அழுத்தல்*
*தான்எந்தை யார்பரதந் தான்.*

*என்னும் உண்மை விளக்க வெண்பா (36)வை இங்கு ஒப்பு நோக்கி உணர்க.*

*2755. தெளிவுரை :- கூத்தப் பிரான் திருவுருவத்தில் உடுக்கை வீச்சு, அமைப்பு, நெருப்பு இவைகளையுடைய நான்கு கைகளையும், ஊன்றிய திருவடியையும் முறையே 'சி, வா, ய, ந, ம' என்னும் எழுத்துக்களாகக் கண்டு துதித்து வணங்குக.*

*குறிப்புரை :-*

*சேர்க்கும் துடிசிகரம், சிக்கெனவா வீசுகரம்;*
*ஆர்க்கும் யகரம் அபயகரம் - பார்க்கில் இறைக்கு*
*அங்கி நகரம்; அடிக்கீழ் முயலகனார்*
*தங்கும் மகரமது தான்.* **- உண்மை விளக்கம், 33**

*என்னும் உண்மை விளக்க வெண்பாவினைக் காண்க. திருவைந்தெழுத்து இவ்வாறு சிகாரம் முதலாக அமைவது சூக்கும பஞ்சாக்கரம் ஆகும் என்பதனை நினைவூட்டுதற் பொருட்டு, "உருஇல் சிவாயநம" என்றார். உருஇன்மை அருவம்; சூக்குமம். இனி நகாரம் முதலாக அமையும் தூல பஞ்சாக்கர வடிவத்தை அந்நூல்,*

*ஆடும் படிகேள்; நல் அம்பலத்தான்; ஐயனே,*
*நாடும் திருவடியி லேநகரம் - கூடும்*

**2756.** **அரன்துடி தோற்றம் அமைத்தல் திதிஆம்**
**அரன்அங்கி தன்னில் அறையின்சங் காரம்**
**அரன்ஊற் றணைப்பில் அமருந்திரோ தாயி**
**அரன்அடி என்றும் அனுக்கிரகம் என்னே.** **38**

---

*மகரம் உதரம்; வளர்தோள் சிகரம்;*
*பகருமுகம் வா;முடிய; பார்.* - ***உண்மை விளக்கம், 32***

*என்பதனால் விளக்கிற்று. அதனை நாயனார் இங்குக் குறித்திலர். அஃது உலகப் பயனையே விளைத்தலின். கரு, ஆகுபெயராய் உடம்பைக் குறித்தது. உடம்பு, முயலகனது. அன்றி, அம்மந்திரம் கிடைத்திலது என்றலும் ஆம். 'கருவின்கண்' என 'மேல்' என்னும் பொருட்டாகிய ஏழாவது விரிக்க.*

*இதனால், முன் மந்திரத்தில் சிலேடை வகையான் குறித்த சூக்கும பஞ்சாக்கர முறை வெளிப்படையாக இனிது விளங்கக் கூறப்பட்டது.*

*2756.* ***தெளிவுரை :-*** *கூத்தப் பிரானது திருவுருவில் தோன்றும் குறிப்பைக் கூறுமிடத்து, உடுக்கையால் ஒலியை உண்டாக்கல் படைத்தல் தொழிலையும், அபயகரம் காத்தல் தொழிலையும், நெருப்பை ஏந்தியிருத்தல் அழித்தல் தொழிலையும், மேல்எடாமல் உறுதியாக முயலகன்மேல் ஒருகாலை ஊன்றியிருத்தல் மறைத்தல் தொழிலையும், மற்றொரு காலை உயரத் தூக்கியிருத்தல் அருளல் தொழிலையும் இவ்வாறாக ஐந்தொழிலையும் உணர்த்தும் என்க.*

***குறிப்புரை :-*** *"திருந்த நற் 'சீ' என்றுதறிய கையும்" என்றதில் உணர்த்தப்பட்ட குறிப்பு முத்தர்கட்கான ஞான நடனக் குறிப்பு எனவும், இது பெத்தர்கட்கான 'ஊன நடனக் குறிப்பு' எனவும் உணர்க. இதனையும்,*

*தோற்றம் துடியதனில்; தோயும் திதி அமைப்பில்;*
*சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்; - ஊற்றமா*
*ஊன்று மலர்ப்பதத்தே உற்ற திரோதம்; முத்தி*
*நான்ற மலர்ப்பதத்தே; நாடு.* - ***உண்மை விளக்கம், 35***

*என உண்மை விளக்க நூல் கூறுதல் காண்க. 'ஊன்று' என்னும் முதனிலை வலித்தல் பெற்று, ஈற்றில் 'அம்' ஏற்று, 'ஊற்றம்' என வந்தது. ஊற்றமா - உறுதியாக. இஃது இம்மந்திரத்தில் ஆக்கம் இன்றி வந்தது. அணைத்தல் - (முயலகன் முதுகில்) சேர்த்தல். ''அரன்'' என்றது, இங்குக் கூத்தப் பெருமானையே. அப்பெயர் சொற்பொருட் பின்வருநிலையாய்ப் பின்னரும் வந்தது. "ஊற்ற அணைப்பு" என ஊன்றிய திருவடியைக் கூறினமையால், பின் வந்த ''அடி'', தூக்கிய திருவடியாயிற்று.*

**2757.** **தீத்திரட் சோதி திகழொளி யுள்ஒளிக்**
**கூத்தனைக் கண்டஅக் கோமளக் கண்ணினள்**
**மூர்த்திகள் மூவர் முதல்வ னிடைச் செல்லப்**
**பார்த்தனள் வேதங்கள் பாடினள் தானே.** **39**

---

*இது பெத்தர்க்கான குறிப்பாயினும், ஐந்தொழில் செய்தல் முதல்வனுக்கு இலக்கணமாதல் சிறப்பு நோக்கியும், இறுதியில் அருளல் அமைந்திருத்தலாலும் இதனையும் இங்கு நாயனார் கூறினார் என்க. "அறையின்" என்பதை முதலிற் கொள்க.*

*இதனால், கூத்தப் பெருமானது வேறொரு வகைக் கூத்தின் குறிப்பு உணர்த்தப்பட்டது.*

*2757. **தெளிவுரை :-** அக்கரங்கள் ஐம்பதைக் குறிக்கும் சுடர்கள் மேல் எல்லாம் விளங்குகின்ற, முதல் ஒளியாகிய ஓங்காரமாம் திருவாசியுள், அவ்வோங்காரத்தின் உள்ளொளியாய் விளங்கும் கூத்தப் பெருமானது கூத்தினை எப்பொழுதும் காண்கின்ற அழகிய கண்களையுடைய சிவகாமியம்மை அந்தக் கண்களினாலே மூவர் மூர்த்திகளும் பெருமானது மூன்று கண்களினின்றும் தோன்றும் வண்ணம் பார்த்தாள். (உடனே அவர்கள் தோன்றினர். பின்பு அவர்களுக்கு வழிகாட்டுதற் பொருட்டுப்) பல வேதங்களைப் பாடி உணர்த்தினாள்.*

*__குறிப்புரை :-__ 'அதனால் உலகம் நடைபெற்று வருகின்றது' என்பது குறிப்பெச்சம்.*

> *"ஓங்கார மேநல் திருவாசி; ஆங்கதனில்*
> *நீங்கா எழுத்தே நிறைசுடராம்"* **- உண்மை விளக்கம், 34**

*என்னும் உண்மை விளக்கப் பகுதியை இங்கு ஒப்பிடுக. 'படைப்புக் காலத்தில் சிவன் தன்னிடத்தினின்றும் சத்தியை, 'இலலிதா' என்னும் பெயருடன் தோற்றுவிக்க, அவள் தனது மூன்று கண்களினின்றும் மும்மூர்த்திகளைத் தோற்றுவித்து, அவர்களை முத்தொழில் புரியுமாறு அருளினாள்' என்பது படைப்பு முறைகள் பலவற்றில் ஒருமுறையாகச் சொல்லப்படுகின்றது. (காஞ்சிப் புராணம் - திருவேகம்பப்படலம், 10). அம்முறை இங்கு ஒருவாறு குறிக்கப்பட்டது. கூத்தப் பெருமான் உலகத்தை நடத்தும் முறையைக் கூறியவாறு, 'உள்ளொளியாகிய கூத்தன்' என்க. "இடை" என்பதைப் பெயராக வைத்து, முதல்வனிடையினின்றும் செல்லப் பார்த்தனள்' என்க. செல்லுதல் - தோன்றிச் செயல்புரிதல்.*

*இதனால், 'மும்மூர்த்திகளும் கூத்தப் பெருமான் தனது சத்தியால் தோற்றுவித்து நிறுத்தி, ஒடுக்கப்படுபவர்களே' என்பது கூறப்பட்டது.*

**2758.** நந்தியை எந்தையை ஞானத் தலைவனை
மந்திரம் ஒன்றுள் மருவி அதுகடந்து
அந்தர வானத்தின் அப்புரத் தப்பர
சுந்தரக் கூத்தனை என்சொல்லு மாறே. **40**

**2759.** சீய குருநந்தி திருவம் பலத்திலே
ஆயுறு மேனி யாரும் அறிகிலர்
தீயுறு செம்மை வெளுப்பொடும் அத்தன்மை
ஆயுறு மேனி அணைபுக லாமே. **41**

---

*2758.* ***தெளிவுரை :-*** *மேல், "சுந்தரக் கூத்து" எனக் கூறப்பட்ட கூத்தினைச் செய்யும் சிவன் இங்குள்ளவர்களுக்கு 'ஓம்' என்னும் அந்த ஒரு மந்திரத்திலும், அதற்கு மேலாய திருவைந்தெழுத்து மந்திரத்திலும் நிறைந்து நின்று அருள் புரிகின்றான் என்றாலும், உண்மையில் அவன் அவற்றைக் கடந்து, எல்லா அண்டங்களுக்கும் அப்பாற்பட்டே யிருக்கின்றான். ஆகையால், 'அவன் இன்ன தன்மையன்தான்' என்று யார் வரை செய்து கூற இயலும்!*

***குறிப்புரை :-*** *'நந்தி' என்பது சிவன் பெயர்கள் பலவற்றில் ஒன்று. அது முதலாக வந்த மூன்றும் சுந்தரக் கூத்தனையே குறித்தமை வெளிப்படை. மந்திரம் ஒன்று, பொது நோக்கில் பிரணவமும், சிறப்பு நோக்கில் திருவைந்தெழுத்துமாம். கூத்தப் பெருமான் அவற்றின் வடிவாய் நிற்றல் இங்கு விளக்கப்பட்டது. 'மருவியும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. "ஓர் ஊரன் அல்லன் ................ இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன் என்று எழுதிக் காட்டொணாதவனாகிய" (தி.6 ப.97 பா.10) அவன், இங்கு மந்திரவடிவாய் நின்று ஆடல் புரியும் அருட் பெருமையை அறிந்து, அன்பு செய்து உய்தல் மக்கட்குக் கடன் என்பது கருத்து.*

*இதனால் திருக்கூத்தின் அருமை அறிந்து பயன்பெறுமாறு அறிவுறுத்தல் செய்யப்பட்டது.*

*2759.* ***தெளிவுரை :-*** *ஆசிரியராய் உள்ளார் அனைவர்க்கும் அவ்ஆசிரியத் தலைமையை அருளிய இயற்கை ஆசிரியத் தலைவன் சிவபெருமானே. அவனே திருவம்பலத்தில் கூத்துக் கோலமும் கொண்டு ஆடுகின்றான். அதனால் அவனது திருமேனியின் தன்மை ஆய்ந்துணரத்தக்கது. அதனை அவ்வாறு ஆய்ந்துணர்ந்தவர் யாரும் இல்லை. அதன் தன்மையாவது, நெருப்பு பார்வைக்குச் சிவப்பு நிறத்தையும், உண்மையில் வெளுப்பு நிறத்தையும் உடையதுபோல இருதன்மைப்பட்டது. அதனை உணர்ந்தால் அவனைச் சார்ந்து அவனுள்ளே இரண்டறக் கலந்துவிடலாம்.*

***குறிப்புரை :-*** *சீயம் - சிங்கம். இது தலைமை பற்றி வந்த உவமை. நந்தி ஆய் உறு மேனி என்க. ஆதல் - பொருந்துதல். மீட்டும் வந்த "ஆய் உறு மேனி"*

**2760.** தானான சத்தியும் தற்பரமாய் நிற்கும்
தானாம் பரற்கும் உயிருக்கும் தரும் இச்சை
ஞானாதி பேதம் நடத்தும் நடித்தருள்
ஆனால் அரனடி நேயத்த தாமே. **42**

---

*என்பது 'அது' என்னும் சுட்டுப்பெயர் அளவாய் நின்று, ஆகுபெயரால் அதன் தன்மையைக் குறித்தது. "ஆரும் அறிகிலர்" என்றதனால், ஆய்ந்துணரற்பாலதாதல் பெறப்பட்டது. 'தீ வெளுப்போடு செம்மை உறும் அத்தன்மை' என இயைக்க. தீயைப் பார்ப்போர் அனைவரும், 'அது சிவப்பானது' என்றும் கருதுகின்றனர். 'ஆயினும் தீ உண்மையில் வெளுப்பானதே' என நியாய நூலால் நிலைநாட்டுவர். இன்றைய அறிவியலாரும் 'ஏழு நிறங்களின் சேர்க்கையே வெண்மை' என்பர். கூத்தப் பெருமானது சத்தி, 'திரோதான சத்தி, அருட்சத்தி' என இரண்டாதல் பற்றி 'சத்தி வடிவான அவனது மேனி இரு தன்மையுடையது' என்றார். திரோதான சத்தியால் பெத்தத்தையும், அருட்சத்தியால் முத்தியையும் உயிர்கட்கு அவன் அருளுகின்றான்; அவ்வருட்செயல், திருக்கூத்தினால் நிகழ்கின்றது என்க. "ஆய், அணை" என்னும் முதனிலைகள் 'ஆய்ந்து' 'அணைந்து' என எச்சப் பொருள் தந்தன.*

*இதனால் திருக்கூத்து இரு சத்திகளால் இருவேறாகச் செய்யப்பட்டு, இருவகைப் பயனை விளைத்தல் கூறப்பட்டது.*

***2760. தெளிவுரை :-** சத்தி, சிவனின் வேறன்று ஆதலால், சிவன் உயிர்களைக் கடந்து 'நிற்றல் போலவே சத்தியும் உயிர்களைக் கடந்து நிற்கும்' (இந்நிலையில் சிவன், 'பரமசிவன்' என்றும், சத்தி, 'பராசத்தி' என்றும் சொல்லப்படுவர். எனினும் அந்தச் சத்தி) பரமசிவனுக்கும், அவனுக்குக் கீழே உள்ள உயிர்கட்கும் முறையே ஐந்தொழில் செய்தலிலும், போக மோட்சங்களை அடைதலிலும் இச்சையையும், அவற்றிற்கு ஆவனவற்றை அறியும் அறிவையும், அறிந்தவாறே ஆற்றும் செயலையும் தந்து, உலகத்தை நடத்தும். நடத்துமிடத்து அஃது 'ஆதி சத்தி' எனப் பெயர் பெறும். ('திரோதான சத்தி' எனப்படுவதும் இதுவே), இவ்வாறு உயிர்களை நடத்துதலே திருக்கூத்து இயற்றுதல் ஆதலின், அக்கூத்தின் பயனாக உயிர்கள் திருவருளைப் பெறும் தன்மையை எய்துமாயின், அந்த ஆதி சத்தியே அருட்சத்தியாய் அவைகட்கு இறைவனுடைய திருவடியில் அன்பைப் பெருக்கும்.*

***குறிப்புரை :-** எனவே, 'இதுவே திருக்கூத்தின் முடிந்த பயன்' என்றதாயிற்று. "தான்" இரண்டும் சிவன். இரண்டாவதில், 'தானே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. தானேயாதலாவது பிறிதொன்றையும் பற்றாது தனித்து நிற்றல். தற்பரை - தனக்கு மேலாய் நிற்பவள். "தன்" என்றது உயிரை. இச்சை ஞானங்களைக் கூறவே, இனம் பற்றிச் செயலும் கொள்ளப்பட்டது. 'ஞான இச்சை' என்னும் உம்மைத்தொகை செய்யுள் நோக்கி பின்முன்னாய் நின்றது.*

*'ஆதியாய்ப் பேதங்களை நடத்தும், அங்ஙனம் நடத்துதலாகிய நாடகத்தை நடித்து நேயத்தது ஆம்' என முடிக்க. தனது உண்மையியல்பில் மாற்றம் எய்தாமையைக் குறிக்க இவற்றை, 'நாடகம்' என்றார். நேயத்தது - நேயத்தைப் பெருக்குவது. உயிர்களது உள்ளத்தின் செயலை அவற்றின்மேல் வைத்து, "அருள் ஆனால்" என்றார்.*

*இதனால், திருக்கூத்தின் செயல் வகைகளையும், பயன் வகைகளையும் தொகுத்துக் கூறி முடிக்கப்பட்டது.*

## 16. ஆகாசப் பேறு

### (அதாவது, அருள்வெளியைப் பெறுவதற்குரிய முறை)

*ஆகாசம், இங்குச் சிதாகாசமே; பூதாகாசம் அன்று. பேறு - அதனைப் பெறுதலின் சிறப்பு. சிவன் திருக்கூத்தியற்றும் அம்பலமாவன பலவும் சிதாகாசமே யன்றிப் பூதாகாசங்கள் அல்ல. சிதாகாசமே. 'சிதம்பரம்' எனப்படுகின்றது. 'பராகாசம், பரமாகாசம், பர வியோமம்' என்னும் பெயர்களாலும் இது குறிக்கப்படும். சேக்கிழார், "சிற்பர வியோமம்" (தி.12 தில்லைவாழந்தணர், 2) என இரண்டையும் இணைத்துக் கூறினார். இது சிவனது சத்தியே. சிவனது சத்தி அவன் விரும்பும் எப்பொருளுமாய் அமையும் ஆதலின், அவன் ஆட நினைக்கும் பொழுது அவனுக்கு அரங்காய் அமைவதும் அவனது சத்தியே. உலகில் அனைத்துப் பொருள்களும் ஆகாசத்துள் அடங்கியிருத்தல் போல, அவ்வாகாசமும், அதற்குமேல் உள்ள தத்துவங்களும் அவற்றை உடைய உயிர்களும் ஆகிய அனைத்தையும் தன்னுள் அடக்கியிருத்தல் பற்றிச் சிவனது சத்தி 'ஆகாசம்' எனப்படுகின்றது. 'அகிலாண்ட கோடியெல்லாம் தன் அருள் வெளிக்குளே தங்கும்படிக்கு இச்சை வைத்து' என்னும் தாயுமானவர் (பாடல், 1) வாக்கு இங்கு நினைவு கூர்தற்குரியது.*

*திருக்கூத்துத் தரிசனம் உருவத் திருமேனி பற்றி நிகழ்வது. அதன் பயன், அருவமாய் உள்ள பரமாகாசத்தை அடைதலேயாகலின், திருக்கூத்துத் தரிசனத்தை யடுத்து ஆகாசப்பேறு கூறுகின்றார். இது பத்து மந்திரங்களையுடையது.*

**2761.** **உள்ளத்துள் ஓம்எனும் ஈசன் ஒருவனை**
**உள்ளத்து ளேஅங்கி யாய ஒருவனை**
**உள்ளத்து ளேநீதி யாய ஒருவனை**
**உள்ளத்து ளேஉறல் ஆகாய மாமே.** **1**

---

*2761. தெளிவுரை :- உயிர்களின் அறிவிலே சிவன் 'ஓம்' என்னும் பிரணவ வடிவாயும், அதனால் உண்டாக்கப்படுகின்ற உணர்வு வடிவாயும், அவ்வுணர்வில் தோன்றுகின்ற அற வடிவாயும் விளங்குகின்றான். அவனை அங்கு அம்முறையானே சென்று தலைப்படும் இடம் அருள் வெளியேயாம்.*

*குறிப்புரை :- ஒருவன் - ஒப்பற்றவன். "அங்கி" என்றது ஒளியை. அஃது உணர்வேயாம். உணர்வுகள் நாதத்தானே உளவாதல் மேலெல்லாம் சொல்லப்பட்டது. "நீதி" என்றது அறத்தை. 'அதுதானும் அற உணர்வை' என்க. 'நாதம், பொருள் உணர்வு, அவற்றுள் அற உணர்வு, திருவருட் பேறு இவை காரண காரியமாய் முறையானே நிகழும்' என்பதும், 'அவற்றுள் திருவருட் பேறே முடிநிலை' என்பதும் கூறியவாறு. ஆகவே, 'திருக்கூத்தினைக் கண்டு, இம்முறையானே திருவருளைப் பெறுக' என்பது குறிப்பெச்சமாயிற்று. "உறல்" என்னும் தொழிற்பெயர் ஆகுபெயராய், உறும் இடத்தைக் குறித்தது. 'உடல்' என்பது பாடம் அன்று.*

**2762.** பெருநில மாய்அண்ட மாய்அண்டத் தப்பால்
குருநில மாய்நின்ற கொள்கையன் ஈசன்
பெருநில மாய்நின்று தாங்கிய தாளோன்
அருநில மாய்நின்ற ஆதிப் பிரானே. **2**

**2763.** அண்ட ஒளியும் அகண்ட ஒளியுடன்
பிண்ட ஒளியால் பிதற்றும் பெருமையை
உண்ட வெளிக்குள் ஒளிக்குள் ஒளித்தது
கொண்ட குறியைக் குலைத்தது தானே. **3**

---

*இதனால், ஆகாசப் பேறே முடிநிலைப் பேறாதலும், அதற்குமுன் உள்ள படிநிலைப் பேறுகளும் கூறப்பட்டன.*

*2762.* ***தெளிவுரை :-*** *சிவன் (உடலில் உயிர்போல எப்பொருளிலும் கலந்து நிற்கும் கலப்பினால்) பெரிய பூமியாயும், அப்பூமிபோன்ற பல உலகங்களையும் அடக்கி நிற்கும் அண்டங்களாயும் இருப்பினும் அவை அனைத்தையும் கடந்த திண்ணிலமாகிய அருள் வெளியிலே விளங்குபவனாய்த்தான் இருக்கின்றான். அதனாற்றான் அவன் எல்லாவற்றையும் தாங்கும் பெரிய பூமிபோல. எல்லாவற்றையும் தாங்கும் ஆற்றலையும் ஒருவராலும் சென்று அணுகுதற்கரிய இடத்தையும் உடைய முதற்கடவுளாய் இருக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *'ஆகையால், அவனை அவ்வருள்வெளியில் சென்று தலைப்படவே முயலவேண்டும்' என்பது குறிப்பெச்சம். "கொள்கை" என்றது உண்மையை. தாள் - ஆற்றல். "அரு நிலமாய் நின்ற ஆதிப்பிரான்" என்றது உடம்பொடு புணர்த்தல் ஆதலின் அதற்கு இவ்வாறு உரைக்கப்பட்டது. குருநிலம், அருநிலம் இரண்டும் ஆகுபெயராய், அதன்கண் உள்ளவனைக் குறித்தன. குரு - திண்மை; பேராற்றல்.*

*இதனால், அருள் வெளியது சிறப்புக் கூறப்பட்டது.*

*2763.* ***தெளிவுரை :-*** *அகண்ட ஒளியாகிய சிவ சொரூபத்தையும் தான் கண்ணாற் காணும் ஞாயிறு, திங்கள், பிறகோள்கள், விண்மீன் ஆகிய ஒளிகளைப் போலவே உடன் வைத்து எளிதில் கண்டுவிட்டதாக, உடம்பாற் பெற்ற சிற்றறிவு கொண்டு பிதற்றுதலாகிய சிறுமையை, அதனை விழுங்கி நிற்கின்ற அருள் வெளிக்குள்ளே ஒளியாகிய சிவ ஒளிக்குள் மறைந்து நிற்கச் செய்வதே, சீவன் தான் பெற்றுள்ள 'சீவன்' என்னும் அப்பெயரைப் போக்கும் செயலாகும்.*

***குறிப்புரை :-*** *அஃதாவது, 'சிவமாகின்ற செயலாம்' என்றபடி. 'அண்ட ஒளியையும்' என உருபு விரிக்க. உம்மை, இழிவு சிறப்பு. பிதற்றுதல், அறிந்தோர் நகைக்கும்படி, அறிந்ததாக எங்கும் சென்று கூறுதல். பிதற்றுதலாகிய சிறுமையை ''பெருமை'' என்றது எள்ளற் குறிப்பு. அனைத்தையும் விழுங்கியுள்ள*

**2764.** பயனுறு கன்னியர் போகத்தின் உள்ளே
பயனுறும் ஆதி பரஞ்சுடர்ச் சோதி
அயனொடு மால்அறி யாவகை நின்றிட்டு
உயர்நெறி யாய்வெளி ஒன்றது வாமே. **4**

**2765.** அறிவுக் கறிவாம் அகண்ட ஒளியும்
பிறியா வலத்தினிற் பேரொளி மூன்றும்
அறியா தடங்கிடில் அத்தன் அடிக்குள்
பிறியா திருக்கிற் பெருங்காலம் ஆமே. **5**

---

*(அடக்கியுள்ள) வெளி அருள்வெளி. "ஒளித்தது, குலைத்தது" என்பன தொழிற் பெயர்கள். 'ஒளிக்குள் ஒளித்தலைச் செய்யாமல் வேறுநின்று கூறுவன எல்லாம் வெறும் பிதற்றல்களே' என்பதாம்.*

*இதனால் ஆகாசப் பேறல்லன எல்லாம் பேறாகாமை கூறப்பட்டது.*

***2764. தெளிவுரை :-*** ***உயிர்கட்குப் புறத்தே பெறப்படும் பயனாகிய மகளிரது இன்பத்தைப்போல, அகத்தே பெறப்படும் பயனாய் விளையும் இன்பமாய் நிற்பது, எல்லாவற்றிற்கும் முதலாயும், மேலாயும் உள்ள பேரொளிப் பொருள். அஃது அயன், மால் முதலியோர்க்கும் அறிய வாரா நிலைமையதாயும், மேலாய நெறியின் பயனாயும் பரவொளியின்கணுள்ள ஒரு பொருளாகும்.***

***குறிப்புரை :-*** ***ஈரிடத்தும், 'பயனாய்' என ஆக்கம் விரிக்க. பின்னர் "உள்ளே" என்றமையால், முன்னர், 'புறத்தே' என்பது பெறப்பட்டது. இன், உவம உருபு, "உறும்" என்பது முற்று. ஈற்றில் உள்ள "அது" என்பதை, "சோதி" என்பதன் பின்னர்க் கூட்டுக. நெறியின் பயனை, "நெறி" என்றார்.***

***இதனால், ஆகாசப் பேறே பேரின்பப் பேறாதல் கூறப்பட்டது.***

***2765. தெளிவுரை :-*** ***உயிர்களின் அறிவுக்கறிவாய் நிற்கின்ற, 'சிவம்' என்னும் ஒளியுடைப் பொருளையும், அதனை விட்டு நீங்காது தாதான்மியமாய் நிற்கும் ஆற்றலாய் எங்கும் பரவி நிற்கும் 'இச்சை, ஞானம், கிரியை' என்னும் முச்சுடர்களையும் ஒருவன் தன்னின் வேறாக வைத்துச் சுட்டி உணராமல் அவற்றினுள்ளே அடங்கி ஒன்றாகி, அந்நிலையினின்றும் நீங்காதிருப்பானாயின், அவன் காலத்திற்குக் காலமாய் விளங்குவான்.***

***குறிப்புரை :-*** ***"காலத்தைக் கடந்து நிற்பான்" என்பதாம். காலத்தைக் கடந்து நிற்றல் கூறவே, இடத்தைக் கடந்து நிற்றலும் தானே பெறப்பட்டது. "ஒளி" இரண்டனுள் முன்னது, ஒளியை உடையதனைக் குறித்தது. வலம் - வல்லமை; ஆற்றல். வலத்தினில் - 'வல்லமை' என்னும் நிலைமையில் உள்ள, 'பெயரொளி' என்பது "பேரொளி" என மருவி வந்தது. பெயர்தல் - பரவுதல். 'வலத்திற்***

**2766.** ஆகாச வண்ணன் அமரர் குலக்கொழுந்து
ஏகாச மாசுணம் இட்டங் கிருந்தவன்
ஆகாச வண்ணன் அமர்ந்துநின் றப்புறம்
ஆகாச மாய்அங்கி வண்ணனு மாமே. **6**

**2767.** உயிர்க்கின்ற வாறும் உலகமும் ஒக்க
உயிர்க்கின்ற உள்ளொளி சேர்கின்ற போது
குயிற்கொண்ட பேதை குலாவி உலாவி
வெயிற்கொண்டென் உள்ளம் வெளியது வாமே. **7**

---

*பெயரொளி மூன்றும்' எனப்பாடம் ஓதுதல் சிறக்கும். 'அத்தன் அடிக்குள் அடங்கிடில்' என முன்னே கூட்டுக.*

*இதனால், 'பரவெளி காலத்தைக் கடந்தது' என்பதும், அஃது அதுவேயாய் அடையத்தக்கது' என்பதும் கூறப்பட்டன.*

***2766. தெளிவுரை :-** ஐந்து தத்துவங்களாய் நிற்கும் சுத்த மாயையினையே ஐந்து தலைகளையுடைய பாம்பாக ஆடைபோல் அணிந்து, அந்தத் தத்துவங்களிலே நிற்கின்ற சிவன் அவையாகிய சுத்த மாயையிடத்தவனாய், 'அமரர்' என்னும் பெயருக்கு, முகமனாக அன்றி, உண்மையாகவே உரிய சிவலோகத்தார்க்குத் தலைவனாவான். இன்னும் அவன் அத்தத்துவங்கட்கு அப்பாற்பட்ட பர வெளியில் நிற்றலையே விரும்பி நிற்பினும் இங்குள்ளார் பொருட்டு இப்பூதாகாசமாகியும், அதன்கண் விளங்குகின்ற ஒளியாகியும் இருக்கின்றான்.*

***குறிப்புரை :-** ஏகாசம் - மேலாடை; உத்தரீயம். மேலாடையே, ஆடி அசைதல் பற்றி, 'ஆடை' எனவும், இடையில் இறுக உடுத்தப்படுவது, 'உடை, உடுக்கை' எனவும் சொல்லப்படும். இரண்டாம் அடியை முதலில் கூட்டி உரைக்க. முதற்கண் உள்ள "ஆகாசம்" சுத்த மாயை. வண்ணம் - வடிவம். அதிட்டானம் 'வடிவம்' எனப்படுதலை, "சுத்த தத்துவம் சிவன்றன் சுதந்திர வடிவமாகும்" என்னும் சிவஞான சித்தி (சுபக்கம், சூ. 1-66) யாலும் உணர்க. அமரர் - மரியாதவர்; இறவாதவர். இது தேவர்கட்கு முகமனாகிய பெயரே என்பதை,*

> *"அச்சுதன், அயன், அமரர் ஆகிய பெயர் அவர்க்கு*
> *நிச்சயம் படு முகமனே யானபோல்"*

*என்னும் கந்த புராணச் (மகேந்திர காண்டம், சூரன் அமைச்சியற் படலம், 140) செய்யுளாலும் அறிக. குலம் - கூட்டம். கொழுந்து - தலைவன். இதன்பின் "அப்புறம்" என்பதை இயைக்க. "ஆகாசம்" மூன்றும் முறையே சுத்தமாயை, பரவெளி, பூதாகாசம் இவற்றைக் குறித்தன. இவையெல்லாம் ஒருங்குதோன்ற அப்பர், "ஆகாய வண்ணம் உடையாய் போற்றி" (தி.6 ப.57 பா.3) என்று அருளிச்*

**2768.** நணுகில் அகல்கிலன் நாதன் உலகத்து
அணுகில் அகன்ற பெரும்பதி நந்தி
நணுகிய மின்னொளி சோதி வெளியைப்
பணியின் அமுதம் பருகலும் ஆமே. **8**

---

*செய்தார். "ஆகாச சரீரம் பிரஹ்ம" என்பது (தைத்ரீயம், 1-6.2) உபநிடதம். அமர்தல் - விரும்புதல். "அங்கி" என்றது ஒளியை. காசம் - ஒளி. அது, 'ப்ர' என்னும் இடைச்சொல்லை முதலிற் பெற்று, 'ப்ரகாசம்' என வழங்கும். ஒளிக்கு இடமாதல் பற்றியே, 'ஆகாசம்' எனப் பெயர் பெற்றது.*

*இதனால், ஆகாசங்களது சிறப்புணர்த்தும் முகத்தால் பராகாசத்தினது சிறப்புணர்த்தப்பட்டது.*

*2767.* ***தெளிவுரை :-*** *'சேதனம், அசேதனம்' என்னும் இருவகை உலகங்களும் இயங்குமாறு உளங்கொள்கின்ற உள்ளொளியாகிய சிவன் தன்னைச் செலுத்தியபோது, குயில்போலும் குரலையுடைய அருட்சத்தி அவனோடே குலாவி உலாவுதலால், எனது உள்ளம் அவனது ஒளியைப் பெற்று, இருள் நீங்கிப் பிரகாசிக்கின்றது.*

***குறிப்புரை :-*** *உயிர்த்தல், உயிர்த்தன்மை பெற்று உணர்தல். எனவே, அதனைச் செய்வது சேதனமாயிற்று. ஆகவே, பின்னர் "உலகம்" என்றது அசேதனத்தையாயிற்று. பின் வந்த உயிர்த்தல், திருவுளங் கொள்ளுதல், 'உயிர்க்கின்ற வாற்றையும், உலகத்தையும் ஒக்க உயிர்க்கின்ற உள்ளொளி' என்க. சேர்தல் தன் காரியம் தோற்றி நின்றது. உலாவி - உலாவுதலால். 'பரவெளியாவது அருட்சத்தியேயாதலின் உயிர் உடம்பொடு கூடியிருக்கும் பொழுதும் அஃது அந்தப் பரவெளியைச் சேர்தலாற்றான் ஒளியுடையதாய்த் திகழ்கின்றது' என்பது உணர்த்தியவாறு.*

*இதனால், சீவன் முத்தியும் பரவெளியிருப்பேயாதல் கூறப்பட்டது.*

*2768.* ***தெளிவுரை :-*** *சிவன் தன்னைச் சாராமல் உலகத்தைச் சாரின் அவர்களை விட்டு மிகச் சேயனாய் நீங்கி நிற்பன். உலகத்தைச் சாராது தன்னைச் சாரின், அவர்களை விட்டு எப்பொழுதும் நீங்கான். முதற்கண் மின்னல் ஒளி போலத் தோன்றிய பின்னர்ப் பேரொளியாகி விளங்குகின்ற பரவெளியாம் அவனை வணங்கினால் அவன் கூறியவாறு நீங்காது நின்று அமுதத்தைப் பொழிவான். அதனை உண்டு தேக்கி மகிழலாம்.*

***குறிப்புரை :-*** *"சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன்" (சிவஞான போதம், சூ-10, அதி-2) என்னும் முறைமையால், 'சிவன் பொதுவாகவே யாவர்க்கும் தலைவனாயினும் அவன் சிறப்பாகத் தலைவனாய் நிற்றல் தன்னைச் சார்ந்தவர்க்கே' என்பதை முன்னிரண்டடிகளில் உணர்த்தி 'அவனைச் சார்ந்து*

**2769.** மிக்கார் அமுதுண்ண நஞ்சுண்ட மேலவன்
தக்கார் உரைத்த தவநெறி யேசென்று
புக்கால் அருளும் பொன்னுரை ஞானத்தை
நக்கார்க் கழல்வழி நாடுமின் நீரே. **9**

---

*பயன் பெறுக' எனப் பின் இரண்டடிகளில் அறிவுறுத்துகின்றவர், 'அவனைச் சார்தல் பரவெளியிலாம்' என விளக்கினார். 'ஒளியும், சோதியும் ஆம் வெளி' என்க. வெளியில் உள்ளவனை "வெளி" என்றார். "நந்தி" என்பதை முதலில் கூட்டியுரைக்க. அகல்கிலனாகிய நாதன்' என்க. 'நாதன், பதி' என்பன பொருட் பின்வரு நிலையணி.*

*இதனால், 'உண்மைச் சிவப்பேறு பர வெளிப்பேறே' என்பதும், அதன் சிறப்பும் கூறப்பட்டது.*

*2769. **தெளிவுரை :-** (பதிப்புக்களில் வருகின்ற அதிகாரத்தில் மூன்றாவதாய்க் காணப்படும் இம்மந்திரம் இங்கிருத்தற்குரியது).*

*எழுவகைப் பிறப்புக்களில் மேற்பிறப்பை எய்தினவராகிய தேவர்கள் அமுதுண்ண வேண்டித் தான் அதற்கு முன்னே தோன்றிய விடத்தை உண்டதனானே, 'எல்லாரினும் மேலானவன் சிவன்' என்பது இனிது விளங்கும். இன்னும்,*

> *"அப்புறுத்த கடல்நஞ்சம் உண்டான் தன்னை,*
> *அமுதுண்டார் உலந்தாலும் உலவா தானை" - தி.6 ப.26 பா.2*

*என்று அருளிச்செய்தபடி, அமுதத்தை உண்டவர் சாவவும், தான் நஞ்சுண்டும் என்றும் ''சாவா மூவாச் சிங்கமாய்'' இருத்தலாலும் அவனது மேன்மை தெளிவாகும். __அறிவும், ஆற்றலும் உடையாரினும் அருளுடையாரே மேலானவர்__ ஆதலாலும், அவ்வருட் பெருக்கம் தன்னையடைந்தார் அமுதுண்ண வேண்டித் தான் நஞ்சத்தை உண்டமையானே தெற்றென விளங்குதலாலும் "மிக்கார் அமுதுண்ணத் தான் நஞ்சுண்டவன் மேலவன்" (தி.6 ப.99 பா.2) ஆகின்றான். அவனைத் தக்கார் உரைத்த தவநெறியில் சென்று அடைந்தால் அங்ஙனம் அடைந்தவர்களைத் தானாம் வண்ணம் அருளுவான். ஆகையால் அவரது பொன்போலும் மொழியால் விளக்கப்படும் ஞானத்தை 'இதுவோ ஞானம்' என இகழ்கின்றவர்களை விட்டு விலகும் உபாயத்தை நீங்கள் ஆராய்ந்து அறிவீர்களாக.*

*__குறிப்புரை :-__ "பணியின் அமுதம் பருகலும் ஆமே" என மேற்கூறியதனை அனுபவமாக நிறுவியவாறு. __'இம் மேலவனை (பராகாசத்தவனை) இகழ்வாரை நீங்குமாற்றையறிதலே ஞானோதயத்தின் முதல் நிலையாகும்__ என இதனானே வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.*

**2770.** புறத்துள்ஆ காசம் புவனம் உலகம்
அகத்துள்ஆ காசம்எம் ஆதி அறிவு
சிவத்துள்ஆ காசம் செழுஞ்சுடர்ச் சோதி
சகத்துள்ஆ காசந் தான்அம் சமாதியே. **10**

---

*2770. **தெளிவுரை :-** ('ஆகாசமாவது யாது' என்பார்க்கு, 'ஆகாசமாவது ஏனை யெல்லாப் பொருள்கட்கும் இடம் தருவது' என்பது விடையாயின், பிற பொருளுக்கு இடம் தருவன யாவும் ஆகாசமாம். அந்நிலையில் பூதங்களில் ஒன்றை மட்டும் 'ஆகாசம்' என்றல் இடுகுறியாம். அவ்வாறன்றிக்) காரண வகையால் நோக்கின் 'புவனங்கள்' என்றும், 'உலகங்கள்' என்றும் சொல்லப்படுவன புற ஆகாசங்களாம். எல்லாப் பொருள்களும் அறிவினுள் அகப்பட்டுத் தோன்றுதலால் நம் அறிவுகள் அக ஆகாசங்களாம். நமது அறிவுகளையும் அகப்படுத்தி நிற்பது சிவனது அறிவு ஆதலின் அஃது உள்ளுக்குள் ஆகாசமாம். அதனை அகப்படுத்தி நிற்பது வேறொன்றில்லை ஆகலின் அதுவே பரமாகாச மாம். அந்த ஆகாசத்தை இந்த உலகிலே பெறுதல் அழகிய 'சமாதி' என்னும் நிலையாகும்.*

***குறிப்புரை :-** 'அதனைப் பெறவே முயலுங்கள்' என்பது குறிப்பெச்சம். புவனங்களாவன அவ்வவ் அண்டங்களைப் புரக்கும் கடவுளரது இடங்களாம். அவர்களது காப்பிற்கு உட்பட்ட அண்டங்களில் உலகங்கள் உள்ளன. ஆதி அறிவு - முதல் அறிவு. அது கருவிகளால் உண்டாகும் பாச அறிவாம். "அறிவு" என்பதை, "சிவத்துள்" என்பதற்கும் கூட்டுக. 'அதற்கு மேலானது ஒன்று இல்லை' என்பதே "செழுஞ்சுடர்ச் சோதி" என்பதனால் குறிக்கப்பட்டது. இதற்கு 'அது' என்னும் எழுவாய் வருவிக்க. ஈற்றில் நின்ற ஆகாசம், அதனைப் பெறும் பேற்றினைக் குறித்தது. சமாதி, 'யோக சமாதியும் ஞான சமாதியும்' என இருவகைத்து. ஞான சமாதியே ஞான நிட்டையாகும்.*

*இதனால், ஆகாசப் பேறுகள் பலவற்றுள் முடிநிலையான ஆகாசப் பேறே பேறாதல் கூறி முடிக்கப்பட்டது.*

## 17. ஞானோதயம்

*திருக்கூத்து நிகழும் இடம் பற்றிச் சில கூறிய நாயனார், அக்கூத்தின் வகைகளுள் சிறப்புடைய ஞான நடனத்தால் ஞானந்தோன்றும் முறை பற்றிச் சில கூறுகின்றார். இது பதினொரு மந்திரங்களையுடையது.*

**2771.** **மன சந்தியில் கண்ட மன்நன வாகும்**
**கனவுற ஆனந்தங் காண்டல் அதனை**
**வினவுற்ற ஆனந்தம் மீதொழி வென்ப**
**இனமுறா னந்திஆ னந்தம் இரண்டே.** **1**

---

*2771.* **தெளிவுரை :-** *மனம், புறக் கருவிகளோடு கூடிப் புறப்பொருளைப் பற்றும் நனவு நிலை (அவ்விடத்து இன்பமும் சிறிது உளதாயினும்) பொதுவாகத் துன்ப நிலையேயாதலும், அந்த மனம் புறத்திற் செல்லாது அகத்தே அடங்கிய கனவு, உறக்கம் முதலிய நிலைகள் இன்ப நிலையாதலும் அனுபவமாக அறியப்படுவன. அந்த முறைமையை ஆராய்ந்து பார்த்தால், 'இன்பமாவது, கருவி கரணங்களின் மேற் செல்லுதலை ஒழிதலே' என்பது விளங்கும். அவ்வொழிவினை எய்தியவன் அடையும் இன்பங்கள் இரண்டு. (உலகின்பம், வீட்டின்பம் என்பன).*

**குறிப்புரை :-** *"கனவுற ஆனந்தம்" எனப் பின்னர்க் கூறினமையால் முன்னர் 'நனவு துன்பமாகும்' என்பது பெறப்பட்டது. வினவுதல் - ஆராய்தல். மீது - கருவி கரணங்களின் மீது. 'மீது செல்லுதல்' என ஒருசொல் வருவிக்க. ஒழிவு - ஒழிதலையுடைய நிலை. பெத்த நிலையில் உளதாகும் இம்முறைமையை உவமையாகக் கொண்டு உணரும் உவம உணர்வால் 'முத்தி நிலையின் இயல்பையும் உணரலாகும்' என்பார். "இனம் உற்ற ஆனந்தி ஆனந்தம் இரண்டு" என்றார். இனம், 'ஆனந்தம்' என்னும் சாதி, ஆனந்தி ஆனந்தத்தை எய்தும் உயிர். 'அஃது எய்தும் ஆனந்தம் இரண்டு என்க. முன்னர்க் கூறியவாற்றால் 'அவ்விரண்டு இவை' என்பது விளங்கலின். வாளா, "இரண்டு" என்று போயினார். வீட்டிற்கு நேர் வாயிலாகிய 'ஞானம் தோன்றுதல் கருவி கரணங்களினின்று நீங்குதல்' என்றபடி. உலகில் விழிப்புத் துன்பமாகவும், கனவும், உறக்கமும் இன்பமாகவும் உணரப்படுதல் வெளிப்படை. இது பற்றி ஏகான்ம வாதிகள் சகல சுழுத்தியையே, 'பிரமானந்த நிலை' என்பர்.*

*இதனால், ஞானோதயத்தின் முதற்படி கூறப்பட்டது.*

*2772.* **தெளிவுரை :-** *சிவபெருமானை, மந்திரம் 337-இல் கூறியவாறு, 'பிரமன் தலையைக் கிள்ளிக் கையில் ஏந்தியவன்' எனவும் மந்திரம் 340-இல் கூறியவாறு 'யானையை உரித்தவன்' எனவும், 'தக்கனுடைய சாபத்திற்கு அஞ்சி வந்து அடைக்கலம் புகுந்த சந்திரனைத் தலையில் அணிந்து காத்தவன்' எனவும் மற்றும்*

**2772.** **கரியட்ட கையன் கபாலம்கை ஏந்தி**
**எரியும் இளம்பிறை சூடும்எம் மானை**
**அரியன் பெரியன்என்று ஆட்பட்ட தல்லால்**
**கரியன்கொல் சேயன்கொல் காண்கின்றிலேனே.** **2**

---

*இவ்வாறு வரும் வரலாறுகள் பலவற்றால் உயர்ந்தோர் புகழ்ந்து கூறிய சொற்களால் அவனையே, 'அரியவன்' என்றும், பெரியவன் என்றும் துணிந்து யான் அவனுக்கு ஆட்பட்டதல்லது, அவனை யான் நேரில் 'கறுப்பன்' என்றோ, 'சிவப்பன்' என்றோ பார்த்து உணர்ந்ததில்லை.*

*குறிப்புரை :-* இது, நாயனாரது தொடக்க நிலையைக் கூறியது. ஏனெனில், சிவனை நிருவிகற்பமாக உணர்ந்ததையே கூறிற்று ஆதலின்,

> அன்றும் திருஉருவம் காணாதே ஆட்பட்டேன்!
> இன்றும் திருஉருவம் காண்கிலேன் - என்றுந்தான்
> எவ்வுருவோ நும்பிரான் என்பார்கட் கென்னுரைக்கேன்,
> எவ்வுருவோ நின்னுருவம் ஏது. - தி.11 அற்புதத் திருவந்தாதி, 61

என்ற அம்மை திருவாக்கு, 'சிவன் உருவிலன்' என்பதை உணர்த்திற்றாதலின் அஃது இதனின் வேறு என்க.

இதனால், 'அனுபூதிமான்கள் அருளிச்செய்த திருமொழியை ஐயுறாது பற்றுதலே ஞானத் தோற்றத்தின் முதல் நிலை' என்பது கூறப்பட்டது. ஞான சம்பந்தரும்,

> ஏதுக்க ளாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
> சோதிக்க வேண்டா; சுடர்விட்டுளன் எங்கள் சோதி,
> மாதுக்கம் நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்;
> சாதுக்கள் மிக்கீர், இறையே வந்து சார்மின்களே. - தி.3 ப.54 பா.5

என்றே அருளிச் செய்தார்.

இதனை அடுத்துப் பதிப்புகளில் காணப்படும் ('மிக்கார் அமுதுண்ண' என்னும்) மந்திரம், முன் அதிகாரத்தில் சேர்க்கப்பெற்றது.

*2773. **தெளிவுரை :-*** ஆணவ இருளால் அறிவை இழந்து நின்ற உயிருக்கு அந்த ஆணவ இருளைச் சிறிதே நீக்கும் விளக்குப் போல்வன மாயா காரியங்களாகிய தூல, சூக்கும, அதிசூக்கும உடம்புகள். அறிவை விளக்கி நிற்கும் கருவிகளாகிய அவைகளையே 'அறிவாகிய தான்' என உயிர் மயங்குகின்றது. அம்மயக்கம் நீங்கி, அவ்வுடம்புகளைத் தனக்கு வேறாக நீக்கி, அறிவு விளக்காம் தன்னைத் தான் உணர்ந்து, பின் தன் அறிவிற்குள்ளே அறிவாய் விளங்கும் திருவருளை விளங்கச் செய்து, பின் அந்தத் திருவருளாகிய விளக்கினுள்

**2773.** **விளக்கைப் பிளந்து விளக்கினை ஏற்றி**
**விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி**
**விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு**
**விளக்குடை யான்கழல் மேவலும் ஆமே.** **3**

**2774.** **தத்துவம் எங்குண்டு தத்துவன் அங்குண்டு**
**தத்துவம் எங்கில்லை தத்துவன் அங்கில்லை**
**தத்துவ ஞானத்தின் தன்மை யறிந்தபின்**
**தத்துவன் அங்கே தலைப்படுந் தானே.** **4**

---

*தானாகிய விளக்கினை, வெயிலின்முன் உள்ள பகல் விளக்குப் போல அடங்கி விளங்கச் செய்யவல்லவர்க்கு அந்தத் திருவருளாகிய ஒளியை உடையவனாகிய சிவனது இன்பக்கடலைப் பெறுதல் கூடும்.*

*குறிப்புரை :- "விளக்குப்" பலவற்றுள் முதலாவது, மாயா காரியமாகிய உடம்புகள். இரண்டாவதும், மூன்றாவதும், ஆறாவதும் உயிரினது அறிவு. ஏனையவை திருவருள். கழல் - திருவடி, அஃதே சத்தி; அஃது அறிவாயும் இன்பமாயும் இருக்கும். அறிவாய் இருத்தல் முன்பு ''விளக்கு'' எனக் கூறப்பட்டமையால், இங்கு, "கழல்" என்றது இன்பத்தையாம்.*

*இதனால், ஆசிரியரது அருள்மொழி வழியே தத்துவ சுத்தி, ஆன்ம தரிசனம், சிவ தரிசனம், சிவ யோகம் என்பன முறையாக நிகழ்தலே ஞானோதயத்தின் வளர்ச்சியாதல் கூறப்பட்டது.*

*2774. தெளிவுரை :- பொருள்களின் பொதுமையை மட்டும் உணர்ந்தொழியாது, அவற்றின் மெய்ம்மையை உணர்ந்தவரிடத்தில்தான் மெய்ப்பொருளாய் உள்ள சிவனும் விளங்கியிருப்பான். மெய்ம்மையை உணராதவரிடத்தில் அவன் விளங்குதல் இல்லை. ஆகவே, மெய்யுணர்வின் சிறப்பினை உணர்ந்து அதனை ஒருவன் பெற்றுவிட்டால், உடனே சிவன் அவனிடம் வந்து விளங்குவான்.*

*குறிப்புரை :- ''தத்துவம்'' என்றது மெய்ம்மையை; பொருள்களின் பொதுமையை மட்டும் உணர்தலாவது. வானவில் தோன்றினால், 'இது மிக அழகியது; பல நிறங்களைக் கொண்டு விளங்குகின்றது; இஃது எங்கிருந்து வந்தது? அதிசயம்! அதிசயம்! என்று இவ்வளவில் உணர்தல் போல்வது. மெய்ம்மையை உணர்தலாவது, வானவில்லைக் கண்டபொழுது, இஃது ஓர் உண்மையான வில் அன்று; பெருவட்டமாகிய சூரியனது வடிவில் ஒரு பாதியின் பிரதிபலனம். நமக்குப் பின்னால் ஓரிடத்தில் மழை பெய்கின்றது. அதற்கு அப்பால் சூரியன் பிரகாசிக்கின்றான். அவனிடத்தில் உள்ள பல நிறக் கதிர்களும் மழைத்துளிகளின் இடையே ஊடுருவி, நமக்கு முன்னால் பிரதிபலித்தலால்*

**2775.** விசும்பொன்றத் தாங்கிய மெய்ஞ்ஞானத்துள்ளே
அசும்பினின் றூறும் ஆரமு தாகும்
பசும்பொன் திகழும் படர்சடை மீதே
குசும்ப மலர்க்கந்தம் கூடிநின் றானே. **5**

---

*இந்தப் பலநிற அரைவட்டம் நமக்கு வில்போலத் தோன்றுகின்றது. இஃது உண்மையில் வில் அன்று. பின்னால் பெய்கின்ற மழை நின்றால் இந்தப் பிரதிபலனமும் மறைந்து விடும் என இவ்வாறு அதன் உண்மையை உணர்தல் போல்வது. இந்த உண்மை உணர்வே மெய்யுணர்வு - தத்துவ ஞானம். பொது உணர்வும், ஐய உணர்வும், திரிபுணர்வும் 'ஞானம்' எனப்படா. 'அஞ்ஞானம்' என்றே சொல்லப்படும். ஆகவே, அந்த அஞ்ஞானம் உள்ள இடத்தில் சிவன் விளங்கமாட்டான். 'கல்லா நெஞ்சின் - நில்லான் ஈசன்' (தி.3 ப.40 பா.3) என்னும் ஞானசம்பந்தர் திருமொழியில், "கல்லா நெஞ்சு" என்பது, 'ஞானத்தைக் கல்லாத நெஞ்சு' என்றும், 'கற்றாலும் கல்லுப்போல நின்று உருகாத (கல் ஆம் நெஞ்சு) நெஞ்சு' என்றும் இருபொருளையும் தருவது. "கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை" (தி.8 திருவம்மானை, 5) என்னும் திருவாசகத் தொடரில் "கல்லா மனம்" என்பதும் அத்தகையது. மூன்றாம் அடியில் வந்த 'அறிதல்', அதன் காரியத்தை உணர்த்தி நின்றது. தத்துவத்தை உணரும் முறையே முன் மந்திரத்தில் சொல்லப்பட்டது.*

*இதனால், ஞானமாவது 'தத்துவ ஞானமே' என்பதும், அதன் இன்றியமையாச் சிறப்பும் கூறப்பட்டன.*

*2775. **தெளிவுரை :-** பசிய பொன்போல விளங்கும் தனது விரிந்த சடையின்கண் குசும்ப மலரின் வாசனை கமழ நிற்கின்ற சிவன், ஆகாயத்தைப் போல எல்லாப் பொருளையும் தன்னுள் அடங்கக் கொண்டிருக்கின்ற உண்மை ஞானத்திலிருந்து கசிந்து ஊறுகின்ற அரிய அமுதமாவான்.*

*குறிப்புரை :- என்றது, 'உதயமான ஞானம் பின் முறுகி வளரச் சிவானந்தம் பெருகும்' என்றவாறு. மூன்றாம் அடி முதலாகத் தொடங்கியுரைக்க. "ஒன்ற" என்பது உவம உருபு. 'சிவஞானம் ஆகாசம் போன்றது' என்பது முன் அதிகாரத்தில் விளக்கப்பட்டது. அசும்பின் - அசும்பாக. அசும்பு - கசிவு. குசும்ப மலர். 'செந்துருக்க மலர்' என்பர்.*

*இதனால், தத்துவ ஞானத்தின் சிறப்பும் பயனும் கூறப்பட்டன.*

*2776. **தெளிவுரை :-** முத்து, வைரம், பவளம், கட்டியான பசும்பொன், மாணிக்கம் ஆகியவற்றில் உள்ள ஒளிகளைப் போல அண்டங்களால் வேறறக் கலந்து நிற்கின்ற ஞான ஒளியை நீவிர் அவற்றினின்றும் வேறுபடுத்திப் பெறுவீர்? சொல்லுமின்.*

**2776.** முத்தின் வயிரத்தின் முந்நீர்ப் பவளத்தின்
தொத்துப் பசும்பொன்னின் தூவொளி மாணிக்கம்
ஒத்துயர் அண்டத்தி னுள்ளமர் சோதியை
எத்தன்மை வேறென்று கூறுசெய் வீரே. **6**

**2777.** நானென்றும் தானென்றும் நாடினேன் நாடலும்
நானென்று தானென் றிரண்டில்லை என்பது
நானென்ற ஞான முதல்வனே நல்கினான்
நானென்று நானும் நினைப்பொழிந் தேனே. **7**

---

*குறிப்புரை :- 'அதனை அவ்வாறு அவ்அண்டங்களில் வைத்துணர்தலே அதனைப் பெறுதலாகும்' என்றபடி. அவ்வாறு உணர்தலைச் "சுத்த பராயோகம்" எனத் துகளறு போதம் (வெண்பா-47) கூறும். இவ்வுணர்வின் நிலையையே, "மரத்தை மறைத்தது மாமத யானை" என்னும் மந்திரத்தில், "மரத்தில் மறைந்தது மாமத யானை" என்றும், "பரத்தில் மறைந்தன பார்முதல் பூதம்" என்றும் கூறினார். கட்டியை, "தொத்து" என்றார். "மாணிக்கத்தின் தூவொளி ஒத்து" என மாறிக் கூட்டுக.*

*இதனால், ஞானக் காட்சியின் இயல்பு கூறப்பட்டது.*

*2777.* **தெளிவுரை :-** *("நான்" என்று உணர்கின்ற என்னையன்றி, எனக்கு வேறாய், 'தான்' என்று ஒருவன் இல்லை என்று இறுமாந்திருந்த எனக்கு, "தான் என்று ஒருவன் இருக்கின்றான்" என்று ஞான குரு உணர்த்த, அவர் உணர்த்திய முறையில்). "நான்" என்கின்ற எனக்கு வேறாய், 'தான்' என்று ஒருவன் இருத்தலை முறையான ஆய்வினால் ஆராய்ந்து உணர்ந்தேன். அங்ஙனம் அவனது இருப்பை, மட்டும் உணர்ந்த யான், எனது இயல்பிற்கு வேறாக அவன்தான் கொண்டிருக்கின்ற இயல்பு யாது' என ஆராயும்பொழுது, அவன் என்னின் வேறாய் இல்லாது, என்னில் யானாகவே கலந்து நிற்றலையும், முதற்கண், 'நான் அன்றித் 'தான்' என்று ஒருவன் இல்லை' என யான் உணர்ந்திருந்த அந்த உணர்வையும், பின்னர், 'என்னின் வேறாய், 'தான்' என்று ஒருவன் இருக்கின்றான்' என்று உணர்ந்த உணர்வையும், இது பொழுது 'என் இயல்பு யாது, அவன் இயல்பு யாது' என ஆராயும் ஆராய்ச்சி உணர்வையும், அந்த ஆராய்ச்சியில், 'அவன் வேறாய் இல்லாமல், யானாகவே என்னிற் கலந்து நிற்கின்றான்' என உணர்ந்த உணர்வையும், 'தந்தவன் அவனே' என்னும் உணர்வையும் அவனே அருளினான், அதனால், நான், 'நான்' என என்னை உணர்தலை அறவே ஒழித்து, அவனை மட்டுமே உணர்ந்து நிற்கின்றேன்.*

**குறிப்புரை :-** *தூல, சூக்கும, அதிசூக்கும உடம்புகளையே 'நான்' என உணர்தல் பாச ஞானம். அஃது இங்குக் குறிக்கப்படவில்லை. பின்னர், 'அவ்வுடம்புகள் அனைத்தும் சடம் ஆகலின் அவை சித்தாகிய நானல்ல' எனத்*

*தன்னை உணரும்பொழுது, பாசத்தினும் மேம்பட்ட தனது மேம்பாடு விளங்குகின்ற நிலையில், 'நானே பரம்பொருள்; எனக்கு மேலாய் ஒரு பரம்பொருள் இல்லை' என உணர்தல் பசு ஞானம். 'அதுவும் அஞ்ஞானமே' எனவும், 'உன்னின் வேறாய், உனக்கு மேலாய், இதற்குமுன் உனக்கு உண்டான பாச ஞானத்தையும், இப்பொழுது உண்டாகிய பசு ஞானத்தையும் உள் உணர்வினுள் உணர்வாய் இருந்து நல்கியவன் அவனே' என ஞானகுரு உணர்த்த, அதனால், பாசங்களையோ, எனது உணர்வையோ கண்ணாகக் கொள்ளாமல், அவனது உணர்வையே எனது உணர்விற்குக் கண்ணாகக் கொண்டு நோக்கிய பொழுது 'நான்' என என்னை உணர்கின்ற உணர்வு தலைக்காட்டாமல், 'அவன்' என்னும் உணர்வே மேலோங்கி நிற்பது பதிஞானம். அந்தப் பதிஞானத்தையே இங்கு உணர்த்தும் முகத்தால் பசுஞானம் விலகும் முறையும் உணர்த்தப்பட்டது. நாடுதல் - ஆராய்தல்.*

*"ஞான முதல்வன்" என்பதில் ஞானம், உயிரினது உணர்வு. அவ்வுணர்விற்கு முதல்வனாதலாவது, உயிரின் உணர்வு கேவலப்பட்டு மூடமாய்க் கிடந்ததனை முதற்கண் கருவி கரணங்களோடு கூடி பாச ஞானமாய் நிகழச் செய்து, பின்பு ஆராய்ச்சியால் அதனைப் பசு ஞானமாய் நிகழச் செய்து, பின்பு ஆராய்ச்சியால் அதனைப் பசு ஞானமாய் நிகழப் பண்ணி, முடிவில் பதி ஞானமாய் நிகழச் செய்தல். இவற்றுள் முன்னை இரண்டும் பெத்த நிலையும், பின்னது முத்தி நிலையுமாகும். பெத்த நிலையைத் திரோதான சத்தியாலும், முத்தி நிலையை அருட்சத்தியாலும், சிவன் செய்கின்றான். 'நானும் நானென்று நினைத்தலை ஒழிந்தேன்' என மாற்றியுரைக்க.*

*பாச ஞானம் உள்ளபொழுது அதற்குப் பசுவும், பதியும் புலன் ஆதல் இல்லை. பசுஞானம் உள்ளபொழுது பாசமும் பசுவும் புலன் ஆதல் இல்லை. பதிஞானம் வந்தபின் பாசமும், பசுவும் புலன் ஆதல் இல்லை. ஒவ்வொரு நிலையில் சிற்சில பொருள்கள் புலனாகாமை பற்றி, 'அவைகள் அறவே இல்லை' என வாதிடுதல் அறியாமையின் பாலதாம். ஆகவே, பாரமார்த்திகத்தில் (உண்மை நிலையில்) பசு பாசங்கள் புலனாகாமை பற்றி, 'பதி ஒன்றே உளது; ஏனைய இரண்டும் இல்லை. அவை பொய்' என்றல் உண்மையாமாறில்லை.*

*"வேதசாத் திரம், மிருதி, புராணகலை ஞானம்,*
*விரும்பசபை வைகரியா தித்திறங்கள் மேலாம்*
*நாதமுடி வானஎலாம் பாச ஞானம்;*
*நணுகி ஆன்மாஇவை கீழ்நாட லாலே*
*காதலினால் 'நான் பிரமம்' என்னும் ஞானம்*
*கருது பசுஞானம்"*

*என்னும் சிவஞான சித்தி (சுபக்கம், சூ-9,2)ச் செய்யுளால் இவ்வியல்புகளை யெல்லாம் தெற்றென உணர்க.*

**2778.** **ஞானத்தின் நன்னெறி நாதாந்த நன்னெறி**
**ஞானத்தின் நன்னெறி நான்அறி வென்றோர்தல்**
**ஞானத்தின் நல்யோகம் நன்னிலை யேநிற்றல்**
**ஞானத்தின் நன்மோனம் நாதாந்த வேதமே.** **8**

---

***இதனால், ஞானங்களின் வகைகளை உணர்த்தும் முகத்தால், 'உண்மை ஞானம் இது' என்பது உணர்த்தப்பட்டது.***

*2778.* ***தெளிவுரை :-*** *ஞானமாகிய உயர்நெறியில் முதற் கண்ணதாகிய ஞானத்திற் கிரியையாவது, நிலம் முதல் நாதம் ஈறாய்ச்சுட்டி அறியப்படுகின்ற அனைத்தையும் 'சடம்' எனவும், அவற்றில் அவையேயாய்க் கலந்து ஒன்றி நிற்கின்ற உயிரை, 'சித்து' (அறிவு) எனவும் இவ்வாறு இரண்டன் தன்மைகளும் வேறு வேறாதலை ஆராய்ச்சியால் உணர்ந்து, அங்ஙனம் உணர்கின்ற உயிர் அவையனைத்தையும் தள்ளித் தன்னை அவற்றின் வேறாக உணர்தலாம். அப்பால் ஞானத்தில் யோகமாவது, தான் சடத்தின் வேறாதலை யுணர்ந்தபின் மீட்டும் அவற்றின்கண் வீழ்ந்து தன்னை அவையாக மயங்காமல், உயர்நிலையில் நிற்றலாம். (உயிர் எப்பொழுதும் தனித்து நில்லாது ஆகையால் தனக்குத் தாரகமாகிய திருவருளில் நிற்றலே சடத்தில் வீழாது நன்னிலைக்கண் நிற்றலாகும் என்பது கருத்து. 'நன்மை' என்றது திரு வருளையேயாம்). இனி ஞானத்தில் ஞானமாகிய முடிநிலையாவது, நாதத்தின் துணையில்லாமலே பொருள்களை நன்குணரும் நிலையாம்.*

***குறிப்புரை :-*** *இங்குச் சரியை கிரியையுள் அடக்கப்பட்டது. 'சரியையேயன்றி யோகமும் சில இடங்களில் கிரியையில் அடக்கப்படும்' என்பது, 'கிரியையென மருவும் அவையாவன ஞானம் கிடைத்தற்கு நிமித்தம்' என்னும் சிவப்பிரகாசச் செய்யுளால் (10) அறியலாம்.*

*"கேட்டலுடன், சிந்தித்தல், தெளிதல், நிட்டை*
*கிளத்தல் என ஈரிரண்டாம் கிளக்கின் ஞானம்"*

***- சிவஞானசித்தி - சுபக்கம் - சூ. 8, 25***

*என்றபடி ஞானத்தின் படி நிலைகளாகிய கேட்டல் முதலிய நான்கும் முறையே 'ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தி ஞானம்' எனப்படும். இங்கு "மோனம்" என்பதும் ஞானத்தோடு ஒருபொருட் சொல்லாய் வந்தது. கேட்கவும், சிந்திக்கவும், தெளியவும் படுவது குருமொழி. "அந்தம்" இரண்டில், முன்னது 'முடிவு' என்றும், பின்னது நீங்கிய நிலை' என்றும் பொருள் தந்தன. 'நான் அறிவு என்று ஓர்தல்' என மாற்றியுரைக்க. "பின்னர் அறிவு என்று ஓர்தல்" என்றதனால், முன்னர், "நாதாந்தம் சடம் என்னும் நன்னெறி" என்பது பெறப்பட்டது. ஓர்தல் - ஆராய்தல்; சிந்தித்தல், சரியையைக் கிரியையுள் அடக்கினாராகலின் அதற்கேற்பக் கேட்டலைச் சிந்தித்தலுள் அடக்கி,*

**2779.** உய்யவல் லார்கட் குயிர்சிவ ஞானமே
உய்யவல் லார்கட் குயிர்சிவ தெய்வமே
உய்யவல் லார்கட் கொடுக்கும் பிரணவம்
உய்யவல் லார்உள் ளறிவறி வாரே. **9**

---

*ஓர்தலையே கூறினார்.*

*கேட்டல் முதலிய நான்குமே 'தசகாரியம்' எனப் பத்தாக விரித்துணர்த்தப்படும். 'எத்தகையோர்க்கும் நாதம் இல்லையேல் பொருளுணர்வு திட்டவட்டமாக உண்டாகாது' என்பதை 'நாதம் இல்லாமலே பொருளுணர்வு திட்டவட்டமாக உண்டாகுமாயின் அதுவே முத்தி நிலையாம்' என்பதையும்,*

*மூவகை அணுக்க ளுக்கும் முறைமையால் விந்து ஞானம்*
*மேவின தில்லை யாகில் விளங்கிய ஞானம் இன்றாம்;*
*ஓவிட விந்து ஞானம் உதிப்பதோர் ஞானம் உண்டேல்,*
*சேவுயர் கொடியி னான்றன் சேவடி சேர லாமே.*

*என்னும் சிவஞான சித்தி (சுபக்கம் - சூ. 1.26)யால் அறிக. நன்னெறிக்கு வாயிலாதல் பற்றி கிரியையே இங்கு "நன்னெறி" எனப்பட்டது. 'அறிதற் கருவி' என்னும் பொருளதாகிய 'வேதம்' என்பது, இங்கு 'அறிவு' என்றே பொருள் தந்தது.*

*இதனால், ஞானத்தின் படிநிலைகள் உணர்த்தப்பட்டன.*

*2779. தெளிவுரை :- பிறவித் துன்பத்தினின்றும் தப்ப வல்லவர்கட்கு அவர்தம் உயிர்போலச் சிறந்து நிற்பன சிவஞானமும், அதனால் அறியப்படுகின்ற சிவமாகிய கடவுளுமாம். அவர்கள் புறத்தே பரந்து சென்று அலையாமல் அகத்தே ஒடுங்கி அமைதியுறுதற்குத் துணையாவது பிரணவ மந்திரம். அம்மந்திரத்தின் வழியாக அவர் அகத்தே ஒடுங்கி, அறிவினுள் அறிவாய் நிற்கும் சிவத்தை அடைவார்கள்.*

*குறிப்புரை :- பிரணவ யோகத்தாலே அறிவு, அறிவினுள் அறிவை அறிந்து அடங்குதல், மேல் 'பிரணவ சமாதி' முதலிய அதிகாரங்களில் விளக்கப்பட்டது. அங்ஙனம் அடங்கினவர்களே சிவஞானமாகிய கண்ணைப் பெற்றுச் சிவனை நேரே கண்டு அடைவார்கள். 'சிவன் பிறப்பிலியாதலின், அவனையடைந்தோரும் பிறவியிராவர்' என்பது கருத்து. "முக்குணங்கள்வாய் மூடா ஊடா நாலந்தக் கரணமும் ஒருநெறியாய்ச் சித்திக்கே உய்த்திட்டுத் திகழ்ந்த மெய்ப் பரம் பொருள் - சேர்வார் தாமே தானாகச் செயுமவன்" (தி.1 ப.126 பா.7) என்பதனாலும் இதனை அறியலாம். "ஒடுக்கம்" என்பது அதற்காம் கருவியை உணர்த்திற்று.*

*இதனால், சிவஞானமே ஞானமும், சிவமே பரமும் ஆதலை வலியுறுத்தி, 'உய்தி வேண்டுவோர் அந்த ஞானத்தால், அந்தப் பொருளை அடைதல் வேண்டும் என்பது கூறப்பட்டது.*

**2780.** **காணவல் லார்க்கவன் கண்ணின் மணியொக்கும்**
**காணவல் லார்க்குக் கடலின் னமுதொக்கும்**
**பேணவல் லார்க்குப் பிழைப்பிலன் பேர்நந்தி**
**ஆணம்வல் லார்க்கே அவன்துணை யாமே.** **10**

---

*2780.* ***தெளிவுரை :-*** *(பிறபொருள்களை அறிதல்போல அறிவால் அறியாது, அறிவிறந்தே அவனை அறிதல் வேண்டும்). அவ்வாறு அறிவார்க்கு அவன் அவர்தம் அறிவினுள் அறிவாய் விளங்கி, தேவர்கள் கடலைக் கடைந்து வருந்திப் பெற்ற அமுதம்போல வருந்தாது பெறப்பட்ட அமுதமாய்ப் பேரின்பத்தை விளைப்பான். அங்ஙனமாயின், (பெற்றதைச் சிறிதாயும், பெறாததைப் பெரிதாயும் கருதும் பழைய பழக்கத்தின்படி அவனைப் பேணாதொழிவார்க்கு அவன் முன்போல அயலவனாய் விடுவான். ஆதலால், அவ்வாறின்றிப்) பின்னும், பின்னும் பேணி ஒழுகுவாரை விட்டு அவன் நீங்குதல் இல்லை. ஆனந்த வடிவினன் ஆதல் பற்றி, 'நந்தி' எனப்பெயர் சொல்லப்படுகின்ற அவன் அன்புடையார்க்கே அவ்வாறு உடனாய் நிற்பன்.*

***குறிப்புரை :-*** *காணுதல், இங்கு அறிதல். ஆகவே, "கண்ணின் மணி" என்றதும், அறிவினுள் அறிவாயிற்று.*

*நாணாமை, நாடாமை, நாரின்மை, யாதொன்றும்*
*பேணாமை பேதை தொழில்.* ***- திருக்குறள், 833***

*என்றபடி, பெற்றதைப் பேணாதிழத்தல் பேதையார் செயலாதலின் "பேண வல்லார்க்குப் பிழைப்பிலன்" என்றார். பிழைத்தல் - தவறுதல். ஆணம் - அன்பு. "ஆணம் இல் நெஞ்சத் தணிநீலக் கண்ணார்க்குக் - காண மிலாதார் கடுவனையர்" (நாலடியார், 374) என்றது காண்க.*

*'ஆணம் பெய்ய' என ஒரு சொல் வருவிக்க.*

*இதனால், தலைப்படுதலேயன்றிப் பேணுதலும், அன்பு செய்தலும் ஞானத்தின் பயனாதல் கூறப்பட்டது.*

*2781.* ***தெளிவுரை :-*** *"ஓம்" என்று எழும் இசையோசையின் உள்ளீடாய் நிற்கும் எழுத்தோசையாகிய நாதம் போல, சுத்த மாயா உலகத்தில் வாழும் ஞான ஒளியினர் உயிர்க்குயிரான பரம்பொருளாக என்றும் விரும்பப்படுபவன் எங்கள் சிவபெருமான். அவனது அருள் சத்தி நிபாதர் அல்லார்க்கு ஞானம் இல்லாமையால் சேயனவாயினும் சத்திநிபாதராய் ஞானத்தைப் பெற்றவர்க்கு அவர்தம் அகத்தே விளங்குவனவாம்.*

***குறிப்புரை :-*** *"மேல் நின்ற தேவர்" என விதந்தோதினமையால் அதற்கு இதுவே பொருளாகும். 'விழுப்பொருளாகிய எம்பெருமான் அடி' என இயைக்க.*

**2781.** ஓமெனும் ஓரெழுத் துள்நின்ற ஓசைபோல்
மேனின்ற தேவர் விரும்பும் விழுப்பொருள்
சேய்நின்ற செஞ்சுடர் எம்பெரு மான்அடி
ஆய்நின்ற தேவர் அகம்படி யாமே. **11**

---

*ஆய்நின்ற - ஆய்வின்கண் நின்ற ஆய்வு, இங்கு ஞானம். முன்னிரண்டடிகள் இன எதுகையும் பின்னிரண்டடிகள் ஆசெதுகையும் பெற்றன.*

*இதனால், 'ஞானியரே சிவனை இம்மையிலும் பெற்று விளங்குவர்' என்பது உடன்பாட்டிலும், எதிர்மறையிலும் வைத்துக் கூறி முடிக்கப்பட்டது.*

## 18. சத்திய ஞானானந்தம்

*மெய்ஞ்ஞானத்தால் அடையப்படுவது மெய்ப்பொருள் ஆதலின், ஞானோதயத்தை அடுத்து அம்மெய்ப்பொருளின் இயல்பைக் கூறுகின்றார். அவ்வியல்புதான் சத்திய ஞானானந்தம் ஆகலின் அதிகாரத்தை அதுவாகவே கூறினார். இஃது ஒன்பது மந்திரங்களையுடையது.*

**2782.** எப்பாழும் பாழாம் யாவுமாய் அன்றாகி
முப்பாழும் கீழுள முப்பாழும் முன்னியே
இப்பாழும் இன்னவா றென்ப திலாஇன்பத்
தற்பரஞா னானந்தந் தான்அது வாகுமே. **1**

---

*2782. தெளிவுரை :- (காரியங்கள் ஒடுங்குதற்கு இடமாதல் பற்றிக் காரணங்கள் 'பாழ்' எனப்படும். அதனால்), "எப்பாழும் பாழாம் யாவுமாய்" என்றது, எக்காரணங்களும் ஒடுங்குதற்குக் காரணமாய் உள்ள பரம காரணங்கள் எல்லாமாகி' என்றதாம். உலகிற்குக் காரணம் தத்துவங்கள். அவை தோன்றி ஒடுங்குதற்கு இடமான பரம காரணங்கள் சுத்த மாயையும். ஓராற்றால் பிரகிருதி மாயையும் பரம காரணமாகக் கொள்ளப்படும். கலப்பினால் மெய்ப்பொருள் அம்மும்மாயையாகியும் நிற்கும். ஆயினும் மாயைகளின் தன்மை வேறு; மெய்ப்பொருளின் தன்மை வேறு ஆதலின் பொருள் தன்மையால் மெய்ப்பொருள் அம்மாயைகளின் வேறாகியும் நிற்கும்.*

*குறிப்புரை :- இனி இரண்டாம் அடியிற் கூறப்பட்ட பாழ்கள் பரம காரணத்தைக் குறியாது, அவற்றினின்றும் தோன்றிப் பிறவற்றிற்கும் காரணமாகின்ற இடைநிலைக் காரணங்களாம் தத்துவங்களைக் குறித்தன. மேல் உள்ள மூன்று தத்துவங்களாவன, 'இலய தத்துவம், போக தத்துவம், அதிகார தத்துவம்' என்பன. அவைமுறையே இரண்டும், ஒன்றும், இரண்டும் ஆக ஐந்தாம். முதல் இரண்டும் சிவம், சத்தி, இடை ஒன்று சாதாக்கியம். இறுதி இரண்டு ஈசுரம், சுத்தவித்தை, கீழ் உள்ள மூன்று தத்துவங்களாவன, 'காரண தத்துவம், கஞ்சுக தத்துவம், குணதத்துவம்' என்பன. காரண தத்துவம், மாயா தத்துவம், கஞ்சுக தத்துவம், காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், இவ்வைந்தில் அடங்கும். குண தத்துவம் சித்தம் முதலிய இருபத்து நான்கு. முன்னுதல் - நினைத்தல்; சங்கற்பித்தல். அஃதாவது மும்மாயைகளினின்றும் இம் மூவகைத் தத்துவங்களும், பின் அவற்றின் காரியங்களும் 'இவ்விவ்வாறு தோன்றுக' எனவும் 'இத்துணைக் காலம் நிலைபெற்றுச் செயலாற்றுக' எனவும், 'இனி இப்பொழுது ஒடுங்குக' எனவும் சங்கற்பித்தல். இதனானே படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களும், அவற்றிற்குக் காரணமாம் மறைத்தல் தொழிலும் அவற்றின் காரியமாய் அருளல் தொழிலும் நடைபெறும். "இப்பாழும்" என்றதனோடு இயைய இன்னவாறும்' எனவந்தா எண்ணும்மை தொகுத்தலாயிற்று. 'இங்குக்*

*கூறிய காரணங்களில் ஒன்று' என்றோ, அவையல்லவாயின் 'வேறு இன்ன தன்மையது' என்றோ ஒன்றதனோடு சார்த்திச் சொல்ல ஒண்ணாத இயல்பினது, பொதுவாக, 'அது' எனச் சுட்டிச் சொல்லப்படும் மெய்ப்பொருள். ஆயினும் அதனைப்பற்றி உணர்வார்க்கு அது பேரின்பப் பொருளாய், உயிரினது அறிவுக்கு மேலான அறிவாய், ஆனந்தமாய் உள்ளது.*

*'சத்திய ஞானம்' என்றது, 'சத்து - சித்து' என்றபடி. எனவே, மெய்ப் பொருளின் உண்மை இயல்பு, 'சத்து - சித்து - ஆனந்தம்' என்றதாயிற்று. சத்து என்றும் ஒருபடித்தாய்த் திரிபின்றியிருத்தல். சித்து - அறியாமை சிறிதும் இன்றி அறிவேயாய் இருத்தல். ஆகவே, அறிவிக்க வேண்டாது தானேயறிதலும், ஒரு காலத்து ஓரிடத்து ஒன்றை மட்டும் அறிதல் என்பதின்றி, எக்காலத்தும், எவ்விடத்தும் எல்லாப் பொருளையும் அறியும் அறிவாதலும் தானே பெறப்பட்டது. ஆனந்தம் - துன்பக் கலப்பு இன்மையால் எஞ்ஞான்றும் வரம்பின்றி விளையும் இன்பமாதல். தற்பரம் - தனக்கு (உயிர்கட்கு) மேல், தன், சாதியொருமை. "தான்" என்பது தேற்றப்பொருளில் வந்தது.*

*"அது" என்பதை முதலில் வைத்து உரைக்க. "ஆகும்" என்றது, இயற்கையைச் செயற்கைபோலக் கூறும் இலக்கணையாய் உளதாதலைக் குறித்தது.*

*'காரணப்பொருள்கள் அனைத்திலும் தான் அவையேயாய்க் கலந்தும், பொருள் தன்மையால் வேறாகியும் நின்று தனது சங்கற்ப மாத்திரையானே ஐந்தொழிலை நடாத்துவதாயினும் மெய்ப்பொருள் பிறிதொரு பொருளோடு சார்த்தி, 'இன்ன தன்மையது' எனச் சொல்ல ஒண்ணாத இயல்பினையுடையது. சத்தாய்ச் சித்தாய், ஆனந்தமாய் இருத்தலே அதன் உண்மையியல்பு' என்பது இம்மந்திரத்தின் திரண்டபொருள். பின்பு "கீழுள முப்பாழ்" என்றதனால் முற்கூறிய முப்பாழ் 'மேல் உள' என்பது பெறப்பட்டது.*

> *ஒன்றும் குறியே குறியாத லால் அதனுக்கு*
> *ஒன்றும் குறியொன் றிலாமையினால் - ஒன்றோடு*
> *உவமிக்க லாவதுவுந் தான்இல்லை; ஒவ்வாத்*
> *தவமிக்கா ரேஇதற்குச் சான்று.*

*என்னும் திருக்களிற்றுப்படியாரை (வெண்பா, 10)க் காண்க.*

*இதனால், மெய்ப்பொருளின் பொதுவியல்பு சிறப்பியல்புகள் தொகுத்துக் கூறப்பட்டன.*

*பதிப்புக்களில் இதன்பின் காணப்படும் "தொம்பதம் தற்பதம்" என்னும் மந்திரம் முன் தந்திரத்தில் 'முத்துரிய' அதிகாரத்தில் வந்தது.*

***2783. தெளிவுரை :- சிவனது சத்தி 'பரா சத்தி' என்றும், 'ஆதி சத்தி' என்றும் இரண்டாய் இருக்கும். (பராசத்தியே அருட் சத்தியும், ஆதி சத்தியே திரோதான***

**2783.** மன்சத்தி ஆதி மணிஒளி மாசோபை
அன்னதோ டொப்ப மிடல்ஒன்றா மாறது
இன்னியல் உற்பலம் ஒண்சீர் நிறம் மணம்
பன்னிய சோபை பகர் ஆறும் ஆனதே. **2**

---

*சத்தியும் ஆகும்.) அவையிரண்டும் வேறு வேறல்ல. அஃது எது போல்வது எனின், மணியின்கண் (இரத்தினங்களில்) அதனிடத்தே நின்று அதனையே விளக்கி நிற்பதும், வேறிடத்திலும் சென்று பிற பொருள்களைப் பற்றுவதும் ஆகிய ஒளி செய்கையால் இரண்டாதல் அல்லது பொருளால் இரண்டாகாமை போல்வது, மணியொளி மணியையே விளக்கி நிற்குமிடத்து 'பிரகாசம்' என்றும், பிற பொருள்மேல் பாயுமிடத்து 'காந்தி' என்றும் சொல்லப்படும். (காந்தியே சோபை) இனி ஆதிசத்தியும் 'இச்சை, ஞானம், கிரியை' என மூன்றாம். ஆதி சத்தி இவற்றின் வேறல்லவாயினும் அதனையும், பரை ஆதியின் வேறல்ல வாயினும் அதனையும் வேறு வேறாக வைத்து எண்ணினால், 'பரை, ஆதி, இச்சை, ஞானம், கிரியை' எனச் சத்திகள் ஐந்தாகும். அதுவும் எதுபோலும் எனின், குவளை மலரின் குணம் ஒன்றேயாயினும் அதனை, பொலிவு, சிறப்பு, நிறம், மணம், அழகு' என இவ்வாறு வேறுவேறாக உணர்வது போலும், சத்தி குணமும், சிவன் குணமும் ஆகலின், குணமாகிய சத்தி வேறுபாடு ஐந்தனோடு குணியாகிய சிவம் ஒன்றையும் கூட்டி எண்ண மெய்ப்பொருள் ஆறு கூற்றதாம்.*

***குறிப்புரை :–** மன் சத்தி - நிலையாய் உள்ள சத்தி; மூல சத்தி, அது பராசத்தி. இது காலத்தைக் கடந்தது. அதனால் அநாதி. இதினின்றும் ஒரு காலத்தில் தோன்றுவது ஆதி. மணியினது 'ஒளி, சோபை' என்பவற்றை "மன் சத்தி, ஆதி" என்பவற்றோடு நிரல் நிறையாக இயைக்க. "சத்தி" என்பதை ஆதிக்கும் கூட்டுக. ஒளியாகிய 'அன்னதோடு, சோபையாகிய அன்னதோடு' எனத் தனித் தனி இயைக்க. "ஒப்ப" 'ஒப்பன்' என முற்று. மிடல் - சத்தி. "ஒன்றா மாறது" என்பதில் அது, பகுதிப்பொருள் விகுதி. 'மிடல் ஒன்றாமாறு, உற்பலம் ஒண்மை முதலியன ஆமாறு போலும்' என முடிக்க. உற்பலம் - குவளை. அது முன்னர் பொருளாகு பெயராய் அதன் மலரையும், பின்னரும் அவ்வாகுபெயராய், அதன் குணத்தையும் குறித்த இருமடியாகுபெயர். ஒண் - ஒண்மை. சீர் - சிறப்பு. அது மலர்களுள் மேலானதாகப் புகழப்படுதற்றன்மை. "சோபை" என்பதன்பின், 'ஆனவாறு' என்பது எஞ்சி நின்றது. "ஆறும் ஆனது" என்னும் உம்மை. 'ஒன்றானதேயன்றி' என இறந்தது தழுவிற்று. "ஆனது" என்னும் பயனிலைக்கு, 'மெய்ப்பொருள்' என்னும் எழுவாய் அதிகாரத்தால் வந்தியைந்தது.*

***இதனால், மெய்ப்பொருள் 'தானும், தன் சத்தியும்' என இரு கூற்றாகப் பின் சத்தி காரணமாகப் பல கூற்றாதல் கூறப்பட்டது.***

***2784. தெளிவுரை :–** சத்தி, சிவம் இவற்றது இயல்பைச் சொல்லுமிடத்து முறையே பரஞானமும், அதனால் தரப்படுகின்ற முடிவில் பொருளும் ஆகும்.*

**2784.** சத்தி சிவம்பர ஞானமும் சாற்றுங்கால்
உய்த்த அனந்தம் சிவம்உயர் ஆனந்தம்
வைத்த சொரூபத்த சத்தி வருகுரு
உய்த்த உடல் இவை உற்பலம் போலுமே. **3**

---

*இனிச் சிவம் பிறிதொன்றிலும் இல்லாத, தனி ஒரு பேரானந்தப் பொருளுமாம். அந்தச் சிவத்தின் மேனிலைச் சத்தியே பக்குவான்மாக்களை ஆட்கொள்ளுதற்கு இந்நிலவுலகில் வந்து உலாவச் செய்கின்ற குரு வடிவும் ஆகும். இங்குக் கூறிய பரஞானம், முடிவின்மை, ஆனந்தம், ஆன்மாக்களை ஏற்ற பெற்றியால் ஆட்கொள்ளும் பேரருள் என்பனவற்றுக்கு முன் மந்திரத்திற்கூறிய குவளை மலரே உவமையாம்.*

***குறிப்புரை :-*** *"சாற்றுங்கால்" என்பதனை, "சிவம்" என்பதன் பின்னர்க் கூட்டுக. உய்த்தல் - தரப்படுதல். "அனந்தம்" என்பதிலும் எண்ணும்மை விரித்து, எஞ்சிநின்ற 'ஆம்' என்னும் பயனிலையை வருவிக்க. அனந்தம் - முடிவின்மை. முடிவு காலம் இடம் இரண்டு பற்றியது. காலம் பற்றிய முடிவின்மை' நித்தியத்துவத்தையும், இடம் பற்றிய முடிவின்மை பூரணத்துவத்தையும் விளக்கும். நித்தியத்துவமே மெய்ம்மையும், பூரணத்துவமே பெருநிறைவும் ஆகும். மெய்ப் பொருள் 'மெய்யாயும், அறிவாயும், முடிவிலதாயும் உள்ளது' என்பதை தைத்தீரிய உபநிடதம் (அத்.2.1), "சத்யம் ஜ்ஞாநம் அநந்தம் பிரஹ்ம" எனக் கூறிற்று. சத்தி தன்னிலையில் நிற்குங்கால் 'சொரூப சத்தி' என்றும், பிறவற்றோடு தொடர்புற்று நிற்குங்கால்' 'தடத்த சத்தி' என்றும் சொல்லப்படும். 'அவற்றுள் சொரூப சத்தியே அருளுருவாய் வந்து ஆட்கொள்ளும்' என்பது பின் இரண்டடிகளில் கூறப்பட்டது. முன் மந்திரத்திற்கூறிய உற்பல உவமையை, 'பூவண்ணம், பூவின் நிறம் போல மெய்ப்போத இன்ப மாவண்ண மெய்கொண்டவன்' என்னும் பரஞ்சோதி திருவிளையாட (கடவுள் வாழ்த்து - பர சிவ வணக்கம்)லாலும் அறிக.*

*இதனால், 'மேற்குறித்த சத்தி சிவங்களாவன இவை' என்பது கூறப்பட்டது.*

***2785. தெளிவுரை :-*** *மேல் உவமையாகக் கூறிய குவளை மலரின் நிறம், பொலிவு, மணம், அழகு என்பன அம்மலரின் வேறாகாததுபோல, உயிர் சிவனிடத்தில் வேற்றுமையின்றி ஒன்றுபட்டு நின்றால், 'சிவாய' எனவும், 'சிவத்துவமசி' எனவும் சொல்லப்படும் மகாவாக்கியங்களின் பொருளாய் உள்ள சிவனது அனந்த சத்தி. அலுத்த சத்தி முதலிய எண்குணங்களும் உயிரினிடத்து விளங்கி நிற்க, உயிர் சிவனாகியே நிற்கும்.*

***குறிப்புரை :-*** *உரு - அழகு. 'உற்பலத்தில்' என ஏழாவது விரிக்க. 'தரமாய்' என ஆக்கம் விரிக்க. மருவுதல், அறிந்து நிற்றல். முப்பதங்களில் இரண்டொன்றையே முதற்குறிப்பாகக் கூறி, மகா வாக்கியங்களை நினைப்பித்தார்.*

**2785.** உருஉற் பலம்நிறம் ஒண்மணம் சோபை
தரம்நிற்ப போல்உயிர் தற்பரந் தன்னில்
மருவச் சிவமென்ற மாமுப் பதத்தின்
சொரூபத்தன் சத்தியாதி தோன்ற நின்றானே. **4**

**2786.** நினையும் அளவில் நெகிழ வணங்கிப்
புனையில் அவனைப் பொதியலும் ஆகும்
எனையும்எங் கோன்நந்தி தன்னருள் கூட்டி
நினையும் அளவில் நினைப்பித் தனனே. **5**

---

*சொரூபம், இங்குப்பொருள். சிவனது எண்குணங்களில் இரு குணம் 'சத்தி' என்னும் பெயராற் சொல்லப்படுதலின். அவை முதலிய குணங்களைச் "சத்தியாதி" என்றார். முன்னர் 'உயிர்' என்றதனைப் பின்னர் "நின்றான்" என ஆடூவறி சொல்லாற் கூறியது வடமொழி மதம் பற்றி. சிவத்திற்கும், உயிருக்கும் இடையே உள்ள தொடர்பு குணிக்கும், குணத்திற்கும் இடையேயுள்ள தொடர்பு போன்றது அன்றாயினும் வேற்றுமையின்றி நிற்றல் மாத்திரைக்கு அத்தொடர்பினை உவமையாகக் கூறினார்.*

*இதனால், உயிர் ஞானத்தால் மெய்ப்பொருளாகிய சிவமாம் நிலையை எய்துதல் கூறப்பட்டது. அந்நிலையை எய்திய வழி உயிரும் மெய்ப்பொருளாதல் பற்றி இஃது இவ்வதிகாரத்தில் கூறப்பட்டது.*

***2786. தெளிவுரை :-* சிவனை அன்பால் நினைதற்குப் பக்குவம் வேண்டும். அது வாய்க்கப் பெற்று, அவனை அன்பினால் நினைந்தும், வணங்கியும் புகழ்ந்து பாடியும் நின்றால் ஒன்றிலும் அகப்படாத அவனை நம்முள்ளே அகப்படுத்திக் கொள்ளலாம். எங்கள் ஆசிரியராகிய நந்தி பெருமானும் எனக்கும் பக்குவம் வாய்த்தமையை அறிந்தே தமது அருளை வழங்கிச் சிவனை நினைக்கச் செய்தார்.**

***குறிப்புரை :-* என்றது, 'நினைத்து வணங்கவும், புகழ்ந்து பாடவும் செய்தார்' எனவும், 'அதனால், நான் சிவனை இப்பொழுது என்னுள்ளே அகப்படுத்தியுள்ளேன்' எனவும் கூறியவாறு. நெகிழ்வது மனம். வணங்குவது உடம்பு. புனைதல், "பூமாலை புனைந்து ஏத்துதலையும், புகழ்ந்து பாடுதலையும்" (தி.6 ப.31 பா.3) ஒருங்கே குறித்து நின்றது. புகழ்ந்து பாடுதல், ஆசிரியன்மார் அருளிச் செய்த பாடல்களையும், தாமே பாடும் பாடல்களையும் அவை அவன் அருள்வழியே அமையும். 'நாயனார் இந் நூலால் அவனைப் புகழ்ந்து பாடினார்' என்க.**

***ஆர்வல்லார் காண அரனவனை? அன்பென்னும்
போர்வை யதனாலே போர்த்தமைத்துச் - சீர்வல்ல
தாயத்தால் நாமும் தனிநெஞ்சி னுள்ளடைத்து
மாயத்தால் வைத்தோம் மறைத்து. - தி.11 அற்புதத் திருவந்தாதி, 96***

**2787.** பாலொடு தேனும் பழத்துள் இரதமும்
வாலிய பேரமு தாகும் மதுரமும்
போலும் துரியம் பொடிபட உள்புகச்
சீலம் மயிர்க்கால் தொறும்தேக் கிடுமே. **6**

---

*எனவும்,*

*"இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்;*
*எங்கெழுந் தருளுவ தினியே". - தி.8 பிடித்த பத்து, 3*

*எனவும்,*

*"அழலார் வண்ணத் தம்மானை*
*அன்பில் அணைத்து வைத்தேனே". - தி.4 ப.15 பா.7*

*எனவும் இவ்வாறு அருளிச்செய்ப ஆதலின், அவனைப் பொதியலும் ஆகும்" என்றமை பொருந்துவதாதல் காண்க. உம்மை சிறப்பு. நந்தி பெருமான் தம் அருளை வழங்கியது, நினைப்பிற்கு எட்டாதவனை நினைக்குமாற்றையும், வணங்குமாற்றையும், பூப்புனையுமாற்றையும், புகழ்ந்து பாடுமாற்றையும் விளக்கியருளியது. 'அவர் அவற்றை அருளிச் செய்யாராயின், யான் எதனை அறிவேன்' என்பது கருத்து.*

*இதனால், 'மெய்ப்பொருளை யுணர்தலும், அடைதலும் பக்குவ காலத்தில் குருவருள் வாய்க்கப் பெறுதலாலே' என்பது கூறப்பட்டது.*

***2787. தெளிவுரை :-** முன் தந்திரத்திற் கூறிய முத்துரியத்துள் நின்ற நிலையிற் புக்கபொழுது, பாலுந்தேனும் கலந்த கலப்பின்கண் உள்ளதும், கனிந்த பழத்தின் சாற்றில் உள்ளதும், மிகத் தூயதாகிய தேவரது அமுதத்தில் உள்ளதுமாகிய இனிமைகள் போன்ற ஓர் இனிமை அவ்வுயிரினது உடம்பில் உள்ள மயிர்க்கால்கள்தோறும் தேங்கி நிற்கும்.*

***குறிப்புரை :-** 'பாலொடு தேன் ஆகும் மதுரமும், பழத்துள் இரதம் ஆகும் மதுரமும்' என "ஆகும் மதுரம்" என்பதை ஏனையவற்றிற்கும் கூட்டுக. வாலிய - தூய. பேரமுது, தேவர் அமுது, "துரியம் பொடிபட உள்புக" என்பதை முதலிற் கூட்டி உரைக்க. பொடிபடல் - விலகுதல். சீலம் - தன்மை, என்றது இங்கு இனிமையை மயிர்க்கால் தோறும் தேக்குதலை.*

*"வாக்கிறந் தமுதம் மயிர்க்கால் தோறும்*
*தேக்கிடச் செய்தனன்" - தி.8 திருஅண்டப்பகுதி, 170, 171*

*என்னும் திருவாசகத்தாலும் அறிக.*

*இதனால், இங்கு எடுத்துக்கொண்ட ஆனந்தத்தின் இயல்பு விளக்கப்பட்டது.*

**2788.** அமரத் துவங்கடந் தண்டங் கடந்த
தமரத்து நின்ற தனிமையன் ஈசன்
பவளத்து முத்துப் பனிமொழி மாதர்
துவளற்ற சோதி தொடர்ந்துநின் றானே. 7

---

***2788. தெளிவுரை :-*** *சிவன் 'இறவா நிலை' எனப்படும் அபர முத்தி நிலையையும், அந்நிலைக்கு ஏற்புடைய சுத்தமாயா புவனங்களையும் கடந்து, அவ்விடத்தை அடைந்த தன் அடியார்களோடே கூடி, அவர்கட்கு ஒப்பற்ற தலைவனாய் இருப்பவன். (எனவே, 'நிரதிசய சுத்த போகத்தையே தருபவன்' என்றதாம்). ஆயினும் அவன், பவழம் போன்ற இதழையும், அதற்குள்ளே அரும்பும் முத்துப்போன்ற நகையினையும், அதற்குள்ளே மெல்ல மிழற்றுகின்ற இனிய சொல்லையும் உடைய மாதராளாகிய, கெடுதல் இல்லாத ஞான சொரூபியைத் துணையாகப் பற்றி நிற்கின்றான்.*

***குறிப்புரை :-*** *'அதனால், பலவகைப்பட்ட மாயா போகங்களை வேண்டுவார்க்கு அவற்றையும் தருகின்றான்' என்பதாம். தமர் - அடியார். "விண் வத்துக் கொட்கும் வண்ணத் தமரர்" என்றாற்போல மகர ஈற்றொழிந்த ஏனை யீறுகளின் முன்னும் சிறுபான்மை அத்துச்சாரியை வருதல் அறிக. 'தமரிடத்து நின்ற' என ஏழாவதன் பொருள்பட விரிக்க. 'அண்டம் கடந்து நிற்பவன், ஆயினும் தமரிடத்து நிற்பவன்' என்க. "தனிமையன்" என்றது, 'சிவன்' என்னும் நிலையையும், "சோதி தொடர்ந்து நின்றான்" என்றது, 'சத்தன்' என்னும் நிலையையும் குறித்தனவாம். இதனால், மெய்ப்பொருளின் இரு நிலைகள் விளங்கும். இம்மந்திரம் ஈரடி எதுகை பெற்றது.*

*இதனால், 'ஞான ஆனந்தமேயன்றி ஊன ஆனந்தமும் மெய்ப்பொருளால் ஆவதே' என்பது உணர்த்தப்பட்டது.*

***2789. தெளிவுரை :-*** *'மத்தியாலவத்தை' எனப்படும் சகலத்திற் சகலமாகிய மாசகலத்திலே முப்பத்தாறு கருவிகளுள் யாதொன்றும் ஒடுங்காது எழுச்சி யுற்றிருப்பினும் தான் அவற்றின் வசப்படாது, அவற்றை வேறு நிறுத்தி, அங்ஙனம் நிறுத்தியதனால் கேவலாவத்தை வந்துவிடாதபடி அதனையும் நீக்கிச் சகலத்திற் சுத்தமாகிய நின்மலாவத்தையை அடைந்து, பின் 'அதுவும் சீவச் செயலேயாம் என அதனை நீக்கிப் பராவத்தையை எய்தியவழியே பந்தம் முற்றும் நீங்கிய நிலையாகும். அந்நிலையை அடைந்து, 'சீவன்' என்னும் நிலைமை மாறி, 'சிவம்' என்னும் நிலைமையை அடைந்து, அதனால் சத்திய ஞானானந்தத்தை அடைந்தவனே நிறைவான ஞானத்தை அடைந்தவனாவான்.*

***குறிப்புரை :-*** *"மத்திமம்" என்றது மத்தியாலவத்தையை. 'மத்திமத்தின்கண்' என ஏழாவது விரிக்க. "மாற்றி" என்றதும் 'நீக்கி' என்றதே. 'பிறழ்வுற்றுச் சிவமாகி'*

**2789.** மத்திமம் ஆறாறும் மாற்றி மலம்நீக்கிச்
சுத்தம தாகும் துரியத் துரிசற்றுப்
பெத்த மறச்சிவ மாகிப் பிறழ்வுற்றுச்
சத்திய ஞானானந் தஞ்சார்ந்தான் ஞானியே. **8**

**2790.** சிவமாய் அவமான மும்மலம் தீர்ந்து
பவமான முப்பாழைப் பற்றறப் பற்றத்
தவமான சத்திய ஞானானந் தத்தே
துவமார் துரியம் சொரூபம் தாமே. **9**

---

*என மாறிக்கூட்டுக. "சார்ந்தான்" என்பது வினையாலணையும் பெயர். 'சார்ந்தானே ஞானி' என ஏகாரத்தை மாற்றி வைத்துரைக்க.*

*இதனால், சத்திய ஞானானந்தமே நிறைஞானத்தின் பயனாதல் கூறப்பட்டது.*

***2790. தெளிவுரை :-*** ***பயன் இலதாம் பிறவியிற் செலுத்துகின்ற மும்மலங்களும் நீங்கி உயிர் சிவமாதற்பொருட்டு உண்மையான மூன்று துரிய நிலைகளைப்பிற பற்றுக்கள் நீங்குதற் பொருட்டுப் பற்றினால், தவத்தின் பயனான சத்திய ஞானானந்தம் கிடைக்கும். அந்நிலையில் அந்த ஆனந்தத்தையுடைய பொருளும் காட்சிப்படும்.***

***குறிப்புரை :-*** *"சிவமாய் மும்மலந்தீர" என்பதனைப் பின்முன்னாக நிறுத்தி, 'மும்மலந்தீர்ந்து சிவமாக' என விகுதி பிரித்துக் கூட்டியுரைக்க. பவம் - உண்மை. துரியம். 'பாழ்' எனப்பட்டது. 'துரிய நிலையில் ஆனந்தம் தோன்ற, அதனானே அதனையுடைய பொருள் உண்மை தோன்றும்' என்றபடி. ஆனந்தம் தோன்ற, அதனானே அதனையுடைய பொருள் உண்மை தோன்றும்' என்றபடி. ஆனந்தம் தோன்ற, அஃதே பற்றி அதனையுடைய பொருளை உணர்தல், அருணோதயம் உண்டாக, அஃதே பற்றி ஞாயிற்றை உணர்தல் போலும்.*

*இதனால், 'துரியத்தை எய்தி, அதில் ஞானானந்தத்தை உணர்ந்து, அதனானே பொருளை உணர்க' என்பது கூறப்பட்டது. இதனானே வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாயும் செய்யப்பட்டது.*

## 19. சொரூப உதயம்

*சொரூபம் - பொருள். அஃது இங்குச் சிறப்புப் பற்றி, அடையத்தக்க பொருளையே குறித்தது.*

*பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்*
*மருளானாம் மாணாப் பிறப்பு.* ***- திருக்குறள், 351***

***என்பதிலும் "பொருள்" எனப்பட்டது அடையத்தக்க பொருளே, அப்பொருளின் முதல் தோற்றம் குரு வடிவே. அதனையடைந்து நிற்றலே இவ்வதிகாரத்தில் சொல்லப்படுகின்றது. இது பதினொரு மந்திரங்களையுடையது.***

**2791.** **பரம குரவன் பரம்எங்கும் ஆகி**
**திரம்உற எங்கணும் சேர்ந்தொழி வற்று**
**நிரவு சொரூபத்துள் நீடும் சொரூபம்**
**அரிய துரியத் தணைந்துநின் றானே.** **1**

---

*2791. தெளிவுரை :- 'குருமார்களில் எல்லாம் மேலான குருவாகிய ஞான குருவே எங்கும் நிறைந்த பரம்பொருளாவான்' என்பது நன்கறியப்பட்டது. அதற்கேற்ப அவன் தன் மாணாக்கனை விட்டு நீங்காது. அவன் செல்லுமிட மெல்லாம் சென்று நிலையாகப் பொருந்தி, கண்ட பொருள்களில் எல்லாம் அது அதுவாகும் இயல்புடைய அவனது ஆன்ம சொரூபத்தினுள் அஃது அவ்வாறாகாமல் நிலைபெற்று விளங்கும். அறிவின்பப் பொருளாய், அடைதற்கரிய துரிய நிலையில் கிடைத்திருப்பான்.*

*குறிப்புரை :- என இவ்வாறு குருவின்மேல் வைத்துக் கூறினாராயினும், ஞான குருவின்பால் ஞானத்தைப் பெற்று நன்மாணாக்கர் எங்கும், எப்பொழுதும், எவ்வாற்றானும் அக்குருவை மறவாது அவனைச் சிவமாகவே அறிவினுள் கண்டு ஆனந்திப்பர்' என்பதே கருத்து. 'அக்காட்சி வெறும் கருதுகோள் காட்சியன்று; உண்மைக் காட்சியாய்ப் பயன் தரும் காட்சியே' என்பதைத் தெளிவித்தற் பொருட்டே இம்மந்திரத்தைக் குருவின்மேல் வைத்து இவ்வாறு அருளிச் செய்தார். 'எங்கும் ஆம் பரமாகி' என்க. "ஆகி" என்பது பெயர். ஒழிவு - விட்டு நீங்குதல். 'எங்கணும் ஒழிவற்று திரம் உறச் சேர்ந்து' என மாற்றிக் கொள்க. நிரவுதல் - அது அதுவாய் வசப்பட்டு நிற்றல். 'நீடும் சொரூபமாய்' என ஆக்கம் வருவிக்க. "துரியத்து நின்றான்" என்றதனால், 'ஞானிகள் துரியத்தினின்றும் கீழ் இறங்கார்' என்க. துரியம் முதலிய அவத்தைகளின் இயல்பு முன் தந்திரத்தில் கூறப்பட்டது.*

*இதனால், 'அடையத் தக்க பொருள் ஞான குரு உருவமே' என்பது கூறப்பட்டது.*

**2792.** **குலைக்கின்ற நீரிற் குவலயம் நீரும்**
**அலைக்கின்ற காற்றும் அனலொடா காசம்**
**நிலத்திடை வானிடை நீண்டகன் றானை**
**வரைத்து வலஞ்செயு மாறறி யேனை.** **2**

**2793.** **அங்குநின் றான் அயன் மால்முதல் தேவர்கள்**
**எங்குநின் றாரும் இறைவனென் றேத்துவர்**
**தங்கிநின் றான்தனி நாயகன் எம்மிறை**
**பொங்கிநின் றான்புவ னாபதி தானே.** **3**

---

*2792.* ***தெளிவுரை :-*** *மண் தன்னை அழிக்கும் தன்மையுடைய நீரினுள் அழியும். அவ்வாறே நீரும், காற்றும் முறையே நெருப்பினுள்ளும் ஆகாயத்தினுள்ளும் அழியும். எனவே, இப்பொருள்களுள் அடங்கியிருப்பவர் அல்லன் சிவன். அவன் பூமியையும் கடந்து கீழ்ப்போகியும், ஆகாயத்தையும் கடந்து மேற்போகியும் அளவின்றியிருப்பவன். ''பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு பாத மலர் - போதார் புனைமுடியும் எல்லாப் பொருள் முடிவே" (தி.8 திருவெம்பாவை, 10) அவனை ஒரு சிறுகுடிலுள் அடக்கி, வைத்துக் கண்ணாற் கண்டு, காலால் வலம் வந்து, வாயால் வாழ்த்தி, மெய்யால் வணங்கி இன்புறுதல் எளிதாயிருக்க, அம்முறையை யறியாமல் யான் அல்லல் உறுகின்றேன்.*

***குறிப்புரை :-*** *என்றது, அறிவிலாதார் செயலைத் தம்மேல் வைத்து அருளிச் செய்து இரங்கியவாறு. 'குவலயம் குலைக்கின்ற நீரில்' என மாற்றி, அதன்பின்னும், ''ஆகாசம்'' என்பதன் பின்னும் 'அழியும்' என்பன வருவிக்க. வரைத்தல் - அளவுட்படுத்தல். 'படுத்தப்படுவது குருவுருவம்' என்க. "அருமையிற் எளிய அழகே போற்றி" (தி.8 போற்றிக். 126) என்றாற்போலும் திருமொழிகளால் ஞான குருவின் அருமையில் எளிமையை ஆய்ந்துணர்க. வலம் செய்தல் கூறவே, இனம் பற்றி ஏனையவும் கொள்க. குவலயம் - மண், பூமி.*

*இதனால், அடைதற்கரிய பொருளை எளிதில் அடையும் முறை கூறப்பட்டது.*

*2793.* ***தெளிவுரை :-*** *அயன், மால் முதலிய தேவர்கள் முதலாக எங்குள்ளவர்களும் இறைவனை, 'அவன் பரமாகாசத்தில் இருக்கின்றான், ஆயினும் ஏத்துவார்க்கு அருள்புரிகின்றான்' என அவனைக் காணாமலே கருதிநின்று ஏத்துவார்கள். ஆயினும் எங்கட்கு அவன் குருஉருவாகி எதிர் வந்து எங்களோடு நீங்காது உறைகின்றான்.*

***குறிப்புரை :-*** *'அதனால் நாங்கள் அவனை நேரிற்கண்டு வலம் வந்து வணங்கி, ஆடிப்பாடி, அளவளாவி மகிழ்கின்றோம்' என்பது குறிப்பெச்சம்.*

**2794.** சமையச் சுவடும் தனைஅறி யாமல்
கமையற்ற காமாதி காரணம் எட்டும்
திமிரச் செயலும் தெளியுடன் நின்றார்
அமரர்க் கதிபதி யாகிநிற் பாரே. **4**

---

*"அங்கு நின்றான்" என்பதனை, "இறைவன்" என்பதற்கு முன்னர்க் கூட்டுக. 'தேவர்கள் முதலாக' என ஒரு சொல் வருவிக்க. "தனி நாயகன், புவனாபதி" என்னும் பெயர்கள் இரண்டன் உருபு ஏற்று, "ஏத்துவர்" என்பதனோடு முடிதற்கு உரியன; செய்யுள் நோக்கி வேறுபட்டு நின்றன. "எம் இறை" என்றது, குருவாகி வந்து அருள் புரிந்த உரிமை பற்றி. பொங்குதல். கூர்தலாகி உள்ளது சிறத்தலேயாகலின் அதனை இங்கு. "பொங்கி" என்றார். "பொங்கி நின்றான்" எனப் பண்பின் வினை பண்பியின்மேல் ஏற்றப்பட்டது. கூர்ந்தது அருள். 'அது கூர்ந்து, குருவுருவாய் வந்தது' என்பதாம். புவனங்களை 'புவனா' என பெண்பாலாற் கூறினார். அன்னதொரு வழக்குப் பற்றி,*

*இதனால், அருட்குருவின் சிறப்பு உணர்த்தப்பட்டது.*

*2794. தெளிவுரை :-* ஒவ்வோர் உயிரும் தன்னைத் தான் அறியக் கடமைப் பட்டவை. அவற்றை அவ்வாறு அறியச் செய்யாமல் மயங்கச் செய்வன. புறச் சமய நூல்களும், அடக்கம் இன்றி, வேண்டியவாறே ஒழுகத் தூண்டும் காமம் முதலிய குற்றம் எட்டும், அவற்றுக்குக் காரணமாக ஆணவ மலமும் ஆகும். அவை முற்றாக நீங்குமாறு ஞான குருவைப் பிரியாது அவரது நிழல்போல உடன் இருப்பவர் வானவர்க்கும் தலைவராவர்.

*குறிப்புரை :-* சுவடு - எழுத்தின் வரிவடிவம். அவற்றை உடையது சுவடி. எனவே சுவடிகளில் உள்ள எழுத்துக்களை, "சுவடு" என்றார். 'தனை அறியாமற் செய்யும்' என ஒரு சொல் வருவித்து, அதனை முதலிற் கூட்டுக. கமை - பொறுமை. அஃது அடக்கத்தைக் குறித்தது. 'ஆணவ மலத்தின் காரியம் எட்டு' என்பதை,

> "............................ விகற்பம், கற்பம்,
> குரோதம், மோகம், கொலை, அஞர், மதம், நகை"

என்னும் இருபா இருபஃதால் (செய்யுள், 4) அறிக, இவற்றுள் 'மோகம்' என்பதனையே தலையாயதாக எடுத்து, "காமம்" என்றார். இனி, காமம் முதலிய அறுபகைகளோடு, 'மண், பொன் இரண்டு கூட்டி, 'எட்டு' என்பாரும், 'இடும்பை, அசூயை, இரண்டு கூட்டி 'எட்டு' என்பாரும் உளர். திமிரம் - இருள்; ஆணவ மலம். "செயல்" என்றது எட்டொழிந்த பிறவற்றை. அவை மறைப்பு. திரிப்பு முதலியன, 'தெளிய' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. "குருவுடன்" என்பது அதிகாரத்தால் வந்தது. தலைவராதல், மேல் நிலையில் நிற்றல்.

**2795.** மூவகைத் தெய்வத் தொருவன் முதல்உரு
ஆயது வேறாம் அதுபோல் அணுப்பரன்
சேய சிவமுத் துரியத்துச் சீர்பெற
ஏயும் நெறியென் றிறைநூல் இயம்புமே. 5

---

*சமையச்சுட்டு என்றது சமையஞ்சட்டி நெறியல்லதன்கண் செல்லுதலைக் குறித்தது.*

*இதனால், சொரூப உதயத்தாலே உயிர் தூய்மை பெறுதல் கூறப்பட்டது.*

*2795.* **தெளிவுரை :-** *'முக்குணங்களால், 'அயன், அரி, அரன்' எனச் சொல்லப்படும் மூவருள், 'தனி ஒருவன்' எனச் சுட்டப்படும் அரன், குணம் பற்றி ஏனையிருவரோடு ஒத்தவனாகச் சொல்லப்படினும் ஏனையிருவர்போலச் சகலனாகாது, பிரளயாகலருள் பக்குவம் உற்றவனாய், சிவனை மறந்து, 'தானே முதல்வன்' என மயங்கும் மயக்கம் இன்றிச் சிவனையே முதல்வனாகத் தெளிந்து அவன் பணியையே ஆற்றுபவன் ஆதலின் வேற்றியல்புடையனாதல் போல முத் துரியத்திலும் சீவனும், சிவனும் ஒரு பெற்றியராய் நின்ற போதிலும் பல வகையில் சிவன் சீவனின் வேறு பட்டவன்' என்று சிவநூல்கள் செப்பும்.*

**குறிப்புரை :-** *முதல் உரு - காரணமூர்த்தி. தனது வலப்பாகத்தினின்று அயனையும், இடப்பாகத்தினின்று அரியையும் தோற்றுவித்தலால் அரன் காரண மூர்த்தியாயினன். இவனே சீகண்ட உருத்திரன். 'முதல் உரு ஆயதனால்' என உருபு விரிக்க. அணு - உயிர். "அணுப் பரன்", சேய - சேய்மையில் உள்ள. "சிவம்" என்பது, 'சுத்தம்' என்னும் பொருளதாய் நின்றது. கேவல சகலங்களைக் கடந்து நிற்றலின் சுத்தாவத்தைகள் சேயவாயின. 'முத்துரியம்' முன் தந்திரத்தில் சொல்லப்பட்டன. 'ஒரு சீர் பெற ஏயும் நெறி' என்க. ஏய்தல் - பொருந்துதல்.*

*'அணுவும், பரனும் ஏயும் நெறி, மூவகைத் தெய்வத்து ஒருவன் வேறாயது' என இயைத்து முடிக்க. முதல் அடி இன எதுகை பெற்று வந்தது.*

*இதனால், 'சொரூப உதயத்துச் சிவ சீவர்கள் அருள்நிலையால் சமமாயினும், பொருள் நிலையால் வேறானவர்களே' என்பது கூறப்பட்டது.*

*2796.* **தெளிவுரை :-** *சிவன் தான், தனக்கு ஓர் உடம்பில்லாமலே பல உயிர்கட்கும் பல்வேறு வகையான உடம்புகளைப் படைத்துக் கொடுக்கின்றான். தனக்கு ஒரு காரணம் இன்றித் தானே அனைத்திற்கும் காரணமாய் உள்ளான். எந்தப் பொருளின் தன்மையும் தன்னைப் பற்றாது தான் அனைத்துப் பொருளிலும் தாமரை இலையில் தண்ணீர் போலப் பொருந்தி நிற்கின்றான். ஆகவே, அவனது நிலை யாவராலும் அறிய ஒண்ணாத பெருமறையாய் இருத்தலின், அம்மறையை அறிந்த நல்லாசிரியன் வழியாக அன்றித் தாமே நேராக*

**2796.** உருவன்றி யேநின் றுருவம் புணர்க்கும்
கருவன்றி யேநின்று தான்கரு வாகும்
மருவன்றி யேநின்ற மாயப் பிரானைக்
குருவன்றி யாவர்க்கும் கூடஒண் ணாதே. **6**

---

*அவனை அடைதல் யாவர்க்கும் இயலாது.*

***குறிப்புரை :-*** *"கரு" என்றது காரணத்தை மருவுதல் பற்றுறப் பற்றல், மாயம், இங்கு மறையைக் குறித்தது. அதனையுடைய தன்மையை உணர்த்திற்று.*

*"கருவினா லன்றியே கருவெலாம் ஆயவன்*
*உருவினா லன்றியே உருவுசெய்தான்" - தி.3 ப.35 பா.3*

*என்னும் ஆளுடைய பிள்ளையார் அருள்மொழியை இம்மந்திரத்தோடு ஒப்பிட்டுக் காண்க.*

*இதனால், 'உண்மைச் சொரூபமாம் சிவனது தோற்றத்திற்கு முற்பட்ட நிலை குருவினது தோற்றம்' என்பது கூறப்பட்டது.*

*2797.* ***தெளிவுரை :-*** *குருவின் உருவத்தை உள்ளத்தில் உள்கியிருப்பவர்கட்கு அங்குச் சிவசோதியே பிரகாசிக்கும். அவர்கள் ஊழிக் காலம் நிலவுலகில் வாழ்வர்; பின்பு சிவலோக வாழ்வினதும் ஆவர். அங்ஙனமாகவும் குரு உருவகத்தின் சிறப்பை அறிந்து அதனை உள்ளத்தில் உள்குவோர் உலகத்தில் எத்துணைப் பேர்!*

***குறிப்புரை :-*** *உருவம், அதிகாரத்தால் குரு உருவேயாயிற்று. 'மணி மந்திர ஔடதங்களாலும், மற்றும் அடயோகம் முதலிய உழைப்புக்களாலும் அடையும் பயனை ஞான குருவால் அடையலாம்; ஆனால் ஞான குருவால் அடையும் பயனை வேறு வழியால் அடைய இயலாது' என்பது உணர்த்துதற்கு இவ்வாறு கூறினார்.*

*மந்திரத்தால், மருந்துகளால், வாய்த்தஇயோ கத்தால்,*
*மணியிரத குளிகையினால், மற்றும் மற்றும்*
*தந்திரத்தே சொன்னமுறை செய்ய, வேத*
*சகலகலை ஞானங்கள், திரிகால ஞானம்,*
*அந்தமிலா அணிமாதி ஞானங்கள் எல்லாம்*
*அடைந்திடும்; ஆசான் அருளால் அடிசேர் ஞானம்*
*வந்திடும்; மற்றொன்றாலும் வாரா தாகும்;*
*மற்றவையும் அவன்அருளால் மருவு மன்றே.*

*என்னும் சிவஞான சித்தி (சுபக்கம்-சூ.12.6)யைக் காண்க. இதன்கண் சொற்பொருட் பின்வருநிலையணி வந்தது.*

**2797.** உருவம் நினைப்பவர்க்கு உள்ளூறும் சோதி
உருவம் நினைப்பவர் ஊழியும் காண்பர்
உருவம் நினைப்பவர் உம்பரும் ஆவர்
உருவம் நினைப்பார் உலகத்தில் யாரே. 7

**2798.** பரஞ்சோதி யாகும் பதியினைப் பற்றப்
பரஞ்சோதி என்னுட் படிந்ததன் பின்னைப்
பரஞ்சோதி யுள்நான் படியப் படியப்
பரஞ்சோதி தன்னைப் பறையக்கண் டேனே. 8

---

*இதனால், சொரூபத்தியானத்தின் சிறப்பு உணர்த்தப்பட்டது.*

*2798.* ***தெளிவுரை :-*** *முன் மந்திரத்தில், "உள்ளூறும் சோதி" எனப்பட்ட அந்த மேலான ஒளி என் உள்ளத்துள்ளே தோன்றியவுடன் நான் அதனைச் சிக்கெனப் பிடித்தேன், பிடித்தபொழுது முதற்கண் அஃது என்னுள்ளே அடங்கப் பின்பு நான் அதனுள்ளே தோய்ந்தேன். தோயத் தோய, அஃது எல்லையின்றி விரியக் கண்டேன்.*

***குறிப்புரை :-*** *'பதியாகும் பரஞ்சோதியை' என மாறிக் கூட்டி உரைக்க. உதயம் உள்ளத்துள் ஆதலின், 'முதற்கண் அஃது என்னுள் படிந்தது' என்றும், விறகினின்றும் தோன்றிய தீ பின் அவ்விறகைக் கதுவுமாறுபோல, ஆன்ம அறிவில் தோன்றிய சிவஒளி பின்பு அவ்வறிவை விழுங்கி நிற்றல் பற்றி, 'பின்பு நான் அதனுட் படிந்தேன்' என்றும், முன்பு சுட்டுணர்வாய் நின்ற ஆன்ம அறிவு பின்பு வியாபக அறிவாய் விரியுந்தோறும் சிவஒளி அவ்வறிவிற்கு வியாபகமாயே விளங்குதல் பற்றி, 'அதனைப் பறையக் கண்டேன்' என்றும் கூறினார். பறைதல் - பறத்தல். அஃது இங்கு வியாபித்தலைக் குறித்தது. இனி, 'பறைதல், சொல்லுதல்' எனக் கொண்டு, அஃதாவது, தன்னியல்பை அறிவித்தல்' என்பாரும் உளர். தன், சாரியை. "பறைய" என்னும் செயவென் எச்சம், 'பறையும்பொழுதில்' எனக் காலம் உணர்த்தி நின்றது. இதனுள்ளும் முன் மந்திரத்திற் போந்த அணியே வந்தது.*

*இதனால், சொரூப உதயத்தின் படிநிலைகள் கூறப்பட்டன.*

*2799.* ***தெளிவுரை :-*** *கவர்ச்சியான வடிவம், நிறம், மணம் முதலிய பிற பண்புகள் ஆகியவற்றை இயல்பாகவே கொண்டிருத்தலாலே குவளை மலர்கள் பிற மலர்களிலும் கிடைத்தற்கரிய சிறந்த மலர்களாகக் கருதப்படுகின்றன. அதுபோலவே, 'சத்தியம், ஞானம், அனந்தம், ஆனந்தம் என்னும் மெய்ப்பொருள் இய்லபுகளை தனது ஞானமாக அடைந்த உண்மைக் குருவே வீட்டின்பத்தைத் தர வல்லவனாவான்.*

***குறிப்புரை :-*** *குவளை மலரையே எல்லா மலர்களினும் சிறந்த மலராக*

**2799.** சொரூபம் உருவம் குணம்தொல் விழுங்கி
அரியன உற்பலம் ஆமாறு போல
மருவிய சத்தியாதி நான்கும் மதித்த
சொரூபக் குரவன் சுகோதயத் தானே. **9**

**2800.** உரையற்ற ஆனந்த மோனசொரூ பத்தன்
கரையற்ற சத்திஆதி காணில் அகாரம்
மருவுற் றுகாரம் மகாரம தாகி
உரையற்ற தாரத்தில் உள்ளொளி யாமே. **10**

---

*நாயனார் கூறிவருதலை மேலேயும் சில மந்திரங்களிற் கண்டோம். அதற்குக் காரணம், அது தீக்கைக் காலத்தில் அணியப்படுதல் பற்றிப்போலும்! "சொரூபம்" இரண்டில் முன்னது வடிவம். பின்னது உண்மை. உருவம் - நிறம். 'தொன்மை' என்பதில் விகுதி தொகுக்கப்பட்டது. 'தொல்லாக' என ஆக்கம் வருவிக்க. இயல்பை, "தொண்மை" என்றார். விழுங்குதல், கொண்டிருத்தல், "விழுங்கி" என்னும் எச்சம் காரணப் பொருளில் வந்தது. 'உற்பலம் அரியன ஆமாறு போல' என மாற்றிக் கொள்க. சத்தியம் முதலிய நான்கு மெய்ப்பொருளின் இயல்பாதல் மேலேயும் கூறப்பட்டது.*

*இதனால், 'சிவனைப் போல, 'சொரூபம்' எனச் சொல்லத்தக்கவன் உண்மையான ஞான குருவே' என்பது கூறப்பட்டது.*

*2800. தெளிவுரை :- ('சொரூபம்' என்பதைப் பொதுப்பட இயல்பு - என வைத்துக் காணும்பொழுது அது, 'மேனிலைச் சொரூபம், கீழ்நிலைச் சொரூபம்' என இரண்டாகும். அவற்றுள்) சிவனது மேனிலைச் சொரூபம் சொல்லைக் கடந்தது; இன்ப உருவானது. அநாதி; சிவமாவது கீழ்நிலைச் சொரூபம். 'அகார உகார மகாரம்' என்னும் பகுதிகளாயும், அங்ஙனம் பகுக்கப்படாத தொகுதியாயும் உள்ள தாரக மந்திரத்தின் உள்ளொளியாகும். ஆதி; சத்தியாவது.*

*குறிப்புரை :- 'உரையற்ற' எனப் போந்த இரண்டில் முன்னது "மோனம்" என்பதனை விளக்கியது. பின்னது 'வெளிப்படச் சொல்ல வாராதது' என்னும் பொருட்டாய் ஓங்காரத்தைக் குறித்தது. உள் ஒளி - அதனால் சுட்டப்படும் பொருள். 'தாரகம்' என்பது இடைக்குறைந்து நின்றது, 'கீழ்நிலைச் சொரூபமும் அளவுட் படாதது' என்றற்கு, "கரை யற்ற" என்றார். 'மருவுற்ற' என்பதில் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று.*

*சொல்லைக் கடந்ததாய், இன்பமாய் அநாதியாய், 'சிவம்' என நிற்பவனே, ஆராயுமிடத்து, அகார உகார மகாரங்களின் பொருளாயும், அவை ஒருங்கு தொக்க 'ஓம்' என்பதன் பொருளாயும், ஆதியாயும் 'சத்தி என நிற்பான்' என்பது இம்மந்திரத்தின் பொருள். சிவம் மேல்நிலைச் சொரூபம். சத்தி கீழ்நிலைச்*

**2801.** ஆமா றறிந்தேன் அகத்தின் அரும்பொருள்
போமா றறிந்தேன் புகுமாறும் ஈதென்றே
ஏமாப்ப தில்லை இனிஓர் இடமில்லை
நாமாம் முதல்வனும் நாமென லாமே. **11**

---

*சொருபம். இவ்விரண்டையும் அனுபவமாக உணர்ந்தவனே ஞானகுரு. அவனே 'சொரூபம்' எனப்படுவான். கீழ்நிலைச் சொரூபத்தை மட்டும் உணர்ந்தவன் கிரியா குரு. அவனும் ஒராற்றால் 'சொரூபம்' எனப்படுவான் என்றற்கு இது கூறினார். கூறவே, கீழ்நிலைச் சொரூபத்தைத் தானும் உணராதவன் குருவாகாமை விளங்கும்.*

*இதனால், மேல்நிலைச் சொருப உதயமே சொரூப உதயமாதல் அன்றிக் கீழ்நிலைச் சொருப உதயமும் ஓராற்றால் சொரூப உதயமாதல் கூறப்பட்டது.*

*இதனையடுத்துப் பதிப்புக்களில், "தலைநின்ற தாழ்வரைமீது தவம் செய்து" என்னும் மந்திரம் முன் தந்திரத்து 'வாய்மை' அதிகாரத்தில் வந்தது.*

*2801. **தெளிவுரை :-** பாச ஞான பசு ஞானங்களால் எளிதில் அறியப்படும் பொருள்கள் யாவும் நமக்குப் புறத்தே நிற்பனவாக, அந்த ஞானங்களால் அறிதற்கரிய பொருள் நம்மின் வேறாகாது நம் உள்ளேயிருத்தலை நான் அறிந்தேன். மேலும், அந்தப் பொருள் நம்மை விட்டு நீங்குதற் காரணத்தையும் நான் 'இது' என அறிந்தேன்; நீங்கிப் போன அது மீட்டும் வந்து புகுதற் காரணத்தையும் 'இது' என அறிந்தேன்; நீங்கிப் போன அது மீட்டும் வந்து புகுதற் காரணத்தையும் 'இது' என அறிந்தேன். இனி நான் 'யான், எனது' எனச் செருக்குற மாட்டேன்; அந்தப் பொருளை யன்றி வேறொரு புகலிடமும் எனக்கு இல்லை. இந்நிலைமை, 'முன்பு தானாய் இராது நாமாகவேயிருந்த முதல்வனும் நாமே' எனத் தக்கதாய் உள்ளது.*

*குறிப்புரை :- 'அகப்பொருள் அகத்தில் ஆமாறு அறிந்தேன்' எனவே, எளிய பொருள்கள் புறத்தேயிருத்தல் பெறப்பட்டது. போதல் - நீங்குதல். அது விளங்காது மறைந்திருந்தமை அதற்குக் காரணம். ஆன்ம அறிவு 'யான் எனது' எனச் செருக்கிமை. புகுதல், மறைவின்றி வெளிப்பட்டு விளங்குதல். அதற்குக் காரணம் அச்செருக்குகள் இன்றி, அடங்கி ஒடுங்கினமை. முன்பு செய்த குற்றங்களை இனிச் செய்யமாட்டேன்' என்பார். "ஏமாப்பதில்லை, இனி ஓர் இடமில்லை" என்றார். பெத்த காலத்தில் முதல்வன் வேறு என்றும், முத்தி காலத்தில் உயிர் வேறு விளங்காது முதல்வனாயே நிற்றலின், "முதல்வனும் நாம் எனலாம்" என்றும் கூறினார். இதனை மெய்கண்ட தேவர்,*

> *"அவனே தானே யாகிய அந்நெறி*
> *ஏக னாகி"* - **சிவஞானபோதம் - சூ. 10**

*என்றார். தம்மோடு தம் மாணாக்கரையும் உளப்படுத்த, "நாம்" என்றார்.*

*இதனால், சொரூப உதயத்தின் முடிநிலை இயல்பு கூறி முடிக்கப்பட்டது.*

## 20. ஊழ்

*'ஊழ்' என்பது 'முறை' எனப் பொருள் தரும். அஃது இடுகுறிப்பெயராய், ஓர் உயிர் முன்பு செய்த செயல் பின்பு காலம் வரும்பொழுது முறையானே அவ்வுயிருக்குப் பயனாய் வரும் முறையை உணர்த்தி நிற்கும். அது தவறுதல் இல்லாமை பற்றி, 'நியதி' என்றும், 'நன்மை, தீமை' என்னும், பாகுபாடு உடைமை பற்றி, 'பால்' அல்லது 'பான்மை' என்றும், தெய்வத்தால் வகுத்து கூடுதல் குறைதல் இன்றி, உள்ள அளவே பயனாதலின் 'உண்மை' என்றும் பிற காரணப் பெயர்களை உடையதாகும். இதனை, தலைப்பொறி, (தலை எழுத்து) என்றல் வழக்கு. அதனானே, 'பொறி' என்றும் சொல்லப்படும். தத்துவ முறையில், இது 'பிராரத்தகன்மம்' எனப்படுகின்றது.*

*உயிர்கள் செய்யும் செயல்கள் அவை நிகழும் பொழுது கட்புலனாய் நிற்றல் பற்றி, 'தூல கன்மம்' அல்லது 'தூலவினை' எனப்படும். அவை உடனே அழிந்ததுபோலத் தோன்றினாலும் தூலமாய்க் கட்புலனாகியிருந்த நிலை நீங்கிற்றேயன்றி, அந்தச் செயல் அடியோடு அழிந்து ஒழிந்துவிடவில்லை; சூக்குமமாய் இருக்கவே செய்கின்றன. அவை பயனாதற்குரிய காலம் வரும் வரையில் கிடையாகவே கிடக்கும். அந்நிலையில் அவை 'சஞ்சித கன்மம்' எனப் பெயர்பெறும். சஞ்சிதம் முழுதும் ஒரே பிறப்பில் பயனாய் வருதல் இல்லை. பக்குவப்பட்ட அளவே பயனாய் வரும். அதனால் அந்த வினைகள் அனைத்தின் பயனையும் நுகர, உயிர்கள் பல பிறப்புக்களை எடுக்கும். சஞ்சிதமும், பிராரத்தமும் கட்புலன் ஆகாமையால், 'அதிட்டம்' எனப்படும். அவை சூக்கும கன்மம் அல்லது சூக்கும வினையாகும்.*

*உயிர்கள் எவையேனும் சில செயல்களைச் செய்தல், நன்மைகளை வருவித்துக் கொள்ளவோ, அல்லது தீமைகளைப் போக்கிக் கொள்ளவோதாம். அங்ஙனம் எவையோ சில பயன்களை விரும்பிச் செய்தலால், அப்பொழுது செய்யும் செயல்கள் 'ஆகாமிய கன்மம்' அல்லது 'ஆகாமிய வினை' எனப்படும். ஆகாமிய கன்மம், புதுவினையும், சஞ்சிதக் கன்மம் பழவினையும் ஆகும். 'ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம்' என்பன முறையே செய்வினை, விடை வினை, நுகர் வினை' எனப்படும். அவற்றுள் ஆகாமியம் 'எதிர்வினை, ஏறுவினை' என்னும் பெயர்களாலும் சொல்லப்படும்.*

*கன்மங்கள் ஆகாமியமாய்த் தோன்றி சஞ்சிதமாய்க் கிடந்து பிராரத்தமாய் வந்து பயன் கொடுக்கும்.*

*பிராரத்தம் நன்மையாகவோ, தீமையாகவோ வந்து பயன் தரும் பொழுது 'அது நாம் முன்பு செய்த நன்மை அல்லது தீமை' என்றும், 'அதனை இறைவன் ஊட்டுவிக்கின்றான்' என்றும் எண்ணாமல், அப்பொழுது அதற்கு முன்னிலையாய் நிற்பவர்களையே காரணமாகக் கருதி, அவர்பால் விருப்பமோ,*

வெறுப்போ கொள்ளுதல் உலக மக்களது இயற்கை. அத்தகைய விருப்பு வெறுப்புக்கள் மனத்தளவில் நில்லாது சொல்லாயும், செயலாயும் நிகழும். அங்ஙனம் நிகழும் செயல்களே ஆகாமிய வினையாய்ப் பின் சஞ்சித பிராரத்தங்களாகும். வினை ஏறிக்கொண்டே போவது இவ்வகையில்தான், அதனால் ஞானிகள் பிராரத்தம் விளையும்பொழுது நன்மையைக் கண்டு விரும்புதலும், துன்பத்தைக் கண்டு வெறுத்தலும் இல்லை.

> இன்பத்துள் இன்பம் விழையாதான், துன்பத்துள்
> துன்பம் உறுதல் இலன். **– திருக்குறள், 629**

என்றார் திருவள்ளுவர்.

பிராரத்தம் உடல் வழியாக உயிரைத் தாங்குமேயல்லது நேரே உயிரைத் தாக்கமாட்டாது. அதனால் உடலையே தாமாகப் பற்றி மயங்கும் மயக்கத்தை உடையவர்கட்கே பிராரத்தம் உயிர் ஊழாய் வந்து தாக்கும். 'உடல் நாமல்ல' எனத் தெளிந்து, அதில் பற்றின்றியிருப்பவர்க்கு நிகழ்ந்து கழியும். மேலும் சிவ ஞானிகள் 'அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது' என்னும் தெளிவுடையவர்கள் ஆதலால், பிராரத்தம் அவர்கட்கு உடல் ஊழாகியே கழிந்துபோகும். அதனையே நாயனார் இவ்வதிகாரத்தால் விளக்குகின்றார்.

'சொரூப உதயம், முதிர்வு பெற்றவர்கட்கும் உடம்பு உள்ள அளவும் பிராரத்தவினை உளதாம்ஆதலானும் பிராரத்தம் விளையும்பொழுது அதனை அனுபவிக்கின்ற நிலையில் ஆகாமியம் தோன்றவே செய்யும் ஆதலாலும் ஞானியர்க்கு வினைத்தொடக்கு நீங்குதல் எங்ஙனம் என்னும் ஐயம் இதனால் நீக்கப்படுகின்றது.

திருவள்ளுவரும் 'மெய்யுணர்தலின் பின்னே அவா அறுத்தலை வைத்தார் அதனால், மெய்யுணர்ந்தார்க்கும் அவா உண்டாகும்' என்பது தெரிகின்றது.

பக்குவம் வரப்பெற்று உயிரை இறைவன் குருவாகி வந்து ஆட்கொள்ளும் பொழுது, பல பிறப்புக்களில் செய்யப்பட்டுக் குவிந்து கிடக்கின்ற சஞ்சித கன்மங்கள் அவனது ஞான நோக்கினால், "எரிமுன்னர் வைந்தூறுபோல" (திருக்குறள், 435) அழிந்தொழியும். ஆயினும், பிராரத்த வினை முன்பே முகந்து கொள்ளப்பட்டது. ஆகலின், அஃது உடல் உள்ளளவும் ஒழியாது, திருவருளைப் பெற்றவர்கட்கும் உடம்பு நிற்றற்குக் காரணம் முன்பே முகந்து கொள்ளப்பட்ட பிராரத்தம் முற்ற நுகரப்படாது, எஞ்சியிருத்தலேயாகும். அது நுகரப்பட்டு விட்டால், அப்பால் உடம்பு ஒரு நொடி நேரமும் நிலைத்து நில்லாது; வீழ்ந்து விடும்.

> "வினைப்போக மேஒரு தேகங்கண்டாய்;
> வினைதான் ஒழிந்தால் தினைப்போதளவும் நில்லாது"

*என்னும் பிற்காலப் பட்டினத்தடிகள் பாட்டில், "வினை" எனப்பட்டது பிராரத்த வினையே. எனவே உடம்பு இருந்தால் 'பிராரத்தம் உள்ளது' என்பதும், உடல் வீழ்ந்தால் 'பிராரத்தம் போய்விட்டது' என்பதும் பொருளாகும்.*

*இங்ஙனமாகவே, மெய்யுணர்வு பெற்றோர் ஒருஞான்றும் சலிப்பின்றி அவ்வுணர்வில் உறைந்து நிற்றல் வேண்டடம். அங்ஙனம் நிற்பின் பிராரத்தம் உயிரைத் தாக்காது உடல் ஊழாய்க் கழியும். பிராரத்தம் தாக்காதாகவே, ஆகாமியமும் ஏறாது. அதனால் அவர்கட்கு அடுத்த பிறப்பிற்கு வழியில்லை. அவ்வாறன்றிச் சிறிதே சலிப்பினும் பிராரத்தம் அற்றம் பார்த்து வந்து உயிரைத் தாக்கும். அது தாக்கவே பிரபஞ்சங்கள் தோன்றும். அவை தோன்றவே அவற்றின்மேல் விருப்பு வெறுப்புக்கள் உளவாகும். அவை உளவானால் பழைய கதை போல, 'ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம், பிறப்பு' என வரிசையாய்த் தொடர்ந்துவிடும். அதனால், 'ஞானிகள் ஞான நிலையிற் சலியார்' என்பதை நாயனார் இவ் வதிகாரத்தில் விளக்குகின்றார். இஃது ஆறு மந்திரங்களை யுடையது.*

**2802.** **செத்தில்என் சீவில்என் செஞ்சாந் தணியின்என்**
**மத்தகத் தேஉளி நாட்டி மறிக்கில் என்**
**வித்தக நந்தி விதிவழி யல்லது**
**தத்துவ ஞானிகள் தன்மைகுன் றாரே.** **1**

---

*2802. தெளிவுரை :- தங்கள் உடம்பைப் பிறர் செத்தினால் தான் என்ன? சீவினால்தான் என்ன? உச்சந் தலையிலே உளியை நாட்டி அடித்தாதான் என்ன? இவ்வாறன்றிச் சிவந்த சந்தனந்தைக் குளிர்ச்சியாகப் பூசினால்தான் என்ன? மெய்யுணர்வு எய்தினோர் ஞானகுரு உபதேசித்த உபதேச வழியில் நிற்றல் அல்லது, அதனினின்றும் பிறழார்.*

*குறிப்புரை :- செத்துதல் - ஆழப்போழ்தல் சீவுதல் - மேற்போக்காகப் போழ்தல். இவ்விரண்டிற்கும் வினைமுதலும் செயப்படுபொருளும் வருவிக்கப்பட்டன. மறித்தல் - அசையாதபடி தடுத்தல்; அஃது அறைதலைக் குறித்தது. மிகக் கொடிய துன்பங்கள் சிலவற்றைக் கூறும் முகத்தால் பல துன்பங்களையும் குறித்தவாறு. வித்தகம் - சதுரப்பாடு; அது ஞானம். தம் குருவாகிய நந்தி பெருமானைச் சுட்டினாராயினும், பொதுப்பட, 'குரு' என்றலே கருத்து. விதி - நெறிமுறை. 'நந்தி சொல்லிய நெறிமுறை' என்க. அஃது, 'உனக்கு இப்பொழுது வரும் துன்ப இன்பங்கள் எல்லாம் நீ முன்பு ஓர் உடலில் நின்று செய்த வினை இவ்வுடலை வந்து பற்றுவனவே. ஆதலின் அவை பற்றி நீ கவலுதலோ மகிழ்தலோ கூடாது' என்ப. இவ்விடத்தில்,*

*"ஆனாச் செல்வத்து வானோர் இன்பம்*
*அதுவே எய்தினும் எய்துக; .................*

**2803.** தான்முன்னம் செய்த விதிவழி தான் அல்லால்
வான்முன்னம் செய்தங்கு வைத்ததோர் மாட்டில்லை
கோன்முன்னம் சென்னி குறிவழி யேசென்று
நான்முன்னம் செய்ததே நன்னிலம் ஆயதே. **2**

---

*வரையில் தண்டத்து மாறாக் கடுந்துயர்*
*நிரயம் சேரினும்சேர்க; உரைநடை*
*ஏனோர் என்னை ஆனாது விரும்பி,*
*'நல்லன்' எனினும் என்க; அவரே*
*'அல்லன்' எனினும் என்க; நில்லாத்*
*திருவொடு திளைத்துப் பெருவளம் சிதையாது*
*இன்பத் தழுந்தினும் அழுந்துக; அல்லாத்*
*துன்பம் துதையினும் துதைக; .......... ஒன்றினும்*
*வேண்டலும் இலனே; வெறுத்தலும் இலனே,*
*ஆண்டகைக் குரிசில்நின் அடியரொடு குழுமித்*
*தெய்வக் கூத்தும், நின் செய்யபொற் பாதமும்*
*அடையவும், அணுகவும் பெற்ற*
*கிடையாச் செல்வம் கிடைத்த லானே"*

*- பட்டினத்துப் பிள்ளையார் கோயில் நான்மணி மாலை - 36*

*என்னும் அனுபவ மொழியையும்,*

*"கேடும், ஆக்கமும் கெட்ட திருவினார்,*
*ஓடும், செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்"*

*- தி.12 திருக்கூட்டச் சிறப்பு - 8*

*என அவ்வனுபவம் உடையாரது இயல்பை எடுத்து விளக்கிய திருமொழியையும் ஒப்புநோக்கி உணர்க.*

*2803.* **தெளிவுரை :-** *ஒவ்வோர் உயிரும் தான் தான் முற்பிறப்பில் செய்த வினையின் பயனைத்தான் இப்பிறப்பில் அனுபவிக்கின்றதே தவிர, இப்பிறப்பில் சிலர் அவ்வுயிர்கட்கு நன்மை தீமைகளைப் புதியன வாகக் கொண்டுவந்து சேர்ப்பிக்கின்றார்கள் இல்லை. (ஆகவே, அவைகளைப் பிறர் கொண்டு வந்து சேர்ப்பிப்பதாகக் கருதி அவர்களை விரும்புதலோ, வெறுத்தலோ செய்தால் அச்செயல்களே அடுத்த பிறப்பிற்குக் காரணமான ஆகாமிய வினையாய்விடும்). இதை உணர்ந்த நான் எனது முன் வினையின் பயனைக் கூட்டுவிக்கின்ற முதல்வன் என் தலையில் எழுதிய எழுத்துப்படியே இன்ப துன்பங்களை அனுபவிக்கும் பொழுதெல்லாம் அவைகளை அவனது அருளாகவே கருதி அனுபவித்ததல்லது இன்பத்தில் மகிழ்ச்சியோ, துன்பத்தில் வாட்டமோ*

**2804.** ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே
கூறிட்டுக் கொண்டு சுமந்தழி வாரில்லை
நீறிட்ட மேனி நிமிர்சடை நந்தியை
பேறிட் டென் உள்ளம் பிரியகி லாதே. **3**

---

*கொண்டதில்லை. அவ்வாறு செய்த எனது செயல் எனது நன்மைக்குச் சிறந்த தொரு காரணமாயிற்று.*

***குறிப்புரை :–*** *'எனது நன்மை' என்றது, வினைத் தொடர்ச்சி அறுபட்டதை, "தான்" என்றது உயிர்களைப் பொதுப்படச் சுட்டியது; விதி - வினை. "வழி" என்றது பயனை. 'அனுபவித்தல் அல்லால்' என ஒரு சொல் வருவிக்க. "வான்" என்பது 'வெளி' என்னும் பொருட்டாய்ப் புறத்துள்ளாரைக் குறித்தது. மாட்டு - தொடர்பு. 'சென்னியில் குறித்த வழியே' என்க. சென்று - செல்லாநின்று; என்பது; 'செல்லும் பொழுது' என்றபடி "செய்தது" எனப் பொதுப்படக் கூறினாராயினும், "கோன் முன்னம் குறித்த வழியே சென்றேன்" என்றதனால் அது அவன் அருள் வழி நின்றதையே குறித்தது. நிலம் - நிலைக்களம். அது, 'சிறந்த காரணம்' எனப் பொருள் தந்தது. நாயனார் சாத்தனூரில் பாதுகாப்பில் வைத்த தம்முடைய உடம்பு காணாமற் போனதையும், தாம் மூலம் உடம்பில் இருக்க நேர்ந்ததையும் சிவன் அருளாகவே கருதி ஏற்றமை நினைக்கத்தக்கது.*

*இதனால், ஊழின் பயனை அனுபவிக்கும்பொழுது அதனை, அவன் அருள்' என்று அனுபவிக்கின் அஃது உடல் ஊழாய்க் கழிதலோடு, ஆகாமியமும் விளையாது' என்பது கூறப்பட்டது.*

*சிவாய நமஎன்று சிந்தித் திருப்போர்க்கு*
*அபாயம் ஒருநாளும் இல்லை - உபாயம்*
*இதுவே மதியாகும்; அல்லாத எல்லாம்*
*விதியாய் மதியாய் விடும்.* ***– நல்வழி, 13***

*என்ற ஔவையார் வாக்கு இங்கு நினைவு கூரத்தக்கது. இவ்வெண்பாவில் "அபாயம்" என்றது ஊழின் தாக்குதலும், அதனால் விளையும் ஆகாமியமுமாம். "விதியை மதியால் வெல்லலாம்" என்னும் பழமொழியில் 'மதி' எனப்பட்டது. 'சிவாயநம' எனச் சிந்தித்திருப்பதே எனவும், அஃது அல்லாத வழியெல்லாம் அந்த ஊழ் உண்டாக்கும் மதியே' எனவும் ஔவையார் விளக்கியிருத்தல் அறியத்தக்கது. ஊழ்வினை நன்மையாகவோ, தீமையாகவோ வந்து விளையும் பொழுதெல்லாம் அதனைச் "சிவாயநம" என்று சொல்லி ஏற்கவேண்டும் என்கின்றார் ஔவையார்.*

***2804. தெளிவுரை :–*** *(ஆற்றில் மணல் சமப்பரப்பாய்ப் பரந்திருப்பின் அஃது அதற்கு ஒரு சுமையாய் இராது. ஆனால் ஆறு சமமாய் இல்லாமையால், அதில்*

**2805.** வானின்றிடிக்கில்என் மாகடல் பொங்கில்என்
கானின்ற செந்தீக் கலந்துடன் வேகில்என்
தானொன்றி மாருதம் சண்டம் அடிக்கில்என்
நானொன்றி நாதனை நாடுவன் நானே. **4**

**2806.** ஆணை துரத்தில்என் அம்பூ டறுக்கில்என்
கானத் துழுவை கலந்து வளைக்கில்என்
ஏனைப் பதியினில் எம்பெரு மான்வைத்த
ஞானத் துழவினை நான்உழு வேனே. **5**

---

*வெள்ளம் வரும்பொழுது பள்ளம் மேடுகள் மாறி மாறி அமைய சில இடங்கள் பெரிய மேடுகள் ஆகிவிடுகின்றன). அந்த மேடுகளை அந்த ஆறு தான் சுமக்க வேண்டுமேயன்றி, அவைகளைப் பங்கு செய்து எடுத்துக் கொண்டு போய்ச் சுமப்பவர் ஒருவரும் இல்லை. (அதுபோல, அவரவர் செய்த வினையின் பயனை அவரவரே அனுபவிக்க வேண்டுமன்றி அனுபவிப்பவர் வேறுயாரும் இலர். இதனை நன்குணர்ந்த எனது உள்ளம்) சிவனைப் பெறற்கரிய பேறாக உணர்ந்து அவனைத் தவிர வேறொன்றைப் பற்றுதலை ஒழிந்தது;*

***குறிப்புரை :-** ஆறிட்ட நுண் மணலாறு - ஆற்றில் உள்ள நுண்ணிய மணல் போல் அளவற்ற கன்ம பலன். 'அதனால், ஊழும் என்னைத் தாக்கவில்லை. அத் தாக்குதலால் தோன்றக்கூடிய ஆகாமியமும் தோன்றவில்லை' என்பது குறிப்பெச்சம். **<u>"நீறிட்ட மேனி" என்றது, 'அவன் தன் அடியார்களது வினையை பொடியாக்குபவன்' என்னும் குறிப்பையும், "நிமிர் சடை" என்றது, உலகப்பற்றை நீக்குபவன்" என்னும் குறிப்பையும் உடையன</u>**. பேறிட்டு - பேறாதலையிட்டு. 'இட்டு' என்பது காரணத்தை உணர்த்தி வருதல் நாட்டு வழக்கு. முன் இரண்டடிகள் ஒட்டணியாய் நின்றமையால், அதற்குரிய பொருள் வருவித்துரைக்கப்பட்டது. ஆறு - உயிர். அது சமம் இன்மை உயிர் சமபுத்தி உடையதாகாமை. வெள்ளம் - ஊழ். மேடு பள்ளங்கள் - ஊழால் விளையும் ஆகாமிய வினைகள். 'சுமவாதே' என்னும் ஏகாரம், அசை.*

*இதனால், அவரவர் வினை அவரவருக்கே பயனாதல் உவமை முகத்தால் விளக்கப்பட்டது. சித்திற்குச் சடம் உவமை யாதலும் உவமத்திற்கு ஏற்புடையதே. அதிகாரப் பொருளை வலியுறுத்தற்கு அதனை வெல்லுமாறும் உடன் கூறப்பட்டது.*

***2805, 2806. தெளிவுரை :-** இவ் இருமந்திரங்களின் பொருளும் வெளிப்படை.*

***குறிப்புரை :-** 'இயற்கைச் சீற்றங்கள்' என உலகத்தார் வழங்குவனவாகிய பெருங்கேட்டுச் செயல்கள் தேவர் முதலியோர்க்கும் பேரச்சம் விளைப்பன வாயினும் சிவனடியார் உள்ளங்கள் சிறிதும் அஞ்சமாட்டா' என்பது முன்*

*மந்திரத்திலும், 'கொடு விலங்குகளாலும், பகைவராலும் வரும் கேடுகட்கும் அவர்களது உள்ளம் நடுங்கா' என்பது பின் மந்திரத்திலும் சொல்லப்பட்டன.*

*"ஒருவர் தமர் நாம்;*
*அஞ்சுவது யாதொன்றும் இல்லை;*
*அஞ்ச வருவதும் இல்லை;....."* **- தி.4 ப.2**

***வானம் துளங்கில் என்? மண்கம்பம் ஆகில் என்?***
***மால்வரையும்***
***தானம் துளங்கித் தலைதடு மாறில் என்?***
***தண்கடலும்***
***மீனம் படில் என்? விரிசுடர் வீழில் என்?***
***வேலை நஞ்சுண்டு***
***ஊனம்ஒன் றில்லா ஒருவனுக்கு ஆட்பட்ட***
***உத்தமர்க்கே.*** **- தி.4 ப.112 பா.8**

***மண்பா தலம்புக்கு, மால்கடல்மூடி, மற்***
***றேழுலகும்***
***விண்பால் திசைகெட்டு, இருசுடர் வீழினும்***
***அஞ்சல் நெஞ்சே!***
***திண்பால் நமக்கொன்று கண்டோம்;***
***திருப்பா திரிப்புலியூர்க்***
***கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான்***
***கழலிணையே.*** **- தி.5 ப.94 பா.9**

***மலையே வந்து விழினும், மனிதர்காள்***
***நிலையி னின்று கலந்துப் பெறுதிரே?***
***தலைவ னாகியஈசன் தமர்களைக்***
***கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே?*** **- தி.5 ப.91 பா.5**

*என்னும் திருமொழிகளை இம்மந்திரங்களோடு ஒப்பிடுக.*

*கான், கானம் - காடு. மாருதம் - காற்று. சண்டம் - வேகம். 'சண்டமாய்' என ஆக்கம் விரிக்க. "நான்" இரண்டில் முன்னது 'நான்' என்னும் போதம். உழுவை - புலி ஏனைப் பதி - உயிர்கள் வாழும் ஊர் அல்லாத வேறோர் ஊர். அஃது வாழ்வது; திருவருள். 'என்னையும்' 'அதில் கொண்டு போய் வைத்தான் அங்கே நான் ஞானத் தொழிலைச் செய்து கொண்டிருக்கின்றேன். அதனால், இடி வீழ்தல முதலிய அழிவு நிகழ்ச்சிகளைக் கண்டு என் உள்ளம் துணுக்குறாது' என்பதாம். ஞானத் தொழில் - ஞானச் செய்தி. அவை தசகாரியம். ஆகவே, இதனால் வருகின்ற அதிகாரத்திற்கும் தோற்றுவாய் செய்யப்பட்டதாம். "உழுவேன்" என்றது 'செய்வேன்' என்னும் அளவாய் நின்றது. ஞானத்துழவு - ஞான வழிபாடு -*

**2807.** கூடு கெடின்மற்றோர் கூடுசெய் வான்உளன்
நாடு கெடினும் நமர்கெடு வாரில்லை
விடு கெடின்மற்றோர் வீடுபுக் காலொக்கும்
பாடது நந்தி பரிசறி வார்கட்கே. **6**

---

*ஞானம் அடைவதற்குரிய ஆய்வு. அம்பு ஊடறுக்கில் என் - அம்பு ஊடுருவிப் பாய்ந்தால் என்? ஏனைப்பதி - ஞானபூமி.*

*இதனால், ஞானிகள் தமக்கு வரும் ஊழாலேயன்றி உலகிற்கு வரும் ஊழாலும் உள்ளம் கலங்காமை கூறப்பட்டது.*

***2807. தெளிவுரை :-*** *குருவருள் வாய்க்கப் பெற்றவர்கட்கு, 'ஓர் உயிரின் உடம்பு அழிந்துவிட்டால், மற்றோர் உடம்பை அவைகட்குடிப படைத்துக் கொடுக்க ஒருவன் இருக்கின்றான்' என்பது தெளிவாம். ஆதலால், 'இறப்பு' என்பது அவர்கள் உள்ளத்திற்கு, 'உயிர்கள் அழிந்துபோலதன்று; மற்று, ஒருநழட எவையேனும் காரணத்தால் அழிவுறுமாயின், அதில் உள்ளவர்கள் வேறு நாட்டில் சென்று வாழ்தல் போல்வதும், ஓர் இல்லம் இடிந்து பாழாயின், அதில் வாழ்ந்தவர்கள் வேறோர் இல்லத்தில் குடிபுகுதல் போல்வதுமேயாகும்'.*

***குறிப்புரை :-*** *ஆகவே அவர்கள், உயிர்கள் எடுத்த பிறப்பில் அனுபவிக்கும் இன்ப துன்பங்கள் அவை முற்பிறப்புக்களில் செய்த வினையின் பயனே' எனத் தெளிந்து, அனைத்துயிர்கட்கும் அவற்றின் வினைப் பயனை ஊட்டுவிக்கின்ற முதல்வன் திருவருளை உணர்ந்து நிற்குமாற்றால் தங்கள் ஊழினை வென்றிருப்பார்கள் என்பது கருத்து. "நந்தி பரிசறிவார்க்கு" என்பதை முதலிற் கூட்டி, "உளன்" என்பதன்பின் 'ஆம்' என்னும் சொல்லெச்சம் வருவித்து, 'பாடு இல்லை ஒக்கும்' என முடிக்க. "இல்லை" என்பது பண்பு; முற்றன்று. பாடு - இறப்பு. அது, பகுதிப்பொருள் விகுதி.*

*இதனால், 'முன் மந்திரத்தில் ஊழை வெல்லுதற்குத் தாம் செய்யும் செயலையே ஞானிகள் செய்து ஊழை வெல்வர்' என்பது குறிப்பால் உணர்த்தி முடிக்கப்பட்டது. ஆகவே மேற்கூறியபடி வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாயும் இதன்கண் அமைந்ததாம்.*

## 21. சிவ ரூபம்

*முன் அதிகாரத்தில், 'ஞானச் செய்திகள்' எனப்படும் தச காரியங்கள் தோற்றுவாய் செய்யப்பட்டன. தக காரியங்களைப் படிமுறையாகச் செய்து மேல் ஏறினோர் முடிவாக அடைவது 'சிவபோகம்' என்பது. உடம்புள்ள வரையில் சிவபோகத்திலே எஞ்ஞான்றும் இருத்தல் இயலாது. ஒரோ ஒருகால் அதற்குக் கீழ் உள்ள 'சிவ யோகம்' என்னும் நிலைக்கு வரவேண்டியேயிருக்கும். அந்நிலையில் பழைய பழக்கத்தால் ஏனையோர் போலப் பிராரத்தத்தால் உலகினை நோக்குதல் நிகழும். அந்நிகழ்ச்சி தொடர்ந்து வலுப்பெறா வண்ணம் சிவயோகத்திலே நிற்றல் வேண்டும். அதன் பொருட்டு ஞானிகள் அதற்குக் கீழ் அதற்குப் படிகளாய் உள்ள சிவரூப சிவதரிசனங்களையே செய்து வேறொன்றைச் செய்யார். அவற்றையே இவ்வதிகாரத்தாலும் வருகின்ற அதிகாரத்தாலும் நாயனார் அருளிச் செய்கின்றார்.*

*முன் தந்திரத்தில் 'சுத்த நனவாதி பருவம்' எனக் கூறப்பட்ட 'சகலத்தில் சுத்தம்' எனப்படும் நின்மலாவத்தைகள் தச காரியங்களே. அவை பந்தமாகிய கீழ் நிலையில் உள்ளோர் அதனின்றும் நீங்கி, வீடாகிய மேல்நிலையை அடையும் முறையாக அங்குக் கூறப்பட்டன. இங்கு அவை மேல் நிலையை எய்தினோர் பழைய பழக்கத்தால் தவறிக் கீழ்நிலையில் வீழாதபடி காத்துக் கொள்ளும் முறையாகக் கூறப்படுகின்றன. அதனாலன்றோ, சிவரூபத்திற்குக் கீழ் உள்ள நிலைகள் இங்குக் கூறப்படவில்லை? இது, வாணிகம் செய்வாருள் பெரும்பாலோர் பொருளீட்டி வாழ்க்கையை நடத்துதற்பொருட்டே செய்வாராயினும், ஒரு சிலர் அவ்வாறன்றி, முன்பே ஈட்டி வைத்துள்ள பொருள் நிலைத்து நிற்றற்பொருட்டே செய்தல் போல்வதாகும். ஆக இருசாரரையும் ஒப்பக் கருதுதல் பிழையாகும். அஃது அறியாதார் பெரியோரையும் ஏனையாரோடு ஒப்பக் கருதிக் குற்றப்படுவர். இவ்வதிகாரம் மூன்று மந்திரங்களையுடையது. சிவரூபம் - உயிர்களின் அறிவுள் அறிவாய்ச் சிவன் இருத்தலை உணர்தல். 'சிவ தரிசனம், சிவரூப தரிசனம்' என்பன பாடம் அல்ல.*

**2808.** சிந்தைய தென்னச் சிவன் என்ன வேறில்லை
சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படும்
சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச்
சிந்தையி னுள்ளே சிவன்இருந் தானே. **1**

---

*2808. தெளிவுரை :- அறிவுப் பொருளாகிய உயிரும், அறிவுக்கறிவாய் உள்ள சிவனும் பொருளால் வேறேயாயினும், உடல் உயிர் போல ஒன்று பட்டு நிற்கும் கலப்பினால் வேறு நிற்பவர் அல்லர். ஆகவே, உயிரினது அறிவினுள்ளே, விறகில் தீயும், பாலில் நெய்யும் போலத் தோன்றாது மறைந்து நிற்கும் சிவன் அவ்விடத்தில் தோன்றவும் வாய்ப்பு உண்டு. அதனால், தங்கள் அறிவு மாசற்று*

**2809.** வாக்கும் மனமும் மறைந்த மறைப்பொருள்
நோக்குமின் நோக்கப் படும்பொருள் நுண்ணிது
போக்கொன்றும் இல்லை வரவில்லை கேடில்லை
ஆக்கமும் அத்தனை ஆய்ந்துகொள் வார்க்கே. 2

---

*விளங்கும்படி அவ்வுண்மை உணர்வில் உறைத்து நிற்க வல்லவர்கட்கு, கடைய வல்லவர்க்கு விறகில் தீயும், பாலில் நெய்யும் வெளிப்படுதல் ஒருதலையாதல் போல அவர்களது அறிவில் சிவன் வெளிப்பட்டு விளங்குதல் ஒருதலை.*

***குறிப்புரை :-***

*விறகில் தீயினன், பாலிற் படுநெய்போல்*
*மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்;*
*உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்*
*முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே. - தி.5 ப.90 பா.10*

*என்னும் அப்பர் அருள்மொழியை நெஞ்சினுள் ஆழப்பதித்துக் கொள்க. தெளிதல் இரண்டில் முன்னது மாசு நீங்கி, விளக்கம் பெறுதலையும், உறுதிப்பட உணர்தலையும் குறித்தன. அவை ஈரிடத்தும் செயவென் எச்சமாய் நின்றவற்றில் முன்னது காரியப் பொருட்டாய வினை யெச்சமாயே நின்றது; பின்னது தொழிற் பெயர்ப்பொருள் தந்தது. "இருந்தான்" என்னும் இறந்த கால வினை தெளிவை விளக்கி நின்றது. ஏகாரம், தேற்றம். எனவே, 'மெய்யுணர்ந்தோர் ஒருஞான்றும் தங்கள் சிந்தையில் சிவன் இருத்தலை மறவார்; அதனால், அவர் மீள ஒரு ஞான்றும் பந்தத்தில் வீழார்' என்பது குறிப்பெச்சமாயிற்று.*

*இதனால், ஞானிகள் சிவரூப நிலையினின்றும் வழுவாமை கூறப்பட்டது.*

***2809. தெளிவுரை :-*** *(முன் மந்திரத்தில் சிந்தையினுள்ளே இருப்பதாகச் சொல்லிய சிவன்) வாக்கும், மனமும் அடங்கி ஒடுங்கி நிற்கும் நிலையில் உள்ள ஓர் உள்ளீடான பொருள். ஆகவே, அவனை நோக்கும் முறை யறிந்து நோக்குங்கள். அங்ஙனம் நோக்கும்பொழுது அந்நோக்கிற்கு அவன் மிக நுண்ணிதாய்ப் புலனாகும் பொருளாவான். புலனாகியபின் அவன் போதல் இல்லை. புலனாகும் பொழுதும் புதியனாய் அப்பொழுது தான் வந்து புகுதலும் இல்லை (முன்பே உள்ளவன் என்பதாம்). அவனுக்கு என்றும் அழிவில்லை, 'அழிவில்லை' எனவே தோற்றமும் இல்லையாம். நன்மையாவன பலவும் அவனை அவ்வாற்றால் நுணுகி அடைவார்க்கே உளவாம்.*

***குறிப்புரை :-*** *மறைந்தவிடத்துத் தோன்றும் பொருளை மறைந்ததனால் தோன்றும் பொருளாக உபசரித்தார். ஆதலின், மறைந்த பொருள் என்பதில்*

*பெயரெச்சம் காரியப்பெயர் கொண்டதாம். மறைப்பொருள் - மறைவை உடைய பொருள். "மறைப்பொருள்" என்பது முன் மந்திரத்தினின்றும் வந்த 'சிவன்' என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் நின்றது. பொருளை 'வாக்கு மனம் மறைந்தது' என்றும், 'மறைவுடையது' என்றும் கூறிப்பின், "நோக்குமின்" என்றதனால், "நோக்குமாற்றால்" என்பது போந்தது. நோக்குமாறாவது பிற ஒளிகள் அடங்கியொடுங்க நிற்கும் ஞாயிற்றைப் பிற ஒளி கொண்டு நோக்காது அதன் ஒளியையே கொண்டு நோக்குதல் போல அதன் ஒளியையே கொண்டு நோக்குதல். 'அவ்வொளி அருள் ஒளி என்க. அது, நோக்கப்படும் பொருளாய், நுண்ணிதாம் என்க. நன்மைகளாவன ஆசையறுதலும், அதனால் துன்பம் நீங்கலும், அன்பு வளர்தலும், இன்பம் மிகுத்தலுமாம். இறுதியில், 'உளவாம்' என்னும் பயனிலை வருவிக்க. 'முன்னர் அஃறிணையாகக் கூறியனயாவும் 'சிவனே' என்றற்கு ஈற்றில், "அத்தன்" என உயர்திணையாகக் கூறினார்.*

*இதனால், அருள் ஒளியாலே சிவரூபம் தோன்றுதல் கூறும் முகத்தால், ஞானிகள் அருளாலல்லது எதனையும் நோக்காமை கூறப்பட்டது.*

*அருளே உலகெல்லாம் ஆள்விப்ப(து); ஈசன்*
*அருளே பிறப்பறுக்க தானால் - அருளாலே*
*மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன்; எஞ்ஞான்றும்*
*எப்பொருளும் ஆவ தெனக்கு. - தி.11 அற்புதத் திருவந்தாதி - 9*

*என்னும் அம்மை திருமொழியையும்,*

*"அருளால் எவையும்பார் என்றான்; - அத்தை"*
*அறியாதே, சுட்டிஎன் னறிவாலே பார்த்தேன்;*
*இருளான பொருள்கண்ட தல்லால், - கண்ட*
*என்னையும் கண்டிலன், என்னேடி தோழி"*

*என்னும் தாயுமானவர் வாக்கையும் (தாயுமானவர் பாடல் - ஆனந்தக் களிப்பு, 13) நினைக.*

***2810. தெளிவுரை :-** (இங்குத் தொடர்ந்து சொல்லிக் கொண்டு வருகின்ற சிவன்) உலகங்கள் பலவற்றிலும் மேல் உள்ள உலகில் உள்ளான். இனிமேல் உள்ள பொருளுக்கும் மேலாய் அவற்றைக் கடந்தும் இருக்கின்றான். ஆயினும் தனக்குக் கீழே உள்ள எல்லா உலகங்களிலும் நிறைந்து நின்று உயிர்களின் பிறவித் தொடர்ச்சி அறுபட அருள் புரிகின்றான். அஃது எங்ஙனம் எனின், பிறிதொரு பொருளால் வெல்லப்படாத ஆற்றலையும், பிறர் அறவிக்க வேண்டாது தானே எல்லாவற்றையும், ஒருங்கே அறியும் அறிவினையும் உடையனாயும், அனைத்துப் பொருளையும் ஆதாரமாய் நின்று தாங்குபவனாயும், பாசங்களை அரித்தல் தெரியாமலே அரிப்பவனாயும் இருந்து.*

**2810.** பரனாய்ப் பராபர னாகிஅப் பாற்சென்று
உரனாய் வழக்கற ஒண்சுடர் தானாய்த்
தரனாய்த் தனாதென ஆறறி வொண்ணா
அரனாய் உலகில் அருள்புரிந் தானே. **3**

---

***குறிப்புரை :-*** *பரன் - மேலானவன். இங்கு இஃது இடம் பற்றி வந்தது. அவ்விடமாவது நாத தத்துவன். 'பராற் பரன்' என்பது "பராபரன்" என மருவி வந்தது. 'அப்பாற் சென்றும்' என்னும் சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. 'சென்றும் உலகில் அருள் புரிந்தான்' என இயைத்து முடிக்க. 'ஆகவே, அவனை வாக்கு மனங்களைக் கடந்தவன்' என எண்ணிச் சோர்ந்தொழியாது, மேற்கூறியவாறு நோக்குமாற்றால் நோக்கிக் காணுதல் கூடும்' என்பதும், 'ஞானிகள் அவனை அங்ஙனம் கண்டிருப்பர்' என்பதும் கருத்துக்களாம். உரம் - அறிவு. 'வழக்கு' எனினும், 'தொடர்ச்சி' எனினும் ஒக்கும். அது பிறவித் தொடர்ச்சியையே குறித்தது. ஆறு - வழி. தனாதென ஆறு அறிவொண்ணா - தான் கையாளும் வழி இது என அறிய ஒண்ணாமல், 'ஒண்ணாது' என்பது ஈறு குறைந்து நின்றது. அரன் - பாசத்தை அரிப்பவன். "உரனாய்............... அரனாய்" என்றது. சிவன் உலகில் நிற்கும் நிலையில் கொண்டிருக்கும் இயல்புகளை விரித்தது. அதனால், அவை அவன் அருள் புரிதற்குக் காரணமாக, அதற்குப் பின் வைத்து உரைக்கப்பட்டது. தரனாய் - யாவற்றிற்கும் ஆதாரமாய். ஆறறிவு - ஐம்புலனறிவும், மன அறிவும்.*

*இதனால், சிவன் பொருள் நிலையில் வாக்கு மனங்களைக் கடந்தவனாயினும், அருள் நிலையில் உலகில் எங்கணும் நிறைந்து நிற்றலால் இங்குள்ளார் அவன் உண்மை உணர்தல் கூடும் என்பது கூறப்பட்டது.*

## 22. சிவ தரிசனம்

*இனிச் சிவரூபத்தை அடுத்து, முறையானே சிவ தரிசனம் கூறுகின்றார். சிவன் சிந்தையுள் நிற்குமாற்றை மறவாது உணர்தலே இங்குச் சிவரூபம் ஆனாற்போல, சிவனது இயல்புகளை மறவாமல் மீள மீள நினைவு கூர்தலே இங்குச் சிவ தரிசனம் ஆதலின் இயல்புகளை இங்கு விரிக்கின்றார். இஃது எட்டு மந்திரங்களையுடையது.*

**2811.** ஓதின் மயிர்க்கால் தொறும்அமு தூறிய
பேதம் அபேதம் பிறழாத ஆனந்தம்
ஆதி சொரூபங்கள் மூன்றகன் றப்பாலை
வேதம தோதும் சொரூபிதன் மேன்மையே. 1

---

*2811. தெளிவுரை :- ஐந்தொழில் செய்யக் கருதிய காலத்துக் கொள்ளப்படுகின்ற 'உருவம், அருவுருவம், அருவம் என்னும் மூவகை வடிவங்களும் இன்றி, அவற்றைக் கடந்துள்ள, உண்மை நூல்களால் கூறப்படுகின்ற சொரூப சிவனது மேலான இயல்பாவது, அவனைத் தன்னின் வேறாகவாயினும், ஒன்றாகவாயினும் உணரும்பொழுது அவ்வாறு உணரும் உயிரினது மயிர்க்கால்தோறும் தவறாது ஊறித் ததும்புகின்ற அமுதம்போலும் பேரின்பமேயாம்.*

*குறிப்புரை :- ஆதி - குறிப்பிட்ட ஒரு காலம் - அக்காலத்தில் வடிவம், பெயர். தொழில் இவைகளைக் கொண்டு நிற்கின்ற சிவன். 'தடத்த சிவன்' எனப்படுவான். அவைகளுள் ஒன்றும் இன்றித் தன்னியல்பில் நிற்கின்ற சிவன் 'சொரூப சிவன்' எனப்படுவான். அவன் அநாதி, மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி, உரைக்க. "சொரூபங்கள்" என்றது வடிவங்களை. மூன்றும் என்னும் முற்றும்மை தொக்கது. ஓதுதல், இங்கு உணர்தலாகிய தன் காரியம் உணர்த்தி நின்றது. 'ஓதும்' என்பது பாடம் அன்று. அமுது ஊறிய - 'அமுதம்போல ஊறிய' என உவமத் தொகை. பேதம், வேறாக உணர்தல். அபேதம், ஒன்றாக உணர்தல். முன்னது முதல்நிலை. பின்னது முடிநிலை. இவற்றின் பின், 'இரண்டிலும்' என்னும் தொகைச் சொல் வருவிக்க இரண்டினும் உளதாகும். ஆனந்தம் முறையே காதலன் காதலியைக் களவுக் காலத்து இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் இடந்தலைப்பாடு முதலிய காலங்களிலும், கற்புக் காலத்துப் பிரிந்து மீண்ட பின்னும் காணும் பொழுதும், கூடிய பொழுதும் உளவாகும் இன்பங்களை ஒக்கும். அவற்றிடையே வேற்றுமை உளதாயினும் இன்பம் ஆதலில் வேற்றுமையின்மை பற்றி, "பிறழாத ஆனந்தம்" என்றார். 'சிந்தையுள்ளே நிற்கும் சிவனை ஞானிகள் சுகோதயனாகவும், சுகவாரியாகவும் உணர்ந்து இன்புறுவர்' என்பதாம்.*

*இதனால், சிந்தையில் உள்ள சிவனது இன்ப நிலையை உணர்தல் கூறப்பட்டது.*

**2812. உணர்வும் அவனே உயிரும் அவனே**
**புணர்வும் அவனே புலவி அவனே**
**இணரும் அவன் தன்னை எண்ணலும் ஆகான்**
**துணரின் மலர்க்கந்தம் துன்னிநின் றானே. 2**

---

*2812. **தெளிவுரை :-** பொருள்களை உணர்தற் கருவியாகிய உணர்வும், அவ்வுணர்வினால் பொருள்களை உணர்கின்ற உயிரும் உணரப்பட்ட பொருள்களை விரும்பும் விருப்பமும், வெறுக்கின்ற வெறுப்பும் எல்லாம் சிவன் ஒருவனே. அனைத்துப் பொருள்களையும் தக்கவாற்றால் இயைத்துச் செயற்படுத்துகின்ற அவன் பிறர் ஒருவராலும் தனியே நினைக்கவும் வாரான். ஆயினும் கொத்தாய் உள்ள மலர்களினின்றும் மணம் கமழ்வது போல அனைத்துப் பொருளின் செயற்பாட்டில் அவன் விளங்குகின்றான்.*

***குறிப்புரை :-*** *'அவனை அத்தன்மையனாக உணர்தல் வேண்டும்; ஞானிகள் அவ்வாறு உணர்ந்திருப்பர்' என்பதாம். புலவி - பிணக்கு.*

*'எல்லாம் அவனே' என்றல் அவன் அவற்றில் நீக்கமற நிறைந்து நிற்றல் பற்றியாம். "அவன்" என்பது பண்டறி சுட்டு. "புணர்வு" என்பது, விடாது பற்றுதல். அஃது அதற்கு ஏதுவாய விருப்பத்தைக் குறித்தது. ''இணரும்'' என்பது பெயரடியாகப் பிறந்த பெயரெச்ச வினை. 'இணராக்கும்' என்றபடி. இணராக்கல் - கொத்தாக்கல். இதயத்துள் கலந்திருத்தல். துணர் - பூங்கொத்து. 'கந்தம் போல' என உவம உருபு விரிக்க.*

*இதனால், 'அனைத்துப் பொருள்களின் செயற்பாட்டினையும் அவனது செயலாக உணர்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

> *எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்*
> *மெய்ப்பொருள் காண்பது அறிவு.* **- திருக்குறள் -** *355*

*என்றார் திருவள்ளுவரும்,*

*2813. **தெளிவுரை :-** முன் மந்திரத்திற் கூறியவாறு மலர்க் கந்தம்போலத் துன்னி நிற்கின்ற சிவன் தன்னை நினைந்திருப்பவர் குறையை முடிப்பவன். வேதத்தை ஓதும் அயன், மற்றும் மால் முதலியோருடைய தலைக்குள் இருந்து அறிவைப் பிறப்பிப்பவனும் ஆவன், ஆகையால் அவனையே நினைந்து அவன் திருமுன்பிலே இரு.*

***குறிப்புரை :-*** *'இருப்பின் உனக்குக் குறை உண்டாகாது' என்பதாம். இரண்டாம் அடி முதலாகத் தொடங்கியுரைக்க. "கேள்வி" என்றது 'சுருதி' என்றபடி. சிவனது திருமுன்பிலே (சந்நிதியிலே) இருத்தலானது புற உலகை நோக்கும்பொழுதும் அவற்றின் இயல்பினைச் சிவனது அருளாகவே கண்டிருத்தலாம். "மறையவன், மாதவன்" என்றது உபலக்கணம்.*

**2813.** துன்னிநின் றான்தன்னை உன்னிமுன் னாஇரு
முன்னி யவர்தம் குறையை முடித்திடும்
மன்னிய கேள்வி மறையவன் மாதவன்
சென்னியுள் நின்றதோர் தேற்றத்த னாமே. **3**

**2814.** மின்னுற்ற சிந்தை விழித்தேன் விழித்தலும்
தன்னுற்ற சோதித் தலைவன் இணையிலி
பொன்னுற்ற மேனிப் புரிசடை நந்தியும்
என்னுற் றறிவானான் என்விழித் தானே. **4**

---

*இதனால், சிவனைச் சேர்ந்திருப்பார் செம்மையராய் விளங்குதல் கூறப்பட்டது.*

*2814.* ***தெளிவுரை :-*** *மின்னல் மின்னினாற்போலத் திடீரெனத் தோன்றி மறைந்த ஓர் ஒளியால் மூடிக்கிடந்த எனது அறிவாகிய கண்ணைத் திறந்தேன். திறந்தவுடன் சிவன் அக்கண்ணில் என் அறிவினுள்ளே அறிவாய் விளங்கினான்.*

***குறிப்புரை :-*** *இடையிரண்டு அடிகள் இயல்பைக் குறித்து நின்றன. எனவே, "தலைவன், இணையிலி, நந்தி" என்பன ஒரு பொருள்மேற் பல பெயராய் வந்தனவாம். தன் உற்ற சோதி - தன்னை இயல்பாகவே பற்றியுள்ள ஒளி; அஃது அறிவேயாம். அந்த அறிவாகிய ஒளியே மின்னல்போலத் தோன்றி மறைந்தது. அஃதாவது, 'சத்தி நிபாதம், முதற்கண் ஆன்ம அறிவில் ஓர் அதிர்ச்சி உண்டாகும் படி தோன்றிப் பின் மெல்ல முதிர்ந்தது' என்பதும், 'அதனால் எனது அறிவு சிவத்தை அறிவும் நிலையைப்பெற்றது' என்பதும், அதனைப் பெற்றபின் சிவன் அறிவினுள் அறிவாய் விளங்கினான்' என்பதும் கருத்து. அறிவினுள் அறிவே சிவஞானம். 'விழிக்கண்' என ஏழாவது விரிக்க. அறிவு, "சிந்தை" எனப்பட்டது. 'சிந்தையை விழித்தேன்' என்க. "விழித்தேன்" என்றது குறிப்புருவகம். தன்னுற்ற - தானே விளங்குகிற.*

*இதனால், சத்தி நிபாதத்தில் திருவருள் மிக்கு விளங்க, அதனாலே பெற்ற சிவ தரிசனத்தை எய்துதல் கூறப்பட்டது.*

*2815.* ***தெளிவுரை :-*** *உண்மையாயும், ஞானமாயும், உள்ள ஒப்பற்ற பரம்பொருள் அனுபவத்தில் ஆனந்தமாய் இருக்கும். அந்த ஆனந்தம் ஆன்ம அறிவு இருந்து கொண்டிருக்கும் பொழுது இராது (எனவே ஆன்ம அறிவு தோன்றாத நிலையே அனுபவமாம்). ஆயினும் ஆன்ம அறிவு உள்ளபொழுது மேற்கூறிய ஆனந்தத்தைக் காட்டுகின்ற அருள் ஒளி உளதாகும். (அந்த அருள் ஒளியால் சிவத்தை உணர்தல் சிவ தரிசனமாகும்). அதன் பின் அருள் ஒளி ஆன்ம அறிவை விழுங்கி நிற்கும் நிலை நின்மல சிவ துரியமாகும். (இதுவே சிவயோகமாம்). இத்துரியத்துள் விளங்குகின்ற அருள் ஒளியே ஆனந்த*

**2815.** **சத்திய ஞானத் தனிப்பொருள் ஆனந்தம்**
**சித்தத்தில் நில்லாச் சிவானந்தப் பேரொளி**
**சுத்தப் பிரம துரியம் துரியத்துள்**
**உய்த்தல் துரியத் துறுபே ரொளியே.** **5**

**2816.** **பரனல்லன் நீடும் பராபரன் அல்லன்**
**உரனல்லன் மீதுணர் ஒண்சுடர் அல்லன்**
**தரனல்லன் தான்அவை யாய்அல்ல ஆகும்**
**அரனல்லன் ஆனந்தத் தப்புறத் தானே.** **6**

---

*அனுபவமாகிய பர துரியத்துள் ஆன்மாவைச் செலுத்தும்.*

*குறிப்புரை :- "நில்லா" என்னும் எதிர்மறைப் பெயரெச்சம், "சிவானந்தம்" என்பதனோடு முடிந்தது. சிவானந்தப் பேரொளி - சிவானந்தத்தைக் காட்டும் பேரொளி. சுத்தம் - நின்மலம். அஃதாவது மலம் நீங்கினும் அதன் வாசனை நீங்காமையால் ஆன்ம அறிவு 'யான், எனது' என முனைந்து நிற்றல் இன்மை. எனவே, இம்முனைப்பின்றி பேரொளியாய் நிற்றலே சுத்தப் பிரம துரியம், ஆதல் அறிக. சிவத்தை, "பிரமம்" என்றார். "துரியம்" என்றதன்பின், "துரியத்துள்" என்றது. 'அதனினும் மேலான துரியத்துள்' என்றதாம். "உய்த்தல்" என்னும் தொழிற்பெயர் உய்ப்பதாகிய வினைமுதலைக் குறித்தது. இதன்பின் "துரியம்" என்றது, முற்கூறிய பிரம துரியத்தை.*

*இதனால், 'ஆனந்த அனுபவமே சிவபோக நிலை' என்பதையும் அருள் அனுபவம் 'சிவ யோக நிலை' என்பதையும் விளக்கும் முகத்தால், அவற்றிற்கு முன் நிற்கும் சிவ தரிசன நிலை உயிர் சிவஞானம் கண்ணாகச் சிவத்தை உணரும் நிலை என்பது கூறப்பட்டது.*

*2816. தெளிவுரை :- "பரனாய்ப் பராபரன் ஆகி" (பா.2810) என்னும் மந்திரத்திற் கூறியபடி சிவ ரூபத்தில் 'பரன்' முதலிய இயல்பினனாய் வேறு தோன்றுகின்ற சிவன், சிவ தரிசனத்திலும் அத் தன்மையனாய், அவற்றிற்கு மேற்பட்ட சிவயோக சிவ போகங்களில் அவ்வாறு காணப்படாது அவற்றைக் கடந்து ஆன்மாவைத் தன்னுள் அடக்கி அருளாயும், ஆனந்தமாயும் விளங்குவன்.*

*குறிப்புரை :- இது, "பரனாய்ப் பராபர னாகி" என்னும் மந்திரத்துட் கூறியவற்றை எதிர்மறுத்துக் கூறுமாற்றால், சிவரூப சிவதரிசனங்கட்கு மேற்பட்ட நிலைகள் உளவாதலைக் குறித்தது. 'அதனால் அவற்றை அடைந்தார் புறப் பொருள்களை நோக்குமிடத்து சிவயோக நிலையில் நின்றே நோக்குதல் வேண்டும் என்பது கூறப்பட்டதாம்.*

*2817. தெளிவுரை :- 'வீடு பேறு' என்பதில் வீடு - விடுதல். பேறு - பெறுதல்.*

**2817.** முத்தியும் சித்தியும் முற்றிய ஞானத்தோன்
பத்தியுள் நின்று பரந்தன்னுள் நின்றுமா
சத்தியுள் நின்று ஓர்க்கும் தத்துவம் கூடலால்
சுத்தி அகன்றோர் சுகானந்த போதரே. 7

**2818.** துரிய அதீதமும் சொல்லறும் பாழாம்
அரிய துரியம் அதீதம் புரியில்
விரியும் குவியும் விள் ளாமிளி ரும்தன்
உருவும் திரியும் உரைப்பதெவ் வாறே. 8

---

*விடுதல் பாசத்தை; பெறுதல் பதியை, வீடும், பேறுமே இங்கு "முத்தியும், சித்தியும்" என ஓதப்பட்டன. முற்றிய ஞானத்தோன் - இவ்விரண்டன் இயல்புகளையும் முற்றும் உணர்ந்தவனே நின்ற ஞானியாவான். "இருமை வகைதெரிந்து ஈண்டு அறம் பூண்டார்" (திருக்குறள் - 23) என்றார் திருவள்ளுவரும். இத்தகையோன் தனது ஞானத்தின் பயனாகச் சிவனிடத்தில் பேரன்பு செய்து, அதனானே அவனது பெருங்குணமாகிய பேரானந்தத்தில் திளைத்து, அவ்வாற்றால் சிவத்துள் அடங்கி, அதனானே அறிவர் யாவரும் ஆராய்கின்ற மெய்ப்பொருளைத் "தலைப்படுதலால், சகலத்தில் சுத்தாவத்தையாகிய நின்மலா வத்தையைக் கடந்தவரே ஆன்ம லாபமாகிய சிவானந்தத்தை அடைந்த ஞானியர் ஆவர்".*

*குறிப்புரை :- "மா சத்தியுள் நின்று" என்பதை, பரந்தன்னுள் நின்று" என்பதற்கு முன்னே கூட்டுக. ஓர்த்தல் - ஆராய்தல். தத்துவம் - மெய்ப்பொருள். "சுத்தி" என்றது சகலத்திற் சுத்தத்தை. "அகன்றோர் போதர்" என்பது வேறு முடிபாகலின், ஒருமை பன்மை மயக்கம் இன்று.*

*இதனால், நின்மலாவத்தையைக் கடந்து பராவத்தையை எய்தினோர் அந்நிலையினின்றும் ஒரோ ஒருகால் இறங்கினும் சிவயோக நிலையினின்றும் தாழார்' என்பது கூறப்பட்டது.*

*2818. தெளிவுரை :- எவ்வகை அவத்தையிலும் 'துரியாதீதம்' என்பது உயிர் தன்னை மறந்திருக்கும் நிலையாகும். ஆகவே, நின்மலாவத்தைத் துரிய துரியா தீதங்களே யாயினும் அந்நிலைகளை அடைந்த ஆன்மா புறத்துச் செல்லுதல், அகத்தில் மீளுதல், பொருள்களை நோக்கி ஓடுதல் என்பனவாகிய தனது இயல்பு அனைத்தினும் நீங்கி நிற்கும் என்றால், அவ்வான்மாவை முன்னது போல வைத்து, 'சீவன்' என்று சொல்வது எங்ஙனம்?*

*குறிப்புரை :- 'கூடாது' சிவம் என்றே சொல்லுதல் வேண்டும்' என்பதாம். முன் மந்திரத்தில் "சுத்தி" நின்மலாவத்தை இடம் பெற்றமையால் இங்கு, "துரிய அதீதம், துரியம்" எனப்பட்ட நின்மலாவத்தைய ஆயின. புரிதலுக்கு, 'ஆன்மா' என்னும் எழுவாய் வருவிக்க. விள்ளா - விள்ளாது; இடைவிடாமல் மிளிர்தல்.*

*இங்கு அறிவு செல்லுதல். "விரியும்" என்பது முதலிய 'செய்யும்' என்னும் எச்சங்கள் மூன்றும் அடுக்கி, "உரு" என்னும் ஒரு பெயர் கொண்டன. 'உரு' என்றது இயல்பை. திரிதல் - வேறுபடுதல்; நீங்குதல். "உரைப்பது" என்பது தொழிற்பெயர், 'முன்னது போல' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது.*

*பராவத்தையை எய்தினோர் சீவத் தன்மை எய்தாமைக்கு நின்மல துரிய துரியாதீதங்களை எடுத்துக் காட்டினார்.*

*இதனால், சொரூப சிவனை எய்தினோர் சீவத் தன்மை எய்தாமை உவமை முகத்தால் வலியுறுத்தி முடிக்கப்பட்டது.*

## 23. முத்தி பேதம் கரும நிருவாணம்

*'சிவரூப சிவ தரிசனங்களால் சிவநிலையினின்றும் தாழாது நின்றோர் அடையும் பேறாவது வீடு' என்பதையும், 'அஃது இரு வகைத்து' என்பதையும், 'அவற்றுட் பின்னதே முடிநிலைப் பேறு' என்பதையும் இவ்வதிகாரத்தால் உணர்த்துகின்றார்.*

*இஃது இரண்டு மந்திரங்களையுடையது.*

**2819.** ஓதிய முத்தி அடைவே உயிர்பர
பேதமி லாச் சிவம் எய்தும் துரியம்அ
நாதி சொரூபம் சொரூபத்த தாகவே
ஏத மிலாநிரு வாணம் பிறந்ததே **1**

---

*2819.* **தெளிவுரை :-** *நூல்களில் சொல்லப்பட்ட முத்தி, வரிசைப்பட்ட 'துரியம், துரியாதீதம்' என இரண்டாகும். அவற்றுள் துரிய முத்தியாவது, ஆதியாய், ஆயினும் பரத்தோடு வேற்றுமையில்லாத சிவத்தை அடைந்து நிற்றலும், துரியாதீத முத்தியாவது, அநாதியாகிய பரத்தை அடைந்து நிற்றலும் ஆம். பரத்தை அடைந்த உயிர் பின் எவ்வாற்றானும் மீளா நிலையே அனைத்தும் நீங்கிய முடிநிலை முத்தியாகும்.*

**குறிப்புரை :-** *நிருவாணம் - முத்தி. அடைவு - வரிசை. "அடைவே" எனக் கூறியதனால் துரியம் முன்னதும், துரியாதீதம் பின்னதும் ஆதல் விளங்கிற்று. 'பரம், சிவம்' என்பன ஒன்றேயாயினும் தடத்த சிவத்தை, 'சிவம்' என்றும், சொரூப சிவத்தை, 'பரம்' என்றும் நாயனார் தொடர்ந்து குறிப்பிட்டு வருகின்றார். அதனானே சகலத்திற் சுத்தாவத்தையை, 'சிவாவத்தை' என வைத்து தனிச் சுத்தாவத்தையை, 'பராவத்தை' என்றார். பரத்தை "அநாதி" என்றமையால், சிவம் ஆதியாதல் விளங்கிற்று.*

*'பரம், சிவம் வேறல்ல' என்றற்கு "பரத்தொடு பேதம் இலாச் சிவம்" 'பரத்தொடு' எனவும் 'சிவத்தை' எனவும் ஏற்கும் உருபுகள் விரிக்க. "சிவத்தை எய்தும் துரியம்" என உடம்பொடு புணர்த்துக் கூறினமையால், 'துரியமாவது சிவத்தை எய்துதல்' என்பது பெறப்பட்டது. சிவ நிலையிலும் அதீத நிலை உளதாயினும், அது நிலை பெறாது துரியமே மேற்பட்டு நிகழ்தலால், சிவ நிலையை, "துரியம்" என்றே கூறினார். இந்நிலை 'சீவன் முத்தி' என்னும் முதல் முத்தியாம். "சொரூபம் என்றது, சொரூபத்தை அடைந்த நிலையைக் குறித்தது. "ஏதம் இலா நிருவாணம்" என்றதனால், சொரூபத்தை அடைந்த நிலையை அனைத்துக் குற்றங்களும் பற்றற நீங்கிய 'முழுத் தூய நிலை' என்றதாயிற்று. இது பரமுத்தி - முடிநிலை முத்தி. இதனை அடைந்த பின் மீட்சியில்லை. நிருவாணம் - முழு நீக்கம். 'கரும நிருவாணம்' எனப்பட்டதும் அது.*

**2820.** பற்றற் றவர்பற்றி நின்ற பரம்பொருள்
கற்றற் றவர்கற்றுக் கருதிய கண்ணுதல்
சுற்றற் றவர் சுற்றி நின்றஎன் சோதியைப்
பெற்றுற் றவர்கள் பிதற்றொழிந் தாரே. 2

---

*'பராவத்தையிலும் சாக்கிரம் முதலிய ஐந்தவத்தைகள் உள' என்பது மேற்காட்டப்பட்டமையின் அதனுள்ளும் அதீத நிலையை எய்தினோர்க்கே மீட்சியில்லை. ஏனையோர்க்குச் சிவனது சங்கற்பத்தால் சிறுபான்மை மீட்சி உண்டாதலும் உண்டு.*

*இதனால், 'முத்தி பேதம் இரு வகைத்து' என்பதும் அவற்றுட் பின்னதே முடிநிலை' என்பதும் கூறப்பட்டன.*

*2820. **தெளிவுரை :-** பரத்தை எய்துதலாகிய அதீத நிலையை அடைந்தவர்களே உலகர் செய்யும் செயல்களினின்றும் முற்றும் நீங்கினவராவர்.*

*__குறிப்புரை :-__ எனவே, 'ஏனையோர் பயிற்சி வயத்தால் ஒரோ ஒருகால் அச்செயல்களைத் தம் இழப்பில் நின்று செய்யினும் செய்வர்' என்பதாம். "அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தை" (தி.6 ப.26 பா.7) என அப்பர் குறிப்பு மொழியால் அருளிச்செய்தது பரத்தை எய்தினோர் நிலையையே ஆகும். கற்றற்றவர் - கற்று அறிந்து அடங்கினவர். சுற்று - சுற்றம். பெற்று உள்ளவர் - அடைந்து அனுபவிப்பவர்.*

*பரத்தை சிறப்பை இதனுட் பலவாறாக எடுத்தோதினார். பரத்தை, "பரம்பொருள்" என்றார், "கண்ணுதல், சோதி" எனக் குறித்ததும் அதனையே. இவை பொருட் பின்வருநிலையணி. கற்றல், இங்கு ஆசிரியர்பாற் கேட்டல். கருதுதல், சிந்தித்தல், ''சுற்றம் அற்றவர்'' என்பதில் 'சுற்றம்' என்பது அம்முக்குறைந்து நின்றது. அவர் முற்றத் துறந்தோராவர் இங்ஙனம் கூறியது தெளிவெய்தினோரை. ஈற்றில் நின்ற பிரிநிலை ஏகாரத்தைப் பிரித்து, "உற்றவர்கள்" என்பதனோடு கூட்டியுரைக்க. பிதற்றுதல் - பேசுதல்*

*இதனால், பரமுத்தியின் சிறப்பு வகுத்தோதி முடிக்கப்பட்டது.*

## 24. சூனிய சம்பாடணை

### *(மறைபொருட் கூற்று)*

***சூனிய சம்பாடணை - மறைத்துரையாடல், முன்னையதிகாரம் வரையில் சித்தாந்தத்தைப் பல வகையாலும் ஏற்ற பெற்றியால் இயைத்துக் கூறிமுடித்த நாயனார், அவற்றின் பொருளை உள்ளுறை உவம (ஒட்டணி) நலத்தால் சுவைபட, மாணாக்கர் உள்ளங்களில் ஆழப் பதியுமாறு சில மந்திரங்களால் உணர்த்துகின்றார். மேலும் யோக சித்தர் கைக்கொண்ட இம்முறையினை ஞான சித்தராய நாயனார் தாமும் வல்லராதலை இதனாற் புலப்படுத்துகின்றார். இம்முறையான செய்யுட்களைத் தொல்காப்பியனார் 'பிசிச்செய்யுள்' எனப் பெயரிட்டு 'ஒப்பொடு புணர்ந்த உவமத்தானும், தோன்றுவது கிளந்த துணிவினானும்' என இலக்கண வகையால் அதனை இருவகையாக்கினார். அவற்றுள் முதல் வகையே இங்குப் பெரும்பான்மை வரும். இதனை இக்காலத்தார், 'புதிர்' என்றும், 'விடுகதை' என்றும் வழங்குவர்.***

***இவ்வதிகாரம் அறுபத்தேழு மந்திரங்களையுடையது.***

**2821. காயம் பலகை கவறைந்து கண்மூன்று**
**ஆயம் பொருவதுஓர் ஐம்பத்தோ ரக்கரம்**
**ஏய பெருமான் இருந்து பொருகின்ற**
**மாயக் கவற்றின் மறைப்பறி யேனே. 1**

---

*2821. தெளிவுரை :- சிவன் கொடுத்த பொருளை அஃது அன்னதாதலை அறியாது தம்முடையனவாகக் கருதிச் சிவனுக்கும், சிவனடியார்களுக்கும் கொடுக்க மறுத்தவர்களது பொருளை மூர்க்க நாயனார் சூதாடிப் பறித்ததுபோல தம்மையுணருமுகத்தால் தமையுடைய தன்னை உணரற்பால வாகிய உயிர்கள் அதனைச் செய்யாது, தம் கருவி கரணங்களைத் தாம் விரும்பும் வகையிற் செலுத்தி அல்லலுறுதலை அறிந்த சிவபெருமான் அவைகள் அறியாமல் அவைகளோடு கூடியிருந்தே அக்கருவி கரணங்களின் வழித் தன் வழியில் அவைகளைத் திருப்புதலாகிய சூதாட்டத்தினைச் செய்வதாகக் குறிப்பிட்டு, ஆயினும், சூதாடுவோர் பிறர் தமக்கு எதிர் இருந்து தம் பொருளைக் கவர முயலுதலை நன்கு அறிதல் போல உயிர்கள் சிவனை அறிந்து கொள்ளவில்லை எனக் கூறுகின்றார்.*

*நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்துச் சம்பாதித்த பொருளாயினும் அப்பொருளை கட்குடிக்கும், கவறாடுதலுக்கும் ஒருவன் பயன்படுத்துவானாயின் அஃது அவனுக்குப் பாவமேயாதல் போல, மூர்க்க நாயனார் சூதாடிப் பொருள் ஈட்டினாராயினும் அதனை அவர் சிவனுக்கும், சிவன் அடியார்களுக்குமின்றி, வேறுவகையில் செலவிடாமையால், அஃது அவர்க்குச் சிவ புண்ணியமேயாயிற்று. வாதவூரடிகள் பாண்டியன் பணத்தைச் செலவிட்டதும் இத்தகையதே. சிவன்*

*மறைந்து நின்றும் செய்யும் செயலும் இப்படிப்பட்டதே.*

*உயிர்களை நன்னெறியில் செல்ல ஏவிய சிவபெருமான், அதன் பொருட்டு அவைகட்கு வேண்டும் துணைப்பொருள்களை நிரம்பக் கொடுத்திருந்த போதிலும் அவைகள் அவற்றை மாற்று வழியிற் செலுத்துதலால், அச்செயலை அவன் மறைந்து நின்று மாற்றுகின்றான். அஃது ஒரு சூதாடியின் செயல் போன்றுள்ளது. ஆகவே சிவபெருமானாகிய சூதாடிக்கு உயிர்கட்கு அவனால் தரப்பட்ட உடம்புகளே சூதாடும் பலகைகள். சாக்கிரம் முதலிய மூன்றவத்தை இடமாகிய புருவ நடு, கண்டம், இருதயம் ஆகியவையே சூதாடு களம். உடம்பின் புறத்தும், அகத்தும் உள்ள கருவிகளே உருட்டியோ, குலுக்கியோ பந்தயம் பெறும் கருவிகள். எழுத்தும், சொல்லும், சொற்றொடருமாய் உணர்வைத் தரும் மொழிகளே. அக்கருவிகளின் வழிப்பெற்ற பந்தயத்தின்படி காய்களை இடம் பெயர்ந்து வைத்து, வெற்றி தோல்வியைத் துணிகின்ற வரைகோடுகள் அல்லது கட்டங்கள், இவைகளில் பலகை, களம், உருள், கட்டம் ஆகியவற்றை எல்லா வற்றையும் அறிகின்ற உயிர்கள் அவற்றின் வழித் தம்மை வஞ்சிக்கின்ற சிவன் ஒருவனை அவன் தம்முடன் கூடவேயிருந்தும் அறியவில்லை.*

***குறிப்புரை :-** காயம் பலகை - உடம்பே சூதாடும் பலகை போன்றது. கவறு ஐந்து - ஐம்பொறிகளும் சூதாடும் கருவிகள். 'இஃதொரு பெருவியப்பு' என்பது குறிப்பெச்சம். ''ஐந்து'' என்றது உபலக்கணம் ஆதலின் தொண்ணூற்றாறையும் கொள்க. கண் - இடம்; களம். ஆயம் - தாயம். அது பத்து, பன்னிரண்டு முதலாகக் கொள்ளப்படும். 'ஆயத்தால்' என்னும் உருபு தொகுத்தலாயிற்று. பொருவது - பொருது, வெற்றி தோல்வி அறியும் கட்டம்; வரைகோடுகள். அக்கரத்தையே கூறினாராயினும் அவற்றால் ஆகும் 'பதம், வாக்கியம்' என்பனவும் கொள்ளப்படும். ஏயஏவிய 'உடன் இருந்து' என்க. 'உலகர் ஆடும் சூதுபோல்வதன்று; வியப்பைத் தரும் சூது' என்றற்கு "மாயக்கவறு" என்றார். தோன்றாது மறைந்து நிற்றல் பற்றிச் சிவனைக் "கள்ளர்" எனக் கூறிற்றுத் திருவுந்தியார் (பா.23). குமர குருபர அடிகளும் "வஞ்சித்த எங்கும் உளன் ஒருவன்" என்றார். (நீதிநெறி விளக்கம் - 93) மறைப்பு - மறைத்தல் தொழில். அறிதல், அதன் இயல்பினை முற்ற உணர்தல்.***

***இதனால், சிவன் தனது மறைத்தற் சத்தியை (திரோதான சத்தியை)க் கொண்டு உயிர்களின் ஆணவ மலத்தை அவையறியாமல் நின்று பக்குவப்படுத்தி வருதல் உள்ளுறையாக உணர்த்தப்பட்டது.***

***2822. தெளிவுரை :-** அனைவரும் சிறிதும் துன்பம் இன்றி மிக இன்பத்துடன் நடந்து செல்லத் தக்க நல்ல வழி ஒன்று இருக்கின்றது. ஆயினும் முட்புதர்கள் பல அதனை மூடிக்கிடக்கின்றன. அதைத் தெரிந்து அப்புதர்களை நீக்கி நல்வழியைக் கண்டு நடப்பவர் மிகச் சிலராகவேயிருக்கின்றனர். அந்தச் சிலர்மேல்தான் எனது உள்ளத்தில் உள்ள அன்பு சுரந்து பாய்கின்றது.*

**2822.** தூறு படர்ந்து கிடந்தது தூநெறி
மாறிக் கிடக்கும் வகையறி வார் இல்லை
மாறிக் கிடக்கும் வகையறி வாளருக்கு
ஊறிக் கிடக்கும் என் உள்ளன்பு தானே. **2**

---

*__குறிப்புரை :-__ 'நல்ல வழி' என்றது, நாயனார், "சிவனொடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை; அவனொடொப்பார் இங்கும் யாவரும் இல்லை" எனவும், "சேயனும் அல்லன், அணியன் நல்ல அன்பர்க்குத் - தாயினும் நல்லன் தாழ்சடையானே" (பா.40, 43) எனவும் முதற்கண் கூறி அவனை அவ்வாறுணர்ந்து நிற்கும் நெறியை.*

*தூறுகளாவன, அச்சிவனை, "அவன் தாமச குணத்தன், பித்தன், சாம்பலைப் பூசிக்கொண்டு, எலும்பு மாலைகளையும், தலைமாலைகளையும் அணிந்து கொண்டு சுடுகாட்டில் ஆடுபவன்" என்பனபோல் இகழ்ந்து கூறும் உரைகள்.*

*"இவரைப் பொருளுணர மாட்டாதா ரெல்லாம்*
*இவரை யிகழ்வதே கண்டீர்" - தி.11 அற்புதத் திருவந்தாதி - 29*

*என்னும் அம்மை திருமொழியையும் நோக்குக. அதனுள், "பொருள்" என்றது, 'உண்மை' என்றபடி. ஈற்றடி, 'நல்லார்கண் நல்லான் அன்பு செய்வர்' என்பதை உணர்த்தி நின்றது.*

*இதனால், 'சிவநெறியாகிய நன்னெறியை இகழ்ந்து கூறும் புன்னெறிகள் உள; அவற்றை அறிந்து விலக்கி அந்நன்னெறிக் கண் செல்ல வல்லார் மிகச் சிலரே' என்பது உள்ளுறையாக உணர்த்தப்பட்டது. "சைவ சித்தாந்தத் - தேனமு தருந்தினர் சிலரே" (பண்டார மும்மணிக்கோவை - 11) எனக் குமரகுருபர அடிகளும் குறித்தருளினார்.*

*__2823. தெளிவுரை :-__ ஆறு தெருக்கள் - அறிவினால் மிக்க அறு சமயங்கள். அவை அனைத்தும் சந்திக்கின்ற சந்தியிடம் - பக்குவான்மா. அதற்கு வீடு பேறாகிய சாற்றைத் தருவனவாய் முறைப்பட மேட்டு நிலத்தில் உயர்ந்து உயர்ந்து நிற்கும் நான்கு பனை மரங்கள் - சரியை, கிரியை, யோகம், ஞானம், ஆறு தெருவில் செல்பவர்களில் யாரும் அந்தப் பனை மரங்களில் ஒன்றிலேனும் ஏற இயலாது. அவற்றை விடுத்துச் சிவ குருவின் அருளால் சிவ நெறியை அடைந்தோரே அவற்றில் ஏற இயலும் ஆகையால், அந்தச் சிவநெறியே அந்தப் பனைமரங்களில் ஏறுதற்கு அரிதல் கிடைக்கும் ஏணி. அந்த ஏணி வழியாக நான் அவற்றில் முறையாக ஏறினேன். ஏறியவுடன் எழுவகைப் பிறவியாகிய கடல்கள் ஏழினது கரையையும் கண்டுவிட்டேன். ஆறு தெருக்கள் - வேத, சித்த, யோக, போத, கலா நாதாந்தம் என்பாரும் உளர்.*

*__குறிப்புரை :-__ 'நாட்டில் வாழ்பவர்கள் கடற்கரையை அங்கிருந்தே காண வேண்டுமாயின் உயர்ந்த பனைமரத்தின்மேல் ஏறிக் காண வேண்டும்.*

**2823.** ஆறு தெருவில் அகப்பட்ட சந்தியில்
சாறு படுவன நான்கு பனைஉள
ஏறற் கரியதோர் ஏணியிட்டு அப்பனை
ஏறலுற் றேன் கடல் ஏழுகண் டேனே. **3**

---

*அதுபோலப் பிறவிக் கடலின் கரையை உலகியலில் நின்றே காணவேண்டுமாயின் மிக மேட்டு நிலத்தில் உள்ள ஞானமாகிய பனை மரத்தின்மேல் ஏறிக் காண வேண்டும். அதை அந்த மேட்டு நிலத்தில் சென்று அடைவதற்கு அதற்குக் கீழே கீழே 'யோகம், கிரியை, சரியை' என்னும் மூன்று பனை மரங்கள் உள்ளன. 'அவற்றில் முதலில் உள்ள 'சரியை' என்னும் பனைமரம் முதலாக முறையே ஏறிச் சென்று, ஞானமாகிய பனை மரத்தை அடைந்து அதில் ஏறி நான் பிறவியாகிய ஏழு கடல்களை கண்டுவிட்டேன்' என்கின்றார் நாயனார்.*

*'ஆறு தெருக்கள் சந்திக்கின்ற சந்திப்பை அடைந்த ஒருவன், தான் குறித்த மேலிடத்தை அடைதற்கு எந்தத் தெரு வழியாகச் செல்வது என்று திகைப்பான். அப்பொழுது அருளும், அறிவும் உடையான் ஒருவன், 'இவைகளில் எதன் வழியாகவும் செல்லாமல், இதோ தெரிகின்ற இந்தப் பனைமரங்கள் வழியாக முறையே ஏறிச் சென்று அடைக' எனக் கூறி உதவி செய்தாற்போல ஆறு சமயங்களைக் கண்டு திகைத்த எனக்கு எங்கள் நந்தி பெருமான் வழிகாட்டினார் என்றபடி.*

*பனைமரத்தில் ஏறி இளைத்தவர்கட்கு ஓர் ஆறுதலாகக் கிடைப்பது அம்மரத்தின் சாறு. அதனை, 'பத நீ' என்பர். அது போலச் சரியை முதலிய மூன்றின் இடைநிலைப் பயன் சாலோக சாமீப சாரூபங்களாகிய பத முத்திகளும் ஞானத்தில்சரியை முதலிய மூன்றின் இடைநிலைப் பயன்கள் அதிகார முத்தி, போக முத்தி, இலய முத்தி' - என்னும் அபர முத்திகளுமாம். ஆதலின் அவற்றைக் குறித்தற்கு, "சாறு படுவன நான்கு பனை" என்றார்.*

*இதனால், 'ஒன்றோடொன்றொவ்வாத சமயங்களின் வழிச் செல்லாது, சித்தாந்த சைவ நெறியைச் சிவ குருவழியாக அறிந்து, அதில் சரியை, கிரியை, யோகங்களின் வழி ஞானத்தை அடைந்து, அது வழியாகச் சிவப்பேற்றினைப் பெறுதல் வேண்டும்' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

*2824. தெளிவுரை :- என்னுடைய தோட்டத்தை ஒருசிலர் தங்களுடைய தாக ஆக்கிக்கொண்டு அவர்கள் விருப்பம்போல அதனைப் பயன்படுத்தி வந்தனர். இருப்பினும் அவர்களுக்கிடையே நான் ஒட்டி ஒன்றிச் சிறிது இடத்தைத் தோண்டிக் குழிசெய்து, எனக்குப் பழக்கமான உணவாகிய கத்தரிக்காயைப் பெறவேண்டி அதன் விதையை ஊன்றினேன். ஆயினும் அந்த விதையினின்று பாகற் கொடி முளைத்துப் படர்ந்தது. படர்ந்த அக்கொடியோ பூசணிப் பூவைப் பூத்தது. அந்தப் பூவோ வாழைக்காயைக் காய்த்தது. அந்தக் காய் பழுத்ததைப்*

**2824.** **வழுதலை வித்திடப் பாகல் முளைத்தது**
**புழுதியைத் தோண்டினேன் பூசணி பூத்தது**
**தொழுது கொண் டோடினார் தோட்டக்குடிகள்**
**முழுதும் பழுத்தது வாழைக் கனியே.** **4**

---

*பார்த்துவிட்டு, முன்பு வலிசெய்து குடியிருந்த அந்த அற்பர்கள், 'ஐயா, உங்கள் தோட்டம் மிகப்பெரிய புதுமைகள் விளைகின்ற தோட்டமாய் உள்ளது; உங்களுக்கு ஒரு கும்பிடு' என்று சொல்லிக் கும்பிட்டு விட்டு ஓடிவிட்டார்கள்.*

*குறிப்புரை :- 'காய்களில் கத்தரிக்காயையே உண்டு களித்து வந்த நான் கனிகளில் சிறந்த வாழைக்கனி தானாகக் கிடைத்ததை உண்டு. அந்தக் கத்தரிக்காயை வெறுத்துவிட்டுப் பேரானந்தம் அடைந்தேன்' என்பது குறிப்பெச்சம்.*

*தோட்டம் - ஆன்ம அறிவு. அதில் குடியிருந்த அற்பர்கள் காமம், வெகுளி, மயக்கம் முதலிய மும்மலங்களின் காரியங்கள், தோண்டிய குழி குருவை அடைந்து வழிபட்டது. அதில் கத்தரி விதைத்தது, 'குருவும் இவ்வுலகில் நல்வாழ்வை அடைய வழி சொல்வார்' என்று நினைத்து அவர் உபதேசத்தைக் கேட்டது. கத்தரி விதையினின்றும் பாகற்கொடி முளைத்தது. குருவினுடைய உபதேசம் காதில் விழுந்தவுடன் உலகத்தின்மேல் வெறுப்புத் தோன்றியது. இது, 'கடல் வாணிபம் செய்து பெரும்பொருள் ஈட்டுவான்' என்று கருதித் திருவெண்காடர் வளர்த்த மகன் அவருக்குக் காதற்ற ஊசியை வைத்து விட்டு மறைந்தது போல்வது. சிலருக்கு இவ்வாறு ஞானம் எதிர்பாராத வகையில் கிடைப்பதுண்டு. திருவாதவூரடிகள் ஞானம் பெற்ற வரலாற்றையும் இங்குக் குறிக்கலாம். இறைவன் சுந்தரரைத் திருமுது குன்றத்திற்கு அழைத்து செல்வதாகச் சொல்லிக் கூடலையாற்றூரில் கொண்டு விட்டதைக் கூறலாம். பாகற்கொடி பூசணிப் பூவைப் பூத்தது, உலகத்தை வெறுத்த வெறுப்புணர்ச்சியிலிருந்து வீடுபேற்றில் விருப்பம் பிறந்தது. அவ்விருப்பம் ஆன்மாத் தான் கொள்ளத்தக்க விருப்பமாய் அதற்கு அழகுசெய்தல் பற்றி, அதனை 'பூசு அணி' எனச் சிலேடைப் பொருள்படக் கூறினார். பூசு - பூசப்படும் பொருள். அணி - அணியப்படும் பொருள் உணர்த்திற்று. வாழ் - வாழ்வு. ஐ - வியப்பு; அதிசயம் -அதிசயமான வாழ்வு, பேரின்ப வாழ்வு. இதனை, "நீடு வாழ்தல்" (திருக்குறள் - கடவுள் வாழ்த்து, 10) என்பார் திருவள்ளுவர். 'ஞானம் வந்தபின் மும்மல காரியங்கள் ஓடிவிட்டன' என்றார். 'வழுதலை, வழுதுணை' என்பன ஒரு பொருட் சொற்கள். "புழுதியைத் தோண்டினேன்" என்பதை முதலிலும் ஈற்றடியை இரண்டாம் அடியின் பின்னும் கூட்டுக.*

*இதனால், "ஆசாரியராய் உள்ளவரை அடைந்து வழிபட்டால் நம்மை யறியாமலும் நமக்கு ஞானம் பிறக்கும்" என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

**2825.** **ஐயென்னும் வித்தினில் ஆனை விளைப்பதோர்**
**செய்யுண்டு செய்யின் தெளிவறி வார்இல்லை**
**மையணி கண்டன் மனம்பெறின் அந்நிலம்**
**பொய்யொன் றுமின்றிப் புகல்எளி தாமே.** **5**

---

*2825.* ***தெளிவுரை :-*** *'ஐ' என்று வியக்கத்தக்க மிகச் சிறிய பொருளையே (கடுகு, மிளகு, கொத்துமல்லி போன்ற பொருள்களையே) விளைக்கக் கூடிய விதைகளை இட்டால், அவற்றிலிருந்தே ஆனைபோன்ற மிகப்பெரிய (மாங்காய், தேங்காய், பலாக்காய் போன்ற) பொருள்களையே விளைவிக்கின்ற அதிசய நிலம் ஒன்று உண்டு. அஃது அத்தன்மைத்தாதலே அறிந்து அதில் விதை விதைக்கின்றவர்கள் உலகத்தில் பலர் இல்லை. அந்த நிலம் சிவன் மனம் வைத்தால், தவறாமல் எளிதில் அடையப் பெறுவதாகும்.*

***குறிப்புரை :-*** *'ஐ' என்பது வியப்புப் பொருட்டாய், வியப்பிற்குக் காரணமான, "புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம்" என்னும் நான்கனுள் சிறுமை பற்றி வந்தது. ஆனை, உவமையாகுபெயராய் அதுபோலும் பொருளை உணர்த்திற்று. "தெளிவு" என்பது தெளியப்படும் தன்மை குறித்து நின்றது. "மனம்" என்றது, மனத்தின் உவகையை, 'நிலம், சிவனது திருமேனி வகைகள்' எனவும், விதைகள் அவற்றிற் செய்யும் சரியை, கிரியை, யோகம் என்னும் வழிபாட்டு வகைகள் எனவும் கொள்க. சிலந்தி ஒன்று வெண்ணாவற் கீழ் உள்ள இலிங்கத்திற்கு வாய் நூலால் பந்தலிட்டுச் சோழ மன்னன் ஆயினமையும், எலியொன்று, திருக்கோயிலில் உள்ள விளக்கைத் தூண்டி, மூவுலகங்களையும் அடிப்படுத்து ஆண்டமகாபலிச் சக்கரவர்த்தியாயும் ஆயினமை போன்றவற்றை வைத்து இவ்வாறு கூறினார். முதல் இரண்டு அடிகளில், பெரியோர்க்குச் செய்த உபகாரம் பொருளால் சிறிதாயினும் பயனால் பெரிதாதல் அறநூல்கட்கெல்லாம் உடன்பாடாதலின் தேவர்க்கெல்லாம் தேவனாம் பெரியோனுக்குச் செய்யும் வழிபாடு பொருளால் மிகச் சிறிதாயினும், பயனால் மிகப் பெரிதாம்' எனச் சிவ புண்ணியத்தின் சிறப்பை உள்ளுறை வகையால் உணர்த்தி, அதனைச் செய்யாதார் நிலைக்கு இரங்கியவாறு. 'அச்செய்யின்' எனச் சுட்டு வருவிக்க. "தவமும் தவம் உடையார்க்கு ஆகும்" (திருக்குறள் - 262) என்றபடி, "சிவபுண்ணியத்தில் மனம் செல்லுதற்கும் சிவ புண்ணியம் வேண்டும்" என்பது குறிக்கப்பட்டது.*

*2826.* ***தெளிவுரை :-*** *மக்களில் ஒவ்வொருவருக்கும் உள்ளது ஒரு நிலந்தான், அந்த நிலத்தில் மூன்றில் ஒரு பகுதி மட்டுமே நீர் எளிதில் பாய்ந்து விளைவைத் தரக்கூடியதாய் உள்ளது. மற்றை இரண்டு பகுதிகள் நீர் செல்லாது, முரம்பாய்க் கிடக்கின்றன. மூன்றிலும் உழமுடியாதபடி கருங்கற்கள் உள்ளன. இவற்றைச் சமப்படுத்தி உழ வல்லவர்கட்கு அந்த ஒரு நிலமே வேண்டுமளவு நீர் தேங்கி நிற்கின்ற நிலமாய், நல்ல விளைவைத் தருகின்றது.*

**2826.** பள்ளச்செய் ஒன்றுண்டு பாழ்ச்செய் இரண்டுள
கள்ளச்செய் அங்கே கலந்து கிடந்தது
உள்ளச்செய் அங்கே உழவுசெய் வார்கட்கு
வெள்ளச்செய் யாகி விளைந்தது தானே. **6**

---

*குறிப்புரை :-* *ஒரு நிலம் - ஆன்ம அறிவு, மூன்று பகுதிகள் 'கேவலம், சகலம், சுத்தம்' என்னும் மூன்று அவத்தைகள் (இம்மூன்றையும் சகலத்தின் பகுதியாகவே கொள்க). பள்ள நிலம், அஃதாவது, நன்செய் - சுத்தாவத்தை, 'நின்மலாவத்தை' எனப்படுவதும் இதுவே, இதில் திருவருளின் வழிச்சிவம் பிரகாசித்து நிற்றலால், நீர்நன்கு பாயும் "பள்ளச் செய்" எனப்பட்டது. ஏனைக் கேவல சகலங்கள் திருவருள் விளக்கம் இன்றி இருத்தலால், "பாழ்ச் செய்" எனப்பட்டன. "கல்ல செய்" என்பது, எதுகை நோக்கித் திரிந்தும், ஒற்றுமிக்கும் நின்றது. கல்ல செய் - கற்களை உடைய நிலம், இங்ஙனம் கொள்ளாது, 'கள்ளம்' என்றே கொள்ளின், கள்ளத்திற்கும், செய்க்கும் இயைபு யாதும் இன்மை அறிக. 'கல்லச்செய்' என்றே பாடம் ஓதி' ஒற்று மிக்கது விகாரம்' என உரைப்பினும் ஆம். "உள்ளச்செய்" என்பதிலும் சகர ஒற்று, விரித்தல். 'உள்ள செய்யாகிய அங்கே' என்க. "உள்ள செய்" என்றதனால் வேறு செய் இன்மை பெறப்பட்டது. "உழவு செய்வார்" என்றது, சொல்லுவாரது குறிப்பால், 'செய்ய வல்லார்க்கு' எனப் பொருள் தந்தது. பாழ்ச் செய்யிலும், கற் செய்யிலும் உழ வல்லவர் அரியராதலை அறிக. நிலம் ஒன்றையே தொல்காப்பியனார் பகுதி பற்றி "காடுறையுலகம், மைவரையுலகம்" என்பன முதலாகப் பலபோலக் கூறினாற்போல, இவரும் ஒரு செய்யினையே பகுதி பற்றி, "பள்ளச் செய், பாழ்ச் செய்" எனப் பல செய்கள் போலக் கூறினார். இம்மூன்றிலும் நிறைந்துள்ள கற்களாவன ஆணவ மலத்தின் சத்திகள். ஆகவே, இங்கு, சுத்தம் ஆவதும் சகலத்திற் சுத்தமே. மூன்றையும் சமப்படுத்தி உழுதலாவது, குருவுபதேசத்தை நனவிலே மட்டுமன்றிக் கனவிலும் மறவாது உணர்தலாம்.*

*"துஞ்சலும், துஞ்சல் இலாத போழ்தினும்*
*நெஞ்சகம் நைந்து நினைமின் நாடொறும்" - தி.3 ப.22 பா.1*

*"துஞ்சும் போதும் சுடர்விடு சோதியை" - தி.5 ப.93 பா.8*

*என்றாற்போல ஆசிரியன்மார் அருளிச் செய்தலை அறிக. வெள்ளம் - நீர்த்தேக்கம். "வெள்ளச் செய்யாகி" என்றது, முதற்கண் கூறிய, "பள்ளச் செய்" போலவே ஆகி - என்றதாம்.*

*இதனால், 'குரு உபதேசத்தை எந்நிலையிலும் மறவாது உணர்வார் உலகில் உலாவினும் முத்தராய் விளங்குவர்' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

**2827. மூவணை ஏரும் உழுவது முக்காணி
தாம்அணை கோலின் தறியுறப் பாய்ந்திடும்
நாவணை கோலி நடுவிற் செறுஉழார்
காலணை கோலிக் களர்உழு வார்களே. 7**

---

*2827. **தெளிவுரை :-** மூன்றாகப் பொருந்தியுள்ள ஏர்கள் மக்கள் ஒவ்வொருவருக்கும் உள்ளன. (அவை, 'இடை, பிங்கலை, சுழுமுனை' என்னும் மூன்றும் நாடிகள் வழியாகச் செல்லும் பிராண வாயுக்கள், வழி பற்றி இவை மூன்றாயின). அந்த ஏர்கள் அனைத்தும் உழுது கொண்டிருப்பது முக்காணி (முக்கால் மா) அளவான சிறிய நிலத்தையே, (ஒரு மாவில் நான்கில் ஒரு பங்கு 'காணி' என்னும் பெயரை உடையது. ஆறு ஆதாரங்களில் முதலாவதாகிய மூலாதாரம் முக்கோண வடிவினது ஆதலின், அதனை "முக்காணி" என்றார். சுவாசம் இயல்பாக மூலாதாரத்தினின்று எழுந்து இயங்கிக் கொண்டிருக்கின்றது) அந்த ஏர்களைத் தடை செய்து செலுத்தினால் அவை குறித்த வழியில் இயங்கிப் பயன் தர வல்லன. அவ்வாறு அவற்றைக் குறித்த வழியில் செலுத்திச் சில சொற்களால் அதட்டி அடக்கி, நடுவில் உள்ள நல்ல நிலத்தை உழுதால் நல்ல பலன் கிடைக்கும். மக்கள் அவ்வாறு அந்த நல்ல நிலத்தை உழாமல், வடிகாலை மட்டும் பெரிதாக்கிக் களர் நிலத்தை உழுது கொண்டிருக்கிறார்கள்.*

***குறிப்புரை :-** 'இஃது இரங்கத் தக்கது' என்பது குறிப்பெச்சம். 'மூஅணை ஏரும்' என்பதில், 'மூன்றாய் அணைந்த ஏர்களும்' என ஆக்கம் வருவிக்க. முற்றும்மை கொடுத்தமையால் 'உள்ள ஏர்கள் மூன்றே' என்பது பெறப்பட்டது. "தாம்" என்றது உழுபவரை அவர் அணைகோலலாவது, உழும் பகடுகளைத் தம் வழிப்படுத்தி ஒட்டுதல். குறித்த வழியை, குறிக்கோளாதல் பற்றி, "தறி" என்றார். "பாய்ந்திடும்" என்பது, பாய்ந்து பயன் விளைக்கும்' எனத் தன் காரியம் தோற்றி நின்றது. யோகம் செய்வார் மூலாதாரத்தினின்றும் எழுந்து இயங்கும் வாயுவைத் தடுத்துச் சுழுமுனையில் செலுத்தி, அது பிரமந்திரத்தில் சென்றபொழுது நா அடியால் மேல் துளையை அடைத்து நிறுத்துவர். அதனையே, ''நா அணைகோலி" என்றார். எனினும் சூனிய சம்பாடணையாகக் கூறலால், 'நா' என்பது ஆகுபெயராய் அதனுள் எழும் சொல்லைக் குறித்து ஏர் உழுபவர் அதட்டும் மொழிகளைக் குறித்தது. "நடுவில் செறு" என்பதற்கு 'நடுவில் உள்ள நல்ல நிலம்' என்பது வெளிப்பொருள் 'புருவ நடுவில் வில்லைப் போன்ற வடிவத்தை உடைய ஆஞ்ஞை என்னும் ஆதாரம்' என்பது உள்ளுறைப் பொருள், 'பிராண வாயுவை நடுநாடியில் பிரமந்திரம் வகையில் செலுத்துதலால், மூலாதாரத்தில் அடங்கிக் கிடக்கின்ற குண்டலி சத்தி எழுந்து ஆஞ்ஞையை அடையும், அஃது அவ்வாறு அடைந்தால், உண்டாகும் விளக்க உணர்வுகளும், காயசித்தி முதலிய சித்திகளும் பலவாம். ஆகவே, மக்கள் அதனைச் செய்ய மாட்டாது, பிராண வாயுவை அது போன வழியிலே போக விட்டு, விரைவில்*

**2828.** ஏத்தம் இரண்டுள ஏழு துரவுள
மூத்தோன் இறைக்க இளையோன் படுத்தநீர்
பாத்தியிற் பாயாது பாழ்ப்பாய்ந்து போயிடின்
கூத்தி வளர்த்ததோர் கோழிப்புள் ளாமே. **8**

---

*மக்கட் பிறப்பை இழக்கின்றனர்' என்பதாம். கால் - வடிகால்; வெளிப்பொருள். பிராண வாயுவின் இயற்கை இயக்கம்; உள்ளுறைப் பொருள். நிலத்திற்கு வடிகால் இன்றி, வடிகால் மட்டும் இருப்பின் காய்ந்து, கமர் வெடித்துக் கெடும். களர் - எதுவும் விளையாத நிலம். அவை இடை பிங்கலை நாடிகள். இரண்டு, நான்காம் அடிகள் உயிரெதுகை பெற்றன.*

*இதனால், 'யோகம் பயின்று பயனடைதற்குரிய மக்கள் அதனைச் செய்யாது, காலத்தை வீணடித்துக் கெடுகின்றனர்' என்பது கூறப்பட்டது.*

*2828. தெளிவுரை :- ('ஏத்தம்' என்பதுதான் நீர் இறைக்கும் ஏத்தத்தின் பெயர். அஃது அறியாதார் 'ஏற்றம்' என்பர்). ஏத்தம் இரண்டு - இடை நாடி. பிங்கல நாடி. ஏழு துரவு - ஆறு ஆதாரங்களும், சகஸ்ராரமும், (துரவு - கிணறு) மூத்தோன் - 'அகங்காரம்' என்னும் அந்தக் கரணம். இதுவே பிராணவாயுவை இயக்குவது. இளையான் - 'மனம்' என்னும் அந்தக் கரணம். (பிராண வாயு இயங்குதலாலே உயிர் அறிவு பெற்று விளங்குகின்றது. அந்த அறிவை நீராகவும், அந்த அறிவு நிற்கும் இடங்களைத் துரவாகவும் பிராண வாயுவின் இயக்கத்தால் உயிரின் அறிவு பிரவர்த்திக்கச் செய்யும் செயலை நீரைப் பயன்படுத்த இறைப்பதாகவும், அறிவு மனத்தின் வழியே சென்று பயன் விளைத்தலின் மனத்தை நீரை வேண்டும் இடத்திற்குக் கொண்டு போய்ப் பாய்ச்சுபவனாகவும் கூறினார். உயிர்க்கு அறிவை உண்டாகும் கருவியை நீர் இறைக்கும் மூத்த சகோதரனாகவும், அறிவைக் கொண்டு போய்ப் பயன்படுத்தும் கருவியை, நீரை வேண்டுமிடத்தில் பாய்ச்சும் இளைய சகோதரனாகவும் கூறினார்). பிராண வாயு நடு நாடியாகிய சுழுமுனையில் சென்றால், ஞானமாகிய பயன் விளையும். அதனால் அதனை, "பாத்தி" என்றார். பிராண வாயுவை மனம் சுழுமுனையிற் செலுத்தாது வெளியில் செலுத்தி, அஞ்ஞானமே விளையப் பண்ணுதலால் மூத்தோன் ஓர் ஏத்தத்தின் வழியாக (இடைகலை வழியாக நீரைத் துரவுக்குத் தந்து மற்றோர் ஏத்தத்தின் வழியாக (பிங்கலை வழியாக) வெளியேற்ற, 'அந்நீர் பாத்தியிற் பாயாது, பாழ் நிலத்தில் பாய்கின்றது' என்றார்.*

*"பழியுடை ஆக்கை தன்னில், பாழுக்கே நீர் இறைத்து" - தி.4 ப.31 பா.6*

*என அப்பர் பெருமானும்,*

*"ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ கால மெலாம்*
*பாழுக் கிறைத்தேன்" - தி.8 திருத்தோணோக்கம் - 13*

*என மாணிக்கவாசகரும் அருளிச் செய்தனர்.*

**2829.** பட்டிப் பசுக்கள் இருபத்து நால்உள
குட்டிப் பசுக்கள்ஓர் ஏழ்உள ஐந்துள
குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரியினும்
பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்தவே. **9**

---

*கூத்தாடும் ஆடவன் 'கூத்தன்' எனப்படுதல்போல கூத்தாடும் மகள் 'கூத்தி' எனப்படுகின்றாள். இங்குக் குறிக்கப்பெறுகின்ற இக்கூத்து, அவிநயக் கூத்து, இதனைப் பழங்காலத்தில் விறலியர் (பாணத்திகள்) ஆடியபோதிலும், பிற்காலத்தில் இது விலைமாதர்க்கே உரியதாய் விட்டது. கோழியைப் பெரிதாக வளர்த்தற்கு மிகத் தொல்லை உண்டு. கூத்தி அத்தொல்லைகளுக்கு உள்ளாகிக் கோழியை வளர்ப்பது, பெரும் பாலும் தனக்காக அன்றித் தனக்கு விலை கொடுத்துத் தன்னிடம் வருகின்ற விடர்கள் மகிழ்ச்சியடைய அவர்கட்கு ஆக்குதற் பொருட்டேயாம். ஆகவே, கூத்தி வளர்க்கும் கோழிகள் அவளையும், அவள் வாயிலாகப் பலரையும் தீநெறியிற் செல்ல ஊக்குவிப்பனவே யாகும். அது பற்றி உலகியலிலே ஊக்கம் பிறப்பிக்கின்ற பிராண வாயுவை, "கூத்தி வளர்த்த கோழிப்புள்" என்றார்.*

*இதனால், 'மக்கள் தமது மூச்சினை வாசியோகமாக்கினால் பயன் மிக விளையும்; அதைச் செய்யாது வீணடிக்கின்றனர் என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

*2829. தெளிவுரை :- பட்டி - தொழுவம். 'பட்டியில்' என ஏழாம் வேற்றுமை உருபு விரிக்க. பட்டி, தூல, சூக்கும பர தேகங்களும், திரோதான சத்தியும், கன்றை, "குட்டி" என்றது மரபு வழுவமைதி. குட்டிப் பசுக்கள் - கன்றையுடைய பசுக்கள். பின்னால், "குட்டிப் பசுக்கள்" எனக் கூறி, முன்னே வாளா, "பசுக்கள்" என்றமையால், அவை கன்றை ஈனாத மலட்டுப் பசுக்களாயின. கன்றையீனாத பசுக்கள் துளிப் பாலும் தாராமையும் கன்றை யீன்ற பசுக்கள் குடம் குடமாகப் பாலைத் தருதலும் வெளிப்படை. அவ்வாறிருந்தும் அனைத்தையும் பட்டிக்குள் வைத்துள்ள பார்ப்பானுக்கு மலட்டுப் பசுக்கள்தாம் தெரிந்தன. கன்றையுடைய பசுக்கள் தெரியவில்லை. இதற்கு அவன் கண்ணில் உள்ள கோளாறு காரணம்.*

*குறிப்புரை :- இருபத்து நான்கு, ஆன்ம தத்துவம். ஏழு, வித்தியா தத்துவம், ஐந்து, சிவதத்துவம் ஆக முப்பத்தாறு தத்துவங்கள் உள்ளன.*

*ஆன்ம தத்துவங்கள் போக்கிய காண்டமாய் ஆன்மாவால் நுகரப்படுவனவேயன்றிப் போசயித்திருகாண்டமாய், ஆன்மாவை நுகர்வோன் (போக்தா) ஆகவும், செய்வோன் (கர்த்தா) ஆகவும் ஆக்கமாட்டா. அதனால் போக்கிய காண்டமாகிய ஆன்ம தத்துவங்களை 'மலட்டுப் பசுக்கள்' என்றும், போசயித்திரு காண்ட மாகிய வித்தியா தத்துவங்களை, 'கறவைப் பசுக்கள்' என்றும் கூறினார். வித்தியா தத்துவங்கள் பிரேரக காண்டமாகிய சிவ*

**2830.** ஈற்றுப் பசுக்கள் இருபத்து நால்உள
ஊற்றுப் பசுக்கள் ஒருகுடம் பால்போதும்
காற்றுப் பசுக்கள் கறந்துண்ணும் காலத்தில்
மாற்றுப் பசுக்கள் வரவறி யோமே. **10**

---

*தத்துவங்களாலே செயற்படுதல் பற்றி அவற்றையும் கறவைப் பசுக்கள் என்றார். பனவன் - பார்ப்பான், "வாய்த்ததே" என்று இரங்கிக் கூறினமையால், பார்ப்பான், கண் பார்வை குறைந்த பார்ப்பான் ஆகின்றான். பார்ப்பான், சமய வாதிகள். இது சாதியொருமை. 'புறப்புறம், புறம்' என்னும் சமயத்தைச் சார்ந்தவர்கள் ஆன்ம தத்துவங்களை மட்டுமே மறைமுகமாகவோ, நேராகவோ அறிந்து வித்தியா தத்துவம் சிவ தத்துவங்களை அறியாமையால், 'கண்பார்வை குறைந்த பார்ப்பான்' என்றது அவர்களையே, கண் பார்வையாவது, சமய ஞானம்.*

*இதனால், 'தத்துவ உணர்வு வேண்டுவோர் சித்தாந்த சைவத் தத்துவங்களை உணராவிடில் பயனில்லை' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

*2830. தெளிவுரை :- ஈற்றுப்பசுக்கள் - ஈன்றணிய அஃதாவது, கன்றை யீன்று ஒன்றிரண்டு நாட்களேயான பசுக்கள். இவைகளின் பாலும் பூசைக்கோ, வேள்விக்கோ பயன்படாது. மக்களுக்கு உணவாகக் கூட ஆகாது. பயன்படாமை பற்றி மேல், 'மலட்டுப் பசுக்கள்' எனக் கூறியவற்றையே, 'ஈற்றுப் பசுக்கள்' எனக் கூறினும் இழுக்கில்லை என்னும் கருத்தால் இங்கு இவ்வாறு கூறினார். எனவே, முன் மந்திரத்திற் கூறிய அந்த இருபத்து நான்கே இங்குக் கூறிய இருபத்து நான்கும் ஆகின்றன. முன் மந்திரத்தில், "குட்டிப் பசுக்கள்" எனக் கூறியவைகளை இங்கு "ஊற்றுப் பசுக்கள்" என்றார். 'பாலைச் சுரந்து பொழியும் பசுக்கள்' என்றபடி. 'தனத்தனி ஒவ்வொரு குடம்' என்க 'குடமாக' ஆக்கம் விரிக்க. 'புகுதும்' என்பது, 'போதும்' என்றபடி, "காற்று" என்பது பகாப் பதமாய்ப் பிராணனையும், 'கால் + து' எனப் பகுபதமாய், கறக்கும்படி துன்புறுத்தப்படும் பசுக்களையும் சிலேடை வகையால் குறித்து நின்றது. காலுதல் - கக்குதல். அஃது இங்குப் பாலைப் பொழிதலைக் குறித்தது. காலுதல், தன்வினை. காற்றுதல், பிறவினை, காற்றுதல், இங்குப் பாலைக் கொடுக்கப்பண்ணுதல். சில பொல்லாத பசுக்கள் கன்றையீன்றாலும், கன்றுக்கும் பால்கொடாது உதைத்துத் தள்ளும் யாரையும் கறக்கவிடா, அப்படிப்பட்ட பசுக்களை அடித்துத் துன்புறுத்தியும், மடியில் மருந்து பூசியும் வலியுறுத்திப்பால் கொடுக்கப் பண்ணுவர்.*

*சொல்லப் பயன்படுவர் சான்றோர்; கரும்புபோல்*
*கொல்லப் பயன்படும் கீழ்.* **- திருக்குறள், 1078**

*என்றார் திருவள்ளுவர்.*

*இவ்வாறு வருந்திக் கறக்கக் கறக்கும் பசுக்கள்போல இடை கலை பிங்கலைக்*

**2831.** தட்டான் அகத்தில் தலையான மச்சின்மேல்
மொட்டாய் எழுந்தது செம்பாய் மலர்ந்தது
வட்டம் படவேண்டி வாய்மை மறைத்திட்டுத்
தட்டான் அதனைத் தகைந்துகொண் டானே. **11**

---

*காற்றுக்கள் யோக முறையால் அடிக்கி இயக்கப் பயன்தருதல் பற்றி அவைகளை, காற்றுப் பசுக்கள்" எனச் சிலேடையாகக் கூறினார். மாற்றுப் பசுக்கள், காற்றுப் பசுக்களுக்கு வேறான பசுக்கள், என்றது, முதலிற் கூறிய ஈற்றுப் பசுக்களையே, வாசியோகம் பயிலுமிடத்து ஞானேந்திரிய கன்மேந்திரியங்களின் செயல் வந்து தடைசெய்ய மாட்டாமையால்,*

*"காற்றுப் பசுக்கள் கறந்துண்ணும் காலத்து*
*மாற்றுப் பசுக்கள் வரவறி யோமே"*

*என்றார். 'காற்றுப் பசுக்களை' என இரண்டன் உருபு விரிக்க. வரவு அறியோம் - வருதலைக் காணோம்.*

*இதனால், 'பிற சமயிகளும் ஹடயோகம் செய்யாது, தியான யோகம் செய்யின், அவரவர் சமய முத்தியை அடைவர்' என்பதும் 'சித்தாந்த தத்துவ ஞானம் உண்டாயின், சிவஞானம் கைவந்து, சைத்தாந்த முத்தி எளிதில் கிடைத்துப் பெரும்பயன் தரும்' என்பதும் உள்ளுறையாகக் கூறப்பட்டன.*

*2831. தெளிவுரை :- தட்டான் ஒருவனது இல்லத்தின் மச்சுமேல், அவன் நண்பன் ஒருவன் தட்டானிடம் இருந்த நம்பகத்தால், 'மொட்டு' என்னும் அளவில் பொன்னை வைத்திருந்தான். அது பின்பு அதிசயமாகச் 'செம்பு' அளவாக விரிவடைந்தது. அதன் பயன் அனைத்தையும் தட்டான் தனதாக்கிக் கொள்ள எண்ணி உண்மையை மறைத்து, முழுவதையும் கவர்ந்து கொண்டான். (நண்பன் ஏமாந்தான்).*

*குறிப்புரை :- தட்டான் - தூல சூக்கும அதிசூக்கும சரீரங்களைத் துருவித் துருவித் தேடினாலும் அகப்படாதவன்; ஆன்மா. அகம் - உடம்பு. மச்சு - உச்சந்தலை. 'குழை, தோடு' என்னும் இயற்கைப் பொருள்களைப் பொன்னால் செயற்கையாகச் செய்து ஆடவரும், மகளிரும் காதில் அணிதல் போல, 'மொட்டு' (அரும்பு) என்னும் இயற்கைப் பொருளையும் பொன்னாற் செய்து, ஆடவர் கால் விரலில் அணிவர் 'மொட்டு' என்பது தவறு எனக் கருதிச் சிலர் அதனை, 'மெட்டு' என்பர். ''எழுந்தது'' என்றது, 'காணப்பட்டது' என்றபடி. காணப்பட்டமைக்குக் காரணம் குறிப்பாற் கொள்ளக்கிடந்தது. இப் பொன்னாவது, ஏழாம் தானத்தில் உள்ள சகஸ்ராரமே, அது குழவிப் பருவத்தில் மொட்டாயே இருக்கும். ஆகவே, "மொட்டு" என்றது சிலேடையாயிற்று. குழந்தைகளின் வளர்ச்சி நம் கண்ணிற்குப் புலப்படுவதில்லையாகையால்,*

**2832.** அரிக்கின்ற நாற்றங்கால் அல்லற் கழனித்
திரிக்கின்ற ஓட்டம் சிக்கெனக் கட்டி
வரிக்கின்ற நல்ஆன் கறவையைப் பூட்டின்
விரிக்கின்ற வெள்ளரி வித்தும்வித் தாமே. **12**

---

*'அதிசயமாக மலர்ந்தது' என்றார். செம்பு, நீர் முகக்கும் சிறு கலம், 'சிறிய மொட்டாய் எழுந்தது. செம்பு அளவு பெரியதாய் விரிந்தது' என்றபடி. வட்டம் - வாசி, என்றது இலாபத்தை. இலாபம் - ஆன்ம லாபம். உச்சந் தலையில் சகஸ்ராரமாகிய பொன்னை மொட்டாக வைத்தவன் பிரம தேவன். அவன் தட்டானிடத்தில் கொண்ட நம்பிக்கையாவது, 'வினையை நுகர்தலாகிய தன் குறிக்கோளை நிறைவேற்றுவான்' என நம்பியது. ஆயினும் ஆன்மாத் தனது பக்குவ முதிர்ச்சியால் அதனை யோகக் காட்சிக்குப் பயன்படுத்திக் கொண்டதே, தட்டான் உண்மையை மறைத்துப் பொன்னைக் கவர்ந்து கொண்டதாகும்.*

*இதனால், முன் மந்திரத்தில் கூறிய, காற்றுப் பசுக்களைக் கறந்துண்ணுதலாகிய பயன் இது' என்பது கூறப்பட்டது.*

*2832. **தெளிவுரை :-** நெற்கதிரை அரி அரியாகக் கொள்ளும்படி மிக விளையக்கூடிய நல்ல வயலைப் புல்லும், பூடுகளும் ஆகிய களையைத் தந்து துன்பம் விளைக்கின்ற கழனியாக மாற்றுகின்ற ஒழுக்கலை உறுதியாக அடைத்து, உழும்பொழுதே பாலைப் பொழிந்து கொண்டு போகின்ற வலிய பசுக்களைப் பூட்டி உழுதால், படர்ந்து செல்கின்ற வெள்ளரி விதையும் செந்நெல் விதையாய்ச் சிறந்த பயனைத் தரும்.*

***குறிப்புரை :-** அரித்தல் - அரி அரியாகச் சேர்த்தல். நாற்று உள்ள இடமே 'நாற்றங்கால்' எனப்படுமாயினும், "அரிக்கின்ற" என்னும் அடைமொழியால் அது நாற்றுக்களை நட்ட வயலைக் குறித்தது. நெல் வயலில் நீர் எப்பொழுதும் நிரம்பி நின்றால்தான் நெற்பயிர் வளர்ந்து பயன்தரும். அத்தகைய நீர் தேங்கி நில்லாமல், உழுபவனும் காணாதபடி வரம்புகளுக்குள்ளே சிறு துளைகளால் வெளியேறி விடுவதுண்டு. அத்துளைகளை 'மோழை' என்பர். நீர் தங்காது போய் விட்டால், பயிர் வளராது; களைகள் வளர்ந்து விடும். நீரை இங்கு "ஓட்டம்" என்றார். "நாற்றங்கால்" என்றும், "கழனி" என்றும் கூறப்பட்டது உடம்பு. "கழனியாக" என ஆக்கம் விரிக்க. நீர், உடல் வலிமை. உடல் வலிமையுடன் நலம் பெற்றிருந்தால்தான், கற்பன கற்றுக்கேட்டுச் சிந்தித்து அறிவு பெறுதல் இயலும். இல்லையேல் பிணி பல நலிய, மூப்பும் விரைவில் வரும். இயல்பான மூச்சுக்காற்று வெளிச் செல்லும்பொழுது பன்னிரண்டங்குலம் வெளியேறப் பின்பு எட்டங்குலமே உட்புகுகின்றது. இவ்வாற்றால் உடல் வலிமை கணந்தோறும் இழக்கப்படுகின்றது. அதனைத் தடுத்து நிறுத்தினால் உடல் வலிமை பெற்றுத் திகழும். அதனையே, "சிக்கெனக் கட்டி" என்றார். வரித்தல் - விரும்பிக்*

**2833.** இடாக்கொண்டு தூவி எருவிட்டு வித்திக்
கிடாய்க்கொண்டு பூட்டிக் கிளறி முளையை
மிடாக்கொண்டு சோறட்டு மெள்ள விழுங்கார்
அடர்க்கொண்டு செந்நெல் அறுக்கின்ற வாறே. **13**

---

*கொள்ளுதல். நன்மை, இங்கு உடல் நலத்தைக் குறித்தது. "மேல் காற்றுப் பசுக்கள்" என்றற்கு ஏற்ப, இங்கு "ஆன் கறவை" என்றார். விரித்தல் - படரும் கொடிகளைத் தருதல். வெள்ளரி வித்து, சுக்கிலம் உம்மை இழிவு சிறப்பு. அதனால், பின் வந்த வித்து நெல்வித்தாயிற்று. யோகிகட்கு விந்து சயம் வந்து பயன் தருதல் முன் மந்திரத்தில் சொல்லப்பட்டது.*

*இதனால், 'மக்கள் வீணே மாய்ந்தொழியாது, யோகம் பயின்று பயன் பெறவேண்டும்' என்பது கூறப்பட்டது.*

*2833. **தெளிவுரை :-** இங்கு "சோறு" எனப்பட்டது வீடுபேறாதல் தெளிவாகலின், அதுபற்றி ஏனையளவும் அதற்கு ஏற்பனவாக உய்த்துணர்ந்து கொள்ளப்படும்.*

*குறிப்புரை :- கூடை. இஃது எருவைக் கொண்டு போய் நிலத்தில் இடுதற்குப் பயன்படும்; விதையை நிரப்பி எடுத்து விதைக்கவும் பயன்படும். எரு ஓரிடத்திலே சேர்ந்துவிடாமல் தூவுதல் வேண்டும். எனவே, 'எருவை இடாக் கொண்டு தூவி இட்டு' என மாற்றிக் கொள்ளுதல் வேண்டும். எரு, ஞானத்தில் வேட்கை. இது, விதை, முளை, பயிர் எல்லாவற்றையும் செழிக்கச் செய்யும். விதை - ஞானம். முளை - அன்பு; பக்தி, "வித்தினைத் தேடி முளையைக் கை விட்டவர்" (திருவுந்தியார் - 28) என்றார் திருவுந்தியாரில், கிடாய் - ஆட்டுக் கிடாய். இஃது இளம் பயிரைக் கறித்துப் பாழாக்கிவிடும். 'கடா' என்பது எருமைக் கடாவையும், 'கிடாய்' என்பது ஆட்டுக்கிடாயையும் குறித்து வரும் பெயர்களாகும். கிடாயை உபலக்கணமாகக் கொண்டு பயிரை அழிக்க வரும் மற்றை விலங்கு முதலியவற்றையும் கொள்க. 'சுற்றம்' என்னும் தொல்பசுக் குழாங்கள் (தி.8 போற்றித் திருவகவல் - 48) "கொண்டு பூட்டி" எனறது, 'பிடித்து ஓரிடத்திலே நிற்கும்படி கட்டிவிட்டு' என்றபடி. முளையைக் கிளறுதலாவது தடையின்றி முளைத்தற்கும், பின் நன்கு வளர்வதற்கும் ஆவன செய்தல். அவை முளை நீர் வடித்தலும், முளைநீர் பாய்ச்சுதலும் போல்வன. அவை இங்குக் குருலிங்க சங்கமங்களைச் சிவனெனவே கண்டு வழிபடுதலைக் குறித்தன. மிடா, இங்குச் சோறு சமைக்கும் பானை, சிவபோகத்தை ஏற்கின்ற ஆன்ம உணர்வைக் குறித்தது. "மெள்ள" என்றது 'சுவைத்து' என்றதாம். விழுங்கார் - உண்ண மாட்டாதவர். 'இவை மாட்டாதவர் செந்நெல்லை அறுப்பதாகக் கூறிக்கொள்ளுதல் எவ்வாறு பொருந்தும்' என்பதாம். அடர் - அடர்த்தல்; அறுத்தல், அஃது ஆகுபெயராய் அதற்குரிய கருவியைக் குறித்தது. அதன் உள்ளுறைப் பொருள் ஆன்மாவின்*

**2834.** விளைந்து கிடந்தது மேலைக்கு வித்து
விளைந்து கிடந்தது மேலைக்குக் காதம்
விளைந்து விளைந்து விளைந்தகொள் வார்க்கு
விளைந்து கிடந்தது மேவுமுக் காதமே. **14**

---

*கிரியா சத்தி. ஈற்றில், 'எங்ஙனம்' என்பது சொல்லெச்சமாய் எஞ்சி நின்றது.*

*இதனால், 'ஞான வேட்கையும், அதன் வழியவாகிய ஞானம். பத்தி, பற்றறுதி என்பனவும் இல்லாதார் வீட்டு நெறியில் நிற்பதாகக் கூறிக்கொள்ளுதல் போலியே' என்பது கூறப்பட்டது.*

*2834. **தெளிவுரை :-** உயிர்களாகிய உழவர்களுக்கு இம்மைக் காலம் முடிவதற்குள்ளே மறுமை தோன்றுதற்கு விதை விளைந்து கிடக்கின்றது. அஃது 'ஆகாமியம்' என்னும் வினையாம். பிராரத்தத்தின் பயன் விளையும் பொழுது அதுபற்றி மகிழ்ச்சியோ, வருத்தமோ கொள்ளாது ஒட்டின்றியிருப்போருக்கு ஆகாமியம் தோன்றாது. மகிழ்ச்சி வருத்தங்களால் அதில் அழுந்துகின்றவர்கட்கு அவை பற்றி நிகழும் முயற்சிகள் ஆகாமியமாய்த் தோன்றிச் சஞ்சிதமாய் நிலைபெறும். இம்மை முடிவெய்தப் பெற்ற உயிர் மறுமையில் செல்லும் இடம் இந்நிலம். சுவர்க்க லோகம், நரக லோகம் என்பன ஆதலாலும், அவற்றிடையே உள்ள தொலைவு வேறுபட்டன ஆதலாலும், 'இந்த உயிர், இன்ன இடத்தில் செல்லும்' என்னும் வரையறையும் அஃது இங்குச் செய்த வினையால் வரையறுக்கப் படுதலை, "மேலைக்குக் காதம் விளைந்து கிடந்தது" என்றார். காதம் - வழியளவு. இப்படி, 'முன் விளைந்ததிலிருந்து பின் விளைவு; பின்பு அதிலிருந்து பின் விளைவு என்று விளைவு இடைவிடாது தொடர்ந்து கொண்டே போவதால், அந்த வினையின் பயனைக் கொள்கின்ற உயிர்களுக்கு அவை மாறி மாறிச் செல்லும் மூன்று உலகங்களுள் 'இது' என்பது முன்னதாகவே வரையறுக்கப்படுகின்றன.*

*குறிப்புரை :- 'ஆகையால் அலைவு நீங்கி, அமைதியுற வேண்டுவார் பின் விளைவு தோன்றாதபடி பார்த்துக் கொள்க' என்பது குறிப்பெச்சம். பின் விளைவு தோன்றாமைக்கு வழி மேற்குறிக்கப்பட்டது. அடுக்கு, இடைவிடாமை குறித்து நின்றது. முக் காதம் - மூன்று வழிகளின் அளவு. சொற் பொருட் பின்வரு நிலையணி வந்தது.*

*இதனால், 'பிறவிக்கு வித்தாகிய ஆகாமியத்திற்குக் காரணமான விருப்பு வெறுப்புக்களை விடுதல் வேண்டும்' என்பது குறிப்பால் அறிவுறுத்தப்பட்டது.*

*2835. **தெளிவுரை :-** விளை நிலம் இருக்கப் புல்லும் முளையாத களர் நிலத்தை உழுகின்றவர்கள் அதில் தப்பித் தவறி முளைத்த வஞ்சிக்கொடியின் பொலிவினைக் கண்டு, 'அஃது உணவாகும்' என்று மயங்கிப் பின் அஃது அவ்வாறு ஆகாமையால், பட்டினியால் இறத்தலும் கூடுவதே. இவ்வாறு களர்*

**2835.** களர்உழு வார்கள் கருத்தை அறியோம்
களர்உழு வார்கள் கருதலும் இல்லை
களர்உழு வார்கள் களரின் முளைத்த
வளர்உழு வஞ்சியின் மாய்தலும் ஆமே. **15**

**2836.** கூப்பிடு கொள்ளாக் குறுநரிக் கொட்டகத்து
ஆப்பிடு பாசத்தை அங்கியுள் வைத்திட்டு
நாட்பட நின்று நலம்புகுந் தாயிழை
ஏற்பட இல்லத் தினிதிருந் தானே. **16**

---

*நிலத்தை உழுகின்றவர்கள் 'நாம் ஏன் இதனை உழுகின்றோம்' என்றும் எண்ணுவதில்லை. ஆகவே, அவர்களது குறிக்கோளாக நாம் ஒன்றையும் அறியவில்லை.*

***குறிப்புரை :-*** *'அவர்களது செயலுக்கு அவர்களது முன்னை வினைதான் காரணம்' என்பது குறிப்பெச்சம். விளைநிலம், சிவநெறி; தவநெறி. களர்நிலம், உலகர் நெறி. அதில் தப்பித் தவறி முளைக்கும் வஞ்சிக் கொடியாவது மகளிர் இனம். "குறிக்கோளிலாது கெட்டேன்" (தி.4 ப.67 பா.9) என்றார் அப்பர் பெருமானும், இம்மந்திரத்தின் அடிகளை 3, 4, 2, 1 என்னும் முறையிற் கூட்டிக் காண்க.*

*இதனால், 'உலகர் வழிப்பட்டுக் குறிக்கோள் இலாது நாளைக் கழித்தல் பிழை' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

***2836. தெளிவுரை :-*** *குறுநரிக் கொட்டகம் - அணு அளவு ஆய மனம் இருக்கும் உடல். ஆப்பிடு - கட்டப்பட்ட. கூப்பிடு - கூப்பிடுதல் உரக்கக் கத்தி வெருட்டுதல். முதனிலைத் தொழிற்பெயர். அதனைச் சிறிதும் மதியாத குறுநரிகள் (குள்ள நரிகள்) ஐம்பொறிகள். அவைகட்கு இடமாய் உள்ள கொட்டகாரம் உடம்பு. யாப்பிடல், கட்டுதல். அஃது "ஆப்பிடு" என வந்தது. பாசம் - கயிறு. "ஆப்பிடு பாசம்" இறந்த கால வினைத் தொகை. கயிறு, வினை, அதில் உயிராகிய மகன் எப்படியோ அகப்பட்டுக் கொண்டான். அவன் அவ்விடத்திலேயே நெருப்பை உண்டாக்கி (சிவ புண்ணியங்களைச் செய்து) கயிற்றை எரித்துவிட்டுச் சிலநாள் உலாவியிருந்தான். அதை அறிந்து நன்றே அங்குப் புகுந்த மகள் ஒருத்தியின் துணை கிடைத்தமையால் (திரோதன சத்தி அருட்சத்தியாய்ப் பதிந்ததனால்) அந்தக் கொட்டகையை விட்டு வெளியேறி (உடம்பை விட்டு நீங்கி) நல்லதோர் இல்லத்தை (சிவத்தை) அடைந்து இன்பத்துடன் இருக்கின்றான்.*

***குறிப்புரை :-*** *ஆயிழை ஏற்பட – சத்தி பதிய அவனைப்போல் மற்றவர்களும் ஏன் சிவ புண்ணியத்தைச் செய்து உய்தி பெறுதல் கூடாது' என்பது குறிப்பெச்சம். 'நலமாக' என ஆக்கம் வருவிக்க. 'புகுந்த' என்னும் பெயரெச்சத்து அகரம் தொகுத்தலாயிற்று. தோன்றா எழுவாய் வருவிக்கப்பட்டது. பின்னிரண்டடிகள் இன எதுகை பெற்றன.*

**2837.** மலைமேல் மழைபெய்ய மான்கன்று துள்ளக்
குலைமேல் இருந்த கொழுங்கனி வீழ
உலைமேல் இருந்த உறுப்பெனக் கொல்லன்
முலைமேல் அமிர்தம் பொழியவைத் தானே. **17**

---

*இதனால், 'வினைத்தொகையை நீக்கிச் சத்திநிபாதம் வருவித்துச் சிவனை அடைவிப்பன சிவபுண்ணியங்களே' என்பது உள்ளுறை யாகக் கூறப்பட்டது.*

*2837. **தெளிவுரை :-** (மலைமேல் மழை பெய்தால், அங்கு வாழும் மான்கன்று வெப்பம் நீங்கிக் குளிர்ச்சியெய்தித் துள்ளத்தானே செய்யும்?) யோகிகள் சுழுமுனா நாடியை 'மேரு' என்பர் ஆகலான். இங்கு "மலை" என்றது அதனையே, மான் கன்று, அதில் உள்ள ஆதாரங்களைச் சார்ந்து நிற்கும் அந்தக் கரணங்களை, துள்ளுதல். மகிழ்ச்சியெய்தல். கொல்லன் - கருமான்; இரும்புத் தொழில் செய்பவன். இங்கு "கொல்லன்" என்றது யோகியை, உலை, கொல்லன் உலை, என்றது மூலாதாரத்தை. அதில் அக்கினியிருத்தலால் "உலை" எனப்பட்டது. மூலாக்கினியை ஓங்கி எரியச் செய்தலின் யோகி "கொல்லன்" எனப்பட்டான். கொல்லனது உலைமேல் உறுப்பாவது இரும்பு, "என" என்றது உவம உருபு. "அமிர்தம் பொழிய வைத்தான்" என்றது, 'அமிர்தத்தைப் பொழியும்படி செய்து விட்டான்' அஃதாவது, உலைமேல் உறுப்பை வெதுப்புவதுபோல வெதுப்பி விட்டான்' என்றதாம். "முலைமேல் அமிர்தம்" என்னும் குறிப்பால் "ஒருத்தியை" என்னும் சொல்லெச்சம் வந்து இயைந்தது. ஒருத்தி, குண்டலினி சத்தி. 'மூலாக்கினி வெதுப்பியதால், குண்டலினி சத்தி விழித்தெழுந்து, தனது அமிர்தத்தைப் பொழிவாளாயினாள்' என்றபடி 'தனது முலைமேல் அமிர்தத்தை' என்க. "மேல்" என்றது, 'ததும்பி வழிகின்ற' என்னும் குறிப்பினது, "குலைமேல் இருந்த கொழுங்கனி" அருட்சத்தி, வீழ்தல், நிபாதமாதல். அந்தக் கனி சுவை மிகுதற்குக் குண்டலி சத்தியின் அமுதமும் வேண்டப்பட்டது. மான்கன்று - சீவன் என்றும் கொள்ளலாம்.*

*இதனால், சிவயோகத்தால் தியான சமாதிகள் கைகூட, சத்தி நிபாதம் வந்து, அது முதிர்ச்சியடைதல் உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

*2838. **தெளிவுரை :-** பார்ப்பான், கடவுளைத் திருஉருவிலாயினும், தீயிலாயினும் வைத்து வழிபடுவன். அவனுக்குப் பாற்பசுக்கள் ஐந்து உள்ளன. ஆயினும் பார்ப்பான் பசுமேய்க்க மாட்டான், மேய்ப்பவர் வேண்டும். அவர் யாரும் அவனுக்குக் கிடைக்கவில்லை. அதனால் அவன் அவிழ்த்து ஓட்டிய அப் பசுக்கள் தம் மனம்போன போக்கிலேபோய்க் கொட்டிலுக்கு வாராமலே உள்ளன. மேய்ப்பவர் கிடைத்தால், அவை வழிப்பட்டு வந்து வேண்டிய அளவு பாலைக் கொடுக்கும். (மேய்ப்பவர் கிடைக்கவில்லையே).*

*__குறிப்புரை :-__ பார்ப்பான், ஆன்மா, அகம், உடம்பு, பாற் பசு ஐந்து, இறைவனைக் கண்டும், அவன் புகழைக் கேட்டும், அவன் புகழ் பாடுதலிலே*

**2838.** பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரு மின்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாய்ப் பொழியுமே. **18**

**2839.** ஆமாக்கள் ஐந்தும் அரிஒன்றும் முப்பதும்
தேமா இரண்டொடு தீப்புலி ஒன்பதும்
தாமாக் குரம்கொளின் தம்மனத் துள்ளன
மூவாக் கடாவிடின் மூட்டுகின் றாரே. **19**

---

*சுவை கண்டும், அவன் வழிபாட்டில் மணம் கண்டும் கைகளால் அவனுக்குரிய பொருள்களைத் தீண்டியும் உவகையடைந்து ஆன்மாவுக்கு உதவக்கூடிய 'கண், காது, நா, மூக்கு, மெய்' என்னும் ஐம்பொறிகள். மேய்ப்பர், குருவின் அறிவுரைகள். அவை அப்பொறிகளை அதற்கு உதவும் வகையில் நடத்தும். அவ்வுரைகள் இல்லாமையால் ஆன்மா ஐம்பொறிகளால் வரும் பயனை அடைய இயலாமல் அலமருகின்றது என்பதாம். மனம் நன்னெறிக்கண் சென்று ஐம்பொறிகளையும் நல்வழிப்படுத்தின இப்பொறிகள் உயிர்க்கு உறுதி பயக்கும் சிவபுண்ணியச் செயலுக்குத் துணைநிற்கும் என்றபடி.*

*பாற்பசு - கறவைப்பசு "உண்டாய், அடங்கினால்" என்றமையால், 'உண்டாயின் அடங்கும்' என்பது பெறப்பட்டது. "பாலாய்" என்பதில் உள்ள ஆக்கம் மிகுதி குறித்தது. 'சோறு கல்லும், மண்ணுமாய் உள்ளது' என்பதிற்போல.*

*இதனால், குரு உபதேசம் பெறாதார், நன்னெறியை அடைய மாட்டாது அல்லல் உறுவர்' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

*2839. தெளிவுரை :- ஒரு காட்டிலே ஐந்து காட்டுப் பசுக்கள், முப்பத்தொரு சிங்கங்கள், தெய்வத் தன்மை வாய்ந்த இரண்டு குதிரைகள், ஒன்பது கொடிய புலிகள், காட்டெருமைக் கடாக்கள் வாழ்கின்றன. அங்குச் செல்வோர் அவைகளில் இரண்டு குதிரைகளை மட்டும் தம் வசப்படுத்தி, அவற்றின்மேல் தக்கபடி ஏறிச் செல்வாராயின், மேற்கூறிய கொடுவிலங்குகள் யாவும் அவர் விருப்பப்படி அடங்கி நடக்கும். மாறாக, குதிரைமேல் ஏறாது, கட்டுடல் வாய்ந்த அந்தக் கடாக்களின் மேல் ஏறுவாராயின், மேற்சொல்லிய கொடுவிலங்குகளையும் வெறியேற்றித் தாமே தமக்குத் துன்பத்தை வருவித்துக் கொள்பவராவார்.*

*குறிப்புரை :- ஆமா - காட்டுப் பசு. அவை ஐந்தாவன சிவ தத்துவங்கள். 'காட்டுப் பசு, மக்களுக்கு இதம் செய்வது போல, நாவால் நக்கி நக்கியே கொன்றுவிடும்' என்பர். சிவ தத்துவங்கள் வித்தியா தத்துவங்களைச் செலுத்தி, உலக இன்பத்தில் அழுத்திப் பிறப்பை உண்டாக்குதல் பற்றி அவைகள் காட்டு பசுக்களாகச் சொல்லப்பட்டன. பக்குவம் வாய்ந்த ஆன்மாக்களுக்கு இறைவனது*

*சத்தி திரோதான சத்தியாய்ப் பிறவித் துன்பத்தைப் பயத்தலால், அந்தச் சத்தியின் வேறுபாட்டால் உண்டாகிய சிவ தத்துவங்களை அவ்வாறு உருவகித்தார். ஆன்மாப் பக்குவம் எய்தியவுடன் திரோதான சத்தி அருட் சத்தியாக மாறினால் சிவதத்துவங்கள் மட்டுமல்ல; எல்லாத் தத்துவங்களுமே நல்லனவாக மாறிவிடும். அதுவரையில் அவை யாவும் பிறவித் துன்பத்தையே தரும். அரி - சிங்கம். முப்பத்தொரு சிங்கங்களாவன. சிவ தத்துவம் ஐந்து தவிர, மற்றைய தத்துவங்கள். புலியை நோக்கச் சிங்கங்கள் அத்துணைக் கொடியன அல்ல. ஏனெனில் 'சிங்கம் பசித்து, உணவை நாடும் பொழுது தான் பிற விலங்குகளைக் கொல்லும்' என்றும், 'மற்றைய வேளைகளில் எதனையும் கொல்லாது' என்றும் கூறுவர். அம்முறையில் வீடுபேற்றினை நோக்கத் தத்துவங்கள் தடையாயினும், உலகியலை நோக்க, அவை உறுதுணைகளேயாம். அது பற்றி அவற்றை 'அரிகள்' என்றார். தே - தெய்வத்தன்மை. மா - குதிரை. இப்பல பொருள் ஒரு சொல், விலங்குகளின் இடை வைத்து எண்ணப்பட்டதனால், குறித்த பொருளை உணர்த்திற்று. இரண்டு குதிரைகளாவன இடநாடி, வலநாடி மூச்சுக்கள். ஒன்பது புலிகளாவன தூல உடம்பில் உள்ள நவத் துவாரங்கள். இவை எஞ்ஞான்றும் தம் செயலைச் செய்யத் தவறுவதில்லை. அதனால் அடக்கப்படாமை பற்றி அவைகளை, "தீப்புலி" என்றார்.*

*தாமா - தாவுகின்ற குதிரை. "தாவுகின்ற" என்ற அடையானே, 'மா' என்பது பாய்மா ஆயிற்று. குரம் - குதிரையின் குளம்பு. இதனை ஊன்றி நடத்தல் பற்றியே குதிரையை வடமொழியாளர் 'குரகதம்' என்றனர். "குரங்கொளின்" என்பது, "நடக்குமாயின்" என்பதைக் குறிக்கும் குறிப்பு மொழியாய்ப் பின்னும் ஏறிச் செலுத்துதலைக் குறித்தது. ''தம்மனத்து உள்ளன'' என்பதற்கு, 'தங்கள் மனத்தின்படி உள்ளனவாம்' என்க. ஆமா முதலியவற்றைக் கூறினமையால் 'காடு' என்பது போந்தமையின், குதிரையை ஏறுவாரும். "தம்மனம்" என்பது அவர் மனமும் ஆதல் விளங்கிற்று. மூவாமை, தன் எதிர் மறையாகிய இளமையைக் குறித்தது. 'மூட்டுகின்றாரே ஆவர்' என ஒரு சொல் வருவித்து முடிக்க. குதிரையை ஏறிச் செலுத்துதலாவது, வாசியோகம் செய்தலாம். யோகம் வல்லார்க்கு மூச்சுக் காற்று அவர் வழிப்படுதலின், அந்நிலையில் அதனைக் குதிரையாகவும், ஏனையோர்க்கு அதுதான் சென்ற வழியே செல்லுதலின் அந்நிலையில் அதனைக் கடாவாகவும் உருவகித்தார். ஒரு பொருளே நிலை வேறுபாடு பற்றிப் பல பொருளோடு உவமிக்கப்படுதலை, "நட்டார்க்கு அமிழ்தொத்து, நள்ளார்க்கு நஞ்சொக்கும் இவன்" என்னும் வழக்கத்தாலும்,*

> *கார்; அணி கற்பகம்; கற்றவர் நற்றுணை;*
> *பாணர் ஒக்கல்;*
> *சீரணி சிந்தா மணி; அணி தில்லைச்சிற்*
> *றம்பலவன்*

**2840.** எழுதாத புத்தகத்து ஏட்டின் பொருளைத்
தெருளாத கன்னி தெளிந்திருந் தோத
மலராத பூவின் மணத்தின் மதுவைப்
பிறவாத வண்டு மணம்உண்ட வாறே. **20**

---

*தாரணி கொன்றையன்; தக்கோர்தம் சங்கநிதி;*
*விதி; சேர்*
*ஊருணி உற்றவர்க்கு; ஊரன்; மற்றியாவர்க்கும்*
*ஊதியமே. - தி.8 திருக்கோவையார், 400*

*என்னும் செய்யுளாலும் அறியலாம்.*

*இதனால், யோகம் பயில்வார்க்கு அவரது கருவி கரணங்கள் அவர் வழிப்பட்டனவாய் வீடு பயத்தலும், அது பயிலாதார்க்கு அவை தம்மியல்பிற் சென்று அதனைப் பயவாமையும் உள்ளுறையாகக் கூறப்பட்டன. முன் தந்திரத்தில் ஐம்பொறிகளை மட்டும் கூறினார்; இம்மந்திரத்தில் அனைத்துக் கருவிகளையும் கூறினார். ஈற்றடி உயிரெதுகை.*

*2840. தெளிவுரை :- எழுத்துக்கள் எழுதப்படாத ஏடு ஒன்று உள்ளது. அதை, 'புத்தகம்' என்கின்றனர். அந்தப் புத்தகத்தைப் பார்க்காமலே ஒரு பெண் அதில் உள்ள பொருளைத் தானே உணர்ந்து, பிறருக்கும் உணர்த்துகின்றாள். (இது நிற்க, மற்றொரு செய்தி). மலராத மலர் ஒன்று உள்ளது. அதில் உள்ள தேனை வண்டாகப் பிறவாத வண்டு ஒன்று அதன் மணத்தின் வழியாக அறிந்து சென்று உண்கின்றது. (இவைகளையெல்லாம், 'நம்ப முடியாது' என்றாலும், உண்மையான அதிசய நிகழ்ச்சிகளாய் உள்ளன).*

*குறிப்புரை :- எழுதாத ஏடு, இறைவனது ஞான சத்தி, எல்லாப் பொருள்களும் முதலில் அதன்கண் இயல்பாகத் தோன்றுகின்றன. கன்னி, அவனது கிரியா சத்தி, அது ஞான சத்தியின் வேறன்மையால், ஞான சத்தியில் தோன்றியவற்றை அப்படியே உயிர்களை அறிவித்தும், செய்வித்தும் நடாத்துகின்றது. இது முதற்கண் கூறப்பட்ட பொருள்.*

*இனி, மலராத பூ, அரும்பாய்த் தோன்றிப் போதாய் முதிர்ந்து மலராத, அதனால், பின்பு வாடாத பூ, சிவம் என்றும் ஒருபடித்தான இன்பமாய் உள்ளது. பிறக்கும் பொழுது புழுவாய்ப் பிறந்து பின்பு வண்டாக மாறுகின்ற வண்டுகள் போலாது, பிறக்கும்பொழுதே வண்டாய்ப் பிறந்த வண்டு, முற்பிறவிகளிற்றானே "புறச்சமய நெறி நின்றும், அகச்சமயம் புக்கும், புகல் மிருதி வழி உழன்றும் ...... .... ....." வருதலாகிய படிகளையெல்லாம் கடந்து, பிறக்கும் பொழுதே சித்தாந்த சைவ மரபில் பிறந்த ஆன்மா. மணம், அருள் ஒளி, தேன், சிவானந்தம், "சித்தாந்தத்தே சிவன் தன் திருக்கடைக்கண் சேர்த்திச் - செனனம் ஒன்றிலே சீவன் முத்தராக*

**2841.** போகின்ற பொய்யும் புகுகின்ற பொய்வித்தும்
கூகின்ற நாவலின் கூழைத் தருங்கனி
ஆகின்ற பைங்கூழ் அவையுண்ணும் ஐவரும்
வேகின்ற கூரை விருத்திபெற் றாரே. **21**

---

*வைத்து ஆண்டு, மலம் கழுவி, ஞானவாரி மடுத்து ஆனந்தம் பொழிவன்" (சிவஞான சித்தியார் - சுபக்கம் - சூ. 8, 16) ஆதலின் பிறக்கும்பொழுதே சித்தாந்த சைவ மரபிற் பிறந்த ஆன்மாவை, "பிறவாத வண்டு" என்றார்.*

*"ஓத" என்னும் செயவெனெச்சம் நிகழ் காலத்தாய் நிற்க, 'உண்டவாறு வியப்பு' எனச் சொல்லெச்சத்தோடு முடிந்தமையால் 'இரண்டும் வியப்பு' என்றதாயிற்று. 'மணத்தால் உண்ட' என ஆல் உருபு விரிக்க. ஈரடி உயிரெதுகை வந்தது.*

*இதனால் உயிர்கட்கு ஞானம் நிகழுமாறும், பிறக்கும் பொழுதே ஞானத்திற்கு உரியவராய்ப் பிறந்தோரது சிறப்பும் கூறப்பட்டன.*

*2841.* ***தெளிவுரை :-*** *பறவைகள் தங்கிக் கூவுகின்ற நாவல் மரத்தினின்றும் உணவாய் அமைகின்ற கனிகள் சில பயன்படாத இடத்தில் உதிர்வனவாயும், சில, மரத்திற்கு அடியில் உதிர்ந்தும் புதர் முதலியவற்றால் பயன்படாதனவாயும் போய்விட, அந்த நாவல் மரத்தை உள்ளடக்கியுள்ள குடிலில் வாழ்கின்ற ஐவர், வேறிடத்தில் வளர்ந்த பயிர் தருகின்ற நெல்லை உண்டு வாழ்கின்றனர். அந்தக் குடிலோ சில நாட்களில் வெந்தொழிவதாய் உள்ளது.*

***குறிப்புரை :-*** *நாவல் மரம், சுவாச கோசம். அதினின்றும் உணவாகக் கிடைக்கும் கனி உடலை நிலைபெறுத்துகின்ற சுவாசம், போகின்ற கனி, வெளிச்செல்லும் காற்று, புகுகின்ற கனி, உள்ளே வரும் காற்று, புகுகின்ற காற்றை வெளிவிடாது தடுத்தால் பயன் விளைதல் பற்றி அதனை, "வித்து" என்றார். 'எனினும், அதனைத் தடுப்பார் இன்மையால் வெளிச்சென்றே வீணாகின்றது' என்றற்கு இரண்டையும் "பொய்" என்றே கூறினார். பறவைகள் சுவாச கோசத்தில் உள்ள நரம்பு முதலியன. 'கூவுகின்ற' என்பது குறைந்து நின்றது. ஆகின்ற - வளர்கின்ற. பைங்கூழ் - பயிர், அது கருவியாகு பெயராய், அதன் விளைவைக் குறித்தது. பயிராவது, முற்பிறவியில் ஆக்கிய வினை, அதன் விளைவாவது, பிரார்த்த விளைவு, அதனை உண்ணும் ஐவர், ஐம்பொறிகள், உண்பது உயிரேயாயினும் அது தன்னை 'வேறு' என உணராது அவையாய் நின்று உண்ணுதலின் அவற்றையே உண்போராகக் கூறினார். உயிர் தன்னை, 'அவற்றின் வேறு' என உணர்ந்து நீங்கியிருப்பின், பிராரத்த விளைவு உணவாகாது' என்பது கருத்து. விரைவு பற்றி, "வேகின்ற" என, எதிர்காலம் நிகழ்கால மாயிற்று. கூரை - குடில். வேவதாய குடிலாவது தூல உடம்பு. 'கூரையில்' என ஏழாவது விரிக்க. விருத்தி - பிழைப்பு.*

**2842.** மூங்கில் முளையில் எழுந்ததோர் வேம்புண்டு
வேம்பினைச் சார்ந்து கிடந்த பனையில்ஓர்
பாம்புண்டு பாம்பைத் துரத்தின் பாரின்றி
வேம்பு கிடந்து வெடிக்கின்ற வாறே. **22**

---

*"நாவலின்" என்னும் 'இன்', நீக்கப் பொருளில் வந்த ஐந்தனுருபு. கூழ் - உணவு. கனியே உணவாயினும் உணவாம் தன்மையை நோக்கி அதனை வேறு போல வைத்து, "கூழைத் தரும் கனி" என்றார். சுவாசத்தை நாவற் கனியாகக் கூறியது, அக்கனி பெரும் பாலும் சாலையோரங்களில் நிற்கும் மரங்களினின்று சாலை நடுவில் உதிர்ந்து கிடப்பினும் வாழை, மா, பலா இவற்றின் கனிகளைப் போல மக்கள் ஆர்வமுடன் கொள்ளாமை பற்றி, 'சுவாசமும் இயற்கையாய் அமைந்து, அருமையறியப்படாததாய் உள்ளது' என்பதாம். இரண்டாம் அடியை முதலிற் கூட்டி, முதல் அடியின் ஈற்றில் 'ஆக' என்பது வருவிக்க.*

*"பைங்கூழ்" எனப்பட்ட பிராரத்த விளைவையே, "போகின்ற பொய்" என்பதற்கும் பொருளாக வைத்து, "புகுகின்ற வித்தாவது ஆகாமியம்" என்றவர், அதற்கு இயைபு காட்டிற்றிலர்.*

*இதனால், 'சுவாசத்தை யோக நெறியில் பயன்படுத்திக் கொள்ளாதவர், பிராரத்தத்தை அனுபவித்து மறைகின்றவரே யாவர்' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

*2842. தெளிவுரை :- மூங்கில் முளையாகிய பராசத்தியில் வேம்பு எனப்படும் திரோதானசத்தி உண்டு. அவ்வேம்பைச் சார்பாகக் கொண்டு ஒரு பனையும் அதன்கண் ஒரு பாம்பும் இருந்தன. இங்கே பனை என்றது பனை விதையை. அதாவது மாயை கன்மங்களை; அப்பனையில் உள்ள பாம்பு என்றது அம் மாயையை வியாபித்து நிற்கும் குண்டலிசத்தியை; பாம்பைத் துரத்திப் பனையின் முளையைத் தின்பார் இலர். இல்லாமையால் அப்பனை விதை வேம்பின்கண் கிடந்து முளையைத் தோற்றுவிக்கின்றது என்றபடி.*

*மூங்கில் - பரம்பொருள். மூங்கில் மூளை - அதன் கண் முளைக்கும் பராசத்தி. அதனைச் சார்ந்து திரோதான சத்தியும் அச்சத்தியைச் சார்பாகக் கொண்ட மாயை கன்மங்களும் குண்டலினியும் உள்ளன. கன்மம் மாயையாகிய பொருளைப் பற்றுக்கோடாகக் கொள்ளுதலின் அவ்விரண்டினையும் ஒன்றாய் அடக்கிப் பனை என்றார். வேம்பு கிடந்து வெடித்தலாவது மாயை திரோதான சத்தியின்கண் கிடந்து உயிர்களின் வினைக்கீடாகத் தன் காரியங்களைத் தோற்றுவித்தல். வெடித்தல் - முளையைத் தோற்றுவித்துப் பின் மரமாக வளர்த்தல். திரோதான சத்தி என்பது உயிர்களில் மறைந்திருந்து ஆணவ மாயை கன்மங்களைத் தொழிற்படுத்தும் இறைவனது அருளாற்றல். அது பிறவி நோய்க்கு*

**2843.** பத்துப் பரும்புலி யானை பதினைந்து
வித்தவர் ஐவர் வினோதகர் ஈரெண்மர்
அத்தகு மூவர் அறுவர் மருத்துவர்
அத்தலை ஐவர் அமர்ந்துநின் றாரே. **23**

---

*மருந்தாகலின், தப்பா மருந்தாகி நிற்கும் வேம்பென உருவகிக்கப்பட்டது. வே - மூடுதல்.*

*குறிப்புரை :- தோற்றுவித்தல் என்னும் பொருளைத் தருதலின், வேம்பு என்பது தன்கண் மாயை கன்மங்களை அடங்கக் கொண்டு செலுத்தி ஆணவத்தின் வலியை மெலிவிக்கும் திரோதான சத்திக்கு அறிகுறியாய் நின்றது. வினையும் மாயையும் விதையும் பனையும் போலும், அதாவது தாலபீஜம் போலும் என்னும் மெய்ந்நூல் வழக்குப் பற்றிப் பனை என்றது விதைக்கும் மரத்திற்கும் பொதுவாய்க் கன்ம மாயைகளை உணர்த்துகிறது. குண்டலி சத்தியைச் சுழுமுனையில் ஓடுமாறு துரத்திப் பனை விதை முளையாகிய வினையை அழிப்பார் இல்லாமையினால், திரோதான சத்தியால் விளையும் தனு கரண புவன போகங்களும் தொடர்ந்து வருகின்றன என்பது கருத்து. தின்னுதலை, 'உலகறியப் பால்முளை தின்று மறலி உயிர்குடித்த கான்முலை' என்புழிப் போலுரைக்க.*

*குண்டலி யோகத்தின் பயன் வினை நீங்கிப் பிறப்பறுதல் என்பது கூறப்பட்டது. "இனி மூங்கில் முளை - மனம், வேம்பு - சிவம், பனை - திரோதான ஆற்றல். பாம்பு - அறியாமையைச் செய்யும் மலம். பாம்பைத் துரத்தித் தின்றல் - அறியாமையை நீக்குதல். வெடித்தல் - பிரித்தல், சிவனருளால் அறியாமையை நீக்குவாரின்மையின் சிவம் பிரிந்து நிற்கின்றது. வெடித்தல் - பிரிதல் என உரைப்பாரும் உளர். மூங்கில் முளையைப் பராசத்தி எனவும், அதில் எழுந்த வேம்பை ஆதிசத்தியாகிய திரோதான சத்தி எனவும், அதன்கண் கிடந்த பனையை மாயை, கன்மம் எனவும், பாம்பைச் சுத்த மாயையாகிய குண்டலினி" எனவும் கொள்க.*

*2843. **தெளிவுரை** :- (சித்தாந்தத்தில், 'கருவிகள் தொண்ணூற்றாறு' என்பவற்றில் 'தத்துவம் முப்பத்தாறு, தாத்துவிகம் அறுபது' எனச் சொல்லப்படுகின்றன. **படைப்புக் காலந்தொட்டு, அழிப்புக் காலம் வரையில் நிலைத்து நிற்கும் கருவிகள், தத்துவம், அவற்றின் காரியங்களாய், இடையே தோன்றியழிவன தாத்துவிகம்**. ஆகவே, தாத்துவிகங்கள் யாவும் தூல உடம்பில் உள்ளனவாம். அது பற்றி அத்தாத்துவிகங்களை மட்டுமே இம் மந்திரத்தில் குறிக்கின்றார்).*

*புலி, பாயும் தன்மை உடையது ஆகலின், "பிராணன், உதானன், அபானன், சமானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன்' எனப்*

*பெயர்பெற்று இயங்கும் வாயுக்கள் பத்தினையும் "பத்துப் பரும்புலி" என்றார். பருமை புலியின் உடன் கண்ணது, இவை பத்தும், 'வாயு' என்னும் ஒரு பூதத்தின் கூறுகளே. வாயுக்களாகிய புலி போல்வர் பதின்மர் நாடிகள்.*

*யானை பதினைந்தாவன, பிருதிவி, அப்பு, தேயு என்னும் மூன்று பூதங்களின் மூவைந்து பதினைந்து கூறுகளாகிய தாத்துவிகங்கள், அவற்றுள்,*

***பிருதிவியின் கூறுகள் :***

*மயிர், தோல், நரம்பு, எலும்பு, தசை.*

***அப்புவின் கூறுகள் :***

*இரத்தம், வெயர்வை, சிறுநீர், நிணம், சுக்கிலம்.*

***தேயுவின் கூறுகள் :***

*பசி, தாகம், உடல் வெப்பம், சோம்பல், பித்து, இவைகளைத் தூல உடம்புடைய யானைகள் என்றார்.*

*வித்தகர் - திறமையாளர். 'ஓசை ஊறு, ஒளி, சுவை, நாற்றம்' என்னும் புலன்கள் ஐந்தும் எல்லோரையும் தம்பால் ஈர்த்து நிற்றலின் இவைகளை "வித்தகர்" என்றார். இவ்வைந்தும் முறையே ஆகாயம் முதலிய ஐந்து பூதங்கட்கும் சிறப்புக் குணமும் ஆகும்.*

*வினோதகர் - பொழுது போக்கிற்கு வேடிக்கை செய்வோர், 'இடைகலை, பிங்கலை, சுழுமுனை, அத்தி, அலம்புடை, காந்தாரி, குகு, சிகுவை, புருடன்' என்னும் நாடிகள் பத்தும் உடம்பை வாழச் செய்வதாலும், 'காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம்' என்னும் குற்றம் ஆறும் உடலில் வாழும் உயிர் தன் வாழ்நாளைக் கழித்தற்கு ஏதுவாய் நிற்றலாலும் இவைகளை 'வினோதகர்' என்றார்.*

*நாடிகள் பத்தும் 'ஆகாயம்' என்னும் ஒரு பூதத்தின் கூறுகளே.*

*'மூவரோடு அறுவர்' என உருபு விரித்து, 'ஒன்பதின்மர்' என உரைக்க. இவ்வொன்பதின்மர் ஆவார். தூல உடம்பில் உள்ள நவத்துவாரங்கள், இவைகள் 'ஒன்பது வாயில்கள் என்றும் சொல்லப்படும். கண் இரண்டு, காது இரண்டு, மூக்கு இரண்டு, வாய், எருவாய், கருவாய் இவை ஒவ்வொன்று, இவைகளில் இறுதி மூன்றும் உடல் நிலைப்பிற்கு இன்றியமையாதனவாய் இருத்தலின் இவைகளே "மூவரோடு" என வேறு பிரித்து ஓதினார் இவ்வொன்பதும் உடல் நிலைப்பிற்குக் காரணம் ஆதல் பற்றி உடல் நலத்தைச் செய்கின்ற மருத்துவர்களாகக் கூறினார்.*

*ஈற்றில் உள்ள "ஐவர்" என்பதற்கு, 'மற்றும் ஓர் ஐவர்' என உரைக்க. 'வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் என்னும் கன்மேந்திரிய விடயங்கள் ஐந்தையே 'மற்றும் ஓர் ஐவர்' என்றார். இவைகளும் ஆகாயம் முதலிய பூதங்களில்*

**2844.** இரண்டு கடாக்களுண் டிவ்வூரி னுள்ளே
இரண்டு கடாக்கட் கொருவன் தொழும்பன்
இரண்டு கடாவும் இருத்திப் பிடிக்கின்
இரண்டு கடாவும் ஒருகடா ஆமே. **24**

---

*ஒவ்வொன்றின் சிறப்புக் குணமாம்.*

*ஆகத் தாத்துவிகம் அறுபதினையும் கூறியவாறு காண்க.*

*ஈற்றில் உள்ள "ஐவர்" என்பதை, "அத்தனை" என்பதற்கு முன்னே கூட்டி, 'ஆகிய இவர்கள் அத்தலை அமர்ந்து நின்றார்' என முடிக்க. தலை - இடம். சூனிய சம்பாடணையாதல் பற்றி, "அத்தலை" என மறை பொருளாகக் கூறினார். அது தூல தேகமே என்க.*

*இதனால், 'தத்துவ ஆராய்ச்சி செய்வோர் தூல தேகத்தின் இயல்பினை இவ்வாறு ஊன்றி உணர்தல் வேண்டும்' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

***2844. தெளிவுரை :-*** *(மேல், "ஆமாக்கள் ஐந்து" என்னும் மந்திரத்தில், (பா.2839) 'பிராண வாயுத் தன்னை அடக்குவார்க்குக் குதிரையாயும், அல்லாதார்க்குக் கடா வாயும் நிற்கும்' எனக் கூறியதனை இங்கு வேறோராற்றான் வலியுறுத்துகின்றார்.*

*இரண்டு கடாக்கள், இடநாடி வலநாடிகள் வழியாக இயங்கும் பிராணன், அஃது ஒன்றேயாயினும் இயக்க வகையால் இரண்டாகின்றது. இவ்வூர், இந்தத் தூல தேகம், தொழும்பன் - அடியான். ஆண்டான் சொற்படி அக் கடாக்களை மேய்ப்பவன். அஃது அகங்கார தத்துவம். ஆன்மாவாகிய ஆண்டான் அந்தக் கடாக்களை அந்த அடிமையினிடம் விடாமல் தானே தன்னிடத்தில் கெட்டியாகப் பிடித்து வைப்பானேயானால், அந்த இரண்டு கடாக்களும் ஒரு கடாவாய் விடும். அஃதாவது, 'இடை நாடி பிங்கலை நாடி வழியாக இயங்காமல், சுழுமுனை நாடியில் நின்றுவிடும்' என்பதாம்.*

***குறிப்புரை :-*** *இடை நாடியால் பூரித்தலும் (உள்வாங்கலும்) பிங்கலை நாடியால் இரேசித்தலும் (வெளிவிடுதலும்) இன்றிச் சுழுமுனை நாடியால் நிறுத்துதல் 'கும்பித்தல்' எனப்படும். அங்ஙனம் கும்பித்தால் விளையும் பயன்கள் பல. 'அதனைச் செய்க' என்பது குறிப்பெச்சம்.*

*'ஊர் பெரிது; அதற்கு உழைக்க இரண்டு கடாக்களே இருத்தல் அதிசயம். பின்னும் அவை இரண்டும் ஒன்றாகி விடுதல் அதிசயத்தினும் அதிசயம்' என்றவாறு.*

***2845. தெளிவுரை :-*** *பயிரிடுதற்கு ஏற்புடைய ஒரு கொல்லையை, அதனுட் கிடக்கும் மேடு பள்ளங்களைச் சமன் செய்து, வரம்புகோலி, வரிசை வரிசையாக*

**2845.** ஒத்த மனக்கொல்லை யுள்ளே சமன்கட்டிப்
பத்தி வலையில் பருத்தி நிறுத்தலால்
முத்தம் கவறாக மூவர்கள் ஊரினுள்
நித்தம் பொருது நிரம்பிநின் றார்களே. **25**

---

*வேலியைக் கட்டிப் பருத்தியை நான் பயிரிட்டதனால், எங்கள் ஊரில் உள்ளவர்கள் மூவர் யான் கொண்டிருந்த உள்ள நட்பையே சூதாடு கருவியாகக் கொண்டு இடைவிடாது என்னுடன் சூது பொருது, இப்பொழுது அதை விட்டுவிட்டார்கள்.*

*குறிப்புரை :- உழைத்துப் பொருள் தேட விரும்பாதவரே சூதாடு களத்தில் சென்று சேர்வார்கள். நான் பயிர் செய்ய முனைந்து விட்டமையால், அங்குச் செல்லவில்லை. அவர்களும் என்னை அங்கு அழைக்கவில்லை' என்பதாம். ஒத்தல், கொல்லைக்கு ஆகுங்கால், பயிருக்கு ஏற்புடைய தன்மையும், மனத்திற்கு ஆகுங்கால் தவத்திற்கு இயையும் பான்மையையும் குறிக்கும். மேடு - பள்ளம், வெறுப்பு, விருப்பு. 'பத்தி - வரிசை' என்பது வெளிப்பொருள். "வலை" என்பதற்கு 'வேலி' என வெளிப்பொருள் கொள்ளாவிடில் மறை பொருட் கூற்றாகாது. 'பருத்தி' என்பதை உள்ளுறைப் பொருட்டு, 'தீ' என்பது குறுகி நின்றதாகக் கொண்டு பெரிய தீ, மூலாக்கினி' என உரைக்க. நிறுத்தல், நிலைப்படுத்துதல், "முத்தம்" என்பது முத்தங் கொடுத்தல் போன்ற மிக நெருங்கிய நட்பைக் குறிப்பதாய், வேற்றுமை யின்றி ஒன்றி இயைபை உணர்த்திற்று. மூவர், முக்குணம், நிரம்புதல் - தம் அளவில் தாம் நிற்றல்.*

*இதனால், 'வேண்டுதல், வேண்டாமையை விட்டு, சிவ பத்தியுடன் சிவயோகம் செய்தால், முக்குண விகாரங்கள் நீங்கும்' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

*2846. தெளிவுரை :- கருடனைப் போலக் கூகையும் பாம்பைக் கண்டவுடன் கொல்லும், அதனால் கூகையும், பாம்பும் தம்முட் பகையாவன, கிளியும் பூனையும் தம்முட் பகையினவாதல் தெளிவு. நாகை - நாகணவாய்ப் புள், இதுவும் கிளியைப் போலப் பேசும் தன்மையுடையது; குறும்பூழ் (காடை) அத்தன்மையைப் பெறாமையால் அவையும் ஒன்றுவன அல்ல. இவை அனைத்தும் வாழ்கின்ற ஒரு காட்டில் எலிகளும் வாழ்கின்றன. "கிள்ளை பாடுவ; கேட்பன பூவைகள்" (தி.12 மனுநீதிகண்ட புராணம், 8) என்றதனால், பேசும் தன்மையோடு, கேட்கும் தன்மையுடையது நாகணவாய்ப்புள்' என்பது விளங்கும்.*

*கூகை, மற்றைப் பறவைகள் போல வெளியே விருப்பப்படி பறந்து காணப்படாது. இருக்கும் இடம் தெரியாமல் ஒளிந்து கிடக்கும். பாம்பு மிகக் கொடியது. கிளி யாவராலும் மிக விரும்பப்படுவது. பூனை வெளிக்கு*

**2846.** கூகையும் பாம்பும் கிளியொடு பூழையும்
நாகையும் பூழும் நடுவில் உறைவன
நாகையைக் கூகை நணுக லுறுதலும்
கூகையைக் கண்டெலி கூப்பிடு மாறே. **26**

---

*நல்லதுபோல இருந்து பாயும், நாகணவாய்ப்புள், கிளியோடு ஓரளவு சமமாக மதிக்கப்படுவது, குறும்பூழ், ஒன்றிலும் சேராதது, 'சிறு துரும்பும் பல்லுக்குதவும்' என்பதுபோல, ஒரோர் காலத்தில் சகுனத்தை அது தரும். இவற்றின் நடுவில் உறைவன எலிகள். 'இவற்றின்' என்பது எஞ்சி நின்றது.*

*இவைகளைப் போல, உலகத்தில் பல திறப்பட்ட மக்கள் வாழும் நிலையில், அவர்களுக்குள்ளேயும் ஒற்றுமையின்றி இகலி வாழ்கின்றார்கள். இங்குக் குறிக்கப்படும் இகல், சமயப் பூசல்.*

*எலி, ஓர் எளிய பிராணி, மக்களுக்கு அதுவும் பகைதான். ஆயினும் இங்கு மக்களை நாம் கருத வேண்டியதில்லை. மேற்கூறிய, அனைத்தும் சிறிய அளவிலோ, பெரிய அளவிலோ எலிக்குப் பகையாவனதாம். அதுபோல, எத்திற மக்களும் ஏழைக்கு உதவுபவர் அல்லர். மாறாக, நலிவும் செய்வர்.*

*தத்துவத் துறையில் ஏழையராவார். சற்குரு கிடைக்கப் பெறாதவர். அவர்கள், 'நமக்கு யார் வழிகாட்டுவார்கள்' என்று அலமந்திருக்கும் பொழுது, கூகை போல வெளியுலகத்தில் தொடர்பு கொள்ளாத சிலர் சில அறிவுரைகளை வேண்டி, நாகணவாய்ப் புள் போன்றவர்களிடம் அறிவுரை கேட்கச் செல்லும் பொழுது, செல்பவரது நிலை தெரியாமல் அவரைக் குருவைத் தேடுபவர் குருவாக அடைந்தால் என்ன ஆகும்?*

> *"குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக்*
> *குருடும் குருடும் குழிவிழு மாறே" - தி.10 பா.2746*

*என இவரே முன்பு அருளிச் செய்தபடி, இருவருங் கெடுவது தவிர, வேறு எதுவும் விளையாது. இதனையே இங்கு,*

> *"நாகையைக் கூகை நணுக லுறுதலும்*
> *கூகையைக் கண்டு எலி கூப்பிடுமாறு"*

*என்றார். கூப்பிடுதல் - தன்பால் வரவழைத்தல். ஆறு - நெறிமுறை. 'ஆறு உள்ளது' என ஒரு சொல் வருவித்து முடிக்க. பிற்பகுதிப் பொருள் இனிது விளங்குதற் பொருட்டு, முற்பகுதியில் பல பொருள்களைக் கூறினார்.*

*இதனுள் உய்த்துணர வைத்த காடாவது உலகம்.*

*இதனால், சற்குருவைச் சாராது அசற்குருவைச் சார்தலின் குற்றம் உள்ளுறையாக உணர்த்தப்பட்டது.*

**2847.** **குலைக்கின்ற நன்னகை யான்கொங் குழக்கின்**
**நிலைக்கின்ற வெள்ளெலி மூன்று கொணர்ந்தான்**
**உலைக்குப் புறம்எனில் ஓடும் இருக்கும்**
**புலைக்குப் பிறந்தவை போகின்ற வாறே.** **27**

---

*2847.* ***தெளிவுரை :-*** *(சிலர் இனிய நகை முகங்காட்டித் தீங்கு விளைவித்தல் உண்டு; சிலர் அவ்வாறன்றிக் கோபச் சிரிப்புச் சிரித்துத் தீமையை ஒழித்தல் உண்டு). அவர்களில் பின்னர்க் கூறிய வகையைச் சார்ந்தவன் ஒருவன் கொங்கு நாட்டு உழக்கில் அடைத்து மூன்று வெள்ளெலிகளைக் கொணர்ந்தான். அவைகள் கொல்லனது உலை போல எரிகின்ற எரிக்கு அப்பால் இருப்பின், ஓடும்; இருக்கும்; இன்னும் பிறவற்றை யெல்லாம் செய்யும். ஆகவே, அவைகளை எரியில் இட்டால், இட்டவனுக்கு உணவாய் விடும். தொல்லை நீங்கும். எனவே, இழிந்த இனத்தவாகிய அவைகளை ஒழிப்பதற்கு வழி அதுவே.*

***குறிப்புரை :-*** *கோபச் சிரிப்புச் சிரித்துத் தீமையை ஒழித்தவன் சிவன். தீமை, திரிபுரத்தவர். விளைத்தவை குலைத்தற்கு, 'தீமை' என்னும் செயப்படுபொருள் வருவிக்க. நிலைத்தல், வாழ்தல், "வெள்ளொலி" என்பதில் வெண்மை நிறம் குறித்ததன்று; வெற்ற வெளியைக் குறித்து இவைகளை 'நாட்டெலி' என்றும், வீடுகளில் உள்ளவற்றை, 'வீட்டெலி' என்றும் கூறுவர். நாட்டெலியே விளைவுச் சேதத்தை உண்டாக்குவன. 'வெள்ளெலி மூன்று' என்றது. 'புத்தி, அகங்காரம், மனம் என்னும் அந்தக் கரணங்களை அவையே புறப் புலன்களைப் பற்றிப் பல்வேறு விவகாரங்களை எய்துவன ஆகலின், அவற்றை, "வெள்ளெலி" என்றார். இனி, 'மூன்றெலி முக்குணம்' என்பாரும் உளர். முக்குணங்கள் இங்ஙனம் காரியமாய்ப் பரிணமித்தன்றிச் செயற்படாமை யறிக. மாயையினின்றும் கருவி கரணங்கள் யாவும் சிவனது சங்கற்பத்தாலே தோன்றுதலின், அவன் இவ்வெலிகளைக் கொணர்ந்ததாகக் கூறினார். உழக்கு, ஒரு முகத்தலளவைக் கருவி, இங்கு அஃது உடம்பைக் குறித்தது. இன்னும் அதன் சிறுமையைக் குறித்தற்கு, "கொங்குழக்கு" என்றார். 'கொங்கு நாட்டு அளவை அளவிற் குறைந்தன' என்பர். "உலை" என்றது, மூலாதாரத்தை குறித்துப் பின்னும் அதிலுள்ள அக்கினி எழுத்தோங்கிச் செல்லும் சுழுமுனா நாடியைக் குறித்தது. பிராண வாயு சுழுமுனா நாடியிற் செல்லாது, இடைகலை, பிங்கலை வழியிற் செல்லும், அந்தக் கரணங்களும் அவ்வுயிர்ப்போடு பொருந்திப் புறத்தே உலாவுதலை, "உலைப்புறம் செல்லின் ஓடும்; இருக்கும்" என்றார். அதினின்றே, 'உலையகத்து அடங்கின் அடங்கி ஒடுங்கும், என்பது பெறப்பட்டது. புலை - கீழ்மை. கீழ்மையுடைய பொருளை, 'கீழ்மை' என்றது உபசாரம். 'கீழ்மையுடையது' என்றது, மூலப்பிரகிருதியை. அது தானே குணதத்துவமாகிச் சித்தமாய் நிற்றலால், சித்தம் இங்கு வேறு கூறப்படவில்லை. போதல் - அழிதல் "போகின்றவாறு இது" என ஒரு சொல் வருவித்து முடிக்க' வெள்ளெலியை உண்பவர் நெருப்பில்*

**2848.** காடுபுக் கார்இனிக் காணார் கடுவெளி
கூடுபுக் கானது ஐந்து குதிரையும்
மூடுபுக் கானது ஆறுள ஒட்டகம்
மூடு புகாவிடின் மூவணை யாமே. **28**

**2849.** கூறையும் சோறும் குழாயகத் தெண்ணெயும்
காறையும் நாணும் வளையலும் கண்டவர்
பாறையின் உற்றுப் பறக்கின்ற சீலைபோல்
ஆறைக் குழியில் அழுந்துகின் றாரே. **29**

---

*இட்டு உண்டல் பற்றி, 'அவை போகின்றவாறு உலையில் இடுதலே' எனக் கூறினார்.*

*இதனால், 'அந்தக் கரணங்களில் அடங்கி ஒடுங்கிப் பயன் தருதல் வாசி யோகத்தாலே' என்பது கூறப்பட்டது.*

*2848. **தெளிவுரை :-** இருள் செறிந்த காட்டிற்குள்ளே அகப்பட்டுக் கொண்டவர்கள், அதினின்றும் நீங்கி, ஒளி விளங்கும் வெளியிடத்தைக் காணுதல் அரிதேயாம். இனி, நாம் குறிப்பிடும் காட்டிற்குள்ளே காட்டுக் குதிரைகள் ஐந்தும், எப்பொழுதுமே நற்குணத்தை அடையாத ஒட்டகங்கள் ஆறும் உள்ளன. (என்றால், இதற்குள் புகுந்துவிட்டவர்களது நிலைமை என்ன!) அந்தக் காட்டிற்குள் புகாமல் இருந்தால், வெளியில் மூன்று நல்லரசுகள் உள்ளன. அவைகளின் கீழ் நல்வாழ்வு வாழலாம்.*

*குறிப்புரை :- காடு, இருவினைப் புதர்கள், 'கூடு, மூடு' என்பனவும் காட்டையே குறித்து நின்றன. "ஆனது" இரண்டும் பன்மையொருமை மயக்கம். "புகாவிடின்" என்றது வெளியே இருப்பின்" எனப் புகுதலின் மறுதலைப் பொருளைத் தந்தது. அணை, அரியணை, குதிரைகள் ஐந்து, பஞ்சேந்திரியங்கள், ஒட்டகம் ஆறு, 'காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம்' என்னும் அகப் பகை ஆறு. 'மூவணை' முத்துரியங்கள். முத்துரியங்கள் முன் தந்திரத்தில் சொல்லப்பட்டன. முதல் அடி வேற்றுப் பொருள் வைப்பணியாய் வந்தது. கடுமை, மிகுதி குறித்தது.*

*இதனால், 'இருவினைகள் வெட்ட வெட்டத் தளிர்க்கும் காடுபோல் உள்ளன; அவற்றிற்குள்ளே அகப்பட்டு அடங்காது நிற்கின்றன பஞ்சேந்திரியங்கள்; அந்நிலையில் மேலும் காமம் முதலிய அறுபகைகள் துன்பம் விளைக்கின்றன. இவற்றிலிருந்து நீங்கினாலே இன்பம் உளதாகும்' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

*2849. **தெளிவுரை :-** பரத்தையர் உடுத்துகின்ற ஆடை, அவர் நல்லுணவு உண்டு வளர்த்துக்கொள்ளும் தசை, குழாய்களில் வைக்கப்பட்டுள்ள எண்ணெய்*

போல வெளியே தோன்றாது உள்ளே ஓடுகின்ற இரத்தத்தால் விளங்கும் மேனியழகு, கழுத்தில் அணிகின்ற காறையும், மார்பில் அணிகின்ற பொன் வடமும், கைகளில் அணிகின்ற வளையலும் முதலான அணிகலன்கள் ஆகியவற்றைக் கண்டவர்கள் அவைகளிலே மயங்கி, பாறைமேல் உலர்த்தப்பட்ட சீலை விரைவில் ஈரத்தை இழந்து காற்றில் பறப்பதுபோலப் பறந்துபோய், அவர்களது உந்திக் குழியில் வீழ்கின்றனர்.

**குறிப்புரை :-** 'அவர்களை மீட்குமாறில்லை' என்பது குறிப்பெச்சம்.

இம்மந்திரம் பரத்தையர் கூட்டத்தை விலக்கியதன்று. என்னையெனின், இது சூனிய சம்பாடணையாகிய குறிப்புப் பொருளை உடையதன்றி, வெளிப்படைப் பொருளதன்று ஆகலானும், அதனை விலக்குதற்கு இங்கு ஓர் இயைபின்மையானும் என்க. மற்று, பரத்தையர் மயக்கத்திற்பட்டாரைத் தெளிவித்தல் அரிதாதலாகிய உலகியலை வைத்து, 'மாயையின் மயக்கத்திற் பட்டாரைத் தெளிவித்தல் அரிது' என்பதையே உணர்த்திற்றாம். ஆகவே, உடம்பு மாயையேயாகலின் அதுவே பரத்தை, திருவருளால் தோன்றும் சிவஞானமே இல்லக் கிழத்தி. அவளோடே கூடியிருப்பின், நாற்பயனும் நன்கு விளையும். இவளது மயக்கிலே வீழ்ந்தால், அனைத்துப் பயனும் கெடும்.

இப்பரத்தை உடுத்தியுள்ள அழகான சீலை தோல், தசை. தசைகளே எண்ணெய் - உதிரம். இஃது உலகியற் பொருளில் ஆகுபெயராய் மேனியழகைக் குறித்தது. காறை, எலும்பு, நாண் - கயிறு; நரம்புகள். வளையல், நேர்நில்லாது வளைகின்ற மயிர்கள். ஆறு, ஆற்று நீர். ஐக்குழி - அழகிய குழி; என்றது அதன் சுழியை. அஃது இங்கு உவமையாகுபெயராய், உவமையில் உந்தியையும், பொருளில் கருப்பையையும் உணர்த்திற்று. 'ஆற்றைக் குழி' என்னும் றகர ஒற்று, எதுகை நோக்கித் தொகுக்கப்பட்டது. மங்கையர் முயக்கில் மயங்கு - வாரை அவர்தம் உந்தியாகிய மடுவில் வீழ்பவராகக் கூறுதல் வழக்கு.

> "மன்றலங் கொந்துமிசை தெந்தனந் தெந்தெனென்
> வண்டினம் கண்டுதொடர் குழல்மாதர்
> ......... ......... ......... ......... ......... ......... ......... ......... .........
> உந்திஎன் கின்றமடு விழுவேனை
> உன் ......... ......... ......... அடி சேராய்"

என்னும் திருப்புகழைக் காண்க.

"சீலைபோல்" என வாளா கூறாது, பாறையில் உற்ற சீலைபோல்" என்றமையால் அச்சீலை விரைவில் ஈரம் இழத்தல் போல, அறிவையிழத்தல் குறிக்கப்பட்டது.

இதில், 'பரத்தையர்' என்னும் முதற்பொருள் ஆற்றலால் கொள்ளக் கிடந்தது.

**2850.** துருத்தியுள் அக்கரை தோன்றும் மலைமேல்
விருத்திகண் காணிக்கப் போவார்முப் போதும்
வருத்திஉள் நின்ற மலையைத் தவிர்ப்பாள்
ஒருத்திஉள் ளாள்அவள் ஊரறி யோமே. **30**

---

*இதனால், உலகியலில் பரத்தையர் மோகம் நோயும், வறுமையும் போலும் பெருந்துன்பங்களைப் பயத்தல் போல, மெய்ந் நெறியில் உடல் மோகம் பிறவித் துன்பத்தைப் பயக்கும் என்பது உள்ளுறையாக உணர்த்தப்பட்டது.*

*2850.* **தெளிவுரை :-** *ஆற்றிடைக் குறை ஒன்று உள்ளது; அந்த ஆற்றின் அக்கரையில் மலை ஒன்று இருக்கின்றது. அந்த மலைமேல் நின்று தமது செயல்களைக் கண்காணிக்க நாள்தோறும், 'காலை, மாலை, இரவு' என்பவற்றில் எப்பொழுது வேண்டுமானாலும் ஒருவர் போகின்றார்'; திரும்பி வருகின்றார். அவரது கண்காணிப்பை முதலில் சிறிது சிறிதாகவும், பின்பு முழுமையாகவும் தன்பால் ஈர்த்து, அவரை அந்த மலைக்குச் செல்லாதபடி தடுக்கின்ற ஒருத்தி அவரோடு கூடவே இருக்கின்றாள். அவள் எந்த ஊரைச் சேர்ந்தவள் என்பதை நாம் அறியமாட்டோம்.*

**குறிப்புரை :-** *"துருத்தி" என்பது ஆற்றிடைக்குறை, கொல்லன் துருத்தி இரண்டையும் குறிக்கும் பல பொருள் ஒரு சொல்லாகலின், அது வெளிப்படைப் பொருளில் ஆற்றிடைக் குறையையும் , குறிப்புப்பொருளில் கொல்லன் உலைத்துருத்தியையும் குறித்தது. கொல்லன் உலைத்துருத்தியாவது சுவாசத்தை வாங்கியும், விட்டும் நின்ற சுவாச கோசம். எனினும் அஃது, அதற்கு இடமாய் உள்ள உடல் முழுவதையும் குறித்தது. 'உடல்' என்பது தலைக்குக்கீழ் உள்ள பகுதிக்கெல்லாம் பெயராய், மூலாதாரம், உந்தி, இருதயம், கண்டம் ஆகியவற்றைக் குறித்தது. எனவே, அக்கரையில் உள்ள மலையாவது புருவ நடு. அதுவே ஆன்மாவின் சாக்கிரத்தானம் ஆதலின் உயிர் தன் கருவி கரணங்களின் வாய்ப்பிற்கு ஏற்ப மூலாதாரத்தினின்று படிப்படியாக மேல் ஏறி வந்து தன் செயலைக் கண்காணிக்கும் இடமாயிற்று. ஆகவே, 'போவார் ஆவார் உயிர்' என்பது விளங்கும். "போவார்" எனவே, 'வருவார்' என்பதும் அமைந்தது. போதல் மேல் ஏறுதலையும், வருதல் கீழ் இறங்குதலையும் குறித்தன. இவை முறையே மேலாவத்தை, கீழாலவத்தை எனப்படும். இவற்றின் இயல்பெல்லாம் முன் தந்திரத்தில் விளக்கப்பட்டன.*

*இனி மறதியை உண்டாக்குவது ஆணவ மலமேயாதலின், 'மலையைத் தவிர்ப்பாள் ஒருத்தி' என்றது ஆணவ மலத்தையேயாம். ஆணவ மலம் வந்தவாறு அறியப்படாமையால், "அவள் ஊரறி யோமே" என்றார்.*

**2851.** பருந்துங் கிளியும் படுபறை கொட்டத்
திருந்திய மாதர் திருமணப் பட்டார்
பெருந்தவப் பூதம் பெறல்உரு ஆகும்
இருந்திய பேற்றினில் இன்புறு வாரே. **31**

---

*விருத்தி - தொழில். வருந்தி - வருவித்து; தன்பால் ஈர்த்து.*

*இதனால், முன் தந்திரத்தில் வெளிப்படையாகச் சொல்லப்பட்ட மேலாலவத்தை கீழாலவத்தையின் இயல்புகள் உள்ளுறையாக உணர்த்தப்பட்டன.*

*2851. **தெளிவுரை :-** கானக மக்களில் மங்கைப் பருவம் எய்திய மகளிர், உண்மை வாக்கியங்களில் ஏதும் இன்றிப் பருந்தும் பறவையும், ஓசை வேறுபட்ட போதிலும் அடிநிலையோசை ஒன்றேயாக முழக்குகின்ற ஓசைகளையே வாச்சியமாகக் கொண்டே எப்பொழுதும் திருமணம் செய்து கொள்ளப்படுகின்றார்கள். அவர்கட்குப் பிறக்கின்ற பிள்ளைகளும் பேயும், பூதமுமாகவே பிறக்கின்றன. ஆயினும் அவர்களில் யாரும் இதைப் பற்றி வருந்துவதாகத் தெரியவில்லை. மகிழ்ச்சியுடனேயே வாழ்கின்றார்கள்.*

***குறிப்புரை :-** 'இது வியப்பு' என்பது குறிப்பெச்சம். உண்மை வாச்சியம் அருள்நாதம். பருந்து தீவினை, கிளி நல்வினை, இவை பறை கொட்டல், ஆரவாரத்தைத் தோற்றுவித்தல். கானக மகளிர், கருவி கரணங்கள். அவர்கள் பருவம் அடைதல், ஒடுங்காது எழுச்சியுற்று நிற்றல். இவர்கட்குக் கணவராகும் கானவர், பெத்தான்மாக்கள். அதீதம் முதலாகச் சாக்கிரம் ஈறாக உள்ள கீழாலவத்தைகள், பிறக்கின்ற பிள்ளைகள், இவ்வவத்தைகளில் நிகழும் அனுபவங்கள். இவைகள் திருவருளை நினைய ஒட்டாது, மீட்டும் மீட்டும் வினைப்பயன்களையே நினைப்பித்தலால் அவை, 'பேய் பூதம்' என இகழப்பட்டன. ஆயினும் அவைகளின் உண்மை உணராது மகிழ்ந்து வாழும் உயிர்களை, "இன்புறுவாரே" என்றார். ஏகாரம், தோற்றம்.*

*"பருந்தும், கிளியும் படுபறை கொட்ட" என்ற குறிப்பினால், மணம் கானவர் மணமாதல் அறியப்பட்டது. 'பெறல் உரு, தவப் பெரும் பூதம் ஆகும்' என மாற்றிக் கொள்க. "ஆகும், இன்புறுவார்" என்பன போலவே, 'படுவார்' என எதிர்காலமாக ஓதற்பாலதனையே வேறோ ராற்றால், "பட்டார்" என இறந்த காலமாக மயக்கிக் கூறினார். 'இருந்த' என்னும் பெயரெச்சம் இடையே ஓர் இகரம் பெய்து விரிக்கப்பட்டது.*

*இதனால், முத்திறத்து ஐந்தவத்தைகளுள் சகல ஐந்தவத்தையும் கேவல ஐந்தவத்தையும் பயனிலவாதலை உணர்ந்து சுத்தவத்தையிற் செல்லமாட்டாதாரது இழிவு உள்ளுறையாக உணர்த்தப்பட்டது.*

**2852.** கூடு பறவை இரைகொத்தி மற்றதன்
ஊடுபுக் குண்டி யறுக்குறில் என்னாக்கும்
சூடெறி நெய்யுண்டு மைகான் றிடுகின்ற
பாடறி வார்க்குப் பயன்எளி தாமே. **32**

---

*2852.* **தெளிவுரை :-** *கூட்டில் வாழும் பறவை இரையைத் தேடித் தின்று விட்டுக் கூட்டிற்குள் புகுந்து பின் அதனைச் சீரணிக்கப் பண்ணிக் கொண்டு மட்டும் இருந்தால், அந்தப் பறவை தனக்கு என்ன உறுதிப் பயனைச் செய்து கொள்ளும்? (ஒன்றையும் செய்து கொள்ளாது, ஆகலின் தம் உயிர்க்கு உறுதி செய்துகொள்ள விரும்புவோர் அந்தப் பறவையின் செயலைக் கைக்கொள்ளாமல் விடுத்த), நெய்யை உணவாக உண்டு அதனாலே ஓங்கி எரிகின்ற நெருப்புப் பின் நறுமணமும், குளிர்மையும், அழகையும் உடைய சாந்தந் தருகின்ற அந்த மேலான செயலை நோக்கி, அதனைக் கடைப்பிடிக்க.*

**குறிப்புரை :-** *'கூட்டுப் பறவை' என்னும் பகர ஒற்று, எதுகை நோக்கித் தொகுக்கப்பட்டது. 'மற்று' வினைமாற்றின் கண் வந்தது. அறுதல் - சீரணித்தல். "அற்றால் அளவறிந்துண்க" (திருக்குறள், 943) என்பது காண்க. அறுத்தல் - சீரணிக்கப்பண்ணுதல். சீரணித்தல் இயல்பிலே நிகழ்வ தாயினும் அது தவிரப் பிறிது செய்யாமையைக் குறித்தற்கு, அதனைப் பறவையால் செய்யப்படுவதுபோலக் கூறினார். உணவை உண்டு அதனைச் சீரணித்துக் கொள்வதனோடு அமைகின்ற உயிர்கள் பல உள ஆயினும் கூட்டில் வாழும் பறவையையே கூறினார். அஃது உடம்பில் வாழும் உயிரைக் குறித்தற்கு, 'கூடு' என்பது உடம்பிற்கும் பெயர். அதனை, "கூடு விட்டிங்கு ஆவிதான் போயின பின்பு ஆரே அனுபவிப்பார் - பாவிகாள் அந்தப் பணம்" (ஒளவையார், நல்வழி, 22) என்பதனானும் அறிக. விளக்கானது தகழியில் வார்த்த நெய்யைத் திரியினால் ஏற்றுச் சுடர்விட்டு எரிந்து மையை வெளிப்படுத்துகின்றது. அவ்வாறு உடம்பாகிய திரியினால் முன்னை வினையாகிய நெய்யை ஏற்றுக் கொள்ளும் முகத்தால் மெய்யுணர்வானது சுடர்ந்து எழவும், அக இருள் புறத்தே நீங்கிக் கெடவும் செய்யும் செயலை ஒருவர் மேற்கொள்ளின் அஃது உயர்ந்த பயனை விளைப்பதாகும்.*

*இதனால், 'மக்கள் உணவைத்தேடி உண்டு உடம்பை வளர்ப்பதால் மட்டும் எந்தப் பயனும் இல்லை; அவ்வளர்ச்சிக்கு ஏற்ப மெய்யறிவையும் வளர்த்து, அதற்கேற்ற செயல்களையும் உடையராதல் வேண்டும்' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

*2853.* **தெளிவுரை :-** *எல்லாச் சமயங்கட்கும் வேர்போன்றது திருவருள். அஃதாவது, 'திருவருட் குறிப்பின்றி, எந்தச் சமயமும் உலகில் இருக்கவில்லை'*

**2853.** இலையில்லை பூவுண்(டு) இனவண்டிங் கில்லை
தலையில்லை வேர்உண்டு தாள்இல்லை பூவின்
குலையில்லை கொய்யும் மலர்உண்டு சூடும்
தலையில்லை தாழ்ந்த கிளைபுல ராதே. **33**

---

*என்பதாம். அத்திருவருளை உணர்ந்த சமயங்கள் வேரின்மேல் வளர்ந்து தழைத்த மரங்களாகும். திருவருளை உணராத சமயங்கள் வளராது முடம்பட்ட மரங்களாம். அவைகளையே, "வேர் உண்டு; தலையில்லை" என்றார்.*

*பிறர்க்கு உறுதிப்பொருள்களை நன்கு விரித்துரைப்பாரது விரிவுரைகள், நல்லாசியரது உபதேசத்தின் வழி அமைந்தனவாயின், அவை பசுமையோடு தழைத்த இலைகளின் நடுவிலே பூத்த பூக்களாய், 'பயன்' என்னும் தேன் உள்ளூறப் பெற்று, அறிஞர்களாகிய வண்டுகளாலும் சூழ்ந்து மொய்க்கப்பட்டு, நுகர்ந்து மகிழத்தக்கனவாய் இருக்கும். தான்றோன்றிகளாய் உள்ளாரது விரிவுரைகள் அத்தன்மை உடையன ஆகா. அவைகளையே, "இலை இல்லை; பூ உண்டு; இன வண்டிங்கில்லை'' என்றார். இவையும் மேற்குறித்த சமயங்களின் பிரசாரங்களையேயாம்.*

*பிற சில கொள்கைகளில் வேறுபாடு உளவாயினும் கடவுட் கொள்கையுடைய சமயங்களிடையே 'திருவருள்' என்னும் ஓர் ஒற்றுமை உண்டு. அதனால் அவை ஒரு கொத்திலே பூத்த பூக்கள் போல விளங்கும் கடவுட் கொள்கையில்லாத சமயங்களிடையே அத்தகைய ஒற்றுமையில்லாமையால், அவை ஒன்றோடொன்று பூக்கள் சிறந்து நிற்றல் தெளிவு. இத்தன்மை பற்றிக் கடவுட் கொள்கையில்லாத சமயங்களை, ''(பூவுண்டு; ஆயினும்) பூவின் குலையில்லை; (அதற்குக் காரணம்) தாள் இல்லை" என்றார். குலை - கொத்து. தாள் - காம்பு.*

*கடவுட் கொள்கை இல்லாவிடினும், "நல்லதன் நலனும், தீயதன் தீமையும் இல்லன அல்ல; அங்ஙனமே அவற்றிற்கு ஏற்ற மறுபிறப்புக்களும் இல்லன அல்ல" (புறநானூறு, 29) எனக் கொள்ளும் சமயங்கள் உள. "அவை பலரால் எளிதில் பின்பற்றப் படுதலால், எளிதில் பறிக்க வரும் மலர்போல்வனவாம். ஆயினும் கடவுட் கொள்கை இல்லாமையால், நாற்றம் இல்லாத மலர் போலும், அதனால் அவை சூடப் பெறும் தலைகளை இல்லனவாம் - என்பதனை, "கொய்யும் மலர் உண்டு; சூடும் தலையில்லை" என்றார்.*

*இனி மலர்கள் எளிதில் கொய்ய வருவதற்குக் காரணம், அவை பொருந்தியுள்ள கிளை தாழ்ந்திருத்தலேயாம். 'அது போல நாற்றம் இல்லாத மலர்கள்போலும் அந்தச் சமயங்கட்கு அடி நிலை யாகிய, கடவுட் கொள்கையற்ற வெற்றறம் உலகில் நிலை பெற்றுத்தான் உள்ளது' என்பதை, ''தாழ்ந்த*

**2854.** அக்கரை நின்றதோர் ஆல மரங்கண்டு
நக்கரை வாழ்த்தி நடுவே பயன்கொள்வர்
மிக்கவர் அஞ்சு துயரமும் கண்டுபோய்த்
தக்கவர் தாழ்ந்து கிடக்கின்ற வாறே. **34**

---

*கிளைபுலராதே" என்றார். புலர்தல் - உலர்தல்; வற்றுதல். கிளை வாடாமைக்குக் காரணம், வேர் பசுமையாய் இருத்தல். 'சமயங்களில் வேர் திருவருட் குறிப்பு' என நாயனார் முதற்கண் கூறியதை நினைக.*

*இரண்டாம் அடியின் முற்பகுதியை, 'வேர் உண்டு இலையில்லை' என மாற்றி முதலிற் கூட்டியும், அதன் பின்னர், 'பூவின் குலையில்லை, (காரணம்) தாள் இல்லை' என மாற்றியும் பொருள் கொள்க. "பூவின் குலையில்லை" என்று மட்டுமே கூறியதால், 'பூ உண்டு' என்பது பெறப்பட்டது.*

*இதனால், 'புறப்படும், புறம்' என்னும் இரு கூற்றுப் புறச் சமயங்களின் இழிபுகள் 'மருட்கை' என்னும் மெய்ப்பாடு தோன்ற, உள்ளுறையாகக் கூறப்பட்டன.*

*2854.* **தெளிவுரை :-** *மக்கள் யாவரும் வினைத் தொடர்ச்சியாகிய ஆற்று வெள்ளத்தில் போய்க் கொண்டிருப்பவரே. ஆயினும் அவருள் ஒரு சிலர் மட்டும் ஆற்றின் அக்கரையில் ஓர் ஆலமரத்தையும், அதன் கீழே உடையின்றியிருக்கும் ஒர் அந்தணரையும் கண்டு வாழ்த்துகின்றார்கள். அதனால் அவ்வந்தணரால் தாம் கடலிற் சென்று விழுவதற்கு முன்னே கரைசேர்க்கவும் பெறுகின்றார்கள். மற்றவர்களும் அவ்வாறே கரை சேரலாம். ஆயினும் அவ்வாறு செய்யாமல் ஐந்து வகையான துன்பங்களை அனுபவித்துக் கொண்டு வெள்ளத்திலே மிதந்து போய்க்கொண்டிருக்கின்றார்கள்.*

**குறிப்புரை :-** *'வெள்ளம் கடலிற் கொண்டுபோய் விடுதல் உறுதி' என்பது கருத்து.*

> *"ஆல நீழல் உகந்த திருக்கையே*
> *ஆன பாடல் உகந்த திருக்கையே" - தி.3 ப.115 பா.1*

*என்பது முதலாக வரும் பல அருட்டிரு மொழிகளால் ஆலமர நிழல் சிவபிரானது இருக்கையாதல் தெளிவு. சங்க இலக்கியங்களிலும் இது பெறப்படும். ஆகவே, "நக்கர்" என்றது சிவபிரானையே என்பதில் ஐயமில்லை. நடுவே - கடலில் சென்று வீழ்வதற்கு முன்பே ஆல மரத்தை அக்கரைக்கண் நிற்பதாகக் கூறியது, சிவன் வினைத் தொடர்ச்சியோடும், பிறவிப் பெருங்கடலோடும் யாதொரு தொடர்பு மின்றி அகல நிற்றலைக் குறித்தற்கு, ஆற்று வெள்ளத்திற் போவாரைக் கரைக்கண் நிற்பார் கரை சேர்த்தல் கூடுமன்றி, போவாருள் ஒருவர்க்கு அது கூடாமை சொல்ல வேண்டா.*

**2855.** கூப்பிடும் ஆற்றிலே வன்காடு இருகாதம்
காப்பிடு கள்ளர் கலந்துநின் றார்உளர்
காப்பிடு கள்ளரை வெள்ளர் தொடர்ந்திட்டுக்
கூப்பிடும் ஈண்டதோர் கூரைகொண் டாரே. **35**

---

*ஆற்று வெள்ளத்திற் போவாரைக் கரைக்கண் நிற்பவர் கண்டால், எவரும் தாமே சென்று மீட்பர். அதற்குமேல், வெள்ளத்திற் செல்வார் அவர்களை அழைத்து வாழ்த்தினால், அந்தணர் ஒருவர் மீட்கா தொழிவாரோ? ஒழியார். ஆதலின் "வாழ்த்திப் பயன் கொள்வர்" என்றார்.*

*ஆல மரம் விரிந்து படரக் கூடியது; அதன் விழுதுகள் எத்துணைத் தூரமும் எட்டக்கூடியன. ஆகவே, ஆலமரத்தின்கீழ் உள்ள அந்தணர் அந்த விழுதுகளில் ஒன்றன் வழியாக செல்வாரை எளிதில் மீட்பார். ஆயினும் அந்தணர் வீசும் ஆலம் விழுதை ஆற்றிற் செல்பவர்கள் பற்ற வேண்டுமன்றோ! 'அது செய்யாமல் பலர் ஆற்றோடே போகின்றனர்' என்பதை, "தக்கவர் தாழ்ந்து கிடக்கின்றவாறே" என்றார். தாழ்தல், ஆற்றில் வீழ்தல்.*

*ஆல மரம், வேதம், அதன் விழுதுகள், அதன் வழி நூல் சார்பு நூல்கள்.*

*ஆல மரமே பண்டு தொட்டு அருள் வடிவான மரமாகக் கொள்ளப்பட்டு வர, அதனை மாற்றி, அசோக மரத்தையும், அரச மரத்தையும் கொண்டவர்களையும், அவருள் ஒரு சாரார், "நக்கன்" என்பது, 'திசைகள் தவிர வேற ஆடை இலன் என்பதாகப் பொருள் தந்து, வியாபக நிலையை உணர்த்தி நிற்க, அதனை யறியாது, உலகியலுக்கு மாறாய், 'ஆடையின்றி யிருப்பவன்' எனப் பொருள் கொண்டவர்களையும் குறிப்பிற் குறிப்பாய் உணர்த்ததற்குச் சிவனை வேறோராற்றால் சுட்டாது, "நக்கன்" எனச் சுட்டினார்.*

*அசோகும், அரசும் ஆற்றிற் செல்வாரை மீட்கலாகாமையையும் நோக்குதல் வேண்டும்.*

*மிக்கவர் - எஞ்சினோர் "அஞ்சு துயரம்" என்பது வெளிப்படைப் பொருளில், 'பல துயரம்' என்றும் உள்ளுறைப் பொருளில் பஞ்சேந்திரியங்களின் துயரம் என்றும் பொருள் தரும். கிடக்கின்றவாறு இரங்கத்தக்கது' என எஞ்சி நின்ற சொல்லெச்சத்தோடு முடிக்க.*

*இதனால், முன் மந்திரத்தில் பொதுப்படக் கூறிய சமயங்களுள் ஒரு சாரனவற்றது இரங்கத்தக்க நிலை வகுத்துக் கூறப்பட்டது. இதனால், நாயனார் காலத்திற்றானே களப்பிரர் ஆட்சி முதலிய காரணங்களால் தமிழ்நாட்டில் சிவனடியார்கட்கு இடுக்கண் தோன்றினமையை உணர்தல் கூடும்.*

*2855. தெளிவுரை :- கூப்பிடு தூரத்தளவேயான குறு வழி ஒன்று உள்ளது. அதற்குள்ளே கடுமையான இரண்டு காடுகள் தனித்தனி ஒவ்வொரு காதம்போல*

*உள்ளன. அந்தக் காடுகளில் வழிச் செல்வாரை மறித்துக் கொண்டுபோய் சிற்றறையில் அடைத்து வைக்கின்ற கள்வர்கள் வாழ்கின்றார்கள். ஒன்றும் அறியாத வழிப்போக்கர்கள் அந்தக் கள்வரை வழிகாட்டுபவராகக் கருதி அவரைப் பின் பற்றிச் சென்று, தமக்கு உதவுபவரை அழைக்க வேண்டிய நிலைமையராய் இச்சிறுவழியில் சிறு குடில் ஒன்றே புகலிடமாக அடைகின்றனர்.*

***குறிப்புரை :-** ஓரிடத்தில் நின்று அழைத்தல், வேறோர் இடத்தில் உள்ளவர் காதில் விழுகின்ற அளவு தூரத்தை, கூப்பிடுதூரம்' என்பர். நெடுவழியின்றிக் குறுவழி' என்றற்கு, "கூப்பிடும் ஆறு" என்றார். ஆறு - வழி. இந்தக் குறுவழியாவது, எண்சாண் உடம்பேயாம். இதிற் செல்லும் வழிப்போக்கர், உடம்பில்வாழும் உயிர்கள், "வன்காடு இரண்டு" என்பது, சொல்வாரது குறிப்பால் விளங்கிற்று. அவை 'கீழாலவத்தை, மேலாலவத்தை' என்பன. அந்தக் காட்டிலே வாழும் கள்வர் கருவிகள், (தத்துவ தாத்து விகங்கள்) இவைகள் மிகுதியாக உயிரைமேல் ஏற்றினால், புருவ நடுவிற்கு மேற் செல்லவிடாது அவ் விடத்தே தடுத்து நிறுத்தலால் "காப்பிடு கள்வர்" என்றார். இதனால் இக்கள்வர்கள் எய்தும் பயன் மெய்யறிவாகப் பொருளைக் கவர்ந்து கொள்ளுதலாம். (கருவிகள் சடமாயினும் உருவக நயம் பற்றிப் பயன் எய்துவனபோலக் கூறினார்) எண்சாண் உடம்பில் புருவநடு ஓரங்குலமே யாதலாலும் அதற்குள்ளே உயிர் நிற்றலாலும் 'இந்தக் குறுவழிக்குள்ளே ஒரு சிறுகுடிலில் அடைபட்டுக் கிடக்கின்றார்கள்' என்பார், "ஈண்டதோர் கூரை கொண்டாரே" என்றார். "ஈண்டு" என்றது. முன்னர்க்கூறிய கூப்பிடு தூரத்தை. கூரையாவது குடில்.*

*'சிறு குடில்' எனப்பட்டது புருவ நடுவாகவே, அதன்கண் அடைபட்டிருத்தல், கேவல சாக்கிரமும், மாசகலமும் ஆயிற்று. அவற்றில் கிடைப்பன, பெரிய அளவாகக் கூறின், ஐம்புல இன்பங்களுக்குமேல் இல்லை. அவையும் கண்டதையே கண்டும், உண்டதையே உண்டும், பிறவும் இவ்வாறானவேயாம். அந்நுகர்ச்சிகளும் கருவிகளின் சேட்டையால் நிலையின்றி, 'சொப்பனம், சுழுத்தி' என்று இப்படியான நிலைகளால் இழக்கப்படுவனவேயாம். இவற்றையெல்லாம் அடைப்பட்டிருப்பர் எண்ணி இன்னலுறுவாராயின் இந்தச் சிறுகுடிலினின்றும் தம்மை மீட்டு உதவுபவரை அழைக்கவே செய்வர். அதனால் அக்குடில், "கூப்பிடு கூரை" எனப்பட்டது. உதவுவது திருவருளேயாதலான் அதனை அவர்கள் அழைத்தே ஆக வேண்டும். அழைத்தவாற்றை,*

> *"தரிக்கிலேன் காய வாழ்க்கை;*
> *சங்கரா போற்றி! போற்றி!!" - தி.8 திருச்சதகம், 61*
>
> *"தினைத்துணை யேனும் பொறேன் துயர் ஆக்கையின்*
> *திண்வலையே" - தி.8 நீத்தல்விண்ணப்பம், 39*

*என்பன முதலியவாற்றான் அறிக.*

*திருவருளால் உயிர் புருவ நடுவிற்கும் மேலே செலுத்தப்படுமாயின்*

**2856.** கொட்டியும் ஆம்பலும் பூத்த குளத்திடை
எட்டியும் வேம்பும் இனியதோர் வாழையும்
கட்டியும் தேனும் கலந்துண்ண மாட்டாதார்
எட்டிப் பழத்துக் கிளைக்கின்ற வாறே. **36**

---

*துவாதசாந்தப் பெருவெளியை அடைதலாகிய யோகாவத்தையையும் அதனையும் கடந்து அகண்டாகாரமாய் நிகழும் ஞானாவத்தையையும் எய்தும், 'அவ்வாய்ப்பினைப் பெறாத உயிர்கள் சகலகேவலங்களில் நின்று புருவ நடுவை மட்டுமே மேல் நிலையாகக் கொண்டு, இருட்டறையில் கிடக்கின்றன' என்பதே இம்மந்திரத்தால் உள்ளுறையாக உணர்த்தப்பட்டது.*

*2856.* ***தெளிவுரை :-*** *குளம் ஒன்றில், பொருட்படுத்தி எண்ணலாகாத கொட்டியும், சிறந்தனவாகிய வெள்ளாம்பல் செவ்வாம்பல்களும் பூத்துள்ளன. அதுபோலவே, பார்வைக்கு அழகாய் உண்டால் கொல்லும் எட்டிப் பழமும், அழகும் இன்றி, இனிமையும் இன்றி, உண்டால் நோயைத் தீர்க்கும் வேப்பம் பழமும் அழகும், இனிமையும் உடையதாய், உண்டால் பசியைத் தீர்த்து, உடல் நலத்தை நல்குவ தாகிய வாழைப்பழமும் அந்தக் குளக்கரையில் பழுத்திருக்கின்றன. வாழையை மேலும் சுவைப்படுத்தி உண்ண வேண்டுமாயின், கட்டியும், தேனும் மக்கட்குக் கிடையாதன அல்ல; எங்கும் கிடைப்பனவே, ஆகவே, வாழைப்பழத்தைப் பறித்துக் கட்டியும், தேனும் கலந்து உண்டு, நாவிற்கு நறுஞ்சுவை பெற்றுப் பசி தீர்ந்து, உடல் நலத்தையும் எய்துமளவிற்கு அறிவில்லாத மக்கள், பார்வைக்குக் கவர்ச்சியாய் உள்ள எட்டிப் பழத்தையே பெறவேண்டி, 'அதனை அம்மரத்தில் ஏறிப் பறிப்பது எவ்வாறு' என்று எண்ணுவதிலேயே காலம் கழிந்து இளைக்கின்றார்கள். இஃது இரங்கத்தக்கது.*

***குறிப்புரை :-*** *'உலகம் சிறுமையும், பெருமையும் கலந்தது' என்பதை முதல் அடி விளக்கிற்று. கொட்டிப்பூ, சிறியனவற்றையும், ஆம்பற் பூ பெரியனவற்றையும் குறித்தன. இரண்டாம் அடி இறுதியில், 'பழுத்துள்ளன' எனச் சொல்லெச்சம் வருவிக்க. 'குளத்திடை பழுத்துள்ளன' என்றாரேனும், 'அதன் கரையில் பழுத்துள்ளன' என்பதே கருத்து. 'குளம்' என்றதும், 'குளக்கரை' என்றதும் உலகத்தையே.*

*எட்டிப் பழமாவது, "முற்பயக்கும் சின்னீர இன்பத்திற் பிற்பயக்கும் பீழை பெரிதாம்" (நீதிநெறிவிளக்கம், 2) காம இன்பம். வேப்பம் பழமாவது, கவர்ச்சியும், தன்னலமும் இல்லாது, செய்தால், முன்பு உள்ள பாவத்தைப் போக்கும் பசு புண்ணியங்கள். வாழைப்பழம், பத்தியுடைய உள்ளங்கட்கு விருந்தாய், என்றும் நிலைத்து நின்று, ஞானத்தைத் தரும் சிவ புண்ணியங்கள்.*

*கட்டியும் தேனும் சிவபுண்ணியங்களைச் சிறப்பித்துக் கூறம் சிவ தோத்திர சாத்திர நூல்கள்.*

**2857.** பெடைவண்டும் ஆண்வண்டும் பீடிகை வண்ணக்
குடைகொண்ட பாசத்துக் கோலம்உண் டானும்
கடைவண்டு தான்உண்ணும் கண்கலந் திட்ட
பெடைவண்டு தான்பெற்ற தின்பமு மாமே. **37**

---

*'இளைக்கின்றவாறு இரங்கத் தக்கது' எனச் சொல்லெச்சம் வருவித்து முடிக்க.*

***இதனால், 'நன்மையும், தீமையும் கலந்துள்ள இவ் வுலகத்தில் அறிவுடையோர் தீமையை விலக்கி, நன்மையைப் பொருந்தி இன்புறுவர்' என்பதும், 'அறிவிலார், நன்மையை விலக்கித் தீமையைப் பொருந்தித் துன்புறுவர்' என்பதும் உள்ளுறையாகக் கூறப்பட்டன.***

*2857.* ***தெளிவுரை :-*** *வண்டினங்களில் 'அரசவண்டு' (கோத்தும்பி) எனச் சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற அந்த இனத்தில் பெண் வண்டும், ஆண் வண்டும் உயர்ந்த தாமரை மலர்களையே நாடிச் சென்று தேன் நுகர்தலுடன், அவற்றை அரியணையாகவும் வெண்கொற்றக் குடையாகவும் கொண்டு அன்புடன் கலந்து அரசு வீற்றிருக்கும். சிற்றின வண்டுகளும் இனத்தால் அவற்றோடு ஒப்பனவாயினும் அவை அத்தன்மையின்றிச் சிறு பூக்களையும் நாடி ஓடுதலுடன், மற்றும் தம் கண் சென்று கலந்த பொருள்களின் மேல் எல்லாம் ஓடிச் சென்று விழும். ஆகவே, அவ்வினத்துப் பெண்வண்டு அதன் ஆண் வண்டினால் இன்பம் பெற்றதாயினும் அந்த இன்பம் அரசப் பெண் வண்டு, அரச ஆண் வண்டினால் பெற்ற இன்பம் ஆகுமோ! ஆகாது.*

***குறிப்புரை :-*** *'உடையான், அடியார்' என்னும் முறைமையில் சிவனும் சிவன் அடியார்களும், ஏனைத் தேவரும் அவன் அடியார்களும் ஒரு தன்மைப்பட்டவர் போலக் கருதப்பட்டாலும், சுத்த போகத்தையன்றித் தராமையும், நாடாமையும், மற்றும் அனைத்துலகங்களையும் ஆட்சி செய்யும் உரிமையும், "இருநிலத்தில் எமக்கெதிரா வாருமில்லை" (தி.6 ப.98 பா.5) "தென்றிசைக்கோன் தானே வந்து - கோவாடிக் குற்றேவல் செய்கென்றாலும் குணமாகக் கொள்ளோம்" என இருக்கும் பெருமிதமும், இவ்வான்றிச் சில விடத்தளவில் சிலவற்றை மட்டுமே தரும் உரிமையும், காமம், வெகுளி, மாற்சரியம் காரணமாகத் தலைப்படும் செயல்களில் வெற்றியைத் தருதலும் விரும்புதலும், அவற்றுள்ளும் தம்மின் வலியாரைக் காணின் அஞ்சுதலும், மூவகைத் துன்பங்களில் ஆதி தெய்விகமாய் வருவனவற்றை நோக்கின், அவ்இரு திறத்தவர்க்கும் இடையேயுள்ள வேறுபாடு, மலைக்கும் மடுவுக்கும் இடையேயுள்ள வேற்றுமை போல்வதாம். ஆகவே, ஏனைத் தேவரையடைந்து அவன் அடியார் பெறும் இன்பம், சிவனை யடைந்து, அவன் அடியார் பெறும் இன்பம் ஆகாது என்பதைப் 'பிறிது மொழிதல்' என்னும் அணிவகையால் தோற்றுவித்தது இம்மந்திரம்.*

**2858.** தட்டத்து நீரிலே தாமரை பூத்தது
குட்டத்து நீரில் குவளை எழுந்தது
விட்டத்தி னுள்ளே விளங்கவல் லார்கட்குக்
குட்டத்தில் இட்டதோர் கொம்மட்டி யாமே. **38**

*சிவானந்தத்தைத் 'தேன்' என்றல் மரபாகலின், அதனை நுகரும் அடியார்களை வண்டாக உருவகிப்பார், அதற்கேற்ப ஏனையவற்றையும் ஒருபுடை ஒப்பாக வைத்து உருவகித்தார்.*

*"கடைவண்டு" எனப் பின்னர் வருதலால், முன்னர்க் கூறப்பட்டவை அரச வண்டாயின. அரச வண்டிற்கு ஏற்புடைமை பற்றி, 'பீடிகையும், குடையும் ஆவன தாமரை மலர்கள்' என்பது அறியப்படும். வண்ணம் - அழகு. 'வண்ணக் குடை' என்க. பாசம் - அன்பு கொண்ட பாசம். கொள்வதற்கு ஏதுவாய் நின்ற பாசம். கோலம் - உருவம். 'பாசத்தையுடைய உருவம்' என்க. 'உண்டாயினும்' என்பது, 'உண்டானும்' என மருவி நின்றது. 'எனைத்தானும் நல்லவை கேட்க' (திருக்குறள், 416) என்பதிற்போல 'கலந்திட்ட வற்றை' என இரண்டாவது இறுதிக்கண் தொக்கது. ஈற்றில் நின்ற பெடை வண்டு, கடை வண்டு இனத்தைச் சார்ந்தது. ஏகாரம், எதிர்மறைப் பொருட்டாய வினா.*

*இதனால், "சிவனோடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை" என முதற்கண் கூறப்பட்ட பொருள் உள்ளுறையாக வலியுறுத்தப்பட்டது.*

*(இதன் பின் பதிப்புக்களில் காணப்படும் "கொல்லையில் மேயும் பசுக்கள்" என்னும் மந்திரம் ஏழாந் தந்திரத்தில் வந்தது).*

*2858. தெளிவுரை :- தட்டம் - ஆழம் இன்றிப் பரவலாகத் தேங்கியுள்ள நீர். குட்டம் - ஆழமாய்ச் சிறிது இடத்தில் நிற்கும் நீர்; குளத்து நீர் போல்வது. முன்னதில் குவளையும், பின்னதில் தாமரையும் பூத்தல் இயல்பு. ஆயினும் இங்கு அவை மாறிக் காணப்படுகின்றன. ஆகவே, இவற்றை விரைந்து சென்று பறியாமல், காத்திருப்பார்களாயின், இந்த முரண்பாட்டு நிலை நீங்குதல் தெரியவரும்.*

*குறிப்புரை :- தட்டத்து நீர் விரைவிற் காய்ந்து மறைந்து விடும். குட்டத்து நீர் நீடு நின்று பயன் தரும். ஆகவே, அவை முறையே உலகின்பத்தையும், வீட்டின்பத்தையும் குறித்தன.*

*தாமரை பெரு விருப்பினையும் குவளை சிறு விருப்பினையும் குறித்தன. நிலையானதில் பெருவிருப்பும், நிலையாததில் சிறு விருப்பும் உண்டாதல் முறைமை. மெய்ப்பொருள் இயலில் இவை மாறி நிகழ்தல் முன் இரண்டடிகள் குறித்தன. இவை இயற்கைக்கு மாறாகலின் செயற்கையே. செயற்கை காரணம் உடைத்து. அஃது இங்கு ஆணவம். செயற்கை நிலையாதாகலின் ஆணவம் நீங்க*

**2859.** ஆறு பறவைகள் ஐந்தகத் துள்ளன
நூறு பறவை நுனிக்கொம்பின் மேலன
ஏறு பெரும்பதி ஏழும் கடந்தபின்
மாறுத லின்றி மனைபுக லாமே. **39**

---

*இந்நிலை மாறித் தன்னியல்பு நிகழும். அதற்குச் சிறிது காலம் வேண்டும். அதனையே பின்னிரண்டடிகள் குறித்தன. பறித்தல், இங்கு அதனையே நிலையானதாகக் கருதுதல். விட்டமாவது, அதுபோலும் மரக்கிளை, விளங்குதல், அப்பால் செல்லாமல் காத்திருத்தல்.*

*கொம்மட்டி, ஒருவகைக்கொடி. அது நிலத்தில் படரும், ஆகவே, அதனை நீரில் இட்டால், அழுகிக் கெடும் ஆதலின், அது நிலையாமைக்கு உவமையாயிற்று. ஆக்கம் உவமை குறித்து நின்றது. "ஆம்" என்னும் பயனிலைக்கு, 'அத்தன்மை' என்னும் தோன்றா எழுவாய் வருவிக்க.*

*இதனால், உயிர்கட்குச் சிவானந்த வேட்கையே இயற்கையும், விடயானந்த வேட்கை செயற்கையும் ஆதல் உள்ளுறையாக உணர்த்தப்பட்டது.*

*2859.* **தெளிவுரை :-** *ஐந்து இல்லங்கள் உள்ளன. அந்த ஐந்திலும் ஆறு வாவல்கள் வாழ்கின்றன. ஐந்து இல்லங்களில் ஒன்றில் உள்ள ஒரு மரத்தின் நுனிக் கிளையில் நூறு வாவல்கள் வாழ்கின்றன. (இந்த இல்லங்களில் எப்படி நாம் குடியிருக்க முடியும்?) வாவல் முதலிய எந்த இடையூறும் இல்லாத வேறோர் இல்லம் உள்ளது. அது போகப் போக உயரமாய் உள்ள இடத்தில் உள்ளது. அந்த ஏறு நிலை முறையில் ஏழு பெரிய ஊர்களைக் கடந்தால், அந்த இல்லத்துட் புகலாம்.*

**குறிப்புரை :-** *ஆறு வாவல்கள், காமக் குரோத லோப மோக மத மாற்சரியங்கள். ஐந்து அகம், பஞ்ச கோசங்கள். அவை முன் தந்திரத் தொடக்கத்தில் காட்டப்பட்டன. மரம், பிராணமய கோசம், அதன் நுனிக்கிளை, புத்தி தத்துவம், நூறு வாவல்கள், புத்தி தத்துவத்தின் அளவிலாப் பாவங்கள், நூறு, அளவின்மையைக் குறித்தது. பெரும் பதி ஏழு, ஆதாரம் ஆறும், 'நிராதாரம்' எனப்படும் சகச்சிராரமாகிய ஏழாம் தானமும், மனை, 'மீதானம்' எனப்படும் துவாதசாந்தம். பிரணவ யோகத்தால் அதனையடைந்தோர் சிவனைச் சார்வர். மாறுதல், பின் விட்டு நீங்குதல். இது பிறப்பு எய்துதலைக் குறித்தது.*

*'பறவை' எனப்பட்டன ஏற்புழிக் கோடலால் வாவலாயின. வாவல், இனத்தால் பறவையன்றாயினும், பறத்தல் பற்றி, 'பறவை' எனப்படும்.*

*இதனால், 'ஆதார நிராதார யோகங்களில் நிற்பின், காமம் முதலிய அகப் பகைகளும், புத்தி குண பாவங்களும் நீங்கிச் சிவனைத் தலைப்படுதல் கூடும்' என்பது உள்ளுறையாக உணர்த்தப்பட்டது.*

**2860.** கொட்டனம் செய்து குளிக்கின்ற கூவலுள்
வட்டனப் பூமி மருவிவந் தூறிடும்
கட்டனம் செய்து கயிற்றால் தொழுமியுள்
ஒட்டனம் செய்தெளி யாவர்க்கு மாமே. **40**

---

***2860. தெளிவுரை :-*** *('அனம்' என்பது "வட்டனம்" என்பதில் பண்புப் பெயர் விகுதியாகவும், ஏனைய மூன்றிலும் தொழிற்பெயர் விகுதியாகவும் வந்துள்ளது. 'கட்டு' என்பது அடியாக, 'கட்டணம், கட்டடம்' என்னும் சொற்கள் இக்காலத்தில் வழங்கக் காண்கின்றோம். இங்கும் 'அனம்' என்பதற்கு, ஈடாக, 'அணம்' என்ற பாட வேறுபாடும் காணப்படுகின்றது. கூலிக்கு நெற்குற்றுதலை, 'கொட்டணம் குற்றுதல்' என்பர். எனவே, இம்மந்திரத்தின் முதற்சீர் நான்கும் முறையே, 'கொட்டுதல், வட்டம், கட்டுதல், ஒட்டுதல்' என்னும் பொருளவாம். கொட்டனம் - கொட்டுதல் - நிலத்தைத் தோண்டுதல்).*

*நிலத்தைத் தோண்டி, மண் அல்லது மணலை அப்பால் குவிக்கின்ற கிணற்றில், அல்லது ஊற்றுக்குழியில் நீரோடு, சுற்றிலும் மண், அல்லது மணலும் உடன் சேர்ந்துவரும். அந்நீர் கலங்கல் நீராய் இருக்கும். மரத்தாலான வட்டத்தின் மேல் சுடுமட் பலகைகளால் ஓரளவு சுவர் எழுப்பி, அதனைக் கயிற்றால் இறுகக் கட்டிப் புறஞ்சுவரோடு ஒட்டிவைத்தால், மண் அல்லது மணல் வாராது. நீர் மட்டுமே ஊறி வந்து தெளிந்து எல்லார்க்கும் பயன்படும்.*

***குறிப்புரை :-*** *கிணறு தோண்டி, அதனை இடிந்து வீழாமல் நிலைக்கச் செய்தற்கு இன்னும் இவ்வாறு செய்யப்படுதலைக் காணலாம். இஃது இங்கு நிலத்தை அகழ்ந்து, அதன் அடியில் உள்ள நீரைப்பெற்று இன்புறுவார்க்குச் சுற்றிலும் உள்ள மண், அல்லது மணல் ஆகிய கலங்கல் வந்து சேர்வதுபோல, ஞான சாதனைகளால் அஞ்ஞானத்தை அகழ்ந்தெறிந்து தோன்றாத் துணையாய் நின்று சிவத்தைத் தலைப்பட்டு இன்புறுபவர்கட்குச் சிவானந்தத்துடன், பிராரத்த வாசனையும் வந்து தாக்கும். அதனைத் திருவருளாகிய பாதுகாவலைப் பத்தியால் உறுதிப்படச் செய்யின் சிவானந்தமே மேலிட்டு யாவர்க்கும் பயன்தரும், என்பதைக் குறித்து நின்றது.*

***2861. தெளிவுரை :-*** *கொட்டு - மண்வெட்டி குந்தாலி - கோடலி. 'இந்த இரண்டே உள்ளன' என்க. 'உள்ளன' என்பது சொல்லெச்சம்.*

*"இரண்டுக்கும்" என்பதை இரண்டாம் அடியில், "குந்தாலிக்கும்" என்பதன் பின்னர்க் கூட்டுக. இரண்டாம் அடியில் 'கொட்டுக் குந்தாலி' என்பது உம்மைத் தொகையாய் நின்றது. அதன் ஈற்றில் நான்கனுருபு, உறழ்பொருளாகிய ஐந்தாவதின் பொருளில் வந்தது. ஈற்றில் உள்ள உம்மை சிறப்பு.*

*பாரை - கடப்பாரை. "பாரைக்கு நெக்குவிடாய் பாறை, பசுமரத்தின் - வேருக்கு நெக்குவிடும்" (நல்வழி, 33) என்னும் ஔவையார் வாக்கைக் காண்க.*

**2861.** கொட்டுக் குந்தாலி இரண்டே இரண்டுக்கும்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரை வலிதென்பர்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரைக்கும் மூன்றுக்கும்
இட்டம் வலிதென்பர் ஈசன் அருளே. **41**

---

*மரவெட்டி ஈர மண்ணைத்தான் பறிக்கும். கோடாலி மரத்தை மேலோடு வெட்டும். பாரை வலிய நிலத்தையும் அகழும். மரத்தை வேரோடும் சாய்க்கும். ஆகவே, மண்வெட்டி, கோடாலி இரண்டையும் விடப் பாரை வலியது. "இரண்டே உள; பாரை வலியது" என்றதனால், பாரை கிடைத்தற்கரிதாதல் கூறப்பட்டது.*

*மண்வெட்டி இடைகலை நாடி, இது* ***பூரிப்பால் நோயைப் போக்கும்****. கோடலி, பிங்கலை நாடி, இஃது* ***இரேசகத்தால் மாசு நீக்கும்****. பாரை, சுழுமுனை நாடி. இது* ***கும்பகத்தால் இறப்பு நீக்கல்****, அறியாமையைப் போக்கல் ஆகியவைகளைச் செய்யும். எனவே, முன்னிரண்டடிகளால் வாசி யோகத்தின் சிறப்புணர்த்தப்பட்டதாம்.*

*இட்டம் - வெளிப்படைப் பொருளில், 'இட்ட + அம்' எனப் பிரித்து, மேகம் பெய்த மழையையும், (அம் - நீர்) உள்ளுறைப் பொருளில் அன்பையும் குறித்தது. அன்பு, சிவ பத்தி.*

*மழை நீர் நிலத்தையும் எளிதில் அகழும்; மரங்களையும் எளிதில் வேரோடு கல்லிவிடும்.* ***ஆகவே அது, மண்வெட்டி, கோடாலி, பாரை மூன்றையும் விட வலியதாம். 'வாசியோகத்தைவிடப் பத்தி வலிது' என்றபடி****, 'ஈசன் அருள் நிலை இவ்வாறு உள்ளது' என்க. "ஆறு பார்ப்பானுக்கு இரண்டே கண்கள்; மாறுகோள் இல்லை; மதியுள்ளோர் சொல்லுங்கள்" என்றால், பின்னடி முன்னடியைச் சார்ந்து வந்ததேயன்றி, உள்ளுறைப் பொருளதாகாது. (ஆறு - வழி, அல்லது யாறு. பார்ப்பான் - பார்ப்பவன்). அஃதே போல், இங்கு, "ஈசன் அருள்" என்பது உள்ளுறைப் பொருள் இன்றி, முற்கூறிய பொருளைச் சார்ந்து நின்றது.*

***2862. தெளிவுரை :-*** *குளத்தில் கயல் மீன்களில் ஒவ்வொன்றை அதன் துள்ளல், பிறழ்ச்சி முதலியவற்றின் கவர்ச்சியால் கண்டு மயங்கினோர் அதைக் கண்டு கொண்டிருப்பதோடே ஒழிவர். (இஃது 'உலகத்தில் மாயையின் விசித்திரத்தில் மயங்கினோர் அம்மயங்குதலோடே ஒழிவர்' என்பதைக் குறித்தது)*

*கரையில் முயல் ஒன்றைக் கண்டவர் அதனைப் பிடிக்க. அஃது ஓடும் வழியே ஓடி, இறுதியில் பெரும் பயனைப் பெறுவர். (அஃது எங்ஙனமெனில்) அவ்வழியின் முடிவில் மறைவில் ஒரு பொருள் உள்ளது; அது பொன். ('அதனைப் பெறுவர்' என்றபடி). "முயல்" என்பது சிலேடை வகையால் 'முயற்சி' எனப் பொருள் தந்து, சரியை, கிரியை, யோகம் ஆகிய தவங்களைக் குறித்தது. முயல்*

**2862.** கயலொன்று கண்டவர் கண்டே யிருப்பர்
முயலொன்று கண்டவர் மூவரும் உய்வர்
பறையொன்று பூசல் பிடிப்பான் ஒருவன்
மறையொன்று கண்டதுருவம்பொன் னாமே. **42**

---

*ஓடி அடையும் புதரில் சில வேளைகளில் புதையல்கள் இருப்பதுண்டு. அஃது இங்குச் சிவஞானத்தைக் குறித்தது.*

*"மறை" என்பது சிலேடையாய், காட்டுப் புதர் மறைவையும், வேதத்தையும் குறித்தது.*

*"மறை ஒன்று கண்டது" என்னும் தொடரை, வெளிப்படைப் பொருட்டு, 'மறைவில் ஒரு பொருள் காணப்பட்டது' எனவும், உள்ளுறைப் பொருட்டு, 'வேதம் முடிவாக ஒரு பொருளைக் கண்டது' எனவும் விரித்துக் கொள்க.*

*உருவம் - பொருள். 'அவ்வுருவம்' எனச் சுட்டு வருவிக்க.*

*"பொன்" என்பது, பொன்னையும், பொன்னோடொக்கும் சிவத்தையும் குறித்தது. **சிவம் பொன்னாகவும், உயிர் செம்பாகவும்** சித்தாந்தத்தில் சொல்லப்படுதல் வெளிப்படை.*

*கயலைக் காண்போரும், முயலைக் காண்போரும் ஆகிய அவ்விரு திறத்தாருமன்றித் தனியே நின்று, 'நான் கயலைப் பிடிப்பேன், முயலைப் பிடிப்பேன்' என்று வாய்ப்பறை சாற்றுதலையே உறுதிப் பொருளாகக் கொண்ட ஒருவன் யாதொரு பயனையும் பெறாமல், வாய்ப்பறை சாற்றுதலோடே நிற்பன். (இஃது அறம் முதலிய பொருள் நூல்களை ஓதுதல் - பிறருக்கு உரைத்தல்களை மட்டுமே செய்து, தாம் அவற்றின்வழி நில்லாதாரைக் குறித்தது.*

*"பிறருக்குப் பயன்படத் தாம்கற்ற விற்பார்,*
*தமக்குப் பயன்வே றுடையார்; ... .... ....*
*... .... .... தென்புலத்தார்*
*கோவினை வேலை கொளல்"* - ***நீதிநெறிவிளக்கம், 21***

*என்றார் குமரகுருபரரும். பூசல் - ஆரவாரம்.*

***குறிப்புரை :-*** *"ஓதி யுணர்ந்தும், பிறர்க்குரைத்தும் தான் அடங்காப் - பேதையிற் பேதையார் இல்" (திருக்குறள், 834) என்றபடியுள்ள வாய்ப்பறை சாற்று வானது இழிவு நோக்கி ஒருமையாற் கூறினார். அம்மூன்றாம் அடியை இறுதிக்கண் கூட்டியுரைக்க. உலக நெறி பிறவி நெறியாகலின் அதனைக் குளமாகவும், தவநெறி வீட்டு நெறியாகலின் அதனை நிலமாகவும் கூறினார். இதில் ஈரடி எதுகை வந்தது.*

**2863.** கோரை யெழுந்து கிடந்த குளத்தினில்
ஆரை படர்ந்து தொடர்ந்து கிடந்தது
நாரை படிகின்றாற் போல்நல்ல நாதனார்
பாரை கிடக்கப் படிகின்ற வாறே. **43**

---

*இதனால் உலக நெறியில் நிற்பார் உலக இன்பத்தையும், தவநெறியில் நிற்பார் வீட்டின்பத்தையும் பெறுதலும், யாதொரு நெறியிலும் நில்லாது வாய்ப்பறை சாற்றுவார் யாதும் எய்தாமையும் உடன் கூறப்பட்டன.*

*2863. **தெளிவுரை :-** இயல்பாகவே வலிய கோரைப் புற்கள் முளைத்துப் படர்ந்து கிடக்கின்ற ஒரு குளத்தில், அதற்கு மேல் மெல்லிய ஆரைக் கொடிகளும் தொடர்ந்து படர்ந்துவிட்டன. இந்நிலையில் அந்தக் குளத்தை உடைய நல்ல தலைவர் ஒருவர், அதில் நாரைகள் மூழ்குவது போலத் தரையளவும் செல்ல மூழ்குவது எங்ஙனம்?*

***குறிப்புரை :-** 'இயலாததாய் உள்ளது' என்பதாம். குளம், சீவான்மா, அதன் அறிவு அக்குளத்தின் நீர், வலிய கோரை ஆணவ மலம். அதன் மேல் தொடர்ந்து படர்ந்த ஆரைக் கொடிகள் மாயையும், கன்மமும், குளத்தை உடைய நாதனார், பரமான்மாவாகிய சிவன், நாதனார் குளத்து நீரில் தரையளவும் செல்ல முழுகுதல், சிவன் சீவான்மாவின் அறிவு முழுதும் பற்றி விளங்குதல். இஃது இயற்கையாயினும் ஆணவ மலம் காரணமாகச் செயற்கையாய்ப் புதிதாக விளங்குதல்போலக் கூறப்பட்டது. "நாரைபோல்" என்பது இடைக்கண் போந்த உவமை. "நாரை" என்றது நீர்மூழ்கும் பறவைகளைக் குறித்த குறிப்பு மொழி. "பாரை" என்னும் இரண்டன் உருபை 'பார்க்கண்' என ஏழாவதாகத் திரித்துக் கொள்க. படிதல் - மூழ்குதல். 'படிக்கின்றவாறு எங்ஙனம்' என ஒரு சொல் வருவித்து முடிக்க.*

*இதனால், 'வலிய மூல மலமாகிய ஆணவ பந்தமும், அதற்கு மேல் ஆகந்துக மலங்களாகிய மாயா கன்ம பந்தங்களும் உள்ளவரையில் சிவ விளக்கம் சீவ போதத்தில் முழுமையாக உண்டாதல் இயலாது' என்பது உள்ளுறையாக உணர்த்தப்பட்டது.*

*2864. **தெளிவுரை :-** வீடுபேறாகிய ஊரை அடைதற்குரிய பெருநெறியின்கண் (இரும்நெறி) வானுலகம் என்னும் சோலையை அடைதற்குரிய முக்காத நீளமுள்ள நெறியும், இவ்வுலகு, கீழ் உலகு என்னும் காட்டில் கொண்டு உய்க்கும் அரைக்காத நெறியும், ஆகிய நன்னெறி தீநெறி என்னும் இரு நெறியும் தமது எல்லைகள் ஒன்றோடொன்று கலந்து கிடந்தன. அவற்றின் எல்லைகளை மயங்கி உணராது, தெளியக்கண்டு நடக்க வல்லார்க்கு, விரைவில் தாம் செல்ல வேண்டிய ஊராகிய வீட்டுலகை அடைதல் கூடும்.*

**2864.** **கொல்லைமுக் காதமும் காடரைக் காதமும்**
**எல்லை மயங்கிக் கிடந்த இருநெறி**
**எல்லை மயங்கா தியங்கவல் லார்களுக்கு**
**ஒல்லை கடந்துசென்று ஊர்புக லாமே.** **44**

---

*குறிப்புரை :-* *கொல்லை - சோலை. வானுலகம். இது நல் வினையால் எய்தற்பாலது ஆதலின் அது செய்தல் அருமை நோக்கி முக்காதம் எனப்பட்டது. காடு - வெற்றிடம் ஆகிய கீழுலகு. இவ்வுலகும் ஆம். இது தீவினையாலும் தீவினையோடு கலந்த நல்வினையாலும் எய்துவது ஆகலின், அவ்வாறு எய்துதல் எளிமை நோக்கி அரைக்காதம் எனப்பட்டது. இருநெறி - புண்ணிய நெறி, பாவநெறி. இரட்டுற மொழிதலால் இரும்நெறி எனவும் கொண்டு, பெரு நெறியாகிய அருள் நெறியினையும் உடன் கொள்க. அது வீட்டுலகின் உய்க்க வல்லது. இரு நெறியும் ஒன்றோடொன்று எல்லை மயங்கிக் கிடந்தன என்க. பெருநெறியிற் செல்லவேண்டிய காலஅளவு குறிப்பிடப்படவில்லை. அது கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டபோதே முதலைப்படற்பாலது ஆதலின்.*

*நூல்களில் விலக்கிய ஓம்பி விதித்தன செய்தல் மேலுலகின்கண் உய்க்கும். நூல்நெறி தழுவாது ஒழுகும் ஒழுக்கம் காடாகிய கீழுலகின்கண் உய்க்கும். இரண்டிடத்தும் யான் எனது என்னும் செருக்கு உண்டு. இறைவன் உண்மையை உணர்ந்து அவன் அருள்வழி நிற்றல் இவ்விரண்டினும் வேறாகிய பெருநெறியாகும். இதனைத் தெளிய உணர்ந்து நிற்போர் விரைவில் வீட்டுலகம் புகுவார் என்பது கருத்து.*

*2865.* ***தெளிவுரை :-*** *வெள்ளிதாய் எழுந்த மேகம் மழை பெய்தல் இல்லை. அப்பொழுது உழவுக்கு வேண்டுவதாகிய விதைகள் சேமித்து வைக்கப்பட்ட இடத்திலே கிடக்க, நிலமும் பதப்படாது. உழவுத் தொழிலும் நிகழ்ந்து பயன் தாராது.*

*(இதனானே, 'கரிதாய் எழுந்த மேகம் மழைபொழிந்த காலத்து, மேற்கூறியன மேற்கூறியவற்றிற்கு மறுதலையாய் நிகழும்' என்பதும் பெறப்படும்). ஆகவே, மழையைப் பெய்விப்போனாகிய சிவன் பெய்வியாது ஒழிதல் இல்லை.*

***குறிப்புரை :-*** *"மழை" (மேகம்) என்றது, சிவனது அருளை. அதனைப் போககாமிகளை நோக்கி, மறக் கருணையாகிய திரோதான சத்தியாகவும், மோட்ச காமிகளை நோக்கி, அறக் கருணையாகிய அருட் சத்தியாகவும் கொள்க.*

*இனி, 'உழவு, வித்து' என்பனவும் போகத்திற்கு ஆகாமியம் ஏறுதலும், சஞ்சிதம் கிடத்தலுமாகவும், மோட்சத்திற்குத் தவம் மிகுதலும், ஞானம் முதிர்தலுமாகவும் கொள்க. நிலம், இரண்டிற்கும் ஆன்ம உணர்வேயாம்.*

*"எழு மலை பெய்யாது" என்பதனை முதலிற்கூட்டிப் பொருள் கொள்க.*

**2865.** உழவொன்று வித்து ஒருங்கிய காலத்து
எழுமழை பெய்யாது இருநிலம் செவ்வி
தழுவி வினைசென்று தான்பய வாது
வழுவாது போவன் வளர்சடை யானே. **45**

---

*பெய்யாது - பெய்யாமையால், வினை, உழவுத் தொழில். மழையின் இன்றியமையாமையையே உடன்பாட்டு முகத்தாலும், எதிர்மறை முகத்தாலும் வலியுறுத்தினார்.*

*இதனால் 'போகமாயினும், மோட்சமாயினும் சிவனருள் இன்றி ஆகாது; அவன் அன்றி ஒரணுவும் அசையாது' என்பது உள்ளுறை வகையால் வலியுறுத்தப்பட்டது.*

*கண்ணுதல் யோகிருப்பக்*
*காமன் நின்றிட வேட்கைக்கு*
*விண்ணுறு தேவ ராதி*
*மெலிந்தமை ஓரார்; மால்தான்*
*எண்ணிவேள் மதனை ஏவ,*
*எரிவிழித் திமவான் பெற்ற*
*பெண்ணினைப் புணர்ந்து யிர்க்குப்*
*பேரின்பம் அளித்த தோரார்.*

*என்பது சிவஞான சித்தி, (சுபக்கம், சூ. 1.53) இதனை ஒட்டி,*

*எல்லா உயிர்க்கும் உயிர் அருணேசர்;*
*இவர் அசைவி*
*னல்லாது அணுவும் அசையாது என்பது*
*அறிந்தனமே;*
*வில்லாடன் மாரன் இருக்கவும் யோகம்*
*விளைத்த அந்நாள்*
*புல்லா திருந்தன எல்லா உயிருந்தம்*
*போகத்தையே. - அருணைக்கலம்பகம்*

*எனப் பிற்காலத்தவரும் கூறினார். இதன் ஈற்றடி, முதல் மூன்று அடிகளின் சார்பு பொருளாக வந்தது.*

*2866. தெளிவுரை :- காட்டிலே வாழ்கின்ற ஒருவன் அங்குள்ள ஒரு புலிக்கு அஞ்சி எங்கே பதுங்கியிருந்தாலும் அந்தப் புலி பன்னிரண்டு காதம் வரையிலும் பாய்கின்றது. அதனால் அவன் அந்தக் காட்டை விட்டு ஒரு கடற்கரையை அடைந்தான். அங்கே புலிப் பாய்ச்சல் இன்றிக் குளிர்ச்சியான அலைகள் வந்து வந்து சென்றன. பின் அந்தக் கடலில் அரிய அமிர்தம் தோன்றிற்று. ஆயினும்*

**2866.** பதுங்கினும் பாய்புலி பன்னிரு காதம்
ஒதுங்கிய தண்கடல் ஓதம் உலவ
அதுங்கிய ஆர்கலி ஆரமு தூறப்
பொதுங்கிய ஐவரைப் போய்வளைத் தானே. **46**

---

*அதனை, அவன் பெற ஒட்டாமல் ஐவர் வந்து கூர்மையான கருவியாற் குற்றினர். ஆயினும் அவன் அவர்களை வளைத்துக் கொண்டு அடித்துத் துரத்தினான். (பின்பு அவன் அமிர்தத்தை உண்டு மகிழ்ந்தான் என்பதைச் சொல்ல வேண்டுமோ!).*

*குறிப்புரை :- காடு, தூல உடம்பு. அதில் உள்ள பிராண வாயு பன்னிரண்டங்குலம் வெளியேறி வாழ்நாளைச் சிறிது சிறிதாக உண்டு வருதலால் அதனைப் பன்னிரண்டு காதம் பாய்ந்து தாக்கும் புலியாகக் கூறினார். 'பன்னிரு காதம் பாயும்' என ஒரு சொல் வருவித்து முடிக்க.*

*உடம்பையே உடம்பாகக்கொண்டு செயற்படுதலை விடுத்து, அருளையே உடம்பாகக் கொள்ளுதலைக் கடற்கரையை அடைந்ததாகக் கூறினார். கடற்கரை இனிய இடமாதல் தெளிவு. அருளை உடம்பாகக் கொண்டோர்க்கு நிகழ்வன யாவும் அருட் செயலாகத் தோன்றுதலைக் கடல் அலைகள் வந்து உலாவுவதாகக் கூறினார்.*

*அமிர்தம், சிவானந்தம், அதனைப் பற்ற ஒட்டாமல் வந்து தாக்கும் ஐவர் ஐம்பொறிகள், அருள்வழி நிற்பார்க்கு ஐம்பொறிகளை வெல்லுதல் எளிதாதல் பற்றி, "ஐவரைப் போய் வளைத்தான்" என்றார்.*

*அதுக்குதல், பொதுக்குதல் என்பன எதுகை நோக்கி மெலிந்து நின்றன. அதுக்குதல் வாயில் இட்டுச் சுவைத்தல். பொதுக்குதல், உடம்பில் தைத்தலும், தைக்கச் செய்தலும்.*

*'ஆர்கலி அதுக்கிய ஆரமுது ஊற' என்க.*

*"பாய்ப்புலி" என்றதனால், 'பதுங்குதல் காட்டில்' என்பது பெறப்பட, அதனால் 'ஒருவன்' என்னும் எழுவாய் பெறப்பட்டது. ஒருவன் உயிர்.*

*பெத்த நிலையில் நிற்பார்க்கு மாயா உடம்பே உடம்பாகவும் முத்தி நிலையில் நிற்பார்க்கு அருளே உடம்பாகவும் நிற்றலும், முறையே அவற்றால் விளையும் துன்ப இன்பங்களும் இதனால் உள்ளுறையாகக் கூறப்பட்டன.*

*2867. தெளிவுரை :- கடலில் தோணி ஒன்றில் ஏறிப் புகுந்து சென்றும், மீண்டும் தொடர்ந்து வாணிபத்தைச் செய்தும் ஆக்கம் பெற்று வருகின்ற ஒருவன் தனது ஆக்கத்தை மனைவியர்க்குக் கொடுத்து வாழ்க்கை நடத்தச் சொல்லாமல் பரத்தைக்கு வழங்குவானாயின், நாளடைவில் அவன் கவலை மீதூர, ஆலங்கட்டி*

**2867.** **தோணிஒன் றேறித் தொடர்ந்து கடல்புக்கு**
**வாணிபம் செய்து வழங்கி வளர்மகன்**
**நீலிக் கிறைக்குமேல் நெஞ்சின் நிலைதளர்ந்து**
**ஆலிப் பழம்போல் அளிகின்ற அப்பே.** **47**

---

*பழம்போலத் தோன்றிச் சாற்றைத் தாராமல் நீரையே தருதல் போலும் நிலையை அடைவான்.*

*குறிப்புரை :-* “உளபோல இல்லாகித் தோன்றாக் கெடும்” (திருக்குறள், 479) என்பது போல அவன் வாழ்க்கை கெடும் என்றபடி.

தோணி, மனம் “மனம் என்னும் தோணி பற்றி” (தி.4 ப.46 பா.2) என அப்பரும் அருளிச் செய்தார். அந்தக் கரணம் அனைத்தும், ‘மனம்’ எனத் தொகுத்து வழங்கப்படும். அந்தக் கரணமே சூக்கும தேகம். அது முத்தியடையுங் காறும் நீங்காதிருக்கும். ‘உயிர்கள் செய்த புண்ணிய பாவங்கள் புத்தி தத்துவத்தைப் பற்றிக் கிடந்து பயன் தரும்’ என்பது சைவ சித்தாந்தம். அதனால், அதனைப் பிறவியாகிய கடலில் பயணம் செய்தற்குரிய தோணியாக உருவகித்தார். வழங்குதல் - பயணம் செய்தல்.

உயிர் உடம்பைப் பற்றி நின்று பிற உயிர்களிடத்து நல்லன தீயனவற்றைச் செய்தல், வாணிபத்தில் விலை கொடுப்பதனோடும், அதனால் செய்த உயிர் தான் அடைகின்ற அறம் பாவங்கள் பண்டத்தைக் கொள்வதனோடும் ஒக்கும். ஆதலின் இச்செயலை “வாணிபம்” என்றும், “அதனை உயிர் தொடர்ந்து நடத்துகின்றது” என்றும் கூறினார்.

அற உணர்வும் இறையுணர்வும் மனைவியர் கொண்ட பண்டங்களாகிய அறம் பாவங்களை இவ்விருவகை உணர்வுகளும் முதிர்வதற்குப் பயன்படுத்தினால் நலன் விளையும். அது பற்றி இவ்வுணர்வுகளை மனைவியராகக் கூறினார்.

பொய்க் கண்ணீர் வடிக்கின்றவளை ‘நீலி’ என்றல் வழக்கு. அது பற்றிப் பொய்யாகப் பரிவு காட்டும் பரத்தையை, “நீலி” என்றார்.

பரத்தை, பல பொருள்கள் மேலும் செல்லும் ஆசை. ஒருவன் தனது அறிவால் மேலும் மேலும் ஆசையை வளர்த்தால் அவன் கெடுவானன்றோ! அது பற்றி, “நெஞ்சின் நிலைதளர்ந்து..... அன்பே” என்றார். அளிதல், மெலிந்து கரைதல். ‘அப்பே ஆம்’ என முடிக்க. இம்மந்திரம் ஈரடி எதுகை பெற்றது.

இதனால், ‘அறிவால் அற உணர்வையும், இறையுணர்வையும் பெருக்கிக் கொள்ளாமல், ஆசையை வளர்ப்பார் கெடுவர்’ என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.

**2868.** **முக்காத ஆற்றிலே மூன்றுள வாழைகள்**
**செக்குப் பழுத்த திரிமலம் காய்த்தன**
**பக்கனார் மிக்கார் படங்கினார் கன்னியர்**
**நக்குமல ருண்டு நடுவுநின் றாரே.** **48**

---

*2868.* ***தெளிவுரை :-*** *இதன் பொருள் வெளிப்படை. குறிப்புரையால் இனிது விளங்கும்.*

***குறிப்புரை :-*** *முக்காத ஆறு - தனித்தனி ஒவ்வொரு காதத் தொலைவுள்ள மூன்று ஆறுகள். அவை, உலகியல் ஒழுக்கம், மெய்நெறி ஒழுக்கம், மெய்யுணர்வு' என்பனவாம்.*

*அந்த ஆறுகளில் தனித்தனி ஒன்றாக, மூன்று வாழை மரங்கள் உள்ளன. அவை அவற்றால் விளையும். அறமும், அருளும், வீடு பேறுமாம்.*

*'செகு' என்னும் பகுதி ஒற்றிரட்டி, 'செய்து' என்னும் இறந்தகால வினையெச்சமாய் நின்றது. இது 'செகுத்து' எனவும் வரும். செகுத்தல் - அழித்தல். பழுத்த - முற்றிய. "காய்த்தன" என்பது, 'ஒழித்தன' என்னும் குறிப்பு. அதனால் ஏற்புடையன கொள்ளப்பட்டன.*

*'மலம்' என்பது இங்கு, 'அழுக்கைக் குறித்து, அதனால் விளையும் நோயைக் குறித்தது. மூன்று வாழைகளும் முறையே பூ, காய், பழம் என்பவற்றால் ஒவ்வொரு நோயைப் போக்கும் நிலையில் உள்ளன. பக்குவம் மிக்கவர்கள் பழத்தை உண்டு எல்லா நோய்களும் நீங்கப்பெற்று அமைதியுற்றார்கள். ('பக்குவான்மாக்களாய் உள்ளவர்கள் மெய்யுணர்வாகிய பழத்தை உண்டு வீட்டை அடைந்து இன்புற்றார்கள்' என்பதாம்).*

*'பக்குவனார்' என்பது, 'பக்கனார்' எனக் குறைந்து நின்றது. 'மிக்கு ஆர்பு அடங்கினார்' எனப் பிரிக்க. ஆர்பு - உண்டு; 'செய்பு' என்னும் வினையெச்சம்.*

*பக்குவம் வாயாத சிறு மகளிரைப் போலப் பக்குவம் எய்தாது, அபக்குவராய் உள்ளோர் பூவையும், காயையுமே மகிழ்ந்து உண்டு, 'நோயுற்றோர், நோயற்றோர்' என்னும் இருதிறந்தார்க்கும் நடுப்பட்டவர்களாய் நின்றார்கள். பழத்தின் அருமையறிந்து அதனைப் பறித்து உண்பதற்கும் அறிவு வேண்டும் என்க.*

*(பக்குவம் முதிராது அபக்குவராய் உள்ளவர்கள். மெய்யுணர்வைப் பெறாது, இருவகை ஒழுக்கங்களை மட்டுமே உடையராய், 'அறம், அருள்' என்பவற்றை மட்டும் பெறுதலோடு, உலகர்க்கும், அறிவார்க்கும் இடைப்பட்டவராய் உள்ளனர்' என்பதாம்).*

*உடலில் உண்டாகும் மூன்று நோய்களாவன தோல் நோய், வயிற்று நோய்,*

**2869.** அடியும் முடியும் அமைந்ததோர் அத்தி
முடியும் நுனியின்கண் முத்தலை மூங்கில்
கொடியும் படையுங் கொளும்சார்பை யைந்து
மடியும் வலம்புரி வாய்த்ததவ் வாறே. **49**

---

*குருதி நோய் என்பன. இவை முறையே, 'மாயை, கன்மம், ஆணவம்' என்னும் மலங்களைக் குறித்தன. இவைகளில் வாழைப் பூத் தோல் நோயையும், காய், தோல் நோயோடு வயிற்று நோயையும், பழம் எல்லா நோயையும் போக்கும். அது போல அறம் மாயையாகிய உலகியல் துன்பத்தைப் போக்கும். அருள் இருவினையொப்பு வருவிக்கும் முகத்தால் கன்ம மலத்தைப் போக்கி, உலகியல் துன்பமும் உயிரைத் தாக்காதவாறு செய்யும். அருளாகிய சத்தி நிபாதத்தில் உண்டாகும் மெய்யுணர்வு, முன்பே பாகம் எய்திய ஆணவ மலத்தை அடியோடு போக்கி, மெய்ப் பொருளைக் காட்டி, வீடு அடைவிக்கும். ஆணவம் நீங்கவே, ஏனை மலங்களுக்கும் தொடர்பு யாதும் இன்றி, அகன்றொழியும். ஆகவே, வீடெய்தினார்க்குத் துன்பம் யாதும் இல்லையாம்.*

*"திரிமலம்" என்பது, உள்ளுறைப் பொருளில் மும்மலங்களைக் குறித்தது.*

*நகுதல் - மகிழ்தல். "மலர் உண்டு" என்றாரேனும், "மலரையும், காயையும் உண்டு" என்றல் கருத்தென்க.*

*இதனால், அபக்குவ பக்குவிகளது இயல்பும், அவர் செய்யும் சாதனைகளும், அவற்றின் பயன்களும் உள்ளுறையாகக் கூறப்பட்டன.*

***2869. தெளிவுரை :-* இதன் பொருள் வெளிப்படை. குறிப்புரையால் இனிது விளங்கும்.**

***குறிப்புரை :-* வேரும், கிளையும் அமைய வேண்டிய முறையிலே அமைந்த அத்தி மரம் ஒன்று உள்ளது (அத்தி - எலும்பு. அது சிலேடையாய், உள்ளுறையில் உடம்பைக் குறித்தது. உடம்பிற்கு வேர் வித்தியா தத்துவத்தில் உள்ள மாயா தத்துவம். கிளை, பிருதிவி தத்துவம்).**

***முடியும் நுனி - கிளைக்கும் மேல் உள்ள இடம். மூங்கில், சுத்த தத்துவம். முத்தலையாவன அதிகார போக, லய தத்துவங்கள்.***

***கொடியும், படையும் தாத்துவிகங்கள். கொடி, படர்கொடி, படை, இலை தளிர் பூ முதலியவற்றின் கூட்டம். கொள் சார்பு - கொடி கட்கும், படைகட்கும் பற்றாய் உள்ளவை. "ஐயைந்து" உம்மைத் தொகை பத்து, அவை ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியம் ஐந்தும், இவைகளாலேயே உயிர்க்கு எல்லா அறிவும், செயலும் நிகழும்.***

**2870.** பன்றியும் பாம்பும்பசு முசு வானரம்
தென்றிக் கிடந்த சிறுநரிக் கூட்டத்துள்
குன்றாமைக் கூட்டித் தராசின் நிறுத்த பின்
குன்றி நிறையைக் குறைக்கின்ற வாறே. **50**

---

*அத்திப்பழம் உணவாகவும், மூங்கில் பலவற்றுக்குக் கருவியாகவும் நமக்கு உதவுவனபோல தோன்றினாலும் இவையெல்லாம் பேருதவிகள் அல்ல. இவற்றின் வேறாய் இனியதொரு சோலை உண்டு, அதனை அடைந்தால், அல்லல்கள் அற்று, அமைதியுடன் வாழலாம். ஆயினும் அந்தச் சோலையை இந்த அத்தி மரத்தின் வழியாகவே அடைய வேண்டியுள்ளது. அதனால் இந்த அத்தி மரத்தையும் புறக்கணித்தற்கு இல்லை.*

*வலம்புரி - நந்தியாவட்ட மலர். அது நல்லதொரு சோலையைக் குறித்த குறிப்பு மொழி. மடிதல், இங்கு அல்லலற்று அமைதியுடன் இருத்தல். "சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே" (பா.127) என முதற்கட் கூறியதையும் நினைக.*

*சோலை, முத்தி நிலை 'அதனை அடைதற்குச் சாதனமாகவே இவ்வுடம்பு அமைந்துள்ளது' என்பதை "வலம்புரி வாய்த்தது அவ் ஆறே" என்றார். ஆறு - வழி. 'ஆற்றால்' என உருபு விரிக்க. ஏகாரம், பிரிநிலை.*

*இதனால், முன்பு, "உடம்பை வளர்த்தேன்; உயிர் வளர்த்தேனே" என வெளிப்படையாகக் கூறப்பட்ட பொருள் உள்ளுறையாகக் கூறி வலியுறுத்தப்பட்டது.*

*2870. **தெளிவுரை :-** ஒரு குறு நரிக் கூட்டத்திற்குள்ளே, பன்றி, பாம்பு, பசு, குரங்கு இவைகளும் நிறைந்துள்ளன. அவைகளின் இயல்பை முற்றவும், துலாக்கோலில் இட்டு நிறுப்பது போல நுட்பமாக ஆராய்ந்து உணர்ந்தால் அவற்றால் விளையும் துன்பங்களைச் சிறிது சிறிதாகக் குறைக்கும் நிலை உண்டாகும்.*

*__குறிப்புரை :-__ குறுநரிகள், சகல வருக்கத்து ஆன்மாக்கள், பிரளயாகலர் விஞ்ஞான கலர்கள் பெரு நரிகள். நரி தந்திரம் உடையது ஆதலின் அது அறிவுடைய - சிற்றறிவுடைய ஆன்மாக்கட்கு உவமையாயிற்று.*

*பன்றி, பாம்பு, பசு இவை முறையே தாமத, இராசத, சாத்துவிக குணங்கள். குரங்கு, மனம், முசு, வானரம், இரு பெயர் ஒட்டு, தராசில் இட்டு நிறுத்தல் தத்துவ ஆராய்ச்சியை நுண்ணிதாகச் செய்தல்.*

*'குன்றியளவாக' என ஆக்கம் வருவித்து, 'குன்றி குன்றியாக' என உரைக்க. குன்றி - குன்றிமணி. நிறை, பன்றி முதலியவற்றின் வலிமை. 'குறைக்கின்ற ஆறு உளதாம்' என ஒரு சொல் வருவித்து முடிக்க.*

**2871.** மொட்டித் தெழுந்ததோர் மொட்டுண்டு மொட்டினைக்
கட்டுவிட் டோடின் மலர்தலும் காணலாம்
பற்றுவிட் டம்மனை பாழ்பட நோக்கினால்
கட்டுவிட் டாலன்றிக் காணஒண் ணாதே. **51**

---

*'தெற்றி' என்பது மெலிந்து நின்றது. கிடந்த - கிடந்தன. தெற்றிக் கிடத்தல் - நெருங்கிக் கிடத்தல்.*

***இதனால், தத்துவ ஆராய்ச்சியே பந்த நீக்கத்திற்கு வழியாதல் உள்ளுறையாகக் கூறப்பட்டது.***

*2871.* ***தெளிவுரை :-*** *ஓர் இல்லத்திற்குள்ளே சிறிதளவே அரும்பிய அரும்பு ஒன்று உள்ளது. அது மலராமைக்குக் காரணம் அதனை இறுக்கியுள்ள பொருள்கள். ஆகவே, இறுக்கிய பொருள்கள் நீங்கினால் அந்த அரும்பை மலர் நிலையிலும் வைத்துக் காண முடியும். (ஆனால், அரும்பு இல்லத்திற்குள் இருப்பதால், கதிரவன் ஒளி, காற்று, முதலியன புக முடியாமையினால், இறுக்கியுள்ள பொருள்கள் நீங்குமாறில்லை) உடையவன் அந்த இல்லத்தின்மேல் உள்ள பற்றைவிட்டு, அதனை வெற்ற வெளியாகச் செய்தால், இறுக்கிய பொருள்களும் நீங்கும்; அரும்பும் மலரும். ஆகவே, அந்த நிலையை அந்த இல்லம் வெளியானாலன்றிக் காண இயலாது.*

***குறிப்புரை :-*** *மொட்டித்தல் - அரும்புதல். மொட்டு - அரும்பு, ஓர் மொட்டு, சாதியொருமை. அஃது பக்குவம் அடையாத உயிர்களைக் குறித்தது. பக்குவம் வாராதபடி தடுப்பது சூழ்நிலை. அஃது இங்கு மும்மலங்களைக் குறித்தது. இல்லம், அறிவர் இனம் அல்லாத, உலகர் இனம், 'அவ்வினத்தை விட்டு அறிவர் இனத்தை ஒருவன் அடைந்தால், கட்டு நீங்குதற்குரிய நிலைமை உண்டாகி அறிவு முதிரப் பெற்று வீடு பெறலாம்; இல்லையேல் இயலாது' என்றபடி.*

*மூன்றாம் அடியை இரண்டாம் அடிக்கு முன்னர்க் கூட்டியுரைக்க. "அம்மனை" எனச் சுட்டிக் கூறினமையால், அரும்பு மனைக்குள்ளே இருத்தல் பெறப்பட்டது. அரும்பு, உயிருணர்வு. "கட்டு விட்டு ஓடின்" என்ற அனுவாதத்தால் கட்டு விட்டோடுதல் பெறப்பட்டது. 'மலர்தல் நிலையில் காணலாம்' என்க. உம்மை சிறப்பு. ஈற்றடி, எதிர்மறை முகத்தால் வலியுறுத்தியது.*

*2872.* ***தெளிவுரை :-*** *வயல்கள் யாவும் மேல் நீர் வந்து பாயவே பயிர்களை யுடையவாகும். ஆயினும் ஒரு வயல், மேல் நீர் வந்து பாயாமல் உள்ளிருந்தே ஊறும் நீரை உடையதாய்ப் பயிரை உடையதாகும். அந்த வயலை அறிபவர் ஒருவரும் இல்லை. (அதனால் அவர்கள் வானத்தை நோக்கியிருந்து, "பஞ்சம், பஞ்சம்" என்கின்றார்கள்) மேற்குறித்த வயலில் வானம், எதுவும், எப்பொழுதும் பொழிதல் இல்லை. இனி மழை நீரின் தன்மையை ஆராயுமிடத்து, அது*

**2872.** **நீரின்றிப் பாயும் நிலத்தினில் பச்சையாம்**
**யாருமிங் கென்றும் அறியவல் லாரில்லை**
**கூரும் மழைபொழியாது பொழிபுனல்**
**தேரின்இந் நீர்மை திடரின்நில் லாதே.** **52**

---

*'மேட்டில் ஏறாது' என்பது தெளிவு. (அதனால் பெய்கின்ற மழை நீரும் அந்த வயலில் ஏறிப் பாய்வதில்லை. ஆகவே, 'மழையால் விளைவும், மழையின்மையால் பஞ்சமும், என்கின்ற நிலை அந்த வயலிடத்தில் இல்லை).*

***குறிப்புரை :-*** *அந்த அதிசய வயலாவது சிவம். அதில் விளைவன எல்லாம் அதன் அருளாலே. ஆகவே, அந்த அருள் உள்ளிருந்தே ஊறும் நீராயிற்று.*

*மற்றை வயல்கள் உயிர்கள். அந்த வயல்களுக்கு ஆணவமாகிய வானத்தில், மாயையாகிய மேகம் தோன்றி, கன்மமாகிய மழையைப் பொழியவே நன்செய்ப் பயிர்களும், புன்செய்ப் பயிர்களும் உளவாகும். இந்த மழை நீர் மேற்குறித்த அந்த மேட்டு வயலில் ஏறமாட்டாது. ஆகவே, இந்த மழை வளம்படுதலாலோ, வறட்சியடைதலாலோ அந்த வயலுக்கு வருவதொன்றில்லை.*

*"இந்த அரிய செய்தியை அறிந்து கொண்டு அந்த வயலை அடைந்து வாழ அறியாதவர்களாய், உலகர் அல்லல் உறுகின்றார்கள்" என்பதாம்.*

*பாய்தல் - இங்கு, மேல் எழுந்து பாய்தல்; ஊறுதல், நிலம் - வயல். "பச்சை", ஆகுபெயராய்ப் பயிர்களைக் குறித்தது. இங்கு முத்தான்மாக்களைக் கொள்க.*

*படர்தல் - உள்ளது சிறத்தல். அஃது ஆவி மேகமாய், மேகம் மழையாதலால், 'அங்குப் பொழியாது' என ஒருசொல் வருவிக்க. புனல், அதன் தன்மையைக் குறித்த ஆகுபெயர். இந்நீர்மை - இந்த நீரின் தன்மை. திடரில் நில்லாமையைக் கிளர்ந்து கூறியது. 'இந்நீர் அவ்வயலில் செல்லாது' என்பதைப் பெறுவித்தற்கு.*

*இதனால், 'பாசங்களால் விளையும் பயன்களை விரும்பாது விடுத்து, பதியால் விளையும் பயன்கள் விரும்பி, அதனையடைய முயலல் வேண்டும்' என்பதைப் பெறுவித்தற்கு.*

***2873. தெளிவுரை :-*** *கூகை, கதிரவன் விளங்கி நிற்கவும் கண் தெரியாது அலமரும் பறவை. அது, சிவம் விளங்கி நிற்கவும் அதனை அறிய மாட்டாது அல்லல் உறும் பெத்தான்மாவைக் குறித்தது.*

*கூகை பகற் குருடாயினும் அதற்கு நல்லதொரு குருந்த மரம் கிடைத்தது, அதில் வாழ்கின்றது. அஃதாவது, வேதாகம வழக்கும், ஆன்றோர் ஒழுக்கமும் மிக்க கரும பூமி.*

**2873.** கூகை குருந்தம தேறிக் குணம் பயில்
மோகம் உலகுக் குணர்கின்ற காலத்து
நாகமும் ஒன்று நடுவுரை செய்திடும்
பாகனும் ஆகின்ற பண்பனும் ஆமே. **53**

---

*இருப்பினும், அந்தக் கூகை தன் குருடாதல் தன்மையால், அம்மரத்தில் பற்றுவன விடுவனவற்றையும் விலக்குவன கொள்வன ஆகியனவற்றையும் பிரித்தறிய மாட்டாது, தடுமாறிக் கொண்டிருக்கும் பொழுது அத்தடுமாற்றத்தின் நடுவே தெய்வம் ஒன்று திடீரென அதற்குக் கண்கொடுத்தது. ஆகவே, அந்தத் தெய்வந்தான் அந்தக் கூகைகளை வழிநடத்தும் பாகனும், உற்றுழியுதவும் நண்பனும் ஆகும்.*

*குறிப்புரை :-* ‘குணத்தால் பயில் மோகத்தை உணர்கின்ற காலத்து’ என்க. குணம் - கூகையின் குணம்; குருட்டுத் தன்மை. மோகம் - திரிபுணர்வு. “உலகுக்கு” என்னும் நான்கன் உருபு. “நாணற் கிழங்கு மணற்கீன்ற முளை” (தொல், சொல் - வேற்றுமை மயங்கியல் - 106, சேனாவரையம் - மேற்கோள்) என்பது போல் ஏழாவதன் மயக்க மாய் வந்தது. நாகம் - விண்ணுலகம். ந + அகம் = நாகம். ‘பாவம் இல்லாத உலகம்’ என்பது இதன் பொருள். அஃது ஆகுபெயராய், அங்கு வாழும் தெய்வத்தைக் குறித்தது. தெய்வம் கண் தந்ததாவது, சத்தி நிபாதம் வந்து ஞானத்தை உணரச் செய்தமை. அப்பால் அந்த சத்தியே (திருவருளே) ஆன்மாவுக்கு எல்லாமாய் உதவும்.

திணை மயக்கம், உருவக உவமைகளில் ‘வழு’ எனக் கடியப்படாது ஆகலின், ‘நாகம் பாகனும், பண்பனும் ஆம்’ என்றது திணை வழுவாகாமையறிக.

“நாகமும்” என்னும் உம்மை சிறப்பு, உரைசெய்தது, (கண் தெரிய) வரம் கொடுத்தது, வெளிப்படை பொருள் இறந்த காலம் ஆகற்பாற்றாயினும் உவமைகளில் சிறந்தது நோக்கி, முக்காலத்திற்கும் பொதுவாகக் கூறினார். ஆகின்ற பண்பன் உறுதுணை யாகின்ற பண்பினை யுடையவன்; நண்பன்.

இதனால், ‘சத்திநிபாதத்தாலே அஞ்ஞானம் அகன்று பிரகாசிக்கும்’ என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.

*2874. **தெளிவுரை :-*** ஒருவன் வாழும் இல்லத்தில் வாழைச் செடியும், முள் மிகுந்த பிரப்பங் கொடியும் வளர்ந்து, அதில் உள்ள இடம் முழுவதையும் கவர்ந்து கொண்டன. இந்நிலையில், அதில் வாழவேண்டிய தலைவன் எவ்வாறு வாழ்வது?

வாழையை அழிப்பதைவிடப் பிரப்பங்கொடியை வேரோடு அறுத்தெறிவது ‘கடினம்; கடினம்’ என்கின்றார்கள். இருப்பினும் வாழை நல்லது போலத் தோன்றினாலும் வாழ இடம் இல்லாமல் செய்வதால் அதையும், பிரப்பங் கொடியையும் ஒருங்கே அறுத்தெறிந்துதான் வாழ வேண்டும்.

**2874.** வாழையும் சூரையும் வந்திடங் கொண்டன
வாழைக்குச் சூரை வலிது வலிதென்பர்
வாழையும் சூரையும் வன்துண்டம் செய்திட்டு
வாழை இடங்கொண்டு வாழ்கின்ற வாறே. **54**

**2875.** நிலத்தைப் பிளந்து நெடுங்கடல் ஓட்டிப்
புனத்துக் குறவன் புணர்த்த கொழுமீன்
விலக்குமின் யாவர்க்கும் வேண்டின் குறையா
அருத்தமும் இன்றி அடுவதும் ஆமே. **55**

---

*குறிப்புரை :- வாழை, இன்பம், சூரை - துன்பம் இவைகளால் கவர்ந்து கொள்ளப்பட்ட இடம் புத்தி தத்துவம்.*

*ஈற்றடியில் உள்ள "வாழை" என்பதை, 'வாழ் + ஐ' எனப் பிரித்து, 'வாழ வேண்டிய தலைவன்' என உரைக்க.*

*தலைவன், ஆன்மா, வாழ்தல், பசுகரணத்தைச் சிவகரணம் ஆக்கிச் சிவானந்தம் எய்துதல். 'வாழ்கின்றவாறு, வன்துண்டம் செய்திட்டு' என மாறிக் கூட்டி முடிக்க. இரண்டையும் துண்டம் செய்தலாவது, அவற்றில் அழுந்தாது விடுதல்.*

*அடுக்கு, வலியுறுத்தற் பொருட்டு, 'இன்பத்தில் அழுந்தாமல் இருத்தல் கூடும்; துன்பத்தில் அழுந்தாமல் இருப்பது அரிது' என்பதை, "வாழைக்குச் சூரை வலிது வலிது என்பர்" என்றார்.*

*இதனால், "ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும்" இருவினையொப்பு வந்தாலன்றிச் சிவானந்த வாழ்வு வாழ இயலாது' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

*2875. **தெளிவுரை :-** ஐம்புல வேடர் சூழலில் உள்ள குறவனாகிய உயிர், நிலத்தை உழுது பயிரிட்டும் நெடுங் கடலில் தெப்பத்தை ஓட்டிச் செல்வம் ஈட்டியும், தன் உடம்பாகிய கொழுத்த மீனை வளர்க்கின்றான். அம்மீனை நல்லோர் விலக்குதல் வேண்டும். அதாவது உடலின்கண் பற்றுவையாது உயிர்க்கு உறுதி பயக்கும் உணர்வோடு வாழ்தல் வேண்டும் என்றபடி, உயிர் நலத்தைப் பேணாது உடல் நலமே கருதி ஒருவன் இருப்பின், அவன் என்றும் குறையாத அருட்செல்வத்தை இகழ்ந்து பிறப்பிறப்புக்களுட்பட்டுத் துன்புறுவன்.*

***குறிப்புரை :-*** *குறையா அருத்தம் - குறையாத அருத்தம். அகரம் - தொகுத்தல் விகாரம். அடுவது - துன்புறுத்துவது. கொழுமின் - உடலின்கண் வைக்கும் பற்று.*

**2876.** தளிர்க்கும் ஒருபிள்ளை தட்டான் அகத்தில்
விளிப்பதோர் சங்குண்டு வேந்தனை நாடிக்
களிக்கும் குசவர்க்கும் காவிதி யார்க்கும்
அளிக்கும் பதத்தொன்றாம் ஆய்ந்துகொள்வார்க்கே. **56**

---

***2876. தெளிவுரை :-*** *தட்டானாகிய உயிர்க்கு உரிய உடம்பகத்துத் தளிர்த்து வளர்கின்ற பிள்ளை ஒன்று உள்ளது. அப்பிள்ளையை அழைக்கும் சங்கு ஒன்று உண்டு. அச்சங்கின் பெயர், ஆய்ந்து கொள்கின்றவர்களுக்கு, ஓர் அரசன் தன்கண் வந்த குயவனுக்கும் காவிதிக்கும் களிப்புண்டாகும்படி அளிக்கும் பதத்துள் ஒன்றாகும். அளிக்கும் பதம் அன்னம், அதாவது ஹம்ஸம்.*

***குறிப்புரை :-*** *பதம் என்ற சொல் சோறு அல்லது அன்னம் என்பதைக் குறிக்கும். அஃது இங்கு ஹம்ஸம் என்னும் அசபையின் பரியாயமாகிய அன்னம் என்பதைக் குறித்து நின்றது. தட்டான் - தனக்குக் கொடுத்த உடம்பை வேண்டா என்று தட்ட மாட்டாதவன். அவனது அகம் பருவுடல்; அதன் கண் தளிர்க்கின்ற பிள்ளை என்பது உயிர்க்கும் வாசி எனப்படும் உயிர்ப்பு. விளிக்கும் சங்கு என்றது அவ்வுயிர்ப்பை அழைக்கும் ஹம்ஸம் என்ற அசபை. மூலாதாரத்தில் ஹம்ஸம் என்னும் அசபை இருந்து கொண்டு விடுத்தும் அடக்கியும் உயிர்ப்பை நடத்து கின்றது. ஹகாரத்தினால் விடுத்தலாகிய இரேசகமும் ஸகாரத்தினால் அடக்குதலாகிய பூரகமும் நிகழ்கின்றன. இவ்விரண்டானும் மறப்பும் நினைப்பும் உயிர்க்கு மாறி மாறி வருகின்றன. ஹம்ஸம் என்றது பிரணவத்தின் பரிணாமமே ஆதலால் அதனைச் சங்கு என்றார். குசவன் - மட்பாண்டம் செய்து கொடுப்பவன். காவிதி - வரி தண்டிக் கொடுப்பவன்.*

*இதனால், 'யோகத்தை அசபா மந்திரத்தை உணர்ந்து செய்யும் பிரணவ யோகமாகச் செய்தல் வேண்டும்' என்பது, உள்ளுறையாக உணர்த்தப்பட்டது.*

***2877. தெளிவுரை :-*** *தலைவன் ஒருவனது இல்லத்தில் கொட்டிலில் இருந்த எருமை அதைவிட்டுப் புறப்பட்டு மேயப் போந்தது. ஆயினும் உயிர்களைத் துன்புறுத்தும் படைகள் எதிரே வருதலைக் கண்டு அந்த எருமை பாதி வழியிலே திரும்பிவிட்டது. அதையறிந்து அந்தத் தலைவனுடைய அமைச்சன் அந்தப் படைகளை விலக்க, அந்த இல்லத்திற்கு உள்ள ஒன்பது வாயில்களுள் ஒன்றையும் ஒருவரும் அடைக்கவில்லை.*

***குறிப்புரை :-*** *'அதனால் அந்த எருமை தன் விருப்பம் போலச் சென்று மேய்ந்து பாலைச் சொரிந்து வருகின்றது' என்பது குறிப்பெச்சம்.*

*கோ - தலைவன்; உயிர், அதனது இல்லம், தூல உடம்பு. எருமை, பிராண வாயு, இதுவே உயிர்க்கு வலு ஊட்டுவதாய்க் கட்டுப்படுத்தி நடத்தினால் பெரும் பயனைத் தருவதாய் இருத்தல் பற்றி இதனை, வலியையும், மிகுந்த பாலைப்*

**2877.** குடைவிட்டுப் போந்தது கோயில் எருமை
படைகண்டு மீண்டது பாதி வழியில்
உடையவன் மந்திரி உள்ளலும் ஊரார்
அடையார் நெடுங்கடை ஐந்தொடு நான்கே. **57**

---

*பொழிதலையும் உடைய எருமையாக உருவகித்தார்.*

*குடை, குடைபோல் அமைந்த கொட்டில். அது மூலாதாரம். மூச்சு அதனினின்றும் போதல் வெளியேபோய் வலுப்பெற்று மீளுதற்கு, படைகள் பிராரத்தத்தால் வரும் நோய்கள், இந்நோய்கள் உடம்பின் வாயில்கள் ஒன்பதையும் அடைந்து, அகால மரணத்தை உண்டு பண்ணும். இவைகளால் மூச்சும் தடைபடும். ஆகவே, "படை கண்டு மீண்டது பாதி வழியில்" என்றார்.*

*உயிர்க்கு அமைச்சன் சித்தம். அஃது அனைத்தையும் சிந்தித்து, உயிர்ப்பாகிய எருமையைத் தன் விருப்பப்படி நடத்திச் செல்ல, அந்த எருமையைத் தடுத்து நிறுத்தற்கு, உடம்பாகிய இல்லத்தின் வாயிலை அடைக்க ஒருவரும் முன்வரவில்லை. எனவே, எருமை தொடர்ந்து நன்கு மேய்ந்து பாலைச் சொரிந்து வருகின்றது. அஃதாவது உடம்பை எந்த நோய் முதலியனவும் அழிக்க எழவில்லை. அதனால் 'வாழ்நாள் எல்லையின்றி நீட்டிக்கின்றது' என்பதாம்.*

*''ஊரார்'' என்னும், படைகளையே, உள்ளல், அதன் காரியமாகிய நெறிப்படுத்தி நடத்துதலைக் குறித்தது. நெடுங்கடை - பெரிய வாயில். ஐந்தொடு நான்கு - ஒன்பது.*

*இதனால், 'வாசியோகம் புரியின், உடல், நரை, திரை மூப்புப் பிணிகள் இன்றி வலிதாக, வாழ்நாள் நீட்டிக்கும்' என்பது உள்ளுறையாக உணர்த்தப்பட்டது.*

*2878. தெளிவுரை :- வீரன் ஒருவன் ஓர் யானையையும், பன்னிரண்டு குதிரைகளையும் முறையாக வெளியே ஓட்டி நடத்தி, உள்ளே கொணர்ந்து கட்டிப் பணிபுரிதற்கு ஏற்புடைத்தாக அரசன் வெளிச் செல்லும் பொருள் எட்டும், உள்ளே வந்து சேரும் பொருள் பதினெட்டுமாக, ஒன்பது வாயில்களையுடைய ஒரு கூடத்தைக் கட்டிக் கொடுத்தான். வீரன் அதில் முறையாக அந்த யானையையும், குதிரையையும் வைத்து நடத்தாவிடில், அவை பன்றிபோல யாவராலும் இகழப்படுவனவாய், அந்தக் கூடத்தையும் அருவருக்கத் தக்கதாக்கிவிடும்.*

*குறிப்புரை :- நாகம் - யானை. இது மனத்தைக் குறித்தது. "தொண்டர் அஞ்சு களிறும் அடக்கி" (தி.2 ப.14 பா.1) என்பது போல, ஐம்பொறிகளையே யானை யாகக் கூறுதல் பெருவழக்காயினும், உண்மையில் யானைபோல அடங்காது புலன்களின்மேல் செல்வது மனமே. 'மனத்தொடு கூடாத வழி,*

**2878.** போகின்ற எட்டும் புகுகின்ற பத்தெட்டும்
ஆகப் படைத்தன ஒன்பது வாய்தலும்
நாகமும் எட்டொடு நாலு புரவியும்
பாகன்விடாவிடிற் பன்றியும் ஆமே. **58**

---

*இந்திரியங்கள் விடயங்களைக் கவரமாட்டா' என்பது தருக்க மதம். இஃதே பற்றி, "பொறிவாயில் ஐந்தவித்தான்" (குறள், 6) என்னும் குறள் உரையில், 'ஐந்து அவா' எனப் பொருள் உரைத்த பரிமேலழகர். 'அவா ஒன்றுதானே; ஐந்து எப்படியாகும்' என்னும் தடையைக் கருத்துட்கொண்டு. "புலன்கள் ஐந்தாகலான் அவற்றின்கட் செல்கின்ற அவாவும் ஐந்தாயிற்று" என உரைத்தார். எனவே, "ஐந்து என்றல் சார்பு பற்றியேயாகலான். 'ஒன்று' என்பதே உண்மையாம். ஆகவே, "அஞ்சு களிறு" என்றல் சார்பு பற்றியேயாக, களிறு ஒன்றேயாதல் அறியப்படும். அடங்காது புலன்கள்மேற் செல்வது' மனமேயாகலான்' அதனை 'யானை' என்றற்குத் தடையின்மை யறிக.*

*குதிரை பன்னிரண்டாவன, வெளிச்செல்லும் பன்னிரண்டங்குல மூச்சு. பாகன் - நடாத்தும் வீரன். அவன் ஆன்மா விடுதல் - அடக்கிச் செல்லுதல்.*

*ஒன்பது வாயிலையுடைய கூடம் தூல உடம்பு, அதில் வெளிச்செல்லும் பொருள்கள். 'வெயர்வை, கோழை, பீளை, சளி, குறும்பி, மலம், சிறுநீர், சுக்கிலம்' என்பன.*

*உள்வந்து சேரும் பொருள் பதினெட்டாவன. ஞானேந்திரிய விடயங்கள் ஐந்தும், கன்மேந்திரிய விடயங்கள் ஐந்தும், காமம், வெகுளி, மயக்கம் ஆகிய குற்றம் மூன்றும், ஆதியான்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் ஆகிய துன்பம் மூன்றும், இவற்றால் ஏறும் நன்றும் தீதுமாய வினையிரண்டுமாம். முக்குற்றங்கள் அகத்து நிகழ்வன வாயினும் புறப்பொருள் ஏதுவாக அன்றி நிகழாமையறிக. வாயில்களையே கூறினராயினும் அத்துணை வாயில்களையுடைய கூடத்தைக் குறித்தலே கருத்து.*

*முதற்கண் கூடத்தையே சிறந்தெடுத்துக் கூறினமையால், "பன்றியுமாம்" என்பதன்பின், கூடம் பாழ்படுதலையுணர்த்துதல் கருத்தாயிற்று. "பன்றியும்" என்னும் உம்மை இழிவு சிறப்பு.*

*இதனால், 'வாசி யோகம் செய்து, மனத்தை அடக்காவிடில் எடுத்த பிறப்பு வாளா மாயும்' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

*2879. தெளிவுரை :- பாசி படர்ந்த குளம், மலத்தால் மறைக்கப்பட்ட ஆன்ம அறிவு, குளத்தில் இரைதேர்ந்து வாழும் குருகு, (பறவை) அவ்வறிவால் பயன்பெற்று வரும் ஆன்மா. பாசி படர்ந்து கிடத்தலால் குருகு தனக்குரிய*

**2879.** பாசி படர்ந்து கிடந்த குளத்திடைக்
கூசி யிருக்கும் குருகிரை தேர்ந்துண்ணும்
தூசி மறவன் துணைவழி எய்திடப்
பாசி கிடந்து பதைக்கின்ற வாறே. **59**

---

*இரையை எளிதில் காண இயலவில்லை. வருந்தி வருந்திச் சிறிது காண்கின்றது. அஃதாவது ஆன்மாத் தனக்குரிய சிவத்தை எப்பொழுதாவது, எவையோ சிலமுறையில் அறிகின்றது. கூசியிருத்தல் - உயிரற்றது போல ஒடுங்கியிருத்தல்.*

*தூசி மறவன் - படைகளில் முன்னணியிற் செல்லும் வீரன். அவன் குரு மூர்த்தியை அதிட்டித்து நிற்கும் சிவன். படை வீரன் தன் போக்கிலே போய்க் கொண்டிருக்கும் பொழுது குளத்தை அடுத்துச் செல்லும் வழியை அடைவானாயின், நீர் பருக வேண்டிக் குளத்தை அடைவான்; அவனால் பாசிகள் அப்புறப்படுத்தப்படும். அப்பொழுது குருகு, தனக்கு வேண்டிய இரையை வேண்டிய மட்டும் உண்டு மகிழும். 'அதுபோலக் குருமூர்த்தி தம் இயல்பில் இருப்பினும், ஒருவனது சத்திநிபாத நிலையைக் காணின், "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் வேட்கையால் அவனை ஏற்று அவனது பாசத்தைப் போக்குவார். அப்பொழுது அவன் 'சிவத்தை நன்குணர்ந்து, சிவானந்தத்தில் மூழ்கித் திளைப்பான்' என்பதாம்.*

*ஆறு - முறைமை; நிலைமை. 'மறவன் எய்திடப் பாரி பதைக்கின்ற நிலைமை உண்டாகும்' என ஒரு சொல் வருவித்து முடிக்க. துணைவழி, அருகில் சார்ந்து செல்லும் வழி.*

*இதனால், குருவருள் கிடைத்த வழியே பாச நீக்கமும், சிவப்பேறும் உளவாம்' என்பது உள்ளுறையாக உணர்த்தப்பட்டது.*

*2880. தெளிவுரை :- கும்பம் - குடம். இதனைக் கவிழ்த்து வைத்த குடமாகக் கொள்க. கவிழ்ந்த வைத்த குடம் கீழே குறுகியும், மேலே விரிந்தும் இருக்கும். அதுபோலப் பிருதிவியிலிருந்து பிரகிருதி முடியப் போகப் போக விரிந்துள்ளன ஆன்ம தத்துவங்கள். ஆகவே அவற்றின் தொகுதியை, "கும்பமலை" என்றார். கும்பமலை - கும்பம் போன்ற மலை.*

*"கொம்பு" என்றது தறி. மலையின் உச்சியில் தறி ஒன்று மலையுள்ளே அடிவரையில் ஊடுருவ அடிக்கப்பட்டு, மேலேயும் உயர்ந்து நிற்பதாகக் கொள்ள வேண்டும். ஏனெனில், இவையெல்லாம் அதிசயப் பொருள்களாகவே கூறப்படுதலின், இத்தறி, ஆன்ம தத்துவத்தை வியாபித்து, அவற்றிற்கு மேலேயுள்ள, அராகம் முதல், மாயை முடிய உள்ள வித்தியா தத்துவங்களின் தொகுதி. இவை ஆன்ம தத்துவங்களை நிலைபெறுத்தித் தாமும் நிலைபெற்றிருத்தலால் இவ்வாறு கூறப்பட்டன.*

**2880.** கும்ப மலைமேல் எழுந்ததோர் கொம்புண்டு
கொம்புக்கும் அப்பால் அடிப்பதோர் காற்றுண்டு
வம்பாய் மலர்ந்ததோர் பூஉண்டு அப்பூவுக்குள்
வண்டாய்க் கிடந்து மணங்கொள்வன் ஈசனே. **60**

---

*கொம்புக்கும் அப்பால் அடிப்பதோர் காற்று சுத்த தத்துவங்கள். அவை சூக்குமமாயும், காற்றுப்போல வீசிப்பிற தத்துவங்களைத் தூய்மை செய்து, முற்றிலும் வியாபித்திருத்தலாலும் இவ்வாறு உருவகிக்கப்பட்டது.*

*வம்பு - புதுமை. புதுமையாய் மலர்ந்ததோர் பூ, தத்துவ ஆராய்ச்சியால் தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி இவைகளைச் செய்து இவற்றின் நீங்கி, அவற்றின் மேலாய் விளங்குகின்ற சுத்தான்மா.*

*இது வரையில் உருவக முறையால் தாம் கருதிய பொருளை உள்ளுறைப் பொருளாக உணர்த்திய நாயனார், 'ஆன்மாக்களின் இருதய கமலத்தில் விளங்குபவன் சிவன்' என்னும் முறைமை பற்றி, அவன் தயிரில் நெய்போல இனிது விளங்குவது சுத்தான்ம சைதன்னியத்தில் தான்' என்பதை, 'சிவன் இந்தப் புதுமலரில் தான் வண்டாய்க் கிடந்து மணங்கொள்வன்' எனச் சிறிது வெளிப்படையாகவே கூறிவிட்டார்.*

*'மலர் ஆன்மா' எனவே, மணம், அதன் போதம் ஆயிற்று. ஆகவே, 'இந்தப் புதுமலரில் ஈசன் வண்டாய்க் கிடந்து மணங்கொள்ளுதல்' என்பது, சீவ போதத்தைத்தான் உண்டு, சிவபோதம் வாயிலாகச் சிவானந்தத்தை வழங்குதல் ஆயிற்று. இதன் ஈற்றடி இன எதுகை பெற்றது.*

*இதனால், 'தத்துவங்களின் நீங்கித் தூயதாய் நின்ற சுத்தான்ம சைதன்னியத்தில் தான் சிவன் விளங்கி நிற்பான்' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

*2881. தெளிவுரை :- இதன் பொருள் வெளிப்படை. குறிப்புரையால் இனிது விளங்கும்.*

*குறிப்புரை :- வீணை, நாதத்தைத் தரும் நரம்புகள். அது கன்ம மலத்தைக் குறித்தது. தண்டு, நரம்புகள் கட்டப்பட்டுள்ள கோல், அது மாயா மலத்தைக் குறித்தது. கோல் பற்றுக்கோடாக நின்று நரம்புகள் நாதத்தைத் தருதல் போல, மாயை பற்றுக்கோடாக நின்று நரம்புகள் கன்மம் விளைவுகள் பலவற்றையும் தருவதாதலை அறிக. இசை முரல் தாணு, வீணை வல்லான். அவன் மாயை கன்மங்களைக் கூட்டிச் செயற்படுத்துகின்ற சிவன், வீணை வல்லான் தன் இசை வன்மையைக் கொடுத்து, அரங்கில் உள்ளவர்களது உள்ளங்களைக் கவர்கின்றான். இஃது அவன் செய்யும் ஒரு வாணிபம் ஆகும். இங்கு அவ்வாணிபம், மாயை கன்மங்களைச் செயற்படுத்தும் முறையால், முன்பு தன்னை நோக்காது பிறவற்றை*

2881. வீணையும் தண்டும் விரவி இசைமுரல்
தாணுவும் மேவித் தகுதலைப் பெய்தது
வாணிபம் சிக்கென்றதுஅடை யாமுனம்
காணியும் அங்கே கலக்கின்ற வாறே. 61

---

நோக்கியிருந்த உயிர்களைத் தன்னை நோக்கும்படியாகச் செய்தலைக் குறித்தது. சிக்கென்றது - பயனளித்துவிட்டது. அதனையே முன்பு, "தகுதலைப்பெய்தது" என்றார். தகு - தகுதி; உயிர்களின் பக்குவம்; முதனிலைத் தொழிற்பெயர். அடைத்தல், கடையை அடைத்தல்; அஃதாவது, 'வாணிபத்தை விட்டுவிடுதல். அது சிவன் தனது ஐந்தொழிலை நிறுத்திவிடுதல். முத்தி பெற்ற உயிர்களிடத்தில் அவன் ஐந்தொழில் நடாத்துதல் இல்லை. எனவே, கடையை அடைப்பதற்கு முன் வாணிபம் தேவைப்படாத, நிலையான காணியுரிமை வாய்த்துவிட்டது. அஃதாவது, 'முத்தி நிலை வாய்த்துவிட்டது' என்பதாம்.

'கலக்கின்றவாறு வியப்பு' என ஒரு சொல் வருவித்து முடிக்க. மேவி - மேவியதனால்.

இதனால், 'இறைவன் மாயை கன்மங்களைக் கூட்டி ஐந்தொழில் செய்தலாலே உயிர்கள் பக்குவம் எய்தி வீடு பெறுகின்றன' என்பது உள்ளுறையாக உணர்த்தப்பட்டது. ஆகவே, 'இறைவன் ஐந்தொழில் செய்தல் உயிர்களை உய்வித்தற் பொருட்டே' என்பதை உணர்த்தியதாயிற்று.

2882. தெளிவுரை :- பரத கண்டத்திற்கு வெளியே உள்ள யவனர் பரத கண்டத்தில் வந்து இறங்குவது கொங்கு நாட்டிலே. அஃதாவது சேர நாட்டிலே. அவர்களோடு பரத கண்டத்தவர் வாணிபம் செய்து நல்ல அருங்கலம் முதலியவைகளைப் பெறுதலைப் பரத கண்டத்தில் உள்ளவர்கள் அந்தக் கொங்கு நாட்டில் சென்று பார்த்தால் தான் அறிந்துகொள்ள முடியும். அங்குச் செல்லாமல் தொண்டைநாடு, சோழ நாடு, பாண்டிய நாடு இவைகளில் இருந்து கொண்டே அறிய முடியாது. சந்திரன் உதயமானால் இருளைப் பார்க்கமுடியாது. (அது போலக் கொங்கு நாட்டை அடைந்தால் மேற்குறித்த அறியாமை நீங்கிவிடும்). ஆயினும் நல்லூழ் உள்ள ஒரு சிலரே கொங்கு நாட்டையடைந்து வாணிபத்தில் நற்பயன் எய்தி வாழ்கின்றார்கள். (ஏனையோர்க்கு அஃது இயலவில்லை).

குறிப்புரை :- பரத கண்டத்தின் நடுவில் வடக்குத் தெற்கு நீளத்தில் போதிய இடைவெளி விட்டு இமயம் முதல் குமரி வரை பிரித்தால், பரத கண்டம் கீழைக்கரை, நடுப்பகுதி, மேலைக்கரை' என மூன்று பிரிவினதாய் நிற்கும். அவற்றுள் மேலைக் கரைப்பகுதியையே "கொங்கு நாடு" என்றார். கீழைக்கரை முதலிய மூன்று பகுதிகளும், உடம்பின் யோக முறையில் கீழ் நின்றும் மேல்

**2882.** கொங்குபுக் காரொடு வாணிபம் செய்தஅஃது
அங்குபுக் காலன்றி ஆய்ந்தறி வார்இல்லை
திங்கள்புக் கால்இரு ளாவ தறிந்திலர்
தங்குபுக் கார்சிலர் தாபதர் தாமே. **62**

---

*நோக்கிச் சொல்லப்படுகின்ற, அக்கினி மண்டலம், சூரிய மண்டலம், சந்திர மண்டலம்' என்பவற்றைக் குறித்தன.*

*இவற்றுள் அக்கினி மண்டலம் கீழாலவத்தைக்கும், சூரிய மண்டலம் மத்தியாலவத்தைக்கும், சந்திர மண்டலம் யோகாவத்தையாகிய மேலாலவத்தைக்கும் இடமாகக் குறிக்கப்பட்டன. கீழாலவத்தை மத்தியாலவத்தைகளில் துவாத சாந்தத்தில் உள்ள சிவம் தோன்றாமையால், கீழைக் கரைப்பகுதியும், நடுப்பகுதியில் மேலை நாட்டவர் தொடர்பு கொள்ளாத இடமாகவும், யோகாவத்தையில் சிவம் புலனாதல் பற்றி மேலைக்கரையை மேலை நாட்டவர் வந்து புகும் இடமாகவும் கூறினார். எனவே, பரத கண்டத்தவர் மேலை நாட்டவரோடு வாணிபம் செய்தலாவது, கீழாலவத்தை மத்தியா லவத்தைகளில் உழல்கின்ற உயிர், யோகாவத்தையாகிய மேலாலவத்தையை எய்தி, "தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச் சங்கரா ஆர்கொலோ சதுரர்" (தி.8 கோயில் திருப்பதிகம், 10) என்றபடி சிவனுடன் கொண்டும், கொடுத்தும், ஊடாடுதலையே யாயிற்று.*

*மேலாலவத்தையை எய்தினோர்க்கு அஞ்ஞான இருள் நீங்குதலையே மூன்றாம் அடி குறித்தது.*

*''தாபதர்'' என்றது, வெளிப்படைப் பொருளில் பசு புண்ணியம் செய்தாரையும், உள்ளுறைப் பொருளில் சிவ புண்ணியம் செய்தாரையும் குறித்து நின்றது. இச்சிவபுண்ணியம் 'சரியை கிரியைகள்' என்க.*

*கொங்கு புக்கார், மேலை நாட்டவர். தங்கு - அவர் வந்து தங்குமிடம், கொங்கு நாடு, தங்கு, தொழிலாகு பெயராய், தங்கும் இடத்தைக் குறித்தது. 'அங்குப் புக்கால்' என்னும் பகர ஒற்று செய்யுள் நோக்கித் தொகுத்தலாயிற்று. பிற ஏழாவதன் தொகையில் ஒற்று மிகாமை இலேசினாற் கொள்க. இனி ஒற்று மிகுத்தே பாடம் ஓதினும் ஆம் அப்பொழுது, 'திங்கட் புக்கால்' என, ஒற்றுத் திரிந்து நிற்கும்.*

*இதனால், 'யோக நிலையை எய்தினோர் சிவத்தைத் தலைப்படுவார்' என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

*2883. தெளிவுரை :- பொழுது விடிந்துவிட்டது. அதனால், மலர்களையுடைய புன்னைமரம் விளங்குகின்ற, கடலின் இக்கரை, அக்கரை யாகிய இருகரைகளும் பொன்னிறம் பெற்று விளங்குவ வாயின ஆகவே, அந்தக்*

**2883.** போதும் புலர்ந்தது பொன்னிறம் கொண்டது
தாதவிழ் புன்னை தயங்கும் இருகரை
ஏதல்இல் ஈசன் இயங்கும் நெறிஇது
மாதர் இருந்ததோர் மண்டலந் தானே. **63**

---

*கரைகள் சிவனும், சத்தியும் எழுந்தருளி யிருக்கும் இடமாகவும் ஆகிவிட்டன.*

***குறிப்புரை :-*** *பொழுது விடிதலாவது, ஆணவ மலம் நீங்குதல், "தாதவிழ் புன்னை" என்னும் அஃறிணை யியற்பெயர். இங்குப் பன்மையில் வந்து, பல உயிர்களைக் குறித்தது. புன்னை அரும்பு ஆன்ம பூதம். அவ்வரும்பு மகரந்தத்தோடு மலர்தலாவது, திருவருள் உணர்வு உடையதாய் விரிவடைதல். பொழுது புலர்ந்தால் புன்னை மகரந்தத்தோடு மலர்தல்போல, ஆணவம் நீங்கியதால் ஆன்மாக்களின் அறிவு சிவமணமாகிய திருவருள் உணர்வைப் பெற்று விரிவடைந்தது. இரு கரை, பெத்த முத்திகள். முத்தியில் ஆன்ம உணர்வு சிவமணம் பெற்றுத் திகழ்தல் நன்கறியப்பட்டது. பெத்த நிலையிலும் அவ்வுணர்வு அன்ன தாதல் சீவன் முத்தி நிலையிலாம். ஆகவே, ''இருகரையும் பொன்னிறம் கொண்டது" என்றது. ஆணவ மலம் நீங்கினால், ஆன்மா இவ்வுடம்போடிருக்கும் பொழுதே முத்தியை அடைந்து நிற்கும்' என்பது உணர்த்திய வாறு. "பொன்னிறங் கொண்டது" என்பது அழகு பெற்று விளங்குதலைக் குறித்தது. புன்னை மலரின் மகரந்தம் பொன்னிறம் உடையது. தயங்குதல் - விளங்குதல்.*

*பிறவி 'கடல்' என்றும், முத்தி 'அக்கரை' என்றும் சொல்லப்படுதலால், பெத்தத்தை 'இக்கரை' என்றார். 'இருகரையும்' என்னும் முற்றும்மை தொகுத்தலாயிற்று. ''இருகரையும் பொன்னிறம் கொண்டது'' என்றது. பன்மையொருமை மயக்கம். "போதும்" என்னும் உம்மை சிறப்பு.*

*'மாதர், சத்தி, சிவமும், சத்தியும் இருக்கும் இடம்' என ஒருங்கு கூறற்பாலதனை வலியுறுத்தற் பொருட்டுத் தனித்தனியே கூறினார்.*

*இதனால், "ஆணவ இருள் நீங்கினால், 'அம்மை' என்பதின்றி இம்மையே முத்தியாம்" என்பது உள்ளுறையாக உணர்த்தப்பட்டது.*

***2884. தெளிவுரை :-*** *செங்கோல் அரசன் உண்மையாகவே மிகவும் அன்பு செலுத்தினாலும் அவனது தன்மையை அறியாத குடிகள் வெளிப்படையாக இன்றி, மறைவாகத் தங்களுக்குள்ளே வாய்ப்பு நேரும்பொழுதெல்லாம் அவ்வரசனைப் பற்றிப் பல தூற்றுதல் மொழிகளைக் கூறிக்கொள்வர். ஆயினும் கால வரையறையின்றிக் குடிகளுக்கு அவை வாழ வழிவகுத்து வரும் அரசன் தன் கடமையினின்று தவறுவானேயானால், நாம் உணவு முதலியவற்றைப் பெற்று வாழ இயலுமோ! (இயலாது).*

**2884.** கோமுற் றமரும் குடிகளும் தம்முள்ளே
காமுற்ற கத்தி யிடுவர் கடைதொறும்
வீவற்ற எல்லை விடாது வழிகாட்டி
யாமுற்ற தட்டினால் ஐந்துண்ண லாமே. **64**

---

***குறிப்புரை :-*** *அமர்தல் - விரும்புதல். உம்மை, சிறப்பு. குடிகளை உண்மையாகவே மிகவும் விரும்பும் செங்கோல் அரசன், ஆன்மாக்களின்மேல் உண்மையான அறக்கருணையை உடைய சிவன். அவன் அத்தகைய கருணையாளனாய் உயிர்கட்கு, 'பெத்தம், முத்தி' இரு நிலைகளிலும் உபகரித்துவரினும், அறிவற்ற உயிர்கள், 'சிவன் இல்லை' என்றும், 'இருப்பினும் அவனுக்குக் கண் இல்லை' என்றும் இன்னோரன்னவாகத் தம் வாய்க்கு வந்ததைத் தங்களுக்குள் கூறிக் கொள்வர். அதனையே, "கடைதொறும், காமுற்ற கத்தியிடுவர்" என்றார். கடை - இடம்; வாய்ப்பு. காமுற்ற - விரும்பிய சொற்கள். வீதல் - முடிதல். எல்லை, கால எல்லை அரசன் ஒருவனேயன்றிப் பலர் வரினும் அரசு நீடு செல்வதேயாகலின் அதனைச் சிவன் செயலுக்கு உவமையாகக் கூறினார். "வழிகாட்டி" என்பது பெயர். 'யாம் உற்றவற்றைத் தட்டினால்' என்க. தட்டுதல் - தவறுதல். ஐந்து, ஐம்புல நுகர்ச்சி.*

*அரசு கால வரையறையின்றிக் குடிகளை ஓம்பல், சிவன் பெத்தம், முத்தி இரண்டிலும் உயிர்கட்கு உபகரித்தலைக் குறித்தது. பலவற்றைச் சொல்லுமிடத்துப் படர்க்கையில் வைத்துக் கூறிய பொருள் நமக்கும் பொருந்துவதாயின், அதனைப் பின்பு ஓரிடத்தில் நம்மேல் வைத்துக் கூறுதலும் பொருந்துவதே. அதனை, 'நீர் இன்றி யமையாது உலகம் என்றால், மழையின்றி நாம் எங்ஙனம் அமைவேம்' என்பதுபோலக் கூறிக் காண்க. இம்முறையில், "தம்மிலே கத்தி யிடுவர்" எனக் கூறிப் பின்பு, "உற்ற தட்டினால் யாம் உண்ணலாமே" என்றார். ஏகாரம் எதிர்மறை குறித்த வினா, 'ஐம்புல நுகர்ச்சி' என்பது வெளிப்படைப் பொருளில் உடல் ஓம்புதலையும், உள்ளுறைப் பொருளில் வினை நுகர்ச்சியையும் குறித்து நின்றது. இதனுள், மூன்றாம் அடி மூன்றாம் எழுத்தெதுகை பெற்றது.*

*'பெத்த நிலையிலும் சிவன் உடனாய் நின்று உபகரியாவிடின், உயிர்கள் வினையை ஈட்டுதல் நுகர்தல்களைச் செய்தல் இயலாது' என்றபடி.*

***2885. தெளிவுரை :-*** *தோட்டம் - வேதம், ஆகமம், திருமுறை ஆகிய முதல் நூல்களின் தொகுதி. அதில் பழுத்த மாம்பழம், திருவைந்தெழுத்து, "வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமச்சிவாயவே" (தி.3 ப.49 பா.1) என்னும் அருட்டிரு மொழியைக் காண்க.*

*தொண்டி விழுதல் - பழுத்து விழுதல். பழமையைக் குறிக்கும் 'தொண்டு'*

**2885.** தோட்டத்தில் மாம்பழம் தொண்டி விழுந்தக்கால்
நாட்டின் புறத்தில் நரிஅழைத் தென்செயும்
மூட்டிக் கொடுத்த முதல்வனை முன்னிட்டுக்
காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே. **65**

---

*என்னும் பெயரடியாகப் பிறந்த வினை. பழுத்த முதியோனை, 'தொண்டு கிழவன்' என்பர் "தொந்தி சரிய, மயிரே வெளிற, நிரை தந்தம் அசைய" எனத் தொடங்கும் திருப்புகழைக் காண்க. திருவைந்தெழுத்துப் பழுத்து விழுதலாவது, சமயாசாரியர்கள் போன்ற பெரியோர்கள் கருணை மீதூர்ந்து அதனை உலகறிய எடுத்துக்கூறி வலியுறுத்தல், நாயனார் காலத்திலும் அத்தகைய பெரியோர்கள் இருந்திருக்கலாம்.*

*"நமச்சி வாய வாழ்க நாதன்றாள் வாழ்க" (தி.8 சிவபுரா. 1) என்றும்,*

*தலையாய ஐந்தினையும் சாதித்துத் தாழ்ந்து*
*தலையாய யினஉணர்ந்தோர் காண்பர் - தலையாய*
*அண்டத்தான், ஆதிரையான், ஆலாலம் உண்டிருண்ட*
*கண்டத்தான்' செம்பொற் கழல்.*

*- தி.11 அம்மை இரட்டை மணி மாலை, 10*

*என்றும்,*

*வாயிலே வைக்கு மளவின் மருந்தாகித்*
*தீய பிறவிநோய் தீர்க்குமே - தூயஏ*
*கம்பெருமான், தேவியொடு மன்னு கயிலாயத்(து)*
*எம்பெருமான் ஓரஞ் செழுத்து.*

*- தி.1 கயிலை பாதி காளத்திபாதி அந்தாதி, 39*

*அஞ்செழுத்துங் கண்டீர் அருமறைக ளாவனவும்,*
*அஞ்செழுத்துங் கற்க அணித்தாகும், - நஞ்சவித்த*
*காளத் தியில்யார்க்கும் காண்டற் கரிதாய்போய்,*
*நீளத்தே நின்ற நெறி.*

*- தி.1 கயிலை பாதி காளத்திபாதி அந்தாதி, 39*

*என்றும் அருளிச்செய்த ஆளுடைய அடிகள், காரைக்காலம்மையார், நக்கீர தேவ நாயனார் முதலிய பெரியோர்களை இங்கு நினைவு கூர்தல் நன்று.*

*நரி - நரிக்கூட்டம் அதனை, "நாட்டின் புறத்தன" என்றமையால், ஒரு கூட்டம் வேதத்திற்குப் புறம்பானது. மற்றொரு கூட்டம் வேதத்திற்குள் இருப்பினும் சிவாகமத்திற்குப் புறம்பானது. 'இவை எவை' என்பதை அறிந்துகொள்க. இந் நரிக்கூட்டங்கட்கும், மேற்குறித்த மாம்பழத்திற்கும் என்ன தொடர்பு உண்டாகும்.*

*யாதும் தொடர்பு உண்டாகாது. அதனையே, "நாட்டின் புறத்த நரிஅழைத் தென்செயும்" என்றார். அழைத்தல் - கூப்பிடுதல்.*

*இனி, அகப்புறச் சமய நூல்களிலும், அகச்சமய உரைகளிலும் திருவைந் தெழுத்தின் சிறப்புக் குறிக்கப்பட்டதாயினும், அவர் அதனைத் தெளியமாட்டாது புறக்கணித்துவிடுவர். அதனையே, "காட்டிக்கொடுத்தவர் கைவிட்டவாறு" என்றார். கொடுக்கப்பட்டவர் கொடுத்தவர் அந்நூல்களின் ஆசிரியர்களும், உரையின் ஆசிரியர்களும். "மாம்பழத்தைக் கனவிலும் கருதாது கூப்பிட்டுக் கொண்டிருக்கின்ற நரிக் கூட்டங்கள் போக, ஒரு சில மக்கட் கூட்டமும் அப்பழத்தைக் காட்டுவர் காட்டிக் கொடுக்கவும் எடுத்து உண்டு பயன்பெற்றில என்பதாம்".*

*மூட்டிக் கொடுத்த முதல்வன், தோட்டத்தை உண்டாக்கி வளர்த்த தலைவன், அவன் சிவன். தோட்டத்தையுடையான் கருணை காரணமாக, பசித்தவர்க்கு இதன் பழத்தைக் கொடுக்க' என்று தன் ஏவலாளர்க்குச் சொல்லியுள்ளான். அஃதே அவன் ஆணை எனவே, 'பிறவிப் பிணியால் துன்புறுவார்க்குத் திருவைந்தெழுத்தின் சிறப்பினை உணர்ந்தோர் உணர்த்துக' என்பது சிவனது சங்கற்பம் என்பதும், அவ்வாற்றால் உணர்ந்தோர் உணர்த்தினும் மக்கள் அவரவர் பக்குவ பேதங்கட்கு ஏற்ப அதனைச் செவிமடாதோரும், செவிமடுப்பினும் பேணாதோரும், பேணினும் உட்கிடைப் பொருளை முற்ற உணர்ந்து முழுப் பயனைப் பெறாதோருமாய் உளர்' என்பதும் கூறியவாறு.*

***குறிப்புரை :-** 'முதல்வன்' என்பது ஆகுபெயராய் அவனது ஆணையைக் குறித்தது. 'கொடுத்தவரும்' என்னும் சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. 'கைவிட்டவாறு இரங்கத் தக்கது' என ஒரு சொல் வருவித்து முடிக்க.*

***இதனால் சமயிகள் பலரும் திருவைந்தெழுத்தின் உண்மையை அடியோடோ அல்லது முற்றவோ உணரலாதவர்களாய்ப் பிறப்பின் பயனை இழத்தல் உள்ளுறையாக உணர்த்தப்பட்டது.***

***2886. தெளிவுரை :-** தலைவன் தலைவியர் இன்பமாகக் கூடியிருத்தற்குரிய காலம் இராக்காலம். பொழுது விடிந்துவிட்டால், தலைவன் துயிலை விட்டு வெளியே அறம், பொருள் ஆகியவற்றின் செயல்களில் செல்லுதற்கு உரியன். பொழுது விடிதலைத் தலைவன் தானே உணராவிடினும் அதனை அவனுக்கு, "கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்" (தி.8 திருவெம்பாவை, 8) என்றபடி சிறப்பாகக் கோழி கூவ, அதனுடன் மற்றைப் பறவைகளும் ஒலித்து அறிவிக்கின்றன. அதனால் பொழுது விடிந்ததை நன்குணர்ந்தும் தலைவர் சிலர் தலைவியருள்ளும் ஒரு சிலர் தலைவனை எழ விடாது புலம்புவர். இவ்வகையில் எவ்வகையிலோ, புட்கள் ஒலித்தும் எழுந்து வெளிச்செல்லாதவர்கட்குப் புட்கள் ஒலித்தாலும், மற்றும் என்ன நிகழ்ந்தாலும் எப்பொழுதும் பொழுது விடிவதே யில்லை. (பகலாயினும் இரவேயாய் இருக்கும்).***

**2886.** புலர்ந்தது போதென்று புட்கள் சிலம்பப்
புலர்ந்தது போதென்று பூங்கொடி புல்லிப்
புலம்பி னவளோடும் போகம் நுகரும்
புலம்பனுக் கென்றும் புலர்ந்தின்று போதே. **66**

---

***குறிப்புரை :-*** *மக்கள் வாழ்க்கையில்,*

*முப்பதாம் ஆண்டளவில் மூன்றற் றொருபொருளைத்*
*தப்பாமல் தன்னுட் பெறானாயின் - செப்பும்*
*கலையளவே யாகுமாம்; காரிகையார் தங்கள்*
*முலையளவே யாகுமாம் மூப்பு*

*என்ற ஔவையார் வாக்கின்படி, கற்பன கற்று, அறிவன அறிந்து அறத்திற்குரியராம் தன்னை பெறுதற்குரிய காலம் முதல் முப்பது ஆண்டுகளாகும்.*

*பின்பு இல்லாளோடு கூடி இன்பம் நுகர்ந்து, அறத்தையும் தேடிக்கொள்ளுதற்குரிய காலம் அடுத்த முப்பதாண்டுகளாகும். அஃதாவது அறுபதாம் ஆண்டு முடியவாம். பின்பு உலகப்பற்றை விடுத்துத் துறவு பூணுதல் வேண்டும். இதுபொதுவான ஒரு முறை, சிறப்பாக இல்லத்திற் செல்லாமலே உள்ளத்தில் பற்றில்லையாயின் துறவை மேற்கொள்ளுதல் சிறப்புடையதே.*

*தமிழாசிரியர் கூறும் துறவு, 'நாட்டை விடுத்துக் காட்டிலே தான் வாழ வேண்டும்' என்பதன்று. 'பற்றற்று இருத்தல் வேண்டும்' என்பதே. பற்றில்லாதவர் உடல் நிலைமையைப் பொறுத்து எங்கிருப்பினும் துறவரே. 'நாட்டை விடக் கூடாது' என்பதில்லை. விடுதல் விடாமை அவரவரது உடல் நிலையைப் பொறுத்தது.*

*துறவற இயலில் துறவு நிலையைப் பலவகையாக விளங்கிய திருவள்ளுவர் 'நாடு, காடு' என்னும் இரு வாழ்விடங்களில் எதனையும் வரையறுக்கவில்லை.*

*அறுபதாண்டு வரையில் இன்பம் நுகரும் காலமாக வகுக்கப்பட்டமையால், அந்தக் காலத்தை 'இராக் காலம்' என்றும், அறுபதாண்டு கடந்ததை, 'பொழுது விடிந்துவிட்ட காலம்' என்றும் நாயனார் கூறியருளினார்.*

*அறுபதாண்டு கடந்து விட்டதை ஒவ்வொரு தனி மகனும் அறிவான். ஆயினும், உலகப்பற்று அறாது அதனையே அவன் பற்றிக் கிடத்தற்கு, அவனுடைய மனநிலை அல்லது குடும்பச் சூழ்நிலை இரண்டில் எந்த ஒன்றும் காரணமாகலாம். அதனையே நாயனார் பொழுது விடிந்தும் படுக்கையை விட்டு வெளிவாராதவனது தன்மையாகக் கூறினார்.*

*"பூங்கொடி" என்பது உருவகம். ஆகவே, அஃது அஃறிணைப் பெயராய், பூங்கொடி புல்லி" என்பது, 'பூங்கொடியை புல்லி' என இரண்டாவதன்*

**2887.** தோணிஒன் றுண்டு துறையில் விடுவது
ஆணி மிதித்துநின்று ஐவர்கோல் ஊன்றலும்
வாணிபம் செய்வார் வழியிடை யாற்றிடை
ஆணி கலங்கின் அதுஇது ஆமே. **67**

---

*தொகையாகவும், 'பூங்கொடியாற் புல்லப்பட்டு' என மூன்றாவதன் தொகையாகவும், புலி கொன்ற யானை என்பது போலத் "தடுமாறு தொழிற் பெயராய்" (தொல் - சொல் - வேற்றுமை மயங்கியல் - 12) நின்றதாம். புலம்பினவள் - தனிமையைப்பெறாதவள். அஃது இங்குக் குடும்பச் சூழ்நிலையைக் குறித்தது.*

*புலம்பன், நெய்தல் நிலத்தலைவன். நிலத்திற்கு உரியது இரங்கல். எனவே, 'இத்தகைய தலைவன் இரக்கத்திற்கு உரியவன்' என்பது குறிப்பு.*

*கோழி கூவுதல், நாள் நிலைச் சுவடிகள் ஒருவனது ஆண்டளவைத் திட்டவட்டமாகக் காட்டுதல். பிற புட்கள் ஒலித்தல், உடம்பில் நரையும், திரையும் முதலானவை தோன்றுதல் 'மனத்திட்பம்' இல்லாதவனுக்கு எவை நிகழ்ந்தும் என்ன பயன்' என்றற்கு, 'புலம்பனுக்கென்றும் புலர்ந்தின்று போதே' என்றார்.*

*இதனால், அறநூல் முறைப்படி வாழாதவர் மக்கட் பிறப்பின் பயனை எய்தாமை உள்ளுறையாகக் கூறப்பட்டது.*

***2887. தெளிவுரை :-** அடித் தட்டினைத் தக்கபடி மிதித்து, குறிப்பிட்ட ஐந்துபேர் ஓட்டினால், சென்று சேர வேண்டிய துறையில் கொண்டு போய் விடுகின்ற தோணி ஒன்று உள்ளது. (அது திருவைந்தெழுத்து மந்திரமாகும். "அஞ்செழுத்தில் புணை பிடித்துக் கிடக்கின்றேனை" என ஆளுடைய அடிகளும் அருளிச் செய்தார். "ஆணி" என்றது அடித்தட்டினை, அதனைத் தக்கபடி மிதித்தலாவது பளு சமமாக இருக்கும்படி வைத்தல். படகின் அடித்தட்டுப் பளுவைத் தாங்கி நிற்பது. பளு சமமாய் இல்லாவிடில் தோணி புரண்டுவிடும். "தோணி" என்றது ஒரு மரத்தோணியன்று படகேயாம். பளுவைச் சமமாக வைத்தல் அது வல்லார்க்கே கூடுவது. அதனால் இங்கு அது திருவைந்தெழுத்தின் மேலோட்டமான பொருளாகாது, உள்ளீடான பொருளாய் நிற்றலாம். அஃது உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன் எனும் நூல்களில் ஐந்தெழுத்திற்கும் சொல்லப்பட்ட ஐந்து பொருள்கள்). அவைகளையே இங்கு "ஐவர்" என்றார். அவர்கள் கோல் ஊன்றி ஓட்டுதலாவது, திருவைந்தெழுத்தை, 'தூலம், சூக்குமம், அதிசூக்குமம், காரணம், மகாகாரணம்' என்பனவாகப் படிப்படியாக நுணுகி நுணுகி வர உணர்த்துதல். "அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி" (தி.7 ப.83 பா.1) என ஐந்தையும், "ஐந்து பதம்" என அருளிச் செய்தமையும் உணரற்பாற்று.*

***தோணியில் சென்று வாணிபம் செய்வார், திருவைந்தெழுத்தின்***

*உட்பொருளை ஆசிரியர் உபதேசிக்கக் கேட்டு, அதனை மேற்கூறியபடி முறையில் ஓதி, மேன்மேல் உயரும் உயிர்கள்.*

*தோணியை ஓட்டுவார் அதனைச் செவ்வனே ஓட்டுதற்கு, அதில் ஏறியிருப்பவர்களும் ஒத்துழைத்தல் வேண்டும். அவ்வாறின்றி முரண் விளைப்பார்களாயின் தோணி கவிழ்ந்துவிடும். தோணி கவிழ்தலையே, "ஆணி கலங்கின்" "அது இது ஆம்" என்றது, 'மேலது கீழாகியும், கீழது மேலாகியும் புரளும்' என்றபடி, "அது இது ஆம்" என்றதனானே, இது அது ஆம் என்பதும் கொள்க. "வழியிடை யாற்றிடை" என்றதில் வழி செல்லும் வழியையும், யாறு, 'அவ்வழியாவது இது' என்பதையும் குறித்துச் சிறப்பும், பொதுவுமாய் நின்றன. இரண்டாம் அடியை முதலில் வைத்து, 'துறையில்' விடுவது தோணி ஒன்று உண்டு' என மாற்றியுரைக்க.*

*இங்குக் குறித்த வாணிபத்தின் இயல்பை, மேல், "கொங்கு புக்காரொடு வாணிபம் செய்தது" (பா.2882) என்றதில் காண்க.*

*இதனால், பலதிறப் பொருள்களை மறைத்துரையாடலாகக் கூறிவந்து, இறுதியில் வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்து முடிக்கப்பட்டது.*

## 25. மோன சமாதி

*மோனம் - மௌன நிலை. அது பொதுவாக வாய் வாளாமையை (வாய் திறந்து பேசாமையை)க் குறிப்பதாய் வழங்கப்படினும், உண்மையில் அது சீவன் சிவத்தில் அழுந்தித் தற்போதத்தை இழந்து நிற்கும் நிலையையே குறிக்கும். அது, பற்றியே ஔவையார், "மோனம் என்பது ஞான வரம்பு" (கொன்றைவேந்தன்) என்றார். "பேசா அனுபூதி" (கந்தரநுபூதி, 43) என்பதும் இதுவே, சமாதி - தான் அது ஆதல். அஃதாவது அறிவதாகிய உயிர், தான் அறியப்படும் பொருளேயாகி நிற்றல். இந்நிலையே பஞ்சாட்சரமும் ஏகாட்சரமாம் நிலை. இதனை,*

> *"தக்க அஞ்செழுத்து ஓரெழுத் துருவாம்*
> *தன்மை கண்டு அருள் தரும் பெருவெளிக்கே*
> *புக்கழுந்தினர்"*

*என்னும் வாதவூரடிகள் புராணத் (திருப்பெருந்துறைச் சருக்கம்)தாலும் அறிக. திருவைந்தெழுத்தின் வகைகள் பலவும் மேலே விளக்கிக் கூறப்பட்டன.*

*முன் அதிகாரத்திற் கூறிய பலத்திறப் பொருள்களில் இது முடிபு நிலை முடிபாய்ச் சிறந்ததாதல் பற்றி இதனை அதன்பின்னர்ச் சிறந்தெடுத்து வலியுறுத்துகின்றார். இவ்வதிகாரம் இருபது மந்திரங்களையுடையது.*

**2888.** ஏழு வளைகடல் எட்டுக் குலவரை
ஆழும் விசும்பினில் அங்கி மழை வளி
தாழும் இருநிலத் தன்மை யதுகண்டு
வாழ நினைக்கில் அஃது ஆலயம் ஆமே. **1**

---

*2888. தெளிவுரை :- புற உலகத்தை நோக்குமிடத்து நிலமும், வானமும் ஆகிய இரண்டிடங்களில் நிலத்தில் அதனைச் சூழ்ந்துள்ள ஏழு கடல்களும், நிலத்தைத் தாங்குகின்ற எட்டு உயர் மலைகளுமாகியும், வானத்தில் நெருப்பு மயமாய் உள்ள ஞாயிறும், பிற மீன்களும், மேகமும், காற்றும் ஆகியும் வியப்பூட்டுவதாய் என்றும், அழியாது நிலைத்திருப்பது போலக் காணப்படுகின்றது. இப்படியிருத்தலைக் கண்டு இந்த மண்ணுலகத்தைப் பொருளாகக் கருதி நீடு வாழ நினைத்தால், உண்மையில் இதன் தன்மையோ, இவ்விரிவுகள் எல்லாம் ஒன்றும் இன்றி அடங்கி ஒடுங்கிப் போவதாய் உள்ளது.*

*குறிப்புரை :- 'ஆகவே, அறிவுடையோர் இதில் வாழ நினையாது, நிலைத்த வேறொரு நிலையில் வாழவே முயல்வர்' என்பது குறிப்பெச்சம். நிலைத்த நிலை, வீட்டு நிலை. தாழ்தல் - தங்குதல். அது, பகுதிப்பொருள் விகுதி. லயம் - ஒடுக்கம். ஆலயம் - ஒடுக்கத்தை அடைவது.*

*இதனால், மோன சமாதிக்கு வாயிலாக உலகத்தின் நிலையாமை உணர்த்தப்பட்டது.*

**2889.** ஆலிங் கனம்செய்து அகம்சுடச் சூலத்துச்
சாலிங் கமைத்துத் தலைமை தவிர்த்தனர்
கோலிங் கமைந்தபின் கூபப் பறவைகள்
மாலிங்கு வைத்தது முன்பின் வழியே. **2**

---

***2889. தெளிவுரை :-*** *உலகத்தில் ஒருவனும், ஒருத்தியும் ஒருவரை ஒருவர் இறுகத் தழுவுமாற்றால், 'அவளது வயிற்றிற்றானே அங்குள்ள தீயால் வெந்து உருவாகி நிலைப்பதாகிய மண் பாண்டத்தைக் கருவிலே அமைத்து, அதற்கு எந்தத் தன்னுரிமையும் இல்லாமற் செய்து விடுகின்றார்கள். பின்பு அது வெளியில் வந்த பிறகு அதற்கு வளர்ச்சி முறை அமைகின்றது. அப்பொழுது கிணற்றுப் பறவைகள் போல் வெளியுலகைப் பற்றி யாதும் அறியாத மக்கள் அந்தப் பாண்டத்திற்கு அமைத்து வைக்கும் நெறி, முன்பே பலமுறை அமைந்துகிடந்த மயக்க நெறியே யன்றிப் புதிய தெளிவு நெறி யாதுமன்று.*

***குறிப்புரை :-*** *அந்நெறியாவது, உருவாவதும், உடைந்து போவதும் - பின்னும் உருவாவதும், உடைந்து போவதுந்தான். 'செய்து, அமைத்து, தவிர்த்தனர்' என்பவற்றிற்கு எழுவாய் வருவிக்கப்பட்டது. "அகம்" என்றது வயிற்றை, "சுட" என்றதனால் அதற்குரிய 'தீ' என்பது வருவிக்கப்பட்டது. அஃதாவது உடல் வெப்பம். சூல் - கருப்பம். அத்து, வேண்டா வழிச் சாரியையாய் வந்து, ஏழாவதன் பொருளைத் தோற்றுவித்து, சால் - மண் பாண்டம்; என்றது உடம்பையேயாதல் வெளிப்படை. உடம்பை மண்பாண்டமாக வருணித்தல் சித்தர் பாடல்களில் பல இடங்களில் காணலாம். உடம்பில் உயிர் உள்ளதேனும் அது தன்னியல்பை இழந்து, உடம்பின் இயல்பாயே நிற்றலின் அதனைக் குறியாது உடம்பையே குறித்தார். தலைமை தன்னுரிமை அஃதாவது, உள்ளே முடங்கிக் கிடவாது வெளி வர விரும்பினும் அது மாட்டாமை. "தலைமை தவிர்த்தனர்" என்பது 'அடைத்து வைத்தார்கள்' என்றவாறு. கோல், ஒழுங்கு, வெளியுலகம். வீட்டு நெறி. மால் - மயக்கம். 'மால் வழியே' என இயையும். "முன்பின்" என்பதில், 'இன்' சாரியை, 'முன்பு உள்ள நெறியே' என்க. அது பிறந்தும், இறந்தும் மீளப் பிறந்தும், இறந்தும் வருதலாம். எனவே, முன் மந்திரத்திற் கூறியவாறு. 'இவ்வுலகத்திற்றானே நீடு வாழ நினைவாரது நிலைமையெல்லாம் இவ்வாறே முடியும்' என்பதாம்.*

*இதனால், முன் மந்திரத்தில், 'ஆலயம் ஆமே' எனப் பொதுவாகச் சுட்டிய நிலையாமை இனிது விளங்க உணர்த்தப்பட்டது. ஆகவே, இவ்விரு மந்திரங்களாலும், 'உலக வாழ்க்கையை விடுத்து, மோன சமாதியையே பெரியோர் அடைவர்' என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டதாம்.*

***2890. தெளிவுரை :-*** *உலகத்தில் பலர் மறைகின்ற காலத்தில், "நின்றான்; இருந்தான்; கிடந்தான்; தன் கேள் அலறச் சென்றான்" (நாலடியார்-29) என்னும் சொல் நிகழும்படியாக, காளையராய்ப்பின் மூத்து ஒடுங்கிப் பின் பிணியுற்று*

**2890.** நின்றார் இருந்தார் கிடந்தார் எனல்இல்லாச்
சென்றார்தம் சித்தமே மோன சமாதியாம்
மன்றேயும் அங்கே மறைபொருள் ஒன்றுண்டு
சென்றாங் கணைந்தவர் சேர்கின்ற வாறே. **3**

**2891.** காட்டும் குறியும் கடந்தஅக் காரணம்
ஏட்டின் புறத்தில் எழுதிவைத் தென்பயன்
கூட்டும் குருநந்தி கூட்டிடி னல்லதை
யாட்டின் கழுத்தில் அதர்கிடந் தற்றே. **4**

---

*கிடந்தே மறைகின்றனர். அவ்வாறின்றி, ஊர்ப் பயணம் புறப்படுவது போல இவ்வுலகை விட்டு நல்ல உணர்வோடு மறைகின்றவர்களது உணர்வு உற்றிருந்த நிலைமையே 'மோன சமாதி' எனப்படுகின்றது. அந்த நிலை பலரும் சென்று அடையத்தக்க மன்றம் போன்றதுதான். மன்றம் ஆயினும் அங்கு மறைந்து நிற்கும் பொருள். அஃதாவது, அறிவினுள் அறிவாய் நிற்கும் பொருள் ஒன்றுஉண்டு. அதை அடைந்தவர் அடைந்த முறையே முறை. 'பிற எல்லாம் முறையல்ல' என்பதாம்.*

***குறிப்புரை :-*** *"இல்லா" என்பது, துவ்வீறு கெட்ட எதிர்மறை வினையெச்சக் குறிப்பு. "சித்தம்" என்றது உணர்வை. அஃது ஆகுபெயராய், அதன் நிலைமையைக் குறித்தது. 'அதனை அடைதற்கு எவர்க்கும் தடையில்லை' என்பது உணர்த்துதற்கு, அதனை, 'மன்றுபோல்வது' என்றார். ஏயும், உவம உருபு. 'ஆங்குச் சென்று அணைந்தவர்' என மாறிக் கூட்டுக. 'சேர்க்கின்ற ஆறே ஆறு' என ஒரு சொல் வருவித்து முடிக்க. ஆறு - முறைமை.*

*இதனால், மோன சமாதியாவது இன்னது' என்பது உணர்த்தப்பட்டது.*

***2891. தெளிவுரை :-*** *காட்டு - எடுத்துக்காட்டு. குறி - ஏது. நேரே காண வாராத பொருளை அதனை விட்டு நீங்காததாய்க் காணப்படும் ஏதுவாலும், அதனோடொத்த உவமத்தாலும் கருதியுணரலாம். "ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் - சோதிக்க வேண்டா" (தி.3 ப.54 பா.5) என்று அருளிச் செய்தபடி, முன் மந்திரத்தில் "மறைபொருள்" எனப்பட்ட அந்த மெய்ப்பொருளை விட்டு நீங்காது அதனை அறிவிக்கும் ஏதுவாய் நமக்குக் காணப்படுவதும் ஒன்றில்லை. இனி, "தனக்குவமை யில்லாதான்" (திருக்குறள், 7) என்றபடி, அப்பொருளோட ஒத்ததாய், அதற்கு உவமையாவதும் ஒன்றில்லை. அது பற்றி அப்பொருளை, "காட்டும் குறியும் கடந்த அக்காரணம்" என்றார். அப்பொருளே எல்லாவற்றிற்கும் முதலாய் நிற்றலின், "காரணம்" எனப்பட்டது. 'காரணம், முதல்' என்பன ஒரு பொருட் சொற்கள். இங்ஙனம் காட்சி கருதல்கட்கு எய்தாத அப்பொருளை உணர்த்துவன உரைத்திரட்சிகளேயாம். ஆயினும் அவ்வுரைப் பொருள்களை அனுபவமாகப் பயிலாது, உரைகளை ஏட்டின் புறத்திலே எழுதி*

**2892.** மறப்பது வாய்நின்ற மாயநன் நாடன்
பிறப்பினை நீக்கிய பேரரு ளாளன்
சிறப்புடை யான்திரு மங்கையும் தானும்
உறக்கமில் போகத்து உறங்கிடும் தானே. **5**

---

*வைத்தால், அதனால் என்ன பயன் விளையும்? ஒரு பயனும் விளையாது. இனி அப்பொருளை அனுபவமாகப் பற்ற அதனோடு சேர்ப்பிக்கின்றவர் சிவ குருவே, அவர் சேர்ப்பித்தால் மேற்குறித்த உரைப் பொருள்கள் எல்லாம் அனுபவமாகப் பயன்படும். இல்லாவிடில் ஏட்டில் எழுதி வைத்தன எல்லாம் ஆட்டின் கழுத்தில் மடிக் காம்பு போல்வனவாய்த் தூங்குகின்ற அத்தன்மையனவேயாம்.*

*குறிப்புரை :- "எழுதி மட்டும் படிப்பின், தமக்கும், பிறர்க்கும் அவை யாதொரு பயனையும் செய்யா" என்பதாம். இஃதே பற்றி, "நூலறிவு பேசி நுழைவி லாதார் திரிக" (தி.11 அம்மைத் திருவந்தாதி - 33) என்னும் அனுபவ மொழியும்,*

*ஒன்றும் குறியே குறியாத லால்அதனுக்கு*
*ஒன்றும் குறிஒன் றிலாமையினால், ஒன்றோடு*
*உவமிக்க லாவதுவும் தானில்லை; ஒவ்வாத்*
*தவமிக்கோ ரேஇதற்குச் சான்று* **- *திருக்களிற்றுப்படியார், 10***

*என்னும் சாத்திரத் திருமொழியும் எழுந்தன.*

*"காரணம்" என்றது, காரணமாய் உள்ள இயல்பையும், அதனை அடையும் வழியையும் கூறும் உரைகளைக் குறித்தது என்னை? எழுதப்படுவன உரைகளேயாதலால், "நந்தி" என்றது, "சிவ குரு" என்னும் குறிப்பினது. 'அவர் கூட்டினல்லது' என எடுத்துக் கொண்டுரைக்க. "அல்லதை" என்பது ஐயீற்றிடைக் குற்றுகரம்.*

*இதனால், 'ஒரோ ஒருகால் பிற கல்விகள் எல்லாம் ஆசிரியன் இன்றியும் பயன்படும்; மோன சமாதியைப் பற்றிய கல்வி, ஆசிரியன் இன்றிப் பயன்படாது' என்பது வலியுறுத்தி உணர்த்தப்பட்டது. (இதன் பின் பதிப்புக்களில் காணப்படும். "உணர்வுடையார்கட்கு உலகமும் தோன்றும்" என்னும் மந்திரம் ஏழாம் தந்திரத்து, "சம்பிரதாயம்" அதிகாரத்தில் வந்தது.*

*2892. **தெளிவுரை :-** தன்னை மறப்பதையே தனது தொழிலாகக் கொண்ட, வஞ்சக நாட்டில் வாழும் ஒருவன் (பெத்தான்மா) அம் மறதியால் அடைவது பிறவித் துன்பமே. அத்துன்பத்தை, அவன் தன்னை என்றும் மறவா நிலையை அடைவிக்கும் முகத்தால் நீக்கி யருளிய பெருங்கருணையாளன், எவ்வாற்றானும் பிறப்பை எய்தாத சிறப்புடையவன். (சிவன்) அவன், பிறவித் துன்பத்தின் நீங்கிய அவன் (முத்தான்மா) முன்போலத் தன்னை மறப்பதாகிய அந்த உறக்கம் அல்லாத*

*வேறு உறக்க இன்பத்தில் இருக்கும்பொழுது, தானும் தன் தேவியுடன் அந்த உறக்கத்தில் பங்கு பற்றியிருப்பான்.*

***குறிப்புரை :-*** *'கேவலம், சகலம், சுத்தம்' என்னும் மூன்று நிலைகளில் கேவல நிலையே மறப்பும், சகலம் நினைப்புமாயினும் அந்நினைப்பு நிலையிலும் சிவனை நினைத்தல் இல்லையாகலின், பெத்தான்மாவை "மறப்பே வடிவமாய் நின்றவன்" என்றார். அது, பகுதிப் பொருள் விகுதி.*

*நின்னை எப்போதும் நினைய லொட்டாய் நீ;*
*நினையப்புகின்*
*பின்னை அப்போதே மறப்பித்துப்*
*பேர்த்தொன்று நாடுவித்தி;*
*உன்னை எப்போதும் மறந்திட்டு*
*உனக்கு இனிதாய் இருக்கும்*
*என்னை ஒப்பார் உளரோ? சொல்லு*
*வாழி இறையவனே.* *- தி.4 ப.112 பா.4*

*என்னும் அப்பர் திருமொழி இங்கு நினைக்கத்தக்கது. மாயம் - வஞ்சனையும், நிலையாமையும், அவற்றை உடையன மாயா காரியங்களாகிய தத்துவங்கள், மறதியைத் தருதல் பற்றி வஞ்சனையையே இங்குப் பொருளாகக் கொள்க. அவை உயிர்க்கு இடமாதல் பற்றி, 'நாடு' என்றும், கேவலத்தை நீக்குதல் பற்றி, 'நன்று' என்றுங் கூறினார். சுத்த நிலையே சிவனை மறவா நிலையும், அதனால் பிறவி யற்றிருக்கும் நிலையுமாகும். 'நாடனது' என ஆறாவது விரிக்க. சிவபோக நிலை, சிவனை மறந்து துயிலம் சுத்த அதீதம் ஆகலின் அதனை, "உறக்கம் இல் போகம்" என்றும், 'அந்நிலையிலும் சிவனது திருவருள் உதவி ஆன்மாவிற்கு இன்றியமையாதது' என்றற்கு "திருமங்கையும் தானுமாய் (அப்போகத்தில்) தான் உறங்கிடும்" என்றும் கூறினார். 'சிவ போக நிலையிலும் சிவனது திருவருள் உதவி ஆன்மாவிற்கு இன்றியமையாதது' என்பதைச் சிவஞான போதப் பதினொன்றாம் சூத்திரத்து நுண்பொருள் பற்றி உணர்க.*

*ஈற்றில் நின்ற "தான்" என்பதை, "சிறப்புடையான்" என்பதன் பின்னர்க் கூட்டி, 'மங்கையும், தானுமாய்' என ஆக்கம் விரித்துரைக்க.*

*இதனால், 'சுத்த துரியாதீதமே மோன சமாதி நிலை' என்பதும், 'அந்நிலையும் சிவனது அருளாலே பயன்படும்' என்பதும் உணர்த்தப்பட்டன.*

***2893. தெளிவுரை :-*** *சிவன், 'கேவல துரியம், சகல துரியம், யோக துரியம்' என்னும் இம்மூன்று துரியங்களையும் கடந்து நிற்கும் ஒளியாய் உள்ளவர். (இத்துரியங்கள்முன் தந்திரத்தில் விளக்கப்பட்டன. இம்மூன்றையும் கடந்தது அரிய துரியம். அது நின்மல துரியம். (இதுவும் முன் தந்திரத்தில் விளக்கப் பட்டது). அதன்கண் உள்ள மூன்றாவன, ஞாதுரு, ஞானம், ஞேயம் (அறிபவன்,*

**2893.** துரியங்கள் மூன்றும் கடந்தொளிர்சோதி
அரிய துரியம் அதன்மீது மூன்றாய்
விரிவு குவிவு விழுங்கி உமிழ்ந்தே
உரைஇல் அனுபூ திகத்தில்உள் ளானே. **6**

**2894.** உருவிலி ஊன்இலி ஊனம்ஒன் றில்லி
திருவிலி தீதிலி தேவர்க்கும் தேவன்
பொருவிலி பூதப் படையுடை யாளி
மருவிலி வந்தென் மனம்புகுந் தானே. **7**

---

*அறிவு, அறியப்படும் பொருள்). 'இவை தோன்றி நிற்றல் விரிவு' எனவும் 'தோன்றாது மறைதல் குவிவு' எனவும் உணர்க. துரிய நிலையில் விரிவும், அதனையும் கடந்த அதீத நிலையில் குவிவும் உண்டாகும். ஆகவே, 'விரிவை விழுங்கிக் குவிவை உமிழ்ந்து' என நிரல் நிரையாகக் கொள்க. குவிந்த நிலையே பேசா அனுபூதி, அல்லது, மோன சமாதி ஆதலின், "உரைஇல் அனுபூதிகத்து உள்ளான்" என்றார். 'சோதி, விழுங்கி, உமிழ்ந்து உள்ளான்' என முடிக்க. "மீது" என்பது ஏழன் உருபாயும், 'மேல்' என்னும் பொருட்டாயும் நின்றது. "ஆய்" என்னும் வினையெச்சம். "விரிவு" என்னும் தொழிற்பெயர் கொண்டது.*

*இதனால், மோன சமாதி முத்துரியங்களையும் கடந்த அதீத நிலையாதல் வலியுறுத்தி உணர்த்தப்பட்டது.*

***2894. தெளிவுரை :-** (இம்மந்திரம் சிவனது தனிச் சிறப்பான இயல்புகளையே விரிக்கின்றது).*

***உரு இலி - தன் இயல்பில் உருவம் இல்லாதவன். ஊன் இலி - பிறர் பொருட்டாக உருவம் கொள்ளுமிடத்தும் அவ்வுருவில் புலால் இல்லாதவன்; ('மாயா சரீரியல்லன்; சத்தி சரீரி' என்றபடி, "அரிதரு கண்ணியாளை ஒருபாகமாக அருள் காரணத்தின் வருவார்" (தி.4 ப.8 பா.2) என்னும் திருமுறையையும், "காயமோ மாயையன்று; காண்பது சத்தி தன்னால்" (சிவஞானசித்தி - சுபக்கம், சூ - 1.4) சாத்திரத்தையும் ஊன்றி யுணர்தல் வேண்டும்).***

***ஊனம் - குறை. தனக்கு இயல்பாய் உள்ள ஆற்றல் குறைவுபடுதற்குரிய காரணம். அது பாசம், அதனை இயல்பாகவே இல்லாதவன். பாசங்கள் பல ஆதலின், 'அவற்றுள் ஒன்றும் இல்லாதவன்' என்க. 'ஒன்றும்' என்னும் இழிவு சிறப்பும்மை தொகுத்தலாயிற்று.***

***திருஇலி - திருவை இல்லாளாக உடையவன். திரு - அருள். இல்லாள் - தேவி.***

***"தீதலி" என்றதே பற்றி, 'நன்றிலி' என்பதும் கொண்டு, 'உலகில் வரும் தீமை***

**2895.** கண்டறி வார்இல்லைக் காயத்தின் நந்தியை
எண்டிசை யோரும் இறைவன்என் றேத்துவர்
அண்டங் கடந்த அளவிலா ஆனந்தம்
தொண்டர் முகந்த துறைஅறி யோமே. **8**

---

*நன்மைகளில் ஒன்றினாலும் தாக்குண்ணாதவன்' என்க.*

*மருவு இலி - புதிதாக வந்து பொருந்துதல் இன்றி அனாதியே அத்துவிதமாய்க் கலந்து நிற்பவன். அத்தகையோனைப் "புகுந்தான்" என்றது. புதியோன்போல விளங்கி நின்றமை பற்றி, "மனம்" என்றது அறிவை.*

*ஏனைய வெளி. பல பெயர்களும் ஒரு பொருள் மேலவாய், "வந்து என உளம் புகுந்தான்" என்பதனோடு முடிக்க.*

*இதனால், 'எத்துணையும் அரியன் மோன சமாதியில்' எளியனாய் நிற்றல் உணர்த்தப்பட்டது.*

***2895. தெளிவுரை :-** சிவபெருமானை அறிஞர் பலரும் 'முதற்கடவுள் என்று உணர்ந்து போற்றுகின்றனர். ஆயினும் அவன் அவரவர் உடலிற் குள்ளேயிருந்து அருள் புரிதலைப் பலர் அறிந்திலர். (புறத்திலேதான் வைத்துப் போற்றுகின்றனர் என்றபடி) ஆகவே, அதனை அறிந்த ஒரு சிலரே அவனுடைய மெய்த்தொண்டர் ஆகின்றனர். அவர்கள் உலகங்களைக் கடந்து "கரையிலாக் கருணை மாகடலாயும்" (தி.9 திருவிசைப்பா, 1.2) அதனானே கரையிலா இன்ப மாகடலாயும் உள்ள சிவனிடத்தில் அந்த ஆனந்தத்தைத் தம்மால் ஆமளவும் முகந்து உண்கின்ற துறையை நாமெல்லாம் அறியாதவர்களாகவே இருக்கின்றோம்.*

***குறிப்புரை :-** "நந்தியை" என்பது முதலாகத் தொடங்கி, 'காயத்தில் கண்டறிவார் இல்லை' என மாற்றி; அதனை இரண்டாம் அடியின் இறுதியில் கூட்டியுரைக்க.*

*காயம் - தூய உடம்பு. அதன் உள்ளிடமாகச் சொல்லப்படுவது இருதயம். அதனைப் பூசாத்தானமாகக் கொண்டு செய்யும் அகப்பூசையே சிறப்புடைப் பூசையாகும். இஃது 'அந்தரி யாகம்' எனப்படும். 'அந்தரியா கந்தன்னை முத்தி சாதனமாய் அறைந்திடுவர்; அதுதானும் ஆன்ம சுத்தி யாகும்' என்றது சிவஞான சித்தி (சுபக்கம், 9-301). இது கிரியா பூசை.*

*ஞான நிலையில், 'சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம்' என்னும் முறையில் அறிவுக்கறிவாய் அறிவினுள்ளே வைத்துச் சிவன் உணர்ந்து வழிபடப்படுவான். அது ஞான பூசை. இவை ஒன்றின் ஒன்று மேம்பட்டன. இந்த மூவகை நிலையும், 'காயத்தின் உள்' என்பதாகக் கொள்ளப்படுதலின், இவற்றுட் செல்லாது புறத்தில் மட்டும்வைத்து வழிபடுவாரை நாயனார், "நந்தியைக் காயத்தின் உள்ளே*

**2896.** தற்பர மல்லன் சதாசிவன் றானல்லன்
நிட்கள மல்லன் சகள நிலையல்லன்
அற்புத மாகி அனுபவக் காமம்போல்
கற்பனை யின்றிக் கலந்துநின் றானே. **9**

---

*கண்டறிவார் இல்லை" என்றார். காயத்தின் உள்ளே என்பதில் சாரியை நிற்க, உருபு மறைந்தது.*

*"எந்தையே ஈசா, உடல்இடம் கொண்டாய்;*
*யான்இதற் கிலன் ஓர்கைம் மாறே".*

*- தி.8 கோயில் திருப்பதிகம் - 10*

*"நிலாவாத புலால் உடம்பே புகுந்து நின்ற*
*கற்பகமே, யான் உன்னை விடுவே னல்லேன்".*

*- தி.6 ப.95 பா.4*

*என்றாற்போல வரும் திருமொழிகளும் இவற்றையே குறிக்குமாற்றை ஓர்ந்துணர்ந்து கொள்க. இனி இவற்றிற்கெல்லாம் இவ்வுண்மைப் பொருளைக் கொள்ளாது, தூல உடம்பில் தரிக்கப்படும் சின்னங்களையே இவை குறிப்பனவாகக் கொண்டமைவாரும் உளர்.*

*"அண்டம் கடந்த பொருள்*
*அளவில்லதோர் ஆனந்த வெள்ளப்பொருள்"*
*- தி.9 திருப்பல்லாண்டு - 2*

*"................ பேரா, ஒழியாப், பிரிவில்லா,*
*மறவா நினையா, அளவிலா,*
*மாளா இன்ப மாகடலே" - தி.8 கோயில் திருப்பதிகம் - 10*

*என்னும் திருமொழிகளை இதன் மூன்றாம் அடியோடு ஒப்பிட்டு உணர்க. நுகரும் பகுதியை முகக்கும் துறையாக உருவகித்தவர், முழு நிலையையும் கடலாக உருவகம் செய்யாமையால் இஃது ஏகதேச உருவகம்.*

*இதனால், சிவனை அகத்தில் வழிபடுதலே மோன சமாதியைப் பயத்தல் வலியுறுத்தி உணர்த்தப்பட்டது.*

***2896. தெளிவுரை :- (இம்மந்திரத்திற்கு முன் மந்திரத்திற் போந்த, "நந்தி" என்பதை எழுவாயாக வருவிக்க).***

***சிவன், மோன சமாதியை அடைந்தவர்கட்கு, அதற்கு முன்பெல்லாம் அவர்கள் பாவித்த பாவனைகளில் தோன்றியது போலத் தோன்றாமல், அவர்களது பாவனைகளில் ஒன்றற்கும் உட்படாத வேறோர் அதிசயப்***

பொருளாய், அநுபவப் பொருளாய் விளங்கி நிற்கின்றான்.

**குறிப்புரை :-** 'சிவன் ஒருவன் உளன்' என, வேதாகமங்கள் பற்றுக்கோடாகப் பொதுவகையான் உணர்ந்த நிலையில் அவன்,

> "தேவராயும், அசுர ராயும், சித்தர், செழுமறைசேர்
> நாவராயும், நண்ணு பாரும், விண், எரி, கால், நீரும்
> மேவ ராய விரைமலரோன், செங்கண்மால் ஈசன் என்னும்
> மூவ ராயும்". - தி.1 ப.53 பா.1

இங்ஙனம் பல திறப்பட்டுக் காணப்படுகின்ற உயிர் வகைகளையும், ஐம்பூதம் முதலிய உயிரல்பொருள் வகைகளையும் வைத்து, 'சிவன் இவை அனைத்திற்கும் மேலாய் உளன்' என்று உணர்ந்த அளவில், அவன் உண்மை மாத்திரையாக திருவிகற்பகமாகவே தோன்றினான். தற்பரம் - தனக்கு மேலானது. தான் உயிர். உயிர்களாகிய அறிவுடை உலகத்தைக் கூறவே, இனம்பற்றி, உயிரல்லாத அறிவிலா உலகமும் கொள்ளப்படும். இந்த திருவிகற்ப உணர்வும் பாவனையே யாதல் அறிக. இவ்வாறும் அவன் இப்பொழுது இல்லை.

இனி, 'உளன்' எனப் பொதுவாக உணரப்பட்ட சிவன் எவ்வியல்பினன்? என ஆராயுமிடத்து, 'அவன் தன் பொருட்டாக யாதொரு தொழிலையும் வேண்டாதவனாயினும், உயிர்களின் பொருட்டாக ஐந்தொழில்களைச் செய்கின்றான்' என ஆசிரியர், வேதாகமங்களின்வழி அறிவிக்குமிடத்து, **'அவ்வைந்தொழில் - அதிசூக்குமம், சூக்குமம், தூலம் என மூவகைப்படும்' எனவும், அதி சூக்கும ஐந்தொழிலை அருவத் திருமேனியை யுடையனாயும், தூல ஐந்தொழிலை உருவத் திருமேனியை யுடையனாயும் நின்று செய்வன்'** எனவும் அறிவிக்க அவ்வாறே ஆறாயுமிடத்து அத்திருமேனிகள் ஏனைப் பொருள்கள் போலக் கட்புலனாகாமையால் ஆசிரியர் அறிவித்தவாறே பாவித்து வழிபடும் வழிபாட்டுப் பொருள்களாயின. அவற்றுள் உருவம் சரியை நிலையிலும், அருவுருவம் கிரியை நிலையிலும், அருவம் யோக நிலையிலும் வழிபடும் பொருள்களாயின. அந்தப் பாவனைப் பொருள்களாகவும் அவன் இப்பொழுது இல்லை. இங்ஙனம் இவை எல்லாம் அல்லவாம் நிலைகளையே முதல் இரண்டடிகளில் எடுத்தோதினார். சதாசிவன் - அருவுருவத் திருமேனியன். நிட்களம் - அருவத்திருமேனி. அது, 'சிவம், சத்தி' என இருவகைத்து. சகளம் - உருவத் திருமேனி. இது, 'மகேசுரன், வித்தை' என இருவகைத்து.

இவையெல்லாம் ஐந்தொழில் செய்தற்பொருட்டுக்கொள்ளப்பட்ட தடத்த வடிவங்களே யாதலாலும், தடத்தம் பெத்தான்மாக்களுக்கே உரியதாக, முத்தான்மாக்களுக்கு அவையனைத்தினும் வேறாய், வாக்கு மனாதீதமாய் உள்ள சொரூப நிலையே உரித்தாகலும் மோன சமாதியை அடைந்தோராகிய முத்தர்களுக்கு சிவன் 'சதாசிவன்' முதலாகச் சொல்லப்படும் நிலையினன் அல்லன்

**2897.** முகத்தினிற்கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்தினிற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தினைச் சொல்லெனில் சொல்லுமா றெங்ஙனே. 10

---

*என்றார். இந்நிலையைத் திருஞான சம்பந்தரும், "கறையணி வேலிலர் போலும்" (தி.2 ப.65) எனத் தொடங்கும் திருப்பதிகம் முழுவதிலும் பலவாக விரித்தருளிச் செய்தார்.*

*தடத்த மெல்லாம் பாவனை யளவினவாய் நிற்றலாலும், சொரூபம் எவ்வகையும் பாவிக்க வாராது பாவனையால் கண்டு வந்த அவற்றினும் வேறாய் அனுபவத்தில் உணரப்படுவது ஆகலானும், "அற்புதமாய்க் கற்பனையின்றி, அனுபோகக் காமம்போல் கலந்து நின்றான்" என்றார்.*

*காம இன்பமும், 'கற்பனை இன்பமும், அனுபவ இன்பமும்' என இரு வகைத்து. காதலனும், காதலியும் மெய்யுறு புணர்ச்சியின்றி, உள்ளப் புணர்ச்சி மட்டுமே வாய்த்த நிலையில் அவர்களது உள்ளத்தில் தோன்றுகின்ற இன்பம் கற்பனை இன்பம், மெய்யுறு புணர்ச்சி வாய்த்த காலத்தில் அவர்கள் அடையும் இன்பம் அனுபவ இன்பம். 'அவ்வாறே குரு உபதேசத்தைக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல்களால் விளையும் சிவானந்தம் கற்பனை ஆனந்தமாக, நிட்டையாகிய மோன சமாதியில் விளையும் சிவானந்தமே அனுபவ ஆனந்தமாம்' என்றற்கு, "கற்பனையின்றி அனுபவக் காமம்போல் கலந்து நின்றான்" என்றார். "மருவி யிருவரும் புணர வந்த இன்பம் வாயினாற் பேசரிது. மணந்தவர்தாம் உணர்வர்; (சிவஞான சித்தி, சுபக்கம், சூ. 8.36) என்றது போல இதுவே பேசா அனுபூதி என்க. இதனுள் இரண்டாம் அடி இன எதுகை பெற்றது.*

*இதனால், சொரூப அனுபவமே மோன சமாதியாதல் கூறப்பட்டது.*

***2897. தெளிவுரை :-** இதன் பொருள் வெளிப்படை.*

***குறிப்புரை :-** பின்னிரண்டடிகளை முதற்கண் கூட்டி, ஈற்றில் தொக்கு நின்ற, 'அச்சுகம், மகள் தன் மணாளனோடு ஆடிக் காணத்தக்கதே' என்னும் இசையெச்சத்தை விரித்து, 'ஆனந்தம் சுகத்தில் கண்கொண்டு காண்பதே' என மாற்றியுரைத்து முடிக்க. முதல் அடி, இடைப்பிற வரலாய் வந்தது. இஃது எடுத்துக்காட்டுவமை.*

***காண்பதே - காணப்படுவதே. ஆனந்தம், ஏற்புழிக் கோடலால் இங்குச் சிவானந்தமே யாதல் தெளிவு. முகத்தினிற் கண்ணை 'ஊனக் கண்' என்றும், அகத்தினிற் கண்ணை, 'ஞானக் கண்' என்றும் வழங்குப. 'தசையைக் குறிப்பதாகிய 'ஊ' என்னும் பெயர், புணர்ச்சிக்கண் னகரச் சாரியை பெற்று, ஊன் என வரும்'***

**2898.** அப்பினில் உப்பென அத்தன் அணைந்திட்டுச்
செப்பு பராபரம் சேர்பர மும்விட்டுக்
கப்புறு சொற்பதம் மாளக் கலந்தமை
எப்படி அப்படி என்னும்அவ் வாறே. **11**

---

*என்பது தொல்காப்பியம் (எழுத்து - உயிர் மயங்கியல்) பிற்காலத்தில் அஃது, 'ஊன்' என னகர ஈறேயாய்ச் சில இடங்களில் அகரச் சாரியை பெற்று வருவதாயிற்று. அகக் கண்ணால் காண வேண்டுவதை முகக் கண்ணால் காண முயலுதனும், அகக்கண்ணிற்கு அஃது அகப்படாமை பற்றி, 'அஃது இல்லை' என முரணி நிற்றலும் உடைமை பற்றி அத்தன்மையுடையாரை "மூடர்காள்" என விளித்தருளினார். இம்மந்திரத்துட் கூறப்பட்ட பொருளையே திருவுந்தியார் (பா.4).*

*"இங்ஙன் இருந்ததென் றெவ்வண்ணம் சொல்லுகேன்?*
*அங்ஙன் இருந்ததென் றுந்தீபற;*
*அறியும் அறிவதன் றுந்தீபற"*

*என்றும், திருக்களிற்றுப்படியார் (வெண்பா, 9)*

*அன்று முதல் ஆரேனும் ஆளாய் உடனாகிச்*
*சென்றவர்க்கும் இன்னதெனச் சென்றநிலை - இன்றிதனை,*
*இவ்வா றிருந்ததென் றெவ்வண்ண சொல்லுகேன்?*
*அவ்வா றிருந்த தது.*

*என்றும் கூறின.*

*இதனால், சிவானந்த அனுபவம் மோன (மௌன) சமாதி நிலையேயன்றி, மனோ வாக்குக்களின் செயற்பாட்டு நிலையன்று' என்பது வலியுறுத்திக் கூறப்பட்டது.*

***2898. தெளிவுரை :-** செப்பு பராபரம் - குரு மொழியும், வேதாகமங்களும் சொல்லுகின்ற மெய்ப்பொருள். 'பராற்பரம்' என்பது, 'பராபரம்' என மருவிற்று. 'மேலானதற்கும் மேலானது' என்பது அதன் பொருள்.*

*சேர்பரம் - முன்பு பரமாய் இல்லாது பராபரத்தைச் சேர்ந்ததனால் 'பரம்' எனச் சொல்லப்படுவது. அஃது ஆன்மா.*

*இவ்விரண்டையும் விடுதலாவது, சீவான்மா இது, பரமான்மா இது' எனப் பகுத்துக்காணும் நிலையை விடுவது. அஃதாவது, ஆன்மா 'யான், எனது' என்னும் பகுத்துணர்வின், நீங்கியநிலை. 'கப்புறுதல்' எனப்பட்டதும் அதுவே. கப்புறுதல் - கவர்த்தல்; இரண்டு படுதல்.*

**2899.** கண்டார்க் கழகிது காஞ்சிரத் தின்பழம்
தின்றார்க் கறியலாம் அப்பழத் தின்சுவை
பெண்டான் நிரம்பி மடவிய ளானால்
கொண்டான் அறிவன் குணம்பல தானே. **12**

---

*கப்புஉறு சொல்பதம் மாள - பகுத்துச் சொல்லும் சொல் நிலை நீங்க. கலந்தமை - சீவான்மா பரமான்மாவோடு ஒன்றுபட்ட நிலை.*

*'அப்பினில் உப்பென, அதனை ஆன்மா அணைந்திட்டுக் கலந்தமை' என்க. 'கலந்த நிலை எப்படி எனில், அஃது இப்படி - என இலக்கண வகையாற் கூற வாராது - அப்படி எனப் பொதுவகையால் சுட்டும் தன்மையினதேயாம்' என்பன ஈற்றடியின் பொருள். இதன் முதல் மூன்றடிகளில் கூறப்பட்ட பொருளே சிவஞான போத (சூ.11 அதி.2)த்துள், "நசித்து மலம் - அப்பணைந்த உப்பின் உளம் அணைந்து சேடமாம்; கப்பின்றாம் ஈசன் கழல்" எனக் கூறப்பட்டமை காண்க.*

*இதனுள் பாடம் பெரிதும் திரிபுற்றது.*

*இதனால், 'மோன சமாதியின்பம் அனுபவத்தால் அறியப்படுமன்றி, அயலவர் உரையால் அறிய வாராது' என்பது உணர்த்தப்பட்டது.*

***2899. தெளிவுரை :-** எட்டி மரத்தின் பழம் பார்ப்பவர்கண்கட்கு மிக அழகிதாய்த் தோன்றும். ஆயினும் அதனைத் தின்றாலோ, சுவை கைப்பாதலுடன், தின்றவரையும் கொல்லும் தன்மையுடையது. (அதனால் அறிவுடையோர் ஒருபோதும் அப்பழத்தைத் தின்னார்).*

*இனிப் பெண்ணொருத்தி பெண்மை நிரம்பி, 'பெண்டு' என்பதற்குத் தகுதியடைந்த பின்பே அவளைக் கொண்டவன் அவளோடு தனிமையிற் பழகி, அவளுடைய குணங்கள் பலவற்றையும் உள்ளவாறு உணர்ந்து அவளது குணங்கட்கு ஏற்ப ஒழுகி இன்புறுத்துவான். (அவள் பெண்மை நிரம்பாத பொழுது கொண்டவன் அவ்வாறு செய்யான்).*

***குறிப்புரை :-** மோன சமாதி அல்லாதவற்றை மோன சமாதியாகச் சொல்லிச் சொற்சாலம் செய்யும் நூல்களும், உரைகளும் உள. ஆயினும் அவற்றின்வழி நின்றோர் அவற்றால் ஏமாற்றமே எய்தி, வாழ்நாள் வீணாளாயினமை அறிந்து இரங்குவர்.*

> *"இருபிறப்பும் வெறுவியராய் இருந்தார் சொற்கேட்டு*
> *ஏழையேன் நான்பண் டிகழ்ந்த வாறே" - தி.6 ப.3 பா.5*

*என்னும் அப்பர் திருமொழியே இதற்குப் போதிய சான்று.*

**2900.** நந்தி யிருந்தான் நடுவுத் தெருவிலே
சந்தி சமாதிகள் தாமே ஒழிந்தன
உந்தியி னுள்ளே உதித்தெழும் சோதியைப்
புந்தியி னாலே புணர்ந்துகொண் டேனே. **13**

---

*சிவன் எல்லா உயிர்கட்கும் உய்யும் நெறி காட்டி உய்விப்பவனே யாயினும் பக்குவம் எய்திய உயிர்கட்கே அவன் முன் வந்து அதனைச் செய்வான். (பக்குவம் எய்தாத உயிர்கட்கு அவன் அதனைச் செய்யான்).*

*இவ்விரு பொருள்களையே இம்மந்திரம் முன், பின் இரு பகுதிகளாலும் உணர்த்தி நிற்றலின், இது பிறிதுமொழிதல் அணியைப் பெற்றதாம்.*

*பேதை, பெதும்பைப் பருவத்திலேயும் மகளிரை மணம் செய்து கொடுத்தல் அக்காலத்து வழக்காதலைப் பற்றி இதன் பிற்பகுதியிற் போந்த உவமை வந்தது. 'மடவியள் ஆனாலே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. அறிதல், அறிந்து ஒழுகுதலாகிய தன் காரியம் தோன்ற நின்றது. இதன் இரண்டாம் அடி இன எதுகை பெற்றது.*

*இதனால், சற்குரவன் கிடையாமை பற்றிப் பொறுமையிழந்து, அசற்குரவரை அடைந்து அல்லல் உறல் கூடாது' என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

*"இரைதேர் கொக்கொத்து இரவு பகல்*
*ஏசற் றிருந்தே வேசற்றேன்"*

*எனவும்,*

*"நல்கா! தொழியான் நமக்கென்று உன்*
*நாமம் பரவி, நயனம் நீர்*
*மல்கா, வாழ்த்தா, வாய் குழறா,*
*வணங்கா, மனத்தால் நினைந் துருகிப்*
*பல்கால் உன்னைப் பாவித்துப் பரவி"*

*- தி.8 கோயில் மூத்த திருப்பதிகம், 5-10*

*எனவும் அருளிச் செய்தவாறு 'அடங்கியிருத்தல் வேண்டும்' என்பதாம்.*

***2900. தெளிவுரை :-** சிவன் நடுத் தெருவிலே வெளிப்படையாகத்தான் இருக்கின்றான். (ஆயினும், இருள் மூடியிருப்பதால் அவனைக் காண இயலவில்லை). பின்பு அந்த நடுத் தெருவின் முதலில் எரிகின்ற ஒரு விளக்கை எனது அறிவுக் கூர்மையாற் கண்டு பற்றிச் சென்றேன்; சிவனைக் கண்டு கொண்டேன். அப்பொழுது மேற்குறித்த அந்த விளக்கின்றிச் செய்யும் சந்தியானுட்டானங்களும், அவ்வனுட்டானத்தில் செய்யப்படும் தியானங்களும் என்னையறியாமலேயே நீங்கிவிட்டன.*

**2901.** விதறு படாவண்ணம் வேறிருந் தாய்ந்து
பதறு படாதே பழமறை பார்த்துக்
கதறிய பாழைக் கடந்தந்தக் கற்பனை
உதறிய பாழில் ஒடுங்குகின் றேனே. **14**

---

***குறிப்புரை :-*** *நடுவுத்தெரு, ஆறு ஆதாரங்களுள் மேலதான ஆஞ்ஞை. அங்குச் சிவன் தியானப் பொருளாய் விளங்கியே நிற்றலால், "நந்தி யிருந்தான் நடுவுத் தெருவிலே" என்றார்.*

*யோகக் காட்சியைத் தருவது குண்டலினி சத்தியே ஆகவே, குண்டலினி யோகத்தை மேற்கொள்ளாத நிலையை இருள் நிலையாக வைத்து, குண்டலினியை "சோதி" என்கின்றவர், அது மூலாதாரத்தில் உள்ள பொழுது எழாது துயில் கொள்வதாய், மூலாக்கினியால் எழுப்பப்பட்ட பொழுது எழுந்து சுவாதிட்டானத்தைக் கடந்து மணி பூரகத்தை அடைந்த பொழுதே விளக்கத்தைத் தருதலால் அவ் விடத்தில் விளங்குவதாக, "உந்தியினுள்ளே உதித்தெழும் சோதியை" என்றார். சோதி, இங்கு விளக்கு. அந்த விளக்குப் புறத்தே உள்ள கையால் பற்றப்படாது, அகத்தே அறிவால் பற்றப்படுவது ஆதலின், "புந்தியினுள்ளே புணர்ந்து" என்றும், விளக்குக் கிடைத்தலின் வெளியில் உள்ள பொருளை அடைதற்குத் தடையில்லாமை பற்றி, "கொண்டேன்" என்றார். கொள்ளுதல், கைப்பற்றுதல்.*

*யோகத் தியான சமாதிகளில் இருப்பவர்கள்பால் கிரியானுட்டானங்களும், தியானங்களும் நிகழாதுபோதல் இயல்பேயன்றோ? அதனையே, "சந்தி சமாதிகள் தாமே ஒழிந்தன" என்றார். இதனுள் "நான் ஒழிந்தேன்" என்னாது, "தாமே ஒழிந்தன" என அருளிச் செய்ததை ஊன்றி உணர்தல் வேண்டும். யோக சித்தர்களும், "நட்ட கல்லை தெய்வம் என்று" என்னும் பாடல்போன்ற பல பாடல்களில் கிரியைகளை விலக்குதல் போலக் கூறியனயாவும், 'கிரியையோடே நில்லாது யோகத்திற் செல்க' என அறிவுறுத்தியனவேயாம். அஃது அறியாதார், 'கிரியைகள் பயன் இல் செயல்கள்' எனச் சித்தர்கள் கடிந்தொதுக்கினார்கள்' எனத்தாம் அறிந்தவாறே கூறித் தாமும் பயனை இழந்து, பிறரையும் இழப்பிப்பர்.*

*இதனால், யோகத்தில் குண்டலினி யோகம் சிவனை விளக்கி நிற்கும், என்பது கூறப்பட்டது. அது 'பிரணவ யோகம்' அல்லது 'பிராசாத யோகம்' ஆம். ஹடயோகம் அதனைச் செய்யாது என்பது கருத்து. எனவே, மோன சமாதிக்கு வாயிலாகிய யோகம் குண்டலினி யோகம் என்னும் கருத்தினால் இம்மந்திரம் இவ்வதிகாரத்ததாயிற்று.*

***2901. தெளிவுரை :-*** *விதறு படுதல் - சோர்வு உண்டாதல். 'வேறு ஆய்ந்து, இருந்து ஆய்ந்து' எனத் தனித்தனி இயையும். வேறு - முன் மந்திரத்திற்கூறிய*

**2902.** வாடா மலர்புனை சேவடி வானவர்
கூடார் அறநெறி நாடொறும் இன்புறச்
சேடார் கமலச் செழுஞ்சுடருட்சென்று
நாடா அமுதுற நாடார் அமுதமே. **15**

---

*அதற்கு வேறாக. இருந்து - மனம் ஒருங்கியிருந்து. பதறு படுதல் - பதற்றம் உண்டாதல். "பதறு படாதே" என்றதும் "இருந்து" என்றதை வலியுறுத்தியதேயாம். மறை - மந்திரம். "பழ மறை" என்றது, 'முதல் மந்திரம்' என்றபடி. அது திருவைந்தெழுத்தே.*

*"ஆதி மந்திரம் அஞ்செழுத்து" - தி.12 திருஞானசம்பந்தர் - 698*

*எனச் சேக்கிழாரும் அருளிச் செய்தார். பார்த்தல் - பொருளை ஊன்றி உணர்தல். பார்த்து - பார்த்தலால், 'பார்த்தலால், கடந்து ஒடுங்குகின்றேன்' என்க. "பாழ்" என்பது, 'பயனற்றது' என்னும் பொருட்டாய், உலகியலைக் குறித்தது. கதறுதல் - துன்புறுதல். கதறிய பாழ் - துன்புறுவதற்கு ஏதுவாய் நின்ற பாழ். கற்கக் கூடாததனைக் கூடுவதுபோல் மனத்தாற் கருதிக்கொள்ளும் இன்பம் இல்லாத உலகியலை. 'இதில் இன்பம் விளையும், விளையும்' என்று கருதி, விடாது பற்றி நிற்றல் பற்றி, அதனை, "அந்தக் கற்பனை" எனச் சுட்டிக் கூறினார். உலகியலை உதறிய பாழாவது, மாயையின் தொடர்பு சிறிதும் இல்லாத திருவருள் வியாபகம். 'அதில் நான் முன்பு போல இன்றி ஒடுங்குகின்றேன்' என்க.*

*இதனால், குண்டலி யோகத்தால் பக்குவம் எய்திய உணர்வினால் திருவைந்தெழுத்தின் பொருளை உணர உணரத் திருவருள் வியாபகத்தில் ஒடுங்கி யிருக்கும் மோன சமாதி கூடும்' என்பது வலியுறுத்தி உணர்த்தப்பட்டது. 'மேற் கூறியது யோக நிலை' எனவும், 'இது ஞான நிலை' எனவும் உணர்க.*

***2902. தெளிவுரை :-** தேவர்கள் இருவினைகளுள் நல்வினையால் விளைந்த இன்பத்திலே மூழ்கிக் கிடத்தலால் அவர்கள் சிவனது திருவடியின்பத்தை நாடுதல் இல்லை. அவ்வாறே பெருமை நிறைந்த உள்ளக் கமலத்தில் ஒளிரும் ஒளி விளக்காகிய சிவனை அடைந்து, அவன் அருளால் தானே விளையும் அமுதத்தை உண்ணவும் அவர்கள் விரும்புதல் இல்லை. (ஆயினும் தாங்கள் அமுதத்தை உண்டு வாழ்வதாகவே அவர்கள் கருதுகின்றார்கள்). அவர்கள் உண்ணும் அமுதம் அமுதமாகுமோ? (ஆகாது).*

***குறிப்புரை :-** 'அமிர்தம்' என்பதற்கு 'மிருத்யுவை (மரணத்தை) ஒழிப்பது' என்பது பொருள். அதனால் அமிர்தத்தை உண்பவர்கள் 'அமரர்' (மரித்தல் இல்லாதவர்) எனப்படுகின்றனர். ஆயினும் அவர்கள் என்றுமே இறப்பதில்லையோ? தங்கள் நல்வினை முடிந்தவுடன் மாறி, வேறு பிறப்பை அடைவர். ஆதலால், அவர்கள் உண்ணும் உணவை 'அமிர்தம்' என்றலும், அதனை*

**2903.** அதுக்கென் றிருவர் அமர்ந்தசொற் கேட்டும்
பொதுக்கெனக் காமம் புலப்படு மாபோல்
சதுர்க்கென்று வேறு சமைந்தாரைக் காணின்
மதுக்கொன்றைத் தாரான் வளந்தரும் அன்றே. **16**

---

*உண்ணும் அவர்களை 'அமரர்' என்றலும் உபசார வார்த்தைகளேயன்றி உண்மையாவன அல்ல. இதனை,*

> *"அச்சுதன், அயன், அமரர் ஆகிய பெயர் அவர்க்கு*
> *நிச்சயம்படு முகமனே யானபோல்"*

*என்னும் கந்த புராண (சூரன் - அமைச்சியற் படலம், 140)ச் செய்யுளாலும் அறியலாம். இக்கருத்து பற்றியே, 'தேவர் உண்ணும் அமுதம் அமுதமோ' என்றார். "அமுதமே" என்னும் ஏகாரம், எதிர்மறைப் பொருட்டாகிய வினாப்பொருட்டு. 'அவர் உண்ணும் அமுதம்' என இயையும்.*

*சிவனை அடைந்தோரே இறப்பின் நீங்கினோர் ஆவர் ஆதலால், அவனது திருவடியின்பமே உண்மை அமுதமாகும் அஃது உள்ளத்துள்ளே இயல்பாக என்றும் உள்ளதேயாதல் பற்றி அதனை "நாடா (தேட வேண்டாத) என்றார். 'சென்று உற நாடா' என இயைக்க. உறுதல் - பொருந்துதல். சேடு - பெருமை.*

*கற்பக மலர்க்கு வாட்டம் இன்மையால், "வாடா மலர் புனை வானவர்" என்றார். 'இத்தகைய மலரைச் சூடுதல் பற்றியும் அவர்க்கு ஒரு செருக்கு உள்ளது' என்பதைக் குறித்தபடி. "சேவடி" என்பதை, இரண்டாம் அடியின் முதற்கண் வைத்து, 'வானவர், அறப் பயனாம் இன்பம் நாள்தோறும் உறுதலால் சேவடி நாடார்' என்க. "நெறி" என்றது முன்னர் அதனின் நின்ற ஒழுக்கத்தையும், பின்பு அதன் பயனையும் குறித்து நின்றது. 'அறப் பயன் இன்பம் சுவர்க்க இன்பமே' என்பதும், 'அது நிலையற்றதாகலின் இன்பம் ஆகாது என்பதும்' கூறியவாறு. "கொன்றைத் தொங்கலான் அடியவர்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே" (தி.2 ப.41 பா.7) என்றார் ஆளுடைய பிள்ளையார்.*

> *"பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கும்*
> *இசைத்து வருவினையில் இன்பம்"*

*என்பது சிவஞான போதம் (சூ.8 அதி.1) 'சுவர்க்க இன்ப மயத்தால் தேவர் சிவனை நாடுதல் இல்லை' என்றருளிச் செய்த இக்கருத்தே, பற்றி*

> *"தேவர் கனாவிலும் கண்டறியாச் செம்மலர்ப் பாதங்கள்"*
> *- தி.8 திருப்பொற்சுண்ணம், 16*

*என ஆளுடைய அடிகளும் அருளிச் செய்தார்.*

*தேவர்களது செருக்கைக் கூறிய இதனால், மக்கள் செருக்குச் சிவனை நாட*

**2904.** தானும் அழிந்து தனமும் அழிந்து
ஊனும் அழிந்து உயிரும் அழிந்துடன்
வானும் அழிந்து மனமும் அழிந்தபின்
நானும் அழிந்தமை நானறி யேனே. 17

---

*ஒட்டாமையை உணர்த்தி, 'உலகியல் மயக்கம் அற்றோர்க்கே மோன சமாதி கூடும்' என்பது உணர்த்தப்பட்டது.*

***2903. தெளிவுரை :-*** *காமக் கலவிக்கு உரியராய் அமைந்த இருவர் (ஒருவனும் ஒருத்தியும்) அது பற்றித் தம்முட் குறிப்புச் சொற்களால் உரையாடுதலை எதிர்பாராத வகையில் கேள்வியளவிற் கேட்டலும் அவரோடு ஒத்த பருவத்தினர்க்கு அடங்கியிருந்த காமக்குறிப்புச் சடக்கென அவர் உள்ளத்தில் எழுந்து அவரைத் தன் வயப்படுத்துதல் போல, மோக சமாதிக்கு உரியராய் உலகரோடு சேராது தனித்திருக்கும் ஞானியரை எதிர்பாராத வகையில் கண்ணாற் கண்டாலும் அவரோடு ஒத்த ஞானியர்க்கு, அடங்கியிருந்த மோன சமாதி அப்பொழுதே சடக்கெனமிக்கெழுந்து, அவரைத் தன்வயப் படுத்தும்.*

***குறிப்புரை :-*** *"அதுக்கு" 'அதற்கு' என்பதன் மரூஉ. பின்வரும் "காமம்" என்பதைச் சுட்டுகின்ற அது என்னும் சுட்டுப் பெயர், செய்யுளாகலின் முன்னர் வந்தது. 'என்ற' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. என்ற - என்று அமைந்த. அமர்தல் - விரும்புதல். "கேட்டும்" என்னும் உம்மை இழிவு சிறப்பு. உவமையில் வந்த இவ்வும்மைக்கு ஏற்புடைப்பொருளிலும் 'காணவும்' என உம்மை விரித்துரைக்க. சதுர் - பொதுக்கு, என்பது விரைவுக் குறிப்பாய் நாட்டு வழக்கு இடைச்சொல். இது, 'பொசுக்கு' என்றும் வழங்கும். பெருமை அஃது இங்கு அதிகாரத்தால் மோன சமாதியைக் குறித்தது. 'மதுக் கொன்றைத் தாரானது வளம்' என ஆறாவது விரிக்க. அவ்வளமாவது, அவனது ஆனந்தம். அந்த ஆனந்த நிலையே மோன சமாதியாதலை அறிக. அன்றே - அப்பொழுதே 'காணினும் அக்காட்சி வளம்தரும்' என்க.*

*இதனால், 'மோன சமாதி எய்தினார், உலகியலின் தாக்குதலால் அஃது இழக்கப்படாமைப் பொருட்டு அதில் உறைத்து நின்றாரொடு கூடியிருக்க' என்பது கூறப்பட்டது.*

***2904. தெளிவுரை :-*** *நான் மோன சமாதியில் மூழ்கிவிட்டபொழுது எனக்கு அந்த நிலையை வருவித்த குருவும் தோன்றவில்லை. அவர் அளித்தருளிய செல்வமாகிய ஞானமும் தோன்றவில்லை. அவரால் தூய்மை செய்யப்பட்ட உடம்பும் தோன்றவில்லை. அந்த உடம்பை ஆட்டிப் படைத்த உயிரும் தோன்றவில்லை. அந்த உடம்போடு கூடி நான் இருந்த இடமும் தோன்றவில்லை. உடம்பிற்கு உள்ளும், வெளியுமாய் அலைந்து கொண்டிருந்த மனமும்*

*தோன்றவில்லை. அந்த மனத்திற்குமேல் அதன் செயலை ஆராய்ந்து நின்ற அகங்காரம் புத்தி சித்தங்களும் தோன்றவில்லை. கடைசியாக, 'நான், நான்' என்று என்னால் சொல்லப்பட்டும் உணரப்பட்டும் வந்த அந்த ஆன்மாவும் தோன்றவில்லை. இவையனைத்தும் தோன்றாமல் எப்படி எங்கே மறைந்துவிட்டன என்பது எனக்குத் தோன்றவில்லை.*

***குறிப்புரை :-*** *'அழிந்தன' என்றது, புலனாகாமை பற்றியேயாம். ஏனெனில், அந்தச் சமாதி நிலையினின்றும் பிரிந்த வழி இவ்வாறு சொல்லும் சொற்கள் நிகழ்தலானும், அழிந்தவை மீள இவ்வாறு நின்று சொல் நிகழ்த்தா ஆகலானும் என்க.*

*'இவையெல்லாம் முன்னர்த் தோன்றினமை வெறும் கற்பனை யாகலின், கற்பனை கழியவே அவையும் தோன்றுதல் இலவாயின. ஆகவே, "அழிந்தன" என்றது, "அழிந்தன" என்று கூறியதேயாம்' என்பாரும் உளர்.*

> *"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்*
> *பதியினைப் போற்பசு பாசம் அனாதி"   - தி.10 பா.114*

*எனவும்,*

> *"அண்டங்கள் ஏழும் கடந்தகன் றப்பாலும்*
> *உண்டென்ற பேரொளிக் குள்ளே உளஒளி"   - தி.10 பா.2353*

*எனவும், மற்றும் இன்னோரன்னவாக மேலெல்லாம் கூறிவந்த நாயனார்க்கு அது கருத்தாகாமை யறிக.*

*"உயிர்" என்றது, உடம்பை இயக்கி நிற்கும் நிலையை, "வான்" என்பது இடத்தைக் குறித்தது. மனத்தைக் கூறவே, இனம் பற்றி ஏனை அந்தக் கரணங்களும் கொள்ளப்பட்டன. "நான்" என்றது ஆன்மாத் தன்னைப் பதி பாசங்களின் வேறாக அறிந்து நின்ற நிலையை. 'நான்' என்பது அழிந்தபின் பிற அழிந்தவாற்றை அந்த 'நான்' எனப்பட்டது. எங்ஙனம் அறிதல் கூடும்? கூடாமையின், "நான் அறியேன்" என்றார். "அழிந்து" என்னும் எச்சங்கள் எண்ணின்கண் வந்தன. உம்மைகள் எண்ணும்மைகள்.*

*இதனால், 'மோன சமாதி எய்தினோர் மது உண்டவண்டு, அந்த மது மயக்கத்திலே தன்னையும் அறியாது கிடத்தல்போல சிவானந்தத்தை நுகர்ந்து அந்த நுகர்ச்சியில் தம்மையும் மறந்திருப்பார்கள்' என்பது கூறப்பட்டது.*

> *"ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டென் உள்ளமும்போய்,*
> *நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ"*
>
> *- தி.8 திருத்தெள்ளேணம், 18*

*என்னும் திருவாசகத்தை இங்கு ஒப்பு நோக்குக.*

**2905.** நிற்றல் இருத்தல் கிடத்தல் நடைஓடல்
பெற்றுஅக் காலும் திருவருள் பேராமல்
சற்றியேல் ஞானம்தந்து ஆனந்தம் தங்கவே
உற்ற பிறப்பற்று ஒளிர்ஞான நிட்டையே. **18**

**2906.** இருளும் வெளியும் இரண்டையும் மாற்றிப்
பொருளிற் பொருளாய்ப் பொருந்தஉள் ளாகி
அருளால் அழிந்திடும் அத்தன் அடிக்கே
உருளாத கல்மனம் உற்றுநின் றேனே. **19**

---

***2905. தெளிவுரை :-*** *('இம்மந்திரம் அதிகப்படியாக உள்ளது' எனப் பதிப்புகளில் குறிக்கப்பட்டபோதிலும் இங்கு இருத்தற்குரியதே).*

*மோன சமாதியை அடைந்தோர் பின்பு உலகத்தில் ஒன்றோடொன்று மாறுபட்ட செயல்களைச் செய்தபோதிலும் திருவருள் உணர்வு சலியாது நிற்றலால் சிவஞானம் திரிபெய்தல் இன்மையால் சிவானந்தானுபவமும் குறையாது. அவர்கட்கு இனிப்பிறப்பும் இறப்பும் இல்லை இஃதே நிருவிகற்ப சமாதியாகிய நிட்டை நிலையாம்.*

***குறிப்புரை :-*** *"சற்று" என்பதன்பின் 'சற்றும்' என உம்மை விரித்து, "பேராமல்" என்பதற்கு முன்னே கூட்டுக. 'தங்குதலால் பிறப்பற்றது' என்க. ஒளிர்தல், மாசற்று விளங்குதல். 'நிட்டை' என்பதன்பின், 'ஆம்' என்பது வருவித்து முடிக்க.*

*இதனால், மோன சமாதியை முற்றப்பெற்று நின்றோர் உலகியல் தாக்குதலால் சலித்தல் இல்லை என்பது கூறப்பட்டது.*

***2906. தெளிவுரை :-*** *'கேவலம், சகலம்' என்னும் இரு நிலைகளையும் கடந்து சுத்த நிலையை எய்தி, அதில் மேற்பொருள் மேற்பொருளேயாயும், கீழ்ப்பொருள் கீழ்ப்பொருளேயாயும் விளங்க, அந்த மேற்பொருளுக்குள்ளே அடங்கியதனால், இடையிட்ட முன் மந்திரத்திற் கூறியபடி அனைத்தும் திருவருளால், தோன்றாது மறைவதாகிய சிவனது திருவடி நிழலில், சிறிதும் நகர்ந்து அப்பாற் செல்லாத கல்போன்ற உணர்வை நான் இப்பொழுது பொருந்தி நிற்கின்றேன்.*

***குறிப்புரை :-*** *கேவல நிலையில் யாதும் தோன்றிற்றிலது. சகல நிலையில் மேற்பொருள் கீழ்ப்பொருளாயும், கீழ்ப்பொருள் மேற்பொருளாயும் மாறித் தோன்றின. அவ்விரண்டும் குற்றம் ஆகலின், 'சுத்தத்தில் அவை உள்ளவாறு விளங்கின' என்பார். "பொருளிற் பொருளாய்ப் பொருந்த உள்ளாகி என்றார். "ஆகி" என்றது, ஆகினமையால்' எனக் காரணப்பொருட்டாய் நின்றது. "அத்தன் அடி" என்பது திருவருள் வியாபகமே. "அடிக்கு" என்பது, ஏழாவதன் பொருளில் நான்காவது வந்த உருபு மயக்கம். "மனம்" என்றது உணர்வை. சிறிதும் சலியாமை பற்றி, 'கல்போன்றது' என்றார். அவ்வாறு நிற்றலே உறைத்து நிற்றலாம்.*

**2907.** ஒன்றிநின் றுள்ளே உணர்ந்தேன் பராபரம்
ஒன்றிநின் றுள்ளே உணர்ந்தேன் சிவகதி
ஒன்றிநின் றுள்ளே உணர்ந்தேன் உணர்வினை
ஒன்றிநின் றேபல ஊழிகண் டேனே. **20**

---

*இதனால், முன் மந்திரத்திற் கூறிய சலியா நிலை உவமை முகத்தால் வலியுறுத்தி உணர்த்தப்பட்டது.*

***2907. தெளிவுரை :-*** *நான் வெளியே எங்கெங்கு ஓடி ஓடி அலைந்ததை விட்டு, எங்கும் செல்லாது என்னளவுக்கு நின்று, என்னிடத்திலே என் அறிவை ஒன்ற வைத்து என்னுள் தானே நோக்கினேன். அப்பொழுது பரம்பொருள் காட்சிப்பட்டு பின் அதனை அடைந்து இன்புறும் வழியும் தோன்றிற்று. அவ்வழியாவது என் அறிவுக்கறிவாய் இருந்து பெத்தம், முத்தி இரண்டிலும் அறிவித்து வரும் திருவருளை அறிவாற் பற்றுதல். ஆயினும் இவைகளை நான் உணர்தற்கு எனக்குப் பல ஊழி சென்று விட்டன.*

***குறிப்புரை :-*** *'சிவம்' என்பது, இங்கு 'பேரின்பம்' எனப்பொருள் தந்தது. 'கதி, மார்க்கம், வழி' என்பன ஒரு பொருட் சொற்கள். 'பேரின்ப வழி' என முன்னர்ப் பொதுவாகச் சுட்டிப் பின்னர் அதனை ''உணர்வு'' என விளக்கியருளினார். உணர்வு - உணர்வுக்கு உணர்வு; திருவருள். "தம் உணர்வின் தமி அருள்" என்றார் சிவஞான போத (சூ.5.11)த்திலும், 'திருவருளின் இடையறா உதவியை அறிந்து, அதன்கண் இடையறாப் பேரன்பு செய்தலே பேரின்ப வழி' என்பதை, ''அயரா அன்பின் அரன்கழல் செலுமே'' என்னும் சிவஞான போதத்தாலும் அறிக.*

> *"தேடிக் கண்டு கொண்டேன் - திரு*
> *மாலொடு நான்முகனும்*
> *தேடித் தேடொணாத் தேவனை என்னுள்ளே*
> *தேடிக் கண்டு கொண்டேன்" - தி.4 ப.9 பா.12*

*என அப்பர் பெருமானும் தாம் சிவனைக் கண்டுகொண்ட முறையை இங்ஙனமே அருளிச் செய்தவாறு அறிக.*

> *"பல்லூழிக் காலம் பயின்றரனை அர்ச்சித்தால்*
> *நல்லறிவு சற்றே நகும்"*

*என்ப ஆகலான், இந்நிலை வாய்த்தற்கு ஒரு பிறப்பில் செய்யும் தவம் போதாது; பல பிறப்புக்களில் தவம் செய்தல் வேண்டும். ஆகலின், "ஒன்றி நின்றேன் பல ஊழிகண்டேனே'' என்று அருளியதன் உண்மையை உணர்க. இதில் சொற்பொருட் பின்வருநிலையணி வந்தது.*

*இதனால், மோன சமாதியை அடையும் வழியும், அதனை உணர்தல் பற்றல்களின் அருமையும் கூறி முடிக்கப்பட்டது.*

## 26. வரையுரை மாட்சி

*வரை உரை - பல சொல்ல வேண்டாது, ஒன்றே போதுமானதாக அமைந்த சொல். அது 'பெரும்பெயர்' என்றும், 'மகா வாக்கியம்' என்றும் சொல்லப்படும். அது வேதாந்தத்திலும், சித்தாந்தத்திலும் இருத்தலும், அதன் பொருளும் முன் தந்திரத்தில் சொல்லப்பட்டன. எனினும் அவை அங்குச் சாதனமாகச் சொல்லப்பட்டமையானும், சாத்தியத்தை அடைந்த பின்பும் அது நிலை பெறுதற்கு அவ்வுரை வேண்டப்படுதலானும் முன்னர்க் கூறியவற்றுட் சிலவற்றை இத்தந்திரத்தில் வலியுறுத்தி வரும் முறையில் அவற்றின் சிறப்பையும் இங்கு வலியுறுத்திக் கூறுகின்றார். 'உண்மையில் சித்தாந்த மகாவாக்கியம் திருவைந்தெழுத்தே' என்பது இத்தந்திரத்தில் மேலே காட்டப்பட்டது.*

**2908.** **தான்வரை வற்றபின் ஆரை வரைவது**
**தான்அவன் ஆனபின் ஆரை நினைவது**
**காமனை வென்றகண் ஆரை உகப்பது**
**தூமொழி வாசகம் சொல்லுமின் நீரே. 1**

---

*2908. தெளிவுரை :- தூய்மையாகிய சுத்தாவத்தையைப் பயக்கும் முத்தி பஞ்சாக்கரக் கணிப்பினால் ஓர் ஆன்மா தனது ஏகதேச உணர்வாகிய சுட்டுணர்வு கழியப் பெற்ற பின் அஃது யாரை வரைந்து சுட்டியுணரப் போகின்றது? இனி அது தான் சிவமாகி விட்டபின்பு யாரைத் தியானப் பொருளாக வரைந்து கொண்டு தியானிக்கும்? அவாவின் வேரையே அஃது அறுத்து விட்ட பின்பு அஃது யாரை விரும்பும்? மாணவர்களே, நீங்களே சொல்லுங்கள்.*

*குறிப்புரை :- 'இவற்றிற்கெல்லாம் சிறிதும் இடம் இல்லை' என்பது கருத்து. வினாக்கள் யாவும் இன்மையைக் குறிப்பால் உணர்த்தி நின்றன. 'உலகத்தை உணர்வது சுட்டுணர்வினாலும், விருப்பு, வெறுப்புக்கள் தோன்றுதல் அச்சுட்டுணர்வின் பயனாலும் ஆகலின் சுட்டுணர்வு நீங்கவே அவையெல்லாம் இயைபின்றி நீங்கும்' என்பதும் கருத்து. காமன் - மன்மதன். அவன் அவாவின் வேருக்கு ஓர் உருவகம்.* ***'அவன் சிவனது நெற்றிக்கண் முன் நில்லான் ஆகலின், சிவ ஞானியர் கண்முன்னும் நில்லான்'*** *என்னும் நயம் தோன்றச் சிவஞானியரது அறிவை, காமனை வென்ற கண்' என்றார். 'சுட்டுணர்வு நீங்கவே, சிவத்தையும் ஆன்மாத் தன்னின் வேறாக வைத்துச் சுட்டியுணர்தல் இன்றித் தன்னுள்ளே அறிவுக்கறிவாக அநந்நியமாய் நின்று உணரும்' என்பது "ஆரை" நினைவது என்பதனால் குறிக்கப்பட்டது. ஆன்மாச் செயற்கையாய் எய்திய சுட்டுணர்வு நீங்குதல் பாச நீக்கத்தாலும், இயற்கையாகிய வியாபக உணர்வைப் பெறுதல் சிவத்தைத் தலைப்படுதலாலும் ஆதல் பற்றி, வியாபக உணர்வு எய்தினமையை, "தான் அவன் ஆதல்" என்றார். இம்மந்திரம் ஈரடி எதுகை பெற்றது.*

*இதனால், முத்தி பஞ்சாக்கரமாகிய வரையுறை சீவனைச் சிவமாக்கியருளும் மாட்சிமை கூறப்பட்டது.*

**2909.** உரையற்ற தொன்றை உரைசெயும் ஊமர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போலச் சிந்தைதெளி வார்க்குப்
புரையற் றிருந்தான் புரிசடை யோனே. 2

---

***2909. தெளிவுரை :-*** *'கடலுக்குக் கரை யில்லை' என்பது தெளிவு. ('கரை' எனப்படுவன எல்லாம் தீவுகளே) அங்ஙனமாகவும் அதற்குக் கரையிருப்பதாகக் கருதிக்கொண்டு, அந்தக் கரையைச் சென்று காண முயலுதல் அறிவுடைமை யாகுமோ? ஆகாது. அதுபோலச் சிவம் வியாபகப் பொருள்; சொல்லிற்குள்ளும் அடங்குவதன்று. அவ்வாறிருக்கவும், மாணவர்களே, நீங்கள், 'சீவத்தை யாம்சொல்லாற் சொல்லி உணர்த்திவிடுவோம்' என்று உணர்த்த முயல்வீர் களேயானால், ஊமன் தனது கருத்தைப் பிறர்க்குத் தெளிவாக உணர்த்த முயலுங்கால் அடையும் இடர்ப்பாடுகளைத் தான் அடைவீர்கள். அடைந்தாலும் உங்கள் கருத்து நிறைவுறாது. உண்மையென்ன வெளில், 'அலையில்லாத கடல் ஒன்று இருக்குமேயானால் அதனோடு ஒத்துச் சிறிதும் சலனம் அற்றுத் தெளிந்த விரிந்த அறிவினை யுடையாரது அறிவில் சிவன் வரம்பில் பொருளாய் ஒளிர்க்கின்றான்' என்பதே.*

***குறிப்புரை :-*** *'பஞ்சாக்கரத்தை அறியும் முறையில் அறிந்து, ஓதும் முறையில் ஓதினால், அஃது இந்தத் தெளிந்த அறிவைத் தந்துவிடும்' என்பது கருத்து. முன்னிரண்டடிகளில் வேற்றுப் பொருள் வைப்பணி வந்தது. "நீர்" என்றது கரையற்ற நீரை ஆதலால், அது கடல் நீரேயாயிற்று. "திரையற்ற நீர்போல்" என்றது இல்பொருளுவமை. புரை - சிற்றிடம் அஃது ஏகதேசம் (ஒரு புடை) என்பதைக் குறித்தது. "உரையற்ற தொன்று" என்றதனால், முத்தி பஞ்சாக்கரத்தையும் சுத்தமானதம் ஆக அறிவாற் கணித்தலே இங்கு விதிக்கப்பட்டதாம்.*

*இதனால், முத்தி பஞ்சாக்கரத்தை அறியும் முறை ஓதும் முறைகளின் மாட்சிமை உணர்த்தப்பட்டது.*

***2910. தெளிவுரை :-*** *மாயையின் உண்மை யாதாயினும் பொதுவாக 'மாயை, மாயை' எனச் சொல்லிப் பலரும் முறை செய்வன எல்லாம் மாயா காரியங்களுள் ஒன்றாகிய மனத்தைக் குறித்தேயாம். ("மனம் வரும்"). இந்த மனமாகிய மாயை, 'பிறரை மயக்குவது' என்பது இல்லாமல் அது மயங்கும்படி செய்க. அஃதாவது, 'அதன் கொட்டம் அடங்கும்படி செய்க' என்பதாம். மனம் அடங்கிவிட்டால், ஆன்மாவை அலைப்பது வேறு எதுவும் இல்லை. ஆகவே, அப்பால் அடங்க வேண்டுவதாகவும் எதுவும் இல்லை. மனத்தின் வழிப்பட்டு உள்ளத்தில் தோன்றியவற்றைத் தோன்றியவாறே பலபடப் பேசும் பேச்சுக்களும் அற்றொழியும். அப்பால் புறப்பொருள்களைத் துருவித் துருவி ஆராய்வதை விடுத்து, "நான் ஆர், என் உள்ளம் ஆர், ஞானங்கள் ஆர்" (தி.8 திருக்கோத்தும்பி-*

**2910.** மனமாயை மாயைஇம் மாயை மயக்க
மனமாயை தான்மாய மற்றொன்றும் இல்லை
பினைமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டா
தனைஆய்ந் திருப்பது தத்துவந் தானே. **3**

---

*2) என்பன போல உள்நோக்கி ஆன்மாத் தன்னையும், தலைவனையும் ஆராய்ந்து உணர்வதே மெய்ப்பொருளைக் கூட்டுவிக்கும் மெய்யுணர்வாகும்.*

*குறிப்புரை :- மனமாயை, 'மனமாகிய மாயை' என இருபெயர் ஒட்டு. இதில், ''மாயை'' என்பது அதன் காரியத்தைக் குறித்தது. 'இம்மாயையை' என இரண்டாவது விரிக்க. 'மயக்க' என்பது அகர ஈற்று வியங்கோள். பின்வந்த "மனமாயை", 'இது' என்னும் சுட்டுப்பெயரளவாய் நின்றது. தான், அசை, "வேண்டா" என்பது, வேண்டப்படாதாய் அற்றொழிதலைக் குறித்தது. 'தன்னை' என்பது இடைக்குறைந்து, 'தனை' என நின்றது. தன்னை ஆய்தல் கூறவே, அதனோடு உடன் நிகழ்வதாகிய தலைவனை ஆய்தலும் கொள்ளப்பட்டது. பிறவற்றை ஆராயாது, தன்னையும், தலைவனையும் ஆராய்தலை மட்டுமே கூறினமையாயினும், இந்த ஆராய்ச்சி அருள்வழி நிகழ்வதேயாகலானும் 'திருவைந்தெழுத்தில் பாச எழுத்துக்கள் இரண்டை நீக்கி ஏனை மூன்றெழுத்தையே கொண்டு உணர்க' என மறைபொருளாக உணர்த்தியதாயிற்று. 'முத்தி பஞ்சாக்கரமாவது இதுவே' என்பது, மேல் 'ஐந்தெழுத்து' அதிகாரத்தில் சொல்லப்பட்டது. 'இதனைக் கணித்தல்' என்பதும் சுத்தமானதமாக அறிவாற் கணித்தலேயாதல், முன் மந்திரத்தில் "திரையற்ற நீர்போல்" என உவமையாற் கூறப்பட்டது. இங்கு "மன மாயைதான் மாய" என்றதனால் நேரே கூறப்பட்டது.*

*இதனால், 'பஞ்சாக்கரத்தை முத்தி பஞ்சாக்கரமாகக் கொண்டு, அதனையும் 'வாசகம், உபாஞ்சு, மானதம்' முறைகளுக்கு அப்பாற்பட்ட சுத்த மானத முறையிலே கணிப்பின் முத்திப் பயன் உளதாகும்' என அதன் மாட்சிமை உணர்த்தப்பட்டது.*

## 27. அணைந்தோர் தன்மை

*முன் அதிகாரத்தில் வலியுறுத்தி இனிது விளக்கப்பட்ட மோன சமாதியாகிய சிவானந்தப் பேற்றினை எய்தினாரது இயல்பை இவ்வதிகாரத்தால் உணர்த்துகின்றார். இஃது இருபத்திரண்டு மந்திரங்களையுடையது. மோன சமாதியே ஞான நிட்டை என்க. திருவருட் பயனிலும் இறுதியதிகாரம் இப்பெயரினது ஆதலை யறிக.*

**2911.** மலமில்லைமாசில்லை மானாபி மானம்
குலமில்லை கொள்ளும் குணங்களு மில்லை
நலமில்லை நந்தியை ஞானத்தி னாலே
பலம்மன்னி அன்பில் பதித்துவைப் பார்க்கே. **1**

---

*2911. தெளிவுரை :- ஞானத்தைப் பெற்று அதன் பயனாகச் சிவத்தில் புறம் போகாது, அன்பினால் தம்மை ஆழ்த்தி வைத்திருப்பவர்கட்குப் புறத்தோற்றம் உலகத்தாரது தோற்றத்தோடு ஒத்துத் தோன்றினும், உண்மையில் அவை இல்லையாம்.*

*குறிப்புரை :- மலம், ஆணவம் அஃது இங்கு ஆகுபெயராய், 'யான், எனது' என்னும் செருக்கினைக் குறித்தது. உலகத்தார்போல இவர்களும், 'யான் செய்தேன்; பிறர் செய்தார்' என வழங்கற்பாடு பற்றிக் கூறினாராயினும் அவர் உணர்வு, 'எல்லாம் சிவன் செய்தது' என்றே உணர்ந்திருக்கும். மாசு - குற்றம். அஃது அவர் செய்த செயலால் விளையும் புண்ணியமும், பாவமும். புண்ணியமும் பிறவியைத் தருதலின் குற்றமேயாதல் அறிக. பாம்பு கடித்து இறந்த வணிகன் ஒருவனையும், அப்பூதியடிகள் மகனையும் உயிர்பெற்றெழச் செய்தும், முதலை வாயில் அகப்பட்டு இறந்த அந்தணச் சிறுவனை அவனது வளர்ச்சியோடு மீட்டும் வணிகக்கன்னி யொருத்தி, அப்பூதியடிகளும், அவர்தம் துணைவியாரும், அந்தணப் பெற்றோரும் ஆகியோர்க்கு யாதொரு கைம்மாறும் வேண்டாமல் பெருநலம் தந்து உதவிய சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவர் முதலிகட்கும் அவற்றால் யாதொரு புண்ணியமும் விளையாமையையும், தாதையைத் தாள்அற வீசிய சண்டேசுரருக்கு அதனால் யாதொரு பாவமும் விளையாமையையும் அறிக. இவர்கட்குப் புண்ணியமும், பாவமும் விளைந்திருப்பின் இந்திராதி தேவர்கள் வாழும் சுவர்க்கத்திலும், பாதகன் சென்றடையும் நரகத்திலும் சென்றிருத்தல் வேண்டும். அவை அவர்க்கு இல்லாது போயினமை வெளிப்படை.*

*மானமாவது, தம்மைப் பிறர் இழிவு படுத்துதலைப் பொறுக்க மாட்டாமை, அப்பரைச் சமணர்கள்,*

> *"தவ்வை சைவத்து நிற்றலின், தருமசேனரும் தாம்*
> *பொய்வகுத்ததோர் சூலை தீர்ந்திலதெனப் போயினார்"*
>
> *- தி.12 திருநாவுக்கரசர் - 83*

*என அரசனிடத்திற் கட்டிக் கூறி,*

> *“தலைநெறியாகிய சமயந் தன்னை அழித்து; உன்னுடைய*
> *நிலைநின்ற தொல்வரம்பின் நெறியழித்த பொறியிலி”*
>
> *- தி.12 திருநாவுக்கரசர் - 89*

*எனப் பலர்முன் இகழ்ந்தபோதும் வாளா இருந்ததை எண்ணுக.*

*அபிமானம் - பற்று. அஃதாவது, உடம்பும், தாய் தந்தையர், மனைவி, பிறர் ஆகிய சுற்றமும், பொன், பொருள், மக்கள், மாட மாளிகை, காணி முதலிய செல்வமும் ஆகியவற்றைத் துறக்க விரும்பாமல், அவை தாமே நீங்கும் நிலைமை எய்தியவழி உயிர் போவது போலக் கையற வெய்துதல். இந்நிலை நாயன்மாரிடத்து இல்லாமை தெளிவு.*

*குலம் இல்லாமை திருநீல நக்க நாயனார் திருநீல கண்டப் பாணருக்கு அவர் தம் துணைவியாரோடும் இரவுப் பொழுதைக் கழிக்க வேள்வி அறையை அளித்ததில் இனிது விளங்கிற்று.*

*“கொள்ளும் குணங்களும் இல்லை” என்றதனால், ‘தள்ளும் குற்றங்களும் இல்லை’ என்பது போந்தது. அவை, ‘நியமம்’ என யோக உறுப்புக்களுள் ஒன்றாக வைத்துச் சொல்லப்படும் விதி முறைகள். குற்றங்கள், அவற்றிற்கு எதிரவாயுள்ள விலக்குமுறைகள். அவற்றை விலக்கியொழுகல், ‘இயமம்’ எனப்படும். மோன சமாதியில் நிற்போர் உலகை மறந்திருத்தலால், ‘இவைகள் அவர்பால் கட்டாயமாக நிகழும்’ என்பது இல்லை.*

*நலமாவது இன்பம். இதனானே தீங்கும் பெறப்பட்டது. ‘நலத்தில் விரும்பும், தீங்கில் வெறுப்பும் அவர்பால் நிகழா’ என்பதாம். “ஓடும்” செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்” என அருளிச் செய்தமை காண்க. “நலந்தீங்கிலும் உன்னை மறந்தறியேன்” (தி.4 ப.1) என்றதனையும் நோக்குக.*

*‘இவற்றையெல்லாம் இவர்கள் தாமே வலிந்து நீக்காது, உறங்கினோன் கையிலிருந்த பொருள் அவனையறியாது தானே வீழ்ந்துவிடுதல்போல, மோன சமாதியை அடைந்த இவர்களிடத்திலிருந்து தாமே நீங்குவன’ என்பதை,*

> *“உறங்கி னோன்கை வெறும்பாக் கெனவும்*
> *தானே தவிரா தானால், புரியாது*
> *ஒழித்திடில் நிரயத் தழுந்துதல் திடமே”*

*என்னும் சங்கற்ப நிராகரண (மாயாவாதி நிராகரணம் - 234 - 36)த்தால் அறிக.*

> *ஞாலமதில் ஞான நிட்டை யுடையோ ருக்கு*
> *நன்மையோடு தீமையிலை; நாடுவதொன் றில்லை;*
> *சீவமில்லை; தவமில்லை; விரதமொடாச் சிரமச்*
> *செயலில்லை; தியானமில்லை; சித்தமல மில்லை;*

**2912.** ஒழிந்தேன் பிறவி உறவெனும் பாசம்
கழிந்தேன் கடவுளும் நானும்ஒன் றானேன்
அழிந்தாங் கினிவரும் ஆக்கமும் வேண்டேன்
செழுஞ்சார் புடைய சிவனைக்கண் டேனே. **2**

---

*கோலமிலை; புலனில்லை; கரண மில்லை;*
*குணமில்லை; குறியில்லை; குலமுமில்லை;*
*பாலருடன் உன்மத்தர் பிசாசர்குணம் மருவிப்*
*பாடலினோ டாடல்இவை பயின்றிடினும் பயில்வர்.*

*என்ற சிவஞான சித்தி (சுபக்கம் - சூ. 8.32)க்கும் இதுவே கருத்தென்க.*

*ஞானத்தினாலே நந்தியைப் பலம் மன்னி அன்பில் பதித்து வைப்பார்க்கு' என்பதை முதலிற் கூட்டியுரைக்க. பலம் - பயன். 'பலமாக' என ஆக்கம் விரிக்க.*

*இதனால், சிவனை அனுபவமாக அணைந்தோர், தோற்றத்தில் உலகர் போலவே காணப்படினும் அவரது நிலை முற்றிலும் வேறாதல் கூறப்பட்டது. இத்தன்மை யுடையாரே 'சீவன் முத்தர்' எனப்படுவர்.*

***2912. தெளிவுரை :-** நல்லதொரு வளமான சார்பாய் உள்ள சிவனை நான் சார்ந்துவிட்டேன். அதனால், முன்பு எனக்குச் சார்பு போலத் தோன்றி என்னைப் பிறவிக் கடலிலே அலைய வைத்த பாசங்களினின்றும் நீங்கிவிட்டேன். இப்பொழுது நான் அப்பாசங்கட்கு மேலே போய்விட்டேன். 'பரம்பொருள் வேறு நான் வேறு' என்பதன்றி, 'ஒன்றே' எனப்படும் நிலையை 'எய்தினேன்? ஆகவே, இறப்பதும், பின் பிறப்பதும் இனி எனக்குத் தவிர்க்க முடியாத சூழல் இல்லை'.*

***குறிப்புரை :-** ஈற்றடியை முதற்கண் கூட்டி உரைக்க, "கழிந்தேன்" என்பது அவற்றின் நீங்கி உயர்ந்தேன்' எனப் பொருள் தந்தது. 'ஒன்று ஆனேன்' என்பது 'ஒன்று எனச் சொல்லப்படும் நிலையினன் ஆயினேன்' என்றபடி.*

*ஆக்கம் - பிறப்பு. தம் குறிப்பின்றியும் வருவனவற்றைக் குறிப்பொடு கூடி வருவன போல, "வேண்டேன்" எனக் கூறியது இலக்கணை வழக்கு.*

*இதனால், மோன சமாதியை அடைந்தவர்க்கு ஏனை யோர்க்கு உளவாகும் துன்பங்களுள் யாதும் இல்லாமை கூறப்பட்டது. "இன்பமே எந்நாளும்; துன்பம் இல்லை" (தி.6 ப.98 பா.1) என அருளிச் செய்ததையும் நோக்குக.*

***2913. தெளிவுரை :-** ஆலையில் இடப்பட்ட கரும்பும், சோறும், வெல்லக் கட்டியும், சோலையின் நடுவில் உள்ள பொய்கை நீரும் ஆகியவற்றை உடையது எங்கள் நாடு. அதில் அழகிய சாலம் வல்ல பெண்ணொருத்தி யுள்ளாள். அவள் மயிலின் தோகையில் காணப்படும் வியத்தகு 'புள்ளிகளைப்போல் பல*

**2913.** ஆலைக் கரும்பும் அமுதும் அக் காரமும்
சோலைத்தண் ணீரும் உடைத்தெங்கள் நாட்டிடைப்
பீலிக்கண் ணன்ன வடிவுசெய் வாளொரு
கோலப்பெண் ணாட்குக் குறையொன்று மில்லையே. **3**

---

*பொருள்களை விளக்கத்தக்க வகையில் தோற்றுவிப்பாள். அதனால் பலர்க்குப் பல பயன்கள் விளைதலால் அவட்குப்புகழ் உளதேயன்றிச் சிறிதும் இகழ்வில்லை.*

***குறிப்புரை :-*** *இம்மந்திரமும் மறைபொருட் கூற்றாகவே செய்யப்பட்டது. நாடு - நின்மலாவத்தை, ஆலைக்கரும்பு - உழைத்துப் பயன் பெறல் வேண்டும். அது நின்மல சாக்கிரம். சோறு, வாளா எடுத்து விழுங்கப்படும். அது நின்மல சொப்பனம், வெறும்சோறு சுவையில்லாதது போல இதில் சிவானந்தம் போல இனிது விளையாது. அதன் உண்மை மட்டும் விளங்கும். வெல்லக்கட்டி வாயில் இட்டவுடன் இனிக்கும். இது நின்மல சுழுத்தி, துரியமும் உடன் நிகழும். இவற்றில் சிவானந்தத் தோற்றம் உளதாகும். சோலைத் தண்ணீர், குளிர்ச்சி யுடையதாய் உடல் வெப்பம் தணிந்து, உண்ணீர் வேட்கையையும் தணித்து, நீந்தி விளையாடவும் இடனாம். இது நின்மல துரியாதீதம். இதில் சிவானந்த மேலீடு உளதாம். இவற்றையெல்லாம் தந்து நிற்பது அருட்சத்தி. அதுவே கோலப்பெண். இது திரோதான சத்தியைப்போல இடரை விளைவியாது. இன்பத்தையே விளைத்தலால், இதனை உபசாரமாகக் கூட, 'மலம்' என ஒருவரும் குறைத்துக் கூறார். ஆகவே, 'இவட்குக் குறை ஒன்றும் இல்லையே' என்றார். ஏகாரம், தேற்றம். மோனசமாதியை அடைந்தோர் உடல் உள்ள அளவும் ஒரோ ஒரு கால் அதினின்றும் நீங்கிப் புறநோக்குடையராதலும் உண்டு. அந்நிலையிலும் அவர் பண்டை நிலை வந்து பற்றாதபடி நின்மலா வத்தையில் நிற்றல் அல்லது, அதற்குக் கீழ்ப்பட்ட மேலாலவத்தை மத்தியாலவத்தை கீழாலவத்தைகளில் வாரார் என்பதும் அதற்கு அவர்கட்குத் துணைநிற்பது திருவருள் என்பதும் கூறியவாறு. அணைந்தோருள் தம்மையும் உளப்படுத்திக் கூறினார் என்க. 'உடைத் தாகிய எங்கள் நாட்டிடையுள்ள பெண்ணாட்குக் குறையொன்றும் இல்லையே' என்க.*

*இதனால் மோன சமாதி யுற்றாருள் ஓரோர்கால்மீட்சி உறுவாரது செயல் கூறப்பட்டது.*

*"நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும்"*
*நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி*
*ஆசையொடும் அங்கும்இங்கும் ஆகி அலமருவோர்*
*அரும்பாசம் அறுக்கும்வகை அருளின் வழி உரைப்பாம்.*

*என்றார் சிவஞான சித்தி (சுபக்கம் - சூ. 8.39)யிலும்,*

***2914. தெளிவுரை :-*** *இதன் பொருள் வெளிப்படை.*

***குறிப்புரை :-*** *முதலடியை இறுதியில் கூட்டி, 'இனிஎன்னை ஆராலும்*

**2914.** ஆராலும் என்னை அமட்டஒண் ணாதினிச்
சீரார் பிரன்வந்தென் சிந்தை புகுந்தனன்
சீராடி அங்கே திரிவதல் லாதுஇனி
யார்பாடுஞ் சாரா அறிவறிந் தேனே. **4**

---

*அமட்ட ஒண்ணாது' என மாற்றியுரைக்க. அமட்டுதல் - அசைத்தல். நிலைகலங்கச் செய்தல். சீர் - சிறப்பு. பிறர் ஒருவருக்கும் இல்லாத அருட்குணம். 'சிந்தை' என்றது அறிவை, 'அச்சீரடி எனச் சுட்டு வருவிக்க. ஆடுதல் - பயிலுதல். 'ஊடாடுதல்' என்னும் வழக்கையும் நோக்குக. அங்கு அவனிடத்தே. திரிதல் - உலாவுதல்; செயற்படுதல்.*

*பாடு - பக்கம். சாரா அறிவு, சாராமைக்கு ஏதுவாய அறிவு. 'தான் சுதந்திரனாய் உள்ளவனைச் சார்ந்தால், நாமும் சுதந்திரமாய் வாழலாம்' என்னும் அறிவு.*

*"தாம் ஆர்க்குங் குடியல்லாத் தன்மை யான*
*சங்கரன் ...... ...... ...... ...... ...... ......*
*கோமாற்கே நாம் என்றும் மீளா ஆளாய்க்*
*கொய்ம்மலர்ச் சேவடியினையே குறுகி னோமே"*

*என நாவுக்கரசர் அருளிச் செய்தமையும் காண்க.*

*"அறிவு அறிந்தேன்" என்றது, 'அறிவைப் பெற்றேன்' என்றவாறு.*

*இதனால், 'சிவனை, பெறும் பொருளாகப் பெற்றார், எவ்வாற்றானும் பிறர்க்கு, அல்லது பிறவற்றில் அடிமையாகாது, வேண்டிய வேண்டியாங்கு எய்தி இன்புறுதல் கூறப்பட்டது. "ஒன்றாலும் குறை வில்லை" (தி.6 ப.98 பா.1) என்ற அருள்மொழியையும் காண்க.*

***2915. தெளிவுரை :-** நான் இப்பொழுது, முன்பு பிரமன் என் தலையில் எழுதி நியமித்த கட்டினின்றும் நீங்கிவிட்டேன். ("ஊழ்வினைகள் வந்து என்னை ஒன்றும் செய்யா" என்பதாம்). சிவனை அடையும் வழியைத் தெரிந்து கொண்டேன். இப்பொழுது நான் செய்யும் செயல்களால் நான் பின்பு நுகரக் கடவனவாகப் புண்ணியமோ, அல்லது பாவமோ எதுவும் முளைக்காதபடி 'ஞானம்' என்னும் கூரிய வாளால் அவைகளை அறுத்தெறிந்தேன். ('எனக்கு ஆகாமியம் இல்லை' என்றபடி). என்னை வெளியில் செல்லாதபடி தடுத்து வைத்துள்ள உடம்பாகிய சிறைக் கூடம் இடிந்து பாழாய்விடப் பெற்றேன். ஆகவே, நான் எங்கும் செல்கின்றேன். (கருவிகளின் வயப்பட்ட ஏக தேச நிலை நீங்கி, வியாபகமாகப் பெற்றேன்' என்பதாம்).*

***குறிப்புரை :-** "நிலை" என்றது வழியை. கதி - புகலிடம்.*

**2915.** பிரிந்தேன் பிரமன் பிணித்ததோர் பாசம்
தெரிந்தேன் சிவகதி செல்லும் நிலையை
அரிந்தேன் வினையை அயில்மன வாளால்
முரிந்தேன் புரத்தினை முந்துகின் றேனே. **5**

---

*"தொல்லையில் வருதல் போலத்*
*தோன்றிரு வினைய துண்டேல்,*
*அல்லொளி புரையும் ஞானத்*
*தழலுற அழிந்து போமே"* ***- சிவப்பிரகாசம் - 90***

*எனவும்,*

*ஏன்ற வினை உடலோ டேகும்; இடை யேறும்*
*தோன்றில், அருளே சுடும்.* ***- திருவருட் பயன் - 98***

*எனவும் கூறுபவ ஆகலான், "மனம்" என்றது ஞானமேயாதல் அறிக. "ஞான வாள் ஏந்தும்; ஐயர் நாதப் பறை அறைமின்" (தி.8 திருப்படையெழுச்சி-1) என்னும் திருவாசகத்தையும் காண்க.*

*தண்டா யுதமும், திரிசூ லமும் விழத் தாக்கி உன்னைத்*
*திண்டாட வெட்டி விழவிடு வேன்; செந்தில் வேலனுக்குத்*
*தொண்டா கியஎன் அவிரோத ஞானச் சுடர்வடிவாள்*
*கண்டா யடா அந்த காவந்து பார்சற்றென் கைக்கெட்டவே.*

***- கந்தலரங்காரம், 25***

*பட்டிக் கடாவில் வரும் அந்த கா! உனைப் பாரறிய*
*வெட்டிப் புறங்கண் டலாது விடேன்; வெய்ய சூரனைப் போய்*
*முட்டிப் பொருதசெவ் வேற்பெருமான் திருமுன்பு நின்றேன்;*
*கட்டிப் புறப்படடா! சத்தி வாள் என்றன் கையது வே.*

***- கந்தலரங்காரம், 64***

*என எவ்விடத்தும் ஞானமே வாளாக உருவகிக்கப்படுதலை அறிக. ("சத்தி" என்பது சிலேடை வகையால், 'சத்தி' என்னும் ஆயுதத்தையும், ஞானத்தையும் ஒருங்கே குறித்து நின்றது, சத்தி, முருகனது படைக்கலங்களுள் சிறந்த ஒன்றாதல் தெளிவு).*

*புரம் - உடம்பு. முரிந்தேன் - முரிந்ததாகப் பெற்றேன்.*

*இதனால், மோன சமாதியை எய்தினவர்க்குப் பிராரத்தமும் ஆகாமியமும் இல்லையாதலும், அதனானே தனு கரண புவன போகங்களாகிய மாயையின் மயக்கம் நிகழாமையும் கூறப்பட்டன. இக்கருத்தினை நாயனார் முன் தந்திரத்தில் (பா.2570),*

*தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்;*
*முன்னை விளையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்;*

**2916.** ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண்டீர்உல குக்குயி ராவதும்
நன்றுகண் டீர்இன் னமச்சிவா யப்பழம்
தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே. **6**

---

*பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்*
*சென்னியில் வைத்த திருவரு ளாலே.*

*எனக் கூறியருளினார். சஞ்சித கன்மம் குருவின் திருக்கண் நோக்கத்தால் எரிசேர்ந்த வித்துப்போல அப்பொழுதே கெட்டொழிந்தது. சஞ்சித கன்மம் நீங்காத வரையில் ஞானம்பிறவாது. ஆகவே, ஞானியர்க்குச் சஞ்சித கன்மம் இல்லை.*

***2916. தெளிவுரை :-*** ***'கடவுள்' என்பதும், 'தெய்வம்' என்பதும் வேறு வேறு, இரண்டும் ஒன்றல்ல. தெய்வம் எழுவகைப் பிறப்புக்களில் ஒரு பிறப்பு வகையைச் சேர்ந்தது. அது தமிழில் 'பத்தேள், அணங்கு' முதலிய பெயர்களால் குறிக்கப்படும். கடவுள் பிறப்பில்லாது, அனைத்தையும் கடந்து நிற்கும் தனிமுதற் பொருள். கடவுள் ஒன்றே; தெய்வங்கள் பல.*** *மக்கள் அவர்தம் மரபுப்படியும் விருப்பப் படியும் வேறு வேறு தெய்வங்களை வழிபடுவர். கற்புடை மகளிர் யாவர்க்கும் தெய்வம் கணவனே, கணவன் ஒரு தெய்வத்தை வழிபடுவானாயின் அவனோடு இசைந்து நின்று மனைவியும் அத்தெய்வத்தை வழிபடுவாள் ஆயினும், மனைவிக்குத் தெய்வம் கணவன் தான். இதனையே திருவள்ளுவர், "தெய்வந் தொழா அள் கொழுநற் றொழுதெழுவாள்" (திருக்குறள், 55) எனக் கூறினார். ஆகவே, மகளிர் கணவன் தொழாத தெய்வத்தைத் தாம் விரும்பி வழிபடுதல் குற்றமே யல்லது, கடவுளை வழிபடுதல் குற்றம் அன்றாம். ஏனெனில், கடவுள் யாவராலும் தொழத்தக்கவர்.*

*'மனைவி தன் கணவனைத் தவிரத் தான் ஒரு தெய்வத்தை வழிபடுதல் குற்றமே' என்பது எல்லார்க்கும் ஒப்பமுடிந்தது. இந்நிலையில், 'மனைவி கடவுளைத் தொழலாமா, தொழக்கூடாதா என்னும் வினா, சமண பௌத்த மதங்களில் இல்லை. ஏனெனில் அவை 'கடவுள் உண்டு' எனக் கொள்ளவில்லை. கடவுளைக் கொள்ளாத அம்மதங்கள், 'தெய்வங்கள் உள' என நம்புகின்றன. ஆகவே, 'மனைவி கணவனைத் தவிரப் பிற தெய்வங்களைத் தொழலாகாது' என மறுப்பதோடு அவை நின்றுவிடுகின்றன. 'மனைவி கடவுளைத் தொழுதால் என்ன' என்று வினவினால், 'அத்தொழுகை பயனற்ற செயல்' என்பது அம்மதங்களின் முடிவு. 'கடவுள் உண்டு' எனக் கொள்கின்ற மதங்கள், "கடவுள் ஒன்றே" என்றும், 'அஃது யாவராலும் தொழத்தக்கது' என்றுமே கூறும். தெய்வங்களும் கடவுள் அருளால் சில ஆற்றல்களைப் பெற்று விளக்குதலால் இவ் இடங்களில் 'கடவுள்' என உபசரித்துக் கூறப்படும். கடவுள் பொது மக்களால் 'தெய்வம்' என்றே கருதி*

*வழிபடப்பட்டு அவ்வழிபாட்டினை ஏற்று அவர் விரும்பிய பயனைத் தருதல் பற்றி, 'தெய்வம்' என உபசரித்துக் கூறப்படும். இம்மந்திரத்தில், "உலகுக்கு ஒரு தெய்வம்" என்றமையால், கடவுளே 'தெய்வம்' எனப்பட்டமை தெளிவாம்.*

*"ஒன்று கண்டீர் உலகுக்கு ஒரு தெய்வம்" என்றது, 'கடவுள் பல இல்லை ஒன்றே' என்பதைத் தெளிவித்தது. தெய்வங்களை யெல்லாம் 'கடவுள்' எனக் கூறி, 'அவற்றிடையே உயர்வு தாழ்வுகள் இல்லை' எனக் கொள்வோர், அநேகேசுர வாதிகள்' எனப்படுவர். 'கடவுளே இல்லை' என்போர் நிரீச்சுரவாதிகள். அவருள் அநேகேசுர வாதிகள் கொள்கையை மறுத்ததே இதன் முதல் அடி.*

*அக்கடவுள் உலகுக்கு உயிர், அஃதாவது, 'எல்லாப் பொருளிலும் எள்ளினுள் எண்ணெய்போல நிறைந்து அவ்வப் பொருள்களின் தன்மை பயன்படச் செய்வது' என்பதாம். ஒன்றாய கடவுள். இவ்வாறு அனைத்துப் பொருள்களிலும் அது அதுவாய் நிற்றலையே மாணிக்கவாசகர்.*

*"ஏகன், அநேகன் இறைவனடி வாழ்க" (தி.8 சிவபுராண். 5) என அருளிச் செய்தார்.*

*இந்நிலை 'அந்தரியாமித்துவம்' எனப்படும்.*

*ஒன்றாய், உலகுக்கு உயிராய் உள்ள கடவுள் மந்திரம் 'நமச்சிவாய' என்பதே உண்மை. அதன் உண்மைப்பொருளை உணர்ந்து பயில்கின்றவர்கள் கடவுள் இன்பம் கரையின்றி விளைதலைக் காண்பர். ஒரு பழத்தின் இனிமையை அதனைத் தின்று பார்த்தவர் அறிவாரேயன்றி, வாளா காண்பவர் அறியார். அதுபோல, யான் அதனைப் பயின்று அதனால் விளைந்த இன்பத்தைக் கண்டேன். (பயிலாதவர் அதனை அறிதல் அறிது) ஆகையால், அம்மந்திரத்தை உருவகமாகக் கூறினால், 'கிடைத்தற்கரிய தனி ஓர் இனியகனி' என்று கூறலாம்.*

*(இம்மந்திரம் முடிவானபொருளைக் கூறுதலாலும் அப்பொருளை உள்ளவாறுணர்தல் அரிதாய் இருத்தலாலும் உரை இங்ஙனம் விரித்தெழுதப்பட்டது. இப்பாடல் முன்பும் (பா.2654) வந்துள்ளது).*

***குறிப்புரை :- 'கண்டீர்' மூன்றும் முன்னிசையசைகள், 'நன்று' என்றது, 'பிழையற்றது'; உண்மை என்றபடி 'நமச்சிவாய' என்பது ஒரு மந்திரம் - என்பதும், 'மந்திரங்கள் எல்லாம் தெய்வங்களைப் பொருளாக உடையன என்பதும் தெளிவாகலின், 'நமச்சிவாயப் பழம் நன்று' என்பது இப்பொருட்டாயிற்று. "இன்னமச்சிவாய" என்பதை இன்னகை என்பது போலக் கொண்டு சந்தி பிரித்துக் கொள்க. 'நமச்சிவாய இன்பழம்' என மாற்றிக்கொள்க.***

***இதனால், 'சிவானந்தப் பேற்றை எய்தினோர் அது நீங்காமைப் பொருட்டுத் திருவைந்தெழுத்து மந்திரத்தைத் தமக்குரிய முறை யறிந்து ஓதியிருப்பர்' என்பது கூறப்பட்டது.***

**2917.** சந்திரன் பாம்பொடுஞ் சூடும் சடாதரன்
வந்தென்னை ஆண்ட மணிவிளக் கானவன்
அந்தமும் ஆதியும் இல்லா அரும்பொருள்
சிந்தையின் மேவித் தியக்கறுத் தானே. 7

**2918.** பண்டெங்கள்ஈசன் நெடுமால் பிரமனைக்
கண்டங் கிருக்கும் கருக்கும் கருத்தறி வார்இல்லை
விண்டங்கே தோன்றி வெறுமன மாயிடின்
துண்டங் கிருந்ததோர் தூறது வாமே. 8

---

*2917. **தெளிவுரை :-** இதன் பொருள் வெளிப்படை.*

*__குறிப்புரை :-__ 'சந்திரனும், பாம்பும் பகைப் பொருள்கள்' என்பது புராணக் கொள்கை. அவை யிரண்டையும் சிவன் ஒருங்கே தனது முடியில் அணிந்துள்ளான். இது, 'சிவன் உயிர்களை நடுவு நிலையில் நின்றே நோக்கியருளுவன்' என்னும் குறிப்பையும், 'உயிர்கள் அவை சார்ந்துள்ள உடம்பு காரணமாகப் பகைகொள்வன அன்றி, இயற்கையில் அவற்றிடைப் பகையேதும் இல்லை என்பதை உணர்த்தி, ஒற்றுமையுற்று வாழ வழி செய்கின்றான்' என்னும் குறிப்பையும் உடையதாகும். ஆகவே, 'பாம்பும், மதியும் புனலும் தம்மிற் - பகை தீர்த்துடன் வைத்த பண்பா போற்றி' (தி.6 ப.5 பா.4) என்றது காண்க. இத்தகைய நடுவு நிலைமையும், பேரருளும், ஆதியந்தம் அற்ற நித்தயத் தன்மையும் உடைய சிவன் இனிது விளங்கப் பெற்ற நல்லறிவையுடைய பெரியோர்க்குத்தியக்கம் (கலக்கம்) தோன்றுமாறில்லை என்பது குறிப்பு.*

*இதனால், 'மோன சமாதி யுற்றார்க்கு நிலைகலங்கும் தன்மையில்லை' என்பது ஏதுவுடன் குறிப்பால் உணர்த்தப்பட்டது.*

*2918. **தெளிவுரை :-** 'படைப்புக் காலத்தில் எங்கள் கடவுளாகிய சிவன் அரியை முன்படைத்து, அவன் வழியாக அயனைத் தோற்றுவித்து, படைத்தல், காத்தல்களைச் செய்வித்து, அவர்கள் செயலைக் கண்காணித்துக் கொண்டிருக்கின்றான்' என்று வேதாகமங்கள் கூறுகின்றன. இஃது உண்மையா மாற்றை அறிய மாட்டாதவர் 'அரி, அயன்' என்போருள் ஒருவனையே 'முதல்வர்' என்றும், 'அவர் உள்ளிட்ட பலர் உடையவர்களாய்ச் சிவனின் வேறாகத் தோன்றிச் செயலாற்றுவோர், 'நமது தோற்றமும், செயல்களும் சிவனது சங்கற்பத்தால் நிகழ்வன' என்பதை எண்ணாத வேறு நிலை உடையவர்களாய் இருப்பராயின், அவரது நிலைமை, ஒரு முப்பொருளில் ஒரு பகுதி துண்டாகிப் பிரிந்தவழி உளதாகும் பாழ் நிலையையே எய்தும்.*

*__குறிப்புரை :-__ 'காணப்படுகின்ற இவ்வுலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் இவைகளைச் செய்யும் கடவுளர், அதிகார மூர்த்திகளேயன்றி, முதற்*

*கடவுள் அல்லர்' என்பது கடவுட் கொள்கையுடைய வேத மங்கள் அனைத்திற்கும் ஒத்த முடிவு. 'இவர்கள் முதற்கடவுள் அல்லர்' எனவே, 'உயிர் வருக்கத்தினர்' என்பது சொல்லாமே அமைகின்றது. ஒரு மலம் உடையன; இருமலம் உடையன; மும்மலம் உடையன என உயிர்கள் மூவகையின என்பதும், 'மூவகை உயிர்களையும் மும்மலங்களுள் முதல் மலமாகிய ஆணவ மலம் பற்றியே உள்ளது' என்பதும், ஆயினும் அது மிக வன்மையாகப் பற்றியுள்ள உயிர்கள் அது காரணமாக முக்குண வடிவான பிரகிருதி வயப்பட்டு, முதல்வனை உணராமல் மயங்குகின்றன, அதனால் அவை சகல வருக்கத்தின' என்பதும், ஏனை இருவகை உயிர்களையும் ஆணவ மலம் மென்மையாகவும் மிக மென்மையாகவும் பற்றியிருத்தலால், அவை பிரகிருதி வயப்படாதும், அதனானே முதல்வனை மறவாதும் உள்ளன; அதனால், அவை பிரளாயகல, விஞ்ஞானகல வருக்கத்தின' என்பதும் சித்தாந்தம். 'அரி, அயன்' என்போர்களில் அரி இவ்வுலகில் பல பிறப்புக்களை எடுத்து உண்டு வளர்ந்து இன்ப துன்பங்களை நுகர்ந்து வாழ்ந்து மறந்தமையும், முதல்வனை அறியாது மயங்கினமையும் புராண இதிகாசங்களில் பரக்கக் கேட்டுப் படுதலால் அவனை, 'சகல வருக்கத்தினன்' எனக் கொள்ளுதலே பொருந்தும். அவன் சகலனாதல் பெறப்படவே அவனுக்குக் கீழ்ப்பட்டோராக எல்லாராலும் அறியப்பட்ட அயனும் இந்திரன் முதலாய பலரும் சகலரே யாதல் சொல்ல வேண்டா. சிவன் இவ்வுலகில் பிறந்தமை ஓரிடத்தும் சொல்லப்படாமையேயன்றி சிவன் 'பிறப்பிலி' என்பது பலவிடத்தும் பேசப்படுகின்றது. ஆகவே, அவன் உயிர் வருக்கத்தினன் ஆகாது முதற்கடவுள் ஆகின்றான். நடுவுநின்று ஆராய்வார் இவ்வுண்மையை நன்கு உணரவே செய்வர், ஆயினும் பலர் நடுவு நில்லாது மாறுபடப் பேசுதல் பற்றி, "எங்கள் ஈசன் கண்டு அங்கு இருக்கும் கருத்து அறிவார் இல்லை" என்றார். கருத்து - உண்மை. "எங்கள்" எனத் தம்மோடு உளப்படுத்தியது, பிறப்பின்மையே முதற் கடவுட்கு அடையாளம்' என்பதையும், 'சிவன் பிறப்பிலி' என்பதையும் உடன்படுகின்ற பலரையும்,*

> *மூன்றுதிறத் துள்ளாரும் மூலமலத் துள்ளார்கள்;*
> *தோன்றலர்தொத் துள்ளார் துணை.        - திருவருட்பயன் - 13*

*என்றது காண்க.*

*'தன் பொருட் டில்லையாயினும் உயிர்களின் பொருட்டாக இப்பிரகிருதி உலகத்தில் பிறப்பெடுத்தலும் கடவுளது இயல்பு' எனக்கூறின், அது, 'முன்னே கடவுளின் இயல்புகள் யாவை' என ஆராய்ந்து வரையறுத்துக்கொண்டு, பின்னே, இவ்வுலகில் சிலரை, 'இவர் கடவுளா, உயிர் வருக்கத்தவரா' என ஆராய்ந்து வரையறை செய்யாது, முன்னே சிலரை, 'கடவுள்' என முடிவு செய்துகொண்டு, பின்னே, 'அவரது இயல்பே கடவுளின் இயல்பு' என மாறிக் கூறுவதாகும். இது 'தலைக்கு ஏற்ப அமைவது குல்லாய் என்னாது குல்லாய்க்கு ஏற்ப அமைவது தலை' என்பது போல தலைகீழ்ப் பாடமாய்விடும். அன்றியும், எவையோ சில*

*காரணங்களால், 'பிறத்தலும், கடவுட்கு இயல்பு' எனக் கூறினால், 'பிறப்பு இல்லாமையே கடவுள் தன்மை' என்பது நிலையாத ஒன்றாகி, 'பிறவாமை' இழிவுடையதாகியும் விடும். அதனால், 'எது உயிர்? எது கடவுள்? என ஐயுறுவார்க்கு, அவைகளை அடையாளம் காட்டித் தெளிவுபடுத்தலும் இயலாது. இத்துணை இடர்ப்பாடுகளும் பிறப்புடையாரை, 'கடவுள்' என நிறுவ முயல்வதால் உளவாவனவாம். அதனால், உலகில் உயர்ந்தோர் சிலரை, 'இவர் தமது தூய தன்மையால் கடவுள் தன்மையை எய்திய பெரியோராவர்' எனக் கூறியமைதலே பொருந்துவது.*

*மும்மூர்த்திகளில் ஒருவனாகிய உருத்திரன், அம்மூவருள் ஒருவனாயினும் அவன் சிவனை மறந்து செருக்குற்றதாக வரலாறு இல்லை. அதனால், அவன் பிரளயாகல வருக்கத்தினனாகச் சொல்லப்படுகின்றான்.*

*இருமலம் உடையவர் பிரளயாகலர். ஒருமலம் உடையவர் விஞ்ஞானகலர். இவர்களிலும் அதிகார மூர்த்திகளாய் அமைபவர் உளர். அவருள் 'உருத்திரர்' எனப்படுவோர் பிரளயாகலர் வருக்கத்தினர். 'வித்தியேசுரர்' என்றும், 'மந்திரேசுரர்' என்றும் சொல்லப்படுபவர் விஞ்ஞான கலர் வருக்கத்தினர். விஞ்ஞானகலருள் 'அணு சதாசிவர்' என நிற்பாரும் உளர். இவ்வாறான அதிகாரமூர்த்திகள் பலர் உளராயினும் சைவ நூல்களுள் அயன், மால் இருவரை மட்டுமே பெரும்பான்மையாக எடுத்துக் கூறுதற்குக் காரணம் அவர்கள் சகல வருக்கத்தினராய் இருத்தலாலேயாம்.*

*சகல வருக்கத்து ஆன்மாக்களும் அவை செய்த சிவபுண்ணியக் குறைவு மிகுதிகளால், இங்குக் காட்டிய எந்த அதிகார மூர்த்திகளாகவும் ஆதல் கூடும்.*

> *"விரைக்கம லத்தோன் மாலும் ஏவலால் மேவி னோர்கள்,*
> *புரைத்ததி கார சத்தி புண்ணியம் நண்ண லாலே"*
>
> *வித்தைகள், வித்தை யீசர், சதாசிவர் என்றி வர்க்கு,*
> *வைத்திடும் பதங்கள், வன்னம், புவனங்கள், மந்தி ரங்கள்,*
> *தத்துவம், சரீரம், போகம், கரணங்கள் தாம்ள லாமும்*
> *உய்த்திடும் வயிந்த வந்தான் உபாதான மாகி நின்றே.*

*என்பன சிவஞான சித்தி (சுபக்கம் - சூ. 1. 34. 25)*

*காண்டல் - உண்டாக்கல். 'அங்கு இருந்ததோர் துண்டின் தூறு ஆம்' என்க. பின் வந்த "அங்கு" இரண்டும், 'பொதுப்படக் குறித்த ஓர் இடத்தில்' எனப் பொருள் தந்தன. "தூறு பாழ்" என்பன ஒரு பொருட் சொற்கள், ஈற்றில் நின்ற "அது" மேற்போந்த வெறுமனம் ஆதலைச் சுட்டி வந்தது.*

*இதனால், முன் மந்திரத்தில், 'என்னை மோன சமாதியில் வைத்தவன் சந்திரன் பாம்பொடுஞ் சூடும் சடாதரனேயன்றிப் பிறர் அல்லர்' எனக் கூறியது வலியுறுத்தி நிறுவப்பட்டது.*

**2919.** அன்னையும் அத்தனும் அன்புற்ற தல்லது
அன்னையும் அத்தனும் ஆர்அறி வார்என்னை
அன்னையும் அத்தனும் யானும் உடன்இருந்து
அன்னையும் அத்தனும் யான்புரந் தேனே. **9**

---

***2919. தெளிவுரை :-*** *இவ்வுலகில் எனக்குத் தாயாகவும், தந்தையாகவும், எல்லோராலும் அறியப்பட்ட அவ்விருவரும், 'யான், பிறக்க வேண்டும்' என்று விரும்பித் தம்முட்கூடியதும், அதனால் யான் பிறந்ததும் உண்மை. ஆயினும் தங்களால் பிறந்த என்னை 'யார்' என்று அவர்களில் ஒருவரேனும் அறிவாரோ? அறியார். அப்பால் அவ்விருவருமாய் வாழ்ந்த நிலை மாறி, யானும் சேர்ந்து மூவராய் வாழும் நிலை ஏற்பட்டது. அப்பொழுது முன்பு அவர்கள் என்னைக் காப்பாற்றியதுபோக அவர்களை யான் காப்பாற்றும் நிலை உண்டாயிற்று.*

***குறிப்புரை :-*** *'ஆகவே, அவர்கள் எப்பொழுதுமே என்னைக் காப்பவர் ஆவரோ? சிலகாலமே அன்னராவர். என்றுமே என்னைக் காக்கும் அன்னையும், அத்தனும் வேறுளர்' என்பது குறிப்பெச்சம். 'அந்த அன்னையும், அத்தனும் யாவர்' என்னும் வினாவிற்கு விடையும் பின்னிரண்டடிகளில் குறிப்பாய் அமைய அவற்றை இரட்டுற மொழிந்தார்.*

*முத்தி பஞ்சாக்கரத்துள் வகாரம் அன்னை; சிகாரம் அத்தன்; யகாரம் யான்; மூவரும் உடன் இருப்பது முத்தி பஞ்சாக்கரம். புரத்தல் - பேணுதல், அது முத்தி பஞ்சாக்கரத்தை அயராது கணித்து அதன் பொருளை உணர்ந்திருத்தல். 'இதனால் யான் மோன சமாதியில் நிலைத்துள்ளேன்' என்பது கருத்து.*

*அன்புற்றது, அதன் காரியமும் உடன் தோன்ற நின்றது.*

*இரண்டாம் அடியில் "அத்தனும்" என்பதன்பின் 'அவருள்' என்பது வருவிக்க. ஈற்றடியில், 'அன்னையையும்' என உருபும், 'அத்தனையும்' என உருபும் உம்மையும் விரிக்க.*

*இதனால், "உடம்பைப் பயந்த தாய் தந்தையர்க்கு மக்கள் கடமைப்பட்டவ ராயினும், உயிர்க்கு அறிவைப் பயந்து வரும் தாய் தந்தையரை மறவாது போற்றுதல் அதனினும் பெரியதொரு கடப்பாடு; அதனை மோன சமாதி அடைந்தோரே நிரம்பச் செய்வர்" என்பது கூறப்பட்டது.*

***2920. தெளிவுரை :-*** *இம்மந்திரம் சிவனது அருளைப் பெற்றுச் சிவனைச் சார்ந்து நிற்கும் மோன சமாதியினர்க்கு உலகு அனைத்தும் தமது வியாபகத்துள்ளே அடங்கித் தோன்றுதலைச் சில வகைகளால் விளக்கிற்று.*

***குறிப்புரை :-*** *சுழி - சுழல், இதன்கண் தொகுக்கப்பட்ட துவ் விகுதியை, 'சுழல் கொண்டது' என மாற்றி வைத்து உரைக்க. பல சுழல்களைக் கொண்டது கடல். குல வரை - உயர்ந்த மலை. இதனையும், உச்சிக் குலவரை' என*

**2920.** கொண்ட சுழியும் குலவரை உச்சியும்
அண்டரும் அண்டத் தலைவரும் ஆதியும்
எண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்துளே
உண்டனர் நான்இனி உய்ந்தொழிந் தேனே. **10**

---

*மாற்றியுரைக்க. உச்சி - சிகரம். அண்டர் - வானுலகத்தவர். அவர்கட்குத் தலைவர் அண்டத்தலைவர் எண்டிசையோர், திசைக்காவலர், ஆதி - பிரமன், இவரைக் கூறியது உபலக்கணம் ஆதலின் எஞ்சியோரும் எஞ்சிய பொருள்களும் கொள்ளப்படும். சீவத்தன்மை நீங்கிச் சிவமாம் தன்மையடைந்தார்க்கு உலகம் தம்முள் அடங்கித் தோன்றுதற்குச் சான்று, உபநிடதங்களில் வாம தேவர் முதலிய முனிவர்கள். "யானே மனுவாய் இருந்தேன், சூரியனாய் இருந்தேன்" (அஹமனு ரபவம், ஸர்யக'' பிருஹாரண்யகம்) என்றாற்போலக் கூறியதாக உள்ள வாக்கியங்களும் சருவஞ்ஞானோத்தரத்தில், "யானே எல்லாமாய் நின்றேனும், எல்லாவற்றையும் கடந்து நின்றேனும்" என்பனபோல் உள்ள வாக்கியங்களுமாம். 'கொள்' என்பது அடியாகக் 'கொண்டனர்' எனவும் 'விள்' என்பது அடியாக 'விண்டனர்' எனவும் வருதல்போல் 'உள்' என்பது அடியாக உண்டனர் என வந்தது. எனினும் உள் என்பது வினைப் பகுதியாகாது, பண்புப் பகுதியாகலானும் 'மாண்' என்னும் பண்படியாக 'மாண்டது' என வருதல்போல, 'உள்' என்பது அடியாக ஓரிடத்தும் 'உண்டது' என வாராமையாலும் இஃதோர் அரிய ஆட்சி. 'உளராயினர்' என்பது இதன் பொருள். உய்ந்தேன் - பிறவியினின்றும் தப்பினேன். 'ஒழி' துணிவுப் பொருள் விகுதி. பின் அதுவும் சேர்ந்து பகுதியாயிற்று.*

*மோன சமாதி என்றது மீளப் பிறவாமையை, "வீட்டையடைந்திடுவர் நிட்டை மேவினோர்கள்; மேவாது தப்பினவர்... ... .... இந்தப் பார்மேல் நாட்டிய நற் குலத்தினில்வந் தவதரித்துக் குருவால் ஞானநிட்டை அடைந்தடைவர் நாதன் தாளே" என்னும் சிவஞான சித்தி (சுபக்கம் - சூ. 8. 2. 4)யால் அறிக. (இதன்பின் பதிப்புக்களில் காணப்படும்" தானே திசையொடு தேவருமாய் நிற்கும்" என்னும் மந்திரம் இரண்டாம் தந்திரத்தில் 'திதி' என்னும் அதிகாரத்தில் வந்தது).*

***2921. தெளிவுரை :-** ஞானநிட்டையில் நிற்கும் அறிவையுடையார்க்கு அவர்தம் உடல் நீங்கும் காலத்து அதனை நீங்கச் செய்து சிவனே முன் வந்தருளுவன். (ஏனையோர்க்கு யமதூதுவர் வந்து உடலை நீக்கி, உயிர்முன் நிற்றல்போல நில்லார்). யான் தவத்தால் முன்பே பிறப்பிற்குக் காரணமான வினைகளை யெல்லாம் அறுத்தொழித்துச் சிவனை மறவாமையாகிய நிட்டையில் நின்றேன். (ஆகவே, யம தூதுவர் என் முன்வாரார்). 'வந்தாலும், சிவனை உணரும் உணர் வாகிய வாளால் அவர்களை எறிய இயலும்' என்னும் உறுதி யுடையேன். முற்கூறியவாறு சிவன் தான் என்முன் வருவான் வந்தால் அவனுடன் நான் மகிழ்ச்சியோடு செல்வது திண்ணம்.*

***குறிப்புரை :-*** *ஈற்றடியை மூன்றாம் அடிக்கு முன்னர்க் கூட்டிப் பின்*

**2921.** நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்
சிவன்வரின் நான்உடன் போவது திண்ணம்
பவம்வரும் வல்வினை பண்டே அறுத்தேன்
தவம்வரும் சிந்தைக்குத் தான்எதி ராமே.

**11**

---

*அவற்றை முதலில் வைத்து உரைக்க. 'தானே எதிராம்' எனப் பிரிநிலை ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக. 'எதிராரே' என்பது பாடமாயின், 'தாம் எதிராரே' என வருதல் வேண்டும், 'அதுவும் அவ்வாறு ஆம்' எனில் 'நிட்டையுடையார்க்கு மாறாய் முன்னிற்பவர் இலர்; அதனால் அவர்முன் நமன் தூதர் செல்லார்' என உரைக்க. "நமன் வரின்" என்பதில் 'வரின்' என்பது, வருதல் இல்லை' என்பதையும், "சிவன் வரின்" என்பதில் 'வரின்' என்பது, வருதல் இல்லை' என்பதையும் குறித்து நின்றன. ஞானம் வாளாதல் மேலேயும் சொல்லப்பட்டது. (பா.2916) "சிவன்வரின் நான் உடன் போவது" என்பதில் வருதல் போதல்கள் இடையீடகல ஒன்றுதலைக் குறித்தது.*

*பவம் - பிறப்பு. **முகந்து வந்த பிராரத்த வினை முடிந்தால், எடுத்த உடம்பு வீழ்ந்துவிடும். அவ்வீழ்ச்சி, மேலும் வினையுடையார்க்கு 'இறப்பு' என்றும், வினையில்லாதார்க்கு 'வீடுபேறு' என்றும் சொல்லப்படும்**. 'இறவா நிலை' என்பது முதற்கண் கூறிய வகையில் உடம்பு நீங்காமையாம். "நமனை அஞ்சோம்" (தி.6 ப.98 பா.1) என்ற அப்பர் திருமொழியும் காண்க. முதல் அடி உயிர் எதுகை பெற்றது.*

***இதனால், 'மோன சமாதியடைந்தார்க்கு உடலை வீழ்த்துவது திருவருளே யன்றி, வினைப் பயனை அடைவிக்கின்ற கூற்றுவன் அல்லன்' என்பது கூறப்பட்டது. இது பற்றியே, 'ஞானிகளது' உடலை எரிப்படுத்தல் கூடாது' என ஏழாம் தந்திரத்தில் 'சமாதிக் கிரியை' அதிகாரத்தில் சொல்லப்பட்டது.***

***2922. தெளிவுரை :-** மும்மலங்களையும் நீக்கித் தமது அறிவு சிவனது அறிவேயாகப் பெற்ற ஞானிகள், சீவராகாது, இயல்பாகவே பாசம் இன்மையால் தூயனாய் உள்ள சிவனேயாவர். ஆகையால் அவர்கள் மாயா மலமாகிய உடம்போடு கூடி, உலகில் உலவினராயினும் அவற்றால் அவர் கட்டுறார். 'சிவன் இல்லை' என அழித்துப் பேசுவாரது அழிப்புரையும், சிவனை அடைதற்கு இத்துணை விரைவு ஏன்' என மயக்க உரை கூறுவாரது ஆரவார உரையும் 'இவர்களது உரைகள் யாவும் பாசங்களுள் ஒன்றாகிய அசுத்த மாயை அளவினவே என எண்ணித்தம்பால் அணுகக் காணாதவராவர்'.*

***குறிப்புரை :-** முதலடி அவ்வாறு கூறப்பட்டதாயினும், அதனை 'மலம் மூன்றுஞ் செற்றுச் சித்தம் சிவம் ஆயவர்' என்றதாகவே கொள்க. "சித்தம்" என்றது அறிவை. சிலுகு - புன்மொழி. அவை நாத்திகர் பேசும் நாத்திக உரை. கலகம், "ஆத்தம் ஆனார் அயலார் கூடி நாத்திகமாகப் பேசும்" மயக்க உரை. சொற்கள்*

**2922.** சித்தம் சிவமாய் மலம்மூன்றும் செற்றவர்
சுத்த சிவமாவர் தோயார் மலபந்தம்
கத்தும் சிலுகும் கலகமும் கைகாணார்
சத்தம் பரவிந்து தானாம்என் றெண்ணியே. 12

---

*யாவும் சுத்தமாயா காரியமேயாயின் பாசத்துள் நின்று கூறுவாரது சொல் அந்த மாயா நாதமே யாக, திருவருளில் நின்றாரது சொல் அருள் நாதமாம். 'அவற்றுள் இங்குக் குறிக்கப்பட்டவர் சொல் மாய நாதமே' என்பதை, ''சத்தம் பரவிந்துதானாம் என்றார். பரவிந்து - அசுத்த மாயைக்கு மேலுள்ள சுத்த மாயை, 'சுத்தம்' என்னும் வடசொல், 'சொல்' என்றே பொருள் தருமாயினும், இங்கு, 'வெற்றாரவாரம்' என்னும் நயத்தையும் தோற்றுவித்தது.*

*பின்னிரண்டடிகளில் வரும்பொருளை நிறுவுதற்கு முன்னிரண்டடிகள் அநுவாதமாய் வந்தன.*

*இதனால், மோன சமாதி எய்தினோர் அதன் சிறப்பை உணர மாட்டாதார் கூறுவனவற்றிற்குச் செவி கொடார் என்பது கூறப்பட்டது.*

***2923. தெளிவுரை :-** நினைப்பு, மனம் முதலிய கருவிகள் செயற்படுதலால் நிகழ்வது. மறப்பு, கருவிகள் செயற்படாது ஒடுங்குதலால் நிகழ்வது. கருவிகள் இல்லாத பொழுது அறிவு நிகழாமை ஆணவ மல மறைப்பினாலாம். ஆகவே, ஆணவ மலம் நீங்கினால் கருவிகளால் ஆவதொன்றில்லை. ஆன்ம அறிவு எப்பொழுதும் அறிவாயே இருக்கும். அறியாமையாகாது, இவை ஒளி குறைந்த கண்ணிற்குக் கண்ணாடி உள்ள பொழுது பார்வை நிகழ்தலும், கண்ணாடி இல்லாத பொழுது பார்வை நிகழாமையும், ஒளி குறையாத கண்ணிற்குக் கண்ணாடி வேண்டாது, எப்பொழுதும் பார்வை நிகழ்வதும் போல்வனவாகும். ஆணவ மலத்தால் மறைக்கப்பட்ட அறிவு ஒளி குறையாத கண் போல்வது. பெத்தான்மாக்களது அறிவு ஆணவ மலத்தால் மறைக்கப்பட்டிருத்தலால் அவ்வறிவு மேற்குறித்த நினைப்பும், மறப்புமாய் நிலைமாறிக் கொண்டேயிருக்கும். முத்தான்மாக்களின் அறிவு ஆணவ மலம் நீங்கிப் பெற்றமையால் மாற்றம் இன்றி, அறிவாயே விளங்கும். அதனால் அவைகட்குச் சிவம் மறைதல் இன்றி, விளங்கியே நிற்கும்.*

*நினைப்பே சகலம்; மறப்பே கேவலம் இவைகளை, 'பகல், இரவு' எனச் சாத்திரங்கள் குறியீட்டுச் சொல்லாற் கூறும். நினைப்பும், மறப்பும் இன்றி அறிவு ஒரே நிலையில் நிற்பது இரவு பகல் அற்ற இடமாகக் கூறப்படும்.*

*"இரவு பகலில்லா இன்பவெளி யூடே*
*விரவி விரவிநின் றுந்தீபற;*
*விரைய விரையநின் றுந்தீபற"* – ***திருவுந்தியார், 20***

*என்றது திருவுந்தியார்.*

**2923.** நினைப்பும் மறப்பும் இலாதவர் நெஞ்சம்
வினைப்பற் றறுக்கும் விமலன் இருக்கும்
வினைப்பற் றறுக்கும் விமலனைத் தேடி
நினைக்கப் பெறில்அவன் நீளியன் ஆமே. **13**

---

*இவ்வாற்றால், "வினைப்பற்றறுக்கும் விமலன், நினைப்பும் மறப்பும் இலாதவர் நெஞ்சத்து இருக்கும்" எனவும் நினைப்பும் உள்ளவர் நினைப்பினாலே அவனைப்பற்ற முயன்றால் அவன் கிட்டான் ஆகலின், "அவனைத் தேடி நினைக்கப் பெறில் நீளியன் ஆம்" என்றும் கூறினார். நீளியன் - சேய்மையன். "தேடி நினைக்கப் பெறில்" என்றே கூறினாராயினும், 'நினைத்துத் தேடப் பெறில்' என்றலே கருத்தென்க. விமலன் - பரிசுத்தன். என்னே, அவன் ஆணவ மலத்தில் அகப்பட்டான்' என்பதைக் குறிப்பால் உணர்த்தினார் என்க. இனி, 'அவன் ஆணவத்தில் அகப்படானாயினும் வளர்பிறை மதி இருளைச் சிறிது சிறிதாக ஓட்டி வருதல்போல அவன் உயிர்களில் மறைந்து நின்று ஆணவத்தை நீக்கியே வருகின்றான் என்பதை "வினைப்பற்று அறுக்கும்" என்பதனால் குறித்தார். 'நெஞ்சத்து' என்னும் அத்துச் சாரியை தொகுக்கப்பட்டது.*

*இதனால், மோன சமாதி யுற்றார்க்குச் சிவன் கரவின்றி விளங்குதல் ஏதுக் காட்டி விளக்கப்பட்டது.*

*2924. தெளிவுரை :- நான் சிவபெருமானைச் சிவபெருமானாகவே அறிந்து, அப்பெயரையே சொல்லி "சிவனே, சிவனே என்று ஓலம் இட்டுத் துதித்த. 'அந்த மெய்த்தவத்திற்கும் தலைவனே நான்' என்பான் போல அப்பெருமான் என்முன்னே வந்து நின்றான். இவ்வாறுதன் பெயரைச் சொல்லுவாரிடத் தெல்லாம் உடனே தோன்றுகின்ற அப்பெருமானை, 'யார், யார் எவ்வெப் பெயரால் அழைக்கின்றாரோ, அவர் முன்னெல்லாம் அவர் கருதும் பெருமானார்களாய்த் தோன்றும் அருளாளன்' எனவும் அறிந்து தான் பணிபவனாயினேன்.*

*குறிப்புரை :- சிவபெருமானை, 'சிவபெருமான்' என்று சொல்பவரெல்லாம் அப்பெயரின் பொருளை உணர்ந்து சொல்லாமல், பொதுவாக ஓர் இடுகுறி யாகவே நினைத்துச் சொல்கின்றனர். ஆயினும் அப்பெயர், 'அமங்கலம் (பிறப்பிறப்பு) ஒருபோதும் இல்லாத நிறைந்த மங்கல குணத்தை யுடையவன்' (காஞ்சிப் புராணம் - திருநெறிக் காரைக்காட்டுப் படலம் - 23 எனவும், பேரின்பத்துக்குக் காரணன்' எனவும், 'முற்றுணர்வினன்' எனவும், தூய தன்மையன்' எனவும் (சிவஞானபோதம் - சூ.5 அதி.2) பொருள் தருதலால் 'அவ்வெல்லாத் தன்மைகளையுடையவனே அவன்' என உணர்ந்ததையே "சிவபெருமான் என்று" என்றார். இதில் 'உணர்தல்' என்பது சொல்லெச்சம். தவம், 'பொதுத் தவம்' என்றும், 'மெய்த் தவம்' என்றும் இருவகைப்படும். பொதுத்*

**2924.** சிவபெரு மானென்று நானழைத் தேத்தத்
தவபெரு மானென்று தான்வந்து நின்றான்
அவபெரு மான்என்னை ஆளுடை நாதன்
பவபெரு மானைப் பணிந்துநின் றேனே. **14**

**2925.** பணிந்துநின் றேன்பர மாதி பதியைத்
துணிந்துநின் றேன்இனி மற்றொன்றும் வேண்டேன்
அணிந்துநின் றேன்உடல் ஆதிப் பிரானைத்
தணிந்துநின் றேன்சிவன் தன்மைகண் டேனே. **15**

---

*தவம் பசு புண்ணியங்கள். மெய்த்தவம் சிவபுண்ணியம், இது சிவஞான போதத்துள், "இறப்பில் தவம்" எனப்பட்டது. இவற்றுள் இங்கு, "தவம்" என்றது மெய்த் தவத்தை, பின்மூன்று அடிகளிலும் சந்திப் பகர ஒற்று எதுகை நோக்கித் தொகுக்கப்பட்டது. மூன்றாம் அடியில் அதனுடன், அகரத்தையடுத்து வந்த சந்திவகர ஒற்றும் தொகுக்கப்பட்டது. "அவ்வப்பெருமான்" என்றது, அவரவர் கருதும் பெருமானார்களாய்த் தோன்றும் பெருமான் என்றபடி, இக்கருத்தே, "யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வ மாகி ஆங்கே மாதொரு பாகனார்தாம் வருவர்" (சிவஞானசித்தி - சுபக்கம் - சூ.2.25) எனக் கூறப்பட்டது. சிவனைச் சிறப்பாகக் குறிக்கும் மற்றைப் பெயர்களுள் 'பவன்' என்னும் பெயர் சிறந்ததாகச் சொல்லப்படுகின்றது. 'பவன்' எனும் நாமம் பிடித்துத் திரிந்து பன்னாள் அழைத்தால் இவன் எனைப் பன்னாள் அழைப்பொழியான் என்று எதிர்ப்படுமே" (தி.4 ப.12 பா.9) என அப்பரும் அருளிச் செய்தார்.* ***<u>"பவன்" என்பதற்குப் பொருள், 'நினைத்த இடத்தில் நினைத்த உடன் தோன்றுபவன்'</u> என்பது ஆகலின், அப்பெயரையே சொல்லி அழைப்பவன்முன் அவன் எதிர்ப்படுதல் உறுதி' என அப்பர் அருளிச்செய்தார். அந்தக் குறிப்பே இங்கு, சிவபெருமானைப் பணிந்து நின்றேன்" என்பதில் அமைந்திருத்தலை உணர்க. "நின்றேன்" என்றது, 'இனி நான் வேறொன்றை நினையேன்' என்றவாறு. எனவே இது மோன சமாதியாதலை உணர்க.***

***இதனால், சிவபெருமானை உள்ளவாறுணர்ந்து அடைபவரே மோன சமாதியில் நிற்பர்' என்பது கூறப்பட்டது.***

***2925. தெளிவுரை :-** முதல்வர்கட்கெல்லாம் முதல்வனாய் முடிநிலை முதல்வனாயுள்ள சிவனையே நான் முதல்வனாகத் துணிந்தேன், அதனால் அவனையே நான் வணங்கினேன். இனி அவனை வணங்குதலைத் தவிர பிறிதொன்றையும் அவாவ மாட்டேன். அவனையே என்உள்ளத்தில் இருத்தினேன். அதனால், எனது முனைப்பு நீங்கப் பெற்றேன். அவனது உண்மை யியல்புகள் எல்லாம் எனக்கு அனுபவமாயின.*

***குறிப்புரை :-** மோன சமாதி வாய்க்கப் பெறும் வழியையும் அது வாய்க்கப்*

**2926.** என்நெஞ்சம் ஈசன் இணையடி தான்சேர்ந்து
முன்னஞ்செய் தேத்த முழுதும் பிறப்பறும்
தன்னெஞ்சம் இல்லாத் தலைவன் தலைவிதி
பின்னஞ்செய்து என்னைப் பிணக்கறுத் தானே. **16**

---

*பெற்றாரது இயல்பையும் தம் அனுபவத்தின் மேல் இட்டுக் கூறியவாறு.*

*பரம் + அதிபதி = பரமாதிபதி; வடமொழித் தீர்க்க சந்தி. அதிபதி - முதல்வன். "பரமாதிபதியைத் துணிந்து நின்றேன்" என்பதை முதலிற் கூட்டியும், 'ஆதிப் பிரானை உடல் அணிந்து நின்றேன்' என மாற்றி வைத்தும் உரைக்க. அணிதல் - தரித்தல். உள்ளத்தை "உடல்" என நாயனார் குறித்தலை மேலேயும் கண்டோம். (கண்டறி வாரில்லை காயத்தில் நந்தியை', பா. 2835) 'உடலில்' என ஏழாவது விரிக்க. காண்டல், அனுபவமாக உணர்தல்.*

***2926. தெளிவுரை :-*** *எனது நெஞ்சம் சிவனது இரண்டு திருவடிகளையே சார்ந்து, அவற்றையே நினைத்து, அவற்றையே துதித்தலால், எனது பிறவித்தொடர் முடிவடைந்து அற்றொழியும்; இது திண்ணம். இனித் தனக்கு மனம் முதலிய மாயா கருவிகள் ஒன்றும் இல்லாதவனாகிய அவன், இப்பிறப்பினும் நான் முகந்து கொண்டு வந்த ஊழ்வினையை எனக்கு ஆகாதபடி பிரித்து, எனது உடலுக்கே ஆகும்படி செய்தமையால், எனக்கு இன்பத்தில் மகிழ்ச்சியும், துன்பத்தில் வாட்டமும் ஆகிய முரண்பட்ட நிலைமைகள் இல்லாதபடி அறவே நீக்கிவிட்டான்.*

***குறிப்புரை :-*** *முன்னம் செய்தல் - நினைத்தல். ஏத்த - ஏத்தலால், ஏத்துதல் வாயின் தொழிலாயினும் அது மனத்தின் வழி இயங்குதல் பற்றி நெஞ்சமே ஏத்துவதாகக் கூறினார். தலைவிதி - ஊழ்; பிராரத்தம். பின்னம் செய்தல் - வேறுபடுத்தல். உடம்பை 'யான்' என மயங்குதலும், அதனைப்பற்றிய பொருள்களை 'எனது' என மயங்கும் மயக்கம் சிவனையே நினைப்பார்க்கு இல்லாமையால் உடலை வந்து பற்றுவதாகிய ஊழ் அவரைப் பற்றுதலும், அதனால் அவர் மகிழ்ச்சியும், வாட்டமும் அடைதலும் இல்லையாம். இந்நிலையே, 'ஞானியர்க்கு அவர்தம் பிராரத்த வினை உடல் ஊழாய்க் கழியும்' என்று சொல்லப்படுகின்றது. எனவே, இதனுள் அணைந்தோரது இத்தன்மைகள் கூறப்பட்டமை காண்க.*

*"என்னைப் பிணக்கறுத்தான்" என்பதை, "யானையை அரட்டடக்கினான்" என்பது போலக் கொள்க.*

***2927. தெளிவுரை :-*** *எங்கள் நந்தி பெருமான் என்னுடைய அறியாமையைப் போக்கினார். ஆகவே, என் உடம்பு நோய் உறுதலையும், முதுமை எய்தித் தளர்வுறுதலையும் போக்கி 'அவை வரும் என்று எண்ணும் எண்ணங்களையும், அஃதாவது கவலையையும் போக்கி, என்னைத் தமக்கு ஆளாகக்*

**2927.** பிணக்கறுத் தான்பிணி மூப்பறுத் தெண்ணும்
கணக்கறுத் தாண்டனன் காண்நந்தி என்னைப்
பிணக்கறுத் தென்னுடன் முன்வந்த துன்பம்
வணக்கலுற் றேன்சிவம் வந்தது தானே. 17

**2928.** சிவன்வந்து தேவர் குழாமுடன் கூடப்
பவம்வந் திடநின்ற பாசம் அறுத்திட்டு
அவன்எந்தை ஆண்டருள் ஆதிப் பெருமான்
அவன்வந்தென் உள்ளே அகப்பட்ட வாறே. 18

---

*கொண்டவராயினார். யானும் தொன்று தொட்டு என்னோடு கூடவே தொடர்ந்து வந்து கொண்டிருந்த வெறுப்பு விருப்புக்களைப் போக்கி, அவரையே சிவமாகக் கண்டு வழிபட்டேன். அதனால் சிவமே என்முன் வந்து நின்றது.*

***குறிப்புரை :-*** *“நந்தி” என்பதை முதலிற் கொள்க. “பிணக்கறுத் தான்” என்பதன்பின் ‘அதனால்’ என்பது வருவிக்க. கணக்கு - எண்; எண்ணம். காண், முன்னிலையசை, “என்னை ஆண்டனன்” என முன்னே கூட்டி முடிக்க. “முன்” என்பது, ‘முற்றொட்டு’ எனப்பொருள் தந்தது. “துன்பம்” என்றதனால், ‘இன்பம்’ என்பதும் கொள்ளப்பட்டு, ‘என்னும்’ என ஒரு சொல் வருவித்து, ‘துன்பம் இன்பம் என்னும் பிணக்கு’ என உரைக்கப்பட்டது. ‘வணங்கல்’ என்பது எதுகை நோக்கி வலிந்து நின்றது. தான், அசை, ‘தானே வந்தது’ என்றலும் ஆம்.*

*இதனால், குருவருளாலே சிவப்பேறு முறையானே வந்து வாய்த்தல் கூறப்பட்டது.*

***2928. தெளிவுரை :-*** *சிவன் ஒருவனே எனக்குத் தந்தை; குருவாகி வந்து ஆட்கொள்ளும் முதற்கடவுள். அத்தகையோன் முன்பெல்லாம் எனக்கு அகப்படாதிருந்து, இப்பொழுது வந்து என் உள்ளத்திலே அகப்பட்டமை தேவர் கூட்டமும் உடன் வர அவன் வெளிவந்து எனக்குப் பிறப்பு இடையறாது வரும்படி என்னைப் பற்றி நின்ற பாசத்தை அறுத்தமையாலேயாம்.*

***குறிப்புரை :-*** *பின்னிரண்டடிகளை முன் வைத்து உரைக்க. உரைக்கவே, முன்னின்ற “அவன்” என்னும் சுட்டுப்பெயர் ‘சிவன்’ என்னும் சிறப்புப் பெயராயும், ‘சிவன்’ என்னும் சிறப்புப் பெயர், அவன் என்னும் சுட்டுப்பெயராயும் நிற்கும். இதனால் சிவன் நந்தி பெருமானாய் நின்று நாயனாரை ஆட்கொண்டதேயன்றி தன் இயற்கை வடிவிலும் காட்சியளித்து அருள்புரிந்தமை பெறப்படுகின்றது. ‘‘ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதி மாண்பும் கேட்பான் புகின் அளவில்லை” (தி.3 ப.54 பா.4) ஆதலின், ‘குருவாகி நின்று அருள் செய்த பின்பும் இவர்க்கு இவ்வாறு தோன்றி அருள்புரிவான் ஏன்’ என்றும், ‘இங்ஙனமாயின் ஏனையோர்க்கும் இவ்வாறு ஏன் அருள்புரிதல் கூடாது’ என்றும் அவனை வினாவ நாம் யார்?*

**2929.** கரும்பும்செந் தேனும் கலந்ததோர் காயத்தில்
அரும்பும் அக் கந்தமும் ஆகிய ஆனந்தம்
விரும்பியே உள்ளம் வெளியுறக் கண்டபின்
கரும்பும்முன் கைத்தது தேனும் புளித்ததே. **19**

---

*'சிவன், தேவர் உடன் கூட வந்து' என மாற்றியுரைக்க. 'அகப்பட்ட ஆறு' என்பதில் அகப்பட்டதையே 'ஆறு' எனக் கூறினமையின் பெயரெச்சம் தொழிற் பெயரொடு முடிந்ததாம். "நின்முகம் காணும் மருந்தினேன்" என்பது போல, 'இவன் வாழ்தல், அவனைச் சார்ந்து' என்பது போலத் தொழிற்பெயர் எழுவாய்கள் வினையெச்சப் பயனிலைகளைக் கொண்டு முடிதல் உள ஆகலின், 'அகப்பட்ட ஆறு பாசம் அறுத்திட்டு' என முடிந்தது.*

*இதனால், இயைபு பற்றி நாயனார் தமது தனி அனுபவம் ஒன்றை அருளிச் செய்தார். இதனானே பிறர்க்கும் இது கூடலாம் என்பது உணர்தல் வேண்டி.*

***2929. தெளிவுரை :-** கருப்பஞ் சாற்றையும், தேனையும் கலந்து உண்டவழி, 'அதன் இனிப்பு இத்தகையது' என வரையறுத்துச் சொல்ல வாராமைபோல், 'இன்னது' என வரையறுத்துச் சொல்ல வாராத ஓர் இன்பம் இவ்வுடம்பிற்றானே உண்டாகின்றது. (அஃது அரிவையர் இன்பம். அதனால் அதனை மக்கள் பின்னும் பின்னும் வெறாதே விரும்பு கின்றனர்). ஆயினும், மலரில் மணம் போல அறிவினுள் அறிவாய் எழுகின்ற ஓர் ஆனந்தம் உண்டு. (அது சிவானந்தம்) அதனை அடையவே உயர்ந்தோர்கள் விரும்புகின்றார்கள். அவர்கள் விரும்பியபடி அந்த ஆனந்தம் அவர்களது முயற்சியால் அவர்கள் அறிவிலே வெளிப்பட, அதனை அவர்கள் நுகர்ந்த பின் அவர்கட்கு மேலே, குறிப்பிட்ட கருப்பஞ்சாறு போன்ற இன்பங்களும் கசந்து விடுகின்றன; தேன் போன்ற இன்பங்களும் புளித்துவிடுகின்றன.*

***குறிப்புரை :-** எனவே, 'அவை யிரண்டும் கலந்தது போன்ற இன்பமும் அவர்கட்குச் கசப்பும், புளிப்பும் ஆகின்றதேயன்றி, இனிப்பாதல் இல்லை' என்பது இசையெச்சம். 'இங்ஙனமாகவே அவ்வின்பம் அவர்களால் வெறுக்கப்படுவ தாதலைச் சொல்ல வேண்டா' என்பதாம்.*

*பெரும்பைம் புனத்தினில் சிற்றேனல் காக்கின்ற பேதைகொங்கை
விரும்பும் குமரனை மெய்யன்பி னால், மெல்ல மெல்லஉள்க
அரும்பும் தனிப்பர மானந்தம் தித்தித் தறிந்தஅன்றே
கரும்பும் துவர்த்துச்செந் தேனும் புளித்(து) அறக் கைத்ததுவே.*

***– கந்தரலங்காரம், 6***

*என்னும் அனுபவ மொழியை இங்கு எண்ணுக.*

*"கொவ்வைச் செவ்வாய் இக்கொடியிடை தோள்*

**2930.** உள்ளம் சரியாதி ஒட்டியே மீட்டென்பால்
வள்ளல் அருத்தியே வைத்த வளம்பாடிச்
செய்வன எல்லாம் சிவமாகக் காண்டலால்
கைவள மின்றிக் கருக்கடந் தேனே. **20**

---

*புணர்ந்தால், புணருந்தொறும் பெரும்போகம் பின்னும் புதிதாய்,*
*மணந்தாழ் புரிகுழலாள் அல்குல்போல வளர்கின்றதே".*

***– தி.8 திருக்கோவையார், 9***

*என அருளிச் செய்த திருப்பாட்டிற்கும் உலகத்தாரது பேதைமையைப் புலப்படுத்த முகத்தால், சிவபோகமே நுகருந் தொறும் நுகருந்தொறும் புதிது புதிதாய் எல்லையின்றி விளைவதாகிய பெரும் போகம் என்னும் உண்மையை உணர்தலே கருத்து' என்பதைச் சிவஞான போதத்துப் பதினொன்றாம் சூத்திரத்துச் சிற்றுரையால் அறிக.*

*பாலொடு தேன்கலந் தற்றே, பணிமொழி*
*வாலெயி றூறிய நீர்.* ***– திருக்குறள், 1121***

*என்னும் திருவள்ளுவப் பயனும் அன்னது.*

*இதனுள் பாடம்மிக வேறுபட்டது "ஓர் காயத்தில்" என்பதை முதலிற் கூட்டுக. "ஓர் காயம்" என்றாரேனும், இன்பத்தை 'ஓர் இன்பம்' என்றலே கருத்து, கலந்தது … கலந்தது போன்றது.*

*இதன்பின் 'உண்ட ஆயினும்' என்னும் சொல்லெச்சங்கள் வருவிக்க. 'ஆகிய' என்னும் ஆக்கச்சொல் உவமை குறித்து நின்றது விரும்புதற்கு எழுவாயும், கைத்தல் புளித்தல்களுக்குக் கோடற்பொருளும் வருவிக்கப்பட்டன.*

*இதனால், சிவானந்தத்தை நுகர்வார்க்கு ஐம்புல இன்பம் இன்பம் ஆகாது, உவர்ப்பேயாதல் கூறப்பட்டது.*

***2930. தெளிவுரை :-*** *வள்ளலாகிய சிவபெருமான் முதலில் 'சரியை, கிரியை, யோகம்' என்னும் தவ நிலையில் என் உள்ளத்தில் உள்ளப்படும் பொருளாய்ப் பொருந்தி, பின்பு ஞான நிலையில் தனது அருளை வைத்த அந்தப் பயனையே நினைந்து நினைந்து நான் போற்றிக்கொண்டு, என்னால் நிகழ்த்தப்படும் செயல்களை எல்லாம் என் செயலாகக் காணாது அவன் செயலாகவே நான் கண்டுவருதலால், எனக்கெனச் செயலின்றிப் பிறவியைக் கடந்து நிற்கின்றேன்.*

***குறிப்புரை :-*** *'உள்ளம் ஒட்டியே' என இயைக்க. ஒட்டுதல் உண்மை மாத்திரையால் விளங்குதல். ஆகவே, "சரியாதி" என்பது சரியை முதலிய மூன்றையே குறித்தன. 'அன்பு' எனப் பொருள் தரும் "அருத்தி" என்பது இங்கு 'அருள்' எனப் பொருள் தந்தது. சிவன் சீவர்களிடத்தில் தான் அவை என்னாது*

**2931.** மீண்டார் கமலத்துள் அங்கி மிகச்சென்று
தூண்டா விளக்கின் தகளிநெய் சோர்தலும்
பூண்டான் ஒருத்தி புவனசூ டாமணி
மாண்டான் ஒருவன்கை வந்தது தானே. **21**

---

*ஒன்றி நிற்றல் அருள்வகையேயாகலின் தம்மிடம் சிவன் அவ்வாறு நின்றமையை, "அருத்தி வைத்து" என்றார். அதனானே 'அந்நிலை ஞான நிலை' என்பது போந்தது. 'சிவன் தவநிலை அந்நியமாயும், ஞான நிலை அநந்நியமாயும்' நின்றான் என அருளியவாறு "மீட்டு" என்பது, வினைமாற்றாய 'மற்று' என்பதன் பொருட்டாய் நின்றது. "வள்ளல்" என்பதை முதலிற் கூட்டுக. 'அருத்தி வைத்த வளமே பாடி' எனப் பிரிநிலை ஏகாரத்தை மாற்றி வைத்துரைக்க. நினைவு தோன்றாத வழிப் பாடுதல் தோன்றாமையால் "பாடி" எனவே, 'நினைந்து' என்பதும் தானே பெறப்பட்டது. "துருத்தியாய், திருந்தடி உளங்குளிர்ந்த போதெலாம் உகந்துகந் துரைப்பனே" (தி.2 ப.98 பா.9) என ஆளுடைய பிள்ளையாரும் அருளிச்செய்தார். 'மனம், மொழி, மெய்' என்பவற்றுள் மெய்யால் ஆவனவற்றை, கையால் ஆவனமாகவே கூறும் வழக்குப் பற்றி அவற்றை, "கை வளம்" என்றும், முப்பொறிகளாலும் வினை வருமாயினும், வினை பெரும்பான்மை காயத்தால் வருவனவாகவே கருதப்படுதலால் வினை வாராமையை, "கைவளம் இன்றி" எனவும் கூறினார். "இன்றி" எனப் பண்பின் நிலை பண்பிமேல் ஏற்றப்பட்டது. அன்றி, 'இன்றாக' எனத் திரிப்பினும் ஆம். இஃது ஈரடி எதுகைபெற்றது. 'குறிலையடுத்த யகர மெய் அசைக்கு ஐகாரம் எதுகையாய் வரும் என்க'.*

*இதனால், மோன சமாதியுற்றார்க்கு அவரது நினைப்பின் தன்மையால் வினை இன்றாமாறும் அதனால் பிறப்பின்றாமாறும் கூறப்பட்டன.*

***2931. தெளிவுரை :-*** ***உலகியலிற் செல்லும் செலவிலிருந்து மீண்டவரது உள்ளக் கமலமாகிய தகளியில் ஞானமாகிய விளக்கு அணையாது எரியும் படி, தூண்டா விளக்கின் தகளியில் நெய்யையே, உலகத் தலைவியாகிய ஒப்பற்ற ஒருத்தி எடுத்து வார்க்கும் செயலை முன்சென்று மேற்கொண்டாள். அதனால், அவ்விளக்கின் ஒளி விளக்கத்தில், அனைவரிலும் மாட்சி மிக்கோன் ஒருவனது கை வன்மை இனிது நிகழ்ந்தது.***

***குறிப்புரை :-*** ***'இது குறிப்பிடத்தக்க ஒன்று' என்பது குறிப்பெச்சம். "அங்கி" என்றது சுடரை. இது ஞானமே மிக - மிகும்படி, 'சோர்வித்தல்' என்னும் பிறவினைத் தொழிற்பெயரில் விவ்விகுதி தொகுக்கப்பட்டது. சோர்வித்தல் - சொரிதல்; வார்த்தல். 'சோர்வித்தலும்' என்னும் உம்மை சிறப்பு. தூண்டா விளக்காவது மணி விளக்கு. அஃது மாணிக்க மணியே விளக்காக வைக்கப்பட்டு ஒளி தருவது. "நொந்தா ஒண்சுடர்" என்பது இதனையே. இதில் மணியே***

**2932.** அன்புள் ளுருகி அழுவன் அரற்றுவன்
என்பும் உருக இராப்பகல் ஏத்துவன்
என்பொன் மணியை இறைவனை ஈசனைத்
தின்பன் கடிப்பன் திருத்துவன் நானே. 22

---

*தகளியாகவும், அதன் தன்மையே நெய்யாகவும், அதன் ஒளியே சுடராகவும் இங்குக் கொள்ளப்படுதலின், சிவத்தை அவற்றினுள் தகளியாகவும், அதன் தன்மையாகிய அறிவு அல்லது ஞானத்தை நெய்யாகவும், அருட் சத்தியை உள்ளத் தகழியில் ஞானச் சுடர் அணைந்து விடாதபடி அந்நெய்யை வார்க்கும் பெண்ணாகவும் உருவகித்தார். 'புவன சூடாமணி யாகிய ஒருத்தி' என்க. ஞானச் சுடர் ஒளிவிட்டு விளங்கவே, அவ்விளக்கத்தில் சிவத்தின் செயற்பாடு தடையின்றி நிகழ்ந்தது என்பதாம்.*

*ஞானம் முதலியவற்றைச் சுடர் முதலியவாக உருவகித்து, உள்ளக் கமலத்தைத் தகளியாக உருவகம் செய்யாமையால், இஃது ஏகதேச உருவகம். 'அங்கி, தூண்டா விளக்கு, தகளி நெய்' என்பன சிறப்புருவகங்கள் யாவரினும் மாட்சிமையுடைய ஒருவன் சிவன், "கை" என்பது அதன் செயலைக் குறித்த ஆகுபெயர்.*

*இதனால், முத்தரது அறிவில் அருட்சத்தி மேன்மேற் பதிந்து ஞானத்தை மிகுவித்தலால், அவர்களது அறிவில் சிவ விளக்கம் மிகுந்து, சிவானந்தம் மேன்மேல் விளைவதாதல் கூறப்பட்டது. (இதன்பின் பதிப்புகளில் காணப்படும் "ஆறே அருவி அகங்குளம் ஒன்றுண்டு" என்னும் மந்திரம் முன் தந்திரத்தில் 'அட்டதள கமல முக்குண அவத்தை' என்னும் அதிகாரத்தில் வந்தது).*

***2932. தெளிவுரை :-** 'தன்பால் காதல் மிக்க பெண்டினிடம் காதல் மிக்க ஆடவன் அவளது நலத்தை எவ்வாறு கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அனுபவிப்பானோ அதுபோல என்பால் அருள்மிக்க சிவனிடத்தில் நான் அன்பு மிகுந்த அவனது ஆனந்தத்தைப் பல்லாற்றானும் அனுபவிக்கின்றேன் என்பது இம் மந்திரத்தின் திரண்ட பொருள். (திருத்துதல் - தனக்கு ஏற்ற வகையில் கொள்ளுதல். 'தானே' என்பது பாடமன்று).*

***குறிப்புரை :-** 'அன்பால்' என உருபு விரித்து, 'அன்பால் உள் உருகி, என்பும் உருக அழுவன்; அரற்றுவன்' எனவும் 'என் பொன் மணியை இறைவனை, ஈசனை இராப் பகல் ஏத்தி, தின்பன் .......... நானே' எனவும் இயைக்க.*

*'அன்பே இன்பாவதன்றி, வேறில்லை' என்பதை,*

*"ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த*
*இன்பமே! என்னுடை அன்பே" - தி.8 கோயில்திருப்பதிகம், 1*

*எனவும் 'யான் அனுபவிக்கும் இன்பமாவது என்னுடைய அன்பே' என அருளிச்*

*செய்த திருவாசகத்தாலும்,*

> *இன்பில் இனிதென்றல் இன்றிண்டேல் இன்றுண்டாம்;*
> *அன்பு நிலையை அது - திருவருட்பயன், 80*

*என்னும் திருவருட் பயனாலும் அறிக.*

> *அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்*
> *அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே*

*என இந்நாயனாரும் (பா.269) மேலே கூறினார்.*

> *“எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது*
> *தானமர்ந்து வரூஉம் மேவற் றாகும்”*

*என்றார் தொல்காப்பியனாரும் (பொருள் - பொருளியல் - 27), எனவே அன்பு நிலைதான் இன்ப நிலையேயன்றி, அன்பில்லாத நிலை ஒரு வறட்டு நிலையேயாகும்.*

*இதனைத் திருவள்ளுவர்,*

> *அன்பின் வழியது உயிர்நிலை; அஃதிலார்க்கு*
> *என்புதோல் போர்த்த உடம்பு. - திருக்குறள், 80*

*என வேறொரு வகையால் விளக்கினார். இஃதே பற்றி மெய்கண்ட தேவரும், “அயரா அன்பின் அரன்கழல் செலுமே” (சிவஞான போதம் - சூ. 11) என்றார்.*

*ஞானமாவது, பொருளியல்புகளை உள்ளவாறு உணர்தல். அது, துன்பப் பொருளின் நீங்கி, இன்பப் பொருளைப் பற்றதற்கு ஏதுவாம். ஆயினும் அதனாலே இன்பப் பொருளை அனுபவித்தல் இயலாது. மற்றும் அவ்வின்பப் பொருளை உணர்ந்து பற்றினவன் அதனை மேலும் மேலும் விரும்புதலாற்றான் அதனது இன்பத்தை அனுபவித்தல் கூடும். அந்த விருப்பமே அன்பு, அது முடிவின்றி வளர்தலாற்றான் இன்பமும் முடிவின்றி வளர்கின்றது. இதனையே “பெரும்யோகம் பின்னும் புதிதாய் .................... வளர்கின்றதே” என்னும் தி.8 திருக்கோவையார் விளக்கிற்று.*

> *அறிதோ றறியாமை கண்டற்றால் காமம்*
> *செறிதொறும் சேயிழை மாட்டு. - திருக்குறள், 1110*

*என்றதும் இதனையே, ஆகவே, ‘ஞானத்தால் அடையத்தக்கது அன்பே’ எனபதும், ‘அந்த அன்பே இன்பத்தை விளைக்கும்’ என்பதும் போதரும். இதனையே சேக்கிழார்,*

> *“ஞானம் ஈசன்பால் அன்பே*
> *என்றனர் ஞானம் உண்டார்”.*
> *- தி.12 திருஞானசம்பந்தர் புராணம் - 843*

*என அருளிச் செய்தார். இவ்வாற்றால், ஞானம் வித்தாக, அன்பே விளைவாதல் விளங்கும். வித்தை வேண்டுவது, விளைவின் பொருட்டேயன்றோ! ஆகவே, ஞானத்தை மட்டும் வேண்டி, அன்பை வேண்டாதவர், வித்தை வேண்டி, விளைவை வேண்டாதவர் ஆகின்றனர். இதனைத் திருவுந்தியார் (பா.28),*

*"வித்தினைத் தேடி, முளையைக்கை விட்டவர்*
*பித்தேறி னார்களென் றுந்தீபற;*
*பெறுவதெங் கென்பெணே! உந்தீபற"*

*எனக் கூறிற்று. இன்னும் ஞானத்தை வேண்டி, அன்பை வேண்டாத சமயங்களைச் சுட்டி அந்நூல், (திருவுந்தியார், பா.31)*

*"சாவிபோம் மற்றைச் சமயங்கள் புக்குநின்(று)*
*ஆவியறாதேயென் றுந்தீபற;*
*அவ்வுரை கேளாதே; உந்தீபற"*

*என்றும் கூறிற்று. இவ்வுந்திகளின் கருத்தைத் திருக்களிற்றுப்படியார் (வெண்பா, 57)*

*வித்துமதன் அங்குரதமும் போன்றிருக்கும் மெய்ஞ்ஞானம்;*
*வித்துமதன் அங்குரமும் மெய்யுணரில், - வித்ததனில்*
*காணாமை யால்அதனைக் கைவிடுவர்; கண்டவர்கள்*
*பேணாமை யால்அற்றார் பேறு.*

*என விளக்கிற்று.*

*விறகில் தீயினன் பாலிற் படுநெய்போல்*
*மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்;*
*உறவு கோல்நட்(டு) உணர்வு கயிற்றினால்*
*முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே. - தி.5 ப.90 பா.10*

*என்னும் அப்பர் திருமொழியிலும், "உறவு" என்றது, சிவன் சீவர்களோடு அருள் காரணமாகக் கொண்டுள்ள ஆண்டான் அடிமைத் தொடர்பினை அறியும் அறிவையும், "உணர்வு" என்றது, அத்தொடர்பினை அறிந்து, அவனையே விரும்பி, அவனிடத்திற் செலுத்தும் அன்பையும் குறிப்பன. அவற்றுள், அறிவைக் கோலாகவும் அன்பைக் கயிறாகவும் உருவகித்தமையால், 'கயிற்றில் வழிக்கோல் இருந்து கடைதல் கூடாமையால் விறகில் தீயும், பாலில் நெய்யும் வெளிப்படாதவாறுபோல,* ***<u>அறிவாகிய ஞானம் இருந்தும் அன்பு இல்லாவிடில் சிவனிடத்தில் தோய்தல் கூடாமையால்</u>, மறைய நின்றுள்ள அவன் முன்னிற்றல் இயலாது' என்பது போந்தவாறு அறிக. எனவே, இன்ப நிலைக்கு முடிநிலை ஏது அன்பேயாயிற்று.***

***இதனையே இம்மந்திரத்தால் அநுபவமாகக் கூறிமுடித்து, வருகின்ற***

*அதிகாரத்திற்குத் தோற்றுவாயும் செய்யப்பட்டது.*

*(இதன்பின் பதிப்புக்களில் காணப்படும்,*

*“மனம்வி ரிந்து குவிந்தது! மாதவ*
*மனம்வி ரிந்து குவிந்தது வாயு;*
*மனம்வி ரிந்து குவிந்தது மன்னுயிர்;*
*மனம்வி ரிந்துரை மாண்டது முத்தியே”*

*என்பது யாப்பு. முற்றிலும் வேறுபட்டதுடன், பொருள் சிறப்பிலதாயும், இவ்விடத்திற்கு இயைபில்லதாயும் இருத்தலின் நாயனாரது வாக்காகத் தோன்றவில்லை).*

## 28. தோத்திரம்

*முன் மந்திரத்திற் கூறிய அன்புச் செயல்களில் மிக வெளிப்படையாக அன்புக்கண்ணீர் அருவிபோல் தாழ நிகழ்வது வாய்விட்டு வாழ்த்துவதாகிய தோத்திரித்தலேயாகலின், அதனை வேறு சிறந்தெடுத்து இவ்வதிகாரத்துட் கூறுகின்றார். "வள்ளல் அருத்தியே வைத்த வளம் பாடி" (பா.2930) என முன்னரும் கூறினார். இது நாற்பத்தாறு மந்திரங்களையுடையது. தோத்திரம் - புகழ். அதனை எடுத்தோதுதலே தோத்திரித்தல். அஃதாவது புகழ்தலாம். இறைவன் புகழே, "பொருள் சேர்புகழ்" (திருக்குறள், 5) ஆதலை உணர்க. திருமுறைகள் யாவும் தோத்திரங்களாய் இருத்தலும் இங்கு நினைக்கத் தக்கது.*

**2933.** மாயனை நாடி மணநெடுந் தேர்ஏறிப்
போயின நாடறி யாதே புலம்புவர்
தேயமும் நாடும் திரிந்தெங்கள் நாதனைக்
காயமின் நாட்டிடைக் கண்டுகொண் டேனே. **1**

---

*2933. **தெளிவுரை :-** எத்துணையோ பேர் எத்துணையோ வகையில் காண முயன்றும் காணப்படாது ஒளிந்து நிற்கும் கள்வனாகிய சிவனை, 'எப்படியும் கண்டுவிட வேண்டும்' என்று பலர் அவன் ஒளிந்திருக்கும் இடத்தையறியாமல், மனமாகிய நெடுந்தூரம் செல்லத்தக்க தேர்மேல் ஏறிக்கொண்டு சென்று வருந்துகின்றார்கள். நானும் அவர்களைப் போலத்தான் எங்கெங்கோ அவனைத் தேடி வருந்தினேன். ஆயினும் நான் 'அவன் ஒளிந்திருக்கும் இடம் எனது உடம்பாகிய ஒளியிடந்தான்' என்று தெரிந்து அங்குச் சென்று அவனைக் கண்டு விட்டேன்.*

*குறிப்புரை :- மாயம் - வஞ்சனை; கள்ளத்தனம். அதனையுடையவன் மாயன். சிவன், பல்லாற்றானும் தேடிய பல்லோர்க்கும் அகப்படாத கள்வன் ஆதலை மாணிக்கவாசகர் தமது திருஅண்டப் பகுதியுள் நூற்றிருபத்து நான்கு முதல் நூற்று நாற்பத்தைந்து முடிய உள்ள அடிகளால் விரித்தமை காண்க. தேடுவார் தேடும் பொருளாயினமை பற்றி. "போயின" என்றாரேனும், "இருந்த" என்றலே கருத்தென்க. "நாடு" மூன்றனுள் நடுவணது ஒன்றே தன் பொருளைத் தந்தது; ஏனை இரண்டும் 'இடம்' என்னும் பொருளவாய் நின்றன. 'தேயம் பெருநாடும், நாடு உள்நாடும் ஆம்' என்க. 'காய நாடு, மின் நாடு' எனத் தனித்தனி முடிக்க. மின் - ஒளி. 'ஞானியரது உடம்பு ஊனுடம்பாகாமல் ஒளியுடம்பாம்' என்பது கொள்கை. ஆகவே, 'அஞ்ஞானியரது உடம்பன்றி, ஞானியரது உடம்பே சிவன் இருக்கும் இடம்' என்றற்கு, "மின் நாடு" என்றார். "உடம்பினுள் உத்தமன் கோயில் கொண்டான்" என்றும், "கண்டறி வார் இல்லை காயத்தில் நந்தியை" என்றும் முன்னருங் (பா. 709, 2926) கூறினார்.*

*இதனால், 'இத்தோத்திரம் புறக்காட்சித் தோத்திரம் அன்று; அகக் காட்சித்*

**2934.** மன்னும் மலைபோல் மதவா ரணத்தின்மேல்
இன்னிசை பாடஇருந்தவர் யாரெனின்
முன்னியல் காலம் முதல்வனார் நாமத்தைப்
பன்னினர் என்றேதம் பாடறி வீரே. **2**

---

*தோத்திரம்' என்பது கூறப்பட்டது.*

***2934. தெளிவுரை :-*** *நிலைபெற்ற மலைபோலும் தோற்றத்தை உடையதாய், ஆயினும் மதத்தால் அடங்காது நடக்கும் யானையின் மேல் பலர் இனிய இசைபாடிச் சூழ்ந்து வர இப்பொழுது உலவாகும் அரசர்கள் யாவரெனின், 'முற்பிறப்பில் சிவனது ஆயிரம் நாமங்களை எடுத்தோதித் திரித்தவர்' என்றே அவரது பெருமையின் காரணத்தை உணர்ந்துகொள்ளுங்கள்.*

***குறிப்புரை :-*** *முன் இயல் காலம் - முற்பிறப்பு. "என்றே" என்னும் ஏகாரம் தேற்றம்.*

*வானகம் ஆண்டு, மந் தாகினி ஆடி, நந்தாவனஞ் சூழ்*
*தேனக மாமலர் சூடிச்செல் வோரும், சிதவல் சுற்றிக்*
*கால்நகம் தேயத்திரிந் திருப்பாரும் கனக வண்ணப்*
*பால்நிற நீற்றற்கு அடியரும், அல்லாப் படிறருமே.*

*உலகா ளுறுவீர், தொழுமின்; விண்ணாள்வீர், பணிமின்; நித்தம்*
*பலகா முறுவீர், நினைமின்; பரமனொடு ஒன்றலுற்றீர்,*
*நலகா மலரால் அருச்சிமின்; நாள் நரகத்து நிற்கும்*
*அலகா முறுவீர் அரனடி யாரை அலைமின்களே.*

*என்னும் தி.11 பொன்வண்ணத் தந்தாதி (பா. 12, 14) யை இங்கு ஒப்பிட்டுக் காண்க.*

*"மத வாரணம்" என்றது, ஐராவதத்தையும் குறிக்கும் குறிப்பினது.*

*வண்டுளருந் தண்டுழாய் மாயோன் இறுமாப்பும்,*
*புண்டரிகப் போதுறையும் புத்தேள் இறுமாப்பும்,*
*அண்டர்தொழ வாழ்உன் (இந்திரன்) இறுமாப்பும் ஆலாலம்*
*உண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்.*

***- திருவிளையாட. பு. வெள்ளையானை சாபம் தீர்த்த படலம் - 14***

*எனத் திருவிளையாடற் புராணத்திலும்,*

*வானம் ஏத்த யான் (மாயோன்) வைகுந்த வாழ்வுபெற்றதுவும்,*
*ஞான நான்முகன் சத்திய உலகம்நண் ணியதும்*
*ஏனை விண்ணவர் தத்தம் வாழ்க்கை எய்தியதும்*
*ஆனுயர்த்தவர் அருட்குறி அருச்சனைப் பயனால்.*

***- காஞ்சிப் புராணம், சார்ந்தாசயப் படலம் - 14***

**2935.** முத்தினில் முத்தை முகிழிள ஞாயிற்றை
எத்தனை வானோரும் ஏத்தும் இறைவனை
அத்தனைக் காணாது அரற்றுகின் றேனை ஓர்
பித்தன் இவன்என்று பேசுகின் றாரே. **3**

---

*எனக் காஞ்சிப் புராணத்திலும் சொல்லப்பட்டன.* ***நல்வாழ்வு வாழ்வோரைக் கண்டால், "அஃது அவர் பூசா பலம்" என்றல் இன்றும் வழக்கில் உள்ளது. "பாடறிவீரே என்றது, பன்னுவீராயின் நீவிரும் பெருவாழ்வு வாழலாம்" என்றபடி.***

*இதனால், தோத்திரத்தின் பயன் உணர்த்தும் முகத்தால் அதனை சிறப்புக் கூறப்பட்டது.*

***2935. தெளிவுரை :-*** *பொன்னின் தராதரத்தை அளத்தற்கு உதவுகின்ற பொன் 'ஆணிப் பொன்' எனப்படும். அஃது ஏனை எல்லாப் பொன்னினும் உயர்ந்தது. அதுபோல முத்துக்களின் தராதரத்தை அளக்க உதவுகின்ற முத்தும் 'ஆணி முத்து' எனப்படும். அஃது ஏனை எல்லா முத்துக்களினும் உயர்ந்தது. அதுபோலச் சிவன் ஏனைத் தேவர் பலரினும் உயர்ந்தவன். பின் அவன், திருமேனி அழகால் காலையில் தோன்றும் ஞாயிற்றை ஒப்பான்.*

> *காலையே போன்றிலங்கும் மேனி; கடும்பகலின்*
> *வேலையே பொன்றிலங்கும் வெண்ணீறு – மாலையின்*
> *தாங்குருவே போலும் சடைக்கற்றை; மற்றவற்கு*
> *வீங்கிருளே போலும் மிடறு. – தி.11 அற்புதத் திருவந்தாதி, 65*

*என அம்மையாரும் அருளிச் செய்தார். தேவர் என்று எத்துணைப் பேர் உளரோ அத்துணைப் பேராலும் 'இறைவன்' என்று ஏத்தப் படுபவன் அவன்; கருவுற்ற நாள்முதல் இன்றுகாறும் அவன் என்னைப் புரந்து வருதலால் எனக்குத் தந்தை. ஆகவே, அரைக்கணமேனும் அவனை நானுங் காணாமல் எப்படியிருத்தல் கூடும்?*

> *"பாணில் வீணை பயின்றவர் வீரட்டம்*
> *காணி லல்லதென் கண்துயில் கொள்ளுமே" – தி.5 ப.52 பா.1*

*என அப்பரும் அருளிச்செய்தார். அதனால் இவ்வுலக நிலை அவனை இடையறாது காணும் தன்மையுடைத்தாகாமையால் யான் 'ஓ' என்று அழைத்து அரற்றிக் கதறுகின்றேன். எனது நிலைமையை அறிந்து கொள்ளாத உலகர், 'துன்பத்திற்கு ஏதும் காரணம் இல்லாதிருக்கவும் இப்படி இவன் எப்பொழுதும் அழுது கொண்டிருக்கின்றான்; இவன் பித்துக் கொள்ளியல்லது வேறு யார்? என்று தங்களுக்குள் பேசிக்கொள்கின்றார்கள்.*

***குறிப்புரை :-*** *'அதற்கு நான் என் கடவேன்' என்பது குறிப்பெச்சம். "சகம், பேய்" என்று தம்மைச் சிரிப்ப" (தி.8 போற்றித் திருவகவல், 68)*

**2936.** புகுந்துநின் றான்எங்கள் புண்ணிய மூர்த்தி
புகுந்துநின் றான்எங்கள் போதறி வாளன்
புகுந்துநின் றான்அடி யார்தங்கள் நெஞ்சம்
புகுந்துநின் றானையே போற்றுகின் றேனே. **4**

---

*உத்தமன், அத்தன், உடையான் அடியே நினைந்துருகி*
*மத்த மனத்தொடு 'மால்இவன்' என்ன மனநினைவில்*
*ஒத்தன ஒத்தன சொல்லிட ஊரூர் திரிந்தெவரும்*
*தத்தம் மனத்தன பேசஎஞ் ஞான்றுகொல் சாவதுவே.*

*- தி.8 திருச்சதகம், 3*

*என்றார் மாணிக்கவாசகரும்,*

**இதனால், உடம்பில் நிற்குங்காறும் சிவனது தலைப்பாடு இடையிடும் பொழுதெல்லாம் ஞானிகள் ஆற்றாமையால் அழைத்தும், அலறியும் நிற்றல் கூறப்பட்டது. அழைத்தலே தோத்திரம் ஆதல் அறிக.**

*2936.* ***தெளிவுரை :-*** *பல்வேறு வகைப்பட்ட அறங்களையெல்லாம் தனது வடிவாகக் கொண்டிருத்தலால் 'அற ஆழி' எனப்படுபவனும், எல்லாவற்றையும் ஒருங்கேயறிதலால், பேரறிவாளன் - முற்றுணர்வினன்' எனப்படுபவனும், எல்லாப் பொருள்களிலும் தான் நீக்கம் அற நிறைந்திருப்பினும், அங்கெல்லாம் பாலில் நெய்போல விளங்காது நின்று, தன் அடியவர் உள்ளங்களில் தயிரில் நெய்போல விளங்கி நிற்பவனுமாய் இருப்பவன் எங்கள் சிவபெருமான். அவன் என் உள்ளத்திலும் புகுந்துவிட்டமையால் அவனையே தோத்திரித்து நிற்கின்றேன்.*

***குறிப்புரை :-*** *ஈற்றில் வந்த "புகுந்து நின்றான்" என்பது, 'புகுந்து நின்ற அவன்' எனப்பொருள் தந்தது. புண்ணிய மூர்த்தி - அற வடிவினன். போது அறிவு - நிரம்பிய அறிவு. புகுதல், விளங்குதலையே குறித்தது.*

*இதனால், 'சிவன் இத்தன்மையன் ஆகலின் அவனே தோத்திரிக்கப்படுதற்கு உரியவன்' என்பது கூறப்பட்டது.*

*2937.* ***தெளிவுரை :-*** *பூதக் கண் ஆடி - பூத காரியமாகிய 'கண்' என்னும் ஆடி. இஃது உருவகம். இது முகத்தில் உள்ள கண்ணைக் குறித்தது. இக் கண்ணிற்கு அகப்படாதவன் சிவன். ஆயினும், போது - அடியார்களுடைய உள்ளக் கமலத்தில் என்றும் விளங்கியே நிற்கின்றான். வேதக் கண்ணாடி - வேதமாகிய கண்ணாடி. இதுவும் உருவகம். பொருள்களைத் தெளிவுற விளக்குதல் பற்றி வேதத்தைக் கண்ணாடியாக உருவகம் செய்தார். இஃது ஆகமத்தையும் உள்ளடக்கியதே. வேதாகமங்களை உணர்வார்க்குச் சிவன் அந்நூல்களின் பொருளாய், உணர்பவர்க்கு வேறாய் நின்று விளங்குகின்றான். இனி, நீதிக்கண் நாடி நினைவார் மனத்து - "சிவன் - நீதி பலவும் தன்ன உருவாம் என மிகுத்த*

**2937.** **பூதக்கண் ணாடி புகுந்திலன் போதுளன்**
**வேதக்கண் ணாடியில் வேறே வெளிப்படும்**
**நீதிக்கண் நாடி நினைவார் மனத்துளன்**
**கீதக்கண் ணாடியிற் கேட்டுநின் றேனே.** **5**

**2938.** **நாமமொ ராயிரம் ஓதுமின் நாதனை**
**ஏமமொ ராயிரத் துள்ளே யிசைவீர்கள்**
**ஓமமொ ராயிரம் ஓதவல் லாரவர்**
**காமமோ ராயிரங் கண்டொழிந் தாரே.** **6**

---

*தவன்" (தி.3 ப.71 பா.4) என உணர்ந்து அந்த உணர்வு வடிவாகத் தமது அறிவினுட் காண்பவர்கட்கு அவன் அவர்தம் அறிவுக்கறிவாய், ஒன்றாகியே விளங்குகின்றான். அத்தகையோனை நான் பலர் பாடும் தோத்திரப் பாடல்களில் கேட்டுக் கண்ணாடி நிழலைத் தெளிவாக உணர்தல் போல உணர்ந்து நின்றேன். இங்குள்ள கண்ணாடி அதன் நிழலைக் குறித்த ஆகுபெயர். அந்நிழல், தெளிவாக உணரப் படுதற்கு உவமையாயிற்று.*

*குறிப்புரை :- 'அதனால், நானும் அவனைத் தோத்திரித்தலையே மேற்கொண்டேன்' என்பது கருத்து. முதல் மூன்று அடிகள் அவன் தோத்திரிக்கப் படுவதற்கு உரியவன் ஆதலையும், ஈற்றடி, தோத்திரங்களில் அவன் இனிது விளங்கி நிற்றலையும் குறிப்பால் உணர்த்தின. இவையே இம்மந்திரத்தால் உணர்த்தப்பட்டன என்க.*

*2938. **தெளிவுரை :-** 'அளவற்ற மந்திரங்களை ஓத வல்லேம்' என்று சொல்லி, வேத வேள்விகளை அளவின்றிச் செய்தோர் யாவரும் அவற்றின் பயனாகிய போகங்களை அனுபவித்தலோடு போய் விட்டார்கள். ஆகவே, சிவனை அவனது அளவற்ற திருப்பெயர்களைச் சொல்லித் தோத்திரியுங்கள்; அளவற்ற இன்பத்தில் பொருந்துவீர்கள்.*

***குறிப்புரை :-** 'ஓமம் செய்தவர்கள் பெற்றது காமம்'. எனவே, 'நாமம் ஓதுவார் பெறுவது மோட்சம்' என்பது பெறப்பட்டது. "காமம், ஏமம்" எனவும், 'ஒழிந்தார், இசைவீர்' எனவும் கூறிய சொற்குறிப்புக்களால், ஓமத்தை விலக்குதற்கண்ணதே நாயனாரது கருத்தாதல் விளங்கும். "பசித்துண்டு பின்னும் பசிப்பானையொக்கும் - இசைத்து வருவினையில் இன்பம்" (சிவஞானபோதம், சூ - 8) என மெய்கண்ட தேவரும் அதனை விலக்குதலையே மேற்கொண்டார்.*

*அவிசொரிந் தாயிரம் வேட்டலின், ஒன்றன்*
*உயிர்செகுத் துண்ணாமை நன்று.* ***- திருக்குறள் - 259***

*என்னும் திருக்குறளும் இக்குறிப்புடைத்து. "ஆயிரம்" என்றவை அளவின்மை குறித்து நின்றன.*

**2939.** நானா விதஞ்செய்து நாடுமின் நந்தியை
ஊனார் கமலத்தி னூடுசென் றப்புறம்
வானோர் உலகம் வழிபட மீண்டவன்
தேனார உண்டு தெவிட்டலும் ஆமே. 7

---

*இதனால், வேள்வி மந்திரங்களை ஓதுதலைவிட, வழிபாட்டுத் தோத்திரம் பயனுடைத்தாதல் கூறப்பட்டது.*

*(இதன் பதிப்புக்களில் காணப்படும், "போற்றுகின்றேன் புகழ்ந்தும் புகழ் ஞானத்தை" என்னும் மந்திரம் நான்காம் தந்திரத்தின் தொடக்கமாய் (பா.867 வந்தது).*

*2939. **தெளிவுரை :-** தேவருலகமும் உங்களை வழிபடுமாறு, நீவிர் உங்கள் உடம்பில் உள்ள ஆதார கமலங்களில் மந்திர ரூபமாய் நுணுகிச் சென்று, அவற்றிற்கு அப்பால் நிராதாரம், அதற்கப்பால் மீதானம் ஆகிய இடங்களை அடைந்து அங்கே நின்றுகொண்டு சிவனைப் பல்லாற்றானும் நினையுங்கள். அவ்வாறு நினைக்கின்றவர்களில் எவனாயினும் ஒருவன் மீண்டு கீழே வருவானாயின், அவன் மயக்கம் தருகின்ற மதுவை நிரம்ப உண்டு, அதன் கீழ்மையை உணர்ந்து வெறுப்படையும் நிலை உண்டாதலும் கூடும்.*

*குறிப்புரை :- "வானோர் உலகம் வழிபட" என்பதை இரண்டாம் அடியின் முன்னர்க் கூட்டிப் பின் இரண்டாம் அடியோடு முதலிற் கூட்டி யுரைக்க. நானாவிதம் செய்தல் - பலவகைப்படுத்துதல். அஃதாவது, சிவன் ஹடயோகம், மந்திர யோகம், ஆதார யோகம், நிராதார யோகம் முதலியவற்றில் நின்று அருளுமாற்றையெல்லாம் நினைந்து துதித்தல், மீளுதல் யோக நிலையினின்றும் நீங்கி உலகமுகப்படுதல். "தேன்" என்றது, மதுவை. 'தண்ணீர்' என, நகை தோன்றக் கூறுதல்போலக் கூறிய வஞ்சப்புகழ்ச்சி. ''மீண்டவன் தேன் ஆர உண்டு தெவிட்டலும் ஆம்" என்றது, 'உலக மாயையில் வீழ்ந்து அல்லற்பட்டுப் பின் வெறுத்தலும் கூடும்' என்னும் பொருளைத் தோற்றுவித்தலின், பிறிது மொழிதல். 'நிராதார மீதானங்களினின்று மீளுதல் கூடாது' என்பதை இங்ஙனம் கூறினார். மீட்சியைத் தோத்திரம் விலக்கும்' என்பது இங்குள்ள குறிப்பாகக் கொள்க.*

*இதனால் தோத்திரம் மீதானத்தில் சென்றோர்க்கும் உரித்தாதல் கூறப்பட்டது.*

*2940. **தெளிவுரை :-** 'தோத்திரம்' என்னும் அதிகாரத்தை முதலில் 'தோத்திரத்தின் சிறப்புணர்த்துவது' என்னும் பொருளதாக வைத்து, முன் மந்திரம் வரையில் அதனையே கூறிவந்த நாயனார் 'தோத்திரத்தைக் கூறுவது' என்னும் பொருளதாக வைத்து, இது முதலாக வரும் மந்திரங்களில் தோத்திரமே செய்கின்றார். 'இவ்வாற்றால் பிறரும் தோத்திரம் செய்யப் பயன்படும்' என்பது*

**2940.** வந்துநின் றான்அடி யார்கட் கரும்பொருள்
இந்திர னாதி இமையவர் வேண்டினும்
சுந்தர மாதர் துழனிஒன் றல்லது
அந்தர வானத்தின் அப்புற மாமே. **8**

---

*பற்றி திருவள்ளுவ நாயனாரும், 'பெரியாரைப் பிழையாமை' என்ற ஓர் அதிகாரத்தை இரண்டு பொருளதாக வைத்துக் கூறியதைக் காணலாம். இவ்வுலகில் சிறந்தெடுத்துப் பேசப்படுகின்ற இன்ப ஆரவாரமே யல்லது பிறிதொரு சிறப்பும் இல்லாத விண்ணுலகச் சிற்றின்பத்தை, நூறு பரிமேதங்களை வேதம் நுவன்றவாற்றானே சிறிதும் குறையின்றி வருந்திச் செய்து இந்திர பதவி எய்துவோர் முதலாகப் பலர் மயக்கத்தால் விரும்பினாராயினும் தன் அடியவர் களால் மட்டுமே பெறப்படுகின்ற சிவன் தரும் இன்பமே அவ்விண்ணுலக இன்பங்கட் கெல்லாம் அப்பாற்பட்ட அரிய பெரிய இன்பமாகும்.*

*குறிப்புரை :-* *''அந்தம்'' 'வெளி' என்னும் பொருட்டாய், யாதும் இன்மையைக் குறித்தது. "வானம்" என்பது ஆகுபெயராய், அவ்விடத்து விளையும் இன்பத்தைக் குறித்தது. இதனை முன்னர், வேண்டுதலுக்குச் செயப்படு பொருளாக்கிப் பின்னர், 'அரும்பொருள் அதனின் அப்புறம் ஆம்' என இயைத்துரைக்க. எல்லாம், 'பொருள்' எனப்படுதலின், இங்கு இன்பம் "பொருள்" என இயைக்க. வந்து நிற்றல், கிடைத்தல்.*

*இதனால், சிவன் பிறவிடத்தில்லா பேரின்பத்தைத் தருதல் எடுத்தோதிப் புகழப்பட்டது.*

*"செங்க ணவன்பால், திசைமுகன்பால், தேவர்கள்பால்*
*எங்கும் இலாததோர் இன்பம் நம்பாலதா"*

*- தி.8 திருவெம்பாவை, 17*

*என்ற திருவாசகத்தைக் காண்க.*

***2941. தெளிவுரை :-*** *வானில் தெளிவாய் இருந்த நீர் மண்ணில் வீழ்ந்தவுடன் அம்மண்ணின் தன்மையைப் பெற்றுத் தன்மை திரிந்தது போல, மக்களும் அநாதியே மும்மலச் சார்பினால் அறிவு கலங்கி, வேதாகமங்கள், "சிவனொடொக் குந்தெய்வம் தேடினும் இல்லை; அவனொடொப்பார் இங்கு யாவரும் இல்லை" என அறுதியிட்டுரைக்கவும் அதனைத் தெளிய மாட்டாராய், "அத்தேவர் தேவர் அவர் தேவர் என்றிங்ஙன் - பொய்த்தேவு பேசிப் புலம்புவார்" ஆயினர். ஆயினும், பருகுதற்கு உரிய நீராக ஒருவன் குளத்தினின்றும் சிறிது நீரை எடுத்து இல்லத்தில் ஒரு பக்கத்தில் தேற்றாங் கொட்டை யிட்டுத் தெளிய வைப்பதுபோல நல்லாசிரியன் ஓரிடத்திலிருந்து, பல சொல்லி ஆரவாரியாது ஒரு சொல் உறுதியாற் சொல்லித் தெளிவித்த வழி, அங்ஙனம் தெளிவிக்கப்பட்டவன், 'சிவனே தெய்வம்' என்று தெளிந்து சிவனை அடைந்து, சிவனே ஆய்விடுவான்.*

**2941. மண்ணிற் கலங்கிய நீர்போல மனிதர்கள்**
**எண்ணிற் கலங்கி இறைவன் இவன் என்னார்**
**உண்ணிற் குளத்தின் முகந்தொரு பால்வைத்துப்**
**தெண்ணிற் படுத்தச் சிவன்அவன் ஆமே. 9**

---

*குறிப்புரை :- எண் - எண்ணம்; என்றது அறிவை. "இவன்" எனச் சுட்டுப் பெயர், செய்யுளாகலின் முன்வந்தது. "உண்ணில்" என்பது, 'உண்ண வேண்டின்' என்னும் பொருட்டாய், "படுத்த" என்பதனோடு முடிந்தது. 'தெண்மையின்' என்பதில் மையீறு தொகுத்தலாயிற்று. தெண்மை - தெளிவு. இன், உவம உருபு. "படுத்த" என்பது, 'ஆக்க' என்னுப் பொருட்டாகிய செயவெனெச்சம்.*

*"குருவே சிவம்" (பா.1561) என்றாராகலின், 'சிவன் குருவாய் வந்து பாசத்தை நீக்கி, உண்மையை உணர்த்தாதவழிச் சீவன் சிவனாமாறு இல்லை' என்பதை வலியுறுத்து முகத்தான் 'சிவன் யாண்டும் உள்நின்று உணர்த்தி வருதலே யன்றி முடிவில் குருவாகி வந்து பாசத்தை நீக்கிச் சிவனைத் தானாக்கியும் வைக்கும் கருணையாளன்' என அவனது கைம்மாறு கருதாத கருணையுள்ளத்தை இதனால் புகழ்ந்தார் என்க.*

> *"சித்திக்கே உய்த்திட்டுத் திகழ்ந்தமெய்ப் பரம்பொருள்*
> *சேர்வார் தாமே தானாகச் செய்யுமவன்" - தி.1 ப.126 பா.7*

*என்னும் திருமுறையால், சிவன் சீவரைத் தானாகச் செய்யும் கருணையையும்,*

> *சாத்திரத்தை ஓதினார்க்குச் சற்குருவின் தன்வசன*
> *மாத்திரத்தின் வாய்க்கும்வளம் வந்துறுமே - ஆர்த்தகடல்*
> *தண்ணீர் குடித்தவர்க்குத் தாகம் தணிந்திடுமோ*
> *தெண்ணீர்மை யாய் இதனைச் செப்பு.*
>
> **- திருக்களிற்றுப்படியார், 6**

*என்னும் சாத்திரத்தால் குருவினாலன்றி மெய்யுணர்வு பிறவாமையும் உணர்க.*

*2942. **தெளிவுரை :-** சிவன், மெய்த்தவத்தாலன்றிப் பொய்த்தவத்தால் அணுகப்படாதவன்; பிறிதொன்றை விரும்பாது தன்னையே விரும்புபவர்கட்கு அங்கை நெல்லிக் கனியென விளங்கி அதனோடேதானும் தூயனாய், அவரையும் தூய்மை செய்து இன்பப் பொருளாயும் இலங்குபவன். ஆகவே, நானும் அவனையே நாடிய காரணத்தால், "அலையிலாத சாகரம் போலவும், அநிலம் இல்லா விளக்குப் போலவும்" அலையின்றி அமைதியுற்றேன்.*

*குறிப்புரை :- சிவ நெறியில் 'தவம்' எனப்படுவன சரியை கிரியா யோகங்களே. அவை பயன் கருதிச் செய்யுமிடத்து 'உபாயச் சிவ புண்ணியம்' எனப்பட்டு, நேரே ஞானத்திற்குச் சாதனமாகாது, உண்மைச் சிவ புண்ணியம் வழியாகவே ஞானத்திற்குச் சாதனமாம். பயன் கருதாது செய்யப்படும் சரியை*

**2942.** மெய்த்தவத் தானை விரும்பும்ஒருவர்க்குக்
கைத்தலஞ் சேர்தரு நெல்லிக் கனியொக்கும்
சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற தேவர்கள்
அத்தனை நாடி அமைந்தொழிந் தேனே. **10**

*முதலியனவே 'உண்மைச் சிவ புண்ணியம்' எனப்பட்டு ஞானம் வாயிலாகச் சிவனைக் கூட்டுவிக்கும். அது பற்றியே சிவனை, மெய்த்தவத்தாலே அடையப் படுவன்' என்றார். பயன் செய்யும் சிவ புண்ணியம் பொய்த்தவம் ஆயிற்று.*

*"கள்ளனேன்" கள்ளத் தொண்டாய்க்*
*காலத்தைக் கழித்துப் போக்கிப்" - தி.4 ப.75 பா.3*

*"காமியம் செய்து காலங் கழியாதே" - தி.5 ப.22 பா.8*

*"யானே பொய்; என் நெஞ்சும் பொய்; என்*
*அன்பும் பொய்" - தி.8 திருச்சதகம், 90*

*என்றாற்போல, 'கள்ளம், பொய்' என வருவன எல்லாம் பயன் கருதிச் செய்யும் சிவத் தொண்டையும்,*

*"மெய்கலந்த அன்பர்அன்பு எனக்கும் ஆக வேண்டுமே"*
*- தி.8 திருச்சதகம், 73*

*"மெய்த்தொண்டர் செல்லும் நெறியறியேன்"*
*- தி.11 திருவேகம்பமுடையார் திருவந்தாதி, 1*

*என்றாற்போல, 'மெய்யன்பு, மெய்த்தொண்டு' என வருவன எல்லாம் பயன் கருதாது அன்பே காரணமாகச் செய்யும் சிவத் தொண்டையும் குறிப்பனவாம். பொய்த் தொண்டர்கட்குச் சிவன் அகப்படாமையை மாணிக்க வாசகர் தமது திருவண்டப்பகுதி நூற்றிருபத்தாறு முதல், நூற்று நாற்பத்தைந்து முடிய உள்ள அடிகளால் விரித்துக் கூறி, மெய்த்தொண்டர்களுக்கு அங்கை நெல்லிக்கனிபோல் விளங்குதலை, "தடக்கையின் நெல்லிக் கனி எனக்கு ஆயினன்" என நூற்றறுபத் தாறாம் அடியில் விளங்கக் கூறினார்.*

*நெல்லிக்கனி தூய்மைக்கும் இனிமைக்கும் உவமை. இன்னும் அருநெல்லிக்கனி சாவா மருந்தாதல் அதியமான், ஔவையார் வரலாற்றால் அறியப்படும். கனிந்த நெல்லிக்கனி, தன் உள்ளேயிருக்கும் விதையை "அடுத்தது காட்டும் பளிங்குபோல்" (திருக்குறள், 701) இனிது விளக்குதல் பற்றி அஃது இனிது விளங்குதற்கு உவமையாகச் சொல்லப்படும், அக்கனி அகங்கையில் இருந்துவிட்டால், தெளிவு. இன்னும் மிகுதியாம். இஃது அதன் தூய்மையாலே நிகழ்வதாம். நெல்லிக்காயைத் தின்றபின் குடிக்கும் தண்ணீரும் இனித்தல் சங்க இலக்கியங்களில் சொல்லப்பட்டது. அத்தன் - தந்தை. "தேவர்கள் அத்தன்" என்பது, 'சிவன்' என்றவாறாய், "நின்ற" என்னும் பெயரெச்சத்திற்கு முடிவாயிற்று.*

**2943.** அமைந்தொழிந் தேன் அள வில்புகழ் ஞானம்
சமைந்தொழிந் தேன் தடு மாற்றம்ஒன் றில்லை
புகைந்தெழும் பூதலம் புண்ணியன் நண்ணி
வகைந்து கொடுக்கின்ற வள்ளலு மாமே. **11**

**2944.** வள்ளல் தலைவனை வானநன் னாடனை
வெள்ளப் புனற்சடை வேத முதல்வனைக்
கள்ளப் பெருமக்கள் காண்பர் கொலோ என்றென்று
உள்ளத்தி னுள்ளே ஒளித்திருந் தாளுமே. **12**

---

*இங்குச் சிவனது பெருமைகளை எடுத்துக் கூறியது, அவனை நாடியபின் பிறரை நாட வேண்டாமையைக் குறிப்பால் உணர்த்தற்கு. 'ஒழி' துணிவுப் பொருண்மை விகுதி.*

*இதனால், சிவபெருமான் தன்னை அடைந்தவர்க்குக் குறைவிலா இன்பமும், தூய்மையும் உளவாக விளங்கி நிற்கும் தகைமையனாதல் கூறிப் புகழ்தல் செய்யப்பட்டது.*

***2943. தெளிவுரை :-** இம் மண்ணுலகம் தீக்குணங்கள் பலவும் மூண்டு எரியும் இடம். புண்ணியமே வடிவான சிவன் இதன்கண் தன் திருவடி தோயும்படி எழுந்தருளி வந்து மெய்ந்நெறிப் பொருளை வகை வகையாக வகுத்துத் தெளிவிக்கின்ற குருமூர்த்தியும் ஆவான். அத்தகைய குருவருளால் நான் அளவற்ற புகழையுடைய ஞானத்தைப் பெற்றுவிட்டேன். அதன் கண் எனக்குத் தடுமாற்றம் யாதும் இல்லை. எனவே, யான் அலைவு ஒன்றும் இன்றி, முழு அமைதியை உடையவனாயினேன்.*

***குறிப்புரை :-** மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி, "அமைந்தொழிந்தேன்" என்பதை இறுதியில் வைத்து உரைக்க. "வள்ளலும் ஆம்" என்றது சிவன் பலர்க்கு அருள்வதைப் பொதுவாக எடுத்துக் கூறியது. உம்மை, சிறப்பு. வகைந்த - வகை செய்து. தாம் குருவருள் பெற்றவாற்றை மேல் பல இடங்களில் கூறினார் ஆகலான் இங்கு அதனைக் கூறாது பயனை மட்டுமே கூறினார். இம்மந்திரம் ஈரடி எதுகை பெற்றது.*

*இதனால், சிவன் குருவாகியும் வந்து அருளும் கருணைத் திறம் புகழ்ந்து கூறப்பட்டது.*

***2944. தெளிவுரை :-** (தலைவனை, நாடனை, முதல்வனை என வந்தவற்றிற்கு, 'இத்தன்மையேனாகிய என்னை' என்பதே கருத்தாகலான், இவை தன்மைக்கண் படர்க்கை வந்த இட வழுவமைதி).*

*'ஒப்புயர்வற்ற தலைமையையும், சிற்பர வியோமத்தில் இருக்கும்*

**2945.** ஆளும் மலர்ப்பதம் தந்த கடவுளை
நாளும் வழிபடும் நன்மையுள் நின்றவர்
கோளும் வினையும் அறுக்கும் குரிசிலின்
வாளும் மனத்தொடு வைத்தொழிந் தேனே. **13**

---

*இருப்பையும், வேதத்தைச் செய்த முதலாசிரியத் தன்மையும் உடையேனாகின்ற என்னை, எனது உண்மையை உணராது, தாங்களையே தலைவர்களாகக் கருதிக் கொண்டு செயற்படுகின்ற மாக்கள் என்று உணர்வார்களோ' என்னும் அருள் நோக்குடன் சிவபெருமான் உயிர்களின் உள்ளத்துள்ளே தோன்றாத் துணையாய் இருந்து, காலம் வந்தபொழுது தோன்றி ஆட்கொள்கின்றான்.*

*குறிப்புரை :- கள்ளம் உடையரை, "பெருமக்கள்" என்றது வஞ்சப் புகழ்ச்சி. "உடம்போ டுயிரிடை நட்பு" (திருக்குறள், 338) என்றது போல. கொல், அசை. "வள்ளல் தலைவன்" என்பது முதலிய குறிப்பினால், "ஒளிந்திருந் தாளும்" என்னும் பயனிலைக்கு. 'அவன்' என்பது தோன்றா எழுவாயாய் நின்றது. என்று இரண்டில் முன்னதை, என்று காண்பர் கொலோ' என மாற்றி வைத்துரைக்க. ஓர் என்றே பாடமாக ஓதுதல் பாடமன்று.*

*இதனால், சிவன் காலம் வாராத முன்னெல்லாம் தோன்றாத் துணையாயும், காலம் வந்தபொழுது தோன்றி ஆறாம் துணைவனாயும் நிற்கும் கருணைத்திறம் புகழ்ந்து கூறப்பட்டது.*

*2945. தெளிவுரை :- இதன் பொருள் வெளிப்படை.*

*குறிப்புரை :- (இங்கும் "கடவுளை" என வேறு போலக் கூறப்பட்டதை, 'கடவுளாகிய தன்னை' என ஒன்றுபடுத்தி உரைக்க.)*

*நாளும் - நாள்தோறும். நன்மை - நன்றிச்செயல். "தன்னை யறிவித்துத் தான்தானாகச் செய்தானைப் - பின்னை மறத்தல் பிழையலது" (சிவஞான போதம் - சூ - 12 - 4) என்றார் மெய்கண்ட தேவர். 'நின்றவரது, குரிசிலினது' என ஆறாவது விரிக்க. கோள் - கிரகசாரம். "கோட்பாலனவும், வினையும் குறுகாமை" (தி.2 ப.98 பா.5) என்றார் ஞானசம்பந்தரும். குரிசில் - சிவபிரான். அவன் தந்த வாள், ஞானம். "நமன் வரின் ஞானவாள் கொண்டே எறிவன்" (தி.3 ப.71 பா.1) என முன்னருங் கூறினார். உம்மை, சிறப்பு 'மனத்தொடு பொருந்த' என ஒரு சொல் வருவிக்க.*

*இதனால், ஞானம் பெற்றபின்னும் தன்னை வழிபடுவாரைச் சிவன் கைவிடாது காக்கும் கருணை புகழ்ந்து கூறப்பட்டது. "துறக்குமா சொலப்படாய், துருத்தியாய்" என்பதும் ஞானசம்பந்தர் வாக்கு.*

*2946. தெளிவுரை :- "கோழை மிடறாக, கவி கோளும் இலவான" நிலைமையை யுடையோரும் முயன்று, "இசை கூடும் வகையால்" சிவனது*

**2946.** விரும்பில் அவனடி வீர சுவர்க்கம்
பொருந்தில் அவனடி புண்ணிய லோகம்
திருந்தில் அவனடி தீர்த்தமு மாகும்
வருந்தி அவனடி வாழ்த்த வல்லார்க்கே. **14**

**2947.** வானகம் ஊடறுத் தான் இவ் வுலகினில்
தானகம் இல்லாத் தனியாகும் போதகன்
கானக வாழைக் கனிநுகர்ந் துள்ளுறும்
பானகச் சோதியைப் பற்றிநின் றேனே. **15**

---

*திருவடிகளை வாழ்த்துபவர்கட்கு அவர்கள், 'வீர சுவர்க்க இன்பம் எவ்வாறு உள்ளது' எனக் காண ஒரு கால் விரும்புவாராயின் அத்திருவடிகளே அதுவாய் நின்று அவர்கட்கு அதனைக் காட்டும். அங்கு அவர்கள் செல்ல வேண்டுவதில்லை.*

*இனிப் பொதுவான சுவர்க்க இன்பத்தைக் காண அவர்கள் அவ்வாற்றான் விரும்புவராயின் அதுவாயும் அத்திருவடிகள் நின்று இனிப்பிக்கும்.*

*தீர்த்தங்கள் பலவற்றில் சென்று மூழ்க அவர்கள் விரும்புவராயின் அவையாயும் அத்திருவடிகள் அவர்கட்கு நின்று அவர்கள் விருப்பத்தை நிறைவு செய்யும்.*

*குறிப்புரை :- 'இத்துணை ஆற்றல்களையுடையது சிவனது திருவடிகள்' என்றபடி. இதற்கு எடுத்துக்காட்டாக ஞானசம்பந்தர் திருவீழிமிழலையினின்றும் சீகாழிக்குச் செல்ல நினைத்தபொழுது திருவீழிமிழலைக் கோயிலே சீகாழி கோயிலாகிக் காட்சியளித்தமை, திருமருகல் கோயிலும் அவ்வாறே திருச்செங்காட்டங்குடிக் கோயிலாகக் காட்சியளித்தமை, நாவுக்கரசர்க்குத் திருவையாற்றுக் கோயிலே திருக்கயிலையாகிக் காட்சியளித்தமை முதலியனவாம்.*

*"பொருந்தில்" என்றதும், 'மனம் பொருந்தில்' என்றதேயாம். திருந்துதல் - செந்நெறியிற் செல்லுதல். அதுவும் செல்ல விரும்புதலையே குறித்தது. "விரும்பில்" முதலிய மூன்றும் பெரும்பான்மை விரும்பாமையைக் குறித்து நின்றது. 'வருந்தியும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. அவன் 'பண்டறி சுட்டு'.*

*இதனால், சிவனது திருவடிகளைத் தோத்திரிப்பார்க்கு அவை அவர் வேண்டும் பொருள் அனைத்துமாகிப் பயன் தரும் சிறப்புப் புகழ்ந்து கூறப்பட்டது.*

*2947. தெளிவுரை :- ஞானாசிரியன் தனது ஞானத்தால் அண்டங் கடந்த பொருளாய் உள்ளான். அவன் இவ்வுலகத்தில் இருப்பினும் ஏனையோர் போல 'யான், எனது' என்னும் பற்றுடையவன் ஆகாது, பற்றற்றுத் தூயனாய் இருக்கின்றான். அவன் தந்த மலைவாழைக் கனியை நுகர்ந்தமையால், நான்*

**2948.** **விதியது மேலை யமரர் உறையும்**
**பதியது பாய்புனற் கங்கையும் உண்டு**
**துதியது தொல்வினைப் பற்றறு விக்கும்**
**மதியது வவ்விட்டது அந்தமும் ஆமே.** **16**

---

*என்னுள்ளே ஊறுகின்ற அமுதமாயும், ஒளியாயும் உள்ள அம்மெய்ப் பொருளைப் பற்றி அசைவின்றி நிற்கின்றேன்.*

***குறிப்புரை :-*** *"போதகன்" என்பதை முதலிற் கொள்க. போதகன், இங்கு ஞான போதகன், கானக வாழைக் கனி, இனிமைக்கு ஒன்றனை எடுத்துக் கூறியவாறு. பானகம் - இனிப்புடைய நீர்ப் பொருள். அஃது இங்கு அமுதத்தைக் குறித்தது. தனி - தனிமை. அஃது ஆகுபெயராய், அதனை உடையானைக் குறித்தது.*

*இதனால், சிவன் அவன் தானாகும்படி ஆவேசித்து அருளும் ஆன்ம சைதன்னியத்தின் சிறப்புக் கூறும் முகத்தால், அத்தன்மைத்தாகிய சைதன்னியத்தி லன்றி ஆவேசியாத அவனது மாண்பு புகழ்ந்து கூறப்பட்டது.*

*"நம்செய லற்று, இந்த நாம்அற்றபின் நாதன்*
*தன்செயல் தானேயென் றுந்தீபற;*
*தன்னையே தந்தான்என் றுந்தீபற" - திருவுந்தியார், 6*

*என்னும் திருவுந்தியாரையும் காண்க.*

*2948.* ***தெளிவுரை :-*** *ஓர் அறிவு எனது அறிவைத் தன்னுள் விட்டது. அஃது எல்லாப் பொருள்கட்கும் அதுவது இயக்குதற்குரிய நெறி முறைகளை வகுப்பது. சுவர்க்க லோகத்தில் வாழும் அமரர்கட்கு மேலான அமரர்கள் வாழ்கின்ற அந்த உலகத்தில் அஃது உள்ளது. அதன் சடைமுடிவில் வேகமாகப் பரந்து பாய்கின்ற வெள்ளநீர் அடங்கிக் கிடக்கின்றது. யார் யார் எந்த எந்த பெயரைச் சொல்லிப் புகழ்ந்தாலும் அந்தப் புகழ்ச்சிகளையெல்லாம் உண்மையில் தன்னுடையன வாகவே உடையது. அது பழவினையாகிய கட்டினை ஆசானைக் கொண்டு அறுப்பிக்கும். கடைசியாக எல்லாப் பொருட்கும் அதுவே புகலிடமாய் உள்ளது.*

***குறிப்புரை :-*** *"மதியது வவ்விட்டது" என்பதை முதலிற் கொள்க. "மதியது" என்பதில் அது, பகுதிப்பொருள் விகுதி. 'வவ்வியது' என்பது, "வவ்வியிட்டது" என, 'இடு' என்னும் அசைச்சொல்லோடு வந்து, இகரம் தொகுக்கப்பெற்றது. "வவ்வியிட்டது" என்னும் வினைப் பெயரே மேல் வந்த பயனிலைகளுக்கெல்லாம் எழுவாயாயிற்று. 'மதியை வவ்வியது' என்றதனால் அதுவும் மதியாதல் பெறப்பட்டது. ''விதியது'' என்றது, 'விதியை வகுக்கும் ஆற்றலுடையது' என்றவாறு. மேலை அமரர் சுத்த மாயா புவனங்களில் வாழ்வோர். பாய்புனற் கங்கையை உடைமை கூறியது, இங்குச் சொல்லப்பட்ட பெருமைகளையெல்லாம் உடைய அந்தப் பெரும்பொருள் இவ்வுலகத்தில் வெளிப்படும்பொழுது இவ்*

**2949.** மேலது வானவர் கீழது மாதவர்
தானிடர் மானுடர் கீழது மாதனம்
கானது கூவிள மாலை கமழ்சடை
ஆனது செய்யும் எம் ஆருயிர் தானே. 17

---

*வுருவுடையதாய்த்தான் வெளிப்படும்' என்பது உணர்த்தற்கு.*

*அண்டம் ஆரிரு ளூடுகடந் தும்பர்*
*உண்டு போலும்ஓர் ஒண்சுடர்; அச்சுடர்*
*கண்டிங் காரறிவார்? அறி வாரெலாம்*
*வெண்டிங்கட் கண்ணி வேதியன் என்பரே - தி.5 ப.97 பா.2*

*என்னும் அப்பர் திருமொழியைக் காண்க. உம்மை, 'பதியதேயன்றி' என இறந்தது தழுவி நின்றது. "யாதொரு தெய்வம் கொண்டீர்" அத்தெய்வமாகி ஆங்கே - மாதொரு பாகனார்தாம் வருவர்" என்னும் முறைமையால் துதிப்பார் துதிக்கும் துதிகள் யாவும் சிவனுடைய துதிகளேயாதல் அறிக.*

*"எல்லாப் பெயரும் பரமசிவன் பெயர்*
*என்பதே வேதநூல் துணிபு"*

*என்பது சிவஞான மாபாடியம் (சூ.1 அதி.2)*

*2949. தெளிவுரை :- மேலே உள்ள வானத்தில் வாழ்பவரும் கீழே உள்ள நிலத்தில் வாழும் பெருந்தவத்தோரும் தவம் இன்மையால் துன்புறுகின்ற உலகரும் ஆகிய அனைவர்க்கும் வெளித்தோன்றாது புதைந்துள்ளது ஒரு பெருநிதி. அது வில்வமாலை மணக்கும் சடையை உடையது. எங்கட்கு ஆவனவற்றையெல்லாம் அது தானாகவே செய்யும். அதுவே எங்கட்கு அரிய உயிர்.*

*குறிப்புரை :- "மேலது" என்பது "வான்" என்பதனோடே முடிந்தது. முதற்கண் நின்று "கீழது" என்பது கீழ் உள்ளதாகிய நிலத்தைக் குறித்தது. கீழதன்கண் உள்ள மாதவர், மானுடர் என்க. தான், அசை, 'வானவர், மாதவர், மானுடர்' என்னும் செவ்வெண்ணிற்குரிய தொகைப் பொருட்டாகிய 'யாவரும்' என்பதனோடு, 'யாவர்க்கும்' என உருபும் விரிக்க. பின் வந்த "கீழது" என்பது 'மறைந்துள்ளது' என்னும் பொருட்டு. கான் - மனம். இதன்பின் வந்த 'அது' என்பது பகுதிப்பொருள் விகுதி. கூவிள மாலை கான கமழ் சடை என மாற்றியுரைக்க. 'சடைத்து' என்னும் துவ்விகுதி தொகுக்கப்பட்டது. இவ்வாறன்றி, 'சடையொடு' என உருபு விரித்து, அவனை, "செய்யும்" என்பதனோடு முடிப்பினும் ஆம். மூன்றாம் அடிக்கு, முன் மந்திரத்தில் இரண்டாம் அடிக்கு உரைத்தது உரைக்க. "ஆனது தானே" 'செய்யும்' என இயைக்க. முதலடி 'எதுகை யின்றி முரண் தொடை நயமே' பெற்று வந்தது.*

*இதனால், சிவன்தன் அடியார்க்கே "எய்ப்பினில் வைப்பாய்" (தி.8*

**2950.** **சூழும் கருங்கடல் நஞ்சுண்ட கண்டனை**
**ஏழின் இரண்டிலும் ஈசன் பிறப்பிலி**
**ஆழும் சுனையும் அடவியும் அங்குளன்**
**வாழும் எழுத்தைந்தின் மன்னனு மாமே.** **18**

---

*திருவண்டப்பகுதி, 105) அவர்க்கு ஆவனவற்றைத் தானே செய்து, அவர்கட்கு உயிர்போலச் சிறந்துள்ள சிறப்புப் புகழ்ந்து கூறப்பட்டது.*

*2950.* ***தெளிவுரை :-*** *'நஞ்சத்தை உண்டமையால் கருமை நிறம் பெற்ற கண்டத்தை உடையவன்' எனச் சொல்லப்படுகின்ற அந்தச் சிவனையே கருமை நிறம் பொருந்திய கடல் சூழ்ந்து நிற்கின்றது என்றது, 'நில உலகச் சிவன் கறை மிடற்றண்ணல்' என்றபடி, இவன், 'சீகண்ட பரம சிவன்' எனப்படுவான். 'பிரமாண்டம்' எனப் பெயர் பெற்ற இந்த அண்டத்தில் உள்ள, கீழ்ஏழ், மேல்ஏழ் ஆகிய பதினான்கு உலகங்கட்கும் இவனே மகேசுரன்; பிறப்பிறப்பில்லாத பரமசிவன். ஆழ்ந்த சுனைகளையும், காடுகளையும் உடைய கயிலாய மலையில் இவன் எழுந்தருளியிருக்கின்றான். மேலும் இவ்வுலகில் உள்ளார் ஓதும் திருவைந்தெழுத்து மந்திரத்திற்கு முதல்வனும் இவனே.*

***குறிப்புரை :-*** *சிவாகமங்களில் சொல்லப்படுகின்ற ஒரு தலையாய பொருளை நாயனார் 'தோத்திரம்' என்னும் இவ்வதிகாரத்தில் இம் மந்திரத்திற் கூறினார். அஃதாவது, 'சுத்தம், மிச்சரம், அசுத்தம்' என்னும் மூவகை உலகங்கள் முறையே 'விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர்' என்னும் மூவகை உயிர்கட்கு உரியனவாய் உள்ளன. அவற்றுள் சுத்த உலகத்திற்குச் சிவனே நேராய்த் தலைவனாய் இருக்கின்றான். அவ்விடத்து அவன் 'அருவம், அருஉருவம், உருவம்' என்னும் திருமேனிகளைக் கொண்டிருக்கின்றான். அருவத்திருமேனியில் 'சிவன்' என்றும், அருஉருவத்திருமேனியில் 'சதாசிவன்' என்றும், உருவத்திருமேனியில் 'மகேசுரன்' என்றும் பெயர் பெறுகின்றான். இம்மூவகைப் பேதங்களும், 'சம்பு பட்சம்' எனப்படும். மிச்சிர உலகத்திற்கு, விஞ்ஞானகலருள் பக்குவம் பெற்றுச் சுத்த வித்தையில் சிவனது அருளைப் பெற்று வைகும் அட்ட வித்தியேசுரர்களில் முதல்வராகிய அனந்த தேவரே தலைவராய் உள்ளார். அசுத்த உலகிற்குப் பிரளயாகலருட் பக்குவம் பெற்றுக் குண தத்துவத்தில் சிவனது அருளைப் பெற்று வைகும் சீகண்ட உருத்திரரே தலைவராய் உள்ளார் என்பது, இவ்விருவரும் உருவம் ஒன்றையே உடையர். 'அணுபட்சத்தினர்' எனப்படுவர். சிவனது அருளால் மலம் நீங்கப் பெற்று ஞானத்தை அடைந்திருத்தலால், இவர்கள் அவனது முற்றுணர்வு முதலிய எண்குணங்களைப் பெற்று நிற்கின்றனர்.*

*இதனால், சிவன் உயிர்கட்குப் பெத்தம், முத்தி அனைத்தையும் செய்பவனாகின்ற மாட்சிமை புகழ்ந்து கூறப்பட்டது.*

*சீகண்டர் குண தத்துவத்தில் இருப்பவராயினும், அவரது வியாபகம் ஆன்ம*

*தத்துவம் முழுவதிலும் இருத்தலால், கீழ்த் தத்துவமாகிய பிருதிவி உலகத்தில் இங்குள்ள உயிர்களின் பொருட்டுக் கயிலாய மலையில் எழுந்தருளியிருக்கின்றார். இது பற்றி இவருக்குரிய குண தத்துவம் 'மகா கயிலாசம்' எனப்படுகின்றது. 'பிருதிவி தத்துவ உலகத்திற்கு இவரே சிவனாய் உள்ளார்' என்பதையே நாயனார் இம்மந்திரத்து இரண்டாம் அடியால் வலியுறுத்தினார். இவர் அணுபட்சத்தின ராயினும் இவர் செய்வனவற்றை எல்லாம் தற்போதத்தின்வழிச் செய்யாது, சிவபோதத்தின் வழியே செய்தலால் அச்செயல்கள் அனைத்தும் சிவன் செயலே ஆகின்றன. இதனைச் சிவஞான சித்தியார், வேதத்துள் சிவனைப் பற்றிச் சொல்லப்பட்ட, 'விசுவாதிகள், விசுவ காரணன், விசுவத்திற்கு அந்தரியாமி, விசுவரூபி' என்னும் பெயர்கள் ஆதலை நிறுவும் சான்றுகளாக இந்நில உலகத்தில் சீகண்ட உருத்திரர் பால் நிகழ்ந்த செயல்களையே எடுத்துக் காட்டிற்று. (சிவஞான சித்தி, சுபக்கம் - சூ - 1). அது பற்றிச் சிவஞான யோகிகள் இவ்விடத்தில்,*

> *"சீகண்ட ருத்திரர்க்குரிய வடிவங்களும்,*
> *பெயர்களும், தொழில்களும் முதல்வனுக்கும்*
> *ஒப்ப உள - என்பது வாயுசங்கிதையுட்*
> *கூறப்படுதலின், ஈண்டுக் கூறியன*
> *எல்லாம் முதல்வனுக்கு உரியனவேயாம்*
> *எனக் கொள்க"*

*எனவும்,*

> *"அற்றாகலின்றே ஈண்டுக் கூறிய*
> *வடிவங்க ளெல்லாம் மாகேசுரமூர்த்தம்*
> *இருபத்தைந்தனுள் வைத்தெண்ணப்பட்டன*
> *என்பது"*

*எனவும் உரைத்தார். எனினும் சிவன் சருவ வியாபியாதலானும் அவன் எதனுள் நிற்பினும் அதன் தன்மை தனக்கு எய்தான் ஆகலானும் 'அவன் இவ்வுலகத் தொடர்புடையன் அல்லன்' என்றோ, 'ஈண்டுள்ளார்க்கு' அவன் காட்சி வழங்குதல் இல்லை' என்றோ கொள்ளுதல் கூடாதாம்.*

*உலகப் பயன் வேண்டிச் சிவனை நோக்கித் தவம் செய்பவர்கட்கெல்லாம் சீகண்ட உருத்திரரே தோன்றிப் பயன் கொடுத்ததைக் கந்தபுராணம் முதலிய பல புராணங்களாலும், இதிகாசங்களாலும் உணரலாம். ஞானத்தைச் சிவன் சீகண்டர் வழியாகவும் அருளலாம்; தான் நேர் நின்றும் அருளலாம். இதனை, 'சகல வருக்கத்தினர்க் கெல்லாம் ஞானத்தைச் சிவன் குரு மூர்த்திகளை ஆவேசித்து நின்று அருளுவான்' என்பதே பெரும்பான்மை பற்றிய விதியாய் இருப்பினும், வாதவூரடிகட்குச் சிவன், தானே குருவாகி வந்து அருள்செய்த அந்த அருமையைத்தான் வாதவூரடிகள் பல விடத்திலும் பெரிதும் போற்றிப் புகழ்கின்றார்.*

*"அவனியிற் புகுந்து எமை ஆட்கொள்ள வல்லாய்"*

*- தி.8 திருப்பள்ளியெழுச்சி - 10*

*"கனவிலும் தேவர்க்கு அரியாய் போற்றி*
*நனவிலும் நாயேற்கு அருளினை போற்றி"*

*- தி.8 போற்றித் திருவகவல் - 143, 44*

*"பெண் ஆண் அலி எனும் பெற்றியன் காண்க;*
*கண்ணால் யானும் கண்டேன் காண்க"*

*- தி.8 திருவண்டப்பகுதி - 57-58*

*"புவனியிற் சேவடி தீண்டினன் காண்க;*
*சிவன்என யானும் தேறினன் காண்க;*
*அவன்எனை ஆட்கொண்டருளினன் காண்க"*

*- தி.8 திருவண்டப்பகுதி - 61-63*

*என்னும் திருவாக்குக்களைக் காண்க.*

*அங்ஙனமாயின், வாதவூரடிகட்கு அருள்புரிந்த குரு சிவனே என்பது தெளியப்படுதல் எவ்வாறு எனின் அடிகட்கு அருள்புரிந்த குரு நெடுநாள் இங்கில்லாமல் உடன் வந்த அடியவர்களோடும் விரைந்து திருவுருத் தோன்றாமல் மறைந்தமையால் தெற்றென விளங்கும். பலரை மாணாக்கராகக் கொண்டு ஞானத்தை அருளிய குருமூர்த்திகள் பலர் எங்கே, எப்பொழுது, எந்தப் பெற்றோருக்குப் புதல்வராய்த் தோன்றினார்? எப்படி வளர்ந்தார்? எப்படி ஞானம் பெற்றார்? என்பன பற்றிய வரலாறுகள் உள. அத்தகைய வரலாறு மாணிக்க வாசகருக்கு அருள்புரிந்த குருவுக்கு இல்லை. மற்றவர்களெல்லாம் மாணாக்கர்க்கு ஞானத்தை உபதேசிப்பது மட்டுமன்று; பல காலம் உடன் இருந்து சிந்திப்பித்து, தெளிவித்து, நிட்டை கூடுவித்து, பின்னும் அதிலே நிற்குமாறு நிறுத்தி இவ்வாறெல்லாம் அருள்புரிந்து, உடன் இருப்பர். உடம்பினால் அவரெல்லாம் நம்மனோருட் சிலரே. ஞானத்தினாலும் சிவனது திருவருளாலுமே அவர்கள் சிவமாகின்றனர். மாணிக்கவாசகருக்கு அருள்புரிந்த குரு அவ்வாறெல்லாம் இல்லாது விரைய மறைந்தமையால் அவர் சிவனே யன்றி வேறல்லராதல் தெளிவு.*

*"............... உன்தா ளிணை அன்பு*
*பேரா உலகம் புக்கார் அடியார்;*
*புறமே போந்தேன் யான்"* *- தி.8 திருச்சதகம், 87*

*"சிவமா நகர் குறுகப் - போனார் அடியார்;*
*யானும் பொய்யும் புறமே போந்தோமே"*

*- தி.8 திருச்சதகம், 85*

*உடையானே! நின்றனை உள்கி*
*உள்ளம் உருகும் பெருங்காதல்*

*உடையார், உடையாய் நின்பாதம்*
*சேரக்கண்டு இங்கு ஊர்நாயிற்*
*கடையானேன், நெஞ்சு உருகாதேன்*
*கல்லாம் மனத்தேன், கசியாதேன்,*
*முடையார் புழுக்கூடு இது காத்து,*
*இங்கு இருப்பதாக முடித்தாயே - தி.8 திருச்சதகம், 56*

*என்றாற்போல் அடிகள் அருளிச்செய்த குறிப்புகள் பலவும் அவரை ஆட்கொண்ட குருமூர்த்தி அவருடன் பலநாள் இல்லாது விரைய மறைந்தமையைத் தெரிவிக்கின்றன. ஆகவே அவரை சிவனே எனக்கொள்ளுதற்கு ஐயுறவு யாது மில்லையாம்.*

*சீகண்ட உருத்திரரை நஞ்சுண்ட கண்டராகக் கூறுதல், 'அசுத்த உலகத்தில் தீங்கு தருவனவாய் உள்ளவற்றையும் நன்மை தருவனவாக்கும் ஆற்றலுடையார்' என்பதைக் குறிப்பால் உணர்த்தற் பொருட்டேயாம். உருத்திரருள், 'சீகண்ட உருத்திரர்' என இவர் விசேடித்துச் சொல்லப்படுதற்கும் இதுவே காரணம். இங்ஙனமாகவும் மகேசுரருக்கும் கறைக் கண்டம், அல்லது நீல கண்டம் சொல்லப்படுதல், இவருடைய செயல்கள் எல்லாம் அவருடைய செயல்களே என ஒற்றுமை யுணர்த்தற் பொருட்டாம்.*

*'நஞ்சுண்ட கண்டனைக் கருங்கடல் சூழும்' என மாற்றியுரைக்க. இது 'மண்ணுலகம் இவரையே முதல்வராகக் கொண்டுள்ளது' என்னும் குறிப்பினதாம். 'சுனையையும், அடவியையும் உடைய அங்கு' என்க.*

*இதனால், இவ்வுலகத்தார் சொல்லும் தோத்திரங்களின் உண்மைப் பொருள் உணர்த்தப்பட்டது.*

***2951. தெளிவுரை :-** எல்லாப் பொருள்கட்கும் முதலாயுள்ள சிவன் நிலம், நீர், தீ, காற்று, வானம், ஞாயிறு, திங்கள் என்னும் பொருள்களாக அவற்றுடன் ஒன்றாய்க் கலந்திருத்தலால், எல்லா உயிர்களும் அவனேயாய், அவை செல்லும் நெறிகளிலும் அவற்றோடு உடனாய் உதவி புரிந்து எண்திசைக் காவலர்கட்கும் தலைவனாய், உலக முதல்வன் ஆயினான்.*

***குறிப்புரை :-** செய்யுள் நோக்கி நிலம் முதலியன முறையின்றி, ஏற்ற பெற்றியில் வைக்கப்பட்டன. கதிர் முதலிய பிறவற்றிலும் இரண்டன் உருபு விரிக்க. நிலவு - சந்திரன், முகில், இங்கு ஆகுபெயராய், வானத்தை உணர்த்திற்று. "உலகம்" என்றது உயிர்த் தொகுதியை. அது, பகுதிப்பொருள் விகுதி ஒத்தல். அவற்றோடு ஒன்றாய் இயைந்து நிற்றல். 'அமர் தேவர்' என இயையும். 'ஆதிப் பிரான் ஒத்து, ஒத்துப் பிரான் ஆயினான்' என வினை முடிக்க. 'உலகு' நிலம் முதலிய எட்டுக் கூறுகளாய் அடங்குதலாலும், அவ் எட்டுக் கூறுகளிலும் நிறைந்து அவற்றை இயக்குதலாலும் சிவன் உலக முதல்வனாயினான் என அவனது பெருமையை*

**2951.** உலகம தொத்துமண் ஒத்து உயர் காற்றை
அலர்கதிர் அங்கிஒத்து ஆதிப் பிரானும்
நிலவு இயல் மாமுகில் நீர்ஒத்தும் ஈண்டச்
செலவொத்து அமர்திகைத் தேவர் பிரானே. **19**

---

*விளக்கியவாறு. "ஆதிப்பிரானும்" என்னும் உம்மை அசைநிலை. இறுதியில் 'ஆயினான்' என்னும் சொல்லெச்சம் வருவித்து முடிக்க. எண் திசைக் காவலர் களுக்குப் பிரான் ஆயினமை கூறும் முகத்தால் உலக முதல்வன் ஆயினமை குறித்தவாறு.*

*இதனால், சிவன் அட்ட மூர்த்தியாம் சிறப்பினால் உலக முதல்வன் ஆயினமை புகழ்ந்து கூறப்பட்டது.*

*2952. தெளிவுரை :- தீக்குத் தலைவனாகிய தீக் கடவுள், கதிர்க்குத் தலைவனாகிய கதிர்க் கடவுள். மதிக்குத் தலைவனாகிய மதிக்கடவுள் மற்றும் காற்றிற்குத் தலைவனாகிய காற்றுக் கடவுள் ஆகியோரும், நிலத்திற்குத் தலைவியாகிய நிலமகள், 'எல்லாப் பொருள்களையும் தாங்கும் திண்மையை எனக்கு அருளியவன் சிவன்' என்னும் உண்மையுணர்வோடே எல்லாவற்றையும் தாங்குதல் போலவே" தாம் தாம் தீ முதலாக மேற்கூறியவற்றிற்குத் தலைவராய் இருந்து, அவற்றின் செயல்களைச் செய்வித்து வருகின்றனர்.*

*குறிப்புரை :- 'எல்லாக் கடவுளரும் சிவனது முதன்மையை உணரும் உண்மை ஞானத்தாலே தம் தம் அதிகாரத்தை நடத்தி வருகின்றனர்' என்பதை உடம்போடு புணர்த்தலாக நிலமகள் மேல் வைத்து, வேறு வேறு எடுத்துக் கூறினார். அட்ட மூர்த்தத்தில் இயமானன் தவிர ஏனை ஏழும் சடப்பொருள்கள். அவற்றுள், 'நிலம், நீர், வானம்' என்னும் மூன்றிற்கும், 'நிலமகள், நீர்மகள், வான் மகள்' எனப் பெண்மையர் முதல்வராகவும், 'முச்சுடர், காற்று' என்னும் ஏனை நான்கிற்கும் ஆண்மையர் முதல்வராகவும் கூறப்படுதலின் அவருள் பெண்மையர் களில் நிலமகளை எடுத்துக்கூறி, ஏனை இருவரையும் உபலக்கணத்தால் தழுவினார்.*

*முச்சுடர்களை முதலிற் கூறுதல் கருத்தாகலின் பரிசறிந்தங்குளன் மாமதி என்பதை, "அருக்கன் உளன்" என்பதன் பின்னர்க் கூட்டுக. முதற்கண் உள்ள, "பரிசறிந்தங்குளன்" என்பதை "அருக்கன்" என்பதற்கு முன்னும் கூட்டுக. "அருக்கன் ஈசன்" என்பவற்றோடு இயைய, 'அங்கி, மதி' என்றவற்றையும் 'அங்கியன், மதியன்' என ஆடூவறி சொற்களாக்குக. அல் நிலம் - இவர்கள் அல்லாத நிலம். "நிலம்" என்றதும் நிலமகளையே. 'பரித்தல்' என்பது முதல் நீண்டு வந்தது. பரித்தல் - தாங்குதல். 'அல் நிலம், ஞானப் பரிசு அறிந்து பரிக்குமாறே, ஏனை அங்கியன் முதலியோரும் அங்கங்கு உளர் என்பது இம்மந்திரத்தின் சொற்சுருக்கம் அங்கு என்றது, அங்கி முதலியவற்றை. 'அவற்றின் கண் அவர் உளர்' என்றது அவற்றை*

**2952.** பரிசறிந் தங்குளன் அங்கி அருக்கன்
பரிசறிந் தங்குளன் மாருதத் தீசன்
பரிசறிந் தங்குளன் மாமதி ஞானப்
பரிசறிந் தன்னிலம் பாரிக்கு மாறே. **20**

---

*இயக்கி நிற்கின்றனர் என்றபடி, சிவனே எல்லாப் பொருள்கட்கும் அதுவதற்குரிய ஆற்றலைத் தந்தருளினான்' என்பதை,*

*"அருக்கனில் சோதி அமைத்தோன், திருத்தகு*
*மதியில் தண்மை வைத்தோன், திண்திறல்*
*தீயின் வெம்மை செய்தோன், பொய்தீர்*
*வானிற் கலப்பு வைத்தோன், மேதகு*
*காலில் ஊக்கம் கண்டோன், நிழல்திகழ்*
*நீரில் இன்சுவை நிகழ்ந்தோன், வெளிப்பட*
*மண்ணில் திண்மை வைத்தோன் - என்றென்று*
*எனைப்பல கோடி எனைப்பல பிறவும்*
*அனைத்தனைத்து அவ்வயின் அடைந்தோன்"*

*- தி.8 திருவண்டப் பகுதி, 20-28*

*என்னும் திருவாசகத்தால் உணர்க. இதன்கண் சொற்பொருட் பின்வருநிலையணி வந்தது.*

*இதனால், 'தேவர் யாவரும் சிவனது ஆணையால் சிற்சில அதிகாரங்களைப் பெற்று அவற்றை அவனை நினைந்தே நடத்தி வருகின்றர்' என்ற அவனது முழுமுதற்றன்மை புகழ்ந்து கூறப்பட்டது. இதனானே, சிவனுக்கு, 'தேவ தேவன்' எனவும், 'மகா தேவன்' எனவும் சொல்லப்படும் பெயர்கள் பொருள் பொதிந்த பெயர்களாதல் விளங்கும். 'பிறரெல்லாம் சிவனது ஆணையை நினைந்தே தம் அதிகாரத்தைச் செலுத்துபவர் - என்பது, சிவனை மறந்து தம் மனம் சென்றவாறே அதிகாரத்தைச் செலுத்த முற்படும்பொழுது இவர்க்கு ஒறுப்புண்டாயினமையால் அறியப்படும் என்பதைச் சிவஞான யோகிகள்',*

*"அரன் நினைந்தவாறன்றி ஆகாமை*
*தக்கன் வேள்வி, மார்க்கண்டி வாழ்நாள்,*
*ஆலாலத் தோற்றரவு முதலியவற்றால்*
*இனிது விளங்கிக் கிடத்தலின்" - சிவஞான சித்தி, சுபக்கம்-61*

*என விளக்கினார். கூற்றுவனுக்குச் சிவன் இட்ட ஆணை நம் அடியவர்க்கு வாழ்நாள் முடிந்தால், நாம் அவர்களை அழைத்துக் கொள்வோம் நீ அவர்களிடம் செல்ல வேண்டா' என்பது. அதனை மறந்து அவன் மார்க்கண்டேயரிடத்துச் சென்றமையால் ஒறுக்கப்பட்டான். அவ்வினையை இனிமேலாயினும் மறவாது செயலாற்றுங்கள் என அறிவுறுத்தும் முறையில்தான் அப்பர் காலபாசத்*

**2953.** அந்தம் கடந்தும் அதுவது வாய்நிற்கும்
பெந்த உலகினிற் கீழோர்பெரும் பொருள்
தந்த உலகெங்குந் தானே பராபரம்
வந்து படைக்கின்ற மாண்பது வாமே. **21**

---

*திருக்குறுந்தொகையை அருளிச்செய்தார் (தி.5 ப.92).*

**தேவர்கள் சிவபெருமானை வேண்டி இசைவு பெறாதே** *தாமும் அவனைப் போல என்றும் இறவாதிருக்க அமுதம் பெற வேண்டிப் பாற்கடலைக் கடைந்தனர். அதனால் அவர்கள் பெற்ற பயன்* **என்றும் இறவாநிலையை வேண்டியதற்கு மாறாக, அன்றே இறக்கும்படி வந்த ஆலகால விடந்தான்**. *பின்பு அவர்கள் சிவபெருமானை அடைந்தே நலம் பெற்றனர். இவைகளையே சிவஞான யோகிகள் குறித்தார். இவற்றால் எல்லாம் நாம் அறிய வேண்டிய முடிநிலைப் பொருள்,* **'சிவபெருமானது சங்கற்பமே சங்கற்பமாக நின்று முற்றுப்பெறும் அன்றி ஏனையோர் சங்கற்பங்களெல்லாம் முற்றுப்பெறா' என்பதே. இதனால் சிவனது சங்கற்பம் வேதங்களில் 'சுத்திய சங்கற்பம்' எனப்படுகின்றது**.

*2953.* **தெளிவுரை :-** *தான் படைத்த உலகத்திற்குத் தானே முன்னைப் பழம் பொருளும், பின்னைப் புதுப் பொருளுமாய், (தி.8 திருவெம்பாவை, 9) நிற்கும் சிவன், தான் தன் மேல்நிலையினின்றும் இறங்கி வந்து உலகத்தைப் படைக்கின்ற முறை அதுவாகும் (அஃதாவது, 'உலகத்திற்கு அது தோன்றும் இடமும், பின் ஒடுங்கும் இடமும் தானேயன்றிப் பிறரில்லாத தனியொரு முதல்வன்' என்பதாம்.) அவன் உலகத்திற்கு வித்தாகிய மாயையின் வியாபகத்தைக் கடந்து அப்பால் உள்ளவனாயினும் அசுத்த உலகமாகிய இந்தப் பிரகிருதி புவனத்தில் உள்ளவர்கட்கும் அவனே முதல்வன்.*

**குறிப்புரை :-** *மூன்றாம் அடி முதலாகத் தொடங்கி உரைக்க. பரம், அபரம் என்பன, முன், பின் என்னும் பொருளைத் தந்தன. கடலினின்றும் தோன்றும் அலை, நுரை, திவலை முதலியவற்றிற்குக் கடலே முன்னைப் பொருளும், பின்னைப் பொருளுமாய் இருத்தல் போல, இறைவன் உலகிற்கு முன்னைப் பொருளும் தானேயாய் இருக்கின்றான் என்பதை,*

> *"நுரையும் திரையும், நொப்புறு கொட்பும்*
> *வரையில் சீகர வாரியும் குரைகடற்*
> *பெருத்தும், சிறுத்தும் பிறங்கு தோன்றி*
> *எண்ணில வாகி யிருங்கட லடங்கும்*
> *தன்மை போலச்* **சராசரம் அனைத்தும்**
> **நின்னிடைத் தோன்றி, நின்னிடை அடங்கும்; நீ**
> **ஒன்றினும் தோன்றாய்; ஒன்றினும் அடங்காய்"**

*- தி.11 கோயில் நான்மணி மாலை - 24*

*என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கால் உணர்க. உபநிடதமும், "எல்லாம் பிரமத்தினின்றும் தோன்றி அதிலே அடங்குகின்றன. இடையிலும் அதிலேதான் நிலைத்திருக்கின்றன" ("ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி ஸாந்த உபாஸீத" - சாந்தோக்கியம் - 3, 14, 1) எனக் கூறிற்று.*

*சிவன் தான் படைத்த உலகத்திற்கு வெளியிலே வியாபித்தலன்றியும் எல்லாப் பொருள்களினுள்ளும் எள்ளினுள் எண்ணெய் போல நிறைந்தும் நிற்றலால், "பெந்த உலகினிற் கீழோர் பெரும் பொருள்" என்றார். பெந்தம் - பெத்தம் என்றது இங்கு, முக்குண வடிவாய் அறிவை மாறி மாறி மயக்குகின்ற மூலப் பிரகிருதியை. 'இதன் காரிய புவனங்களில் வாழ்பவர் மூவகை ஆன்மாக்களுள் கீழ்ப்பட்ட சகலர்' என்பதைக் ''கீழோர்'' என்பதனால் குறித்தார். 'கீழோர்க்கும்' எனத் தொகுக்கப்பட்ட உருபையும், உம்மையையும் விரிக்க. 'அதிகார மூர்த்திகள் பலரும் சிவனது ஏவல் வழி நிற்பவரேயன்றிச் சுதந்திரர் அல்லர்' என்பது முன் மந்திரத்தில் இனிது விளக்கப்பட்டமையால் ஈண்டுள்ளார்க்கும் சிவனே முதல்வன் ஆதற்கு இழுக்கின்மை அறிக.*

*இதனால், முன் மந்திரத்தில் கூறிய பொருள் வலியுறுத்தி உணர்த்தப்பட்டது.*

***2954. தெளிவுரை :-** மூன்றும், இரண்டும் ஆக ஐந்தாய உலகங்களே அனைத்துலகங்கட்கும் முடியாய், 'சிவனுக்கு உரியன' என்று சொல்லப் பட்டாலும், எல்லா உலகங்களுமே அவனுக்கு உருவமாகும். அப்படிப் பார்க்கின்ற பொழுது, பிருதிவி அண்டத்தில் அதன் கீழ்ப் பகுதியாகச் சொல்லப்படுகின்ற பாதாள உலகங்களே அவனுக்குத் திருவடியாம். (சிவ தத்துவ உலகமே முடியாதல் முதலடியிற் கூறியதனானே பெறப்பட்டது). அறியாமையுடையவர்கள் இந்த உண்மையை அறிந்து மகிழ்வெய்தும் நிலையில்லாதவராவர்.*

***குறிப்புரை :-** இதுவும் முன் மந்திரத்தில், "பெத்த உலகினிற் கீழோர் பெரும்பொருள்" என்றதனை விளக்கியவாறு. "முத்தண்ட ஈர் அண்டம்" என்றதனை 'மூ இரு தண்ட அண்டம்' என மாற்றிக் கொள்க. 'மூ இரு' என்பது, "மூன்றும் இரண்டும்" என உம்மைத்தொகை. "ஐந்து" என்பது, தத்துவங்களைக் குறித்த தொகைக் குறிப்பு. முடியாவது, பிறவற்றிற்கெல்லாம் மேல் நிற்பது. 'உரு, பெயர், தொழில் ஒன்றும் இல்லாத சிவன் அவைகளை உடையனாய பொழுதும், சுத்த தத்துவத்திலன்றி, ஏனைத் தத்துவங்களில் இருத்தல் இல்லை' என்னும் தத்துவக் கோட்பாடு பற்றி, 'அவன் அத்தத்துவங்கட்குக் கீழ்ப்பட்ட தத்துவ உலகங்கட்கு முதல்வனாதல் எவ்வாறு' என மலைவெய்து வார்க்கு அம்மலைவை நீக்குதற்கு இவ்வாறு கூறினார் என்க. 'திரு மேனி கொண்டு விளங்குதல் சுத்த தத்துவத்திலாயினும், எள்ளினுள் எண்ணெய்போல எல்லாப் பொருளிலும் அவன் நிறைந்திருக்கின்றான் ஆதலின், அவன் அனைத்துலகங்கட்கும் முதல்வனாதல் கூடுவதாம்' என விடுத்தவாறு. இந்நிறைவு நிலை பற்றியே அவனை, 'விசுவ ரூபி' என்றும், 'அட்ட மூர்த்தமாய் நிற்பவன்' என்றும் உண்மை நூல்கள் கூறுகின்றன என்க. இதனானே எவ்வுலகத்தார் செய்யும் வழிபாட்டினையும்*

**2954.** முத்தண்ட ஈரண்ட மேமுடி யாயினும்
அத்தன் உருவம் உலகே ழெனப்படும்
அத்தன்பா தாள அளவுள்ள சேவடி
மத்தர் அதனை மகிழ்ந்துண ராரே. **22**

---

*அவன் ஏற்றுப் பயனளித்தல் கூடுவதாதலையும் அறிக.*

*தண்டம் - கோல். இஃது ஒரு நீட்டலளவை. சுத்த தத்துவங்கள் ஐந்தின் அண்டங்களையும் தனித்தனி ஒரு கோல் அளவினதாகக் கூறியது, பொதுப்பட அவையும் அளவுட்பட்டனவே என்பது உணர்த்துதற்கு. 'உலகேழும்' என்னும் முற்றும்மை தொகுத்தலாயிற்று. 'உலகேழும் அத்தன் உருவம் எனப்படும்' எனவும், 'அத்தன் சேவடி பாதாள அளவுள்ள' எனவும், உணர்ந்து மகிழார் எனவும் மாற்றிக் கொள்க. பாதாள அளவு - பாதாளமாகிய அவ்வளவினதாகிய இடம் 'சேவடியாய்' உள்ளது என்க. இத்துவ்விகுதி தொகுக்கப்பட்டது.*

*2955. தெளிவுரை :- அனைத்துலகங்களும் ஒடுங்கிய பின்னரும் தான் ஒடுங்காது, ஒடுங்கிய உலகம் மீளத் தோன்றுதற்கு முதல்வனாய் உள்ளவன் எவனோ அவனே நமக்குப் பெருமான். அவன், விரிந்த இடத்தையுடைய இந்த உலகத்திற்கு விளக்காய் உள்ள 'கதிர், மதி, தீ' என்னும் மூன்றிற்கும் ஒளியைத் தரும் பேரொளிப் பெருமான்; முன் மந்திரத்திற் கூறியவாறு விசுவ ரூபியாய் நிற்றலேயன்றி, விசுவாதிகளாய், அனைத்துலகங்களையும் கடந்து அவற்றிற்கு மேலும், கீழும் இருக்கின்றான். இனி மேற்கூறியவாறு அவற்றினுள்ளும் விசுவ ரூபியாயும் இருக்கின்றான்.*

*குறிப்புரை :- 'அவனது பெருமையை அறிய வல்லார் யார்' என்பது குறிப்பெச்சம். "ஆதிப் பிரான்" என்பது மீள மீள வந்தது சொற்பொருட் பின்வருநிலையணி. "ஆதிப் பிரான்" என்ற இதனையே மெய்கண்ட தேவர், "அந்தம் ஆதி என்மனார் புலவர்" (சிவஞானபோதம், சூ. 1) என்றார், 'அகலிடச் சுடர் மூன்றின் ஒளியாய் நிற்கும் சோதிப் பிரான்' என இயைக்க. "அப்புறம்" என்பதிலும் 'அப்புறத்தவன்' என்னும் விகுதி தொகுத்தலாயிற்று. சிவன் அண்டத்து அப்புறத்தவனும், கீழவனும் ஆதலை,*

> *"பாதாளம் ஏழினும்கீழ் சொற்கழிவு பாதமலர்;*
> *போதார் புனைமுடியும் எல்லாப் பொருள் முடிவே"*
>
> *- தி.8 திருவெம்பாவை, 10*

> *"கீதம் இனிய குயிலே, கேட்டியேல் எங்கள் பெருமான்*
> *பாதம் இரண்டும் வினவில் பாதாளம் ஏழினுக் கப்பால்;*
> *சோதி மணிமுடி சொல்லின் சொல்லிறந்து நின்ற தொன்மை"*
>
> *- தி.8 குயிற்பத்து, 1*

*என்னும் திருவாசகத்தால் அறிக.*

**2955.** ஆதிப் பிரான்நம் பிரான் இவ்வகலிடச்
சோதிப் பிரான்சுடர் மூன்றொளி யாய்நிற்கும்
ஆதிப் பிரான்அண்டத் தப்புறம் கீழவன்
ஆதிப் பிரான்நடு வாகிநின் றானே. **23**

**2956.** அண்டங் கடந்துயர்ந் தோங்கும் பெருமையன்
பிண்டங் கடந்த பிறவிச் சிறுமையன்
கண்டர் கடந்த கனைகழல் காண்டொறும்
தொண்டர்கள் தூய்நெறி தூங்கிநின் றாரே. **24**

---

*இதனால், சிவபிரானது நித்தியத் தன்மையும், அளவில் ஆற்றலும் புகழ்ந்து கூறப்பட்டன. 'எல்லாம் ஒடுங்கும் பொழுது ஒருவன் மட்டும் எங்ஙனம் ஒடுங்காது நிற்பான்' என்பனபோலும் ஐயங்கள், 'திருவருள் கிடைக்கப் பெற்றார்க்கன்றி நீங்கா' என்பதை அப்பர்,*

*கூவல் ஆமை குறைகடல் ஆமையைக்*
*கூவலோ டொக்கு மோகடல்? என்றல்போல்,*
*பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்,*
*தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே.* *- தி.5 ப.100 பா.5*

*என அருளிச் செய்தமை காண்க.*

*2956. தெளிவுரை :- அண்டங்கள் அனைத்தையும் கடந்து எல்லையற்று விளங்கும் அண்டப் பொருளாய் இருப்பவனும், பிறவாப் பிறவியாகிய திருமேனிகள் பலவற்றைக் கொண்டு கண்டப் பொருளாயும் விளங்குகின்ற சிவனது, தீயோர் அணுகாத திருவடிகளைக் காணுந்தோறும் அவன் அடியார்கள் சுத்தாவத்தையில் அழுந்துகின்றார்கள்.*

*குறிப்புரை :- 'ஆகவே, யாவரும் அவனது திருவடிகளைக் காணுதல் வேண்டும்' என்பது குறிப்பெச்சம். 'பெருமை, சிறுமை' என்பன அகண்டம், கண்டம் என்னும் பொருளவாய் நின்றன. "பெருமையன்" என்பதன் பின் 'ஆயினும்' என்பது வருவிக்க. பிண்டம் - தசை. நிணம் முதலிய தாதுக்களின் திரட்சி. எனவே, அது, தாய் தந்தையரது உடற் கூற்றால் தோன்றி வளர்ந்து, பின்னும் உணவால் பெருக்கின்ற புலால் உடம்பைக் குறிக்கும். 'அவ்வா றில்லாத பிறவி' என்றது அருட்டிரு மேனியை. சிவனை, "பிறவா யாக்கைப் பெரியோன்" (சிலப்பதிகாரம் - இந்திரவிழவூர் எடுத்த காதை - 163) எனப் பிறருங் கூறினார். அஃதாவது, 'சிவனுக்கு யாக்கை உண்டு; ஆயினும் அது மேற்கூறியவாறு தாய் தந்தையரால் பிறந்து, அவரால் வளர்க்கப்பட்டது அன்று' என்றதால் "சிறுமை" பிறப்பிப்பதுதான் கடவுட்குப் பெருமை" எனக் கூறுவாரை நோக்கி. 'அத்தகைய பெருமையில்லாத சிறுமையன் எங்கள் சிவன்' என நகை தோன்றக் கூறிய பழிப்பது போலப் புகழ் புலப்படுத்திய வஞ்சப் புகழ்ச்சியாக உரைப்பாரும் உளர்.*

**2957.** உலவுசெய் யோக்கப் பெருங்கடல் சூழ்ந்த
நிலமுழு தெல்லாம் நிறைந்தனன் ஈசன்
பலம்முழு தெல்லாம் படைத்தனன் முன்னே
புலம்உழு பொன்னிற மாகிநின் றானே. **25**

---

*'சிறுமையானது' என ஆறாவது விரிக்க. கண்டர் - கண்டகர்; தீயோர். 'இவர்கள் கடந்த கழல்' என்றது 'அணுகாது விலகிச் சென்ற கழல்' என்றதாம். கனை கழல் அடையடுத்த ஆகுபெயர். 'தொண்டர் நடந்த கனைகழல், என்பது பாடமன்று, "நெறி" என்றது அவத்தையை. சுத்தாவத்தையின் இயல்பு முன் தந்திரத்தில் விளக்கப்பட்டது.*

*இதனால், சிவன் அகண்டப் பொருளாயினும் உயிர்களின் பொருட்டுக் கண்டப் பொருளாய்த் தோன்றியருளும் அருட்சிறப்புப் புகழ்ந்து கூறப்பட்டது. 'இதுபற்றி அவன் பிறத்தல் இல்லை' என்னும் உண்மையும் உடன் கூறப்பட்டது.*

*2957. **தெளிவுரை :-** சிவன் ஓவாது வீசுகின்ற அலைகளையுடைய கடலால் சூழப்பட்ட இவ்வுலகம் முழுதும் நிறைந்து நிற்கின்றான். நின்று, இதன்கண் உளவாகின்ற அனைத்துப் பயன்களையும் தோற்றுவிக்கின்றான். இவை யல்லாமலும் உயிர்களின் கட்பொறி சென்று பற்றும்படி பொன்னார் மேனியால் முன் வந்து காட்சியும் தருகின்றான்.*

*குறிப்புரை :- 'வேறு என்ன வேண்டும்' என்பது குறிப்பெச்சம். உலவு, உலவுதல்; முதனிலைத் தொழிற்பெயர். 'ஓங்கு' என்னும் முதனிலை 'அம்' என்னும் தொழிற்பெயர் விகுதி பெற்று, வலித்தல் பெற்று, 'ஓக்கம்' என வரும். தேங்கு, தேக்கம்; அடங்கு, அடக்கம்; விளங்கு, விளக்கம் முதலியவற்றைக் காண்க. இஃது இங்கு ஆகு பெயராய், ஓங்கியெழுகின்ற அலைகளைக் குறித்தது. இவ்வாறன்றி, 'நோக்கம்' என்னும் பாடத்திற்கு இங்கு இயைபு யாதும் இன்மை அறிக. பலம் - பயன். 'முழுதெல்லாம்' என்பது ஒரு பொருட் பன்மொழி. "முன்னே" என்பதை, "நின்றான்" என்பதற்கு முன்னர்க் கூட்டுக. "புலம்" என்பது பொறியின் மேலதாய், இங்குக் கண்ணைக் குறித்தது. கண் உழுதலாவது பற்றிக் காணுதல். "பொன்னிறம்" என்பது பண்பாகுபெயராய், அதனையுடைய திருமேனியைக் குறித்தது. 'சிவன் திருமேனி கொள்ளுங் காலத்தில், பொன்மயமான திருமேனியையே கொள்ள விரும்புகின்றான்' என்பதாம்.*

*இதனால், சிவனது மற்றும் பல அருட் சிறப்பே புகழ்ந்து கூறப்பட்டன.*

*2958. **தெளிவுரை :-** சிவன், மேலான பொருள்கட்கெல்லாம் மேலான பெரும்பொருளாய் நிற்பினும் ஊழிகள் தோறும் அவற்றின் தொடக்கமாயும், முடிவாயும் நிற்கின்ற அளவினனும் ஆய், நாம் கண்டும், கேட்டும் உணர்கின்ற அனைத்துலகங்களையும் நிலம் போலத் தாங்கி நிற்கும் தன்மையுடையனாதலை*

**2958.** பராபர னாகிப்பல் லூழிகள் தோறும்
பராபர னாய்இவ் வகலிடம் தாங்கித்
தராபர னாய்நின்ற தன்மை யுணரார்
நிராபர னாகி நிறைந்துநின் றானே. **26**

---

***உலகர் உணர்தல் இல்லை. ஆயினும், அவன் அதனால் கீழ்மை ஒன்றும் இலனாய், எல்லாப் பொருள்களிலும் நிறைந்து அவற்றை இயக்கியே நிற்கின்றான்.***

*குறிப்புரை :-* ‘சிவன்’ என்னும் எழுவாய் அதிகாரத்தில் வந்தது. “பராபரன்” இரண்டில் முன்னது. “பராற்பரன்” என்பதன் மரூஉ. பின்னது, ‘பரனாயும் அபரனாயும் நிற்பவன்’ என்றதாம். பரம் - மேல், அபரம் - கீழ், ‘பராபரன்’ என்பதை, “மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க” (தி.8 திருவண்டப்பகுதி, 50) என்னும் திருவாசகத்திலும் காண்க. இந்த, ‘பரம், அபரம்’ என்பன இங்கும். “அந்தம் கடந்தும்” (பா. 2945) என்னும் மந்திரத்திற் போலவே, ‘முன், எனப் பொருள் தந்தன. ‘தராபரன்’ என்னும் வட சொல் தொகை மொழி உவமத்தொகை. பரன் - தன்மையுடையவன். “உணரார்” என்பதன்பின், ‘ஆயினும்’ என்பது வருவிக்க. ‘அபரன்’ என்பது முதல் நீண்டு, ‘நிர்’ என்பதனோடு புணர்ந்து “நிராபரன்” என வந்து, ‘கீழ்மையில்லாதவன்’ எனப் பொருள் தந்தது.

*தரையை யுணராது தாமே திரிவார்;*
*புரையை உணரா புவி.* – ***திருவருட்பயன், 36***

என்றாற்போல், நிலம் யார் தன்னைப் போற்றினும், போற்றாதொழியினும் தாங்குதலாகிய தன் கடமையை அஃது ஆற்றி வருகின்றது. அதுபோலத்தான் சிவன் தன் செயலைச் செய்து நிற்கின்றான் என்பதையே “தராபரனாய் நின்ற தன்மை” என்றார். இதனையே அப்பர் பெருமான், “தன்கடன் அடியேனையும் தாங்குதல்” என்றார். அஃது, யார் போற்றிடினும் போற்றாவிடினும் நிகழ்ந்து கொண்டே யிருக்கின்றது. ஆயினும், “என்கடன் பணி செய்து கிடப்பதே” (தி.5 ப.19 பா.9) என்பதை நான் உணர்ந்தேனா என்னும் ஐயம் எழுகின்றது என்று அருளிச் செய்தார். சிவன் இவ்வகலிடத்தைத் தாங்குதலை நாயனார் சில இடங்களில் நினைவு கூர்கின்றார். அப்பரும் சிவனை, “பொய்யாத பொழில் ஏழும் தாங்கி நின்ற - கற்றூண்காண்” (தி.6 ப.8 பா.1) எனக் குறித்தருளினார். உலகனைத்தையும் தாங்கும் சிவனது சத்தி, ‘ஆதார சத்தி’ எனச் சிவாகமங்களில் சொல்லப்படுகின்றது. “நின்றான்” என்பது, நின்று செய்தலாகிய தன் காரியம் தோன்ற நின்றது.

*இதனாலும், சிவனது சில திருவருட் சிறப்புக்களே புகழ்ந்து கூறப்பட்டன.*

*2959.* ***தெளிவுரை :-*** பொருள்களும், சொற்களும், சொற்கள் ஒடுங்குகின்ற இடமும் தனக்கு வேறாயினும் அவை தனக்கு உடலாய் நிற்க, அவற்றிற்கு உயிராய் நிற்பது எதுவோ, அது பெருந்தெய்வம். (முதற் கடவுள்) அத்தகைய பெருந்

**2959.** போற்றும் பெருந்தெய்வம் தானே பிறிதில்லை
ஊற்றமும் ஓசையும் ஓசை ஒடுக்கமும்
வேற்றுடல் தான்என் றதுபெருந் தெய்வம்
காற்றது ஈசன் கலந்துநின் றானே. **27**

**2960.** திகைஅனைத் தும்சிவ னே அவன் ஆகின்
மிகைஅனைத் தும்சொல்ல வேண்டா மனிதரே
புகைஅனைத் தும்புறம் அங்கியிற் கூடும்
முகைஅனைத் தும்எங்கள் ஆதிப் பிரானே. **28**

---

***தெய்வம் சிவனன்றிப் பிறிதில்லை. அஃது எங்ஙனம் எனின், சிவனே எல்லா உயிர்களிடத்தும் அவற்றின் உயிராகிக் கலந்து நின்று அவற்றைப் புரந்து வருகின்றான்.***

*குறிப்புரை :- ஊற்றம் - பிறிதொன்றைத் தாங்கும் திட்பம். அஃது அதனையுடைய பொருளைக் குறித்தது. சொல் ஒடுங்குமிடம் நாதம். எனவே, 'சொல்லும், பொருளுமாகிய இருவகை உலகங்களும் தனக்கு உடலாகத் தான் அவற்றுக்கு உயிராகி அவற்றைப் புரந்து வருவதே பெருந்தெய்வம்' எனப் பெருந்தெய்வத்தின் இலக்கணம் கூறப்பட்டதாம். 'உடல் நிலை பெறுவது உயிரால்' என்பது வெளிப்படையாதலின், 'இருவகை உலகங்கட்கும் உயிராவது பெருந்தெய்வம். எனவே, 'உயிர்போல அவற்றை நிலைப்பிப்பது பெருந்தெய்வம்' என்றதாயிற்று. 'அந்த இலக்கணத்திற்கு இலக்கியம் சிவபெருமானே' என்பதை நிறுவுதற்கு, "காற்றது ஈசன் கலந்து நின்றானே" என்றார். சிவன் உயிர்களின் உயிர்ப்பாய் நிற்றலை, நான்காம் தந்திரத் தொடக்கத்தில் அசபா மந்திரத்தால் நாயனார் விளக்கினார். அப்பரும், "என்னுளே உயிர்ப்பாய்ப் புறம் போந்து புக்கு என்னுளே நிற்கும் இன்னம்ப ரீசனே" (தி.5 ப.21 பா.1) என்று அருளிச் செய்தார். "காற்றது" என்பதில் 'அது' பகுதிப் பொருள் விகுதி. "காற்றதன்கண்" ஏழனுருபு விரிக்க. 'மர' வகைகளும் உயிர்க்கின்றன' என இக்கால அறிவியலார் கூறுவர். முதல் அடியை இரண்டாம் அடியின் பின்னர்க் கூட்டி, அதன்பின் 'என்னையெனின்' என்பதும், இறுதியில் 'ஆகலின்' என்பதும் வருவித்து முடிக்க. இடையிலும் 'உடலாக, உயிர்' என வேண்டும் சொற்கள் வருவிக்க. இதனுள், "ஈசன்" என்றது 'சிவன்' என்றதேயாதல் வெளிப்படை. "சிவனோ டொக்கும் தெய்வம் தேடினு மில்லை" (பா.40) என முதற்கணே கூறினார்.*

*இதனால், முதற்கண் கூறிய சிவனது முதன்மை வலியுறுத்திப் புகழப்பட்டது.*

*2960. **தெளிவுரை :-** மனம் உடைமையால், 'மனிதர்' எனப் பெயர் பெற்றவர்களே! (அந்த மனம் திருந்தியதாய் இல்லையே). ("மனிதர்காள்! இங்கே வம்மொன்று சொல்லுகேன்" (தி.5 ப.91 பா.7) என்பதிலும் இக்குறிப்பு உள்ளது).*

**2961.** அகன்றான் அகலிடம் ஏழும்ஒன் றாகி
இவன் தான் எனநின்று எளியனும் அல்லன்
சிவன்றான் பலபல சீவனு மாகி
நவின்றா உலகுறு நம்பனு மாமே. **29**

---

**உலகனைத்தும் சிவமயமே. அனைத்தும் அவனானபின்பு சொல்ல வேண்டியது என்ன இருக்கின்றது? ஆகலே, வீண் வாதங்களைக் கிளப்ப வேண்டா. ஏனெனில், சில இடங்களில் வெளியே காணப்படுகின்ற புகை உள்ளே மறைந்திருக்கின்ற நெருப்பினின்றும் வந்ததுதான். பின்பு அஃது அடங்குவதும் நெருப்பில்தான். அது போலத் தான் காணப்படுகின்ற பொருள்கள் அனைத்தும் சிவனிடத்தி லிருந்தும் வந்தவைதாம். ஆகவே, அவை ஒடுங்குவதும் அவனிடத்தில்தான்.**

*குறிப்புரை :- இவ்வாறு கூறுவன ஆணை மொழிகளாம். அஃதாவது உபதேச மொழிகளாம். ஆசிரியர் மாணாக்கனை 'இவ்வாறு நில்' என்றால் மாணாக்கன் அவ்வாறு நிற்க வேண்டியவனே தவிர, 'ஏன், ஐயா, இவ்வாறு நிற்கச் சொல்கின்றீர்' என வினாவுதற்கு உரியன் அல்லன். அத்தகையவான மொழிகள் ஆணை மொழிகளாம். "நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த" (தொல் - பொருள் - செய்யுளியல்) எனத் தொல்காப்பியர் கூறியதும் இவ்வாறான மொழிகளை நோக்கியே. இவ்வாறான நல்லாசிரியரை, தொல்லாணை நல்லாசிரியர்" (மதுரைக்காஞ்சி - 761, பட்டினப்பாலை-170) எனச் சங்க இலக்கியங்கள் கூறும். ஞானசம்பந்தரது பாடல்களில் பல இத்தகையினவாய் இருத்தல் காணலாம். "புறம்" என்பதற்கு, 'புறத்து உள்ளன' எனவும் 'பின் அங்கியிற் கூடும்' எனவும் உரைக்க. இஃது எடுத்துக் காட்டுவமை. முகை - அரும்பு. அரும்புதல் - தோன்றுதல், ஆகலின் அது தோன்றிய பொருள்களைக் குறித்தது. ஆதிப் பிரான் - ஆதி சத்தியை உடைய கடவுள். "எல்லாம் சிவன் என்ன நின்றாய் போற்றி" (தி.6 ப.5 பா.1) என்ற அப்பர் திருமொழியை, "திசை அனைத்தும் சிவம்" என்பதனோடு ஒப்பிட்டுக் காண்க.*

*இதனால், சிவன் எல்லாப் பொருளுமாய் நிற்கும் பெருமை புகழ்ந்து கூறப்பட்டது.*

*2961. **தெளிவுரை :-** சிவன், ஏழுலகங்களும் ஒன்றாக ஓர் உருவாய்க் கலந்து, அப்பொழுதே தான் அவற்றுள் ஒன்றும் ஆகாது தனியனாய் நிற்பினும், தனிமையானோர் பலர் பிறர்க்கு எளியராதல்போல எளியனல்லன்; அரியனே, இனி இவன் அளவற்ற உயிர்களோடு அவையேயாய்க் கலந்து அவற்றின் செயல்களில் எல்லாம் தானும் உடன் பயின்று, அனைத்துயிர்கட்கும் சுத்தனும் ஆகின்றான்.*

*குறிப்புரை :- செய்யுளாகலின், "இவன்" என்னும் சுட்டுப்பெயர் முன் வந்தது. 'தான் என நின்றும் எளிய னல்லன்' என உம்மையை மாற்றி*

**2962.** கலையொரு மூன்றும் கடந்தப்பால் நின்ற
தலைவனை நாடுமின் தத்துவ நாதன்
விலையில்லை விண்ணவ ரோடும் உரைப்ப
உரையில்லை உள்ளூறும் உள்அவன் தானே. **30**

---

*வைத்துரைக்க. நவிலுதல் - பயிலுதல். நம்பன் - நம்பத்தக்கவன். இதுவே வடமொழியில் 'ஆத்தன்' எனப்படுகின்றது. இதனுள் சிவன் எல்லாப் பொருளிலும் ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று உயிர்கட்கு உறுதுணையாதல் கூறப்பட்டவாறு அறிக. இரு பொருள் ஒன்றாய், வேறாய், உடனாய் இயைந்து நிற்பதொரு சம்பந்த விசேடமே சைவ சித்தாந்தத்துள் கூறப்படும் சுத்தாத்துவிதம் ஆதலை நினைக. சிவன் இவ்வத்துவிதப் பொருளாம் முறைமை இங்குப் புகழ்ந்து கூறப்பட்டது.*

*இம்மந்திரம் பதிப்புக்களில் இரண்டாம் தந்திரத்தில் 'அனுக்கிரகம்' என்னும் அதிகாரத்திலும் காணப்படுகின்றது.*

*2962. **தெளிவுரை :-** நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகளில் முதல் மூன்றைக் கடந்து, மேலேயுள்ள 'சாந்தி, சாந்தியதீதை' என்னும் கலைகளில் விளங்கு வோனாய் உள்ளவன் சிவனேயன்றிப் பிறரல்லர். (பிறர் எல்லாரும் மேற்கூறிய மூன்று கலைக்குள் இருப்பவரே' என்றபடி). ஆகவே அவனே யாவர்க்கும் தலைவன், எல்லாத் தத்துவங்கட்கும் முதல்வன். உயிர்கட்கெல்லாம் உயிராய் அவைகளின் அறிவினுள் உள்ளவனும் அவனே. ஆதலின், ஏனைத் தேவர்களோடு அவனையும் ஒப்ப வைத்துக் கூறும் கூற்றுக்கே இடமில்லை. இனி அவன், எவராயினும் தம்மை அவனுக்குக் கொடுத்துப் பெறத் தக்கவனேயன்றி, வேறு பொன், பொருள் முதலியவற்றைப் பண்டமாற்றாகக் கொடுத்துப் பெறத்தக்கவன் அல்லன். இவற்றையெல்லாம் அறிந்து அவனை நினைமின்கள்.*

***குறிப்புரை :-*** *"கலையொரு மூன்று" என்பவற்றை 'இடைகலை, பிங்கலை, சுழுமுனை' எனவும், 'தந்திர கலை, மந்திர கலை, உபதேச கலை' எனவும், "அருள் நூலும், ஆரணமும் அல்லாதும்" (திருவருட்பயன் - 81) எனவும் உரைப்பாரும் உளர். சிவனை ஏனை விண்ணவரின் வேறு வைத்துக் கூறுதற்குக் காரணம் கூறுகின்றார் ஆகலின், அவற்றிற்கு இங்கு இயைபின்மையறிக. சிவனைப் 'பரம்பொருள்' எனக் கொள்பவர் தவிர ஏனையோரெல்லாம் போக்கிய காண்ட தத்துவங்கட்குமேல் (ஆன்ம தத்துவங்கட்குமேல்) உள்ள தத்துவங்களையும், போசயித்திரு காண்ட தத்துவங்கட்கு மேல் (வித்தியா தத்துவங்கட்குமேல்) உள்ள தத்துவங்களையும் உணராமையால் அவரால் கொள்ளப்படும் கடவுளர்கள் யாவரும் 'நிவிர்த்தி பிரதிட்டை, வித்தை' என்னும் மூன்று கலைகட்குள்ளே நிற்பவராவர். ஆன்ம தத்துவங்களில் கீழ் உள்ளதாகிய பிருதிவி தத்துவத்தளவில் நிற்பவன் பிரமதேவன். ஆகவே இந்திரன் முதலிய பலரும் அவனுக்குக் கீழ் நிற்போரேயாவர். அவரெல்லாம் நிவிர்த்தி கலைக்கு உட்பட்டவர்கள்.*

**2963.** படிகாற் பிரமன்செய் பாசம் அறுத்து
நெடியோன் குறுமைசெய் நேசம் அறுத்து
செடியார் தவத்தினில் செய்தொழில் நீக்கி
அடியேனை உய்யவைத்து அன்புகொண் டானே. **31**

---

*பிருதிவிக்குமேல் பிரகிருதியளவும் சென்று நிற்பவன் மாயோன். ஆகவே, அவனும், அவனைச் சார்ந்த அதிகாரிகளும், அடியவர்களும் எல்லாம் பிரதிட்டா கலைக்கு உட்பட்டவர்கள். ஆயினும் பௌத்தரும், சமணரும் 'உயிரும், வினையும் உண்டு' என நம்புபவர்கள். வினை புத்தி தத்துவத்தையே பற்றிக் கிடத்தலாலும் அவர்கள் 'அறிவு அல்லது உயிர்' என்பன எல்லாம் புத்தி தத்துவத்தையே யாகலானும் அவர்கள் புத்தி தத்துவத்தளவில் செல்லுதற்கு உரியர். 'புத்தி தத்துவம் பிரதிட்டா கலைக்கு உட்பட்டது' என்பது மேலே பெறப்பட்டது.*

*புறச் சமயிகளில் மீமாஞ்சகரும், சாங்கியரும் கடவுட் கொள்கை இல்லாதவர்கள். ஆயினும் உயிரும், அதற்குக் கருவியாகிய உடம்பு முதலியனவும், வினையும் உள்ளன' என நம்புபவர்கள். அவருள் சாங்கியர் கூறும் தத்துவமே மீமாஞ்சகர், ஏகான்ம வாதிகள் ஆகியோருக்கும். ஆகையால் அவரெல்லாம் பிரகிருதிக்குமேல் உள்ள புருட தத்துவத்தளவில் செல்லுதற்குரியர். புருட தத்துவம் வித்தியா கலையின் கீழ் எல்லையாகலின், இவர்களைப் பிரதிட்டா கலைக்குள் நிற்பவர்களாகவே கருதலாம். இவருள் ஏகான்ம வாதிகள் 'கடவுள் இல்லை' எனக் கூறாவிடினும் 'கடவுள் வியாவகாரிக சத்தையாவதன்றிப் பார மார்த்திக சத்தை அன்று' எனவும், 'பரமார்த்திகப் பொருள் பரப்பிரம்மம்; அது நாமேயன்றி வேறில்லை' எனக் கூறுதலால் அவர்கட்கு எல்லையும் புருட தத்துவமே யாகின்றது.*

*அகப்புறச் சமயிகளாகிய பாசுபதர், மாவிரதர், காபாலிகர், வைரவ மதத்தினர் முதலியோர், 'சிவன், சிவன்' எனக் கூறினாலும், அவர் கருதுவன எல்லாம் உருத்திர வகையினரையே. வாம மதத்தவர் 'சத்தி' என்பதும் உருத்திராணிகளில் ஒருத்தியையே. சுத்த சாந்த மதத்தினர் இவரின் வேறுபட்டவர்கள். அவர்கள் அகச் சமயிகளுள் வைத்து எண்ணத் தக்கவர்கள். ஆகவே அகப்புறச் சமயிகளது கடவுளரும் வித்தியா கலைக்கு உட்பட்டவர்களே.*

*அகச் சமயிகளாகிய பாடாண வாத சைவர் முதலியோர் 'இலய சிவன், போக சிவன், அதிகார சிவன்' எனப் பகுதிப்பட்டு, முறையே உருவம், அருவுருவம், அருவம் என்னும் திருமேனிகளைத் தாங்கித் தூல, சூக்கும, அதிசூக்கும ஐந்தொழில்களைச் செய்யும் தடத்த சிவபேதங்களுள் ஒரோ ஒருவனையே பரம சிவனாகக் கொள்வர். அதனால் அவர்களது கடவுளர், வித்தியா கலைக்கு மேல் உள்ள சாந்தி, சாந்தியதீத கலையில் உள்ளவராவர். இம்மந்திரத்தில் ஐந்தொழில் இயற்றுதல் இன்றிச் சித்தாந்த சைவர்க்கே உரியவனாய்த் தன்னளவில் நிற்கும்*

*சொரூப சிவனைக் கூறாமல், ஐந்தொழில் இயற்றி, 'பதி' எனப் பெயர்பெற்றுத் தலைவனாய் அகச் சமயத்தார்க்கு உரிய தடத்த சிவனையே கூறினார் ஆதலின், 'கலை ஐந்தும் கடந்து' என்னாது, 'கலையாரு மூன்றும் கடந்து அப்பால் நின்ற தலைவன்' என்றார்.*

*ஒரு பொருளைப் பெறுதற்கு அதற்கு நிகரான மற்றொரு பொருளைக் கொடுக்குமிடத்து, அவ்வாறு கொடுக்கப்படும் பொருளே 'விலை' எனப்படுவதல்லது, தன்னையே தான் கொடுப்பது விலையெனப்படாது, ஏனெனில், விலையைக் கொடுப்பவன் பின்பு அவ்விலைக்கீடாகத் தான் வாங்கும் பொருளைப் பின் சுதந்திரமாய் நின்று அனுபவித்தற்கு உரியன். தன்னையே கொடுத்தவன் தன்னை வாங்கினவனுக்கு அடிமையேயல்லாது, சுதந்திரமிலன். இவ்வகையில் உயிர்கள் தம்மையே கொடுத்துப் பெறத் தக்கவன் சிவன் ஆதலின், 'அவனுக்கு விலையில்லை' என்றார். "உள்ளூறும் உள்" என்றதில் பின்னுள்ள "உள்" என்பது ஆகுபெயராய், அவ்விடத்துள்ள பொருளைக் குறித்தது. உம்மை சிறப்பும்மை. இதனால் பிறரோடு ஒப்பவைத்துக் கூறுதல் கூடாமை சொல்ல வேண்டாவாயிற்று. 'விண்ணவரோடும் ஒப்பித்து உரைப்ப' என ஒரு சொல் வருவிக்க. உரைப்ப உரை - உரைக்கப்படுவன - வாகிய உரைகள். ஈற்றடி இன எதுகை பெற்றது.*

*இதனால், சிவனது முதன்மை தத்துவங்களில் வைத்து இனிது விளங்கக் கூறிப் புகழ்ந்துரைக்கப்பட்டது.*

***2963. தெளிவுரை :-** மேற்கூறிய தலைவன், மேற்கூறிய கலைகளுள் கீழதாகிய நிவிர்த்தி கலையில் இருக்கும் பிரம தேவன் செய்கின்ற படைத்தலையும் நீக்கி, அவனுக்குமேல் இருபத்து மூன்று தத்துவங்கட்குத் தலைவன் ஆதலின், 'நெடியோன்' எனப்படுகின்ற மாயோன் செய்கின்ற சின்னாள் நிலைப்பதாகிய காத்தலையும் நீக்கி, அவனுக்கு மேல் உள்ள உருத்திரன் அறியாமையிற் படுத்துத் துன்பக்கிடையில் கிடத்துகின்ற அழித்தலையும் நீக்கி அடியேனை உய்ய வைத்து, என்மீது அருள்மிக உடையன் ஆயினான்.*

***குறிப்புரை :-** 'அவனது பெருமை அத்தகையது' என்பது குறிப்பெச்சம். கால் - அடிநிலை. இதனை, 'கடைக்கால்' என்பர். பாசம், பிணிப்பது. "பிரமன் செய் குறுமை நேசம்" என மொழி மாற்றிக் கொள்க. நேசம் - கருணை, கருணையால் செய்யப்படுவதனை, 'கருணை' என உபசரித்துக் கூறினார். முத்தொழில்களுள் காத்தல் தொழிலையே கருணைத் தொழிலாக மக்கள் கருதுதல் பற்றி அதனை, "குறுமை நேசம்" - என நகையாடிக் கூறினார். செடி - கீழ்மை. அஃது இங்கு அறியாமையைக் குறித்தது. ஊழியை முடிப்பவன் உருத்திரன். அது முடிந்தபொழுது கருவிகளுள் யாதும் இன்மையால், உயிர்கள் ஆணவத்துள் அழுந்தி, யாதும் அறியாது கிடக்கும் சிலவகைக் கேவலங்களுள் இது 'சகல கேவலம்' எனப்படும். 'தவம்' என்பது, 'தாபம் - வெப்பம்' என்பதினின்றே வருதலால் இக்கேவல நிலையையும் 'தவம்' என்கின்றவர்*

**2964.** ஈசன்என் றெட்டுத் திசையும் இயங்கின
ஓசையி னின்றெழு சத்தம் உலப்பிலி
தேசம் ஒன்று ஆங்கே செழுங்கண்டம் ஒன்பதும்
வாச மலர்போல் மருவிநின் றானே. **32**

---

*'செடியார் தவம்' என வேறுபடுத்திக் கூறினார். "சுடச் சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம் - சுடச்சுட நோற்கிற் பவர்க்கு" (குறள், 267) என்னும் திருக்குறளும் தவம் என்னும் சொல்லியல்பை விளக்குவதாய் உள்ளது. இவ்வாற்றால் அழித்தலைக் குறிக்கவே, அதனைச் செய்வோனை எடுத்தோதல் வேண்டா வாயிற்று. இங்கு, செய்தல், சேர்த்தலாம். முத்தியாவது விடுதலை யாகலின், 'அவ்விடுதலை யாது' என்பார்க்கு, 'படைத்தல் முதலிய தொழில்களைச் செய்யும் காரணக் கடவுளர்களது செயல்களினின்றும் விடுபடும் விடுதலை' என்பதே விடையாகக் கூறப்படுகின்றது. அதனையே நாயனார் இம்மந்திரத்தில் இவ்வாற்றாற் கூறினார்.*

*இதனால், முன் மந்திரத்தில் "நாடுமின்" எனக் கூறிய அத்தலைவன் உயிர்களிடத்துக் கொண்டுள்ள அருள்நிலை புகழ்ந்து கூறப்பட்டது.*

*2964. தெளிவுரை :- சிவன், 'நாதம்' எனப்படும் சூக்குமை வாக்கினின்றும் தோன்றிய அனைத்து மொழிகளுமாகிய சொற் பிரபஞ்சத்திலும் நீங்காது நிறைந்து நிற்கின்றான். தேசம், என்று சொல்லப்படும் பூமி ஒன்றுதான் ஆயினும் அஃது ஒன்பது கண்டங்களாகப் பிரிந்து நிற்கின்றது. அப் பிரிவுகளாகிய பொருட் பிரபஞ்சத்திலும் அவன் மலரில் மணம்போல் மருவி நிற்கின்றான். அதனால் அனைத்துலகங்களும், சிவனாகிய முதலையே முதலாகக் கொண்டு இயங்குகின்றன.*

*குறிப்புரை :- 'ஆகலான் அவனைத் தோத்திரித்தல் உயிர்கட்குக் கடன்' என்பது குறிப்பெச்சம். இரண்டாம் அடி முதலாகத் தொடங்கி யுரைக்க. 'சத்தத்தும்' என அத்தும் உம்மையும் விரிக்க. "இமயம், குமரி இவற்றின் இடைப்பட்ட நிலம், 'பாரத தேசம்' என ஒன்றாகவும், அதுதானே குமரி முதலிய ஒன்பது கண்டங்களாகவும் சொல்லப்பட்டது" என்பதைச் சிவஞான மாபாடியத்து இரண்டாம் சூத்திரத்து, மூன்றாம் அதிகரணப் பகுதியில் காண்க. 'அனைத்துலகங்களும்' என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாகப் பாரத வருடம் முழுவதையும் கூறினார். "வாச மலர்போல்" என்பதை, 'மலர் வாசம் போல்' என மாற்றியுரைக்க. ஈசன் - சிவன். 'சிவன் என்று' என்றது, 'சிவனே முதல் என்று கொண்டு' எனக் கூறியவாறு. இங்ஙனம் கூறியதனால், "உலப்பிலி" எனவும், "மருவி நின்றான்" எனவும் போந்த பயனிலைகட்கு, 'சிவன்' என்பதே எழுவாயாயிற்று.*

*இதனால், சிவன் தோத்திரிக்கப்படும் பொருளாதல் காரணங் கூறி விளக்கப்பட்டது.*

**2965.** **இல்லனு மல்லன் உளனல்லன் எம்மிறை**
**கல்லது நெஞ்சம் பிளந்திடுங் காட்சியன்**
**தொல்லையன் தூயன் துளக்கிலன் தூய்மணி**
**சொல்லருஞ் சோதி தொடர்ந்துநின் றானே.** **33**

---

*2965.* ***தெளிவுரை :-*** *எங்கள் சிவபெருமான், உலகர் எத்தனை கூறினாலும், அவனை உணர்ந்தோர், "என் புந்தி வட்டத்திடைப் புக்கு நின்றானையும் பொய்யென்பனோ" (தி.4 ப.98 பா.1 பா.113 பா.5) எனவும், "ஏதுக்களாலும், எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா; சுடர்விட்டுளன் எங்கள் சோதி" (தி.3 ப.54 பா.5) எனவும் உறுதிப்பட உரைத்தலால், இல்லாதவனும் அல்லன். அவர் எத்தனை சொல்லினும் உலகர், "காணாதான் கண்டானாம் தான் கண்டவாறு" (திருக்குறள், 849) எனற்படி. தாம் கூறுவதையே கூறி, 'சிவன் இல்லை' எனப் பிணங்குதலின், உள்ளவனும் அல்லன், 'இல்லை' என்பவரது கல் போன்ற நெஞ்சங்களிலும் ஒரு காலத்தில் அந்நெஞ்சைப் பிளந்து கொண்டு வெளித் தோன்றுவான். ஏனெனில், அவன் பழமையாகவே எங்கும் இருப்பவன்; இயல்பிலே மாசற்றவன் ஆதலின் மாசிலா மணி போல ஒளிவிடுந் தன்மையன்; தோன்றியபின் தோன்றிய இடத்தினின்றும் பெயர்தல் இல்லாதவன்; சொல்லைக் கடந்த அறிவு வடிவினன். என்றாலும் அனைத்துயிர்களையும் தொடர்ந்து நிற்கின்றான்.*

***குறிப்புரை :-*** *"உண்மையுமாய், இன்மையுமாய்" (தி.8 திருச்சதகம், 15) என்னும் திருவாசகத்தையும் காண்க. "உளதன் றிலதன்று" (கந்தரநுபூதி, 51) எனப் பிற்காலத்தவரும் கூறினார். "தூய்மணி" என்பதை, "தூயவன்" என்பதன் பின்னர்க் கூட்டி, "தூயன் ஆகலின் தூய்மணிபோல்பவன்" என ஒருசொல் வருவித்துரைக்க.*

*இதனால், சிவனது பெருமைகளே புகழ்ந்து கூறப்பட்டன.*

*2966.* ***தெளிவுரை :-*** *கொன்றை மாலை மணக்கும் சடையையுடைய சிவபெருமான், தன் அடியவர்கட்கு,*

> *"போதையார் பொற்கிண்ணத்து அடிசில் பொல்லாதெனத்*
> *தாதையார் முனிவுறும்"* - *தி.3 ப.24 பா.2*

*வண்ணம் ஆட்கொண்டும் என்னை,*

> *"எங்கே (என்று) இருந்திடம் தேடிக்கொண்டு*
> *அங்கே வந்து அடையாளம் அருளியும்"* - *தி.5 ப.50 பா.1*

> *"முன்புநீ நமக்குத் தொண்டன்*
> *முன்னிலை வேட்கை கூரப்*
> *பின்புநம் ஏவலாலே பிறந்தனை"* - *தி.12 தடுத்தாட். 67*

**2966.** உள்ளத் தொடும் புறத்துளும் நான் எனும்
கள்ளத் தலைவன் கமழ்சடை நந்தியும்
வள்ளல் பெருமை வழக்கம்செய் வார்கள்தம்
அள்ளற் கடலை அறுத்துநின் றானே. **34**

---

*என முற்பிறப்பினை அறிவித்தும்,*

*"மற்று நீ வன்மை பேசி*
*வன்றொண்டன் என்னும் நாமம்*
*பெற்றனை"* *- தி.12 தடுத்தாட். 70*

*என இப்பிறப்பில் காரணப் பெயர் ஒன்றை வழங்கியும்,*

*"நமக்கும், அன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க*
*அற்சனை பாட்டேயாகும்;*
*ஆதலால் மண்மேல் நம்மைச்*
*சொற்றமிழ் பாடுக"* *- தி.12 தடுத்தாட். 67*

*எனத் தொண்டொன்றை யளித்தும்,*

*"கோலம் ஆர்தரு பொதுவினில் வருக"*
*- தி.8 கீர்த்தித் திருவகவல், 128*

*என ஆணை தந்தும் இவ்வாறெல்லாம் எதிர் வந்து 'நான்' என்று சொல்லி அருள் புரிந்தாலும், இவையெல்லாம் இம்மெனத் தோன்றி, இம்மென மறைதலால், 'இவன் நிலைபெயராது இருக்கும் இடந்தான் யாது' என ஆராயுமிடத்து அவரது உள்ளமே அதுவாகக் கரைந்து நிற்றலால், அவன் முழுமுதல் தலைவனேயாயினும் கள்ளத் தலைவனேயாம். (உள்ளத்தைக் கவர்ந்தொளிக்கின்ற கள்வன்). இங்ஙனம் அவனை அவன் அடியவர்கள் இகழ்வது போலக் கூறினாலும், உண்மையில் அவன் அளவிடற்கரிய பெருமையை யுடையவன். வேண்டுவோர் வேண்டுவதை மாறாது வழங்கும் வள்ளல். அதனை யறிந்து அவனது பெருமையைப் புகழ்பவர்களுடைய பிறவியாகிய சகதிக் கடலை அவன் வற்றச் செய்வான்.*

*குறிப்புரை :- 'புறத்துளும் நான் எனுமாயினும் உள்ளத்து ஒடுங்கும்' என்க. 'நந்தியும்' என்னும் உம்மை அசை நிலை.*

*இதனாலும் சிவனது பெருமைகளே புகழ்ந்து கூறப்பட்டன.*

*2967. தெளிவுரை :- எப்பொழுதும் பகையாய் ஒருவரை ஒருவர் எதிர்ப்பவராகிய தேவரும், அசுரரும் தாம் தாம் தனித் தனியே வந்து நாள்தோறும் சிவபெருமானைத் துதித்து அவன் திருவடியை நினைப்பர். துதிப்பவர்க்கு அருளும் முறையில் அவர் வேண்டியவற்றை அவர்க்கு அவன் அளித்து நிற்பான்.*

**2967.** மாறெதிர் வானவர் தானவர் நாடொறும்
கூறுதல் செய்து குரைகழல் நாடுவர்
ஊறுவார் உள்ளத் தகத்தும் புறத்தும்
வேறுசெய் தாங்கே விளக்கொளி யாமே. **35**

**2968.** விண்ணினுள் வந்த வெளியினன் மேனியன்
கண்ணினுள் வந்த புலனல்லன் காட்சியன்
பண்ணினுள் வந்த பயனல்லன் பான்மையன்
எண்ணில்ஆ னந்தமும் எங்கள் பிரானே. **36**

---

*(அவற்றால் விளையும் விளைவுகட்கு அவன் பொறுப்பாதல் இல்லை). மனிதருள்ளும் இத்தகையோர் உளர். அவர்களிடத்தில் சிவபெருமான் அத்தகையோனாகியே நிற்பன். ஆயினும், உள்ளத்தில் அன்பு மிகத் துதிக்கின்ற வர்களுக்கு அவன் அகமாகிய உயிரைப் பற்றியும், புறமாகிய பொருள் சுற்றம் பற்றியும் அவர் வேண்டுவனவற்றை வேண்டியவாறே தாராது, ஆவனவற்றைத் தந்து, ஆகாதனவற்றை விலக்கி, அவர்களது அறிவையும் திருத்துவான்.*

*குறிப்புரை :-* இதனை அப்பர் பெருமான் கயிலையை அடைய முயன்று அணுகியும் அடையச் செய்யாது மீள்வித்தமையும், வாதவூரடிகள் ஏனையடியார் போலத் தம்மையும் உடனழைத்துச் செல்ல வேண்டியும் அழையாது இருத்தினமையும் போல்வனவற்றால் உணரலாம்.

"வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான், மனம் நின்பால்
தாழ்த்துவதும் தாம்உயர்ந்து தம்மை எல்லாம்தொழ வேண்டி"

- தி.8 திருச்சதகம், 16

என்னும் திருவாசகத்தை இங்கு நினைவு கூர்க. "மாறாய் எதிர்" என ஆக்கம் வருவிக்க. 'உள்ளத்து ஊறுவார்' என மாற்றியுரைக்க. 'அகம், புறம்' என்பன முதற்கண் அவ்விடத்துப் பொருள்களைக் குறித்துப் பின் அவை பற்றிய பற்றுக்களைக் குறித்தன. 'அப்பற்றுக்களில் அவர் வேண்டியவாறன்றி வேறு செய்தும்' என்க. 'செய்தும்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. 'விளக்கொளி யாதல் அறிவிற்கு' என்க. ஊறுவோர் உள்ளத்திற்கு அருளும் முறை கூறியதனால், அவரின் வேறானவர்க்கு அருளும் முறை பெறப்பட்டது.

இதனால், சிவன் தன் அடியார்க்குச் சிறந்த வகையில் அருள்புரிதல் புகழ்ந்து கூறப்பட்டது.

*2968. தெளிவுரை :-* எங்கள் சிவபெருமான், ஆகாயத்திற்கு உள்ள அருவத்தன்மையன், ஆயினும் உருவம் உடையவனே. கண்ணாற் காணப்படும் பொருளல்லன். ஆயினும் கண்ணாற் காணப்படுபவனே. ஒன்றை ஆக்கும்

**2969.** **உத்தமன் எங்கும் முகக்கும் பெருங்கடல்**
**நித்திலச் சோதியன் நீலக் கருமையன்**
**எத்தனைக் காலமும் எண்ணுவர் ஈசனைச்**
**சித்தர் அமரர்கள் தேர்ந்தறி யாரே.** **37**

---

*செயலின் பலனாய்த் தோன்றுவன போலத் தோன்றியவன் அல்லன்; ஆயினும் அத்தன்மை உடையவனே. ஆகவே அவன் எல்லையுட்படாத இன்பமும் ஆவான்.*

*குறிப்புரை :- முதல் மூன்று அடிகளிலும் முன்னர்ச் சிவனது சொரூபத் தன்மையும், பின்னர்த் தடத்தத் தன்மையும் கூறப்பட்டன. 'தடத்தத் தன்மையால் அளவுபட்ட இன்பத்தையும் தருவன்' என்றபடி. பண் - பண்ணுதல்; முதனிலைத் தொழிற்பெயர். "எண்" இங்கு அளவைக் குறித்தது. உம்மையால் எண்ணுடை ஆனந்தமும் பெறப்பட்டது. ஆனந்தம் இரண்டில் எண்ணில் ஆனந்தம் அவனே எண்ணுடை ஆனந்தத்தைத் தருதல் பற்றி அதனையும் அவனேயாக உபசரித்தார். இதன்கண் பாடங்கள் வேறுபட்டன.*

*2969. **தெளிவுரை :-** சிவன் ஏனை யாவரினும் மேலானவன்; எந்த இடத்திலும் முகந்துகொள்ளக் கூடிய பேரானந்தப் பெருங்கடலாய் உள்ளவன்; முத்துப்போலும் வெண்மை நிறம் உடையவன். அப்பொழுதே நீலமணிபோலும் கருமை நிறத்தையும் உடையவன். அத்தகையோனைச் சித்தர்களும், தேவர்களும் எத்துணையோ காலமாகப் பொதுவாக எண்ணுகின்றார்கள். ஆயினும் இன்னும் உண்மையாக அறிந்திலர்.*

*குறிப்புரை :- சிவபெருமான், "பொங்கழல் உருவன்" (தி.3 ப.120 பா.1) ஆயினும் பளிங்குபோன்றவன் என்பதை, "தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே" (தி.9 ப.1 பா.1) என்பதனான் அறிக. வெண்ணிறம் அப்பன், கருநிறம் அம்மை, எவரும் தாம் தாம் இடத்தில் இருந்தே முகந்து கொள்ளக் கூடிய கடல் எதுவும் இன்மையால் சிவன் அத்தகைய கடலாய் இருத்தலாலும், ஒருபாதி உடம்பு ஒரு நிறமும், மற்றொரு பாதி உடம்பு வேறொரு நிறமும் உள்ளார் எவரும் இன்மையால் சிவன் அத்தகைய உருவம் உடையவனாக இருத்தலாலும் இந்த அதிசயங்களைச் சித்தரும், அமரரும் எண்ணி வியக்கின்றார்களேயன்றி, 'எவ்வாற்றால் இவன் இப்படியிருக்கின்றான், அறிந்தாரில்லை' என்பதாம். 'ஒருடம் பிருவராகி' (தி.4 ப.22 பா.6) என வேறிடத்தும் வியந்தோதுதல் காணத்தக்கது. ''ஈசன்'' எனப்பின் வருவதனை வைத்து, அவ்விடத்தில், 'அவனை' எனச் சுட்டியுரைக்க.*

*இதனால், சிவனது, யாவராலும் அறுதியிட்டறியப்படாத அதிசயத்தன்மை புகழ்ந்து கூறப்பட்டது.*

*2970. தெளிவுரை :- **உயிர்களுக்குச் சிவனது அறக்கருணை எந்த அளவினதாகக் கிடைக்கின்றதோ அந்த அளவினதாக வீட்டின்பம் உளதாகும்.***

**2970.** நிறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் ஈசன்
அறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் இன்பம்
மறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் பாவம்
புறம்பல காணினும் போற்றகி லாரே. **38**

---

*அவனது மறக்கருணை எந்த அளவினதாகக் கிடைக்கின்றதோ அந்த அளவினதாகப் பிறவித் துன்பம் உளதாகும். இவையறிந்து, உலகில் எத்தனை வண்ணங்களும், வடிவங்களும் உள்ளனவோ அத்தனை வண்ணங்களுடனும், வடிவங்களுடனும் சிவன் உலகில் விளங்குதலைக் கண்டும் மக்கள் அவனைத் துதிக்க மாட்டாதவர்களாய் உள்ளனர்.*

***குறிப்புரை :-*** *முதலடியை இரண்டாம் அடிக்குப் பின்னர்க் கூட்டியுரைக்க. "அவ்வண்ணம் ஈசன்" என்பதில் "வண்ணம்" என்பது ஆகுபெயராய், 'வண்ணத்தன்' எனப்பொருள் தந்தது. வண்ணம் கூறவே, வடிவமும் பெறப்பட்டது. "யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே - மாதொரு பாகனார் தாம் வருவர்" (சிவஞான சித்தி - சுபக்கம், சூ.2) என்பது சித்தாந்தமாகலின் தெய்வத் திருவுருவங்கள் எல்லாம் சிவன் வடிவே யாதல் பற்றி, 'எல்லா வண்ணங் களுடனும், வடிவங்களுடனும் சிவன் உலகில் விளங்குகின்றான்' என்றார். 'சிவன்' என்னும் எண்ணம் இன்றியே தெய்வங்களை வழிபடினும் அவ்வழிபாடு பின்பு சிவ நெறியிற் சேர்த்தல் பற்றி, "போற்றகிலாரே" என்றார். "புறச்சமய நெறி நின்றும் அகச் சமயம் புக்கும் .. ...... சென்றால் சைவத் திறத்தடைவர்" என்னும் சிவஞான சித்தியால் பிற தெய்வ வழிபாடுகள் சிவநெறி அடைவதற்கு வழியாதல் விளங்கும். "ஈசன்" என்றதன் சார்பால் "அறம்", "மறம்" என்பன அத்தன்மையவான அவனது கருணை வகைகளைக் குறித்தன. அறக்கருணை அருட் சத்தியும், மறக்கருணை திரோதான சத்தியும் ஆகும். பவம் - பிறப்பு. அது, "பாவம்" என நீட்டப்பெற்றது. 'இன்பம், பவம்' என்பன ஒன்றாய் ஒன்று விளங்கு வைத்தன ஆதலின், பவத்துன்பம், வீட்டின்பம்' என உரைத்துக் கொள்க. "புறம் பல" என்பதில் பல, பல தெய்வ வடிவங்கள்.*

*இதனால், 'மக்கள் எவ்வளவாயினும் தோத்திரம் செய்தல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.*

> *"எப்பரி சாயினும் ஏத்துமின்; ஏத்தினால்,*
> *அப்பரிசு ஈசன் அருள்பெற லாமே" - தி.10 பா.71*

*என முன்னருங் கூறினார்.*

***2971. தெளிவுரை :-*** *சிவன் இங்கிருக்கின்றான்; அங்கிருக்கின்றான்; எங்கும் இருக்கின்றான். எல்லாப் பொருள்கட்கும் மேலே யிருக்கின்றான்; உலகிற்குத் தலைவன்; அற வடிவினன்; இரவில் தண்கதிர் மதியாய் நிற்கின்றான்; பகலில் வெங்கதிர் ஞாயிறாய் நிற்கின்றான்; மேகத்தைப் போலக் கைம்மாறு கருதாது*

**2971.** **இங்குநின் றான் அங்கு நின்றனன் எங்குளன்**
**பொங்கிநின் றான் புவ னாபதி புண்ணியன்**
**கங்குல்நின் றான்கதிர் மாமதி ஞாயிறாய்**
**எங்கும்நின் றான்மழை போல்இறை தானே.** **39**

**2972.** **உணர்வது வாயுமே உத்தம மாயும்**
**உணர்வது நுண்ணறிவு எம்பெரு மானைப்**
**புணர்வது வாயும் புல்லிய தாயும்**
**உணர்வுடல் அண்டமும் ஆகிநின் றானே.** **40**

---

*எவ்வுயிர்கட்கும் தனது அருளைப் பொழிகின்றான்.*

*குறிப்புரை :- 'அத்தகையோனை மக்களுயிர்கள் தோத்திரிக்க வேண்டாவோ' என்பது குறிப்பெச்சம். "இங்கு, அங்கு" என்பன இவ்வுலகத்தையும், பிற உலகங்களையும் குறித்தன. 'எங்கும் உளன்' என்னும் உம்மை தொகுத்தலாயிற்று. இது முடிந்தது முடித்தல். பொங்குதல் - மேல் எழுதல். உலகங்களை, "புவனா" எனப் பெண்பாலாகக் கூறினார். 'கங்குலில் கதிர் மதியாய் நின்றான்' என மாற்றி ஆக்கம் வருவித்துரைக்க. இதனானே "ஞாயிறாய்" என்பதில், 'பகலில் நின்றான்' என்பது போந்தது. "இறைதான்" என்பதில் 'தான்' எழுவாய்ப் பொருள்படவந்த அசை நிலை.*

*இதனால், மக்கட்குச் சிவனைத் தோத்திரித்தல் கடமையாதல் கூறப்பட்டது.*

*2972. தெளிவுரை :- எங்கள் பெருமானாகிய சிவன், சார்ந்ததன் வண்ணமாவதும், ஒருகாலத்து ஒன்றனை மட்டுமே உணர்தலின் சிறிதாயும் உள்ள அறிவினையுடைய உயிர்களாயும் அவ்வுயிர்கட்கு நிலைக்களமாகிய உடல்களாயும் அவ்வுடல்களுக்கு இடமாகிய அண்டங்களாயும் உள்ளான். அவனை, உயிர்களின் அறிவுக்கறிவாகவும், உயிர்க்குணங்களின் மாறுபட்ட குணங்களையுடையவனாகவும் உணரும் அறிவே நுண்ணறிவாகும்.*

*குறிப்புரை :- "புணர்வது" என்பது 'அழுந்துவது' என்னும் பொருட்டு, 'புணர்வதாயும், புல்லிதாயும் உள்ள உணர்வு' என்க. எம்பெருமான், என எடுத்துக் கொண்டு, மூன்றாம் அடி முதலாகத் தொடங்கியுரைக்க. "உணர்வு, உடல்" என்பவற்றிலும் உள்ள எண்ணும்மைகள் தொகுக்கப்பட்டன. "எம்பெருமானை" என்பதை 'அவனை' என்றவாறாகக் கொள்க. முதற்கண் உள்ள, "உணர்வது" என்பதில் அது, பகுதிப்பொருள் விகுதி. முதலடியில் உள்ள "ஆயும்" என்றவற்றை, 'ஆகவும்' எனத் திரிக்க. ஏகாரங்கள் அசை.*

*இதனால், 'தோத்திரங்களைச் சிவனது உண்மை நிலையறிந்து செய்தல் சிறந்தது' என்பது கூறப்பட்டது.*

**2973.** தன்வலி யால்உல கேழும் தரித்தவன்
தன்வலி யாலே அணுவினுந் தான்நொய்யன்
தன்வலி யால்மலை எட்டினும் சார்பவன்
தன்வலி யாலே தடங்கட லாமே. **41**

**2974.** ஏனோர் பெருமைய னாகிலும் எம்மிறை
தானே சிறுமையுள் உட்கலந் தங்குளன்
வானோர் அறியும் அளவல்லன் மாதேவன்
தானே அறியும் தவத்தின் அளவே. **42**

---

*2973.* ***தெளிவுரை :-*** *சிவன் தனது ஆற்றலால் தானே உலகத்தையெல்லாம் தாங்குகின்றான். அதனால் அவன் மிகப்பெரிய பொருள் போலத் தோன்றினும் தனது ஆற்றலாலே அணுவினுள் அணுவாய் நிற்கும் நுண்ணியனும் ஆகின்றான்; எட்டுப் பெருமலைகளிலும் நின்று நிலத்தை நிலைபெறுவிக்கின்றான்; நிலம் முழுவதையும் தன்னுள் அடக்கியுள்ள பெரிய கடலாயும் விரிந்து நிற்கின்றான்.*

***குறிப்புரை :-*** *'அவனது ஆற்றல் எத்தகையது? எவ்வளவினது? என அறிதல் அரிது' என்பது குறிப்பெச்சம். 'சாரான்' என்பது பாடமன்று. சொற்பொருட் பின்வருநிலையணி வந்தது.*

*இதனால், சிவனது ஆற்றல் திறம் புகழ்ந்து கூறப்பட்டது.*

*2974.* ***தெளிவுரை :-*** *எங்கள் சிவபெருமான் ஏனைத் தேவரினும் பார்க்க மிகப் பெரியோனாயினும், உயிர்களின் சிற்றுடம்பினுள் அவற்றினும் சிறியவாய இதயத்துட் சிறியனாய்க் கலந்து, அங்குச் சுடர்வடிவாய் விளங்குகின்றான். ஆகவே, அப்பெரியோன் ஏனைத் தேவரால் அளவிட்டறியப்படும் அளவினன் அல்லன். இங்ஙனமாகவே உயிர்கள் செய்யும் தவங்களை அளவிட்டறிபவன் அவனே.*

***குறிப்புரை :-***

*தொழுது தூமலர் தூவித் துதித்துநின்று*
*அழுது காமுற் றரற்றுகின் றாரையும்,*
*பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்*
*எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்ப ரீசனே. - தி.5 ப.21 பா.8*

*என அப்பர் பெருமானும் அருளிச் செய்தார். 'சிறுமை' என்பது ஆகுபெயராய்ச் சிறியவாகிய உடல்களைக் குறித்தது. சிவன் உயிர்களின் இதயங்களில் சுடர் வடிவாய் நிற்றலைச் சாந்தோக்கிய உபநிடதம் தகர வித்தை கூறுமிடத்தில் கூறிற்று. 'அம்மாதேவன்' எனச் சுட்டு வருவித்துரைக்க.*

**2975.** **பிண்டாலம் வித்தில் எழுந்த பெருமுளை**
**குண்டாலங் காய்த்துக் குதிரை பழுத்தது**
**உண்டார்கள் உண்டார் உணர்விலா மூடர்கள்**
**பிண்டத்துட் பட்டுப் பிணங்குகின் றார்களே.** **43**

---

*இதனால், சிவன் பெரியவற்றிற்கெல்லாம் பெரியவனாய்ச் சிறியவற்றிற் கெல்லாம் சிறியவனாய் நிற்கும் திறம் புகழ்ந்து கூறப்பட்டது.*

*2975.* ***தெளிவுரை :-*** *ஆல மரத்தினின்றும் பாகுபட்ட பழத்தின் விதையி லிருந்து முளைத்த சிறு முளை, பெரிய மரமாகி, உருண்டை வடிவான ஆலங்காயே காய்த்தது. ஆயினும், அந்தக் காய் மாம்பழமாகப் பழுத்தது. இந்த அதிசயப் பழத்தை உண்டவர்கள் பிறவித் துன்பத்தினின்றும் நீங்கிக் களித்தார்கள். உண்ணும் உணர்வு இல்லாத பேதையர்கள், பிறவித் துன்பத்தில் அகப்பட்டு முரணியே நிற்கின்றார்கள்.*

***குறிப்புரை :-*** *இம்மந்திரமும் மறைத்துரையாடலாகவே அமைந்தது. ஆலமரம் - உடம்பு. உடம்பை ஆலமரமாகச் சிவாகமங்களின் கிரியா பாதங்கள் வருணிக்கும். பிண்ட - பாகுபட்ட ஈற்று அகரம் தொகுத்தலாயிற்று. ஆல் - ஆலம் பழம்; ஆகுபெயர். அது முன் மந்திரத்திற் கூறிய இருதயம். முளை, இருதயத்தில் சுடர்விடும் சிவன். மரம், தியானம் - தியானிக்கப்படும் பொருட்கும் தியானத்திற்கும் வேற்றுமையின்மையாலும் வளர்வதாதலின் தியானமே 'மரம்' எனப்பட்டது. பெருமுளை - பின் பெரிதாதற்குரிய முளை. காய், தியானத்தில் வரும் திருவருள். உருண்டைக்கு, கீழ், மேல், வலம் இடம் ஆகிய பக்க வேறுபாடுகள் இன்மை பற்றி யாவர்மாட்டும் ஒப்பச் செல்லும் திருவருட்கு உருண்டை வடிவம் கற்பிக்கப்பட்டது. 'மா' எனக் கூறி, ஒருவகை மரத்தை உணர்த்தற்பாலதனை, 'மா' என்னும் பெயருடைமையே பற்றி, 'குதிரை' எனக் கூறியது. அதிசயத்தின் மேலும், மற்றும் ஓர் அதிசயம் தோற்றுவித்தற்பொருட்டு. இவ்வாறு எழுத்தொப்புமையால் ஒன்றாகின்ற சொற்களால் அவற்றின் பொருளல்லாத பிற பொருளைக் கூறுதலையும் ஒட்டணி வகையிற் சேர்ப்பர். கந்தபுராண ஆசிரியர் 'சூரபதுமன் மாமரமாய் நின்றான்' எனக் கூறுமிடத்தில், 'அத்தி, அரசு, வாகை, வன்னி, வீரை, இலுப்பை' என்னும் மரப்பெயர்களை உடன் வைத்து, இந்திரன், அக்கினி முதலிய பிறபொருள்கள் தோன்றக் கூறியது முதலியன இதற்கு எடுத்துக்காட்டாகும். சீவக சிந்தாமணி ஆசிரியரும், புத்திசேனன் என்னும் பெயருடையவனை, "திங்கள் விரவிய பெயரினான்" (காந்தருவ தத்தையார் இலம்பகம் - 179) என்றார். அதற்கு நச்சினார்கினியர், "திங்கள் - மதி, 'மதி எனவே புத்திசேனரும்" என உரைத்து, தீத்தீண்டு கையார்" என்றது வேங்கையை உணர்த்தினாற்போல - எனத் திணைமாலை நூற்றைம்பதின் தொடரை மேற்கோளாகக் காட்டினார். 'வேங்கை' என்பது ஒரு சொல்லாயினும் அது, 'வேம் கை' என்னும் புணர்மொழி போல வைத்து, 'வேகின்ற கை - தீத்தீண்டு*

**2976.** முதல்ஒன்றாம் ஆனை முதுகுடன் வாலும்
திதமுறு கொம்பு செவிதுதிக் கை கால்
மதியுடன் அந்தகர் வகைவகை பார்த்தே
அதுகூற லொக்குமவ் வாறு சமயமே. **44**

---

*கை' எனப்பட்டது. பிற்காலத்தில் காளமேகப் புலவரும்,*

*கரிக்காய் பொரித்தாள்; கன் னிக்காயைத் தீய்த்தாள்;*
*பரிக்காயைப் பச்சடியாய்ப் பண்ணாள்; - உருக்கமுடன்*
*அப்பைக்காய் நெய்த்துவட்ட வாக்கினாள், - அத்தைமகள்;*
*உப்புக்காண் சீசீ உமி.* ***- தனிப்பாடல் திரட்டு***

*எனப் பாடினார். கரி - யானை; அத்தி. கரிக்காய் - அத்திக் காய், கன்னி - அரம்பை. அரம்பை - வாழை. கன்னிக் காய் - வாழைக்காய். பரி - குதிரை; மா, பரிக்காய் - மாங்காய். பை - பாம்பின் படம், அது, 'படத்தையுடைய பாம்பு' என்று ஆயிற்று. பாம்பில் ஓர் இனம் கத்தரி. அப்பைக் காய் - கத்தரிக்காய். இவை போல்வன எல்லாம் சொற்சுவை பட வருவனவாகும். மாம்பழம், சிவானந்தம், பிண்டம் - உடல், முதற்கண் உள்ள "பிண்ட" என்பதனையும், இப்பொருட்டாகவே உரைப்பர். அது மறைபொருட் கூற்றிற்கு ஒவ்வாமை அறிக.*

*'அம்முச் சாரியை இடையினம் வருமிடத்துக் கெடும்' எனத் தொல்காப்பியர் கூறினாராயினும், பிற்காலத்தில் கெடாதே வழங்கும் வழக்கம் உண்டாயிற்று. "உறக்கும் துணையதோர் ஆலம் வித்து" (நாலடியார், 38) என்னும் நாலடி வெண்பாவைக் காண்க.*

*"பிணங்குகின்றார்கள்" என்றது சமய வாதிகளை.*

*இதனால், தோத்திரத்தால் சிவானந்தப் பேறு உளதாதலைக் கூறி, அது செய்யாதாருக்கு இரக்கம் காட்டி முடிக்கப்படுகின்றது. எனினும், சமய வாதிகளைக் கூறிய இயைபே கொண்டு சமயங்களைப் பற்றி மூன்று மந்திரங்கள் கூறி முடிக்கின்றார். அவை பதிப்புக்களில் 'அதிகப் பாடல்கள்' எனக் காட்டப்படுகின்றன.*

***2976. தெளிவுரை :-*** *இதன் பொருள் வெளிப்படை.*

***குறிப்புரை :-*** *"ஒன்றே பொருள் என்னின், வேறென்ப, வேறென்னின், என்றாற்போலச் சமய வாதிகள் ஒருவர் கொள்கையை மற்றவர் மறுத்து வாதம் புரிதலை யானை கண்ட குருடர் கதையில் வைத்து உணர்த்திற்று இம்மந்திரம்.*

*"சமய வாதிகள் தத்தம் மதங்களே*
*அமைவ தாக அரற்றி மலைந்தனர்" - தி.8 போற். திரு. 53, 54*

*என ஆளுடைய அடிகளும் அருளிச்செய்தார். "ஒன்றதே பேரூர், வழி ஆறதற்குள"*

**2977.** ஆறு சமயம் முதலாம் சமயங்கள்
ஊற தெனவும் உணர்க உணர்பவர்
வேற தறஉணர் வார்மெய்க் குருநந்தி
ஆற தமைபவர்க் கண்ணிக்குந் தானே. **45**

---

*(பா.15, 38) என்னும் மந்திரத்திலும் இதனைக் கூறினாராயினும் வலியுறுத்தி உணர்த்தற்கு இங்கும் கூறி முடிக்கின்றார்.*

*ஆனையாகிய முதல் ஒன்றேயாம்; ஆயினும் அந்தகர் அதன் உறுப்புக்களை வேறு வேறு முதல்களாகக் கூறிக் கலாம் விளைத்தல் போலவே, மெய்ப்பொருள் ஒன்றேயாயினும் அதன் இயல்புகளை வேறு வேறு பொருள்களாகக் கருதிச் சமய வாதிகள் ஒருவரை ஒருவர் மறுக்கின்றனர் என்பது இம்மந்திரத்தின் திரண்ட கருத்து. சிவஞான போத அவையடக்கத்தில்,*

> *"தம்மை - உணரார்; உணரார் உடங்கியைந்து தம்மில்*
> *புணராமை"*

*என்றதன் உரையிலும் மாதவச் சிவஞான யோகிகள் இக்கதையையே உவமையாகக் காட்டினார்.*

*அகரம், பண்டறி சுட்டு. அன்றி, 'ஆறு ஆறாகச் சொல்லப்படுகின்ற சமயம்' எனினுமாம். 'ஒருபுடையுணர்வே முரண்பாட்டிற்குக் காரணம் ஆதலின், முழு துணர்வார்க்கு முரண் ஏதுமில்லை' என்பதாம்.*

*2977. தெளிவுரை :- சமயங்களுட் சிறந்தனவாகச் சொல்லப்படுகின்ற ஆறு சமயம் முதலாக அனைத்துச் சமயங்களிலும் ஒரோ ஒன்று 'நன்று' என உணர்பவர் உணரட்டும் (அஃது அவர் விருப்பம்). சமய வேற்றுமை பாராட்டாது 'அனைத்துச் சமயங்களையும் அதனதனளவில் நன்றே' என உணர்பவர்க்கு உண்மைக் குரு நந்திப் பெருமானேயாவார். அவரது மரபு நெறியே சான்றோர்க்கு இனிதாய் இனிக்கும்.*

*குறிப்புரை :- அதனதன் அளவில் நன்றாதலாவது, ஓரோர் பக்குவம் உடையார்க்கு அவரவர்க்கேற்ற நன்மையைத் தருவதாதல் "எச்சமயத்தோர் செல்லும் - தீதொழிய நன்மை செயல்" (நல்வழி) என ஔவையார் கூறியதும், எல்லாச் சமயங்களும் ஓரோர் நன்மை கருதியே எழுந்தனவாதல் பற்றியே. அங்ஙனமாயின் பிற மதங்களை நூல்கள் மறுத்தல் ஏன் எனின், மறுப்பு, அதில் உள்ள நன்மையைப் பற்றி எழுதல் இல்லை; அவ்வச் சமயத்திற்கு மேற்பட்ட சமயத்தில் உள்ள நன்மையை மறுப்பதைப் பற்றித்தான் எழும் என்க.*

*உறுவது - நன்றாவது, "உணர்வார் குரு" என்னும் கிழமைப் பொருள் தொகையில், 'குரு' உயர்திணையாகலின் 'உணர்வாரது குரு' என ஆறாவது விரியாது, 'உணர்வார்க்குக் குரு' என நான்காவது விரிக்க. 'அவரது ஆறு' எனச்*

**2978.** ஒத்த சமயங்கள் ஓராறு வைத்திடும்
அத்தன் ஒருவனாம் என்ப தறிந்திலர்
அத்தன் ஒருவனாம் என்ப தறிந்திடும்
முத்தி விளைக்கும் முதல்வனு மாமே. **46**

---

*சுட்டு வருவிக்க. 'அது' இரண்டும் பகுதிப் பொருள் விகுதிகள். அமைபவர் - சான்றோர். சான்றோர் முழுதுணர்ந்தவர். எனவே, 'உணர்வார் உணர்க என்றது ஒருபுடை' உணர்ந்தாரை நோக்கியாம்.*

*சமயங்களுட் சிறந்த சமயங்களாகச் சொல்லப்படும் ஆறாவன ஆறு தரிசன மதங்கள். அவை 'வைசேடிகம், நையாயிகம், பூர்வ மீமாஞ்சை, உத்தர மீமாஞ்சை, சாங்கியம், யோகம்' என்பன. இவை வேதத்தின் தத்துவத்தை ஆராயும் நூல்களாகச் சொல்லப்படுதலின் சிறந்தனவாகச் சொல்லப்படுகின்றன. "அறிவினால் மிக்க அறுவகைச் சமயத்து" (தி.7 ப.55 பா.9) எனச் சுந்தரர் அருளிச் செய்ததும், வாதவூரடிகள் "இருமுச் சமயம்" (தி.8 திருவண்டப் பகுதி, 79) என்றதும் இவற்றையே. "அறுவகைச் சமயத்து அறுவகையோர்க்கும்" (தி.8 திருவண்டப் பகுதி, 17) என அவர் அருளிச் செய்தது, காணாபத்தியம் கௌமாரம் முதலிய அறுவகைச் சமயங்களை. அவற்றிடையே கொள்கைப் பூசல் பெரும்பான்மையாக இல்லை.*

*இதனால், பிற சமயங்களெல்லாம் ஒருபுடை உண்மையை உடையனவாக, சைவம் முழுதுண்மை உடையதாதல் கூறப்பட்டது.*

***2978. தெளிவுரை :-** 'புறப்புறம், புறம் அகப்புறம், அகம்' எனப்பாகுபட்ட சமயங்கள் பலவற்றுள் பெரும்பான்மை ஒத்த கொள்கைகளை யுடையவாய்ச் சிறுபான்மையே வேறுபட்ட சமயங்கள் அகச் சமயங்களாகும். அவையாவும் சைவமே. அவை ஆறு வகைப்பட்டன. அந்த ஆறும், 'தம்மை ஆக்கினவன் சிவனே' எனக் கருதுகின்றன. அதனைப் பிற சமயிகள் மறுக்கின்றனர். அம்மறுப்புக்களைக் கேளாமல், 'அகச் சமயங்கள் ஆறும் சிவனையே முதல்வனாக உடையன' என்பதை ஒருவன் அறிந்து, அவற்றுள் எந்த ஒன்றனையேனும் தெளிந்து அதில் நிற்பானாயின், அவன் சிவஞானியாய்த் தானும் முத்திக்கு உரியவனாய்ப் பிறரையும் முத்திக்கு உரியவராகச் செய்ய வல்ல ஆசிரியனும் ஆவான்.*

***குறிப்புரை :-** 'சமயங்கள்' என்னாது, ஒத்த சமயங்கள் என்றதனால், அவை அகச் சமயங்களாயின. எனவே, அவை தம்முள் ஒத்தனவாதல் பற்றியே "ஒன்றதே பேரூர்; வழி ஆறதற்குள" எனவும், அவற்றுள் ஒன்றை இகழ்வோரையும், "குன்று குரைத்தெழு நாயைஒத் தாரே" எனவும் முன்பு (பா.15-38) கூறினார். அவ்வகச் சமயங்கள் 'பாடாண வாத சைவம்' முதலிய ஆறுமாம். அவற்றைச் சங்கற்ப நிராகரண நூலுட் காண்க. அந்நூலுள் இறுதியில் அடைமொழியின்றி, 'சைவம்'*

என்றே கூறப்பட்டது, சுத்த சைவம். அதற்கும், சித்தாந்த சைவத்திற்கும் இடையேயுள்ள வேற்றுமை மிகமிகச் சிறிதே. 'குரு' என்பது பொதுவாயினும், சைவத்துள் 'சிவாச்சாரியார் 'சைவாச்சாரியர்' என்றும் குறிக்கப்படுவோரை 'சிவகுரு' எனப்படுவர். சிறுசிறு வேறுபாட்டால் அவருள் தாரதம்மியமும், சித்தாந்த சைவாசாரியரை நோக்க ஆசிரியத்தன்மை முற்றப்பெறாமையும் உடையரேனும், அவரெல்லாம் சிவப்பேறாகிய முத்தியை வழிமுறையில் அடை விப்பவரேயாவர். அதனால், 'சிவப் பேற்றை விரும்புபவர் அவருள் எவரையேனும் ஆசிரியராகத் தெளியின் பழுதடையார்' என்பதாம்.

இதனால், 'சித்தாந்த சைவமும் பொதுவாக, 'சமயம்' என வழங்கப்படினும், அது சமயங் கடந்த நெறியேயாம்' என்பதை அதற்கு அணியவாகிய அகச் சமயங்களது சிறப்புக் கூறும் முகத்தால் சமயங்களைப் பற்றிய கூற்றுக்களில் இறுதியாக முடித்துக் கூறினார்.

## 29. சருவ வியாபகம்

*சருவ வியாபி என்னும் தொடர் எங்கும் எப்பொருட் கண்ணும் நிறைந்திருப்பவன் என்னும் பொருளைத் தரும். இது முதல்வனையே குறிப்பது; ஆயினும், ஆன்மா என்னும் சொல் வியாபகம் என்னும் பொருளைத் தருவது. மேலும் அச்சொல் சீவான்மா பரமான்மா இரண்டற்கும் பொதுவாக உபநிடதங்களில் ஆளப்படுகிறது. வியாபகமாவது 'அவையே தானே ஆதல்' என்னும் இலக்கணம் சிவஞான போதம் இரண்டாம் பாதம் முதலதிகரணத்தாற் பெறப்படுகிறது. முதற்பொருள் அடக்கு நிறைவுள்ளது (வியாபிப்பது); உயிரும் தளையும் அடங்கு நிறைவுள்ளவை (வியாப்பியம்); உயிர் முதற்பொருளை நோக்க வியாப்பியமாயினும், தன்கீழ் உள்ள தத்துவங்களை நோக்க வியாபகம்; ஏனைப் பொருள்களும் தத்தம் எல்லைவரை காரக சத்தியான் வியாபித்தல் உடைய என்றாற்போன்ற நுண் கருத்துக்கள் உணரத்தக்கவை.*

*அறிவுடைமை (சித்தாதல்) பரமான்மா சீவான்மா இரண்டற்கும் பொதுவாதல் போன்றே, வியாபகமாதலும் இரண்டற்கும் பொதுவே ஆகும். சீவான்மா மூலமலத்தால் தடுக்கப்பட்டு ஏகதேசப்படினும் திருவருளைச் சார்ந்து மலவலியைக் கடந்து நிற்கையில் தன் வியாபகம் முற்றும் விளங்கப் பெறும். "தமியேன் உளம்புகுதல் யானே உலகென்பன் இன்று" (பாசத்தின் நீங்கித் தனித்துள்ள என்கண் சிவோகம் பாவனையால் சிவன் புகுந்து நிற்றலின், அச்சார்பு பற்றி, இம்முத்திக் காலத்து யானே உலகெலாம் ஆயினேன் என்பேன்) என மெய்கண்டதேவர் கூறுதல் நினைவிற் கொள்ளத்தக்கது. இவ்வதிகாரம் சிவனது நிறைவும், அவனைச் சார்ந்த ஆன்மாவினது நிறைவும் உணர்த்துகின்றது.*

**2979.** ஏயும் சிவபோகம் ஈதன்றி ஓர் ஒளி
ஆயும் அறிவையும் மாயா உபாதியால்
ஏய பரிய புரியுந் தனைஎய்தும்
சாயும் தனது வியாபகந் தானே. **1**

---

*2979. தெளிவுரை :- ஆன்மா, பரமுத்தி நிலையில் விளைக்கின்ற சிவபோகத்தை நுகர்தலாகிய இஃது ஒன்றைத்தவிர, அந்தப் போகத்தைத் தருகின்ற சிவத்தைத் தனக்கு வேறாக வைத்து ஆராய்கின்ற அறிவையும், மாயா மலத்தின் காரியமாய்ப் பொருந்திய அதிசூக்கும, சூக்கும, தூல உடம்புகளைப் பற்றி, புறஞ் செல்லுதலையும் உடையதாகின்ற வரையில் அதனது இயற்கைத் தன்மையைத் தலைப்பட்ட வியாபக நிலை அதற்கு நிலைக்கமாட்டாது. இஃது ஆன்ம வியாபகம் உணர்த்துகிறது.*

*குறிப்புரை :- 'சிவனைப்போல எங்குமாம் வியாபகமே ஆன்மாவின் இயற்கைத் தன்மை. ஆயினும் சிவனைப்போல ஆன்மா சூக்கும சித்தாகாது. தூல சித்தாய் இருத்தலின், அதனை அநாதியே ஆணவ மலம் பற்றி, அணுத்தன்மை*

**2980.** நானறிந் தப்பொருள் நாட இடமில்லை
வானறிந் தங்கே வழியுற விம்மிடும்
ஊனறிந் துள்ளே உயிர்க்கின்ற ஒண்சுடர்
தானறிந் தெங்குந் தலைப்பட லாமே. **2**

---

*அடையச் செய்தது. எனவே, ஆன்மாவின் இயற்கைத்தன்மை வியாபகமும், ஆணவ மலம் காரணமாக அடைந்த செயற்கைத் தன்மையே அணுத்தன்மையும் ஆதலால், ஆணவம் நீங்கிய பொழுது, ஆன்மாத் தனது இயற்கையாகிய வியாபகத் தன்மையை எய்தும். ஆணவ மலம் காரணமாகவே ஆன்மாவை மாயையும், கன்மமும் வந்து பற்றின ஆகலான், ஆணவ மலம் நீங்கினாலும் அதன் வாசனை நீங்காத வரையில் ஆன்மாவிற்கு அது அடைந்த இயற்கைத் தன்மையாகிய வியாபகத்தன்மை அதற்கு நிலையாதாக, மாயை கன்மங்களைப் பற்றித் தனது முன்னைச் செயற்கைத் தன்மையாகிய அணுத்தன்மை உடையதாகும்' என்பதே இம்மந்திரத்தால் கூறப்பட்ட பொருளாகும். ஆணவ மலத்தின் வாசனையே ஆன்மாவைச் சிவபோகத்தை நுகர்தலினின்றும் நீக்கிச் சிவனைத் தனக்கு வேறாக வைத்து ஆராயத்தூண்டும். அதனாலே ஆன்மா மாயா கருவிகளையும், அவற்றின் செயல்பாட்டிற்கு ஏதுவான கன்மத்தையும் உடையதாகும் என்க. ஏய்தல் - பொருந்துதல். ஓர் ஒளி - சிவம். 'ஒளியை' என உருபு விரிக்க. உபாதி - செயற்கை; குற்றம். "பரிய" என்பதில் 'பரியவற்றை' என இரண்டாவது விரிக்க. 'பரியவற்றைப் பற்றி' என ஒருசொல் வருவிக்க. "சாயும்" என்பதை இறுதியிற்கூட்டி முடிக்க. சாய்தல் - மெலிதல்; நீங்குதல். தான், ஏ அசைகள்.*

*2980. தெளிவுரை :- மெய்ப்பொருளை நம்மின் வேறாகத் தேடி அடையும் இடம், நான் அறிந்தவரையில் எதுவும் இல்லை. அதனை நாம் நம்மிலே அறிதல் எவ்வாறு எனின், 'பரவியோமம்' எனப்படும் திருவருளை முன்னே அறிந்து, நம் வழியை நாம் விட்டு, அதன் வழியில் நின்றால், மெய்ப்பொருள் விறகைக் கடந்தவழித் தோன்றும் தீ, பின் அந்த விறகைத் தான் அழிப்பதுபோல, நம் அறிவிலே விளங்கிப் பின் 'நாம்' என வேறு முனைத்து நிற்கும் தற்போதத்தை அழித்து, நம்மைத் தானாக்கிக் கொள்ளும். ஆகவே, கருவிக் கூட்டங்களை 'நாம் அல்ல' என்று கண்டு கழித்து நாம் தனித்து நின்றவழி, முன்னெல்லாம் உயிர்ப்பு வடிவில் இருந்த அந்த ஒளி விளக்கு இப்பொழுது தானேயாய் விளங்கும். ஆகவே இம்முறையில் ஒருவன் அதனை அறிவானே ஆயின், அவன் அதனோடு ஒற்றித்துத் தனது செயற்கைத் தன்மையாகிய அணுத்தன்மையின் நீங்கித் தனது இயற்கைத் தன்மையாகிய வியாபக நிலைப்படுதல் கூடும்.*

*குறிப்புரை :- ''அறிந்து'' நான்கில் முதலது, அறிந்த அளவு என அறியப்பட்ட இடத்தைக் குறித்தது. ஏனைய மூன்றும், 'அறிந்தவழி' என்பன திரிந்து நின்றவை, 'உற விம்மிடும்' என்பதில் செயவெனெச்சம், 'மழை பெய்யக் குளம் நிறையும்' என்பது போலக் காரணப் பொருளில் வந்தது. விம்முதல் -*

**2981.** கடலிடை வாழ்கின்ற கௌவை யுலகத்து
உடலிடை வாழ்வுகண் டுள்ளொளி நாடின்
உடலிடை வைகின்ற உள்ளுறு தேனைக்
கடலின் மலிதிரைக் காணலு மாமே. **3**

---

*பெருகுதல். ஆன்மாவைத் தன்னுள் அடக்கித் தாம் மேம்பட்டு நிற்றல். "ஊன்" என்பது, பலவகை உடம்புகளாய் நிற்கும் கருவிகளைக் குறித்தது. கருவிகளில் ஒவ்வொன்றையும் 'இது' எனச் சுட்டி, நான் அன்று எனக் கழித்தல் 'நேதி வாக்கியம்' எனப்படும். (நேதி = ந + இதி இவ்வாறான தன்று) 'நாஹம்' (நான் அன்று) கருவிகள் 'நாஹம்' எனக் கழித்தபின் மெய்ப்பொருளை 'சோஹம்' (நான் அது) எனப் பாவிக்க வேண்டும். 'நாஹம்' என்னும் உணர்வால் பாச நீக்கமும், 'சோஹம்' என்னும் உணர்வால் 'சிவப்பேறும்' உளவாம் என்பர். சிவன் உயிர்களின் உயிர்ப்பாய் நிற்றலை*

> *"என்னுளே உயிர்ப்பாய் புறம் போந்து புக்(கு)*
> *என்னுள்ளே நிற்கும் இன்னம்ப ரீசனே" - தி.5 ப.21 பா.1*

*என்னும் அப்பர் திருமொழியாலும் உணர்க. 'அம்' எனப் புறம் போந்து 'சம்' என உட்புகுந்து அசபா மந்திர வடிவாய் நிற்பன் என்பதை, "ஊனங் கத்துரு வாய்உல கெல்லாம் ஓங்கா ரத்துரு வாகிநின் றானை" (தி.7 ப.67 பா.1) என்னும் சுந்தரர் திருமொழியால் உணர்க.*

*இதனால், ஆன்மா ஆணவ மலத்தால் தான் இழந்த வியாபக நிலையைத் தலைப்படுமாறு கூறப்பட்டது.*

*2981. தெளிவுரை :- ஆரவாரம் மிக்க கடலாற் சூழப்பட்ட உலகத்தில் உடலில் தங்கி வாழ்கின்ற ஆரவார வாழ்வின் உண்மையை ஆராய்ந்துணர்ந்தால், அந்த உடலிற்றானே தன்னோடு உடன் உறைகின்ற சிவானந்தத் தேனைக் கடலிடை நிரம்பப் புதிது புதிதாக எல்லையின்றி எழுந்து வருகின்ற அலை போல்வதாகக் காண முடியும்.*

*குறிப்புரை :- ''கௌவை'' என்பதைக் கடலுக்கும் கூட்டுக. கடல் கௌவையுடைத்தாதல் போல, அதனால் சூழப்பட்ட உலகத்தில் வாழும் வாழ்க்கையும் ஆரவாரம் மிக்கதாய் உள்ளது - என ஒரு நயம் தோற்றுவித்தவாறு, 'கடலின் ஆரவாரம் முற்றுப் பெறாமையும், பயனின்மையும் உடைத்தாதல்போல, உலக வாழ்வின் ஆரவாரமும் முற்றுப் பெறாமையும், பயனின்மையும் உடைத்து' என்பது குறிப்பு. உடலிடை வாழ்வின் உண்மையாவது சில காலமே உளதாய்ப் பின் இல்லாதொழிவது. உள்ளொளி, சிவம். அதனை நாடும் முறை மேற் கூறப்பட்டது. 'மலிதிரையின்' என, ஒப்புப்பொருளதாகிய ஐந்தன் உருபு விரிக்க. தேன் தான் உள்ள இடத்தில் சிறிதளவினதாகவே இருக்கும். 'இந்தத் தேன் கடல்போல எல்லை யற்றதாம்' என அதிசயம் உணர்த்தியவாறு. "காணலும்" என்னும் உம்மை சிறப்பு.*

**2982.** பெருஞ்சுடர் மூன்றினும் உள்ளொளி யாகித்
தெரிந்துட லாய்நிற்குந் தேவர் பிரானும்
இருஞ்சுடர் விட்டிட் டிகலிட மெல்லாம்
பரிந்துடன் போகின்ற பல்குரையாமே. **4**

---

***இதனால், 'ஆன்மாத் தனது இயற்கைத் தன்மையாகிய வியாபக நிலையை அடைந்தவழி வியாபகமாகிய சிவத்தினது, கால, இட எல்லைகளில் ஒன்றும் இன்றிப் பெருகுகின்ற இன்ப வெள்ளத்தில் திளைக்கும்' என்பது கூறப்பட்டது.***

*2982. **தெளிவுரை :-** 'கதிர், மதி, தீ' என்னும் பெருஞ்சுடர் மூன்றையும் அவை உலகிற்குப் பயன்படுவ ஆதலைத்தெரிந்து, தனக்கு உடம்பாகக்கொண்டு அந்த ஒளிப்பொருள்கட்கு ஒளியைத் தருகின்ற உள்ளொளியாய் அவற்றில் நிறைந்து நிற்கின்ற சிவனும் வியாபகப் பொருளாகிய ஆன்மாக்கள் ஒன்றுக்கொன்று மாறுபட அடையும் நிலைகளில் எல்லாம் தான் அருள் கூர்ந்து அவற்றின் அறிவுக்கு அறிவாய், அவற்றோடு உடனாய்ப் பலவாகின்றான்.*

*__குறிப்புரை :-__ தெரிந்து உள்ளொளியாகி எனவும், 'இகலிடம் எல்லாம் பரிந்து, இருஞ்சுடர் விட்டு உடன்போகின்ற பல்குரையாமே' எனவும் இயைக்க. இகல் இடம் பெத்தமும் முத்தியும், "பிரானும்" என்னும் உம்மை எதிர்வருகின்ற 'உயிர்' என்னும் பொருளைத் தழுவி நின்றது. பல உயிர்களிலும் நிறைந்து நிற்றல் பற்றி இறைவன், "அநேகன்" (தி.8 சிவபுராணம்-5) எனப்படுதல் காண்க.*

*"பல்கு உரை" என்பதில், 'சொல்' எனப் பொருள் தரும் 'உரை' என்பது அதனால் குறிக்கப்படும் பொருளைக் குறித்தது. பொருள், இங்கு உயிர், இனி, 'பல் + குரை' என்றே பிரித்து, 'குரை அசைநிலை இடைச்சொல்' என்றலுமாம். "அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே" (புறநானூறு -5) என்பது போலும் சங்க இலக்கியங்களில் மட்டுமன்றி, "நல்குர வென்னும் நசையின்மை பல்குரைத் துன்பங்கள் சென்று படும்" (திருக்குறள்-1045) எனத் திருக்குறளிலும் 'குரை' என்னும் இடைச்சொல் ஆளப்பட்டமை காண்க. 'பல் கோரை என்றே பாடம் ஓதித் தாம் தாம் வேண்டுமாறேயும் உரைப்பர்.*

*இதனால், சிவன் தனது சருவ வியாபகத்தால் பல உயிர்களோடும் உடனாய் நிற்றல் கூறப்பட்டது.*

*2983. **தெளிவுரை :-** முன் மந்திரத்தில் கூறியபடி சிவன் எல்லா உயிர்களோடும் உடனாய் நிற்பினும், மாயா காரியங்களில் வைத்துள்ள உறுதியான நம்பிக்கையால் உளவாகின்ற வினைகளில் அகப்பட்டு உழன்ற*

**2983.** உறுதியி னுள்வந்த உள்வினைப் பட்டும்
இறுதியின் வீழ்ந்தார் இரணம தாகும்
சிறுதியின் உள்ளொளி திப்பிய மூர்த்தி
பெறுதியின் மேலோர் பெருஞ்சுட ராமே. **5**

**2984.** பற்றினுள் ளேபர மாய பரஞ்சுடர்
முற்றினும் முற்றி முளைக்கின்ற மூன்றொளி
நெற்றியி னுள்ளே நினைவாய் நிலைதரும்
மற்றவ னாய்நின்ற மாதவன் தானே. **6**

---

*எல்லையில்லா ஒளியாய், எங்கும் நிறைந்து விளங்குவான்.*

***குறிப்புரை :-*** *"உறுதியினுள்" என்பதில் 'உள்' என்பது மூன்றாவதன் பொருளில் வந்த வேற்றுமை மயக்கம். உள் வினை - உளவாம் வினை. 'இரணியம்' என்னும் வடசொல், 'இரணம்' எனத் திரிந்து நின்றது. 'அறுதி, பெறுதி' என்பனபோல, "சிறுதி" என்பது திவ்விகுதி பெற்ற தொழிற் பெயர். 'சிறுத்தல்' என்பது அதன் பொருள். அஃது ஆகு பெயராய், அதனையுடைய பொருளைக் குறித்தது. "ஒளி மூர்த்தி" என்பது, 'ஒளித்த மூர்த்தி' என வினைத்தொகை. 'மேலோர்க்கு' என்னும் நான்கன் உருபு தொகுக்கப்பட்டது.*

*இதனால், சிவன் சருவ வியாபியாயினும் மலம் நீங்கப் பெற்றார்க்கே அவன் வியாபகன் ஆதல் கூறப்பட்டது.*

*2984.* ***தெளிவுரை :-*** *பற்றப்படும் பொருள்களில் எல்லாம் மேலான பொருளாய், மேலான ஒளியாயும் உள்ள சிவன் அண்டம் முழுதும் நிறைந்து, 'கதிர், மதி, தீ' என்னும் முச்சுடர்களாய்ப் புலப்படுவான். பிண்டத்தில் புருவ நடுவிலே தியானிக்கப்படும் பொருளாய் நிலைத்திருப்பான். பின்னும் அவ்வாறு தியானிப்போனும் தானேயாகின்ற தகவடிவினனும் ஆவான்.*

***குறிப்புரை :-*** *முதற்கண் "பற்று" என்றது, பற்றப்படும் பொருளை. பற்றப்படும் பொருள் நற்பொருளும், விடப்படும் பொருள் தீயபொருளும் ஆதலை நினைக. 'அத்தகைய பொருள்களுள் மேலானவன்' எனவே, அவனின் மிக்க நன்றாம் பொருள் இல்லையாயிற்று. நன்மையே, வடமொழியில் 'சிவம்' எனப்படுகின்றது. நன்மையை உடையது' என்பது அதன் பொருள். சுடர் - ஒளி. அஃது ஆகுபெயராய், அதனை உடையானைக் குறித்தது. "முளைக்கின்ற மூன்றொளி" என்றதனால், "முற்றும்" என்றது அண்டத்தைப் பற்றியதாயிற்று. உம்மை முற்றும்மை. முற்றுதல் - நிறைதல். நெற்றி - ஆஞ்ஞை. இதுவே தியானத்தானம் ஆதலை யறிக. நினைவு - தியானம்; என்றது தியானிக்கப்படும் பொருளாதல் ஒன்றேயாகலின், "நிலைதரும்" எனவும், 'தியானமும் அவன் உடனாகாத விடத்து நிகழாது' என்றற்கு "அவனாய் நின்ற" என்றும், அவன்*

**2985.** தேவனு மாகுந் திசைதிசை பத்துளும்
ஏவனு மாய்விரி நீருல கேழையும்
ஆவனு மாம் அமர்ந் தெங்கும் உலகினும்
நாவனு மாகி நவிற்றுகின் றானே. **7**

---

*தியானமுமாய்க் கலந்து நிற்றல் பற்றி "மாதவன்" என்றும் கூறினார். தான்ஏ அசைகள்.*

***இதனால் சிவன் அண்டத்திலும், பிண்டத்திலும் வியாபியாய், ஏற்ற பெற்றியில் அருள்புரியுமாறு கூறப்பட்டது.***

*2985.* ***தெளிவுரை :-*** *இன்னும், முன் மந்திரத்திற்கூறிய பரஞ்சுடராகிய சிவன், எல்லாத் திசைகளிலும் அதுவதற்குத் தலைவனாய் நிற்கின்றான். அவைகள் உள்ள எல்லாப் பொருள்களுமாய் இருக்கின்றான்; ஏழு கடல்களால் சூழப்பட்ட ஏழு தீவுகளையும் ஆக்குபவனுமாகி, அவை அனைத்திலும் நிறைந்து அவற்றை நிலைக்கச் செய்பவனுமாய், அங்குள்ளாரது நாவில் அவையாய்க் கலந்து சொற்களைச் சொல்கின்றான்.*

***குறிப்புரை :-*** *அடுக்கு, 'அதுவது' எனத் தனித்தனியைச் சுட்ட வந்தது. 'ஒவ்வொரு திசையையும் காக்கும் காப்பாளர் வேறு வேறாகச் சொல்லப்படினும் அவரிடத்தும் சிவனே வியாபியாய் நின்று காவல் புரிவிக்கிறான்' என்பது கருத்து. சிவாகமங்கள் பத்துத் திசைகளிலும் ஒவ்வொன்றிலும் பத்துப் பத்து உருத்திரர் இருந்து திசைக் காப்பாளரைச் செலுத்துகின்றனர்' என்று கூறுதலோடு, அவர்களின் பெயர்ப் பட்டியலையும் தருதற்கு இதுவே கருத்து என்க. 'எவன்' என்னும் வினாப்பெயர் முதல் நீண்டு நின்றது. "விரிநீர் உலகு" என்றதனால், "உலகு" என்றது நிலவுலகத்தையாயிற்று. காட்சிப் பொருளாய நிலவுலகத்தின் பகுதிகளை வகுத்துக் கூறியதனால், உரைப்பொருளாய் பிற உலகங்களை ஆக்குதலும் தானே பெறப்பட்டது. 'ஆக்குவன்' என்பது இடைக்குறைந்து நின்றது. அமர்தல் - தங்குதல். இதன் பயன் அப்பொருள்கள் நிலைபெறுதலாம். 'எங்குமாம் உலகினும்' என ஆக்கம் விரிக்க. "எங்கும்" என்றது ஆகாயத்தை உணர்த்திற்று. நாவன் - நாவே வடிவானவன். 'நவிற்றுதல்' என்பது பிறவினை வாய்ப்பாடாய்த் தன்வினையையும் குறிப்பதொன்று. "நம்பு வார்அவர் நாவின் நவிற்றினால் வம்பு நாண்மலர் வார்மது ஒப்பது" (தி.3 ப.49 பா.2) என்பதிலும் இவ்வாறு வந்தமை காண்க. "நட்பாடல் தேற்றாதவர்" (திருக்குறள், 187) என்றார் போல்வன காண்க. நாவாய் நின்று நவிற்றுதல், பொதுப்பட எல்லார் மொழியையும் குறித்தலுடன் அருளாளர்களது நாவில் இனிது விளங்கி நின்று அருளிச்செய்யும் உறுதிச் சொல்லைச் சிறப்பாகக் குறிப்பதாம். "எனதுரை தனதுரையாக" (தி.1 ப.76) என்னும் அருள் மொழியை ஓர்ந்துணர்க.*

*இதுவும் சிவனது சருவ வியாபகத்தையே கூறியது.*

**2986.** **நோக்கும் கருடன் நொடிஏ ழுலகையும்**
**காக்கும் அவனித் தலைவனும் அங்குள**
**நீக்கும் வினைஎன் நிமலன் பிறப்பிலி**
**போக்கும் வரவும் புணரவல் லானே.** **8**

---

*2986.* ***தெளிவுரை :-*** *(ஆகாயத்தில் இருந்து அனைத்துப் பொருளையும், காணும் கருடன் நம்மால் அறியப்பட்டது). அதுபோலப் பரம வியோமமாகிய சிதாகாசத்தில் இருந்து கொண்டு ஏனை எல்லாப் பொருளையும் அறிந்தாங்கறியும் கருடன் போல சிவன் பின்பு அழிக்கப்படுவனவாகிய ஏழுலகங்களையும் இதுபொழுது அவனே காக்கின்றான். ஆகவே உலக முதல்வன் அவனே. ஆதலின், அவ்வுலகங்களில் உள்ள வினைகளையெல்லாம் நீக்குகின்ற, இயல்பாகவே பாசம் இல்லாத, எஞ்ஞான்றும், எவ்வாற்றானும் பிறப்பினுட்படாத கடவுளும் அவனே, பிறப்பு இறப்பு இன்மையால், போக்கும், வரவும் இவன் ஆகிலும், உயிர்களில் அவையேயாய்க் கலந்து நிற்றலால், அவற்றது போக்கு வரவுகளில் நீங்காது நிற்கவும் அவன் வல்லவனாவான்.*

***குறிப்புரை :-*** *"கருடன்" என்றது, உவமையாகு பெயர். கருடன் மேற்கூறிய இயல்பினது ஆதல் பற்றியும், புள்ளரசு ஆதல் பற்றியும் இறைவனுக்கு அஃது உவமையாயிற்று. வேதத்தில் கருடனுக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. அது பற்றி, அங்கு, 'கருடன்' என்பதைச் சிவனாகக் கொள்க என்றற்கும் இது கூறினார். 'நோக்குதல்' பெரும்பான்மையும் காத்தல் தொழிலையே குறித்தலால், காத்தற் கடவுளாகிய மாயோனுக்குக் கருடன் ஊர்தி சொல்லப்பட்டது. 'அங்குள வினை' என மாறிக் கூட்டுக. 'வினையை நீக்குதற்கு உரியவன், வினையும், அதனால் வரும் பிறவியும் இல்லாதவனே என்றற்கு, 'அங்குள வினையை நீக்கும் நிமலன்; பிறப்பிலி' என்றார். 'புணரவும்' என்னும் எதிர்மறையும்மை தொகுத்தலாயிற்று. நொடித்தல் - அழித்தல். 'நொடி உலகு, என் நிமலன்' - இவை வினைத் தொகைகள். அவை செயப்படு பொருள்மேல் தொக்கன. "காக்கும்" என்பது முற்று - எச்சமாகக் கொள்ளினும் ஆம். 'தலைவனும் ஆவன்' எனச் சொல்லெச்சம் வருவித்து முடிக்க.*

*இதனால், சிவன் எல்லாப் பொருள்களையும் கடந்து நிற்பினும் எல்லாப் பொருளிலும் வியாபியாய் நின்று செயலாற்றுதல் கூறப்பட்டது.*

*2987.* ***தெளிவுரை :-*** *சிவன் திருமேனி கொள்ளும்பொழுது சிவந்த சடை. செம்பொன்னே போலும் நிறம் இவைகளையுடையனாகவே கொள்வான். ஏனைப் பொருள்களில் ஒன்றன் வடிவிலேயும் அவன் தோன்றானாகிலும் அவை அனைத்திலும் உடன் நிறைந்து நீங்காமலே நிற்கின்றான். ஆயினும் அவை பிறப்பதுபோல அவன் பிறப்பதில்லை. அவன் ஒடுங்கல் தோன்றல்கள் இல்லாதவனாயினும் அவைகளையுடைய உலகத்தோடு ஒட்டி நிற்கின்றான்.*

***குறிப்புரை :-*** *ஈசன் என்பதை முதலிற் கொள்க. அவன் மேனி செம்பொனே*

**2987.** செழுஞ்சடை யன்செம்பொ னேஒக்கும் மேனி
ஒழிந்தன ஆயும் ஒருங்குடன் கூடும்
கழிந்திலன் எங்கும் பிறப்பிலன் ஈசன்
ஒழிந்தில கேழினும் ஒத்துநின் றானே. **9**

---

*ஒக்கும் என்க. எங்கும் கழிந்திலன் என மாறிக் கூட்டுக. எங்கும் என்பது அப்பால் எங்கும் எனப் பொருள் தந்தது. உலகத்தின் இயல்பாகிய ஒடுங்குதல் இலகுதல்களைப் பின்னர்க் கூறுகின்றார் ஆதலின், சிவனுக்கு அவையில்லை என்றற்கு.*

*"பிறப்பிலன்" என்பதை முன்னே கூறினார். இலகுதல் - தோன்றுதல்.*

*பிற வகையான தெய்வ வடிவங்களையே சிவன் வடிவாகக் கொண்டு வழிபடின் குற்றம் என்னை? ஐயத்தை நீக்குதற்கு இது கூறினார். இது பற்றியே இத்தகைய வடிவங்கள். 'சிவனது இயற்கை வடிவங்கள்' எனப்படுகின்றன. இவ்வாறன்றி, நாயன்மார் சிலரிடம் சிவ யோகியாகவும், பிரமசாரியாகவும், சிவனடியாராகவும் வந்து சில திருவிளையாடல்களைச் செய்த வடிவங்கள் யாவும் சிவனுக்கு நிலையானவாய் இல்லாது, அவ்வப்பொழுது ஏற்ற பெற்றியாற் கொள்ளும் செயற்கை வடிவங்கள் என்க.*

*அண்டம் ஆர்இரு ளூடு கடந்தும்பர்*
*உண்டு போலும்ஓர் ஒண்சுடர், அச்சுடர்*
*கண்டிங் கார்அறிவார்? அறிவா ரெலாம்*
*வெண்டிங்கட் கண்ணி வேதியன் என்பரே.    - தி.5 ப.97 பா.3*

*என அப்பர் பெருமான் அருளிச்செய்ததும் இக்கருத்தை விளக்கவேயாம்.*

*இதனால், 'சருவ வியாபியாய் அகண்டனாய் நிற்கும் சிவன் கண்டனாய்த் தோன்றுமாறு இது' என்பது கூறப்பட்டது. இதன் பின் பதிப்புக்களில் காணப்படும் "உணர்வும் அவனே உயிரும் அவனே" என்னும் மந்திரம் மேல், 'சிவ தரிசனம்' என்னும் அதிகாரத்தில் வந்தது.*

*2988. தெளிவுரை :- எங்கள் தந்தையாகிய சிவபெருமான், வெறும் நூலறிவில் மட்டும் தோன்றுபவன் அல்லன்; தவத்தில் தோற்றஞ் செய்பவன். அப்பால் அத்தவத்தின் பயனாகப் பெறப்படுகின்ற நன்மையுடைய ஞானத்தில் இடையறாது தொடர்ந்து விளங்குபவனும் ஆவான். இனி, 'இன்ன செயலுக்கு இன்ன பயன்' எனப் பண்டமாற்றுப் போலக் கொண்டு வேதியர்கள் கூறுகின்ற காமிய கன்மங்களிலும் எங்கும் நிறைந்து வேதியர்கள் அவர்கட்குப் பயனளித்து வருகின்றான்.*

*குறிப்புரை :- நாற்றம் - தோற்றம். நாறுதல் - முளைத்தல். 'நூலுணர் வுணரா நுண்ணியன் காண்க' (தி.8 திருஅண்டப் பகுதி, 49) என்னும் திருவாசகத்தை*

**2988.** புலமையில் நாற்றம்இல் புண்ணியன் எந்தை
நலமையில் ஞான வழக்கமும் ஆகும்
விலமையில் வைத்துள வேதியர் கூறும்
பலமையில் எங்கும் பரந்துநின் றானே. **10**

**2989.** விண்ணவ னாய்உல கேழுக்கும் மேல்உளன்
மண்ணவ னாய் வலம் சூழ்கடல் ஏழுக்கும்
தண்ணவ னாய் அதன் தன்மையில் நிற்பதோர்
கண்ணவ னாகிக் கலந்துநின் றானே. **11**

---

*இங்கு நினைவு கூர்க. 'நன்மை' என்பது எதுகை நோக்கி இடையே அகரம் பெற்று, "நலமை" என வந்தது. 'நன்மையின்' எனச் சாரியை நிற்க இரண்டன் உருபு தொக்கது. 'நன்மையைப் பயனாக உடைய ஞானம்' என்க. நன்மை, இங்கு வீடுபேறு. வழக்கம் - தொடர்ச்சி, 'விலைமை, என்பது எதுகை நோக்கி, "விலமை" என நின்றது. பண்ட மாற்றுத் தன்மை, என்பது பொருள். பலம் - பயன். பலமை - பலன் தரும் தன்மை. அஃது ஆகுபெயராய், அதனையுடைய கன்மங்களைக் குறித்தது.*

*இதனான், சிவன் சருவ வியாபியாய் நிற்பினும் அவரவருக்கு ஏற்ற பெற்றியால் அருள்புரியுமாறு கூறப்பட்டது.*

*2989. தெளிவுரை :- சிவன், பராகாயத்தில் அனைத்துலகங்கட்கும் மேலேயும் இருக்கின்றான். அப்பொழுதே மிகக் கீழே உள்ள மண்ணில் திண்மையாய் உள்ளவனாயும், அதனைச் சூழ்ந்துள்ள நீரில் தண்மையாய் உள்ளவனாயும், இவ்வாறு எல்லாவற்றிலும் அதனதன் தன்மையாய் நிற்பதுடன், உயிர்களுக் கெல்லாம் வேறோர் அறிவாயும் எல்லாவற்றிலும் கலந்து நிற்கின்றான்.*

*குறிப்புரை :- 'தன்மை' என்பது எதுகை நோக்கி இறுதி நிலை தொகுத்த லாயிற்று. 'அதனதன்' என்னும் அடுக்கும் தொகுத்தலே பெற்றது, கண் - அறிவு. "நிற்பதோர் கண்" என்பது உடம்பொடு புணர்த்ததாகலின் நிற்றலையும், கண் ஆதலையும் வேறு வேறாகக் கொள்க. "தண்ணவன், கண்ணவன்" என்பவற்றில், "அவன்" என்பன பகுதிப்பொருள் விகுதிகள். எழுவாய் முன் மந்திரத்தினின்றும் வந்தது.*

*இதனால், சிவன் தனது வியாபகத் தன்மையால் மேலானவற்றிற்கெல்லாம் மேலாயும், கீழானவற்றிற்கெல்லாம் கீழாயும் நிற்றல் கூறப்பட்டது. "மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க'' (தி.8 திருஅண்டப்பகுதி, 50) என்னும் திருவாசகத்தையும் காண்க.*

*2990. தெளிவுரை :- சிவன் முன் மந்திரத்திற் கூறியபடி உலகத்தைக் கடந்து அப்பால் மேலும், கீழுமாய், உலகத்தில் எல்லாப் பொருளுமாய் வியாபித்து*

**2990.** நின்றனன் மாலொடு நான்முகன் தானாகி
நின்றனன் தான்நிலம் கீழொடு மேல்என
நின்றனன் தான்நெடு மால்வரை ஏழ்கடல்
நின்றனன் தானே வளங்கனி யாமே. **12**

---

*நிற்றலால், 'மால், அயன்' என்னும் காரணக் கடவுளர்களை அதிட்டித்துக் காத்தல் படைத்தல்களைச் செய்பவனும் அவனே. அதனால், எல்லாப் பொருள்களின் முழுத்தன்மையும் அவனே.*

*குறிப்புரை :-* "தான் நிலம்" என்பது தொடங்கி, ஈற்றடியில் "நின்றனன்" என்பது காறும் சென்று, பின், 'அதனால் என்பது வருவித்து மாலோடு நான்முகன் தானாகி நின்றனன்; தானே வளங்கனியாம்' என முடிக்க. "என" என்பதை "வரை, கடல்" என்பவற்றோடும் கூட்டுக. கனி, கனிவு; முதிர்ச்சி முதனிலைத் தொழிற்பெயர். சொற்பொருட் பின்வருநிலையணி வந்தது. இதன் கண்ணும் எழுவாய் முன் மந்திரத்திற்போல வந்தது.

முன் மந்திரத்தில் 'சிவனே எல்லாப் பொருளுமாய் நிற்பினும் மாலும், அயனுமாகிய காரணக் கடவுளரும் அவனேயோ' என ஐயுறுவார்க்கு அவ்வையத்தை நீக்குவார் முன் மந்திரத்திற்கூறிய பொருள்களையே மீண்டும் இம்மந்திரத்தில் அனுவதித்துக் கூறினார். இங்ஙனம் உரையாதார்க்கு இவை கூறியது கூறலாம். "நாரணன்காண்; நான்முகன்காண்; நால்வேதன்காண்" (தி.6 ப.8 பா.3) என்னும் திருத்தாண்டகத்தையும் காண்க.

*2991. தெளிவுரை :-* பெரியோர்கள் சிவனிடத்திலேயே காதல் மிக்கவர்களாய் அவனையே நோக்கி நிற்றற்குக் காரணம், 'எல்லாப் புவனங்கட்கும் அதிபதி அவனே; புண்ணியத்தின் பயனாய்க் கிடைப்பவனும் அவனே, யாவர்க்கும் தந்தையும் இவனே; உலகத்தை வலிமை வாய்ந்த தலைமையோடு நடத்துவோனாகி அதனை நடத்துபவனும் அவனே; எண்ணித்தொகை கூறுதற்கு இயலாத அனைத்துயிர்களும் அவனே; ஆகலின் அவன் ஒருவனே கடவுள்' என உணரும் மெய்யுணர்வேயாகும்.

*குறிப்புரை :-* 'சிவன்பால்' என்பதும், 'பெரியோர்கள்' என்னும் தோன்றா எழுவாயும் வருவித்து, "மால் உற்ற ஆறு" என்பது தொடங்கி உரைக்க.

புவனங்களை, "புவனா" எனப் பெண்பாலாகக் கூறினார். நிலத்தைப் பெண்ணாகக் கூறும் வழக்குப் பற்றி, 'புவனா' என்பாள் ஒரு சத்தி என்றலுமாம். மிகுதி, பன்மை குறித்து நின்றது. "என" என்னும் செயவெனெச்சம். 'என்பதனால்' என்னும் பொருட்டாய், ''மாலுற்ற ஆறு'' என்னும் எழுவாய்க்குப் பயனிலையாயிற்று. பெரியோர்கள் சிவனிடத்துச் செலுத்தும் அளவிலா அன்பு, தலைவி ஒருத்தி தன் தலைவனை அவனை யின்றித் தான் அமையாளாய்க் காதலிப்பதனோடு ஒத்தது' என்றற்கு அதனை, 'அன்பு, காதல்' என்பவற்றுள்

**2991.** புவனா பதி மிகு புண்ணியன் எந்தை
அவனே உலகின் அடற்பெரும் பாகன்
அவனே அரும்பல சீவனும் ஆகும்
அவனே இறைஎன மாலுற்ற வாறே. **13**

**2992.** உண்ணின் றொளிரும் உலவாப் பிராணனும்
விண்ணின் றியங்கும் விரிகதிர்ச் செல்வனும்
மண்ணின் றியங்கிடும் வாயுவு மாய்நிற்கும்
கண்ணின் றிலங்கும் கருத்தவன் தானே. **14**

---

*ஒரு சொல்லாற் கூறாது. "மால்" என்னும் சொல்லாற் கூறினார். மால் - மயக்கம், மோகம்.*

*இதனால், மெய்யுணர்ந்தோர், சிவனே சருவ வியாபகனும் சருவேசுரனும் ஆதலையறிந்து அவன்பால் கரை கடந்த காதலையுடையாராதல் கூறப்பட்டது.*

*2992.* ***தெளிவுரை :-*** *உயிர்களின் உடம்புள்ளிருந்து ஓவாது இயங்கி, உயிரை நிலைப்பிக்கின்ற பிராணனும், வானத்தில் இயங்கி உலகிற்குப் பல நலங்களை விளைவிக்கின்ற, அளவற்ற கதிர்களையுடைய பகலவனும், மண்ணில் ஒரு சிற்றிடமும் விலக்கின்றி எங்கும் இயங்கி வாழ்விக்கும் காற்றும், மற்றும் அனைத்துப் பொருள்களுமாய் நிற்பவன் சிவன்' என்றால், உயிர்களின் அறிவினுள் விளங்கி, அவ்வறிவை அறியச் செய்பவனும் அவன்தானே? வேறு யாராய் இருக்க முடியும்?.*

***குறிப்புரை :-*** *"ஒளிரும்" என்பது "ஒளிர்விக்கும்" எனப் பிறவினைப் பொருட்டாய், நிலைப்பித்தலைக் குறித்தது. உலவா - உலவி; சஞ்சரித்து, 'உலவா ஒளிரும்' என மாறிக் கூட்டுக. உம்மை கொடுத்து எண்ணியது, உபலக்கணத்தால் அனைத்தையும் எண்ணிக் கொள்ளுதற்கு, "நிற்கும்" என்பதன் பின் 'எனின்' என்பது வருவிக்க. அல்லாக்கால், மேல், "நின்றனன்" என்னும் மந்திர உரையிற் கூறியவாறு. 'கூறியது கூறல்' என்பதும் படும். "நிற்கும்" என வேறு தொடராக்கி முடித்தமையையும் நோக்குக. கண் - அறிவு. கருத்து அதில் தோன்றும் புலன் கருத்திற்கு ஏதுவாவதனை, 'கருத்து' என்றது உபசார வழக்கு. "தான்" என்பது கட்டுரைச் சுவைபட வந்தது. ஏகாரம், உடன்படுவித்தற்பொருட்டாகிய வினா.*

*இதனால், சிவன் தனது சருவ வியாபகத் தன்மையால் அனைத்துப் பொருளையும் நிலைப்பித்து, உயிர்களின் அறிவையும் அறியச் செய்தல் கூறப்பட்டது.*

*2993.* ***தெளிவுரை :-*** *எண் அறிவையும், எழுத்து அவ்வறிவின் வழி இன்பத்தையும் உண்டாக்குதலால், அவையிரண்டும் இயற்றமிழில் அறிஞரால் ஓர் இனப்படுத்தி எண்ணப்பட்டன. ("எண் என்ப, ஏனை எழுத்தென்ப"*

**2993.** **எண்ணும் எழுத்தும் இனஞ்செயல் அவ்வழிப்**
**பண்ணும் திறனும் படைத்த பரமனைக்**
**கண்ணில் கவரும் கருத்தில் அதுஇது**
**உண்ணின் றுருக்கி ஓர் ஆயமும் ஆமே.** **15**

---

*(திருக்குறள் - 392, 933) "எண்ணெழுத் திகழேல்" (ஆத்திசூடி) "எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்" (கொன்றைவேந்தன்) என்பவற்றைக் காண்க). இசைத்தமிழில் பண், திறம் (இன்னும் - திருத்திறம்) என்பனவும் அவ்வாறு ஓரினப்படுத்தி எண்ணப்படுவனவாய் இன்னோரன்ன பலவற்றை இனம், இனமாகப் படைத்த சிவபெருமானைக் கண்ணிலும், பொருள்களை உணரும் கருத்திலும் 'அது' என்றும், 'இது' என்றும் சேய்மைப் பொருளாகவும் அண்மைப் பொருளாகவும் தம்மின் வேறு வைத்து உணர்வார்க்கு அவன் அங்ஙனம் உணரும் உணர்வை, அவ்வுணர்வின் வழியே சென்று உணர்விற்கு உணர்வாய்த் தோன்றி அழித்து, 'அவனே தாம் என்னும்படி ஒன்றாகியே நின்று, ஒப்பற்ற ஓர் ஊதியமும்' ஆவான்.*

*குறிப்புரை :- ''செயல்'' என்னும் தொழிற்பெயர் ஆகுபெயராய்ச் செயப்படுபொருளை உணர்த்திற்று. 'பண்ணும்திறனும் அவ்வழியவே' எனக் கூட்டி இன்னோரன்னவற்றைப் படைத்த பரமனை எனச் செயப்படுபொருள் வருவித்துரைக்க. 'கண்ணிலும் கருத்திலும்' என எண்ணும்மை விரிக்க. "அது இது" என்பது அவ்வாறு உணரும் உணர்வைக் குறித்தது. அஃது உம்மைத் தொகை. 'அது இதுவை உருக்கி' என இயைக்க. ஆயம் - "பொருளாயம்" "ஆயமும்" என்னும் உம்மை சிறப்பு.*

*இதனால், சிவன் எங்கும் சருவ வியாபியாய் நின்று, தன்னை உணர்வார்க்கு முன்னர் அவரின் வேறாகியும், பின்னர் அவரேயாகியும் பெரும்பேறாய் நிற்றல் கூறப்பட்டது.*

*2994. தெளிவுரை :- 'தோன்றல், நிற்றல், ஒடுங்கல்' என்னும் முத்தொழில்களில் நடுவணதாகிய நிற்றல் தொழிலுடையவாய் உள்ள உலகங்கள் அனைத்தும் தனது உருவத்திற்குள்ளே 'இவ்வாறு அடங்கியிருக்க' எனச் சங்கற்பித்துச் சிவன் அவற்றில் நிறைந்து நிற்கின்றான்.*

*குறிப்புரை :- 'இவ்வண்ணம் ஓங்கக் கருக்கொடு' என மாற்றியுரைக்க. ஓங்குதல் - நிலைத்து நிற்றல். கருக்கொள்ளுதல், திருவுளத்திற்குள் சங்கற்பித்தல். ஈற்றடி 'சிவன்' என்னும் துணையாய் நின்றது. "ஓங்கக் கருக்கொடே எங்கும் கலந்திருந்தான்'' என்றதனால், 'அவனது சங்கற்பத்தானே உலகம் நிலை பெற்றுள்ளது' என்பதும், 'பிறவாறு சங்கற்பிக்கின் அவ்வாறே ஆம்' என்பதும் 'பிறர்போலக் கரணத்தாலன்றிச் சங்கற்பத்தாலே எல்லாம் செய்வன்' என்பதும் போந்தன. "தன்" என்றது தனது உருவத்தை. இவனது உருவம் சத்தியேயாதலை நினைக.*

*இதனால், சிவனது சருவ வியாபகச் சிறப்புடன், இயைபு பற்றி அவன்*

**2994.** இருக்கின்ற எண்டிசை அண்டம் பா தாளம்
உருக்கொடு தன்நடு ஓங்க இவ் வண்ணம்
கருக்கொடே எங்கும் கலந்துநின் றானே
திருக்கொன்றை வைத்த செழுஞ்சடை யானே. 16

**2995.** பலஉடன் சென்றஇப் பார்முழுது ஈசன்
செலவறி வார்இல்லை சேயன் அணியன்
அலைவிலன் சங்கரன் ஆதிஎம் ஆதி
பலவில தாய்நிற்கும் பான்மைவல் லானே. 17

---

*செயலாற்றும் முறையும் கூறப்பட்டது.*

*2995. **தெளிவுரை :-** 'ஆதி' என்னும் பெயருடைய சத்தியை உடைய எங்கள் முதல்வனாகிய சிவன், தோற்றத்தாலும், இயக்கத்தாலும் ஒன்றோடு ஒவ்வாது பலவகைத்தாய்க் காணப்படுகின்ற உலகம் முழுவதையும் தன் உடைமையாக உடையவன். ஒரு காலத்திற்றானே, சாராதார்க்குச் சேயனாயும், சார்ந்தார்க்கு அணியனாயும் நிற்றலால், அவனது நடைமுறையை அறுதியிட்டு அறிவார் ஒருவரும் இல்லை. சருவ வியாபகன் ஆதலின், 'போதல், வருதல்' என்பன அவனிடத்து நிகழ்தற்கு வழியில்லை. ஆகவே, அவனே நிலைத்த இன்பத்தைத் தர வல்லன் ஆகலின் 'சங்கரன்' எனப் பெயர் சொல்லப்படுகின்றான். கலப்பினால் அளவற்ற பொருளாய் அவன் இருப்பினும், தனது இயல்பில் மாற்றம் இன்றி அவை அனைத்தினும் வேறாய், ஒரு பொருளாயே நிற்கும் திறமும் அவன் வல்லவனாவன்.*

***குறிப்புரை :-** சென்ற என்றது 'பொருந்தி' என்றபடி. "ஆதி எம் ஆதி" என்பதை முதலில் வைத்து உரைக்க. ஈசன் - ஐசுவரியம் உடையவன். 'முழுதையும் உடைய ஈசன்' என்க. "ஈசன்" என்றதனானே, 'பார் முழுதும் அவனுக்கு உடைமை' என்பது போந்தது. 'சேயன் அணியன் ஆதலின்' செலவறிவார் இல்லை எனவும், 'அலைவிலன் ஆதலின் சங்கரன்' எனவும் ஏதுப் பொருளவாக உரைக்க. 'பலவாயினும் அத்தன்மை இலதாய் நிற்கும் பான்மையும் வல்லான் என வேண்டும் சொற்கள் வருவித்துக் கொள்க'.*

*இதனால், 'சருவ வியாபகத்தால் எல்லாப் பொருளோடு கூடியிருப்பினும் தான் தனியனேயாம்' எனச் சிவனது பெருமை முழுவதும் ஓராற்றான் தொகுத்துக் கூறி இந்நூல் நுதலிய பொருள் முடிக்கப்பட்டது. நுதலிய பொருள் சிவனது முதன்மையேயாம்.*

*2996. **தெளிவுரை :-** சிவனது பெருமை, உபநிடதங்களில் 'அது' எனப் பொதுவாகச் சுட்டியும், 'சித்து' என வரையறுத்தும் கூறப்படுதலும், எல்லாப் பொருட்கும் ஆதியாயினும், தான் அநாதியேயாதலும், எந்த அளவையினாலும் அளந்தறியப் படாமையும், உயிர்கள் பலவற்றிற்கும் பொதுப்பட இடமாய் விரிந்து*

**2996.** அதுஅறி வானவன் ஆதி புராணன்
எதுஅறி யாவகை நின்றவன் ஈசன்
பொதுஅது வான புவனங்கள் எட்டும்
இதுஅறி வான்நந்தி எங்கள் பிரானே. **18**

**2997.** நீரும் நிலனும் விசும்பு அங்கி மாருதம்
தூரும் உடம்புறு சோதியுமாய் உளன்
பேரும் பராபரன் பிஞ்ஞகன் எம்இறை
ஊரும் சகலன் உலப்பிலி தானே. **19**

---

*உலகம் முழுதிலும் வியாபகம் ஆதலும் ஆகும். இன்னும் அவனது பெருமையை எல்லாம் எங்களுக்குக் குருவாகிய நந்தி பெருமான்தான் அறிவார்.*

*குறிப்புரை :-* "பொதுவது" என்பதில் அது, பகுதிப்பொருள் விகுதி. எட்டும் - வியாபிக்கும். பெருமைகள் பலவாயினும் பொதுப்பட, 'பெருமை' என்னும் அளவில் "இது" என்றார். "ஈசன்" என்பதை முதலில் கொள்க.

இதனால் முடிவில் முதற்கண் குரு வணக்கம் கூறப்பட்டது.

*2997. தெளிவுரை :-* எங்கள் சிவன் ஐம்பூதங்களுடன் 'ஒளி' எனத் தக்க மற்றும் முப்பொருள்கள் கூட எட்டுப் பொருள்களாகிய வடிவினை உடையவன், 'பராபரன் பிஞ்ஞகன்' என்பன போன்ற பெயர்களால் யாவராலும் புகழப்படுபவன், எல்லா இடங்களும் அவனுக்கு இடங்களே. எல்லாவற்றிற்கும் இறுதியாயினும் தனக்கு இறுதியில்லாதவன். அவனை யான் வாழ்த்துகின்றேன்.

*குறிப்புரை :-* இறுதியில் கூறியது குறிப்பெச்சம். சோதி - ஒளி. ஞாயிறும், திங்களும் ஒளிப் பொருள்களாதலால் வெளிப்படை. இனி அறிவும் ஒளியாதலின் அவ்வாற்றால் 'ஒளி' என்பது ஆன்மாவையும் குறித்தது. ஆக அட்ட மூர்த்தமும் சொல்லப்பட்டமை காண்க. பராபரன் - மேலோடு கீழாய் விரிந்தவன். பிஞ்ஞகன் - தலைக்கோலத்தை உடையவன். தலையில் உலகம் அழியாதபடி கங்கையைத் தாங்கினவன்; பாம்பையும், நிலவையும் பகையின்றி ஒன்றி வாழ அணிந்தவன்; தலைமாலைகளை அணிந்து தனது நித்தியத்தை உணர்த்துபவன்; பிரணவத்தைக் குறிக்கும் கொன்றை மலர் மாலையைத் திருஅடையாள மாலையாக அணிந்தவன். குரண்டாசுரனை அழித்துக் கொண்ட கொக்கிறகை அணிந்து, கொடியோரை ஒறுத்தலை உணர்த்துபவன்; இன்னோரன்ன பல புகழ்கள் 'பிஞ்ஞகன்' என்பதனால் பெறப்படுதல் அறிக. தூரும் உடம்பு - சோற்றால் தூர்க்கப்படும் உடம்பு; அதனுள் சோதி உயிர். "சோதியும்" என்னும் உம்மையால் ஏனை ஒளியும் தழுவப்பட்டன. "பேரும்" என்னும் உம்மை சிறப்பு. ஊர் - இடம். சகலன் - எல்லாம் ஆனவன். ஈற்றடி, கால இட வரையறைகள் இன்மையைக் குறித்தது.

இது நூற்பொருள் கூறியதன்று. நூற்கும், தமக்கும் முதல்வனாகிய

**2998.** தானே கடல்மலை ஆதியு மாய்நிற்கும்
தானே திசையொடு தேவருமாய் நிற்கும்
தானே உடல்உயிர் தத்துவ மாய்நிற்கும்
தானே உலகில் தலைவனும் ஆமே. **20**

**2999.** மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
மூலன் உரைசெய்த முந்நூறு மந்திரம்
மூலன் உரைசெய்த முப்ப துபதேசம்
மூலன் உரைசெய்த மூன்றும்ஒன் றாமே. **21**

---

*இறைவனை வாழ்த்தியது. 'வாழ்த்து வணக்கம்' என்பவற்றுடன் பொருளியல்புரைத்தலும் வாழ்த்தாதலை உணர்க.*

*2998. **தெளிவுரை :-** இதன் பொருள் வெளிப்படை. நூலைச் சிவனது முதன்மையோடு தொடங்கிய நாயனார் முடிவையும் அவனது முதன்மையோடு முடித்தமை நினைந்து இன்புறத் தக்கது.*

*2999. **தெளிவுரை :-** இது நூல் சிதையாமற் பொருட்டு இதன் அளவை நூற்குள்ளே வரையறை செய்தது.*

*"தமிழ்" என்பது தமிழால் ஆகிய பாடலைக் குறித்தது. இந்நூலின் பாடல் தொகை மூவாயிரம்' என்பதாம்.*

*'இந்நூற் பாடல்கள் அனைத்துமே 'மந்திரம்' எனப் பெயரிடப்பட்ட போதிலும், சிறப்பாக மந்திரமாகவே அமைந்த பாடல்கள் முந்நூறு' என்றபடி. அவை நான்காம் தந்திரத்துள் எண்ணிக் கொள்ளற்பாலன. 'எந்திரம்' எனப்படும் சக்கரங்களும் 'மந்திரம்' என்றதனானே பெறப்பட்டன. அவை மிகச்சில ஆதலின், தொகை சொல்லப்படவில்லை. இங்ஙனமாயினும் 'முந்நூறு மந்திரம்' என்றே ஒரு தனி நூலும் வெளி வந்துள்ளது. (அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு).*

*'உபதேசம்' என்பது ஓர் அதிகாரம். முப்பது பாடல்களுடன் முதல் தந்திரத்தில் இருத்தல் நன்கறியப்பட்டது.*

*ஈற்றடியில் "மூன்றும் ஒன்றாமே" என முடிபு கூறியது, 'மந்திரம் உபதேசம்' - எனக் கூறியவற்றை மூவாயிரம் வேறு என மலையற்க - என மலைவு தீர்த்தது. "செய்த" 'செய்தன' என அன் பெறா அகர ஈற்றுப் பன்மை வினைப் பெயர். இவை செயப்படு வினையாய் நின்றன. இதிலும் சொற்பொருட் பின்வருநிலையணி வந்தது.*

*இங்ஙனம் நாயனார் பாதுகாப்புச் செய்தும், பிரதிகள் நன்கு போற்றாமையால், பாடங்கள் மிகத் திரிக்கப்பட்டும், பாடல்கள் இடம்*

**3000.** வாழ்கவே வாழ்கஎன் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலம்அறுத் தான்பதம்
வாழ்கவே வாழ்கமெய்ஞ் ஞானத் தவன்தாள்
வாழ்கவே வாழ்க மலம் இலான் பாதமே. **22**

---

*மாற்றப்பட்டும், சொற்கள் இருமுறை, மூன்றுமுறை சேர்க்கப்பட்டும், சில பாடல்களை விடுத்தும், சில பாடல்களை, இடைச் செருகல்களாக மிகுத்தும் செய்யப்பட்டமை பாதுகாத்தவர்களது ஊக்கக் குறைவால் நேர்ந்துள்ளதை உணர்ந்து கொள்ளுதல் அறிஞர்க்குக் கடனாய் உள்ளது.*

***3000. தெளிவுரை :-*** *இஃது இறுதியில் வாழ்த்துக் கூறி நூலை முடிவு செய்தது. "என் நந்தி" என்றதனானே இது நாயனாரின் திருமொழியாதல் விளங்கும்.*

*இவ்வாழ்த்து இரட்டுற மொழிதலாகக் குருவையும், சிவனையும் ஒருங்கே வாழ்த்தியது. மலம் அறுத்தது நாயனார்க்கும் அவரோடு உபதேசம் பெற்றவர்கட்கும் என்க.*

*முதற்கண், 'சிவ பரத்துவம்' எடுத்துத் தொடுத்து இடையிலேயும், அதனையே பல்லாற்றானும் வலியுறுத்தித் தம் குருவையும், பல இடங்களில் நினைவு கூர்ந்து, ஈற்றிலும் சிவன் பெயரையே கூறிச் சிவன் திருவடியையன்றி, மறந்தும் பிறிதொன்றை நினையாது அவனது நெறியை விளக்கிய நாயனாரது திருமொழியின் அமைப்பையும், "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற அவரது திருவுள்ளத்தையும் நினைந்து நினைந்து பயன் பெறுதல் அறிஞர் கடனாகும்.*

***ஒன்பதாம் தந்திரம் மூலமும் உரையும் முற்றிற்று.***

***திருமூலர் அருளிய திருமந்திரம் முற்றிற்று.***

**பத்தாம் திருமுறை - திருமந்திரம் 7, 8, 9**

## பாட்டு முதற்குறிப்பு அகராதி